புராணமென்னும் பெரியபுராணமென்றும் வழங்கப்பட்டு வருகிறது. நூற்பெயர் ஆசிரியராலேயே பாயிரத்தில் ஓதப்பட்டிருக்கிறது. அ பெயரைப்பற்றி எழுதப்பெற்ற குறிப்புரைகளேயும் நோக்குக.

பெரியபுராணம், சீவகசிந்தாமணியின் பொருட்டுப் பாடப்பெ தென்று சேக்கிழார் புராணத்தார் கூறுகிருர். இக்கூற்றுக்குச் சே கிழார் மொழியாகிய பெரியபுராணத்தில் சான்றில்லை. இடைக்கால தில் சமணரென்று நடித்தவர்களின் புன்மைச் செயல்களைச் சே கிழார் கடிந்திருத்தலைக் கண்டு, "சீவக சிந்தாமணிமீது காழ்ப்பு கொண்டு சேக்கிழார் பெரியபுராணம் பாடினர்" என்ற கதை, பில் வந்தவரால் புனேயப்பட்டிருக்கலாம்.

பண்டை அறநெறி விடுத்து, இடையில் மறநெறிபற்றி ஒழுகி சமண வேடக்காரரின் புன்மைச் செயல்களைச் சேக்கிழார் கடி திருத்தல் உண்மை. அதைக்கொண்டு, சமண நெறியையே தூற்று தற்குச் சேக்கிழார் பெரியபுராணத்தைப் பாடினர் என்று சொல்வது அறமாகாது. சமணர்களின் பண்டைக்கால நிலையும், இடைக்கால நிலையும் விளங்குமாறு, சேக்கிழார், திருஞானசம்பந்த சுவாமிகள் புரா ணத்தில், கூ௬௪-ம் பாட்டில், "முந்தைய உரையிற் கொண்ட பொறை முதல் வைப்பும் விட்டுச் - சிந்தையிற் செற்றம் முன்னுந் தீக்குணத் தலைநின் றார்கள்" என்று அருளியிருத்தல் காண்க. இத்திருவாக் கின் உள்ளக் கிடக்கையை ஓர்ந்து உணர்வோர்க்குச் சேக்கிழாரது செம்மை நிலை இனிது புலனுகும்.

பெரிய புராணத்தையும், சீவக சிந்தாமணியையும் நடுநிலை நின்று ஆராய்வோர், சேக்கிழார் சீவகசிந்தாமணிச் செம்மொழியை 'முன் னோர் மொழி பொருளாகக்' கொண்டவர் என்னும் முடிவுக்கு வருதல் ஒருதலை. ஆகவே, சேக்கிழார் சீவகசிந்தாமணிக்கு மாருகப் பெரிய புராணம் பாடப் புகுந்தவரல்லர் என்று கொள்க. சேக்கிழாரின், தமிழ் அன்பும், திருமுறை நேயமும், அடியவர் பத்தியும், இன்ன பிறவும் அவரைப் பெரியபுராணம் பாடச் செய்தன என்று கொள்வது சிறப்பு.

சேக்கிழார் காலத்தைப்பற்றி ஆராய்ச்சியாளருள் கருத்து வேற்றுமை யுண்டு. சிலர் பதினோராம் நூற்றாண்டின் இறுதி என் றும், வேறு சிலர் பன்னிரண்டாம் நூற்றாண்டின் தொடக்கம் என்றும், இன்னுஞ் சிலர் பன்னிரண்டாம் நூற்றாண்டின் நடு என்றும் கூறுப. இதுகாறும் வெளிப்போந்துள்ள ஆராய்ச்சிகளான், சேக்கிழ

காலத்தை அறுதியிட்டுக் கூறுதற்குரிய சான்றுகள் போதிய அளவு கிடைக்கவில்லை என்பது விளங்குகிறது.

பெரியபுராணத்துக்கு முதல் நூல் வன்தொண்டப் பெருமான் அருளிய திருத்தொண்டத் தொகை ; வழி நூல் நம்பியாண்டார்நம்பி அருளிய திருத்தொண்டர் திருவந்தாதி ; பெரியபுராணம் திருமலைச் சிறப்பு - பாட்டு - ௩௮, ௩௯—வெள்ளானைச் சருக்கம் - பாட்டு - ௧ பார்க்க.

காவியங்கள் பல பிறந்தன. அவைகளுள் சிலவற்றில் உலகைக் காணலாம் ; சிலவற்றில் உயிரைக் காணலாம் ; சிலவற்றில் கடவுளைக் காணலாம். மூன்றையும் ஒருங்கே காட்டுங் காவியங்கள் மிகச் சில. அச்சிலவற்றுள் பெரிய புராணமும் ஒன்று.

உலகு உயிர் கடவுள் என்னும் மூன்றும் சேர்ந்த இடத்திலேயே இன்ப அன்பு வாழ்வு நிகழும். இன்ப அன்பு அற்றவாழ்வு வாழ்வாகாது. அது, வற்றல் மரம்போன்றது. பெரியபுராணத்தில் தமிழ் இன்ப அன்பு வாழ்வு யாண்டும் பொலிதல் வெள்ளிடைமலை.

காவியங்களின் உள்ளுறை எதுவாயினும் ஆக. ஒவ்வொரு காவியத்தில் ஒவ்வொருவித சுவை யுண்டு. "உலகம் பலவிதம்." அவரவர் பண்புக்கேற்றவாறு, அவரவர் விருப்பம் எழுதல் இயல்பு. எல்லாரும் ஒ[illegible]ணவு கொள்வதில்லை. எல்லாரும் ஒரேவித உடை அ[illegible]யிற்று. சிலருக்குக் கடற்காற்றுப் பொருந்தும். சிலருக்கு மலைக்காற்றுப பொருந்தும். சிலரைப் பெருமரச் செறிவு கவரும். சிலரைச் சிறு பசும்பயிர் கவரும். இயற்கை ஒன்றே. அது மக்கள் பண்புக்கேற்றவாறு பல முகமாகப் பயன்படுகிறது. காவிய உலகமும் இத்தன்மையதே.

காவியக் கண்ணர்கள், காவிய உலகில் நுழைந்து பார்த்தால், அவ[illegible]கு ஒவ்வொன்று ஒவ்வொன்றை அடியாக்கொண்டு பொலிதல் புலனுகும். காதல், வண்மை, தியாகம், வீரம் முதலியவற்றுள் ஒவ்வொன்று சிறப்பாகவும், பிற பொதுவாகவும் காவியங்களில் அமைதல் இயல்பு. பெரியபுராணத்தில் பொதுவாகப் பலதிறச் சுவையும், சிறப்பாகப் பத்திச்சுவையும் அமைந்துள்ளன. "பத்திச்சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய கவிவலவ" என்று சேக்கிழாரை மகா வித்வான் - மீனாட்சிசுந்தரம் பிள்ளை போற்றியது காண்க. பெரியபுராணம் ஓர் அன்புக்கடல்.

சேக்கிழார் அன்பர். அவர் அன்பை நினைந்து நினைந்து, அன்பானவர். அவர்தங் கருவி கரணங்களெல்லாம் அன்பே ஆயின. அத்

தகைய ஒருவரிடமிருந்து பிறக்கும் காவியம் எத்தகையதாயிருக்கும்? சேக்கிழாரின் உள்ளமாகிய ஊற்றினிடத்துத் தேங்கிய அன்புநீர், பொங்கி எழுந்து, அருவிகளாக வழிந்து வழிந்து, ஆறுகளாகப் பெருகிப் பெருகி ஓடிப் பெரியபுராணக் கடலாயிற்று. அவ்வன்பு நீரால் வளர்ந்து செழித்த தமிழ்ச்சோலைகள் பல. பெரியபுராணம் பத்தியை உயிராக்கொண்டு, பிறவற்றை உடலுறுப்புக்களாகக் கொண்ட காவியம் என்று சுருங்கச் சொல்லலாம்.

பெரியபுராணம், பௌராணிகத்தை வித்தாகக் கொண்டு எழுந்த நூல் அன்று. அது சரித்திரத்தை வித்தாகக் கொண்டு எழுந்த காவியம். காவிய இயலுக்கு ஏற்பச் சிலச்சில விடங்களில் பௌராணிகமும் அதனிடை நுழைந்திருக்கிறது. நாயன்மார் பலர், சரித்திரத் தொடர்புடையார் என்பதைச் சரித்திர உலகம் ஏற்றுக் கொண்டது. கல்வெட்டுகளையும், வேறு பல சான்றுகளையும் ஆராய ஆராயப் பெரிய புராணம் சரித்திரத்தை அடிப்படையாக் கொண்ட நூல் என்பது நனி விளங்கும்.

காவியங்களைப் பெரிதும் வருணனை நூலாகக் கொள்வது சாதாரண உலக வழக்கு. வருணனை, காவியத்துக்கு வேண்டற்பாலது. அது காவிய இயல்களுள் ஒன்று. ஆனால் வருணனையொன்றே காவிய இயல் ஆகாது.

பெரியபுராணத்தில் வருணனை இ[illegible] தருவாக [illegible]கிய வருணனை பெரியபுராணத்தில் உண்டு. [illegible]னை, பொருந்திய இடங்களில் அமைந்திருக்கிறது. இதனை பெரிய புராணத்துக்குரிய சிறப்புக்களுள் ஒன்றெனக் குறிக்கலாம். பெரியபுராண வருணனை இயற்கையில் முகிழ்த்தது.

சிலர் வருணனை ஒன்றன்மீது சிறப்பாகக் கருத்துச் செலுத்தி, அதற்கெனச் சொற்களைப் பலபடப் பெய்து பெருக்குவர். முயன்று வலிந்து வருணனையிற் புகுந்து, அதை வேண்டுமென்றே வளர்த்துச் செல்வது இயற்கையாகாது. கவியின் முயற்சியின்றி இயற்கையில் அவர்பால் வருணனை முகிழ்த்தல்வேண்டும். இத்திறம் இப்புராணத்தில் சிறந்து விளங்குகிறது.

சேக்கிழார் அருளிய பெரிய புராணத்தில் வருணனையுடன் வேறு பல பொருளும் உண்டு. அதன்கண், பாட்டு, ஓவியம், கலை, அரசியல், வாணிபம், தொழில், உழவு, பெண்மை, ஆண்மை, காதல், வண்மை, வீரம், தியாகம், ஆத்மசத்தி, தத்துவம், பொதுமை, சீர்திருத்தம், புரட்சி, சரித்திரம், பௌராணிகம் முதலியன திகழ்கின்றன.

பொருளைச் சுருங்கச் சொல்லி விளங்க வைத்தலுக்குப் பெரிய புராணத்தை ஒரு வைப்பு என்று கூறல் மிகையாகாது. பனித்துளி, தனதகத்தே நீண்ட மரங்களைக் காட்டுவதுபோலப் பெரிய புராணம், உலகு உயிர் கடவுளைத் தன்னகத்தே காட்டி நிற்கிறது. இன்னோரன்ன நுட்பங்கள் பெரிய புராணத்தில் பல உண்டு. அவைகளை ஒரு தனி ஆராய்ச்சி நூலில் விளக்க எண்ணி யிருக்கிறேன்.

பெரியபுராணம் 'உலகெலாம்' என்றெழுந்து, 'உலகெலாம்' என்று முடிகிறது. இது, பெரியபுராணம் எல்லா உலகுக்கும் உரியது என்பதைக் காட்டுங் குறிப்பாகும். இவ்வுண்மையைப் பெரியபுராணத்தின் உள்ளுறை, உள்ளங்கை நெல்லிக்கனிபோலப் புலப்படுத்தும். திருநாவுக்கரசு நாயனார் புராணம், அப்பூதியடிகள் புராணம், சாக்கிய நாயனார் புராணம், பூசலார் நாயனார் புராணம், அப்பாலும் அடிச்சார்ந்தார் புராணம் முதலியவற்றைப் பார்க்க.

பெரிய புராணத்தின் ஒரு பகுதியை முதல்முதல் அச்சில் பதிப்பித்தவர்,மழவை-வீரசைவப்புலவர்-மகாலிங்கஐயர். அப்பதிப்பு வெளிவந்த ஆண்டு 1843. காஞ்சிபுரம்-மகா வித்வான் - சபாபதி முதலியா பெரியபுராணப் பதிப்பில் இருமுறை ஈடுபட்டனர். அவை முறையே 1859-ம் ஆண்டிலும், 1870-ம் ஆண்டிலும் நிகழ்ந்தன. சிதம்பரம் - உபாத்தியாயர்-பே. இராமலிங்கம் பிள்ளைப் பதிப்பு 1879-ம் ஆண்டில் வெளியாயிற்று. ஆறுமுக நாவலர் முதற்பதிப்பு 1884-ம் ஆண்டில் வெளியிடப்பட்டது. இவர்கள் ஒவ்வொருவரும் அவ்வப்போது தனித் தனியே ஓலை ஏடுகளை ஆய்ந்து புராணத்தைப் பதிப்பித்தனர். இவர்கள் பதிப்புக்களைத்தழுவிப் பின்னை வேறுசில பதிப்புக்கள் வெளிவந்தன.

பெரியபுராணத்துக்கு முதல் முதல் பொழிப்புரை எழுதியவர் மழவை-வீரசைவப்புலவர்-மகாலிங்க ஐயர். அவ்வுரை முற்றுப்பெற வில்லை. திருவண்ணாமலை ஆதீனம்-ஆறுமுகத்தம்பிரானார், ஏறக்குறைய பெரிய புராணம் முக்காற் பகுதிக்குப் பதவுரை இயற்றினார். அவ்வுரையைப் பொம்மபுரம்-சிவஞானபாலைய தேசிகசுவாமிகள் ஆதீனம்- இராமலிங்க சுவாமிகள் முற்றுவித்தார்கள். சென்னைப் புலவர் - சுப்பராய நாயகர் என்பவர் பெரியபுராணத்துக்கு ஒரு சிறந்தபொழிப்புரை வரைந்துள்ளார். உரையாசிரியர் - ஆலாலசுந்தரம் பிள்ளை எழுதிய விரிவுரை இப்பொழுது வெளி வந்துகொண்டிருக்கிறது. "பெரிய புராண அரும்பத விளக்கம்" என்றொரு பழைய குறிப்புரை யாழ்ப்பாணத்திலுண்டு. அது, "செந்தமிழி"ல் வெளிவந்துள்ளது.

சென்னை வெஸ்லி கலாசாலையில் யான் மாணுக்கனு யிருந்த போது, யாழ்ப்பாணம் - நா. கதிரைவேற் பிள்ளையவர்களது அன்புக்கு உரியவனுனேன். ஆங்கிலத்தில் பித்துக்கொண்டு திரிந்த எனக்குத் தமிழில் வேட்கையை எழுப்பியவர் அவரேயாவர். அவரிடம் யான் நெருங்கிப் பழகி வந்தபோது, பெரியபுராணத்தைப் படிக்கு மாறும், நாயன்மார் வரலாறுகளை உரைநடையில் எழுதி எழுதிப் பயிற்சி பெறுமாறும் அவர் எனக்கு அடிக்கடி சொல்லி வருவர். அவ்வாறே யான் பெரியபுராணத்தில் சிறுதேர் உருட்டியும், சிற்றில் கட்டியும் விளையாடிவந்தேன். அவ்வப்போது அரும்பதங்கட்கு உரை குறித்துக் கொள்வதுண்டு. நாயன்மார் வரலாறுகளை உரைநடையில் எழுதுவதுமுண்டு.

கதிரைவேற்பிள்ளை சென்னை விடுத்து, நீலகிரிக்கேகித், தமிழ்த் தொண்டு செய்தபோது, சிவனடி சேர்ந்தனர். தமிழிலுள்ள பேரிலக்கிய இலக்கணங்களையும், ஞானநூல்களையும் முறையாகப் பயிலுதல் வேண்டுமென்ற அவா என்னைப் பிடர்பிடித்து உந்திக்கொண்டே யிருந்தது. அவ்வவாவைத் தணித்துக்கொள்ள யான் மயிலை-மகா வித்வான்-தணிகாசல முதலியாரை அடைந்தேன். அச்சமயத்தில், என் தமயனுர் - திரு. வி. உலகநாத முதலியாரும், என் நண்பர் - அ. சிவசங்கர முதலியாரும் தமிழ் நூல்களை அடக்கவிலையில் வெளியிடுதல் வேண்டுமென்று "உமாபதி குருப்பிரகாச அச்சுக்கூடம்" என்றோர் அச்சுக்கூடத்தை அமைத்தனர்; முதல் முதல், கதிரைவேற் பிள்ளை கட்டளையிட்டவாறு, பயிற்சியின் பொருட்டு, யான் எழுதிய அரும்பதவுரையுடனும், வசனத்துடனும் பெரியபுராணத்தைச் சஞ்சிகை சஞ்சிகையாக வெளியிட முயன்றனர். அம் முயற்சி 1907-ஆம் ஆண்டு தொடங்கப்பட்டு, 1910-ம் ஆண்டு முற்றுப் பெற்றது. அவ் வரும்பத உரையும் வசனமும் எப்பருவத்தில் எந்நிலையில் என்னுல் எழுதப் பெற்றன என்பதைப்பற்றி இங்கே விரித்துக்கூற வேண்டுவதில்லை. மயிலை - முதலியாரிடத்தில் யான் தமிழ் பயின்றபின்னை, பெரியபுராணப் பதிப்பை மற்றுமொருமுறை திருத்தி வெளியிடுதல் வேண்டுமென்ற எண்ணம் என் நெஞ்சில் எழுந்துகொண்டே யிருந்தது. ஆனுல் அதற்குரிய வாய்ப்புக் கிட்டாமலிருந்தது.

யான் சென்னை வெஸ்லிகல்லூரியில் தலைமைத் தமிழாசிரியனு யிருந்த ஞான்று, 1916-ம் ஆண்டில், பெரியபுராணப் பணியில் தலைப்பட முயன்றேன். வேறு வேலைகள் குறுக்கிட்டு அம் முயற்சியைத் தகைந்தன. 1920-ம் ஆண்டு, யான் "தேசபக்தன்" ஆசிரிய பதவியே

னின்றும் விலகியபோது எனக்குச் சிறிது ஓய்வு கிடைத்தது. அப் பொழுது பெரியபுராணத் தொண்டில் இறங்க எண்ணினேன். "நவ சக்தி" பத்திரிகையை விரைந்து தொடங்க நேர்ந்தமையானும், தொழிலாளர் வேலை நிறுத்தங்களில் ஈடுபட நேர்ந்தமையானும் அம் முறையும் எனது எண்ணம் நிறைவேறு தொழிந்தது. 1930-ம் ஆண்டு உப்புச் சத்தியாக்கிரகப் போர் எழுந்த சமயத்தில், "நவ சக்தி"க்கு ஈடுகாணங் கேட்கப்பட்டது. அது காரணமாக "நவசக்தி" சில காலம் நிறுத்தப்பட்டது. அவ்வேளையில் எனக்கு வேறு வேலை இல்லாமையால், பெரியபுராண முற்பதிப்பைப் பல வழியிலும் திரித்துத் திருத்தி விரித்துச் செப்பஞ் செய்யலானேன். அச்செப்பத் துடன் வெளிவந்தது இப்பதிப்பாகும்.

இப்பதிப்பு, மாதச் சஞ்சிகையாக வெளியிடப்பட்டு, இப்பொழுது முற்றுப்பெற்றது. முற்பதிப்புக்கும் இப்பதிப்புக்கும் உள்ள வேற் றுமை பெரிது. இதனை ஒரு புது நிலயமென்றே கூறலாம். இது குறித்து, "உலகெலாம் உணர்ந்தோதற்கரியவன்" என்னும் முதற் பாட்டின் விரிவுரையிலும் சிலவுரை பகர்ந்துள்ளேன்.

இத்துணை நாள் கடந்து இப்பதிப்பு வெளிவர நேர்ந்தமை குறித்து மகிழ்வெய்துகிறேன். என்னை? பெரியபுராண ஆராய்ச்சிக்கு வேண்டப்படுங் கருவிகள் பல. அவைகளுள் ஒன்று சமணசமய நூலாராய்ச்சி. சமணப் பெரியோர் சிலரிடம் அணுகிச் சமண சித்தாந் தத்தை ஒருவாறு தெளியும் பேறு எனக்கு வாய்த்தது. அஃது இப்பதிப்புக்குப்பெருந்துணையாக நின்றது. மதவாதங்கள் தொலைந்து, சமரச சன்மார்க்கம் பரவுதல் வேண்டும் என்னுங் கருத்துடன் யான் தொண்டாற்றி வரும் இந்நாளில், தொண்டர் புராணத்துக்கு அரும் பத ஆராய்ச்சி விசேடக் குறிப்புரை எழுத என்னை ஆளாக்கிய திரு வருளை வழுத்துகிறேன்.

பெரியபுராணத்தைப்பற்றிய ஆராய்ச்சிகள் சில வெளிவந் திருக் கின்றன. அவைகள், பெரியபுராண மூலத்தில் சில விடங்களில் ஐயப் பாடுகளை எழுப்பியுள்ளன. அதனால், மூலத்தைப் பழைய ஓலைப் பிரதி களுடன் ஒப்புநோக்கிப் பதிப்பித்தல் நல்லது என்று எண்ணலா னேன். எதையும் எண்ணுதல் எளிது. அதைச் செயலில் கொணர் வது அவ்வளவு எளிதன்று. ஓலைப் பிரதிகளைத் தேடிப் பெறும் அருமைப்பாடு, அம்முயற்சியில் தலைப்பட்டார்க்கே தெரியும்.

ஓலைப்பிரதிகளைப்பற்றிச் சிலரிடம் பேசினேன். அவருள் ஒரு வர், தாம் ஒல்லும் வகை முயன்று ஓலைச்சுவடிகளைத் திரட்டித் தருவ

தாக வாக்களித்தனர். அவர், தமிழ்ப்பேராறிஞரும், ஒப்புரவிற்கு ஒல்காதவரும், தமிழ் "லெக்ஸிகன்" பதிப்பாசிரியரும் ஆகிய திரு வாளர் - எஸ். வையாபுரிப் பிள்ளையாவர். இவ்வன்பர், திருவாளர்கள் - புத்தேரி - எஸ். தேசிகவிநாயகம் பிள்ளை, திருநெல்வேலி - ஹிந்து கல்லூரித் தமிழாசிரியர் - வி. சிதம்பரராமலிங்கம் பிள்ளை, பெருங் குளம் - செங்கோல் மடத்துப் பண்டார சந்நிதிகள், ஆழ்வார் குறிச்சி எம். பி. எஸ். துரைசாமி முதலியார், வெள்ளகால் - திருமலையப்ப முதலியார், திருநெல்வேலி - சுந்தரமூர்த்தி ஓதுவார், எஸ். அநவரதவிநாயகம் பிள்ளை, மயிலை - பாலசுப்பிரமணிய முதலியார் ஆகிய இவர்களிடமிருந்து ஓலைப்பிரதிகளைப் பெற்று, அவைகளை அன்புடன் என்னிடஞ் சேர்த்தனர்.

இவ்வாறு கிடைக்கப்பெற்ற பழைய ஓலை ஏடுகளுடன் மூலம் ஒப்புநோக்கப்பட்டது. பொருந்திய பாடபேதங்கள் ஆங்காங்கே பொறிக்கப்பெற்றன. இயற்கை வருணனை, விழுமிய கருத்து முதலி யன தடித்த எழுத்தால் விளக்கஞ் செய்யப்பட்டன. படிப்பவர்க்குப் பல வழியிலும் எளிதில் பயன்படும் முறையில் இப்பதிப்பு ஒழுங்கு செய்யப்பட்டது.

அரும்பதவுரை, பழைய சங்க இலக்கியங்களைத் தழுவி வரையப் பட்டது. வாசகர்கள், பதவுரைத்துணையை நாடாத முறையில், அரும்பதங்கள் விளக்கஞ் செய்யப்பட்டுள்ளன. உரை காணப்பெறாத அரும்பதமில்லை என்று கூறலாம். விசேடங்கள், தமிழ் பயில்வோர்க் குப் பெருந்துணை செய்யும். அவைகள், சிலவிடங்களில் தற்கால விஞ் ஞான நுட்பங்களால் தெளிவு செய்யப்பட்டுள்ளன. ஆராய்ச்சிக் குறிப்புகள், ஆராய்ச்சியாளர்க்குப் பல வழியிலும் பயன்படுவனவாம். இன்றியமையாத இடங்களில் தேவார அகச் சான்றுகள் எடுத்துக் காட்டப்பட் டிருக்கின்றன. பதவுரையின்றியும் ஆசிரியரின்றியும் பெரியபுராணத்தைப் பயிலுதற்குரிய துறைகளில் இப்பதிப்புச் செப் பஞ் செய்யப்பட்டிருத்தல் சிறப்பாகக் குறிக்கத்தக்கது.

பெரிய புராணத்துக்கு வசனம் பலர் எழுதியுள்ளார். அவ்வச னப் போக்குகள் அவ்வக் காலதேச வர்த்தமானங்களைப் பற்றியன. இம்முறை, இக்காலப் போக்குக்கு உரியதாக வசனம் என்னால் எழு தப்பெற்றது. அஃது எல்லார்க்கும் பயன்படுமுறையில் எளிய நடையில் எழுதப்பட்டது.

இப்பதிப்பு மூலத்தை மட்டும் அடக்கவிலைப் பதிப்பாக வெளியிடச் சைவ சித்தாந்த சமாஜத்தார் விரும்பிக் கேட்டனர். அவர்கட்கு அவ்வுரிமை வழங்கப்பட்டது.

எனது முயற்சி சிறிதுமின்றி, ஓலைப் பிரதிகளை எளிதிற் பெறச் செய்த நண்பர்-எஸ். வையாபுரிப்பிள்ளைக்கும், தங்கள் தங்கள்பாலுள்ள ஓலைப் பிரதிகளை அன்பு கூர்ந்து உதவிய பெரியார்கட்கும், அச்சுப் பிரதி கொண்டு, மூலத்தைக் கூர்ந்து கூர்ந்து, ஊன்றி ஊன்றி நோக்கி, அச்சுப்பிழை களைவதில் ஊக்கஞ் செலுத்திய அன்பர் - மாங்காடு - துரைசாமி முதலியார்க்கும், பெரிதுஞ் சந்திப் பிரிவுமீது கருத்துச்செலுத்தி, அச்சுப்பிழை திருத்திய அன்பர்-அ. சோமசுந்தரம் செட்டியார்க்கும், பாட்டகராதியை ஒழுங்குசெய்து கொடுத்த நண்பர் - கிழக்குமருதூர் - கிலக்கிழார் - திருச்சிற்றம்பல இல்லம் - கி. நாராயணசாமி நாயடுவுக்கும், பலதிறச் சிக்கல்களைக் கண்டுஞ் சலிப்புறாது உழைத்த சாது அச்சுக்கூடத் தொழிலாளர்கட்கும் எனது மனமார்ந்த நன்றியறிதலைச் செலுத்துகிறேன்.

இப்பதிப்பு மாதம்மாதம் சஞ்சிகையாக வெளி வந்துகொண்டிருந்தபோது, தாமே வலிந்து இருவர் பொருளுதவி செய்தனர். அவருள் ஒருவர் திருப்பனந்தாள் காசிமடத் தலைவர் - ஸ்ரீலஸ்ரீ - சுவாமிநாத சுவாமிகள். இவர், சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் வித்வான் பரீட்சையில் முதல் வகுப்பில் முதல்வராகத் தேறுவோர்க்கு ஆயிரம் ரூபா பரிசிலாகக் கொடுத்துவரும் தமிழ்ப் பெரியார். இவ்வடிகள் அனுப்பிய தொகை நூறு ரூபா. மற்றொருவர் சிதம்பரம் - என். தண்டபாணி பிள்ளை. இவர் இந்நாளில் தம் பிள்ளைக்குச் சேக்கிழார் என்னும் அருமைப் பெயர் சூட்டியது இங்கே குறிக்கத் தக்கது. இவ்வன்பர் செலுத்திய தொகை இருபத்தைந்து ரூபா. அவ்வடிகட்கும், இவ்வன்பர்க்கும் எனது நன்றி உரியதாக.

சென்னை :<br>பவ ஆண்டு வைகாசி மீ<br>பூச நாள்<br>19—5—1934

திருவாரூர் - வி. கலியாணசுந்தரன்.



# முற்பதிப்பின் உபோற்காதமும் உரிமையுரையும்

—o—

I

அவன் அவள் அது எனச் சுட்டி அறியப்படும் உலகம், தோற்றம் நிலை இறுதி என்னும் முத்தொழில் உடைமையான், ஒரு காரணனால் காரியப்படுவதென்பது எவரும் ஒப்பமுடிந்த உண்மையேயாம். என்னை? காரணமின்றிக் காரியம் நிகழாதாகலான் என்க. இதனை "அவனவ ளதுவெனும் அவைமூ வினைமையிற் - றோற்றிய திதியே ஒடுங்கி மலத்துளதாம் - அந்தம் ஆதி என்மனார் புலவர்" என்னுஞ் **சிவஞானபோதமும்**, "அகர முதல எழுத் தெல்லாம் ஆதி - பகவன் முதற்றே உலகு" என்னும் **வள்ளுவர் வாக்கும்** வலி யுறுத்தலைக் காண்க.

அவ்வாதிபகவனை, மண் புனல் தீ காற்றென மயங்கியும், உருவனென உரைத்தும், அருவனென அறைந்தும், ஆன்மாவென ஆடியும், மாலாதியோ ரென மகிழ்ந்தும், "யானே உலகமும், அதன் ஒளியும்" எனக்கூறி அற்புதங்கள் ஆற்றிய அருளாளர்களுட் சிலரெனச் செப்பியும், பிறவெனப் பிதற்றியும் தத்தம் பசுபாச ஞானங்கள் சென்றவழித் தமக்குள் வேறுபட்டும், மாறுபட்டும், இறுதியில் இடர்ப்பட்டும் ஒழிகின்றார் பல்சமயத்தார். அவரை அவசித்தாந்தி கள் என்பார் சிவசித்தாந்தங் கைவரப்பெற்றார். என்னை? மண்ணாதியன சட மாகலானும், அவை தாமே இயங்காவாகலானும், உருவம் அழிதன் மாலையதாக லானும், அருவம் முயற்கோடுமானச் சூனியமாய் முடிதலானும், ஆன்மா முக் குணவயத்தானும் அவத்தை வயத்தானும் அலக்கணுற்றும் பிறப்பிறப்புக்களை யும் பிறகேடுகளையும் பெற்றும் உழல்கின்றமையானும், மாலாதியோர் தோற் றக்கேடுகள் உறுவோர் ஆகலானும், அவர் பதித்துவம் பிருதிவிமுதல் பிரகிருதி மாயைகாறும் வியாபித்து நிற்கும் பிரதிட்டாகலை பரியந்தமே நிலவுதலானும், பிரகிருதிக்குமேலுந் தத்துவ புவனங்கள் உண்மையானும், அற்புதமாற்றிய அரு ளாளர்கள் யோனிவாய்ப்பட்டவர்களாகலானும், அவர்கள் ஒரோருகால் தங்கள் குறையறுப்பான் இறைவனை இரங்குமாறு வேண்டினார்கள் ஆகலானும், 'தம்மை யும் தலைவனையும் உணர்ந்து' சிவோகம்பாவனையில் தலைப்பட்டவர்களாகலானும், பிறவும் பொய்யாய்ப் பொன்றுகின்றமையானும் என்க.

இனி, இச்சமயத்தார் தெய்வங்களாக நின்று, அவரவர் போற்றல்களை ஏற் றுக்கொள்வோனும், "குணாதீதன்" "நிர்க்குணன்" "துரியமூர்த்தி" என உப நிடதங்களான் ஓதப்பெற்றானும், ஐசுவரியமாதி அறுகுணங்களையும், முற்றறிவு முதலிய எண் குணங்களையும் உடையானும், உருவாயும், அருவாயும், அருவுரு வாயும், அவை கடந்த அகண்டாகார அழற்சோதிப் பிழம்பாயும், அறிவாயும், **அன்பாயும்** உள்ளானுமாய பரசிவனே ஆதியென்னுஞ் சத்தத்தால் விசேடிக் கப்பட்ட பகவன் என்க. இதனை:—*"தேவராயும் அசுரராயும் சித்தர்செழு மறைசேர் - நாவராயும் நண்ணுபாரும் விண்ணெரிகால் நீரு - மேவராய விரை

* தேவாரம்.

மலரோன் செங்கண்மால் ஈசனென்னும் - மூவராய முதலொருவன் மேயதுமுது குன்றே" எனவும், *"விரிவிலா அறிவி னூர்கள் வேறொரு சமயஞ் செய்தே - எரிவினாற் சொன்னா ரேனும் எம்பிராற் கேற்ற தாகும்" எனவும், †"யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வ மாகி யாங்கே - மாதொரு பாக னார்தாம் வருவர்" எனவும், ‡"கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்-தாளை வணங்காத் தலை" எனவும், *"எட்டு வான் குணத் தீசனெம் மான்றனை" எனவும், †"அருவமோ ரூபா ரூபம் ஆனதோ அன்றி நின்ற - உருவமோ உரைக்குங் கர்த்தா வடிவெனக் குணர்த்திங் கென்னில் அருவமும் ரூபா ரூபம் ஆனதும் அன்றி நின்ற - உருவமும் மூன்றுஞ் சொன்ன ஒருவனுக் குள்ள தாமே" எனவும், ¶"அறிவு சிவமிரண் டென்பர் அறிவிலார் - அறிவே சிவமாவ தாரும் அறிகிலார் - அறிவே சிவமாவ தாரும் அறிந்தபின் - அறிவே சிவமா யமர்ந்திருப் பாரே" எனவும், ¶'அன்பு சிவமிரண் டென்ப ரறிவிலார் - அன்பே சிவமாவ தாரும் அறிகிலார் - அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின் - அன்பே சிவமா யமர்ந்திருப் பாரே' எனவும், §"அம்மையே அப்பா ஒப்பிலா மணியே அன்பினில் விளைந்தஆ ரமுதே" எனவும், §"ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த இன்பமே என்னுடை அன்பே" எனவும் வருந் திருவாக்குகளான் ஓர்ந்துணர்க. இன்னும் பகவப்பெயர் சிவபரமாதலைச் சதுர் வேத தாற்பரிய சங்கிரகத்தினும், பவுட்கராகமத்தினும் காண்க. பிறவற்றை இந்நூல் ஐந்தாம் பக்கத்திற் பார்க்க.

இனி, ஆதி பகவனுய சிவபிரான் திருவடிப்பேற்றைக் கதிக்குநெறி பத்தி நெறியேயாம். இதனை ஞானநெறி எனவும், சைவநெறி எனவும், அத்துவிதநெறி எனவும், அருணெறி எனவுங் கூறுவர் கூரிய அறிவினூர். இது, மணிவாசகப் பெருமானூர் பிறநெறியினரை "முத்திநெறி அறியாத மூர்க்கர்" என்றும், சிவநெறியைச் சித்தமலங் கழிவிக்கும் "பத்திநெறி" என்றும் அருளிச்செய்தவாற்றான் இனிது விளங்குதல் காண்க. இன்னும் பத்திநெறியே முத்திநெறி என்பதனை:—"பத்தி வலையிற் படுவோன் காண்க" எனவும், "திசைமுகன் சென்று தேடினர்க் கொளித்தும் - முறையுளி ஒற்றி முயன்றவர்க் கொளித்தும்-ஒற்றுமை கொண்டு நோக்கும் உள்ளத் - துற்றவர் வருந்த உறைப்பவர்க் கொளித்தும் - மறைத்திறம் நோக்கி வருந்தினர்க் கொளித்தும் - இத்தந் திரத்திற் காண்டுமென் றிருந்தோர்க் - கத்தந் திரத்தின் அவ்வயின் ஒளித்தும் - முனிவற நோக்கி நனிவரக் கவ்வி-ஆணெனத் தோன்றி அலியெனப் பெயர்ந்து-வாணுதற் பெண்ணென ஒளித்தும் சேண்வயின் - ஐம்புலன் செலவிடுத் தருவரை தொறும்போய்த் - துற்றவை துறந்த வெற்றுயிர் ஆக்கை-அருந்தவர் காட்சியுள் திருந்த ஒளித்தும்-ஒன்றுண் டில்லை என்றறி வொளித்தும்-பண்டே பயில்தொறும் இன்றே பயில்தொறும் - ஒளிக்குஞ் சோரனைக் கண்டனம் - ஆர்மின் ஆர்மின் நாண்மலர்ப் பிணையலில்-தாள்தளை யிடுமின் - சுற்றுமின் சூழ்மின்

* தேவாரம். † சிவஞானசித்தியார். ‡ திருக்குறள். ¶ திருமந்திரம். § திருவாசகம்.

தொடர்மின் விடேன்மின்-பற்றுமின் என்றவர் பற்றுமுற் றொளித்தும்-தன்னே ரில்லோன் தானேயான தன்மை - என்னோர் அனையோர் கேட்கவந் தியம்பி - அறைகூவி ஆட்கொண் டருளி-மறையோர் கோலம் காட்டி யருளலும்-உளையா **அன்பென்** புருக ஓலமிட்-டலைகடற் றிரையின் ஆர்த்தார்த் தோங்கி"...எனவும், "தெய்வம் என்பதோர் சித்தம்உண் டாகி - முனிவி லாததோர் பொருளது கருதலும்-ஆறு கோடி மாயா சத்திகள் - வேறு வேறுதம் மாயைகள் தொடங்கின - ஆத்த மானார் அயலவர் கூடி-நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்-சுற்றம் என்னுந் தொல்பசுக் குழாங்கள்-பற்றி அழைத்துப் பதறினர் பெருகவும்-விரத மேபர மாக வேதியரும்-சரத மாகவே சாத்திரங் காட்டினர்-சமய வாதிகள் தத்தம் மதங்களே-அமைவ தாக அரற்றி மலைந்தனர் - மிண்டிய மாயா வாதம் என்னும் - சண்ட மாருதம் சுழித்தடித் தாஅர்த் - துலகா யதமெனும் ஒண்டிறற் பாம்பின் - கலாபே தத்த கடுவிடம் எய்தி - அதிற்பெரு மாயை எனைப்பல சூழவும் - தப்பா மேதாம் பிடித்தது சலியாத் - தழலது கண்ட மெழுகது போலத் - தொழுதுள முருகி அழுதுடல் கம்பித் - தாடியும் அலறியும் பாடியும் பரவியும் - கொடிறும் பேதையும் கொண்டது விடாதெனும் - படியே யாகிநல் லிடையறா அன்பிற் - பசுமரத் தாணி அறைந்தாற் போலக் - கசிவது பெருகிக் கடலென மறுகி - அகங்குழைந் தனுகுல மாய்மெய் விதிர்த்துச் - சகம்பேய் என்று தம்மைச் சிரிப்ப - நாணது ஒழிந்து நாடவர் பழித்துரை - பூணது வாகக் கோணுதலின்றிச் - சதுரிழந் தறிமால் கொண்டு சாரும் - கதியது பரமா அதிசய மாகக் - கற்றா மனமெனக் கதறியும் பதறியும் - மற்றோர் தெய்வம் கனவிலும் நினையா - தருபரத் தொருவன் அவனியில் வந்து-குருபர னாகி அருளிய பெருமையைச் - சிறுமைஎன் றிகழாதே திருவடி யிணையைப் - பிறிவினை அறியா நிழலது போல - முன்பின் னாகி முனியா தத்திசை - என்புநைந் துருகி நெக்குநெக் கேங்கி - **அன்பெனும்** ஆறு கரையது புரள..." எனவும் வருந் **திருவாசகத்தானும்,** "என்பே விறகா இறைச்சி அறுத்திட்டுப் - பொன்போற் கனலிற் பொரிய வறுப்பினும் - **அன்போ டுருகி** அகங்குழைந் தார்க்கன்றி - என்போன் மணியினை எய்தவொண் ணாதே" எனவும், "அன்பினுள் ளான்புறத் தானுடலாயுளான் - முன்பி னுள்ளான் முனிவர்க்கும் பிரானவன் - அன்பினுள் ளாகி அமரும் அரும்பொருள் - அன்பினுள் ளார்க்கே அணைதுணை யாமே" எனவும் வருந் **திருமந்திரத்தானும்,** "அன்பே என்னன்பே என்றன்பால் அழைத் தழைத்திட் - டன்பே அன்பாக அறிவழியும் - அன்பன்றித் - தீர்த்தம் தியானம் சிவார்ச்சனைகள் செய்யுமது - சாத்தும் பழமன்றே தான்," என்னுந் **திருக்களிற்றுப்படியாரானும்,** "கருமமா தவஞ்செ பஞ்சொல் காசறு சமாதி ஞானம் - புரிபவர் வசம தாகிப் பொருந்திடேம் புரையொன் றின்றித் - திரிவறும் **அன்பு** செய்வோர் வசமதாய்ச் சேர்ந்து நிற்போம் - உரைசெய்வோ மவர்முன் னெய்தி அவருளத் துறைவோ மென்றும்" என்னும் **வாயுசங்கிதையானும்** அறிக.

இன்னோரன்ன சிறப்புக்களை யுடைத்தாம் பத்திநெறியன்றிப் பரமுத்தி சித்தியாதென்பதைச் சின்னாட் பல்பிணிச் சிற்றறிவினர்களாய சீவர்கள் தேர்ந்

துய்வான் சங்கரியாருக்குச் சாவா மூவா மருந்தாய சங்கரன் செவியறிவுறுத்திய வண்ணம், எந்நாட்டினுஞ் சிறந்த நன்னாடாகிய தென்னாட்டிலே உயர்ந்த நலத்தும், இழிந்தகுலத்தும் திருவவதாரஞ்செய்து, செயற்கருஞ் செய்கைகளைச் செவ்வனே ஆற்றிச், சிந்தையும் மனமுஞ் செல்லா நிலைமைத்தாய அந்தமி லின்பத் தழிவில் பேறெய்தினார்கள் அறுபான்மும்மை நாயன்மார்கள். அவர்களதருட் சரிதங்களை அறைவது திருத்தொண்டர் புராணம். இதனைத் திருவருட் பெருஞ் செல்வராகிய சேக்கிழார் பெருமான் தென்தமிழ் நாடு உய்யத் திருவாய் மலர்ந்தருளுந் திருத்தொண்டை ஏற்ற வரலாற்றையும், பிற வற்றையும், பெற்றான் சாம்பானுக்கும் முள்ளிச் செடிக்கும் முத்தி யளித்த **உமாபதிசிவம்** அருளிச்செய்த சேக்கிழார் புராணத்தா னுணர்க.

இப்புராணம் பெரியபுராண மெனவும், திருத்தொண்டர் புராணமெனவும் இரு திருநாமங்களான் வழங்கப்பெறும். அவ்விரு நாமங்களும் ஆசிரியரால் இடப் பட்டன என்பதை "எடுக்கு **மாக்கதை**" எனவும், "இங்கிதன் நாமங் கூறின் இவ்வுல கத்து முன்னாட் - டங்கிரு ளிரண்டின் மாக்கள் சிந்தையுட் சார்ந்து நின்ற - பொங்கிய இருளை ஏனைப் புறவிருள் போக்கு கின்ற - செங்கதி ரவன் போல் நீக்குந் **திருத்தொண்டர் புராணம்** என்பாம்" எனவும் போந்த பாயிரத்தானுணர்க.

இக்காலத்துச் சிலர், பெரியபுராணத்துட் பல பாக்களில் சங்கநூற் கிடக்கைகள் விரவப்பெற்றுள்ளன என்றும், அதனால் சேக்கிழார் செந்தமிழ்க் கலைப் புலமை மாத்திரம் நிரம்பப் பெற்றார் என்றும், அவர் திருவருட்புலமை கைவரப் பெறாதார் என்றுங் கூறிக் கழிபேருவகை யுறுகின்றார். அவஞானிகள் சிவஞானிகளோடு வடிவான் ஒரோவழி ஒப்புறினும், பிறவற்றிற் றம்முட் சிறிதும் ஒவ்வாமை சிவணச் சங்கநூற்பாக்கள் பெரியபுராணப் பாக்களோடு சொல்வடிவில் ஒரோவழி ஒப்புறினும், பொருண் மாட்சியினும், பிறபயங்களினும் ஒப்புப்பெறா எனக் கொள்க. ஈண்டுச் 'சங்கநூற்கள்' என்றது திருமுறைகளுட் சேராதன வற்றை என்க. இனி ஆசிரியர், திருவருள் காட்டிய நெறியானே புராணம் பாடியருளிய திருவருட் பெரும்புலவர் என்பதனை, அவரே "அருளின் நீர்மைத் திருத்தொண் டறிவருந் - தெருளி னீரிது செப்புதற் காமெனின் - வெருளின் மெய்ம்மொழி வானிழல் கூறிய - பொருளி னாகும் எனப்புகல் வாமன்றே" எனவும், "வெறியார் பொழிற்சண் பையர்வேந்தர் மெய்ப்பா சுரத்தைக்குறியே நியவெல்லை யறிந்தும் பிட்டே னல்லேன் - சிறியே னறிவுக் கவர்தந்திருப் பாதந் தந்த - நெறியே சிறிதியா னறிநீர்மைகும் பிட்டே னன்பால்" எனவும் திருவாய்மலர்ந்தருளி விளக்கினமை காண்க. இவ்வுண்மை கண்டன்றோ இப் புராணத்தை அருண்மொழி யெனக்கொண்டு, பன்னிரண்டாந் திருமுறையாக வகுத்து, அருட்பாவென அன்புடன் போற்றி, ஆசிரியராம் அருண்மொழித் தேவரை அருட்பெரும் புலவரெனத் தொழுது, ஆனந்தவாரிதியிற் றிளைத் துய்த்தனர் **அநபாய வளவர்**. இப்புராணம் தமிழ் வேதங்களின் பெற்றியறி விக்கும் பெருங் கருவியா யிருத்தலானே இதன் மேன்மை இனிது விளங்கு மென்க. தோலா நாவினராய மேலோர் மொழிந்த சங்கநூற்களே இந்நூலுக்கு

அன்புத் துறையில் ஒப்புமை பெறுவெனின், அத் துறையில் பிறநூல்கள் இதற்கு ஒப்புமை பெறுமாறெங்ஙனம்? அன்புத்துறையில் இவ்வருணூற்கு ஒப்பாகவும் உயர்வாகவும் வேறு நூற்களை விளம்புவோர் மானுடராவரோ? அவர் அன்பினீர்மையும், அருளினீர்மையும் அறிந்தாராவரோ? அவரை "அன்பின் வழிய துயிர்நிலை அஃதிலார்க்—கென்புதோல் போர்த்தவுடம்பு" என்னுந் திருக்குறட்கு இலக்கியமாக்கி விலக்குவர் மேலோர்.

இவ்வருணூலில் அகத்திணை புறத்திணை நுட்பமும், வருணச்சிரம ஒழுக்கும் விலக்கும், அகப்புறச்சமய ஆசாரமும், அத்துவித அருணெறியும், உண்மைச் சரியையாதியனவும், இன்ன பிறவும் ஓதப்பட்டுள்ளன. இன்னும் இத்திருமுறையின் காவியக் கவின்களும் பிறவும், ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பிய முதலிய தொல்லிலக்கணங்களையும் பல்காப்பியங்களையும் நல்லாசிரியர்மாட்டுக் கேட்டுத் தெளிந்து, ஊனுண்ணல் முதலிய ஊனங்கட்குக் கனவிலும் மறந்தும் ஆளாகாதவர்களாய், ஞானசாரியரை வழிபட்டு, வேதாந்தத் தெளிவாஞ் சைவ சித்தாந்த உண்மைகளை உள்ளங்கை நெல்லிக்கனிபோலக் கைவரப்பெற்று, அன்பின் தன்மையை அனுபவத்திலறிந்தவராயுள்ள ஒண்புலவரது நுண்ணறிவிற்கே சிறிது விளங்கும் என்க. ஏனையோர் இவ்வெழினூற்குச் செம்பொருளுரைக்க எழுவது பேதைப் பருவப் பெண் காமநூற்பொருளை உணர்ந்துரைக்குமாறு போலாம் என்க.

இத்துணைச் சிறப்பினதாய இதிற் செறிந்துள்ள சிறந்த வனப்புக்களை ஒருங்கே தொகுத்துக் காட்ட யான் சிறிதும் வல்லேனல்லேனாயினும், என் சிற்றறிவிற்குப் புலப்பட்ட சிலவற்றையாதல் ஈண்டெடுத்துதவ வேண்டுமென, எனதுள்ளத்தெழுந்த பேரவா என்னைப் பிடர்பிடித்துந்தியதேனும், உபோற்காதம் இடந்தாராமை யானும், இதனை வெளியிட்டார்க்கு விருப்ப மின்மையானும் விரியாது விடுத்தேன். பெருங்காவியங்களை யாத்தோருள் பெரும்பாலோர் பெண்ணுண் வனப்புக்களையும், பிறவற்றையும் புகழ்ந்து வர்ணிப்பான் புகுந்துழிச் சுருங்கச் சொல்லல் விளங்கவைத்தல் முதலிய அழகுகளை அறவே மறந்து, பல பாக்களால் பகர்ந்தும் கருத்தைத் தெளிவுற விளக்காது தியங்கினர். அப்பாக்களும் அன்பர்கட்கு இன்பளியாதனவாயிருப்பது வெள்ளிடைமலையே. சேக்கிழார் சுவாமிகள் அவ்விடங்கள் நேர்ந்துழிச் செவிமடுப்போரும், செவ்வனே ஓதுவோரும், பிறரும் சிவமாந்தன்மை எய்துமாறு கருத்து முற்றுறச் சுருங்கக் கூறிப் பேரின்பப் பொருள் கரந்து விளங்க விளம்பியுள்ளார். அதனைத் தாலிபுலாக நியாயத்தாற் காட்டுவல்: "கற்பகத்தின் பூங்கொம்போ காமன்றன் பெருவாழ்வோ - பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ புயல்சுமந்து - விற்குவளை பவளமலர் மதிபூத்த விரைக்கொடியோ - அற்புதமோ சிவனருளோ அறியேனென் றதிசயித்தார்" "முன்னேவந் தெதிர்தோன்றும் முருகனோ பெருகொளியாற்-றன்னேரின் மாரனோ தார்மார்பின் விஞ்சையனோ-மின்னேர் செஞ் சடையண்ணல் மெய்யருள்பெற் றுடையவனோ - என்னேஎன் மனந்திரித்த இவன்யாரோ எனநினைந்தார்" "கழைசொரி தரளக் குன்றிற் கதிர்நில வொருபாற் பொங்க - முழையரா வுமிழ்ந்த செய்ய மணிவெயி லொருபால்

மொய்ப்பத் - தழைகதிர்ப் பரிதி யோடுஞ் சந்திரன் றலையு வாவிற் - குழையணி காதர் வெற்புக் கும்பிடச் சென்று லொக்கும்" "வேத வேதியர் வேள்வியே தீயன-மாத ரோதி மலரே பிணியன - காதல் வீதி விலக்கே கவலைய - சூத மாதவி யேபுறஞ் சூழ்வன" "சாய லார்கள் நுசுப்பே தளர்வன - வாய மாடக் கொடியே அசைவன - சேய வோடைக் களிறே திகைப்பன - பாய சோலைத் தருவே பயத் தன"—இத்திருப்பாக்களை நோக்குக. திருக்குறிப்புத் தொண்டர் புராணத்தின் திறனும், கண்ணப்ப நாயனுர் புராணத்துக் கவினும் கவனிக்கற் பாலன. மங்கையர்க்கரசியார் மாண்புராணத்தையும் பார்த்து மகிழ்க.

இத்திருவருட்பாக் கனியுள் எங்கணும் ஒழுகுவது அன்பின் ரசமே. இவ் வுண்மையை, "பத்திச் சுவைநனி சொட்டச் சொட்டப் பாடிய கவிவலவ" எனச் சேக்கிழார் பிள்ளைத்தமிழார் சிறப்பித்ததானுணர்க. அப்பத்திரசத்தை நுகர்ந்து ஆனந்தவாரிதியிற் ரேய்ந்து இன்புறுவோர் ஒரு சிலரேயாவர். இதனை : "குடிலை என்னுந் தடவய லுப்பண் - அருள்வித் திட்டுக் கருணைநீர்ப் பாய்ச்சி - வேத மெல்லாம் பாதபம் வளர்த்தனை - பாதப மதனிற் படுபயன் பலவே-அவற் றுள் - இலைகொண்டு வந்தனர் பலரே இலையொரீஇத் - தளிர்கொண்டு வந்தனர் பலரே தளிரொரீஇ - அரும்பொடு மலர்பிஞ் சருங்கா யென்றிவை - விரும்பினர் கொண்டு கொண்டு வந்தனர் பலரே - அவ்வா றுறுப்பும் இவ்வாறு பயப்ப - ஒரும்வே தாந்தமென் றுச்சியிற் பழுத்த - சாரங் கொண்ட சைவசித் தாந்தத் - தேனமு தருந்தினர் சிலரே" என்னும் **பண்டாரமும்மணிக்கோவை**யா னுணர்க. இன்னும் இந்நூல் கருங்கன் மனத்தரையுங் கரையச் செய்வது ; எச் சமயத்தவர்க்கும் இன்பூட்டுவது ; சாதிவேற்றுமையைச் சேதித்தொழிப்பது ; நவில்தொறும் நவில்தொறும் நாநயம் பயப்பது ; பயில்தொறும் பயில்தொறும் பத்தியை விளைப்பது ; இக்கால நாகரிக இனிமையும் உடையது ; பிறவும் மிளிரும் பெருமை பெற்றது.

இத்துணைச் சிறப்பினையுடைய அருமருந்தன்ன இத்திருத்தொண்டர் புராண மூலத்தை **ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் பெருமான்** பிரதிக்கிணங்கப் பரி சோதித்து, அதனுடன் அடியேனியற்றிய அரும்பதக் குறிப்புரையையும், வசனத்தையும் சேர்த்து, 1871-ம் ஆண்டிலே அமிழ்தினுமினிய தமிழ் ஈழ நாட் டிலே அவதரித்து, அருட்பா என்பது ஆறிருமுறையே என்று அரச மன்றமே றிப் பசுமரத்தாணிபோல் நாட்டி, முன்னர்த் தில்லையம்பதியில் நடைபெற்ற திருமுறை மகோற்சவத்தை இக்காலத்து மக்கள் கண்டு இன்புற்றுய்ய அத் தில்லையினும் பிறபதிகளினும் இனிமையாய் நடாத்திக் காட்டி, 1907-ம் வரு டத்திலே சிவனடி சேர்ந்த **சதாவதானம் - ஸ்ரீலஸ்ரீ - நா - கதிரைவேற் பிள்ளை யவர்கள் ஞாபகசின்னத்திற்காக** வெளியிட்டுத் தங்கள் குரு பத்தியை விளக்கி னுர் என் தமயனுர் திருவாரூர் - வி. உலகநாத முதலியாரும், என் கெழுதகை நண்பரும் உழுவலன்பரும் ஆகிய அ. சிவசங்கர முதலியாரும்.

கல்வியினும், அறிவினும், அனுபவத்தினும் சிறியேனுய யான் இவ்வுலகத்தில் நேர்ந்த பல இன்னல்களான் கடற்புயலிடைப்பட்ட கலனைக்கடுப்பக்

கலங்கிய உள்ளத்தனாய் வருந்திய காலை எழுதிய அரும்பதக் குறிப்புரையை யும், வசனத்தையும் என்னுதவியைப் பெரிதும் வேண்டாது, தாங்களே அச்சுப் பிழை பார்த்து வெளியிட்ட என்னொருசாலை மாணவர்கள் புரிந்த நன்றி என் றும் மறக்கற்பாலதன்றாம். அடியேனியற்றிய அரும்பதக் குறிப்புரையையும், வசனத்தையும் சொன்னயமுடைய நன்னயப் புலவர்கள் அன்னம்போற் கொள்வார்களாக. என்னுயிரனைய இருவரும் இதுபோன்ற பன்னூல்களை அச்சுவிமானமேற்றிக் குருபத்தியை வளர்க்குமாறு ஸ்ரீ முருகவேள் இருபாதத் தொருதிருவருளைச் சிந்திக்கின்றேன். சுபம்! சுபம்!! சுபம்!!!

—திரு. வி. க.

---

## II

### நேரிசையாசிரியப்பா

பூவினிற் சிறந்த நாவினிற் பெரியார்
தொண்டையே நாடுந் தொண்டைமா நாடு
பாலிபாய்ந் தளிசேர் பாலிநன் னாடு
எண்ணிய உதவும் புண்ணிய நாடு
அம்மை அறம்வளர் செம்மைசேர் நாடு
இத்திரு நாட்டிடைப் பத்திரு வனப்பார்
தோன்ற அருள்புரி ஆன்றபே ரறங்கள்
குன்றுத லில்லாக் குன்றையம் பதிவாழ்
பாக்கிழார் பெருமான் சேக்கிழா ரருளால்
விரித்த அடியவர் சரித்திர மணக்கும்
பெரிய புராணமே வரியசொன் மூலம்
உகந்த கத்தியம் உயாரும் பதவுரை
சேர்ந்தொளி செய்யுஞ் சிவநா லிதனை
முத்தமிழ் நாளுந் தத்தைக ளோம்பும்
அருட்பா திருப்புகழ்ப் பொருட்பா ஓதையும்
நலமணி ஓதியின் மலரணி பிணியும்
மலர்முக மணியணி நிலவெரி உமிழ்வும்
நீங்கா தொளிரும் பாங்குறு நாடு
செந்தமி ழரிவைமா தந்தவ நாடு
காவலர் போற்றுங் கூவலர் நாடு
அமிழ்தினும் இனிய தமனிய நாடு
செய்தவ மொன்றாய்த் திரண்ட உருவென
ஆன்றவர் குணமொடு தோன்றின னெவனோ
நாவலர் மாணவ னாரலை படிந்தே

உகந்திரு மொழிநீர் முகந்துருள் புடவி
அந்தமிழ்ப் பேரக ராதியுங் கூர்ம
புராண சிவகிரி புராண உரையும்
சைவ பூடண சந்திரி கையும்
குகபராக் கிரமமு மிகநூ லாக
உதவிய மழையெனும் உத்தம னவனே
செந்தமி ழணங்கின் சிந்தையி லென்றும்
தங்குந் தமிழொளித் துங்கவ னவனே
சாலி வாணிமா குலியைப் புரையும்
கற்புயர் கல்வி பொற்பருண் ஞானம்
கொண்டுமெய் யன்பிற் கோமகள் பேயார்
எனவே வளர்ந்து வனவே டச்சிதே
அத்தியை என்றும் புத்தியிற் போற்றும்
வடிவாம் பிகையெனும் வடிவினை மணந்தே
இல்லறம் ஏற்ற நல்லவ னவனே
தெய்வ 'வைதிக சைவசித் தாந்த
சண்டமா ருதப்'பேர் கொண்டநஞ் சோம
சுந்தர நாயன் சுந்தர னுயபின்
அவன்போற் செழித்தவன் சிவநெறி எவனே
நாஞ்சிவ மென்றே ஆஞ்சிடுங் கரிகள்
வீரிட வாட்டிப் பாரிடர் களைந்து
'மாயா வாத தும்சகோ ளரி'யெனும்
காந்திசேர் பட்டம் ஏந்தின னவனே
பின்னரும் அப்பெயர் மன்னவ ருறுதி
செய்திடப் பெற்ற மெய்யவ னவனே
மன்னவர் நீதி மன்றினி லேறிப்
பன்னிரு முறையே உன்னருட் பாவென்
றூணி பசுமரத் தறைந்தா லென்னக்
காட்டிச் சாத்திரம் நாட்டின னவனே
சிற்றம் பலத்தினும் மற்றத் தலத்தினும்
வளவ னடாத்திய வளமார் திருமுறை
விழாவை இந்நாள் வழாமல் நிகழ்த்தி
உண்மை அருட்பா வண்மையை முன்போல்
எங்கணும் பரப்பிய கங்கண னவனே
அருவி கண்களிற் பெருகிட அன்பே
உருவா யானந்தப் பெருவா ரிதியில்
திளைக்கவும் நேயர்கள் விளைவிலாக் கல்விப்
பண்டித ரீண்டிக் 'கண்டிலம் யாண்டும்
இவனிற் புலவரை இவனது சொல்விசை'

என்றிமை யோராய் நின்றிட ஒன்னார்
அகத்திற் புகழ்ந்து முகத்தைச் சுளிப்பத்
தன்னை மறந்துந் தானறி யாமல்
பிரசங்க மாரி பெய்தவ னவனே
தென்தமிழ் வளர்ந்த தொன்மது ராபுரிச்
சங்கப் புலவனாய்ச் சார்ந்தவ னவனே
நல்லிசைப் புலவர்முன் சொல்லிசைச் சதாவ
தானஞ் செய்த வானவ னவனே
அடக்கம் பொறையை நடக்கையிற் காட்டி
இல்லா ருள்ளா ரொல்லா ரொல்லுநர்
ஒக்கவே நோக்கி மிக்கவ னவனே
அக்க மணியரை ஒக்க வெனக்கொண்
டரியவ ரிகந்த பெரியவ னவனே
'நாடவர் பழித்துரை பூணா வாக'த்
துலக்கிய வாசக இலக்கிய னவனே
உலகை வென்ற உண்மைய னவனே
பற்றினர்க் கினிய பண்டித னவனே
எம்மைவிட் டகலாச் செம்மைய னவனே
நஞ்சபை கண்ட நாயக னவனே
**கதிரைவே** லென்றொரு மதுரப் பெயருடைத்
தவன னவனே அவனது ஞாபக
சின்னம தாகச் செய்தனம்
உரிமை உலகமும் உவந்திட இனிதே.

# உள்ளுறை

## சருக்கம்



## புராணம்

---

பாயிரம் - "உலகெலாம்" என்னும் முதற்பாட்டு விரிவுரை - பக்கம் கச - வரி கசு - 'வணங்குகின்றன' என்பதைக் 'கைகள் வணங்குகின்றன' என்று படிக்க.

உ

சிவமயம்

# திருமுறைகண்ட புராணம்

*கருமுறை விண்டடி யவருயு மாறருள் கவுணியர் குலதீபம்*
*தருமிறை நாவுக் கரசா ரூரர் தாஞ்சே மித்திடும்அத்*
*திருமுறை கண்ட புராண முரைக்கச் சிந்துர முகனற்றாள்*
*ஒருமுறை இருமுறை மும்முறை வாழ்த்தி உவந்தன் பொடுபணிவாம்.*

---

உலகமகிழ் தருசைய மீது தோன்றி ஓவாது வருபொன்னி சூழ்சோ ணாட்டின், திலகமென விளங்குமணி மாட ஆரூர்த் தியாகேசர் பதம்பணிந்து செங்கோ லோச்சி, அலகில்புகழ் பெறுராச ராச மன்னன் அபயகுல சேகரன்பால் எய்தும் அன்பர், இலகுமொரு மூவருள் பதிக மொன்றொன் றேஇனிதின் உரைசெய்ய அன்பாற் கேட்டு. க

கையிரண்டும் உச்சிமேல் ஏறக் கண்ணீர் கரைந்தோட மெய்ம்முழுதும் புளகம் போர்ப்ப, ஐயன்மலர்ப் பதமுளத்தே கொண்டு போற்றி அரியமுறை தேடஎங்கும் இலாமை யாலே, நையுமனத் தினனுகி இருக்குங் காலை நாரையூரினில்ஆதி சைவமறை யோன்பால், வையமெலாம் ஈடேறச் சைவம் வாழ மாமணிபோல் ஒருசிறுவன் வந்து தோன்றி. உ

வளமொடுப நயனவிதிச் சடங்கும் பூண்டு மறைமுதலாம் கலைபயின்று வருநாள் ஈன்ற, கிளர்மறையோன் ஒரூர்க்குச் செல்ல மைந்தன் கேடில்பிதா உரைத்தமொழிப் படியே அந்தி, இளமதிச்செஞ் சடைப்பொல்லாப் பிள்ளையாரை ஏத்திஆ ராதிப்பான் இனிதின் ஏகி, உளமலிஅன் பொடுதிருமஞ் சனமுன் னரும் உரியஎலாஞ் செய்துநிவே தனம்முன் வைத்து. ங

"எம்பெருமான்! அமுதுசெய வேண்டும்" என்ன இறைஞ்சிடவும் அமுதுசெயா திருப்பக் கண்டு, வெம்பியுளம் "ஏதேனுந் தவறிங் குண்டோ வேழமுகனே! அடியேன் நிவேதித் திட்ட, பம்பமுதம் உண்ணாத தென்னை" என்று பரிந்துதலை தனைமோதப் புகுங்கால் எம்மான், "நம்பிபொறு" எனத்தடுத்தவ் வமுத மெல்லாம் நன்கருந்த உவந்துநம்பி நவில்வ தானூர். ச

"எந்தையே! இனிஅடியேன் பள்ளிக் கேகில் எங்கள்தே சிகன்அடிப்பான் ஆத லாலே, சந்தமறை முதற்கலைகள் நீயே ஓதித் தரல்வேண்டும்" எனவேழ முகத்தோன் தானும், அந்தமற ஓதுவிக்க ஓதி நம்பி மகிழ்ந்தனன்அன் றதுபோல மற்றை நாளும், விந்தையொடு நிகழநம்பி யாண்டார் நம்பி மேவியிருந் திடுஞ்செய்தி வேந்தன் கேளா. ரு

"செல்வமிகு திருநாரை யூரில் மேவுஞ் சிவனளித்த மதகரிக்குச் சிந்தை கூர்ந்து, நல்லபுக முடையநம்பி யாண்டார் நம்பி நண்பினெடு நிவேதிப்பான் மதுர மிக்க, எல்லையில்வா ழைக்கனிதேன் அவலோ டப்பம் எள்ளுண்டை இவ்வுலகோர் எடுக்க" என்றே, மல்லல்மிகு சேனையுடன் இராச ராச மன்னவனும் அந்நகரில் வந்து சேர்ந்தான்.

ஆங்கதனுக் கந்நகரில் இடம்போ தாமல் அயல்சூழப் பதின்காத அகல எல்லை, மாங்கனிவா ழைக்கனிகள் வருக்கை யாவும் வந்தனஅவ் வெல்லையெலாம் மருவ வைத்துப், பாங்கினுடன் நம்பிதாள் பணிந்து மன்னன் பலகனிகள் கொணர்ந்தஎலாம் பகர்ந்து போற்றி, "ஈங்கிதனைப் பொல்லாத பிள்ளை யாருக் கிப்பொழுதே நிவேதிக்க" என்று சொன்னான். எ

நம்பிஅர சன்சொன்ன வார்த்தை கேளா "நன்றுனது பணி" என்ன அரு ளால் உன்னித், தும்பிமுகன் அடிபணிந்து " மன்னன் இங்குத் தொகுத்தனநீ அமுதுசெய வேண்டும்" என்னக், கம்பமதக் களிற்றுமுகத் தானும் அங்குக் கருத்தினுடன் நம்பியுரைக் கிசைந்து காட்ட, இம்பரினில் வந்தனநாற் சுத்தி செய்தே இருந்தஎலாம் படைக்கஅவன் ஏற்றல் செய்தான். அ

புகர்முகக்கை புறப்படவே படைத்த எல்லாம் புகுந்தஇடம் அறியாமற் போனபின்னை, அகநெகிழ மெய்யரும்பிக் கண்ணீர் வார நம்பிகழல் அன்பினால் அரசன் போற்றி, "மிகவும்ஒரு விண்ணப்பம் அடியேற் குண்டு வேதியனே! கேள்" என்று விளம்பு வான் "மெய்ப், புகழுதுசேர் மூவர்தமிழ்-தொண்டர் செய்தி பூதலத்தில் விளங்க" எனப் போற்றி நின்றான். கூ

அந்தஉரை கேட்டலும்அங் கரசன் தன்னை நம்பிமகிழ்ந் தருள்புரிவான் "அருள்சேர் மூவர், செந்தமிழ்கள் இருந்தஇடம் அன்ப ருள்ளோர் செய்திக்கவ் விநாயகன்தாள் சிந்தித் தெந்தாய்!, அந்தவகை ஏதென்று கேட்டால் எந்தை மகிழ்ந்தருளும் அந்நெறியை வழாது னக்குத், தந்திடுவன் மன்ன!பொறு" என்று சொல்லித் தந்திமுகன் சந்நிதியில் தாழ்ந்து சென்றான். ௧௦

சென்றுபணிந் திபமுகத்தோன் பாதப் போதைச் சென்னியில்வைத் தவனருளில் திளைத்துச் சிந்தை, ஒன்றுமற உருகிவிழி தாரை கொள்ள உண்மையினால் வந்தித்தங் குவாவோன் தன்னை, "இன்தமிழ்சேர் மூவர்தமிழ் இருந்த எல்லை - எல்லையில்சீர்த் திருத்தொண்டர் இயல்பு - மூர்த்தி !, நன்றும் அருள் செய்தருள வேண்டும்" என்ன நாகமுகன் நம்பிக்கு நவில லுற்றான். ௧௧

"வார்ந்தருட்கண் நீர்சொரிய நம்பி கேட்ப வண்தமிழ்கள் இருந்தஇடம் மன்று ளாடும், கூர்ந்தஇருட் கண்டர்புறக் கடையின் பாங்கர்க் கோலமலர்க் கைகள்அடை யாள மாகச், சார்ந்தன" என் றருள்செய்து தொண்டர் பேறும் சாற்றுதலால் சகதலத்தோர் அருளைச் சார, ஆர்ந்ததமிழ் இருந்தஇடம் - அன் பர் செய்தி அத்தனையும் நம்பிமனத் தருளிற் கொண்டார். ௧௨

கொண்டுகுல சேகரனுங் கோன்பால் வந்து குஞ்சரத்தோன் அருள்செய்த கொள்கை எல்லாம், மண்டுபெருங் காதலுடன் சொல்லி அந்த வண்தமிழின் பெருமைதனை வகுத்துச் சொல்வார், "கண்டபெரு மந்திரமே மூவர் பாடல் கைகாணு மந்திரங்கண் ணுதலோன் கூறல், எண்திசையுஞ் சிவனருளைப் பெறு தற் காக இம்மொழியின் பெருமையையான் இயம்பக் கேள்நீ." ௧௩

"சேடர்மலி காழிநகர் வேந்தர் தாமுந் தேவர்புகழ் திருத்தோணிச் சிவனார் பங்கில், பீடுடைய உமைமுலைப்பால் அருளால் உண்டு பிஞ்ஞகனைச் சின விடைமேல் பெருகக் கண்டு, 'தோடுடைய செவியன்' முதல் 'கல்லூர்' றென்னும் தொடைமுடிவாப் பரசமயத் தொகைகள் மாளப், பாடினார் பதிகங்கள் பாவில் ஒன்றும் பதினாறு யிரமுளதாப் பகரு மன்றே. ௧௪

திருநாவுக் கரையரெனும் செம்மை யாளர் தீஅமணர் சிறைநீங்க அதிகை மேவும், குருநாமப் பரஞ்சுடரைப் பாவிச் சூலை கொடுங்'கூற்றா யின' என்ன எடுத்

துக் கோதிலி, 'ஒருமானைத் தரிக்கு'மொரு வரையுங் காறும் ஒருநாற்பத் தொன் பதினு யிரம தாகப், பெருநாமப் புகலூரிற் பதிகங் கூறிப் பின்னுக ஞர் அடியிணைகள் பெற்று ளாரே. கரு

பின்புசில நாளின்கண் ஆரூர் நம்பி பிறங்குதிரு வெண்ணெய்நல்லூர்ப் 'பித்தா' என்னும், இன்பமுதல் திருப்பதிகம் 'ஊழி தோறும்' ஈறுய்முப் பத் தெண்ணு யிரம தாக, முன்புபுகன் றவர்நொடித்தான் மலையிற் சேர்ந்தார் முறைகளெல்லாந் திருத்தில்லை மூதூர் தன்னில், அன்றவர்கை இலச்சினை யால் வைத்தார் மன்ன! ஆராய்ந்து தருக" என அருளிச் செய்தார். கசு

"அருமறையைச் சிச்சிலிபண் டருந்தத் தேடும் அதுபோலன் றிதுஎன்றும் உளதாம் உண்மைப், பரபதமும் தற்பரமும் பரனே அன்றிப் பலரில்லை என் றெழுதும் பனுவல் பாரின், எரியினிடை வேவாதாற் றெதிரே யோடும் என் புக்கும் உயிர்கொடுக்கும் இடுகஞ் சாற்றும், கரியைவளை விக்குங்கல் மிதக்கப் பண்ணுங் கராமதலை கரையிலுறக் காற்றுங் காணே." கஎ

என்றென்று நம்பிக்குப் பரிவால் உண்மை இன்தமிழின் பெருமைதனை இயம்பக் கேட்டுக், குன்றொன்று பேருருவங் கொண்டாற் போலுங் குஞ்சரத் தோன் அருளினைஉட் கொண்டு மன்னன், மன்றினிடஞ் சென்றுமறை யோர்கள் தொண்டர் வார்சடையோர் காவலுடை மரபோர்க் கெல்லாம், "நன்றெங்கள் கணபதிதன் சொல்லி" தென்று நன்மையுடன் மன்னவனுர் நவிலுங் காலை. கஅ

அத்தகையோர் "தமிழ்வைத்த மூவர் வந்தால் அறைதிறக்கும்" என உரைக்க அரசன் தானும், மெய்த்தகுசீர் அம்பலவர்க் குற்ற செல்வ விழா எடுத்து விளம்புதமிழ் மூவர் தம்மை, உய்த்தணிவீ தியினிலுலா வருவித் தும்பர் நாயகன்றன் கோயில்வல மாக்கி புள்ளே, சித்தமெலாம் உருக்குதமிழ் இருக்கை சேரச் சேர்த்திஅவர் சேர்ந்ததெனச் செப்பி நின்முன். கக

ஐயர்நட மாடும்அம் பலத்தின் மேல்பால் அருள்பெற்ற மூவர்தம தருள் சேர் செய்ய, கையதுவே இலச்சினையாய் இருந்த காப்பைக் கண்டவர்கள் அதி சயிப்பக் கடைவாய் நீக்கிப், பொய்யுடையோர் அறிவுதனைப் புலன்கள் மூடும் போற்பதுபோல் போதமிகும் பாடல் தன்னை, நொய்யசிறு வன்மீகம் மூடக் கண்டு நொடிப்பளவி னிற்சிந்தை நொந்த வேந்தன். உ௦

பார்த்ததனைப் புறத்துய்ப்ப உரைத்து மேலே படிந்திருந்த மண்மலையைச் சேரத் தள்ளிச், சீர்த்ததில தயிலமலி கும்பங் கொண்டு செல்லுநனை யச் சொரிந்து திருவ டெல்லாம், ஆர்த்தஅரு ளதனுலே எடுத்து நோக்க அல கிலா ஏடுபழு தாகக் கண்டு, "தீர்த்தமுடிக் கணிபரனே பரனே" என்னச் சிந்தைதளர்ந் திருகண்ணீர் சோர நின்முன். உக

ஏந்துபுகழ் வளவனிவ்வா றன்பி னுலே இடர்க்கடலின் கரைகாணு தினை யுங் காலைச், சார்ந்தமலை மகள்கொழுநன் அருளால் "வேதச் சைவநெறித் தலைவ ரெனும் மூவர் பாடல், வேய்ந்தனபோல் மண்மூடச் செய்தே ஈண்டு வேண்டு வன வைத்தோம்" என் றுலகி லுள்ள, மாந்தரொடு மன்னவனுங் கேட்கு மாற் றுல் வானகத்தில் ஓரோசை எழுந்த தன்றே. உஉ

அந்தமொழி கேட்டலுமே மன்னன் தானும் ஆடினுன் பாடினுன் அலக் கண் யாவும், சிந்தினுன் அமுதமுண்டான் போல நெஞ்சந் தேறினுன் நம்பி

திரு வடியில் தாழ்ந்தான், "பந்தமறு சிவனடியார் கொள்க" என்றுப் பண்டாரந் திறந்துவிட்டான் பரிவு கூர்ந்தான், இந்தவகைப் பெருங்களிகொள் மன்னன் தானும் எழில்முறையை முன்போல வகுக்க எண்ணி. உரு

மன்னுதமிழ் விரகரெங்கள் காழி வேந்தர் வகுத்தருளால் அமைத்ததிரு முறைஓர் மூன்றும், அன்னவகை வாகீசர் முறைஓர் மூன்றும் ஆரூரர் உரைத்ததிரு முறைய தொன்றும், துன்னவகை ஏழாகத் தொகுத்துச் செய் தான் தூயமனு எழுகோடி என்ப துன்னித், தன்னிகரில் திருவருளால் மன் னன் தானுந் தாரணியோர் வீடுபெறுந் தன்மை சூழ்ந்தே. உச

## வேறு

பண்புற்ற திருஞான சம்பந்தர் பதிகமுந்நூற்
றெண்பத்தி நான்கினால் இலங்குதிரு முறைமூன்று
நண்புற்ற நாவரசர் மூந்நூற்றேழ் மூன்றினால்
வண்பெற்ற முறைஒன்று நூற்றினால் வன்தொண்டர். உரு

ஆகவளர் திருமுறைஏழ் அருட்டிருவா சகமொன்று
மோகமெறி திருவிசைப்பா மாலைமுறை யொன்றுசிவ
போகமிகு மந்திரமாம் முறையொன்று புகழ்பெறவே
பாகமிகுந் திருமுறைகள் பத்தாக வைத்தார்கள். உசு

வைத்ததற்பின் நம்பிகழல் மன்னர்பிரான் மகிழ்ந்திறைஞ்சிச்
"சித்திதரும் இறைமொழிந்த திருமுகப்பா சுரம்முதலாம்
உய்த்தபதி கங்களையும் ஒருமுறையாச் செய்க"எனப்
பத்திதருந் திருமுறைகள் பதினொன்றாப் பண்ணினார். உஎ

மந்திரங்கள் எழுகோடி ஆதலினால் மன்னுமவர்
இந்தவகை திருமுறைகள் ஏழாக எடுத்தமைத்துப்
பந்தமுறு மந்திரங்கள் பதினொன்றும் ஆதலினால்
அந்தமுறை நான்கினொடு முறைபதினொன் றாக்கினார். உஅ

ஆக்கியபின் திருத்தொண்டத் தொகைஅடைவை அருளாலே
நோக்கியபின் நாயன்மார் நடங்கடைவுந் தொழிற்பேறும்
பாக்கியத்தால் இபமுகத்தோன் அருள்செய்த பகுதியினால்
வாக்கியல்சேர் அந்தாதி நம்பிஅடை வேவகுத்தார். உகு

சீரருள்சேர் அறுபத்து மூவர்தனித் திருக்கூட்டம்
சாரும்அவர் ஒன்பானுந் தண்டமிழா னுரைசெய்து
பேரிசையாம் வகைஅடைவு புவியினிடைப் பெருமையினாற்
சீருலவு திருஎருக்கத் தம்புலியூர் சென்றடைந்தார். ௩0

சென்னியருள் நம்பிஇவர் அந்நகரைச் சேர்ந்துசிவன்
மன்னுதிருக் கோயிலினை வலங்கொண்டு பணிந்"தரனே
இன்னிசைதந் தருள்"என்ன இரக்கமுடன் குறைந்திரப்பக்
கன்னியொரு பங்குடையோன் அருள்செய்த கடனுரைப்பாம். ௩க

"நல்லிசையாழ்ப் பாணனார் நன்மரபின் வழிவந்த
வல்லிஒருத் திக்கிசைகள் வாய்ப்பஅளித் தோம்"என்று

சொல்லஅவள் தனைஅழைத்துச் சுருதிவழிப் பண்தழுவும்
நல்லிசையின் வழிகேட்டு நம்பிஇறை உள்மகிழ்ந்தார். ௩௨

"ஆங்கவளை அம்பலத்துள் ஆடுவார் திருமுன்பே
பாங்கினுடன் கொடுவந்து பண்ணடைவு பயில்பாடல்
ஓங்கருளால் முறைபணித்தற் கொக்கும்" என ஓரோசை
நீங்கரிய வானின்கண் நிகழஅர சன்கேட்டான். ௩௩

மன்னனுக்கும் நம்பிக்கும் மறையவர்மூ வாயிரவர்
பன்னரிய திருத்தொண்டர் பலதுறையோர்க் குங்கேட்க
இன்னருள்முன் வியந்துரைத்த இவள்முதலா இசைத்தஇசை
தென்னிலமேல் மிகத்தோன்றத் திருவருளால் தோன்றியதாம். ௩௪

சொல்நட்ட பாடைக்குத் தொகைஎட்டுக் கட்டளையாம்
இன்னிசையால் தருந்தக்க ராகத்தேழ் கட்டளையாம்
பன்னுபழந் தக்கரா கப்பண்ணின் மூன்றுளதாம்
உன்னரிய தக்கேசிக் கோரிரண்டு வருவித்தார். ௩௫

மேவுகுறிஞ் சிக்கஞ்சு வியாழக்குறிஞ் சிக்காறு
பாவுபுகழ் மேகரா கக்குறிஞ்சிப் பாலிரண்டு
தேவுவந்த இந்தளத்தின் செய்திக்கு நான்கினிய
தாவில்புகழ்க் காமரத்தின் தன்மைதனக் கிரண்டமைத்தார். ௩௬

காந்தார மாகியபி யந்தையாங் கட்டளைக்கு
வாய்ந்தவகை மூன்றாக்கி வன்னட்ட ராகத்திற்
கேய்ந்தவகை இரண்டாக்கிச் செவ்வழியொன் றாக்கிஇசைக்
காந்தார பஞ்சமத்தின் கட்டளைமூன் றாக்கினார். ௩௭

கொல்லிக்கு நாலாக்கிக் கவுசிகத்துக் கூறும்வகை
சொல்லிரண் டாக்கிமிகு தூங்கிசைநேர் பஞ்சமத்திற்
கொல்லையினில் ஒன்றாக்கிச் சாதாரிக் கொன்பதாப்
புல்லும்இசைப் புறநீர்மைக் கொன்றாகப் போற்றினார். ௩௮

அந்தாளிக் கொன்றாக்கி வாகீசர் அருந்தமிழின்
முந்தாய பலதமிழுக் கொன்றொன்றும் மொழிவித்து
நந்தாத நேரிசையாங் கொல்லிக்கு நாட்டிலிரண்
டுந்தாடுங் குறுந்தொகைக்கோர் கட்டளையா விரித்துரைத்தார். ௩௯

தாண்டகமாம் பாவுக்கோர் கட்டளையாத் தாபித்தங்
காண்டகையார் தடுத்தாண்ட ஐயர்அருள் தூய்மறைக்
கீண்டிசைசேர் இந்தளத்துக் கிரண்டாக எடுத்துரைத்து
நீண்டதக்க ராகத்துக் கிரண்டாக நிகழ்வித்தார். ௪௦

கூறரிய நட்டரா கத்திரண்டு கொல்லிக்கு
வேறுவகை மூன்றாக மிகுத்தபழம் பஞ்சுரத்துக்
கேறும்வகை இரண்டாக்கி இன்னிசைதேர் தக்கேசிப்
பேறிசைஆ றாக்கியதிற் காந்தாரம் பிரித்திரண்டாம். ௪௧

ஒன்றாகுங் காந்தார பஞ்சமத்துக் கோரிரண்டாம்
நன்றான சீர்நட்ட பாடைக்கு நவின்றுரைக்கில்

குன்றாத புறநீர்மைக் கிரண்டாகுங் கூறுமிசை
ஒன்றாகக் காமரத்துக் கொன்றாகப் போற்றினார். ௩௨

உற்றஇசைக் குறிஞ்சிக்கோர் இரண்டாக வகுத்தமைத்துப்
பற்றரிய செந்துருத்திக் கொன்றாக்கிக் கவுசிகப்பாற்
றுற்றஇசை இரண்டாக்கித் தூயஇசைப் பஞ்சமத்துக்
கற்றஇசை ஒன்றாக்கி அரனருளால் விரித்தமைத்தார். ௩௩

இந்தவகை சிவன்செவிப்பால் எக்கண்ணுந் தழைத்தோங்க
அந்தமிலா அறுபத்து மூவரருள் அம்புவிமேல்
நந்தியிட மும்மலமும் நல்லுலகோர் நீங்கியிடச்
சிந்தைஅருட் சிவமாகத் தெளிவித்தான் அருட்சென்னி. ௩௪

சீராருந் திருமுறைகள் கண்டதிறற் பார்த்திபனும்
ஏராரும் இறைவனையும் எழிலாரும் நம்பியையும்
ஆராத அன்பினுடன் அடிபணிந்தங் கருள்விரவச்
சோராத காதல்மிகுந் *திருத்தொண்டர் பதந்துதிப்பாம். ௩௫

ஆ திருவிருத்தம் ௩௫.

# திருப்பதிகக்கோவை

ஒன்றாதி ஒரெழுபத் தொன்றீறாய் மூவர்தமிழ்
சென்றார் சிவதலங்கள் செப்புதற்கு—நின்று
கடக்குஞ் சாமுகனோர் காய்விழியான் ஈன்ற
கடக்குஞ் சாமுகனே காப்பு.

பன்னுசிவ தலம்ஒருநூற் றைம்பதிற்று மூன்று பதிகம்ஒன்றாம் நாற்பத் தொன் பதுபதிகம் இரண்டாம்,உன்னும்இரு பதிற்றெட்டு நகர்பதிகம் மூன்றாம் ஒருபதினோர் தலம்பதிகம் ஒருநான்கென் றுணர்க, மன்னும்இரு நான்குதலம் ஓரைந்தே பதிகம் மற்றும்ஐந்து தலங்களுக்கு வருபதிகம் ஆறாம், பின்னும் ஐந்து வளநகர்க்குப் பெறும்பதிகம் ஏழாம் பேசும்ஒரு நான்குதலம் பெறும் பதிகம் எட்டே. க

பரவும்ஒரு நான்குதலம் பதினொன்றாம் பதிகம் பன்னும்இரு தலம்பதிகம் பன்னிரண்டாப் பகரும், உரைசெய்இரு தலம்பதிகம் பதினெட்டாம் இப்பால் ஒருமூன்று தலங்களுக்கிங் குறுபதிகம் உரைக்கின், நிரவிவரும் அறுநான்கு மூப்பதிற்று நான்கு நீடெழுபத் தொன்றாம்என நிரல்நிரையா மாகக், கருது சிவ தலம்இருநூற் றெழுபதிற்று நான்கு கடைகாப்போர் எழுநூற்று நாற்பதிற் றொன் பானே. உ

திருப்பழூர் சேய்ஞலூர் திருமுல்லை வாயில் திருவைகா கொடிமாடச் செங்குன்றூர் வியலூர், கருக்குடிதெங் கூர்பனந்தாள் கலிக்காமூர் தலைச்சங் காடுமயேந் திரப்பள்ளி கச்சினங்கன் றாப்பூர், குரக்குக்கா பெரும்புலியூர் திருக் காட்டுப் பள்ளி குடந்தைக்கீழ்க் கோட்டமொடு குடந்தைக்கா ரோணம்,எருக்கத்

* திருத்தொண்டர் புராணசாரம் பார்க்க.

தம் புலியூர்வெண் துறைகண்ணார் கோயில் இலம்பையங்கோட் டூர்சிக்கல் இரா
மனதீச் சரமே. ௩

பள்ளியின்முக் கூடல்திரு இரும்பூளை ஆவூர்ப் பசுபதீச் சரம்பாலைத்
துறைபரிதி நியமம், கள்ளில்குரங் கணின்முட்டம் திருமுருகன் பூண்டி கஞ்ச
னூர் கச்சிநெறிக் காரைக்கா டோத்தூர்,புள்ளமங்கை நாட்டியத்தான் குடிகலைய
நல்லூர் புக்கொளியூர் அவிநாசி பூவனூர் துறையூர்,கொள்ளிக்கா டிடைச்சுரம்அச்
சிறுபாக்கம் விளமர் கொட்டையூர் கொடுங்குன்றங் கூடலையாற் றூரே. ௪

நெல்வேலி திருவழுந்தூர் தருமபுரம் பயற்றூர் நெடுங்களம்வக் கரை
இரும்பை மாகாளம் வடுகூர், நெல்வெண்ணெய் வடகரைமாந் துறைதிருவிற்
கோலம் நீடூர்சக் கரப்பள்ளி அகத்தியான் பள்ளி, நெல்வாயில் பேணுபெருந்
துறைநாலூர் மயானம் நெல்லிக்கா விற்குடிவீ ரட்டமதி முற்றம், வல்லம்அறை
யணிநல்லூர் தலையாலங் காடு வாட்போக்கி திருநாவ லூர்மயிலாப் பூரே. ௫

திருவாரூர்ப் பரவையுண்மண் டளிசாத்த மங்கை சிற்றேமந் தெளிச்சேரி
திருவுசாத் தானம், கரவீரம் திருவாலம் பொழில்வெண்ணெய் நல்லூர் கச்சி
அனே கதங்காவ தங்கோடிக் குழகர், அரசிலிதென் குடித்திட்டை வடமுல்லை
வாயில் அம்பர்ப்பெருந் திருக்கோயில் வெண்பாக்கம் சுழியல், பெருமணம்இந்
திரநீல பருப்பதம்வேற் காடு பேரெயில்பாற் றுறைமூக்கிச் சரம்முண்டீச்
சரமே. ௬

பறியலூர் வீரட்டங் கானாட்டு முள்ளூர் பாதாளீச் சரம்எதிர்கொள் பாடி
வலி தாயம், சிறுகுடிகச் சூர்ஆலக் கோயில்கொள்ளம் பூதூர் திருப்புறவார்
பனங்காட்டூர் விளநகர்தண் டலைநீள், நெறிஅரதைப் பெரும்பாழி ஊறல்கரு
வூர்ஆ னிலைஇடும்பா வனங்கடுவாய்க் கரைப்புத்தூர் கடம்பந், துறைதிருவ டகந்
திருவஞ் சைக்களம்ஆ டானை சோபுரங்கற் குடிவடகு ரங்காடு துறையே. ௭

திருமாணி குழிவேட்டக் குடிதிருவாப் பாடி திருந்துதே வன்குடிமா
கறல்சத்தி முற்றம், திருவாப்ப னூர்மீயச் சூரவ்வூர் தன்னில் திகழ்ந்ததிரு
விளங்கோயில் வெஞ்சமாக் கூடல், பெருநீலக் குடிமண்ணிப் படிக்கரைநன்
னிலத்துப் பெருங்கோயில் திருநணா திருப்பட்டீச் சரமே, திருஈங்கோய் மலை
வன்பார்த் தான்பனங்காட் டூரே திருப்புகலூர் வர்த்தமா னேச்சரம்பாம்
புரமே. ௮

கடைமுடியே ஓணகாந் தன்தளிகோட் டூர்வை கன்மாடக் கோயில்இடை
யாறுபழை யாறை, வடதளிநற் றிணைநகரம் கோணமா மலைசீர் வன்னியூர்
கருவிலிஅ னேகதங்கா வதநல், இடம்மேவு கடிக்குளநல் திருக்களர்என் றிவை
கட் கிரும்பதிகம் ஒவ்வொன்றென் றிசைத்திடுக இப்பால்,குடவாயில் புனவாயில்
தூங்கானை மாடம் கோழம்பம் அவளிவணல் லூர்கோலக் காவே. ௯

குருகாவூர் திருவேள்விக் குடிவிசய மங்கை குற்றாலம் குடமூக்குக் கோட்
டாறு பனையூர், கருகாவூர் குரங்காடு துறையோமாம் புலியூர் கண்டியூர் வேதி
குடி கானூர்கோ கரணம், திருவாரூர் அரநெறியந் தணைநல்லூர் நல்லந் திருக்
கண்டீச் சரந்தேவூர் திருச்சிராப் பள்ளி, பெருவேளூர் கீழ்வேளூர் எறும்பியூர்
கானப் பேர்திருமங் கலக்குடிஆக் கூர்கோவ லூரே. ௧௰

திருப்பரங்குன் றந்திருப்பா திரிப்புலியூர் குறுக்கை திருப்புத்தூர் மணஞ்
சேரி பாச்சிலாச் சிராமம், கருப்பறிய லூர்கேதீச் சரந்திருக்கே தாரங் கச்சிமேற்
றளிமேலைத் திருக்காட்டுப் பள்ளி, அருத்தியுறு பட்டினத்துப் பல்லவனீச்

சரம்பேர் அன்பிலா லந்துறைப ராய்த்துறைவேட் களம்இங், குரைத்தசீர் அன்னியூர் இவ்விரண்டாம் பதிகம் உள்ளதலங் கடவூர்ம யானம்வாஞ் சியமே.

துருத்திதிரு நனிபள்ளி திருமருகல் திருப்பூந் துருத்திபுறம் பயங்கடவூர் புள்ளிருக்கு வேளூர், அரத்துறைவாழ் கொளிபுத்தூர் வான்மியூர் பாசூர் அம் பர்மா காளம்மயி லாடுதுறை வாய்மூர், திருக்கழுக்குன் றம்பாண்டிக் கொடு முடிரா மேசம் செங்காட்டங் குடிவெண்ணி திருச்செம்பொன் பள்ளி, பருப் பதம்புன் கூர்அரிசிற் கரைப்புத்தூர் சேறை பைஞ்ஞீலி கற்குடிமா மலைபதிகம் மூன்றே. கஉ

வலம்புரம்ஆ லங்காடு சிவபுரங்கா ளத்தி வலிவலஞ்சாய்க் காடுதிருக் கோ டிகா நகரம், நலந்திகழும் பூவணங்கோ ளிலிநின்றி யூரும் நறையூர்ச்சித் தீச் சரமும் நான்காகும் பதிகம், வலஞ்சுழிநல் லூர்பழனம் ஆமாத்தூர் அண்ணா மலை கடம்பூர் இன்னம்பர் நாரையூர் ஐந்தாம், நிலந்திகழ்நா கேச்சரம்மாற் பேறுமழ பாடி நெய்த்தானம் வெண்காடு நீள்பதிகம் ஆறே. கங

கயிலாயம் ஆனைக்கா நள்ளாறு நாகைக் காரோணம் திருச்சோற்றுத் துறை ஏழு புகலூர், வயலாருங் கழிப்பாலை ஒற்றியூர் திருவா வடுதுறைஎட் டாந்தில்லை மறைக்காடு மதுரை, இயலாரும் முதுகுன்றம் பதினொன்று கச்சி ஏகம்பம் இடைமருதீ ராறையா றதிகை, அயலீரொன் பான்வீழி ஆரூர்சீ காழி அறு நான்கும் முப்பானுன் கெழுபத்தொன் றுமே. கச

ஆ திருவிருத்தம் - கச.

---

# திருப்பதிக்கோவை

கோயில்திரு வேட்களம்நெல் வாயில்கழிப் பாலை குலவுபெரு மணமயேந் திரப்பள்ளி முல்லை, வாயில்கலிக் காமூர்சாய்க் காடுதிருப் பல்ல வனீச்சரம் வெண் காடுவளர் திருக்காட்டுப் பள்ளி, தாயிலான் குருகாவூர் காழிகோ லக்கா தருக்கிளர்புள் ளிருக்குவே ளூர்கண்ணார் கோயில், ஞாயில்இயற் கடைமுடியே நின்றியூர் புன்கூர் நாடியநீ டூர்அன்னி யூர்வேள்விக் குடியே.

கருதெதிர்கொள் பாடிமணஞ் சேரிதிருக் குறுக்கை கருப்பறிய லூர் கதியே காட்டுகுரக் குக்கா, மருவும்வாழ் கொளிபுத்தூர் மண்ணிப்படிக் கரையே வளரும்ஓ மாம்புலியூர் கானாட்டு முள்ளூர், திருநாரை யூர்கடம்பூர் பந்தணைநல் லூர்பொன் திகழ்கஞ்ச னூர்கோடி காமங்கலக் குடியே, திருப்பனந்தாள் ஆப் பாடி சேய்ஞலூர் திருந்து தேவன்குடி திருவியலூர் திருக்கோட்டை யூரே. உ

இன்னம்பர் திருப்புறம்ப யம்விசய மங்கை இயல்வைகா வூர்நல்வட குரங் காடு துறையே, பின்னமறு பழனம்ஐ யாறுநெய்த் தானம் பெரும்புலியூர் மழ பாடி திருப்பழுவூர் கானூர், அன்னஅன்பி லாலந்துறை மாந்துறைபாற் றுறையே ஆனைக்கா பைஞ்ஞீலி பாச்சிலாச் சிராமம், மன்னும்ஈங் கோய்மலையி ரேட்டு பான் மூன்றே வடகரையிற் பதிதென்பால் வாட்போக்கி யாமே. ங

கடம்பந்துறை திருப்பராய்த்துறை கற்குடிமூக் கீசங் கருதுதிருச் சிராப் பள்ளி திருஎறும்பி யூரே, நெடுங்களம்மே லைக்காட்டுப் பள்ளிஆலம் பொழில் சீர் நிகழ்திருப்பூந் துருத்திகண்டி யூர்சோற்றுத் துறைமால், அடும்வேதி குடி

தென்குடித் திட்டைபுள்ள மங்கை அணியார்சக் கரப்பள்ளி அருங்கருகா வூரே, படர்பாலைத் துறைநல்லூர் திருவாவூ ரதனில் பசுபதீச் சரஞ்சத்தி முற்றம்பட் டீச் சரமே. ௪

ஆறைவட தளிதிருவ லஞ்சுழியே குடமூக் கதனிற்கீழ்க் கோட்டங்கா ரோணம்நா கேசங், கூறும்இடை மருதுகுரங் காடுதுறை நீலக் குடிவைகன் மாடக்கோயில் நல்லங்கோ ழம்பஞ், சாறமரா வடுதுறைதண் துருத்திதிரு வழூந் தூர் சகம்புகழ்மா யூரம்விள நகர்பறிய லூரே, வீறுசெம்பொன் பள்ளிநனி பள்ளிவலம் புரமே வியன்தலைச்சங் காடாக்கூர் விளங்குகட வூரே. ௫

திருக்கடவூர் மயானமொடு திருவேட்டக் குடியே தெளிச்சேரி தருமபுரம் நள்ளாறு கோட்டா, றுரைக்கும்அம்பர்ப் பெருந்திருக் கோயில்மா காளம் உயர் மீயச் சூர்இளங்கோ யில்திலதைப் பதிபூ, மருக்கமழ்பாம் புரம்நற்சிறு குடிவீழி மிழலை வன்னியூர் கருவிலிமன் பேணுபெருந் துறையென், கருத்துடைக்கும் நறையூர்ச்சித் தீச்சரத்தோ டரிசிற் கரைப்புத்தூர் சிவபுரமும் கலையநல்லூர் காணே. ௬

கருக்குடிவாஞ் சியந்திருநன் னிலத்துப்பெருங் கோயில் கவின்கொண்டீச் சரம்பனையூர் விற்குடிதென் புகலூர், இருக்கும்வர்த்த மானேச்சரம் இராமன தீச் சரமே இயல்பயற்றூர் செங்காட்டங் குடிமருகல் இருளே, முருக்குதிருச் சாத்தமங்கை நாகைக்கா ரோணம் முன்திருச்சிக் கல்திருக்கீழ் வேளூர்தே வூரே, அரிக்கரியான் பள்ளியின்முக் கூடல்திரு வாரூர் அரனெறிமூ லட்டானம் பரவையுண்மண் டளியே. ௭

மேலாகும் விளமர்கர வீரம்பெரு வேளூர் மிளிர்தலைஆ லங்காடு குட வாயில் சேறை, நாலூர்ம யானங்கடு வாய்க்கரைப் புத்தூர் நவிலும்இரும் பூளை திரு வரதைப்பெரும் பாழி, மாலூரும் அவளிவணல் லூர்பரிதி நியமம் வாழ் வெண்ணி பூவனூர் பாதாளீச் சரநீர்ச், சேலூருந் திருக்களர்சிற் றேமம்உசாத் தானந் திருஇடும்பா வனத்தோடு சேர்ந்தகடிக் குளமே. ௮

தண்டலைநீ ணெறிகோட்டூர் வெண்துறையோ டழகே தருகொள்ளம் பூதூர்பேர் எயில்கொள்ளிக் காடு, கண்டருதெங் கூர்நெலிக்கா நாட்டியத்தான் குடியே காருயல் கன்றுப்பூர் வலிவலங்கச் சினத்தோ, டண்டர்பிரான் கோளி லிதென் திருவாய்மூர் மறைக்கா டகத்தியான் பள்ளிகோடிக் குழகருந்தென் கரையில்,எண்தருநூற் றிருபத்தேழ் இப்பாலீ ழத்தில் இசைகோண மாமலைகே தீச்சுரம்என் றிரண்டே. ௯

ஆலவாய் ஆப்பனூர் பரங்குன்றே டகத்தோ டருங்கொடுங்குன் றந்திருப் புத் தூர்புனவா யிலினோ, டேலும்இரா மேச்சரமா டானைகா னப்பேர் எழில் திருப்பூ வணஞ்சுழியல் இன்புறுகுற் றாலம், பாலமேலா சனன்திருநெல் வேலி யொடு பாண்டி பதினான்கு மலைநாட்டில் அஞ்சைக்களம் ஒன்றே, சீலமிகும் அவிநாசி திருமுருகன் பூண்டி திருநணு கொடிமாடச் செங்குன்றூர் தானே.

வெஞ்சமாக் கூடல்கொடு முடிகருவூர் கொங்கின் மேவும்எழ் அரத்துறை வண் தூங்கானை மாடம், எஞ்சலில்கூ டலையாற்றூர் எருக்கத்தம் புலியூர் இணை யகலுந் தினைநகர்சோ புரம்அதிகை புகழே, விஞ்சுதிரு நாவலூர் முதுகுன்றந் திருநெல் வெண்ணெய்திருக் கோவலூர் அறையணிநல் லூரே, மஞ்சுதிகழ் இடையாறு வெண்ணெய்நல்லூர் துறையூர் வடகூர்வீ டேஅருளுந் திருமாணி குழியே. ௧௧

தண்ணார்தண் டலைப்பாதி ரிப்புலியூர் முண்டீச் சரம்புறவார் பனங்காட்டூர் திருஆமாத் தூரே, எண்ணார்அண் ணாமலையும் நடுநாட்டில் இருபத் திரண்டா கும் இப்பாலவ கம்பம்மேற் றளிவிண், கண்ணேங்கு மதில்ஓண காந்தன்ற ளி அனே கதங்காவ தங்கச்சி நெறிக்காரைக் காடே, உள்ளாடு குரங்கணின்முட் டந் திருமா கறல்ஒத் தூர்வன்பார்த் தான்பனங்காட் டூர்வல்லம்மாற் பேறே. கஉ

ஊறல்இலம் பையங்கோட்டூர் விற்கோலம் ஆலங்கா டியர்பாசூர் வெண் பாக்கம் கள்ளில்கா ளத்தி, மாறில்திரு ஒற்றியூர் வலிதாயம் பாலி வடமுல்லை வாயில்வேற் காடுதிரு மயிலை, ஈறில்திரு வான்மியூர் கச்சூர்ஆ லக்கோயில் இடைச்சுரங் கழுக்குன்றம் அச்சிறுபாக் கம்மே, மாறில்திரு வக்கரையே அர சிலிதொல் விரும்பை மாகாளந் தொண்டைநன்னாட் டெண்ணின்முப்பான் இரண்டே. கங

கோகரணந் துளுவதே யத்தில்ஒன்றே இப்பால் குலவுபருப் பதநீல பருப்பதம்அம் பிகைதன், பாகர்உறை அனேகதங்கா வதந்திருக்கே தாரம் பகர் கொடித்தான் மலைவடக்கிற் பதிஐந்தே இவற்றோ, டாகஇரு நூற்றெழுபான் நான்கென்பர் மூவர் அருட்பதிகம் இருக்குமூர் அதிகமாம் வைப்புத், தாக முடன் நினைப்போர்க்கும் துதிப்போர்க்கும் வினைகள் சாராவாம் பிறப்பகலுஞ் சத்தியம்முத் தியுமே. கச

ஆ திருவிருத்தம் - கச.

நம்பியாண்டார் நம்பி அருளிய

# திருத்தொண்டர் திருவந்தாதி

### தில்லைவாழ் அந்தணர்

செப்பத் தகுபுகழ்த் தில்லைப் பதியில் செழுமறையோர்
ஒப்பப் புவனங்கள் மூன்றினும் உம்பரின் ஊர்எரித்த
அப்பர்க் கமுதத் திருநடர்க் கந்திப் பிறையணிந்த
துப்பர்க் குரிமைத் தொழில்புரி வோர்தமைச் சொல்லுதுமே. க

### திருநீலகண்ட நாயனார்

சொல்லச் சிவன்திரு ஆணைதன் தூமொழி தோள்*நசையை
ஒல்லைத் துறந்துரு மூத்ததற் பின்னுமை கோனருளால்
வில்லைப் புரைநுத லாளொடி ளமைபெற் றின்பமிக்கான்
தில்லைத் திருநீல கண்டக் குயவனுஞ் செய்தவனே. உ

### இயற்பகை நாயனார்

செய்தவர் வேண்டியதி யாதுங் கொடுப்பச் சிவன்தவனாய்க்
கைதவம் பேசிநின் காதலி யைத்தரு கென்றலுமே
மைதிகழ் கண்ணியை ஈந்தவன் வாய்ந்த பெரும்புகழ்வந்
தெய்திய காவிரிப் பூம்பட் டினத்துள் இயற்பகையே. ங.

பா - ம்—*நசையால்.

## இளையான்குடிமாற நாயனார்

*இயலா விடைச்சென்ற மாதவர்க் கின்னமு தாவிதைத்த*
*வயலார் முளைவித்து வாரி மனையலக் கால்வறுத்துச்*
*செயலார் பயிர்விழுத் தீங்கறி யாக்கு மவன்செழுநீர்க்*
*கயலார் இளையான் குடியுடை மாறனெங் கற்பகமே.* ௪

## மெய்ப்பொருள் நாயனார்

*கற்றநன் மெய்த்தவன் போலொரு பொய்த்தவன் காய்சினத்தால்*
*செற்றவன் தன்னை அவனைச் செறப்புக லுந்திருவாய்*
*மற்றவன் தத்தா நமரே எனச்சொல்லி வானுலகம்*
*பெற்றவன் சேதியன் மெய்ப்பொரு ளாமென்று பேசுவரே.* ௫

## விறன்மிண்ட நாயனார்

*பேசும் பெருமையவ் வாரூ ரனையும் பிரானவனும்*
*ஈசன் தனையும் புறகுதட் டென்றவன் ஈசனுக்கே*
*நேசன் எனக்கும் பிரான்மனைக் கேபுக நீடுதென்றல்*
*வீசும் பொழிற்றிருச் செங்குன்ற மேய விறன்மிண்டனே.* ௬

## அமர்நீதி நாயனார்

*மிண்டும் பொழிற்பழை யாறை அமர்நீதி வெண்பொடியின்*
*முண்டந் தரித்த பிராற்குநல் லூரின்முன் கோவணநேர்*
*கொண்டிங் கருளென்று தன்பெருஞ் செல்வமுந் தன்னையுந்தன்*
*துண்ட மதிநுத லாளையும் ஈந்த தொழிலினனே.* ௭

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்

*தொழுதும் வணங்கியும் மாலயன் தேடருஞ் சோதிசென்றுங்*
*கெழுதுந் *தமிழ்ப்பழ ஆவணங் காட்டி எனக்குன்குடி*
*முழுதும் அடிமைவந் தாட்செய் எனப்பெற்ற வன்முரல்தேன்*
*ஒழுகும் மலரினற் றூர்எம் பிரான்நம்பி யாரூரனே.* ௮

## எறிபத்த நாயனார்

*ஊர்மதில் மூன்றட்ட உத்தமர்க் கென்றோர் உயர்தவத்தோன்*
*தார்மலர் கொய்யா வருபவன் †தண்டின் மலர்பறித்த*
*ஊர்மலை மேற்கொளும் பாகர் உடல்துணி யாக்குமவன்*
*‡ஏர்மலி மாமதில் சூழ்கரு வூரி லெறிபத்தனே.* ௯

## ஏனாதிநாத நாயனார்

*பத்தனை ஏனாதி நாதனைப் பார்§நீ டெயினை தன்னுள்*
*அத்தனைத் தன்னோ டமர்மலைந் தான்நெற்றி நீறுகண்டு*
*கைத்தனி வாள்வீ டொழிந்தவன் கண்டிப்ப நின்றருளும்*
*நித்தனை ஈழக் குலதீபன் என்பரிந் நீணிலத்தே.* ௧௦

## கண்ணப்ப நாயனார்

*நிலத்தில் திகழ்திருக் காளத்தி யார்திரு நெற்றியின்மேல்*
*நலத்திற் பொழிதரு கண்ணிற் குருதிகண் டுள்நடுங்கி*

பா - ம்—*இதழ். †அங்கை. ‡ஏர்மலியும் மதில். §நீடெயினி.

வலத்திற் கடுக்கணை யால்தன் மலர்க்கண் இடந்தப்பினன்
குலத்திற் கிராதனங் கண்ணப்ப னென்று கூறுவரே. கக

## குங்குலியக்கலய நாயனார்

ஏய்ந்த கயிறுதன் கண்டத்திற் பூட்டி எழிற்பனந்தாள்
சாய்ந்த சிவனிலைத் தானென்பர் காதலி தாலிகொடுத்
தாய்ந்தநற் குங்குலி யங்கொண்ட னற்புகை காலனைமுன்
காய்ந்த அரற்கிட்ட தென்கட வூரிற் கலயனையே. கஉ

## மானக்கஞ்சாற நாயனார்

கலச முலைக்கன்னி காதற் புதல்வி கமழ்குழலை
நலசெய் தவத்தவன் பஞ்ச வடிக்கிவை நல்கெனலும்
அலசும் எனக்கரு தாதவள் கூந்தல் அரிந்தளித்தான்
மலைசெய் மதிற்கஞ்சை மானக்கஞ் சாற னெனும்வள்ளலே. கங

## அரிவாட்டாய நாயனார்

வள்ளற் பிராற்கமு தேந்தி வருவோ னுகலுமிங்கே
வெள்ளச் சடையாய்! அமுதுசெய் யாவிடில் என்தலையைத்
தள்ளத் தகுமென்று வாள்பூட் டியதடங் கையினன்காண்
அள்ளற் பழனக் கணமங் கலத்தரி வாட்டாயனே. கச

## ஆனாய நாயனார்

தூயவன் *யாவுக்குந் தாழ்சடை மேல்தனித் திங்கள்வைத்த
தாயவன் பாதந் தொடர்ந்துதொல் சீர்துளை யாற்பரவும்
வேயவன் மேல்மழ நாட்டு விரிபுனல் மங்கலக்கோன்
ஆயவன் ஆனயன் என்னையு வந்தாண் டருளினனே. கரு

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்

அருட்டுறை அத்தர்க் கடிமைப்பட் டேன்இனி அல்லனென்னும்
பொருட்டுறை யாவதென் னேஎன்ன வல்லவன் பூங்குவளை
இருட்டுறை நீர்வயல் நாவற் பதிக்குப் பிரான்அடைந்தோர்
மருட்டுறை நீக்கிநல் வான்வழி காட்டிட வல்லவனே. கசு

## மூர்த்தி நாயனார்

அவந்திரி குண்டம ணவதின் மாள்வன்என் றன்றாலவாய்ச்
சிவன்திரு மேனிக்குச் செஞ்சந் தனமாச் செழுமுழங்கை
உவந்தொளிர் பாறையில் தேய்த்துல காண்டஒண் மூர்த்திதன்னூர்
நிவந்தபொன் மாட மதுரா புரிஎன்னு நீள்பதியே. கஎ

## முருக நாயனார்

பதிகந் திகழ்தரு பஞ்சாக் கரம்பயில் நாவினன்சீர்
மதியஞ் சடையார்க் கலர்தொட் டணிபவன் யான்மகிழ்ந்து
துதியுங் கழற்சண்பை நாதற்குத் தோழன்வன் தொண்டனம்பொன்
அதிகம் பெறும்புக லூர்முரு கன்எனும் அந்தணனே. கஅ

பா - ம்—*யாவர்க்குந்.

### உருத்திரபசுபதி நாயனார்

அந்தாழ் புனல்விடை அல்லும் பகலும்நின் றுதரத்தால்
உந்தாத அன்பொ டுருத்திரஞ் சொல்லிக் கருத்தமைந்த
பைந்தார் உருத்ர பசுபதி தன்னற் பதிவயற்கே
நந்தார் திருத்தலை யூரென் றுரைப்பரிந் நானிலத்தே. ௧௯

### திருநாளைப்போவார் நாயனார்

நாவார் புகழ்த்தில்லை அம்பலத் தானருள் பெற்றுநாளைப்
போவா னவனும் புறத்திருத் தொண்டன்றன் புன்புலைபோய்
மூவா யிரவர்கை கூப்ப முனியாய வன்பதிதான்
மாவார் பொழில்திகழ் ஆதனூர் என்பரிம் மண்டலத்தே. ௨௦

### திருக்குறிப்புத்தொண்ட நாயனார்

மண்டும் புனற்சடை யான்தமர் தூசெற்றி வாட்டும்வகை
விண்டு மழைமுகில் †வீடா தொழியின்யான் வீவனென்று
மிண்டும் படர்பாறை முட்டும் எழிலார் திருக்குறிப்புத்
தொண்டன் குலங்கச்சி ஏகா லியர்தங்கள் தொல்குலமே. ௨௧

### சண்டேசுர நாயனார்

குலமே றியசேய்ஞ லூரிற் குரிசில் குரைகடல்சூழ்
தலமே றியவிறற் சண்டிகண் டீர்தந்தை தாளிரண்டும்
வலமே றியமழு வால்எறிந் தீசன் மணிமுடிமேல்
நலமே றியபால் சொரிந்தலர் சூட்டிய நன்னிதியே. ௨௨

### சுந்தரமூர்த்தி சுவாமிகள்

நிதியார் துருத்திதென் வேள்விக் குடியாய்! நினைமறந்த
மதியேற் கறிகுறி ‡வைத்துப் புகர்பின்னை மாற்றிடென் று
துதியா அருள்சொன்ன வாறறி வாரிடைப் பெற்றவன்காண்
நதியார் புனல்வயல் நாவலர் கோனென்னு நற்றவனே. ௨௩

### திருநாவுக்கரசு சுவாமிகள்

நற்றவன் நல்லூர்ச் சிவன்திருப் பாதந்தன் சென்னிவைக்கப்
பெற்றவன் மற்றிப் பிறப்பற வீரட்டர் பெய்கழற்றாள்
உற்றவன் உற்ற விடமடை யாரிட ஒள்ளமுதாத்
துற்றவ னாமூரில் நாவுக் கரசெனுந் தூமணியே. ௨௪

மணியினை மாமறைக் காட்டு மருந்தினை வண்மொழியால்
திணியன நீள்கத வந்திறப் பித்தன தெண்கடலில்
பிணியன §கல்மிதப் பித்தன சைவப் பெருநெறிக்கே
அணியன நாவுக் கரையர்பி ரான்ற னருந்தமிழே. ௨௫

### குலச்சிறை நாயனார்

அருந்தமி ழாகரன் வாதில் அமணைக் கழுநுதிமேல்
இருந்தமிழ் நாட்டிடை ஏற்றுவித் தோன்எழிற் சங்கம்வைத்த

பா - ம்—*புனல்தன்னில். †வீடா தொழிந்திடில். ‡வைத்த. §வன்கல் மிதப்பித்த.

பெருந்தமிழ் மீனவன் தன்னதி காரி பிரசமல்கு
குருந்தவிழ் சாரல் மணமேற் குடிமன் குலச்சிறையே. உக

## பெருமிழலைக்குறும்ப நாயனார்

சிறைநன் புனல்திரு நாவலூ ராளி செழுங்கயிலைக்
கிறைநன் கழல்நாளை எய்தும் இவனருள் போற்றஇன்றே
பிறைநன் முடியன் அடியடை வேன்என் றுடல்பிரிந்தான்
நறைநன் மலர்த்தார் மிழலைக் குறும்பன் எனுநம்பியே. உஎ

## காரைக்காலம்மையார்

நம்பன் திருமலை நான்மிதி யேனென்று தாளிரண்டும்
உம்பர் மிசைத்தலை யால்நடந் தேற உமைநகலும்
செம்பொன் னுருவன்என் னம்மை எனப்பெற் றவள்செழுந்தேன்
கொம்பி னுகுகாரைக் காலினில் மேய குலதனமே. உஅ

## அப்பூதியடிகள்

தனமா வதுதிரு நாவுக் கரசின் சரணமென்று
மனமார் புனற்பந்தர் வாழ்த்திவைத் தாங்கவன் வண்தமிழ்க்கே
இனமாத் தனது பெயரிடப் பெற்றவன் எங்கள்பிரான்
அனமார் வயல்திங்க ளூரினில் வேதியன் அப்பூதியே. உகூ

## திருநீலநக்க நாயனார்

பூதிப் புயத்தர் புயத்திற் *சிலந்தி புகலுமஞ்சி
ஊதித் துமிந்த மனைவியை நீப்பவுப் பாலவெல்லாம்
பேதித் தெழுந்தன காணென்று பிஞ்ஞகன் காட்டுமவன்
நீதித் திகழ்சாத்தை நீலநக் கன்னெனும் வேதியனே. ௩0

## நமிநந்தியடிகள்

வேத மறிக்காரத் தாரூர் அரற்கு விளக்குநெய்யைத்
தீது செறிஅமண் கையரட் டாவிடத் தெண்புனலால்
ஏதம் உறுக அருகரொன் றன்று விளக்கெரித்தான்
நாதன் எழிலேமப் பேறூர் அதிபன் நமிநந்தியே. ௩க

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்

நந்திக்கு நம்பெரு மாற்குநல் லாரூரில் நாயகற்குப்
பந்திப் பரியன செந்தமிழ் †பாடிப் படர்புனலின்
சிந்திப் பரியன ‡சேவடி பெற்றவன் சேவடியே
வந்திப் பவன்பெயர் வன்தொண்டன் என்பரிவ் வையகத்தே. ௩உ

## திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்

வைய மகிழயாம் வாழ அமணர் வலிதொலைய
ஐயன் பிரம புரத்தரற் கம்மென் குதலைச்செவ்வாய்
பைய மிழற்றும் பருவத்துப் பாடப் பருப்பதத்தின்
தையல் அருள்பெற் றனனென்பர் ஞானசம் பந்தனையே. ௩௩

பா - ம்—*சிலம்பி. †பாடப். ‡செல்படி.

பந்தார் விரலியர் வேள்செங்கட் சோழன் முருகனல்ல
சந்தா ரகலத்து நீலநக் கன்பெயர் தான்மொழிந்து
கொந்தார் சடையர் பதிகத்தில் இட்டடி யேன்கொடுத்த
அந்தாதி கொண்ட பிரானருட் காழியர் கொற்றவனே. ருச

## ஏயர்கோன்கலிக்காம நாயனார்

கோற்றத் திறலெந்தை தந்தைதன் தந்தைஎங் கூட்டமெல்லாம்
தெற்றச் சடையாய் நினதடி யேந்திகழ் வன்தொண்டனே
மற்றிப் பிணிதவிர்ப் பானென் றுடைவா ளுருவிஅந்நோய்
செற்றுத் தவிர்கலிக் காமன் குடிஏயர் சீர்க்குடியே. ருரு

## திருமூல நாயனார்

குடிமன்னு சாத்தனூர்க் கோக்குலம் மேய்ப்போன் குரம்பைபுக்கு
முடிமன்னு கூனற் பிறையாளன் தன்னை முழுத்தமிழின்
படிமன்னு வேதத்தின் சொற்படி யேபர விட்டெனுச்சி
அடிமன்ன வைத்த பிரான்மூல னாகின்ற அங்கணனே. ருசு

## தண்டியடிகள்

கண்ணார் மணியொன்று மின்றிக் கயிறு பிடித்தாற்குத்
தண்ணார் புனல்தடந் தொட்டலுந் தன்னை நகும்அமணர்
கண்ணாங் கிழப்ப அமணர் கலக்கங்கண் டம்மலர்க்கண்
விண்ணா யகனிடைப் பெற்றவன் ஆரூர் விறற்றண்டியே . ருஎ

## மூர்க்க நாயனார்

தண்டலை சூழ்திரு வேற்காட் டேர்மன்னன் தருகவற்றால்
கொண்டவல் லாயம்வன் சூதரை வென்றுமுன் கொண்டபொருள்
முண்டநன் னீற்றன் அடியவர்க் கீபவன் மூர்க்கனென்பர்
நண்டலை நீரொண் குடந்தையின் மேவுநற் சூதனையே. ருஅ

## சோமாசிமாற நாயனார்

சூதப் பொழிலம்பர் அந்தணன் சோமாசி மாறனென்பான்
வேதப் பொருள்அஞ் செழுத்தும் விளம்பியல் லால்மொழியான்
நீதிப் பரன்மன்னு நித்த நியமன் பரவைஎன்னும்
*மாதுக்குக் காந்தன் வன்தொண்டன் தனக்கு மகிழ்துணையே. ருகூ

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்

துணையும் அளவும்இல் லாதவன் தன்னரு ளேதுணையாக்
கணையுங் கதிர்நெடு வேலுங் கறுத்த கயலிணையும்
பிணையும் நிகர்த்தகண் சங்கிலி பேர்அமைத் தோள்இரண்டும்
அணையு மவன்திரு ஆரூ ரனாகின்ற அற்புதனே. சo

## சாக்கிய நாயனார்

தகடன ஆடையன் சாக்கியன் மாக்கற் றடவரையின்
மகடனந் தாக்கக் குழைந்ததிண் தோளர்வண் கம்பர்செம்பொன்

பா - ம்—*மாதுக் குகந்தான்.

திகழ்தரு மேனியிற் செங்க லெறிந்து சிவபுரத்துப்
புகழ்தரப் புக்கவன் ஊர்சங்க மங்கை புவனியிலே. ௬௧

### சிறப்புலி நாயனூர்

புவனியில் பூதியுஞ் சாதன மும்பொலி வார்ந்துவந்த
தவநிய மர்க்குச் சிறப்புச்செய் தத்துவ காரணனும்
அவனியிற் கீர்த்தித் தென்னூக்கூர் அதிபன் அருமறையோன்
சிவனிய மந்தலை நின்றதொல் சீர்நஞ் சிறப்புலியே. ௬௨

### சிறுத்தொண்ட நாயனூர்

புலியின் அதளுடைப் புண்ணியற் கின்னமு தாத்தனதோர்
ஒலியின் சதங்கைக் குதலைப் புதல்வன் உடல்துணித்துக்
கலியின் வலிகெடுத் தோங்கும் புகழ்ச்சிறுத் தொண்டன்கண்டீர்
மலியும் பொழிலொண் செங்காட்டங் குடியவர் மன்னவனே. ௬௩

### கழறிற்றறிவார் நாயனூர்

மன்னர் பிரானெதிர் வண்ணூ னுடலுவர் *ஊறிநீறூர்
தன்னர் பிரான்தமர் போல வருதலுந் தான்வணங்க
என்ன பிரான்அடி வண்ணூன் எனஅடிச் சேரனென்னும்
தென்னர் பிரான்கழ றிற்றறி வானெனுஞ் சேரலனே. ௬௪

சேரற்குத் தென்னூ வலர்பெரு மாற்குச் சிவனளித்த
பாரக் கடகரி முன்புதன் பந்தி இவுளிவைத்த
வீரற்கு வென்றிக் கருப்புவில் வீரனை வெற்றிகொண்ட
சூரற் கெனதுள்ளம் நன்றுசெய் தாய்இன்று †தொண்டுபட்டே. ௬௫

### கணநாத நாயனூர்

தொண்டரை யாக்கி அவரவர்க் கேற்ற தொழில்கள்செய்வித்
தண்டர்தங் கோனக் கணத்துக்கு நாயகம் பெற்றவன்காண்
கொண்டல்கொண் டேறிய மின்னுக்குக் கோல மடல்கள்தொறும்
கண்டல்வெண் சோறளிக் குங்கடற் காழிக் கணநாதனே. ௬௬

### கூற்றுவ நாயனூர்

நாதன் திருவடி யேமுடி யாகக் கவித்துநல்ல
போதங் கருத்திற் பொறித்தமை யாலது கைகொடுப்ப
ஓதந் தழுவிய ஞாலமெல் லாம்ஒரு கோலின்வைத்தான்
கோதை நெடுவேற் களப்பாள னூகிய கூற்றுவனே. ௬௭

### சுந்தரமூர்த்தி சுவாமிகள்

கூற்றுக் கெவனோ புகல்திரு வாரூரன் பொன்முடிமேல்
ஏற்றுத் தொடையலும் இன்னடைக் காயும் இடுதருமக்
கோற்றூத்து கூனனும் கூன்போய்க் குருடனும் கண்பெற்றமை
சாற்றித் திரியும் பழமொழி யாமித் தரணியிலே. ௬௮

பா - ம்—*ஊறிய நீற் - றன்ன. †தொன்றுபட்டே.

### பொய்யடிமைஇல்லாத புலவர்

தரணியிற் பொய்ம்மை இலாத்தமிழ்ச் சங்க மதிற்கபிலர்
பரணர்நக் கீரர் முதல்நாற்பத் தொன்பது பல்புலவோர்
அருள்நமக் கீயுந் திருவால வாய்அரன் சேவடிக்கே
பொருளமைத் தின்பக் கவிபல பாடும் புலவர்களே. ௪௯

### புகழ்ச்சோழ நாயனார்

புலமன் னியமன்னைச் சிங்கள நாடு பொடிபடுத்த
குலமன் னியபுகழ்க் கோகன நாதன் குலமுதலோன்
நலமன் னியபுகழ்ச் சோழன தென்பர் நருசுடர்வாள்
வலமன் 'னியஎறி பத்தனுக் கீந்ததோர் வண்புகழே. ௫௦

### நரசிங்கமுனையரைய நாயனார்

புகழும் படிஎம் பரமே தவர்க்குநல் பொன்னிடுவோன்
இகழும் படியோர் தவன்மட வார்புனை கோலமெங்கும்
*திகழும் படிகண் டவனுக் கிரட்டிப்†பொன் னிட்டவன்நீள்
திகழும் முடிநர சிங்க முனையர சன்திறமே. ௫௧

### அதிபத்த நாயனார்

திறமமர் மீன்படுக் கும்பொழு தாங்கொரு மீன்சிவற்கென்
றுறவமர் மாகடற் கேவிடு வோனொரு நாட்கனக
நிறமமர் மீன்பட நின்மலற் கென்றுவிட் டோன்கமலம்
புறமமர் நாகை அதிபத்த னாகிய பொய்யிலியே. ௫௨

### கலிக்கம்ப நாயனார்

பொய்யைக் கடிந்துநம் புண்ணியர்க் காட்பட்டுத் தன்னடியான்
சைவத் திருவுரு வாய்வரத் தானவன் தாள்கழுவ
வையத் தவர்முன்பு வெள்கிநீர் வாரா விடமனைவி
கையைத் தடிந்தவன் பெண்ணை கடந்துக் கலிக்கம்பனே. ௫௩

### கலிய நாயனார்

கம்பக் கரிக்கும் சிலந்திக்கும் நல்கிய கண்ணுதலோன்
உம்பர்க்கு நாதற் கொளிவிளக் கேற்றற் குடலிலனாய்க்
கும்பத் தயிலம்விற் றுஞ்செக் குழன்றுங்கொள் கூலியினால்
நம்பற் கெரித்த கலியொற்றி மாநகர்ச் சக்கிரியே. ௫௪

### சத்தி நாயனார்

கிரிவில் லவர்தம் அடியரைத் தன்முன்பு கீழ்மைசொன்ன
திருவில் லவரைஅந் நாவரி வோன்திருந் தாரைவெல்லும்
வரிவில் லவன்வயற் செங்கழு நீரின் மருவுதென்றல்
தெருவில் விரைகம ழும்தென் வரிஞ்சைத் திகழ்சத்தியே. ௫௫

### ஐயடிகள்காடவர்கோன் நாயனார்

சத்தித் தடக்கைக் குமரன்நற் றாதைதன் தானமெல்லாம்
முத்திப் பதம்ஒரோர் வெண்பா மொழிந்து முடியரசாம்
அத்திற்கு மும்மைநன் றூலறக் காவையம் ஏற்றவென்னும்
பத்திக் கடல்ஐ யடிகளா கின்றநம் பல்லவனே. ௫௬

பா - ம்—*திகழும் படிகண் டவற்கன் றிரட்டிப்பொன் னிட்டவனி.

### சுந்தரமூர்த்தி சுவாமிகள்

பல்லவை செங்கதி ரோனைப் பறித்தவன் பாதம்புகழ்
சொல்லவன் தென்புக லூர்அரன் பால்துய்ய செம்பொன்கொள்ள
வல்லவன்! நாட்டியத் தான்குடி மாணிக்க வண்ணனுக்கு
நல்லவன் தன்பதி நாவலூ ராகின்ற நன்னகரே. ௫எ

### கணம்புல்ல நாயனார்

நன்னக ராய இருக்குவே ளூர்தனில் நல்குரவாய்ப்
பொன்னக ராயநற் றில்லை புகுந்து புலீச்சரத்து
மன்னவ ராய அரற்குநற் புல்லால் விளக்கெரித்தான்
கன்னவில் தோளெந்தை தந்தை பிரானெங் கணம்புல்லனே. ௫அ

### காரி நாயனார்

புல்லன வாகா வகையுல கத்துப் புணர்ந்தனவும்
சொல்லின வுந்நய மாக்கிச் சுடர்பொற் குவடுதனி
வில்லனை வாழ்த்தி விளங்குங் கயிலைபுக் கானென்பரால்
*கல்லின மாமதில் சூழ்கட வூரினில் காரியையே. ௫௯

### நின்றசீர்நெடுமாற நாயனார்

கார்த்தண் முகிற்கைக் கடற்கா ழியர்பெரு மாற்கெதிராய்
ஆர்த்த அமணர் அழிந்தது கண்டுமற் றுங்கவரைக்
கூர்த்த கழுவின் நுதிவைத்த பஞ்சவன் என்றுரைக்கும்
வார்த்தை அதுபண்டு நெல்வேலி யில்வென்ற மாறனுக்கே. ௬0

### வாயிலார் நாயனார்

மாறா அருளரன் தன்னை மனஆ லயத்திருத்தி
ஆறா அறிவாம் ஒளிவிளக் கேற்றி அகமலராம்
வீறா மலரளித் தன்பெனும் மெய்யமிர் தங்கொடுத்தான்
†வேறூர் மயிலையுள் வாயிலான் என்று விளம்புவரே. ௬௧

### முனையடுவார் நாயனார்

என்று விளம்புவர் நீடூ ரதிபன் முனையடுவோன்
என்றும் அமருள் அழிந்தவர்க் காக்கூலி ஏற்றெறிந்து
‡வென்ற பெருஞ்செல்வ மெல்லாங் கனகநல் மேருவென்னும்
குன்று வளைத்த சிலையான் தமர்க்குக் கொடுத்தனனே. ௬௨

### சுந்தரமூர்த்தி சுவாமிகள்

கொடுத்தான் முதலைகொள் பிள்ளைக் குயிரன்று புக்கொளியூர்த்
தொடுத்தான் மதுர கவிஅவி நாசியை வேடர்சுற்றம்
படுத்தான் திருமுரு கன்பூண் டியினிற் பராபரத்தேன்
மடுத்தா னவனென்பர் வன்தொண்ட னாகின்ற மாதவனே. ௬௩

### கழற்சிங்க நாயனார்

மாதவத் தோர்தங்கள் வைப்பினுக் காரூர் மணிக்குவைத்த
போதினைத் தான்மோந்த தேவிதன் மூக்கை அரியப்பொற்கை

பா - ம்—*கல்லன. †வீறூர். ‡வென்று.

காதிவைத் தன்றே அரிவதென் றங்கவள் கைதடிந்தான்
நாதமொய்த் தார்வண்டு கிண்டுபைங் கோதைக் கழற்சிங்கனே. ௬௫

## இடங்கழி நாயனார்

சிங்கத் துருவனைச் செற்றவன் சிற்றம் பலமுகடு
கொங்கிற் கனகம் அணிந்தஆ தித்தன் குலமுதலோன்
திங்கட் சடையார் தமரென் செல்வம் எனப்பறைபோக்
கெங்கட் கிறைவன் இருக்கு வேளூர்மன் னிடங்கழியே. ௬௬

## செருத்துணை நாயனார்

கழிநீள் கடல்நஞ் சயின்றார்க் கிருந்த கடிமலரை
மொழிநீள் புகழ்க்கழற் சிங்கன்றன் தேவிமுன் மோத்தலுமே
எழில்நீள் குமிழ்மலர் மூக்கரிந் தான்என் றியம்புவரால்
செழுநீர் மருகனன் னாட்டமர் தஞ்சைச் செருத்துணையே. ௬௭

## புகழ்த்துணை நாயனார்

செருவிலி புத்தூர்ப் புகழ்த்துணை வையஞ் சிறுவிலைத்தா
உருவலி கெட்டுண வின்றி உமைகோனை மஞ்சனஞ்செய்
தருவதோர் போதுகை சோர்ந்து கலசம் *விழுத்தரியா
தருவரை வில்லி அருளின் நிதியது பெற்றனனே. ௬௮

## கோட்புலி நாயனார்

பெற்றம் உயர்த்தோன் விரையாக் கலிபிழைத் தோர்தமது
சுற்ற மறுக்குந் தொழிற்றிரு நாட்டியத் தான்குடிக்கோன்
குற்ற மறுக்குநங் கோட்புலி நாவற் குரிசிலருள்
பெற்ற அருட்கட லென்றுல கேத்தும் பெருந்தகையே. ௬௯

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்

தருமகட் பேசினோன் வீயவே நூல்போன சங்கிலிபால்
புகுமணக் காதலி னால்ஒற்றி யூருறை புண்ணியன்றன்
மிகுமலர்ப் பாதம் பணிந்தரு ளாலிவ் வியனுலகம்
நகும்வழக் கேகன்மை யாப்புணர்ந் தான்நாவ லூரரசே. ௬௯

## பத்தராய்ப் பணிவார்

அரசினை ஆரூர் அமரர் பிரானை அடிபணிந்திட்
டுரைசெய்த வாய்தடு மாறி உரோம புளகம்வந்து
கரசர ணாதி அவயவங் கம்பித்துக் கண்ணருவி
சொரிதரும் அங்கத்தி னோர்பத்தர் என்று தொகுத்தவரே. ௭0

## பரமனையே பாடுவார்

தொகுத்த வடமொழி தென்மொழி யாதொன்று தோன்றியதே
மிகுத்த இயலிசை †வல்ல வகையில்விண் தோயுநெற்றி
வகுத்த மதிற்றில்லை அம்பலத் தான்மலர்ப் பாதங்கள்மேல்
உகுத்த மனத்தொடும் பாடவல் லோரென்பர் உத்தமரே. ௭௧

பா - ம்—*விழுத்தரியாப் - பெருவரை. †அவ்வகை யாலவ்விண்.

### சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்

உத்தமத் தானத் தறம்பொருள் இன்ப மொடிஎறிந்து
வித்தகத் தானத் தொருவழிக் கொண்டு விளங்கச்சென்னி
மத்தம்வைத் தான்திருப் பாத கமல மலரடிக்கீழ்ச்
சித்தம்வைத் தாரென்பர் வீடுபே றெய்திய செல்வர்களே. எஉ

### திருவாரூர்ப் பிறந்தார்

செல்வந் திகழ்திரு வாரூர் மதில்வட்டத் துட்பிறந்தார்
செல்வன் திருக்கணத் துள்ளவ ரேயத னுற்றிகழச்
செல்வம் பெருகுதென் னூரூர்ப் பிறந்தவர் சேவடியே
செல்வ நெறியுறு வார்க்கணித் தாய செழுநெறியே. எங

### முப்போதுந் திருமேனி தீண்டுவார்

நெறிவார் சடையரைத் தீண்டி முப்போதுநீ டாகமத்தின்
அறிவால் வணங்கிஅர்ச் சிப்பவர் நம்மையும் ஆண்டமரர்க்
கிறையாய்முக் கண்ணும்எண் தோளுந் தரித்தீறில் செல்வத்தொடும்
உறைவார் சிவபெரு மாற்குறை வாய உலகினிலே. எச

### முழுநீறுபூசிய முனிவர்

உலகு கலங்கினும் ஊழி திரியினும் உள்ளொருகால்
விலகுத லில்லா விதியது பெற்றநல் வித்தகர்காண்
அலகில் பெருங்குணத் தாரூ ரமர்ந்த அரனடிக்கீழ்
இலகுவெண் ணீறுதம் மேனிக் கணியும் இறைவர்களே. எரு

### அப்பாலும் அடிச்சார்ந்தார்

வருக்க மடைத்துநன் னாவலூர் மன்னவன் வண்தமிழால்
*பெருக்கு மதுரத் தொகையிற் பிறைசூடி பெய்கழற்கே
ஒருக்கு மனத்தொடப் பாலடிச் சார்ந்தவ ரென்றுலகில்
தெரிக்கு மவர்சிவன் பல்கணத் தோர்நஞ் செழுந்தவரே. எசு

### சுந்தரமூர்த்தி சுவாமிகள்

செழுநீர் வயல்முது குன்றினில் செந்தமிழ் பாடிவெய்ய
மழுநீள் தடக்கைய னீந்தபொன் ஆங்குக்கொள் ளாதுவந்து
பொழிநீள் தருதிரு வாரூரில் வாசியும் பொன்னுங்கொண்டோன்
கெழுநீள் புகழ்த்திரு வாரூரன் என்றுநாங் கேட்பதுவே. எஎ

### பூசலார் நாயனார்

பதுமநற் போதன்ன பாதத் தரற்கொரு கோயிலையான்
கதுமெனச் செய்குவ தென்றுகொ லாமென்று கண்துயிலா
ததுமனத் தேஎல்லி தோறும் நினைந்தருள் பெற்றதென்பர்
புதுமணத் தென்ற லுலாநின்ற வூர்தனிற் பூசலையே. எஅ

### மங்கையர்க்கரசியார்

பூச லயிற்றென்ன னூர்க்கன லாகப் பொருமையினால்
வாச மலர்க்குழல் பாண்டிமா தேவியா மானிகண்டீர்

பா - ம்—*பெருக்க மதுரத் தொகைபிறை சூடிதன்.

தேசம் விளங்கத் தமிழா கரர்க்கறி வித்தவரால்
நாசம் விளைத்தா ளருகந்த ருக்குத்தென் ஞட்டகத்தே. எக

## நேச நாயனர்

நாட்டமிட் டன்றரி வந்திப்ப வெல்படை நல்கினர்தந்
தாட்டரிக் கப்பெற் றவனென்பர் சைவத் தவரரையில்
*கூட்டும்அக் கப்படங் கோவணம் நெய்து கொடுத்துநன்மை
ஈட்டும்அக் காம்பீலிச் சாலிய நேசனை இம்மையிலே. அ௦

## கோச்செங்கட்சோழ நாயனர்

மைவைத்த கண்டன் நெறியன்றி மற்றோர் நெறிகருதாத்
தெய்வக் குடிச்சோழன் முன்பு சிலந்தியாய்ப் பந்தர்செய்து
சைவத் துருவெய்தி வந்து தரணிநீ டாலயங்கள்
செய்வித் தவன்†திருக் கோச்செங்க ணனெனுஞ் செம்பியனே. அக

செம்பொன் அணிந்துசிற் றம்பலத் தைச்சிவ லோகமெய்தி
நம்பன் கழற்கீழ் இருந்தோன் குலமுதல் என்பர்நல்ல
வம்பு மலர்த்தில்லை ஈசனைச் சூழ மறைவளர்த்தான்
நிம்ப நறுந்தொங்கற் கோச்செங்க ணனெனு நித்தனையே. அ௨

## திருநீலகண்டயாழ்ப்பாண நாயனர்

தனையொப் பரும்எருக் கத்தம் புலியூர்த் தரும்புகழோன்
நினையொப் பருந்திரு நீலகண் டப்பெரும் பாணனைநீள்
சினையொப் பலர்பொழிற் சண்பையர் கோன்செந் தமிழொடிசை
புனையப் பரனருள் பெற்றவ னென்பரிப் பூதலத்தே. அ௩

## சடைய நாயனர்

தலம்விளங் குந்திரு நாவலூர் தன்னில் சடையனென்னும்
குலம்விளங் கும்புக ழோனை உரைப்பர் குவலயத்தில்
நலம்விளங் கும்படி நாம்விளங் கும்படி நற்றவத்தின்
பலம்விளங் கும்படி ஆரூ ரனைமுன் பயந்தமையே. அ௪

## இசைஞானியார்

பயந்தாள் கறவுடைச் செங்கண்வெள் ளேப்பொள்ளல் நீள்பனைக்கைக்
கயந்தான் உகைத்தநற் காளையை என்றுங் கபாலங்கைக்கொண்
டயந்தான் புகுமா ரூர்ப் புனித அரன்திருத்தாள்
நயந்தாள் தனதுள்ளத் தென்றும் உரைப்பது ஞானியையே. அ௫

ஆ திருவிருத்தம் - அ௫.

---

பா - ம்—*கூட்டு மகப்படக். †பெயர்.

(சில பிரதிகளில் காணப்பட்டவை)

### சுந்தரமூர்த்தி சுவாமிகள்

*ஞானஆ ரூரரைச் சேரரை யல்லது நாமறியோம்
மானவ ஆக்கை யொடும்புக் கவரை வளரொளிப்பூண்
வானவ ராலும் †மருவற் கரிய வடகயிலைக்
கோனவன் கோயில் பெருந்தவத் தோர்தங்கள் கூட்டத்திலே.

### திருத்தொண்டத் தொகைக் கூட்ட அடியார்கள், தனியடியார்கள்

கூட்டம்ஒன் பானொ டறுபத்து மூன்று தனிப்பெயரா
ஈட்டும் பெருந்தவத் தோர்எழு பத்திரண் டாம்வினையை
வாட்டுந் தவத்திருத் தொண்டத் தொகைபதி னொன்றின்வகைப்
பாட்டுந் திகழ்திரு நாவலூ ராளி பணித்தனனே.

### திருத்தொண்டத் தொகை முதற்குறிப்பு

பணித்தநற் றொண்டத் தொகைமுதல் தில்லை இலைமலிந்த
வணித்திகழ் மும்மை திருநின்ற வம்பறு ‡வார்கொண்ட சீர்
இணைத்தநற் பொய்யடி மைகறைக் கண்டன் கடல்சூழ்ந்தபின்
மணித்திகழ் சொற்பத்தர் மன்னிய சீர்மறை நாவனொடே.

### §பலனருள் கவி

ஓடிடும் பஞ்சேந் திரியம் ஒடுக்கினன் ||உள்வினைகள்
வாடிடும் வண்ணநின் றெத்தவஞ் செய்தனன் வானினுள்ளோர்
சூடிடுஞ் சீர்த்திருப் பாதத்தர் தொண்டத் தொகையினுள்ள
சேடர்தஞ் செல்வப் பெரும்புக ழந்தாதி செப்பிடவே.

### நம்பியாண்டார்நம்பி

பொன்னி வடகரை சேர்நாரை யூரில் புழைக்கைமுக
மன்னன் அறுபத்து மூவர் பதிதே மரபுசெயல்
பன்னஅத் தொண்டத் தொகைவகை பல்கும்அந் தாதிதனைச்
சொன்ன மறைக்குல நம்பிபொற் பாதத் துணைதுணையே.



பா - ம்—*ஞானவவ் வாரூ ரரசரை. †அறிதற். ‡வார்கொண்டதோர் - இணைத் திகழ். §நூற்பயன். ||ஊழ்.

# திருத்தொண்டர் புராணசாரம்



மல்குபுகழ் வன்றொண்டர் அருளால் ஈந்த வளமருவு திருத்தொண்டத் தொகையின் வாய்மை, நல்கும்வகை புல்கும்வகை நம்பி யாண்டார் நம்பிதிரு வந்தாதி நவின்ற வாற்றால், பல்குநெறித் தொண்டர்சீர் பரவ வல்ல பான்மையார் எமையாளும் பரிவால் வைத்த, *செல்வமிகுந் திருத்தொண்டர் புராண மேவுந் திருந்துபயன் அடியேனுஞ் செப்ப லுற்றேன். க

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்

தண்கயிலை யதுநீங்கி நாவ லூர்வாழ் சைவனார் சடையனார் தனய னாய், மண்புகழ அருட்டுறையான் ஓலை காட்டி மணம்விலக்க வன்றொண்டாய் அதிகை சேர்ந்து, நண்பினுடன் அருள்புரிய ஆரூர் மேவி நலங்கிளரும் பரவைதோள் நயந்து வைகித், திண்குலவும் விறன்மிண்டர் திறல்கண் டேத்துந் திருத்தொண்டத் தொகைஅருளாற் செப்பி னாரே.

செப்பலருங் குண்டையூர் நெல்லை யைத்துத் திருப்புகலூர்ச் செங்கல் செழும் பொன்னாச் செய்து, தப்பில்முது குன்றார்தரும் †பொருள்ஆற் றிட்டுத் தடத்தெடுத்துச் சங்கிலிதோள் சார்ந்து நாதன், ஒப்பில்தனித் தூதுவந்தா றாடு கீறி உறுமுதலை சிறுமதலை உமிழ நல்கி, மெய்ப்பெரிய களிறேறி அருளாற் சேர வேந்தருடன் வடகயிலை மேவி னாரே.

## தில்லைவாழந்தணர்

நல்லவா னவர்போற்றுந் தில்லை மன்றுள் நாடகஞ்செய் பெருமானுக் கணியார் நற்பொன், தொல்லைவான் பணிஎடுத்தற் குரியார் வீடு ‡துறந்தநெறி யார் தொண்டத் தொகைமுன் பாடத், தில்லைவாழ் அந்தணரென் றெடுத்து நாதன் செப்பும்அரு ளுடையார்முத் தீயார் பத்திக், கெல்லைகாண் பரியாரொப் புலகில் தாமே ஏய்ந்துளார் எமையாள வாய்ந்து ளாரே.

## திருநீலகண்ட நாயனார்

தில்லைநகர் வேட்கோவர் தூர்த்த ராகித் தீண்டிலெமைத் திருநீல கண்டம் என்று, சொல்லுமனை யாள்தனையே அன்றி மற்றுந் துடியிடையா ரிடையின்பந் துறந்து மூத்தங், கெல்லையிலோ டிறைவைத்து மாற்றி நாங்கள் எடுத்திலமென் றியம்புமனை இழிந்து பொய்கை, மெல்லியலா ளுடன்மூழ்கி இளமை எய்தி விளங்குபுலீச் சரத்தரனை மேவி னாரே. ரு

## இயற்பகை நாயனார்

எழிலாருங் காவிரிப்பூம் பட்டி னத்துள் இயல்வணிகர் இயற்பகையார் இருவர் தேட, அழலாய பிரான்தூர்த்த மறையோ னாகி ஆயிழையைத் தரவேண்டி அணைய ஐயன், கழலாரப் பணிந்துமனைக் கற்பின் மேன்மைக் காதலியைக் கொடுத்தமர்செய் கருத்தால் வந்த, பிழையாருஞ் சுற்றமெலாந் துணித்து மீளப் பிஞ்ஞகனார் அழைத்தருளப் பெற்று ளாரே. சு

பா - ம்—*செல்வமலி. †பொன். ‡துறந்தநிலை யார்.

## இளையான்குடிமாற நாயனார்

*மன்னியவே ளாண்டொன்மை இளசை மாறர் வறுமையால் உணவுமிக மறந்து வைகி, உன்னருநள் ளிருள்மழையில் உண்டி வேண்டி உம்பர்பிரான் அணையவயல் உழுது வித்துஞ், செந்நெல்முளை அமுதுமனை அலக்கால் ஆக்கிச் சிறுபயிரின் கறியமுது திருந்தச் செய்து, பன்னலரும் உணவருந்தற் கெழுந்த சோதிப் பரலோகம் முழுதாண்ட பான்மை யாரே.* எ

## மெய்ப்பொருள் நாயனார்

*சேதிபர்நற் கோவலூர் மலாட மன்னர் திருவேடம் மெய்ப்பொருளாத் தெளிந்த சிந்தை, நீதியினார் உடன்பொருது தோற்ற மாற்றான் நெடுஞ்சினமுங் கொடும்படையும் நிகழா வண்ணம், மாதவர்போல் ஒருமுறைகொண் டணுகி வாளால் வன்மைபுரிந் திடமருண்டு வந்த தத்தன், காதலுற நமர்தத்தா என்று நோக்கிக் கடிதகல்வித் திறைவனடி கைக்கொண் டாரே.* அ

## விறன்மிண்ட நாயனார்

*விளங்குதிருச் செங்குன்றூர் வேளாண் தொன்மை விறன்மிண்டர் திருவாரூர் மேவு நாளில், வளங்குலவு தொண்டரடி வணங்கா தேகும் வன்றொண்டன் புறகவனை வலிய ஆண்ட, துளங்குசடை முடியோனும் புறகென் றன்பால் சொல்லுதலும் அவர்தொண்டத் தொகைமுன் பாட, உளங்குளிர உளதென்றார் அதனால் அண்ணல் உவகைதர உயர்கணத்துள் ஓங்கி னாரே.*

## அமர்நீதி நாயனார்

*பழையாறை வணிகர்அமர் நீதி யார்பால் பரவுசிறு முனிவடிவாய்ப் பயிலும் நல்லூர்க், குழைகாதர் வந்தொருகோ வணத்தை வைக்கக் கொடுத்ததனை எடுத்தொளித்துக் குளித்து வந்து, தொழிலாரும் அதுவேண்டி வெகுண்டு நீர்இத் துலையிலிடுங் கோவணநேர் தூக்கும் என்ன, எழிலாரும் பொன்மனைவி இளஞ்சேய் ஏற்றி ஏறினர்வா னுலகுதொழ ஏறி னாரே.* ௧௦

## எறிபத்த நாயனார்

*திருமருவு கருவூர்ஆ னிலையார் சாத்துஞ் சிவகாமி யார்மலரைச் சிந்த யானை, அரனெறியோர் எறிபத்தர் பாக ரோடும் அறஎறிய என்னுயிரும் அகற்றீர் என்று, புரவலனார் கொடுத்தபடை அன்பால் வாங்கிப் புரிந்தரிவான் புகஎழுந்த புனித வாக்கால், கரியினுடன் விழுந்தாரும் எழுந்தார் தாமுங் கணநாத ரதுகாவல் கைக்கொண் டாரே.* ௧௧

## ஏனாதிநாத நாயனார்

*ஈழக் குலச்சான்றார் எயின னூர்வாழ் ஏனாதி நாதனார் இறைவன் நீற்றைத், தாழத் தொழுமரபார் படைகள் ஆற்றுந் தன்மை †பெறு அதிசூரன் சமரில் தோற்று, வாழத் திருநீறு சாத்தக் கண்டு மருண்டார் தெருண்டார்கை வாள் வி[illegible]ார்நேர், வீழக் களிப்பார்போல் நின்றே யார்க்கை விடுவித்துச் சிவனருளே மேவி னாரே.* ௧௨

## கண்ணப்ப நாயனார்

*வேடர்அதி பதியுடுப்பூர் வேந்தன் நாகன் விளங்கியசேய் திண்ணனார் கன்னி வேட்டைக், காடதில்வாய் மஞ்சனமுங் குஞ்சிதரு மலருங் காய்ச்சினமென் றிடு*

பா - ம்—*வைத்துக். †பொரு அரிசூரன்.

தசையுங் காளத்தி யார்க்குத், தேடரும்அன் பினில்ஆறு தினத்தளவும் அளிப்பச் சிறுசிவ கோசரியுந் தெளியவிழிப் புண்ணீர், ஓடஒரு கண்ணப்பி ஒருகண் ணப்ப ஒழிகஎனும் அருள்கொடரு குறசின் றாரே. கங

## குங்குலியக்கலய நாயனார்

சீலமலி திருக்கடவூர்க் கலய னாராந் திகழ்மறையோர் பணிவறுமை சிதையா முன்னே, தாலியைநெற் கொளஎன்று வாங்கிக் கொண்டு சங்கையில்குங் குலியத்தால் சார்ந்த செல்வர், ஞாலதிகழ் திருப்பனந்தாள் நாதர் நேரே நரபதியுந் தொழக்கச்சால் நயந்து போதப்,பாலமுதம் உண்டாரும் அரசும் எய்திப் பரிந்துமுது செயஅருள்சேர் பான்மை யாரே. கச

## மானக்கஞ்சாற நாயனார்

கஞ்சநகர் மானக்கஞ் சாற னார்சீர்க் காதல்மகள் வதுவைமணங் காண நாதன், வஞ்சமலி மாவிரதத் தலைவ னாகி வந்துபுகுந் தவளளக மகிழ்ந்து நோக்கிப், பஞ்சவடிக் காமென்ன அரிந்து நீட்டும் பத்தர்எதிர் மறைந்திறைவன் பணித்த வாக்கால், எஞ்சலில்வண் குழல்பெற்ற பேதை மாதை ஏயர்பிராற் குதவியருள் எய்தி னாரே. கரு

## அரிவாட்டாய நாயனார்

தாவில்கண மங்கலத்துள் வேளாண் தொன்மைத் தாயனார் நாயனார் தமக்கே செந்நெல்,தூவரிசி எனவிளைவ தவையே யாகத் துறந்துணவு வடுவரிசி துளங்கு கீரை, ஆவினில்ஐந் துடன்கொணர கமரிற் சிந்த அழிந்தரிவாள் கொண்டூட்டி அரியா முன்னே, மாவடுவின் ஒலியும்அரன் காமுந் தோன்றி வாள் விலக்கி அமரர்தொழ வைத்த தன்றே. கசு

## ஆனாய நாயனார்

மங்கலமா மழநாட்டு மங்கலமா நகருள் மருவுபுகழ் ஆனாயர் வளர்ஆ மேய்ப்பார், கொங்கலர்பூந் திருக்கொன்றை மருங்கு சார்ந்து குழலிசையில் ஐந்தெழுத்துங் குழைய வைத்துத், தங்குசரா சரங்களெலாம் உருகா நிற்பத் தம்பிரான் அணைந்துசெவி தாழ்த்தி வாழ்ந்து, பொங்கியவான் கருணைபுரிந் தென்றும் ஊதப் போதுகஎன் றருளஉடன் போயி னாரே. கஎ

## மூர்த்தி நாயனார்

வழங்குபுகழ் மதுரைநகர் மூர்த்தி யாராம் வணிகர்திரு வாலவாய் மன்னர் சாத்தத்,தழங்குதிர முழங்கைதரத் தேய்த்த ஊறும் தவிர்ந்தமணர் வஞ்சனையும் தவிர மன்னன்,இழந்தவுயி ரினனாக ஞாலம் நல்க எழில்வேணி முடியாக இலங்கு வேடம், முழங்குபுகழ் அணியாக விரைநீ றாக மும்மையுல காண்டருளின் மூன்னி னாரே. கஅ

## முருக நாயனார்

மன்னுதிருப் புகலூர்வாழ் முருக னாராம் மறையவர்கோ வர்த்தமா னீச்சரத்தார், சென்னியினுக் கழகமரும் மலர்கள் கொய்து *திருமாலை புகழ்மாலை திகழச் சாத்திக், கன்னிமதிற் கழுமலநா டுடைய நாதன் காதல்மிகு மணங்காணுங் களிப்பி னாலே, இன்னல்கெட உடன்சேவித் தருளால் மீளா திலங்கு பெரு மணத்தானை எய்தி னாரே. கக

பா - ம்—*திகழ்மாலை புகழ்மாலை திருந்தச் சாத்தி.

### உருத்திரபசுபதி நாயனர்

பங்கமில்வண் புகழ்நிலவு தலையூர் வாழும் பசுபதியார் எனும்மறையோர் பணிந்து செந்தேன், அங்கமல மடுவினிடை அல்லும் எல்லும் அகலாதே யாகளமாய் அமர்ந்து நின்று, திங்கள்வளர் சடைமுடியான் அடியே போற்றித் திருஎழுத்தும் உருத்திரமும் *திருந்த ஓதி, மங்கையிடம் உடையபிரான் அருளால் மேலை வானவர்கள் †தொழும்உலகில் மன்னி னரே. ௨௦

### திருநாளைப்போவார் நாயனர்

நன்மைதிகழ் மேற்காநாட் டாதனூர்வாழ் நந்தனர் புறத்தொண்டர் நாளைப் போகப், பொன்மலிதென் புலியூர்க்கென் றுரைப்பார் புன்கூர்ப் பொய்கைஅமைத் தடலேறு பிரிய நோக்கி, வன்மதில்சூழ் தில்லைஇறை அருளால் வாய்ந்த வண்தழலின் இடைமூழ்கி மறையோர் போற்ற, மின்மலிசெஞ் சடைமுனியாய் எழுந்து நாதன் விளங்குநடந் தொழுமன்றுள் மேவி னரே. ௨௧

### திருக்குறிப்புத்தொண்ட நாயனர்

கோந்தலர்பூம் பொழிற்கச்சி நகரஏ காலிக் குலத்தலைவர் தவர்குறிப்புக் குறித்து ளார்பால், வந்திறைவர் நமக்கின்று தாரீ ராகில் வருந்தும்உடல் என வாங்கி மாசு நீத்த,கந்தைபுல ராதொழிய மழையும் மாலைக் கடும்பொழுதும் வரக்கண்டு கலங்கிக் கன்மேல், சிந்தமுடி புடைப்பளவில் திருவே கம்பர் திருக்கைகொடு பிடித்துயர்வான் சேர்த்தி னரே. ௨௨

### சண்டேசுர நாயனர்

வேதமலி சேய்ஞலூர் எச்ச தத்தன் விளங்கியசேய் மறையவிலும் விசாரசன்மர்,கோதனம்மேய்ப் பவன்கொடுமை பொறாது தாமே கொண்டுநிரை மண்ணியின்தென் கரையின் நீழல், தாதகியின் மணல்இலிங்கத் தான்பா லாட்டத் தாதைபொறு தவைஇடறுந் தாள்கள் மாளக், காதிமலர்த் தாமமுயர் நாமமுண்ட கலமகனும் பதமருளாற் கைக்கொண் டாரே. ௨௩

### திருநாவுக்கரசு சுவாமிகள்

போற்றுதிரு வாமூரில் வேளாண் தொன்மைப் பொருவில்கொறுக் கையர்அதிபர் புகழ னர்பால், மாற்றரும்அன் பினில்திலக வதியாம் மாது வந்துதித்த பின்புமரு ணீக்கி யாரும், தோற்றிஅமண் சமயமுறு துயரம் நீங்கத் துணைவிஅருள் தரவந்த சூலை நோயால், பாற்றருநீள் இடரெய்திப் பாடலிபுத் திரத்திற் பாழியொழித் தரன்அதிகைப் பதியில் வந்தார். ௨௪

வந்துதமக் கையரருளால் நீறு சாத்தி வண்டமிழால் நோய்தீர்ந்து வாக்கின் மன்னய், வெந்தபொடி விடம்வேழம் வேலை நீந்தி வியன்சூலங் கொடிஇடபம் விளங்கச் சாத்தி, அந்தமில்அப் பூதிமகன் அரவு மாற்றி அருட்காசு பெற்றுமறை அடைப்பு நீக்கிப், புந்திமகிழ்ந் தையாற்றில் கயிலை கண்டு பூம்புகலூர் அரன்பாதம் பொருந்தி னரே. ௨௫

### குலச்சிறை நாயனர்

கோதில்புகழ் தருமணமேற் குடியார் கோவண் குலச்சிறையார் தென்னர்குல அமைச்சர் குன்ற, மாதவர்கள் அடிபரவும் மரபார் பாண்டி மாதேவியார்அருள்வான் பயிர்க்கு வேலி, காதல்மிகு கவுணியர்கோன் வாதில் தோற்ற கையரைவை கைக்கரைசேர் கழுவில் ஏற்று, ‡நீதியினல் ஆலவாய் நிமலர்ச் சேர்ந்த நின்மலனர் என்மலங்கள் நீக்கி னரே. ௨௬

பா - ம் — *திகழ. †தொழ. ‡நீதியினர்.

### பெருமிழலைக்குறும்ப நாயனார்

கொண்டல்பணி வளர்சோலை மிழலை நாட்டுக் கோதில்புகழ்ப் பெருமிழலைக் குறும்ப னார்சீர்,அண்டர்பிரான் அடியவருக் கடியா ராகும் ஆதரவால் அணுக்கவன் தொண்டர்க் காளாய்,மண்தொழும்எண் தருசித்தி வாய்ந்து ளார்தாம் வன்தொண்டர் வடகயிலை மருவு நாள்முன், எண்திகழும் மறைமூல நெறியூ டேகி இலங்கொளிசேர் வடகயிலை எய்தி னாரே. உஎ

### காரைக்காலம்மையார்

தங்குபுகழ்க் காரைக்கால் வணிகன் மிக்க தனதத்தன் தரும்புனித வதியார் மாவின்,செங்கனிகள் திருவருளால் அழைப்பக் கண்டு திகழ்கணவன் அதிசயித்துத் தேசம் நீங்க, அங்கவுடல் இழந்தருமுடி நடையால் ஏறி அம்மையே எனநாதன் அப்பா என்று, பொங்குவட கயிலைபணிந் தாலங் காட்டில் புனிதனடம் அனவரதம் போற்றி னாரே. உஅ

### அப்பூதியடிகள்

அந்தமில்நல் திங்களூர் வரும்அப் பூதி அருமறையோர் திருநாவுக் கரசின் நாமம், பந்தரிடை எழுதக்கண் டரசும் எய்தப் பணிந்துபரி கலநேடிப் படப்பை சேர்ந்த, மைந்தனுயிர் உயர்கதலி இலைமேல் துஞ்சும் வாளரவு கவரஉடன் மறைத்தல் கேட்டுச், சிந்தைமகிழ்ந் துயர்பதிக மருந்தால் தீர்த்துத் திருவமுது செயஅருளைச் சேர்ந்து ளாரே. உகூ

### திருநீலநக்க நாயனார்

நீதிதரு மறையோர்வாழ் சாத்த மங்கை நீலநக்கர் அயவந்தி நிமலர் மேனி, ஊதிவிழுஞ் சிலம்பிகடிந் தவளை நீத்தார்க் குமியாத இடம்நாதன் உறுநோய் காட்டக் காதல்மிகு மனைவியையும் மகிழ்ந்து மேவிக் காழியர்கோன் அமுதுசெயக் களித்து வாழ்ந்து, வேதிகையில் பாணனார்க் கிடமும் நல்கி விளங்குபெரு மணத்தரனை மேவி னாரே. ௩௦

### நமிநந்தியடிகள்

நண்ணுபுகழ் மறையோர்வாழ் ஏமப் பேறூர் நமிநந்தி யடிகள்திரு விளக்கு நல்க, எண்ணெய்அம ணர்கள்விலக்க நீரால் ஆரூர் இலங்கும்அர னெறியாருக் கேற்று நாளில், கண்ணமணர் கெடக்கண்பெற் றடிகள் வாழக் காவலனால் நிபந்தங்கள் கட்டு வித்தே, அண்ணலருள் கண்டாரூர் அமர்ந்து தொண்டர்க் காணி எனும் அரசினருள் அடைந்து ளாரே. ௩க

### திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்

காழிநகர்ச் சிவபாத விதயர் தந்த கவுணியர்கோன் அழுதுமையாள் †சுருதியூட்டும், எழிசையின் அமுதுண்டு தாளம் வாங்கி இலங்கியமித் திலச்சிவிகை இசைய ஏறி, வாழும்முய லகனகற்றிப் பந்தர் எய்ந்து வளர்கிழிபெற் றரவின் விடம் மருகல் தீர்த்து, வீழிநகர்க் காசெய்தி மறைக்கதவம் பிணித்து மீனவன்மே னியின்வெப்பு விடுவித் தாரே. ௩௨

ஆரெரியிட் டெடுத்தஏ டவைமுன் னேற்றி ஆற்றிலிடும் ‡ஏடெதிர்போய் அணைய ஏற்றி, ஓரமணர் ஒழியாமே கழுவி லேற்றி ஓதுதிருப் பதிகத்தால் ஓடம்

பா - ம்—*கலந்து. †சுருதி யூட்ட. ‡ஏடெதிரே.

ஏற்றிக், காருதவும் இடிபுத்தன் தலையில் ஏற்றிக் காயாத பனையின்முது கனிகளை
ஏற்றி, ஈரமிலா அங்கம்உயிர் எய்த ஏற்றி இலங்குபெரு மணத்தானை எய்தி
னாரே. ௫௩

### ஏயர்கோன்கலிக்காம நாயனார்

ஏதமில்வே ளாளர்பெரு மங்க லத்துள் ஏயர்கோன் கலிக்காமர் இறையை
நேரே, தூதுகொளு மவன னாகில் என்னும் என்னுந் துணிவினர்பால்
இறைவன்அருஞ் சூலை ஏவி, வேதனைவன் தொண்டன்வரின் நீங்கும் என்ன
வெகுண்டுடல்வாள் கொடுதுறந்து மேய நாவல்,போதகமும் உடல்இகழ எழுந்து
தாழ்ந்து போற்றியது விலக்கிஅருள் பொருந்தி னாரே. ௫௪

### திருமூல நாயனார்

கயிலாயத் தொருசித்தர் பொதியில் சேர்வார் காவிரிசூழ் சாத்தனூர் கரு
தும் மூலன், பயிலாநோ யுடன்வீயத் துயர நீடும் பசுக்களைக்கண் டவனுடலிற்
பாய்ந்து போத, அயலாகப் பண்டையுடல் அருளான் மேவி ஆவடுதண் டுறை
ஆண்டுக் கொருபா வாகக், குயிலாரும் அரசடியில் இருந்து கூறிக் கோதிலா
வடகயிலை குறுகி னாரே. ௫௫

### தண்டியடிகள்

திருவாரூர் வருந்தண்டி யடிகள் காட்சி சேராதார் குளந்தொட்டற் கம
ணர் சீறிக்,குருடாநீ முன்செவிடுங் கூடிற் றென்று குறித்தறியைப் பறித்தெறி
யக் கொதித்துத் தங்கண், அருளாலே விழித்தெவரும் அந்த ராக அமணர்கலக்
கம்பலகண் டவர்கள் பாழிப், பருவான கற்பறித்தா விக்கரையுங் கட்டிப் பரனரு
ளால் அமருலகம் பற்றி னாரே. ௫௬

### மூர்க்க நாயனார்

தொண்டைவள நாட்டுவளர் வேற்காட் டூர்வாழ் தொல்லுழவர் நற்சூதர்
சூது வென்று, கொண்டபொருள் கொண்டன்பர்க் கமுத ளிக்குங் கொள்கை
யினார் திருக்குடந்தை குறுகி யுள்ளார், விண்டிசைவு குழறுமொழி வீணர் மாள
வெகுண்டிடலான் மூர்க்கரென விளம்பும் நாமம், எண்டிசையும் மிகவுடையார்
அண்டர் போற்றும் ஏழுலகு முடனாளும் இயல்பி னாரே. ௫௭

### சோமாசிமாற நாயனார்

அம்பர்நகர் அந்தணர்சோ மாசி மாறர் அன்பர்களாம் யாவர்க்கும்
அமுத ளிப்பார், உம்பர்திகழ் வகையாகம் பலவுஞ் செய்யும் உண்மையினார் ஐந்
தெழுத்தும் ஓவா நாவார், நம்பர்திகழ் திருவாரூர் நயந்து போற்றும் நாவலர்
கோன் அடிபரவும் நன்மை யாலே, இம்பர்தொழ உம்பர்பணிந் தேத்த மேலை
ஏழுலகு முடனாளும் இயல்பி னாரே. ௫௮

### சாக்கிய நாயனார்

சங்கமங்கை வரும்வேளாண் தலைவர் காஞ்சிச் சாக்கியரோ டியைந்தவர்தந்
தவறுஞ் சைவத்,துங்கமலி பொருளும்உணர்ந் தந்த வேடந் துறவாதே சிவலிங்
கந் தொழுவோர் கண்டோர், அங்கல்மலர் திருமேனி அழுந்தச் சாத்தி அமரு
நாள் மறந்தொருநாள் அருந்தா தோடிச்,செங்கலெறிந் திடும்அளவில் மகிழ்ந்த
நாதன் திருவருளால் அமருலகஞ் சேர்ந்து ளாரே. ௫௯

## சிறப்புலி நாயனார்

திருவாக்கூர் அருமறையோர் உலகம் ஏத்துஞ் சிறப்புலியார் மறப்புலியார் உரிமேற் செங்கண், அரவார்த்தார் வரும்ஏற்றூர்க் கன்ப ராஞர்க் கமுதளிப்பார் ஒளிவெண்ணீ றணிந்த மார்பர், பெருவாக்கால் மறைபரவி யாகம் போற்றும் பெற்றியிஞர் ஐந்தெழுத்தும் பிறழா தோதிக், கருவாக்கா இறைவன்தா ளிணைகள் சேர்ந்த கருத்திஞர் எனையாவுந் திருத்தி ஞரே. ௪௦

## சிறுத்தொண்ட நாயனார்

பல்குமருத் துவர்அதிபர் செங்காட்டங் குடிவாழ் படைத்தலைவர் அமுதளிக்கும் பரஞ்சோதி யார்மெய்ச், செல்வமிகு சிறுத்தொண்டர் காழி நாடன் திருவருள்சேர்ந் தவர்வளருஞ் சீராளன் தன்னை,நல்குதிரு வெண்காட்டு நங்கை சமைத் திடப்பின் நன்மதிச்சந் தனத்தாதி தலைக்கறியிட் டுதவப், புல்கவரும் வயிரவர்தாம் மகிழ்ந்துமக வருளப் போற்றியவர் சிவனருளே பொருந்தி ஞரே.

## கழறிற்றறிவார் நாயனார்

காவலர்ம கோதையார் கொடுங்கோ ளூர்க்கோக் கழறியவை அறிந்தகோச் சிலம்போசைக் கருத்தார்,நாவலர்கோன் நண்பர்அடிச் சேரன் என்றே நவின்று வரும் வண்ணனை நயந்த கோநற், பாவலர்கோப் பாணபத் திரனல் வாய்ந்த பாமர்திரு முகம்வாங்கிப் பணிகோ வெற்பின், மேவியகோ ஆனைக்குக் குதிரை வைத்த வீரர்கோ எனையாளுஞ் சேரர் கோவே. ௪௨

## கணநாத நாயனார்

கந்தமலி வயற்காழி மறையோ ரேத்துங் கணநாதர் திருத்தோணிக் கடவுளார்க்கு, நந்தவனம் பலஅமைத்து மலருங் கொய்து நற்றுமஞ் சொற்றுமம் நயந்து சாத்தி, வந்தவரைத் தொண்டாக்கிப் பணிகள் பூட்டி வாதுசெய்த வாரணத்தை மகிழ்ந்து வாழ்த்திப், புந்திமகிழ்ந் தரனருளால் கயிலை மேவிப் பொருவில்கணத் தவர்காவல் பொருந்தி ஞரே. ௪௩

## கூற்றுவ நாயனார்

குன்றாத புகழாளர் களந்தை வேந்தர் கூற்றுவஞர் மாற்றலர்மண் கொண்டு சூடப், பொன்தாழு முடிவேண்டப் புலியூர் வாழும் பூசுரர்கள் கொடாதகலப் புனிதன் ஈந்த, மன்றாடுந் திருவடியே முடியாச் சூடி மாநிலங்காத் திறைவனுறை மாடக் கோயில், சென்றாசை யுடன்வணங்கிப் பணிகள் செய்து திருவருளால் அமருலகஞ் சேர்ந்து ளாரே. ௪௪

## பொய்யடிமையில்லாத புலவர்

பொய்யறியாக் கபிலரொடு பரண ராதிப் புலவோர்பொற் பார்கலைகள் பொருந்த ஓதிச், செய்யுளிடை வளர்ஆசு மதுர நல்ல சித்திரம்வித் தாரமெனத் தெரிக்குஞ் செம்மை, மெய்யுடைய தொடைகளெல்லாம் மன்றுள் ஆடல் மேவியகோன் இருதாளில் விரவச் சாத்திக், கையுடைஅஞ் சலியினராய் அருளால் மேலைக் கருதரிய அமருலகங் கைக்கொண் டாரே. ௪௫

## புகழ்ச்சோழ நாயனார்

பொழில்மருவுங் கருவூர்வாழ் புகழார் சோழர் போதகம்போல் என்னுயிரும் போக்கும் என்றே, அழல்அவிர்வாள் கொடுத்தபிரான் அதிக மான்மேல்

அடர்ந்தபெரும் படைவெவ அவர்கொண் டேய்ந்த, தழல்விழிகொள் தலைகாண் பார் கண்ட தோர்புன் சடைத்தலையை முடித்தலையால் தாழ்ந்து வாங்கிக், கழல் பரவி அநுசிரத்தின் ஏந்தி வாய்ந்த கனல்மூழ்கி இறைவனடி கைக்கொண் டாரே. சசு

## நரசிங்கமுனையரைய நாயனர்

நாடுபுகழ் முனைப்பாடி நாடு மேய நரசிங்க முனையர்பவி நயந்து மன்றுள், ஆடுமவர் ஆதிரைநாள் அடியார்க் கம்பொன் அமுதளிப்பார் ஒளிவெண்ணீ றணிந்து தூர்த்த, வேடமுடை யவர்க்கிரட்டிச் செம்பொன் ஈந்து விடுத்தழகார் ஆலயங்கள் விளங்கச் செய்து, தோடலர்தா ருடையபிரான் அருளை ஆளத் தோன்றினர் எனையருளின் ஊன்றி னரே. சஎ

## அதிபத்த நாயனர்

அலையாருங் கடல்நாகை நகருள் வாழும் அதிபத்தர் பரதவர்கள் அதிபர் வேலை, வலைவாரி வருமீனில் தலைமீன் ஈசன் வார்கழற்கே என்றுவிடும் மா பார் பன்னள், தலையான தொருமீனே சார நாளுந் தந்தொழிலால் விடுத்துமிடி சாரச் செம்பொன், நிலையாரும் மணிநயந்த மீனென் றெய்த நீத்தருளால் இறைவனடி சேர்ந்து ளாரே. சஅ

## கலிக்கம்ப நாயனர்

கடவுளருட் கண்ணார்கள் பயிலுந் தொல்லைக் கடந்தைநகர் வணிகர்கலிக் கம்பர் அன்பர்க், கடிமையுற அமுதளிப்பார் அடியான் நீங்கி அருளுருவாய் அன் பருடன் அணைய ஏத்தி, இடையிலவர் அடியிணையும் விளக்கா நிற்ப இகழ் மனைவி கரகமலி இரண்டு கையும், படியில்விழ எறிந்தவள்செய் பணியுந் தாமே பரிந்துபுரிந் தரனருளே பற்றி னரே. சகூ

## கலிய நாயனர்

தடமதில்சூழ் ஒற்றியூ ரதனில் வாழுஞ் சக்கரப்பா டியர்குலமெய்த் தவமா யுள்ளார், படர்புகழார் கலியனர் நலியுங் கூற்றைப் பாய்ந்தவர்க்கு விளக்கெரிக் கும் பரிவால் மற்றோர், உடலிலராய்ச் செக்குழல்வார்க் கதுவும் நேரா துயர் மனைவி யைக்கொள்வார் உளரும் இன்றி, மிடறுதிரம் அகல்நிறைய அரிய நாதன் வியன்கைகொடு பிடிப்பஅருள் மேவி னரே. ருo

## சத்தி நாயனர்

விரிதருகா விரிநாட்டு வரிஞ்சை யூர்வாழ் வேளாளர் சத்தியார் விமலர் பா தத், துரியவர்கள் அடிபரவும் ஒருமை யார்நாள் ஓவாமே ஐந்தெழுத்தும் உரைக்கு நீரார், இருளின்மிட றுடையபிரான் அடியார் தம்மை இகழ்வார்நாத் தண்டாயத் திடுக்கி வாங்கி, அரியுமது திருத்தொழிலா உடையார் மன்றுள் ஆடியசே வடிநீழல் அடைந்து ளாரே. ருக

## ஐயடிகள் காடவர்கோன் நாயனர்

வையநிகழ் பல்லவர்தங் குலத்து வந்த மாமணிமா நிலமுழுதும் மகிழ்ந்து காக்கும், ஐயடிகள் காடவர்கோன் அருளால் நூல்கள் அறிந்தரசு புரிந்திடுதல் அமையு மென்றே, பொய்யனைய உடல்வாழ்வு கழியு மாறு பொருந்தியிடும் புகழ் வெண்பாப் புலியூர் மேவும், செய்யதிரு வடிமுதலாப் பதிகள் தோறுஞ் செப்பி னர் *இருவினைகள் தப்பி னரே. ருஉ

பா - ம்—*என்.

## கணம்புல்ல நாயனார்

இலகுவட வெள்ளாற்றுத் தென்பால் வாழும் இருக்குவே ளூர்அதிபர் எழிலார் சென்னிக், கலைநிலவார் அடிபரவுங் கணம்புல்லர் தில்லைக் கருதுபுலீச் சரத்தாற்குக் காதல் தீபம், நிலைதரத்தாம் இடமிடியால் ஒருநாள் புல்லால் நீடுவிளக் கிடஅதுவும் நேரா தாகத்,*தலைமயிரின் எரிகொளுவும் அளவில் நாதன் தாவாத †வாழ்வருளுந் தன்மை யாரே. ௫௩

## காரி நாயனார்

திருக்கடவூர் வரும்உரவோர் காரி யாராம் திகழ்தொண்டர் வண்தமிழ்நூல் திருந்த ஓதி, விருப்பொடுதம் பெயராற்பா விளம்பி மும்மை வேந்தரையும் முறைமுறையே மேவி அங்கண், உரைத்தஉரை நயமாக்கி அவர்பால் ஏய்ந்த ‡ஒண்பொருளால் ஆலயங்கள் ஓங்கச் செய்து, தரைக்கண்அருந் தவர்க்கேவல் தகமுன் போற்றுந் தன்மையால் அருள்சேர்ந்த நன்மை யாரே. ௫௪

## நின்றசீர் நெடுமாற நாயனார்

கன்னல்மலி நெல்வேலிக் கவினூர் மாறர் கவுரியர்கோன் அமணருறு கலக்கமெல்லாம், பொன்னெயில்சூழ் சிரபுரக்கோன் அணைய மாற்றிப் புனிதமிகு நீறணிந்து போற்றி செய்து, மன்னுபுகழ் மங்கையருக் கரசி யாராம் மலர்மாது மணிமார்பின் மகிழ்ந்து மாற்றூர், வெந்நிடுதல் கண்டரசு புரிந்து காழி வேந்தருள்சேர்ந்தபெரு விறலி னாரே. ௫௫

## வாயிலார் நாயனார்

ஞாயிலார் மதிற்றொண்டை நாட்டு மேன்மை நண்ணுமயி லாபுரியின் வேளாண் தொன்மை, வாயிலார் மலைவில்லான் அடியே போற்றி மறவாமை தலைநின்ற மனமே செம்பொற், கோயிலா உயர்ஞானம் விளக்கா நீராக் குலவியஆனந்தம்அன்பே அமுதாக் கொண்டு, தாயிலான் இருசரணம் நிகழ ஏத்தும் தன்மையார் அருள்சேர்ந்த நன்மை யாரே. ௫௬

## முனையடுவார் நாயனார்

பொன்னிவளந் தருநாட்டுப் புகழு நீடூர்ப் பொருவில்திரு மலிவேளாண் தொன்மை மிக்கார், முன்னியவர் முனையடுவார் இகலார் போரின் முரணழிவார் தமக்காக மொழிந்த கூலி, மன்னுநிதி கொண்டுசெயங் கொடுத்து வந்த வளர் பொருளால் இறைவனடி ||வழுவா அன்பர்க், கன்னமவர் நசையின்மிக மிசைய நல்கும் அன்பர்துன்ப மவையாவும் அகன்று ளாரே. ௫௭

## கழற்சிங்க நாயனார்

காடவர்தங் குலமுவந்த கழலார் சிங்கர் காதல்மிகு தேவியுடன் காவலாரூர், ஆடவல பெருமானைப் பணிவார் அங்கோர் அகன்றமலர் தனைமோந்த அரிவை மூக்கைச், சேடுடைய செருத்துணையார் அரியக் கேட்டுத் திறலரசர் மலரெடுத்த செங்கை என்றே, சூடகமுன் கைதடிந்து ஞாலங் காத்த தூய்மையார் அருள்சேர்ந்த வாய்மை யாரே. ௫௮

## இடங்கழி நாயனார்

கோநாட்டுக் கொடும்பாளூர் இருக்கும் வேளிர் குலத்தலைவர் இடங்கழியார் கொங்கிற் செம்பொன், ஆனேற்றூர் மன்றின்முகடம்பொன் மேய்ந்த ஆதித்

பா - ம்—*தலையின்மயிர். †வரமருளுந் தகைமையோரே. ‡ஒண்பொருள்கொண்டாலயங்கள். ||மறவா.

*தன் மரபோர்நெல் கவர்ந்தோ ரன்பர், போநாப்பண் இருளின்கட் காவ லாளர் புரவலர்முன் கொணரஅவர் புகலக் கேட்டு, மானேற்றார் அடியாரே கொள்க என்று வழங்கிஅர சாண்டருளின் மன்னி னாரே.* ௫௯

## செருத்துணை நாயனார்

*இரைத்தணையார் புனற்பொன்னி மருகல் நன்னாட் டெழிலாருந் தஞ்சை நகர் உழவ ரேத்தும், செருத்துணையார் திருவாரூர் சேர்ந்து வாழ்வார் செல்வ மிகும் பல்லவர்கோன் தேவி வீழ்ந்த, மருத்துணையார் மலரெடுத்து மோப்பக் கண்டு வளமலிபூங் கத்தியால் அவள்மூக் கீர்ந்த, கருத்துணையார் விறற்றிருத் தொண் டினையே செய்து கருதலரும் அமருலகம் கைக்கொண் டாரே.* ௬௦

## புகழ்த்துணை நாயனார்

*புண்ணியர்கள் புகழ்அழகார் திருப்புத் தூர்வாழ் புகழ்த்துணையார் அகத்தடிமைப் புனிதர் சின்னாள், மண்ணிகழ மழைபொழியா வற்கா லத்தால் வருந்துடலம் நடுங்கிடவு மணிநீ ரேந்தி, அண்ணல்முடி பொழிகலசம் முடிமேல் வீழ அயர்ந்தொருநாள் புலம்பஅரன் அருளா லீந்த, நண்ணலரும் ஒருகாசுப் படியால் வாழ்ந்து நலமலிசீர் அமருலகம் நண்ணி னாரே.* ௬௧

## கோட்புலி நாயனார்

*குலவுபுகழ் நாட்டியத்தான் குடிவே ளாளர் கோட்புலியார் குவித்துயர்த்த செந்நெற் கூடு, நிலவணிவார்க் கமைத்தாணை நிறுத்தி ஒன்னார் நேர்மலைவார் திருவாணை கினையா தேநெல், சிலமிடியால் அழித்தபடி அறிந்து வாளால் சேர்ந்தபெருங் கிளைஞருடல் சிதற வீசி, இலகுமொரு குழவியையும் எறிந்து நாதன் எண்ணரிய கருணைநிழல் எய்தி னாரே.* ௬௨

## பத்தராய்ப் பணிவார்

*தொண்டரடித் தொழல்பூசைத் தொழில்மகிழ்தல் அழகார் துளங்கியஅர்ச்சனைபுரிதல் தொகுதிநிய மங்கள், கொண்டபணி திருவடிக்கே கொடுத்தல் ஈசன் குணமருவும் அருங்கதையைக் *குலவிக் கேட்டு, மண்டிவிழி துளும்பல் மயிர் சிலும்பல் உன்னல் மருவுதிருப் பணிகாட்டி வருப வாங்கி, உண்டிகொளா தொழிதலென இவைஒ ரெட்டும் உடையாரவர் பத்தரென உரைத்து ளாரே.* ௬௩

## பரமனையே பாடுவார்

*அருந்தமிழால் வடகலையால் அருளால் ஒன்றால் அறிவுநெறி மருவுமருந் †கவிகள் யாவும், திருந்தியவா னவர்பணிய மன்று ளாடுந் தேவர்பிரான் கழலிணையே சேர ஓதி, விருந்திடுநா வுடையபயன் மேவி னோர்தாம் மேலானோமெனமகிழ்ந்து விழிநீர் சோரப், பரிந்தருளால் பரமனையே பாட வல்ல பான்மையார் எமையாளும் மேன்மை யாரே.* ௬௪

## சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்

*பாரணவும் புலனைந்தக் கரண மொன்றும் படராமே நடுநாடி பயிலு நாதம், காரணபங் கயன்முதலாம் ஐவர் வாழ்வுங் கழியுநெறி வழிபடவுங் கருதி மேலைப், பூரணமெய்ப் பரஞ்சோதிப் பொலிவு நோக்கிப் புணர்ந்தணைந்த சிவாநுபவ போகம் மேவும், சீரணவு மவரன்றோ எம்மை யாளும் சித்தத்தைச் சிவன்பாலே வைத்து ளாரே.* ௬௫

பா - ம்—*குலவிக் கேட்டல். †கலைகள்.

## திருவாரூர்ப் பிறந்தார்

பொங்கியமா தவமுடையார் வருணம் நான்கில் பொருந்தினர்கள் அல் லாத புகழி னுள்ளார், சங்கையிலா அருந்தவம்முன் புரிந்தார் இங்குச் சார் விலார் இறைவனருள் சார்த லாலே, கங்கைவாழ் சடைமுடியான் அருளை நீங் காக் கணநாதர் எனவாழுங் கருத்தர் கன்னிச், செங்கண்வரால் வளர்வாவி திகழும் ஆரூர்ச் சிறந்துளார் எமையாளப் பிறந்து ளாரே. ௬௬

## முப்போதுந் திருமேனி தீண்டுவார்

சேப்பலரும் தவமுடைய செம்மை யாளர் சிறுகாலே மலர்வாவி திகழ மூழ்கி, ஒப்பில்திரு நீறணிந்து நியதி ஆற்றி ஓவாமே ஐந்தெழுத்தும் *உணர்ந்து ரைத்துத், தப்பில்சிவா கமவிதியால் இன்பால் அன்பாந் தன்மையால் நன் மையாந் தகையார் என்றும்,முப்பொழுதுந் திருமேனி தீண்ட வல்ல முறைமை யார் பிறவிதெறுந் திறமை யாரே. ௬௭

## முழுநீறு பூசிய முனிவர்

கற்பம்அனு கற்பம்உப கற்பம் என்றிக் கடன்அணைந்த திருநீறுங் கனற்கண் நீறும், பொற்புடைய அரன்ஆசான் அங்கி ஆறு பொல்லாத பூமிஎதிர் புனைத லாகா, அற்புதமாந் திரிபுண்ட மதியின் பாதி அகிலாங்கந் தீபமிகும் அழகார் வட் டம், முற்பொலிய உடலணியும் முறையா ரன்றே முழுநீறு பூசவல்ல முனிவர் தாமே. ௬௮

## அப்பாலும் அடிச்சார்ந்தார்

தாராரும் மூவேந்தர் பயிலும் தொல்லைத் தமிழ்நாட்டப் புறத்திறைவன் சரணஞ் சார்ந்த, சீராருந் தொண்டர்களும் அண்ட ரேத்துந் திருத்தொண்டத் தொகைஅருளால் செப்புங் காலத், தேராருந் தொடையிலுறு திப்பால் அப்பால் எந்தைபிரான் அடியடைந்த இயல்பி னோரும், ஆராத காதலுடை யவர்க ளன்றே அப்பாலும் அடிச்சார்ந்த அடியார் தாமே. ௬௯

## பூசலார் நாயனார்

பொருவருந்தண் டகநாட்டு நின்ற வூர்வாழ் பூசுரர்கோப் பூசலார் புந்தி யாலே, இருநிதியந் தேடிஆ லயமு மாக்கி எழுந்தருளப் பண்ணுவதா எண்ணுங் காலை, அரனதனைக் காடவர்கோற் கருள மன்னன் அந்நகரம் அணைந்தவ்வா றறிந்து தாழ, விரவுமனக் கோயிலுற இருத்தி அங்கண் வேண்டுவகொண் டிறைஞ்சிஅருள் மேவி னாரே. ௭௦

## மங்கையர்க்கரசியார்

மங்கையர்க்குத் தனிஅரசி வளவர்குலக் கொழுந்து மன்னவர்சூழ் தென்ன வர்க்கு மாதேவி யார்மண், சங்கைகெட அமண்சமயஞ் சாட வல்ல சைவசிகா மணிஞானத் தமிழிற் கோத்த, பொங்குதிரு வருளுடைய போத வல்லி பொரு வில்நெடு மாறனார் புயமேல் வாழும், செங்கலச முலையாள்தன் அருளால் இன் பஞ் சேர்ந்தவரைப் புகழ்ந்தடியேன் வாழ்ந்த வாறே. ௭௧

## நேச நாயனார்

சாலியர்கோக் காம்பீலித் தலைவர் மேன்மை தாவாத புகழ்நேசர் தஞ் சொல் என்றும், கோலியஐந் தெழுத்தோதிச் சிந்தை யுன்னிக் கொண்ட

பா - ம்—*உரைத்து மேன்மைத்.

பொருள் அன்பர்கொளக் கொடுத்து வாழ்வார், சீலமிகுந் திருத்தொண்டர்க் குடையுங் கீளுந் திருந்தியவெண் கோவணமுஞ் சேர ஈந்து, பாலனைய ஒளிநீற் றான் பாத மேத்திப் பரலோகம் முழுதாண்ட பான்மை யாரே. எ௨

### கோச்செங்கட் சோழ நாயனார்

வெண்ணாவல் இறைக்கொளிநூல் பந்தர் செய்த வியன்சிலம்பி அது அழித்த வெள்ளா னைக்கை, உள்நாடிக் கடித்தஉடல் ஒழியச் சோழன் உயர் குலத்துச் சுபதேவன் கமலத் தோங்கும், பெண்ணாகி யவள்வயிற்றில் வைகிச் செங்கட் *பெருமானாய்ப் பெருங்கோயில் பலவுங் கட்டிக், கண்ணார்வித் துயர் தில்லை மறையவர்க்கும் உறையுள் கனகமய மாக்கிஅருள் கைக்கொண் டாரே.

### திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார்

பிறங்கெருக்கத் தம்புலியூர் வாழும் பேரியாழ் பேணுதிரு நீலகண்டப் பாண னார்சீர், சிறந்தருசெம் பொற்பலகை ஆல வாயின் சிமலன்பால் பெற் றாரூர் சேர்ந்துசிவன் வாயில், திறந்தருளும் வடதிசையே சேர்ந்து போற்றித் திருஞான சம்பந்தர் திருத்தாள் வாழ்த்தி, அறந்திகழுந் திருப்பதிகம் யாழி லேற்றி ஆசில்திருப் பெருமணஞ்சேர்ந் தருள்பெற் றாரே. எச

### சடைய நாயனார்

சங்கையிலா அரன்மறையோர் நாவ லூர்வாழ் தவரதிபர் தம்பிரான் தோழ ராய, எங்கள்பிரான் தவநெறிக்கோர் இலக்கு வாய்த்த இசைஞானி யார்தனயர் எண்ணார் சிங்க,மங்கையர்கள் தொழும்பரவை மணவாள நம்பி வந்து திக்க மாதவங்கள் வருந்திச் செய்தார், வெங்கண்அரா விளங்கும்இளம் பிறை சேர் சென்னி விடையினார் அருள்சேர்ந்த சடைய னாரே. எரு

### இசை ஞானியார்

நாவல் திருப்பதிக்கோர் செல்வச் சைவ நாயகமாஞ் சடையனார் நயந்த இன்பப், பூவைக் குலமடந்தை பொற்பார் கொம்பு புனிதமிகு நீறணிந்து போற்றி செய்தே,ஆவில் திகழ்தலைவன் வலிய ஆண்ட ஆரூரர் அவதரிக்க அருந் தவங்கள் புரிந்தார், யாவர்க்கும் எட்டாத இசைந்த இன்ப இசைஞானி என ஞானம் எளிதா மன்றே. எசு

ஆக திருவிருத்தம் - எசு

---

(சில பிரதிகளில் காணப்பட்டவை)

அத்தரடி யவர்கூட்டத் தில்லை வாழும் அந்தணர்பொய் யடிமையிலாப் புலவர் ஆசில், பத்தர்முதல் எழுவரோ டொன்பதின்மர் ஏழொன் பதின்மர் தனிப் பேரெண்ணொன் பதின்ம ராய, இத்தொகையில் தொண்டர்சீர் உரைத் தான் வைத்த ஈரிரண்டா யிரத்திருநூற் றைம்பத்து மூன்றும், உத்தமநல் விருத்தத்திற் பயனுஞ் செய்யுள் உலகெழுபத் தைந்தெனநின் றுரைக்கு மன்றே.

செல்வமிகு திருத்தொண்டத் தொகையில் உள்ளார் சிறந்ததனிப் பெய ராக அறுபதின்மேன் மூவர், மல்லன்மிகு கூட்டப்பேர் அருள்சேர்ந் தார்கள்

பா - ம்—*தென்னவனாய்ப் பெருங்கோயில் பலவும்.

மாதவத்தோர் மும்மூன்று வகைபெற் றூர்கள், இல்லறத்துந் துறவறத்தும் இருந்து வாழ்ந்தே இயல்பாகச் சிவபதநான் கிசைந்தார் தம்மை, அல்லலறுத் தெனையாண்ட சைவசிகா மணியார் அருட்புலியூர் உமாபதியார் அருள்செய் தாரே.

---

திருஞான சம்பந்தர் சண்டீசர் முருகர் சிறப்புலியார் கணநாதர் திருநீல கக்கர், அருள்சேரும் பசுபதியார் சோமாசி மாறர் அப்பூதி நமிநந்தி கலையர்பூ சலையார்,பெருவாய்மை மறையவர்கள் பன்னிருவர் சைவப் பெருமான்நற் சடை யர்இசை ஞானிபுகழ்த் துணையார், ஒருநால்வர் சிவமறையோர் திருத்தொண் டர் என்னும் ஒருவர்மருத் துவர்மன்னர் அறுவரையும் உரைப்பாம்.

ஆமருவும் கொடைச்செங்கண் வளவர்புகழ்ச் சோழர் அன்பர்இடங் கழி மாறர் அருள்மானி சேரர்,தாமறுவர் குறுநிலமன் னவர்ஐவர் சேதித் தலைவரருட் கூற்றர்நர சிங்கர்கழற் சிங்கர், காமர்எழிற் காடவர்கோன் வணிகர்கள்தாம் ஐவர் காரைக்கால் அம்மைஎங்கள் கலிக்கம்ப மூர்த்தி, யாமகிழ அருளும்அமர் நீதி இயற் பகையார் வேளாளர் பதின்மூவர் இவரைஇனி உரைப்பாம்.

வாக்கரசர் இளையான்றன் குடிமாறர் மாறூர் மானக்கஞ் சாறனூர் வாட்டா யர் ஏயர், கோக்குடிசேர் கலிக்காமர் விறன்மிண்டர் மூர்க்கர் கோட்புலியார் வாயி லார் கொடியமுனை யடுவார், சாக்கியனூர் செருத்துணையார் வரிஞ்சியூர் வாழ்ந்த சத்தியார் பதின்மூவர் பொதுவர்இரண் டெங்கள், பாக்கியமாம் திருமூலர் ஆனு யர் பாணர் யாழ்ப்பாணர் பரதரதி பத்தரெனுந் தவரே.

தூவரான வேட்கோவர் தனிநீல கண்டர் சான்றூரில் ஏனாதி நாதர்சா லியரில்,சிவநேசர் வண்ணாரில் திருக்குறிப்புத் தொண்டர் செக்காரில் கலியனூர் அருட்டிருக்கண் ணப்ப, ரவர்வேடர் களிற்கடைஞர் திருநாளைப் போவார் ஆக இவர் மரபறியார் அறுவர்இவர் ஞானக், குலச்சிறையார் கணம்புல்லர் காரிஎறி பத்தர் தண்டியடி கள்குறும்பி னரெனுமா தவரே.

மாமறையோர் பன்னிருவர் சிவமறையோர் நால்வர் மருத்துவரி லேயொ ருத்தர் மன்னவரில் அறுவர், கோமுறைமைக் குறுநிலமன் னவர்ஐவர் வணிகர் குலத்தைவர் வேளாளர் பதின்மூவர் குயவர், தாமுயர்வே டர்பாணர் கடைஞரறச் செக்கார் சான்றூர்வண் ணூர்பரதர் சாலியர்ஓ ரொருவ, ராமிடையர் இருவர் இரு மூவர்மர பறியார் ஆகஅறு பத்துமூன் றூகியமா தவரே.



---

திருமுறைகண்ட புராண இறுதிச் செய்யுளிலுள்ள " ......திருத்தொண்டர் பதந் துதிப்பாம் " என்பது, திருத்தொண்டர் புராண சாரத்தைக் குறிப்பது. இதனால் திருமுறைகண்ட புராண ஆசிரியரும், திருத்தொண்டர் புராண சார ஆசிரியரும் ஒருவர் என்பது விளங்குகிறது. திருத்தொண்டர் புராணசார ஆசிரியர் உமாபதியார் என்று இச்சிறப்புப் பாயிரம் கூறுகிறது. சில பிரதிகளில் இச்சிறப்புப் பாயிரம் இல்லை.

# திருத்தொண்டர் திருநாமக்கோவை

மெய்யன்பர் நாமமெல்லாம் வெவ்வேறு போற்றிடஐங்
கையன் திருவடியே காப்பு.

தில்லைவா ழந்தணர்கள் சீர்நீல கண்டனார்
இல்லை அளித்த இயற்பகையார்—தொல்லை
இளையான் குடிமாறர் மெய்ப்பொருளார் என்றும்
இளையா விறன்மிண்டர் இன்பம்—அளவும்அமர்
நீதி எறிபத்தர் நீண்டபுகழ் ஏனாதி
நாதர்திருக் கண்ணப்பர் நற்கலயர்—மேதகுசீர்
மானக்கஞ் சாறர்அரி வாட்டாயர் ஆனாயர்
ஞானத் திருமூர்த்தி நாயனார்—மேன்மை
முருகர் பசுபதியார் முன்னாளைப் போவார்
துரிசில் திருக்குறிப்புத் தொண்டர்—மருவுமறைச்
சண்டீசர் வாகீசர் தக்க குலச்சிறையார்
கொண்ட மிழலைக் குறும்பனார்—தொண்டுசெயும்
நீள்காரைக் காலம்மை அப்பூதி நீலநக்கர்
மூனா நமிநந்தி முத்தமிழை—ஆளும்
திருஞான சம்பந்தர் செய்ய கலிக்காமர்
அருள்மூலர் தண்டி யடிகள்—வருமூர்க்கர்
சோமாசி மாறனார் சாக்கியனார் சூழாக்கூர்
நாமார் சிறப்புலியார் நற்றொண்டின்—நேமச்
சிறுத்தொண்டர் சேரமான் செய்ய கணநாதர்
விறற்களந்தைக் கூற்றுவனார் விஞ்சைத்—திறத்துமிகும்
பொய்யடிமை இல்லாப் புலவர் புகழ்ச்சோழர்
மொய்கொள்நர சிங்க முனையரையர்—ஐயர்அதி
பத்தர் கலிக்கம்பர் கலியர் பகர்சத்தி
கைத்தபுலன் ஐயடிகள் காடவர்கோன்—மொய்த்தகணம்
புல்லனார் காரிநெடு மாறர்புகழ் வாயிலார்
நல்ல முனையடுவார் நாயனார்—மல்குகழற்
சிங்கர் இடங்கழியார் தஞ்சைச் செருத்துணையார்
கொங்கார் புகழ்த்துணையார் கோட்புலியார்—அங்கணர்க்குப்
பத்தராய்த் தாழ்வார் பரமனையே பாடுவார்
சித்தஞ் சிவன்பாலே சேர்த்துள்ளார்—நித்தமும்
முத்தி நெறிகாட்டும் முதல்வர் முழுதுணர்ந்தோர்
பித்தனுறை ஆரூர்ப் பிறந்தார்கள்—அத்தனையே
முப்போதுந் தீண்டுவார் முழுநீறு பூசுவார்
அப்பாலும் ஈசன் அடிச்சார்ந்தார்—மெய்ப்பூசல்
மானியார் நேசனார் வாழ்செங்கட் சோழனார்
பான்மையார் நீலகண்டப் பாணனார்—மேன்மைச்
சடையரிசை ஞானிஇவர் தம்மைஎல்லாஞ் சேர்த்துத்
தொடையாகப் பாடியவன் தொண்டர்—அடியிணைகள்

சிந்தனைசெய் திந்தத் திருநாமக் கோவைதனை
மந்திரமாக் கொண்டு மயிர்சிலிர்த்து—நைந்துருகி
மெய்யன்பா லென்றும் விளம்பப் பெறுவார்கள்
கைதவமும் புல்லறிவும் கற்பனையும்—மையலுந்தீர்ந்
தத்துவிதா னந்த அகண்டபரி பூரணத்தில்
நித்தியமா வாழ்வார் நிசம்.

# திருத்தொண்டர் திருநட்சத்திரம்

ஒன்றகல எட்டெட்டாம் ஓதும்அடி யாரன்பால்
அன்றுமதி நாளினிது சொல்லவே—வென்றிதரும்
பொன்னிதிவி ளுயகனூர் பூமுடிமேல் ஆடுதிருச்
சன்னிதிவி நாயகனூர் தாள்.

தில்லைவாழ் அந்தணர் திருவரு ளாலவர்
மல்குசீர்ப் பதத்தை மகிழ்வொடு வணங்கிக்
கடிதிரு நீல கண்டர்தை விசாகம்
வடிவியற் பகையார் மார்கழி உத்திரம்
வரும்இளை யான்குடி மாறர்ஆ வணிமகம்
கருதுமெய்ப் பொருளார் கார்த்திகை உத்திரம்
விறன்மிண்ட கண்டர் மேடம்ஆ திரைநாள்
அறன்அமர் நீதி ஆனிப் பூரம்
மாண்எறி பத்தர் மாசியில் அத்தம்
காணும்ஏ னாதியார் கன்னிஉத்தி ராடம்
மலர்கண் ணப்பர் மகரமான் றலையிற்
குலவுகுங் குலியர் கோளரி மூலம்
தருமா னக்கஞ் சாறர்விற் சுவாதி
அரிவாட் டாயர்தை ஆதிரை நாளில்
ஆனாயர் கார்த்திகை அத்த நாளில்
கான மூர்த்தியார் கடகத் தாரல்
முருகர் இடப மூல மதனில்
உருத்திர பசுபதி உயர்கன்னி முன்னாள்
பொருந்திரு நாளைப் போவார்கன் னியிற்பூர்
திருக்குறிப் படியார் சித்திரைச் சுவாதி
சண்டீச ராமவர் தையுத் திரத்தில்
தண்டமிழ் அப்பர் தகரிற் சதயம்
குலச்சிறை நாயனூர் கோளரி அனுடம்
அலகில் குறும்பர் ஆடியிற் சித்திரை
அருள்கா ரைக்கால் அம்மைமீன் விளக்காம்
அருகில்அப் பூதிதை யதிற்சத யத்தில்
கமைநீல நக்கர் காளை மூலத்தில்

நமிநந்தி யடிகள் நாள்விடைப் பூசம்
ஞானசம் பந்தர் நாள்விடை மூலம்
ஆன கலிக்காமர் ஆனிரே வதியில்
அருட்டிரு மூலர் ஐப்பசி மூன்னுள்
வருதண்டி யடிகள் வளர்மீன் சதயம்
சேமமா மூர்க்கர் தேள்மதி மூலம்
சோமாசி மாறர் தொழுவிடை அரவில்
சாக்கிய நாயனுர் தனுப்பூ ராடம்
தேக்கிய சிறப்புலி தேட்பூ ராடம்
சேர்சிறுத் தொண்டர் சித்திரைப் பரணி
சேரமான் கடகஞ் சேர்ந்தசோ தியினில்
கணநாதர் மீனங் கலந்தஆ திரையில்
குணமாங் கூற்றுவர் குளிர்மதி ஆதிரை
பொய்யடிமை இல்லாப் புலவர்தாள் போற்றி
மெய்ப்புகழ்ச் சோழர் மிளிர்குளிர் ஆரல்
நரசிங்க முனையார் நற்கன்னி சதயம்
திரஅதி பத்தர் சிங்கஆ யிலியம்
*கலிக்கம்பர் மகரக் கடைநா ளதனில்
கலியார் ஆடியிற் கலந்தஇந் திரனுள்
தூயசிற் சத்தியார் துலாப்பூ சத்தில்
ஐயர்கா டவர்கோன் ஐப்பசி மூலம்
கணம்புல்ல நாயனுர் கார்த்திகை அங்கி
கணஞ்சேர் காரியார் கடம்பூ ராடம்
தூய்நெடு மாறர் துலாமதிப் பரணியில்
வாயிலார் நாயனுர் மார்கழி இரேவதி
வெம்முனை யடுவார் மீனப் பூசம்
†செம்மைநா கங்கழற் சிங்கர்சேப் பரணி
மருவிடங் கழியார் மதிதுலா ஆரல்
செருத்துணை நாயனுர் சிங்கப் பூசம்
சேட்புகழ்த் துணையார் சிங்கஆ யிலியம்
கோட்புலி நாயனுர் குளிர்மதி கேட்டை
பத்தராய்த் தாழ்வார் பரமனைப் பாடுவார்
சித்தத் தைச்சிவன் பாலே சேர்த்துளார்
அப்புறு செய்த்திரு ஆரூர்ப் பிறந்தார்
முப்போ துந்திரு மேனி தீண்டுவார்
முப்புவி தொழுமுழு நீறு பூசுவார்
அப்பாலும் அடிச்சார்ந் தாரை வணங்கிப்
பூசலார் ஐப்பசி புகும்அனு டத்தில்
மாசிலா மானியார் மைம்மதி உரோகணி
மிகுசிவ நேசர் மீனரோ கணியில்
தொகுபுகழ்ச் செங்கட் சோழர் குடக்குன்
றடுநீல கண்ட யாழ்ப்பாணர் சேமூலம்
சடையனுர் மார்கழி சார்ந்தஆ திரையில்
இசைஞானி மேடத் திசைந்தசித் திரையில்

பா - ம்.—*கலியர் ஆடியினிற். †செம்மையா நங்கழற் ; நன்கழற்.

*வசையிலா இம்மதி மருவும்இந் நாளில்*
*பரகதி யடைந்த பத்தரைப் பாடிக்*
*கருதுவன் தொண்டர் கடகச் சுவாதி*
*குருபூசை நாளில் குறைவிலா திவர்க்கு*
*வருபூசை தந்தோர் மாநிலத் தோங்கித்*
*தவப்பய னெய்திச் சதுமறைக் கிரியில்*
*சிவகதி யடைதல் திண்ணம்உண் மையதே.*

---

**சமயகுரவர்**

*சித்திரைச் சதயம் அப்பர் சிறந்தவை காசி மூலம்*
*அத்தரைப் பணிசம் பந்தர் ஆனிமா மகத்தில் அந்த*
*முத்தமிழ் வாத வூரர் முதியநல் ஆடி தன்னில்*
*சுத்தமாஞ் சோதி நாளில் சுந்தரர் கயிலை சேர்ந்தார்.*

**சமயகுரவர்—சேக்கிழார்**

*பாடிய சம்பந்தர் வைகாசி மூலம் பயிலும்அப்பர்*
*நீடிய சித்திரை மாதச் சதயம் நிறைவன்தொண்டர்*
*ஆடியிற் சோதி திருவாத வூரர்நல் லானிமகம்*
*தேடிய சேக்கிழார் வைகாசிப் பூசஞ் சிறந்தனரே.*

**சந்தானகுரவர்**

*சித்திரை அத்தம் உமாபதி ஆவணித் திங்கள்தனில்*
*உத்திரஞ் சீர்கொள் மறைஞான சம்பந்தர் ஓதுகன்னிச்*
*சுத்தமெய்ப் பூரம் அருணந்தி ஐப்பசிச் சோதிதனில்*
*வித்தக மெய்கண்ட தேவர் சிவகதி மேவினரே.*

**சமயகுரவர் வயது**

*அப்பருக்கெண் பத்தொன் றருள்வாத வூரருக்குச்*
*செப்பியநா லெட்டினில் தெய்வீகம்—இப்புவியில்*
*சுந்தரர்க்கு மூவாறு தொன்ஞான சம்பந்தர்க்*
*கந்தம் பதினா றறி.*

சேக்கிழார் புராணம்

என வழங்கும்

# திருத்தொண்டர் புராண வரலாறு

## பாயிரம்

### விநாயகர்

வானுலகும் மண்ணுலகும் வாழமறை வாழப்
பான்மைதரு செய்யதமிழ் பார்மிசை விளங்க
ஞானமத ஐந்துகர மூன்றுவிழி நால்வாய்
ஆனைமுக னைப்பரவி அஞ்சலிசெய் கிற்பாம்.

### சபாநாதர்

சீராருஞ் சதுமறையும் தில்லைவா ழந்தணரும்
பாராரும் புலிமுனியும் பதஞ்சலியும் தொழுதேத்த
வாராருங் கடல்புடைசூழ் வையமெலாம் ஈடேற
வாராரு மணிமன்றுள் எடுத்ததிரு வடிபோற்றி.

### சிவகாமசுந்தரி

பரந்தெழுந்த சமண்முதலாம் பரசமய இருள்நீங்கச்
சிரந்தழுவு சைவநெறித் திருநீற்றின் ஒளிவிளங்க
அரந்தைகெடப் புகலியர்கோன் அமுதுசெயத் திருமுலைப்பால்
சுரந்தளித்த சிவகாம சுந்தரிபூங் கழல்போற்றி.

### கற்பகவிநாயகர்

மலரயனுந் திருமாலுங் காணாமை மதிமயங்கப்
புலிமுனியும் பதஞ்சலியுங் கண்டுதொழப் புரிசடையார்
குலவுநடந் தருந்தில்லைக் குடதிசைக்கோ புரவாயில்
நிலவியகற் பகக்கன்றின் நிரைமலர்த்தா ளிணைபோற்றி.

### சுப்பிரமணியர்

பாறுமுக மும்பொருந்தப் பருந்துவிருந் துணக்கழுகு
நூறுமுக மாயணைந்து நூழில்படு களம்புகுத
மாறுமுகந் தருநிருதர் மடியவடி வேலெடுத்த
ஆறுமுகன் திருவடித்தா மரையிணைக ளவைபோற்றி.

### சைவசமயாசாரியர்

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
ஆழிமிசைக் கல்மிதப்பில் அணைந்தபிரான் அடிபோற்றி
வாழிதிரு நாவலூர் வன்தொண்டர் பதம்போற்றி
ஊழிமலி திருவாத வூரர்திருத் தாள்போற்றி.

### திருத்தொண்டர்—சேக்கிழார்

தில்லைவாழ் அந்தணரே முதலாகச் சீர்படைத்த
தொல்லையதாந் திருத்தொண்டத் தொகையடியார் பதம்போற்றி
ஒல்லையவர் புராணகதை உலகறிய விரித்துரைத்த
செல்வமலி குன்றத்தூர்ச் சேக்கிழா ரடிபோற்றி. எ

### நூற்பெயர்

தாய்மலர்ந்த முகத்தினளாய்த் தழுவிமுலை தரவந்த
நோய்மலர்ந்த பிறவிதொறு நுழையாமல் உலகுய்யத்
தீமலர்ந்த சடைக்கூத்தர் திருவருளாற் சேக்கிழார்
வாய்மலர்ந்த புராணத்தின் வரலாறு விரித்துரைப்பாம். அ

### அவையடக்கம்

ஊர்க்கடலை இவனெனவர் துதித்தநான் ஓங்குதமிழ்
நூற்கடலைக் கரைகண்டு நுவலரிதைக் குமதுதிருப்
பாற்கடலைச் சிற்றெறும்பு பருகநினைப் பதுபோலும்
நீர்க்கடல்சூழ் மண்ணுலகை நிறுக்கநினைக் குமதொக்கும். கூ

தேவுடனே கூடியசொல் செழுந்தமிழோர் தெரிந்துரைத்த
பாவுடனே கூடியஎன் பருப்பொருளும் விழுப்பொருளாம்
கோவுடனே கூடிவருங் குருட்டாவும் ஊர்புகுதும்
பூவுடனே கூடியநார் புனிதர்முடிக் கணியாமல். கo

### நூல்

பாலாறு வளஞ்சுரந்து நல்க மல்கும் பாலைவிரி மணங்கமழ்பூஞ் சோலை தோறும்,காலாறு கோலிஇசை பாட நீடும் களிமயில்நின் றாடும்இயல் தொண்டை நாட்டுள், நாலாறு கோட்டத்துப் புலியூர்க் கோட்டம் நன்றிபுனை குன்றைவள நாட்டு மிக்க, சேலாறு கின்றவயற் குன்றத் தூரில் சேக்கிழார் திருமரபு சிறந்த தன்றே. கக

நாடெங்கும் சோழன்முனந் தெரிந்தே எற்றும் நற்குடிநாற் பத்தெண்ணா யிரத்து வந்த, கூடல்கிழான் புரிசைகிழான் குலவு சீர்வெண் குளப்பாக்கி ழான் வரிசைக் குளத்து ழான்முன், தேடுபுக ழாரிவருஞ் சிறந்து வாழச் சேக்கிழார் குடியிலிந்தத் தேசம் உய்யப், பாடல்புரி அருண்மொழித்தே வரும்பி னந்தம் பாலறா வாயரும்வர் துதித்து வாழ்ந்தார். கஉ

இமயமலை யரையன்மகள் தழுவக் கச்சி ஏகம்பர் திருமேனி குழைந்த ஞான்று, சமயமவை ஆறினுக்குந் தலைவிக் கீசர் தந்தபடி எட்டுழக்கீ ராழி நெல்லும், உமைதிருச்சூ டகக்கையால் கொடுக்க வாங்கி உழுவுதொழி லாற் பெருக்கி உலக மெல்லாம், தமதுகொழு மிகுதிகொடு வளர்க்கும் வேளாண் தலைவர்பெரும் புகழுலகில் தழைத்த தன்றே. கங

விளைகழனி பூலோகம் முழுதும் ஏரி விரிதிரைநீர்க் கடல்வருணன் கம்பு கட்டி, கிளர்கலப்பை தருசுமையாள் சுவேத ராமன் கிடாமறலி வசத்தீசன் வசத்தான் என்றிங், களவறிந்தாண் டாண்டுதொறும் விதைதப் பாமல் அளக்கு மவள் கச்சியறம் வளர்த்த மாதா, ஒளிபெருகு கொழுமிகுதி எறும்பீ றான உயிரனைத்துந் தேவரும்உண் டுவப்ப தன்றே. கச

மாறுகொடு பழையனூர் நீலி செய்த வஞ்சனையால் வணிகன்உயிர் இழப்பத் தாங்கள், கூறியசொல் பிழையாது துணிந்து செந்தீக் குழியிலெழு பதுபேரும் முழுகிக் கங்கை, ஆறணிசெஞ் சடைத்திருவா லங்காட் டப்பர் அண்டமுற நிமிர்ந்தாடும் அடியின் கீழ்மெய்ப், பேறுபெறும் வேளாளர் பெருமை எம்மால் பிறித்தளவிட் டிவளவெனப் பேச லாமோ. கரு

காராளர் அணிவயலில் உழுது தங்கள் கையார நட்டமுடி திருந்தில் இந்தப், பாராளுந் திறல்அரசர் கவித்த வெற்றிப் பசும்பொன்மணி முடிதிருந் துங் கலப்பை பூண்ட, ஏராலெண் திசைவளர்க்கும் புகழ்வே ளாளர் ஏரடிக்குஞ் சிறுகோலால் தரணி யாளச், சீராரு முடியரசர் இருந்து செங்கோல் செலுத்து வர்வே ளாளர்புகழ் செப்ப லாமோ. கசு

வாயிலார் சத்தியார் விறல்சேர் மிண்டர் வாக்கரையர் சாக்கியர்கோட் புலிகஞ் சாறர், ஏயர்கோன் கலிக்காமர் முனைவித் தாக்கும் இளையான்றன் குடி மாறர் மூர்க்கர் செங்கைத், தாயனூர் செருத்துணையார் செருவில் வெம்போர் சாதித்த முனையடுவார் ஆக நம்பி, பாயிரஞ்சேர் அறுபதுபேர் தனிப்பேர் தம் மில் பதின்மூவர் வேளாளர் பகருங் காலே. கஎ

அத்தகைய புகழ்வேளாண் மரபில் சேக்கி ழார்குடியில் வந்தஅருண் மொழித்தே வர்க்குத், தத்துபரி வளவனுந்தன் செங்கோ லோச்சுந் தலைமை அளித் தவர்தமக்குத் தனது பேரும், "உத்தமச்சோ ழப்பல்ல வன்தான்" என் றும் உயர்பட்டங் கொடுத்திடஆங் கவர்நீர் நாட்டு, நித்தனுறை திருநாகேச் சுரத்தில் அன்பு நிறைதலினால் மறவாத நிலைமை மிக்கார். கஅ

தம்பதிகுன் றத்தூரில் மடவ ளாகந் தானாக்கித் திருக்கோயில் தாபித் தங் கண், செம்பியர்கோன் திருநாகேச் சுரம்போ லீதுந் திருநாகேச் சுரமெனவே திருப்பேர் சாற்றி, அம்புவியில் அங்காங்க வைப வங்கட் கானபரி கலந்திருநாள் பூசை கற்பித், திம்பர்புகழ் வளவன்அர சுரிமைச் செங்கோல் இமசேது பரியந்தம் இயற்று நாளில். ககூ

*கலகமிடும் அமண்முருட்டுக் கையர் பொய்யே கட்டிநடத் தியசிந்தா மணியை மெய்யென், றுலகிலுளோர் சிலர்கற்று நெற்குத் துண்ணு துமிக் குத்திக் கைவருந்திக் கறவை நிற்க, மலடுகறந் துளந்தளர்ந்து குளிர்பூஞ் சோலை வழியிருக்கக் குழியில்விழுந் தளறு பாய்ந்து, விலைதருமென் கரும்பிருக்க இரும்பை மென்று விளக்கிருக்க மின்மினித்தீக் காய்ந்து நொந்தார். உ0

வளவனுங்குண் டமண்புரட்டுத் திருட்டுச் சிந்தா மணிக்கதையை மெய் யென்று வரிசை கூற, உளமகிழ்ந்து பலபடப்பா ராட்டிக் கேட்க உபயகுல மணிவிளக்காஞ் சேக்கி ழார்கண், டிளஅரசன் தனைநோக்கிச் "சமணர் பொய்ந் நூல் இதுமறுமைக் காகாதிம் மைக்கு மற்றே, வளமருவு கின்றசிவ கதைஇம் மைக்கும் மறுமைக்கும் உறுதி" என வளவன் கேட்டு. உக

"அவகதையாய்ப் பயனற்ற கதையீ தாகில் அம்மையும்இம் மையும்உறுதி பயக்கத் தக்க, சிவகதைஏ ததுகற்ற திறமைப் பேரார் சீவகசிந் தாமணிபோல் இடையில் வந்த, நவகதையோ புராதனமோ முன்னூ லுண்டோ நாநிலத்துச் சொன்னவரார் கேட்ட பேரார், தவகதையோ தவம்பண்ணிப் பேறு பெற்ற தனிக்கதையோ அடைவுபடச் சாற்றும்" என்றான். உஉ

செம்பியர்பூ பதிமகிழ்ந்து வினவிக் கேட்கச் சேக்கிழார் குரிசில்உரை செய்வார் "ஞாலத், தம்பலவர் திருத்தொண்டர் பெருமை ஆரூர் அடிகள்முதல்

*இதற்குச் சேக்கிழார் அருளிய பெரிய புராணத்தில் சான்றில்லை.

அடிஎடுத்துக் கொடுக்க நாவல், நம்பிபதி னொருதிருப்பாட் டாகச் செய்த நலமலிதொண் டத்தொகைக்கு நாரை யூரில், தும்பிமுகன் பொருளுரைக்க நம்பி யாண்டார் சுருதிமொழிக் கலித்துறைஅந் தாதி செய்தார். ௨௩

“ஆயுமறை மொழிநம்பி யாண்டார் நம்பி அருள்செய்த சலித்துறைஅந் தாதி தன்னைச், சேயதிரு முறைகண்ட ராச ராச தேவர்சிவா லயதேவர் முதலா யுள்ள, வயகருங் கடல்புடைசூழ் உலக மெல்லாம் எடுத்தினிது பாராட்டிற்” றென்ன “அந்தத், தூயகதை அடைவுபடச் சொல்வீர்” என்று சோழன்உரை செயக்கேட்டுக் குன்றை வேந்தர். ௨௪

தில்லைவாழ் அந்தணரே முதற்பண் பாடு திருநீல கண்டத்துப் பாணர் ஈறாச், சொல்லியதொண் டத்தொகைநூல் வகைஅந் தாதித் தொடர்ச்சியினை விரித்துரைக்க வளவன் கேட்டு, மெல்லியலாள் பங்கர்திரு வருளை நோக்கி *வியந்தடியார் தொண்டுசெய்து பேறு பெற்ற, செல்கதியை நினைந்துருகி வளவர் கோமான் சேவையர்கா வலரைமுக நோக்கிச் சொல்வான். ௨௫

“அவரவர்கள் நாடவர்கள் இருந்த ஊர்வந் தவரித்த திருமரபு திருப்பேர் செய்த, சிவசமயத் திருத்தொண்டு முற்பிற் பாடு சிவனடிக்கீழ் உயர்பரம முத்தி பெற்றோர், எவரும்அறி யச்சீவன் முத்த ராய்இங் கிருப்பவர்கள் இனிமேலும் பிறப்போர் மண்மேல், அவர்களைச்சேர்ந் தருள்பெற்றோர் பகைத்துப் பெற்றோர் அவர்கள்பகை யாய்நரகில் அடைந்த பேர்கள். ௨௬

இல்லறத்தில் இருந்துநனி முத்தி பெற்றோர் இல்லறத்தில் சிற்றின்ப இயல்பை நீக்கி, நல்லறமாந் துறவறத்தில் நின்று பெற்றோர் நற்பிரம சாரிகளாய் அருள்பெற் றுய்ந்தோர், செல்கதிசற் குருவருளால் சென்று சேர்ந்தோர் சிவபூசை செய்துபர முத்தி பெற்றோர், புல்லறிவு தவிர்ந்துதிரு வேடமேமெய்ப் பொருளெனக்கொண் டரனடிக்கீழ்ப் பொருந்தப் புக்கோர். ௨௭

இப்படியே அடைவுபடப் பிரித்துக் கேட்டால் யாவருக்கு மேதரிக்கச் செவிநா நீட்ட, ஒப்பரிய பொருள்தெரிந்து விளங்கித் தோன்ற உவமையுடைத் தாயகதை கற்க நிற்கத், தப்பில்பெருங் காவியமாய் விரித்துச் செய்து தருவீர்” என் றவர்க்குவிடை கொடுத்து வேண்டும், செப்பரிய திரவியமும் கொடுக்க வாங்கிச் சேக்கிழார் குரிசில்திருத் தில்லை சேர்ந்தார். ௨௮

## வேறு

தில்லை எல்லையில் வந்து வந்தெதிர் தெண்ட னாகவி ழுந்தெழுந்
தல்லி சேர்கம லத்த டத்தினில் மூழ்கி அம்பல வாணர்முன்
ஒல்லை சென்றுப ணிந்து கைத்தலம் உச்சி வைத்துளம் உருகிநைந்
தெல்லை காணரி தாய பேரொளி இன்ப வாரியில் மூழ்கியே. ௨௯

அடைய லார்புரம் நீறெ ழத்திரு நகைசெய் தன்றொரு மூவரைப்
படியின் மேல்அடி மைக்கொ ளும்பத பங்க யங்கள் பணிந்துநின்
“றடிக ளேஉன தடியர் சீர்அடி யேன்உ ரைத்திட அடிஎடுத்
திடர்கெ டத்தரு வாய்”எ னத்திரு வருளை எண்ணிஇ றைஞ்சினார். ௩௦

அலைபு னற்பகி ரதிந திச்சடை யாட வாடர வாடநின்
றிலகு மன்றினில் ஆடு வார்திரு வருளி னால்அச ரீரிவாக்

பா - ம்—*வியந்தடிமைத்.

'குலமெ லாம்'என அடிஎ டுத்துரை செய்த பேரொலி யோசைமிக்
கிலகு சீரடி யார்செ விப்புலத் தெங்கு மாகிநி றைந்ததால். ௩௧

தில்லை மாநகர் வாழ வாழ்தவ சிந்தை அந்தணர் ஆறைஞ்ஞூ
றல்ல தும்பல மடப திந்தவ ராச ரிக்கையி லுள்ளபேர்
எல்லை யில்லவர் யாவ ருங்களி கொளவி ளங்கச ரீரிவாக்
கொல்லை வந்தெழ அனைவ ருங்கரம் உச்சி வைத்துளம் உருகினார். ௩௨

உள்ள லார்புரம் நீறெ ழக்கணை ஒன்று தொட்டுயர் மன்றில்வாழ்
வள்ள லார்திரு மாலை யுந்திரு நீறு மெய்ப்பரி வட்டமும்
எள்ள லாரல ரென்று சேவையர் காவ லர்க்கிவை இனிதளித்
தள்ள லார்வயல் நீடு தில்லையில் அனைவ ருங்களி கொண்டபின். ௩௩

சேவை காவலர் தொண்டர் சீர்உரை செய்வ தற்குயர் செய்யுள்முன்
மூவ ரோதிய திருநெ றித்தமிழ் ஆத லால்வரன் முறைமையால்
யாவ ரும்புகழ் திருநெ றித்தலை வரைவ ணங்கிஇ ணங்கிமெய்த்
தாவ ருஞ்சிவ சாத னங்கள் தரித்து நீறு பரித்தரோ. ௩௪

வந்து சூழ நிரைத்த ஐஇரு நூறு கால்மணி மண்டபத்
தெந்தை தயார்திரு வருளை யுன்னி இருந்து சேவையர் காவலர்
செந்த மிழ்த்தொடை யால்வி ளங்கிய திருவி ருத்தநி ருத்தனார்
தந்த சொன்முத லாஎ டுத்தனர் தானு வானபு ராணநூல். ௩௫

## வேறு

திருமறையோர் புராணமவை பதின்மூன்று சிவவே தியர்அரனை வழிபட்ட புராணமோ ரிரண்டு, குரைகழல்மா மாத்திரரொன் றறுவர்முடி மன்னர் குறுநில மன் னவர்ஐவர் வணிகர்குலத் தைவர், இருமைநெறி வேளாளர் பதின்மூவர் இடையர் இருவர்சா லியர்குயவர் தயிலவினை யாளர், பரதவர்சான் றார்வண் ணார் சிலைமறவர் நீசர் பாணரிவர் ஒரொருவ ராம்பகருங் காலே. ௩௬

அறுதிபெறத் திருமரபு குறித்துரையாப் புராணம் அவைகள்ஒரு பதின் மூன்று திருக்கூட்டந் தன்னில், மறுவிலவர் பதியறிந்த கதைஇரண்டு வந்த மரபறிந்த கதைஇரண்டு பேரறிந்த கதையொன், றுறுமரபு தெரியாப்பு ராணமவை யோரேழ் ஊரறியாக் கதைஎழு பேரறியாக் கதைஎட், டிறுதியிலக் கங்கண்ட திருக்கூட்ட மொன்றெண் ணித்தனைஎன் றறியாத திருக்கூட்டம் எட்டே. ௩௭

தில்லைமறை யோர்கலயர் முருகர்பசு பதியார் சிறப்புலியார் கணநாதர் பூசலைசண் டேசர், கல்விநிறை சோமாசி மாறர்நமி நந்தி கவுணியனார் அப்பூதி நீலநக்க ராகச், செல்வமறை யோர்காதை பதின்மூன்று சிவவே தியர்காதை இரண்டுபுகழ்த் துணையார்முப் போதும், வல்லபடி சிவனைஅருச் சிப்பார்கள் மாமாத் திரர்மரபில் சிறுத்தொண்டர் ஒருவர்முடி மன்னர். ௩௮

அறுவரெவ ரவர்செங்கட் சோழர்புகழ்ச் சோழர் அருள்மானி இடங்கழி யார் நெடுமாறர் சேரர், குறுநிலமன் னவர்ஐவர் நரசிங்க முனையர் கூற்றுவனார் கழற்சிங்கர் மெய்ப்பொருள்ஐ யடிகள், முறைமைவணி கரில்ஐவர் காரைக்கா லம்மை மூர்த்திகலிக் கம்பர்அமர் நீதிஇயற் பகையார், *திறமைவிரி வேளா ளர் பதின்மூவர் மூர்க்கர் செருத்துணையார் வாயிலார் கோட்புலியார் சத்தி. ௩௯

பா - ம்—*திறமைபுரி.

தாயனார் இளையான்றன் குடிமாறர் அரசு சாக்கியர்கஞ் சாறார்விறன் மிண்டர்முனை யடுவோர், ஏயர்கோன் கலிக்காமர் கோபாலர் மரபில் இருவர்திருமூலனார் ஆனாயர் குயவர், சேயபுகழ்த் திருநீல கண்டனார் பாணர் திருமரபில் திருநீல கண்டத்துப் பாணர், மேயதிறல் அதிபத்தர் பரதவர்கண் ணப்பர் வேடர்மர பினில்*சான்றார் ஏனாதி நாதர். ௬௦

நேசனார் சாலியரில் திருநாளைப் போவார் நீசர்மர பினில்எங்கள் திருக்குறிப்புத் தொண்டர், தூசொலிக்கும் ஏகாலி மரபுதில தயிலத் தொழில் மரபில் கலியனார் மரபு†குறித் துரையாக், காசில்கதை பதின்மூன்று குலச்சிறையார் தண்டி கணம்புல்லர் எறிபத்தர் காரியார் குறும்பர், தேசுடைய பத்தர்பரமனைப்பாடு வார்கள் சித்தத்தைச் சிவன்பால்வைத் தார்ஆரூர்ப் பிறந்தார். ௬௧

செப்பரிய பொய்யடிமை இல்லாதார் மெய்யில் திருநீறு பூசுமுனி வருலகு தன்னில்,அப்பாலும் அடிச்சார்ந்தார் இவர்கள்தமிற் சிலபேர் ஆய்ந்ததமிழ்ப் பேர்சிலபேர் மலையாளர் சிலபேர், தப்பாத தெலுங்கர்சிலர் மற்றுளதே சத்தோர் தவஞ்செய்து பரகதியை அடைந்தவர்கள் சிலபேர், இப்போதும் இருந்தரனை வழிபடுவோர் சிலபேர் இனிமேலுந் திருமேனி கொடுவருவோர் சிலரே.

திருஞான சம்பந்தர் திருநாவுக் கரையர் திருமூலர் நெடுமாறர் மங்கையருக் கரசி, கரைசேருங் குலச்சிறையார் யாழ்ப்பாணர் குறும்பர் கணநாதர் அப்பூதி சோமாசி மாறர், உரைசேரும் இவர்கள்பதி னொருவர்குரு வருளால் உயர்முத்தி யடைந்தவர்கள் எறிபத்தர் கலயர், முருகனார் கண்ணப்பர் ஆனாயர் தாயர் மூர்த்தியார் சண்டேசர் திருநாளைப் போவார். ௬௩

சேரனார் சாக்கியனார் கூற்றுவனார் தண்டி சிறப்புலியார் பசுபதியார் கலிக்காமர் கலியர், காரியார் அதிபத்தர் நீலநக்கர் பூசல் கணம்புல்லர் கோட்புலியார் நமிநந்தி யடிகள், சீருடைய கழற்சிங்கர் வாயிலார் தூய செருத்துணையார் புகழ்த்துணையார் காடவர்ஐ யடிகள், மூரிநெடு வேற்செங்கட் சோழனாராக முப்பதுபேர் சிவலிங்கத் தால்முத்தி யடைந்தோர். ௬௪

திருநீல கண்டனார் இயற்பகையார் மூர்க்கர் சிறுத்தொண்டர் திருக்குறிப்புத் தொண்டர்விறன் மிண்டர்,அருள்சேரும் இடங்கழியார் முனையடுவார் சத்தி அமர்நீதி மெய்ப்பொருளார் ஏனாதி நாதர், கரைசேரும் புகழ்ச்சோழர் கஞ்சாறர் மாறர் காரைக்கா லம்மைநர சிங்கர்கலிக் கம்பர், வருநேச ராகஒரு பத்தொன்ப தடியார் மணிவேடத் தாரைவழி பட்டரனை யடைந்தோர். ௬௫

கவுணியர்நா வுக்கரசர் பேயார்இம் மூவர் கற்கும்இயல் இசைவல்லோர் இசைத்தமிழ்நூல் வல்லோர், பவமணுகாத் திருநாளைப் போவார்ஆ னாயர் பாணர்பர மனைப்பாடு வாராக நால்வர், புவனிபுகழ் ஐயடிகள் திருமூலர் காரி பொய்யடிமை இல்லாத தமிழ்ப்புலவர் சேரர், நவமுடைய இவரைவர் இயல்வல்லோர் நின்ற நாயன்மார் தவம்புரிந்து நற்கதியை அடைந்தோர். ௬௬

இல்லறத்தில் நின்றவர்கள் திருநீல கண்டர் இயற்பகையார் உள்ளிட்டார் மூர்த்தியார் அப்பர், நல்லதுற வறம்பிரம சாரிகள்சண் டேசர் நானிலத்தில் அரனடியார் தங்களுடன் சேர்ந்து, செல்கதிபெற் றவர்ஞான சம்பந்த ருடனே திருமணத்தில் ஒருமணமாய்ச் சேர்ந்தவர்கள் அநேகர், பல்வளஞ்சேர் ஆரூரருடன்சேரர் கையில் பரிஉகைக்க உடன்சென்ற பரிசனமெண் ணிறந்தோர்.௬௭

பா - ம்—*சான்றேர். †குறித்தறியாக்.

சிவனடியா ருடன்பகையாய் முத்தியடைந் தவர்கள் சேய்ஞலூர்ச் சண் டேசர் பிதாஎச்ச தத்தன், கவர்புகழ்சேர் கோட்புலியார் உரைத்ததிரு விரை யாக் கலிபிழைத்த கிளை*பகைத்து நரகினைச்சென் றடைந்தோர், †தவரான மூர்த்தியார் இறைவனுக்குச் சாத்துஞ் சந்தனக்காப் பினைவிலக்கி அமண்சம யச் சார்வாய்ப், புவிபுரந்த கருநடமன் னவன்முதல னேகர் புராணகதை யினைப் பிரித்துப் புகலஎளி தலவே. ௪அ

ஆரூரர் திருத்தொண்டத் தொகையுரைத்த நாளில் அடித்தொண்டு செய் தொண்டர் சிலர்அவர்க்கு முன்னே, பேரூர்மெய்த் தொண்டுசெய்த பேர்சில பேர் அவர்க்குப் பிறகுதிருத் தொண்டுசெயும் பேர்சிலபே ராகச், சீரூருந் திருத் தொண்டர் புராணத்திற் சேர்த்துச் சேவையர்கோன் சேர்வைசெயுந் தொண் டாள விறந்தோர், காரூரும் மணிகண்டர்க் கவரவர்கள் செய்த கைத்தொண்டின் நிலைகரைகண் டுரைக்கஎளி தலவே. ௪௯

ஒருலகோ ஒருதிசையோ ஒருபதியோ தம்மில் ஒருமரபோ ஒரு பெயரோ ஒருகாலந் தானோ, பேருலகில் ஒருமைநெறி தருங்கதையோ பன்மைப் பெருங்கதையோ பேர்ஒன்றோ அல்லவே இதனை, ஏ"ருலகெ லாம்உணர்ந் தோ தற்கரிய வன்"என் றிறைவன்முதல் அடியெடுத்துக் கொடுத்தருளக் கொண்டு, பாருலகில் நாமகள்நின் றெடுத்துக்கை நீட்டப் பாடிமுடித் தனர் தொண்டர் சீர்பரவ வல்லார். ௫0

கருங்கடலைக் கைநீத்துக் கொளஎளிது முந்நீர்க் கடற்கரையின் ‡நொய் மணலை எண்ணிஅள விடலாம், பெருங்கடல்மேல் வருந்திரையை ஒன்றிரண் டென் றெண்ணிப் பிரித்தெழுதிக் கடைஇலக்கம் பிரித்துவிட லாகும், தருங் கடலின் மீனைஅள விடலாகும் வானத் தாரகையை அளவிடலாம் சங்கரன்தாள் தமது, சிரங்கொள்திருத் தொண்டர்புரா ணத்தைஅள விடநஞ் சேக்கிழார்க் கெளிதலது தேவர்க்கும் அரிதே. ௫௧

அறுபதுபேர் தனித்திருப்பேர் திருக்கூட்டம் ஒன்ப தாகஅறு பத் தொன்ப தானடியார் கதையை, மறுவில்திரு நாவலூர்ச் சிவமறையோர் குலத்து வருசடைய ஞர்மனைவி இசைஞானி வயிற்றில், உறுதிபெற அவதரித்த ஆரூரர் முன்னாள் உரைசெய்த திருத்தொண்டத் தொகைப்பதிகத் தடைவே, நறைமலியும் பொழில்புடைசூழ் திருநாரை யூரில் நம்பியாண் டார்திருவந் தாதிகடைப் பிடித்து. ௫௨

காண்டம்இரண் டாவகுத்துக் கதைப்பரப்பைத் தொகுத்துக் கருதரிய சருக்கங்கள் பதின்மூன்று நிலையிட், டீண்டுரைத்த புராணத்தில் திருவிருத்தம் நாலா யிரத்திருநூற் றைம்பத்து மூன்றாக அமைத்துச், சேண்டகைய திருத் தொண்டர் புராணமெனப் புராணத் திருமுறைக்குத் திருநாமஞ் சீர்மைபெற அமைத்திட், டாண்டகைமை பெறஎழுதி மைக்காப்புச் சாத்தி அழகுபெறக் கவளிகையும் அமைத்ததில்வைத் ததன்பின். ௫௩

வேறு

"சேவை காவலர் புராண காதைதொகை செயநி னைந்தெமை அகன்றபின்
பாவர் தாம்அரு கிருந்த பேர்கள்கதை சென்ற தெவ்வளவி ருந்ததெந்
காவ தென்னிவைகள் அறிய வேண்டுமெ தறிந்து வாரும்" என வளவர்கோன்
ஏவி ஞனுரிய தூதர் தூதரறி யாம லொற்றரையு மேவினன். ௫௪

பா - ம்—*பிழைத்து. †தவராசர். ‡நுண்.

வென்றி வேல்வளவன் அளவ றிந்துவர விட்ட காளையர்"பு ராணநூல்
ஒன்று பாதிகதை சென்ற" தென்றுசிலர் ஓடி னார்சிலர்உ வந்துசென்
"றின்று நாளைமுடி யும்பு ராணம்இனி" என்று ரைத்திடஇ றைஞ்சினான்
சென்று "நற்கதை முடிந்த" தென்றுசிலர் செம்பியற் குறுதி செப்பினார். ௫௫

வந்து சொன்னவர்கள் அனைவ ருக்குநவ மணிக ளுந்துகிலு மம்பொனும்
சிந்தி அள்ளியும் உவந்து வீசிஉயர் செம்பொன் அம்பல மருங்கில்வாழ்
அந்தி வண்ணர்நட மும்பணிந் துமுதல் அடிஎ டுத்தவர் கொடுத்திடப்
புந்தி செய்துமகிழ் சேவை காவலர் "புராண முந்தொழு வன்நான்"எனா. ௫௬

வீதி வீதிகள்தொ றுந்தொறும் பயணம் என்று வென்றிமணி முரசறைந்
தோதி வேதியர்கள் எண்ணி இட்டஉயர் நாளும் ஓரையும் முகூர்த்தமும்
போத நாடிவரை புரைகடக் களிறு புரவி தேர்கருவி யாள்தரச்
சாது ரங்கமுட னேசெலப் பிளிறு தந்தி மேல்கொடு நடந்தனன். ௫௭

தேர்மு ழக்கொலி மழைக்க டக்கரட சிந்துரக் களிறு பிளிறுசீர்
ஆர்மு ழக்கொலி பரிச்செ ருக்கொலி பதாதி வந்தெதிர் அடர்ந்தெழும்
போர்மு ழக்கொலி சழக்கி லாதுயர் படைக்க லன்புணரும் ஓசைஎழ்
கார்மு ழக்கொலியின் எட்டி ரட்டிநிறை கடல்மு ழக்கென முழக்கெழ. ௫௮

வளவர் கோன்வர வறிந்து தில்லைமறை யோரும்வண் மைமட பதிகளும்
பிளவு கொண்டமதி நுதல்ம டந்தையரும் மற்று முள்ளபெரி யோர்களும்
களவி லாதமொழி கொடுபு ராணகதை செய்த கங்கைகுல திலகரும்
தளவ மாலைஅப யனைஎதிர்ந் தினிய சார ஆசிபல சாற்றினார். ௫௯

பூண்ட மானதிரு முடியும் இட்டதிரு முண்ட முங்கவச முந்துணைக்
குண்ட லங்களும் இரண்டு காதினும் வடிந்த லைந்தகுழை யுந்திருக்
கண்ட மாலைகர மாலை யுஞ்சிரசு மாலை யுங்கவின் விளங்கவே
தொண்டர் சீர்பரவு வான்அ ணைந்தசுப சரிதை சோழனெதிர் கண்டனன். ௬௦

கண்ட போதுள மகிழ்ந்து தன்னைஅறி யாது கைகள்தலை மீதுறக்
'கொண்ட வேடம்அர னடியர் வேடம்இது குறைவி லாததவ வேடம்'என்
றண்ட வாணர்திரு வருளை யுன்னிஅவர் அடிமை கொண்டபெரு மையைநினைந்
தெண்த யங்கரசர் ஏறு சேவையர் குலாதி பாதுகை இறைஞ்சினான். ௬௧

இறைஞ்சி அம்பலவர் பாத தாமரை இறைஞ்ச எண்ணிவான் முறைமையால்
அறஞ்சி றந்தமுனி சேவை காவலரும் ஆறைஞ் ஞூறுமறை யோர்களும்
துறஞ்சி றந்தமட பதிகளுந் தொடர வந்து மன்னன்அரி பிரமர்பால்
மறைஞ்சு நின்றபொருள் வெளிப்படக் கனக மன்றில் நின்றபடி கண்டனன்.

கண்ட கண்ணருவி தாரை கொள்ளஇரு கைகள் அஞ்சலி கொளக்கசிந்
தெண்த ரும்புளக ரோம கூபம்எழ இன்ப வாரிகரை புரளவாய்
விண்ட தூமொழிகள் குழற அன்பினொடு விம்மி விம்மிஅருள் மேவிடத்
தெண்ட னாகமுன் விழுந்தெ ழுந்துநனி செம்பி யன்பரவ எம்பிரான். ௬௩

"சேக்கி ழான்நமது தொண்டர் சீர்பரவ நாம்மகிழ்ந் 'துலகம்' என்றுநம்
வாக்கி னால்அடி எடுத்து ரைத்திட வரைந்து நூல்செய்து முடித்தனன்
காக்கும் வேல்வளவ நீஇதைக் கடிது கேள்"எனக் கனக *வெளியிலே
ஊக்க மானதிரு வாக்கெ ழுந்தது திருச்சி லம்பொலியும் உடனெழ. ௬௪

**பா - ம்**—*சபையிலே.

மன்று ளாடிதிரு வாய்ம லர்ந்தமொழி யுஞ்சிலம் பொலியும் மன்றிலே
நின்ற மானிடர்செ விப்பு லன்புக நிறைந்த தன்றியும் நிலத்தின்மேல்
ஒன்றி நின்றுயர் சராசரங் கள்அடை யக்க சிந்துருகி ஒலிடக்
குன்றி லங்குதிரள் தோள்நரேந் திரபதி *குதுகு லித்துளம் மகிழ்த்தனன். ௬௫

“தொண்டர் தொண்டுசெய் புராண காதைமதி சூடு நாதர்திரு வருளினால்
விண்ட நீதிபுனை சேக்கி ழார்முனி விரித்து ரைத்தகதை கேட்பதற்
கண்ட வாணர்அடி யாரெலாங் கடுக வருக” என்றுதிசை திசைதொறும்
எண்த யங்கரசன் ஏடெடுத் தெழுதி ஆளும் ஓலைகளும் ஏவினான். ௬௬

வேறு

கவச மணிந்த சனங்களு மிங்கித முங்கம்பித்
தவச முறுஞ்சிவ சிந்தையும் அன்பக லாமேன்மைத்
தவச ரிதத்தொழி லுஞ்சிவ சாதன முஞ்சாரச்
சிவச மயத்தவர் யாவரும் வந்து திரண்டார்கள். ௬௭

வேதியர் வேத முழக்கொலி வேதத் தைத்தமிழால்
ஓதிய மூவர் திருப்பதி கத்தொலி ஓவாமல்
பூதி அணிந்‘தர கர’என அன்பர் புகழ்ந்தோதும்
காதியல் பேரொலி காரொலி போலொலி கைத்தேற. ௬௮

பூசிப் பவர்சிலர் பூசித் தன்பொடு புனிதன்தாள்
நேசிப் பவர்சிலர் “பிறவா வரம்அருள் நிமலா”என்
றியாசிப் பவர்சிலர் திருமுறை எழுதிக் களிகூர
வாசிப் பவர்சில ராக இருந்து மகிழ்ந்தார்கள். ௬௯

தெள்ளு திரைக்கடல் மீது மிதந்த திருத்தோணி
வள்ளலை அன்புசெய் அன்பர் மடங்கள் தொறும்பாலர்
மெள்ள இருந்து மிழற்று புராண விருத்தத்தைக்
கிள்ளைகள் பாடி உரைப்பன கேட்பன மெய்ப்பூவை. ௭௦

மற்றது கண்டு களித்த நலத்த மனத்தோடு
சுற்றிய மந்திரி மாரொடு தந்திரி மார்சூழத்
தெற்றென வந்து திரண்டு முரண்தரு சீர்நாடு
பெற்றது செல்வ மெனத்தனி யோகை பெருத்தார்கள். ௭௧

பாடினர் தும்புரு நாரதர் நீடிசை பாடாநின்
றாடினர் வானில் அரம்பையர் அஞ்சலி எஞ்சாமல்
சூடினர் மண்ணின் மடந்தையர் எந்தை துணைப்பாதம்
தேடினர் மாலயன் அன்பர் நடந்தரி சித்தார்கள். ௭௨

சங்கொடு பேரி கறங்கிசை வீணை தனித்தாளம்
வங்கிய காள மிடக்கை கடக்கை மணிக்காளம்
பொங்கிய பம்பை வலம்புரி கண்டை முதற்பொற்பார்
மங்கல தூரியம் எங்கும் முழங்கி வனப்பெய்த. ௭௩

வேதியர் வேள்வி நெடும்புகை ஆலயம் எங்கெங்கும்
காதிய குங்குலி யப்புகை நீடு கருப்பாலைச்

பா - ம்—*குதுகுதுத்.

சோதி நெடும்புகை தோரண வீதி தொறுந்தோறும்
மாதர் புகைக்கும் அகிற்புகை எங்கும் வனப்பெய்த. எச

ஆடக நாடக சாலைகள் முத்தணி அத்தாணி
மேடை அரங்குக ளெங்க மிலாத வெளிக்கூடம்
மாட மதிட்கண மாளிகை சூளிகை எங்கெங்கும்
தோடவிழ் மாலைகள் பொன்னரி மாலைகள் சூழ்வித்தார். எரு

பழுதக லத்திரு வலகு விருப்பொடு பணிமாறிக்
குழைவு பெறத்திகழ் கோமய நீர்குளி ரச்செய்து
தழைபொதி தோரண முங்கொடி யுந்துகி லுஞ்சார்வித்
தழகு பெறத்திரு வீதி புதுக்கி யதன்பின்பு. எசு

வேறு

திருநெ றித்தமிழ் வல்ல பேர்கள் சிவாக மங்கள் படித்தபேர்
கருநெ றிப்பகை ஞான நூல்பல கற்ற பேர்மறை கற்றபேர்
குருநெ றிக்குரி யோரி லக்கண லக்கி யங்கள்கு றித்தபேர்
பெருநெ றிப்பல காவி யங்கதை பேச வல்லவ ரெனவரும். எஎ

வேறு

வள்ளலார் திருநடஞ்செய் மன்றின் முன்றில் மறையவர்கோ மயசலத்தால் மெழுகித் தாபித், தெள்ளரும்வெண் சுதையொழுக்கி அறுகாற் பீடம் இட்டதன்மேல் பசும்பட்டு விரித்து மீதே, வெள்ளைமடித் திட்டுமது மலருந் தூவி விரைநறுந்தா பங்கொடுத்தா தனங்கற் பித்துத், தெள்ளுதமிழ்ச் சேக்கிழார் புராணஞ் செய்த திருமுறையை அதன்மேல்வைத் திறைஞ்சிப் போற்றி.

"வாழிதிருத் தொண்டர்புரா ணத்தை நீரே வாசித்துப் பொருள்அருளிச் செய்வீர்" என்று, சோழர்பெரு மான்முதலாம் அடிய ரெல்லாஞ் சொலக்கேட்டுக் குன்றைமுனி மன்று ளாடும், தாழ்சடையான் அடிஎடுத்துத் தரத்தாஞ் செய்த சைவகதை யினைவிளங்க விரித்துச் சொல்லச், சூழிருந் தம்பலவர் அடியா ரெல்லாம் "சுருதிமொழி இது" எனக்கை தொழுது கேட்டார். எகூ

வேறு

"தாளுடைய திருச்சிலம்பு புலம்பநடம் புரியுந் தன்மைஅர னுக்கிசைந்த பேர்வழியி னாளும், ஆளுடைய பிள்ளையார் அவதரித்த நாளும் அவரழுது திருஞானம் அமுதுசெய்த நாளும், சூளுடைஆ திரைநாளாம் சித்திரைஆ திரைநாள் தொடங்கிஎதி ராம்ஆண்டு சித்திரைஆ திரையின், நாளுடைய கதைமுடிப்பம்" எனக்குன்றை வேந்தர் நடத்தஅனை வருமிருந்து கேட்டனர்நாள் தோறும்.

சிறப்புடைய மூவர்முத லிகள்திருவாய் மலர்ந்த திருநெறிய தமிழ்மூலர் திருமந்திர மாலை, அறப்பயனுங் காரைக்கால் பேயிரட்டை மாலை அந்தாதி மூத்தபதி கங்கழறிற் றறிவார், மறப்பரிய பொன்வண்ணத் தந்தாதி திருமும்மணிக்கோவை தெய்வஉலா ஐயடிகள் வெண்பா, உறுப்பாகத் திருவிருத்தம் உடலாகப் பொருட்கோள் உயிராக நாலடியால் நடந்தநூ லெல்லாம். அக

அன்றுமுதல் நாள்தோறும் நாள்தோறும் அண்ணல் அடியர்அள விறந்தபெயர் வந்தவர்க ளெல்லாம், சென்றுறையத் திருமடங்கள் திருமடங்கள் தோறும் திருவிளக்கங் கவர்சாத்த உள்ளுடைமேற் போர்வை, துன்றியசெந் நெலின்அடிசில் கன்னல்நறுங் கனிகள் தூயஅறு சுவைக்கறிநெய் தயிர்திரண்ட

பால்தேன், நன்றுதிருப் பண்ணியந்தண் ணீர்அமுதம் அடைக்காய் நரபதிஎ வலின்அமைச்சர் நாள்தோறும் நடத்த. அ௨

நலமலியுந் திருத்தில்லை மன்றினில்நின் றாடும் நடராசற் கன்றுமுதல் மக பூசை நடத்தி, அலகில்புகழ்த் தில்லைவாழ் அந்தணர்க்கும் வெவ்வே றமுதுபடி கறியமுது முதலான எல்லாம், நலமலிசெங் கோல்வளவன் தப்பாமே நாளும் நடத்திவர அரனடியார் நிறைந்துபதஞ் சலியும், புலிமுனியும் தவஞ்செய்த பெரும்பற்றப் புலியூர் பூலோக சிவலோக மெனப்பொலிந்து தோன்ற. அ௩

மருவுதிரு முறைசேர்ப்பார் எழுதுவார் இருந்து வாசிப்பார் பொருளு ரைப்பார் கேட்டிருப்பார் மகிழ்ந்து, சிரமசைத்துக் கொண்டாடிக் குதுகுலிப் பார் சிரிப்பார் தேனிப்பார் குன்றைமுனி சேக்கிழார் செய்த, அரியதவத் தினைநினைப்பார் ‘அம்பலவர் முன்னாள் அடிஎடுத்துக் கொடுக்கஇவர் பாடினர்’ என் றுரைப்பார், ‘பெரியபுரா ணங்கேட்ட வளவர்பிரான் செவிக்குப் பிடிக் குமோ இனிச்சிந்தா மணிப்புரட்’டென் றுரைப்பார். அ௪

இத்தகைய சிறப்புடனே திருத்தொண்டர் புராணம் இருந்தன்பர் பாரா ட்ட நடந்தெதிராம் ஆண்டு, சித்திரைஆ திரைநாளின் முடியஅது கண்டு திருத்தொண்டர் ‘அர’எனும்பே ரொலிஎழுந்து பொங்கக், கத்துதிரைக் கடலொலியை விழுங்கிமுழங் கோரேழ் கடலொலியைக் கீழ்ப்படுத்திப் பிர மாண்ட வெளியைப், பொத்திஇமை யவர்செவியை நிறைத்துயரப் பொங்கிப் பொன்னுலகுக் கப்பாலும் புகழ்பொலிந்த தன்றே. அ௫

திருத்தொண்டர் புராணம்எழு தியமுறையை மறையோர் சிவமூல மந்திரத்தால் அருச்சனைசெய் திறைஞ்சி, இருக்குமுதல் மறைநான்கில் இன்று முத லாக இதுவும்ஒரு தமிழ்வேதம் ஐந்தாவ தென்று, கருத்திருத்தி அமுத டைக்காய் நறுந்தூப தீபம் கவரிகுடை கண்ணாடி ஆலத்தி நீறு, பரித்தளவு செயக்கண்டு வளவர்பிரான் முறையைப் பசும்பட்டி னாற்சூழ்ந்து பொற்க லத்தில் இருத்தி. அ௬

சேறிமதயா னைச்சிரத்தில் பொற்கலத்தோ டெடுத்துத் திருமுறையை இருத்தியபின் சேவையர்கா வலரை, முறைமைபெற ஏற்றிஅர சனுங்கூட ஏறி முறைமையினால் இணைக்கவரி துணைக்கரத்தால் வீச, மறைமுழங்க விண்ணவர் கள் கற்பகப்பூ மாரி மழைபொழியத் திருவீதி வலமாக வரும்போ, திறைவர்திரு வருளைநினைந் தடலரசர் கோமான் “இதுவன்றோ நான்செய்த தவப்பயன்” என் றிசைத்தான். அ௭

வாரணத்தில் இவரைவரக் கண்டதிரு வீதி மறுகுதொறுந் தூய்மைசெய்து வாழைகளும் நாட்டிப், பூரணகும் பமும்அமைத்துப் பொரியும்மிகத் தூவிப் பொன்னரிமா லையும்நறும்பூ மாலைகளுந் தூக்கித், தோரணங்கள் நிரைத்து விரை நறுந்தூபம் ஏந்திச் சுடர்விளக்கும் ஏற்றிஅணி மணிவிளக்கும் ஏந்தி, ஆரணங்கள் விரித்தோதி மாமறையோ ரெதிர்கொண் டறுகெடுப்ப வாழ்த் தெடுத்தார் அரம்பையர்க ளெல்லாம்.

**வேறு**

“காவல னரிவர் தவரிவர் காவலர் கவரி இடத்தகு மோ”என்பார்
“சேவையர் காவல னர்சிவ மான சிறப்பிது நல்ல சிறப்”பென்பார்
“தேவரு மெழுதவொ ணுமறை யைத்தமிழ் செய்து திருப்பதி கம்பாடும்
மூவரும் ஒருமுத லாயுல கத்து முளைத்த முதற்பொருள் தான்”என்பார். அ௯

மின்மழை பெய்தது மேக ஒழுங்குகள் விண்ணவர் கற்பக விரைசேர்பூ
நன்மழை பெய்தனர் சேவையர் காவலர் நாவல ரின்புற நாவாரச்
சொன்மழை பெய்தன ரிரவலர் மிடிகெட அள்ளி முகந்தெதிர் சோழேசன்
பொன்மழைபெய்தனன்உருகிய நெஞ்சொடு கண்மழைஅன்பர் பொழிந்தார்கள்.

"மதுரஇ ராமா யணகதை உரைசெய்த வான்மிக பகவனும் ஒப்பல்ல
விதிவழி பாரதம் உரைசெய்து கரைசெய்த வேதவி யாதனும் ஒப்பல்ல
சிதைவற ஆயிர நாவுடன் அறிவுள சேட விசேடனும் ஒப்பல்ல
பொதிய மலைக்குறு முனிவனும் ஒப்பல புகழ்புனை குன்றை முனிக்"கென்பார்.

மெய்யுள சிவசா தனமும் வெளிப்பட வெண்ணீ றெழுதிய கண்ணேறும்
கையுந் திகழ்மணி கண்டமும் ஒளிதரு கவளிகை யும்புத் தகஏடும்
மையுந் திருவுள மழியுந் தொழு"மா கர"வெனு நாமமும் "நாமெல்லாம்
உய்யும் படியருள் கருணையும் அழகி"தெ னத்தொழு தனருல கவரெல்லாம். கூஉ

பூவை மறந்தனள் வெண்டா மரைமயில் புகல்தரு சங்கப் புலவோர்சொல்
பாவை மறந்தனள் தேச சுபாடித பயனை மறந்தனள் பதுமத்தோன்
நாவை மறந்தனள் பொதிய மலைத்தலை நண்ணிய புண்ணிய முனிவனெனும்
கோவை மறந்தனள் சேவையர் காவல னார்திரு நாவிற் குடிகொண்டாள். கூங

இப்படி இப்படி தன்னில் விதிப்படி இம்பரும் உம்பரும் ஏனோரும்
அப்படி சூழ அரத்திரு வீதிவ லஞ்செய் தணைந்தம் பலமுன்றில்
தப்பற யானையி னின்றும் இழிந்தர சனும்உரை செறிசே வையர்கோவும்
முப்புரி நூல்மறை யோரொ டணைந்தெழு தியமுறை யைத்திரு முன்வைத்தார்.

## வேறு

அண்ட வாணரெதிர் தெண்ட னுகஅனை வரும்வி ழுந்துபின் எழுந்துசீர்
கொண்ட சேவைகுல திலக ருக்கனைவ ருங்கு றித்தெதிர் கொடுத்தபேர்
தொண்டர் சீர்பரவு வாரெ னப்பெயர் சுமத்தி ஞானமுடி சூட்டிமுன்
மண்ட பத்தினி லிருத்தி மற்றவரை வளவர் பூபதி வணங்கினன். கூ௫

பூவ ரோதுதிரு முறைக ளேழுதிரு வாத வூரர்முறை ஒன்றிசைப்
பாவ ரைந்தமுறை ஒன்று மூலர்முறை ஒன்று பாசுரம தாதியாக்
கோவை செய்தமுறை ஒன்று சேவையர் குலாதி நீதிமுறை ஒன்றுடன்
பாவை பாகர்திரு வருள்சி றந்தமுறை பன்னி ரண்டென வகுத்தபின். கூசு

"தோடு செய்ததிரு நெறிய செந்தமிழெ டொக்கும்" என்றுரை தொடர்ந்து [செப்
பேடு செய்துநட ராசர் சந்நிதியில் ஏற்றி னூர்களிது பாலிசூழ்
நாடு செய்ததவ நீடு குன்றைவள நகரி செய்ததவ நிகரிலாப்
பீடு செய்தபகி ரதிகு லத்திலகர் சேக்கி பூர்செய்த பெருந்தவம். கூஎ

ஆய வேலைஅன பாயன் இந்நிலைமை யாதலால்"அனுசர் பாலரு
வாயர் எங்குளர்" எனப்ப ணிந்திரு மருங்கு நின்றவர் விளம்புவார்
"தூய குன்றைநகர் மீது தம்பெயர் துலங்க ஓர்குளம் அமைத்தபின்
ஏய நாகைஅர னூர்தி ருப்பணி இயற்றி அவ்விடை இருந்தனர்". கூஅ

என்று சொல்லஅவர் தமைஅழைத் தரசன் "இவரமைச் சரிவர் பட்டமும்
'மன்றல் மாலைபுனை தொண்டை மான்' "என வகுத்தபின் தமது மண்டலம்

பா - ம்—*ஒளிவரு.

அன்று வற்பம்வர வந்த டைந்தவரை ஆற்றல் செய்து "தொண் டைமண்டல
நின்று காத்தபெரு மான்" எனத் தமது பெயரை எங்கணும் நிறுத்தினர். கக

தொண்டர் சீர்பரவு சேக்கி ழார்குரிசில் தூய தில்லைநகர் தன்னிலே
பண்டு மூவர்பதி கத்து வந்தஅறு பத்து மூவர்கதை தனையுணர்ந்
தண்ட வாணர்அடி யார்கள் தம்முடன் அருந்த வந்தனில் இருந்துபின்
இண்டை வைத்தசடை அம்பலத்தவர் எடுத்த பாதநிழல் எய்தினர். க00

வாழி தில்லைமணி மன்று ளென்றும்நட மாடும் அங்கணர் மலர்ப்பதம்
வாழி காழிநகர் வாழ வந்ததிரு நெறிய ராதிபதி வள்ளல்தாள்
வாழி அன்பர்திரு நீறு மிட்டதிரு மூண்ட மூர்த்துவய கவசமும்
வாழி குன்றைமுனி சேவை யாதிதிரு வாய்ம லர்ந்தருள் புராணமே. க0க

தேசி லங்குமுகில் குன்றை யாதிபதி தொண்டர் சீர்பரவு சேக்கிழார்
வாசல் அன்றுமுதல் இன்று காறும்இனி மேலும் வாழையடி வாழையாய்
வீசு தென்றல்மணி மண்ட பத்தரசு வீற்றி ருக்குமுடி மன்னருக்
கீச னன்பர்கள் புராண முஞ்சொலி அமைச்சு மாகிநலம் எய்துமால். க0உ

அண்ட வாணர்தொழு தில்லை யம்பலவர் அடிஎடுத்'துலகெ லாம்'எனத்
தொண்டர் சீர்பரவு சேக்கி ழான்வரிசை துன்றுகுன்றைநக ராதிபன்
தண்ட காதிபதி திருநெ றித்தலைமை தங்கு செங்கைமுகில் பைங்கழல்
புண்ட ரீகமலர் தெண்ட னிட்டுவினை போக்கு வார்பிறவி நீக்குவார். க0௩

ஆக திருவிருத்தம் - க0௩.

---

## சிறப்புப்பாயிரம்*

திருக்கிளருங் கயிலைமலைக் காவல் பூண்ட செல்வமலி திருநந்தி மரபில் வந்து, கருக்குழியில் எமைவீழா தெடுத்தாட் கொள்ளுங் கருணைநிகு மெய்கண்ட தேவர் தூய, மருக்கிளர்தாள் பரவும்அரு ணந்தி தேவர் மகிழும்மறை ஞானதே வருக்கன் பாகி, இருக்கும்உமா பதிதேவர் சேக்கி ழார்தம் இசைப் புரா ணம்உரைத்தார் என்ப மாதோ.

---

'சான்றோ ருடைத்துத் தொண்டை நாடு' என்பது பழமொழி. அச் சிறப்பு வாய்ந்த தொண்டை நாட்டிலே, குன்றத்தூரிலே, வேளாண் மரபிலே, **சேக்கிழார் குடி** என்றொரு குடியுண்டு. அக்குடியில் **அருண்மொழித் தேவர்** தோன்றினர். அவருக்குப் பின் **பாலறுவாயர்** பிறந்தார். முன்னவரால் சேக்கிழார் மரபு விளங்கப்பெற்றது. அதனால் அவருக்குச் **சேக்கிழார்** என்னும் சிறப்புப் பெயர் வழங்கலாயிற்று.

அருண்மொழித்தேவர், கல்வி கேள்விகளில் வல்லவரானர்; சிவபத்தி சிவனடியார் பத்தியிற் சிறந்து விளங்கினர். அவர்தம் பெருமை அநபாயச் சோழருக்கு எட்டிற்று. அச்சோழர், அருண்மொழித்தேவரை முதலமைச்ச ராக்கினர். அருண்மொழித்தேவருக்கு **உத்தமச்சோழப் பல்லவர்** என்னும் பட்டஞ் சூட்டப்பட்டது.

*இச்சிறப்புப் பாயிரம் சில பிரதிகளிலில்லை.

அருண்மொழித்தேவர் சோழநாட்டிலுள்ள திருநாகேச்சுரம் என்னும் திருப்பதியினிடத்துப் பேரன்பு செலுத்தி வந்தார். அவ்வன்புக்கு அறிகுறியாக அவர் தமது குன்றத்தூரிலே ஒரு திருக்கோயில் கட்டினார்; அத்திருக்கோயிலுக்குத் திருநாகேச்சுரம் என்னும் திருப்பெயர் சூட்டி ஆண்டவனை வழிபட்டு வந்தார்.

அந்நாளில் சீவக சிந்தாமணி என்னும் நூல் பேராக்கம் பெற்றிருந்தது. அநபாயச் சோழரும் அந்நூலின்கண் மயக்குற்றார். "அரசன் எவ்வழி அவ்வழி குடிகள்."

முதல் அமைச்சராகிய சேக்கிழார் பெருமான், ஒருநாள் மன்னரைப் பார்த்து, "நீர் சைவர்; சிவகதையைக் கேளாது, அவகதையை ஏன் கேட்கிறீர்?" என்று கேட்டார். அதற்கு மன்னர், "சிவகதை எது? அதன்வரலாறு என்னை?" என்று வினவினார். சேக்கிழார் பெருமான், "திருத்தொண்டத்தொகையைப் பற்றி நீர் கேள்வியுற்றிருக்கலாம். அது, தியாகேசப் பெருமானால் அடி எடுத்துக் கொடுக்கப்பெற்றது ; சுந்தரமூர்த்தி சுவாமிகளால் அருளிச்செய்யப்பெற்றது. நம்பியாண்டார்நம்பி என்பவர் அத்திருத்தொண்டத்தொகையைத் தழுவி ஒரு திருவந்தாதி பாடினார். அத்திருவந்தாதி, அபயகுலசேகர சோழர், சிவாலய முனிவர் முதலிய பெரியோர்களால் போற்றப்பெற்றது" என்று கூறினார். அநபாயச் சோழர், திருவந்தாதியை ஓதிப் பொருளுரைக்குமாறு சேக்கிழாரைக் கேட்டார். சேக்கிழார் அவ்வாறே செய்தார். மன்னர், அன்பின் வயப்பட்டு, "அடியவர் வரலாறுகளைக் காவியமாகச் செய்தருளும்" என்று சேக்கிழார் பெருமானை வேண்டினார் ; அதற்கெனப் பொருளும் வழங்கினார்.

சேக்கிழார் பெருமான் தில்லையை அடைந்தார் ; தில்லைக் கூத்தனைக் கண்டார் ; தொழுதார் ; திருமுன்னே நின்று, "பெருமானே ! திருத்தொண்டர் அருட்பெருஞ் செயல்களைக் காவியமாகப் பாடுதல் வேண்டும். அதற்கு அடிகள் அடி எடுத்துக் கொடுத்தருளல் வேண்டும்" என்று முறையிட்டார். அவ்வேளையில் தில்லைக்கூத்தன் அருளால் 'உலகெலாம்' என்றொரு வானொலி எழுந்தது. அவ் 'உலகெலாம்' என்பதையே முதலாகக் கொண்டு, சேக்கிழார் பெருமான் திருத்தொண்டர் புராணத்தைப் பாடி முடித்தார்.

அநபாயச்சோழர், நூல் முற்றுப்பெற்றதைக் கேள்வியுற்றார் ; தில்லையை நோக்கினார். சேக்கிழாரும் மற்றவரும் மன்னரை எதிர்கொண்டனர். சேக்கிழாரின் திருமேனிப் பொலிவு, மன்னர் உள்ளத்தைக் கவர்ந்தது. மன்னர், சேக்கிழார் பெருமான் திருவடியில் விழுந்து வணங்கினார். பின்னர் எல்லோரும் ஒன்று சேர்ந்து திருச்சிற்றம்பலத்தை அடைந்தனர். அப்பொழுது, "மன்னனே ! நாம் 'உலகெலாம்' என்று அடி எடுத்துக் கொடுத்தோம். சேக்கிழான் அதனை முதலாகக் கொண்டு திருத்தொண்டர் புராணத்தைப் பாடி முடித்தான். திருத்தொண்டர் திறங்களை நீ கேட்பாயாக" என்று ஓர் ஒலி வானில் எழுந்தது. அது கேட்ட மன்னர், திருத்தொண்டர் புராணத்தைக் கேட்டுப் பேறெய்துமாறு அன்பர்களுக்கு அழைப்புக்கள் விடுத்தார்.

---

* இதற்குப் பெரிய புராணத்தில் சான்றில்லை.

தில்லைக்கூத்தன் திருமுன்னர், திருத்தொண்டர் புராணப் பிரசங்கத்துக்குரிய ஏற்பாடுகளெல்லாம் குறைவறச் செய்யப்பட்டன. நாலுபக்கங்களினின்றும் அடியவர்கள் போந்து குழுமினார்கள். மன்னர், சேக்கிழார் பெருமானை வேண்டச் சேக்கிழார் பெருமான், திருப்புராணத்தை ஓதிப் பொருளுரைக்கத் தொடங்கினார். அத்தொண்டு, சித்திரைத் திங்களில் திருவாதிரை நாளில் தொடங்கப்பெற்றது ; மறு ஆண்டு அதே திங்களில் அதே நாளில் முற்றுப் பெற்றது.

மன்னரும் மற்றவரும் ஆனந்தக் கடலில் தோய்ந்தனர். எல்லாரும் அன்புருவராயினர். மன்னர் பெருமான் திருத்தொண்டர் புராணத்தை யானைமீதேற்றினார் ; சேக்கிழார் பெருமானையும் அதன்மீது எழுந்தருளச் செய்தார்; தாமும் ஏறி வெண்சாமரம் வீசினார். யானை திருவீதி வலம் வந்தது. எல்லாரும் உடன்சூழ்ந்து சென்றனர். யானை வலம் வந்து, சிற்சபைமுன் நின்றது. அடியவர்கள் யானையைச் சூழ்ந்து மிடைந்து நின்றார்கள். திருத்தொண்டர் புராணம் திருமுன்னே வைக்கப்பட்டது. மன்னர் பெருமான், சேக்கிழார் பெருமானுக்குத் **'தொண்டர் சீர் பரவுவார்'** என்னும் திருநாமம் சூட்டி வணங்கினார். அங்கிருந்த மற்றெல்லாரும் தொண்டர் சீர் பரவுவாரைத் தொழுது ஆரவாரித்தனர். பின்னர், அநபாயச் சோழர், திருத்தொண்டர் புராணத்தை மற்றத் திருமுறைகளுடன் சேர்த்துச் சிறப்புச் செய்தனர். திருத்தொண்டர் புராணம் **பன்னிரண்டாந் திருமுறை** என்று வழங்கலாயிற்று.

அநபாயச் சோழர் அங்கிருந்தவர்களைப் பார்த்து, "இத்தொண்டர் சீர் பரவுவாருடைய தம்பியார் பாலறாவாயர் எங்கே இருக்கிறார்?" என்று கேட்டார். அவர்கள், "பாலறாவாயர் குன்றத்தூரிலே திருநாகேச்சுரப் பெருமானுக்குத் திருத்தொண்டு செய்துகொண் டிருக்கிறார்" என்று சொன்னார்கள். மன்னர் பெருமான், பாலறாவாயரை அழைப்பித்தார்; அவருக்குத் **"தொண்டைமான்"** என்னும் நாமஞ் சூட்டினார் ; அவரை முதலமைச்சராக்கிக்கொண்டார்.

சேக்கிழார் பெருமான் தில்லையிலேயே தங்கலானார் ; நாடோறுந் தில்லைக் கூத்தனை வழிபட்டுவந்தார். சிவபெருமான் அவருக்குத் தமது திருவடிநீழலை வழங்கினார்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# பெரியபுராணம்

என வழங்கும்

# திருத்தொண்டர் புராணம்

## பாயிரம்

### வாழ்த்து

*உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்*
*நிலவு லாவிய நீர்மலி வேணியன்*
*அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்*
*மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.*

### தோற்றுவாய்

இப்புராணத்தின் முதற் றிருப்பாட்டாகிய இத்திருப்பாட்டுக்கு *விரிவுரையும், ஏனைய திருப்பாக்கட்கு அரும்பதவுரையும், பிறவும் காணும் பேற்றை இளமையில் ஒரு முறை பெற்றேன். இத்துணைநாள் கடந்து, அவைகளை மீண்டும் பார்வையிடவும், புதுக்கவும், பெருக்கவும், பிற சீருஞ் செப்பமுஞ் செய்யவும் இன்று நேர்ந்தமை குறித்து மகிழ்வெய்துகிறேன். இவ்வேளையில் அ[illegible]றைய நிலையும் இன்றைய நிலையும் என்னுள்ளத்துள் முகிழ்த்துத் தோன்றுகின்

---

*அவ்விரிவுரை வருமாறு :—

(இதன் பொருள்) உலகு எல்லாம் உணர்ந்து ஓதற்கு அரியவன் (சிவஞானங் கைவரப்பெற்ற) அறிஞர்கள் யாவரும் (இவ்வியல்பினனென்று) அறிந்தும் (அவ்வியல்பை எடுத்துச்) சொல்லுதற்கரியவனும், நிலவு உலாவிய நீர் மலி வேணியன் - சந்திரன் தவழுங் கங்கை தங்கும் சடையினையுடையவனும், அலகு இல் சோதியன் - அளவில்லாத பேரொளிப் பிழம்பானவனும் ஆகிய, அம்பலத்து ஆடுவான் - திருச்சிற்றம்பலத்தின்கண் ஆனந்தத் தாண்டவம் புரியும் ஸ்ரீ நடராஜப் பெருமானது, மலர் சிலம்பு அடி வாழ்த்தி வணங்குவாம் - மலர் சிலம்பணிந்த திருவடிகளை (யாம்) துதித்து வணங்குவாம் (என்றவாறு)

அமிழ்தினுமினிய தமிழ்க்கல்வி நிரம்பப்பெற்ற அருட்புலவர்கள் அருளிய காப்பியங்களிற் காப்புச் செய்யுள்களின் முதற்கண் மங்கலமொழி மிளிர்வதை

றன. ஆ! இடை இடையே எத்துணை எத்துணை மாறுதல்கள் நிகழ்ந்திருக்கின்றன!

மாறுதல் என்பது என்னை? மாறுதல் என்பதற்குப் பல வழியில் விரிவுரை கூறலாம். ஒன்றில் இறந்து மற்றொன்றில் பிறத்தல் என்னும் ஒன்றை அடிப்படையாகக் கொண்டு நிகழ்வது மாறுதலின் சிறப்பியல்பாகும். வெறும் உடல் அழிவும் தோற்றமும் மட்டும் இறப்பும் பிறப்பும் ஆகா. பிறவற்றிலும் இறத்தல் பிறத்தல் உண்டு. இளமை தொட்டுப் பெற்றுவரூஉங் கல்வி கேள்வி ஆராய்ச்சிகளையும், வாழ்வு சேர்க்கை சேவை முதலியவாற்றான் பெற்றுவரூஉம் அநுபவங்களையும், இன்ன பிறவற்றையுங் கொண்டு, ஒருவன் தன்னைச் சிந்தித்துப் பார்ப்பானாயின், அவன் எத்துணை இறப்புப் பிறப்புக்களில் உழன்றான் என்பது அவனுக்கு விளங்காமற் போகாது.

இவ்விறப்புப் பிறப்புக்கள் என்று ஒழியும்? அறியாமை தேய்ந்து தேய்ந்து, அறிவு விளங்கி விளங்கி, ஆண்டவனருளால் மாறுதலுறாத மெய்யுணர்வு என்று அரும்பி மலர்கிறதோ, அன்றே மரணம் பிறப்பு என்னும் இரண்டின் மயக்கமும் ஒழியும். "நாளுநாள் சாகின்றாமால் நமக்குநாம் அழாததென்னோ"—என்பது வளையாபதி. "காரணங்க ளெல்லாங் கடந்துநின்ற கறைமிடற்றன் - சரணங்க ளேசென்று சார்தலுமே தானெனக்கு - மரணம் பிறப்பென் றிவையிரண்டின் மயக்கறுத்த - கருணைக் கடலுக்கே சென்றூதாய் கோத்தும்பி"—என்பது திருவாசகம்.

இந்நூலின் முதற்பதிப்பு வெளிவந்த பின்னைப் பல பேரிலக்கிய இலக்கண நூல்களைப் பயிலல், பல சமயத்தாரிடத்தும் அவர்தம் நூல்களிடத்தும் உறவு கொள்ளல், இல் வாழ்வில் தலைப்படல், பலதிற உலகியற் கிளர்ச்சிகளில் ஈடுபடல் முதலிய வாய்ப்புகள் எனக்குக் கிடைத்தன. இவ்வாய்ப்புகள் கிடைக்கப் பெறாத

---

மான, எந்நூலினுஞ் சிறந்த நன்னூலாய இந்நூலினும் உலகு என்னும் மங்கல மொழி முதற்கண் மிளிர்கிறது. தமிழ்த் தெய்வத்திற்குத் தொண்டு பூண்டொழுகும் உத்தமப் புலவர்கள் தாங்கள் பாடுங் காப்பியங்கள் முட்டின்றி யினிது முற்றுப்பெறுவான், வழிபடு தெய்வ வணக்கஞ்செய்து, மங்கலமொழியை முதலில் அமைக்கும் வழக்கு இழுக்குறாது என்றும் நிலவவும், மாணக்கர் உய்யும்பொருட்டும் எல்லாம்வல்ல இறைவரும் மங்கலப் பொருத்தமும், பிறபொருத்தங்களுந் தேங்க உலகெலாம் என்று ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகட்கு அடியெடுத்துக் கொடுத்தருளினர். வழிபடுதெய்வ வணக்கமும், மங்கலமொழியும் முதலில் வேண்டற்பாலன என்பதனை :—"வழிபடு தெய்வ வணக்கங் கூறி, மங்கல மொழிமுதல் வகுத்தெடுத்துக் கொண்ட, இலக்கண இலக்கியம் இடுக்க ணின்றி, இனிது முடியும் என்மனார் புலவர்." என்னுஞ் சூத்திரத்தானுணர்க.

"தில்லை வாழந்தணர்த மடியார்க்கு மடியேன்" என்று வன்றொண்டப் பெருந்தகைக்கு அடியெடுத்துக் கொடுத்த அடியார்க்கெளியவரே, பசுகாணங்கள் நீங்கிச் சிவகரணமுற்ற திருவருட்பெருங்கடலாகிய ஸ்ரீ சேக்கிழார் பெருமானர்க்கு உலகெலாம் என்றோரடி யெடுத்துதவ, அருண்மொழித் தேவர் பாடி முற்றுப்பெறுவித்தமையால், பெரிய புராணம் பதிவாக்கோ பசுவாக்கோ என மலைவாருமுளர். பெரிய புராணம் பதிவாக்கே என்பது பதிஞானிகளின் துணிபு. என்னை? உலகெலாம் என்றருளடி யெடுத்தீந்த முழுமுதற் கடவுளே குன்றை

அந்நாளிலும், கிடைக்கப்பெற்ற இந்நாளிலும் பெரியபுராணத்தை முறையே நோக்கினேன்; நோக்குகிறேன். அன்றைய நோக்குக்கும் இன்றைய நோக்குக்கும் பெரும் பெரும் வேற்றுமைகள் தோன்றுகின்றன. இடை யிடையில் தோன்றி நின்றழிந்த நோக்குகள் பலப்பல. அறியாமை யுள்ளவரை, முடிந்த நோக்கம் எங்ஙனம் நிலைபெறும்?

அடியேன் அறியாமை யுடையவன். அறியாமையினின்றும் முழு விடுதலை யடையும் பேறு எனக்கு என்று கிட்டுமோ அறிகிலேன். ஒரோ வழி அவ்வப்போது நேருஞ் சிறு சிறு விடுதலையால் பெரியோர்தம் உள்ளத்தை உள்ளவாறு உணர்தல் அரிது. பெரியாராகிய சேக்கிழாரை உள்ளவாறு உணர்தற்கு, அறியாமை ஒடுங்கி, நிலைத்த மெய்யுணர்வுச் சுடர் எழுதல் வேண்டும். இஃது இதுகாறும் பெற்ற ஆராய்ச்சி அநுபவங்களால் நன்கு தெரிகிறது. சேக்கிழார் பெருமான் தெய்வப் புலவர்; திருவருட் செல்வர்; அன்புக் கடல். அவர்தம் பெருமை அளப்பரிது. அவரைக் காண்டற்குத் தெய்வப் புலமை வேண்டும்; திருவருட் செல்வம் வேண்டும்; அன்பு வேண்டும். இவையில்லா ஒருவன் தெய்வச் சேக்கிழார் உள்ளத்தை எங்ஙனங் காண்டல் கூடும்?

பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ்நாட்டில் திருவருட் பெருஞ் செல்வரா யிலங்கிய இராமலிங்க சுவாமிகள், சேக்கிழாரின் பெருமை பேசியது ஈண்டு நினைவிற்கு வருகிறது. இராமலிங்க சுவாமிகள், தமது மெய்ம்மொழி விளக்க

---

முனிவரை அதிட்டித்துத் திருத்தொண்டர் புராணத்தைத் திருவாய் மலர்ந்தருளினமையால் என்க.

விசேடணம் விசேடியத்தை யடையுமென்னு முறையால் அரியவன், வேணியன், சோதியன் என்னும் விசேடணங்கள் ஆடுவானென்னும் விசேடியத்தை எற்றன.

உலகு என்பது, லுக் (காணல்) என்னுந் தாதுவினின்றும் பிறந்த வடமொழியாகலின், அதற்குக் காணப்படும் இம்மண்ணுலகமெனப் பொருளுரைப்பர் சிலர். அது பொருத்தம் அன்றென்க; என்னை? சிவபராஞ்சுடராற் சிருட்டிக்கப்பட்ட உலகங்கள் பலவுண்மையானும், அவைகளிலுள்ளாரும் மண்ணுலகினரைச் சிவணத் தற்பர சிவத்தைத் தரிசிக்கப் பல கிரியைகள் இயற்றுகின்றமையானும், தரிசித்து ஆனந்தமயமாயினோர் பலர் உண்மையானும் என்க. 'உலகு' என்பதைக் "காலமுலகம்" என்னுந் தொல்காப்பியச் சூத்திரவுரையில் ஆசிரியர் நச்சினார்க்கினியர், "வடசொல் அன்று, ஆசிரியர் வடசொற்களை யெடுத்தோதி யிலக்கணங் கூறாராகலின். உலகமென்பது மக்கட் டொகுதியை உணர்த்தியவழி உயர்திணையாயும், இடத்தை உணர்த்திய வழி அஃறிணையாயும் வருதலின், ஒருசொல் இருபொருட்கண்ணுஞ் சென்றதெனப் படாது இருசொல் எனவே படும். அங்ஙனம் மக்கட்டொகுதியை உணர்த்துங்கால் உரிப்பெயரையே உணர்த்திற்று. ஆகுபெயரன்று" என்றுரைத்தார்.

ஈண்டு உலகென்னும் பலபொருளொருசொற்கு அறிஞர்களெனப்பொருள் கோடலே யமைவுடைத் தென்பது, அருணூலுணர்ந்த ஆன்றோர் துணிபு. அவ்வறிஞர்கள் எவரோவெனில் கூறுதும்:

உலகாயதம், சௌத்திராந்திகம், யோகாசாரம், மாத்திமிகம், வைபாடிகம், நிகண்டவாதம், ஆசீவகம், பட்டாசாரியம், பிரபாகரம், சத்தப்பிரமவாதம்,

வுரைக்கண் "சேக்கிழா ரென்னும் பேரிற் சிறந்த பேரறிவுடைய பெரியர் திருவருட்டுணையால் இப் பெருங்காப்பிய முடித்தனர். இது மாயைத் துணை யால் தேவர் முனிவர் மனிதர் இயற்றிய மற்றைய காப்பியங்கள் போல் எளி தன்று" என்று சேக்கிழார் பெருமையை உலகுக்கு அறிவுறுத்தி யிருத்தல் காண்க. பெரியபுராணம் மாயா நாத ஒலியால் ஆக்கப்பட்டதன்று என்பது இராமலிங்க சுவாமிகளின் உள்ளக்கிடக்கை.

தெய்வப் புலமையும், திருவருட் செல்வமும் வாய்க்கப்பெற்ற சேக்கிழார் பெருமான் உள்ளத்தை, அவை வாய்க்கப்பெறாது, கலைப்புலமையால் மட்டுங் காண்டல் எளிதன்று. கலைப்புலமையும் நிரம்பப் பெறாத சிறியேன் சேக்கி ழாரை எங்ஙனங் காணவல்லேன்? ஆனால் சேக்கிழாரைக் காண்டல் வேண்டு மென்னும் வேட்கை மட்டும் என்பால் தணிவதில்லை. அவ்வேட்கை தணிதற்கு என் செய்வது? யாண்டுச் செல்வது? அன்புக் கடலாகிய சேக்கிழாரிடமே செல் கிறேன். தெய்வச் சேக்கிழார் திருவடி வாழ்க.

## வாணிழல்

சேக்கிழார் பெருமானுக்குத் தெய்வப்புலமை ஆண்டவன் திருவருளா லேயே விளங்கலாயிற்று. சேக்கிழார் பெருமான் பெரிய புராணத்தைப் பாட எண்ணியதும் பாடப் புகுந்தாரில்லை. அவர் சிதம்பரம் போந்து ஆண்டவன் அருள்வேட்டு நின்றார். அவர்தம் பக்குவம் உணர்ந்து ஆண்டவனே "உலகெ லாம்" என்று அடியெடுத்துக் கொடுத்தான். ஆண்டவன் அருள்நாத ஒலி, சேக்கிழார் பெருமானைத் தெய்வப் புலவராக்கிப் பெரிய புராணத்தைப் பாடுவித் தது. பெரிய புராணத்திற்கு மூதலாக நின்ற திருத்தொண்டத் தொகைக்கும் ஆண்டவன் அடியெடுத்துக் கொடுத்தது ஈண்டுக் கருதற்பாலது.

'ஆண்டவனுதல் அடியெடுத்துக் கொடுத்தலாதல்' என்று என்னுவோ ரில்லாமலில்லை; ஐயுறுவோரில்லாமலில்லை; 'பெரிய புராணத்துக்கு உயர்வு கற்

மாயாவாதம், பாற்கரியம், நிரீச்சுரசாங்கியம், சிவசாங்கியம், விஷ்ணுசாங்கியம், பாஞ்சராத்திரம், தர்க்கம், மீமாஞ்சை, சைவம், பாசுபதம், மாவிரதம், காளா முகம், வாமம், வைரவம், பாடாணவாதசைவம், நிமித்த காரண பரிணும வாத சைவம், சுத்த சைவம், பேதவாத சைவம், சங்கிராந்தவாத சைவம், அவிகாரவாதசைவம், ஐக்கியவாதம், சிவசமவாதம், கிரீடாப்பிரம வாதம் முத லிய சமயங்களிலுழன்று, அவ்வச்சமய வுண்மை நூல்களையாராய்ந்து, உண் மைப்பொருள் விளங்காது மயங்கி, அவைகள் நிச்சயிக்கும் பொருள்கள் பொய் யெனத் தெளிந்து, வெண்ணீற்றையும், கண்மணியையும் அணியும் புண் ணியமேற்றுப், பிறவிப் பிணியை யொழிக்கும் சிவதீக்கைகள் பெற்றுத், திருக் கோயில்களிலே திருவலகிடல், திருமெழுகு சாத்தல், திருநந்தனவனம் வைத் தல், பத்திர புட்பங்களெடுத்தல், திருமாலை கட்டுதல், சுகந்த தூபமிடுதல், திரு விளக்கேற்றுதல், தேவார முதலிய திருமுறைகளை யோதல், ஆனந்தக் கூத் தாடல் முதலியனவாகிய சரியையிற் சரியையையும் - சந்திரசேகரர், உமாமகே சர், இடபாரூடர், சபாபதி, கல்யாணசுந்தரர், பிச்சாடனர், காமாரி, காலாரி, திரிபுராரி, சலந்தராரி, மாதங்காரி, வீரபத்திரர், அரியர்த்தர், அர்த்தநாரீசுவரர், கிராதர், கங்காளர், சண்டேசாநுக்கிரகர், நீலகண்டர், சக்கரப்பிரதர், கசமுகாநுக்

பிக்கவேண்டி ஒருவிதத் தெய்வத்தன்மை அதன் மாட்டுப் புனைந்து புகுத்தப் பட்டது' என்று சொல்லுவோரில்லாமலில்லை; இன்னும் பலவாறு கூறுவோரு மில்லாமலில்லை.

'உலகெலாம்' என்று ஆண்டவன் அடியெடுத்துக் கொடுத்த நிகழ்ச்சி, சேக்கிழார் பெருமான் திருவாக்கிலேயே திகழ்கிறது. அந்நிகழ்ச்சியைச் சேக்கிழார் பெருமான் கூறாது, அவர் பின் வந்தவர் எவரேனும் முதன்முறையாகக் கூறியிருப்பரேல், அதைப்பற்றி ஐயங்கொள்ளுதற்கு இடனுண்டாகலாம். சேக்கிழார் பெருமானே "மெய்ம்மொழி வானிழல் கூறிய பொருளினாலும்" என்று திருவாய் மலர்ந்துள்ளார். ஆதலால் அகச்சான்றை எப்படிப் புறக்கணிப்பது?

வானிழல், தக்கார்க்கு மொழி வழங்கல் இயல்பு. வானிழல் என்பதை அசரீரி என்று நம்மவர்கள் சொல்கிறார்கள். இப்பொழுது சிலவிடங்களில் 'ஆகாசப் பதிவு' (Akashic Records) என்பதொன்று காணப்பெற்று வருகிறது. வானில் முன்னர் நுண்மையாகப் பதிந்து கிடந்து, பின்னர்ப் பருமையாக அறிஞர்வழி வெளி வருவது 'ஆகாசப் பதிவு' எனப்படும். வானிழல் என்பதும் 'ஆகாசப் பதிவு' என்பதும் பொருளில் ஒன்றே. வானிழல் ஆராய்ச்சி, தத்துவ வுலகில் இந்நாளிற் பரவி வருகிறது. அதைப்பற்றிய நுட்பங்கள் பல இப்பொழுது வெளிவந்து கொண்டிருக்கின்றன.

உலகில் வாழும் மக்கள் அனைவரும் ஒரு திறத்தவரா யிருப்பதில்லை. ஒருவர்க்கு எளிமையாகத் தோன்றும் ஒன்று மற்றொருவர்க்கு அருமையாகத் தோன்றுகிறது. ஒன்றை ஒருவர் மிக எளிதில் உணர்கிறார். அதையே மற்றொருவர் அரிதில் முயன்றும் உணரா தொழிகிறார். ஒருவர் எளிதில் முடிப்பதை மற்றொருவர் அரிதில் முடிப்பதும் இயலாமற் போகிறது. யோகிகளின் செயல்களைப்பற்றி என்ன கூறுவது? பல யோகிகளின் அதி அற்புத நிகழ்ச்சிகளை இன்றுங் காண்கிறோம்; கேட்கிறோம். அவைகள் விஞ்ஞான உலகையும் எக்குறச்

---

கிரகர், சோமாஸ்கந்தர், ஏகபாதர், சுகாசீனர், தக்கிணாமூர்த்தி, இலிங்கோற்பவர் என்னும் ஐயைந்து மூர்த்திகளுள் ஒன்றனையேனும், கணபதி முதலிய ஆவரண மூர்த்திகளுள் ஒன்றனையேனும் பூசித்தலாகிய சரியையிற் கிரியையையும் - மனத்தின்கண் உருத்திரக் கடவுளைத் தியானஞ் செய்தலாகிய சரியையில் யோகத்தையும் - அங்ஙனம் இயற்றுந் தியான பாவனையின் உறைப்பினால் ஓரனுபவ வுணர்வு நிகழ்தலாகிய சரியையில் ஞானத்தையும் - சிவபூசைக்கு வேண்டப்படும் உபகரணங்களெல்லாஞ் செய்துகோடலாகிய கிரியையிற் சரியையையும் - சிவாகமங்களில் விதிக்கப்பட்டவாறே *ஐவகைச் சுத்தி முன்னாகச் சிவலிங்க வடிவிற் செய்யும் பூசனையாகிய கிரியையிற் கிரியையையும் - அகத்தே பூசை, ஓமம், தியானம் என்னு மூன்றற்கும் †மூவிடம் வகுத்துக்கொண்டு செய்யப்படும் அந்தரியாகமாகிய கிரியையில் யோகத்தையும் - அவ்வந்தரியாக வுறைப்பின்கண் நிகழும் ஓரனுபவவுணர்வாகிய கிரியையில் ஞானத்தையும் - இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம் என்னும் நான்காகிய யோகத்திற் சரியையையும் -

* ஐவகைச்சுத்தி :— பூதசுத்தி, ஆன்மசுத்தி, இலிங்கசுத்தி, மந்திரசுத்தி, திரவிய சுத்தி என்பன.

† மூவிடம் :— இதயம், உந்தி, புருவநடு என்பன.

செய்கின்றன. யோகத்துறையிலிறங்கி உழையாத ஒருவன், யோகிகளின் அதி அற்புதச் செயல்களைப் பொய்யென்று கூறி ஒதுக்கல் அறிவுடைமை யாகுங்கொல்?

மக்களுக்குள் வேறுபாடுகள் விளங்குவதன் நுட்பமென்னை? உடலமைப்பில் ஏதாயினும் வேற்றுமையுண்டோ? எல்லாரும் பூத காரியமாகிய உடலையே தாங்கி நிற்கிறார். பின்னை வேறுபாடுகள் யாண்டிருந்து முளைக்கின்றன? எல்லாரும் பூதகாரிய உடலைத்தாங்கி நிற்பினும், அவர்தம் அறிவு பூதகாரியங்களின் துணையைப் பொதுவாகப் பெற்றிருப்பினும், அவ்வறிவு ஒவ்வொரு பூதகாரியத்திலும் படியும் முறைமையிலும் நிலைமையிலும் வேறுபாடுகள் தோன்றுகின்றன. எவ்வெப்பூத காரியத்தில் எவ்வெவ்வறிவு சிறந்து படிந்து கிடக்கிறதோ, அவ்வப் பூதகாரிய இயலுக்கேற்ற அவ்வவ்வளவில் அவ்வவ்வறிவும் விளக்கமுறும். வானில் சிறந்து உறவு கொள்வோர் மட்டும் தெள்ளிய அறிவு விளங்கப் பெறுவர்.

பூதங்கள் ஐந்து. அவை மண் புனல் தீ காற்று வான் என்பன. மண்ணில் மண்ணொடு மற்ற நான்கும் உண்டு. புனலில் புனலொடு மற்ற மூன்றும் உண்டு. தீயில் தீயொடு மற்ற இரண்டும் உண்டு. காற்றில் காற்றொடு மற்ற ஒன்றும் உண்டு. வான் மட்டுந் தன்னந் தனியதாய், ஏனைய பூதங்களுடன் கலந்து, அவைகள் இயங்கத் தாரகமாக நிற்பது.

இப்பூதங்கட்குத்தன்மைகளுண்டு. அவைகள் தன்மாத்திரைகள் எனப்படும். ஐம்பூதம் தோன்றுதற்குத் தன்மாத்திரைகள் நிலைக்களனாயிருத்தலால், அவைகள் நுண்பூத மென்றும் மா பூதமென்றுஞ் சொல்லப்படும். அத்தன்மாத்திரைகள்: சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்பன. மண்ணின் இயற்கைத் தன்மை (கந்தம்)

---

*பிரத்தியாகாரமும், †தாரணையுமாகிய யோகத்திற் கிரியையையும்-‡தியானமாகிய யோகத்தில் யோகத்தையும் - §சமாதியாகிய யோகத்தில் ஞானத்தையும் - உண்

---

* **பிரத்தியாகாரம்**:—விடயவழிக்கட்செல்லும் இந்திரியங்களைத் தன்வசப்படுத்தல் - பிரபஞ்சம் யாவும் மெய்யெனவும், அவைகள் சிவரூபமெனவும், தான் புரியுங் கருமங்கள் யாவும் சிவகரும மெனவுங் கொண்டு, நித்திய நைமித்திய காமிய கருமங்களையியற்றிச், சுத்தவாயுவைப் பூரித்துத் தந்தமூலம், கண்டம், நெஞ்சு, உந்தி, கந்தஸ்தானம், குண்டலித்தானம், மூலாதாரம், அபானம், கடி, இருதொடைநடு, இருமுழந்தாள், கணைக்கால்களினடு, கால்விரல்கள் என்னுமித்தானங்களில் முறையே நிறுத்தல்.

† **தாரணை**:—உடலிலே முழங்கால் வரையுமுள்ள பிருதிவிபாகத்திலே அயனையும், முழங்கால் முதல் குதம் வரையுமுள்ள அப்பு பாகத்திலே அரியையும், குத முதல் இதயத்தானம் வரையுமுள்ள தேயுபாகத்திலே உருத்திரனையும், இதய முதல் கழுத்து வரையுமுள்ள வாயு பாகத்திலே மாகேசுர தேவரையும், கழுத்து முதல் சிரமளவுமுள்ள ஆகாய பாகத்திலே சதாசிவரையும் (அவரவர்) அமையுமாறு பாவித்தல்.

‡ **தியானம்**:—நிருமலமான ஆகாயத்திலே பேரொளி வாய்ந்து, ஒப்பில்லாத சீதளங்கொண்டு விளங்குஞ் சந்திரமண்டலத்தை முதலிற் றியானித்துப், பின்னர் அதனடுவே பேரானந்த வடிவினராய், தெளிபளிங்குபோன்ற திருமேனியும், நீலகண்டமும், முக்கண்ணும், நாற்புயமும் உடையவராய், பராசத்தி சமேதராய், ஆதியந்தமில்லாராய் வைகும் பரஞ்சோதிப் பிழம்பாகிய சிவபெருமானை இடையறாது சோகம்பாவனை செய்தல்.

§ **சமாதி**:—பேரானந்த வடிவாய நிருமல வொளியிலே வேறல்லவாக் கூடுமாறு நிற்கு நிலை.

நாற்றம். புனலின் இயற்கைத் தன்மை (ரசம்) சுவை. தீயின் இயற்கைத் தன்மை (ரூபம்) ஒளி. காற்றின் இயற்கைத் தன்மை (ஸ்பரிசம்) ஊறு. வானின் இயற்கைத் தன்மை (சப்தம்) ஓசை. மண்ணின் இயற்கைத் தன்மை நாற்றமாயினும், அதன்கண் மற்றப் பூதங்கள் கலந்திருத்தலான், அவைகளின் தன்மைகளாகிய சுவை ஒளி ஊறு ஓசைகளும், அதன்மாட்டு (மண்ணின்மாட்டு) விரவியிருக்கின்றன. இவ்வாறே புனலுடன் அதன் சுவையும் மற்ற மூன்றும், தீயுடன் அதன் ஒளியும் மற்ற இரண்டும், காற்றுடன் அதன் ஊறும் மற்ற ஒன்றும், வானில் தனித்த ஓசையும் நிலவுகின்றன. இவைகளை, "பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி - நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி - தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி - வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி - வெளியிடை யொன்றாய் விளைந்தாய் போற்றி" என்றும், "திண்டிறல் - தீயின் வெம்மை செய்தோன் பொய்தீர் - வானிற் கலப்பு வைத்தோன் மேதகு - காலில் ஊக்கங் கண்டோன் நிழல்திகழ் - நீரில் இன்சுவை நிகழ்ந்தோன் வெளிப்பட - மண்ணில் திண்மை வைத்தோன்" என்றும் மாணிக்கவாசகர் விளக்கியிருத்தல் காண்க. "சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின் - வகைதெரிவான் கட்டே யுலகு" என்னுந் திருக்குறளின் பொருளையும் ஈண்டு ஓர்க.

வான் தனித்தும் மற்றப் பூதங்களுடன் கலந்து மிருப்பதால், அதன் ஓசையும் தனித்தும் மற்றவைகளுடன் கலந்தும் நிற்கிறது. ஆகவே, வானோசை எல்லாப் பூதங்களிலுங் கலந்திருத்தலை இன்னும் விரித்துக் கூறவேண்டுவதில்லை.

வானின் தனித்த ஓசைக்கும், மற்றப் பூதங்களொடு கலந்த அதன் ஓசைக்கும் வேறுபாடு உண்டு. அவ்வப் பூதத்தின் திண்மை நுண்மைக்கேற்ற வளவில்

---

மைப் பொருளை ஞானாசிரியன்பாற் கேட்டலாகிய ஞானத்திற் சரியையையும் - அங்ஙனங்கேட்ட மெய்ப்பொருளைச் சிந்தித்தலாகிய ஞானத்திற் கிரியையையும் - அங்ஙனஞ் சிந்தித்ததைத் தெளிதலாகிய ஞானத்தில் யோகத்தையும் வழாது அனுஷ்டித்துச், சிவத்துடன் இரண்டறக் கலந்து நிற்கும் நிட்டையாகிய ஞானத்தில் ஞானங் கைவரப்பெற்ற சிவஞானச் செல்வர்களே யறிஞர்களாவர். இவ்வுண்மையை:—"புறச்சமய நெறிநின்றும் அகச்சமயம் புக்கும் புகன்மிருதி வழியுழன்றும் புகலும் ஆச்சிரம-அறத்துறைக ளவையடைந்தும் அருந்தவங்கள் புரிந்தும் அருங்கலைகள் பலதெரிந்தும் ஆரணங்கள் படித்தும்-சிறப்புடைய புராணங்களுணர்ந்தும் வேதச் சிரப்பொருளை மிகத்தெளிந்தும் சென்றால் சைவத் - திறத்தடைவர் இதிற்சரியை கிரியா யோகஞ் செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்" (சிவஞானசித்தியார்) எனவும், "தத்துவிதச் சமயமெலாங் கடந்தொளிருஞ் சித்தாந்தக் கதியி னேறிப் - பத்துவிதத் தவராகி யறிவுண்மைச் சரியை வகை படிந்து சிவன் - வத்துவித முணர்ந்துதிருவடிஞானந் தனையடைந்து வாரா முத்தி - அத்துவிதம் பெறுமேழிக் குலத்து மற்றைப் பதிற்றிருவ ரடிகள் போற்றி" (பட்டினத்துப் பிள்ளையார் புராணம்) எனவும் வருமாற்றானுணர்க.

"உணர்ந்தோதற் கரியவன்" என்பதற்கு, உணர்தற்கு மோதற்கு மரியவன் என்றுரைத்து இடர்ப்படுவாருமுளர். உணர்தற்கு மோதற்கு மரிதாம் பொருள் முக்காலத்தினுமில்லா முயற்கோடுபோலச் சூனியமாகலின், அவர் கூற்று அவசித்தாந்த மாதல் காண்க. வாக்கு மனங்கட் கெட்டாததாய், குணங்

ஆங்காங்கே வான் ஒலிக்கும். தனித்த வானொலி கட்டுப்பட்டதன்று. ஏனைய பூதங்களில் கலந்த வானொலி கட்டுப் பட்டதாகும். கட்டுப்படாத தூய வானொலி யில் தனித்துத் தொடர்பு பூண்டோர் உள்ளத்தில் ஒலி மயமான உலகெலாம் மிளிரும். அவர்தம் புலன்கள் உலக நிகழ்ச்சிகளை யெல்லாம் ஓரிடத்திருந்தே ஒரே காலத்தில் உணரும் தன்மையைப் பெறும். அப்புலன்களுடையார் வானிழல் துணை பெறுதல் எளிது.

மக்கள் வாழ்வில் விழிப்பு கனவு முதலிய நிலைகளிருத்தல் வெள்ளிடைமலை. சில சமயங்களில் விழிப்பில் எவ்வளவு முயன்றும் பொருளாகாத ஒன்று, கனவில் எளிதில் பொருளாதல் கண்டு வியப்புறுகிறோம். ஆழ்ந்த பொருளாராய்ச்சியில் தலைப்பட்டுள்ளோர் பலர் பலவாறு பல நுட்பங்களைக் கனவில் தெளியப்பெற்றே உலகுக்கு உபகரித்திருக்கிறார். கனவு நிலையைக் கடந்த நிலைகளுமிருக்கின்றன. விழிப்பில் பொருளாகாத ஒன்று கனவில் பொருளாதற்குப் பலப்பல காரணங் கூறலாம். விரிவு ஈண்டைக் கென்றுக்கு ? விழிப்பில் எல்லாத் தத்துவக் காரியங் களும் செயலிலுற்று நடத்தலையும், கனவில் பல தத்துவக் காரியங்கள் செயலற் றுக் கிடத்தலையும் உன்னினால் உண்மை விளங்கும். தத்துவச் சேட்டைகளின் இயல், அறிவு விளக்கத்துக்குக் கேடு சூழ்வதாகும்.

கனவில் பல தத்துவச் சேட்டைகளின்மையால், அதன்கண் அறிவு ஒரு வித அமைதியில் நின்று தெளிந்து விளங்குவதாகிறது. (இங்கே குறிப்பிட்ட கனவு, நோய், பொல்லா உணவு, தீய எண்ணம் முதலியவாற்றால் நேருங் கனவு கள் போன்றதன்று.) தத்துவச் சேட்டை குறையக் குறைய வானிழல் துணை பெருகிக் கொண்டே போகும். கனவு முதலியவற்றைக் கடந்த துரியத்தில் வானிழல் பெருந்துணை புரிவதாகிறது.

---

குறி நாமம் முதலியன இல்லாததாய் விளங்கும் பரப்பிரமத்தை யுணர்தல் யாங்ஙனமெனில், ஞானத்தால் என்க. அந்த ஞானம், மேன்மேலும் பந்த முறுத்தும் பசுபாச ஞானங்கட்கு மேம்பட்டதாய பதிஞானம் என்றுணர்க. பதி ஞானம், பரமஞானம், தத்துவஞானம், அத்துவித ஞானம், பரஞானம், திரு வடி ஞானம், அருண்ஞானம், சிவஞானம், மெய்யுணர்வு என்பன ஒரு பொருள் குறிப்பன. பதி - சிவன், ஞானம் - அறிவு; எனவே அன்பு காரணமாகச் சிவனை யுள்ளவாறறியு மறிவெனப்படும். அது முதல்வனை யுணருமிடத்து அன்பென வும், உணர்ந்து அருளுருவாகி முதல்வனின் வேறாகாது நிற்புழிப் பதிஞானமென வுங் கூறப்படும். தற்பரசிவம் குணங்குறி முதலியன இல்லாத தென்பதனை :—
"மைப்படிந்த கண்ணாளுந் தானுங் கச்சி மயானத்தான் வார்சடையான் என்னி னல்லான்-ஒப்புடைய னல்லன் ஒருவ னல்லன் ஓரூ னல்லன் ஒருவம னில்லி- அப்படியும் அந்நிறமும் அவ்வண்ணமும் அவனருளே கண்ணாகக்காணி னல்லால்- இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவனிறைவன் என்றெழுதிக் காட் டொணாதே" (தேவாரம்) எனவும், "அன்றுந் திருவுருவங் காணாதே யாட்பட் டேன் - இன்றுந் திருவுருவங் காண்கிலேன்—என்றுந்தான் - எவ்வுருவோ நும் பிரான் என்பார்கட் கென்னுரைக்கேன் - எவ்வுருவோ நின்னுருவ மேது" (பதினொராந்திருமுறை) எனவும், "பலகலையா கமவேதம் யாவையினுங் கருத் துப் பதிபசுபா சந்தெரித்தல் பதிபரமே அதுதான் - நிலவும்அரு வுருவின்றிக் குணங்குறிக ளின்றி நின்மலமாய் ஏகமாய் நித்த மாகி - அலகிலுயிர்க் குணர்வாகி அசலமாகி அகண்டிதமாய் ஆனந்த வுருவா யன்றிச் - செலவரிதாய்ச் செல்கதி

விழிப்பிலுஞ் சிலர் தத்துவச் சேட்டையின்றி, அமைதிபெற்று, அறிவு தெளியப் பெறுகிறார். விழிப்பில் ஏதாவது ஒன்று விளங்காதபோது புலவர்கள் என் செய்கிறார்கள்? அவர்கள் அமைதியூட்டும் ஓரிடஞ் சென்று, தனித்துச் சிந்தனையில் அமர்கிறார்கள். அப்பொழுது அவர்கள் விரும்பியதொன்று அவர்கட்குப் புலனாகிறது. விழிப்பில் எல்லாத் தத்துவங்களும் இயங்கினும், அமைதியும் தனிமையும் ஆழ்ந்த சிந்தனையும் அவைகளின் (தத்துவங்களின்) சேட்டைகளைத் தகைகின்றன. அப்பொழுது வானிழல் துணை எழுகிறது. எந்நிலையிலும் பூத தத்துவக் காரியச் சேட்டைகள் அற்றவிடத்தில் வானிழல் துணை புரிவதாகிறது என்று சுருங்கச் சொல்லலாம்.

வானிழல் பண்டைப் பெரியோர்கட்கு மட்டும் துணை நின்றது என்று எவருங் கருத வேண்டுவதில்லை. என்றும் அது தக்கார்க்குத் துணை செய்வதென்பதில் ஐயமில்லை. உழைப்பால் எல்லாரும் தம்மை எல்லாவற்றிற்குந் தகுதி யுடையராய்ச் செய்து கொள்ளலாம். வேண்டுவது உழைப்பே. "உழைப்பின் வாரா உறுதிக ளுளவோ" என்றார் பட்டினத்தார். வானிழல் துணை பெறுவோர் இன்று மிருக்கிறார்; இனியுமிருப்பார்.

வானென்னும் ஆகாசம் இருவகைத்து. ஒன்று பூதாகாசம்; இன்னொன்று சிதாகாசம். முன்னையதன் ஓசை மாயாநாதத்தினின்றும் பிறப்பது. பின்னையதன் ஓசை அருள் நாதத்தினின்றும் பிறப்பது. அதன் துணை கேவலத்தில் அறிவை விளங்கச் செய்யும். இதன் துணை சுத்தத்தில் அறிவை விளங்கச் செய்யும்.

சேக்கிழார் பெருமான், அயரா அன்பில் அரன்கழல் போற்றித் தத்துவக் குறும்புகளினின்றும் விடுதலை யடைந்து மெய்யுணர்வு பெற்றவர்; சிவமே

---

யாய்ச் சிறிதாகிப் பெரிதாய்த் திகழ்வதுதற் சிவமென்பர் தெளிந்துளோரே" (சிவப்பிரகாசம்) எனவும், "ஊரி லான்குணங் குறியிலான் செயலிலான் உரைக்கும் - பேரி லான்ஒரு முன்னிலான் பின்னிலான் பிறிதோர் - சாரி லான்வரல் போக்கிலான் மேலிலான் தனக்கு - நேரி லான்குகக் கடவுளா யென்னுளே நின்றான்" (கந்தபுராணம்) எனவும், "குலமி லான்குணங் குறியிலான் குறைவிலான் கொடிதாம் - புலமி லான்தனக் கென்னவோர் பற்றிலான் பொருந்தும் - இலமி லான்மைந்தர் மனைவியில் லானென வனவன்சஞ் - சலமி லான்முத்தி தரும்பர சிவனெனத் தகுமே" (தாயுமான சுவாமிகள்) எனவும் வரூஉந் திருச்செய்யுள்களானறிக. சிவஞானத்தாலன்றிப் பசுபாச ஞானங்களாற் சிவம் உணரப்படாதென்பதனை:—"பாச ஞானத்தாலும் பசுஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பரனைப் பதிஞானத்தாலே - நேசமொடு முள்ளத்தே நாடிப்பாத நீழற்கீழ் நில்லாதே நீங்கிப்போதின்-ஆசைதரு முலகமெலா மலமைத்தே ராமென் றறிந்தகல அந்நிலையேயாகும் பின்னும் - ஓசைதரும் அஞ்செழுத்தை விதிப்படி உச்சரிக்க

---

"The Aquarian Gospel of Jesus the Christ" என்னும் நூலாசிரியராகிய லெவி - Levi - என்பார் வானிழல் துணைபெற்று நூலெழுதியவர். அவர் 1844-ம் ஆண்டு மண்ணில் தோன்றி 1911-ம் ஆண்டில் மறைந்தவர். அச்சீரிய நூலுக்கு ஈவா எஸ். டௌலிங், எ. பிஎச். டி., - Eva S. Dowling, A. Ph. D., - என்பார் முன்னுரை வரைந்துள்ளார். அதன்கண் வானிழல் நுட்பம் விளக்கப்பட் டிருக்கிறது.

பார்த்துப் பார்த்துத் தெளிவுபெற்ற சித்தர்; சிதாகாசத் தொடர்புடையவர். அவர் சிதாகாசத் தொடர்புடையார் என்பதற்கு வேறு சான்று வேண்டுவதில்லை. சேக்கிழார் பெருமான் பெரிய புராணம் பாடுதற்கு மற்றத் தலங்கள் நோக்காது, சிதாகாசத்தின் அறிகுறியாக இம்மண்ணுலகிற் பிறங்குஞ் சிதம்பரத் தலம் நோக்கிய தொன்றே சாலும்.

சேக்கிழார் பெருமானின் சிவபத்தியும், சிவனடியார் பத்தியும் பெரிய புராணத்தைப் பாடுதல் வேண்டுமென்னும் வேட்கையில் அவரை உந்தின. அவ்வேட்கை அவரை விழுங்கி நின்றது. அவர்தம் அகக்கரண புறக்கரணங்களெல்லாம் பெரிய புராண மயமாயின. அவர்தம் நெஞ்சம் சிதாகாசமாயிற்று. அவர், சிதாகாசத்தில் நடம்புரியும் அண்ணலை நோக்கிப் "பெருமானே! திருத்தொண்டர் புராணம் பாடும் வேட்கையுடையேன் ; சிவஞானச் செல்வர்களாகிய திருத்தொண்டர்களின் திறங்களையுணர்ந்து பாடுதற்கு அடியேன் அருகனுவனோ? திருவருட்டுணைவேண்டும். ஐயனே" என்று முறையிட்டார். அவர்தம் உண்மை முறையீடு, 'பொய்யன்புக் கெட்டாத பொற் பொதுவில் நடம்புரியும் ஐயன்தன் திருச்செவிக்' கெட்டியது. எட்டியதும், ஐயன் அருளால் "உலகெலாம்" என்னும் மெய்ம்மொழியை வானிழல் வழங்கிற்று. வழங்கியதும் சேக்கிழாருக்கும் திருவருளுக்கும் பழமைத் தொடர்பு ஏற்பட்டது. எல்லா மெய்ம்மொழிப் பதிவுகட்கும் நிலைக்களனுகவுள்ள அருணுதம் சேக்கிழாரிடம் ஒலிக்கலாயிற்று. அவ்வருணுதம், சேக்கிழார்க்கு எல்லாம் விளங்கத் துணைநின்று, அவரைத் தெய்வப் புலவராக்கிற்று. இன்னோரன்ன பல காரணங்களால் சேக்கிழாரைத் தெய்வத் திருவருட் சேக்கிழாரென்று உலகங் கொண்டது.

---

வுள்ளத்தே புகுந்தளிப்பன் ஊனமெலா மோட" என வரூஉஞ் சிவஞான சித்தியார் திருவிருத்தத்தா னுணர்க.

சிவஞானத்தால் விளையும் உணர்ச்சி நிருவிகற்ப ஞானமாகலானும் அதனை யடைந்தோர் குணவிருத்திகளும் பிறவும் ஒடுங்கப் பெற்று, எங்குஞ் சிவமாக விளங்கி, நிரதிசயானந்தத்தை நுகர்வாராகலானும், அவ்வானந்தத்தை யவரெடுத்தோதுவரேல், அவரடைந்த இன்பம் அத்துவித இன்பம் அன்றாகலானும், அவ்வின்பம் ஓதரிய இன்ப மாகலானும், அவ்வின்புருவனை "ஓதற் கரியவன்" என்றார். சிவபிரான் ஓதற்கரியவன் என்பதனை :— "பாதாள மேழினுங்கீழ்ச் சொற்கழிவு பாதமலர் போதார் புனைமுடியு மெல்லாப் பொருண்முடிவே - பேதை யொருபாற் றிருமேனி யொன்றல்லன் வேதமுதல் விண்ணோரும் மண்ணுந் துதித்தாலும் - ஓத வுலவா ஒருதோழன் தொண்டருளன் கோதில் குலத்தரன்றன் கோயிற் பிணாப் பிள்ளைகாள் - ஏதவனூர் ஏதவன்பேர் ஆருற்றார் ஆரயலார் ஏதவனைப் பாடும் பரிசேலோர் எம்பாவாய்" (திருவாசகம்) என்பதானும், "மறையினா லயனான் மாலான் மனத்தினால் வாக்கான் மற்றுங்-குறைவிலா வளவி னாலுங் கூறொணா தாகி நின்ற-இறைவனார் கமல பாதம் இன்றியான் இயம்பும் ஆசை - நிறையினார் குணத்தோர்க் கெல்லா நகையினை நிறுத்துமன்றே" (சிவஞானசித்தியார்) என்பதானுமுணர்க. உணர்ந்தோதற்கரியவன் என்னுங் கருத்தை :—"உணர்ந்தார்க் குணர்வரி யோன்றில்லைச் சிற்றம் பலத்தொருத்தன்-குணந்தான் வெளிப்பட்ட கொவ்வைச்செவ் வாயிக்கொடியிடைதோள்-புணர்ந்தாற் புணருந்தொறும் பெரும்

சேக்கிழார் பெருமான் சிவபத்தி சிவனடியார் பத்தியான் சிவகாரணங்களெல் லாஞ் சிவகாரணங்களாகப் பெற்ற திருவருட் செல்வரானமையான், ஆண்டவ னருள், வானிற் பதிந்திருந்த மெய்ம்மையை "உலகெலாம்" என்னும் மெய்ம் மொழியால் அவருக்கு வழங்கிற்றென்க.

இம்மெய்ம்மொழியைப் பற்றி இராமலிங்க சுவாமிகள் மணிமொழிகள் பல வழங்கி யுள்ளார்கள். சுவாமிகளியற்றிய மெய்ம்மொழி விளக்கத்தைப் பார்க்க. அம்மணி மொழிகளில் சிலவற்றை அகழ்ந்து ஈண்டுத் தருகிறேன்.

"சுத்த வியோமாகாரமாய் விளங்குகின்ற திருவருட் பா வயிந்துவத் துரி யத் திருவாக்கான் மொழிந்த உலகெலாம் என்னும் மொழியை மெய்ம் மொழி யென்றல் இறும்பூ தன்றென்க".

"பரசிவ மொழியாய திருவருட்டுரிய மொழி,துரிய சத்தார்த்தப் பிரபஞ்ச காரணமாய்ச் சிற்சத்தி பாவிந்துவிற் பதிதலான் நாதமாத்திரத்தி னுண் டாய மொழி யாகலின், லக்ஷிய மெய்ம்மொழி யாயிற்றென்க."

"இம் மெய்ம் மொழிப்பொருள் விளக்கத்தின் எல்லை எங்ஙனமெனின்: யோகாந்த கலாந்த நாதாந்த போதாந்த வேதாந்த சித்தாந்த மென்னுஞ் சடாந் தானுபவ சாத்திரியர்களும் அவற்றை விரும்பி யவ்வழிக்கணின்ற சாத கர்களும் அந்தானுபவ திட்டாந்தமாக உபாசிக்க விளங்குகின்ற சிதம்பர ரஹசி யத்தைக் குறிக்குஞ் சிற்சபைக்கண்ணே, சேக்கிழா ரென்னுந் தெய்வப்

போகம்பின் னும்புதிதாய்-மணந்தாழ் புரிகுழ லாளல்குல் போல வளர்கின்றதே" (திருக்கோவையார்) என்பதனைலறிக.

'உலகெலா முணர்ந்தோதற் கரியவனு பரன் எவனே' என்று ஐயுறு வார் பிறவிப் பெருங்கடலை நீந்தி, முத்திக் கரையேறி யுய்ய "நிலவுலாவிய நீர்மலி வேணியன்" என்றோதி யுபகரித்தனர். நிலவு - பண்பாகுபெயர். உலாவிய என்னும் பெயரெச்சம் வேணி யென்னும் இடப்பெயர் கொண்டது. தக்கன் சாபந்தாங்கித் தளர்ந்து மெலிந்து சரணடைந்த தண்மதியைத் தனி முடியிற் றரித்து உய்வித்தமையால், பிறாற் பெருங்கேடெய்தினருஞ் சங்கா னடிக் கீழ்ச் சரணம் புகுவரேல், அவர்கட்குய்வுண்டா மென்பதும், பகீ ரதன் வேண்டுகோளால் பங்கய னுலகத்தினின்றும் பாந்தாமனுதியிமையோரும் அடக்குமாற்றலில்லாது வருந்த, அதிவேகமாகப் பன்முகங்களுடன் பாரழிக்க வந்த கங்கையின் செருக்கையடக்கித் தரித்து, உலகையும் உம்பரையும் உய்வித்து உவப்பித்தமையால், எவரானும் முடித்தற்கரிய பெருங் காரியங் களும் பிறை சூடியாம் பெருமானுல் முடிக்கப்படுமென்னுந் தண்ணளியாந் தன் மையும், பிறவும் பெறப்படுகின்றன. அஞ்ஞானவடிவாந் தக்கனது சாபம் அம் புலியை அடையாவண்ணம், அதனைச் சடையில் அணிந்தமையால், பரன் ஞான வடிவின னென்பதும், கங்கையின் செருக்கையடக்கி அதையுஞ் சடையிற் றரித்தமையால், சங்கரன் கிரியை வடிவினனென்பதும், (உலகுய்ய இச்சை கொண்டு திருமேனி தாங்கினமையால்,) அவ்வருட் டிருமேனியில் வேறுகாத சடையை யுடையான், இச்சை வடிவினனென்பதும் விளங்குகின்றன.

தனக்கென ஒரு நிறமும் வேண்டப்படாத சுத்த படிகமானது கூடினத னிறமா யிருத்தற்போல, தத்துவா தீதமாகலிற் றனக்கென ஒரு வடிவுமில்லாத

புலவர் பொருட் டிறைவர் பரமாகாய வாக்கான் மொழியப்பட்டுச் சமாசாநு பவ சாட்சாத்காரமாய் ஆறந்தத்தினும் நடிக்கின்ற சிதம்பரநடனத் திருவருட் பதத்தை வாச்சிய லக்ஷியமாகக் கொள்ளப்பட்ட தாகலின், சடாந்த சமரச லக்ஷியப் பொருளெல்லையை யுடைய தென்க".

"அன்புகொண் டனுபவித் துய்தற்பொருட்டும் அம் மெய்ம் மொழியைக் கேட்டுச் சேக்கிழாரது புறக்காரணங்கள் சுத்தியாதற் பொருட்டும், புறத்தே உலகெலா மென் றெழுந்து தத்துவ படலத்தான் மயங்கிய அவரது ஆன்ம திருட்டியைப் படல நீக்கி அறிவு விளக்கிச் சுத்தி செய்தற்பொருட் டகத் தே யுணர்ந்தோதற் கரியவ னென்று முடிந்த தென்க".

"வேதாகமங்கள் சகளத்திற் சகுணமாகத் தோன்றிய வீசுர வாக்கியங்க ளென்பதும், உலகெலாம் என்பது பூரண நிஷ்களத்தின் நிர்க்குணமாகத் தோன்றிய பரசிவ வாக்கிய மென்பதும், உணர்ந் தோதற் கரியவன் என் பது ஏகதேச நிஷ்களத்தின் நிர்க்குணமாகத் தோன்றிய பரசிவவாக்கிய மென்பதும் அறிக வென்க".

## பொருள்

"உலகெலாம்" என்னுந் திருப்பாட்டுக்குக் கலைப்புலவர் பலர் பொருள் விரித்துள்ளார். அப்பொருள்கள் ஒன்றோடொன்று பூசல் விளைத்து வருகின் றன. ஆண்டவன் மெய்ம் மொழிக்குக் கலைப்புலமையால் என்ன பொருள் கூறுவது? அதற்குப் பொருள் அவனே. உலகெலாம் உணர்ந்து ஓதற்கரிய ஒன்று எச்சொல்லில் எப்பொருளில் அடங்கும்?

---

தற்பரசிவம் பிரபஞ்சங்களைக் காரியப்படுத்தும் அவதரத்து, தனது சத்தியின் சொரூபமாகிய பேரொளியையே தனக்கு வடிவாக்கிக் கொள்ளுதலானும், நட் சத்திர சந்திர சூரியாக்கினிகட்கும் ஒளியை யருளுகின்றமையானும், உயிர்களது கட்புலனை மறைக்கும் புறவிருள் போலன்றி மற்றுள்ள விடய இந்திரியங்களை யும், இச்சாஞானக் கிரியைகளையும் மறைத்தகலா நிற்கும் பேரிருளாணவக் குறும்பை யோட்டுகின்றமையானும் "அலகில் சோதியன" என்றார். இறை பரை வடிவினன் என்பதனை :—"பொன்மைநீ லாதி வன்னம் பொருந்திடப் பளிங்கி வற்றின் - தன்மையாய் நிற்கு மாபோற் சத்திதன் பேதமெல்லாம் - மின் மலன் றானுய்த் தோன்றி நிலைமையொன் றாயே நிற்பன் - முன்னருட்சத்திதன் பான் முகிழ்க்குந்தான் முளையா னன்றே" எனவும், சிவபிரான் யாவற்றிற்கும் ஒளி கொடுப்பதனை :—"நாயகன் கண்ண யப்பா னுயகி புதைப்ப வெங்கும் - பாயிரு ளாகி மூடப் பரிந்தல கினுக்கு நெற்றித் - தூயகேத் திரத்தி னாலே சுட ரொளி கொடுத்த பண்பில் - தேயமா ரொளிக ளெல்லாஞ் சிவனுருத் தேசதென் றூர்" (சிவஞானசித்தியார்) எனவும், பேரிருளாய ஆணவத்தை யொழிப்பர் என் பதை :—"கண்ணின் றுளிருங் கருமணியி னுள்ளொளிபோல் - உண்ணின் றுளிரு மொளிவிளக்கென்—றெண்ணிப் - புகலிப் பெருமானைப் புண்ணியனைப் போற்றில் - அகலுமே பாசவிரு ளன்று" (திருக்கழுமல மும்மணிக்கோவை) எனவும் வருவன வாற்றா னுணர்க.

சிவபெருமான் அலகில் சோதியனாயினும், ஆன்மாக்கள்மீது வைத்த கைம்மாறற்ற பெருங் கருணையினாலே திருவருளையே திருமேனியாகக் கொண்டு

பலர் இருளில் உழன்று உழன்று பொருள் தேடினார்; தேடுகின்றார். யானும் இருளி லிருப்பவன். இருளில் உழன்று உழன்று பொருள் தேடுகிறேன். இருளில் வாளா கிடப்பதினும் முயன்றுதல் பொருள் தேடுதல் நலந்தருமன்றோ? “முயற்சி திருவினை யாக்கும்” என்பது பொய்யா மொழி.

(பதவுரை) உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன் - உலகமெல்லாம் உணர்ந்து கூறுதற்கு அருமையானவனும், நிலவு உலாவிய நீர்மலி வேணியன் - சந்திரன் தவழ்கின்ற நீர்நிறைந்த சடையை யுடையவனும், அலகு இல் சோதியன் - அளவில்லாத பேரொளியனுமாய், அம்பலத்து ஆடுவான் - திருச்சிற்றம்பலத்தில் திருக்கூத்தாடும் இறைவன்றன், மலர் சிலம்பு அடி வாழ்த்தி வணங்குவாம் - மலர்கின்ற சிலம்பணிந்த திருவடியை வாழ்த்தி வணங்குவோம்.

## விளக்கம்

### க. உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்

“உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்” என்று ஊன்றி நோக்கி உன்னலானேன். உன்ன உன்ன உள்ளம் விரிந்து செல்கிறது; விரிந்து விரிந்து செல்கிறது; சென்று கொண்டே போகிறது. ஒன்றும் விளங்கவில்லை. கூர்ந்து கூர்ந்து உன்னலானேன். ஆழம் அகலம் நீளம் ஒன்றும் புலனாகவில்லை. ஆழம் ஆழ்ந்து கொண்டே போகிறது; அகலம் அகன்று கொண்டே போகிறது; நீளம் நீண்டு கொண்டே போகிறது. எல்லை காணேம். உள்ளமோ முட்டுகிறது; தடைபடுகிறது; சுழல்கிறது; சுழன்று சுழன்று நிற்கிறது; அயர்கிறது. திடீரெனச் சிறு மின்னொளி எழுந்தது. அவ்வொளியை உள்ளம் பற்றி நின்றது. அங்கே பிறை தோன்றுகிறது; நீர் மலிந்து எழுகிறது; தொடர்ந்து கோடி கோடி இளஞாயிறு ஒருங்கு சேர்ந்து செக்கர் உமிழ்ந்தாலெனச் செவ்வொளி

---

திருச்சிற்றம்பலத் தாடுகின்றார் என்பது தோன்ற, “அம்பலத்தாடுவான்” என்றார். அம்பலம் என்றது, விராட் புருடனது இதய கமலத்துள்ள பரமாகாசத்தில் வியாபகமான சிதாகாசத்தை; அதுவே கோயிலெனவும் படும். இறைவர் அச்சிற் சபையில் பஞ்சகிருத்தியங்கட்குங் காரணமான ஆனந்தநிருத்தம் புரிகின்றனர். சிவபெருமான் பஞ்சகிருத்திய நடம்புரிகின்றனர் என்பதனை :—“தோற்றந் துடியதனிற் றோயுந் திதியமைப்பிற் - சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்—ஊற்றமாய் - ஊன்று மலர்ப்பதத்தி லுற்ற திரோதமுத்தி - நான்ற மலர்ப்பதத்தே நாடு” என்னும் மனவாசகங் கடந்தார் திருவாக்கானும், “பூமலி கற்பகப் புத்தேள் வைப்பும் - நாமநீர் வரைப்பி னானில வளாகமும் - ஏனைய புவனமும் எண்ணீங் குயிருந் - தானே வகுத்ததுன் தமருகக் கரமே - தனித்தனி வகுத்த சராசரப் பகுதி - அனைத்தையும் காப்பதுன் அமைத்தகைத் தலமே - தோற்றுபு நின்றவத் தொல்லுல கடங்கலும் - ஆற்றுவ தாரழல் அமைத்ததோர் கரமே - ஈட்டிய வினைப்பயன் எவற்றையு மறைத்துநின் - றூட்டுவ தாகுநின் ஊன்றிய பதமே - அடுத்தவின் னுயிர்கட் களவில்பே ரின்பங் - கொடுப்பது முதல்வநின் குஞ்சித பதமே” என்னுங் குமரகுருபர சுவாமிகள் திருவாக்கானு முணர்க.

“புண்ணியனே யுன்னடிக்கே போதுகின்றேன்” என்றும், திருவடிச் சிறப்பிற்கே ஒரு திருத்தாண்டகம் அருளியும் ஆன்றோர்கள் திருவடியையே

பரக்கும் வார்சடைச் செறிவு திகழ்கிறது. அச்செம்மை, அலைந்து வறண்ட நெஞ்சினுக்கு அமுதூட்டுகிறது. அவ்வமுதை உண்ண உண்ணச் செஞ்சுடர் பெருக்கெடுக்கிறது ; சுடர் பெருகிப் பெருகிப் பெருஞ் சோதியாகிறது; கண்ணி லடங்காச் சோதியாகிறது ; அலகில் சோதியாகிறது. எல்லை கடந்து ஒளி வீசு கிறது. பொறுத்தல் முடியவில்லை. புலன்கள் விதிர் விதிர்க்கின்றன. சோதி யில் ஓரழகு வடிவம் புலனாகிறது. தணிவு தோன்றுகிறது. "குனித்த புருவ மும் கொவ்வைச் செவ்வாயில் குமிண் சிரிப்பும்-பனித்த சடையும் பவளம்போல் மேனியில் பால்வெண்ணீறும் - இனித்தமுடைய எடுத்த பொற் பாதமும்" புலன்களுக்கு விருந்துசெய்கின்றன. அழகு,நடம் புரிகிறது. நடமோ நெஞ்சைக் கவர்கிறது. நடம் எங்கும் நிகழ்கிறது. மண்ணில், நீரில், நெருப்பில், காற்றில், வானில் நடம் - திங்களில் ஞாயிற்றில் நடம் - என்னில் நடம் - எங்கும் எங்கும் நடம். நடத்தினின்றும் ஒலி கேட்கிறது ; கேட்கக் கேட்க இனிக்கிறது. ஒலி வழியே ஒலி மலர் அடியைக் காண்கிறேன். ஐந்து பொறிவும் கண்களை அடை கின்றன ; கரணங்கள் சிந்தையில் சேர்கின்றன. சிந்தையில் செந்தேன் பிலிற்று கிறது. இன்பம் ! இன்பம் ! பேரின்பம் !! தெளிவிலே வாய் வாழ்த்துகிறது; வணங்குகின்றன. உலகீர் ! வாரீர்; வாரீர் - ஐயன் மலரடியை வாழ்த்தி வணங்கு வோம் - வாரீர் ; வாரீர்.

உலகெலாம் உணர்ந்தோதற் கரியவன், நிலவுலாவிய நீர்மலி வேணியனாய் அமர்ந்து, அலகில் சோதியனாய் எழுந்து விரிந்து, அம்பலத்தாடியாய் நின்று, சிலம்பும் மலரடி காட்டி, வாழ்த்தி வணங்க உயிர்கட்குத் திருவருள் புரியும் அருட்டிறம் என்னே ! என்னே !!

"உலகெலாம் உணர்ந்தோதற் கரியவன்" என்னும் மெய்ம்மொழியை நோக்குகிறேன் ; ஓதுகிறேன். "உலகெலாம் உணர்ந் தோதற் கரியவன்" "உலகெலாம் உணர்ந் தோதற் கரியவன்" என்று ஓதாநிற்கிறேன். "உலகெலாம்

---

சிறப்பித்தமையால், ஆசிரியரும் "மலர்சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்" என்றார். சிலம்பென்றது வேதங்களை. "மறைச்சிலம் பார்ப்ப" என்று பின்னர் விளக்கியதைக் காண்க.

வணங்குவாம் என்பது உளப்பாட்டுத் தன்மைப் பன்மை வினைமுற்று. என்னை ? தற்பயனையும் பிறர்பயனையுங் கருதியெடுக்கப்பட்ட திப் புராணமாக லின் மக்கட்டொகுதியையும் தம்மோடுளப் படுத்துதன் முறையாம். 'வாழ்த்தி வணங்குவாம்' என்றவாக்கு காயங்களின் தொண்டானே இனமாய மனத்தொண் டும் அமையும்.

அறுபான் மும்மை நாயன்மார்களும் ஞானம், யோகம், கிரியை, சரியை என்னும் நாற்பாதங்களையும் அனுட்டித்தவரென்பது தோன்ற, ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகளும், "உலகெலா முணர்ந்தோதற் கரியவன்" என்றதனால் ஞான தரிச னத்தையும், "அலகில் சோதியன்" என்றதனால் யோகதரிசனத்தையும், "அம்பலத்தாடுவான்" என்றதனால் கிரியா பூசையையும், "வாழ்த்தி வணங்கு வாம்" என்றதனால் சரியைத் தொண்டையும் விளக்கினார்கள். இத்திருவருட் பாசுரத்திற்குப் பலர் விருத்தியுரை செய்துள்ளமையால், அவ்வுரைகளையும் வாசித்து உண்மையுணர்க.

உலகெலாம், உணர்ந் தோதற் கரியவன்" என்று ஓதிப்பாருங்கள்; பாடுங்கள்—இனிய எந்திசை இன்பூட்டுகிறது; இழுமென் ஓசை ஒருமை கூட்டுகிறது.

"உலகெலாம்" என்று ஓத ஓத அதன் ஓசையும் பொருளும் அளிக்கும் ஆறுதலை - ஊட்டும் இன்பத்தை - எம்மொழியால் கூறுவது! எவ்வெழுத்தால் எழுதுவது! சொல்லால் சொல்ல வொண்ணாத ஒரு பெரும் பொலிவு தோன்றுகிறது.

'உலகெலாம்' 'உலகெலாம்' என்று அடிக்கடி ஓதி ஓதிப் பின்னே இடையறாது ஓத ஓத 'உலகெலாம்' என்பது உம் என்று சுருங்க முழங்கும். உம் உம் என்று உள்ளே ஓதி ஓதி ஒலிக்க ஒலிக்க, உம் ஓம் என ஒலிக்கத் தொடங்கும். ஆகவே 'உலகெலாம்' என்பது ஓம் என்னும் மூல ஒலியின் விரிவென்க.

'உலகெலாம்' தோன்றும் இடமெது? ஓம் அன்றோ? "ஓங்காரத் துள்ளே உதித்த ஐம்பூதங்கள் - ஓங்காரத் துள்ளே உதித்த சராசரம்" என்றார் திருமூலர். 'உலகெலாம்' என்பது சிறப்பாக நூலின் முதலிடை கடையிலும் பொதுவாக வேறு பல விடங்களிலும் ஒளிர ஆசிரியர் அருளியிருத்தலை ஆராய்க.

பாட்டின் முதற்கண் உகரம் ஒலித்து ஒளிர்கிறது. உகரம் பிரணவ எழுத்து மூன்றனுள் ஒன்று. அ, உ, ம்—இம்மூன்றுஞ் சேர்ந்த ஒன்றே ஓம் என்னும் பிரணவம். இம் மூன்றெழுத்துக்களும் தோற்றம் நிலை இறுதி என்னும் முத்தொழிலைக் குறிப்பன. நடுவணதாகிய உகரம் நிலைப்பின் அறிகுறி. நிலைப்பின் விழுப்பம் தெரிக்க உகரம் முதற்கண் அமைந்தது போலும்! இருளினின்றும் படைக்கப்படும் உயிர்கள், மீண்டும் இருளில் ஒடுங்காது வீடுபேறெய்தல் வேண்டுமென்பதே படைப்பின் நோக்கமாகும். அந்நோக்க நிறைவேற்றத்துக்கென்றே நிலைப்பு நடுவில் நிற்கிறது. நிலைப்பில், வீடுபேற்றுக்கென வாய்ப்புகளும் வழங்கப்படுகின்றன. அவைகளை நல்வழியில் பயன்படுத்தாத உயிர்கள் இடையில் இடர்ப்படுகின்றன. வீடுபேற்றிற்குரிய வாய்ப்புகள் நிலைப்புக்கண்ணிருத்தலால், அது விழுப்பமுடையதாகிறது. அவ்விழுப்பத்தைத் திருமூலர், "அகார முதலாக ஐம்பத்தொன்றாகி - உகார முதலாக ஓங்கி உதித்து" என்றும் "அகார முதலா அனைத்துமாய் நிற்கும் - உகார முதலா உயிர்ப்பெய்து நிற்கும்" என்றும் "அகாரம் உயிரே உகாரம் பரமே" என்றும் அருளியிருத்தல் காண்க. உலகெலாம் உய்தல் வேண்டும் என்னும் மங்கல ஒலியாக உகரம் முதற்கண் பொலிகிறது.

பிரணவத்தைக் குறிக்கும் பிள்ளையார் சுழி உகர வடிவில் வரையப்படுகிறது. இஃது உகரத்தின் சிறப்பை உணர்த்துவதாகிறது. உகரம், ஒலியிலும் வடிவிலும் ஒரு புடை ஓகாரத்தை ஒத்திருப்பது.

உலகு என்பது மங்கல மொழிகளுள் சிறந்தது. உலகில் எல்லாம் அடங்கலான் அது சிறந்ததாகிறது. உலகில் தாய்மைப் பொலிவிருத்தல் தனிச்சிறப்பாகும். "ஆதி பகவன் முதற்றே யுலகு" என்னும் மெய்ம்மொழியிலும் உலகுக்கு முதன்மை வழங்கப்பட்டிருக்கிறது. முழுமுதலின் உண்மை உணர்தற்கும் உல

கங்கருவியாக நிற்கிறது. உலகு என்னுஞ் சொல்லிற் பொலிதரும் மங்கலப் பொருளின் பெற்றிமை யுணர்ந்தே, ஆன்றோர்கள் அதனைக் காப்பியங்களில் முதற்கண் அமைக்கும் வழக்கைக் கொண்டார்கள் போலும்!—"உலக முவப்ப"—திருமுருகாற்றுப்படை ; "உலக மூன்றும்" - வளையாபதி; "மூவா முதலா உலகம்" - சிந்தாமணி ; "உலகம் யாவையும்" - கம்ப இராமாயணம்.

உலகு என்பதற்குப் பல பொருள் கூறலாம். உலகு என்பதே பல பொருள் ஒரு சொல். "உலகம் என்பது பல பொருள் ஒரு சொல்லாய் * * *"—என்பது நச்சினார்க்கினியம்.

"உலகெலாம், உணர்ந்து ஓதற்கு" என்றமையான், உலகு என்பதற்கு உயிர்கள் என்று பொருள் கோடல் பொருந்தும். என்னை? உயிர்கள் மாட்டே உணர்தல் ஓதல் நிகழ்தலான் என்க. ஈண்டு உலகு என்பது உயிர்த் தொகுதியினையும், நல்லுயிர்த் தொகுதியினையும் உணர்த்தும் ஒரு சொல்லாக நிற்கிறது.

"உலகம் என்பது ஈண்டு மக்கட் டொகுதியை * * * * *. உலக மென்பது இடத்தையும் ஆகு பெயரான் இடத்து நிகழ் பொருளாகிய மக்கட் டொகுதியையு முணர்த்து மாகலான், இருதிணைக் கண்ணுஞ் சென்றதன்றோவெனின்:—அற்றன்று: வடநூலுள் உலக மென்பது இருபொருட்கு முரித்தாக ஓதப்பட்டமையின், மக்கட்டொகுதியை யுணர்த்தும் வழியும் உரிய பெயரே யாகலின் ஆகு பெயரன்று ; அதனால் ஒரு சொல் இரு பொருட் கண்ணுஞ் சென்ற தெனப்படாது இரு பொருட்கு முரிமையான் இரண்டு சொல்லெனவே படுமென்பது. வேறு பொருளுணர்த்தலின் வேறு சொல்லாதலே துணிவாயினும், பல பொருள் ஒரு சொல்லென்புழி எழுத்தொப்புவமைபற்றி ஒரு சொல்லென்றார்" எனவரூஉந் "கால முலகம்" என்னுந் தொல்காப்பியச் சூத்திர உரைக்கண் சேனாவரையர் 'உலகம்' என்பதற்கு மக்கட் டொகுதி என்றும், "உலகமென்பது பல பொருள் ஒரு சொல்லாய் நிலத்தையும் உயிர்களையும் ஒழுக்கத்தையும் உணர்த்தி நிற்குமேனும், ஈண்டு 'உவப்ப' என்றதனான், மண்ணிடத்து வாழுஞ் சீவான் மாக்களை உணர்த்திற்று" - எனவரூஉந் திருமுருகாற்றுப்படை உரைக்கண் நச்சினார்க்கினியர் 'உலகம்' என்பதற்குச் சீவான்மாக்கள் என்றும் பொருள் கண்டிருத்தல் காண்க.

உலகு என்பது நல்லுயிர்த் தொகுதியென்னும் பொருள்படுதலை, "பொய் தீர் உலகம்" (கலித்தொகை) "உலகம் புகழ்ந்த ஓங்குயர் விழுச்சீர்" (திருமுருகாற்றுப்படை) எனவரூஉம் ஆன்றோர் மொழிகளிற் போந்துள்ள உலகு என்பதற்கு நச்சினார்க் கினியர், "நன்மக்கள்" என்று பொருள் கூறியவாற்றானுணர்க. நன்மக்களாவார் உண்மைஞானந் தெளியப் பெற்றவர்.

உலகு என்பது, உயிர்கள் நல்லுயிர்கள் என்னும் இருபொருள்குறித்து நிற்றல் ஈண்டுக் கருதற்பாலது. "உயிர்கள் உணர்ந்தோதற் கரியவன்" என்றும், "நல்லுயிர்கள் உணர்ந்தோதற் கரியவன்" என்றுங் கொண்டு பார்க்க. இரண்டுக்குமுள்ள வேற்றுமை என்னை?

ஓதல் இருவகைத்து. ஒன்று ஆண்டவனை உணராது ஓதல்; மற்றொன்று அவனை உணர்ந்து ஓதல். இவ்விரண்டனுள் எது எளிது? எது அரிது? முன்னையது எளிதென்றும், பின்னையது அரிதென்றும் எவரும் கூறுவர்.

உயிர்கள் உணர்ந்து ஓதலின் அருமையும், நல்லுயிர்கள் உணர்ந்தும் ஓதலின் அருமையும் ஈண்டு ஒருசேரக் குறிக்கப்பட்டன.

நல்லுயிர்கள் ஆண்டவனை யுணரும். ஆனால் உணர்ந்ததை ஓதல் அவ்வுயிர்களாலும் இயலாது. இப்பொருள்பட, "நல்லுயிர்கள் உணர்ந்தும் ஓதற்கரியவன்" என்று கொள்க. "உணர்ந்தார்க் குணர்வரியோன்" என்னுந் திருக்கோவைப் பாட்டுரையில் பேராசிரியர் "உணர்ந்தார்க் குணர்வரியோன்" என்பதற்குத் "தவத்தானும் தியானத்தானும் எல்லாப் பொருள்களையும் உணர்ந்தவர்க்கும் உணர்வரியோன் எனினும் அமையும். இப்பொருட்கு உணர்ந்தார்க்குமென உம்மை வருவித் துரைக்கப் பட்டது" என்று கூறியிருத்தல் காண்க.

உலகு என்பது உயிர்களை யுணர்த்தும்போது உணர்ந்தோதற்கு அரியவன் என்றும், அது நல்லுயிர்களை யுணர்த்தும்போது உணர்ந்தும் ஓதற்கு அரியவன் என்றுங் கொள்க.

உலகு இங்கே உயர்திணை. உலகெலாம் என்றது உயிர்களெல்லாவற்றையும்.

உயிர்கள் விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலரென முத்திறத்தாராவர். விஞ்ஞானகலர் ஆணவமென்னும் ஒருமல முடையவர்; பிரளயாகலர் ஆணவம் கன்மம் என்னும் இருமல முடையவர்; சகலர் ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மல முடையவர். உயிர்களின் இப்பாகுபாடுகள் பல சமய நூல்களிலுமிருக்கின்றன. மொழி வேறுபாட்டான் பெயர்கள் வேறுபட்டு நிற்கின்றன. பொருளில் எல்லாம் ஒருமை.

உணர்தல் - அறிவில் தெளிதல்; பொய்யறிவு மயக்கத்தினின்றும் எழுந்து தெளிதல்; மெய்யுணர்வு பெறல்; வீடுபேற்றிற்குரிய உணர்வு பெறுதல்.

ஓதல் - கூறுதல்; ஒழுங்குபட உரைத்தல்.

அரியவன்-அருமையன்; அடங்காதவன்; இல்லாதவன். ஓதற்கு அரியவன்-அடங்காதவன் - இல்லாதவன் என்று கொள்க. இறைவன் இல்லாதவன் என்று கோடற்க. என்னை? பின்னே தொடர்ந்து "நிலவுலாவிய நீர்மலி வேணியன்" என்றும், "அலகில் சோதியன்" என்றும், "அம்பலத் தாடுவான்" என்றும்,"மலர்சிலம்படி" என்றும் இறைவனுண்மையைக் குறிகளுடன் நிறுவிக் காட்டியிருத்தலின் என்க.

இறைவன் எப்படி யிருப்பன் என்று கூர்ந்து கூர்ந்து, ஆழ்ந்து ஆழ்ந்து, சிந்திக்கச் சிந்திக்க, "அல்லையீது அல்லையீது" என்று மேலும் மேலும் கடந்து கடந்து சிந்தனைக் கெட்டாச் சேண்மையனாக அவன் சென்று சென்றுகொண்டிருத்தலின், அத்தன்மையனை "அரியவன்" என்றார்.

மெய்யுணர்வு பெறாத உயிர்கள், ஆண்டவனை யுணர்ந்து ஓதல் அரிது. காணங் கடந்த மெய்யுணர்வு பெற்றோர் ஆண்டவனுண்மையை உணர்தல் இயலும்; ஆனால் அவர்களாலும் அதனை ஓதல் இயலாது. ஓதலில் அடங்குவது எல்லையுடையது. ஆண்டவனோ எல்லை யில்லாதவன். அவன் இன்பமும் எல்லை

யில்லாதது. எல்லையிலா ஒன்றை எங்ஙனம் எல்லைப்படுத்தி ஓதுவது? அத னல் அவ்வொன்று ஓதற்கரியதாகிறது. இதனை அநுபூதிமான்களின் மெய்ம் மொழிகளால் உணரலாம். "ஓத உலவா ஒருதோழன்", "ஏதவனைப் பாடும் பரிசு", "ஆழ்ந்து அகன்ற நுண்ணியனே", "மாற்ற மனங்கழிய நின்ற மறை யோனே", "நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே", "சொற்பதங் கடந்த தொல்லோன் காண்க", "சித்தமுஞ் செல்லாச் சேட்சியன் காண்க", "அரியதில் அரிய அரியோன் காண்க", "போக்கும் வரவும் புணர்வு மிலாப் புண்ணியனே", "சொல்லற் கரியானை", "சொற்கழிவு பாதமலர்", "ஒன்றுநீ யல்லை அன்றி யொன்றில்லை யாருன்னை அறிய கிற்பாரே", "உணர்ந்தாற் குணர்வரியோன்"—மாணிக்கவாசகர்; "நற்பதத்தார் நற்பதமே ஞான மூர்த்தி நலஞ்சுடரே நால்வேதத் தப்பால் நின்ற - சொற்பதத்தார் சொற் பதமுங் கடந்து நின்ற சொலற்கரிய சூழலாய் இதுவுன் தன்மை"—திருநாவுக் கரசர்; "ஆட்பா லவர்க்கருளும் வண்ணமும் ஆதிமாண்பும் - கேட்பான் புகில் அள வில்லை"—திருஞானசம்பந்தர்; "யார் அறிவார் எங்கள் அண்ணல் பெருமை யை - யார் அறிவார் அந்த அகலமும் நீளமும் - பேரறியாத பெருஞ் சுடர் ஒன்ற தின் - வேரறியாமல் விளம்புகின்றேனே"—திருமூலர்.

இறைவன் உண்மைப் பொருளாகலான், அவ்விறைவன், பொய்யறிவினின் றும் விழித்தெழுந்து மெய்யுணர்வு பெற்றோரால் மட்டும் உணருந் தகைமையன் என்பது தோன்ற "உணர்ந்து" என்றார். ஆண்டவனுண்மை விளங்கியதும்,வேறு பொருளொன்று மின்மையானும், அங்கே ஓதல் இன்மையானும் 'ஓதற்கரியவன்' என்றார். "செம்மான் மகளைத் திருடுந் திருடன் - பெம்மான் முருகன் பிறவான் இறவான் - சும்மாவிரு சொல்லற என்றலுமே - அம்மா பொருளொன்றும் அறிந் திலனே"—அருணகிரிநாதர்.

"உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்"— என்பது ஆண்டவன் சொரூபநிலை. சொரூப நிலையாவது உருவம் அருவம் அருவுருவம் முதலிய எல்லாவற்றையுங் கடந்து நிற்பது. இஃது உலகெலாமுள்ள அனைவராலுங் கொள்ளப்படுவது. சொரூபநிலை எல்லாச் சமயத்தார்க்கும் பொது உடைமை. "உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்" என்பது வாதங்கடந்த ஒன்று. நாம ரூபமற்ற விடத்தில் வாதம் ஏது? வழக்கு ஏது?

## உ. நில வுலாவிய நீர்மலி வேணியன்

நிலவு உலாவிய வேணியன் என்றும், நீர்மலி வேணியன் என்றும் இயைக்க. நிலவும், உலாவிய நீரும் மலிவேணியன் என்று இயைப்போரு முளர்.

ஈண்டு நிலவை ஆகு பெயராகவுங் கொள்ளலாம்; இயற் பெயராகவுங் கொள் ளலாம். நிலவு ஆகு பெயரில் நிற்கும்போது ஆசிரியர் கருத்து, திங்கள்மீது படிந்ததெனக் கொள்க. நிலவு இயற் பெயரில் நிற்கும்போது ஆசிரியர் நெஞ்சம் திங்கள் உமிழும் நிலவின்மீது படர்ந்ததெனக் கொள்க.

நிலவு - தண்ணொளி. வெவ்வொளி - வெயில்.

நிலவு அழகுடையது; கண்ணுக்கினியது. "அங்கண் விசும்பின் அகல் நிலாக் காண்பினிதே"—இனிது நாற்பது.

வெண்மை நிலவு, செம்மை வேணிமீது படர்வதன் அழகைச் சிந்திக்க. நிலவு காலலை ஈண்டு ஆசிரியர் அழகுபட "உலாவிய" என்றார்.

உலாவிய - பெயரெச்சம். அதனைச் செய்யிய என்னும் வாய்ப்பாட்டுவினை எச்சமாகக்கொண்டு உலவும்பொருட்டு என்று பொருள்கொள்ளினும் அமையும்.

நீர் - கங்கை. நிலவைக்கண்டு நீரெழுதல் இயல்பு. "நீரின் றமையா துலகு" என்றார் திருவள்ளுவர். நீரின் மலிவு நெஞ்சைக் கவர்வது. "எரி நிறைந்தனைய செல்வன் கண்டாய்"—அப்பர்.

மலி - மிகுந்த எனினுமாம்.

"உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்" என்றருளிய ஆசிரியர், தொடர்ந்து "நிலவுலாவிய நீர்மலி வேணியன்" என்று அருளி யிருத்தல் உன்னற்பாலது. இவ்விரண்டும் ஒருவர் திருவாக்கினின்றும் பிறந்திருத்தலான் இரண்டுக்கும் தொடர்பிருத்தல் வேண்டும்.

"உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்" வாக்குமனங்கடந்து அகண்டமாக நிற்பவன். அவனுண்மையை எப்படி யுணர்வது? உயிருண்மையை நாம் எப்படி யுணர்கிறோம்? உடல்வாயிலாகவன்றோ உயிருண்மையை உணர்கிறோம்? அதேபோல ஆண்டவன் உண்மையையும் அவன் உடல்வாயிலாக உணர்தல் கூடும். ஆண்டவன் உடல் எது? இயற்கை. "உலகமே உருவமாக" என்று அருணந்தி சிவமும், "நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன் - புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்து நின்றான் - உலகே ழெனத்திசை பத் தெனத்தா னொருவனுமே - பலவாகி நின்றவா தோணோக்க மாடாமோ" என்று மாணிக்க வாசகரும், "இருநிலனாய்த் தீயாகி நீருமாகி இயமானனாய் எறியுங் காற்றுமாகி - அருநிலைய திங்களாய் ஞாயிறாகி ஆகாசமாய் அட்ட மூர்த்தியாகி" என்று திருநாவுக்கரசரும் ஆண்டவன் திருமேனி இயற்கை என்பதை இயற்கைக் கூறுகளுடன் விளக்கி யிருத்தலை நோக்குக.

ஈண்டு நிலவு நீருடன் அவைகளின் இனமாகிய பிறவற்றையுங் கொள்க. அவை மண் தீ காற்று வான் ஞாயிறு உயிர் என்பன. இவை எட்டும் அட்ட மூர்த்த மெனப்படும். அட்ட மூர்த்தமாவது ஆண்டவன் இயற்கை வடிவினன் என்பதை அறிவுறுத்துவது. (உலகு - மண்ணையும், சோதி - தீயையும் ஞாயிற்றையும், அம்பலம் - வானையும், ஆடுதல் - காற்றையும், வாழ்த்தி வணங்கல் - உயிரையும் நினைவூட்டுஞ் சொற்குறிகள் என்றுங் கொள்ளலாம்.)

"உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்","நிலவுலாவிய நீர்மலி வேணிய" னாக நிற்றலின் உள்ளுறை, இறைவன் இயற்கை வடிவினனாக இருக்கிறான் என்பதாகும். 'நிலவுலாவிய நீர்மலி வேணிய'னை நினைந்து நினைந்து, வழிபட வழிபட இறைவன் இயற்கை வடிவினன் என்பது நன்கு புலனாகும். வேணிமுகிற்கூட்டமாகவும், கங்கை அம்முகிலில் மலியும் நீராகவும், பிறை நிலவு ஒளியாகவும்பெருகி நிற்பதைச் சிவயோகாநுபவத்தால் பெறுதல் கூடும். முடிவில் 'அண்டமே பிண்டம் பிண்டமே அண்டம்' என்பதன் நுட்பம் தெளிதல் கூடும்.

"உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்" என்று நினைக்கும்போது, உள்ளத்தில் ஒன்றுந் தோன்றாது. "நில வுலாவிய நீர்மலி வேணியன்" என்று நினைக்கும்போது உள்ளத்தில் ஒன்று தோன்றும். அத்தோற்றம் வழிபாட்டிற்கு இன்றியமையாதது. மனம் உள்ளவரை தோற்றமும் உண்டு. மனமிறந்தால் தோற்றமும் மறையும். தோற்றத்தைக் கொண்டே தோற்றமையை உணர்தல் வேண்டும். ஆதலால் 'நிலவுலாவிய நீர்மலி வேணிய'னைக் கொண்டே 'உல கெலாம் உணர்ந்தோதற் கரியவ'னை உணர்தல் வேண்டும். இதனால் "உல கெலாம் உணர்ந்தோதற் கரியவன்" என்பதற்கும் "நிலவு லாவிய நீர்மலி வேணியன்" என்பதற்கும் தொடர்பிருத்தல் காண்க. அத்தொடர்பு இயற்கை வழி இறைவனை யுணர்த்துவது.

நிலவு, கங்கை, சடை முதலியவற்றைச் சிவபெருமான் அணிந்திருத்தலைப் பற்றி உலகம் பலவிதங் கூறும். எங்கும் எல்லாவற்றிலும் நீக்கமற நிறைந்துள்ள சிவத்தினியலை ஒவ்வோர் உலகும் ஒவ்வொரு விதமாகப் பேசுவதில் வியப் பொன்றுமில்லை. பலபடப் பேசிப்பேசியே தெளிவடைதல் வேண்டும். எல் லாக் கூற்றுக்களையுந் திரட்டிப் பார்த்தால், அவை, 'ஆண்டவன் அண்ட பிண் டங்களை வடிவாக்கொண்டு அவைகளையுங் கடந்து நிற்பவன்' என்னும் ஒன் றில் அடங்கிவிடும். இதனைப் புராணங்கள் ஒருவிதமாகவும், யோக தத்துவ ஞான நூல்கள் வெவ்வேறு விதமாகவுங் கூறும். எல்லாம் பொருளில் ஒன்றே யாகும்.

திங்கள், தக்கனால் சபிக்கப்பெற்றுத் தேய்ந்து தேய்ந்து இறுதி யெய்து நிலையில் சிவபெருமானை யடைந்ததென்றும், சிவபெருமான் அதனையருளுடன் ஏற்றுத் திருமுடியிலணிந்து இறுதி யெய்தாதவாறு காத்தார் என்றும் புராணங் கூறுகிறது. இக்கூற்றின் நுட்பம் ஆண்டவன் அருளுடைமையைப் புலப் படுத்துகிறது. மூலாதாரத்தில் மூண்டெழு கனலைக் காற்றால் எழுப்பின், அது குண்டலினி வழியாய்ச் சென்று, மதிமண்டிலத்தைத் திறக்கிறதென்பது யோகாநுபவம். இதன் கருத்து, சிவபெருமான் மதிசூடியாய் நின்று சிவயோக உலகத்துக்கு எடுத்துக்காட்டாக நிற்கிறாரென்பது. சிவபெருமான் மதி, உயிர் களின் அஞ்ஞானத்தைப் போக்கி, அவைகட்கு ஞானத்தை அருள் செய்வதன் அறிகுறி. "தூமதி சடைமிசைச் சூடுதல் தூநெறி-யாம் அது யானென அமைத்த வாறே" என்றார் பட்டினத்தார்.

கங்கை, தெய்வலோகத்தினின்றும் பன்முகங் கொண்டு இறங்கியபோது, தேவர்களுள்ளிட்ட பலரும், அதன் வேகத்துக்கு ஆற்றாதவராய் வருந்தின ரென்பதும், அப்பொழுது சிவபெருமான் கங்கையின் வீறு ஒடுங்க அதனைச் சடையில் ஏற்றாரென்பதும் புராணக்கூற்று. இஃது ஆண்டவன்றன் வரம்பி லாற்றலுடைமையைத் தெரிவிப்பது. மேற்கூறியவாறு மதிமண்டிலந் திறக்கப் பெற்றதும் அங்கே எழுந்து தேங்கும் அமிர்தமே கங்கையென்பது. இதனைச் சிவபெருமானே கங்கை சூடியாய் நின்று முன்னிலையாகக் காட்டுகிறாரென்று யோக உலகங் கூறும். மதி, தூய அறிவிற்கு அறிகுறியாதலின், அவ்வறிவின்

தன்மையாகிய ஈரத்துக்கு அதாவது அன்புக்கு அறிகுறியாகக் கங்கை பொலிகிற தென்று கூறலுமொன்று.

சடை, மண்டைக்கு மேலிருத்தல் நலந்தரும். மொட்டையடிப்பது பிற்கால வழக்கு. மண்டைக்குமேலும் நுண்ணொளி வீசுதலால், அதன்மீது பன்னிரண்டங்குலஞ் சடையிருத்தல் வேண்டும். இது சிவயோக முறைப்பாடு. சிவபெருமான் தாமே சடையணிந்து இம்முறைப்பாட்டை உலகுக்குக் காட்டுகிறாரென்பது நுட்பம். சடை, மதியெனும் ஞானத்தின் சுடராய், அம்மதியினின்றும் பிறக்குங் கங்கையெனும் அமிர்த ஒழுக்குத் தாரையா யிருப்பது. "ஞானம் விளைந் தெழுகின்ற தோர் சிந்தையுள் - ஏனம் விளைந் தெதிரேகாண் வழிதொறும் - கூனல் மதிமண்டலத் தெதிர்நீர் கண்டு - ஊனம் மறுத்து நின்று ஒண்சுட ராகுமே" —திருமூலர்.

மாற்ற மனங்கடந்து நிற்கும் 'உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவன்', உயிர்கள் பொருட்டே, 'நிலவுலாவிய நீர்மலிவேணிய' னாகிறானெனில், அவன்றன் கருணைத் திறத்தை என்னென்று கூறுவது? கருணையே அவன்; அவனே கருணை. "கற்பனை கடந்த சோதி கருணையே வடிவமாகி" என்பது ஆசிரியர் மொழி. கருணை, 'நிலவுலாவிய நீர்மலிவேணி'யனாக மலர்ந்து நிற்கிறது.

நிலவும் நீரும் புலன்களுக்கு எவ்வாறு விருந்தாகுமென்று சொல்லவும் வேண்டுமோ? நிலவும் நீரும் தண்ணளியைப் பொழிந்து வழங்குகின்றன. 'நிலவுலாவிய நீர்மலிவேணிய'னை நினைக்க நினைக்க உள்ளங் குளிரும்.

"நிலவுலாவிய நீர்மலி வேணியனில்"—யாண்டும் வல்லோசையையே காணோம். எல்லார்க்கும் பயன்படும் எளிய கருணை வடிவம், 'நிலவுலாவிய நீர்மலி வேணிய'னாதலின், அதன்கண் வன்மை அமையுங்கொல்!

'உலகெலாம் உணர்ந்தோதற்கரியவன்', தன்னை யுணர்த்துதற்குத் தானே கருணையால் 'நிலவுலாவிய நீர்மலிவேணிய'னாய்க்கொண்ட திருவுருவம், வழிபாட்டிற்குக் கொழுக்கொம்பு போன்றதாதலின், அத்திருவுருவை 'உலகெலாம் உணர்ந்தோதற்கரியவன்' என்பதற்கு அணித்தே வைத்தோதியது பொருத்தமாகும். "உலகமே! ஆண்டவன் 'உலகெலாம் உணர்ந்தோதற்கரியவன்' என்று அலமராதே. அவன் 'நிலவுலாவிய நீர்மலி வேணிய'னாகக் காட்சியளிக்கிறான். வழிபடுக" என்று அறிவு கொளுத்திய வாறும்.

### ௩. அலகில் சோதியன்

"நிலவுலாவிய நீர்மலி வேணியன்" 'உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவ'னாதல் மேலே காட்டப்பட்டது. "நிலவுலாவிய நீர்மலி வேணியன்" எங்ஙனம் "உலகெலாம் உணர்ந்தோதற்கரியவ"னாகிறான் என்பது "அலகில் சோதிய"னில் மிளிர்கிறது. 'உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரிய'வனை, 'நிலவுலாவிய நீர்மலிவேணிய'னாக்கொண்டு, நினைந்து நினைந்து, வழிபட வழிபட, இயற்கையின் உயிராகவுள்ள வேணியனுஞ் சிவம், சோதி மயமாகக் காட்சியளிக்கும். சிவசோதி ஓர் எல்லைக்கு உட்படாத அகண்டமாதலின், அதனை "அலகில் சோதி" என்

றூர். சிவபரஞ்சோதி எல்லாச் சோதிகட்குஞ் சோதி வழங்கும் ஒன்றாதலின், அஃது அலகில் சோதியாயிற்று. "மெய்ச்சுடருக் கெல்லாம் - ஒளிவந்த பூங் கழல்"—திருவாசகம். "தேசவிளக்கெலாம் ஆனாய் நீயே"—தேவாரம்.

எல்லா உலகங்கட்கும் ஒளி வழங்குவது ஞாயிறு. அஞ்ஞாயிற்றுக்கு ஒளி வழங்குவது சிவம். ஆதலின் சிவம் எல்லா ஒளிகட்கும் உயிரொளியாயிருப்பது. இதனை மாணிக்கவாசகர் "அருக்கனில் சோதி அமைத்தோன்" என்று சிறப் பித்தவாறு காண்க.

சிவம், ஞாயிற்றின் வாயிலாக எல்லாவற்றிற்கும் ஒளி வழங்குதலான், ஞாயிறு வழிபாடு ஆன்றோர்களால் சிறப்பாகக் கொள்ளப்பட்டது. காயத்திரி மந்திரவழி பாட்டின் உள்ளக்கிடக்கை யென்னை? ஞாயிற்றின்வழி ஒளிவழங்கி உலகுயிர் களையெல்லாம் இயக்கும் சிவஞாயிற்றின் வழிபாட்டை யன்றோ அப்பெரு மந்தி ரம் அறிவுறுத்துகிறது? இக்காரணம் பற்றியே இருக்குவேதம் சிவத்தைச் சோதி என்றும், நெருப்பு என்றும், நெருப்புக் கடவுள் என்றும் போற்றா நிற்கிறது. இருக்கு முழுவதும் நெருப்பு நெருப்புக்கடவுள் மயமாயிருத்தல் கருதத்தக்கது. "எரி பெருக்குவர் அவ்வெரி ஈசன - துருவ ருக்கம தாவ துணர்கிலார்", "அருக்கன்பாதம் வணங்குவர் அந்தியில் - அருக்கன் ஆவான் அரனுருவல்லனோ" —திருநாவுக்கரசர்.

'நிலவுலாவிய நீர்மலிவேணி'யனை, நினைந்து நினைந்து வழிபட வழிபட அவன் 'அலகில் சோதிய'னாய், 'உலகெலாம் உணர்ந் தோதற்கு அரியவ'னாதல் ஈண்டுக் காட்டப்பட்டது. 'அலகில் சோதியன்' உலகு உயிர்களை யெல்லாம் இயக்கி இயக்கியே "உலகெலாம் உணர்ந்தோதற் கரியவ" னாகிறான். அவ்வியக்கம் இங் கே "அம்பலத் தாடுவான்" எனப் பட்டது.

## ச. அம்பலத்தாடுவான்

"அலகில் சோதியன்" உலகு உயிர்கள் எல்லாவற்றிலும் ஆங்காங்கே நின்று நின்று, அதற்கு அதற்கு ஒளி வழங்கி, அதனை அதனை இயக்கலான் "அம்பலத் தாடுவான்" என்றார். அம்பலமாவது உலகெலாம் என்க. எங்கும் அம்பலம்; எல்லாம் அம்பல மென்க. இதனை, "அம்பலமாவது அகில சராசரம் - அம்பலமாவது ஆதிப் பிரானடி - அம்பலமாவது அப்புத்தீ மண்டலம் - அம்பல மாவது அஞ்செழுத் தாமே", "அண்டம் எழுகோடி பிண்டம் எழுகோடி - தெண்டிரை சூழ்ந்த திசைகள் எழுகோடி - எண்திசை சூழ்ந்த இலிங்கம் எழு கோடி - அண்டன் நடஞ்செயும் ஆலயந் தானே", "காளியோ டாடிக் கனகா சலத்தாடிக் - கூளியோ டாடிக் குவலயத் தேயாடி - நீடியநீர் தீகால் நீள்வானிடை யாடி - நாளுற அம்பலத் தேயாடும் நாதனே", "எங்குந் திருமேனி எங்குஞ் சிவஞ்சத்தி - எங்குஞ் சிதம்பரம் எங்குந் திருநட்டம் - எங்குஞ் சிவமா யிருத்த லால் எங்கெங்கும் - தங்குஞ் சிவனருட் டன்விளை யாட்டதே", "ஆனந்த மாடரங் கானந்தம் பாடல்கள் - ஆனந்தம் பல்லியம் ஆனந்த வாச்சியம், ஆனந்த மாக அகில சராசரம் - ஆனந்தம் ஆனந்தக் கூத்துகந் தானுக்கே", "அண்டங்க ளோரேழும் அம்பொற் பதியாகப்-பண்டையா காசங்க ளைந்தும் பதியாகத் - தெண்

டினிற் சத்தி திருவம் பலமாகக் - கொண்டு பரஞ்சோதி கூத்துகந் தானே", "இடங்கொண்ட சத்தியும் எந்தை பிரானும் - நடங்கொண்டு நின்றமை நானும் அறிந்தேன் - படங்கொடு நின்றவிப் பல்லுயிர்க் கெல்லாம் - அடங்கலுந் தாமாய்நின் றாடுகின் றாரே", "இருதயந் தன்னில் எழுந்த பிராணன் - கரசர ணாதி கலக்கும் படியே - அரதன மன்றினின் மாணிக்கக் கூத்தன் - குரவனாய் எங்க ணுங் கூத்துகந் தானே" என வரூஉந் திருமூலர் திருவாக்குகளால் தெளிக.

இத் திருமொழிகளான், ஆண்டவன் அண்ட பிண்டங்க ளெல்லாவற்றிலும் ஆடுகிறான் என்பது பெறப்படுகிறது. அண்ட பிண்டங்களில் ஆண்டவன் ஓவாது அருள்நடம் புரிவதைச் சிவயோகிகள் நன்குணர்வார்கள். அப்பெரு நிலையை ஆன்றோர்கள், நூல்கள் வாயிலாகவும் தலங்கள் வாயிலாகவும் பிறவாயி லாகவும் நன்கு விளக்கிச் சென்றார்கள்.

அண்ட பிண்ட அம்பலத்தின் அறிகுறியாகச் சிதம்பரத் தலம் அமைந் துளது. சிதம்பர ரகசியத்தைச் சிந்தித்தால் உண்மை விளங்கும்.

உடம்பினுள் ஓடும் நாடிகள் மூன்று. அவை இடைகலை, பிங்கலை, சுழு முனை என்பன. சுழுமுனை நடுவே ஓடுவது. சுழுமுனையின் நடுவண் ஒளிர் வது உள்ளமலர் (ஹிருதய கமலம் - Heart). உள்ள மலரிடை ஆண்டவன் திருக்கூத்து நிகழ்கிறது. இஃது அகச் சிற்றம்பலம்.

புற உலகத்தும் மூன்று நாடிகள் ஓடுகின்றன. அவைகளுள் சுழுமுனை, தில்லையம்பதி நேரே ஓடுகிறது. அத்தில்லை மூதூரிலுள்ள திருச்சிற்றம்பலத் திலே ஆண்டவன் இன்பக் கூத்தாடுகிறான். இது புறச் சிற்றம்பலம்.

இந்நுட்பங்கள் திருமூலர் அருளிய திருமந்திரத்துட் பலவிடங்களில் காணப்படுகின்றன. சில திருமந்திரங்கள் வருமாறு:— "மேரு நடுநாடி மிக்கிடை பிங்கலை - கூருமிவ் வானின் இலங்கைக் குறியுறுஞ் - சாருந் தில்லை வனத் தண்மா மலயத்து - டேறுஞ் சுழுனை இவைசிவ பூமியே", "பூதல மேருப் புறத்தான தெக்கணம் - ஓதும் இடைபிங் கலையொண் சுழுனையாம் - பாதி மதியோன் பயில்திரு அம்பலம் - ஏதமில் பூதாண்டத் தெல்லையி னீறே", "இடைபிங் கலையிம வானோ டிலங்கை - நடுநின்ற மேரு நடுவாஞ் சுழுனை - கடவுந் தில்லைவனங் கைகண்ட மூலம் - படர்வொன்றி என்னும் பரமாம் பரமே", "ஆனத்தி யாடிப் பின்னவக் கூத்தாடிக் - கானத்தி யாடிக் கருத்தில் தரித்தாடி - மூனச் சுழுனையு ளாடி முடிவில்லா - ஞானத்து ளாடி முடித்தானென் னாதனே", "நெற்றிக்கு நேரே புருவத் திடைவெளி - உற்றுற்றுப் பார்க்க வொளிவிடு மந்திரம் - பற்றுக்குப் பற்றாய் பரம னிருந்திடஞ் - சிற்றம் பலமென்று சேர்ந்து கொண் டேனே", "நீடுஞ் சிரசிடைப் பன்னிரண் டங்குலம் - ஓடு முயிரெழுந் தோங்கி யுதித்திட - நாடுமின் னாதாந்த நம்பெரு மானுகந் - தாடு மிடந்திரு வம்ப லந் தானே."

இவ்வுலகத்துள்ள திருப்பதிகள் பல. அவைகளுள் தத்துவ முறைப்படி அமைந்தன சில. அச்சிலவற்றுள் சிறந்தன ஐந்து. ஐந்தும் ஐம்பூதங்கட்கு அறிகுறியாக விளங்குவன. திருக்காஞ்சி - மண்; திருவானைக்கா - நீர்; நெருப்பு - திருவண்ணாமலை; காற்று - திருக்காளத்தி; வெளி - தில்லையம்பதி.

வெளி யென்னும் ஆகாயம், பூதங்கட்கு உயிர் போன்றது. அதன் கூட்டுற வின்றி மற்றப் பூதங்கள் இயங்க மாட்டா. அவ்வெளியின் அறிகுறியாகச் சிதம்பரத் தலம் திகழ்தலான், அது சிறந்ததாயிற்று.

அம்பலங்கள் ஐந்து. அவை இரத்தின அம்பலம் (திருவாலங்காடு); பொன்னம்பலம் (தில்லை); வெள்ளியம்பலம் (திருவாலவாய்); தாமிரசபை (திருநெல்வேலி); சித்திர சபை (திருக்குற்றாலம்). இவைகளுள் பொன்னம்பலமே சிறந்தது. பொன்னம்பலத்தில் அகப்புற இயல்கள் அமைந்திருக்கின்றன. பொன் தீ நிறத்தது. சிவத்தின் நிறமும் அதுவே. தன்னைச் சார்வதையுந் தன் மயமாக்குவது தீ.

ஆண்டவன் ஆடும் சிற்றம்பலம், அகத்துக்கு அறிகுறியாய், விராட் புருடனுக்கு ஹிருதய ஸ்தானமாய், வெளியை அறிவிப்பதாய், பொன்மயமா யிருத்தலான் சிறப்புடையதாகிறது.

சேக்கிழார் பெருமான் இந்நூலை யாத்தற்குத் தில்லையம்பதி நண்ணியதும், நூலுள் தில்லையைப் புகழ நேரும்போ தெல்லாம் அதற்கொரு தனிப்பெருமை அவர் வழங்கி யிருப்பதும் ஈண்டுக் கருதற் பாலன. மூவர் முதலிகள் தில்லை நோக்கியபோது, அவர்கள் பெற்ற ஆர்வத்தைச் சேக்கிழாரும் பெற்றுப் பாடியிருப்பதைப் பார்க்கப் பார்க்க நமக்கும் ஆர்வம் பொங்கும்.

“ வையகம் பொலிய மறைச்சிலம் பார்ப்ப மன்றுளே மாலயன் தேட
ஐயர்தாம் வெளியே ஆடுகின் றாரை அஞ்சலி மலர்த்திமுன் குவித்த
கைகளோ திளைத்த கண்களோ அந்தக் கரணமோ கலந்தவன் புந்தச் [கு”
செய்தவம்பெரியோன் சென்றுதாழ்ந் தெழுந்தான் திருக்களிற் றுப்படி மருங்

“ ஐந்துபே ரறிவுங் கண்களே கொள்ள அளப்பருங் கரணங்கள் நான்குஞ்
சிந்தையே யாகக் குணமொரு மூன்றுந் திருந்து சாத்து விகமே யாக
இந்துவாழ் சடையான் ஆடுமா னந்த எல்லையில் தனிப்பெருங் கூத்தின்
வந்தபே ரின்ப வெள்ளத்துட் டிளைத்து மாறிலா மகிழ்ச்சியில் மலர்ந்தார் ”

“ தெண்ணிலா மலர்ந்த வேணியாய் உன்தன் திருநடங் கும்பிடப் பெற்று
மண்ணிலே வந்த பிறவியே எனக்கு வாலிதாம் இன்பமாம் என்று
கண்ணிலா னந்த அருவிநீர் சொரியக் கைம்மலர் உச்சிமேற் குவித்துப்
பண்ணினால் நீடி அறிவரும் பதிகம் பாடினார் பரவினார் பணிந்தார்”

—தடுத்தாட்கொண்டபுராணம்.

“ நீடுந் திருவுடன் நிகழும் பெருகொளி நிறையம் பலநினை வுறநேரே
கூடும் படிவரும் அன்பால் இன்புறு குணமுன் பெறவரு நிலைகூடத்
தேடும் பிரமனும் மாலுந் தேவரு முதலாம் யோனிகள் தெளிவொன்றா
ஆடுங் கழல்புரி அமுதத் திருநட மாரா வகைதொழு தார்நின்றார் ”

“ கையுந் தலைமிசை புனையஞ் சலியன கண்ணும் பொழிமழை யொழியாதே
பெய்யுந் தகையன கரணங் களுமுட னுருகும் பரிவின பேறெய்து

மெய்யுந் தரைமிசை விழுமுன் பெழுதரு மின்தாழ் சடையொடு நின்றாடும்
ஐயன் திருநடம் எதிர்கும் பிமெவர் ஆர்வம் பெருகுதல் அளவின்றால்''

"இத்தன் மையர்பல முறையுந் தொழுதெழ என்றெய் தினையென மன்றாடும்
அத்தன் திருவருள் பொழியுங் கருணையின் அருள்பெற் றிடவரும் ஆனந்த
மெய்த்தன் மையினில்வி ருத்தத் திருமொழி பாடிப் பின்னையு மேன்மேலுஞ்
சித்தம் பெருகிய பரிவா லின்புறு திருநே ரிசைமொழி பகர்கின்றார்''

—திருநாவுக்கரசு சுவாமிகள் புராணம்.

"நந்தி யெம்பிரான் முதற்கண நாதர்க ணலங்கொள்பன் முறைகூட
அந்தம் இல்லவ ரணுகிமுன் தொழுதிரு வணுக்கனுந் திருவாயில்
சிந்தை யார்வமும் பெருகிடச் சென்னியிற் சிறுச்செய்ய கையேற
உய்ந்து வாழ்திரு நயனங்கள் களிகொள்ள உருகுமன் பொடுபுக்கார்''

"அண்ண லார்தமக் களித்தமெய்ஞ் ஞானமே யானவம் பலமுந்தம்
உண்ணிறைந்தஞா னத்தெழு மானந்த ஒருபெருந் தனிக்கூத்தும்
கண்ணின் முன்புறக் கண்டுகும் பிட்டெழுங் களிப்பொடுங் கடற்காழிப்
புண்ணி யக்கொழுந் தனையவர் போற்றுவார் புனிதரா டியபொற்பு''

"உணர்வி னேர்பெற வருஞ்சிவ போகத்தை யொழிவின்றி யுருவின்கண்
அணையு மைம்பொறி யளவினு மெளிவர வருளினை யெனப்போற்றி
இணையில் வண்பெருங் கருணையே யேத்திமுன் னெடுத்தசொற் பதிகத்திற்
புணரு மின்னிசை பாடின ராடினர் பொழிந்தனர் விழிமாரி''

—திருஞானசம்பந்த சுவாமிகள் புராணம்.

ஐயன் திருக்கூத்தையும் உன்னுக; இத்திருப் பாக்களையும் நோக்குக; சேக்கிழாரின் ஆர்வம் புலனாகும். பலதிறப் பெற்றி கருதியே அன்பர்கள் திருச்சிற்றம்பலம் திருச்சிற்றம்பலம் திருச்சிற்றம்பலம் என்று ஓதி ஓதி ஓதி இன்புறுகின்றார்கள்.

அத்து - ஏழாம் உருபின்கண் வந்த சாரியை.

ஆடுவான் - என்றும் ஓவாது ஆடுவான். ஆண்டவன் திருக்கூத்து, உயிரையும் உடலையும் உலகையும் இயக்குகிறது. ஆண்டவன் எங்கும் நீக்கமற நிறைந்து ஒவ்வொரு நுண்ணிய நுண்ணிய நுண்மையையும் அம்பலமாக் கொண்டு கூத்தாடுகிறான். அக்கூத்தின் திறத்தை என்னென்று கூறுவது? அத்திருக்கூத்தின் திறத்தைத் திருமூலர், "வேதங்க ளாட மிகுவா கமமாடக் - கீதங்க ளாடக் கிளரண்ட மேழாடப் - பூதங்க ளாடப் புவன முழுதாட - நாதங்கொண் டாடினான் ஞானனந்தக் கூத்தே", "மேதினி மூவேழ் மிகுமண்ட மோரேழு-சாதக மாகுஞ் சமயங்க ளூற்றெட்டு - நாதமொ டந்த நடானந்த நாற்பதப் - பாதியோ டாடிப் பானிரு பாதமே", "தீமுத லைந்துந் திசையெட்டுங் கீழ்மேலும் - ஆயு மறிவினுக் கப்புற மானந்த - மாயைமா மாயை கடந்துநின் றார்காண - நாயக னின்று நடஞ் செய்யு மாறே", "நாதத் தினிலாடி நாற்பதத் தேயாடி - வேதத்தி லாடித் தழலந்த மீதாடி - போதத்தி லாடிப் புவன முழுதாடுந்-தீதற்ற தேவாதி தேவர்பிரானே", "தேவரோ டாடித் திருவம்ப லத்தாடி - மூவரோ டாடி முனிசனத் தோடாடி -

பாவினு ளாடிப் பராசத் தியிலாடிக் - கோவினு ளாடும் கூத்தப் பிரானே ", "தேவர் சுரர்நரர் சித்தர்வித் தியாதரர் - மூவர்க ளாதியின் முப்பத்து மூவர்கள் - தாபதர் சத்தர் சமயஞ் சராசரம் - யாவையு மாடும் எம்மிறை யாடவே ", " ஒன்பது மாடம் ஒருபதி னொன்றாட - அன்புறு மார்க்கங்கள் ஆறும் உடனாட - இன்புறும் ஏழினும் ஏழைம்பத் தாறாட-வன்பது மாடினன் ஆனந்தக் கூத்தே", " தத்துவ மாடச் சதாசிவந் தானாடச் - சித்தமு மாடச் சிவசத்தி தானாட - வைத்த சராசர மாட மறையாட - அத்தனு மாடினா னானந்தக் கூத்தே", " சிவமாடச் சத்தியு மாடச் சகத்தில் - அவமாட வாடாத வம்பர மாட - நவமான தத்துவ நாதாந்த மாடச் - சிவமாடும் வேதாந்தச் சித்தாந்தத் துள்ளே ", " புளிக்கண் டவர்க்குப் புனலூறு மாபோற் - களிக்குந் திருக்கூத்துக் கண்டவர்க் கெல்லாம் - அளிக்கு மருட்கண்ணீர் சோர்நெஞ் சுருக்கும் - ஒளிக்குளா னந்தத் தமுதூறு முள்ளத்தே ", " விம்மும் வெருவும் விழுமெழும் மெய்சோரும் - தம்மையுந் தாமறி யார்கள் சதுர்கெடுஞ் - செம்மை சிறந்த திருவம் பலக்கூத்துள் - அம்மலர்ப் பொற்பாதத் தன்புவைப் பார்கட்கே ", " அண்டத்தில் தேவர்க ளப்பாலைத் தேவர்கள் - எண்டிசை சூழ்புவிக் குள்ளுள்ள தேவர்கள் - புண்டரி கப்பதப் பொன்னம் பலக்கூத்துக் - கண்டுசே வித்துக் கதிபெறு வார்களே ", " ஆனந்த மானந்த மென்ப ரறிவிலர் - ஆனந்த மாநட மாரு மறிகிலர் - ஆனந்த மாநட மாரு மறிந்தபின் - தானந்த மற்றிட மானந்த மாமே " என்று வருணித் திருத்தல் காண்க.

ஆண்டவன் திருக்கூத்தில் ஐந்தொழில் நிகழ்கின்றன. ஆக்கல் அளித்தல் அழித்தல் மறைத்தல் அருளல் என்பன ஐந்தொழில். " அரன்துடி தோற்றம் அமைத்தல் திதியாம் - அரனங்கி தன்னில் அறையிற்சங் காரம் - அரனூற் றணைப்பில் அமருந் திரோதாயி - அரனடி யென்றும் அனுக்கிரக மென்னே"—திருமூலர்.

## ரு. மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்

மலர் சிலம்பு - வினைத்தொகை. மலர்போன்ற சிலம்படி என்று கூறுவோருமுளர்.

சிலம்பு - ஓங்கார ஒலிப்பிரிவு. புலனடங்கி அமைதியில் திளைத்திருப் போர்க்கு ஒலி கேட்டல் இயல்பு. " திருச்சிலம் போசை ஒலிவழியே சென்று நிருத்தனைக் கும்பிடென் றுந்தீபற - நேர்பட அங்கேநின் றுந்தீபற "—திருவுந்தியார். " ஆடிய காலும் அதிற்சிலம் போசையும் - பாடிய பாட்டும் பலவான நட்டமுங் - கூடிய கோலங் குருபரன் கொண்டாடத் - தேடியு ளேகண்டு தீர்ந்தற்ற வாறே "—திருமூலர்.

அடி - திருவடி; திருவருள். ஒரு காலால் உயிர்களின் மூனப்பை மிதித் தொடுக்கி, மற்றொரு காலால் திருவருள் புரிவது கூத்தினியல்.

வாழ்த்தலும் வணங்கலும் நினைவினின்றும் நிகழ்தலான், நினைத்தலையும் உடன் சேர்த்துக் கொள்க.

எங்கெங்கும் எவ்வுயிரிலும் நீக்கமற நிறைந்து நடம்புரியுந் திருவடியை வாழ்த்தி வணங்கலாவது, எவ்வுயிர்க்கும் அன்பு செய்தலாகும். " எவ்வுயிரும்

நீங்காதுறையும் இறை சிவன் என்று - எவ்வுயிர்க்கும் அன்பா யிரு"—சைவ சமய நெறி. "எங்கெங்கே பார்த்தாலும் எவ்வுயிர்க்கும் அவ்வுயிராய் - அங்கங் கிருப்பது நீயன்றோ பராபரமே", "எவ்வுயிரும் என்னுயிர்போல் எண்ணி இரங்க வும்நின் - தெய்வ அருட்கருணை செய்யாய் பராபரமே"—தாயுமானர்.

## இறுவாய்

உலகு கண்கூடாக விளங்குவது. கடவுள் கண்கூடாக விளங்காதது. கண் கூடாக விளங்காத ஒன்றைக் கண்கூடாக விளங்கும் ஒன்றைக் கொண்டே உணர் தல்வேண்டும். "அகர முதல எழுத்தெல்லாம் ஆதிபகவன் முதற்றே உலகு" என்னுந் திருக்குறளில் திருவள்ளுவர் "முதற்றே உலகு" என்று கூறியதன் நுட்பத்தையோர்க.

உலகு சுட்டியுணரப்படுவது. சுட்டி யுணரப்படுதற்கு நாமரூபங்களுண்டு. நாமரூபமுடையது தோற்றம் நிலை இறுதி என்னும் மூவினையுடையதாகும். தோற்ற நிலை யிறுதியுடைய ஒன்று தானே தோன்றி நின்று அழியாது. அது, மூவினை வாய்ப்படுதற்கு மூவினை வாய்ப்படாத ஒன்று வேண்டற்பாலது.

மூவினை ஏன் நடைபெறுதல்வேண்டும்? உயிரின் பொருட்டு மூவினை நிகழும் அவசியம் நேர்கிறது. உலகைப்போல உயிர் அறிவற்றதுமன்று; கடவு ளைப்போல அது முற்றறிவுடையதுமன்று. அஃது இரண்டுக்கும் இடைப்பட் டது. அஃது அறியாமையால் சிற்றறிவுடையதா யிருப்பது. அச்சிறுமை நீங்கி ஞல் உயிர் சிவமாகும்.

சிற்றறிவுடைய உயிரின் பொருட்டு முற்றறிவாகிய சிவம் அருட்டொழில் புரிவதாகிறது. சிவத்தின் இரக்கமே இதற்குக் காரணம். இரக்கம் சிவத்தின் இயல்பு. சிவம், உயிரின் அறியாமைச் சிறுமையைப் போக்க அதற்குத் தனு கரண புவன போகங்களைக் கொடுக்கிறது. சிவத்தின் துணையால் உலக வாழ் வைப்பெற்ற உயிர், தான் பெற்ற துணையை மறவாது நினைந்து வாழின், வினை களின் வாய்ப்படாது, அறியாமைச் சிறுமை நீங்கப்பெற்றுச் சிவமாந்தன்மை எய்தும். இல்லையேல், உயிர் பிறவி வாய்ப்பட்டு உழலா நிற்கும். இவை யாவும் "உலகெலாம்" என்னுந் திருப்பாட்டில் பொதிந்து கிடக்கின்றன.

"உலகெலாம்" என்னுந் திருப்பாட்டு "வாழ்த்தி வணங்குவாம்" என்று முடிகிறது. வாழ்த்தி வணங்குவது யார்? யாம் என்பது சொல்லாமலே அமை யும். யாம் என்பது உயிர்களை. உயிர்கள் எதை வாழ்த்தி வணங்குவது? ஆண்ட வன் மலரடியையென்க. உயிர்கள் ஏன் ஆண்டவன் மலரடியை வாழ்த்தி வணங் கல்வேண்டும்? அறியாமையால் நேரும் சிறுமையினின்றும் விடுதலை யடையும் பொருட்டு உயிர் ஆண்டவன் மலரடியை வாழ்த்தி வணங்கல்வேண்டும். ஆகவே "வாழ்த்தி வணங்குவாம்" என்பதில் முப்பொருளுண்மை விளங்கல் தேர்க. மூன்றனுள், எல்லாவற்றிற்குந் தாரகமாயுள்ள ஆண்டவன் திறத்தைப் போற் றும் வழிப் பிற உள்ளுறைந்து புலப்படுமாறு ஆசிரியர் "உலகெலாம்" என்னும் முதற்றிருப்பாட்டை அருளியிருத்தல் காண்க.

"உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்" என்னும் முதலடியிலேயே முப்பொருளின் இயல்கள் குறிப்பாக விளங்குகின்றன. உலகெலாம் என்றது உயிர்களை. உயிர்கள் இறைவனை உணர்ந்து ஓதற்கு இயலாமை அவைகளின் அறியாமையைக் காட்டுகிறது. "அரியவன்" என்பது ஆண்டவனை உணர்த்துகிறது.

ஆண்டவன், அரியவனாயினும், எல்லாவற்றையுங் கடந்து நிற்கும் அகண்ட சொரூபனாயினும், அவன் உலகு உயிர்களுடன் கலவாது பிரிந்து நிற்கின்றானில்லை. "உலகெலா மாகி வேறாய் உடனுமாய்" என்பது சிவஞான சித்தியார். உடனுள்ள ஒன்றை உணர இயலாதிருக்கும் உயிரின் சிறுமை என்னே! என்னே!

அச்சிறுமை போக்க வல்லார் யார்? குருடனுக்குக் குருடன் வழி காட்டுதல் எங்ஙனம்? குறைவிலா நிறைவாயுள்ள ஒருவனே உயிர்களின் சிறுமையைப் போக்க வல்லவனாவன். குறைவிலா நிறைவாயிருப்பவன் இறைவன் ஒருவனே. அவனே உணர்ந்து ஓதற்கு அரியனாயிருப்பவன்! அவன் எப்படி உயிர்களின் சிறுமை போக்குவன்? அறியாமையுள்ள உயிர்களாலும் தஞ்சிறுமையைப் போக்கிக் கொள்ளல் இயலாது. வேறு வழியென்னை? ஆண்டவனே வழிகாட்டல் வேண்டும்.

"உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்" என்பது ஆண்டவனது சொரூபம். சொரூபமாவது உருவம் அருவம் அருவுருவம் முதலியவற்றைக் கடந்து நிற்பது. இவ்வரிய ஆண்டவன் உயிர்கள்மீது கொண்ட இரக்கத்தால் தடத்தனாகிறான். தடத்தம் மூன்று நிலைகளையுடையது. அவை, உருவம் அருவம் அருவுருவம் என்பன. உருவம் - சகளம்; அருவம் - நிஷ்களம்; அருவுருவம் நிஷ்கள சகளம்.

"உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்" - சொரூபம். "நிலவுலாவிய நீர்மலிவேணியன்" - சகளம். அலகில் சோதியன் - நிஷ்களம். அம்பலத்தாடுவான் - நிஷ்கள சகளம். இவ்வடிவங்களெல்லாம் ஆண்டவன் உயிர்கள் பொருட்டுக் கருணையால் தாங்குவன. இக்கருணையே, ஆண்டவன் உயிர்கட்குப் புரியும் பெருந்துணை யென்க.

"சிவனுரு வருவுமல்லன் சித்தினோ டசித்துமல்லன் - பவமுதற் றொழில்களொன்றும் பண்ணிடு வானுமல்லன் - தவமுத லியோகபோகந் தரிப்பவ னல்லன் தானே - இவைபெற இயைந்தும் ஒன்றும் இயைந்திடா இயல்பி னானே", "உருமேனி தரித்துக்கொண்ட தென்றலும் உருவிறந்த-அருமேனி யதுவுங்கண்டோம் அருவுரு வானபோது - திருமேனி யுபயம்பெற்றோஞ் செப்பிய மூன்றும்நந்தம் - கருமேனி கழிக்கவந்த கருணையின் விளைவுகாணே","உருவருள் குணங்களோடும் உணர்வருள் உருவிற்றோற்றுங்-கருமமும் அருள்அரன்றன் கரசர ணாதிசாங்கம் - தரும்அருள் உபாங்கமெல்லாந் தானருள் தனக்கொன்றின்றி-அருளுரு வுயிருக் கென்றே ஆக்குவன் அமலனன்றே", "அருவமோ ரூபாரூப மானதோ வன்றி நின்ற - உருவமோ வுரைக்குங்கர்த்தா வடிவெனக் குணர்த்திங்கென்னில் - உருவமும் ரூபாரூப மானது மன்றிநின்ற - உருவமு மூன்றுஞ்சொன்ன ஒருவனுக் குள்ளதாமே" "ஒருவனே யிராவணாதி பாவக முற்றாற்போலத் - தருவனிவ்

வுருவமெல்லாந் தன்மையுந் திரியானுரும் - வரும்வடி வெல்லாஞ்சத்தி சத்தி தான் மாமுங்காழ்ப்பும் - இருமையும் போலமன்னிச் சிவத்திஞே டியைந்து நிற்கும் "—சிவஞானசித்தியார்.

ஒருவனே இவ்வடிவங்களை யெல்லாந் தாங்கலான், எவரெவர்க்கு எவ்வெவ் வடிவத்தின் மீது விருப்பஞ் செல்கிறதோ, அவரவர் அவ்வவ்வடிவத்தை வழி படலாம்.

உலகம் பலவிதம். உலகில் ஆண்டவனை வேருகவும் தன்னை வேருகவுங் கொண்டு புற வழிபாடு செய்வோரு மிருக்கிருர். அக வழிபாட்டில் மட்டுங் கருத்தைச் செலுத்துவோரு மிருக்கிருர். அகம்புறம் என்னும் இரண்டு வழி நின்று ஆண்டவனைப் போற்றுவோரு மிருக்கிருர். இவைகளை யெல்லாம் வேண்டாது ஞான நாட்டம் ஒன்றிலே ஒன்றுவோரு மிருக்கிருர். இத்திறப் பாகுபாடுகளுடன் மக்கள் உலகில் வதிதலால், அவரவர் பக்குவத்துக் கேற்ற வண்ணம் ஆண்டவன் வடிவங்கொண்டு அருள் செய்கிருன். " அப்பனை நந்தியை ஆரா அமுதினை - ஒப்பிலி வள்ளலை ஊழி முதல்வனை - எப்பரி சாயினும் ஏத்துமின் ஏத்திஞல் - அப்பரி சீசன் அருள்பெற லாமே" என்ருர் திருமூலர்.

புறவழிபாடு சரியை-இதற்குரிய வடிவம் "நிலவுலாவிய நீர்மலி வேணியன்" என்பது. அக வழிபாடு யோகம்-இதற்குரியது "அலகில் சோதியன்" என்பது. அகப்புறவழிபாடு கிரியை-இதற்குரியது "அம்பலத் தாடுவான்" என்பது. இவை எல்லாவற்றையுங் கடந்தது ஞானம். ஞானத்துக் குரியது "உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவன்" என்பது.

இந்நான்கில் உலகெலாம் அடங்கும்; சமயமெலாம் அடங்கும். இவை களில் அடங்காத உலகமுமில்லை; சமயமுமில்லை. இவைகளில் எல்லாம் அடங் கும். சமய நிலைகளை ஆய்ந்தால், அவை, சரியா சமயம், கிரியா சமயம், யோக சமயம், ஞான சமயம் என்னும் நான்கில் அடங்காமற் போகா.

சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் நான்கும் ஒன்றைவிட்டு ஒன்று பிரிந்து நிற்பன அல்ல. அவை ஒன்றுடன் ஒன்று தொடர்புடையன. அத் தொடர்பு வழியே மக்களின் சமய வாழ்வும் அரும்பி மலர்ந்து காய்த்துக் கனியும். "விரும்புஞ் சரியை முதல் மெய்ஞ்ஞான நான்கும் - அரும்புமலர் காய்கனிபோல் அன்றே பராபரமே" என்பது தாயுமானுர் திருவாக்கு.

இவை " மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம் " என்பதிலும் விளங்குகின் றன. " மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம் " என்பதை நான்கிலும் பொருத் திக் கொள்க. " நிலவுலாவிய நீர்மலி வேணியன்றன் " மலர் சிலம்படி வாழ்த்தி வணங்கலாவது, மனமொழி மெய்களால் திருவடி தொழுதல். " அம்பலத்தாடு வான்றன்" மலர் சிலம்படி வாழ்த்தி வணங்கலாவது, திருவடியைத் திருவருளாக வேண்டி நிற்பது. " அலகில் சோதியனது " மலர் சிலம்படி வாழ்த்தி வணங்க லாவது, புறமறைந்து ஓசை ஒலியால் ஒளி தோன்ற, அகமலர, அம்மலரில் வண் டெனப் படிந்திருத்தல். "உலகெலாம் உணர்ந் தோதற்கரியவனது" மலர் சிலம் படி வாழ்த்தி வணங்கலாவது, அகப்புற வேற்றுமையின்றிக் காண்டல் கேட்டல்

முதலிய வுணர்வின்றித் தான் வேறு சிவம் வேறு என்னும் எண்ணமின்றி, இரண்டற்ற நிலையில் நிரதிசயானந்தத்தில் தேங்கிக் கிடப்பது.

"மலரடி" என்பதை ஞானத்துக்கும், "சிலம்படி" என்பதை யோகத்துக்கும், "அடி வாழ்த்தலை"க் கிரியைக்கும், "அடி வணங்குவாம்" என்பதைச் சரியைக்கும் கொள்ளுமுறையிலும் "மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்" என்பது அமைந்திருக்கிறது.

வழிபாட்டுக்கென "உலகெலாம் உணர்ந்தோதற் கரிய" ஆண்டவன், நம்பொருட்டு அழகிய திருமுடியும் அழகிய திருவடியுந் தாங்கி, நம்முள்ளத்தில் கோயில் கொண்டு திருவருள் செய்தலை உன்னுவோமாக. ஆண்டவன் அடி முடி இல்லாதவன். அவ்வடியையும் முடியையுந் தேடிச் செல்லச் செல்ல அவை நீண்டுகொண்டே போகும். அவைகட்கு எல்லை இல்லை. "கீதம் இனிய குயிலே கேட்டியேல் எங்கள் பெருமான் - பாதம் இரண்டும் வினவில் பாதாளம் ஏழினுக் கப்பால் - சோதி மணிமுடி சொல்லில் சொல்லிறந்து நின்றதொன்மை - ஆதிகுணம் ஒன்றும் இல்லான் அந்தமிலான் வரக்கூவாய்", "ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ் சோதியை" என்றார் மாணிக்கவாசகர்.

முடியில்லா ஒன்று - அடியில்லா ஒன்று - மலமும் மனமுமுடைய உயிர்களின் பொருட்டு நிலவுலாவிய நீர்மலிவேணியாம் முடியையும், மலர் சிலம்படியையும் தாங்கி, உயிர்களின் மலம் நீங்க மனதில் நிற்குங் காட்சியைக் காண்க. அழகிய முடியை—அழகிய அடியை—நோக்குக ; நோக்குக.

திருமுடியுந் திருவடியுங்கொண்ட ஒருவனுக்குரிய திருமேனி எது? "அலகில் சோதி" என்று ஆசிரியர் அறிவுறுத்துகிறார். "அலகில் சோதியன்" திருமுடியும் திருவடியும் மாயையால் கொள்ளப்பட்டனஅல்ல என்பது குறிப்பு. "காயமோ மாயை யன்று காண்பது சத்தி தன்னால்", "சத்திதன் வடிவே தென்னில் தடையிலா ஞானமாகும்"—சிவஞானசித்தியார். இவ்வொளி வடிவம், உயிர்கள்மீது கொண்ட கைம்மாறற்ற பெருங் கருணையால் தாங்கப்படுவ தென்பதை "அம்பலத்தாடுவான்" என்பதனால் ஆசிரியர் தெளிவு செய்கிறார். ஆண்டவன் அம்பலத்தாடுதலால் நிகழும் தொழில் ஐந்தும் உயிர்கள் பொருட்டாதலின், அவன் உருவம் செயல் முதலிய யாவும் கருணை மயம் என்று மீண்டும் மீண்டும் வலியுறுத்த வேண்டுவதில்லை. "உலகெலாம் உணர்ந் தோதற்கரியவன்" என்று ஆண்டவனைக் கூறிய ஆசிரியர், ஆண்டவன் தலையையும் உடலையுங் காலையுங் காட்டுவதன் அழகை உள்க.

"உலகெலாம்" என்னுஞ் சீரிய திருப்பாட்டுப் பலதிற விழுப்பங்களைத் தன்னகத்தே தாங்கி நிற்கிறது. அவைகளுள் சில மேலே காட்டப்பட்டன. அக் காட்டினின்றும் பெறத்தக்க ஒன்றை ஈண்டுச் சிறப்பாகக் குறிக்க விரும்புகிறேன்.

ஆண்டவன், "உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்". "உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரிய" அவன், உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியனாகவே கிடக்கிறானா? அல்லது "நான் 'உலகெலாம் உணர்ந்தோதற் கரியவன்'" என்னும் இறுமாப்பில் வீழ்ந்து கிடக்கிறானா? என்பது சிந்திக்கற்பாலது. ஆண்ட

வன் வாளாவாதல் இறுமாந்தாதல் கிடக்கிற்றன்றில்லை. 'உலகெலாம் உணர்ந் தோதற்கரிய' ஆண்டவன், உயிர்கள் பொருட்டு இரங்கி இரங்கி இரங்கி இரங்கி 'நிலவுலாவிய நீர்மலி வேணிய'னாய், 'அலகில் சோதிய'னாய், 'அம்பலத் தாடுவா'னாய், "மலர்சிலம்படி"யனாய் வருகிறான்.

சிவம் கட்டில்லா முற்றறிவா யிருப்பது. "அறிவே சிவம்" என்றார் திருமூலர். அறிவின் நீர்மை என்னை? அன்பன்றோ? அன்பு, கட்டுடைய உயிர்களிடத்தும் ஒவ்வொருபோது நிகழ்தல் காண்கிறோம். அன்பு நிகழும்போது கட்டு என்னும் அறியாமையினின்றும் உயிர் சிறிது விடுதலை யடைகிறது. மீண்டும் அறியாமை சூழும்போது அன்பு மறைய, எரி பகை வீறிட்டெழுகின்றன. உயிர், அறியாமையினின்றும் முழு விடுதலை யடையும்போது, அதன்மாட்டுள்ள அழுக்காறு முதலியன நீங்க, அது முழு அன்பில் முழுகி நிற்கும். அந்நிலை பெற்றோர் எக்காரணம் பற்றியும் எவ்வுயிர்க்குந் தீங்கு செய்யார். அவர் எவ்வுயிரையுந் தம்மைப்போல் பார்ப்பார். உற்ற வேளையில் அவர் தம்முயிரையும் பிறர்க்கு உதவுவார். அவர்தம் இயல் தமக்கென வாழாது பிறர்க்கென வாழ்தல் என்று சுருங்கச் சொல்லலாம். "அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ் - செந்தண்மை பூண்டொழுக லான்" எனவும், "அன்பிலார் எல்லாந் தமக்குரியர் அன்புடையார் - என்பும் உரியர் பிறர்க்கு" எனவும் வரூஉந் திருவள்ளுவர் திருவாக்கை நோக்குக. ஆண்டவன் அறியாமைக் கட்டில்லா முற்றறிவினன் ஆதலின், அவன் முழு அறிவினனாகவே என்றும் பொலிகிறான். அப்பேரறிவு என்றும் நீங்காத அன்பு மயமா யிருக்கிறது. இதனால் "அறிவே சிவம்" என்றருளிய திருமூலர் "அன்பே சிவம்" என்றும் அருளலானார். முழு அன்பில் முனைப் பேது? அவ்வன்பு உயிர்களின் துன்பத்தை நீக்க இரங்குகிறது. உலகெலாம் உணர்ந்தோதற் கரியதாயுள்ள அறிவு, அன்பால் எப்பயனுங் கருதாது, உயிர்களின்பொருட்டு, இரக்கங்கொண்டு, நீர்மலி வேணியனாய், அலகில் சோதியனாய், அம்பலத் தாடுவானாய், மலர்சிலம் படியனாய் எளிவந்தருளுஞ் சிறப்பை எம்மொழியால் இயம்புவது? உலகெலாம் உணர்ந்தோதற் கரிய ஆண்டவன், அன்பால் இரங்கி உயிர்கட்கு உபகரித்தலை உன்னிப் பார்க்க. இதனால் விளங்குவ தென்னை? அறிவிற் சிறந்தவர்கள் அன்பால் மற்றவர்கட்குக் கைம்மாறு கருதாது உழைத்தல் வேண்டுமென்பதும், அவ்வுழைப்பே ஆண்டவனுக்குரிய அன்புத் தொண்டென்பதும், அவ்வன்புத் தொண்டு அன்பாகிய ஆண்டவன் நிலையை அடைவிக்கும் என்பதும், அத்தொண்டு நிகழ்த்துவோர் ஆண்டவன் அடியவரென்பதும், இன்ன பிறவும் பெறப்படுகின்றன. இத்திருப்பாட்டில் தனக்கென வாழாமையும், பிறர்க்கு இரங்கி வருதலும், அருளலும், பிறவும் விளங்குதல் காண்க. "தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன்"—சாத்தனார், "கிழமைப் பட வாழ்"—ஔவையார்.

"உலகெலாம்" என்னும் முதற்றிருப்பாட்டில் உலகு உயிர் கடவுளுண்மையும், அதனதன் இயலும், உயிர்கள் பொருட்டு ஆண்டவன் இரங்கி எளிவரலும், எளி வந்து தாங்கும் அருட்டிருமேனிகளும், அவ்வத்திருமேனியின் திறங்களும், அவ்வத்திறத்துக்கேற்ற வழிபாட்டின் வகைகளும், தனக்கென வாழாமையும்,

பிறர்க்குக் கிழமைப்படுதலும், இன்னோரன்ன பிறவுங் கருக்கொண் டிருத்த
வெள்ளிடைமலை. நூற்கண் போந்துள்ள பொருள்கள் "உலகெலாம்" என்னு
ஒன்றில் நுண்மையாக ஒன்றி யிருத்தலை யுணர்க. "உலகெலாம்" என்னு
வானிழல் மெய்ம்மொழி அறிவுவிதை. அதனின்றும் எழுந்த அன்புமர
பெரியபுராணம்.

பெரியபுராணம், நாயன்மார்கள் வரலாற்றைக் கூறும் ஓர் அருணூல். நாய
மார்கள் முழுமுதற் பொருளாகிய சிவபெருமானை "உலகெலாம் உணர்ந்தோத
கரியவ"னாகவும், "நிலவுலாவிய நீர்மலி வேணிய"னாகவும், "அலகில் சோதிய"ன
வும்,"அம்பலத் தாடுவா"னாகவுங்கொண்டு, அவர்தம்"மலர் சிலம்படி"யை நினைந்து
வாழ்த்தி வணங்கிப் பலதிற வழிபாடுகள் நிகழ்த்திப் பேறு பெற்றதும், அவரவ
தொண்டின் திறத்துக்கேற்ற வண்ணம் ஆண்டவன் அவரவர்க் கருள் புரிந்ததும்
இவைகளை யொட்டிய மற்ற அன்புக் கூறுபாடுகளும் பெரியபுராணத்தில் ஒளி
கின்றன. இவைகளெல்லாம் "உலகெலாம்" என்னும் முதற் றிருப்பாட்டிக்
உறைந்து நிற்குமாறு பாடிய பெருமை ஆசிரியருடையது. அப்பெரியாரின்
பரந்த நோக்கும், விரிந்த மனமும், கடவுளிடத் தன்பும், உயிர்களிடத் தன்பும்
சொல் நயமும், பொருளாழமும், கல்லையுங் கரைக்கும் பா வளமும், பிறவும் நூன்
முழுவதும் பொலிந்துகொண் டிருக்கின்றன.

இத்தகை நூல் எவர்க்கு உரியது? உலகிலுள்ள அன்பர்கட்கெல்லாம் உரிய
தென்பது அதன் உள்ளுறையால் நன்கு புலனாகும். "உலகெலாம்" என்று
ஒலித்தெழுங் குறிப்பே, உலகிலுள்ள அன்பர்கட்கெல்லாம் இந்நூல் உரியதென்
பதை அறிவிப்பதாகிறது. "அப்பாலும் அடிசார்ந்தார்" புராணமும், பிறவும் இக்
கூற்றை வலியுறுத்தல் காண்க. "உலகெலாம்" என்னும் மெய்யறிவுவிதையினின்
றும் எழுந்த பெரியபுராணம் என்னும் அன்புமரம், தனது அருள் நிழலை எல்லார்க்
கும் வழங்கும் பெற்றியதென்க.

இம்முதற் றிருப்பாட்டின் இயற்கை அமைப்பை வெவ்வேறு வழியில்
குலைத்துக், கொண்டுகூட்டிப் பொருளுரைப்போருமுளர். அப்பொருள் இலக்
கண வரம்புக்கு அரண் செய்வதாயினும் பொருந்தியதாயினும், மெய்ம்மொழிப்
பாட்டின் இயற்கை அமைப்பைக் குலைத்துக், கொண்டுகூட்டல் செய்யாது,
பொருள் கோடலே சிறப்பாகும். அவ்வாறு பொருள் கோடற்கு மெய்ம்மொழிப்
பாட்டு இடந்தந்து நிற்கிறது.

"உலகெலாம்" என்னும் மெய்ம்மொழிப் பாட்டின் ஒவ்வொரு சொல்லை
யும் பொருளையும் தனித்தனியே ஓதி ஓதி உன்னி உன்னிப் பார்க்க. ஒவ்
வொன்றிலும் மங்கலமும், இனிமையும், அழகும், அமைதியும், ஆறுதலும்,
இன்ன பிறவும் இயற்கையில் அமைந்திருத்தல் நனி விளங்கும்.

"உலகெலாம்" என்று ஒலித்தெழும் இம்மெய்ம்மொழிநூலை உலகெ
லாம் உணர்ந்து ஓதுவதாக! இதன் அருமைப்பாடு யாண்டும் நிலவி உலவுவ
தாக! இதன் நீர்மை யாண்டும் மலிவதாக! இவ்வறிவுநூல் எல்லார் முடியிலும்

எறி அலகில் ஒளியை வீசுவதாக! இவ்வன்பு நூல் எல்லா அம்பலங்களிலும் ஆடுவதாக! இவ்வருணூல் எல்லார் நெஞ்சிலும் மலர்வதாக. இப் பெருநூலை உலகுக்களித்த ஆசிரியர் திருவடியை வாழ்த்துகிறேன்; வணங்குகிறேன். உலகெலாம் ஓங்கி வாழ்க. ௧

ஊன் அடைந்த உடம்பின் *பிறவியே
தான் அடைந்த உறுதியைச் சாருமால்
தேன் அடைந்த மலர்ப்பொழில் தில்லையுள்
மாந டஞ்செய் வரதர்பொற் றுள்தொழ. ௨

†எடுக்கு மாக்கதை இன்தமிழ்ச் செய்யுளாய்
நடக்கு மேன்மை நமக்கருள் செய்திடத்
தடக்கை ஐந்துடைத் தாழ்செவி நீள்முடிக்
கடக்க ளிற்றைக் கருத்துள் இருத்துவாம். ௩

---

௨. ஊன்-தசை. பிறவியே - (மானுடப்) பிறப்பே. ஏகாரம் பிரிநிலை; தேற்றமுமாம். உறுதியை - பயனை; பேற்றை. ஆல் - அசை. எல்லா நடங்களுக்கும் உயிராயுள்ள நடமாதலின் "மாநடம்" என்றார். வரதர் - வரத்தைக் கொடுப்போர்; நடராசர். பிறவி சாரும். ஊன், அடைந்த உடம்பு, விலங்கு பறவை முதலிய உயிர்கட்கும் உண்டு. அவ்வூனுடலால் அமையும் கருவி காரணங்கள் முதலியன வீடு பேற்றைக் காதலிக்கும் ஆறுவதறிவு விளக்கத்துக்குத் துணை நிற்பதில்லை. மனித உடலின் கருவிகாரணங்கள் முதலியன அவ்வறிவு விளக்கத்துக்குத் துணை நிற்றலான், ஈண்டுப் பிறவி யென்றது மானுடப் பிறப்பின்மேற்றென்க. இது, "பொற்றுள் தொழ" என்பதால் நன்கு விளங்கும். மக்கட் பிறவி, தில்லைக் கூத்தன் திருவடி தொழும்பேறு பெறின் விழுமியதாகுமென்க. "ஊனிலாவி உயிர்க்கும் பொழுதெலாம் - நானிலாவி இருப்பன் என்நாதனை"—அப்பர். மாநடத்தின் இனிமையைத் "தேனடைந்த மலர்ப்பொழில்" என்று குறிப்பால் உணர்த்தியவாறும். "புளிக் கண்டவர்க்குப் புனலூறு மாபோல் - களிக்கும் திருக்கூத்துக் கண்டவர்க் காங்கே"—திருமூலர்.

௩. மாக்கதை - பெரிய புராணமென்ப. தடம் - பெரிய; விசாலமான. கை நான்கு, துதிக்கை ஒன்று, ஆக ஐந்து. கடம் - மதம் பொருந்திய. களிற்றை - யானைமுகக் கடவுளை. களிறு - ஆண் யானை. பிடி - பெண் யானை. ஈண்டு இனம்பற்றிப் பிடியையுங் கொள்க. என்னை? விநாயகக் கடவுளின் யானை முகத்தில் ஒருபால் கொம்புண்மை யானும், மற்றொருபால் கொம்பின்மை யானுமென்க. கொம்புண்மை ஆணையும், அஃதின்மை பெண்ணையுங் குறிப்பன. ஆண் பெண் முறையே சிவஞ்சத்தி யெனப்படும். உலகங்களெல்லாம் வெம்மை தண்மையென்னும் இரண்டு சக்திகளான் இயங்குகின்றன. வெம்மையும் தண்மையும் முறையே ஆண் பெண் என்னுஞ் சிவம் சத்தியென்று சொல்

பாடபேதம்—* பிறவியை. † இப்பாடல் சில பிரதிகளிலில்லை.

**வேறு**

**திருக்கூட்டம்**

மதிவளர் சடைமுடி மன்று ளாரைமுன்
துதிசெயு நாயன்மார் தூய சொன்மலர்
பொதிநலன் நுகர்தரு புனிதர் பேரவை
விதிமுறை உலகினில் விளங்கி வெல்கவே.

**வேறு**

**அவையடக்கம்**

அளவி லாத பெருமைய ராகிய
அளவி லாஅடி யார்புகழ் கூறுகேன்
அளவு கூட உரைப்பரி தாயினும்
அளவி லாசை துரப்ப அறைகுவேன். ரு

---

லப்படும். "ஆணெலாம் இறைவன் பெண்ணெலாந் தேவி"—சைவ புராணம். சிவனுஞ் சத்தியாய பரம்பொருள், கொண்ட மூர்த்தங்கள் பலவற்றுள் விநாயக மூர்த்தமும் ஒன்று. "பெண்ணொரு பாகம் வைத்த பிஞ்ஞகன் வடிவு காட்டும் - அண்ணலங் களிநல் யானை"—கூர்ம புராணம். யானை முகம் - பிரணவத்துக்கு அறிகுறி. முறைப்பட்ட பிராணாயாமத்தில் அமரும் ஒருவனது நுரை ஈரல் துதிக்கைபோல எழும்பி நிற்றலும், வீணா தண்டம் பிடரியில் நிமிர்ந்து நிற்றலும், இன்னோரன்ன பிறவும் பெறுதல் கண்கூடு. இந்நுட்பங்களை விநாயக மூர்த்தம் உணர்த்துகிறதெனக் கணபதி உபநிடதங் கூறுகிறது. இயம நியமங் கடந்து யோகத்திலமர்வோர், முதல் முதல் பயில்வது பிராணாயாமம். அதற்குரிய விநாயகரும் எவ்வினைக்கும் முதல் முதல் தொழப்படுகிறார்.

ச. மதி - இளம்பிறை. மன்றுளாரை - சபாநாதரை. முன் - முன்னுளில்; திருமுன்னே எனினுமாம். சொன் மலர் - சொல்லாகிய மலரில்; பாமாலையில்; திருத்தொண்டத் தொகையை முதலாக்கொண்டு பிறந்த நாயன்மார் வரலாற்றில்; நாயன்மார் திருவாக்கினின்றும் பிறந்த தூய சொன்மலரில் (தமிழ் மறைகளில்) எனக் கொள்ளினுமாம். பொதி நலம் - நிறைந்த தேனை (பத்திச் சுவையை). நுகர்தரு புனிதர்பேர் அவை - உண்ணும் தூயமக்களுடைய பெருமை பொருந்திய அவைக்களம். விதிமுறை - இறைவன் இயற்கை விதி வழி இயங்கும். வெல்க - சிறக்க. நாயன்மார்களின் புகழை ஓதும் - கேட்கும் - அல்லது அவர்களருளிய பாமாலையை ஓதும் - கேட்கும் - அடியவர்கள் உள்ளத்தை ஆண்டவன் திருக்கோயில் கொள்வதால், கடவுள் வாழ்த்தினைத் தொடர்ந்து திருக்கூட்டத்தை வாழ்த்தியவாறு காண்க.

ரு. கூறுகேன் - வினையாலணையும் பெயர். அளவு கூட - விசேடமின்றிச் சாமான்யத் தன்மையைக்கூட என்பர் மகாலிங்க ஐயர். துரப்ப - உந்த; செலுத்த.

தெரிவ ரும்பெரு மைத்திருத் தொண்டர்தம்
பொருவ ருஞ்சீர் புகலலுற் றேன்முற்றப்
பெருகு *தெண்கடல் †உற்றுண் பெருநசை
ஒருசு ணங்கனை ஒக்குந் தகைமையேன். ௬

செப்ப லுற்ற பொருளின் சிறப்பினால்
அப்பொ ருட்குரை யாவருங் கொள்வரால்
இப்பொ ருட்கென் னுரைசிறி தாயினும்
மெய்ப்பொ ருட்குரி யார்கொள்வர் மேன்மையால். ௭

மேய இவ்வுரை கொண்டு விரும்புமாம்
சேய வன்திருப் பேரம்ப லஞ்செய்ய
தூய பொன்னணி சோழன்நீ டூழிபார்
ஆய சீர்அந பாயன் அரசவை. ௮

‡அருளின் நீர்மைத் திருத்தொண் டறிவரும்
தெருளில் நீரிது செப்புதற் காமெனின்

௬. தெரிவரும் - அறிதற்கரிய. பொருவருஞ்சீர் - ஒப்பற்ற சிறப்பை; வரலாற்றை. தெண் கடல் உற்றுண் பெருநசை - தெளிந்த கடலை அடைந்து அதனை முழுவதும் உண்ணுதல் வேண்டும் என்னும் பேராசையை யுடைய. (தண் கடல் ஊற்றும் - குளிர்ந்த கடலை வாயாலெடுத்துக் கவிழ்க்கும்). சுணங்கனை - நாயை.

௭. சொல்லப்பட்ட பொருளின் சிறப்பினாலே, அப்பொருட்குப் போர்வையாக அமைந்த சொல்லைப் பலரும் ஏற்பர் (அதுபோல). மேன்மையால் - பொருளின் சிறப்பினால். மெய்ப்பொருட்கு உரியார் - உண்மைப் பொருளை உணர்தற்குரிய அறிஞர்கள்.

௮. சேயவன் - சிவந்த திருமேனியுடைய தில்லைக்கூத்தன்; அன்பரல்லாதார்க்குத் தூரத்திலிருப்பவன் என்று கொள்ளினுமாம். அம்பலம் - சபையை. செய்ய - சிவந்த. அணி - வேய்ந்த. நீடூழி பார் ஆய சீர் - நீண்ட காலம் உலகில் நிறைந்த புகழினையுடைய. மேய இவ்வுரை-(திருவருளால்) பொருந்திய இப்புராணத்தை. அவை விரும்பும். அரசு அவை - இராஜ சபை; வேந்துரிமை பெற்ற தலைமையவை. அநபாயன்-அபாய ரகிதன் என்பர் பழைய குறிப்புரைக்காரர். இம்மன்னனைச் சேக்கிழார் பெருமான் பலவிடங்களில் பலவாறு புகழ்ந்து கூறுகிறார். இவனைக் கங்கைகொண்ட சோழன் (இராசேந்திர சோழன்) என்றும், முதலாவது குலோத்துங்கன் என்றும், இரண்டாவது குலோத்துங்கன் என்றும் ஆராய்ச்சிக்காரர் கூறுப.

௯. அறிவரும் அருளின் நீர்மைத் திருத்தொண்டு - அறிதற்கியலாத அருட்டன்மையுடைய நாயன்மார்களின் திருத்தொண்டினை. தெருள் இல் நீர் -

பா - ம்—* தண்கடல். † ஊற்றும்; ஊற்ற ; ஊற்றுண்.
‡ அருளு நீர்மை......தெருளு நீரிது.

வெருளில் மெய்ம்மொழி வானிழல் கூறிய
பொருளின் ஆகும் எனப்புகல் வாம்அன்றே.

## நூற்பெயர்

### வேறு

இங்கிதன் நாமங் கூறின் இவ்வுல கத்து முன்னாள்
தங்கிருள் இரண்டில் மாக்கள் சிந்தையுள் சார்ந்து நின்ற
பொங்கிய இருளை ஏனைப் புறஇருள் போக்கு கின்ற
செங்கதி ரவன்போல் நீக்கும் திருத்தொண்டர் புராணம் என்பாம்.

ஆ திருவிருத்தம் ௧௦.

---

தெளிவு இல்லாத அதாவது மெய்யுணர்வு இல்லாத நீர். ஆம் எனில் - ஆகுமோ என்றால். வெருளில் - மயக்கமில்லாத. மெய்ம்மொழி - "உலகெலாம்" என்னும் மெய்ம்மொழியை. வானிழல் இயலும் பிறவும் மேலே கூறப்பட்டுள்ளன. பொருளின் ஆகும் - முதலால் ஆகும். மெய்ம்மொழியையுடைய வானிழல் எனக் கொண்டு, அது கூறிய "உலகெலாம்" என்னும் பொருளாலாகுமென்று கூறுதலு மொன்று. மெய்ம்மொழிவான் நிழல் என்று கொண்டு வேதாகமங்களை அருளிய ஆண்டவன் அசரீரி என்று பொருளுரைப்போரு முளர். அவர் 'பொருள்' என்பதற்குத் திருத்தொண்டத் தொகையைக் கூறுவர்.

௧௦. திருத்தொண்டர் புராணம் - திருத்தொண்டத் தொகை அருளிய வன்றொண்டர் புராணமென்றும், நாயன்மார்களாகிய திருத்தொண்டர்கள் புராணமென்றுங் கூறுப. திருத்தொண்டர் என்பதற்கு வன்றொண்டர் என்று பொருள் கூறுவோர், வன்றொண்டப் பெருமான் வரலாற்றைக் கூறுமுகத்தான், அப்பெருமான் அருளிய திருத்தொண்டத் தொகையை முதலாக் கொண்டு, கதைக்குள் கதைகளாக நாயன்மார்களின் வரலாறுகளை ஆசிரியர் முறை முறையே கிளந்து கூறியருளினரென்று தங்கோள் நிறுத்துவர். இந்நூலின் பாட்டுடைத் தலைவர் வன்றொண்டரென்பது நாட்டுச்சிறப்பு, நகரச்சிறப்பு, சருக்க முடிவு தோறுமுள்ள வன்றொண்டர் வணக்கம் முதலியவாற்றானும், பிறவாற்றானும் நனி விளங்கும். திருத்தொண்டர் புராணமென்னும் இந்நூற்குப் பெரியபுராணம் என்னும் மற்றுமொரு திருப்பெயருண்டு. அதனை "எடுக்கு மாக்கதை" என்னுந் திருப்பாட்டிற் போந்துள்ள மாக்கதை யுணர்த்துமென்ப. பெரியபுராணம் - பெருமையையுடைய புராணம். எவர் பெருமையை? திருத்தொண்டர் பெருமையை யென்க. பெரியர் புராணமெனக் கொள்வோருமுளர். பெரியர் - திருத்தொண்டர். பெரிய புராணமென்னுந் திருத்தொண்டர் புராணமென்றும், திருத்தொண்டர் புராணமென்னும் பெரிய புராணமென்றும் இக்காவியம் வழங்கப்படுகிறது. புராணம் - பழைய வரலாறு. முன்னாள் - தொன்று தொட்டு. இருள் இரண்டில் - அகஇருள் புறஇருள் என்னும் இரண்டில். மாக்கள்......இருளை - அகஇருளை; அஞ்ஞானத்தை. அஞ்ஞானமுடையார் மாக்கள். இவர் ஐயறிவினர். அஞ்ஞானத்தை அழிக்கும் ஆறுவது அறிவு விளங்கப் பெற்றோர் மக்கள். இவ்வேற்றுமை தோன்ற "மாக்கள்" என்றார். ஏனை புற இருள் - மற்றைப் பூதஇருள். செங்கதிரவன் - சிவந்த கிரணங்களையுடைய சூரியன். "பொங்கிய இருளை நீக்கும் திருத்தொண்டர் புராணம்" என்று இயைக்க. புறவிருளைச் சூரியன் நீக்குவதுபோல அகவிருளை இத்திருத்தொண்டர் புராணம் நீக்கும் என்றவாறு. திருத்தொண்டர் புராணம் அகஞாயிறு ஆதல் காண்க.

முதற்காண்டம்

க. திருமலைச் சருக்கம்

# திருமலைச் சிறப்பு

பொன்னின் வெண்டிரு நீறு புனைந்தெனப்
பன்னு நீள்பனி மால்வரைப் பாலது
தன்னை யார்க்கும் அறிவரி யானென்றும்
மன்னி வாழ்கயி லைத்திரு மாமலை.

அண்ணல் வீற்றிருக் கப்பெற்ற தாதலின்
நண்ணு மூன்றுல குந்நான் மறைகளும்
எண்ணில் மாதவஞ் செய்யவந் தெய்திய
புண்ணி யந்திரண் டுள்ளது போல்வது. உ

க. பொன்னின் - செம்பொன்னிலே. பனிமால்வரை பாலது - இமயமலையின் இடத்தது. உலகிலுள்ள மலைகளிலெல்லாம் இமயம் உயர்ந்ததாகலானும், அதன் அகலமும் நீளமும் உயரமும் காண்போரை மயங்கச் செய்தலானும் "மால்வரை" என்றார். மால் - மயக்கம். இமயக்குவட்டை ஞாயிற்றின் ஒளி தாக்கி அதைப் பொன்னிற மாகச் செய்தலின் "பொன்னின்" என்றார். "பொற்கோட் டிமயம்"—புறநானூறு. தன்னை யார்க்கும் அறிவரியான் - சிவபெருமான். பொன்னிலே வெண்ணீறு அணிந்தாற்போல இமயத்தில் கயிலை பொலிகிறதென்க. பொற்கோட் டிமயம் செம்மேனிச் சிவத்தையும், வெண் கயிலை சிவத்தின்மீது பூக்கும் வெண்ணீற்றையும் உணர்த்தல் குறிப்பு. "செம் பொன் வரைமேல் பசும்பொ னெழுத்திட்டதே போல்"—சிந்தாமணி.

உ. அண்ணல் - பெருமையிற் சிறந்தவன்; சிவபெருமான். மூன்று உலகம் - சுவர்க்க மத்திய பாதலம். நான்மறைகள் - தைத்திரியம், பௌடியம், தலவகாரம், சாமம்; இவை பின்னே இருக்கு யசுர் சாமம் அதர்வணம் என்று வகுக்கப்பட்டன. தலவகாரம் சந்தோகமெனவும்படும். "சந்தோகா பௌழியா தைத்திரியா சாம வேதியனே"—பெரிய திருமொழி. "நான்கு கூறுமாய் மறைந்த பொருளு முடைமையான் 'நான்மறை' என்றார். அவை தைத்திரியமும் பௌடியமும் தலவகாரமும் சாமவேதமுமாம். இனி, இருக்கும் யசுவும் சாமமும் அதர்வணமும் என்பாருமுளர்; அது பொருந்தாது. இவர் இந்நூல் (தொல்காப்பியம்) செய்த பின்னர் வேதவியாதர் சில் வாழ்நாட் சிற்றறிவினோருணர்தற்கு நான்கு கூறாகச் செய்தாராகலின்"—நச்சினார்க்கினியம். புண்ணியம் - வெண்மையைக் குறிப்பது; தூய்மைக்கு அறிகுறி.

நிலவும் எண்ணில் தலங்களும் நீடொளி
இலகு தண்தளிர் ஆகவெ ழுந்ததோர்
உலகம் என்னும் ஒளிமணி வல்லிமேல்
மலரும் வெண்மலர் போல்வதம் மால்வரை.

மேன்மை நான்மறை நாதமும் விஞ்சையர்
கான வீணையின் ஓசையும் காரெதிர்
தான மாக்கள் முழக்கமும் தாவில்சீர்
வான துந்துபி ஆர்ப்பும் மருங்கெலாம்.

பனிவி சும்பில் அமரர் பணிந்துசூழ்
அனித கோடி அணிமுடி மாலையும்
புனித கற்பகப் பொன்னரி மாலையும்
முனிவர் அஞ்சலி மாலையும் முன்னெலாம்.

நீடு தேவர் நிலைகளும் வேண்டிடின்
நாடும் ஐம்பெரும் பூதமும் நாட்டுவ
கோடி கோடி குறட்சிறு பூதங்கள்
பாடி ஆடும் பரப்பது பாங்கெலாம். ௬

---

௩. நிலவும் - விளங்கும். உலகம், தலங்கள், கயிலை - இவைகள் முறையே கொடியாகவும், தளிராகவும், வெண்மலராகவும் உருவகிக்கப் பட்டன. அம் மால் வரை - அப்பெருமை பொருந்திய மலை.

௪. மருங்கெலாம் - பக்கங்களிலெல்லாம். நாதமும் - ஒலியும். விஞ்ஞையர் - வித்தியாதரர். கானம் - பாட்டு; வீணைகானம் என்க. கார் எதிர் தான மாக்கள் - மேகத்துக்கு மாறாக மதம் பொழிகின்ற யானைகள்; காரைத் தமது இனமெனக் கருதி அதற்கு எதிரிலே......; காருக்கு ஒப்பாக......எனினும் அமையும். தாவில் சீர் - கெடாத சிறப்பு; குறைவற்றது. வான துந்துபி - தேவ துந்துபி; தெய்வ வாச்சியம். ஆர்ப்பும் - ஆரவாரமும்.

௫. பனி விசும்பில் அமரர் - குளிர்ச்சி பொருந்திய விண்ணிலே வாழுந் தேவர்கள். அனிதம் - எண்ணிறந்த. அளவில்லாத கோடி கோடி என்றபடி. முடிமாலையும் - முடிவரிசையும். அத்தேவர்கள் அணிந்த பொன்னரி மாலையும். பொன்னரிமாலை - வாடாமாலை. அஞ்சலி மாலையும் - குவித்த கைகளின் ஒழுங்கும்.

௬. நிலைகளும் - பதங்களும். நாட்டுவன - படைக்க வல்லனவாகிய. கோடி கோடி - எண்ணில் கோடி. குறள் - குள்ளம். பரப்பது - பரந்த இடத்தை யுடையது. குறட் சிறு பூதகணங்கள் விரும்பினால் வேறு வேறு நிலைகளையும், ஐம்பெரும் பூதங்களையும் படைக்கும் ஆற்றல் வாய்ந்தன என்க.

நாய கன்கழல் சேவிக்க நான்முகன்
மேய காலம் அலாமையின் மீண்டவன்
தூய மால்வரைச் சோதியில் மூழ்கியொன்
றூய அன்னமும் காணு தயர்க்குமால். ௭

**வேறு**

*காதில்வெண் குழையோன் கழல்தொழ நெடியோன் காலம் பார்த் திருந்ததும் அறியான், சோதிவெண் கயிலைத் தாழ்வரை முழையில் துதிக்கையோன் ஊர்தியைக் கண்டு, மீதெழு பண்டைச் †செஞ்சுடர் இன்று வெண்சுட ரானதென் றதன்கீழ், ஆதியே னமதாய் இடக்கலுற் றனென் றதனைவந் தணைதரும் கலுழன். ௮

*அரம்பைய ராடல் முழவுடன் மருங்கில் அருவிகள் எதிரெதிர் முழங்க, வரம்பெறுங் காதல் மனத்துடன் தெய்வ மதுமலர் இருகையும் ஏந்தி, நிரந்தரம் மிடைந்த விமானசோ பான நீடுயர் வழியினுல் ஏறிப், புரந்தரன் முதலாம் கடவுளர் போற்றப் பொலிவதத் திருமலைப் புறம்பு. ௯

---

௭. மேயகாலம் - இயைந்த சமயம். அயர்க்கும் - மனந்தளர்வான். உம்மை இறந்தது தழீயது; சிவபெருமானைக் காணுமையையும் தழீஇ நிற்றலின். கயிலையும் வெண்மை; அவ்வெள்ளொளியில் மூழ்கிய அன்னமும் வெண்மை. தூய - வெண்மைக் குறிப்பு.

௮. வெண்குழையோன் - சிவபெருமான். நெடியோன் - திருமால். முழையில் - குகையில். துதிக்கையோன் ஊர்தியை - யானைமுகக் கடவுளின் வாகனமாகிய பெருச்சாளியை. பண்டைச் செஞ்சுடர் என்றது முன்னுளில் முகுந்தனும் முண்டகனும் முனிந்து போர்புரிந்த காலத்தில் அவர்களை ஆட்கொள்ளும் பொருட்டுச் சிவபெருமான் கொண்ட செஞ் சுடருருவாம் அக்கினி மலையை. வெண்சுடர் என்றது கயிலாய மலையை. ஏனம் - பன்றி. *இடக்கலுற்றுன் - பூமியைத் தோண்டச் செல்கிறுன். கலுழன் - கருடன். கலுழன், பெருச்சாளியைப் பன்றியெனக் கொண்டு மயங்கி அணைதரும் என்க.

௯. அரம்பையர் - தெய்வப் பெண்கள். முழவு - ஆடற்குரிய ஒருவகைத் தோற் கருவி; மத்தளம். தெய்வ மது மலர் - கற்பகத்தின் தேன்பொருந்திய பூக்களை. நிரந்தரம் மிடைந்த - எப்பொழுதும் இடையீடின்றி நெருங்கிய. விமான சோபானம் - விமானங்களின் கீழுள்ள படிகளின். புரந்தரன் - தேவேந்திரன்.

* இவை சிற்சில பிரதிகளிலில்லை. "காதில் வெண்குழையோன்" என்னும் பாடல் மட்டும் வெள்ளிப்பாடல் என்று காஞ்சி சபாபதி முதலியார் பதிப்பில் குறிக்கப்பட்டிருக்கிறது. பா - ம் — † செழுஞ்சுடர்.

*வேதநான் முகன்மால் புரந்தரன் முதலாம் விண்ணவர் எண்ணிலார் மற்றும், காதலால் மிடைந்த முதற்பெருந் தடையாம் கதிர்மணிக் கோபுரத் துள்ளான், பூதவே தாளப் பெருங்கண நாதர் போற்றிடப் பொதுவில் நின்றுடும், நாதனூர் ஆதி தேவனூர் கோயில் நாயகன் நந்தியெம் பெருமான். ௧0

*நெற்றியிற் கண்ணர் நாற்பெருந் தோளர் நீறணி மேனியர் அனேகர், பெற்றமேல் கொண்ட தம்பிரான் அடியார் பிஞ்ஞகன் தன்னருள் பெறுவார், மற்றவர்க் கெல்லாம் தலைமையாம் பணியும் மலர்க்கையில் சுரிகையும் பிரம்பும், கற்றைவார் சடையான் அருளினுல் பெற்றான் காப்பதக் கயிலைமால் வரைதான். ௧௧

*கையில்மான் மழுவர் கங்கைசூழ் சடையில் கதிரிளம் பிறைநறுங் கண்ணி, ஐயர்வீற் றிருக்குந் தன்மையி னாலும் அளப்பரும் பெருமையி னாலும், மெய்யொளி தழைக்குந் தூய்மையி னாலும் வென்றிவெண் குடைஅந பாயன், செய்யகோல் அபயன் திருமனத் தோங்கும் திருக்கயி லாயநீள் சிலம்பு. ௧௨

**வேறு**

அன்ன தன்திருத் தாழ்வரை யின்னிடத்
தின்ன தன்மையன் என்றறி யாச்சிவன்

---

௧0. பொதுவில் - சிற்சபையில். நந்தியெம்பெருமான் முதற்றடையாகிய கோபுரத்துள்ளார்.

௧௧. பெற்ற மேல்கொண்ட தம்பிரான் - இடபத்தை வாகனமாக் கொண்ட சிவபெருமான். பிஞ்ஞகன் - தலைக்கோல முடையவன்; சிவபெருமான். சுரிகையும் - உடைவாளையும். சுரிகையும்...பெற்றான் - நந்தி தேவர்.

௧௨. கண்ணி - கொண்டைமாலை; கொன்றைமாலை யென்ப; பிறையாகிய நறுங்கண்ணி எனினுமாம். செய்யகோல் - செங்கோல். அபயன் - பயமில்லாதவன். திருமனத்து - திருவுள்ளம்போல. அத்து உவமை யுணர்த்துஞ் சொல்லாய் வருதற்குத் "துணைமல ரெழுநீலத் தேந்தெழின் மலருண்கண்" என்பதை (கலித்தொகை) ஆசிரியர் இளம்பூரணர் தொல்காப்பிய உவம இயலில் காட்டியுள்ளார். சிலம்பு - மலை.

* இவை சிற்சில பிரதிகளிலில்லை.

தன்னை யேயுணர்ந் தார்வந் தழைக்கின்றான்
உன்ன ருஞ்சீர் உபமன் னியமுனி. ௧௩

யாத வன்துவ ரைக்கிறை யாகிய
மாத வன்முடி மேலடி வைத்தவன்
பூத நாதன் பொருவருந் தொண்டினுக்
காதி அந்தம் இலாமை அடைந்தவன். ௧௪

அத்தர் தந்த அருட்பாற் கடலுண்டு
சித்தம் ஆர்ந்து தெவிட்டி வளர்ந்தவன்
பத்த ராய முனிவர்பல் ஆயிரர்
சுத்த யோகிகள் சூழ இருந்துழி. ௧௫

அங்கண் ஓரொளி ஆயிர ஞாயிறு
பொங்கு பேரொளி போன்றுமுன் தோன்றிடத்
துங்க மாதவர் சூழ்ந்திருந் தாரெலாம்
"இங்கி தென்கொல் அதிசயம்" என்றலும். ௧௬

---

௧௩. ஆர்வம் - அன்பு (கருதியதொன்றன்மீது தோன்றும் பற்றுள்ளம்). ஆண்டவன் உணரக்கூடியவனும் ஓதற் கரியவனு முள்ளவனுதலின், "உணர்ந்து ஆர்வந் தழைக்கின்றான்" என்றார். முனிவர் ஆண்டவனுண்மையுணர்ந்து, அதனுலெழும் அன்பு பெருகப் பெருக அதனிடை மூழ்கி நிற்பவரென்க. "இன்ன தன்மைய னென்றறி யொண்ணு எம்மானை."—சுந்தரர்.

௧௪. யாதவன் - இடையன். துவரைக்கு இறையாகிய மாதவன் - துவாரகைக்கு அரசனுகிய கண்ணபிரான். முடிமேல் அடி வைத்தவன் - திருவடி தீக்கை செய்தவன். பூத நாதன் - சர்வ பூதங்கட்கும் (எல்லா உயிர்கட்கும்) இறைவன். ஆதி - முதல்; வைப்பு. அந்தம் - முடிவு; இறப்பு. தொண்டினுக்குத் தோற்றமும் இறுதியும் இல்லாமை தெளிந்து அதனை எப்பொழுதும் ஆற்றும் பேறு பெற்றவர் என்றுங் கொள்ளலாம்.

௧௫. அத்தர் - சிவபெருமான். உபமன்னிய முனிவர் குழவியாய் அழுத ஞான்று சிவபெருமான் திருப்பாற்கடல் தந்தருளியது புராண கதை. ஆண்டவன் அளித்தது திருவருளாகிய பாற்கடல் என்பது உட்பொருள். முனிவர் உண்டது திருவருட் பாலாதலினுல் "சித்தம் ஆர்ந்து" என்றார். ஆர்ந்து - மகிழ்ந்து; நிறைந்து; நுகர்ந்து. "பாலனுக்குப் பாற்கடல் அன்று ஈந்தான் தன்னை"—தேவாரம். "பாலுக்குப் பாலகன் வேண்டி அழுதிடப் பாற்கடல் ஈந்தபிரான்"—திருப்பல்லாண்டு. சுத்த யோகிகள் - அமல யோகிகள். இருந்துழி - இருந்த சமயம்.

௧௬. ஆயிர ஞாயிறு - பல்லாயிரஞ் சூரியர்கள். ஞானவுடல் ஒளியாய்த் தோன்றல் இயல்பு.

அந்தி வான்மதி சூடிய அண்ணல்தாள்
சிந்தி யாஉணர்ந் தம்முனி "தென்திசை
வந்த நாவலர் கோன்புகழ் வன்தொண்டன்
எந்தை யார்அரு ளால்அணை வான்" என. கள

கைகள் கூப்பித் தொழுதெழுந் தத்திசை
மெய்யில் ஆனந்த வாரி விரவிடச்
செய்ய நீள்சடை மாமுனி செல்வுழி
ஐயம் நீங்க வினவுவோர் அந்தணர். கஅ

"சம்பு வின்அடித் தாமரைப் போதலால்
எம்பி ரான்இறைஞ் சாயிஃ தென்" எனத்
"தம்பி ரானைத்தன் உள்ளம் தழீஇயவன்
நம்பி ஆரூரன் நாம்தொழும் தன்மையான்". கக

என்று கூற இறைஞ்சி இயம்புவார்
"வென்ற பேரொளி யார்செய் விழுத்தவம்
நன்று கேட்க விரும்பும் நசையினேம்
இன்றெ மக்குரை செய்தருள்" என்றலும். உ0

---

கள. சிந்தியா உணர்ந்து - சிந்தித்துத் தெளிந்து ; தியான முதிர்ச்சியால் கூடிய சமாதியாலுணர்ந்து. நாவலர்கோன் - வன்றொண்டர் ; சுந்தரமூர்த்தி சுவாமிகள். எந்தையார் - சிவபெருமான்.

கஅ. அத்திசை - தென்திசை. விரவிய - பெருக ; கலக்க. செய்ய - சிவந்த. மாமுனி - உபமன்னிய மாமுனிவர். அந்தணர் - (அங்கே சூழவிருந்த) முனிவரர்கள் ; "அந்தண ரென்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ் - செந் தண்மை பூண்டொழுக லான்"—திருவள்ளுவர். "அழகிய தட்பத்தை யுடையவர்"—பரிமேலழகர். "அந்தத்தை அணவுவார் அந்தணர் என்றது வேதாந் தத்தையே நோக்குவார் என்றவாறு". "வேதாந்தத்தை எக்காலமும் பார்ப்பார்"— நச்சினார்க்கினியர்.

கக. சம்புவின் - சிவபிரானுடைய. தாமரைப் போது அல்லால் - தாமரை மலர் போன்ற திருவடியை அல்லாமல். எம்பிரான் - எம்பிரானே! (உபமன்னிய முனியே). இறைஞ்சாய் - (பிறவற்றை) வணங்க மாட்டாய். தம்பிரானை - சிவ பெருமானை. தழீஇயவனாகிய நம்பியாரூரன். நாம் - உளப்பாட்டுத் தன்மைப் பன்மை. தம்பிரானை உள்ளந் தழீஇ நிற்பவரைத் தம்பிரான் என்றே கொண்டு வந்தனை வழிபாடுகள் செய்வது மரபு.

உ0. பேரொளியார் - சுந்தரமூர்த்தி சுவாமிகள்; ஐம்புலன்களை வென்று பேரொளியானவர்; ஒளிகளெல்லாவற்றையும் வென்ற பேரொளியார் எனினு மாம். செய்விழுத்தவம் - செய்த சீரிய தவம். நசையினேம் - வேட்கை யுடையேம்.

உள்ள வண்ணம் முனிவன் உரைசெய்வான்
"வெள்ள நீர்ச்சடை மெய்ப்பொரு ளாகிய
வள்ளல் சாத்து மதுமலர் மாலையும்
அள்ளு நீறும் எடுத்தணை வானுளன். ௨௧

அன்ன வன்பெயர் ஆலால சுந்தரன்
முன்னம் ஆங்கொரு நாள்முதல் வன்தனக்
கின்ன ஆமெனும் நாண்மலர் கொய்திடத்
துன்னி னான்நந் தனவனச் சூழலில். ௨௨

அங்கு *முன்னெமை ஆளுடை நாயகி
கொங்கு சேர்குழற் காமலர் கொய்திடத்
திங்கள் வாள்முகச் சேடியர் எய்தினார்
பொங்கு கின்ற கவினுடைப் பூவைமார். ௨௩

அந்த மில்சீர் அனிந்திதை ஆய்குழல்
கந்த மாலைக் கமலினி என்பவர்
கொந்து கொண்ட திருமலர் கொய்வுழி
வந்து வானவர் ஈசர் அருளென. ௨௪

---

௨௧. வள்ளல் - சிவபெருமான். எடுத்து அணைவான் ஒருவன் உளன்.

௨௨. முதல்வன் தனக்கு - சிவபெருமானுக்கு. இன்ன ஆம் என்னும் - இன்ன மலர்கள் ஆகும் என்னும்படியான. நாண் மலர் - அன்றலர்ந்த புதிய மலர்கள். துன்னினான் - சென்றான். சூழலில்-சோலையில்; சுற்றுப் பக்கத்தில்.

௨௩. ஆளுடை நாயகி - பார்வதி தேவியார். கொங்கு சேர் குழற்கு ஆம் - இயற்கை மணம் வீசும் கூந்தலுக்கு ஆகும். உமா தேவியார்க்கு ஞானப்பூங் கோதை என்றொரு பெயருண்டு. திங்கள் வாள்முகச் சேடியர் - முழுமதி போன்று ஒளி காலும் முகத்தினையுடைய தோழிப் பெண்கள். கவினுடை - அழகுடைய. பூவைமார் - நாகணவாய்ப் பறவையின் மொழி யொத்தவர்கள். பூவைமாராகிய சேடியர்.

௨௪. அந்தம் இல் - அழிவில்லாத. சீர்-அழகு. ஆய் குழல் - அழகிய கூந்தல்; ஆய்ந்து சிக்கெடுக்கப்பட்ட கூந்தல். கந்தம் - மணம். கொந்து - கொத்துக் கள். கொய்வுழி - கொய்யும்போது. வானவர் ஈசர் - தேவர் நாயகராகிய சிவபெரு மான். ஈசர் அருள் என்பதன் விளக்கம் தடுத்தாட்கொண்ட புராணத்துட் காண்க. "ஈசனாருள் எவ்வழிச் சென்றதே" முதலிய பல வாசகங்களை நோக்குக. * * * என்பவர் * * * ஈசர் அருளென வந்து * * * கொய்வுழி என்றியைத்தல் ஒருவிதம். வருஞ் செய்யுளுடன் தொடர்புகொண்டியைத்தல் மற்றொரு விதம். அது, "* * * போதுவான் வந்து, 'வானவர் ஈசர் அரு ளென' அவர் (சேடியர்)மேல் மனம் போக்கிட" என்றியைப்பது.

பா - ம்—* முன்னரே.

மாத வஞ்செய்த தென்திசை வாழ்ந்திடத்
தீதி லாத்திருத் தொண்டத் தொகைதரப்
போது வான்அவர் மேல்மனம் போக்கிடக்
காதல் மாதருங் காட்சியில் கண்ணினர். உரு

முன்னம் ஆங்கவன் மொய்ம்முகை நாண்மலர்
என்னை யாட்கொண்ட ஈசனுக் கேய்வன
பன்ம லர்கொய்து செல்லப் பனிமலர்
அன்னம் அன்னவ ருங்கொண் டகன்றபின். உசு

ஆதி மூர்த்தி அவன்திறம் நோக்கியே
'மாதர் மேல்மனம் வைத்தனை, தென்புவி
மீது தோன்றிஅம் மெல்லிய லாருடன்
காதல் இன்பங் கலந்தணை வாய்'என. உஎ

கைக ளஞ்சலி கூப்பிக் கலங்கினன்
'செய்ய சேவடி நீங்குஞ் சிறுமையேன்
மையல் மானுட மாய்மயங் கும்வழி
ஐய னே!தடுத் தாண்டருள் செய்'என. உஅ

---

உரு. போதுவான் - போவாராகிய ஆலால சுந்தரர். அவர் - சேடியர். காட்சியில் கண்ணினர் - காட்சியில் கண்ணுடையாரானர். ஆலால சுந்தரர் காட்சியே அவர்கள் கண்ணின்கண் நின்றது ; பிற நிற்கவில்லை என்க.

உசு. மொய்ம்முகை நாண்மலர் - நெருங்கிய அரும்புகளா யிருந்து அன்றலர்ந்த மலர்களில். ஏய்வன - பொருந்துவனவாகிய. பனிமலர்...கொண்டு அகன்றபின். ஆலால சுந்தரர் உள்ளங்கவர அன்னம்போல் நடந்தன ரென்பது குறிப்பு.

உஎ. ஆதிமூர்த்தி - சிவபெருமான். அவன்திறம் - ஆலால சுந்தரர் கொண்ட எண்ணத்தை ; கொள்கையை. நோக்கியே - கருதியே. அணைவாய் - (இங்கே) சேர்வாயாக. கயிலாயம் சுத்த புவனமாதலானும், சுந்தரரும் மகளிரிருவரும் ஆண்டுத் தாங்கியுள்ள உடலங்கள் எண்ண நிகழ்ச்சிக்கேயன்றிச் செயல் நிகழ்ச்சிக்கு இடந்தாராமையானும், பிரகிருதி யுலகில் பிரகிருதி யுடல் தாங்கி, எண்ணத்தைச் செயலில் நிறைவேற்றுமாறு ஆணை பிறந்தது. எண்ணம் பிறவிக்கு வித்து என்பது ஈண்டு உன்னற்பாலது.

உஅ. செய்ய - அழகிய. மையல் - அறியாமை மயக்கம். எண்ணம் பிறவிக்கு வித்து என்பதையுணர்ந்து, கலங்கி, அதனால் பிறவி தாங்கத் திருவருளாணை பிறந்தது நியதியென்று தெளிந்து, ஆணையை மறாது ஏற்று, ஆண்டவன் அருட்கடலாகலான் அவனை வேண்டுதல் செய்யத்துணிந்து, தாம் மானுடமாய் மயங்கும் வேளையில் தம்மைத் தடுத்தாட்கொள்ளுமாறு ஆலால சுந்தரர் ஆண்டவ

பா - ம்—* போதுவார்.

*அங்க ணாளன் அதற்கருள் செய்தபின்
நங்கை மாருடன் நம்பிமற் றத்திசை
தங்கு தோற்றத்தில் இன்புற்றுச் சாரு"மென்
றங்க வன்செயல் எல்லாம் அறைந்தனன். ௨௯

அந்த ணாளரும் ஆங்கது கேட்டவர்
"பந்த மானுடப் பாற்படு தென்திசை
இந்த வான்திசை எட்டினும் மேற்பட
வந்த புண்ணியம் யாதெ"ன மாதவன். ௩௦

"பொருவ ருந்தவத் தான்புலிக் காலனும்
அருமு னியெந்தை அர்ச்சித்தும் உள்ளது
பெருமை சேர்பெரும் பற்றப் புலியூரென்
றொருமை யாளர்வைப் பாம்பதி ஓங்குமால். ௩௧

அத்தி ருப்பதி யின்னமை ஆளுடை
மெய்த்த வக்கொடி காண விருப்புடன்
†அத்தன் நீடிய அம்பலத் தாடுமற்
றித்தி றம்பெற லாந்திசை எத்திசை. ௩௨

---

னிடம் விண்ணப்பஞ் செய்துகொண்டனர்; பிராரத்த வினையை அனுபவிக்கும் போது ஆகாமிய மேறாதிருப்பதற்குத் திருவருட்டுணையை நாடுதல் மெய்யுணர்வு பெறுதற்குரிய வழியாகும்.

௨௯. அங்கணாளன் - அழகிய கண்ணையுடைய அதாவது கண்ணோட்ட முடைய சிவபெருமான். நங்கைமாருடன்-அனிந்திதை கமலினி என்பவருடன். நம்பி - சுந்தரமூர்த்தி. நங்கை - மகளிரிற் சிறந்தவள். நம்பி - ஆடவரிற் சிறந்தவன். அத்திசை - தென்திசை. தோற்றத்தில் - மானுட உடலில். "இம்மண்ணுலகில் நானுக வகுத்தனை"—சுந்தரர். சாரும் - இப்பொழுது திரும்பி வருகிறார். அவன் செயலெலாம் - வன்றொண்டர் வரலாறுகளெல்லாம்.

௩௦. அந்தணாளரும் - முனிவர்களும். மாதவன் - உபமன்னிய முனிவர்.

௩௧. பொருவரும் - ஒப்பற்ற. புலிக்காலனும் அருமுனி எந்தை - வியாக்கிர பாதரென்னும் என் தந்தை. பெரும்பற்றப் புலியூர் - தன்னை நோக்கும் உயிர்கட்குத் தன்னிடத்தே பெரும் பற்றை விளைக்கும் புலியூர்; சிதம்பரம். ஒருமையாளர் - புலன்களை ஒரு வழியில் நிறுத்தி மனதை ஒருமையில் நிறுத்துஞ் சீவன்முத்தர்கள். வைப்பு - இருப்பிடம்.

௩௨. மெய்த்தவக் கொடி - சிவகாமவல்லி. அத்தன் - சிவபெருமான். இத்திறம் - இத்தன்மை; இம்மேன்மை.

பா - ம்—*அங்கணுதன். † நித்தன்; நித்தம்.

பூதம் யாவையின் உள்ளலர் போதென
வேத மூலம் வெளிப்படு மேதினிக்
காதல் மங்கை இதய கமலமாம்
மாதொர் பாகனூர் ஆரூர் மலர்ந்ததால். ௩௩

எம்பி ராட்டிஇவ் வேழுல கீன்றவள்
தம்பி ரானைத் தனித்தவத் தாலெய்திக்
கம்பை யாற்றில் வழிபடு காஞ்சியென்
றும்பர் போற்றும் பதியும் உடையது. ௩௪

நங்கள் நாதனும் நந்தி தவஞ்செய்து
பொங்கு நீடருள் எய்திய பொற்பது
கங்கை வேணி மலரக் கனல்மலர்
செங்கை யாளர் ஐயாறுந் திகழ்வது. ௩௫

தேசம் எல்லாம் விளக்கிய தென்திசை
ஈசர் தோணி புரத்துடன் எங்கணும்
பூச னைக்குப் பொருந்தும் இடம்பல
பேசில் அத்திசை ஒவ்வா பிறதிசை" ௩௬

என்று மாமுனி வன்தொண்டர் செய்கையை
அன்று சொன்ன படியால் அடியவர்
†தொன்று சீர்த்திருத் தொண்டத் தொகைவிரி
இன்றென் ஆதர வால்இங் கியம்புகேன். ௩௭

மற்றி தற்குப் பதிகம்வன் தொண்டர்தாம்
புற்றி டத்தெம் ‡புராணர் அருளினால்

---

௩௩. பூதம் யாவையின் உள் அலர் போது என - எல்லா உயிர்களிடத்தும் அலர்கின்ற நெஞ்சத்தாமரை (ஹிருதய கமலம்) போல. வேத மூலம் - வேத வித்தாகிய சிவம் ; பிரணவமுமாம். மேதினிக் காதல் மங்கை - பூமிதேவி. இதய கமலமாம் ஆரூர் மலர்ந்தது.

௩௪. தம்பிரானை - சிவபெருமானை. உம்பர் - தேவர்கள்.

௩௫. நந்தி குருமூர்த்தியாதலான் "நங்கள் நாதனும் நந்தி" என்றார். பொற்பது - பொலிவினையுடையது. வேணி - சடை. கனல் மலர் செங்கையாளர் - நெருப்பு மலர்கின்ற அழகிய கையையுடைய சிவபெருமான்.

௩௬. தென்திசையில். தோணிபுரம் - சீகாழி.

௩௭. தொன்று - பழைய. என் ஆதரவால் - என்வேட்கையால்.

௩௮. புற்றிடத்து-திருவாரூரிற் புற்றிடங் கொண்ட. புராணர் - பழையவர் ; தியாகேசர். சிவபெருமான் திருவாரூரைக் கோயில் கொண்ட நாள் காலங்கடந்தது.

பா - ம்—*பூதம் யாவையும். † துன்று. ‡ பிராணர்.

சொற்ற மெய்த்திருத் தொண்டத் தொகையெனப்
பெற்ற நற்பதி கம்தொழப் பெற்றதாம். ௩௮

அந்த மெய்ப்பதி கத்தடி யார்களை
நந்த நாதனும் நம்பியாண் டார்நம்பி
புந்தி ஆரப் புகன்ற வகையினால்
வந்த வாறு வழாமல் இயம்புவாம். ௩௯

உலகம் உய்யவும் சைவநின் றோங்கவும்
அலகில் சீர்நம்பி ஆரூரர் பாடிய
நிலவு தொண்டர்தங் கூட்ட நிறைந்துறை
குலவு தண்புனல் நாட்டணி கூறுவாம். ௪௦

ஆ. திருவிருத்தம் ௫௦.

---

உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியராயுள்ள சிவபெருமான், உயிர்கள்மீது வைத்த கைம்மாறற்ற பெருங்கருணையான், திருவருளையே திருமேனியாக் கொண்டு, நங்கை பங்கராய் வீற்றிருந்தருளும் பேறு பெற்றிருப்பது திருக் கயிலாயமலை. அத்திருமலை இமயப் பொற்கோட்டின் ஒரு பாங்கர் உள்ளது; அது தூய வெண்ணிறமுடையது; அஃது அறனே ஒருருக் கொண்டு நிற்பது போன்று விளங்குவது. அதன் பக்கங்களில் முனிவர்களின் மறையோசையும்,

---

திருநாவுக்கரசர் திருவாரூர்த் திருத்தாண்டகம் நோக்குக. பெரிய புராணத்துக்குப் பதிகம் திருத்தொண்டத்தொகை என்றவாறு.

௩௯. திருத்தொண்டத்தொகை - தொகை. நம்பியாண்டார் நம்பி அந்தாதி - வகை. பெரியபுராணம் - விரி. புந்தியார - மனமார. நம்பியாண்டார் நம்பி திருவருளால் திருத்தொண்டத் தொகைக்கு வகைநூல் அருளி வழிகாட்டியவராதலான், அவரை "நந்தம் நாதனும்" என்றார்.

௪௦. சைவம் ஓங்கினால் உலகு உய்யும். அலகில் - அளவில்லாத. நம்பி ஆரூரர் - சுந்தரமூர்த்தி சுவாமிகள். புனல்நாடு - சோழநாடு. பல நாட்டில் தோன்றிய நாயன்மார்கள் வரலாற்றைக் கொண்ட பெரியபுராணம், நாட்டுச் சிறப்பில் சோழநாட்டைக் கொண்டமைக்குக் காரணம் இங்கே சொல்லப்பட்டது. பதிகமாகிய திருத்தொண்டத்தொகை பிறந்ததும், அதையருளிய சுந்தரமூர்த்தி சுவாமிகளைப் போதருமாறு திருவருளால் குறிக்கப் பெற்றதும், திருவருள் வழி நின்று பாட்டுடைத் தலைவராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் பரவையாரை மணந்து உறைவிடமாக் கொண்டு ஆரூரராதற்கு முதலாக நின்றதும், திருக்கூட்டம் வீற்றிருந்தருளும் பெரும்பேறுடையதுமாகிய திருவாரூர் சோழநாட்டிலிருத்தலால் நாட்டுச் சிறப்பில் சோழநாட்டை ஆசிரியர் கொண்டாரென்க.

விஞ்சையர்களின் வீணை கானமும், பூதர்களின் பல்லிய முழக்கமும் என்றும் இன்பமூட்டிக் கொண்டிருக்கும்.

முனிவர்களும், கணநாதர்களும், மற்றவர்களும் சிவபெருமான் திருமுன்னர் வரிசை வரிசையாக நின்று, தலைமேற் கைகளைக் குவித்து, இன்பக் கண்ணீர் பெருக்கெடுப்பச் சேவை செய்வார்கள். வாயிற்படியில் நந்தியெம்பெருமான், பிரம்பு தாங்கித் தம்மாணை செலுத்துவார். பெரும் பெருந் தேவர்கள் தங்கள் தங்கள் குறைகளை முறையிட வேளை பார்த்திருப்பார்கள்.

இத்துணைச் சிறப்பு வாய்ந்த திருமலையின் அடியிலே உபமன்னிய முனிவரின் அழகிய ஆசிரம மொன்றிருக்கிறது. அம் முனிவர் புலிமுனிவரின் புதல்வர்; சிவபத்தி சிவனடியார் பத்தியிற் சிறந்தவர்; சிவபெருமான் திருவருளாற் பெற்ற பாற்கடலை யுண்டு வளர்ந்தவர். அவரைச் சுற்றி எண்ணிறந்த முனிவர்களும் சிவ யோகிகளும் அமர்ந்து வேத வேதாந்த ஆராய்ச்சி செய்து கொண்டிருப்பது வழக்கம்.

ஒருபோது, ஆங்கே திடீரென ஆயிரம் ஞாயிறு ஓருருக்கொண்டு ஒளி உமிழ்ந்தாலெனப் பேரொளி யொன்று தோன்றலாயிற்று. அப்பேரொளி கண்ட முனிவர்களும் மற்றவர்களும், "இஃதென்ன! என்ன!" என்று வியப்புற்றார்கள். அப்போது உபமன்னிய முனிவர், அந்திவான் பிறைசூடிய அண்ணலை நினைந்து, "ஆண்டவனருளால் தென்னாட்டிற் றோன்றிய வன்றொண்டப் பெருந்தகையார் திருக்கயிலைக் கெழுந்தருள்கிறார்" என்று தெளிந்து, எழுந்து, கைகள் தலைமேலேறக் கண்கள் நீர்பொழிய அத்திசை நோக்கினார். அக்காட்சி கண்ட முனிவர்கள், தங்களுக்குற்ற ஐயத்தைக் களைந்துகொள்ள வேண்டிப் பாற் கடலை யுண்ட பரமஞானியைப் பார்த்து, "மா முனிவரே! பிறப்பிறப்பில்லாச் சிவபெருமானை யன்றி எவரையும் - எதையுந் தொழாத தங்கள் கைகள், இன்று இப்பேரொளியைக் கண்டதுங் குவிந்ததென்ன?" என்று வினவினார்கள். அதற்கு உபமன்னிய முனிவர், "இப்பேரொளிப் பிழம்பா யெழுந்தருள்வோர் நம்பியாரூ ரென்னுந் திருப்பெயருடையவர். அவர்தஞ் சிந்தை என்றுஞ் சிவத்தில் அழுந்திக் கிடக்கும். அவரே இறைவர்; இறைவரே அவர். அவர் நாம் வணங்குந் தகுதி வாய்ந்தவர்" என்று திருவாய் மலர்ந்தருளினார். முனிவர்களும் மற்றவர்களும், புலி முனிவரின் புதல்வரைப் பணிந்து, "பேரொளிப் பிழம்பா யெழுந்தருளி வரும் நம்பியாரூரரின் தவப் பெருமையைக் கேட்க விரும்புகிறோம். அருளிச் செய்க." என்று வேண்டினார்கள்.

உபமன்னிய முனிவர், மகிழ்வெய்தி, "பேரொளிப்பிழம்பென எழுந்தருளி வருவோர், திருக்கயிலையில் சிவபெருமானுக்குப் பூமாலைத் தொண்டும் திருநீற்றுத் தொண்டுஞ்செய்து கொண்டிருந்தவர். அவர்தம் அருமைத் திருப்பெயர் ஆலால சுந்தரர் என்பது. அவர் ஒருநாள் வழக்கம்போல, அம்மை யப்பருக்கு மலர் கொய்யத் திருநந்தனவனம் போந்தார். அவருக்கு முன்னே, அம்மையாருக்குப் பூக் கொய்ய அனிந்திதை, கமலினி என்னும் இரண்டு தோழிமார்களும் அவ்வனமே போனார்கள். அங்கே அழகர் மனம், பூங்கொடிகள்மீதும், பூங்கொடிகள் மனம்

அழகர்மீதும் நடந்தன. பின்னர் ஒருவாறு தெளிவுற்றுப் பூப்பறித்து, அவரவர் தத்தம் இருக்கை சேர்ந்தனர்.

என்னுக்குள் எண்ணெய்போல் எங்குஞ் சக்தியுடன் வீற்றிருந்தருளும் எம்பெருமான், ஆலால சுந்தரரை அருள் விழியால் திருநோக்கஞ்செய்து 'நீ பெண்கள்மீது வேட்கை கொண்டமையான், தென்னாடு போந்து மானுடனாகப் பிறந்து, அப்பெண்களுடன் இன்பம் நுகர்ந்து,வேட்கை தணித்து, மீண்டும் இங்கு வாக்கடவை' என்று கட்டளையிட்டார். அதுகேட்ட ஆலால சுந்தரர், நடுநடுங்கிச் சிவபெருமான் திருவடிகளில் வீழ்ந்து வணங்கிச், 'சிவமே! மானுடனாய்ப் பிறந்து மாயவலையிற் சிக்கி மயங்கும் போழ்து, அடியேனைத் தடுத்தாட் கொள்ளல்வேண்டும்' என்று வேண்டி நின்றார். தடங்கருணைப் பெருங் கடலாகிய சங்கரர், அவ் வேண்டுதலுக்கு இரங்கி அருளினார். பின்னர் ஆண்டவன் ஆணைப்படியே ஆலால சுந்தரர், அனிந்திதை, கமலினி என்னும் இரு பெருமாட்டிகளுடன் தென்னாட்டிற் பிறந்து, இன்பந்துய்த்து, இப்பொழுது பேரொளிப் பிழம்பாக எழுந்தருளி வருகிறார்" என்று சுந்தரர் தவப் பெருமையைச் சொன்னார்.

அருமறைவல்ல முனிவர்கள் உபமன்னிய முனிவரைப் பணிந்து "ஆலால சுந்தரர் தோன்றிய தென்னாடு, எட்டுத் திசைகளினுஞ் சிறந்து மேம்பட்டு விளங்குதற்கு அது செய்த புண்ணியம் யாது?" என்று கேட்டார்கள். உபமன்னிய முனிவர், "கண்டாலும், சொன்னாலும், நினைந்தாலும், வீடுபேறளிக்கவல்ல பெருமை வாய்ந்த தில்லை, திருவாரூர், காஞ்சி, திருவையாறு, சீகாழி முதலிய திருப்பதிகளை உடைமையான், தென்னாடு பிறநாடுகளினுஞ் சிறந்தது" என்றார்.

இங்ஙனம் உபமன்னிய முனிவர், வன்றொண்டர்தந் தவப்பெருமையை முனிவர்களுக்கு அன்று சொன்னபடியால், எனக்குண்டாகிய பேரவாவினால், யானும் (சேக்கிழார்) திருத்தொண்டத் தொகையின் விரிவைச் சொல்லத் தொடங்கினேன். அத் திருத்தொண்டத் தொகையே இப்புராணத்துக்குப் பதிகம். அத் திருத்தொண்டத் தொகையை முதலாக் கொண்டு பிறந்த வழிநூலாகிய நம்பியாண்டார் நம்பி திருவந்தாதியைத் தழுவி, அடியார்கள் வரலாற்றை விரித்துக் கூறப் புகுகிறேன்.

# திருநாட்டுச் சிறப்பு

பாட்டியல் தமிழுரை பயின்ற எல்லையுள்
கோட்டுயர் பனிவரைக் குன்றின் உச்சியில்
சூட்டிய வளர்புலிச் சோழர் காவிரி
நாட்டியல் பதனையான் நவிலல் உற்றனன். க

ஆதிமா தவமுனி அகத்தி யன்தரு
பூதநீர்க் கமண்டலம் பொழிந்த காவிரி
மாதர்மண் மடந்தைபொன் மார்பில் தாழ்ந்ததோர்
ஓதநீர் நித்திலத் தாமம் ஒக்குமால். உ

சையமால் வரைபயில் தலைமை சான்றது
செய்யபூ மகட்குநற் செவிலி போன்றது
வையகம் பல்லுயிர் வளர்த்து நாள்தொறும்
உய்யவே சுரந்தளித் தூட்டு நீரது. ங

---

க. பாட்டியல் தமிழுரை பயின்ற எல்லையுள் - தமிழகத்துள். பாட்டு இயல் - பாட்டுத் தன்மை. தமிழ் உரை - தமிழ் மொழி. பயின்ற - பன்னெடுநாள் பழகிய. தமிழ் : இயல் இசை நாடகமென மூன்று வகை. மூன்றும் பாட்டியல்பு வாய்ந் தன. பாட்டியல் தமிழ் உரை - புகழினையுடைய இயற்றமிழ்மொழி என்றுரைப் போருமுளர். தமிழக எல்லை ஒருபோது நாவலந் தீவு (பாரதகண்டம்) முழுவ தும், இன்னொருபோது விந்தியத்திருந்து குமரிவரையும், பின்னே வடவேங் கடத்திருந்து குமரிவரையும் பரவியிருந்தது. கோடு - சிகரங்கள். பனிவரை குன்றின் - இமயமலையிலுள்ள ஒரு குன்றின். புலிச் சோழர் - புலிக் கொடியை யுடைய சோழ மன்னர்கள். புலி - ஆகுபெயர். அஃது அம்மன்னரால் இமயத் துச்சியில் பொறிக்கப்பட்டது. இது சோழ மன்னர் வீரத்தையும், அவர்தம் எல் லைப்பரப்பையுங் காட்டுவது. கரிகாற்சோழன் வரலாற்றைப் பார்க்க. காவிரி நாடு - சோழ நாடு. காவிரி பாய்ந்து வளஞ்செய்தலான் சோழநாடு காவிரி நாடாயிற்று.

உ. பூதநீர்-தூயநீர்; 'வெகு நாளா யிருக்கின்ற நீர்' என்பர் மகாலிங்க ஐயர். "அமர முனிவன் அகத்தியன் தனாது - கரகங் கவிழ்த்த காவிரிப் பாவை" —மணிமேகலை : பதிகம் ௧௧-௧௨. மாதர் - அழகு. ஓதநீர் நித்திலத் தாமம் - கடல் நீரில் பிறக்கும் முத்தாலாகிய மாலை. (ஓதம் - கடல்வாய் வெள்ளம்.)

ங. சைய மால்வரை பயில் - சையகிரியில் தோன்றும். செவிலி - வளர்க் குந் தாய். நீரது - தன்மையுடையது.

மாலினுந் திச்சுழி மலர்தன் மேல்வருஞ்
சால்பினால் பல்லுயிர் தருதன் மாண்பினால்
கோலநற் குண்டிகை தாங்கும் கொள்கையால்
போலும்நான் முகனையும் பொன்னி மாநதி. ௪

திங்கள்சூ டியமுடிச் சிகரத் துச்சியில்
பொங்குவெண் தலைநுரை பொருது போதலால்
எங்கள்நா யகன்முடி மிசை*நின் றேயிழி
கங்கையாம் பொன்னியாங் கன்னி நீத்தமே. ரு

வண்ணநீள் வரைதர வந்த மேன்மையால்
எண்ணில்பேர் அறங்களும் வளர்க்கும் ஈகையால்
அண்ணல்பா கத்தையா ளுடைய நாயகி
உண்ணெகிழ் கருணையின் ஒழுக்கம் போன்றது. சு

வேறு

வம்பு லாமலர் நீரால் வழிபட்டுச்
செம்பொன் வார்கரை எண்ணில் சிவாலயத்
தெம்பி ரானை இறைஞ்சலின் ஈர்ம்பொன்னி
உம்பர் நாயகர்க் கன்பரும் ஒக்குமால். எ

---

௪. பொன்னிமாநதி - காவிரி. "மலைத்தலைய கடற்காவிரி - புனல் பரந்து பொன் கொழிக்கும்"—பட்டினப்பாலை 6 - 7. நான்முகன் - பிரமதேவன். பொன்னிமாநதி நான்முகனையும் போலும். மிகப் பெருகி நீர்ச்சுழியும் மலரும் தன்மேல் வருஞ் சிறப்பினாலும், பல்லுயிர்களை ஓம்பும் மாண்பினாலும், அழகிய நல்ல கமண்டலம் தன்னைத் தாங்கிய தன்மையினாலும் - காவிரி. திருமாலின் உந்திக் கமலத்தில் தோன்றின சிறப்பினாலும், பல்லுயிர்களைப் படைக்கும் மாண்பினாலும், அழகிய நல்ல கமண்டலத்தை ஏந்தும் தன்மையினாலும் - நான்முகன்.

ரு. கன்னி நீத்தம் - அழியாத வெள்ளம்; இடையறாது ஓடுவது. திங்கள் சூடல் மலைக்கும் சிவபிரானுக்கும் பொது. சிகரத்து உச்சியில் - சையகிரி என்னும் மலையுச்சியில்; சடை முடியின் உச்சியில். வெண்தலை - வெள்ளிடம்; வெள்ளிய தலைபோலும். சிவபிரானைக் குறிக்கும்போது நகு வெண்டலை அல்லது பிரம கபாலம் என்று கொள்க. பொருது - மோதி.

சு. வண்ணம் நீள்வரை - அழகிய நீண்டமலை. காவிரியும் மலையில் (சைய மலையில்) தோன்றியது; உமாதேவியாரும் மலையில் (இமயத்தில்) வந்தவர். நதியால் அறங்கள் வளர்தல் வெளிப்படை. உமையம்மையார் காஞ்சியில் வளர்த்த அறங்கள் இங்கே குறிக்கப்பட்டன.

எ. ஈர்ம் பொன்னி - குளிர்ச்சி பொருந்திய காவிரி. வம்பு உலா - மணங் கமழும். செம்பொன் - செம்பொற் பொடிகள் நிறைந்த. வார் - நீண்ட. இறைஞ்சலின் - வணங்குதலால். உம்பர் நாயகர்க்கு அன்பரும் - தேவர்கள் தலைவராகிய சிவபிரானுடைய அன்பர்களையும்.

பா - ம்—*நின்றேய்ந்திழி.

வாசம் நீர்குடை மங்கையர் கொங்கையில்
பூசு குங்கும மும்புனை சாந்தமும்
வீசு தெண்டிரை *மீதிழிந் தோடுநீர்
தேசு டைத்தெனி னுந்தெளி வில்லதே. அ

மாவி ரைத்தெழுந் தார்ப்ப வரைதரு
பூவி ரித்த புதுமதுப் பொங்கிட
வாவி யிற்பொலி நாடு வளந்தரக்
காவி ரிப்புனல் கால்பரந் தோங்குமால். கூ

ஒண்டு றைத்தலை மாமத கூடுபோய்
மண்டு நீர்வய லுள்புக வந்தெதிர்
கொண்ட மள்ளர் குரைத்தகை யோசைபோய்
அண்டர் வானத்தின் அப்புறஞ் சாருமால். க0

மாதர் நாறு பறிப்பவர் மாட்சியும்
சீத †நீர்முடி சேர்ப்பவர் செய்கையும்
ஓதை யார்செய் யுழுநர் ஒழுக்கமும்
காதல் செய்வதோர் காட்சி மலிந்தவே. கக

---

அ. நீர்குடை - நீராடும். சாந்தமும் - சந்தனமும். தெண்டிரைமீது இழிந்து- தெள்ளிய அலைகள்மீது கலந்து. தேசு உடைத்து எனினும் - வெள்ளொளித் தெளிவு உடையதாயினும். குங்குமக் குழம்பும் சந்தனக் குழம்பும் நீரின் தெளி வைப் போக்கின என்க. (குங்குமத்தையும் சாந்தத்தையும் தெண்டிரைகளால் தன்னிடம் அழித்து ஓடும் நீர்). நீர் - காவிரிநீர்.

கூ. மா விரைத்து - வண்டுகள் விரைந்து. ஆர்ப்ப - ஆரவாரிக்க. வரைதருபூ- மலைப்பூக்கள். புதுமது - மிகப் புதியதேன். வாவிகளால் (தடாகங்களால்) பொலி தரும் நாடு இயற்கையிலேயே வளமுடையதாயிருப்பது. காவிரியின் நீர்க்கால் களால் அவ்வளம் மேலும் மேலும் செழித்துக் கொழிப்பதாகும். " சோழ நாடு சோறுடைத்து " என்பது பழமொழி.

க0. மண்டு நீர் - மிகுந்து விரைந்து செல்லும் நீர். ஒண்துறைத்தலை - ஒள் ளிய கரையினிடத்துள்ள. மதகு ஊடு - மதகு வழியே. மள்ளர் - உழவர். குரைத்த - (மகிழ்ச்சியால்) தட்டிய.

கக. மாதர் நாறு - அழகிய நாற்றை. சீத நீர் முடி - குளிர்ச்சித் தன்மை வாய்ந்த நாற்று முடி. ஓதை ஆர்செய் உழுநர் ஒழுக்கமும் - ஓசை நிறைந்த வயல் களை உழும் மள்ளர்களின் வரிசையும் (ஒழுங்கு - ஒழுக்கு - ஒழுக்கம்). பார்ப்போர் கருத்தைப்பற்றி ஈர்த்துப் படிவிக்கும் விருப்ப மூட்டுங் காட்சியாக.

பா - ம்—*மீதழித்தோடு நீர். † நீண்முடி.

உழுத சால்மிக வூறித் தெளிந்தசே
றிழுது செய்யினுள் இந்திரத் தெய்வதம்
தொழுது நாறு நடுவார் தொகுதியே
பழுதில் காவிரி நாட்டின் பரப்பெலாம். கஉ

**வேறு**

மண்டுபுனல் பரந்தவயல் வளர்முதலின் சுருள்விரியக்
கண்டுழவர் பதங்காட்டக் களைகளையுங் கடைசியர்கள்
தண்தரளஞ் சொரிபணிலம் இடறியிடை தளர்ந்தசைவார்
வண்டலையுங் குழல்அலைய மடநடையின் வரம்பணைவார். கங

செங்குவளை பறித்தணிவார் கருங்குழல்மேல் சிறைவண்டை
அங்கைமலர் களைக்கொடுகைத் தயல்வண்டும் வரவழைப்பார்
திங்கள்நுதல் வெயர்வரும்பச் சிறுமுறுவல் தளவரும்பப்
பொங்குமலர்க் கமலத்தின் புதுமதுவாய் மடுத்தயர்வார். கச

கரும்பல்ல நெல்லென்னக் கமுகல்ல கரும்பென்னச்
சுரும்பல்லி குடைநீலத் துகளல்ல பகலெல்லாம்
அரும்பல்ல முலையென்ன அமுதல்ல மொழியென்ன
வரும்பல்லா யிரங்கடைசி மடந்தையர்கள் வயலெல்லாம். கரு

---

கஉ. சால் - படைச்சால். இழுது - நெய்; குழம்பு. (சேறு குழம்பிய) செய்யினுள் - வயல்களில். இந்திரத் தெய்வதம் - மருத நிலத் தெய்வம். காவிரி நாடு - சோழ நாடு.

கங. மண்டு புனல் - மிகுந்து விரைந்து செல்லும் நீர். முதலின் - நெற்பயிர்களின். உழவர் பதம் காட்ட-மள்ளர்கள் (களை களையும்) காலம் இஃது என்று காட்ட. கடைசியர்கள் - மள்ளப் பெண்கள். தண் தரளம் - குளிர்ந்த முத்துக் களை. பணிலம் - சங்குகள். காலில் இடறுதலால்.........அசைவாராய். மடநடையில் - மெல்லிய நடையால்.

கச. செங்குவளை - ஒருவகை நீர்ப்பூ ; சிவந்த நிறமுடையது ; செங்கழு நீர்ப்பூ (நெடுநல்வாடை 81-5 உரை காண்க). அம் கை மலர்களை கொடு கைத்து - அழகிய கையாகிய தாமரை மலர்களைக்கொண்டு ஓட்டி. அயல் வண்டும் - பின்னர்ப் பக்கத்துள்ள வண்டுகளையும். திங்கள் நுதல் - பிறைச் சந்திரனை யொத்த நெற்றி. சிறு முறுவல் - புன்முறுவல் ; சிறிய பற்கள். தளவு - முல்லை முகை. "தளவள முகை கொல் பல்லாள்"—சீவகசிந்தாமணி 75. பொங்குமலர் கமலத்தின் புதுமது வாய் மடுத்து அயர்வார் - பொலிந்த தாமரைப் பூவிலுள்ள புதிய தேனைக் குடித்து மயங்குவார்.

கரு. பகலெல்லாம் வருவார் போவார், இவைகள் கரும்புகளல்ல நெற்பயிர்கள் என்றும், இவைகள் கமுகுகளல்ல கரும்புகள் என்றும், இவைகள் நீலப் பூவின்

கயல்பாய்பைந் தடநந்தூன் கழிந்தபெருங் கருங்குழிசி
வியல்வாய்வெள் வளைத்தரள மலர்வேரி உலைப்பெய்தங்
கயலாமை அடுப்பேற்றி அரக்காம்பல் நெருப்பூதும்
வயல்மாதர் சிறுமகளிர் விளையாட்டு வரம்பெல்லாம். ௧௬

காடெல்லாம் கழைக்கரும்பு காவெல்லாங் குழைக்கரும்பு
மாடெல்லாம் கருங்குவளை வயலெல்லாம் நெருங்குவளை
கோடெல்லாம் மடவன்னம் குளமெல்லாம் கடலன்ன
நாடெல்லாம் நீர்நாடு தனையொவ்வா நலமெல்லாம். ௧௭

---

துகள்களல்ல அப்பூவின் அக இதழைக்குடையும் வண்டுகள் என்றும், இவைகள் அரும்புகளல்ல (கடைசியர்) முலைகள் என்றும், இவைகள் அமுதல்ல (கடைசியர்) மொழி என்றும் பேச,வரும் பல்லாயிரம் கடைசியர்கள் வயல்களிலெல்லாம் நிரம்பி இருக்கிறார்கள். சுரும்பு அல்ல அல்லிகுடை நீலத்துகள் என்று கொள்ளலு மொன்று; பகலெல்லாம் துகள் அல்ல (அல்ல - இரவினைச் செய்யும்) என்று கொள்ளலுமாம். கரும்பல்ல நெல்லென்ன கமுகல்ல கரும்பென்ன அரும்பல்ல முலை என்ன அமுதல்ல மொழியென்னக் காட்சி தரும் வயலெல்லாம், சுரும்பு அல்லிகுடை நீலத்துகள் அல்ல (துகளாலாகிய இருளையுடைய) பகலெல்லாம் பல்லாயிரங் கடைசியர் உளர் என்று கொள்ளினும் அமையும். அல்லி - அகஇதழ்.

௧௬. கயல் பாய் பைந்தடம் - கெண்டை மீன்கள் பாய்கின்ற பசிய தடாகத்தில். ஊன் கழிந்த நந்து - தசை கழிந்த சங்கு. கருங் குழிசி - கரிய பானையாக. வியல் வாய் வெள் வளை தரளம் - அகன்ற வாயினை யுடைய வெண்சங்க மீன்ற முத்துக்கள். மலர் வேரி உலை பெய்து - பூந்தேனை உலை பெய்து. அங்கு அயல் ஆமை - அங்கே பக்கத்துள்ள ஆமை ஓடுகள். அரக்கு ஆம்பல் - செவ்வாம்பல். வயல் மாதர் - வயல்களிலுள்ள மள்ளப் பெண்களின். சிறு மகளிர் - சிறுமியர்கள். வரம்பெல்லாம் இவ்விளையாட்டு. ஊன் கழிந்த சங்கு - பானை. முத்துக்கள் - அரிசி. பூந்தேன் - உலைநீர். ஆமை ஓடுகள் - அடுப்பு. செவ்வாம்பற் பூ - நெருப்பு.

௧௭. காடெல்லாம் - காடாகத் தோன்றுவன எல்லாம். கழைக் கரும்பு - இருபெயரொட்டுப் பண்புத் தொகை; மூங்கிலின் வளர்ச்சி போன்ற கரும்பு எனலுமாம். கா எல்லாம் - சோலைகளெல்லாம். குழைக்கு அரும்பு - தளிர்கின்ற அரும்புகள்; கு - சாரியை. குழை கரும்பு - குண்டலமணிந்த கரும்பையொத்த பெண்கள் என்றும், குழைக்கு அரும்பு - கூந்தலுக்கு அணியத் தக்க அரும்பு என்றுங் கொள்ளலுமாம். மாடெல்லாம் - பக்கங்களி லெல்லாம். கருங்குவளை - நீலோற்பல மலர்கள். நெருங்கு வளை - நெருங்குகின்ற சங்குகள். கோடெல்லாம் - நீர் நிலைகளின் கரைகளிலெல்லாம். மட அன்னம் - இளமை அன்னங்கள். கடல் அன்ன - கடலைப் போன்றன. நலம் எல்லாம் - நலங்கள் எல்லாவற்றிலும். நீர் நாட்டினை (சோழ நாட்டினை) நாடுகளெல்லாம் ஒவ்வா.

வேறு

ஆலை பாய்பவ ரார்ப்புறும் ஒலமும்
சோலை வாய்வண் டிரைத்தெழு சும்மையும்
ஞாலம் ஓங்கிய நான்மறை ஓதையும்
வேலை ஓசையின் மிக்கு விரவுமால். கஅ

அன்னம் ஆடும் அகன்துறைப் பொய்கையில்
துன்னு மேதி படியத் துதைந்தெழும்
கன்னி வாளை கமுகின்மேல் பாய்வன
மன்னு வான்மிசை வானவில் போலுமால். கக

காவி னிற்பயி லுங்களி வண்டினம்
வாவி யிற்படிந் துண்ணு மலர்மது
மேவி அத்தடம் மீதெழப் பாய்கயல்
தாவி *அப்பொழி விற்கனி சாடுமால். உ0

வேறு

சாலிநீள் வயலின் ஓங்கித் தங்கிகர் இன்றி மிக்கு
வாலிதாம் வெண்மை உண்மைக் கருவினும் வளத்த வாகிச்
சூல்முதிர் பசலை கொண்டு சுருள்விரித் தரனுக் கன்பர்
ஆலின சிந்தை போல அலர்ந்தன கதிர்க ளெல்லாம். உக

---

கஅ. ஆலை பாய்பவர் - ஆலையில் கரும்பினைப் பாய்ப்பவர். ஆர்ப்புறும் ஒலமும் - ஆரவாரிக்கும் ஒலியும். சும்மையும் - ஒலியும். ஓதையும் - ஓசையும். வேலை ஓசையின் - கடலின் ஓசையைப் பார்க்கிலும். விரவும் - கலந்து முழங்கும்.

கக. துன்னு மேதி படிய - அங்கே விரும்பி அணைந்த எருமைகள் மூழ்க. துதைந்து-நெருங்கி. கன்னி வாளை - இளமை வாளைமீன்கள். பாய்வன-தொழிற் பெயர். பாயுந் தோற்றங்கள். பாய்வனவாகிய கன்னி வாளை எனக் கொள்ளினு மாம். வானவில் - இந்திர தனுசு.

உ0. காவினில் பயிலும் - சோலைகளில் வாழும். களி-தேனுண்டு மயங்கும். சோலைகளிலுள்ள களி வண்டினங்கள் தடாகத்தில் விழுந்து ஆங்குப் பூக்களின் தேன் உண்ணும். அவ்வாவியிலுள்ள கெண்டை மீன்கள் (மாறுபட்டு) மேலே பாய்ந்து வண்டுகளின் அச்சோலைகளைத் தாவிக் கனிகளைச் சாடும்.

உக. சாலி - நெற்பயிர். தங்கிகரின்றி - தங்களுக்கு ஒப்பு இல்லாமல். வாலி தாம் வெண்மை உண்மை கருவினும் வளத்த ஆகி - இயற்கையினு லமைந்த தூய்மையதாம் வெள்ளிய இயற்கைக் கருவினால் ஆகின்ற வளத்தை யுடையனவாய். சூல் முதிர் பசலைகொண்டு - அக்கரு முதிர்தலால் பசப்பு நிறங் கொண்டு. சுருள் - கதிர்ச்சுருள். ஆலின சிந்தை - மலர்ந்த சிந்தை.

பா - ம்—*அப்பொழிவின்.

பத்தியின் பால ராகிப் பரமனுக் காளாம் அன்பர்
தத்தமில் கூடி னார்கள் தலையினால் வணங்கு மாபோல்
மொய்த்தநீள் பத்தி யின்பால் முதிர்தலை வணங்கி மற்றை
வித்தகர் தன்மை போல விளைந்தன சாலி யெல்லாம். உஉ

அரிதரு செந்நெற் சூட்டின் அடுக்கிய அடுக்கல் சேர்ப்பார்
பரிவுறத் தடிந்த பன்மீன் படர்நெடுங் குன்று செய்வார்
சுரிவளை சொரிந்த முத்தின் சுடர்ப்பெரும் பொருப்பு யர்ப்பார்
விரிமலர்க் கற்றை வேரி பொழிந்திழி வெற்பு வைப்பார். உங

---

சாலிக் கதிர்கள் கருவுற்று முதிர்ந்து பசலைகொண்டு சுருள் விரித்து அலர்வது, பல காவியங்களில் பலவிதமாக அணிபெற வருணிக்கப்பட்டிருக்கிறது. காவிய நோக்கிற்கேற்ப வருணிப்பதே அறிவுடைமை. ஈண்டு ஆசிரியர் தாம் எடுத்த அன்பு நூலுக்கேற்பக் கதிர்கள் சிவனடியார் சிந்தைபோல அலர்ந்தன என்று கூறி யிருத்தல் கருதற்பாலது. பிறண்டும் ஆசிரியர் இவ்வாறே பொருந்தக்கூறிச் செல்லுதலும் உணரற்பாற்று. "சொல்லருஞ் சூல்பசும் பாம்பின் தோற்றம் போல் - மெல்லவே கருவிருந் தீன்று மேலலார் - செல்வமே போல்தலை நிறுவித் தேர்ந்தநூல் - கல்விசேர் மாந்தரின் இறைஞ்சிக் காய்த்தவே"—சிந்தாமணி 53.

உஉ. பாலராகி - வயத்தராகி. மொய்த்த நீள் பத்தியின் - நெருங்கிக் கூடிய நீண்ட வரிசையினை யுடையனவாய். பால் முதிர் தலை-பால் முதிர்ந்த கதிர்த்தலைகள். வணங்கி - எதிரெதிர் வணங்கி. வித்தகர்-மேற்கூறிய பரமனுக்கு ஆளாம் அன்பர். பரமனுக்காளாகி அன்பராதலாவது,நான் என்னும் முனைப்பை யொழிப்பதாகும். முனைப்பற்ற விடத்தில் வணக்க மிருத்தல் இயல்பு. அம்முனைப்பற்ற வணக்கத்தை ஈண்டு ஆசிரியர் குறிப்பாராயினார். இவ்வணக்கம் இந்நூற்பொருளாக உள்ள நாயன்மார்களிடத்திருத்தலை ஈண்டுக் குறிப்பித்தவாறும். ஞானசம்பந்தர் அப்பர் மற்றவர் சந்திப்பு, சேரமான் பெருமாள் நாயனார் வண்ணான் சந்திப்பு முதலியவற்றை உன்னுக. வித்தகர் தன்மைகள் பல. அவை முனைப்பறல், திருவருளமுதம் பெறல், அதனை மற்றவர்க்குதவல், தன்னலம் நாடாமை முதலியன. செஞ்சாலியின் மாட்டும் முனைப்பற்று அடங்கி வீழ்தல், உணவமிழ்தம் பெறல், அதனைத் தன்னலத்துக்குப் பயன்படுத்தாது மற்றவர்க்குதவல் முதலிய தன்மைகளிருத்தல் வெள்ளிடைமலை.

உங. அரிதரு - அரியப்பட்ட. சூட்டின் - அரிகளால். அடுக்கல் - மலை. "நெல்லரிந்து சூடு கோடாகப் பிறக்கி"—பொருநராற்றுப்படை 242-43. பரிவுறத் தடிந்த - விருப்புடன் பிடித்த. சுரிவளை - சுரி சங்கு. பொருப்பு - மலை. விரிமலர்க்கற்றை - மலர்ந்தபூக் கூட்டங்களை. வேரி பொழிந்து இழி - தேனருவி பொழிந்து இழிதர. வெற்பு - மலை.

சாலியின் கற்றை துற்ற தடவரை முகடு சாய்த்துக்
காலிரும் பகடு போக்குங் கரும்பெரும் பாண்டில் ஈட்டம்
ஆலிய முகிலின் கூட்டம் அருவரைச் சிமயச் சாரல்
மேல்வலங் கொண்டு சூழுங் காட்சியின் மிக்க தன்றே. உச

வைதெரிந் தகற்றி ஆற்றி மழைபெயல் மானத் தூற்றிச்
செய்யபொற் குன்றும் வேறு நவமணிச் சிலம்பும் என்னக்
கைவினை மள்ளர் வானங் கரக்கவாக் கியநெற் குன்றால்
மொய்வரை உலகம் போலும் முளரிநீர் மருத வைப்பு. உரு

அரசுகொள் கடன்கள் ஆற்றி மிகுதிகொண் டறங்கள் பேணிப்
பரவருங் கடவுட் போற்றிக் குரவரும் விருந்தும் பண்பின்
விரவிய கிளையுந் தாங்கி விளங்கிய குடிகள் ஓங்கி
வரைபுரை மாடம் நீடி மலர்ந்துள பதிகள் எங்கும். உசு

---

உச. சாலியின் கற்றை துற்ற - நெல்லரியின் கற்றைகள் நெருங்கிய. தடவரை முகடு சாய்த்து - பெரிய மலை போன்ற நெற்போர்களை உச்சியிலிருந்து சரித்து. காலிரும் பகடு போக்குங் கரும்பெரும் பாண்டில் ஈட்டம் - வலிய கால்களை யுடைய பெரிய எருமைகள் விரைந்து போகும் சுழலால் உண்டாகும் கரிய பெரிய வட்டத்தின் கூட்டமானது; வலிய கால்களையுடைய பெரிய எருமைகளுடன் பொருத்தி நடாத்துங் கரிய பெரிய வட நாட்டு எருதுகளின் கூட்டமானது என்னலுமொன்று. ஆலிய - அசைகின்ற. அருவரைச்சிமயச்சாரல் - அரிய மலையுச்சியின் சாரலில். காட்சியின் - காட்சியைப் பார்க்கிலும்.

உரு. வைதெரிந்து அகற்றி ஆற்றி - (எருமைகள் மிதித்தவுடன்) வைக்கோலை ஆராய்ந்து நீக்கி உதறி; வைக்கோலை ஆராய்ந்து எடுத்துக்கட்டி அகற்றி என்னலுமாம். மழை பெயல் மான தூற்றி - (பதர் போக) மழைத்துளிகள் தூற்றுவது போலத் தூற்றி. செய்ய - சிவந்த. சிலம்பு - மலை. கைவினை மள்ளர் - கைத் தொழில்வல்ல உழவர்கள். கரக்க - மறையும்படி. முளரி நீர் மருத வைப்பு - தாமரை நீர் நிலைகளையுடைய மருதநிலம். மொய்வரை உலகம்போலும் - நெருங்கிய மலைகளையுடைய குறிஞ்சி நிலத்தை ஒக்கும். செந்நெல்-பொற்குன்று. வெண்ணெல் கருநெல் முதலியன - நவமணிக்குன்று. "ஈடுசால் போரழித் தெருமைப் போத்தினால் - மாடுறத் தெழித்துவை களைந்து காலுறீஇச் - சேடுறக் கூப்பிய செந்நெற் குப்பைகள் - கோடியர் கொழும்பொனின் குன்ற மொத்தவே"—சிந்தாமணி 59.

உசு. அரசுகொள் கடன்களாற்றல்-ஆறிலொருபங்கு அரசனுக்குத் தருதல். கடவுள் - கடவுளை. குரவரும் - பெரியோரையும். பண்பின் விரவிய - குணத்தாலமைந்த; உண்மையில் ஒழுகிய. கிளையும் - சுற்றத்தையும். இவ்வறவினைகளால் குடிகள் ஓங்கி. வரைபுரை - மலையை யொத்த. பதிகள் - ஊர்கள்.

கரும்படு களமர் ஆலைக் கமழ்நறும் புகையோ மாதர்
சுரும்பெழ அகிலால் இட்ட தூபமோ யூப வேள்விப்
பெரும்பெயர்ச் சாலை தோறும் பிறங்கிய புகையோ வானின்
வருங்கரு முகிலோ சூழ்வ மாடமும் காவும் எங்கும். ௨எ

நாளிகே ரஞ்செ ருந்தி நறுமலர் நரந்தம் எங்கும்
கோளிசா லந்த மாலங் குளிர்மலர்க் குரவம் எங்கும்
தாளிரும் போந்து சந்து தண்மலர் நாகம் எங்கும்
நீளிலை வஞ்சி காஞ்சி நிறைமலர்க் கோங்கம் எங்கும். ௨அ

சூதபா டலங்கள் எங்கும் சூழ்வழை ஞாழல் எங்கும்
சாதிமா லதிகள் எங்கும் தண்தளிர் நறவம் எங்கும்
மாதவி சரளம் எங்கும் வகுளசண் பகங்கள் எங்கும்
போதவிழ் கைதை எங்கும் பூகபுன் னாகம் எங்கும். ௨௯

மங்கல வினைகள் எங்கும் மணஞ்செய்கம் பலைகள் எங்கும்
பங்கய வதனம் எங்கும் பண்களின் மழலை எங்கும்
பொங்கொளிக் கலன்கள் எங்கும் புதுமலர்ப் பந்தர் எங்கும்
செங்கயல் பழனம் எங்கும் திருமகள் உறையுள் எங்கும். ௩௦

---

௨எ. களமர் கரும்பு அடு ஆலை - மள்ளர்கள் கருப்பஞ் சாற்றைக் காய்ச்சுகின்ற ஆலையுள்ளவிடத்தில். சுரும்பு - வண்டுகள். அகிலால்-அகிற்றுண்டுகளால். யூபம் - யூபஸ்தம்பங்களை நிறுத்திச் செய்யப்படும். வேள்வி - அறவேள்வி. மாடமுங்காவுஞ் (சோலைகளிலும்) சூழ்வன.

௨அ. நாளிகேரம் - தென்னை. செருந்தி - ஒருவகைமரம்; வாட்கோரைக்கும் பெயர்; மணித்தக்காளிக்கும் இப்பெயர் வழங்குவதுண்டு. நரந்தம்-நாரத்தை. கோளி - அரசு; பூவாமற்காய்க்கு மரமென்று நச்சினார்க்கினியர் கூறுப. "கோளியுள்ளும்"—பெரும்பாணாற்றுப்படை 407. ("பூவாமற் காய்க்கும் மரங்களில் விசேடித்தும் '' என்பது உரை.) சாலம் - ஆச்சா. தமாலம் - பச்சிலை மரங்கள். குரவம் - குராமரங்கள். தாளிரும்போந்து - அடிபெருத்தபனை. சந்து - சந்தன மரங்கள். நாகம் - நாகமரம்.

௨௯. சூதம் - மா. பாடலம் - பாதிரி. வழை - சுரபுன்னை. ஞாழல் - குங்கும மரங்கள்; புலிநகக் கொன்றைக்கும் பெயர்; கோங்கு எனினுமாம். சாதி - செம்மல்; சிறு சண்பகம். மாலதி - மல்லிகை; முல்லை. நறவம் - அனிச்சம்; நறைக் கொடி. மாதவி - குருக்கத்தி. வகுளம் - மகிழ மரங்கள். போது - மலர். கைதை - தாழை. பூகம் - கமுகம். புன்னாகம் - புன்னை.

௩௦. மங்கலவினைகள்-மணம் பின்னே கூறுதலான் அஃதல்லாத மற்ற மங்கள வினைகளைக் கொள்க. கம்பலைகள் - முழக்கங்கள். பங்கய வதனம் - (பெண்மணிகளின்) தாமரை முகங்கள். பெண்மக்களின் இளஞ்சொற்கள் பண்போன்றிருத்தலானும், எல்லாப் பண்ணிசையும் அவர்கள் மழலையிலிருத்தலானும் "பண்களின் மழலை '' என்றார். "குழலும் யாழும் அமிழ்துங் குழைத்த நின்

மேகமும் களிறும் எங்கும் வேதமும் கிடையும் எங்கும்
யாகமும் சடங்கும் எங்கும் இன்பமும் மகிழ்வும் எங்கும்
யோகமும் தவமும் எங்கும் ஊசலும் மறுகும் எங்கும்
போகமும் பொலிவும் எங்கும் புண்ணிய முனிவர் எங்கும். ௩க

பண்தரு விபஞ்சி எங்கும் பாதசெம் பஞ்சி எங்கும்
வண்டறை குழல்கள் எங்கும் வளரிசைக் குழல்கள் எங்கும்
தொண்டர்தம் இருக்கை எங்கும் சொல்லுவ திருக்கை எங்கும்
தண்டலை பலவும் எங்கும் தாதகி பலவும் எங்கும். ௩உ

மாடுபோ தகங்கள் எங்கும் வண்டுபோ தகங்கள் எங்கும்
பாடும்அம் மனைகள் எங்கும் பயிலும்அம் மனைகள் எங்கும்
நீடுகே தனங்கள் எங்கும் நிதிநிகே தனங்கள் எங்கும்
தோடுசூழ் மாலை எங்கும் துணைவர்சூழ் மாலை எங்கும். ௩௩

வீதிகள் விழவின் ஆர்ப்பும் *விருந்தினர் விருந்தின் ஆர்ப்பும்
சாதிகள் நெறியில் தப்பா தனயரும் மனையில் தப்பா
நீதிய புள்ளு மாவு நிலத்திருப் புள்ளு மாவும்
ஓதிய எழுத்தாம் அஞ்சும் உறுபிணி வரத்தாம் அஞ்சும். ௩௪

---

மழலை..."—சிலப்பதிகாரம் : மனையறம் ௫அ - ௫க. "வீணையுங் குழலும் பாலும் அமுதமுங் கரும்புந் தேனும் - பாணியாழ் கனியும் வென்ற பைங்கிளி மழலைத் தீஞ்சொல்"—சிந்தாமணி 1500. கலன்கள் - ஆபரணங்கள். பழனம் - வயல்கள். உறையுள் - வாழுமிடம் ; இருப்பிடம்.

௩க. களிறும் - யானைகளும். கிடையும் - வேதமோதுமிடமும். மறுகும் - தெருக்களும். இப்பாட்டில் ஒன்றற்கொன்று தொடர்பிருத்தல் காண்க. யோகத்தின் பயன் தவமென்க. போகத்தால் உட்பொலிவும் புறப்பொலிவும் இயைதல் இயல்பு.

௩உ. விபஞ்சி - ஒருவித யாழ். பாத செம்பஞ்சு - கால்களி லூட்டிய செம்பஞ்சுக்குழம்பு. (பெண்மக்கள் நடக்கும்போது அவர்கள் காலில் பூசியுள்ள செம்பஞ்சுக் குழம்பு படியும் அடையாளங்கள்). குழல்கள் - கூந்தல்கள். குழல்கள் - புல்லாங் குழல்கள். இருக்கை - இருப்பிடம். இருக்கை - இருக்குவேதத்தை. தண்டலை பலவும் - சோலைகள் பலவும். தாதகி பலவும் - ஆத்தியும் பலாவும்.

௩௩. மாடு - பக்கங்களில். போதகங்கள் - யானைக் கன்றுகள். போது அகங்கள் - மலரிடங்கள். பாடும் அழகிய வீடுகள். சிறுமியர் பயிலும் அம்மானை விளையாட்டுகள். கேதனங்கள் - கொடிகள். நிகேதனங்கள் - பொக்கிஷ சாலைகள். தோடுசூழ் மாலை - இதழ்கள் சூழ்ந்த பூ மாலைகள். துணைவர் சூழ் மாலை - நாயக நாயகிகள் சூழ்ந்து வரும் வரிசைகள்.

௩௪. ஆர்ப்பும் - ஆரவாரமும். ஆசிரியர் காலத்தில் சாதி வேற்றுமைகளிருந்தன. அவைகள் தத்தம் நெறியில் வழாமல் நிலவி வந்தன. கண்டதைக் கூறுவது

பாட - ம்—* விருந்தினர் விருப்பின் ஆர்ப்பும்.

நற்றமிழ் வரைப்பின் ஓங்கு நாம்புகழ் திருநா டென்றும்
பொற்றடந் தோளால் வையம் பொதுக்கடிந் தினிது காக்கும்
கொற்றவன் அநபா யன்பொற் குடைநிழற் குளிர்வ தென்றால்
மற்றதன் பெருமை நம்மால் வரம்புற விளம்ப லாமோ. கூ௫

ஆ. திருவிருத்தம் - அ௫.

# திருநகரச் சிறப்பு

சொன்ன நாட்டிடைத் தொன்மையில் மிக்கது
மன்னு மாமல ராள்வழி பட்டது
வன்னி யாறு மதிபொதி செஞ்சடைச்
சென்னி யார்திரு வாரூர்த் திருநகர். க

வேத ஓசையும் வீணையின் ஓசையும்
சோதி வானவர் தோத்திர ஓசையும்
மாதர் ஆடல் மணிமுழ வோசையும்
கீத ஓசையு மாய்க்கிளர் வுற்றதே. உ

---

கவிகள் வழக்கு. தமக்கு மாறுபட்ட ஒன்றையும் மறைத்துக் கூறுவது அவர்கள் வழக்கன்று. சாதிகளைப்பற்றி ஆசிரியர் கொண்ட கருத்துப் பின்னே நூலுள் வருதல் காண்க. தனயரும் அனையில் தப்பா - பிள்ளைகள் அன்னை சொற்குத் தவற மாட்டார்கள். மனையெனக்கொண்டு மனைவி என்றலுமொன்று. தனயர் - போகப்பருவமுடைய ஆடவர்கள். ஆடவர் கற்புக் கூறியவாறு. தப்பா ஓசையால் ஈறு கெடாதது. புள்ளும் மாவும் நீதிய - (பகைமையுடைய) பறவைகளும் விலங்கு களும் (அப்பகைமை நீங்கி) நீதியுடையனவா யிருக்கின்றன. மாவும் நிலத்து இருப்பு உள்ளும் - இலக்குமியும் அந்நாட்டில் வசித்தலை விரும்புவாள். உள்ளும் ஆவும் எனப் பிரித்துக் காமதேனு என்று பொருள் கூறுவோருமுளர். சிவாயநம என்னும் அஞ்செழுத்தினால் புறப்பிணியும் அகப்பிணியும் வர அஞ்சும்.

கூ௫. தமிழ் வரைப்பில் - தமிழ் எல்லையுள்; தமிழகத்துள். திருநாடு - சோழநாடு. பொதுக்கடிந்து - பொதுமையை நீக்கி; பிற அரசர்க்கு உரியது என் னும் பொதுமையை நீக்கி. ஓகாரம் - எதிர் மறை.

க. சொன்ன நாட்டிடை - மேலே கூறிய சோழநாட்டில். தொன்மையில் - பழமையில். "திருவாரூர்க் கோயிலாக் கொண்ட நாளே" என்னும் இறுதியைப் பாட்டு தோறுமுடைய திருத்தாண்டகத்தைப் பார்க்க. மாமலராள் - பெருமை யுடைய பூமகள்; திருமகள். "திருவினாள் சேர்வதற்கு முன்னோ பின்னோ - திருவாரூர்க் கோயிலாக் கொண்ட நாளே"—அப்பர். வன்னி-வன்னிப்பத்திரம். திரு + ஆர் + ஊர் - திருவாரூர்.

உ. மணி - அழகிய; மணிச்சிலம்புமாம். முழவு - மத்தளம். எல்லா ஓசை களும் ஒன்றிய ஒருமை இன்ப ஓசை கிளர்வுற்ற தென்க. கிளர்வுற்றது - எழுந் தது. கீதம் - இசைப்பாட்டு.

பல்லி யங்கள் பரந்த ஒலியுடன்
செல்வ வீதிச் செழுமணித் தேரொலி
மல்லல் யானை ஒலியுடன் மாவொலி
எல்லை இன்றி எழுந்துள எங்கணும். ௩

மாட மாளிகை சூளிகை மண்டபம்
கூட சாலைகள் கோபுரம் தெற்றிகள்
நீடு சாளர நீடரங் கெங்கணும்
ஆடல் மாதர் அணிசிலம் பார்ப்பன. ௪

அங்கு ரைக்கென் னளவப் பதியிலார்
தங்கள் மாளிகை யின்னொன்று சம்புவின்
பங்கி னுள்திருச் சேடிப் பரவையாம்
மங்கை யார்அவ தாரஞ்செய் மாளிகை. ௫

படர்ந்த பேரொளிப் பன்மணி *வீதிபார்
இடந்த ஏனமும் அன்னமும் தேடுவார்
தொடர்ந்து கொண்டவன் தொண்டர்க்குத் தூதுபோய்
நடந்த செந்த மரையடி நாறுமால். ௬

---

௩. பல்லியங்கள் - பலவகை வாத்தியங்கள். மல்லல் - வளப்பமுடைய. மா - குதிரைகள்.

௪. சூளிகை - செய்குன்றுகள். சூளிகை மண்டபம் எனக்கொண்டு உயர்வாகக் கட்டப்பெற்ற சிகரத்தையுடைய மண்டபங்கள் என்னலும் ஒன்று. தெற்றிகள் - திண்ணைகள். நீடுசாளரம் - நீண்ட பலகணிகளையுடைய. நீடு அரங்கம் - பெரிய சபைகள். ஆர்ப்பன - முழங்குவன.

௫. அப்பதியிலார் தங்கள் மாளிகையில் - மேற்கூறிய ஆடல் மாதர்களாகிய பதியிலாருடைய மாளிகைகளுள். சம்புவின் பங்கினுள் - சிவபிரான் இடப்பாகத்துள்ள உமையம்மையாரின். திருச் சேடி - அழகிய தோழியாகிய கமலினி. கமலினியார் பரவையாராகப் பிறந்தவர். அங்கு உரைக்கு அளவு என் - அத்திருவாரூரின் மாண்பைக் கூறுதற்கு அளவை என்னை; என்னளவில் ஆகாது என்றபடி. பதியிலார் என்பதைப்பற்றிப் பின்னே கூறுவல்.

௬. பார் இடந்த ஏனமும் அன்னமும் தேடுவார் - நிலத்தைத் தோண்டிச் சென்ற பன்றியும் (விண்ணை நோக்கிச் சென்ற) அன்னமும் (அடிமுடி தேடிய) சிவபெருமான். வன்தொண்டரைத் தொடர்ந்து அன்பாற் கொண்ட பெருமான் அவர் பொருட்டுத் தூது போன வரலாற்றைச் சொல்லிய இடத்திலும் ஆசிரியர் அடி முடி தேடியதைக் குறிப்பிட்டிருக்கிறார்.

பா - ம்—* வீதிதான்.

செங்கண் மாதர் தெருவில் தெளித்தசெங்
குங்கு மத்தின் குழம்பை அவர்குழல்
பொங்கு கோதையின் பூந்துகள் வீழ்ந்துடன்
அங்கண் மேவி அளறு புலர்த்துமால். எ

உள்ளம் ஆருரு காதவர் ஊர்விடை
வள்ள லார்திரு வாரூர் மருங்கெலாம்
தெள்ளும் ஓசைத் திருப்பதி கங்கள்பைங்
கிள்ளை பாடுவ கேட்பன பூவைகள். அ

விளக்கம் மிக்க கலன்கள் விரவலால்
துளக்கில் பேரொலி யால்துன்னு பண்டங்கள்
வளத்தொ டும்பல ஆறு மடுத்தலால்
அளக்கர் போன்றன ஆவண வீதிகள். கூ

ஆர ணங்களே அல்ல மறுகிடை
வார ணங்களும் மாறி முழங்குமால்
சீர ணங்கிய தேவர்க ளேயலால்
தோர ணங்களில் தாமமுஞ் சூழுமால். கo

தாழ்ந்த வேணியர் சைவர் தபோதனர்
வாழ்ந்த சிந்தை முனிவர் மறையவர்

---

எ. அவர் குழல் - அம்மாதர்களின் கூந்தலில். கோதையின் பூந்துகள் - பூமாலையின் மகரந்தப் பொடிகள். உடன் அங்கண்மேவி - உடனே அவ்விடத்திற் கலந்து. அளறு புலர்த்தும் - சேற்றை உலரச்செய்யும்.

அ. ஊர் விடை வள்ளலார் - தியாகேசப் பெருமான். தெள்ளும் - இனிய. பூவைகள் - நாகணவாய்ப் பறவைகள். உள்ளம் உருகாதவர் யார் ?

கூ. கலன்கள் - ஆபரணங்கள். விரவலால் - கலத்தலாலும். துளக்கில்-அசைவில்லாத; நீங்காத. துன்னு - நெருங்கிய. ஆறு மடுத்தலால்-வழியாக வந்து நிறைதலாலும். ஆவண வீதிகள் - கடைத்தெருக்கள். அளக்கர் - கடல். அளத்தையுடைமையான் கடல் அளக்கராயிற்று. கடலுக்கு ஆம்போது, கலன்கள் - கப்பல்கள்; ஆறு - நதி.

கo. மறுகிடை-தெருவினிடத்து. ஆரணங்களே அல்ல - வேதங்களே அல்லாமல். வாரணங்களும்-யானைகளும். சீர் அணங்கிய - அழகாகப் பின்னிக்கூடிய. "முழு நெறி அணங்கிய நுண்கோல் வேரலோடு"—மலைபடுகடாம் 223. சீர் கனமுமாம். "நேர்சீர் சுருக்கிக் காயகலம்பையிர் "—மலைபடுகடாம் 13. சீரணங்கிய என்பதற்குச் சிறந்த அழகினையுடைய எனினுமாம். தாமமும் - மாலைகளும். ஆகாயத்திலே நெருங்கிய தேவர்களும் தோரணங்களின் தாமமும் என்று கொள்க.

வீழ்ந்த இன்பத் துறையுள் விரவுவார்
சூழ்ந்த பல்வே றிடத்ததத் தொல்நகர். கக

நிலம கட்கழ கார்*திரு நீள்நுதல்
திலகம் ஒப்பது செம்பியர் வாழ்பதி
மலர்ம கட்குவண் தாமரை போல்மலர்ந்
தலகில் சீர்திரு வாரூர் விளங்குமால். கஉ

அன்ன தொல்நக ருக்கர சாயினன்
துன்னு †செங்கதி ரோன்வழித் தோன்றினன்
மன்னு சீர்அந பாயன் வழிமுதல்
மின்னு மாமணிப் பூண்மனு வேந்தனே. கங

மண்ணில் வாழ்தரு மன்னுயிர் கட்கெலாம்
கண்ணும் ஆவியும் ஆம்பெருங் காவலான்
விண்ணு ளார்மகிழ் வெய்திட வேள்விகள்
எண்ணி லாதன மாண இயற்றினன். கச

கோற்ற ஆழி குவலயஞ் சூழ்ந்திடச்
சுற்று மன்னர் திறைகடை சூழ்ந்திடச்
செற்றம் நீக்கிய செம்மையின் மெய்ம்மனுப்
பெற்ற நீதியுந் தன்பெயர் ஆக்கினன். கரு

---

கக. அத்தொல்நகர் - அப்பழம்பதி; திருவாரூர். வேணியர் - சடையினர். அறநெறியில் வாழ்ந்த. வீழ்ந்த - விரும்பிய.

கஉ. நுதல் - நெற்றி. திலகம் - பொட்டு. செம்பியர் - சோழர்கள். மலர் மகட்கு - இலக்குமிக்கு. அலகில்சீர் - அளவில்லாத சிறப்பினையுடைய.

கங. செங்கதிரோன்வழி - சூரியன் மரபில். (சோழவமிசம் சூரியவமிச மாதலின்). முதல் - முதல்வன்.

கச. "நெல்லும் உயிரன்றே - நீரும் உயிரன்றே - மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்"—புறம் கஅசு. "நெல்லுயிர் மாந்தர்க்கெல்லாம் நீருயிர் இரண்டுஞ் செப்பில் - புல்லுயிர் புகைந்து பொங்கு முழங்கழ லிலங்கு வாட்கை - மல்லலங் களிற்றுமாலை வெண்குடை மன்னர் கண்டாய்-நல்லுயிர் ஞாலந்தன்னுள் காமவேல் நம்பி என்றான்"—சிந்தாமணி 2908. வேள்விகள் - அறவேள்விகள். ஊனமில் வேள்வியென்று ஆசிரியர் பல விடங்களில் கூறியுள்ளார். மாண - மாட்சிமை பொருந்த.

கரு. கொற்ற ஆழி - வெற்றி பொருந்திய ஆஞ்ஞா சக்கரம். குவலயம் - உலகம். சுற்று மன்னர் திறை - தன் ஆட்சிக்கு உட்பட்டுத் தன் வழி நிற்கும் சுற்றரசர்கள் (செலுத்தும்) கப்பம். கடை - வாயிலில். செற்றம் - பகைமை

பா - ம்—* தரு. † வெங்கதிரோன்.

பொங்கு மாமறைப் புற்றிடங் கொண்டவர்
எங்கும் ஆகி இருந்தவர் பூசனைக்
கங்கண் வேண்டும் *நிபந்தமா ராய்ந்துளான்
துங்க ஆகமம் சொன்ன முறைமையால். ௧௬

வேறு

அறம்பொரு ளின்ப மான அறநெறி வழாமல் புல்லி
மறங்கடிந் தரசர் போற்ற வையகங் காக்கும் நாளில்
சிறந்தநல் தவத்தால் தேவி திருமணி வயிற்று மைந்தன்
பிறந்தனன் உலகம் போற்றப் பேர்அரிக் குருளை அன்னான். ௧௭

தவமுயன் றரிதில் பெற்ற தனிஇளங் குமரன் நாளுஞ்
சிவமுயன் †றடைந்து தெய்வக் கலைபல திருந்த ஓதிக்
கவன‡வாம் புரவி யானை தேர்படைத் தொழில்கள் கற்றுப்
பவமுயன் றதுவும் பேறே எனவரும் பண்பில் மிக்கான். ௧௮

---

யை ; நீண்டகாலம் நிகழுங் கோபத்தை. செம்மையின் - நடுவு நிலைமையுடைய. மனுபெற்ற நீதியையும் தன் பெயராலாக்கினான் என்க. மனுநீதி சோழன் என்னும் பெயர்பெற்றான் என்பது. மற்ற நலன்களுடன் “ இவனே மனு ” என்று சொல்லுமாறு பழைய மனுநீதியைக் கடைப்பிடித்தொழுகுவதிலும் மனு என்றே தன் பெயரை ஆக்கிக் கொண்டான் என்க. ஈண்டுக் கூறிய மனுநீதி பழைய காலத்தது. இடைக்காலத்தில் மனுநீதி இடத்துக்கேற்றவாறு திரிக்கப்பட்டது. நாளடைவில் அதன் உருக்குலைக்கப்பட்டது. இப்பொழுது மனுவின் பெயரால் வழங்கப்படுவது ஸ்மிருதி. பண்டை மனுதர்மம் இறந்துபட்டது. மனுநீதிச் சோழன் பண்டை மனுநீதி வழிநின்று அரசு புரிந்தான் என்பது பின்னே வரூஉம் வரலாற்றால் நனிவிளங்கும்.

௧௬. மறையாகிய புற்று. புற்றிடங் கொண்டவர் - திருவாரூர்த் தியாகேசப் பெருமான். வரம்பில் காலத்தை (அநாதியை)க் காட்டுதற் பொருட்டு “ இருந்தவர் ” என்றார். புற்றிடங் கொண்டவர் எங்குமுள்ளவரென்க. நிபந்தம்-படித்தரங்களை ; கட்டளைகளை. (நிரந்தரம்-எப்பொழுதும்.) மனுச்சோழன் ஆகம வழி நின்றவன் என்பது கருதத்தக்கது.

௧௭. புல்லி - தழுவி. மறங்கடிந்து - பகைமையை யழித்து. போற்ற - வணங்க. போற்ற - விரும்ப. அரிக்குருளை - சிங்கக்குட்டி.

௧௮. சிவ முயன்று அடைந்து - சிவ நெறியில் அதாவது நன்னெறியில் பழகிப் பயன் பெற்று. கவன வாம்புரவி - விரை கதியும் தாவிப் பாய்தலுமுடைய குதிரை. பவம் முயன்றதுவும் - பிறவி தாங்கியதும். பேறே - பாக்கியமே. பண்பில் - குணங்களால்.

பா - ம்—* நிமந்தம் ; நிரந்தரம். † அடையும். ‡ வெம்புரவி.

அளவில்தொல் கலைகள் முற்றி அரும்பெறல் தந்தை மிக்க
உளமகிழ் காதல் கூர ஓங்கிய குணத்தால் *நீடி
இளவர சென்னுந் தன்மை எய்துதற் கணிய னாகி
வளரிளம் பரிதி போன்று வாழுநாள் ஒருநாள் மைந்தன். கக

திங்கள்வெண் கவிகை மன்னன் திருவளர் கோயில் நின்று
மங்குல்தோய் மாட வீதி மன்னிளங் குமரர் சூழக்
கொங்கலர் மாலை †தாழ்ந்த ‡குங்குமக் குவவுத் தோளான்
பொங்கிய தானை சூழத் தேர்மிசைப் பொலிந்து போந்தான். உ0

§பரசுவந் தியர்முன் சூதர் மாகதர் ஒருபால் பாங்கர்
விரைநறுங் குழலார் சிந்தும் வெள்வளை ஒருபால் மிக்க
முரசொடு சங்கம் ஆர்ப்ப முழங்கொலி ஒருபால் வென்றி
அரசிளங் குமரன் போதும் அணிமணி மாட வீதி. உக

தனிப்பெருந் தருமந் ¶தானோர் தயாஇன்றித் தானை மன்னன்
பணிப்பில்சிந் தையினில் உண்மைப் பான்மைசோ தித்தால் என்ன
மனித்தர்தன் வரவு காணா வண்ணமோர் வண்ண நல்ஆன்
புனிற்றிளங் கன்று துள்ளிப் போந்ததம் மறுகி ||னூடே. உஉ

---

கக. முற்றி - ஓதிமுடித்து. அணியனாகி - சமீபித்தவனாகி. பரிதி-சூரியன். இவ்விளங்கோவின் பெயர் வீதிவிடங்கன் என்றும், பின்னே இவன் சுந்தரச் சோழன் என்ற பெயரால் அழைக்கப்பட்டான் என்றுஞ் சொல்லப்படுகின்றன.

உ0. கவிகை - குடை. மங்குல் - இருண்ட மேகம். கொங்கு - வாசனை. குவவு - திரண்ட. தானை - சேனை. பொலிந்து - அழகுடன் விளங்கி.

உக. பரசுவந்தியர் - மங்கலப் பாடல்களால் துதிக்கும் பாணர்கள். சூதர் - நின்றேத்துவோர். மாகதர் - இருந்தேத்துவோர் (இவர்கள் உலாவில் கலந்து போந்தார்கள்). ஒருபால் - ஒரு பக்கம். பாங்கர் - அருகே. விரைநறுங் குழலார் - மணங்கமழும் நறிய கூந்தலையுடைய பெண்மணிகள். வெள்வளை - வெள்ளிய வளையல். நடையால் நேரும் மெலிவானும் பிறவாற்றானும் மகளிர் வளை நெகிழ்தல் இயல்பு. சங்கம் - சங்கு.

உஉ. ஓர் - ஒரு; சிறிதும்; எவ்வளவும். பணிப்பில் - நடுக்கமில்லாத; சலியாத. பான்மை - தன்மையை. மனித்தர் - மனிதர். "மனித்தப் பிறவியும்"—அப்பர்: கோயில் ச. அக்கூட்டத்தில் மனிதர் ஒருவரும் தன்வரவைக் காணாதவாறு கன்று போந்தது. ஓர் வண்ணம் - ஓரழகிய. நல் வண்ணம் எனக்கொண்டு வெண்ணிறம் எனினும் அமையும். புனிறு - ஈன்றணிமை. புனிற்றிளமை-மிக இளமை. அம்மறுகினூடே - அத்தெருவினூடே.

**பா - ம்**—*ஈண்டி. † தாழ்ந்து; தாழக். ‡ குங்குமங் குலவு. § பரசுவந் தியர்கள் முன்னம் மாகதர்; பரசுவந் திகர்முன் சூதர். ¶ தானோ. || ஊடு.

அம்புனிற் றாவின் கன்றோர் அபாயத்தின் ஊடு போகிச்
செம்பொனின் தேர்க்கால் மீது விசையினுல் செல்லப் பட்டே
உம்பரின் அடையக் கண்டங் குருகுதாய் அலமந் தோடி
வெம்பிடும் அலறும் சோரும் மெய்ந்நடுக் குற்று வீழும். ௨௩

மற்றது கண்டு மைந்தன் "வந்ததிங் கபாயம்" என்று
சொல்தடு மாறி நெஞ்சில் துயருழந் தறிவ ழிந்து
"பெற்றமுங் கன்றும் இன்றென் உணர்வெனும் பெருமை மாளச்
செற்ற,என் செய்கேன்" என்று தேரினின் றிழிந்து வீழ்ந்தான். ௨௪

அலறுபேர் ஆவை நோக்கி ஆர்உயிர் பதைத்துச் சோரும்
நிலமிசைக் கன்றை நோக்கி நெடிதுயிர்த் திரங்கி நிற்கும்
"மலர்தலை உலகங் காக்கும் மனுவெனும் என்கோ மானுக்
குலகிலிப் பழிவந் தெய்தப் †பிறந்தவா ஒருவன்" என்பான். ௨௫

"வந்தஇப் பழியை மாற்றும் வகையினை மறைநூல் வாய்மை
அந்தணர் ‡விதித்த ஆற்றால் ஆற்றுவ தறமே ஆகில்
எந்தைஈ தறியா §முன்னம் இயற்றுவன்" என்று மைந்தன்
சிந்தைவெந் துயரந் தீர்ப்பான் திருமறை யவர்முன் சென்றான். ௨௬

---

௨௩. அம் - அழகிய; எதுகைக்காக அப்புனிறு அம்புனிறு என்றாயிற் றெனினுமாம். ஓர் அபாயத்தின் ஊடு போகி - ஓர் ஆபத்திடை ஓடி. விசையி னுல் செல்லப்பட்டு - வேகத்தினுல் உருட்டப்பட்டு. உம்பரின் அடைய - விண் ணேக; இறக்க. கண்டு - சகிக்க முடியாத அக்காட்சியைக் கண்டு. அலமந்து - நெஞ்சம் சுழன்று. மெய் - உடல்.

௨௪. மற்றும் அங்கே ஆன் உற்ற துன்பக் காட்சியைக்கண்டு. துயருழந்து- துயரிலே அழுந்தி. பெற்றமும் - பசுவும்; செற்ற - செற்றன; சாய்த்தன. உணர்வு உயிரணி. அதுவே பெருமையுடைத்து.

௨௫. ஆர் உயிர் - அரிய உயிர். நெடிது உயிர்த்து - நெட்டுயிர்த்து; பெரு மூச்சு விட்டு. உலகம் வளருந் தன்மையதாகலான் "மலர்தலை உலகம்" என்றார். இதன்கண், 'உள்ளதுசிறத்தல்' (Evolution) என்னும் அறமிருத்தல் உணரற் பாற்று. பிறந்தவாறு என்னே!

௨௬. வந்த - அறியாது வந்த. விதித்த ஆற்றால் - விதித்த வழியால். ஆற்றுவது - செய்வது. கழுவாய் அதாவது பிராயச்சித்தம் நாடி மைந்தன் வேதம் வல்லாரிடம் போனுன். மைந்தன் - இளங்கோ. மாண்டது அம்மறிணைப் பசுங் கன்று. நிகழ்ச்சியும் அபுத்தி பூர்வகமானது. ஆயினும் இளங்கோ கழுவாய் தேட முயன்றது அக்கால நிலையைக் காட்டுவதாகும்.

பா - ம்—* கண்டாங்குருகு. † பிறந்தவாறொருவன். ‡ விரித்த. § வண்ணம்.

நன்னுயிர்க் கன்று வீயத் தளர்ந்தஆத் தரியா தாகி
முன்னெருப் புயிர்த்து விம்மி முகத்தினில் கண்ணீர் வார
மன்னுயிர் காக்குஞ் செங்கோல் மனுவின்பொன் கோயில் வாயில்
பொன்னணி மணியைச் சென்று கோட்டினுல் புடைத்த தன்றே.

பழிப்பறை முழக்கோ ஆர்க்கும் பாவத்தின் ஒலியோ வேந்தன்
வழித்திரு மைந்தன் ஆவி கொளவரு மறலி ஊர்திக்
கழுத்தணி மணியின் ஆர்ப்போ என்னத்தன் கடைமுன் கேளாத்
தெழித்தெழும் ஓசை மன்னன் செவிப்புலம் புக்க போது. உஅ

ஆங்கது கேட்ட வேந்தன் அரியணை இழிந்து போந்து
பூங்கொடி வாயில் நண்ணக் காவலர் எதிரே போற்றி
"ஈங்கிதோர் பசுவந் தெய்தி, இறைவ! நின் கொற்ற வாயில்
தூங்கிய மணியைக் கோட்டால் துளக்கிய" தென்று சொன்ஞர். உகூ

மன்னவன் அதனைக் கேளா வருந்திய பசுவை நோக்கி
"என்னிதற் குற்ற" தென்பான் அமைச்சரை இகழ்ந்து நோக்க
முன்னுற நிகழ்ந்த எல்லாம் அறிந்துளான் முதிர்ந்த கேள்வித்
தொன்னெறி அமைச்சன் மன்னன் தாளிணை தொழுது சொல்வான்.

---

உஎ. வீய - இறக்க. ஆ தரியாதாகி. நெருப்பு உயிர்த்து - நெருப்பெழப் பெருமூச்சு விட்டு. கோட்டினுல் புடைத்தது - கொம்பினுல் அடித்தது. ஆ அஃறிணையாயினும் உணர்வுடன் சென்று வினை நிகழ்த்தியது கருதற்பாலது. இத்தகை உணர்வு கிளி, புரு, நாய், யானை முதலிய சிலவற்றிற்குண்டு. குறையுடையார் தங்குறையை மணியடித்தலால் தெரிவித்தற் பொருட்டு வாயிலில் மணி கட்டி வைப்பது பண்டை அரசர் வழக்கு.

உஅ. பழிப்பறை - பழிச் சொல்; பறையுமாம். பாவம் ஒருருக்கொண்டு ஆரவாரிக்கும் ஒலியோ. வேந்தன் வழித் தோன்றிய திரு மைந்தன். மறலி ஊர்தி - யமனுடைய வாகனமாகிய எருமைக் கடாவின். கடைவாயிலில் முன் எப்பொழுதுங் கேளாத. தெழித்து - உரப்பி; அதட்டி; இரைந்து. செவிப் புலம் - காதினிடம்.

உகூ. அரியணை இழிந்து போந்து-சிம்மாசனம் விட்டுக் குதித்து ஓடி. கொற்ற வாயிலில் தூங்கிய - வெற்றியுடைய வாயிலில் தொங்கக் கட்டியிருந்த. கோட்டால் துளக்கியது - கொம்பினுல் அசைத்தது. இதுகாறும் தூங்கிய மணி என்பது குறிப்பு.

௩0. கேளா - கேட்டு. என்பாஞய்...நோக்க. அறிந்துளான் - அறிந்துளாஞகிய அமைச்சன். முதிர்ந்த கேள்வி யுடையவனும் பழைய அமைச்ச வழியை நன்குணர்ந்தவனுமாகிய அமைச்சன்.

"வளவர்கின் புதல்வன் ஆங்கோர் மணிநெடுந் தேர்மேல் ஏறி
அளவில்தேர்த் தானை சூழ அரசுலாந் தெருவில் போங்கால்
இளையஆன் கன்று தேர்க்கால் இடைப்புகுந் திறந்த தாகத்
தளர்வுறும் இத்தாய் வந்து விளைத்தஇத் தன்மை" என்றான். ௩௧

அவ்வுரை கேட்ட வேந்தன் ஆவுறு துயரம் எல்லாம்
வெவ்விடந் தலைக்கொண் டாற்போல் வேதனை அகத்து மிக்"கிங்
கிவ்வினை விளைந்த வா"றென் றிடருறும் இரங்கும் ஏங்கும் [ன்.
"செவ்விதென் செங்கோல்!" என்னும் தெருமரும் தெளியும் தேறு

"மன்னுயிர் புரந்து வையம் பொதுக்கடிந் தறத்தில் நீடும்
என்னெறி நன்றால்" என்னும் "என்செய்தால் தீரும்" என்னும்
தன்னிளங் கன்று காணுத் தாய்முகம் கண்டு சோரும்
அந்நிலை அரசன் உற்ற துயரம்ஓர் அளவிற் றன்றால். ௩௩

வேறு

மந்திரிகள் அதுகண்டு மன்னவனை அடிவணங்கிச்
"சிந்தைதளர்ந் தருளுவது மற்றிதற்குத் தீர்வன்றால்
கொந்தலர்தார் மைந்தனைமுன் கோவதைசெய் தார்க்குமறை
அந்தணர்கள் விதித்தமுறை வழிநிறுத்தல் அறம்"என்றார். ௩௪

---

௩௧. வளவ - சோழ! தானை - சேனை. அரசு உலாந் தெருவில் - இராச வீதியில்; அரசு இல்லாத தெருவன்று; அரசு உலாவுந் தெரு என்று குறிப்பிட்டவாறு. காவலரும் பிறரும் ஆங்கே இருந்தமையும், கவலையீனமின்மையும், எச்சரிக்கையாக இருந்தமையும், இன்னோரன்ன பிறவும் தொனித்தல் காண்க. "இறந்ததாக" என்பது, இன்னும் வழக்கு உறுதிப்படவில்லை என்னுங் குறிப்புடையது.

௩௨. எல்லாம் வெவ்விடமாகி. "இங்கு இவ்வினை விளைந்தவாறு என்!" என்றபடி. செவ்விது - அழகாயிருக்கிறது! செங்கோல் ஈண்டு இகழ்ச்சியின் மேற்று. தெருமரும் - நெஞ்சஞ் சுழல்வான். சுழலுதலும் தெளிதலும் உற்று உற்றுப் பின்னர் ஒன்றுந் தெளியாதவனு (தேறான்)னன்.

௩௩. புரந்து - காத்து. பொதுக்கடிந்து - பொதுமை நீக்கித் தனதாக்கி. "பொதுமொழி பிறர்க்கின்றி முழுதாளுஞ் செல்வர்க்கு"—கலித்தொகை ௬அ. "வையங் காவலர் வழிமொழிந் தொழுகப் - போகம் வேண்டிப் பொதுச் சொல் பொறாஅது", "வழுதி தண்டமிழ் பொதுவெனப் பொறான்"—புறம் அ; ௫௧.

௩௪. கொந்தலர்தார் - கொத்தாக அலர்ந்த மாலையை மார்பிலணிந்துள்ள. மைந்தனை......நிறுத்தல். மந்திரிகள் ஸ்மிருதி முறைப்படி கழுவாய் தேடுமாறு அரசனுக்கு அறிவுறுத்தினர்கள்.

"வழக்கென்று நீர்மொழிந்தால் மற்றதுதான் வலிப்பட்டுக்
குழக்கன்றை இழந்தலறுங் கோவுறுநோய் மருந்தாமோ
இழக்கின்றேன் மைந்தனை*என் றெல்லீருஞ் சொல்லியஇச்
சழக்கின்று நானிசைந்தால் தருமந்தான் சலியாதோ." ௩௫

"மாநிலங்கா வலனாவான் மன்னுயிர்காக் குங்காலைத்
தானதனுக் கிடையூறு தன்னால்தன் பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தால் கள்வரால் உயிர்தம்மால்
ஆனபயம் ஐந்துந்தீர்த் தறங்காப்பான் அல்லனோ." ௩௬

"என்மகன்செய் பாதகத்துக் கிருந்தவங்கள் செயா†இசைந்தே
அன்னியன்ஓர் உயிர்கொன்றால் அவனைக்கொல் வேனானால்
தொன்மனுநூல் தொடைமனுவால் துடைப்புண்ட தெனும்வார்த்தை
மன்னுலகில் பெறமொழிந்தீர் மந்திரிகள் வழக்"கென்றான். ௩௭

என்றரசன் இகழ்ந்துரைப்ப எதிர்நின்ற மதிஅமைச்சர்
"நின்றநெறி உலகின்கண் இதுபோல்முன் நிகழ்ந்ததால்
பொன்றுவித்தல் மரபன்று மறைமொழிந்த அறம்புரிதல்
தொன்றுதொடு நெறியன்றோ தொன்னிலங்கா வல!"என்றார். ௩௮

---

௩௫. அதுதான் - அத்தீர்வுதான்; அப்பிராயச்சித்தந்தான். வலிப்பட்டு - பலாத்காரப்பட்டு; வருத்தமுற்று. குழக்கன்றை - இளங்கன்றை. "மழவுங்குழவும் இளமைப் பொருள"—தொல்காப்பியம்: சொல் - உரி கடு. இச்சழக்கு - இப்பொய்யினுக்கு. மந்திரிகள் கூற்றைச் சழக்கென்றமையான், அரசன் நிலை நன்கு புலனாகும். மந்திரிகள் ஸ்மிருதி வழி நிற்கிறார்கள். அரசன் அற வழி நிற்கிறான். இதனை, "எல்லீருஞ் சொல்லிய இச்சழக்கு" என்பதனாலும், "தருமந்தான் சலியாதோ" என்பதனாலுந் தெளிக.

௩௬. காவலனாவான் - காக்கும் அரசனாவான். அதனுக்கு - அம்மன்னுயிர்க்கு. (க) தன்னால், (உ) தன் பரிசனத்தால் (பரிவாரங்களால்) (௩) பகைத்திறத்தால் (பகை வகைகளால்) (ச) கள்வரால் (௫) உயிர் தம்மால் (விலங்கு முதலிய உயிர்களால்.)

௩௭. தொன்மை மனுநூல் தொடை - பழைய மனுதர்ம சாத்திர ஒழுங்கு முறை. (தற்போது வழங்கும் மனு ஸ்மிருதி யன்று) மனுவால் - மனுநீதிச் சோழனால். துடைப்புண்டது - அழிந்தது. அரசர் மகிழுமாறு பொருளைத் திரித்துக் கூறுவது மந்திரிகள் வழக்கு.

௩௮. மதி அமைச்சர் - அன்பு அருள் நீதி முதலியனவின்றி அறிவால் மட்டும் நிலைமையை ஒழுங்குபடுத்த வல்ல மந்திரிகள் என்றவாறு. பொன்றுவித்தல் - புதல்வனை இறக்கச் செய்தல். தொன்று தொட்டுவரும்.

பா - ம்—*மைந்தனையே; மைந்தனை இன்று. † இசைந்தேன்.

அவ்வண்ணந் தொழுதுரைத்த அமைச்சர்களை முகநோக்கி
மெய்வண்ணந் தெரிந்துணர்ந்த மனுவென்னும் *விறல்வேந்தன்
"இவ்வண்ணம் பழுதுரைத்தீர்" என்றேரியின் இடைத்தோய்ந்த
செவ்வண்ணக் கமலம்போல் முகம்புலர்ந்து செயிர்த்துரைப்பான்.

"அவ்வுரையில் வருநெறிகள் அவைநிற்க அறநெறியின்
செவ்வியஉண் மைத்திறநீர் சிந்தைசெயா துரைக்கின்றீர்
எவ்வுலகில் எப்பெற்றம் இப்பெற்றித் தாயிடரால்
வெவ்வுயிர்த்துக் கதறிமணி எறிந்துவிழுந் ததுʼʼவிளம்பீர். சO

"போற்றிசைத்துப் புரந்தரன்மால் அயன்முதலோர் புகழ்ந்திறைஞ்ச
வீற்றிருந்த பெருமானார் மேவியுறை திருவாரூர்த்
தோற்றமுடை உயிர்கொன்றான் ஆதலினால் துணிபொருள்தான்
ஆற்றவுமற் றவற்கொல்லும் அதுவேயாம் எனநினைமின்' சக

எனமொழிந்து "மற்றிதனுக் கினியிதுவே செயல்இவ் ஆன்
மனம்அழியுந் துயர்அகற்ற மாட்டாதேன் வருந்தும்இது
தனதுறுபேர் இடர்யானுந் தாங்குவதே †தருமம்"என
அநகன்அரும் பொருள்துணிந்தான் அமைச்சரும்அஞ்சினர்அகன்றார்.

---

௩௯. மெய் வண்ணம் - (அற நூலின்) உண்மைத் தன்மையை. விறல் - வெற்றி. செவ்வணக் கமலம்போல் - சிவந்த நிறத்தையுடைய தாமரை மலர் போல. புலர்ந்து - வாடி; உலர்ந்து. செயிர்த்து - வருத்தத்தால் கோபித்து.

சO. அவ்வுரையில் வருநெறிகளவை நிற்க - நீவிர் கூறும் மறைமொழிகளி லுள்ள பிராயச்சித்த முறைகள் கிடக்க. நிற்க என்பது மந்திரிகளின் கூற்றை மறுக்கப் புகுந்தமை காட்டுகிறது. செவ்விய - நேர்மையான. எப்பெற்றம் - எப் பசு. இப்பெற்றித் தாம் - இத்தன்மையதாகிய. வெவ்வுயிர்த்து - பெருமூச்சு விட்டு. எறிந்து - அடித்து.

சக. புரந்தரன் - இந்திரன். 'பொதுவாக யாண்டும் உயிர்க்கொலை நிகழ்தல் ஆகாது; திருவாரூரில் கொலை நிகழ்வது பெரும்பாவம்' என்றபடி. திருவாரூரில் பிறந்த உயிர்கள் சிவகணமாதலினாலும், அவைகள் பிறவாநெறிபெறுவன ஆதலினா லும், அவைகளை அகால மரணத்திற்படுத்துவது அறமன்று என்பது கருத்து. " திருவாரூர் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன் "—சுந்தரர். விரிவு நமிநந்தி யடிகள் புராணத்திற் காண்க. ஆற்றவும் துணி பொருள்தான் - மிகவும் துணிந்து நிகழ்த்துவது தான். அவற் கொல்லும் அதுவே யாம் - அவனைக் கொல்லுதலே யாகும். ஆற்றவும் அற்று என்று கோடலும் பொருந்தும். நிகழ்த்த வேறொன் றின்றி என்றபடி.

சஉ. இதனுக்கு இனி இதுவே செயல் - இப்பழிக்கு இனிச் செய்வதாவது கன்றைக் கொன்றவனைக் கொல்லுதலே; பொருந்திய செயல். மாட்டாதவனாகிய

பா - ம்—* திறல். † கருமம்.

மன்னவன்தன் மைந்தனைஅங் கழைத்தொருமந் திரிதன்னை
"முன்னிவனை அவ்வீதி முரண்தேர்க்கால் ஊர்க"என
அன்னவனும் அதுசெய்யா தகன்றுதன்ஆர் உயிர்துறப்பத்
தன்னுடைய குலமகனைத் தான்கொண்டு மறுகணைந்தான். ௪௩

ஒருமைந்தன் தன்குலத்துக் குள்ளானென் பதும்உணரான்
தருமந்தன் வழிச்செல்கை கடனென்று தன்மைந்தன்
மருமந்தன் தேராழி உறஊர்ந்தான் மனுவேந்தன்
அருமந்த அரசாட்சி அரிதோமற் றெளிதோதான். ௪௪

தண்ணளிவெண் குடைவேந்தன் செயல்கண்டு தரியாது
மண்ணவர்கண் மழைபொழிந்தார் வானவர்பூ மழை*சொரிந்தார்
அண்ணலவன் கண்ணெதிரே அணிவீதி மழவிடைமேல்
விண்ணவர்கள் தொழநின்றான் வீதிவிடங் கப்பெருமான். ௪௫

சடைமருங்கில் இளம்பிறையுந் தனிவிழிக்குந் திருநுதலும்
இடமருங்கில் உமையாளும் எம்மருங்கும் பூதகணம்
புடைநெருங்கும் பெருமையும்முன் கண்டரசன் போற்றிசைப்ப
விடைமருவும் பெருமானும் விறல்வேந்தற் கருள்கொடுத்தான். ௪௬

---

யான். இது தனது - இப்பசுவினது. அநகன் - பாவமில்லாதவன். அரும் பொருள் - செயற்கரும் பொருள்.

௪௩. முன் - முன்னே; விரைவில். முரண் - வலிய. ஊர்க - ஊர்த்திச் செலுத்துக. அன்னவனும் - அம் மந்திரியும். தன் ஆர் உயிர் துறப்ப - தன்னுடைய அரிய உயிரைப் போக்க. தான் - தானே (அரசனே). மறுகு - தெரு.

௪௪. தருமந் தன் வழிச் செல்கை - அறத்தின் வழியே நடப்பது. மருமம்- மார்பில். தன் தேர் ஆழி உற - தன்னுடைய தேர்ச்சக்கரம் பொருந்த. அருமந்த- அருமருந்தன்ன; அரிய அமிர்தம் போன்ற; நல்ல.

௪௫. அளி - அருள். கண் மழை - கண்ணீரை மழையாக. அண்ணலவன்- பெருமையிற் சிறந்தவனாகிய மனுநீதிச் சோழன். மழவிடை - இளமை எருது. விடங்கப் பெருமான் - உளிபடாத கடவுள். (டங்கம் - உளி; வி - இன்மை.)

௪௬. இட மருங்கில் - இடது பக்கத்தில். விழிக்குந் திருநுதலும் - இமையா நாட்டமுடைய நெற்றியும் (கண்ணுதல்); இதற்கு அருட்கண் என்று பெயர். இக் கண் நெற்றிக்கு நேரே புருவத்திடைவெளியிலிருப்பது. ஆண்டவன் இத்திருக் கண்ணால் உயிர்களை நோக்கும்போது உயிர்களும் இக்கண் விளங்கப் பெறுதல் ஒருதலை. உயிர்கட்கு இக்கண்ணிருத்தலை உடற்கூற்று நூல்களிற் காண்க (Pinal Gland). இது புருவத்தின் இடைநேரே மூளையின் நடுவிலிருப்பது. இதனை, "நெற்றிக்கு நேரே புருவத்திடைவெளி உற்றுற்றுப் பார்க்க ஒளிவிடு மந்திரம்" எனவரூஉந் திருமூலர் திருவாக்கானுமுணர்க. மனுநீதிச் சோழன்றன் நீதியையும்

பா - ம்—*பொழிந்தார்.

அந்நிலையே உயிர்பிரிந்த ஆன்கன்றும் அவ்வரசன்
மன்னுரிமைத் தனிக்கன்றும் மந்திரியும் உடனெழவும்
இன்னபரி சானுனென் றறிந்திலன்வேந் தனும்யார்க்கும்
முன்னவனே முன்னின்றால் முடியாத பொருளுளதோ. சஎ

அடிபணிந்த திருமகனை ஆகமுற எடுத்தணைத்து
நெடிதுமகிழ்ந் தருந்துயரம் நீங்கினான் நிலவேந்தன்
மடிசுரந்து பொழிதீம்பால் வருங்கன்று மகிழ்ந்துண்டு
படிநனைய வரும்பசுவும் பருவரல்நீங் கியதன்றே. சஅ

பொன்தயங்கு மதிலாரூர்ப் பூங்கோயில் அமர்ந்தபிரான்
*வென்றிமனு வேந்தனுக்கு வீதியிலே அருள்கொடுத்துச்
சென்றருளும் பெருங்கருணைத் திறங்கண்டு தன்னடியார்க்
கென்றும்எளி வரும்பெருமை ஏழுலகும் †எடுத்தேத்தும். சகூ

இனையவகை அறநெறியில் எண்ணிறந்தோர்க் கருள்புரிந்து
முனைவரவர் மகிழ்ந்தருளப் பெற்றுடைய மூதூர்மேல்

---

உண்மையையும் விராசையையும் உணர்ந்த ஆண்டவன் முக்கண் காட்டி அருள் புரிந்தான். அடியார்க்கருள் புரியும்போதெல்லாம் முக்கண் காட்டுங் குறிப்பைப் பலப்பல விதமாக ஆசிரியர் நூன்முற்றுங் குறித்துச் செல்லுதல் கருதற்பாலது. சடை இளம்பிறை இவைகளின் நுட்பங்கள் மேலே சொல்லப்பட்டன. உமை - திருவருள். "அருளது சத்தியாகும்"—சிவஞானசித்தியார். விடை - அற விடை. மருவும் - வீற்றிருந்தருளும்.

சஎ. அந்நிலையே - காட்சி கொடுத்த அப்பொழுதே. தனிக் கன்றும் - ஒப்பற்ற இளங் குமரனும். வேந்தனும் தான் இன்ன பரிசு (தன்மை) ஆனான் என்று அறிந்திலன்.

சஅ. ஆகம் உற - மார்பிற் பொருந்த. படி - பூமி. பருவரல் - துன்பம்.

சகூ. பூங்கோயில் - கமலாலயம்; திருவாரூர் ஆலயத்தின் பெயர்.

ரு0. இனைய வகை-இப்படி. முனைவரவர் - சிவபெருமான். மூதூர் - பழைய திருவாரூர். அனையதனுக்கு - அத்திருவாரூர்க்கு. அகமலர் - நெஞ்சத்தாமரை. அறவனார் - அற வடிவினராகிய சிவபெருமான்றன். அறவனாராகச் சிவபெருமானிருத்தலினால் அவ்வூரில் அறக்கோல் நடைபெற்றதென்க.

"வாயிற்கடைமணி நடுநா நடுங்க - ஆவின் கடைமணி உகுநீர் நெஞ்சு சுடத் தான்தன் - அரும்பெறற் புதல்வனை ஆழியில் மடித்தோன் - பெரும் பெயர்ப் புகார் என்பதியே"—சிலப்பதிகாரம்: உ0 - வழக்கு ருஉ - ருசு (இது கண்ணகியின் கூற்று. கண்ணகியின்பதி, புகார் என்னும் காவிரிப்பூம்பட்டினம். காவிரிப் பூம்பட்டினம் சோழமன்னர் தலைநகரங்களுள் ஒன்று. "புதல்வனை ஆழியில் மடித்த" இடம் திருவாரூர். திருவாரூரும் சோழமன்னர் தலைநகரங்களுள்

பா - ம்—*வென்ற. † எடுத்தோதும்.

புனையும்உரை நம்மளவில் புகலலாந் தகைமையதோ
அனையதனுக் ககமலராம் அறவனூர் பூங்கோயில். ௰

ஆ_ திருவிருத்தம் கஙரு.

---

தமிழகத்துள்ள மூன்று நாடுகளுள் மிகவுஞ் செழியது சோழநாடு. அந்நாட்டைக் காவிரி என்றும் வளஞ்செய்த வண்ணமாயிருக்கிறது. காவிரி பலமுகங் கொண்டு கால்வாய்கள் வழியே ஓடிப் பாய்ந்து சோழநாட்டை நீரால் நிரப்பலால் அந்நாட்டிற்கு நீர்நாடு (புனல்நாடு) என்றொரு பெயருமுண்டு. காவிரியால் அந்நாட்டு மருத நிலங்கள் நலம் பெறுதலால், அந்நாட்டில் எங்கணும் மருத நிலப் பொருள்கள் கொழுமையாக விளைகின்றன. அந்நாட்டு மன்னர்கள் செங்கோன்மையிலும், வண்மையிலும், வீரத்திலும், பிறவற்றிலும் பேர்பெற்றவர்கள். அவர்கள் புலிக்கொடி இமயத்தில் பொறிக்கப்பெற்றதென்றால், அவர்கள்தம் ஆட்சித் திறங்களை விரித்துக்கூற வேண்டுவதில்லை.

இத்துணைச் சிறப்புவாய்ந்த சோழநாட்டில் பழமையிற் சிறந்து விளங்குவது திருவாரூர் என்னுந் திருநகரம். அத்திருநகரில் திருமகள் என்றும் வீற்றிருப்பாள். அங்கே அறவோர்களும் துறவோர்களும் நீங்காமலிருப்பார்கள். அவ்வூரில், திருப்பதிகங்களைக் கிள்ளைகள் பாடும்; பூவைகள் கேட்கும்.

திருவாரூரில் பரவையார் திருவவதாரஞ் செய்த திருமாளிகை ஒன்றிருக்கிறது. அவ்வம்மையார் வன்றொண்டரை மணந்து இல்வாழ்க்கை நடாத்தியபெருமையுந் திருவாரூருக்குண்டு. அவ்விருவர்க்கும் நேர்ந்த புலவி தீர்க்கவேண்டித் தியாகேசப்பெருமானே திருவாரூர்த் திருவீதியில் தூது சென்றிருக்கிறார். இப்பெற்றிவாய்ந்த திருவாரூரில் என்றுந் தெய்வமணமுஞ் சைவமணமுங் கமழ்ந்துகொண்டே யிருக்கும்.

இத்திருவாரூரை ஆண்ட மன்னர்களுள் ஒருவர் மனுநீதிகண்ட சோழர் என்பவர். அவர் அநபாயச் சோழரின் குல முதல்வர்; எல்லா உயிர்கட்குங் கண்ணும் உயிரும் போன்றவர்; ஊனமில் வேள்வி பல செய்தவர்; புற்றிடங் கொண்ட பெருமானார்க்குப் பூசனை முதலியன முறைப்படி நிகழ்த்தியவர். அம்மன்னர் ஆட்சி அறம் பொருள் இன்பம் என்னும் பேற்றிற்கு அடிப்படையாக நிலவியிருந்தது.

அவ்வரசர் பெருமானுக்கு ஓர் அரிய புதல்வன் பிறந்தான். அவனுக்கு இளமையில் பல கலைகளும், குதிரை யேற்றம், யானை யேற்றம், தேரூர்தல், விற்பயிற்சி முதலியனவும் பயிற்றுவிக்கப்பட்டன. அவன் பிறையென வளர்ந்து

---

ஒன்று. திருவாரூரையும் புகாரையும் ஆண்ட மன்னர் சோழராதலின், சோழர்தம் மாண்பு கூறப் புகுந்த கண்ணகி, "புதல்வனை ஆழியில் மடித்த" அருஞ் செயலையுங் குறிப்பிடலானாள்.) "குறைவிலுடம் பரிந்த கொற்றவன் முன்வந்த கறவை முறைசெய்த காவலன் காண் அம்மானை"—சிலப் : உக - வாழ்த்து-அம்மானைவரி. "மகனை முறை செய்த மன்னவன்"—மணிமேகலை : உஉ - சிறை உகo. "கறவைக் கன்று ஊர்ந்தானைத் தந்தையும் ஊர்ந்தான்"—பழமொழி கங.

அந்நிலையே உயிர்பிரிந்த ஆன்கன்றும் அவ்வரசன்
மன்னுரிமைத் தனிக்கன்றும் மந்திரியும் உடனெழலும்
இன்னபரி சானானென் றறிந்திலன்வேந் தனும்யார்க்கும்
முன்னவனே முன்னின்றால் முடியாத பொருளுளதோ. ௪௭

அடிபணிந்த திருமகனை ஆகமுற எடுத்தணைத்து
நெடிதுமகிழ்ந் தருந்துயரம் நீங்கினான் நிலவேந்தன்
மடிசுரந்து பொழிதீம்பால் வருங்கன்று மகிழ்ந்துண்டு
படிநனைய வரும்பசுவும் பருவரல்நீங் கியதன்றே. ௪௮

பொன்தயங்கு மதிலாரூர்ப் பூங்கோயில் அமர்ந்தபிரான்
*வென்றிமனு வேந்தனுக்கு வீதியிலே அருள்கொடுத்துச்
சென்றருளும் பெருங்கருணைத் திறங்கண்டு தன்னடியார்க்
கென்றும்எளி வரும்பெருமை ஏழுலகும் †எடுத்தேத்தும். ௪௯

இனையவகை அறநெறியில் எண்ணிறந்தோர்க் கருள்புரிந்து
முனைவரவர் மகிழ்ந்தருளப் பெற்றுடைய மூதூர்மேல்

---

உண்மையையும் நிராசையையும் உணர்ந்த ஆண்டவன் முக்கண் காட்டி அருள் புரிந்தான். அடியார்க்கருள் புரியும்போதெல்லாம் முக்கண் காட்டுங் குறிப்பைப் பலப்பல விதமாக ஆசிரியர் நூன்முற்றுங் குறித்துச் செல்லுதல் கருதற்பாலது. சடை இளம்பிறை இவைகளின் நுட்பங்கள் மேலே சொல்லப்பட்டன. உமை - திருவருள். "அருளது சத்தியாகும்"—சிவஞானசித்தியார். விடை - அற விடை. மருவும் - வீற்றிருந்தருளும்.

௪௭. அந்நிலையே - காட்சி கொடுத்த அப்பொழுதே. தனிக் கன்றும் - ஒப்பற்ற இளங் குமரனும். வேந்தனும் தான் இன்ன பரிசு (தன்மை) ஆனான் என்று அறிந்திலன்.

௪௮. ஆகம் உற - மார்பிற் பொருந்த. படி - பூமி. பருவரல் - துன்பம்.

௪௯. பூங்கோயில் - கமலாலயம்; திருவாரூர் ஆலயத்தின் பெயர்.

௫௦. இனைய வகை-இப்படி. முனைவரவர் - சிவபெருமான். மூதூர் - பழைய திருவாரூர். அனையதனுக்கு - அத்திருவாரூர்க்கு. அகமலர் - நெஞ்சத்தாமரை. அறவனார் - அற வடிவினராகிய சிவபெருமான்றன். அறவனாராகச் சிவபெருமானிருத்தலினால் அவ்வூரில் அறக்கோல் நடைபெற்றதென்க.

"வாயிற்கடைமணி நடுநா நடுங்க - ஆவின் கடைமணி உகுநீர் நெஞ்சு சுடத் தான்தன் - அரும்பெறற் புதல்வனை ஆழியில் மடித்தோன் - பெரும் பெயர்ப் புகார் என்பதியே"—சிலப்பதிகாரம்: ௨௦ - வழக்கு ௫௩ - ௫௬ (இது கண்ணகியின் கூற்று. கண்ணகியின்பதி, புகார் என்னும் காவிரிப்பூம்பட்டினம். காவிரிப் பூம்பட்டினம் சோழமன்னர் தலைநகரங்களுள் ஒன்று. "புதல்வனை ஆழியில் மடித்த" இடம் திருவாரூர். திருவாரூரும் சோழமன்னர் தலைநகரங்களுள்

பா - ம்—*வென்ற. † எடுத்தோதும்.

புனையும்உரை நம்மளவில் புகலலாந் தகைமையதோ
அனையதனுக் ககமலராம் அறவனார் பூங்கோயில். ருo

ஆக திருவிருத்தம் கருரு.

---

தமிழகத்துள்ள மூன்று நாடுகளுள் மிகவுஞ் செழியது சோழநாடு. அந்நாட்டைக் காவிரி என்றும் வளஞ்செய்த வண்ணமாயிருக்கிறது. காவிரி பலமுகங் கொண்டு கால்வாய்கள் வழியே ஓடிப் பாய்ந்து சோழநாட்டை நீரால் நிரப்பலால் அந்நாட்டிற்கு நீர்நாடு (புனல்நாடு) என்றொரு பெயருமுண்டு. காவிரியால் அந்நாட்டு மருத நிலங்கள் நலம் பெறுதலால், அந்நாட்டில் எங்கணும் மருத நிலப் பொருள்கள் கொழுமையாக விளைகின்றன. அந்நாட்டு மன்னர்கள் செங்கோன்மையிலும், வண்மையிலும், வீரத்திலும், பிறவற்றிலும் பேர்பெற்றவர்கள். அவர்கள் புலிக்கொடி இமயத்தில் பொறிக்கப்பெற்றதென்றால், அவர்கள்தம் ஆட்சித் திறங்களை விரித்துக்கூற வேண்டுவதில்லை.

இத்துணைச் சிறப்புவாய்ந்த சோழநாட்டில் பழமையிற் சிறந்து விளங்குவது திருவாரூர் என்னுந் திருநகரம். அத்திருநகரில் திருமகள் என்றும் வீற்றிருப்பாள். அங்கே அறவோர்களும் துறவோர்களும் நீங்காமலிருப்பார்கள். அவ்வூரில், திருப்பதிகங்களைக் கிள்ளைகள் பாடும்; பூவைகள் கேட்கும்.

திருவாரூரில் பரவையார் திருவவதாரஞ் செய்த திருமாளிகை ஒன்றிருக்கிறது. அவ்வம்மையார் வன்றொண்டரை மணந்து இல்வாழ்க்கை நடாத்தியபெருமையுந் திருவாரூருக்குண்டு. அவ்விருவர்க்கும் நேர்ந்த புலவி தீர்க்கவேண்டித் தியாகேசப்பெருமானே திருவாரூர்த் திருவீதியில் தூது சென்றிருக்கிறார். இப்பெற்றிவாய்ந்த திருவாரூரில் என்றுந் தெய்வமணமுஞ் சைவமணமுங் கமழ்ந்து கொண்டே யிருக்கும்.

இத்திருவாரூரை ஆண்ட மன்னர்களுள் ஒருவர் மனுநீதிகண்ட சோழர் என்பவர். அவர் அநபாயச் சோழரின் குல முதல்வர்; எல்லா உயிர்கட்குங் கண்ணும் உயிரும் போன்றவர்; ஊனமில் வேள்வி பல செய்தவர்; புற்றிடங்கொண்ட பெருமானார்க்குப் பூசனை முதலியன முறைப்படி நிகழ்த்தியவர். அம்மன்னர் ஆட்சி அறம் பொருள் இன்பம் என்னும் பேற்றிற்கு அடிப்படையாக நிலவியிருந்தது.

அவ்வரசர் பெருமானுக்கு ஓர் அரிய புதல்வன் பிறந்தான். அவனுக்கு இளமையில் பல கலைகளும், குதிரை யேற்றம், யானை யேற்றம், தேரூர்தல், விற்பயிற்சி முதலியனவும் பயிற்றுவிக்கப்பட்டன. அவன் பிறையென வளர்ந்து

---

ஒன்று. திருவாரூரையும் புகாரையும் ஆண்ட மன்னர் சோழராதலின், சோழர்தம் மாண்பு கூறப் புகுந்த கண்ணகி, "புதல்வனை ஆழியில் மடித்த" அருஞ் செயலையுங் குறிப்பிடலானாள்.) "குறைவிலுடம் பரிந்த கொற்றவன் முன்வந்த கறவை முறைசெய்த காவலன் காண் அம்மானை"—சிலப் : உக - வாழ்த்து-அம்மானைவரி. "மகனை முறை செய்த மன்னவன்"—மணிமேகலை : உஉ - சிறை உகo. "கறவைக் கன்று ஊர்ந்தானைத் தந்தையும் ஊர்ந்தான்"—பழமொழி கங.

இளங்கோவாகும் பருவத்தை அடைந்தான். அப்பருவத்தில் அவன் தேரிலேறி அரசிளங்குமரர்களும் சேனைகளும் மற்றவர்களும் புடைசூழ்ந்துவரத் திருவீதி உலா வருவது வழக்கம். வழக்கம்போல ஒருநாள் அவன் உலா வரலானுன். அன்று வழியில் ஓரிடத்திருந்த பசுங்கன்று ஒன்று துள்ளிப் பாய்ந்து தேருருளையில் அகப்பட்டு இன்னுயிர் துறந்தது. அக்காட்சிகண்ட தாய்ப்பசு அங்கே ஓடி வந்து, கதறிக் கதறித் துடித்துத் துடித்துக்கீழே விழுந்தது. அதன் கதறலும் துடிப்பும் வீழ்ச்சியும் இளங்கோவின் நெஞ்சைப்பிளந்து, அவனைத் தேரினின்றுஞ் சாய்த்துத்தள்ளின. தள்ளுண்ட இளங்கோ, மெய்விதிர் விதிர்ப்ப, வாய்குழற, நாவறளத் தாய்ப் பசுவைப் பார்க்கிறுன் ; கன்றைப் பார்க்கிறுன் ; கண்ணீர் உகுக்கிறுன் ; அலமருகிறுன் ; பெருமூச்சு விடுகிறுன் ; ' அந்தோ ! அறக்கோலோச்சும் என் தந்தைக்கு நான் எற்றுக்கோ பிள்ளையாய்ப் பிறந்தேன்' என்கிறுன்; 'மனுவென்னும் பெரும்பேர் தாங்கும் அவருக்கு இப்பெரும்பழி சுமத்தவோ நான் பிறந்தேன்.' என்கிறுன்; அழுகிறுன்; அழுது அழுது, ' இப்பெரும் பாவத்திற்குக் கழுவாயுளதோ ? உளதாயின் இக்கொலையை என் தந்தை அறியா முன்னரே அக்கழுவாய் தேடுவது நலன் ' என்று சொல்லிக்கொண்டே, அவன் அந்தணரிருக்கை நோக்கிச் சென்றுன். வாயில்லாப் பசு என்ன செய்தது ?

பசு, மனங்கலங்க, முகத்தில் கண்ணீர் தாரை தாரையாய்ப் பெருக, நெருட்புயிர்த்து, மன்னுயிர்களைத் தன்னுயிர் போற் காக்கும் மனுச்சோழ மன்னரின் அரமனை நோக்கி விரைந்து நடந்தது ; நடந்து அரமனை அடைந்தது; அடைந்து மனைவாயிலில் தூங்கிக்கொண்டிருந்த ஆராய்ச்சி மணியைத் தன் கொம்பினுல் புடைத்தது. அம்மணியோசை அரசர் பெருமான் செவியில் விழுந்தது. விழுந்ததும், அவர் திடுக்கிட்டு அரியாசனத்தினின்றுங் குதித்து வாயிலை அடைந்தார். வாயில் காப்போர், மன்னர் பிரானை வணங்கி, "இப்பசு தன் கோட்டினுல் இம்மணியை அடித்தது" என்றுர். மன்னர் பெருமான் சினந்து அமைச்சர்களை நோக்கினுர். அமைச்சருள் ஒருவன், நிகழ்ந்ததைக் கூறினுன். கருணை மன்னர் ஆவுறு துயரம் எய்தினுர் ; நஞ்சு தலைக்கேறினுலென மயக்குற்றுர் ; விழுந்தார் ; எழுந்தார் ; பசுவைப் பார்க்கிறுர் ; " என்னரசாட்சி நன்று ! நன்று!!" என்று ஏங்குகிறுர்; இரங்குகிறுர்.

இவ்வாறு துயருறும் வேந்தரை அமைச்சர்கள் பார்த்து, " அரசே ! சிந்தை தளர்க. இப்பழிக்குக் கழுவாயுண்டு. அதைச்செய்வதே முறை" என்று சொன்னுர்கள். அதற்கு அரசர்," அமைச்சர்களே! நீங்கள் கூறுங்கழுவாய்க்கு யான் இசையேன். அக்கழுவாய் கன்றை இழந்தலறும் பசுவின் நோய்க்கு மருந்தாகுமோ ? மைந்தன் பொருட்டுக் கழுவாய் தேடினுல் அறக்கடவுள் சலிப்புறுதோ ? உயிர்களுக்குத் தன்னுலாவது, பரிசனங்களாலாவது, பகைவர்களாலாவது, கள்வர்களாலாவது, பிற உயிர்களாலாவது விளையும் ஐந்து பயத்தையுந் தீர்த்து அறத்தைக் காப்பவனல்லனே அரசன் ? இன்று உங்கள் உரைக்கு யான் இசைந்து, நாளை வேறொருவன் ஓர் உயிரைக் கொன்றுல், அவனுக்கு மட்டுங் கொலைத் தண்டனை விதிக்கலாமோ? 'பண்டை மனுவின் நீதி, பாவி மனுவால் தொலைந்தது' என்னும் பழிமொழி உலகில் நிலவாதோ ? நீங்கள் மந்திரிகள் ! வழக்கப்படி மொழிந்

தீர்கள் !" என்று இயம்பினர். மன்னரின் மனோநிலையையுணர்ந்த மந்திரிகள் அவரைப் பார்த்து, " இத்தகைய நிகழ்ச்சி முன்னரும் நிகழ்ந்துள்ளது. இதன் பொருட்டு அருமைப் புதல்வனை இழப்பது முறையாகாது. கழுவாய் தேடுவதே முறை" என்று வேண்டி நின்றார்கள். சோழர் பெருமான் " இத்தகைய நிகழ்ச்சி எங்கே நடைபெற்றது? எங்கே எந்தப் பசு துன்பத்தால் மணியடித்தது? ஆகவே, பசு உற்ற துயரை யானும் உறுதல்வேண்டும். திருவாரூரில் பிறந்த உயிரை யன்றோ என்மைந்தன் கொன்றான்? அவனைக் கொல்வதே தகுதி" என்று கூறி அவ்வாறுசெய்ய உறுதிகொண்டார். அவ்வுறுதிகண்ட அமைச்சர்கள் நடுக்குற்று அகன்றார்கள். நீதிமன்னர் தம்மொருபுதல்வனை வரவழைத்து, ஓர் அமைச்சரை விளித்து, ''இவனைக் கன்றிறந்த இடத்திலே கிடத்தித் தேரைச் செலுத்தக் கடவை '' என்று ஆணையிட்டார். அவ்வமைச்சர் அவ்வாணைவழிநின்று கடனாற்ற ஒருப்படாது, அவ்விடத்தினின்றும் அகன்று, தம்முயிரை மாய்த்துக்கொண்டார். அதற்குமேல் அரசர் பெருமான் தம்முடைய குலமகனைத் தாமே அழைத்துச் சென்று, எண்ணியவாறு செய்துமுடித்தார்.

கருணை வேந்தரின் செயற்கருஞ் செயல்கண்டு மண்ணவர்கள் கண்மழை பொழிந்தார்கள் ; விண்ணவர்கள் பூமழை சொரிந்தார்கள். வீதி விடங்கப் பெருமான் விடைமேல் எழுந்தருளிச் சோழர் பெருமானுக்குக் காட்சி வழங்கினர். சோழர் பெருமான் ஆண்டவனைத் தொழுது இன்பக் கடலில் திளைத்தார். அந் நிலையில் பசுவின் கன்று எழுந்தது ; அரசிளங்குமரனும் விழித்தெழுந்தான்; அமைச்சரும் உயிர் பெற்றெழுந்தார். தம்மை வணங்கிய புதல்வனை மார் புறத்தழுவிச் சோழவேந்தர் வரம்பிலா மகிழ்வெய்தினர். பாலூட்டிய கன்றைக் கண்டு பசு துன்பம் நீத்தது. தியாகேசப் பெருமான், வெற்றிவேந்தர்க்கு வீதியிலே திருவருள் புரிந்த கருணைத் திறத்தை எழுலகமும் வியந்தோதின.

இங்ஙனம் அறவழி நின்று ஒழுகும் மெய்யன்பர்கட்கு ஆண்டவன் அருள் புரியும் பெருமை வாய்ந்த திருவாரூரின் சிறப்பு எம்மொழியில் எவ்வளவில் அடங்குவதாகும்? அத்திருநகரினுக்குப் புற்றிடங் கொண்டவர்தம் பூங்கோயில் அகமலராகப் பொலிகிறது.

# திருக்கூட்டச் சிறப்பு

பூத நாயகர் புற்றிடங் கொண்டவர்
ஆதி தேவர் அமர்ந்தபூங் கோயிலில்
சோதி மாமணி நீள்சுடர் முன்றில்சூழ்
மூதெ யில்திரு வாயில்* முன் னுயது.

பூவார் திசைமுகன் இந்திரன் பூமிசை
மாவாழ் அகலத்து மால்† முதல் வானவர்
ஓவா தெவரும் நிறைந்துறைந் துள்ளது
தேவா சிரியன் எனுந்திருக் காவணம்.

அரந்தை தீர்க்கும் அடியவர் மேனிமேல்
நிரந்த நீற்றொளி யால்‡ நிறை தூய்மையால்
புரந்த அஞ்செழுத் தோசை பொலிதலால்
பரந்த ஆயிரம் பாற்கடல் போல்வது. ௩

---

௧. பூதநாயகர் - உயிர்கட்குத் தலைவர். பூங்கோயிலில் - கமலாலயத்தில். முன்றில் - முற்றத்தை. முதுமை எயில் - பழைய மதில்களின். (தேவாசிரிய மண்டபம்) முன்னுயது.

௨. பூவார் திசைமுகன் - பூமியைப் படைக்கும் நான்முகன். பூமிசைமாவாழ் அகலத்துமால் - செந்தாமரைப் பூவில் வீற்றிருக்கும் இலக்குமி வாழும் மார்பினையுடைய திருமால். எவரும் ஓவாது - எவரும் நீங்காது. நிறைந்து உறைந்து உள்ளது - நிறைந்து இருக்க இடமாயிருப்பது ; உறைந்து என்பதற்குக் கூட்டம் இறுகிப் படிந்து எனினுமாம். தேவாசிரியன் என்னுந் திருக்காவணம் - தேவாசிரியன் என்னும் திருப்பெயருடைய திருமண்டபம் ; தெய்வத்தன்மை வாய்ந்த ஆசிரியன்மார் எழுந்தருளியுள்ள மண்டபம். உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன் அருளால் இவ்வுலகை நடாத்துகின்றவர் ஆசிரியன்மாராவர். அவர்கள் நுண்ணிய ஒளி வடிவினர்களாய் இமயம் மேரு முதலிய இடங்களிலிருப்பவர்கள். ஆண்டவன் அருள்வழி நின்று, உயிர்கட்கு நலஞ் செய்வது அவர்கள் திருத்தொண்டு. சமயம் நேரும்போது அவர்களிற் பலர் பருவுடல் தாங்கி உலகில் தோன்றிக் காலம் விழையும் திருப்பணி செய்வர். உலகில் நாலு பக்கங்களிலும் சமய குரவர்கள் என்று போற்றப்படுபவர்களெல்லாரும் இத்திருக்கூட்டத்திற் சேர்ந்தவரேயாவர். அப்பாலும் அடிசார்ந்தார் புராணம் பார்க்க. தமிழ் நாட்டிலும் அவர்களிற்சிலர் தோன்றி ஆண்டவன் அருள்நெறி வளர்த்தனர். அவ்வாசிரியன்மார் வீற்றிருந்தருளும் திருமண்டபமே தேவாசிரிய மண்டபமென்பது. அவர்களைப்பற்றி விரித்துக்கூறும் நூல் இஃதாகலான், அவர்கள் சிறப்பை ஈண்டு ஆசிரியர் கூறலானார்.

௩. தேவாசிரிய மண்டபம் ஆயிரம் பாற்கடல் போல்வது. அரந்தை-உலகத் துன்பத்தை. நிரந்த - ஒழுங்குபட்ட. "விரைந்து தொழில்கேட்கு ஞாலம் நிரந்தினிது - சொல்லுதல் வல்லார்ப்பெறின்"—குறள் 648. "நிரந்த பாய்மாமணிக மலிர"—சிந்தாமணி 1859. புரந்த - காத்தற்குரிய. நீற்றொளியும் தூய்

பா - ம்—*முன்னுளது ; முன்னுவது † முதலானவர். ‡ நெறி.

அகில காரணர் தாள்பணி வார்கள்தாம்
அகில லோகமும் ஆளற் குரியர்என்
றகில லோகத்து ளார்கள் *அடைதலின்
அகில லோகமும் போல்வ ததனிடை.

அத்தர் வேண்டிமுன் ஆண்டவர் அன்பினால்
†மெய்த்த ழைந்து விதிர்ப்புறு சிந்தையார்
கைத்தி ருத்தொண்டு செய்கடப் பாட்டினார்
இத்தி றத்தவர் அன்றியும் எண்ணிலார். ௫

மையும் வெண்மைப் பாலையும், அஞ்செழுத்தோசை அலை ஓசையையுங் குறிப்பன. நிறைந்த தூய்மையுடையார்பால் ஒளி வீசுதல் இயல்பு. அவ்வொளி ஒழுங்குபட்ட அருளொளி யாதலின் ' நிரந்த நீற்றொளி ' என்றார். " பூசு நீறு போல் உள்ளும் புனிதர்கள் " என்பதை ௬௪ம் பாட்டிற் பார்க்க. அஞ்செழுத்து - சி-வ-ய-ந-ம. சி - சிவம்; வ - அருள்; ய - உயிர்; ந - திரோதானம் (மலத்தால் மறைப்பது); ம - மலம். இவ்வைந்தில் எல்லாம் அடங்கி நிற்றலை நோக்குக. யகரமாகிய உயிர் மலத்தினின்றும் நீங்கி மறைப்பைத் தவிர்த்துத் திருவருளால் சிவமாதல்வேண்டும். இவ்வுணர்வை இடையறாது நினைப்பூட்டி நிகழ்ச்சியில் கொணர்தற்குக் கருவியாக நிற்பது ஐந்தெழுத்து. நினைவின் திண்மையே செயலாகும். மலத்தினின்றும் விடுதலை பெற யகரமாகிய உயிர் சிவத்தை நினைந்து நினைந்து உருக உருக வகரமாகிய அருட்டுணை நேரும். நேர்ந்ததும் யகரத்துக்கு ந. ம. வின் தொடர்பு அறும். அப்பொழுது சிவயநம என்பது சிவயவசி ஆகும். யகரமாகிய உயிர் வகரமாகிய திருவருளில் திளைத்துச் சிகரமாகிய சிவ ஆகும். இத்துணைச் சிறப்பு வாய்ந்து உயிர்களைக் காக்கும் ஆற்றலைப் பெற்றிருப்பது அஞ்செழுத்தாதலின், அதனை, "பரந்த அஞ்செழுத்து" என்றார். அவ்வஞ்செழுத்து, குறைவிலா நிறைவாகிய சிவமாந்தன்மை யென்னும் நிறை தூய்மையையும், அத்தூய்மை தன்னிறத்ததாகிய நீற்றொளியையும், அவ்வொளி அரந்தை இருளைப் போக்கலையும், பிறவற்றையும் கூட்டுதல் தெளிக.

௪. உலக ஆசிரியத் திருக்கூட்டத்தார்கள் அகில காரணனாகிய ஆண்டவன் திருவடித் தொண்டர்களாதலான், அவர்களே அகில லோகங்களையும் ஆளுதற்கு உரியவர்களென்க. அவர்கள் திருவருள் பெறின், ஆண்டவன் திருவருள் எளிதில் கூடும். " அன்பர்பணி செய்யஎனை ஆளாக்கி விட்டுவிட்டால் - இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே" "தொண்டரொடு கூட்டு கண்டாய்" —தாயுமானார். "வணங்கத் தலைவைத்து வார்கழல்வாய் வாழ்த்த வைத்து - இணங்கத் தன் சீரடியார் கூட்டமும் வைத்து" —மாணிக்கவாசகர். தேவாசிரிய மண்டபம் எல்லார்க்கும் உரியதென்பதும், குறிப்பிட்ட சிலர்க்கு மட்டும் உரியதன்றென்பதும் பின்னிரண்டடிகளான் விளங்குதல் காண்க.

௫. அத்தர் - சிவபெருமான். முன் - முன்னாளில்; எல்லையிட்டுக் கூற முடியாத காலம். பக்குவநிலை யுணர்ந்து ஆண்டவனே வேண்டி ஆட்கொள்

பா - ம்— * அடைதலால். † மெய்த்தழைத்து.

மாசி லாத மணிதிகழ் மேனிமேல்
பூசு நீறுபோல் உள்ளும் புனிதர்கள்
*தேசி னால்எத் திசையும் விளக்கினார்
பேச ஒண்ணாப் பெருமை பிறங்கினார்.

பூதம் ஐந்தும் நிலையில் கலங்கினும்
மாதொர் பாகர் மலர்த்தாள் மறப்பிலார்
ஓது காதல் உறைப்பின் நெறிநின்றார்
கோதி லாத குணப்பெருங் குன்றனார். எ

ஊப் பெற்றவர் ஆசிரியன்மார் என்க. அவர் அன்பே வடிவினர். முழு அன்பு நிலையாவது தனக்கென்று வாழாது மற்றவர்கட்கென்றே வாழ்வது. உலகிற்குத் தொண்டு புரிதல் வேண்டு மென்னும் ஆர்வமே அவர்தஞ் சிந்தையில் நிலவிக் கொண்டிருக்கும். அவ்வார்வத்தின் எழுச்சியால் "மெய்தழைத்தல்" "விதிர்ப்புறல்" முதலியன நிகழும். அவர்கள் செயலாளர்கள் என்பதை, "கைத் திருத் தொண்டு செய்கடப் பாட்டினார்" என்று ஆசிரியர் விளக்கியிருத்தல் காண்க. கைத்திருத்தொண்டு-சரியை. இத்திறத்தவர் அன்றியும் எண்ணிலார் - இவ்வகையினரல்லாமல் வெவ்வேறு வகையில் ஈடுபட்டவர் பலர்; வேறு முறையில் தொண்டாற்றுபவர்; வேறு முறைகள் கிரியை, யோகம், ஞானம் என்பன. சரியை முதலிய நான்குந் தொண்டின் கூறுபாடுகள். ஆசிரியன்மார்கள் உலகின் பொருட்டு ஒவ்வொருவிதத் தொண்டாற்றிக் காட்டுவார்கள். இக்காரணத்தால் அவர்கள் மாட்டு உயர்வு தாழ்வு கற்பித்தல் கூடாது.

சு. மணி - உருத்திராக்க மணி; சிவகாருண்யத்தைக் காட்டுவது. உருத்திராக்கம் சிவபெருமான் திருக்கண்ணினின்றும் பிறந்தது என்று புராணங் கூறும். அருள்வடிவினனாகிய ஆண்டவன் திருக்கண்ணினின்றும் என்னபிறக்கும்? கண்ணுக்கணிகலங் கண்ணோட்டமன்றோ? உயிர்களின் பாசத்தை நீறுபடுத்துவது நீறு. பாசம் நீறாயினதும் உள்ளத்தில் தூய்மையன்றோ நிலவும்? ஆகவே, உளத் தூய்மைக்கு அறிகுறி திருநீறென்க. வெளிவேடத்திற்காகத் தரிப்பது நீறாகாது. திருநீற்றின் நுட்பத்தை மெய்ப்பொருள் நாயனார், ஏனாதி நாயனார், சேரமான் பெருமாள் நாயனார் முதலியவர்கள் வரலாற்றிற் காண்க. "நீற்றைப்புனைந் தென்ன" முதலிய மெய்யுரைகள் வெளிவேடக்காரர்களை நோக்கி யெழுந்தனவென்க. தேசினால் - ஒளியால். பெருமை பிறங்கினார்-பெருமையில் விளங்கினார்.

எ. "மண்பா தலம்புக்கு மால்கடல் மூடிமற் றேழுலகும் - விண்பால் திசைகெட் டிருசுடர் வீழினும் அஞ்சல்நெஞ்சே - திண்பால் நமக்கொன்று கண்டோந் திருப்பா திரிப்புலியூர்க் - கண்பாவு நெற்றிக் கடவுட் சுடரான் கழலிணையே". "வானந் துளங்கிலென் மண்கம்ப மாகிலென் மால்வரையும் - தானந் துளங்கித் தலைதடு மாறிலென் தண்கடலும் - மீனம் படிலென் விரிசுடர் வீழிலென் வேலைநஞ்சுண் - டேனமொன் றில்லா ஒருவனுக் காட்பட்ட உத்தமர்க்கே."—அப்பர். காதல் உறைப்பின் - அன்புறைப்பின்.

பா - ம்—* தேசினாலே திசைகள்; திசையை.

கேடும் ஆக்கமும் கெட்ட திருவினர்
ஓடுஞ் செம்பொனும் ஒக்கவே நோக்குவார்
கூடும் அன்பினில் கும்பிட லேஅன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினர். ௮

ஆரங் கண்டிகை ஆடையுங் கந்தையே
பாரம் ஈசன் பணிஅல தொன்றிலார்
ஈர அன்பினர் யாதுங் குறைவிலார்
வீரம் என்னால் விளம்புந் தகையதோ. ௯

வேண்டும் ஆறு விருப்புறும் *வேடத்தர்
தாண்ட வப்பெரு மான்தனித் †தொண்டர்கள்

௮. கேடும் - இலாமையும்; வறுமையும். ஆக்கமும் - பொருட் செல்வமும். கெட்ட - அழிந்த. திருவினர் - அருட்செல்வ முடையவர்; ஓட்டில் வெறுப்பும் செம்பொனில் விருப்பும் இல்லாதவர். இவ்வியல்பினர்தம் வேலை என்ன? கூடும் அன்பினால் இறைவனையும் உயிர்களையும் தொழுது பயன்கருதாப் பணி செய்வது. பயன்கருதாத் தொண்டு வீட்டினுஞ் சிறந்ததாதலின் "வீடும் வேண்டா விறலின் விளங்கினர்" என்றார். வீட்டில் இன்பம்உண்டு என்று எண்ணித் தொண்டு செய்வதும் பயன் கருதுவதாய் முடிதலின், அதனையும் அன்பர்கள் வேண்டார்கள். "ஆசை அறுமின்கள் ஆசை அறுமின்கள் - ஈசனோடாயினும் ஆசை அறுமின்கள்"—திருமூலர். வீடும்வேண்டாது பயன்கருதாத் தொண்டில் உறைந்து நிற்பது சிறந்த வலிமையாதலாலும், வெற்றியாதலாலும் "விறலின்" என்றார்.

௯. கண்டிகை - உருத்திராக்கமாலை. ஈசன்பணி - ஈசன் பணியும் ஈசன் எழுந்தருளியுள்ள நடமாடுங் கோயில்களின் பணியும். "எவ்வுயிரும் நீங்காது உறையும் இறை சிவன் என்று - எவ்வுயிர்க்கும் அன்பாயிரு"—சைவசமயநெறி. "ஈசனுக்கன்பில்லார் அடியவர்க் கன்பில்லார் எவ்வுயிர்க்கும் அன்பில்லார் தமக்கும் அன்பில்லார்"—சிவஞானசித்தியார். இஃது "ஈர அன்பினர்" என்பதில் விளங்குகிறது. ஈரஅன்பினராதலால் அவர் யாதுங்குறைவிலார். முன்னே "விறல்" என்றார். இங்கே "வீரம்" என்கிறார். "வீரம்" எது என்பது கருதற்பாலது. இப்பாட்டிலும் இதற்குமுன்னுள்ள பாட்டுகளிலும்போந்துள்ள இயல்புகளின் அடைவே வீரமாகும். எல்லா உயிர்களிலும் தன்னிலும் வீற்றிருப்பது ஒருபொருள் என்பதையுணர்ந்து, எல்லா உயிரையுந் தன்னைப்போல் கருதிப் பணிபுரிவதும், எவ்வுயிர்க்குந்தீங்கு செய்யாமையும், அந்நிலை யுறுதார் அறியாமையால் தீங்கு செய்யினும் அதனை அன்புடன் பொறுத்தலும், இன்னோரன்ன பிறவும் வீரமாகும். அப்பர், மெய்ப்பொருள் நாயனர், ஏனாதிநாயனர் முதலியோர் வரலாற்றைப்பார்க்க. இவ்வீரர்க்கு ஆரம் எது? ஆடை எது? பாரம் எது? பாட்டை நோக்குக.

௧௦. இவர்கள் காலதேச வர்த்தமானங்களுக் கேற்றவாறு கோலங்கொள்வார்கள்; பல தேசங்களில் பல வேடங்கொண்டு உலகைக் காப்பார்கள். மேலே

பா - ம்—*வேடத்தார். † தொண்டுசெய்.

நீண்ட தொல்புக ழார்தம் நிலைமையை
ஈண்டு வாழ்த்துகேன் *என்னறிந் தேத்துகேன். கo

இந்த மாதவர் கூட்டத்தை எம்பிரான்
அந்தம் இல்புகழ் ஆலால சுந்தரன்
சுந்த ரத்திருத் தொண்டத் தொகைத்தமிழ்
வந்து பாடிய வண்ணம் உரைசெய்வாம். கக

ஆ திருவிருத்தம் - கசசு

பூதநாயகரும், புற்றிடங்கொண்டவருமாகிய தியாகேசப் பெருமான் வீற்றிருந்தருளுந் திருவாரூர்ப் பூங்கோயிலிலே, தேவாசிரியனென்னுந் திருப்பெயருடைய மண்டபம் ஒன்று உளது. அம்மண்டபத்திலே தேவர்கள் என்றும் நிறைந்திருப்பார்கள். கண்டிகை விளங்குகின்ற திருமேனியின்மீது பூசுந் திருநீற்றைப்போல உள்ளத்தினும் புனிதமுடையவர்களும், சிவஞான ஒளியால் எல்லாத் திசைகளையும் விளக்கினவர்களும், ஐந்து பூதங்களும் தத்தம் நிலையில் கலங்கினும் அம்மை அப்பரது திருவடிகளை மறவாதவர்களும், அன்புருவாய் நின்றவர்களும், குணத்தில் மலையை ஒத்தவர்களும், இன்பதுன்பங்களை ஒழித்தவர்களும், ஓட்டையும் பொன்னையும் ஒக்கவே நோக்குவோர்களும், பேரன்பினால் சிவபெருமானை வணங்குதலையன்றி வீட்டின்பத்தையுங் கருதாதவர்களும், கண்டிகையையே ஆரமாகவும், கந்தையையே உடையாகவும், இறைபணி நிற்றலையே பெரும்பணியாகவுங் கொண்டுள்ளவர்களும் அத்திருக்காவணத்தில் வீற்றிருப்பார்கள். அவர்கள் அருட்டன்மையை எங்ஙனம் எடுத்துப் போற்றுவேன்! ஆயினும் என்னை அடிமையாகவுடைய ஆலால சுந்தரர், திருக்கயிலையினின்றுந் தென்றிசையில் திருவவதாரஞ் செய்து, இம்மாதவர் திருக்கூட்டத்தைத் தொழுது திருத்தொண்டத் தொகையைத் திருவாய்மலர்ந்தருளிய வண்ணம் உரைசெய்வேன்.

---

கூறிய சில இந்நாட்டுக்குரியன. ஆண்டவனும் வேண்டுமாறு விருப்புறும் வேடத்தனாதலின், இதனைத் தாண்டவப் பெருமானுடன் சேர்த்துக் கோடலுமொன்று. தாண்டவப்பெருமான் - நடராசப்பெருமான். பயன் கருதாது உயிர்கள்பொருட்டு நிகழ்த்தும் ஐந்தொழிற்றாண்டவம். வாழ்த்தப் புகுந்தயான் என்ன அறிந்து ஏத்துவேன் என்றபடி. தொண்டர் புகழ் நீண்டதொன்மையுடையதாதலின் என்க.

கக. சுந்தரன் சொற்றது சுந்தரமுடையது. "எம்பிரான்.........உரைசெய்வாம்" என்பது ஆசிரியரின் முனைப்பின்மையையும், அடியாரிடத்து அவர்க்குள்ள அன்பையுங் காட்டுகிறது. மாதவர்கூட்டத்தில் ஆலால சுந்தரரும் ஒருவரே. அவர் வாயிலாக மாதவக் கூட்டத்தின் மாண்பு வெளிவருதல் வேண்டுமென்பது திருவருள் நோக்கு. திருத்தொண்டத்தொகையே இந்நூற்குப் பதிகம் என்று ஆசிரியர் மேலே திருமலைச் சிறப்பில் கூறியதையும் நோக்குக.

பா - ம்—* எங்கறிந்.

# தடுத்தாட்கொண்ட புராணம்

கங்கையும் மதியும் பாம்பும் கடுக்கையும் முடிமேல் வைத்த
அங்கணர் ஓலை காட்டி ஆண்டவர் தமக்கு நாடு
மங்கையர் வதன சீத மதிஇரு மருங்கும் ஓடிச்
செங்கயல் குழைகள்நாடும் திருமுனைப் பாடி நாடு. க

க. பாயிர முதலிலே உலகு ; இங்கே பாட்டுடைத்தலைவர் புராண முதலிலே கங்கை. "முதற்றே உலகு" என்ற திருவள்ளுவர், அவ்வதிகாரத்தைத் தொடர்ந்து வான் சிறப்புக் கூறியதும், 'நீரின்றமையாது உலகு' என்று அவரே உலகுக்கும் நீருக்கு முள்ள தொடர்பை உணர்த்தியதும் ஈண்டு உன்னற்பாலன. உலகு, உயிர்களை உணர்த்துவது ; கங்கை, அவ்வுயிர்கட்கு இன்றியமையாத ஈரம் என்னும் அன்பை உணர்த்துவது. உலகுக்கு இன்றியமையாதது அன்பு என்பதும், அவ்வன்பே அன்புக் கடவுளை உணர்த்துவது என்பதும் இந்நூலின் உள்ளக்கிடக்கை. கங்கை போலக் கண்ணுக்கும் கருத்துக்கும் இனிமை யூட்டுவது இந்நூலென்க. கங்கை தெய்வத் தன்மை வாய்ந்தது ; தாய்மைக்குரிய பெண்ணீர்மையுடையது. "கங்கையும் மதியும் பாம்பும் கடுக்கையும் முடிமேல் வைத்த அங்கணர்" என்பது, "நிலவுலாவிய நீர்மலிவேணியன்" என்பதன் விளக்கம். "உலகெலாம் உணர்ந்தோதற்கரியவன்" "நிலவுலாவிய நீர்மலிவேணியனும்" உலகுக்குத் துணைபுரிதல் மேலே சொல்லப் பட்டது. கங்கை மதி இவைகளின் உட்பொருள்களும் மேலே விளக்கப்பட்டன. குண்டலினி எழுந்து வளைந்து பாம்பின் படம்போல் நிற்றலான், அதனை இறைவன் முடிமீதுள்ள பாம்பெனக் கூறுவது பௌராணிகம். கடுக்கையும் - கொன்றைப் பூமாலையையும். கொன்றை, பிரணவத்துக்கு அறிகுறி. அங்கணர் - அழகிய கண்ணுடையவர் ; சிவபெருமான்; திருநகரச்சிறப்பு : பாட்டு சசு குறிப்புப் பார்க்க. ஓலை காட்டி ஆண்டது புராணத்தின் உயிர்போன்ற தாதலின், அதனை முதற்பாட்டிற் குறிப்பிட்டவாறு காண்க. ஆண்டவர் தமக்கு - சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு. வதன சீதமதி - முகமாகிய குளிர்ச்சி பொருந்திய சந்திரனுடைய. இருமருங்கும் - இரண்டு பக்கங்களிலும். செங்கயல் ஓடி - கண்களாகிய அழகிய கயல் மீன்கள் ஓடி. குழைகள் நாடும் - காதுகளைத் தாவும். காதளவோடிய கண்களையுடைய பெண்மணிகள் கற்பிற்குரிய அழகுடையவர்களென்க. "செங்கயல் நெடுங்கண் செவிமருங் கோடி"—மணிமேகலை : ௪ - பளிக்கறை க0க. "கயற்கண் செவியுறப் போந்தகன் றனவே"—சிந்தாமணி 167. ஒரு நாட்டின் சிறப்பு அந்நாட்டின் பெண்மக்களின் சிறப்பைப் பொறுத்து நிற்றலான், ஈண்டுப் பெண்மக்கள் நிறைவைச் சுருங்கக் கூறும் வழி, நாட்டுச்சிறப்பைக் கூறியவாறு காண்க. பெண்ணின் பெருமை பேசுவது இப்புராண நோக்கங்களுள் ஒன்றாதலானும், பாட்டுடைத்தலைவர் பெண்ணுடன் வாழ்ந்து பேறு பெற்றவராதலானும், அவர்,"பண்மயத்த மொழிப் பரவை சங்கிலிக்கும் எனக்கும் பற்றாய பெருமானே மற்றாரை

பெருகிய *நலத்தால் மிக்க பெருந்திரு நாடு தன்னில்
அருமறைச் சைவம் ஓங்க அருளினால் அவத ரித்த
மருவிய தவத்தால் மிக்க வளம்பதி, வாய்மை குன்றாத்
திருமறை யவர்கள் நீடும் திருநாவ லூராம் அன்றே. ௨

மாதொரு பாக னார்க்கு வழிவழி அடிமை செய்யும்
வேதியர் குலத்துள் தோன்றி மேம்படு சடைய னாருக்
கேதமில் கற்பின் வாழ்க்கை மனைஇசை ஞானி யார்பால்
தீதகன் றுலகம் உய்யத் திருவவ தாரஞ் செய்தார். ௩

யுடையேன்" என்று பெண்ணின் தெய்வக் காதற்றன்மையை உலகுக்கு அறிவுறுத்தியவராதலானும், அவர்தம் வரலாற்றைக் கூறும் தடுத்தாட்கொண்ட புராணத்தின் முதற்றிருப்பாட்டில் பெண்ணின் பெருமை பேசப்பட்டது. வதனம் சீதம் மதி கயல் இவைகள் வளத்தைக் குறிப்பால் உணர்த்துவன.

௨. மங்கையர் நிறைவைக் கூறும் வழி, நாட்டு நலன் கூறப்பட்டதென்பது "பெருகிய நலத்தால்" என்பதால் நன்கு விளங்குகிறது. பெண் மக்கள் நலன் பெற்றுள்ள நாட்டில் பிறநலன்கள் செழுமியிருத்தல் இயல்பு. பல வளங்கள் நிரம்பிய நாடாதலின் "பெருந்திருநாடு" என்றார். திருநாடு - திருமுனைப் பாடி நாட்டில். திரு - 'கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கம்' (பேராசிரியர்: திருக்கோவை க. உரை) ஆகிய அழகு; அமைதியுமாம். ("திருமுகத்து" —சிறுபாணாற்றுப்படை: 157; "அமைதியினையுடைய முகம்"—உரை). மறைச் சைவம் - வேதசாரமாகிய சைவம். "வேதாந்தத் தெளிவாஞ் சைவ சித்தாந்தத் திறன்"—சிவப்பிரகாசம்: பாயிரம் எ. "ஒரும் வேதாந்தம் என்னும் உச்சியில் பழுத்த - ஆரா இன்ப அருங்கனி பிழிந்த - சாரங்கொண்ட சைவ சித்தாந்தத் தேன்"—குமரகுருபரர்: பண்டார. க௦. அருளினால் அவதரித்த - திருவருளினால் சுந்தரமூர்த்தி சுவாமிகள் இறங்குதற்கு; இறங்கிய எனினுமாம். மருவிய - பொருந்திய; கலந்த. வாய்மை குன்றாத் திருவுடைய மறையவர்கள். நீடும் - பெருகியுள்ள. "தென்னாவலூர்கோன்", "திருநாவலூரனவன்", "நாவலர் கோன்"—சுந்தரர்: தேவாரம்.

௩. வழி வழி அடிமை செய்தல்: "எம்மான் எந்தை மூத்தப்பன் ஏழேழ் படிகால் எமை ஆண்ட பெம்மான்"—சுந்தரர்: திருவாலங்காடு க. "என்னைப் பெற்ற முற்றவை தம்மனை தந்தைக்குந் தவ்வைக்குந் தம்பிரானார்"—மூப்பது மில்லை எ. "எந்தையை எந்தை தந்தை பிரானை"—திருவாழ்கொளிபுத்தூர் எ. வேதியர்-ஆதிசைவர். ஏதம் இல் - குற்றமில்லாத. ஆலால சுந்தரர் திருவவதாரஞ் செய்தார். "அன்னவன் பெயர் ஆலால சுந்தரன்"—இந்நூல்: திருமலைச் சிறப்பு ௨௨. "அறந்தருநா வுக்கரசும் ஆலால சுந்தரரும்"—இந்நூல்: திருநாவுக்கரசு நாயனார் புராணம் ௧௧. "சடையனவன் சிறுவன்"; "நன்சடையன் இசை ஞானி சிறுவன்"; "இசைஞானி சிறுவன்"—சுந்தரர்: தேவாரம்.

பா - ம்—*வளத்தால்.

தம்பிரான் அருளி னாலே தவத்தினால் மிக்கோர் *போற்றும்
நம்பியா ரூரர் என்றே நாமமுஞ் †சாத்தி மிக்க
ஐம்படைச் சதங்கை சாத்தி அணிமணிச் சுட்டி சாத்திச்
செம்பொன்நாண் அரையில் மின்னத் தெருவில்தேர் உருட்டு நாளில்.

நரசிங்க முனையர் என்னும் நாடுவாழ் அரசர் கண்டு
பரவருங் காதல் கூரப் பயந்தவர் தம்பால் சென்று
விரவிய நண்பி னாலே வேண்டினர் பெற்றுத் தங்கள்
அரசிளங் குமரற் கேற்ப அன்பினால் மகன்மை கொண்டார். ரு

ச. தம்பிரான் - சிவபெருமான். நம்பியாரூரர் என்னும் பெயர், பெற்றோர்களால் இடப்பட்டது. சுந்தரர், ஆரூரர் ஆதற்கு முன்னர் இப்பெயர் பெற்றமை குறித்துச் சிலர் ஐயுறலாம். சுந்தரரால் முதல் முதல் பாடப்பெற்ற "பித்தா பிறைசூடி" என்னுந் திருப்பதிகத்தின் இறுதியில், அவர் தம்மை "ஆரூரன்" என்று குறித்திருத்தல் கருதற்பாற்று. நம்பியாரூரரின் பாட்டனார் பெயரும் "ஆரூரர்" என்பது, இப்புராணம் ருகூ-ம் பாட்டால் விளங்குகிறது. இச் சான்றுகளான் சுந்தரர் மரபினர் திருவாரூர்ப் பெருமானார்க்கு வழி வழித் தொண்டரென்பதும், "ஆரூரர்" என்னுங் கடவுள் பெயரும், "ஆரூரர்" என்னும் பாட்டனார் பெயரும் விரவி வருமாறு சுந்தரர்க்கு அப்பெயர் சூட்டப்பட்டது என்பதும் செவ்வனே விளங்குதல் காண்க. பின்னே சுந்தரர் வாழ்வில் ஆரூரராதலும் ஈண்டு உன்னற்பாலது. ஆகவே, ஐயத்துக்கிடமில்லை என்க. நம்பி - ஆடவரிற் சிறந்தவர். நம்பி என்பது ஆதி சைவரின் பட்டப் பெயர் என்றுரைப்போரு முளர். "ஆரூரன் நம்பி" "நம்பியூரன்" "திருவாரூர்ச் சிவன் பேர் சென்னியில் வைத்த - ஆரூரன்" எனவரூஉஞ் சுந்தரர் திருவாக்குகளை நோக்குக. ஐம்படை - ஐம்படைத்தாலி; பஞ்சாயுதம்; திருமாலின் சங்கம் சக்கரம் கதை கட்கம் சார்ங்கம் என்னும் ஐந்து ஆயுதங்களின் வடிவாய்ச்செய்து ஐந்தா நாளில் குழந்தைகளின் மார்பில் அணியும் ஓர் ஆபரணம்; இஃது அச்சம் முதலியவற்றைத் தடுக்கும் என்பது நம்பிக்கை. " அமளித்துஞ்சும் ஐம்படைத் தாலிக் - குதலைச் செவ்வாய்க் குறுநடைப் புதல்வர்க்கு "—மணிமேகலை: எ - துயில். ருகூ - ருஎ. ஐம்படையும் சதங்கையும். அரை நாண் - அரை ஞாண்.

ரு. (நம்பியாரூரரைக் கண்டு) பரவரும் - சொல்லுதற்கரிய. கூர - உள்ளது சிறப்ப. "கூர்ப்புங் கழிவும் உள்ளது சிறக்கும்"—தொல்: சொல். உரி. கஅ. பயந்தவர் தம்பால் - ஈன்றவரிடத்தில். விரவிய நண்பினாலே - முன்னே கலந்த நட்புரிமையினாலே. நம்பியாரூரரை வளர்க்க வேண்டினர். ஏற்ப - இசைய; ஒப்ப. மகன்மை - மகனுந்தன்மை. " நாதனுக்கூர் நமக்கூர் நரசிங்க முனை அரையன் - ஆதரித்து ஈசனுக்கு ஆட்செய்யும் ஊர் அணி நாவலூர் "—சுந்தரர்: திருநாவலூர் - கக.

பா - ம்—*பெற்று. † சாற்றி.

*பெருமைசால் அரசர் காதல் பிள்ளையாய்ப் பின்னும் தங்கள்
வருமுறை மரபில் வைகி வளர்ந்துமங் கலஞ்செய் கோலத்
தருமறை முந்நூல் சாத்தி அளவில்தொல் கலைகள் ஆய்ந்து
திருமலி சிறப்பின் ஓங்கிச் சீர்மணப் பருவஞ் சேர்ந்தார். சு

தந்தையார் சடைய னார்தந் தனித்திரு மகற்குச் சைவ
அந்தணர் குலத்துள் தங்கள் அரும்பெரும் மரபுக் கேற்ப
†வந்ததொல் சிறப்பின் புத்தூர்ச் சடங்கவி மறையோன் தன்பால்
சேந்திரு அனைய கன்னி மணத்திறஞ் செப்பி விட்டார். எ

குலமுதல் ‡அறிவில் மிக்கோர் கோத்திர முறையும் தேர்ந்தோர்
நலமிகு முதியோர் சொல்லச் சடங்கவி நன்மை ஏற்று
மலர்தரு முகத்தன் ஆகி மணம்புரி செயலின் வாய்மை
பலவுடன் பேசி ஒத்த பண்பினால் அன்பு நேர்ந்தான். அ

மற்றவன் இசைந்த வார்த்தை கேட்டவர், வள்ளல் தன்னைப்
பெற்றவர் தம்பால் சென்று சொன்னபின் பெருகு சிந்தை
உற்றதோர் மகிழ்ச்சி எய்தி மணவினை உவந்து §சாற்றக்
கொற்றவர் திருவுக் கேற்பக் குறித்து நாள்ஓலை விட்டார். கூ

---

சு. சால் - அமைந்த; மிக்க. நம்பியாரூரர் அரசர்தங் காதற் பிள்ளையாயினும், அவர் தமது ஆதி சைவமரபு முறை வழாது ஒழுகி வளர்ந்து வந்தார் என்க. மங்கலத்தைச் செய்கின்ற அழகு வாய்ந்த அரிய வேத முறைப்படி முப்புரி நூல் அணிந்து. மலி - நிறைந்த; மிகுந்த.

எ. மணஞ் செய்தற்குச் செய்தி செப்பிவிட்டார்.

அ. குலம் முதல் - குல முதலாகச் சொல்லப்பட்ட பலவற்றில். அறிவின் மிக்கோரும், தேர்ந்தோரும் (தெளிந்தோரும்) ஆகிய நலமிகு முதியோர். நன்மை என்று ஏற்று. செயலொடு வாய்மை. வாய்மை - உண்மை; தப்பாத மொழி என்பர் நச்சினார்க்கினியர்; ("பொருப்பன் வாய்மை:" 'பாண்டியனுடைய தப்பா மொழியை'—கலித்தொகை : நுடு - உச உரை.) "......ஒத்த பண்பும் ஒத்த நலனும் ஒத்த அன்பும் ஒத்த செல்வமும் ஒத்த கல்வியும் உடையாராய் "—இறையனார் அகப் பொருளுரை : க. அன்பு நேர்ந்தான் - (பெண்ணைத் தருதற்கு) அன்போடு உடன்பட்டார்.

கூ. வள்ளல் தன்னை - வள்ளலாகிய நம்பியாரூரரை. முன்னரே மகிழ்ச்சி பெருகு சிந்தையிலே உற்ற. ஓர் - ஒப்பற்ற. சாற்ற - வெளிப்படுத்த. கொற்றவர் திருவுக்கு ஏற்ப நாள் குறித்து - அரசராகிய நரசிங்க முனையர் தமது செல்வம் முதலியவற்றிற்கு இசைய நாள் குறித்து. நம்பியாரூரர் நரசிங்கமுனையரிடம் வளர்ந்து வருதலால் "கொற்றவர் திருவிற்கு ஏற்ப" என்றார். மிகச் சிறப்பாக

பா - ம்—*பெருமையால். † வந்தோர். ‡ அறிவு மிக்க. § சாற்றி. ¶ குறித்த.

மங்கலம் பொலியச் செய்த மணவினை ஓலை ஏந்தி
அங்கயல் கண்ணி னாரும் ஆடவர் பலரும் ஈண்டிக்
*கொங்கலர் சோலை மூதூர் குறுகினார் எதிரே வந்து
பங்கய வதனி மாரும் மைந்தரும் பணிந்து கொண்டார். க0

மகிழ்ச்சியால் மணமீக் கூறி மங்கல வினைகள் எல்லாம்
புகழ்ச்சியால் பொலிந்து தோன்றப் போற்றிய தொழிலர் ஆகி
இகழ்ச்சியொன் றானும் இன்றி ஏந்துபூ மாலைப் பந்தர்
நிகழ்ச்சியில் மைந்தர் ஈண்டி நீள்முளை சாத்தி னார்கள். கக

மணவினைக் கமைந்த செய்கை மாதினைப் பயந்தோர் செய்யத்
†துணைமலர்க் கோதைத் தாமச் சுரும்பணை தோளி னானைப்
புணர்மணத் திருநாள் முன்னாள் பொருந்திய விதியி னாலே
பணைமுர சியம்ப வாழ்த்திப் பைம்பொன்நாண் காப்புச் சேர்த்தார்.

மாமறை விதிவ ழாமல் மணத்துறைக் கடன்கள் ஆற்றித்
தூமறை மூதூர்க் கங்குல் மங்கலம் துவன்றி ஆர்ப்பத்

---

என்றபடி. 'சாற்றி' என்பது பாடமாயின் பெற்றவர்......ஏற்ப...ஓலை விட்டார் என்று கொள்க.

க0. மங்கலம் பொலியத் தீட்டிய. அம் கயல் கண்ணினாரும் - அழகிய கயல் போன்ற கண்களையுடைய மகளிரும். ஈண்டி - ஒருங்கு சேர்ந்து. கொங்கு அலர் - வாசனை மலர்; தாது பரக்கும் எனினுமாம். மூதூர்-பழைமை பொருந்திய புத்தூர். பங்கய வதனிமாரும் - தாமரை போன்ற முகத்தையுடைய பெண் மக்களும். கொண்டார் - வரவேற்றார். ஏந்தி - வாங்கி வாசித்துப் பார்த்து என்றும், மூதூர் - திருநாவலூரென்றும் கூறுவோருமுளர்.

கக. மணம் மீக்கூறி - திருமணம் திருமணம் என்று மேலும் மேலும் பலர் அறியச் சொல்லி. போற்றிய - விருப்பொடு செய்த. பந்தரில். நிகழ்ச்சியில் - உள்ளக் கிளர்ச்சியால்.

கஉ. துணைமலர் - ஒத்தமலர். துணை தோள் எனக் கொண்டு இரண்டு புயங்கள் என்னலுமாம். (துணர் - பூங்கொத்து). சுரும்பு அணை - வண்டுகள் மொய்க்கின்ற. கோதையாகிய தாமம் ; கோதை - ஒழுங்கு ; தாமம் - மாலையுமாம் ; கோதை - மாலை ; தாமம் - ஒழுங்குமாம். "கோதைத் தாமம் குழலொடு களைந்து" —சிலப்பதிகாரம் : உஎ - நீர்ப்படை க0எ. சுரும்பணை துணைமலர்க் கோதைத் தாமம் என்று இயைக்க. கோதைத் தாமம் என்பதை முடி அல்லது மார்பு மாலையாக்கொண்டு, அம்மாலையினின் றும் சுரும்பு அணை தோளினானை என்று கோடலுமொன்று. தோளினானை - நம்பியாரூரரை. பணைமுரசு - பருத்தமுரசு; முரசின் விசேடமுமாம்; இங்கே மணமுரசு. பைம்பொன் நாண்-பசும் பொன் கயிற்றால்.

கங. பின்னேயுள்ள மறை, மறையவரைக் குறிப்பது என்பது பழைய குறிப்புரை. கங்குல் - முன்னாளிரவில். மங்கல வாத்தியங்கள் சேர்ந்து முழங்க.

பா - ம்—* கொங்கலர்ச் சோலை. † துணர்.

தேமரு தொடையல் மார்பன் திருமணக் கோலங் காணக்
காமுறு மனத்தான் போலக் கதிரவன் உதயம் செய்தான். கந

காலைசெய் வினைகள் முற்றிக் கணிதநூல் புலவர் சொன்ன
வேலை*வந் தணையா முன்னர் விதிமணக் கோலம் கொள்வான்
நூலசைந் திலங்கு †மார்பின் நுணங்கிய கேள்வி மேலோன்
மாலையுந் தாரும் பொங்க மஞ்சனச் சாலை புக்கான். கச

வாசநெய் யூட்டி மிக்க மலர்விரை அடுத்த தூநீர்ப்
பாசனத் ‡தமைத்த பாங்கர் பருமணிப் பைம்பொன் திண்கால்
ஆசனத் தணிநீர் ஆட்டி அரிசனஞ் சாத்தி அன்பால்
ஈசனுக் கினியான் மேனி எழில்பெற விளக்கி னார்கள். கரு

அகில்விரைத் §தூப மேய்ந்த அணிகொள்பட் டாடை சாத்தி
முகில்நுழை மதியம் போலக் கைவலான் முன்கை ¶சூழ்ந்த
துகில்கொடு குஞ்சி ஈரம் புலர்த்தித்தன் தூய செங்கை
உகிர்நுதி முறையில் போக்கி ஒளிர்நறுஞ் சிகழி ஆர்த்தான். கசு

---

தேமரு தொடையல் மார்பன் - தேன் பொருந்திய மாலையை யணிந்த மார்பினை யுடைய நம்பியாரூரர். காமுறு - விருப்பங் கொண்ட. கதிரவன் - சூரியன்.

கச. காலைக் கடன்களை முடித்து. வேலை - முகூர்த்த வேளை. மார்பின் நுணங்கிய - நெஞ்சில் நுட்பமான. மார்பினையும் கேள்வியையு முடைய மேலோன் என்னலுமாம். " மாலை, தார் என்பன மாலையின் விகற்பங்கள். தார் - விடுபூவுமாம்" என்பது பழைய குறிப்புரை. இரத்தின மாலையும் பூமாலையும் என்பர் மகாலிங்க ஐயர். தார் - மார்பு மாலை; ஆடவர் அணிவது; மகளிர் மாலைக்கும் அருகி வருதல் உண்டு. (ஒருவரை ஓரிடத்தில் ஒருமைப் பெயரானும், மற்றோரிடத்தில் பன்மைப் பெயரானும், மயங்கக் கூறுதல் காவிய மரபு. இதற்கு ஆண்டாண்டமையும் சொல்லோசைகளும், அன்பு நிகழ்ச்சியும், இன்னபிறவும் காரணமாகும். "ஒருமை சுட்டிய" என வரூஉந் தொல்காப்பிய எச்சவியற் சூத்திரத்துக்குப் புலவர்கள் கண்ட உரைத் திறங்களை நோக்குக.)

கரு. வாச நெய் ஊட்டி - வாசனையுடைய எண்ணெய் தேய்த்து. விரை அடுத்த - மணங்கலந்த. தூ நீர் பாசனத்து - தூய நீர்ப் பாத்திரத்தின். பாங்கர் அமைத்த - பக்கத்தே அமைத்த. பருத்த மணிகளிழைத்துப் பசும் பொன்னால் செய்யப்பட்ட வலிய கால்களையுடைய பீடத்திலே இருத்தி. அணி - அழகு. அரிசனம்-மஞ்சள் சேர்ந்த கலவைப்பொடி. ஈசனுக்கு இனியான் - நம்பியாரூரர். எழில் - அழகு.

கசு. அகில் விரை தூப மேய்ந்த - அகிற்றுண்டுகளால் வாசனைப் புகை ஊட்டப்பட்ட. கைவலான் - ஒப்பனை செய்வதில் கைதேர்ந்தவன். தனது முன்கை

பா - ம்— *வந்தணையும். † மார்பன். ‡ அமைந்த. § தூபமேந்தி. ¶ சூழ்ந்து.

தூநறும் பசுங்கர்ப் பூரச் சுண்ணத்தால் வண்ணப் போதில்
ஆனதண் பனிநீர் *கூட்டி அமைத்தசந் தனச்சே றட்டி
மான்மதச் சாந்து தோய்ந்த மங்கலக் கலவை சாத்திப்
பான் †மறை முந்நூல் மின்னப் பவித்திரஞ் சிறந்த கையான். கள

தூமலர்ப் பிணையல் மாலை துணர்இணர்க் கண்ணி கோதை
தாமம்‡என் றினைய வேறு தகுதியால் அமையச் சாத்தி
மாமணி அணிந்த தூய வளர்ஒளி இருள்கால் §சீக்கும்
நாமநீள் கலன்கள் சாத்தி நன்மணக் கோலம் கொண்டார். கஅ

மன்னவர் திருவும் தங்கள் வைதிகத் திருவும் பொங்க
நன்னகர் விழவு கொள்ள நம்பியா ரூரர், நாதன்
தன்னடி மனத்துள் கொண்டு தகுந்திரு நீறு சாத்திப்
பொன்னணி மணியார் ¶யோகப் புரவிமேல் கொண்டு போந்தார்.

---

யில் சுற்றிய ஆடையைக் கொண்டு. குஞ்சி - குடுமி. உகிர் நுதி - நகநுனி. நக நுனியை முறையால் போக்கலாவது வகிர்ந்து சிக்கறுப்பது. சிகழி ஆர்த்தான் - குடுமியை முடித்தான். குடுமியின் கருமையையும் துகிலின் வெண்மையையும் "முகில் நுழை மதியம் போல" என்றார்.

கள. சுண்ணத்தால் - பொடியால். வண்ணப்போதில் - அழகிய மலர்களால். ஆன - ஆகிய. மான்மதச் சாந்து - கஸ்தூரிக் குழம்பு. மங்கலக் கலவை - மற்ற மணத்துக்குரிய வாசனைக் கலவைகள். பால் மறை - பாலும் வெள்கி மறையும் படியான ; அதிக வெண்மை என்றபடி.

கஅ. பிணையல் மாலை - மலர்களின் தாளிரண்டையும் ஒன்றன்மேல் ஒன்று வைத்துக்கட்டப்படுஞ் சரம். துணர் இணர் - பூங்கொத்துக்களாலமைந்த. கண்ணி- கொண்டை மாலை; நாரின் வழியாகப் பூக்களை யடுக்கிச் சிறிய இழையினால் வளை வாகக் கட்டப்படும் மாலை. தாமம் - பூக்களை வெவ்வேறு பத்தியாக வைத்து வளைவின்றி நீளமாகக் கட்டப்படும் மாலை. கோதை - பொதுவாக நீளமாகக் கட்டப் படும் மாலை. கண்ணிக் கோதை என்றும், கோதைத் தாமம் என்றும் கொள்ளின், கோதையைத் தனியாகக்கொள்ளவேண்டுவதில்லை. கண்ணி, கொண்டையில் சூட் டப்படுவது. மற்ற மாலைகள் தோள் மார்பு முதலிய விடங்களில் சூட்டப்படுவன. இருள் கால் சீக்கும் - இருளை அறவே ஒதுக்கும். அணிந்த - அழுத்திய. நாமம் - பேர் பெற்ற. கலன்கள் - ஆபரணங்கள். மாமணி அணிந்த கலன்கள்.

கக. மன்னவர் திரு - தேர், யானை, குதிரை, காலாள், குடை, முரசு முத லிய சிறப்புக்கள். வைதிகத் திரு - வைதிக உடை அணி மறைமுழக்கம் முதலி யன. பொன் அணி மணி ஆர் - பொன்னால் அலங்கரிக்கப்பெற்ற அழகு பொருந் திய ; மணி ஆர் பொன் அணி எனக்கொண்டு மணிகளிழைத்த பொன்னணிகள் புனைந்த என்னலுமொன்று. யோகப் புரவி - நல்ல சுழிகள் அமைந்த குதிரை.

பா - ம்—*கூட அமைந்த. † முறை. ‡ என்றின்ன. § சீப்ப. ¶ வேகப்புரவி.

இயம்பல துவைப்ப எங்கும் ஏத்தொலி எடுப்ப மாதர்
நயந்துபல் லாண்டு போற்ற நான்மறை ஒலியின் ஓங்க
வியந்துயிர் விரும்ப வந்து விரவினர்க் கின்பஞ் செய்தே
உயர்ந்தவா கனயா னங்கள் மிசைகொண்டார் உழையர் ஆனோர். உ0

மங்கல கீத நாத மறையவர் †குழாங்க ளோடு
தொங்கலும் விரையும் சூழ்ந்த மைந்தரும் துவன்றிச் ‡சூதும்
பங்கய முகையும் சாய்த்துப் பணைத்தெழுந் தணியில் மிக்க
குங்கும முலையி னாரும் பரந்தெழு கொள்கைத் தாகி. உக

§அருங்கடி எழுந்த போழ்தின் ஆர்த்தவெள் வளைக ளாலும்
இருங்குழை மகரத் தாலும் இலங்கொளி மணிக ளாலும்
நெருங்கிய பீலிச் சோலை ¶நீல்நிறத் தரங்கத் தாலும்
கருங்கடல் கிளர்ந்த தென்னக் காட்சியில் பொலிந்த தன்றே. உஉ

---

யோகம்-உயர்ச்சியுமாம். இனி நம்பி அடையப்போவது ஞான நிலையாதலின் அவர் 'யோகப் புரவி' ஏறினர் என்பது குறிப்பு. யோக உலகம் புரவியை உவமையாகக் கோடல்மரபு. "புள்ளினு மிக்க புரவியை மேற் கண்டால்-கள்ளுண்ண வேண்டாம் தானே களிதரும் - துள்ளி நடப்பிக்கும் சோம்பு தவிர்ப்பிக்கும் - உள்ளது சொன்னோம் உணர்வுடை யோருக்கே"—திருமந்திரம்.

உ0. இயம் - வாத்தியங்கள். துவைப்ப - முழங்க. ஏத்து ஒலி - வாழ்த்தித் தோத்திரிக்கும் ஒலி. நயந்து - விரும்பி. ஒலியின் - ஒலியுடன். தத்தம் உயிர் திருமணத்தை வியந்து விரும்ப வந்து, உயிர் கலந்த விருப்பம் என்றபடி. (பார் - உலகம்). விரவினர்க்கு - திரண்டு கூடியவர்கட்கு. யானங்கள் - சிவிகைகள். உழையானோர்-பக்கத்திலுள்ளவர்கள்; சுற்றத்தார்கள்; பரிசனங்கள் முதலியவர்கள்.

உக. தொங்கலும் விரையும் - மாலையும் மணமும். துவன்றி - நெருங்கி. சூதும் - சூதாடு கருவியையும். பங்கய முகையும் - தாமரை அரும்பையும். சாய்த்து - தோற்கச் செய்து. பணைத்து - பருத்து. அணியில் - அழகில். கொள்கை - சிறப்பு. "கொள்கைத்தாகி என்னும் வினைக்கு, கூட்டம் தோன்றா எழுவாயாக நின்றது" என்பர் மகாலிங்க ஐயர். கீழ் வரும் அருங்கடி கொள்கைத் தாகி என்று கொள்ளலுமொன்று.

உஉ. அரும் கடி எழுந்த போழ்தின் - திருமணக் கூட்டம் எழுந்தபோது; திருமண வேளை நெருங்கியபோது என்போருமுளர். ஆர்த்த வெள் வளைகளாலும்-ஒலிக்கும் வெள்ளை வளையல்களாலும் (சிலேடை) முழங்கும் வெண் சங்குகளாலும், இருங்குழை மகரத்தாலும்-பெரிய மகர குண்டலங்களாலும் (சிலேடை) துளையுடைய பெரிய மகரமீன்களாலும். மணிகளாலும் - இரத்தினாபரணங்களாலும் (சிலேடை) முத்துக்களாலும். அரங்கத்தாலும்-வரிசைகளாலும் (சிலேடை)

பா - ம்—* வியந்து பார். † குழாங்கள் சூழ்ந்து. ‡ சூழப். § அருங்குடி. ¶ நீலநீர்த்.

நெருங்குதூ ரியங்கள் ஏங்க *நிரைத்தசா மரைகள் †ஓங்கப்
பெருங்குடை மிடைந்து செல்லப் ‡பிணங்குபூங் கொடிகள் ஆட
அருங்கடி மணம்§வந் தெய்த அன்றுதொட் டென்றும் அன்பில்
வருங்குல மறையோர் புத்தூர் மணம்வந்த புத்தூர் ஆமால். உரு

நிறைகுடம் தூபம் தீபம் நெருங்குபா லிகைகள் ஏந்தி
நறைமலர் அறுகு சுண்ணம் நறும்¶பொரி ||பலவும் வீசி
உறைமலி கலவைச் சாந்தின் உறுபுனல் தெளித்து வீதி
மறையவர் மடவார் வள்ளல் மணம்எதிர் கொள்ள வந்தார். உச

"கண்கள்எண் ணிலாத வேண்டுங் காளையைக் காண" என்பார்
"பெண்களில் உயர நோற்றாள் சடங்கவி பேதை" என்பார்
"மண்களி கூர வந்த மணம்கண்டு வாழ்ந்தோம்" என்பார்
பண்களில் நிறைந்த கீதம் பாடுவார் ஆடு வார்கள். உரு

"ஆண்டகை அருளின் நோக்கின் வெள்ளத்துள் அலைந்தோம்" என்பார்
"தாண்டிய °பரியும் நம்பால் தகுதியில் @நடந்த" தென்பார்
"பூண்தயங் கிவனே காணும் புண்ணிய மூர்த்தி" என்பார்
ஈண்டிய மடவார் கூட்டம் %இன்னன இசைப்பச் சென்றார். உசு

---

தரங்கத்தாலும் - அலைகளாலும். பீலிச்சோலை - மயிற்பீலியொத்த சோலை. தரங்கம், சோலையொத்த நிறத்தது. கிளர்ந்தது என்ன - எழுந்தாற் போன்ற. அருங்கடி கொள்கைத்தாகி எழுந்த போதின்.

உரு. தூரியங்கள் - வாத்தியங்கள். ஏங்க - ஒலிக்க. நிரைத்த சாமரைகள் - வீச வரிசையாகப் பிடித்த சாமரங்கள். ஓங்க - மேலே எழும்ப. (தோரை - மயிலிறகாற் செய்த விசிறி. தோரையைப் பெருங்குடையுடன் சேர்த்துக் கோடலுமொன்று). மிடைந்து-நெருங்கி. பிணங்கு - நெருங்கிய. கடிமணம் - திருமணம்; புதுமணம் எனினுமாம். மணம் வந்த புத்தூரேயன்றி மணம் நிகழ்ந்த புத்தூரான்று.

உச. நறை - வாசனை. சுண்ணம் - வாசனைப் பொடி. உறை மலி கலவைச் சாந்தின் உறுபுனல் - துளி மிகுந்த பனிநீர் கலந்த சந்தனத்தினின்றும் தெளிந்த நீரையும். உறை - உறைதலுமாம். வள்ளல் - நம்பியாரூரர்.

உசு. நம்பியாரூரர் அடியவராதலால் "அருளின் நோக்கின் (கருணை நோக்கு) வெள்ளத்துள்" என்றார். தாண்டிச் செல்லுங் குதிரையும் (நமது எண்ணத்துக் கேற்ப) நம்மிடம் மெல்ல நடந்தது என்பார். பூண் தயங்கு-ஆபரணம் அசையும். பூணுக்கும் அழகு வழங்கும் இயற்கையழகுடையான். ஈண்டிய - நெருங்கியுள்ள.

பா - ம்—*நிரைந்த. †தோரை. ‡பிறங்கு. §வந்தேய்ந்த. ¶பொடி. ||பிறவும். °மாவும். @அடைந்த. %இன்னணம்.

வருமணக் கோலத் தெங்கள் வள்ளலார் தெள்ளும் வாசத்
திருமணப் பந்தர் முன்பு சென்றுவெண் சங்கம் எங்கும்
பெருமழைக் குலத்தின் ஆர்ப்பப் பரிமிசை இழிந்து பேணும்
ஒருமணத் திறத்தின் * ஆங்கு நிகழ்ந்தது மொழிவேன் உய்ந்தேன்.

**வேறு**

ஆலுமறை சூழ்கயிலை யின்கண் அருள் செய்த
சாலுமொழி யால்வழி தடுத்தடிமை கொள்வான்
மேலுற எழுந்துமிகு கீழுற அகழ்ந்து
மாலும்அய னுக்கும்அரி யார்ஒருவர் வந்தார். உஅ

கண்ணிடை கரந்தகதிர் வெண்படம் எனச்சூழ்
புண்ணிய நுதல்புனித நீறுபொலி வெய்தத்
தண்மதி முதிர்ந்துகதிர் சாய்வதெனெ †மீதே
வெண்ணரை முடித்தது விழுந்திடை சழங்க. உகூ

---

உஎ. தெள்ளும் - இனிய. சங்கம் - மணச்சங்கு. பெருமழைக் குலத்தின் ஆர்ப்ப - பெரிய மேகக் கூட்டத்தைப் போல முழங்க. பரிமீதிருந்து இறங்கி. பேணும் - செய்ய உட்கொள்ளும்; விரும்பும். ஒரு மணத்திறத்தின் - ஒப்பற்ற திருமணத்தினிடத்தே.

உஅ. ஆலும் - ஒலிக்கும். மறை கயிலையில் ஒலிவடிவாயிருப்பது. ஈண்டு மறை என்றது, உலகில் தோன்றிய எல்லா மறைகளையும். பின்னே, "முந்தை மறை ஆயிரம் மொழிந்தான்" என்று வருதல் காண்க. சாலுமொழியால்-அமைந்த மொழியால்; மேன்மை மொழியால். முன்னே அருள் செய்த சாலுமொழியைத் திருமலைச் சிறப்பில் உஎ, உஅ, உகூ-ம் பாக்களிற்பார்க்க. வழி - முறையே. கொள்வான் - கொள்ளும் பொருட்டு. அகழ்ந்து - தோண்டி. ஒருவர் - கயிலாயத்துள்ள சீகண்டர். (புவனங்கள் பலப்பல. அவைகள் முக்கூறுபடுத்தப்பட்டிருக்கின்றன. அம்முக்கூறு பிரகிருதி மாயா புவனம், அசுத்த மாயா புவனம், சுத்த மாயாபுவனம் என்பன. இம்மூன்று மாயையையுங் கடந்து நிற்பது தற்பரசிவம். தற்பரசிவம் ஊர்பெயர் இடம் முதலியன இல்லாதது. அஃது அறிவாய் யாண்டும் நீக்கமற நிறைந்து நிற்பது. "பதிபரமே அதுதான் - நிலவும்அரு உருவின்றிக் குணங்குறிக ளின்றி நின்மலமாய் ஏகமாய் நித்த மாகி - அலகில் உயிர்க் குணர்வாகி அசலமாகி அகண்டிதமாய் ஆனந்த உருவாய் அன்றிச் - செலவரிதாய்ச் செல்கதியாய்ச் சிறிதாகிப் பெரிதாய்த் திகழ்வது **தற்சிவம்** என்பர் தெளிந்தோரே"—**சிவப்பிரகாசம்** - க. தற்பரசிவம் அதிட்டிக்க முத்திறப் புவனங்களையும் முறையே நடாத்துவோர் சீகண்டர், அநந்தேசுரர், சதாசிவர் ஆவர். இவருள், கயிலையில் வீற்றிருப்பவர் சீகண்டர். இவரைச் சம்பு பக்கத்தில் தற்பரசிவமாகவும் அணுபக்கத்தில் குருவாகவுங் கோடல் மரபு. விரிவு சைவசித்தாந்த நூல்களினும், சிவாகமங்களினும் பார்க்க.)

உகூ. கதிர் கண்ணிடை கரந்த - ஒளி பொருந்திய நெற்றிக் கண்ணை இடையில் மறைத்த. வெண்படம் என - வெள்ளிய வஸ்திரம் போல. கதிர்வெண்

பா - ம்—* அங்கு. † மாடே.

காதிலணி கண்டிகை வடிந்தகுழை தாழச்
சோதிமணி மார்பின்* அசை நூலினொடு †தோளின்
மீதுபுனை உத்தரிய வெண்துகில் நுடங்க
ஆதப மறைக்குடை அணிக்கரம் விளங்க. ௩௦

பண்டிசரி கோவண உடைப்பழமை கூரக்
கொண்டதொர் சழங்கலுடை ஆர்ந்தழகு கொள்ள
வெண்துகில் உடன்குசை முடிந்துவிடு வேணுத்
தண்டொருகை கொண்டுகழல் தள்ளுநடை கொள்ள. ௩௧

மொய்த்துவளர் பேர்அழகு மூத்தவடி வேயோ
அத்தகைய மூப்பெனும் அதன்படிவ மேயோ
மெய்த்தநெறி வைதிகம் ‡விளைந்தமுத லேயோ
இத்தகைய வேடம்என ஐயமுற எய்தி. ௩௨

வந்துதிரு மாமறை மணத்தொழில் தொடங்கும்
பந்தரிடை நம்பிஎதிர் பன்னுசபை முன்னின்று
"இந்தமொழி கேண்மின்எதிர் யாவர்களும்" என்றான்
முந்தைமறை ஆயிரம் மொழிந்ததிரு வாயான். ௩௩

எனவுங் கொள்ளலாம். நுதல் - நெற்றி. சூழ் நீறு என்றியைக்க. குளிர்ச்சி பொருந்திய பிறைச்சந்திரன் பூரணச் சந்திரனுகி வெண்ணிலவு பொழிவது போன்ற வெண்ணரையை மேலே முடித்தது. சழங்க - சப்பளிப்ப; தளர; துவள.

௩௦. கண்டிகை - கண்டிகைபோன்று விளைந்த. மணி - உருத்திராக்கமணி மாலை. நூலினொடு - பூணூலுடன். உத்தரியமாகிய வெள்ளாடை. நுடங்க - அசைய. ஆதபம் - வெயில்.

௩௧. பண்டி - வயிற்றினின்றும். கூர - மிக. கொண்டதொர் - உடுத்திய ஒரு. சழங்கல் உடை - நழுவும் உடை. ஆர்ந்து - நிறைந்து. குசை - தருப்பை. முடிந்து விட்டிருக்கிற. வேணு - மூங்கில். கழல் - கால்.

௩௨. படிவம் - வடிவம். முதல் - முதற்குரு (எல்லாருக்கும் பெருங் குரு சீகண்டராதலின்).

௩௩. நம்பி - நம்பியாரூரர். பல்லாயிரம் மறைகள் (பல சமயமறைகள்) வெளி வருதற்கு முதற்குருவாக நின்றவர் சீகண்டர். நம்பி எதிர் - நம்பிக்கு எதிரிலே; நம்பிக்கு மாறாக எனினுமாம். பன்னு-நெருங்கிய. கண்ணால் காண்டல், வாயால் பேசல், கையால் தொடுதல் முதலியன நிகழ்தல்வேண்டும். இவை ஞானதீக்கை முறைகள். தொடக்கத்தில் முதலிரண்டும் நிகழ்கின்றன. பின்னே மற்றொன் றும் நிகழ்தலை நோக்குக.

பா - ம்—*மிசை. † தோன்ற. ‡ விளைத்த.

என்றுரைசெய் அந்தணனை எண்ணில்மறை யோரும்
மன்றல்வினை மங்கலம டங்கலனை யானும்
"நன்றுமது நல்வரவு நங்கள்தவம் என்றே
நின்றதிவண் நீர்மொழிமின் நீர்மொழிவ" தென்றார். ௬௪

பின்னுகனும் நாவலர் பெருந்தகையை நோக்கி
"என்னிடையும் நின்னிடையும் நின்றஇசை வால்யான்
முன்னுடைய தோர்பெரு வழக்கினை முடித்தே
நின்னுடைய வேள்வியினை நீமுயல்தி" என்றான். ௬௫

நெற்றிவிழி யான்மொழிய நின்றநிகர் இல்லான்
"உற்றதொர் வழக்கெனிடை நீயுடைய துண்டேல்
*மற்றது முடித்தலது யான்வதுவை செய்யேன்
முற்றஇது சொல்லு"கென எல்லைமுடி வில்லான்.

"ஆவதிது கேண்மின்மறை யோர்! என்அடி யான்இந்
நாவல்நகர் ஊரன்இது நான்மொழிவ" தென்றான்
தேவரையும் மாலயன் முதற்றிருவின் மிக்கோர்
யாவரையும் †வேறடிமை யாவுடைய எம்மான். ௬௭

---

௬௪. மன்றல் - திருமணம். மடங்கல் அனையானும் - சிங்கம்போன்ற நம்பி யாரூரும்; நம்பியாரூரர் அரசர்பால் வளர்ந்தவராதலின், அவர்மாட்டு வீரக்கூறும் உடைமை கூறியவாறும். 'நன்றுமது நல்வரவு நங்கள் தவம்' என்று சொல்லி, 'நங்கள் தவம் என்றே இவண் நின்றது' என்று கொண்டு பொருளுரைப்பினும் பொருந்தும். இவண் - இங்கு. இவண் நீர்மொழிவது என்றும், இவண்நின்றது என்றுங் கொள்ளலாம்.

௬௫. பின்னுகனும் - சடைக்கோலமுடைய கயிலாய பதியும். நாவலர் - திரு நாவலூரில் வந்தவர். ஆண்டான் தன்மை ஐயரிடத்தும், அடிமை என்பது நம்பி யாரூரரிடத்தும் தொன்றுதொட்டே ஏற்பட்டனவாதலின் "முன்னுடையது" என்றார். யான் முன்னுடையது - யான் முன்னமே உடைத்தாயுள்ளது. வேள் வியினை - திருமணத்தை. முயல்தி - நடத்துவாய். என்னைவிட்டுப் பிரிந்தவழக்கு என்பது குறிப்பு. இதனை "இசைவால்" என்பது உணர்த்தும்.

௬௬. நெற்றிவிழியான் - கண்ணுதலோன் (திருநகரச்சிறப்பு : பாட்டு ௪௬ குறிப்பை நோக்குக). நிகர் இல்லான் - ஒப்பற்ற நம்பியாரூரர். வதுவை - கலியா ணம். முற்ற - முழுவதும் ; முடிய. அது - அவ்வழக்கு. எல்லைமுடிவு இல்லான்- ஆதியந்த மில்லாத ஆண்டவன். இவ்வாறு நம்பியாரூரரைப் பேசச் செய்தது, அவரை அறியாது அவர்பால் மறைந்துள்ள பழைய உணர்வென்க.

௬௭. மறையோர் - மறையோர்களே. யான் சொல்வதாவது இது என்றபடி. சுந்தரர் அணுக்கத்தொண்ட ராதலின் அவர்க்குள்ள சிறப்பை ஈண்டு விளக்கிய வாறு காண்க.

பா - ம்—* மற்றிது. † வேறடிமையாயுடைய.

### வேறு

என்றான் இறையோன் அதுகேட்டவர் எம்ம ருங்கும்
நின்றார் இருந்தார் "இவன் என்நினைந் தான்கொல்" என்று
சென்றார் வெகுண்டார் சிரித்தார், திருநாவ லூரர்
"நன்றால் மறையோன் மொழி" என்றெதிர் நோக்கி நக்கார். ௩௮

நக்கார் முகநோக்கி நடுங்கி நுடங்கி யார்க்கும்
மிக்கான் மிசையுத் தரிகத்துகில் தாங்கி மேற்சென்று
"அக்கா லம்உன் தந்தை தன்தந்தை ஆள்ஓலை ஈதால்
இக்கா ரியத்தை †இன்றுநீ சிரித்ததென் ஏடா" என்ன. ௩௯

### வேறு

மாசிலா மரபில் வந்த வள்ளல்வே தியனை நோக்கி
நேசமுன் கிடந்த சிந்தை நெகிழ்ச்சியால் சிரிப்பு நீங்கி
"ஆசில்அந் தணர்கள் வேறோர் அந்தணர்க் கடிமை ஆதல்
பேசஇன் றுன்னைக் கேட்டோம் பித்தனோ ‡மறையோய்" என்றார்.

"பித்தனும் ஆகப் பின்னும் பேயனும் ஆக நீயின்
றெத்தனை தீங்கு §சொன்னால் யாதும்மற் றவற்றால் நாணேன்
அத்தனைக் கென்னை ஒன்றும் அறிந்திலை யாகில் நின்று
வித்தகம் பேச வேண்டாம் பணிசெய வேண்டும்" என்றான்.

---

௩௮. கேட்டவர் - கேட்டவராய். எம்மருங்கும் - எப்பக்கத்திலும். நின்றாரும் இருந்தாரும். நக்கார் - சிரித்தார்.

௩௯. நுடங்கி - தள்ளாட; நுணுகி எனினுமாம். தாங்கி - விழாமல் தாங்கி. மேற்சென்று - மேலேசென்று; எதிர்த்து. ஆள் ஓலை - (எழுதிக் கொடுத்த) அடிமை ஓலை. ஏடா என்பது அடிமையை அழைக்கும் முறை.

௪௦. வள்ளல் - நம்பியாரூரர். நேசமானது பண்டேகிடந்த சிந்தைக்கசிவால். பண்டையுணர்வைக் குறிப்பால் உணர்த்தியவாறும். ஆசு இல் - குற்றமில்லாத. உன்னை - உன்னிடம். சுந்தரமூர்த்தி சுவாமிகள் காலத்தில் சாதிகள் நிலைத்திருந்தன. அவைகட்கென வரம்புகளும் கோலப்பட்டிருந்தன. அவ்வரம்புகளின்படி அந்தணர்க்கு அந்தணர் அடிமையாதல் இல்லை. சாதிவரம்புகளை அழிக்க வேண்டுமென்பது ஆண்டவன் திருவுள்ளம் போலும்.

௪௧. சொன்னாலும். யாதும் - சிறிதும். வித்தகம் - விளையாட்டு மொழி; சாமர்த்திய மொழியுமாம். எதிரிலே நின்று. 'என்னை அறிகிலை; அறியின் பணி செய்வாய்' என்பது குறிப்பு. பணியை நினைப்பூட்டியவாறும்.

பா - ம்—*இது. † நீஇன்று. ‡ மறையோன். § சொன்னாய்.

"கண்டதோர் வடிவால் உள்ளங் காதல்செய் துருகா நிற்கும்
கொண்டதோர் பித்த வார்த்தை கோபமும் உடனே ஆக்கும்
உண்டொராள் ஓலை என்னும் அதன்உண்மை அறிவேன்" என்று
தொண்டனார் ஓலை காட்டு கென்றனர் துணைவ னாரை. சஉ

"ஓலைகாட்" டென்று நம்பி உரைக்க"நீ ஓலை காணற்
பாலையோ அவைமுன் காட்டப் பணிசெயற் பாலை" என்ற
வேலையில் நாவ லூரர் வெகுண்டுமேல் விரைந்து சென்று
மாலயன் தொடரா தானை வலிந்துபின் தொடர லுற்றார். சங

ஆவணம் பறிக்கச் சென்ற அளவினில் அந்த ணாளன்
காவணத் திடையே ஓடக் கடிதுபின் தொடர்ந்து நம்பி
பூவணத் தவரை உற்றார் அவரலால் புரங்கள் செற்ற
ஏவணச் சிலையி னாரை யார்தொடர்ந் தெட்ட வல்லார். சச

சஉ. முதலிரண்டடியைத் தன்மைவாய்ப் படுத்தியும் படர்க்கைவாய்ப்படுத்தியும் பொருள் கூறலாம். என்னெற் காணப்படுவதாகிய............இவர்கொண்டதாகிய......ஓர் ஆளோலை உண்டு என்னும் அதன்—இது தன்மை வழி. படர்க்கை வழி வெளிப்படை. தொண்டனார் - நம்பியாரூரர். முன்னே "நேசமுன் கிடந்த சிந்தை நெகிழ்ச்சியால்" என்றார். "பண்பில் மிக்க விழைவுறு மனமும் பொங்க"—பாட்டு சஅ பார்க்க. ஆசிரியர், நம்பியாரூரர்தம் பழைய உணர்வைக் குறித்துக்கொண்டே போதல் கருதற்பாலது. தமது உயிர்த்துணைவனாரை; தமது உயிர்க்குத் துணைபுரிய வந்தவரை.

சங. காணற்பாலையோ - கண்டு உணர்தற்கு வல்லையோ. அவைமுன் காட்ட - சபை முன் காட்டப்பட்ட பின். வேலையில் - வேளையில். வெகுண்டு - கோபித்து. நாவலூரர் ஆண்டவனருளால் இன்னும் மெய்யுணர்வு பெறாமையால் வெகுண்டெழுந்து தொடரலுற்றாரென்க. இவ்வெகுளி கதிரவன் எழுமுன்னர்த் தோன்றுங் குமரி இருள் போன்றது என்பர் கா. சுப்பிரமணியம் பிள்ளை.

சச. ஆவணம் - அடிமை ஓலை. காவணத்திடையே - பந்தரினூடே. பூவணத்தவரை - அழகிய நிறத்தையுடையவரை (சார்ந்ததனைத் தன் வண்ணமாக்கும் நெருப்புருவினரை என்பது குறிப்பு); திருப்பூவணத்தி லெழுந்தருளியுள்ள பெருமானை என றலுமொன்று. உற்றார் - அடைந்தார். அவர் அலால் - நம்பியாரூரரை அல்லாமல். ஏவணச் சிலையினாரை - அம்பு பூட்டிய மேரு என்னும் வில்லையுடையவரை. ஏ - அம்பு. வெகுளிக்கு அடிப்படையாயுள்ள தத்துவக் காரியங்களைக் குருநாதன் குலைத்தல் "புரங்கள் செற்ற ஏவணச் சிலையினார்" என்பதால் உணரற்பாற்று. வெகுளி யற்றதும் ஆண்டவனைத் தொடரவல்லாராவர் என்க. ஆண்டவன், அடியார்கட்கு அருள்புரியும்போது, முப்புரம் எரித்த கதையை ஆசிரியர் குறிப்பது வழக்கம். முப்புரம் எரித்தது என்பது புராணக் கதை. அதன் நுட்பம் மும்மலத்தை எரிப்பது என்பது. "அப்பணி செஞ்சடை ஆதி புராதனன் - முப்புரஞ் செற்றனன் என்பர்கள் மூடர்கள் - முப்புர மாவது மும்மல காரியம் - அப்புரம் எய்தமை யார்அறி வாரே"—திருமூலர்.

மறைகளா யினமுன் போற்றி மலர்ப்பதம் பற்றி நின்ற
இறைவனைத் தொடர்ந்து பற்றி எழுதும்ஆள் ஓலை வாங்கி
அறைகழல் அண்ணல் "ஆளாய் அந்தணர் செய்தல் என்ன
முறை" எனக் கீறி யிட்டார் முறையிட்டான் முடிவி லாதான். ௪௫

அருமறை முறையிட் டின்னும் அறிவதற் கரியான் பற்றி
ஒருமுறை முறையோ என்ன உழைநின்றார் விலக்கி "இந்தப்
பெருமுறை உலகில் இல்லா நெறிகொண்டு பிணங்கு கின்ற
திருமறை முனிவ ரேநீர் எங்குளீர் செப்பும்" என்றார். ௪௬

என்றலும் நின்ற ஐயர் "இங்குளேன் இருப்புஞ் *சேய
தன்றிந்த வெண்ணெய் நல்லூர், அதுநிற்க, அறத்தா றின்றி
வன்திறல் செய்தென் கையில் ஆவணம் வலிய வாங்கி
நின்றிவன் கிழித்துத் தானே நிரப்பினான் அடிமை" என்றான். ௪௭

குழைமறை காதி னானைக் கோதில்ஆ ரூரர் நோக்கிப்
"பழையமன் றாடி போலும் இவன்" என்று பண்பில் மிக்க
விழைவுறு மனமும் பொங்க "வெண்ணெய்நல் லூரா யேல்உன்
பிழைநெறி வழக்கை ஆங்கே பேசநீ போதாய்" என்றார். ௪௮

---

௪௫. முன் - முற்படுத்தி; முன்னாளில் எனினுமாம். மறைகள் பற்றி நின்ற. எழுதும் - எழுதப்பட்டிருக்கும். அறைகழல் அண்ணல் - ஒலிக்கின்ற வீரக்கழலை யணிந்த பெருமையிற் சிறந்த நம்பியாரூரர். கீறி இட்டார் - கிழித்தெறிந்தார். வெகுளியைக் கீறியது என்க.

௪௬. அரியான் - இறைவன். பற்றி - நம்பியாரூரரைப் பிடித்து. உழை நின்றார்-அருகில் நின்றவர்கள். பிணங்குகின்ற - சண்டையிடுகின்ற. முறையோ என்று கூவியது வன்றொண்டர் வெகுளியை ஒதுக்கியதாகும்.

௪௭. இங்குளேன் - தற்போது இங்கே யிருக்கிறேன். இருப்பும் சேயது அன்று - இருப்பிடமும் தூரமன்று. அறத்து ஆறு - தரும வழி. வன்திறல் - பலாத்காரம். ஆவணம் - அடிமை ஓலை. அடிமை என்பதை உறுதிப் படுத்தினான் என்றபடி.

௪௮. குழை மறை காதினானை - குண்டலத்தை மறைத்து வந்த ஆண்டவனை. கோது இல் - குற்றமில்லாத. பழைய மன்றாடி-வழக்கில் கைதேர்ந்தவன். பழைய திருடன் என்பது போன்றது. மன்றாடி - நியாய சபையில் வழக்காடி; அம்பலத்தாடி; சிவபிரான் என்பது குறிப்பு. "பிறவி வழக்கு" என்பது நுட்பம்; "மன்றுள் நிறைந்து பிறவி வழக்கறுக்க-நின்ற திருத்த நிலைபோற்றி"-போற்றிப் பஃறொடை எ - அ. மறையவர் தோற்றமும் பிறவும் நம்பியாரூரர்க்கு அவர் தம் வழிபடு தெய்வமாகிய மன்றாடியின் நினைவூட்டின போலும். மன்று-சபை. இது மாத்தடியினின்றும் பிறந்தது. மன்று - மாத்தடி. பண்டை நாளில் மாத்

பா - ம்—*சேய்த்த

வேதியன் அதனைக் கேட்டு "வெண்ணெய்நல் லூரி லேநீ
போதினும் நன்று மற்றப் புனிதநான் மறையோர் முன்னர்
*ஆதியில் மூல வோலை காட்டிநீ அடிமை யாதல்
சாதிப்பன்" என்று முன்னே †தண்டுமுன் தாங்கிச் சென்றான். சக

செல்லு‡மா மறையோன் தன்பின் §திரிமுகக் காந்தஞ் சேர்ந்த
வல்லிரும் பணையு மாபோல் வள்ளலுங் கடிது சென்றார்
எல்லையில் சுற்றத் தாரும் "இதுஎன்னும்" என்று ¶செல்ல
நல்லஅந் தணர்கள் வாழும் வெண்ணெய்நல் லூரை நண்ணி. ருo

வேதபா ரகரில் மிக்கார் விளங்குபேர் அவைமுன் சென்று
ஒநாதனும் மறையோன் சொல்லும் "நாவலூர் ஆரு ரன்தான்
காதலென் அடியான் ||என்னக் காட்டிய ஓலை கீறி
மூதறி வீர்முன் போந்தான் @இதுஎன்றன் ǀமுறைப்பா"டென்றான்.

அந்தணர் அவையில் மிக்கார் "மறையவர் அடிமை ஆதல்
இந்தமா நிலத்தில் இல்லை என்சொன்னாய் ஐயா" என்றார்
"வந்தவா றிசைவே அன்றோ வழக்கிவன் கிழித்த ஓலை
தந்தைதன் தந்தை நேர்ந்தது" என்றனன் தனியாய் நின்றான். ருஉ

தடியில் பஞ்சாயத்துக் கூடி வழக்கு முதலியவற்றைப் பேசுவது வழக்கம். அத னால் மன்று - மன்றம் - என்பது சபைக்குப் பெயராக நாளடைவில் வழங்க லாயிற்று. "மன்றமும் பொதியிலும்"—திருமுருகாற்றுப்படை 226. "மன் றில் வதியுநர் சேட்புலப் பரிசிலர்"—மலைபடுகடாம் 492. "மன்றமும்-ஊரு க்கு நடுவாய் எல்லாருமிருக்கும் மரத்தடியினும்"; மன்றில் வதியுநர் - அம்பலங் களிலே தங்குவார்"—நச்சினார்க்கினியம். அன்புத் தன்மையில் மிக்க விருப்புக் கொண்ட நன்மனமும் கோபத்தால் பொங்க; இயல்புக்கு மாறாக என்றபடி; ...மனம்மட்டும் காதலால் பொங்க என்று கொள்ளின், அது பழைய உணர்ச்சி யைக் குறிப்பதாகுமென்க.

சக. ஆதியில்-ஆதியிலே எழுதிக்கொடுத்த. ஆதியில் மூல ஓலை - பிரணவம் என்பது குறிப்பு. "முன்னே - நம்பியாரூரர்க்கு முன்னே. முன - விரைவில்.

ருo. திரிமுகம் - ஈர்க்கின்ற முகமுடைய (திரிதல் - மாறுபடுதல்; அதனின் றும் ஈண்டு ஈர்த்தல்). வள்ளல் - நம்பியாரூரர். "சுற்ற மென்னுந் தொல்பசுக் குழாங்கள்"—திருவாசகம்: போற்றி சஅ. "சுற்றம் என்னும் வினையுளே." —அப்பர்: நாகை - திருநேரிசை - க.

ருக. மறையவர்களில் மிக்கார். உங்கள் முன் அவனே போந்தான்.

ருஉ. வழக்கு - வழக்குக்கு யான் வந்தவாறு பொருத்தமுடையதல்லவோ. நேர்ந்தது - எழுதிக் கொடுத்தது. ஆண்டவன் தத்துவக் கட்டில்லாதவன் ஆத லின் "தனியாய்" என்றார்.

பா - ம்—*ஆதியுள். † தண்டினை. ‡ நான்மறையோன். § நீமுகம்; திருமுகம். ¶ சொல்ல. ஒநாதனுன் மறையோன். || ஆகக். @ இது மற்றென். ǀ முறைப்பாடென்ன.

"இசைவினால் எழுதும் ஓலை காட்டினான் ஆகில் இன்று
விசையினால் வலிய வாங்கிக் கிழிப்பது வெற்றி ஆமோ
தசையெலாம் ஒடுங்க மூத்தான் வழக்கினைச் சாரச் சொன்னான்
அசைவில்ஆ ரூரர் எண்ணம் என்"என்றார் அவையில் மிக்கார். ருங

"அனைத்துநூல் உணர்ந்தீர்! ஆதி சைவனென் றறிவீர் என்னைத்
தனக்குவே றடிமை என்றிவ் அந்தணன் சாதித் தானேல்
மனத்தினால் உணர்தற் கெட்டா மாயைஎன் சொல்லு கேன்யான்
எனக்கிது தெளிய வொண்ணா தென்றனன்" எண்ணம் மிக்கான்.

அவ்வுரை அவையின் முன்பு நம்பியா ரூரர் சொல்லச்
செவ்விய மறையோர், நின்ற திருமறை முனியை நோக்கி
"இவ்வுல கின்கண் நீரின் றிவரைநும் அடிமை என்ற
வெவ்வுரை எம்முன் பேற்ற வேண்டும்"என் றுரைத்து மீண்டும்.

"ஆட்சியில் ஆவணத்தில் அன்றிமற் றயலார் தங்கள்
காட்சியில் மூன்றில் ஒன்று காட்டுவாய்" என்ன "முன்னே
மூட்சியில் கிழித்த ஓலை படியோலை மூல ஓலை
மாட்சியில் காட்ட வைத்தேன்" என்றனன் மாயை வல்லான். ருசு

---

ருங. இசைவினால் எழுதும் - உடன்பாட்டின்மீது எழுதப்பட்ட. விசையினால் - வேகத்தால். சார - பொருந்துமாறு; ஏற்குமாறு. அசைவில் - மனக் கவலையற்ற; அரசரால் வளர்க்கப் பெற்றவராதலின் கவலையற்றிருந்தவர் என்ற படி; என்ன நேருமோ என்று அசைவற்று நின்றார் என்னலுமாம். 'தசையெலாம் ஒடுங்க' என்பது நம்போலப் பிறப்பு இறப்புக்குரிய மாயா காரிய தசை தாங்கினவனல்லன் என்பதை உணர்த்துவது. மூத்தான் - முற்றறிவுடையான். "ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி"—திருவாசகம்: பிடித்த க.

ருச. அந்தணர்க்கு அந்தணர் அடிமையாதலும், அதற்கென ஓலையும், உலகில் நோாத வழக்கை விசாரிக்க மறையோர் இசைந்ததும், பிறவும் உணர்விற் கெட்டா மாயை என்றபடி. ஆண்டவன் அருளாடல், பசுபாச உணர்விற்கெட்டாதது என்பது கருத்து. 'தெளிய ஒண்ணாது' என்பதும், 'எண்ணமிக்கான்' என்பதும் நம்பியாரூரர்தம் பசுபாச கரணங்களைச் சிவகரணமாக மாற்றிவரூஉங் குறிகளென்க.

ருரு. செவ்விய - நடுநிலையுடைய. வெவ்வுரை - (அந்தணர்க்கு அந்தணர் அடிமை என்னும்) தீமொழியை; வழக்கத்திலில்லாத உரை 'வெவ்வுரை' என்னப்பட்டது. ஏற்ற வேண்டும் - ஏற்றி உறுதிப்படுத்தல் வேண்டும்.

ருசு. ஆட்சியில் - அநுபவத்தில். ஆவணத்தில் - இலிகிதத்தில். அயலார் தங்கள் காட்சியில் - சாட்சியில். மூட்சியில் - மூண்டெழுந்த கோபத்தால். கிழித்தது கோபம்; நம்பியாரூரர் இயல்பு அன்று என்பது நுட்பம். படியோலை - மூல

" வல்லையேல் காட்டிங் "கென்ன, மறையவன் " வலிசெய் யாமல்
சொல்லநீர் வல்லீ ராகில் காட்டுவேன் " என்று சொல்லச்
*"செல்வநான் மறையோய்! நாங்கள் தீங்குற ஒட்டோம்" என்றார்
அல்லல்தீர்த் தாள †நின்றான் ஆவணங் கொண்டு சென்றான். ருஎ

இருள்மறை மிடற்றோன் கையில் ஓலைகண் டவையோர் ஏவ
அருள்பெறு கரணத் தானும் ஆவணம் தொழுது வாங்கிச்
சுருள்பெறு மடியை நீக்கி விரித்தனன் தொன்மை நோக்கித்
தெருள்பெறு சவையோர் கேட்ப வாசகம் செப்பு கின்றான். ருஅ

" அருமறை நாவல் ஆதி சைவனா ரூரன் செய்கை
பெருமுனி வெண்ணெய் நல்லூர்ப் பித்தனுக் கியானும் என்பால்
வருமுறை மரபு ளோரும் வழித்தொண்டு செய்தற் கோலை
இருமையால் எழுதி நேர்ந்தேன் இதற்கிவை என்னெ ழுத்து " ருகூ

வாசகங் கேட்ட பின்னர் மற்றுமேல் ‡எழுத்திட் டார்கள்
ஆசிலா எழுத்தை நோக்கி " அவையொக்கும் " என்ற பின்னர்
மாசிலா மறையோர் "ஐயா! மற்றுங்கள் பேர னார்தம்
தேசுடை எழுத்தே ஆகில் தெளியப்பார்த் §தறிமின்" என்றார். கூ0

---

ஓலையைப் பார்த்து எழுதிய ஓலை. மாட்சியில் - பெருமையுடன்; வழக்கு விளக்கத்தில்.

ருஎ. (காட்ட)வல்லையேல். மறையவன்-இறைவன். ஆரூரன் முன்புபோல் வலிசெய்யாமல். நம்பியாரூரர்தம் அல்லல் தீர்த்து அவரை ஆளநின்ற இறைவன்.

ருஅ. இருள்மறை மிடற்றோன் - கரியநஞ்சை மறைத்த கண்டத்தையுடைய சிவபிரான். அன்பர்தம் இருளை மறைத்து அருள் வழங்குவோன் என்பது குறிப்பு. "சிற்றுயிர்க் கிரங்கிக் காய்சின ஆலமுண்டாய் அமுதுண்ணக் கடையவனே "—திருவாசகம்: நீத்தல் ௰. கரணத்தானும் - கணக்கனும். ஆவணம் ஆண்டவனுடையதாதலின் அதை வாங்கிப் படிப்போனது கரணம் அருள் பெறும் புண்ணியமுடையதாயிற்று என்பது குறிப்பு. தொன்மை - பழமை. பழமையாயிருந்தமையால் உற்றுநோக்கி. தெருள் - தெளிவு.

ருகூ. செய்கை - எழுதிக் கொடுப்பது; செய்கைப் பெருமுனி என்று கொண்டு ஒழுக்கமும் பெருமையுமுடைய முனி என்று கூறினும் பொருந்தும். இருமையால் - உள்ளும் புறமும் ஒத்து. நேர்ந்தேன் - கொடுத்தேன். என் எழுத்து - என் கை யெழுத்து.

கூ0. மேலெழுத்து இட்டார் - சாட்சிக் கையெழுத்திட்டவர்கள். ஆசிலா - குற்றமில்லாத. ஐயா! நம்பியாரூரரே. பேரனார் - பாட்டனார். தேசு - அழகு;

பா - ம்—* செல்வ நான்மறையோர் " நாங்கள்......ஒட்டோம் " † வல்லான். ‡ எழுத்துமிட்டார். § அறிதி.

அந்தணர் கூற "இன்னும் ஆள்ஓலை இவனே காண்பான்
தந்தைதன் தந்தை தான்வே றெழுதுகைச் சாத்துண் டாகில்
இந்தஆ வணத்தி னோடும் எழுத்துநீர் ஒப்பு நோக்கி
வந்தது மொழிமின்" என்றான் வலியஆட் கொள்ளும் வள்ளல். ௬௧

திரண்டமா மறையோர் தாமும் திருநாவ லூரர் கோமுன்
மருண்டது தெளிய மற்ற மறையவன் எழுத்தால் ஓலை
அரண்தரு காப்பில் வேறொன் றழைத்துடன் ஒப்பு நோக்கி
"இரண்டுமொத் திருந்த தென்னே! இனிச்செயல் இல்லை" என்றார்.

"நான்மறை முனிவ னார்க்கு நம்பியா ரூரர்! தோற்றீர்
பான்மையின் ஏவல் செய்தல் கடன்" என்று பண்பில் மிக்க
மேன்மையோர் விளம்ப, நம்பி "விதிமுறை இதுவே ஆகில்
யானிதற் கிசையேன் என்ன இசையுமோ" என்று நின்றார். ௬௩

ஒளி; இங்கே மெய்ம்மையின் மேற்று. பொருந்தா வழக்காயினும் மறையவர்கள் நடுநிலை பிறழாது அதனை விசாரித்தலான், அவர் மேலே "செவ்விய மறையோர்" என்றும், இங்கே "மாசிலா மறையோர்" என்றுஞ் சொல்லப்பட்டார்.

௬௧. சபையிலுள்ள அந்தணர்கள் இவ்வாறு கூற, நம்பியாரூரரை வலிய ஆட்கொள்ளவந்த வள்ளல், "ஆளோலை இவனே காணவல்லான்..." என்றார். இவன் சிறுவனாதலின் பாட்டன் கையெழுத்தை அறியவல்லான் அல்லன் என்றபடி. கைச்சாத்து - கையெழுத்து. வந்தது - உங்கள் மனதில் தோன்றியதை. ஆரூரர் இனி உறவினர்க்கு உரியர் அல்லர் என்பது குறிப்பு.

௬௨. திருநாவலூரர் கோ முன் - நம்பியாரூரர் முன்னிலையில். மருண்டது தெளிய - (மயக்கம்) சந்தேகம் தெளிய. முன்னே மருண்டது தெளிய என்னலுமாம். மறையவன் எழுத்தால் ஓலை - நம்பியாரூரரின் பாட்டனார் கையெழுத்தாலாகிய ஓலை. அரண்தரு காப்பில் - (அவர்தம் வீட்டில்) பாதுகாப்பிலுள்ள. என்னே - அந்தணர்க்கு அந்தணர் அடிமை ஓலை எழுதிக் கொடுத்தது என்னும் வியப்பு.

௬௩. பான்மையின் - விதியால்; இன்புடன் என்றலு மொன்று. "குலவிய புருவத்தாட்கு வந்தடை பான்மை..."; "கனிபடு கிளவியார்தங் காதலர் கவானில் துஞ்சில் - பனியிரு விசும்பில் தேவர் பான்மையிற்று"—சிந்தாமணி : 539, 553. பண்பில் - குணத்தில்; நீதியில். தங்கள் மரபுக்குப் பொருந்தா வழக்கென்பதை யுணர்ந்தும் மறையவர்கள் அநியாயத் தீர்ப்பு அளித்தார்களில்லை. மரபு, நூல், வழக்கம் முதலியவற்றைப் பொருட்படுத்தாது அவர்கள் நீதி வழியே நின்று கடனாற்றியது கருதற்பாலது. அவர் அல்லரோ அந்தணர்? நம்பியாரூரரும் மறையவர்கள் அளித்த தீர்ப்பை மீறத் துணிந்தாரில்லை. அவர் தம் பெருந்தகைமையும் போற்றற்பாலதே. அந்தணர்க்கு அந்தணர் அடிமையாதல் இல்லை என்னும் ஆட்சி வீழ்ந்துபட்டதை உன்னுக.

திருமிகு மறையோர் நின்ற செழுமறை முனியை நோக்கி
"அருமுனி! நீர்முன் காட்டும் ஆவணம் *அதனில் எங்கள்
பெருமைசேர் பதியே யாகப் பேசிய நுமக்கிவ் வூரில்
வருமுறை †மனையும் நீடு வாழ்க்கையும் காட்டு"கென்றார்.

பொருவரும் வழக்கால் வென்ற புண்ணிய முனிவர் "என்னை
ஒருவரும் அறியீ ராகில் 'போதும்'" என் றுரைத்துச் சூழ்ந்த
பெருமறை யவர்கு ழாமும் நம்பியும் பின்பு செல்லத்
திருவருட் டுறையே புக்கார், கண்டிலர் திகைத்து நின்றார். ௬௫

எம்பிரான் கோயில் நண்ண இலங்குநூல் ‡மார்பர் "எங்கள்
நம்பர்தங் கோயில் புக்க தென்கொலோ" என்று நம்பி
தம்பெரு விருப்பி னோடு தனித்தொடர்ந் தழைப்ப மாதோ
டும்பரின் விடைமேல் தோன்றி அவர்தமக் குணர்த்தல் உற்றார். ௬௬

௬௪. அவையோர், தீர்ப்புக் கூறிய பின்னும் தமது மனச்சான்றை நடுநிலையில் நிறுத்திக்கொள்ளச் சிந்தித்து, முனிவரை நோக்கி அவர்தம் இருப்பிடம் முதலியவற்றைக் கேட்டனர். வருமுறை - தலைமுறை தலைமுறையாக வந்து கொண்டிருக்கும். நீடு - நீண்டகால. வாழ்க்கையும் - வாழ்க்கைக்குரிய நிலபுலம் பொருள் முதலியனவும்.

௬௫. பொருவரும்-ஒப்பற்ற. உலகிடை நடைபெறு வழக்காதலின் "பொருவரும் வழக்கு" என்றார். அந்தணர்க்கு அந்தணர் அடிமையாதல் இல்லை என்பதை உடைத்தது சிறந்த வெற்றியேயாகும். போதும் - என்னுடன் வாருங்கள். குழாமும் - கூட்டமும். திருவருட்டுறை - திருவெண்ணெய் நல்லூர் கோயிலின் பெயர். தத்துவங்கள் ஒடுங்குமிடத்தில் அருட்டுறை விளங்குதல் இயல்பு. உடன் சென்றவர் கண்டிலர்.

௬௬. மார்பர் - நம்பியாரூரர். மார்பின் என்ற பாடங் கொள்ளின் மார்பினராகிய எங்கள் நம்பர் (சிவபெருமான்) என்று பொருள் கூறுக. தனித்தொடரவாவது தத்துவக் குறும்புகளினின்றும் விடுதலை யடைந்து சிவத்தைத் தொடர்வது. ஆன்மா சார்ந்ததன் வண்ணமாவது. நம்பியாரூரர், முன்னே கூட்டங்களுடன் அதாவது தத்துவங்களுடன் கூடி வழக்கிட்டபோது ஆண்டவன் வெளிப்பட்டானில்லை. இப்பொழுது அவர் தனியே அதாவது தத்துவங்களினின்று விடுதலையடைந்து அழைக்க, ஆண்டவன் வெளிப்பட்டான் என்க. "ஆறொடு முப்பதும் அங்கே அடங்கிடில் - கூறக் குருபரன் கும்பிடு தந்திடும்" —திருமூலர். உம்பரில் - விண்ணில்.

பா - ம்—* தன்னில். † மரபும். ‡ மார்பன்; மார்பின்.

"முன்புநீ நமக்குத் தொண்டன் முன்னிய வேட்கை கூரப்
பின்புநம் ஏவ லாலே பிறந்தனை மண்ணின் மீது
துன்புறு *வாழ்க்கை நின்னைத் தொடர்வறத் தொடர்ந்து வந்து
நன்புல மறையோர் முன்னர் நாம்தடுத் தாண்டோம்" என்றார். ௬எ

என்றெழும் ஓசை கேளா ஈன்றஆன் கனைப்புக் கேட்ட
கன்றுபோல் †கதறி நம்பி கரசர ணாதி அங்கம்
துன்றிய புளகம் ஆகத் தொழுதகை தலைமேல் ‡ஆக
"மன்றுளீர்! செயலோ வந்து வலியஆட் கொண்ட" தென்றார். ௬அ

எண்ணிய ஓசை ஐந்தும் விசும்பிடை §நிறைய எங்கும்
விண்ணவர் பொழிபூ மாரி மேதினி ¶நிறைந்து விம்ம
மண்ணவர் மகிழ்ச்சி பொங்க மறைகளும் முழங்கி ஆர்ப்ப
அண்ணலை ஓலை காட்டி ஆண்டவர் அருளிச் செய்வார். ௬௯

"மற்றுநீ வன்மை பேசி வன்தொண்டன் ‖என்னும் நாமம்
பெற்றனை நமக்கும் அன்பில் பெருகிய சிறப்பில் மிக்க

---

௬எ. சுந்தரர் கயிலையில் அணுக்கத் தொண்டர் என்பது திருமலைச்சிறப் பால் தெரிகிறது. இது "சுந்தரனைத் துணைக்கவரி வீசக் கொண்டார்" என வரூஉம் அப்பர் திருவாக்கானும் (தனித் திருத்தாண்டகம் ௫) தெளிவு பெறு கிறது. முன்னிய - மனதாற் கருதிய. வேட்கை கூரலாவது சேடிமார் மீது காதல் கூர்ந்தது; திருமலைச்சிறப்பு : ௨எ, ௨அ, ௨௯ பாக்களைப் பார்க்க. "இம்மண்மேல் நாளுக வகுத்தனை"—சுந்தரர் : திருநெல்வாயில் - திருவரத் துறை ௨. கயிலையில் கொண்ட வேட்கை, முறைப்படி நிகழ வேண்டுவது. அதற்கு மாறுபட்டதொன்று துன்பந் தருவதாதலின் "துன்புறு வாழ்க்கை" என்றார். முன்னையது திருவருள்வழி நிகழப்போகிறது என்பது குறிப்பு. நன்புலம் - நல்லறிவுடைய.

௬அ. காம் சரண் ஆதி அங்கம்-கைகால் முதலிய உறுப்புக்களில். துன்றிய புளகம் ஆக - நெருங்கி யெழுந்த மயிர்சிலிர்ப்பு உண்டாக. முன்னே "பழைய மன்றாடி" என்றது இங்கே நம்பியாரூராருக்கு விளங்கலாயிற்று.

௬௯. எண்ணிய - எல்லாரும் அறியுமாறு. ஓசை ஐந்தும் - தோற்கருவி, துளைக்கருவி, நரப்புக்கருவி, மிடற்றுக்கருவி, கஞ்சக்கருவி ஆகிய ஐந்து வாத்தியங்களின் ஓசை. விசும்பிடை - விண்ணிடை. மேதினி - மண்ணுலகில். விம்ம - நெருங்கிப் பொலிய ; கமழ. ஆர்ப்ப - ஆரவாரிக்க. அண்ணலை - பெரு மையிற் சிறந்த நம்பியாரூரரை. ஆண்டவர் - சிவபெருமான்.

எo. "தன்மையினு லடியேனைத் தாமாட்கொண்ட நாட் சபைமுன் - வன் மைகள் பேசிட வன்தொண்டன் என்பதோர் வாழ்வு தந்தார்"—சுந்தரர்:

பா - ம்—*வேட்கை. † பதறி. ‡ ஆகி. § நிறைப்ப. ¶ நிறையவிம்மி. ‖என்று.

அர்ச்சனை பாட்டே ஆகும் ஆதலால் மண்மேல் நம்மைச்
சொற்றமிழ் பாடு'' கென்றார் தூமறை பாடும் வாயார். ௭௦

தேடிய அயனும் மாலும் தெளிவுறா *ஐந்தெ ழுத்தும்
பாடிய பொருளாய் உள்ளான் ''பாடுவாய் நம்மை'' என்ன
நாடிய †மனத்த ராகி நம்பியா ரூரர், மன்றுள்
ஆடிய செய்ய தாளை அஞ்சலி கூப்பி நின்று. ௭௧

''வேதியன் ஆகி என்னை வழக்கினால் வெல்ல வந்த
ஊதியம் அறியா தேனுக் குணர்வுதந் துய்யக் கொண்ட
‡கோதிலா அமுதே! இன்றுன் குணப்பெருங் கடலை நாயேன்
யாதினை §அறிந்தென் சொல்லிப் பாடுகேன்'' எனமொ ழிந்தார்.

அன்பனை அருளின் நோக்கி அங்கணர் அருளிச் செய்வார்
''முன்பெனைப் பித்தன் என்றே மொழிந்தனை ஆத லாலே
என்பெயர் பித்தன் என்றே பாடுவாய்'' என்றார், நின்ற
வன்பெருந் தொண்டர் ஆண்ட வள்ளலைப் பாடல் உற்றார். ௭௩

வேறு

கோத்தார்மலர்க் குழலாளொரு கூறாய்அடி யவர்பால்
மெய்த்தாயினும் இனியானைஅவ் வியன்நாவலர் பெருமான்

---

திருநாவலூர் ௨. திருக்கடைக் காப்பில் பலவிடங்களில் ''வன்தொண்டன்'' என்று சுந்தரர் தம்மைக்குறித்திருத்தலையும் நோக்குக. நமக்கும் என்பது விருப்பு வெறுப்பற்ற இயல்பை உணர்த்துவது. பலதிற அர்ச்சனைகளுள் பாட்டே சிறந்ததென்க. சொல் தமிழ் - இன்சொற்றமிழ்; புகழ்த் தமிழ். தூய மறை பாடும் வாயார் தமிழ்ப்பாடலைத் தம் அன்பர் வாயிலாகக் கேட்க வேட்டது தமிழின் மாண்பையும் இனிமையையும் பிறவற்றையும் தெரிப்பதாகும்.

௭௧. தெளிவுறா - தெளியாத. பாடிய - போற்றிய; சொல்லிய. செய்ய - சிவந்த; அழகிய.

௭௨. ஊதியம் - இலாபம்; பயன். ''கோதிலா அமுதே''—சுந்தரர்: திருவாவடுதுறை அ; திருவாசகம்: கோயில் ௫. அறிந்து என் சொல்லி.

௭௩. அருளால் நோக்கி. அங்கணர் - அழகிய கண்ணையுடைய சிவபெருமான். ஆண்டவன் பித்தன் என்னும் பெயர் பெற்றான். அடியவர் வன்றொண்டர் என்னும் பெயர் பெற்றார். ஆண்டவன் அருள் நாதம் வன்றொண்டரிடம் பதிந்தது.

௭௪. கொத்தார் மலர் குழலாள் - பூங்கொத்து நிறைந்த மலரணிந்த கூந்தலையுடைய உமையம்மையார். பாயிரம்: பாட்டு ௩ குறிப்புப் பார்க்க. உமை

பா - ம்—*அஞ்செழுத்து. † மனத்தினோடு. ‡ கோதிலாய்! § அறிந்தேன்.

பித்தாபிறை சூடிஎனப் பெரிதாந்திருப் பதிகம்
இத்தாரணி *முதலாம்உல கெல்லாம்உய எடுத்தார். எச

முறையால்†வரு மதுரத்துடன் மொழிஇந்தள முதலில்
குறையாநிலை மும்மைப்படி கூடுங்கிழ மையினுல்
நிறைபாணியின் இசைகோள்புணர் நீடும்‡புகழ் வகையால்
இறையான்மகிழ் இசைபாடினன் எல்லாநிகர் இல்லான். எரு

" பித்தாபிறை சூடிபெரு மானேயரு ளாளா
எத்தால்மற வாதேநினைக் கின்றேன்மனத் துன்னை
வைத்தாய்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
அத்தாவுனக் காளாயினி யல்லேனென லாமே"

" காரூர்புன லெய்திக்கரை கல்லித்திரைக் கையால்
பாரூர்புக ழெய்தித்திகழ் பன்மாமணி யுந்திச்
சீரூர்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
ஆரூரன்எம் பெருமாற்கா ளல்லேனென லாமே"—தேவாரம்.

சொல்லார்தமிழ் இசைபாடிய தொண்டன்தனை "இன்னும்
பல்லாறுல கினில்நம்புகழ் பா"டென்றுறு §பரிவில்
நல்லார்வெண்ணெய் நல்லூரருட் டுறைமேவிய நம்பன்
எல்லாவுல குய்யப்புரம் எய்தான்அருள் செய்தான். எசு

---

யம்மையார் - திருவருள்; அத்திருவருள் தாய்மையைக் குறிப்பது. அத்தாய்மை உலகிலுள்ள உயிர்த் தாய்மைகட்கெல்லாம் வற்றா ஊற்றாயிருத்தலானும், அதற்கு ஒத்ததும் மிக்கதுமாய தாய்மை யாண்டுமின்மையானும், " மெய்த்தாயினும் இனியான்" என்றார். "தாயினும் நல்ல சங்கரன்"—அப்பர்: ஆதி புராணம் க. "பால் நினைந்தூட்டும் தாயினுஞ் சாலப்பரிந்து நீ"—திருவாசகம்: பிடித்த பத்து க. வியன் - பெருமை. உய்ய.

எரு. முறையால் வரு மதுரத்துடன் - "படிப்படியாய் உயர்ந்து வருகிற ஸ்வரவின்னியாஸ விசேஷங்களால் உண்டாகிற நயப்புடன்" என்பர் மகாலிங்கையர்; முறைமையால் வரும் இனிமையுடன். இந்தளம் - இந்தளம் என்னும் பண்ணை. மும்மைப்படி - நலிதல் படுத்தல் எடுத்தல்—துரிதம் விளம்பிதம் மத்தியம்—என்னும் முறைமைப்படி. கூடும் கிழமையினுல் - பொருந்தும் உரிமையோடு. பாணியில் நிறை இசைகோள் புணர் - கையால் மேற்கூறிய பண்ணுடன் இயையத்தாளம் பொருத்தி. நீடும் புகழ் - மிகவும் புகழ்கின்ற. இறையான் - சிவபெருமான். எல்லாம் நிகரில்லான் - எல்லாவற்றாலும் நிகரில்லாதவராகிய நம்பியாரூரர்.

எசு. சொல்லார் - இன் சொல் நிறைந்த. "மொழிக்கு மொழி தித்திப்பாக மூவர் சொல்லுந் தமிழ்."—தாயுமானர்: கல்லாலின் கஉ. பல்லாறு - பல

பா - ம்—*முதலா வுலகெல்லாம்; முதலா யுலகெல்லாம். † வருமருத்தத்துடன்; வருமருதத்துடன் ‡ புகல். § பரிசில்.

அயலோர்தவ முயல்வார்பிறர் அன்றேமணம் அழியும்
செயலால்*நிகழ் புத்தூர்வரு சிவவேதியன் மகளும்
உயர்நாவலர் தனிநாதனை ஒழியாதுணர் வழியில்
பெயராதுயர் சிவலோகமும் எளிதாம்வகை பெற்றாள். எஎ

வேறு

நாவலர்கோன் ஆரூரன் தனைவெண்ணெய் நல்லூரில்
மேவும்அருட் டுறையமர்ந்த வேதியராள் கொண்டதற்பின்
பூவலரும் தடம்பொய்கைத் திருநாவ லூர்புகுந்து
தேவர்பிரான் தனைப்பணிந்து திருப்பதிகம் பாடினார். எஅ

---

வழியில். உறுபரிவில் - மிக்க அன்பால். நல்லார் - நன்மக்கள். புரம் எய்தான் - முப்புரங்களையும் அழித்த சிவபெருமான்.

எஎ. மணம் அழியும் செயலால் - மணந் தவறிய செயலால். நிகழ் - நிகழ்ச்சியை யுடைய. சிவவேதியன் - சடங்கவி சிவாசாரியார். உணர் வழியில் பெயராது - தியானிக்கும் வழியினின்றும் பிறழாது. இதற்கு அயலோர் தவ முயல்வர். அவர் பிறர் (அன்னியரே) ஆவர். பிறர் அயலில் சென்று ஒரு தவம் முயல்வார் என்று கூறுவோருமுளர். நம்பியாரூரரைத் தியானிப்பதால் சிவலோகத்தை எளிதில் பெறக்கூடும் என்பது உணரத்தக்கது. அதில் முதன்மைப் பேறு பெற்றவர் புத்தூர்ச் சடங்கவி சிவாசாரியர் அருமைப் புதல்வியார் என்க.

எஅ. நாவலர் கோனாகிய ஆரூரன் தன்னை. வேதியர் - சிவபெருமான். ஆண்டவன் தம்மைத் தடுத்தாட்கொண்ட திறத்தைப் பல விடங்களில் பலவாறு நம்பியாரூரரே திருப்பதிகங்களில் விதந்தோதியுள்ளார். அவ்வகைச் சான்றுகளிற் சில வருமாறு:—"ஓண காந்தன் தளியுளார் தாம் ஆவணஞ்செய்து ஆளுங்கொண்டு"—திருவோண காந்தன்றளி கo; "வெண்ணெய் நல்லூரில் வைத்து என்னை ஆளுங்கொண்ட நாவலனார்", "தன்மையினால் அடியேனைத் தாம் ஆட்கொண்ட நாள் சபை முன் வன்மைகள் பேசிட வன்தொண்டன் என்பதோர் வாழ்வு தந்தார்", "ஓர் ஆவணத்தால் எம்பிரானார் வெண்ணெய் நல்லூரில் வைத்தென்னை ஆளுங்கொண்ட நம்பிரானார்", "அடக்கங் கொண்டு ஆவணங் காட்டி நல்வெண்ணெயூர் ஆளுங்கொண்டார்"—திருநாவலூர்: க, உ, ரு, கo; "நேசத்தினால் என்னை ஆளுங் கொண்டார்"—திருநின்றியூர் உ; "மெய்யே வந்து இங்கு எனை ஆண்ட மெய்யா"—திருவாலங்காடு உ; "அன்று வந்து எனை அகலிடத்தவர் முன் ஆளதாக என்று ஆவணங்காட்டி, நின்று வெண்ணெய் நல்லூர் மிசை ஒளித்த நித்திலத்திரள் தொத்தினை"—திருக்கோலக்கா ரு. "வெண்ணெய் நல்லூரில், அற்புதப்பழ ஆவணங்காட்டி அடியனாய் என்னை ஆளது கொண்ட, நற்பதத்தை"—திருநள்ளாறு சு. "மண்ணின் மேல் மயங்கிக் கிடப்பேனை வலியவந்தெனை ஆண்டு கொண்டானே"—திருவாவடுதுறை க. தடம் - விசாலமான.

பா - ம்—*நிகர்.

சிவனுறையுந் திருத்துறையூர் சென்றணைந்து தீவினையால்
அவநெறியே செல்லாமே தடுத்தாண்டாய் அடியேற்குத்
தவநெறிதந் தருளென்று தம்பிரான் முன்னின்று
பவநெறிக்கு விலக்காகுந் திருப்பதிகம் பாடினார். ௭௯

"மத்தம் மதயானையின்வெண் மருப்புந்தி
முத்தங் கொணர்ந்தெற்றி யோர்பெண்ணை வடபால்
பத்தர் பயின்றேத்திப் பரவுந் துறையூர்
அத்தா உனைவேண்டிக் கொள்வேன் தவநெறியே"—தேவாரம்.

புலனொன்றும் படிதவத்தில் புரிந்தநெறி கொடுத்தருள
அலர்கொண்ட நறுஞ்சோலைத் திருத்துறையூர் அமர்ந்தருளும்
நிலவுந்தண் புனலும்ஒளிர் நீள்சடையோன் திருப்பாதம்
மலர்கொண்டு போற்றிசைத்து வந்தித்தார் வன்தொண்டர். ௮௦

திருத்துறையூர் தனைப்பணிந்து சிவபெருமான் அமர்ந்தருளும்
பொருத்தமாம் இடம்பலவும் புக்கிறைஞ்சிப் பொற்புலியூர்
நிருத்தனார் திருக்கூத்துத் தொழுவதற்கு நினைவுற்று
வருத்தமிகு காதலினால் வழிக்கொள்வான் மனங்கொண்டார். ௮௧

மலைவளர்சந் தகில்பீலி மலர்பரப்பி மணிகொழிக்கும்
அலைதருதண் புனல்பெண்ணை யாறுகடந் தேறியபின்
நிலவுபசும் புரவிநெடுந் தேரிரவி மேல்கடலில்
செலஅணையும் பொழுதணையத் திருவதிகைப் புறத்தணைந்தார். ௮௨

---

௭௯. அவம் - பாவம். பவம் - பிறப்பு.

௮௦. புலன் ஒன்றும்படி - புலன்கள் ஒருமையிற் பொருந்தும்படி. தவத்தில் புரிந்த நெறி-தவத்திலே வன்தொண்டர் விரும்பிய நெறியை. அலர் - பூக்கள். "புறம்பேயும் அரன் கழல்கள் பூசிக்க வேண்டில் பூ மரத்தின் கீழ் உதிர்ந்த போதுகளுங் கொண்டு, சிறந்தாருஞ் சீர்ச்சிவனை ஞானத்தால் அங்குச் சிந்திக்கும்படி இங்கும் சிந்தித்துப் போற்றி"—சிவஞான சித்தியார் : சுபக்கம் சூத்திரம் ௮ - ௩௮.

௮௧. பொற்புலியூர் - சிதம்பரத்தில். நிருத்தனார் - ஆடல் புரிவோர். வருத்தமிகு - ஆற்றாமைமிகும். வழிக் கொள்ளுதற்கு.

௮௨. மலையில் வளர்ந்த. சந்து - சந்தனமரம். பீலி - மயிற்பீலி. மணி - முத்துக்களை. தண்புனல் - குளிர்ந்த நீர். நிலவு - விளங்குகின்ற. இரவி - சூரியன். பொழுது அணைய - மாலைக்காலம் வர. ஏழு நிறத்தை ஏழு புரவியாகச் சொல்வது கவிகள் வழக்கு. புறத்து - பக்கத்தில்.

பா - ம்—* அவநெறியில்.

"உடையஅர சுலகேத்தும் உழவாரப் படையாளி
விடையவர்க்குக் கைத்தொண்டு விரும்புபெரும் பதியைமிதித்
தடையுமதற் கஞ்சுவன்" என் றந்நகரில் புகுதாதே
மடைவளர்தண் புறம்பணையில் சித்தவட மடம்புகுந்தார். அ௩

வரிவளர்பூஞ் சோலைசூழ் மடத்தின்கண் வன்தொண்டர்
விரிதிரைநீர்க் கெடிலவட வீரட்டா னத்திறைதாள்
புரிவுடைய மனத்தினராய்ப் புடைஎங்கும் மிடைகின்ற
பரிசனமும் துயில்கொள்ளப் பள்ளியமர்ந் தருளினார். அச

அதுகண்டு வீரட்டத் தமர்ந்தருளும் அங்கணரும்
முதுவடிவின் மறையவராய் முன்னொருவர் அறியாமே
பொதுமடத்தி னுள்புகுந்து பூந்தாரான் திருமுடிமேல்
பதுமமலர்த் தாள்வைத்துப் பள்ளிகொள்வார் போல்பயின்றார். அரு

அந்நிலைஆ ரூரன்உணர்ந் "தருமறையோய்! உன்னடிஎன்
சென்னியில்வைத் தனை" என்னத் "திசையறியா வகைசெய்த
தென்னுடைய மூப்புக்காண்" என்றருள அதற்கிசைந்து
தன்முடிஅப் பால்வைத்தே துயிலமர்ந்தான் தமிழ்நாதன். அசு

அங்குமவன் திருமுடிமேல் *மீட்டும்அவர் தாள்நீட்டச்
செங்கயல்பாய் தடம்புடைசூழ் திருநாவ லூராளி

அ௩. ஆளுடைய திருநாவுக்கரசராகிய உழவாரப் படையாளி. உழவாரப் படை - புல் செதுக்கும் கருவி. விடையவர்க்கு - விடையூருஞ் சிவபெருமானுக்கு. கைத்தொண்டு - திருக்கோயில் திருவீதி முதலியவிடங்களில் புல் செதுக்கல் முதலிய கைத்தொண்டுகள். பதியை - திருவதிகையை. மடை - நீர்மடை. மடைவளர் - வரம்பு உயர்ந்த எனினுமாம். புறம்பணை - புறத்துள்ள வயல்கள் சூழ்ந்த.

அச. வரி வளர் - வண்டுகளின் ரீங்கார ஓசைமிகும். விரி திரை - விரிந்த அலைகளையுடைய. கெடிலம் - கெடில நதி. திருவதிகைத் திருவீரட்டானத் திறைதாளில். புரிவுடைய-விருப்பமுடைய. புடை எங்கும் மிடைகின்ற பரிசனமும் - தம்மைச்சுற்றி நாஞபக்கங்களிலும் நெருங்கிய பரிவாரங்களும்.

அரு. அங்கணரும் - அழகிய கண்ணுடைய சிவபெருமானும். பூந்தாரான் - மலர்மாலை யணிந்த வன்தொண்டரின். பதுமமலர் - தாமரை மலர். பயின்றார் - நடித்தார்.

அசு. தமிழ் நாதன் - நம்பியாரூரர்.

அஎ. தடம் புடை - வாவிகள் புறத்தே. காந்த - மறைத்த. வலிந்து தடுத் தாட்கொள்ளப் பெற்றவர்க்கு வலிந்தே திருவடி தீக்கையுஞ் செய்யப்பட்ட

பா - ம்—*மீண்டும்.

"இங்கென்னைப் பலகாலும் *மிதித்தனைநீ யார்"என்னக்
கங்கைசடை கரந்தபிரான் "அறிந்திலையோ" எனக்கரந்தான். அஎ

" செம்மாந்திங் கியானறியா தென்செய்தேன் " எனத்தெளிந்து
தம்மானை அறியாத சாதியார் உளரேஎன்
றம்மானைத் திருவதிகை வீரட்டா னத்தமர்ந்த
கைம்மாவின் உரியானைக் கழல்பணிந்து பாடினார். அஅ

" தம்மானை யறியாத சாதியாருளரே
சடைமேற்கொள் பிறையானை விடைமேற்கொள் விகிர்தன்
கைம்மாவின் உரியானைக் கரிகாட்டில்ஆடல்
உடையானை விடையானைக் கறைகொண்ட கண்டத்
தெம்மான்றன் அடிக்கொண்டென் முடிமேல் வைத்திடும்என்னும்
ஆசையால் வாழ்கின்ற அறிவிலாநாயேன்
எம்மானை எறிகெடில வடவீரட்டானத்
துறைவானை இறைபோதும் இகழ்வன்போல் யானே"—தேவாரம்.

பொன்திரளும் மணித்திரளும் பொருகரிவெண் கோடுகளும்
மின்திரண்ட வெண்முத்தும் விரைமலரும் நறுங்குறடும்
வன்திரைக ளால்கொணர்ந்து திருவதிகை வழிபடலால்
தென்திசையில் கங்கையெனும் திருக்கெடிலம் திளைத்தாடி. அகூ

அங்கணரை அடிபோற்றி அங்ககன்று மற்றந்தப்
பொங்குநதித் தென்கரைபோய்ப் போர்வலித்தோள் மாவலிதன்
மங்கலவேள் வியில்பண்டு வாமனனாய் மண்இரந்த
செங்கணவன் வழிபட்ட திருமாணிக் குழி†அணைந்தார். கூo

தெங்க. திருநாவுக்கரசர் திருவடி தீக்கை பெற்றது போல அவர்பால் அன்பு கொண்ட சுந்தரரும் அத்தீக்கை பெற்றாரெங்க.

அஅ. செம்மாந்து - இறுமாந்து. அம்மானை - பெருமையுடையவனை. கைம்மாவின் உரியானை - யானைத் தோலைப் போர்வையாக உடைய சிவபிரானை.

அகூ. பொரு கரி வெண்கோடுகளும் - போர் புரியும் யானைகளின் வெள்ளிய தந்தங்களையும். விரைமலரும் - வாசனைப் பூக்களையும். நறுங்குறடும் - மணம் கமழும் சந்தனக் கட்டைகளையும். வன் திரைகளால் - வலிய அலைகளால். வழிபடலால் - வணங்குதலால்; வழியே போதலால். திளைத்து ஆடி - நன்றாகப் படிந்து மூழ்கி.

கூo. மங்கல வேள்வியில் - யாக சாலையில். பண்டு - முன்னே. வாமனவதாரம் ஐந்தாவது. செங்கணவன் - சிவந்த கண்ணையுடைய திருமால். (மாணி - பிரமசாரி; வாமனன்.)

பா - ம்—*மிதித்தநீ. †அடைந்தார்.

பரம்பொருளைப் பணிந்துதாள் பரவிப்போய்ப் பணிந்தவர்க்கு
வரந்தருவான் தினைநகரை வணங்கினர்வண் தமிழ்பாடி
நரம்புடையாழ் ஒலிமுழவின் நாதஒலி வேதஒலி
அரம்பையர்தம் கீதஒலி அறாத்தில்லை மருங்கணைந்தார். ௯௧

வேறு

தேம லங்கலணி மாமணி மார்பின் செம்மல், அங் கயல்கள் செங்கம லத்தண்
பூம லங்கஎதிர் பாய்வன மாடே புள்ள லம்பு திரை வெள்வளை வாவித்
தாம லங்குகள் தடம்பணை சூழும் †தண்ம ருங்குதொழு வார்கள்தம் மும்மை
மாம லங்களற வீடருள் தில்லை மல்லல் அம்ப தியின் எல்லை வணங்கி.

நாக சூதவகு ளஞ்சர ளஞ்சூழ் நாளி கேரம்இல வங்க நரந்தம்
பூக ஞாழல்குளிர் வாழை மதூகம் பொதுளும் வஞ்சிபல எங்கும் நெருங்கி
மேக சாலமலி சோலைக ளாகி மீது கோகில மிடைந்து மிழற்றப்
போக பூமியினும் மிக்கு விளங்கும் பூம்பு றம்பணை கடந்து புகுந்தார்.

---

௯௧. வரந்தருவான் - சிவபெருமான் எழுந்தருளியுள்ள. தினை நகரை - திருத்தினை நகரை. முழவின் - மத்தளத்தின். அறா - நீங்காத. மருங்கு - புறத்தே. தில்லையில் நடமும், அதற்குரிய ஆரவாரமும் கிளர்ந்தவண்ணமாயிருத்தலான் தொடக்கத்திலேயே உள்ள எழுச்சியும் வீறும் உண்டாக ஆசிரியர் "நரம்புடை......தில்லை" என்றார். கீழ்வரும் பாக்களின் சந்தமே தில்லையின் நிலையை உணர்த்துதல் காண்க.

௯௨. தேமலங்கல் மாமணி அணி மார்பின் - வாசனை பொருந்திய பூ மாலையையும், உயர்ந்த இரத்தின மாலையையும் அணிந்த மார்பினையுடைய. தேம்-தேன் எனினுமாம். செம்மல் - வன்தொண்டர். புள்ளலம்பு திரைவெள்வளை வாவி மாடு-பறவைகள் ஒலிக்கின்ற வெண் சங்குகள் நிறைந்த தடாகங்களினிடத்திலே. அம் கயல்கள் தண் செம் கமலம் பூ மலங்க - அழகிய கெண்டை மீன்கள் குளிர்ந்த செந்தாமரைப் பூக்கள் அசைய. எதிர் பாய்வன - எதிர் எதிராகப் பாய்தலால். தாமலங்குகள் - தாவுகின்ற மலங்கு மீன்கள் (மலங்குகள் தா - மலங்கு மீன்கள் தாவுகின்ற அல்லது தாவி விழுகின்ற எனினுமாம்). தடம்பணை சூழும் - விசாலமாகிய வயல்களைச் சூழும். தண் மருங்கு தொழுவார்கள் தம் - குளிர்ந்ததன் (தில்லையின்) பக்கத்து வணங்கும் அன்பர்களுடைய. மும்மை மாமலங்கள் அற - ஆணவம் கர்மம் மாயை என்னும் மூன்று மலங்களும் நீங்க. வீடு அருள் - முத்தி கொடுத்தருளும். தில்லை - சிதம்பரமென்னும். மல்லல் - வளத்தையுடைய. அம் பதியின் - அழகிய பதியின்.

௯௩. நாகம் - நாகமரங்கள். சூதம் - மா. வகுளம் - மகிழ மரங்கள். நாளிகேரம் - தென்னை. நரந்தம் - நாரத்தை. பூகம் - கமுகம். ஞாழல் - குங்கும மரங்

பா - ம்—*பணிந்தார்க்கு. † தன்.

வன்னி கொன்றைவழை சண்பகம் ஆரம் மலர்ப்ப லாசொடு செருந்திமந் தாரம், கன்னி காரங்குர வங்கமழ் புன்னை கற்பு பாடலம் கூவிளம் ஓங்கித், துன்னு சாதிமரு மாலதி மௌவல் துதைந்த நந்திகர வீர மிடைந்த, பன்ம லர்ப்புனித நந்த வனங்கள் பணிந்து சென்றனன் மணங்கமழ் தாரான். கூச

இடம ருங்குதனி நாயகி காண எழ்பெ ரும்புவனம் உய்ய எடுத்து, நடந வின்றருள் சிலம்பொலி போற்றும் நான்ம றைப் பதியை நாளும் வணங்கக், கடல்வ லங்கொள்வது போல்புடை சூழுங் காட்சி மேவிமிகு சேண்செல ஓங்கும், தடம ருங்குவளர் மஞ்சிவர் இஞ்சித் தண்கி டங்கைஎதிர் கண்டு மகிழ்ந்தார். கூரு

மன்று ளாடுமது வின்நசை யாலே மறைச்சு ரும்பறை புறத்தின் மருங்கே, குன்று போலுமணி மாமதில் சூழுங் குண்ட கழ்க்கமல வண்டலர் கைதை, துன்று நீறுபுனை மேனிய வாகித் தூய நீறுபுனை தொண்டர்கள் என்னச், சென்று சென்று *முரல் கின்றது கண்டு சிந்தை அன்பொடு திளைத்தெதிர் சென்றார். கூசா

---

கள். மதூகம் - இலுப்பை. பொதுளும் - தழைத்த. மேகசாலம் மலி - மேகக் கூட்டங்கள் நிறைந்த. (சோலைகள் மீது) கோகிலம் மிடைந்து மிழற்ற - குயில் கள் நெருங்கிக் கூவ. போக பூமியினும் - தெய்வலோகத்தைப் பார்க்கினும். பூம் புறம்பணை - பொலிவினையுடைய புறத்துள்ள வயல்களை.

கூச. வழை - சுரபுன்னை. ஆரம் - சந்தனமரங்கள்; ஆத்தியுமாம். பலாசு - முருக்கமரங்கள். செருந்தி - ஒருவகை மரம்; வாட்கோரைக்கும் மணித்தக் காளிக்கும் இப்பெயர் வழங்குவதுண்டு. கன்னிகாரம் - கோங்கு. குரவம் - குரா மரங்கள். கற்பு - கொடிமல்லிகை. பாடலம் - பாதிரி. கூவிளம் - வில்வம். சாதி - சிறு சண்பகம். மரு - ஒருவகைப்புல்; வாசனையுமாம். மாலதி - மல் லிகை. மௌவல் - முல்லை. துதைந்த நந்தி - இதழ்நெருங்கிய நந்தியாவர்த்தம். கரவீரம் - அலரி. மிடைந்த - நிறைந்து மொய்த்த. தாரான் - பூமாலை யணிந்த நம்பியாரூரர்.

கூரு. இடமருங்கு தனிநாயகி - பக்கத்துள்ள ஒப்பற்ற சிவகாமவல்லி. எடுத்து - தூக்கி. நான்மறைப் பதியை - நான்கு மறைகளும் இடையறாது பயி லப்படும் சிதம்பரத்தை. நாளும் - நாடோறும். புடைசூழும் - பக்கத்திலே சூழு கின்ற. மேவி - பொருந்தி. சேண்செல - தூரஞ் செல்ல; வானத்தை அளாவ. ஓங்கும் தடம் மருங்கு வளர் - உயர்ந்திருக்கும் விசாலம் பொருந்திய பக்கத்தில் தங்கும். மஞ்சு இவர் இஞ்சி - மேகங்கள் ஏறுகின்ற மதில்களையுடைய. தண் கிடங்கை - குளிர்ந்த அகழியை.

கூசா. மன்றுள் ஆடும் மதுவின் நசையாலே - சிற்சபையில் ஆடும் (தூக்கிய திருவடியாகிய தாமரைமலர்த்) தேன்மீது கொண்ட விருப்பத்தினால். தேனை

பா - ம் * முரல்கின்றன.

பார்வி ளங்க*வளர் நான்மறை நாதம் பயின்ற பண்புமிக வெண்கொடி†ஆடும், சீர்வி ளங்குமணி நாஒலி யாலும் திசைகள் நான்கெதிர் புறப்பட லாலும், தார்வி ளங்கு‡வரை மார்பின் அயன்பொன் சதுர்மு கங்களென ஆயின தில்லை, ஊர்வி ளங்குதிரு வாயில்கள் நான்கின் உத்த ரத்§திரு வாயில்முன் எய்தி. கஎ

அன்பின் வந்தெதிர் கொண்டசீர் அடியார் அவர்க ளோநம்பி ஆரூரர் தாமோ, முன்பி றைஞ்சினர் யாவரென் றறியா முறைமை யால்எதிர் வணங்கி மகிழ்ந்து, பின்பு கும்பிடும் விருப்பில் நிறைந்து பெருகு ¶நாவல்நக ரார்பெரு மானும், பொன்பி றங்குமணி மாளிகை நீடும் பொருவி றந்ததிரு வீதி புகுந்தார். கஅ

நுகர்தல்வேண்டும் என்னும் நசையால் என்க. மறை சுரும்பு அறை - வேதங்களாகிய வண்டுகள் முழங்குகின்ற. புறத்தின் மருங்கே - புறஇடத்தே; சுற்றுப் பக்கத்தே. குண்டு அகழ் கமலவண்டு - ஆழமாகிய அகழிகளிலிருக்கும் தாமரை மலர்களிலுள்ள வண்டுகள். அலர் கைதை - அருகே மலர்ந்திருக்கிற தாழம்பூக்களில். துன்று நீறு - நிறைந்துள்ள வெண்பொடியை (மகரந்தப் பொடியை). மலர்கள் தோறும் சென்று சென்று. முரல்கின்றது - பாடுவதை. திளைத்து - மூழ்கி. சிவனடியார் போன்ற காட்சியை இயற்கை நம்பியாரூரருக்கு நல்குவ துணர்க. இயற்கை இறையுடல் என்பது நூலின் முதற்பாட்டில் விளக்கப்பட்டிருக்கிறது. எல்லாவற்றையும் சிவமாகக் காணும் பேற்றை நம்பியாரூரர் பெற்றார் என்பது கருத்து.

கஎ. பார் - உலகம். பயின்ற பண்பு - ஓதுகின்ற இயல்பு. (ஆலும் - ஆடும்). திசைகள் நான்கு எதிர் புறப்படலாலும் - திசைகள் நான்கும் எதிர் தோன்றுதலாலும்; நான்கு திசையினும் நேரே புறப்பட்டுப் போதற்கு வழிகளை யுடைமையானும்; நான்கு திசைகட்கும் எதிர்ப்பட்டு நான்கு வழிகளிலும் (மணியொலி) புறப்படுதலானும் என்றலுமொன்று. தார் விளங்கு வரைமார்பின் அயன் - பூமாலை விளங்குகின்ற மலைபோன்ற மார்பினையுடைய பிரமதேவனின். பொன் சதுர் முகங்கள் என - பொன் மயமான நான்கு முகங்களைப் போல அமைந்த. உத்தரம் - வடதிசையின். பிரமனுக்கு ஆம்போது வெண்கொடி என்பதற்குக் கலைமகள் என்று பொருள் கொள்ளுதல்வேண்டும். பிற வெளிப்படை.

கஅ. இறைஞ்சினர் - வணங்கினவர். கும்பிடும் - நடராசப் பெருமானைத் தொழும். நாவல் நகரார் பெருமானும் - திருநாவலூர்த் தலைவராகிய வன்தொண்டப் பெருமானும். பொன் பிறங்கும் - பொன் வண்ணமாக விளங்கும். நீடும் - பெருகியுள்ள. பொருவு இறந்த - ஒப்பற்ற. பொன்னம்பலமுள்ள பதியாதலின், முனுன்ம் இங்கும் பின்னும் அடிக்கடி பொன் பெய்யப்பட்டதென்க.

பா - ம்—*வரு. † ஆலும். ‡ மணி. § திசையின். ¶ நாவலூரர்.

அங்கண் மாமறை முழங்கும் மருங்கே ஆட ரம்பையர் அரங்கு முழங்கும், மங்குல் வானின்மிசை ஐந்து முழங்கும் வாச மாலைகளில் வண்டு முழங்கும், பொங்கும் அன்பருவி கண்பொழி தொண்டர் போற்றி சைக்கும்ஒலி எங்கும் முழங்கும், திங்கள் தங்குசடை கங்கை முழங்கும் தேவ தேவர்புரி யுந்திரு வீதி. கூகூ

போக நீடுநிதி மன்னவன் மன்னும் புரங்கள் ஒப்பன வரம்பில ஓங்கி, மாக முன்பருகு கின்றன போலும் மாளி கைக்குலம் மிடைந்தப தாகை, யோக சிந்தைமறை யோர்கள் வளர்க்கும் ஓம தூமம்உயர் வானில் அடுப்ப, மேக பந்திகளின் மீதிடை எங்கும் மின்னு டங்குவன என்ன விளங்கும். க00

ஆடு தோகைபுடை நாசிகள் தோறும் அரணி தந்தசுடர் ஆகுதி தோறும், மாடு தாமமணி வாயில்கள் தோறும் மங்க லக்கலசம் வேதிகை தோறும், சேடு கொண்டஒளி தேர்நிரை தோறும் செந் நெல் அன்ன*மலை சாலைகள் தோறும், நீடு தண்புனல்கள் பந்தர்கள் தோறும் நிறைந்த தேவர்கணம் நீளிடை தோறும். க0க

---

கூகூ. மருங்கே - பக்கத்தே. ஆடும் அரம்பையர் அரங்கு - நடம்புரியும் தெய்வப் பெண்களின் சபை. மங்குல் - மேகம் தவழும். ஐந்தும் - ஐவகை வாத்தியங்களும்; கூகூ-ம் பாட்டுக் குறிப்புப் பார்க்க. பொங்கும் - இயல்பாகப் பொங்கும். அன்பு அருவிபோல; அன்பால் இன்ப அருவி. "அன்புக்கும் உண்டோ அடைக்குந்தாழ்"—குறள்: 71. புரியும் - விரும்பும். (திருவீதியாகிய) அங்கண் - அழகியவிடத்தில்; அங்கண் மாமறை எனக்கொண்டு அழகிய சாகைகளையுடைய பெரிய வேதங்கள் என்னலுமாம். பலவழியில் ஆண்டவன் நினைவு தோன்றத் தக்க எண்ணமுஞ் செயலுமுடைய அன்பர்கள் வாழ் வீதியாதலின், அதனைத் "தேவதேவர் புரியும் திருவீதி" என்றார்.

க00. போக நீடு நிதி மன்னவன் - குபேரன். மாகம் முன்பருகுகின்றன போலும்-ஆகாயத்தை முன்னே உண்கின்றனபோலும். மாளிகைக்குலம் மிடைந்த பதாகை - மாளிகைக் கூட்டங்களில் நெருங்கிய கொடிகள். பருகுதலைக் கொடிகள்மீது ஏற்றுவோருமுளர்; மாளிகைகள்மீது ஏற்றுவோருமுளர். பருகுதல் என்பது நெருங்கி முட்டுதலின் மேற்று. முகில் நீரைப் பருகுதல் எனினுமாம். ஓமதூமம் - ஓமப்புகை. அடுப்ப - அடைய. மேகபந்திகளின் மீதிடை - மேக வரிசைகளின் இடையிடை. மின் நுடங்குவன என்ன - மின்னல் தோன்றி மறைவது (அசைவது) போல. யோகசிந்தைபோல எல்லாம் ஓங்கியிருக்கின்றன என்பது குறிப்பு.

க0க. நாசிகள் புடை தோறும் ஆடு தோகை - கோபுர நாசிகளின் பக்கந் தோறும் ஆடும் மயில்கள். ஆகுதிதோறும் அரணிதந்த சுடர் - ஆகுதி செய்தற்கு

பா - ம்—*மலி.

எண்ணில் பேர்*உல கனைத்தினும் உள்ள எல்லை யில்அழகு சொல்லிய எல்லாம், மண்ணில் இப்பதியில் வந்தன என்ன மங்க லம்பொலி †வளத்தன ஆகிப், புண்ணி யப்புனித அன்பர்கள் முன்பு புகழ்ந்து பாடல்புரி பொற்பின் விளங்கும், அண்ணல் ஆடுதிரு அம்பலம் சூழ்ந்த அம்பொன் வீதியினை நம்பிவ ணங்கி. க0௨

மால யன்சத மகன்பெருந் தேவர் மற்றும் உள்ளவர்கள் முற்று நெருங்கிச், சீல மாமுனிவர் சென்றுமுன் துன்னித் திருப்பி ரம்பின் அடி கொண்டு திளைத்துக், கால நேர்படுதல் பார்த்தயல் நிற்பக் காதல் அன்பர்கண நாதர் புகும்பொன், கோல நீடுதிரு வாயி லிறைஞ் சிக் குவித்த செங்கைதலை மேற்கொடு புக்கார். க0௩

வேறு

பெரு‡மதில் சிறந்த செம்பொன்மா ளிகைமின் பிறங்குபேர் அம்பல மேரு, வருமுறை வலங்கொண் டிறைஞ்சிய பின்னர் வணங்கிய

---

இடமாக உள்ள யாக குண்டங்கள் தோறும் தீக்கடைக்கோல் தந்த நெருப்பு. மணிவாயில்கள் தோறும் மாடுதாமம். மாடுதாமம் - பக்கங்களில் கட்டப்பட்ட மலர் மாலைகள். மாடு மணித்தாமம் எனக்கொண்டு பொன்னாலும் முத்து இரத்தினம் முதலியவற்றாலுஞ் செய்யப்பட்ட மாலைகள் என்னினுமாம். வேதிகை தோறும்- திண்ணைகள் தோறும். நிரை - வரிசை. சேடு - பெருமை. சாலைகள் - சத்திரங்கள். நீடு தண்புனல்கள் - மிகக் குளிர்ந்த நீர் வகைகள். நீளிடை - நீண்ட வீதிகள். கணம் - கூட்டம்.

க0௨. முன்பு பாடல்புரி பொற்பின் - முன்னாளில் பாடல்கள் செய்த அழகினால், (திருஞானசம்பந்தர் திருநாவுக்கரசர் முதலியோர் பாடல்களைப் பெற்ற பதியாதலின்.) அண்ணல் - நடராஜன்.

க0௩. சதமகன் - இந்திரன் (முதலிய பெருந்தேவர்கள்). சீலமாமுனிவர் முதலியோர். துன்னி - நெருங்கி. திளைத்து - வருத்தத்தில் அழுந்தி. காதலன்பர்களும், சிவகணநாதர்களும்தடையின்றிப்புகும். பொற்கோலங்கள்நிரம்பிய.

க0௪. மின் பிறங்கும்-ஒளி விளங்கும்; மின்னலிடும். பேரம்பலமாகிய மேரு. அந்த வணங்கிய மகிழ்வோடும். திரு - அருட்டிரு. திருவணுக்கன் திருவாயில்- ஆண்டவன் அருகேயுள்ள திருவாயில். இங்கே பேரம்பலம் சிற்றம்பலம் என இரண்டு அம்பலங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அம்பலங்களின் விளக்கத்தை முதற்றிருப்பாட்டில் “ அம்பலத்தாடுவான் ” என்னுந் தலைப்பின் கீழ் வரையப் பட்டுள்ள விரிவுரையிற் காண்க. பேரம்பலம் அண்டத்தைக் குறிப்பது ; சிற்றம்பலம் பிண்டத்தைக் குறிப்பது. பெரியதிற்கெல்லாம் பெரியதாயிருப்பது பேரம்பலம். சிறியதற் கெல்லாம் சிறியதாயிருப்பது சிற்றம்பலம். இதன் நுட்பம்

பா - ம்— * உலகத்தினும். † வளத்தின. ‡ மகிழ்.

மகிழ்வொடும் புகுந்தார், அருமறை முதலில் நடுவினில் கடையில்
அன்பர்தம் சிந்தையில் அலர்ந்த, திருவளர் ஒளிசூழ் திருச்சிற்றம்
பலமுன் திருஅணுக் கன்திரு வாயில். ௧0௪

---

இறைவன் பருமைக்குப் பருமையாய், நுண்மைக்கு நுண்மையாயிருப்பவன் என்பது. "அணுத்தருந் தன்மையில் ஐயோன் காண்க - இணைப்பரும் பெருமையில் ஈசன் காண்க-அரியதில் அரிய அரியோன் காண்க-மருவி எப்பொருளும் வளர்ப்போன் காண்க"—திருவாசகம் - திருவண்டப் பகுதி ௬௩ - ௬௮. நிறத்தானும், சிவத்தையுடைமையானும், முடியிற் பொற்குடங்களைக் கொண்டுண்மையானும், இன்ன பிறவாற்றானும் பேரம்பலம் மேருவை ஒத்திருத்தலை யோர்க. இடகலை பிங்கலை சுழுமுனை என்னும் மூன்று நாடிகளுள் சுழுமுனை நடுநாடி எனப்படும். அந்நடுநாடி மேரு எனப்படும். அம்மேருவுக்கு அறிகுறி பேரம்பலமென்க. திருச்சிற்றம்பலம் பிரணவமாதலின் " அருமறை முதலில் நடுவினில் கடையில் அன்பர்தஞ் சிந்தையில் அலர்ந்த - திருவளர் ஒளிசூழ் திருச்சிற்றம்பலம் " என்றார். பிரணவம் ' ஓம் ' என்பது. அஃது அ உ ம் என்று பிரிகிறது. இம்மூன்றும் முதல் மூன்று மறைகளின் முதலிடை கடையே முறையே நிற்கின்றன. அகரம் - அக்நிமீளே - இருக்கின் முதல் ; உகரம் - யோகிஸ் சமுத்திரோ பந்து - எசுரின் இடை ; மகரம் - சமாநம்வரம் - சாமத்தின் கடை. இது நீலகண்டர் குறித்தமுறை. புறத்தே பேரம்பலத்தைக்கண்டு தொழுது, அது பிரணவ வடிவமாக அமைந்திருத்தலை யுணர்ந்து, அதன் தூலசூக்கும காரண நிலைகளை உன்னி, அவைகளில் அழுந்த அழுந்த அகத்தே ஓங்காரமாக அமைந்துள்ள நெஞ்சமலரை (ஹிருதயகமலத்தை)க் கண்டு தெளிவுறும் பேறு கூடும். "உய்ய என்னுள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற மெய்யா"—திருவாசகம் : சிவபுராணம் ௩௩ - ௩௪. மறையின் முதலிடை கடையிலுள்ள பிரணவம் புற அம்பலமாகவும் அக அம்பலமாகவும் பொலிதலான், இரண்டிற்கும் இடையில் " அருமறை முதலில் நடுவில் கடையில்......" என்று கூறினர். அருமறைமுதலில் அலர்ந்த திருச்சிற்றம்பலம், நடுவில் அலர்ந்த திருச்சிற்றம்பலம், கடையில் அலர்ந்த திருச்சிற்றம்பலம், சிந்தையில் அலர்ந்த திருச்சிற்றம்பலம் எனக்கொள்க. ஈண்டுச் சிந்தை உள்ளக் கமலத்தின் மேற்று. திருச்சிற்றம்பலம் என்பது தகராகாசத்தை என்க. "சிறைவான் புனற்றில்லைச் சிற்றம்பலத்தும் என் சிந்தையுள்ளும் - உறைவான்" —திருக்கோவையார் : ௨0. இறுதிப்பேறு, உள்ளக் கமலமாகிய திருச்சிற்றம்பலத்தில் ஆண்டவன் அருட்கூத்தைக் காண்பது என்பதை விரிக்கிற்பெருகும். நம்பியாரூரர் ஆண்டவனால் தடுத்தாட்கொள்ளப்பெற்றவர் ; திருவருட் செல்வர். அவருக்கு உலகம் சிவமாகத் தோன்றுதல் இயல்பு. அவர், சிதம்பரத்தின் புறஎல்லைக் கண்ணுள்ள இயற்கையை இறையாகக்கண்டு தொழுது வந்தது மேலே சொல்லப்பட்டது. அத்திருவருள் நிலையில் நின்ற நம்பியாரூரருக்குப் பிரணவத்தின் தூல சூக்கும காரணமாக விளங்கும் அம்பலக் கூறுகள் புலனாயின என்க. இனிச் சிந்தையில் அலர்ந்த திருச்சிற்றம்பலத்தில் ஆண்டவன் புரியும் இன்பக் கூத்துக் காட்சியும், அக்காட்சியான் உறும் நிகழ்ச்சியும், பிறவும் கீழ் வருதல்

வையகம் பொலிய மறைச்சிலம் பார்ப்ப மன்றுளே மாலயன் தேட, ஐயர்தாம் வெளியே ஆடுகின் றுரை அஞ்சலி மலர்த்திமுன் *குவித்த, கைகளோ திளைத்த கண்களோ அந்தக் கரணமோ கலந்த அன் புந்தச், செய்தவப் பெரியோன் சென்றுதாழ்ந் தெழுந்தான் திருக்களிற் றுப்படி மருங்கு. க௦௫

ஐந்துபேர் அறிவுங் கண்களே கொள்ள அளப்பருங் கரணங்கள் நான்கும், சிந்தையே ஆகக் குணம்ஒரு மூன்றும் திருந்துசாத் துவிகமே ஆக, இந்துவாழ் சடையான் ஆடும்ஆ னந்த எல்லையில் தனிப்பெருங் கூத்தின், வந்தபேர் இன்ப வெள்ளத்துள் திளைத்து மாறிலா மகிழ்ச்சி யில் மலர்ந்தார். க௦௬

---

காண்க. ஓங்கார மூலமாகவுள்ள விந்து, ஒலிக்கும் ஒளிக்குங் காரணமாக நிற்ற லின் "ஒளி சூழ்" என்றார். அது திருவளர் ஒளி என்க.

க௦௫. ஐயர் ஆட அதனின்றெழும் சிலம்பொலியால் உலகம் பொலிதலால் ஈண்டு "வையகம் பொலிய" என்றார். பொலிய - அழகுற விளங்க. மறையாகிய சிலம்பு. சிலம்பு ஒலிக்கு அறிகுறி. அவ்வொலியால் மந்திரமும் அமைகிறது; வையகமும் அமைகிறது. அதனால் "மறை" என்றும், "வையகம்" என்றுங் கூறலானார். ஆர்ப்ப - ஒலிக்க. வெளியே - சிதாகாசத்திலே. முன்னரே அஞ்சலி விரித்துத் தலைமேல் குவித்த கைகளையோ, அசையாது நின்ற கண்களையோ, அந்தக் கரணங்களையோ கலந்த அன்பானது செலுத்த. உள்ளத்தெழுந்த அன்பு அந்தக் கரணத்தை இயக்க, அதனால் கண் காண, அதனால் கைகள் குவிதல் பெறுகின்றன. இவ்வொவ்வொன்றுந் தொடர்ந்து மிக விரைந்து நிகழ்வது. அவ் விரைவு மனதுக்கும் எட்டாதது. இங்கே அன்பின் விரைவைப்பற்றிக் கையோ கண்ணோ கரணமோ எது முதலில் கடனாற்றியதோ என்பார், "ஆடுகின்றுரை ........கரணமோ" என்றார். மருங்கே - பக்கத்தே. திருக்களிற்றுப்படி - ஸ்ரீ பஞ்சாக்ஷரப்படி; களிறு தாங்கி நிற்றலான் களிற்றுப்படியாயிற்று; "திருக்களிற் றுப்படி, ஒரு சைவ சித்தாந்த நூலைத் தன்னிடத்துள்ள களிற்றுக் கை நிமிர்ந் தெடுத்து நடராஜரது திருவடியிற் கொடுக்கப்பெற்ற கனகசபையின் திருவாயிற் படி" என்பது பழைய குறிப்புரை. ஒகாரங்களை எண்ணென்போருமுளர்; ஐயமென்போருமுளர்.

க௦௬. ஐந்துபேர் அறிவு: சுவை (ரசம்), ஒளி (ரூபம்), ஊறு (ஸ்பரிசம்), ஓசை (சப்தம்), நாற்றம் (கந்தம்) என்பன. இவ்வைந்தும் முறையே, வாய், கண், மெய், செவி, மூக்கு என்னும் ஐம்பொறி வாயிலாகத் தன் தன் கடனை ஆற்றா நிற்கின்றன. இவைகள் எல்லாம் ஒருமைப்பட்டுக் கட்புலனில் ஒன்றிநிற்றல் ஈண் டுச் சொல்லப்பட்டது. இதனை "ஐந்துபேர் அறிவுங் கண்களே கொள்ள" என்றார். ஐந்துபேர் அறிவு - ஐந்தாகப் பெயர்ந்த அறிவு; ஐந்து பெரிய அறிவு

பா - ம்—*போற்றும்.

தெண்ணிலா மலர்ந்த வேணியாய் உன்தன் திருநடம் கும்பிடப் பெற்று, மண்ணிலே வந்த பிறவியே எனக்கு வாலிதாம் இன்பம்ஆம் என்று, கண்ணில்ஆ னந்த அருவிநீர் சொரியக் கைம்மலர் உச்சிமேல் குவித்துப், பண்ணினால் *நீடி அறிவரும் பதிகம் பாடினார் பரவினார் பணிந்தார். க0எ

தடுத்துமுன் ஆண்ட தொண்டனார் முன்பு தனிப்பெருந் தாண்டவம் புரிய, எடுத்தசே வடியார் அருளினால் "தரளம் எறிபுனல் மறிதிரைப் பொன்னி †மடுத்தநீள் வண்ணப் பண்ணைஆ ரூரில் வருக நம்பால்" என வானில், அடுத்தபோ தினில்வந் தெழுந்ததோர் நாதம் கேட்டலும் அதுவுணர்ந் தெழுந்தார். க0அ

---

எனினுமாம். கரணங்கள் நான்கு: மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்பன. இவை மனமெனும் ஒன்றில் படிதல் குறிக்கப்பட்டது. இதனை "கரணங்கள் நான்கும் சிந்தையே ஆக" என்றார். கரணங்களின் நிகழ்ச்சிகள் அளவைக்கு அகப்படாதன ஆதலான் "அளப்பரும்" என்றார். குணம் மூன்று: இராசதம் தாமதம் சாத்விகம் என்பன. இம்மூன்றும் சாத்விகம் என்னும் ஒன்றில் உறைவது இங்கே உணர்த்தப்பட்டது. இதனை, "குணமொரு மூன்றுந் திருந்து சாத்துவிகமேயாக" என்றார். சாத்விகம் சிறந்ததாகலானும், தூயதாகலானும், "திருந்து சாத்துவிகம்" என்றார். இந்து - சந்திரன். கூத்தின் வந்த - கூத்தால் விளைந்த. திளைத்து - மூழ்கி. மலர்ந்தார் - உள்ளக் கமலம் மலரப் பெற்றார். புலன்கள் கண்ணினும், கரணங்கள் சித்தத்திலும், குணங்கள் சாத்விகத்திலும் ஒன்றும் நிலை அமலயோகத்தின் பாற்பட்டது. இந்து - மதிமண்டலம்; அமிர்தகலசம். சடை - அமிர்தஒழுக்கு. விளக்கம் முதற்பாட்டின் விரிவுரையிற் காண்க. யோக உலகின் பொருட்டு இவைகளை ஆண்டவன் தாங்கி நிற்றலும் அவ்வுரைக்கண் சொலலப்பட்டிருக்கிறது. இக்காட்சியை மேற்போந்த ஒன்றிய நிலை பெற்றோர் கண்டதும் அவர்பாலும் மதிமண்டலத் திறப்பு, அமிர்த ஒழுக்கெனும் வாயூறல் முதலியன நிகழ்தல் இயல்பு. அவ்வமிர்தத் தேக்கால் விளையும் இன்பமும் மகிழ்ச்சியும் மாறிலாதன என்க. மாறிலா இன்பமும் மகிழ்ச்சியும் உள்ளக்கமலக் கட்டை அவிழ்த்து மலர்த்தல் இயல்பு.

க0எ. தெள்நிலா - தெள்ளியநிலா. வேணியாய் - சடையையுடையவனே. வாலிதாம் - நன்றுடையதாகிய; மேலான. பரவினார் - வாழ்த்தினார்.

க0அ. தடுத்தாட் கொள்ளப்பெற்ற வன்தொண்டர் தம் முன்பு. தரளம் எறி மறிதிரை புனல் பொன்னி - முத்தினை எறிந்து மீளும் அலை நீரையுடைய காவிரி. மடுத்த - பாய்ந்து நிறைத்த. நீள்வண்ணம் - நீளும் அழகுடைய. பண்ணை ஆரூரில் - வயல்கள் சூழ்ந்த திருவாரூரில். நம்பால் வருக என்னும் அருள் ஒலி. வானில் அடுத்தபோதினில் - ஆகாயத்தில் சேர்ந்தபொழுதில்.

பா - ம் :—* நீடும். † அடுத்த.

ஆடுகின் றவர்பேர் அருளினால் நிகழ்ந்த அப்பணி சென்னிமேல் கொண்டு, சூடுதம் கரங்கள் அஞ்சலி கொண்டு தொழுந்தொறும் புறவிடை கொண்டு, மாடுபே ரொளியின் வளரும்அம் பலத்தை வலங்கொண்டு வணங்கினர் போந்து, நீடுவான் பணிய உயர்ந்த பொன் வரைபோல் நிலைஎழு கோபுரம் கடந்து. ௧0௯

*நின்றகோ புரத்தை நிலமுறப் பணிந்து நெடுந்திரு வீதியை வணங்கி, †மன்றலார் செல்வ மறுகினூ டேகி மன்னிய திருப்பதி அதனில், ‡தென் திரு வாயில் கடந்துமுன் போந்து சேண்படுந் திரு எல்லை இறைஞ்சிக், கொன்றைவார் சடையான் அருளையே நினைவார் கொள்ளிடத் திருநதி கடந்தார். ௧௧0

வேறு

புறந்தருவார் போற்றிசைப்பப் புரிமுந்நூல் அணிமார்பர்
அறம்பயந்தாள் திருமுலைப்பால் அமுதுண்டு வளர்ந்தவர்தாம்
பிறந்தருளும் பெரும்பேறு பெற்றதெனை முற்றுலகில்
சிறந்தபுகழ்க் கழுமலமாம் திருப்பதியைச் சென்றணைந்தார். ௧௧௧

---

வந்து எழுந்ததோர் நாதம் கேட்டலும் - உடனே வந்து எழுந்ததாகிய ஒப்பற்ற ஒலி கேட்டதும். வானில் அடுத்த போதினில் என்றது விந்துவை. அது காரியப்படுதற்கு முன்னர் நம்மனோர்க்குப் புலனாதல் அரிது. அதினின்றும் பிறக்கும் நாதம் நமக்குப் புலனாகும். விந்து ஆகாயத்தை ஒரு பற்றுக் கோடாகக் கொண்டு நாதத்தைத் தோற்றுவித்தலால் "வானில் அடுத்த போதினில் வந்து எழுந்ததோர் நாதம்" என்றார்.

௧0௯. ஆடுகின்றவர் - நடராசர். அப்பணி - (திருவாரூர்க்குப் போதல் வேண்டும் என்னும்) அக்கட்டளையை. புறவிடை - புறப்படுதற்கு விடை. மாடு - தன்னிடத்தே; பொன் என்பர் பழைய குறிப்புரைக்காரர். போந்து - புறம் போந்து. வான் பணிய - வான் தாழ; வான் அளாவ. பொன்வரை - மேரு. இவ்வாறு மேலேயுங் கூறப்பட்டிருத்தல் காண்க. எழுநிலைக் கோபுரம்.

௧௧0. மன்றல் ஆர் - மங்கலம் நிறைந்த; வாசனை நிறைந்த எனினுமாம். மறுகினூடு - வீதி வழியே. திருப்பதி அதனில் - சிதம்பரத்தில். சேண்படு - தூரத்திலுள்ள. வார் - நீண்ட.

௧௧௧. புறந்தருவார் - தம்மைச் சூழ்ந்துவரும் அடியவர்கள். அறம்பயந்தாள் - (முப்பத்திரண்டு) தருமங்களை வளர்த்த உமாதேவியார். வளர்ந்தவர் - திருஞான சம்பந்தர். முற்றுலகில் - உலக முழுவதும். கழுமலம் - சீகாழி.

பா - ம்—*நின்ற. †மன்றுளார். ‡தென்திசை.

"பிள்ளையார் திருஅவதா ரஞ்செய்த பெரும்புகலி
உள்ளும்நான் மிதியேன்" என் றாரெல்லைப் புறம்வணங்கி
வள்ளலார் வலமாக *வரும்பொழுது மங்கைஇடம்
கொள்ளுமால் விடையானும் எதிர்காட்சி கொடுத்தருள. கக௨

மண்டியபேர் அன்பினால் வன்றொண்டர் நின்றிறைஞ்சித்
தெண்டிரைவே லையில்மிதந்த திருத்தோணி புரத்தாரைக்
கண்டுகொண்டேன் கயிலையினில் வீற்றிருந்த படிஎன்று
பண்தரும்இன் னிசைபயின்ற திருப்பதிகம் பாடினார். கக௩

இருக்கோலம் இடும்பெருமான் எதிர்நின்றும் எழுந்தருள
வெருக்கோளுற் றதுநீங்க ஆரூர்மேற் செலவிரும்பிப்
பெருக்கோதஞ் சூழ்புறவப் பெரும்பதியை வணங்கிப்போய்த்
திருக்கோலக் கா†இறைஞ்சிச் செந்தமிழ்மா லைகள்பாடி. கக௪

தேனார்க்கும் மலர்ச்சோலைத் திருப்புன்கூர் நம்பர்பால்
ஆனாப்பேர் அன்புமிக ‡அடிபணிந்து தமிழ்பாடி
மானார்க்கும் கரதலத்தார் மகிழ்ந்தஇடம் பலவணங்கிக்
கானார்க்கும் மலர்த்தடஞ்சூழ் காவிரியின் கரையணைந்தார். கக௫

---

கக௨. பிள்ளையார் - ஆளுடைய பிள்ளையார்; திருஞான சம்பந்தர். புகலி - சீகாழியின். உள்ளும் - எல்லையையும்; உள்ளிடத்தையும். ஊரின் எல்லைப் புறம்; புற எல்லை. வள்ளலார் - நம்பியாரூரர். எதிர் - எதிராக.

கக௩. மண்டிய - நிறைந்த. தெண்டிரை வேலையில் - தெள்ளிய அலைகளையுடைய கடலில். பிரளய காலத்திலும் சீகாழி அழியாமல் தோணிபோல் மிதத்தலால் அதற்குத் தோணிபுரம் என்றொரு பெயர் வழங்கப்படுகிறது. தோணி புரத்தாரை - தோணிபுரத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமானை. பயின்ற - செறிந்த.

கக௪. இருக்கு ஓலம் இடும் - வேதம் (இன்னதன்மையன் என்று உணராது) முறையிடும். பெருமான் - கயிலைக் கோலங் காட்டிய தோணியப்பர். எதிர் நின்றும் எழுந்தருள - நம்பியாரூரர் எதிரிலிருந்து மறைந்தருள. "வெருவுதல் என்பது அச்சம்போல நீடு நில்லாது கதுமெனத் தோன்றி மாய்வதொரு குறிப்பு; அதனைத் துணுக்கென்றலுமாம்"—இளம்பூரணம். வெருக்கோளுற் றப் பின்னே அது நீங்க. பெருக்கு ஓதம் - பெருக்குடைய கடல்வாய் வெள்ளம். புறவம் - சீகாழி.

கக௫. தேன் ஆர்க்கும் - வண்டுகள் பாடும். திருப்புன்கூரில் எழுந்தருளியுள்ள சிவபிரானிடம். ஆனா - அடங்காத; கெடாத. மான் ஆர்க்கும் - மான் ஒலிக்கும். கான் ஆர்க்கும் - மணம் நிறைந்த.

பா - ம்—*வரும்பொழுதில். †வணங்கி. ‡அடி அடைந்து.

வம்புலா மலர்அலைய மணிகொழித்து வந்திழியும்
பைம்பொன்வார் கரைப்பொன்னிப் பயில்தீர்த்தம் படிந்தாடித்
தம்பிரான் மயிலாடு துறைவணங்கித் தாவில்சீர்
அம்பர்மா காளத்தின் அமர்ந்தபிரான் அடிபணிந்தார். கக௬

மின்னார்செஞ் சடைஅண்ணல் விரும்புதிருப் புகலூரை
முன்னாகப் *பணிந்தேத்தி முதல்வன்தன் †அருள்நினைந்து
பொன்னாரும் உத்தரியம் புரிமுந்நூல் அணிமார்பர்
தென்னாவ லூராளி திருவாரூர் ‡சென்றணைந்தார். கக௭

தேராரு நெடுவீதித் திருவாரூர் வாழ்வாருக்கு
" ஆராத காதலினம் ஆரூரன் நாம்அழைக்க
வாராநின் றான்அவனை மகிழ்ந்தெதிர்கொள் வீர்" என்று
நீராரும் சடைமுடிமேல் நிலவணிந்தார் அருள்செய்தார். கக௮

---

கக௬. வம்பு உலா - வாசனை வீசும். இழியும் - பாயும். பைம்பொன் வார் கரை - பசிய பொன்துகள்கள் படர்ந்த நீண்ட கரைகளையுடைய. பொன்னி - காவிரி. " மலைத்தலைய கடற்காவிரி புனல் பரந்து பொன் கொழிக்கும் " —பட்டி னப்பாலை. 5 - 6. " புலங்களை வளம்படப் போக்கறப் பெருக்கிப் பொன்களே சுமந்தெங்கும் பூசல்செய் தார்ப்ப - இலங்குமா முத்தினோ டினமணி இடறி இருகரைப் பெருமரம் பீழ்ந்துகொண் டெற்றிக் - கலங்குமா காவிரி " —சுந்தரர்: திருத்துருத்தியும் திருவேள்விக் குடியும் க. பயில் - நிரம்பிய. மயிலாடு துறை- மயூரம் (மாயவரம்). தாவில் - கெடாத.

கக௭. பொன் ஆரும் உத்தரியம் - பீதாம்பரம். மார்பராகிய. முப்புரிநூல் - பூணூல்.

கக௮. திருவாரூர்த் தேர் மிகச் சிறப்புடையது. அஃது அணித்தே எரிக்கு இரையாயிற்று. "தேராரு நெடுவீதி"—அப்பர்:திருவாரூர்த் திருத்தாண்டகம் க. காதலுடைய நம்பியாரூரர். நம்பியாரூரர் திருப்பதிகட்கு வரும்போ தெல்லாம் அவர்தம் வரவு கேட்டு ஆங்காங்குள்ள அடியவர்கள் தாங்களே எதிர்சென்று அவரை ஏற்பது வழக்கம். திருவாரூரில் நம்பியாரூரரை எதிர்கொள்ளுமாறு அடி யவர்கட்கு ஆண்டவனே அருள் செய்தது கருதற்பாலது. நம்பியாரூரரைத் திரு வாரூர்க்குப் போதருமாறு கட்டளை யிட்டவர் சிவபெருமானே யாவர். அவரே வர வேற்புக்கும் அடியார்களை ஏவுதல் முறைமையாகும். பின் நிகழ்ச்சிக்கு நம்பியா ரூரர் மாண்பு, திருவாரூர் அன்பர்கட்குத் தெரிதல்வேண்டு மென்பது ஆண்டவன் திருவுள்ளம் போலும். நம்பியாரூரரின் முதன்மணத்தைச் சிதைவுசெய்த ஒருவர், அவருக்கு மற்றுமொரு மணத்தைத் திருவாரூரில் செய்விக்க அவரை அவ்வூருக் குப் போகுமாறு தில்லையில் திருவருள் சுரந்தமையான், அவரை (மணப்பிள் ளையை) எதிர்கொண் டழைக்க அடியார்களை ஏவினார் என்க.

பா - ம்— *பணிந்திறைஞ்சி. †அடிபணிந்து; அடிநினைந்து. ‡சென்றடைந்தார்.

தம்பிரான் அருள்செய்யத் திருத்தொண்டர் அதுசாற்றி
"எம்பிரா னூர்அருள்தான் இருந்தபரி சிதுவானால்
நம்பிரா னூர்ஆவார் †அவரன்றே" எனும்நலத்தால்
உம்பர்நா டிழிந்ததெனை எதிர்கொள்ள உடன்எழுந்தார். ககக

மாளிகைகள் மண்டபங்கள் மருங்குபெருங் கொடிநெருங்கத்
தாளில்நெடுந் தோரணமும் தழைக்கமுகும் குழைத்தொடையும்
நீளிலைய கதலிகளும் நிறைந்தபசும் பொன்தசும்பும்
ஒளிநெடு மணிவிளக்கும் உயர்வாயில் தொறும்நிரைத்தார். கஉ0

சோதிமணி வேதிகைகள் தூநறுஞ்சாந் தணிநீவிக்
கோதில்பொரி பொற்சுண்ணங் குளிர்தரள மணிபரப்பித்
‡தாதவிழ்பூந் தொடைமாலைத் தண்பந்தர் களுஞ்சமைத்து
வீதிகள்நுண் துகள்அடங்க விரைப்பனிநீர் §மிகத்தெளித்தார். கஉக

மங்கலகீ தம்பாட மழைநிகர்தூ ரியம்முழங்கச்
செங்கயற்கண் முற்றிழையார் தெற்றிதொறும் நடம்பயில
நங்கள்பிரான் திருவாரூர் நகர்வாழ்வார் நம்பியைமுன்
பொங்கெயில்நீள் திருவாயில் புறம்உறவந் ததிர்கொண்டார். கஉஉ

---

ககக. சாற்றி - மற்றவர்க்குந் தெரிவித்து. பரிசு - தன்மை. அவரன்றே நம் பிரானூர் - அவரல்லவோ நம் தலைவர். எனுநலத்தால் - என்றெழுந்த அன் பால். உம்பர் நாடு - விண்ணவ ருலகம். இழிந்ததெனை - இறங்கிவந்தாற் போல.

கஉ0. மருங்கு - பக்கத்தே. தாளில் - கால்களில் நாட்டப்பெற்ற; பனை தென்னை முதலிய குருத்துக்களாலாகிய என்பது மொன்று. குழைத் தொடையும் - தழைகளால் கட்டப்பெற்ற மாலைகளும் (மாவிலைத் தோரணங்கள் முதலி யன). குழை - தழை. "கொய்குழைய கைகாஞ்சி"—கலித்தொகை எச : டு. கதலிகளும் - வாழை மரங்களும். தசும்பும் - குடங்களும். ஒளி - ஒழுங்காக; ஒளி யின் நீட்டலாகக் கொள்ளலுமொன்று. நிரைத்தார் - வரிசை வரிசையாக வைத் தார்கள்.

கஉக. வேதிகைகள் - திண்ணைகளை. தூ நறும் சாந்து அணி நீவி - தூய நல்ல சந்தனக் குழம்பால் அழகுபெற மெழுகி. கோதில் - குற்றமில்லாத. பொற் சுண்ணம் - பொன் பொடி. தரள மணி - முத்து மணிகள். தாது அவிழ் பூந்தொடைமாலை - இதழ் விரிந்த மலர்களால் தொடுக்கப்பட்ட மாலைகளால். பூம்பந்தரிட்டு என்றபடி. நுண் துகள் - புழுதி. விரை - வாசனையுடைய.

கஉஉ. மழைநிகர் - முகிலை யொத்த. தூரியம் - பேரிகை; வாத்தியங்கள் எனினுமாம். முற்றிழையார் - தொழில் முடிவுபெற்ற ஆபரணங்களை யணிந்த பெண்மணிகள். தெற்றி - திண்ணை. பொங்கு எயில் - பொலிவினையுடைய மதி லின். நீள் திருவாயிலின் வெளியே. உறவந்து - சேரவந்து.

பா - ம்—*அருள் புரிய. †அவரென்றே. ‡தாதிவர். §மிசைவிட்டார்; மிக விட்டார்.

**வேறு**

வந்தெதிர் கொண்டு வணங்குவார்முன் வன்தொண்டர் அஞ்சலி கூப்பி* நின்று, சிந்தை களிப்புற வீதியூடு செல்வார் திருத்தொண்டர் தம்மை நோக்கி, **எந்தை இருப்பதும் ஆரூர்அவர் எம்மையும் ஆள் வரோ கேளீர்**என்னும், சந்த இசைப்பதி கங்கள்பாடித் தம்பெரு மான்திரு வாயில் †சார்ந்தார். கஉ௩

> " சந்தம் பலவறுக் கில்லேன் சாரந்தவர் தம்மடிச் சாரேன்
> முந்திப் பொருவிடை யேறி மூவுல குந்திரி வானே
> கந்தங் கமழ்கொன்றை மாலைக் கண்ணியன் விண்ணவ ரேத்தும்
> **எந்தை இருப்பதும் ஆரூர்அவர் எம்மையும் ஆள்வரோ கேளீர்** "
>
> —**தேவாரம்.**

வானுற நீள்திரு வாயில்நோக்கி மண்ணுற ஐந்துறுப் பால் வணங்கித், தேனுறை கற்பக வாசமாலைத் தேவா சிரியன் தொழு திறைஞ்சி, ஊனும் உயிரும் ‡உருகும்அன்பால் உச்சி குவித்தசெங் கைகளோடும், தூநறுங் கொன்றையான் மூலட்டானம் சூழ்திரு மாளிகை வாயில் §புக்கார். கஉ௪

புற்றிடங் கொண்ட ¶புராதனனைப் பூங்கோயில் மேய பிரானை யார்க்கும், பற்றிடம் ஆய ||பரம்பொருளைப் பார்ப்பதி பாகனைப் பங்க யத்தாள், அர்ச்சனை செய்ய அருள்புரிந்த அண்ணலை மண்மிசை வீழ்ந்திறைஞ்சி, நற்றமிழ் நாவலர் கோன்உடம்பால் நன்மையின் தன்மையை மெய்ம்மைபெற்றார். கஉ௫

---

கஉ௩. செல்வாராய். திருக்கோயிலின் திருவாயிலை. தம்மையே பிரான் என்று தம்மை எதிர்கொண்ட அடியவர்கள் கருதாதவாறு தாம் அடியவர் என் பதையும், திருவாரூர்ப்பெருமான் ஆண்டவன் என்பதையும் அவர்க்கும், அவர் வழி உலகிற்கும் உணர்த்தவேண்டி, வன்தொண்டப் பெருமான் " எந்தையிருப் பதும் ஆரூர் அவர் எம்மையும் ஆள்வரோ கேளீர் " என்று அருளினரென்க.

கஉ௪. நோக்கி - கண்டு (தொழுது). மண்ணுற - நிலத்திற்படிய. ஐந்துறுப் பால் - பஞ்சாங்கத்தால். மாலைகள் தூங்கும் தேவாசிரிய மண்டபத்தை. தொழுது - கும்பிட்டு ; வணங்கி. இறைஞ்சி - (நீண்ட நேரம் தம்மை மறந்து) விழுந்து கிடந்து. "**புல்லுவிட்டு இறைஞ்சிய பூங்கொடி**"—**கலித்தொகை** ௩ : கரு. " சேரு தலைக்கைவிட்டு **வீழ்ந்து கிடந்த பூங்கொடிகள்** "—**நச்சினார்க்கினியம்.** கொன்றையான் - தியாகேசப் பெருமான் வீற்றிருந்தருளும்.

கஉ௫. புராதனனை - பழையவனை. பூங்கோயில் - கமலாலயம். பங்கயத் தாள் - திருமகள். திருநகரச் சிறப்பு முதற்பாட்டைப்பார்க்க. பங்கயத்தாளை என் போருமுளர். மனிதப் பிறவி தாங்கியதால் பெறவேண்டும் நன்மையின் பயனை மெய்ம்மையாகப் பெற்றார்.

பா - ம்—* வந்து. † சேர்ந்தார். ‡ உருக்கும். § சார்ந்தார். ¶ புராணன்றனை ; புராரிதனை. || பரம்பரனை.

அன்பு பெருக உருகிஉள்ளம் அலையஅட் டாங்கபஞ் சாங்க மாக, முன்பு முறைமையி னுல்வணங்கி முடிவிலாக் காதல் முதிர ஓங்கி, நன்புலன் ஆகிய ஐந்தும்ஒன்றி நாயகன் சேவடி *எய்தப்பெற்ற, இன்பவெள் ளத்திடை மூழ்கிநின்றே இன்னிசை வண்தமிழ் மாலை பாட. கஉசு

வாழிய மாமறைப் புற்றிடங்கொள் மன்னவன் ஆரூ ரரலோர் வாக்குத், "தோழமை ஆக உனக்குநம்மைத் தந்தனம் நாம்முன்பு தொண்டுகொண்ட, வேள்வியில் அன்றுநீ கொண்டகோலம் என்றும் புனைந்துநின் வேட்கைதீர, வாழிமண் மேல்விளையாடுவாய்"என் றருரு ரர் கேட்க எழுந்ததன்றே. கஉஎ

---

கஉசு. உள்ளம் பெருகிய அன்பில் உருகி அலைய. அட்டாங்கம் - எட்டுறுப்பு (தலை, கையிரண்டு, தாளிரண்டு, காதிரண்டு, நெற்றி). பஞ்சாங்கம் - ஐந்துறுப்பு (தலை, கையிரண்டு, தாளிரண்டு). ஐம்புலன்: சுவை (ரசம்) ஒளி (ரூபம்) ஊறு (ஸ்பரிசம்), ஓசை (சப்தம்) நாற்றம் (கந்தம்). இவ்வைம்புலனடக்கம் நூல்களில் பேசப்படுகிறது. அடக்கம் என்பது நல்வழியில் அடங்கி நடப்பதைக் குறிப்பது. அஃது அழிவைக் குறிப்பதன்று. அடக்கத்தை அழிவெனக் கொண்டு புலன்களுக்கு ஊறு செய்து கொள்ளுதல் அறியாமை. அறியாமையால் புலன்களுக்கு ஊறுசெய்வோரை நோக்கி, "அஞ்சும் அடக்கு அடக்கு என்பர் அறிவிலார் - அஞ்சும் அடக்கும் அமரரும் அங்கில்லை - அஞ்சும் அடக்கில் அசேதனம் ஆம் என்றிட்டு-அஞ்சும் அடக்கா அறிவு அறிந்தேனே" என்று திருமூலர் அறிவு கொளுத்தினர். ஐந்து புலன்கள் நல்வழியில் இயங்க வாழ்வு நடாத்தல் வேண்டுமென்பது கருத்து. வாயடக்கம் கையடக்கம் என்பன தீயவற்றைப் பேசாமை திருடாமை என்னும் பொருள் தருதலையும், வாயையழித்தல் கையைக் கெடுத்தல் என்னும் பொருள் தாராமையையும் ஓர்க. இப் புலனடக்க நுட்பத்தை "முருகன் அல்லது அழகு" "பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத் துணை" என்னும் நூல்களில் விரித்துக் கூறியுள்ளேன். விரிவு ஆண்டுக் காண்க. நல்வழியில் புலனியங்கலே புலனடக்கமாகும் என்பது தோன்ற, "நன்புலன்" என்றார். முன்னே "ஐந்துபேர் அறிவும் கண்களே கொள்ள" என்றார். இங்கே நன்புலனைந்தும் நாயகன் சேவடியில் ஒன்றுதலைக் குறித்தனர். ஒன்றி - ஒருமைப்பட்டு ; ஒருமையில் பொருந்தி.

கஉஎ. மன்னவன் - தியாகேசப் பெருமான். வேள்வியில் - கலியாணத்தில். கொண்டகோலம் - வேந்தர் (திருமணக்)கோலத்தை. கயிலையில் மலர்வனத்தில் கொண்ட வேட்கைதீர என்றபடி. வாழி - வாழ்வாயாக. விளையாடுவாயாக. முதற்கணுள்ள 'வாழிய' என்பது பலபொருள்பட நிற்பது. அதை அசையாகக் கோடல் ஒன்று. "குவளை ஏய்ந்த கொடுங்குழை கூந்தலுள் - திவளும் வாழிய செம்பொறி வண்டுகாள்..."—சிந்தாமணி 1331. இங்கே வாழிய என்பதை அசை என்றார்

பா - ம்—*எத்த.

கேட்க விரும்பிவன் தொண்டர்என்றும் கேடிலா தானை இறைஞ்சி
நின்றே, "ஆட்கொள வந்த மறையவனே! ஆரூர் அமர்ந்த அரு
மணியே,! வாட்கயல் கொண்டகண் மங்கைபங்கா! மற்றுன் பெரிய
கருணையன்றே,! நாட்கம லப்பதம் தந்ததின்று நாயினே னைப்பொரு
ளாக"என்றார். கஉஅ

என்று பலமுறை யால்வணங்கி எய்திய உள்ளக் களிப்பினொடும்
வென்றி அடல்விடை போல்நடந்து வீதிவி டங்கப் பெருமான்முன்பு
சென்று தொழுது துதித்துவாழ்ந்து திருமாளி கைவலம் செய்துபோந்தார்
அன்று முதலடி யார்களெல்லாந் தம்பிரான் தோழர்என் றேஅறைந்தார்.

மைவளர் கண்டர் அருளினாலே வண்தமிழ் நாவலர் தம்பெருமான்
சைவ விடங்கின் அணிபுனைந்து சாந்தமும் மாலையும் தாரும்ஆகி
மெய்வளர் கோலமெல் லாம்பொலிய மிக்க விழுத்தவ வேந்தர்என்னத்
தெய்வ மணிப்புற்று ளாரைப்பாடித் திளைத்து மகிழ்வொடுஞ் செல்லாநின்றார்.

---

நச்சினார்க்கினியர். 'வாழிய' என்பதை வாழ்வாயாக என்றுங் கொள்ளலுமாம். நம்பியாரூரரை இருமுறை 'வாழ்வாயாக வாழ்வாயாக' என்று கூறியவாறும். 'வாழிய' என்பதற்கு உயிர்கள் வாழும்பொருட்டு என்று கூறினும் அமையும். "தோழமையாக உனக்கு நம்மைத் தந்தனம்"-இதற்கு அகச்சான்று: "தன்னைத் தோழமை அருளி"—சுந்தரர்: திருநள்ளாறு அ. "என்றனை ஆள்தோழனை"—திருக்கானப்பேர் க. "என்னுடைய தோழனுமாய்"—திருவாரூர் கO.

கஉஅ. ஒலிகேட்க. கேடிலாதானை - அழிவே இல்லாத தியாகேசப் பெருமானை. தடுத்தாட் கொள்ளவந்த. மாணிக்கத் தியாகனே. ஒளியையும் கெண்டையையும் ஒத்த கண்களையுடைய உமாதேவியாரைப் பக்கத்திலுடையவனே. இன்று நாயினேனைப் பொருளாக எண்ணி நாள்கமலப்பதம் (அன்றலர்ந்த தாமரை போன்ற திருவடியை - திருவருளை) தந்தது உன் பெரிய கருணையல்லவோ.

கஉகூ. வெற்றிக்குரிய போரேறுபோல் நடந்து. ஆண்டவன் தோழமை பெறல் எளிதன்று. அதைப்பெற்ற மகிழ்ச்சியினாலுண்டாகிய மெய்ப்பாடு, போரேற்றுக் குறிப்பு. அடல் - வலிமையுமாம். விடங்கப் பெருமான் - திருநகரச் சிறப்பு: பாட்டு சுகு பார்க்க. வாழ்ந்து என்பது ஆண்டவன் அருளால் பெற்ற புத்துயிர் வாழ்வைக் குறிப்பது. இவ்வாழ்வே திருவருள் வாழ்வென்பது. மருள் வாழ்வு மரணத்தைக்கொடுப்பது. அருள்வாழ்வு மரணத்தைத் தவிர்த்துப்பேரின்பத்தை நல்குவது. அவ்வருட் பெரும் வாழ்வை நம்பியாரூரர் உறுதியாகப் பெற்றதை 'வாழ்ந்து' என்பதால் ஆசிரியர் உணர்த்துகிறார்.

கநO. மைவளர்கண்டர் - நீலகண்டத்தையுடைய சிவபெருமான். சைவ விடங்கு - சைவப் பொலிவுக்கு அல்லது அழகுக்குரிய. அணி - விபூதிருத்திராக்கங்களை. சாந்தமும் - சந்தனமும். மாலையும் - மணிமாலையும். தாரும் - பூமாலையும். (இவைகளை அணிந்தவராகி) மெய்வளர் கோலம் எல்லாம் - திருமேனி

**வேறு**

இதற்குமுன் எல்லை இல்லாத் திருநகர் *இதனுள் வந்து
முதற்பெருங் கயிலை ஆதி முதல்வர்தம் பங்கி னாட்குப்
பொதுக்கடிந் துரிமை செய்யும் பூங்குழல் சேடி மாரில்
கதித்தபூண் ஏந்து கொங்கைக் கமலினி அவத ரித்தாள். கரு௧

கதிர்மணி பிறந்த தென்ன உருத்திர கணிகை மாராம்
பதியிலார் ‡குலத்துள் தோன்றிப் பரவையார் என்னும் நாமம்
விதியுளி விளக்கத் தாலே மேதகு சான்றோர் ஆன்ற
மதியணி புனிதன் நன்னாள் மங்கல அணியால் §சாத்த. கருஉ

யில் மேலும்மேலும் அழகை வளர்க்கும் அலங்காரங்களெல்லாம். விழுத்தவ வேந்தர் - சீரிய தவமன்னர். அகத்தே தவமும் புறத்தே வேந்தர் கோலமுமுடையார் என்க. தவத்தில் வேந்தர் என்னலுமாம். தெய்வ மணிப்புற்றுளாரை - திருமூலட்டான நாதரை ; தியாகேசப் பெருமானை. திளைத்து - இன்பத்தில் மூழ்கி.

கரு௧. காலத்தானும் பெருமையானும் எல்லையில்லாத திருவாரூரிலே; "......திருவாரூர்க் கோயிலாக்கொண்ட நாளே" எனவரூஉந் திருத்தாண்டகத்தை நோக்குக. முதல் - முதன்மைத்தன்மை வாய்ந்த. முதல்......பங்கினாட்கு - உமாதேவியார்க்கு. பொதுக்கடிந்து - பல சேடியர்க்குள்ள பொதுமை நீக்கி; சிறப்பாகத் தாங்களே உரிமைத்தொண்டு செய்த.சேடிமார் இருவர்; அவர் அனிந்திதையும் கமலினியும் ; திருமலைச் சிறப்பு உச-ம் பாட்டைப் பார்க்க. 'பூங்குழல்' கயிலைப் பூந்தோட்டத்தை உணர்த்துங் குறிப்பு. கதித்தபூண் - சிறந்த ஆபரணம் ; கிளர்ந்த ஆபரணமுமாம். கதிர்த்த என்பது பாடமாயின் ஒளியையுடைய என்று கொள்க. கதிர்த்த என்பது எதுகையின் பொருட்டுக் கதித்த என்றாயிற்று என்றலுமொன்று.

கருஉ. கதிர்மணி - ஒளியையுடைய மாணிக்கம். மணி என்பதற்கு முத்தெனப் பொருள் கொண்டு, சிப்பியினின்றும் முத்துப் பிறந்தாற்போல என்று கூறுவோருமுளர். இஃது இக்காலக் கணிகையர் நிலையை உளங்கொண்டு கூறுங் கூற்றாகும். பரவையார் காலத்துக் கணிகையர், ஒழுக்கம் பேணிக் கடவுளன்பில் கருத்திருத்தியவர். அவர்தம் மரபை இழிவாகக் கருதிச் சிப்பியில் மணிதோன்றியவாறு என்று கொள்வது இழுக்காகும். மாணிக்கம் பிறந்தாற்போல என்று கொள்வது ஒழுங்கு. உருத்திர கணிகைமார் சிவபெருமானையே பதியாக்கொண்டு சிவபணி செய்ய உறுதிகொண்ட பெண்மணிகள். பண்டைநாளில் இவர்கட்கு மரபு வளர்ச்சி கிடையாது. உலக வாழ்விற்குத் தகுதியற்ற பெண்மணிகள் ஆண்டவனையே பதியாக்கொண்டு அவன் பணிசெய்து பேறு பெற்று வந்தார்கள். வேறு பதியின்மையால் அவர் பதியிலார் என்றழைக்கப்பட்டனர். பின்னே மற்றுஞ் சிலரும் அவர்களொடு கலக்கலாயினர். அவருள் சிலர் உலக இன்பந் துய்த்துக்கொண்டு இறைபணி செய்ய எண்ணினர். இது தவறுதலாகாது.

பா - ம்—* அதனுள் † கதிர்த்த. ‡ குலத்தில். § சாற்றி ; சாத்தி.

பரவினர் காப்புப் போற்றிப் பயில்பெருஞ் சுற்றம், திங்கள்
விரவிய பருவம் தோறும் விழாஅணி எடுப்ப, மிக்கோர்
"வரமலர் மங்கை இங்கு வந்தனள்" என்று சிந்தை
தரவரு மகிழ்ச்சி பொங்கத் தளர்நடைப் பருவஞ் *செய்து. ௧௩௩

மான்இளம் பிணையோ தெய்வ வளர்இளம் முகையோ வாசத்
தேன்இளம் பதமோ வேலைத் திரைஇளம் பவள வல்லிக்

---

ஒழுக்கத்திற் சிறந்த ஒருவனுடன் ஒருத்தி வாழும் இயற்கை அறம் அவர்களால் பேணப்பட்டது. அன்னார் இவ்வறம் பேணியமையால், மரபு வளர்ச்சிக்கு இடந் தந்தது. பண்டைப் பதியிலார் என்ற பெயரே இடைக்காலத்திலும், இவர் கட்கு வழங்கி வரலாயிற்று. இச்சீரிய பதியிலார் குலத்தில் தோன்றியவரே பரவையார் என்னும் பாவையார். பின்னாளில் கோயில் தலைவர்களின் அடக்கு முறையால், பதியிலாப் பெண்மணிகள் ஒழுக்கந் தவறுங் கொடுமைக்கு ஆளானார் கள். நாளடைவில் அவர் பலரிடங் கூடும் வேசையராயினர். இந்நாளில் பதி யிலார் என்பது விலைமாதர்கட்கு வழங்கி வருகிறது. விதியுளி - முறைமையால் ; விதிப்படி. மேதகு சான்றோர் - கல்வி கேள்வி ஒழுக்கம் முதலியவற்றில் மேம்பட்ட பெரியோர்கள். ஆன்ற - அமைந்த. மதி அணி புனிதன் - சிவபெரு மான். அவன் நாள் திருவாதிரை. சாற்றி என்பது பாடமாயின் (சான்றோ ரால்) சாற்றப்பட்டு என்று கொள்க. சாற்றிப் பரவினர் என்று கீழ் வரும் பாட் டுடன் இயைப்போருமுளர்.

௧௩௩. சுற்றத்தார், குழந்தை சுகமாக வாழவேண்டித் தெய்வம் பரவின ராய்க் காப்பிட்டு (காவல்பேணி). திங்கள் விரவிய - மாதங்கள் சேர்ந்த. தால் (ஐந் தாம் மாதம்), செங்கீரை (எழாம் மாதம்), சப்பாணி (ஒன்பதாம் மாதம்) முதலிய பருவங்கள் தோறும் மங்கலச் சிறப்புகளை முறைப்படி செய்ய. சுற்றத்தார் இவை களைச் செய்யக் கல்வியறிவு ஒழுக்கத்தில் மிக்கோர் "வரமலர்மங்கை இங்கு வந்த னள் என்று சிந்தை தரவரு மகிழ்ச்சி" பொங்கினாராம். இவர் பொங்க அம்மை யார் தளர்நடைப் பருவம் அழகுடன் செய்தனரென்க. வரமலர் மங்கை - திரு மகள். வரம் - வரம் ; மேன்மை ; விருப்பம்.

௧௩௪. அம்மையார்பால் தெய்வ இளநலம் அரும்பா நிற்கிறது. இங்கே இளம்பிணை காட்சியளிக்கிறது ; இளமுகையின் மணங் கமழ்கிறது ; தேனினம் பதம் இனிமை யூட்டுகிறது ; இளங்கொடியினின்றும் இனிய ஓசை பிறக்கிறது ; கதிரிளங் கொழுந்து தண்மை பொழிகிறது. பிணையின் இளமையும், முகையின் இளமையும், தேனின் இளமையும், கொடியின் இளமையும், கதிரின் இளமை யும் ஒருமைத் தெய்வ இளநலத்தினின்றும் முகிழ்த்து அழகு செய்கின்றன. ஒருமைத் தெய்வ இளநலம், பிணை, முகை, தேன், கொடி, திங்கள் ஆகிய இவைகளினூடே கிளர்ந்து நின்று, முறையே, ஒளி, நாற்றம், சுவை, ஓசை, ஊறுரய்ப் புலன்களுக்கு விருந்தளிக்கிறது. இவ்வைந்துக்கும் அடிப்படையா யுள்ள தெய்வ இளநலம், காமன் இளம் பருவங்கட்கும் தனி இளம் தனுவாக நிற்

பா - ம்—* சேர்ந்தார்.

கான்இளங் கொடியோ திங்கட் கதிர்இளங் கொழுந்தோ காமன்
தான்இளம் பருவம் கற்கும் தனிஇளந் தனுவோ என்ன. கங௪

---

கிறது. இதன் சிறப்புணர்த்துதற்குத் "தனி இளம்" என்றார். இத்தெய்வத் தனி இளமை அஞ்சையுங் கவர்ந்து நெஞ்சையுங் கவர்ந்து ஒருமை இன்பத்தில் நிறுத்தவல்லது. இளமைப்பயன் காதலாதலின், அதனைக் 'காமன்' என்று இங்கே உணர்த்துகிறார். ஈண்டுக் குறிப்பது தெய்வக்குழவி இளமை; முதிரிளமை யன்று. இளமையை ஒரு பாட்டில், புலன்கவரப், புலன்வழிப் புந்தி கவா அழகுற வடித்துள்ள ஆசிரியர் வாழ்க. இளம்பிணை நோக்கு, இளமுகைப் பல், இளந்தேன் மொழி (ஊறல்), இளம்பவள இளங்கொடி இதழ், திங்கட் கதிரிளங்கொழுந்து நுதல், தனி இளந்தனுப் புருவம் ஆகிய இவைகள் பரவையாரிடைப் பொலிவுற்றுக் கிளர்ந்து தெய்வ இள நலமாகத் திரண்டு நிற்றல் காண்க. "மான்பிணை யன்ன மகிழ்மடநோக்கே"—புறநானூறு ௩௫௪. "முகைநிரைத் தன்ன மாவீழ் வெண் பல்"—அகநானூறு ககூஉ. "தேனூறு தீஞ்சொல்"—சிந்தாமணி 15. (பவளத்தை இதழுக்கும், கொடியைச் சாயலுக்கும் பிரித்துக் கூறுவோருமுளர். அப்பிரிவு ஈண்டைக் கேற்புடைத் தன்று. ஈண்டு ஆசிரியர் கொண்டது இளம் பவளவல்லிக் கானிளங் கொடியை என்பது வெள்ளிடைமலை. ஆசிரியர் இளமைக் கூறுகளை உறுப்பு உறுப்பாகக் கூறிக்கொண்டு போதலும் ஈண்டுக் கருதற்பாலது. இளம்பவள இளங்கொடியின் துண்டம் இதழுக்கு நிற்கிற தென்க.) "பவளக்கடிகையில் தவளவாண் நகையும்"—மணிமேகலை : உ0. உதயகு - எடு. (கடிகை - துண்டம்-உதடு). "பவளச் செவ்வாய் தவளவாண் நகை" மணி : ௩. மலர் ககஎ. (பவளமென்றுங் கொடியென்றும் பிரியாது பவளக் கொடியனையாள் என்றலுமொன்று.) "குழவித் திங்கள் இமயவரேத்த - அழகொடு முடித்த அருமைத்தாயினும் - உரிதி னின்னோ டுடன்பிறப் புண்மையின் - பெரியோன் தருக திருநுதல் ஆகெனு"—சிலப்பதிகாரம் உ. மனையறம் ௩அ-௪௧. "...உருவிலாளன் ஒருபெருங் கருப்புவில் - இருகரும்புருவாமாக ஈக்க"—சிலப் : உ. மனையறம் ௪௪ - ௪௫. "தேனார் பூங்கோதாய் நினக்குக்காமன் சிலை இரண்டும் செவ்வனே கோலித்தந்தான்"—சிந்தாமணி 2065. இள நலத்தின் விளைவு காதல். இளங்காதல், இங்கே "காமன்......தனி இளந்தனுவோ" என்று சொல்லப் பட்டிருக்கிறது. இதனால் இளங்கூறுகட் கெல்லாம் அடிப்படை "காமன் ..........இளந்தனு" என்று மேலே கொள்ளப்பட்டது. விற்புருவம் வாணுதலுக்கும் வேற்கண்ணுக்கும் இடையில் அமைந்து அழகுசெய்து நெஞ்சைக் கவர்கிறது. புருவவில், கண்வேல் பூட்டப்படுதற்குத் துணை நிற்றலானும், நின்று நெஞ்சைத் தன்வயப்படுத்தும் ஆற்றலுடைத்தாயிருத்தலானும், இன்பக்காமன் வில்லாக உவமிக்கப்படும் பெருமை கொண்டுள்ளமையானும், இன்ன பிறவானும் அதன் மாண்பு புலனாதல் காண்க. பவளக்கொடியை ஓசைக்குக்கொண்டதை

நாடும்இன் *பொற்பு வாய்ப்பு நாளுநாள் வளர்ந்து பொங்க
ஆடும்மென் கழங்கும் பந்தும் அம்மனை ஊசல் இன்ன
பாடும்இன் இசையும் தங்கள் பனிமலை வல்லி பாதம்
கூடும்அன் புருகப் பாடும் கொள்கையோர் குறிப்புத் தோன்ற. கஙரு

பிள்ளைமைப் பருவம் மீதாம் பேதைமைப் பருவ நீங்கி
அள்ளுதற் கமைந்த பொற்பால் அநங்கன்மெய்த் தனங்கள் ஈட்டம்
கொள்ளமிக் குயர்வ போன்ற கொங்கைகோங் கரும்பை வீழ்ப்ப
உள்ளமெய்த் தன்மை முன்னை உண்மையும் தோன்ற உய்ப்பார்.

---

வேலைத்திரையும் காணும் விளக்குதல் காண்க. திங்கட் கதிரிளங் கொழுந்து ஊறு தலுக்குக்கொண்டது அதன் பொழிவால் என்க. "திங்களைத் தெளித்திட்டன்ன பாற்கடற்றிரை செய் தண்ணீர்"—சிந்தாமணி 469. பிணையோ - பெண்மானோ. தெய்வவளரிள முகையோ - கற்பகத்தின் அரும்போ. வாசம் - வாசனையுடைய. வேலை - கடல். திரை - அலை. பவள......கொடியோ-பவளக்கொடிகளாகிய காட்டி லுள்ள ஓரிளங் கொடியோ. திங்கள் கதிர் இளங்கொழுந்து - பிறைக்கொழுந்து. தனுவோ - வில்லோ. என்ன - என்று சொல்ல.

கஙரு. என்ன நாடும் என்றியைக்க. இன்பொற்பு - இனிய அழகின். மின் பொற்பு என்று கொண்டு, மின்னல்போலக் கண்வழுக்குறச் செய்யும் அழகு என்பர் மகாலிங்க ஐயர். அழகு மென்மேலும் பொங்குதற்கு உடற்பயிற்சி இன்றியமையாதது. (உடற்பயிற்சிக்காகக்) கழங்கு பந்து அம்மனை ஊசல் இன்ன ஆடும்; இன்னிசையும்பாடும். மென் கழங்கு - மெல்லிய கழற்சிக்காய். இன்ன - முதலியன. இசையும் உடற்பயிற்சியின் பாற்பட்டது. தங்கள் என்றது அனிந் திதையையுஞ்சேர்த்து. பனிமலை வல்லி - இமயக்கொடி என்னும் உமாதேவியா ரின். கொள்கையாகிய ஒரு குறிப்பு. பழைய உணர்வு தோன்றும் குறிப்பு என்க. அம்மையார் உடற்பயிற்சியுடன் உயிர்க்குரிய அன்புப் பயிற்சியுஞ் செய்துவந்தா ரென்க. இரண்டும் வாழ்விற்கு வேண்டற்பாலன.

கஙசு. பிள்ளைமைப்பருவம் மீதாம்-குழந்தைப் பருவத்துக்கு (ஐந்துவயது) மேலே ஆகிய. பேதைமைப் பருவம் - பேதைமைப் பருவத்தினின்றும் நீங்கி (எழுவயதையுங்கடந்து). அதற்கு மேல் மலரும் பொற்பை (அழகை) ஆசிரியர் "அள்ளுதற்கமைந்த" என்றார். அள்ளும் அழகு எத்தகைத்து? உன்னுக. அநங்கன்மெய் தனங்கள் ஈட்டம்-மன்மதனது மெய்ம்மையான பொருட் குவி யல். கோங்கின் அரும்பையும் தோற்கச் செய்ய. உள்ளத்திலே மெய்த்தன்மை யும் முன்னை உண்மையும்; உள்ள மெய்த்தன்மையாகிய பழைய உண்மை யும் என்றலுமொன்று. முன்னை உண்மையாவது உமாதேவியார்க்குத் தோழியா யிருந்தமை. ஞான உணர்வில் பழைய நினைவு தோன்றுதல் இயல்பு. அது குறிப் பால் தோன்ற வாழ்வு நடாத்தினரென்க.

பா - ம்—*பொற்பின்.

பாங்கியர் மருங்கு சூழப் படரொளி மறுகு சூழத்
தேங்கமழ் குழலின் வாசம் திசையெலாம் சென்று சூழ
ஓங்குபூங் கோயில் உள்ளார் ஒருவரை அன்பி னோடும்
பூங்கழல் வணங்க என்றும் போதுவார் ஒருநாள் போந்தார். கருஎ

அணிசிலம் படிகள் "பார்வென் றடிப்படுத் தனம்" என் றார்ப்ப
மணி*கிளர் காஞ்சி அல்குல் வரிஅர வுல கவென்ற
துணிவுகொண் டார்ப்ப மஞ்சு சுரிகுழற் கழிய "விண்ணும்
பணியும்" என் றினவண் டார்ப்பப் பரவையார் போதும் போதில்.

புற்றிடம் விரும்பி னாரைப் போற்றினர் தொழுது செல்வார்
சுற்றிய பரிச னங்கள் சூழஆ ரூரனுடைய நம்பி
நற்பெரும் பான்மை கூட்ட நகைபொதிந் திலங்கு செவ்வாய்
விற்புரை நுதலின் வேற்கண் விளங்கிழை யவரைக் கண்டார். கருக

கருஎ. பாங்கியர் - தோழிமார். மருங்கு - பக்கத்தே. மறுகு - தெருவிலே. தேன்மணக்கும் கூந்தலின் வாசனை. பூங்கழல் - பொலிவினையுடைய திருவடிகளை. போதுவார் - போவாராகிய பரவையார்.

கருஅ. சிலம் பணிந்த அடிகள் (பாதங்கள்). பார்-மண்ணுலகை. அடிப்படுத்தனம் - கீழ்ப்படுத்தினோம். ஆர்ப்ப - ஆரவாரிக்க. மணிகிளர் காஞ்சி-முத்து முதலிய மணிகள் ஒளிரும் காஞ்சி என்னும் அணி அணிந்த. "எண்கோவை காஞ்சி எழுகோவை மேகலை..." ("எண் கோவை மேகலை காஞ்சி இருகோவை.." என்றும் பாடம்). வரி அரவு அல்குல் - புள்ளிகளையுடைய பாம்பாகிய நிதம்பம். ஈண்டு உலகை என்றது காமப்பேயை என்க. காமப்பேயை அம்மையார் வென்றனர் என்க. சுரி குழற்கு மஞ்சு அழிய - சுருண்ட கூந்தலுக்கு மேகம் தோற்றமையால். வண்டினம். பாரைப் பெண்ணுலகமென்றும், உலகை ஆணுலகமென்றுங் கொள்வோருமுளர். பரவையார் பூங்கோயிலுக்குப் போம்போது மண்ணுலகம், காமப்பேய் (காதல் அல்லாதது), விண்ணுலகம் எல்லாம் வெல்லப்பட்டன என்பதன் குறிப்பு, அவர் மற்றும் ஒன்றை வெல்லவில்லை என்பது; அது பின்னே வருவது.

கருக. (காட்சி) நெருங்கியுள்ள பரிவாரங்கள் சூழ நம்பியாரூரர், புற்றிடங்கொண்ட தியாகேசப் பெருமானைப் போற்றித் தொழுது செல்வாராய்...பரவையாரைக் கண்டார். நற்பெரும்பான்மை - நல்வினை. "நகை பொதிந்திலங்கு செவ்வாய் விற்புரை நுதலின் வேற்கண் விளங்கிழை"—இஃது இங்கே எழுத்தன்று; சொல்லன்று; படமுமன்று; பரவையார் வடிவக் காட்சி என்க. நம்பியாரூரர் கண்கள் பரவையாரைக் காண்கின்றன. பொதிந்து - குவிந்து. இலங்கும் - விளங்கும். வில்புரை நுதலின் வேற்கண்-வில்லொத்த நெற்றியையும் வேலொத்த கண்ணையுமுடைய. விளங்கிழையவரை - ஒளிரும் ஆபரணங்களைப் பூண்ட பரவையாரை.

பா - ம்—*வளர்.

வேறு

"கற்பகத்தின் பூங்கொம்போ காமன்தன் பெருவாழ்வோ
பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ புயல்சுமந்து
விற்குவளை பவளமலர் மதிபூத்த விரைக்கொடியோ
அற்புதமோ சிவனருளோ அறியேன்''என் றதிசயித்தார். கச(

கசO. (இ-ள்) பரவையாரைக் கண்டதும் நம்பியாரூராருக்கு ஓர் அதிசயம் உண்டாயிற்று. காணாததைக் கண்டதும் அதிசயம் உண்டாதல் இயல்பே. அவர் அதிசயித்து இவ்வாறு கருதுகிறார்: "கற்பகத்தின்......சிவனருளோ". நம்பியாரூரரின் புலன்களும் புந்தியும் என்னென்ன விழைகின்றனவோ அவைகளையெல்லாம் பரவையார் வடிவம் வரையா தளிக்கிறது. இத்தகைய ஒன்றை என்னென்று நினைப்பது? வரையாதளிக்கும் ஒன்றாக நினைத்தல்வேண்டும். இல்லையேல் உள்ளத்தில் ஒன்றுந் தோன்றாதொழியும். விரும்பினவற்றை வரையாதளிப்பது எது? கற்பகமென்று சொல்லவேண்டுவதில்லை. அஃதெப்படி விரும்பியவற்றை அளிக்கிறது? அது மலர்ந்த கொம்பாகிய கையால் எதையும் அளிக்கிறது. இங்கே விரும்புவதை வரையாது வழங்கும் ஒன்றை என்னென்று நினைப்பது? ஆகவே, "கற்பகத்தின் பூங்கொம்போ" என்கிறார். அணிபூத்துள்ள அக்கொம்பைப் பார்க்கப்பார்க்க அதன்கண் பொலிந்துள்ள அழகு புலனாகிறது. அவ்வழகை என்னென்று கருதுவது? கருத்துக்கு ஓரழகு வடிவம் வேண்டுமன்றோ? அழகுக்குக் காமனைக் கொள்வது வழக்கம். காமன் நினைவு அரும்பும்போது, அவ்வழகிடைப் பெண்மைத் தெய்வ ஒளி எழ "காமன்தன் பெருவாழ்வோ" என்கிறார். தெய்வ ஒளி எளிதிற் கூடுங்கொல்! அதற்குப் புண்ணியம் வேண்டும். அப்புண்ணியத்தெய்வ ஒளிகள் பல இருக்கின்றன. அவைகளுள் இது தலைமையாகக் காணப்படுகிறது. ஆதலால் இது புண்ணியத்தின் புண்ணியமாயிருத்தல்வேண்டும் என்று "புண்ணியத்தின் புண்ணியமோ" என்கிறார். 'புண்ணியத்தின் புண்ணியம்' என்னும் மட்டும் நெஞ்சம் செல்கிறது. புண்ணியத்தின் புண்ணியத்தை ஊன்றி உன்ன உன்ன, அது புலனுக்கும் புந்திக்கும் விருந்தளிக்கும் புயலும் வில்லும் குவளையும் பவளமும் மலரும் மதியுங் கொண்ட ஒன்றாய்த் திகழ்தல் கண்டு, "புயல் சுமந்து விற்குவளை பவளமலர் மதிபூத்த விரைக்கொடியோ" என்கிறார். இப்பெற்றி வாய்ந்த ஒன்று இயற்கை முயற்சியிலடங்காததாகவே இருத்தல் வேண்டுமென்று "அற்புதமோ" என்கிறார். அதற்கு மேலுங் கடந்து எண்ணும்போது, "அற்புதமன்று"; "சிவனருளோ" என்கிறார். நொடிப்பொழுது நம்பியாரூரர் நெஞ்சம் வெவ்வேறிடஞ் சென்றதேனும், மீண்டும் அது நீண்டகாலம் பயின்று பண்பட்ட ஒன்றிலேயே சென்றுநிற்கலாயிற்று. நம்பியாரூரருஞ் சிவனருட் செல்வர்; பரவையாருஞ் சிவனருட் செல்வர். அவர் அகத்திலும் அருள் ஒளி திகழ்கிறது; இவர் அகத்திலும் அவ்வொளி திகழ்கிறது. இவ்வொளி அவ்வொளியிலும் அவ்வொளி இவ்வொளியிலும் புகுந்து உண்மையுணர்தல் இயல்பு. அம்மையார் அருள் ஒளி ஆரூரர் அருள் நெஞ்சில் நுழைந்து "சிவனருளோ" என்று நினைக்கச் செய்தது. திருவருள் வழி நிற்போர் தமக்

"ஓவியநான் முகன்எழுத ஒண்ணுமை உள்ளத்தால்
மேவியதன் வருத்தமுற விதித்ததொரு மணிவிளக்கோ
மூவுலகின் பயனாகி முன்நின்ற" தெனநினைந்து
நாவலர்கா வலர்நின்றார் நடுநின்றார் படைமதனார். கஊக

கென ஒன்றும் இல்லாதவராதலானும், திருவருள் வழி நிற்றல் அவர்தங் கடனாத லானும் "அறியேன்" என்கிறார். காணாத காட்சி அதிசயம் ஊட்டுதல் இயல்பு. அம்மையாரின் புயற் கூந்தலும், விற்புருவமும், குவளைக் கண்ணும், பவள வாயும், மலர்முகமும், மதிநுதலும், கொடியிடையும் கொண்ட அழகிய அமைதிப் புண்ணிய அற்புதத் தெய்வ அருள் வடிவம், ஒரு பாட்டின் ஒன்றேகால் அடியில் விளங்குதல் காண்க. " புயல்சுமந்து விற்குவளை பவளமலர் மதிபூத்த விரைக் கொடி" - இஃதன்றோ சொல்லோவியம்? ஈண்டுள்ள முறைப் பாடுங் கருதற் பாலது. மலர் முகம் என்றும் மதிநுதல் என்றுங் கொள்ளப்பட்டன. முகத்தை யும் நெற்றியையும் ஒரே இடத்தில் வெவ்வேறு உவமைகளால் கூறுவதும் மரபு. இவ்வாசிரியராதல் முகத்துக்கு மலரையும் நுதலுக்கு மதியையுங் கூறினர். சீவக சிந்தாமணி ஆசிரியர் ஒரே இடத்தில் முகத்துக்கு முழுமதியையும் நுத லுக்குப் பிறைமதியையும் உவமை கூறியுள்ளார். " குழவிக்கோட் டிளம்பிறை யும் குளிர்மதியும் கூடினபோல் - அழகுகொள் சிறுநுதலும் அணிவட்ட மதிமுக மும் "—சிந்தாமணி 165. மலரை மேனிக்கும் மதியை முகத்துக்குங் கொள் வோரு முளர். சண்பகப்பூ மேனி என்பர் மகாலிங்க ஐயர். இவர் கொடியை உடலென்பர். மலரையும் மதியையும் வெவ்வேறாகப் பிரியாது மலர் மதி எனக்கொண்டு பூரண சந்திரன் என்று கூறுவது பழைய குறிப்புரை. மலரை முகத்துக்கும் மதியை நுதலுக்குங் கொள்ளும்போது மதியைப் பிறை மதியாக் கொள்க. நுதல் ஒரு சிறப்புறுப்பாதலின் அஃது இறுதியில் கூறப்பட்ட தென்க. " அப்பகையைப் பேணும் நுதலெனவு மென்றது, சிறப்புறுப்பாய் அழகு கொடுத்தற்கு உரியது பகையாயிற்றென்னுங் குறிப்பிற்று. மெய்யெல் லாங் கோலஞ் செய்தாலும் நுதற்குத் திலகம் முதலியன தீட்டாக்கால் அவை கோலமாய்த் தோன்றாத தன்மை நுதற்கு உளதாகலின், அது சிறப்புறுப்பா யிற்று."—கலித்தொகை உ௫ : உரைக் குறிப்பு. காமன்தன் பெருவாழ்வு - இரதி. குவளை - கருங்குவளை ; நீலோற்பலம். மலர் - தாமரை மலர். விரை - வாசனை.

கஊக. 'சிவனருளோ' அறியேன் என்று அதிசயித்த நம்பியாரூரர், அம்மையார் தம் சிவவொளிகாலுஞ் செம்மைத்திருமேனியைக் கண்டு " மணிவிளக்கோ" என் கிறார். மணிவிளக்கின் அருமைப்பாடு மிகத் திறம்படச் சொல்லப்பட்டிருக்கி றது. 'இப்பேரழகு வடிவு எவரால் படைக்கப்படும்? நான்முகனாலும் இதைப் படைத்தல் இயலுமோ? படைத்தற்றொழிலைச் செய்வோர் அவனையன்றிப் பிற ரில்லை. ஆதலால் அவனே இதைப் படைத்திருத்தல் வேண்டும். ஆனால் மற்ற வடிவங்களைப்போல அவன் இவ்வடிவத்தை எளிதில் படைத்திருக்க மாட்டான். படைக்க அவன் கைகள் போதா. கைகளால் இவ்வடிவை அமைத்தலும் இயலாது.

தண்தரள மணித்தோடும் தகைத்தோடும் கடை *பிறழும்
கெண்டைநெடுங் கண்வியப்பக் கிளர்ஒளிப்பூண் உரவோனை
அண்டர்பிரான் திருவருளால் †அயல்அறியா மனம்விரும்பப்
பண்டைவிதி கடைகூட்டப் பரவையா ருங்கண்டார். கசஉ

கண்கொள்ளாக் கவின்பொழிந்த திருமேனி கதிர்விரிப்ப
விண்கொள்ளாப் பேரொளியான் எதிர்நோக்கு மெல்லியலுக்
கெண்கொள்ளாக் காதலின்முன் பெய்தாத தொருவேட்கை
மண்கொள்ளா நாண்மடமச் சம்பயிர்ப்பை ‡வலிந்தெழலும். கசங

---

ஓவியமாக (சித்திரமாக) வாதல் அவன் இவ்வடிவை எழுதி யிருப்பனோ? அஃதும் அவனால் இயலாது. அவன் மனதால், அதுவும் வருத்தமுற 'இம்மணி விளக்கை விதித்திருத்தல் வேண்டும்' என்று, "ஓவிய......விளக்கோ" என்கிறார். ஓவியத்தில் நான்முகனால் எழுத வொண்ணா மணிவிளக்கு, சேக்கிழார் ஓவியத்தில் திறம்பட அமைந்திருத்தல் காண்க. கையால் படைக்க இயலாமை..., 'வருத்தமுற' என்று கோடலுமொன்று. மூன்று உலகிலுள்ள பேறுகளின் பயனாகி என்க. நாவலர் காவலர் - திருநாவலூர் கோனாகிய நம்பியாரூரர். நின்றார் - பெயராது நின்றார்; ஓவியமானார் என்றபடி. இனிப் போர்தொடுக்கப் படை தாங்கும் காமன் நம்பியாரூரர்க்கும் பரவையார்க்கும் நடுவில் நின்றான் என்க.

கசஉ. (காட்சி) தண்தரள மணித்தோடும் - குளிர்ச்சி பொருந்திய முத்தாலும் மணியாலும் அமைந்த காதணியையும். தகைத்து - தடுத்து. கடை - கண் கடை; தோட்டையும் தடுத்து அதற்கு மேலும் போகும் கண்ணின் நீட்சியையும் சிறப்பையும் கூறியவாறு. கிளர் - எழும்; விளங்கும். உரவோனை - அறிஞராகிய நம்பியாரூரரை. கிளர் ஒளிப்பூண், வேந்தர்கோலத்தைக் குறிப்பது. உரன் (அறிவு) தவத்தைக் குறிப்பது (அறிவு தவத்தால் விளங்கப்பெறுவதாதலின்). இரண்டுஞ் சேர்ந்த தவவேந்தர் நம் நம்பியாரூரர்; கஙo-ம் பாட்டைப் பார். பெருமையும் உரனும் தலைவன் குணங்கள். "பெருமையும் உரனும் ஆடூஉ மேன"—தொல்காப்பியம்: களவியல் எ. அயலறியா மனம் - களவு.

கசங. நம்பியாரூரர் அழகை உள்ளத்தால் ஊன்றி நோக்குக. கவின் அழகு. கதிர் - கிரணம். பேரொளியான் - நம்பியாரூரர். மெல்லியலுக்கு பரவையாருக்கு. எண்கொள்ளாக் காதலின்-எண்ணத்தில் அடங்காத காதலினால். "வேட்கை என்பது என்னேவெனின், ஒருவரொருவரை இன்றியமையாமை. அவ்வின்றி யமையாது நின்ற வேட்கை எல்லா உணர்வினையும் நீக்கித் தானேயாய் நாண் வழிக் காசுபோலவும், நீர் வழி மிதவைபோலவும் பான்மை வழி கூடி இருவருயிரையும் புணர்விக்கும் என்பது......"—களவியலுரை உ. மண் கொள்ளா என்ன. நாணம் முதலிய நான்கு குணங்களும் மகளிர்பால் இயல்பாய்ப் பிரிவின்றிக் கிடப்பன. இவைகளையும், முன்பு எப்பொழுதும் உண்டாகாதவேட்கை கீழ்ப்படுத்தித் தான் முனைந்து எழுதலும். நாண், மடம், அச்சம், பயிர்ப்பு

பா - ம்—*புரளும். †அயலறியா மணம் விரும்ப; மணம் விரும்பி; அறியாமல். ‡வலித்.

"முன்னேவந் தெதிர்தோன்றும் முருகனோ பெருகொளியால்
தன்னேரில் மாரனோ தார்மார்பின் விஞ்சையனோ
மின்னேர்செஞ் சடைஅண்ணல் மெய்யருள்பெற் றுடையவனோ
என்னே!என் மனங்*திரித்த இவன்யாரோ" எனநினைந்தார். கசச

---

*தலைவியின் குணங்கள். "அச்சமும் நாணமும் மடனும் முந்துறுத்த - நிச்சமும் பெண்பாற்குரிய என்ப"—தொல்: களவியல் - அ. "நாண் என்பது பெண்டிர்க்கு இயல்பாகவே உள்ளதொரு தன்மை. மடமென்பது கொளுத்தக்கொண்டு கொண்டது விடாமை. அச்சமென்பது காணப்படாததொருபொருள் கண்டவிடத்து அஞ்சுவது. பயிர்ப்பென்பது பயிலாத பொருட்கண் அருவருத்து நிற்கும் நிலைமை. இந்நான்மையும், புனல் ஓடு வழியில் புல் சாய்ந்தாற்போல வேட்கையான் மீதூரப்பட்டுச் சாய்ந்து கிடப்பது"—களவியல் உரை உ. வேட்கை எழுச்சியின் முன்னே நாண் முதலியன ஒடுங்கும் என்பது.*

*கசச.* (ஐயம்) தமக்கு முன்பு எப்பொழுதும் எய்தாத ஒரு வேட்கை எழுதலும், அதற்குக் காரணமாக நிற்கும் உருவைப் பரவையார் "முன்னே......" என்று நினைக்கலானார். நம்பியாரூரர் "கண்கொள்ளாக் கவின்பொழிந்த திருமேனி கதிர் விரிப்ப - விண் கொள்ளாப் பேரொளியா"ராதலின், அவர்தம் இளமைச் செறிவும், மணக்கமழ்வும், கடவுட்டன்மையும், கட்டழகும் பொங்கிப் பொங்கிப் பொழிகின்றன. அப்பொழிவு அம்மையார் கருத்தைக் கவர்கிறது. அப்பொழிவுடைய உருவை என்னென்று கருதுவது? கருத்தில், இளமையும் மணமும் கடவுட்டன்மையும் அழகும் ஒருங்கே திரண்ட முருகையுடைய முருகன் நினைவே தோன்றும். ஆகவே, "முன்னே......முருகனோ" என்கிறார். பதியிலார்க்கு வழிபடு தெய்வம் முருகன். அம்முருகன் நினைவு முதற்கண் தோன்றுதல் இயல்பு. 'முருகன் பன்முறை நினைவில் வந்ததுண்டு. அவன் இத்தகைய கிளர்ச்சியை நிகழ்த்துவதில்லை. இவன் மன்மதன் போலும்' என்று எண்ணிப் "பெருகொளி......மாரனோ" என்கிறார். 'மாரன் உருவில் ஒருவன். இவனுக்கு உருவிருக்கிறது. ஆதலால் இவன் மந்திரசால அற்புதம் புரியும் வித்தியாதரனோ' என்று "தார்......விஞ்சையனோ?" என்கிறார். 'இவன் மந்திர சாலங்கள் என் மனதைத் திரிக்குங்கொல்! என் மனதைத் திரிக்கவல்லான் சிவனருட் செல்வனாகவேயிருத்தல் வேண்டும்'என்று "மின்...உடையவனோ" என்கிறார். என்னே என்பது திரியாத மனதையுந் திரித்த வியப்பு. திரியாத மனதையுந் திரித்த "இவன் யாரோ" என்கிறார். இவ்வுலகில் இல்லாதவன் என்றபடி. இருவர்க்கும் ஐயப்பாட்டில் ஒருமை நயமிருத்தல் ஈண்டு உன்னற்பாலது. நம்பியாரூரர் நினைவில் "கற்பகத்தின் பூங்கொம்போ" (இந்திரன் மகள் தெய்வ யானையோ) என்பது—பரவையார் நினைவில் "முருகனோ" என்பது. நம்பியாரூரர் கருத்தில் "காமன்தன் பெருவாழ்வோ" (காமன் மனைவியோ) என்பது—பரவையார் கருத்தில் "மாரனோ" (காமனோ) என்பது. நம்பியாரூரர் எண்ணத்தில் "அற்புதமோ" என்பது—பரவையார் எண்ணத்தில் "விஞ்சையனோ" (மந்திரவித்தை

பா - ம்—*திரித்தவன்.

அண்ணலவன் தன்மருங்கே அளவிறந்த காதலினால்
உள்நிறையும் குணநான்கும் ஒருபுடைசாய்ந் தனஎனினும்
வண்ணமலர்க் கருங்கூந்தல் மடக்*கொடியை வலிதாக்கிக்
கண்ணுதலைத் தொழும்அன்பே கைக்கொண்டு செலவுய்ப்ப. கசரு

பாங்கோடிச் சிலைவளைத்துப் படைஅநங்கன் விடுபாணம்
தாங்கோலி எம்மருங்கும் †தடைசெய்ய மடவாரும்
தேங்கோதை மலர்க்குழல்மேல் சிறைவண்டு கலந்தார்ப்பப்
பூங்கோயில் அமர்ந்தபிரான் பொற்கோயில் போய்ப்‡புகுந்தார். கசசு

வன்றொண்டர் அதுகண்டு"என் மனங்கொண்ட மயிலியலின்
இன்தொண்டைச் செங்கனிவாய் இளங்கொடிதான் யார்"என்ன,
அன்றங்கு முன்னின்றார் "அவர்நங்கை பரவையார்
சென்றும்பர் தரத்தார்க்கும் சேர்வரியார்" எனச்செப்ப. கசஎ

---

அற்புதனே) என்பது. நம்பியாரூரர் நெஞ்சில் "சிவனருளோ" என்பது—பரவை யார்நெஞ்சில் "மின்னேர்செஞ் சடையண்ணல் மெய்யருள் பெற்றுடையவனே" என்பது. இவ்வொற்றுமையுணர்வு புலவர்களால் காட்டப்படுவது. தன்னேரில் - தனக்கு ஒப்பில்லாத. தார்மார்பன் - மாலையணிந்த மார்பினையுடைய. மாலை மந்திர வித்தைக்குறிப்பு. ஆரூரர் ஒளி, மின்னேர் செஞ்சடையை நினைக்கச் செய்தது.

கசரு. அண்ணலவன் தன்மருங்கே - பெருமையிற் சிறந்த நம்பியாரூரரிடத்திலே. உள்நிறைந்த குணநான்கும் என்றும், உள் நிறையும் குணநான்கும் என்றும் கொள்ளலாம். நிறை - காப்பன காத்துக் கடிவன கடிந்து ஒழுகும் ஒழுக்கம்—களவியலுரை : உ. குணநான்கு - நாண், அச்சம், மடம், பயிர்ப்பு. ஒரு புடை - ஒரு புறம். வண்ணம் - அழகுடைய. மடக்கொடியை - பரவையாரை. வேட்கை வயப்பட்ட பரவையார் சிவநேயத்திற் சிறந்தவராதலின், அந்நேயம் வலிந்து அம்மையாரைத் தன் வயப்படுத்தித் தன் வழி நிறுத்திக் கோயிலுக்குப் போகச் செலுத்தியது.

கசசு. பாங்கு ஓடி - அருகருகே ஓடி. சிலை - கரும்புவில். அநங்கன் - காமன். பாணம் ஐந்து - தாமரை, மாம்பூ, அசோகம், முல்லை, குவளை. கோலி - வளைந்து. எம்மருங்கும் - எப்பக்கத்தும். மடவாரும் - மடப்பம் வருதலை உடையவளும்; பரவையாரும். தேன் பொருந்திய மலர் மாலை யணிந்த கூந்தல்மீது. சிறை - சிறகுகளையுடைய. ஆர்ப்ப - ஆரவாரிக்க. வண்டின் ஆரவாரம் வேட்கையை அதிகப்படுத்துவது. எந்நிலையில் அம்மையார் கோயில் போந்தார் என்பது கருதற்பாலது.

கசஎ. (தெளிவு) மயில் இயலின்-மயில்போலுஞ் சாயலினையுடைய. (சாயல்- ஐம்பொறியால் நுகரும் மென்மை). தொண்டைச் செங்கனி - கொவ்வைக்கனி. நங்கை - பெண்பால்; மகளிரிற் சிறந்தவள். நம்பி - ஆண்பால்; ஆடவரிற் சிறந்தவன். நம்பிக்குரிய நங்கை என்றபடி. உம்பர் தரத்தார்க்கும்-தேவர்கட்கும். அம்மையார் பெருமை கூறியவாறு. "மிக்கோர் வாமலர் மங்கை இங்கு வந்தனள்"எனக் கொண்டாராதலின் என்க; கஙரு-ம் பாட்டைப் பார்க்க.

பா - ம்—*கொம்பை. †தகை. ‡புக்கார்.

"பேர்பரவை பெண்மையினில் பெரும்பரவை விரும்பல்குல்
ஆர்பரவை அணிதிகழும் மணிமுறுவல் அரும்பரவை
சீர்பரவை ஆயினாள் திருவுருவின் மென்சாயல்
ஏர்பரவை இடைப்பட்ட என்னாசை எழுபரவை". கசஅ

என்றினைய பலவுநினைந் தெம்பெருமான் அருள்வகையான்
முன்தொடர்ந்து வருங்காதல் முறைமையினால் தொடக்குண்டு
"நன்றெனையாட் கொண்டவர்பால் நண்ணுவன்"என் றுள்மகிழ்ந்து
சென்றுடைய நம்பியும்போய்த் தேவர்பிரான் கோயில்புக. கசகூ

பரவையார் வலங்கொண்டு பணிந்தேத்தி முன்னரே
புரவலனார் கோயிலினின் றொருமருங்கு புறப்பட்டார்,
விரவுபெருங் காதலினால் மெல்லியலார் தமைவேண்டி
அரவின்ஆ ரம்புனைந்தார் அடிபணிந்தார் ஆரூரர். கரு௦

---

கசஅ. பெயரைக் கேட்டதும் ஆரூரர், பரவை பரவை என்று பிதற்றத் தொடங்குகிறார். பேர் பரவை - இவள் பெயரோ பரவை; பெண்மையினில் - பெண்மை அழகு முதலியவற்றில்; பெரு உம்பர் அவை விரும்பு அல்குலார் பரவு ஐ-பெரிய தேவர் கூட்டம் விரும்புகின்ற திலோத்தமை முதலிய தெய்வப் பெண்களும் (இவரே சிறந்தாரென்று) வாழ்த்தும் தெய்வமாம்; அணி திகழும் மணி முறுவல் அரும்பர் அவை - ஒழுங்காக விளங்கும் நல்ல பற்கள் முல்லை யரும்புகளாம்; சீர் பரவை ஆயினாள் - சிறந்த பரவை என்னும் கூத்தையுடைய இலக்குமியைப் போன்றவளாது; திருவுருவின் மென் சாயல் - அழகிய உரு வின் மென்சாயலாகிய; ஏர் பரவை இடைப்பட்ட-அழகிய பரப்பில் அகப்பட்ட; என் ஆசை - என் வேட்கை; எழு பரவை - ஏழு கடல்களாம். மற்றும் ஒரு வழி: பேர் பரவை - பெயரில் பரவை; பெரு உம்பர் அவ்வை (அவை விகா ரம்)-பெரிய தேவர்கட்குந் தாய்; விரும்பு அல்குல் ஆர்பு அரவு ஐ - விரும்புகின்ற நிதம்பத்தின் நிறைவில் பாம்புகளுக்கு இறை (ஆதிசேடன்); சீர்பரவு ஐ ஆயி னாள் - திருமகளும் பரவும் அழகு வாய்ந்த இவள்தன். (மணி முறுவல் - நல்ல முறுவல்—சிலப்பதிகார அரும்பதவுரை: எ கானல்வரி அ. மணியை முத் தெனலும் அழகெனலும் பொருந்தும்.)

கசகூ. சிவபெருமான் அருள்வழி பிறக்கும் ஆணைவகையால். முன்தொ டர்ந்து – முன்னைநாள் தொட்டு (கயிலாயத்தில்). முறைமையினால் - அம்முறை மைப்படி (வேறுமுறைமைப்படி யன்று என்பது). தொடக்குண்டு - கட்டுப் பட்டு; பந்திக்கப்பட்டு. எல்லாஞ் சிவன் செயல் என்று வாழ்வோ ராதலின் "உண்மகிழ்ந்து" என்றார். மகிழ்ச்சி, ஆண்டவன் அருளின்கணுள்ள உறுதியை யும், அவ்வருள் அடியவர்க்கு எளி வரலையுங் குறிப்பது. உடைய - என்னை (ஆசிரி யரை) ஆளாக உடைய; ஆண்டவன் அருள் உடைய நம்பி என்னலுமாம்.

கரு௦ புரவலனார் - சிவபெருமான் எழுந்தருளி யுள்ள. ஒருமருங்கு - ஒரு பக்கமாக. விரவு - ஊடுருவிப் பாய்ந்த. மெல்லியலார்தமை வேண்டி - பரவை

அவ்வாறு பணிந்தேத்தி "அணிஆரூர் மணிப்புற்றின்
மைவாழுந் திருமிடற்று வானவர்பால் நின்றும்போந்
தெவ்வாறு சென்றாள்என் இன்னுயிராம் அன்னம்"எனச்
சேவ்வாய்வெண் நகைக்கொடியைத் தேடுவா ராயினார். ௬௧

வேறு

"பாச மாம்வினைப் பற்றறுப் பான்மிகும்
ஆசை மேலுமோர் ஆசை அளிப்பதோர்
*தேசு மன்னஎன் சிந்தை †மயக்குற
ஈச னார்அருள் எந்நெறிச் சேன்றதே." ௬௨

"உம்பர் நாயகர் தம்கழல் அல்லது
நம்பு மாறறி யேனை நடுக்குற
வம்பு மால்செய்து வல்லியின் ஒல்கியின்
றெம்பி ரான்அருள் எந்நெறிச் சேன்றதே." ௬௩

---

யாரை அடைய விரும்பி. அரவின் ஆரம் புனைந்தார் - பாம்பணிந்த பரமசிவனது. ஆரூரர் உடல் பொருள் ஆவி மூன்றையும் ஆண்டவனுக்கு அர்ப்பணஞ் செய்த வர்; தமக்கென ஒன்றும் இல்லாதவர். அவர் தாம் விரும்புவதை ஆண்டவனைக் கேட்டே பெறுதல் வேண்டும். திருவருள் வழி நிற்பவர் என்பது கருத்து.

௬௧. அணி..............போந்து - திருநீல கண்டத்தையுடைய தியாகேசப் பெருமானிடத்திருந்தும் போந்து. அன்ன நடையாள். செவ்வாயும் வெண்ணகையும் கொண்ட கொடியின் இயல் உள்ளத்தில் படிந்து வேட்கை எழுப்புவது.

௬௨. பாசமாம் வினைப்பற்று - பாசத்தால் வரும் வினையின் தொடர்பை; பாசமாகிய வினையின் தொடர்பை என்றலுமொன்று. வினைக்கு மூலமாயிருப்பது பாசம். ஈண்டுப் பாசம் ஆணவத்தின் மேற்று. அறுப்பான் - நீக்கும் பொருட்டு. அறுப்பான் என்பதற்குச் சிவபிரானிடத்து என்பர் ஆறுமுகத் **தம்பிரானார்.** தேசுமன்ன - அழகு பொருந்த. (அதனால்) வன்றொண்டர் சிந்தையை மயக்குற. தம்மை மயக்குறச் செய்யும் ஆற்றல் ஈசனருளொன்றற்கே உண்டாதலின் "ஈசனார் அருள்" என்றார். ஈசனருள்வழி நேர்ந்த ஒன்றைஈசனருள் என்று சொல்வது மரபு. ஈண்டு அருள் என்றது பரவையாரை.

௬௩. உம்பர் நாயகர் - தேவர்கள் நாயகராகிய சிவபெருமான். வம்புமால் - புதிய மயக்கம்; நிலையில்லாத மயக்கம் என்போருமுளர். 'வம்பப்பரத்தர்' என்பதற்குப் 'புதிய காம நுகர்ச்சியை விரும்புங்காமுகர்' என்று அடியார்க்கு நல்லார் பொருள் கண்டிருத்தலை நோக்குக—**சிலப்பதிகாரம் :** ௧௪ கொலை. ௬௩. வல்லியின் ஒல்கி - கொடிபோலத் துவண்டு.

பா - ம்—*தேசின் மன்னி. †மயக்கிய; கலக்கிய.

"பந்தம் வீடு தரும்பர மன்கழல்
சிந்தை *ஆரவும் உன்னும் என்† சிந்தையில்
வந்து மால்செய்து மான்என‡ வேவிழித்
தேந்தை யார்அருள் எந்நெறிச் சென்றதே." கருச

என்று சாலவும் ஆற்றலர் "என்னுயிர்
நின்ற தெங்"கென, நித்திலப் பூண்முலை
§மன்றல் வார்குழல் வஞ்சியைத் தேடுவான்
சென்று தேவா சிரியனைச் சேர்ந்தபின். கரு௫

காவி நேர்வருங் கண்ணியை நண்ணுவான்
யாவ ரோடும் உரையியம் பாதிருந்து
"ஆவி நல்குவர் ஆரூரை ஆண்டவர்
பூவின் மங்கையைத் தந்து"எனும் ¶போழ்தினில். கருசு

நாட்டு நல்லிசை நாவலூ ரன்சிந்தை
வேட்ட மின்னிடை இன்னமு தத்தினைக்
காட்டு வன்கட லைக்கடைந் தென்பபோல்
பூட்டும் ஏழ்பரித் தேரோன் கடல்புக. கருஎ

---

கருச. உயிர்கட்குப் பந்தத்தையும் வீட்டையுந் தரும் பரமன். அறிவு விளக்கமின்றிக் கிடக்கும் உயிர்கட்குப் பரமன் தனு கரண புவன போகங்களைக் கொடுத்துச் சிறிது அறிவு விளக்கஞ் செய்வது ஈண்டுப் பந்தம் எனப்பட்டது. அப்பந்தத்தினின்றும் பரமன் உயிர்கட்கு முற்றறிவு விளக்கஞ் செய்வது ஈண்டு வீடு எனப்பட்டது. ஆரவும் - நிரம்பவும்; தெவிட்டவும். (ஆர்வுற - விருப்பமுற). உன்னும் - நினைக்கும். மால் - மயக்கம்.

கரு௫. என்று - இவ்வாறு கூறி. சாலவும் ஆற்றலர் - மிகவும் பொறுதலராய். ஈண்டு உயிர் என்றது பரவையாரை. நித்திலப் பூண் - முத்தாபரணம் பூண்ட. மன்றல் வார் குழல்-வாசனைவீசும் நீண்ட கூந்தலையுமுடைய. வஞ்சியை- வஞ்சிக் கொடிபோன்ற பரவையாரை. தேவாசிரிய மண்டபம்.

கருசு. நீலோற்பலமலரை யொத்த கண்களையுடைய பரவையாரை அடையும் பொருட்டு. ஆரூரை ஆண்டவர் (தியாகேசப் பெருமான்) பூவின் மங்கையை (அழகுடைய பரவையாரை)த் தந்து (என்) ஆவி நல்குவர் என்னும் போழ்தினில். நம்பியாரூரர் ஆண்டவனிடங் கொண்டுள்ள உறுதி கருதத்தக்கது. மங்கையையும் அருள்வழி நின்று பெறுதல் வேண்டுமென்னுங் கருத்துடையார் நம்பியாரூரரென்க.

கருஎ. நல்லிசை - நல்ல புகழுடைய. வேட்ட - விரும்பிய. அமுதத்தை அளிப்பது கடலாதலின், அதனைக் கடைந்து அமுதத்தைக் காட்டுவன் என்பது போல. தேரோன் - சூரியன். ஏழ் நிறத்தை ஏழு குதிரையாகச் சொல்வது மரபு. சூரியன் அத்தமிக்க.

பா - ம்—*ஆர்வுற. †சிந்தையை. ‡வேல். §மன்றலார். ¶போதினில்.

எய்து மென்பெடை யோடிரை தேர்ந்துண்டு
பொய்கை யிற்பகல் போக்கிய புள்ளினம்
வைகு சேக்கைகண் மேற்செல வந்தது
பையுள் மாலை தமியோர் பனிப்புற. கடுஅ

பஞ்சின் *மெல்லடிப் பாவையர் உள்ளமும்
வஞ்ச மாக்கள்தம் வல்வினை யும் †பரன்
அஞ்செ ழுத்தும் உணரா அறிவிலோர்
நெஞ்சும் என்ன இருண்டது நீண்டவான். கடுகூ

"மறுவில் சிந்தைவன் தொண்டர் வருந்திறல்
இறும ருங்குலார்க் கியார்பிழைப் பார்" என்று
நறும லர்க்கங்குல் நங்கைமுன் கொண்டபுன்
முறுவல் என்ன முகிழ்த்தது வெண்ணிலா. கசூ௦

---

கடுஅ. எய்தும் மென்பெடையோடு - பிரியாது உடனுள்ள மெல்லிய பறவைகளுடன். புள்ளினம் - பறவைக்கூட்டம். வைகு சேக்கைகண் மேற்செல - தங்கும் கூடுகளிற் செல்ல. தமியோர் பனிப்பு உற - பிரிவுற்ற நாயகனும் நாயகியும் (காம) நோய் அடைய. பையுள் மாலை வந்தது - துன்பத்தைக் கொடுக்கும் மாலைக்காலம் வந்தது.

கடுகூ. "ஈண்டுப் பஞ்சின் மெல்லடிப் பாவையர்" என்றது விலைமகளிரை யென்க. இதற்குப் பொதுப்படப் பெண்ணுலகெனக் கூறுவோரு முளர். அது தவறு. நூற்றறுபத்தோராம் பாட்டில் "குலமாதர்" என்று ஆசிரியர் குறித்துள்ளமையால் ஈண்டுப் "பாவையர்" என்பது விலைமகளிரைக் குறிப்பதாகு மென்க. ஆசிரியர் பெண்ணின் பெருமை பேசிய பெரியார். அவர் இருட்டுக்குப் பாவையருள்ளத்தை எங்ஙனங் கொள்வர்? பின்னே, மங்கையர்க்கரசியார் புராணத்தில் "மங்கையர்க்குத் தனியரசி எங்கள் தெய்வம்......" என்று பெண்ணின் பெருமை பேசியிருத்தல் காண்க. பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்த பெரும் புலவருள் ஒருவராகிய மகாலிங்க ஐயர் "பஞ்சுபோல் மிருதுவா யிருக்கின்ற அடிகளையுடைய விலைமாதர்கள் மனதும்" என்று பொருள் கொண்டிருத்தலை யோர்க. பொய்யொழுக்க முடையார் மக்களல்லராதலின் "மாக்கள்" என்றார். மக்கள் - ஆறறிவுடையார். மாக்கள் - ஐயறிவுடையார். அஞ்செழுத்து அக விளக்காதலின், அஃதில்லா அகம் இருள் செறிந்ததென்க. "இல்லக விளக்கது இருள் கெடுப்பது....................நல்லக விளக்கது நமச்சிவாயவே"—அப்பர்: நமச்சிவாயத் திருப்பதிகம் அ.

கசூ௦. மறுவில் - குற்றமற்ற. இறுமருங்குலார்க்கு - வளையும் இடுப்பினையுடைய பெண்களுக்கு. இடை கொடிபோல் நுடங்கலான், அஃது 'இறுமருங்குல்' எனப்பட்டது. "இறு நுசுப்பு அலச"—மணிமேகலை: சு பீடிகை - எ.

பா - ம்—*மெல்லடி யார்தம துள்ளமும். †அரன்.

அரந்தை செய்வார்க் கழுங்கித்தம் ஆருயிர்
வரன்கை தீண்ட மலர்*குல மாதர்போல்
பரந்த வெம்பகற் கொல்கிப் பனிமதிக்
கரங்கள் †தீண்ட அலர்ந்த கயிரவம். கரு௧

தோற்றும் மன்னுயிர் கட்கெலாந் தூய்மையே
சாற்றும் இன்பமும் தண்மையும் தந்துபோய்
ஆற்ற அண்டமெ லாம்பரந் தண்ணல்வெண்
நீற்றின் பேரொளி போன்றது நீள்நிலா. கரு௨

வாவி புள்ளொலி ‡மாறிய மாலையில்
நாவ லூரரும் நங்கை பரவையாம்
பாவை தந்த படர்பெருங் காதலும்
ஆவி சூழ்ந்த தனிமையும் ஆயினர். கரு௩

"தந்தி ருக்கண் எரிதழ விற்பட்டு
வெந்த காமன் வெளியே உருச்செய்து
வந்தென் முன்னின்று வாளி ¶தொடுப்பதே
எந்தை யார்அருள் இவ்வண்ண மோ" என்பார். கரு௪

---

மூலையின் சுமையால் இடைவளைவுறு மென்ப. வாசனை மலர்களை யணிந்த இரவாகிய பெண். புன் முறுவல் - புன்சிரிப்பு. முகிழ்த்தது - உதயமாயிற்று.

கரு௧. அரந்தை செய்வார்க்கு அழுங்கி - தம்மைக் காமுற்று வலிந்து தன்புறத்தும் அங்கியர்கட்கு உடன்படாது வருந்தி. வரன் - நாயகன். அகம்மலருங் குலமாதர். பகற்கு - சூரியனுக்கு. ஒல்கி - மலராமற் சுருங்கி ; ஒதுங்கி. குளிர்ச்சி பொருந்திய சந்திரன் கதிர்கள். அலர்ந்த கயிரவம் - ஆம்பல்கள் ; அல்லிகள் மலர்ந்தன.

கரு௨. தூய்மையும். ஆற்ற - மிகவும். அண்ணல் - சிவபெருமான். தூய்மையும் இன்பமும் தண்மையும் நீற்றினிடத்திலுமுண்டு.

கரு௩. தடாகங்களில் பறவை யொலி நீங்கிய மாலை நேரத்தில். தனிமை யெனக் கூறாது ஆவிசூழ்ந்த என்றமையான், ஈண்டுத் தனிமை திருவருளை உணர்த்துவதாகக் கொள்க. பரவையின் காதலும் அதைக் கூட்டி முடிக்கவல்ல ஆவி சூழ்ந்த திருவருளும் அன்றிப் பிறவொன்றும் உறவில்லை. பிறர்பால் உரையாடுதல் முதலிய ஒன்றும் நிகழவில்லை என்றபடி.

கரு௪. என் ஆண்டவரால் எரிக்கப்பெற்ற காமன், அவர் அடியாராகிய என் முன் உருக்கொண்டு வாளி தொடுப்பதோ ? அவ்வாண்மை அவனுக்கு எப்படிப் பிறந்ததோ தெரியவில்லை என்றபடி.

பா - ம்__*குழல். †நீட்ட. ‡மாற்றிய. ¶தொடுப்பதேன்.

"ஆர்த்தி கண்டுமென் மேல்நின் றழற்கதிர்
*தூர்ப்ப தேஎனைத் தொண்டுகொண் டாண்டவர்
நீர்த்த ரங்க நெடுங்கங்கை நீள்முடிச்
சாத்தும் வெண்மதி போன்றிலை தண்மதி." ௧௬௫

"அடுத்து மேன்மேல் அலைத்தெழும் ஆழியே!
தடுத்து முன்னெனை ஆண்டவர் தாமுணக்
கடுத்த நஞ்சுன் தரங்கக் கரங்களால்
எடுத்து நீட்டுநீ என்னையின் றென்செயாய்." ௧௬௬

"பிறந்த தெங்கள் பிரான்மல யத்திடைச்
சிறந்த ணைந்தது தெய்வநீர் †நாட்டினில்
புறம்ப ணைத்தடம் பொங்கழல் வீசிட
மறம்ப யின்றதெங் கோதமிழ் மாருதம்." ௧௬௭

இன்ன தன்மைய பின்னும் இயம்புவான்
மன்னு காதல ணுகிய வள்ளல்பால்
தன்ன ரும்பெறல் நெஞ்சு தயங்கப்போம்
அன்னம் அன்னவள் செய்கை அறைகுவாம். ௧௬அ

---

௧௬௫. ஆர்த்தி கண்டும் - பரவையார்மீது கொண்ட வேட்கை காரணமாக யான்படுந் துன்பங் கண்டும். என்மேல் (வானில்) நின்று. அழற்கதிர் - நெருப்புக்கதிரை. தூர்ப்பதே - சிரப்பலாமோ. நீர்த்தரங்கம் - நீர்மயமான அலைகளையுடைய. 'என்னை ஆண்டவர்தங் கங்கை கொண்ட திருமுடியிலுள்ள வெண்மதியாயின், எனக்குத் தண்ணளி செய்வாய்; அங்ஙனஞ் செய்யாது வெம்மைசொரிதலால் நீ வேறு மதிபோலும்' என்றபடி.

௧௬௬. அடுத்து அடுத்து. ஆழியே - கடலே. நஞ்சு உன். தரங்கம் - அலை. என்னை ஆண்டவருக்கே நஞ்சை நீட்டிய நீ என்னை என்செய்யமாட்டாய் என்றபடி.

௧௬௭. தமிழ் மாருதம் - இனிய தென்றலே; தமிழுடன் பழகிய தென்றலே எனினுமாம். நீ பிறந்தது எங்கள் சிவபெருமான் எழுந்தருளியுள்ள பொதிகையிலே. நீ சிறப்பாகவந்து சேர்ந்தது தெய்வச் சோழநாட்டிலே புறத்தேயுள்ள வயல்கள் சூழ்ந்த தடாகங்களில். இங்ஙனமாகக் கொதிக்கும் வெம்மை வீசுதற்குரிய பாவச் செயலை நீ எங்கே பழகினாய்?

௧௬அ. பின்னும் என்றது குயில் முதலியவற்றைப் பழித்துக் கூறுவதை புணர்த்துவது. இயம்பும் பொருட்டு; இயம்புவானாய் என்னலுமொன்று. மன்னு-நிலைபெற்ற. வள்ளல்பால்-நம்பியாரூரரிடத்து. பிறரிடம் புகாத நெஞ்சமாதலின் "அரும்பெறல் நெஞ்சம்" என்றார். தயங்கப்போம் - சென்று மீளாது திகைத்துப்போகும். அன்னம் அன்னவள் - பரவையார்

பா - ம்.—*தூர்ப்பதேன். †நாட்டணி.

### வேறு

கனங்கொண்ட மணிகண்டர் கழல்வணங்கிக் கணவனைமுன் பெறுவாள் போல, இனங்கொண்ட சேடியர்கள் புடைசூழ எய்து பெருங் காத லோடும், தனங்கொண்டு தளர்மருங்குல் பரவையும்வன் றொண்டர்பால் தனித்துச் சென்ற, மனங்கொண்டு வரும்பெரிய மயல் கொண்டு தன்மணிமா ளிகையைச் சார்ந்தாள். க௬௯

சீறடி*மேல் நூபுரங்கள் அறிந்தனபோல் சிறிதளவே ஒலிப்ப முன்னர், வேறொருவர் உடன்பேசாள் மெல்லஅடி ஒதுங்கிமா ளிகையின் மேலால், ஏறிமர கதத்தூணத் திலங்குமணி வேதிகை யில் †நிலங்கொள் பொற்கால், மாறில்மலர்ச் சேக்கையிசை மணிநிலா முன்றில்மருங் கிருந்தாள் வந்து. க௭௦

அவ்வளவில் அருகிருந்த ‡சேடிமுக நேர்நோக்கா "ஆரூர் ஆண்ட மைவிரவு கண்டரைநாம் வணங்கப்போ மறுகெதிர்வந் தவரார்" என்ன, "இவ்வுலகில் அந்தணராய் இருவர்தே டொருவர்தாம் எதிர்நின் றாண்ட சைவமுதல் திருத்தொண்டர் ¶தம்பிரான் தோழனார் நம்பி" என்றாள்.

என்றவுரை கேட்டலுமே "எம்பிரான் தமரேயோ" என்று முன் னம், வன்றொண்டர் பால்வைத்த மனக்காதல் அளவின்றி வளர்ந்து பொங்க, நின்றநிறை நாண்முதலாங் குணங்களுடன் நீங்கஉயிர் ஒன் றுந் தாங்கி, பின்தயங்கு நுண்ணிடையாள் வெவ்வுயிர்த்து மெல் லணைமேல் வீழ்ந்த போது. க௭௨

---

க௬௯. கனம் - உயர்வு; மாட்சி. மணிகண்டர் - திருநீல கண்டராகிய தியா கேசப் பெருமான். கணவனை - தாங் காதலித்த நம்பியாரூரரை. இனம் - கூட் டம். தனங்களைத் தாங்கி அதனால் தளர்வுறும் இடையையுடைய. மனங்கொண்டு அதனால் வரும்.

க௭௦. சீறடிமேல் - சிறிய பாதங்களில். நூபுரங்கள் - சிலம்புகள். முன்னர்- முன்னே நிற்கும். பாதங்களை மெல்லவைத்து நடந்து, மாளிகையின் மேல்வீட்டி லேறி மரகதத் தூண் விளங்கும் அழகிய. வேதிகையில் - திண்ணையில். மாறில் - வாடாத. சேக்கை - படுக்கை. நிலாமுற்றத்தில் வந்து இருந்தாள்.

க௭௧. நோக்கா - நோக்கி. மறுகு - வீதிவழியே. இருவர் - பிரம விஷ்ணுக் கள். ஒருவர் - சிவபெருமான். எதிர் நின்று அந்தணராகி ஆண்ட சைவமுதல். (சைவ முதல்வர் - ஆதி சைவர்; நம்பியாரூரர்.)

க௭௨. தமரேயோ - அடியவரோ. என்று - என்று. நிறை - "காப்பன காத்துக் கடிவன கடிந்து ஒழுகும் ஒழுக்கம்"—மணக்குடவர்; "மனத்து அடக் கற்பாலனவற்றை அடக்குதல்"—பரிமேலழகர். "மறை பிறர் அறியாமை"

பா - ம்—*மென். †நலங். ‡சேடிதனை முகநோக்கி; நோக்கா. ¶தம்பெருமான்.

ஆரநறுஞ் சேறாட்டி அரும்பனிநீர் நறுந்திவலை அருகு வீசி
ஈரஇளந் தளிர்*குளிரி படுத்துமட வார்செய்த இவையும் எல்லாம்
பேரழலின் நெய்சொரிந்தால் ஒத்தனமற் றதன்மீது சமிதை என்ன
மாரனுந்தன் பெருஞ்சிலையின் வலிகாட்டி மலர்வாளி சொரிந்தான்வந்து.

மலரமளித் துயிலாற்றாள் வருந்தென்றல் மருங்காற்றாள் மங்குல் வானில், நிலவுமிழுந் தழலாற்றாள் நிறையாற்றும் பொறை †யாற்றா நீர்மை யோடும், கலவமயில் எனஎழுந்து கருங்குழலின் பாரமாற்றாக் கைய ளாகி, இலவஇதழ்ச் செந்துவர்வாய் நெகிழ்ந்தாற்றா மையின்வறிதே இன்ன சொன்னாள். களச

வேறு

"கந்தம் கமழ்மென் குழலீர்! இதுஎன் கலைவாண் மதியம் கனல் வான் எனைஇச், சந்தின் தழலைப் பனிநீர் அளவித் தடவுங் கொடியீர்!

—நச்சினார்க்கினியர். நாண் முதலாங் குணங்கள் : கசங-ம் பாட்டுக் குறிப்பைப் பார்க்க. உடன் - உடனே. தயங்கும் - விளங்கும். வெவ்வுயிர்த்து - பெருமூச் செறிந்து.

களங. ஆரநறுஞ் சேறு ஆட்டி - வாசனையுடைய சந்தனக் குழம்பை மிகப் பூசி. திவலை-துளி. ஈரமும் இளமையுமுடைய தளிர். குளிரி-நீர்க்குளிரி என்னும் ஒருவகைக் கொடி. படுத்து - பரப்பி. மடவார் - சேடிமார். சமிதை - ஓமவிறகு. மாரன் - காமன். சிலை - கரும்புவில். மலர்வாளி-புஷ்பபாணம். [தாமரை, மாம்பூ, அசோகம், முல்லை, குவளை. இவைகளின் செயல் : பெருமயக்கு, சிந்தாகுலம், மோகனம், சந்தாபம், வசீகரணம். இவைகளின் அவத்தை ; சுப்பிர யோகம் (பேசாது ஒழியா வினைவு), விப்பிர யோகம் (பெருமூச்செறிந்து வருந்துதல்), சோகம் (வெதும்பி உணவு வெறுத்தல்), மோகம் (அழுதலும் பிதற்றலும்), மரணம் (உயிர் சோர்தலும் மயங்குதலும்.)—பிங்கலந்தை.]

களச. மருங்கு வருந் தென்றல். "தென்றற்காற்று மோதலால் இடையொடிபவ ராஞர்" என்பர் மகாலிங்க ஐயர். மங்குல் - இராக்காலம்; மேகமுமாம். நிறையாற்றும் பொறையாற்றா நீர்மையோடும் - நிறை முதலிய குணங்களைத் தாங்கச் சகியாத தன்மையோடும். கலவம் - தோகையுடைய. கருங்கூந்தலின் பாரமாற்றாத. கை - கை ; குணமுமாம். இலவம் - இலவம்பூ. செந்துவர் வாய் - இயல்பான சிவப்பால் சிவந்த வாய். "இலவவிதழ்ச் செவ்வாய் காணாயோநீ" —மணிமேகலை உo உதயகு : ருக. "இலவவிதழ்ச்செவ்வாய் இளமுத்தரும்ப" —சிலப்பதிகாரம் கச ஊர்காண் : கஙஈ. "தேமொழித்துவர்ச் செவ்வாய் நன்னுதால்"—கலித்தொகை ருரு : ச. "தோளால் தழுவித் துவர்த்தொண்டையஞ் செவ்வாய்"—சிந்தாமணி கoளச. நெகிழ்ந்து - திறந்து. ஆற்றாமையால்.

களரு. மணங்கமழும் மெல்லிய கூந்தலையுடைய பெண்களே ! கலைநிரம்பிய ஒளியுடைய சந்திரன் என்னைச் சுடுகிறான். இஃது என்ன ? இச்சந்தனக்குழம்

பா - ம்—*குளிரப். †யாற்றாள்.

தவிரீர் தவிரீர், வந்திங் குலவி நிலவும் விரையார் மலையா னிலமும் எரியாய் வருமால், அந்தண் புனலும் அரவும் விரவும் சடையான் அருள்பெற் றுடையார் அருளார்.'' ௧௭௫

"புலரும் படியன் றிரவென் னளவும் பொறையும் நிறையும் இறையும் தரியா, உலரும் தனமும் மனமும் வினையேன் ஒருவென் அளவோ பெருவாழ் வுரையீர், பலரும் புரியும் துயர்தான் இதுவோ படைமன் மதனார் புடைநின் றகலார், அலரும் நிலவும் மலரும் முடியார் அருள்பெற் றுடையார் அவரோ அறியார்.'' ௧௭௬

"தேரும் கொடியும் மிடையும் மறுகில் *திருவா ரூரீர் நீரே அல்லால், ஆரென் துயரம் அறிவார் †அடிகேள் அடியேன் அயரும் படியோ இதுதான், நீரும் பிறையும் பொறிவாள் அரவின் நிரையும் நிரைவெண் டலையின் புடையே, ஊரும் சடையீர்! விடைமேல் வருவீர்! உமதன் பிலர்போல் யானோ வுறுவேன்.'' ௧௭௭

---

பாம் நெருப்பைப் பனிநீரோடு கலந்து தடவுங் கொடியவர்களே! விரையார்-வாசனை பொருந்திய. மலையா னிலமும் - தென்றற் காற்றும். அந்தண் புனலும்-கங்கையும். விரவும் - சேர்ந்துள்ள. அருள் பெற்றுடையார் - நம்பியாரூரர்.

௧௭௬. என்னளவில் இரவு விடியுந்தன்மைய தன்று. நிறை - ௧௭௨-ம் பாட்டுக் குறிப்புப் பார்க்க. "பொறையென் வரைத்தன்றிப் பூநுதலீத்த - நிறையழி காமநோய்''—கலித்தொகை ௧௩௮ : ௧௪ - ௧௫. "நிறையும் உண்டோ காமங் காழ்கொளின்''—மணிமேகலை ௫ மணிமே: ௨0. இறை - சிறிதும். தீவினையுடைய யான் உலரும் தனமனங்களினின்றும் விடுதலை யடைதல் என் அளவிலில்லை என்றபடி. இத்துணைத் துன்பத்தில் மூழ்கியிருத்தலோ பெருவாழ்வு! பெரு வாழ்வு உரையீர் என்பதற்கு உயிர் பிழைக்கும் வழியை உரையாதிருக்கின்றீர் என்று கொள்வோருமுளர். நீவிர் பலரும். பலரும் விரும்பும் என்னலுமாம். புடை - என்னருகினின்றும். அலரும் - கொன்றை மலரும். மலரும் - விளங்கும். (இத்துயரிலும் வன்றொண்டர் குறித்திரங்கும் பொருளும், பரவையார் குறித்திரங்கும் பொருளும் பெரிதும் ஒன்று பட்டிருத்தலை ஈண்டுப் போதரும் பாக்களால் உணர்க).

௧௭௭. மிடையும் மறுகில் - நெருங்கியுள்ள திருவீதியையுடைய. இத்துன்பத்திடையும் பரவையார்க்கு ஆண்டவன் நினைவு தோன்றுதல் கருதத்தக்கது. அடிகேள் - பெருமானே. அடியேன் அயரும்படியோ - அடியேன் துன்புறுதல் திருவுள்ளமோ? பொறிவாள் அரவின் நிரையும் - புள்ளியையும் ஒளியையும் உடைய பாம்பின் வரிசையும். மாலையாகத் தரித்த வெண்டலையின் பக்கத்தே செல்லும் சடையை யுடையவரே. இதுதான் யானோ உறுவேன். இது அடியேன் அயரும்படியோ என்று கூட்டிக்கோடலு மொன்று.

பா - ம்—*திருவாரூரார். †அடிகள்.

என்றின் னனவே பலவும் புகலும் இருளார் அளகச் சுருளோ தியையும், வன்றொண் டரையும் படிமேல் வர*முன் பருள்வான் அருளும் வகையார் நினைவார், சென்றும் பர்களும் பணியும் செல்வத் திருவா ரூர்வாழ் பெருமான் அடிகள், "அன்றங் கவர்மன் றலைநீர் செயும்" என் றடியார் அறியும் படியால் அருளி. கஎஅ

மன்னும் புகழ்நா வலர்கோன் மகிழ "மங்கை பரவை தன்னைத் தந்தோம், இன்ன வகைநம் அடியார் அறியும் படியே உரைசெய் தனம்" என் றருளிப், பொன்னின் புரிபுன் சடையன் விடையன் பொருமா கரியின் உரிவை புனைவான், அன்ன நடையாள் பரவைக் "கணிய தாரூ ரன்பால் மணம்" என் †றருள. கஎகூ

காமத் துயரில் கவல்வார் நெஞ்சில் ‡கரையில் இருளும் கங்குல் கழிபோம், யாமத் திருளும் புலரக் கதிரோன் எழுகா லையில்வந் தடியார் கூடிச், சேமத் துணையாம் அவர்பேர் அருளைத் தொழுதே திருநா வலர்கோன் மகிழத், தாமக் குழலாள் பரவை வதுவை தரு நீர் மையினால் நிகழச் செய்தார். கஅ0

## வேறு

தென்னாவ லூர்மன்னன் தேவர்பிரான் திருவருளால்
மின்னாருங் கொடிமருங்குல் பரவையெனும் மெல்லியல்தன்

---

கஎஅ. அளகம் - ஐம்பாலுள் ஒன்று; ஐம்பால்: குழல், அளகம், கொண்டை, பனிச்சை, துஞ்சை (சுருள், குரல், அளகம், துஞ்சு குழல், கொண்டை—நச்சினார்க்கினியர்). ஓதியையும் - தலை மயிரையுடைய பரவையாரையும். படிமேல் வர - பூமியின்மீது தோன்ற. முன்னர் (கயிலையில்) கட்டளையிட்டருளிய சிவபெருமான் இப்பொழுது அருளும்வகை யார் அறிவார்? உம்பர்களும் - தேவர்களும். பெருமான் அடிகள் - தியாகேசப் பெருமான். அவர் மன்றலை - பரவையார் நம்பியாரூரர் திருமணத்தை.

கஎகூ. பொன்னின்-பொன்போலும். பொருமாகரியின் உரிவை - போருக்குரிய பெரிய யானையின் தோலை. அணியது-சமீபத்தது. பரவைக்கும், 'ஆரூரன் பால் உனக்கு மணம் அணியது' என்று அருள.

கஅ0. கரையில் - அளவில்லாத; கரைதலில்லாத எனலுமாம். கங்குல் கழிபோம் யாமத்து இருளும் புலர - (இருவர்க்கும்) மிக நீடித்திருந்த இரவின் இருளும்விடிய. கழிந்துபோகும் யாமம் கடையாமம். சேமத்துணையாம் அவர் - சேம நிதிபோன்று துணைபுரியும் தியாகேசப் பெருமான். தாமக்குழலாள் பரவை - மாலை யணிந்த கூந்தலையுடையவராகிய பரவையார். வதுவை - திருமணம். தருநீர்மையினால் - முறைப்படி.

கஅக. மருங்குல்-இடையையுடைய. பொன்னாரும்-பொன்போலுந் தேமல் படர்ந்த. துங்கல் - மலை. குவடே - உச்சியே. யோகம் - புணர்ச்சி. பரம்பரையில்-

பா - ம் — *முன்னருள்வான். †அருளி. ‡கரைவல.

பொன்ஞரும் முலைஓங்கல் *புணர்குவடே சார்வாகப்
பன்னாளும் பயில்†யோக பரம்பரையின் விரும்பினார். கஅக

தன்னையா ளுடையபிரான் சரணார விந்தமலர்
சென்னியினுஞ் சிந்தையிலும் மலர்வித்துத் திருப்பதிகம்
பன்னுதமிழ்த் தொடைமாலை பலசாத்திப் பரவையெனும்
மின்னிடையாள் உடன்கூடி விளையாடிச் செல்கின்றார். கஅஉ

வேறு

மாதுடன் ‡கூட வைகி மாளிகை மருங்கு சோலை,
போதலர் வாவி மாடு செய்குன்றின் புடையோர் தெற்றிச்
சீதளத் தரளப் பந்தர்ச் செழுந்தவி சிழிந்து தங்கள்
நாதர்பூங் கோயில் நண்ணிக் கும்பிடும் விருப்பால் நம்பி. கஅங

அந்தரத் தமரர் §போற்ற அணிகிளர் ஆடை சாத்திச்
சந்தனத் தளறு தோய்ந்த குங்குமக் கலவை சாத்திச்
சுந்தரச் சுழியஞ் சாத்திச் சுடர்மணிக் கலன்கள் சாத்தி
இந்திரத் திருவின் மேலாம் எழில்¶பெற விளங்கித் தோன்ற. கஅச

நாளுக்குநாள்; யோகிகள் யோகத்தைப் பரம்பரை பரம்பரையாக விரும்புவது போல்; நம்பியாரூரரும் யோக பரம்பரையினராதலின் அதை விரும்பினாரென்க. மலைக் குவடு யோகத்துக்குப் பொருந்தியவிடம். நம்பியும் சிவயோகி; நங்கையுஞ் சிவயோகி. இருவர் போகமும் யோகத்தின்பாற் பட்டதே. சிவத்தில் ஒன்றி அதை நினைந்து நினைந்து சிவமாய இருவர் சேர்க்கையை யோகம் எனக் கூறியது மிகப் பொருத்தம். போகமெனப் பாடங் கொள்ளினும் பொருள் ஒன்றே. இந் நுட்பம் "பண்மயத்த மொழிப்பரவை சங்கிலிக்கும் எனக்கும் பற்றாய பெருமானே" என்று நம்பியாரூரர் திருவாக்கிலேயே விளங்குதல் காண்க (திருநாகைக் காரோணம் : கக).

கஅஉ. அரவிந்தமலர் - தாமரைப் பூ.

கஅங. மாளிகையிலும், அருகிலுள்ள சோலையிலும், தாமரைப் பூ மலரும் தடாகத்தின் பக்கத்திலும், செய்குன்றிலும், அதன் பக்கத்துள்ள திண்ணையிலும், குளிர்ந்த முத்துப் பந்தர்க் கீழிட்டுள்ள அழகிய ஆசனத்திலும் மாதுடன் கூட வைகி, ஆங்காங்கிருந்து இழிந்து (இறங்கி). பூங்கோயில் - கமலாலயம்.

கஅச. அந்தரத்து அமரர் - வானத்துள்ள தேவர்கள். அணிகிளர் - அழகு விளங்கும். அளறு - குழம்பு. சுழியம் - கிரீடம் ; சூளியம் என்னும் வட சொற் சிதைவு; சூழியம்; சுழியம். மணிக்கலன்கள் - இரத்தினுபரணங்கள். தேவேந்திரச் செல்வ அழகினும். எழில் - அழகு.

பா - ம்—*பொரு. †போகம். ‡கூடிவைகும். §போற்றும். ¶மிக.

கையினில் புனைபொற் *கோலும் காதினில் இலங்கு தோடும்
மெய்யினில் துவளு நூலும் நெற்றியில் விளங்கு நீறும்
"ஐயனுக் கழகி தாம்"என் றுயிழை மகளிர் போற்றச்
சைவமெய்த் திருவின் கோலம் தழைப்பவீ தியினைச் சார்ந்தார். கஅரு

"நாவலூர் வந்த சைவ நற்றவக் களிறே" என்றும்
"மேவலர் புரங்கள் செற்ற விடையவர்க் கன்ப" என்றும்
"தாவில்சீர்ப் பெருமை ஆரூர் மறையவர் தலைவ" என்றும்
மேவினர் இரண்டு பாலும் வேறு†வே றுயம் போற்ற. கஅசு

கைக்கிடா குரங்கு கோழி சிவல்கவு தாரி பற்றிப்
பக்கமுன் போது வார்கள் பயில்மொழி பயிற்றிச் செல்ல
மிக்கபூம் பிடகை கொள்வோர் விரையடைப் பையோர் சூழ
‡மைத்தடங் கண்ணி னார்கள் மறுகநீள் மறுகில் வந்தார். கஅஎ

பொலங்கலப் புரவி பண்ணிப் போதுவார் §பின்பு போத
இலங்கொளி ¶வலயப் பொற்றோள் இடையிடை மிடைந்து தொங்கல்
நலங்கிளர் நீழல் ||சூழ நான்மறை முனிவ ரோடும்
அலங்கலந் தோளி னான்வந் தணைந்தனன் அண்ணல் கோயில். கஅஅ

---

கஅரு. புனை - அலங்கரித்த. ஆயிழை - திருந்தின ஆபரணங்களை யணிந்த.

கஅசு. களிறே - ஆண் யானையே. மேவலர் - பகைவர். புரங்கள் செற்ற - முப்புரங்களையும் அழித்த. தாவில் - கெடாத. ஆரூரர் என்பது பிள்ளைத் திருநாமம். இங்கே அப்பெயர் சிறப்புப் பெறுகிறது. பாட்டு ச : குறிப்புப்பார்க்க. இருபாலும் - இரண்டுபக்கமும். ஆயம் - கூட்டம்.

கஅஎ. கை - கையிலே. கிடா - ஆட்டுக்கிடாவும். சிவல் - காடையும். பயில் மொழி - குறிப்பு மொழி ; போருக்கும் விளையாட்டுக்கும் வழங்கும் மொழி. பயிற்றி-கற்பித்து. பிடகை - பூக்கூடை. விரை-வாசனைப் பொருள்கள். அடைப் பை - வெற்றிலை பாக்கு முதலியன வைக்கும் பை. மைத்தடம் - கரிய விசால மான. மறுக - திரிய. மறுகில் - திருவீதியில். "மாட மறுகின் மனைதொறு மறுகி"—**சிலப்பதிகாரம்** கரு அடைக்கல : கூக. "மறுகிடை மறுகும் கவலை யிற் கவலும்"—உஉ அழற்படு : கரு.

கஅஅ. பொலம் கலம் - பொற்கலங்கள் பூட்டிய. பண்ணி - சீர்படுத்தி. வலயம் - வாகுவலய மணிந்த. தோளின். மிடைந்து - நெருங்கி. தொங்கல் - மாலை களின். நலங்கிளர் - அழகு பொலியும் ; குளிர்ச்சியுள்ள. அலங்கலம் தோளி னான் - அசைதலையுடைய கையினராகிய நம்பியாரூரர். அலங்கலம்-மாலையுமாம். "தோளிற்றிருகுவான் போன்ம்"—கலித்தொகை க0க : நஉ; "நாளுற்று நம்பி பிறந்தான் திசைபத்து நந்தத் - தோளுற்றோர் தெய்வம் துணையாய்த் துயர்தீர்த்த வாறும்"—சிந்தாமணி 10. (தோள் - கை—நச்சினார்க்கினியம்.)

பா - ம்—*செண்டும். †வேறுகப். ‡மைக்கருங். §முன்பு. ¶வயிரப். ||சூழல்.

கண்ணுதல் கோயில் தேவா சிரியனுங் *காவ ணத்துள்
விண்ணவர் ஒழிய மண்மேல் மிக்கசீர் அடியார் கூடி
எண்ணிலார் இருந்த போதில் "இவர்க்குயான் அடியா னுகப்
பண்ணுநாள் எந்நாள்" என்று பரமர்தாள் †பரவச் சென்றூர். கஅகூ

அடியவர்க் கடிய னுவேன் என்னும்ஆ தரவு கூரக்
கொடிநெடுங் கொற்ற வாயில் பணிந்துகை குவித்துப் புக்கார்
கடிகொள்பூங் கொன்றை வேய்ந்தார் அவர்க்கெதிர் காணக் காட்டும்
படியெதிர் தோன்றி நிற்கப் பாதங்கள் பணிந்து பூண்டு. ககூo

கஅகூ. கண்ணுதல் - திருநகரச்சிறப்பு : பாட்டு - சகூ குறிப்புப்பார்க்க. தேவா சிரியனும் காவணத்துள் - தேவாசிரிய மண்டபத்தில். ஒழிய - நீங்கலாக.

ககூo. ஆதரவுகூர - அன்புவளர (கூர்தல் - உள்ளது சிறத்தல்). கொற்றம் - வெற்றி. கடி - வாசனை. வேய்ந்தார் - அணிந்த தியாகேசப்பெருமான். அவர்க்கு - நம்பியாரூரர்க்கு. எதிர்காணக் காட்சியளிக்க நம்பியாரூரர் முன்னே தோன்றி நிற்க. இப்பாட்டினைத் தொடர்ந்து, திருநெல்வேலிச் செங்கோல் மடத்து ஏட்டுப் பிரதியில் கீழ்வரும் பாக்கள் அதிகமாகக் காணப்படுகின்றன. (க) "வன் தொண்டர் காதல் கண்டு மழவிடை உடையார் தாமும் - முன்தொண்ட ராக ஆண்ட முதல்நம்பி யாரூ ரர்க்குச் - சென்றங்கு போற்று மிக்க திருத்தொண்டர் தம்பாற் சேர - ஒன்றும்பண் பருள வேண்டி ஒருதொண்டர் வெகுளச் செய் தார்.—(உ) பெருந்தவத் தொண்டரான பெருமிறன் மிண்ட ரென்பார்-இருந்தவக் குழாத்தி னின்றும் எதிர்செயிர்த் தெழுந்து நின்று - அருந்தவப் பெரியோர் தம்மைப் பணிந்தணை யாது போன - வருந்தவற் றுடைய வேட மற்றிவ னுர்கொல் என்று—(ங) பக்க மேவரு வார்கள் பலருடன் - புக்கபோது பொருவிறன் மிண்டர் தாம் - மிக்கெ ழுந்த வெகுளியால் நம்பிபால் - தக்க வல்லன சாலவுஞ் சொல்லினர் —(ச) சொன்ன தொண்டரை நோக்கிமெய்த் தொண்டரால் - மன்னி நீடு வளர் பெருங் கூட்டத்து - முன்னி ருந்தார் ஒருவர் மொழிகின்றார்-இன்னல் சொல்லல் இயல்பல்ல வாமென்று—(ரு) ஓலை காட்டி உடையவர் முன்னின்று - ஞால மேற்க ஆட் கொண்டருள் நம்பியைச் - சீல முன்பறி யாதிவை செப்பினீர் - கோலமே கண்டுகூறலா மோஎன்றூர்—(சு) என்றுகூற இகழ்ந்து விறன்மிண்டர்-நன்று சாலவு நம்பெரு மக்கள்வந் - தொன்று கூட்டம் உணரா ஒருவனை - அன்று தம்பிரான் ஆள்வ தழகிதால்—(எ) கருந்தடங் கண்ணி பாகர்தங் காதல்சூழ் - அருந்தவத் தடியாரை அணைவின்றிப் - புரிந்த பண்பினில் தூர்த்தன் புறகெனு - இருந்த தொண் டர் திருக்கைசாத் தும்மென—(அ) வெம்பி நீர்மொழி யீர்விறன் மிண்டரே - நம்பி யாரூரர் காணும்அந் நாயனுர் - அம்பொன் மாளிகை ஆரூர் அமர்ந்தருள் - தம்பி ரான் தோழ னுர்அவர் தாமென—(கூ) தோழ ராகிலும் தொண்டரே யாகிலும் - ஆழி மாலயன் காணு அருட்கழல் - சூழும் மெய்யடி யாரைத் தொடர்வின்றி -

பா - ம்—*காவணத்து. †பணியச்.

## வேறு

மன்பெ ருந்திரு மாமறை வண்டு*சூழ்
அன்பர் சிந்தை அலர்ந்தசெந் தாமரை
நன்பெ ரும்பர மானந்த நன்மது
என்த ரத்தும் அளித்தெதிர் நின்றன. ௧௯௧

---

வாழு மூரன் பிரானுதல் வைத்திலம்—(௧௦) இன்ன வாறடி யார்புற கென்றபின் - தன்ன வாறறிந் தஞ்சிஆ ரூரர்தாம் - மின்னு வார்சடை வேதியன் தான் தொழப் - பொன்ன வாமணிப் பூங்கோயில் சார்தலும்—(௧௧) பொங்கு மாமறைப் புற்றிடங் கொண்டவர் - அங்குக் காட்சி கொடுத்தரு ளாமையில் - இங்கும் பேறெனக் கில்வண்ண மோஎன்பார் - எங்குந் தேடி அழிவுற் றியம்புவார்—(௧௨) என்னை ஆட்கொண்ட ஈசனு மாய்எனக் - கன்னை யாய்அமு தாய்அறி வாயினாய் - பொன்னை ஆர்ந்த புரிசடைப் புண்ணியா ! - உன்னை யான்இங்குக் காணேன் ஒளித்தியோ—(௧௩) வெள்ள நீர்பரந் தோங்கும் விரிசடை - வள்ளலே மலை யாள்மண வாளனே - தெள்ளு மாமறை யின்தெளி வாகிஎன் - உள்ள மேபுகுந் தாய்இங் கொளித்தியோ—(௧௪) ஈச னேஎனக் கெய்ப்பினில் வைப் பெனப் - பேச லாகும் பெரும்பொரு ளாயினாய் - தேச னேசிவ னேசிவ லோ கனே - ஓசை யேஉனை யான்உணர் வேன்என்று—(௧௫) தோழ ராகிநற் சுற்றமு மாய்அடி - நீழல் தந்தளிப் பார்எதிர் நீங்கவும் - ஆழி போன்ற அடியார் மூனிய வும் - வாழி வன்தொண்டர் சால வருந்தினார்—(௧௬) வேண்டி ஆட்கொண்ட வீறு டைத் தொண்டரை - ஆண்ட நாயகர் அவர்வென் றருள்செய்து - காண்ட கும்படி காட்சி கொடுத்தலும் - பூண்டு கொண்டவர் பொன்னடி போற்றுவார். இப்பாக்கள், தமது வீட்டு ஏட்டுப்பிரதியில் காணப்பட்டன என்று இலக் கண விளக்கப் பரம்பரை திருவாரூர் - **சோமசுந்தர தேசிகரவர்கள்**, அவைகளைச் ''செந்தமிழ்'' தொகுதி 17-ல் வெளியிட்டுள்ளார்கள். இப்பிரதியிலுள்ள பாடல் களுக்கும் அப்பிரதியிலுள்ள பாடல்களுக்கும் மிகச் சில விடங்களில் வேற்றுமை களிருக்கின்றன. ௧௯௦ - பாட்டைத் தொடர்ந்து ''வேண்டி......போற்றுவார்'' என்னும் பாட்டும், ௨௦௨ -ம் பாட்டைத் தொடர்ந்து ''அப்பெரியோர் சிவனருளால் அளவிறந்த கருணையால் - ஒப்பரிய ஆரூரன் பிரானுதல் உளதாமென் - றிப்பரிசுக் கினத்திருக்கை சாத்துமென எழுந்தனவால் - முப்புவனங் களும்உய்ய எழுந்த ஒலி திருக்கைஒலி'' என்னும் பாட்டும் நாகர்கோயில் **தேசிகவிநாயகம் பிள்ளை** யவர்கள் வீட்டுப் பிரதியில் காணப்படுகின்றன.

௧௯௧. மறை வண்டு - வேதமாகிய வண்டு. என்தரத்தும் - எனக்கும் (இழிவுக் குறிப்பு). ஆண்டவன் பாதங்களை (செந்தாமரையை) மறை வண்டு சூழ்ந்து கிடக்கும்; அவை அன்பர் சிந்தையில் அலர்வன ; பரமானந்தம் என்னும் தேனைப் பிலிற்றுவன.

பா - ம்—*சூழ்ந்து.

ஞாலம் உய்ய நடம்மன்றுள் ஆடின
கால னாருயிர் மாளக் கறுத்தன
மாலை தாழ்குழல் மாமலை யாள்செங்கை
சீல மாக வருடச் சிவந்தன. கககஉ

நீதி மாதவர் நெஞ்சில் *பொலிந்தன
வேதி யாதவர் தம்மைவே திப்பன
சோதி யாய்எழுஞ் சோதியுட் சோதிய
ஆதி மாலயன் காணா அளவின. கககங

வேத ஆரணம் மேற்கொண் டிருந்தன
பேதை யேன்செய் பிழைபொறுத் தாண்டன
ஏத மானவை தீர்க்க இசைந்தன
பூத நாத!நின் புண்டரீ கப்பதம். கககச

வேறு

இன்னவா றேத்து நம்பிக் கேறுசே வகனார் தாமும்
அந்நிலை அவர்தாம் வேண்டும் அதனையே அருள வேண்டி
மன்னுசீர் அடியார் தங்கள் வழித்தொண்டை உணர நல்கிப்
பின்னையும் அவர்கள் தங்கள் பெருமையை அருளிச் செய்வார். கககரு

"பெருமையால் தம்மை ஒப்பார் பேணலால் எம்மைப் பெற்றார்
ஒருமையால் உலகை வெல்வார் ஊனமேல் ஒன்றும் இல்லார்

---

கககஉ. கறுத்தன - கோபித்தன. "கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப்பொருள" - தொல்காப்பியம்: சொல் எகூ. மலையாள் - உமையம்மையார். சீலமாக - விருதுவாக. வருட - தடவ. சிவந்தன - செந்நிறமடைந்தன.

கககங. வேதியாதவர் தம்மை - மலத்தினின்றும் நீங்காதவர்களை; தம்மை உணராதவர்களை. வேதிப்பன - அவர்தம் மலத்தை நீக்குவன. திருவடிகளை உணராமைக்குக் காரணம் அறியாமை. அவ்வறியாமையை (மலத்தை)த் திருவருள் (திருவடி) நீக்குமென்க. (களிம்புடைய செம்பை வேதித்துக் களிம்பைப் போக்கிப் பொன்னாக்குவது போல). சோதிய - சோதியாய் விளங்குவன.

கககச. வேத ஆரணம் மேற்கொண்டிருந்தன - வேதத்தின் ஞானபாகத்தின் (உபநிடதங்களின்) மேலேறுவன. ஏதமானவை - குற்றமானவைகளை. பூதம் - உயிர்கள். புண்டரீகம் - தாமரை.

கககரு. ஏறு சேவகனார் - எருதேறும் வீரர்; எவரினு முயர்ந்த வீரர் என்பது பழைய குறிப்புரை. அவர் - நம்பியாரூரர். வழிவழியாக வருந் தொண்டை. உணர நல்கி - அறியத் திருவருள்செய்து.

கககசு. பேணலால் - இடையறாது தியானித்தலால். ஒருமையால் - ஒருமையுணர்வால். உலகம் பன்மை யுணர்வால் பாதிக்கப்படுதலின் "ஒருமை

பா - ம்—*பொலிவன.

அருமையாம் நிலையில் நின்றார் அன்பினால் இன்பம் ஆர்வார்
இருமையுங் கடந்து நின்றார் இவரைநீ அடைவாய்'' என்று. ககசு

நாதனார் அருளிச் செய்ய நம்பியா ரூரார் ''நானிங்
கேதந்தீர் நெறியைப் பெற்றேன்'' என்றெதிர் வணங்கிப் போற்ற
''நீதியால் அவர்கள் தம்மைப் பணிந்துநீ நிறைசொன் மாலை
கோதிலா வாய்மை யாலே பாடென'' அண்ணல் கூற. ககஎ

தன்னையா ரூடைய நாதன் தானருள் செய்யக் கேட்டுச்
சென்னியால் வணங்கி நின்ற திருமுனைப் பாடி நாடர்
''இன்னவா றின்ன பண்பென் றேத்துகேன் †இதற்கு யானார்
பன்னுபா மாலை பாடும் பரிசெனக் கருள்செய்'' என்ன. ககஅ

வேறு

தொல்லைமால் வரைபயந்த தூயாள்தன் திருப்பாகன்
அல்லல்தீர்ந் துலகுய்ய மறையளித்த திருவாக்கால்
''தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்''என்று
''எல்லையில்வண் புகழாரை எடுத்திசைப்பா மொழி''என்றான். ககக

---

யால் உலகை வெல்வார்'' என்றார். ஒருமை புணர்வு பெற்றோர்க்கு எவ்வித ஊனமும் (பிறவி முதலிய துன்பங்களும்) நேர்வதில்லை. ''ஒன்றியிருந்து நினைமின்கள் உந்தமக்கு ஊனம் இல்லை - கன்றியகாலனைக் காலால் கடிந்தான் அடியவற்கா''—அப்பர்: கோயில் திருவிருத்தம் உ. ஊனமில்லா அருமையாம் நிலை. ஆர்வார் - நுகர்வார். தத்துவக் காரியங்கள் தாக்காத விடத்தில் எழுவது உண்மை அன்பு. அவ்வன்பால் நுகர்வது உண்மை இன்பம் என்க. அவ்வன்பே இன்பமுமாம். ''அறிவாப்பதங்கள் யாவையுங்கடந்த இன்பமே என்னுடை அன்பே''—திருவாசகம்: அநுபோக இலக்கணம் க. இருமை - இறப்புப் பிறப்புக்களை.

ககஎ. ஏதம் தீர் - குற்றம் ஒழிந்த. அவர்கள் தம்மை - அடியார்களை. அண்ணல் - சிவபெருமான்.

ககஅ. திருமுனைப்பாடி நாடர் - நம்பியாரூரர். இன்னவாறு இன்ன பண்பு என்று ஏத்துகேன் - அடியார்கள் வரலாறு இன்ன தென்றும் அவர்கள் தன்மை இத்தகைய தென்றும் தெரியாத யான் அவர்களை எங்ஙனம் ஏத்துவேன்? பன்னு - அவர்தம் புகழைச் சொல்லும். பரிசு - இயல்பு; சக்தி.

ககக. பழைய|பெரிய இமயமலை ஈன்ற தூய்மையுடைய உமாதேவியாரை இடப்பக்கத்தில் கொண்ட சிவபெருமான். என்று - என்று அடியெடுத்துக் கொடுத்து. புகழாரை - அடியவர்களை. இசைப்பாவால்.

பா - ம்—*ஆவார். †அதற்கு யானோர்.

மன்னுசீர் வயல்ஆரூர் மன்னவரை வன்றொண்டர்
சென்னியுற அடிவணங்கித் திருவருள்மேற் கொள்பொழுதில்
முன்னமால் அயன்அறியா முதல்வர்தாம் எழுந்தருள
அந்நிலைகண் டடியவர்பால் சார்வதனுக் கணைகின்றார். உ00

ஆரத்தே திருக்கூட்டம் பலமுறையால் தொழுதன்பு
சேரத்தாழ்ந் தெழுந்தருகு சென்றெய்தி †நின்றழியா
வீரத்தார் எல்லார்க்குந் தனித்தனியே றடியேனென்
றார்வத்தால் திருத்தொண்டத் தொகைப்பதிகம் அருள்‡செய்தார்.

தம்பெருமான் கொடுத்த§மொழி முதலாகத் தமிழ்மாலைச்
செம்பொருளால் திருத்தொண்டத் ¶தொகையான்ற திருப்பதிகம்
உம்பர்பிரான் தானருளும் உணர்வுபெற உலகேத்த
எம்பெருமான் வன்றொண்டர் பாடிஅவர் எதிர்பணிந்தார். உ0உ

உம்பர்நா யகரடியார் பேருவகை தாமெய்த
நம்பியா ரூரர்திருக் கூட்டத்தின் நடுவணைந்தார்
தம்பிரான் தோழரவர் தாம்மொழிந்த தமிழ்முறையே
எம்பிரான் தமர்கள்திருத் தொண்டேத்தல் உறுகின்றேன். உ0௩

ஆ திருவிருத்தம்—௩சக

---

உ00. மன்னவரை - தியாகராஜரை. திருவருள் படிகின்றபோது. எழுந்தருள - மறைந்தருள ; காட்சி கொடுத்தருள என்பது மொன்று.

உ0க. என்றும் நிலைபேறுக உள்ள வீரமாதலின் "நின்றழியா வீரத்தார்" என்றார். திருக்கூட்டச் சிறப்பு க-ம் பாட்டையும் குறிப்பையும் பார்க்க.

உ0உ. மொழி முதலாக என்றது "தில்லைவாழ் அந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்" என்பதை. ஆன்ற - அமைந்த. உம்பர் பிரான் - தெய்வ நாயகராகிய சிவபெருமான். அருளும் உணர்வு பெற - அருளிய உணர்வு உண்டாக. அருளும் உணர்வும் பெற என்னலுமாம். ஆண்டவனருட்டுணையால் பெற்ற உணர்வால் திருப்பதிகம் பாடினாரென்க. அவர் - அவ்வடியவர்கள். எதிர் - திருமுன்னே.

உ0௩. தமிழ் முறையே - திருத்தொண்டத் தொகை முறைப்படியே. எம்பிரான் தமர்கள் - சிவனடியார்கள் ; நாயன்மார்கள். இந்நூலுக்குப் பதிகம் திருத்தொண்டத் தொகை என்பது திருமலைச் சிறப்பில் விளக்கப்பட்டது. விளக்கம் ஆண்டுக் காண்க.

பா - ம்—*செல்வ. †நின்றிழியா. ‡செய்வார். §தருளி மொழிமுதலாத். ¶தொகையான.

## பதிகம்

### திருத்தொண்டத்தொகை - பண் - கொல்லிக்கௌவாணம்

திருச்சிற்றம்பலம்

தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன் திருநீல கண்டத்துக் குயவனார்க் கடியேன், இல்லையே என்னாத இயற்பகைக்கும் அடியேன் இளையான்றன் குடிமாறன் அடியார்க்கும் அடியேன், வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன் விரிபொழில்சூழ் குன்றையார் விறன்மிண்டர்க் கடியேன், அல்லிமென் முல்லையந்தார் அமர்நீதிக் கடியேன் ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே.

இலைமலிந்த வேல்நம்பி எறிபத்தர்க் கடியேன் ஏனாதி நாதன்றன் அடியார்க்கும் அடியேன், கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பர்க் கடியேன் கடவூரிற் கலயன்றன் அடியார்க்கும் அடியேன், மலைமலிந்த தோள்வள்ளல் மானக்கஞ் சாறன் எஞ்சாத வாட்டாயன் அடியார்க்கும் அடியேன், அலைமலிந்த புனல்மங்கை ஆனாயர்க் கடியேன் ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. உ

மும்மையால் உலகாண்ட மூர்த்திக்கும் அடியேன் முருகனுக்கும் உருத்திர பசுபதிக்கும் அடியேன், செம்மையே திருநாளைப் போவார்க்கும் அடியேன் திருக்குறிப்புத் தொண்டர்தம் அடியார்க்கும் அடியேன், மெய்ம்மையே திருமேனி வழிபடா நிற்க வெகுண்டெழுந்த தாதைதாள் மழுவினால் எறிந்த, அம்மையான் அடிச்சண்டிப் பெருமானுக் கடியேன் ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. ௩

திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட திருநாவுக் கரையன்றன் அடியார்க்கும் அடியேன், பெருநம்பி குலச்சிறைதன் அடியார்க்கும் அடியேன் பெருமிழலைக் குறும்பர்க்கும் பேயார்க்கும் அடியேன், ஒருநம்பி அப்பூதி அடியார்க்கும் அடியேன் ஒலிபுனல்சூழ் சாத்தமங்கை நீலநக்கர்க் கடியேன், அருநம்பி நமிநந்தி அடியார்க்கும் அடியேன் ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. ௪

வம்பறா வரிவண்டு மணநாற மலரும் மதுமலர்நற் கொன்றையான் அடியலாற் பேணா, எம்பிரான் சம்பந்தன் அடியார்க்கும் அடியேன் ஏயர்கோன் கலிக்காமன் அடியார்க்கும் அடியேன், நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன் நாட்டமிகு தண்டிக்கும் மூர்க்கர்க்கும் அடியேன், அம்பரான் சோமாசி மாறனுக்கும் அடியேன் ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. ௫

வார்கொண்ட வனமுலையாள் உமைபங்கன் கழலே மறவாது கல்லெறிந்த சாக்கியர்க்கும் அடியேன், சீர்கொண்ட புகழ்வள்ளல் சிறப்புலிக்கும் அடியேன் செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டர்க் கடியேன், கார்கொண்ட கொடைக்கழறிற் றறிவார்க்கும் அடியேன் கடற்காழிக் கணநாதன் அடியார்க்கும் அடியேன், ஆர்கொண்ட வேற்கூற்றன் களந்தைக்கோன் அடியேன் ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. ௬

பொய்யடிமை யில்லாத புலவர்க்கும் அடியேன் பொழிற்கருவூர்த் துஞ்சிய புகழ்ச்சோழர்க் கடியேன், மெய்யடியான் நரசிங்க முனையரையர்க் கடியேன்

விரிதிரைசூழ் கடல்நாகை அதிபத்தர்க் கடியேன், கைதடிந்த வரிசிலையான் கலிக் கம்பன் கலியன் கழற்சத்தி விரிஞ்சையர்கோன் அடியார்க்கும் அடியேன், ஐயடிகள் காடவர்கோன் அடியார்க்கும் அடியேன் ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே.

கறைக்கண்டன் கழலடியே காப்புக்கொண் டிருந்த கணம்புல்ல நம்பிக்குங் காரிக்கும் அடியேன், நிறைக்கொண்ட சிந்தையால் நெல்வேலி வென்ற நின்றசீர் நெடுமாறன் அடியார்க்கும் அடியேன், துறைக்கொண்ட செம்பவளம் இருளகற்றுஞ் சோதி தொன்மயிலை வாயிலான் அடியார்க்கும் அடியேன், அறைக்கொண்ட வேல்நம்பி முனையடுவார்க் கடியேன் ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. அ

கடல்சூழ்ந்த உலகெலாங் காக்கின்ற பெருமான் காடவர்கோன் கழற்சிங்கன் அடியார்க்கும் அடியேன், மடல்சூழ்ந்த தார்நம்பி இடங்கழிக்குந் தஞ்சை மன்னவனாஞ் செருத்துணைதன் அடியார்க்கும் அடியேன், புடைசூழ்ந்த புலியதள்மேல் அரவாட ஆடிப் பொன்னடிக்கே மனம்வைத்த புகழ்த்துணைக்கும் அடியேன், அடல்சூழ்ந்த வேல்நம்பி கோட்புலிக்கும் அடியேன் ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. கூ

பத்தராய்ப் பணிவார்கள் எல்லார்க்கும் அடியேன் பரமனையே பாடுவார் அடியார்க்கும் அடியேன், சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கும் அடியேன் திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன், முப்போதுந் திருமேனி தீண்டுவார்க் கடியேன் முழுநீறு பூசிய முனிவர்க்கும் அடியேன், அப்பாலும் அடிச்சார்ந்த அடியார்க்கும் அடியேன் ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. க0

மன்னியசீர் மறைநாவன் நின்றவூர்ப் பூசல் வரிவளையாள் மானிக்கும் நேசனுக்கும் அடியேன், தென்னவனாய் உலகாண்ட செங்கணார்க் கடியேன் திருநீலகண்டத்துப் பாணனார்க் கடியேன், என்னவனாம் அரனடியே அடைந்திட்ட சடையன் இசைஞானி காதலன் திருநாவ லூர்க்கோன், அன்னவனாம் ஆரூரன் அடிமைகேட் டுவப்பார் ஆரூரில் அம்மானுக் கன்பரா வாரே. கக

திருச்சிற்றம்பலம்

உ. தில்லைவாழந்தணர் சருக்கம்

# தில்லைவாழந்தணர் புராணம்



ஆதியாய் நடுவும் ஆகி அளவிலா அளவும் ஆகிச்
சோதியாய் உணர்வும் ஆகித் தோன்றிய பொருளும் ஆகிப்
பேதியா ஏகம் ஆகிப் பெண்ணுமாய் ஆணும் ஆகிப்
போதியா நிற்கும் தில்லைப் பொதுநடம் போற்றி போற்றி. க

---

க. இங்கே முதலிரண்டு பாக்களான் தில்லைக் கூத்தன் வணக்கம் சொல்லப்பட்டிருக்கிறது. பதிகமாகிய திருத்தொண்டத் தொகையைப் பீடிகையாக்கொண்டு அடியார்கள் வரலாறு கூறப் புகுந்த இவ்விடத்தில், அப்பதிகத்துக்கும், இந்நூலுக்கும் முதலடி எடுத்துதவிய ஆண்டவன் அருளை நினைந்து வணக்கங் கூறியவாறு காண்க. பரம்பொருள் அநாதி. அஃது ஆதியும் அந்தமும் இல்லாதது. அவ்வொன்றை ஈண்டு "ஆதியாய்" என்றது என்னை? பரம்பொருள் தோற்றக் கேடில்லாதது. தோற்றக் கேடில்லா ஒன்றனிடத்துத் தோற்றக் கேடுடைய எல்லாம் ஒடுங்குதல் இயல்பு. ஒடுங்கிய எல்லாம் மீண்டுந் தோன்றுதற்கும் நிலைக்களனாயிருப்பது தோற்றக் கேடில்லாத அவ்வொன்றேயாகும். ஒடுங்கிய எல்லாம்மீண்டுந் தோன்றுதற்குப் பரம்பொருள் துணை நிற்றலான், அஃது ஆதியை(தோற்றத்தை-படைப்பை)ச் செய்வதாகிறது. இதனால் அஃது ஆதியாகிறதென்க. ஈண்டு "நடு" என்பது காப்பதைக்குறிப்பது. படைத்தற்கு முதலாக உள்ள ஒன்றே அப்படைப்பை நிலைக்கச்செய்தலான், "நடுவாகி" என்றார். ஆதி நடு இவைகளின் இனமாகிய இறுதியையும் ஈண்டுச் சேர்த்துக் கொள்க. "அவன் அவள் அது எனும் அவை மூவினைமையின் - தோற்றிய திதியே ஒடுங்கி மலத்துளதாம் - அந்தம் ஆதி என்மனார் புலவர்"—சிவஞானபோதம் க. "படைத்தளித் தழிப்ப மும்மூர்த்திக ளாயினை"— திருஞானசம்பந்தர்: திருவெழு கூற்றிருக்கை ௪. வேதுக்களாலும் எடுத்த மொழியாலும் பிறவாற்றாலும் அளக்கமுடியா அளவினது என்பார் "அளவிலா அளவுமாகி" என்றார். "யார்அறி வார்எங்கள் அண்ணல் பெருமையை - யார்அறி வார்அந்த அகலமும் நீளமும் - பேர்அறி யாத பெருஞ் சுடர் ஒன்றதின் - வேர்அறி யாமை விளம்புகின் றேனே"—திருமந்திரம்: அவையடக்கம் க. பசுஞானத்தாலும் பாசஞானத்தாலும் அளந்து உணரமுடியாத ஒன்றாயினும், அது பதிஞானத்தில் சோதியாய் விளங்கலான், "சோதியாய்" என்றார். பதிஞானம் பெற்றவர்க்கு உணர்வாக ஒளிர்தலான், "உணர்வுமாகி" என்றார். கடவுள், தன்னால் தோற்றுவிக்கப்படும் பொருள்களினின்றும் பிரிந்து வேறே நில்லாது, அவைகளுடன் கலந்து நிற்றலான், "தோன்றிய பொருளுமாகி" என்றார். காணப்பட்ட பொருளுமாகி என்று கொள்க. பரம்பொருள் பலவற்றிலுங் கலந்து நிற்பினும், அது மாறுதலின்றி ஒன்றாகவே நிற்பது என்பார்

கற்பனை கடந்த சோதி கருணையே உருவ மாகி
அற்புதக் கோல *நீடி அருமறைச் சிரத்தின் மேலாம்
சிற்பர வியோம மாகுந் திருச்சிற்றம் பலத்துள் நின்று
பொற்புடன் நடம்செய் கின்ற பூங்கழல் போற்றி போற்றி. உ

போற்றிநீள் தில்லை வாழ்அந் தணர்திறம் புகல லுற்றேன்
நீற்றினால் நிறைந்த கோல நிருத்தனுக் குரிய தொண்டாம்
பேற்றினார் பெருமைக் கெல்லை ஆயினார் பேணி வாழும்
ஆற்றினார் பெருகும் அன்பால் அடித்தவம் புரிந்து வாழ்வார். ங

பொங்கிய திருவில் நீடும் பொற்புடைப் பணிகள் ஏந்தி
மங்கலத் தொழில்கள் செய்து மறைகளால் துதித்து மற்றும்

---

"பேதியா ஏகமாகி" என்றார்; "வேகமாகி" எனக்கொள்வோரு முளர். பரம் பொருள் ஒன்றாயினும் அதன் இயல் இரண்டு. ஒன்று தண்மை; மற்றொன்று வெம்மை. தண்மை கூட்டுவது; வெம்மை பிரிப்பது. தண்மையும் வெம்மையும் முறையே பெண் ஆணாகச் சொல்லப்படுவது மாபு. இதுபற்றிப் "பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத்துணை" என்னும் நூலின் முதல் அதிகாரத்தில் விரித்துக் கூறியுள்ளேன். விளக்கம் ஆண்டுக் காண்க. "ஆணெலாம் இறைவன் பெண்ணெலாந் தேவி"—சைவபுராணம். போதியாநிற்கும் - "ஆதியாய்......ஆணுமாயிருத்தல்" முதலியவற்றைக் கற்பியா நிற்கும். பொது - அம்பலம்; சபை; எல்லாவிடங்களிலும் வேற்றுமை யின்றிப் பொதுவாகச் செய்யப்படும் நடம் எனினுமாம். நடம் போற்றி - திருநடத்துக்கு வணக்கம்.

உ. "உரு அருள்..."—சிவஞானசித்தியார். உயிர்கள் பொருட்டு ஆண்டவன் தாங்குங் கோலங்கள் மாயை கடந்தனவாதலான் "அற்புதக்கோலம்" என்றார். பலரால் எளிதில் நிகழ்த்த முடியாத ஒன்று அற்புதம் எனப்படும். வியக்கத்தக்க அழகு மிகுந்து எனினுமாம். நீடி - பெருகி; சிறந்து. அருமறைச் சிரத்தின் மேலாம் - வேதாந்தத்தின் (உபநிடதங்களின்) மேலும் ஒளிரும். சிற்பர வியோமமாகும் - சிதாகாச சொரூபமாய்த் திகழும். திருச்சிற்றம்பலம் - பாயிரம் பாட்டு : க; தடுத்தாட்கொண்ட புராணம் பாட்டு : கOச குறிப்புகளைப் பார்க்க. பொற்புடன் - அழகுடன்.

ங. தில்லைக் கூத்தனைப்போற்றி. தொண்டுசெய்யும் பேற்றினையுடையவர்கள். பெருமைக்கு எல்லையென்றதனால், வேறு பெருமை இல்லை என்றபடி. தொண்டால் நேரும் பெருமையின் சிறப்புக் கூறியவாறு. நன்மையைப் பேணிவாழும் நெறியில் நிற்பவர்கள். திருவடியை அடைதல் வேண்டுமென்று செய்யப்படுந் தவம்.

ச. ஓங்கி வளர்கின்ற திருவருட் செல்வம் போல, ஓங்கி வளரும் அழகுடைய திருத்தொண்டுகளைத் தாங்கி. பொற்புடைப் பணிகள் - பொன்

பா - ம்—*நீட.

தங்களுக் கேற்ற பண்பில் தரும்பணித் தலைநின் றுய்த்தே
அங்கணர் கோயில் உள்ளா அகம்படித் தொண்டு செய்வார்.

வருமுறை எரிமூன் றோம்பி மன்னுயிர் அருளால் மல்கத்
தருமமே பொருளாக் கொண்டு தத்துவ நெறியில் செல்லும்
அருமறை நான்கி னோடா றங்கமும் பயின்று வல்லார்
திருநடம் புரிவார்க் காளாம் திருவினால் சிறந்த *சீரார். ௫

மறுவிலா மரபின் வந்து மாறிலா ஒழுக்கம் பூண்டார்
அறுதொழில் ஆட்சி யாலே அருங்கலி நீக்கி உள்ளார்
உறுவது நீற்றின் செல்வம் எனக்கொளும் உள்ளம் மிக்கார்
பெறுவது சிவன்பால் அன்பாம் பேறெனப் பெருகி வாழ்வார். ௬

ஞானமே முதலா நான்கும் நவையறத் தெரிந்து மிக்கார்
தானமும் தவமும் வல்லார் தகுதியின் பகுதி சார்ந்தார்
ஊனமேல் ஒன்றும் இல்லார் உலகெலாம் புகழ்ந்து போற்றும்
மானமும் பொறையும் தாங்கி மனைஅறம் புரிந்து வாழ்வார். ௭

செம்மையால் தணிந்த சிந்தைத் தெய்வவே தியர்க ளானார்
மும்மைஆ யிரவர் தாங்கள் போற்றிட முதல்வ னாரை
இம்மையே பெற்று †வாழ்ந்தார் இனிப்பெறும் பேறொன் றில்லார்
தம்மையே தமக்கொப் பான நிலைமையால் தலைமை சார்ந்தார். ௮

---

னபாணங்கள் என்னலுமாம். தொழில்கள் - கிரியைகள். பண்பமைந்த (தன்மை வாய்ந்த) அணுக்கத் தொண்டு முதலியவற்றையும் சிறப்பாகச் செய்து. அகம் படித் தொண்டு - அகத்தொண்டு என்பது பழைய குறிப்புரை.

௫. எரி மூன்று - ஆகவனீயம், காருகபத்தியம், தக்கிணாக்கினி. மல்க - நலம் பெற்று வளர. தத்துவ நெறியில் - உண்மை வழியில். ஆறு அங்கம் : சிக்ஷை, வியாகரணம், சந்தோவிசிதி, நிருத்தம், சோதிடம், கற்பம். ஆளாகும் திருவருட் செல்வத்தினால். சீரார் - குணமுடையவர்கள்.

௬. ஆறு தொழில் : ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல். கலி - துன்பம். உறுவது - வாழ்வில் அடைவது.

௭. நான்கு - சரியை, கிரியை, யோகம், ஞானம். நவை அற - ஐயந்திரிபு மயக்கம் நீங்க. தகாத பகுதியில் சாராதவர்கள். ஊனம் - குற்றம். மனைஅறம் - இல்லறம்.

௮. செம்மை......ஆனார் - அந்தணர்; செந்தண்மையாளர்; (நம்பியாரூரர் காலத்துத் தில்லைவாழ் அந்தணர்தம் நிலை). தில்லை மூவாயிரவர். முதல்வனாரை - நடராசரை. இம்மையே - இப்பிறவியிலேயே.

பா - ம்—*சீரார். †வாழ்வார்.

இன்றிவர் பெருமை எம்மால் இயம்பலாம் *எல்லைத் தாமோ
தென்தமிழ்ப் பயனாய் உள்ள திருத்தொண்டத் தொகைமுன் பாட
அன்றுவன் தொண்டர் தம்மை அருளிய ஆரூர் அண்ணல்
முன்திரு வாக்கால் கோத்த முதற்பொரு ளானார் என்றால். க

அகலிடத் துயர்ந்த தில்லை அந்தணர் அகிலம் எல்லாம்
புகழ்திரு மறையோர் என்றும் பொதுநடம் போற்றி †வாழ்க
நிகழ்திரு நீல கண்டக் குயவனார் நீடு வாய்மை
திகழும்அன் புடைய தொண்டர் செய்தவம் கூற லுற்றாம். கo

ஆ திருவிருத்தம் – கஉக

---

தில்லைவாழ் அந்தணர்கள், நடராஜப் பெருமான் திருவடித் தொண்டர்கள். அத்திருத் தொண்டே அவ்வந்தணர்களுக் குரிய பெருந்தவம். முறைப்படி எரிமூன்றோம்பி உலகுக்கு நலஞ்செய்வதில் அவர்கள்தங் கண்ணுங் கருத்தும் படிந்துகிடக்கும். அறத்தைப் பொருளாகக்கொண்டு வேதங்களையும் வேதாங்கங்களையும் பயில்வதில் அவர்கள் பொழுதுபோகும். அவர்கள் மரபு மாசில்லாதது. அவர்கள் ஒழுக்கம் மாறில்லாதது. அவர்களது அறுதொழில் ஆட்சியால் அருங்கலி நீங்கும். திருநீறு அவர்களது செல்வம். ஞானம் முதலிய நான்கு பாதங்களில் அவர்களது உழைப்புச் செல்லும். அவர்கள் மானமும் பொறையுந் தாங்கும் இல்லறம் பூண்டு, இப்பிறவியிலேயே இறைவனை வணங்கும் பேறு பெற்றமையால், இனிப்பெறும் பேறு ஒன்றுமில்லாதவர்கள். அவர்கள் பெருமையிற் சிறந்தவர்கள்; தங்களுக்குத் தாங்களே ஒப்பானவர்கள். தியாகேசப் பெருமானே, சுந்தரமூர்த்தி சுவாமிகட்குத் "தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்" என்று அடியெடுத்துச் சிறப்பித்த முதன்மை வாய்ந்தவர்கள் அவர்கள் என்றால், அவர்கள்தம் அருட்பெருந்தன்மை அளவிட்டுரைக்கற் பாலதாமோ?

---

க. முன் - முன்னர். அன்று - அந்நாளில். வன் தொண்டர் தமக்கு. ஆரூர் அண்ணல் - திருவாரூர்த் தியாகேசப் பெருமானே. முன் (முதல் முதல்) திருவாக்கால் "தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்" என்று எடுத்துக் கொடுத்த.

கo. அகலிடத்து - பூமியில். தவம் - தொண்டு.

பா - ம்—*பெருமைத். †வாழ.

# திருநீலகண்ட நாயனார் புராணம்

வேதியர் தில்லை மூதூர் வேட்கோவர் *குலத்து வந்தார்
மாதொரு பாகம் நோக்கி மன்னுசிற் றம்ப லத்தே
ஆதியும் முடிவும் இல்லா அற்புதத் †தனிக்கூத் தாடும்
நாதனார் கழல்கள் வாழ்த்தி வழிபடும் நலத்தில் மிக்கார். க

பொய்கடிந் தறத்தின் வாழ்வார் புனற்சடை முடியார்க் கன்பர்
மெய்யடி யார்கட் கான பணிசெயும் விருப்பில் நின்றார்
வையகம் போற்றும் செய்கை மனையறம் புரிந்து வாழ்வார்
சைவமெய்த் திருவின் சார்வே பொருளெனச் சாரு நீரார். உ

அளவிலா மரபின் வாழ்க்கை மட்கலம் அமுதுக் காக்கி
வளரிளம் திங்கட் கண்ணி மன்றுளார் அடியார்க் கென்றும்
உளமகிழ் ‡சிறப்பின் மல்க ஓடளித் தொழுகு நாளில்
இளமைமீ தூர இன்பத் துறையினில் எளியர் ஆனார். ங

அவர்தங்கண் மனைவி §யாரும் அருந்ததி கற்பில் மிக்கார்
புவனங்கள் உய்ய ஐயர் பொங்குநஞ் சுண்ண யாம்செய்

---

க. வேட்கோவர் - குயவர். என்றும் உள்ளதாதலின் "மன்னு" என்றார். எல்லாக் கூத்துகட்கும் முதலும் முடிவும் உண்டு. ஆண்டவன் திருக்கூத்துக்கு முதலும் முடிவு மில்லையாதலின் அஃது அற்புதத்தனிக் கூத்தாயிற்று. கூத்தின் விளக்கத்தைப் பாயிரம் முதற்பாட்டின் விரிவுரையிற் காண்க.

உ. கடிந்து-நீக்கி. "பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற-செய்யாமை செய்யாமை நன்று" - திருக்குறள் ருOஎ. புனல் - கங்கை. மெய் - உண்மையை புணர்ந்த. அறம் என்பது மனையறமாதலின் "வையகம்போற்றும் செய்கை" என்றார். "அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை" - திருக்குறள் சக. சைவ உண்மைத் திருவருட் செல்வத்தின் சார்பே. நீரார் - குணத்தையுடையவர்.

ங. மரபின் வாழ்க்கை - தங்குலவாழ்க்கைக்குரிய. அளவிலா மட்கலம் என் றியைக்க. அளவிலாமரபின் எனக் கொள்ளினுமாம். அமுதுக்கு - சீவனத்துக்கு. திங்கள் கண்ணி - பிறையைக் கொண்டைமாலையாயணிந்து. மன்றுளார் - சபையில் நடம் புரியும் பெருமானின். மல்க - பெருக. இளமைச் செவ்வி முதிர; காளைப் பருவம் வர. எளியர் ஆனார் - வயப்பட்டார்; விருப்ப முடையவரானார். இளமைக் கும் இன்பத்துக்கும் தொடர்பு உண்டு. "இளமையிற் சிறந்த வளமையும் இல்லை - இளமை கழிந்த பின்றை வளமை - காமம் தருதலும் இன்றே" - நற்றிணை கஉசு: எ - கO.

ச. ஐயர் - சிவபெருமான். தகைந்து - தடுத்து. தான் - கண்டம்.

பா - ம்—*குலத்தின். †திருக். ‡சிறப்பி னோடும். §யார்தாம்.

தவநின்று தடுத்த தென்னத் தகைந்துதான் தரித்த தென்று
சிவனெந்தை கண்டந் தன்னைத் திருநீல கண்டம் என்பார். ச

ஆனதங் கேள்வர் *அங்கோர் பரத்தைபால் அணைந்து நண்ண
மானமுன் †பொருது வந்த ஊடலால் மனையின் வாழ்க்கை
ஏனைய எல்லாஞ் செய்தே உடனுறை விசையார் ஆனார்
தேனலர் கமலப் போதில் திருவினும் உருவம் மிக்கார். ரு

மூண்டஅப் புலவி ‡தீர்க்க அன்பனார் முன்பு சென்று
பூண்தயங் கிளமென் சாயல் பொற்கொடி அனையார் தம்மை
வேண்டுவ இரந்து கூறி மெய்யுற அணையும் போதில்
§"தீண்டுவீ ராயின் எம்மைத் திருநீல கண்டம்" என்றார். சு

ஆதியார் நீல கண்டத் தளவுதாம் கொண்ட ஆர்வம்
பேதியா ஆணை கேட்ட பெரியவர் பெயர்ந்து நீங்கி
ஏதிலார் போல நோக்கி "எம்மைஎன் றதனால் ¶மற்றை
மாதரார் ||தமையும் என்தன் மனத்தினும் தீண்டேன்" என்றார். எ

ரு. ஆனதங்கேள்வர்-'திருநீல கண்டம்' என்று சொல்பவராகிய தம்கணவர்; பிரியமுள்ள தம் கணவர் எனினுமாம். ஓர் பரத்தை பால் அணைந்து நண்ண - ஒரு விலை மாதினிடம் கூடி (வீட்டிற்கு) வர. ஊடலால் - பிணக்கால். உடன் உறைவு - புணர்ச்சியை மட்டும். தேன் ததும்பும் தாமரை மலரிலுள்ள இலக்குமியைப் பார்க்கிலும் அழகிற் சிறந்தவர். இளமை, போகத்துக்கு உரியது. அதை நீத்திருத்தல் அருமை. அவ்வருமையை ஆசிரியர், அம்மையாரின் அழகைத் " தேனலர்.........மிக்கார் " என்று சிறப்பிக்கும் வாயிலாக விளக்கி யிருத்தலை யோர்க. இத்தகை அழகு வாய்ந்த அம்மையாரிருப்ப நாயனார் பரத்தையை விரும்பியது தவறு என்பது குறிப்பு.

சு. மூண்ட - உதித்தெழுந்த. அப்புலவி - அப்பிணக்கை. அன்பனார் - திருநீலகண்ட நாயனார். பூண் தயங்கு - ஆபரணங்கள் விளங்கும். இளமை மென்மை சாயல். (சாயல் - ஐம்பொறியால் நுகரும் மென்மை).......அனையார் தம்மை - மனைவியாரை. மெய்யுற - உடலுற. (அம்மையார்) என்றார்.

எ. ஆதியார் - சிவபிரானது. நீலகண்டத்தளவு - திருநீலகண்டமொன்றனிடத்தில். ஆர்வம் - விருப்பம். ஆர்வ அளவு என்று இயைப்பினுமாம். பேதியா - வேறுபடாமல். பெரியவர் - திருநீலகண்ட நாயனார். பெயர்ந்து நீங்கி - அம்மையாரைத் தீண்டாது விட்டகன்று. ஏதிலார்போல - (அம்மையாரை) அயலாரைப் போல. 'என்னை' எனக் கூறாது 'எம்மை' எனப் பன்மையாற் கூறினமையால், (உன்னையும் உன்னினமாகிய) மற்றப் பெண்களையும். (திருநீலகண்டநாயனார் சிவநேயர். அந்நேயத்துடன் பரத்தையர் நேயமும் அவர்பால் இருந்தது. இரண்

பா - ம்—*ஆங்கோர். †பொறுத்து; பெருது; பொருது. ‡நீக்க. §தீண்டுவீரானீர். ¶மற்று. ||தம்மை.

கற்புறு மனைவி யாரும் கணவனார்க் கான எல்லாம்
*பொற்புறு மெய்யு றாமல் பொருந்துவ போற்றிச் †செய்தே
இற்புறம் பொழியா தங்கண் இருவரும் வேறு வைகி
அற்புறு புணர்ச்சி இன்மை அயலறி யாமை வாழ்ந்தார். அ

இளமையில் மிக்கு ளார்கள் இருவரும் ‡அறிய நின்ற
அளவில்சீர் ஆணை போற்றி ஆண்டுகள் பலவுஞ் செல்ல
வளமலி இளமை நீங்கி வடிவுறு மூப்பு வந்து
தளர்வொடு சாய்ந்தும் அன்பு தம்பிரான் திறத்துச் சாயார். கூ

இந்நெறி ஒழுகு நாளில் எரிதளிர்த் தென்ன நீண்ட
மின்னொளிர் சடையான் தானுந் தொண்டரை விளக்கங் காண
நன்னெறி இதுவாம் என்று ஞாலத்தார் விரும்பி உய்யும்
அந்நெறி காட்டும் ஆற்றால் அருட்சிவ யோகி யாகி. கO

வேறு

கீளொடு கோவணம் சாத்திக் கேடிலா
வாள்விடு நீற்றொளி மலர்ந்த மேனிமேல்

---

டில் சிவநேயமே அவர்பால் மிக்கிருந்தது. நாளடைவில் சிவநேயம் அருகாதவாறு நாயகியார் நாயனாரைக் காத்தனர். அம்மையார் திருநீலகண்டத்தின்மீது ஆணை கூறியது நாயனாரை நல்வழிப்படுத்தற்கேயாகும். திருநீலகண்டத்தினிடத்து நாயனார்க்குள்ள ஆர்வம் பெண்ணினத்தையே மறக்கச் செய்தது. இதனால் நாயனார் பெரியாரானாரென்க. இப்பெருமைக்குத் துணைநின்ற பெருமை நாயனார் மனைவியாருடையது. உற்றவேளையில் நாயகன் வாழ்க்கைக்கு உறுதுணை செய்ய வேண்டுவது நாயகியின் கடமை. இப்புராணத்தில் பெண்ணின் பெருமையும் உரிமையும் விளங்குதல் காண்க.)

அ. அழகு மிக்க உடல் நாயகனிடம் படாமல் மற்றப் பொருந்திய பணிகளை அன்புடன் செய்து. இற்புறம்பு ஒழியாது - வீட்டை விடுத்துப் புறம்பே செல்லாது. அற்புறு - அன்பு பொருந்திய.

கூ. வடிவுறு மூப்பு-உடலிலே யுற்ற மூப்பு; உடலிலே மிக்க மூப்பு; திரைத் தலை யுண்டாக்கும் மூப்பு. தம்பிரான் திறத்து - சிவபிரானிடத்தில்.

கO. எரி தளிர்த்தென்ன - நெருப்புக் கொழுந்து விட்டாற்போல. சடையான் - சிவபெருமான். விளக்கங்காண - சோதிக்க; இத்தன்மையரென்று யாவருக்கும் விளக்கஞ் செய்ய என்றலுமொன்று. 'இது' என்றது பக்தி வைராக்கியத்தை; பெண்ணை ஆணும் ஆணைப் பெண்ணும் நீத்து வாழ்வதையன்று; இஃது ஆண்டவன் திருவுளமன்று என்பது, பின்னை மீண்டும் ஆண்டவன் இருவர்க்கும் இளமை வழங்குதலால் நன்கு விளங்கும். ஞாலத்தார் - உலகோர். அந்நெறி - அந்தப் பக்தி வைராக்கிய மார்க்கத்தை. காட்டும் ஆற்றால் - காட்டும் வகையால்.

பா - ம்—*பொற்புற. †செய்ய. ‡அறியா நின்ற.

தோளொடு மார்பிடைத் துவளு நூலுடன்
நீளொளி வளர்திரு முண்ட நெற்றியும். கக

நெடுஞ்சடை கரந்திட நெறித்த பம்மையும்
விடுங்கதிர் முறுவல்வெண் நிலவும் மேம்பட
இடும்பலிப் பாத்திரம் ஏந்து கையராய்
நடந்துவேட் கோவர்தம் மனையில் நண்ணினார். கஉ

நண்ணிய தவச்சிவ யோக நாதரைக்
கண்ணுற நோக்கிய காதல் அன்பர்தாம்
புண்ணியத் தொண்டராம் என்று போற்றிசெய்
தெண்ணிய *வகையினால் எதிர்கொண் டேத்தினார். கங

பிறைவளர் சடைமுடிப் பிரானைத் தொண்டரென்
றுறையுளில் அணைந்துபேர் உவகை கூர்ந்திட
முறைமையின் வழிபட மொழிந்த பூசைகள்
நிறைபெரு விருப்பொடு செய்து நின்றபின். கச

"எம்பிரான்! யான்செயும் பணிஎது" என்றனர்
வம்புலா மலர்ச்சடை வள்ளல் தொண்டனார்
உம்பர்நா யகனும்"இவ் வோடுன் பால்வைத்து
நம்பி!நீ தருகநாம் வேண்டும் போ"தென்று. கரு

---

கக. கிளொடு கோவணம் - அரைஞாணோடு கூடிய கௌபீனம். வாள் விடு நீற்றொளி - ஒளி வீசும் திருநீற்றின் தெய்வத்தன்மை. திருமுண்டம் - திரிபுண்டரம் அணிந்த.

கஉ. கரந்திட - மறையும்படி. நெறித்த பம்மையும் - சிலிர்த்துச் சுருண்டு கீழ் விழாமல் தூருயிருக்கிற தலைமயிரும். ஒளி வீசும் பற்களினின்றும் தோன்றும் வெண்ணிலவும்; புன்சிரிப்புடனும் என்றபடி. பலி இடும் பாத்திரம் - பிச்சையிடுதற்குரிய திருவோட்டை. வேட்கோவர் - திருநீலகண்ட நாயனார்.

கங. அன்பர் - திருநீலகண்ட நாயனார். மனம் எண்ணிய வகைப்படி.

கச. பிரானை - சிவபிரானை. உறையுளில் அணைந்து - தமது வீட்டுக்கு அழைத்துச் சென்று. பேர்உவகை கூர்ந்திட - பெருமகிழ்ச்சி பொங்க, அறிஞர்கள் மொழிந்த.

கரு. எம்பிரானே. வம்பு உலா - வாசனை வீசும். வள்ளல் தொண்டனார்- சிவபெருமானின் தொண்டராகிய திருநீலகண்ட நாயனார். தொண்டனார் 'செயும் பணி எது' என்றனர் எனக் கூட்டுக. உம்பர் நாயகனும் - தேவர்கள் நாயகராகிய சிவபெருமானும். நம்பி-ஆடவரிற் சிறந்த திருநீல கண்டனே. "நம்பி வைத்தும்- நம்பி வைப்பேம்" என்பது பழைய குறிப்புரை.

பா - ம்—*உவகையால்.

"தன்னை ஒப் பரியது தலத்துத் தன்னுழைத்
துன்னிய யாவையுந் தூய்மை செய்வது
பொன்னினும் மணியினும் போற்ற வேண்டுவ
தின்னதன் மையதிது வாங்கு நீ"என. கசு

தொல்லைவேட் கோவர்தங் குலத்துள் தோன்றிய
மல்குசீர்த் தொண்டனார் வணங்கி வாங்கிக்கொண்
டொல்லையின் மனையிலோர் மருங்கு காப்புறும்
எல்லையில் வைத்தவந் திறையை எய்தினார். கஎ

வைத்தபின் மறையவ ராகி வந்தருள்
நித்தனார் நீங்கிட நின்ற தொண்டரும்
உய்த்துடன் போய்விடை கொண்டு மீண்டனர்
அத்தர்தாம் அம்பலம் அணைய மேவினார். கஅ

வேறு

சாலநாள் கழிந்த பின்பு தலைவனார் *தாம்முன் வைத்த
கோலமார் ஓடு தன்னைக் குறியிடத் தகலப் போக்கிச்
சீலமார் கொள்கை என்றும் திருந்துவேட் கோவர் தம்பால்
வாலிதாம் நிலைமை காட்ட முன்புபோல் மனையில் வந்தார். கசு

வந்தபின் தொண்ட னாரும் எதிர்வழி பாடு செய்து
"சிந்தைசெய் தருளிற் றெங்கள் செய்தவம்" என்று நிற்ப
"முந்தைநாள் உன்பால் வைத்த மொய்யொளி விளங்கும் ஓடு
தந்துநில்" என்றான் எல்லாந் தான்வைத்து வாங்க வல்லான். உo

கசு. தன்னை - தனக்குத்தான். தலத்துத் தன்னுழை துன்னிய யாவையும்- இவ்வுலகில் தன்னிடம் பொருந்தும் எல்லாவற்றையும். இது - இவ்வோடு. இதை வாங்கு.

கஎ. தொல்லை - பழமை நிறைந்த. மல்குசீர் - நிறைந்த புகழினையுடைய. ஒல்லையில் - விரைவில். ஓர் மருங்கு - ஒரு பக்கத்தில். காப்புறும் எல்லையில் - காவல் மிகுந்த இடத்தில்.

கஅ. உய்த்து - அவரைச் செலுத்தித் தாமும். அத்தர் - நடராசர்.

கசு. சாலநாள் - பன்னெடுநாள். தலைவனார் - சிவபெருமான். முன் வைத்த - முன்னே வைக்கத்தந்த. கோலம் ஆர் - அழகு பொருந்திய. குறியிடத்து - (வைக்கப்பட்ட) குறித்த விடத்தினின்றும். சீலம் நிறைந்த விரதத்தால் என்றும் திருந்திய வேட்கோவர் தம்பாலுள்ள. வாலிதாம் நிலைமை காட்ட - தூய்மையாகிய உறுதி நிலையை உலகுக்கு உணர்த்த.

உo. சிந்தைசெய்து அருளிற்று - திருவுளங் கொண்டு இங்கே எழுந்தருளியது. மொய் - மொய்த்த; மிக்க. ஓட்டைத் தந்துநில் என்றபடி; விரைவிற் பா - ம்—*முன்பு.

என்றவர் விரைந்து கூற இருந்தவர் ஈந்த ஓடு
சென்றுமுன் கொணர்வான் புக்கார் கண்டிலர் திகைத்து நோக்கி
நின்றவர் தம்மைக் கேட்டார் நேடியும் காணார் மாயை
ஒன்றுமங் கறிந்தி லாதார் உரைப்பதொன் றின்றி நின்றார். உக

மறையவ னாகி நின்ற மலைமகள் கேள்வன் தானும்
உறையுளில் புக்கு நின்ற ஒருபெருந் தொண்டர் கேட்ப
"இறையிலிங் கெய்தப் புக்காய் தாழ்த்ததென்" என்ன வந்து
கறைமறை மிடற்றி னானைக் கைதொழு துரைக்க லுற்றார். உஉ

"இழையணி முந்நூல் மார்பின் எந்தை! நீர் தந்து போன
*விழைதரும் ஓடு வைத்த வேறிடம் தேடிக் காணேன்
பழையமற் றதனில் நல்ல பாத்திரம் தருவன் கொண்டிப்
பிழையினைப் பொறுக்க வேண்டும் பெரும" என் றிறைஞ்சி நின்றார்.

சென்னியால் வணங்கி †நின்ற தொண்டரைச் செயிர்த்து நோக்கி
"என்னிது மொழிந்த வாறு யான்வைத்த மண்ணோ டன்றிப்
பொன்னினால் அமைத்துத் தந்தா யாயினுங் கொள்ளேன் போற்ற
‡முன்னைநான் வைத்த ஓடே கொண்டுவா" என்றான் முன்னோன். உச

"கேடிலாப் பெரியோய்! என்பால் வைத்தது கெடுத லாலே
நாடியும் காணேன் வேறு நல்லதோர் ஓடு சால
நீடுசெல் வதுதான் ஒன்று தருகின்றேன் எனவும் கொள்ளா
தூடிநின் றுரைத்த தென்றன் உணர்வெலாம் ஒழித்த" தென்ன.

கொடு என்றவாறு. எல்லாவற்றையும் ஆக்கவும் அழிக்கவும் ஆற்றலுடைய சிவ பெருமான். " விச்சதின்றியே விளைவு செய்குவாய் விண்ணும் மண்ணகம் முழு தும் யாவையும் - வைச்சு வாங்குவாய் "—திருவாசகம் : ஆனந்தாதீதம் கசு.

உக. இருந்தவர் - பெருந் தவத்தையுடைய சிவயோகியார். அவர் - அச்சிவ யோகியார். நேடியும் - தேடியும்.

உஉ. மலைமகள் கேள்வன் - சிவபிரான். இறையில் - நொடிப்போதில். திருநீலகண்டர் ஓடிவந்து. கறைமறை மிடற்றினை - திருநீலகண்டத்தை மறைத்துவந்த சிவநாதனை.

உங. விழைதரும் - விருப்பூட்டும். வைத்த இடத்திலும் வேறிடங்களினும். பழையதைப் பார்க்கினும்.

உச. செயிர்த்து - கோபித்து. மொழிந்தவாறு. போற்ற - பாதுகாக்க.

உரு. கெடுதலால் - காணாது போனபடியால். நாடியும் - கவலையுடன் தேடி யும். சாலநீடு செல்வது - மிகநெடுங்காலம் பயன்படத்தக்கது. ஊடி - கோபித்து.

பா - ம்—*விழைதகும். †சொன்ன. ‡முன்னநான்.

"ஆவதென் உன்பால் வைத்த அடைக்கலப் பொருளை வௌவிப்
*பாவகம் பலவும் செய்து பழிக்குநீ ஒன்றும் நாணாய்
யாவரும் காண உன்னை வளைத்துநான் கொண்டே அன்றிப்
போவதும் செய்யேன்" என்றான் புண்ணியப் பொருளாய் நின்றான்.

"வளத்தினால் மிக்க ஓடு வௌவினேன் அல்லேன் ஒல்லை
உளத்தினும் களவி லாமைக் கென்செய்கேன் உரையும்" என்னக்
களத்துநஞ் சோளித்து நின்றான் "காதல்உன் மகனைப் பற்றிக்
குளத்தினில் மூழ்கிப் போ"என் றருளினான் கோடுமை இல்லான்.

"ஐயர்நீர் அருளிச் செய்த வண்ணம்யான் செய்வ தற்குப்
பொய்யில்சீர்ப் புதல்வன் இல்லை என்செய்கேன் புகலும்" என்ன,
"மையறு சிறப்பின் மிக்க மனையவள் தன்னைப் பற்றி
மொய்யலர் வாவி புக்கு மூழ்குவாய்" எனமொ ழிந்தார். ௨அ

வேறு

கங்கைநதி கரந்தசடை கரந்தருளி எதிர்நின்ற
வெங்கண்விடை யவர்அருள வேட்கோவர் உரைசெய்வார் :
"எங்களில்ஓர் சபதத்தால் உடன்மூழ்க இசைவில்லை
பொங்குபுனல் யான்மூழ்கித் தருகின்றேன் போதும்"என. ௨௯

"தந்ததுமுன் தாராதே கொள்ளாமைக் குன்மனைவி
அந்தளிர்ச்செங் கைப்பற்றி அலைபுனலில் மூழ்காதே
சிந்தைவலித் திருக்கின்றாய் தில்லைவாழ் அந்தணர்கள்
வந்திருந்த பேரவையில் மன்னுவன்யான்" எனச்சென்றார். ௩0

௨௬. இனி ஆவதென்ன. வௌவி - கவர்ந்து. பாவகம் - வஞ்சக நடிப்பு; பாவமுமாம். ஒன்றும் - சிறிதும்; எவ்வளவும். வளைத்து - பிடித்து. யான் என் பாத்திரத்தை வாங்கிக் கொண்டேயன்றி.

௨௭. ஒல்லை - சிறிதும். உள்ளத்திலும் களவில்லாமையைத் தெரிவிக்க என்ன செய்வேன்; என்ன செய்ய வேண்டும் என்றபடி. களத்து-கண்டத்தில்.

௨அ. மைஅறு - குற்றமற்ற. மொய்யலர் வாவி - நெருங்கிய தாமரைகள் நிறைந்த தடாகத்தில்.

௨௯. கரந்த - அடங்கிய. கரந்தருளி - மறைத்தருளி. விடையவர்-சிவபெருமான். அருள-இவ்வாறு சொல்ல. புனல் - நீரில். சத்தியஞ்செய்து தருகிறேன்.

௩0. கொள்ளாமைக்கு - நீர் கவர்ந்து கொள்ளாமைக்கு; கவரவில்லை என்பதற்கு. அந்தளிர் - அழகிய தளிர்போன்ற. மனதை உறுதிப்படுத்திக் கொண்டிருக்கிறாய். மன்னுவன் - போய்ச் சொல்வேன்.

பா - ம்—*பாவமே.

நல்லொழுக்கந் தலைநின்றார் நான்மறையின் துறைபோனார்
தில்லைவாழ் அந்தணர்கள் வந்திருந்த திருந்தவையில்
எல்லையிலான் முன்செல்ல இருந்தொண்டர் அவர்தாமும்
மல்குபெருங் காதலினால் வழக்கின்மே விட்டணைந்தார். ௩௧

அந்தணனும் எந்தைபிரான் அருமறையோர் முன்பகர்வான்
"இந்தவேட் கோவன்பால் யான்வைத்த பாத்திரத்தைத்
தந்தொழியான் கெடுத்தானேல் தன்மனைவி கைப்பற்றி
வந்துமூழ் கியுந்தாரான் வலிசெய்கின் றான்"என்றார். ௩௨

நறைகமழுஞ் சடைமுடியும் நாற்றோளும் முக்கண்ணும்
கறைமருவுந் திருமிடறும் கரந்தருளி எழுந்தருளும்
மறையவன்இத் திறமொழிய மாமறையோர் உரைசெய்வார்
"நிறையுடைய வேட்கோவர்! நீர்மொழியும்" புகுந்ததனை. ௩௩

"நீள்நிதியாம் இதுவென்று நின்றஇவர் தரும்ஓடு
பேணிநான் வைத்தஇடம் பெயர்ந்துகரந் ததுகாணேன்
பூணணிநூல் மணிமார்பீர்! புகுந்தபரி சிது"என்று
சேணிடையும் தீங்கடையாத் திருத்தொண்டர் உரைசெய்தார். ௩௪

## வேறு

திருவுடை அந்த ணாளர் செப்புவார் "திகழ்ந்த நீற்றின்
உருவுடை இவர்தாம் வைத்த ஓட்டினைக் கெடுத்தீ ரானால்
தருமிவர் குளத்தில் மூழ்கித் தருகஎன் றுரைத்தா ராகில்
மருவிய மனைவி யோடு மூழ்குதல் வழக்கே" என்றார். ௩௫

---

௩௧. நான்கு வேதத் துறைகளின் கரை கண்டவர்கள். திருந்தவையில் - நல்ல சபையில்; நடுநிலை பிறழாத செம்மைச் சபையில். எல்லையிலான் - சிவபெருமான். இருந்தொண்டர் - பெருமை பொருந்திய திருநீலகண்ட நாயனார். மல்கு- நிறைந்த. வழக்கின் பொருட்டு.

௩௨. தந்தொழியான் - கொடுத்துவிடான். கெடுத்தானேல் - இழந்து விட்டானாயின். வலி செய்கின்றான் - சத்தியஞ் செய்ய இசையாது துணிந்து நிற்கிறான்; சத்தியஞ்செய்ய ஒருப்படாது எனக்கு வேண்டுமென்றே துன்பஞ் செய்கிறான் எனினுமாம்.

௩௩. நறை - மணம். கறைமருவும் திருமிடறும் - நீலம் விளங்கும் அழகிய கண்டத்தையும். மறையவன் - சிவபெருமான். நிறை - சால்பு. திருநீலகண்டரின் சால்பினை முன்னரே யுணர்ந்திருந்தாராதலின் "நிறையுடைய வேட்கோவர்" என்றார். வேட்கோவரே. புகுந்தது - நிகழ்ந்தது.

௩௪. இது - ஓடு. பெயர்ந்து கரந்தது - இடம் விட்டு மறைந்தது. சேணிடையும் - நெடுந்தூரத்தும்.

௩௫. ஓட்டினைத்தந்த இவர். மருவிய - அமைந்த; உள்ளங் கலந்த. வழக்கு - ஒழுங்கு; நியாயம்.

*அருந்தவத் தொண்டர் தாமும் அந்தணர் மொழியக் கேட்டுத்
திருந்திய மனைவி யாரைத் தீண்டாமை †செப்ப மாட்டார்
"பொருந்திய வகையால் மூழ்கித் தருகின்றேன் போதும்" என்று
பெருந்தவ முனிவ ரோடும் பெயர்ந்துதம் மனையைச் சார்ந்தார். ருசு

மனைவியார் தம்மைக் கொண்டு மறைச்சிவ யோகி யார்முன்
சினவிடைப் பாகர் மேவும் திருப்புலீச் சுரத்து முன்னர்
நனைமலர்ச் சோலை வாவி நண்ணித்தம் உண்மை காப்பார்
புனைமணி வேணுத் தண்டின் இருதலை பிடித்துப் புக்கார். ருஎ

தண்டிரு தலையும் பற்றிப் புகும்அவர் தம்மை நோக்கி
வெண்திரு நீற்று முண்ட வேதியர் "மாதைத் தீண்டிக்
கொண்டுடன் மூழ்கீர்" என்னக் கூடாமை பாரோர் கேட்பப்
பண்டுதம் செய்கை சொல்லி மூழ்கினார் பழுதி லாதார். ருஅ

வாவியின் மூழ்கி ஏறுங் கணவரும் மனைவி யாரும்
மேவிய மூப்பு நீங்கி விருப்புறும் இளமை பெற்றுத்
தேவரும் முனிவர் தாமும் சிறப்பொடு பொழியுந் தெய்வப்
பூவின்மா மழையின் மீள மூழ்குவார் போன்று தோன்ற. ருகூ

அந்நிலை அவரைக் காணும் அதிசயம் கண்டார் எல்லாம்
முன்னிலை நின்ற வேத முதல்வரைக் கண்டார் இல்லை
"இந்நிலை இருந்த வண்ணம் என்"என மருண்டு நின்றார்
துன்னிய விசும்பி னூடு துணையுடன் விடைமேற் கண்டார். சo

---

ருசு. திருந்திய - செந்நெறியினின்றும் வழுவாத.

ருஎ. திருப்புலீச்சுரம் - சிதம்பரத்திலுள்ள ஒரு கோயில். மணிபுனை வேணுத்தண்டின் - மூங்கிற்றண்டின். இருதலை - ஒரு புறம் தாமும் மற்றொரு புறம் மனைவியாருமாக.

ருஅ. முண்டம்-திரிபுண்டர மணிந்த நெற்றியையுடைய. மூழ்கும். பண்டு-பழைய. நாயனாரின் உண்மை நிலையைப் பலர் அறியலானார். ஆண்டவன் விரும்பி வந்ததும் இதன்பொருட்டே யாகும்.

ருகூ. இளமையைப் பொருட்படுத்தாது ஆணை காத்தமையான், இன்பத் துக்குரிய இளமை மீண்டும் ஆண்டவ னருளால் கிடைத்தது என்க. இல்லற இன்பம் ஆண்டவன் அருள் வழிய தென்பது கருதத்தக்கது. இது குறித்துப் " பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத்துணை" என்னும் நூலில் விரித்துக் கூறியுள்ளேன். விளக்கம் ஆண்டுக் காண்க.

சo. நின்றார் - நின்றவர். விசும்பினூடு - ஆகாய வழியே. துன்னிய - அணைய. துணையுடன்-உமாதேவியாருடன். விடைமேல்-இடபவாகனத்தின்மீது.

பா - ம்—*அரும்பெரும். †பேச.

கண்டனர் கைக ளாரத் தொழுதனர் கலந்த காதல்
அண்டரும் எத்தி னார்கள் அன்பர்தம் பெருமை நோக்கி
விண்டரும் பொலிவு காட்டி விடையின்மேல் வருவார் தம்மைத்
தொண்டரும் மனைவி யாரும் தொழுதுடன் போற்றி நின்றார். சக

மன்றுளே திருக்கூத் தாடி அடியவர் மனைகள் தோறும்
சென்றவர் நிலைமை காட்டும் தேவர்கள் தேவர் தாமும்
"வென்றஐம் புலனால் மிக்கீர்! விருப்புடன் இருக்க நம்பால்
என்றும்இவ் இளமை நீங்கா" தென்றெழுந் தருளி னாரே. சஉ

விறலுடைத் தொண்ட னாரும் வெண்ணகைச் செவ்வாய் மென்தோள்
அறலியற் கூந்த லாளாம் மனைவியும் அருளின் ஆர்ந்த
திறலுடைச் செய்கை செய்து சிவலோகம் அதனை எய்திப்
பெறலரும் இளமை பெற்றுப் பேரின்பம் உற்றார் அன்றே. சங

அயலறி யாத வண்ணம் அண்ணலார் ஆணை உய்த்த
*மயலில்சீர்த் தொண்ட னாரை யான்அறி வகையால் வாழ்த்திப்
புயல்வளர் மாடம் நீடும் பூம்புகார் வணிகர் பொய்யில்
செயல்இயற் பகையார் செய்த திருத்தொண்டு செப்ப லுற்றேன். சச

ஆக திருவிருத்தம் - சOங

---

சக. அண்டரும் - தேவர்களும். அன்பர் தம் - திருநீலகண்ட நாயனாருடைய. விண்டு அரும் - ஆகாயத்திலே அரிய.

சஉ. அவர் - அடியவர்களின். தேவர்கள் தேவர் தாமும் - சிவபெருமானும். வெல்லப்பட்ட ஐம்புலன்களுடன் கூடி வாழ்ந்து மேன்மை யுற்றவர்களே: ஐம்புலனை அழியாது, அவைகளை நல்வழியில் நிறுத்தி ஆள்வது அறிவுடைமை. திருநீலகண்ட நாயனாரும் அவர் தம் மனைவியாரும் ஐம்புலன்களை ஒடுக்க எம் முயற்சியிலுந் தலைப்பட்டாரில்லை. அவர்கள் தம் புலன்கள் இயங்கிக் கொண்டிருந்தன. புலன்கள்வழி அவர்கள் உழலாமல், அவர்கள் வழிப் புலன்கள் நின்றமையால் "வென்ற ஐம்புலனால்" என்றார். தடுத்தாட்கொண்ட புராணம் கஉ௬-ம் பாட்டுக் குறிப்பைப் பார்க்க. இருக்க - இருக்கக்கடவீராக.

சங. விறல் - பத்தி வைராக்கிய வலிமை. அறல் இயல் - கருமணல் போன்ற. "வெண்......ளாம்" என்பது ஆண்டவனருளால் அம்மையார் பெற்ற அழகொழுகும் இளமையைக் குறிப்பதென்க. திறல் உடை - திருவருளால் நிறைந்த ஒளி அல்லது வலிமையுடைய. பெறுதற்கரிய இளமை.

சச. அண்ணலார் ஆணை உய்த்த - சிவபெருமான் திருநீல கண்டத்தின் மீது இடப்பட்ட ஆணை காத்த. மயல்இல் - மயக்கமில்லாத. பூம்புகார் - காவிரிப் பூம் பட்டினத்தில். "பூம்புகார் போற்றுதும் பூம்புகார் போற்றுதும்"—சிலப்பதிகாரம்: மங்கல வாழ்த்து.

பா - ம்—*மயலிலாத்.

தில்லை என்னும் பழம் பெரும்பதியிலே குயவர் குலத்திலே தோன்றிய வர் ஒருவர் இருந்தார். அவர் அறவழியிலே நின்றவர்; சிவபத்தி சிவனடியார் பத்திகளிற் சிறந்தவர். அப்பெரியார் மட்கலம் வனையுந் தொழில்செய்து வாழ்வு நடாத்திவந்தார். அடியவர்களுக்குத் திருவோடு கொடுப்பது அவர்தந் திருத் தொண்டு. சிவபெருமான்றன் திருநீலகண்டத்தினிடத்துப் பேரன்புகொண்டு "திருநீலகண்டம் திருநீலகண்டம்" என்று அவர் சொல்லிவந்தமையான், அவ ருக்குத் திருநீலகண்டநாயனார் என்னுந் திருப்பெயர் வழங்கலாயிற்று.

அந்நாயனார் இன்பத்துறையில் எளியராய் அருந்ததியனைய ஒரு மங்கை நல்லாரைத் திருமணஞ் செய்து இல்லறத்தில் வாழ்ந்துவந்தார். வருநாளில் ஒரு நாள் அவர் ஒரு பரத்தைபா லணைந்து வீடுசேர்ந்தார். அதையுணர்ந்த இல்லக் கிழத்தியார், ஊடல் கொண்டு வீட்டுப் பணிக ளெல்லாவற்றையுங் குறைவறச் செய்து, கூடலுக்குமட்டும் இசையாதிருந்தார். அவ்வூடலைத் தீர்க்கவேண்டி, நாயனார் ஒருபோது, இரப்புரைகள் பலகூறி, மனைவியாரைத் தழுவ முயன்றார். அவ்வேளையில் அம்மையார் வெகுண்டு, "நீர் எம்மைத் தீண்டுவீராயின் திருநீல கண்டம்" என்றார். அடியவரோ திருநீலகண்டத்தினிடத்தில் பெரும் பற்று டையவர். அப்பற்று மாறுபடா வண்ணம் நாயனார், தம் மனைவியாரைத் தீண்டா தகன்று, அவரை அயலாரைப்போல் பார்த்து, "இவள் எம்மை எனப் பன்மை யாகக் கூறினமையால் இவளையும், இவளினமாகிய மற்ற மாதர்களையும் யான் மனதிலுந் தீண்டேன்" என்று சூளுரை பகர்ந்தார். இக்கொள்கையுடன் இரு வரும் வீட்டைவிட்டுத் துறவாது, புணர்ச்சியின்மையை அயலறியாதவாறு மற்ற இல்லப்பணிகளை இயற்றிக்கொண்டு வாழ்ந்துவந்தனர். இவ்வாறு பல ஆண்டு கள் கழிந்தன. இளமைச்செவ்வி மறைந்து முதுமை எய்தலாயிற்று. எய்தியும் சிவபத்தி சிவனடியார் பத்திமட்டும் அவரிடந் தளர்ச்சியுறவில்லை.

திருநீலகண்டநாயனாரது திருத்தொண்டின் பெருமையை உலகுக்குணர்த்த வேண்டி, நடராஜப் பெருமான், ஒருசிவயோகியாகிக் குயவர் பெருமான் வீட்டிற்கு எழுந்தருளினார். நாயனார் அவரை முறைப்படி வழிபட்டு, "அடியேன் செய்ய வேண்டிய பணி யாது?" என்று கேட்டனர். சிவயோகியார், "அன்பனே! இத் திருவோட்டைச் சேமித்து வைத்திருந்து யான் கேட்கும்போது கொடுப் பாயாக. இத் திருவோடு, தனக்குத்தானே ஒப்பானது; தன்னிடஞ் சேரும் எல்லாப் பொருளையுந் தூய்மை செய்யும் ஆற்றலுடையது; பொன்னினும் மணி யினும் போற்றுந் தகையது. இத்துணைச் சிறப்பு வாய்ந்த இத் திருவோட்டினை வாங்கி வை" என்று அதை நீட்டினார். நாயனார் அதை அன்புடன் வாங்கி இல் லத்தின் ஒரு பக்கத்தில் காப்புடைய ஓரிடத்தில் வைத்துத் திரும்பினார். சிவயோகி யார் அவ்விடத்தினின்றும் புறப்பட்டார். நாயனார் அவருடன் சிறிது தூரஞ் சென்று விடைபெற்றனர். சிவயோகியாக வந்த நடராஜ வள்ளல் பொற் சபைக் கெழுந்தருளினார்.

பன்னெடு நாட்கள் கடந்தன. ஒருநாள், திருவோடு, வைக்கப்பெற்ற இடத் தினின்றும் மறைந்தொழியச் சிவபெருமான் திருவருள் செய்து, முன்போலச்

சிவயோகி வடிவந் தாங்கி நாயனார் இல்லம் போந்தார். நாயனார் அவரை வழி பட்டு நின்றார். சிவயோகியார் அவரைப் பார்த்து முன்னே உன்னிடம் தந்த ஓட்டைக் கொண்டுவா" என்றார். நாயனார், திருவோடு கொண்டுவரச் சென்றார். திருவோட்டைக் கண்டாரில்லை. என் செய்வார் பாவம்! மனைவியாரைக் கேட்கிறார்; மற்றவரைக் கேட்கிறார்; பிற விடங்களில் தேடுகிறார்; திகைக்கிறார்; "யோகியார்க்கு என் சொல்வேன்; என் செய்கேன்" என்று அலமருகிறார்; நாயனார் ஒன்றுந் தோன்றாது நிற்கிறார். இந்நிலையில் சிவயோகியார், "என்ன இவ்வளவு நேரம்?" என்று கூவுகிறார். நாயனார் ஓடிவந்து, "எந்தையே! திருவோட்டை வைத்த இடத்திலுந் தேடினேன்; வேறிடங்களிலுந் தேடினேன். அதைக் கண்டிலேன். அப் பழைய ஓட்டினுஞ் சிறந்த புதிய ஓடு ஒன்று வனைந்து தருகிறேன். ஏற்றுக்கொள்ளுமாறு வேண்டுகிறேன். பிழை பொறுத்தருளல் வேண்டும்" என்று கேட்டுக்கொண்டார். சிவ யோகியார்க்குச் சினம் மூண்டெழுகிறது. அவர், நாயனாரை உற்று நோக்கி, "என்ன சொன்னாய்! புது ஓடா கொடுக்கப்போகிறாய்; யான் கொடுத்த மண்ணோடே வேண்டும்; மற்றது பொன்னோடேயாயினு மாக; அஃதெனக்கு வேண்டாம். என் ஓட்டைக்கொண்டு வா" என்றார். அடியவர் நடுக்குற்றுப் பெரியவரைப் பணிந்து "ஐயரே! தங்கள் திருவோடு கெட்டுவிட்டது. வேறொரு நல்ல ஓடு கொடுக்கிறேனென்றாலும் அதை ஏற்க மறுக்கிறீர். தங்கள் மறுப்புரை என் உணர்வு முழுவதையும் ஒழித்து விட்டது. என்ன செய்வேன்!" என்று ஏக்குற்று நின்றார். புண்ணியப் பொருளாக நின்ற பெருமான், "என்ன இது! உன்பால் வைத்த அடைக்கலப் பொருளை வௌவிக்கொண்டாய்; பழி பாவங்கட்கு அஞ்சுகிறாயில்லை; யான் உன்னை விடேன்; விடேன். என் ஓட்டை வாங்கிக் கொண்டே போவேன்" என்றார். நாயனார், "திருவோட்டை நான் வௌவினேனில்லை; என் உள்ளத்திலுங் களவின்மையை எங்ஙனம் விளக்க வல்லேன்" என்று இரங்கிக் கூறினார். அங்ஙனமாயின், "உன் மகனைப்பற்றிக் குளத்தில் மூழ்கித் 'திருவோடு கெட்டது' என்று சொல்லிப் போ" என்று சிவயோகியார் உரைத்தார். அதற்கு நாயனார், "எனக்குப் புதல்வனில்லையே" என்றார். சிவயோகியார், "உன் மனைவியைப் பற்றிச் சொல்" என்று கூறினார். அதற்கும் நாயனார், "எனக்கும் என் மனைவிக்கும் ஒரு சூள் உண்டு. அதனால் அவள் கையைப் பிடித்து மூழ்க இயலாமை குறித்து வருந்துகிறேன். யானே மூழ்கி உண்மை சொல்கிறேன்." என்று மொழிந்தார். உடனே, சிவ யோகியார் கனன்று, "என் ஓட்டையுங் கொடாமல், மனைவியைப் பற்றிக் குளத்தில் மூழ்கவும் இசையாமல் சிந்தை வலித்திருக்கிறாய். தில்லைவாழந்தணர்கள் கூடியுள்ள பேரவையில் என் வழக்கை உரைக்கப் போகிறேன்" என்று சொல்லி விரைந்து நடந்தார். நாயனாரும் அவரைத் தொடர்ந்து நடந்தார். சிவ யோகியார் அந்தணர் அவைக்களம் புகுந்து நிகழ்ந்ததைக் கூறினார். வேதியர்கள் வேட்கோவரைப் பார்த்தார்கள். வேட்கோவரும் விளைந்ததை விளம்பினார். இருவர் கூற்றையுங் கேட்ட அந்தணர்கள், வேட்கோவரை நோக்கி "இவர் தம் ஓட்டை நீரிழந்தீராயின், இவர் விரும்பும் வண்ணம் செய்வது நியாயம்" என்று தீர்ப்புக் கூறினார்கள். தமக்கும் மனைவிக்கு

முள்ள தீண்டாமையை நாயனார் வெளியிடமாட்டாராய், ''பொருந்திய வகையால் குளத்தில் மூழ்குகிறேன்'' என்று சொல்லி, சிவ யோகியாருடன் தமதில் லத்திற் ஏகி, மனைவியாரை அழைத்துக் கொண்டு, திருப்புலீச்சுரத் திற்கு முன்னுள்ள திருக்குளத்தை யடைந்து, ஒரு மூங்கிற்றண்டின் ஒரு முனையை மனைவியார் பற்ற, மற்றொரு முனையைத் தாம் பற்றி மூழ்கலானார். அப்போது சிவ யோகியார், "உன் மனைவி கையைப்பற்றி மூழ்கு'' என்றார். திருநீலகண்ட நேயர் அப்படிச் செய்யக் கூடாமையை யாவரும் அறிய விளக்கி மூழ்கிக் கரையேறினார். ஏறிய இருவரிடமும் முதுமை ஒழிந்து இள மைச் செவ்வி மலர்ந்தது. அக்காட்சி கண்டவர்கள், அங்கிருந்த சிவயோகியாரைக் கண்டார்களில்லை. "இஃதென்ன மாயம்!" என்று அவர்கள் மருண்டு நின்றார் கள். அந்நேரத்தில் சிவயோகியாகவந்த சிவபெருமான் உமையம்மையாருடன் விடைமீது காட்சி வழங்கினார். திருநீலகண்ட நாயனாரும் அவர் தம் அருமை மனைவியாரும் சிவபெருமானை வணங்கிப் போற்றி இன்பக் கடலில் மூழ்கினார். எல்லாம் வல்ல இறைவர், "ஐம்புலனை வென்ற விழுமிய அன்பர்களே! இவ்விள மை என்றும் நீங்காமல் நம்பாலிருங்கள்'' என்று திருவருள் சுரந்து எழுந்தருளி னார். திருநீலகண்ட நாயனாரும் அவர் தம் மனைவியாரும் சிவலோகமடைந்து பெறுதற்கரிய இளமைபெற்றுப் பேரின்ப முற்றனர்.

# இயற்பகைநாயனார் புராணம்

சென்னி வெண்குடை நீடந பாயன் திருக்குலம்புகழ் பெருக்கிய
சிறப்பின், மன்னு தொல்புகழ் மருதநீர் நாட்டு வயல்வளந்தர இயல்
பினில் அளித்துப், பொன்னி நன்னதி மிக்கநீர் *பாய்ந்து புணரி
தன்னையும் புனிதமாக் குவதோர், நன்னெடும்பெருந் தீர்த்தமுன்
னுடைய நலஞ்சிறந்தது வளம்புகார் நகரம். க

---

க. சென்னி - சோழ (குலத்தில் தோன்றிய); தலைமீதுமாம். மன்னு தொல் புகழ் - நிலைபெற்ற பழைய புகழ் பொருந்திய. மருதநீர் நாட்டு - மருத நிலங்களைப் பெரிதுங் கொண்ட சோழநாட்டில். இயல்புடன் நீரை அளித்து. பொன்னி நன்னதி - காவிரி. மிக்க நீர் - எஞ்சிய நீர். புணரி தன்னையும் - கடல் தன்னையும். தீர்த்தம் - காவிரி சங்கமம்; காவிரி கடலுடன் கூடுவது. புகார் நகரம் - காவிரிப் பூம்பட்டினம். "புகழால் அமைந்த புகார்"- சிலப்பதிகாரம்: புகார்க் காண்ட இறுதிச் செய்யுள். காவிரிப் பூம்பட்டினம் - சோழமன்னர் தலை நகரங்களுள் தலையாயது; சரித்திர சம்பந்தமுடையது.

பா - ம்——*பரந்தும்.

அக்கு லப்பதிக் குடிமுதல் வணிகர் அளவில் செல்வத்து வள மையின் அமைந்தார், செக்கர் வெண்பிறைச் சடையவர் அடிமைத் திறத்தின் மிக்கவர் மறைச்சிலம் படியார், மிக்க சீரடி யார்கள்யா ரேனும் வேண்டும் யாவையும் இல்லையென் னாதே, இக்க டற்படி நிகழமுன் கொடுக்கும் இயல்பின் நின்றவர் உலகியற் பகையார். உ

ஆறு சூடிய ஐயர்மெய் யடிமை அளவி லாததோர் உளநிறை அருளால், நீறு சேர்திரு மேனியர் மனத்து நினைத்த யாவையும் *வினைப்பட முடித்து, மாறி லாதநன் னெறியினில் †விளங்கும் மனைய றம்புரி மகிழ்ச்சியின் வந்த, பேறெ லாம்அவர் ஏவின செய்யும் பெரு மை யேஎனப் பேணிவாழ் நாளில். ௩

‡ஆய நுண்பொரு ளாகியும் வெளியே அம்ப லத்துள்நின் றாடு வார் உம்பர், நாய கிக்குமஃ தறியவோ பிரியா நங்கை தானறி யாமையோ அறியோம், தூய நீறுபொன் மேனியில் விளங்கத் தூர்த்த வேடமுந் தோன்றவே தியராய், §மாய வண்ணமே கொண்டு தந் தொண்டர் மறாத வண்ணமுங் காட்டுவான் வந்தார். ௪

உ. அக்குலப்பதி - அம்மேன்மை பொருந்திய நகரத்தில். அந்திவான் வெண்பிறையைச்சூடிய. செக்கரைச் சடையுடன் கூட்டிக் கொள்ளினுமாம். செக்கர் - சிவந்த. சடையவர் - சிவபெருமான். மறைச்சிலம்பு அடியார் - நடரா சர்தம். கடல்படி - கடல் சூழ்ந்த உலகம். நிகழ - விளங்க; இயங்க. முன் - உடனே. உலக இயலுக்குப் பகையானவர். கேட்டதை இல்லையென்னாது ஈதலை உலகியற்பகை என்றார். "இல்லையே என்னாத இயற்பகைக்கும் அடியேன்" —திருத்தொண்டத் தொகை: க. இவ்வுண்மை பின்வரும் நிகழ்ச்சி ஒன்றால் உறுதிப்படுதல் காண்க.

௩. ஆறு - கங்கை. ஐயர் - சிவபெருமானது. உள்ளத் தூய்மைக்கு அறி குறி நீறாதலான், அதனை அணிந்தோர் மெய்ம்மையுடையவராகவும் அருளுடைய வராகவும் இருத்தல் வேண்டுமாதலின், "மெய்யடிமை" என்றும், "அருளால்" என்றும் கூறினர். "பூசு நீறுபோல் உள்ளும் புனிதர்கள்"-திருக்கூட்டச் சிறப்பு சு. நீறு சேர்திருமேனியர் - விபூதியணிந்த அடியார்கள். வினைப்பட - செயலில் வர. இக்கொடைக்குக் காரணமாக சிறப்பது இல்லறம் என்க. அவர் - அச்சிவனடி யார்கள். பேணி - ஈகைத் தொண்டினைப் பாதுகாத்து.

௪. ஆய - அறிஞர்கள் ஆராய ஆராய. அறிவால் ஆய ஆய நுண்மைக்கு நுண் மையாய்ச் செல்வதால் "நுண்பொருள்" என்றார். அந்நுண்மையா யிருந் தும் உயிர்கள் பொருட்டுக் கனகசபையில் ஆடுகிறார் என்க. ஆடுவார் - சிவபெரு மான். உம்பர் நாயகிக்கும் - தேவர்களுள் முதல்வியாகிய உமையம்மையார்க்கும். உம்பர் என்பதற்கு மேன்மை பொருந்திய எனக் கொள்ளினுமாம். அஃது அறி யவோ - (பின்னிகழ்ச்சியாகிய) அது தெரியவோ. பிரியாத அந்நங்கைக்கு (உமையம்மையார்க்கு)த் தெரியாமையோ. தூர்த்த வேடமும் - காமுகர்க்குரிய

III - IV—*வினைப்படி. †விளங்க. ‡ஆயும். §மாயை.

வந்து தண்புகார் வணிகர்தம் மறுகின் மருங்கி யற்பகை யார்
மனை புகுத, "எந்தை எம்பிரான் அடியவர் அணைந்தார்" என்று நின்ற
தோர் இன்பஆ தரவால், சிந்தை அன்பொடு சென்றெதிர் வணங்கிச்
சிறப்பின் மிக்கஅர்ச் சனைகள்முன் செய்து, "முந்தை எம்பெருந்
தவத்தினு *லென்கோ முனிவர் இங்கெழுந் தருளிய" தென்றார். ௫

என்று கூறிய இயற்பகை யார்முன் எய்தி நின்றஅக் கைதவ
மறையோர், "கொன்றை வார்சடை யாரடி யார்கள் குறித்து வேண்
டின குணமெனக் கொண்டே, ஒன்றும் நீரெதிர் மறுதுவந் தளிக்கும்
உண்மை கேட்டுநும் பாலொன்று வேண்டி, இன்று நான்இங்கு வந்
தனன் அதனுக் கிசைய லாம்எனில் இயம்பலாம்" என்றார். ௬

என்ன அவ்வுரை கேட்டியற் பகையார் "யாதும் ஒன்றும்என்
பக்கல்உண் டாகில், அன்ன தெம்பிரான் அடியவர் உடைமை ஐயம்
இல்லைநீர் அருள்செய்யும்" என்ன, "மன்னு காதல்உன் மனைவியை
வேண்டி வந்த திங்"கென †அந்தணர் எதிரே, சொன்ன போதிலும்
முன்னையின் மகிழ்ந்து தூய தொண்டனார் தொழுதுரை செய்வார். எ

வேடமும். மாயையின்படியே. தமது தொண்டராகிய இயற்பகையாரின் (எதை
யும்) மறாது கொடுக்குந் திறத்தையும் உலகிற்குக் காட்டும்பொருட்டு.

௫. தண் - குளிர்ச்சி பொருந்திய. மறுகின் மருங்குவந்து - வீதியினிடத்து
வந்து. ஆதரவால் - விருப்பத்தால். என்கோ - என்பேனோ.

௬. அக் கைதவமறையோர் - அந்த வஞ்சனை யொழுக்குடைய பிராமணர்.
மறாது உவந்து. அதற்கு இசைவீரேல் அதனை இன்னதென இயம்புதல் கூடும்.

எ. மனைவியைக்கொடு என்று நாயகன் எதிரிலே கேட்டல் தகாதாதலின்
"சொன்ன போதிலும்" என்றார். உம்மை எதிர்மறை. கேட்டவர் தீய எண்ணத்
துடன் கேட்கவில்லை என்பார் "அந்தணர்" என்றார். "அங்கணர்" என்பது
பாடமாயினும் பொருந்தும்; திருநகரச் சிறப்பு சகூ-ம் பாட்டுக் குறிப்புப் பார்க்க.
கேட்கத்தகாத உரையைக் கேட்டும் இயற்பகையார்க்குச் சீற்றம் பிறக்கவில்லை.
அவர்தம் விரதம் எதையும் இல்லை என்னாது கொடுப்பது. தம்மிடத்தில்லாத
ஒன்றை எங்கே அன்பர் கேட்டு விடுகிறாரோ என்பதிலேயே இயற்பகையார்
மனம் ஏக்குற்றுக்கிடந்தது. உள்ள பொருளை அன்பர் கேட்டதும் நாயனாரின்
மனம் மகிழ்ச்சியடைந்தது. பொருள் மனைவியாயினுமாக; மற்றை எதுவாயினு
மாக. "யாதும் ஒன்று என் பக்கல் உண்டாகில் அன்னது எம்பிரான் அடியவர்
உடைமை" என்று கூறிய உறுதியினின்றும் நாயனார் பிறழாமையே ஈண்டுக்
கருதற்பாலது. நாயனார் சிவநேயம் ஒன்றிலே பெரும் பற்றுடையரா யிருந்தா
ரென்பதும், பிறவற்றில் தாமரை நீர்போல் பற்றின்றி வாழ்ந்தார் என்பதும் நனி
விளங்குகின்றன.

பா - ம்—*என்கொல்; என்கோன். †அங்கணர்.

"இதுஎ னக்குமுன் புள்ளதே வேண்டி எம்பி ரான்*செய்த பேறெனக்'' கென்னாக், கதுமெ னச்சென்று தம்மனை வாழ்க்கைக் †கற்பு மேம்படு காதலி யாரை, "விதிம ணக்குல மடந்தை!இன் றுனைஇம் மெய்த்த வர்க்குநான் கொடுத்தனன்'' என்ன, மதும லர்க் குழல் மனைவியார் கலங்கி மனந்தெ ளிந்தபின் மற்றிது ‡மொழிவார்.

"இன்று §நீரெனக் கருள்செய்த திதுவேல் என்உ யிர்க்கொரு நாத!நீர் உரைத்த, தொன்றை நான்செயும் அத்தனை யல்லால் உரிமை வேறுள தோஎனக்'' கென்று, தன்த னிப்பெருங் கணவரை வணங் கத் தாழ்ந்து தொண்டனார் தாமெதிர் வணங்கச், சென்று மாதவன் சேவடி பணிந்து திகைத்து நின்றனள் திருவினும் பெரியாள். ௯

அ—௯. கதுமென - விரைவாக. மடந்தையே. முதலில் அம்மையார் கலக்குற்றார்; பின்னே தெளிந்து நாயனார் விரும்பிய வழிநிற்க ஒருப்பட்டார். "இஃதென்ன உலகிலில்லாச் செயல்'' என்ற எண்ணந் தோன்றிய போது அம்மையார்க்குக் கலக்கமுண்டாயிற்று. "நமது நாயகர் சிவநேயர்; இல்லையே என்னாத நோன்புடையவர்; உலகவழிநின்று நாம் ஒன்றும் இங்கே கருதலாகாது. இது திருவருள் நிகழ்ச்சியாகவே இருத்தல்வேண்டும்.மேலே விளைவதைப்பார்ப்போம்'' என்று அம்மையார் தெளிவுற்று இசையலானார். உலகவழியில் கலங்கி என்றும், திருவருள் வழியில்தெளிந்து என்றுங்கொள்க. அம்மையாருஞ் சிவத்தை நினைந்து நினைந்து சிவ நேயத்தில் மூழ்கினவ ராதலான், நேர்ந்துள்ளது திருவருள் நிகழ்ச்சி என்று தெளிவடைந்தாரென்க. அம்மையார் அன்று நாயனார் வேண்டுகோளை மறுத்தொதுக்கியிருப்பரேல்,நாயனாரின் "இல்லையே என்னாத''நோன்புக்கு இடையூறு நேர்ந்திருக்கும். நாயனார் மாண்பு நாயகியாரை யொட்டியே நிலவியதென்க. நாயனார் பெருமையினும் நாயகியார் பெருமையே சாலச் சிறந்தது. நாயனார் நாயகியாரை வணங்கியதனால் அவர்தம் மனோநிலை நன்கு புலனாகிறது. மற்று மொன்று இங்கே குறிக்கத்தக்கது. அந்நாளில் காம நூல்கள் பரவியிருக்கும். பெண்மக்களிடத்துள்ள தாய்மையும் இறைமையும் விளங்கப்பெறாது, அவர்களை வெறுங் காமப் பொருளாக்கருதி ஆடவர் உலகம் துன்புற்றிருக்கும். பெண்மக்கள் காமப் பொருளல்லர் என்பதையும், நாயனார் மற்றவர் போல் பெண்ணை வெறுங் காமப் பொருளாகக்கருதி வாழ்வு நடாத்தவில்லை என்பதையும், காமப்பொருளுக்கும் மேற்பட்டதாய்மை இறைமைப்பொருளினிடத்து நாயனார் மனம்படிந்து கிடந்ததென்பதையும், இன்னபிறவற்றையும் நாயனார் வாயிலாக உலகுக் குணர்த்தவேண்டுவது திருவருள் நோக்கம் போலும். நாயனார், நாயகியாரை வெறுங் காமக்கிழத்தியா ரெனக் கருதி யிருப்பரேல், அடியவர் வேண்டுதலுக்கு உடன்பட்டிரார். அக் காலதேச வர்த்தமானங்களைக் கொண்டே இவ் வரலாற்றை ஆய்ந்து பார்த்தல்வேண்டும். "கனியி னுங்கட்டி பட்ட கரும்பினும் - பனிமலர்க் குழல்

பா - ம்—*தந்த. †கற்பின். ‡மொழிந்தார்; புகன்றார். §நீரென்னை யருள்.

மாது தன்னைமுன் கொடுத்தமா தவர்தாம் மனமகிழ்ந்துபேர் உவகையின் மலர்ந்தே, "யாது நான்இனிச் செய்பணி" *என்றே இறைஞ்சி நின்றவர் தம்மெதிர் நோக்கிச், சாதி வேதிய ராகிய தலைவர் தையல் தன்னையான் தனிக்கொடு போகக், காதல் மேவிய சுற்றமும் பதியும் கடக்க நீதுணை போதுக" என்றார். க0

வேறு

என்றவர் அருளிச் செய்ய "யானேமுன் செய்குற் றேவல்
ஒன்றிது தன்னை என்னை உடையவர் அருளிச் செய்ய
நின்றது பிழையாம்" என்று நினைந்துவே றிடத்துப் புக்குப்
பொன்திகழ் அறுவை சாத்திப் பூங்கச்சுப் பொலிய வீக்கி. கக

வாளொடு பலகை ஏந்தி வந்தெதிர் வணங்கி மிக்க
ஆளரி ஏறு போல்வார் அவரைமுன் போக்கிப் பின்னே
தோளிணை துணையே யாகப் போயினார் துன்னி னாரை
நீளிடைப் படமுன் கூடி நிலத்திடை வீழ்த்த நேர்வார். கஉ

---

பாவை நல்லாரினும் - தனிமுடிகவித் தாளும் அரசினும் - இனியன் தன்னடைந் தார்க்கிடை மருதனே"—அப்பர்: திருவிடை மருதூர் க.

க0. மனைவியை மனமுவந்து கொடுத்தலாகிய அருஞ்செயலாற்றினமையால் நாயனார் "மாதவ"ராயினா ரென்க. இல்லை என்னாது அடியார் விரும்பியதை ஈய நேர்ந்தது நாயனார்க்கு மகிழ்ச்சி யூட்டிற்று. "ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை - வைத்திழக்கும் வன்கணவர்"—திருக்குறள்: உஉஅ. நின்றவர் - நாயனார். வேதியர் இருவகையினர்: பிறப்பு வேதியர்; சிறப்பு வேதியர். கல்வி அறிவு ஒழுக்கத்தால் வேதியராதலே சிறப்பு. பண்டைநாள் முறையிதுவே. பின்னரே பிறப்பு வேதியரினம் தோன்றலாயிற்று. நாயனார் காலத்தில் பிறப்பு வேதியரினம் இருந்தமையான் "சாதி வேதியர்" என்றார். உங்களிடத்து ஆசை வைத்துள்ள சுற்றத்தாரையும் ஊராரையும் கடந்து போக. அடியவர், நாயனார் மனோநிலையை உலகுக் குணர்த்தவேண்டி வந்தவரேயன்றி, அவர்தம் மனைவியாரைக் கவர்ந்து செல்ல வந்தவரல்லராதலினால், அம்மையாருடன் நாயனாரையும் அழைத்துச் செல்லத் திருவுளங் கொண்டார் என்க. இது "துணை போதுக" என்பதால் விளங்குகிறது. இடையில் நாயனார் பிரிந்த போதும் சிவபெருமான் அவரை அழைத்தது பின்னே வருதல் காண்க.

கக. "என்னையுடையவர்" என்றமையான், நாயனாரின் உடல் பொருள் ஆவி எல்லாம் அடியாருடையன என்பது விளங்குதல் காண்க. பொன் திகழ் அறுவை - பீதாம்பரம். பூங்கச்சு - அழகிய அரைக்கச்சு. பொலிய வீக்கி - விளக்கும்படி கட்டி.

கஉ. பலகை - கேடகத்தையும். ஆள் அரியேறு - ஆண் சிங்கம். அவரை - சிவனடியாரையும் மனைவியாரையும். வீரனுக்குத் தோளே சிறந்த துணையாத

பா - ம்—*தானென்று.

மனைவியார் சுற்றத் தாரும் வள்ளலார் சுற்றத் தாரும்
"இனையதொன் றியாரே செய்தார் இயற்பகை பித்த ஞனல்
புனையிழை தன்னைக் கொண்டு போவதாம் ஒருவன்" என்று
துனைபெரும் பழியை மீட்பான் தொடர்வதற் கெழுந்து சூழ்வார். கங

வேலொடு *வில்லும் வாளும் சுரிகையும் எடுத்து மிக்க
காலென விசையிற் சென்று கடிநகர்ப் புறத்துப் போகிப்
பாலிரு மருங்கும் ஈண்டிப் பரந்தஆர்ப் பரவம் †பொங்கி
மால்கடல் கிளர்ந்த தென்ன வந்தெதிர் வளைத்துக் கொண்டார். கச

வழிவிடுந் துணைபின் போத வழித்துணை யாகி யுள்ளார்
கழிபெருங் காதல் ‡காட்டக் காரிகை யுடன்போம் போதில்
"அழிதகன்! போகேல் §ஈண்ட அருங்குலக் கொடியை விட்டுப்
பழிவிட நீபோ" என்று பகர்ந்தெதிர் ¶நிரந்து வந்தார். கரு

மறைமுனி அஞ்சி னன்போல் மாதினைப் பார்க்க மாதும்
"இறைவனே! அஞ்ச வேண்டாம் இயற்பகை வெல்லும்" என்ன

---

லால் "தோள் இணை துணையேயாக" என்றார். தோளிணை - தோளிரண்டும். மனைவியின் அருகே நெருங்கி வருவோரை, நெடுந்தூரத்தில் காணும்போதே எதிர்த்து மண்ணின்மீது வெட்டிச் சாய்க்க உளங் கொண்டவராய்ச் சென்றார்.

கங. வள்ளலார் - இயற்பகை நாயனர். (இயற்பகையின்) மனைவியை ஒருவன் கொண்டு போகலாமா? துனை - விரைந்து பற்றும். சுற்றத்தாரும் மற்றவரும் உலகியல் நெறி நிற்பவராதலான், அவர் மானமேற்கொண்டு எழுந்தது தவறுத லன்று. இயற்பகையாரின் செயல் பலகொண்டு அவரை முன்னரே பித்தரெனச் சுற்றத்தாரும் மற்றவரும் கருதியிருந்தன ரென்பது ஈண்டுப் "பித்தன்" என்றமையால் தெரிகிறது.

கச. சுரிகையும் - உடைவாளையும். கால் என - காற்றைப்போல. கடிநகர் - காவலையுடைய பட்டினம். இருபால் இருமருங்கும் ஈண்டி - வலம் இடம் முன் பின்னுக நெருங்கி. ஆர்ப்பு அரவம் - மிக்க ஆரவாரம். மால் கடல் கிளர்ந்தது என்ன - பெரிய கடல் எழுந்தாற்போல.

கரு. வழிவிடுதற்கு நாயனர் பின்னே செல்ல, எல்லார்க்கும் வழித்துணையாக உள்ள சிவபெருமான். இயற்பகைக்கும், அவர்தம் மனைவியார்க்கும், மற்றவர்க்கும் முத்தி வழிக்குத் துணை நிற்பவர் என்பது குறிப்பு. "வழித்துணையாம் மழபாடி வயிரத்தூணே"—திருத்தாண்டகம். கழி - மிகவும். தம்மைச் சிவபிரான் என்று காட்டிக்கொள்ளாது என்பார் "காதல் காட்ட" என்றார். தாங்கிய கோலத்துக் கேற்ற நடையென்க. அழிதகனே - தகுதி கெட்டவனே; மிகுந்த பாவத்தை யுடையவனே. போகேல் - போகாதே. ஈண்ட - இங்கே. நிரந்து - எங்கும் பரந்து.

பா - ம்—*வாளும் வில்லும். †பொங்க. ‡காட்டி. §ஈண்டல். ¶நிரைந்து.

அறைகழல் அண்ணல் கேளா "அடியனேன் அவரை எல்லாம்
தறையிடைப் படுத்து கின்றேன் தளர்ந்தருள் செய்யேல்" என்று. கசு

பெருவிறல் ஆளி என்னப் பிறங்கெரி சிதற நோக்கிப்
பரிபவப் பட்டு வந்த படர்பெருஞ் சுற்றத் தாரை
"ஒருவரும் எதிர்நில் லாமே ஓடிப்போய்ப் பிழையும் அன்றேல்
எரிசுடர் வாளில் கூறுய்த் †துடிக்கின்றீர்" என்று ‡நொந்தார். கஎ

"ஏடா! நீ என்செய் தாயால் §இத்திறம் இயம்பு கின்றாய்
நாடுறு பழியும் ஒன்னார் நகையையும் நாணுய் இன்று
பாடவம் உரைப்ப துன்றன் மனைவியைப் பனவற் கீந்தோ
கூடவே மடிவ தன்றிக் கொடுக்கயாம் ஒட்டோம்" என்றார். கஅ

மற்றவர் சொன்ன மாற்றம் கேட்டலும் மனத்தின் வந்த
செற்றம்முன் பொங்க "உங்கள் உடற்றுணி எங்குஞ் சிந்தி
முற்றுறும் உயிரை எல்லாம் முதல்விசும் பேற்றிக் கொண்டு
நற்றவர் தம்மைப் போக விடுவன்" என் றெழுந்தார் நல்லோர். கக

நேர்ந்தவர் எதிர்ந்த போது ¶நிறைந்தஅச் சுற்றத் தாரும்
சார்ந்தவர் தம்முன் செல்லார் தையலைக் கொண்டு பெற்றம்
ஊர்ந்தவர் படிமேற் செல்ல உற்றெதிர் உடன்று பொங்கி
ஆர்ந்தவெஞ் சினத்தால் மேற்சென் றடர்ந்தெதிர் தடுத்தார் அன்றே.

சென்றவர் தடுத்த போதில் இயற்பகை யார்முன் சீறி
வன்துணை வாளே யாகச் சாரிகை மாறி வந்து

---

கசு. அறைகழல் அண்ணல் - ஒலிக்கின்ற வீரகண்டையை அணிந்த பெருமையிற் சிறந்த இயற்பகையார். கேளா - அம்மையார் சொற்றதைக் கேட்டு.

கஎ. விறல் ஆளி - வெற்றியுடைய சிங்கம். பிறங்கு எரி சிதற - பெருகுங் கோபாக்கினியி னின்றும் பொறிகள்பறக்க. பரிபவப்பட்டு - அவமானமடைந்து. துடிக்கின்றீர் - துணிவுபற்றி எதிர்காலம் நிகழ்கால மாயிற்று.

கஅ. ஒன்னார் - பகைவர்தம். பாடவம் - சாமர்த்தியம். பனவற்கு - பிராமணனுக்கு.

கக. மாற்றம் - உரை. செற்றம் - கோபம். விசும்பு - விண்ணில்.

உ0. தம்மைச் சார்ந்து எதிர்த்த நாயனார் எதிரிலே செல்லாதவராய். பெற்றம் ஊர்ந்தவர் - இடபாரூடராகிய சிவபெருமான். படிமேல் செல்ல - பூமிமீது செல்ல. உடன்று - பகைத்து. ஆர்ந்த - நிறைந்த. அடர்ந்து - நெருங்கி.

உக. சாரிகை மாறிவந்து - வலம் இடமாகச் சுற்றிவந்து. துன்றினர் - நெருங்கி வந்தவர்களுடைய. வென்று அடுபுலி ஏறு என்ன - மற்ற விலங்குகளை

பா - ம்—*அன்பர். †துணிகின்றீர். ‡நேர்ந்தார். §இத்திறல். ¶நிறைதவச்.

துன்றினர் தோளும் தாளும் தலைகளும் துணித்து வீழ்த்து
வென்றடு புலியே றென்ன அமர்விளை யாட்டில் மிக்கார். உக

மூண்டுமுன் பலராய் வந்தார் தனிவந்து முட்டி னூர்கள்
வேண்டிய திசைகள் தோறும் வேறுவே றமர்செய் போழ்தில்
ஆண்டகை வீரர் தாமே அனைவர்க்கும் அனைவ ராகிக்
காண்டகு விசையிற் பாய்ந்து கலந்துமுன் துணித்து வீழ்த்தார். உஉ

சோரிந்தன குடல்கள் எங்கும் துணிந்தன உடல்கள் எங்கும்
விரிந்தன தலைகள் எங்கும் மிடைந்தன கழுகும் எங்கும்
எரிந்தன விழிகள் எங்கும் *எதிர்ப்பவர் ஒருவர் இன்றித்
திரிந்தனர் களனில் எங்கும் சிவன்கழல் புனைந்த வீரர். உங

மாடலை குருதி பொங்க மடிந்தசெங் களத்தி னின்றும்
ஆடுறு செயலின் வந்த கிளைஞரோ டணைந்தார் தம்மில்
ஓடினர் உள்ளார் உய்ந்தார் ஒழிந்தவர் ஒழிந்தே மாண்டார்
நீடிய வாளும் தாமும் நின்றவர் தாமே நின்றார். உச

திருவுடை மனைவி யாரைக் †கொடுத்திடைச் செறுத்து முன்பு
வருபெருஞ் சுற்றம் எல்லாம் வாளினால் துணித்து ‡மாட்டி
அருமறை முனியை நோக்கி "அடிகள்நீர் அஞ்சா வண்ணம்
பொருவருங் கானம் நீங்க விடுவன்" என் றுடனே போந்தார். உரு

இருவரால் அறிய ஒண்ணு ஒருவர்பின் செல்லும் ஏழை
பொருதிறல் வீரர் பின்பு போகமுன் போகும் போதில்

---

வென்று கொல்லும் ஆண்புலியைப்போல. போர்க்களத்தில் வீரம் சாதுக்களுக்கும் இருத்தல் வேண்டுமென்பது விளங்குதல் காண்க.

உங. தலைகள் வெட்டுண்டு எங்கும் விரிந்து கிடந்தன. மிடைந்தன - நெருங்கின. எரிந்தன - தீக்கனன்று கொண்டிருந்தன. களனில் - போர்க் களத்தில்.

உச. மாடு அலை குருதி பொங்க - பக்கங்களில் அலையைவீசி இரத்த வெள்ளம் பெருகியோட. ஆடுறு செயலின் - போராடும் அல்லது வெற்றி பெறுஞ் செயல்மேற் கொண்டு. கிளைஞரோடு - சுற்றத்தாருடன். ஒழிந்தவர் - ஓடாது எதிர்த்துப் போர் புரிந்தவர்கள். இயற்பகையார் ஒருவரே நின்றார்.

உரு. இடை செறுத்து - இடையிலே கோபித்து. மாட்டி - மாளச் செய்து. அடிகளே, ஒப்பற்ற இக்காட்டைக் கடக்கத் துணைபோந்து வழிவிடுவேன்.

உகூ. இருவரால் - இயற்பகையாராலும் அவர்தம் மனைவியாராலும்; பிரம விஷ்ணுக்களால் என்றலு மொன்று. ஒருவர் - சிவபெருமான். ஏழை - அம்மை

பா - ம்—*எதிர்ந்தவர். †கொடுத்திட. ‡மாற்றி.

அருமறை முனிவன் சாய்க்கா டதன்மருங் கணைய மேவித்
திருமலி தோளி னானை "மீள்"எனச் செப்பி னானே. உசு

தவமுனி தன்னை மீளச் சொன்னபின் தலையால் ஆர
அவன்மலர்ப் பதங்கள் சூடி அஞ்சலி கூப்பி நின்று
புவனமுன் றுய்ய வந்த பூசுரன் தன்னை ஏத்தி
"இவனருள்பெறப்பெற்றேன்"என்றியற்பகையாரும்மீண்டார். உஎ

செய்வதற் கரிய செய்கை செய்தநற் றொண்டர் போக
மைதிகழ் கண்டன் எண்தோள் மறையவன் மகிழ்ந்து நோக்கிப்
"பொய்தரும் உள்ளம் இல்லான் பார்க்கிலன் போனான்" என்று
மெய்தரு சிந்தை யாரை மீளவும் அழைக்க லுற்றான். உஅ

"இயற்பகை முனிவா ஓலம் ஈண்டநீ வருவாய் ஓலம்
அயர்ப்பிலா தானே ஓலம் அன்பனே ஓலம் ஓலம்
செயற்கருஞ் செய்கை செய்த தீரனே ஓலம்" என்றான்
மயக்கறு மறைஓ லிட்டு மாலயன் தேட நின்றான். உகூ

அழைத்தபேர் ஓசை கேளா "அடியனேன் வந்தேன் வந்தேன்
பிழைத்தவர் உளரேல் இன்னும் பெருவலித் தடக்கை வாளின்
இழைத்தவ ராகின் றார்"என் றியற்பகை யார்வந் தெய்தக்
குழைப்பொலி காதி னானும் மறைந்தனன் கோலங் கொள்வான். ௩0

---

யார். ஏழை முன்போகும் போதில். பொருதிறல் - போர்செய்தற்குரிய வல்லமை வாய்ந்த. வீரர் - இயற்பகை நாயனார். அருமறை முனிவன் - சிவபெருமான். வீரத்திருநிறைந்த தோளினையுடைய நாயனாரை.

உஎ. தன்னை - இயற்பகையை. பூசுரன் தன்னை - பிராமணனை.

உஅ. திரும்பியும் பார்க்கிலன். மெய்தரு சிந்தையாரை - இயற்பகை நாயனாரை. அன்பு அழைக்கச் செய்கிறது. இயற்பகையையும் உடன் அழைத்துச் செல்லவேண்டுமென்பது ஆண்டவன் திருவுள்ளம்.

உகூ. இயற்பகையார் சோதனையில் முழுவெற்றி பெற்றதைக் கண்டு சிவபிரானே அவரை "முனிவர்" என்கிறார். இயற்பகையார், செயலால் முனிவராயினார் என்க. ஓலம் - அபயம்; அச்சம் உற்ற விடத்து அதனின்றும் விடுதலையடைய விளிப்பது. அயர்ப்பு இலாதானே - மறப்பு இல்லாதவனே. சிவத்தை என்றும் மறவாதவரே அன்பராதலின் "அன்பனே" என்றார். "செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர் - செயற்கரிய செய்கலாதார்"—திருக்குறள்: உசு.

௩0. தடம் – அகன்ற. வாளில் இழைத்தவராகின்றார் - வாளுக்கு இரையாகின்றார். குழை (குண்டலம்) பொலிகாதினானும் - சிவபெருமானும். கோலம் - தமது உண்மைக்கோலம். கோலங் கொள்வான் மறைந்தனன்.

சென்றவர் முனியைக் காணார் சேயிழை தன்னைக் கண்டார்
பொன்றிகழ் குன்று வெள்ளிப் பொருப்பின்மேற் பொலிந்த தென்னத்
தன்துணை யுடனே வானில் தலைவனை விடைமேற் கண்டார்
நின்றிலர் தொழுது வீழ்ந்தார் நிலத்தினின் றெழுந்தார் நேர்ந்தார்.

"சொல்லுவ தறியேன் வாழி தோற்றிய தோற்றம் போற்றி
வல்லைவந் தருளி என்னை வழித்தொண்டு கொண்டாய் போற்றி
எல்லையில் இன்ப வெள்ளம் எனக்கருள் செய்தாய் போற்றி
தில்லையம் பலத்து ளாடும் சேவடி போற்றி" என்ன. ௩௨

விண்ணிடை நின்ற வெள்ளை விடையவர் அடியார் தம்மை
"எண்ணிய உலகு தன்னில் இப்படி நம்பால் அன்பு
பண்ணிய பரிவு கண்டு மகிழ்ந்தனம் பழுதி லாதாய்!
நண்ணிய மனைவி யோடு நம்முடன் போது" கென்று. ௩௩

திருவளர் சிறப்பின் மிக்க திருத்தொண்டர் தமக்கும் *தேற்றம்
மருவிய தெய்வக் கற்பின் மனைவியார் தமக்கும் தக்க
பெருகிய அருளின் நீடு பேறளித் திமையோர் ஏத்தப்
பொருவிடைப் பாகர் மன்னும் பொற்பொது அதனுட் புக்கார். ௩௪

வானவர் பூவின் மாரி பொழியமா மறைகள் ஆர்ப்ப
ஞானமா முனிவர் போற்ற நலமிகு சிவலோ கத்தில்
ஊனமில் தொண்டர் கும்பிட் டுடன்உறை பெருமை பெற்றார்
ஏனைய சுற்றத் தாரும் வானிடை இன்பம் பெற்றார். ௩௫

---

௩௧. பொருப்பு - மலை. தலைவனை, தன் துணையுடனே - சிவபெருமானை உமாதேவியாருடன். நேர்ந்தார் - வழிபட்டார்; நெருங்கினாரெனினுமாம்.

௩௨. தோற்றிய தோற்றம் - காட்டிய காட்சி. வல்லை - விரைவாக. வழி வழி வருந்தொண்டு.

௩௩. எண்ணிய - மதிக்க. பரிவு - (அன்புத்)திறம்.

௩௪. தேற்றம் - தெளிவு; திருவருள்நிலை இன்னதென்னுந் தெளிவு; அ - ம் பாட்டையும் குறிப்பையும் பார்க்க. அருளின் நீடு பேறு - அருளால் நிலையாகவுள்ள வீடுபேற்றை. இமையோர் - தேவர்கள். பொரு - போர். பொற்பொது - கனகசபை.

௩௫. ஊனமில் தொண்டர் - இயற்பகை நாயனார். உடன் உறை - சிவபிரானுடன் வாழும்.

பா - ம்—*தோற்றம்.

*இன்புறு தாரந் தன்னை ஈசனுக் கன்பர் என்றே*
*துன்புறா துதவும் தொண்டர் பெருமையைத் தொழுது வாழ்த்தி*
*அன்புறு மனத்தால் நாதன் அடியவர்க் கன்பு நீடு*
*மன்புகழ் இளையை மாறன் வளத்தினை வழுத்த லுற்றேன்.* ௩௬

ஆ. திருவிருத்தம் - ௪௩௧

---

சோழ நாட்டிலே, காவிரிப் பூம்பட்டினத்திலே, வணிகர் குலத்திலே பிறந்த அடியவர் ஒருவர் இருந்தார். அவர், இயற்பகை என்ற பெயரை உடையவர். அவர் இல்லற ஞானியார். அவர்பால் அடியவராய் அணைவோர் எவராயினும், அவர் விரும்புவது எதுவாயினும், அவருக்கு அதை இல்லை என்னாது அளித்து வருவது அவர்தந் திருத்தொண்டாகும்.

ஒருநாள் சிவபெருமான், இயற்பகை நாயனாரின் திருத் தொண்டின் திறத்தை உலகுக் குணர்த்தும்பொருட்டு, வேதியராய்த் திருநீற்று மேனியராய்க் காமுகராய்க் கோலங்கொண்டு நாயனாரிடம் போந்தார். நாயனார் அடியவரைக் கண்டதும் முறைப்படி வழிபட்டு நின்றார். நின்ற அன்பரை அந்தணர் நோக்கி, "உமது திருத்தொண்டின் திறத்தைக் கேள்வியுற்று ஒரு பொருள் நாடி இங்கு வந்தோம். அதை அளிப்ப நீர் இசைவீராயின், அதை இன்னதென்று இயம்புவோம்." என்றார். அன்பிற் சிறந்த நாயனார், "எப்பொருளாயினும் ஆக. அஃதென்பால் இருப்பின், அஃதடியவ ருடைமை. அதை அருளிச் செய்க" என்று கூறினார். மறையோர், முன்பின் சிந்தியாது, "உம் மனைவியை நாடி இங்கு வந்தோம்" என்றார். என்றதும், இயற்பகையார், "அடிகள் என்னிடம் உள்ள பொருளை நாடியது எனது புண்ணியப் பயன்" என்று அதிக மகிழ்வெய்தி, உள்ளே விரைந்து நுழைந்து இல்லக் கிழத்தியார்க்கு அடிகள் விருப்பத்தையும் தங் கருத்தையும் தெரிவித்தார். மனைவியார் சிறிது மனங் கலங்கி, உடனே தெளிந்து, நாயனார் கருத்துக்கு இணங்கி அவரை வணங்கினார். நாயனாரும் காதலியாரைத் தொழுதார். மாதரசியார் மறையவரிடஞ் சென்று, அவரைப் பணிந்து எழுந்து திகைத்து நின்றார். அக்காட்சி கண்டு மகிழ்வெய்திய இயற்பகையார், வேதியரை நோக்கி, "இன்னும் யான் என்செய்தல் வேண்டும்?" என்று கேட்டார். சுவாமியார், "இத் தையலை யான் தனியே அழைத்துக்கொண்டு போதல்வேண்டும். உங்கள் உறவினரையும் இவ்வூரையுங் கடந்து போக நீர் எமக்குத் துணைவரல்வேண்டும்" என்று வாய்மலர்ந்தார். நாயனார், "இப்பணியை யானே செய்ய முற்பட்டிருத்தல் வேண்டும். இவர் அருளும் வரை தாழ்த்தது பிழை" என்று வருந்தி, வேறோரிடஞ் சென்று போர்க் கோலம் பூண்டு திரும்பி, வேதியரையும் அருந்ததியனையாரையும் தமக்கு முன்னே போகவிடுத்துத் தாம் அவர்களுக்குப் பின்னே சென்றார்.

---

௩௬. மன் - நிலைபெற்ற. இளையை - இளையான்குடி.

இச்செய்தி ஊர் முழுவதும் பரவலாயிற்று. பரவியதும், சுற்றத்தவர்கள், ஒருங்கே திரண்டு "என்ன அநியாயம்! இத்தகைய அடாத செயலை இதுகாறும் எவரே செய்தார்! இயற்பகை பித்தனாயினும் நாம் வாளா கிடத்தல்வேண்டுமோ? அவன் மனைவியை ஒரு மறையவன் கொண்டுபோவது தகுதியா?" என்று கூறிக் கொண்டு, தங்கள் குலத்துக்கு நேரும் பழியை ஒழிக்கப் போர்க்கருவிகளைத் தாங்கி ஐயரை வளைத்துக்கொண்டார்கள். ஐயர் அம்மையாரை நோக்கினார். அம்மையார், "எம்பிரானே! அஞ்சற்க. இவர்களை இயற்பகையார் வெல்வார்" என்றார். உடனே இயற்பகை நாயனர் வேதியருக்குத் தேறுதல் கூறி, உறவினர் கட்கு நல்லுரைபகர்ந்து, ஓடிப் பிழைக்குமாறு சொற்றனர். சுற்றத்தார்கள், "அடா! நீ என்ன செய்தாய்? ஊரார்கள் பழிப்பார்கள்; பகைவர்கள் நகைப்பார்கள். உனக்கு நாணமில்லை. மனைவியை மறையவனுக்குக் கொடுத்தோ நீ வீரம் பேசுகிறாய்? நாங்கள் ஒருங்கே செத்தாலுஞ் சாவோம். இப்பெண்ணை மறையவன் கொண்டு போக விடோம்" என்று வீரமொழி பகர்ந்தார்கள். இயற்பகையார் சினந்து, "உங்கள் உயிரை விண்ணுக்கேற்றி இப்பெரியாரைப் போகவிடுவேன்" என்று விளம்பி, அவர்களை எதிர்த்தார். அவர்கள் இயற்பகையாரை விடுத்து, அந்தணரைத் தாக்கினார்கள். இல்லையே என்னாத இயற்பகையார், சீறித்தாக்கிய அனைவரையும் வாளினால் துண்டம் துண்டமாக வெட்டி வீழ்த்தி, எதிர்ப்பவர் ஒருவருமின்றி ஏறுபோல் உலவினார். பின்னர்ப் பிறவி வேரை வெட்டி வீழ்த்திய பெருந்தகையார் அந்தணரைப் பார்த்து, "இக்காட்டை அடிகள் கடக்கும் வரை உடன் வருகிறேன்" என மொழிந்து, திருச்சாய்க்காடு என்னுந் திருப்பதிவரை உடன் சென்றார். அங்கே, அந்தணர், அன்பரைத் திருக்கண்ணோக்கஞ்செய்து, "நீர் வீட்டிற்குத் திரும்பலாம்" என்றருளினார். செயற்கருஞ் செய்கை செய்த இயற்பகை நாயனர், அந்தணரைத் தொழுது, வாழ்த்தித் திரும்பினார்.

சிவபெருமான், "இவன் மனைவியை விடுத்துத் திரும்பிப் பாராது போகின்றான். இவன்றன் அன்பு நிலை என்னே! என்னே!!" என்று வியந்து, "இயற்பகை முனிவா ஓலம்! ஓலம்! இவ்விடம் விரைந்து வருக" என்று ஓலமிட்டார். திருத்தொண்டர் அவ்வோலங் கேட்டு, "வந்தேன்; வந்தேன். இன்னுந் துன்பஞ் செய்பவர்களிருக்கின்றார்களா? அவர்களைத் தொலைத்து விடுகிறேன்" என்று முழங்கிக்கொண்டு விரைந்து ஓடிவந்தார். வந்தவர், மறையவரைக் கண்டாரில்லை; நங்கையை மட்டுங்கண்டார். அந்நிலையில், சிவபிரான் உமாதேவியாரோடு விடைமேற் காட்சியளிப்பதை இயற்பகையார் கண்டார். நாயனர், விழுந்து விழுந்து, வணங்கி வணங்கி, வாழ்த்தி வாழ்த்தி ஆனந்த வடிவினராயினர். அப்பொழுது சிவபெருமான், "அன்பனே! உன் தொண்டின் திறம் எமக்குப் பெருமகிழ் வளித்தது. நீ உன் மனைவியுடன் நம்மோடு வரக்கடவாய்" என்று திருவாய் மலர்ந்தருளித் திருவுருக்கரந்தனர்.

இயற்பகை நாயனரும் அவர்தம் மனைவியாரும் சிவலோகமெய்தி இன்ப வாழ்வைப் பெற்றனர். இறந்துபட்ட உறவினர்களும் விண்ணடைந்து பிறவாத இன்ப நுகர்ந்தார்கள்.

# இளையான்குடிமாறநாயனார் புராணம்



அம்பொன் நீடிய அம்ப லத்தினில் ஆடு வார்அடி சூடுவார்
தம்பி ரான்அடி மைத்தி றத்துயர் சால்பின் மேன்மை தரித்துளார்
நம்பு வாய்மையில் நீடு சூத்திர நற்கு லஞ்செய் தவத்தினால்
இம்பர் ஞாலம் விளக்கி னார்இளை யான்கு டிப்பதி மாறனார். க

ஏரின் மல்கு வளத்தி னால்வரும் எல்லை இல்லதொர் செல்வமும்
நீரின் மல்கிய வேணி யார்அடி யார்தி றத்து நிறைந்ததோர்
சீரின் மல்கிய அன்பின் மேன்மை *திருந்த மன்னிய சிந்தையும்
பாரின் மல்க விரும்பி †மற்றவை பெற்ற நீடு பயன்கொள்வார். உ

ஆரம் என்பு புனைந்த ஐயர்தம் அன்பர் என்பதொர் தன்மையால்
நேர வந்தவர் யாவ ராயினும் நித்த மாகிய பத்திமுன்
கூர வந்தெதிர் கொண்டு கைகள் குவித்து நின்று செவிப்புலத்
தீர மென்மது ரப்ப தம்பரி வெய்த முன்னுரை செய்தபின். ங

கொண்டு வந்து மனைப்பு குந்து குலாவு பாதம் விளக்கியே
மண்டு காதலின் ஆச னத்திடை வைத்த ருச்சனை செய்தபின்
உண்டி நாலு விதத்தி லாறு சுவைத்‡தி றத்தினில் ஒப்பிலா
அண்டர் நாயகர் தொண்டர் இச்சையில் அமுது செய்ய அளித்துளார்.

---

க. அம்பொன் நீடிய அம்பலத்தினில் - அழகிய பொன்னால் சிறப்பாக வேயப்பெற்ற சபையில்; பொன்னம்பலத்தில். தம்பிரான்-அந்நடேசரது. திறத்து-தன்மையில். சால்பின் - தகுதியில். தரித்துளார் - வாய்ந்துளார். 'சூத்திரர்' என்னுஞ் சொல் இடைச்செருக லென்றும், அங்கே 'மேழியர்' என்னுஞ் சொல் இருத்தல் வேண்டுமென்றுஞ் சிலர் கூறுகிறார். இம்பர் ஞாலம் - இவ்வுலகத்தை.

உ. மல்கும் - நிரம்பும். மல்கிய - நிறைந்த. வேணியார்-சடையுடைய சிவபெருமானின். அடியார் திறத்து - அடியவர்களிடத்தில். மல்கிய - பெருகிய. திருந்த மன்னிய - பண்பட்டு நிலை பெற்ற. பாரில் மல்க - உலகில் மிகச் சிறக்க. அவை - செல்வமும் சிந்தையும்.

ங. என்பு ஆரம் புனைந்த ஐயர் தம் - சிவபெருமானுடைய. நித்தம் ஆகிய - எப்பொழுதும் உள்ள. முன்கூர - அதிகரிக்க. செவிப்புலத்து - காதில். ஈரம் மென் மதுரப் பதம் - குளிர்ந்த மிருதுவான இனிய சொற்களை. பரிவு எய்த - அன்பு உண்டாக. "இன்சொலால் ஈரம் அளைஇப் படிறிலவாம் - செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்"—திருக்குறள் கக.

ச. குலாவு - பிரகாசமுடைய; வியக்குமெனினுமாம். மண்டு காதலின் - மிகுந்த அன்பால். ஆசனத்திடை - பீடத்திலே. உண்டி நாலு - உண்ணல்,

பா - ம்—*திருந்தி. †மற்றிலை. ‡திறத்தன;

ஆளு நாயகர் அன்பர் ஆனவர் அளவி லார்உள மகிழவே
நாளு நாளுநி றைந்து வந்து நுகர்ந்த தன்மையின் நன்மையால்
நீளு மாநிதி யின்ப ரப்பு நெருங்கு செல்வம் நிலாவிஎண்
தோளி னார்அள கைக்கி ருத்திய தோழ னாரென வாழுநாள். ரு

செல்வம் மேவிய நாளில் இச்செயல் செய்வ தன்றியும் மெய்யினால்
அல்லல் நல்குர வான போதினும் வல்லர் என்றறி விக்கவே
மல்லல் நீடிய செல்வம் மெல்ல மறைந்து நாள்தொறும் மாறிவந்
தொல்லை யில்வறு மைப்ப தம்புக உன்னி னார்தில்லை மன்னினார். சு

இன்ன வாறுவ ளஞ்சு ருங்கவும் எம்பி ரான்இளை யான்குடி
மன்னன் மாறன் மனஞ்சு ருங்குதல் இன்றி உள்ளன மாறியும்
தன்னை மாறிஇ றுக்க உள்ள கடன்கள் தக்கன கொண்டுபின்
முன்னை மாறில் திருப்ப ணிக்கண் முதிர்ந்த *கொள்கைய ராயினார்.

---

தின்னல், நக்கல், பருகல் என்பன. அறு சுவை - கைப்பு, புளிப்பு, இனிப்பு, துவர்ப்பு, கார்ப்பு, உவர்ப்பு என்பன. திறத்தினில் - வகையினில். இச்சையில் - விருப்பப்படி.

ரு. ஆளு நாயகர் - சிவபிரான். உண்டி கொடுத்தல் நன்மை என்றபடி. அதனால் செல்வம் திரண்டது என்றவாறு. "உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே" - புறநானூறு கஅ : கக; மணிமேகலை : கக பாத்திரம் கசு. "அகரம் ஆயிரம் அந்தணர்க்கு ஈயில் என் - சிகரம் ஆயிரம் செய்து முடிக்கில் என் - பகரு ஞானி பகல் உண் பலத்துக்கு - நிகரில்லை என்பது நிச்சயம் தானே"—திருமந்திரம் : மாகேசுர பூசை ௭. நிலாவி - விளங்கி ; பெருகி. எட்டுத் தோள்களையுடைய சிவபெருமான் அளகாபுரியில் அமர்த்திய தோழனாகிய குபேரனைப் போல.

சு. அல்லல் நல்குரவு ஆனபோதிலும் - துன்பத்தைக் கொடுக்கும் தரித்திரம் நேர்ந்த காலத்திலும். மெய்யினால் - உண்மை அன்பால். மெய்யாகத் தரித்திரம் நேர்ந்த காலத்திலும் எனக்கொள்ளினும் பொருந்தும். வல்லர் - தமது தொண்டை ஆற்றுதற்கு வல்லவர். மல்லல் - வளப்பம். ஒல்லையில் வறுமைப் பதம்புக-விரைவாகக் கொடிய வறுமை நிலை அடையுமாறு. நடராஜப் பெருமான் திருவுளங் கொண்டார்.

௭. எம்பிரானாகிய. உள்ளன மாறியும் - உள்ள பொருள்களை விற்றும். பின் தன்னைமாறி இறுக்கஉள்ள - பின்பு தம்மையும் விற்றுக் கொடுக்கத்தக்க அளவு. முன்னை மாறில் - முன்னைப்போலவே மாறுதலில்லாமல். முதிர்ந்த - முன்னையினும் மேலாக.

பா - ம்—*செய்கைய.

மற்ற வன்செயல் இன்ன தன்மைய தாக மாலய னனஅக்
கொற்ற வனமும் அன்ன முன்தெரி யாத கொள்கைய ராயினர்
பெற்றம் ஊர்வதும் இன்றி நீடிய பேதை யாளுடன் இன்றிஓர்
நற்ற வத்தவர் வேட மேகொடு ஞாலம் உய்ந்திட நண்ணினர். அ

வேறு

மாரிக் காலத் திரவினில் வைகியோர்
தாரிப் பின்றிப் பசிதலைக் கொள்வது
பாரித் தில்லம் அடைத்தபின் பண்புற
வேரித் †தாரான் விருந்தெதிர் கொண்டனன். கூ

ஈர மேனியை நீக்கி இடங்கொடுத்
தார இன்னமு தூட்டுதற் காசையால்
தார மாதரை நோக்கித் தபோதனர்
"தீர வேபசித் தார்செய்வ தென்"என்று. க0

"நமக்கு முன்பிங் குணவிலை யாயினும்
இமக்கு லக்கொடி பாகர்க் கினியவர்

அ. கொற்றவனமும்-வெற்றியுடைய பன்றியும்....ஆயினர்-சிவபெருமான். பெற்றம்......இன்றி - விடையேறி வருதலும் இல்லாமலும், உமையம்மையாரும் உடன் இல்லாமலும்.

கூ. வைகி - தனியே கண் விழித்திருந்து. ஓர் தாரிப்பு இன்றி - ஓர் உதவியும் இல்லாமல். தலைக்கொள்வது - மேற்படுவது. பாரித்து - அதிகரித்து ; சகித்துக்கொண்டு என்பர் ஆறுமுகத்தம்பிரானர்; பாரித்து என்பது பாரித்தென்றுயிற்று என்பது அவர் தங் கருத்து ; (பலநாள் பட்டினியைக் குறிப்பது). வேரித்தாரான் - வாசனை பொருந்திய மாலையையுடைய இளையான்குடிமாறனர். மாலை மாறனரின் இரக்கமுடைமையைக் குறிப்பது. காலம் மாரிக்காலம். நேரம் நள்ளிரவு. நிலையோ பலநாள் பட்டினி. கதவும் அடைக்கப்பட்டது. இவ்வேளையில் ஒரு விருந்தினர் போந்து தமது வீட்டுக் கதவைத் தட்டக் கதவைத் திறந்து அவ்விருந்தை மாறனர் எதிர்கொண்டார். தமது நிலையையுன்னி வருத்தத்துடன் உள்ளொன்று கொண்டு புறமொன்று பேசி விருந்தினரை மாறனர் எதிர் கொண்டாரில்லை. அகங்கலந்த அன்புடன் அவர் விருந்தினரை எதிர் கொண்டார் என்பது விளங்கப் " பண்புற ", என்றும் " வேரித்தாரான் " என்றுங் கூறினர். விருந்தினர் எந்நிலையுடன் வந்தார் என்பதையும், அவரை மாறனர் எங்ஙனம் ஏற்றார் என்பதையும் கீழ்க் காண்க.

க0. வந்தவர் பசியார, தமது மனமார. தபோதனர் - அடியவர் ; விருந்தினர். தீரவே - மிகவும் ; அறவே.

பா - ம்—*அடைந்த. †தாரான்.

தமக்கு நாம்இன் அடிசில் தகவுற
அமைக்கு மாறெங்ஙனே அணங் கே!"என. ௧௧

மாது கூறுவள் "மற்றொன் றுங் காண்கிலேன்
ஏதி லாரும் இனித்தரு வாரில்லை
போதும் வைகிற்றுப் போம்இடம் வேறில்லை
தீது செய்வினை யேற்கென் செயல்"என்று. ௧௨

"செல்லல் நீங்கப் பகல்வித் தியசெந்நெல்
மல்லல் நீர்முளை வாரிக் கொடுவந்தால்
வல்ல வாறமு தாக்கலும் ஆகும்மற்
றல்ல தொன்றறி யேன்"என் றயர்வுற. ௧௩

மற்றம் மாற்றம் மனைவியார் †கூறலும்
பெற்ற செல்வம் எனப்பெரி துள்மகிழ்ந்
துற்ற காதலி னால்ஒருப் பட்டனர்
சுற்று நீர்வயல் செல்லத் தொடங்குவார். ௧௪

பெருகு வானம் பிறங்க மழைபொழிந்
தருகு நாப்பண் அறிவருங் கங்குல்தான்
கருகு மையிரு ளின்கணம் கட்டுவிட்
டுருகு கின்றது போன்ற துலகெலாம். ௧௫

---

௧௧. பார்வதி பாகராகிய பரமசிவனுடைய தொண்டருக்கு. இன்னடிசில் - இனிய அமுதை. அணங்கே - பெண் தெய்வமே. அணங்கே என்னும் விளி நாயனாரது வருத்தத்தைப் புலப்படுத்துவது.

௧௨. ஏதிலாரும் - அயலவரும். போதும் வைகிற்று - நெடுநேர மாயிற்று (வைகல் - கழிதல்).

௧௩. செல்லல் - வறுமை ; துன்பம். செல்வம் பாடமாயின் செல்வமெல்லாம் நீங்கினமையால் என்று கொள்க. வித்திய - விதைக்கப்பட்ட. எத்தகைக் கொடிய வறுமை நேரினும் வேளாளர் விதைநெல்லை விதைக்கே பயன்படுத்துவது வழக்கம். மல்லல்-வளமையுடைய. வல்லவாறு-கூடியவரை. 'செல்லல் நீங்க ஆக்கலுமாகும்' என்று இயைத்துப் பொருள் கூறலுமொன்று.

௧௪. அம்மாற்றம் - அவ்வார்த்தையை. ஒருப்பட்டனர் - உடன்பட்டனர்.

௧௫. பிறங்க - அதிகமாக. அருகு நாப்பண் அறிவருங் கங்குல்தான் - வழியின் பக்கம் இது, நடு இஃது என்று அறியக்கூடாத இராக்காலமானது. கணம் - கூட்டம். கட்டுவிட்டு - நெகிழ்ந்து.

பா - ம்—*செல்வம். †கூறமுன்.

என்னும் இவ்வுல கத்தவர் யாவரும்
துண்ணெ னும்படி தோன்றமுன் *தோன்றிடில்
வண்ணம் நீடிய மைக்குழம் பாமென்று
நண்ணல் செய்யா நடுவிருள் யாமத்து. கசு

உள்ளம் அன்புகொண் டுக்கவோர் பேரிடாக்
கொள்ள முன்கவித் துக்குறி யின்வழிப்
புள்ளு றங்கும் வயல்புகப் போயினார்
வள்ள லார்இளை யான்குடி மாறனார். கஎ

காலி னால்தட விச்சென்று கைகளால்
சாலி வெண்முளை நீர்வழிச் சார்ந்தன
கோலி வாரி இடாநிறை யக்கொண்டு
மேலெ டுத்துச் சுமந்தொல்லை மீண்டனர். கஅ

வேறு

வந்தபின் மனைவி யாரும் வாய்தலின் நின்று வாங்கிச்
சிந்தையில் விரும்பி நீரில் சேற்றினை அலம்பி ஊற்றி
"வெந்தழல் அடுப்பின் †மூட்ட விறகில்லை" என்ன மேலோர்
அந்தமில் மனையில் நீடும் அலக்கினை அறுத்து வீழ்த்தார். கக

முறித்தவை அடுப்பின் ‡மாட்டி முளைவித்துப் பதமுன் கொள்ள
வறுத்தபின் அரிசி ஆக்கி வாக்கிய உலையிற் பெய்து
வெறுப்பில்இன் அடிசில் ஆக்கி §மேம்படு கற்பின் மிக்கார்
"கறிக்கினி என்செய் கோம்!" என் றிறைஞ்சினார் கணவ னாரை. உ௦

---

கசு. துண்ணெனும்படி - அஞ்சும்படி ; விரைவாக. தோன்ற - (இருள்) புலப்பட்ட. முன் தோன்றிடில் - அதற்குமுன் செல்ல நேர்ந்தால். வண்ணம் - கருநிறம். மைக்குழம்பால் பூசப்படுவோம் என்று வெளியே வாராத.

கஎ. இடா - கூடையை. கொள்ள - தலைகொள்ள ; அல்லது நெல்லைக் கொள்ள. அநுபவப்பட்ட குறியின் வழி. புள் - பறவைகள்.

கஅ. சாலிவெண் முளைகளில் நீர்வழி யொதுங்கி அல்லது மிதந்திருந்தன வற்றை. கோலி - சேர்த்து. ஒல்லை - விரைவில்.

கக. அந்தமில் - அழகில்லாத; கிலமுற்ற. அலக்கினை - வரிச்சுக்கொம்புகளை.

உ௦. வாக்கிய - முன்னரே நீர்வார்த்திருந்த. அடிசில் - சோறு.

பா - ம்—*தோய்ந்திடில். †மாட்ட. ‡மூட்டி. §மெய்படு.

வழிவரும் இளைப்பி னோடும் வருத்திய பசியி னாலே
"அழிவுறும் ஐயன்" என்னும் அன்பினிற் பொலிந்து சென்று
குழிநிரம் பாத புன்செய்க் குறும்பயிர் தடவிப் பாசப்
பழிமுதல் பறிப்பார் போலப் பறித்தவை கறிக்கு நல்க. உக

மனைவியார் கொழுநர் தந்த மனமகிழ் கறிகள் ஆய்ந்து
புனலிடைக் கழுவித் தக்க புனிதபாத் திரத்துக் கைம்மை
வினையினால் வேறு வேறு கறியமு தாக்கிப் பண்டை
நினைவினால் குறையை *நொந்து திருவமு தமைத்து நின்று. உஉ

கணவனார் தம்மை நோக்கிக் கறியமு தான காட்டி
"இணையிலா தாரை ஈண்ட அமுதுசெய் விப்போம்" என்ன
உணர்வினால் உணர ஒண்ணா ஒருவரை உணர்த்த வேண்டி
அணையமுன் சென்று நின்றங் கவர்துயில் அகற்ற லுற்றார். உங

"அழுந்திய இடருள் நீங்கி அடியனேன் உய்ய என்பால்
எழுந்தருள் பெரியோய்! ஈண்ட அமுதுசெய் தருள்க" என்று
தொழும்பனார் உரைத்த போதில் சோதியாய் எழுந்து தோன்றச்
செழுந்திரு மனைவி யாரும் தொண்டரும் திகைத்து நின்றார். உச

மாலயற் கரிய நாதன் வடிவொரு சோதி யாகச்
சாலவே மயங்கு வார்க்குச் சங்கரன் தான்ம கிழ்ந்தே
ஏலவார் குழலாள் தன்னோ டிடபவா கனனாய்த் தோன்றிச்
சீலமார் பூசை செய்த திருத்தொண்டர் தம்மை நோக்கி. உரு

"அன்பனே! அன்பர் பூசை அளித்தநீ அணங்கி னோடும்
என்பெரும் உலகை எய்தி இருநிதிக் கிழவன் தானே
முன்பெரு நிதியம் ஏந்தி †மொழிவழி ஏவல் கேட்ப [கான்.
இன்பமார்ந் ‡திருக்க" என்றே அருள்செய்தான் எவர்க்கும் மிக்

உக. ஐயன் - சிவனடியார். குழி......பயிர் - பூசினி சுரை முதலியன. தம் பாசவேரை.

உஉ. கொழுநர் - கணவர். கைம்மை வினையினால் - கைத்திறத்தினால்.

உங. இணையிலாதாரை - சிவனடியாரை. ஈண்ட - திருத்தியாக; நன்றாக; விரைவாக எனினுமாம். ஒருவரை - சிவபிரானை.

உச. தொழும்பனார் — அடியவராகிய இளையான்குடிமாற நாயனார்.

உரு. சாலவே - மிகவும். ஏலவார் குழலாள் தன்னோடு - மயிர்ச்சாந்தணிந்த நீண்ட கூந்தலையுடைய உமாதேவியாருடன்.

உசு. அணங்கினோடும் - மனைவியோடும். இருநிதிக்கிழவன் தானே - குபேரனே. உன் சொற்படி ஏவல் செய்ய.

பா - ம்—*நேர்ந்து. †மொழியுநின். ‡இருப்பீர்.

இப்பரி சிவர்க்குத் தக்க வகையினால் இன்பம் நல்கி
முப்புரஞ் செற்றார் அன்பர் முன்பெழுந் தருளிப் போனார்
அப்பெரி யவர்தந் தூய அடியிணை தலைமேற் கொண்டு
மெய்ப்பொருட் சேதி வேந்தன் செயலினை விளம்ப லுற்றேன். உஎ

ஆ. திருவிருத்தம் - ௪௯௯.

இளையான் குடிப்பதியிலே வேளாளர் மரபிலே பிறந்தவர் ஒருவர் இருந்தார். அவர் **மாறனார்** என்னும் பெயருடையவர். அவருக்கு வேளாண்மையில் ஏராளமான வருவாயுண்டு. அவர் சிவபத்தி சிவனடியார் பத்தியிற் சிறந்தவர். தமது இல்லம் போதரும் அடியவர் எவராயினும் அவருக்குச் சோறிடுவதை ஒரு பெருந் தொண்டாகக்கொண்டு அவர் வாழ்ந்து வந்தார்.

இத்திருத் தொண்டின் பயனாக மாறனார்க்குச் செல்வம் பெருகலாயிற்று. இளையான் குடியில் அவர் அளகேசனைப் போல வாழலானார். அவர் வறியராய் வருந்ினுஞ் சோறிடும் திருத்தொண்டைத் தவறாது செய்யும் உறுதி உடையார் என்பதை உலகத்தவர்க்கு உணர்த்தச் சிவபெருமான் திருவுளங் கொண்டனர். அதனால் மாறனார்க்கு வறுமை எய்திற்று. எய்தியும் தொண்டில் அவர் சிறிதும் சலிப்புற்றுத் தளர்ச்சியுற்றாரில்லை. அவர், தம் பொருள்களை விற்று விற்றுத் திருத்தொண்டு செய்து வந்தார். பின்னே, தம்மை விற்றுக் கொடுக்கத்தக்க கடன் வாங்கியும் தமது தொண்டை நெகிழவிடாது செய்தே வந்தார்.

வருநாளில் மழைக்காலத்தில் ஒரு நாளிரவில் இளையான் குடிமாற நாயனார் உணவின்றி நீண்ட நேரந் தனியே விழித்திருந்தார். எவ்வித உதவியும் அவருக்குக் கிடைக்கவில்லை; பசியோ, முறுகி எழுந்து குடைகிறது. அவர் பசியைப் பொறுத்துக் கொண்டு வீட்டுக் கதவை அடைத்துச் சென்றார். சிறிது நேரத்திற்குள் அம்மையப்பர் அடியவர் வேடந் தாங்கிக் கதவைத் தட்டினார். உடனே நாயனார், கதவைத் திறந்து, அன்பரை அழைத்துச் சென்று, திருமேனியைத் துடைத்து ஈரம் போக்கி, இருக்கும்படி செய்தார்.

அடியவர்க்கு அமுதளிக்க விரும்பி மாறனார் மனைவியாரைப் பார்த்தார். அம்மையார் என் செய்வார்; கணவரை நோக்கி "வீட்டில் ஒரு பொருளுமில்லை. அயலாரும் இனிக் கடன் கொடுத்தல் அரிது. பொழுதும் போயிற்று. போகும் இடம் வேறில்லை. என் செய்வேன்?" என்று வருந்திக் கூறிப் பின்பு, "இன்று வயலிலே நெல் விதைக்கப்பட்டது. அந்நெல்லை வாரிக்கொண்டு வந்தால் கூடிய வரை முயன்று அமுதாக்கலாம். இஃதன்றி வேறொன்றும் எனக்குத் தோன்றவில்லை" என்றார். அவ்வுரை கேட்டதும் பெருஞ் செல்வம் பெற்றதுபோன்றதொரு மகிழ்ச்சி மாறனார்க்குப் பொங்கி வழிந்தது. மழை பொழியும் நள்ளிரவிலே ஒரு கூடையைக் கவிழ்த்துக்கொண்டு மாறனார் புறப்பட்டார்.

---

உஎ. சேதி வேந்தன் - மெய்ப்பொருள் நாயனார்.

கால்களினால் தடவித் தடவிச் சென்று மாறனார் தம் வயலை அடைந்து, மழை நீரிலே மிதந்திருந்த நென்முளைகளைக் கோலிவாரி, அவைகளால் கூடையை நிரப்பித் தூக்கிச் சுமந்துவந்தார். நாயனார் வரவைப் பேராவலோடு எதிர் பார்த்து, வாயிலில் நின்று கொண்டிருந்த நாயகியார், கூடையை அன்புடன் வாங்கி, நென்முளைகளைக் கழுவி, நாயனாரைப் பார்த்து "விறகில்லையே!" என்றார். அன்பிற் பெரியவர், நிலமாய்க் கிடந்த தம் இல்லத்தின் வரிச்சுகளை அறுத்துத் தள்ளினார். மனைவியார் அவைகளை அடுப்பில் வைத்து நென்முளைகளை வறுத்து அரிசிகொண்டு சோறாக்கிக் "கறியமுதுக்கு என்செய்வது" என்று துணைவனாரைக்கேட்டார். தொண்டர்பெருமான் புறக்கடை போந்து புன்செய்க் குறும் பயிர்களைத் தடவிப் பிடுங்கிக் கொணர்ந்தார். இல்லக்கிழத்தியார் அவைகளைக் கழுவித் தூய்மைசெய்து, கைத்திறமையால் பலதிறக் கறியமுதாக்கி நாயனார்க்குத்தெரிவித்தார். நாயனார், கண்டுயிலும் அடியவரிடஞ்சென்று, "பெரியீர்! திருவமுதுசெய்ய எழுந்தருள்க" என்று அழைத்தார். அவ்வேளையில் அடியவர், சோதியாய் எழுந்து தோன்ற, நாயனாரும் அவர்தம் நாயகியாருந் திகைத்து நின்றனர். சிவபிரான் உமாதேவியாருடன் விடைமீது எழுந்தருளி, "அன்பனே! அறுசுவை உண்டியை அன்பர்களுக்கு நாடோறும் ஊட்டிய ஐயனே! நீ உன் மனைவியுடன் நமது உலகை அடைந்து, குபேரன் உன் ஏவல் கேட்ப, இன்பநுகர்ந்துகொண் டிருப்பாயாக" என்று திருவாய் மலர்ந்தருளித் தமது அருளுருவை மறைத்தருளினார்.

# மெய்ப்பொருள்நாயனார் புராணம்

சேதி*நன் னாட்டு நீடு திருக்கோவ லூரின் மன்னி
மாதொரு பாகர் அன்பின் வழிவரு மலாடர் கோமான்
வேதநன் னெறியின் வாய்மை விளங்கிட மேன்மை பூண்டு
காதலால் ஈசர்க் கன்பர் கருத்தறிந் தேவல் செய்வார். க

அரசியல் நெறியின் †வந்த அறநெறி வழாமல் காத்து
வரைநெடுந் தோளால் வென்று மாற்றலர் முனைகள் மாற்றி
உரைதிறம் பாத நீதி ‡ஓங்குநீர் மையினில் மிக்கார்
திரைசெய்நீர்ச் சடையான் அன்பர் வேடமே சிந்தை செய்வார். உ

க. நத்தமான் சுருதிமான் மலையமான் என்னும் இம்மூவரும் பார்க்கவகுலத்தவர். இவருள் மெய்ப்பொருள் நாயனார் மலையமான்வழி வந்தவர். அவர் சைவ பரம்பரையின ராதலின் "......அன்பின்வழி வரும்......" என்றார்.

உ. அறத்திற்குப் பிறப்பிடம் அரசியல் என்க. மெய்ப்பொருள் நாயனாரின் அரசியல், பரம்பரையாக அறநெறியில் இயங்குவதாதலின் "அரசியல் நெறியின்

பா - ம்—*நன்னாட்டின். †வந்தே; வந்தாங்கற. ‡ஓங்குமுன் னுரிமை

மங்கையைப் பாக மாக *உடையவர் மன்னுங் கோயில்
எங்கணும் பூசை நீடி ஏழிசைப் பாடல் ஆடல்
பொங்கிய சிறப்பின் மல்கப் போற்றுதல் புரிந்து வாழ்வார்
தங்கணா யகருக் கன்பர் தாளலால் சார்பொன் றில்லார். ௩

தேடிய †மாடு நீடு செல்வமும் தில்லை மன்றுள்
ஆடிய பெருமான் அன்பர்க் காவன ஆகும் என்று
நாடிய மனத்தி னோடு நாயன்மார் அணைந்த போது
கூடிய மகிழ்ச்சி பொங்கக் குறைவறக் கொடுத்து வந்தார். ௪

இன்னவா றொழுகு நாளில் இகல்திறம் புரிந்தோர் மன்னன்
அன்னவர் தம்மை வெல்லும் ஆசையால் அமர்மேற் கொண்டு
பொன்னணி ஓடை யானைப் பொருபரி ‡காலாள் மற்றும்
பன்முறை இழந்து தோற்றுப் பரிபவப் பட்டுப் போனான். ௫

இப்படி இழந்த மாற்றான் இகலினால் வெல்ல மாட்டான்
மெய்ப்பொருள் வேந்தன் சீலம் அறிந்துவெண் ணீறு சாத்தும்
அப்பெரு வேடங் கொண்டே அற்றத்தில் வெல்வா னாகச்
செப்பரு நிலைமை எண்ணித் திருக்கோவ லூரிற் சேர்வான். ௬

மெய்யெலாம் நீறு பூசி வேணிகள் முடித்துக் கட்டிக்
கையினிற் படைக ரந்த புத்தகக் கவளி ஏந்தி
மைபொதி விளக்கே என்ன §மனத்தினுள் கறுப்பு வைத்துப்
பொய்தவ வேடங் கொண்டு புகுந்தனன் ¶முத்த நாதன். ௭

---

வந்த'' என்றார். வரை - மலையையொத்த. மாற்றலர் முனைகள் மாற்றி - பகைவர்களின் சேனைகளை அழித்து. உரைதிறம்பாத - சொல் தவறாத. நீர்மையினில் - குணத்தில். திரைசெய் நீர் - அலை வீசுங் கங்கை.

௪. மாடும் - பொன்னும். நீடு செல்வமும் - பெருகியுள்ள மற்றச் செல்வங்களும்.

௫. இகல்திறம் புரிந்து - பகைமை பூண்டு. அன்னவர்தம்மை - மெய்ப்பொருள் நாயனாரை. ஓடை - நெற்றிப்பட்டம். பொரு பரி - போர்செய்யுங் குதிரைகளையும். பரிபவம் - அவமானம்.

௬. அற்றத்தில் - பொய்யால்; வஞ்சனையால்.

௭. வேணிகள்-சடைகளை. படை கரந்த-ஆயுதத்தை மறைத்துவைத்துள்ள. புத்தகக் கவளி - புத்தகப் பை; மூட்டை. கறுப்பு - களங்கம். ''முத்தநாதனென்றது அவன் பெயரன்று. அவனுக்கு அது பெயராயின் முன்னர் அவ்வாறு கூறுது ஒரு மன்னனெனக் கூறுதலின் முக்தன் என்னும் வடசொல் தமி

பா - ம்—*வைத்தவர். †மாட. ‡காடு. §மனத்தினில். ¶முத்தி; புத்தி.

மாதவ வேடங் கொண்ட வன்கணன் மாடந் தோறும்
கோதைசூழ் அளக பாரக் குழைக்கொடி ஆட மீது
சோதிவெண் கொடிகள் ஆடுஞ் சுடர்நெடு மறுகிற் போகிச்
சேதியர் பெருமான் கோயில் திருமணி வாயில் சேர்ந்தான்.

கடையுடைக் காவ லாளர் கைதொழு தேற நின்றே
“உடையவர் தாமே வந்தார் உள்ளெழுந் தருளும்” என்னத்
தடைபல புக்க பின்பு தனித்தடை நின்ற தத்தன்
“இடைதெரிந் தருள வேண்டும் துயில்கொளும் இறைவன்” என்றான்.

என்றவன் கூறக் கேட்டே “யான்அவற் குறுதி கூற
நின்றிடு நீயும்” என்றே அவனையும் நீக்கிப் புக்குப்
பொன்திகழ் பள்ளிக் கட்டில் புரவலன் துயில மாடே
மன்றலங் குழல்மென் சாயல் மாதேவி இருப்பக் கண்டான். ௧௦

கண்டுசென் றணையும் போது கதுமென †எழுந்து தேவி
வண்டலர் ‡மாலை யானை எழுப்பிட உணர்ந்து மன்னன்
அண்டர்நா யகனார் தொண்ட ராம்எனக் குவித்த செங்கை
கொண்டிழிந் தெதிரே சென்று கொள்கையின் வணங்கி நின்று. ௧௧

---

ழில் முத்தனெனவரும் முறைபற்றி மூடனெனத் தானே ஒருபெயர் கொடுத்துக் கூறினாரென்பது போதலின் முத்தநாதனென்ற பாடமே கொள்ளப்பட்டது. புத்திநாதனென்றும் முத்திநாதனென்றும் பாடபேதமும் உண்டு” —ஆறுமுகத் **தம்பிரானார்.**

௮. வன்கணன் - கொடிய முத்தநாதன். கோதை - மாலை. கொடி ஆட - மகளிர்கள் நடம்புரிய. மறுகில் - வீதியில். சேதியர் பெருமான் - மெய்ப்பொருள் நாயனாரின்.

௯. கடைவாயிற் காவலர். ஏறநின்றே - தூரத்தில் நின்று. உடையவர் - சிவனடியார். தாமே - தாமாகவே. தடைபல - அடுத்தடுத்துள்ள பல வாயில்கள். தனித்தடை - நாயனாருள்ள இடத்தின் ஒப்பற்ற வாயிலில். இடைதெரிந்து அருளல் வேண்டும் - சமயம் அறிந்து எழுந்தருளல் (உள்ளே போதல்) வேண்டும்.

௧௦. யான் அவனுக்கு (மெய்ப்பொருள் நாயனார்க்கு வீடுபேற்றிற்குரிய) உறுதிமொழியைக் கூறுதற்கு நீ தடைசெய்யாது நின்றுவிடு என்று. புரவலன் - மன்னராகிய மெய்ப்பொருள் நாயனார். மாடே - பக்கத்தே. வாசனைபொருந்திய கூந்தல்.

௧௧. கதுமென - விரைவாக. இழிந்து - கட்டிலினின்றுங் குதித்து. கொள்கையின் - விதிமுறைப்படி.

பா - ம்—*எத்தி. †இழிந்து. ‡தாரி னானை.

"மங்கலம் பெருக மற்றென் வாழ்வுவந் தணைந்த தென்ன
இங்கெழுந் தருளப் பெற்ற தென்கொலோ" என்று கூற
"உங்கள்நா யகனார் முன்னம் உரைத்தஆ கமநூல் மண்மேல்
எங்குமில் லாத தொன்று கொடுவந்தேன் இயம்ப" என்றான். கஉ

"பேறெனக் கிதன்மேல் உண்டோ பிரான்அருள் செய்த இந்த
மாறிலா கமத்தை வாசித் தருள்செய வேண்டும்" என்ன
"நாறுபூங் கோதை மாது தவிரவே நானும் நீயும்
வேறிடத் திருத்தல் வேண்டும்" என்றவன் விளம்ப வேந்தன். கங

திருமகள் என்ன நின்ற தேவியார் தம்மை நோக்கிப்
*புரிவுடன் விரைய அந்தப் புரத்திடைப் போக ஏவித்
தருதவ வேடத் தானைத் தவிசின்மேல் இருத்தித் தாமும்
இருநிலத் திருந்து போற்றி "இனியருள் செய்யும்" என்றார். கச

கைத்தலத் திருந்த வஞ்சக் கவளிகை மடிமேல் வைத்துப்
புத்தகம் அவிழ்ப்பான் போன்று புரிந்தவர் வணங்கும் போதில்
பத்திரம் வாங்கித் தான்முன் நினைந்தஅப் பரிசே செய்ய
"மெய்த்தவ வேட மேமெய்ப் பொருள்"எனத் தொழுது வென்றார்.

---

கஉ. "உங்கள்" என்றமையால் அவன் சிவ வழிபாட்டுக்குப் புறம்பானவன் என்பது குறிப்பு.

கச. புரிவுடன் - விருப்பத்துடன். போலியாகத் தரித்த தவவேடம். தவிசின்மேல் - பீடத்தின்மீது.

கரு. புரிந்து - விரும்பி. பத்திரம் வாங்கி - உடைவாளை எடுத்து. கொலையைச் சொல்லாலும் சொல்ல ஆசிரியர் மனங்கொள்ளாது, "நினைந்த அப்பரிசே (அவ்விதமே) செய்ய" என்றது கருதற்பாலது. "தன்கருத்தே முற்றுவித்தான்"—ஏனாதி நாயனார் புராணம் ௪௦. "அன்பர் வேடமே சிந்தை செய்வார்" என்று ௨௰ம் பாட்டில் கூறியிருத்தல் காண்க. கொலையுண்ட இவ்வேளையிலும் நாயனார் சிவவேடத்தின்மீது கொண்ட அன்பினின்றுஞ் சிறிதும் பிறழாதவராய்த் தம்மைக் குத்தினவனை மாற்றானெனக் கருதாது, அவன் வேடத்தின்மீதே கருத்துக்கொண்டு "மெய்த்தவ வேடமே மெய்ப்பொரு" ளெனத் தொழுதது நாயனாரின் உண்மைநிலையைப் புலப்படுத்துகிறது. "வென்றார்" என்பது உன்னத்தக்கது. முத்த நாதன் நாயனாரை வென்றதாகக் கருதினான். உண்மையில் வென்றவர் மெய்ப்பொருள் நாயனாரே யாவர். முத்த நாதனை நாயனார் எதிர்த்து வீழ்த்தியிருப்பின், அவர் வென்றவராகார். இதுவே அஹிம்சா தர்மம் என்பது. அஹிம்சை என்பது பிறர்க்குத் தீங்கு செய்யாமலிருப்பது மட்டுமன்று. அதனுடன் தமக்குப் பிறர் தீங்கு

பா - ம்—*பரிவுடன்.

மறைத்தவன் புகுந்த போதே மனம்அங்கு வைத்த தத்தன்
இறைப்பொழு தின்கட் கூடி வாளினல் எறிய லுற்றுன்
நிறைத்தசெங் குருதி சோர வீழ்கின்ருர் நீண்ட கையால்
தறைப்படும் அளவில் "தத்தா! நமர்"எனத் தடுத்து வீழ்ந்தார். கசு

வேதனை எய்தி வீழ்ந்த வேந்தரால் விலக்கப் பட்ட
தாதனும் தத்தன் தானும் தலையினல் வணங்கித் தாங்கி
"யாதுநான் செய்கேன்" என்ன "எம்பிரான் அடியார் போக
மீதிடை விலக்கா வண்ணம் கொண்டுபோய் விடுநீ" என்ருர். கஎ

அத்திறம் அறிந்தார் எல்லாம் "அரசனைத் தீங்கு செய்த
பொய்த்தவன் தன்னைக் கொல்வோம்" எனப்புடை சூழ்ந்த போது
தத்தனும் அவரை எல்லாம் தடுத்துடன் கொண்டு போவான்
"இத்தவன் போகப் பெற்ற திறைவன தாணை" என்ருன். கஅ

---

செய்யும்போது திருப்பித் தீங்கு செய்யாது, அத்தீங்கைப் பொறுமையுடன் ஏற்றுத் தீங்கு செய்தோரிடமும் இரக்கங் காட்டி நலஞ் செய்வது அஹிம்சா தர்மமாகும். இதுபற்றியே "அஹிம்சா பரமோ தர்மா" என்னும் அருள் மொழி எழுந்தது. இவ்விழுமிய பேரறத்தைத் திருவள்ளுவர், அருளுடைமை, தவம், இன்னு செய்யாமை, கொல்லாமை முதலிய அதிகாரங்களில் அருளி யிருத்தலைக் காண்க. கிறிஸ்துபெருமானும் இச்சீரிய அறத்தை மலைப்பொழி வில் வலியுறுத்திச் செயலிலும் நிகழ்த்திக் காட்டியதை யோர்க. இவ்வறத் தைக் குறித்துக் "காந்தியடிகளும் மனிதவாழ்க்கையும்" என்னும் நூலில் விரித் துக் கூறியுள்ளேன். விரிவு ஆண்டுக் காண்க. மெய்ப்பொருள் நாயனர் பெற்றது சிறந்த வெற்றியாதலின், அதை "வெல்லுமாமிக வல்ல மெய்ப் பொருளுக்கடியேன்" என்று திருத்தொண்டத் தொகையில் நம்பியாரூரர் சிறப்பிக்கலானுர். நாயனரின் அஹிம்சா தர்ம உறுதி நிலை கீழ்வரும் பாக்க ளால் இனிது விளங்கும்.

கசு. இறைப்பொழுதின்கண் கூடி - ஒரு நொடிப் பொழுதில் உள்ளே போய். முத்த நாதனை வாளினல்.......குருதி - இரத்தம். வீழ்கின்ருர் - வீழப் போகிறவராகிய மெய்ப்பொருள் நாயனர். தறைபடும் அளவில் - மண்ணில் சாயும்போது. நமர் - நம்மவர்; நமது இனமாகிய சிவனடியார்.

கஎ. தாதனும் - ஊழியனுகிய. நாயனரைத் தாங்கி. முத்தநாதன் வேடத் தையே பொருளாகக்கொண்டு, அவனை "எம்பிரான் அடியார்" என்று நாய னர் கூறுதல் காண்க. இச்செய்தி கேட்டோர் இவரைத் தடுத்துத் தீங்கு செய்யாதவாறு காத்து, இவர் போதற்குத் துணை நின்று, இவரைக்கொண்டு போய்விடு.

அவ்வழி அவர்கள் எல்லாம் அஞ்சியே அகல நீங்கச்
செவ்விய நெறியில் தத்தன் திருநகர் கடந்து போந்து
கைவடி நெடுவாள் ஏந்தி ஆளுறுக் கானஞ் சேர
வெவ்வினைக் கொடியோன் தன்னை விட்டபின் மீண்டு போந்தான்.

மற்றவன் கொண்டு போன வஞ்சனை வேடத் தான்மேல்
செற்றவர் தம்மை நீக்கித் தீதிலா நெறியில் விட்ட
சொற்றிறங் கேட்க வேண்டிச் சோர்கின்ற ஆவி தாங்கும்
கொற்றவன் முன்பு சென்றான் கோமகன் குறிப்பில் நின்றான். ௨0

சென்றடி வணங்கி நின்று "செய்தவ வேடங் கொண்டு
வென்றவற் கிடையூ றின்றி விட்டனன்" என்று கூற
"இன்றெனக் கையன் செய்த தியார்செய்ய வல்லார்" என்று
நின்றவன் தன்னை நோக்கி நிறைபெருங் கருணை கூர்ந்தார். ௨க

அரசியல் ஆயத் தார்க்கும் அழிவுறுங் காத லார்க்கும்
விரவிய செய்கை எல்லாம் விளம்புவார் "விதியி னாலே
பரவிய திருநீற் றன்பு பாதுகாத் துய்ப்பீர்" என்று
புரவலர் மன்று ளாடும் பூங்கழல் சிந்தை செய்தார். ௨௨

தொண்டனார்க் கிமயப் பாவை துணைவனார் அவர்முன் தம்மைக்
கண்டவா றெதிரே நின்று காட்சிதந் தருளி மிக்க
அண்டவா னவர்கட் கெட்டா அருட்கழல் நீழல் சேரக்
கொண்டவர் இடைய றாமல் கும்பிடுங் கொள்கை ஈந்தார். ௨௩

---

கக. அரசன் ஆணையென்று அஞ்சி நீங்கி. முத்தநாதனுக்குத் தீங்கு செய்ய வாளேந்தி ஆட்கள் வாராத காடுசேர.

௨0. செற்றவர் தம்மை - கோபித்துத் தாக்க வந்தவர்களை. கொற்றவன் - மெய்ப்பொருள் நாயனார். நின்றான் என்பது தத்தனை.

௨க. செய்தவ வேடத்தால் வென்றானன்றி வீரத்தால் வெல்லவில்லை என்பது. ஐயன் - தத்தன்.

௨௨. தமக்குப்பின்னர் அரசியலை யேற்று நடாத்தற்குரிய புதல்வர்க்கும், மனம் வருந்தும் உறவினர் அமைச்சர் முதலியவர்க்கும். விரவிய செய்கை - தம்முள்ளத்துள்ள கொள்கை. உய்ப்பீர் - அரசை நடத்துங்கள். புரவலன் - மெய்ப்பொருள் நாயனார். உயிர் போம்போது இறைவன் நினைவு தோன்றுமாறு வாழ்வு நடாத்துவது அறிவுடைமை. "சங்கொத்தமேனிச் செல்வா சாதல்நாள் நாயேன் உன்னை - எங்குற்றாய் என்ற போதா இங்குற்றேன் என் கண்டாயே" - அப்பர் : தனித்திருநேரிசை அ.

௨௩. இமயப்பாவை துணைவனார் - உமாதேவியாரின் நாயகராகிய சிவபெருமான். தியானத்தில் கண்டவாறு.

இன்னுயிர் செருக்கக் கண்டும் எம்பிரான் அன்பர் என்றே
நன்னெறி காத்த சேதி *நாதனார் பெருமை தன்னில்
என்னுரை செய்தே னாக இகல்விறன் மிண்டர் பொற்றாள்
சென்னிவைத் தவர்முன் செய்த திருத்தொண்டு செப்ப லுற்றேன்.

௲ திருவிருத்தம் - சகo.

---

மெய்ப்பொருள் நாயனார் சேதி நன்னாட்டில் திருக்கோவலூரில் வாழ்ந்த வேந்தர் பெருமான். அடியவர் திருவேடத்தையே மெய்ப் பொருளெனக் கொண்டமையால், அவர், மெய்ப்பொருள் நாயனார் என்று அழைக்கப் பட்டார். அவர், மலையமான் வழியில் தோன்றியவர்; பகைவர்களை வென்று நாட்டுக்கு நலஞ் செய்வதில் பேர்பெற்றவர்; அடியவர்கள் கருத்தறிந்து ஏவல் செய்து தமது உடைமை எல்லாம் அவர்களது உடைமை என்னுங் கருத்துடையவர். திருக்கோயில்களில் பூசை, விழா முதலியன செய்வதும் அவர்தம் திருத் தொண்டுகளில் ஒன்றாம்.

முத்தநாதன் என்னும் ஓர் அரசன் மெய்ப்பொருள் நாயனாரிடம் பகைமை பூண்டிருந்தான். அவனுக்கும் நாயனார்க்கும் பலமுறை போர்கள் நிகழ்ந்தன. ஒரு முறையாவது முத்தநாதன் வெற்றிபெற்றா னில்லை. "நேரிய முறையில் போர் புரிந்தால் இந்நாயனாரைவெல்லுதல் இயலாது" என்று அவன் எண்ணி, நாயனாரின் திருநீற்றன்பையுஞ் சிவனடியார் நேயத்தையும் உணர்ந்து, வஞ்சனையால் அவரை வெல்லக் கருதினான். அக்கருத்துக்கொண்ட முத்தநாதன் என்னசெய்தான்?

ஒருநாள், உடல் முழுமையுந் திருநீறு பூசி, சடைகளைச் சுருட்டிக் கட்டி, உடைவாளை மறைத்து வைத்துள்ள புத்தகக் கவளியொன்று ஏந்தி,மனதில்மட்டுங் கறுப்புக்கொண்டு, மெய்யடியார் அரண்மனை நோக்கினான். வாயில் காப்போர் அவனைச் சிவனடியார் எனக்கருதி, அரண்மனையில் நுழைந்து போமாறு அவனை விடுத்தனர். அவன் பல வாயில்களையுங் கடந்து பள்ளிவாயிலை அடைந்தான். அங்கிருந்த தத்தன் என்ற வாயில் காப்போன், வஞ்சகனை நோக்கி, "இது மன்னர் உறங்கும் நேரம்; சமயமறிந்து போதல் வேண்டும்" என்று எச்சரிக்கை செய்தான். விரைந்து நுழையும் வஞ்சகன், "மன்னர்க்கு யான் உறுதிப்பொருள் கூறப்போகிறேன்; தடைசெய்யாதே" என்று தத்தனை விலக்கிக்கொண்டே உள் நுழைந்தான். அப்பாவி, அரசர் பெருமான் துயில்வதையும், பெருமாட்டியார் பக்கத்திலிருப்பதையுங் கண்டுங் கட்டிலின் அருகணைந்தான். உடனே அம்மையார், உண்மை நாயனாரை எழுப்பினார். நாயனார் விழித்து விரைந்திழிந்து, கயவனைச் சிவனடியாரெனக் கருதிப்பணிந்து, "அடியவரே! இங்கு எழுந்தருளிய நோக்கம் என்னை?" என்று கேட்டார். முத்தநாதன் "உங்கள் இறைவன் முன்னர் அருளிச்செய்த ஆகமங்களுள் ஒன்று என்னிடமிருக்கிறது. அஃது எங்கணும் காணப்படாதது. அதை உமக்கு அறிவுறுத்த வந்தேன்" என்று சொன்னான். அச்சொல், அடியவர் பெருமானை ஆனந்த வாரிதியில் தோய்த்துவிட்டது. "இதைவிட எனக்கு என்ன பேறு! அவ்வருளாகமத்தை வாசித்தருள்க" என்றுவேண்டினார். பாதகன் "உன்மனைவி

---

உச. செருக்க - வாளால் குத்த. நன்னெறி - அஹிம்சா தர்மத்தை. இகல் - நம்பியாரூருடன் மாறுபாடு கொண்ட; வலிமையுடைய என்போருமுளர்.

பா - ம்—*நாயனார்.

இங்கே இருத்தலாகாது. நாம் இருவேமும் தனித்திருத்தல் வேண்டும்" என்று இயம்பினன். உடனே மன்னர்பெருமான், தம் நாயகியாரை அந்தப்புரம் போம் படி கட்டளையிட்டுக் கரவாடும் வன்னெஞ்சனைப் பீடத்தி லிருத்தித் தாம் கீழே யிருந்து, "மெய்யன்பரே! அருள்செய்க" என்று பணிந்தபோது, இரக்க மில்லா அரக்கன் கவளியை எடுத்துப் புத்தகம் அவிழ்ப்பவனைப்போல நடித்து, கவளியில் மறைத்துக் கொணர்ந்த உடைவாளை எடுத்து நினைந்தவாறே செய் தான். அந்நிலையில், நாயனார்பெருமான், "மெய்த்தவவேடமே மெய்ப்பொருள்" என்று தொழுதார்.

முத்தநாதன் உள்நுழைந்தபோதே அங்கு மனம்வைத்த தத்தன், நொடிப் பொழுதில் அரசர் பெருமானிடம் அணுகி, அங்கிருந்த பாவியை வாளினால் வீசப்போனான். அப்பொழுது செங்குருதி பொங்க விழப்போகும் வேந்தர், "தத்தனே! இவர் நம்மவர்; சிவனடியார்" என்று தடுத்துச்சாய்ந்தார். சாய்ந்த மெய்யன்பரைத் தத்தன்தாங்கி, "அரசே! எனக்குள்ள பணி யாது?" என்று வினவினான். மெய்ப்பொருள் நாயனார், "இவ்வடியார்க்கு எவராலும், வழியில் தீங்கு நேராதவாறு காத்து இவரைக் கொண்டுபோய் விடு" என்று சொன்னார். ஆணைப்படியே தத்தன் அவ்வஞ்சகனை அழைத்துச் சென்றான்.

அரண்மனையில் நிகழ்ந்ததை அறிந்தவர்கள் எல்லாரும் ஆங்காங்கே முத்த நாதனை வளைத்துக் கொண்டனர். அவர்கட்கெல்லாம், அரசர் பெருமானின் அருள் மொழியைத் தத்தன் தெரிவித்துத் தடுத்து, நகரத்தைக் கடந்து, காட்டை அடைந்து, வாளேந்தி மக்கள் வாராத இடத்தில் பாவியை விடுத்து, அரண்மனைக்குத் திரும்பி, நாயனார்க்குச் செய்தி தெரிவித்தான். அந்நற் செய் தியைக் கேட்கும் வரை உயிர் தாங்கிக்கொண்டிருந்த நாயனார், தத்தனைப் புகழ்ந்து, அரசியலுக்குரிய புதல்வர்களையும் மற்ற அன்பர்களையும் பார்த்துத் திருநீற்று நெறியை அன்புடன் பாதுகாக்குமாறு அறிவுறுத்தித் தில்லைக் கூத் தன் சேவடியைச் சிந்தை செய்தார். அப்பொழுது சிவபெருமான், மெய்ப் பொருள் நாயனார் எண்ணியவாறு அவர்க்குக் காட்சிகொடுத்து, அவரைத் தமது அருட் கழல் நீழலில் சேர்த்தருளினார்.

## விறன்மிண்ட நாயனார் புராணம்

**வி**ரைசெய் நறும்பூந் தொடையிதழி வேணி யார்தங் கழல்*பரவிப்
பரசு பெறுமா தவமுனிவன் பரசு ராமன் பெறுநாடு
திரைசெய் கடலின் பெருவளனும் திருந்து நிலனின் செழுவளனும்
வரையின் வளனும் உடன்பெருகி மல்கு நாடு மலைநாடு. க

க. வாசனை வீசும் நல்ல அழகு பொருந்திய கொன்றைப்பூ மாலையை யணிந்த சடையையுடைய சிவபிரான். பரசு - மழு. பரசுராமன் சமதக்கினி முனிவரின் புதல்வன். தன் தந்தையாகிய சமதக்கினியைக் கார்த்தவீரியன் கொன்றதை முற்கொண்டு, அவனையும், அவன் மரபினரையுங் கருவறுக்கப் பரசுராமன் விரதம் பூண்டு, சிவபூசை புரிந்து, பரசுபெற்று, நினைந்தபடியே

பா - ம்—*பரவிப்.

வாரி சொரியுங் கதிர்முத்தும் வயல்மென் கரும்பில் படுமுத்தும்
வேரல் விளையுங் குளிர்முத்தும் வேழ மருப்பின் ஒளிர்முத்தும்
மூரல் முறுவல் வெண்முத்த நகையார் தெரிந்து முறைகோக்கும்
சேரர் திருநாட் டூர்களின்முன் சிறந்த மூதூர் செங்குன்றூர். உ

என்னும் பெயரின் விளங்கியுல கேறும் பெருமை யுடையதுதான்
அன்னம் பயிலும் வயலுழவின் அமைந்த வளத்தால் ஆய்ந்தமறை
சொன்ன நெறியின் வழியொழுகும் தூய குடிமைத் தலைநின்றார்
மன்னுங் குலத்தின் மாமறைநூல் மரபில் பெரியோர் வாழ்பதியாம்.

அப்பொற் பதியி னிடைவேளாண் குலத்தை விளக்க அவதரித்தார்
செப்பற் கரிய பெருஞ்சீர்த்திச் சிவனார் செய்ய கழல்பற்றி
எப்பற் றினையும் அறஎறிவார் எல்லை தெரிய ஒண்ணாதார்
மெய்ப்பத் தர்கள்பால் பரிவுடையார் எம்பி ரானார் விறன்மிண்டர். ச

நதியும் மதியும் புனைந்தசடை நம்பர் விரும்பி நலஞ்சிறந்த
பதிகள் எங்கும் கும்பிட்டுப் படரும் காதல் வழிச்செல்வார்
முதிரும் அன்பிற் பெருந்தொண்டர் முறைமை நீடு திருக்கூட்டத்
தெதிர்முன் பரவும் அருள்பெற்றே இறைவர் பாதம் தொழப்பெற்றார்.

---

செய்து, அவர்கள் இரத்தத்தால் பிதிர் தர்ப்பணஞ்செய்தனன். இதனால் பரசுராமனுக்குப் பழி சூழ்ந்தது. அப்பழி போக்கச் சிவபெருமானை வழிபட்டு, ஒரு நாடு மறையவர்க்கு உதவுதல் வேண்டுமென்று எண்ணி, அவன் வருணனை வேண்டித் தென்திசைக் கடலில் மழுவை வீசினான். அம்மழு விழுந்த இடம் மறையவர்க்கு அளிக்கப்பட்டது. அதுவே மலைநாடு என்பது. இது புராணக்கதை. இக் கதைக்குறிப்பு இப்பாட்டிலிருத்தல்காண்க. மல்கும் - நிறைந்திருக்கும். கடலின் வளம்: முத்து பவளம் சங்கு உப்பு முதலியன; நிலனின் வளம்: செந்நெல் வாழை தென்னை கமுகு முதலியன; மலையின் வளம்: அகில் சந்தனம் தந்தம் முதலியன.

உ. வாரி - கடல். வேரல் - மூங்கிலில். வேழமருப்பின் - யானைக் கொம்பில். மூரல்......முத்த நகையார் - பல்லென்று சொல்லப்படுகின்ற வெள்ளிய முத்துக்களை நகைப்பினிடத்துடைய பெண்மக்கள். தெரிந்து - ஆராய்ந்து.

ங. ஏறும் - பரம்பும்; மதிக்கத்தக்க. வயல்......நின்றார் - வேளாளர்களும். மன்னும்......பெரியோர் - மறையவர்களும்.

ச. களைகாணு மெய்யன் புடையவரும்; எல்லை தெரிய ஒண்ணாதவராகிய சிவபெருமானின் என்னலு மொன்று. பரிவுடையார் - அன்புடையவரும்.

ரு. நம்பர்-சிவபெருமான். முறைமை நீடு - ஒழுங்காகப் பரவியுள்ள; ஒழுக்கம் மிகுந்த எனினுமாம். அடியவர் திருக்கூட்டத்தை முன்னே தொழும் அருள் பெற்றுப் பின்னே சிவபெருமான் திருவடிகளைத் தொழும் நியதியுடையவர்.

பா - ம்—*எனச் சொல்.

பொன்தாழ் அருவி மலைநாடு கடந்து கடல்சூழ் புவியெங்கும்
சென்றாள் உடையார் அடியவர்தம் திண்மை ஒழுக்க நடைசெலுத்தி
வன்தாள் மேருச் சிலைவளைத்துப் புரங்கள் செற்று வைதிகத்தேர்
நின்றார் இருந்த திருவாரூர் பணிந்தார் நிகரொன் றில்லாதார். சு

திருவார் பெருமை திகழ்கின்ற தேவா சிரிய னிடைப்பொலிந்து
மருவா நின்ற சிவனடியார் தம்மைத் தொழுது வந்தணையா
தொருவா றொதுங்கும்வன்தொண்டன் †புறகென் றுரைப்பச்சிவனருளால்
பெருகா நின்ற பெரும்பேறு பெற்றார் மற்றும் பெறநின்றார். எ

சேணார் மேருச் சிலைவளைத்த சிவனார் அடியார் திருக்கூட்டம்
பேணா தேகும் ஊரனுக்கும் பிரானாந் தன்மைப் பிறைசூடிப்
பூணார் அரவம் புனைந்தார்க்கும் புறகென் றுரைக்க மற்றவர்பால்
கோணா அருளைப் பெற்றார்மற் றினியார் பெருமை கூறுவார். அ

ஞாலம் உய்ய நாமுய்ய நம்பி சைவ நன்னெறியின்
சீலம் உய்யத் திருத்தொண்டத் தொகைமுன் பாடச் செழுமறைகள்
ஓலம் இடவும் உணர்வரியார் அடியார் உடனும் ‡உளதென்றால்
ஆலம் அமுது செய்தபிரான் அடியார் பெருமை அறிந்தாரார். கூ

ஒக்க நெடுநாள் இவ்வுலகில் உயர்ந்த சைவப் பெருந்தன்மை
தொக்க நிலைமை நெறிபோற்றித் தொண்டு பெற்ற விறன்மிண்டர்

---

சு. பொன் தாழ் அருவி - பொற் பொடிகளுடன் கலந்து விழும் அருவி. ஆள் உடையார் அடியவர்-நம்மை ஆளாக உடைய சிவனடியார்களின். திண்மை - உறுதியான. வன்தாள் - வலிய அடியையுடைய. வைதிகத் தேர் நின்றார் - வேதங்களாகிய குதிரைகள் பூட்டப்பட்ட தேரில் எழுந்தருளியுள்ள சிவபெருமான். தடுத்தாட்கொண்ட புராணம் : பாட்டு சஉ பார்க்க.

எ. திருமகள்வாழும் தேவாசிரிய மண்டபம். புறகு - அடியார் கூட்டத்துக்குப் புறம்பு. மற்றுமுள்ள பேறுகளையும் பெற நின்றார்.

அ. சேண் ஆர் - ஆகாயத்தை அளாவிய. பேணாது ஏகும் ஊரனுக்கும் - வணங்காது செல்லும் நம்பியாரூருக்கும். அவர்பால் - சிவபெருமானிடத்தில் ; சிவபெருமானிடத்திலும் வன்தொண்ட ரிடத்திலும் எனினுமாம். இனியார் அவர் (விறன் மிண்டர்) பெருமை கூறுவார்.

கூ. உணர்வரியார் - சிவபெருமான். அடியவர் திருக்கூட்டத்துடன் இருப்பதாகும் தன்மை இவருக்கு உண்டு என்றால். நம்பியாரூரர் திருத்தொண்டத் தொகை பாடுதற்கு முன்னர் அவரையும், சிவபெருமானையும் “ அடியார்க்குப் புறம்பு ” என்று சொல்லவும், அத்திருப்பாட்டை நம்பியாரூரர் பாடிய பின்னை அவரையும் சிவபெருமானையும் “அடியாருடன்” என்று சொல்லவும் உரிமை அன்பு வாய்க்கப்பெற்றவர் விறன்மிண்டர் என்றபடி.

கO. ஒக்க - பொருந்த.

பா - ம் — *சேடியார். †புறம்பென். ‡உளமென்றால்.

தக்க வகையால் தம்பெருமான் அருளி னாலே தாள்நிழற்கீழ்
மிக்க கணநா யகராகுந் தன்மை பெற்று விளங்கினார். ௧0

வேறு பிறிதென் திருத்தொண்டத் தொகையால் உலகு விளங்கவரும்
பேறு தனக்குக் காரணராம் பிரானார் விறன்மிண் டரின்பெருமை
கூறும் அளவென் அளவிற்றே அவர்தாள் சென்னி மேற்கொண்டே
ஆறை வணிகர் அமர்நீதி அன்பர் திருத்தொண் டறைகுவாம். ௧௧

ஆ_ திருவிருத்தம் • ௫0௧.

சேர நாட்டிலே, செங்குன்றூரிலே, வேளாள குலத்திலே பிறந்தவர் **விறன்மிண்ட நாயனார்** என்பவர். முன்னே திருத்தொண்டர்களை வணங்கிப் பின்னே சிவபெருமானைப் பணிவது அவரது வழக்கமாகும். அவர், பல திருப்பதிகளைத் தொழுது திருவாரூரை அடைந்தபோது, அங்கே ஒருநாள் சுந்தர மூர்த்தி சுவாமிகள், தேவாசிரிய மண்டபத்தில் எழுந்தருளியுள்ள அடியார்களை வணங்காது ஒருவாறு ஒதுங்கிச் சென்றதைக்கண்டு, “திருத்தொண்டர்களுக்கு வன்றொண்டனும் புறம்பு; அவனை ஆண்ட சிவனும் புறம்பு” என்றார். விறன்மிண்ட நாயனார் அடியவரிடத்துக் கொண்டுள்ள அன்புறுதியைக்கண்டு, நம்பியாரூரர் தங்கருத்து முற்றுப்பெறவும், உலகுய்யவுந் திருத்தொண்டத் தொகையைத் திருவாய் மலர்ந்தருளினார். அத்திருத்தொண்டத் தொகை விறன்மிண்ட நாயனாருக்குப் பெருமகிழ்ச்சி யூட்டிற்று. சிவபெருமான், தம்கணங்களுக்குத் தலைவராயிருக்கும் பெருவாழ்வை விறன்மிண்ட நாயனார்க்கு அளித்தருளினார்.

# அமர்நீதி நாயனார் புராணம்

சீரில் நீடிய செம்பியர் பொன்னிநன் னாட்டுக்
காரின் †மேவிய களிஅளி மலர்ப்பொழில் சூழ்ந்து
தேரின் ‡மேவிய செழுமணி வீதிகள் சிறந்து
பாரில் நீடிய பெருமைசேர் பதிபழை யாறை.

மன்னும் அப்பதி வணிகர்தங் குலத்தினில் வந்தார்
பொன்னும் முத்தும்நன் மணிகளும் பூந்துகில் முதலா

௧௧. வேறு பிறிது என் - இதைவிட வேறாகச் சொல்லும் பிற பெருமை அவருக்கு என்? திருத்தொண்டத் தொகையைப் பாடுவித்த பெருமை ஒன்றே சாலும் என்றபடி. அளவிற்றே. ஆறை - பழையாறை.

௧. செம்பியர் - சோழ மன்னர்; சிபிமரபிற்றோன்றியவர். பொன்னி நன்னாட்டு - காவிரி நாட்டிலே. காரின் மேவிய - மேகமண்டலத்தை அளாவிய. களி அளி - தேனுண்டு களிக்கும் வண்டுகள் பொருந்திய. பாரில் - உலகில்.

பா - ம்—*தாளிணைக்கீழ். †நீடிய. ‡நீடிய.

எந்நி லத்தினும் உள்ளன வருவளத் தியல்பால்
அந்நி லைக்கண்மிக் கவர்அமர் நீதியார் என்பார். ௨

சிந்தை செய்வது சிவன்கழல் அல்லதொன் றில்லார்
அந்தி வண்ணர்தம் அடியவர்க் கமுதுசெய் வித்துக்
கந்தை கீளுடை கோவணம் கருத்தறிந் துதவி
வந்த செல்வத்தின் வளத்தினால் வரும்பயன் கொள்வார். ௩

முக்கண் நக்கராம் முதல்வனா ரவர்திரு நல்லூர்
மிக்க சீர்வளர் திருவிழா விருப்புடன் வணங்கித்
தக்க அன்பர்கள் அமுதுசெய் திருமடம் சமைத்தார்
தொக்க சுற்றமும் தாமும்வந் தணைந்தனர் தூயோர். ௪

மருவும் அன்பொடு வணங்கினர் மணிகண்டர் நல்லூர்த்
திருவி ழாஅணி சேவித்துத் திருமடத் தடியார்
பெருகும் இன்பமோ டமுதுசெய் திடஅருள் பேணி
உருகு சிந்தையின் மகிழ்ந்துறை நாளிடை ஒருநாள். ௫

பிறைத்த ளிர்ச்சடைப் பெருந்தகைப் பெருந்திரு நல்லூர்க்
கறைக்க ளத்திறை கோவணப் பெருமைமுன் காட்டி
நிறைத்த அன்புடைத் தொண்டர்க்கு நீடருள் கொடுப்பான்
மறைக்கு லத்தொரு பிரமசா ரியின்வடி வாகி. ௬

---

௨. பூந்துகில் - அழகிய பட்டுவர்க்கங்கள். அந்நிலைக்கண் - அவ்வாணிபத் தன்மையில்; அவ்விடத்தில் எனினுமாம்.

௩. அந்தி வண்ணர் தம் - அந்திவான் நிறமுடைய சிவபெருமானின். கீள் - அரைநாணுக்குப் பதிலாக அணிவது. செல்வ வளத்தின் பயன் - அடியவர்க்கு அமுது செய்வித்தல் முதலியன.

௪. நக்கராம் முதல்வனாரவர் - திருவாணியாகிய சிவபெருமானது. சமைத்து. தொக்க - நெருங்கிய. தூயோர் - அமர்நீதி நாயனார்.

௫. மருவும் - கலந்த. மணி கண்டர் - நீலகண்டராகிய சிவபெருமான். அணி - அழகை; சிறப்பை. வணங்கிய அடியவரின் அருளைப் பேணி. உறை நாளிடை - வாழும் நாளில்.

௬. பெருந்திரு நல்லூர் பிறை............இறை. தளிர்போன்ற சடை. றைக்களத்திறை - திருநீலகண்டத்தையுடைய சிவபெருமான். தன் கோவணப் பெருமையை முன் காட்டி; அமர்நீதி நாயனார் அடியவர்களுக்கு அளிக்கும் கோவணப் பெருமையை முன்காட்டி என்னினுமாம். நிறைந்த அன்புடைய அமர்நீதி நாயனார்க்கு.

செய்ய புன்சடை கரந்ததோர் திருமுடிச் சிகையும்
சைவ வெண்திரு நீற்றுமுண் டகத்தொளித் தழைப்பும்
மெய்யின் வெண்புரி நூலுடன் விளங்குமான் தோலும்
கையில் மன்னிய பவித்திர மரகதக் கதிரும். எ

முஞ்சி நாண்உற முடிந்தது சாத்திய அரையில்
தஞ்ச மாமறைக் கோவண ஆடையின் †அசைவும்
வஞ்ச வல்வினைக் கறுப்பறும் மனத்தடி யார்கள்
நெஞ்சில் நீங்கிடா அடிமலர் நீள்நிலம் பொலிய. அ

கண்ட வர்க்குறு காதலின் மனங்கரைந் துருகத்
தொண்டர் அன்பெனுந் தூநெறி வெளிப்படுப் பாராய்த்
தண்டின் மீதிரு கோவண நீற்றுப்பை தருப்பை
கொண்டு வந்தமர் நீதியார் திருமடங் குறுக. கூ

வடிவு காண்டலும் மனத்தினும் ‡மிகமுக மலர்ந்து
கடிது வந்தெதிர் வணங்கி"இம் மடத்தினிற் காணும்
படியி லாதநீர் அணையமுன் பயில்தவம் என்னோ
அடிய னேன்செய்த தென்றனர்" அமர்நீதி அன்பர். கO

பேணும் அன்பரை நோக்கி"நீர் பெருகிய அடியார்க்
கூணும் மேன்மையில் ஊட்டிநற் கந்தைகீள் உடைகள்
யாணர் வெண்கிழிக் கோவணம் §ஈவது கேட்டுக்
காண வந்தனம்" என்றனன் கண்ணுதற் கரந்தோன். கக

---

எ. சிவந்த மிருதுவாகிய சடையை மறைத்த திருமுடி மீது குடுமியும். முண்டகம் - நெற்றியில். பிரமசாரிகள் பூணூலில் மான்தோலை ஓரங்குல அளவில் புனைந்து கொள்வது வழக்கம். பவித்திரத்தின் மரகத (பசுமையின்) ஒளியும்.

அ. முஞ்சி என்னும் தருப்பைப் புல்லைக் கயிறாக முறுக்கி அதனை அணிந்த அரையிலே, எவர்க்கும் பற்றுக்கோடாகும் பெரிய வேதமாகிய கோவணத்தின் அசைவும். கறுப்பு - களங்கம்.

கூ. தம்மைக் கண்டவர்க்கு மிக்க காதலால். தொண்டர் - அமர்நீதி நாயனார்.

கO. காணும்படி இலாதநீர் - இதுகாறும் காணும்படி வாராத நீர். இதுகாறும் வந்த அடியவர் தோற்றத்தினும் இவ்வடியவர் தோற்றம் மனங் கவர்ந்தமையான் "காணும்படி இலாதநீர்" என்றார். பயில் - பயின்ற; செறிந்த; நிறைந்த.

கக. பேணும் - வழிபடும். "அமரர்ப் பேணியும்" - பட்டினப்பாலை : ௨OO. யாணர் - புதிய. நெற்றிக்கண்ணை மறைத்து வந்த சிவபெருமான்.

பா - ம்—*ஒண். †தசைவும். ‡முகமிக. §ஈதல்கேட்டும்மைக்.

என்று தம்பிரான் அருள்செய "இத்திரு மடத்தே
நன்று நான்மறைப் பெருந்தவர் அமுதுசெய் தருளத்
துன்று வேதியர் தூய்மையின் அமைப்பதும் உளதால்
இன்று நீரும்இங் கமுதுசெய் தருளும்"என் றிறைஞ்ச. கஉ

வணங்கும் அன்பரை நோக்கிஅம் மறையவர் இசைந்தே
"அணங்கு நீர்ப்பொன்னி ஆடிநான் வரமழை வரினும்
உணங்கு கோவணம் வைத்துநீர் தாரும்"என் றொருவெண்
குணங்கொள் கோவணம் தண்டினில் அவிழ்த்தது கொடுப்பார்.

"ஓங்கு கோவணப் பெருமையை உள்ளவா றுமக்கே
ஈங்கு நான்சொல வேண்டுவ தில்லைநீர் இதனை
வாங்கி நான்வரும் அளவும்உம் மிடத்திக ழாதே
ஆங்கு வைத்துநீர் தாரும்"என் றவர்கையிற் கொடுத்தார். கச

கொடுத்த கோவணங் கைக்கொண்டு கோதிலா அன்பர்
"கடுப்பில் இங்கெழுந் தருளும்நீர் குளித்"தெனக் கங்கை
மடுத்த தும்பிய வளர்சடை மறைத்தஅம் மறையோர்
அடுத்த தெண்திரைப் பொன்னிநீர் †ஆடவென் றகன்றார். கரு

தந்த கோவணம் வாங்கிய தனிப்பெருந் தொண்டர்
முந்தை அந்தணர் மொழிகொண்டு முன்புதாம் கொடுக்கும்
கந்தை கீளுடை கோவணம் அன்றியோர் காப்புச்
சிந்தை செய்துவே றிடத்தொரு சேமத்து வைத்தார். கசு

போன வேதியர் வைத்தகோ வணத்தினைப் போக்கிப்
பான லந்துறைப் ‡பொன்னிநீர் படிந்துவந் தாரோ

---

கஉ. துன்று - நெருங்கிய.

கங. அணங்கு - அழகிய; தெய்வத்தன்மையுடைய; பாவையாகிய. பொன்னி - காவிரி. உணங்குகோவணம் - உலர்ந்த இக்கோவணத்தை. குணம் - நிறம். கோவணம் ஈண்டுத் திருவருளைக் குறிப்பது. அதற்கேற்ப "வெண்குணம்" என்றார். வெண்குணம் தூய்மையை உணர்த்துவது.

கச. கோவணந்தானே என்று இகழாது.

கரு. கடுப்பில் - விரைவில். 'கங்கையாகிய மடு'—பழைய குறிப்புரை. 'மடுத்து (பாய்ந்து) என்னும் வினை எச்ச ஈறு விகாரத்தால் தொக்கது'—**ஆறுமுகத் தம்பிரானார்.** அடுத்த - அருகேயுள்ள. தெண்திரை - தெள்ளிய அலைகளையுடைய.

கசு. காப்பு - காவலான இடத்தை. சேமத்து - பாதுகாப்புள்ள ஓரிடத்தில்.

பா - ம்—*ற்றவர். †ஆடுதற் ககன்றார். ‡பொன்னியே.

தூந றுஞ்சடைக் கங்கைநீர் தோய்ந்துவந் தாரோ
வான நீர்மழை பொழிந்திட நனைந்துவந் தணைந்தார். ௧௭

கதிர்இ ளம்பிறைக் கண்ணியர் நண்ணிய பொழுதில்
முதிரும் அன்புடைத் தொண்டர்தாம் முறைமையின் முன்னே
அதிக நன்மையின் அறுசுவைத் திருவமு தாக்கி
எதிரெ ழுந்துசென் றிறைஞ்சிட நிறைந்தநூல் மார்பர். ௧௮

தொண்டர் அன்பெனுந் தூயநீர் ஆடுதல் வேண்டி
"மண்டு தண்புனல் மூழ்கிய ஈரத்தை மாற்றத்
தண்டின் *மேலதும் ஈரம்,நான் தந்தகோ வணத்தைக்
கொண்டு வாரும்"என் றுரைத்தனர் கோவணக் கள்வர். ௧௯

ஐயர் கைதவம் அறிவுறு தவர்கடி தணுகி
†எய்தி நோக்குறக் கோவணம் இருந்தவே றிடத்தில்
மையில் சிந்தையர் கண்டிலர் "வைத்தகோ வணம்முன்
செய்த தென்"என்று திகைத்தனர் தேடுவா ரானார். உ0

"பொங்கு வெண்கிழிக் கோவணம் போயின நெறிமேல்
சங்கை இன்றியே தப்பின" தென்றுதம் சரக்கில்
எங்கும் நாடியும் கண்டிலர் என்செய்வார் நின்றார்
அங்கண் வேதியர் பெருந்தொடக் கினில்அகப் பட்டார். உ௧

மனைவி யாரொடு மன்னிய கிளைஞரும் தாமும்
இனைய தொன்றுவந் தெய்திய தெனஇடர் கூர்ந்து
நினைவ தொன்றிலர் வருந்தினர் நிற்கவும் மாட்டார்
புனைய வேறொரு கோவணங் கொடுபுறப் பட்டார். உஉ

---

௧௭. பானல் அம் துறை - நீலோற்பலம் மலர்ந்திருந்த அழகிய கரையையுடைய. வானம் - மேகம்.

௧௮. பிறைக் கண்ணியர் - பிறையைக் கொண்டைமாலையாக அணிந்த சிவபெருமான்.

௧௯. மண்டு தண்புனல் - மிகுந்து விரைந்து செல்லும் குளிர்ந்த நீரில். கோவணத்தை மறைத்த சிவபெருமான்.

உ0. கைதவம் - வஞ்சனை. அவர் - அமர்நீதி நாயனார். வேறிடத்தில் - ௧௬-ம் பாட்டைப் பார்க்க. மையில் - களங்கமில்லாத. நாம் முன்னே வைத்த கோவணம் எவ்வாறு சென்றது?

உ௧. பொங்கு - பொலிவினையுடைய. போனவழியை மேலே யோசிக்குமிடத்து. தொடக்கினில் - வாதத்தில்; சிக்கில்.

உஉ. கிளைஞரும் - சுற்றத்தாரும்.

பா - ம்—*மேலுள ஈரம். †எய்தமுன் சென்று.

அத்தர் முன்புசென் "றடிகள்! நீர் தந்தகோ வணத்தை
வைத்தி டத்துநான் கண்டிலன் மற்றுமோ ரிடத்தில்
உய்த்தொ ளித்தனர் இல்லை *அஃதொழிந்தவா றறியேன்
இத்த கைத்தவே றதிசயம் கண்டிலேன்" என்று. உ௩

"வேறு நல்லதோர் கோவணம் விரும்பிமுன் கொணர்ந்தேன்
கீறு கோவணம் அன்றுநெய் தமைத்தது கிளர்கொள்
நீறு சாத்திய நெற்றியீர்! மற்றது களைந்து
மாறு சாத்திஎன் பிழைபொறுப் பீர்"என வணங்க. உ௪

நின்ற வேதியர் வெகுண்டு"அமர் நீதியார் நிலைமை
நன்று சாலவும் நாளிடை கழிந்ததும் அன்றால்
இன்று நான்வைத்த கோவணங் கொண்டதற் கெதிர்வே
றொன்று கொள்கென †உரைப்பதே நீர்"என உரையா. உ௫

"நல்ல கோவணம் ‡கொடுப்பன்என் றுலகின்மேல் நாளும்
சொல்லு வித்ததென் கோவணம் கொள்வது துணிந்தோ
ஒல்லை ஈங்குறு வாணிபம் §அழகிதே உமக்கு"என்
றெல்லை இல்லவன் எரிதுள்ளி னல்என வெகுண்டான். உ௬

மறிக ரந்துதன் டேந்திய மறையவர் வெகுளப்
பொறிக லங்கிய உணர்வின ராய்முகம் புலர்ந்து
"சிறிய என்பெரும் பிழைபொறுத் ¶தருள்செய்வீர் அடியேன்
அறிய வந்ததொன் றன்"றென அடிபணிந் தயர்வார். உஎ

"செயத்த கும்பணி செய்வன்இக் கோவணம் அன்றி
நயத்த குந்||தன நல்லபட் டாடைகள் மணிகள்

உ௩. அடிகள் - அடிகளே. உய்த்து - எடுத்துச் சென்று.

உ௪. கீறு - கிழித்த. கிளர்கொள் - விளக்கங்கொண்ட. அது - ஈரமாயுள்ள கோவணத்தை. மாறு சாத்தி - அதற்கு மாற்றாக இக்கோவணத்தையணிந்து.

உ௫. நீண்ட காலமும் ஆகவில்லை. உரைப்பதே - உரைக்கலாமா.

உ௬. ஒல்லை - விரைவாக. ஈங்கு - இதைப்போன்ற என்பது பழையகுறிப்புரை.

உஎ. மறி கரந்து - மானை மறைத்து. அயர்வார் - வருந்துவார்.

பா - ம்—*அஃதொளித்த; நான் ஒளித்த. †உரைப்பதென். ‡கொடுப்பர். §அழகிய தமக்கு: அழகிதிக்குமக்கு. ¶அருளுவீர். ||தனி.

உயர்த்த கோடிகொண் டருளும்"என் றுடம்பினில் அடங்காப்
பயத்தொ டுங்குலைந் தடியிசைப் பலமுறை பணிந்தார். உஅ

பணியும் அன்பரை நோக்கிஅப் பரம்பொரு ளானார்
தணியும் உள்ளத்த ராயினார் போன்று"நீர் தந்த
மணியும் பொன்னும்நல் ஆடையும் மற்றும்என் செய்ய
அணியும் கோவணம் நேர்தர அமையும்"என் றருள. உ௯

மலர்ந்த சிந்தைய ராகிய வணிகர்ஏ றனையார்
"அலர்ந்த வெண்ணிறக் கோவணம் அதற்குநே ராக
இலங்கு பூந்துகில் கொள்வதற் கிசைந்தருள் செய்யீர்
நலங்கொள் கோவணந் தரும்பரி சியா"தென நம்பர். ௩0

"உடுத்த கோவணம் ஒழியநாம் உம்கையில் தரநீர்
கெடுத்த தாகமுன் சொல்லுட அக் கிழித்தகோ வணநேர்
அடுத்த கோவணம் இது"என்று தண்டினில் அவிழா
எடுத்து "மற்றிதன் எடையிடுங் கோவணம்" என்றார். ௩௧

"நன்று சால"என் றன்பரும் ஒருதுலை நாட்டக்
குன்ற வில்லியார் கோவணம் ஒருதட்டில் இட்டார்
நின்ற †தொண்டருங் கையினில் நெய்தகோ வணந்தட்
டொன்றி லேஇட நிறைநிலா தொழிந்தமை கண்டார். ௩உ

நாடும் அன்பொடு நாயன்மார்க் களிக்கமுன் வைத்த
நீடு கோவணம் அடையநே ராகவொன் றின்றாக்
கோடு தட்டின்மீ திடஇடக் கொண்டெழுந் ததுகண்
டாடு சேவடிக் கடியரும் அற்புதம் எய்தி. ௩௩

---

உஅ. நயத்தகுந்தன - விரும்பத் தக்கனவாகிய. உயர்ந்த கோடி - உயர்ந்தனவாகிய பல.

உ௯. நேர்தர - ஒத்திருக்க.

௩0. ஏறு அனையார் - சிங்கம் போன்றவர். அலர்ந்த - விரிந்த; ஒளியுடைய. இலங்கு - விளங்கும். பரிசு - விதம். நம்பர் - சிவபெருமான்.

௩௧. இதன் எடை கோவணம் இடும் - இக்கோவணத்தின் நிறையளவில் வேறு கோவணம் நிறுத்துக்கொடும்.

௩உ. குன்றவில்லியார் - சிவபெருமான்.

௩௩. நாயன்மார்க்கு - அடியவர்கட்கு. அடைய - முழுவதும். கோடு - மேலெழுந்த; வட்டமான என்பொருளுமுளர். ஆடு சேவடிக்கு அடியரும் - கனகசபையில் நடம்புரியும் திருவடிக்கு அன்பு செய்யும் அமர்நீதி நாயனாரும்.

பா - ம்—*அக்கிழிந்த. †அன்பரும்.

"உலகில் இல்லதோர் மாயைஇக் கோவணம் ஒன்றுக்
கலகில் கோவணம் ஒத்தில" என்றதி சயித்துப்
பலவும் மென்துகில் பட்டுடன் இடஇட உயர
இலகு பூந்துகிற் பொதிகளை எடுத்துமேல் இட்டார். ௩௪

முட்டில் அன்பர்தம் அன்பிடுந் *தட்டுக்கு முதல்வர்
மட்டு நின்றதட் டருளொடுந் தாழ்வுறும் வழக்கால்
பட்டொ டுந்துகில் அநேக†கோ டிகளிடும் பத்தர்
தட்டு மேற்படத் தாழ்ந்தது கோவணத் தட்டு. ௩௫

ஆன தன்மைகண் டடியவர் அஞ்சிஅந் தணர்முன்
"தூந றுந்துகில் வர்க்கம்நூல் வர்க்கமே முதலா
மானம் இல்லன குவிக்கவுந் தட்டின்மட் டிதுவால்
ஏனை என்தனம் இடப்பெற வேண்டும்" என் றிறைஞ்ச. ௩௬

மங்கை பாகராம் மறையவர் மற்றதற் கிசைந்தே
"இங்கு நாம்இனி வேறொன்று சொல்லுவ தென்கொல்!
அங்கு மற்றுங்கள் தனங்களி லாகிலும் இடுவீர்
எங்கள் கோவணம் நேர்நிற்க வேண்டுவ" தென்றார். ௩௭

---

௩௪. அலகில் - அளவில்லாத. மென்துகில் - மெல்லிய பட்டுடன் பலவும். இலகும் - ஒளிவீசும்.

௩௫. அன்பு இடும் முட்டு இல் அன்பர்தம் தட்டுக்கு - அன்பினை இடும் முட்டுப்பாடில்லாத அன்பர்கள் (நிலைமை என்னும்) தட்டுக்கு. முதல்வர்மட்டு நின்ற தட்டு - சிவபெருமானிடத்து நின்ற (அருட்குணம் என்னும்) தட்டானது. தடங்கருணைப் பெருங்கடலாகிய சிவபெருமான் அடியவர்க்கு எளியராதலின், ஈண்டு இறைவர் கோவணம் வைக்கப்பட்ட தட்டும் எளிய தன்மையுடையதுபோலத் தாழ்ந்து நின்றதென்று நயம்படக் கூறினார் என்க. நாயனார் பட்டுப் பீதாம்பரங்களைத் தட்டிலிடுதல் சங்கரன் மாட்டுள்ள பேரன்பு என்றும், அச்சங்கரன் தன்கோவணத் தட்டைத் தாழ்த்தல் அடியவர் அன்பை வெளிப்படுத்தும் அருளுடைமை என்றுமுணர்க. அன்பருக்குத் தாழுந் தன்மை ஆண்டவன் மாட்டுள்ள தென்பார், "முதல்வர்மட்டில் நின்றதட்டு" என்றார். "தட்டு மேற்பட" என்பதற்குப் பரிபாகம் மேற்படத் திருவருள் பதிந்ததெனவும் விளக்குதலும் ஒன்று. மட்டு - மாட்டென்பதன் குறுக்கம்.

௩௬. மானமில்லன - அளவில்லாதன. மட்டு - அளவு. இது - முந்திய நிலை அதாவது மேற்பட்டு நிற்பது. மற்றுமுள்ள என் தனங்களையிட அனைத்தையும் அடிகள் பெறுதல்வேண்டும்.........இடுதற்கு அடிகள் கட்டளை வேண்டும் என்னலுமாம்.

பா - ம்—*தட்டுக்கம். †கோடிகளிடப்.

நல்ல பொன்னொடும் வெள்ளியும் நவமணித் திரளும்
பல்வ கைக்திறத் துலோகமும் புணர்ச்சிகள் பலவும்
எல்லை யில் பொருள் சுமந்தவர் இடஇடக் கொண்டே
மல்கு தட்டுமீ தெழுந்தது வியந்தனர் மண்ணோர். ௩௮

†தவம்நி றைந்தநான் மறைப்பொருள் நூல்களாற் சமைந்த
சிவன்வி ரும்பிய கோவண மிடுஞ்செழுந் தட்டுக்
கவனி மேலமர் நீதியார் தனமெலாம் அன்றிப்
புவனம் யாவையும் நேர்நிலா என்பது புகழோ. ௩௯

நிலைமை மற்றது நோக்கிய நிகரிலார் நேர்நின்
"றுலைவில் பஃறன மொன்றொழி யாமைஉய்த் தொழிந்தேன்
தலைவ! யானும்என் மனைவியும் சிறுவனும் தகுமேல்
துலையில் ஏறிடப் பெறுவதுன் அருள்" எனத் தொழுதார். ௪0

பொச்ச மில்லடி மைத்திறம் புரிந்தவர் எதிர்நின்
றச்ச முன்புற உரைத்தலும், அங்கணர் அருளால்
நிச்ச யித்தவர் நிலையினைத் துலையெனுஞ் சலத்தால்
இச்ச முக்கினின் றேற்றுவார் ஏறுதற் கிசைந்தார். ௪௧

மனம கிழ்ந்தவர் மலர்க்கழல் சென்னியால் வணங்கிப்
புனைம லர்க்குழல் மனைவியார் தம்மொடு புதல்வன்
‡தனையி டக்கொடு தனித்துலை வலங்கொண்டு தகவால்
இனைய செய்கையில் ஏறுவார் கூறுவார் எடுத்து. ௪௨

---

௩௮. புணர்ச்சிகள் - பலவகை உலோகங்களைக் கலந்த வெண்கலம் முதலியன. மல்கு - பொருள்கள் நிறைந்த.

௩௯. சிவபெருமான் கோவணம் நான்கு வேதப் பொருளாகிய நூல்களால் ஆகியதென்க.

௪0. ஒப்பில்லாத அமர்நீதி நாயனார் அடிகள் முன் நின்று. உலைவு இல் - கெடுதலில்லாத. பஃதனம். உய்த்து - கொண்டுவந்து வைத்து. ஒழிந்தேன் - எஞ்சி நிற்கிறேன். பெறுவது - எங்களைப் பெற்றுக்கொள்வது.

௪௧. பொச்சமில் - குற்றமில்லாத. புரிந்தவர் - அமர்நீதி நாயனார். அங்கணர் - **திருநகரச் சிறப்பு**: பாட்டு ௪௧: குறிப்புப் பார்க்க. மறையவருக்கு எதிரே நின்று. சலத்தால் - முகாந்தரத்தால்; வியாசத்தால் (எண்ணியதை மறைத்து வேறொன்று செய்வது). இப்பொய்யுலகினின்றும் மெய்யுலகுக்கு ஏற்றுவாராய் நாயனார் மனைவிமைந்தருடன் தட்டில் ஏறுதற்கு.

௪௨. அவர் - அடியவராக வந்த சிவபெருமான். தகுதியுடன் இவ்விதச் செய்கையினால் தட்டில் ஏறப்போகும் அமர்நீதி நாயனார்.

**பா - ம்—*தனம். †தவநிறைந்து நாற்பொருள்மறை. ‡தனையுடன் கொடு.**

"இழைத்த அன்பினில் இறைதிரு நீற்றுமெய் யடிமை
பிழைத்தி லோமெனிற் பெருந்துலே நேர்நிற்க" என்று
மழைத்த டம்பொழில் திருநல்லூர் இறைவரை வணங்கித்
தழைத்த அஞ்செழுத் தோதினுர் ஏறினுர் தட்டில். ௪௩

மண்டு காதலின் மற்றவர் மகிழ்ந்துடன் ஏற
அண்டர் தம்பிரான் திருஅரைக் கோவணம் அதுவும்
கொண்ட அன்பினிற் குறைபடா அடியவர் அடிமைத்
தொண்டும் ஒத்தலால் த்துநேர் நின்றதத் துலேதான். ௪௪

மதிவி ளங்கிய தொண்டர்தம் பெருமையை மண்ணோர்
துதிசெய் தெங்கணும் அதிசயம் உறஎதிர் தொழுதார்
கதிர்வி சும்பிடைக் கரந்திட நிரைந்தகற் பகத்தின்
புதிய பூமழை இமையவர் மகிழ்வுடன் பொழிந்தார். ௪௫

அண்டர் பூமழை பொழியமற் றதனிடை ஒளித்த
முண்ட வேதியர் ஒருவழி யான்முதல் நல்லூர்ப்
பண்டு தாம்பயில் கோலமே விசும்பினிற் பாகங்
கொண்ட பேதையுந் தாமுமாய்க் காட்சிமுன் கொடுத்தார். ௪௬

தொழுது போற்றிஅத் துலேமிசை நின்றுநேர் துதிக்கும்
வழுவில் அன்பரும் மைந்தரும் மனைவியார் தாமும்
முழுதும் இன்னருள் பெற்றுத்தம் முன்தொழு திருக்கும்
அழிவில் வான்பதங் கொடுத்தெழுந் தருளினுர் ஐயர். ௪௭

நாதர் தம்திரு வருளினுல் நற்பெருந் துலேயே
மீது கொண்டெழு விமானம தாகிமேற் செல்லக்
கோதில் அன்பருங் குடும்பமுங் குறைவறக் கொடுத்த
ஆதி மூர்த்தியா ருடன்சிவ புரியினே அணைந்தார். ௪௮

---

௪௩. மழைத்தடம் பொழில் - மேகங்கள் தவழும் விசாலமான சோலே சூழ்ந்த.

௪௪. மண்டு - நிறைந்த. அண்டர் தம்பிரான் - சிவபெருமானது.

௪௫. மதி - மெய்யறிவு. கதிர்விசும்பு இடை கரந்திட - ஒளி விளங்கும் ஆகாய வெளிமறைய. நிரைந்த - வரிசையாகவுள்ள. இமையவர் - தேவர்கள்.

௪௬. அண்டர் - தேவர்கள். முண்டவேதியர் - திரிபுண்டரம் தரித்த வேதியர்; சிவபெருமான். முதன்மையுடைய திருநல்லூரில். பண்டு தாம் பயில் கோலம் - முன்னே தாங்கொண்டிருந்த கோலமாகிய. பேதையும் - உமாதேவி யாரும். விசும்பினில் - ஆகாயத்தில்.

௪௭. வான்பதம் - உயர்ந்த சிவபதத்தை.

௪௮. திருவருளைக் கொடுத்த.

## வேறு

மலர்மிசை அயனும் மாலும் காணுதற் கரிய வள்ளல்
பலர்புகழ் வெண்ணெய் நல்லூர் ஆவணப் பழமை காட்டி
உலகுய்ய ஆண்டு கொள்ளப் பெற்றவர் பாதம் உன்னித்
தலைமிசை வைத்து வாழும் தலைமைநந் தலைமை யாகும். சக

ஆ_ திருவிருத்தம் - ருரு௦.

---

சோழ நாட்டிலே, பழையாறை என்னும் பழம் பதியிலே, வணிகர் குலத்திலே தோன்றிய நாயனார் ஒருவர் இருந்தார். அவர்தம் பெயர் **அமர்நீதி நாயனார்** என்பது. அவருக்கு அளவில்லாச் செல்வம் உண்டு. அவர், அச்செல்வத்தை அடியவர்கட்குத் திருவமுது செய்வித்தல், அவர்கள் கருத்தறிந்து அவர்கட்குக் கந்தை, கீள், உடை, கோவணம் அளித்தல் முதலிய திருத்தொண்டுகட்குப் பயன்படுத்தி வந்தார்.

திருநல்லூர் என்னுந் திருப்பதியிலே நடைபெறுந் திருவிழாவைக் கண்டு இன்புற அடியவர் பலர் அங்கே போவது வழக்கம். அவ்விடத்தில் அடியவர்களுக்குத் திருவமுது செய்விக்கும் பொருட்டு நாயனார் ஒரு திருமடங் கட்டினார். நாயனார் சுற்றத்தவர்களுடன் அத்திருமடத்தில் தங்கித் தந்தொண்டுகளைக் குறைவற ஆற்றி வரலானார்.

அந்நாயனார்க்குத் திருவருள் சுரக்கவேண்டிச் சிவபெருமான் ஒரு நாள் ஒரு வேதியராய்ப் பிரமசாரி வடிவந் தாங்கி, இரண்டு கோவணமும், திருநீற்றுப் பையும், தருப்பையுங் கட்டப்பெற்ற ஒரு தண்டேந்தித் திருமடம் நோக்கி வந்தார். வந்ததும் அமர்நீதிநாயனார் அவரை முறைப்படி வழிபட்டனர். வேதியர் பெருமான் நாயனாரை நோக்கி, "உமது திருத்தொண்டைக் கேள்வியுற்று உம்மைக் காணவந்தோம்" என்றார். அதுகேட்ட நாயனார், "இங்கே அந்தணர்கள் அமுதுசெய்ய அந்தணர்களாற் சமைக்கப்பெற்ற அமுதும் உண்டு" என்று வணங்கினார். பிரமசாரியார் "காவேரியில் நீராடி வருவோம்; ஒருவேளை மழைவரினும் வரும். இவ்வுலர்ந்த கோவணத்தை வைத்திருந்து கொடும்" என்று தண்டிலுள்ள ஒரு கோவணத்தை அவிழ்த்து, "இதன் பெருமையை உமக்குச் சொல்லவேண்டுவதில்லை; இதனை இகழாமல் வைத்துக் கொடும்" என்று அதனை நாயனாரிடம் அளித்துச் சென்றார். அடியவர் பெருமான், அக்கோவணத்தை ஒரு தனியிடத்திற் சேமித்து வைத்தார்.

திருவருளால் அக்கோவணம் மறையலாயிற்று. வேதியர் நீராடி மழையில் நனைந்து வந்தார். மடத்தில் திருவமுதுஞ் சித்தமாயிருந்தது. அந்தணர் பெருமான் "தொண்டர் அன்பெனுந் தூயநீ ராடுதல்வேண்டி" அன்பரைப் பார்த்து, "ஈரத்தை மாற்றல் வேண்டும். தண்டிலுள்ள கோவணமும் ஈரமாயிருக்கிறது. ஆதலால் உம்மிடம் அளித்த கோவணத்தைக் கொண்டுவாரும்" என்றார். நாயனார், கோவணத்தைக் கொண்டு வரச் சென்றார். சென்ற நாயனார் கோவணத்தைக் கண்டாரில்லை. என் செய்வார் பாவம்! தேடுகிறார்; திகைக்கிறார்; அங்கு மிங்கும் ஓடுகிறார்; அலைகிறார்; "இடர் வந்ததே" என்று அலமருகிறார். இனி நிற்கமாட்டாதவராய் வேறொரு கோவணத்தைக்

---

சக. ஆவணம் - ஓலை. பெற்றவர் - சுந்தரமூர்த்தி சுவாமிகளின். தலைமை- மேன்மை.

கொண்டுவந்து, "அடிகள் அளித்த கோவணம் கெட்டுவிட்டது. அதனைத்தேடித் தேடிப் பார்த்தேன். அதை எங்கும் கண்டேனில்லை. வேறு இக்கோவணங் கொண்டு வந்திருக்கிறேன். இஃது ஒன்றினின்றுங் கிழிக்கப்பட்டதன்று. புதிதாக நெய்யப்பட்டது. இதனை ஏற்றருளும்; பிழை பொறுத்தருளும்" என்று இறைஞ்சினர். மறையவர் வெகுண்டு, "இன்று கொடுத்த கோவணம்! அஃது எப்படிக் கெட்டுவிடும்! அதனைக் கவர்ந்து வேறு கோவணங் கொடுக்கவா துணிந்தீர்! அடியார்களுக்கு நல்ல கோவணங் கொடுப்பதாகச் சொல்வித்தது, என் கோவணத்தைக் கவருதற்கே போலும்! உமது வாணிபம் நன்று; நன்று; மிக நன்று!" என்றுகூறினர். நாயனர் நடுநடுங்கி ஐயரைப் பணிந்து, "இப்பிழையைத் தெரிந்து செய்தேனில்லை. இக்கோவணமன்றி நல்ல பட்டாடைகளையும் மணிகளையுங் கொடுக்கிறேன். ஏற்றருளல் வேண்டும்" என்று வேண்டினர். அடிகள் தணிவுற்று, "எமக்கு ஒன்றும் வேண்டாம். எமது கோவணத்துக்கு ஒத்த நிறையுள்ள கோவணம் ஒன்று கொடுத்தாற்போதும்" என்றார். அதற்கு நாயனர் "எதன் நிறைக்கு ஒத்திருத்தல்வேண்டும்?" என்று கேட்டார். அந்தணர் பெருமான், "இக்கோவண நிறைக்கு" என்று தண்டில் கட்டியுள்ள கோவணத்தை அவிழ்த்துக் காட்டினர். அடியவர் விரைந்து ஒரு துலைநாட்டினர். அந்தணர் தமது கோவணத்தை ஒரு தட்டில் இட்டார். நாயனருந் தாம் கொண்டுவந்த கோவணத்தை மற்றொரு தட்டில் இட்டார். நிறை ஒத்துவரவில்லை. நாயனர், அந்தணரின் ஆணைபெற்றுத் தம்பாலுள்ள கோவணங்களையும் பட்டாடைகளையும் ஒவ்வொன்றாகவும் பொதி பொதியாகவும் இட்டு இட்டுப் பார்த்தார். தட்டு ஒத்துவரவில்லை. நாயனர் வேதியரின் அனுமதிபெற்றுத் தம்மிடமுள்ள பொன் வெள்ளி முதலிய உலோகங்களையும் பிற பொருள்களையும் குவியல் குவியல்களாகக்கொண்டுவந்து கொண்டுவந்து முறை முறையே தட்டில் சேர்த்தார். தட்டு நேர் நிற்கவில்லை. அக்காட்சி கண்ட நாயனர், "அடிகளே! என்னிடத்துள்ள எல்லாவற்றையுங் கொண்டுவந்து வைத்துவிட்டேன். இனி யானும் மனைவியும் புதல்வனும் எஞ்சி நிற்கிறோம். திருவுள மிருப்பின், நாங்களும் தட்டில் ஏறுகிறோம்" என்றார். ஐயரும் அதற்கிசைந்தார். அமர்நீதி நாயனர் பெரிதும் மகிழ்ந்து மனைவியுடனும் மைந்தருடனும் துலையை வலம்வந்து, "இதுகாறும் நாங்கள் நிகழ்த்திவந்த தொண்டு தவறுதலில்லாததாயின், நாங்கள் ஏறினதும் இத்துலை நேர் நிற்பதாக" என்று மொழிந்து ஐந்தெழுத்தை ஓதித் தட்டிலேறினர். ஏறினதும், தட்டுகள் நேர் நின்றன. அதைக் கண்ட மண்ணவர் வாழ்த்தினர்; விண்ணவர் மலர் சொரிந்தார். பிரமசாரியாக வந்த பெருமான் உமாதேவியாருடன் மழவிடைமேல் தோன்றினர். தட்டிலே நின்ற நாயனரும் அவர்தம் மனைவியாரும் புதல்வரும் ஆண்டவன் திருக்கோலத்தைக் கண்டு போற்றுகிறார். சிவபெருமான், மூவர்க்கும் தம்மை என்றுந் தொழுதுகொண்டிருக்கும் வான்பத மருளி எழுந்தருளினர். திருவருளால் அத்துலையே விமானமாகி மேலே சென்றது. அமர்நீதி நாயனர் தம் மனைவியுடனும் மைந்தருடனுஞ் சிவலோகஞ் சேர்ந்தனர்.

## ௩. இலைமலிந்த சருக்கம்

# எறிபத்த நாயனார் புராணம்



மல்லல்நீர் ஞாலந் தன்னுள் மழவிடை யுடையான் அன்பர்க்
கொல்லைவந் துற்ற செய்கை உற்றிடத் துதவும் நீரார்
எல்லையில் புகழின் மிக்க எறிபத்தர் பெருமை எம்மால்
சொல்லலாம் படித்தன் றேனும் ஆசையால் *சொல்ல லுற்றேன். க

பொன்மலைப் †புலிநின் றோங்கப் புதுமலை இடித்துப் போற்றும்
அந்நெறி வழியே யாக அயல்வழி அடைத்த சோழன்
மன்னிய அநபா யன்சீர் மரபின்மா நகர மாகும்
தொன்னெடுங் கருவூர் என்னுஞ் சுடர்மணி வீதி மூதூர். ௨

மாமதில் மஞ்சு சூழும் மாளிகை நிரைவிண் சூழும்
தூமணி வாயில் சூழும் சோலையில் வாசஞ் சூழும்
தேமலர் அளகஞ் சூழும் சிலமதி ‡தெருவில் சூழும்
தாமகிழ்ந் தமரர் சூழும் சதமகன் நகரந் தாழ. ௩

---

க. மல்லல் நீர் ஞாலம் தன்னுள் - வளப்பமுடைய கடல் சூழ்ந்த நிலவுலகில். மழவிடை உடையான் அன்பர்க்கு - இளமை வாய்ந்த இடப வாகனராகிய சிவபெருமானுடைய நேயர்கட்கு. உற்ற செய்கை உற்ற இடத்து - பொருந்திய தொண்டுக்கு ஆபத்து நேர்ந்தபோது. ஒல்லை வந்து உதவும் நீரார் - விரைந்து வந்து துணைபுரியும் தன்மையுடையவர். படித்தன்றேனும் - தன்மையுடைய தன்றாயினும்.

௨. பொன்மலை - இமயம்; திருமலைச் சிறப்பு முதற்பாட்டின் குறிப்பைப் பார்க்க. புலிக்கொடி - திருநாட்டுச் சிறப்பு முதற்பாட்டின் குறிப்பைப்பார்க்க. இமயமலையிலே புலிக்கொடி நின்று ஓங்க. மலைகளை இடித்துச் செய்த அவ்வழி புதுவழியாக, மற்றச் சுற்று வழிகளை அடைத்த. மலைகளை இடித்துப் புதிய நேர் வழி யுண்டாக்குதல் மன்னர்களின் வழக்கமென்க. சோழன்-சோழவமிசத் [illegible]; ஒரு சோழன் செயலை மற்றச் சோழன் செயலாகக் கூறுவது மரபு. திருப்பண்டுச் சோழன் என்பதற்குச் சோழ வமிசத்தான் என்று பொருள் மேற்கொப்பட்டது. மன்னிய - நிலை பெற்ற. மரபினர்க்குரிய மாநகரம் பாலை மிகுந்த கருவூர். கருவூர் - கொங்கு நாட்டிலுள்ளது; சோழ மன்னர்க் [illegible]ந்து தலை நகரங்களுள் ஒன்று. தலை நகரங்கள் ஐந்து: காவிரிப்பூம் [illegible]னம், திருவாரூர், உறையூர், திருச்சேய்ஞலூர், கருவூர்.

௩. மஞ்சு - மேகங்கள். நிரை - வரிசைகள். தூயமணி. தேன்மலர். அளகம் - கூந்தலில். சில மதி - (மாதர்களின் முகமாகிய) சில சந்திரர்கள்.

பா - ம்—*சொல்லலுற்றும். †புலிவென். ‡தெருவுஞ்.

கடகரி துறையி லாடும் களிமயில் புறவி லாடும்
அடர்மணி அரங்கி லாடும் அரிவையர் குழல்வண் டாடும்
படரொளி மறுகி லாடும் பயில்கொடி கதிர்மீ தாடும்
தடநெடும் புவிகொண் டாடும் தனிநகர் வளமை ஈதால். ௪

மன்னிய சிறப்பின் மிக்க வளநகர் அதனில் மல்கும்
பொன்னியல் புரிசை சூழ்ந்து சுரர்களும் போற்றும் பொற்பால்
துன்னிய அன்பின் மிக்க தொண்டர்தஞ் சிந்தை நீங்கா
அந்நிலை அரனார் வாழ்வ தானிலை என்னுங் கோயில். ௫

பொருட்டிரு மறைக டந்த புனிதரை இனிதக் கோயில்
மருட்டுறை மாற்றும் ஆற்றால் வழிபடுந் தொழில ராகி
இருட்கடு ஒடுங்கு கண்டத் திறையவர்க் குரிமை பூண்டார்க்
கருட்பெருந் தொண்டு செய்வார் அவர்எறி பத்த ராவார். ௬

மழைவளர் உலகில் எங்கும் மன்னிய சைவம் ஓங்க
அழலவிர் சடையான் அன்பர்க் கடாதன அடுத்த போது
முழையரி என்னத் தோன்றி முரண்கெட எறிந்து தீர்க்கும்
பழமறை பரசுந் தூய பரசுமுன் எடுக்கப் பெற்றார். ௭

---

அமரர் (தேவர்கள்) தாம் மகிழ்ந்து. சதமகன் - இந்திரன். "ஒரு நூறுயிர வேள்வி உரவோன்" - மணிமேகலை : பதிகம் ௩௩.

௪. கடகரி - மதயானைகள். துறையில் - நீர்த்துறையில். புறவில் - முல்லை நிலத்தில். அரங்கில் - சபையில். அரிவையர் குழல் - பெண்களின் கூந்தலில். (அரிவைப் பருவம் - பத்தொன்பது முதல் இருபத்தைந்து வயது வரை ; அப் பருவம் இன்பத்துக்கு மிகவும் உரியது. "அரிவையர் இன்புமுத்தி"—சிவப் பிரகாசம் - ௩௮.) மறுகில் - வீதியில். பயில் - கட்டப்பட்ட. கதிர் - சூரிய மண்டலத்தின். தடம் - அகன்ற.

௫. புரிசை சூழ்ந்து - மதிலைச் *சுற்றி. சுரர்களும் - தேவர்களும். பொற் பால் - சிறப்பால். துன்னிய - உள் கலந்த. அந்நிலைமை வாய்ந்த. ஆனிலை - கருவூர்த் திருக்கோயிலின் பெயர். கோயில் மல்கும்.

௬. எல்லாப் பொருளும் அடங்கியுள்ள மறை. மறைகள் தந்த ( சென் மறை கடந்த எனினுமாம். புனிதரை - சிவபெருமானை. கோயிலின்லோகஞ் துறை - மயக்க வழியை. ஆற்றால் - வழியில். இருள்கடு - கரிய நஞ்சு. பூண்டார்க்கு - சிவனடியார்களுக்கு.

௭. மழையினால் வளர்க்கப்பெறும். "வானின் றுலகம் வழங்கி வருதல —திருக்குறள் : ௧௧. சைவம் உலகிற்குரியது ; பொதுச் சமயம் ; "ஓது சமயங் கள் பொருளுணரு நூல்கள் ஒன்றோடொன் றொவ்வாம லுளபலவும் இவற்றுள்-

பா - ம்—*பூண்ட அருட்.

அண்ணலார் நிகழு நாளில் ஆனிலை அடிக ளார்க்குத்
திண்ணிய அன்பு கூர்ந்த சிவகாமி யாண்டார் என்னும்
புண்ணிய முனிவ னார்தாம் பூப்பறித் தலங்கல் சாத்தி
உள்நிறை காத லோடும் ஒழுகுவார் ஒருநாள் முன்போல். ௮

வைகறை உணர்ந்து போந்து புனல்மூழ்கி வாயுங் கட்டி
மொய்மலர் நெருங்கு வாச நந்தன வனத்து முன்னிக்
கையினில் தெரிந்து நல்ல கமழ்முகை அலரும் வேலைத்
தெய்வநா யகர்க்குச் சாத்தும் திருப்பள்ளித் தாமங் கொய்து. ௯

கோலப்பூங் கூடை தன்னை நிறைத்தனர் கொண்டு நெஞ்சில்
வாலிய நேசங் கொண்டு மலர்க்கையில் தண்டும் கொண்டங்
காலய மதனை நோக்கி அங்கணர்க் கமைத்துச் சாத்தும்
காலைவந் துதவ வேண்டிக் கடிதினில் வாரா நின்றார். ௧0

மற்றவர் அணைய இப்பால் வளநகர் அதனில் மன்னும்
கொற்றவர் வளவர் தங்கள் குலப்புகழ்ச் சோழ னார்தம்
பற்றலர் முனைகள் சாய்க்கும் பட்டவர்த் தனமாம் பண்பு
பெற்றவெங் களிறு கோலம் பெருகுமா நவமி முன்னாள். ௧௧

---

யாது சமயம் பொருள் நூல் யாதிங் கென்னில் இதுவாகும் அதுவல்ல எனும் பிணக்கதின்றி - நீதியினால் இவை யெல்லாம் ஓரிடத்தே காண நிற்பது யாதொரு சமயம் அது சமயம் பொருள் நூல் ”—**சிவஞானசித்தியார் :** சுபக்கம் - ௲ - ௮ - ௧௩. முழை அரி என்ன - குகையிலிருந்து புறப்படுஞ் சிங்கம் போல. முரண்கெட - தீங்கிழைத்தவர்களின் வலிமைகெட. தீர்க்கும் - தீங்கைப் போக்கும். பரசும் - துதிக்கும். பரசு - (சிவபிரான்) மழுவை யொத்த மழுவை. மறை பரசம் பரசு இறைவனுடையது.

௮. அண்ணலார் - எறிபத்தநாயனார். ஆனிலை ஆண்டவனுக்கு. திண்ணிய - உறுதியான. அலங்கல் - மாலை.

௯. வைகறை - விடியற் காலத்தில். முன்னி - கருதிப் போந்து. தெரிந்து - ஆராய்ந்து. கமழ்முகை - மணங்கமழும் அரும்புகள். வேலை - வேளை. திருப்பள்ளித்தாமம் - கோயிலுக்கு மலர்கள். தாமம் - மாலை; ஈண்டு மலரின் மேற்று; ஆகு பெயர்; “ பூவைத் திருப்பள்ளித்தாமமென்பது சைவ பரிபாஷை”—**பழைய குறிப்புரை.**

௧0. கோலம் - அழகு வாய்ந்த. வாலிய - மாசற்ற; தூய. அங்கணர் **திருநகரச் சிறப்பு :** பாட்டு ௨௯ - குறிப்புப் பார்க்க.

௧௧. கொற்றவர் - மன்னர். வளவர் - சோழர். பற்றலர் - பகைவர்களுடைய. முனைகள் - சேனைகளை; பகைவர்களைப் போர் முனைகளில் என்னலு

**பா - ம்**—*நன்னாள்.

மங்கல விழவு கொண்டு வருநதித் துறைநீ ராடிப்
பொங்கிய களிப்பி னோடும் பொழிமதஞ் சொரிய, நின்றோர்
எங்கணும் இரியல் போக எதிர்பரிக் காரர் ஓடத்
துங்கமால் வரைபோல் தோன்றித் துண்ணென அணைந்த தன்றே.

வென்றிமால் யானை தன்னை மேல்கொண்ட பாக ரோடுஞ்
சென்றொரு தெருவின் முட்டிச் சிவகாமி யார்முன் செல்ல
வந்தணித் தண்டில் தூங்கும் மலர்கொள்பூங் கூடை தன்னைப்
பின்தொடர்ந் தோடிச் சென்று பிடித்துடன் பறித்துச் சிந்த. கங

மேல்கொண்ட பாகர் கண்டு விசைகொண்ட களிறு சண்டக்
கால்கொண்டு போவார் போலக் கடிதுகொண் டகலப் போக
நூல்கொண்ட மார்பின் தொண்டர் நோக்கினர் பதைத்துப் பொங்கி
மால்கொண்ட களிற்றின் பின்பு தண்டுகொண் டடிக்க வந்தார். கச

அப்பொழு தணைய வொட்டா தடற்களி றகன்று போக
மெய்ப்பெருந் தொண்டர் மூப்பால் விரைந்துபின் செல்ல மாட்டார்
தப்பினர் விழுந்து கையால் தரையடித் தெழுந்து நின்று
செப்பருந் துயரம் †நீடிச் செயிர்த்துமுன் சிவதா என்பார். கரு

மாம். பட்டவர்த்தனமாம் - பட்டத்து யானையாகிய. பண்பு - மேன்மை. வெங்களிறு - கொடிய ஆண்யானை. கோலம் பெருகும் - விழா கொண்டாடுதற்குரிய. முதல் நாளில்.

கஉ. விழவு - அலங்காரம். நின்றோர் - எதிரில் வாராநின்றவர்கள். இரியல் போக - விரைந்து நீங்கிப் போக. எதிர் - (யானையின்) முன்னே. பரிக்காரர் - குத்துக்கோல்காரர். யானையை நல்வழியில் செலுத்துதற்கும் அதனை அடக்குதற்கும் மேலே பாகரிருப்பது போலக் கீழும் பரிகோற்காரர் இருப்பது வழக்கம். இவர்கள் யானைக்கு முன்னே நடந்து அதன் வருகையை எதிரில் வருவோர்க்கு உணர்த்துவார்கள். யானை மாறுபடுங் காலத்து அதனை அடக்குதற்கு ஈட்டி தாங்கலால் இவர்கள் 'பரிகோற்காரர்' என்றழைக்கப்படுகிறார்கள். பரித்தல் - தாங்குதல். உயர்ந்த பெருமை பொருந்திய மலைபோல.

கங. யானை - யானையானது. தூங்கும் - தொங்கும்.

கச. களிறு - யானையை. கால் - மாருதம்; காற்று. சண்டமாருதத்தை வயப்படுத்திக் கொண்டு போவார் போல. சண்டமாருதத்தால் கொண்டுபோகப் பட்டவர்களைப் போலக் களிறு தங்களைக்கொண்டு அகலப்போக என்னலுமொன்று. தொண்டர்-சிவகாமி யாண்டார். பொங்கி - கோபித்து. மால் - மதம்; மயக்கம்.

கரு. அடல்களிறு - கொல்யானை; அடல் - வலிமையுமாம். தப்பினர் விழுந்து - தவறி வீழ்ந்து. செயிர்த்து - மிகக் கோபித்து. சிவதா - நன்மையைச் செய்கிறவனே. சிவகாமியாண்டார் நாடோறுஞ் "சிவதா" "சிவதா" என்று

பா ம்—*பிடித்து முன். †எய்திச்.

வேறு

"களியா னையின்ஈர் உரியாய் சிவதா
எளியார் வலியாம் இறைவா சிவதா
அளியார் அடியார் அறிவே சிவதா
தெளிவார் அமுதே சிவதா சிவதா. கசு

ஆறும் மதியும் அணியுஞ் சடைமேல்
ஏறும் மலரைக் கரிசிந் துவதே
வேறுள் நினைவார் புரம்வெந் தவியச்
சீறுஞ் சிலையாய் சிவதா சிவதா. கள

தஞ்சே சரணம் புகுதுந் தமியோர்
நெஞ்சேய் துயரங் கெடநேர் தொடரும்
மஞ்சே எனவீழ் மறலிக் கிறைநீள்
செஞ்சே வடியாய் சிவதா சிவதா. கஅ

நெடியோன் அறியா நெறியார் அறியும்
படியால் அடிமைப் பணிசெய் தொழுகும்
அடியார் களில்யான் ஆரா அணைவார்
முடியா முதலார்" எனவே மொழிய. கசு

---

உச்சரிப்பது வழக்கம். அவ்வழக்கத்தால் இடுக்கண் நேர்ந்த இவ்வேளையிலும் முறைப்பாடாக அவர் "சிவதா" "சிவதா" என்கிறார்.

கசு. 'மதமயக்கமுடைய யானையினின்றும் உரித்த தோலை யணிந்தவரே! இடையூறு செய்த களியானையை அடக்காயோ' என்பது குறிப்பு. "சிவதா - பூங் கூடையை வாங்கித்தா என்று கோடலுமொன்று"—**பழைய குறிப்புரை.** அளி ஆர் - அன்பு நிறைந்த.

கள. கரி - யானை. சிந்துவதோ. வேறு - மாறுபாட்டை. சீறும் - கோபித் தழிக்கவல்ல.

கஅ. தஞ்சமென்று திருவடியை அடைந்த மார்க்கண்டேயர். நெஞ்சு எய் துயரம் - நெஞ்சிலுற்ற துயரம். மஞ்சே என - மேகம்போல. மறலிக்கு - யம னுக்கு. இறை - சிறிதே. நேர்தொடரும் மறலி.

கசு. திருமால் அறியாத நெறியை முற்றும் உணரும்படியாக. நெறியை ஈங்குத் திருவடி என்றலுமொன்று. 'நெறியார்' எனக் கொண்டு சிவபெருமான் என்னலுமாம். யான் ஆராக - என்னை யாராக மதித்து ; அடியவருள் யான் ஒரு வனாக எண்ணப்படாதவன் என்றபடி.

பா - ம்—*அணைவான் ; அணைவாய்.

### வேறு

என்றவ ருரைத்த மாற்றம் எறிபத்தர் எதிரே வாரா
நின்றவர் கேளா மூளும் நெருப்புயிர்த் தழன்று பொங்கி
*"மன்றவர் அடியார்க் கென்றும் வழிப்பகை களிறே யன்றே
கொன்றது வீழ்ப்பன்" என்று †கொலைமழு எடுத்து வந்தார். உ0

வந்தவர் அழைத்த தொண்டர் தமைக்கண்டு வணங்கி "உம்மை
இந்தவல் இடும்பை செய்த யானைஎங் குற்ற" தென்ன
"எந்தையார் சாத்தும் பூவை என்கையில் பறித்து மண்மேல்
சிந்திமுன் பிழைத்துப் போகா நின்றதித் தெருவே" என்றார். உக

"இங்கது பிழைப்ப தெங்கே இனி"என எரிவாய் சிந்தும்
அங்கையின் மழுவும் தாமும் அனலும்‡வெங் காலும் என்னப்
பொங்கிய விசையிற் சென்று பொருகரி தொடர்ந்து §பற்றும்
செங்கண்வாள் அரியிற் கூடிக் கிடைத்தனர் சீற்றம் மிக்கார். உஉ

"கண்டவர் இதுமுன் பண்ணல் உரித்தஅக் களிறே போலும்
அண்டரும் மண்ணு ளோரும் தடுக்கினும் அடர்த்துச் சிந்தத்
துண்டித்துக் கொல்வேன்" என்று சுடர்மழு வலத்தில் வீசிக்
கொண்டெழுந் தார்த்துச் சென்று காலினால் குலுங்கப் பாய்ந்தார்.

பாய்தலும் மிசைகொண் டுய்க்கும் பாகரைக் கொண்டு சீறிக்
காட ¶தழல் உமிழ்கண் வேழம் திரிந்துமேற் கதுவ அச்சம்
தாய்தலை அன்பின் முன்பு நிற்குமே தகைந்து பாய்ந்து
தோய்தனித் தடக்கை வீழ மழுவினால் துணித்தார் தொண்டர். உச

---

உ0. மாற்றம் - மொழிகளை. எதிரே வாராநின்றவராகிய எறிபத்தர். நெருப்பெனப் பெருமூச்சுவிட்டு. மன்றவர் - நடராசருடைய.

உக. வல் இடும்பை - கொடுந்துன்பத்தை. பிழைத்து - தப்பி.

உஉ. மழுவும் தாமும் முறையே அனலும் காற்றும் போல. பொருகரி - போர்யானையை. வாள் - கூரிய நகங்களுமுடைய. அரியில் - சிங்கம்போல. கிடைத்தனர் - கிட்டினார். சீற்றம் - மிகுசினம்.

உங. அண்ணல் - சிவபெருமான். அடர்த்து - நெருங்கி. வலத்தில் - வலக் கையால்; பலங்கொண்டு; வீரங்கொண்டு என்னலுமாம். யானை குலுங்க.

உச. உய்க்கும் - செலுத்தும். பாகரைத் தன்மீது தாங்கிக்கொண்டு. வேழந்திரிந்து - யானை மாறுபட்டு. மேல் கதுவ - எறிபத்த நாயனார் மேல் பாய்ந்து எதிர்க்க. அச்சம், தாயின் தலையன்பு போன்றதொரு பேரன்பின்

பா - ம்—*மன்றவர்க் கடியார்க். †கோடு. ‡வன். §செல்லும். ¶கனல்.

கையினைத் துணித்த போது கடலெனக் கதறி வீழ்ந்து
மைவரை அனைய வேழம் புரண்டிட மருங்கு வந்த
வெய்யகோல் பாகர் *மூவர் மிசைகொண்டார் இருவ ராக
ஐவரைக் கொன்று நின்றார் அருவரை அனைய தோளார். உ௫

வெட்டுண்டு பட்டு வீழ்ந்தார் ஒழிய மற் றுள்ளார் ஓடி
மட்டவிழ் தொங்கல் மன்னன் வாயிற்கா வலரை நோக்கிப்
"பட்டவர்த் தனமும் பட்டுப் பாகரும் பட்டார் என்று
முட்டநீர் கடிது புக்கு முதல்வனுக் குரையும்" என்றார். உ௬

மற்றவர் மொழிந்த மாற்றம் மணிக்கடை காப்போர் கேளாக்
கொற்றவன் தன்பால் எய்திக் குரைகழல் பணிந்து †நின்று
"பற்றலர் இலாதாய்! நின்பொற் பட்டமால் யானை வீழச்
செற்றனர் சிலராம் என்று செப்பினார் பாகர்" என்றார். உ௭

வளவனும் கேட்ட போதில் மாறின்றி மண்காக் கின்ற
கிளர்மணித் தோள்அ லங்கல் சுரும்பினம் கிளர்ந்து பொங்க
அளவில்சீற் றத்தி னாலே "யார்செய்தார்" என்றுங் கேளான்
இளஅரி ஏறு போல ‡எழில்மணி வாயில் நீங்க. உ௮

தந்திரத் தலைவர் தாமுந் தலைவன்றன் நிலைமை கண்டு
வந்துறச் சேனை தன்னை வல்விரைந் தெழமுன் சாற்ற
அந்தரத் தகல மெல்லாம் அணிதுகிற் பதாகை §தூர்ப்ப
எந்திரத் தேரும் மாவும் இடைஇடை களிறு மாகி. உ௯

முன்னர் நிற்குமோ. தகைந்து - தொண்டர் யானையை மறித்து. நிலத்திற் றோயும் தனித்த பருத்த துதிக்கை.

உ௫. மைவரை அனைய - கரியமலை போன்ற.

உ௬. மட்டு அவிழ் தொங்கல் - தேன்சிந்தும் மலர் மாலையணிந்த. பட்டு - இறந்து. முட்ட - சேர.

உ௭. குரைகழல் - ஒலிக்கும் வீரக்கழலை யணிந்த பாதங்களை. பற்றலர் - பகைவர்கள். செற்றனர் - கொன்றனர்.

உ௮. வளவனும் - சோழமன்னனும். மாறு - பகை. கிளர் - போரைநாடி ஓங்கும். அலங்கல் - மாலையில். சுரும்பினம் - வண்டுக் கூட்டங்கள். கிளர்ந்து - எழுந்து. அரி ஏறு - சிங்க ஏறு.

உ௯. தந்திரத் தலைவர் தாமும் - சேனைத் தலைவர்களும். பறைசாற்றுவிக்க. அந்தரத்து அகலம் எல்லாம் - ஆகாயப் பரப்பு முழுமையும். பதாகை - கொடிகள். எந்திரத்தையுடைய தேர்களும். மாவும் - குதிரைகளும்.

பா - ம்—*வேறுள்ளார். †போற்றி. ‡எரி. §போர்ப்ப.

வில்லொடு வேல்வாள் தண்டு பிண்டிபா லங்கள் மிக்க
வல்லெழு முசலம் நேமி மழுக்கழுக் கடைமுன் னான
பல்படைக் கலன்கள் பற்றிப் பைங்கழல் வரிந்த *வன்கண்
எல்லையில் படைஞர் கொட்புற் றெழுந்தனர் எங்கும் எங்கும். ௩0

சங்கொடு தாரை காளம் தழங்கொலி முழங்கு பேரி
வெங்குரல் பம்பை கண்டை வியன்துடி திமிலை தட்டி
பொங்கொலிச் சின்னம் எல்லாம் பொருபடை மிடைந்த பொற்பின்
மங்குல்வான் கிளர்ச்சி நாண மருங்கெழுந் தியம்பி மல்க. ௩க

†தூரியத் துவைப்பும் முட்டுஞ் சுடர்ப்படை ஒலியும் மாவின்
தார்மணி ‡இசைப்பும் வேழ முழக்கமும் தடந்தேர்ச் §சீறும்
வீரர்தஞ் செருக்கின் ஆர்ப்பும் மிக்கெழுந் தொன்றும் எல்லைக்
காருடன் கடைநாட் பொங்கும் கடலெனக் கலித்த அன்றே. ௩உ

பண்ணுறும் உறுப்பு நான்கில் பரந்தெழு சேனை யெல்லாம்
மண்ணிடை இறுகால் மேன்மேல் வந்தெழுந் ததுபோல் தோன்றத்
தண்ணளிக் கவிகை மன்னன் தானைபின் தொடரத் தானோர்
அண்ணலம் புரவி மேற்கொண் டரசமா வீதி சென்றான். ௩௩

கடுவிசை முடுகிப் ¶போகிக் களிற்றொடும் பாகர் வீழ்ந்த
படுகளம் குறுகச் சென்றான் பகைப்புலத் தவரைக் காணான்

௩0. பிண்டிபாலம் - 'தலையிலே பீலி கட்டப்பட்டு எறிவதோர் படை.' முசலம் - இருப்புலக்கைகளும். நேமி - சக்கரங்களும். கழுக்கடை - எறியீட்டிகளும்; சூலங்களும் எனினுமாம். வீரக்கழலை வரித்துக்கட்டிய. கொட்புற்று - சுழன்று பரந்து; இடசாரி வலசாரியாகச் சுழன்று என்னலுமாம்.

௩க. தழங்கு ஒலி - அதிக ஒலி. துடி - உடுக்கை. கண்டை - ஒருவகைப் பறை. திமிலை - சல்லரி; ஒருவிதப் பறை. தட்டி - கரடிப் பறை. போர் புரியும் சேனைகள் நெருங்கிய சிறப்பால். மேக ஒலிக்கிளர்ச்சி. மல்க - நிரம்ப.

௩உ. தூரியத் துவைப்பும் - வாத்திய ஒலியும். மாவின் தார் மணி இசைப்பும் - குதிரைகளின் கழுத்திலணிந்த மாலை மணியின் ஒலியும். சீறும் - ஒலியும். ஆர்ப்பும் - ஒலியும். ஒன்றும் எல்லை ஒன்றுகும்பொழுது. எல்லைக்காரெனக் கோடலுமாம். காருடன் - ஊழிக்கால முகிலுடன்.

௩௩. அலங்கரித்து ஒழுங்கு செய்யப்பட்ட 'ரதகஜதுரகபதாதி' என்னும் உறுப்புகள் நான்காக. இறுகால் - ஊழிக்காற்று. குளிர்ந்த அருளமைந்த குடையையுடைய மன்னன். தானை பின் - சேனை பின்னே. பெருமையும் அழகும் வாய்ந்த புரவி.

௩௪. பகைப்புலத்தவரை - பகைவர்களை. அடுகளிறு - கொல்யானை. எறிபத்தர் அடுகளிறுபோல நின்றாராதலின், அவர்தங் கரங்கள் இரண்டும் துதிக்கை

பா - ம்—*வெங்கண். †தூரியந் துவைப்ப. ‡அசைப்பும். §சீரும். ¶பொங்கி.

விடுசுடர் மழுவொன் றேந்தி வேறிரு தடக்கைத் தாய
அடுகளி றென்ன நின்ற அன்பரை முன்பு கண்டான். ௩௪

பொன்தவழ் அருவிக் குன்றம் எனப்புரள் களிற்றின் முன்பு
நின்றவர் மன்று ளென்றும் நிருத்தமே பயிலும் வெள்ளிக்
குன்றவர் அடியா ரானார் கொன்றவர் இவரென் றோரான்
"வென்றவர் யாவர்" என்றான் வேடிபட முழங்குஞ் சொல்லான். ௩௫

அரசன்ஆங் கருளிச் செய்ய அருகுசென் றணைந்து பாகர்
"விரைசெய்தார் மாலை யோய்!நின் விறற்களிற் றெதிரே நிற்கும்
திரைசெய்நீர் உலகின் மன்னர் யாருளார் தீங்கு செய்தார்
பரசுமுன் கொண்டு நின்ற இவர்"எனப் பணிந்து சொன்னார். ௩௬

"குழையணி காதி னானுக் கன்பராங் குணத்தின் மிக்கார்
பிழைபடின் அன்றிக் கொல்லார் பிழைத்ததுண்" டென்றுட் கொண்டு
மழைமத யானை சேனை வரவினை மாற்றி மற்ற
உழைவயப் புரவி மேல்நின் றிழிந்தனன் உலக மன்னன். ௩௭

"மைத்தடங் குன்று போலும் மதக்களிற் றெதிரே இந்த
மெய்த்தவர் சென்ற போது வேறொன்றும் புகுதா விட்ட
அத்தவ முடையேன் ஆனேன் அம்பல வாணர் அன்பர்
இத்தனை முனியக் கெட்டேன் என்கொலோ பிழை"என் றஞ்சி. ௩௮

---

களாக இங்கே சொல்லப்பட்டன. 'வேறு' - துண்டிக்கப்பெற்ற யானைத் துதிக்கையை யல்லாத வேறு. எறிபத்தர் சிவநேயராதலால் அவர் பகைவர் என்ற எண்ணமே மன்னன்பால் தோன்றவில்லை.

௩௫. செம் பொற்பொடிகள் தவழும் அருவியையுடைய குன்றுபோல. அருவி இரத்தத்தைக் குறிப்பது. மன்றுள்...குன்றவர் - சிவபெருமான். ஓரான் - நினையாதவனாய். யானையைக் கொன்றவர் யாவர்.

௩௬. விரை - வாசனை. தார் - பூமாலை. மாலை - மணிமாலை. விறல் - வெற்றியுடைய. திரை செய்நீர் - அலைகடல் சூழ்ந்த.

௩௭. மழைபோல் மதத்தைச் சொரியும். மாற்றி - நிறுத்தி. வயஉழை புரவி - வலிமைக்கு அல்லது வெற்றிக்கு இடமாகவுள்ள குதிரை. நாயனாரைச் சிறப்பிக்க "உலக மன்னன்" என்றார்.

௩௮. அபாயத்தை "வேறொன்று" என்றார். மெய்ப்பொருள் நாயனார் புராணம் : ௧௫ - ம் பாட்டையும், குறிப்பையும் பார்க்க. அம்பலவாணர் அன்பர் - எறிபத்தநாயனார். இத்தனை முனிய - இவ்வளவு கோபிக்க. கெட்டேன் - அவலத்தை யுணர்த்துவது ; துயரின்போது வெளிவருவது ; ஐயோ ; இரக்கக் குறிப்பு.

செறிந்தவர் தம்மை நீக்கி அன்பர்முன் தொழுது சென்"நீ
தறிந்திலேன் அடியேன் அங்குக் கேட்டதொன் றதுதான் நிற்க
மறிந்தஇக் களிற்றின் குற்றம் பாகரோ டிதனை மாள
எறிந்ததே போது மோதான் அருள்செயும்" என்று நின்றார். ௩௯

மன்னவன் தன்னை நோக்கி வானவர் ஈசர் நேசர்
"சென்னி!இத் துங்க வேழம் சிவகாமி யாண்டார் கொய்து
பன்னகா பரணர்ச் சாத்தக் கொடுவரும் பள்ளித் தாமம்
தன்னைமுன் பறித்துச் சிந்தத் தரைப்படத் துணித்து வீழ்த்தேன்."

"மாதங்கம் தீங்கு செய்ய வருபரிக் காரர் தாமும்
மீதங்குக் கடவு வாரும் விலக்கிடா தொழிந்து பட்டார்
ஈதிங்கு நிகழ்ந்த" தென்றார் எறிபத்தர் என்ன அஞ்சிப்
பாதங்கள் முறையால் தாழ்ந்து பருவரைத் தடந்தோள் மன்னன்.

"அங்கணர் அடியார் தம்மைச் செய்தஇவ் அபரா தத்துக்
*கிங்கிது தன்றாற் போதா தென்னையுங் கொல்ல வேண்டும்
மங்கல மழுவால் கொல்கை வழக்குமன் றிதுவாம்" என்று
செங்கையால் உடைவாள் வாங்கிக் கொடுத்தனர் தீர்வு நேர்வார். ௪௨

வெந்தழற் சுடர்வாள் நீட்டும் வேந்தனை நோக்கிக் "கெட்டேன்
அந்தமில் புகழான் அன்புக் களவின்மை கண்டேன்" என்று
தந்தவாள் வாங்க மாட்டார் தன்னைத்தான் துறக்கும் என்று
சிந்தையால் உணர்வுற் றஞ்சி வாங்கினார் †தீங்கு தீர்ப்பார். ௪௩

வாங்கிய தொண்டர் முன்பு மன்னனார் தொழுது நின்றே
"ஈங்கெனை வாளி னாற்கொன் றென்பிழை தீர்க்க வேண்டி

---

௩௯. செறிந்தவர் தம்மை - நெருங்கிச் சூழ்ந்து நின்றவர்களை. மறிந்த - எதிர்த்த. குற்றம் - குற்றத்திற்காக.

௪0. வானவர் ஈசர் நேசர் - சிவநேசராகிய எறிபத்தர். சென்னி - சோழனே. துங்கவேழம் - உயர்ந்த யானை. பன்னகாபரணர் - பாம்பை அணிகலனாகப் பூண்டுள்ள சிவபெருமானுக்கு.

௪௧. மாதங்கம் - யானை. கடவுவாரும் - செலுத்தும் பாகர்களும். விலக்காமையால் அவர்களும் வெட்டுப்பட்டு உயிர் துறந்தார்கள். சொன்னவர் எறிபத்தர் என்று தெளிந்து.

௪௨. அடியார் தமக்கு. இது ஆம் - இவ்வாள் தக்கது. தீர்வு நேர்வார் - கழிவு அல்லது பிராயச் சித்தம் விரும்புகிறவராகிய மன்னர்.

௪௩. கெட்டேன் - ஐயோ. தீங்கு - தன்னைத்தான் துறத்தலை ; தன்னுயிரைத் தானே வாளால் போக்கிக்கொள்ளுதலை.

பா - ம்—*இங்கிவை தம்மால் போதா. †தீர்வு.

ஓங்கிய உதவி செய்யப் பெற்றனன் இவர்பால்'' என்றே
ஆங்கவர் உவப்பக் கண்ட எறிபத்தர் அதனுக் கஞ்சி. சச

"வன்பெருங் களிறு பாகர் மடியவும் உடைவா ளைத்தந்
தென்பெரும் பிழையி னாலே என்னையுங் கொல்லும் என்னும்
அன்பனார் †தமக்குத் தீங்கு நினைந்தனன்'' என்று கொண்டு
"முன்பென துயிர்செ குத்து முடிப்பதே முடி''வென் றெண்ணி. சரு

புரிந்தவர் கொடுத்த வாளை அன்பர்தங் கழுத்தில் பூட்டி
அரிந்திட லுற்ற போதில் அரசனும் "பெரியோர் செய்கை
இருந்தவா றிதுஎன்! கெட்டேன்!'' என்றெதிர் கடிதிற் சென்று
பெருந்தடந் தோளால் கூடிப் பிடித்தனன் வாளுங் கையும். சசு

வளவனார் விடாது பற்ற மாதவர் ‡வருந்து கின்ற
அளவிலாப் பரிவில் வந்த இடுக்கணை அகற்ற வேண்டிக்
களமணி களத்துச் செய்ய கண்ணுதல் அருளால் வாக்குக்
கிளரொளி விசும்பின் மேல்வந் தெழுந்தது பலருங் கேட்ப. சஎ

"தொழுந்தகை அன்பின் மிக்கீர்! தொண்டினை மண்மேல் காட்டச்
செழுந்திரு மலரை இன்று சினக்கரி சிந்தத் திங்கட்
கொழுந்தணி வேணிக் கூத்தர் அருளினால் கூடிற்'' றென்றங்
கெழுந்தது பாக ரோடும் யானையும் எழுந்த தன்றே. சஅ

ஈரவே பூட்டும் §வாளை விட்டெறி பத்தர் தாமும்
நேரியர் பெருமான் தாள்மேல் விழுந்தனர் நிருபர் கோனும்
போர்வடி வாளைப் போக எறிந்தவர் கழல்கள் போற்றிப்
பார்மிசைப் பணிந்தார் விண்ணோர் பனிமலர் மாரி தூர்த்தார். சகூ

இருவரும் எழுந்து வானில் எழுந்தபே ரொலியைப் போற்ற
அருமறைப் பொருளா யுள்ளார் அணிகொள்பூங் கூடை தன்னில்

சரு. அன்பனார் - மன்னவர். உயிர்செகுத்து - உயிரைப்போக்கி.

சசு. புரிந்து அவர் - விரும்பி மன்னர். அன்பர் - எறிபத்தர்.

சஎ. வளவனார் - சோழர். பரிவில் - அன்பால். நீலகண்டத்தையும் சிவந்த நெற்றிக் கண்ணையும் உடைய சிவபெருமான். வாக்கு - அசரீரி.

சஅ. யாவரும் தொழுந்தகைமை வாய்ந்த. திங்கள் கொழுந்து - பிறை. எழுந்ததும்.

சகூ. ஈரவே - அறுக்கவே. நேரியர் - சோழர். நிருபர் கோனும் - புகழ்ச் சோழமன்னரும். அவர் - எறிபத்த நாயனார்தம்.

**பா - ம்**—*உரைப்பக். †தம்மைத். ‡வருந்தி நிற்ப. §வாள்விட்டெறிபத்தர் தாமும்அந்த.

மருவிய பள்ளித் தாமம் நிறைந்திட அருள மற்றத்
திருவருள் கண்டு வாழ்ந்து சிவகாமி யாரும் நின்றார். ௫௦

மட்டவிழ் அலங்கல் வென்றி மன்னவர் பெருமான் முன்னர்
உட்டரு களிப்பி னோடும் உறங்கிய தெழுந்த தொத்து
முட்டவெங் கடங்கள் பாய்ந்து முகிலென முழங்கிப் பொங்கும்
பட்டவர்த் தனத்தைக் கொண்டு பாகரும் அணைய வந்தார். ௫௧

ஆனசீர்த் தொண்டர் கும்பிட் "டடியனேன் களிப்ப இந்த
மானவெங் †களிற்றில் ஏறி மகிழ்ந்தெழுந் தருளும்" என்ன
மேன்மையப் பணிமேற் கொண்டு வணங்கிவெண் குடையின் நீழல்
யானைமேற் கொண்டு சென்றார் இவுளிமேற் கொண்டு வந்தார். ௫௨

அந்நிலை எழுந்த சேனை ஆர்கலி எழும் ஒன்றாய்
மன்னிய ஒலியின் ஆர்ப்ப மண்ணெலாம் மகிழ்ந்து ‡வாழ்த்தப்
பொன்னெடும் பொதுவில் ஆடல் நீடிய புனிதர் பொற்றாள்
சென்னியில் கொண்டு சென்னி திருவளர் கோயில் புக்கான். ௫௩

தம்பிரான் பணிமேற் கொண்டு சிவகாமி யாருஞ் சார
எம்பிரான் அன்ப ரான எறிபத்தர் தாமும் "என்னே!
அம்பலம் நிறைந்தார் தொண்டர் அறிவதற் கரியார்" என்று
செம்பியன் பெருமை உன்னித் திருப்பணி நோக்கிச் சென்றார். ௫௪

மற்றவர் இனைய வான வன்பெருந் தொண்டு மண்மேல்
உற்றிடத் தடியார் முன்சென் றுதவியே நாளும் நாளும்

---

௫௦. அருமறைப் பொருளாயுள்ளார் - சிவபெருமான். வாழ்ந்து - புத்துணர்வு பெற்று.

௫௧. மட்டவிழ் அலங்கல் - தேனொழுகும் மலர்மாலை யணிந்த. முட்டவெம் கடங்கள் பாய்ந்து - நானுபக்கங்களிலும் வெப்பமாகிய மதங்கள் பாய்ந்து.

௫௨. ஆனசீர் - பொருந்திய சிறப்பினையுடைய. மானம்-வலிமையுடைய. இவுளிமேல் கொண்டுவந்தார் - குதிரை மீது வந்த புகழ்ச்சோழர்.

௫௩. ஆர்கலி - சமுத்திரம். பொன்னெடும் பொதுவில் ஆடல் நீடிய புனிதர் - கனக சபையில் தாண்டவம் புரியும் நடராசர்.

௫௪. தம்பிரான் - சிவபிரான். என்னே - என்ன ஆச்சரியம்! சிதாகாசத்தில் நிறைந்துள்ள நடராசப் பெருமான். தொண்டர் (புகழ்ச்சோழநாயனார்). செம்பியன் - புகழ்ச்சோழநாயனாரின். நோக்கி - நினைந்து.

பா - ம்—*உறங்கிமீ. †களிற்றை எறிமனமகிழ்ந். ‡பொங்க.

நற்றவக் கொள்கை தாங்கி நலமிகு கயிலை வெற்பில்
*கொற்றவர் கணத்தின் முன்னுங் கோமுதல் தலைமை பெற்றார். ௫௫

ஆளுடைத் தொண்டர் செய்த ஆண்மையும் தம்மைக் கொல்ல
வாளினைக் கொடுத்து நின்ற வளவனார் பெருமை தானும்
நாளுமற் றவர்க்கு நல்கும் நம்பர்தாம் அளக்கில் அன்றி
நீளும்இத் தொண்டின் நீர்மை நினைக்கிலார் அளக்க வல்லார். ௫௬

தேனாருந் தண்பூங் கொன்றைச் செஞ்சடை யவர்பொற் றாளில்
ஆனாத காதல் அன்பர் எறிபத்தர் அடிகள் †சூடி
வானாளுந் தேவர் போற்றும் மன்றுளார் நீறு போற்றும்
ஏனாதி நாதர் செய்த ‡திருப்பணி இயம்ப லுற்றேன். ௫௭

ஆ_ திருவிருத்தம் - ௬0௭.

---

கருவூர், சோழமன்னர்களுக் குரிய தலைநகரங்கள் ஐந்தனுள் ஒன்று. அது கொங்கு நாட்டி லிருப்பது. அங்கே ஆனிலை என்னும் திருக்கோயில் ஒன்றிருக்கிறது. அவ்வானிலையில் எழுந்தருளியுள்ள சிவபெருமானை வழிபட்டுச் சிவனடியார்களுக்குத் தீங்கிழைப்பவர்களை எறிந்து வீழ்த்த மழுப்படை தாங்கி நின்றவர் ஒருவர் இருந்தார். அவர், **எறிபத்த நாயனார்** என்னும் பெயருடையவர்.

அவர் காலத்தில் சிவகாமி யாண்டார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் சிவனடியார்; ஆனிலையடிகளுக்குப் பூத்தொண்டு செய்பவர். ஒருநாள், அதாவது நவமி முன்னாளில், சிவகாமியாண்டார் வழக்கம்போல் பூக்களால் கூடையை நிரப்பி, அக்கூடையைத் தண்டில் தூங்கச்செய்து, திருக்கோயில் நோக்கிச் செல்வாரானார். அவ்வேளையில் அவ்வழியே புகழ்ச்சோழ மன்னவரின் பட்டவர்த்தன யானை காவிரியில் மூழ்கி, பாகர்கள் மேலேயிருப்ப, குத்துக்கோற்காரர்கள் முன்னேஓட, விரைந்து நடந்துவந்தது. அந்தயானை சிவகாமியாண்டாரை நெருங்கித் தண்டிலிருந்த பூங்கூடையைப்பற்றி மலர்களைச் சிந்தியது. அதைக் கண்ட பாகர்கள், யானையை வாயுவேகமாக நடாத்திச் சென்றார்கள். சிவகாமியாண்டார் சினந்து வேழத்தைத் தண்டினால் புடைக்க விரைந்து நடந்தார். யானையின் கதிநடை எங்கே! சிவகாமியாண்டார் மூப்புநடை எங்கே! மூப்பால் சிவகாமியாண்டார் கால்தவறிக் கீழேவிழுந்தார். விழுந்தவர் தரையைக் கையால் மோதி எழுந்து நின்று, "ஆனிலை யப்பா! நின் முடிமீது ஏறும் மலரை ஒரு யானையா மண்ணிற் சிந்துவது? சிவதா சிவதா" என்று ஓலமிடலானார். அவ்வோலங் கேட்டுக்கொண்டு அவ்வழியே வந்த எறிபத்த நாயனார், சிவகாமியாண்டாரை யடைந்து பணிந்து, "அக்கொடிய யானை எங்குற்றது"? என்று கேட்டார். சிவகாமியாண்டார் "அந்த யானை இவ்வீதி வழியே போயிருக்கிறது" என்றார். என்றதும், எறிபத்த நாயனார் காற்றெனப் பறந்து, யானையைக்கிட்டி, அதன்மீது பாய்ந்தார். யானையும் எறிபத்தர்மீது பாய்ந்தது. நாயனார் சிறிதும்

---

௫௫. கொற்றவர் - சிவபெருமானது. முன்னிருக்கும் தலைமைக்குள் முதற்றலைமை பெற்றார். கோ - தலைமை.

௫௬. நல்கும் - அருள் புரியும். நம்பர் - சிவபெருமான்.

௫௭. ஆனாத - குறையாத.

பா - ம்—*கொற்றவக். †போற்றி. ‡திருத்தொழில்.

அஞ்சாது யானையை எதிர்த்துத் தமது மழுவினால் அதன் துதிக்கையைத் துணித்தார். யானை கதறிக்கொண்டு கருமலைபோல் கீழே விழுந்தது. பின்னை குத்துக்கோற்காரர் மூவரையும், பாகர் இருவரையும் நாயனார் வெட்டி வீழ்த்தினார். மற்றவர்கள் விரைந்து ஓடி, "பட்டவர்த்தனத்தைச் சிலர் கொன்றனர்" என்று புகழ்ச்சோழ மன்னர்க்கு அறிவித்தார்கள்.

சோழர் பெருமான், வடவைபோற் சீறி, ஒரு குதிரைமீ திவர்ந்து புறப்பட்டார். நால்வகைச் சேனைகளும், பிறவும் அவரைச் சூழ்ந்து சென்றன. மன்னர் பெருமான், யானை இறந்துபட்ட இடத்தைச்சேர்ந்தார். யானையைக்கொன்றவர் எறிபத்தர் என்று கொள்ளாதவராய் "யானையைக் கொன்றவர்யார்?" என்று கேட்டார். அங்கிருந்த பாகர்கள் "மழுவைத் தாங்கி நிற்கும் இவரே நமது யானையைக் கொன்றவர்" என்றார்கள். புகழ்ச்சோழநாயனார் திடுக்கிட்டு, "இவர் சிவனடியார்; குணத்திற் சிறந்தவர்; யானை பிழைசெய்திருத்தல் வேண்டும்; இல்லையேல் இவர் அதைக் கொன்றிரார்" என்று எண்ணிச் சேனைகளையெல்லாம் நிறுத்திக்குதிரையினின்றும் இறங்கி,"இப்பெரியவர் யானைக்கெதிரே சென்றபோது வேறொன்றும் நிகழாதிருக்க, யான் முன்னே என்ன தவஞ் செய்தனனோ! அடியவர் இவ்வளவு முனியக் கெட்டேன்! நேர்ந்தபிழை என்னோ?" என்று அஞ்சி, நாயனார்முன்னே சென்று தொழுது, "யானையைக் கொன்றவர் அடியவர் என்று யான் அறியேன்; யான் கேட்டதொன்று; இந்த யானை செய்த பிழைக்கு, இதனைப் பாகரோடும் மாய்த்தது போதுமா?" என்று கேட்டார். நாயனார், நிகழ்ந்ததைக் கூறினார். சோழர் பெருமான், எறிபத்த நாயனாரை வணங்கிச் "சிவனடியாருக்கு விளைத்த தீங்குக்கு யானையையும் பாகர்களையுங் கொன்றது போதாது; என்னையுங் கொல்லுதல் வேண்டும்; அடிகளின் மங்கல மழுவால் என்னைக் கொல்லுதல் முறைமையன்று" என்று மொழிந்து, தமது உடைவாளை எடுத்து, "இதனால் என்னைக் கொன்றருள்க" என்று நீட்டினார். எறிபத்தர் "அந்தோ! இவர் அன்பர்; இவர்தம் அன்பிற்கோரளவில்லை. வாளை வாங்காவிடின் தற்கொலை செய்துகொள்வர்" என்று கருதி வாளை வாங்கினார். புகழ்ச்சோழர் "ஆ! இப்பெரியவர் அடியேனைக் கொன்று என் பிழைதீர்க்கும் பேறு பெற்றேன்" என்று மனமகிழ்ந்தார். எறிபத்தர் "இத்தகை அன்பருக்கோ தீங்கு நினைந்தேன்! யான் பாவி! பாவி! முதலிலே என்னுயிரை மாய்த்துக்கொள்வதே முறை" என்று உறுதிகொண்டு, வாளைக் கழுத்திலிட்டு அரியப் புகுந்தார். அக்காட்சிகண்ட அரசர் பெருமான், "கெட்டேன்! கெட்டேன்!!" என்று வாளையுங் கையையும் பிடித்தார். "அரசர் கையைப் பற்றினரே" என்று அன்பர் வருந்தா நிற்கிறார். இஃது அன்பின் பெருக்கால் நேர்ந்த இடுக்கண். இவ்விடுக்கணை மாற்ற "உங்கள் திருத் தொண்டின் மாண்பை உலகத்தவர்க்குக் காட்டவேண்டிச் சிவபெருமான் திருவருளால் இவையாவும் நிகழ்ந்தன" என்று ஓர் அசரீரி வானில் எழுந்தது. எழுந்ததும், யானை, பாகர்களோடு உயிர்பெற்றெழுந்தது. எறிபத்த நாயனார் வாளைவிடுத்துப் புகழ்ச்சோழ நாயனாரை வணங்கினார். புகழ்ச்சோழர் வாளை எறிந்து எறிபத்தரைப் பணிந்தார். இருவரும் திருவருளை வழுத்தினார். திருவருளால் கூடையில் பூக்கள் நிறைந்தன. சிவகாமியாண்டார் ஆனந்தவாரிதியிற் றிளைத்தனர். பட்டவர்த்தனத்தை அழைத்துக்கொண்டு பாகர்கள் அரசர் முன்னே வந்தார்கள். எறிபத்த நாயனார் வேண்டுகோளுக் கிணங்கிப் புகழ்ச்சோழ நாயனார் யானைமீ தெழுந்தருளிச் சேனைகள் புடை சூழ்ந்து செல்ல அரமனையை அடைந்தார். சிவகாமியாண்டார் பூங்கூடையைத் தண்டிற்றூங்கித் தந் தொண்டின்மேற் சென்றார். எறிபத்த நாயனார் தாம் ஏற்ற திருத்தொண்டைக் குறைவறச்செய்து வாழ்ந்து, திருக்கயிலையில் சிவகணங்களுக்குத் தலைவரானார்.

# ஏனாதிநாத நாயனார் புராணம்



புண்டரிகம் பொன்வரைமேல் ஏற்றிப் புவியளிக்கும்
தண்டரள வெண்கவிகைத் தார்வளவர் சோணாட்டில்
வண்டறைபூஞ் சோலை வயன்மருதத் தண்பணைசூழ்ந்
தெண்டிசையும் ஏறிய*சீர் எயின்மூதூர் எயினனூர்.

வேழக் கரும்பினொடு மென்கரும்பு தண்வயலில்
தாழக் கதிர்ச்சாலி தாமோங்குந் †தன்மையதாய்
வாழக் குடிதழைத்து மன்னியஅப் பொற்பதியில்
ஈழக் குலச்‡சான்றார் ஏனாதி நாதனார். ௨

---

௧. புண்டரிகம் - புலிக்கொடியை. பொன்வரை - இமயமலை; **திருமலைச் சிறப்பு**: பாட்டு - ௧ குறிப்புப் பார்க்க. குளிர்ந்த முத்து வெண்குடை. தார் - ஆத்திமாலை. வளவர்-சோழர். வயல்கள் நிறைந்த மருதமாகிய குளிர்ந்த இடஞ் சூழ்ந்து. எயில் - மதில்சூழ்ந்த.

௨. வேழக் கரும்பினொடு-நாணற் கரும்போடு. இங்கே 'ஏனாதி' என்னும் பெயர் இயற் பெயரோ பட்டப்பெயரோ என்பது ஐயம். 'ஏனாதி' என்பது ஒரு பட்டப் பெயர்; வேந்தனால் கொடுக்கப்படும் பட்டப் பெயர்களுள் அஃதும் ஒன்று. அஃது அரச பதத்துக்கு அடுத்ததாய், அமைச்ச பதத்துக்கு மேலதாயிருப்பது என்று சொல்லப்படுகிறது. ஏனாதியைத் தளவீரருக்கு மேலதிகாரி என்பர் நீலகேசி உரையாசிரியர். நெற்றிக்கு ஏனாதிப்பட்டமும், விரலுக்கு ஏனாதி மோதிரமும் அரசனால் பேரவையில் அணியப்படுவது மரபு. "போர்க்கட லாற்றும் புரவித்தேர்ப் பல்படைக்குக், கார்க்கடல்பெற்ற கரையன்றோ—போர்க்கெல்லாம், தானாதி யாகிய தார்வேந்தர் மோதிரஞ்சேர், ஏனாதிப் பட்டத் திவன்"—**மேற்கோள்**: தொல். புறத். சூ, அ. "சோழிக ஏனாதி"—**மணிமேகலை**: ௨௨ சிறைசெய் ௨௦௫. "ஏனாதிப்பட்டங் கட்டினான் ஒருவன்"—**கலித்தொகை**: ௮௧. உரை. "ஏனாதி திருக்கிள்ளி", "மலையமான் சோழிய ஏனாதி திருக்கண்ணன்"—**புறநானூறு**: ௧௬௭, ௧௭௪-உரை. "ஏனாதி மோதிரஞ்செறிந்த சேனாபதி" "......ஏனாதி மோதிரத்தையும் செம்பொனாற்செய்த பட்டத்தையும்......அருளி"—**சிந்தாமணி**: 2167, 2569 உரை. "பெரியபுராணத்துக் கூறப்பட்டுள்ள திருத்தொண்டர்களுள் ஒருவர்க்கு ஏனாதி நாயனார் என்ற திருநாமம் இதுபற்றியே வந்த குடிப்பெயர் போலும்" என்பர் **டாக்டர் சாமிநாத ஐயர் (மணிமேகலை**: ௨௨. ௨௦௫. குறிப்புரை).

**பா - ம்**—*சீர்மூதூர் எயினனூர். †தன்மையவாய். ‡சான்றோர்.

தொன்மைத் திருநீற்றுத் தொண்டின் வழிபாட்டின்
நன்மைக்கண் நின்ற நலம்என்றுங் குன்றுதார்
மன்னர்க்கு வென்றி வடிவாட் படைபயிற்றுந்
தன்மைத் தொழில்விஞ்சை யிற்றலைமை சார்ந்துள்ளார். ௩

வாளின் படைபயிற்றி வந்த வளமெல்லாம்
நாளும் பெருவிருப்பால் நண்ணுங் கடப்பாட்டில்
தாளும் தடமுடியும் காணுதார் தம்மையுந்தொண்
டாளும் பெருமான் அடித்தொண்டர்க் காக்குவார். ௪

நள்ளார் களும்போற்றும் நன்மைத் துறையின்கண்
எள்ளாத செய்கை இயல்பின் ஒழுகுநாள்
தள்ளாத தங்கள் தொழிலுரிமைத் தாயத்தின்
உள்ளான் அதிசூரன் என்பான் உளனுனன். ௫

மற்றவனுங் கொற்ற வடிவாட் படைத்தொழில்கள்
கற்றவர்கள் தன்னிற் கடந்துள்ளார் இல்லையெனும்
பெற்றிமையான் மாநிலத்து மிக்க பெருமிதம்வந்
துற்றுலகில் தன்னையே சால மதித்துள்ளான். ௬

தானுள் விருத்திகெடத் தங்கள்குலத் தாயத்தின்
ஆனுத செய்தொழிலாம் ஆசிரியத் தன்மைவளம்
மேனுளுந் தான்குறைந்து மற்றவர்க்கே மேம்படலால்
ஏனுதி நாதர்திறத் தேலா இகல்புரிந்தான். ௭

---

௩. விஞ்சையில் - வித்தையில்.

௪. நண்ணும் கடப்பாட்டால் - உண்டாகும் கடமையால்; "உதித்த கொடைக்குண மிகுதியால்" என்பர் ஆறுமுகத் தம்பிரானுர். தடம் - பெருமை வாய்ந்த. காணுதார் தம்மையும் - பிரம விஷ்ணுக்களையும். பெருமான் - சிவ பெருமானின்.

௫. நள்ளார்களும் - பகைவர்களும். எள்ளாத - இகழாத. தள்ளக்கூடாத. தாயத்தின் - பங்காளி மரபின்.

௬. கொற்ற - வெற்றியுடைய. தன்னினும் மேம்பட்டவர்களில்லை என்னுந் தன்மையால். பெருமிதம் - இறுமாப்பு. சால - அதிகமாக.

௭. தான்ஆள் விருத்தி கெட - தனது சீவனுேபாயங்கெட. ஆனுத - குன்றுத. மேல் நாளும் - நாளுக்கு நாள். அவர்க்கே - ஏனுதிநாயனுர்க்கே. நாயனு ரிடத்துப் பொருந்தாத (நீதியில்லாத) பகைமை கொண்டான்.

பா - ம்—*அரிசூரன்.

கதிரோன் எழமழுங்கிக் கால்சாயுங் காலை
மதிபோல் அழிந்துபொறா மற்றவனுஞ் சுற்றட
பதியோ ருடன்கூடப் பண்ணியலார் மேற்சென்
றெதிர்போர் விளைப்பதற்கே †எண்ணி யதுதுணிந்தான். அ

தோள்கொண்ட வல்லாண்மைச் சுற்றத் தொடுந்துணையாங்
கோள்கொண்ட போர்மள்ளர் கூட்டத் தொடுஞ்சென்று
வாள்கொண்ட தாயம் வலியாரே கொள்வதென
மூள்கின்ற செற்றத்தான் முன்கடையில் நின்றழைத்தான். கூ

வெங்கண் புலிகிடந்த வெம்முழையில் சென்றழைக்கும்
பைங்கண் குறுநரியே போல்வான் படைகொண்டு
பொங்கிப் ‡புறஞ்சூழ்ந்து போர்குறித்து நேர்நின்றே
அங்கண் ¶கடைநின் றழைத்தான் ஒலிகேளா. க0

"ஆர்கொல் பொரஅழைத்தார்" என்றரியேற் றிற்§கிளர்ந்து
சேர்வு பெறக்கச்சில் செறிந்தவுடை மேல்வீக்கி
வார்கழலுங் கட்டி வடிவாள் பலகைகொடு
போர்முனையில் ஏனாதி நாதர் புறப்பட்டார். கக

புறப்பட்ட போதின்கண் ||போர்த்தொழில்வாள் கற்கும்
விறற்பெருஞ்சீர்க் காளையர்கள் வேறிடத்து நின்றார்
மறப்படைவாள் சுற்றத்தார் கேட்டோடி வந்து
செறற்கரும்போர் வீரர்க் கிருமருங்குஞ் சேர்ந்தார்கள். க௨

---

அ. மழுங்கி - ஒளி மழுங்கி. கால்சாயும் - தோற்றங்கெடும். காலைமதி - காலைச் சந்திரன். பதியோர் - ஊரார். தன்னுடன் கூட. பண்ணியலார்-நற்குண முடைய ஏனாதி நாயனார்.

கூ. கோள்கொண்ட - கொலைத்தொழில் கொண்ட. "கோளினைக் குறித்து வந்தான்"—சிந்தாமணி 264. போர்மள்ளர் - யுத்தவீரர்கள். தாயம் - உரிமை. செற்றத்தால் - நீண்டகாலப் பகைமையால். முன்கடையில் - தலைவாயிலில்.

க0. வெங்கண் - தீக்கண். வெம்முழையில் - கடிய குகையில். பைங்கண் - குறுகிய பார்வையுடைய; 'திருட்டுப் பார்வை' என்பர் மகாலிங்கஐயர். அங்கண்- அழகிய இடத்தையுடைய.

கக. பொர-போர் செய்ய. அரிஏற்றில் கிளர்ந்து-சிங்கத்தைப்போல் கர்ச்சித்து எழுந்து. உறுதியாகப் பொருந்தக் கச்சால்சேர்ந்த உடையை மேல்கட்டி. வாரினால் வீரக்கழலையும் காலில் கட்டி. பலகை - கேடகம்.

க௨. விறல் - வலிமையுடைய. முன்னர்ப் பயிற்சி பெற்று வெவ்வேறிடத்திலிருந்தவர்கள். மறம் - வீரம். செறற்கு அரும் - அடக்கி வெல்லுதற்கு அரிய. வீரர்க்கு - ஏனாதிநாத நாயனாரின்.

பா - ம்—*பண்ணியவர். †எண்ணித் துணிந்தெழுந்தான். ‡புடை சூழ்ந்து. ¶படைமுன் பழைத்தான். §சினந்து. ||போர்த்தொழில்கள்.

வந்தழைத்த மாற்றான் வயப்புலிப்போத் தன்னார்முன்
" நந்தமது வாள்பயிற்று நற்றாயங் கொள்ளுங்கால்
இந்தவெளி மேற்கை வருத்திருவேம் பொருபடையும்
சந்தித் தமர்*விளைத்தால் சாயாதார் கொள்வ"தெனை. ௧௩

என்றுபகைத் தோனுரைப்ப ஏனாதி நாதர்"அது
நன்றுனக்கு †வேண்டுமேல் நண்ணுவன்"என் றுள்மகிழ்ந்து
சென்றவன்முன் சொன்ன செருக்களத்துப் போர்குறிப்பக்
கன்றி ‡இருபடையும் கைவகுத்து நேர்மலைவார். ௧௪

வேறு

மேக ஒழுங்குகள் முன்கொடு மின்னிரை தம்மிடை யேகொடு
மாக மருங்கினும் மண்ணினும் வல்லுரு மேறெதிர் செல்வன
வாக நெடும்பல கைக்குல மாள்வினை வாளுடை யாடவர்
காக மிடைந்த களத்திரு கைகளின் வந்து கலந்தனர். ௧௫

கால்கழல் கட்டிய மள்ளர்கள் கைகளின் மெய்கள் அடக்கிய
வாளொளி வட்ட முனைந்திட வந்திரு கைகளின் முந்தினர்
வேலொடு வேலெதிர் நீள்வன மேவிய பாதலம் விட்டுயர்
ஞாலமு றும்பணி வீரர்கள் நாநிமிர் கின்றன ஒத்தன. ௧௬

---

௧௩. மாற்றான் - பகைவனாகிய அதிசூரன். வலிமையுடைய ஆண் புலி போன்ற ஏனாதி நாயனார். வெளியிடத்தில். சாயாதார் - தோல்வி யுறாதவர்கள்.

௧௪. நீ கூறியது நன்று. நீ விரும்பினால் யானும் போர்புரிய நண்ணுவன். செரு - போர். கன்றி - கோபித்து.

௧௫. வல் உரும் ஏறு - வலிய இடியேறுகள். மேகக் கூட்டங்களைத் தங்கள் முன்னே கொண்டு, மின்னல் வரிசைகளைத் தங்கள் நடுவேகொண்டு. மாக மருங்கினும் - விண்ணிலும். எதிராகச் செல்வனபோலாக. நெடும்......ஆடவர் - நெடிய கேடகக் கூட்டங்களையும் முயற்சி வாய்ந்த வாள்களையும் உடைய வீரர்கள். காகமிடைந்த - காகங்கள் நிறைந்த. இரு கைகளில் - இரண்டு பக்கங்களிலும். வீரர்கள் - இடியேறுகள் ; கேடகங்கள் - மேகக்கூட்டங்கள் ; வாளாயுதங்கள் - மின்னல்கள்.

௧௬. மள்ளர்கள் - வீரர்கள். மெய்கள் அடக்கிய - உடம்புகளை மறைத்துள்ள. வாள் ஒளி வட்டம் முனைந்திட - மிகுந்த ஒளியுடைய கேடகங்கள் முற்பட. பணிவீரர்கள்-நாகவீரர்கள். நாநிமிர்கின்றன ஒத்தன - நாவைச் சுழற்றலை யொத்தன.

பா - ம்—*மலைந்தால். †வேண்டுமென்றால். ‡இருபுடையும்.

வெங்கண் விறற்சிலை வீரர்கள் வேறிரு கையினும் நேர்பவர்
தங்கள் சிலைக்குலம் உந்தின தாவில் சரங்கள் நெருங்குவ
பொங்கு சினத்தெரி யிற்புகை போகு கொடிக்கள் வளைத்தெதிர்
செங்கண் விழிக்கனல் சிந்திய சீறு பொறிச்செல வொத்தன. கஎ

வாளொடு நீள்கை துடித்தன மார்பொடு வேல்கள் குளித்தன
தோளொடு வாளி நிலத்தன தோலொடு தோல்கள் தகைத்தன
தாளொடு வார்கழல் இற்றன தாரொடு சூழ்சிரம் அற்றன
நாளொடு சீறி மலைப்பவர் நாடிய போர்செய் களத்தினில். கஅ

குருதியின் நதிகள் பரந்தன குறையுடல் ஓடி அலைந்தன
பொருபடை அறுதுணி சிந்தின புடைசொரி குடர்உடல் பம்பின
வெருவர எருவை நெருங்கின விசியறு துடிகள் புரண்டன
இருபடை பிணினும் எதிர்ந்தவர் எதிரெதிர் அமர்செய் பறந்தலை. கக

நீளிடை முடுகி நடந்தெதிர் நேரிரு வரிலொரு வன்தொடர்
தாளிரு தொடையற முன்பெயர் சாரிகை முறைமை தடிந்தனன்

---

கஎ. வேறிரு கையிலும் நேர்பவர் - வேறாகிய இரண்டு அணிவகுப்பிலும் எதிர்நின்று போர் புரிபவர்களாகிய. வெங்கண் விறல் சிலைவீரர்கள் தங்கள். சிலைக்குலம் உந்தின - வில்கூட்டங்கள் சொரிந்த. தாவில் சரங்கள் நெருங்குவ- குற்றமில்லாத அம்புகள் செல்வன. பொங்கு சினத்து எரியில் புகை போகு கொடிக்கள் - கிளர்ந்தெழுங் கோபாக்கினியினின்றும் கிளம்பும் புகைக்கொடிகளை. செங்கண் விழிக்கனல்-சிவந்த கண்களினின்றும் எழும்பிய நெருப்பானது. வளைத்து எதிர் சிந்திய - வளைத்துக்கொண்டு எதிரெதிர் சிந்திய. சீறு பொறி - கொடிய பொறிகளின்; சிறு பொறிகளின் எனினுமாம். செலவு - செல்வதை; விழுதலை.

கஅ. கைகள் அற்று விழுந்து துடித்தன. குளித்தன - முழுகின; பாய்ந்து மறைந்தன. தோளொடு வாளி நிலத்தன-(அறுபட்ட) தோள்களோடு அம்புகள் தரையில் விழுந்து கிடந்தன. தோலொடு தோல்கள் தகைத்தன - கேடகங்களோடு கேடகங்கள் நெருக்கின. தாரொடு - மாலையுடன். நாளொடு சீறி மலைப்பவர் - தங்கள் வாழ்நாளுடன் கோபித்துப் போரிடுவோர்.

கக. இரத்தப் பெருக்காலாகிய ஆறுகள் ஓடின. பொருபடை அறுதுணி - போர் புரியுஞ் சேனைகளின் உடலினின்றும் அற்ற துண்டுகள். குடல்கள் பக்கத்திற் சரிந்த உடல்கள் நிரம்பிக்கிடந்தன. வெருவர எருவை - அச்சம் உண்டாகக் கழுகுகள். விசி அறு துடிகள் - வார் அறுந்த உடுக்கைகள். பறந்தலை - போர்க்களத்தில்.

உ0. நீளிடை முடுகி நடந்து - நெடுந் தூரத்தினின்றும் விரைந்து நடந்து. தொடர்ந்த இரண்டு கால்களும் தொடைகளும் அற்றுவிழ. சாரிகை

பா - ம்—*தனினும்.

வாளொடு விழுமுடல் வென்றவன் மார்பிடை அறமுன் எறிந்திட
ஆளியி னவனு மிறிந்தனன் ஆயினர் பலருள ரெங்கணும். உ0

கூர்முனை அயில்கொடு முட்டினர் கூடிமுன் உருவிய தட்டுடன்
நேருரம் உருவ †உரப்புடன் நேர்பட எதிரெதிர் குத்தினர்
ஆருயிர் கழியவும் நிற்பவர் ஆண்மையில் இருவரும் ஒத்தமை
போரடு படைகொ டளப்பவர் போல்பவர் அளவிலர் பட்டனர். உக

பொற்சிலை வளைய எதிர்ந்தவர் புற்றர வனைய சரம்பட
விற்படை துணியவும் நின்றிலர் வெற்றிகொள் சுரிகை வழங்கினர்
முற்றிய பெருவளன் இன்றியும் முற்படு கொடைநிலை நின்றிட
உற்றன உதவிய பண்பினர் ஒத்தனர் உளர்சில கண்டர்கள். உஉ

அடல்முனை மறவர் மடிந்தவர் அலர்முகம் உயிருள வென்றுறு
படர்சிறை சுலவு கருங்கொடி ‡படர்வன சுழல்வன துன்றலில்
விடுசுடர் விழிகள் இரும்புசெய் வினைஞர்தம் உலையின் முகம்பொதி
புடைபிடை கரியிடை §பொங்கிய புகைவிடு ¶தழலை நிகர்த்தன. உ௩

---

முறைப்படி. தடிந்தனன் - வெட்டினன். தன்னை வென்றவனுடைய. சிங்கத்தைப் போன்ற அவனும் இறந்து பட்டனன். ஆயினர் - இவ்வாறாக இறந்தவர்.

உக. அயில் - வேலாயுதம். கூடி - நெருங்கி. தட்டுடன் - கேடகத்தோடு. நேர் உரம் உருவ உரப்புடன் - நேரே மார்பில் உருவும்படி பலத்துடன். உரப்புடன் - அதட்டலுடனுமாம். ஒத்திருத்தலை. போரடு......பட்டனர் - போரில் கொல்லும் படைக்கலங்களைக் கொண்டு அளந்து காண்பவரைப் போன்றவர் அளவில்லாதவர் இறந்தனர்.

உஉ. புற்றிலுள்ள பாம்புகளைப் போன்ற அம்புகள் பட. வில் படை துணியவும் - தங்கள் கையிலுள்ள விற்படைகள் வெட்டுப்படவும். சுரிகை வழங்கினர் - உடைவாளை (பாணங்களுக்கு எதிராக) வீசினார்கள். முற்றிய - நிரம்பிய. இன்றியும் - இல்லாது ஒழிந்த காலத்தும். முற்படு - முதன்மை பொருந்திய; முன் செய்து வந்த எனினுமாம். நிலைநின்றிட - நிலை நிற்க. உற்றன உதவிய பண்பினர் - தங்களுக்குக் கிடைத்த பொருளை (இரப்பவர்க்குக்) கொடுக்குங் குணமுடையவர்களை. கண்டர்கள் - படைவீரர்கள்.

உ௩. அடல்முனை - போர்முகத்தில். மறவர் - வீரர்கள். மலர்முக நோக்கி. உறுபடர் சிறை சுலவு கருங்கொடி - வரும் படர்ந்த சிறகினை யுடையன வாய்ச் சூழுங் காகங்கள். படர்கின்றன; சுழல்கின்றன. துன்றலில் - ஆனால் நெருங்குவதில்லை. இரும்புசெய் வினைஞர்தம் - கொல்லர்களது. உலைமுகத்தில் பொதிந்து பக்கத்திலே நெருங்கியுள்ள கரியிலே பொங்கிய புகைவிடும் நெருப்பை. (வீரர்களின்) விடுசுடர் விழிகள் நிகர்த்தன. காகங்கள் துன்றலின்றிப் படர்வனவாயும் சுழல்வனவாயு மிருந்தன என்றலுமொன்று. துன்றலில்

பா - ம்—*மறிந்தனன். †உறைப்புடன். ‡பயில்வன. §தங்கிய. ¶தழல் நிகர்கின்றன.

திண்படை வயவர் பிணம்படு செங்கள மதனிடை முன்சிலர்
புண்படு வழிசொரி யுங்குடர் பொங்கிய கழுகு பருந்தொடு [னர்
கொண்டெழு பொழுதினும் முன்செயல் குன்றுதல் இலர்தலை நின்ற
விண்படர் கொடிவிடு பண்பயில் விஞ்சையர் குமரரை வென்றனர். உ௪

**வேறு**

இம் முனைய வெம்போரில் இருபடையின் வாள்வீரர்
வெம்முனையில் வீடியபின் வீடாது மிக்கொழிந்த
தம்முடைய பல்படைஞர் பின்னாகத் தாம்முன்பு
தெம்முனையில் ஏனாதி நாதர் செயிர்த்தெழுந்தார். உ௫

வெஞ்சினவாள் தீயுமிழ வீரக் கழல்கலிப்ப
நஞ்சணிகண் டர்க்கன்பர் தாமெதிர்ந்த ஞாட்பின்கண்
எஞ்சியெதிர் நின்ற இகல்முனையில் வேல்உழவர்
தஞ்சிரமுந் தோள்உரமுந் தாளும் விழத்துணித்தார். உ௬

தலைப்பட்டார் எல்லாருந் தனிவீரர் வாளில்
கொலைப்பட்டார் முட்டாதார் கொல்களத்தை விட்டு
நிலைப்பட்ட மெய்யுணர்வு நேர்பட்ட போதில்
அலைப்பட்ட ஆர்வமுதற் குற்றம்போ லாயினர். உ௭

---

(நெருங்கக்கூடாதவாறு) விடுசுடர் விழிகள் என்று இயைத்துக் கொள்ளினு மாம். காகங்கள் துன்றலின் (நெருங்கியிருத்தலான்) என்போரு முளர்.

உ௪. வயவர் - வீரர்கள். புண்பட்டவழியே சொரியுங் குடர்களை. பொங்கிய - மிகுந்து நெருங்கிய. அவர்கள் முன்செயல் (தைரியம் முதலிய செயல்களினின்றும்) குன்றுதலிலராய், அம்முயற்சியில் தலைப்பட்டு நின்றார்கள். (அவர்கள்) கொடி - காற்றாடி; பட்டம். பண்பயில் - குணம் பொருந்திய. விஞ்சையர் குமரரை - விளையாட்டுப் பயிற்சி யுடையவர்களாகிய சிறுவர்களை. பண்பயில் விஞ்சையர் குமரர் - "இசையைப் பழகிய வித்தியாதரர்களுடைய சிறுவர்களை"—**ஆறுமுகத் தம்பிரானார்.**

உ௫. இம்முனைய - இப்பகைமையுடைய. முனையில் - போரில். வீடியபின் - இறந்தபின்னர். தெம்முனையில் - பகைப்புலத்தில். செயிர்த்து - கோபித்து.

உ௬. ஞாட்பின்கண் - போரினிடத்து. இகல் - பகை. வேல் உழவர்தம் - வேல்வீரர்களின். உரமும் - மார்பும்.

உ௭. முட்டாதார் - எதிர்த்து வாராதவர்கள். ஆர்வமுதல்குற்றம் - காமம் வெகுளி மயக்கம் முதலியன. மெய்யுணர்வுக்கு அலைப்படுத லின்மையான் "நிலைப்பட்ட" என்றார். காமம் வெகுளி முதலியன அலைப்படுவன என்பது

பா - ம்—*முனை.

இந்நிலைய வெங்களத்தில் ஏற்றழிந்த மானத்தால்
தன்னுடைய புல்படைஞர் மீண்டார் தமைக்கொண்டு
மின்னெளிவாள் வீசி விறல்வீரர் வெம்புலியே
றன்னவர்தம் முன் †சென் றதிசூரன் நேரடர்ந்தான். உஅ

மற்றவர்தஞ் செய்கை வடிவாள் ஒளிகாணச்
சுற்றிவரும் வட்டணையில் தோன்று வகைகலந்து
பற்றியடர்க் கும்பொழுதில் தானும் படைபிழைத்துப்
பொற்றடந்தோள் வீரர்க் குடைந்து ‡புறகிட்டான். உகூ

போன அதிசூரன் போரில் §அவர்க்கழிந்த
மானமிக மீதூர மண்படுவான் கண்படான்
ஆனசெயல் ஓரிரவுஞ் சிந்தித் ¶தலமந்தே
"ஈனமிகு வஞ்சனையால் வெல்வன்" என எண்ணினான். ௩௦

சேட்டாருங் கங்குல் புலர்காலைத் தீயோனும்
"நாட்டாரைக் கொல்லாதே நாம்இருவேம் வேறிடத்து
வாட்டாயங் கொள்போர் மலைக்க வருக" எனத்
தோட்டார்பூந் தாரார்க்குச் சொல்லிச் ||செலவிட்டான். ௩௧

---

வெள்ளிடைமலை. நூலுக்கேற்ற வருணனை. மெய்யுணர்வு விளங்கியதும் காமம் வெகுளி மயக்கங்கள் இரிந்தோடுதல் இயல்பு. மெய்யுணர்வு - ஏனாதி நாயனார். காமம் வெகுளி முதலியன - அவரை முட்டாதவர்கள்.

உஅ. ஏற்று - எதிர்த்து. நேர் அடர்ந்தான் - நேரே எதிர்த்துப் போர் புரிந்தான்.

உகூ. செய்கையால். இடசாரி வலசாரியாகவரும் வட்டணையிலே. ஒருவருக்குந் தாம் தோன்றாதவாறு கலந்து. வாள்ஒளியும் வட்டணையிடும் விரைவும் நாயனாரைத் தோன்றாவகை செய்தன. அடர்க்கும்பொழுது - தாக்கும்போது. தானும்படை பிழைத்து - அதிசூரனும் படையுடன் தப்பி.

௩௦. "மண்படுவான் - மண்விழுவான். அதிசூரனை இங்ஙனமாசிரியர் கூறியது இவனது வஞ்சகக் கொடுமைபற்றியென அறிக. பாயலின்றிப் பூமியிற் படுப்பவனெனக் கோடலுமாம். பூமியிலிறப்பவனெனக் கோடல் சிறப்பின்று." **பழைய குறிப்புரை.** கண்படான் - தூங்காதவனாய். ஏனாதி நாயனாரை வெல்வதற்கான. அலமந்து - நெஞ்சஞ் சுழன்று.

௩௧. சேட்டாருங் கங்குல் - நீண்ட இராக்காலம்; சேடு ஆரும் - நீடித்தல் நிறைந்த. துக்கமுடையோர்க்கு இரவு நீடித்தல் இயல்பு. வாள்தாயம் - வாள் தொழில் உரிமை. தோடு ஆர் பூந்தாரார்க்கு - இதழ்களுடைய பூமாலையணிந்த ஏனாதி நாயனார்க்கு.

பா - ம்—*பல். †வந்ததிசூரன். ‡புறத்திட்டான்; புறமிட்டான். §அவர்க்கழிந்து. ¶அலமருவான். ||வரவிட்டான்.

இவ்வாறு கேட்டலுமே ஏனாதி நாதனார்
"அவ்வாறு செய்தல் அழகி தெனஅமைந்து
கைவ்வாள் அமர்விளைக்கத் தான்கருதும் அக்களத்தே
வெவ்வாள் உரவோன் வருக" என *மேற்கொள்வார். ௩௨

சுற்றத்தார் யாரும் அறியா வகைசுடர்வாள்
பொற்பலகை யுந்தாமே கொண்டு புறம்போந்து
மற்றவன்முன் சொல்லி வரக்குறித்த அக்களத்தே
பற்றலனை முன்வரவு பார்த்துத் தனிநின்றார். ௩௩

தீங்கு குறித்தழைத்த தீயோன் திருநீறு
தாங்கிய நெற்றியினார் தங்களையே எவ்விடத்தும்
ஆங்கவருந் தீங்கிழையார் என்ப தறிந்தானாய்ப்
பாங்கில் திருநீறு பண்டு பயிலாதான். ௩௪

வெண்ணீறு நெற்றி விரவப் புறம்பூசி
உள்நெஞ்சில் வஞ்சக் கறுப்பும் உடன்கொண்டு
†வண்ணச் சுடர்வாள் மணிப்பலகை கைக்கொண்டு
புண்ணியப்போர் வீரர்க்குச் சொன்னஇ டம்புகுந்தான். ௩௫

வென்றி மடங்கல் விடக்குவர முன்பார்த்து
நின்றாற்போல் நின்றார் நிலைகண்டு தன்நெற்றி
சென்று கிடைப்பளவுந் திண்பலகை யான்மறைத்தே
முன்தனிவீ ரர்க்கெதிரே மூண்டான் மறம்பூண்டான். ௩௬

அடல்விடையே றென்ன அடர்த்தவனைக் கொல்லும்
இடைதெரிந்து தாள்பெயர்க்கும் ஏனாதி நாதர்

---

௩௨. தான் - (அதிசூரன்.) கொடிய வாளேந்திய வலிமையுடைய அதிசூரன். மேற்கொள்வார் - அவன் சொல்லை ஏற்று ஒப்புக்கொண்டார்.

௩௩. பொற்பலகையும் - அழகிய கேடகத்தையும். பற்றலனை முன்வரவு - பகைவனாகிய அதிசூரன் வரவை.

௩௪. பாங்குடன் திருநீற்றை முன்னே அணிந்தறியாதவன்.

௩௫. மெய்ப்பொருள் நாயனார் புராணம் எ-ம் பாட்டைப் பார்க்க.

௩௬. மடங்கல் - சிங்க ஏறு. விடக்குவர - பிராணி வருதலை; விடக்கு - மாமிசம் ; ஆகுபெயர். சென்று அவரைக் கிட்டும் வரைக்கும். மூண்டான் - முடுகி நடந்தான். மறம் - பாவத்தை.

௩௭. பாய்ந்து கொல்லும் இடப ஏற்றைப்போல. அடர்த்து - நெருக்கித் தாக்கி. புடைபெயர்ந்த மாற்றான் - தம் அருகே வந்த பகைவன்.

பா - ம்—*மேற்கொண்டார். †வண்ணக்கதிர்.

புடைபெயர்ந்த மாற்றான் பலகைபுறம் போக்கக்
கடையவன்தன் நெற்றியின்மேல் வெண்ணீறு தாங்கண்டார். ௩எ

கண்டபொழு தே"கெட்டேன் முன்பிவர்மேற் காணாத
வெண்திருநீற் றின்பொலிவு மேற்கண்டேன் வேறினிஎன்
அண்டர்பிரான் சீரடியார் ஆயினார்" என்றுமனங்
கொண்"டிவர்தங் கொள்கைக் குறிவழிநிற் பேன்"என்று. ௩அ

கைவாள் உடன்பலகை நீக்கக் கருதியது
செய்யார் "நிராயுதரைக் கொன்றார் எனுந்தீமை
எய்தாமை வேண்டும் இவர்க்கென்" றிரும்பலகை
நெய்வாள் உடன்அடர்த்து நேர்வார்போல் நேர்நின்றார். ௩௯

அந்நின்ற தொண்டர் திருவுள்ளம் ஆரறிவார்
முன்நின்ற பாதகனும் தன்கருத்தே முற்றுவித்தான்
இந்நின்ற தன்மை அறிவார் அவர்க்கருள
மின்நின்ற செஞ்சடையார் தாமே வெளிநின்றார். ௪0

மற்றினிநாம் போற்றுவதென் வானோர் பிரான்அருளைப்
பற்றலர்தங் கைவாளால் பாசம் அறுத்தருளி
உற்றவரை என்றும் உடன்பிரியா அன்பருளிப்
பொற்றொடியாள் பாகனார் பொன்னம் பலம்அணைந்தார். ௪க

தம்பெருமான் சாத்துந் திருநீற்றுச் சார்புடைய
எம்பெருமான் ஏனாதி நாதர் கழல்இறைஞ்சி
உம்பர்பிரான் காளத்தி உத்தமர்க்குக் கண்ணப்பு
நம்பெருமான் செய்தபணி நாந்†தெரிந்த வாறுரைப்பாம். ௪உ

ஆ திருவிருத்தம் - ௬௪௧.

---

௩அ. கெட்டேன் - ஐயோ. மேற்கண்டேன் - இப்பொழுதே பார்த்தேன்.
௩௯. இரும் - பெரிய. எண்ணெய் பூசியுள்ள வாளுடன்.
௪0. அங்கு அவ்வாறு நின்ற. மெய்ப்பொருள் நாயனார் புராணம் கரு-ம் பாட்டையும் குறிப்பையும் பார்க்க. அறிவாராய் நாயனார்க் கருள்புரியச் சிவ பெருமான் தாமே காட்சி வழங்கினார்.
௪க. பற்றலர் - பகைவர். உற்றவரை - திருவருளை அடைந்த ஏனாதி நாய னாரை. உடன் - தம்முடன்.

பா - ம்—*அறிந்தார். †தெளிந்த.

**ஏனாதிநாத நாயனார்** சோழநாட்டிலுள்ள எயினனூரில் தோன்றிய ஈழ குலச்சான்றோராவர். அவர், திரு நீற்றினிடத்துப் பேரன்பு வாய்ந்தவர். அரசர்களுக்கு வாள்வித்தை பயிற்றுவிப்பது அவர்தந் தொழிலாகும். அதனால் கிடைக்கும் பொருளைச் சிவனடியார்களுக்குக் கொடுத்து வருவது அவர்தந் திருத்தொண்டாகும்.

அவர் காலத்திலே அதிசூரன் என்னும் மற்றுமொரு வாள்வீரன் இருந்தான். அவனது தொழிலும் வாள்வித்தை பயிற்றுவிப்பதாகும். ஏனாதி நாயனார் தொழில் முறையில், தன்னினும் நலம் பெற்று வருதல் கண்டு, அவன் அழுக்காற்றால் புழுங்கலானான். அவன் ஒருநாள், தன் மாணக்கர்களும் மற்றவர்களுந் தன்னைச் சூழ்ந்துவர,ஏனாதி நாயனார் இல்லம் போந்து, தலை வாயிலில் நின்று அவரைப் போருக்கழைத்தான். அவன் அழைத்தலைக் கேட்ட நாயனார், போர்க்கோலந் தாங்கிப் புறப்பட்டார். அவர்தம் மாணக்கர்களும், ஊரவர்களும், மற்றவர்களும் படை தாங்கி அவரைச் சூழ்ந்து தொடர்ந்தார்கள்.

அதிசூரன், நாயனாரைப் பார்த்து, "இவ்வெளியிலே அமர் செய்வோம்; வெற்றியடைவோரே வாள்வித்தை கற்பிக்கும் உரிமை ஏற்றல் வேண்டும்" என்று கூறினான். அதற்கு நாயனாரும் உடன்பட்டனர். உடனே இருவருந் தத்தம் படைகளுடன் அவ்வெளி நோக்கி நடந்து போர் புரியலானார். இறுதியில் அதிசூரன் புறமுதுகிட்டு ஓடினான்.ஓடிய அவன், அன்றிரவு முழுவதும் உறக்கமின்றித் துயர்க்கடலில் அழுந்தி, 'ஏனாதி நாயனாரை எப்படிக் கொல்வது' என்று எண்ணி எண்ணி, முடிவில் 'வஞ்சனை வழியில் கொல்லுதல்வேண்டும்' என்று உறுதிகொண்டான். பொழுதுபுலர்ந்ததும், போருக்கு வேறு எவரையும் அழைத்துச்செல்லாமல், 'ஏனாதிநாயனாரும் தானும்மட்டும் தன்னந் தனியராய்ப் போர் புரிதல் வேண்டும்' என்று ஓர் ஒற்றன்வாயிலாக ஏனாதிநாயனார்க்குத் தெரிவித்தான். நாயனார் அதற்கும் உடன்பட்டு,ஒருவருக்குந் தெரியாமல் அதிசூரன் குறிப்பிட்ட போர்க்களம் போந்தார்.

என்றும் வெண்ணீறணியாத அதிசூரன், அன்று புண்ணிய நீற்றை நெற்றியிலணிந்து, போர்க்களம் நோக்கினான். அங்கே, சிங்க ஏறுபோல் உலவும் நாயனாரை நெருங்குமட்டும் அதிசூரன் கேடகத்தால் தன் நெற்றியை மறைத்துச் சென்றான். ஏனாதி நாயனார் அதிசூரன் மேல் பாய அடிபெயர்த்தார். அவ்வேளையில், அதிசூரன், முகமூடி போன்ற கேடகத்தை விலக்கினான். அவன் நெற்றியில் புண்ணிய நீறு பொலிகிறது! அப்பொலிவு கண்ட நாயனார், "கெட்டேன்! இவர் நெற்றியிலே நீற்றினை இன்று கண்டேன். இவர் சிவபிரான் தொண்டராயினார்" என்று நினைந்து வாளையுங் கேடகத்தையும் விட்டெறியக் கருதினார். பின்னை "நிராயுதனைக் கொன்றார் என்னும் பழி இவரை அடர்க்கும்" என்றஞ்சி, வாளையுங் கேடகத்தையும் நீக்காது, போரிடுவார் போல நடித்தனர். அப்பொழுது அவர் முன்னின்ற பாதகன், தன் கருத்தை முற்றுவித்தான்.

சிவபெருமான் ஏனாதிநாத நாயனார்முன் எழுந்தருளித் தம்மை என்றும் பிரியாப் பெருவாழ்வை, அவருக்கு அளித்து மறைந்தருளினார்.



# கண்ணப்ப நாயனார் புராணம்



மேவலர் புரங்கள் செற்ற விடையவர் வேத வாய்மைக்
காவலர் திருக்கா ளத்திக் கண்ணப்பர் திருநா டென்பர்
நாவலர் புகழ்ந்து *போற்ற நல்வளம் †பெருகி நின்ற
பூவலர் வாவிச் சோலை சூழ்ந்த‡போத் தப்பி நாடு.

இத்திரு நாடு தன்னில் இவர்திருப் பதியா தென்னில்
நித்தில அருவிச் சாரல் நீள்வரை சூழ்ந்த பாங்கர்
மத்தவெங் களிற்றுக் கோட்டு வன்தொடர் வேலி கோலி
ஒத்தபேர் அரணஞ் சூழ்ந்த முதுபதி உடுப்பூர் ஆகும். உ

---

க. பகைவர்களது முப்புரங்களை யழித்த. வேதநெறி சத்தியநெறி. அந்நெறி ஆண்டவனால் உயிர்களின் பொருட்டுக் காக்கப்படுவது. இதனை "வேத வாய்மைக் காவலர்" என்றார். விடையவரும் காவலருமாகிய சிவபெருமான் எழுந்தருளியுள்ள திருக்காளத்தி. முப்புரங்கள் மும்மலங்களைக் குறிப்பன. தடுத்தாட்கொண்ட புராணம் சஅ-ம் பாட்டின் குறிப்பைப் பார்க்க. மும்மலங்கள் நீக்கப்பெற்றதும் அறம் நிலைபெறும். அவ்வற நிலையை ஈண்டு "விடையவர்" என்றார். விடை, அறத்துக்கு அறிகுறி. அற நிலையில் மெய்யறிவு விளங்குதல் இயல்பு. ஈண்டு வேதம் என்பது மெய்யறிவை உணர்த்துவது. வேதம் வித் என்னும் தாதுவினடியாகப் பிறந்தது. வித் - அறிவு. மும்மலம் அழியவும் அறம் நிலைக்கவும் மெய்யறிவு விளங்கவும் உண்மை கடைப்பிடித்தல் வேண்டற்பாலது. அவ்வுண்மை கடைப்பிடித்தல் ஈண்டு "வாய்மை" எனப்பட்டது. ஆகவே, உயிர்களின் நலத்துக்குவாழ்வில் அடிப்படையாகவேண்டற்பாலது சத்தியமாதலின், அஃது ஆண்டவனால் சிறப்பாகக் காக்கப்படுகிறதென்க. "பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற - செய்யாமை செய்யாமை நன்று"—திருக்குறள்: உகஎ. காளமும் (சிலந்தியும் பாம்பும்) அத்தியும் (யானையும்) ஆண்டவனைப் பூசித்துப் பேறுபெற்ற இடம் திருக்காளத்தி. உயர்திணை உயிர்கட்கல்லாது அஃறிணை உயிர்கட்கும் ஆண்டவன் அருள்சுரப்பவன் என்பதைத் திருக்காளத்தி நினைவூட்டா நிற்கிறது. கண்ணப்பர் அத்திருக்காளத்தியில் கண்ணையப்பிப் பேறுபெற்றமையான், திருக்காளத்திக் கண்ணப்பர் என்னப் பெற்றார். நாவலர் - நாவில்வல்ல புலவர்கள். வாவிகளும் (தடாகங்களும்) சோலைகளும். பொத்தப்பிநாடு கண்ணப்பர் திருநாடென்பர்.

உ. நித்தில அருவிச் சாரல் நீள்வரை சூழ்ந்த பாங்கர் - முத்துக்களைக் கொழித்து இழிதரும் அருவிகள் பொருந்திய சாரல்களையுடைய மலைப்பக்கங்களில். மத்தவெங் களிற்றுக் கோட்டு - மதத்தை யுடைய கொடிய யானைக் கொம்புகளால். பேர் அரணம் ஒத்த - பெரிய மதிலையொத்த. வன்தொடர்

பா - ம்—*போற்றும். †பெருக. ‡போத்தப்பி.

குன்றவர் அதனில் வாழ்வார் கொடுஞ்செவி ஞமலி யார்த்த
*வன்திரள் விளவின் கோட்டு வார்வலை மருங்கு தூங்கப்
பன்றியும் புலியும் எண்கும் கடமையும் மானின் பார்வை
அன்றியும் பாறை முன்றில் ஐவனம் உணங்கும் எங்கும். ௩

வன்புலிக் குருளை யோடும் வயக்கரிக் கன்றி னோடும்
புன்தலைச் சிறும கார்கள் புரிந்துடன் ஆடல் அன்றி
அன்புறு காதல் கூர அணையுமான் பிணைக ளோடும்
இன்புற மருவி †ஆடும் எயிற்றியர் மகளிர் எங்கும். ௪

வெல்படைத் தறுகண் வெஞ்சொல் வேட்டுவர் கூட்டந் தோறும்
கொல்லெறி குத்தென் றார்த்துக் குழுமிய ஓசை யன்றிச்

வேலி கோலி - மிகப் பிணிப்புடைய தொடர்வேலி வளைந்து. முதுபதி - பழம் பதி. வேலிகோலி ஒத்த (பொருந்திய) பேரரணஞ்சூழ்ந்த என்னலு மொன்று.

௩. குன்றவர் - வேடுவர்கள். கொடுஞ்செவி ஞமலி ஆர்த்த - வளைந்த காது களையுடைய நாய்களைக் கட்டிய. வன்திரள் விளவின் கோட்டு - வன்மைவாய்ந்த திரண்ட விளாமரக் கொம்புகளின். வார் - நீண்ட; பெரிய. மருங்கு - பக்கங் களில். தூங்க - தொங்க. எண்கும் - கரடியும். கடமையும் - காட்டுப் பசுவும். மானின் - மானுமாகிய இவைகளின். பார்வை - பார்வை மிருகங்கள்; மிருகங் களைப்போலச் செயற்கையால் செய்யப்படுவன; அவைகளைக் காட்டி மிருகங் களை வயப்படுத்துவது வழக்கம். முன்றில் - முற்றத்தில். ஐவனம் - மலை நெல். இதற்கு ஐவனவெண்ணெல் என்னும் பெயருமுண்டு. ஐவனமும் வெண்ணெல் லும் வெவ்வேறென்று கூறுதலும் ஒன்று. "தேனுகு மடையை மாற்றிச் செந்தினைக் குறவர் முந்தி, வானநீர் ஆறு பாய்ச்சி ஐவனம் வளர்ப்பர் மாதோ" —கம்பஇராமாயணம்: வரைக்காட்சி ௩௪. உணங்கும் - உலர்ந்துகொண்டிருக் கும்.

௪. புலிக்குருளை - புலிக்குட்டி. வயக்கரி - வெற்றியானை. புன்தலை சிறு மகார்கள் - புல்லிய தலையையுடைய (எண்ணெய் தேயாமையால் வெப்பத்தால் உலர்ந்து சுண்டிய மயிர்களையுடைய; நன்றாக முளையாத மயிர்களையுடைய) வேடப்பிள்ளைகள். புரிந்து - விரும்பி. மான் பிணைகளோடும் - பெண்மான்க ளோடும். மருவி - தழுவி. எயிற்றியர்மகளிர் - வேடப் பெண்கள். வேடச்சிறு மிகள் தினை முதலிய உணவுகளை மான்களுக்குக் கொடுப்பது வழக்கம். அவ் வழக்கால் அப்பெண்களைக் கண்டதும் மான்கள் தாமே அணையும் என்க. மான் களின் கண்களைப்போல வேடப்பெண்களின் கண்களும் தோற்றலால் அவைகள் அவர்களைத் தங்களினமெனக் கருதித் தாமே அணையும் என்றுங் கூறலாம்.

௫. பகைவர்களை வெல்லும் ஆயுதங்களையும் வன்கண்மையையும் வெஞ் சொல்லையுமுடைய. ஆர்த்துக் குழுமிய - முழங்க அதனால் நிறைந்த. சில்லரி

பா - ம்—*வன்திறல். †ஓடும்.

சில்லரித் துடியும் கொம்பும் சிறுகணு குளியுங் கூடிக்
கல்லெனும் ஒலியின் மேலும் கறங்கிசை அருவி எங்கும். ரு

ஆறலைத் துண்ணும் வேடர் அயற்புலங் கவர்ந்து கொண்ட
வேறுபல் உருவின் மிக்கு விரவுமான் நிரைக ளன்றி
ஏறுடை வானந் தன்னில் இடிக்குரல் எழிலி யோடு
மாறுகொள் முழக்கங் காட்டும் மதக்கைமா நிரைகள் எங்கும். ௬

மைச்செறிந் தனைய மேனி வன்தொழில் மறவர் தம்பால்
அச்சமும் அருளும் என்றும் அடைவிலார் உடைவன் தோலார்
பொச்சையின் நறவும் ஊனின் புழுக்கலும் உணவு கொள்ளும்
நச்சழற் பகழி வேடர்க் கதிபதி நாகன் என்பான். எ

பேற்றியால் தவமுன் செய்தா ரூயினும் பிறப்பின் சார்பால்
குற்றமே குணமா வாழ்வான் கோடுமையே தலைநின் றுள்ளான்
விற்றொழில் விறலின் மிக்கான் வெஞ்சின மடங்கல் போல்வான்
மற்றவன் குறிச்சி வாழ்க்கை மனைவியுந் தத்தை என்பாள். அ

---

துடியும் - சில பரல்களையுடைய உடுக்கையும். (அரி - வெண்கல முதலியவற்றால் சிறியமணிகள் போல் செய்யப்பட்டுச் சிலம்பு முதலியவற்றுள் இடப்படுவது). கொம்பும் - ஊது கொம்புவாத்தியமும். சிறுகணுகுளியும் - சிறிய கண்களையுடைய பறையும். கறங்கு - ஒலிக்கும். அருவியோட்டத்தில் இசை முழங்கல் இயல்பு. "கால்பொர நுடங்கல் கறங்கிசை அருவி - நின்மால் வரை மலிசுனை "—கலித்தொகை ௬ரு : அ.

௬. ஆறு அலைத்து உண்ணும் - வழிபறித்துச் சீவிக்கும். அயல்நாடு போந்து கொள்ளையிட்டுக்கொண்டுவந்த வேறுபட்ட பல நிறங்களோடுகூடிய விலங்குகளே யல்லாமல். ஆன்நிரைகள் எனக்கொண்டு பசுக்கூட்டங்கள் என்று பொருள் கூறினும் பொருந்தும். ஏறு உடை - உயர்ச்சியுடைய. எழிலியோடு - மேகங்களோடு. மதக்கைம் மா நிரைகள் - மதம் பொழியும் துதிக்கையுடைய யானைக்கூட்டங்கள்.

எ. மைசெறிந்து அனைய - மைக்குழம்பு பூசினாற் போன்ற; மைக்குழம்பு திரண்டாற் போன்ற. தம்மிடத்தில் அச்சமும் பிறவுயிர்மேல் அருளும். பொச்சையின் நறவும் - மலைத்தேனையும். பொச்சை - காடுமாம். ஊனின் புழுக்கலும் - ஊன்சோற்றையும். நச்சு அழல் பகழி - நஞ்சனைய நெருப்பை உமிழும் அம்புகளையுடைய. மறவராகிய வேடர்க்கு.

அ. பெற்றியால் - இயல்பால்; தன்மையால்; பெருமையால் (கண்ணப்பரைப் புதல்வராகப் பெறுந்தன்மையால்). மடங்கல் - ஆண் சிங்கம். குறிச்சி - குறிஞ்சி நிலத்து ஊர். இங்கே இல்லம் ; ஆகுபெயர்.

அரும்பெறல் மறவர் தாயத் தான்றதொல் குடியில் வந்தாள்
இரும்புலி எயிற்றுத் தாலி இடையிடை மனவு கோத்துப்
பெரும்புறம் அலையப் பூண்டாள் பீலியும் குழையும் தட்டச்
சுரும்புறு படலை முச்சிச் சூர்அரிப் பிணவு போல்வாள். க

பொருவருஞ் சிறப்பின் மிக்கார் இவர்க்கினிப் புதல்வர்ப் பேறே
அரியதென் றெவரும் கூற அதற்படு காத லாலே
முருகலர் அலங்கற் செவ்வேல் முருகவேள் முன்றிற் சென்று
பரவுதல் செய்து நாளும் பராய்க்கடன் நெறியில் நிற்பார். க0

வாரணச் சேவ லோடும் வரிமயிற் குலங்கள் விட்டுத்
தோரண மணிகள் தூக்கிச் சுரும்பணி கதம்பம் நாற்றிப்
போரணி நெடுவே லோற்குப் புகழ்புரி குரவை தூங்கப்
பேரணங் காடல் செய்து பெருவிழா எடுத்த *பின்றை. கக

க. அரும்பெறல் - பெறுதற்கரிய. மறவர் தாயத்து - வேடர் மரபிலே. ஆன்ற தொல் குடியில் - பழமை நிறைந்த குடியில். பெரிய புலிப்பல்தாலியின். "புலிப்பல் கோத்த புலம்புமணித்தாலி"—அகநானூறு எ. மனவு - சங்குமணிகளை; பல கறைகளை. புறம் - முதுகின் பக்கத்து; பிடரியில். பீலியும் குழையும் தட்ட - மயிற் பீலிகளும் தழைகளும் நெருங்க. சுரும்பு உறு படலை முச்சி-வண்டுகள் மொய்க்கும் மாலையையணிந்த மயிர் முடியையுடைய. படலை - மாலை; இலைமாலை. "பைந்தளிர்ப்படலை" **சிலப்பதிகாரம்:** ௨ அந்தி. ௨௪. "முறிமிடை படலைமாலை"—**சிந்தாமணி :** ௨அ௩. சூர் அரிப்பிணவு - அச்சமூட்டும் பெண் சிங்கத்தை.

க0. பொருவரும் - ஒப்பற்ற. இவர்க்கு - நாகனுக்கும் தத்தைக்கும். அதற் படும் காதலாலே-அப்புத்திரப்பேற்றின் மீதுள்ள விருப்பத்தால். முருகு அலர் அலங்கல் செவ்வேல் - மணங்கமழும் கடப்பமாலையையணிந்து செவ்வேலை ஏந்திய. முருகவேளைப்பற்றி **"முருகன் அல்லது அழகு"** என்னும் நூலில் விரித்துக் கூறியுள்ளேன்; விளக்கம் அதன் கண் காண்க. முன்றில் - சந்நிதியில்; திருமுன். பராய்க்கடன் - பரவுக்கடன்.

கக. வாரணச்சேவல் - சேவற்கோழி. வரி - புள்ளி; சித்திரமுமாம். சேவல் - முருகன் கொடி. மயில்-முருகன் வாகனம். தோரணங்களாக மணிகளை. சுரும்பு அணி கதம்பம் நாற்றி - வண்டுகள் வரிசையாக மொய்த்துள்ள கடப்ப மாலைகளைத் தொங்கவிட்டு. குரவை தூங்க - குரவைக்கூத்து நிகழ்ந்துவர. குரவை - கைகோத்தாடுங் கூத்து. "குரவை என்பது எழுவர் மங்கையர், செந் நிலைமண்டலக் கடகக் கைகோத்து, அந்நிலைக் கொட்பநின்றாடலாகும்"—**சிலப்பதிகாரம் :** பதிகம் எஎ. மேற்கோள். "குரவை என்றது, காமமும் வென்றியும் பொருளாகக் குரவைச் செய்யுள்பாட்டாக எழுவரேனும் எண்மரேனும் ஒன்பதின்மரேனும் கைபிணைத்தாடுவது"—**சிலப்.** ௩. அரங். க௨. உரை. பேர்

பா - ம்—*பின்னர்.

பயில்வடுப் பொலிந்த யாக்கை வேடர்தம் பதியாம் நாகற்
கெயிலுடைப் புரங்கள் செற்ற எந்தையார் மைந்த ரான
மயிலுடைக் கொற்ற வூர்தி வரையுரங் கிழித்த திண்மை
அயிலுடைத் தடக்கை வென்றி அண்ணலார் அருளி னாலே. கஉ

கானவர் குலம்வி ளங்கத் தத்தைபால் கருப்பம் நீட
ஊனமில் பலிகள் போக்கி உறுகடன் வெறியாட் டோடும்
ஆனஅத் திங்கள் செல்ல அளவில்செய் தவத்தி னாலே
பான்மதி உவரி ஈன்றா லெனமகப் பயந்த போது. க௩

கரிப்பரு மருப்பின் முத்தும் கழைவிளை செழுநீர் முத்தும்
பொருப்பினின் மணியும் வேடர் பொழிதரு மழையே யன்றி
வரிச்சுரும் பலைய வானின் மலர்மழை பொழிந்த தெங்கும்
அரிக்குறுந் துடியே யன்றி அமரர்துந் துபியும் ஆர்த்த. க௪

அணங்கு ஆடல் செய்து - பெரிய தேவராட்டியை வெறியாட்டயர்வித்து; பேரழகுவாய்ந்த வெறியாட்டைச் செய்து என்னலுமாம்.

கஉ. நெருங்கிய தழும்புகள் விளங்கிய உடலையுடைய வேடர்களுக்குத் தலைவனாகிய. எயில் - மதில்கள். எந்தையார் - சிவபெருமானின். கொற்ற வூர்தி - வெற்றிபொருந்திய வாகனமாகிய மயிலையுடையவராய். வரைஉரம் - கிரவுஞ்ச மலையின் மார்பைப் பிளந்த; வலிமையையழித்த எனினுமாம். அயில் - வேல். வென்றி அண்ணலார் - முருகப்பெருமான்.

க௩. கானவர் - வேடர். வெறியாட்டோடு ஊனமில் பலிகள் முதலிய செய்யத்தக்க கடன்களைச் செய்து. வெறியாடல் - தெய்வமேறியாடல்; சிலப்பதிகாரம் குன்றக் குரவை பார்க்க. ஆன...செல்ல - ஆகிய அவ்வம்மாதங் கழிய. பான்மதி - வெள்ளிய சந்திரனை. உவரி - கடல்.

க௪. கரிபரு மருப்பின் - யானைகளின் பருத்த கொம்பின். கழைவிளை - மூங்கிலில் உண்டாகும். நீர் - ஒளியுடைய. "நெடு நீர்வார் குழை" (நெடுநெல் வாடை க௩௬)—இதற்குப் "பெரிய ஒளி யொழுகின மகரக்குழையை" என்று ஆசிரியர் நச்சினார்க்கினியர் உரை கண்டிருத்தல் காண்க. பொருப்பினின்-மலையில் உண்டாகும். மணியுமாக. "முத்துடை மருப்பின் மழகளிறு"—பதிற்றுப் பத்து: உ௩. ௩. "தக்கமுத் திரண்டு வேறு தலசமே சலச மென்ன-இக்கதிர் முத்தந் தோன்றும் இடன்பதின் மூன்று சங்கம்-மைக்கரு முகில்வேய் பாம்பின் மத்தகம் பன்றிக் கோடு - மிக்கவெண் சாலி இப்பி மீன்தலை வேழக் கன்னல்" "கரிமருப் பைவாய் மான்கை கற்புடை மடவார் கண்டம் - இருசிறைக் கொக் கின் கண்டம் எனக்கடை கிடந்த மூன்றும் - அரியன வாதிப் பத்து நிறங்களு மணங்குந் தங்கட் - குரியன நிறுத்த வாறே எனவும் உரைப்பக் கேண்மின்" —**திருவிளையாடற்புராணம்:** மாணிக்கம் விற்றபடலம் ௫௩ - ௫௪. வரிச்சுரும்பு - வரிவண்டு. அரிக்குறுந்துடி - ௫ - ம் பாட்டுக் குறிப்பைப் பார்க்க.

பா - ம்—*தையல்பால்.

அருவரைக் குறவர் தங்கள் அகன்குடிச் சீறூர் ஆயம்
பெருவிழா எடுத்து மிக்க பெருங்களி கூரும் காலைக்
கருவரை காளா மேகம் ஏந்திய தென்னத் தாதை
பொரு*வரைத் தோள்க ளாரப் புதல்வனை எடுத்துக் கொண்டான். ௧௫

கருங்கதிர் விரிக்கு மேனிக் காமரு குழவி தானும்
இரும்புலிப் பறழின் ஓங்கி இறவுளர் அளவே யன்றி
அரும்பெறல் உலக மெல்லாம் அளப்பரும் பெருமை காட்டித்
தருங்குறி பலவுஞ் சாற்றுந் தன்மையிற் பொலிந்து தோன்ற. ௧௬

அண்ணலைக் கையில் ஏந்தற் கருமையால் "உரிமைப் பேருந்
திண்ணன் என் றியம்பும்" என்னத் திண்சிலை வேடர் ஆர்த்தார்
புண்ணியப் பொருளா யுள்ள பொருவில்சீர் உருவி னானைக்
கண்ணினுக் கணியாத் தங்கள் கலன்பல அணிந்தார் அன்றே. ௧௭

வரையுறை கடவுட் காப்பு மறக்குடி மரபில் தங்கள்
புரையில்தொல் முறைமைக் கேற்பப் பொருந்துவ போற்றிச் செய்து
விரையிளந் தளிருஞ் சூட்டி வேம்பிழைத் திடையே கோத்த
அரைமணிக் கவடி கட்டி அழகுற வளர்க்கு நாளில். ௧௮

---

௧௫. வரை - மலை. ஆயம் - திரள்; சனக்கூட்டம். கரிய மலை, கரிய மேகத்தைத் தாங்கியதுபோல.

௧௬. காமரு - விருப்பம் மருவிய. காமர் - அழகுமாம். "காமம் வருமென்பது விகாரத்தால் காமருவென நின்று, கண்டார்க்கு விருப்பம் வரும் என்பதாயிற்று"; "காமம் காமரென விகாரம்"—அடியார்க்கு நல்லார் உரை. சிலப்பதிகாரம்: ௪. அந்தி ௪௦; ௬. கடலாடு ௮௧. இரும்புலிப்பறழின் ஓங்கி-பெருமை பொருந்திய புலிக்குட்டியைப்போல வளர்ந்து. இறவுளர் அளவேயன்றி - வேடர்கள் மட்டில்லாமல். நற்குறிகள் பலவும் பலரறிய அமையுந் தன்மையில் தோன்ற.

௧௭. அண்ணலை - பெருமையிற் சிறந்த குழவியை. அருமையால் - கூடாமையால். திண்சிலை - வலிய வில்லினையுடைய. ஆர்த்தார் - ஆரவாரித்தார்கள். பொருவில் - ஒப்பில்லாத. அணியாம்படி. தங்கள் மரபிற் குரிய அணிகள் பல.

௧௮. வரையுறை கடவுள் காப்பு - முருகன் காவலாக. மறக்குடி - வேட்டுவக்குடி. புரையில் - குற்றமில்லாத. தொன்மை - பழைய. விரை - வாசனையுடைய. வேம்பு இழைத்து - மலைவேப்பங் கொட்டைகளை அலங்கரித்து; வேப்பங் கோலை (துண்டு துண்டாகத் தறித்து) இழைத்து என்போருமுளர். கவடி - பலகறை. அரைமணியுடன் கவடி கட்டி. மணிக்கவடி அரையில் கட்டி என்றலுமொன்று.

பா - ம்—*வலித்தோள்களார்ப்ப.

வருமுறைப் பருவந் தோறும் வளமிகு சிறப்பில் தெய்வப்
பெருமடை கொடுத்துத் தொக்க பெருவிறல் வேடர்க் கெல்லாம்
திருமலி துழனி பொங்கச் செழுங்*களி மகிழ்ச்சி செய்தே
அருமையிற் புதல்வர்ப் பெற்ற ஆர்வமுந் தோன்ற உய்த்தார். ௧௯

ஆண்டெதிர் அணைந்து செல்ல விடும்அடித் தளர்வு நீங்கிப்
பூண்திகழ் சிறுபுன் குஞ்சிப் புலியுகிர்ச் சுட்டி சாத்தி
மூண்டெழு சினத்துச் செங்கண் முளவுமுள் அரிந்து கோத்த
நாண்தரும் எயிற்றுத் தாலி நலங்கிளர் மார்பில் தூங்க. ௨௦

பாசொளி மணியோ டார்த்த பன்மணிச் சதங்கை ஏங்கக்
காசொடு தொடுத்த காப்புக் கலன்புனை அரைஞாண் சேர்த்தித்
தேசுடை மருப்பின் தண்டை செறிமணிக் குதம்பை மின்ன
மாசறு கோலங் காட்டி மறுகிடை யாடும் நாளில். ௨௧

தண்மலர் அலங்கல் தாதை தாய்மனங் களிப்ப வந்து
புண்ணியக் கங்கை நீரில் புனிதமாந் திருவாய் நீரில்
உள்நனைந் தமுதம் ஊறி ஒழுகிய மழலைத் தீஞ்சொல்
வண்ணமென் பவளச் செவ்வாய் குதட்டியே வளரா நின்றார். ௨௨

---

௧௯. சப்பாணி முதலிய பருவங்கள்தோறும். தெய்வத்துக்குப் பெருமை பொருந்திய பொங்கல் சோறு முதலியன. தொக்க - நெருங்கிய. திருமலி துழனி - மங்கல ஒலிகள். களி - களிப்பு; கள்ளாட்டு. உய்த்தார் - நடாத்தினர்.

௨௦. ஒருவருஷம் ஆகத் தளர்நடை நீங்கி. பூண் - ஆபரணம். குஞ்சி - தலை மயிரிலே. புலிஉகிர் - புலிநகத்தால் செய்யப்பட்ட; புலி நகம் பதித்த. முளவு - முள்ளம் பன்றியின். நாண்தரு எயிற்றுத் தாலி - கயிற்றில் கட்டப்பட்ட புலிப் பல் மாலை. கிளர் - விளங்கும். தூங்க - அசைய.

௨௧. பாசொளி மணியோ டார்த்த - பசுமை ஒளிவீசும் நீலமணியோடு கோத்த. ஏங்க - ஒலிக்க. காசொடு...புனை - செப்புக்காசுடன் சேர்த்த காவற் கலன் (தாயித்துக் கூடு) புனைந்த. ஒளியுடைய யானைக் கொம்பால் செய்யப் பெற்ற தண்டையும். செறிமணிகுதம்பை-மணியிழைத்த காதணியும். குதம்பை- காதில் தொங்க அணியும் ஓர் ஆபரணம்; கடிப்பிணை. மறுகிடை - தெருவில்.

௨௨. அலங்கல் - மாலை. கங்கை நீரில் - கங்கை நீரைப் பார்க்கிலும். (பின் நிகழ்ச்சிக் குறிப்பு) தீம் - இனிய.

பா - ம்—*கழி.

போருபுலிப் பார்வைப் பேழ்வாய் முழையெனப் பொற்கை நீட்டப்
பரிவுடைத் தந்தை கண்டு பைந்தழை கைக்கொண் டோச்ச
இருசுடர்க் குறுகண் தீர்க்கும் எழில்வளர் கண்ணீர் மல்கி
வருதுளி முத்தம் அத்தாய் வாய்முத்தம் கொள்ள மாற்றி. உ௩

துடிக்குற டுருட்டி ஓடித் தொடக்குநாய்ப் பாசஞ் சுற்றிப்
பிடித்தறுத் தெயினப் பிள்ளைப் பேதையர் இழைத்த வண்டல்
அடிச்சிறு தளிரால் சிந்தி அருகுறு சிறுவ ரோடும்
குடிச்செறி குரம்பை எங்கும் குறுநடைக் குறும்பு செய்து. உ௪

அனையன பலவும் செய்தே ஐந்தின்மேல் ஆன ஆண்டின்
வினைதரு வடிவார் கண்ணி மறச்சிறு மைந்த ரோடும்
சினைமலர்க் காவு ளாடிச் செறிகுடிக் குறிச்சி சூழ்ந்த
புனைமருப் புழலை வேலிப் புறச்சிறு கானில் போகி. உ௫

கடுமுயற் பறழி னோடுங் கானஏ னத்தின் குட்டி
கொடுவரிக் குருளை செந்நாய் கொடுஞ்செவிச் சாப மான
முடுகிய விசையி லோடித் தொடர்ந்துடன் பற்றி முற்றத்
திடுமரத் *தாளில் கட்டி வளர்ப்பன எண்ணி லாத. உ௬

---

உ௩. பார்வை மிருகமாகிய புலியின். பேழ் - பிளந்த. முழை - சிறுகுகை; பொந்து. ஓச்ச - ஓட்ட. இருசுடர்க்கு உறுகண் தீர்க்கும் - சிவபிரானுடைய சோமசூரியர்களென்னும் இரண்டு கண்களின் துன்பத்தைத் தீர்க்கப்போகும். எழில் - அழகு. மல்கி - பெருகி.

உ௪. துடிக்குறடு - உடுக்கை வடிவாய்ச் செய்த மரக் கட்டையை; தோலில்லா உடுக்கையை. கட்டப்பட்ட நாயின் கயிற்றைச் சுற்றி. எயினப் பிள்ளைப் பேதையர் - வேடச்சிறுமிகள். இழைத்த வண்டல் - கட்டிய சிறுவீடுகளை. குடிச்செறி குரம்பை - குடி நெருங்கிய குடிசைகள்.

உ௫. வினைதரு - செய்யப்பெற்ற. வடிவு ஆர் கண்ணி - அழகு நிறைந்த கொண்டை மாலை யணிந்த. 'வார்கண்ணி' எனக்கொண்டு வாரையும் (வலையையும்) கண்ணியையும் எடுத்துக்கொண்டு எனினும் பொருந்தும். சினை மலர் காவுள் - கிளைகளில் மலர்களையுடைய சோலைகளில். செறி குடி - நெருங்கிய குடிகளையுடைய. புனை மருப்பு உழலை வேலிப்புறம் - யானைக் கொம்பினுல் கோலப்பெற்ற உழலை வழியையுடைய வேலிப் புறத்தேயுள்ள. (உழலை - போவோர் வருவோர்க்கு இடந்தந்து பின் உழன்று தன் நிலையில் நிற்கும் மரம்).

உ௬. கடுமுயல் பறழினோடும் - அதிவிசையினையுடைய முயற்குட்டியுடனும். கான ஏனத்தின் - காட்டுப் பன்றியின். கொடுவரிக் குருளை - வளைந்தவரியினையுடைய புலிக்குட்டியும். செந்நாய் கொடுஞ் செவிச் சாபமான - செந்

பா - ம்—*திரளில்.

அலர்பகல் கழிந்த அந்தி ஐயவிப் புகையும் ஆட்டிக்
குலமுதுகுறத்தி ஊட்டிக் கொண்டுகண் டுயிற்றிக் கங்குல்
புலரஊன் உணவு நல்கிப் புரிவிளை யாட்டின் விட்டுச்
சிலமுறை யாண்டு செல்லச் சிலைபயில் பருவம் சேர்ந்தார். உஎ

தந்தையும் மைந்த னாரை நோக்கித்தன் தடித்த தோளால்
சிந்தையுள் மகிழப் புல்லிச் சிலைத்தொழில் பயிற்ற வேண்டி
முந்தைஅத் துறையில் மிக்க முதியரை அழைத்துக் கூட்டி
வந்தநாட் குறித்த தெல்லாம் மறவர்க்குச் சொல்லி விட்டான். உஅ

"வேடர்தங் கோமான் நாகன் வென்றிவேள் அருளால் பெற்ற
சேடரின் மிக்க செய்கைத் திண்ணன்வில் பிடிக்கின் றான்" என்
றாடியல் துடியும் சாற்றி அறைந்தபேர் ஓசை கேட்டு
மாடுயர் மலைகள் ஆளும் மறக்குலத் தலைவ ரெல்லாம். உகூ

மலைபடு மணியும் பொன்னும் தரளமும் வரியின் தோலும்
கொலைபுரி களிற்றுக் கோடும் பீலியின் குவையும் தேனும்
தொலைவில்பல் நறவும் ஊனும் பலங்களும் கிழங்கும் துன்றச்
சிலைபயில் வேடர் கொண்டு திசைதொறும் நெருங்க வந்தார். ௩0

---

நாயின் கொடிய செவிகளையுடைய குட்டியும் ஆகியவற்றை. சாபம் - சிங்கக் குட்டி என்பது பழைய குறிப்புரை. சரபமான என்னும் பாடங்கொண்டு, கடுமுயல்......செந்நாய் ஆகியவற்றைச் சரபத்தைப் போல ஓடிப் பற்றி என்று பொருள் கூறலுமொன்று. இட்டு வளர்க்கும் மரத்தடியில்.

உஎ. அலர் பகல் - உதயமாகிய பகல். அந்தி ஐயவி புகையும் ஆட்டி - அந்தி வேளையில் கடுகின் புகையால் திருஷ்டி சுற்றி. ஊட்டி - உணவு ஊட்டி. கங்குல் புலர - பொழுது விடிய.

உஅ. புல்லி - தழுவி. வந்தநாள் குறித்ததெல்லாம் - விற்பயிற்சிக்குரித்தாக உற்ற நாள் முதலியன குறிக்கப்பெற்ற எல்லாம்.

உகூ. வேள் - முருகக் கடவுள். சேடரின் - அறிவுடையோரினும்; ஆதி சேடரினும். ஆடு இயல் துடியும் - வெற்றிப் பறையும். மாடு - பக்கங்களில்.

௩0. தரளமும்-முத்தும். வரியின் - புலியின். களிற்றுக் கோடும் - யானைக் கொம்பும். குவையும் - கூட்டமும். நறவும் - கள்ளும். பலங்களும் - பழங்களும். துன்ற - நெருங்க; ஒன்றாக. "யானைவெண் கோடு மகிலின் குப்பையு - மான் மயிர்க் கவரியு மதுவின் குடங்களுஞ் - சந்தனக் குறையுஞ் சிந்தூரக் கட்டியு - மஞ்சனத் திரளு மணியரி தாரமு - மேல வல்லியு மிருங்கறி வல்லியுங் - கூவை நீறுங் கொழுங்கொடிக் கவலையுந் - தெங்கின் பழனுந் தேமாங் கனியும் - பைங் கொடிப் படலையும் பலவின் பழங்களுங் - காயமுங் கரும்பும் பூமலி கொடியுங் - கொழுந்தாட் கமுகின் செழுங்குலைத் தாறும் - பெருங்குலை வாழையி னிருங் கனித் தாறு - மாளியி னணங்கு மரியின் குருளையும் - வாள்வரிப் பறழு மத

மல்கிய வளங்கள் எல்லாம் நிறைந்திட மாறில் சீறார்
எல்லையில் அடங்கா வண்ணம் ஈண்டினர் கொணர்ந்தார் எங்கும்
"பல்பெருங் கிளைஞர் போற்றப் பராய்க்கடன் *பலவும் செய்து
வில்விழா எடுக்க" என்று விளம்பினன் வேடர் கோமான். ௩க

பான்மையில் சமைத்துக் கொண்டு படைக்கலம் வினைஞர் ஏந்தத்
தேனலர் கொன்றை யார்தந் திருச்சிலைச் செம்பொன் மேரு
வானது கடலின் நஞ்சம் ஆக்கிட அவர்க்கே பின்னும்
கானஊன் அமுதம் ஆக்கும் சிலையினைக் காப்புச் சேர்த்தார். ௩உ

சிலையினைக் காப்புக் கட்டும் திண்புலி நரம்பில் செய்த
நலமிகு காப்பு நன்னாண் நாகனார் பயந்த நாகக்
குலம்விளங் கரிய †குன்றின் கோலமுன் கையில் சேர்த்தி
மலையுறை மாக்கள் எல்லாம் வாழ்த்தெடுத் தியம்பி னார்கள். ௩௩

ஐவன அடிசில் வெவ்வே றமைத்தன புற்பாற் சொன்றி
மொய்வரைத் தினைமென் சோறு மூங்கில்வன் பதங்கள் மற்றும்
கைவினை எயின ராக்கிக் கலந்தஊன் ‡கிழங்கு துன்றச்
செய்வரை உயர்ப்ப எங்கும் கலந்தனர் சினவில் வேடர். ௩௪

---

கரிக் களபமுங் - குரங்கின் குட்டியுங் குடாவடி யுளியமும் - வரையாடு வருடையு மடமான் மறியுங் - காசறைக் கருவு மாசறி நகுலமும் - பீலி மஞ்ஞையு நாவியின் பிள்ளையுங் - கானக் கோழியுந் தேமொழிக் கிள்ளையு - மலை மிசை மாக்க டலைமிசைக் கொண்டு"—**சிலப்பதிகாரம்:** உடு காட்சி. ௩எ - ௫௫.

௩க. ஈண்டினர் - நெருங்கினராய். பராய்க்கடன் பலவும் - பரவுக்கடன் பலவும்; வனதெய்வ வழிபாடு பலி யீடு முதலியன. எடுக்க - செய்க.

௩உ. பான்மையில் சமைத்துக்கொண்டு - முறைமையோடு (வில் விழா விற்குரிய பொருள்களை எல்லாம்) முடித்துக்கொண்டு. வினைஞர்-அத்தொழிலில் வல்லவர்கள். தேனலர் கொன்றையார்தம்-சிவபிரானுடைய. அவர்க்கே-அச்சிவ பெருமானுக்கே. தேவர்கள் சிவபிரானது வில்லாகிய மலையை மத்தாக நாட்டிப் பாற்கடல் கடைந்தபோது, அதனால் நஞ்சமெழுந்ததென்பதும், அதனைச் சிவ பிரான் உண்டார் என்பதும் புராண கதை. முன்னே மேரு என்னும் ஒருவில் நஞ்சை ஆக்கிட அதனை உண்ட சிவபெருமானுக்கே, பின்னும் ஊனமுதம் ஆக்கி அளிக்க மற்றுமொரு வில்லுக்குக் காப்புக் கட்டினரென்க. சிலை - (கண் ணப்பர்) வில்.

௩௩. நாகர் குலம் - வேடர் குலம். குன்றின் - குன்றனைய திண்ணனாரின்.

௩௪. ஐவன அடிசில் - மலைநெற்சோறு. புல் பால் சொன்றி - புல்லரிசிச் சோறு. மூங்கில்வன் பதங்கள் - மூங்கிலரிசிச் சோறுகள். கைவினை எயினர் - சமயற்றொழிலில் வல்ல வேடர்கள். செய்வரை உயர்ப்ப - செய்குன்றைப் போலக் குவிக்க.

**பா - ம்—***பலவுநேர்ந்து; மிகவுஞ் செய்து. †கன்றின். ‡கிழங்குகூட; கிழங் குங்கூட.

செந்தினை இடியும் தேனும் அருந்துவார் தேனில் தோய்த்து
வெந்தஊன் அயில்வார் வேரி விளங்கனிக் கவளம் கொள்வார்
நந்திய ஈயல் உண்டி நசையொடு மிசைவார் வெவ்வே
றந்தமில் உணவின் மேலோர் ஆயினர் அளவி லார்கள். ௩௫

அயல்வரைப் *புலத்தின் வந்தார் அருங்குடி இருப்பின் உள்ளார்.
இயல்வகை உணவில் ஆர்ந்த எயிற்றியர் எயினர் எல்லாம்
உயர்கதிர் உச்சி நீங்க ஒழிவில்பல் நறவு மாந்தி
மயலுறு களிப்பின் நீடி வரிசிலை விழவு கொள்வார். ௩௬

பாசிலைப் படலை சுற்றிப் பன்மலர்த் தொடையல் சூடிக்
காசுடை வடத்தோல் கட்டிக் கவடிமெய்க் †கலன்கள் பூண்டு
‡மாசில்சீர் வெட்சி முன்னா §வருந்துறைக் கண்ணி சூடி
ஆசில்ஆ சிரியன் ஏந்தும் அடற்சிலை மருங்கு சூழ்ந்தார். ௩௭

தொண்டக முரசும் கொம்பும் துடிகளும் துளைகொள் வேயும்
எண்டிசை நிறைந்து விம்ம எழுந்தபேர் ஒலியி னோடும்
திண்திறல் மறவர் ஆர்ப்புச் சேண்விசும் பிடித்துச் செல்லக்
கொண்டசீர் விழவு பொங்கக் குறிச்சியை வலங்கொண் டார்கள். ௩௮

குன்றவர் ¶வரிகொண் டாடக் கொடிச்சியர் துணங்கை ஆடத்
துன்றிய மகிழ்ச்சி யோடுஞ் சூர்அர மகளிர் ஆட

---

௩௫. இடியும் - மாவும். வேரி விளங்கனிக் கவளம் - தேனொடு கலந்த விளாம்பழக் கவளம். நந்திய ஈயல் - மிகுந்த ஈசல். நசையொடு மிசைவார் - விருப்பொடு உண்பார். உணவின் மேலோர் ஆயினர் - உணவினால் மகிழ்ச்சி மேம்பட்டவராயினர்; உணவின் மேற்பட்டவராயினர் என்னலுமாம்.

௩௬. வந்தாரும் உள்ளாரும். உணவில் ஆர்ந்த - உணவினால் மகிழ்ச்சி நிறைந்த. எயிற்றியர் எயினர் - வேடிச்சிகளும் வேடர்களும். களிப்பு - கள்ளின் களிப்பு. வரிசிலை விழவு - வரிந்த வில் விழா.

௩௭. பாசிலைபடலை - பச்சிலை மாலை. தொடையல் - மாலை. காசுடை வடத் தோல்கட்டி - மாணிக்கங்கள் கோக்கப் பெற்ற தோல்வடத்தை அரையில்கட்டி. கவடிமெய்க் கலன்கள் - பலகறைகளாலாகிய உடற் பூண்களை. வெட்சிமுத லாகச் சொல்லப்பட்ட மாலைகள்; போர்த்துறைக்குரிய மாலைகள். ஆசுஇல் - குற்றமில்லாத. அடல் - வலிமை யுடைய.

௩௮. தொண்டக முரசும் - குறிஞ்சிப் பறையும். தொண்டகமும் முரசும் எனக் கொள்வோருமுளர். வேயும் - புல்லாங்குழலும். சேண் விசும்பு - தூரத்துள்ள ஆகாயத்தை.

௩௯. வரி - பாட்டு; வரிப்பண்; இங்கே குறிஞ்சிப் பண்; வரிக்கூத்துமாம். (சிலப்பதிகாரம்: ௭. கானல் வரி ௧; ௩. அரங்கே. ௨௪ - உரை பார்க்க.) குறிஞ்

பா - ம்—*புறத்தின். †கலங்கள் பூண்டார். ‡மாசிலா. §வருநறை. ¶களி.

வென்றிவில் விழவி னோடும் விருப்புடை ஏழா நாளாம்
அன்றிரு மடங்கு செய்கை அழகுற அமைத்த *பின்றை. ௩௯

வெங்கதிர் விசும்பின் உச்சி மேவிய பொழுதில் எங்கும்
மங்கல வாழ்த்து மல்க மருங்குபல் லியங்கள் ஆர்ப்பத்
தங்கள்தொல் மரபின் விஞ்சைத் தனுத்தொழில் வலவர் தம்பால்
பொங்கொளிக் குரும்போர் ஏற்றைப் பொருசிலை பிடிப்பித் தார்கள். ௪0

போற்றட வரையின் பாங்கர்ப் புரிவுறு கடன்முன் செய்த
விற்றொழிற் †களத்தில் நண்ணி விதிமுறை வணங்கி மேவும்
அற்றைநாள் தொடங்கி நாளும் அடற்சிலை ஆண்மை முற்றக்
கற்றனர் என்னை யாளுங் கானவர்க் கரிய சிங்கம். ௪க

வண்ணவெஞ் சிலையும் மற்றப் படைகளும் மலரக் கற்றுக்
கண்ணகல் சாயல் பொங்கக் கலைவளர் திங்க ளேபோல்
எண்ணிரண் டாண்டின் செவ்வி எய்தினார் எல்லை இல்லாப்
புண்ணியந் ‡தோன்றி மேன்மேல் வளர்வதன் பொலிவு போல்வார்.

வேறு

இவ்வண்ணந் திண்ணனார் நிரம்பு நாளில் இருங்குறவர் பெருங் குறிச்சிக் கிறைவன் ஆய, மைவண்ண வரைநெடுந்தோள் நாகன் தானும் மலையெங்கும் வனமெங்கும் வரம்பில் காலம், கைவண்ணச்

சிப் பண்ணைப்பாடி ஆட. கொடிச்சியர் - வேடிச்சிகள். துணங்கை-துணங்கைக் கூத்து ; சிங்கிக்கூத்து ; " பழுப்புடை இரு கை முடக்கி அடிக்கத் - துடக்கிய நடையது துணங்கையாகும்." துன்றிய - மிக்க ; நிறைந்த. சூர் அர மகளிர் - (இவ்வாடல்களைப் பார்த்து மலையிலுள்ள) கொடுமையுடைய தெய்வ மகளிர். ஏழாம் நாளன்று.

௪0. உச்சிப்பொழுதில். மல்க - நிரம்ப. மருங்கு - அருகே. பல்லியங்கள் - பல வாத்தியங்கள். தங்கள் பழைய மரபிற்குரிய வித்தையாகிய வில் தொழில் வல்லவர்களிடத்தில். ஏற்றை - ஆண் சிங்கம் போன்ற திண்ணனாரை ; இடபம் போன்ற எனினுமாம். பொருசிலை - போர் வில்.

௪க. அழகு பொருந்திய அகன்ற மலைப்பக்கத்தில். புரிவுறு கடன் - செய் யத்தக்க கடன்களை ; புரி - விருப்பமுமாம். ஆண்மை - வல்லமை ; ஆளுந் தன்மை.

௪உ. வண்ணம் - அழகிய. மலர - நன்றாக; விரிவாக. கண்ணகல் சாயல் - கண்ணுக்கடங்காத அழகு. செவ்வி - வயது.

௪௩. நிரம்பு நாளில் - பதினாறு வயதுடன் புண்ணியப் பொலிவு நிரம்பு நாளில். மைவண்ண வரை - கரிய மலைபோன்ற. கை வண்ணச் சிலை-கையிற்

பா - ம்—*பின்னர். †களத்தை. ‡திரண்டு.

சிலைவேட்டை யாடித் தெவ்வர் கணநிரைகள் பலகவர்ந்து கானங் காத்து, மெய்வண்ணந் தளர்மூப்பின் பருவம் எய்தி வில்லுழவின் பெருமுயற்சி மெலிவான் ஆனான். சங

அங்கண்மலைத் தடஞ்சாரற் புனங்கள் எங்கும் அடலேனம் புலி கரடி கடமை ஆமா, வெங்கண்மரை கலையொடுமான் முதலா யுள்ள மிருகங்கள் †மிகநெருங்கி மீதூர் காலைத், "திங்கள்முறை வேட்டை வினை தாழ்த்த" தென்று ‡சினவேடர் தாமெல்லாந் திரண்டு சென்று, தங்கள்குல முதற்றலைவ னாகியுள்ள தண்டெரியல் நாகன்பால் சார்ந்து சொன்னார். சச

சொன்னவுரை கேட்டலுமே நாகன் தானும் சூழ்ந்துவருந் தன் மூப்பின் தொடர்வு நோக்கி, முன்னவர்கட் குரைசெய்வான் "மூப்பி னாலே முன்புபோல் வேட்டையினில் முயல கில்லேன், என்மகனை உங்களுக்கு நாத னாக எல்லீருங் கைக்கொள்மின்" என்ற போதின், அன்னவரும் இரங்கிப்பின் மகிழ்ந்து தங்கோன் அடிவணங்கி இம் மாற்றம் அறைகின் றார்கள். சரு

"இத்தனைகா லமும்நினது சிலைக்கீழ்த் தங்கி இனிதுண்டு தீங்கின்றி இருந்தோம் இன்னும், §அத்த!நின தருள்வழியே நிற்ப தல்லால் அடுத்தநெறி வேறுளதோ அதுவே அன்றி, மெய்த்தவிறல் ¶திண் ணனையும் மரபில் சால மேம்படவே பெற்றளித்தாய் விளங்கு மேன்மை, வைத்தசிலை மைந்தனைஈண் டழைத்து நுங்கள் வரையாட்சி அருள்" என்றார் மகிழ்ந்து வேடர். சசு

சிலைமறவர் உரைசெய்ய நாகன் தானும் திண்ணனைமுன் கொண்டு வரச் செப்பி விட்டு, "மலைமருவு நெடுங்கானில் கன்னி வேட்டை

---

பிடித்த அழகிய வில்லினால். தெவ்வர் கணநிரைகள் - பகைவர்களின் பசுக் கூட்டங்களை. மெய் வண்ணம் - உடலியல்; தேக நிலை. வில்லுழவின் - வில் தொழிலின்.

சச. அங்கண் - அழகிய இடத்தையுடைய. தடம் - விசாலமான. அடல்- போர்; வலிமையுடைய. ஏனம் - பன்றி. கடமை ஆமா - கடமையென்னும் காட்டுப் பசு. மரை - ஒருவகை மான். கலை - கலைமான். திங்கள் முறை-மாதந் தோறும் முறையாகச் செய்யும். தண் தெரியல் - குளிர்ந்த மாலையை அணிந்த.

சரு. தொடர்வு - தொடர்ச்சி. மாற்றம் - மறுமொழி.

சசு. உடம்பில் வலிமையுடைய திண்ணனை. சால - மிகுதியும். வரை யாட்சி - மலையினதும் மலை சார்ந்த ஊர்களினதும் ஆட்சி.

சஎ. சிலை மறவர் - வில் வேடர். மலைகள் விளங்கும். கன்னி வேட்டை - (நல்ல நாள் குறித்து ஆடும்) முதல்வேட்டை. காட்டில் பலியை(வனதேவதை) மகிழ ஊட்ட. தேவராட்டி - தெய்வமேறப் பெற்றவள். "வழங்கு விற்றடக்கை

பா - ம்—*கலைகளொடுமுதலா. †பல. ‡சிலை. §அத்தஉன. ¶திண்ணனையுன்.

மகன்போகக் காடுபலி மகிழ வூட்டத், தலைமரபின் வழிவந்த தேவ ராட்டி தனைஅழைமின்" எனஅங்குச் சார்ந்தோர் சென்று, நிலைமை யவள் தனக்குரைப்ப நரைமூ தாட்டி நெடிதுவந்து விருப்பினொடுங் கடிது வந்தாள். சஎ

கானில்வரித் தளிர்துதைந்த கண்ணி சூடிக் கலைமருப்பின் அரிந்த குழை காதில் பெய்து, மானின்வயிற் றரிதாரத் திலகம் இட்டு மயிற் கழுத்து மனவுமணி வடமும் பூண்டு, தானிழிந்து திரங்கிமுலை சரிந்து தாழத் தழைப்பீலி மரவுரிமேல் சார எய்திப், பூநெருங்கு தோரைமலி சேடை நல்கிப் போர்வேடர் கோமானைப் போற்றி நின்றாள். சஅ

நின்றமுது குறக்கோலப் படிமத் தாளை நேர்நோக்கி "அன்னை நீ நிரப்பு நீங்கி, நன்றினிதின் இருந்தனையோ " என்றுகூறும் நாகன் எதிர் நலம்பெருக வாழ்த்தி " நல்ல, மென்தசையும் ஈயலொடு நறவும் வெற்பில் விளைவளனும் பிறவளனும் வேண்டிற் றெல்லாம், அன்றுநீ வைத்தபடி பெற்று வாழ்வேன் அழைத்தபணி என்"என்றாள் அணங்கு சார்ந்தாள். சகூ

"கோட்டமில்என் குலமைந்தன் திண்ணன் எங்கள் குலத்தலைமை யான்கொடுப்பக் கொண்டு பூண்டு, பூட்டுறுவெஞ் சிலைவேடர் தம்மைக்

---

மறக்குடி தாயத்துப், பழங்கடனுற்ற முழங்குவாய்ச் சாலினி, தெய்வமுற்று "
—**சிலப்பதிகாரம் :** கஉ. வேட்டு. ௭ - அ.

சஅ. கானில் வரி தளிர் துதைந்த கண்ணி - காட்டிலிருக்கிற வரியுடைய தளிர் நிறைந்த கொண்டை மாலையை. கலை மருப்பின் - கலைமான் கொம்பிலே. குழை-குண்டலத்தை. அரிதாரத்திலகம் - கஸ்தூரிப் பொட்டு. பலவகைப்பட்ட அரிதாரங்களுள் மானின் வயிற்றிற் பிறக்கும் அரிதாரம் சிறந்த தென்க. மயிற் கழுத்து மனவுமணி - மயிற் கழுத்து நிறம்போன்ற (சாயமேறிய) அக்கு மணி ; தட்டையாக அரியப் பெற்று உலர்ந்த மயிற் கழுத்து இடை இடையே கோக் கப் பெற்ற சங்கு மணி என்போருமுளர். முலை தானிழிந்து திரங்கி - முலை யானது சரிந்து சுருங்கி ; " கொங்கை திரங்கி "—**காரைக்காலம்மையார் :** மூத்த. க. தழையும் மயிற்பீலியும் என்றும், தழையாகிய மயிற் பீலி என்றுங் கொள்ளலாம். எய்தி - தேவராட்டி அடைந்து. தோரை - ஒரு வகை நெல் ; மூங்கலரிசியுமாம். சேடை - அட்சதை. பூக்கள் நெருங்கிய அரிசி அட்சதை யைத் தூவி என்றபடி. போற்றி - வாழ்த்தி.

சகூ. படிமத்தாளை - தேவராட்டியை ; படிமம் - தெய்வ வடிவம். நிரப்பு- வறுமை. மிருதுவான மாமிசமும் ஈசலும் கள்ளும் (தேனும்). வெற்பில் - மலையில். அணங்கு சார்ந்தாள் - தெய்வமேறப் பெற்றவள் ; தேவராட்டி.

௫௦. கோட்டம் இல் - நடு நிலை பிறழாத. பொருப்புரிமை புகுகின்றான் - மலையாட்சியில் தலைப்படப் போகிறான். வேறு புலம் - வேறு நாடுகளை.

காக்கும் பொருப்புரிமை புகுகின்றான் அவனுக் கென்றும், வேட்டை வினை எனக்குமே லாக வாய்த்து வேறுபுலங் கவர்வென்றி மேவு மாறு, காட்டிலுறை தெய்வங்கள் விரும்பி உண்ணக் காடுபலி ஊட்''டென்றான் கவலை இல்லான். ௫0

மற்றவன்தன் மொழிகேட்ட வரைச்சூ ராட்டி "மனமகிழ்ந்திங் கன்போடு வருகின் றேனுக், கெற்றையினுங் குறிகள்மிக நல்ல ஆன இதனாலே உன்மைந்தன் திண்ண னான, வெற்றிவரிச் சிலையோன்நின் அளவி லன்றி மேம்படுகின் றான்''என்று விரும்பி வாழ்த்திக், கொற்றவனத் தெய்வங்கள் மகிழ ஊட்ட வேண்டுவன குறைவின்றிக் கொண்டு போனாள். ௫க

தெய்வநிகழ் குறமுதியாள் சென்ற பின்பு திண்ணனார் சிலைத் தாதை அழைப்பச் சீர்கொள், மைவிரவு நறுங்குஞ்சி வாசக் கண்ணி மணிநீல *மலையொன்று வந்த தென்னக், கைவிரவு சிலைவேடர் போற்ற வந்து காதல்புரி தாதைகழல் வணங்கும் போதில், †செவ்வரைபோற் புயமிரண்டும் செறியப் புல்லிச் செழும்புலித்தோல் ‡இருக்கையினில் சேர வைத்தான். ௫உ

முன்னிருந்த மைந்தன்முகம் நோக்கி நாகன் "மூப்பெனைவந் தடைதலினால் முன்பு போல, என்னுடைய முயற்சியினால் வேட்டை யாட இனிஎனக்குக் கருத்தில்லை எனக்கு மேலாய், மன்னுசிலை மலையர்குலக் காவல் பூண்டு மாறெறிந்து மாவேட்டை ஆடி என்றும், உன்னுடைய மரபுரிமை தாங்கு வாய்''என் றுடைதோலுஞ் சுரிகையுங்கைக் கொடுத்தான் அன்றே. ௫௩

---

௫க. வரைச் சூராட்டி - மலையில் வாழும் தேவராட்டி. வருகின்றவளாகிய எனக்கு. எற்றையினும் - எந்நாட்களினும் நிகழாத. கொற்ற - வெற்றியினை யுடைய.

௫உ. கரிய மை அனைய நல்லதலைமயிரில் மணங்கமழும் மாலையை யணிந்த நீலமணி மலையொன்று. விரவு - உவம உருபு. "மணிநிற மால்வரை'' ஐங்குறுநூறு : உ0க. கைவிரவு - கையிற்றங்கிய. செவ்வரை - செப்பமான மலை. செறியப் புல்லி - நெருங்கத் தழுவி.

௫௩. மாறு எறிந்து - பகைவர்களை வீழ்த்தி. மா - விலங்கு. உடைதோலும் சுரிகையும் - தன்னுடைய கேடகத்தையும், உடைவாளையும். உடைதோல் - தோலுடைய கேடகத்தை என்னலுமாம்; தோலுடையை என் போருமுளர்.

பா - ம்—*வரையொன்று வந்தாலென்ன. †செய்வரை. ‡இருக்கையின்முன்.

தந்தைநிலை உட்கொண்டு தளர்வு கொண்டு தங்கள்குலத் தலைமைக்குச் *சார்வு தோன்ற, வந்தகுறை பாடதனை நிரப்பு மாறு மனங்கொண்ட குறிப்பினால் மருமை கொண்டு, முந்தையவன் கழல் வணங்கி முறைமை தந்த முதற்சுரிகை உடைதோறும் வாங்கிக் கொண்டு, சிந்தைபரங் கோளநின்ற திண்ண னார்க்குத் திருத்தாதை முகமலர்ந்து செப்பு கின்றான். ருச

"நம்முடைய குலமறவர் சுற்றத் தாரை நான்கொண்டு பரித்த தன்மேல் நலமே செய்து, தெம்முனையில் அயற்புலங்கள் கவர்ந்து †கொண்ட திண்சிலையின் வளமொழியாச் சிறப்பின் வாழ்வாய்,வெம்முனையின் வேட்டைகளும் உனக்கு வாய்க்கும் விரைந்துநீ தாழாதே வேட்டை ஆட, இம்முரண்வெஞ் சிலைவேடர் தங்க ளோடும் எழுக" என விடைகொடுத்தான் இயல்பில் ‡நின்றான். ருரு

செங்கண்வயக் கோளரியே றன்ன திண்மைத் திண்ணனார் செய்தவத்தின் பெருமை பெற்ற, வெங்கண்விறல் தாதைகழல் வணங்கி நின்று விடைகொண்டு புறம்போந்து வேட ரோடும், மங்கலநீர்ச் சுனைபடிந்து மனையின் வைகி வைகிருளின் புலர்காலை வரிவிற் சாலைப், பொங்குசிலை அடல்வேட்டைக் கோலங் கொள்ளப் புனைதொழிற்கை வினைஞரொடும் பொலிந்து புக்கார். ருசு

ருச. சார்வு - சார்பு ; துணை. சுரிகையை முதலில் ஏற்றது வீரக் குறிப்பு. சிந்தையைச் சிவங் கொள்ள நின்றது என்பது, திண்ணனார் முன்னைப் பிறவியிலுஞ் சிவ சிந்தையை யுடையவராயிருந்தார் என்பதை அறிவிப்பது. திண்ணனார் சிந்தை பண்பட்டதாதலின் அதனைச் சிவம் தானே கொண்டதென்க. "பூவினிற் கந்தம் பொருந்திய வாறுபோல் - சீவனுக்குள்ளே சிவ மணம் பூத்தது"—திருமந்திரம்: யோகம் ௩. ஈன்ற தந்தை யளித்த சுரிகையையும் கேடகத்தையும் திண்ணனார் புறத்தே ஏற்றாரேனும், அவர் தம் அகத்தே சிவ தந்தை நின்று அவரைத் தம் வழியில் செலுத்தப் போகிறார் என்பது குறிப்பு.

ருரு. பரித்ததன்மேல் - காத்ததற்கு மேலாக. தெம்முனையில் அயற்புலங்கள் - பகைமுனையில் அயல் ஊர்களை. "தெவ்வர் முனைகவர்ந்து"—முல்லைப் பாட்டு : 18-19. வெம்முனையில் - கொடிய வேட்டைப்போரில் ; வேட்டைத் தொழிலில். "கொடிய துணிவையுடைய" என்பது பழைய குறிப்புரை ; "கொடியனவாகக் கோபித்துவரும் மிருகங்களை வேட்டையாடுதலும்"—மகாலிங்க ஐயர். இம்முரண் - இவ்வலிமையுடைய. வேடரியல்பில்.

ருசு. சிவந்த கண்ணையும் வலிமையையும் எதிர்த்தவர்களைக் கொல்வதையுமுடைய சிங்கஏறுபோல. விறல் - வெற்றியுடைய. வைகிருளின் புலர் காலை - தங்கிய இருள் விடியுங்காலையில். அடல் - போர். புனை தொழில் - அலங்கரிக்கும் தொழில். கைவினைஞர் - கைத்தொழிலாளர்.

பா - ம்—*சாய்வு. †கொண்டுதிண் சிலையில். ‡மிக்கான்.

வேறு

நெறிகொண்ட குஞ்சிச் சுருள்துஞ்சி நிமிர்ந்து பொங்க
முறிகொண்ட கண்ணிக் கிடைமொய்யொளிப் பீலி சேர்த்தி
வெறிகொண்ட முல்லைப் பிணைமீது குறிஞ்சி வெட்சி
செறிகொண்ட வண்டின் குலஞ்சேர்கொளப் பின்பு செய்து. ௱௭

முன்நெற்றியின் மீது முருந்திடை வைத்த குன்றி
தன்னிற்புரி கொண்ட மயிர்க்கயி றுராச் சாத்தி
மின்னில்திகழ் சங்கு விளங்குவெண் தோடு காதின்
மன்னிப்புடை நின்றன மாமதி போல வைக.

கண்டத்திடை வெண்கவ டிக்கதிர் மாலை சேரக்
கொண்டக்கொடு பன்மணி கோத்திடை ஏனக் கோடு
துண்டப்பிறை போல்வன தூங்கிட வேங்கை வன்தோல்
தண்டைச்செயல் பொங்கிய சன்னவீ ரந்த யங்க. ௱௯

மார்பிற்சிறு தந்த மணித்திரள் மாலை தாழத்
தாரிற்பொலி தோள்வல யங்கள் தழைத்து மின்னச்

---

௱௭. நெறிகொண்ட - நெறித்தலைக் கொண்ட; நெறித்த. குஞ்சிச்சுருள் துஞ்சி நிமிர்ந்து - தலைமயிர்ச் சுருள் சாய்ந்தும் நிமிர்ந்தும். பொங்க - பொலிய. முறி - தளிரை. கண்ணிக்குஇடை-கொண்டை மாலைக்கு நடுவே. வெறி-வாசனை. முல்லைப்பிணை - முல்லை மாலை. குறிஞ்சிவெட்சி - குறிஞ்சி மலரையும் வெட்சி மலரையும். செறிகொண்ட - நெருங்கிய. சேர்கொள - மொய்த்துக்கொள்ள. பின்புசெய்து - பின்னுற் செருகி.

௱௮. முருந்து இடை . மயிலிறகின் அடியின் இடையிடையே. குன்றி தன்னில் - குன்றி மணிகளுடன். முறுக்கப்பட்ட மயிர்க் கயிற்றைப் பொருந் தும்படி. மின்னில் - மின்னலைப்போல். புடை - இரண்டு பக்கங்களிலும். மாமதி . பூரண சந்திரன்.

௱௯. கண்டத்திடை - கழுத்திலே. கவடி - பலகறை. அக்கொடு - சங்கு மணியோடு. ஏனக்கோடு - பன்றிக் கொம்பு. தூங்கிட - தொங்க; ஆட; விளங்க. வேங்கை வன்தோல் தண்டை செயல் பொங்கிய - புலியின் வலிய தோலா லாகிய தட்டை வடிவுத் தொழில் பொலிந்த. தட்டை - தண்டை; மெலித் தல். தண்டை என்று கொள்வோருமுளர். சன்ன வீரம் தயங்க - வெற்றி மாலை விளங்க. சன்னவீரம் - முத்தினால் மாலையாகச் செய்து அரசர் முதலி யோர் அணிந்துகொள்வது; அம்மாலையை வேங்கைத் தோலால் வேடர்கள் செய்து திண்ணனார்க்கு அணிந்தனரென்க.

௲௰. தந்தத்தாலாகிய மணித்திரள். தாரில் - மாலைபோல. வலயங்கள் - வாகுவலயங்கள். சேர்வில் பொலி - பொருந்தி ஒளிபொலிந்த. முன் கை கார்

சேர்விற்பொலி கங்கணம் மீது திகழ்ந்த முன்கைக்
கார்விற்*செறி நாண்எறி கைச்செறி கட்டி கட்டி. ௬0

அரையிற்சர ணத்துரி ஆடையின் மீது பௌவத்
திரையிற்படு வெள்ளல கார்த்து விளிம்பு சேர்த்தி
நிரையிற்பொலி நீளுடை தோல்சுரி கைப்பு றஞ்சூழ்
விரையில்துவர் வார்விசி போக்கி அமைத்து வீக்கி. ௬௧

வீரக்கழல் காலின் விளங்க †அணிந்து பாதம்
‡சேரத்தொடு நீடு செருப்பு விருப்பு வாய்ப்பப்
§பாரப்பெரு வில்வலங் கொண்டு பணிந்து திண்ணன்
சாரத்திருத் தாள்¶மடித் தேற்றி வியந்து தாங்கி. ௬௨

அங்கப்பொழு திற்புவ னத்திடர் வாங்க ஓங்கித்
துங்கப்||பெரு மாமழை போன்று துண்ணென் றொலிப்ப
வெங்கட்சின நீடு விலங்கு விலங்கி நீங்கச்
செங்கைத்தலத் தால்தட விச்சிறு நாண்எறிந்தார். ௬௩

---

வில் செறிநாண் எறிகைச் செறிகட்டி - முன் கையில், கரிய வில்லிற் கட்டிய நாணை ஏற்றி அம்பை எய்வதற்குச் சாதனமாய கைக்கோதையை (விரலுறையை). "காழகம் வீங்கக்கட்டி"—கலித்தொகை. எ : ௯. "விரற்றலைப் புட்டில்வீக்கி வெஞ்சிலை கணையோ டேந்தி"—சிந்தாமணி : 2202.

௬௧. சரணத்து உரி ஆடையின்மீது - மயிர்ப்பீலியோடு சேர்ந்த புலித் தோல் ஆடையின்மேல். பௌவம் திரையில்படு வெள் அலகு ஆர்த்து விளிம்பு சேர்த்தி - கடல் அலைகளில் பொருந்தும் வெள்ளிய பலகறைகளைக் கோத்து ஓரத்திற்கட்டி. நிரையில் - வரிசையாக. தோலையும் சுரிகைப் (உடைவாளின்) புறத்தையும். விரையில்......வீக்கி - வாசனையுள்ள ஒருவகைத் துவர்ப்பட்டையால் பதஞ்செய்யப் பெற்ற வாரால் இறுக வலித்து அமைத்து முறுக்கி. துவர் வார் - பவளநிறம்போலச் சாயமூட்டிய வார் என்னலு மொன்று. நிரையில்...... வீக்கி - "வரிசையாகப் பொலிகின்ற உடையாகிய தோலின் மீதேவாளின் புறத்தைச் சூழ்ந்த வாசனை பொருந்திய துவராற் பதப்படுத்தப்பட்ட வார்க்கட்டைச் சூழ்ந்து அமைத்துக்கட்டி"—பழைய குறிப்புரை. "வரிசையாக அழகு கொடுக்கின்ற தோலினாலாகிய நீண்ட தட்டிக்குப் புறத்தில் உடைவாளை ஒரு வித மணமுள்ள துவர்ப்பட்டையினாற் பதப்படுத்திய வாரினாற் கட்டி அமையச் சேர்த்து"—மகாலிங்க ஐயர்.

௬௨. "தொடு நீடு செருப்பு பாதஞ் சேர" எனக்கொண்டும், "பாதஞ் சேரத் தொடுநீடு செருப்பு விருப்பு வாய்ப்ப" எனக் கொண்டும் பொருள் கூறலாம். ஏற்றி - நாணேற்றி.

௬௩. புவனத்திடர் வாங்க - உலகத் துன்பம் நீங்க. "அச்சிற்றாரிற் பொருந்திய இடர்நீங்க"—பழைய குறிப்புரை. "பிறவித் துன்பமானது நீங்

பா - ம்—*சிற. †விசிந்து. ‡சேரக்கொடு. §பாரப்பொரு. ¶மடுத்தேற்றி. ||பெருமான்

பல்வேறு வாளி புதைபார்த் துடன்போத ஏவி
வில்வேட ராயத் துடிமேவி ஒலிக்கு முன்றில்
சொல்வேறு வாழ்த்துத் திசைதோறுந் துதைந்து விம்ம
வல்லேறு போல்வார் அடல்வாளி தெரிந்து நின்றார். கூச

மானச்சிலை வேடர் மருங்கு நெருங்கு போதில்
பானற்குல மாமல ரிற்படர் சோதி யார்முன்
தேனல்தசை தேறல் சருப்பொரி மற்று முள்ள
கானப்பலி நேர்கட வுட்பொறை யாட்டி வந்தாள். கூரு

நின்றெங்கு மொய்க்குஞ் சினவேடர்கள் நீங்கப் புக்குச்
சென்றங்கு வள்ளல் திருநெற் றியிற்சேடை சாத்தி
"உன் தந்தை தந்தைக்கும் இந்நன்மைகள் உள்ள வல்ல
நன்றும்பெரி துன்விறல் நம்மளை வன்றி தெ"ன்றாள். கூகூ

அப்பெற்றியில் வாழ்த்தும் அணங்குடை யாட்டி தன்னைச்
செப்பற்கரி தாய சிறப்பெதிர் செய்து போக்கிக்
கைப்பற்றிய திண்சிலைக் கார்மழை மேகம் என்ன
மெய்ப்பொற் புடைவேட் டையின்மேற்கொண் டெழுந்து போந்தார்.

---

கும்படி "—ஆறுமுகத் தம்பிரானுர். உயர்ச்சி வாய்ந்த பெரிய மேகம்போல நாணொலி செய்தார்.

கூச. வாளி - அம்புகளை. புதை பார்த்து - அம்புக்கட்டுகளி னின்றும் பார்த்து எடுத்து. உடன்போத ஏவி - தம்முடன் வருமாறு (மற்றவர்கட்குக்) கட்டளை யிட்டு. ஆயம் - கூட்டத்தின். முன்றில் - முற்றத்தில். சொல்லப்படும் வெவ்வேறு வாழ்த்துக்கள் நெருங்கி ஒலிக்க. வல்ஏறு போல்வார் - திண்ண னுர். தெரிந்து - ஆராய்ந்து

கூரு. மானம் - வலிமை பொருந்திய. பானற்குல......முன் - பெருங் கூட்டமாகிய நீலோற்பல மலரின் படர்ந்த ஒளிபோன்ற கரிய திருமேனி யுடைய திண்ணனுரின். தேனும் நல்ல மாமிசமும். தேறல் - கள்ளும். சரு - தேவருணும் (அவிசும்). காட்டிற் பலியிடும் தேவராட்டி.

கூகூ. வள்ளல் - திண்ணனுரின். சேடை - அட்சதை. இந்நன்மைகள் உள்ள அல்ல - இந்நல்ல சகுனங்கள் உண்டாகவில்லை. நன்றும் பெரிது - மிகவும் பெரிது. தந்தை தந்தை என்பது தேவராட்டியின் முதுமையைக் குறிப்பது.

கூஎ. அத்தன்மையால் வாழ்த்திய தேவராட்டிக்கு. போக்கி - அவளை அனுப்பிவிட்டு. மெய்ப் பொற்புடை - உண்மையாகப் பொலிவுடைய; உடற் பொலிவுடையராய் என்னலுமொன்று.

பா - ம்—*சினவேடரை நீக்கி.

வேறு

தாளில்வாழ் செருப்பர்தோல் தழைத்தநீடு தானையார்
வாளியோடு சாபமேவு கையர்வெய்ய வன்கணூர்
ஆளியேறு போலஏகும் அண்ணலார்முன் எண்ணிலார்
மீளிவேடர் நீடுகூட்டம் மிக்குமேல் எழுந்ததே. ௬௮

வன்தொடர்ப்பி ணித்தபாசம் வன்கைமள்ளர் கொள்ளவே
வென்றிமங்கை வேடர்வில்லின் மீதுமேவு பாதம்முன்
சென்ற நீளு மாறுபோல்வ செய்யநாவின் வாயவாய்
ஒன்றொடொன்று நேர்படாமல் ஓடுநாய்கள் மாடெலாம். ௬௯

போர்வலைச் சிலைத்தொழிற் புறத்திலே விளைப்பவச்
சார்வலைத் தொடக்கறுக்க ஏகும்ஐயர் தம்முனே
கார்வலைப் படுத்தகுன்று கானமா வளைக்கநீள்
வார்வலைத் திறஞ்சுமந்து வந்தவெற்பர் முந்தினார். ௭0

நண்ணிமா மறைக்குலங்கள் நாடவென்று நீடும்அத்
தண்நிலா †அரும்புகொன்றை தங்குவேணி யார்தமைக்
கண்ணில்நீடு பார்வையோன்று கோண்டுகாணும் அன்பர்முன்
எண்ணில்பார்வை கொண்டுவேடர் எம்மருங்கும் ஏகினார். ௭௧

௬௮. தோல் தழைத்த நீடு தானையார் - தோலினால் விரித்துச் செய்யப் பெற்ற நீண்ட உடையுடையராய். வாளியோடு - அம்போடு. சாபம் - வில். மீளி - வலிமையுள்ள; யமனைப் போன்ற எனினுமாம்.

௬௯. வலிய சங்கிலியால் கட்டப்பெற்ற கயிற்றை. மள்ளர் - வீரர்கள். வென்றி......பாதம் - விஜயலட்சுமி வேடர்கள் வில்லின்மீது பொருந்துகின்ற பாதங்கள். போல்வனவாகிய சிவந்த. மாடெலாம் - பக்கங்களி லெல்லாம். “மதந்தபு ஞமலி நாவினன்ன, துளங்கியன் மெலிந்த கல்பொரு சீறடி”— மலைபடுகடாம்: ௪௨-௩ “ முயல் வேட் டெழுந்த முடுகுவிசைக் கதநாய், நன் னுப்புரையுஞ் சீறடி ”—நற்றிணை : உ௫உ.

௭0. வலைத்தொழிலும் சிலைத்தொழிலும் புறத்தே நடைபெற, அகத்தே பந்தித்துள்ள அப்பாசவலையை யறுக்கப் போகும் திண்ணனார் என்றபடி. கார் ......வளைக்க - மேகங்கள் வலையிட்டுள்ள (மூடிக்கொண்டுள்ள) மலைகளிலும் காடுகளிலு முள்ள மிருகங்களை வளைக்க. திறம் - வகைகளை. வெற்பர் - வேடர் கள்.

௭௧. மறைக்குலங்கள் - வேதக்கூட்டங்கள். நாட - தேட. என்றும் நீடும்- எப்பொழுதும் அறியமுடியாதவாறு நீளும். வேணியார்தமை-சடையையுடைய சிவபெருமானை. காணப்போகும் திண்ணனார். பார்வை மிருகங்களைக்கொண்டு.

பா - ம்—*நீளு. †அடம்பு.

கோடுமுன் பொலிக்கவும் குறுங்கணு குளிக்குலம்
மாடுசென் றிசைப்பவும் மருங்குபம்பை கொட்டவும்
சேடுகொண்ட கைவிளிச் சிறந்தஓசை செல்லவும்
காடுகொண் டெழுந்த*வேடு கைவளைந்து சென்றதே. எஉ

நெருங்குபைந் தருக்குலங்கள் நீடுகாடு கூடநேர்
வருங்கருஞ் சிலைத்தடக்கை மானவேடர் சேனைதான்
பொருந்தடந் திரைக்கடற் பரப்பிடைப் புகும்பெருங்
கருந்தரங்க நீள்புனற் †களிந்திகன்னி ஒத்ததே. எங

தென்திசைப் பொருப்புடன் செறிந்தகானின் மாவினம்
பன்றிவெம் மரைக்‡கணங்கள் ஆதியான பல்குலம்
துன்றிநின்ற என்றடிச் சுவட்டின்ஒற்றர் சொல்லவே
வன்தடக்கை வார்கொடெம் மருங்கும்வேடர் ஓடினர். எச

ஓடியெறிந்து வாரொழுக்கி யோசனைப் பரப்பெலாம்
நெடியதிண் வலைத்தொடக்கு நீளிடைப் பிணித்துநேர்
கடிகொளப் பரந்தகாடு காவல்செய் தமைத்தபின்
செடிதலைச் சிலைக்கைவேடர் திண்ணனார்முன் நண்ணினார். எரு

வெஞ்சிலைக்கை வீரனாரும் வேடரோடு கூடிமுன்
மஞ்சலைக்கு மாமலைச் சரிப்புறத்து வந்தமா

---

எஉ. கோடு - ஊது கொம்புகள். ஆகுளிக்குலம் - சிறு பறைக்கூட்டங்கள். மாடு - பக்கங்களில். மருங்கு - அவைகளி னருகே. சேடு கொண்ட கைவிளி - பெருமைகொண்ட கைத்தட்டுதலின். சேடு - திரட்சியுமாம்; ஜனத்திரட்சி கொண்ட. வேடு - வேடர்கள்; ஆகுபெயர். கை வளைந்து - இரண்டு பக்கங்களிலும் வளைந்து.

எங. பைந்தருக் குலங்கள் - பசிய மரக் கூட்டங்கள். கூட - அடைய. மான - வலிமையுடைய. பொருந்தடந்திரை - மோதுகின்ற பெரிய அலைகளையுடைய. தரங்கம் - அலை. களிந்தி கன்னி - காளிந்தி நதி; யமுனாநதி; கருநிறமுடையது. காடு - பசுங்கடல்; காளிந்தி - வேடர்சேனை.

எச. பொருப்புடன் - மலையுடன். துன்றி (நெருங்கி) நின்றன என்று. அடிச்சுவட்டின் - காலடியின் அடையாளங்களால். ஒற்றர் - வேவுகாரர்கள். வன்தடக்கை - வலிய பெரிய கைளில். வார்கொடு - வார்வலைகளைக் கொண்டு.

எரு. ஓடி எறிந்து - ஓடிய எறிந்து; மரங்களை வெட்டிச் சாய்த்து. வார் ஒழுக்கி - வார்வலைகளைக் கட்டி. வலைத் தொடக்கு - வலைக் கயிறுகளை. நேர் கடிகொள - நேராகக் (கண்டவர்கள்) அச்சங்கொள்ள. செடிதலை - சிறு புதர் போன்ற தலையை யுடைய.

எசு. மஞ்சு அலைக்கும் - மேகங்கள் அலைவு செய்யும். சரி - வழி. மா - மிருகங்களை. அடர்க்கும் - வருத்துகின்ற. அட்டமாக - குறுக்காக; அருகாக

பா - ம்—*வேடர் கைவளைந்து சென்றனர். †கலித்த. ‡குலங்கள்.

அஞ்சுவித் தடர்க்குநாய்கள் அட்டமாக விட்டுநீள்
செஞ்சரத்தி னோடுசூழல் செய்தகானுள் எய்தினார். எசு

வெய்யமா எழுப்ப ஏவி வெற்பராயம் ஓடிநேர்
எய்யும்வாளி முன்தெரிந்து கொண்டுசெல்ல எங்கணும்
மொய்குரல் துடிக்குலங்கள் பம்பைமுன் சிலைத்தெழக்
கைவிளித் ததிர்த்துமா எழுப்பினார்கள் கானெலாம். எஎ

ஏனமோடு மானினங்கள் எண்குதிண் கலைக்குலம்
கானமேதி யானைவெம் புலிக்கணங்கள் கான்மரை
ஆனமா அநேகமா வெருண்டெழுந்து பாயமுன்
சேனைவேடர் மேலடர்ந்து †சீறிஅம்பில் நூறினார். எஅ

வேறு

தாள்அறுவன இடைதுணிவன தலைதுமிவன கலைமான்
வாளிகளொடு குடல்சொரிதர மறிவனசில மரைமா
நீள்உடல்விடு சரம்உருவிட நிமிர்வனமிடை கடமா
மீளிகொள்கணை படும்உடலெழ விழுவனபல உழையே. எகூ

வெங்கணைபடு பிடர்கிழிபட ‡விசைஉருவிய கயவாய்
செங்கனல்விட அதனொடுகணை செறியமுன்இரு கருமா

எனினுமாம்; எட்டுத் திக்கினும் என்பது பழைய குறிப்புரை. சாத்தினோடு - பாணத்தினோடு. சூழல்செய்த - வேடர்களால் வளைத்துக் காவல் செய்யப் பெற்ற.

எஎ. வெற்பர் ஆயம்-வேடக் கூட்டம். வெய்யமா எழுப்ப ஏவி - கொடிய விலங்குகளை அவைகள் வசிக்கும் இடங்களினின்றும் எழுப்பும்படி ஒற்றர்களை ஏவி. நேர்......கொண்டு - எதிரே விடுதற்குரிய பாணங்களை முன்னே தெரிந்து கொண்டு. மொய்குரல் துடிக் குலங்கள் - மொய்த்த ஓசையையுடைய உடுக்கைக் கூட்டங்கள். சிலைத்து - ஒலித்து. கைவிளித்து - கையால் தட்டி. அதிர்த்து - வாயால் உரப்பி (அதட்டிக் கூவி).

எஅ. ஏனமோடு - காட்டுப் பன்றிகளோடு. எண்கு - கரடிகளும். திண் கலைக்குலம் - வலிய கலைமான் கூட்டங்களும். கானமேதி - காட்டெருமைகளும். ஆன மா - ஆகிய விலங்குகள். நூறினார் - அழித்தார்கள்.

எகூ. துமிவன - வெட்டுண்டன. மறிவன - இறப்பன. நிமிர்வன - செயலற்று நிமிர்ந்தே நின்றன. மிடைகடமா - நெருங்கியுள்ள மதயானைகள். மீளி-வலிமை. உடலெழ - உடல் துள்ள. உழை - மான்கள்.

அ0. முன்இருகருமா, வெங்கணை...விட, செறிய, அங்கெழு...பொழுது, அதனொடு கணை அடல் எயிலுற, அதனைச் சில புலிகள் பொங்கிய...புரைவன.

பா - ம்—*மேவி. †சீறிஅம்பு நூறினார். ‡மிசை.

அங்கெழுசிரம் உருவியபொழு தடலெயிறுற அதனைப்
பொங்கியசின மொடுகவர்வன புரைவனசில புலிகள். ௮0

பின்மறவர்கள் விடுபகழிகள் பிறகுறவயி றிடைபோய்
முன்னடுமுக மிசையுருவிட முடுகியவிசை யுடனக்
கொன்முனையடு சரமினமெதிர் குறுகியமுகம் உருவத்
தன்னெதிரெதிர் பொருவனநிகர் தலையனபல கலைகள். ௮௧

கருவரையொரு தனுவொடுவிசை கடுகியதென முனைநேர்
குரிசில்முன்விடும் அடுசரமெதிர் கொலைபயில்பொழு தவையே
பொருகரியொடு சினஅரியிடை புரையறவுடல் புகலால்
வரும்இரவொடு பகல்அணைவன எனமிடையும்அவ் வனமே. ௮௨

---

இருகருமா - பெரிய பன்றி. கயவாய் - பெரிய வாய். செறிய-நெருங்க. அடல் எயிறு - வலியபல். புரைவன - போன்றன. முன்னே பன்றிகள் : பாணங்கள் பட்ட அவைகளின் பிடரி கிழிபட, அப்பாணங்கள் விசையோடு உருவிய அவைகளின் வாய் நெருப்பு உமிழ, நெருக்க, அவைகளின் தலையில் பாய்ந்த பொழுது, அவைகளை இழுத்துச் சென்று புலிகளின் பற்களினூடுருவ, அவைகளை (பன்றிகளை)ப் புலிகள் பொங்கிய சினத்தொடு கவர்வன போன்றிருந்தன என்க.

௮௧. மறவர்கள் மான்களின் பின்பக்கங்களில் விட்ட பாணங்கள். பிறகு உற-அப்பின் பக்கமாகவே பாய்ந்து. முன்னரே நடு முகத்தில் விசையோடு உருவ. அக்கொன்முனை அடுசரம்-அவ்வேட்டை முகத்தில் கொல்லுகின்ற பாணங்கள். இனம் எதிர் குறுகிய முகம் - இனமாக எதிரே வந்த கலைமான்களின் முகங்கள். பொருவன - போர் புரிவன. கலைகள் - கலைமான்கள். வேட்டையில் சில மான்கள் பின்காட்டி ஓடுகின்றன ; சில மான்கள் முன்காட்டி ஓடி வருகின்றன. பின்காட்டி ஓடும் மான்களின் பின்பக்கம் வேடர்கள் பாணம் எய்கிறார்கள். அப்பாணம் மான்களின் பின்பக்கம் பாய்ந்து நெற்றி வழி உருவி வரும்போது, முன்காட்டி எதிரே வரும் மான்களின் நெற்றியிலும் பாய்கிறதாம். அக்காட்சி மான்கள் ஒன்றோடொன்று எதிர்த்துப் போர் புரிவது போன்றிருக்கிறதாம்.

௮௨. கரிய மலையொன்று ஒரு வில்லை ஏந்தி விசையாக வந்ததுபோல வேட்டை முனைக்கு வந்த திண்ணனார். முன் - விலங்குகளின்முன். எதிர் கொலை பயில்பொழுது-(விலங்குகளின்) எதிர் சென்று(அவைகளைக்) கொல்லும் போது. அவையே - அவ்வம்புகளே. பொருகரியோடு - போர் யானையுடன்.சின அரியிடை - கோபச் சிங்கத்தினிடத்திலும். புரையற - உட்டுளையற்ற ; இடையீடு நீங்க எனினுமாம். யானைமீது எய்யப்படும் அம்புகள் விரைந்து ஊடுருவி ஒரு பாதி சிங்கத்தின் மீதும் பாய்ந்து நிற்கின்றன என்க. அம்பின் ஒரு பகுதி யானையினிடமும் மற்றொரு பகுதி சிங்கத்தினிடமும் பாய்ந்து நிற்கும் காட்சி இரவும் பகலும் ஒன்றி அணைந்தது போன்றிருந்தது என்க.

நீளிடைவிசை மிசைகுதிகொள நெடுமுகில்தொட எழுமான்
தாளுறுகழல் மறவர்கள்விடு சரநிரைதொடர் வனதாம்
வாள்விடுகதிர் மதி†பிரிவுற வருமெனவிழும் உழையைக்
கோளொடுபயில் பணிதொடர்நிலை கொளவுளஎதிர் பலவே. அ௩

கடல்விரிபுனல் கொளவிழுவன கருமுகிலென நிரையே
படர்வொடுசெறி தழைபொதுளிய பயில்புதல்வனம் அதன்மேல்
அடலுறுசரம் உடலுறவரை யடியிடம்அல மரலால்
மிடைகருமரை கரடிகளொடு விழுவனவன மேதி. அச

பலதுறைகளின் வெருவரலொடு பயில்வலையற நுழைமா
உலமொடுபடர் வனதகையுற உறுசினமொடு கவர்நாய்
நிலவியஇரு வினைவலையிடை நிலைசுழல்பவர் நெறிசேர்
புலனுறுமன னிடைதடைசெய்த பொறிகளின்அள வுளவே. அரு

துடியடியன மடிசெவியன துறுகயமுனி தொடரார்
வெடிபடவிரி சிறுகுருளைகள் மிசைபடுகொலை விரவார்

---

அ௩. நீளிடை விசைமிசை குதிகொள - நீண்ட வெளியில் அல்லது தூரத்தில் விசையோடு மேலே குதிக்க. சர நிரை - அம்பு வரிசைகள். வாள் விடு கதிர்மதி - ஒளி வீசும் கிரணங்களுடைய சந்திரன். உழையை - மானை. கோளொடு பயில் பணி - கிரகங்களுடன் பொருந்திய பாம்பாகிய இராகு. தொடர்............ பல - தொடரும் நிலைமை பொருந்த எதிரே பலமான்க ளிருக்கின்றன. சந்திரனிடத்துள்ள களங்கத்தை மான் என்று சொல்வது மரபு. சந்திரனைப் பாம்பு பற்றும்போது தன்னையும் பற்றும் எனக்கருதிக் கீழே விழும் மானை அப்பாம்பே பற்றும் ஒரு நிலை என்க. மான்கள், வேடர் களுக்கு அஞ்சி எப்பக்கமும் ஓட இயலாது ஆகாயத்திலே பாய்கின்றன. பாய்ந்து கீழே விழும் அம்மான்களை வேடர்களுடைய பாணங்கள் தொடர்ந்து பற்றுகின்றன. அக்காட்சி சந்திரனிடத்திருந்து கீழே விழும் மானை இராகு பற்றுவதுபோன் றிருக்கிறதென்க.

அச. நிரையே - வரிசையாக. செறிதழை பொதுளிய பயில் - நெருங்கிய தழை நிறைந்து பொருந்திய. புதல் - சிறு தூறுகளையுடைய. வரைஅடி இடம் அலமரலால் - மலையினடியில் சுழலுதலால். வனமேதி - காட்டெருமைகள்.

அரு. பல துறைகளின் - பல வழிகளினின்றும். வெருவரலொடு - அச்சத் துடன். பயில்வலை - கட்டப்பட்டுள்ள வலைகள். உலமொடு படர்வன தகையுற- சுழற்சியோடு வருவனவற்றைத் தடுக்க. இருவினையாகிய வலையிடை. நிலையாக, புலனுறு - மெய்யறிவு பொருந்தும். ஐம்பொறிகளின் நிலையை ஒத்திருந்தன.

அசு. துடி...தொடரார் - உடுக்கை போன்ற கால்களையும் மடிந்த காது களையுமுடையனவாய் நெருங்கிவரும் யானைக் கன்றுகளைத் [தொடர்ந்து வேட்

பா - ம்—*மயவர்கள். †பரிவுற.

அடிதளர்வுறு கருவுடையன அணைவுறுபிணை அலையார்
கொடியனஎதிர் முடுகியும்உறு கொலைபுரிசிலை மறவோர். அசு

இவ்வகைவரு கொலைமறவினை எதிர்நிகழ்வுழி அதிரக்
கைவரைகளும் வெருவுறமிடை கான்எழுவதொர் ஏனம்
பெய்கருமுகி லெனஇடியொடு பிதிர்கனல்விழி சிதறி
மொய்வலைகளை அறநிமிர்வுற முடுகியகடு விசையில். அஎ

போமதுதனை அடுதிறலொடு பொருமறவர்கள் அரியே
தாமவர்தொடர் வுறும்விசையுடன் அடிவழிசெலும் அளவில்
தாமொருவரும் அறிகிலரவர் தனிதொடர்வுழி அதன்மேல்
ஏமுனைஅடு சிலைவிடலைகள் இருவர்கள்அடி பிரியார். அஅ

நாடியகழல் வயவர்களவர் நாணனும்நெடு வரியில்
காடனும்எனும் இருவருமலை காவலரொடு கடிதில்
கூடினர்விடு பகழிகளொடு கொலைஞமலிகள் வழுவி
நீடியசரி படர்வது தரு நீழலின்விரை கேழல். அகூ

குன்றியைநிகர முன்செறஎரி கொடுவிழிஇடி குரல்நீள்
பன்றியும்அடல் வன்திறலொடு படர்நெறிநெடி தோடித்
துன்றியதொரு குன்றடிவரை சுலவிய*நெறி சூழல்
சென்றதனிடை நின்றது†வழி தெருமரமர நிரையில். கூ0

---

டையாடார். வெடிபட......விரவார் - ஒலியுண்டாக ஓடும் சிறிய குட்டிகளின் மீது கொலை நிகழ்த்த மனங்கொள்ளார். பிணை அலையார் - பெண் விலங்குகளைத் துன்புறுத்தமாட்டார். கொடியன - கொடிய விலங்குகளின். இங்கே வேட்டை அறம் சொல்லப்பட்டது.

அஎ. கைவரைகளும் - யானைகளும். வெருவுற - அஞ்ச. மிடைகான் - நெருங்கிய காட்டில். ஏனம் - காட்டுப் பன்றி. நிமிர்வுற - கிளம்பி.

அஅ. அடுதிறலொடு - கொல்லத்தக்க வலிமையோடு. பொரு......அவர் - திண்ணனர். மற்ற வேடரெவரும் அறிந்தாரில்லை. ஏமுனை......இருவர்கள் - அம்பினல் பகைவர்களைக் கொல்லும் வில்லை ஏந்திய காளைகள் இருவர்கள்.

அகூ. வயவர்கள் - வீரர்கள். மலைகாவலரொடு - திண்ணனருடன். ஞமலிகள் வழுவி - நாய்கட்கும் தப்பி. விரைகேழல் - விரைந்து செல்லும்பன்றி. தரு நீழலின் - மரநீழலில். நீடிய சரிபடர்வது - நீண்ட மலைச்சாரல் வழியே போகலாயிற்று.

கூ0. முன்னே எதிர்ப்பவரைக் கொல்லக் குன்றிமணியை ஒப்ப எரியும். பொருந்திய ஒரு மலையடியில். சுலவிய நெறி சூழல் சென்று - வளைந்த வழியுடைய ஒரு சோலையை அடைந்து. மரநிரையில் - மரச்செறிவில். வழிதெரு மர - வழி சுழல.

பா - ம்—*செறி. †வலி.

அத்தருவளர் சுழலிடையடை அதன்நிலையறி பவர்முன்
கைத்தெரிகணை யினிலடுவது கருதலர்விசை கடுகி
மொய்த்தெழுசுடர் விடுசுரிகையை முனைபெறஎதிர் உருவிக்
குத்தினருடல் முறிபடவெறி குலமறவர்கள் தலைவர். ௬௧

வேறு

வேடர்தங் கரிய செங்கண் வில்லியார் விசையில் குத்த
மாடிரு துணியாய் வீழ்ந்த வராகத்தைக் கண்டு நாணன்
"காடனே! இதன்பின் இன்று காதங்கள் பலவந் தெய்த்தோம்
ஆடவன் கொன்றான் அச்சோ" என்றவர் அடியில் தாழ்ந்தார். ௬௨

மற்றவர் திண்ண னார்க்கு மொழிகின்றார் "வழிவந் தாற்ற
உற்றது பசிவந் தெம்மை உதவிய இதனைக் காய்ச்சிச்
சற்றுநீ அருந்தி யாமும் தின்றுதண் ணீர்கு டித்து
வெற்றிகொள் வேட்டைக் காடு குறுகுவோம் மெல்ல" என்றார். ௬௩

என்றவர் கூற நோக்கித் திண்ணனார் "தண்ணீர் எங்கே
நன்றும்இவ் வனத்தில் உள்ள" தென்றுரை செய்ய நாணன்
"நின்றஇப் பெரிய தேக்கின் அப்புறஞ் சென்றால் நீண்ட
குன்றினுக் கயலே ஓடுங் குளிர்ந்தபொன் முகலி" என்றான். ௬௪

போங்கிய சினவில் வேடன் சொன்னபின் "போவோம் அங்கே
இங்கிது தன்னைக் கொண்டு போதுமின்" என்று தாமும்
அங்கது நோக்கிச் சென்றார் காவதம் அரையில் கண்டார்
செங்கண்ஏ றுடையார் வைகுந் திருமலைச் சாரல் சோலை. ௬௫

---

௬௧. அம்மரங்கள் வளருமிடத்தில். அதன் நிலை......கருதலர் - அப்பன்றியின் இருப்பை உணர்ந்தவராய், கையில் ஆராய்ந்தெடுக்கப்படும் அம்புகளால் அதனைக்கொல்ல நினையாதவராய். சுரிகையை - உடைவாளை. விசையிற்கிட்டி. முனைபெற - முனை அழுந்த; வெற்றிபெற எனினுமாம்.

௬௨. வில்லியார் - திண்ணனார். மாடு - பக்கம். "நாம் வேட்டையிற் பன்னெடு நாள் பயிற்சி யுடையோம். திண்ணனார் கன்னி வேட்டையாட வந்தவர். பன்றியைக் கொல்லுதல் நம்மால் இயலாமற் போயிற்று. திண்ணனாரே அதைக் கொன்றார். அவர் தம் ஆண்டகைமை வியக்கற்பாலது" என்றபடி. எய்த்தோம் - இளைத்தோம். ஆடவன் - ஆண் தகைமையுடைய திண்ணனார்.

௬௪. நன்றும் - "அப்படிச் செய்வோம்" என்பது **பழைய குறிப்புரை**; உம்மையைச் சாரியையாகக் கொண்டு நன்று தண்ணீர் என்று சேர்த்து நல்ல தண்ணீர் எனக் கொள்ளலுமொன்று. நன்று பெரிதெனினுமாம்.

௬௫. வேடன் - நாணன். இது தன்னை - இப்பன்றியை. அது - பொன்முகலியை. காவதம் அரையில் - அரைக்காத தூரத்தில். செங்கண் ஏறுடையார் - சிவபெருமான்.

"நாணனே தோன்றும் குன்றில் நண்ணுவேம்" என்ன நாணன்
"காணநீ போதின் நல்ல காட்சியே காணும், இந்தச்
சேணுயர் திருக்கா ளத்தி மலையின்மிசை எழுந்து செவ்வே
கோணமில் குடுமித் தேவர் இருப்பர்கும் பிடலாம்" என்றான். கூகூ

"ஆவதென் இதனைக் கண்டிங் கணைதொறும் என்மேல் பாரம்
போவதொன் றுளது போலும் ஆசையும் பொங்கி மேன்மேல்
மேவிய நெஞ்சும் வேறோர் விருப்புற விரையா நிற்கும்
தேவரங் கிருப்ப தெங்கே போ"கென்றார் திண்ண னார்தாம். கூஎ

உரைசெய்து விரைந்து செல்ல அவர்களும் உடனே போந்து
கரைவளர் கழையின் முத்தும் கார்அகில் குறடும் சந்தும்
வரைதரு மணியும் பொன்னும் வயிரமும் புளினந் தோறும்
திரைகள்முன் திரட்டி வைத்த திருமுக லியினைச் சார்ந்தார். கூஅ

ஆங்கதன் கரையின் பாங்கோர் அணிநிழற் கேழல் இட்டு
வாங்குவில் காடன் தன்னை மரக்கடை தீக்கோல் பண்ணி
"ஈங்குநீ நெருப்புக் காண்பாய் இம்மலை ஏறிக் கண்டு
நாங்கள்வந் தணைவோம்" என்று நாணனும் தாமும் போந்தார். கூகூ

அளிமிடை கரைசூழ் சோலை அலர்கள்கொண் டணைந்த ஆற்றின்
தெளிபுனல் இழிந்து சிந்தை தெளிவுறும் திண்ண னார்தாம்
களிவரு மகிழ்ச்சி பொங்கக் காளத்தி கண்டு கொண்டு
குளிர்வரு நதியூ டேகிக் குலவரைச் சாரல் சேர்ந்தார். சுOO

கூகூ. 'காணும்' என்பதை முற்றாகக்கோடல் ஒன்று; மலையுடன் சேர்த்து எச்சமாகக்கோடல் மற்றொன்று; சேணுயர் - ஆகாயத்தை அளாவிய. குடுமித் தேவர் - மலையுச்சியி லுள்ள கடவுள்.

கூஎ. இனி ஆவது என்ன? தத்துவப்பாரம் குறையத் தொடங்குகிறது. சீவகரணங்கள் சிவகரணங்களாக மாறப் பெறுகின்றன. என்றும் எழாததொரு விருப்பம்.

கூஅ. கழையின் - மூங்கிலின். அகிற்குறடும் - அகிற்றுண்டங்களும். சந்தும் - சந்தனக்கட்டைகளும். புளினம் தோறும் - மணற்குன்று தோறும். திருஞானசம்பந்தர்: திருக்காளத்தி - "சந்தமார்" என்னும் பதிகம் பார்க்க.

கூகூ. கேழல் - பன்றியை. மரத்தால் தீக்கடைக் கோல் செய்து. காண்பாய் - உண்டாக்குவாய்.

சுOO. அளிமிடை - வண்டுகள் மொய்க்கும். குலவரை - தெய்வமுள்ள மலையின்; திருக்காளத்தி மலையின்.

பா - ம்—*விரையா.

கதிரவன் உச்சி நண்ணக் கடவுள்மால் வரையின் உச்சி
அதிர்தரும் ஓசை ஐந்தும் ஆர்கலி முழக்கங் காட்ட
"இதுஎன்கொல் நாணு" என்றார்க் "கிம்மலைப் பெருந்தேன் சூழ்ந்து
மதுமலர் ஈக்கள் மொய்த்து மருங்கெழும் ஒலிகொல்" என்றான். ௧0௧

முன்புசெய் தவத்தின் ஈட்டம் முடிவிலா இன்ப மான
அன்பினை எடுத்துக் காட்ட அளவிலா ஆர்வம் பொங்கி
மன்பெருங் காதல் கூர வள்ளலார் மலையை நோக்கி
என்புநெக் குருகி உள்ளத் தெழுபெரு வேட்கை யோடும். ௧0௨

௧0௧. கடவுள்மால் - காண்போரைத் தெய்வமயக்கில் சேர்க்கும்; தெய்வத் தன்மை வாய்ந்த பெரிய எனினுமாம். ஐந்தும் - தேவதுந்துபி ஐந்தும். ஆர்கலி - கடல். தேன் - தேன்கூடு. மருங்கு - மலைப்பக்கத்தில். தேவதுந்துபி முழக்கம் திண்ணனார்க்குக் கேட்கிறது. அது நாணனுக்குக் கேட்கவில்லை. அவன் காதுக்குக் கேட்கும் தேனீக்களின் ஒலியை அவன் கூறுகிறான். தத்துவச் சேட்டை ஒடுங்கும் வேளையில் தெய்வ ஒலிகேட்கும்.

௧0௨. ஈட்டம் - சேர்க்கை; கூட்டம். திண்ணனார் வேடர் குலத்தில் பிறந்து வேட்டுவத் தொழிலின் முறைகளைப் பயின்றவர். இப்பிறவியில் அவர் எவ்விதத் தவமுஞ்செய்தாரில்லை. அவர் திருக்காளத்தி மலையைக் கண்டதும் அவர்க்கு ஒரு விதஉணர்ச்சி தோன்றியதுமேலே சொல்லப்பட்டது. அவ்வுணர்ச்சியினின்றும் அன்பு எழுந்து கரைகடந்து ஓடுகிறது. இதற்குக் காரணம் என்னை? "முன்பு செய் தவத்தின் ஈட்டம்" என்று ஆசிரியர் கூறுகிறார். திண்ணனார் முற்பிறப்பில் கடவுளன்புக் குரிய தவநெறியில் நின்றொழுகித் தம்மைப் பண்படுத்திக் கொண்டவர். இந்நுட்பம் "கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பர்க் கடியேன்" எனவரும் **திருத்தொண்டத் தொகை**யானும் விளங்குகிறது. கலைபயின் றறியாத கண்ணப்பரைக் "கலைமலிந்த சீர்நம்பி" என்று வன்றொண்டர் போற்றியது உன்னற்பாலது. கண்ணப்பர் முற்பிறப்பில் தவக் கலைகளைப் பயின்று அவைகள் வழிநின் றொழுகினமையால், அவர் இப்பிறப்பில் அத்தவக் கலைகளின் பயன் மலிந்தவராயினா ரென்க. தவத்தின் பயன் அன்பை உணர்த்தி அதைக் கூட்டுவதாகும். அன்பு என்பது தத்துவங் கடந்த சிவம். தத்துவச் சேட்டையில் உண்மை அன்பு விளையாது. அவ்வன்பு இன்பமுடையது மாகாது. அன்புள்ள விடத்தில் இன்பமும் இன்பமுள்ள விடத்தில் அன்புமிருத்தல் இயல்பு. இன்பமும் அன்பும் வேறுபட்டு நிற்பனவல்ல. இதுபற்றியே ஆசிரியர் "இன்ப மான அன்பினை" என்றார்; "இறவாத இன்ப அன்பு" என்றார் **காரைக்காலம்மையார் புராணத்திலும்**. "ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த இன்பமே என்னுடை அன்பே" என்றார் **மாணிக்கவாசகனாரும்**. இங்கே இன்பமான அன்புக் கூறுகளைத் திண்ணனாரின் உள்ளத்திற் கலந்து நின்று அநுபவித்த ஆசிரியர், அக்கூறுகளை முறையே "ஆர்வம்" என்றும், "காதல்" என்றும், "வேட்கை" என்றும் பாகுபடுத்தி அருளியிருத்தல் காண்க. ஆர்வம் - பெறக்

நாணனும் அன்பும் முன்பு நளிர்வரை ஏறத் தாமும்
பேணுதத் துவங்க ளென்னும் பெருகுசோ பானம் ஏறி
ஆணையாம் சிவத்தைச் சார அணைபவர் போல ஐயர்
நீள்நிலை மலையை ஏறி நேர்படச் செல்லும் போதில். கOஙு

திங்கள்சேர் சடையார் தம்மைச் சென்றவர் காணு முன்னே
அங்கணர் கருணை கூர்ந்த அருள்திரு நோக்கம் எய்தத்
தங்கிய பவத்தின் முன்னைச் சார்புவிட் டகல நீங்கிப்
பொங்கிய ஒளியின் நீழல் பொருவில்அன் புருவம் ஆனார். கOச

---

டவதாகிய ஒன்றன்மேலது. அதனைப் "பொங்கி" என்கிறார். காதல் - தனக்கு ஒப்பு உயர்வின்றி நெஞ்சில் நிலவும் ஒன்றை நுகர்தற்கு எழும் இடையறா விருப்பம். அதனை இங்கே "கூர" என்கிறார். கூர்தல் - உள்ளது சிறத்தல். வேட்கை - **தடுத்தாட்கொண்ட புராணம்** கசஙு-ம் பாட்டுக் குறிப்பைப் பார்க்க. வேட்கையை "என்புநெக் குருகி உள்ளத் தெழுபெரு வேட்கையோடும்" என்கிறார்.

கOஙு. நாணன் வழி காட்டி போல் முன்னே செல்கிறான். திண்ணனாரை உண்மையாக வழிகாட்டிச் செல்வது அவர்தம் அகவொளியாகிய அன்பென்க. அவ்வன்பு ஈண்டோர் உருவம்போல் சொல்லப்பட்டது. நளிர்வரை - குளிர் மலை. சோபானம் - படிகள். ஆணை - சக்தி. திண்ணனார் புறத்தே மலைப்படி ஏறுகிறார்; அகத்தே தத்துவப்படி ஏறுகிறார். மலைப்படி கடந்தால் குடுமித் தேவர் காட்சியளிப்பர். தத்துவப்படி கடந்தால் சிவம் காட்சியளிக்கும். "ஆறாறு முப்பதும் அங்கே அடங்கிடில் - கூறக் குருபரன் கும்பிடு தந்திடும்"—**திருமந்திரம்:** ஞானகுரு தரிசனம் - க. தத்துவங்களால் தநுகரண புவனபோகங்கள் பெறுதலானும், அவைகளால் இருள் நீக்கத்துக்குத் துணை பெறுதலானும் "பேணு தத்துவங்கள்" என்றார். தத்துவங் கடந்ததுங் காணப்பெறுவது ஆணையாகிய சக்தி என்க. அச்சக்தி கொண்டே சிவம் எல்லாஞ் செய்தலால், அஃது 'ஆணை' எனப்பட்டது. " அவையே தானேயா யிருவினையிற் - போக்கு வரவு புரிய ஆணையின் - நீக்கமின்றி நிற்குமன்றே"—**சிவஞானபோதம்** சூ. உ. சிவமும் சக்தியும் ஒன்றேயாதலின் "ஆணையாஞ் சிவத்தை" என்றார். விரிவு **மெய்கண்ட நூல்களிற்** பார்க்க.

கOச. அவர் - திண்ணனார். பவத்தின் - பிறவியின். முன்னைச் சார்பு - பழைய தொடர்புகள்; மலமாயா கர்மங்களின் தொடர்புகள். ஒளி - சிவ ஒளி. பொருவில் - ஒப்பற்ற. திங்கள் ஞானக்குறி என்பதும், சடை அமிர்ததாரை என்பதும் பாயிர முதற்பாட்டில் விளக்கப்பட்டன. திண்ணனார் ஞானம், அமிர்த ஒழுக்குப் பெறும் நேரமிது. தத்துவங்களினின்றும் விடுதலையடைந்த உயிர்களை ஆண்டவன் திருக்கண் நோக்கஞ் செய்து ஞான தீக்கை வலிந்து செய்வது வழக்கம். முக்கண் நுட்பம் **திருநகரச் சிறப்பு** சகூ-ம் பாட்டுக் குறிப்பில் விளக்கப்பட்டது. திண்ணனார் முக்கண் பெறப்போகும் நேரமிது. திண்ணனார் முற்பிறவியில் செய்யத்தக்க தவங்களை யெல்லாஞ் செய்தவராதலின், அவர்க்கு

மாகமார் திருக்கா ளத்தி மலைஎழு கொழுந்தா யுள்ள
ஏகநா யகரைக் கண்டார் எழுந்தபேர் உவகை அன்பின்
வேகமா னதுமேற் செல்ல மிக்கதோர் விரைவி னோடு
மோகமாய் ஓடிச் சென்றூர் தழுவினூர் மோந்து நின்றூர். கO௫

நெடிதுபோ துயிர்த்து நின்று நிறைந்தெழு மயிர்க்கால் தோறும்
வடிவேலாம் புளகம் பொங்க மலர்க்கண்ணீர் அருவி பாய
"அடியனேற் கிவர்தாம் இங்கே அகப்பட்டார் அச்சோ" என்று
படியிலாப் பரிவு தானோர் படிவமாம் பரிசு தோன்ற. கO௬

"வெம்மறக் குலத்து வந்த வேட்டுவச் சாதி யார்போல்
கைம்மலை கரடி வேங்கை அரிதிரி கானந் தன்னில்
உம்முடன் துணையாய் உள்ளார் ஒருவரும் இன்றிக் கெட்டேன்!
இம்மலைத் தனியே நீரிங் கிருப்பதே" என்று நைந்தார். கOஎ

கைச்சிலை விழுந்த தோரார் காளையார் மீள "இந்தப்
பச்சிலை யோடு பூவும் பறித்திட்டு நீரும் வார்த்து
மச்சிது செய்தார் யாரோ" என்றலும் மருங்கு நின்ற
அச்சிலை நாணன் தானும் "நானிது அறிந்தேன்" என்பான். கOஅ

"வன்திறல் உந்தை யோடு மாவேட்டை ஆடிப் பண்டிக்
குன்றிடை வந்தோம் ஆகக் குளிர்ந்தநீர் இவரை ஆட்டி
ஒன்றிய இலைப்பூச் சூட்டி ஊட்டிமுன் பறைந்தோர் பார்ப்பான்
அன்றிது செய்தான் இன்றும் அவன்†செய்த தாகும்" என்றூன்.

உள்நிறைந் தெழுந்த தேனும் ஒழிவின்றி ஆரா அன்பில்
திண்ணனூர் " திருக்கா ளத்தி நாயனூர்க் கினிய செய்கை

---

இப்பிறவியில் ஆண்டவன் திருவருள் தானே படிகிறது. கOஉ-ம் பாட்டைப் பார்க்க. கO௫. மாகம்ஆர் - ஆகாயத்தை அளாவிய.

கO௬. நெடிதுபோது - நீண்டநேரம். உயிர்த்து - (மோந்து) பெருமூச்சு விட்டு. படியிலா...தோன்ற - உவமையில்லா அன்பே தாஞெரு வடிவங் கொண்ட தன்மை தோன்ற.

கOஎ. கைம்மலை - யானை. அரி - சிங்கம். நைந்தார் - இரங்கி வருந்தினூர்.

கOஅ. ஓரார் - உணராதவராய். மச்சு - அநுசிதம் (பழைய குறிப்புரை). " மஞ்சு - அழகு; மஞ்சு என்றது மச்சென விகாரமாயிற்று " என்பர் ஆறுமுகத் தம்பிரானூர்.

கOகூ. உந்தையோடு - உம் தந்தையுடன். மா - விலங்கு. பண்டு - முன்னே. ஒன்றிய - கலந்த. பார்ப்பான் சொல்லும் மந்திரம் நாணனுக்கு விளங்கியதில்லை யாதலின், ஏதோ ஒன்றைப் பார்ப்பான் சொன்னூன் என்பான் " முன் பறைந்து " என்றூன்.

ககO. இது கடைப்பிடித்துக் கொண்டு - நாணன் சொற்றதை உறுதியாகக் கொண்டு. நீராட்டல், மலர் சூட்டல், உணவூட்டல், ஏதோ மொழிதல் இவைகள் இறைவருக்கு இனியன என்று திண்ணனூர் அவைகளை விடாப் பிடியாகப்

பா - ம்—*நிரைந். †செய்தாஞகும்.

எண்ணிய இவைகொ லாம்”என் றிதுகடைப் பிடித்துக் கொண்டவ்
அண்ணலைப் பிரிய மாட்டா அளவில்ஆ தரவு நீட. கக0

“இவர்தமைக் கண்டே னுக்குத் தனியராய் இருந்தார் என்னே
இவர்தமக் கமுது செய்ய இறைச்சியும் இடுவார் இல்லை
இவர்தமைப் பிரிய ஒண்ணு தென்செய்கேன் இனியான் சால
இவர்தமக் கிறைச்சி கொண்டிங் கெய்தவும் வேண்டும்” என்று. கக்க

போதுவர் மீண்டு செல்வர் புல்லுவர் மீளப் போவர்
காதலின் நோக்கி நிற்பர் கன்றகல் புனிற்றாப் போல்வர்
“நாதனே! அமுது செய்ய நல்லமெல் இறைச்சி நானே
கோதறத் தெரிந்து வேறு கொண்டிங்கு வருவேன்” என்பார். ககஉ

“ஆர்தம ராக நீரிங் கிருப்பதென் றகல மாட்டேன்
நீர்பசித் திருக்க இங்கு நிற்கவுங் கில்லேன்” என்று
சோர்தரு கண்ணீர் வாரப் போய்வரத் துணிந்தா ராகி
வார்சிலை எடுத்துக் கொண்டு மலர்க்கையால் தொழுது போந்தார்.

முன்புநின் றரிதில் நீங்கி மொய்வரை இழிந்து நாணன்
பின்புவந் தணைய முன்னைப் பிறதுறை வேட்கை நீங்கி
அன்புகொண் டுய்ப்பச் செல்லும் அவர்திரு முகலி யாற்றின்
பொன்புனை கரையி லேறிப் புதுமலர்க் காவிற் புக்கார். ககச

---

பற்றிக்கொண்டார். அவைகளைப்பற்றிய ஆராய்ச்சியே அவரிடம் எழவில்லை. அவைகளைச் செய்யவே அவர் தொடங்கினார். ஒருவித பயனையுங் கருதாது அச்செயலில் அவர் தலைப்பட்டது கருதத்தக்கது. ஆதரவு - அன்பு.

கக்க. சால - போதிய. திண்ணனார் இறைவருக்கு இறைச்சிகொண்டுவர முயல்கிறார். உணவு என்பதற்குத் திண்ணனார் இறைச்சி என்று கொண்டனர். திண்ணனார் வேடர்; வேட்டுவத் தொழிலில் ஈடுபட்டவர். அத்தொழில் பாவமென்றோ புண்ணியமென்றோ அவர்க்குத் தெரியாது. அவர் இப்பொழுது சிவத்திலீடுபட்டு அன்பராயினார். அன்பர் தமது உணவை ஆண்டவனுக்கு ஊட்டுவர். அன்பு, பாவ புண்ணிய நிலையைக்கடந்தது. பாவ புண்ணிய நிலையில் கட்டுப்பட்டுழல்வோர், அந்நிலை கடந்து அன்பு நிலையிலிருப்போருடைய செயல்களைத் தம் மதியால் ஆராய்ந்து முடிவு காணப்புகுவது அறியாமை. திண்ணனார் இறைச்சியை வாயால் அதுக்கிச் சுவைபார்த்து இறைவர்க்கு இட்டது, கண்ணிடந்தப்பியது போன்றசெயல்களை இருவினைக்குட்பட்டோர்செய்ய ஒருப்படுவரோ? இவைகள் அன்பு வழி நிகழ்வன அல்லவோ? அன்பு நிகழ்ச்சிகளைக் கட்டுப்பாடுகளில் நுழைத்துப் பார்ப்பதே தவறு. இறைவன் விரும்புவது அன்பு; கட்டுப்பாடன்று.

ககஉ. புல்லுவர்-தழுவுவர். புனிற்றா-ஈன்றணிமைப் பசு; இளங்கன்றுப்பசு.

ககங. ஆர்தமராக-யாரைச் சுற்றமாகக் கொண்டு. வார்சிலை - நீண்டவில்லை.

ககச. முன்னைப் பிறதுறைவேட்கை நீங்கி - பழைய பிறவழிகளில் செல்லும் ஆசை நீங்கி. அன்பானது தன்னைச் செலுத்த அதன்வழிச் செல்லுந் திண்ணனார். பொன் புனை - பொன் ஒதுங்கி அணி செய்யும். காவில் - சோலையில்.

காடனும் எதிரே சென்று தொழுது“தீக் கடைந்து வைத்தேன்
கோடுடை ஏனம் உங்கள் குறிப்படி உறுப்பை எல்லாம்
மாடுற நோக்கிக் கொள்ளும் மறித்துநாம் போகைக் கின்று
நீடநீர் தாழ்த்த தென்னே” என்றலும் நின்ற நாணன். ககரு

“அங்கிவன் மலையில் தேவர் தம்மைக்கண் டணைத்துக் கொண்டு
வங்கினைப் பற்றிப் போதா வல்லுடும் பென்ன நீங்கான்
இங்குமத் தேவர் தின்ன இறைச்சிகொண் டேகப் போந்தான்
நங்குலத் தலைமை விட்டான் நலப்பட்டான் தேவர்க்” கென்றான்.

“என்செய்தாய் திண்ணா! நீதான் என்னமால் கொண்டாய் எங்கள்
முன்பெரு முதலி யல்லை யோ”என, முகத்தை நோக்கார்
வன்பெரும் பன்றி தன்னை எரியினில் வதக்கி மிக்க
இன்புறு தசைகள் வெவ்வே றம்பினால் ஈர்ந்து கொண்டு. ககஎ

கோலினிற் கோத்துக் காய்ச்சிக் கொழுந்தசை பதத்தில் வேவ
வாலிய சுவைமுன் காண்பான் வாயினில் அதுக்கிப் பார்த்துச்
சாலவும் இனிய எல்லாம் சருகிலை இணைத்த கல்லை
ஏலவே கோலிக் †கூட அதன்மிசை இடுவார் ஆனார். ககஅ

மருங்குநின் றவர்கள் பின்னும் “ மயல்மிக முதிர்ந்தான் என்னே!
அரும்பெறல் இறைச்சி காய்ச்சி அதுக்கிவே றுமிழா நின்றான்
பெரும்பசி யுடைய னேனும் பேச்சிலன் எமக்கும் பேறு
தரும்பரி சுணரான் மற்றைத் தசைபுறத் தெறியா நின்றான்.” ககசு

“தேவுமால் கொண்டான் இந்தத் திண்ணன்மற் றிதனைத் தீர்க்கல்
ஆவதொன் றறியோம் தேவ ராட்டியை நாக னோடு
மேவிநாங் கொணர்ந்து தீர்க்க வேண்டும்அவ் வேட்டைக் கானில்
ஏவல்ஆட் களையுங் கொண்டு போதும்”என் றெண்ணிப் போனார்.கஉ0

---

ககரு. கோடுடை ஏனம்-கொம்புடைய பன்றியின். உங்கள் குறிப்புப்படி. மாடுற - இவ்விடத்தி லிருக்க. மறித்து - மீண்டும்.

ககசு. வங்கினை - மரப்பொந்தினை. “ தணக்கிறப் பறித்தபோதும் தானளை விடுத்தல் செல்லா - திணப்புடை உடும்பனாரை ”—சிந்தாமணி : 2887.

ககஎ. மால் - மயக்கம். முதலி - முதல்வன் ; தலைவன். தலைமைப் பதவி நினைவூட்டினால் மனோநிலை மாறுமென்று காடன் கருதினான் போலும்.

ககஅ. வாலிய - இனிய. கல்லை - இலைக்கலத்தை; (சருகிலையால் செய்யப் பட்டது). ஏலவே கோலி - பொருந்துமாறு நன்றாகத் தைத்து. கூட - இறைச்சிகளை எல்லாம் ஒருங்கு.

ககசு. மயல்-பித்து ; மயக்கம். நமக்கும் நமக்குரிய பகுதியைக் கொடுக்குந் தன்மையை யுணராதவனாய். கஉ0. தேவுமால் - தெய்வப் பயித்தியம்.

பா - ம்——*தேவர்க் கின்னம். †கூட்டி.

கானவர் போன தோரார் கடிதினில் கல்லை யின்கண்
ஊனமு தமைத்துக் கொண்டு மஞ்சனம் ஆட்ட உன்னி
மாநதி நன்னீர் தூய வாயினில் கொண்டு கொய்த
தூநறும் பள்ளித் தாமம் குஞ்சிமேல் துதையக் கொண்டார். ௧௨௧

தனுவொரு கையில் வெய்ய சரத்துடன் தாங்கிக் கல்லைப்
புனிதமெல் இறைச்சி நல்ல போனகம் ஒருகை ஏந்தி
"இனியஎம் பிரானார் சாலப் பசிப்பர்" என் றிரங்கி ஏங்கி
நனிவிரைந் திறைவர் வெற்பை நண்ணினார் திண்ண னார்தாம். ௧௨௨

இளைத்தனர் நாய னாரென் றீண்டச்சென் றெய்தி வெற்பின்
முளைத்தெழு முதலைக் கண்டு முடிமிசை மலரைக் காலில்
வளைத்தபொன் செருப்பால் மாற்றி வாயின்மஞ் சனநீர் தன்னை
விளைத்தஅன் புமிழ்வார் போல விமலனார் முடிமேல் விட்டார். ௧௨௩

தலைமிசைச் சுமந்த பள்ளித் தாமத்தைத் தடங்கா ளத்தி
மலைமிசைத் தம்பி ரானார் முடிமிசை வணங்கிச் சாத்திச்
சிலைமிசைப் பொலிந்த செங்கைத் திண்ணனார் சேர்த்த கல்லை
இலைமிசைப் படைத்த ஊனின் திருவமு தெதிரே வைத்து. ௧௨௪

"கொழுவிய தசைகள் எல்லாங் கோலினில் தெரிந்து கோத்தங்
கழலுறு பதத்திற் காய்ச்சிப் பல்லினால் அதுக்கி நாவில்
பழகிய இனிமை பார்த்துப் படைத்தஇவ் இறைச்சி சால
அழகிது நாய னீரே அமுதுசெய் தருளும்" என்றார். ௧௨௫

அன்னஇம் மொழிகள் சொல்லி அமுதுசெய் வித்த வேடர்
மன்னனார், "திருக்கா ளத்தி மலையினார்க் கினிய நல்லூன்
இன்னமும் வேண்டும்" என்னும் எழுபெருங் காதல் கண்டு
பன்னெடுங் கரங்கள் கூப்பிப் பகலவன் மலையில் தாழ்ந்தான். ௧௨௬

அவ்வழி அந்தி மாலை அணைதலும் "இரவு சேரும்
வெவ்விலங் குள" என் றஞ்சி மெய்ம்மையின் வேறு கோள்ளாச்
செவ்விய †அன்பு தாங்கித் திருக்கையில் சிலையும் தாங்கி
மைவ்வரை என்ன ஐயர் மருங்குநின் றகலா நின்றார். ௧௨௭

௧௨௧. கானவர் - நாணனும் காடனும். பள்ளித்தாமம் - எறிபத்த நாயனார் புராணம் ௯-ம் பாட்டுக் குறிப்பைப் பார்க்க. குஞ்சி மேல் துதைய - தலைமயிரில் நெருங்க.

௧௨௨. தனு-வில். சரத்துடன் - அம்புடன். போனகம்-திருவமுது. சால - மிகவும். நனி - அதிக. இறைவர் வெற்பை-திருக்காளத்தியப்பர் மலையை.

௧௨௩. நாயனார் - சிவபெருமான். ஈண்ட - விரைவாக. பொன் - ஆற்றங் கரையிலுள்ள பொற்பொடிகள் ஒட்டிய ; அழகிய எனினுமாம்.

௧௨௫. கொழுவிய - கொழுமையான. ௧௨௬. பகலவன் - சூரியன்.

௧௨௭. உண்மையினின்றும் வேறுபடாத.

பா - ம்—*மெய்த்துயில். †அன்புந.

சார்வருந் தவங்கள் செய்து முனிவரும் அமரர் தாமும்
கார்வரை அடவி சேர்ந்தும் காணுதற் கரியார் தம்மை
ஆர்வமுன் பெருக ஆரா அன்பினிற் கண்டு கொண்டே
நேர்பெற நோக்கி நின்ருர் நீளிருள் நீங்க நின்ருர். க௨அ

கழைசொரி தரளக் குன்றின் கதிர்நில வொருபால் பொங்க
முழையர வுமிழ்ந்த செய்ய மணிவெயில் ஒருபால் மொய்ப்பத்
தழைகதிர்ப் பரிதி யோடுஞ் சந்திரன் தலைஉ வாவில்
குழையணி காதர் வெற்பைக் கும்பிடச் சென்ருல் ஒக்கும். க௨௯

விரவுபன் மணிகள் கான்ற விரிகதிர்ப் படலை பொங்க
மரகதம் ஒளிகொள் நீல மணிகளும் இமைக்குஞ் சோதி,
பொரஇரு சுடருக் கஞ்சிப் போயின புடைகள் தோறும்
இரவிருள் ஒதுங்கி ஞலே போன்றுள தெங்கும் எங்கும். க௩௦

செந்தழல் ஒளியிற் பொங்கும் தீபமா மரங்க ளாலும்
மந்திகள் முழையில் வைத்த மணிவிளக் கொளிக ளாலும்

க௨அ. கார் வரை அடவி - மேகம் தவழும் மலையிலும், அதைச் சார்ந்த காட்டிலும். அரியார் தம்மை - சிவபெருமானை. "புற்று மாய்மர மாய்ப்புனல் காலே உண்டியாய் அண்ட வாணரும் பிறரும் - வற்றி யாரும்நின் மலரடி காணு மன்ன என்னையோர் வார்த்தையுட் படுத்துப் - பற்றிஞய் பதையேன் மனம் மிக உருகேன் பரிகி லேன்பரி யாவுடல் தன்னைச் - செற்றிலேன் இன்னுந் திரிதரு கின்றேன் திருப்பெ ருந்துறை மேவிய சிவனே"—திருவாசகம்: செத் திலாப்பத்து - உ. நீள் இருள் என்றது ஆணவமலத்தை; அஞ்ஞானத்தை; அக இருளை.

க௨௯. கழை சொரி தரளக் குன்றின் - மூங்கில்கள் சொரியும் முத்துக் குவையினின்றும். முழை - குகைகளிலுள்ள. அரவு - பாம்பு. முத்தின் கதிர் தண்மையதாகலின், அது நிலவென்றும், மணியின் கதிர் வெம்மையதாகலின், அது வெயில் என்றும் சொல்லப்பட்டன. சந்திரன்கதிர், நிலவு. சூரியன்கதிர், வெயில். பரிதி - சூரியன். தலை உவாவில் - அமாவாசியில். (உவா இரண்டு: பௌர்ணமியும் அமாவாசியும். தலைஉவா-அமாவாசி). குழையணிகாதர் வெற்பை - குண்டலமணிந்த காதினையுடைய காளத்தியப்பர் மலையை.

க௩௦. விரவு - கலந்து நெருங்கிய. கான்ற - உமிழ்ந்த. படலை - பரப்புத் திரள்; கூட்டம். மரகதமும். இமைக்குஞ் சோதியானது. பொர - தன்னுடன் பொருகின்ற; வலியைக் கெடுக்க. இருசுடருக்கு - சூரிய சந்திரர்கட்கு. அஞ்சிப் போயின - பயந்து விலகிய. இரவிருள் புடைகள் தோறும் - இரவின் இருளானது பக்கங்கள் தோறும்; ஆழமாகவுள்ள சிறு சிறு குகைகள் தோறும்.

க௩க. ஒளியில் - ஒளிபோல. தீபமா மரங்களாலும் - சோதிவிருட்சங் களாலும். சோதி விருட்சம்:—தெய்விக மலைகளிலும் தபோ வனங்களிலு

பா - ம்—*மணிஒளி விளக்கத்தாலும்.

ஐந்துமா றடக்கி யுள்ளார் அரும்பெருஞ் சோதி யாலும்
எந்தையார் திருக்கா ளத்தி மலையினில் இரவோன் றில்லை. ௧௩௧

வருங்கறைப் பொழுது நீங்கி மல்கிய யாமஞ் சென்று
சுருங்கிட அறிந்த புள்ளின் சூழ்சிலம் போசை கேட்டுக்
கருங்கடல் என்ன நின்று கண்துயி லாத வீரர்
அரும்பெறல் தம்பி ரானார்க் கமுதுகொண் டணைய வேண்டி. ௧௩௨

ஏறுகாற் பன்றி யோடும் இருங்கலை புனமான் மற்றும்
வேறுவே றினங்கள் வேட்டை வினைத்தொழில் விரகி னாலே
ஊறுசெய் காலம் சிந்தித் துருமிகத் தெரியாப் போதின்
மாறடு சிலையுங் கொண்டு வள்ளலைத் தொழுது போந்தார். ௧௩௩

---

மிருப்பது; பகலில் புலனாகாதது; இரவில் சோதி மயமாய்த் தோன்றுவது; காயசித்திக்குப் பயன்படுவது. மந்திகள் முழையில் வைத்த - குரங்குகள் (தாங்கள் வசிக்கும்) குகைகளில் ஏற்றிய. ஐந்தும் ஆறும் அடக்கியுள்ளார் - ஐம்புலச் சேட்டைகளையும் அறுவகைப் பகைகளையும் அடக்கியுள்ள முனிவரர்களின். ஐந்து-சப்த ஸ்பரிஸ ரூப ரச கந்தம்; ஆறு-காமக் குரோத லோப மோக மத மாற்சரியம். "திண்ணனார் அக இருள் நீங்க நின்றார்" என்று மேலே சொல்லப்பட்டது. புற இருள் அகவொளி வீசுமிடத்தில் இருத்தலரிது. காளத்தி மலையில் இரவுக் காலத்தில் புறஇருள் என்னும் பூதஇருளும் இல்லை என்று ஆசிரியர் தொடர்ந்து கூறியுள்ள மூன்று பாக்களையும் நோக்குக. திருக்காளத்தி மலையில் பலநிற மணி ஒளி, சோதி விருட்ச ஒளி, பெரியோர்களொளி, சிவஒளி, திண்ணனாரொளி முதலிய ஒளிகளிருத்தலான், அம்மலையில் இருள் இல்லையென்க.) தத்துவங்கடந்து ஞான தீக்கை பெற்றவர்க்குச் சோதி தரிசனமாதல் இயல்பு.

௧௩௨. கறைப்பொழுது - மாலைக் காலம். மல்கிய யாமம் - இருள் நிறைந்த நடுயாமம். புள்ளின் - பறவைகளின். சிலம்பு ஓசை - ஒலிக்கின்ற ஓசை; பேரோசை என்றபடி. பெறுதற்கரிய தம்பிரான் முன்னர், திண்ணனார் நின்ற காட்சியை முன்னே மலை என்றதும், இங்கே கடலென்றதுங் கருதற்பாலன. ஆசிரியர்க்கு அன்பு மலையாகத் தோன்றியவர் இப்பொழுது அன்புக் கடலாகத் தோன்றுகிறார். இஃது அன்பு உருக்கத்தைக் குறிப்பது. திண்ணனார், இருள் மலம் நீங்கப்பெற்று ஒளி மயமாய் விளங்குவோராதலின், அவர்க்குப் பூத இரவுத் துயில் இல்லை யென்க. அஞ்ஞானத்துயிலை வெல்வதே சிறந்த வீர மாதலின் "கண் துயிலாத வீரர்" என்றார்.

௧௩௩. விரகினாலே - சாமர்த்தியத்தினாலே. ஊறு செய்காலம் - கொல்லுங்காலம். உருமிகத் தெரியாத விடியற்காலத்தில். மாறு அடு - பகைவர்களைக் கொல்லும். வள்ளலை - காளத்தியப்பரை.

பா - ம்---*வைகிய.

வேறு

மொய்காட்டும் இருள்வாங்கி முகங்காட்டும் தேர்இரவி
மெய்காட்டும் அன்புடைய வில்லியார் தனிவேட்டை
எய்காட்டின் மாவளைக்க இட்டகருந் திரைஎடுத்துக்
கைகாட்டு வான்போலக் கதிர்காட்டி எழும்போதில். கநடு

எய்தியசீர் ஆகமத்தில் இயம்பியபூ சனைக்கேற்பக்
கொய்தமலரும்புனலும் முதலான கொண்டணைந்தார்
மைதழையுங் கண்டத்து மலைமருந்தை வழிபாடு
செய்துவருந் தவமுடைய முனிவர்சிவ கோசரியார். கநரு

வந்துதிரு மலையின்கண் வானவர்நா யகர்மருங்கு
சிந்தைநிய மத்தோடுஞ் செல்கின்றார் திருமுன்பு
வெந்தஇறைச் சியும்எலும்பும் கண்டகல மிதித்தோடி
"இந்தஅநு சிதங்கெட்டேன் யார்செய்தார்" என்றழிவார். கநசு

*"மேவநோ வாஅஞ்சா வேடுவரே இதுசெய்தார்
†தேவதே வேசனே! திருமுன்பே இதுசெய்து
போவதே இவ்வண்ணம் புகுதநீர் திருவுள்ளம்
ஆவதே" எனப்பதறி அழுதுவிழுந் தலமந்தார். கநஎ

"பொருப்பில்எழுஞ் சுடர்க்கொழுந்தின் பூசனையும் தாழ்க்கநான்
இருப்பதினி என்"னென்றவ் இறைச்சிஎலும் புடன்இலையும்
செருப்படியும் நாயடியும் திருவலகால் மாற்றியபின்
விருப்பினொடுந் திருமுகலிப் புனல்மூழ்கி விரைந்தணைந்தார்.

---

கநச. மொய் காட்டும் - மொய்த்துக் காட்டும்; கூட்டமாய்த் தோன்றுகிற. இரவி - சூரியன். எய்காட்டில் - செல்லுங் காட்டில். எய்காடு - வினைத்தொகை. எய் - முட்பன்றியையும், காட்டின்மா - மற்றக் காட்டு மிருகங்களையும் என்று கொள்ளினுமாம்.

கநசு. செல்கின்றவராகிய சிவகோசரியார்.

கநஎ. மேவநோவா அஞ்சா - சந்நிதி முன் வருதற்கு மனம் நோவாத; அஞ்சாத. மேவநோவா - மிக வருந்தி என்பது பழைய குறிப்புரை. புகுத - நிகழ. அலமந்தார் - நெஞ்சஞ் சுழன்றார்.

கநஅ. பொருப்பில் - திருமலையில். திருவலகு - கோயில் விளக்குமாறு. "நாயொடும் புகுந்து", "தொடர்ந்த நாயொடு தோன்றினன்"—திருக்கண்ணப்ப தேவர் திருமறம்.

பா - ம்—*மேவநோர் வரவஞ்சா, †தேவதேவீசனே.

பழுதுபுகுந் ததுதீரப் பவித்திரமாம் செயல்புரிந்து
தொழுதுபெறு வனகொண்டு தூயபூ சனைதொடங்கி
வழுவில்திரு மஞ்சனமே முதலாக வரும்பூசை
முழுதுமுறை மையின்முடித்து முதல்வனார் கழல்பணிந்தார். ௧௩௯

பணிந்தெழுந்து தனிமுதலாம் பரனென்று பன்முறையால்
துணிந்தமறை மொழியாலே துதிசெய்து சுடர்த்திங்கள்
அணிந்தசடை முடிக்கற்றை அங்கணரை விடைகொண்டு
தணிந்தமனத் திருமுனிவர் தபோவனத்தி னிடைச்சார்ந்தார். ௧௪0

இவ்வண்ணம் பெருமுனிவர் ஏகினார் இனிஇப்பால்
மைவண்ணக் கருங்குஞ்சி வனவேடர் பெருமானார்
கைவண்ணச் சிலைவளைத்துக் கான்வேட்டை தனியாடிச்
செய்வண்ணத் திறம்மொழிவேன் தீவினையின் திறம்ஒழிவேன். ௧௪௧

திருமலையின் புறம்போன திண்ணனார் செறிதுறுகல்
பெருமலைக ளிடைச்சரிவில் பெரும்பன்றி புனம்மேய்ந்து
வருவனவும் துணிபடுத்து மானினங்கள் கானிடைநின்
றொருவழிச்சென் றேறுதுறை ஒளிநின்று கொன்றருளி. ௧௪௨

பயில்விளியால் கலைஅழைத்துப் பாடுபெற ஊடுருவும்
அயில்முகவெங் கணைபோக்கி அடியொற்றி மரையினங்கள்
துயிலிடையிற் கிடையெய்து தொடர்ந்துகட மைகளெய்து
வெயில்படுவெங் கதிர்முதிரத் தனிவேட்டை வினைமுடித்தார். ௧௪௩

பட்டவன விலங்கெல்லாம் படர்வனத்தில் ஒருசூழல்
இட்டருகு தீக்கடைகோல் இருஞ்சுரிகை தனையுருவி
வெட்டிநறுங் கோற்றேனும் மிகமுறித்துத் தேக்கிலையால்
வட்டமுறு பெருங்கல்லை மருங்குபுடை படஅமைத்தார். ௧௪௪

---

௧௩௯. பவித்திரமாம் செயல் - சுத்தமாகும் பிராயச்சித்தம். பெறுவன - காட்டிற் கிடைக்கும் உபகரணங்கள்.

௧௪0 அங்கணரை - சிவபெருமானிடம்.

௧௪௧. வண்ணம் - நிறம். குஞ்சி - தலைமயிர். வண்ணச்சிலை - அழகியவில்.

௧௪௨. சரிவில் - சாரலில். ஒளிநின்று - மறைந்திருந்து.

௧௪௩. பயில் விளியால் - மிருகங்களைப்போலக் கூப்பிடும் ஓசை அழைப்பால். கலை - கலைமானை. பாடுபெற - வருந்தும்படி. அயில் - கூரிய. அடி ஒற்றி - அடிவழிச் சென்று. கிடை எய்து - கூட்டத்தை அம்பால் எய்து.

௧௪௪. பட்ட - இறந்த. ஒரு சூழல் - ஒரு சோலையில். தீக்கடைக்கோலைப் பெரிய உடை வாளை யுருவி வெட்டி. இலைக் கலத்தில் நிறையவார்த்தார்.

இந்தனத்தை முறித்தடுக்கி எரிகடையும் அரணியினில்
வெந்தழலைப் பிறப்பித்து மிகவளர்த்து மிருகங்கள்
கொந்திஅயில் அலகம்பால் குட்டமிட்டுக் கொழுப்பரிந்து
வந்தனகொண் டெழுந்தழலில் வக்குவன வக்குவித்து. கசரு

வாயம்பால் அழிப்பதுவும் வகுப்பதுவும் செய்தவற்றின்
ஆயஉறுப் பிறைச்சியெலாம் அரிந்தொருகல் லையில்இட்டுக்
காயநெடுங் கோல்கோத்துக் கனலின்கண் உறக்காய்ச்சித்
தூயதிரு அமுதமைக்கச் சுவைகாணல் உறுகின்றார். கசசு

எண்ணிறந்த கடவுளருக் கிடும்உணவு கொண்டூட்டும்
வண்ணஎரி வாயின்கண் வைத்ததெனக் காளத்தி
அண்ணலார்க் காம்பரிசு தாம்†சோதித் தமைப்பார்போல்
திண்ணனார் திருவாயில் அமைத்தார்ஊன் திருவமுது. கசஎ

நல்லபத முறவெந்து நாவின்கண் இடும்இறைச்சி
கல்லையினிற் படைத்துத்தேன் பிழிந்துகலந் ததுகொண்டு
வல்விரைந்து திருப்பள்ளித் தாமமுந்தூய் மஞ்சனமும்
ஒல்லையினின் முன்புபோல் உடன்கொண்டு வந்தணைந்தார். கசஅ

வந்துதிருக் காளத்தி மலையேறி ‡வனசரர்கள்
தந்தலைவ னாரிமையோர் தலைவனார் தமையெய்தி
அந்தணனார் பூசையினை முன்புபோல் அகற்றியபின்
முந்தைமுறை தம்முடைய பூசனையின் செயல்முடிப்பார். கசகூ

---

கசரு. இந்தனத்தை - விறகை. எரிகடையும் அரணியினில் - தீக்கடைக் கோலால். அயில் அலகு - கூரிய நுனியுடைய. குட்டமிட்டு - வளைவாக அகழ்ந்து எடுத்து; ஆழமாக வெட்டி எடுத்து எனினுமாம். வக்கு - வதக்கு; இடைக்குறை; வேடர்கள் மொழியும் முறையில் சொல்லப் பட்டது.

கசசு. வாய் - கூர்மை பொருந்திய. அழிப்பதுவும் - துண்டு ஆக்குவதையும்; அரிந்து ஒதுக்குவதையுமாம். வகுப்பதுவும் - கீறுவதையும்.

கசஎ. உணவு கொண்டு ஊட்டும் - அவிஉணவை (முன்புதான்) உண்டு (பின்பு தேவர்களை) உண்பிக்கும். எரி - அக்கினி தேவன்.

கசஅ. ஒல்லையினில் - நொடிப்பொழுதில்.

கசகூ. வனசரர்கள் தம் தலைவனார் - வேடர்களுடைய தலைவனா ராகிய திண்ணனார். இமையோர் தலைவனார்தமை - தேவர்கள் தலைவராகிய சிவபெருமானை. முந்தைமுறை - முன்போல.

பா-ம்—*குட்டமிடுங் கொழுப்பறிந்து. †சோதித்தமைப்பதற்குத். ‡வனவேடர்.

ஊன்அமுது கல்லையுடன் வைத்"திதுமுன்னையினன்றால்
ஏனமொடு மான்கலைகள் மரைகடம்மை இவையிற்றில்
ஆனவுறுப் பிறைச்சியமு தடியேனும் சுவைகண்டேன்
தேனும்உடன் கலந்ததிது தித்திக்கும்" எனமொழிந்தார். கருO

இப்பரிசு திருவமுது செய்வித்துத் தம்முடைய
ஒப்பரிய பூசனைசெய் தந்நெறியில் ஒழுகுவார்
எப்பொழுது மேன்மேல்வந் தெழும்அன்பால் காளத்தி
அப்பர்எதிர் அல்லுறங்கார் பகல்வேட்டை ஆடுவார். கருக

மாமுனிவர் நாள்தோறும் வந்தணைந்து வனவேந்தர்
தாமுயலும் பூசனைக்குச் சாலமிகத் தளர்வெய்தித்
தீமையென அதுநீக்கிச் செப்பியஆ கமவிதியால்
ஆமுறையில் அர்ச்சனைசெய் தந்நெறியில் ஒழுகுவரால். கருஉ

நாணனொடு காடனும்போய் நாகனுக்குச் சொல்லியபின்
ஊணுமுறக் கமும்இன்றி அணங்குறைவா ளையுங்கொண்டு
பேணும்மக னார்தம்பால் வந்தெல்லாம் பேதித்துக்
காணும்நெறி தங்கள்குறி வாராமல் கைவிட்டார். கருங

முன்புதிருக் காளத்தி முதல்வனார் அருள்நோக்கால்
இன்புறுவே தகத்திரும்பு பொன்னானாற் போல்யாக்கைத்
தன்பரிசும் வினைஇரண்டும் சாருமல மூன்றும்அற
அன்புபிழம் பாய்த்திரிவார் அவர்கருத்தின் அளவினரோ. கருச

அந்நிலையில் அன்பனார் அறிந்தநெறி பூசிப்ப
மன்னியஆ கமப்படியால் மாமுனிவர் அருச்சித்" திங்
கென்னுடைய நாயகனே! இதுசெய்தார் தமைக்காணேன்
உன்னுடைய திருவருளால் ஒழித்தருள வேண்டும்"என. கருரு

---

கருO. முன்னையதைப் பார்க்கிலும் நல்லது.

கருக. இப்பரிசு - இவ்விதம். அல் - இரவில். பகல் - பகலில்.

கருங. அணங்குறை வாளையும் - தேவராட்டியையும். பேணும் - தம்மால் விரும்பப்படும். எல்லாம் பேதித்துக் காணும் நெறி - எல்லா வகையாலும் பேதித்துக் காணும் வழி.

கருச. வேதகத்து - தரிசன வேதியால்; இரச குளிகையால். யாக்கைத் தன் பரிசும் - உடற்றன்மையும். இருவினை - புண்ணிய பாவம். மும்மலம் - ஆணவம் கர்மம் மாயை. இந்நிலையினரா யிருக்கிறாரென்று அவ்வேடர்களால் கருதி அளவிடத் தக்க அளவிலிருக்கிறாரோ என்றபடி.

கருரு. அன்பனார் - திண்ணனார்.

அன்றிரவு கனவின்கண் அருள்முனிவர் தம்பாலே
மின்திகழுஞ் சடைமவுலி வேதியர்தாம் எழுந்தருளி
"வன்திறல்வே டுவன்என்று மற்றவனை நீநினையேல்
*நன்றவன்தன் செயல்தன்னை நாமுரைப்பக் கேள்" என்று. கருசு

"அவனுடைய வடிவெல்லாம் நம்பக்கல் அன்பென்றும்
அவனுடைய அறிவெல்லாம் நமைஅறியும் அறிவென்றும்
அவனுடைய செயலெல்லாம் நமக்கினிய வாம்என்றும்
அவனுடைய நிலைஇவ்வா றறிநீ" என் †றருள்செய்தார். கருஎ

||"பொருப்பினில்வந் தவன்செய்யும் பூசனைக்கு முன்பென்மேல்
அருப்புறுமென் மலர்முன்னை அவைநீக்கும் ஆதரவால்
விருப்புறும்அன் பெனும்வெள்ளக் கால்பெருகிற் றெனவீழ்ந்த
செருப்படி‡அவ் இளம்பருவச் சேயடியிற் சிறப்புடைத்தால்." கருஅ

||"உருகியஅன் பொழிவின்றி நிறைந்தஅவன் உருவென்னும்
பெருகியகொள் கலமுகத்தில் பிறங்கியினி தொழுகுதலால்
ஒருமுனிவன் §செவிஉமிழும் உயர்கங்கை முதல்தீர்த்தப்
பொருபுனலின் எனக்கவன்தன் வாயுமிழும் புனல்புனிதம்." கருகூ

||"இம்மலைவந் தெனையடைந்த கானவன்தன் இயல்பாலே
மெய்ம்மலரும் அன்புமேல் விரிந்தனபோல் விழுதலால்
செம்மலர்மேல் அயனொடுமால் முதல்தேவர் வந்துபுனை
எம்மலரும் அவன்தலையால் இடுமலர்போல் எனக்கொவ்வா." கசூO

கருசு. மவுலி - முடியுடைய. வேதியர் - காளத்தியப்பர்.

கருஅ. உன்னல் சாத்தப்பெற்ற அரும்பு உறுமென்மலர். ஆதரவால்-விருப்பால். இளம் பருவச் சேயடியில் - முருகனடியினும். அரும்பும் மென்மலரும் எனினுமாம்.

கருகூ. அவன் வடிவமென்னும் பாத்திரத்தினிடத்து விளங்கி. ஒரு முனிவன் - சந்நு முனிவன். பகீரதனால் கொண்டுவரப் பெற்ற கங்கை சென்ற வழியில் தவஞ் செய்துகொண்டிருந்த சந்நு முனிவர் அக்கங்கையைக் குடித்துவிட்டாரென்பதும், பின்னே பகீரதன் வேண்டுகோட் கிணங்கி அவர் அந்நதியைக் காதின்வழி விட்டா ரென்பதும் புராணகதை. பொருபுனலின் - மோதுகின்ற நீரைப்பார்க்கிலும்.

கசூO. மெய்ம்மலரும்-உண்மை மலருகின்ற.

பா - ம்—*நன்றும்அவன் தன்செயலை. †அருள் செய்வார்; அருள் புரிந்தார். ‡எம்; நம். §செவியினுமிழ்.

||"வெய்யகனற் பதங்கொள்ள வெந்துளதோ எனும்அன்பால்
நையும்மனத் தினிமையினில் நையமிக மென்றிடலால்
*செய்யுமறை வேள்வியோர் முன்புதருந் திருந்தவியில்
எய்யும்வரிச் சிலையவன்தான் இட்டஊன் எனக்கினிய." ௧௬௧

||"மன்பெருமா மறைமொழிகள் மாமுனிவர் மகிழ்ந்துரைக்கும்
இன்பமொழித் தோத்திரங்கள் மந்திரங்கள் யாவையினும்
முன்பிருந்து மற்றவன்தன் முகமலர †அகநெகிழ
அன்பினினைந் தெனையல்லால் அறிவுறா மொழிநல்ல." ௧௬௨

" உனக்கவன்தன் செயல்காட்ட நாளைநீ ஒளித்திருந்தால்
எனக்கவன்தன் பரிவிருக்கும் பரிசெல்லாங் காண்கின்றாய்
மனக்கவலை ஒழி"கென்று மறைமுனிவர்க் கருள்செய்து
புனற்சடிலத் திருமுடியார் எழுந்தருளிப் போயினார். ௧௬௩

கனவுநிலை நீங்கியபின் விழித்துணர்ந்து கங்குலிடைப்
புனைதவத்து மாமுனிவர் புலர்வளவுங் கண்துயிலார்
மனமுறுமற் புதமாகி வரும்பயமும் உடனாகித்
துனைபுரவித் தனித்தேர்மேல் தோன்றுவான் கதிர்தோன்ற. ௧௬௪

முன்னைநாள் போல்வந்து திருமுகலிப் புனல்மூழ்கிப்
பன்முறையும் தம்பிரான் அருள்செய்த படிநினைந்து
மன்னுதிருக் காளத்தி மலையேறி முன்புபோல்
பின்னுசுடைப் பூசித்துப் பின்பாக ஒளித்திருந்தார். ௧௬௫

**வேறு**

கருமுகில் என்ன நின்ற கண்படா வில்லி யார்தாம்
வருமுறை ஆறும் நாளில் வரும்இர வொழிந்த காலை

௧௬௧. திருந்தவியில் - நல்ல அவிர்ப்பாகமாகிய ஊனைப் பார்க்கிலும்.

௧௬௨. பிறரை அறிவுறாத.

௧௬௩. பரிவிருக்கும் பரிசெல்லாம்-அன்பிருக்கும் தன்மைகளை யெல்லாம். புனற்சடிலம் - கங்கை யணிந்த சடையையுடைய.

௧௬௪. புனைதவத்து - செய்யப்பட்ட தவத்தை யுடைய; தவத்தையே ஆபரணமாக உடைய எனினுமாம். துனை - வேகமான. தோன்றுவான் கதிர் - சூரியனது கிரணம்.

௧௬௫. பின்னுசுடை - தலைக்கோல முடைய சிவபெருமானை.

பா - ம்—*செய்ய. †அகநெகிழ்ந்த.

|| கருஅ-ம் பாட்டு முதல் ௧௬௨-ம் பாட்டுவரை வெள்ளிப்பாடல்கள் என்று சொல்லப்படுகின்றன; அவ்வளவும் பல பிரதிகளில் காணப்படவில்லை.

அருமறை முனிவ னார்வந் தணைவதன் முன்பு போகித்
தருமுறை முன்பு போலத் தனிப்பெரு வேட்டை யாடி. கசுசு

மாறில்ஊன் அமுதும் நல்ல மஞ்சனப் புனலும் சென்னி
ஏறுநாண் மலரும் வெவ்வே றியல்பினில் அமைத்துக் கொண்டு
தேறுவார்க் கமுத மான செல்வனார் திருக்கா ளத்தி
ஆறுசேர் சடையார் தம்மை அணுகவந் தணையா நின்றார். கசுஎ

"இத்தனை பொழுது தாழ்த்தேன்" எனவிரைந் தேகு வார்முன்
மொய்த்தபல் சகுனம் எல்லாம் முறைமுறை தீங்கு செய்ய
"இத்தகு தீய புட்கள் ஈண்டமுன் உதிரங் காட்டும்,
அத்தனுக் கென்கொல் கெட்டேன் அடுத்ததென்" றணையும் போதில்.

அண்ணலார் திருக்கா ளத்தி அடிகளார் முனிவ னார்க்குத்
திண்ணனார் பரிவு காட்டத் திருநய னத்தில் ஒன்று
துண்ணென உதிரம் பாய இருந்தனர் தூரத் தேஅவ்
வண்ணவெஞ் சிலையார் கண்டு வல்விரைந் தோடி வந்தார். கசுசு

வந்தவர் குருதி கண்டார் மயங்கினார் வாயில் நன்னீர்
சிந்திடக் கையில் ஊனுஞ் சிலையுடன் சிதறி வீழக்
கொந்தலர் பள்ளித் தாமங் குஞ்சிநின் றலைந்து சோரப்
பைந்தழை அலங்கல் மார்பர் நிலத்திடைப் பதைத்து வீழ்ந்தார். கஎ0

விழுந்தவர் எழுந்து சென்று துடைத்தனர் குருதி வீழ்வ
தொழிந்திடக் காணார் செய்வ தறிந்திலர் உயிர்த்து மீள
அழிந்துபோய் வீழ்ந்தார் தேறி "யாரிது செய்தார்" என்னு
எழுந்தனர் திசைகள் எங்கும் பார்த்தனர் எடுத்தார் வில்லும். கஎக

வாளியுந் தெரிந்து கொண்"டிம் மலையிடை எனக்கு மாறு
மீளிவெம் மறவர் செய்தார் உளர்கொலோ விலங்கின் சாதி

கசுஎ. மாறில்-குற்றமில்லாத. நாண்மலரும் - அன்றலர்ந்த மலரும். தேறுவார்க்கு - அன்பில் தெளிந்தவர்க்கு. செல்வனார் - செல்வனாராகிய.

கசுஅ. இத்தகு தீய புட்கள் ஈண்ட - இப்படிப்பட்ட துர்ச்சகுனங்களைக் காட்டும் கொடிய பறவைகள் நெருங்கலால். இச்சகுனங்கள் இரத்தங் காட்டும் என்று திண்ணனார் அநுபவம் உணர்த்தியவாறும். அடுத்தது - நேர்ந்தது.

கஎ0. கொந்தலர் - கொத்தாக அலர்ந்த. அலங்கல் மார்பர் - அசையும் மாலையணிந்த மார்பையுடைய திண்ணனார்.

கஎக. உயிர்த்து - பெருமூச்சு விட்டு. அழிந்து - அறிவழிந்து; மயங்கி.

கஎஉ. அம்புகளைத் தெரிந் தெடுத்துக்கொண்டு. மீளிவெம் மறவர் - வன்மையும் கொடுமையு முடைய வேடர்கள். ஆளி (சிங்கம்) முதலாகச் சொல்லப் பட்ட விலங்குகள்.

ஆளிமுன் னாகி யுள்ள விளைத்தவோ அறியேன்" என்று
நீளிருங் குன்றைச் சாரல் நெடிதிடை நேடிச் சென்றார். கஎஉ

வேடரைக் காணார் தீய விலங்குகள் மருங்கும் எங்கும்
நாடியுங் காணார் மீண்டும் நாயனார் தம்பால் வந்து
நீடிய சோகத் தோடு நிறைமலர்ப் பாதம் பற்றி
மாடுறக் கட்டிக் கொண்டு கதறினார் கண்ணீர் வார. கஎஙு

"பாவியேன் கண்ட வண்ணம் பரமனார்க் கடுத்த தென்னோ
ஆவியின் இனிய எங்கள் அத்தனார்க் கடுத்த தென்னோ
மேவினார் பிரிய மாட்டா விமலனார்க் கடுத்த தென்னோ
ஆவதொன் றறிகி லேன்யான் என்செய்கேன்" என்று பின்னும். கஎச

"என்செய்தால் தீரு மோதான் எம்பிரான் திறத்துத் தீங்கு
முன்செய்தார் தம்மைக் காணேன் மொய்கழல் வேடர் என்றும்
பின்செய்வார் பகழிப் புண்கள் தீர்க்குமெய் மருந்து *தேடிப்
பொன்செய்தாழ் வரையிற் கொண்டு வருவன்நான்" என்று போனார்.

நினைத்தனர் வேறு வேறு நெருங்கிய வனங்கள் எங்கும்
இனத்திடைப் பிரிந்த செங்கண் ஏறென வெருக்கொண் டெய்திப்
புனத்திடைப் பறித்துக் கொண்டு பூதநா யகன்பால் வைத்த
மனத்தினுங் †கடிது வந்தம் மருந்துகள் ‡பிசைந்து வார்த்தார். கஎசு

மற்றவர் பிசைந்து வார்த்த மருந்தினால் திருக்கா ளத்திக்
கொற்றவர் கண்ணிற் புண்நீர் குறைபடா §திழியக் கண்டும்

---

கஎங. நாயனார் தம்பால் - சிவபிரானிடத்தில். தமதுள்ளத்தில் நிறைந்த மலர்ப்பாதம். மாடுஉற - திருமேனியின் புறமெல்லாம் பொருந்த.

கஎச. உயிரைப் பார்க்கிலும் இனிய. "என்னில் யாரும் எனக்கினி யா ரில்லை - என்னி லும்இனி யானொரு வனுளன்"—அப்பர் : திருவின்னம்பர் திருக்குறுந்தொகை - க. "கலந்தபின் பிரிவதில்லை"—அப்பர் : திருவையாறு - திருநேரிசை - ச.

கஎரு. எம்பிரான் திறத்து - காளத்தியப்பரிடத்து. வேடர்கள் எப்பொழுதும் ஒளிவீசும் நீண்ட அம்புகளால் உண்டான புண்களைத் தீர்க்கவல்ல மருந்தை (பச்சிலைகளை) நாடி. பொன் - பொற்கொடிகள் ; பொற்பொடிகளு மாம் ; அழகுமாம்.

கஎசு. நினைத்தனர் - மருந்திலைகளை நினைக்கும் நெஞ்சுடையவராய். வெருக்கொண்டு - "காளத்தியப்பரைத் தனியேவிட்டு வந்தோமே ; இன்னும் என்ன நேருமோ" என்ற அச்சங்கொண்டு. புனங்களில். பூதநாயகன்பால் - சிவ பிரானிடத்தில்.

பா - ம்—*நாடிப் †வந்து சென்று. ‡பிழிந்து. §தொழுகக்.

"இற்றையின் நிலைமைக் கென்னோ" இனிச்செயல் என்று பார்ப்பார்
உற்றநோய் தீர்ப்ப தூனுக் கூனெனும் உரைமுன் கண்டார். கஎஎ

"இதற்கினி என்கண் அம்பால் இடந்தப்பின் எந்தை யார்கண்
அதற்கிது மருந்தாய்ப் புண்ணீர் நிற்கவும் அடுக்கும்" என்று
மதர்த்தெழும் உள்ளத் தோடு மகிழ்ந்துமுன் இருந்து தங்கண்
முதற்சரம் அடுத்து வாங்கி முதல்வர்தங் கண்ணில் அப்ப. கஎஅ

நின்றசெங் குருதி கண்டார் நிலத்தினின் றேறப் பாய்ந்தார்
குன்றென †வளர்ந்த தோள்கள் கொட்டினார் கூத்தும் ஆடி
"நன்றுநான் செய்த இந்த மதி"என நகையுந் தோன்ற
ஒன்றிய களிப்பி னாலே உன்மத்தர் போல மிக்கார். கஎகூ

வலத்திருக் கண்ணில் தங்கண் அப்பிய வள்ள லார்தம்
நலத்தினைப் பின்னுங் காட்ட நாயனார் மற்றைக் கண்ணில்
உலப்பில்செங் குருதி பாயக் கண்டனர் உலகில் வேடர்
குலப்பெருந் தவத்தால் வந்து கோள்கையின் உம்பர் மேலார். கஅ0

கண்டபின் "கெட்டேன் எங்கள் காளத்தி யார்கண் ஒன்று
புண்தரு குருதி நிற்க மற்றைக்கண் குருதி பொங்கி
மண்டுமற் றிதனுக் கஞ்சேன் மருந்துகை கண்டேன் இன்னும்
உண்டொரு கண்அக் கண்ணை இடந்தப்பி ஒழிப்பேன்" என்று. கஅக

கண்ணுதல் கண்ணில் தங்கண் இடந்தப்பின் காணு நேர்பா
டெண்ணுவார் தம்பி ரான்றன் திருக்கண்ணில் இடக்கால் ஊன்றி
உள்நிறை விருப்பி னோடும் ஒருதனிப் பகழிகொண்டு
திண்ணனார் கண்ணில் ஊன்றத் தரித்திலர் தேவ தேவர். கஅஉ

---

கஎஎ. இற்றையின் நிலைமைக்கு - இத்தன்மைத்தாகிய நிலைமைக்கு ; இப்படி ஒழுகும் நிலைமைக்கு. உரைமுன் கண்டார்-பழமொழி தோன்றப் பெற்றார் ; நினைவுக்கு வந்தது என்றபடி.

கஎஅ. இடந்து - தோண்டி. அடுக்கும் - கூடும். மதர்த்து - பூரித்து ; மகிழ்ச்சியாற் செருக்கி. தங் கண் முதல் - தமது கண்களில் முதன்மையான வலது கண்ணை. சரம் அடுத்து வாங்கி - அம்பால் தோண்டி எடுத்து. "தங்கண் -...........வாங்கி" என்பதற்குத் தம்மிடமுள்ள முதன்மைத் தன்மை வாய்ந்த அம்பால் தங்கண்ணைத் தோண்டி எடுத்து என்போருமுளர்.

கஎகூ. மதி - அறிவான செயல். ஒன்றிய - கூடிய; பொருந்திய. உன்மத்தர் - பித்துக் கொண்டவர்.

கஅ0. அன்பு நலத்தினை. நாயனார் - சிவபெருமான். உலப்பில் - வற்றாத. உம்பர் - தேவரினும். கஅக. மண்டும் - விரைந்து ஒழுகும்.

கஅஉ. காணும் நேர்பாடு எண்ணுவார் - தங்கண்க ளிரண்டும் இல்லாத வேளையில் இறைவன்றன் கண்ணுள்ள இடத்தை உணருங் குறிப்பை எண்ணுவாராய்.

பா - ம்—*எடுத்து. †வளரும்.

செங்கண்வெள் விடையின் பாகர், திண்ணனூர் தம்மை யாண்ட
அங்கணர், திருக்கா ளத்தி அற்புதர் திருக்கை, *அன்பர்
தங்கண்முன் இடக்கும் கையைத் †தடுக்கமுன் றடுக்கு நாக
கங்கணர் அமுத வாக்குக் "கண்ணப்ப நிற்க" என்ற. க௮௩

கானவர் பெருமா னூர்தங் கண்ணிடந் தப்பும் போதும்
ஊனமு துகந்த ஐயர் உற்றுமுன் ‡பிடிக்கும் போதும்
ஞானமா முனிவர் கண்டார் நான்முகன் முதலா யுள்ள
வானவர் §வளர்பூ மாரி பொழிந்தனர் மறைகள் ஆர்ப்ப. க௮௪

பேறினி இதன்மேல் உண்டோ பிரான்திருக் கண்ணில் வந்த
ஊறுகண் டஞ்சித் தங்கண் இடந்தப்ப உதவுங் கையை
¶ஏறுயர்த் தவர்தங் கையால் பிடித்துக்கொண் "டென்வ லத்தில்
மாறிலாய்! நிற்க" என்று மன்னுபேர் அருள்பு ரிந்தார். க௮௫

மங்குல்வாழ் திருக்கா ளத்தி மன்னனூர் கண்ணில் புண்ணீர்
தங்கணால் மாற்றப் பெற்ற தலைவர்தாள் தலைமேற் கொண்டே
கங்கைவாழ் சடையார் வாழுங் கடவூரில் கலய னாராம்
பொங்கிய புகழின் மிக்கார் திருத்தொண்டு புகல லுற்றேன். க௮௬

௲ திருவிருத்தம் - ௮௩௫

---

க௮௩. செங்கண்......அற்புதர் - சிவபெருமான். கையை - திண்ணனூர் கையை. தடுத்தற் பொருட்டுப் பாம்பைக் கங்கணமாக அணிந்துள்ள சிவபெருமானது அமுத வாக்கு மூன்று முறை " கண்ணப்ப நிற்க, கண்ணப்ப நிற்க, கண்ணப்ப நிற்க " என்றது. " நில்லுகண்ணப்ப நில்லுகண்ணப்ப என்அன் புடைத் தோன்றல் நில்லு கண்ணப்ப......"—**திருக்கண்ணப்ப தேவர் திருமறம்.** "மறைமொழி பிறந்த தம்வாய் மலர்திறந் தருட்பே ராழி - இறைவர்கண்ணப்ப நிற்க எனமுக்கால் மொழிந்து கொண்டே"—**சீகாளத்திப் புராணம்.**

க௮௪. ஊன் அமுது உகந்த ஐயர் - சிவபிரான். ஞானமா முனிவர் - சிவ கோசரியார். வளர் - கற்பகத் தருவின்.

க௮௫. ஏறு உயர்த்தவர் - இடபக் கொடியையுடைய சிவபெருமான். வலத்தில் - வலப் பக்கத்தில்.

க௮௬. மங்குல் வாழ் - மேகங்கள் தவழும். தலைவர் - அன்பிற்றலைவராகிய கண்ணப்பர். அன்பிற்றலைவராகிய கண்ணப்பரை,அவர்பின்வந்த பெரியார் பலர் போற்றியிருக்கின்றனர். நால்வர், சங்கராச்சாரியர், பட்டினத்தார் முதலிய பெரியோர்களெல்லாரும் கண்ணப்பரை அன்புத் தலைவராகப் போற்றியிருத்தல் கருதத் தக்கது. "**கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்** - என்னப்பன் என்னொப்பில் என்னையுமாட் கொண்டருளி - வண்ணப் பணித்தென்னை வாவென்ற வான்கருணைச் - சுண்ணப்பொன் னீற்றற்கே சென்றூதாய் கோத்தும்பீ "—**திருவாசகம் :** திருக்கோத்தும்பி - ௪.

பா - ம்—*அம்பால். †தடுக்கும் முன் தடுக்கும் ; தடுக்கமுன் தடுக்கும் ; தடுக்கும் மூன்றடுக்கு. ‡பிடித்த. §பூவின். ¶ஏறுகைத்.

பொத்தப்பி நாடு, வேடர்கள் நிறைந்த ஒரு மலை நாடு. அதன் பேரூர் உடுப்பூர் என்பது. அவ்வூரில் வேட மன்னன் ஒருவன் இருந்தான். அவன் பெயர் நாகன்.

நாகன் தத்தை என்பவளை மணந்து இல்லறம் நடாத்திவந்தான். வந்த நாளில் அவன், தனக்குப் புத்திரப் பேறின்மை கருதி வருந்தி முருகப் பெருமானை வழிபடலானான். முருகப்பெருமான் திருவருளால் அவனுக்கு ஓர் ஆண் குழவி பிறந்தது. அக்குழவியை நாகன் ஏந்தியபோது, அது திண்மையாகத் தோன்றினமையால் அதற்குத் **திண்ணன்** என்னும் திருப்பெயரைச் சூட்டினன்.

திண்ணனார், வேடர்கள் போற்ற வளர்ந்து விற்பயிற்சிக்குரிய பருவத்தை அடைந்தார். அவர் நல்லாசிரியர்பால் வில்வித்தை பயின்று தேர்ச்சி பெற்றார். திண்ணனார்க்கு வயது பதினாறு ஆயிற்று. அவர் தந்தை நாகன், முதுமையால் மெலிவுற்றான். அதனால் அவன் காடுபோந்து வேட்டையாட இயலாதவனானான்.

ஒருநாள், வேடர்கள், நாகனிடம் போந்து, "அரசே! மாதந்தோறும் வேட்டையாடுதல் தவறியபடியால் கொடிய விலங்குகள் பெருகிப் புனங்களை அழிக்கின்றன" என்று முறையிட்டார்கள். அதற்கு நாகன், "நான் மூப்பால் மெலிந்துவிட்டேன். இனி வேட்டை யாடுதல் என்னால் இயலாது. என் மகன் திண்ணனை உங்களுக்குத் தலைவனாக்குகிறேன்" என்று சொல்லித் தேவராட்டியை அழைப்பித்துத் திண்ணனார்க்கு அரசுரிமை வழங்கினன். தேவராட்டியுந் திண்ணனாரை வாழ்த்திச் சென்றாள்.

வேடமன்னராகிய திண்ணனார், வேட்டைக்குரிய கோலந்தாங்கி காடு நோக்கினார். வேடவீரர்களும் அவருடன் புறப்பட்டார்கள். நாய்களுஞ் சூழ்ந்து ஓடின. வேடர்கள் காட்டில் நுழைந்து ஆங்காங்கே முறைப்படி வலைகளை வளைத்துக் கட்டினார்கள். திண்ணனார் காட்டிலே சுழன்று சுழன்று வேட்டையாடிக் கொடிய விலங்குகளை வீழ்த்தினார். அப்பொழுது கொழுத்த பன்றியொன்று எழும்பி வலைகள் அறும்படியாகக் கடுவிசையில் ஓடிற்று. அப்பன்றியைத் தொடர்ந்து திண்ணனாரும் அவ்விசையில் ஓடினார்.

திண்ணனார் பன்றியைத் தொடர்ந்து ஓடியது மற்ற வேடர்களுக்குத் தெரியாது. நாணன் காடன் என்ற இருவர் மட்டுந் திண்ணனாரைத் தொடர்ந்தே ஓடினர். அப்பன்றி, நாய்களுக்குந் தப்பி நெடுந்தூரம் ஓடி, இளைத்து, மேலும் ஓட இயலாததாய், ஒரு மலையடியிலே உள்ள சோலையை அடைந்து அங்கே மரச்செறிவில் நின்றது. திண்ணனார் அப்பன்றியைக்கண்டு அதன்மீது அம்புகளை எய்யாது, அதனிடம் நெருங்கி, உடை வாளை உருவி அதைக் குத்தினார். அவரைப் பின்தொடர்ந்து ஓடிவந்த நாணன், காடனைப் பார்த்து, "காடனே! பல காதங்கள் ஓடிவந்து இளைத்தோம். முடிவில் இப்பன்றியை நமது வேடர் பெருமானே கொன்றார்" என்று திண்ணனாரை வியந்து இருவரும் அவரடியில் விழுந்து வணங்கினர்.

அதற்குமேல் இருவரும் திண்ணனாரை நோக்கி "நாம் நெடுந்தூரம் வந்துவிட்டோம். பசி நம்மை அரிக்கிறது. இப்பன்றியைக் காய்ச்சித் தின்று தண்ணீர் அருந்திப் பசி தணித்துக் கொள்வோம். பின்னே, வேட்டைக் காட்டுக்குப் போவோம்" என்றனர். திண்ணனார், "நல்லது, இக்காட்டில் தண்ணீர் எங்கேயிருக்கிறது?" என்று கேட்டார். நாணன், "அதோ பெரிய தேக்குமரம் தெரிகிறதல்லவா? அதற்கு அப்பால் நீண்ட குன்று ஒன்று இருக்கிறது.

அதற்கு அயலில் பொன்முகலி ஆறு ஓடுகிறது" என்றான். திண்ணனார், "நாம் அங்கே போவோம். இப்பன்றியை எடுத்து வாருங்கள்." என்று சொல்லி அக்குன்று நோக்கிப் போனார். போம்போது அரைக்காதத்துக் கப்பா லுள்ள திருக்காளத்தி மலைச்சாரலிலுள்ள சோலை அவருக்குக் காட்சியளித்தது. அக்காட்சிகண்ட திண்ணனார், "நாணனே! நமக்கு முன்னே தோன்றும் இக்குன்றினுக்குப் போவோம்." என்றார். அதற்கு அவன் "இக்குன்றில் நல்ல காட்சி காண்போம்; அங்கே குடுமித்தேவர் வீற்றிருக்கிறார்; கும்பிட லாம்" என்றான். "என்ன நாணா! மலையை நெருங்க நெருங்க என்மேலுள்ள சுமை குறைகிறதுபோல் தோன்றுகிறது. ஒருவித புது விருப்பம் பொங்கி எழுகிறது. அது விரைந்து என்னுள் பாயா நிற்கிறது. தேவர் இருக்கும் இடம் எங்கே? கடிது செல்க" என்று திண்ணனார் விரைந்து நடந்தார்.

மூவரும் பொன் முகலியை அடைந்தனர். அவ்வாற்றங்கரையிலுள்ள ஒரு மர நிழலிலே பன்றி வைக்கப்பட்டது. தீக்கடைக்கோலால் நெருப்பை உண்டு பண்ணி வைக்குமாறு காடனுக்குக் கட்டளையிட்டுத் திண்ணனார் நாணனோடு மலை நோக்கிச் சென்றார்.

முன்னைத் தவம் திண்ணனாரை வேற்றுருவாக்குகிறது; அன்பு பெருக் கெடுக்கிறது; அளவிலா ஆர்வம் பொங்குகிறது; காதல் கூர்ந்து கூர்ந்தெழு கிறது; என்பு நெக்கு நெக்குருகுகிறது. இவ்வாறு உள்ளத்தெழும் வேட்கை யோடு திண்ணனார் மலையேறுகிறார். நாணன் முன்னே செல்கிறான். அவ னுக்குப் பின்னே அன்பு செல்கிறது. அதற்குப் பின்னே திண்ணனார் மலைப் படிகளென்னும் தத்துவப்படிகளை ஏறிச் செல்கிறார்.

திண்ணனார் சிவபெருமானைக் காண்பதற்கு முன்னே, சிவபெருமான் அவரைத் திருக்கண்ணோக்கஞ் செய்தார். செய்ததும், வேடர் கோமான், ஒளி மயமாய் அன்புருவம் பெற்றார். அவர் மலைக்கொழுந்தென விளங்கும் மகா தேவரைக் கண்டார்; கண்டதும் கட்டித் தழுவுகிறார்; மோந்து மோந்து நிற் கிறார்; பெரு மூச்சு விடுகிறார்; மெய்ம்மயிர் சிலிர்க்கிறது; புளகம் போர்க்கிறது; கண்களினின்றும் அருவி பெருகுகிறது. "அச்சோ! இவர் அடியேனுக்கு அகப்பட்டார்" என்று திண்ணனார் கூறுகிறார்; ஆனந்தக் கூத்தாடுகிறார். "இது கொடிய விலங்குகள் திரியும் கானம்! இங்கே வேடரைப்போல ஐயன் தனித்திருப்பதென்னே! துணைவர் ஒருவருமிங்கில்லையே! அந்தோ! கெட் டேன்; கெட்டேன்." என்று அவர் நைந்து நைந்துருகுகிறார். கைச்சிலை நழுவி விழுந்தது; அஃதும் அவருக்குத் தெரியவில்லை. பின்னர்ச் சிறிது தெளிவுற்று, "இவர் முடிமீது நீரை வார்த்துப் பச்சிலையும் பூவுமிட்டுச் சென் றவர் யாரோ?" என்கிறார். அருகிருந்த நாணன், "இஃதெனக்குத் தெரியும். முன்னொரு நாள் உம் தந்தையாருடன் வேட்டையாடி இங்கே வந்தோம். அப்பொழுது ஒரு பார்ப்பான் இவர்மீது நீரை வார்த்துப் பச்சிலைகளையும் மலர் களையுஞ் சூட்டி, உணவை ஊட்டி, முன்னின்று சில மொழிகளைச் சொல்லிக் கொண்டிருந்ததைப் பார்த்தேன். அவனே இதைச் செய்திருத்தல்வேண்டும்" என்றான். அதைக்கேட்ட அன்பர், "இவைகள் இறைவனார்க்கு இனியவை போலும்" என்று அவைகளைக் கடைப்பிடித்துக் கொண்டு ஆண்டவனைப் பிரிந்து செல்ல மனமில்லாதவராய், "இவர் இங்கே தனியாய் இருக்கிறார். இவர் அமுதுசெய்ய இறைச்சியும் அளிப்பாரில்லை. இவரைப் பிரிதலும் ஒண் ணுது. என் செய்வேன்! இவருக்கு இறைச்சிகொண்டு வந்தே தீர்தல் வேண் டும்" என்று நினைந்து சிறிது தூரம் போவார்; மீண்டும் திரும்புவார்; தழுவிக் கொள்வார்; திரும்பவும் போவார்; காதலால் நோக்கி நோக்கி நிற்பார்; கன்றை

விட்டகலும் பசுப்போலாவார். "ஐயனே! திருவமுது செய்ய நல்லஇறைச்சியை நானே கொண்டு வருவேன். இங்கு உனக்குச் சுற்றத்தார் ஒருவருமில்லை! உன்னைப் பிரிந்து செல்லவும் மனம் எழவில்லை. பசியோடிருத்தலையும் மனம் விரும்பவில்லை. ஆதலால் போய் வருகிறேன்" என்று கூறிக் கண்களில் அருவிபாய, வில்லை எடுத்துக்கொண்டு மலையினின்றும் இழிந்து சோலை சேர்ந் தார். நாணனும் பின்னே தொடர்ந்து வந்தான்.

அங்கிருந்த காடன், எதிரே சென்று பணிந்து "தீக்கடைந்து வைத்து ளேன். பன்றியின் உறுப்புக்களை யெல்லாம் உமது குறிப்புப்படி பார்த்துக் கொள்க. இவ்வளவு நேரந் தாழ்த்தது என்னே?" என்றான். அதற்கு நாணன், நிகழ்ந்தவைகளைக் கூறி, "குடுமித் தேவர்க்கு இறைச்சி கொண்டு போகும் பொருட்டு இவர் இங்கே வந்திருக்கிறார்; நமது குலத் தலைமையை விட்டு விட்டார்; அத்தேவர் வழிப்பட்டு விட்டார்" என்று சொன்னான். அதைக்கேட்ட காடன், "திண்ணனாரே! என் செய்தீர்! நீங்கள் எங்கள் குலத்தலைவரல் லரோ! என்ன பித்துக் கொண்டீர்!" என்று கூறினான்.

கானவர் பெருமான்அவனை நோக்காது பன்றியை நெருப்பிலே வதக்கு கிறார்; வதக்கி அதன்இறைச்சியைப் பதஞ் செய்கிறார்; வெந்த இறைச்சிகளை வாயிலிட்டு அதுக்குகிறார்; அதுக்கி, இனியவைகளைக் கல்லையிலே வைக்கி றார்; மற்றவைகளைப் புறத்திலே துப்புகிறார். இச்செயல்களைப் பார்த்துக் கொண்டிருந்த நாணனுங்காடனும் "இவர்க்குப் பித்தம் தலைக்கேறி விட்டது; இவர் பசியால் பீடிக்கப்பட்டிருக்கிறார்; இருந்தும், இறைச்சிகளை உண்கிறா ரில்லை; அவைகளை வீணுகஇலைக் கலத்திலிடுகிறார்; புறத்தில் உமிழ்கிறார்; நமக்குங் கொடுக்கின்றா ரில்லை; இவர் தெய்வப்பித்துக் கொண்டிருக்கிறார்; நாம் என் செய்வது? தேவராட்டியையும் நாகனையும் அழைத்து வருதல் வேண்டும்; நாம் காடுபோந்து நம்முடன்போந்த மற்றவர்களையும் அழைத்துப் போவோம்" என்று எண்ணிச் சென்றார்.

இவர்கள் சென்றது சிவத்தில் ஈடுபட்டுள்ள திண்ணனார்க்குத் தெரியாது. அவர் ஊனமுதைக் கல்லையிலே வைத்துக் கொண்டார்; திருமஞ்சனத்துக்குப் பொன் முகலியாற்று நீரை வாயிலே முகந்துகொண்டார்; பச்சிலைகளையும் மலர்களையும் குடுமியிலே செருகிக் கொண்டார்; ஒரு கையில் வில்லையும் அம்பையும் தாங்கிக்கொண்டார்; மற்றொரு கையில் ஊனமுதமுள்ள இலைக் கலத்தை ஏந்திக்கொண்டார்; "எனக்கினிய பெருமான் சாலப் பசித்திருப்பர்" என்று இரங்கி ஏங்கி விரைந்து நடந்து மலையை அடைந்தார்; அங்கே சிவனார் திருமுடிமீ திருந்த மலர்களைக் கால் செருப்பால் மாற்றினார்; வாய் நீரைத் திரு முடிமீது அன்புபோல் உமிழ்ந்தார்; குடுமியில் செருகிவந்த பூக்களை ஆண்ட வனுக்குச் சாத்தினார்; ஊனமுதைத் திரு முன்னே வைத்து, "ஆண்டவனே! இவ்விறைச்சிகள் நல்லன. யானே சுவை பார்த்துத் திரு முன்னர்ப் படைத்துள் ளேன். அமுது செய்தருள்க" என்று இன்சொற் கூறி அமுதுசெய்வித்தார்.

அப்பொழுது சூரியன் மறைந்தான். "இரவில் கொடிய விலங்குகள் ஐயனுக்குத் தீங்கு செய்யும்" என்று திண்ணனார் கருதி அஞ்சித் திருக்கையில் சிலை தாங்கிச் சிவபிரானை நோக்கி நின்றார். காடுகளில் நுழைந்தும் மலைகளிற் புகுந்தும் பன்னெடு நாள் அருந்தவங்கிடந்த தேவர்களும் முனிவர்களும் காண் டற்கரிய பெருமானைத் திண்ணனார் அன்பினில்கண்டு கொண்டார். பொழுது புலர்ந்தது. பறவைகள் ஒலி செய்தன. இரவு முழுவதும் கண் துயிலாத வீரர், ஆண்டவனுக்கு ஊனமுது கொண்டுவர வேட்டைக்குப் புறப்பட்டார்.

திண்ணனூர் சென்ற பின்பு, சிவகோசரியார் அங்கே வந்தார். சிவகோசரி யார் என்பவர், திருக்காளத்தியப்பரை நாள்தோறும் ஆகமவிதிப்படி அருச்சிப்ப வர். அவர் வழக்கம்போலத் தொண்டாற்றத் திரு முன்னர்ச் சென்றபோது, அங்கே வெந்த இறைச்சியையும் எலும்பையும் பார்த்து, அகலமிதித்து ஓடி "இவ்வநுசிதத்தைச் செய்தவர் யாவர்? வேடப் புலையர்களே இதைச் செய் திருத்தல்வேண்டும். இக்கொடுமைக்குத் தேவ தேவன் திருவுள்ளமும் இசைந் ததோ" என்று கலங்கித்தெளிந்து, இறைச்சி, இலை, செருப்படி, நாயடி முத லியவற்றைத் திருவலகால் மாற்றிப் பொன்முகலி போந்து மூழ்கி விரைந்து சந்நிதி சேர்ந்து பிராயச்சித்தஞ் செய்து, முறைப்படி அருச்சித்துத் தமது தபோவனம் போனார்.

ஆண்டவனுக்கு ஊனமுதங் கொண்டுவரச் சென்ற திண்ணனூர், கான் புகுந்தார்; வேட்டையாடிப் பன்றி மான் முதலிய விலங்குகளைக் கொன்றார்; அவைகளின் ஊனெடுத்துப் பதஞ்செய்து தேன் கலந்து கல்லையிலே வைத்துக் கொண்டார்; முன்போலவே மஞ்சனமும் மலருங் கொண்டார்; இவைகளைக் கொண்டு மலையேறி முன்போலவே பார்ப்பனர் பூசையை அகற்றித் தமது பூசையைச்செய்து முடித்து, இறைச்சிகளைத் திருமுன்னேவைத்து, "ஐயனே! இவ்விறைச்சிகள் முன்னவைகளைவிடச் சிறந்தன; இவை பன்றி, மான், கலை, மரை, கடமை இவைகளின் இறைச்சிகள்; யானுஞ் சுவை பார்த்தேன்; தேனுங் கலந்துள்ளேன்; தித்திக்கும்! அமுது செய்தருள்க" என்று இன்சொல் கூறி அமுது செய்வித்தார். இவ்வாறு திண்ணனூர் பகலில் வேட்டையாடி ஆண்டவனுக்கு ஊனமுதம் படைத்தும், இரவிலே உறங்காமல் ஆண்டவன் முன்னின்றும் திருத்தொண்டு நிகழ்த்தி வந்தார். சிவகோசரியாரும் சிவ சந்நிதி போந்து வனவேந்தர் பூசனையை மாற்றி ஆகமமுறைப்படி அருச்சித்து வந்தார்.

நாணனுங் காடனும் ஊருக்குச் சென்று, திண்ணனூர் செயல்களை நாக னுக்கு அறிவித்தனர். நாகன் ஊணுறக்கமின்றித் தேவராட்டியையும் அழைத் துக்கொண்டு மைந்தரிடம் போந்து அவரைத் தன் வழிப்படுத்தப் பற்பல வழியில் முயன்றான். முயன்றும் பயன் விளையாமை கண்டு, மனம் நொந்து அவன் வீட்டுக்குத் திரும்பினான்.

சிவகோசரியார் நாடோறும் அநுசிதத்தை விலக்கி விலக்கிச் சலிப்புற்று ஒருநாள் ஆண்டவன் எதிரே நின்று "என்னுடைய நாயகனே! இவ்வநுசிதஞ் செய்தாரைக் காண்டல் கூடவில்லை. இதனை உன்னருளாலேயே ஒழித்தல் வேண்டும்" என்று வேண்டிச் சென்றார். அன்றிரவு சிவபெருமான் சிவகோசரி யார் கனவிலே தோன்றி, "அநுசிதஞ் செய்யும் ஒருவனை வேடுவன் என்று நீ நினைக்கவேண்டாம். அவன் அன்பன். அவனுடைய வடிவெல்லாம் நம்பக்க லுள்ள அன்பே யாகும். அவனுடைய அறிவெல்லாம் நம்மை அறியும் அறி வேயாகும். அவனுடைய செயல்களெல்லாம் நமக்கு இனிய செயல்களாகும். அவன் நிலை இத்தகைத்து. நீ நாளை நமக்குப் பின் ஒளித்திரு. அவன் தன் அன்புச் செயல்களைக் காண்பாய். கவலை யொழிக" என்றருளி மறைந்தார். சிவகோசரியார் கண் விழித்துக் கொண்டார். பொழுது விடியும் வரை அவருக்கு உறக்கம் வரவில்லை. பொழுது விடிந்தது. சிவகோசரியார் எழுந்து பொன் முகலியில் நீராடி மலையேறி வழக்கம்போல ஆண்டவனை வழிபட்டுப் பின் பக்கம் ஒளித்திருந்தார். நாட்கள் ஆறாயின.

திண்ணனூர், வழக்கம்போல இறைச்சி முதலியவற்றைத் தாங்கிக்கொண்டு விரைந்து வருகிறார். அவர் அன்று வழியில் துர்ச் சகுனங்களைக் காண்கிறார்.

“ இவைகள் உதிரங் காட்டுங் குறிகள். என் ஐயனுக்கு என்ன நேர்ந்ததோ !” என்று அவர் கலங்கி ஓடி வருகிறார். திருக்காளத்திப் பெருமான், திண்ணனார் தம் அன்பின் பெருமையைக் காட்டத் தமது வலக் கண்ணினின்றும் உதிரம் பெருகச் செய்தார். அக்காட்சியைத் தூரத்தே கண்ட திண்ணனார், ஓடோடி வந்தார் ; இரத்தங்கண்டார் ; மயங்கினார் ; அவர்தம் வாயிலுள்ள நீர் சிந்திற்று; கையிலுள்ள ஊன் சிதறிற்று ; வில்லும் விழுந்தது ; தலைமயிரினின்றும் மலர்கள் விழுந்து அலைந்தன. திண்ணனார் பதை பதைத்து வீழ்கிறார் ; எழுகிறார் ; எழுந்துபோய் இரத்தத்தைத் துடைக்கிறார்; துடைத்தும் இரத்தம் நிற்கவில்லை. அவர் பெருமூச்சு விட்டு விழுகிறார் ; பின் ஒருவாறு தேறி, “ யார் இது செய்தார் ?” என்று எழுந்து திசை திசை ஓடிப் பார்க்கிறார் ; வில்லை எடுக்கிறார் ; அம்பைத் தொடுக்கிறார். “ எனக்கு மாறாக இத்தீங்கை வேடர்கள் செய்தார்களோ ? கொடிய விலங்குகள் செய்தனவோ ?” என்று கூறிக்கொண்டே மலைப் பக்கங்களில் அவர் நெடுந் தூரம் ஓடிப் பார்க்கிறார். திண்ணனார் வேடர்களையுங் கண்டாரில்லை ; விலங்குகளையுங் கண்டாரில்லை. அன்பர் திரும்பி வந்து ஆண்டவனைக் கட்டிக்கொண்டு, “ ஐயனே ! உனக்கு அடுத்ததென்னே ? என்னே ?” என்று கதறிக் கதறி அழுகிறார். “இஃது என் செய்தால் தீரும் ? பச்சிலை மருந்துகளைக் கொண்டு வருவேன் ” என்று காடெலாஞ் சுற்றிப் பச்சிலைகளைப் பறித்துவந்து பிசைந்து பிசைந்து ஐயன் கண்ணில் வார்க்கிறார் ; இரத்தம் நிற்கவில்லை. “ இனி என் செய்வது ?” என்று அண்ணல் சிந்தித்து நின்றார். அப்பொழுது “ ஊனுக்கு ஊன் ” என்னும் பழமொழி அவரது நினைவுக்கு வந்தது. வந்ததும், திண்ணனார் அம்பால் தமது வலக்கண்ணை அகழ்ந்தெடுத்து ஐயன் திருக்கண்ணில் அப்பினார். இரத்தம் நின்று விட்டது. அன்பர் பெருமான் குதிக்கிறார் ; தோள் கொட்டுகிறார் ; கூத்தாடுகிறார் ; “ நான் செய்தது நன்று ! நன்று !” என்று கூறிக் கூறி மகிழ்ச்சியடைகிறார். மகிழ்ச்சிப் பெருக்கால் அன்பர் உன்மத்தர் போலானார்.

இன்னும் திண்ணனார் அன்பின் உண்மையைக் காட்டச் சிவபிரான் தமது இடக்கண்ணிலும் உதிரம் பெருகச் செய்தார். அதைக் கண்ட திண்ணனார், “இதற்கு யான் அஞ்சேன் ; மருந்து கைக் கண்டிருக்கிறேன் ; இன்னும் எனக்கொரு கண்ணுண்டு. அதை அகழ்ந்து அப்பி ஐயன் நோயைத் தீர்ப்பேன் ” என்று அடையாளத்தின் பொருட்டுக் காளத்தி நாதர் திருக் கண்ணில் தமது இடக்காலை ஊன்றிக்கொண்டு, உள் நிறைந்த விருப்பத்தோடும் தமது இடக்கண்ணைத் தோண்ட அம்பை ஊன்றலானார். ஊன்றிய பொழுது, தடங்கருணைப் பெருங்கடலாகிய தேவதேவர் மனந்தாளாதவராய், “கண்ணப்ப நிற்க! கண்ணப்ப நிற்க ! கண்ணப்ப நிற்க !” என்றருளிக் கொண்டே திண்ணனார் கையைத் தமது திருக்கையால் பிடித்துத்தடுத்தார். அவ்வரும் பெருங் காட்சி கண்ட சிவகோசரியார் ஆனந்தவாரிதியில் மூழ்கினார். கண்ணப்பர் திருக்கையைப்பற்றிய முக்கணப்பர், கண்ணப்பரைப் பார்த்து, “ மாறிலா அன்பனே ! என் வலப்பக்கத்தில் இருக்கக் கடவாய் ” என்று அவருக்குப் பேரருள் புரிந்தார்.

# குங்குலியக்கலய நாயனார் புராணம்



வாய்ந்தநீர் வளத்தால் ஓங்கி மன்னிய பொன்னி நாட்டின்
ஏய்ந்தசீர் மறையோர் வாழும் எயிற்பதி எறிநீர்க் கங்கை
தோய்ந்தநீள் சடையார் பண்டு தொண்டர்மேல் வந்த கூற்றைக்
காய்ந்தசே வடியார் நீடி இருப்பது கடவூர் ஆகும். க

வயலெலாம் விளைசெஞ் சாலி வரம்பெலாம் *வளையின் முத்தம்
அயலெலாம் வேள்விச் சாலை அணையெலாங் கழுநீர்க் கற்றை
புயலெலாங் கமுகின் காடப் புறமெலாம் அதன்சீர் போற்றல்
செயலெலாந் தொழில்கள் ஆறே செழுந்திருக் கடவூர் என்றும். உ

குடங்கையின் †அகன்ற உண்கண் கடைசியர் குழுமி ஆடும்
இடம்படு பண்ணை தோறும் எழுவன மருதம் பாடல்
வடம்புரி முந்நூல் மார்பின் வைதிக மறையோர் செய்கைச்
சடங்குடை இடங்கள் தோறும் எழுவன சாமம் பாடல். ங

துங்கநீள் மருப்பின் மேதி படிந்துபால் சொரிந்த வாவிச்
செங்கயல் பாய்ந்து வாசக் கமலமும் தீம்பால் நாறும்

---

க. பொன்னி நாட்டின் - காவிரி நாடாகிய சோழநாட்டில். ஏய்ந்த - பொருந்திய. எயில் - மதில் சூழ்ந்த. பண்டு - முன்னாளில். தொண்டர் மேல் - மார்க்கண்டேயர் மீது. கூற்றைக் காய்ந்த - யமனை உதைத்துக் கொன்ற. மார்க்கண்டேயர் பொருட்டுச் சிவபெருமான் யமனைக் கொன்ற இடம் காசியென்று கந்தபுராணம் முதலியன கூறுகின்றன. அவ்விடம் திருக்கடவூரென்று தமிழ் வேதம் முதலியன சொல்லுகின்றன. ஓர் அன்பர் பொருட்டுக் காசியில் நடந்ததைக் கடவூரில் கடவுள் காட்டினார் என்றுஞ் சொல்லப்படுகிறது.

உ. வளையின் - சங்குகளின். கழுநீர்க்கற்றை - செங்கழுநீர்க் கூட்டங்கள். கமுகஞ் சோலைகளிலெல்லாம் மேகங்கள். அப்புறமெலாம் - அவ்வயல் பக்கமெல்லாம்; அவ்வூரின் பக்கமெல்லாம் எனினுமாம். சீர்போற்றல் - சிறப்பைப் போற்றல்; சீர்படுத்தல் எனினுமாம். ஆறு - நன்னெறி. செயலெலாம் சன்மார்க்கத்துக்குரிய செயல்களென்க. அறுதொழில் எனக்கோடலு மொன்று; அவை: ஓதல் ஓதுவித்தல் வேட்டல் வேட்பித்தல் ஈதல் ஏற்றல்.

ங. குடங்கையின் - உள்ளங் கையைப் பார்க்கிலும். உண்கண் - மையுண்ட (தீட்டிய) கண்களையுடைய. கடைசியர் குழுமி - பள்ளப் பெண்கள் கூடி. இடம்படு - விசாலமாகிய. மருதப்பண்பாடல். சாம வேதப் பாடல்.

ச. உயர்ந்த நீண்ட கொம்புகளையுடைய எருமைகள் நீரிற்படிந்து. வாவி - குளத்தில். கயல் - கயல்மீன்கள். பாய்ந்து - பாய்தலால். தீம்பால் நாறும்-இனிய

பா - ம்—* மலையின். †நெடிய.

மங்குல்தோய் மாடச் *சாலை மருங்கிறை ஒதுங்கும் மஞ்சும்
அங்கவை பொழிந்த நீரும் ஆகுதிப் புகைப்பால் நாறும். ௪

மருவிய திருவின் மிக்க வளம்பதி அதனில் வாழ்வார்
அருமறை முந்நூல் †மார்பின் அந்தணர் கலயர் என்பார்
பெருநதி அணியும் வேணிப் பிரான்கழல் பேணி நாளும்
உருகிய அன்பு கூர்ந்த சிந்தையார் ஒழுக்கம் மிக்கார். ௫

பாலனும் மறையோன் ‡பற்றப் பயங்கெடுத் தருளும் ஆற்றால்
மாலும்நான் முகனும் காணா வடிவுகொண் டெதிரே வந்து
காலனார் உயிர்செற் றார்க்குக் கமழ்ந்தகுங் குலியத் தூபம்
சாலவே நிறைந்து விம்ம இடும்பணி தலைநின் றுள்ளார். ௬

கங்கைநீர் கலிக்குஞ் சென்னிக் கண்ணுதல் எம்பி ராற்குப்
பொங்குகுங் குலியத் தூபம் பொலிவுறப் போற்றிச் செல்ல
அங்கவர் அருளி னாலே வறுமைவந் தடைந்த பின்னும்
தங்கள்நா யகர்க்குத் தாமுன் செய்பணி தவாமை உய்த்தார். ௭

இந்நெறி ஒழுகு நாளில் இலம்பாடு நீடு செல்ல
நன்னிலம் முற்றும் விற்றும் நாடிய அடிமை விற்றும்
பன்னெடுந் தனங்கள் மாளப் பயில்மனை வாழ்க்கை தன்னில்
மன்னிய சுற்றத் தோடு மக்களும் வருந்தி னார்கள். ௮

யாதொன்றும் இல்லை யாகி இருபகல் உணவு மாறிப்
பேதுறும் மைந்த ரோடும் பெருகுசுற் றத்தை நோக்கிக்
காதல்செய் மனைவி யார்தங் கணவனார் கலய னார்கைக்
கோதில்மங் கலநூல் தாலி கொடுத்து"நெற் கொள்ளும்" என்றார். ௯

---

பால்மணங்கமழும். மங்குல்.........மஞ்சும் - ஆகாயம் அளவு உயர்ந்த மாடங்களின் சாலைகளின் பக்கங்களில் சிறிது நேரம் ஒதுங்கும் மேகங்களும். புகைப்பால் - புகையினிடத்து.

௫. வேணிப்பிரான் - சடையணிந்த சிவபெருமான். கூர்ந்த - உள்ளது சிறந்த; மிகுந்த.

௬. பாலனும் மறையோன் - மார்க்கண்டேயர். கால......ர்க்கு - யமனுடைய உயிரைப்போக்கிய சிவபெருமானுக்கு. மணங்கமழ்ந்த. விம்ம - பரவ.

௭. போற்றிச் செல்ல - பேணிநடாத்த. தவாமை உய்த்தார் - கெடாமல் (தவறாமல்) நடாத்தி வந்தார்.

௮. இலம்பாடு நீடுசெல்ல - வறுமை அதிகரிக்க. பயில் - நெருங்கிய.

௯. உணவுமாறி - உணவில்லாமல். பேதுறும் - வருந்தும்.

பா - ம்—*சோலை. †மார்பர். ‡போற்றப்.

அப்பொழு ததனைக் கொண்டு நெற்கொள்வான் அவரும் போக
ஒப்பில்குங் குலியங் கொண்டோர் வணிகனும் எதிர்வந் துற்றான்
"இப்பொதி என்கொல்" என்றார்க் குள்ளவா றியம்பக் கேட்டு
முப்புரி வெண்ணூல் மார்பர் முகமலர்ந் திதனைச் சொன்னார். கO

"ஆறுசெஞ் சடைமேல் வைத்த அங்கணர் பூசைக் †கான
நாறுகுங் குலியம் ‡ஈதேல் நான்இன்று பெற்றேன் நல்ல
பேறுமற் றிதன்மேல் உண்டோ பெறுப்பேறு பெற்று வைத்து
வேறினிக் கொள்வ தென்"என் றுரைத்தெழும் விருப்பின் மிக்கார்.

"பொன்தரத் தாரும்" என்று புகன்றிட வணிகன் தானும்
"என்தர இசைந்த" தென்னத் தாலியைக் கலயர் ஈந்தார்
அன்றவன் அதனை வாங்கி அப்பொதி கொடுப்பக் கொண்டு
நின்றிலர் §விரைந்து சென்றார் நிறைந்தெழு களிப்பி னோடும். கஉ

விடையவர் வீரட் டானம் விரைந்துசென் றெய்தி என்னை
உடையவர் நம்மை யாளும் ஒருவர்தம் பண்டா ரத்தில்
அடைவுற ஒடுக்கி எல்லாம் ||அயர்த்தெழும் அன்பு பொங்கச்
சடையவர் மலர்த்தாள் போற்றி இருந்தனர் தமக்கொப் பில்லார். கங

அன்பர்அங் கிருப்ப நம்பர் அருளினால் அளகை வேந்தன்
தன்பெரு நிதியந் தூர்த்துத் தரணிமேல் நெருங்க எங்கும்
பொன்பயில் குவையும் நெல்லும் பொருவில்பல் வளனும் பொங்க
மன்பெருஞ் செல்வம் ஆக்கி வைத்தனன் மனையில் நீட. கச

மற்றவர் மனைவி யாரும் மக்களும் பசியால் வாடி
அற்றைநாள் இரவு தன்னில் அயர்வுறத் துயிலும் போதில்
நற்றவக் கொடிய னார்க்குக் கனவிடை நாதன் நல்கத்
தெற்றென உணர்ந்து செல்வங் கண்டபின் சிந்தை செய்வார். கரு

கO. மார்பர் - குங்குலியக் கலயர்.

கங. வீரட்டானம் - வீரஞ் செலுத்திய இடம் (யமனைக் கொன்ற இடம் - கடவூர்). என்னை அடிமையாக உடையவரும் நம்மெல்லாரையும் ஆளாக உடையவருமாகிய சிவபிரானது. பண்டாரத்தில் - பண்டக சாலையில். எல்லாம் அயர்த்து-(நேர்ந்துள்ள துன்பம், வறுமை, பசி, மனைவி மக்கள் நிலை முதலிய) எல்லாவற்றையும் மறந்து.

கச. நம்பர் - சிவபெருமான். அளகைவேந்தன் - குபேரன். தூர்த்து - நிறைத்து. பொருவில் - ஒப்பில்லாத.

கரு. நற்றவக் கொடியனார்க்கு - நாயனார் மனைவியார்க்கு. நல்க - திருவருள் செய்ய. தெற்றென உணர்ந்து - விரைவாகத் துயிலெழுந்து.

பா - ம்—*முந்நூல்; நன்னூல். †கேற்ற. ‡ஈதே. §மகிழ்ந்து. ¶எம்மை. ||ஆர்ந்தெழும்.

கொம்பனார் இல்லம் எங்கும் குறைவிலா நிறைவிற் காணும்
அம்பொனின் குவையும் நெல்லும் அரிசியும் முதலா யுள்ள
எம்பிரான் அருளாம் என்றே இருகரங் குவித்துப் போற்றித்
தம்பெருங் கணவ னார்க்குத் திருவமு தமைக்கச் சார்ந்தார். கசு

காலனைக் காய்ந்த செய்ய காலனார், கலய னாராம்
ஆலும்அன் புடைய சிந்தை அடியவர் அறியும் ஆற்றால்
"சாலநீ பசித்தாய் உன்தன் தடநெடு மனையில் நண்ணிப்
பாலின்இன் அடிசில் உண்டு பருவரல் ஒழிக" என்றார். கஎ

கலயனார் அதனைக் கேளாக் கைதொழு திறைஞ்சிக் கங்கை
அலைபுனற் சென்னி யார்தம் அருள்மறுத் திருக்க அஞ்சித்
தலைமிசைப் பணிமேற் கொண்டு சங்கரன் கோயில் நின்று
மலைநிகர் மாட வீதி மருங்குதம் மனையைச் சார்ந்தார். கஅ

இல்லத்திற் சென்று புக்கார் இருநிதிக் குவைகள் ஆர்ந்த
செல்வத்தைக் கண்டு நின்று திருமனை யாரை நோக்கி
"வில்லோத்த நுதலாய்! இந்த விளைவெலாம் என்கொல்" என்ன
"அல்லோத்த கண்டன் எம்மான் அருள்தர வந்த" தென்றார். ககூ

மின்னிடை மடவார் கூற மிக்கசீர்க் கலய னார்தாம்
மன்னிய பெருஞ்செல் வத்து வளமலி சிறப்பை நோக்கி
"என்னையும் ஆளுந் *தன்மைத் தெந்தைஎம் பெருமான் ஈசன்
தன்னருள் இருந்த வண்ணம்" என்றுகை தலைமேற் கொண்டார். உ0

பதுமநற் றிருவின் மிக்கார் பரிகலந் திருத்திக் கொண்டு
கதுமெனக் கணவ னாரைக் கண்ணுதற் கன்ப ரோடும்
விதிமுறை தீபம் ஏந்தி மேவும்இன் அடிசில் ஊட்ட
அதுநுகர்ந் தின்பம் ஆர்ந்தார் அருமறைக் கலய னார்தாம். உக

---

கசு. கொம்பனார் - நாயனார் மனைவியார். உள்ள - உள்ளன.

கஎ. காலனைக் காய்ந்த காலனார் - சிவபெருமான். ஆலும் அன்பு - நெகிழ்ந்த அன்பு. பாலோடுகூடிய இனிய சோறு உண்டு. பருவரல் - பசித்துன்பத்தை.

ககூ. ஆர்ந்த - நிறைந்த. நுதலாய் - நெற்றியையுடைய பெண்ணே! அல்லொத்த கண்டன் எம்மான் - இருளொத்த நீலகண்டத்தை யுடைய சிவபெருமான். உ0. தன்மைத்தாய். இருந்த வண்ணம் என்னையோ.

உக. பதும நற்றிருவின் மிக்கார் - தாமரை மலரிலுள்ள இலட்சுமியைப் பார்க்கிலும் மிக்கவராகிய அம்மையார். பரிகலம் - உண்கலத்தை. கதுமென -

பா - ம்—*தன்மைக் கெந்தை.

ஊர்தொறும் பலிகொண் டுய்க்கும் ஒருவனை தருளி னாலே
பாரினில் ஆர்ந்த செல்வம் உடையராம் பண்பில் நீடிச்
சீருடை அடிசில் நல்ல செழுங்கறி தயிர்நெய் பாலால்
ஆர்தரு காதல் கூர அடியவர்க் குதவும் நாளில். உஉ

செங்கண்வெள் ளேற்றின் பாகன் திருப்பனந் தாளில் மேவும்
அங்கணன் செம்மை கண்டு கும்பிட அரசன் ஆர்வம்
பொங்கித்தன் வேழம் எல்லாம் பூட்டவும் நேர்நில் லாமைக்
கங்குலும் பகலும் தீராக் கவலையுற் றழுங்கிச் செல்ல. உங

மன்னவன் வருத்தங் கேட்டு மாசறு புகழின் மிக்க
நன்னெறிக் கலய னார்தாம் நாதனை நேரே காணும்
அந்நெறி தலைநின் றுன்னன் றரசனை விரும்பித் தாமும்
மின்னெறித் தனைய வேணி விகிர்தனை வணங்க வந்தார். உச

மழுவுடைச் செய்ய கையர் கோயில்கள் மருங்கு சென்று
தொழுதுபோந் தன்பி னோடுந் தொன்மறை நெறிவ ழாமை
முழுதுல கினையும் போற்ற மூன்றெரி புரப்போர் வாழும்
செழுமலர்ச் சோலை வேலித் திருப்பனந் தாளிற் சேர்ந்தார். உரு

காதலால் அரசன் உற்ற வருத்தமுங் களிற்றி னோடும்
†தீதிலாச் சேனை செய்யுந் திருப்பணி நேர்ப டாமை
மேதினி மிசையே எய்த்து வீழ்ந்திளைப் பதுவும் நோக்கி
மாதவக் கலயர் தாமும் மனத்தினில் வருத்தம் எய்தி. உசு

---

விரைவாக. கண்ணுதற்கு அன்பரோடும் - சிவனடியார்களோடும். மேவும் இன் அடிசில் - விரும்பத்தக்க இன்னுணவை.

உஉ. பலி - பிச்சை. ஒருவனது - சிவபெருமானது. பாரினில் ஆர்ந்த - உலகில் நிறைந்த. பண்பில் நீடி - குணத்தில் மேம்பட்டு. ஆர்தரு-உண்பிக்கும்.

உங. திருப்பனந்தாளில் வீற்றிருக்குஞ் சிவலிங்கப் பெருமான், தம்மைப் பூசித்த ஒரு பார்ப்பனியின் பொருட்டுத் தமது திருமேனியைச் சாய்த்தமையால், அச்சாய்வினைப் போக்க மன்னன் முயன்றது இங்கே சொல்லப்படுகிறது. செம்மை - நேர்மை. வேழமெல்லாம் - யானைகளையெல்லாம். பூட்டவும் - பூட்டி இழுப்பித்தும். அழுங்கி - வருந்தி.

உச. மின்னல்போல் ஒளிரும் சடையையுடைய சிவபெருமானை.

உரு. போற்ற - காக்க. மூன்றெரி புரப்போர் - பிராமணர். (மூன்றெரி : ஆகவனியம், காருகபத்தியம், தக்ஷிணாக்கினியம்).

உசு. நேர்படாமையால். எய்த்து - தளர்ந்து ; சோர்ந்து.

பா - ம்—*அரிசி. †தீதில்வன்.

சேனையும் ஆனை பூண்ட திரளும்எய்த் தெழாமை நோக்கி
"யானும்இவ் இளைப்புற் றெய்க்கும் இதுபெற வேண்டும்" என்று
தேனலர் கொன்றை யார்தந் திருமேனிப் பூங்கச் சேய்ந்த
மானவன் கயிறு பூண்டு கழுத்தினால் வருந்த லுற்றார். உஎ

நண்ணிய ஒருமை அன்பின் நாருறு பாசத் தாலே
திண்ணிய தொண்டர் பூட்டி இளைத்தபின் திறம்பி நிற்க
ஒண்ணுமோ கலய னார்தம் ஒருப்பாடு கண்ட போதே
அண்ணலார் நேரே நின்றார் அமரரும் விசும்பில் ஆர்த்தார். உஅ

பார்மிசை நெருங்க எங்கும் *பரப்பினர் பயில்பூ மாரி
தேர்மலி தானை மன்னன் சேனையும் களிறும் எல்லாம்
கார்பெறு கானம் போலக் களித்தன கைகள் கூப்பி
வார்கழல் வேந்தன் தொண்டர் மலரடி தலைமேல் வைத்து. உகூ

"விண்பயில் புரங்கள் வேவ வைதிகத் தேரில் மேருத்
திண்சிலை குனிய நின்றார் செந்நிலை காணச் செய்தீர்
†மண்பகிர்ந் தவனுங் காணா மலரடி இரண்டும் யாரே
பண்புடை அடியார் அல்லால் பரிந்துநேர் காண வல்லார்." ௩0

என்றுமெய்த் தொண்டர் தம்மை ஏத்தியங் கெம்பி ரானுக்
கொன்றிய பணிகள் மற்றும் உள்ளன பலவுஞ் செய்து
நின்றவெண் கவிகை மன்னன் நீங்கவும் நிகரில் அன்பர்
மன்றிடை ஆடல் செய்யும் மலர்க்கழல் வாழ்த்தி வைகி. ௩க

---

உஎ. எய்த்து - இழுத்தும். எய்க்கும்-மெலியும். திருமேனியில் பூங்கச்சிற் பொருந்திய (முடியப்பட்ட) பெரிய வலியகயிற்றைப் பூண்டு, கழுத்தினால் இழுக்கலுற்றார்.

உஅ. பொருந்திய ஒருமை அன்பாகிய நாரால் ஆக்கப்பெற்ற கயிற்றால். திண்ணிய - அன்பு வலிமையுடைய. திறம்பி நிற்க ஒண்ணுமோ - நாயனார் அன்புக்கு மாறுபட்டு நிற்கச் சிவனார்க்குக் கூடுமோ. ஒருப்பாடு - அன்பின் ஒருமைப்பாடு; ஒப்பில்லாத முயற்சி என்பர் மகாலிங்க ஐயர்.

உகூ. தேர்மலிதானை - தேர்கள் நிறைந்த படையையுடைய. கார்பெறு கானம் போல - மழை பொழியப்பெற்ற காடுபோல. தொண்டர் - குங்குலியக் கலயரது.

௩0. விண்பயில் - ஆகாயத்தில் சஞ்சரித்த. வைதிகத் தேரில் - வேத மாகிய தேரில். முப்புரஞ் செற்றதன் நுட்பத்தைத் தடுத்தாட்கொண்ட புராணம் சச-ம் பாட்டுக்குறிப்பில் பார்க்க. செந்நிலைகாணச் செய்தீர் - நேர்மையாக நிற்கச் செய்தீர். மண்பகிர்ந்தவனும் - திருமாலும்.

௩க. ஒன்றிய - பொருந்திய. வெண்கவிகை - வெண்கொற்றக் குடையையுடைய.

பா - ம்—*பரப்பின. †மண்பகுர்தவனும்.

சிலபகல் கழிந்த பின்பு திருக்கட வூரில் நண்ணி
நிலவுதம் *பணியில் தங்கி நிகழுநாள் நிகரில் காழித்
தலைவராம் பிள்ளை யாருந் தாண்டகச் சதுர ராகும்
அலர்புகழ் அரசுங் கூட அங்கெழுந் தருளக் கண்டு. ௩உ

மாறிலா மகிழ்ச்சி பொங்க எதிர்கொண்டு மனையில் எய்தி
ஈறிலா அன்பின் மிக்கார்க் †கின்னமு தேற்கும் ஆற்றால்
ஆறுநற் சுவைகள் ஓங்க அமைத்தவர் அருளே அன்றி
நாறுபூங் கொன்றை வேணி நம்பர்தம் அருளும் பெற்றார். ௩௩

கருப்புவில் லோனைக் கூற்றைக் காய்ந்தவர் கடவூர் மன்னி
விருப்புறும் அன்பு மேன்மேல் மிக்கெழும் வேட்கை கூர
ஒருப்படும் உள்ளத் தன்மை உண்மையால் தமக்கு நேர்ந்த
திருப்பணி பலவுஞ் செய்து சிவபத நிழலிற் சேர்ந்தார். ௩௪

தேனக்க கோதை மாதர் திருநெடுந் தாலி மாறிக்
கூனற்றண் பிறையி னார்க்குக் குங்குலி யங்கொண் டுய்த்த
பான்மைத்திண் கலய னாரைப் பணிந்தவர் அருளி னாலே
மானக்கஞ் சாறர் மிக்க வண்புகழ் வழுத்த லுற்றேன். ௩௫

ஆக திருவிருத்தம் - ௪௭௦.

---

சோழநாட்டிலுள்ள திருக்கடவூரிலே ஒரு நாயனார் இருந்தார். அவர் மறையவர்; கலயனார் என்னும் பெயருடையவர்; சிவபத்தியிலும் ஒழுக்கத்திலும் மிகச் சிறந்தவர். திருக்கோயிலில் குங்குலியத் தூபமிடுவது அவர்தந் திருத்தொண்டு.

இத்திருத்தொண்டைக் கலயனார் குறைவற நிகழ்த்தி வருநாளில், ஆண்டவன் அருளால் அவருக்கு வறுமை நேர்ந்தது. நேர்ந்தும் அவர் திருத்தொண்டைத் தவறாது செய்துவந்தார்.

கலயனார் தமக்குள்ள நில புலங்களையும் பிறவற்றையும் விற்கலானார். அவர்தஞ் செல்வங்களெல்லாம் ஒழிந்தன. அவருக்கு நேர்ந்த வறுமையின் கொடுமைக்கு ஓர் அளவில்லை. அக்கொடுமை அவரையும், அவர்தம் மனைவி மக்களையும், மற்றவர்களையும் இரண்டு நாள் பட்டினி கிடக்கவுஞ் செய்தது. அந்

---

௩உ. காழி......அரசும் - திருஞான சம்பந்த சுவாமிகளும், திருநாவுக்கரசு சுவாமிகளும்.

௩௪. கரும்புவில்லையுடைய மன்மதனையும் யமனையும். வேட்கை கூர - விருப்பம் அதிகப்பட. உண்மையால் - உளதாந் தன்மையால்.

௩௫. தேனக்க - தேன் விளங்கும். கூனல் தண்பிறையினார்க்கு - வளைந்த குளிர்ந்த பிறையை யணிந்த சிவபெருமானுக்கு.

பா - ம்—*பதியில். †இன்னமுதொக்கும்.

நிலை கண்டு மனஞ் சகியாத நாயனாரின் அருமை மனைவியார், தாலியை நாயனாரிடந் தந்து, "நெல் வாங்கிவாரும்" என்றார். கலயனார் தாலியைக் கொண்டு கடைவீதி வழியே சென்றார். அவ்வேளையில் ஒரு வணிகன் குங்குலியப் பொதிகொண்டு அவ்வழியே வந்தான். அடியார் அவனைப் பார்த்து, "இஃதென்ன?" என்று வினவினார். அவன் "குங்குலியப் பொதி" என்றான். அன்பர் "இன்று யான் பெரும்பேறு பெற்றேன்" என்று அளவிலா மகிழ்வெய்திப் "பொன் தருகிறேன்; இதைக் கொடும்" என்றார். வணிகன் "எவ்வளவு பொன்?" என்று கேட்டான். நாயனார் தாலியை நீட்டினார். வணிகன் தாலியை வாங்கிப் பொதியைக் கொடுத்தான். கலயனார் அப்பொதியை ஏற்று விரைந்து ஓடித் திருக்கோயிற் பண்டாரத்தில் அதைச் சேர்த்துச் சிவபெருமான் திருவடியைப் போற்றிக்கொண்டிருந்தார்.

இல்லத்தில் நாயனாரின் மனைவி மக்கள் முதலியோர் பசியால் வருந்தி வருந்தி உறங்கிவிட்டனர். அந்நிலையில் அடியவர்க் கெளியவராகிய சிவபெருமான், நாயனார் வீடு முழுவதும் பொற்குவியலும், நெற்குவியலும், பிறவும் நிரம்புமாறு திருவருள் செய்து, அதை அம்மையார்க்குக் கனவில் உணர்த்தினார். அம்மையார் விழித்தெழுந்து, செல்வக் குவியல்களைக் கண்டு, ஆண்டவன் அருளை வியந்து போற்றிக் கணவனார்க்கு அமுது சமைக்கச் சென்றார்.

திருக்கோயிலிலுள்ள நாயனார் கனவிலுஞ் சிவபெருமான் தோன்றி "நீ பசியால் வருந்துகிறாய்; வீடுபோந்து உணவு கொள்வாயாக" என்று கட்டளையிட்டருளினார். நாயனார் திருவருள் ஆணையை மறுத்தற்கஞ்சி, வீடுநோக்கிச் சென்றார். சென்ற அவர், வீட்டில் நிரம்பியுள்ள செல்வக்காட்சியைக்கண்டு, மனைவியாரைப் பார்த்து, "இஃதென்ன?" என்று கேட்டார். அம்மையார் "எல்லாம் ஆண்டவன் அருள்" என்று சொன்னார். நாயனார் ஆண்டவன் அருளைப்போற்றிப் புகழ்ந்து, அடியவர்களுடன் அமுதுண்டு இன்புற்றார். கலயனார் வழக்கம் போலத் தமது திருத்தொண்டைக் குறைவற நிகழ்த்தி அறுவகைச் சுவையுடன் அடியவர்கட்கு அமுதூட்டி வந்தார்.

திருப்பனந்தாளிலே சிவலிங்கத் திருவுருவிற்குச் சாய்வு நேர்ந்தது. அச் சாய்வைப் போக்கிப் பெருமானை வழிபட மன்னன் விரும்பினான். அவன் தன் சேனை யானைகளையெல்லாம் பூட்டித் திருவுருவை இழுப்பித்தான். இழுப்பித்தும் அவன் விருப்பம் நிறைவேறவில்லை. அவன் துயரக்கடலில் அழுந்தினான்.

மன்னன் படுந்துயரைக் குங்குலியக் கலய நாயனார் கேள்வியுற்றுத் திருப்பனந்தாள் சேர்ந்தார். அங்கே மன்னவன் துயரையும் சேனை யானைகளின் இளைப்பையுங் கண்டு, "யானும் இத்தொண்டில் ஈடுபடுகிறேன்" என்று, சிவலிங்கத்திற் பூட்டியுள்ள கயிற்றைத் தங்கழுத்திற் பூட்டி இழுத்தார். அன்புக் கயிற்றின் இழுப்புக்குச் சிவலிங்கம் நிமிராதிருக்குமோ? சிவலிங்கம் நிமிர்ந்து விட்டது. மன்னன் நாயனாரை வணங்கி வாழ்த்தித் திருக்கோயிலில் திருப்பணி செய்து தனது பதியைச் சேர்ந்தான்.

நாயனார் திருப்பனந்தாளில் சிலநாள் தங்கிப், பின்னை தமது திருக்கடவூருக்குத் திரும்பினார். திருக்கடவூருக்குத் திருஞானசம்பந்த சுவாமிகளும், திருநாவுக்கரசு சுவாமிகளும் எழுந்தருளினார்கள். குங்குலியக் கலயர் அப்பெருமக்களை எதிர்கொண்டழைத்து, அவர்கட்குத் திருவமுது செய்வித்து, அவர்கள் அருளையும் ஆண்டவன் அருளையும் பெற்றார்.

நாயனார் தமது திருப்பணியை முறையாகச் செய்து வாழ்ந்து சிவபெருமான் திருவடி நீழலை அடைந்தார்.

# மானக்கஞ்சாற நாயனார் புராணம்

மேலாறு செஞ்சடைமேல் வைத்தவர்தாம் விரும்பியது
நூலாறு நன்குணர்வார் தாம்பாடும் மேன்மையது
கோலாறு தேன்பொழியக் கொழுங்கனியின் சாறொழுகும்
காலாறு வயற்கரும்பின் கமழ்சாறூர் கஞ்சாறூர்.

கண்ணீலக் கடைசியர்கள் கடுங்களையில் பிழைத்தொதுங்கி
உள்நீர்மைப் புணர்ச்சிக்கண் உறைத்துமலர்க் கண்சிவக்கும்
தண்ணீர்மென் கழுநீர்க்குத் தடஞ்சாலி தலைவணங்கும்
மண்ணீர்மை நலஞ்சிறந்த வளவயல்கள் உளஅயல்கள். உ

---

க. மேல் ஆறு - ஆகாய கங்கையை. நூல் ஆறு - நூல் நெறியை. நோன்மையது - பெருமையுடையது ; வலிமையுடையது, பொறுமையுடையது என்றுங் கூறலாம். தேன் கோல் ஆறு பொழிய - தேன், கொம்புகளின் வழிச் சொரிய. கொழுங்......கமழ் சாறூர் - கொழுமை பொருந்திய பழங்களின் சாறு ஒழுகி வாய்க்கால் வழியே சென்று வயல்களிலுள்ள கருப்பஞ்சாற்றோடு கலந்து மணம் வீசுகின்ற ஊராகிய ; பழங்களின் சாறு ஒழுகுதலால் ஆறாகி வயல்களிற் பாய்ந்து ஆங்குள்ள கருப்பஞ் சாற்றுடன் கலந்து மணங்கமழும் ஊராகிய என்னலுமாம் ; பழங்களின் சாறு ஒழுகுகின்ற வாய்க் கால்கள் பாயும் வயல்களிலுள்ள கரும்பின் வாசனை கமழுஞ் சாறு பாய்கின்ற என்னலுமொன்று.

உ. கண் நீலக் கடைசியர்கள்-கண்ணெனும் நீலோற்பலத்தையுடைய பள்ளப் பெண்கள். கடுங்களையில் பிழைத்து ஒதுங்கி-பிடுங்குகின்ற களைகளில் தப்பி ஒதுங்கி. உள்நீர்மைப்புணர்ச்சிக்கண்-உள்ளே பொருந்திய நீர்மைச்சேர்க்கையில், (நீர்மை-நீரின் தன்மை).உறைத்து-அதிகப்பட்டு; மிக்கு. மலர்க்கண் சிவக்கும்-மலரிடத்துச் சிவக்கின்ற. தண்ணீர்மென் கழுநீர்க்கு-குளிர்ந்த தன்மை வாய்ந்த மெல்லிய செங்கழுநீர்ப் பூவின்மேல். தடஞ்சாலி-பெரிய நெற் பயிர்கள். தலை வணங்கும் - தலை சாய்க்கும். மண்ணீர்மை நலம் சிறந்த வளவயல்கள் - மண் தன்மையின் நலம் சிறந்த வளப்பத்தையுடைய வயல்கள். அயல்கள் உள - பக்கங்களிலிருக்கின்றன. கடைசியர்கள் பிடுங்கிய களைகளினின்றும் தப்பிய செங்கழுநீர் மலர்மேல், நெற் கதிர்கள் சாய்ந்துள்ள வயல்கள் என்றபடி. உள்......வணங்கும் - மனநேயம் வாய்ந்த புணர்ச்சியில் வேட்கை மிகுந்து மலர்க்கண்கள் சிவக்கும் குளிர்ந்த தன்மையும் மென்மையுமுடைய செங்கழுநீரென்னும் நாயகிக்கு, பெரிய நெற் பயிரென்னும் நாயகன் தலை வணங்கும்......வயல்கள் எனக்கொள்க. நீர்மைப் புணர்ச்சி என்பதற்கு நீரின் சம்பந்தம் என்றுங் கூறலாம்.

புயல்காட்டுங் கூந்தல்சிறு புறங்காட்டப் புனமயிலின்
இயல்காட்டி இடையொதுங்க இனங்காட்டும் உழத்தியர்கண்
முயல்காட்டும் மதிதோற்கு முகங்காட்டக் கண்மூரிக்
கயல்காட்டுந் தடங்கள்பல கதிர்காட்டுந் தடம்பணைகள். ௩

சேறணிதண் பழனவயல் செழுநெல்லின் கொழுங்கதிர்போய்
வேறருகு மிடைவேலிப் பைங்கமுகின் மிடறுரிஞ்சி
மாறெழுதிண் குலைவளைப்ப வண்டலைதண் டலையுழவர்
தாறரியும் நெடுங்கொடுவாள் அனையவுள தனியிடங்கள். ௪

பாங்குமணிப் பலவெயிலும் சுலவெயிலும் உளமாடம்
ஞாங்கரணி துகிற்கொடியும் நகிற்கொடியும் உளஅரங்கம்
†ஓங்குநிலைத் தோரணமும் பூரணகும் பமும்உளவால்
பூங்கணைவீ தியில்அணைவோர் புலம்மறுகுஞ் சிலமறுகு. ௫

மனைசாலும் நிலையறத்தின் வழி‡வந்து வளம்பெருகும்
வினைசாலும் உழவுதொழில் மிக்கபெருங் குடிதுவன்றிப்

---

௩. புயல்காட்டும் கூந்தல்-மேகத்தைக் காட்டும் கூந்தலை; மேகம்போலக்கரு நிறத்தைக் காட்டும் கூந்தலை. சிறுபுறம் காட்ட - பிடர் (பின்புறம்) காட்டலால். புன...ஒதுங்க - புனத்திலுள்ள மயிலின் சாயலைக் காட்டி இடைதளர. இனம்... கண் - தங்கள் கூட்டத்தைக் காட்டும் பள்ளப் பெண்களின் கண்களை. முயல்... காட்ட - முயற் களங்கத்தை யுடைய சந்திரனையுந் தோல்வியுறச் செய்யும் (அவர்களின்) முகம் காட்ட. கண்...தடங்கள் - அக்கண்களை வலிய கெண்டை மீன்கள் காட்டும் தடாகங்கள். கதிர் காட்டும் தடம் பணைகளில் (விசாலித்த வயல்களில்) தடங்கள் பல எனக் கூட்டிக்கொள்க.

௪. சேறு அணி தண் பழன வயல்-சேற்றாலாகிய அழகினையுடைய குளிர்ந்த மருத நிலத்து வயல்களிலுள்ள. பழனமாகிய வயல் என்னலுமாம். வேறு... உரிஞ்சி - வேறாக அருகே நெருங்கிய வேலியாகிய பசிய கமுக மரத்தின் கழுத்தை உராய்ந்து. மாறு எழு திண் குலை வளைப்ப - மாறாக எழும்பிய வலிய குலைகளை வளைத்தலால். தண்டலை - சோலைகளிலிருக்கின்ற. தாறு...உள - குலைகளை அரிகின்ற நீண்டு வளைந்த அரிவாளை ஒத்தனவாயிருக்கின்றன. தனி இடங்களில் கதிர்கள் உள என்க.

௫. மாடம் - மாடங்களில். பாங்கு மணி......உள - பக்கமணிகளின் பலநிற ஒளிகளும் சூழ்ந்த மதில்களும் இருக்கின்றன. அரங்கம் - சபைகளில். ஞாங்கர் ......உள - முன்பக்கத்தில் கட்டிய துணிக் கொடிகளும் முலைகளையுடைய பெண் கொடிகளும் இருக்கின்றன. பூங்கணை...மறுகு - தம்மிடத்து அணைவோர் (மன்மதனால்) ஒழுங்காக எய்யப்படும் புஷ்ப பாணங்களால் புலன்கள் சுழலப் பெறும் சில வீதிகளில். சில மறுகில் தோரணமும் பூரண கும்பமும் உள எனக் கூட்டுக.

௬. சாலும் நிலை மனையறத்தின் - பெருமை மிகுந்த இல்லறத்தின். வினை சாலும் - தொழில்களுள் சிறந்த. குடி துவன்றி - குடிகள் நெருங்கி. புனை -

பா - ம்—*பாங்கின். †ஓங்குமணி. ‡வந்த.

புனைசாயல் மயிலனையார் நடம்புரியப் புகல்முழவம்
கனைசாறு மிடைவீதிக் கஞ்சாறு விளங்கியதால். ௬

அப்பதியில் குலப்பதியாய் அரசர்சே னாபதியாம்
செப்பவருங் குடிவிளங்கத் திருஅவதா ரஞ்செய்தார்
மெய்ப்பொருளை அறிந்துணர்ந்தார் விழுமியவே ளாண்குடிமை
வைப்பனைய மேன்மையினார் மானக்கஞ் சாறனார். ௭

பணிவுடைய வடிவுடையார் பணியினொடும் பனிமதியின்
அணிவுடைய சடைமுடியார்க் காளாகும் பதம்பெற்ற
தணிவில்பெரும் பேறுடையார் தம்பெருமான் கழல்சார்ந்த
துணிவுடைய தொண்டர்க்கே ஏவல்செயுந் தொழில்பூண்டார். ௮

மாறில்பெருஞ் †செல்வத்தின் வளம்பெருக மற்றதெலாம்
ஆறுலவுஞ் சடைக்கற்றை ‡அந்தணர்தம் அடியாராம்
ஈறில்பெருந் திருவுடையார் உடையாரென் றியாவையுநேர்
கூறுவதன் முன்னவர்தங் குறிப்பறிந்து கொடுத்துள்ளார். ௯

விரிகடல்சூழ் §மண்ணுலகை விளக்கியஇத் தன்மையராம்
பெரியவர்க்கு முன்சில்நாள் பிள்ளைப்பே றின்மையினால்

---

அலங்கரிக்கும். புகல் முழவம் கனை சாறு மிடை வீதி - விரும்பத்தக்க முழவு ஒலிக்கின்ற திருவிழா நெருங்கிய வீதிகளை யுடைய. "முழவி மிழு மகலாங்கண் விழவு நின்ற வியன் மறுகில்"—**மதுரைக் காஞ்சி** : 327 - 8. முழவைப் பற்றிய விளக்கம் **சிலப்பதிகார** அரங்கேற்று காதை உரைக் குறிப்புகளிற் காண்க.

எ. விழுமிய - சிறந்த. வைப்பு அனைய - சேமநிதி போன்ற.

அ. வடிவில் பணிவு உடையார் என்பது மற்ற மன மொழிகளிலும் அவர் பணிவு உடையார் என்பதைக் குறிப்பது. மனப் பணிவும் மொழிப் பணிவும் பரிணமித்த வடிவுடையா ரென்க. சைவம் என்பது பணிவிலிருப்பது. "வாழ் வெனும் மையல்விட்டு வறுமையாஞ் சிறுமை தப்பித் - தாழ்வெனுந் தன்மை யோடுஞ் சைவமாஞ் சமயஞ் சாரும் - ஊழ்பெறல் அரிது"—**சிவஞான சித்தியார்** : சூத். உ. கக. பணியினொடும் - பாம்போடும். அணிவு - அணிதல். பதம் - பக்குவம். துணிவுடைய - தெளிவுடைய.

கூ. அந்தணர்தம்......உடையார் - சிவபிரானுடைய அடியவராகிய முடிவில்லாத செல்வத்தை யுடையவர்களே சிவபெருமான் ; திருவுடையாரே எல்லாம் உடையார் என்றும், தம்மை யுடையார் என்றும் கூறலாம். சிவனடியாரைச் சிவமாகக் கருதல் மரபு. **சிவஞானபோதம்** கஉ-ம் சூத்திரம் பார்க்க. நேர்கூறுவதன் முன் - நேரே அவர்கள் இது வேண்டுமென்று சொல்வதற்கு முன்.

கo. பெரியவர்க்கு - மானக்கஞ்சாற நாயனார்க்கு. அறியாமை அறியாதார் - அறிதலை அறிந்தவர்.

**பா - ம்**—*புனை. †செல்வத்து. ‡அந்தணனார் ; அங்கணனார் ; அங்கணர்தம். §மண்ணுலகில்.

அரியறியா மலர்க்கழல்கள் அறியாமை அறியாதார்
வருமகவு பெறற்பொருட்டு மனத்தருளால் வழுத்தினார். ௧0

குழைக்கலையும் வடிகாதில் கூத்தனார் அருளாலே
மழைக்குதவும் பெருங்கற்பின் மனைக்கிழத்தி யார்தம்பால்
இழைக்கும்வினைப் பயன்சூழ்ந்த இப்பிறவிக் கொடுஞ்சூழல்
பிழைக்குநெறி தமக்குதவப் பெண்கொடியைப் பெற்றெடுத்தார். ௧௧

பிறந்தபெரு மகிழ்ச்சியினால் பெருமூதூர் களிசிறப்பச்
சிறந்தநிறை மங்கலதூ ரியம்முழங்கத் தேவர்பிரான்
அறந்தலைநின் றவர்க்கெல்லாம் அளவில்வளத் தருள்பெருக்கிப்
புறந்தருவார் போற்றிசைப்பப் பொற்கொடியை வளர்க்கின்றார். ௧௨

காப்பணியும் இளங்குழவிப் பதநீங்கிக் கமழ்சுரும்பின்
பூப்பயிலுஞ் சுருட்குழலும் பொலங்குழையும் உடன்தாழ
யாப்புறுமென் சிறுமணிமே கலையணிசிற் றுடையுடன்
கோப்பமைகிண் கிணியசையக் குறுந்தளிர்மெல் லடியொதுங்கி. ௧௩

௧௧. குண்டலத்தால் அசையும் வடித்த காதினையுடைய நடராஜப் பெருமான்றன். மழைக்கு உதவும் - மழை வேண்டும்போது பெய்விக்கும். "வான்தருங் கற்பினள்" "அருமழை தரல்வேண்டில் தருகிற்கும் பெருமையளே"—**கலித்தொகை** ௧௬: ௨0; ௩௯ : ௬. "வானம் பொய்யாது வளம்பிழைப் பறியாது - நீணில வேந்தர் கொற்றஞ் சிதையாது - பத்தினிப் பெண்டிர் இருந்த நாடென்னும் - அத்தகு நல்லுரை அறியா யோநீ"—**சிலப்பதிகாரம்** : ௧௫ அடைக்கல. ௧௪௫-அ. "கற்பின் மின்றனை கால மாரியே"—**கம்ப இராமாயணம்** : நாட்டு ௩௯. இழைக்கும் - செய்யும். அவரவர் செய்யும் வினையின் பயனே பிறவியாகச் சூழ்கிறதென்க. சூழல் - காட்டினின்றும். பெண்பிறவி இழிந்ததெனக் கருதும் பிற்காலப் புலவர்கள், ஈண்டுப் பெண் பிறவியின் விழுப்பங் கூறப்பட் டிருத்தலைக் கண்டு உண்மை யுணர்வார்களாக.

௧௨. தூரியம் - வாத்தியங்கள். அறம் தலை - அறவழியே. அளவில் வளத்து அருள் பெருக்கி - அளவில்லாத பொருள்களைக் கொடுத்து; அளவில்லாத வளத்தில் அருள் பெருக்கலாவது, கொடையால் உயிர்கட்கு நலஞ் செய்வது. புறந்தருவார் - பாதுகாப்போர்; தாதிகள்; "ஐவகைத் தாயர்" என்பர் **பழைய குறிப்புரை** யாசிரியர்.

௧௩. காப்பு - திலதம். பதம் - பருவம். கமழ்.........குழலும் - மணத்தையும் வண்டுகளையு முடைய சுருண்ட கூந்தலும். பொலங் குழையும் - பொற் குண்டலமும். மெல்லிய சிறுமணிகளால் ஆக்கப்பட்ட மணிமேகலை; கட்டப் பட்ட மெல்லிய சிறிய அழகிய மணிமேகலை என்னலுமாம். கோப்பு அமை - கோக்கப்பட்ட.

பா - ம்—*மலர்ப்பாதம்.

புனைமலர்மென் *கரங்களினால் போற்றியதா தியர்நடுவண்
முனையகத்து மணிமுன்றில் மணற்சிற்றில் இழைத்துமணிக்
கனைகுரல்நூ புரம்†அலையக் கழன்முதலாப் பயின்றுமுலை
நனைமுகஞ்செய் முதற்பருவம் நண்ணினள்அப் பெண்அமுதம். கச

உறுகவின்மெய்ப் புறம்பொலிய ஒளிநுசுப்பை முலைவருத்த
முறுவல்புற மலராத முகிழ்முத்த நகையென்னும்
நறுமுகைமென் கொடிமருங்குல் நளிர்ச்‡சுருளந் தளிர்ச்செங்கை
மறுவில்குலக் கொழுந்தினுக்கு மணப்பருவம் வந்தணைய. கரு

திருமகட்கு மேல்விளங்கும் செம்மணியின் தீபம்எனும்
ஒருமகளை §மன்னுலகில் ஓங்குகுல மரபினராய்க்
கருமிடற்று மறையவனார் தமராய கழல்ஏயர்
பெருமகற்கு மகட்¶பேச வந்தணைந்தார் பெருமுதியோர். கசா

---

கச. வீட்டினிடத்துள்ள அழகிய முற்றத்தில். மணி கனை குரல் நூபுரம் - மணிகள் நெருங்கி ஒலிக்கின்ற சிலம்புகள். கழன் முதலா - கழங்காடல் முதலியவற்றை. முலை நனை முகஞ்செய் முதற் பருவம் - கொங்கை அரும்புகின்ற முதற்பருவம்; பேதைப் பருவத்தை என்பது பழைய குறிப்புரை; ஒப்பற்ற பருவத்தை என்பர் மகாலிங்க ஐயர்; "முதற் பருவ மென்பதற்குப் பேதைப் பருவம் என்பாருமுளர். ஏழு வயதில் அப்பருவம் வருதலால் அக்காலத்தில் பெண்களுக்கு ஸ்தனம் அரும்புபோல் பருக்கிறது கூடாமை யென்று மறுக்க"—மகாலிங்க ஐயர்.

கரு. உறுகவின் மெய்ப்புறம் - மிகுந்த அழகு உடலினிடத்தே. நுசுப்பை - இடையை. முறுவல் புறம் மலராத - சிரிப்புப் புறத்தே மலராத. முகிழ் முத்த நகை என்னும் நறுமுகை - அரும்புகின்ற முத்தனைய பற்கள் என்னும் நறிய அரும்பினையும். புறமலராத அரும்பினையும் அரும்பும் முத்தினையும் போன்ற பற்கள் என்றலுமொன்று. மென்கொடி போன்ற மருங்குல் (இடையினையும்). நளிர்......கை - குளிர்ச்சி பொருந்திய கூந்தலையும் அழகிய தளிர் போன்ற சிவந்தகையினையுமுடைய.

கசா. கரு......தமராய - திருநீல கண்டத்தினையுடைய சிவபெருமானின் அடியவராகிய. கழல் ஏயர் பெருமகற்கு - "கழலை அணிந்த ஏயர்கோன் கலிக்காம நாயனார்க்கு"—பழைய குறிப்புரை. "வீர கண்டையைத் தரித்த காலினை உடைய ஏயாது பெருமை பொருந்திய குமாரராகிய கலிக்காம நாயனார்க்கு" —மகாலிங்க ஐயர்; "கழலேயர் என்னும் வேளாளரது புதல்வராகிய ஏயர்கோன் கலிக்காம நாயனார்க்கு"—ஆறுமுகத் தம்பிரானார்.

பா - ம்—*கரமலரால். †அலம்பக். ‡சுருளும் §மண்ணுலகில். ¶பேசி.

*வந்தமூ தறிவோரை மானக்கஞ் சாறனார்
முந்தைமுறை மையின்விரும்பி மொழிந்தமணத் திறங்கேட்டே
"எந்தமது மரபினுக்குத் தரும்பரிசால் ஏயும்" எனச்
சிந்தைமகிழ் வுறவுரைத்து மணநேர்ந்து செலவிட்டார். கஎ

சென்றவருங் கஞ்சாறர் மணம்இசைந்த படிசெப்பக்
குன்றனைய புயத்தேயர் கோனாரும் மிகவிரும்பி
நின்றநிலை மையின்இரண்டு திறத்தார்க்கும் †நேர்வாய
மன்றல்வினை மங்கலநாள் மதிநூல்வல் லவர்வகுத்தார். கஅ

மங்கலமாஞ் செயல்விரும்பி மகட்பயந்த வள்ளலார்
தங்குலநீள் சுற்றமெலாந் தயங்குபெருங் களிசிறப்பப்
பொங்கியவெண் முளைப்பெய்து பொலங்கலங்க ளிடைநெருங்கக்
கொங்கலர்தண் பொழில்மூதூர் வதுவைமுகங் கோடித்தார். ககூ

கஞ்சாறர் மகட்கொடுப்பக் கைப்பிடிக்க வருகின்ற
எஞ்சாத புகழ்ப்பெருமை ஏயர்குலப் பெருமானும்
தஞ்சால்பு நிறைசுற்றம் தலைநிறைய முரசியம்ப
மஞ்சாலும் மலர்ச்சோலைக் கஞ்சாற்றின் மருங்கணைய. உ0

வள்ளலார் மணம்அவ்வூர் மருங்கணையா முன்மலர்க்கண்
ஒள்ளிழையைப் பயந்தார்தந் திருமனையில் ஒருவழியே
தெள்ளுதிரை நீருலகம் உய்வதற்கு மற்றவர்தம்
உள்ளநிலைப் பொருளாய உம்பர்பிரான் தாம்அணைவார். உக

கஎ. முந்தை முறைமையின் விரும்பி - பழைய சம்பிரதாயப்படி அன்புடன் உபசரித்து. மொழிந்த மணத்திறம் - அவர் மொழிந்த மண முறையை. பரிசால் ஏயும் - தன்மையால் பொருந்தும். மணம் நேர்ந்து செலவிட்டார் - திருமணத்துக்கு உடன்பட்டு (அவர்களை) அனுப்பினார்.

கஅ. நேர்வாய - உடன்பாடாகிய. மன்றல் வினை - திருமணவினைக்கு. மதி நூல் வல்லவர் - சோதிட சாஸ்திரிகள்; அறிவால் ஊகிக்கும் சோதிட நூல் வல்லவர்கள்.

ககூ. பொலம் கலங்கள் - பொற் கலங்கள். கொங்கலர் - ......கோடித்தார் - வாசனை வீசும் குளிர்ந்த சோலைகள் சூழ்ந்த பழைய ஊராகிய கஞ்சாறூரில் திருமணஞ் செய்யுமிடத்தை அலங்கரித்தார்.

உ0. எஞ்சாத - குறையாத. சால்பு நிறை - அமைதி நிறைந்த. தலை நிறைய - கூட்டமாய் வர. முரசியம்ப - மங்கல முரசு முழங்க. மஞ்சு ஆலும் - மேகங்கள் தவழும்.

உக. வள்ளலார் - ஏயர்கோன் கலிக்காம நாயனார். மணம் - திருமணத்தின் எழுகை (வரவு). மலர்க் கண்ணையும் ஒளி வீசும் ஆபரணங்களையுமுடைய

பா - பே—*வந்தணைமூ. †நேராய.

முண்டநிறை நெற்றியின்மேல் முண்டித்த திருமுடியில்
காண்டசிகை முச்சியின்கண் கோத்தணிந்த எற்புமணி
பண்டொருவன் உடல்அங்கம் பரித்தநாள் அதுகடைந்த
வெண்தரளம் எனக்காதின் மிசைஅசையுங் குண்டலமும். உஉ

அவ்என்பின் ஒளிமணிகோத் தணிந்ததிருத் தாழ்வடமும்
பைவன்பேர் அரவொழியத் தோளில்இடும் பட்டிகையும்
மைவந்த நிறக்கேச வடப்†பூணு நூலும்மனச்
செவ்வன்பர் பவமாற்றுந் திருநீற்றுப் பொக்கணமும். உங

ஒருமுன்கைத் தனிமணிகோத் தணிந்தஒளிர் சூத்திரமும்
அருமறைநூற் கோவணத்தின் மிசை‡அசையுந் திருவுடையும்
இருநிலத்தின் மிசைதோய்ந்த எழுதரிய திருவடியும்
§திருவடியில் திருப்பஞ்ச முத்திரையும் திகழ்ந்திலங்க. உச

பொடிமூடு தழல்என்னத் திருமேனி தனிற்பொலிந்த
படிநீடு திருநீற்றின் பரப்பணிந்த பான்மையராய்க்
கொடிநீடு மறுகணைந்து தம்முடைய குளிர்கமலத்
தடிநீடும் மனத்தன்பர் தம்மனையின் அகம்புகுந்தார். உரு

மணவணைப பெற்ற மானக்கஞ்சாற நாயனாரின். தெள்ளு திரைநீர் - தெளிந்த அலைகடல் சூழ்ந்த. அவர்தம் - அந்நாயனாருடைய. உம்பர்பிரான் - தேவர்கள் நாயகராகிய சிவபெருமான்.

உஉ. முண்டம் - திரிபுண்டரம். முண்டித்த - க்ஷௌரஞ் செய்த; மழித்த. சிகைமுச்சியின்கண் - குடுமி மயிர் நுனியில். என்பு மணியும். பண்டு...... நாள் - முன்னே திருமாலின் உடல் எலும்புகளை அணிந்த நாளில். அது...... அசையும் - அதனால் கடைந்த வெள்ளிய முத்துப்போலக் காதினிடத்து அசையும்.

உங. பைவன்பேர் அரவு ஒழிய - படத்தையுடைய வலிய பெரிய பாம்பு ஒழிய. பட்டிகையும் - யோகப்பட்டையும்; உத்தரீயமுமாம். மை......நூலும் - கரிய மயிரால் வடமாகச் செய்யப்பட்ட பூணூலும். மனச் செவ்வன்பர் - மனத்தைச் செம்மை நெறியிற் செலுத்தும் அன்பர்களின். பவம் - பிறவி நோயை. பொக்கணமும் - பையும்.

உச. தனிமணி - ஒருமணி. சூத்திரமும் - கயிறும். அத்திருவடியில். பதுமம், சங்கம், மகரம், சக்கரம், தண்டம் இவை கொண்ட பஞ்ச முத்திரை யோகிகளின் பாதத்திலுண்டு.

உரு. பொடி மூடு தழல் என்ன - சாம்பல் மூடிய நெருப்புப்போல; நீறு பூத்த நெருப்புப் போல. படிநீடு - தன்மை ஓங்கும்; உலகை ஓங்குவிக்கும் என்னலுமாம். பரப்பு-உத்தூளனத்தை. மறுகு-வீதியில். அடிநீடும் - திருவடிகள் பொலியும். அன்பர் - மானக்கஞ்சாற நாயனார்.

பா - ம்—*பைவனப்பேர், பைவளர்பேர். †பூண ‡அசைந்த. §திருவடிவில்.

வந்தணைந்த மாவிரத முனிவரைக்கண் டெதிரெழுந்து
சிந்தைகளி கூர்ந்துமகிழ் சிறந்தபெருந் தொண்டனார்
"எந்தைபிரான் புரிதவத்தோர் இவ்விடத்தே எழுந்தருள
உய்ந்தொழிந்தேன் அடியேன்" என் றுருகியஅன் பொடுபணிந்தார்.

நற்றவராம் பெருமானார் நலமிகும்அன் பரைநோக்கி
"உற்றசெயல் மங்கலம்இங் கொழுகுவதென்" னென "அடியேன்
பெற்றதொரு பெண்கொடிதன் வதுவை" எனப் பெருந்தவரும்
"மற்றுமக்குச் சோபனம்ஆ குவ"தென்று வாய்மொழிந்தார். உஎ

ஞானச்செய் தவரடிமேற் பணிந்துமனை யகநண்ணி
மானக்கஞ் சாறனார் மணக்கோலம் புனைந்திருந்த
தேனக்க மலர்க்கூந்தல் திருமகளைக் கொண்டணைந்து
பானற்கந் தரமறைத்து வருமவரைப் பணிவித்தார். உஅ

தஞ்சரணத் திடைப்பணிந்து தாழ்ந்தெழுந்த மடக்கொடிதன்
மஞ்சுதழைத் தென*வளர்ந்த மலர்க்கூந்தல் புறநோக்கி
அஞ்சலிமெய்த் தொண்டரைப்பார்த் "தணங்கிவள்தன் மயிர்நமக்குப்
பஞ்சவடிக் காம்"என்றார் பரவஅடித் தலங்கொடுப்பார். உகூ

அருள்செய்த மொழிகேளா அடற்சுரிகை தனைஉருவிப்
"பொருள்செய்தாம் எனப்பெற்றேன்" எனக்கொண்டு பூங்கொடிதன்

---

உகூ. மாவிரதம் - அகச்சமயம் ஆறனுள்ஒன்று; இச்சமயிகள் தங்கள் நூல் முறைப்படி தீக்கை பெற்று, என்பணிதல் முதலிய கிரியைகளைக் கடைப் பிடித்துச் சிவபெருமானை என்பு மாலை பூண்ட மூர்த்தியாக வழிபடுவார்கள். புரி - விரும்பும். உய்ந்தொழிந்தேன் - உய்ந்துவிட்டேன்.

உஎ. மங்கலம் உற்ற செயல் இங்கு ஒழுகுவது - மங்கலம் பொருந்திய செயல் இங்கு நடப்பது. வதுவை - கலியாணம். சோபனம் ஆகுவது - சுபம் உண்டாகக் கடவது.

உஅ. மானக்கஞ்சாற நாயனார் ஞானம் நிறைந்த தவத்தினராகிய மாவிரதி யாரின் திருவடிமீது விழுந்து வணங்கி வீட்டுக்குள் நுழைந்து. தேனக்க - தேன் விளங்கும். பானல் கந்தரம் - நீலோற்பல மலரை யொத்த கரிய கண்டத்தை.

உகூ. சரணத்திடை - பாதங்களில். மடக் கொடிதன் - அழகுக் கொடியி னுடைய. மஞ்சு தழைத்தென - மேகம் தழைத்தாற்போல. தம்மை அஞ்சலி செய்து நிற்கும். அணங்கு - பெண். பஞ்சவடிக்கு - மயிர்ப்பூணூலுக்கு. பஞ்ச வடி: மயிராற் செய்யப்பெற்று மார்பிலே பூணூலாக அணியப்படும் வடம்; உரு-ம் பாட்டைப் பார்க்க. பரவ - வாழ்த்தி வணங்க.

ங0. அடற்சுரிகை - வலிமையுடைய உடைவாளை; போர்வாளை எனினு மாம். பொருள் செய்து ஆம் எனப் பெற்றேன் எனக்கொண்டு - பொருள்

பா - ம்—*அலைந்த; அலர்ந்த.

இருள்செய்த கருங்கூந்தல் அடியில்அரிந் ததிர்நின்ற
மருள்செய்த பிறப்பறுப்பார் மலர்க்கரத்தி னிடைநீட்ட. ௩0

வாங்குவார் போல்நின்ற மறைப்பொருளாம் அவர்மறைந்து
பாங்கின்மலை வல்லியுடன் பழையமழ விடையேறி
ஓங்கியவிண் மிசைவந்தார் ஒளி விசும்பின் நிலநெருங்கத்
தூங்கியபொன் மலர்மாரி தொழும்பர்தொழு ததிர்விழுந்தார். ௩௧

விழுந்தெழுந்து மெய்ம்மறந்த மெய்யன்பர் தமக்குமதிக்
கொழுந்தலைய விழுங்கங்கை குதித்தசடைக் கூத்தனார்
"எழும்பரிவு நம்பக்கல் உனக்கிருந்த பரிசிந்தச்
செழும்புவனங் களில்ஏறச் செய்தோம்" என் றருள்செய்தார். ௩௨

மருங்குபெருங் கணநாதர் போற்றிசைப்ப வானவர்கள்
நெருங்கவிடை மேற்கொண்டு நின்றவர்முன் நின்றவர்தாம்
ஒருங்கியநெஞ் சொடுகரங்கள் உச்சியின்மேல் குவித்தையர்
பெருங்கருணைத் திறம்போற்றும் பெரும்பேறு நேர்பெற்றார். ௩௩

தொண்டனார் தமக்கருளிச் சூழ்ந்திமையோர் துதிசெய்ய
இண்டைவார் சடைமுடியார் எழுந்தருளிப் போயினார்
வண்டுவார் குழற்கொடியைக் †கைப்பிடிக்க மணக்கோலங்
கண்டவர்கள் கண்களிப்பக் கலிக்காம னார்புகுந்தார். ௩௪

வந்தணைந்த ஏயர்குல மன்னவனார் மற்றந்தச்
சிந்தைநினை வரியசெயல் செறிந்தவர்பால் கேட்டருளிப்
புந்தியினில் மிகஉவந்து புனிதனார் அருள்போற்றிச்
சிந்தைதளர்ந் தருள்செய்த திருவாக்கின் திறங்கேட்டு. ௩௫

---

படுத்தி 'நமக்கு ஆகும்' என்று சொல்லப்பெற்றேன் என்று மனதிற் கொண்டு. மருள் - மயக்கத்தை.

௩௧. பாங்கில் - பக்கத்தில். மலைவல்லியுடன் - பார்வதியுடன். மழவிடை - இளவேறு. விசும்பின் நிலம் - ஆகாயத்தினின்றும் நில உலகில். பொன் (கற்பக) மலர்மாரி தூங்கிய (சொரியப்பட்டன). தொழும்பர் - அடியவராகிய மானக்கஞ்சாற நாயனார். ௩௨. பரிசு - தன்மையை.

௩௩. ஒருங்கிய - ஒருமைப்பட்ட. நேர்பெற்றார் - அடையப் பெற்றார்; நேராகப்பெற்றார் எனினுமாம்.

௩௪. இமையோர் - தேவர்கள்- இண்டை - இண்டை மாலையை யணிந்த; இண்டைப் பத்திரத்தை என்போருமுளர். வார் - நீண்ட.

௩௫. நினைத்தற்கரிய. செறிந்தவர்பால் - அங்கே திரண்டிருந்தவர்களிடத்தில். புந்தியினில் மிக உவந்து - மனதில் மிக மகிழ்ந்து. புனிதனார் - சிவ

பாடம்—*விசும்பு. †கைப்பிடிக்கும்.

மனந்தளரும் இடர்நீங்கி வானவர்நா யகர்அருளால்
புனைந்தமலர்க் குழல்பெற்ற பூங்கொடியை மணம்புணர்ந்து
தனம்*பொழிந்து பெருவதுவை உலகெலாந் தலைசிறப்ப
இனம்பெருகத் தம்முடைய எயின்மூதூர் சென்றணைந்தார். ௩௬

வேறு

ஒருமகள் கூந்தல் தன்னை வதுவைநாள் ஒருவர்க் கீந்த
பெருமையார் †தன்மை போற்றும் பெருமைஎன் னளவிற் றாமே
மருவிய கமரிற் புக்க மாவடு 'விடேல்'என் னோசை
உரிமையால் கேட்க வல்லார் திறம்இனி உரைக்க லுற்றேன். ௩௭

ஆ திருவிருத்தம் - ௯௦௭.

**மானக்கஞ் சாற நாயனார்** கஞ்சாறூரிலே தோன்றியவர். அவர் வேளாண் குலத்தலைவர்; சேனாதிபதி; சிவனடியார்களைச் சிவனே என்று கருதுவோர்; 'தமது உடைமை யெல்லாம் சிவனடியார் உடைமை' என்று கருதும் பெருநிலையில் நின்றவர்; எதையுங் குறிப்பறிந்து கொடுப்பவர்.

இப்பெரியார்க்கு நீண்ட காலமாக மகப்பேறில்லாமலிருந்தது. அது குறித்து அவர் திருவருளை வழுத்துவார். திருவருளால் அவருக்கொரு பெண் மகவு பிறந்தது. அதை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக அவர் வளர்த்து வந்தார். அப்பெண்மகள் உற்றவயதடைந்தாள்.

அப்பெண்மணியை ஏயர்கோன் கலிக்காம நாயனாருக்கு மணம் பேசச் சில முதியோர்கள், மானக்கஞ்சாற நாயனாரிடம் வந்தார்கள். நாயனார் அவர்களை முறைப்படி உபசரித்தார். அவர்கள் தங்கள் கருத்தைத் தெரிவித்தார்கள். அதற்கு மானக்கஞ்சாறர் உடன்பட்டார். இருசாரிலும் திருமண முயற்சி நிகழ்ந்து வரலாயிற்று.

ஏயர்கோன் கலிக்காம நாயனார் மணக்கோலங் கொண்டு உறவினருடனும் மற்றவர்களுடனும் கஞ்சாறூருக்குப் புறப்பட்டார். அவர் கஞ்சாறூரை அடைவதற்குள், சிவபெருமான் மாவிரத கோலந் தாங்கி, மானக்கஞ்சாற நாயனார் வீட்டுள் நுழைந்தார். நாயனார் அவரை எதிர்கொண்டு வணங்கி "உய்ந்தேன் உய்ந்தேன்" என்று குழைந்து குழைந்து உருகலானார். உருகும் அடியவரை மாவிரதியார் பார்த்து "இங்கென்ன மங்கல காரியம் நடக்கப்போகிறது?" என்று கேட்டார். மானக்கஞ்சாறர் "அடியேனது ஒரு புதல்விக்குத் திருமணம் நடக்

---

பெருமானின். சிந்தை தளர்ந்து - "இந்நிகழ்ச்சி நாம் வந்த பின்னை நிகழாமற் போயிற்றே; அப்பேற்றை நாம் பெறவில்லையே" என்று மனந் தளர்ந்து; 'மனைவியின் மயிர் அரியுண்டமைக்கு மனந் தளர்ந்து' என்று கூறுவோருமுளர். "உனக்குந் திருவருள் செய்வோம்; வருந்தற்க" என்றருள்செய்த திருவாக்கு.

௩௬. பழையபடி கூந்தல் பெற்ற. இனம் பெருக - சுற்றத்தார் மகிழ்ச்சியடைய- எயில் - மதில் சூழ்ந்த.

௩௭. மருவிய கமரில் - பொருந்திய நிலப் பிளப்பில்.

பா - ம்—*பொழிந்த. †தம்மைப்.

கப்போகிறது" என்று பணிவுடன் கூறினார். மாவிரத முனிவர் "உமக்குச் சோபனம் உண்டாகுக" என்று வாழ்த்தினார்.

உடனே நாயனார் உள் புகுந்து தமது புதல்வியாரை அழைத்துவந்து முனிவரைத் தொழச் செய்தார். தொழுதெழுந்த மணப் பெண்ணின் மேகம் போன்று தழைத்துப் பொலியும் அழகிய கூந்தல் மீது முனிவரானார் மனஞ் செலுத்தினார்; செலுத்தி நாயனாரைப் பார்த்து, "இவ்வணங்கின் கூந்தல் நமது பஞ்சவடிக்கு உதவக் கூடும்" என்றார். என்றதும் நாயனார் தமது உடைவாளை உருவிப் புதல்வியின் கூந்தலை அறுத்து மாவிரதியாரிடம் நீட்டினார். அதை வாங்குவார்போல் நின்ற பெருமான், தாம் ஏற்ற கோலத்தை மறைத்து, உமையம்மையாருடன் மழவிடைமேல் காட்சி தந்தார். நாயனார் விழுந்து எழுந்து மெய்ம்மறந்தார். சிவபெருமான் அன்பரை நோக்கி "நம்மாட்டு உனக்குள்ள அன்பின் திறத்தை உலகறியச் செய்தோம். இனி நம்மை அடைவாயாக" என்று திருவருள் செய்து திருவுருக் கரந்தார். நாயனார் ஆண்டவன் அருட் பெருந்திறத்தைப் போற்றும் அரும்பேற்றைப் பெற்றார்.

ஏயர்கோன் கலிக்காம நாயனார் கஞ்சாறூரை அடைந்து, நிகழ்ந்ததைக் கேட்டுத், திருவருளைப் போற்றி மகிழ்ந்து, "அந்நிகழ்ச்சியைக் காணும் பேற்றை யான் பெறவில்லையே" என்று மனந் தளர்ந்தார். அங்கே அருளால் எழுந்த திருவாக்கைக் கேட்டு அவர் துன்பம் நீத்தார். திருவருளால் மணப் பெண்ணின் கூந்தல் முன்போல வளரப்பெற்றது. ஏயர்கோன் கலிக்காம நாயனார் அப் பெண்மணியை மணந்து தம்மூர் நோக்கினார்.

# அரிவாட்டாய நாயனார் புராணம்

வரும்பு னற்பொன்னி நாட்டொரு வாழ்பதி
சுரும்பு வண்டொடு சூழ்ந்து முரன்றிட
விரும்பு மென்க ணுடையவாய் விட்டுநீள்
கரும்பு தேன்பொழி யுங்கண மங்கலம்.

செந்நெல் ஆர்வயல் *கட்ட செந் தாமரை
முன்னர் நந்துமிழ் முத்தஞ் சொரிந்திடத்
துன்னு மள்ளர்கைம் மேற்கொண்டு தோன்றுவார்
மன்னு பங்கய மாநிதி போன்றுளார். ௨

க. வரும்...பதி - இடையறாது வரும் நீரினை யுடைய காவிரி நாட்டிலே (சோழநாட்டிலே) ஒப்பற்ற குடிகள் வாழ்தற்கு இடமாகிய ஊராவது. சுரும்பு வண்டொடு - ஆண் வண்டுகள் பெண் வண்டுகளுடன். முரன்றிட - ஒலிக்க. "நரம்பிசைப் பபோல் வண்டொடு சுரும்பார்ப்ப"—கலித்தொகை : ௩௬. ௩. வண்டுஞ் சுரும்பு மூசுந் - தேனார்பூங் கோதாய்"—சிந்தாமணி : ௨0௬௫. விரும்பு...விட்டு - விரும்பப்படுகின்ற மெல்லிய கணுக்களை யுடைய வாய் பிளந்து.

௨. செந்நெல் ஆர் வயல் கட்ட - செந்நெற் பயிர்கள் நிறைந்த வயல்களில் களை கட்ட. செந்தாமரை மலர்களில். நந்து உமிழ் - சங்குகள் ஈன்ற. நெருங்

பா - ம்—*காட்ட.

வளத்தில் நீடும் பதியதன் கண்வரி
உளர்த்தும் ஐம்பால் உடையோர் முகத்தினும்
களத்தின் மீதும் கயல்பாய் வயலயல்
குளத்தும் நீடுங் குழையுடை நீலங்கள். ௩

அக்கு லப்பதி தன்னில் அறநெறித்
தக்க மாமனை வாழ்க்கையில் தங்கினார்
தொக்க மாநிதித் தொன்மையில் ஓங்கிய
மிக்க செல்வத்து வேளாண் தலைமையார். ௪

தாய னாரெனும் நாமம் தரித்துளார்
சேய காலந் தொடர்ந்துந் தெளிவிலா
மாய னார்மண் கிளைத்தறி யாதஅத்
தூய நாண்மலர்ப் பாதந் தொடர்ந்துளார். ௫

மின்னு செஞ்சடை வேதியர்க் காமென்று
செந்நெல் இன்னமு தோடுசெங் கீரையும்
மன்னு பைந்துணர் மாவடு வுங்கொணர்ந்
தன்ன என்றும் அமுதுசெய் விப்பரால். ௬

இந்த நன்னிலை இன்னல்வந் தெய்தினும்
சிந்தை நீங்காச் செயலின் உவந்திட
முந்தை வேத முதல்வர் அவர்வழி
வந்த செல்வம் அறியாமை மாற்றினார். ௭

---

கிய பள்ளர்கள் அத்தாமரை மலர்களைக் கையிற் கொண்டு. பங்கயமாநிதி - பதும நிதி உடையவர்களை.

௩. வரி உளர்த்தும் ஐம்பாலுடையோர் - வண்டுகள் குடைகின்ற கூந்தலையுடைய பெண்மக்களின்; ஐம்பால்: தடுத்தாட்கொண்ட புராணம் ௧௭௮-ம் பாட்டுக் குறிப்பைப் பார்க்க. களத்தின்மீதும் - கழுத்திலும்; நெற்களத்தின்மீதும் என்னலுமாம். குழையுடை நீலங்கள்...முகத்திலும், களத்திலும், குளத்திலும் நீடும் (மிகும்) என்க. குழையுடை நீலங்கள்......முகத்தில் - குண்டலங்களை உடைக்கின்ற கண்ணாகிய நீலோற்பலங்கள் முகத்தில். குழையுடை நீலங்கள் களத்தின்மீது - குழைவாகச் செய்யப்பெற்ற நீலமணிகள் கழுத்தின்மீது. கயல் பாய்வயல் அயலிலுள்ள குளங்களில் குழைதலையுடைய நீலோற்பலங்கள்.

௫. சேயகாலம் - நெடுங்காலம். மண்கிளைத்து - பூமியைத் தோண்டியும். நாண்மலர்ப் பாதம் - அன்றலர்ந்த தாமரைப் பூப்போன்ற சிவபெருமான் திருவடியை.

௬. வேதியர்க்கு ஆம் - சிவபிரானுக்கு ஆகும். பைந்துணர் மாவடும் - பசிய கொத்தாயுள்ள மாம்பிஞ்சும். அன்ன - அவைகளை.

௭. நன்னிலை - நல்ல திருத்தொண்டை. இன்னல் - துன்பம். சிந்தையில் நீங்காத செயலாக மகிழ்வுடன் செய்துவர. உவந்திட - உலகம் கண்டு மகிழ் எனக் கொள்ளலுமொன்று. முதல்வர் - சிவபெருமான். அவர் - தாயனார். அறியாமை - இப்படிப் போயிற்று என்று எவரும் அறியக்கூடாதவாறு.

பா - ம்—* நீளுங்குழையுடை.

மேவு செல்வம் களிறுண் விளங்கனி
ஆவ தாகி அழியவும் அன்பினால்
பாவை பங்கர்க்கு முன்பு பயின்றஅத்
தாவில் செய்கை தவிர்ந்திலர் தாயனார்.

அல்லல் நல்குர வாயிடக் கூலிக்கு
நெல்அ றுத்துமெய்ந் நீடிய அன்பினால்
நல்ல செந்நெலிற் பெற்றன நாயனார்க்
கொல்லை இன்னமு தாக்கொண் டொழுகுவார். கூ

சாலி தேடி அறுத்தவை தாம்பெறும்
கூலி எல்லாந் திருஅமு தாக்கொண்டு
நீல நெல்லரி கூலிகொண் டுண்ணுநாள்
மால யற்கரி யாரது மாற்றுவார். க௦

வேறு

நண்ணிய வயல்கள் எல்லாம் நாடொறும் முன்னங் காண
வண்ணவார் கதிர்ச்செஞ் சாலி ஆக்கிட மகிழ்ந்து சிந்தை
அண்ணலார் அறுத்த கூலி கொண்டு“இஃ தடியேன் செய்த
புண்ணியம்” என்று போத அமுதுசெய் விப்பார் ஆனார். கக

வைகலும் உணவி லாமை மனைப்படப் பையினிற் புக்கு
†நைகரம் இல்லா அன்பின் ‡நங்கைகை அடகு கொய்து
பெய்கலத் தமைத்து வைக்கப் பெருந்தகை அருந்தித் தங்கள்
செய்கடன் முட்டா வண்ணம் திருப்பணி §செய்யும் நாளில். கஉ

---

அ. களிறுஉண் விளங்கனி ஆவதுஆகி அழியவும் - யானை உண்ட விளாம் பழத்தைப்போல உள்ளதுபோலத் தோன்றி உள்ளே ஒன்றுமில்லாததாகி அழியவும். களிறுஉண் விளங்கனி - வேழமுண்ட விளங்கனி. “வேழம் - வெள்ளிலுக்கு (விளங்கனிக்கு) வருவதோர்நோய்” “தேரை போயிற் றென்றாற் போல்வதோர் நோயென்க; இனி யானையுண்டது வேறுவிதமென் றுரைப்ப”— **நச்சினார்க்கினியம்.** (சிந்தாமணி 232; 1024 உரைக்குறிப்பு.) பாவை பங்கர்க்கு - சிவபிரானுக்கு. தாவில் - கெடுதலில்லாத.

கூ. அல்லல் நல்குரவு - துன்பத்தைக் கொடுக்கும் தரித்திரம். நாயனார்க்கு- சிவபெருமானுக்கு. ஒல்லை - விரைவில்.

க௦. சாலி - செந்நெல் (சம்பாநெல்). நீல.........நாள் - கார்நெல் லறுத்து அதனாற்பெறுங் கூலியைக் கொண்டு தாம் உண்ணுநாளில்.

கக. முன்னங்காண - நாயனார் கண்முன்னே தோன்றும்படி. வண்ணவார்- அழகிய நீண்ட. போத - முன்னையைவிட அதிகமாக.

கஉ. வைகலும் - நாடோறும். மனைப்படப்பையினிற் புக்கு - வீட்டின் கொல்லை (புழைக்கடை)யிற் போய். நைகரம் - வருத்தம். நங்கைகை அடகு.

பா - ம்—*பாகர்க்கு †நைகுறல். ‡நங்கைமற் றடகு; நங்கையார். §செலுத்தும்.

மனைமருங் கடகு மாள வடநெடு வான மீனே
அனையவர் தண்ணீர் வார்க்க அமுதுசெய் தன்ப ரூரும்
வினைசெயல் முடித்துச் செல்ல மேவுநாள் ஒருநாள் மிக்க
முனைவனார் தொண்டர்க் கங்கு நிகழ்ந்தது மொழியப் பெற்றேன். ௧௩

முன்புபோல் முதல்வ னாரை அமுதுசெய் விக்க மூளும்
அன்புபோல் தூய செந்நெல் அரிசிமா வடுமென் கீரை
துன்புபோம் மனத்துத் தொண்டர் கூடையில் சுமந்து போதப்
பின்புபோம் மனைவி யாரான் பெற்றஅஞ் சேந்திச் சென்றார். ௧௪

போதரா நின்ற போது புலர்ந்துகால் தளர்ந்து தப்பி
மாதரார் வருந்தி வீழ்வார் மட்கல மூடு கையால்
காதலால் அணைத்தும் எல்லாங் கமரிடைச் சிந்தக் கண்டு
பூதநா யகர்தந் தொண்டர் "போவதங் கினியேன்" என்று. ௧௫

நல்லசெங் கீரை தூய மாவடு அரிசி சிந்த
"அல்லல்தீர்த் தாள வல்லார் அமுதுசெய் தருளும் அப்பே
றெல்லையில் தீமை யேன்இங் கெய்திடப் பெற்றி லேன்"என்
றொல்லையில் அரிவாள் பூட்டி ஊட்டியை அரிய லுற்றார். ௧௬

"ஆட்கொள்ளும் ஐயர் தாமிங் கமுதுசெய் திலர்கொல்" என்னாப்
பூட்டிய அரிவாள் பற்றிப் புரையற விரவும் அன்பு
காட்டிய நெறியின் உள்ளந் தண்டறக் கழுத்தி னோடே
ஊட்டியும் அரியா நின்றார் உறுபிறப் பரிவார் ஒத்தார். ௧௭

---

கொய்து - மனைவியார் கையால் இலைக்கறிகளைப் பறித்து. அமைத்துப் பெய் கலத்து - சமைத்து உண்கலத்தில். தங்கள் என்பது நாயனாரையும் அவர்தம் அருமை மனைவியாரையுங் குறிப்பது.

௧௩. மனை.........அனையவர் - மனைப் புறத்துள்ள இலைக்கறிகள் (கீரைகள்) அற்றுப்போகக் கற்பில் அருந்ததிபோன்ற மனைவியார். முனைவனார் - சிவபிரானுடைய ; சிவபிரானால் என்னலுமாம்.

௧௪. ஆன்பெற்ற அஞ்சு - பஞ்சகவ்வியத்தை (பால், தயிர், நெய், கோசலம், கோமயம்).

௧௫. போகின்றபோது. புலர்ந்து - பட்டினியால் உடல் உலர்ந்து (வாடி). தப்பி வருந்தி வீழ்வாரை மாதரார் (பஞ்சகவ்வியமுள்ள) மட்கல மூடுகையால் காதலால் அணைத்தும். எல்லாம் - செங்கீரை மாவடு அரிசி ஆகிய இவைகள். கமரிடை - நிலப்பிளப்பில்; வெடிப்பில். பூதநாயகர்தந் தொண்டர் - தாயனார்.

௧௬. ஒல்லையில் - விரைவில் ; உடனே. ஊட்டியை - மிடற்றினை ; கழுத்தின் முற்பக்கத்தை.

௧௭. ஆட்கொள்ளும் ஐயர்தாம் - சிவபெருமான். புரையற விரவும் - குற்றமறக் கலந்த. நெறியின் - நல்லவழியில் ; முறைமையில். உள்ளம் தண்டு அற-

மாசறு சிந்தை அன்பர் கழுத்தரி அரிவாள் பற்றும்
ஆசில்வண் கையை மாற்ற அம்பலத் தாடும் ஐயர்
வீசிய செய்ய கையும் மாவடு விடேல்வி டேலென்
றோசையும் கமரி னின்றும் ஒக்கவே எழுந்த அன்றே. கஅ

திருக்கைசென் றரிவாள் பற்றும் திண்கையைப் பிடித்த போது
வெருக்கொடங் கூறு நீங்க வெவ்வினை விட்டு நீங்கிப்
பெருக்கவே மகிழ்ச்சி நீடத் தம்பிரான் பேணித் தந்த
அருட்பெருங் கருணை நோக்கி அஞ்சலி கூப்பி நின்று. கக

"அடியனேன் அறிவி லாமை கண்டும்என் அடிமை வேண்டிப்
படிமிசைக் கமரில் வந்திங் கமுதுசெய் பரனே போற்றி
துடியிடை பாக மான தூயநற் சோதி போற்றி
பொடியணி பவள மேனிப் புரிசடைப் புராண போற்றி." உ௦

என்றவர் போற்றி செய்ய இடபவா கனராய்த் தோன்றி
"நன்றுநீ புரிந்த செய்கை நன்னுத லுடனே கூட

---

(அன்பினின்றும்) நெஞ்சம் விலகுதல்கெட ; மனமொத்து ; நெஞ்சாங் குழல் அற என்னலுமொன்று.

கஅ. ஆசில்வண் கையைமாற்ற - குற்றமற்ற வண்மையுடைய தாயனாரின் கையை விலக்க. மாவடு முதலியன சிவபெருமானுக்குப் பயன்படவில்லையே என்ற வருத்த மேலீட்டான், தாயனார் அரிவாள்கொண்டு ஊட்டியை அரிந்த போது, நடராசப்பெருமான் தமது வீசிய செங்கையால் நாயனாரின் அரிவாளைப் பற்றியும், அவர் வருத்தம் நீங்க மாவடுவைக்கடித்து 'விடேல் விடேல்' என்னும் ஓசையைக் கமரினின்றும் எழுப்பியும் அருள்செய்தார் என்க. ஆண்டவன் கோயிலில்மட்டும் வீற்றிருக்கின்றானில்லை என்பதும், அன்பர்கட்கு அவன் எங்கிருந்தும் அருள் செய்வான் என்பதும், அவன் எங்கும் நீக்கமற நிறைந்துள்ள ஒருவன் என்பதும் விளங்குதல் காண்க. விடேல் - மாம்பிஞ்சைக் கடிப்பதனால் உண்டாகும் ஒலி. ஒக்கவே - ஒரு சேர. கையும் ஓசையும் எழுந்தன.

கக. வெருக்கொடு - **தடுத்தாட்கொண்ட புராணம்** கககூ-வது பாட்டுக் குறிப்பைப் பார்க்க. ஊறு - அரிவாள் அரிந்த ஊறு. வெவ்வினை - ஊட்டியை அறுத்தலாகிய கொடுஞ் செயலை. பேணி - துன்பத்தினின்றுங் காத்து ; விரும்பி எனினுமாம்.

உ௦. படிமிசை - பூமிமீது. துடிஇடை பாகமான - உடுக்கைபோன்ற இடையையுடைய உமாதேவியாரைப் பாகத்திற் கொண்ட ; ஈண்டு உமைக் குறிப்பு அருளைக் காட்டுவது ; அருளைப் பெண்ணாகக் கூறுவது மரபு. "அருளது சத்தியாகும். அரன்றனக்கருளையின்றித் - தெருள் சிவமில்லை அந்தச் சிவமின்றிச் சத்தியில்லை."—**சிவஞான சித்தியார் :** சூத். ரு. க. பொடி - திருநீறு. புராண - பழையவனே.

**பா - ம்**—*எழுந்ததன்றே.

என்றும்நம் உலகில் வாழ்வாய்'' என்றவர் உடனே நண்ண
மன்றுளே ஆடும் ஐயர் மழவிடை உகைத்துச் சென்றார். ௨௧

பரிவுறு சிந்தை அன்பர் பரம்பொரு ளாகி யுள்ள
பெரியவர் அமுது செய்யப் பெற்றிலேன் என்று மாவின்
வரிவடு விடேலெ னுமுன் வன்கழுத் தரிவாள் பூட்டி
அரிதலால் அரிவாட் டாயர் ஆயினார் தூய நாமம். ௨௨

முன்னிலை கமரே யாக முதல்வனார் அமுது செய்யச்
செந்நெலின் அரிசி சிந்தச் செவியுற வடுவின் ஓசை
அந்நிலை கேட்ட தொண்டர் அடியிணை தொழுது வாழ்த்தி
மன்னும்ஆ னாயர் செய்கை அறிந்தவா வழுத்தல் உற்றேன். ௨௩

ஆ திருவிருத்தம் - ௬௩௦.

---

சோழ நாட்டில் கணமங்கலம் என்றொருபதியுண்டு. அப்பதியில் தாயனார் என்ற பெயருடையவர் ஒருவர் இருந்தார். அவர் செல்வத்திற் சிறந்தவர்; வேளாண்குலத்தலைவர். செந்நெல் அரிசியையும், செங்கீரையையும், மாவடுவையும் சிவபெருமானுக்குத் திருவமுது செய்விப்பது அவர்தந் திருத்தொண்டு.

தாயனாரின் செல்வ வளங்களையெல்லாம் மாற்றச் சிவபெருமான் திருவுளங் கொண்டார். அவ்வன்பருடைய செல்வங்களெல்லாம் யானையுண்ட விளங்கனி போல் ஒழிந்தன. ஒழிந்தும் நாயனார் தமது திருத்தொண்டினின்றும் வழுவினாரில்லை.

தாயனார் கூலிக்கு நெல்லறுக்கப் புகுந்தார். அவர், செந்நெல்லறுத்துக் கூலியாகப் பெறுஞ் செந்நெல்லை ஆண்டவனுக்கு அமுதாக்குவார்; கார் நெல் லறுத்துக் கூலியாகப் பெறுங் கார் நெல்லைத் தாம் உண்பார். தாயனார் இந்நெறி பற்றி ஒழுகுநாளில், அவர் செல்லும் வயல்களெல்லாம் செந்நெல்லாகவே காணப்பட்டன. அன்பிற் சிறந்த தாயனார் "இது யான் செய்த புண்ணியம்" என்று மகிழ்ந்து பெறுஞ் செந்நெல்லை எல்லாம் ஆண்டவனுக்கே உதவித் தாம் பட்டினி கிடக்கலானார்.

தாயனாரின் அருமை மனைவியார், வீட்டுக்கொல்லையிலுள்ள இலைக்கறிகளைக் கொய்து அவருக்குப் படைக்கத் துவங்கினார். அன்பர் அதை உண்டு கழிப்பார். கொல்லையில் இலைக்கறிகளும் அற்றுப்போயின. அம்மையார் நீர் வார்ப்பார். நாயனார் அதையும் அருந்தித் தமது தொண்டைச் செய்துவந்தார்.

ஒரு நாள் தாயனார் வழக்கப்படி ஆண்டவனுக்கு அமுதூட்டச் செந்நெல் அரிசியையும், செங்கீரையையும், மாவடுவையும் கூடையில் வைத்துச் சுமந்து

---

௨௧. நன்னுதல் உடனே - நல்ல நெற்றியை யுடைய மனைவியுடன். அவர் உடனே நண்ண - நாயனாரும் அவர்தம் மனைவியாரும் உடன் செல்ல. உகைத்து - நடாத்தி.

௨௨. வரி - நிறம் வாய்ந்த. அரிவாள் தாயனார். - அரிவாட்டாயனார்.

௨௩. கமரே முன்னிலையாக.

பா - ம்—*ஒன்றி.

செல்கிறார். அவர் பின்னே, மனைவியார் பஞ்சகவ்யத்தை ஏந்திச் செல்கிறார். உணவின்றி மெலிவுற்றிருந்த தாயனார், கால் தளர்ந்து தவறி வீழலானார். அப்போது அம்மையார் பஞ்சகவ்யக் கலத்தை மூடியிருந்த கையால் நாயகரை அணைக்க முயன்றார். முயன்றும் பயன் விளையவில்லை. செந்நெல் முதலியயாவும் நிலவெடிப்பில் சிந்திவிட்டன. தாயனார் "இனி ஏன் திருக்கோயிலுக்குப் போதல் வேண்டும்? செந்நெல் முதலியவற்றை ஆண்டவன் அமுது செய்யும் பேற்றைப் பெற்றேனில்லை" என்று அரிவாளை எடுத்துத் தமது ஊட்டியை அறுக்கலுற்றார். அச்சமயத்தில் அன்பனார் கையைத் தடுக்க, எள்ளுக்குள் எண்ணெய்போல் எங்கும் நீக்கமற வீற்றிருந்தருளும் இறைவனாரது வீசிய கையும், (அவர் மாவடுவைக் கடிப்பதினின்றும் எழும்)'விடேல்' 'விடேல்' என்னும் ஓசையும் வெடிப்பினின்றும் எழுந்தன. ஆண்டவன் திருக்கை அடியவரின் கையைப்பற்றியது. தாயனார் வெருக்கொண்டார். ஊறு நீங்கியது. தாயனார் ஆண்டவன் அருளைப் போற்றி நிற்கிறார். சிவபெருமான் விடைமேல் தோன்றி, "நீபுரிந்த செய்கை நன்று. உன் மனைவியுடன் என்றும் நமது உலகில் வாழ்வாயாக" என்று அருள் செய்து எழுந்தருளினார். அவருடன் நாயனாரும் அவர்தம் மனைவியாருஞ் சென்று பெறுதற்கரிய பேற்றைப் பெற்றார்.

தாயனார் தமது ஊட்டியை அறுக்க அரிவாள் பூட்டினமையால், அவர் **அரிவாட்டாயர்** என்னும் தூயநாமம் பெறலானார்.

# ஆனாய நாயனார் புராணம்

மாடு விரைப்பொலி சோலையின் வான்மதி வந்தேறச்
சூடு பரப்பிய பண்ணை வரம்பு சுரும்பேற
ஈடு பெருக்கிய போர்களின் மேகம் இளைத்தேற
நீடு வளத்தது மேன்மழ நாடெனும் நீர்நாடு. க

நீவி நிதம்ப உழத்தியர் நெய்க்குழல் மைச்சூழல்
மேவி *உறங்குவ மென்சிறை வண்டு விரைக்கஞ்சப்
பூவில் உறங்குவ நீள்கயல் பூமலி தேமாவின்
காவின் நறுங்குளிர் நீழல் உறங்குவ கார்மேதி. உ

க. விரைப்பொலி - வாசனை பொருந்திய. சோலையின் மாடு - சோலையிடத்து ; பக்கங்களில் வாசனை பொருந்திய சோலையில் என்று கொள்ளினுமாம். வான்மதி - வானச்சந்திரன். சூடு - நெல்லரிகள். பண்ணைவரம்பு - வயல் வரம்புகளில். சுரும்பு - வண்டுகள். ஈடுபெருக்கிய - ஒன்றுக்கொன்று சமமாக உயர்ந்துள்ள; பெருமை மிகச் செய்த எனினுமாம். போர்களில் - நெற்போர்களில். மேன்மையுடைய மழநாடு. நீர்நாடு - நீர்வளமுடைய நாடு.

உ. நீவி......சூழல் - ஆடையைக் கொய்சகம் வைத்து அணிந்த அல்குலையுடைய பள்ளப் பெண்கள் புழுகு பூசப்பெற்ற கூந்தலாகிய கருமைச் சூழலில்.

பா - ம்—*உறக்குறும்.

வன்னிலை மள்ளர் உகைப்ப எழுந்த மரக்கோவைப்
பன்முறை வந்தெழும் ஓசை பயின்ற முழக்கத்தால்
அன்னம் மருங்குறை தண்டுறை வாவி அதன்பாலைக்
கன்னல் அடும்புகை யால்முகில் செய்வ கரும்பாலை. ௩

பொங்கிய மாநதி நீடலை உந்து புனல்சங்கம்
துங்க இலைக்கத லிப்புதல் மீது தொடக்கிப்போய்த்
தங்கிய பாசடை சூழ்கொடி யூடு தவழ்ந்தேறிப்
பைங்கமு கின்தலை முத்தம் உதிர்க்குவ பாளையென. ௪

அல்லி மலர்ப்பழ னத்தயல் நாகிள ஆன்ஈனும்
ஒல்லை முழுப்பை உகைப்பின் உழக்கு குழக்கன்று
கொல்லை †மடக்குல மான்மறி யோடு குதித்தோடும்
மல்கு வளத்தது முல்லை யுடுத்த மருங்கோர்பால். ௫

சிறை - சிறகினையுடைய. வண்டுகள் மேவி உறங்குவ. விரை கஞ்சப் பூவில் - மணங்கமழும் தாமரைப்பூவில். கயல் - கயல்மீன்கள். தேமாவின் காவின்-தேமா மரச் சோலையின். (தித்திப்புமா தேமா; புளிப்புமா புளிமா). கார்மேதி - கரிய எருமைகள்.

௩. வன்னிலை மள்ளர் - வலிய நிலைமை வாய்ந்த பள்ளர்கள். உகைப்ப எழுந்த-அழுத்தலால் எழுந்த; மாடுகளைப் பூட்டி ஓட்டுதலால் சுற்றுகின்ற என்னலுமாம். மரக்கோவை - இணைமரங்களினின்றும். ஓசை பொருந்திய முழக்கத்தாலும். அன்னம்...பால் - அன்னங்கள் அருகில் வசிக்கும் குளிர்ந்த துறைகளையுடைய தடாகங்களின் பக்கத்தில். ஐ - சாரியை; அசை; அழகுமாம். கன்னல் அடும்புகையால் - கருப்பஞ் சாற்றைக் காய்ச்சுதலால் எழும் புகையாலும். கரும்பாலைகள் முகில்களைச் செய்கின்றன (காட்டுகின்றன).

௪. நீடு அலை உந்து புனல் சங்கம் - நீண்ட அலைகளால் ஒதுக்கப்பட்ட நீரிலுள்ள சங்குகள். துங்க...கொடியூடு - உயர்ந்த இலைகளையுடைய வாழைப் புதலின் மீது தொடர்ந்துபோய், அவ்வாழை இலைகளைச் சுற்றித் தங்கிய பச்சிலைகள் சூழ்ந்த கொடியின் வழியாக. பாளையைப்போலப் பசிய கமுகின் உச்சியில் முத்துக்களைச் சொரிகின்றன.

௫. அல்லி மலர் - அல்லிப் பூக்களை யுடைய; அக இதழ்களை யுடைய மலர்கள் நிறைந்த எனினுமாம். பழனத்து அயல் - வயல்களின் அருகில். நாகு இள ஆன் ஈனும் - மிகவும் இளமை பொருந்திய பசு ஈன்ற. ஒல்லை...மறியோடு - வேகமாகக் கருவின் முழுப்பையை உதைத்துக் கலக்கிய இளங் கன்று, கொல்லையிலுள்ள அழகிய கூட்டமான மான் கன்றுகளுடன். மல்குவளத்தது - நிறைந்த வளத்தையுடையது. முல்லை நிலத்தைச் சூழ்ந்த பகுதிகளின் ஒரு பக்கம். ஓர்பால் வளத்தது என்று கூட்டுக.

பா - ம்—*உகுப்பன. †மடக்குற.

கண்மலர் காவிகள் பாய இருப்பன கார்முல்லைத்
தண்ணகை வெண்முகை மேவு சுரும்பு தடஞ்சாலிப்
பண்ணை எழுங்கயல் பாய இருப்பன காயாவின்
வண்ண நறுஞ்சினை மேவிய *வன்சிறை வண்டானம். ௬

பொங்கரில் வண்டு புறம்பலை சோலைகள் மேலோடும்
வெங்கதிர் தங்க விளங்கிய மேன்மழ நன்னாடாம்
அங்கது மண்ணின் அருங்கல மாக அதற்கேயோர்
மங்கல மானது மங்கல மாகிய வாழ்மூதூர். ௭

ஒப்பில் பெருங்குடி நீடிய தன்மையில் ஓவாமே
தப்பில் வளங்கள் பெருக்கி அறம்புரி சால்போடும்
செப்ப உயர்ந்த சிறப்பின் மலிந்தது சீர்மேவும்
அப்பதி †மன்னிய ஆயர் குலத்தவர் ஆனாயர். ௮

ஆயர் குலத்தை விளக்கிட வந்துத யஞ்செய்தார்
தூய சுடர்த்திரு நீறு விரும்பு தொழும்புள்ளார்
வாயினின் மெய்யின் வழுத்து மனத்தின் வினைப்பாலின்
பேயுட னாடு பிரானடி அல்லது பேணாதார். ௯

---

௬. கார்முல்லை...சுரும்பு - கார்காலத்தில் மலரும் முல்லைகளின் குளிர்ச்சியும் ஒளியும் வெண்மையுமுடைய அரும்புகளிலுள்ள வண்டுகள். கள்மலர்... இருப்பன - தேன் நிறைந்த நீலோற்பல மலர்களில் பாயும்படி இருக்கின்றன. கண்மலர் எனக்கொண்டு கண்களைப்போல் மலர்ந்த எனக் கூறினும் பொருந்தும். காயாவின்...வண்டானம் - காயா மரத்தின் அழகிய வாசனை பொருந்திய கிளைகளிலுள்ள வலிய சிறகினையுடைய நாரைகள். தடம்...இருப்பன - விசாலமான நெற்பயிர்களையுடைய வயல்களில் எழுகின்ற மீன்களின் மீது பாயும்படி இருக்கின்றன.

௭. பொங்கரில் - மரக் கொம்புகளில். புறம்பு அலை - புறத்தில் அலைகின்ற. வெங்கதிர் - சூரியன். மண்ணின் அருங்கலமாக - பூமிக்கு ஓர் ஆபரணமாக. அதற்கே - அந்நாட்டினுக்கே. மங்கலமாகிய வாழ்மூதூர் - திருமங்கலமென்னும் பெயராலாகிய வாழ்வினையுடைய பழைய ஊர்.

௮. ஓவாமே - குறையாமல். சால்போடும் - குணத்தோடும்.

௯. தொழும்பு - தொண்டு; அன்பு. வினைப்பாலின் - வாயால் வாழ்த்தல், மெய்யால் வணங்குதல், மனதால் நினைத்தலாகிய செய்கையுடன். பேயுடனாடும் பிரான் - சிவபிரான். பேணாதார் - மற்றொன்றை விரும்பாதவர்.

பா - ம்—*அஞ்சிறை. †மேவிய.

ஆனிரை கூட அகன்புற விற்கொடு சென்றேறிக்
கானுறை தீய விலங்குறு நோய்கள் கடிந்தெங்கும்
தூநறு மென்புல் அருந்தி விரும்பிய தூநீருண்
டூனமில் ஆயம் உலப்பில பல்க அளித்துள்ளார். ௰

கன்றொடு பால்மறை நாகு கறப்பன பாலாவும்
புன்தலை மென்சினை ஆனொடு நீடு புனிற்றாவும்
வென்றி விடைக்குல மோடும் இனந்தொறும் வெவ்வேறே
துன்றி நிறைந்துள சூழ லுடன்பல தோழங்கள். ௧௧

ஆவின் நிரைக்குலம் அப்படி பல்க அளித்தென்றும்
கோவலர் ஏவல் புரிந்திட ஆயர் குலம்பேணும்
காவலர் தம்பெரு மானடி அன்புறு கானத்தின்
மேவு துளைக்கரு விக்குழல் வாசனை மேல்கொண்டார். ௧௨

வேறு

முந்தைமறை நூன்மரபின் மொழிந்தமுறை எழுந்தவேய்
அந்தமுதல் நாலிரண்டில் அரிந்துநரம் புறுதானம்
வந்ததுளை நிரையாக்கி வாயுமுதல் வழங்குதுளை
அந்தமில்சீர் இடையீட்டின் அங்குலிஎண் களின்அமைத்து. ௧௩

௰. ஆன் நிரை கூட - பசுக் கூட்டங்களை ஒருங்கே. அகன் புறவில் - அகன்ற காட்டில். கான் உறை - காட்டில் வசிக்கும். நோய்கள் கடிந்து - துன்பங்களை நீக்கி. ஆயம் உலப்பில பல்க அளித்துள்ளார் - பசுக் கூட்டங்கள் அளவில்லாதன விருத்தியடையக் காப்பாற்றுகின்றவர்.

௧௧. பால்மறை நாகு - பால் மறுத்த கிடாரிகளும். புன்தலை மென்சினை ஆனொடு - சிறுமயிருள்ள தலையினையுடைய மெல்லிய சினைப்பசுக்களோடு. புனிற்றாவும் - ஈன்றணிமைத்தான பசுக்களும்; புதிதாகக் கன்றை ஈன்ற பசுக்களும். விடைக்குலமோடும் - எருதுக் கூட்டங்களோடும். துன்றி - நெருங்கி. சூழலுடன் - இடங்களுடன்.

௧௨. பல்க - விருத்தியாக. அளித்து - காப்பாற்றி. பேணும் காவலர் - காக்கும் ஆனாயர். தம் பெருமான் அடி அன்புறும் - சிவபெருமான் திருவடியில் அன்பு பெருகுவிக்கும். கானத்தின் மேவு துளைக் கருவி குழல் வாசனை - இசை பொருந்திய துளைகளையுடைய கருவியாகிய புல்லாங்குழல் வாசித்தலை.

௧௩. முந்தை மறை - பழைய காந்தருவவேதம். முறை - முறைப்படி. எழுந்த.........அரிந்து - வளர்ந்த மூங்கில் நுனியில் நான்கு பங்கும் அடியில் இரண்டு பங்கும் அறுத்து எறிந்து (நடுவிலுள்ளபாகத்தை எடுத்து). நரம்பு...... ஆக்கி-மெட்டுகளிருக்க வேண்டிய இடங்களில் துளைகளை வரிசையாகச்செய்து.

பா - ம்—* தூநிறை ; தூநிற.

எடுத்தகுழற் கருவியினில் எம்பிரான் எழுத்தஞ்சும்
தொடுத்தமுறை ஏழிசையின் சுருதிபெற வாசித்துத்
தடுத்தசரா சரங்களெலாந் தங்கவருந் தங்கருணை
அடுத்தஇசை அமுதளித்துச் செல்கின்றார் அங்கொருநாள். ௧௪

வாசமலர்ப் பிணைபொங்க மயிர்நுழுதி மருங்குயர்ந்த
தேசுடைய சிகழிகையிற் செறிகண்ணித் தொடைசெருகிப்
பாசிலைமென் கொடியின்வடம் பயில்நறு விலிபுனைந்து
காசுடைநாண் அதற்கயலே கருஞ்சுருளின் புறங்கட்டி. ௧௫

---

முதல் வாயு வழங்கு துளை (அமைத்து)-முதல் காற்றுண்டாக்குந் துளையையும் செய்து. அந்தம்......அமைத்து - கேடில்லாத சிறப்பொடு இடைவெளி (ஒரு துளைக்கும் மற்றொரு துளைக்கும் நடுவில்) ஒவ்வோர் அங்குல அளவாக உண்டாக்கி. "குழல் - வங்கியம்; அதற்கு மூங்கில், சந்தனம், வெண்கலம், செங்காலி, கருங்காலியென ஐந்துமாம். இவற்றுள் மூங்கிலிற்செய்வது உத்தமம்; வெண்கலம் மத்திமம்; ஏனைய அதமமாம். மூங்கில் பொழுதுசெய்யும்; வெண்கலம் வலிது; மரம் எப்பொழுதும் ஒத்துநிற்கும். இக்காலத்துக் கருங்காலி செங்காலி சந்தனம் இவற்றாற் கொள்ளப்படும். கருங்காலிவேண்டு மென்பது பெருவழக்கு. இவை கொள்ளுங்கால் உயர்ந்த ஒத்தநிலத்திற் பெருகவளர்ந்து நாலு காற்றுமயங்கின் நாதமில்லையாமாதலான் மயங்காநிலத்தின்கண் இளமையும் நெடும்பிராயமுமின்றி ஒரு புருடாயுப்புக்க பெரியமரத்தை வெட்டி ஒரு புருடாகாரமாகச்செய்து அதனைநிழலிலே ஆற இட்டுவைத்துத் திருகுதல் பிளத்தல் போழ்ந்துபடுதல்செய்கையறிந்து ஓர் யாண்டுசென்றபின் இலக்கணவகையான் வங்கியஞ்செய்யப்படும். நீளம் இருபதுவிரல்; சுற்றளவு நாலரைவிரல்; இது துளையிடுமிடத்து நெல்லரிசியில் ஒரு பாதி மாநிறுத்திக்கடைந்து வெண்கலத்தாலே அணைசுபண்ணி இடமுகத்தை அடைத்து வலமுகம் வெளியாக விடப்படும்."—அடியார்க்கு நல்லார் (சிலப்பதிகாரம் : ௩. அரங்கே ௨௬-உரைக் குறிப்பு). பிற குறிப்புக்களை ௨௩, ௨௪, ௨௫, ௨௬, ௨௭, ௨௮-ம் பாக்களின் கீழ்ப் பார்க்க.

௧௪. "வலிவும் மெலிவும் சமனும் என்னும் மூவகைப்பட்ட சுருதி" —அடியார்க்கு நல்லார். தடுத்த - இசைந்த. உருகி நிற்குமாறு வரும் தங் கருணை பொருந்திய இசையாகிய அமுது.

௧௫. பிணை - மாலை. நுழுதி - கோதி. மருங்கு......செருகி - வலப்புறம் உயர முடித்த ஒளியுடைய மயிர் முடியில் நெருங்கிய கொண்டை மாலையைச் செருகி. பாசிலை......புனைந்து - பச்சை இலைகளையுடைய மெல்லிய கொடியாகிய வடத்தில் பொருந்த நறுவிலியை அணிந்து. நறுவிலி இலை என்றும் காய் என்றும் கூறுப. காசுடை நாண் - பொற்காசு கோத்த மயிர்க் கயிற்றை; கருமை பொருந்திய கயிற்றினால் என்பர் பழைய குறிப்புரை ஆசிரியர். கருஞ்சுருளின் - கரிய சுருண்ட பச்சிலையின்; கரிய மயிர் முடியின் என்னலுமாம்.

வெண்கோடல் இலைச்சுருளிற் பைந்தோட்டு விரைத்தோன்றித்
தண்கோல மலர்புனைந்த வடிகாதின் ஒளிதயங்கத்
திண்கோல நெற்றியின்மேல் திருநீற்றின் ஒளிகண்டோர்
கண்கோடல் நிறைந்தாராக் கவின்விளங்க மிசையணிந்து. கசு

நிறைந்தநீ றணிமார்பின் நிரைமுல்லை முகைசுருக்கிச்
செறிந்தபுனை வடந்தாழத் திரள்தோளின் புடைஅலங்கல்
அறைந்தசுரும் பிசைஅரும்ப அரையுடுத்த மரவுரியின்
புறந்தழையின் மலிதானைப் பூம்பட்டுப் பொலிந்தசைய. கள

சேவடியில் தொடுதோலும் செங்கையினில் வெண்கோலும்
மேவும்இசை வேய்ங்குழலும் மிகவிளங்க வினைசெய்யும்
காவல்புரி வல்லாயர் கன்றுடைஆன் நிரைசூழப்
பூவலர்தார்க் கோவலனார் நிரைகாக்கப் புறம்போந்தார். கஅ

வேறு

நீலமா மஞ்ஞை ஏங்க நிரைக்கொடிப் புறவம் பாடக்
கோலவெண் முகையேர் முல்லை கோபம்வாய் முறுவல் காட்ட
ஆலுமின் னிடைசூழ் மாலைப் பயோதரம் அசைய வந்தாள்
ஞாலநீ டரங்கி லாடக் காரெனும் பருவ நல்லாள். கக

---

கசு. வெண்......புனைந்த - வெண் காந்தளின் இலைச்சுருளில் பசிய இதழ்களையுடைய மணமுள்ள செங்காந்தளின் குளிர்ந்த அழகிய மலரணிந்த; இலைச் சுருளாலாகிய பைந்தோட்டில் எனக் கூட்டி உரைத்தலுமொன்று. தயங்க - ஒளிர. திண்கோலம் - மிக்க அழகு ஒழுகும். கோடல் - கொள்ளுதல். ஆராக்கவின் விளங்க - அடங்காத அழகு பொலிய. மிசை அணிந்து - உடலின்மீதும் திருநீற்றை அணிந்து.

கள. நிரை...தாழ - வரிசையாக முல்லை அரும்புகளைச் சுருக்கி நெருங்கக் கட்டப்பட்ட மாலை தாழ. திரள்...அரும்ப - திரண்ட தோள்களினிடத்துத் தாழ்ந்து அலையும் மாலைகளில் மோதி வீழ்ந்த வண்டுகள் இசைபாட. மரவுரியின்...அசைய - மரவுரியின் புறத்தே தழையால் செய்யப்பட்ட தானையாகிய பூம்பட்டுப் பொலிந்தசைய. பூம்பட்டுப் போன்றதானை என்பர் மகாலிங்கஐயர். தானை - ஆடை. முன்தானை என்பர் ஆறுமுகத்தம்பிரானர்.

கஅ. தொடுதோலும் - செருப்பும். வேய்ங்குழலும் - புல்லாங்குழலும். வினை செய்யும் காவல்புரி வல்லாயர் - (ஆனாயர் வழி நின்று) தொழில் புரிந்து (பசுக்களைக்) காக்கின்ற வலிய இடையர்களும். ஆன் நிரை சூழ - பசுக்கூட்டங்களும் சூழ்ந்துவர. தார் - மாலையைத் தரித்த. கோவலனார் - ஆனாயநாயனார். நிரை - அப்பசுக் கூட்டங்களை.

கக. மஞ்ஞை ஏங்க - மயில் ஒலிக்க; (ஏங்கல் - மயில் குரல்). மயில் குறிஞ்சிக்குரியது; இங்கே முல்லைக்கண் வந்தது மயக்கம். மேகத்தைக் கண்டு மயில் ஏங்கி ஆடுதல் இயல்பு. நிரை...பாட - வரிசையாகவுள்ள கொடியையுடைய

### வேறு

எம்மருங்கு நிரை பரப்ப எடுத்தகோ லுடைப்பொதுவர்
தம்மருங்கு தொழுதணையத் தண்புறவில் வருந்தலைவர்
அம்மருங்கு தாழ்ந்தசினை அலர்மருங்கு மதுவுண்டு
செம்மருந்தண் சுரும்புசுழல் செழுங்கொன்றை மருங்கணைந்தார். ௨௦

சென்றணைந்த ஆனாயர் செய்தவிரைத் தாமமென
மன்றல்மலர்த் துணர்தூக்கி மருங்குதாழ் சடையார்போல்
நின்றநறுங் கொன்றையினை நேர்நோக்கி நின்றுருகி
ஒன்றியசிந் தையில்அன்பை உடையவர்பால் மடைதிறந்தார். ௨௧

---

முல்லை பாட; வண்டுகள் பாட என்றபடி. "பாடு வண்டூதும் பருவம்"—கார்நாற்பது : ௪. கோல...காட்ட - அழகும் வெண்மையும் தோன்றும் முல்லையரும்புகளாகிய பற்களையும், இந்திர கோபமாகிய வாயையும் காட்ட. "கார்க்கொடி முல்லை எயிறீன"—ஐந்திணை எழுபது : ௨௧. கோபம் - இந்திர கோபம் ; தம்பலப் பூச்சி ; செந்நிறம் பொருந்தியது ; கார்காலத்தில் தோன்றுவது; "கோபங்கள் பயிர்மிசை பரவ"—சிந்தாமணி 1564. ஏர் என்பதை உவம உருபாக்கொண்டு அரும்புபோன்ற என்றும், கோபம் போன்ற என்றும் கூறலுமாம். ஆலும்...வந்தாள் - அசையும் மின்னலாகிய இடையும், சூழ்ந்த மாலைக்கால மேகமாகிய முலையும் அலைய வந்தாள். மாலையணிந்த முலை மாலைக்கால மேகத்தைக் குறிப்பதென்க. மின்னலும் மேகமும் கார்காலத்துக்குரியன என்பது வெளிப்படை. ஞால நீடு அரங்கில் ஆட - பூமியாகிய பெரிய சபையில் ஆடும்படி. கார்-பெரும்பொழுது ஆறனுள் ஒன்று; பெரும்பொழுது ஆறு: கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில். சிறுபொழுது ஆறு : மாலை, யாமம், வைகுறு, காலை, நண்பகல், எற்பாடு. கார் - ஆவணியும் புரட்டாதியும். மாலை - எற்பாட்டுக்கும் யாமத்துக்கும் இடைப்பட்ட பத்து நாழிகை. எற்பாடு - சூரியன் மறையும் நேரம் ; மாந்தளிர்போலும் நிறமுடையது. "காரும் மாலையும் முல்லை"—தொல்காப்பியம் : அகம் - ௬.

௨௦. எம்மருங்கும் நிரைபரப்ப - நாறு பக்கங்களிலும் பசுக் கூட்டங்களைப் பரவச்செய்ய. பொதுவர் - இடையர்கள். புறவில் வருந்தலைவர் - முல்லைநிலத்தில்வரும் ஆனாய நாயனார். அம்மருங்கு - அவ்விடத்தில். சினைஅலர் - கிளைகளிலுள்ள மலர்களில். செம்மரும் - மிகக் களிப்புறும். சுரும்பு - வண்டுகள். கொன்றை - முல்லைநில மரங்களுள் ஒன்று ; கார்காலத்தில் மலர்வது. "கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்"—அகம் : காப்பு.

௨௧. விரைத்தாமம் என - மணங்கமழும் பூமாலையைப் போல. மன்றல் மலர்த்துணர் தூக்கி - வாசனைவீசும் பூங்கொத்துக்களைத் தாங்கி. மருங்குதாழ் சடையார்போல் - புறத்தே தாழ்ந்த சடையையுடைய சிவபெருமானைப் போல.

பா - ம்—*மேய்ப்ப.

அன்பூறி மிசைப்பொங்கும் அமுதஇசைக் குழலொலியால்
வன்பூதப் படையாளி எழுத்தைந்தும் வழுத்தித்தாம்
முன்பூதி வருமளவின் முறைமையே எவ்வுயிரும்
என்பூடு கரைந்துருக்கும் இன்னிசைவேய்ங் கருவிகளில். ௨௨

ஏழுவிர லிடையிட்ட இன்னிசைவங் கியம்எடுத்துத்
தாழுமலர் வரிவண்டு *தாதுபிடிப் பனபோலச்
சூழுமுரன் றெழநின்று தூயபெருந் தனித்துளையில்
வாழியநந் தோன்றலார் மணிஅதரம் வைத்தூத. ௨௩

---

ஒன்றிய - ஒருமைப்பட்ட. உடையவர்பால் - சிவபிரானிடம். மடைதிறந்தார் - மடைதிறந்து பாயச்செய்தார். கார்காலக் கொன்றையின் மலர்ந்தகாட்சி பொதுவாக எல்லார்நெஞ்சையுங்கவரும்ஆற்றல்வாய்ந்தது. அவ்வருங்காட்சி, கொன்றையணிந்த தலைவராகிய சிவபெருமானிடம் ஈடுபட்ட நெஞ்சினை யுடைய ஆனாய நாயனாரை எப்படி வயப்படுத்தி யிருக்குமென்பதை விளக்கவேண்டுவ தில்லை. ஆனாய நாயனார், சீவகரணங்கள் சிவகரணங்களாக மாறப் பெற்றவர் ; எல்லாவற்றையும் சிவமாகப் பார்க்கும் நிலை யெய்தியவர். அவர்தம் ஆன்மா பக்குவநிலையிலிருந்தது என்று சுருங்கச் சொல்லலாம். அவருக்குக் கொன்றை, சிவமாகவே தோன்றலாயிற்று. பக்குவப்பட்ட உயிர்களுக்கு இயற்கை சிவமாகத் தோன்றுதல் இயல்பு. "மரத்தை மறைத்தது மாமதயானை - மரத்தில் மறைந்தது மாமதயானை - பரத்தை மறைத்தது பார்முதல் பூதம் - பரத்தில் மறைந்தது பார்முதல் பூதமே" திருமந்திரம் : எட்டு - பராவத்தை. ௨௨.

௨௨. வன்பூதப் படையாளி-சிவபிரான். எவ்வுயிரையும் உருக்கும் ஆற்றல் வாய்ந்தது இசை. அதற்கு உருகாத ஒருவன் கொலைஞனுவன் என்று ஷேக்ஸ்பியர் கூறியுள்ளார். வேய்ங்கருவிகளில் - பலவகைப் புல்லாங்குழல்களில்.

௨௩. ஏழு விரல் இடையிட்ட - (ஒவ்வொரு துளைக்கும் ஒவ்வொரு விரலளவு இடம் விட்டுள்ள) ஏழு துவாரங்களையுடைய. வங்கியம் - ஒருவகைப் புல்லாங்குழல். "வங்கியத்தின் துளை அளவு : நீளம் இருபது விரல் ; இதிலே தூம்பு முகத்தின் இரண்டு விரல் நீக்கி முதல்வாய் விட்டு அம்முதல்வாய்க்கு ஏழங்குலம் விட்டு வளைவாயினும் இரண்டு விரல் நீக்கி நடுவில் நின்ற ஒன்பது விரலினும் எட்டுத்துளை யிடப்படும். இவற்றுள் ஒன்று முத்திரை என்று கழித்து நீக்கி நின்ற ஏழினும் ஏழு விரல் வைத்து ஊதப்படும். துளைகளின் இடைப் பரப்பு ஒரு விரலகலம் கொள்ளப்படும்"; "ஏழு விரலாவன : இடக்கையிற் பெருவிரலும் சிறு விரலும் நீக்கி மற்றை மூன்று விரலும், வலக்கையிற் பெருவிரலொழிந்த நான்கு விரலும் ஆக ஏழு விரலுமென்க."—அடியார்க்கு நல்லார் (சிலப்பதிகாரம் : ௩ அரங்கே ; ௧௭ ஆய்ச்சி - உரைக்குறிப்பு). தாழு......போல- மலரில் விழுகின்ற வரிவண்டுகள் அம்மலர்த்தாதுகளைப்பற்றி ஊதுவதுபோல. சூழுமுரன்றெழ நின்று - நாற்புறமுஞ் சூழ்ந்து இசையொலித்து எழும்படி நின்று. வாழிய - தடுத்தாட்கொண்ட புராணம் ௧௨௭-ம் பாட்டுக் குறிப்பைப் பார்க்க. தோன்றலார் - தலைவராகிய ஆனாயநாயனார். அதரம் - உதடு.

பா - ம்—*தாவி.

முத்திரையே முதலனைத்து முறைத்தானஞ் சோதித்து
வைத்ததுளை ஆராய்ச்சி வக்காணை வழிபோக்கி
ஒத்தநிலை உணர்ந்ததற்பின் ஒன்றுமுதல் படிமுறையாம்
அத்தகைமை ஆரோசை அமரோசை களின்†அமைத்தார். ௨௪

மாறுமுதற் ‡பண்ணின்பின் வளர்முல்லைப் பண்ணாக்கி
ஏறியதா ரமும்உழையும் கிழமைகொள இடுந்தானம்
ஆறுலவுஞ் சடைமுடியார் அஞ்செழுத்தின் இசைபெருகக்
கூறியபட் டடைக்குரலாங் கொடிப்பாலை யினில்நிறுத்தி. ௨௫

ஆயஇசைப் புகல்நான்கின் அமைந்தபுகல் வகையெடுத்து
மேயதுளை பற்றுவன §விடுப்பனவாம் விரல்நிரையிற்
சேயவொளி யிடையலையத் திருவாளன் எழுத்தஞ்சுந்
தூயஇசைக் கிளைகொள்ளுந் துறையஞ்சின் முறைவிளைத்தார். ௨௬

---

௨௪. முத்திரை - வளைவாய்க்கடுத்த எட்டாவது துளை; நீக்கப்படுவது; "வங்கியம் ஊதுமிடத்து வளைவாய் சேர்ந்த துளையை முத்திரை என்று நீக்கி முன்னின்ற ஏழினையும் ஏழு விரல்பற்றி வாசிக்க"—அடியார்க்கு நல்லார். தானம்.........போக்கி - தானங்களைச் சோதித்து அமைக்கப்பட்ட துளைகளை ஆராய்ந்து அவைகளின் வழி இராக சோதனை அறிய விரல்களை முறையே செலுத்தி. ஒன்றுமுதல் படிமுறையாம் - சட்சம் முதல் நிடாதம்வரை; "ஏழு துளைகளிலும் இசை பிறக்குமாறு: அஃது எழுத்தாற் பிறக்கும். எழுத்து ச ரி க ம ப த நி என்பன. இவ்வேழு எழுத்தினையும் மாத்திரைப்படுத்தித் தொழில் செய்ய இவற்றுள்ளே ஏழிசையும் பிறக்கும். ஏழிசையாவன: சட்சம், ரிடபம், காந்தாரம், மத்திமம், பஞ்சமம், தைவதம், நிடாதம் என்பன. இவை பிறந்து இவற்றுள்ளே பண்கள் பிறக்கும்"—அடியார்க்குநல்லார். ஆரோசை - ஆரோகணம். அமரோசை - அவரோகணம்.

௨௫. மாறு - மாறுபடுஞ் சுரங்களையுடைய. முதற் பண்ணின் - குறிஞ்சிப் பண்ணின். தாரம் - உச்ச இசை. உழை - மத்திம இசை. "தாரத்து உழை தோன்றப் பாலை"—சிலப்பதிகாரம்: ௧௭. ஆய்ச்சி - மேற்கோள். கிழமை கொள இடும் தானம் - பொருந்துமாறு இட்ட தானங்களில். கூறிய - சொல்லப்பட்ட. பட்டடை - அழுத்தம்; இளி. இளி குரலாயது கோடிப்பாலை. கொடிப்பாலை - கோடிப்பாலை.

௨௬. ஆய - இசைக்குரிய. இசைப்புகல் நான்கு - பண் பண்ணியல் திறம் திறத்திறம். அமைந்த புகல்வகை எடுத்து - தாங்கொண்ட கோடிப்பாலைக்கு அமைந்த பண்ணின் திறத்தை எடுத்து. விரல்...அலைய - விரல் வரிசையினின்றும் உதிக்கும் செவ்விய ஒளியானது வங்கியத்தினிடத்து அலைய. திருவாளன் - சிவபெருமான். இசைக்கிளை ஐந்து: ஆயத்தம், எடுப்பு, உற்கிரகம், சஞ்சாரம், இடாயம். முறை விளைத்தார் - முறையே பாடினார்.

பா - ம்—*படிமுறையால். †அமைத்து. ‡பண்ணினபின். §விடுவனவாம்.

மந்தரத்தும் மத்திமத்தும் தாரத்தும் வரன்முறையால்
தந்திரிகள் மெலிவித்தும் சமங்கொண்டும் வலிவித்தும்
அந்தரத்து விரற்றொழில்கள் அளவுபெற அசைத்தியக்கிச்
சுந்தரச்செங் கனிவாயும் துளைவாயும் தொடக்குண்ண. ௨எ

எண்ணியநூற் பெருவண்ணம் இடைவண்ணம் வனப்பென்னும்
வண்ணஇசை வகையெல்லாம் மாதுரிய நாதத்தில்
நண்ணியபா ணியும்இயலும் தூக்குநடை முதற்கதியில்
பண்ணமைய எழும்ஓசை எம்மருங்கும் பரப்பினார். ௨அ

வள்ளலார் வாசிக்கும் மணித்துளைவாய் வேய்ங்குழலின்
உள்ளுறைஅஞ் செழுத்தாக ஒழுகியெழு மதுரவொலி
வெள்ளநிறைந் தெவ்வுயிர்க்கும் மேலமரர் தருவிளைதேன்
தெள்ளமுதின் உடன்கலந்து செவிவார்ப்ப தெனத்தேக்க. ௨௯

ஆனிரைகள் அறுகருந்தி அசைவிடா தணைந்தயரப்
பானுரைவாய்த் தாய்முலையில் பற்றும்இளங் கன்றினமும்
தானுணவு மறந்தொழியத் தடமருப்பின் விடைக்குலமும்
மான்முதலாம் கான்விலங்கும் மயிர்முகிழ்த்து வந்தணைய. ௩0

ஆடுமயில் இனங்களும்அங் கசைவயர்ந்து மருங்கணுக
ஊடுசெவி இசைநிறைந்த உள்ளமொடு புள்ளினமும்

---

௨எ. மந்தரம் - படுத்தலோசை ; மத்திமம்-நலிந்த ஓசை ; தாரம் - எடுத்த லோசை. தந்திரிகள் - துளைகளை. அந்தரத்து - இடையிட்ட துளைகளில். துளைவாயும் - குழலின் துளைவாயும்.

௨அ. வண்ணவகை : பெருவண்ணம், இடைவண்ணம், வனப்புவண்ணம். வனப்பென்னும் வண்ணம் - வனப்பு வண்ணம். மாதுரிய - மதுரமான. நண்ணிய - அமைந்த. பாணியும் - இராகமும். இயலும் - மூர்ச்சனையும். தூக்கும்- ஏற்றமும். நடைமுதற் கதியில் - நடை முதலிய கதிகளுடன். பாணியும் இயலும் என்பதற்குத் தாளமும் இராகமும் என்போருமுளர்.

௨௯. உள்உறை - உள் அடக்கம் ; உட்பொருள். ஒலியாகிய வெள்ளம். மேல் அமரர் தருவிளைதேன் - விண்ணில் கற்பகத்தரு ஒழுக்குந் தேனை.

௩0. அறுகு அருந்தி - அறுகம் புல்லை மேய்ந்து. அசை விடாது - இரை எடாது. அயர - (பசுக்கள்) தம்மை மறக்க ; (இசையில் உருகி அதை) விரும்ப எனினுமாம். தடமருப்பின் விடைக் குலமும் - பெரிய கொம்புகளையுடைய எருதுக் கூட்டங்களும். கான் விலங்கும் - காட்டு மிருகங்களும். முகிழ்த்து - சிலிர்த்து.

௩௧. அசைவு அயர்ந்து - ஆடுதலை மறந்து. செவி ஊடு - செவி வழியே. புள்ளினமும் - பறவைக் கூட்டங்களும். மாடு படிந்து - அருகே அடைந்து.

மாடுபடிந் துணர்வொழிய மருங்குதொழில் புரிந்தொழுகும்
கூடியவன் கோவலரும் குறைவினையின் துறைநின்றார். ௩௧

பணிபுவனங் களிலுள்ளார் பயில்பிலங்கள் வழியணைந்தார்
மணிவரைவாழ் அரமகளிர் மருங்குமயங் கினர்மலிந்தார்
தணிவில்ஒளி விஞ்சையர்கள் சாரணர்கின் னரர்அமரர்
அணிவிசும்பில் அயர்வெய்தி விமானங்கள் மிசைஅணைந்தார். ௩௨

சுரமகளிர் கற்பகப்பூஞ் சோலைகளின் மருங்கிருந்து
கரமலரின் அமுதூட்டுங் கனிவாய்மென் கிள்ளையுடன்
†விரவுநறுங் குழல்அலைய விமானங்கள் விரைந்தேறிப்
பரவியவ ழிசைஅமுதம் செவிமடுத்துப் பருகினார். ௩௩

நலிவாரும் மெலிவாரும் உணர்வொன்றாய் நயத்தலினால்
மலிவாய்வெள் எயிற்றரவம் மயில்மீது மருண்டுவிழும்
சலியாத நிலைஅரியும் தடங்கரியும் உடன்சாரும்
புலிவாயின் மருங்கணையும் புல்வாய புல்வாயும். ௩௪

மருவியகால் விசைத்தசையா மரங்கள்மலர்ச் சினைசலியா
கருவரைவீழ் அருவிகளும் கான்யாறும் கலித்தோடா

---

மருங்கு தொழில் - அருகில் மேய்த்தற்றொழிலை. கூடிய - திரண்ட. குறை வினையின் துறைநின்றார் - மேய்த்தற் றொழிலில் கருத்திருத்தாது இசையில் ஈடுபட்டனர்.

௩௨. பணிபுவனங்களில் - நாகலோகங்களில். பயில்பிலங்கள் - தாம்முன்னே பழகிய பாதலங்கள். மணிவரைவாழ் அரமகளிர் - அழகிய மலையில்வாழும் தெய்வ மகளிர்கள். மயங்கினராய் மலிந்தார். அடங்காத ஒளியையுடைய வித்தியாதரார் கள். சாரணர் - சஞ்சரிப்பவர்கள்; சித்தி பெற்றவர்கள். கின்னரர் - வீணையர் கள். அமரர் - தேவர்கள். விசும்பில் அயர்வு எய்தி - (குழலிசை கேட்டு) விண் ணில் வெறுப்படைந்து.

௩௩. சுரமகளிர் - (விண்ணிலுள்ள) தெய்வப் பெண்கள். கனி - கொவ் வைக் கனிபோன்ற.

௩௪. நலிவாரும் மெலிவாரும் - வருத்துவோரும் வருந்துவோரும். வருத் தல் வருந்தல் என்பன தத்துவக் காரியங்களில் பற்றுள்ளவரை நிகழ்வன. ஆனா யர் குழலோசை உயிர்களைத் தத்துவங்கடந்த ஒருமை யுணர்வில் நிறுத்தின மையால், அவைகளிடைச் சகோதரநேயம் விளைந்த தென்க. நயத்தலினால்- விரும்புவதால். வாய்மலி வெள்ளெயிற்று அரவம் - வாயில் நிறைந்த வெள்ளிய பற்களையுடைய பாம்பு. அரியும் - சிங்கமும். தடங்கரியும் - பெரிய யானையும். புல்வாய புல்வாயும் - சிறிய வாயினையுடைய மானும்.

௩௫. மருவியகால் - உலவுகின்ற காற்று. சினை - கிளைகள். கரிய மலையி னின்றும் இழிதரும். கலித்து - ஒலித்து. மேகக்கூட்டங்கள் புடைபெயரவு

பா - ம்—*கூடியவண். †விரவ.

பெருமுகிலின் குலங்கள்புடை பெயர்வொழியப் புனல்சோரா
இருவிசும்பி னிடைமுழங்கா எழுகடலும் இடைதுளும்பா. ௩௫

இவ்வாறு நிற்பனவும் சரிப்பனவும் இசைமயமாய்
மெய்வாழும் புலன்கரண மேவியவொன் றாயினவால்
மொய்வாச நறுங்கொன்றை முடிச்சடையார் அடித்தொண்டர்
செவ்வாயின் மிசைவைத்த திருக்குழல்வா சனையுருக்க. ௩௬

மெய்யன்பர் மனத்தன்பின் *விளைந்தஇசைக் குழலோசை
வையந்தன் னையுநிறைத்து †வானந்தன் வயமாக்கிப்
பொய்யன்புக் கெட்டாத பொற்பொதுவில் நடம்புரியும்
ஐயன்றன் திருச்செவியின் அருகணையப் பெருகியதால். ௩௭

ஆனாயர் குழலோசை கேட்டருளி அருட்கருணை
தானாய திருவுள்ளம் உடையதவ வல்லியுடன்
கானாதி காரணராம் கண்ணுதலார் விடையுகைத்து
வானாறு வந்தணைந்தார் மதிநாறுஞ் சடைதாழ. ௩௮

திசைமுழுதுங் கணநாதர் தேவர்கட்கு முன்னெருங்கி
மிசைமிடைந்து வரும்பொழுது வேற்றொலிகள் விரவாமே
அசையஎழுங் குழல்நாதத் தஞ்செழுத்தால் தமைப்பரவும்
இசைவிரும்பும் கூத்தனார் எழுந்தருளி எதிர்நின்றார். ௩௯

---

மில்லை; நீர் சொரியவு மில்லை; ஆகாயத்தில் முழங்கவு மில்லை. எழுகடல்களும் அலைத்து எழவில்லை.

௩௬. சரிப்பனவும் - அசைவனவும். சராசரங்கள் என்றபடி. மெய்வாழும் - உடலிலுள்ள. கொன்றை மரத்தடியில் நிற்கும் தொண்டர் என்பது குறிப்பு.

௩௭. பொற்பொதுவில் - பொன்னம்பலத்தில்.

௩௮. தவவல்லியுடன் - தவக் கொடியுடன்; உமையம்மையாருடன்; சிவத்தின் அருளே உமை என்பது; **அரிவாட்டாய நாயனார் புராணம் :** ௨௦. குறிப்புப் பார்க்க. கான் ஆதிகாரணராம் - இசைக்கு மூலகாரணராய. "ஓசை ஒலி எலாம் ஆனாய் நீயே"—**அப்பர் :** திருவையாறு - திருத்தாண்டகம். ௧. "ஏழிசையாய் இசைப்பயனாய்"—**சுந்தரர் :** திருவாரூர். ௧௦. கண்ணுதலார் —**திருநகரச்சிறப்பு** ௪௬-ம் பாட்டுக் குறிப்பைப் பார்க்க. விடைஉகைத்து - இடபத்தைச் செலுத்தி. வானாறு - விண்வழியே. மதிநாறும் - பிறைதொங்கும்; தங்கும்.

௩௯. மிசை மிடைந்து - ஒருவர்மீது ஒருவர் விழுந்து. விரவாமே - கலவாமே. கூத்தனார் - நடராஜர்.

பா - ம்—*விளைத்த. †வானும்.

முன்னின்ற மழவிடைமேல் முதல்வனார் எப்பொழுதும்
செந்நின்ற மனப்பெரியோர் திருக்குழல்வா சனைகேட்க
"இந்நின்ற நிலையேநம் பாலணைவாய்" எனஅவரும்
அந்நின்ற நிலைபெயர்ப்பார் ஐயர்திரு மருங்கணைந்தார். ௪0

விண்ணவர்கள் மலர்மாரி மிடைந்துலக மிசை விளங்க
எண்ணிலரு முனிவர்குழாம் இருக்குமொழி எடுத்தேத்த
அண்ணலார் குழற்கருவி அருகிசைத்தங் குடன்செல்லப்
புண்ணியனார் எழுந்தருளிப் பொற்பொதுவி னிடைப்புக்கார். ௪௧

வேறு

தீதுகொள் வினைக்கு வாரோம் செஞ்சடைக் கூத்தர் தம்மைக்
காதுகொள் குழைகள் வீசுங் கதிர்நில விருள்கால் சீப்ப
மாதுகொள் புலவி நீக்க மனையிடை இருகால் செல்லத்
தூதுகொள் பவராம் நம்மைத் தொழும்புகொண் டுரிமை கொள்வார்.

ஆ திருவிருத்தம் - ௬௭௨.

மழநாட்டில் திருமங்கலம் என்னும் பதியில் ஆயர் குலத்தில் தோன்றியவர் **ஆனாய நாயனார்.** அவர் திருநீற்றினிடத்திற் பேரன்பு வாய்ந்தவர்; மனமொழிமெய்களில் சிவபெருமான் திருவடியையே போற்றுபவர்.

அப்பெரியார், இடையர்களுக்குத் தலைமை பூண்டு, பசுக் கூட்டங்களைக் காத்துவந்தார். அவர்தம் முயற்சியால் பசுக்கூட்டங்கள் காட்டுக்குப்போய் எவ்வித இடையூறுமின்றி நறும்புல் மேய்ந்து, தூநீர் அருந்தி, நல்வழியில் பெருகலாயின. பசுக்கூட்டங்களை மேய்த்துக் காப்பதுடன், வேய்ங்குழல் வாசிப்பதும் ஆனாயரின் வழக்கமா யிருந்து வந்தது.

---

௪0. மழவிடை - இளவேறு. செந்நின்ற - செம்மைக்குணம் நிலவிய. பெரியார் - ஆனாயநாயனார். பெரியோர்கள் ஆனாயநாயனாரின் திருக்குழல் வாசனை கேட்க என்று கூறுவோருமுளர். வாசனை - வாசிப்பை. இந்நின்ற நிலையே - இவ்வாறு குழல்வாசித்து நின்றபடியே. அந்நின்ற நிலை பெயர்ப்பார் - அங்கே நின்ற நிலையினின்றும் பெயர்வாராய்; பிறவித்துயரை வீழ்த்துவோராய் என்க. ஐயர் - சிவபெருமான்.

௪௧. இருக்குமொழி - மறைமொழிகளை. புண்ணியனார் - சிவபெருமான்.

௪உ. இருள்கால் சீப்ப - இருளை யொழிக்க. மாது - பரவை. தொழும்பு - அடிமை. உரிமை கொள்வாராதலின் இனியாம் தீமையை ஏற்கும் வினைவழிப் பிறவி தாங்கமாட்டோம் என்றபடி.

பா - ம்—*வழங்க.

ஒருநாள், ஆனாயர் வழக்கம்போலக் கார்காலத்திற் காடுநோக்கிச் சென்ற போது, பூத்துத் தளிர்த்து நின்ற ஒரு கொன்றைமரம் அவரது கண்ணையுங் கருத்தையுங் கவர்ந்தது. அவ்வருங்கொன்றை, தாழ்சடையில் கொன்றை யணிந்த சிவபெருமானைப் போலவே ஆனாயருக்குத் தோன்றலாயிற்று. தோன் றவே, அவர்தம்மனம் சிவத்தில் ஒன்றிவிட்டது; கருவிகரணங்க ளெல்லாம் குழைந்து குழைந்து உருகின. அவர்பால் அன்புமடை திறந்து கொண்டது. அன்பில் மூழ்கிய ஆயர் பெருமான், வேய்ங்குழலை மணிவாயில் வைத்து அஞ் செழுத்தை இசையில் அமைத்து வாசிக்கத் துவங்கினார். அவ்விசையின் திறத்தை என்னென்று கூறுவது! அவ்விசை அமுதம்! எல்லா உயிர்களிலும் பாய்கிறது. அறுகம் புற்களை மேய்ந்துகொண்டிருந்த ஆனிரைகள் அசைவிடா மல் அவரைச் சூழ்ந்தன; நுரைவாயுடன் பாலூட்டிக்கொண் டிருந்த இளங் கன்றுகள் தங்களை மறந்தன; எருதுகளும், மான் முதலிய காட்டு விலங்குகளும் மயிர் முகிழ்த்து அங்கேவந்து சேர்ந்தன; ஆடும் மயில்கள் அசையாது அணு கின; மற்றப் பறவை இனங்களெல்லாம் மயங்கி மயங்கி நெருங்கின; மாடு மேய்த்துக்கொண் டிருந்த கோவலர்கள் அவ்வப்படியே நின்றார்கள்; நாகலோக வாசிகள் பிலங்கள் வழியாக வந்தார்கள்; மலையில்வாழும் தெய்வப் பெண்கள் இசையிற் றேங்கி நின்றார்கள்; விஞ்சையர்கள், சாரணர்கள், கின்னரர்கள், தேவர்கள் முதலியோர் விமானங்களில் போந்தார்கள்; கற்பகத்தருவின் மருங் கிருந்து கிளிகளுக்கு அமுதூட்டிக்கொண் டிருந்த தேவமகளிர்கள், அக்கிள்ளை களுடன் தங்கள் குழல் அலைய விமானங்களில் விரைந்தேறி இசை அமுதைப் பருகினார்கள்; வலியார் மெலியா ரெல்லாரும் இசையால் ஒன்று பட்டமை யான், பாம்புகள் மயில்மீது விழுகின்றன; சிங்கமும் யானையும் ஒருங்குசேர்ந்து வருகின்றன; மான்கள் புலியின் பக்கத்தில் செல்கின்றன; காற்று விசைத் தசையவில்லை; மரக்கிளைகள் சலிக்கவில்லை; மலை வீழ் அருவிகளும் காட்டாறு களும் கலித்து ஓடவில்லை; முகில்கள் புடை பெயரவுமில்லை; மழை பொழி யவுமில்லை; முழங்கவுமில்லை

இவ்வாறு சராசரங்களெல்லாம் இசைவாய்ப் பட்டுப் பொறி புலன்கள் ஒன்றப்பெற்றன. ஆனாயர் குழலோசை, வையத்தை நிறைத்து வானையும் வசப் படுத்திவிட்டது. எஞ்சி நிற்பது என்ன? சிவம் ஒன்றே. அச்சிவத்தின் செவி யிலும் குழலோசை நுழைந்தது. பொய்யன்புக் கெட்டாத பெருமான் ஆனாயர் முன்னே தோன்றி “இப்படியே நம்பால் அணைவாய்” என்றருளினார். ஆனாய நாயனாரும் அப்படியே ஆண்டவனை அடைந்து பேரின்பம் பெற்றார்.

## ௪. மும்மையால் உலகாண்ட சருக்கம்

# மூர்த்தி நாயனார் புராணம்



சீர்மன்னு செல்வக் குடிமல்கு சிறப்பின் ஓங்கும்
கார்மன்னு சென்னிக் கதிர்மாமணி மாட வைப்பு
நார்மன்னு சிந்தைப் பலநற்றுறை மாந்தர் போற்றும்
பார்மன்னு தொன்மைப் புகழ்பூண்டது பாண்டி நாடு.

சாயுந் தளிர் வல்லி மருங்குல் நெடுந்த டங்கண்
வேயும்படு தோளியர் பண்படும் இன்சொற் செய்ய
வாயும்படு நீள்கரை மண்*பொருந் தண்பொ ருநந்தம்
பாயுங்கட லும்படு நீர்மை பணித்த முத்தம்.

மொய்வைத்த வண்டின் செறிசூழல் முரன்ற சந்தின்
மைவைத்த சோலை மலயந்தர வந்த மந்த
மெய்வைத்த காலும் தருஞாலம் அளந்த மேன்மைத்
தெய்வத்தமி ழும்தருஞ் செவ்வி மணஞ்செ யீரம்.

சூழுமிதழ்ப் பங்கய மாகஅத் தோட்டின் மேலாள்
தாழ்வின்றி என்றுந் தனிவாழ்வதத் தையல் ஒப்பார்

---

க. மல்கு - நிறைந்திருத்தலால். கார்......வைப்பு - மேகந் தங்கும் சிகரங்களையுடைய ஒளி காலும் அழகிய மணிகள் பதித்த மாடங்களாகிய இடங்களிலுள்ள. நார் - அன்பு. நற்றுறை மாந்தர் - சன்மார்க்கர்கள். பார்......புகழ் - உலகில் நிலையான பழம் புகழ்.

உ. நீர்மை பணித்த முத்தம் - நீருள்ள முத்துக்கள். சாயும்......மருங்குல் - தளிரால் சாயும் கொடி போன்ற இடையினையும். வேயும்படு - மூங்கிலையும் வென்ற. பண்படும் - பண்ணொலிக்கும். வாயும் படும் - வாயிலும் உண்டாகும். பொரும் - அரித்துச் செல்லும். பொருநந்தம் - தாம்பிரபன்னி; தாமிரவருணி. கடலும் படும் - கடலிலும் உண்டாகும். வாயிற்படு முத்தம் - பல். முத்தம் மகளிர் வாயிலும் படும்; கடலிலும் படும் என்க.

௩. செவ்வி மணஞ் செய் ஈரம் - நறு மணத்தைக் கமழச் செய்யும் ஈரத்தை. மொய்.........தரும் - மொய்த்துள்ள வண்டின் நெருங்கிய கூட்டங்கள் ஒலிக்கின்ற மேகந் தவழும் சந்தனச் சோலையையுடைய பொதிய மலை அளிக்க வந்துலவும் சிறு தென்றற் காற்றும் தரும். ஈரத்தைத் தென்றலும் தமிழும் தருமென்க.

பா - ம்—*படும்.

யாழின் மொழியிற் குழலின்னிசை யுஞ்சு ரும்பும்
வாழும் நகரம் மதுராபுரி என்ப தாகும். ௪

சால்பாய மும்மைத் தமிழ்தங்கிய அங்கண் மூதூர்
நூல்பா யிடத்தும் உளநோன்றலை மேதி பாயப்
பால்பாய் முலைதோய் மதுப்பங்கயம் பாய எங்குஞ்
சேல்பாய் தடத்தும் உளசெய்யுள்மிக் கேறு சங்கம். ௫

மந்தாநிலம் வந்தசை பந்தரின் மாட முன்றில்
பந்தாடிய மங்கையர் பங்கயச் செங்கை தாங்கும்
சந்தார்முலை மேலன தாழ்குழை வாள்மு கப்பொன்
செந்தாமரை மேலன நித்திலஞ் சேர்ந்த கோவை. ௬

மும்மைப் புவனங்களின் மிக்கதன் றேஅம் மூதூர்
மெய்ம்மைப் பொருளாந் தமிழ்நூலின் விளங்கு வாய்மைச்

---

௪. பங்கயமாக - தாமரை மலராக. அத்தோட்டின் மேலாள் - அம்மல ரிதழில் வாழும் இலக்குமியானவள். அத்தையல் ஒப்பார்......வாழும் - அவ் விலக்குமியைப் போன்ற பெண் மக்களின் யாழ் போன்ற மொழியிலும், கூந் தலிலும் முறையே இன்னிசையும், வண்டும் வாழ்கின்ற. **திருநாட்டுச் சிறப்பு** ௬0-ம் பாட்டுக் குறிப்பைப் பார்க்க. மதுரை என்னும் பெயர்க்குக் காரணத்தைத் **திருவிளையாடற் புராணம்** (புலியூர் நம்பி) - மதுரையான திருவிளையாடலில் பார்க்க.

௫. செய்யுள் மிக்கேறு சங்கங்கள்: சால்பாய - அமைதியுடைய. மும் மைத் தமிழ் - இயல் இசை நாடகத் தமிழ். அங்கண் - அழகிய இடத்தை யுடைய. நூல் பாய் இடத்தும் உள - நூல்கள் பயிலும் இடத்திலும் இருக்கின் றன. நோன் தலை மேதி பாய - பெரிய தலையையுடைய எருமைகள் பாய்த லால். பால்......பாய - பால் சொரியும் முலையானது தோய்தலால் தேனானது தாமரை மலரில் ஒழுக; பரந்த முலையினிடத்தே தோய்ந்த பாலானது தேன் பொருந்திய தாமரையினிடத்துப் பாய என்னலு மொன்று. சேல் - சேல் மீன்கள். தடத்தும் உள - தடாகங்களிலும் இருக்கின்றன. செய்யுள் மிக்கேறு சங்கம் - (க) பாச் செய்யுள் மிக்கு உயரும் கல்விச் சங்கங்கள் (புலவர் கூட்டம்). (உ) வயல்களில் மிகுந்து ஏறுகின்ற சங்குகள்.

௬. நித்திலம் (முத்துச்) சேர்ந்த கோவைகள்: மந்த ஆநிலம் - தென்றற் காற்று. முன்றில் - முற்றத்தில். மங்கையர் பங்கயச் செங்கை தாங்கும் சந் தனம் நிறைந்த முலைகள் மேலிருக்கின்றன. தாழ்ந்த குண்டலங்களையுடைய ஒளி வீசும் பொன் முகமாகிய செந்தாமரை மேலிருக்கின்றன. முகத்தில் நித்திலஞ் சேர்ந்த கோவை யாவது வேர்வை.

௭. மெய்ம்மைப் பொருள் என்றும், வாய்மைச் செம்மைப் பொருளென் றும் கூறியது தமிழின் உண்மை மாண்பைக் குறிப்பதென்க. பழந் தமிழ்

செம்மைப் பொருளுந் தருவார்திரு வால வாயில்
எம்மைப் பவந்தீர்ப் பவர்சங்கம் இருந்த தென்றால். ௭

அப்பொற் பதிவாழ் வணிகக்குலத் தான்ற தொன்மைச்
செப்பத் தகுசீர்க் குடிசெய் தவஞ் செய்ய வந்தார்
எப்பற் றினையும்அறுத் தேறுகைத் தேறு வார்தாள்
மெய்ப்பற் றெனப்பற்றி விடாத விருப்பின் மிக்கார். ௮

நாளும்பெருங் காதல் நயப்புறும் வேட்கை யாலே
கேளும் துணையும் முதற்கேடில் பதங்க ளெல்லாம்
ஆளும்பெரு மான்அடித் தாமரை அல்ல தில்லார்
மூளும்பெரு கன்பெனும் மூர்த்தியார் மூர்த்தி யார்தாம். ௯

அந்திப் பிறைசெஞ் சடைமேலணி ஆல வாயில்
எந்தைக் கணிசந் தனக்காப்பிடை என்றும் முட்டா
அந்தச் செயலின் நிலைநின் றடியா ருவப்பச்
சிந்தைக் கினிதாய திருப்பணி செய்யு நாளில். ௧௦

---

நூல்களில் பெரிதும் உண்மையும் வாய்மையும் மெய்ம்மையும் செறிந்து இடப்பது கருதற்பாலது. பிற்காலத் தமிழ் நூல்களில் அவைகட்கு மாறுபட்டன காணப்படுவதும் வெள்ளிடைமலை. பவம் - பிறவித் துன்பம். தீர்ப்பவராகிய சிவபெருமானின் சங்கம். சிவபெருமான், சங்கப் புலவர்கள் வழித் தமிழ் வாயிலாக உண்மையை உணர்த்தினமை ஈண்டுக் குறிக்கப்பட்டுளது. "மூவர்கட் கரியான் நிற்ப முத்தமிழ்ச் சங்கத் தெய்வப் - பாவலர் வீற்றிருக்கும் பாண்டி நன்னாடு போற்றி"—டி திருவிளையாடல்: வாழ்த்து அ. "தண்டமிழ் நூல் புலவாணர்க் கோரம்மானே"—தேவாரம். "தண்ணார் தமிழளிக்குந் தண் பாண்டி நாட்டானை"—திருவாசகம். சங்கப் புலவரை "வாய்மை யுரியவர்" என்று பெரும்பற்றப் புலியூர் நம்பியார் (திருவிளையாடல்: கிழியறுத்த - ௧௧) கூறியிருத்தல் காண்க. பொருளுந்தருவார் என்பதற்கு அகப்பொருளிலக் கணந் தந்த இறையனார் என்று கூறுவது பிற்காலவழக்கு. இறையனார் என்பவர் ஒரு புலவர்; கடவுளல்லர். இறையனார் என்னும் பெயரைக்கொண்டு எழுந்த புராணக் கதைகள் சரித்திரத்துக்குத் துணைசெய்யா.

அ. ஆன்ற தொன்மை - அமைந்த பழைமை. ஏறு உகைத்து ஏறுவார் - சிவபெருமான்.

௯. காதல், வேட்கை - கண்ணப்ப நாயனார் புராணம் ௧௦௨-ம் பாட்டுக் குறிப்பைப் பார்க்க. நயப்புறும் - விருப்புறும். கேளும் - உறவினரும். பதங்கள் - பேறுகள். அன்பெனும் மூர்த்தியார் - அன்பையே உடலாகக் கொண்டவராகிய மூர்த்தி நாயனார்.

௧௦. ஆலவாயில் எந்தைக்கு - திருவாலவாயில் எழுந்தருளியுள்ள சிவபெருமானுக்கு. ஆலவாய் - திருவிளையாடற் புராணம் பார்க்க.

கானக் கடிசூழ் வடுகக்கரு நாடர் காவன்
மானப் படைமன்னன் வலிந்து நிலங்கொள் வானுய்
யானைக் குதிரைக் கருவிப்படை வீரர் *திரண்ட
சேனைக் கடலுங் கொடுதென் திசை நோக்கி வந்தான். ௧௧

வந்துற்ற பெரும்படை மண்புதை யப்ப ரப்பிச்
சந்தப்பொதி யில்தமிழ் நாடுடை மன்னன் வீரம்
சிந்தச்செரு வென்றுதன் னாணை செலுத்து மாற்றால்
கந்தப்பொழில் சூழ்மது ராபுரி காவல் கொண்டான். ௧௨

வல்லாண்மையின் வண்தமிழ் நாடு †வளம்ப டுத்து
நில்லாநிலை ஒன்றிய இன்மையின் நீண்ட மேரு
வில்லான்அடி மைத்திறம் மேவிய நீற்றின் சார்பு
செல்லாதரு கந்தர் திறத்தினிற் சிந்தை தாழ்ந்தான். ௧௩

தாழுஞ்சமண் கையர் தவத்தைமெய் யென்று சார்ந்து
வீழுங்கொடி யோன்அது வன்றியும் வெய்ய முன்னைச்
சூழும்வினை யால்அர வஞ்சுடர்த் திங்க ளோடும்
வாழுஞ்சடை யான்அடி யாரையும் வன்மை செய்வான். ௧௪

சேக்கர்ச்சடை யார்விடை யார்திரு வால வாயுள்
முக்கட்பர னார்திருத் தொண்டரை மூர்த்தி யாரை
மைக்கற்புரை நெஞ்சுடை வஞ்சகன் வெஞ்ச மண்பேர்
எக்கர்க்குட னாக இகழ்ந்தன செய்ய எண்ணி. ௧௫

அந்தம்இல வாமிறை செய்யவும் அன்ப னார்தாம்
முந்தைம்முறை மைப்பணி முட்டலர் செய்து வந்தார்

---

௧௧. கானக்கடி - காட்டரண். மான - வலிய. கருவி - ஆயுதம் தாங்கிய. "மதுரை வவ்விய கருநட வேந்தன்"—**கல்லாடம்** : ௫௭.

௧௨. சந்தப் பொதியில் - சந்தன மரங்களையுடைய பொதிகை மலையிற் பிறந்த. செரு - போர். கந்தம் - மணங்கமழும்.

௧௩. வளம் படுத்தும் - வளங்களைத் தன் வயப்படுத்தியும். ஒன்றிய. பொருந்திய. இன்மையின் - (அறிவுவிளக்க) வறுமையால். மேரு வில்லான் - சிவபெருமானது. அருகந்தர் திறத்தினில் - சமணர் கொள்கையில்.

௧௪. கையர் - வஞ்சகர்கள். வெய்ய - கொடிய. வன்மை செய்வான் - கொடுமை செய்வானானான்.

௧௫. செக்கர் - செந்நிற முடைய. மை கல் புரை - கருங்கல்லை யொத்த. எக்கர்க்கு - இடக்கர்களுக்கு. "எக்கராம் அமண் கையருக்கு"—**திருஞான சம்பந்தர் :** திருவாலவாய் - மானி. ௧௧.

௧௬. அந்தம் இலவா மிறை-அளவில்லாத நடுக்கங்கள். "மிறைகள் செய்யவும்"—**திருவிளையாடல்** (நம்பி): ௫௭ மூர்த்தி ௪. முட்டிலராய்.

பா - ம்—*திண்டேர். †வளம்படுத்தி

தந்தம் பெருமைக் களவாகிய சார்பில் நிற்கும்
எந்தம் பெருமக் களையாவர் தடுக்க வல்லார். கசு

எள்ளுஞ்செயல் வன்மைகள் எல்லையில் லாத செய்யத்
தள்ளுஞ்செய லில்லவர் சந்தனக் காப்புத் தேடிக்
கொள்ளுந்துறை யும்அடைத் தான்கொடுங் கோன்மை செய்வான்
தெள்ளும்புனல் வேணியர்க் கன்பருஞ் சிந்தை நொந்து. கஎ

புன்மைச் செயல்வல் லமண்குண்டரிற் போது போக்கும்
வன்மைக் கொடும்பா தகன்மாய்ந்திட வாய்மை வேத
நன்மைத் திருநீற் றுயர்நன்னெறி தாங்கு மேன்மைத்
தன்மைப் புவிமன் னரைச்சார்வதென் றென்று சார்வார். கஅ

காய்வுற்ற செற்றங்கொடு கண்டகன் காப்ப வுஞ்சென்
றாய்வுற்ற கொட்பிற் பகலெல்லை அடங்க நாடி
ஏய்வுற்ற நற்சந் தனமெங்கும் பெறாது சிந்தை
சாய்வுற்றிட வந்தனர் தம்பிரான் கோயில் தன்னில். கக

நட்டம்புரி வாரணி நற்றிரு மெய்ப்பூச் சின்று
முட்டும்பரி சாயினுந் தேய்க்குங்கை முட்டா தென்று
வட்டந்திகழ் பாறையின் வைத்து முழங்கை தேய்த்தார்
கட்டும்புறந் தோல்நரம் பென்பு கரைந்து தேய. உ0

கல்லின்புறந் தேய்த்த முழங்கை கலுழ்ந்து சோரி
செல்லும்பரப் பெங்கணும் என்பு திறந்து மூளை
புல்லும்படி கண்டு பொறுத்திலர் தம்பி ரானுர்
அல்லின்கண் எழுந்தது வந்தருள் செய்த வாக்கு. உக

கஎ. எள்ளும் - இகழும். தள்ளும் - தமது திருப்பணியைத் தள்ளும். அடைத்தான் - தடுத்துக் கெடுத்தான்.

கஅ. சார்வார் - மனதில் கொள்வாராயினர்.

கக. காய்......காப்பவும் - கோபம் நிறைந்த பகைமை கொண்டு அக் கொடிய மன்னன் (நாயனுருக்குச் சந்தனக் கட்டையை எவரும் உதவா வண்ணம்) தடுக்கவும். (கண்டகம் - முள் ; கண்டகன் - முள் போன்றவன்). சென்று ......நாடி - நாயனுர் பல விடங்களில் ஆராய்ந்து திரிந்து பகல் முழுவதும் (சந்தனக் கட்டையைத்) தேடி. ஏய்வுற்ற - தகுந்த.

உ0. நட்டம் புரிவார் - சிவபெருமான். மெய்ப்பூச்சு - சந்தனக் காப்பு. வட்டந் திகழ் பாறையில் - சந்தனக் கல்லில்.

உக. சோரி கலுழ்ந்து - இரத்தம் சொரிந்து. பரப்பு - இடம். புல்லும் படி கண்டு - வெளி வருதலைப் பார்த்து. தம்பிரானுர் - சிவபெருமான். அல்லின்கண்- இரவில்.

"அன்பின் துணி வால்இது செய்திடல் ஐய! உன்பால்
வன்புன்கண் விளைத்தவன் கொண்டமண் எல்லாங் கொண்டு
முன்பின்னல் புகுந்தன முற்றவும் நீத்துக் காத்துப்
பின்புன்பணி செய்துநம் பேருல கெய்து" கென்ன. ௨௨

இவ்வண்ணம் எழுந்தது கேட்டெழுந் தஞ்சி முன்பு
செய்வண்ணம் ஒழிந்திடத் தேய்ந்தபுண் ஊறு தீர்ந்து
கைவண்ண நிரம்பின வாசமெல் லாங்க லந்து
மொய்வண்ண விளங்கொளி எய்தினர் மூர்த்தி யார்தாம். ௨௩

அந்நாள்இர வின்கண் அமண்புகல் சார்ந்து வாழும்
மன்னாகிய போர்வடு கக்கரு நாடர் மன்னன்
தன்நாளும் முடிந்தது சங்கரன் சார்பி லோர்க்கு
மின்னுமென நீடிய மெய்ந்நிலை யாமை வெல்ல. ௨௪

இவ்வா றுலகத்தின் இறப்ப உயர்ந்த நல்லோர்
மெய்வா ழுலகத்து விரைந்தணை வார்க ளேபோல்
அவ்வா றரனார் அடியாரை அலைத்த தீயோன்
வெவ்வாய் நிரயத் திடைவீழ விரைந்து வீந்தான். ௨௫

முழுதும்பழு தேபுரி மூர்க்கன் உலந்த போதின்
எழுதுங்கொடி போல்பவ ருட்பட எங்கு சுற்றம்
அழுதும்புலர் வுற்றது மற்றவன் அன்ன மாலைப்
பொழுதும்புலர் வுற்றது செங்கதிர் மீது போத. ௨௬

---

௨௨. ஐய - ஐயனே. செய்திடல் - செய்யாதே. வன் புன்கண் - கொடுந் துன்பம். நீ கொண்டு. முன்பு இன்னல் புகுந்தன - முன்னே அவன் கொடுங் கோன்மையால் நேர்ந்த துன்பங்களை.

௨௩. செய் வண்ணம் ஒழிந்திட - கையைத் தேய்த்தலை நிறுத்த. கை வண்ணம் - கை வடிவு. (புலால் நாற்றம் நீங்கி) வாசம் எல்லாம் கலந்து......... மொய் வண்ணம் - திரண்ட அழகு.

௨௪. அமண் புகல் - சமணரிடம்; சமணக் கொள்கை. நீடிய மெய் - நீடித்த ஆயுளையுடைய தேகம். வெல்ல - மிக. மின்னும் என நிலையாமை வெல்ல முடிந்தது என்று கூட்டுக.

௨௫. மெய் வாழுலகத்து - சிவலோகத்தில். நிரயத்திடை - நரகத்தில். வீந்தான் - இறந்தான்.

௨௬. உலந்த - இறந்த. எழுதுங் கொடி போல் பவர் - அவன் மனைவிமார் கள். புலர்வுற்றது - வாட்ட முற்றது. அவன் அன்ன மாலைப் பொழுதும் - அவனைப் போன்ற இராக் காலமும். புலர் வுற்றது - விடிந்தது.

பா - ம்—*முழுதும்.

அவ்வேலையில் அங்கண் அமைச்சர்கள் கூடித் தங்கள்
கைவேறுகொள் ஈம வருங்கடன் காலை முற்றி
வைவேலவன் றன்குல மைந்தரும் இன்மை யாலே
செய்வேறுவி னைத்திறஞ் சிந்தனை செய்து தேர்வார். உஎ

"தாழுஞ்செய லின்றொரு மன்னவன் தாங்க வேண்டும்
கூழும்குடி யும்முத லாயின கொள்கைத் தேனும்
சூழும்படை மன்னவன் தோளிணைக் காவ லின்றி
வாழுந்தகைத் தன்றிந்த வையகம்" என்று சொன்னார். உஅ

வேறு

"பன்முறை உயிர்கள் எல்லாம் பாலித்து ஞாலங் காப்பான்
தன்னெடுங் குடைக்கீழ்த் தத்தம் நெறிகளில் சரித்து வாழும்
மன்னரை இன்றி வைகும் மண்ணுல கெண்ணுங் காலை
இன்னுயிர் இன்றி வாழும் யாக்கையை ஒக்கும்" என்பார். உகூ

இவ்வகை பலவும் எண்ணி "இங்கினி அரசர் இல்லை
செய்வகை இதுவே என்று தெளிபவர் சிறப்பின் மிக்க
மைவரை அனைய வேழம் கண்கட்டி விட்டால் மற்றக்
கைவரை கைக்கொண் டார்மண் காவல்கைக் கொள்வார்" என்று.

வேறு

செம்மாண்வினை அர்ச்சனை நான்முறை செய்து தோளால்
"இம்மாநிலம் ஏந்தலர் ஏந்தலை ஏந்து" கென்று
பெய்ம்மாமுகில் போல்மதம் பாய்பெரு கோடை நெற்றிக்
கைம்மாவை நறுந்துகில் கொண்டுகண் கட்டி விட்டார். நக

---

உஎ. அவ்வேலையில் - அப்பொழுது. கை வேறு கொள் - ஒழுக்கத்துக்கு வேறு பட்ட. ஈமவருங்கடன் - மயானக் கிரியைகள். காலைமுற்றி - காலையில் செய்துமுடித்து. வை வேலவன்தன் - கூரிய வேலேந்திய அம்மன்னன் தன். செய்வேறு வினைத் திறம் - செய்யத்தக்க வேறுவித செயலினிடத்து. தேர்வார் - தெளிவார்.

உஅ. தாழும்செயல் இன்று - தாமதித்த லின்றி. தாங்க - உலகைத் தாங்க. கூழும் - உணவும்; பொருளும்; "படை குடி கூழ் அமைச்சு நட்பு அரண் ஆறும் உடையான் அரசருள் ஏறு"—திருக்குறள் நஅக. "குடியும் கூழின் பெருக்கமும்" சிலப்பதிகாரம்: கo. நாடு காண் - கட்டுரை எ. கொள்கைத் தேனும் - நலத்தை உடைத்தா யிருப்பினும்.

உகூ. பாலித்து - காத்து. சரித்து - ஒழுகி. திருநகரச் சிறப்பு; பாட்டு கச - குறிப்புப் பார்க்க.

நo. மைவரை அனைய வேழம் - கரிய மலை போன்ற யானையை. அக் கைவரை - அந்த யானை.

நக. செம்மாண் வினை - செவ்விய பெருமையுடைய கிரியைகளால். ஓர் ஏந்தலை - ஓர் அரசனை (உயர்ந்தவனை). ஓடை - பட்ட மணிந்த.

கண்கட்டி விடுங்களி யானைஅக் காவல் மூதூர்
மண்கொட்புற வீதி மருங்கு திரிந்து போகித்
திண்பொற்றட மாமதில் சூழ்திரு வால வாயின்
விண்பிற்பட ஓங்கிய கோபுர முன்பு *மேவி. ௩௨

நீங்கும்இர வின்கண் நிகழ்ந்தது கண்ட தொண்டர்
"ஈங்கெம்பெரு மான்அரு ளாம்எனில் இந்த வையம்
தாங்கும்செயல் பூண்பன்" என்றுள்ளந் தளர்வு நீங்கிப்
பூங்கொன்றை மிலைந்தவர் கோயிற் புறத்து நிற்ப. ௩௩

வேழத் தரசங்கண் விரைந்து நடந்து சென்று
வாழ்வுற் றுலகஞ்செய் தவத்தினின் வள்ள லாரைச்
சூழ்பொற் சுடர்மாமணி மாநிலந் தோய முன்பு
தாழ்வுற் றெடுத்துப் பிடர்மீது தரித்த தன்றே. ௩௪

மாதங்கம் எருத்தினில் வைத்தவர் தம்மைக் காணா
ஏதங்கெட எண்ணிய திண்மை அமைச்சர் எல்லாம்
பாதங்களின் மீது பணிந்தெழுந் தார்கள் அப்போ
தோதங்கிளர் வேலையை ஒத்தொலி மிக்க தவ்வூர். ௩௫

சங்கங்கள் முரன்றன தாரைகள் பேரி யோடும்
எங்கெங்கும் இயம்பின பல்லியம் எல்லை யில்ல
அங்கங்கு மலிந்தன வாழ்த்தொலி அம்பொற் கொம்பின்
பங்கன்அரு ளால்உல காள்பவர் பாங்கர் எங்கும். ௩௬

வெங்கட்களிற் றின்மிசை நின்றும் இழிச்சி வேரித்
தொங்கல்சுடர் மாலைகள் சூழ்முடி சூடு சாலை
அங்கட்கொடு புக்கரி யாசனத் தேற்றி ஒற்றைத்
திங்கட்குடைக் கீழ்உரி மைச்செயல் சூழ்ந்து செய்வார். ௩௭

---

௩௨. கொட்புற - நடுங்க. ௩௩. மிலைந்தவர் - சூடிய சிவபெருமானது.

௩௪. வேழத்தரசு - பட்டத்து யானை; அரசுவா. வள்ளலாரை - மூர்த்தி யாரை.

௩௫. மாதங்கம் - யானை; அரசுவா. எருத்தினில் - பிடரியில். காணா - கண்டு. ஏதங்கெட - உலகத் துன்பங்கெட. ஓதங் கிளர் வேலையை - வெள்ளம் எழும் கடலை.

௩௬. முரன்றன - ஒலித்தன. பேரி - பேரிகை. இயம்பின - முழங்கின. பல்லியம் - பலவகை வாத்தியங்கள். அம்பொற் கொம்பின் பங்கன் - சிவபெருமான்.

௩௭. இழிச்சி - இறக்கி. வேரித் தொங்கல் - தேனொழுகும் மலர் மாலைகளும். சுடர்மாலைகள் - மணிமாலைகளும். அரியாசனத்து - சிங்காசனத்தில். உரிமைச் செயல் - மகுடாபிஷேகச் செயல்.

பா - ம்—*மேவ.

மன்னுந் திசைவேதியில் மங்கல ஆகு திக்கண்
துன்னுஞ் சுடர்வன்னி வளர்த்துத் துதைந்த நூல்சூழ்
பொன்னின் கலசங்கள் குடங்கள் பூரித்த தூநீர்
உன்னுஞ் செயல்மந் திர*யோகர் நிறுத்தி னார்கள்.

வந்துற்றெழு மங்கல மாந்தர்கள் தம்மை நோக்கிச்
சிந்தைச்சிவ மேதேளி யுந்திரு மூர்த்தி யார்தாம்
"முந்தைச்செய லாம்அமண் போய்முதற் சைவம் ஓங்கில்
இந்தப்புவி தாங்கிஇவ் வின்னர சாள்வன்" என்றார். கூகூ

அவ்வாறு மொழிந்தது கேட்ட அமைச்ச ரோடு
மெய்வ்வாழ்தரு நூலறி வின்மிகு மாந்தர் தாமும்
"எவ்வாறருள் செய்தனை மற்றவை யன்றி யாவர்
செய்வ்வார் பெரியோய்" எனச்சேவடி தாழ்ந்து செப்ப. சo

"வையம் முறைசெய் குவனாகில் வயங்கு நீறே
செய்யும் அபிடே கமுமாக, செழுங்க லன்கள்
ஐயன் அடையா ளமுமாக, அணிந்து தாங்கும்
மொய்புன் சடைமா முடியேமுடி யாவ" தென்றார். சக

என்றிவ்வுரை கேட்டலும் எல்லையில் கல்வி யோரும்
வன்திண்மதி நூல்வளர் வாய்மை அமைச்சர் தாமும்
"நன்றிங்கருள் தானென நற்றவ வேந்தர்" சிந்தை
ஒன்றும்அர சாள்உரி மைச்செய லான உய்த்தார். சஉ

மாடெங்கும் நெருங்கிய மங்கல ஓசை மல்கச்
சூடுஞ்சடை மௌலி அணிந்தவர் தொல்லை ஏனம்
தேடுங்கழ லார்திரு வாலவாய் சென்று தாழ்ந்து
நீடுங்களிற் றின்மிசை நீள்மறு கூடு போந்தார். சங

---

கூஅ. மன்னும் திசை வேதியில் - மூர்த்தி நாயனார் வீற்றிருக்கும் திசையில் இடப்பட்ட ஓம குண்டத்தில். வன்னி - நெருப்பு. துதைந்த - நெருங்கிய. பூரித்த - நிரப்பிய. உன்னும் - தியானிக்கும்.

கூகூ. வந்து...தம்மை - வந்து தொழுது எழும் மங்கல காரியத்தில் ஈடுபட்டுள்ள மந்திரிகள் முதலியவர்களை.

சக. வயங்கும் - பொலியும். கலன்கள் - ஆபரணங்கள். ஐயன் அடையாளமும் - சிவபெருமான் அடையாளமாகிய உருத்திராக்கமும். திருநீறு, உருத்திராக்கம், சடைமுடி ஆக மூன்று.

சஉ. ஒன்றும் - பொருந்தும். உய்த்தார் - கொடுத்தார்.

சங. மாடெங்கும் - பக்கமெங்கும். மௌலி அணிந்தவர் - முடியணிந்த மூர்த்தி நாயனார். தொல்...கழலார் - பழைய பன்றியாகிய திருமால் தேடுந் திருவடியை யுடைய சிவபெருமான் எழுந்தருளியுள்ள. மறுகூடு - வீதி வழியே.

பா - ம்—*யோகினிறுத்தினார்கள்.

மின்னும்மணி மாளிகை வாயிலின் வேழ மீது
தன்னின்றும் இழிந்து தயங்கொளி மண்ட பத்திற்
பொன்னின்அரி மெல்லணைச் சாமரைக் காமர் பூங்கால்
மன்னுங்குடை நீழல் இருந்தனர் வையந் தாங்கி. ௪௪

குலவுந்துறை நீதி அமைச்சர் குறிப்பின் வைகக்
கலகஞ்செய் அமண்செய லாயின கட்டு நீங்கி
நிலவுந்திரு நீற்று நெறித்துறை நீடு வாழ
உலகெங்கு நிரம்பிய சைவம் உயர்ந்து மன்ன. ௪௫

நுதலின்கண் விழித்தவர் வாய்மை நுணங்கு நூலின்
பதமெங்கும் நிறைந்து விளங்கப் பவங்கள் மாற
உதவுந்திரு நீறுயர் கண்டிகை கொண்ட வேணி
முதன்மும்மையி னால்உல காண்டனர் மூர்த்தி யார்தாம். ௪௬

ஏலங்கமழ் கோதையர் தந்திறம் என்றும் நீங்கும்
சீலங்கொடு வெம்புலன் தெவ்வுடன் வென்று நீக்கி
ஞாலந்தனி நேமி நடாத்தி நலங்கொள் ஊழிக்
காலத்உயிர் கட்கிட ரான கடிந்து காத்து. ௪௭

---

௪௪. பொன்னாற் செய்யப்பட்ட சிங்காசனத்தில். சாமரையின் விரும்பத்தக்க மெல்லிய காற்று.

௪௫. குலவும் துறை - விளங்கும் பல துறைகளில் வல்ல. எறிபத்த : எ. குறிப்புப் பார்க்க.

௪௬. நுதலின்...பதம் - நெற்றியிற் கண்ணுடைய சிவபிரானது சத்தியம் விளங்கும் அருள் நூல்களின் வழி. பவங்கள் - பாவங்கள்; பிறவிகள். வேணி- சடை. "மும்மையினால் - மூன்றால் (விபூதி, உருத்திராக்கம், சடை). "மும்மையால் உலகாண்ட மூர்த்திக்கும் அடியேன்"—திருத்தொண்டத்தொகை : ௩.

௪௭. ஏலம் கமழ்கோதையர் - மயிர்ச்சாந்து கமழ்கின்ற கூந்தலை யுடைய பெண்கள். தெவ்வுடன் - பகைவர்களுடன். வெம்புலன்களைத் தெவ்வுடன் என்றும், வெம்புலன்களாகிய தெவ்வுடன் என்றும் கொள்ளலாம். நேமி-ஆஞ்ஞா சக்கரத்தை. விபூதி, உருத்திராக்கம், சடைமுடி இம்மூன்றும் ஜீவகாருண்யத்துக்கு அறிகுறிகளாதலான், "உயிர்கட்கு இடரான கடிந்துகாத்து" என்றார். விபூதி மனத் தூய்மைக்கும், உருத்திராக்கம் கண்ணோட்டத்துக்கும், சடைமுடி அபேத மென்னும் ஞானத்துக்கும் அறிகுறிகள். இவ்வியல்களின்றி வெறும் வேடத்திற்காக விபூதி உருத்திராக்கம் சடை முதலியவற்றைத் தரிப்பதால் பயனில்லை. மூர்த்தி நாயனார் புற வேடத்தின் வழி அகத்திலும் நின்றார் என்பது "உயிர்கட்கு இடரான கடிந்து காத்து" என்பதால் விளங்குகிறது. "வேடநெறி நில்லார் வேடம்பூண் டென்பயன் - வேடநெறி நிற்பார் வேடம் மெய்வேடம்"—திருமந்திரம் : இராசதோடம். ௩.

பாதம்*பர மன்னவர் சூழ்ந்து பணிந்து போற்ற
ஏதம்பிணி யாவகை இவ்வுல காண்டு தொண்டின்
பேதம்புரி யாஅருட் பேரர சாளப் பெற்று
நாதன்கழற் சேவடி நண்ணினர் அண்ண லாரே. ௪௦

அகல்பா றையின்வைத்து முழங்கையை அன்று தேய்த்த
இகலார்களிற் றன்பரை ஏத்தி முருக னாரம்
முகில்சூழ் நறுஞ்சோலையின் மொய்யொளி மாட வீதிப்
புகலூர்வரும் அந்தணர் தந்திறம் போற்ற லுற்றாம். ௪௧

ஆக திருவிருத்தம் - ௧,0௨௧.

---

பாண்டி நாட்டிலே மதுரைமா நகரிலே வணிகர் குலத்திலே மூர்த்தி நாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் சிவபத்தியிற் சிறந்தவர்; அன்பையே திருவுருவாக்கொண்டவர்.

அப்பெரியார், சொக்கலிங்கப் பெருமானுக்குச் சந்தனக் காப்பணிவதைத் தமக்குரிய திருத்தொண்டாகக்கொண்டு வாழ்ந்து வந்தார். வருநாளில், வடுகக் கருநாடக மன்னன் ஒருவன், தென்னாடு போந்து, பாண்டியனைவென்று, மதுரைக்கு அதிபதியானான். அவன், சமண சமயத்தைத் தழுவித் திருநீறணியுஞ் சிவனடியார்களுக்குத் தீங்கிழைத்து வந்தான். அவன் தீங்கிடை மூர்த்தி நாயனாரது திருத்தொண்டும் நிகழ்ந்து வந்தது.

கருநாடக மன்னன், மூர்த்தியாருக்குப் பல இடையூறுகள் புரியத் தொடங்கினான். புரிந்தும், மூர்த்தியார் தந்திருத்தொண்டினின்றும் வழுவினாரில்லை. அது கண்ட மன்னன், நாயனார் சந்தனக் கட்டைகளைப் பெறாதவாறு எவ்வெத் தடைகளைச் செய்ய வேண்டுமோ, அவ்வத் தடைகளைச் செய்தான். நாயனார் மனம் வருந்தலாயிற்று. வருந்த மேலிட்டான் நாயனார் "இக்கொடுங் கோலன் என்றே மாய்வான்? இந்நாடு திருநீற்று நெறியினைத் தாங்கும் வேந்தனை என்றே பெறும்?" என்று எண்ணி எண்ணிச் சந்தனக் கட்டையைத் தேடிப் பகல் முழுவதுந் திரிந்தார். சந்தனக் கட்டை எங்குங் கிடைக்கவில்லை. மூர்த்தியார் என் செய்வார்! அவர் திருக்கோயிலுட் புகுந்து "இன்று சந்தனக் கட்டைக்கு முட்டு நேர்ந்தால் என்ன? அதைத் தேய்க்கும் என் கைக்கு எவ்வித முட்டும் நேரவில்லை" என்று கருதி ஒரு சந்தனக் கல்லின்மீது தமது முழங்கையை வைத்துத் தேய்த்தார். இரத்தம் வெள்ளம் போல் பெருகிப் பாய்ந்தது; எலும்பு வெளிப்பட்டது; என்புத் துவாரங்கள் திறந்தன; மூளை ஒழுகியது. அதைக் கண்டு பொறாத ஆண்டவன் அருளால், "ஐயனே! மெய்யன்பின் துணிவால் இதைச் செய்யாதே. இராச்சிய மெல்லாம் நீயே கைக்கொண்டு, கொடுங்கோலனால் விளைந்த தீமைகளை ஒழித்து, உன் திருப்பணியைச் செய்து நமது சிவலோகத்தை அடைவாயாக" என்று ஒரு வானொலி எழுந்தது. எழுந்ததும், நாயனார் நடுக்குற்றுக் கையைத் தேய்த்தலை நிறுத்தினார். அவரது கை ஊறு நீங்கிப் பழையபடியாயிற்று.

---

௪௦. பரமன்னவர் - வேற்றரசர்கள். ஏதம் பிணியாவகை - துன்பம் பீடியா வண்ணம். தொண்டு பேதியாத. இன் - சரியை.

௪௧. இகல்ஆர் களிற்று அன்பரை - போர்க்குணம் நிறைந்த யானைமீது சென்ற மூர்த்தியாரை.

பா - ம்—*பல.

மூர்த்தியார் "இறைவன் திருவருள் கூரப்பின், இவ்வையத்தை நான் தாங்குவேன்" என்று நினைந்து, திருக்கோயிற் புறத்தில் நின்றார். அன்றிரவே அக்கொடிய மன்னன் இறந்துபட்டான். அடுத்தநாட் காலையில் அவனுக்குத் தகன கிரியைகள் செய்யப்பட்டன. அவனுக்குப் புதல்வர்கள் முதலிய அரசுரிமைத் தாயத்தாரெவருமின்மையால் "எவரை அரசராக்குவது?" என்று அமைச்சர்கள் ஆலோசித்து முடிவாக, ஒரு யானையைக் கண்கட்டி விடுதல் வேண்டுமென்றும், அஃது எவரை எடுத்துக்கொண்டு வருகிறதோ, அவரே அரசராதல் வேண்டுமென்றுந் தீர்மானித்தார்கள். அவர்கள் தீர்மானித்தவாறே, ஒரு யானையை முறைப்படி அருச்சித்து, ஓர் ஏந்தலை எடுத்து வருமாறு பணித்துத், துகிலால் அதன் கண்ணைக்கட்டி விட்டார்கள். யானை தெருக்களிலே திரிந்து, மூர்த்தி நாயனார் முன்னேபோய்த் தாழ்ந்து, அவரை எடுத்துப்பிடரியில் வைத்தது. அமைச்சர்கள் மூர்த்தி நாயனாரை அரசராகக்கொண்டு அவர் திருவடியில் விழுந்து வணங்கி அவரை முடிசூட்டு மண்டபத்திற்கு அழைத்துச் சென்று சிங்காசனத்தில் வீற்றிருக்கச் செய்தார்கள்.

முடி சூட்டற்குரிய மங்கல கிரியைகள் தொடங்கப்பட்டன. அப்போது நாயனார், மந்திரிகளை நோக்கி, "சமணம் அழிந்து சைவம் ஓங்கினால் யான் அரசாட்சியை ஏற்றல்கூடும்" என்றார். அதற்கு எல்லாரும் இசைந்தனர். பின்னும் நாயனார், "எனக்குத் திருநீறு அபிடேகப் பொருளாகவும், கண்டிகை கலன்களாகவும், சடைமுடி முடியாகவும் இருத்தல்வேண்டும்" என்று கூறினார். அதற்கும் அமைச்சர் முதலாயினோர் உடன்பட்டனர். அம்முறையில் முடி சூட்டுவிழா நன்கு நடைபெற்றது. நாயனார் திருக்கோயிலுக்குப் போய்ச் சொக்கநாதரைத் தொழுது யானைமீது ஏறி அரண்மனை சேர்ந்தார்.

மூர்த்தி நாயனார், பிரம சரியத்தில் உறுதிகொண்டு, திருநீறு, கண்டிகை, சடைமுடி ஆகிய மூன்றையும் அணிந்து, சைவம் ஓங்கப் பன்னெடுநாள் ஆட்சி புரிந்து, சிவபெருமான் திருவடி நீழலை அடைந்தார்.

---

# முருக நாயனார் புராணம்

---

தாது சூழும் குழல்*மலையாள் தளிர்க்கை சூழும் திருமேனி
மீது சூழும் புனற்கற்றை வேணி நம்பர் விரும்புபதி
சோதி சூழும் மணிமௌலிச் சோழர் பொன்னித் திருநாட்டுப்
போது சூழும் தடஞ்சோலைப் பொய்கை சூழும் பூம்புகலூர். க

நாம மூதூர் மற்றதனுள் நல்லோர் மனம்போல் அவரணிந்த
சேம நிலவு திருநீற்றின் சிறந்த வெண்மைத் திருந்தொளியால்

---

க. தாது-பூந்தாதுகள். குழல்...நம்பர்-கூந்தலையுடைய பார்வதிதேவியார் தளிர்போன்ற கையால் தழுவும் திருமேனியையும், திருமுடிமீது சூழும் கங்கை தங்கிய கற்றைச்சடையையும் உடைய சிவபெருமான். மௌலி-முடி. பொன்னி-காவிரி. போது - மலர்கள். "பூம்புகலூர் மேவிய புண்ணியனே"—**அப்பர்.**

உ. நாமம் - புகழையுடைய. அவர் - அந்நல்லோர். சேமம் நிலவும் - நலம் விளங்கும். **திருக்கூட்டச்சிறப்பு** : ௬. பார்க்க. காமர்—**கண்ணப்ப நாயனார் புராணம்** : கசு - குறிப்புப் பார்க்க.

**பா - ம்**—*மடவாள்.

யாம இருளும் வெளியாக்கும் இரவே அல்ல விரைமலர்மேல்
காமர் மதுவுண் சிறைவண்டும் களங்கம் இன்றி விளங்குமால். ௨

நண்ணும் இசைதேர் மதுகரங்கள் நனைமென் சினையின் மருங்கலைய
வண்ண மதுரத் தேன்பொழிவ வாச மலர்வா யேயல்ல
தண்ணென் சோலை எம்மருங்கும் சாரும் மடமென் சாரிகையின்
பண்ணின் கிளவி மணிவாயும் பதிகச் செழுந்தேன் பொழியுமால். ௩

வண்டு பாடப் புனல்தடத்து மலர்ந்து கண்ணீர் அரும்புவன
கொண்ட வாச முகைஅவிழ்ந்த குளிர்பங் கயங்க ளேயல்ல
அண்டர் பெருமான் திருப்பாட்டின் அமுதம் பெருகச் செவிமடுக்கும்
தொண்டர் வதன பங்கயமும் துளித்த கண்ணீர் அரும்புமால். ௪

ஆன பெருமை வளஞ்சிறந்த அந்தண் புகலூர் அதுதன்னில்
மான மறையோர் குலமரபின் வந்தார் முந்தை மறைமுதல்வர்
ஞான வரம்பின் தலைநின்றார் நாகம் புனைவார் சேவடிக்கீழ்
ஊனம் இன்றி நிறைஅன்பால் உருகும் மனத்தார் முருகனார். ௫

அடைமேல் அலவன் துயிலுணர அலர்செங் கமல வயற்கயல்கள்
மடைமேல் உகளும் திருப்புகலூர் மன்னி வாழுந் தன்மையராய்
விடைமேல் வருவார்க் காளான மெய்ம்மைத் தவத்தால் அவர்கற்றைச்
சடைமேல் அணியத் திருப்பள்ளித் தாமம் பறித்துச் சாத்துவார். ௬

புலரும் பொழுதின் முன்னெழுந்து புனித †நீரில் மூழ்கிப்போய்
மலருஞ் செவ்வித் தம்பெருமான் முடிமேல் வான்நீர் ஆறுமதி

---

௩. தேர் மதுகரங்கள் - பாடும் வண்டுகள். நனைமென் சினையின் மருங்கு-அரும்பு பொருந்திய மெல்லிய கிளைகளின் பக்கங்களில். வண்ணம் - நிறம்; அழகு. மடமென் சாரிகையின்-அழகிய மெல்லிய நாகணவாய்ப் பறவைகளின். பண்ணின் கிளவி - பண்அனைய சொல்லையுடைய. பதிகம் - தேவாரப் பதிகமாகிய.

௪. தடத்து - தடாகங்களில். கண்ணீர் - கள்நீர்; தேனாகிய நீர். முகை - அரும்பு. பங்கயங்களே - தாமரை மலர்களே. செவிமடுக்கும் - செவியால் பருகும்; கேட்கும். வதனம் - முகமாகிய. கண்ணீர் - கண்நீர்.

௫. மானம் - மேன்மை யுடைய. நாகம் புனைவார் - பாம்பை யணிந்த சிவபெருமான்.

௬. அடைமேல் - தாமரை இலைமீது. அலவன் - நண்டுகள். துயில் உணர-உறக்கத்தினின்றும் எழ. கயல்மீன்கள். உகளும் - பாயும். திருப்பள்ளித்தாமம்—எறிபத்தநாயனார் புராணம்: ௧. குறிப்புப் பார்க்க.

௭. மலரும் செவ்வி - மலர்ந்த அழகிய. வான்நீர் ஆறு மதி - ஆகாயகங்கையும் சந்திரனும். முருகு உயிர்க்க - வாசனை வீச. நகைக்கும் பதத்தினுடன் - மலரும் பருவத்துடன். அலகில் - அளவில்லாத.

பா - ம்—*பொழுது. †நன்னீர்.

உலவு மருங்கு முருகுயிர்க்க, நகைக்கும் பதத்தின் உடன்பறித்த
அலகில் மலர்கள் வெவ்வேறு திருப்பூங் கூடை களிலமைப்பார். எ

கோட்டு மலரும் நிலமலரும் குளிர்நீர் மலரும் கொழுங்கொடியின்
தோட்டு மலரும் மாமலரும் சுருதி மலருந் திருவாயில்
காட்டு முறுவல் நிலவலரக் கனக வரையின் பன்னகநாண்
பூட்டும் ஒருவர் திருமுடிமேல் புனைய லாகும் மலர்தெரிந்து. அ

கொண்டு வந்து தனியிடத்தின் இருந்து கோக்கும் கோவைகளும்
இண்டைச் சுருக்கும் தாமமுடன் இணைக்கும் வாச மாலைகளும்
தண்டில் கட்டும் கண்ணிகளும் தாளிற் பிணைக்கும் பிணையல்களும்
நுண்டா திறைக்கும் †தொடையல்களும் சமைத்து நடங்கு நூன்மார்பர்.

ஆங்கப் பணிக ளானவற்றுக் கமைத்த காலங் களின்அமைத்துத்
தாங்கிக் கொடுசென் றன்பினொடுஞ் சாத்தி வாய்ந்த அர்ச்சனைகள்
பாங்கிற் புரிந்து பரிந்துள்ளார் பரமர் ‡பதிகப் பற்றான
ஓங்கிச் §சிறந்த அஞ்செழுத்தும் ஓவா நாவின் உணர்வினார். ௧௦

தள்ளும் முறைமை ஒழிந்திடஇத் தகுதி ஒழுகும் மறையவர்தாம்
தெள்ளு மறைகள் முதலான ஞானஞ் செம்பொன் வள்ளத்தில்
அள்ளி அகிலம் ஈன்றளித்த அம்மை முலைப்பால் உடனுண்ட
பிள்ளை யார்க்கு நண்பருமாம் பெருமை யுடையா ராயினார். ௧௧

---

அ. தோட்டு - இதழுடைய. மாமலரும் - பெருமை பொருந்திய மலர்களுள்ளும். கோட்டுப்பூ, நிலப்பூ, நீர்ப்பூ, கொடிப்பூ ஆகிய இவைகளுள். சுருதி - வேதம். புன்முறுவல் நிலவு. கனகவரையில் பன்னக நாண் - மேருமலையாகிய வில்லில் பாம்பாகிய (ஆதிசேடனாகிய) நாணை. ஒருவர் - சிவபெருமான்.

௯. தாமம் - மலர்; மாலையுமாம். தண்டில் - தண்டைப்போல்; வாழை நார்த்தண்டில் எனினுமாம். தாளில் - காம்புகளில். நுண்தாது - நுண்ணிய மகரந்தங்கள். கோவை - மலர்களால் கோக்கப்படும் மாலை. இண்டை - சுருக்கிக் கோக்கப்படும் மாலை; சுருக்கு மாலை. தாமம், கண்ணி, பிணையல்—நடுத்தாட் கொண்ட புராணம்: ௧அ. குறிப்புப் பார்க்க. தொடையல்களும் - முதலிய மாலைகளும்; கோக்கப்பட்ட மாலைகளும் என்னலுமாம். நடங்கும் - அசையும்.

௧௦. பாங்கில் - உரிமையுடன்; முறைமையுடன் எனினுமாம். சிவபிரானுக்கினிய தேவாரப் பதிகங்களின் பற்றான. ஓவா - நீங்காமல். "நற்றவா உனை நான் மறக்கினுஞ் சொல்லுநா நமச்சிவாயவே"—சுந்தரர்: கொடுமுடி. ௧.

௧௧. விதிமுறை விலக்குமுறை என்னும் இரண்டில் விலக்கு முறைகள் போக. மறையவர் தாம் - முருகநாயனார். தெள்ளும் - தெளிந்த. ஞானம் - ஞானத்தை. வள்ளத்தில் - கிண்ணத்தில். பிள்ளையார்க்கு - ஞானசம்பந்தப் பெருமானுக்கு.

பா - ம்—*திருப்பூக்கூடை. †தொங்கல்களும். ‡பத்தர். §செறிந்த.

அன்ன வடிவும் ஏனமுமாய் *அறிவான் இருவர் †அறியாமல்
மன்னும் புகலூர் உறைவாரை வர்த்த மான வீச்சுரத்து
நன்னர் மகிழ்ச்சி மனங்கொள்ள நாளும் பூசை வழுவாமே
பன்னும் பெருமை அஞ்செழுத்தும் பயின்றே பணிந்து பரவினார். ௧௨

அங்கண் அமருந் திருமுருகர் அழகார் புகலிப் பிள்ளையார்
பொங்கு மணத்தின் முன்செய்த பூசை அதனால் புக்கருளிச்
செங்கண் அடலே றுடையவர்தாஞ் சிறந்த அருளின் பொருள்அளிக்கத்
தங்கள் பெருமான் அடிநீழல் தலையாம் நிலைமை சார்வுற்றார். ௧௩

அரவம் அணிந்த அரையாரை அருச்சித் தவர்தங் கழல்நிழற்கீழ்
விரவு புகலூர் முருகனார் மெய்ம்மைத் தொண்டின் திறம்போற்றிக்
கரவி லவர்பால் வருவாரைக் கருத்தில் உருத்தி ரங்கொண்டு
பரவும் அன்பர் பசுபதியார் பணிந்த பெருமை ‡பகர்வுற்றேன். ௧௪

ஆக திருவிருத்தம் - ௧,0௩௫.

---

முருக நாயனார் சோழ நாட்டிலே திருப்புகலூரிலே வேதியர் குலத்திலே தோன்றியவர். அவர் சிவபத்தியிலும் அடியார் பத்தியிலுஞ் சிறந்தவர். அவர் நாள் தோறும் வைகறை எழுவார்; காலைக் கடன்களை முடித்துக் கொள்வார்; நீராடுவார்; திருநந்தனவனம் புகுவார்; கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ என்னும் நால்வகைப் பூக்களைக் கொய்வார்; அப்பூக்களால் இண்டை, தாமம், கண்ணி, பிணையல் முதலிய மாலைகள் கட்டுவார்; அம்மாலைகளைச் சிவபிரானுக்குச் சூட்டுவார்; நெஞ்சங் குழைந்து குழைந்து உருகுவார்; அஞ்செழுத்து ஓதுவார். இம்முறையில் திருத்தொண்டு செய்து வந்த முருக நாயனார், திருஞான சம்பந்த சுவாமிகளுக்கு நண்பராகி, அச்சுவாமிகளின் திருமணச் சிறப்பிற் கலந்து சிவபிரான் திருவடிநீழலை அடைந்தார்.

---

௧௨. ஏனமுமாய் - பன்றியுமாய். அறிவான் இருவர் - அறியும் பொருட்டு முயன்ற பிரமவிட்டுணுக்களாகிய இருவர். உறைவாரை - எழுந்தருளியுள்ள சிவபெருமானை. வர்த்தமான ஈச்சுரம் - திருப்புகலூர்த் திருக்கோயிலின் பெயர். நன்னர் - நல்ல. பன்னும் - செபித்தற்குரிய. பயின்றே - ஓதி ஓதி.

௧௩. புகலிப்பிள்ளையார் - சீகாழித் திருஞானசம்பந்த சுவாமிகளின். செங்கண் அடல் ஏறு உடையவர் - சிவபெருமான். அருளாகிய இனிய பொருள்.

௧௪. அரவம் அணிந்த அரையாரை-சிவபெருமானை. விரவு-கலந்த. கரவிலவர் பால் வருவாரை - வஞ்சனையில்லாதவரிடம் காட்சியளிக்குஞ் சிவபரம் பொருளை. "கரவாடும் வன்னெஞ்சர்க்கரியானை"—அப்பர்.

பா - ம்—*அறிவார். †அறியாமே. ‡பரவுற்றேன்.

# உருத்திரபசுபதி நாயனார் புராணம்

நிலத்தின் ஓங்கிய நிவந்தெழும் பெரும்புனல் நீத்தம்
மலர்த்த டம்*பணை வயல்புகு பொன்னிநன் னாட்டுக்
குலத்தின் ஓங்கிய குறைவிலா நிறைகுடி குழுமித்
தலத்தின் மேம்படு †நலத்தது பெருந்திருத் தலையூர். ௧

வான ளிப்பன மறையவர் வேள்வியின் வளர்தீ
தேன ளிப்பன நறுமலர் செறிசெழுஞ் சோலை
ஆன ளிப்பன அஞ்சுகந் தாடுவார்க் கவ்வூர்
தான ளிப்பன தருமமும் நீதியும் சால்பும். ௨

அங்கண் மாநக ரதனிடை அருமறை வாய்மைத்
துங்க வேதியர் குலத்தினில் தோன்றிய தூயோர்
செங்கண் மால்விடை யார்செழும் பொன்மலை வல்லி
பங்க னாரடி மைத்திறம் புரிபசு பதியார். ௩

ஆய அந்தணர் அருமறை உருத்திரம் கொண்டு
மாய னாறி யாமலர்ச் சேவடி வழுத்தும்
தூய அன்போடு தொடர்பினில் இடையறாச் சுருதி
நேய ‡நெஞ்சின ராகிஅத் தொழில்தலை நின்றார். ௪

கரையில் கம்பலை புள்ளொலி கறங்கிட மருங்கு
பிரச மென்சுரும் பறைந்திடக் §கருவரால் பிறழும்
¶நிரைநெ டுங்கயல் நீரிடை நெருப்பெழுந் தனைய
விரைநெ கிழ்ந்தசெங் கமலமென் பொய்கையுள் மேவி. ௫

---

௧. நிவந்து - பரந்து. புனல் நீத்தம் - நீர்வெள்ளம். தடம்பணைவயல் - மிகவும் அகன்றவயல்களில். பொன்னி - காவிரி; (சோழநாட்டிலே). குழுமி - நெருங்கி.

௨. வளர்தீவான்(மழையை) அளிப்பன. அஞ்சு உகந்து ஆடுவார்க்கு - பஞ்ச கவ்வியத்தை விரும்பி ஆடுஞ் சிவபிரானுக்கு. (அவ்வைந்தையும்) ஆன் அளிப்பன. சால்பும் - அமைதியும்.

௩. அம்கண் - அழகிய இடத்தையுடைய. வாய்மையால் உயர்ந்த வேதியர். இமயக் கொடியாகிய பார்வதி பாகர். புரி - விரும்பும்.

௫. கம்பு அலைகரையில் புள்ஒலி கறங்கிட - சங்குகள் அலையும் கரையிலே பறவை யொலிகள் முழங்க. மருங்கு பிரச மென்சுரும்பு அறைந்திட - பக்கத்தே மெல்லிய தேன் வண்டுகள் ஒலிக்க. வரால் மீன்கள் பிறழும். நிரை - வரிசையாக. கயல் மீன்கள் பாயும் நீரிடை. விரை - வாசனை.

**பா - ம்—*புனை. †தகையது. ‡நெஞ்சினராகிய தொழில். §பெரு. ¶நிறைநெ டுங்கய நீரிடை.**

தெள்ளு தண்புனல் கழுத்தள வாயிடைச் செறிய
உள்ளு றப்புக்கு நின்றுகை உச்சிமேற் குவித்துத்
தள்ளு வெண்டிரைக் கங்கைநீர் ததும்பிய சடையார்
கொள்ளும் அன்பினில் உருத்திரங் குறிப்பொடு பயின்றார். சு

அரும றைப்பய னாகிய உருத்திரம் அதனை
வருமு றைப்பெரும் பகலும்எல் லியும்வழு வாமே
திரும லர்ப்பொகுட் டிருந்தவன் அனையவர் சிலநாள்
ஒருமை உய்த்திட உமைஇடம் மகிழ்ந்தவர் உவந்தார். எ

காதல் அன்பர்தம் அருந்தவப் பெருமையும் கலந்த
வேத மந்திர நியதியின் மிகுதியும் விரும்பி
ஆதி நாயகர் அமர்ந்தருள் செய்யமற் றவர்தாம்
நீதி லாநிலைச் சிவபுரி எல்லையிற் †சேர்ந்தார். அ

நீடும் அன்பினில் உருத்திரம் ஓதிய நிலையால்
ஆடு சேவடி அருகுற அணைந்தனர் அவர்க்குப்
பாடு பெற்றசீர் உருத்திர பசுபதி யாராம்
கூடு நாமமும் நிகழ்ந்தது குவலயம் போற்ற. கூ

அயில்கொள் முக்குடு மிப்படை யார்மருங் கருளால்
பயில்உ ருத்திர பசுபதி யார்திறம் பரசி
எயிலு டைத்தில்லை எல்லையில் நாளைப்போ வாராம்
செயலு டைப்புறத் திருத்தொண்டர் திறத்தினை மொழிவாம். கo

ஆக திருவிருத்தம் - க,0சரு.

---

சோழ நாட்டுப் பதிகளில் திருத்தலை என்னும் பதியும் ஒன்று. அப்பதியில் அந்தணர் குலத்தில் தோன்றியவர் பசுபதி என்பவர். அப்பெரியார் தாமரைத் தடாகத்துட் சென்று கழுத்தளவு நீரிலே நின்று ஸ்ரீருத்திரத்தை ஓதுவார். இஃது அவர்தந் திருத்தொண்டு. அவர் இத்திருத்தொண்டில் ஈடுபட்டுச் சின்னாள் வாழ்ந்து சிவபதஞ் சேர்ந்தார். உருத்திர மந்திரத்தை ஓதிய படியால், அவர் உருத்திர பசுபதி நாயனார் என்னுந் திருநாமத்தைப் பெற்றார்.

---

எ. எல்லியும் - இரவும். திருமலர்ப் பொகுட்டு இருந்தவன் - பிரமன். ஒருமை உய்த்திட - ஒருமைப்பாட்டிற் பொருந்த. இடம் - இடப்பக்கம்.

அ. அமர்ந்து - உள்ளத்திருந்து. கூ. பாடு - பெருமை.

கo. கூர்மை பொருந்திய முத்தலைச் சூலத்தையுடைய சிவபிரான். பரசி - போற்றி. எயில் - மதில்.

பா - ம்—*மகிழ்ந்தருள் ; அறிந்தருள். †சென்றார்.

# திருநாளைப்போவார் நாயனார் புராணம்

பகர்ந்துலகு சீர்போற்றும் பழையவளம் பதியாகும்
திகழ்ந்தபுனற் கொள்ளிடம்பொன் செழுமணிகள் திரைக்கரத்தால்
முகந்துதர இருமருங்கும் முளரிமலர்க் கையேற்கும்
அகன்பணைநீர் நன்னாட்டு மேற்கானாட் டாதனூர். க

நீற்றலர்பே ரொளிநெருங்கும் அப்பதியின் நிறைகரும்பின்
சாற்றலைவன் குலைவயலில் தகட்டுவரால் எழப்பகட்டேர்
ஆற்றலவன் கொழுக்கிழித்த சால்வழிபோய் அசைந்தேறிச்
சேற்றலவன் கருவுயிர்க்க முருகுயிர்க்குஞ் செழுங்கமலம். உ

நனைமருவுஞ் சினைபொதுளி நறுவிரைசூழ் செறிதளிரில்
தினகரமண் டலம்வருடுஞ் செழுந்தருவின் குலம்பெருகிக்
கனமருவி *அசைந்தலையக் களிவண்டு புடைசூழப்
புனல்மழையோ மதுமழையோ பொழிவொழியா பூஞ்சோலை. ங

பாளைவிரி மணங்கமழும் பைங்காய்வன் குலைத்தெங்கின்
தாளதிர மிசைமுட்டித் தடங்கிடங்கின் எழப்பாய்ந்த
வாளைபுதை யச்சொரிந்த பழம்மிதப்ப வண்பலவின்
நீளமுதிர் கனிகிழிதேன் நீத்தத்தில் எழுந்துகளும். ச

---

க. புனல் கொள்ளிடம் - நீர் கொள் இடம் ; காவிரியினின்றும் நீர்கொள் இடம் ; கொள்ளிட நதி ; காவிரியினின்றும் நீரைக் கொண்டு பிரிந்தமையான் "புனல் கொள்ளிடம்" என்றார். திரைக்கரத்தால் - அலையாகிய கைகளால். முகந்து - அள்ளி ; வாரி. இருமருங்கும்-இருபுறமும். முளரி மலர்க்கை - தாமரைகள் தங்கள் மலர்களாகிய கைகளால். அகன்பணை நீர் நன்னாட்டு - அகன்ற வயல்கள் நிறைந்த சோழவளநாட்டில்.

உ. நீறுஅலர் - விபூதியின் பரந்த. சாறு அலை வன் குலை - சாற்றால் அலைகின்ற வலிய கதிர்க்குலைகளை யுடைய; குலை - வரம்புமாம். பகடு ஏர் ஆறு அலம்-எருமைகள் பூட்டிய ஏர்போகும் வழியில் கலப்பையின். வன்கொழு - வலிய காறு. சால் - படைச்சாலின். சேறு அலவன் - சேற்றிலே நண்டுகள். கருவுயிர்க்க - கரு ஈன. முருகுயிர்க்கும் - தேனைச் சொரியும்.

ங. நனை...தளிரில் - அரும்புகள் விளங்கும் கிளைகள் தழைத்து நறுமணங் கமழும் நெருங்கிய தளிரால். தினகர...பெருகி - சூரிய மண்டலத்தைத் தடவும் செழிய மரக் கூட்டங்கள் பெருகி. கனம் மருவி - மேகங்கள் அணைந்து. புடை - பக்கம். அலைதலாலும் சூழ்தலாலும். பூஞ்சோலை பொழிவொழியா.

ச. பைங்காய் வன் குலை-பசிய காய்களை யுடைய வலிய குலைகள் பொருந்திய. மிசை - அத்தெங்கின்மீது. தடங் கிடங்கின் - விசாலமாகிய குளத்தி

பா - ம்—*இருந்தசையக்.

வயல்வளமுஞ் செயல்படுபைந் துடவையிடை வருவளமும்
வியலிடமெங் கனும்நிறைய மிக்கபெருந் திருவினவாம்
*புயலடையும் மாடங்கள் பொலிவெய்த மலிவுடைத்தாய்
அயலிடைவே றடிநெருங்கக் குடிநெருங்கி உளதவ்வூர். ௫

மற்றவ்வூர்ப் புறம்பணையின் வயன்மருங்கு பெருங்குலையில்
சுற்றம்விரும் பியகிழமைத் தொழில்உழவர் கிளைதுவன்றிப்
பற்றியபைங் கொடிச்சுரைமேற் படர்ந்தபழங் கூரையுடைப்
புற்குரம்பைச் சிற்றில்பல †நிறைந்துளதோர் புலைப்பாடி. ௬

கூருகிர்மெல் லடியளகின் குறும்பார்ப்புக் குழுச்சுழலும்
வார்பயின்முன் றிலில்நின்ற வள்ளுகிர்நாய்த் துள்ளுபறழ்
காரிரும்பின் சரிசெறிகைக் கருஞ்சிறார் கவர்ந்தோட
ஆர்சிறுமென் குரைப்படக்கும் அரைக்கசைத்த இருப்புமணி. ௭

வன்சிறுதோல் மிசையுழத்தி மகவுறக்கு நிழல்மருதும்
தன்சினைமென் பெடையொடுங்குந் தடங்குழிசிப் புதைநீழல்

---

னின்றும். வாளை புதைய - வாளை மீன்கள் புதையும்படி. பழம் - தென்னம் பழங்கள். வண்...நீத்தத்தில் - வளமையுடைய பலாமரத்தின் நீண்டு முதிர்ந்த பழங்கள் வெடித்துச் சொரியும் தேன் பெருக்கில். எழுந்து உகளும் - பாய்ந்து குதிக்கும். முட்டிப் பாய்ந்த வாளை எழுந்து உகளும் என்று இயையும். நீத்தத்தில் மிதப்ப எழுந்து உகளும் எனக் கூட்டிக்கொள்ளலுமாம்.

௫. துடவையிடை - தோட்டங்களிலிருந்து. வியல் - விசாலமான. அயலிடை வேறு அடி - பக்கங்களில் ஓரடி இடைவிட்டு.

௬. அவ்வூர்......குலையில் - அவ்வாதனூரில் மருதநிலத்தைச் சேர்ந்தவயற் பக்கங்களிலுள்ள பெரிய கரைகளில். பெருங் குலையில் சுற்றம் - பெருங் கூட்டமாகிய சுற்றத்தார் எனினுமாம். கிழமை - உரிமை. கிளைதுவன்றி - கூட்டம் நிரம்பி. புற்குரம்பை - புற் குடிசைகளாகிய.

௭. கூர் உகிர் மெல்லடி அளகின் - கூரிய நகங்கள் பொருந்திய மெல்லிய அடியையுடைய கோழிப் பெடையின். குறும் பார்ப்பு குழு சுழலும் - சிறிய குஞ்சுகளின் கூட்டங்கள் சுழலும். வார் பயில் முன்றிலில் நின்ற - வார்கள் நெருங்கியுள்ள முற்றத்தில் நின்ற. வள் உகிர் நாய் துள்ளு பறழ் - நெருங்கிய நகங்களையுடைய நாய்களின் துள்ளு குட்டிகளை. (வள் என்பதற்குக் கூரிய, பெரிய என்றுங் கூறலாம்). கார் இரும்பின் சரி செறி கை - கரிய இருப்புக் காப்புகள் நெருங்கிய கையை யுடைய. ஆர் சிறு மென்குரைப்பு-அந்நாய்க்குட்டிகளின் நுண்ணிய சிறிய மெல்லிய குரைப்பை. சிறுவர்களின் அரையிற் கட்டிய இருப்பு மணிச் சதங்கை குரைப்பை அடக்கும்.

௮. உழத்தி - உழவுப் பெண்கள்; பள்ளப் பெண்கள். மருதும் - மருத மரங்களும். தன்...வஞ்சிகளும் - தன்னுடைய முட்டைகளுடன் மென்மை

பா - ம்—*புயலிடையும். †நிலைத்துளதோர்.

மென்சினைய வஞ்சிகளும் விசிப்பறைதூங் கினமாவும்
புன்தலைநாய்ப் புனிற்றுமுழைப் புடைத்தெங்கும் உடைத்தெங்கும். ௮

செறிவலித்திண் கடைஞர்வினைச் செயல்புரிவை கறையாமக்
குறியளக்க உளைக்குஞ்செங் குடுமிவா ரணச்சேக்கை
வெறிமலர்த்†திண் சினைக்காஞ்சி விரிநீழல் மருங்கெல்லாம்
நெறிகுழற்புன் புலைமகளிர் நெற்குறுபாட் டொலிபரக்கும். ௯

புள்ளுந்தண் புனற்கலிக்கும் பொய்கையுடைப் புடைஎங்கும்
தள்ளுந்தாள் நடையசையத் தளையவிழ்பூங் குவளைமது
விள்ளும்பைங் குழற்கதிர்நெல் மிலைச்சியபுன் புலைச்சியர்கள்
கள்ளுண்டு களிதூங்கக் கறங்குபறை யுங்கலிக்கும். ௧௦

இப்படித்தா கியகடைஞர் இருப்பின்வரைப் பினின்வாழ்வார்
மெய்ப்பரிவு சிவன்கழற்கே விளைத்தஉணர் வோடும்வந்தார்
அப்பதியில் ஊர்ப்புலைமை ஆன்றதொழில் தாயத்தார்
‡ஒப்பிலவர் நந்தனர் எனஒருவர் உளரானர். ௧௧

பிறந்துணர்வு தொடங்கியபின் பிறைக்கண்ணிப் பெருந்தகைபால்
சிறந்தபெருங் காதலினல் செம்மைபுரி சிந்தையராய்

---

யான கோழிப் பெடைகள் அடைகாக்கும் பெரிய பானைகள் புதைக்கப்பட்டிருக்கும் நிழலையுடைய மெல்லிய கிளைகளைத் தாங்கிய வஞ்சி மரங்களும். விசி... மாவும் - வார்க்கட்டினையுடைய பறைகளைத் தூக்கியுள்ள மாமரங்களும். புன்... தெங்கும் - சிறிய தலையையுடைய நாய்க் குட்டிகளுள்ள பள்ளங்களைப் பக்கங்களிலே கொண்டிருக்கிற தென்ன மரங்களும். நாய்ப் புனிறு என்பதற்கு நாய்கள் குட்டிபோட்டிருக்கும் என்னலுமொன்று.

௯. செறி...உளைக்கும் - திரண்ட வலிமையுடைய திண்ணிய உழவர்கள் தங்கள் தொழிலில் தலைப்படும் விடியற்காலக் குறிப்பை அளக்கக் கூவுகின்ற, (அளத்தல் - வரையறுத்தல்). செங்...காஞ்சி - சிவந்த கொண்டை பொருந்திய சேவலின் இருப்பிடமுள்ள வாசனை மலர்களைக் கொண்ட திண்ணிய கிளைகளையுடைய காஞ்சி மரத்தின். நெறிகுழல் - நெறித்த கூந்தலையுடைய. நெற்குறு பாட்டு - நெற்குற்றுப்பாட்டு.

௧௦. பொய்கையின் பக்கங்களெல்லாம். புள்ளும்......கலிக்கும் - பறவைகளும் தண்ணீரில் ஒலிக்கும். தளை - கட்டு. பைங்குழல் - பசிய கூந்தலிலே. மிலைச்சிய - சூடிய. களிதூங்க - களிப்பால் கூத்தாட ; கள்ளாட்டயர. கறங்கு - (அதற்கிசைய) அடிக்கப்படும்.

௧௧. கடைஞர் இருப்பின் வரைப்பு - புலைப்பாடி. பரிவு - அன்பு. ஆன்ற தொழில் தாயத்தார் - அமைந்த தொழிலுரிமை யுடையவர்.

௧௨. பிறைக்கண்ணிப் பெருந்தகை பால் - சிவபிரானிடத்து.

பா - ம்—*அழைக்கும். †தண். ‡ஒப்பில்வளர்.

மறந்தும்அயல் நினைவின்றி வருபிறப்பின் வழிவந்த
அறம்புரிகொள் கையாரயே அடித்தொண்டின் நெறிநின்றார். ௧௨

ஊரில்விடும் பறைத்துடவை உணவுரிமை யாக்கொண்டு
சார்பில்வருந் தொழில்செய்வார் தலைநின்றார் தொண்டினால்
கூரிலைய முக்குடுமிப் படையண்ணல் கோயில்தொறும்
பேரிகையே முதலாய முகக்கருவி பிறவினுக்கும். ௧௩

போர்வைத்தோல் விசிவார்என் றினையனவும் புகலும்இசை
நேர்வைத்த வீணைக்கும் யாழுக்கும் நிலவகையில்
சேர்வுற்ற தந்திரியும் தேவர்பிரான் அர்ச்சனைகட்
கார்வத்தி னுடன்கோரோ சனையும்இவை அளித்துள்ளார். ௧௪

இவ்வகையால் தந்தொழிலின் இயன்றவெலாம் எவ்விடத்தும்
செய்வனவும் கோயில்களில் திருவாயிற் புறநின்று
மெய்விரவு பேரன்பு மிகுதியினால் ஆடுதலும்
அவ்வியல்பில் பாடுதலு மாய்நிகழ்வார் அந்நாளில். ௧௫

---

௧௩. ஊரில் விடும் பறைத்துடவை - ஊரிலே பறை யடித்தற்கென விடப்பட்ட தோட்டம் முதலிய மானிய வருவாயை. தமது சார்பில். தமக்குரிய உலகியற் றொழிலை மற்றவர்போலத் திருநாளைப்போவார் செய்துவரினும் அவர் திருத்தொண்டில் மட்டும் எல்லாரினுந் தலைநின்றார் என்று ஆசிரியர் கூறியுள்ளது கூர்ந்து நோக்கத்தக்கது. கூரிலைய...அண்ணல் - கூரிய தகட்டு வடிவான முத்தலைச் சூலத்தை ஏந்திய சிவபெருமான் எழுந்தருளியுள்ள. முகக் கருவி - தோல் கட்டும் வாயெனும் முகமுடைய கருவிகள். பிற என்றது மத்தளம் முதலியவற்றை.

௧௪. விசிவார் - இறுகக் கட்டும் வார்கள். புகலும் - விரும்பும். வீணைக்கும் யாழுக்கும் வேற்றுமை யுண்டு; இது வேறு, அது வேறு: "குழலும் வீணையும் யாழுமென் றினையன குழைய"—**கம்ப இராமாயணம்**: ஊர்தேடு. ௬. நிலவகையில் சேர்வுற்ற தந்திரியும் - சுரஸ்தானங்களுக் கேற்றவகையில் பொருந்திய நரம்புகளும்.

௧௫. செய்வனவும் - செய்தலும். மெய்விரவு - உயிர் வழி உடலிற் கலந்த. "அன்பினால் அடியேன் ஆவியோடாக்கை ஆனந்த மாய்க் கசிந்துருக"—**திருவாசகம்**: கோயில். அனுபோக. ௨ "பாடவேண்டும் நான் போற்றி நின்னையே பாடி நைந்துநைந் துருகி நெக்குநெக் - காடவேண்டும் நான்"—**திருவாசகம்**: திருச்சதகம்: ௪௦. "ஆடுவதும் பாடுவதும் ஆனந்தமாக நின்னைத் - தேடுவதும் நின்னடியார் செய்கை பராபரமே"—**தாயுமானார்**: பராபர. ௧௪௪.

பா - ம்—*கையினராய்.

திருப்புன்கூர்ச் சிவலோகன் சேவடிகள் மிகநினைந்து
விருப்பினொடுந் தம்பணிகள் வேண்டுவன செய்வதற்கே
அருத்தியினால் ஒருப்பட்டங் காதனூர் தனில்நின்றும்
வருத்தமுறுங் காதலினால் வந்தவ்வூர் மருங்கணைந்தார். ௧௬

சீரேறும் இசைபாடித் திருத்தொண்டர் திருவாயில்
நேரேகும் பிடவேண்டும் எனநினைந்தார்க் கதுநேர்வார்
காரேறும் எயிற்புன்கூர்க் கண்ணுதலார் திருமுன்பு
போரேற்றை விலங்கஅருள் புரிந்தருளிப் புலப்படுத்தார். ௧௭

சிவலோக முடையவர்தந் திருவாயில் முன்னின்று
பவலோகங் *கடப்பவர்தம் பணிவிட்டுப் பணிந்தெழுந்து
சுவலோடு வாரலையப் போவார்பின் பொருசூழல்
அவலோடும் அடுத்ததுகண் டாதரித்துக் குளந்தொட்டார். ௧௮

வடங்கொண்ட பொன்னிதழி மணிமுடியார் திருவருளால்
தடங்கொண்ட குளத்தளவு சமைத்ததற்பின் தம்பெருமான்
இடங்கொண்ட கோயில்புறம் வலங்கொண்டு பணிந்தெழுந்து
நடங்கொண்டு விடைகொண்டு †தம்பதியில் நண்ணினார். ௧௯

---

௧௬. அருத்தியினால் ஒருப்பட்டு - விருப்பத்தால் ஒருமைப்பட்ட மனமுடையவராய். 'திருப்புன்கூர்ச் சிவலோகநாதனை எப்பொழுது காணப்போகிறோம்' என்று எழும் வருத்தமுறுங் காதலினால் என்க. வருத்தம் - ஆற்றாமை. "திருப்புன்கூர் மேவிய சிவலோகனை"—**அப்பர் :** திருப்புன்கூர்த் திருத்தாண்டகம்.

௧௭. அது நேர்வார் - அதைத் திருவருள் செய்வாராய். "வேண்டுவார்க்கு வேண்டுவதே ஈவான் கண்டாய்"—**அப்பர்.** காரேறும் எயில் - மேகந்தவழும் மதிலையுடைய. கண்ணுதலார் - **திருநகரச் சிறப்பு :** ௪௯. குறிப்புப்பார்க்க. திருமுன்பு போரேற்றை விலங்க - சந்நிதியிலுள்ள பொருகின்ற இடப தேவரை விலகும்படி. புலப்படுத்தார் - தரிசனம் வழங்கினார்.

௧௮. பவலோகங் கடப்பவர்தம் - பிறவி உலகத்தைக் கடப்பவராகிய நந்தனார் தமது. பணிவிட்டு - தோற்கருவியைக் கீழே வைத்து; தெண்டனிட்டு எனினுமாம். "கூத்தாடுதலாகிய தொழிலைவிட்டு" என்பர் **பழைய குறிப்புரையாசிரியர்.** "சுதந்திரமிழந்து" என்பர் **ஆறுமுகத் தம்பிரானார்.** சுவலோடு வார் அலைய - முதுகோடு வார்கள் அலைய. ஒரு சூழல் அவலோடும் அடுத்தது கண்டு - ஓரிடம் பள்ளத்தோடு அமைந்து இருந்ததைக் கண்டு; ஒரு சோலையை ஆவலோடும் அடைந்து அதைப்பார்த்து என்னலும் ஒன்று. ஆதரித்து - விருப்பங்கொண்டு.

௧௯. பொன்னிதழி - பொன்னிறமுள்ள கொன்றை. தடம்...பின் - விசாலமான குளத்துக்குரிய அளவாக வெட்டிச் சமைத்த பின்பு. நடங்கொண்டு-

பா - ம்—*கடந்தவர். †தம்பதியை.

இத்தன்மை ஈசர்மகிழ் பதிபலவுஞ் சென்றிறைஞ்சி
மெய்த்ததிருத் தொண்டுசெய்து விரவுவார் மிக்கெழுந்த
சித்தமொடுந் திருத்தில்லைத் திருமன்று சென்றிறைஞ்ச
உய்த்தபெருங் காதலுணர் வொழியாது வந்துதிப்ப. ௨0

அன்றிரவு கண்துயிலார் புலர்ந்ததற்பின் "அங்கெய்த
ஒன்றியணை தருதன்மை உறுகுலத்தோ டிசைவில்லை"
என்"றிதுவும் எம்பெருமான் ஏவல்"எனப் போக்கொழிவார்
நன்றுமெழும் *காதல்மிக "நாளைப்போ வேன்"என்பார். ௨௧

"நாளைப்போ வேன்"என்று நாள்கள்செலத் தரியாது
பூளைப்பூ வாம்பிறவிப் பிணிப்பொழியப் போவாராய்ப்
பாளைப்பூங் கமுகுடுத்த பழம்பதியி னின்றும்போய்
வாளைப்போத் தெழும்பழனஞ் சூழ்தில்லை †மருங்கணைவார். ௨௨

செல்கின்ற போழ்தந்தத் திருவெல்லை பணிந்தெழுந்து
பல்குஞ்செந் தீவளர்த்த பயில்வேள்வி எழும்புகையும்
மல்குபெருங் கிடையோது மடங்கள்நெருங் கினவுங்கண்
டல்குந்தங் குலநினைந்தே அஞ்சிஅணைந் திலர்நின்றார். ௨௩

நின்றவர்அங் கெய்தரிய பெருமையினை நினைப்பார்முன்
சென்றிவையுங் கடந்தூர்சூழ் எயிற்றிருவா யிலைப்புக்கார்
குன்றனைய மாளிகைகள் தொறுங்குலவும் வேதிகைகள்
ஒன்றியமூ வாயிரம்அங் குளஎன்பார் ஆகுதிகள். ௨௪

---

கூத்தாடி. "நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தன் நாவினுக் கரையன் **நாளைப்போ வானுங்** - கற்ற சூதன்நற் சாக்கியன் சிலந்தி கண்ணப்பன் கணம்புல்ல னென்றிவர்கள் - குற்றஞ் செய்யினுங் குணமெனக் கருதுங் கொள்கை கண்டுநின் குரைகழ லடைந்தேன் - பொற்றிரள்மணிக் கமலங்கள் மலரும் **பொய்கை சூழ்** திருப்புன்கூ ருளானே."—**சுந்தரர்**; இத்திருப்பாட்டில் திருநாளைப் போவார் திருப்பெயரும், அவர் எடுத்த பொய்கையும் குறிப்பாக உணர்த்தப்பட்டிருத்தல் காண்க.

௨0. விரவுவார் - அன்போடு தாமும் இரண்டறக் கலந்திருப்பார். உய்த்த - செலுத்திய. ௨௧. ஏவல் - திருவருள். நன்றும் - பெரிதும்.

௨௨. பூளைப் பூவைப்போல் நிலையின்றிச் சுழலும் பிறவியின் தொடர்பு. பழம் பதியினின்றும் - ஆதனூரினின்றும். வாளைப்போத்து - வாளை ஆண். பழனம் - வயல்கள்.

௨௩. பல்கும் - பெருகும். பயில் - நெருங்கிய. மல்கு - நிறைந்த. கிடை - வேதம் பயிலிடங்கள். ஓதுகிடை என்றுங் கொள்ளலாம். அல்கும் - குறைந்த.

௨௪. இவையும் - வேள்வி, கிடை, மடம் முதலியவற்றையும்; திருவெல்லை முதலியவற்றைக் கடந்து என்றபடி. எயில் - மதிலின். குலவும் -

பா - ம்—*காதலினால். †மருங்கணைந்தார்.

"இப்பரிசா யிருக்கவெனக் கெய்த" லரி தென்றஞ்சி
அப்பதியின் மதிற்புறத்தின் ஆராத பெருங்காதல்
ஒப்பரிதாய் வளர்ந்தோங்க உள்ளுருகிக் கைதொழுதே
செப்பரிய திருவெல்லை வலங்கொண்டு செல்கின்றார். ௨௫

இவ்வண்ணம் இரவுபகல் வலஞ்செய்தங் கெய்தரிய
அவ்வண்ண நினைந்தழிந்த அடித்தொண்டர் அயர்வெய்தி
"மைவண்ணத் திருமிடற்றார் மன்றில்நடங் கும்பிடுவ
தெவ்வண்ணம்" எனநினைந்தே ஏசறவி னொடுந்துயில்வார். ௨௬

"இன்னல்தரும் இழிபிறவி இதுதடை" என் றேதுயில்வார்
அந்நிலைமை அம்பலத்துள் ஆடுவார் அறிந்தருளி
மன்னுதிருத் தொண்டரவர் வருத்தமெலாந் தீர்ப்பதற்கு
முன்னணைந்து கனவின்கண் முறுவலோடும் அருள்செய்வார். ௨௭

"இப்பிறவி போய்நீங்க எரியினிடை நீமூழ்கி
முப்புரிநூல் மார்பருடன் முன்னணைவாய்" *என்னமொழிந்
தப்பரிசே தில்லைவாழ் அந்தணர்க்கும் எரியமைக்க
மெய்ப்பொருளா னார்அருளி அம்பலத்தே மேவினார். ௨௮

விளங்கும். ஆகுதிகள் ஒன்றிய (பொருந்திய) வேதிகைகள் மூவாயிரம் அங்கு உள என்பார்.

௨௫. இப்பரிசாயிருக்க - இத்தன்மையாயிருக்க. எய்தல் - போதல். ஆராத- அடங்காத.

௨௬. அங்கு...எய்தி - அங்கே போதற்கு இயலாத அந்நிலையை நினைந்து வருந்திய திருவடித் தொண்டராகிய நந்தனார் சோர்வடைந்து. மைவண்ண... துயில்வார் - திருநீலகண்டத்தை யுடைய ஆண்டவன், சபையில் ஆடுந் திருக் கூத்தைக் கும்பிடுவது எப்படி என்று நினைந்தே துக்கத்தோடும் உறங்கு வாரானார்.

௨௭. இல்லாத ஒன்றை இருப்பதாகக் கருதி வருந்துவோரைப் பார்ப்ப வர்க்குப் புன் முறுவல் தோன்றுதல் இயல்பு. நடராசப்பெருமான் சாதி குலங்க ளெல்லாங் கடந்தவர். அவரைத் தரிசிக்க நந்தனார் தம் பிறவியை இழிவாகக் கருதி வருந்தினமையால் ஆண்டவன் புன் முறுவல் கொண்டான் என்க. அடியவர் எதுபற்றி வருந்துகிறாரோ அதைத் தீர்க்கவேண்டுவது ஆண்டவன் கடமை.

௨௮. முப்புரிநூல் மார்பருடன் - வேதியருடன். அப்பரிசே - அப்படியே. நந்தனார், வேதியர்களின் இருக்கை வேள்வி மடம் ஆகுதி முதலியவற்றைக் கண்டு அஞ்சி உறங்கினமையால், அவரை அவ்வேதியராக்கி அழைத்தால் அவர் தம் அச்சம் ஒழியும் என்பது ஆண்டவன் திருவுள்ளம்போலும். வேதியர் சாதிபேதம் பாராட்டுவோர் ஆதலின், அவ்வேதியர்களுக்கு, அன்பராகிய நந்தனார் திருமேனி நெருப்பிலும் வேகாததொன்று என்று காட்டும் வழி, அன்பின் உயர்வையும் சாதியின் இழிவையும் புலப்படுத்தவும் ஆண்டவன் திருவுளம் பற்றினான் என்க.

பா - ம்— *எனமொழிந்த.

தம்பெருமான் பணிகேட்ட தவமறையோர் எல்லாரும்
அம்பலவர் திருவாயின் முன்பச்ச முடனீண்டி
"எம்பெருமான் அருள்செய்த பணிசெய்வோம்" என்றேத்தித்
தம்பரிவு பெருகவருந் திருத்தொண்டர் பாற்சார்ந்தார். ௨௯

"ஐயரே! அம்பலவர் அருளால்இப் பொழுதணைந்தோம்
வெய்யஅழல் அமைத்துமக்குத் தரவேண்டி" எனவிளம்ப
மையுமனத் திருத்தொண்டர் "நானுய்ந்தேன்" எனத்தொழுதார்
தெய்வமறை முனிவர்களும் *தீயமைத்த படிமொழிந்தார். ௩௦

மறையவர்கள் மொழிந்ததற்பின் தென்திசையின் மதிற்புறத்துப்
பிறையுரிஞ்சுந் திருவாயின் முன்னாகப் பின்னுகர்தம்
நிறையருளால் மறையவர்கள் நெருப்பமைத்த குழியெய்தி
இறையவர்தாள் மனங்கொண்டே எரிசூழ வலங்கொண்டார். ௩௧

கைதொழுது, நடமாடுங் கழலுன்னி அழல்புக்கார்
எய்தியஅப் பொழுதின்கண் எரியின்கண் இம்மாயப்
பொய்தகையும் உருவொழித்துப் புண்ணியமா முனிவடிவாய்
மெய்திகழ் †வெண் நூல்விளங்க வேணிமுடி கொண்டெழுந்தார். ௩௨

---

௨௯. அம்பலவர் - நடராசர். ஈண்டி - கூடி. பரிவு - அன்பு.

௩௦. வேதியர்கள், தொண்டரைத் தீயில் மூழ்குவிக்க வேண்டுவதில்லை' என்று ஆண்டவனை வேண்டியிருப்பார்களாயின், அவர்கள் வேண்டுதலுக்கு ஆண்டவன் இரங்கி யிருப்பன். அவர்கள் அவ்வழி புகாது ஆண்டவன் கட்டளையை நிறைவேற்றும் வழியிலேயே புகுந்தார்கள்.

௩௧. பிறை யுரிஞ்சும் - சந்திரன் தவழும். பின்னுகர்தம் - சிவபெருமானின். சூழ - சூழ்ந்து.

௩௨. பொய் தகையும் - பொய் உள்ளடங்கும்; பொய்யால் கட்டப்பட்டுள்ள. இங்கே சாதித் தீட்டு என்று ஆசிரியர் கூறாது "இம்மாயப் பொய் தகையும் உரு ஒழித்து" என்றது கருதற்பாலது. மாயா காரியமாகிய பொய் உடல் ஒழிந்ததென்க. ஒவ்வோருயிரும் இந்நிலை ஒருபோது எய்தியே தீர்தல்வேண்டும். அந்நிலையை நந்தனார் எய்தினார் என்பது "புண்ணியமா முனி வடிவாய் மெய்திகழ் வெண்நூல் விளங்க வேணிமுடி கொண்டெழுந்தார்" என்பதனால் வலியுறுத்தப்படுதல் காண்க. புலையர் பிறவிபோய் மறையவர் பிறவி வந்ததென்று கொள்ளற்க. அஞ்ஞான உடல்போய் ஞான உடல் வந்ததெனக் கொள்க. நந்தனார் சிவமானார் என்பது நுட்பம். வெண்நூல் - குண்டலினி; வேணி (சடை) முடி - ஞானமிர்தத் தேக்கம். முனி - காமக் குரோத முதலிய தத்துவக் காரியங்களை முனிந்த நிலை.

பா - ம்—*என்றேகித். †முந்நூல்.

செந்தீமேல் எழும்பொழுது செம்மலர்மேல் வந்தெழுந்த
அந்தணன்போல் தோன்றினார் அந்தரதுந் துபிநாதம்
வந்தெழுந்த திருவிசும்பில் வானவர்கள் மகிழ்ந்தார்த்துப்
பைந்துணர்மந் தாரத்தின் பனிமலர்மா ரிகள்பொழிந்தார். ௩௩

திருவுடைய தில்லைவாழ் அந்தணர்கள் கைதொழுதார்
பரவரிய தொண்டர்களும் பணிந்துமனம் களிபயின்றார்
அருமறைசூழ் திருமன்றில் ஆடுகின்ற கழல்வணங்க
வருகின்றார் திருநாளைப் போவாராம் மறைமுனிவர். ௩௪

தில்லைவாழ் அந்தணரும் உடன்செல்லச் சென்றெய்திக்
கொல்லைமான் மறிக்கரத்தார் கோபுரத்தைத் தொழுதிறைஞ்சி
ஒல்லைபோய் உள்புகுந்தார் உலகுய்ய நடமாடும்
எல்லையினைத் தலைப்பட்டார் யாவர்களுங் கண்டிலரால். ௩௫

அந்தணர்கள் அதிசயித்தார் அருமுனிவர் துதிசெய்தார்
வந்தணைந்த திருத்தொண்டர் தம்மைவினை மாசறுத்துச்
சுந்தரத்தா மரைபுரையுந் துணையடிகள் தொழுதிருக்க
அந்தமிலா ஆனந்தப் பெருங்கூத்தர் அருள்புரிந்தார். ௩௬

மாசுடம்பு விடத்தீயின் மஞ்சனஞ்செய் தருளியெழுந்
தாசில்மறை முனியாகி அம்பலவர் தாளடைந்தார்
தேசுடைய கழல்வாழ்த்தித் திருக்குறிப்புத் தொண்டர்வினைப்
பாசமற முயன்றவர்* தம் திருத்தொண்டின் பரிசுரைப்பாம். ௩௭

ஆக திருவிருத்தம் - ௧,0அ௨.

---

குறிப்பு :—நாயன்மார்கள் காலத்திலும் பிறப்பில் உயர்வு தாழ்வு கருதுவது நாட்டில் நிலை பெற்றிருந்தது. நாயன்மார்கள் பற்பல குலத்திற் றோன்றி அன்பர்களாகி, அன்புக்கு முன்னே சாதிவேற்றுமை இல்லை என்பதை நிறுவிச் சென்

---

௩௩. அந்தணன்போல் - பிரமதேவனைப்போல். அந்தர துந்துபி நாதம் - தேவ துந்துபியின் ஒலி. திருவிசும்பில் - பெரிய விண்ணில். ஆர்த்து - ஆரவாரித்து. பசிய பூங்கொத்துக்களையுடைய கற்பகத் தருவின் குளிர்ந்த மலர் மாரிகளை.

௩௫. மான்மறிக்கரத்தார் - மான் கன்றைத் திருக்கையில் ஏந்திய சிவபெருமானின். ஒல்லை - விரைந்து. தலைப்பட்டார் - அடைந்தார்.

௩௬. புலையர் பிறவியை அறுத்து என்று கூறாது "வினைமாசு அறுத்து" என்றதை உன்னுக. புரையும் - ஒக்கும். துணையடிகள் - இரண்டு திருவடிகளை.

௩௭. மாசுடம்பு - மாயா உடம்பு. இஃது எல்லார்க்கும் இருப்பது. மஞ்சனஞ் செய்தருளி - மூழ்கி. ஆசில் - குற்றமில்லாத. தேசு - ஒளி.

பா - ம்—*செய்.

ரர்கள். சுந்தரமூர்த்தி சுவாமிகள், திருநாவுக்கரசு சுவாமிகள், அப்பூதியடிகள், திருநீலநக்கநாயனார், நமிநந்தி அடிகள், திருஞானசம்பந்த சுவாமிகள், கழறிற்றறிவார் நாயனார் ஆகிய இவர்கள் வரலாறுகளை நோக்குக. பல குலத்திற் றோன்றிய நாயன்மார்களெல்லாரையும் மறையவர் குலத்திற்றோன்றிய வன்றொண்டப் பெருந்தகையார் "அடியார்க்கும் அடியேன்" என்று போற்றியதும், அந்நாயன்மார்கள் அனைவரையும் சிவாலயத்தில் சூழ எழுந்தருளுவித்து மக்கள் வழிபாடு செய்வதும் ஈண்டுக் கருதற்பாலன. சேக்கிழார் காலத்தும் சாதிநெறி ஆக்கம் பெற்றிருந்தமையான், அதன் புன்மையை உலகுக்கு உணர்த்தச் சாதி வேற்றுமை முதலியவற்றைக் கடந்த சிவநெறி நின்றொழுகிய நாயன்மார்கள் வரலாறுகளை அவர் அருளப் புகுந்தார். அந்நாயன்மார்களுள் திருநாளைப் போவாரும் ஒருவர். திருநாளைப் போவார் நாளில் சாதிவேற்றுமை இருந்தமையான், அவரும் அவ்வேற்றுமையில் நம்பிக்கைகொண்டு தம்மைப் புலையரெனக் கருதியே தொண்டாற்றி வந்தார். அவர் பிறந்த புலைப்பாடியை உள்ளவாறே கவிமுறையில் சேக்கிழார் வருணித்துள்ளதை நோக்குக. உள்ளதை உள்ளவாறு கூறுவது கவிமரபு. திருநாளைப் போவார் வரலாற்றைப்பற்றிப் பலதிற ஆராய்ச்சிகள் வெளிவந்திருக்கின்றன. அவைகளுள்,சேக்கிழார் பெருமான் திருவாக்கைத் தழுவிச் "சித்தாந்தம்" ஆசிரியர் - ம. பாலசுப்பிரமணிய முதலியார், "சித்தாந்தம்" ஐந்தாம் மலரில் ஒன்பதாம் இதழில் வரைந்துள்ள ஆராய்ச்சி உரை எனது கருத்தை ஈர்த்தது. அவ்வாராய்ச்சியிற் போந்துள்ள குறிப்புகள் சிலவருமாறு:—

[......மேற்கூறிய விவரங்கள்மட்டும் அடங்கிய வரலாறு பக்திரசம் ததும்பும் ஒரு தீம்கனியாகச் சேக்கிழார் பெருமானால் நமக்களிக்கப்பட்டுள்ளது. இந்த ரசம் ஒன்று போதாதென்று கருதிச் சிருங்கார ரசம், சோக ரசம், ஹாஸ்யரசம் முதலியவைகளைப் புகுத்தி, இவ்வுண்மை வரலாற்றைத் திரித்துப் பல புதிய விஷயங்களைச் சேர்த்து, நந்தனார் நாடகமாகவும், நந்தனார் சரித்திரக் கீர்த்தனை காலக்ஷேபங்களாகவும் இவ்வரலாறு உலவி வருவதைக் காண்கின்றோம். நந்தனார் ஓர் அந்தணரிடம் அடிமையாதல், நந்தனாருக்குப் பைத்தியம் பிடித்தல், சேரியில் பூசைபோடுதல், பெரிய கிழவன் வருதல், நந்தனார் எஜமானனை வேண்டுதல், நந்தனாருக்காகச் சிவ பூதங்கள் ஒரே இரவில் உழுது விதைப்பது முதல் கதிரறுத்தல்வரை எல்லாம் செய்தல், நந்தனார் வேதியருக்கு உபதேசித்தல் முதலிய பல விஷயங்கள் கர்ண பரம்பரையாகவோ தலபுராணங்கள் மூலமாகவோ கலந்துள்ளன. இவற்றை யெல்லாம் கருத்தில் வையாமல் சேக்கிழார் பெருமான் அருளிய உண்மை வரலாற்றின் உள்ளக்கிடக்கையை ஆராய்வோம்.

...நந்தனாருடைய சிவபக்தி மனதளவில் பேச்சளவில் நிற்கவில்லை; செயலிலும் விளங்கிற்று. தமது குலத்துக்கேற்ற தொண்டுபுரிவதே தகுதி யென்று கருதி, கோயில்களில் பேரிகை முதலிய தோற் கருவிகட்குத் தோலும், யாழ், வீணை முதலிய நரம்புக்கருவிகட்கு நரம்பும், ஈசனார் பூசனைக்குக் கோரோசனையும் தந்து நந்தனார் தமது பக்தியைச் செயலில் நிறுத்தினார். "வருபிறப்பின் வழி வந்த அறம்புரி கோள்கையாரயே அடித்தொண்டின் நெறிநின்றார்" என்பதில் சேக்கிழார் கொடுத்துள்ள ஏகாரம் அவர் கருத்தை வலியுறுத்தும் ; ஏனைய வழி

களில் தொண்டு செய்யக் கருதினல் வசதிக்குறைவினல் தடைகள் நேரும்... ......இனி நந்தனரது அன்பின் தன்மையை நோக்குவாம். ......நந்தனரது கரை கடந்த பேரன்பு அவரைத் தில்லையெல்லைக்குச் செலுத்திற்று. அதை வலம் வந்து வேள்விப் புகைகண்டு மறையோசை கேட்டுத் தமது குலம் நினைந்து உட்செல்ல அஞ்சினர்......தாம் உள்ளே நுழையக் கூடவில்லையே என்ற உணர்ச்சியினல் அவரது பக்தியும் மெய்யன்பும் எள்ளளவும் குறையவில்லை யென்பது பெரிதும் நோக்கத்தக்கது. தாங்கள் நினைத்த காரியங்கட்காகக் கோயில் சென்று பிறகு காரியங் கைகூடாவிடில் 'இந்த சுவாமிக்குக் கண்ணில்லையா, இந்தப் பாழுங் கோயிலில் இடிவிழாதா' என்றெல்லாம் தங்கள் வயிற்றெரிச்சலைக் கொட்டியளக்கும் 'உயர்குலத்து மெய்யடியார்கள்' எத்தனை பேரை நாம் காண்கிரும். நந்தனர் தமக்கென ஒன்றும் வேண்டவில்லை. இறைவனைத் தரிசிக்கும் ஆசையைத் தவிர வேறெவ்வித ஆசையும் அவருக்கில்லை; தமது குலத்தினல் உண்டான தடையினல் அவரது மெய்யன்பு ஒரு சிறிதும் குன்றவேயில்லை; நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டே போயிற்று. ......இங்கே ஒரு நவீன ஆராய்ச்சி உண்டு. "இப்பிறவி போய் நீங்க எரியினிடை நீ மூழ்கி......மேவினர்" என்று இறைவன் கூறியதாகச் சேக்கிழார் சொல்வது சேக்கிழார் வாக்கல்ல என்றும், பிற்காலத்து இடைச் செருகல் என்றும், பாட்டின் போக்கும் பிறவும் இதை வலியுறுத்தும் என்றும் சில பேரறிஞர்கள் கூறுவதை நான் கேட்டிருக்கிறேன். இறைவனுக்குச் சாதி வேற்றுமை, தீண்டாமை முதலிய கொள்கைகள் உண்டென்று ஏற்பட்டு விடுமாம். அதற்காக இப்பாட்டில் இறைவன் வாக்காகச் சேக்கிழார் கூறுவது தவறென்றெண்ணி, சேக்கிழார் வாக்கேயல்ல வென்பது பொருத்தமாம். இவ்வாறு பொருள் கூறுவதைவிட வேறொரு வழியில் பொருள் கொண்டு இறைவன் திருவாக்கின் மேன்மையையும் சேக்கிழார் வாக்கே யென்பதையும் வலியுறுத்துவதே விசேஷமென அப்பேரறிஞர்கட்கு விண்ணப்பித்துக் கொள்கிறேன். அது பின் வருமாறு:—'ஏ! தில்லை வாழந்தணர்களே! நீங்கள் நாடோறும் என்னைத் தொழுகின்றீர்கள்; என் உருவமாகிய தீயை வளர்க்கின்றீர்கள்; என்றாலும் இப்புறப் பூசைகளினல் உங்கள் அன்பு இன்னம் முதிர்ச்சி யடையவில்லை. இப்பூசை வசதிகளெல்லாம் இல்லாத ஒருவன் எல்லைப்புறத்தில் உள்ளான். என்னைக்கண்டு தொழும் வசதியை நீங்கள் அவனுக்குத் தரவில்லையாயினும் உங்களைவிட அவனே என்மீதுள்ள அன்பிற்சிறந்தவன். அவனது பக்திக்கு ஓரளவும்எல்லையுமில்லை. பூசனைந்த நிலையிற் கலங்கினும் அவன் என்னை மறவான்......அவனது பெருமையை உங்களுக்குக் கண்கூடாகக் காட்ட விரும்புகிறேன். நீங்கள் சுடுமென்று அஞ்சுகிற என் உருவமாகிய தீயை எழுப்புங்கள். அவன் அதனுட் புகுந்து 'புண்ணியமா முனிவடிவாய், மெய்திகழும் வெண்ணூல் விளங்க வேணி முடிகொண் டெழுவான்'; என்மீது யார் உண்மையான அன்பு செலுத்துகிறர்களோ அவர்களுக்குள்ள இடையூறுகளை விலக்கி அவர்களை என் திருவடியில் அணைவிப்பதே எனது தொழில் என்பதைப்பிரத்தியக்ஷமாக அறியுங்கள்' என்று தில்லைவாழந்தணராகிய தலைக்குலத்தவர்க்கும் ஏனைய உயர் குலத்தவர்க்

கும் அறிவுறுத்தவே கடைஞனெனப்படும் ஒருவனுக்கு அருள் புரிந்தார் அருட் பெருஞ்சோதியார் எனக்கொள்வதே சிறப்பு.......கனவில் நந்தனார்க்கும் தில்லை வாழந்தணர்க்கும் திருக்கூத்தன் அருள்செய்தான். தில்லைவாழந்தணர்கள் நல் லொழுக்கமும் நற்சார்பும் உடையவர்களாய் நந்தனார் காலத் திருந்தமையால் இறைவன் திருவுளக் குறிப்பை நன்றாய் அறிந்து கொண்டார்கள்; உடனே நந்தனாரிடம் சென்றார்கள். இத்"தவ மறையோரெல்லாரும்" ஆங்கு அவரிடம் கூறும் வாக்கின் நுட்பம் நோக்கத்தக்கது. 'அடே, நந்தன் பயலே! உன்னைத் தீயி லிட்டு பொசுக்கி மந்திர ஸம்ஸ்காரம் செய்து உள்ளே சேர்த்துக் கொள்கிறோம்' என்று அவர்கள் சொல்லவேயில்லை. ஆனால் - "ஐயரே அம்பலவர் அருளால் இப் பொழுதணைந்தோம் - வெய்யஅழ லமைத்துமக்குத் தரவேண்டி" என்றார்கள். கல்நாருரித்தன்ன ஈரமிலா நெஞ்சுடைய தில்லைவாழ் ஐயர்கள், ஆராத காதல் ஒப்பரிதாய் வளர்ந்தோங்க உள்ளுருகும் நந்தனாரைத் தங்களுக்கு அன்புப் பாடம் கற்பிக்கும் ஐயரே என்றழைத்ததை நோக்குக. தங்கள் குலச்செருக் காலும் புறப்பூசைச் செருக்காலும் உண்மை யன்பின் உறைவிடத்தை யறியாத அந்தணர்கள் கண்ணுதல் அருளால் காட்டக் கண்டார்களாதலின் "அம்பலவர் அருளால் இப்பொழுது அணைந்தோம்" என்றார்கள். அன்பிற்கு முன் மந்திர ஸம்ஸ்காரங்கள் நில்லாவென்பதை நன்குணர்ந்த அந்தணர்கள் "அழல் அமைத்து உமக்குத் தரவேண்டி" என்று தாங்கள் சொல்லியபடி செய்யும் ஏவலாளர்க ளென்பதையும் விளக்கினார்கள். தீ வளர்க்கப்பட்டது. நந்தனார் இறைவனை நினைந்து தீயை வலம் வந்தார்; 'கைதொழுது நடமாடுங் கழலுன்னி அழல் புக்கார்'; புண்ணியமா முனிவடிவாய் நூல் விளங்க எழுந்தார். நந்தனாருக்கு நாக்கை மூக்கை மட்டும் சுடும் ஸம்ஸ்காரம் நிகழவில்லை. உடல் முழுமையும் தீக்குளிக்கும் அரிய ஸம்ஸ்காரம் நிகழ்ந்தது. ஓரந்தணன் மற்றொரு சிறுவ னுக்கு நூலணிவிக்கும் உபநயனம் நடைபெறவில்லை. இறைவனே தீயில் உரு மாற்றி நூலணிவித்தான். தில்லை வாழந்தணர்க்கும் ஏனைய குலங்கட்கும் முத லென்று புராணுதிகள் விதந்தோதும் பிரமன்போல் நந்த மகாமுனிவர் விளங் கினார். "செந்தீமேல் எழும்போது செம்மலர்மேல் வந்தெழுந்த - அந்தணன் போல் தோன்றினார்" என்பது சேக்கிழார் பெருமான் திருவாக்கு. எனவே கடைஞன் எனப்படும் ஒருவன் இறைவன் திருவடியன்பினால் குலங்களைத்தோற் றுவித்த பிரம வடிவம் திகழ விளங்கினமை பெற்றாம். இந்நிகழ்ச்சியைக்கண் ணுற்ற அமரர் பூமாரி பொழிந்தனர். தேவதுந்துபி முழங்கியது. 'திருவுடைய தில்லைவாழந்தணர்கள் கைதொழுதார்.' இனி நந்தனார் அம்பலக்கூத்தனையணுகி அடிப்பேறெய்தியதை ஆராய்வோம். திருநாளைப் போவாராம் 'மறைமுனி வர்' 'தில்லை வாழந்தணரும் உடன் செல்லச் சென்றெய்தி உள் புகுந்தார்.' ஈண்டு உம்மை இழிவு சிறப்பின்கண் வந்ததை நோக்குக. (திருத்தொண்டத் தொகையில் முதலில் வைத்து ஓதப்படும் தில்லைவாழந்தணரை வேண்டு மென்றே குறை கூறுவதாக ஒருவரும் எண்ணுதல் கூடாது.) 'உள் புகுந்தார் உலகுய்ய நடமாடும், எல்லையினைத் தலைப்பட்டார் யாவர்களும் கண்டிலரால்.' இவ்வாறு அனைவரும் கண்கொட்டாது விழிப்ப, அவரெதிர் மறைதல் நந்தனு

ரும் மாணிக்கவாசகரும் செய்த அருந்தொழிலே. ஐந்து பூதங்களாலாகிய பரு வுடலை இறைவன் திருவருள், அவ்வப் பூதங்களோடு இமைப்பொழுதில் சேர்ப்பித்தது ; ஆன்மா திருவடியில் நின்றது. இதுவே மிகச் சிறந்த விதேக முத்தியாகும்......மேற்கூறியவைகளிலிருந்து சிவபெருமானுவது சேக்கிழார் பெருமானுவது சாதிவேற்றுமை உயர்வு தாழ்வுகள் நமது நாட்டில் வேண்டுமென்று எண்ணுவதாகக் கொள்வதற்கிடமில்லை. மெய்யன்பின் முன் சாதி நில்லாதென்பதையே இச்சரிதை வலியுறுத்தும். இவ்வோர் உண்மையை வலியுறுத்தவே இக்கட்டுரை எழுந்தது. இதை விட்டு விட்டு நந்தனார் கோயிலுக்குள்ளே செல்லும் உரிமை பாராட்டாததினால் இப்போதைய ஆதிதிராவிடர்களும் அவ்வாறு செய்தல் கூடாது, நந்தனார் தீப்புகுந்த பிறகே உட்சென்றதினால் அவர்களும் அவ்வாறே செய்ய வேண்டும், கடவுளே தீக்குளி என்று கட்டளையிட்டதால் சைவ சமயத்துக்குச் சாதி இன்றியமையாத அடிப்படை என்பன போன்ற பல வகையான விபரீதப் பொருள்கள் காண்பதற்கு இக்கட்டுரையில் இடமில்லையென்பதையும், இவ்வரலாற்றைக் கிழித்துச் சின்னபின்னமாக்கி மனம் போனவாறெல்லாம் குறைகூறுதல் தவறென்பதையும் போலி ஆராய்ச்சிப் புலிகளின் கூரிய நகங்கட்குத் தெரிவிக்கின்றோம்.]

உள, உஅ, கூ0, கூஉ, கூரு, கூஎ-பாக்களின் குறிப்புக்களை ஊன்றி நோக்குக.

---

சோழநாட்டின் ஒரு பாங்கரிலுள்ளது மேற்காநாடு. அந்நாட்டில் ஆதனூர் என்னும் ஒரு திருப்பதி உண்டு. அத்திருப்பதியில் ஆதிதிராவிடர் மரபில் தோன்றியவர் **நந்தனார்** என்பவர்.

நந்தனார்க்கு மானிய நிலங்களிருந்தன. அவைகளின் விளைவு அவர்தம் வாழ்விற்குப் பயன்பட்டுவந்தது. சிவாலயங்களிலுள்ள பேரிகைக்குத் தோலும் வாரும், வீணைக்கும் யாழுக்கும் நரம்பும், சிவார்ச்சனைக்குக் கோரோசனையும் அவரால் கொடுக்கப்பட்டு வந்தன. அவரது சிந்தை சிவன் கழலிலேயே சேர்ந்து நிற்கும். திருக்கோயில்களின் வாயிற் புறத்தே நின்று ஆண்டவனைத் தொழுவது அப்பெரியாரது வழக்கம். தொழுகையில் அவருடைய நெஞ்சங் கசிந்து கசிந்து உருகும் ; கண்கள் நீர் சொரியும். அன்பால் அவர் மெய்ம்மறந்து ஆடுவார் ; பாடுவார்.

திருப்புன்கூர்ச் சிவலோகநாதனைக் கண்டு பணிசெய்தல் வேண்டும் என்னும் வேட்கை நந்தனார் பால் எழுந்தது. அவ்வேட்கையைத் தணிக்கை செய்ய அவர் திருப்புன்கூர் சென்றார் ; சென்று திருக்கோயில் வாயிலிலே நின்று, சிவலிங்கப் பெருமானை நேரே கண்டு தொழ விரும்பினார். அன்பர்கள் விரும்புமாறு அருள்புரியும் சிவபெருமான், தம்முன்னுள்ள இடபதேவரை விலகும்படி செய்து, நந்தனாருக்குக் காட்சி தந்தருளினார். அடியவர் பெருமான் அன்புடன் பணிந்து ஆனந்த முற்றார் ; பின்னை அவ்விடத்தில் ஒரு பள்ளத்தைக்கண்டு, அதைப் பெரிய திருக்குளமாக வெட்டித் திருப்பணி செய்து தமதூருக்குத்

திரும்பினார். அவர் வேறு பல திருப்பதிகட்கும் போந்து போந்து தமது வழித் தொண்டு செய்வார்.

ஒருநாள் நந்தனாரது சிந்தை சிதம்பரதரிசனத்தின்மீது சென்றது. சென்ற அன்றிரவு முழுவதும் அவர் உறங்கினாரில்லை. பொழுது புலர்ந்தது. சிதம்பரப் பித்து அவரை விட்டகலவில்லை. அவர் தில்லையை நினைந்து நினைந்து, "அந்தோ! தில்லை நண்ணினும் திருக்கோயிலுட் புகுந்து திருக்கூத்தைக் காணும் பேறு இக்குலத்துக்கு இல்லையே" என்று வருந்துவார்; "இஃதும் எம் பெருமான் திருவருள்" என்று போக்கொழிவார்; மேலும் மேலும் எழுங்காதலால் "நாளைப்போவேன்; நாளைப்போவேன்" என்று சொல்வார். இவ்வாறு பல நாட்கள் கழிந்தன. ஒருநாள் **திருநாளைப் போவார்** உறுதிகொண்டு தில்லை நோக்கிச் சென்று திருவெல்லையை அடைந்தார்.

அங்கே அவர், அந்தணர்கள் யாகசாலைகளையும், வேதம் ஓதும் இடங்களையும், மடங்களையும், பிறவற்றையுங் கண்டார்; அஞ்சினார்; அஞ்சித் திருவெல்லையைமட்டும் இரவு பகல் வலஞ் செய்வாராயினார்; செய்து செய்து ஒருநாள், "உள்நுழைவிற்கு இப்பிறவி தடையாக நிற்கிறதே; எவ்வழியில் திருக்கூத்தைக்கண்டு தொழுவது?" என்று நினைந்து நினைந்து, மனம் நொந்து நொந்து உறங்கிவிட்டனர். அன்பருளங் கோயில் கொண்ட தில்லைக்கூத்தன், நந்தனார் கனவில் தோன்றிப் புன்முறுவல் செய்து "இப்பிறவி ஒழிய நீ நெருப்பில் மூழ்கி வேதியர்களுடன் நம்முன் அணைவாய்" என்று திருவாய்மலர்ந்தருளினான்; மேலுந் தொடர்ந்து தில்லைவாழ் அந்தணர்கள் கனவில் தோன்றித் திருநாளைப் போவார் நிலையை அவர்கட்கு உணர்த்தி, எரி அமைக்குமாறு பணித்தருளினான்.

அந்தணர் பெருமக்கள் விழித்தெழுந்து, அச்சத்துடன் ஆலயத்திலே ஒருங்கு சேர்ந்து, ஆண்டவன் கட்டளையை நிறைவேற்ற உறுதிகொண்டு, திருநாளைப் போவாரிடஞ் சென்றார்கள்; சென்று, "ஐயரே! ஆண்டவன் ஆணைப்படி இங்கே வந்தோம்; உம்பொருட்டு எரி அமைக்கப்போகிறோம்" என்றார்கள். திருநாளைப்போவார் "உய்ந்தேன்; உய்ந்தேன்" என்று ஆண்டவன் திருவருளைப் போற்றினார்.

அந்தணர்கள் தென்மதிற் புறத்துத் திருவாயிலின் முன் தீ வளர்த்து, அதைத் திருநாளைப் போவார்க்குத் தெரிவித்தார்கள். திருநாளைப் போவார் தீக்குழியை அடைந்து, இறைவன் திருவடியை மனங்கொண்டு, அதை வலம் வந்து, நெருப்பில் மூழ்கினார். மூழ்கியதும் அவர்தம் மாயப் பொய்யுடலம் ஒழிந்தது. அவர் புண்ணியப் பொன்மேனி திகழும் முனிவராய்ப் பூணூலுஞ் சடைமுடியும் பொலிய எழுந்தார். அதுகண்டு அமரர்கள் மலர் மாரி சொரிந்தார்கள்; அந்தணர்கள் கைகூப்பித் தொழுதார்கள்; அடியவர்கள் மகிழ் வெய்தினார்கள்.

திருநாளைப்போவார், தில்லைவாழ் அந்தணர் முதலியவருடன் சென்று திருக்கோபுரத்தைக்கண்டு தொழுது பொன்னம்பலம் புகுந்தார். புகுந்ததும் அவர்தம் திருவுருவம் மறையவர்கட்கும் மற்றவர்கட்கும் புலப்படவில்லை. அவர்களெல்லாரும் அதிசயித்தனர். நடராஜப் பெருமான் திருநாளைப் போவார்க்குத் தமது திருவடிப் பேற்றை நல்கினார்.



# திருக்குறிப்புத்தொண்ட நாயனார் புராணம்



ஏயு மாறுபல் உயிர்களுக் கெல்லையில் கருணைத்
தாய னாள்தனி யாயின தலைவரைத் தழுவ
ஆயு நான்மறை போற்றநின் றருந்தவம் புரியத்
தூய மாதவம் செய்தது தொண்டைநன் னாடு. க

நன்மை நீடிய நடுநிலை ஒழுக்கத்து நயந்த
தன்மை மேவிய தலைமைசால் பெருங்குடி தழைப்ப
வன்மை †ஓங்கெயில் வளம்பதி பயின்றது வரம்பின்
தொன்மை மேன்மையில் ‡நிகழ்பெருந் தொண்டைநன் னாடு. உ

நற்றி றம்புரி பழையனூர்ச் §சிறுத்தொண்டர் நவைவந்
துற்ற போதுதம் உயிரையும் வணிகனுக் கொருகால்
சொற்ற மெய்ம்மையுந் ¶தூக்கிஅச் சொல்லையே காக்கப்
பெற்ற மேன்மையில் நிகழ்ந்தது பெருந்தொண்டை நாடு. ௩

---

க. ஏயுமாறு - இயையும்படி. தாயனாள் - உமாதேவியார். தனியாயின தலைவரை - ஏகாகிய சிவபெருமானை. ஆயும் - ஆராயும்.

உ. நயந்த - விரும்பிய. சால் - அமைந்த; மிக்க. எயில் - மதில். பயின்றது - பொருந்தியது.

௩. நற்றிறம் - நற்செயல்களை. சிறுத்தொண்டர் - வேளாளர்கள். நவை - குற்றம். சீர்தூக்கி. இப்பாட்டிற் போந்துள்ள கதையின் சாரம் வருமாறு :— ஒருவன் பரத்தையர் வயப்பட்டான். அவனை நல்வழிப்படுத்த அவன் மனைவி முயன்றாள். அவன் ஒரு சிறப்புக்குச் சென்ற வழியில் தன்னுடன் போந்த மனைவியைக் கொன்றான். அவள் நீலி என்னும் பெயராள். கொலைஞன் பின்னை இறந்து ஒரு வணிகனாகப் பிறந்தான். அவனுக்கு ஒருவித பழி யுளதென்று ஒரு பெரியார் கூறி, ஒரு வாளைத் தந்து, அவ்வாள் கையிலுள்ளவரை அப்பழியால் தீங்கு நேராதென்று சொற்றுச் சென்றனர். ஒருநாள் வணிகன் வாணிபத்தின்மேற் சென்றபோது, நீலி ஒரு மாயக் குழவியுடன் அவனைத் தொடர்ந்து பழையனூர் எழுபதின்மர்பா லடைந்து, "இவன் என் கணவன். என்னை வெறுத்துப் பரத்தையர் வயப்பட்டிருக்கிறான்" என்றாள். வணிகன் "இவள் பேய்" என்றான். அவள், குல முறைகளை ஒழுங்காகக் கூறி மாயக் குழவியைக் கீழேவிட்டாள். அக்குழவி செட்டிமீது விழுந்து விளையாடிற்று. அதைக்

**பா - ம்—** *தகைமைசால். †பொங்கெயில். ‡நிகழ்வது. §சிவத்தொண்டர். ¶ தூக்கிய சொல்லையே தூக்கி.

ஆணை யாமென நீறுகண் டடிச்சேரன் என்னும்
சேணு லாவுசீர்ச் சேரனார் திருமலை நாட்டு
வாணி லாவுபூண் வயவர்கள் மைத்துனக் கேண்மை
பேண நீடிய முறையது பெருந்தொண்டை நாடு. ௪

கறைவி ளங்கிய கண்டர்பாற் காதல்செய் முறைமை
நிறைபு ரிந்திட நேரிழை அறம்புரிந் ததனால்
பிறைபு ரிஞ்செயிற் பதிபயில் பெருந்தொண்டை நாடு
முறைமை யாமென உலகினில் மிகுமொழி உடைத்தால். ௫

---

கண்ட வேளாளர்கள் இருவரையும் கலந்து பேசுமாறு ஆங்குள்ள ஒரு மண்டபத்துட் போகும்படி கட்டளையிட்டார்கள். அவ்வேளையில் நீலி "இவன் கையில் வாளிருக்கிறது. அவ்வாளால் என்னைக் கொன்று விடுவான்" என்று நடுக்குற்றுக் கூறினாள். அதற்கு அவன் "இவள் பேய்; என் கையில் வாளிருத்தல் வேண்டும்" என்றான். அப்பொழுது வேளாளர்கள் "உன் உயிருக்கு எங்கள் உயிரைக் கொடுப்போம். வாளை எறிந்து அஞ்சாது செல்வாயாக" என்று உறுதி கூறினார்கள். வணிகன் நீலியுடன் மண்டபத்துள் நுழைந்தான். நீலி அவனைக் கிழித்துக்கொன்றாள். மீண்டும் நீலி, செட்டியின் தாய் போல வடிவங்கொண்டு வேளாளரை யடைந்து, "என் மகனைக் காணோம். அவன் இங்கே வந்தான் என்று கேள்வியுற்றேன்" என்று முறையிட்டாள். வேளாளர்கள் மண்டபத்தின் கதவைத் திறந்தார்கள். வணிகன் அங்கே மாண்டு கிடப்பதை அவர்கள் கண்டார்கள். பின்னே, அவர்கள் தாங்கள் கூறிய உறுதி மொழியைக் காக்கவேண்டித் தீ வளர்த்து அதில் இறங்கி உயிர் துறந்தார்கள்.

௪. ஆணை என்றது சக்தியை; திருநீறு பராசக்தியின் கூறு. "பராவணமாவது நீறு—ஞானசம்பந்தர். அடிச்சேரன் - கழறிற்றறிவார் புராணம் பார்க்க. சேண் உலாவு - நெடுந்தூரம் பரவிய; வான் வரை பரவிய என்னலுமாம். வாள்...பேண - ஒளி வீசும் அணிகளைப் பூண்ட வீரர்கள் மைத்துன உரிமை கொள்ள. இங்கே உள்ள சரித்திரக் குறிப்பு வருமாறு: சோழநாட்டில் ஒரு போது கலகம் நடந்தது. அவ்வேளையில் சிலர் நாலுபக்கங்களிலும் ஓடினர். அவருள் ஒரு பெண், தொண்டை நாட்டு வேளாளரிடத்தில் வளர்ந்துவந்தாள். கலகம் அடங்கிய பின்னை எல்லாரும் தத்தம் ஊர் போய்ச் சேர்ந்தனர். ஓரூரில் ஒரு பெண் மட்டும் எண்ணிக்கையில் குறைபட்டிருந்தாள். அவள் சுற்றத்தார் அவளைத் தேடித் தேடித் தொண்டை மண்டலத்தில் கண்டனர். அவளை வளர்த்த வேளாண் மக்கள் "இவளை நாங்கள் புதல்வியாகவே வளர்த்தோம்" என்று வரிசை முதலியன தந்தார்களாம். இதனால் சேரநாட்டுக்கும் தொண்டை நாட்டுக்கும் மைத்துனக்கேண்மை ஏற்பட்டதாம்.

௫. கறை......பால் - சிவபிரானிடம். நிறை புரிந்திட - முற்றும்படி; முறைமையாகிய சால்பை (சிவபிரான்) விரும்ப எனக்கொள்ளலுமொன்று. நேரிழை - உமையம்மையார். அறம் - முப்பத்திரண்டு அறம். பிறைதவழும் மதில்களையுடைய நகரங்கள் நெருங்கிய. அறமுறைமை.

தாவில் செம்மணி அருவியா றிழிவன சாரல்
பூவில் வண்டினம் புதுநற வருந்துவ புறவம்
வாவி நீள்கயல் வரம்பிற உகைப்பன மருதம்
நீவி நித்திலம் பரத்தியர் உணக்குவ நெய்தல். ௬

குறவர் பன்மணி அரித்திதை விதைப்பன குறிஞ்சி
கறவை ஆனிரை மானுடன் பயில்வன கானம்
பறவை தாமரை யிருந்திற வருந்துவ பழனம்
சுறவ முள்மருப் பணங்கயர் வனகழிச் சூழல். ௭

கோண்டல் வானத்தின் மணிசொரி வனகுல வரைப்பால்
தண்து ணர்க்கொன்றை பொன்சொரி வனதள வயற்பால்
வண்டல் முத்தநீர் மண்டுகால் சொரிவன வயற்பால்
கண்டல் முன்துறைக் கரிசொரி வனகலங் கடற்பால். ௮

தேனி றைந்தசெந் தினையிடி தருமலைச் சீறூர்
பானி றைந்தபுற் பதத்தன முல்லைநீள் பாடி
தூநெ லன்னநெய் கன்னலின் கனியதண் டுறையூர்
மீனி றைந்தபே ருணவின வேலைவைப் பிடங்கள். ௯

---

௬. மலைச்சாரல்களினின்றும் குற்றமற்ற அழகிய மணிகளுடன் அருவி ஆறுகள் இறங்குகின்றன. புறவம் - முல்லை நிலங்களில். புதுநறவு - புதிய தேனை. வாவி......உகைப்பன - தடாகங்களிலுள்ள நீண்ட கயல் மீன்கள் வரம்புகள் இற்று விழப்பாய்கின்றன. பரத்தியர் - நெய்தல் நிலப் பெண்களால். நித்திலம் - முத்துக்கள். நீவி - துடைத்து; கழுவி. உணக்குவ - உலர்த்தப்படுகின்றன.

௭. குறிஞ்சி - குறிஞ்சி நிலங்களில். குறவர்...விதைப்பன - குறவர்களால் பல மணிகளைக் களைந்து பண்படுத்தப்பெற்ற நிலத்தில் தினைகள் விதைக்கப்படும். கானம் - முல்லை நிலங்களில். கறவைப் பசுக் கூட்டங்கள் மான்களுடன் நெருங்கியிருக்கும். பழனம் - மருத நிலங்களில். இறவு அருந்துவ - இறால் மீன்களை யுண்ணும். கழிச்சூழல் - நெய்தல் நிலங்களில். சுறவ...அயர்வன - சுறா மீன் முள் தெய்வத்துக்கு அறிகுறியாக வைத்துத் திருவிழாக்கள் செய்யப்படும். "...... சினைச் சுறவின் கோடு நட்டு - மனைச் சேர்த்திய வல்லணங்கினான்......" —பட்டினப்பாலை: 86-87.

௮. குலவரைப்பால் - கூட்டமாகிய மலையினிடத்து. மணி - மழைத்துளிகளை. தளவு அயற்பால் - முல்லை நிலப்பக்கங்களில். தண்துணர் - குளிர்ந்த பூங்கொத்துக்களையுடைய. பொன் - பொன்போன்ற மலர்களை. நீர் மண்டுகால் - நீர் நிறைந்து விரைந்து செல்லும் வாய்க்கால்கள். வண்டல் முத்தம் - சிறுபெண்கள் விளையாட்டிற் சிந்திய முத்துக்களை. கலம் - கப்பல்கள். கண்டல் முன்துறை - தாழைகளை முன்னாக வுடைய துறைகளில். கரி - யானைகளை.

௯. பாடி - முல்லை நிலத்தூருக்குப் பெயர். புற்பதத்தன - புல்லரிசிச் சோற்றையுடையன. தண்துறை ஊர் - குளிர்ந்த நீர்த் துறைகளை யுடைய மருத

குழல்செய் வண்டினங் குறிஞ்சியாழ் முரல்வன குறிஞ்சி
முழவு கார்கொள முல்லைகள் முகைப்பன முல்லை
மழலை மென்கிளி மருதமர் சேக்கைய மருதம்
நிழல்செய் கைதைசூழ் நெய்தலங் கழியன நெய்தல். ௧௦

மல்கும் அப்பெரு நிலங்களில் வரைபுணர் குறிஞ்சி
எல்லை எங்கணும் இறவுளர் ஏனல்முன் விளைக்கும்
பல்பெ ரும்புனம் பயில்வன படர்சிறைத் தோகை
சொல்லும் அப்புனங் காப்பவுஞ் சுரிகுழல் தோகை. ௧௧

அங்கண் வான்மிசை அரம்பையர் கருங்குழற் சுரும்பு
பொங்கு பூண்முலைக் கொடிச்சியர் குழன்மூழ்கிப் போகாச்
செங்கண் மால்விடை யார்திருக் காளத்தி என்னும்
மங்குல் சூழ்வரை நிலவிய வாழ்வினுல் மல்கும். ௧௨

பேறு வேறுசூழ் இமையவர் அரம்பையர் பிறந்து
மாறில் வேடரும் மாதரு மாகவே வணங்கும்
ஆறு சூழ்சடை அண்ணலார் திருவிடைச் சுரமும்
கூறு மேன்மையின் மிக்கதந் நாட்டுவண் குறிஞ்சி. ௧௩

---

நிலத்தூர்கள். அன்னம், நெய், கன்னல் (கரும்பு), இனிய கனி ஆகிய இவைகளை யுடையன. வேலை வைப்பிடங்கள் - நெய்தல் நிலத்தூர்கள்.

௧௦. குறிஞ்சி நிலத்தில். குழல் - கூந்தல்; புல்லாங் குழலுமாம். முரல்வன - ஒலிக்கின்றன. முழவு - தயிர்த்தாழி; முழவுப்பறையுமாம். கார்கொள - மேகம்போல் முழங்க. முல்லைகள் முகைப்பன - முல்லைகள் அரும்புகின்றன. மருது அமர் சேக்கைய - மருத மரங்களில் அமருங் கூடுகளை யுடையன; "கிளி வளர் பூ மருதணிந்து"—சிந்தாமணி ௯௪. கைதை - தாழை. நெய்தலங்கழியன - நெய்தற் பூக்கள் பொருந்திய கழி நிலத்தை யுடையன.

௧௧. மல்கும் - நிறைந்த. வரைபுணர் - மலைசார்ந்த. இறவுளர் - வேடர்கள். ஏனல் - தினையை. புனங்களில் மயில்கள் இருக்கின்றன. சுரிகுழல் தோகை - சுருண்ட கூந்தலையுடைய பெண்கள்.

௧௨. அங்கண் - அழகிய இடமகன்ற. சுரும்பு - வண்டுகள். கொடிச்சியர் - வேட்டுவப் பெண்களின். தெய்வப்பெண்கள் கூந்தலிலுள்ள வண்டுகள் வேடப் பெண்களின் கூந்தலில் வீழ்ந்து மூழ்கி மண மிகுதியால் போகாத. மங்குல் - மேகம்.

௧௩. அடையும் பேற்றை வேறு வழியில் விரும்பும் இமையவர் (தேவர்கள்) அரம்பையர் முறையே வேடர்களாகவும் வேடப் பெண்களாகவும் பிறந்து.

பா - ம்—*படர்வன பயில்சிறைத்.

அம்பொன் வார்குழற் கொடிச்சிய ருடன்அர மகளிர்
வம்பு லாமலர்ச் சுனைபடிந் தாடுநீள் வரைப்பின்
உம்பர் நாயகர் திருக்கழுக் குன்றமும் உடைத்தால்
கொம்பர் வண்டுசூழ் குறிஞ்சிசெய் தவங்குறை உளதோ. ௧௪

கோல முல்லையும் குறிஞ்சியும் அடுத்தசில் லிடங்கள்
நீல வாட்படை நீலிகோட் டங்களும் நிரந்து
கால வேனிலிற் கடும்பகற் பொழுதினைப் பற்றிப்
பாலை யுஞ்சொல லாவன வுளபரல் முரம்பு. ௧௫

சோலும் எல்லையின் புறத்தன துணர்ச்சுரும் பலைக்கும்
பல்பெ ரும்புனற் கானியா றிடையிடை பரந்து
கொல்லை மெல்இணர்க் குருந்தின்மேற் படர்ந்தபூம் பந்தர்
முல்லை மென்புதல் முயலுகைத் தடங்குநீள் முல்லை. ௧௬

பிளவு கொண்டதன் மதிநுதற் பேதையர் எயிற்றைக்
களவு கொண்டது தளவெனக் களவலர் தூற்றும்
அளவு கண்டவர் குழல்நிறங் கனியும்அக் களவைத்
தளவு கண்டெதிர் சிரிப்பன தமக்குமுண் டென்று. ௧௭

---

௧௪. அம்பொன்வார் - அழகிய பொன் நிறம் ஒழுகும். அரமகளிர் - தெய்வப் பெண்கள். வம்பு உலா - மணங் கமழும். வரைப்பின் - இடங்களையுடைய. கொம்பர் - பூங்கொம்புகளிடத்து.

௧௫. நீலி கோட்டங்களும் - துர்க்கைக் கோயில்களும். நிரந்து - பரம்பி. பரல் முரம்பு - பருக்கைக் கற்களையுடைய மேட்டு நிலங்கள். பாலைக்கு நிலமின்மை தோன்றப் "பாலையுஞ் சொலலாவன உள" என்றார்.

௧௬. துணர்ச்சுரும்பு - பூங் கொத்துக்களிலுள்ள வண்டுகளை. கான்யாறு - காட்டாறுகள். தளிர்களையுடைய குருந்த மரங்களின்மீது. புதல் - சிறு தூறுகளிலுள்ள. கான்யாறுகள் பரந்து முயல்களை உகைத்து (தாமும் பெருக்கினின்றும்) அடங்கும். கான்யாறுகள் பரத்தலால் முயல்கள் உகைத்துத் தங்களைக் காத்தற்குரிய இடங்களில் அடங்கும் என்னலும் ஒன்று. உகைத்து - ஓடி; எழுந்து.

௧௭. பிளவு..........எயிற்றை - பிறைபோன்ற நெற்றியை யுடைய இடைச்சியர்களின் பற்களை. களவு கொண்டன என்று களாச்செடிகள் அலர் தூற்றும். அவர் குழல்நிறம் கனியும் - அப்பெண்களின் கூந்தல் நிறம்போலப் பழுத்துள்ள. (அக்களவு) தமக்கும் (களாச்செடிகட்கும்). அலர் தூற்றல் - பழித்தல், மலர் சொரிதல். சிரித்தல் - நகைத்தல், பூத்தல். தளவு - முல்லை, அரும்பு. களவு - களாப்பழம்.

மங்கை யர்க்குவாள் விழியிணை தோற்றமான் குலங்கள்
எங்கும் மற்றவ ரிடைக்கிடை மலர்க்கொடி எங்கும்
அங்கண் முல்லையின் தெய்வமென் றருந்தமிழ் உரைக்கும்
செங்கண் மால்தொழுஞ் சிவன்மகிழ் திருமுல்லை வாயில். ௧௮

நீறு சேர்திரு மேனியர் நிலாத்திகழ் முடிமேல்
மாறில் கங்கைதான் அவர்க்குமஞ் சனந்தர அணைந்தே
ஊறு நீர்தரும் ஒளிமலர்க் கலிகைமா நகரை
வேறு தன்பெரு வைப்பென விளங்குமா முல்லை. ௧௯

வாச மென்மலர் மல்கிய முல்லைசூழ் மருதம்
வீசு தெண்டிரை நதிபல மிக்குயர்ந் *தோடிப்
பாச டைத்தடந் தாமரைப் பழனங்கள் மருங்கும்
பூசல் வன்கரைக் குளங்களும் ஏரியும் புகுவ. ௨0

துங்க மாதவன் சுரபியின் திருமுலை சொரிபால்
பொங்கு தீர்த்தமாய் நந்திமால் வரைமிசைப் போந்தே
அங்கண் நித்திலம் சந்தனம் அகிலொடு மணிகள்
பங்க யத்தடம் நிறைப்பவந் திழிவது பாலி. ௨௧

பிள்ளை தைவரப் பெருகுபால் சோரிமுலைத் தாய்போல்
மள்ளர் வேனிலின் மணற்றிடர் பிசைந்துகை வருட
வெள்ள நீரிரு மருங்குகால் வழிமிதந் தேறிப்
பள்ள நீள்வயல் பருமடை உடைப்பது பாலி. ௨௨

---

௧௮. "மாயோன்மேய காடுறை உலகமும்"—தொல்காப்பியம்: அகம். இ. இடைக்கு இடை - இடைகளுக்குத் தோற்ற. திருமுல்லைவாயில் என்னுந் திருப்பதி.

௧௯. முல்லைநிலம். திருமஞ்சனம். கலிகைமாநகர் - திருவூறல்: இது தக்கோலம் என்று வழங்கப்படுகிறது; இங்கே இடபதேவர் வாயில் நீர் ஒழுகிய வண்ண மிருக்கும்.

௨0. பாசடை.........மருங்கும் - பசிய இலைகள் பொருந்திய பெரிய தாமரை மலர்களையுடைய வயல்களின் பக்கங்களிலும். பூசல்-அலைகள் மோதும்.

௨௧. துங்க மாதவன் சுரபியின் - வசிட்ட முனிவரது காமதேனுவின். அங்கண் நித்திலம் - அவ்விடத்துள்ள முத்துக்களையும். பங்கயத்தடம் - தாமரைத் தடாகங்கள். பாலி - பாலாறு.

௨௨. தைவர - தடவ. மள்ளர்-உழவர்கள். மணல் திடர் - மணல்திட்டைகளை. கைவருட - கையால் தடவ. "சரவெனும் பெயருடைத் தடங்கொள் வெம்முலைக் குரைபுனற் கன்னி"—சிந்தாமணி: ௬௧. "சரயுவென்பது தாய்முலை யன்னது........."—கம்ப இராமாயணம்: பால. ஆற்று. ௧௨.

பா - ம்—*ஓங்கி.

அனைய வாகிய நதிபரந் தகன்பணை மருங்கில்
கனைநெ டும்புனல் நிறைந்துதிண் *கரைப்பெருங் குளங்கள்
புனையி ருங்கடி மதகுவாய் திறந்திடப் புறம்போய்
வினைஞ ரார்ப்பொலி எடுப்பநீர் வழங்குவ வியன்கால். ௨௩

மாறில் வண்பகட் டேர்பல நெருங்கிட வயல்கள்
சேறு செய்பவர் செந்நெலின் வெண்முளை சிதறி
நாறு வார்ப்பவர் பறிப்பவர் நடுபவ ரான
வேறு பல்வினை யுடைப்பெருங் கம்பலை மிகுமால். ௨௪

வரும்பு னற்பெருங் கால்களை மறித்திட வாளை
பெருங்கு லைப்பட விலங்குவ பிறங்குநீர்ப் பழனம்
நெருங்கு சேற்குல முயர்த்துவ நீள்கரைப் படுத்துச்
சுருங்கை நீர்வழக் கறுப்பன பருவரால் தொகுதி. ௨௫

தளைத்த டம்பணை எழுந்தசெந் தாமரைத் தவிசின்
இளைத்த சூல்வளை கண்படுப் பனஇடை எங்கும்
விளைத்த பாசொளி விளங்குநீள் விசும்பிடை ஊர்கோள்
வளைத்த மாமதி போன்றுள மருத†நீர் வைப்பு. ௨௬

ஓங்கு செந்நெலின் புடையன உயர்கழைக் கரும்பு
பூங்க ரும்பயல் மிடைவன பூகமப் பூகப்

---

௨௩. பணை - வயல்களின். கனை - ஒலிக்கின்ற. புனை இருங்கடி - கட்டப்பட்ட பெரிய காவலையுடைய. வினைஞர் - உழவர்கள். வியன் - அகன்ற.

௨௪. பகட்டு - எருமைகள் பூட்டிய. கம்பலை - ஆரவாரம்; பேரொலி.

௨௫. வாளை மீன்கள் மறித்திட (குறுக்கிட்டுத் தடுக்க). பெருங்குலைப்பட விலங்குவ - பெரிய கரைகள் உடைந்து விலங்குவன. பிறங்கும் - ஒளிரும். பழனம் - வயல்களில். சேல்மீன்கள் (ஒன்றன்மேல் ஒன்றாகப்) படுத்து நீண்ட கரைகளை உயர்த்துவன. பருவரால் மீன்களின் கூட்டம். சுருங்கைநீர் வழக்கு அறுப்பன - மதகுகளினின்றும் நீர் வருதலை அடைப்பன.

௨௬. தளை தடம்பணை - வரம்புகளையுடைய அகன்ற வயல்களில். தவிசின் - பீடத்தில்; படுக்கையில். சூல் இளைத்த வளை - கருப்பத்தால் இளைத்த சங்குகள். விளைத்த பாசொளி - முற்றிய பச்சையொளி. "வெப்புள் விளைந்த வேங்கைச் செஞ்சுவல்"—**புறம்: ௬௨0**; "விளைவமை தயிரொடு"—**சிந்தாமணி: ௯௨௨**. ஊர்கோள்-பரிவேடம்; சுற்றியது; "கட்டழற்கதிரை ஊர்கோள் வளைத்தவா வளைத்துக்கொண்டார்"—**சிந்தாமணி: ௧௧௩௬**; "ஊர்கோள் மதியை உடேச்சூழ்ந் தாங்கு"—**உதையணன் கதை.** மாமதி - பூரணச்சந்திரன். தாமரை இலை - விசும்பு; தாமரைப்பூ - ஊர்கோள்; வளை - மாமதி.

௨௭. புடையன - பக்கத்தன. அப்பூங்கரும்பு அயல். மிடைவன - நெருங்கியிருப்பன. பூகம் - கமுக மரங்கள். பாங்கு - பக்கம். பைங்கதலி - பசிய வாழைமரங்களும். தூங்கு - தொங்கும். தீம் - இனிய. சூதம் - மாமரங்களும்.

**பா - ம்**—*கரைப்பொருங். †நீள்.

பாங்கு நீள்குலைத் தெங்குபைங் கதலிவண் பலவு
தூங்கு தீங்கனிச் சூதநீள் வேலிய சோலை. ௨௭

நீடு தண்பணை உடுத்தநீள் மருங்கின, நெல்லின்
கூடு துன்றிய இருக்கைய, விருந்தெதிர் கொள்ளும்
பீடு தங்கிய பெருங்குடி மனையறம் பிறங்கும்
மாடம் ஓங்கிய மறுகின மல்லல்மூ தூர்கள். ௨௮

தொல்லை நான்மறை முதற்பெருங் கலையொலி துவன்றி
இல்ல றம்புரிந் தாகுதி வேள்வியில் எழுந்த
மல்கு தண்புகை, மழைதரு முகிற்குலம் பரப்பும்
செல்வம் ஓங்கிய திருமறை யவர்செழும் பதிகள். ௨௯

தீது நீங்கிடத் தீக்கலி யாம்அவு ணற்கு
நாதர் தாம்அருள் புரிந்தது நல்வினைப் பயன்செய்
மாதர் தோன்றிய மரபுடை மறையவர் வல்லம்
பூதி சாதனம் போற்றிய பொற்பினால் விளங்கும். ௩௦

அருவி தந்தசெம் மணிகளும், புறவில்ஆய் மலரும்
பருமி ஓடைகள் நிறைந்திழி பாலியின் கரையின்
மருவு கங்கைவாழ் சடையவர் மகிழ்ந்தமாற் பேறும்
பொருவில் கோயிலும் சூழ்ந்ததப் †பூம்பணை மருதம். ௩௧

விரும்பு மேன்மையென் பகர்வது விரிதிரை நதிகள்
அருங்க ரைப்பயில் சிவாலயம் அனேகமும் அணைந்து
பருங்கை யானையை உரித்தவர் இருந்தவப் பாசூர்
மருங்கு சூழ்தவம் புரிந்ததன் றேமற்ற மருதம். ௩௨

---

௨௮. வயல்கள் சூழ்ந்த பக்கங்களை யுடையன. நெற்குதிர்கள் நெருங்கிய இருப்பிடங்களை யுடையன. பீடு - பெருமை. மறுகின - தெருக்களை உடையன. மல்லல் - வளப்பமுடைய.

௩௦. தீக்கலியாம் அவுணற்கு - தீக்காலி என்னும் ஓர் அசுரனுக்கு. புத்திரப் பேறு கருதித் தவங் கிடந்த ஒரு மறையவனுக்குச் சிவபெருமான் புத்திரிப் பேறு அருள் செய்தமை இங்கே குறிக்கப்பட்டிருக்கிறது.

௩௧. அருவி - மலை அருவி. புறவில் - முல்லை நிலத்து. ஆய் - மெல்லிய; அழகிய. பருமி - பலவாறு அணிந்து. மணிகளையும் மலர்களையும் அணிந்து என்க. பொருவில் - ஒப்பற்ற. பணை - வயல்களையுடைய.

௩௨. பிற தலங்களின் சிவகலைகள் ஒடுங்கும் பதிகள் இரண்டு. ஒன்று தில்லை; மற்றொன்று திருப்பாசூர். இரவில் தில்லையிலும் பகலில் திருப்பாசூரிலும் அக்கலைகள் ஒடுங்கிப் பின்னே பரவும். "பகலெலாம் பாசூர்மேய"... முதலிய திருவாக்குகளை நோக்குக.

பா - ம்—*சாதனர். †புறம்பணை.

பூம ருங்புனல் வயற்களம் பாடிய பொருநர்
தாம ருங்கிளை யுடன்தட மென்மலர் மிலைந்து
மாம ருங்குதண் ணீழலின் மருதயாழ் முரலும்
காமர் தண்பணைப் புறத்தது கருங்கழி நெய்தல். ௩௩

தூய வெண்டுறைப் பரதவர் தொடுப்பன வலைகள்
சேய நீள்விழிப் பரத்தியர் தொடுப்பன செருந்தி
ஆய பேரளத் தளவர்கள் அளப்பன உப்பு
சாயன் மெல்லிடை அளத்தியர் அளப்பன தாளம். ௩௪

கோடுவி ளைத்தொழில் நுளையர்கள் கொடுப்பன கொழுமீன்
படும ணற்கரை நுளைச்சியர் கொடுப்பன பவளம்
தொடுக டற்சங்கு துறையவர் குளிப்பன அவர்தம்
வடுவ கிர்க்கண்மங் கையர்குளிப் பனமணற் கேணி. ௩௫

சுழிப்பு னற்கடல் ஓதமுன் சூழ்ந்துகொண் டணிய
வழிக்க ரைப்பொதிப் பொன்னவிழ்ப் பனமலர்ப் புன்னை
விழிக்கு நெய்தலின் விரைமலர்க் கட்சுரும் புண்ணக்
†கழிக்க ரைப்பொதி சோறவிழ்ப் பனமடற் கைதை. ௩௬

காயல் வண்கரைப் புரைநெறி அடைப்பன ‡கனிமுள்
சேய தண்ணறுஞ் செழுமுகை செறியுமுண் டகங்கள்
ஆய நுண்மணல் வெண்மையை மறைப்பன அன்னம்
தாய முன்றுறைச் சூழல்சூழ் ஞாழலின் தாது. ௩௭

---

௩௩. பூக்கள் மருவும். களம் - நெற்போர்க்களம். பொருநர் - உழவோர். மிலைந்து - சூடி. மா - மாமரத்தின். காமர் - விரும்பத்தக்க; அழகிய. பணை - மருதநிலத்தின்.

௩௪. தூய வெண்மணற் றுறைகளில். பரதவர்-பட்டினவர். சேய - சிவந்த. செருந்திப் பூக்கள். அப்பெரு நிலத்துள்ள அளங்களில். தாளம் - முத்துக்கள்.

௩௫. படு - மிக்க; படுத்த, படிந்த எனினுமாம். துறையவர் - கரையார்களால். சங்குகள் குளிக்கப்படுவன. வடுவகிர் - மாவடுவின் பிளவினை யொத்த.

௩௬. சுழிப்புனல் - சுழி நீரையுடைய. கடல் ஓதம் - கடலின் வாய் வெள்ளம். கரை வழியிலுள்ள புன்னை மரங்கள், பொன்போன்ற மலர்களை அவிழ்ப்பன. விழிக்கும் - மலரும். நெய்தலின் வாசனை மலர்க்களை (தேனை) சுரும்பு (வண்டுகள்) உண்ண. மடற்கைதை - மடல்களையுடைய தாழைகள்.

௩௭. காயல் - கழி; உப்பளமுமாம். புரைநெறி - துவாரவழி. முண்டகங்கள் - தாழைகள்; வெள்ளத்தில் வந்து கரையை யடைக்கும் தாமரைகள்

பா - ம்—*மென்னடை. †கழிக்கடைப். ‡கயல்முள்.

வாம்பெ ருந்திரை வளாகமுன் குடிபயில் வரைப்பில்
தாம்ப ரப்பிய கயல்களின் விழிக்கயல் தவிரக்
காம்பி னேர்வருந் தோளியர் கழிக்கயல் விலைசெய்
தேம்பொ திந்தசின் மழலைமென் மொழியசெவ் வழியாழ். ௩௯

மருட்கொ டுங்தொழில் மன்னவன் இறக்கிய வரியை
நெருக்கி முன்திரு வொற்றியூர் நீங்கவென் றெழுதும்
ஒருத்தர் தம்பெருங் கோயிலின் ஒருபுறஞ் சூழ்ந்த
திருப்ப ரப்பையும் உடையதத் திரைக்கடல் வரைப்பு. ௩௯

மெய்த ரும்புகழ்த் திருமயி லாபுரி விரைசூழ்
மொய்த யங்குதண் பொழில்திரு வான்மியூர் முதலாப்
பைத ரும்பணி அணிந்தவர் பதியெனைப் பலவால்
நெய்தல் எய்தமுன் செய்தஅந் நிறைதவம் சிறிதோ. ௪0

கோடு கொண்டெழும் திரைக்கடற் பவளமென் கொழுந்து
மாடு மொய்வரைச் சந்தனச் சினைமிசை வளரும்
நீடு நெய்தலும் குறிஞ்சியும் புணர்நிலம் பலவால்
ஆடு நீள்கொடி மாடமா மல்லையே அனைய. ௪௧

மலைவி ழிப்பன எனவயற் சேல்வரைப் பாறைத்
தலையு கைப்பவும் தளைச்செறு விடைநெடுங் கருமான்

---

என்னலுமாம். ஆய - அக்கடற்கரைக்கணுள்ள; அழகிய எனினுமாம். அன்னங்கள் தாவிய துறைகளின் முன்னுள்ள இடங்களைச் சூழ்ந்த ஞாழற்பூக்களின் தாதுக்கள்.

௩௯. வாம்...வரைப்பில் - தாவுகின்ற பெரிய அலைகளையுடைய கரையிடத்தின் முன்னே குடிகளுள்ள எல்லையில். கயல்மீன்களிலே. விழிக்கயல்-விழிகளாகிய கயல்மீன்கள். காம்பி னேர் வரும் - மூங்கில் போன்ற. கழிக்கயல் - கழிக்கணுள்ள கயல்மீன்களை. தேம் - தேன். சில வான மழலை....செவ்வழியாழ் - செவ்வழி யாழ்ப்பண்; இப்பண் நெய்தலுக்குரியது.

௩௯. இறக்கிய - சுமத்திய. திருப்பரப்பையும் - திருஎல்லையையும். கடல் வரைப்பு - நெய்தல் நிலம்.

௪0. விரை......பொழில் - மணங்கமழ நெருங்குதலைக்கொண்ட சோலைகளையுடைய. பைதரும்பணி அணிந்தவர் - படத்தையுடைய பாம்பை யணிந்த சிவபெருமான் எழுந்தருளியுள்ள. எனைய பலவால்.

௪௧. கோடு - சங்கு; எறிதலுமாம்; பவளத்துடன் சேர்த்துக் கொம்பெனக் கோடலுமொன்று. மாடுமொய்வரை - பக்கத்தே நெருங்கிய மலைகளிலுள்ள. சினை - கிளை. மல்லை - மாவலிபுரம்.

௪௨. சேல் மீன்கள் மலையின் பாறைகளிடத்தில் எழும்பிப்பாயவும். அம்மலைகளிலுள்ள கருமான்கள். தளைச்செறுவிடை - வரம்புகளையுடைய வயல்களில். எருமை பூட்டிய ஏரை. பணை - மருதம்.

பா - ம்—*வைப்பு.

கலைகு திப்பன கரும்பகட் டேர்நிகர்ப் பவுமாய்
அலைபு னற்பணை குறிஞ்சியோ டணைவன அனேகம். ௪௨

புணர்ந்த ஆனிரைப் புறவிடைக் குறுமுயல், பொருப்பின்
அணைந்த வான்மதி முயலினை இனமெ௵ அணைந்து
மணங்கொள் கொல்லையில் வரகுபோர் மஞ்சன வரைக்கார்
இணைந்து முல்லையுங் குறிஞ்சியுங் கலப்பன எங்கும். ௪௩

கவரு மீன்குவை கழியவர் கானவர்க் களித்துச்
சிவலும் சேவலும் மாறியும் சிறுகழிச் சியர்கள்
அவரை ஏனலுக் கெயிற்றியர் பவளமுத் தளந்தும்
உவரி நெய்தலும் கானமும் கலந்துள ஒழுக்கம். ௪௪

அயல் நறும்புற வினில்இடைச் சியர்அணி நடையும்
வியன் நெடும்பணை உழத்தியர் சாயலும் விரும்பி
இயலும் அன்னமும் தோகையும் எதிர்எதிர் பயில
வயலும் முல்லையும் இயைவன பலவுள மருங்கு. ௪௫

மீளும் †ஓதமுன் கொழித்தவெண் தாளமும் கமுகின்
பாளை உக்கவும் விரவலிற் பரத்தியர் பணைமென்
தோளு ழத்தியர் மகளிர்மா ருடிமுன் தொகுக்கும்
நீளு நெய்தலும் மருதமும் கலந்துள நிலங்கள். ௪௬

ஆய நானிலத் தமைதியில் தத்தமக் கடுத்த
மேய செய்தொழில் வேறுபல் குலங்களின் விளங்கித்
தீய என்பன கனவிலும் நினைவிலாச் சிந்தைத்
தூய மாந்தர்வாழ் தொண்டைநாட் டியல்புசொல் வரைத்தோ. ௪௭

---

௪௩. பசுக்கூட்டங்கள் சேர்ந்த முல்லை நிலத்துள்ள குறுமுயலானது, மலையில் சேர்ந்த வான்மதிக்கணுள்ள முயலினை. போரில். வரைமஞ்சனக்கார்-மலையிலுள்ள நீர் கொண்ட மேகங்கள். அணைந்தும் இணைந்தும் கலப்பன.

௪௪. கழியவர் - பரதவர். சிவலும் - கவுதாரியையும். ஏனலுக்கு - தினைக்கும். எயிற்றியர் - கானப் பெண்கள். உவரி - கடற்கரையிலுள்ள. ஒழுக்கம் - இடம்; ஆகுபெயர் - பழைய குறிப்புரை.

௪௫. பக்கத்திலுள்ள நல்ல முல்லைநில இடைச்சியர்களின். அகன்று நீண்ட மருதநில உழத்தியர்களின். இயலும் - இசையும். பயில - நெருங்க. வயலும் - மருதமும்.

௪௬. மீளும்......தாளமும் - கரையிற் சென்று திரும்பும் வாய்வெள்ளம் விடுத்த வெண்முத்துக்களும். கமுகின்பாளை சிந்திய பூவும். விரவலின்-கலத்தலால். பணை - மூங்கிலை யொத்த. மாறாய்ச் சேர்த்து விளையாடி.

௪௭. " திருத்தொண்டை நன்னாட்டு நானிலத்தைத் திணைவளமுந் தெரித்துக் காட்ட - மருத்தொண்டை வாய்ச்சியர்சூழ் குன்றைநகர்க் குலக் கவியே வல்லா னல்லால் - கருத்தொண்ட ரெம்போல்வா ரெவ்வாறு தெரிந்

பா - ம்—*மஞ்சென. †ஓதமங்.

வாம்பெ ருந்திரை வளாகமுன் குடிபயில் வரைப்பில்
தாம்ப ரப்பிய கயல்களின் விழிக்கயல் தவிரக்
காம்பி னேர்வருந் தோளியர் கழிக்கயல் விலைசெய்
தேம்பொ திந்தசின் மழலைமென் மொழியசெவ் வழியாழ். ௩௮

மருட்கொ டுந்தொழில் மன்னவன் இறக்கிய வரியை
நெருக்கி முன்திரு வொற்றியூர் நீங்கவென் றெழுதும்
ஒருத்தர் தம்பெருங் கோயிலின் ஒருபுறஞ் சூழ்ந்த
திருப்ப ரப்பையும் உடையதத் திரைக்கடல் வரைப்பு. ௩௯

மெய்த ரும்புகழ்த் திருமயி லாபுரி விரைசூழ்
மொய்த யங்குதண் பொழில்திரு வான்மியூர் முதலாப்
பைத ரும்பணி அணிந்தவர் பதியெனைப் பலவால்
நெய்தல் எய்தமுன் செய்தஅந் நிறைதவம் சிறிதோ. ௪0

கோடு கொண்டெழும் திரைக்கடற் பவளமென் கொழுந்து
மாடு மொய்வரைச் சந்தனச் சினைமிசை வளரும்
நீடு நெய்தலும் குறிஞ்சியும் புணர்நிலம் பலவால்
ஆடு நீள்கொடி மாடமா மல்லையே அனைய. ௪௧

மலைவி ழிப்பன எனவயற் சேல்வரைப் பாறைத்
தலையு கைப்பவும் தளைச்செறு விடைநெடுங் கருமான்

என்னலுமாம். ஆய - அக்கடற்கரைக்கணுள்ள; அழகிய எனினுமாம். அன்னங்கள் தாவிய துறைகளின் முன்னுள்ள இடங்களைச் சூழ்ந்த ஞாழற்பூக்களின் தாதுக்கள்.

௩௮. வாம்...வரைப்பில் - தாவுகின்ற பெரிய அலைகளையுடைய கரையிடத்தின் முன்னே குடிகளுள்ள எல்லையில். கயல்மீன்களிலே. விழிக்கயல்-விழிகளாகிய கயல்மீன்கள். காம்பி னேர் வரும் - மூங்கில் போன்ற. கழிக்கயல் - கழிக்கணுள்ள கயல்மீன்களை. தேம் - தேன். சில வான மழலை....செவ்வழி யாழ் - செவ்வழி யாழ்ப்பண்; இப்பண் நெய்தலுக்குரியது.

௩௯. இறக்கிய - சுமத்திய. திருப்பரப்பையும் - திருஎல்லையையும். கடல் வரைப்பு - நெய்தல் நிலம்.

௪0. விரை......பொழில் - மணங்கமழ நெருங்குதலைக்கொண்ட சோலைகளையுடைய. பைதரும்பணி அணிந்தவர் - படத்தையுடைய பாம்பை யணிந்த சிவபெருமான் எழுந்தருளியுள்ள. எனைய பலவால்.

௪௧. கோடு - சங்கு; எறிதலுமாம்; பவளத்துடன் சேர்த்துக் கொம்பெனக் கோடலுமொன்று. மாடுமொய்வரை - பக்கத்தே நெருங்கிய மலைகளிலுள்ள. சினை - கிளை. மல்லை - மாவலிபுரம்.

௪௨. சேல் மீன்கள் மலையின் பாறைகளிடத்தில் எழும்பிப்பாயவும். அம் மலைகளிலுள்ள கருமான்கள். தளைச்செறுவிடை - வரம்புகளையுடைய வயல்களில். எருமை பூட்டிய ஏரை. பணை - மருதம்.

பா - ம்—*வைப்பு.

கலைகு திப்பன கரும்பகட் டேர்கிகர்ப் பவுமாய்
அலைபு னற்பணை குறிஞ்சியோ டணைவன அனேகம். ௪௨

புணர்ந்த ஆனிரைப் புறவிடைக் குறுமுயல், பொருப்பின்
அணைந்த வான்மதி முயலினை இனமென அணைந்து
மணங்கொள் கொல்லையில் வரகுபோர் *மஞ்சன வரைக்கார்
இணைந்து முல்லையுங் குறிஞ்சியுங் கலப்பன எங்கும். ௪௩

கவரு மீன்குவை கழியவர் கானவர்க் களித்துச்
சிவலும் சேவலும் மாறியும் சிறுகழிச் சியர்கள்
அவரை ஏனலுக் கெயிற்றியர் பவளமுத் தளந்தும்
உவரி நெய்தலும் கானமும் கலந்துள ஒழுக்கம். ௪௪

அயல் நறும்புற வினில்இடைச் சியர்அணி நடையும்
வியன் நெடும்பணை உழத்தியர் சாயலும் விரும்பி
இயலும் அன்னமும் தோகையும் எதிர்எதிர் பயில
வயலும் முல்லையும் இயைவன பலவுள மருங்கு. ௪௫

மீளும் †ஓதமுன் கொழித்தவெண் தரளமும் கமுகின்
பாளை உக்கவும் விரவலிற் பரத்தியர் பணைமென்
தோளு ழத்தியர் மகளிர்மா றுடிமுன் தொகுக்கும்
நீளு நெய்தலும் மருதமும் கலந்துள நிலங்கள். ௪௬

ஆய நானிலத் தமைதியில் தத்தமக் கடுத்த
மேய செய்தொழில் வேறுபல் குலங்களின் விளங்கித்
தீய என்பன கனவிலும் நினைவிலாச் சிந்தைத்
தூய மாந்தர்வாழ் தொண்டைநாட் டியல்புசொல் வரைத்தோ. ௪௭

---

௪௩. பசுக்கூட்டங்கள் சேர்ந்த முல்லை நிலத்துள்ள குறுமுயலானது, மலையில் சேர்ந்த வான்மதிக்கணுள்ள முயலினை. போரில். வரைமஞ்சனக்கார்- மலையிலுள்ள நீர் கொண்ட மேகங்கள். அணைந்தும் இணைந்தும் கலப்பன.

௪௪. கழியவர் - பரதவர். சிவலும் - கவுதாரியையும். ஏனலுக்கு - தினைக்கும். எயிற்றியர் - கானப் பெண்கள். உவரி - கடற்கரையிலுள்ள. ஒழுக்கம் - இடம்; ஆகுபெயர் - பழைய குறிப்புரை.

௪௫. பக்கத்திலுள்ள நல்ல முல்லைநில இடைச்சியர்களின். அகன்று நீண்ட மருதநில உழத்தியர்களின். இயலும் - இசையும். பயில - நெருங்க. வயலும் - மருதமும்.

௪௬. மீளும்......தரளமும் - கரையிற் சென்று திரும்பும் வாய்வெள்ளம் விடுத்த வெண்முத்துக்களும். கமுகின்பாளை சிந்திய பூவும். விரவலின்-கலத்தலால். பணை - மூங்கிலை யொத்த. மாறுய்ச் சேர்த்து விளையாடி.

௪௭. "திருத்தொண்டை நன்னாட்டு நானிலத்தைத் திணைவளமுந் தெரித்துக் காட்ட - மருத்தொண்டை வாய்ச்சியர்சூழ் குன்றைநகர்க் குலக் கவியே வல்லா னல்லால் - கருத்தொண்ட ரெம்போல்வா ரெவ்வாறு தெரிந்

பா - ம்—*மஞ்சென. †ஓதமங்.

இவ்வ ளந்தரு பெருந்திரு நாட்டிடை என்றும்
மெய்வ ளந்தரு சிறப்பினால் உலகெலாம் வியப்ப
எவ்வு கங்களும் உள்ளதென் றியாவரும் ஏத்தும்
கைவி ளங்கிய நிலையது காஞ்சிமா நகரம். சஅ

ஆன தொல்நகர் அம்பிகை தம்பெரு மானை
மான அர்ச்சனை யாலொரு காலத்து வழிபட்
டூன மில்அறம் அனைத்தும் உலகுய்ய *வைத்த
மேன்மை பூண்டஅப் பெருமையை அறிந்தவா விளம்பில். சகூ

வெள்ளி மால்வரைக் கயிலையில் வீற்றிருந் தருளித்
துள்ளு வார்புனல் வேணியார் அருள்செயத் தொழுது
தெள்ளு வாய்மையின் ஆகமத் திறனெலாந் †தெரிய
உள்ள வாறுகேட் டருளினாள் உலகையா ளுடையாள். ருo

எண்ணில் ஆகமம் ‡இயம்பிய இறைவர்தாம் விரும்பும்
உண்மை யாவது பூசனை எனவுரைத் தருள
அண்ண லார்தமை அர்ச்சனை புரியஆ தரித்தாள்
பெண்ணின் நல்லவ ளாயின பெருந்தவக் கொழுந்து. ருக

வேறு

நங்கை உள்நிறை காதலை நோக்கி நாய கன்திரு உள்ளத்து மகிழ்ந்தே, அங்கண் எய்திய முறுவலுந் தோன்ற "அடுத்த தென் கொல்நின் பால்" என வினவ, "இங்கு நாதநீ மொழிந்தஆ கமத்தின் இயல்பி னால்உனை அர்ச்சனை புரியப், பொங்கு கின்றதென் ஆசை" என் றிறைஞ்சிப் போக மார்த்தபூண் முலையினாள் போற்ற. ருஉ

தேவ தேவனும் அதுதிரு வுள்ளஞ் செய்து "தென்திசை மிக்க செய் தவத்தால், யாவ ருந்தனை அடைவது மண்மேல் என்றும் உள் ளது காஞ்சிமற் றதனுள், மாவ மர்ந்தநம் இருக்கையில் அணைந்து மன்னு பூசனை மகிழ்ந்துசெய் வாய்" என், றேவ எம்பெரு மாட்டியும் பிரியா இசைவு கொண்டெழுந் தருளுதற் கிசைந்தாள். ருங

துரைப்பார் கலந்தார்க் கின்ப - மருத்தொண்ட ரணியிலவை யொன்றேடொன் றியைந்தனவு மாங்காங் குண்டால்."—காஞ்சிப் புராணம்: திருநாட்டு. கஉஅ.

சஅ. எந்த யுகங்களிலும். கை - ஒழுக்கம்.

சகூ. மான - பெருமை பொருந்திய.

ருo. துள்ளும் வார்புனல் - ததும்பும் மிக்க நீரையுடைய. தெள்ளும் வாய்மையின் - தெளிந்த சத்தியத்தைக் கொண்ட.

ருக. ஆதரித்தாள் - விரும்பினாள்.

ருஉ. "போகமார்த்தபூண் முலையாள் தன்னொடும்"—ஞானசம்பந்தர்: திருநள்ளாறு. ருங. மாமரத்தடியில். பிரியாவிடைகொண்டு.

பா - ம்—*அமைக்க. †தெளிய. ‡வாங்கிய.

ஏத மில்பல யோனியெண் பத்து நான்கு *நூ றாயி ரந்தனுள்
வைத்த, பேத மும்புரந் தருளும்அக் கருணைப் பிரான்மொ ழிந்தஆ
கமவழி பேணிப், போது நீர்மையில் தொழுதனள் போதப் பொருப்
பில் வேந்தனும் விருப்பில்வந் தெய்தி, மாத வம்புரிந் தருளுதற்
கமைந்த வளத்தொ டும்பரி சனங்களை விடுத்தான். ௫௪

துன்னு பல்லுயிர் †வானவர் முதலாச் சூழ்ந்து டன்செலக் காஞ்சி
யில் அணையத், தன்னை நேர்வரும் பதுமமா நாகம் தம்பி ராட்டிதாள்
தலைமிசை வைத்தே, "அன்னை யாயுல கனைத்தையும் ஈன்றாய் அடிய
னேன்உறை பிலமத னிடையே, மன்னு கோயில்கொண் டருளுவாய்"
என்ன மலைம டந்தைமற் றதற்கருள் புரிந்து. ௫௫

அங்கு மண்ணுல கத்துயிர் தழைப்ப அளவில் இன்பத்தி னருட்
கரு விருத்தித், திங்கள் தங்கிய புரிசடை யார்க்குத் திருந்து பூசனை
விரும்பினள் செய்ய, எங்கும் நாடவுந் திருவிளை யாட்டால் ஏக மா
முதல் எதிர்ப்படா தொழியப், பொங்கு மாதவஞ் செய்துகாண்
பதற்கே புரிவு செய்தனள் பொன்மலை வல்லி. ௫௬

நெஞ்சம் ஈசனைக் காண்பதே விரும்பி நிரந்த ரந்திரு வாக்கினில்
நிகழ்வ, தஞ்செ ழுத்துமே ஆகஆ ளுடைய அம்மை செம்மலர்க்
கைகுவித் தருளித், தஞ்ச மாகிய அருந்தவம் புரியத் தரிப்ப ரோஅ,
வள் தனிப்பெருங் கணவர், வஞ்சம் நீக்கிய மாவின்மூ லத்தில் வந்து
தோன்றினார் மலைமகள் காண. ௫௭

---

௫௪. ஏதமில் - குற்றமற்ற "உரைச்சேரும் எண்பத்து நான்கு நூறாயிர மாம் யோனிபேத - நிரைச்சேரப் படைத்தவற்றின் உயிர்க்கு உயிராய் அங் கங்கே நின்றான் கோயில்"—**ஞானசம்பந்தர்** : திருவீழிமிழலை. புரந்தருளும் - காத்தருளும். போது......போத - போகுங் குணத்தொடு தொழுது புறப்பட உமையம்மையார் மாதவம் புரிந்தருளுதற்கு. பொருப்பில் வேந்தனும் - மலை யரையனும். பரிசனங்களை - ஏவல் செய்வோர்களை.

௫௫. தன்னை நேர்வரும் - தனக்குத்தானே ஒப்பாகிய. உறை - வசிக்கும் மலைமடந்தை - பார்வதி தேவியார்.

௫௬. அளவில்லாத இன்பத்தையுடைய அருளைக் கருவாக்கொண்ட சிவலிங்கத்தை இருத்தி ; அருளை உளங்கொண்டு என்னலுமொன்று. ஏகமா முதல் - சிவம். புரிவு செய்தனள் - விருப்பங் கொண்டாள். பொன்மலைவல்லி பார்வதி தேவியார்.

௫௭. நிரந்தரம் - எப்பொழுதும். தஞ்சமாகிய - தமக்குப் புகலாகிய தரிப்பரோ. மாவின் மூலம் - மாமரத்தடியில். மலைமகள் - பார்வதி தேவ யார்.

**பா - ம்**—*நூறாயிரமதில். †மாதவர்.

கண்ட போதிலப் பெருந்தவப் பயனும் கம்பம் மேவிய தம்பெரு மானை, வண்டு லாங்குழற் கற்றைமுன் தாழ வணங்கி வந்தெழும் ஆசைமுன் பொங்கக், கொண்ட காதலின் விருப்பள வின்றிக் குறித்த பூசனை கொள்கைமேற் கொண்டு, தொண்டை யங்கனி வாயுமை நங்கை தூய அர்ச்சனை தொடங்குதல் புரிவாள். ௫அ

உம்பர் நாயகர் பூசனைக் கவர்தாம் உரைத்த ஆகமத் துண்மையே தலைநின், றெம்பி ராட்டியர்ச் சனைபுரி வதனுக் கியல்பில் வாழ்திருச் சேடிய ரான, கொம்ப னார்கள்பூம் பிடகைகொண் டணையக் குலவு மென்தளிர் அடியிணை ஒதுங்கி, அம்பி காவன மாந்திரு வனத்தி லான; தூநறும் புதுமலர் கொய்தாள். ௫௯

கொய்த பன்மலர் கம்பைமா நதியில் குலவு மஞ்சன நிலவுமெய்ப் பூச்சு, நெய்த ருங்கொழுந் தூபதீ பங்கள் நிறைந்த சிந்தையில் நீடிய அன்பின், மெய்தரும்படி வேண்டின எல்லாம் வேண்டும் போதினில் உதவமெய்ப் பூசை, எய்த ஆகம விதியெலாஞ் செய்தாள் உயிர்கள் யாவையும் ஈன்றஎம் பிராட்டி. ௬௦

கரந்த ரும்பயன் இதுவென உணர்ந்து கம்பம் மேவிய உம்பர்நா யகர்பால், நிரந்த காதல்செய் உள்ளத்த ளாகி நீடு நன்மைக ளியாவை யும் பெருக, வரந்த ரும்பொரு ளாம்மலை வல்லி மாறி லாவகை மலர்ந் தபே ரன்பால், சிரம்ப ணிந்தெழு பூசைநாள் தோறும் திருவு ளங்கொளப் பெருகிய தன்றே. ௬௧

நாத ரும்பெரு விருப்பொடு நயந்து நங்கை யர்ச்சனை செய்யும் அப் பொழுதில், காதல் மிக்கவோர் திருவிளை யாட்டில் கனங்கு ழைக் கருள் புரிந்திட வேண்டி, ஓத *மார்கடல் ஏழுமொன் றாகி ஓங்கி வான மும் உட்படப் பரந்து, மீது செல்வது போல்வரக் கம்பை வெள்ள மாந்திரு வுள்ளமுஞ் செய்தார். ௬௨

---

௫அ. கம்பம் - திருவேகம்பத்தில்; காஞ்சியில். கூந்தல் கற்றை. தொண் டையங் கனி - கொவ்வைக் கனிபோன்ற.

௫௯. அவர் தாம் - அவரே. இயல்பில் - நற்குணத்துடன். பூம்பிடகை - பூங்கூடை. குலவும் - விளங்கும். ஆன - சிவ பூசைக்கு ஆன.

௬௦. குலவு மஞ்சனம் - விளக்கமான திருமஞ்சனமும். நிலவு மெய்ப் பூச்சு - விளங்கும் சந்தனக் காப்பும். மெய் தரும்படி - உண்மையாக. சேடி மார்கள் உதவ. ஆகம விதியெலாம் எய்த.

௬௧. கைதரும்பயன். இது - இப்பூசை. நிரந்த - பரந்த.

௬௨. ஓதம் ஆர் - வெள்ளம் நிறைந்த; அலை பொருந்திய எனினுமாம்.

பா - ம்—*மாகடல்.

அண்ண லார்அருள் வெள்ளத்தை நோக்கி அங்க யற்கண்ணி நம்பெரு மான்மேல், விண்ணெ லாங்கொள வரும்பெரு வெள்ளம் மீதுவந்துறும் எனவெருக் கொண்டே, உள்நி லாவிய பதைப்புறு காத லுடன்தி ருக்கையால் தடுத்தும்நில் லாமை, தண்ணி லாமலர் வேணி யிறைத் தழுவிக் கொண்டனள் தன்னையே ஒப்பாள். ௩௭௩

மலைக்கு லக்கொடி பரிவுறு பயத்தால் மாவின் மேவிய தேவநா யகனை, முலைக்கு வட்டொடு வளைக்கையால் நெருக்கி முறுகு காத லால் இறுகிடத் தழுவச், சிலைத்த னித்திரு நுதற்றிரு முலைக்கும் செந்த ளிர்க்கரங் களுக்கும்மெத் தெனவே, கொலைக்க ளிற்றுரி புனைந் தத்தம் மேனி குழைந்து காட்டினார் விழைந்தகொள் கையினார். ௩௭௪

கம்பர் காதலி தழுவமெய் குழையக் கண்டு நிற்பவுஞ் சரிப்பவு மான, உம்ப ரேமுதல் யோனிகள் எல்லாம் உயிரும் யாக்கையும் உருகியொன் றாகி, "எம்பி ராட்டிக்கு மெல்லிய ரானார் என்றும் ஏகம் பர்" என்றெடுத் தேத்த, வம்பு லாமலர் நிறையவிண் பொழியக் கம்பை யாறுமுன் வணங்கிய தன்றே. ௩௭௫

பூதி யாகிய புனிதநீ றாடிப் பொங்கு கங்கைதோய் முடிச்சடை புனைந்து, காதில் வெண்குழை கண்டிகை தாழக் கலந்த யோகத்தின் மருவிய கருத்தால், ஆதி தேவனா ராயுமா தவஞ்செய் அவ்வ ரங் கொலோ அகிலமீன் றளித்த, மாது மெய்ப்பயன் கொடுப்பவே கொண்டு வளைத்த ழும்புடன் முலைச்சுவ டணிந்தார். ௩௭௬

---

௩௭௩. வெருக்கொண்டு - **தடுத்தாட்கொண்ட புராணம்** : ௧௧௪. குறிப்புப் பார்க்க. குளிர்ந்த நிலாமலருஞ் சடையுடைய சிவபிரானை "எள்கலின்றி... வெள்ளங்காட்டி வெருட்டிட...."—**சுந்தரர் :** திருவேகம்பம் : ௧௦.

௩௭௪. பரிவுறும் - துன்புறும். குன்றின் உச்சி போன்ற முலையுடன். சிலைத் தனித்திருநுதல் - வில்லைப் போன்ற ஒப்பற்ற அழகிய நெற்றியை யுடைய உமையம்மையார். கொலைக் களிற்றுரி தம் மேனி என்பது வலிய மேனி என்பதைக் குறிப்பால் உணர்த்துவது. அம்மேனியும் அம்மையார் காத லன்புக்குக் குழைந்தது என்றபடி. விழைந்த - பூசையை விரும்பிய.

௩௭௫. கம்பர்......குழைய - ஏகாம்பர நாதர் தங்காதலி (உமையம்மையார்) தழுவத் திருமேனி குழைந்ததைக் கண்டு. நிற்பவும் சரிப்பவுமான - அசரம் சரமாகிய. உம்பரே - தேவர்களே. உயிரும் உடலும். வம்பு உலா - மணங் கமழும். கம்பாநதி உடனே பெருகுத லொழிந்து தாழ்ந்தது (அடங்கிற்று). கம்பாநதி பெண்ணுருக்கொண்டு உமையம்மையாரை வணங்கினாள் என்று கூறுவோருமுளர்.

௩௭௬. அருட் செல்வமாகிய தூய திருநீற்றைப் பூசி. கருத்தால் - கருத் தொடு. ஆதி......கொலோ - சிவபெருமான் தாமும் நுணுகிய மாதவஞ்

பா - ம்—*தடுக்க.

கோதி லாஅமு தனையவள் முலைக்குக் குழைந்த தம்மணி வாள நற் கோலம், மாது வாழவே காட்டிமுன் நின்று "வரங்கள் வேண்டுவ கொள்க" என் றருள, வேத காரண ராயஏ கம்பர் விரைம லர்ச்செய்ய தாமரைக் கழற்கீழ், ஏதம் நீங்கிய பூசனை முடிந்த தின்மை தானறி விப்பதற் கிறைஞ்சி. ௬௭

அண்டர் நாயகர் எதிர்நின்று கூறும் அளவி னால்அஞ்சி அஞ்சலி கூப்பிக், "கொண்ட இற்றைஎன் பூசனை இன்னும் குறைநி ரம்பிடக் கொள்க" என் றருள, வண்டு வார்குழல் மலைமகள் கமல வதன நோக்கிஅம் மலர்க்கண்நெற் றியின்மேல், முண்ட நீற்றர் "நின் பூசனை என்றும் முடிவ தில்லைநம் பால்" என மொழிய. ௬௮

"மாறி லாதஇப் பூசனை என்றும் மன்ன எம்பிரான் மகிழ்ந்து கொண் டருளி, ஈறி லாதஇப் பதியினுள் எல்லா அறமும் யான்செய அருள்செய வேண்டும், வேறு செய்வினை திருவடிப் பிழைத்தல் ஒழிய இங்குளார் வேண்டின செயினும், பேறு மாதவப் பயன்கொடுத் தருளப் பெறவும் வேண்டும்" என் றனள்பிறப் பொழிப்பாள். ௬௯

---

செய்த அம்மேன்மையோ. அளித்த - காத்த. மாது - உமாதேவியார். மெய்ப் பயன் - தம் திருமேனியால் தழுவுதலே. சுவடு - தழும்பு. உமாதேவியார் தவக் கோலத்துடன் சிவலிங்கப் பெருமானை இறுகத் தழுவியபோது அத்தேவியா ருடைய கை வளையற் றழும்பும் முலைத் தழும்பும் பெருமான் திருமேனியில் படிந்தன. அத்தழும்புகளைப் பெறுதற்குச் சிவபெருமானும் தவஞ்செய்தனரோ என்றபடி. இது "ஆதி......கொலோ" என்று குறிக்கப்பட்டது காண்க.

௬௭. விரை......கீழ் - மணங் கமழும் மலர்ந்த சிவந்த தாமரை போன்ற திருவடிக்கீழ். ஏதம் - குற்றம். முடிந்த தின்மை - முடியாமையை.

௬௮. இற்றை - இன்று. கமல வதனம் - தாமரை முகம். முண்ட நீற்றர் - திரிபுண்டரமாகத் திருநீறணிந்த சிவபெருமான்.

௬௯. மன்ன - நிலைபெற. எம்பிரானே !. "ஈறுசேர் பொழுதினும் இறுதி இன்றியே - மாறிலா திருந்திடும் வளங்கொள் காஞ்சியில்"—**கந்தபுராணம்:** கடவுள் வாழ்த்து. ௧௮. எல்லா அறமும் - முப்பத்திரண்டறங்களையும். உல கெலாம் ஈன்று காக்குந் தாயார் உமையம்மையா ராகலான், பிள்ளைகளாகிய உயிர்கள் பொருட்டுத் தாம் வேண்டுதல் செய்கிறார். திருவடிப் பிழைத்தல் பெரும்பிழை யாதலின் அஃது ஒழிந்த மற்றப் பிழைகளைப் பொறுத்துப் பேறு அளித்தருளல் வேண்டும் என்றபடி. "பிழைப்ப னாகிலுந் திருவடிப் பிழையேன்"—**சுந்தரர்:** திருவொற்றியூர். பிறப்பு - உயிர்களின் பிறவித் துன் பத்தை.

விடையின் மேல்வர் மலைமகள் வேண்ட விரும்பு பூசனை மேவி வீற் றிருந்தே, இடைய றாஅறம் வளர்க்கும்வித் தாக இகப ரத்திரு நாழிநெல் அளித்துக், கடைய ராகியும் உயர்ந்த வராயும் காஞ்சி வாழ் பவர் தாஞ்செய்தீ வினையும், தடைய டாதுமெய்ந் நெறியடை வதற்காந் தவங்க ளாகவும் உவந்தருள் செய்தார். ௭௦

எண்ண ரும்பெரு வரங்கள்முன் பெற்றங் கெம்பி ராட்டிதம் பிரான்மகிழ்ந் தருள, மண்ணின் மேல்வழி பாடுசெய் தருளி மனைய றம்பெருக் குங்கரு ணையினால், நண்ணு மன்னுயிர் யாவையும் பல்க நாடு காதலின் நீடிய வாழ்க்கைப், புண்ணி யத்திருக் காமக்கோட் டத்துப் பொலிய †முப்பதோ டிரண்டறம் புரக்கும். ௭௧

அலகில் நீள்தவத் தறப்பெருஞ் செல்வி அண்ட மாந்திரு மனைக்கி டுந் தீபம், உலகில் வந்துறு பயனறி விக்க ஓங்கு நாண்மலர் மூன்று டன் ஒன்று, நிலவ ஆண்டினுக் கொருமுறை செய்யும் நீடு தொன்மை யால் நிறைந்தபே ருலகம், மலர்பெ ருந்திருக் காமக்கோட் டத்து வைத்த நல்லறம் மன்னவே மன்னும். ௭௨

தீங்கு தீர்க்குநல் தீர்த்தங்கள் போற்றுஞ் ‡சிறப்பி னால்திருக் காமக்கோட் டத்தின், §பாங்கு மூன்றுல கத்தினுள் ளோரும் பரவு தீர்த்தமாம் பைம்புனற் கேணி, வாங்கு தெண்டிரை வேலைமே கலை சூழ் வைய கந்தனக் கெய்திய படியாய், ஓங்கு தன்வடி வாய்¶நிகழ்ந் தென்றும் உள்ள தொன்றுல காணியென் றுளதால். ௭௩

அந்த மின்றிநல் லறம்புரிந் தளிக்கும் ||அன்னை தன்திருக் காமக் கோட் டத்தில், வந்து சந்திர சூரியர் மீது வழிக்கொ ளாததன் மருங்

---

௭௦. அம்மையார் விரும்பிச்செய்த பூசனையை ஏற்று அங்கு வீற்றிருந்து இடையறாமல் (நீங்காமல்) முப்பத்திரண் டறங்களையும் வளர்க்கும் வித்தாகும் படி. இகத்துக்கும் பரத்துக்கும். ௭௧. பல்க - பெருக. புரக்கும் - வளர்ப்பாள்.

௭௨. அலகில் நீள் தவத்து - அளவில்லாத பெருந்தவத்தை யுடைய. அண்டமாகிய வீட்டுக்கு. தீபம் - சோமன் சூரியன் அக்கினி. மூன்று மலர்கள் ஒருநாளில் விளங்குமாறு ஆண்டினுக்கு ஒருமுறை மலரும். பேருலகத்தில். இவ்வற்புத மலர்கள் மலரும் காமக்கோட்ட மென்க.

௭௩. பாங்கில் - அருகில். வளைந்த தெள்ளிய அலைகளையுடைய கடலாகிய மேகலைசூழ்ந்த. படியாய் - ஏணியாய்.

௭௪. மீது - கோட்டத்தின்மீது. மருங்கு - பக்கத்தில். சந்தமாதிரம் - நல்ல திசைகள். எம்மருங்கும் - எவ்விடத்தும்.

பா - ம்—*யார்க்கும் ; ஆக்கும். †முப்பத்திரண். ‡சிறப்பினுள். §பாங்கின். ¶நிறைந். ||அம்மை.

குபோ தலினால், சந்த மாதிர மயங்கிஎம் மருங்கும் சாயை மாறிய தன்திசை மயக்கம், இந்த மாநிலத் தவரெலாம் காண என்றும் உள்ள தொன் றின்றும்அங் குளதால். ௭௪

கன்னி நன்னெடுங் காப்புடை வரைப்பில் காஞ்சி யாந்திரு நதிக் கரை மருங்கு, சென்னி யிற்பிறை அணிந்தவர் விரும்பும் திருப்பெ ரும்பெய ரிருக்கையில் திகழ்ந்து, மன்னு வெங்கதிர் மீதெழும் போதும் மறித்து மேற்கடல் தலைவிழும் போதும் தன்னி ழற்பிரி யாதவண் காஞ்சித் தானம் மேவிய மேன்மையும் உடைத்தால். ௭௫

மறைக ளால்துதித் தருந்தவம் புரிந்து மாறி லாகிய மந்தலை நின்று, முறைமை யால்வரும் பூசனை செய்ய முனிவர் வானவர் முதல் உயி ரெல்லாம், நிறையும் அன்பினால் அர்ச்சனை செய்ய நீடு காமங்கள் அவரவர்க் கருளி, இறைவர் தாமகிழ்ந் தருளிய பதிகள் எண்ணி றந்தஅத் திருநகர் எல்லை. ௭௬

மன்னு கின்றஅத் திருநகர் வரைப்பின் மண்ணில் மிக்கதோர் நன்மையி னாலே, துன்னும் யானையைத் தூற்றில்வாழ் முயல்முன் துரக்க எய்திய தொலைவில்ஊக் கத்தால், தன்னி லத்துநின் றகற்று தல் செய்யும் தானம் அன்றியுந் தனுவெழுந் தரணி, எந்நி லத்தினுங் காண்பரும் இறவாத் தானம் என்றிவை இயல்பினில் உடைத்தால்.

ஈண்டு தீவினை யாவையும் நீக்கி இன்ப மேதரும் புண்ணிய தீர்த் தம், வேண்டி னார்தமக் கிட்டசித் தியதாய் விளங்கு தீர்த்தம்நன் மங் கல தீர்த்தம், நீண்ட காப்புடைத் தீர்த்தம்மூன் றுலகில் நிகழ்ந்த சாருவ *தீர்த்தமே முதலா, ஆண்டு நீடிய தீர்த்தம்எண் ணிலவும் அமர நாட்டவர் ஆடுதல் ஒழியார். ௭௮

---

௭௫. கன்னி - உமையம்மையார்; துர்க்கை என்போரு முளர். காப்புடை வரைப்பில் - காவலையுடைய காஞ்சிபுரத்தில். கன்னி - அழியாத என்றும், காப்பு - மதிலையுடைய என்றுங் கூறலுமாம். காஞ்சிநதி. இருக்கையில் - கோயி லுடன். கதிர் - சூரியன். மறித்து - மீண்டும். காஞ்சித்தானம் - மாமரமுள்ள இடம். ௭௬. நீடு காமங்கள் - விரும்பும் வரங்களை.

௭௭. வரைப்பின் - இன் சாரியை. துன்னும் - வரும். தூற்றில் - புதரில். துரக்க - துரத்த. தொலைவு இல் - கேடில்லாத. யானையை முயல் துரத்தி அகற்றும் இடமன்றியும். தனு எழுந்தரணி - உயிர் நீங்கிய உடல் மீண்டும் உயிர்பெற்றெழும் இடமும். காண்பரும் - காண்டற்கரிய.

௭௮. ஈண்டு - சேரும். ஆண்டு - அக்காஞ்சி நகரில். அமரநாட்டவர் - தேவ லோகத்தார்.

பா - ம்—*தீர்த்தமும்.

தாள் தொன்றினில் மூன்றுபூ மலருந் தமனி யச்செழுந் தாமரைத் தடமும், நீள வார்புனல் குடதிசை யோடி நீர்க ரக்குமா நதியுடன் நீடு, நாள லர்ந்தசெங் குவளைபைங் கமலம் நண்ப கல்தரு பாடலம் அன்றிக், காள மேகம்ஒப் பாள்உறை வரைப்பில் கண்ப டாதகா யாப்புளி உளதால். ௭௯

சாயை முன்பிணிக் குங்கிண றென்று தஞ்ச முண்ணின்நஞ் சாந் தடம் ஒன்று, மாயை இன்றிவந் துள்ளடைந் தார்கள் வான ரத்துரு வாம்பிலம் ஒன்று, மேய அவ்வுரு நீங்கிடக் குளிக்கும் விளங்கு பொய்கையும் ஒன்றுவிண் ணவரோ, டாய இன்பம்உய்க் கும்பிலம் ஒன்றோ டனைய ஆகிய அதிசயம் பலவால். ௮௦

அஞ்சு *வன்கரத் தாறிழி மதத்தோர் ஆனை நிற்கவும் அரையிருட் டிரியும், மஞ்சு நீள்வது போலுமா மேனி மலர்ப்ப தங்களில் வண்சிலம் பொலிப்ப, நஞ்சு பில்கெயிற் றரவவெற் றரையின் நாம மூன்றிலைப் படையுடைப் பிள்ளை, எஞ்ச லின்றிமுன் திரியவும் குன்றம் எறிந்த வேலவன் காக்கவும் இசையும். ௮௧

சத்தி தற்பர சித்தயோ கிகளும் சாத கத்தனித் தலைவரும் முதலா, நித்தம் எய்திய ஆயுள்மெய்த் தவர்கள் நீடு வாழ்திருப்

௭௯. தமனியம்......தடம் - பொற்றாமரைக் குளமும். நீள வார் புனல் - மிகப்பெருகும் நீர். குடதிசை - மேற்குத்திசை. நீர் கரக்கும் - அந்நீர் மறையும். நீடுநாள் - நெடுநாள். நண்பகல் தரும்பாடலம்-நடுப்பகலில் மலரும் பாதிரி. உறை - வீற்றிருக்கும்...... ஒப்பாள் - காமாட்சி அம்மையார். கண்படாத - உறங்காத.

௮௦. தன்னைப் பார்த்தோர் சாயையை அவருக்குப் புலப்படாமல் அடக்கிக்கொள்ளும். தஞ்சம் உண்ணின் - சிறிது உண்டாலும். மாயைஇன்றி - ஒரு மாயமுமில்லாமல். பிலம் - பிலத்துவாரம். விண்ணவரோடு கலந்ததாலாகிய இன்பம் சேர்க்கும்.

௮௧. அஞ்சு...நிற்கவும் - ஐந்து வலிய கைகளையும் ஆறுபோல் ஓடும் மூன்று மதத்தையுமுடைய கணபதி நிற்கவும். பாயிரம் : ௩. குறிப்புப்பார்க்க. அரை...திரியவும் - நள்ளிருளைத் திரிக்கும் கருமேகம் நீள்வது போன்ற திருமேனியுடன் தாமரை மலர்போன்ற திருவடிகளில் வளப்பமுடைய சிலம்பு ஒலிக்க நஞ்சு உமிழும் பற்களைக்கொண்ட பாம்பணிந்த வெற்றரையை யுடைய அச்சமூட்டும் முத்தலைச் சூலத்தை ஏந்திய வைரவர் ஒழிவின்றி முன் திரியவும்.

௮௨. சத்தியை யுடைய தற்பர சிவத்தினிடம் வைத்த சித்தங் கொண்ட யோகிகளும், யோகசாதகத் தனித் தலைவரும். நித்தம் எய்திய - அழியா நிலை

பா - ம்—* நாளலர்ந்து. † வான்கரத்.

பாடியும் அனேகம், சித்தர் விஞ்சையர் இயக்கர்கந் தருவர் திகழ்ந்து மன்னுவார் செண்டுகை ஏந்தி வித்த கக்கரி மேற்கொளுங் காரி மேவு செண்டணை வெளியும்ஒன் றுளதால். ௮௨

வந்த டைந்தவர் தம்முரு மாய மற்று ளாரைத்தாங் காண்பிடம் உளது, சிந்தை யோகத்து முனிவர்யோ கினிகள் சேரும் யோகபீ டமும்உள தென்றும், அந்த மில்அறம் புரப்பவள் கோயில் ஆன போகபீ டமும்உள தாகும், எந்தை யார்மகிழ் காஞ்சிநீ டெல்லை எல்லை இல்லன உள்ளவா ரறிவார். ௮௩

தூண்டு சோதியொன் றெழுந்திருள் துரக்கும் சுரர்கள் வந்துசூழ் உருத்திர சோலை, வேண்டி னோர்கள்தம் பிறப்பினை ஒழிக்கும் மெய்ந்நெ றிக்கணின் றோர்கள்தாம் விரும்பித், தீண்டில் யாவையுஞ் சேம்பொனுக் குவதோர் சிலையும் உண்டுரை செய்வதற் கரிதால், ஆண்ட நாயகி சமயங்கள் ஆறும் அகில யோனியும் அளிக்கும்அந் நகரம். ௮௪

என்றும் உள்ளஇந் நகர்கலி யுகத்தில் இலங்கு வேற்கரி காற் பெரு வளத்தோன், வன்தி றற்புலி இமயமால் வரைமேல் வைக்க ஏகுவோன் தனக்கிதன் வளமை, சென்று வேடன்முன் கண்டுரை செய்யத் திருந்து காதநான் குட்பட வகுத்துக், குன்று போலுமா மதில்புடை போக்கிக் குடியி ருத்தின கொள்கையின் விளங்கும். ௮௫

---

அடைந்த. திருப்பாடியும் - பன்ன சாலைகளும். வித்தகக் கரி - நல்ல யானை. காரி - சாத்தா; ஐயனார். செண்டணை வெளி - வையாளி வீதி.

௮௩. மாய - (பிறர் காணுதவாறு) மறைய. மற்றுளாரை - அங்கே வாராத வரை. புரப்பவள் - காமாட்சி வீற்றிருந்தருளும். எந்தையார் - ஏகாம்பரநாதர். உள்ளன யார் அறிவார்.

௮௪. துரக்கும்-ஓட்டும். சுரர்கள் - தேவர்கள். ஒழிக்கும் சிலையும். ஆறினை யும். யோனிகளையும். அளிக்கும் - காக்கும்.

௮௫. கரிகாற் பெருவளத்தோன் - கரிகாற் சோழன். இவன் நெருப்பால் கரிந்த காலையுடையவன்; காவிரிப்பூம் பட்டினத்தை ஆண்டவன்; இமயம் வரை சென்றவன்; இமயத்திற் புலிக்கொடி பொறித்தவருள் ஒருவன்; இமயத் தைச் செண்டால் அடித்தவன்; காஞ்சியில் சாத்தன் அருளால் செண்டு பெற் றவன். "செண்டு கொண்டு கரிகாலனொரு காலிலிமயச் சிமய மால்வரை திரித் தருளி மீளவதனைப், பண்டு நின்றபடி நிற்க விதுவென்று முதுகிற் பாய்பு லிப் பொறி குறித்தது மறித்தபொழுதே" கலிங்கத்துப்பரணி; இராச. க. "கச்சி வளைக்கைச்சி காமக்கோட் டங்காவல், மெச்சி யினிதிருக்கு மெய்ச்சாத்தன் - கைச்செண்டு, கம்பக் களிற்றுக் கரிகாற் பெருவளத்தான், செம்பொற் கிரிதிரித்த செண்டு"—சிலப்பதிகாரம் - டு - இந்திர. கடு - அ. உரை, மேற்கோள்.

பா - ம்—*வித்தகப்பரி.

வேறு

தண்காஞ்சி மென்சினைப்பூங் கொம்ப ராடல் சார்ந்தசைய அதன் மருங்கு சுரும்பு தாழ்ந்து, பண்காஞ்சி இசைபாடும் பழன வேலிப் பணைமருதம் புடையுடைத்தாய்ப் பாரில் நீடும், திண்காஞ்சி நகர் நொச்சி இஞ்சி சூழ்ந்த செழுங்கிடங்கு திருமறைகள் ஒலிக்குந் தெய்வ, வண்காஞ்சி அல்குல்மலை வல்லி காக்க வளர்கருணைக் கடலுலகம் சூழ்ந்தால் மானும். ௮௬

கோந்தலர்பூங் குழலிமயக் கொம்பு கம்பர் கொள்ளும்பூ சனை குறித்த தானங் காக்க, மந்திரமா மதில்அகழி அவர்தாந் தந்த வாய்மைஆ கமவிதியின் வகுப்புப் போலும், அந்தமில்சீர்க் காஞ்சியைவந் தடைந்தார்க் கன்றி அடைகளங்கம் அறுப்பரிதென் றறிந்து சூழ; வந் தணைந்து தன்கறுப்பும் உவர்ப்பும் நீக்கும் மாகடலும் போலும்மலர்க் கிடங்கு மாதோ. ௮எ

ஆங்குவளர் எயிலினுடன் விளங்கும் வாயில் அப்பதியில் வாழ் பெரியோர் உள்ளம் போல, ஓங்குநிலைத் தன்மையவாய் அகிலம் உய்ய உமைபாகர் அருள்செய்த ஒழுக்க மல்லால், தீங்குநெறி அடையாத தடையு மாகிச் செந்நெறிக்கண் நிகழ்வாய்மை திருந்து மார்க்கம், தாங் குலவ நிலவிவளர் ஒளியால் என்றும் தடநெடுவான் அளப்பனவாந் தகைய வாகும். ௮௮

மாறுபெறல் அருங்கனக மாட நீடு மணிமறுகும் நெடுந்தெருவும் வளத்தில் வந்த, ஆறுபயில் ஆவணவீ திகளும் மற்றும் அமைந்தநகர்

௮௬. காஞ்சி - மாமரத்தின். சினை - கிளைகளிலுள்ள; கிளைகளாகிய எனினுமாம். சுரும்பு தாழ்ந்து - வண்டுகள் தங்கி. காஞ்சிப்பண். சோலையை வேலியாகவுடைய வயல்கள் நிறைந்த மருத நிலத்தைப் பக்கத்திற் கொண்டதாய். நொச்சி இஞ்சி - நொச்சியாகிய மதில்; காவல் வேண்டாத அரண் என்றபடி. "நொச்சி வேலித் தித்தனுறந்தை"—அகம் : ௧௨௨. கிடங்கு - அகழி. காஞ்சி-மேகலை யணிந்த. மானும்-போலும். காஞ்சி—உலகம்; அகழி—கருணைக் கடல்.

௮எ. கொந்து - கொத்து. இமயக் கொம்பு - உமையம்மையார். பூசைத் தானம். அவர் - சிவபெருமான். வகுப்பு - நிருமாணம். அடைகளங்கம் - தம்மை யடைந்த குற்றத்தை. கறுப்பு - கருநிறத்தையும் (களங்கத்தையும்). வகுப்பைப் போலும் மலர்க் கிடங்கு கடலைப்போலும்.

௮௮. மதிலுடன் விளங்கும் வாயிலானது. விளங்கி நின்று வளரும் ஒளியால்.

௮௯. ஒப்பிடுதற்கரிய பொன்மயமான மாடங்கள் மிகுதியாயுள்ள. மணி மறுகும் - அழகிய வீதிகளும். வளத்தால் வந்த வகைகளையுடைய கடைத் தெருக்களும். நகர் - காஞ்சி நகரானது. மலைகளை யிடையிட்டு நவகண்டங்

அணிவரைகள் நடுவு போக்கிக், கூறுபடு நவகண்ட மன்றி மல்கக் கொண்டஅனே கங்கண்ட மாகி அன்ன, வேறொருமண் ணுலகுதனில் உளதால் என்ன விளங்கியமா லோகநிலை மேவிற் றன்றே. அகூ

பாகமருங் கிருபுடையும் உயர்ந்து நீண்ட படரொளிமா ளிகை நிரைகள் பயில்மென் கூந்தல், தோகையர்தங் குழாம்அலையத் தூக்கு முத்தின் சுடர்க்கோவைக் குளிர்நீர்மை துதைந்த வீதி, மாகமிடை ஒளிதழைப்ப மன்னி நீடு மருங்குதா ரகைஅலைய வரம்பில் வண்ண, மேகமிடை கிழித்தொழுகும் தெய்வக் கங்கை மேல்நதிகள் பலமண்ணி மேல் விளங்கி †ஒக்கும். கூ0

கிளரொளிச்செங் கனகமயந் தாறும் மாடு கீழ்நிலையோர் நீலச்சோ பானம் பூணக், கொளஅமைத்து மீதொருபாற் கன்ன சாலை குலவயிரத் தாலமைத்த கொள்கை யாலே, அளவில்சுடர்ப் பிழம் பானார் தம்மைத் தேடி அகழ்ந்தேனம் ஆனும் அன்ன மாகி, வளர் விசும்பில் எழுந்தானும் போல நீடு ‡மாளிகையும் உளமற்று மறுகு தோறும். கூக

மின்போலிபன் மணிமிடைந்த தவள மாட மிசைப்பயில்சந் திரகாந்தம் விசும்பின் மீது, பொன்புரையும் செக்கர்நிறப் பொழுது §தோன்றும் புனிற்றுமதி கண்டுருகிப் பொழிந்த நீரால், வன்புலியின் உரியாடைத் திருவ கம்பர் வளர்சடையும் இளம்பிறையும் கண்டு

---

களின் எல்லை பிரித்தமையான், "அணி......கண்டம்" என்றார். மல்க - நெருங்க. அன்ன - அத்தன்மையான. தன்னில் உளதால்.

கூ0. பகுக்கப்பட்ட இடங்களாய் இருபக்கமும். மாளிகை வரிசைகள் நெருங்கியும். பெண்கள் கூட்டம். தூக்கப்பட்ட முத்து மாலைகளின் குளிர்ந்த ஒளி நிறைந்ததுமாகிய வீதி. பயில் துதைந்த வீதி. மாகமிடை - விண்ணிடை. மருங்கில் விண்மீன்கள் அலைய. வண்ணம் - கருநிறம் பொருந்திய. கங்கை என்னும் பெயருடைய மேன்மை நதிகள். பல கங்காநதிகள் என்றபடி. முத்துக்கள்—தாரகைகள். அவைகளின் ஒளிதுதைந்த வீதிகள்—நதிகள்.

கூக. கனகமயந் தாறும் நீடும் மாளிகைகள் உள. மாடு - அருகே. நீல மணிப்படிகள் பூண........ பிழம்பானார் தம்மை - சிவபெருமானை. அகழ்ந்து ஏனம் ஆனும் - மண்ணைத் தோண்டும் பன்றியானவனும். கனகமாளிகை— சுடர்ப்பிழம்பான சிவபெருமான். மாளிகை அடியிலுள்ள நீலச் சோபானம்— பன்றி. குலவயிரச்சாலை—அன்னம்.

கூஉ. தவளம் - வெண்மை. மாடமிசைப் பதிக்கப்பெற்ற சந்திரகாந்தக் கற்கள். பொன்போலும். பொழுது - அந்தி வேளையில். புனிற்றுமதி - இளம்.

பா - ம்—*விளங்கியும். †ஒங்கும். ‡மாளிகைகள் உள மற்ற §தோற்றும்.

கும்பிட், டன்புருகி மெய்பொழியக் கண்ணீர் வாரும் அடியவரும் அனையவுள அலகி லாத. கூஉ

முகிலுரிஞ்சுங் கொடிதொடுத்த முடிய வாகும் முழுப்பளிங்கின் மாளிகைகள் முற்றுஞ் சுற்றும், நிகரில்சரா சரங்களெல்லாம் நிழலி னாலே நிறைதலினால் நிறைதவஞ்செய் இமயப் பாவை, நகில்உழுத சுவடும்வளைத் தழும்பும் பூண்ட நாயகனார் நான்முகற்குப் படைக்க நல்கும், அகிலயோ னிகளெல்லாம் அமைத்து வைத்த அரும்பெரும் பண் டாரநிலை அனைய வாகும். கூகூ

பொற்களப மாளிகைமேல் முன்றில் நின்று பூங்கழங்கு மணிப் பந்தும் போற்றி ஆடும், விற்புருவக் கொடிமடவார் கலன்கள் சிந்தி விழுவனவும் கெழுவுதுணை மேவு மாதர், அற்புமுதிர் கலவியினிற் பரிந்து சிந்தும் அணிமணிச்சே டியர்தொகுக்கும் அவையும் ஆகி, நற் கனக மழையன்றிக் காஞ்சி எல்லை நவமணிமா ரியும்பொழியும் நாளும் நாளும். கூச

பூமகளுக் குறையுளெனுந் தகைய வான பொன்மாடத் தரமியங் கள் பொலிய நின்று, மாமகரக் குழைமகளிர் மைந்த ரங்கண் வந் தேறு முன்னறுநீர் வண்ட லாடத், தூமணிப்பொன் புனைநாளத் துருத்தி வீசுஞ் சுடர்விடுசெங் குங்குமநீர்த் துவலை தோய்ந்த, காமர் மணி நாசிகையின் மருங்கு தங்குங் கருமுகில்கள் செம்முகில்க ளாகிக் காட்டும். கூரு

---

பிறையை. மாடம், அடியவரும் அனையனவாக அலகில்லாதன (அளவில்லாதன) அந்நகரிலிருக்கின்றன என்க. அந்தி—செஞ்சடை; புனிற்றுமதி—இளம் பிறை; சந்திர காந்தக்கல். நீர்—அடியவர் கண்ணீர்.

கூகூ. முடிய - சிகரங்களையுடைய. நிழலினாலே நிறைதலினால் - பிரதிபிம் பத்தால் அதனுள் நிறைதலால். இமயப்பாவை - பார்வதி தேவியார். நகில் உழுத - முலைகள் அழுந்திய. பண்டாரம் - கருவூலம்.

கூச. பொற்களபம் - பொன்னால் செய்யப்பெற்ற யானைக் கன்றுகள் அமைக்கப்பட்டுள்ள; பொன் சாந்துமாம். முற்றத்தில். கழங்கு - கழற்சிக் காயையும். கலன்கள் - அணிகளினின்றும். விழுகின்ற பொன்களும். கெழுவு துணை - பொருந்தும் நாயகர்களுடன். அன்புமுதிர். அணி......ஆகி - ஆபர ணங்களிலுள்ள மணிகளைச் சேடியர்கள் தொகுக்கும் அவைகளுமாய் (மணிகளு மாய்), விழுவனவும் அவையுமாகி. கனகமழை - பொன்மழை.

கூரு. பூமகளுக்கு உறையுள் - இலக்குமி தேவிக்கு வாசஸ்தலம். அரமியங் கள் - நிலா முற்றங்களில். மகரகுண்டல மணிந்த. அங்கண் - அந்நிலா முற்றங் களில். நறு நீரால். வண்டல் - மகளிர் ஆடல்களுள் ஒன்று. நாளத் துருத்தி - துளைகளையுடைய நீர்த்துருத்தி. துவலை - துளிகள். அழகிய மணிகள் பதித்த கோபுர நாசிகளின்.

இமம்மலிய எடுத்தநெடு வரைகள் போல †இலங்குசுதைத் தவளமா ளிகைநீள் கோட்டுச், சிமையடையுஞ் சோபான நிரையும் விண்ணும் தெரிவரிய ‡தூய்மையினால் அவற்றுட் சேர்ந்து, தமர் களுடன் இழிந்தேறு மைந்தர் மாதர் தங்களையும் விசும்பிடைநின் றிழியா நிற்கும், அமரரையும் அரமகளிர் தமையும் வெவ்வே றறி வரிதாந் தகைமையன அனேகம் அங்கண். கூகூ

அரவநெடுந் தேர்வீதி அருகு மாடத் தணிமணிக்கோ புரத்தயலே §வியல்வாய் நீண்ட, விரவுமர கதச்சோதி வேதித் திண்ணை விளிம் பின்ஒளி துளும்புமுறைப் படிமீ தேறும், குரவலருங் குழல்மடவார் அடியில்ஊட்டுங் குழம்படுத்த செம்பஞ்சின் சுவட்டுக் கோலம், பரவை நெடுந் தரங்கமிசை விளங்கித் தோன்றும் பவளநறுந் தளிரனைய பலவும் பாங்கர். கூஎ

வெம்புசினக் களிற்றதிர்வும் மாவின் ஆர்ப்பும் வியன்நெடுந்தேர்க் காலிசைப்பும் விழவ றாத, அம்பொன்மணி வீதிகளில் அரங்கி லாடும் அரிவையர்நூ புரவொலியோ ¶டமையும் இம்பர், உம்பரின்இந் திரன் களிற்றின் முழக்குந் தெய்வ உயர்இரவி மாக்கலிப்பும் ||அயனூர் தித் தேர், பம்பிசையும் விமானத்துள் ஆடுந் தெய்வப் பாவையர்நூ புர அரவத் துடனே பல்கும். கூஅ

---

கூகூ. இமம் மலிய - பனி நிரம்ப. விளங்குகின்ற சுண்ணச்சாந்து பூசிய வெண்மையான. கோட்டுச்சிமை - சிகரத்தின் உச்சியை. சோபான நிரையும் விண்ணும் - படிகளின் வரிசையையும் விண்ணையும் (வெவ்வேறு பிரித்து). அவற்றுள் - அப்படிகளில். தமர்களுடன் - உறவினர்களுடன். இழிந்து - இறங்கி. தேவர்களையும் தேவப் பெண்களையும்.

கூஎ. அரவம் - ஒலியையுடைய. வியல் - அகன்ற. விரவும் - கலந்த. வேதி - ஓமகுண்டங்களுள்ள. விளிம்பின் - ஓரத்தின்; கரையின். துளும்பும் - அலையும். குரவலருங்குழல் - குராமலர்கள் ஒளிரும் கூந்தலையுடைய. அடியில் - பாதங்களில். சுவட்டுக்கோலம் - அடையாளக்குறி. பரவை நெடும் தரங்க மிசை - கடலின் நீண்ட அலைமீது.

கூஅ. வெம்புசினக் களிற்று - கொதித்தெழுங் கோபத்தையுடைய ஆண் யானைகளின். மாவின் - குதிரைகளின். விழவு அறாத - திருவிழா நீங்காத. அரங்கில்......ஒலியோடு - சபையில் நடம்புரியும் பெண்மணிகளின் சிலம்பொலி யோடு. இம்பர் அமையும் - இங்கே அமையும். உம்பரின் - மேலே (விண்ணில்). இரவி மா - சூரியன் குதிரைகளின். பிரமதேவன் தேர் எழுப்பும். நூபுர அர வத்துடன் - சிலம்பொலியுடன். பல்கும் - கலந்து பெருகும்.

பா - ம்—*வரையே. †இசைந்தந்தத். ‡சீர்மையினால். §இயல்பாய். ¶அலையும்; அணையும். ||அவன்.

அருமறையர் தணர்மன்னும் இருக்கை யான ஆகுதியின் புகை அடுத்த அம்பொன் மாடப், பெருமறுகு தொறும்வேள்விச் சாலை எங்கும் பெறும்அவிப்பா கங்கொடுக்கும் பெற்றி மேலோர், வரு முறைமை அழைக்கவிடு மந்திரம்எம் மருங்கும் வானவர்நா யகர் திருவே கம்பர் முன்றில், திருமலிபொற் கோபுரத்து நெருங்கும் எல்லாத் தேவரையும் அணித்தாகக் கொண்டு செல்லும். ௯௯

அரசர்குலப் பெருந்தெருவும் தெற்றி முற்றத் தாயுதங்கள் பயிலும்வியல் இடமும் அங்கண், புரசைமதக் கரிகளொடு புரவி ஏறும் பொற்புடைய வீதிகளும் பொலிய எங்கும், விரைசெய்நறுந் தொடை அலங்கல் குமரர் செய்யும் †வியப்புறுசெய் தொழில்கண்டு விஞ்சை விண்ணோர், நிரைசெறியும் விமானவூர் திகளின் மேலும் நிலமிசையும் பலமுறையும் நிரந்து நீங்கார். ௧௦௦

வெயிலுமிழும் பன்மணிப்பூண் வணிக மாக்கள் விரவுநிதி வளம் பெருக்கும் வெறுக்கை மிக்க, வயின்நிலவு மணிக்கடைமா நகர்கள் எல்லாம் வனப்புடைய பொருட்குலங்கள் மலித லாலே, கயிலைமலை யார்கச்சி ஆல யங்கள் கம்பமுமே வியதன்மை கண்டு போற்றப், பயிலுமுருப் பலகொண்டு நிதிக்கோன் தங்கப் பயில்அளகா புரிவகுத்த பரிசு காட்டும். ௧௦௧

விழவுமலி திருக்காஞ்சி வரைப்பின் வேளாண் விழுக்குடிமைப் பெருஞ்செல்வர் விளங்கும் வேணி, மழஇளவெண் திங்கள்புனை கம்பர் செம்பொன் மலைவல்லிக் ‡களித்தவள ருணவின் மூலம், தொழ

௯௯. பெற்றி - குணம் வாய்ந்த. தேவர்களை வருமாறு அழைக்க விடும் மந்திரங்கள்.

௧௦௦. தெற்றி முற்றத்து - சித்திர கூடங்களின் முற்றத்திலே. புரசைமதக்கரிகளொடு - கழுத்திற் கயிற்றையுடைய மதயானைகளோடு; (புரசை - யானைக் கழுத்திற்கட்டுங் கயிறு; யானையைக் கட்டுங்கயிறு; புரோசை). மணங் கமழும் மலர்களால் தொடுக்கப் பெற்ற மாலையணிந்த. விஞ்சை - வித்தையுடைய. விண்ணோர் கூட்டம் நெருங்கும். நிரந்து - பரந்து நின்று.

௧௦௧. வெறுக்கை - செல்வம். வயின்நிலவும் - இடத்தால் விளங்கும். மணிக்கடைகளையுடைய. காஞ்சியிலுள்ள பல ஆலயங்களிலும் திருவேகம்பத்திலும். பயிலும் - (பலவுருவங்கொள்ளத்தான்) கற்றுப் பழகிய. நிதிக்கோன் - குபேரன். பயில் - சொல்லப்படும். பரிசு - தன்மை.

௧௦௨. விழுக்குடிமை - சீரியகுடிமை. ஒளிருஞ் சடையில் மிகவும் இளமை வாய்ந்த வெள்ளிய சந்திரனை அணிந்த ஏகாம்பரநாதர். உணவின் மூலம் -

பா - ம்—*அழைத்து. †விருப்புறு. ‡அளித்தவருணவின்.

வுலகு பெருமவள்தா னருளப் பெற்றுத் தொன்னிலத்து மன்னுபயிர் வேத வாய்மை, உழவுதொழி லாற்பெருக்கி உயிர்கள் எல்லாம் *ஓங்க வருந் தருமவினைக் குளரால் என்றும். ௧0௨

ஓங்கியநாற் குலத்தொவ்வாப் புணர்வில் தம்மில் உயர்ந்தனவும் இழிந்தனவும் ஆன சாதி, தாங்குழூஉப் பிறந்தகுல பேதம் எல்லாம் தந்தகைமைக் கேற்றதனி இடங்கள் மேவி, ஆங்குநிறை கிளேபயின்று மரபின் ஆற்ற அடுத்தவினைத் தொழின்முறைமை வழாமை நீடு, பாங்குவளர் இருக்கைநிலை பலவும் எல்லாம் பண்புநீ டியவுரிமைப் பால அன்றே. ௧0௩

வேறு

ஆதி மூதெயில் அந்நகர் மன்னிய
சோதி நீள்மணித் தூபமும் தீபமும்
கோதில் பல்லிய முங்கொடி யும்பயில்
வீதி நாளும் ஒழியா விழாவணி. ௧0௪

வாயில் எங்கணுந் தோரணம் மாமதில்
ஞாயில் எங்கணுஞ் சூழ்முகில் நாண்மதி
தோயில் எங்கணும் மங்கலம், தொண்டர்சூழ்
கோயில் எங்கணும் உம்பர் குலக்குழாம். ௧0௫

வேத வேதியர் வேள்வியே தீயன
மாத ரோதி மலரே பிணியன

---

இருநாழி நெல்லே. (வேளாளர்கள்) பெற்று. தருமவினைக்கு - வேளாண்மைக்கு.

௧0௩. புணர்வில் - சேர்க்கையால். குழூஉ - கூடி. ஆங்காங்கே நிறையுமாறு சந்ததிகளை விருத்திசெய்து; உறவினருடன் கலந்து என்போரு முளர். தம்மரபில் செய்தற்குரிய. நீடு பாங்கு - மிக்க நலத்துடன். இவ்வாசிரியர் காலத்தில் காஞ்சிமாநகரில் சாதிகள் இருக்கை பெற்றிருந்தமை இங்கே குறிக்கப்பட்டது.

௧0௪. ஆதிமூதெயில் - முதன்மையான பழைய மதில்களால் சூழப்பெற்ற. பல்லியமும் - பலவகை வாத்தியங்களும். பயில் - நெருங்கிய.

௧0௫. மதில் ஞாயில் - மதிலுறுப்புக்கள். நாள் மதி தோய் இல் - நட்சத்திரங்கள் சூழ்ந்த சந்திரன் தவழும் இல்லங்கள். உம்பர் குலக்குழாம் - தேவ இனத்தாரின் கூட்டம்.

௧0௬. தீயன - தீயை (நெருப்பை) உடையன; (வேறு தீயன—தீமையன—இல்லை என்றபடி). ஓதி - கூந்தலிலுள்ள. பிணியன - கட்டப்பட்டன;

பா - ம்—*ஓம்ப.

காதல் வீதிவி லக்கே கவலைய
சூத மாதவி யேபுறஞ் சூழ்வன. ௧0௬

சாய லார்கள் நுசுப்பே தளர்வன
ஆய மாடக் கொடியே அசைவன
சேய ஓடைக் களிறே திகைப்பன
பாய சோலைத் தருவே பயத்தன. ௧0எ

அண்ணலார் அன்பர் அன்பேமுன் ஆர்த்தன
தண்ண றுஞ்செழுந் தாதே துகள்வன
வண்ண நீள்மணி மாலையே தாழ்வன
எண்ணில் குங்குமச் சேறே இழுக்கின. ௧0அ

வென்றி வானவர் தாம்விளை யாடலும்
என்றும் உள்ளவர் வாழும் இயற்கையும்
நன்றும் உள்ளத்து நண்ணினர் †வேட்கைகள்
ஒன்றும் அங்கொழி யாவகை உய்ப்பது. ௧0௯

---

(வேறு பிணியன—நோயுடையன—இல்லை). காதல் வீதிகளில். விலக்கே-கூட்ட மிகுதியால் ஒருவரை ஒருவர் விலக்கல்களே. கவலைய - சந்திப்பன; (வேறு கவலைய—துன்பமுடையன—இல்லை). சூதமாதவி-மாமரங்களும் குருக்கத்தி மரங்களுமே. புறஞ் சூழ்வன - பக்கங்களில் சூழ்ந்திருப்பன; (வேறு சூழ்வன—தாழ்ந்து இரப்பன—இல்லை).

௧0எ. மயில் போலுஞ் சாயலுடைய பெண் மக்களின் இடைகளே தளர்வன; (வேறு தளர்வன இல்லை). ஆயமாடம் - அப்பெண்களின் திரளையுடைய மாடங்களில். சேய ஓடைக் களிறே - செம்பொன் நெற்றிப்பட்டத்தையுடைய யானைகளே. பாய - பரந்த. தருவே - மரங்களே. பயத்தன - பழங்களையுடையன; (வேறு பயத்தன—அச்சமுடையன—இல்லை).

௧0அ. அண்ணலார் - சிவபெருமான். ஆர்த்தன - பிணிப்பன; நிறைவிப்பன, நுகர்விப்பன என்னலுமாம்; (வேறு ஆர்த்தன—அலர் தூற்றுங்கொடுமையன—இல்லை). பூர் தாதுக்களே. துகள்வன - புழுதியாவன; (வேறு துகள்வன—குற்ற முடையன—இல்லை). வண்ணம் - அழகிய; பன்னிறம் வாய்ந்த. தாழ்வன - தொங்குவன; (வேறு தாழ்வுடையன இல்லை). இழுக்கின - வழுக்குவன; வேறு இழிவுடையன இல்லை.

௧0௯. என்றும் உள்ளவர் - சித்தர்கள்; "மூன்று மடக்குடைப் பாம்பிரண் டெட்டுள-என்ற இயந்திரம் பன்னிரண் டங்குலம் - நான்றவிழ் முட்டை இரண்டையுங் கட்டியிட் - டேன்றி இருக்க உடல் அழியாதே"—திருமந்திரம்: ௩. சரீர சித்த. ௧அ0. நன்றும் - நல்லனவற்றையும். உய்ப்பது - கொண்டு கொடுப்பது (காஞ்சி).

பா - ம்—*துகளன. †வேட்கையுள்.

புரங்க டந்தவர் காஞ்சி புரம்புகழ்
பரம்பு நீள்புவ னம்பதி ஞன்கினும்
வரம்பில் போக வனப்பின் வளமெலாம்
நிரம்பு கொள்கலம் என்ன நிறைந்ததால். ககO

வேறு

அவ்வகைய திருநகரம் அதன்கண்ஒரு மருங்குறைவார்
இவ்வுலகிற் பிறப்பினால் ஏகாலிக் குலத்துள்ளார்
செவ்வியஅன் புடைமனத்தார் சீலத்தின் நெறிநின்றார்
மைவிரவு கண்டரடி வழித்தொண்டர் உளரானார். ககக

மண்ணின்மிசை வந்ததற்பின் மனமுதலா யினமூன்றும்
அண்ணலார் சேவடியின் சார்வாக அணைவிப்பார்
புண்ணியமெய்த் தொண்டர்திருக் குறிப்பறிந்து போற்றுநிலைத்
திண்மையினால் திருக்குறிப்புத் தொண்டரெனுஞ் சிறப்பினார். ககஉ

தேரொலிக்க மாவொலிக்கத் திசையொலிக்கும் புகழ்க்காஞ்சி
ஊரொலிக்கும் பெருவண்ணா ரெனவொண்ணா உண்மையினார்
நீரோலிக்க அராஇரைக்க நிலாமுகிழ்க்குந் திருமுடியார்
பேரொலிக்க உருகுமவர்க் கொலிப்பர்பெரு விருப்பினொடும். ககந

தேசுடைய மலர்க்கமலச் சேவடியார் அடியார்தந்
தூசுடைய துகள்மாசு கழிப்பார்போல் தொல்லைவினை
ஆசுடைய மலமூன்றும் அணையவரும் பெரும்பிறவி
மாசுதனை விடக்கழித்து வருநாளில் அங்கொருநாள். ககச

---

ககO. புரங்கடந்தவர் - முப்புர மெரித்த சிவபிரான் எழுந்தருளியுள்ள. பரம்பு - பெருகும். கொள்கலம் - பாத்திரம். காஞ்சியின் மற்றும் பல சிறப்புக்களை மணிமேகலை, கந்தபுராணம், காஞ்சிப்புராணம் முதலிய நூல்களிற் காண்க.

ககஉ. மனம் வாக்கு காயம் என்னும் மூன்றும். திண்மையினால் - உறுதியினால்.

ககந. மா - குதிரைகள். காஞ்சியூரில் ஆடைகளை ஒலிக்கும். நீர் - கங்கை. அரா இரைக்க - பாம்பு சீற. முகிழ்க்கும் - மலரும்; தோன்ற, வைத்த எனினுமாம். பேர் ஒலிக்க - திருநாமத்தை உச்சரிக்க. அவர்க்கு - அடியவர்களுக்கு. ஒலிப்பர் - ஆடையை ஒலித்து (வெளுத்து)க் கொடுப்பர்.

ககச. தேசு - ஒளி......சேவடியார் அடியார் தம் - சிவனடியார்களுடைய. தூசுடைய - ஆடைகளிலுள்ள. பழைய வினையென்னும் குற்றமுடைய ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்கள். அக மாசினையுங் கழுவுவார் என்றபடி.

பா - ம்—*ஆங்கொருநாள்.

பொன்னிமயப் பொருப்பரையன் பயந்தருளும் பூங்கொடிதன்
நன்னிலைமை அன்றளக்க எழுந்தருளும் நம்பெருமான்
தன்னுடைய அடியவர்தந் தனித்தொண்டர் தம்முடைய
அந்நிலைமை கண்டன்பர்க் கருள்புரிவான் வந்தணைவான். ௧௧௫

சீதமலி காலத்துத் திருக்குறிப்புத் தொண்டர்பால்
ஆதுலராய் மெலிந்துமிக அழுக்கடைந்த கந்தையுடன்
மாதவவே டந்தாங்கி மாலறியா மலரடிகள்
கோதடையா மனத்தவர்முன் குறுநடைகள் கொளக்குறுகி. ௧௧௬

திருமேனி வெண்ணீறு திகழ்ந்தொளிருங் கோலத்துக்
கருமேக மெனஅழுக்குக் கந்தையுடன் எழுந்தருளி
வருமேனி அருந்தவரைக் கண்டுமனம் மகிழ்ந்தெதிர்கொண்
டுருமேவு மயிர்ப்புளகம் உளவாகப் பணிந்தெழுந்தார். ௧௧௭

எய்துமவர் குறிப்பறிந்தே †இன்மொழிகள் பலமொழிந்து
"செய்தவத்தீர்! திருமேனி இளைத்திருந்த தென்"என்று
கைதொழுது "கந்தையினைத் தந்தருளும் கழுவ"என
மைதிகழ்கண் டங்கரந்த மாதவத்தோர் அருள்செய்வார். ௧௧௮

"இக்கந்தை அழுக்கேறி எடுக்கவொணா தெனினும்யான்
மெய்க்கொண்ட குளிர்க்குடைந்து விடமாட்டேன் மேல்கடற்பால்
அக்குன்றம் வெங்கதிரோன் அணைவதன்முன் தருவீரேல்
கைக்கொண்டு போயொலித்துக் கொடுவாரும் கடி"தென்றார். ௧௧௯

"தந்தருளும் இக்கந்தை தாழாதே ஒலித்துமக்கின்
றந்திபடு வதன்முன்னந் தருகின்றேன்" எனஅவரும்
"கந்தைஇது ஒலித்துணக்கிக் கடிதின்றே தாரீரேல்
இந்தவுடற் கிடர்செய்தீர்" என்றுகொடுத் தேகினார். ௧௨௦

---

௧௧௫. மலையரையன் பெற்ற உமையம்மையாரின். அன்று - அந்நாளில். அடியவர்க்கு அடியவராகிய திருக்குறிப்புத் தொண்டருடைய. அன்பருக்கு - அத்திருக்குறிப்புத் தொண்டருக்கு. அணையும் பொருட்டு.

௧௧௬. ஆதுலராய் - ஏழையாய். கோது - குற்றம்.

௧௧௭. உருமேவும் - தமது உடலிற் பொருந்தும்.

௧௧௮. எய்துமவர் - எழுந்தருளிய சிவபிரானாகிய அடியவரது. திருநீலகண்டத்தை மறைத்த.

௧௧௯. உடலிலுற்ற குளிரால் நடுங்கிக் கந்தையைக் கைவிடமாட்டேன். மேற்றிசைக் கடல்பாலுள்ள அத்தகிரியை; சூரியன் மறைவதற்குள்.

௧௨௦. அந்திப்பொழுதுக்கு முன். உணக்கி - உலர்த்தி.

பா - ம்—*வந்தணைவார்; வந்தணைந்தார். †இனிய மொழி.

துறித்தபொழு தேஒலித்துக் கொடுப்பதற்குக் கொடுபோந்து
வெறித்தடநீர்த் துறையின்கண் மாசெறிந்து மிகப்புழுக்கிப்
பிறித்தொலிக்கப் புகும்அளவில் பெரும்பகல்போய்ப் பின்பகலாய்
மறிக்கரத்தார் திருவருளால் மழைஎழுந்து பொழிந்திடுமால். ௧௨௧

திசைமயங்க வெளியடைத்த செறிமுகிலின் குழாமிடைந்து
மிசைசொரியும் புனல்தாரை விழிநுழையா வகைமிடைய
அசைவுடைய மனத்தன்பர் அறிவுமறந் தருந்தவர்பால்
இசைவுநினைந் தழிந்"தினியான் என்செய்கேன்" எனநின்றார். ௧௨௨

"ஓவாதே பொழியுமழை ஒருகால்விட் டொழியும்"எனக்
காவாலி திருத்தொண்டர் தனிநின்றார் விடக்காரூர்
மேவார்போற் கங்குல்வர "மெய்குளிரும் விழுத்தவர்பால்
ஆ!ஆ!என் குற்றேவல் அழிந்தவா" எனவிழுந்தார். ௧௨௩

"விழுந்தமழை ஒழியாது மெய்த்தவர்சொல் வியஎல்லை
கழிந்ததுமுன் பொலித்துமனைக் காற்றேறக அறிந்திலேன்
செழுந்தவர்தந் திருமேனி குளிர்காணுந் தீங்கிழைத்த
தொழும்பனேற் கினியிதுவே செயல்"என்று துணிந்தெழுவார். ௧௨௪

"கந்தைபுடைத் திடஎற்றுங் கற்பாறை மிசைத்தலையைச்
சிந்தஎடுத் தெற்றுவன்"என் றணைந்துசெழும் பாறைமிசைத்
தந்தலையைப் புடைத்தெற்ற அப்பாறை தன்மருங்கு
வந்தெழுந்து பிடித்ததணி வளைத்தழும்பர் மலர்ச்செங்கை. ௧௨௫

---

௧௨௧. மணங்கமழும் அகன்ற நீர்த்துறையில். உவர்மண் முதலியன ஊட்டி வெள்ளாவி வைத்து. மறி - மான்.

௧௨௨. நெருங்கிய மேகக் கூட்டங்கள் நிறைந்து வானத்தினின்றும். இசைவு - (பொழுது போவதற்குள் ஆடையை ஒலித்துத் தருகிறேன் என்று செய்துகொண்ட) உடன்பாட்டை.

௧௨௩. ஓவாதே - நீங்காமல். காவாலி - சிவபிரானுடைய. பகைவரைப் போல் இரவு வர. விழுத்தவர்பால் - சீரிய தவத்தை யுடையவரிடம்.

௧௨௪. மனையில். தொழும்பனேற்கு - அடியேனுக்கு.

௧௨௫. புடைத்திட எற்றும் - ஒலிக்க அடிக்கும். சிந்த எடுத்து எற்றுவன் - சிதறும்படி எடுத்து மோதுவன். புடைத்து எற்ற - மோதியுடைக்க. அப்பாறையினிடத்து. அணிவளைத் தழும்பர் - காமாட்சி யம்மையாரின் அழகிய வளைச் சுவட்டை அணிந்த ஏகாம்பரநாதரின்.

வானிறைந்த புனல்மழைபோய் மலர்மழையா யிடமருங்கு
தேனிறைந்த மலரிதழித் திருமுடியார் பொருவிடையின்
மேனிறைந்த துணைவியொடும் வெளிநின்றார், மெய்த்தொண்டர்
தானிறைந்த அன்புருகக் கைதொழுது தனிநின்றார். கஉ௬

முன்னவரை நேர்நோக்கி முக்கண்ணார் "மூவுலகும்
நின்நிலைமை அறிவித்தோம் நீயும்இனி நீடியநம்
மன்னுலகு பிரியாது வைகுவாய்" என்அருளி
அந்நிலையே எழுந்தருளி அணிஏகாம் பரமணைந்தார். கஉ௭

சீர்நிலவு திருக்குறிப்புத் தொண்டர்திருத் தொழில்போற்றிப்
பார்குலவத் தந்தைதா ளறஎறிந்தார் பரிசுரைக்கேன்
பேரருளின் மெய்த்தொண்டர் பித்தனெனப் பிதற்றுதலால்
ஆருலகில் இதனுண்மை அறிந்துரைக்க இசைந்தெழுவார். கஉ௮

ஆக திருவிருத்தம் - க,உகO

---

தொண்டைநாட்டிலே உமையம்மையார் அறம்வளர்த்த திருப்பதி காஞ்சிமா நகரம். அத்திருப்பதியிலே வண்ணார் குலத்திலே தோன்றிய ஒரு நாயனார் இருந்தார். அவர், அடியவர்களின் திருக்குறிப்பை அறிந்து திருத்தொண்டு செய்தமையால், அவருக்குத் **திருக்குறிப்புத் தொண்டர்** என்னும் பெயர் வழங்கலாயிற்று. அடியவர்களுக்கு வஸ்திரம் வெளுத்துக் கொடுப்பது அவர் தம் தொண்டு.

குளிர் காலத்தில், ஒருநாள் சிவபெருமான் திருநீறு பூசி, அழுக்கேறிய கந்தை யுடுத்தி, மெலிந்த மேனியராய், வறியராய், நாயனார்பால் அணைந்தார். நாயனார் அவரைக் கண்டு, எதிர் கொண்டு பணிந்து, அவர்தம் திருக்குறிப்பை அறிந்து, "தவத்தீர்! திருமேனி இளைத்திருப்பதென்ன? அணிந்துள்ள கந்தையை அளித்தருளும்; வெளுத்துத் தருகிறேன்" என்று வேண்டி நின்றார். தவவேடர், நாயனாரை நோக்கி, "இக்கந்தை அழுக்கேறியதே. குளிரின் கொடுமையால் இதைவிடவும் மனமெழவில்லை. பொழுதுபோவதற்குள் இதை ஒலித்துக் கொடுக்க முடியுமாயின், இதைக்கொண்டு போம்" என்றருளினார். நாயனார் அதற்கு இசைந்தார். இறைவர் "பொழுதுபோவதற்குள் இதை வெளுத்து உலர்த்திக் கொடுத்தல் வேண்டும். இல்லையேல், நீர் இவ்வுடலுக்கு இடர் செய்தவராவீர்" என்று கூறிக் கந்தையைக் கொடுத்தார். நாயனார் அதை வாங்கி வெளுக்கப் புகுந்தார். அப்பொழுது சிவனருளால் மேகங்கள் திரண்டு எழுந்து மழை பொழிந்தன.

திருக்குறிப்புத் தொண்டர் என் செய்வார்! அவர், சிவனடியார்க்களித்த உறுதிமொழியை நினைக்கிறார்; வருந்துகிறார்; 'மழை விடவுங் கூடும்' என்று நின்றுபார்க்கிறார். மழை விடவில்லை. பொழுதும் போயிற்று, "அடியேன் குற்றேவல்தவறிற்றே" என்று நாயனார் விழுந்தார்; விழுந்து, "மழையொழியாது

---

கஉ௬. இதழி - கொன்றை. பொர்விடையின். துணைவி - உமையம்மையார். கஉ௮. மெய்த்தொண்டர் - சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

அடியவர் குறிப்பிட்ட காலவரையுங் கழிந்தது. முன்னரே இதை ஒலித்து வீட்டில் காற்றேறக் கட்டிவிட்டேனில்லை; அடியவர் திருமேனியைக் குளிரினால் வருந்தச் செய்தேன்; பாவியானேன்" என்று எழுந்து, கற்பாறையில் தலையை மோதினார். அங்கே சிவபெருமான் திருக்கை தோன்றி நாயனாரைப்பற்றிக் கொண்டது. புனல் மழை யொழிந்தது; பூ மழை சொரிந்தது.

சிவபெருமான் உமையம்மையாருடன் மழ விடைமேற் றோன்றினார். திருக்குறிப்புத் தொண்ட நாயனார் மெய்ம் மறந்து பணிந்து எழுந்து கை தொழுது நின்றார். சிவபெருமான் நாயனாரைப் பார்த்து, "உனது நிலையை மூவுலகும் அறியும்படி செய்தோம். நீ நமது உலகை அடைவாயாக" என்று அருள் சுரந்து மறைந்தருளினார்.

# சண்டேசுர நாயனார் புராணம்

பூந்தண் பொன்னி எந்நாளும் பொய்யா தளிக்கும் புனல்நாட்டு
வாய்ந்த மண்ணித் தென்கரையில் மன்ன முன்னாள் வரைகிழிய
ஏந்தும் அயில்வேல் நிலைகாட்டி இமையோர் இகல்வெம் பகைகடக்கும்
சேந்தன் அளித்த திருமறையோர் மூதூர் செல்வச் சேய்ஞலூர். ௧

செம்மை வெண்ணீற் றொருமையினார் இரண்டு பிறப்பின் சிறப்பினார்
மும்மைத் தழலோம் பியநெறியார் நான்கு வேத முறைபயின்றார்
தம்மை ஐந்து புலனும்பின் செல்லும் தகையார் அறுதொழிலின்
மெய்ம்மை ஒழுக்கம் ஏழுலகும் போற்றும் மறையோர் *விளங்குவது.

கோதில் மான்தோல் புரிமுந்நூல் குலவு மார்பிற் குழைக்குடுமி
ஓது †கிடைசூழ் சிறுவர்களும் உதவும் பெருமை ஆசானும்
போதின் விளங்குந் தாரகையும் மதியும் போலப் புணர்மடங்கள்
மீது முழங்கு முகிலொதுங்க வேத ஒலிகள் முழங்குவன. ௩

௧. பூந்தண் பொன்னி - பொலிவும் தண்மையுமுடைய காவிரி. "வான் பொய்ப்பினும் தான் பொய்யா மலைத்தலைய கடற்காவிரி"—**பட்டினப்பாலை**: ௫ - ௬. புனல் நாட்டு - சோழநாட்டில். வாய்ந்த - உள்ள; சிறப்பு வாய்ந்த என்னலுமாம். மண்ணியாற்றின். மன்ன - நிலைபெற. வரை - கிரவுஞ்சகிரி. அயில் - கூர்மையான. தன்னிலை காட்டி. இமை...கடக்கும் - தேவர்களுடன் மாறுபட்ட கொடிய பகைவர்களாகிய தாருகன் முதலியவர்களை வென்ற. சேந்தன் - முருகன். சேய் நல்லூர்; சேய்ஞலூர்; போலி. சேய் - முருகன். முருகப்பெருமானால் விரும்பப்பட்ட நல்ல ஊர்.

௨. ஒருமை நேயமுடையவர். மும்மைத்தழல் ஓம்பி - மூன்று தீ வளர்த்து; **தில்லைவாழ் அந்தணர் புராணம்** பார்க்க. ஐம்புலச் சேட்டைகளைப் பின் செலுத்தும்.

௩. குலவும் - விளங்கும். குழை - மெல்கிய. மார்பினையும் குடுமியையுமுடைய. ஓதுகிடை - வேதம் பயிலும் இடத்தில். போதின் - இரவில். தாரகையும் - நட்சத்திரங்களும்.

**பா** - ம்—*விளங்குபதி. †புடை.

யாகம் நிலவும் சாலைதொறும் மறையோர் ஈந்த அவியுணவின்
பாகம் நுகர வருமாலும் அயனும் ஊரும் படர்சிறைப்புள்
மாகம் இகந்து வந்திருக்கும் சேக்கை எனவும் வானவர்கோன்
நாகம் அணையும் கந்தெனவும் நாட்டும் யூப ஈட்டமுள. ௪

தீம்பா லொழுகப் பொழுதுதொறும் ஓம தேனுச் செல்வனவும்
தாம்பா டியசா மங்கணிப்போர் சமிதை இடக்கொண் டணைவனவும்
பூம்பா சடைநீர்த் தடம்மூழ்கி மறையோர் மகளிர் புகுவனவும்
ஆம்பான் மையினில் விளங்குவன அணிநீள் மறுகு பலவுமுள. ௫

வாழ்பொற் பதிமற் றதன்மருங்கு மண்ணித் திரைகள் வயல்வரம்பின்
தாழ்வில் தரளம் சொரிகுலைப்பால் சமைத்த யாகத் தடஞ்சாலை
சூழ்வைப் பிடங்கள் நெருங்கியுள தொடங்கு சடங்கு முடித்தேறும்
வேள்வித் தலைவர் பெருந்தேர்கள் விண்ணோர் ஏறும் விமானங்கள். ௬

மடையில் கழுநீர் செழுநீர்சூழ் வயலில் சாலிக் கதிர்க்கற்றைப்
புடையில் சுரும்பு மிடைகமுகு புனலில் பரம்பு பூம்பாளை
அடையில் பயிலுந் தாமரைநீள் அலரில் துயிலுங் கயல்கள்வழி
நடையில் படர்மென் கொடிமௌவல் நனையில் திகழுஞ் சினைக்காஞ்சி.

---

௪. அவிர்ப்பாகத்தை உண்ண. படர்ந்த சிறகுடைய பறவைகளாகிய கருடனும் அன்னமும். மாகம் இகந்து - ஆகாயத்தினின்றும் நீங்கி.* சேக்கை - இருப்பிடம்; குடம்பை. வானவர்......கந்தெனவும் - இந்திரனது ஐராவதத்தைக் கட்டும் தறிபோலவும். நாட்டப்பட்ட யூபஸ்தம்ப (யாகஸ்தம்ப - ஓமத் தறி)க் கூட்டங்கள் உள்ளன. யூபஸ்தம்பத்தின் நுனி சேக்கைபோலிருக்கும். "எருவை நுகர்ச்சி யூப நெடுந்தூண்"—புறநானூறு : ௨௨௪.

௫. தீம் - இனிய. ஓமதேனு - யாகச் சடங்குக்குப் பால் உதவும் பசுக்கள்; ௨௧, ௪௨-ம் பாக்களைப் பார்க்க. தாம் ஓதிய சாமவேதத்தைச் சிந்திப்போர். பூவும் பசிய இலைகளும் உள்ள தடாகங்களில். ஆம் பான்மையினில் - (செல்லுதலும், அணைதலும், புகுதலும்) ஆகிய பாகுபாட்டில். மறுகு - தெருக்கள்.

௬. மண்ணியாற்றின் அலைகள். தாழ்வில் - சார்பில்; பள்ளத்தில். தரளம் - முத்துக்களை. குலைப்பால் - கரையினிடத்து. தடம் - பெரிய. தேர்களும் விமானங்களும் நெருங்கியுள.

௭. கழுநீர் செழுநீர் - கருங் குவளையும் செங்குவளையும். கழுநீர் - ஆம்பல் என்றும், செழுநீர் - செழிய நீரென்றுங் கூறுவாருமுளர். செஞ்சாலிக் கதிர்க் கற்றையின் பக்கங்களில் வண்டுகள் நெருங்கிய கமுக மரங்கள். சாலிக் கதிர்க் கற்றைகள் எனத் தனியாகக் கோடலுமாம். நீரில் பெருகியுள்ள கமுகம் பாளைகள். அடையில் பயிலும் - இலைகளுடன் கூடிய. நடக்கும் வழியில் படர்ந்துள்ள மெல்லிய கொடிகளையுடைய முல்லைகள். அரும்புகளால் விளங்குங் கிளைகளையுடைய காஞ்சி மரங்கள்—(இவைகள் உள்ளன).

சென்னி அபயன் குலோத்துங்கச் சோழன் தில்லைத் திருவெல்லை
பொன்னின் மயமாக் கியவளவர் போரே றென்றும் புவிகாக்கும்
மன்னர் பெருமான் அநபாயன் வருந்தொல் மரபின் முடிசூட்டுந்
தன்மை நிலவு பதிஐந்தின் ஒன்றாய் நீடும் தகைத்தவ்வூர். ௯

பண்ணின் பயனாம் நல்லிசையும் பாலின் பயனாம் இன்சுவையும்
கண்ணின் பயனாம் பெருகொளியும் கருத்தின் பயனாம் எழுத்தஞ்சும்
விண்ணின் பயனாம் பொழிமழையும் வேதப் பயனாம் சைவமும்போல்
மண்ணின் பயனாம் அப்பதியின் வளத்தின் பெருமை வரம்புடைத்தோ.

பெருமை பிறங்கும் அப்பதியின் மறையோர் தம்முள் பெருமனைவாழ்
தருமம் நிலவு காசிபகோத் திரத்துத் தலைமை சால்மரபில்
அருமை மணியும் அளித்ததுவே நஞ்சும் அளிக்கும் அரவுபோல்
இருமை வினைக்கும் ஒருவடிவாம் எச்ச தத்தன் உளனானான். ௧௦

மற்றை மறையோன் திருமனைவி வாய்ந்த மரபின் வந்துதித்தாள்
சுற்றம் விரும்பும் இல்வாழ்க்கைத் தொழிலாள் உலகில் துணைப்புதல்வர்
பெற்று விளங்குந் தவஞ்செய்தாள் பெறும்பே றெல்லைப் பயன்பெறுவாள்
பற்றை எறியும் பற்றுவரச் சார்பா யுள்ள †பவித்திரையாம். ௧௧

நன்றி புரியும் அவர்தம்பால் நன்மை மறையின் துறைவிளங்க
என்றும் மறையோர் குலம்பெருக ஏழு புவனங் களும்உய்ய
மன்றில் நடஞ்செய் பவர்சைவ வாய்மை வளர மாதவத்தோர்
வென்றி விளங்க வந்துதயம் செய்தார் விசார சருமனார். ௧௨

ஐந்து வருடம் அவர்க்கணைய அங்கம் ஆறும் உடன்நிறைந்த
சந்த மறைகள் உட்படமுன் தலைவர் மொழிந்த ஆகமங்கள்

---

௯. "பரிதிகுலந் தனிலுதித்துப் பரசமய இருளகற்றிப் பரம னாடும் - பொருவருபே ரம்பலமும் கோபுரமும் ஆலயமும் பொன்வேய்ந் தண்மைச் - சுருதியுடன் சைவநெறி தழைத்தோங்கத் திருநீற்றுச் சோழன் என்று - குரு மணிமா முடிபுனைந்த குலோத்துங்க வளவனருள் குறித்து வாழ்வாம்"—**சிதம்பர புராணம்**: பாயிரம். ௧௧. பதி ஐந்து: காவிரிப்பூம் பட்டினம், திருவாரூர், உறையூர், சேய்ஞலூர், கருவூர்.

௧௦. மனைவாழ் தருமம் - இல்லறம். பாம்பினிடத்தில் மணியும் நஞ்சும் இருப்பதுபோல எச்சதத்தனிடத்தில் முறையே நல்வினையும் தீவினையும் உண்டு என்றபடி. நல்வினை, சண்டேசுரரை ஈன்றது; தீவினை, சிவபூசையைக் குலைத்தது.

௧௧. துணையாகிய புதல்வரை. பெறும் பேற்றின் முடிவான பயனை. பற்றை - பாசத்தை. பற்று - சிவநேசம்.

**பா - ம்**—*விளங்கும். †பவித்திரையாள்.

முந்தை அறிவின் தொடர்ச்சியினால் முகைக்கு மலரின் வாசம்போல்
சிந்தை மலர உடன்மலரும் செவ்வி உணர்வு சிறந்ததால். கங

நிகழும் முறைமை ஆண்டேழும் நிரம்பும் பருவம் வந்தெய்தப்
புகழும் பெருமை உபநயனப் பொருவில் சடங்கு முடித்தறிவின்
இகழு நெறிய அல்லாத எல்லாம் இயைந்த எனினுந்தம்
திகழு மரபின் ஓதுவிக்கும் செய்கை பயந்தார் செய்வித்தார். கச

குலவு மறையும் பலகலையும் கொளுத்து வதன்முன் †கொண்டமைந்து
நிலவும் உணர்வின் திறங்கண்டு நிறுவு மறையோர் அதிசயித்தார்
அலகில் கலையின் பொருட்கெல்லை ஆடுங் கழலே எனக்கொண்ட
செலவு மிகுந்த சிந்தையினில் தெளிந்தார் சிறிய பெருந்தகையார். கரு

"நடமே புரியுஞ் சேவடியார் நம்மை உடையார்" எனும்மெய்ம்மை
உடனே தோன்றும் உணர்வின்கண் ஒழியா தூறும் வழியன்பின்
கடனே இயல்பாய் முயற்றிவருங் காதல் மேன்மேல் எழுங்கருத்தின்
திடநேர் நிற்குஞ் செம்மலார் திகழு நாளில் ஆங்கொருநாள். கசு

ஓது கிடையி னுடன்போவார் ஊர்ஆன் நிரையி னுடன்புக்க
போது மற்றங் கொருபுனிற்று போற்றும் அவன்மேல் மருப்போச்ச
யாதும் ஒன்றுங் கூசாதே எடுத்த கோல்கொண் டவன்புடைப்ப
மீது சென்று மிகும்பரிவால் வெகுண்டு விலக்கி மெய்யுணர்ந்து. கஎ

யாவுங் கலைகள் ஆகமநூல் பரப்பின் தொகுதிப் பான்மையினால்
மேவும் பெருமை அருமறைகள் மூல மாக விளங்குலகில்

---

கங. ஆறு அங்கம்: சிக்ஷை, வியாகரணம், சந்தோ விசிதி, நிருத்தம், சோதிடம், கற்பம். முகை கொண்டு மலரும். செவ்வி உணர்வு - சிவஞானம். "பூவினிற் கந்தம் பொருந்திய வாறுபோல்—சீவனுக் குள்ளே சிவமணம் பூத்தது"—திருமந்திரம்: யோகம். ச.

கச. அறிவால் இகழப்படும் நெறியை யுடையன அல்லாத நெறிகளெல்லாம் இவரிடம் பொருந்தி இருந்தனவாயினும். பயந்தார் - பெற்றோர்.

கரு. குலவும் - விளங்கும். கொளுத்துவதன் முன் - போதிப்பதற்கு முன்னரே. அவைகளைத் தாமே விளங்கிக்கொண்டு. நிறுவும் - போதிக்கும். அளவில்லாத கலைகளின் முடிந்த முடிவு மன்றுள் ஆடும் ஆண்டவன் திருவடியே. செலவு - ஞானச்செலவு (செல்லுதல்).

கசு. முயற்றி - ஊக்கி; முதிர்ந்து. செம்மலார் - விசார சருமர்.

கஎ. ஓது கிடையினுடன் போவார் - ஒருசாலை மாணுக்கருடன் போகும் விசாரசருமர். ஊரிலுள்ள பசுக்கூட்டங்களுடன் போதல் நேர்ந்தபோது. ஒரு ...ஓச்ச - ஈன்றணிமைத் தான ஒரு பசு தன்னை மேய்ப்பவனைக் கொம்பால் முட்ட. புடைப்ப - (அப்பசுவை) அடிக்க. மீது - அம்மேய்ப்பவனிடம்.

பா - ம்—*முகைத்த. †கொண்டமைந்த.

யாவுந் தெளிந்த *பொருள்நிலையே எய்த உணர்ந்த உள்ளத்தால்
ஆவின் பெருமை உள்ளபடி அறிந்தார் ஆயற் கருள்செய்வார். ௧அ

"தங்கும் அகில யோனிகட்கும் மேலாம் பெருமைத் தகைமையன
பொங்கு புனித தீர்த்தங்கள் எல்லாம் என்றும் பொருந்துவன
துங்க அமரர் திருமுனிவர் கணங்கள் சூழ்ந்து பிரியாத
அங்கம் அனைத்துந் தாமுடைய அல்ல வோநல் ஆனினங்கள். ௧௯

ஆய சிறப்பி னாற்பெற்ற அன்றே மன்றுள் நடம்புரியும்
நாய னார்க்கு வளர்மதியும் நதியும் நகுவெண் தலைத்தொடையும்
மேய வேணித் திருமுடிமேல் விரும்பி ஆடி அருளுதற்குத்
தூய திருமஞ் சனம்ஐந்தும் அளிக்கும் †உரிமைச் சுரபிகள்தாம். ௨0

சீல முடைய கோக்குலங்கள் சிறக்குந் தகைமைத் தேவருடன்
கால முழுதும் உலகனைத்துங் காக்கும் முதற்கா ரணராகும்
நீல கண்டர் செய்யசடை நிருத்தர் சாத்து நீறு‡தரும்
மூலம் அவதா ரஞ்செய்யும் மூர்த்தம் என்றால் முடிவென்னோ. ௨௧

உள்ளுந் தகைமை இனிப்பிறவே றுளவே உமைமான் மறிக்கன்று
துள்ளுங் கரத்தார் அணிபணியின் சுடர்சூழ் மணிகள் சுரநதிநீர்
தெள்ளுஞ் சடையார் தேவர்கள்தம் பிராட்டி யுடனே சேரமிசைக்
கொள்ளுஞ் சினமால் விடைத்தேவர் குலமன் றோஇச் சுரபிகுலம்".

என்றின் னனவே பலவும்நினைந் "திதத்தின் வழியே மேய்த்திந்தக்
கன்று பயில்ஆன் நிரைகாக்கும் இதன்மேல் இல்லை கடன்இதுவே
மன்றுள் ஆடுஞ் சேவடிகள் வழுத்து நெறியா வதும்"என்று
நின்ற ஆயன் தனைநோக்கி "நிரைமேய்ப் பொழிக நீ"என்பார். ௨௩

௧அ. யாவும் - பரந்த. கலைகளும் ஆகமநூற்பரப்பின் தொகுதியும் ஆகிய பகுதிகளாற் பொருந்தும். சிவமே எய்த (பொருந்த). ஆயற்கு - இடையனுக்கு.

௧௯. துங்க அமரர் - உயர்ந்த தேவர்கள். விரிவு சிவதருமோத்திரம் முதலிய நூல்களிற் காண்க.

௨0. நாயனார்க்கு - நடராஜப் பெருமானுக்கு. சிரிக்கும் வெள்ளிய தலைமாலையும். அபிடேகத்துக்கு. ஐந்து: பால், தயிர், நெய், கோசலம், கோமயம். சுரபிகள் - பசுக்கள். ஆய சிறப்பினால் பெற்றன அல்லவோ?

௨௧. திருநீற்றுக்கு மூலமாகவுள்ள சாணம் தோன்றும்.

௨௨. உமைமான் மறிக்கன்று - சிறந்த மான் கன்று. பணியின் - பாம்பின். சுரநதி - கங்கை. தெள்ளும் - கொழிக்கும். பிராட்டி - பார்வதி. உள்ளும் - சிந்திக்கும். வேறுளவோ.

௨௩. இதத்தின் வழியே - பசுக்களின் பிரியப்படி. கன்றொடு கூடிய பசுக் காத்தல் சிவ வழிபாடு செய்வதாகும் என்றபடி.

பா - ம்—*பொருளின் நிலை எய்த. †உரிமை சுரபிகள்தாம். ‡திரு.

"யானே இனிஇந் நிரைமேய்ப்பன்" என்றார் அஞ்சி இடைமகனும்
தானோர் இறைஞ்சி விட்டகன்றான் தாமும் மறையோர் இசைவினால்
ஆனே நெருங்கும் பேராயம் அளிப்பா ராகிப் பைங்கூழ்க்கு
வானே என்ன நிரைகாக்க வந்தார் தெய்வ மறைச்சிறுவர். உச

கோலும் கயிறும் கொண்டுகுழைக் குடுமி அலையக் குலவுமான்
தோலும் நூலும் சிறுமார்பில் துவள அரைக்கோ வணஞ்சுடரப்
பாலும் பயனும் பெருகவரும் பசுக்கள் மேய்க்கும் பான்மையினால்
சாலும் புல்லின் அவைவேண்டுந் தனையும் மிசையுந் தலைச்சென்று. உரு

பதவு காலங் களில்*மேய்த்தும் பறித்தும் அளித்தும் பரிவகற்றி
இதமுண் துறையுள் நற்றண்ணீர் ஊட்டி அச்சம் எதிர்நீக்கி
அதர்நல் லனமுன் செலநீழல் அமர்வித் தமுத மதுரப்பால்
உதவும் பொழுது பிழையாமல் உடையோர் இல்லந் தொறும்உய்த்தார்.

மண்ணிக் கரையின் வளர்புறவின் மாடும் படுகர் மருங்கினிலும்
தண்ணித் திலநீர் மருதத்தண் டலைசூழ் குலையின் சார்பினிலும்
எண்ணிற் பெருகு நிரைமேய்த்துச் சமிதை யுடன்மேல் எரிகொண்டு
நண்ணிக் கங்குல் முன்புகுது நன்னாள் பலவாம் அந்நாளில். உஎ

ஆய நிரையின் குலமெல்லாம் அழகின் விளங்கி மிகப்பல்கி
மேய இனிய புல்லுணவும் விரும்பு புனலும் ஆர்தலினால்

---

உச. பேர்ஆயம் - பெரிய கூட்டத்தை. அளிப்பாராகி - காப்பாராகி. பயிர்களுக்கு மழைபோல. "விசும்பிற் றுளிவீழி னல்லான் மற்றாங்கே - பசும்புற் றலைகாண் பரிது"—திருக்குறள் : கக. காத்தற்கு வந்தார்.

உரு. துவள - அசைய. சுடர - ஒளிர. பயனும் - கன்றும். மிகுந்த புற்களிலே அவை விரும்புமளவும் மேயும் இடங்களில் அவைகளை ஓட்டிக் கொண்டுபோய்.

உசா. பதவு - புல் நிறைந்துள்ள இடத்தில் (பதவு - புல்; ஆகுபெயர்). பதவு காலம்-பக்குவ காலம் என்பர் **பழைய குறிப்புரைக்காரர்.** மேயக்கூடாத விடங்களிலுள்ள புற்களைப் பறித்து உண்பித்தும். பரிவு-துன்பம். இதம் உண் துறையுள் - இதமாக நீர் அருந்தத்தக்க துறைகளில். பிற உயிர்களால் விளையும் அச்சத்தைத் தாமே எதிர் நின்று நீக்கி. அதர் - வழி. நல்லனவாகிய வழிகளில் முன் செல்லும்படிசெய்து. உய்த்தார் - செலுத்தினார்.

உஎ. புறவின் மாடும் - முல்லை நிலங்களிலும். படுகர் மருங்கினிலும் - பள்ளங்களிலும். குளிர்ந்த முத்து நீர் பாயும் மருதநிலத்திலே. தண்டலை - சோலை. குலையின் - கரைகளின். எரி - தீக்கடைக்கோல். கங்குல் முன் - இரவுமுன்.

பா - ம்—*மேய்த்துப்.

ஏய மனங்கொள் பெருமகிழ்ச்சி *எய்தி இரவும் நன்பகலும்
தூய தீம்பால் மடிபெருகிச் சொரிய முலைகள் சுரந்தனவால். ௨அ

பூணுந் தொழில்வேள் விச்சடங்கு புரிய ஓம தேனுக்கள்
காணும் பொலிவின் முன்னையினும் அனேக மடங்கு கறப்பனவாய்ப்
"பேணுந் தகுதி அன்பால்இப் பிரம சாரி மேய்த்ததற்பின்
மாணுந் திறத்த வான"என மறையோர் எல்லாம் மனமகிழ்ந்தார்.

அனைத்துத் திறத்தும் ஆனினங்கள் அணைந்த மகிழ்ச்சி அளவின்றி
மனைக்கண் கன்று பிரிந்தாலும் மருவுஞ் சிறிய மறைக்கன்று
தனைக்கண் டுருகு சார்ந்துருகித் தாயாந் தன்மை நிலைமையவாய்க்
கனைத்துச் சுரந்து முலைக்கண்கள் கறவா மேபால் பொழிந்தனவால்.

தம்மை அணைந்த ஆன்முலைப்பால் தாமே பொழியக் கண்டுவந்து
செம்மை நெறியே உறுமனத்தில் திருமஞ் சனமாங் குறிப்புணர்ந்தே
எம்மை யுடைய வள்ளலார் எய்த நினைந்து தெளிந்ததனில்
மெய்ம்மைச் சிவனார் பூசனையை விரும்பும் வேட்கை †விரைந்தெழலும்.

அங்கண் முன்னை அர்ச்சனையின் அளவின் தொடர்ச்சி விளையாட்டாப்
பொங்கும் அன்பால் மண்ணிமணல் புளினக் குறையில் ஆத்தியின்கீழ்ச்
செங்கண் விடையார் திருமேனி மணலால் ஆக்கிச் சிவாலயமும்
துங்க நீடு கோபுரமும் சுற்று லயமும் வகுத்தமைத்தார். ௩௨

ஆத்தி மலரும் செழுந்தளிரும் முதலா அருகு வளர்புறவில்
பூத்த மலர்கள் தாந்தெரிந்து புனிதர் சடிலத் திருமுடிமேல்
சாத்த லாகுந் திருப்பள்ளித் தாமம் பலவுந் தாங்கொய்து
கோத்த இலைப்பூங் கூடையினில் கொணர்ந்து மணந்தங் கிடவைத்தார்.

---

௨அ. பல்கி - பெருகி. ஆர்தலினால் - அருந்துதலால். ஏய - பொருந்து மாறு. நன்பகலும் - உச்சிப்பொழுதும்; " முன்பகல் தலைக்கூடி நன்பகல் அவள் நீத்து"—கலித்தொகை: எ௪. ௧௦.

௨௯. மாணுந் திறத்தவான - மாட்சியடையும் தன்மையவாயின; செழித் திருக்கின்றன. யாகத்துக்குப் பால் கறத்தல் ௪௨-ம் பாட்டிலுஞ் சொல்லப்பட் டிருக்கிறது.

௩௦. அனைத்துத்திறத்தும் - எல்லா வகையாலும். அணைந்த - அடைந்த. மறைக்கன்றுதனை - விசார சருமரை.

௩௧. ஆன்கள். சிவபிரான் திருவடிக்குத் திருமஞ்சனமாகும். வள்ளலார்- விசார சருமர். எய்த - பொருந்த. அதனில் - அந்நினைவில் (நெஞ்சில்).

௩௨. அங்கண் - அவ்விடத்தில். முன்னை - முற்பிறப்பின். மண்ணிமணற் புளினக்குறையில் - மண்ணியாற்றின் மணற்றிட்டையில்.

௩௩. அருகில் வளரும் முல்லைநிலத்துப் பூத்த மலர்களை. புனிதர் - சிவ பெருமானது. சடிலம் - சடை. திருப்பள்ளித் தாமம் - எறிபத்த நாயனார் புரா ணம்: ௧. குறிப்புப் பார்க்க. இலையால் தைக்கப்பெற்ற பூங்கூடையில்.

பா - ம்—*எய்த இரவு நண்பகலும். †விளைர்.

நல்ல நவகும் பங்கள்பெற நாடிக் கொண்டு நாணற்பூங்
கொல்லை யிடத்தும் குறைமறைவும் மேவுங் கோக்கள் உடன்கூட
ஒல்லை அணைந்து பாலாக்கள் ஒன்றுக் கொருகா லாகஎதிர்
செல்ல அவையும் கனைத்துமுலை தீண்டச் செழும்பால் பொழிந்தனவால்.

கொண்டு மடுத்த குடநிறையக் கொணர்ந்து விரும்புங் கொள்கையினால்
அண்டர் பெருமான் வெண்மணல்ஆ லயத்துள் அவைமுன் தாபித்து
வண்டு மருவுந் திருப்பள்ளித் தாமங் கொண்டு வான்முறையே
பண்டைப் பரிவால் அருச்சித்துப் பாலின் திருமஞ் சனம்ஆட்டி. ௩௫

மீள மீள இவ்வண்ணம் வெண்பால் சொரிமஞ் சனம்ஆட்ட
ஆள உடையார் தம்முடைய அன்பர் அன்பின் பாலுளதாய்
மூள அமர்ந்த நயப்பாடு முதிர்ந்த பற்று முற்றச்சூழ்
கோளம் அதனில் உள்நிறைந்து குறித்த பூசை †கொள்கின்றார். ௩௬

பெருமை பிறங்குஞ் சேய்ஞலூர்ப் பிள்ளை யார்தம் உள்ளத்தில்
ஒருமை நினைவால் உம்பர்பிரான் உவக்கும் பூசை உறுப்பான
திருமஞ் சனமே முதலவற்றில் தேடா தனஅன் பினில்நிரப்பி
வரும்அந் நெறியே அர்ச்சனைசெய் தருளி வணங்கி மகிழ்கின்றார். ௩௭

இறையோன் அடிக்கீழ் மறையவனார் எடுத்துத் திருமஞ் சனம்ஆட்டும்
நிறைபூ சனைக்குக் ‡குடங்கள்பால் நிரம்பச் சொரிந்து நிரைக்குலங்கள்
குறைபா டின்றி மடிபெருகக் குவிந்த முலைப்பால் குறைவின்றி
மறையோர் மனையின் முன்புதரும் வளங்கள் பொலிய வைகுமால்.

---

௩௪. நவகும்பங்கள் - புதிய குடங்கள். நாணல்கள் நெருங்கிய பொலிவினை யுடைய கொல்லை என்பர் **ஆறுமுகத் தம்பிரானார்:** நாள் நற் பூங்கொல்லை என்பர் **பழைய குறிப்புரை ஆசிரியர்.** குறைமறைவும் - ஆற்றிடைக் குறைமறைவிலும். ஒல்லை - விரைவாக. ஒருகால் - ஒருதரம்.

௩௫. கொண்டு மடுத்த - கொண்டு வைத்த ; கறந்த. பண்டைப்பரிவால் - முற்பிறப்பு உணர்வால் ; விட்ட குறையால்.

௩௬. மூளப் பொருந்திய விருப்பு. சூழ்கோளமதனில் உள்நிறைந்து - (அன்பரால்) வகுக்கப்பெற்ற சிவலிங்கத்தில் கலந்து நின்று.

௩௭. பிறங்கும் - விளங்கும். பிள்ளையார் - விசாரசருமர். உம்பர் பிரான் - சிவபிரான். உறுப்பான - அங்கங்களான. தேடாதன - தேடிக் காண இயலாதவற்றை (தூப தீபம் முதலியவற்றை). அன்பினில் நிரப்பி - மனோ பாவனையால் முற்றுவித்து.

௩௮. குவிந்த முலைகளில்.

**பா - ம்**—*உரியார். †கொளநின்றார். ‡குடங்கொள்.

சேயலிப் படியே பலநாளுஞ் சிறந்த பூசை செய்வதற்கு
முயல்வுற் றதுவே திருவிளையாட் டாக முந்நூல் அணிமார்பர்
இயல்பில் புரியும் மற்றிதனைக் கண்டித் திறத்தை அறியாத
அயல்மற் றொருவன் அப்பதியில் அந்த ணாளர்க் கறிவித்தான். ௩௯

அச்சொற் கேட்ட அருமறையோர் "ஆயன் அறியான் என்றவற்றின்
இச்சை வழியே யான்மேய்ப்பேன் என்றெம் பசுக்கள் தமைக்கறந்து
பொச்சம் ஒழுகு மாணவகன் பொல்லாங் குரைக்க அவன்தாதை
எச்ச தத்தன் தனையழைமின்" என்றார் அவையில் இருந்தார்கள். ௪0

ஆங்கு மருங்கு நின்றார்கள் அவ்வந் தணன்தன் திருமனையின்
யாங்கு சென்று மற்றவனை அழைத்துக் கொண்டு வரப்பரந்த
ஓங்கு சபையோர் அவனைப்பார்த் "தூரா னிரைமேய்த் துன்மகன்செய்
தீங்கு தன்னைக் கேள்"என்று புகுந்த பரிசு செப்புவார். ௪௧

அந்தண் மறையோர் ஆகுதிக்குக் கறக்கும் பசுக்க ளானவெலாம்
சிந்தை மகிழ்ந்து பரிவினால் திரளக் கொடுபோய் மேய்ப்பான்போல்
கந்த மலிபூம் புனல்மண்ணி மணலிற் கறந்து பாலுகுத்து
வந்த பரிசே செய்கின்றான் †என்றான்" என்று வாய்மொழிந்தார்.

மறையோர் மொழியக் கேட்டஞ்சிச் "சிறுமா ணவகன் செய்ததிது
இறையும் நான்முன் பறிந்திலேன் இதற்கு முன்பு புகுந்ததனை
நிறையும் பெருமை அந்தணர்காள்! பொறுக்க வேண்டும் நீங்கள்" எனக்
குறைகொண் டிறைஞ்சி "இனிப்புகுதிற் குற்றம் எனதே யாம்"என்றான்.

அந்த ணாளர் தமைவிடைகொண் டந்தி தொழுது மனைபுகுந்து
"வந்த பழியொன்" றெனநினைந்தே மகனார் தமக்கு வாய்நேரான்
"இந்த நிலைமை அறிவேன்"என் றிரவு கழிந்து நிரைமேய்க்க
மைந்த னார்தாம் போயினபின் மறைந்து சென்றான் மறைமுதியோன்.

---

௩௯. தமது இயல்பால். கண்டு இத்திறத்தை.

௪0. ஆயன் அறியான்-இடையன்(பசுக்களை மேய்க்க) அறியான்.பொச்சம் ஒழுகும் மாணவகன் - வஞ்சக ஒழுக்குடைய பிரமசாரியாகிய விசாரசருமர் து.

௪௧. ஆங்கே சபையார் அருகே நின்றிருந்தவர்கள். புகுந்த பரிசு-நிகழ்ந்த செயலை.

௪உ. உகுத்து - சொரிந்து. வந்த பரிசே - மனஞ் சென்றபடியே. என்றான் - ஒருவன்வந்து சொன்னான்.

௪௩. இறையும் - சிறிதும். குறை இரந்து வணங்கி. புகுதின் - அவ்வாறு நிகழுமாயின்.

௪௪. அந்தி தொழுது - சந்தி வந்தனஞ் செய்து. வாய்நேரான் - சொல்லாதவனாய்.

பா - ம்—*அந்தணாளர். †என்று மறையோர்.

சென்ற மறையோன் திருமகனார் சிறந்த ஊர்ஆன் நிரைகொடுபோய்
மன்றல் மருவும் புறவின்கண் மேய்ப்பார் மண்ணி மணற்குறையில்
அன்று திரளக் கொடுசென்ற அதனை அறிந்து மறைந்தப்பால்
நின்ற குரவின் மிசையேறி நிகழ்வ தறிய ஒளித்திருந்தான். ௪௫

அன்பு புரியும் பிரமசா ரிகளும் மூழ்கி அரனார்க்கு
முன்பு போல மணற்கோயில் ஆக்கி முகைமென் மலர்கொய்து
பின்பு வரும்ஆன் முலைபொழிபால் பெருகுங் குடங்கள் பேணுமிடந்
தன்பாற் கொணர்ந்து தாபித்துப் பிறவும் வேண்டு வனசமைத்தார். ௪௬

நின்ற விதியின் விளையாட்டால் நிறைந்த அரும்பூ சனைதொடங்கி
ஒன்றும் உள்ளத் துண்மையினால் உடைய நாதன் திருமுடிமேல்
மன்றல் விரவுந் திருப்பள்ளித் தாமஞ் சாத்தி மஞ்சனமா
நன்று நிறைதீம் பாற்குடங்கள் எடுத்து நயப்புற் றாட்டுதலும். ௪௭

பரவ மேன்மேல் எழும்பரிவும் பழைய பான்மை மிகும்பண்பும்
†விரவு மேதக் கவர்தம்பால் மேவும் பெருமை வெளிப்படுப்பான்
அரவ மேவுஞ் சடைமுடியார் அருளாம் என்ன அறிவழிந்து
குரவ மேவு முதுமறையோன் கோப மேவும் படிகண்டான். ௪௮

கண்ட போதே விரைந்திழிந்து கடிது சென்று கைத்தண்டு
கொண்டு மகனார் திருமுதுகில் புடைத்துக் கொடிதா மொழிகூறத்
தொண்டு புரியுஞ் சிறியபெருந் தோன்றலார்தம் பெருமான்மேல்
மண்டு காதல் அருச்சனையின் வைத்தார் மற்றொன் றறிந்திலரால். ௪௯

மேலாம் பெரியோர் பலகாலும் வெகுண்டோன் அடிக்க வேறுணரார்
பாலார் திருமஞ் சனம்ஆட்டும் பணியிற் சலியா ததுகண்டு
மாலா மறையோன் மிகச்செயிர்த்து வைத்த திருமஞ் சனக்குடப்பால்
காலால் இடறிச் சிந்தினான் கையாற் கடைமைத் தலைநின்றான். ௫௦

---

௪௫. ஊரினுள்ள பசுக் கூட்டங்களை. மன்றல் மருவும் - மணங்கமழும். அப்பால் - அவ்விடத்தில்.

௪௬. பிரமசாரிகள் - விசார சருமர். பெருகு......கொணர்ந்து - நிறைந்த குடங்களைக் காப்புள்ள இடத்தில் கொண்டுவந்து.

௪௭. நிலைபெற்ற ஆகம விதிகளின். ஒன்றும்-ஒருமைப்பட்ட. நயப்புற்று-விருப்புற்று. ஆட்டுதலும் - அபிடேகஞ் செய்யவும்.

௪௮. பரவ - தோத்திரஞ் செய்யச் செய்ய. பரிவும் - அன்பும். பழைய பான்மை - முன்னைப் பிறவி வாசனையால். பண்பும் - குணமும். விரவு - பொருந்தும்.

௪௯. மண்டுகாதல் - மிக்கெழுந்த அன்பால்.

௫௦. மாலாம் - மதிமயங்கிய. செயிர்த்து - கோபித்து. கையால் கடைமைத் தலைநின்றான் - தீயொழுக்கத்தால் பாவத்தின் முடிவில் நின்றவன்.

பா - ம்—*விரவும். †விரவ.

சிந்தும் பொழுதில் அதுநோக்குஞ் சிறுவர் இறையில் தீயோனைத்
தந்தை எனவே அறிந்தவன்தன் தாள்கள் சிந்தும் தகுதியினால்
முந்தை மருங்கு கிடந்தகோல் எடுத்தார்க் கதுவே முறைமையினால்
வந்து மழுவா யிடஎறிந்தார் மண்மேல் வீழ்ந்தான் மறையோனும். ௫௧

எறிந்த அதுவே அர்ச்சனையில் இடையூ றகற்றும் படையாக
மறிந்த தாதை இருதாளும் துணித்த மைந்தர் பூசனையில்
அறிந்த இடையூ றகற்றினராய் முன்போல் அருச்சித் திடப்புகலும்
செறிந்த சடைநீள் முடியாரும் தேவி யோடும் விடையேறி. ௫௨

பூத கணங்கள் புடைசூழப் புராண முனிவர் புத்தேளிர்
வேத மொழிகள் எடுத்தேத்த விமல மூர்த்தி திருவுள்ளம்
காதல் கூர வெளிப்படலும் கண்டு தொழுது மனங்களித்துப்
பாத மலர்கள் மேல்விழுந்தார் பத்தி முதிர்ந்த பாலகனார். ௫௩

தோடுத்த இதழி சூழ்சடையார் துணைத்தாள் நிழற்கீழ் விழுந்தவரை
எடுத்து நோக்கி "நம்பொருட்டால் ஈன்ற தாதை விழஎறிந்தாய்
அடுத்த தாதை இனியுனக்கு நாம்" என் றருள்செய் தணைத்தருளி
மடுத்த கருணை யால்தடவி உச்சி மோந்து மகிழ்ந்தருள. ௫௪

செங்கண் விடையார் திருமலர்க்கை தீண்டப் பெற்ற சிறுவனார்
அங்கண் மாயை யாக்கையின்மேல் அளவின் றுயர்ந்த சிவமயமாய்ப்
பொங்கி எழுந்த திருவருளின் மூழ்கிப் பூமேல் அயன்முதலாம்
துங்க அமரர் துதிசெய்யச் சூழ்ந்த ஒளியில் தோன்றினார். ௫௫

---

௫௧. சிந்தும் - பால் சிந்தும். இறையில்-அந்நொடியிலே. சிந்தும் - துணிக்கும். முந்தை மருங்கு - தமக்குமுன் அருகே.

௫௨. அதுவே - கோலாகிய மழுவே. மறிந்த - தடைசெய்த. செறிந்த - நெருங்கிய. செய்யத்தகாததைத் தந்தை செய்யினும் அவனை ஒறுக்க வேண்டுவது மைந்தர்தங் கடமையுமாகும். "அரனடிக் கன்பர் செய்யும் பாவமும் அறமதாகும் - அரனடிக் கன்பி லாதார் புண்ணியம் பாவமாகும் - வாமுடைத் தக்கன் செய்த மாவேள்வி தீமை யாகி - நரரினிற் பாலன் செய்த பாதகம் நன்மையாய்த்தே", "இறைவனுலகி லிதமகிதஞ் செய்தவெல்லா மிதமகித மிவனுக்குச் செய்தார்பா லிசையும் - அவனிவனாய் நின்றமுறை ஏகனாகி அரன்பணியி னின்றிடவு மகலுங் குற்றம் - சிவனுமிவன் செய்தியெல்லா மென்செய்தி யென்றுஞ் செய்ததெனக் கிவனுக்குச் செய்த தென்றும் - பவமகல வுடனாகி நின்றுகொள்வன் பரிவால் பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கி விடுமே".
—சிவஞானசித்தியார்.

௫௩. புராண - பழமையாகிய. புத்தேளிர்-தேவர்கள். விமலமூர்த்தி - சிவபிரான். ௫௪. இதழி - கொன்றை.

அண்டர் பிரானுந் தொண்டர்தமக் கதிப னாக்கி "அனைத்தும்நாம்
உண்ட கலமும் உடுப்பனவும் சூடு வனவும் உனக்காகச்
சண்டீ சனுமாம் பதந்தந்தோம்" என்றங் கவர்பொற் றடமுடிக்குத்
துண்ட மதிசேர் சடைக்கொன்றை மாலை வாங்கிச் சூட்டினார். ருசு

எல்லா உலகும் ஆர்ப்பெடுப்ப எங்கும் மலர்மா ரிகள்பொழியப்
பல்லா யிரவர் கணநாதர் பாடி ஆடிக் களிபயிலச்
சொல்லார் மறைகள் துதிசெய்யச் சூழ்பல் லியங்கள் எழச்சைவ
நல்லா றோங்க நாயகமா நங்கள் பெருமான் தொழுதணைந்தார். ருஎ

ஞாலம் அறியப் பிழைபுரிந்து நம்பர் அருளால் நான்மறையின்
சீலந் திகழுஞ் சேய்ஞலூர்ப் பிள்ளை யார்தந் திருக்கையில்
கோல மழுவால் ஏறுண்டு குற்றம் நீங்கிச் சுற்றமுடன்
மூல முதல்வர் சிவலோகம் எய்தப் பெற்றான் முதுமறையோன். ருஅ

வந்து மிகைசெய் தாதைதாள் மழுவால் துணித்த மறைச்சிறுவர்
அந்த உடம்பு தன்னுடனே அரனார் மகனார் ஆயினார்
இந்த நிலைமை அறிந்தாரார் ஈறி லாதார் தமக்கன்பு
தந்த அடியார் செய்தனவே தவமா மன்றோ சாற்றுங்கால். ருகூ

நேசம் நிறைந்த உள்ளத்தால் நீலம் நிறைந்த மணிகண்டத்
தீச னடியார் பெருமையினை எல்லா *உயிரும் தொழஎடுத்துத்
தேசம் உய்யத் திருத்தொண்டத் தொகை†முன் பணித்த திருவாளன்
வாச மலர்மென் கழல்வணங்க வந்த பிறப்பை வணங்குவாம். சுo

ஆ திருவிருத்தம் - க,உஎo.

---

ருசு. உண்ட கலமும் - பரிகல சேஷமும்; அமுதும். அனைத்தும் உனக்காக. தடம் - பெருமையுடைய.

ருஎ. களிபயில - ஆனந்தக் களிப்படைய. பல்லியங்கள்-பலவகை வாத்தியங்கள். நல்லாறு - நல்லவழி. கணங்கள் நாயகமாகிய. அணைந்தார் - சண்டீச பதத்தை அடைந்தார்.

ருஅ. ஏறுண்டு - வெட்டுண்டு. மூல முதல்வர் - எல்லாவற்றிற்கும் மூலமாகவுள்ள இறைவனது. முது மறையோன் - எச்சதத்தன்.

ருகூ. மிகை - குற்றம்; துன்பம். ஈறு இலாதார் - அழிவில்லாத சிவபெருமான் "ஈறி லாதநல் லீசன் ஒருவனே"—அப்பர். "ஈறிலான் கயிலை"—கம்பர்.

சுo. திருவாளன் - சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

பா - ம்—*உலகும். †முன்பணித்த.

சோழநாட்டுத் தலைநகரங்களுள் ஒன்றாயிருப்பது திருச்சேய்ஞலூர். அவ்வூரில் வேதியர் குலத்தில் காசிபர் கோத்திரத்தில் உதித்தவன் ஒருவன் இருந்தான். அவன் பெயர் எச்சதத்தன் என்பது. அவன், பவித்திரை என்பவளை மணந்து இல்லறம் நடாத்தி வந்தான். அவனுக்கு **விசாரசருமர்** என்பவர் தவப் புதல்வராகப் பிறந்தார்.

விசார சருமருக்கு முற்பிறவி உணர்ச்சி உண்டு. அதனால் அவர் ஐந்து வயதிலேயே வேதாகமங்களின் உணர்வை இயல்பாகப் பெற்றார். ஏழாம் ஆண்டில் அவருக்கு உபநயனச் சடங்கு நடைபெற்றது. உலகியல், முறைப்படி ஆசிரியர்கள் அவருக்கு வேதம் முதலிய கலைகளைக் கற்பிக்கத் தொடங்கினார்கள். அவைகளைத் தாங்கள் கற்பிப்பதற்கு முன்னரே அவைகளின் பொருள்களை விசாரசருமர் உணர்ந்திருந்ததைக் கண்டு ஆசிரியர்கள் அதிசயித்தார்கள். வேதாகமங்களின் பயன் ஆண்டவன் திருவடிக்கு அன்பு செய்தல் எனத் துணிந்து அவ்வன்பில் விசாரசருமர் நிற்பாராயினர்.

ஒருநாள் விசாரசருமர் ஒருசாலைமாணாக்கர்களுடன் வெளியே புறப்பட்டார். அவ்வேளையில் அவருடன் அவ்வூர் ஆனிரைகளும் போந்தன. அந்நிரைகளிலுள்ள ஓரிளங்கன்றுப்பசு மேய்ப்பவனை முட்டப்போயிற்று. அவன் அதைக் கோலால் அடிக்கலானான். அதைக் கண்ட விசாரசருமரின் நெஞ்சம் பதை பதைத்தது. அவர், மேய்ப்பன் அருகே சென்று அடிப்பதைத் தடுத்தார். ஆங்கே பசுக்களின் மாண்பை நினைந்தார். "என்னே! பசுக்களின் உறுப்புக்களில் தேவர்களும் முனிவர்களும் இருக்கிறார்கள்! புண்ணிய தீர்த்தங்கள் இருக்கின்றன! சிவபிரான் அபிடேகத்துக்குப் பஞ்சகவ்வியமளிக்கும் பெருமையைப் பசுக்கள் பெற்றிருக்கின்றன! அவைகளின் சாணம் திருநீற்றிற்கே மூலம்! ஆண்டவன் ஊர்தியாகிய வெள்ளேறு பசுக்க ளினத்தைச் சேர்ந்தது!" என்று எண்ணி எண்ணி நின்றார்; மேலும் பசுக்களின் மாண்பை எண்ணி "இப்பசுக்களை மேய்த்துக் காப்பதைவிட வேறு சிறந்த தொண்டு ஒன்றுண்டோ? இதுவே சிவபிரானுக் குரிய சிறந்த வழிபாடாகும்" என்று உறுதிகொண்டார். கொண்டு, ஆயனைப் பார்த்து "இவ்வானிரையை இனி நீ மேய்த்தல் வேண்டாம். அத்தொண்டை யானே செய்யப்போகிறேன்." என்றார். ஆயன் நடுநடுங்கிக் கைகூப்பிக் கூப்பி ஓடிப்போனான். விசாரசருமர் அந்தணர்களின் சம்மதம் பெற்று, அன்று முதல் பசுக்களை மேய்க்குந் திருத்தொண்டை ஏற்றார்.

விசாரசருமர் பசுக்களை மண்ணியாற்றங் கரையிலும் வேறிடங்களிலும் மேய்ப்பார்; பசும் புற்களைப் பறித்துப் பசுக்களுக்கு ஊட்டுவார்; நல்லதுறைகளில் தண்ணீர் அருந்த அவைகளை விடுவார்; அச்சத்தைத் தாமே முன்னின்று நீக்குவார்; காலங்களில் பசுக்களை வீடுபோகச் செய்வார். அவர் பார்வையில் பசுக்கள் முன்னினும் அழகொழுகச் செழித்தன. வேதியர்களும் மற்றவர்களும் மகிழ்ச்சி அடைந்தார்கள்.

பசுக்கள் தங்கள் கன்றுகளைப் பார்க்கினும் மறைக் கன்றாகிய விசார சருமரை அதிகம் நேசித்துவந்தன. கன்றுகள் தங்களைப் பிரியினும் அவைகள் தளரமாட்டா; விசாரசருமர் பிரியின் அவைகள் தளர்ச்சி அடையும். பசுக்கள் அவர் அருகே செல்லும்; தாமே பால் சொரியும்.

பசுக்கள் அன்பால் சொரியும் பாலைக் காணுந்தொறுங் காணுந்தொறும் விசார சருமருக்குச் சிவபெருமான் திருமஞ்சன நினைவு தோன்றும். அதனால் அவருக்குச் சிவபூசை வேட்கை எழுந்தது. விசாரசருமர் மண்ணியாற்றங்கரையில், ஒரு மணற்றிட்டையில், ஓர் ஆத்தி மரத்தடியில், மணலினால் ஒரு சிவ

புரமெரிய நினைந்த தெய்வத், தோரானைத் திருவீழி மிழலை யானைச் சேரா-
தார் தீநெறிக்கே சேர்கின் றாரே."—தேவாரம்.

முன்னாள் அயனும் திருமாலும் முடியும் முதலும் காணாத
பொன்னார் மேனி மணிவெற்பைப் பூநீர் மிழலை யினில்போற்றிப்
பன்னாள் பிரியா நிலைமையினால் பயிலக் கும்பிட் டிருப்பாராய்
அந்நாள் மறையோர் திருப்பதியில் இருந்தார் மெய்ம்மை அருந்தவர்கள்.

சீரின் விளங்குந் திருத்தொண்டர் இருந்து சிலநாள் சென்றதற்பின்
மாரி சுருங்கி வளம்பொன்னி நதியும் பருவ மாறுதலும்
†நீரின் இயன்ற உணவருகி நிலவும் பலமன் ‡னுயிர்களெலாம்
பாரின் மலிந்த இலம்பாட்டில் படர்கூர் வறுமை §பரந்ததால். உருரு

வையம் எங்கும் வற்கடமாய்ச் செல்ல உலகோர் வருத்தமுற
நையும் நாளில் பிள்ளையார் தமக்கும் நாவுக் கரசருக்கும்
கையில் மானும் மழுவுமுடன் காணக் கனவில் எழுந்தருளிச்
செய்ய சடையார் திருவீழி மிழலை யுடையார் அருள்செய்வார். உருசு

"கால நிலைமை யால்உங்கள் கருத்தில் வாட்ட முறீர்எனினும்
ஏல உம்மை வழிபடுவார்க் களிக்க அளிக்கின் றோம்"என்று
கோலங் காண எழுந்தருளிக் குலவும் பெருமை இருவர்க்கும்
ஞாலம் அறியப் படிக்காசு வைத்தார் மிழலை நாயகனார். உருஎ

விண்ணின் றிழிந்த விமானத்தின் கிழக்கும் மேற்கும் பீடத்தில்
அண்ணல் புகலி ஆண்டகையார் தமக்கும் ஆண்ட அரசினுக்கும்

---

உருச. மணி வெற்பை - மாணிக்க மலையை (சிவபிரானை). பூநீர் - தாமரைத் தடாகங்களையுடைய. பயில - பொருந்த; நெருங்க. "திடமலி தருமறை முறையுணர் மறையவர் நிறைதிரு மிழலையே"; "கீதத் திசையோடும் கேள்விக் கிடையோடும் - வேதத் தொலியோவா வீழிம் மிழலையே"; "பாரிசையும் பண்டிதர்கள் பன்னாளும் பயின்றேதும் ஓசை கேட்டு - வேரிமலி பொழிற்கிள்ளை வேதங்கள் பொருட்சொல்லும் மிழலையாமே"—திருஞான சம்பந்தர்.

உருரு. "வான்பொய்யினும் தான் பொய்யாக் காவிரி"யாதலின், "வளம் பொன்னி நதியும்" என்றார். நீரின் இயன்ற - நீரால் விளையத்தக்க. நிலவும் - வாழும். பாரில் மலிந்த - பூமியில் நிறைந்த. இலம்பாட்டில் - இல்லாமையால் (இலம்பாடு - இல்லாமை உண்டாதல்; தொல்காப்பியம்: புள்ளி மயங்கியல் உக). படர்கூர் - துயரை வளர்க்கும் (கூர்தல் - உள்ளது சிறத்தல்).

உருசு. வற்கடமாய் - பஞ்சமாய்.

உருஎ. ஏல - பொருந்த. படியில் காசினை வைத்தருள; படியாகக் காசுவைத்தருள என்னலுமாம்.

பா - ம்—*வளர். †நீரினியன்றி உணர்வருகி. ‡உயிர்க்கெல்லாம். §படர்ந்ததால்.

நண்ணும் நாள்கள் தொறுங்காசு படிவைத் தருள ஞானிலத்தில்
எண்ணில் அடியா ருடன்அமுது செய்தங் கிருந்தார் இருவர்களும்.

அல்லார் கண்டத் தண்டர்பிரான் அருளால் பெற்ற படிக்காசு
பல்லா றியன்ற வளம்பெருகப் பரமன் அடியா ராளுர்கள்
எல்லாம் *எய்தி உண்கவென இரண்டு பொழுதும் பறைநிகழ்த்திச்
சொல்லால் சாற்றிச் சோறிட்டார் துயர்கூர் வறுமை தொலைத்திட்டார்.

ஈசர் மிழலை இறையவர்பால் இமையப் பாவை திருமுலைப்பால்
தேசம் உய்ய உண்டவர்†தாந் திருமா மகனுர் ஆதலினுல்
காசு வாசி யுடன்பெற்ருர் கைத்தோண் டாகும் படிமையினுல்
வாசி இல்லாக் காசுபடி பெற்று வந்தார் வாகீசர். ௨௬௦

ஆறு சடைமேல் அணிந்தருளும் அண்ணல் வைத்த படிக்காசால்
ஈறி லாத பொருளுடைய இருவருடைய திருமடங்கள்
சோறு நாளுந் தொண்டர்மகிழ்ந் துண்ண உண்ணத் தொலையாதே
ஏறு பெருமை புவிபோற்ற இன்புற் றிருக்கும் அந்நாளில். ௨௬௧

காலந் தவறு தீர்ந்தெங்கும் கலிவான் பொழிந்த புனல்கலந்து
ஞாலம் எல்லாம் ‡குளிர்தூங்கி உணவு பெருகி நலஞ்சிறப்ப
மூல அன்பர் இருவர்களும் மொழிமா லைகளும் பலசாத்தி
நீல கண்டர் உறைபதிகள் பிறவும் வணங்க நினைவுற்ருர். ௨௬௨

வாய்ந்த மிழலை மாமணியை வணங்கிப் பிரியா விடைகொண்டு
பூந்தண் §புனல்சூழ் ||வாஞ்சியத்தைப்போற்றிப் புனிதர் ¶வாழ்பதிகள்

௨௫௮. "பாடிப் பெற்ற பரிசில் பழங்காசு - வாட வாட்டந் தவிர்ப்பார் அவரைப்போல் - தேடிக்கொண்டு திருவாய் மூர்க்கே எனு - ஓடிப் போந்திங் கொளித்தவாறென் கொலோ"—அப்பர் : திருவாய்மூர்த் திருக்குறுந் தொகை. எ.; "இருந்து நீர் தமிழோடிசை கேட்கும் இச்சையால் காசு நித்தம் நல்கினீர் - அருந்தண் வீழி கொண்டீர் அடியேற்கும் அருளுதிரே"—சுந்தரர் : திருவீழி மிழலை. அ.

௨௫௯. இருள் நிறைந்த (நீல) கண்டத்து. பல்லாறு - பலவழியிலும்.

௨௬௦. இமயப்பாவை - உமாதேவியார். வாசியுடன் - வட்டமுடன். படிமையினுல் - முறைமையினுல். திருமாமகனுர் என்பதன் நுட்பம் முதலியன திருஞானசம்பந்த சுவாமிகள் புராணத்தில் விளக்கப்படும்.

௨௬௨. காலந்தவறு - கால வேறுபாடு; பஞ்சகாலம். கலி - ஒலிக்கும். நலத்துக்கு மூலமான.

பா - ம்—*எய்த. †தம். ‡களிதூங்கி. §பொழில். ||வாஞ்சியத்தில் தங்கி, வாஞ்சியத்தில் இறங்கி. ¶வான்.

ஏய்ந்த அன்பி னால்இறைஞ்சி இசைவண் தமிழ்கள் புனைந்துபோய்ச்
சேர்ந்தார் செல்வத் திருமறைக்கா டெல்லை இல்லாச் சீர்த்தியினர்.

மன்றல் விரவு மலர்ப்புன்னை மணஞ்சூழ் சோலை உப்பளத்தின்
முன்றில் தோறுஞ் சிறுமடவார் முத்தங் கொழிக்கும் மறைக்காட்டுக்
குன்ற வில்லி யார்மகிழ்ந்த கோயில் புகுந்து வலங்கொண்டு
சென்று சேர்ந்தார் தென்புகலிக் கோவும் அரசுந் திருமுன்பு. உகூச

பரவை *ஓதக் கழிக்†கானற் பாங்கு நெருங்கும் அப்பதியில்
அரவச் சடைஅந் தணனை அகில மறைகள் அர்ச்சனைசெய்
துரவக் கதவந் திருக்காப்புச் செய்த அந்நாள் முதல்இந்நாள்
வரையும் அடைத்தே நிற்கின்ற மணிநீள் வாயில் வணங்குவார். உகூரு

தொல்லை வேதந் திருக்காப்புச் செய்த வாயில் தொடர்வகற்ற
வல்ல அன்பர் ‡அணையாமை மருங்கோர் வாயில் வழிஎய்தி
அல்லல் தீர்ப்பார் தமையருச்சிப் பார்கள் தொழுவார் ஆம்படிகண்
டெல்லை இல்லாப் பெரும்புகழார் இதனை அங்குக் கேட்டறிந்தார்.

ஆங்கப் §பரிசை அறிந்தருளி ஆழித் தோணி புரத்தரசர்
ஓங்கு வேதம் அருச்சனைசெய் உம்பர் பிரானை உள்புக்குத்
"தேங்கா திருவோம் நேர்இறைஞ்சத் திருமுன் கதவந் திருக்காப்பு
நீங்கப் பாடும் அப்பர்" என நீடுந்திருநா வுக்கரசர். உகூஎ

---

உகூச. மன்றல் விரவு - மணங்கமழும். முன்றில் தோறும் - முற்றந் தொறும்.

உகூரு. கடலின் வாய்வெள்ளத் தருகேயுள்ள கழிக்கரைச் சோலையினிடத்தே. அரவச்சடை அந்தணனை சிவபெருமானை. அகிலமறைகள் - எல்லா வேதங்களும். உரவ - வன்மையாக. கதவடைப்புச் செய்த.

உகூசு. தொல்லை - பழைய. தொடர்வு - அடைப்பை ; பிணிப்பை. அணையாமையால். மருங்கு - பக்கத்தே. அல்லல் தீர்ப்பாராகிய சிவபெருமானை அருச்சிப்பவர்களாயும் தொழுபவர்களாயுமுள்ள நிலைமையைக் கண்டு. புகழார் - திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும்.

உகூஎ. ஆங்கேயுள்ள அத்தன்மையை. ஆழித்தோணிபுரத்தரசர் - திருஞானசம்பந்தர். உம்பர் பிரானை - சிவபெருமானை. தேங்காது - திகையாது ; அஞ்சாது. நாம் இருவேமும். அப்பரே. வேதம் ஒலியாயிருப்பது. அஃது எம்மொழியிலும் இறங்கும். கதவை அடைத்த வேதமே தம்பால் பிறந்து வருதலால் கதவைத் திறக்கத் திருஞானசம்பந்தர் எண்ணினரென்க. அப்பர் வாயிலாக வெளிவருவதும் வேதமாதலால், அவரைத் திறக்கப்பாடுமாறு பிள்ளையார் அருளினரென்க.

பா - ம்—*ஓத்த. †கானிற். ‡அணையாமுன். §படியை.

உண்ணீர் மையினால் பிள்ளையார் உரைசெய் தருள அதனாலே
"பண்ணி னேரு மொழியாள்" என் றெடுத்துப் பாடப் பயன்துய்ப்பான்
தெண்ணீர் அணிந்தார் திருக்காப்பு நீக்கத் தாழ்க்கத் திருக்கடைக்காப்
"பெண்ணீர் இரக்கம் *ஒன்றில்லீர்" என்று பாடி இறைஞ்சுதலும்.

"பண்ணி னேர்மொழி யாளுமை பங்கரோ
மண்ணி னார்வலஞ் செய்ம்மறைக் காடரோ
கண்ணி னால்உமைக் காணக் கதவினைத்
திண்ண மாகத் திறந்தருள் செய்ம்மினே"

"அரக்க னைவிர லாலடர்த் திட்டநீர்
இரக்க மொன்றிலீர் எம்பெரு மானிரே
சுரக்கும் புன்னைகள் சூழ்மறைக் காடரோ
சரக்க இக்கத வந்திறப் பிம்மினே"—தேவாரம்.

வேத வனத்தின் மெய்ப்பொருளின் அருளால் விளங்கு மணிக்கதவு
காதல் அன்பர் முன்புதிருக் காப்பு நீங்கக் கலைமொழிக்கு
நாதர் ஞான முனிவருடன் தொழுது விழுந்தார் ஞாலத்துள்
ஓத ஒலியின் மிக்கெழுந்த தும்பர் ஆர்ப்பும் மறையொலியும். ௨௬௯

அன்பர் ஈட்டங் களிசிறப்ப ஆண்ட அரசுஞ் சிவக்கன்றும்
இன்ப வெள்ளத் திடைமூழ்கி எழுந்துள் புகுந்து தம்பெருமான்
முன்பு பணிந்து போற்றிசைத்துப் பரவி மொழிமா லைகள்பாடி
என்பு கரைய உள்ளுருகி இறைஞ்சி அரிதிற் புறத்தணைந்தார். ௨௭0

புறம்பு †நின்று வாகீசர் புனிதர் அருளால் இக்கதவம்
திறந்தும் அடைத்தும் செல்லுநெறி திருந்த மலையாள் திருமுலையில்

---

௨௬அ. உள் நீர்மையினால் - உள்ளொளியால். தெளிந்த நீரை யணிந்த சிவபெருமான். பயன்துய்ப்பான்-அப்பரின் தமிழ்ச்சுவையை அருந்துதற்பொருட்டு. திருக்கடைக் காப்பு - இறுதிப்பாட்டில். எண்ணீர் - கதவைத் திறக்கத் திருவுள்ளங் கொள்ளீர்.

௨௬௯. கலைமொழிக்கு நாதர் - திருநாவுக்கரசர். ஞானசம்பந்தருடன. கடலொலியைப் பார்க்கிலும் தேவர்கள் ஆரவாரமும்.

௨௭0. அன்பர் கூட்டம். சிவக்கன்றும் - திருஞான சம்பந்தரும்.

௨௭௧. திறக்கவும் அடைக்கவும் நிகழும் வழி ஒழுங்குபட (வழக்கத்தில் வர). கவுணியரை - கவுணிய கோத்திரத்தில் பிறந்த திருஞானசம்பந்தரை. நிறைந்த - திறந்த. ஒருவரை யொருவர் திறக்கவும் அடைக்கவும் பாடுமாறு கேட்டுக் கொண்டது, அவர்கள் ஆண்டவன் அருளில் ஒருமைப்பட்டிருந்தலையும், பெருந்தகைமையையும், இருவர் மொழியும் வேதம் என்பதையும் உணர்த்துவதென்க.

பா - ம்—*இல்லீரே. †நின்ற.

கறந்த ஞானங் குழைத்தமுது செய்த புகலிக் கவுணியரை
"நிறைந்த கதவம் அடைக்கும்வகை நீரும் பாடி அருளும்"என. உஎக

சண்பை ஆளுந் தமிழ்விரகர் தாமுந் திருநா வுக்கரசர்
பண்பின் மொழிந்த உரைகொண்டு பதிகம் பாடும் அவ்வளவில்
கண்போற் பமைந்த நுதற்காள கண்டர் அருளால் கடிதுடனே
திண்பொற் கதவந் திருக்காப்புச் †செய்த தெடுத்த திருப்பாட்டில்.

அதுகண் டுடைய பிள்ளையார் தாமும் ஆண்ட அரசும்மகிழ்ந்
"திருநம் பெருமான் அருள்செய்யப் பெற்றோம்" என்றங் கிறைஞ்சியபின்
பதிகம் நிரம்பப் பிள்ளையார் பாடித் தொழுது பணிவுற்றார்
எதிர்பொற் றிருவா யிலின்வழக்கம் என்றும் நிகழ்ச்சி எய்தியதால்.

அங்கு நிகழ்ந்த அச்செயல்கண் டடியார் எல்லாம் அதிசயித்துப்
பொங்கு புளகம் எய்திடமெய் பொழியுங் கண்ணீர் ‡பரந்திழிய
எங்கும் நிகரொன் றில்லாத இருவர் பாதம் இறைஞ்சினார்
நங்கள் புகலிப் பெருந்தகையும் அரசும் மடத்தில் நண்ணியபின். உஎச

"அரிதில் திறக்கத் §தாம்பாட அடைக்க அவர்பா டியஎளிமை
கருதி நம்பர் திருவுள்ளம் அறியா தயர்ந்தேன்" எனக்கவன்று
பெரிதும் அஞ்சித் திருமடத்தில் ஒருபால் அணைந்து பேழ்கணித்து
மருவும் உணர்வில் துயில்கொண்டார் வாய்மை திறம்பா வாகீசர்.உஎரு

---

உஎஉ. பதிகம் தொடங்கியதும் என்றபடி. கண் அழகமைந்த நெற்றியை யுடைய நீலகண்டர். திருக்காப்புச் செய்தது - மூடிக்கொண்டது. எடுத்த திருப் பாட்டில் - முதற்றிருப்பாட்டில்.

உஎஈ. வழக்கம் - திறக்கவும் அடைக்கவும் கொண்ட வழக்கம்.

உஎரு. அயர்ந்தேன் - மறந்தேன். கவன்று - கவலையுற்று. பேழ் கணித்து - "தம்பிழை குறித்துச் சிந்தித்து"—ஆறுமுகத் தம்பிரானார்; "பேழ் கணித்தல் - நித்திரையின்றிக் கண் மூடல்"—பழைய குறிப்புரை. உணர் விற்றுயில் - அறிதுயில். கதவைத் திறக்குமாறு பிள்ளையார் தம்மைக் கேட்ட போது, தாம் இணங்காது அவரைத் திறக்குமாறு கேட்டிருத்தல் வேண்டுமென் பது ஆண்டவன் திருவருட் குறிப்பா யிருந்தமையால், தமக்குக் கதவு அரிதில் திறந்ததுபோலும் என்று எண்ணி, அதனால் தாம் திருவருட் குறிப்புக்கு மாறாக நடந்து கொண்டதாக உணர்ந்து அப்பர் கவன்றார் என்க; இஃது அப்பர் மனோநிலை. இந்நிலை அவர் தம் பெருந் தகைமையைப் புலப்படுத்து வது. தொடக்கத்தில் இறைவன் கதவைத் திறப்பியாமைக்குக் காரணம் "பயன் துய்ப்பான்...தாழ்க்க" என்று மேலே (உசுஅ) சொல்லப்பட்டிருத்தலையும் ஓர்க. திறம்பா - வழுவாத.

பா - ம்—*அருள் †கொண்ட. ‡பாய்ந். §யாம்.

மன்னுஞ் செல்வ மறைக்காட்டு மணியின் பாதம் மனத்தின்கண்
உன்னித் துயிலும் பொழுதின்கண் உமையோர் பாகம் உடையவர்தாம்
பொன்னின் மேனி வெண்ணீறு புனைந்த கோலப் பொலிவினொடுந்
துன்னி அவர்க்கு "வாய்மூரில் இருப்போந் தொடர வா"என்றார்.

"போதம் நிகழ வாஎன்று போனார் என்கொல்" எனப்பாடி
"ஈதெம் பெருமான் அருளாகில் யானும் போவேன்" என்றெழுந்து
வேத வனத்தைப் புறகிட்டு விரைந்து போக அவர்முன்னே
ஆதி மூர்த்தி முன்காட்டும் அவ்வே டத்தால் எழுந்தருள. ௨௭௭

சீரார் பதியி னின்றெழுந்து செல்லுந் திருநா வுக்கரசர்
ஆரா அன்பில் ஆரமுதம் உண்ண எய்தா வாறேபோல்
நீரார் சடையார் எழுந்தருள நெடிது பின்பு செல்லுமவர்
போரா ளரைமுன் தொடர்ந்தணையப் பெறுவார் எய்தப் பெற்றிலரால்.

அன்ன வண்ணம் எழுந்தருளி அணித்தே காட்சி கொடுப்பார்போல்
பொன்னின் கோயில் ஒன்றெதிரே காட்டி அதனுட் புக்கருளத்
துன்னுந் தொண்டர் அம்மருங்கு விரைந்து தொடரப் போந்தபடி
மன்னும் புகலி வள்ளலார் தாமுங் கேட்டு வந்தணைந்தார். ௨௭௯

"அழைத்துக் கொடுபோந் தணியார்போல் காட்டி மறைந்தார்" எனஅயர்ந்து, "பிழைத்துச் செவ்வி அறியாதே திறப்பித் தேனுக் கேயல்லால், உழைத்தா மொளித்தால் கதவந்தொண் டுறைக்கப் பாடி அடைப்பித்த, தழைத்த †மொழியார் உப்பாலார் தாமிங் கெப்பால் ‡மறைவதென". ௨௮௦

"எங்கே என்னை இருந்திடந் தேடிக்கொண்
டங்கே வந்தடை யாளம் அருளினார்
தெங்கே தோன்றுந் திருவாய்மூர்ச் செல்வனார்
அங்கே வாவென்று போனா ரதென்கொலோ"

---

௨௭௭. போதம் நிகழ - அறிவு விளங்க.

௨௭௮. ஆரா - தணியாத. ஆரமுதம் - பெறுதற்கரிய அமுதம். போராளரை - சிவபெருமானை. தொடர்ந்து அணையப்பெற்றும்.

௨௭௯. அணித்தே - அருகே. துன்னுந் தொண்டர் - நெருங்கிச் செல்லும் திருநாவுக்கரசர். அம்மருங்கு - அவ்விடத்தில்.

௨௮௦. அணியார் - சமீபிப்பவர். அயர்ந்து - சோர்ந்து. செவ்வி - திருவுள்ளக் குறிப்பை. உழை - இவ்விடத்தில். கதவைத் தம் தொண்டால் உறைக்கப்பாடி. மொழியார் - திருஞான சம்பந்தர். உப்பாலார் - உங்கே வந்துள்ளார். எப்பால் - எவ்விடத்தில்.

பா - ம்—*புறப்பட்டு. †மொழியார் உட்பாலார்; மொழியா ரும்பாலார். ‡மறைத்ததென; மறைப்பதென.

" மன்னு மாமறைக் காட்டு மணாளனார்
உன்னி உன்னி உறங்குகின் றேனுக்குத்
தன்னை வாய்மூர்த் தலைவனு மாசொல்லி
என்னை வாவென்று போனா தென்கொலோ "

" யாதே செய்துமி யாமலோ நீயென்னில்
ஆதே யேயும் அளவில் பெருமையான்
மாதே வாகிய வாய்மூர் மருவினார்
போதே என்றும் புகுந்ததும் பொய்கொலோ"

" பாடிப் பெற்ற பரிசில் பழங்காசு
வாடி வாட்டந் தவிர்ப்பா ரவரைப்போல்
தேடிக் கொண்டு திருவாய்மூர்க் கேயெனு
ஓடிப் போந்திங் கொளித்தவா றென்கொலோ "

" திறக்கப் பாடிய என்னினுஞ் செந்தமிழ்
உறைக்கப் பாடி அடைப்பித்தா ருந்நின்றார்
மறைக்க வல்லரோ தம்மைத் திருவாய்மூர்ப்
பிறைக்கொள் செஞ்சடை யாரிவர் பித்தரே "—தேவாரம்.

மாட நீடு திருப்புகலி மன்ன ரவர்க்கு மாலயனும்
தேடி இன்னங் காணதார் நேரே காட்சி கொடுத்தருள
ஆடல் கண்டு பணிந்தேத்தி அரசுங் காணக் காட்டுதலும்
"பாட அடியார்" என்றெடுத்துப் பரமர் தம்மைப் பாடினார். உ௮௧

" பாட அடியார் பரவக் கண்டேன் பத்தர்கணங் கண்டேன் மொய்த்த பூதம், ஆடல் முழவம் அதிரக் கண்டேன் அங்கைஅனல் கண்டேன் கங்கை யாளைக், கோட லரவார் சடையிற் கண்டேன் கொக்கினிதழ் கண் டேன் கொன்றை கண்டேன், வாடல் தலையொன்று கையிற் கண்டேன் வாய்மூ ரடிகளைநான் கண்ட வாறே "—தேவாரம்.

பாடுந் தமிழ்மா லைகள்கொண்டு பரமர் தாமும் எழுந்தருள
நீடுந் திருவாய் மூரடைந்து நிலவுங் கோயில் வலஞ்செய்து
சூடும் பிறையார் பெருந்தொண்டர் தொழுது போற்றித் துதிசெய்து
நாடுங் காதல் வளர்ந்தோங்க நயந்தங் நகரில் உடனுறைந்தார். உ௮உ

ஆண்ட அரசும் பிள்ளையா ருடனே அங்கண் இனிதமர்ந்து
பூண்ட காதல் பொங்கிஎழ வாய்மூர் அடிகள் அடிபோற்றி
மூண்ட அன்பின் மொழிமாலை சாத்தி ஞான முனிவரொடு
மீண்டு வந்து திருமறைக்கா டெய்தி விமலர் தாள்பணிந்தார். உ௮௩

உ௮௧. திருஞானசம்பந்தருக்கு. அரசுங் காணத் திருஞான சம்பந்தர் காட்டுதலும்.

ஆதி முதல்வர் தமைப்பணிந்தங் கான பணிசெய் தமருநாள்
சீத மதிவெண் குடை வளவர் மகளார் தென்னன் †தேவியாங்
கோதில் குணத்துப் பாண்டிமா தேவி யார்முன் குலச்சிறையார்
போத விட்டார் சிலர்வந்தார் புகலி வேந்தர் தமைக்காண. உ௮௪

வந்து சிவனூர் திருமறைக்கா டெய்தி மன்னு வேணுபுரி
அந்த ணாளர் தமக்கறிவித் தவர்பால் எய்தி அடிவணங்கச்
சிந்தை மகிழ்ந்து தீதின்மை வினவத் "தீங்கும் உளவாமோ
இந்த ‡உலகம் உயவந்தீர் இருதாள் §நினைவார்க்" கென்றுரைப்பார்.

"சைவ நெறிவை திகநிற்கச் சழக்கு நெறியைத் தவமென்னும்
பொய்வல் அமணர் செயல்தன்னைப் பொறுக்க கில்லோம்" எனக்கேட்டே
அவ்வன் தொழிலோர் செயல்மாற்றி ஆதி சைவ நெறிவிளங்கத்
தெய்வ நீறு ||நிலைநிறுத்தவர் சீர்கொள் சண்பைத் திருமறையோர்.

ஆய பொழுது திருநாவுக் ¶கரசு புகலி ஆண்டகைக்குக்
"காய மாசு பெருக்கியுழல் கலதி அமணர் கடுவினைசெய்
மாய சாலம் மிகவல்லார் அவர்மற் றென்னை முன்செய்த
தீய @தொழிலும் பலகெட்டேன் செல்ல இசையேன் யான்" என்றார்.

என்று கூற "எல்லையிலா நீறு போற்றும் இருவரையும்
சென்று ¥காணுங் கருத்துடையேன் அங்குத் %தீங்கு புரிஅமணர்
நின்ற நிலைமை அழிவித்துச் சைவ நெறிபா ரித்தன்றி
ஒன்றுஞ் செய்யேன் ஆணையும" தென்றார் உடைய பிள்ளையார். உ௮௮

"போமா துணிந்து நீர்அங்குப் ⁰போகப் போதா அவ்வமணர்
தீமா யையினை யானேபோய்ச் சிதைத்து வருகின் றேன்" என்ன

---

உ௮௪. வளவர்......முன் - சோழன் மகளாரும் பாண்டியன் தேவியாரு மாகிய குற்றமில்லாக் குணமுடைய மங்கையர்க்கரசியார் முன்னிலையில்.

உ௮௫. வேணு......அறிவித்து - சீகாழி மறையவராகிய திருஞான சம்பந்தர்க்குத் தமது வரவைத் தெரிவித்து. ஞானசம்பந்தர் சிந்தை மகிழ்ந்து.

உ௮௬. நிற்க - அடங்க; இருப்ப என்னலுமொன்று.

உ௮௭. உடம்பில் அழுக்கைப் பெருக்கி. கலதி - மூதேவிகளாகிய. கெட்டேன் - இரக்கக் குறிப்பு. நீர் செல்ல யான் இசையேன் என்றார்.

உ௮௮. இருவரையும் - மங்கையர்க்கரசியாரையும், குலச் சிறையாரையும். பாரித்து - பரக்கச் செய்து; பரப்பி.

பா - ம்—*வளவன் மகளாங். †தேவியார். ‡வையம் உயவருவீர். §அணைவார்க். ||புனை. ¶கரசும். @வினையும். ¥காணக். %தீமை. ⁰போதப்.

ஆமா றெல்லாம் உரைத்தவரை மறுக்க மாட்டா தரசிருப்பத்
தாமா தரவால் தமிழ்நாட்டில் போனார் ஞானத் தலைவனார். உஅகூ

வேணு புரக்கோன் எழுந்தருள விடைகொண் டிருந்த வாகீசர்
பூணும் அன்பால் மறைக்காட்டில் புனிதர் தம்மைப் போற்றிசைத்துப்
பேணி இருந்தங் குறையுநாள் பெயர்வார் வீழி மிழலைஅமர்
தாணு வின்தன் செய்யகழல் மீண்டுஞ் சார நினைக்கின்றார். உகூ0

சோலை மறைக்காட் டமர்ந்தருளுஞ் சோதி அருள்பெற் றகன்றுபோய்
"வேலை விடமுண் டவர்வீழி மிழலை மீண்டுஞ் செல்வன்" என
ஞாலம் நிகழ்ந்த நாகைக்கா ரோணம் பிறவுந் தாம்பணிந்து
சாலு மொழிவண் தமிழ்பாடித் தலைவர் மிழலை வந்தடைந்தார். உகூக

வீழி மிழலை தனைப்பணிந்து வேத முதல்வர் தாமிருப்ப
ஆழி வலமேந் தியஅரியால் ஆகா சத்தின் நின்றிழிந்த
வாழி மலர்ந்த கோயில்தனில் மன்னும் பொருளைப் போற்றிசைத்துத்
தாழும் நாளிற் பிறபதியும் பணியுங் காதல் தலைநிற்பார். உகூஉ

பூவிற் பொலியும் புனற்பொன்னிக் கரைபோய்ப் பணிவார் பொற்பமைந்த
ஆவுக் கருளும் ஆவடுதண் டுறையார் பாதம் அணைந்திறைஞ்சி
நாவுக் கரசர் ஞானபோ னகர்க்குச் செம்பொன் ஆயிரமும்
பாவுக்களித்த திறம்போற்றிப் போந்து பிறவும் பணிகின்றார். உகூந

"மாயிரு ஞால மெல்லாம் மலரடி வணங்கும் போலும்
பாயிருங் கங்கை யாளைப் படர்சடை வைப்பர் போலும்
காயிரும் பொழில்கள் சூழ்ந்த கழுமல ஊரர்க் கம்பொன்
ஆயிரங் கொடுப்பர் போலும் ஆவடு துறைய னாரே"—தேவாரம்.

---

உஅகூ. போமாறு துணிந்து நீர் அங்குப் போதல் கூடாது. அவரை - பிள்ளையாரை. ஆதரவால் - விருப்பத்தால். தமிழ் நாட்டில் - பாண்டி நாட்டில்; பாண்டி நாட்டைத் தமிழ் நாடென்று இவ்வாசிரியர் பல இடங்களில் கூறியுள்ளார். உகூ0. தாணு - சிவம்.

உகூக. சோதி - சிவத்தின். வேலை - கடல். ஞாலம் நிகழ்ந்த - பூமியில் விளங்கிய. சாலும் - அமைந்த.

உகூஉ. வேத முதல்வர் தாமிருப்ப - சிவபிரான் எழுந்தருள. ஆழி - சக்கரத்தை. விண்ணிழிந்த விமானக் கோயில்; உருக - குறிப்பைப் பார்க்க. பொருளை - சிவத்தை.

உகூந. காவிரிக்கரையே போய். பொற்பு அமைந்த ஆவுக்கு - அழகு பொருந்திய பசுவுக்கு. ஞான போனகர்க்கு - திருஞானசம்பந்தருக்கு. பாவுக்கு - பாட்டுக்கு.

செய்ய சடையார் பழையாறை எய்த அதனிற் செல்பொழுதில்
மையல் அமணர் *மறைத்தவட தளியின் மன்னுஞ் சிவனாரைக்
கைகள் கூப்பித் தொழுதருளக் கண்ட வாற்றால் அமணர்கள்தம்
பொய்கொள் விமான மெனக்கேட்டுப் பொறாத வுள்ளம் மிகப்புழுங்கி

அந்த விமானந் தனக்கருகா ஆங்கோர் இடத்தின் பாங்கெய்திக்
கந்த மலரும் கடிக்கொன்றை முடியார் செய்ய கழல்உன்னி
மந்த அமணர் வஞ்சனையால் மறைத்த வஞ்சம் ஒழித்தருளிப்
"பந்தங் கொண்ட குண்டர்திறம் பாற்றும்" என்று பணிந்திருந்தார்.

"வண்ணங் கண்டு நான்உம்மை வணங்கி யன்றிப் போகேன்" என்
றெண்ண முடிக்கும் வாகீசர் இருந்தார் அமுது செய்யாதே
அண்ண லாரும் அதுவுணர்ந்தங் கரசு, தம்மைப் பணிவதற்குத்
திண்ண மாக மன்னனுக்குக் கனவில் அருளிச் செய்கின்றார். ௨௬௬

"அறிவில் அமணர் நமைமறைப்ப இருந்தோம்" என்றங் கடையாளக்
குறிகள் அறியச் செய்தருளி நம்மை அரசு கும்பிடுவான்
நெறியில் அமணர் தமையழித்து நீக்கிப் போக்கென் றருள்புரியச்
செறிவில் அறிவுற் றெழுந்தவனுஞ் செங்கை தலைமேல் குவித்திறைஞ்சி.

கண்ட வியப்பு மந்திரிகட் கியம்பிக் கூடக் கடிதெய்தி
அண்டர் பெருமான் அருள்செய்த அடையா ளத்தின் வழிகண்டு
குண்டர் செய்த வஞ்சனையைக் குறித்து வேந்தன் குலவுபெருந்
தொண்டர் தம்மை அடிவணங்கித் தொக்க அமணர் தூர்அறுத்தான்.

ஆனை இனத்தில் துகைப்புண்ட அமணா யிரமும் மாய்ந்ததற்பின்
மேன்மை அரசன் ஈசர்க்கு விமான மாக்கி விளக்கியபின்
ஆன வழிபாட் டர்ச்சனைக்கு †நிபந்தம் எல்லாம் அமைத்திறைஞ்ச
ஞான அரசும் புக்கிறைஞ்சி நாதர் முன்பு போற்றுவார். ௨௬௯

௨௬௪. வட தளி - பழையாறைக் கோயிலின் பெயர். கண்டதனுல். வட தளி சமணரால் மறைக்கப்பட்டது. அப்பர் ஞானக் கண்ணுக்கு அது புலனா யிற்று. அதனுல் அதனை அவர் வணங்கினார். மறைந்துள்ள அது சமணர் கோயில் என்று ஆங்குள்ளார் சொற்றனர். இது சமணர்கள் நிகழ்த்திய சூழ்ச்சி.

௨௬௫. அருகாக. கடி - புதிய ; (அன்றலர்ந்த). மலபந்தம். பாற்றும் - அழியும். ௨௬௬. திருவுருவைக் கண்டு.

௨௬௭. செறிவில் அறிவுற்று - நனவுணர்வு பெற்று.

௨௬௮. குலவு - விளங்கிய ; வாடிய என்னலுமாம். தொக்க - கூடியிருந்த. தூர் - வேர். ௨௬௯. நிபந்தம் - கட்டளைகள்.

பா - ம்—*மறைக்க. †நிரம்ப.

"தலையின் மயிரைப் பறித்துண்ணுஞ் சாதி அமணர் மறைத்தாலும்
நிலையி லாதார் நிலைமையினால் மறைக்க ஒண்ணு மோ" என்னும்
விலையில் வாய்மைக் குறுந்தொகைகள் விளம்பிப் புறம்போந் தங்கமர்ந்தே
இலைகொள் சூலப் படையார்சேர் இடங்கள் பிறவுந் தொழவணைவார்.

"தலையெ லாம்பறிக் குஞ்சமண் கையருள்
நிலையி னான்மறைத் தான்மறைக் கொண்ணுமோ
அலையி னார்பொழி லாறை வடதளி
நிலையி னான்அடி யேநினைந் துய்ம்மினே"

"நீதி யைக்கெட நின்றம ணேயுணும்
சாதி யைக்கெடு மாசெய்த சங்கரன்
ஆதி யைப்பழை யாறை வடதளிச்
சோதி யைத்தொழு வார்துயர் தீருமே"

"வாயி ருந்தமி ழேபடித் தாளுறு
†ஆயி ரஞ்சம ணும்மழி வாக்கினான்
பாயி ரும்புன லாறை வடதளி
மேய வன்னென வல்வினை வீடுமே"—தேவாரம்.

போங்கு புனலார் பொன்னியினில் இரண்டு கரையும் பொருவிடையார்
தங்கும் இடங்கள் புக்கிறைஞ்சித் தமிழ்மா லைகளுஞ் சாத்திப்போய்
எங்கும் நிறைந்த புகழாளர் ஈறில் தொண்டர் எதிர்கொள்ளச்
செங்கண் விடையார் திருவானைக் காவின் மருங்கு சென்றணைந்தார்.

சிலந்திக் கருளுங் கழல்வணங்கிச் செஞ்சொன் மாலை பலபாடி
இலங்கு சடையார் எறும்பியூர் மலையும் இறைஞ்சிப் பாடியபின்
மலர்ந்த சோதித் திருச்சிராப் பள்ளி மலையுங் கற்குடியும்
நலங்கொள் செல்வத் திருப்பராய்த் துறையுந் தொழுவான் நண்ணினார்.

மற்றப் பதிகள் முதலான மருங்குள் ளனவுங் கைதொழுது
பொற்புற் றமைந்த திருப்பணிகள் செய்து பதிகங் கொடுபோற்றி
உற்ற அருளால் காவிரியை ஏறி ஒன்னார் புரமெரியச்
செற்ற சிலையார் திருப்பைஞ்ஞீ லியினைச் சென்று சேர்கின்றார். ௩0௩

௩00. சாதி அமணர் - சமயக் கொள்கையை விட்டுச் சாதிக் கொள்கை கொண்ட அமணர். பண்டைக்காலச் சமணர்களிடைச் சாதி வேற்றுமை கிடையாது. இடைக்காலச் சமணர்களிடைச் சாதி வேற்றுமையும் புகலாயிற்று.

௩0௩. பகைவர்களின் முப்புரம் எரிந்தழிய வில்லையேந்திய சிவபெருமான்.

பா - ம்—*பாடிப்பின். †ஆயி ரஞ்சம ணும்வழி யாக்கினன்.

வழிபோம் பொழுது மிக இளைத்து வருத்தம் உறநீர் வேட்கையொடும்
அழிவாம் பசிவந் தணைந்திடவும் அதற்குச் சித்தம் அலையாதே
மொழிவேந் தரும்முன் எழுந்தருள முருகார் சோலைப் பைஞ்ஞீலி
விழியேந் தியநெற் றியினார்தந் தொண்டர் வருத்தம் மீட்பாராய். ௩௦௪

காவும் குளமும் முன்சமைத்துக் †காட்டி வழிபோங் கருத்தினால்
மேவுந் திருநீற் றந்தணராய் விரும்பும் பொதிசோ றுங்கொண்டு
நாவின் தனிமன் னவர்க்கெதிரே நண்ணி யிருந்தார் விண்ணின்மேல்
தாவும் புள்ளும் மண்கிழிக்குந் தனியே னமுங்காண் பரியவர்தாம். ௩௦௫

அங்கண் இருந்த மறையவர்பால் ஆண்ட அரசும் எழுந்தருள
வெங்கண் விடைவே தியர்நோக்கி "மிகவும் வழிவந் திளைத்திருந்தீர்
இங்கென் பாலே பொதிசோறுண் டிதனை உண்டு தண்ணீர்இப்
பொங்கு குளத்தில் குடித்திளைப்புப் போக்கிப் போவீர்" எனப்புகன்றார்.

நண்ணுந் திருநா வுக்கரசர் நம்பர் அருள்என் றறிந்தார்போல்
"உண்ணும்" என்று திருமறையோர் உரைத்துப் பொதிசோ றளித்தலுமே
‡எண்ண நினையா தெதிர்வாங்கி இனிதா அமுது செய்தினிய
தண்ணீர் அமுது செய்தருளித் தூய்மை செய்து தளர்வொழிந்தார்.

எய்ப்பு நீங்கி நின்றவரை நோக்கி இருந்த மறையவனார்
"அப்பால் எங்கு நீர்போவ" தென்றார் அரசும் அவர்க்கெதிரே
செப்பு வார்"யான் திருப்பைஞ்ஞீ லிக்குப் போவ" தென்§றுரைப்ப
ஒப்பி லாரும் யான்அங்குப் போகின் றேன்என் றுடன்போந்தார். ௩௦௮

கூட வந்து மறையவனார் திருப்பைஞ் ஞீலி குறுகியிட
வேடம் அவர்முன் மறைத்தலுமே மெய்ம்மைத் தவத்து மேலவர்தாம்
"ஆடல் புரிந்தார் அடியேனைப் பொருளா அளித்த கருணை" எனப்
பாடல் புரிந்து விழுந்தெழுந்து கண்ணீர் மாரி பயில்வித்தார். ௩௦௯

பைஞ்ஞீ லியினில் அமர்ந்தருளும் பரமர் கோயில் சென்றெய்தி
மைஞ்ஞீ லத்து மணிகண்டர் தம்மை வணங்கி மகிழ்சிறந்து

---

௩௦௪. மொழி வேந்தரும் - திருநாவுக்கரசரும். மணங்கமழுஞ் சோலை.

௩௦௫. திருநாவுக்கரசர்க் கெதிரே. காவும் - சோலையும். வழியேபோகும். புள்ளும் - அன்னமும் (பிரமனும்). ஏனமும் - பன்றியும் (விட்டுணுவும்).

௩௦௮. எய்ப்பு - இளைப்பு. நின்றவரை - திருநாவுக்கரசரை.

௩௧௦. மைந்நீலத்து. மெய்ந்நீர்மையினில் (மெய்மைத் தன்மையினில்). கைந்நீடிய.

பா - ம்—*இளைத்த. †காட்ட. ‡எண்ணி. §உரைத்தார்.

மெய்ஞ்ஞீர் மையினில் அன்புருக விரும்புந் தமிழ்மா லைகள்பாடிக்
கைஞ்ஞீ டியதந் திருத்தொண்டு செய்து காத லுடனிருந்தார். ௩௧0

நாதர் மருவுந் *திருவண்ணா மலையை நாடிப் பதிபலவும்
காதல் கூரச் சென்றிறைஞ்சிக் கலந்த இசைவண் தமிழ்பாடி
மாதொர் பாகர் அருளாலே வடபால் நோக்கி வாகீசர்
ஆதி தேவர் அமர்ந்ததிரு அண்ணா மலையை நண்ணினார். ௩௧௧

செங்கண் விடையார் திருவண்ணா மலையைத் தொழுது வலங்கொண்டு
துங்க †வரையின் மிசையேறித் தொண்டர் தொழும்புக் கெதிர்நிற்கும்
அங்கண் அரசைத் தொழுதெழுந்து திளைத்துத் திருநா வுக்கரசர்
தங்கு பிறப்பே வீட்டினுக்கு மேலாம் ‡பெருமை சாதித்தார். ௩௧௨

அண்ணா மலைமேல் §அணிமலையை ஆரா அன்பின் அடியவர்தங்
கண்ணார் அமுதை விண்ணோரைக் காக்கக் கடலில் வந்தெழுந்த
உண்ணா நஞ்சம் உண்டானைக் கும்பிட் டுருகுஞ் சிந்தையுடன்
பண்ணார் பதிகத் தமிழ்பாடிப் பணிந்து பரவிப் பணிசெய்தார். ௩௧௩

பணியார் வேணிச் சிவபெருமான் பாதம் போற்றிப் பணிசெயுநாள்
மணியார் கண்டத் தெம்பெருமான் மண்மேல் மகிழும் இடமெங்கும்
தணியாக் காத லுடன்சென்று வணங்கித் தக்க பணிசெய்வார்
அணியார் தொண்டைத் திருநாட்டில் அருளால் அணைவா ராயினார்.

காதல் செய்யுங் கருத்தினுடன் காடும் மலையும் கான்யாறும்
சூத மலிதண் பணைப்பதிகள் பலவும் கடந்து சொல்லினுக்கு
நாதர் போந்து பெருந்தொண்டை நன்னா டெய்தி முன்னாகச்
சீத ||மலர்மென் சோலைசூழ் திருவோத் தூரிற் சென்றடைந்தார். ௩௧௫

௩௧௨. துங்கவரை - உயர்ந்த மலை. தொழும்புக்கு - பணிக்கு. அங்கண் அரசை - சிவபெருமானை. மனிதப் பிறப்பே. வீடுபேறு காதலித்தலும், அதனை நிறைவேற்ற முயலுதலும், அம் முயற்சியான் பேறெய்தலும் மனிதப் பிறப்புக் கிருத்தலான், "தங்கு.........சாதித்தார்" என்றார். "மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே"; "வாய்த்தது நந்தமக்கு ஈதோர் பிறவி மதித்திடுமின்"—அப்பர் : கோயில் திருவிருத்தம்.

௩௧௪. பணியார் வேணி - பாம்புகளுள்ள சடையையுடைய. அணிஆர் - அழகு நிறைந்த.

௩௧௫. சூதம்......பதிகள் - மாமரங்கள் மிகுந்த குளிர்ந்த மருதநிலப் பதிகள். சொல்லினுக்கு நாதர் - திருநாவுக்கரசர்.

பா - ம்—*திருமலைகள் நாடும் பதிகள் பலமிகவும். †விடையின். ‡பரிசு சாற்றினார். §மணி. ||மலிதண்.

சேக்கர்ச் சடையார் திருவோத்தூர்த் தேவர் பிரானர் தங்கோயில்
புக்குவலங்கொண் டெதிர்இறைஞ்சிப் போற்றிக் கண்கள் புனல்பொழிய
முக்கட் பிரானை விரும்புமொழித் திருத்தாண் டகங்கள் முதலாகத்
தக்க மொழிமா லைகள்சாத்திச் சார்ந்து பணிசெய் தொழுகுவார். ௬௧௬

செய்ய ஐயர் திருவோத்தூர் ஏத்திப் போந்து செழும்புவனம்
உய்ய நஞ்சுண் டருளுமவர் உறையும் பதிகள் பலவணங்கித்
தையல் தழுவக் குழைந்தபிரான் தங்கும் தெய்வப் பதிஎன்று
வையம் முழுதுந் தொழுதேத்தும் மதில்சூழ் காஞ்சி மருங்கணைந்தார்.

"ஞாலம் உய்யத் திருவதிகை நம்பர் தம்பேர் அருளினால்
சூலை மடுத்து முன்னாண்ட தொண்டர் வரப்பெற் றோம்" என்று
காலை *மலரும் கமலம்போல் காஞ்சி வாணர் முகமெல்லாம்
சால †மலர்ந்து களிசிறப்பத் தழைத்த மனங்கள் தாங்குவார். ௬௧அ

மாட வீதி ‡மருங்கெல்லாம் மணிவா யில்களில் தோரணங்கள்
நீடு கதலி யுடன்கமுகு §நிரைத்து நிறைபொற் குடந்தீபம்
தோடு குலவு மலர்மாலை சூழ்ந்த வாசப் பந்தர்களும்
ஆடு கொடியு முடனெடுத்தங் கணிநீள் காஞ்சி அலங்கரித்தார். ௬௧௯

தொண்டர் ஈண்டி எதிர்கொள்ள எழுந்து சொல்லுக் கரசர்பால்
கொண்ட ||வேடப் பொலிவினொடுங் குலவும் வீதி பணிசெய்யும்
அண்டர் அறிதற் கரியதிரு வலகு முதலாம் அவையேந்தி
இண்டை புனைந்த சடைமுடியார்க் கன்பர் தம்மை எதிர்கொண்டார்.

எதிர்கொண் டிறைஞ்சுஞ் சீரடியார் தம்மை இறைஞ்சி எழுந்தருளி
மதில்கொண் டணிந்த காஞ்சிநகர் மறுகுட் போந்து வானநதி
குதிகொண் டிழிந்த சடைக்கம்பர் செம்பொற் கோயில் குறுகினார்
அதிர்கொண் டலைநேர் மணிமிடற்றார் ஆண்ட திருநா வுக்கரசர். ௬௨௧

திருவா யிலினைப் பணிந்தெழுந்து செல்வத் திருமுன் றிலைஅணைந்து
கருவார் கச்சி ஏகம்பர் கனக மணிமா ளிகைசூழ்ந்து

---

௬௧௭. செய்ய ஐயர் - சிவபிரான். தையல் - உமாதேவியார்.

௬௧௯. மாடவீதி மருகெல்லாம் என்பது பாடமாயின், மாடவீதியும் மற்றத் தெருக்க ளெல்லாமும் என்று கொள்க. நிரைத்து - வரிசையாக நாட்டி. தோடு குலவு - இதழ்கள் விளங்கிய.

௬௨௦. ஈண்டி - நெருங்கி. குலவும் - விளங்கும். இண்டை - பூமாலை.

௬௨௧. வான நதி - கங்கை. சடையையுடைய திருவேகம்பர். அதிர்கின்ற மேகத்தையொத்த நீலம் பொருந்திய கண்டர்.

பா - ம்—*மருவுங். †மகிழ்ந்து. ‡மறுகெல்லாம். §நெருங்கு. ||வேட்கைப்.

வருவார் செம்பொன் மலைவல்லி தழுவக் குழைந்த மணிமேனிப்
பெருவாழ் வினைமுன் கண்டிறைஞ்சிப் போரா அன்பு *பெருகினார்.

வார்ந்து †சொரியுங் கண்ணருவி மயிர்க்கால் தோறும் வரும்புளகம்
ஆர்ந்த மேனிப் புறம்பலைப்ப அன்பு கரைந்தென் புள்ளலைப்பச்
சேர்ந்த நயனப் பயன்பெற்றுத் திளைப்பத் திருவே கம்பர்தமை
நேர்ந்த மனத்தில் உறவைத்து நீடும் பதிகம் பாடுவார். நஉந

வேறு

"கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானை" என்றெடுத்துப்
பரவாய சொன்மாலைத் திருப்பதிகம் பாடியபின்
விரவார்தம் புரமெரித்த விடையவனார் ‡வெள்ளெயிற்றின்
அரவாரம் புனைந்தவர்தந் திருமுன்றிற் புறத்தணைந்தார். நஉச

" கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானைக் கரவார்பால்
விரவாடும் பெருமானை விடையேறும் வித்தகனை
அரவாடச் சடைதாழ அங்கையில் அனலேந்தி
இரவாடும் பெருமானை என்மனத்தே வைத்தேனே"—தேவாரம்.

§கையார்ந்த திருத்தொண்டு கழியமிகு காதலொடுஞ்
செய்யாநின் றேஎல்லாச் செந்தமிழ்மா லையும்பாடி
மையார்ந்த மிடற்றார்திரு மயானத்தை வலங்கொண்டு
மெய்யார்வ முறத்தொழுது விருப்பினொடு ||மேவுநாள். நஉரு

சீர்வளரு மதிற்கச்சி நகர்த்திருமேற் றளிமுதலாம்
¶நீர்மருவுஞ் சடைமுடியார் நிலவியுறை ஆலயங்கள்
ஆர்வமுறப் பணிந்தேத்தி ஆய்ந்ததமிழ்ச் சொன்மலரால்
சார்வுறுமா லைகள்சாத்தித் ‖ தகுந்தொண்டு செய்திருந்தார். நஉசு

அந்நகரில் அவ்வண்ணம் அமர்ந்துறையும் நாளின்கண்
மன்னுதிரு மாற்பேறு வந்தணைந்து தமிழ்பாடிச்
சென்னிமிசை மதிபுனைவார் பதிபலவுஞ் சென்றிறைஞ்சித்
துன்னினார் காஞ்சியினைத் தொடர்ந்தபெருங் காதலினால். நஉஎ

---

நஉஉ. கருவார் - எல்லாவற்றிற்கும் மூலமாகவுள்ள. கனகம் - பொன். மணி - மாணிக்கம். சுற்றி வருகின்றவராகிய அப்பர்.

நஉந. வார்ந்து - வடிந்து. புளகம் - சிலிர்ப்பு. ஆர்ந்த - நிறைந்த. அருவியும் புளகமும் ஆர்ந்த. நயனப் பயன் - கண்ணுலாகிய பயன். திளைப்ப - மூழ்க.

நஉச. பரவுதற்குரிய. விரவார்தம் - பகைவர்களுடைய. எயிற்றின் அரவு ஆரம் - பற்களையுடைய பாம்பாபரணத்தை.

பா - ம்—*பெருக்கினார். †சொரிந்த. ‡வெள்ளை எயிற் றரவாரம். §கையாரத். ||மேவுவார். ¶நீர்வளருஞ் சடையவர் தாம். ‖தந்.

"ஏகம்பன் காண்அவன்என் எண்ணத்தான்" எனப்போற்றிப்
பாகம்பெண் ணுருவானைப் பைங்கண்விடை உயர்த்தானை
நாகம்பூண் உகந்தானை நலம்பெருகுந் திருநீற்றின்
ஆகந்தோய் அணியானை அணைந்துபணிந் தின்புற்றார். ௬உஅ

"கூற்றுவன்காண் கூற்றுவனைக் குமைத்த கோன்காண் குவலயன் காண் குவலயத்தின் நீரா னுன்காண், காற்றவன்காண் கனலவன்காண் கலிக்குமின்காண் கனபவளச் செம்மேனி கலந்த வெள்ளை, நீற்றவன் காண் நிலாவூருஞ் சென்னி யான்காண் நிறையார்ந்த புனற்கங்கை நிமிர் சடைமேல், ஏற்றவன்காண் எழிலாரும் பொழிலார்கச்சி ஏகம்பன் காண் அவன்என் எண்ணத் தானே"—**தேவாரம்.**

திருக்கச்சி ஏகம்பம் பணிந்தேத்தித் திங்களார்
நெருக்கச்செஞ் சடைக்கணிந்தார் நீடுபதி தொழுதினைவார்
வருக்கைச்செஞ் சுளைபொழிதேன் வயல்விளைக்கும் நாட்டிடைப்போய்ப்
பருக்கைத்திண் களிற்றுரியார் கழுக்குன்றின் பாங்கணைந்தார். ௬உ௯

நீடுதிருக் கழுக்குன்றில் நிருத்தனார் கழல்வணங்கிப்
பாடுதமிழ்த் தொடைபுனைந்து பாங்குபல பதிகளிலுஞ்
சூடும்இளம் பிறைமுடியார் தமைத்தொழுது போற்றிப்போய்
மாடுபெருங் கடலுடுத்த வான்மியூர் மருங்கணைந்தார். ௬௩0

திருவான்மி யூர்மருந்தைச் சேர்ந்துபணிந் தன்பினொடும்
பெருவாய்மைத் தமிழ்பாடி *மருங்கெங்கும் †பிறப்பறுத்தல்
தருவார்தங் கோயில்பல சார்ந்திறைஞ்சித் தமிழ்வேந்தர்
மருவாரு மலர்ச்சோலை மயிலாப்பூர் வந்தடைந்தார். ௬௩க

‡வரைதவழ்மா மஞ்சென்ன மாடமிசை மயிலாடும்
தரை§புகழ்சீர்த் திருமயிலைச் சங்கரனார் தாள்வணங்கி
உரைவளர்மா லைகள்அணிவித் துழவாரப் படையாளி
திரைவளர்வே லைக்கரைபோய்த் திருவொற்றி யூர்சேர்ந்தார். ௬௩உ

---

௬உஅ. ஆகம் - திருமேனி.

௬உ௯. திங்கள் ஆர் - சந்திரனும் ஆத்தியும். வருக்கை - பலா. பருத்த துதிக்கையுடைய வலிய யானை உரியைப் போர்த்த சிவபிரான் எழுந்தருளியுள்ள. ௬௩க. சுவாமி பெயர் மருந்தீசர்.

௬௩உ. மலையில் தவழும் மேகம்போல மாடங்களில் மயில் ஆடும். கடற் கரை போய்.

**பா - ம்**—*அம்மருங்கு. †பிறப்பறுத்துத். ‡வரைவளர்மா மயிலென்ன மாடமிசை மஞ்சாடும். §வளர்.

ஒற்றியூர் வளநகரத் தொளிமணிவீ திகள்விளக்கி
நற்கொடிமா லைகள்பூகம் நறுங்கதலி நிரைநாட்டிப்
பொற்குடங்கள் தூபங்கள் தீபங்கள் பொலிவித்து
மற்றவரை எதிர்கொண்டு கொடுபுக்கார் வழித்தொண்டர். ௩௩௩

திருநாவுக் கரசரும்அத் திருஒற்றி யூர்அமர்ந்த
*பெருநாகத் திண்சிலையார் கோபுரத்தை இறைஞ்சிப்புக்
கொருஞானத் தொண்டருடன் உருகிவலங் கொண்டடியார்
கருநாமந் தவிர்ப்பாரைக் கைதொழுது முன்வீழ்ந்தார். ௩௩௪

எழுதாத மறைஅளித்த எழுத்தறியும் பெருமானைத்
தொழுதார்வம் உறநிலத்தில் தோய்ந்தெழுந்தே அங்கமெலாம்
முழுதாய பரவசத்தின் முகிழ்த்தமயிர்க் கால்மூழ்க
விழுதாரை கண்பொழிய விதிர்ப்புற்று விம்மினார். ௩௩௫

"வண்டோங்குஞ் செங்கமலம்" எனஎடுத்து மனமுருகப்
பண்தோய்ந்த சொற்றிருத்தாண் டகம்பாடிப் பரவுவார்
விண்தோய்ந்த புனற்கங்கை வேணியார் திருவுருவம்
கண்டோங்கு களிசிறப்பக் கைதொழுது புறத்தணைந்தார். ௩௩௬

"வண்டோங்கு செங்கமலக் கழுநீர் மல்கு மதமத்தஞ் செஞ்சடைமேல் மதியஞ் சூடித், திண்டோள்கள் ஆயிரமும் வீசி நின்று திசைசேர நடமாடிச் சிவலோகனார், உண்டார்நஞ் சுலகுக்கோர் உறுதி வேண்டி ஒற்றியூர் மேய ஒளிவண்ணனார், கண்டேன்நான் கனவகத்திற் கண்டேற்கென்தன் கடும்பிணியுஞ் சுடுந்தொழிலுங்கைவிட்டவே"—**தேவாரம்.**

விளங்குபெருந் திருமுன்றில் மேவுதிருப் பணிசெய்தே
உளங்கொள்திரு விருத்தங்கள் ஓங்குதிருக் குறுந்தொகைகள்
களங்கொள்திரு நேரிசைகள் பலபாடிக் கைதொழுது
வளங்கொள்திருப் பதியதனில் பலநாள்கள் வைகினார். ௩௩௭

அங்குறையு நாளின்கண் அருகுளவாஞ் †சிவாலயங்கள்
எங்குஞ்சென் றினிதிறைஞ்சி ஏத்துமவர் இறைஅருளால்

௩௩௪. பெருநாகத் திண் சிலையார் - பெரிய (மேரு) மலையாகிய வலிமையுடைய வில்லையேந்திய சிவபெருமான். ஒருமை ஞானமுடைய. கருநாமம் - பிறவிப் பலத்தை.

௩௩௫. எழுதாமறை ஒலிவடிவா யுள்ளது. முகிழ்த்த - மலர்ந்த. விதிர்ப்புற்று - நடுக்குற்று. "மெய்தான்அரும்பி விதிர் விதிர்த்து..."—**திருவாசகம்.**

௩௩௭. களங்கொள் - மிடற்றை இடமாக் கொண்டெழும்.

பா - ம்—*பொரு. †ஆலயங்கள்.

பொங்குபுனல் திருவொற்றி யூர்தொழுது போந்துமையாள்
பங்குடையார் அமர்ந்ததிருப் பாசூராம் பதிஅணைந்தார். ௩௩௮

திருப்பாசூர் நகரெய்திச் சிந்தையினில் வந்தூறும்
விருப்பார்வம் மேற்கொள்ள வேயிடங்கொண் டுலகுய்ய
இருப்பாரைப் புரமூன்றும் எரித்தருள எடுத்ததனிப்
பொருப்பார்வெஞ் சிலையாரைத் தொழுதெழுந்து போற்றுவார். ௩௩௯

"முந்திமூ வெயில்எய்த முதல்வனார்" எனஎடுத்துச்
சிந்தைகரைந் துருகுதிருக் குறுந்தொகையும் தாண்டகமும்
சந்தநிறை நேரிசையும் முதலான தமிழ்பாடி
எந்தையார் திருவருள்பெற் றேகுவார் வாகீசர். ௩௪௦

"முந்தி மூவெயில் எய்த முதல்வனார்
சிந்திப் பார்வினை தீர்த்திடுஞ் செல்வனார்
அந்திக் கோன்தனக் கேயருள் செய்தவர்
பந்திச் செஞ்சடைப் பாசூர் அடிகளே"—தேவாரம்.

அம்மலர்ச்சீர்ப் பதியைஅகன் றயல்உளவாம் பதிஅனைத்தின்
மைம்*மலருங் களத்தாரை வணங்கிமகிழ் வொடும்போற்றி
மெய்ம்மைநிலை வழுவாத †வேளாள விழுக்குடிமைச்
செம்மையினார் பழையனூர்த் திருஆல வனம்பணிந்தார். ௩௪௧

"திருஆலங் காடுறையுஞ் செல்வர்தாம்" எனச்சிறப்பின்
ஒருவாத பெருந்திருத்தாண் டகம்முதலாம் ஓங்குதமிழ்ப்
பெருவாய்மைத் தொடைமாலை பலபாடிப் பிறபதியும்
மருஆர்வம் பெறவணங்கி வடதிசைமேல் வழிக்கொள்வார். ௩௪௨

"ஒன்றா வுலகனைத்தும் ஆனார் தாமே ஊழிதோ றூழி உயர்ந்தார் தாமே
நின்றாகி எங்கும் நிமிர்ந்தார் தாமே நீர்வளிதீ ஆகாசம் ஆனார் தாமே
கொன்றாடுங் கூற்றை உதைத்தார் தாமே கோலப் பழனை உடையார் தாமே
சென்றாடு தீர்த்தங்கள் ஆனார் தாமே திருவாலங் காடுறையுஞ் செல்வர்தாமே"
—தேவாரம்.

பல்பதியும் நெடுங்கிரியும் படர்வனமுஞ் சென்றடைவார்
செல்கதிமுன் அளிப்பார்தந் திருக்காரிக் கரைபணிந்து

௩௩௯. வேய் - மூங்கில்போன்ற தோளுடைய உமையம்மையாரை (ஆகுபெயர்). பொருப்பு ஆர் - (மேரு) மலை அமைந்த.

௩௪௧. விழுக்குடிமை - சீரிய குடிப்பிறப்பையுடைய. திருவாலவனம் - திருவாலங்காடு. ௩௪௨. ஒருவாத - நீங்காத.

பா - ம்—*மருவுங். †மேன்மைநெறி.

*தொல்கலையின் பெருவேந்தர் தொண்டர்கள்பின் †உம்பர்குழாம்
மல்குதிருக் காளத்தி மாமலைவந் தெய்தினார். ௩௪௩

பொன்முகலித் திருநதியின் புனிதநெடுந் தீர்த்தத்தில்
முன்முழுகிக் காளத்தி மொய்வரையின் தாழ்வரையில்
சென்னியுறப் பணிந்தெழுந்து செங்கண்விடைத் தனிப்பாகர்
மன்னும்மலை மிசையேறி வலங்கொண்டு வணங்குவார். ௩௪௪

காதணிவெண் குழையானைக் காளத்தி மலைக்கொழுந்தை
வேதமொழி மூலத்தை விழுந்திறைஞ்சி எழுந்துபெருங்
காதல்புரி மனங்களிப்பக் கண்களிப்பப் பரவசமாய்
'நாதனைஎன் ‡கண்ணுளான்'' எனுந்திருத்தாண் டகம்நவின்றார். ௩௪௫

"விற்றாண்ஒன் றில்லாத நல்கூர்ந் தான்காண் வியன்கச்சிக் கம்பன் காண் பிச்சை அல்லால், மற்றாண்ஒன் றில்லாத மாசதுரன்காண் மயானத்து மைந்தன்காண் மாசொன் றில்லாப், பொற்றூண்காண் மாமணிநற் குன்றொப் பான்காண் பொய்யாத பொழில்ஏழுந் தாங்கி நின்ற, கற்றூண் காண் காளத்தி காணப்பட்ட கணநாதன் காண்அவன்என் கண்ணுளானே"—தேவாரம்.

மலைச்சிகரச் சிகாமணியின் மருங்குறமுன் னேநிற்குஞ்
சிலைத்தடக்கைக் கண்ணப்பர் திருப்பாதம் சேர்ந்திறைஞ்சி
அலைத்துவிழுங் கண்ணருவி ஆகத்துப் பாய்ந்திழியத்
தலைக்குவித்த கையினராய்த் தாழ்ந்துபுறம் போந்தணைந்தார். ௩௪௬

சேணிலவு திருமலையில் திருப்பணியா யினசெய்து
தாணுவினை அம்மலைமேல் தாள்பணிந்த குறிப்பினால்
பேணுதிருக் கயிலைமலை வீற்றிருந்த பெருங்கோலங்
காணுமது காதலித்தார் கலைவாய்மைக் காவலனார். ௩௪௭

---

௩௪௩. செல்கதி - வீடுபேற்றை. "...காரியாற்றுக் கொண்ட காவல்..." —மணிமேகலை: ௧௯. சிறைக்கோட் ௧௨௬. "காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி"—புறநானூறு: ௪௭. வேந்தர் - திருநாவுக்கரசர். உம்பர்குழாம் - தேவர்கள் கூட்டம். மல்கு - நெருங்கியுள்ள.

௩௪௪. திருக்காளத்தித் திண்ணிய மலையின் அடிவாரத்தில். மொய் - நெருங்கிய எனினுமாம்.

௩௪௭. தாணுவினை - சிவத்தை. திருக்காளத்தி தென்கயிலையாதலால், அது வடகயிலை நினைவூட்டிற் றென்க.

பா.- ம்—*சொல். †நம்பர். ‡கண்ணுள்ளான்.

வேறு

அங்கண் மாமலை மேல்ம ருந்தைஅவ ணங்கி யாரரு ளால்மிகப்
பொங்கு காதலின் உத்த ரத்திசை மேல்வி ருப்பொடு போதுவார்
துங்க மால்வரை *கானி யாறுதொ டர்ந்த நாடு கடந்தபின்
செங்கண் மால்விடை அண்ணல் மேவு திருப்ப ருப்பதம் எய்தினார்.

மான விஞ்சையர் வான நாடர்கள் வான்இ யக்கர்கள் சித்தர்கள்
கான கின்னரர் பன்ன காதிபர் காம சாரிக ளேமுதல்
ஞான மோனிகள் நாளும் நம்பரை வந்தி றைஞ்சி நலம்பெறுந்
தான மானதி ருச்சி லம்பை வணங்கி வண்தமிழ் சாற்றினார். ௩சகூ

அம்ம ருங்குக டந்து போமவர் ஆர்கொள் சூலவ யிற்படைச்
செம்மல் வெண்கயி லைப்பொ ருப்பைநி னைந்தெ ழுந்ததோர் சிந்தையால்
எம்ம ருங்குமொர் காத லின்றி இரண்டு பாலும் †வியந்துளோர்
கைம்ம ருங்கணை யுந்தெ லுங்கு கடந்து கன்னடம் எய்தினார். ௩ருo

கருந டங்கழி வாக ‡ஏகிய பின்க லந்தவ னங்களும்
திருந தித்துறை யாவை யும்பயில் சேண்நெ டுங்கிரி வட்டையும்
பெருந லங்கிளர் நாடும் எண்ணில பிற்ப டச்செறி பொற்பினால்
வருநெ டுங்கதிர் §கோலு சோலைய மாள வத்தினை நண்ணினார். ௩ருக

அங்கு முற்றிஅ கன்று போகி அருஞ்சு ரங்கள் கடந்துசென்
றெங்கு மிக்கஅ றங்கள் நீடும் இலாட பூமி இகந்துபோய்
மங்குல் சுற்றிய வெற்பி னோடு வனங்கள் ஆறு கடந்தயற்
பங்க யப்பழ னத்து ¶மத்திய பைதி ரத்தினை எய்தினார். ௩ருஉ

௩சஅ. உத்தரத்திசை - வடதிசை. திருப்பருப்பதம் - ஸ்ரீசைலம்.

௩சகூ. மானவிஞ்சையர் - பெருமை வாய்ந்த வித்தியாதரர்கள். பன்ன காதிபர் - நாகலோக வாசிகள். காமசாரிகள் - விரும்பிய இடத்து உடனே சென்று சஞ்சரிப்பவர்கள். திருச்சிலம்பை - ஸ்ரீசைலத்தை.

௩ருo. அம்மருங்கு - அவ்விடத்தை. ஆர்கொள் சூல அயிற்படைச் செம்மல் - கூரிய சூலாயுதத்தையுடைய சிவபெருமான். (சூல அயில் - சூலவேல்; வயின் எனக் கொள்ளின் வெற்றி எனக் கூறுக) பொருப்பை - மலையை. இரு பக்கமும் வியந்துவரும் அடியார்கள். கைம்மருங்கு - சமீபத்தில்.

௩ருக. கருநடம் - கன்னட தேசம். பயில் சேண் நெடுங்கிரி வட்டையும் - நெருங்கி நெடுந்தூரம் நீண்டுள்ள மலைவழிகளும். கிளர் - விளங்கும்; உயரும். செறி...சோலைய - நெருங்கி உயர்ந்துள்ள அழகால் பாயும் நீண்ட சூரிய கிரணங்கள் வளைந்துசெல்லும் சோலைகளையுடைய; சூரியனையும் மறைக்கும் என்றபடி. மாளவதேசத்தை.

௩ருஉ. அங்கு முற்றி - அவ்விடத்தைக் கடந்து. அருஞ்சுரங்கள் - அரிய வழிகள்; நிலங்கள்; காடுகள். இகந்து - கடந்து. மேகம் சூழ்ந்த மலைகளோடு.

பா - ம்—*கானை; காடு. †விரைந். ‡எய்திய §சோலை வேலிஅம் மாள. ¶மத்திம.

லிங்கம் அமைப்பார் ; திரு மதில்கள் எழுப்புவார்; கோபுரங்கள் வகுப்பார் ; சுற் ருலயங்கள் எடுப்பார்; வழிபாட்டுக்கு அவர் ஆத்தி முதலிய மலர்களைக் கொய்து வருவார் ; புதிய குடங்களை வாங்கிவருவார் ; கறவைப் பசுக்களிடஞ் சென்று மடியைத் தீண்டுவார்; பசுக்கள் கனைத்துச் சொரியும் பாலைக் குடங்களில் நிரப்பிக் கொணர்வார் ; சிவலிங்கத்தை அருச்சிப்பார் ; திருமஞ்சனம் ஆட்டுவார்; பூசைக் குக் கிட்டாத பொருள்களை மனதிலே பாவித்து நிரப்புவார். இவ்வன்புப் பூசை யைச் சிவபெருமான் இன்புடன் ஏற்பார். திருமஞ்சனத்துக்குப் பால் உதவி யும் பசுக்கள் உரியவர்களுக்குப்பால் குறையாதபடி வழங்கி வந்தன.

இவ்வாறு நிகழ்ந்துவரு நாளில், ஒருநாள் ஒருவன் சேய்ஞலூர்ப் பிள்ளை யார் செய்கையைக் கண்டான். அவன் உண்மை யுணராதவனுய் அவ்வூர் அந் தணர்களுக்கு அதை அறிவித்தான். அவர்கள் உடனே எச்சதத்தனை அழைப் பித்து அவ்வொருவன் சொன்னதை அவனுக்குச் சொன்னுர்கள். எச்சதத்தன் "இஃதெனக்குத் தெரியாது. சிறுவன் பிழையைப் பொறுத்தருளல் வேண் டும். இனி அப்பிழை நிகழுமாயின் அஃது என்னுடையதாகும்" என்று வணங்கி விடைபெற்றுச் சென்ருன்.

அடுத்தநாள் காலையில் விசாரசருமர் வழக்கம்போலப் பசுக்களை மேய்க்கப் போனுர். அன்று எச்சதத்தன் அவரைத் தொடர்ந்து மறைந்து பின்னே சென்ருன். சென்று மணற்றிட்டையின் அருகேயுள்ள ஒரு குராமரத்தில்ஏறி ஒளித்திருந்தான். விசாரசருமர் வழக்கப்படி பூசை தொடங்கினுர். அவர், பாற் குடங்களை ஏந்தி அபிடேகஞ் செய்வதை எச்சதத்தன் கண்டான். கண்டதும், அவன் மரத்தினின்றும் விரைந்திறங்கி ஓடிக் கைத்தண்டால் பிள்ளையார் முது கில் அடித்தான்; வெம்மொழிகளால் வைதான். பெரியவர் சிந்தை சிவ பூசையில் திளைத்துக் கிடக்கிறது. எச்சதத்தன் மேலும் மேலும் சீறிச்சீறி அன்பரைப் புடைக்கிருன். அன்பர் நிலை குலையவில்லை. அதற்குமேல் பாவி பாற்குடங்களை உதைத்தான். அவ்வடாத செயலைச் செய்தவன், தந்தை என்று விசாரசருமர் நன்கு உணர்ந்தார் ; உணர்ந்து, அவன் கால்களைத் துணிக்கத் தமக்கு முன் னிருந்த ஒரு கோலை எடுத்தார். அக்கோல் மழுவாயிற்று. அம்மழுவால் தந்தை யின் கால்களை வெட்டி, அவர் முன்போலச் சிவபூசையில் அமர்ந்தார். சிவபெரு மான் தேவியுடன் விடைமேல் தோன்றினுர். விசாரசருமர், ஆண்டவனைக் கண்டு எல்லை இல்லா ஆனந்தம் எய்தினுர் ; விழுந்து வணங்கினுர்.

சிவபெருமான், விசாரசருமரைத் திருக்கையால் எடுத்து, "நம் பொருட்டு நீ உன் தந்தையைத் தடிந்தாய். இனி நாமே உனக்கு அடுத்த தந்தை" என்று திருவாய்மலர்ந்து அவரை அணைத்தார் ; அவருடலைத் தடவினுர் ; உச்சி மோந்தார்; மகிழ்ந்தருளினுர். விசாரசருமரது திருமேனி சிவமயமாயிற்று. அவர் பேரொளியாய் விளங்கினுர். சிவபெருமான் சேய்ஞலூர்ப் பிள்ளையாரை நோக் கித் " திருத்தொண்டர்களுக்கு உன்னைத் தலைவனுக்கினேம். நாம் உண்பன உடுப்பன அணிவன முதலிய எல்லாம் உனக்கே ஆகுக. அதன் பொருட்டு உனக்குச் சண்டேசுரபதத்தைத் தந்தோம்" என்று அருளித் தமது திருச் சடையிலுள்ள கொன்றை மாலையை எடுத்து அவருக்குச் சூட்டினுர். **சண்டீச நாயனுர்**, தேவதேவரைத் தொழுது, அவர் அருள் செய்த சண்டேசுரபதத்தை அடைந்தார்.

எச்சதத்தன் சண்டீசுரப் பெருமானுல் வெட்டுண்டமையால் அவன் குற்றம் நீங்கிற்று. அவன் சுற்றத்துடன் சிவலோகம் எய்தினுன்.



## ரு. திருநின்ற சருக்கம்

# திருநாவுக்கரசு சுவாமிகள் புராணம்

திருநாவுக் கரசுவளர் திருத்தொண்டின் நெறிவாழ
வருஞானத் தவமுனிவர் வாகீசர் வாய்மைதிகழ்
பெருநாமச் சீர்பரவ லுறுகின்றேன் பேருலகில்
ஒருநாவுக் குரைசெய்ய ஒண்ணுமை உணராதேன். க

தொன்மைமுறை வருமண்ணின் துகளன்றித் துகளில்லா
நன்மைநிலை †ஒழுக்கத்து நலஞ்சிறந்த குடி‡மல்கிச்
சென்னிமதி புனையவளர் மணிமாடச் செழும்பதிகள்
மன்னிநிறைந் துளதுதிரு முனைப்பாடி வளநாடு. உ

---

க. திருநாவுக்கரசர் வளர்த்த திருத்தொண்டின் நெறி வாழ்க. (அந்நெறி வளர்க்க) வந்த ஞானத்தவ முனிவராகிய அவ்வாகீசர். வாகீசர்-திருநாவுக்கரசர். உண்மை விளங்கும் அவர் தஞ் சரித்திரத்தைச் சொல்லப் புகுகிறேன் என்றபடி. வாகீசர் என்பவர் ஒரு முனிவரென்றும், அவர் திருநாவுக்கரசராகப் பிறந்தார் என்றும் பின்னே புனையப் பெற்ற ஒரு கதையைப் பொருளாக்கொண்டு அக்கதைக்கியையச் சிலர் இப்பாட்டிற்குப் பொருள் கூறியுள்ளார். யானும் இளமையில் அக்கூற்றுக்கு இரையானேன். வாகீசர் என்பதும் திருநாவுக்கரசர் என்பதும் ஒரு பொருள் குறிப்பனவே. கஅ, சஅ, எடு-ம் பாட்டுகளின் குறிப்புகளைப் பார்க்க. திருநாவுக்கரசர் சமயகுரவருள் ஒருவராதலானும், அவர் தம் வாழ்வு பெரிதுந் தொண்டையே பற்றி நின்றமையானும், அவர்தந்தொண்டை வாழ்த்தும்வழி அவர்தம் புராணத்தைப் பாட ஆசிரியர் தொடங்குகிறார். திருஞானசம்பந்தர்க்கும் ஒரு பாட்டில் வாழ்த்துக் கூறியே ஆசிரியர் அப்புராணத்தைப் பாடப் புகுந்தமையும் ஈண்டுக் கருதற்பாலது. சுந்தரமூர்த்தி சுவாமிகள் பாட்டுடைத் தலைவராகலானும், சருக்க முடிவுதோறும் அவருக்கு வாழ்த்துக் கூறப்பெறுதலானும், தடுத்தாட்கொண்ட புராணத்தில் தனி வாழ்த்துக் கூறுதற்கு அவசியமில்லை யென்க.

உ. பழைய முறைப்படி. துகள் (புழுதி) அன்றி வேறு துகள் (குற்றம்) இல்லாத. மல்கி - பெருகி. சிகரத்தில் சந்திரன் தவழுதலால் அணி செய்ய வளர்ந்த; சிகரத்தில் சந்திரன் குளிக்க வளர்ந்த எனினுமாம். மன்னி - நிலையாக. திருமுனைப்பாடி வளநாடு தொன்மைமுறை வருவதும், மண்...துகளில்லாதும் ஆகிய நன்மை நிலை யொழுக்கத்து...உளது.

பா - ம்—*தொன்முறைமை. †ஒழுக்கத்தின். ‡பல்கி.

புனப்பண்ணை மணியினொடும் புறவினறும் *புதுமலரின்
கனப்பெண்ணில் திரைசுமந்து கரைமருங்கு பெரும்பகட்டேர்
இனப்பண்ணை உழும்பண்ணை எறிந்துலவி எவ்வுலகும்
வனப்பெண்ண வரும்பெண்ணை மாநதிபாய் வளம்பெருகும். ௩

காலெல்லாந் தகட்டுவரால் கரும்பெல்லாங் கண்பொழிதேன்
பாலெல்லாங் கதிர்ச்சாலி பரப்பெல்லாங் குலைக்கமுகு
சாலெல்லாந் தரளநிரை தடமெல்லாஞ் செங்கழுநீர்
மேலெல்லாம் அகிற்றூபம் விருந்தெல்லாந் திருந்துமனை. ௪

கடைஞர்மிடை வயற்குறைத்த கரும்புகுறை பொழிகொழுஞ்சா
றிடைதொடுத்த தேன்கிழிய இழிந்தொழுகு நீத்தமுடன்
புடைபரந்து ஞிமிறொலிப்பப் புதுப்புனல்†போல் மடையுடைப்ப
உடைமடையக் கரும்படுகட் டியினடைப்ப வூர்கள்தொறும். ௫

கருங்கதலிப் பெருங்குலைகள் களிற்றுக்கைம் முகங்காட்ட
மருங்குவளர் ‡கதிர்ச்செந்நெல் வயப்புரவி முகங்காட்டப்

---

௩. புனப்பண்ணை மணியினொடும் - குறிஞ்சி நிலத்திலிருக்குங் கூட்டமான இரத்தினங்களோடும். புற...கனப்பு - முல்லை நிலத்திலிருக்கும் வாசனையுடைய புது மலர்களின் திரளை. எண்...மருங்கு - எண்ணில்லாத அலைகள் சுமந்து கரைப் பக்கங்களில். பெரும்...எறிந்து - பெரிய எருமைகள் பூட்டப்பட்ட ஏர்களின் அதிக கூட்டங்கள் உழுகின்ற வயல்களில் எறிந்து. வனப்பு எண்ண - அழகை மதிக்க.

௪. கால் - நீர்க்கால். வரால் மீன்கள். கண் - கணுக்கள். பால் - பக்கம். சாலி - நெற்கள். பரப்பு - அகன்ற இடம். சால் - படைச்சால். தரளநிரை - முத்து வரிசைகள். தடம் - குளம். செங்கழுநீர் - செங்குவளை. திருந்திய மனைகளிலெல்லாம் விருந்து.

௫. கடைஞர்...குறை - பள்ளர்கள் நெருங்கிய வயல்களில் துண்டிக்கப்பட்ட கரும்புக் குறைகள். இடை...நீத்தமுடன் - (கொம்புகளுக்கு) இடையிடையே கட்டப்பட்டுள்ள தேன் கூடுகள் கிழியச் சொரிந்து பாயும் (தேன்) வெள்ளத்தோடு. புடை...ஒலிப்ப - பக்கங்களில் பரவி வண்டுகள் ஒலிக்க. புதுப்புனல்போல்-புதிய நீரைப்போல (ஓடி). புதுப்புனல்போய் என்னும் பாடத்துக்குப் புதுப்புனலுடன் போய் என்றுரைக்க. உடை...அடைப்ப - உடைபட்ட மடைகளை அக்கருப்பஞ் சாற்றால் காய்ச்சப்பெற்ற வெல்லக்கட்டிகளால் அடைப்பார்கள்.

௬. கதலி - வாழையின். களிற்றுக்கை - யானைகளின் துதிக்கை. மருங்கு - பக்கத்தே. வயப்புரவி - வெற்றிக் குதிரைகளின். சகடு - வண்டிகள். வினைஞர்

பா - ம்—*புதுமலரும். †போய். ‡கதிர்ச்சாலி.

பெருஞ்சகடு தேர்காட்ட வினைஞர்ஆர்ப் பொலிபிறங்க
நெருங்கியசா துரங்கபல நிகர்ப்பனவாம் நிறைமருதம். ௬

நறையாற்றுங் கமுகுநவ மணிக்கழுத்தி னுடன்கூந்தல்
பொறையாற்றா மகளிரெனப் புறம்பலைதண் டலைவேலித்
துறையாற்ற *மணிவண்ண சுரும்பிரைக்கும் பெரும்பெண்ணை
நிறையாற்று நீர்க்கொழுந்து படர்ந்தேறு நிலைமையதால். ௭

மருமேவு மலர்மேய மாகடலி னுட்படியும்
உருமேகம் எனமண்டி உகைத்தகருங் கன்றுபோல்
†பருமேனிச் செங்கண்வரால் மடிமுட்டப் பால்சொரியும்
கருமேதி தனைக்கொண்டு கரைபுரள்வ திரைவாவி. ௮

மொய்யளிசூழ் நிரைநீல முழுவலயங் களின்அலையச்
செய்யதளிர் நறுவிரலின் செழுமுகையின் நகஞ்சிறப்ப
மெய்யொளியின் நிழற்காணும் ஆடியென வெண்மதியை
வையமகள் கையணைத்தாற் போலுயர்வ மலர்ச்சோலை. ௯

---

ஆர்ப்பொலி பிறங்க-பள்ளர்களின் ஆரவார ஒலி (பதாதியை) விளக்க. சாதுரங்க பலம் - நால்வகைச் சேனையை.

௭. நறை ஆற்றும் கமுகு - மணங் கமழும் பாக்கு மரங்கள். பொறை - சுமையை. புறம்பு...துறை-புறம்பே அலையும் சோலைகளை வேலியாக்கொண்ட கரையில். ஆற்ற...இரைக்கும் - மிகுந்த நீலமணி போன்ற வண்டுகள் ஒலிக்கும். பழம், காய், பாளை, சோலை முதலிய பன்னிறப் பொருள்களைக் கமுகு உடைமையான், அதற்கும் நவமணிக்கழுத்துடன் கூந்தல் பொறை ஆற்றாத மகளிர்க்கும் உவமை. "எண்ணார் முத்த மீன்று மரகதம்போல் காய்த்துக் - கண்ணார் கமுகு பவளம் பழுக்குங் கலிக்காழி"—திருஞானசம்பந்தர்: சீர்காழி. ௬.

௮. மணம்பொருந்திய மலர்களை மேயும்படி. இடியையுடைய மேகம் போல; உரும் - இடி. உருவெனக் கொண்டு கருநிறம் எனக் கூறலுமொன்று. மண்டி உகைத்த - நெருங்கிப் பாய்கின்ற. பருத்த உடலையும் சிவந்த கண்ணையுமுடைய வரால் மீன்கள். கருமேதிதனை - கரிய எருமையை. அலைகளையுடைய வாவிகள் கரைபுரள்வ.

௯. மொய்......அலைய - கூட்டமாகத் திரண்ட வண்டுகள் சூழ்ந்த வரிசையானது முழு நீலமணிகளால் ஆக்கப்பெற்ற வளையல்களைப்போல் அலைய;... வண்டுகள் கூடியுள்ள நீலமலர்கள் முழுவதும் நீலமணி வளையல்...என்னலுமாம். செய்ய...சிறப்ப - சிவந்த தளிர்கள் அழகிய விரலைப்போலவும் செவ்விய அரும்புகள் நகத்தைப்போலவும் சிறந்து விளங்க. மெய்...என - உடல் ஒளியின் நிழலைக் காணும் கண்ணாடியைப்போல. வையமகள் - பூமிதேவி.

பா - ம்—*மணி சொரிய. †வருமேனி.

எயிற்குலவும் வளம்பதிகள் எங்கும்மணந் தங்கும்வயற்
பயிர்க்கண்வியல் *இடங்கள்பல பரந்துயர்நெற் கூடுகளும்
வெயிற்கதிர்மென் குழைமகளிர் விரவியமா டமும்மேவி
மயிற்குலமும் முகிற்குலமும் மாறுட மருங்காடும். ௧0

மறந்தருதீ நெறி†மாற மணிகண்டர் வாய்மைநெறி
அறந்தருநா வுக்கரசும் ஆலால சுந்தரரும்
பிறந்தருள உளதானல் நம்மளவோ பேருலகில்
சிறந்ததிரு முனைப்பாடித் திறம்பாடுஞ் சீர்ப்பாடு. ௧௧

இவ்வகைய திருநாட்டில் எனைப்பலவூர் களுமென்றும்
மெய்வளங்கள் ஓங்கவரு மேன்மையன ஆங்கவற்றுள்
சைவநெறி ஏழுலகும் பாலிக்குந் ‡தன்மையினல்
தெய்வநெறிச் §சிவம்பெருக்குந் திருவாமூர் திருவாமூர். ௧௨

ஆங்குவன முலைகள்சுமந் தணங்குவன மகளிரிடை
ஏங்குவன நூபுரங்கள் இரங்குவன மணிக்காஞ்சி
ஓங்குவன மாடநிரை ஒழுகுவன வழுவில்அறம்
நீங்குவன தீங்குநெறி நெருங்குவன பெருங்குடிகள். ௧௩

மலர்நீலம் வயல்காட்டும் மைஞ்ஞீலம் மதிகாட்டும்
அலர்நீடு மறுகாட்டும் அணியூசல் பலகாட்டும்

---

௧0. எயில் குலவும் - மதில்கள் சூழ்ந்த. எங்குமுள்ள. வயலில் பொலிந்த பயிர்கள் உள்ள அகன்ற இடங்கள் பலவற்றில். நெற்கூடுகளிலும். வெயிலொளி உமிழும் மெல்லிய இரத்தினக் குண்டலங்களை அணிந்த பெண்மக்கள் நெருங்கியுள்ள மாடங்களிலும். குலமும் - கூட்டமும். மாறுட - (கண்டோர் மயிலோ முகிலோ என்று) மயங்க. மருங்கு - பக்கங்களில்.

௧௧. மறம் - பாவத்தை. மணிகண்டர் வாய்மை நெறி - சிவபிரானது சத்தியமார்க்கமாகிய. சீர்ப்பாடு - சிறப்பு.

௧௨. எனைப்பல ஊர்களும் - எல்லா ஊர்களும். "எனைப்பொருள் உண்மை மாத்திரை கண்ட"—மணிமேகலை: ௨எ. சமய. ௬௨. "...எனைப்பலகோடி தொகுத்தே"—தக்கயாகப்பரணி: ௨௬௫. பாலிக்கும் - காக்கும்; வளர்க்கும். சிவம் - நன்மை. திரு ஆம் ஊர் - செல்வம் உண்டாகும் (இலக்குமிவாழும்) ஊராகிய.

௧௩. வனமுலை - அழகிய முலைகளை. மகளிரிடை (இடுப்புகள்) அணங்குவன (வருத்துகின்றன). நூபுரங்கள் - சிலம்புகள். மணிக்காஞ்சி - மணிமேகலை. மாடநிரை-மாடவரிசைகள். வழுவில்லாத அறங்கள் ஒழுகுவன (நிகழ்கின்றன; நீள வளர்கின்றன).

பா - ம்—*அகலிடங்கள் பரந்துயர். †மாள. ‡தகைமையினல். §சிவம்பெருகும்.

புலர்நீலம் இருள்காட்டும் பொழுதுழவர் ஒலிகாட்டும்
கலநீடு மனைகாட்டும் கரைகாட்டாப் பெருவளங்கள். ௧௪

தலத்தின்கண் விளங்கியஅத் தனிப்பதியில் அனைத்துவித
நலத்தின்கண் வழுவாத *நடைமருவுங் குடிநாப்பண்
விலக்கின்மனை ஒழுக்கத்தின் மேதக்க நிலைவேளாண்
குலத்தின்கண் வரும்பெருமைக் குறுக்கையர்தங் குடிவிளங்கும். ௧௫

அக்குடியின் மேல்தோன்ற லாயபெருந் தன்மையினார்
மிக்கமனை †அறம்புரிந்து விருந்தளிக்கும் மேன்மையினார்
ஒக்கல்வளர் பெருஞ்சிறப்பின் உளராஞர் உளராஞர்
திக்குநில வும்பெருமை திகழவரும் புகழஞர். ௧௬

புகழஞர் தமக்குரிமைப் பொருவில்குலக் குடியின்கண்
மகிழவரு மணம்புணர்ந்த மாதினியார் மணிவயிற்றில்
நிகழுமலர்ச் செங்கமல நிரையிதழின் அகவயினில்
திகழவருந் திருவனைய ‡திலகவதி யார்பிறந்தார். ௧௭

திலகவதி யார்பிறந்து சிலமுறையாண் டகன்றதற்பின்
அலகில்கலைத் துறைதழைப்ப அருந்தவத்தோர் நெறிவாழ
உலகில்வரும் இருள்நீக்கி ஒளிவிளங்கு கதிர்போல
மலருமரு ணீக்கியார் வந்தவதா ரஞ்செய்தார். ௧௮

---

௧௪. மதிமைஞ்ஞீலம் காட்டும் - மதிபோன்ற முகம் கரியநீல மலர்போன்ற கண்ணைக் காட்டும். அலர்நீடு மறுகு - அகன்ற நீண்ட தெருக்கள். இருள் (குமரி இருள்) புலர்தற்குரிய நீலத்தைக் காட்டும். பொழுது - வைகறை. அள வில்லாப் பெரு வளங்களைப் பலதிறப் பண்டங்கள் நிறைந்த மனைகாட்டும்.

௧௫. தலத்தின்கண் - உலகத்திலே. மருவும் - விளங்கும். குடி நாப்பண் - குடிகள் மத்தியில். விலக்கு இல்-வழுவில்லாத. மேதக்க - மேம்பட்ட. "உழுத சால்வழி யேயுழு வான்பொருட் - டிழுதை நெஞ்சமி தென்படு கின்றதே" (தனிக்குறுந் தொகை : அ) ; "ஏரி நிறைந்தனைய செல்வன் கண்டாய்" (திரு மறைக்காட்டுத் திருத்தாண்டகம் : ௫) எனவரூஉம் அப்பர் திருவாக்குகளை யோர்க. குறுக்கையர் என்பவரின் வழி வருங்குடி.

௧௬. மேல் தோன்றலாய - பெருந்தலைவராகிய. ஒக்கல் - சுற்றம். சிறப் பின் உளராஞராகிய புகழஞர் உளராஞர்.

௧௭. பொருவில் - ஒப்பற்ற. நிகழும்...அனைய - விளங்கும் செந்தாமரை மலரின் ஒழுங்குபட்ட இதழ்களிடைப் பொலிய வீற்றிருக்கும் திருமகளைப் போன்ற.

௧௮. அலகில் - அளவில்லாத. கதிர் - சூரியனை. இங்கு மருள் நீக்கியார் முற்பிறப்புக் குறிப்பேயில்லை. மருள் நீக்கியார், வாகீசர் அவதாரமென்றும், சுதபாமுனி அவதாரமென்றும் இரண்டு கதைகள் பின் வந்தவர்களாற் புனை யப்பட்டன. பாட்டு. ௧, ௪அ, ௭௫ - குறிப்புகளைப் பார்க்க.

பா - ம்—*நடைமரபிற். †அறம் புரந்து. ‡திலதவதியார்.

*மா தினியார் திருவயிற்றின் மன்னியசீர்ப் புகழனார்
காதலனார் உதித்ததற்பின் கடன்முறைமை மங்கலங்கள்
மேதகுநல் வினைசிறப்ப விரும்பியபா ராட்டினுடன்
ஏதமில்பல் கிளைபோற்ற இளங்குழவிப் பதங்கடந்தார். ௧௯

மருணீக்கி யார்சென்னி மயிர்நீக்கும் மணவினையும்
தெருள்நீர்ப்பன் மாந்தரெலாம் மகிழ்சிறப்பச் செய்ததற்பின்
பொருள்நீத்தங் கொளவீசிப் புலன்கொளுவ மனம்முகிழ்த்த
சுருள்நீக்கி மலர்விக்கும் கலைபயிலத் தொடங்குவித்தார். ௨0

தந்தைதாய் களிமகிழ்ச்சி †தலைசிறக்க முறைமையினால்
சிந்தைமலர்ந் தெழும்உணர்வில் செழுங்கலையின் திறங்களெல்லாம்
‡முந்துமுறை மையில்பயின்று முதிரவறி வெதிரும்வகை
மைந்தனார் மறுஒழித்த இளம்பிறைபோல் வளர்கின்றார். ௨௧

அந்நாளில் திலகவதி யாருக்காண் டாறிரண்டின்
முன்னாக ஒத்தகுல முதல்வேளாண் குடித்தலைவர்
மின்னார்செஞ் சடைஅண்ணல் மெய்யடிமை விருப்புடையார்
பொன்னாரும் மணிமௌலிப் புரவலன்பால் அருளுடையார். ௨௨

ஆண்டகைமைத் தொழிலின்கண் அடலரியே றெனவுள்ளார்
காண்டகைய பெருவனப்பிற் கலிப்பகையார் எனும்பெயரார்
பூண்டகொடைப் புகழனார் பாற்பொருவின் மகள்கொள்ள
வேண்டிஎழுங் காதலினால் மேலோரைச் செலவிட்டார். ௨௩

---

௧௯. காதலனார் - மருள்நீக்கியார். மேன்மை பொருந்திய நல்வினைகள் சிறக்க. ஏதம்...போற்ற - குற்றமில்லாத பல சுற்றத்தார் செய்ய. பதம் - பருவம்

௨0. தலைமயிர் நீக்கும் மங்கல காரியம். தெருள்நீர் - தெளிந்த குணம் வாய்ந்த. பொருளை வெள்ளமாக வீசி (தானஞ் செய்து). புலன்கொளுவ - அறிவு கொள்ளுமாறு. முகிழ்த்த சுருள் - குவிந்த முகையை. புலன்கள் வழி உணர்வு பெற என்றும், மனத்தரும்புஞ் சுருளை என்றுங் கூறுவோரு முளர். மனம் மொட்டுப் போலிருப்பது. அறிவு விளக்கத்துக்கு அஃது அரும்பி மலர்தல் வேண்டும். அதனை அரும்பி மலரச் செய்வது கலை. கலையின் சிறப்புக் கூறிய வாறு காண்க.

௨௧. தலை சிறக்க - மிகச் சிறக்க. திறங்கள் - வகைகள். அறிவு எதிரும் - அறிவு தோன்றும். மறு - களங்கம்.

௨௨. பன்னிரண்டு வயது ஆக. மௌலி புரவலன் பால் - கிரீடந் தரித்த அரசனிடம். அருள் - அன்புக் கட்டளை.

௨௩. ஆண்......உள்ளார் - போர்த் தொழிலில் வலிய சிங்க ஏறு போன்றவர். வனப்பின் - அழகுடைய. அழகு கண்ணைக் கவருந்தகையினதாகலான், "காண்டகைய" என்றார். கொடையறம் பூண்ட புகழனாரிடம். பொருவில் - ஒப்பற்ற.

பா - ம்—*தந்தையார். †தலைசிறக்கு. ‡முந்தை.

அணங்கனைய திலகவதி யார்தம்மை ஆங்கவர்க்கு
மணம்பேசி வந்தவரும் வந்தபடி அறிவிப்பக்
குணம்பேசிக் குலம்பேசிக் கோதில்சீர்ப் புகழனார்
பணங்கொளர வகல்அல்குல் பைந்தொடியை மணம்நேர்ந்தார். ௨௪

கன்னிதிருத் தாதையார் மணம்இசைவு கலிப்பகையார்
முன்அணைந்தார் அறிவிப்ப வதுவைவினை முடிப்பதன்முன்
மன்னவற்கு வடபுலத்தோர் மாறேற்க மற்றவர்மேல்
அன்னவர்க்கு விடைகொடுத்தான் அவ்வினைமேல் அவர்அகன்றார். ௨௫

வேந்தற்குற் றுழிவினைமேல் வெஞ்சமத்தில் விடைகொண்டு
போந்தவரும் பொருபடையும் உடன்கொண்டு சிலநாளில்
காய்ந்தசினப் பகைப்புலத்தைக் †கலந்துகடுஞ் சமர்க்கடலை
நீந்துவார் நெடுநாள்கள் நிறைவெம்போர்த் துறைவிளைத்தார். ௨௬

ஆயநா ளிடைஇப்பால் அணங்கனையாள் தனைப்பயந்த
தூயகுலப் புகழனார் தொன்றுதொடு நிலையாமை
மேயவினைப் பயத்தாலே இவ்வுலகை விட்டகலத்
தீயஅரும் ‡பிணியுழந்து விண்ணுலகிற் சென்றடைந்தார். ௨௭

மற்றவர்தாம் உயிர்நீப்ப மனைவியார் மாதினியார்
சுற்றமுடன் மக்களையுந் துகளாக வேநீத்துப்
பெற்றிமையால் உடன்என்றும் பிரியாத உலகெய்தும்
கற்புநெறி வழுவாமல் கணவனா ருடன்சென்றார். ௨௮

---

௨௪. அணங்கு அனைய - திருமகளை யொத்த. பணங்கொள் அரவு - பாம்பின் படம் போன்று. மணம் நேர்ந்தார் - திருமணஞ்செய்து கொடுக்க உடன்பட்டார்.

௨௫. வதுவைவினை - திருமணவினை. வடதேசத்துள்ள பகைவர்கள் போர் தொடுக்க (படை யெடுக்க), அவர்களுடன் போர்புரியச் சேனுபதியாகிய கலிப் பகையார்க்கு.

௨௬. வேந்தற்கு......கொண்டு - அரசனுக்கு ஆபத்து நேர்ந்தபொழுது போர்த் தொழிலை மேற் கொண்டு கொடிய போருக்கு விடை பெற்று. பொரு படையும் - போர் செய்யுஞ் சேனைகளையும். பகைவர்களின் போர்க் களத்திற் கலந்து.

௨௭. ஆய நாளிடை - கலிப் பகையார் போர் புரிந்து கொண்டிருக்குங் காலத்தில். இப்பால் - திருவாமூரில். திலகவதியாரைப் பெற்ற. பழமையாய்த் தொடர்ந்து வரும் நிலையாமை சேர்தற்குரிய வினை வசத்தால். அரும் பிணியால் வருந்தி.

௨௮. துகளாக - அற்பமாக. பெற்றிமையால் - தன்மையால்.

பா - ம்—*மற்றதன்மேல். †கடந்து நெடுஞ். ‡பிணியுழன்று விண்ணுலகைச்.

தாதையா ரும்பயந்த தாயாரும் *இறந்ததற்பின்
மாதரார் திலகவதி யாரும்அவர் பின்வந்த
காதலனார் மருணீக்கி யாரும்மனக் கவலையினால்
பேதுறுநற் சுற்றமொடும் பெருந்துயரில் அழுந்தினார். உகூ

ஒருவாறு பெருங்கிளைஞர் மனந்தேற்றத் துயரொழிந்து
பெருவானம் அடைந்தவர்க்குச் செய்கடன்கள் பெருக்கினார்
மருவார்மேல் மன்னவற்கா மலையப்போங் கலிப்பகையார்
பொருவாரும் போர்க்களத்தில் உயிர்கொடுத்துப் புகழ்கொண்டார். ௩௦

வெம்முனைமேற் கலிப்பகையார் வேல்வேந்தன் ஏவப்போய்
அம்முனையில் பகைமுருக்கி அமருலகம் ஆள்வதற்குத்
தம்முடைய கடன்கழித்த பெருவார்த்தை தலஞ்சாற்றச்
செம்மலர்மேல் திருவனைய திலகவதி யார்கேட்டார். ௩௧

"எந்தையும்எம் அனையும்அவர்க் கெனைக்கொடுக்க இசைந்தார்கள்
அந்தமுறை யால்அவர்க்கே †உரியதுநான் ஆதலினால்
இந்தவுயிர் அவருயிரோ ‡டிசைவிப்பன்" எனத்துணிய
வந்தவர்தம் அடியிணைமேல் மருணீக்கி யார்விழுந்தார். ௩௨

அந்நிலையில் மிகப்புலம்பி "அன்னையும்அத் தனும்அகன்ற
பின்னையும்நான் உமைவணங்கப் பெறுதலினால் உயிர்தரித்தேன்
என்னைஇனித் §தனிக்கைவிட் டேகுவீர் எனில்யானும்
முன்னம்உயிர் நீப்பன்"என மொழிந்திடரின் அழுந்தினார். ௩௩

---

உகூ. மாதர் ஆர் - அழகு நிறைந்த. பேதுறும் - வருந்தும்; கலக்க முறும்; மதி மயங்கும்.

௩௦. கிளைஞர் - சுற்றத்தார். பெருக்கினார் - செய்தார். மரு......போம் - பகைவர்மீது மன்னவன் பொருட்டுப் போர்புரியச் சென்ற. பொரு ஆரும் - பகைமை நிறைந்த.

௩௧. வெம்முனை மேல் - கொடும்போர் முகத்துக்கு. முருக்கி - அழித்து. அமருலகம் - விண்ணுலகம். தலம் - தம்மிடத்தில்; உலகத்தாருமாம்.

௩௨. எம் அன்னையும். அவர்க்கு - கலிப்பகையார்க்கு. திலகவதியாரைக் கலிப்பகையார்க்கு மணஞ் செய்விக்கத் தாயுந் தந்தையும் உறுதி செய்ததனை யானும், அதனால் அம்மையார் நெஞ்சம் கலிப்பகையார்பால் செல்ல நேர்ந்தமை யானும், வெளிப்படையாக மணவினை நிகழாமையைக் காரணமாக்கொள்ள அம் மையார் மனம் எழாமையானும்,அவர் தம்முயிரைக் கலிப்பகையார் உயிரோடிசை விக்கத் துணிந்தாரென்க. இதுவே உண்மைக் காதல் (தலையாய அன்பு) என்பது.

௩௩. அத்தனும் - தந்தையும்.

பா - ம்—*மாய்ந்ததற்பின். †உரியதுதான். ‡இசைப்பனென வேதுணிய. §தனிக்கவும்.

"தம்பியார் உளராக வேண்டும்" என வைத்தகயா
உம்பருலக கணையவுறு நிலைவிலக்க உயிர்தாங்கி
அம்பொன்மணி நூல்தாங்கா தனைத்துயிர்க்கும் அருள்தாங்கி
இம்பர்மனைத் தவம்புரிந்து திலகவதி யாரிருந்தார். ௩௪

மாசின்மனத் துயரொழிய மருணீக்கி யார்நிரம்பித்
தேசநெறி நிலையாமை கண்டறங்கள் செய்வாராய்க்
காசினிமேற் புகழ்விளங்க *நிதியளித்துக் கருணையினால்
ஆசில்அறச் சாலைகளும் தண்ணீர்ப்பந் தரும்அமைப்பார். ௩௫

காவளர்த்தும் குளந்தொட்டும் கடப்பாடு வழுவாமல்
மேவினர்க்கு வேண்டுவன மகிழ்ந்தளித்தும் விருந்தளித்தும்
நாவலர்க்கு வளம்பெருக நல்கியும்நா னிலத்துள்ளோர்
யாவருக்குந் தவிராத ஈகைவினைத் துறைநின்றார். ௩௬

நில்லாத உலகியல்பு கண்டு"நிலை யாவாழ்க்கை
அல்லேன்" என் றறத்துறந்து சமயங்க ளானவற்றின்
நல்லாறு †தெரிந்துணர நம்பர்அரு ளாமையினால்
கொல்லாமை ‡மறைந்துறையும் அமண்சமயம் §குறுகுவார். ௩௭

௩௪. உளராக - உயிரோடிருக்க. விண்ணுலகை அடைதல்வேண்டுமென்று கொண்ட உறுதி நிலையை விலக்க. தயா விலக்க. அம்பொன் மணி நூல் - திருமங்கலிய சூத்திரம்; அம்பொன் மணி முதலியவற்றாலாகிய அணிகளை என்னலுமாம். திருநாவுக்கரசு சுவாமிகள் உலகுய்யத் தோன்றிய பெரியாராதலான் "அனைத்துயிர்க்கும் அருள்தாங்கி" என்றார். இம்பர்மனை-இம்மண்ணுலகில் வீட்டிலிருந்தே. அம்மையார் தியாகமும், தன்னலமற்ற வாழ்வும், ஒப்புரவும் இங்கே குறிக்கப்பட்டன.

௩௫. நிரம்பி - உற்றவய தடைந்து; கல்வி அறிவு ஒழுக்கத்தால் நிரம்பி என்னலுமாம். தேச நெறி - உலகியல் நெறி. காசினிமேல் - உலகில். ஆசில் - குற்றமற்ற.

௩௬. கா - சோலைகளை. கடப்பாடு - நேர்மை; கடமை. மேவினர்க்கு - வந்தடைந்தவர்க்கு.

௩௭. நிலையாத வாழ்க்கைக்கு உரியனல்லேன். நல்லாறு - சன்மார்க்கம். நம்பர் - சிவபெருமான். கொல்லாமையில். மருள்நீக்கியார் பெரிதும் இடைக்காலச் சமண நூல் பயின்றிருப்பர். அதனால் அவர் "நிலையா வாழ்க்கை அல்லேன்" என்று அறத்துறந்து... சமண் சமயம் குறுக எண்ணினார் போலும். உலகைத் துறத்தல் என்பதைப் பெரிதும் அறிவுறுத்துவது இடைக்காலச் சமண சமயம். மருள்நீக்கியார் கலைஞானியாக மட்டும் இருந்தார் என்பது.

பா - ம்—*நிதியளிக்கும். †தெரிந்துணர்ந்து. ‡மறைத்துறையும். §குறுகினார்.

பாடலிபுத் திரமென்னும் பதிஅணைந்து சமண்பள்ளி
மாடணைந்தார் வல்லமணர் மருங்கணைந்து மற்றவர்க்கு
*"வீடறியும் நெறிஇதுவே" எனமெய்போல் தங்களுடன்
†கூடவரும் உணர்வுகொளக் குறிபலவுங் கொளுவினார். ௩௮

அங்கவரும் அமண்சமயத் தருங்கலைநூ லானவெலாம்
பொங்குமுணர் வுறப்பயின்றே அந்நெறியிற் புலன்சிறப்பத்
துங்கமுழு உடற்சமணர் சூழ்ந்துமகிழ் வார்அவர்க்குத்
தங்களின்மே லாந்தரும சேனர்எனும் பெயர்கொடுத்தார். ௩௯

"நம்பர் அருளாமையினால்" என்பதால் தெரிகிறது. திருநாவுக்கரசர் காலச் சமண சமய நிலைக்கும், பண்டைச் சமண சமய நிலைக்கும் வேறுபாடுகள் பல உண்டு. இது "கொல்லாமை மறைந்துறையும் அமண்" என்பதால் நன்கு விளங்குகிறது. இதுபற்றித் திருஞானசம்பந்தசுவாமிகள் புராணத்தில் தெளிவு செய்யப்படும். ஆசிரியர் ஈண்டுக்குறிப்பது திருநாவுக்கரசர் காலத்திய சமண சமய நிலையை எனக் கொள்க.

௩௮. பாடலிபுத்திரம் - அந்நாளில் சமணர் அரசு, கழகம், பள்ளி, பாழி முதலியன பல்கிக்கிடந்த நகரங்களுள் சிறந்தது; இதுவே திருப்பாதிரிப்புலியூர் என்பது. சமண் பள்ளி மாடு - சமணக் கோயிலில்; உறைவிடத்தில் என்னலுமாம். "ஐயருறை பள்ளியிடம் ஆண்டழகர்காண"—சிந்தாமணி: ௭௮௨. பாட்டு: ௩௪௬. குறிப்புப் பார்க்க. மருங்கு-(மருள் நீக்கியார்) அருகில். அவர்க்கு - மருள் நீக்கியார்க்கு. தங்களுடன் சேர்தற்குப் பிறக்கும். குறி-கருத்து; நூல். கொளுவினார் - போதித்தார். மெய் போல் கொளுவினார் - வெளிக்கு உண்மைபோலத் தோன்ற என்றபடி.

௩௯. புலன் - அறிவு. துங்க - உயர்ந்த. உடையில்லாத நீண்ட உடல் என்றபடி. தங்கட்கு மேம்பட்ட குருவாக என்றவாறு. தருமசேனர் என்ற பெயர் அக்காலச் சமணப் பெரியார்களிடை வழங்கி வந்ததொன்று; "சந்து சேனனும் சிந்துசேனனும் தருமசேனனும்..."—திருஞானசம்பந்தர்: திருவாலவாய். திருநாவுக்கரசர் சமண் சமயம் புகுந்து தருமசேனர் என்ற பெயர் பெற்றாரென்பது, அவரைப்பற்றிச் சமணப்புலவரொருவரால் யாக்கப்பெற்ற "தருமசேன புராணம்" என்னும்நூலான் இனிது விளங்கும். திருநாவுக்கரசர் சமண் சமயம் புக்கதற்கு அவர் திருவாக்கிற் பிறந்த அகச்சான்றுகள் பல. அவைகளுள் சில வருமாறு:—"ஓதுவித்தாய் முன் அறவுரைகாட்டி அமணரோடே - காதுவித்தாய்" "அமணொடு இசைவித்து" "குண்டனாய்ச் சமணரோடே கூடி" "சமணர்தமை உறவாக் கொண்ட பரங்கெடுத்து" "சமணர் பொய்யில் புக்கழுந்தி" "நின்றுண்ணுங்கையர் பொய்யெல்லாம் மெய்யென்று கருதிப்புக்கு" "பல்லுரைச் சமணரோடே பல பல காலமெல்லாம் சொல்லிய செய்தேன்" 'அமணே நின்றார் சொற்கேட்டு உடனாகி உழி தந்தேன்".

பா - ம்—*வீடடையும். †கூடி.

அத்துறையின் மீக்கூறும் அமைதியினால் அகலிடத்தில்
*சித்தநிலை அறியாத தேரரையும் வாதின்கண்
உய்த்தவுணர் வினில்வென்றே உலகின்கண் ஒளியுடைய
வித்தகராய் அமண்சமயத் தலைமையினில் மேம்பட்டார். ௪௦

**வேறு**

அந்நெறியின் மிக்கார் அவரொழுக ஆன்றதவச்
செந்நெறியின் வைகுந் திலகவதி யார்தாமும்
தொன்னெறியின் சுற்றத் தொடர்பொழியத் தூயசிவ
நன்னெறியே சேர்வதற்கு †நாதனருள் நண்ணுவார். ௪௧

போராத பாசப் பிணிப்பொழியப் பிஞ்ஞகன்பால்
ஆராத அன்புபெற ஆதரித்த அம்மடவார்
நீரார் கெடிலவட நீள்கரையில் நீடுபெருஞ்
சீரார் திருவதிகை வீரட்டானஞ் சேர்ந்தார். ௪௨

சென்றுதிரு வீரட்டா னத்திருந்த செம்பவளக்
குன்றை அடிபணிந்து கோதில் சிவசின்னம்
அன்று முதல்தாங்கி ஆர்வமுறத் தங்கையால்
துன்று திருப்பணிகள் செய்யத் தொடங்கினார். ௪௩

---

௪௦. அத்துறையின் மீக்கூறும் அமைதியினால் - அச்சமண சமய ஞானத்தில் மிகுந்து சிறந்து விளங்கும் பெருமையினால். அகலிடத்தில் - உலகில். சித்தநிலை - உறுதிநிலை (சித்தம் - நிச்சயம்); சித்தர்நிலை எனக் கொள்ளலுமாம்; சமணர்கள் நிலைகளில் மிகஉயர்ந்தது சித்தர் நிலை. தேரரையும் - புத்தரையும். சமணத்துக்கும் பௌத்தத்துக்கும் அறத்தில் ஒற்றுமையும் தத்துவத்தில் வேற்றுமையும் உண்டு. உய்த்த உணர்வினில் - (வெகுளாது) செலுத்திய உணர்வினால்; ஆராய்ந்து பெற்ற உணர்வினால்; (உய்த்துணர்தல் - ஒரு தந்திர யுக்தி). வித்தகராய் - பெரியோராய்.

௪௧. மிக்காராய். ஆன்ற - அமைந்த; அடங்கிய. தூய சிவ நன்னெறி - தத்துவங்கடந்த சிவத்தைப்பற்றிய நன்னெறி. தடுத்தாட்கொண்ட புராணம்: ௨அ. குறிப்புப் பார்க்க.

௪௨. பாசக்கட்டு (பாசம் - ஆணவம் கர்மம் மாயை). பிஞ்ஞகன்பால் - சிவபெருமானிடம். ஆராத - அடங்காத. ஆதரித்த - விரும்பிய. அம்மடவார் - திலகவதியார். நீர் ஆர் - நீர் நிறைந்த. வீரஸ்தானம் - வீரட்டானம். திருவதிகை - வீரட்டத் தலம் எட்டனுள் ஒன்று; முப்புரம் எரித்த இடம்; "பூமன் சிரங்கண்டி அந்தகன் கோவல் புரம் அதிகை-மாமன் பறியல் சலந்தரன் விற்குடி மாவழுவூர் - காமன் குறுக்கை யமன்கட வூரிந்தக் காசினியில் - தேமன்னு கொன்றையுந் திங்களுஞ் சூடிதன் சேவகமே."

௪௩. செம்பவளக் குன்றாகிய சிவபெருமானின். பலதிறத் திருப்பணிகள்.

பா - ம்—*சித்தநெறி ; சித்தநிலை நெறி அறியாத். †நாதன்தாள்.

வேறு

புலர்வதன்முன் திருவலகு பணிமாறிப் புனிறகன்ற
நலமலிஆன் சாணத்தால் நன்குதிரு மெழுக்கிட்டு
மலர்கொய்து கொடுவந்து மாலைகளுந் தொடுத்தமைத்துப்
பலர்புகழும் பண்பினால் திருப்பணிகள் பலசெய்தார். ௪௪

நாளும்மிகும் பணிசெய்தங் குறைந்தடையும் நன்னாளில்
கேளுறும்அன் புறவொழுகுங் கேண்மையினார் பின்பிறந்தார்
கோளுறுதீ வினைமுந்தப் பரசமயங் குறித்ததற்கு
†மூளுமனக் கவலையினால் முற்றவருந் ‡துயருழந்து. ௪௫

தூண்டுதவ விளக்கனையார் சுடரொளியைத் தொழு"தென்னை
ஆண்டருளும் நீராகில் அடியேன்பின் வந்தவனை
ஈண்டுவினைப் பரசமயக் குழிநின்றும் §எடுத்தாள
வேண்டும்"எனப் பலமுறையும் விண்ணப்பஞ் செய்தனரால். ௪௬

"தவமென்று பாயிடுக்கித் தலைபறித்து நின்றுண்ணும்
அவமொன்று நெறிவீழ்வான் வீழாமே அருளும்"எனச்
சிவமொன்று நெறிநின்ற திலகவதி யார்பரவப்
பவமொன்றும் வினைதீர்ப்பார் திருவுள்ளப் ¶பற்றுவார். ௪௭

மன்னுதபோ தனியார்க்குக் கனவின்கண் மழவிடையார்
"உன்னுடைய மனக்கவலை ஒழிநீஉன் உடன்பிறந்தான்
முன்னமே முனியாகி எமைஅடையத் தவம்முயன்றான்
அன்னவனை இனிச்சூலை மடுத்தாள்வம்" எனஅருளி. ௪௮

---

௪௪. திருவலகு பணிமாறி - பெருக்கி. புனிறு - ஈன்றணிமை. "புலர்வதன் முன் அலகிட்டு மெழுக்கு மிட்டுப் பூமாலை புனைந்தேத்தி"—அப்பர்: திருவாரூர்த் திருத்தாண்டகம்.

௪௫. அங்கு உறைந்து அடையும் - திருவதிகையில் வதிந்திருக்கும். குறைந்து என்னும் பாடத்துக்குக் குறையிரந்து என்று கொள்க. கேள்உறும் அன்பு உற - உறவினர்தம்மாட்டு மிகுந்த அன்புகொள்ள. கேண்மையினார் - அன்புடையவராகிய திலகவதியார். பின்பிறந்தார் - தம்பியார். வலிமைமிக்க தீவினை முற்பட.

௪௬. தூண்டு தவம் - இடையறாத தவமுடைய. சுடரொளியை - சிவபெருமானை. பின்வந்தவனை-என் தம்பியாரை. சேரும் தீவினையை விளக்கும்.

௪௭. அவம் ஒன்றும் - பயனின்மை (வீண்) பொருந்திய. பவம் ஒன்றும் வினை தீர்ப்பார் - பிறவிக்கு வித்தாகச் சேரும் வினைகளைக் களையுஞ் சிவபெருமான்.

௪௮. மழவிடையார் - இளவேறுடைய சிவபெருமான். சூலை நோய் தந்து. முனியாகி என்பது பொதுவாகக் கூறப்பட் டிருக்கிறது. 'எப்பெயருடைய

பா - ம்—*பணிசெய்து குறைந்தடையும். †மூளவருந். ‡துயருழந்தார். §எடுத் தருள. ¶பற்றினார்.

பண்டுபுரி நற்றவத்துப் பழுதினளவிறைவழுவும்
தொண்டரைஆ ளத்தொடங்குஞ் சூலைவே தனைதன்னைக்
கண்டருநெற் றியர்அருளக் கடுங்கனல்போல் அடுங்கொடிய
மண்டுபெருஞ் சூலைஅவர் வயிற்றினிடைப் புக்கதால். சகூ

அடைவிலமண் புரிதரும சேனர்†வயிற் றடையும்அது
வடஅனலும் கொடுவிடமும் வச்சிரமும் பிறவுமாம்
கொடியஎலாம் ஒன்றாகும் எனக்குடரின் அகங்குடையப்
‡படருழந்து நடுங்கிஅமண் பாழியறை யிடைவிழுந்தார். ருo

அச்சமயத் திடைத்தாமுன் அதிகரித்து §வாய்த்துவரும்
விச்சைகளால் தடுத்திடவும் மேன்மேலும் ||மிகமுடுகி
உச்சமுற வேதனைநோய் ஓங்கிஎழ ஆங்கவர்தாம்
நச்சரவின் விடந்தலைக்கொண் டெனமயங்கி நவையுற்றார். ருக

அவர்நிலைமை கண்டதற்பின் அமண்கையர் பலர்ஈண்டிக்
"கவர்கின்ற விடம்போல்முன் கண்டறியாக் கொடுஞ்சூலை
இவர்தமக்கு வந்ததினி யாதுசெயல்" என்றழிந்தார்
தவமென்று வினைபெருக்கிச் சார்பல்லா நெறிசார்வார். ருஉ

---

முனிவர்' என்பது விளங்கவில்லை. இது குறித்துப் பின்வந்த பலர் பலதிறப் பொய்க் கதைகளைப் புனைந்துள்ளார். முதற்பாட்டுக் குறிப்பைப் பார்க்க.

சகூ. பண்டுபுரி - முன்னே செய்த. இறை அளவு பழுதின்வழுவும் - மிகச் சிறு பிழையால் வழுவிய. தொண்டரை - தருமசேனரை. கண்தரு நெற்றியர் - சிவபெருமான். **திருநகரச்சிறப்பு** : சகூ. குறிப்புப் பார்க்க. அடும் - வருத்தும். மண்டு - மிக்குச் செல்லும். அவர் - தருமசேனர்.

ருo. அடைவு இல் அமண் புரி-ஒழுங்கு இல்லாத சமண்சமயம் விரும்பிய. அது - சூலைநோய். வடவாமுகாக்கினியும் ஆலகாலமும் வச்சிராயுதமும் பிறவும் ஆகிய. ஒன்றுபட்டன என்று சொல்லும்படி. படர் உழந்து - துன்பத்தால் வருந்தி. பாழி அறை யிடை - தங்குமிடத்தில் (பாழி - சமணமுனிவர் தங்குமிடம் ; குகை; கசகூ - குறிப்புப் பார்க்க).

ருக. அச் சமணசமயத்தில்; அவ்வேளையில் எனினுமாம். முன் அதிகரித்து வாய்த்துவரும் - முன்னே அதிகம் பயின்று கைவந்துள்ள. விச்சைகளால் - வித்தைகளால் ; (மணி மந்திர ஔஷதங்களால்). நவை - துன்பம்.

ருஉ. கையர் - வஞ்சகர்கள். பலர் சேர்ந்து. கவர்கின்ற - கதுவுகின்ற ; அதிகமாகப்பற்றுகின்ற; கொள்ளுகின்ற எனினுமாம். தீவினை. நற்சார்பல்லாத தீநெறி.

**பா - ம்**—*பண்டுதவம் புரிதவத்துப். †வயிற் றிடையும். ‡இடர். §வாய்த்த அரும். ||அனல்.

புண்தலைவன் முருட்டமணர் புலர்ந்துசெயல் அறியாது
குண்டிகைநீர் மந்திரித்தும் குடிப்பித்தும் தணியாமை
கண்டுமிகப் பீலிகொடு கால்அளவுந் தடவிடவும்
பண்டையினும் நோவுமிகப் பரிபவத்தால் இடர்உழந்தார். ௫௩

தாவாத புகழ்த்தரும சேனருக்கு வந்தபிணி
ஓவாது நின்றிடலும் ஒழியாமை உணர்ந்தாராய்
"ஆ!ஆ!நாம் என்செய்கோம்" என்றழிந்த மனத்தினராய்ப்
போவார்கள் "இதுநம்மாற் போக்கரிதாம்" எனப்புகன்று. ௫௪

குண்டர்களுங் கைவிட்டார் கொடுஞ்சூலை †கைக்கொண்டு
மண்டிமிக மேன்மேலும் முடுகுதலால் மதிமயங்கிப்
பண்டையுற வுணர்ந்தார்க்குத் திலகவதி யார்உளராக்
கொண்டவர்பால் ஊட்டுவான் தனைவிட்டார் குறிப்புணர்த்த. ௫௫

ஆங்கவன்போய்த் திருவதிகை தனைஅடைய அருந்தவத்தார்
பூங்கமழ்நந் தனவனத்தின் ‡புறம்பணையக் கண்டிறைஞ்சி
"ஈங்குயான் உமக்கிளையார் ஏவலினால் வந்த"தெனத்
"தீங்குளவோ" எனவினவ மற்றவனுஞ் செப்புவான். ௫௬

"§கொல்லாது சூலைநோய் குடர்முடக்கித் ||தீராமை
எல்லாருங் கைவிட்டார் இதுசெயல்என் முன்பிறந்த
நல்லாள்பால் சென்றியம்பி நான்உய்யும் படிகேட்டிங்
|கல்லாகும் பொழுதணைவாய் என்றார்"என் றறிவித்தான். ௫௭

என்றவன்முன் கூறுதலும் "யான்அங்குன் னுடன்போந்து
¶நன்றறியா அமண்பாழி நண்ணுகிலேன் எனும்மாற்றம்
சென்றவனுக் குரை"என்று திலகவதி யார்மொழிய
அன்றவனும் மீண்டுபோய்ப் புகுந்தபடி அவர்க்குரைத்தான். ௫௮

---

௫௩. புண் தலையும் வன்மையும் முருடும் உடைய சமணர்கள். புலர்ந்து - வாடி. கமண்டலநீர். மயிற்பீலி. பரிபவத்தால் - அவமானத்தால். பண்டையினும் - முன்னையினும்.

௫௪. தாவாத - கெடாத. ஓவாது நின்றிடலும் - நீங்காமல் நிலைக்கவும்.

௫௫. மண்டி - நெருங்கி அடர்ந்து. பழைய உறவினை உணர்ந்த தரும சேனர்க்கு. திலகவதியார் இருப்பதை மனதிற் கொண்டு அவரிடம் சமையற் காரனை. ௫௭. அல்லாகும்பொழுது - இராப்பொழுது.

௫௮. மாற்றம் - சொல்லை; மறுமொழியை. பாழி - அமணர் தங்குமிடம்; கசசு - குறிப்புப் பார்க்க. புகுந்தபடி - நடந்தவாறு.

பா - ம்—*மந்திரித்துக் குடிப்பித்தும். †மிசைக். ‡புறத்தணையக். §கொல்லாத. ||தீராமல். |அல்லாரும். ¶நன்றறியார் அமண்பள்ளி.

அவ்வார்த்தை கேட்டலுமே அயர்வெய்தி "இதற்கினியான்
எவ்வாறு செய்வன்" என *ஈசரருள் கூடுதலால்
"ஒவ்வாஇப் புன்சமயத் தொழியாஇத் துயரொழியச்
செவ்வாறு சேர்திலக வதியார்தாள் சேர்வன்" என. ௫௯

எடுத்தமனக் கருத்துய்ய எழுதலால் எழுமுயற்சி
அடுத்தலுமே அயர்வொதுங்கத் திருவதிகை அணைவதனுக்
குடுத்துழலும் பாயொழிய உறியுறுகுண் டிகையொழியத்
தொடுத்தபீ லியும்ஒழியப் போவதற்குத் துணிந்தெழுந்தார். ௬௦

பொய்தருமால் உள்ளத்துப் புன்சமணர் இடம்†கழிந்து
‡மெய்தருவான் நெறியடைவார் §வெண்புடைவை மெய்சூழ்ந்து
கைதருவார் ||தமையூன்றிக் காணுமே இரவின்கண்
செய்தவமா தவர்வாழுந் திருவதிகை சென்றடைவார். ௬௧

சுல்லி¶வயிற் றகங்கனலுஞ் சூலைநோ யுடன்தொடரக்
குலவியெழும் %பெருவிருப்புக் கொண்டணையக் குலவரைபோன்
றிலகுமணி மதிற்சோதி எதிர்கோள்திரு வதிகையினில்
திலகவதி யார்இருந்த திருமடத்தைச் சென்றணைந்தார். ௬௨

வந்தணைந்து திலகவதி யார்அடிமே லுறவணங்கி
" நந்தமது குலஞ்செய்த நற்றவத்தின் பயன்அனையீர்!
இந்தவுடற் கொடுஞ்@சூலைக் கிடைந்தடைந்தேன் இனிமயங்கா
துய்ந்துகரை ஏறுநெறி உரைத்தருளும்" எனஉரைத்து. ௬௩

தாளிணைமேல் விழுந்தயருந் தம்பியார் தமைநோக்கி
ஆளுடைய தம்பெருமான் அருள்நினைந்து கைதொழுது
"கோளில்பர சமயநெறிக் குழியில்விழுந் தறியாது
மூளும்அருந் துயர்உழந்தீர் எழுந்திரீர்" எனமொழிந்தார். ௬௪

---

௫௯. அயர்வு எய்தி - சோர்வுற்று; வருந்தி. செவ்வாறு - செந்நெறி.

௬௦. அடுத்தலும் - சேர்தலும். உறியிற்றூக்கிய கமண்டலம். சேர்த்துக் கட்டப்பட்ட மயிற்பீலியும்.

௬௧. மால் - மயக்கமுடைய. வான் நெறி - உயர்ந்த நெறி. புடவை - ஆணுடைக்குமாம்; பழைய வழக்கு; கலித்தொகை: ௬௯, மதுரைக்காஞ்சி ௫௬௮, முல்லைப்பாட்டு-௫௯—உரை பார்க்க. மெய் சூழ்ந்து - உடலில் அணிந்து. ஆதரவாகக் கைகொடுப்போரைப் பற்றிக்கொண்டு.

௬௨. சுழற்றிச் சுழற்றி வயிற்றினுள்ளே எரியும். உள்ளத்தில் பொலிந்து எழும். குல மலைபோன்று விளங்கும். ௬௩. இடைந்து - மெலிந்து.

௬௪. கோள்இல் - கொள்கை இல்லாத. பரசமயக் குழியினின்றும் எழுந்திரீர் என்பது குறிப்பு.

பா - ம்—*ஈசனருள். †கழித்து. ‡மெய்தருவார். §வெண்புடவை. ||தமையன்றிக். ¶வயிற்றிடுக்; வயிற்றடுங். %பெருவியப்பு. @சூலைக்கிடைத்துடைந்தேன்.

மற்றவுரை கேட்டலுமே மருணீக்கி யார்தாமும்
உற்றபிணி உடல்நடுங்கி எழுந்துதொழ உயர்தவத்தோர்
"கற்றைவே ணியர்அருளே காணும்இது கழலடைந்தோர்
பற்றறுப்பார் தமைப்பணிந்து பணிசெய்வீர்" எனப்பணித்தார். சுரு

என்றபொழு தவரருளை எதிரேற்றுக் கொண்டிறைஞ்ச
நின்றதபோ தனியாரும் நின்மலன்பேர் அருள்நினைந்து
சென்றுதிரு வீரட்டம் புகுவதற்குத் திருக்கயிலைக்
குன்றுடையார் திருநீற்றை அஞ்செழுத்தோ திக்கொடுத்தார். சுசு

திருவாளன் திருநீறு திலகவதி யார்அளிப்பப்
"பெருவாழ்வு வந்த"தெனப் பெருந்தகையார் பணிந்தேற்றங்
குருவார அணிந்துதமக் குற்றவிடத் துய்யுநெறி
தருவாராய்த் தம்முன்பு வந்தார்பின் தாம்வந்தார். சுஎ

நீறணிந்தார் அகத்திருளும் நிறைகங்குல் புறத்திருளும்
மாறவருந் திருப்பள்ளி எழுச்சியினில் மாதவஞ்செய்
சிறடியார் திருவலகுந் *திருமெழுக்குந் தோண்டியுங்கொண்
டாறணிந்தார் கோயிலினுள் அடைந்தவரைக் கொடுபுக்கார். சுஅ

திரைக்கெடில வீரட்டா னத்திருந்த செங்கனக
வரைச்சிலையார் பெருங்கோயில் தொழுதுவலங் கொண்டிறைஞ்சித்
தரைத்தலத்தின் மிசைவீழ்ந்து தம்பிரான் திருவருளால்
உரைத்தமிழ்மா லைகள்சாத்தும் உணர்வுபெற உணர்ந்துரைப்பார். சுகூ

---

சுரு. உயர் தவத்தோர் - திலகவதியார். இது கற்றைச் சடைமுடியாராகிய சிவபெருமான் திருவருளே என்று உணர்வாயாக என்றபடி. தமது கழலையடைந்தோரின் பாசத்தை அறுப்பவராகிய அச்சிவபெருமானையே பணிந்து.

சுஎ. திருவாளன் - சிவபெருமானது. உருவார - உடல் முழுவதும். உற்ற இடத்து - ஆபத்து நேர்ந்த இடத்து. தருவாராய்த் தம்முன் பிறந்த திலகவதியார். திலகவதியார் பின்னே மருள்நீக்கியார் சென்றார் என்றபடி.

சுஅ. திருநீறணிந்த மருணீக்கியாரது அகவிருளும், நிறைந்த இரவாகிய புறவிருளும் நீங்கவரும் திருப்பள்ளி எழுச்சி காலத்தில் (வைகறையில்). சிறடியார் - சிற்றடியையுடைய திலகவதியார். திருவலகும் - விளக்குமாறும். திருமெழுக்கும் - சாணமும். அவரை - மருள்நீக்கியாரை.

சுகூ. செங்கனக வரைச்சிலையார் - செம்பொன்மலையை வில்லாகக்கொண்ட சிவபெருமான் வீற்றிருந்தருளும். தம்பிரான் - சிவபெருமான். புகழ்த்தமிழ். மருள்நீக்கியாரிடம் ஆண்டவன் திருவருள் பதிந்தது என்றபடி.

பா - ம்—*திருமெழுக்குத்.

வேறு

நீற்றால்நிறை வாகிய மேனியுடன் நிறைஅன்புறு சிந்தையில் நேசமிக
மாற்றார்புரம் மாற்றிய வேதியரை மருளும்பிணி மாயை அறுத்திடுவா
"கூற்றாயின வாறு விலக்ககிலீர்" எனநீடிய கோதில் திருப்பதிகம் [ன்
போற்றாலுல கேழின் வருந்துயரும் போமாறெதிர் நின்று புகன்றனரால்.

"கூற்றாயின வாறு விலக்ககிலீர் கொடுமைபல செய்தன நானறியேன்
ஏற்றாயடிக் கேயிர வும்பகலும் பிரியாது வணங்குவன் எப்பொழுதும்
தோற்றாதென் வயிற்றின் அகம்படியே குடரோடு தொடக்கி முடக்கியிட
ஆற்றேன்அடி யேன்அதி கைக்கெடில வீரட்டா னத்துறை அம்மானே."

"நெஞ்சம்உமக் கேயிட மாகவைத்தேன் நினையாதொரு போதும் இருந்தறியேன், வஞ்சம்இது ஒப்பது கண்டறியேன் வயிற்றோடு தொடக்கி முடக்கியிட, நஞ்சாகி வந்தென்னை நலிவதனை, நணுகாமற் றுரந்துகரந்து மிடீர், அஞ்சேலும் என்னீர்அதி கைக்கெடில வீரட்டா னத்துறை அம்மானே."

"முன்னம்அடி யேன்அறி யாமையினால் முனிந்தென்னை நலிந்து முடக்கியிடப், பின்னைஅடி யேன்உமக் காளும்பட்டேன் சுடுகின்றது சூலை தவிர்த்தருளீர், தன்னைஅடைந் தார்வினை தீர்ப்பதன்றோ தலையாயவர் தங்கட னாவதுதான், அன்னநடை யார்அதி கைக்கெடில வீரட்டானத் துறை அம்மானே."

"சலம்பூவொடு தூபம் மறந்தறியேன் தமிழோடிசை பாடல் மறந்தறியேன், நலந்தீங்கிலும் உன்னை மறந்தறியேன் உன்னாமம் என்னாவில் மறந்தறியேன், உலந்தார்தலை யிற்பலி கொண்டுழல்வாய் உடலுள்ளுறு சூலை தவிர்த்தருளாய், அலந்தேன்அடி யேன்அதி கைக்கெடில வீரட்டா னத்துறை அம்மானே."

"போர்த்தாய் அங்கோ ரானையின் ஈருரிதோல் புறங்காடரங் காநடமாட வல்லாய், ஆர்த்தான்அரக் கன்தனை மால்வரைக்கீழ் அடர்த்திட்டருள் செய்த அதுகருதாய், வேர்த்தும் புரண்டும் விழுந்தும் எழுந்தால் என் வேதனை யான விலக்கியிடாய், ஆர்த்தார் புனல்சூழ் அதிகைக் கெடில வீரட்டா னத்துறை அம்மானே"—தேவாரம்.

மன்னும்பதி கம்மது பாடியபின் வயிறுற்றடு சூலை மறப்பிணி
தான், அங்கின்ற நிலைக்கண் அகன்றிடலும் "அடியேன்உயி ரோடருள்

---

௭௦. பகைவர்களின் முப்புரத்தை அழித்த சிவபெருமானை. மருளும் - தமக்கு மயக்கத்தை விளைக்கும். போற்றுதலால். தமது பிணி மாயையை அறுத்திடும் பொருட்டும், உலகேழின் வருந்துயரும் போகுமாறும் திருமுன்னே நின்று.

தந்த"தெனுச், செந்நின்ற பரம்பொரு ளானவர்தம் திருவாரருள் பெற்ற சிறப்புடையோர், முன்னின்ற தெருட்சி மருட்சியினுல் முதல் வன்கரு ணைக்கடல் மூழ்கினரே. எக

அங்கங்கள் அடங்கஉ ரோமமெலாம் அடையப்புள கங்கண் முகிழ்த்தலரப், பொங்கும்புனல் கண்கள் பொழிந்திழியப் புவிமீது விழுந்து புரண்டயர்வார், "இங்கென்செய லுற்ற பிழைப்பதனுல் ஏருத பெருந்திட *ரேறிடநின், தங்குங்கரு ணைப்பெரு வெள்ளமிடத் தகுமோ"என இன்னன தாம்மொழிவார். எஉ

"போய்வாய்மை பெருக்கிய புன்சமயப் பொறியில்சமண் நீசர் புறத்துறையாம், அவ்வாழ்குழி யின்கண் விழுந்தெழுமா றறியாது மயங்கி அவம்புரிவேன், மைவாச நறுங்குழல் மாமலையாள் மணவாளன் மலர்க்கழல் வந்தடையும், இவ்வாழ்வு பெறத்தரு சூலையினுக் கெதிர் செய்குறை என்கொல்" எனத்†தொழுவார். எங

மேவுற்றஇவ் வேலையில் நீடியசீர் வீரட்டம் அமர்ந்த ‡பிரானரு ளால், "பாவுற்றலர் செந்தமி ழின்சொல்வளப் பதிகத்தொடை பாடிய

எக. அடு - வருத்திய. சூலையாகிய. மறப்பிணிதான் - கொடிய பிணியானது. அந்நின்ற நிலைக்கண் - துன்புறுத்தி நின்ற நிலையினின்றும். அடியேனுக்கு. என - என்று. திருஆர் - ஞானத்திரு நிறைந்த. சிறப்புடையோர் - மருள்நீக்கியார். தெருட்சி மருட்சியினுல் - ஞானத் தெளிவால் விளைந்த மயக்கத்தால். "சூலைதீர்த் தடியேனை ஆளுங் கொண்டார்" "உடலுறுநோய் தீர்த் தென்னை ஆளுங் கொண்டார்" "கட்டநோய் பிணிதீர்த்தாய்"—அப்பர்: தனித்திருத்தாண்டகம். ங, சு; திருவேகம்பத் திருவிருத்தம். க.

எஉ. அங்கங்களடங்க உள்ள. அடைய - ஒருங்கே. புளகங்கண் முகிழ்த்தலர - மகிழ்ச்சியால் சிலிர்த்துமலர. புனல் - ஆனந்த நீர். அயர்வார் - ஆனந்தப் பரவசராய். இங்கே என் செயலில் விளைந்த பிழையினுல். திடர் - மேட்டில். ஏறிட - பாயும்படி. இட-பாய்ச்ச. தம்மைத் தடுத்தாண்ட அருமைப்பாட்டைக் குறிப்பிட்டவாறு.

எங. பொய்வாய்மை - அசத்தியம். புறத்துறையாம் - புறச்சமயமாகிய. மணவாளன் - சிவபிரானது. எதிர் செய்குறை - கைம்மாறு; பிரதியுபகாரம். திருவருள், சூலை நோயாகப் போந்து தம்மை ஆட்கொண்டமையான், அச்சூலையைப் போற்றியவாறு காண்க. "வீட்டிற்கு வாயி லெனுர்தொடை சாத்துசொல் வேந்த! பொது - ஆட்டிற்கு வல்லன் ஒருவற்கு ஞான அமுதுதவி - நாட்டிற் கிலாத குடர்நோய் நினக்குமுன் நல்கினும் என்-பாட்டிற்கு நீயும் அவனும் ஒப்பீர் எப் படியினுமே"—நால்வர்நான்மணிமாலை: ங.

எச. தொழுத இவ்வேளையில். பாட்டென்பது இலக்கணவரம்பில் அடங்கி ஒடுங்கி உருக்கொள்வதன்ருகலானும், அது மகிழ்ச்சி பொங்குதலினின்றும்

பா - ம்—*ஏற்றிட. †தொழுதார். ‡பிரானருளப் பாவுற்றவர்.

பான்மையினால், நாவுக்கர சென்றுல கேழினும்நின் நன்னுமம் நயப்
புற மன்னுக " என், றியாவர்க்கும் வியப்புற மஞ்சுறைவா னிடையே
ஒரு வாய்மை எழுந்ததுவே. ௭௪

இத்தன்மை நிகழ்ந்துழி நாவின்மொழிக் கிறையாகிய அன்பரும்
" இந்நெடுநாள், சித்தந்திகழ் தீவினை யேன்அடையுந் திருவோஇது "
என்று தெருண்டறியா, அத்தன்மைய னுய இராவணனுக் கருளுங்
கருணைத்திற மானஅதன், மெய்த்தன்மை அறிந்து துதிப்பதுவே மேல்
கொண்டு வணங்கினர் மெய்யுறவே. ௭௫

பரசுங்கரு ணைப்பெரி யோன்அருளப் பறிபுன்தலை யோர்நெறி
பாழ்படவந், தரசிங்கருள் பெற்றுல குய்ந்ததெனு அடியார்புடை சூழதி
கைப்பதிதான், முரசம்பட கந்துடி தண்ணுமையாழ் முழவங்கிளை தூந்
துபி கண்டையுடன், நிரைசங்கொலி எங்கும் †முழங்குதலால் நெடு
மாகடல் என்ன நிறைந்துளதே. ௭௬

---

பரந்தெழுவதாகலானும் "பாவுற்றலர்..." என்றார். திருவருளால் திறக்கப்
பெற்ற ஊற்றினின்றும் பொங்கிப் பெருகியோடும் பா என்றபடி. தொடை –
மாலை. நயப்பு - விருப்பு; மகிழ்ச்சி; இன்பு. மஞ்சு உறை - மேகங்கள் வாழும்.
வானிடையே ஒரு வாய்மை - அசரீரி வாக்கு.

௭௫. நாவின் மொழிக்கு இறை - நாவுக்கு அரசர்; சொல் வேந்தர்; வாகீ
சர். திருவோ - செல்வமோ. தெருண்டு அறியா - தெளிந்து அறியாத. இராவ
ணன் அறியாமையால் கயிலை மலையைத் தூக்கப் புகுந்தான். பின்னர் அவன்
அம்மலையைத் தூக்க இயலாது நொறுக்குண்டு வருந்தலானான். அவ்வேளையில்
அவன் தனது அறியாமையை யுணர்ந்து வருந்திக் கசிந்து கசிந்து உருகி
இறைவனை நினைந்து நினைந்து வேண்டுதல் செய்தான். இறைவன் அவனது
நிலைக்கு இரங்கித் திருவருள் செய்தான். இது புராண கதை. இதன் நுட்பம்
என்னை? அறியாமையால் அடாதன செய்து பின்னை அறிவு விளங்கிச் செய்த
குற்றத்தையுணர்ந்து உண்மையாக வருந்துவோர்க்கு ஆண்டவன் அருள்புரியக்
காத்துக் கொண்டிருக்கிறான் என்பது நுட்பம். திருநாவுக்கரசர் ஆண்டவன்
கருணைத் திறத்துக்கு ஓர் அறிகுறியாக இராவணன் நிலையைப்பெரிதும் பத்
தாம் பாட்டில் குறிப்பாராயினர். ஆண்டவன் கருணைத் திறத்தைவியந்து பாடப்
புகுந்த திருநாவுக்கரசர் மொழியைக்கொண்டு பின் வந்தோர், திருநாவுக்
கரசர் முற்பிறப்புக் கதையெனப் பல பொய்ம்மைகளைப் புனைந்துரைத்தார்
போலும். முதற் பாட்டுக் குறிப்பையும் பார்க்க.

௭௬. பரசும் - போற்றும். பெரியோன் - சிவபெருமான்; "பிறவாயாக்
கைப் பெரியோன்"—சிலப்பதிகாரம்: ௫. இந்திர. ௧௬௯. பறிபுன் தலை
யோர் நெறி - சமண சமயம். அரசு-திருநாவுக்கரசு. இங்கு அருள் பெற்றதால்

பா ம்—*நாமங்கள். †இயம்புதலால்.

மையற்றுறை ஏறி மகிழ்ந்தலர்சீர் வாகீசர் மனத்தோடு வாய்மை யுடன், மெய்யுற்ற திருப்பணி செய்பவராய் விரவுஞ்சிவ சின்னம் விளங் கிடவே, எய்துற்ற தியானம் அருவுணர்வும் ஈறின்றி எழுந்திரு வாசக மும், கையில்திக ழும்உழ வாரமுடன் *கைக்கொண்டு கலந்து கசிந் தனரே. ௭௭

மெய்ம்மைப்பணி செய்த விருப்பதனால் விண்ணோர்தனி நாயக னார்கழலில், தம்மிச்சை நிரம்ப வரம்பெறும்அத் தன்மைப்பதி மேவிய தாபதியார், "பொய்ம்மைச்சம யப்பிணி விட்டவர்முன் போதும்பிணி விட்டரு ளிப்பொருளா, எம்மைப்பணி கொள்கரு ணைத்திறமிங் கியார் பெற்றனர்" என்ன இறைஞ்சினரே. ௭௮

வேறு

இன்ன தன்மையில் இவர்சிவ நெறியினை எய்தி
மன்னு பேரருள் பெற்றிடர் நீங்கிய வண்ணம்
பன்னு தொன்மையிற் பாடலி புத்திர நகரில்
புன்மை யேபுரி அமணர்தாம் கேட்டது பொறாராய். ௭௯

---

உலகு உய்ந்தது உய்ந்தது. என - என்று. புடைசூழ் - பக்கத்தில் சூழ்ந்த. படகம் - ஒருவகைத் தோற்கருவி. துடி - துடிப்பறை; தமருகம்; உடுக்கை. தண்ணுமை - மத்தளம். முழவம் - குடமுழா. "தண்ணுமைப் பின் வழி நின்றது முழவே"—சிலப்பதிகாரம்: அரங். ௧௪௦-௧௪௪. கிளை - ஒருவகை நரம்புக் கருவி; வீணையுமாம். (யாழ் வேறு; வீணை வேறு - பாட்டு 1059 பார்க்க). கண்டை - கண்டாமணி. நிரை - ஒழுங்கான.

௭௭. மையல் - மயக்கமாகிய. அலர்சீர் - பரந்த புகழையுடைய. மனத்... பணி - மனம் வாக்கு காயம் ஆகிய திரிகரணங்களாலுஞ் செய்யப்படுந் திருத் தொண்டுகள். விரவும் - அன்பில் கலப்பிக்கும். சிவ சின்னம் - விபூதி ருத்தி ராக்கம். எய்துற்ற - அருளால் தோன்றி நிலை பொருந்திய. மனதால் தியானம்; வாய்மையால் (வாயினின்றும் வருவது) திருவாசகம் (பாடல்); மெய்யால் (கையால்) உழவாரத் தொண்டு.

௭௮. தன்மைப்பதி - அத்திருவதிகை. தாபதியார் - திலகவதியார். பிணி (சூலை நோயை) விட்டருளி; ௬௪-ம் பாட்டைப் பார்க்க.

௭௯. சிவநெறி எது? — இறைவன் ஒருவனே. அவனது அருள்நெறி யும் ஒன்றே. இறைவனுக்கும் அவனது அருள் நெறிக்கும் உலகில் வழங் கும் பெயர்கள் பல. பெயர்ப் பன்மைகளை நீக்கிப் பொருள் ஒருமையை உணர்வது அறிவுக்கு அழகு. பன்மைப் பெயர்கள் உலகில் பல சமயங் களாக நாளடைவில் கொள்ளப்பட்டன. முடிவில் எல்லாம் ஒன்றே என்பது நனிவிளங்கும். திருநாவுக்கரசரின் தாய் தந்தையர்கள் உலக வழக்கிலுள்ள சைவ சமயத்தைக் கடைப்பிடித் தொழுகியவர்கள். அவர்கட்குப் பிறந்த திரு நாவுக்கரசரும் அவர்களது சமய வழக்கில் நிற்கலானார். அந்நிலையில் அவர் பால் சிவனருள் விளங்கித் தோன்றவில்லை. இது பற்றியே "நம்பர் அரு

பா - ம்—*கைத்தொண்டு கலந்து கசிந்தனரே, கைக்கொண்டுகசிந்து கலந்தனரே.

"தரும சேனர்க்கு வந்தஅத் தடுப்பருஞ் சூலை
ஒருவ ராலும்இங் கொழிந்திடா மையின்அவ ருய்யப்போய்ப்
பெருகு சைவராய்ப் பெயர்ந்துதம் பிணியொழித் துய்ந்தார்
மருவு நம்பெருஞ் சமயம்வீழ்ந் தது "என மருள்வார். அ௦

---

ளாமையால்" (௩எ) என்றனர் இந்நூலாசிரியர். திருநாவுக்கரசருக்குப் பல சமய உணர்வே தொடக்கத்தில் மிக்கிருந்தது. அதனால் அவர் பலசமய நூல்களை ஆராய்தல் நேர்ந்தது. ஆராய்ச்சியில் அவர்க்குச் சமண சமயம் மெய்ச் சமயமாகத் தோன்றிற்று. தோன்றவே அவர் அச்சமயம் புகுந்தார். அச்சமயத்திலும் அவர் கலைப் புலவராகவே வாழ்ந்தார். பின்னே "ஈசனருள் கூட"லாயிற்று (௫௧). அப்பொழுது அவர்க்கு இறைவன் ஒருவனே என்பதும், அவனது நெறியும் ஒன்றே என்பதும், சமயங்களுள் மெய்ச் சமயம் பொய்ச் சமயம் வகுத்தலும், சமயம் மாறலும் அறியாமை என்பதும், இன்னபிறவும் புலனாயின. அவர், "யான் முன்னே தாய் தந்தையர் குறிப்பிட்ட சிவன் என்ற பெயரால் நிகழ்த்திய வழிபாடும், பின்னே சமணனாகி அருகன் என்ற பெயரால் செய்த வழிபாடும் ஒரு பரம் பொருளையே சார்ந்திருத்தலைத் திருவருட்டுணையால் காண்கிறேன். ஆகவே, யான் எப்பொழுதும் பரம்பொருளை மறந்தறியேன்" என்னுங் கருத்துப்பட **முதற் பதிகத்திலேயே** பாடப் புகுந்தார். இந்நுட்பம், "நெஞ்சம் உமக்கே இடமாக வைத்தேன் நினையாதொருபோதும் இருந்தறியேன்" எனவும், "சலம்பூவொடு தூபம் மறந்தறியேன் தமிழோடிசை பாடல் மறந்தறியேன், நலந் தீங்கிலும் உன்னை மறந்தறியேன் உன் நாமம் என் நாவில் மறந்தறியேன்" எனவும் வரூஉந் திருவாக்குகளில் பொலிதல் காண்க. இச்சீரிய கருத்துப் பொதுளப் பின்னரும் பல பாக்கள் அவரால் பாடப்பட்டன. அவைகளுள் சில வருமாறு:—"உலகுக்கு ஒருவனாய் நின்றாய் நீயே" (**திருவையாற்றுத் திருத்தாண்டகம் : க**); "ஒருவனாய் உலகேத்த நின்ற நாளோ ஒருருவே மூவுருவம் ஆன நாளோ"—(**திருவாரூர்த் திருத்தாண்டகம்: க**); "வாது செய்து மயங்கு மனத்தராய் - ஏது சொல்லுவீ ராகிலும் ஏழைகாள் - யாதோர் தேவர் எனப்படு வார்க்கெலாம்-மாதே வன்னலால் தேவர்மற் றில்லையே"—(**ஆதிபுராணத் திருக்குறுந் தொகை : ௪**); "விரிவிலா அறிவி னார்கள் வேறொரு சமயஞ் செய்தே எரிவினால் சொன்னா ரேனும் எம்பிராற்கு ஏற்ற தாகும்..."—(**திருப்பெருவேளூர்த் திருநேரிசை : ௯**); "ஆறொன் றியசம யங்களின் அவ்வவர்க் கப்பொருள்கள் - வேறொன் றிலாதன" "ஆறு சமயத் தவரவரைத் தேற்றுந் தகையன"—(**திருவின்னம்பர்த் திருவிருத்தம் : ௪ ; எ**); "சமயமவை ஆறினுக்குந் தலைவன்தான் காண்"—(**திருக்கச்சி ஏகம்பத் திருத்தாண்டகம் : எ**). ஈண்டுச் சிவநெறி என்றது ஆண்டவன் அருள் நெறி என்னும் ஒன்றையே குறிப்ப தென்க. சிவநெறி கட்டுப்பட்ட நெறி அன்று. அஃது உலகில் வழங்கப்படும் எல்லா நெறிகளுமாய், அவைகளுக்கு உயிருமா யிருப்பது. அதற்கு 'இச்சமயம் ஆகும் இச்சமயம் ஆகாது' என்பதில்லை. **எறிபத்தநாயனார் புராணம் : எ.** குறிப்பைப் பார்க்க. **தாயுமானார் :** ஆகாரபுவனம் - சிதம்பர ரகசியம் ; அ, ௯, க௦-ம் பாடல்களை நோக்குக. ஈண்டுப் புன்மையே புரி அமணர் என்றது 'அஹிம்சா பரமோ தர்மா' 'தயாமூல தர்மம்' என்று உலகுக்கு அறிவுறுத்திய **ஆதிநாதராகிய விருஷபதேவர்** கண்ட சமண அருள்நெறியினின்றும் வழுக்கிய இடைக்காலச் சமணரை என்க. இது குறித்துத் **திருஞானசம்பந்த சுவாமிகள் புராணத்தில்** விளக்கஞ் செய்யப்படும்.

அ௦. அவர் உய்ய. மருவும் - (நீண்டகாலமாக) நிலவும்.

"மலையும் பல்சம யங்களும் வென்றுமற் றவரால்
நிலையும் பெற்றஇந் நெறிஇனி அழிந்த"தென் றழுங்கிக்
கொலையும் பொய்ம்மையும் *இலவென்று கொடுமையே புரிவோர்
தலையும் பீலியும் தாழவந் தொருசிறை சார்ந்தார். அக

இவ்வ கைப்பல அமணர்கள் துயருடன் ஈண்டி
"மெய்வ கைத்திறம் அறிந்திடில் வேந்தனும் வெகுண்டு
சைவ னாகிநம் விருத்தியுந் தவிர்க்கும்மற் றினிநாம்
செய்வ தென்"என வஞ்சனை தெரிந்துசித் திரிப்பார்." அஉ

"தவ்வை சைவத்து நிற்றலின் தருமசே னருந்தாம்
பொய்வ குத்ததோர் சூலைதீர்ந் திலதெனப் போயிங்
கெவ்வ மாக†அங் கெய்திநஞ் சமயலங் கனமும்
தெய்வ நிந்தையும் செய்தனர்" எனச்சொலத் தெளிந்தார். அங

சொன்ன வண்ணமே செய்வது துணிந்ததுன் மதியோர்
"முன்னம் நாம்சென்று முறைப்படு வோம்"என முயன்றே
இன்ன தன்மையில் இருட்குழாஞ் செல்வது போல
மன்ன னாகிய பல்லவன் நகரில்வந் தணைந்தார். அச

உடைஒ ழிந்தொரு பேச்சிடை யின்றிநின் றுண்போர்
கடைஅ ணைந்தவன் வாயில்கா வலருக்கு "நாங்கள்
அடைய வந்தமை அரசனுக் கறிவியும்" என்ன
இடைஅ றிந்துபுக் கவருந்தம் இறைவனுக் கிசைப்பார். அரு

வேறு

"அடிகண்மார் எல்லாரும் ஆகுலமாய் மிகஅழிந்து
கொடிநுடங்கு திருவாயிற் புறத்தணைந்தார்" எனக்கூற

அக. மலையும் - ஒன்றோடொன்று மாறுபடும். பல்சமயங்களையும். அழுங்கி-வருந்தி. ஒருசிறை - ஒரு பக்கம்; துன்பத்தால் சிறைப்பட்டார் என்பது குறிப்பு.

அஉ. ஈண்டி - கூடி. விருத்தியும் - சீவிதத்தையும்; (சீவிதம்; சர்வமானியம்; கவலையின்றிச் சீவிக்கும்படி விடப்படுவது).

அங. தவ்வை - தமக்கை. எவ்வமாக - கபடமாக; வெறுப்பாக. லங்கனமும்-விடுத்துத் தாண்டுதலும்.

அச. (அரசன் கேள்விப்படுதற்கு) முன்னம். முறைப்படுவோம் - முறையிடுவோம். இருள்கூட்டம்; மனமிருண்டவர் என்பது குறிப்பு.

அரு. பேசாமல் நின்று உண்போர் என்றபடி. கடை - வாயிலை. அடைய - ஒருங்கே. இடை - சமயம்.

பா - ம்—*இலமென்று கொடுந்தொழில். †வந்தெய்தி.

வடிநெடுவேல் மன்னவனும் மற்றவர்சார் பாதலினால்
கடிதணைவான் "அவர்க்குற்ற தென்கொல்" எனக்†கனன்றுரைத்தான்.

கடைகாவ லுடையார்கள் புகுதவிடக் காவலன்பால்
நடையாடுந் தொழிலுடையார் நண்ணித்தாம் எண்ணியவா
"றுடையாரா கியதரும சேனர்பிணி உற்றாராய்ச்
சடையானுக் காளாய்நின் சமயம்அழித் தார்"என்றார். ௮௭

விரையலங்கற் பல்லவனும் அதுகேட்டு வெகுண்டெழுந்து
"புரையுடைய மனத்தினராய்ப் போவதற்குப் பொய்ப்பிணிகொண்
டுரைசிறந்த சமயத்தை அழித்தொழியப் பெறுவதே
கரையில்தவத் தீர்!இதனுக் கென்செய்வ" தெனக்கனன்றான். ௮௮

"தலைநெறியா கியசமயந் தன்னையழித் துன்னுடைய
நிலைநின்ற தொல்வரம்பின் நெறியழித்த பொறியிலியை
‡அலைபுரிவாய்" எனப்§பரவி வாயால்அஞ் சாதுரைத்தார்
கொலைபுரியா நிலைகொண்டு பொய்யொழுகும் அமண்குண்டர். ௮௯

அருள்கொண்ட உணர்வின்றி நெறிகோடி அறிவென்று
மருள்கொண்ட மன்னவனும் மந்திரிகள் தமைநோக்கித்

---

௮௬. அடிகள்மார் - குருமார்கள்; சமண முனிவர்கள். நுடங்கு - அசையும். மன்னவனும் சமணச் சார்பினனாதலால். கடிதுஅணைவான் - (அவர்கள்) விரைந்து அணைதற்கு; (அவர்களை) விரைவாக வருமாறு என்னலுமாம். கனன்று - கொதித்து; சினந்து.

௮௭. புகுதவிட - அடிகள்மார்களைப் புகவிட. நடையாடுந் தொழிலுடையார் - நடக்குந் தொழில் ஒன்றையே உடைய சமணர்கள்; நடைப்பிணங்கள்; ஆன்ம ஒளி இல்லாதவர்கள் என்றபடி. எண்ணியவாறு - முன்னே சித்திரித்த படி. நமக்கு முதன்மை யுடையவராகிய தருமசேனர் பிணியுற்றார்போல நடித்து. சிவபெருமானைச் சடையான் என்று சமணர்கள் இழித்துக் கூறுவது வழக்கம்.

௮௮. விரைஅலங்கல் - மணங்கமழும் மாலையணிந்த. புரையுடைய - குற்ற முடைய. உரை - புகழ். பெறுவதோ. கரையில் - அளவில்லாத. கனன்றான் - கோபித்தான்.

௮௯. பொறியிலியை - ஞானமில்லாத தருமசேனரை. அலை புரிவாய் - அலைப்பாய்; வருத்துவாய். பிற உயிர்களை அலைப்பது சமணக் கொள்கை யன்று; இச்சமணர்கள் தங்கள் கொள்கையினின்றும் வழுக்கி வீழ்ந்தவர்கள். முன்னே "கொல்லாமை மறைந்துறையும்" (௩௭) என்றும், "கொலையும் பொய்ம் மையும் இலவென்று கொடுமையே புரிவோர்" (௮௧) என்றும், இங்கே "கொலைபுரியா......குண்டர்" என்றுங் கூறினமை காண்க.

௯௦. கோடி - தவறி. தெருள் - தெளிவு. செறுவதற்கு - தண்டிப்பதற்கு; வருத்துதற்கு.

பா - ம்—*கடிதணைவார். †கவன்று. ‡அலைபுரிவோம். §பாவி.

"தெருள்கொண்டோர் இவர்சொன்ன தீயோனைச் செறுவதற்குப்
பொருள்கொண்டு விடாதென்பால் கொடுவாரும்" எனப்புகன்றான்.

அரசனது பணிதலைநின் றமைச்சர்களும் அந்நிலையே
முரசதிருந் தானையொடு முன்சென்று முகில்சூழ்ந்து
விரைசெறியுஞ் சோலைசூழ் திருவதிகை தனைமேவிப்
பரசமயப் பற்றறுத்த பான்மையினார் பால்சென்றார். ௯௧

சென்றணைந்த அமைச்சருடன் சேனைவீ ரருஞ்சூழ்ந்து
மின்தயங்கு புரிவேணி வேதியனார் அடியவரை
"இன்றுநுமை அரசன்அழைத் தெமைவிடுத்தான் போதும்"என
நின்றவரை நேர்நோக்கி நிறைதவத்தோர் உரைசெய்வார். ௯௨

"நாமார்க்குங் குடியல்லோம்" என்றெடுத்து நான்மறையின்
கோமானை நதியினுடன் குளிர்மதிவாழ் சடையானைத்
தேமாலைச் செந்தமிழின் செழுந்திருத்தாண் டகம்பாடி
"ஆமாறு நீரழைக்கும் அடைவிலம்"என் றருள்செய்தார். ௯௩

" நாமார்க்குங் குடியல்லோம் நமனை அஞ்சோம் நரகத்தில் இடர்ப்படோம் நடலை யில்லோம், ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம் இன்பமே எந்நாளுந் துன்ப மில்லை, தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான சங்கரன்நற் சங்கவெண் குழையோர் காதில், கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகி னோமே"

—தேவாரம்.

ஆண்டஅர சருள்செய்யக் கேட்டவரும் அடிவணங்கி
வேண்டியவர்க் கொண்டேக விடையுகைத்தார் திருத்தொண்டர்
"ஈண்டுவரும் வினைகளுக்கெம் பிரான்உளன்"என் றிசைந்திருந்தார்
மூண்டசினப் போர்மன்னன் முன்னணைந்தங் கறிவித்தார். ௯௪

பல்லவனும் அதுகேட்டுப் பாங்கிருந்த பாயுடுக்கை
வல்லமணர் தமைநோக்கி "மற்றவனைச் செய்வதினிச்
சொல்லும்"என அறந்துறந்து தமக்குறுதி அறியாத
புல்லறிவோர் அஞ்சாது நீற்றறையில் இடப்புகன்றார். ௯௫

---

௯௧. முரசு அதிரும் தானையொடு - முரசு முழங்கும் சேனைகளுடன்; " முரசதிர்ந்தானை முன்னோட "—அப்பர் : திருவாரூர் ௨. விரை செறியும் - மணங் கமழும்.

௯௨. மின்...அடியவரை - சிவனடியாராகிய திருநாவுக்கரசரை. நிறை தவத்தோர் - திருநாவுக்கரசர்.

௯௩. தேம் - இனிய. பொருந்துமாறு நீர் அழைக்கும் முறையில் யாம் இல்லை.

௯௪. அவர்க்கொண்டேக - திருநாவுக்கரசரை அழைத்துப்போக. விடை உகைத்தார் திருத்தொண்டர் - திருநாவுக்கரசர். மந்திரிகள் அறிவித்தார்கள்.

௯௫. பாங்கு - பக்கத்தே.

அருகணைந்தார் தமைநோக்கி "அவ்வண்ணஞ் செய்க" எனப்
பெருகுசினக் கொடுங்கோலான் மொழிந்திடலும் பெருந்தகையை
உருகுபெருந் தழல்வெம்மை நீற்றறையின் உள்ளிருத்தித்
*திருகுகருந் தாள்கொளுவிச் சேமங்கள் செய்தமைத்தார். ௯௬

ஆண்டஅர சதனகத்துள் அணைந்தபொழு தம்பலத்துத்
தாண்டவம்முன் புரிந்தருளுந் தாள்நிழலைத் தலைக்கொண்டே
"ஈண்டவருந் துயருளவோ ஈசன்அடி யார்க்" கென்று
மூண்டமன நேர்நோக்கி முதல்வனையே தொழுதிருந்தார். ௯௭

வெய்யநீற் றறையதுதான் வீங்கிளவே னிற்பருவம்
தைவருதண் தென்றல்†அணை தண்கழுநீர்த் தடம்போன்று
‡மொய்யொளிவெண் ணிலவலர்ந்து முரன்றயாழ் ஒலியினதாய்
ஐயர்திரு வடிநீழல் அருளாகிக் குளிர்ந்ததே. ௯௮

"மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே"—தேவாரம்.

மாசின்மதி நீடுபுனல் மன்னிவளர் சென்னியனைப்
பேசஇனி யானைஉல காளுடைய பிஞ்ஞகனை
ஈசனைஎம் பெருமானை §எவ்வுயிருந் தருவானை
ஆசையில்ஆ ராஅமுதை அடிவணங்கி இனிதிருந்தார். ௯௯

ஓரெழுநாள் கழிந்ததற்பின் உணர்வில்அம ணரைஅழைத்துப்
"பாரும்இனி நீற்றறையை" எனஉரைத்தான் பல்லவனும்
காரிருண்ட குழாம்போலும் உருவுடைய காரமணர்
தேருநிலை இல்லாதார் நீற்றறையைத் திறந்தார்கள். ௪௦௦

---

௯௬. திருகு......அமைத்தார் - முறுக்கிருப்புத் தாளிட்டுப் பாதுகாப்புகள் செய்து அடைத்து வைத்தார்கள்; சுழலுந் தன்மையுடைய இருப்புத்தாள் என்னலுமாம்.

௯௭. அதன் அகத்துள் - நீற்றறையினுள். கிளர்ந்தெழுந்த மனதால் நேர்மையாக நினைந்து.

௯௮. வீங்கு - மிகுந்த. இளவேனிற் பருவம் - சித்திரையும் வைகாசியும். தைவரும் - வீசும் (தடவும்). தண்தென்றல் - மென்மைத் தென்றல். குளிர்ந்த கழுநீர் மலர்ப் பொய்கை. முரன்ற - வாசிக்கப்பெற்ற. ஐயர் - சிவபெருமான்.

௪௦௦. கார்மேகம் இருண்ட கூட்டம்போலும். தேருநிலை - சித்தந்தெளிந்த நிலை; 1354-பார்க்க.

பா - ம்—*திருகுகொளுந். †அலை. ‡மொய்யளி. §எவ்வுலகுந்.

ஆனந்த வெள்ளத்தின் இடைமூழ்கி அம்பலவர்
தேனுந்து மலர்ப்பாதத் தமுதுண்டு தெளிவெய்தி
ஊனந்தான் இலராகி உவந்திருந்தார் தமைக்கண்டே
"*ஈனந்தாங் கியதிலதாம் என்னஅதி சயம்!" என்றார். ௧0௧

"அதிசயமன் றிதுமுன்னை அமண்சமயச் சாதகத்தால்
இதுசெய்து பிழைத்திருந்தான்" எனவேந்தற் குரைசெய்து
"மதிசெய்வ தினிக்கொடிய வல்விடமூட் டுவ" தென்று
முதிரவரும் பாதகத்தோர் முடைவாயால் மொழிந்தார்கள். ௧0௨

ஆங்கதுகேட் டலுங்கொடிய அமண்சார்பால் கெடும்மன்னன்
ஓங்குபெரு மையலினால் "நஞ்சூட்டும்" எனஉரைப்பத்
தேங்காதார் திருநாவுக் கரயரைஅத் தீயவிடப்
பாங்குடைய பாலடிசில் அமுதுசெயப் பண்ணினார். ௧0௩

"நஞ்சும்அமு தாம்எங்கள் நாதன்அடி யார்க்" கென்று
வஞ்சமிகு நெஞ்சுடையார் வஞ்சனையாம் படியறிந்தே
செஞ்சடையார் சீர்†விளக்குந் திறலுடையார் தீவிடத்தால்
வெஞ்சமணர் இடுவித்த பாலடிசில் மிசைந்திருந்தார். ௧0௪

பொடியார்க்குந் திருமேனிப் புனிதற்குப் புவனங்கள்
முடிவாக்குந் துயர்நீங்க முன்னைவிடம் அமுதானால்

௧0௧. உந்து - துளிக்கும்; தெறிக்கும். "தேனுந்து சேவடிக்கே சென்றூதாய் கோத்தும்பீ"—திருவாசகம். "சிந்திப்பரியன சிந்திப்பவர்க்குச் சிறந்து செந்தேன் - முந்திப் பொழிவன.........ஐயாறன் அடித்தலமே"—அப்பர். ஆண்டவன் அருள்பெற்ற அடியவர்கட்கு இயற்கை ஏவல் செய்யும். ஆண்டவன் அருளமுதம் அவ்வடியார்களின் உயிரெலாம் பாய்ந்து, ஊனெலாம் பாய்ந்து, என்புத்துளை தொறும் புகுந்து புகுந்து அவர்களை ஆனந்த மயமாகச் செய்யும். அமுதூறும் உடல் அவர்கள் உடல் என்க. அவ்வுடல் நெருப்பில் வேகாது; நீரில் அழுந்தாது; அதற்கு விலங்கு நஞ்சு முதலிய எவற்றாலும் தீங்கு நேராது; அஃது ஆண்டவன் வசத்திலிருப்பது; திருவாசகம் திருவண்டப் பகுதியின் இறுதியை நோக்குக.

௧0௨. மந்திர சாதகத்தால். இனி அறிவாகச் செய்வது. முடை - நாற்றம்.

௧0௩. மையலினால் - மதிமயக்கத்தால். தேங்காதார் - (கொடுமை செய்ய) அஞ்சாத சமணர்கள். விடப் பாங்குடைய - விஷக் கலப்புடைய. பால் அடிசில் அமுது செய்ய - பால் சோற்றை உண்ண.

௧0௪. திறலுடையார் - திருநாவுக்கரசர். மிசைந்து-உண்டு. "துஞ்சிருள் காலை மாலை தொடர்ச்சியை மறந்தி ராதே - அஞ்செழுத் தோதி நாளும் அரனடிக் கன்ப தாகும் - வஞ்சனைப் பால்சோ றாக்கி வழக்கிலா அமணர் தந்த - நஞ்சமு தாக்கு வித்தார் நனிபள்ளி அடிக ளாரே"—அப்பர்: திருநனிபள்ளித் திருநேரிசை ௫.

பா - ம்—*ஈனந்தங். †விளக்குங்.

படியார்க்கும் அறிவரிய பசுபதியார் தம்முடைய
அடியார்க்கு நஞ்சமுதம் ஆவதுதான் அற்புதமோ? கOரு

அவ்விடத்தை ஆண்டஅர சமுதுசெய்து முன்னிருப்ப
"வெவ்விடமும் அமுதாயிற்" றெனஅமணர் வெருக்கொண்டே
இவ்விடத்தில் இவன்பிழைக்கில் எமக்கெல்லாம் இறுதி"எனத்
தெவ்விடத்துச் செயல்புரியுங் காவலற்குச் செப்புவார். கOசு

"நஞ்சுகலந் தூட்டிடவும் நஞ்சமயத் தினில்விடந்தீர்
தஞ்சமுடை மந்திரத்தால் சாதியா வகைதடுத்தான்
எஞ்சும்வகை அவற்கிலதேல் எம்முயிரும் நின்முறையும்
துஞ்சுவது திடம்" என்றார் சூழ்வினையின் துறைநின்றார். கOஎ

மற்றவர்தம் மொழிகேட்டு மதிகெட்ட மன்னவனும்
"செற்றவனை †இனிக்கடியுந் திறம்எவ்வா" றெனச்செப்ப
உற்றவரும் "மந்திரசா தகநாங்கள் ‡ஒழித்திடநின்
கொற்றவயக் களிற்றெதிரே விடுவ" தெனக் கூறினார். கOஅ

---

கOரு. திருநீறு நிரம்பியிருக்கும் திருமேனியுடைய சிவபெருமானுக்கு. முன்னை விடம் - பாற்கடலில் எழுந்த ஆலகாலம். படி - உலகில்.

கOசு. சமணர்களூட்டிய நஞ்சை. வெருக்கொண்டு - திடுக்கிட்டு; **தடுத்தாட் கொண்ட புராணம்:** ககச. குறிப்புப் பார்க்க. இறுதி - முடிவு; இறப்பு. தெவ்விடத்து.........காவலற்கு - பகைவர்களிடத்து முறை தவறிச் செய்யுஞ் செயலைப் புரியும் மன்னவற்கு; பகைவரிடத்துச் செய்யப்படுஞ் செயலைத் திருநாவுக்கரசரிடஞ் செய்யத் துணிந்த காவலற்கு என்றபடி; பகைவரிடத்தும் முறை தவறிய செயலைச் செய்தலாகாது.

கOஎ. தருமசேனருக்கு நஞ்சுகலந்த பால்சோறு ஊட்டவும். தஞ்சமுடை - (துன்பத்தினின்றும் நீங்குதற்குப்) பற்றுக்கோடாகவுள்ள; எளிதாகவுள்ள எனினுமாம். சாதியா - தன்னைச் சேராத; கொல்லாத. அவற்கு எஞ்சும் வகை இலதேல் - அவனை ஒழிக்கும்வகை நம்மிடம் இனி இல்லையானால்; அவனை ஒழிப்பதற்கு இன்னும் மிகுதியாயுள்ள வகை இல்லையெனில் என்னுமாம். எஞ்சும் - ஒழியும்; மிகுந்த. முறையும் - அரசுரிமையும். துஞ்சுவது - அழிவது. சூழ்ச்சித் துறையில். தங்கள் பொய்க் கூற்றையுணர்ந்து மன்னன் எங்கே மனந் திரும்பி விடுகிறானோ என்றஞ்சி அவனுக்கு மேலும் வன்மமூட்டவேண்டி அடிகள்மார்கள் "...நின் முறையுந் துஞ்சுவதுதிடம்" என்றார்கள்.

கOஅ. மன்னன் மனந் திரும்பாது, அடிகள்மார்களின் சூழ்ச்சிக்கு எளியனாய் மேலும் தொடர்ந்து நாவுக்கரசரைத் துன்புறுத்தவே மனஞ் செலுத்தின

பா - ம்— துஞ்சும்அது. †இனித்தடியுந். ‡ஒழிந்திட.

பாவிக் கடையமணர் வாகீசத் திருவடியாம்
காபாலி அடியவர்பால் "கடக்களிற்றை விடு"கென்னப்
பூபாலர் செயல்மேற்கோள் புலைத்தொழிலோன் அவர்தம்மேல்
கோபாதி சயமான கொலைக்களிற்றை விடச்சொன்னான். க0கூ

கூடத்தைக் குத்திஒரு குன்றமெனப் புறப்பட்டு
மாடத்தை *மறித்திட்டு மண்டபங்கள் எடுத்தெற்றித்
தாடத்திற் பரிக்காரர் தலைஇடறிக் கடக்களிற்றின்
வேடத்தால் வருங்கூற்றின் மிக்கதொரு விறல்வேழம். ககO

வேறு

பாசத்தொடை நிகளத்தொடர் பறியத்தறி முறியா
மீசுற்றிய பறவைக்குலம் வெருவத்துணி விலகா
ஊசற்கரம் எதிர்சுற்றிட †உரறிப்பரி உழறு
வாசக்கட மழைமுற்பட மதவெற்பெதிர் வருமால். ககக

ஞதலின், அவனை "மதிகெட்ட மன்னவன்" என்றார். செற்றவனை - நம் மதத்தை அலர் தூற்றுகிறவனை; கெடுத்தவனை. கடியும் திறம் - தண்டிக்கும் வகை. உற்றவரும் - அங்குள்ள அடிகள்மார்களும். உற்ற (கைவந்த) அரும் மந்திர......எனக் கொள்ளலுமாம். திருநாவுக்கரசரது மந்திர சாதகத்தை நாங்கள் நீக்க; ஒழிந்திட என்பது பாடமாயின் திருநாவுக்கரசரை வெல்லுதற்கு மந்திர சாதகஞ் செய்யப் போதிய கால மின்மையால், அச்செயலினின்றும் நாங்கள் நீங்க என்று கொள்க. கொற்ற வயக்களிற்றெதிரே - வெற்றியும் வலிமையுமுடைய யானைக்கு எதிரிலே (திருநாவுக்கரசரை).

கOகூ. வாகீசஅடிகளாகிய (முனிவராகிய) சிவனடியாரிடம். கடம் - மதம். பூபாலர் - அரசர். இராஜ தருமத்தினின்றும் வழுவிய புலையன் என்றபடி. கோபாதிசயம் என்ற பெயரையுடைய.

ககO. தன் கூடத்தை; (கூடம் - யானைக் கூடம்). மாடங்களை இடித்து. மண்டபங்களை எடுத்தெறிந்து. தாள் தத்தின் - கால்களின் பாய்தலால். பரிக்காரர் - முன்னே போகுங் குத்துக்கோல் காரர்களின்; **எறிபத்த நாயனார் புராணம்:** கஉ. குறிப்புப் பார்க்க. மதயானையின் வேடத்தால் வரும் யமனைப் பார்க்கிலும். ஒரு விறல் வேழம் - ஒப்பற்ற வலிமையுடைய யானை.

ககக. பாசத் தொடை - கழுத்திற் கட்டப்பட்டுள்ள கயிறும். நிகளத் தொடர் - காலில் கட்டப்பட்டுள்ள சங்கிலியும். பறிய - அறும்படி. தறியை (யானை கட்டுந்தறியை) முறித்து. மேலே சுற்றிய பறவைக் கூட்டம் திடுக்கிட ஊசல் போன்ற துதிக்கை எதிரே சுழல. உரறி பரி உழறு - முழங்கியோடிக் கலக்கி;......குதிரை யெனப் பாய்ந்து......என்னலு மொன்று. வாசனை கமழும் மத மழை; "புணர் மருப்பி யானையின் புயல்கொண் மும்மத - மணமகள் கதுப்பென நாறு மாநகர்......"—**சீந்தாமணி** கசஉக. மத வெற்பு - மத யானை.

பா - ம்—*மறுத்திட்டு. †உதறி.

இடியுற்றெழும் ஒலியில்திசை இபமுட்கிட அடியில்
*படிபுக்குற நெளியப்படர் பவனக்கதி விசையில்
கடிதுற்றடு செயலிற்கிளர் கடலிற்படு கடையின்
முடிவிற்கன லெனமுற்சின முடுகிக்கடு கியதே. ககஉ

மாடுற்றணை இவுளிக்குலம் மறியச்செறி வயிரக்
கோடுற்றிரு பிளவிட்டறு குறைகைக்கொடு முறியச்
சாடுற்றிடு மதில்தெற்றிகள் சரியப்புடை †அணிசெற்
றாடுற்றகல் வெளியுற்றதவ் வடர்கைக்குல வரையே. ககா

பாவக்கொடு வினைமுற்றிய ‡படிறுற்றடு கொடியோர்
நாவுக்கர செதிர்முற்கொடு நணுகிக்கரு வரைபோல்
ஏவிச்செறு பொருகைக்கரி யினைஉய்த்திட வெருளார்
சேவிற்றிகழ் பவர்பொற்கழல் தெளிவுற்றனர் பெரியோர். ககச

வேறு

அண்ணல் அருந்தவ வேந்தர் ஆனை தம் மேல்வரக் கண்டு
விண்ணவர் தம்பெரு மானை விடையுகந் தேறும் பிரானைச்
"சுண்ணவெண் சந்தனச் சாந்து" தொடுத்த திருப்பதி கத்தை
மண்ணுலஞ் குய்ய எடுத்து மகிழ்வுட னேபாடு கின்றார். ககரு

"சுண்ணவெண் சந்தனச் சாந்தும் சுடர்த்திங்கட் சூளா மணியும்
வண்ண வுரிவை யுடையும் வளரும் பவள நிறமும்
அண்ணல் அரண்முர ணேறும் அகலம் வளாய அரவும்
திண்ணன் கெடிலப் புனலும் உடையார் ஒருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்றும் இல்லை அஞ்ச வருவதும் இல்லை"—தேவாரம்.

---

ககஉ. ஒலியால். திசை இபம் உட்கிட - திசையானைகள் அஞ்ச. அடியில் படிபுக்குற - அடிபெயர்த்து வைப்பதால் நிலம் அழுந்தி. பவனக்கதி - வாயு கதி. அடு - கொல்லும். கிளர்......கடுகியது - எழுங் கடலில் உண்டாகும் ஊழித்தீப் போன்று முற்கோபத்துடன் விரைந்து வந்தது.

ககா. மாடு......மறிய - பக்கத்தே வருங் குதிரைக் கூட்டங்கள் அழிய. விளங்கும் வயிரமுடைய கொம்பால். மதில்களும் திண்ணைகளும். புடை அணி செற்று - பக்கங்களிலுள்ள அழகுச் சின்னங்களை அழித்து. ஆடு...உற்றது - இத்தகை ஆடல்களைச் செய்து விசாலமான வெளியிடத்தில் வந்து சேர்ந்தது. அந்தக் கொல்லுந் தன்மையுடைய யானை.

ககச. படிறுற்றுஅடு - வஞ்சனை கொண்டு திருநாவுக்கரசரைக் கொல்லுதல் வேண்டும் என்னும் கருத்துடைய. செறுபொருகைக்கரி - கனன்று போர் புரியும் யானையை. ஏவி உய்த்திட (செலுத்த). வெருளார் - திடுக்கிட்டு நடுங்காதவராய்; வெருளார் சேவில் எனக்கொண்டு வெருட்சிமிக்க இடபத்தில் என்று கூறுவர் **பழைய குறிப்புரை** ஆசிரியர். சேவில்திகழ்பவர் - இடபத்தின் மீது விளங்கும் சிவபிரானது.

பா - ம்—*படிபுக்கற †அணிசென். ‡படிறுய்த்திடு.

வஞ்சகர் விட்ட சினப்போர் மதவெங் களிற்றினை நோக்கிச்
"செஞ்சடை நீள்முடிக் கூத்தர் தேவர்க்குந் தேவர் பிரானார்
*வெஞ்சுடர் மூவிலைச் சூல வீரட்டர் தம்அடி யோம்நாம்
அஞ்சுவ தில்லை"என் றென்றே அருந்தமிழ் பாடி †உறைந்தார். ககசு

தண்டமிழ் மாலைகள் பாடித் தம்பெரு மான்சர ணாகக்
கொண்ட கருத்தில் இருந்து குலாவிய அன்புறு கொள்கைத்
தொண்டரை முன்வல மாகச் சூழ்ந்தெதிர் தாழ்ந்து நிலத்தில்
எண்டிசை யோர்களுங் காண இறைஞ்சி எழுந்தது வேழம். ககஎ

ஆண்ட அரசை வணங்கி அஞ்சிஅவ் வேழம் பெயரத்
தூண்டிய மேன்மறப் பாகர் தொடக்கி அடர்த்துத் திரித்து
மீண்டும் அதனை அவர்மேல் மிறைசெய்து காட்டிட வீசி
ஈண்டவர் தங்களை யேகொன் றமணர்மேல் ஓடிற் றெதிர்ந்தே. ககஅ

ஓடி அருகர்கள் தம்மை உழறி மிதித்துப் பிளந்து
நாடிப் பலரையுங் கொன்று நகரந் ‡கலங்கி மறுக
நீடிய வேலை கலக்கும் நெடுமேந் தரகிரி போல
§ஆடிஅவ் யானையும் மன்னற் காகுலம் ஆக்கிய தன்றே. ககக

யானையின் கையிற் பிழைத்த ||வினைஅமண் கையர்கள் எல்லாம்
மானம் அழிந்து மயங்கி வருந்திய சிந்தைய ராகித்
தானை நிலமன்னன் தாளில் தனித்தனி வீழ்ந்து புலம்ப
மேன்மை நெறிவிட்ட வேந்தன் வெகுண்"டினிச் செய்வதென்" என்றான்.

---

ககசு. அன்பில் உறைந்து நின்றார். "மலைக்கொ ளானை மயக்கிய வல்வினை - நிலைக்கொ ளானை நினைப்புறு நெஞ்சமே - **கொலைக்கை யானையுங் கொன்றிடு** மாதலால் - கலைக்கை யானைகண் டீர்கட வூரரே"—**அப்பர்: திருக்**கடவூர் வீரட்டக் குறுந்தொகை. க.

ககஅ. தொடக்கி அடர்த்து திரித்து - கட்டுப்படுத்தி நெருக்கித் திருப்பி. மிறைசெய்து - துன்புறுத்திக் "கொல்" என்று. வீசி - பாகர்களை எடுத்தெறிந்து. ஈண்டவர் தங்களையே - (ஈண்டியவர்) சேர்ந்திருந்த அப்பாகர்களையே.

ககக. அருகர்கள் - சமணர்கள். உழறி - கலக்கி. நாடி - தேடித்தேடி. மறுக - சுழல. கலக்கி என்பது பாடமாயின் நகரத்தைக் கலக்கி (மறுக)ப் பலகாலுந் திரிய எனக்கொள்க. வேலை - கடலை. ஆடு இயல் என்னும் பாடத்துக்கு இவ்வாறு ஆடித் திரியும் அல்லது வெற்றி இலக்கணங்கள் பொருந்திய என்று கொள்க. கஉ0. கையர்கள் - வஞ்சகர்கள்; தானை - சேனை.

**பா - ம்**—*வெஞ்சிலை. †அறைந்தார். ‡கலக்கி. §ஆடியல்யானையும். ||அவ்வமண்; இனஅமண்.

"நங்கள் சமயத்தி னின்றே நாடிய முட்டி நிலையால்
எங்கள் எதிரே றழிய யானையால் இவ்வண்ணம் நின்சீர்
பங்கப் படுத்தவன் போகப் பரிபவந் தீரும் உனக்குப்
பொங்கழல் போக அதன்பின் புகையகன் றாலென" என்றார். கஉக

அல்லிருள் அன்னவர் கூற அரும்பெரும் பாவத் தவன்பின்
"தொல்லைச் சமயம் அழித்துத் துயரம் விளைத்தவன் தன்னைச்
சொல்லும் இனிச்செய்வ" தென்னச் சூழ்ச்சி முடிக்குந் தொழிலோர்
"கல்லுடன் பாசம் பிணித்துக் கடலிடைப் *பாய்ச்சுக" என்றார்.

ஆங்கது கேட்ட அரசன் அவ்வினை மாக்களை நோக்கித்
"தீங்கு புரிந்தவன் தன்னைச் சேமம் உறக்கொடு போகிப்
பாங்கொரு கல்லில் அணைத்துப் பாசம் பிணித்தோர் படகில்
வீங்கொலி வேலையில் †எற்றி வீழ்த்துமின்" என்று விடுத்தான்.

அவ்வினை செய்திடப் போகும் அவருடன் போயரு கந்த
வெவ்வினை யாளருஞ் சென்று மேவிட நாவுக் கரசர்
‡செவ்விய தந்திரு வுள்ளஞ் சிறப்ப அவருடன் சென்றார்
பவ்வத்தில் மன்னவன் சொன்ன படிமுடித் தார்அப் பதகர். கஉ௪

அப்பரி சவ்வினை முற்றி அவரகன் றேகிய பின்னர்
ஒப்பரும் §ஆழ்கடல் புக்க உறைப்புடை மெய்த்தொண்டர் தாமும்
"எப்பரி சாயினும் ஆக ஏத்துவன் எந்தையை" என்று
செப்பிய வண்டமிழ் தன்னால் சிவன்அஞ் செழுத்துந் துதிப்பார். கஉரு

---

கஉக. நாடிய - ஆராய்ந்தறிந்த. முட்டி நிலையால் - மந்திர சாத்திரத்தால்; விடம் முதலியனவற்றால் கேடு நேராதவாறு தடுக்கும் முறையால். எதிர்ஏறு அழிய - எதிர் ஏவுதல்கெட (எதிர் ஏறு - எதிரே செல் என்னல்; வலி என்பது பழைய குறிப்புரை). போக - சாக ; செத்தால். பரிபவம் - அவமானம். அழல் - நெருப்பு.

கஉஉ. அல்லிருள்-இரவிருள் ; நள்ளிருள்; 1354, 1370-பார்க்க. தொல்லை-பழைய. பாசம் - கயிறு.

கஉ௩. அத்தொழிலாளர்களை. சேமமுற - காவலொடு. பாங்கு - அவ்விடத்தில். வீங்கு - மிக்க. வேலையில் - கடலில். எற்றி - எறிந்து.

கஉ௪. அருகந்த வெவ்வினையாளரும் - சமணக் கொடியர்களும். பவ்வத்தில் - கடலில். மெய்ப்பொருள் நாயனார் புராணம்: கரு - குறிப்புப் பார்க்க. அப்பதகர் - அச்சண்டாளர்கள்.

பா - ம்—*பாய்ச்சுவதென்றார். †எற்றி. ‡செவ்வியதாம். §மாகடல்.

வேறு

"சொற்றுணை வேதியன்" என்னுந் தூமொழி
நற்றமிழ் மாலையா "நமச்சி வாய"என்
றற்றமுன் காக்கும்அஞ் செழுத்தை அன்பொடு
பற்றிய உணர்வினால் பதிகம் பாடினார். ௧௨௬

"சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணை திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணை பூட்டியோர் கடலில் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே"—தேவாரம்.

பெருகிய அன்பினர் பிடித்த பெற்றியால்
அருமல ரோன்முதல் அமரர் வாழ்த்துதற்
கரியஅஞ் செழுத்தையும் அரசு போற்றிடக்
கருநெடுங் கடலினுள் கல்மி தந்ததே. ௧௨௭

அப்பெருங் கல்லும்அங் கரசு மேல்கொளத்
தெப்பமாய் மிதத்தலில் செறிந்த பாசமும்
*தப்பிய ததன்மிசை †இருந்த தாவில்சீர்
மெய்ப்பெருந் தொண்டனார் விளங்கித் தோன்றினார். ௧௨௮

இருவினைப் பாசமும் மலக்கல் ஆர்த்தலின்
வருபவக் கடலில்வீழ் மாக்கள் ஏறிட
அருளுமெய் அஞ்செழுத் தரசை இக்கடல்
ஒருகல்மேல் ஏற்றிடல் உரைக்க வேண்டுமோ. ௧௨௯

அருள்நயந் தஞ்செழுத் தேத்தப் பெற்றஅக்
கருணைநா வரசினைத் திரைக்க ரங்களால்

---

௧௨௬. அற்றம் - துன்பகாலத்தில்.

௧௨௭. உறுதியாகப் பிடித்த தன்மையால். பிரமன் முதலிய தேவர்கள். "கல்லி னோடெனைப் பூட்டி அமண்கையர் - ஒல்லை நீர்புக நூக்கஎன் வாக்கினால் - நெல்லு நீள்வயல் நீலக் குடிஅரன் - நல்ல நாமம் நவிற்றி உய்ந்தே னன்றே"—அப்பர்: திருநீலக்குடிக் குறுந்தொகை: ௭.

௧௨௮. செறிந்த பாசமும் தப்பியது - நெருங்கக் கட்டப்பட்ட கயிறுகளும் அவிழ்ந்தன. தாவில் - கெடுதலில்லாத.

௧௨௯. இருவினைப் பாசமும் - நல்வினை தீவினை என்ற கயிறும். மலக்கல் - ஆணவமலம் என்ற கல்லும். ஆர்த்தலின் - தம்மைப் பிணித்தலால். வருபவக் கடலில் - வருகின்ற பிறவி என்ற கடலில். அருளும் - துணை அருளும். அத்தகை அஞ்செழுத்து என்றபடி.

௧௩௦. நயந்து - விரும்பி. அலைகளாகிய கைகளால். தெருள்நெறி நேர்மையால் - தெளிந்த வழி முறைமையால்.

பா - ம்—*தப்பினஅதன். †இருந்து; அறிந்த.

தெருள்நெறி *நேர்மையில் சிரத்தில் †தாங்கிட
வருணனுஞ் செய்தனன் முன்பு மாதவம். ௪௩௦

வாய்ந்தசீர் வருணனே வாக்கின் மன்னரைச்
சேர்ந்தடை கருங்கலே சிவிகை ஆயிட
ஏந்தியே கொண்டெழுந் தருளு வித்தனன்
பூந்திருப் பாதிரிப் புலியூர்ப் பாங்கரில். ௪௩௧

அத்திருப் பதியினில் அணைந்த அன்பரை
மெய்த்தவக் குழாமெலாம் மேவி ஆர்த்தெழ
எத்திசை யினும்அர என்னும் ஓசைபோல்
தத்துநீர்ப் பெருங்கடல் தானும் ஆர்த்ததே. ௪௩௨

தொழுந்தகை நாவினுக் கரசுந் தொண்டர்முன்
செழுந்திருப் பாதிரிப் புலியூர்த் திங்கள்வெண்
கொழுந்தணி சடையனைக் கும்பிட் டன்புற
விழுந்தெழுந் தருள்நெறி விளங்கப் பாடுவார். ௪௩௩

வேறு

"ஈன்றாளு மாய்எனக் கெந்தையு மாகி" எனஎடுத்துத்
"தோன்றாத் துணையாய் இருந்தனன் தன்அடி யோங்கட்"கென்று
வான்தாழ் புனற்கங்கை ‡வாழ்சடை யானைமற் றெவ்வுயிர்க்கும்
சான்றாம் ஒருவனைத் தண்டமிழ் மாலைகள் சாத்தினரே. ௪௩௪

"ஈன்றாளு மாய்எனக் கெந்தையு மாயுடன் தோன்றினராய்
மூன்றாயுலகம் படைத்துகந் தான்மனத் துள்ளிருக்க
ஏன்றான் இமையவர்க் கன்பன் திருப்பா திரிப்புலியூர்த்
தோன்றாத் துணையா யிருந்தனன் தன்அடி யோங்களுக்கே"

"வைத்த பொருள்நமக் காமென்று சொல்லி மனத்தடைத்துச்
சித்த மொருக்கிச் சிவாய நமஎன் றிருக்கினல்லால்
மொய்த்த கதிர்மதி போல்வா ரவர்பா திரிப்புலியூர்
அத்த னருள்பெற லாமோ அறிவிலாப் பேதைநெஞ்சே"

---

௪௩௧. வாக்கின் மன்னரை - திருநாவுக்கரசரை.

௪௩௨. குழாம் - கூட்டம். ஆர்த்து - ஆரவாரித்து. தத்து நீர் - எறிநீரை யுடைய.

௪௩௪. வானின்றும் இறங்கிய கங்கை. சான்றாம் - சாட்சியாயுள்ள (சிவ சாட்சியாய் மறைந்துள்ள).

பா - ம்—*நீர்மையில். †தாங்கிடல். ‡வார்.

"மண்பா தலம்புக்கு மால்கடல் மூடிமற் றேழுலகும்
விண்பால் திசைகெட் டிருசுடர் வீழினும் அஞ்சல்நெஞ்சே
திண்பால் நமக்கொன்று கண்டோந் திருப்பா திரிப்புலியூர்க்
கண்பாவு நெற்றிக் கடவுட் சுடரான் கழலிணையே"

"திருந்தா அமணர்தம் தீநெறிப் பட்டுத் திகைத்துமுத்தி
தருந்தா ளிணைக்கே சரணம் புகுந்தேன் வரையெடுத்த
பொருந்தா அரக்கன் உடல்நெறித் தாய்பா திரிப்புலியூர்
இருந்தாய் அடியேன் இனிப்பிற வாமல்வந் தேன்றுகொள்ளே"

—தேவாரம்.

மற்றும் இனையன வண்டமிழ் மாலைகள் பாடிவைகி
வெற்றி மழவிடை வீரட்டர் பாதம் மிகநினைவால்
உற்றதோர் காதலின் அங்குநின் றேகிஒன் னார்புரங்கள்
செற்றவர் வாழுந் திருவதி கைப்பதி சென்றடைவார். கஙரு

தேவர் பிரான்திரு மாணி குழியுந் தினைநகரும்
மேவினர் சென்று விரும்பிய சொன்மலர் கொண்டிறைஞ்சிப்
பூவலர் சோலை †மணமடி புல்லப் பொருள்மொழியின்
காவலர் செல்வத் திருக்கெடி லத்தைக் கடந்தணைந்தார். கஙசு

வெஞ்சமண் குண்டர்கள் ‡செய்வித்த தீய மிறைகளெல்லாம்
எஞ்சவென் றேறிய இன்தமிழ் ஈசர் எழுந்தருள
மஞ்சிவர் மாடத் திருவதி கைப்பதி வாணரெல்லாம்
தஞ்செயல் பொங்கத் தழங்கொலி மங்கலஞ் சாற்றலுற்றார். கஙஎ

மணிநெடுந் தோரணம் வண்குலைப் பூகம் மடற்கதலி
இணையுற நாட்டி எழுநிலைக் கோபுரந் தெற்றிஎங்கும்
தணிவில் பெருகொளித் தாமங்கள் நாற்றிச்செஞ் சாந்துநீவி
அணிநகர் முன்னை அணிமேல் அணிசெய் தலங்கரித்தார். கஙஅ

---

கஙரு. பகைவர்களின் முப்புரங்களை அழித்த சிவபெருமான்.

கஙசு. சோலையின் மணம் திருவடிகளிற் பொருந்த. மொழியின் காவலர்-திருநாவுக்கரசர்.

கஙஎ. மிறைகளெல்லாம் எஞ்ச - துன்பங்களெல்லாம் ஒழிய. தமிழீசர் - திருநாவுக்கரசர். மஞ்சு இவர் மாடம் - மேகம் தவழும் மாடங்களையுடைய. வாணர் - வாழ்நர். தழங்கொலி - பேரொலி. மங்கலம் - மங்கல வாத்தியங்களை.

கஙஅ. பூகம் - கமுகமரங்களையும். கதலி - வாழைமரங்களையும். தெற்றி - திண்ணை. தாமங்கள் நாற்றி - மாலைகள் தூக்கி. சாந்துநீவி - சந்தனக் குழம்பால் மெழுகி. அழகுமேல் அழகு செய்து.

பா - ம்—*திருநகரும். †மலரடி. ‡செய்தஇத்.

மன்னிய *அன்பின் வளநகர் மாந்தர் வயங்கிழையார்
இன்னிய நாதமும் ஏழிசை ஓசையும் எங்கும்விம்மப்
பொன்னியல் சுண்ணமும் பூவும் பொரிகளும் தூவிஎங்கும்
தொன்னக ரின்புறஞ் சூழ்ந்தெதிர் கொண்டனர் தொண்டரையே.

தூயவெண் ணீறு துதைந்தபொன் மேனியுந் தாழ்வடமும்
நாயகன் சேவடி தைவருஞ் சிந்தையும் நைந்துருகிப்
பாய்வது போல்அன்பு நீர்பொழி கண்ணும் பதிகச் செஞ்சொல்
மேயசெவ் வாயும் உடையார் புகுந்தனர் வீதியுள்ளே. கசO

கண்டார்கள் கைதலை மேல்குவித் " திந்தக் கருணைகண்டால்
மிண்டாய செய்கை அமண்கையர் தீங்கு விளைக்கச்செற்றம்
உண்டா யினவண்ணம் எவ்வண்ணம்" என்றுரைப் பார்கள்பின்னும்
தொண்டாண்டு கொண்ட பிரானைத் தொழுது துதித்தனரே. கசக

இவ்வண்ணம் போல எனைப்பல மாக்கள் இயம்பிஏத்த
மெய்வ்வண்ண நீற்றொளி மேவுங் குழாங்கள் விரவிச்செல்ல
அவ்வண்ணம் நண்ணிய அன்பரும் வந்தெய்தி அம்பவளச்
செவ்வண்ணர் கோயில் திருவீரட் டானத்தைச் சேர்ந்தனரே. கசஉ

உம்பர்தங் கோனை உடையபி ரானைஉள் புக்கிறைஞ்சி
நம்புறும் அன்பின் நயப்புறு காதலி னால்திளைத்தே
"எம்பெரு மான்தனை ஏழையேன் நான்பண் டிகழ்ந்த"தென்று
தம்பரி வாற்றிருத் தாண்டகச் செந்தமிழ் சாற்றிவாழ்ந்தார். கசங

"வெறிவிரவு கூவிளநற் றொங்க லானை வீரட்டத் தானைவெள் ளேற்றி னானைப்
பொறியரவி னானைப்புள் ளூர்தி யானைப் பொன்னிறத்தி னானைப் புகழ்தக் கானை
அறிதற்கரியசீர் அம்மான் தன்னை அதியரைய மங்கை அமர்ந்தான் தன்னை
எறிகெடிலத் தானை இறைவன் தன்னை ஏழையேன் நான்பண் டிகழ்ந்தவாறே"

---

கஙகூ. வயங்கு இழையார் - விளங்கும் ஆபரணமணிந்த பெண்மணிகள். விம்ம - பெருகி ஒலிக்க. பொற்சுண்ணமும்.

கசO. துதைந்த - நிறைந்த. தைவரும் - இடையறாது தியானிக்கும் (தடவும்). உடையார் - திருநாவுக்கரசர்.

கசக. கருணை வடிவை. கொடுஞ் செருக்குச் செய்கையுடைய. செற்றம் - பகைமை. பிரானை - சிவபிரானை.

கசஉ. கூட்டங்கள் நெருங்கிச் செல்ல. அழகிய பவளம் போலுஞ் செந்நிறமுடைய சிவபிரான் எழுந்தருளியுள்ள.

கசங. உம்பர்தம்-தேவர்களின். திளைத்தே-இடையறாது மூழ்கி நின்றே.

பா - ம்—*அன்பர்.

"உறிமுடித்த குண்டிகைதங் கையில் தூக்கி ஊத்தைவாய்ச் சமணர்க்கோர் குண்டாக்கனாய்க், கறிவிரவு நெய்சோறு கையி லுண்டு கண்டார்க்குப் பொல்லாத காட்சியானேன், மறிதிரைநீர்ப் பவ்வநஞ் சுண்டான் றன்னை மறித்தொருகால் வல்வினையேன் நினைக்க மாட்டேன், எறிகெடில நாடர் பெருமான் றன்னை ஏழையேன் நான்பண் டிகழ்ந்த வாறே"—**தேவாரம்.**

வேறு

அரிஅயனுக் கரியானை அடியவருக் கெளியானை
விரிபுனல்சூழ் திருவதிகை வீரட்டா னத்தமுதைத்
தெரிவரிய பெருந்தன்மைத் திருநாவுக் கரசுமனம்
பரிவுறுசெந் தமிழ்ப்பாட்டுப் பலபாடிப் பணிசெயுநாள். கசச

புல்லறிவிற் சமணர்க்காப் பொல்லாங்கு புரிந்தொழுகும்
பல்லவனுந் தன்னுடைய பழவினைப்பா சம்பறிய
அல்லலொழிந் தங்கெய்தி ஆண்டஅர சினைப்பணிந்து
வல்லமணர் தமைநீத்து மழவிடையோன் றாளடைந்தான். கசரு

வீடறியாச் சமணர்மொழி பொய்யென்று மெய்யுணர்ந்த
காடவனுந் திருவதிகை நகரின்கண் கண்ணுதற்குப்
பாடலிபுத் திரத்தில்அமண் பள்ளியொடு பாழிகளும்
கூடஇடித் துக்கொணர்ந்து குணபரவீச் சரமெடுத்தான். கசசு

இந்நாளில் திருப்பணிகள் செய்கின்ற இன்றமிழ்க்கு
மன்னான வாகீசத் திருமுனியும் மதிச்சடைமேல்
பன்னாகம் அணிந்தவர்தம் பதிபலவுஞ் சென்றிறைஞ்சிச்
சொன்னாமத் தமிழ்புனைந்து தொண்டுசெய்வான் றொடர்ந்தெழுவார்.

திருவதிகைப் பதிமருங்கு திருவெண்ணெய் நல்லூரும்
அருளுதிரு ஆமாத்தூர் திருக்கோவ லூர்முதலா

கசரு. சமணர்க்காக. பறிய - அற; நீங்க. அங்கு - திருவதிகை வீரட்டானம்.

கசசு. காடவனும் - பல்லவனும். பள்ளியொடு பாழிகளும் - கோயிலொடு தங்கு மிடங்களையும். "அமணர் சேரும் பாழியும் அருகன் மேவு பள்ளியும்" —**திருஞானசம்பந்தர் புராணம்:** அஎக. பல்லவனுக்குக் **குணபரன்** என்பது ஒருபட்டப் பெயர். இது **குணதரன்** என்றும் வழங்கப்படுகிறது. அவனால் கட்டப்பட்ட சிவாலயம் 'குணபர ஈச்சரம்' என்னும் பெயர் பெற்றதுபோலும்.

கசஎ. பன்னாகம் - பல பாம்புகள். சொல் நாமம் - போற்றும் புகழமைந்த.

**பா - ம்**—*பெருந்தகைமைத்.

மருவுதிருப் பதிபிறவும் வணங்கிவளத் தமிழ்பாடிப்
பெருகுவிருப் புடன்விடையார் மகிழ்பெண்ணா கடம்அணைந்தார். கசஅ

கார்வளரும் மாடங்கள் கலந்தமறை ஒலிவளர்க்குஞ்
சீருடைஅந் தணர்வாழுஞ் செழும்பதியின் அகத்தெய்தி
வார்சடையார் மன்னுதிருத் தூங்கானை மாடத்தைப்
பார்பரவுந் திருமுனிவர் பணிந்தேத்திப் பரவினார். கசகூ

"புன்னெறியாம் அமண்சமயத் தொடக்குண்டு போந்தவுடல்
தன்னுடனே உயிர்வாழத் தரியேன்நான் தரிப்பதனுக்
கென்னுடைய நாயக!நின் இலச்சினையிட் டருள்"என்று
பன்னுசெழுந் தமிழ்மாலை முன்னின்று பாடுவார். கருo

"பொன்னார்ந்த திருவடிக்கென் விண்ணப்பம்" என்றெடுத்து
முன்னாகி எப்பொருட்கும் முடிவாகி நின்றானைத்
தன்னாகத் துமைபாகங் கொண்டானைச் சங்கரனை
நன்னுமத் திருவிருத்தம் நலஞ்சிறக்கப் பாடுதலும். கருக

"பொன்னார் திருவடிக் கொன்றுண்டு விண்ணப்பம் போற்றிசெய்யும்
என்னாவி காப்பதற் கிச்சையுண் டேல்இருங் கூற்றகல
மின்னாரு மூவிலைச் சூலமென் மேற்பொறி மேவு கொண்டாற்
றுன்னார்க டந்தையுட் டூங்கானை மாடச் சுடர்க்கொழுந்தே"

"கடவுந் திகிரி கடவா தொழியக் கயிலையுற்றான்
படவுந் திருவிர லொன்று வைத்தாய்பனி மால்வரைபோல்
இடபம் பொறித்தென்னை என்றுகொள் ளாயிருஞ் சோலைதிங்கள்
தடவுங் கடந்தையுட் டூங்கானை மாடத்தெந் தத்துவனே"—தேவாரம்.

நீடுதிருத் தூங்கானை மாடத்து நிலவுகின்ற
ஆடகமே ருச்சிலையான் அருளாலோர் சிவபூதம்
மாடொருவர் அறியாமே வாகீசர் திருத்தோளில்
சேடுயர்மூ விலைச்சூலஞ் சினவிடையி னுடன்சாத்த. கருஉ

கசகூ. மேகந்தவழும் மாடங்களில். உலகம் போற்றும் வாகீச முனிவர்.
கருo. தொடக்குண்டு - கட்டுண்டு. இலச்சினை - முத்திரை :குறி.
கருக. தன்னாகத்து - தன்னுடலில். நல்ல புகழ் வாய்ந்த திருவிருத்தம்.
கருஉ. ஆடகமேருச்சிலையான் - பொன்மலையை வில்லாகக் கொண்ட சிவபெருமான். மாடு ஒருவர் - பக்கத்துள்ள ஒருவரும். சேடு உயர் - திரண்டுயர்ந்த. சூல முத்திரையை, இடபமுத்திரையுடன் சாத்த.

ஆங்கவர்தந் திருத்தோளில் ஆர்ந்ததிரு இலச்சினையைத்
தாங்கண்டு மனங்களித்துத் தம்பெருமான் அருள்நினைந்து
தூங்கருவி கண்பொழியத் தொழுதுவிழுந் தார்வத்தால்
ஓங்கியசிந் தையராகி "உய்ந்தொழிந்தேன்" எனஎழுந்தார். கருங

தூங்கானை மாடத்துச் †சுடர்க்கொழுந்தின் அடிபரவிப்
பாங்காகத் திருத்தொண்டு செய்துபயின் றமருநாள்
‡பூங்கானம் மணங்கமழும் பொருவில்திரு அரத்துறையும்
தேங்காவின் முகில்உறங்குந் திருமுதுகுன் றமும்பணிந்து. கருச

வண்டமிழ்மென் மலர்மாலை புனைந்தருளி மருங்குள்ள
தண்டுறைநீர்ப் பதிகளிலுந் தனிவிடையார் மேவியிடங்
கொண்டருளுந் தானங்கள் கும்பிட்டுக் குணதிசைமேல்
புண்டரிகத் தடஞ்சூழ்ந்த நிவாக்கரையே போதுவார். கருரு

ஆறாத சீர்த்தில்லை அம்பலத்தே ஆடுகின்ற
வானாறு புடைபரக்கும் மலர்ச்சடையார் அடிவணங்கி
ஊனாலும் உயிராலும் உள்ளபயன் கொளநினைந்து
தேனாரும் மலர்ச்சோலைத் திருப்புலியூர் மருங்கணைந்தார். கருசு

வேறு

நாவுக் கரசரும் இருவர்க் கரியவர் நடமா டியதிரு எல்லைப்பால்
மேவித் தலமுற மெய்யில் தொழுதபின் மேன்மேல் எழுதரும் §விரைவோடும்

கருங. ஆர்ந்த - பொருந்திய; பொறித்த. தூங்கு அருவி - விரையவிழும் அருவி நீர்.

கருச. பாங்காக - முறையாக; நன்றாக. பயின்று - (ஆண்டவன் திருப் புகழைப்) பலகால் சொல்லி. பூங்கானம் - பூம்பொதிகளினின்றும்; பூ மிகுந்த இடம் பூங்கானம் என்று சொல்வது வழக்கு. "பூமலி கானத்துப் புதுமணம் புக்கு"—சிலப்பதிகாரம்: டு. இந்திர. கசு௯ (பூ விற்கு மிடங்களைப் பூமிகுதி யாற் கானமென்றார்" - உரை). தேங்காவில் - பார்வைக்கினிய சோலையில்; தேன் சிந்துஞ் சோலையில் எனினுமாம். மேகங்கள் உறங்கும் விருத்தா சலத்தையும்.

கருரு. குணதிசை - கீழ்த்திசை. தாமரைத் தடாகங்கள் சூழ்ந்த. நிவாநதி.

கருசு. ஆறாத - குறையாத. வான்ஆறு புடைபரக்கும் - தெய்வக் கங்கை யின் ஒலிபெருகும். திருப்புலியூர்-சிதம்பரம். "புலியூ ரானைப் பேசாத நாளெல் லாம் பிறவா நாளே"—அப்பர்; "புலியூர் சிற்றம்பலம்"—சுந்தரர்.

பா - ம்—*தாள். †சுடர்க்கொழுந்தை. ‡பூங்கானின். §விழைவோடும்.

காவிற் *களிமயில் மகிழ்வுற் றெதிரெதி ராடக் கடிகமழ் கமலஞ்சூழ்
வாவித் தடமலர் வதனம் பொலிவுறு மருதத் தண்பணை வழிவந்தார்.

முருகிற் செறிஇதழ் முளரிப் படுகரில் முதுமே திகள்புது மலர்
மேயும், அருகிற் செறிவன மெனமிக் குயர்கழை அளவிற் பெருகிட
வளரிக்குப், பெருகிப் புடைமுதிர் தரளஞ் சொரிவன பெரியோ ரவர்
திரு வடிவைக்கண், டுருகிப் பரிவுறு புனல்கண் பொழிவன எனமுன்
புளவள வயலெங்கும். கருஅ

அறிவிற் பெரியவர் அயல்நெற் பணைவயல் அவைபிற் படும்வகை
அணைகின்றார், "பிறவிப் †பகைநெறி விடுவீர் இருவினை பெருகித்
தொடர்பிணி உறுபாசம், பறிவுற் றிடஅணை யுமின்"என் றிருபுடை
பயில்சூழ் சினைமிசை குயில்கூவும், செறிவிற் பலதரு நிலையிற் பொலி
வுறு திருநந் தனவனம் ‡எதிர்கண்டார். கருகூ

அவர்முன் பணியொடு தொழுதங் கணைவுற அணிகொம் பரின்
மிசைஅருகெங்கும், "தவமுன் புரிதலில் வருதொண் டெனுநிலை தலை
நின் றுயர்தமிழ் இறையோராம், இவர்தந் திருவடி அதுகண் டதிச
யம்" எனவந் தெதிர்"அர கர"என்றே, சிவமுன் பயில்மொழி பகர்
கின் றனவளர் சிறைமென் கிளியொடு §சிறுபூவை. கசுO

---

கருஎ. இருவர்க்கு - பிரம விஷ்ணுக்களுக்கு. தலமுறமெய்யில் - பூமியில் உடல்பொருந்த; சாஷ்டாங்கமாக. காவில் - சோலைகளில். களிமயில் - தருக்கும் மயில்கள்; வினைத் தொகை. கடி...வதனம் - மணங்கமழும் தாமரை சூழ்ந்த வாவிகளில் மலராகிய முகங்கள். மருத நிலத்திலுள்ள குளிர்ந்த வயல் வழியே.

கருஅ. முருகில்...படுகரில் - வாசனையுடன் நிறைந்த இதழ்களையுடைய தாமரைத் தடாகத்தில். முதுமேதிகள் - முதிர்ந்த எருமைகள். செறிவனம் என - நெருங்கிய காடுபோல. கழை அளவில் - மூங்கில்கள் அளவாக. இக்கு - கரும்புகள். புடைமுதிர் தரளம் - கணுக்களில் முதிர்ந்த முத்துக்களை. சொரிவன - சொரிதல். பெரியோர் - திருநாவுக்கரசர்.

கருகூ. அயலில் நெல் விளையும் மருதநிலத்துள்ள வயல்கள். பறிவுற்றிட - அறும்படி. இரு......மிசை - இருபக்கமும் நெருங்கிச் சூழ்ந்துள்ள கிளைகள் மீது. செறிவில் பல தரு நிலையில் - நெருங்கிய பல மரங்கள் நிற்றலால்.

கசுO. அவர் - திருநாவுக்கரசர். அவ்வனத்தின் அருகெங்குமுள்ள அழகிய கொம்புகள்மீது. முற்பிறப்புத் தவத்தால் வந்த தொண்டு. தமிழ் இறையோராம் - திருநாவுக்கரசராகிய. பகர்கின்றனவாய். சிறை - சிறகுடைய. பூவை - நாகணவாய்ப் பறவைகள்.

பா - ம்—*களியளி. †பவநெறி. ‡எதிர்கொண்டார். §சில.

அஞ்சொல் திருமறை அவர்முன் பகர்தலும் அவருந் தொழுது முன் §அளிகூரும், நெஞ்சிற் பெருகிய *மகிழ்வும் காதலும் நிறையன் பொடும்உரை தடுமாறச், செஞ்சொல் திருமறை மொழியந் தணர் பயில் தில்லைத் திருநகர் எல்லைப்பால், மஞ்சிற் †பொலிநெடு மதில்சூழ் குடதிசை மணிவா யிற்புறம் வந்துற்றார். கசுக

அல்லற் பவம்அற அருளுந் தவமுதல் அடியார் எதிர்கொள அவ ரோடும், மல்லற் புனல்கமழ் மாடே வாயிலின் வழிபுக் கெதிர்தொழு தணைவுற்றார், கல்வித் துறைபல வருமா மறைமுதல் கரைகண் டுடை யவர் கழல்பேணுஞ், செல்வக் குடிநிறை நல்வைப் பிடைவளர் சிவமே நிலவிய திருவீதி. கசுஉ

நவமின் சுடர்மணி நெடுமா லையுநறு மலர்மா லையுநிறை திரு வீதிப், புவனங் களின்முதல் இமையோர் தடமுடி பொருதுந் திய மணி ‡போகட்டிப், பவனன் பணிசெய வருணன் புனல்கொடு பணிமா றவும்அவை பழுதாமென், றெவருந் தொழுதெழும் அடியார் திருவல கிடுவார் குளிர்புனல் விடுவார்கள். கசுங

---

கசுக. கிளியும் பூவையும் வேதம் ஓதல்—"பாரிசையும் பண்டிதர்கள் பன்னாளும் பயின்றேத்தும் ஓசைகேட்டு - வேரிமலி பொழிற்கிள்ளை வேதங் கள் பொருட்சொல்லும் மிழலை யாமே"; "வேதத் தொலியால் கிளிசொல் பயிலும் வெண்காடே"; "சட்டகலை யெட்டுமெரு வெட்டும்வளர் தத்தைபயில் சண்பை நகரே"; "வளர்பூவை நல்ல மறையோது கொச்சை வயமே"—திரு ஞான சம்பந்தர். அளி கூரும் - அருள்வளரும் (கூர்தல் - உள்ளது சிறத் தல்). மஞ்சில் - மேகங்களால். குடதிசை - மேற்குத் திசை.

கசுஉ. பவம் - பிறவி. தவமுதல் - திருநாவுக்கரசர். மல்லல்......மாடே - வளமையுடைய நீர் மணங்கமழும் பக்கமாகவே. உடையவர் - நடராஜர். "செல்வ நெடுமாடஞ் சென்றுசேண் ஓங்கிச் - செல்வ மதிதோயச் செல்வ முயர் கின்ற - செல்வர்வாழ் தில்லைச் சிற்றம் பலமேய - செல்வன் கழலேத் துஞ் செல்வஞ் செல்வமே"—திருஞான சம்பந்தர். நல்விருக்கைகள்.

கசுங. புவனங்களின்......போகட்டி - புவனத் தலைவர்களாகிய தேவர்க ளின் பெரிய கிரீடங்கள் ஒன்றோடொன்று மோதிச் சிந்திய மணிகளைப் போக்கி (போகவிட்டு). பவனன் - வாயுதேவன். பணி மாறவும் - தொண்டு செய்யவும். அவை - வாயுவின் திருவலகுத் தொண்டும், வருணனின் நீர்த் தொண்டும். வாயு வருணன் முதலிய தேவர்களைப் பார்க்கிலும் அடியவர்கள் சிறந்தவர்க ளாதலான் "எவரும் தொழுதெழும் அடியார்" என்றார்.

பா - ம்—*மகிழ்வுறு. †பொலிதரு. ‡போகட்டுப்.

மேலம் பரதல நிறையுங் கொடிகளில் விரிவெண் கதிர்நுழை வரி தாகும், கோலம் பெருகிய திருவீ தியைமுறை குலவும் பெருமையர் பணிவுற்றே, ஞாலந் திகழ்திரு மறையின் பெருகொலி நலமார் முனி வர்கள் துதியோடும், ஓலம் பெருகிய நிலையேழ் கோபுரம் *முறையே கொடுதொழு துள்புக்கார். கசுச

வளர்பொற் கனமணி திருமா ளிகையினை வலம்வந் தலமரு வரை நில்லா, அளவிற் பெருகிய ஆர்வத் திடைஎழும் அன்பின் கடல்நிறை உடலெங்கும், புளகச் செறிநிரை †விரவத் திருமலி பொற்கோ புரமது புகுவார்முன், களனிற் பொலிவிடம் உடையார் நடநவில் கனகப் பொதுஎதிர் கண்ணுற்றார். கசுரு

நீடுந் ‡திருவுடன் நிகழும் பெருகொளி நிறைஅம் பலநினை வுற நேரே, கூடும் படிவரும் அன்பால் இன்புறு §குணமுன் பெறவரு நிலை கூடத், தேடும் பிரமனும் மாலுந் தேவரும் முதலாம் யோனிகள் தெளிவொன்ற, ஆடுங் கழல்புரி அமுதத் திருநடம் ஆரா வகைதொழு தார்கின்றார். கசுசு

கையுந் தலைமிசை புனைஅஞ் சலியன கண்ணும் பொழிமழை ¶ஒழியாதே, பெய்யுந் தகையன கரணங் களும்உடன் உருகும் பரிவின பேறெய்தும், மெய்யுந் ||தரைமிசை விழுமுன் பெழுதரு மின்தாழ் சடை யோடே நின்றாடும், ஐயன் திருநடம் எதிர்கும் பிடும்அவர் ஆர்வம் பெருகு தல் அளவின்றால். கசுஎ

---

கசுச. மேல் அம்பரதலம் - மேலே ஆகாயத்தில். குலவும் பெருமையர் - விளங்கிய பெருமையுடைய திருநாவுக்கரசர். ஓலம் - ஒலி.

கசுரு. கனம் - கூட்டம்; மேகம்; பொன். (பொன்கனம் - உயர்ந்த செம் பொன்). அலமரும்வரை - சுற்றிவரும்வரை. உடல்......விரவ - உடல் முழுவ தும் மயிர்ச்சிலிர்ப்பு மிகுந்து ஒழுங்குபடக் கலக்க. களனில் - கண்டத்தில். கனகப் பொது - பொற்சபையை.

கசுசு. அருள் திருவுடன். பெருகு ஒளி - கடவுள் வாழ்த்து முதற்பாட்டுக் குறிப்பைப்பார்க்க. அம்பலம் - சிற்றம்பலம். யோனிகள் - பிறவிகள்; உயிர்கள். தெளிவு ஒன்ற - ஞானத் தெளிவில் பொருந்த; விளங்க. ஆரா - தெவிட் டாத. ஆர்கின்றார் - (நடன இன்பத்தை) அநுபவிக்கின்றார்.

கசுஎ. கரணங்கள் - மனம் புத்தி சித்தம் அகங்காரம். பரிவின - அன் புடையனவாயின. பிறவியில் எப்பேற்றை எய்தவேண்டுமோ அப்பேற்றினை எய்திய உடலும் மண்மிசை விழும் எழும் என்றபடி. தடுத்தாட்கொண்ட புரா ணம்: சoரு, சoசு, சoஎ. பார்க்க.

பா - ம்—*உறமெய். †விரவி. ‡திருவடி. §குணமும். ¶ஒழியாமே. ||தலைமிசை.

இத்தன் மையர்பல முறையுந் தொழுதெழ "என்றெய் தினை" என மன்றுடும், அத்தன் திருவருள் பொழியுங் கருணையின் அருள்பெற் றிடவரும் ஆனந்தம், மெய்த்தன் மையினில்வி ருத்தத் திருமொழி பாடிப் பின்னையும் மேன்மேலும், சித்தம் பெருகிய பரிவால் †இன்புறு திருநே ரிசைமொழி பகர்கின்றார். கசுஅ

வேறு

"பத்தனுய்ப் பாட மாட்டேன்" என்றுமுன் னெடுத்துப் பண்ணால்
"அத்தாஉன் ஆடல் காண்பான் அடியனேன் வந்த வா"றென்
றித்திரம் போற்றி நின்றே இன்தமிழ் மாலை பாடிக்
கைத்திருத் தொண்டு செய்யுங் காதலிற் பணிந்து போந்தார். கசுகூ

" பத்தனுய்ப் பாட மாட்டேன் பரமனே பரம யோகி
எத்திறுற் பத்தி செய்கேன் என்னைநீ இகழ வேண்டா
முத்தனே முதல்வா தில்லை அம்பலத் தாடு கின்ற
அத்தாவுன் ஆடல்காண்பான் அடியனேன் வந்த வாறே"—தேவாரம்.

நீடிய மணியின் சோதி ‡நிறைதிரு முன்றின் மாடும்
§ஆடுயர் கொடிசூழ் பொற்றே ¶அணிதிரு வீதி யுள்ளும்
கூடிய பணிகள் செய்து கும்பிடுந் தொழில ராகிப்
பாடிய புனித வாக்கின் பணிகளும் பயிலச் செய்வார். கஎ0

அருட்பெரு மகிழ்ச்சி பொங்க "அன்னம்பா லிக்கும்" என்னும்
திருக்குறுந் தொகைகள் பாடித் திருவுழ வாரங் கொண்டு
பெருத்தெழு காத லோடும் பெருந்திருத் தொண்டு செய்து
விருப்புறு மேனி கண்ணீர் வெண்ணீ ற்று வண்ட லாட. கஎக

" அன்னம் பாலிக்குந் தில்லைச்சிற் றம்பலம்
பொன்னம் பாலிக்கு மேலும்இப் பூமிசை
என்னன் பாலிக்கு மாறுகொண் டின்புற
இன்னம் பாலிக்கு மோஇப் பிறவியே"—தேவாரம்.

---

கசுஅ. " தில்லையுட் சிற்றம்பலத்து நட்டம், என்று வந்தாய் என்னும் எம்பெருமான்தன் திருக்குறிப்பே"—அப்பர்: கோயில் திருவிருத்தம். உ. மன்றுடும் - பொன்னம்பலத்தில் நடம் புரியும்.

கஎ0. முன்றின் மாடும் - திருமுற்றத்தினிடத்தும். பயில - நிரம்ப.

கஎக. கண்ணீர் திருநீற்றில் வண்டலாட ; மகளிர்கள் சுண்ணத்துடன் நீர் கலந்து ஒருவர்மீது ஒருவர் தெறித்து வண்டலாட்டயர்தல் போலத் திருநாவுக்கரசரின் ஆனந்தக் கண்ணீர் திருநீற்றுடன் கலந்து ஒழுகுதலை "வண்டலாட" என்றார்.

பா - ம்—*கடைவிழி. †அன்புறு. ‡நிறைதரு. §மாடுயர். ¶மாமணி.

மேவிய பணிகள் செய்து விளங்குநாள் வேட்க ளத்துச்
சேவுயர் கொடியார் தம்மைச் சென்றுமுன் வணங்கிப் பாடிக்
காவியங் கண்டர் மன்னுந் திருக்கழிப் பாலை தன்னில்
நாவினுக் கரசர் சென்று நண்ணினர் மண்ணோர் வாழ. ௧௭௨

வேறு

சினவிடையே றுகைத்தேறும் மணவாள நம்பிகழல் சென்று தாழ்ந்து
"வனபவள வாய்திறந்து வானவர்க்குந் தானவனே என்கின் றா"ளென்
றனையதிருப் பதிகமுடன் அன்புறுவண் தமிழ்பாடி அங்கு வைகி
நினைவரியார் தமைப்போற்றி நீடுதிருப் புலியூரை நினைந்து மீள்வார்.

"வனபவள வாய்திறந்து வானவர்க்குந் தானவனே என்கின் றாளால்
சினபவளத் திரள்தோள்மேற் சேர்ந்திலங்கு வெண்ணீற்றன் என்கின் றாளால்
அனபவள மேகலையோ டப்பாலைக் கப்பாலான் என்கின் றாளால்
கனபவளஞ் சிந்துங் கழிப்பாலைச் சேர்வானைக் கண்டாள் கொல்லோ"
—தேவாரம்.

மனைப்படப்பிற் கடற்கொழுந்து வளைசொரியுங் கழிப்பாலை மருங்கு நீங்கி, நனைச்சினைமென் குளிர்ஞாழற் பொழிலூடு வழிக் கொண்டு நண்ணும் போதில், "நினைப்பவர்தம் மனங்கோயில் கொண் டருளும் அம்பலத்து நிருத்த னுரைத், தினைத்தனையாம் பொழுதும் மறந் துய்வனோ" எனப்பாடித் தில்லை சார்ந்தார். ௧௭௪

"பனைக்கை மும்மத வேழம் உரித்தவன்
நினைப்ப வர்மனங் கோயிலாக் கொண்டவன்
அனைத்தும் வேடமாம் அம்பலக் கூத்தனைத்
தினைத்த னைப்பொழு தும்மறந் துய்வனோ"—தேவாரம்.

"அரியானை" என்றெடுத்தே அடியவருக் கெளியானை அவர்தஞ் சிந்தை
பிரியாத பெரியதிருத் தாண்டகச்செந் தமிழ்பாடிப் பிறங்கு சோதி

---

௧௭௨. இடபக் கொடியாராகிய சிவபெருமானை. காவியங் கண்டர் - திருநீலகண்டராகிய சிவபெருமானை.

௧௭௩. விடை ஏறு உகைத்து ஏறும் மணவாள நம்பி - இடபத்தைச் செலுத்தி ஏறும் சிவபிரான். சிதம்பரத்தை நினைந்து.

௧௭௪. மனை......சொரியும் - புழைக் கடையில் கடல் அலைகள் சங்குகளைச் சொரியும். நனைசினை - அரும்புகளையுடைய கிளைகளில். ஞாழற் பொழிலூடு - சுரபுன்னைச் சோலை வழியாக ; ஞாழல் - புலிநகக் கொன்றையுமாம்.

௧௭௫. பிறங்கு சோதி - பெருகொளி.

விரியாநின் றெவ்வுலகும் *விளங்கியபொன் னம்பலத்து மேவி ஆடல்
புரியாநின் றவர்தம்மைப்பணிந்துதமிழாற்பின்னும்போற்றல்செய்வார்.

“அரியானை அந்தணர்தஞ் சிந்தை யானை அருமறையின் அகத்தானை அணுவை யார்க்குந், தெரியாத தத்துவனைத் தேனைப் பாலைத் திகழொளியைத் தேவர்கள்தங் கோனை மற்றைக்,கரியானை நான்முகனைக் கனலைக்காற் றைக் கனைகடலைக் குலவரையைக் கலந்து நின்ற, பெரியானைப் பெரும்பற் றப் புலியூ ரானைப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே”—**தேவாரம்.**

“செஞ்சடைக் கற்றைமுற்றத் திளநிலா எறிக்கும்” எனுஞ்சிறந்த வாய்மை
அஞ்சொல்வளத் தமிழ்மாலை அதிசயமாம் படிபாடி அன்பு சூழ்ந்த
நெஞ்சுருகப் பொழிபுனல்வார் கண்ணிணையும் பரவியசொல் நிறைந்த வாயும்
தஞ்செயலின் ஒழியாத திருப்பணியும் மாறாது சாரும் நாளில். ௧௭௬

“செஞ்சடைக் கற்றை முற்றத் திளநிலா எறிக்குஞ் சென்னி
நஞ்சடை கண்ட னாரைக் காணலாம் நறவம் நாறும்
மஞ்சடை சோலைத் தில்லை மல்குசிற் றம்ப லத்தே
துஞ்சடை இருள்கிழியத் துளங்கெரி யாடு மாறே”—**தேவாரம்.**

கடையுகத்தில் ஆழியின்மேல் மிதந்ததிருக் கழுமலத்தின் இருந்த செங்கண், †விடையுகைத்தார் திருவருளால் வெற்பரையன் பாவைதிரு முலைப்பா லோடும், அடையநிறை சிவம்பெருக வளர்ஞானங் குழைத்தூட்ட அமுது செய்த, உடையமறைப் பிள்ளையார் திரு வார்த்தை அடியார்கள் உரைப்பக் கேட்டார். ௧௭௭

ஆழிவிடம் உண்டவரை அம்மை‡திருப் பாலமுதம் உண்ட போதே, ஏழிசைவண் தமிழ்மாலை “இவனெம்மான்” எனக்காட்டி இயம்ப வல்ல, காழிவரும் பெருந்தகைசீர் கேட்டலுமே அதிசயமாங் காதல் கூர, வாழியவர் மலர்க்கழல்கள் வணங்குதற்கு மனத்தெழுந்த விருப்பு வாய்ப்ப. ௧௭௮

அப்பொழுதே அம்பலத்துள் ஆடுகின்ற கழல்வணங்கி அருள் முன் பெற்றுப், பொய்ப்பிறவிப் பிணியோட்டுந் திருவீதி புரண்டு வலங் கொண்டு போந்தே, எப்புவனங் களும்நிறைந்த திருப்பதியின்

---

௧௭௭. யுகமுடிவில் கடலின்மீது மிதந்த. திருக்கழுமலம் - சீகாழிக்கொரு பெயர். கற்பாந்தத்திலுஞ் சீகாழி கடலில் மிதத்தலால் அதற்குத் தோணிபுரம் என்றொரு பெயருண்டு. வெற்பரையன் பாவை - உமாதேவியார். அடைய - எங்கும். பிள்ளையார் - திருஞான சம்பந்தர்.

௧௭௮. ஆழி விடம் உண்டவரை - சிவபெருமானை.

**பா - ம்**—*விளக்கிய. †விடையுயர்த்தார். ‡திரு முலையமுதம்.

எல்லையினை இறைஞ்சி ஏத்திச், செப்பரிய பெருமையினார் திருநாரையூர்பணிந்து பாடிச் செல்வார். கஎகூ

தொண்டர்குழாம் புடைசூழத் தொழுதகரத் தொடுநீறு துதைந்த கோலங், கண்டவர்தம் மனங்கசிந்து கரைந்துருகுங் கருணைபுறம் பொழிந்து காட்டத், தெண்திரைவாய்க் கல்மிதப்பில் உகைத்தேறுந் திருநாவுக் கரசர் தாமும், வண்தமிழால் எழுதுமறைமொழிந்தபிரான் திருப்புகலி மருங்கு சார்ந்தார். கஅ0

நீண்டவரை வில்லியார் வெஞ்சூலை மடுத்தருளி நேரே முன்னாள்
ஆண்டஅர செழுந்தருளக் கேட்டருளி ஆளுடைய பிள்ளை யாரும்
காண்டகைய பெருவிருப்புக் கைம்மிக்க திருவுள்ளக் கருத்தி னோடு
மூண்டஅருள் மனத்தன்பர் புடைசூழ எழுந்தருளி முன்னே வந்தார்.

தொழுதணைவுற் றாண்டஅர சன்புருகத் தொண்டர்குழாத் திடையே சென்று, பழுதில்பெருங் காதலுடன் அடிபணியப் பணிந்தவர்தங் கரங்கள் பற்றி, எழுதரிய மலர்க்கையால் எடுத்திறைஞ்சி விடையின்மேல் வருவார் தம்மை, அழுதழைத்துக் கொண்டவர்தாம் "அப்பரே" எனஅவரும் "அடியேன்" என்றார். கஅஉ

அம்பிகைசெம் பொற்கிண்ணத் தமுதஞா னங்கொடுப்ப அழுகைதீர்ந்த, செம்பவள வாய்ப்பிள்ளை திருநாவுக் கரசரெனச் சிறந்த

கஎகூ. சிதாகாசம் எங்கும் நிறைந்த தாகலானும், அதற்கு அறிகுறியாகச் சிதம்பரம் விளங்குதலானும் "எப்புவனங்களும் நிறைந்த திருப்பதி" என்றார்.

கஅ0. துதைந்த - நெருங்கிய. தெள்ளிய கடலிடத்துக் கல்லாகிய தெப்பத்தைச் செலுத்தி ஏறிய. மறை ஒலியா யிருப்பது; அது வரிவடிவில் இறங்கும்போது எழுது மறையாகிறது. பிரான் திருப்புகலி - திருஞானசம்பந்தர் அவதரித்த சீகாழியின்.

கஅக. நீண்ட மேருவை வில்லாக உடைய சிவபெருமான். மடுத்து - செலுத்தி. ஆளுடைய பிள்ளையாரும் - திருஞான சம்பந்தப் பெருமானும். கை - ஒழுங்கு; ஒழுக்கம்.

கஅஉ. ......கொண்டவர் தாம் - திருஞான சம்பந்தப் பெருமான். திருநாவுக்கரசர் வயதில் முதிர்ந்தவர்; அன்பில் முதிர்ந்தவர். அவர் முதலில் திருஞான சம்பந்தர் காலில் விழுந்து விட்டனர். அது கண்ட திருஞான சம்பந்தர் இறைஞ்சி 'என் தந்தையாரே' என்ற பொருள் படும்படி "அப்பரே" என்று சிறப்பித்தார்.

கஅங. திருஞான சம்பந்தர் திருநாவுக்கரசர் எனச் சிறந்த சீர்த்தி எம்பெரு மக்களும் சேர்ந்த திருக்கூட்டத்திலுள்ள. உம்பர்களும் - தேவர்களும்.

பா - ம்—*தெய்வமறை.

சீர்த்தி, எம்பெருமக் களும்இயைந்த கூட்டத்தில் அரனடியார் இன்பம் எய்தி, உம்பர்களும் போற்றிசைப்பச் சிவம்பெருகும் ஒலிநிறைத்தார் உலகம் எல்லாம். கஅ௩

"பிள்ளையார் கழல்வணங்கப் பெற்றேன் "என் றரசுவப்பப் பெருகு ஞான, வள்ளலார் வாகீசர் தமைவணங்கப் பெற்றதற்கு மகிழ்ச்சி பொங்க, உள்ளநிறை காதலினால் ஒருவரோரு வரிற்கலந்த உண்மை யோமே், வெள்ளநீர்த் திருத்தோணி வீற்றிருந்தார் கழல் வணங்கும் விருப்பின் மிக்கார். கஅச

வேறு

அருட்பெருகு தனிக்கடலும் *உலகுக் கெல்லாம் அன்புசெறி கடலுமாம் எனவும் †ஓங்கும், பொருட்சமய முதற்சைவ நெறிதான் பெற்ற புண்ணியக்கண் ணிரண்டெனவும் புவனம் உய்ய, இருட்கடவுண் டவர்அருளும் அகிலம் எல்லாம் ஈன்றாள்தன் திருவருளும் எனவுங் கூடித், தெருட்கலைஞா னக்கன்றும் அரசுஞ் சென்று செஞ்சடைவா னவர்கோயில் சேர்ந்தார் அன்றே. கஅ௫

புண்பயில்வண் டறைசோலை சூழுங் காழிப் பரமர்திருக் கோபுரத்தைப் பணிந்துள் புக்கு, விண்பணிய ஓங்குபெரு விமானந் தன்னை வலங்கொண்டு தொழுதுவிழுந் தெழுந்த எல்லைச், சண்பைவரு பிள்ளையார் "அப்பர் உங்கள் தம்பிரா னரைநீர் பாடீர்"என்னக், கண்பயிலும் புனல்பொழிய அரசும் வாய்மைக் கலைபயிலும் மொழிபொழியக் கசிந்து பாடி. கஅ௬

---

கஅச. திருத்தோணிபுரம் - கஎஎ : குறிப்புப் பார்க்க. திருத்தோணிபுரத்தில் வீற்றிருந்தருளுஞ் சிவபிரான் திருவடிகளை வணங்கும்.

கஅ௫. ஓங்கும் பொருட் சமய முதலாகிய—1349:குறிப்புப் பார்க்க. இருள் கடு - கரிய நஞ்சை. சிவனருளும் சத்தியருளும் என்றபடி. தெருள் - தெளிந்த. கன்றும் - திருஞான சம்பந்தரும். சிவமுஞ் சத்தியும் ஒன்றே. அவ்வொன்றை இரண்டாகக் கூறுவது உபசாரம். அது போலத் திருநாவுக்கரசரும் திருஞான சம்பந்தரும் வடிவால் வேறுபட் டிருப்பினும் திருவருளில் இருவரும் ஒருவர் என்னுங் கருத்து ஈண்டு விளக்கப்பட்டிருக்கிறது.

கஅ௬. சண்பை - சீகாழிக்கு ஒரு பெயர். அப்பரே. கண் பயிலும் புனல் - கண்ணிரம்பிய நீர்.

பா - ம்—*உலகமெல்லாம் அன்புநிறை கடலுமாம்; உலகுக் கெல்லாம் அன்புநிறை கடலுமெனவாகி ஓங்கும். †பொங்கும்.

பெரியபெரு மாட்டியுடன் தோணி மீது பேணிவீற் றிருந்தரு ளும்பிரான்முன் நின்று, பரிவுறுசெந் தமிழ்மாலை பத்தி யோடும் "பார்கொண்டு மூடி"எனும் பதிகம் போற்றி, அரியவகை புறம் போந்து பிள்ளை யார்தந் திருமடத்தில் எழுந்தருளி அமுது செய்து, மருவியநண் புறுகேண்மை அற்றை நாள்போல் வளர்ந்தோங்க உடன் பலநாள் வைகும் நாளில். கஅஎ

"பார்கொண்டு மூடிக் கடல்கொண்ட ஞான்றுநின் பாதமெல்லாம்
நாலஞ்சு புள்ளினம் ஏந்தின என்பர் நளிர்மதியங்
கால்கொண்ட வண்கைச் சடைவிரித் தாடுங் கழுமலவர்க்
காளன்றி மற்றுமுண் டோஅந்த ஞான்று அகலிடமே"—**தேவாரம்.**

அத்தன்மை பயில்அரசும் பிள்ளை யாரும் அளவளா வியமகிழ்ச்சி அளவி லாத, சித்த*நெகிழ்ச் சியினோடு செல்லும் நாளில் திருநாவுக் கரசுதிரு வுள்ளந் தன்னில், மைத்தழையும் மணிமிடற்றார் பொன்னி நாட்டு மன்னியதா னங்களெல்லாம் வணங்கிப் போற்ற, மெய்த் தெழுந்த பெருங்காதல் பிள்ளை யார்க்கு விளம்புதலும் அவருமது மேவி நேர்வார். கஅஅ

ஆண்டஅர செழுந்தருளக் கோலக் காவை அவரோடுஞ் சென் றிறைஞ்சி அன்பு கொண்டு, மீண்டருளி னார்அவரும் விடைகொண் டிப்பால் வேதநா யகர்விரும்பும் பதிக ளான, நீண்டகருப் பறியலூர் புன்கூர் நீடூர் †நீடுதிருக் குறுக்கைதிரு நின்றி யூருங், காண்டகைய நனிபள்ளி முதலாய் நண்ணிக் கண்ணுதலார் கழல்தொழுது கலந்து செல்வார். கஅகூ

மேவுபுனற் பொன்னியிரு கரையுஞ் சார்ந்து ‡விடையுயர்த்தார் திருச்செம்பொன் பள்ளி பாடிக், காவுயரு மயிலாடு துறைநீள் பொன் னிக் கரைத்துருத்தி வேள்விகுடி எதிர்கொள் பாடி, பாவுறுசெந் தமிழ்மாலை பாடிப் போற்றிப் பரமர்திருப் §பதிபலவும் பணிந்து

---

கஅஎ. பெரிய பெருமாட்டி - பெரிய நாயகி; சீகாழி அம்மையாரின் பெயர். கேண்மை - உறவு; அன்பு.

கஅஅ. பொன்னி நாட்டு - காவிரி நாட்டில்; சோழ நாட்டில். அது மேவி நேர்வார் - அதற்கு உடன்படுவாரானார்.

ககூ0. விடைக்கொடி யுடையார். கா - சோலை. ஆவுறும் அஞ்சு - பஞ்ச கவ்வியம்.

**பா - ம்**—*மகிழ்ச். †திருக்குறுக்கை நீடுதிரு நின்றியூருங். ‡விடை யுகைத்தார். §பதிபிறவும்.

போந்தே, ஆவுறும்அஞ் சாடுவார் கோடி காவில் அணைந்துபணிந் தாவடு தண் டுறையைச் சார்ந்தார். ௧௧௦

"ஆவடுதண் டுறையாரை அடைந்துய்ந் தேன்" என் றளவில்திருத் தாண்டகமுன் அருளிச் செய்து, மேவுதிருக் குறுந்தொகைநே ரிசையுஞ் சந்த விருத்தங்க ளானவையும் வேறு வேறு, பாவலர்செந் தமிழ்த் தொடையாற் பள்ளித் தாமம் பலசாத்தி மிக்கெழுந்த பரிவி னோடும், பூவலயத் தவர்பரவப் பலநாள் தங்கிப் *புரிவுறுகைத் திருத்தொண்டு போற்றிச் செய்வார். ௧௧௧

"நம்பனை நால்வேதங் கரைகண் டானை ஞானப் பெருங்கடலை நன்மை தன்னைக், கம்பனைக் கல்லா லிருந்தான் தன்னைக் கற்பகமாய் அடியார்கட் கருள்செய் வானைச், செம்பொன்னைப் பவளத்தைத் திரளு முத்தைத் திங்களை ஞாயிற்றைத் தீயை நீரை, அம்பொன்னை ஆவடுதண் டுறையுள் மேய அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே"—**தேவாரம்.**

எறிபுனல்பொன் மணிசிதறுந் †திரைநீர்ப் பொன்னி இடைமருதைச் சென்றெய்தி அன்பி னோடு, மறிவிரவு கரத்தாரை வணங்கி வைகி வண்தமிழ்ப்பா மாலைபல மகிழச் சாத்திப், பொறியரவம் புனைந் தாரைத் திருநாகேச் சுரத்துப் போற்றியருந் தமிழ்மாலை புனைந்து போந்து, செறிவிரைநன் மலர்ச்சோலைப் பழையா றெய்தித் திருச் சத்தி ‡முற்றத்திற் சென்று சேர்ந்தார். ௧௧௨

### வேறு

சென்று சேர்ந்து திருச்சத்தி முற்றத் திருந்த சிவக்கொழுந்தைக்
குன்ற மகள்தன் மனக்காதல் குலவும் பூசை கொண்டருளும்
என்றும் இனிய பெருமானை இறைஞ்சி இயல்பில் திருப்பணிகள்
முன்றில் அணைந்து செய்துதமிழ் மொழிமா லைகளுஞ் சாத்துவார்.

"கோவாய் முடுகி" என்றெடுத்துக் "கூற்றம் வந்து குமைப்பதன்முன்
பூவா ரடிகள் என்தலைமேல் பொறித்து வைப்பாய்" எனப்புகன்று

---

௧௧௧. தமிழ்த் தொடையலாகிய பள்ளித் தாமம்; தமிழால் தொடுக்கப் பட்ட மாலை; **எறிபத்த நாயனார் புராணம்:** ௧. குறிப்புப் பார்க்க. பூவலயத் தவர் - பூமியிலுள்ளவர். புரிவுறு - விருப்புறும்.

௧௧௨. மறி - மான். பொறி - புள்ளி.

௧௧௩. பார்வதி பூசித்த திருப்பதி.

௧௧௪. கோவாய் - இடியாய்; அம்பாய், வச்சிரமாய் எனினுமாம். கூற்றம் - யமன். குமைப்பதன் முன் - அழிப்பதன் முன். பூ ஆர் - பூப்போன்ற.

**பா - ம்**—*பரிவுறு நற். †கரை. ‡முற்றத்தைச்.

நாவார் பதிகம் பாடுதலும் நாதன் தானும் நல்லூரில்
"வாவா" என்றே அருள்செய்ய வணங்கி மகிழ்ந்து வாகீசர். ௧௧௬௪

"கோவாய் முடுகி அடுதிறற் கூற்றங் குமைப்பதன்முன்
பூவா ரடிச்சுவ டேன்மேற் பொறித்துவை போகவிடின்
மூவா முழுப்பழி மூடுங்கண் டாய்முழங் குந்தழற்கைத்
தேவா திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே"—தேவாரம்.

வேறு

நன்மைபெரு கருள்நெறியே வந்தணைந்து நல்லூரில்
மன்னுதிருத் தொண்டனார் வணங்கிமகிழ்ந் தெழும்பொழுதில்
"உன்னுடைய நினைப்பதனை முடிக்கின்றோம்" என்றவர்தஞ்
சென்னிமிசைப் பாதமலர் சூட்டினான் சிவபெருமான். ௧௧௬௫

"நினைந்தனைய திருவடிஎன் தலைமேல்வைத் தார்"என்று
புனைந்ததிருத் தாண்டகத்தால் போற்றிசைத்துப் புனிதரருள்
நினைந்துருகி விழுந்தெழுந்து நிறைந்துமலர்ந் தொழியாத
தனம்பெரிதும் பெற்றுவந்த வறியோன்போல் மனந்தழைத்தார். ௧௧௬௬

"நினைந்துருகும் அடியாரை நைய வைத்தார் நில்லாமே தீவினைகள் நீங்க வைத்தார், சினந்திருகு களிற்றுரிவைப் போர்வை வைத்தார் செழு மதியின் தளிர்வைத்தார் சிறந்து வானோர், இனந்துருவி மணிமகுடத் தேறத் துற்ற இனமலர்கள் போதவிழ்ந்து மதுவாய்ப் பில்கி, நனைந்தனைய திருவடியென் தலைமேல் வைத்தார் நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே"—தேவாரம்.

நாவுக்கு மன்னர்திரு நல்லூரில் நம்பர்பால்
மேவுற்ற திருப்பணிகள் மேவுறநா ளுஞ்செய்து
பாவுற்ற தமிழ்மாலை பலபாடிப் பணிந்தேத்தித்
தேவுற்ற திருத்தொண்டு செய்தொழுகிச் செல்லுநாள். ௧௧௬௭

கருகாவூர் முதலாகக் கண்ணுதலோன் அமர்ந்தருளுந்
திருவாவூர் திருப்பாலைத் துறை*பிறவுஞ் சென்றிறைஞ்சிப்
பெருகார்வத் திருத்தொண்டு செய்துபெருந் திருநல்லூர்
ஒருகாலும் பிரியாதே உள்ளுருகிப் பணிகின்றார். ௧௧௬௮

---

௧௧௬௬. "காலனை வீழச் செற்ற கழலடி இரண்டும் வந்தென் மேலவா இருக்கப் பெற்றேன்"—அப்பர்: திருநெய்த்தானத் திருநேரிசை ௧. பெற்று உவந்த. ௧௧௬௭. தேவுற்ற - தெய்விகம் பொருந்திய.

பா - ம்—*பலவுஞ்.

ஆளுடைய நாயகன்றன் அருள்பெற்றங் ககன்றுபோய்
வாளைபாய் புனற்பழனத் திருப்பழன மருங்கணைந்து
காளவிடம் உண்டிருண்ட கண்டர்பணிக் கலன்பூண்டு
நீளிரவில் ஆடுவோர் கழல்வணங்க நேர்பெற்றார். ௧௬௬

௧௬௬. புனற்பழனம் - நீர்நிரம்பிய பொய்கைகள் சூழ்ந்த. பணிக்கலன் - பாம்பாபரணம். பின்னிரண்டு அடிகளிலுள்ள தத்துவ நுட்பங்கள் வருமாறு:—உலகில் உயிர்கட்கு அறிவும் அறியாமையும், நினைப்பும் மறப்பும், இன்பமும் துன்பமும், ஒளியும் இருளும் கலந்திருத்தலும், முழு அறிவோ முழு அறியாமையோ, முழுநினைப்போ முழுமறப்போ, முழு இன்பமோ முழுத்துன்பமோ, முழு ஒளியோ முழு இருளோ இன்மையும் வெள்ளிடைமலை. இவைகளைக் கொண்டு உயிர்கட்கு முழுஅறிவுநிலையும் முழுஅறியாமைநிலையும், முழுநினைப்புநிலையும் முழுமறப்புநிலையும், முழுஇன்பநிலையும் முழுத் துன்பநிலையும், முழுஒளி நிலையும் முழுஇருள் நிலையும் இருத்தல் வேண்டுமென்று ஊகித் துணர்தற்கு இடனுண்டு. (அறிவு - நினைப்பு - இன்பம் - ஒளி- இவை எல்லாம் ஒன்று; அறியாமை - மறப்பு - துன்பம் - இருள் - இவை எல்லாம் ஒன்று). உயிர்கள் முழு ஒளியினின்றும் பிறவிதாங்கி யிருக்குமா, அல்லது முழு இருளினின்றும் பிறவிதாங்கி யிருக்குமா என்பது சிந்திக்கற்பாலது. இன்பத்திலுள்ள ஒருவன் துன்பத்தை நாடுதலில்லை; துன்பத்திலுள்ள ஒருவன் இன்பத்தை நாடுதல் இயல்பு. ஆகவே, உயிர்கள் முழு இருளினின்றுமே ஈண்டுப் பிறவி தாங்கி யிருத்தல் வேண்டும் என்பது தேற்றம். இவ்வுலகில் உயிர்கள் பிறவி தாங்கியதும் அவைகட்குச் சிறிது இருள் விலகுகிறது; சிறிது ஒளி விளங்குகிறது. இச் சிற்றொளியினின்றும் பேரொளியை அடைய வேண்டுவது உயிர்களின் கடமை. உயிர்கள் முழு இருளில் கட்டுண்டு கிடக்கும்போது அவைகட்கு அறிவு செயல் அரும்புவதில்லை; ("காரிட்ட ஆணவக் கருவறையில் அறிவற்ற கண்ணிலாக் குழவியைப்போல் கட்டுண்டிருந்த எமை வெளியில் விட்டு......சின்மயானந்த குருவே"—தாயுமானார்). அறிவு செயல் அரும்புதற்குக் கட்டில்லாத முழுஅறிவுடைய ஒன்றன் துணை தேவையாகிறது. அம்முழு அறிவே சிவம் என்பது. முற்றறிவாகிய சிவம் உயிர்கள்பொருட்டு என் செய்கிறது? கருணை நடம்புரிந்தவண்ணமா யிருக்கிறது. அந்நடம் பலதிறநிலையிலுள்ள உயிர்கட்குப் பலப்பல விதமாகப் பயன்படுகிறது. முழு இருளிலுள்ள உயிர்கட்கும் அது பயன்படுவதாகிறது. அவ்வுயிர்கள் சிவத்தின் நடனத்தால் அறிவு செயல் பெறும் நிலையைப் பெறுகின்றன; அதாவது தனு கரண புவன போகங்களைப் பெறுகின்றன என்பது. முழு இருளில் அறிவு செயல் விளக்கமின்றிக் கிடக்கும் உயிர்கள் பொருட்டும் ஆண்டவன் நடம் புரிவது அவனது கைம்மாறற்ற கருணைப்பெருக்கைப் புலப்படுத்துவதாகும். முழுஇருள் என்பது ஆணவ இருளைக் குறிப்பது. அதனை இங்கே "நீளிரவு" என்றார். மேலும் உயிர்களின் அகமலரில் ஆண்டவன் நடம்புரிந்து துணைசெய்வதும் ஈண்டுக்கொள்ளற்பாலது. ஆண்டவன் திருநடம் விழிப்பில் துணைசெய்வதேபோல் உறக்கத்தி

அப்பதியைச் சூழ்ந்ததிருப் பதியில்அர ணூர்மகிழும்
ஒப்பரிய தானங்கள் உள்ளுருகிப் பணிந்தணைவார்
மெய்ப்பொருள்தேர் நாவினுக்கு வேந்தர்தாம் மேவினூர்
செப்பருஞ்சீர் அப்பூதி அடிகளூர் திங்களூர். உ௦௦

அந்தணரின் மேம்பட்ட அப்பூதி அடிகளார்
தந்தனய ருடன்சாலை கூவல்குளந் தருதண்ணீர்ப்
பந்தர்பல ஆண்டஅர செனும்பெயரால் பண்ணினமை
வந்தணைந்த வாகீசர் கேட்டவர்தம் மனைநண்ண. உ௦க

மற்றவரும் மனமகிழ்ந்து மனைவியார் மைந்தர்பெருஞ்
சுற்றமுடன் களிகூரத் தொழுதெழுந்து சூழ்ந்துமொழிக்
கொற்றவரை அமுதுசெயக் குறைகொள்வார் இறைகொள்ளப்
பெற்றபெருந் தவத்தொண்டர் திருவுள்ளம் பெறப்பெற்றார்.

லும் துணை செய்கிறது. உறக்கத்தில் தத்துவங்கள் படிப்படியாக ஒடுங்குகின்றன. அக்காலத்தும் அகமலர் (இருதயம்) இயங்குகிறது. அந்நிலையிலும் ஆண்டவன் நடம் அகமலரை இயக்கா நிற்கிறது. "நள்ளிரவில் நட்டம் பயின்றாடும் நாதனே"; "கூரிருட் கூத்தொடு குனிப்பான்"—திருவாசகம்: சிவபுராணம்: அக; திருவண்டப்பகுதி க௦உ. புறச்சிதம்பர மென்னும் தில்லையில் நள்ளிரவில் இறைவனுக்குப் பூசை நடைபெறுதல் ஈண்டுக் கருதற்பாலது.

நள்ளிருளில் சிவம்நட்டம் பயிலப்பயில, உயிர்கள் அறிவுசெயல்பெறத் தனு கரணபுவன போகங்களைத் தாங்குகின்றன. அத்தனு முதலியன மாயாகாரியங்கள். மாயையைக் காரியப்படுத்துவதும் ஆண்டவன் நடமேயாகும். ஆண்டவன் நடத்தால் மாயை மண்டில மண்டிலமாகச் சுழன்று சுழன்று இயங்கலான், அதைப் பாம்பெனக் கூறுவது கவிமரபு. இங்கே "பணிக்கலன்" என்றது பாம்பு போல் மண்டிலமிடும் மாயையை என்க.

ஆண்டவனது அற்புத நடம், முழு இருளிலுள்ள உயிர்கள் அறிவு செயல் விளங்கத் தனு முதலியவற்றைப் பெறுதற்குத் துணை செய்வது போலவே, அவ்வுயிர்கள் முழு ஒளி பெறுதற்குந் துணை செய்கிறது. அதனை இங்கே "களவிடம் உண்டு இருண்ட கண்டர்" என்றார். உயிர்கள் தனு முதலியவற்றைப் பெற்றுச் சிறிது இருள் நீங்கிச் சிறிது ஒளி பெற்ற நிலையிலும் சில குற்றங்கள் செய்துவிடும். அவைகளை நினைந்து உயிர்கள் இரங்கும்போது, அவைகளைக் கருணைக்கடலாகிய ஆண்டவனே ஏற்று உயிர்கட்கு நடனத்தால் ஆனந்தமூட்டுவன். உயிர்களின் குற்றம் "களவிடம்" என்பது.

உ௦க. அப்பூதியடிகள் சாதிச்செருக்கின்றி அன்பில் திளைத்துத் திருநாவுக்கரசரைக் குருவாகக் கொண்டவராதலின் "அந்தணரின் மேம்பட்ட அப்பூதி அடிகளார்" எனப்பட்டார். தனயருடன் - புதல்வர்களுடன். சாலை - அறச்சாலைகள். கூவல் - கிணறுகள். தரு - நிழல்மரங்கள்.

உ௦உ. மொழிக்கொற்றவரை - திருநாவுக்கரசரை. குறைகொள்வார் - குறையிரந்து வேண்டுதல் செய்வார். இறை - விடை. இறை - சிவபெருமானுமாம். இறைவனால் ஆட்கொள்ளப்பெற்ற......என்றபடி. திருவுள்ளம் - சம்மதம்.

காண்டகைமை இன்றியும்முன் கலந்தபெருங் கேண்மையினார்
பூண்டபெருங் காதலுடன் போனகமுங் கறியமுதும்
வேண்டுவன வெவ்வேறு விதங்கள்பெற விருப்பினால்
ஆண்டஅர சமுதுசெயத் திருஅமுதாம் படிஅமைத்து. ௨0௩

திருநாவுக் கரசமுது செய்தருள மற்றவர்தம்
பெருநாமஞ் சாத்தியஅப் பிள்ளைதனை *அழைத்தன்பு
தருஞானத் திருமறையோர் தண்டலையின் வண்கதலிக்
குருநாளக் குருத்தரிந்து கொண்டுவரத் தனிவிட்டார். ௨0௪

ஆங்கவனும் விரைந்தெய்தி அம்மருங்கு தாழாதே
பூங்கதலிக் குருத்தரியப் புகும்அளவில் ஒருநாகம்
தீங்கிழைக்க அதுபேணான் திருஅமுது செய்தருள
ஓங்குகத விக்குருத்துக் கொண்டொல்லை வந்தணைந்தான். ௨0௫

தீயவிடந் தலைக்கொள்ளத் தெருமந்து செழுங்குருத்தைத்
தாயர்கரத் தினில்நீட்டித் தளர்ந்துதனைத் †தழல்நாகம்
மேயபடி ‡உரைசெய்யான் விழக்கண்டு "கெட்டொழிந்தேம்
தூயவர்இங் கமுதுசெயத் தொடங்கார்"என் றதுஒளித்தார்.

தம்புதல்வன் சவம்மறைத்துத் தடுமாற்றம் இலராகி
"எம்பெருமான்! அமுதுசெய வேண்டும்"என வந்திறைஞ்ச
உம்பர்பிரான் திருத்தொண்டர் உள்ளத்தில் தடுமாற்றம்
நம்பர்திரு வருளாலே அறிந்தருளி நவைதீர்ப்பார். ௨0௭

அன்றவர்கள் மறைத்ததனுக் களவிறந்த கருணையராய்க்
கொன்றைநறுஞ் சடையார்தங் கோயிலின்முன் கொணர்வித்தே

௨0௩. கேண்மையினார் - ஆன்ம நேயம் பூண்ட அப்பூதியார். போனக
மும் - சோறும்.

௨0௪. அத்திருநாவுக்கரசரின் பெயரைச் சூட்டியுள்ள. தண்டலையின்...
அரிந்து - தோட்டத்தில் வளப்பமுடைய வாழையின் நிறமுள்ள தண்டமைந்த
குருத்தை அரிந்து.

௨0௫. பேணான் - பொருட்படுத்தாதவனாய்.

௨0௬. தெருமந்து - சுழன்று. தன்னைத் தழல் நாகம் தீண்டிய விதத்தை.
து - பிணத்தை.

௨0௭. எம்பெருமானே. நவை - துன்பத்தை ; குறைபாட்டை.

௨0அ உடையான் - சிவபெருமான்.

பா - ம்—*அழைத்தந்தத். †தழலரவம். ‡உரைசெய்து.

"ஒன்றுகொலாம்" எனப்பதிகம் எடுத்துடையான் சீர்பாடப்
பின்றைவிடம் போய்நீங்கிப் பிள்ளையுணர்ந் தெழுந்திருந்தான்.

"ஒன்றுகொ லாம்அவர் சிந்தை உயர்வரை
ஒன்றுகொ லாம்உய ரும்மதி சூடுவர்
ஒன்றுகொ லாம்இடு வெண்தலை கையது
ஒன்றுகொ லாம்அவர் ஊர்வது தானே"—தேவாரம்.

அருந்தனயன் உயிர்பெற்ற அதுகண்டும் அமுதுசெயா
திருந்ததற்குத் தளர்வெய்தி இடருழந்தார் துயர்நீங்க
வருந்துமவர் மனைப்புகுந்து வாகீசத் திருமுனிவர்
விருந்தமுது செய்தருளி விருப்பினுடன் மேவுநாள். ௨௦௯

திங்களூர் தனில்நின்றுந் திருமறையோர் பின்செல்லப்
பைங்கண்விடைத் தனிப்பாகர் திருப்பழனப் பதிபுகுந்து
தங்குபெருங் காதலொடுந் தம்பெருமான் கழல்சார்ந்து
பொங்கிய*அன் புறவணங்கி முன்னின்று போற்றிசைப்பார். ௨௧௦

புடைமாலை மதிக்கண்ணிப் புரிசடையார் பொற்கழற்கீழ்
அடைமாலைச் சீலமுடை அப்பூதி அடிகள்தமை
நடைமாணச் சிறப்பித்து நன்மைபுரி தீந்தமிழின்
தொடைமாலைத் திருப்பதிகச் சொன்மாலை பாடினார். ௨௧௧

"சொன்மாலை பயில்கின்ற குயிலினங்காள் சொல்லீரே
பன்மாலை வரிவண்டு பண்மிழற்றும் பழனத்தான்
முன்மாலை நகுதிங்கள் முகிழ்விளங்கு முடிச்சென்னிப்
பொன்மாலை மார்பன்என் புதுநலம்உண் டிகழ்வானோ"

"வஞ்சித்தென் வளைகவர்ந்தான் வாரானே ஆயிடினும்
பஞ்சிக்காற் சிறகன்னம் பரந்தார்க்கும் பழனத்தான்
அஞ்சிப்போய்க் கலிமெலிய அழலோம்பும் அப்பூதி
குஞ்சிப்பூ வாய்நின்ற சேவடியாய் கோடியையே"—தேவாரம்.

எழும்பணியும் இளம்பிறையும் அணிந்தவரை எம்மருங்குந்
தொழும்பணிமேற் †கொண்டருளித் திருச்சோற்றுத் துறைமுதலாத்

---

௨௦௯. இடருழந்தார் - இடரால் வருந்துவோரின்.

௨௧௦. திருமறையோர் - அப்பூதி அடிகள். பசிய கண்கள் பொருந்திய இடபவாகனத்தை யுடைய சிவபிரான் வீற்றிருந்தருளும்.

௨௧௧. திரண்டமாலை என்னப் பிறையாகிய கொண்டைமாலையணிந்த முறுக் கேறிய சடையையுடைய சிவபெருமானது; புடை - பக்கமுமாம். அடை... உடை - சார்ந்த இயல்பும் சீலமுமுடைய. நடைமாண - ஒழுக்கத்தை மாட்சியுற.

பா - ம்*அன்பொடு. †கொண்டருளுந்.

தழும்புறுகேண் மையில்நண்ணித் தானங்கள் பலபாடிச்
செழும்பழனத் திறைகோயில் திருத்தொண்டு செய்திருந்தார். உகஉ

சாலநாள் அங்கமர்ந்து தந்தலைமேல் தாள்வைத்த
ஆலமார் மணிமிடற்றார் அணிமலர்ச்சே வடிநினைந்து
சேலுலாம் புனற்பொன்னித் தென்கரையே றிச்சென்று
கோலநீள் மணிமாடத் திருநல்லூர் குறுகினர். உகஙு

அங்கணைந்து தம்பெருமான் அடிவணங்கி ஆராது
பொங்கியஅன் பொடுதிளைத்துப் போற்றிசைத்துப் பணிசெயுநாள்
தங்குபெருங் காதலினால் தாமரைமேல் விரிஞ்சனொடு
செங்கண்மால் அறிவரியார் திருவாரூர் தொழநினைந்தார். உகச

நல்லூரில் நம்பர்அருள் பெற்றுப்போய்ப் பழையாறை
பல்லூர்வெண் தலைக்கரத்தார் பயிலும்இடம் பலபணிந்து
சொல்லூர்வண் தமிழ்பாடி வலஞ்சுழியைத் தொழுதேத்தி
அல்லூர்வெண் பிறையணிந்தார் திருக்குடமூக் கணைந்திறைஞ்சி. உகரு

நாலூர்தென் திருச்சேறை குடவாயில் நறையூர்சேர்
பாலூரும் இன்மொழியாள் பாகனார் கழல்பரவி
மேலூர்தி விடைக்கொடியார் மேவும்இடம் பலபாடிச்
சேலூர்தண் பணைசூழ்ந்த தென்திருவாஞ் சியம்அணைந்தார். உகசா

பெருவாச மலர்ச்சோலைப் பெருவேளூர் பணிந்தேத்தி
முருகாரும் மலர்க்கொன்றை முதல்வனார் பதிபிறவும்
திருவாரும் விளமருடன் சென்றிறைஞ்சி வாகீசர்
மருவாரூர் எரித்தவர்தந் திருவாரூர் வந்தடைந்தார். உகஎ

---

உகஉ. பணியும் - பாம்பும். நீண்ட நாள் பழகிய அன்பாதலின் "தழும்புறு கேண்மையின்" என்றார். தானங்கள் - திருப்பதிகள்.

உகஙு. ஆலமார் மணி மிடற்றார் - நஞ்சு அமைந்த திருநீலகண்டர். சேல் மீன்கள் உலாவும்.

உகச. திளைத்து - இடையீடின்றி நின்று; மூழ்கி. விரிஞ்சனொடு - பிரம தேவனோடு.

உகரு. பல்லூர் வெண்தலை கரத்தர் - பற்கள் மேலே கிளம்பியுள்ள வெள்ளிய கபாலத்தை ஏந்திய கையராகிய சிவபெருமான். மாலைக்காலத்தில் தோன்றும் வெண்பிறை. குடமூக்கு - கும்பகோணம்.

உகசா. விடையை வாகனமாகவும் கொடியாகவும் உடைய சிவபெருமான்.

உகஎ. முருகுஆரும் - தேன் நிறைந்த. மருவார் ஊர் - பகைவர்களின் முப்புரங்களை.

ஆண்டஅர செழுந்தருள ஆரூரில் அன்பர்கள்தாம்
நீண்டசடை முடியார்பால் நிறைந்தஅருள் பெற்றுடையார்
காண்தருமா ளிகைமாடங் கவின்சிறந்தோங் கிடஎங்கும்
சேண்திகழ்வீ திகள்பொலியத் திருமலிமங் கலஞ்செய்தார். உகஅ

வேறு

வல்லமண் குண்டர்தம் மாயை கடந்து மறிகடலில்
கல்லே மிதப்பாகப் *போந்தவர் வந்தா ரெனுங்களிப்பால்
எல்லையில் தொண்டர் எயிற்புறஞ் சென்றெதிர் கொண்டபோது
சொல்லின் அரசர் வணங்கித் தொழுதுரை செய்தணைவார். உகக

"பற்றொன் றிலாவரும் பாதக ராகும் அமணர்தம்பால்
உற்ற பிணியொழிந் துய்யப்†போந் தேன்பெற லாவதொன்றே
புற்றிடங் கொண்டான்தன் தொண்டர்க்குத் தொண்டாம் புண்ணிய"மென்
‡றற்ற உணர்வொடும் ஆரூர்த் திருவீதி உள்ளணைந்தார். உஉ0

"மற்றிட மின்றி மனைதுறந் தல்லுணு வல்லமணர்
சொற்றிட மென்று துரிசுபட் டேனுக்கும் உண்டுகொலோ
விற்றிடம் வாங்கி விசயனோ டன்றொரு வேடுவனாய்ப்
**புற்றிடங் கொண்டான்றன் தொண்டர்க்குத் தொண்டாம் புண்ணியமே"**
**—தேவாரம்.**

சூழுந் திருத்தொண்டர் தம்முடன் தோரண வாயில்நண்ணி
வாழி திருநெடுந் தேவா சிரியன்முன் வந்திறைஞ்சி
ஆழி வரைத்திரு மாளிகை வாயில் அவைபுகுந்து
நீள்சுடர் மாமணிப் புற்றுகந் தாரைநேர் கண்டுகொண்டார். உஉக

கண்டு தொழுது §கரசர ணாதிஅங்கமெலாம்
கொண்ட புளகங்க ளாக எழுந்தன்பு கூரக்கண்கள்
தண்டுளி மாரி பொழியத் திருமூலட் டானர்தம்மைப்
புண்டரி கக்கழல் போற்றித் திருத்தாண் டகம்புனைந்து. உஉஉ

---

உகஅ. கவின் - அழகு. நீண்டு விளங்கும் திருவீதிகள்.

உகக. மறிகடலில் - அலைகடலில். எயில் - மதில்.

உஉ0. பற்று - அன்பு. அவ்வொன்றாவது புற்றிடங்......புண்ணியமென்க. ஜீவபோதம் அற்ற உணர்வோடும்.

உஉக. தே...சிரிய மண்டபம். ஆழிவரை - சக்கரவாள கிரிபோன்ற. புற்றிடங் கொண்ட தியாகேசப் பெருமானை.

உஉஉ. கைகால் முதலிய உறுப்புக்களெல்லாம். புண்டரிகக் கழல் - தாமரை போன்ற திருவடியை.

பா - ம்—*பொங்க. †போந் தென்பெற லாவதுண்டே. ‡றுற்ற. §விழுந்து கர சர ணாதி யங்கம்.

"காண்ட லேகருத் தாய்நினைந்" தென்னுங் கலைப்பதிகம்
தூண்டா விளக்கன்ன சோதிமுன் நின்று துதித்துருகி
ஈண்டு மணிக்கோயில் சூழ வலஞ்செய் திறைஞ்சிஅன்பு
பூண்ட மனத்தொடு நீள்திரு வாயிற் புறத்தணைந்தார். உஉ௫

" காண்டலே கருத்தாய் நினைந்திருந்தேன் மனம்புகுந்தாய் கழலடி
பூண்டுகொண் டொழிந்தேன் புறம்போயினு லறையோ
ஈண்டு மாடங்கள் நீண்டமா ளிகைமே லெழுகொடி வானிளமதி
தீண்டிவந் துலவுந் திருவாரூர் அம்மானே "—தேவாரம்.

வேறு

செய்யமா மணிஒளிசூழ் திருமுன்றின் முன்தேவா சிரியன் சார்ந்து
*"கொய்யுலா மலர்ச்சோலைக் குயில்கூவ மயிலாலும் ஆரூ ராரைக்
கையினுல் தொழாதொழிந்து கனியிருக்கக் காய்கவர்ந்த கள்வ னேன்" என்
றெய்தரிய †கையறவால் திருப்பதிகம் அருள்செய்தங் கிருந்தார் அன்றே.

" மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த மேனியான் தாள்தொ ழாதே
உய்யலாம் என்றெண்ணி உறிதூக்கி உழிதந்தென் உள்ளம் விட்டுக்
கொய்யுலா மலர்ச்சோலைக் குயில்கூவ மயிலாலும் ஆரூரைக்
கையினுல் தொழாதொழிந்து கனியிருக்கக் காய்கவர்ந்த கள்வ னேனே "
—தேவாரம்.

மார்பாரப் பொழிகண்ணீர் மழைவாருந் திருவடிவும் மதுர வாக்கில்
சேர்வாகுந் திருவாயில் தீந்தமிழின் மாலைகளுஞ் செம்பொற் றாளே
சார்வான திருமனமும் உழவாரத் தனிப்படையும் தாமும் ஆகிப்
பார்வாழத் திருவீதிப் பணிசெய்து பணிந்தேத்திப் பரவிச் செல்வார்.

நீடுபுகழ்த் திருவாரூர் நிலவுமணிப் புற்றிடங்கொள் நிருத்தர் தம்மைக்
கூடியஅன் பொடுகாலங் களில்அணைந்து கும்பிட்டுக் கோதில் வாய்மைப்
"பாடிளம்பூ தத்தினன்" எனும்பதிகம் முதலான பலவும் பாடி
நாடியஆர் வம்‡பெருக நைந்துமனங் கரைந்துருகி நயந்து செல்வார்.

" பாடிளம் பூதத்தி னனும் பவளச்செவ் வாய்வண்ணத் தானும்
கூடிள மென்முலை யாளைக் கூடிய கோலத்தி னனும்
ஓடிள வெண்பிறை யானும் ஒளிதிகழ் சூலத்தி னனும்
ஆடிளம் பாம்பசைத் தானும் ஆரூர் அமர்ந்தஅம் மானே "—தேவாரம்.

---

உஉ௫. ஈண்டு - நெருங்கிய. உஉ௬. கையறவால் - வருத்தத்தால்.
உஉ௭. இனிய தமிழின். இறைவன் செம்பொற்றாளே. உலகம் வாழ.
*மேலே: கசO, திருஞான சம்பந்த சுவாமிகள் புராணம்: உஎO - பார்க்க.
பா - ம்—*கொய்யுமா. †கையறவார். ‡பொங்க; பொருந்த.

நான்மறைநூற் பெறுவாய்மை நமிநந்தி அடிகள்திருத் தொண் டின் நன்மைப், பான்மைநிலை யால்அவரைப் பரமர்திரு விருத்தத்துள் வைத்துப் பாடித், *தேன்மருவுங் கொன்றையார் திருவாரூர் அர னெறியில் திகழுந் தன்மை, ஆனதிற மும்போற்றி அணிவீதிப் பணி செய்தங் கமரும் நாளில். உஉஎ

"ஆராய்ந் தடித்தொண்டர் ஆணிப்பொன் ஆரூர் அகத்தடக்கிப்
பாரூர் பரிப்பத்தம் பங்குனி உத்திரம் பாற்படுத்தான்
ஆரூர் நறுமலர் நாதன் அடித்தொண்டன் நம்பிநந்தி
நீரால் திருவிளக் கிட்டமை நீணா டறியுமன்றே"—தேவாரம்.

நீராருஞ் சடைமுடியார் நிலவுதிரு வலிவலமும் நினைந்து சென்று
வாராரு முலைமங்கை உமைபங்கர் கழல்பணிந்து மகிழ்ந்து பாடிக்
காராருங் கறைக்கண்டர் கீழ்வேளூர் கன்றாப்பூர் கலந்து பாடி
ஆராத காதலினால் திருவாரூர் தனில்மீண்டும் அணைந்தார் அன்றே.

மேவுதிரு வாதிரைநாள் வீதிவிடங் கப்பெருமாள் பவனி தன் னில், தேவருடன் முனிவர்கள்முன் சேவிக்கும் அடியார்க ளுடன்சே வித்து, மூவுலகுங் களிகூர வரும்பெருமை முறைமையெலாங் கண்டு போற்றி, நாவினுக்குத் தனியரசர் நயக்குநாள் நம்பர்திரு அருளி னாலே. உஉகூ

திருப்புகலூர் அமர்ந்தருளுஞ் சிவபெருமான் சேவடிகள் கும்பிட் டேத்தும், விருப்புடைய உள்ளத்து மேவிஎழுங் காதல்புரி வேட்கை கூர, ஒருப்படுவார் திருவாரூர் ஒருவாறு தொழுதகன்றங் குள்ளம் வைத்துப், பொருப்பரையன் மடப்பாவை இடப்பாகர் பதிபிறவும் பணிந்து போந்தார். உ௩௦

அந்நாளில் ஆளுடைய பிள்ளையார் திருப்புகலி அதன்கண் நின் றும், பன்னகப் பூணணிவார் பயின்றதிருப் பதிபலவும் பணிந்து செல்வார், புன்னாக மணங்கமழும் பூம்புகலூர் வந்திறைஞ்சிப் பொரு வில் சீர்த்தி, மின்னாரும் புரிமுந்நூல் முருகனார் திருமடத்தில் மேவுங் காலை. உ௩௧

ஆண்டஅர செழுந்தருளி அணியாரூர் மணிப்புற்றில் அமர்ந்து வாழும், நீண்டசுடர் மாமணியைக் கும்பிட்டு நீடுதிருப் புகலூர் நோக்கி, மீண்டருளி னாரென்று கேட்டருளி எதிர்கொள்ளும் விருப்பி

உ௩௧. பல நாகப் பூண். புன்னாகம் - சுரபுன்னை மலர்.
பா - ம்—*தேனமருங்.

ளுேடும், ஈண்டுபெருந் தொண்டர்குழாம் புடைசூழ எழுந்தருளி எதிரே சென்றார். உ௱உ

காண்டமலி தடம்பொய்கைக் காழியர்கோன் எதிரணையுங் காதல் கேட்டு, வரன்றுமணிப் புனற்புகலூர் *நேர்நோக்கி வாகீசர் மகிழ்ந்து வந்தார், †திரண்டுவருந் திருநீற்றுத் தொண்டர்குழாம் இருதிறமுஞ் சேர்ந்த போதில், இரண்டுநில வின்கடல்கள் ஒன்றாகி அணைந்தன போல் இசைந்த அன்றே. உ௱௩

திருநாவுக் கரசரெதிர் சென்றிறைஞ்சிச் சிரபுரத்துத் தெய்வ வாய்மைப், பெருஞான சம்பந்தப் பிள்ளையார் எதிர்வணங்கி "அப்ப ரே!நீர், வருநாளில் திருவாரூர் நிகழ்பெருமை வகுத்துரைப்பீர்" என்று கூற, அருநாமத் தஞ்செழுத்தும் பயில்வாய்மை அவரும்எதிர் அருளிச் செய்தார். உ௱௪

வேறு

"சித்த நிலாவுந் தென்திரு ஆரூர் நகராளும்
மைத்தழை கண்டர் ஆதிரை நாளின் மகிழ்செல்வம்
‡இத்தகை மைத்தென் றென்மொழி கேன்"§என் றருள்செய்தார்
"முத்து விதான மணிப்பொற் கவரி" மொழிமாலை. உ௱ரு

"முத்து விதான மணிப்பொற் கவரி முறையாலே
பத்தர்க ளோடு பாவையர் சூழப் பலிப்பின்னே
வித்தகக் கோல வெண்டலை மாலை விரதிகள்
அத்தன் ஆரூர் ஆதிரை நாளால் அதுவண்ணம்."—தேவாரம்.

அம்மொழி மாலைச் செந்தமிழ் கேளா அணிசண்பை
||மைம்மலர் கண்டத் தண்டர் பிரானுர் மகனாரும்
கொய்ம்மலர் வாவித் தென்திரு ஆரூர் கும்பிட்டே
"உம்முடன் வந்திங் குடன்அமர் வேன்"என் றுரை¶செய்தார். உ௱௬

---

உ௱௩. காண்டம் - நீர்க் காக்கைகள். காழியர் கோன் - திருஞான சம்பந் தர். வரன்று - கொழித்து. நிலவின் கடல்கள் - வெள்ளிய பாற்கடல்கள்.

உ௱௪. சிரபுரம் - சீகாழிக்கு ஒரு பெயர்.

உ௱ரு. சித்த நிலாவும் - அன்பர்கள் சித்தத்தில் நிற்கும். முத்து விதா னம் - முத்துப் பந்தர். கவரி - விசிறி.

உ௱௬. கேளா - கேட்டு. சண்பை - சீகாழியின் பெயர்களுள் ஒன்று. மகனாரும் - திருஞான சம்பந்தரும்.

பா - ம்—*நோக்கிவரும். †திரண்ட பெருந். ‡எத்தகைமைத். §என்றுரை செய் வார். ||மைம்மலி. ¶செய்து.

*மாமதில் ஆரூர் மன்னரை அங்கு வணங்கச்செந்
தாமரை யோடைச் சண்பையர் நாதன் தானேக
†நாமரு சொல்லின் நாதரும் ஆர்வத் தொடுபுக்கார்
‡பூமலர் வாசத் தண்பணை சூழும் புகலூரில்.* உருஎ

அத்திரு மூதூர் மேவிய நாவுக் கரசுந்தம்
சித்த நிறைந்தே அன்பு தெவிட்டுந் தெளிவெள்ளம்
மொய்த்திழி தாரைக் கண்பொழி நீர்மெய்ம் முழுதாரப்
பைத்தலை நாகப் பூண்அணி வாரைப் பணிவுற்றார். உருஅ

தேவர் பிரானைத் தென்புக லூர்மன் னியதேனைப்
பாவியல் மாலைச் செந்தமிழ் பாடிப் பரிவோடு
மேவிய காலந் தோறும் விருப்பிற் கும்பிட்டே
ஓவுதல் ஓவுந் திருப்பணி செய்தங் குறைகின்றார். உருகூ

சீர்தரு செங்காட் டங்குடி நீடுந் திருநள்ளா
றார்தரு சோலை சூழ்தரு சாந்தை அயவந்தி
வார்திகழ் மென்முலை யாளொரு பாகன் திருமருகல்
ஏர்தரும் அன்பால் சென்று வணங்கி இன்புற்றார். உசo

அப்படிச் சின்னாள் சென்றபின் ஆரூர் நகராளும்
துப்புறழ் வேணிக் கண்ணுத லாரைத் தொழுதிப்பால்
மெய்ப்பொருள் ஞானம் பெற்றவர் வேணு புரத்தெங்கள்
பொற்புரி முந்நூல் மார்பரும் வந்தார் புகலூரில். உசக

## வேறு

பிள்ளையார் எழுந்தருளப் பெருவிருப்பால் வாகீசர்
உள்ளமகிழ்ந் தெதிர்கொண்டங் குடன்உறையு நாளின்கண்
வள்ளலார் சிறுத்தொண்டர் மற்றவர்பால் எழுந்தருள
எள்ளருஞ்சீர் நீலநக்கர் தாமும்எழுந் தருளினார். உசஉ

---

உருஅ. பைத்தலை - படத்தோடு கூடிய தலையையுடைய. ஆர - நிறைய.

உருகூ. தேனை - சிவபெருமானை. ஓவுதல் ஓவும் - நீங்குதல் நீங்கும்; நீங்காத; இடையறாத என்றபடி.

உசo. ஆர்தரு - நிறைந்த. ஏர்தரும் - எழும்.

உசக. துப்பு உறழ் வேணி - பவளம்போன்ற செஞ்சடையையுடைய. வேணுபுரம் - சீகாழி. திருஞான சம்பந்தரும் வந்தார்.

உசஉ. எள்ளரும் - இகழ்தல் நீங்கிய.

பா - ம்—*தானேகா. †செஞ்சொல். ‡பூமலி வாவித்.

ஆங்கணையும் அவர்களுடன் அப்பதியில் அந்தணராம்
ஓங்குபுகழ் முருகனார் திருமடத்தி லுடனாகப்
பாங்கில்வருஞ் சீரடியார் பலருமுடன் பயில்கேண்மை
நீங்கரிய திருத்தொண்டின் நிலையுணர்ந்து நிகழ்கின்றார். உ.சங

திருப்பதிகச் செழுந்தமிழின் திறம்போற்றி மகிழ்வுற்றுப்
பொருப்பரையன் மடப்பாவை இடப்பாகர் பொற்றாளில்
விருப்புடைய திருத்தொண்டர் பெருமையினை விரித்துரைத்தங்
கொருப்படுசிந் தையினார்கள் உடனுறைவின் பயன்பெற்றார். உசச

அந்நாளில் தமக்கேற்ற திருத்தொண்டின் நெறியாற்ற
மின்னார்செஞ் சடைஅண்ணல் மேவுபதி எனைப்பலவும்
முன்னாகச் சென்றேத்தி முதல்வன்தாள் தொழுவதற்குப்
பொன்னாரு மணிமாடப் பூம்புகலூர் தொழுதகன்றார். உசரு

திருநீல நக்கடிகள் சிறுத்தொண்டர் முருகனார்
பெருநீர்மை அடியார்கள் பிறரும்விடை கொண்டேக
ஒருநீர்மை மனத்துடைய பிள்ளையா ருடன்அரசும்
வருநீர்செஞ் சடைக்கரந்தார் திருஅம்பர் வணங்கினார். உசசு

செங்குமுத மலர்வாவித் திருக்கடவூர் அணைந்தருளிப்
பொங்கியவெங் கூற்றடர்த்த பொன்னடிகள் தொழுதேத்திக்
குங்குலியக் கலயனார் திருமடத்தில் குறைவறுப்ப
அங்கவர்பால் சிவனடியா ருடன்அமுது செய்தார்கள். உசஎ

சீர்மன்னுந் திருக்கடவூர்த் திருமயா னமும்வணங்கி
ஏர்மன்னும் இன்னிசைப்பாப் பலபாடி இனிதமர்ந்து
கார்மன்னுங் கறைக்கண்டர் கழலிணைகள் தொழுதகன்று
தேர்மன்னும் மணிவீதித் திருவாக்கூர் சென்றணைந்தார். உசஅ

சார்ந்தார்தம் புகலிடத்தைத் தான்தோன்றி மாடத்துக்
கூர்ந்தார்வம் உறப்பணிந்து கோதில்தமிழ்த் தொடைபுனைந்து

---

உசங. பாங்கில் வரும் - சேர்ந்து வரும். பயில் கேண்மை - நெருங்கிய நேசம். உசச. ஒருமைப்பட்ட சிந்தையினார்கள்.

உசசு. பெரு நீர்மை - பேரொளி வாய்ந்த. ஒரு நீர்மை - ஒருமைத் தன்மை. சடையை மறைத்த சிவபெருமான் எழுந்தருளியுள்ள.

உசஎ. செவ்வாம்பல் மலரும். கொடிய யமனை உதைத்து வீழ்த்திய. குறைவறுப்ப - வேண்டுகோளைப் பூர்த்தி செய்ய.

உசஅ. ஏர் - அழகு.

பா - ம்—*பாங்கமருஞ், பாங்கிவருஞ்.

வார்ந்தாடுஞ் சடையார்தம் பதிபலவும் வணங்கியுடன்
சேர்ந்தார்கள் தம்பெருமான் திருவீழி மிழலையினை. உசகூ

வேறு

வீழி மிழலை வந்தணைய மேவு நாவுக் கரசினையும்
காழி ஞானப் பிள்ளையையும் கலந்த உள்ளக் காதலினால்
ஆழி வலவன் அறியாத அடியார் அடியார் அவர்களுடன்
வாழி மறையோர் எதிர்கொண்டு வணங்க வணங்கி உள்புக்கார். உருO

மாட வீதி அலங்கரித்து மறையோர் வாயின் மணிவிளக்கு
நீடு கதலி தழைப்பூகம் நிரைத்து நிறைபொற் குடமெடுத்துப்
பீடு *பெருகும் வாகீசர் பிள்ளை யாரும் தொண்டர்களும்
கூட மகிழ்ந்து விண்ணிழிந்த கோயில் வாயில் சென்றணைந்தார். உருக

சென்றுள் புகுந்து திருவீழி மிழலை அமர்ந்த செங்கனகக்
குன்ற வில்லி யார்மகிழ்ந்த கோயில் வலமா வந்துதிரு
முன்றில் வணங்கி முன்னெய்தி முக்கட் செக்கர்ச் சடைமவுலி
வென்றி விடையார் சேவடிக்கீழ் விழுந்தார் எழுந்தார் விம்மினார்.

கைகள் குவித்துக் கழல்போற்றிக் கலந்த அன்பு †கரைந்துருக
மெய்யில் வழியுங் கண்ணருவி ‡விரவப் பரவுஞ் சொன்மாலை
"செய்ய சடையார் தமைச்சேரார் தீங்கு நெறிசேர் கின்றார்" என்
றுய்யு நெறித்தாண் டகமொழிந்தாங் கொழியாக் காதல் சிறந்தோங்க.

"போரானை ஈருரிவைப் போர்வை யானைப் புலியதளே யுடையானைப் போற்றி னானைப், பாரானை மதியானைப் பகலா னானைப் பல்லுயிராய் நெடுவெளியாய்ப் பரந்து நின்ற, நீரானைக் காற்றானைத் தீயா னானை நினையாதார்

---

உசகூ. தான்தோன்றி மாடத்து எழுந்தருளியுள்ள சார்ந்தார் தம் புகலிடத்தை (தம்மை அடைந்த அன்பர்கட்குப் புகலிடமாயுள்ள சிவபெருமானை). வார்ந்து - நீண்டு தொங்கி. இருவரும் திருவீழிமிழலையினை அடைந்தனர்.

உருO. ஆழி வலவன் - சக்கரமேந்திய திருமால். அடியார் - திருவடியையுடைய சிவபெருமானின். "தெரிந்த அடியார்கள் சென்ற திசைதோறும் - விரும்பி எதிர்கொள்வார் வீழிம் மிழலையே"—திருஞான சம்பந்தர்.

உருக. கதலி - வாழை. பூகம் - கமுகம். நிரைத்து - வரிசையாக நாட்டி. பீடு - பெருமை. "அழகார் - விண்ணிழி விமானமுடை விண்ணவர் பிரான் மருவு வீழி நகரே"—திருஞான சம்பந்தர். "விண்ணிழி தண்வீழி மிழலையானே"—அப்பர்.

உருஉ. செம்பொன்மேருவை வில்லாகஉடைய சிவபெருமான்.மவுலி-முடி.

பா - ம்—*பெருக. †கரைந்துருக்க. ‡விரவிப்.

அன்ன நாடு கடந்து கங்கை அணைந்து சென்று வலங்கொளும்
மின்னு வேணியர் வார ணாசி விருப்பி னோடு பணிந்துடன்
பின்ன ணைந்தவர் தம்மை அங்கண் ஒழிந்து கங்கை *பெயர்ந்துபோய்
மன்னு காதல்செய் நாவின் மன்னவர் வந்து கற்சுரம் முந்தினார்.

மாக மீதுவ ளர்ந்த கானக மாகி எங்கும் மனித்தரால்
போக லாநெறி அன்றி யும்புரி கின்ற காதல்பொ லிந்தெழச்
சாக மூலப லங்கள் துய்ப்பன வுந்த விர்ந்துத னித்துநேர்
ஏகி னாரிர வும்பெ ருங்கயி லைக்கு லக்கிரி எய்துவார். ௩௫௪

ஆய வாரிரு ளின்கண் ஏகுமவ் வன்பர் †தம்மைஅ ணைந்துமுன்
தீய வாயவி லங்கு வன்தொழில் செய்ய அஞ்சின, நஞ்சுகால்
வாய நாகம ணிப்ப ணங்கொள்வி ளக்கெ டுத்தன, வந்துகால்
தோய வானவ ராயி னுந்தனி துன்ன ருஞ்சுரம் ‡மன்னினார். ௩௫௫

வெங்க திர்ப்பக லக்க டத்திடை வெய்ய வன்கதிர் கைபரந்
தெங்கு மிக்கபி ளப்பி னுகர்தம் எல்லை புக்கெரி கின்றன
பொங்க ழற்றெறு பாலை §வெந்நிழல் புக்க சூழல் புகும்பகல்
செங்க திர்க்கனல் போலும் அத்திசை திண்மை மெய்த்தவர் நண்ணினார்.

அயல்...எய்தினார் - அருகே தாமரைகள் மலிந்த வயல்களையுடைய நடுநாட்டினை (மத்திய தேசத்தை) அடைந்தார்.

௩௫௩. கங்கை பெருகிப் பாய்ந்து வலம் வருவதும், ஒளிருஞ் சடையராகிய சிவபெருமான் வீற்றிருந்தருள்வதுமாகிய வாரணாசியை (காசியை). தம் பின்னே தொடர்ந்து வந்தவர்களை அவ்விடத்தே விடுத்து. கல்சுரம் - கல்வழி.

௩௫௪. மாகம்மீது - வானளவு. காடுகளையுடையனவாகி மனிதரால் போக ஒண்ணா வழிகள் அன்றியும். புரிகின்ற - விரும்புகின்ற. சாக...தவிர்ந்து-இலை கிழங்கு பழம் முதலியவற்றை உண்பதையும் ஒழித்து. இரவிலும் ஏகினார்.

௩௫௫. அப்படி நிறைந்த இருளிலும் செல்லும். நஞ்சு...எடுத்தன - விஷத்தை உமிழும் வாயினையுடைய பாம்புகள் படங்களிலுள்ள மணிகளால் விளக்கேந்தின.

௩௫௬. கொடும் வெயில் வீசும் பகல் வேளையில் அவ்வருஞ்சுரத்தில். சூரிய கிரணங்கள் பரந்து. தெறும்-சுடும்; அழிக்கும். 'பொங்கழலையுந் தெறும் பாலை' என்றது பாலையின் கொடுமையைக் குறிப்பிட்டவாறு. பொங்கழலைப்போலச் சுடும்பாலை என்னலுமொன்று. அத்தகைப் பாலையில் வெம்மை நிழல் புகுந்த இடத்தில் புகும் சூரியனுடைய சிவந்த கிரணங்கள் போலும். திண்மை - உறுதியுடைய.

பா - ம்—*கடந்து. †பாதம். ‡முன்னினார், §புக்கழல் சூழலான.

இங்க னம்இர வும்ப கற்பொழு தும்அ ருஞ்சுரம் எய்துவார்
பங்க யம்புரை தாள்ப ரட்டள வும்ப சைத்தசை தேயவும்
மங்கை பங்கர்தம் வெள்ளி மால்வரை வைத்த சிந்தை †மறப்பரோ
தங்க ரங்க ளிரண்டு மேகொடு தாவி ஏகுதல் மேவினார். ௩௫௭

கைக ளும்மணி பந்த சைந்துற வேக ரைந்துசி தைந்தபின்
மெய்க லந்தெழு சிந்தை அன்பின் விருப்பு மீமிசை பொங்கிட
மொய்க டுங்கனல் வெம்ப ரற்புகை மூளு மத்த முயங்கியே
மைகொள் கண்டர்தம் அன்பர் செல்ல வருந்தி உந்தினர் மார்பினால்.

மார்ப முந்தசை நைந்து சிந்தி ‡வரிந்த என்பு முரிந்திட
நேர்வ ருங்§குறி நின்ற சிந்தையின் நேசம் ஈசனை ¶நேடநே
டார்வம் அங்குயிர் கொண்டு கைக்கும்உ டம்ப டங்கவும் ||ஊன்கெடச்
சேர்வ ரும்பழு வம்பு ரண்டுபு ரண்டு சென்றனர் செம்மையோர்.

அப்பு றம்புரள் கின்ற நீளிடை அங்கம் எங்கும் அரைந்திடச்
செப்ப ருங்கயி லைச்சி லம்படி சிந்தை சென்றுறும் ஆதலால்
மெய்ப்பு றத்தில் உறுப்ப ழிந்தபின் மெல்ல உந்து முயற்சியும்
தப்பு றச்செய லின்றி அங்நெறி தங்கி னார்தமி ழாளியார். ௩௬௦

வேறு

அன்ன தன்மையர் கயிலையை அணைவதற் கருளார்
மன்னு தீந்தமிழ் புவியின்மேற் பின்னையும் வழுத்த
நன்னெ டும்புனல் தடமும்ஓன் றுடன்கொடு நடந்தார்
பன்ன கம்புனை பரமரோர் முனிவராம் படியால். ௩௬௧

---

௩௫௭. பங்கயம்......தசை - தாமரை போன்ற திருவடிகள் கணைக்காலள வும் பசிய மாமிசம்.

௩௫௮. மணி பந்து - மணிக்கட்டு. உற - மிகவும். பரல்......முயங்கி - பருக்கைக் கற்களினின்றும் புகை எழும் வழியே நண்ணி. உந்தினர்-நகர்ந்தார்.

௩௫௯. வரிந்த - கட்டப்பட்ட. நேர்வு அரும் - (கயிலைக்குச்) செல்ல இய லாத. உகைக்கும் - செலுத்தும். பழுவம் - காட்டில்.

௩௬௦. நீளிடை - நீண்ட வழியில். அரைந்திட - தேய. சிலம்பு - மலை. உடற் புறத்துள்ள உறுப்புகள்.

௩௬௧. அன்ன தன்மையர் - திருநாவுக்கரசர். அருளார் - சிவபெருமான் திருவருள் செய்யாராக. அப்பர் இன்னும் தீந்தமிழ்ப் பதிகங்களை உலகில் ஓத. நீர் நிரம்பிய ஒரு தடாகத்தை யுண்டு பண்ணி. பன்னகம் - பாம்பை.

பா. பே—*பாகர். †மறிப்பரோ; மறைப்பரோ. ‡வருந்த. §குறை. ¶நேரு. ||முன்கொடச்.

வந்து மற்றவர் மருங்குற அணைந்துநேர் நின்று
நொந்து நோக்கிமற் றவர்எதிர் நோக்கிட நுவல்வார்
"சிந்தி இவ்வுறுப் பழிந்திட வருந்திய திறத்தால்
இந்த வெங்கடத் தெய்திய தென்" என இசைத்தார். ௩௬௨

மாசில் வற்கலை ஆடையும் மார்பின்முந் நூலும்
தேசு டைச்சடை மவுலியும் நீறும்மெய் திகழ
ஆசின் மெய்த்தவ ராகிநின் றவர்தமை நோக்கிப்
பேச உற்றதோர் உணர்வுற விளம்புவார் பெரியோர். ௩௬௩

"வண்டு லாங்குழல் மலைமக ளுடன்வட கயிலை
அண்டர் நாயகர் இருக்கும்அப் பரிசவர் அடியேன்
கண்டு கும்பிட விருப்பொடுங் காதலின் அடைந்தேன்
கொண்ட என்குறிப் பிதுமுனி யே" எனக் கூற. ௩௬௪

"கயிலை மால்வரை யாவது காசினி மருங்கு
பயிலு மானுடப் பான்மையோர் அடைவதற் கெளிதோ
அயில்கொள் வேற்படை அமரரும் அணுகுதற் கரிதால்
வெயில்கொள் வெஞ்சுரத் தென்செய்தீர் வந்"தென விளம்பி. ௩௬௫

" மீளும் அத்தனை உமக்கினிக் கடன்" என விளங்கும்
தோளும் ஆகமும் துவளுமுந் நூல்முனி சொல்ல
" ஆளு நாயகன் கயிலையில் இருக்கைகண் டல்லால்
மாளும் இவ்வுடல் கொண்டுமீ ளேன் " என மறுத்தார். ௩௬௬

ஆங்கு மற்றவர் துணிவறிந் தவர்தமை அறிய
நீங்கு மாதவர் விசும்பிடைக் கரந்துநீள் மொழியால்
" ஓங்கு நாவினுக் கரசனே! எழுந்திர் "என் றுரைப்பத்
தீங்கு நீங்கிய யாக்கைகொண் டெழுந்தொளி திகழ்வார். ௩௬௭

---

௩௬௨. கடத்து - காட்டில்.

௩௬௩. வற்கலை - மரவுரி. ஒளியுடைய சடை முடியும். ஆசில் - குற்ற மற்ற. பெரியோர் - அப்பர்.

௩௬௪. பரிசு - தன்மையை; கோலத்தை. அவர் (சிவபெருமான்) அடியே னாகிய யான்.

௩௬௫. உலகிடை வாழும் மானிடத் தன்மை யுடையவர். அயில்-கூர்மை. அமரரும் - தேவர்களும். வெயில் - வெம்மை.

௩௬௬. திரும்புதலே இனி உமக்குரிய கடன். ஆகமும் - மார்பிலும்.

௩௭. விசும்பிடைக் கரந்து - ஆகாயத்திலே மறைந்து. குறை நீங்கிய உடல் கொண்டு.

"அண்ண லேஎனை ஆண்டுகொண் டருளிய அமுதே
விண்ணி லேமறைந் தருள்புரி வேதநா யகனே
கண்ணி னால்திருக் கயிலையில் இருந்தநின் கோலம்
நண்ணி நான்தொழ நயந்தருள் புரி" எனப் பணிந்தார். ௩௬௮

தொழுதெ ழுந்தநற் றொண்டரை நோக்கிவிண் தலத்தில்
எழுபெ ருந்திரு வாக்கினால் இறைவர்"இப் பொய்கை
முழுகி நம்மைநீ கயிலையில் இருந்தஅம் முறைமை
பழுதில் சீர்த்திரு வையாற்றிற் காண்" எனப் பணித்தார். ௩௬௯

ஏற்றி னார்அருள் தலைமிசைக் கொண்டெழுந் திறைஞ்சி
வேற்று மாகிவிண் ணாகிநின் றார்மொழி விரும்பி
ஆற்றல் பெற்றவர் அண்ணலார் அஞ்செழுத் தோதிப்
பாற்ற டம்புனற் பொய்கையில் மூழ்கினார் பணியால். ௩௭0

ஆதி தேவர்தந் திருவருட் பெருமையார் †அறிந்தார்
போத மாதவர் ‡பனிமலர்ப் பொய்கையில் மூழ்கி
மாதொர் பாகனார் மகிழும்ஐ யாற்றிலோர் வாவி
மீது தோன்றிவந் தெழுந்தனர் உலகெலாம் வியப்ப. ௩௭௧

வம்பு லாமலர் வாவியின் கரையில்வந் தேறி
உம்பர் நாயகர் திருவருட் பெருமையை §உணர்வார்
"எம்பி ரான்||தருங் கருணைகொல் இது" என இருகண்
பம்பு தாரைநீர் வாவியிற் படிந்தெழும் படியார். ௩௭௨

மிடையு நீள்கொடி வீதிகள் விளங்கிய ஐயா
றுடைய நாயகர் சேவடி பணியவந் துறுவார்
அடைய அப்பதி நிற்பவுஞ் சரிப்பவு மான
புடைஅ மர்ந்ததந் துணையொடும் பொலிவன கண்டார். ௩௭௩

---

௩௭0. ஏற்றினார் - இடபவாகனராகிய சிவபெருமான். வேற்றுமாகி - வெவ்வேறு பூதங்களாகி. வேற்று......விரும்பி என்பதற்கு "வேற்றாகி விண்ணாகி" என்னுந் திருத்தாண்டகத்தைப் பாடி என்னலு மொன்று. பால் தடம் - பால்போலும் பரந்த. பணியால் - ஆண்டவன் ஆணைப்படி.

௩௭௧. போதமாதவர் - மெய்யுணர்வுடைய அப்பர்.

௩௭௨. மணங்கமழும் தாமரைத் தடாகத்தினின்றும். இரு கண்களிலும் ததும்பும் தாரைநீராகிய குளத்தில் மூழ்கி எழுந்தன்மையரானார்.

௩௭௩. மிடையும் - நெருங்கியுள்ள. நிற்பவும் சரிப்பவும் - அசரமும் சரமும். சராசரங்களெல்லாம் தத்தம் பக்கத்தில் தத்தமக்குரிய வாழ்க்கைத் துணையுடன் (பெண்ணுடன்) பொலிவதைக் கண்டார்.

பா - ம்—*பெற்ற அவ்வண்ணலார். †அறிவார். ‡மணிவரை. §உணர்ந்தார். ||திருக்கருணையோ இது ; தருங்கருணை போலிது.

பொன்மலைக்கோடி யுடன்அமர் வெள்ளியம் பொருப்பில்
தன்மை யாம்படி சத்தியுஞ் சிவமுமாஞ் சரிதைப்
பன்மை யோனிகள் யாவையும் பயில்வன பணிந்தே
மன்னு மாதவர் தம்பிரான் கோயில்முன் வந்தார். ஙஎச

காணும் அப்பெருங் கோயிலுங் கயிலைமால் வரையாய்ப்
பேணு மால்அயன் இந்திரன் முதற்பெருந் தேவர்
பூணும் அன்பொடு போற்றிசைத் தெழும்ஒலி பொங்கத்
தாணு மாமறை யாவையுந் தனித்தனி முழங்க. ஙஎரு

தேவர் தானவர் சித்தர்விச் சாதரர் இயக்கர்
மேவு மாதவர் முனிவர்கள் புடையெலாம் மிடையக்
காவி வாள்விழி அரம்பையர் கானமும் முழவும்
தாவில் ஏழ்கடல் முழக்கினும் பெருகொலி தழைப்ப. ஙஎசு

---

ஙஎச. பொன்மலைக் கொடி - உமாதேவியார். வெள்ளியம் பொருப்பில் - கயிலையில். சரிதை - இயல்பை. பயில்வன - கூடியிருத்தலைக் கண்டு. உலகம் பெண் ஆண் மயமாயிருத்தல் கண்கூடு. புல் முதல் மக்கள் ஈறாக உள்ள எல்லா உயிர்களும் பெண் ஆண் மயமாகவே இருக்கின்றன. காரிய உலகம் பெண் ஆண் மயமாக இருத்தலான் அதைக் காரியப்படுத்தும் காரணமும் பெண் ஆண் மயமாக இருத்தல் வேண்டுமென்பது வெள்ளிடைமலை. இதனால் உலகுக்குக் காரணமாக உள்ள பரம்பொருளும் சத்தி சிவமாக-அர்த்தநா ரீசுர வடிவ மாக-இருக்கின்றது என்று சொல்லப்படுகிறது. பரம்பொருள் எங்கும் நீக்கமற நிறைந் துள்ளமையான், அதை ஞானக் கண்ணாற் காணும் பேறு பெறுவோர்க்கு அப்பொருள் சராசர முழுவதும் பெண் ஆண் வடிவாக - சத்தி சிவமாகப் - புலனாகும். அஞ்ஞான நிலையில் மாயா ரூபமாகத் தோன்றுவன வெல்லாம் ஞான நிலையில் சிவமாகத் தோன்றும். இங்கே அப்பர் சுவாமிகளுக்கு ஆண்டவன் கயிலாயக் கோலத்தை வழங்கும் பெற்றியை ஓர்க. அக்கோலம் எப்படி வழங்கப்படுகிறது? சராசர முழுவதும் சத்தி சிவமாக அது வழங்கப்படுகிறது. சராசரத்துள்ள ஒவ்வொரு பெண்ணும் சத்தியாகவும் ஒவ்வோர் ஆணும் சிவமாகவும் அப்பருக்கு விருந்தாதல் காண்க. இஃதே உண்மைக் கயிலாயக் காட்சி. அப்பர் கருத்து நிறைவேறலாயிற்று. "ஆணெலாம் இறைவன் பெண்ணெலாந் தேவி"—சைவ புராணம். "மாதர் பிறைக்கண்ணி யானை" என்னுந் திருப்பதிகத்தை நோக்குக.

ஙஎரு. தாணு - என்றுமுள்ள; புகலிடமான.

ஙஎசு. தானவர் - அசுரர். பக்கங்களெல்லாம் நெருங்க. நீலமும் ஒளியுமுடைய விழி. கானமும் முழவும் - கீதமும் மத்தளவோசையும். தாவில் - கெடுதலில்லாத.

கங்கை யேமுதல் தீர்த்தமாங் கடவுள்மா நதிகள்
மங்க லம்பொலி புனற்பெருந் தடங்கொடு வணங்க
எங்கு நீடிய பெருங்கண நாதர்கள் இறைஞ்சப்
பொங்கி யங்களால் பூதவே தாளங்கள் போற்ற. ௩௭௭

அந்தண் வெள்ளிமால் வரையிரண் டாமென அணைந்தோர்
சிந்தை செய்திடச் செங்கண்மால் விடைஎதிர் நிற்ப
முந்தை மாதவப் பயன்பெறு *முதன்மையால் மகிழ்ந்தே
நந்தி எம்பிரான் நடுவிடை யாடிமுன் நணுக. ௩௭௮

வெள்ளி வெற்பின்மேல் மரகதக் கொடியுடன் விளங்கும்
தெள்ளு பேரொளிப் பவள†வெற் பெனஇடப் பாகம்
கொள்ளு மாமலை யாளுடன் கூடவீற் றிருந்த
வள்ள லாரைமுன் கண்டனர் வாக்கின்மன் னவனார். ௩௭௯

கண்ட ஆனந்தக் கடலினைக் கண்களால் முகந்து
கொண்டு கைகுவித் தெதிர்விழுந் தெழுந்துமெய் குலைய
அண்டர் முன்புநின் றாடினார் பாடினார் அழுதார்
தொண்ட னார்க்கங்கு நிகழ்ந்தன யார்சொல வல்லார். ௩௮௦

முன்பு கண்டுகொண் டருளின்ஆர் அமுதுண்ண மூவா
அன்பு பெற்றவர் அளவிலா ஆர்வம்முன் பொங்கப்
பொன்பி றங்கிய சடையரைப் போற்றுதாண் டகங்கள்
இன்பம் ஓங்கிட ஏத்தினார் எல்லையில் தவத்தோர். ௩௮௧

‡ஆய வாறுமற் றவர்மனங் களிப்புறக் கயிலை
மேய §நாதர்தங் துணையொடும் வீற்றிருந் தருளித்

௩௭௭. கடவுள் மாநதிகள் - தெய்வ நதிகள். தடங்கொடு - தடாக வடிவந் தாங்கி. இயங்களால் - வாத்தியங்களால். பூத பசாசுகள்.

௩௭௮. நந்தி எம்பெருமான் திருவையாற்றில் தவங்கிடந்து பேறுபெற்றது ஈண்டுக் குறிக்கப்பட்டிருக்கிறது. நடு இடை ஆடி - "நடு இடத்தினின் றங்கு மிங்கும்போய்"—பழைய குறிப்புரை; "நடுவின்கணுள்ள கண்ணாடி" ஆறுமுகத் தம்பிரானார்; சபையில் நடம்புரியுஞ் சிவபிரான் என்றலு மொன்று.

௩௭௯. வெள்ளிமலைமீது மரகதக் கொடி (சத்தி) யுடன் பவளமலை (சிவம்) விளங்குவதுபோல. தெள்ளு - தெளிந்த.

௩௮௦. மெய் குலைய - உடல் பரவசமாக. அண்டர் - சிவபெருமான்.

௩௮௧. "ஆரா அமுதே என்னை யாறனே"—அப்பர். மூவா - அழியாத.

பா - ம்—*முறைமையால். †வெற் பாமெனப் பாகம். ‡ஆய காலையில் அவர்மனங் களியுறக். §நாயகர்.

தூய தொண்டருந் தொழுதெதிர் நிற்கஅக் கோலம்
சேய தாக்கினுர் திருவையா றமர்ந்தமை திகழ. ௩அ௨

ஐயர் கோலம்அங் களித்தகன் றிடஅடித் தொண்டர்
மையல் கொண்டுளம் மகிழ்ந்திட வருந்திமற் "றிங்குச்
செய்ய வேணியர் அருளிது வோ"எனத் தெளிந்து
வையம் உய்ந்திடக் கண்டமை பாடுவார் மகிழ்ந்து. ௩அ௩

வேறு

"மாதர்ப் பிறைக்கண்ணி யானை மலையான் மகளொடும்" என்னும்
கோதறு தண்டமிழ்ச் சொல்லால் குலவு திருப்பதி கங்கள்
"வேத முதல்வர்ஐ யாற்றில் விரவுஞ் சராசரம் எல்லாம்
காதல் துணையொடுங் கூடக் கண்டேன்" எனப்பாடி நின்ருர். ௩அ௪

"மாதர்ப் பிறைக்கண்ணி யானை மலையான் மகளொடும் பாடிப்
போதொடு நீர்சுமந் தேத்திப் புகுவார் அவர்பின் புகுவேன்
யாதுஞ் சுவடு படாமல் ஐயா றடைகின்ற போது
காதல் மடப்பிடி யோடுங் களிறு வருவன கண்டேன்
கண்டேன் அவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன்"
—தேவாரம்.

கண்டு தொழுது வணங்கிக் கண்ணுத லார்தமைப் போற்றிக்
கொண்ட திருத்தாண் டகங்கள் குறுந்தொகை நேரிசை அன்பில்
மண்டு விருத்தங்கள் பாடி வணங்கித் திருத்தொண்டு செய்தே
அண்டர் பிரான்திரு ஐயா றமர்ந்தனர் நாவுக் கரசர். ௩அ௫

நீடிய அப்பதி நின்று நெய்த்தான மேமுத லாக
மாடுயர் தானம் பணிந்து மழபாடி யாரை வணங்கிப்
பாடிய செந்தமிழ் மாலை பகர்ந்து பணிசெய்து போற்றித்
தேடிய மாலுக் கரியார் திருப்பூந் துருத்தியைச் சேர்ந்தார். ௩அ௬

சேர்ந்து விருப்பொடும் புக்குத் திருநட மாளிகை முன்னர்ச்
சார்ந்து வலங்கொண் டிறைஞ்சித் தம்பெரு மான்திரு முன்பு

---

௩அ௨. தந்துணையொடும் - உமா தேவியாரோடும். சேயதாக்கினுர் - விலக்கினுர்.

௩அ௪. மாதர் - காதலுடைய. பிறைக்கண்ணி - பிறையாகிய கொண்டை மாலை. துணையொடும் - வாழ்க்கைத் துணையொடும் (பெண்ணெடும்).

௩அ௫. அன்பில் மண்டு - அன்பால் மிகுந்து செல்லும்.

௩அ௬. மாடு உயர் தானம் - பக்கங்களில் மேன்மை பொருந்தியுள்ள தலங்களை.

நேர்ந்த பரிவோடுந் தாழ்ந்து நிறைந்தொழி யாஅன்பு பொங்க
வூர்ந்தகண் ணீர்மழை தூங்க அயர்வுறுந் தன்மைய ரானார். ௩அஎ

"திருப்பூந் துருத்தி அமர்ந்த செஞ்சடை யானைஆன் ஏற்றுப்
பொருப்பூர் தருளும் பிரானைப் பொய்யிலி யைக்கண்டேன்" என்று
விருப்புறு தாண்டகத் தோடு மேவிய காதல் விளைப்ப
"இருப்போந் திருவடிக் கீழ்நாம்" என்னுங் குறுந்தொகை பாடி. ௩அஅ

"எனக்கென்றும் இனியானை எம்மான் தன்னை எழிலாரும் ஏகம்பம்
மேயான் தன்னை, மனக்கென்றும் வருவானை வஞ்சர் நெஞ்சில் நில்லானை
நின்றியூர் மேயான் தன்னைத், தனக்கென்றும் அடியேனை ஆளாக் கொண்ட
சங்கரனைச் சங்கவார் குழையான் தன்னைப், புனக்கொன்றைத் தாரணிந்த
புனிதன் தன்னைப் பொய்யிலியைப் பூந்துருத்திக் கண்டேன் நானே"

"கொடிகொள் செல்வ விழாக்குணை லையறாக்
கடிகொள் பூம்பொழிற் கச்சியே கம்பனார்
பொடிகள் பூசிய பூந்துருத் திந்நகர்
அடிகள் சேவடிக் கீழ்நாம் இருப்பதே"—தேவாரம்.

அங்குறை யுந்தன்மை வேண்டி "நாமடி போற்றுவ" தென்று
பொங்கு தமிழ்ச்சொல் விருத்தம் போற்றிய பாடல் புரிந்து
தங்கித் திருத்தொண்டு செய்வார் தம்பிரா னார்அருள் பெற்றுத்
திங்களும் ஞாயிறும் தோயும் திருமடம் †ஆங்கொன்று செய்தார். ௩அகூ

"மாலினை மாலுற நின்றான் மலைமகள் தன்னுடைய
பாலனைப் பால்மதி சூடியைப் பண்புண ரார்மதில்மேல்
போலனைப் போர்விடை யேறியைப் பூந்துருத் திமகிழும்
மாலனை ஆதி புராணனை நாமடி போற்றுவதே"—தேவாரம்.

பல்வகைத் தாண்டகத் தோடும் பரவுந் தனித்தாண் டகமும்
அல்லல் அறுப்பவர் தானத் தடைவு திருத்தாண் டகமும்
செல்கதி காட்டிடப் போற்றுந் திருஅங்க மாலையும் உள்ளிட்
டெல்லையில் பன்மைத் தொகையும் இயம்பினர் ஏத்தி இருந்தார். ௩கூO

---

௩அஎ. நடமாளிகை - நிருத்த மண்டபம். ஆர்ந்த - நிறைந்த. தூங்க - பொழிய. "தூங்கி நீர் இமிழ்திரை துணையாகி ஒலிக்குமே"—கலித்தொகை : கஉக. அ. அயர்வுறும் - தம்மை மறக்கும்.

௩அஅ. ஆன் ஏற்றுப் பொருப்பு - இடபமாகிய மலையை.

பா - ம்—*சேர்ந்து. †அங்.

வேறு

பொன்னிவலங் கொண்டதிருப் பூந்துருத்தி அவர்இருப்பக்
கன்மனத்து வல்லமணர் தமைவாதிற் கட்டழித்துத்
தென்னவன்கூன் நிமிர்த்தருளித் திருநீற்றின் ஒளிகண்டு
மன்னியசீர்ச் சண்பைநகர் மறையவனார் வருகின்றார். ௩௬௧

தீந்தமிழ்நாட் டிடைநின்றும் எழுந்தருளிச் செழும்பொன்னி
வாய்ந்தவளந் தருநாட்டு வந்தணைந்தார் வாக்கினுக்கு
வேந்தர்இருந் தமைகேட்டு "விரைந்தவர்பால் செல்வன்"எனப்
பூந்துருத்தி வளம்பதியின் புறம்பணையில் வந்தணைந்தார். ௩௬௨

சண்பைவருந் தமிழ்விரகர் எழுந்தருளத் தாங்கேட்டு
மண்பரவும் பெருங்கீர்த்தி வாகீசர் மனம்மகிழ்ந்து
கண்பெருகுங் களிகொள்ளக் கண்டிறைஞ்சுங் காதலினால்
எண்பெருகும் *விருப்பெய்த எழுந்தருளி எதிர்சென்றார். ௩௬௩

காழியர்கோன் வரும்எல்லை கலந்தெய்திக் காதலித்தார்
சூழுமிடைந் திடுநெருக்கிற் காணாமே தொழுதருளி
"வாழியவர் தமைத்தாங்கும் மணிமுத்தின் சிவிகையினைத்
தாழும்உடல் இதுகொண்டு தாங்குவன்யான்" எனத்தரித்தார். ௩௬௪

வந்தொருவர் அறியாமே மறைந்தவடி வொடும்புகலி
அந்தணனார் ஏறியெழுந் தருளிவரும் மணிமுத்தின்
சந்தமணிச் சிவிகையினைத் தாங்குவா ருடன்தாங்கிச்
சிந்தைகளிப் புறவருவார் தமையாருந் தெளிந்திலரால். ௩௬௫

†திருஞான மாமுனிவர் அரசிருந்த பூந்துருத்திக்
கருகாக எழுந்தருளி "எங்குற்றார் அப்பர்"என
உருகாநின் "றும்அடியேன் உம்அடிகள் தாங்கிவரும்
பெருவாழ்வு ‡வந்தெய்தப் பெற்றிங்குற் றேன்"என்றார். ௩௬௬

பிள்ளையார் அது||கேளாப் பெருகுவிரை வுடன்இழிந்தே
உள்ளமிகு பதைப்பெய்தி உடையஅர சினைவணங்க
வள்ளலார் வாகீசர் அவர்வணங்கா முன்வணங்கத்
துள்ளுமான் மறிக்கரத்தார் தொண்டரெலாந் தொழுதார்த்தார். ௩௬௭

---

௩௬௧. தென்னவன் - பாண்டியனது. ௩௬௩. அளவு கடந்த விருப்பம்.
௩௬௪. அப்பர் கலந்து எய்தி. காதலித்தார்...நெருக்கில் - அன்பர்கள் சூழ்ந்துள்ள மிக்க நெருக்கிடையில். சம்பந்தர், தம்மைக் காணாமே அவரை (சம்பந்தரை). ௩௬௫. சந்தம் - அழகு; நிறம்.

பா - ம்—*விருப்பெய்தி. †திருஞான முனிவர் அரசிருந்த திருப்பூந்துருத்தி. ‡வந்ததெனப் பெற்றுயர்ந்தேன் யான். ||கேளாப்.

கழுமலக்கோன் திருநாவுக் கரசருடன் கலந்தருளிச்
செழுமதியந் தவழ்சோலைப் பூந்துருத்தித் திருப்பதியின்
மழுவினொடு மானேந்தும் திருக்கரத்தார் மலர்த்தாள்கள்
தொழுதுருகி இன்புற்றுத் துதிசெய்தங் குடனிருந்தார். ௩௯௮

வல்அமணர் தமைவாதில் வென்றதுவும் வழுதியுடல்
புல்லியகூன் நிமிர்த்ததுவும் தண்பொருந்தப் புனல்நாட்டில்
எல்லையிலாத் திருநீறு வளர்த்ததுவும் இருந்தவத்தோர்
†சொல்லஅது கேட்டுவந்தார் தூயபுகழ் வாகீசர். ௩௯௯

பண்புடைய பாண்டிமா தேவியார் தம்பரிவும்
நண்புடைய குலச்சிறையார் பெருமையுஞ்ஞா னத்தலைவர்
எண்பெருக வுரைத்தருள எல்லையில்சீர் வாகீசர்
மண்குலவும் தமிழ்நாடு காண்பதற்கு மனங்கொண்டார். ௪௦௦

பிரமபுரத் திருமுனிவர் பெருந்தொண்டை நன்னாட்டில்
‡அரனமருந் தானங்கள் அணைந்திறைஞ்சிப் §பாடுதற்கங்
குரனுடைய திருநாவுக் கரசர்உரை செய்தருளப்
புரமெரித்தார் திருமகனார் பூந்துருத்தி தொழுதகன்றார். ௪௦௧

ஆண்டஅர சங்கணர்சீர் அருள்பெற்றப் பதிநின்றும்
பாண்டிநாட் டெழுந்தருளும் பான்மையராய்த் தென்திசைபோய்க்
காண்டகைய திருப்புத்தூர் பணிந்தேத்திக் கதிர்மதியம்
தீண்டுகொடி மதில்மதுரைத் திருஆல வாய்சேர்ந்தார். ௪௦௨

சென்றணைந்து மதுரையினில் திருந்தியநூற் சங்கத்துள்
அன்றிருந்து தமிழாராய்ந் தருளியஅங் கணர்கோயில்
முன்றிலினை வலங்கொண்டு முன்இறைஞ்சி உள்புக்கு
வன்தனிமால் விடையானை வணங்கிமகிழ் வொடுந்திளைத்தார். ௪௦௩

---

௩௯௮. கழுமலக்கோன் - திருஞானசம்பந்தர்.

௩௯௯. வழுதியுடல் புல்லிய - பாண்டியன் உடலில் சேர்ந்திருந்த. தண் பொருந்தப்புனல் நாட்டில் - குளிர்ந்த தாம்பிரபன்னிநதி பாயும் பாண்டி நாட்டில். இருந் தவத்தோர் - திருஞானசம்பந்தர்.

௪௦௦. பரிவும் - அன்பும். நினைவுப் பெருக்கால் விரித்துக் கூற. மண் ணில் விளங்கும் பாண்டி நாட்டை.

௪௦௧. பிரமபுரம் - சீகாழி. உரனுடைய - மெய்யறிவுடைய. புரமெரித்தார் திருமகனார் - திருஞானசம்பந்தர்; இதன் நுட்பம் திருஞானசம்பந்த சுவாமிகள் புராணத்தில் விளக்கஞ் செய்யப்படும்.

௪௦௩. "நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கமேறி"—திருநாவுக்கரசர்: திருப் புத்தூர். ௩. மூர்த்திநாயனார் புராணம்: பாட்டு. ௭. குறிப்புப் பார்க்க.

எய்தியபே ரானந்த இன்பத்தி னிடைஅழுந்தி
மொய்திகழுஞ் சடையானை "முளைத்தானை" என்றெடுத்துச்
செய்தவத்தோர் தாண்டகச்செந் தமிழ்பாடிப் புறத்தணைவார்
கைதொழுது பணிந்தேத்தித் திருவுள்ளங் களிசிறந்தார். சஂ0ச

"முளைத்தானை எல்லார்க்கும் முன்னே தோன்றி முதிருஞ் சடைமுடிமேல் முகிழ்வெண் திங்கள், வளைத்தானை வல்லசுரர் புரங்கள் மூன்றும் வரைசிலையா வாசுகிமா நாணுக் கோத்துத், துளைத்தானைச் சுடுசரத்தால் துவளநீறாத் தூமுத்த வெண்முறுவல் உமையோ டாடித், திளைத்தானைத் தென்கூடல் திருவாலவாய்ச் சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே"
—தேவாரம்.

சீர்திகழும் பாண்டிமா தேவியார் *திருநீற்றின்
சார்வுடைய கூன்நிமிர்ந்த தென்னவனுர் தம்முடனே
பார்பரவுங் குலச்சிறையார் வாகீசர் தமைப்பணிவுற்
றாரகிலாக் காதல்மிக அடிபோற்ற அங்கிருந்தார். சஂ0ரு

திருவால வாய்அமர்ந்த செஞ்சடையைச் செழும்பொருள்நூல்
தருவானை நேரிசையும் தாண்டகமும் முதலான
பெருவாய்மைத் தமிழ்பாடிப் பேணுதிருப் பணிசெய்து
மருவார்தம் புரம்எரித்தார் பூவணத்தை வந்தடைந்தார். சஂ0சா

கோடிமாடம் நிலவுதிருப் பூவணத்துக் கோயிலினுள்
நெடியானுக் கறிவரியார் நேர்தோன்றக் கண்டிறைஞ்சி
"வடிவேறு திரிசூல"த் தாண்டகத்தால் வழுத்திப்போய்ப்
பொடிநீடு திருமேனிப் புனிதர்பதி பிறபணிவார். சஂ0எ

"வடிவேறு திரிசூலம் தோன்றுந் தோன்றும் வளர்சடைமேல் இளமதியந் தோன்றுந் தோன்றுங், கடியேறு கமழ்கொன்றைக் கண்ணி தோன்றுங் காதில்வெண் குழைதோடு கலந்து தோன்றும், மிடியேறு களிற்றுரிவைப் போர்வை தோன்றும் எழில்திகழுந் திருமுடியும் இலங்கித் தோன்றும், பொடியேறு திருமேனி பொலிந்து தோன்றும் பொழில்திகழும் பூவணத்தெம் புனிதனார்க்கே."—தேவாரம்.

தென்னிலங்கை இராவணன்தன் சிரமீரைந் துந்துணித்த
மன்னவனும் இராமனுக்கு வரும்பெரும்பா தகந்தீர்த்த

---

சஂ0ரு. ஆரகிலா - அடங்காத.

சஂ0சா. செழும் பொருள்நூல் தருவானை - மறை அருளியவனை ; மூர்த்திநாயனுர் புராணம் : பாட்டு. எ. குறிப்புப் பார்க்க.

பா - ம்—*திருமேனி-சேரவரு ளுடையதனுல் கூன்நிமிர்ந்த தென்னவனுர்.

பின்னுகனைத் தொழுவதற்கு நினைந்துபோய்ப் பெருமகிழ்ச்சி
துன்னிமனங் கரைந்துருகத் தொழுதெழுந்தார் சொல்லரசர். சOஅ

தேவர்தொழுந் தனிமுதலைத் திருவிரா மேச்சுரத்து
மேவியசங் கரனைஎதிர் நின்றுவிருப் புறுமொழியால்
பாவுதிரு நேரிசைகள் முதலான தமிழ்பாடி
நாவரசர் திருத்தொண்டு நலம்பெருகச் செய்தமர்ந்தார். சOகூ

அங்குறைந்து கண்ணுதலார் அடிசூடி அகன்றுபோய்ப்
பொங்குதமிழ்த் திருநாட்டுப் புறம்பணைசூழ் நெல்வேலி
செங்கண்விடை யார்மன்னுந் திருக்கானப் பேர்முதலா
எங்குநிகழ் தானங்கள் எல்லாம்புக் கிறைஞ்சுவார். சகO

தொழுதுபல வகையாலுஞ் சொற்றொடைவண் தமிழ்பாடி
வழுவில்திருப் பணிசெய்து மனங்கசிவுற் றெப்பொழுதும்
ஒழுகியகண் பொழிபுனலும் ஓவாது சிவன்தாள்கள்
தழுவியசிந் தையில்உணர்வுந் தங்கியநீர் மையிற்சரித்தார். சகக

†தேம்பொழியும் செந்தமிழ்நாட் டினில்எங்குஞ் ‡சென்றிறைஞ்சிப்
பாம்பணிவார் தமைப்பணிவார் பொன்னிநா டதுஅணைந்து
வாம்புனல்சூழ் வளநகர்கள் பின்னும்போய் வணங்கியே
பூம்புகலூர் வந்தடைந்தார் பொய்ப்பாசம் §போக்குதற்கு. சகஉ

பொய்கைசூழ் பூம்புகலூர்ப் புனிதர்மலர்த் தாள்வணங்கி
நைபுமனப் பரிவினொடும் நாள்தோறுந் திருமுன்றில்
கைகலந்த திருத்தொண்டு செய்துபெருங் காதலுடன்
வைகுநாள் எண்ணிறந்த வண்தமிழ்மா லைகள்மொழிவார். சகங

நின்றதிருத் தாண்டகமும் நீடுதனித் தாண்டகமும்
மன்றுறைவார் வாழ்பதிகள் வழுத்துதிருத் தாண்டகமும்
கொன்றைமலர்ச் சடையார்பால் குறைந்ததிரு நேரிசையும்
துன்றுதனி நேரிசையும் முதலான தொடுத்தமைத்தார். சகச

ஆருயிரின் திருவிருத்தம் தசபுரா ணத்தடைவும்
பார்பரவும் பாவநா சப்பதிகம் பன்முறையும்

---

சகக. மேலே : பாட்டு. கச0, உஉ௫ பார்க்க.

சகச. மன்று உறைவார் - நடராஜர்.

பா - ம்—*அருள். †தேம்பொழில்சூழ். ‡சேர்ந்திறைஞ்சி. §போக்குவார்.

நேர்படநின் றறைகூவுந் திருப்பதிகம் முதற்பிறவும்
பேரருளின் கடல்அளிக்கும் பெருமானைப் பாடினார். சகரு

அந்நிலைமை *யினில்ஆண்ட அரசுபணி செய்யஅவர்
நன்னிலைமை காட்டுவார் நம்பர்திரு மணிமுன்றில்
தன்னில்வரும் உழவாரம் நுழைந்தவிடந் தானெங்கும்
பொன்னினொடு நவமணிகள் பொலிந்திலங்க அருள்செய்தார். சகசு

செம்பொன்னும் நவமணியும் சேண்விளங்க †ஆங்கெவையும்
உம்பர்பிரான் திருமுன்றில் உருள்பருக்கை யுடன்ஒக்க
எம்பெருமான் வாகீசர் உழவாரத் தினில்ஏந்தி
வம்பலர்மென் பூங்கமல வாவியினிற் புகஎறிந்தார். சகஎ

புல்லோடும் கல்லோடும் பொன்னோடும் மணியோடும்
சொல்லோடும் வேறுபா டிலாநிலைமை துணிந்திருந்த
நல்லோர்முன் திருப்புகலூர் நாயகனார் திருவருளால்
வில்லோடு நுதல்மடவார் விசும்பூடு வந்திழிந்தார். சகஅ

வானகமின் னுக்கொடிகள் வந்திழிந்தால் எனவந்து
தானநிறை சுருதிகளில் தரும்அலங்கா ரத்தன்மை
கானஅமு ‡தம்பரக்குங் கனிவாயில் ஒளிபரப்பப்
பானல்நெடுங் கண்கள்வெளி பரப்பிஇசை பாடுவார். சகக

கற்பகப்பூந் தளிரடிபோங் காமருசா ரிகைசெய்ய
உற்பலமென் முகிழ்விரல்வட் டணையோடுங் §கைபெயரப்
பொற்புறும்அக் கையின்வழிப் பொருகயற்கண் புடைபெயர
அற்புதப்பொற் கொடிநுடங்கி ஆடுவபோல் ||ஆடுவார். சஉ0

---

சகரு. அறைகூவும் திருப்பதிகம் - சாக்கறைத் திருவிருத்தம். அருட் கடலைத் தமக்களிக்கும்.

சகஎ. சேண் - நெடுந்தூரத்தே. பருக்கைக் கல்லுடன்.

சகஅ. புல் கல் பொன் மணி ஆகிய இவைகளைச் சொல்லால் வேறுபாடு உணர்ந்தாரே யல்லாமல் பொருளால் ஒன்றாகவே நினைத்தார் என்க ; **திருக்கூட்டச் சிறப்பு :** அ பார்க்க. "ஓட்டில் தமனியத்தில் சமபுத்தி பண்ணி"—**சிவஞான சித்தியார்.**

சகக. **ஆனாய நாயனார் புராணம் :** சச, உச - பார்க்க. கீத அமுதம் பெருகும். கனி-கொவ்வைக் கனிபோன்ற. பானல் - நீலோற்பல மலர்போன்ற.

சஉ0. கற்பகத் தருவின் பொலிவு பெற்ற தளிர்போன்ற அடிகள் போந்து அழகிய சாரிகை செய்து நடிக்க. சாரிகை - புறக்கூத்துக்குரிய ஆடல்களுள்

**பா - ம்**—*தனில். †ஆங்கவையும். ‡திசையாக்கும். §கைபெயர்ப்பார். ||ஆடினார்.

ஆடுவார் பாடுவார் அலர்மாரி மேற்பொழிவார்
கூடுவார் போன்றணைவார் குழல்அவிழ இடைநுடங்க
ஓடுவார் மாரவே ளுடன்மீள்வர் ஒளிபெருக
நீடுவார் துகில்அசைய நிற்பாரும் ஆயினார். சஉக

இத்தன்மை அரம்பையர்கள் எவ்விதமுஞ் செயல்புரிய
அத்தனார் திருவடிக்கீழ் நினைவகலா அன்புருகு
மெய்த்தன்மை உணர்வுடைய விழுத்தவத்து மேலோர்தம்
சித்தநிலை திரியாது செய்பணியின் தலைநின்றார். சஉஉ

இம்மாயப் பவத்தொடக்காம் இருவினைகள் தமைநோக்கி
"உம்மால்இங் கென்னகுறை உடையேன்யான் திருவாரூர்
அம்மானுக் காளானேன் அலையேன்மின் நீர்" என்று
"பொய்ம்மாயப் பெருங்கடலுள்" எனுந்திருத்தாண் டகம்புகன்றார்.

"பொய்ம்மாயப் பெருங்கடலிற் புலம்பா நின்ற புண்ணியங்காள் தீவினைகாள் திருவே நீங்கள், இம்மாயப் பெருங்கடலை யரித்துத் தின்பீர்க் கில்லையே கிடந்துதான் யானேல் வானோர், தம்மானைத் தலைமகனைத் தண்ண வாரூர்த் தடங்கடலைத் தொடர்ந்தோரை அடங்கச் செய்யும், எம் மான்தன் அடித்தொடர்வான் உழிதர் கின்றேன் இடையிலேன் கெடுவீர் காள் இடறேன் மின்னே"—**தேவாரம்.**

மாதரவர் மருங்கணைய வந்தெய்தி மதனவசக்
காதலவர் புரிந்தொழுகுங் கைதவங்கள் செய்திடவும்

---

ஒன்று. உற்பல மென்முகிழ் விரல் - செங்காந்தளின் மெல்லிய பூப்போன்ற விரல்களில். வட்டணையோடும் - வர்த்தனையோடும்; அபிநயத்தோடும். "மாணிழை வளைக்கை தம்மால் வட்டணை போக்கு கின்றாள்"; "காற்கொசி கொம்பு போலப் போந்துகைத் தலங்கள் காட்டி"—**சிந்தாமணி:** கஉருஎ, கஎரு (கைத்தலங் காட்டுதல், கமலவர்த்தனை—**நச்சினார்க்கினியம்**). பொற்பு உறும் - அழகு பொருந்திய. பொரு............பெயர - மாறுபடுஞ் சேல்மீன் போன்ற கண்கள் கடைபிறழ. நுடங்கி - அசைந்து.

சஉக. மாரவேளுடன் - காம மயக்கத்துடன்.

சஉங. இம்மாயப் பிறவியைக் கூட்டுதற்குத் துணையாகும். உம்மால் - (வினைகளே) உங்களால். அலையேன்மின் - என்னை வருத்தாதேயுங்கள்.

சஉச. கைதவங்கள் - வஞ்சனைகள். அப்பர் எல்லாவற்றையும் சிவமாகக் காணும் பேறு பெற்றமையால், அவருக்கு மண் பொன் பெண் எல்லாம் பேதமின்றிச் சிவமாகத் தோன்றுதல் இயல்பு. அவ்வியல்பினரே "பேதமிலா ஒருணர்விற் பெரியவர்" என்க.

பேதமிலா ஒருணர்விற் பெரியவரைப் பெயர்விக்க
யாதும்ஒரு செயலில்லா மையில்இறைஞ்சி எதிர்*நின்றார். சஉச

இந்நிலைமை உலகேழும் எய்தஅறிந் தியல்பேத்த
மன்னியஅன் புறுபத்தி வடிவான வாகீசர்
மின்னிலவுஞ் சடையார்தம் †மெய்யருள்தான் எய்தவரும்
அந்நிலைமை அணித்தாகச் சிலநாள்அங் கமர்ந்திருந்தார். சஉரு

மன்னியஅந் தக்கரணம் மருவுதலைப் பாட்டினால்
"தன்னுடைய சரணான தமியேனைப் புகலூரன்
என்னையினிச் சேவடிக்கீழ் இருத்திடும்" என் றெழுகின்ற
முன்னுணர்வின் முயற்சியினால் திருவிருத்தம் பலமொழிந்தார். சஉசு

மண்முதலாம் உலகேத்த மன்னுதிருத் தாண்டகத்தைப்
"புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன்" எனப்புகன்று
நண்ணரிய சிவானந்த ஞானவடி வேயாகி
அண்ணலார் சேவடிக்கீழ் ஆண்ட‡அர சமர்ந்திருந்தார். சஉஎ

"எண்ணுகேன் என் சொல்லி எண்ணு கேனோ எம்பெருமான் திரு வடியே எண்ணின் அல்லால், கண்ணிலேன் மற்றோர் களைக ணில்லேன் கழலடியே கைதொழுது காணின் அல்லால், ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய் ஒக்க அடைக்கும்போ துணர மாட்டேன், புண்ணியா உன்ன டிக்கே போது கின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணியனே"—தேவாரம்.

வானவர்கள் மலர்மாரி மண்ணிறைய விண்ணுலகின்
மேனிறைந்த ஐந்துபே ரியவொலியும் விரிஞ்சன்முதல்
யோனிகளா யினஎல்லாம் உள்நிறைந்த பெருமகிழ்ச்சி
தானிறைந்த சித்திரையில் சதயமாந் திருநாளில். சஉஅ

---

சஉரு. அப்பர் தம் இயல்பை. அன்பில் மிகும் பத்தி. அணித்தாக-நெருங்க.

சஉசு. பொருந்திய மனம் புத்தி சித்தம் அகங்காரமாகிய நான்கு கரணமும் அடைந்த ஒருமைப்பாட்டால். திருப்புகலூரனே !. தன்னுடைய (சிவ பெருமானுடைய) அடைக்கலமான என்னை.

சஉஎ. மண் முதலாம் உலகு - மண்முதல் நாதமீறாக உள்ள தத்துவ உலகங்கள்.

சஉஅ. ஐந்து பேரிய ஒலியும் - ஐந்து துந்துபியின் ஒலியும். விரிஞ்சன் - பிரமன். திருநாளில்...ஆண்டஅர சமர்ந்திருந்தார் என்று முன் பாட்டுடன் கூட்டிக் கொள்க.

பா - ம்—*அகன்றார். †மெய்ப்பொருள்தான். ‡அர செய்தினார்.

அடியனேன் ஆதரவால் ஆண்டஅர சின்சரிதப்
படியையான் அறிந்தபடி பகர்ந்தேன்அப் பரமுனிவன்
கடிமலர்மென் சேவடிகள் கைதொழுது குலச்சிறையார்
முடிவில்புகழ்த் திருத்தொண்டின் †முயற்சியினை மொழிகின்றேன்.

ஆ_ திருவிருத்தம் - ககககூ.

---

தமிழ்நாட்டில் பலப்பல அழகிய நாடுகள் இருக்கின்றன. அவைகளுள் ஒன்று திருமுனைப்பாடி நாடு. அத்திருநாட்டில் திருவாமூர் என்றொரு திருப்பதியுண்டு. அதன்கண், வேளாள மரபில், குறுக்கையர்குடியில் தோன்றிய **புகழனார்** என்பவர் ஒருவர் இருந்தார். அவர், மாதினியார் என்ற பெண்மணியை மணந்து இல்லறம் நடாத்திவந்தார். விருந்தோம்புவதிலும், சுற்றங்களைத் தாங்குவதிலும் அவர் பேர்பெற்றவர்.

புகழனார்க்கும் மாதினியார்க்கும் முதலில் **திலகவதியார்** என்ற புதல்வியார் பிறந்தார். சில ஆண்டு கடந்த பின்னர் அவர்கள்பால் **மருணீக்கியார்** என்பவர் தோன்றினார். புகழனார் மருணீக்கியாரை அன்புடன் வளர்த்துக் கலைகளைப் பயிற்றுவித்தார். மருணீக்கியார் பலகலைகளைப் பயின்று இளம்பிறை போல் வளர்ந்து வரலானார். திலகவதியாருக்குப் பன்னிரண்டு வயதாயிற்று.

அந்நாளில் **கலிப்பகை நாயனார்** என்பவர் ஒருவர் இருந்தார். அவர் வேளாளர்; சிவனடியார்; சேனாபதி. அந்நாயனார் திலகவதியாரை மணம் புரிய விரும்பிச் சில பெரியோர்களைப் புகழனாரிடம் அனுப்பினார். அவர்கள் புகழனாரிடம் போந்து கலிப்பகையார் கருத்தைத் தெரிவித்தார்கள். புகழனார், குணம் குலம் முதலியன பேசிய பின்னர்த் தம் மகளைக் கலிப்பகையார்க்குக் கொடுக்க இசைந்தனர். அந்நற்செய்தியைப் பெரியோர்கள் கலிப்பகையார்க்கு அறிவித்தார்கள்.

திருமணம் நிகழ்வதற்குள் வடபுலத்தில் போர் மூண்டது. அப்போர் முனைக்குக் கலிப்பகையார் அனுப்பப்பட்டார். அங்கே அவர் நீண்டநாள் போர்புரிதல் நேர்ந்தது. அவ்வேளையில் திருவாமூரில் புகழனார் பிணிவாய்ப்பட்டு விண்ணெய்தினார். அவர்தம் மனைவியாராகிய மாதினியாரும் அவருடன் உயிர் துறந்தார். திலகவதியாரும் மருணீக்கியாரும் துயரக் கடலில் அழுந்தினார்கள். உறவினர் தேற்றத் தேறி அவர்கள் தாய் தந்தையர்களுக்கு இறுதிக் கடன் ஆற்றினார்கள்.

கலிப்பகையார் வீரப் போர் புரிந்து போர்க்களத்தில் மாண்டார். அச்செய்தி திலகவதியார்க்கு எட்டிற்று. அம்மையார், "என்னருமைத் தாய் தந்தையர்கள் என்னை அவருக்கு மணம்பேசி முடிவுசெய் திருந்தார்கள்; இவ்வுயிர் அவருடையதாயிற்று; ஆதலால் இவ்வுயிரை அவ்வுயிரோடு இசைவிப்பேன்" என்று துணிவுகொண்டார். அந்நிலையில் மருணீக்கியார் அம்மை

---

சஉகூ. ஆதரவால் - விருப்பத்தால். படியை - முறைமையை. அப்பர முனிவன் - அம்மேலான முனிவராகிய திருநாவுக்கரசரின்; அப் பால்முனிவன் என்னும் பாடத்துக்கு, அப்பான்மையிற் சிறந்த முனிவன் என்று கொள்க. மணங்கமழும் மலர்போலும் மெல்லிய சேவடிகளை.

பா - ம்—*பால். †முயற்சி இனி.

யாரை வணங்கி, "நம் தாய் தந்தையர்கள் சிவலோகமடைந்த நாள்தொட்டு உம்மையே அவர்களாகக் கருதி வாழ்ந்து வருகிறேன்; என்னைத் தனியனாக விடுத்துச் செல்லத் துணிவீராயின், முதலில் என் உயிரை விடுகிறேன்" என்று புலம்பினார். திலகவதியார், "தம்பியார் உலகில் வாழ்தல்வேண்டும்" என்னும் தயா உடையாரானார். அதனால் அம்மையார், பொன் மணி நூல் பூணாது, அனைத்துயிர்க்கும் அருள்பூண்டு, இல்லத்திலேயே தவம் புரியலானார். மருணீக்கியார் துயரொழிந்தார்.

பின்னே, மருணீக்கியார் உலக நிலையாமை முதலியவற்றை உணர்ந்து அறநெறியில் நின்றார். அவர் அறச் சாலைகள் அமைத்தார்; தண்ணீர்ப்பந்தர் வைத்தார்; சோலைகள் வளர்த்தார்; குளங்கள் எடுத்தார்; விருந்தளித்தார்; நாவலர்கட்கு உதவினார். அவர் துறவு பூண்டு சமய ஆராய்ச்சியில் தலைப்பட்டார். "சமயங்களிற் சிறந்த சமயம் எது" என்பதை உணர அவருக்கு ஆண்டவன் அருளினானில்லை.

மருணீக்கியார், சமண சமயத்தில் பற்றுள்ளங்கொண்டு பாடலீபுத்திரம் போந்து, சமண்பள்ளி அடைந்தார். அங்கே சமணர்கள், 'வீடறியும் நெறி தங்கள் நெறியே' என்று மருணீக்கியாருக்கு அறிவுறுத்தினார்கள். மருணீக்கியார் சமண சமயக் கலைகளை நன்றாக ஓதி யுணர்ந்தார். அவர்தம் புலமையையுந் தெளிவையுங் கண்ட சமணர்கள், அவருக்குத் தருமசேனர் என்னும் பெரும் பெயர் சூட்டி, அவரைக் குருவாகக் கொண்டார்கள். தருமசேனர் புத்தர்களை வாதில் வென்று சமண சமயத்தை வளர்த்து வந்தார்.

திலகவதியார் சிவநெறியில் நின்று, சிவனருள் பெறத் திருவதிகை வீரட்டானஞ்சேர்ந்து, திருத்தொண்டு செய்துவந்தார். ஒரு நாள் அவருக்குத் தம்பியார் நினைவு தோன்றிற்று. அவர், துயருற்றுத் திருவதிகைப் பெருமானைத் தொழுது, "பெருமானே! என்னை ஆண்டருள்பவர் நீராயின், சமணப் படுகுழியில் வீழ்ந்து கிடக்கும் என் தம்பியாரை அதினின்றும் எடுத்தாளல் வேண்டும்" என்று பன்முறை விண்ணப்பித்தார். சிவபெருமான் அம்மையார் கனவில் தோன்றி, "உன் மனக்கவலையை ஒழிப்பாயாக; உன்தம்பி முன்னமே முனியாகி நம்மை அடையத் தவஞ் செய்தவன்; அவனிடம் சூலைநோய் செலுத்தி அவனை ஆண்டருள்வோம்" என்று அருளிச்செய்தார்.

எல்லாம் வல்ல இறைவனருளால் தருமசேனர் வயிற்றில் சூலை நோய் புகுந்தது; புகுந்து குடலை முடக்குகிறது. தருமசேனர் வருந்துகிறார். வருந்தி வருந்தி அவர் பாழி அறையில் மயங்கி வீழ்ந்தார். அவர், சமண சமயத்தில் தாம் கற்ற மந்திரங்களால் நோய் தீர்க்க முயன்றார். நோய் மேன்மேலும் மூடுகியே எழுகிறது. அவர்தம் துன்பங்கண்ட சமணர்கள் பலர் ஒன்று சேர்ந்து "இச்சூலை மிகக் கொடியதாயிருக்கிறது. இது நஞ்சுபோல் கவர்கிறது. இதைப் போன்ற தொன்றை நாம் கண்டதுமில்லை; கேட்டதுமில்லை. இதற்கென் செய்வது"-என்று துயருழந்தார். பின்னே "பார்ப்போம்" என்று அவர்கள் குண்டிகை நீரை மந்திரித்துக் குடிப்பித்தார்கள்; மயிற்பீலிகொண்டு காலளவுந் தடவினார்கள். நோய் தணிந்தபாடில்லை. அது, முன்னிலும் வீறுகொண்டு முடக்குகிறது. சமணர்கள் வேறு பல வழியிலும் முயன்றார்கள்; முடிவில் "இது நம்மால் போக்கல் அரிது" என்று சொல்லிக் கைவிட்டார்கள்.

தருமசேனர் என் செய்வார் பாவம்! அவர்தம் நெஞ்சம் திலகவதியாரை நினைந்தது. அவர், தமது நிலையைத் திலகவதியாருக்குத் தெரிவிக்கச் சமயற்காரனை அனுப்பினார். அவன் திருவதிகை யடைந்து அருந்தவக் கொழுந்தாகிய திலகவதி யம்மையார் நந்தன வனத்தின் புறம்பணையும்போது அவரைக்

கண்டான்; இறைஞ்சினான்; "உமக்கிளையவர் ஏவலினால் வந்தேன்" என்றான். அம்மையார், "என்ன! அவருக்கு ஏதாகிலும் தீங்கு உண்டோ?" என்று கேட்டார். அதற்கு அவன், "ஆம்; உண்டு." என்று நிகழ்ந்ததைக் கூறி, "உம்மிடம் உய்யும் வழிகேட்டு இரவே திரும்பிவருமாறு என்னை அவர் அனுப்பினார்." என்றான். அம்மையார், "சமண பள்ளியில் யான் அடி எடுத்து வையேன்; இதைத் தம்பியாருக்குத் தெரியப்படுத்து" என்று கூறினார். அதைக்கேட்ட சமயற்காரன் திரும்பித் தருமசேனரிடஞ் சென்று அம்மையார் சொற்றதைச் சொற்றான்.

நோயால் வருந்தும் தருமசேனர், "அந்தோ! என் செய்கேன்!" என்று மனஞ் சோர்ந்தார். அந்நிலையில் ஆண்டவன் அருள் கூடலாயிற்று. மருணீக்கியார், "இவ்வெந்நோய், இப்புன்னெறியில் உள்ளவரை ஒழியாது; நன்னெறி நின்று ஒழுகும் திலகவதியார் திருவடிஅடைவேன்" என்று உறுதிகொண்டார். அப்பொழுது சிறிது ஆறுதல் உண்டாயிற்று. அவர், சமணக் கோலங்களை நீக்கி, வெள்ளாடை புனைந்து, சூலைநோய்க் காரணத்தால் சிலரைப் பற்றிக் கொண்டு, திருவதிகையில் உள்ள திலகவதியார் திருமடத்தைச் சேர்ந்தார். அங்கே அவர், தமக்கையாரைப் பார்த்து, "நங்குலஞ் செய்த நற்றவப் பயனே! அடியேன் சூலை நோயால் பெரிதும் வருந்துகிறேன்; பொறுக்க முடியவில்லை; உய்யும் வழி உணர்த்தி யருள்க" என்று திருவடியில் வீழ்ந்தார்.

அம்மையார் தடங்கருணைப் பெருங்கடலாகிய சிவபெருமான் திருவருளை நினைந்தார்; கைதொழுதார். தொழுது, "பரசமயப் படுகுழியில் வீழ்ந்து வருந்தும் தம்பியாரே! எழுந்திரும்" என்றார். மருணீக்கியார் நோயுடன் நடுங்கி எழுந்து தமக்கையாரை வணங்கி நின்றார். அருந்தவ அரசியார், "இது சிவபெருமான் திருவருளாகும். அவரே பற்றையறுக்கும் பேரருளாளர். அவருக்கே தொண்டு செய்க" என்று கட்டளையிட்டார்; தம்பியார் திருக்கோயிலுள் புகுதற்குத் திருவைந் தெழுத்தை ஓதித் திருநீற்றை அவருக்குக் கொடுத்தார். மருணீக்கியார் திருநீற்றை வாங்கி அணிந்துகொண்டார். பொழுது புலர்ந்தது.

திலகவதியார் வழக்கம்போலத் திருவலகும் திருமெழுக்கும் திருத்தோண்டியுந் தாங்கி ஆலயத்துக்குப் புறப்பட்டார். அவர் தம்பியாரையும் உடனழைத்துச் சென்றார். மருணீக்கியார், வீரட்டானேசுரர் திருக்கோயிலைத் தொழுது, வலம்வந்து, திருமுன் விழுந்து, எழுந்து நின்றார். அதுகாலை, சிவநாதன் திருவருளால் அவருக்குத் தமிழ்ப் பாமாலை சாத்தும் மெய்யுணர்ச்சி தோன்றிற்று. தோன்றவே, சூலைநோய் ஒழியவும், உலகம் உய்யவும் "**கூற்றாயின வாறு விலக்ககிலீர்**" என்னுந் திருப்பதிகத்தை ஓதியருளினார். ஓதியருளினதும் சூலைநோய் ஒழிந்தது. தெய்வத் திருவருள் கைவரப்பெற்ற அடியவர் பெருமான், அன்புருவாய் நிற்கிறார்; நின்று விழுந்து புரண்டு புரண்டு எழுகிறார்; "இப்பெரு வாழ்வைப் பெறச்செய்த சூலை நோய்க்கு என்ன கைம்மாறு செய்வேன்" என்கிறார். அப்பொழுது ஆண்டவன் அருளால், "மொழிக்கு மொழி தித்திக்கும் நீந்தமிழ்ப் பதிகத்தை நீ பாடினாய். அதனால், **நாவுக்கரசு** என்னும் பெயர் உனக்கு ஏழுலகங்களிலும் வழங்குவதாக" என்றொரு வானொலி எழுந்தது. அது கேட்ட யாவரும் வியப்புற்றனர். திருநாவுக்கரசர், "தீவினையேன் அடையும் பேறோ இது" என்று இன்புற்றார். அப்பொழுது அவர் இராவணனுக்கு ஆண்டவன் செய்த திருவருட்டிறத்தின் உண்மையை உணரலானார். உணர்ந்து அத்திருவருட்டிறத்தைத் துதித்தலை மேற்கொண்டார். அடியவர்கள் ஆரவாரித்தார்கள்.

திருநாவுக்கரசருக்கு மனம் வாக்கு காயம் என்னும் திரிகரணங்களாலும் தொண்டு செய்தல் வேண்டும் என்னும் பேரவா எழுந்தது. அவர் மனதால் ஆண்டவனைத் தியானித்தும், வாயால் அவன் புகழைப் பாடியும், கையால் உழவாரத்தொண்டு செய்தும் வரலானார். திலகவதியார், "எம்மை ஒரு பொருளாக மதித்து ஆண்டருளிய சிவபிரான் கருணைத் திறத்தை இங்கே பெற்றவர் யாவர்?" என்று வியந்து வியந்து ஆண்டவனைப் போற்றினார்.

திருநாவுக்கரசர் திருவருள் பெற்ற செய்தி பாடலிபுரத்தில் பரவிற்று. ஆங்குள்ள சமணர்கள் புழுங்கினார்கள். அவர்கள், "தருமசேனர்க்குற்ற சூலை நோயைத் தீர்த்தல் நம்மால் முடியாமற்போயிற்று. அவர் திருவதிகைக்குப்போய், முன்போலச் சைவரானார். இனி நமது சமயம் ஒழிந்தது" என்று தளர்ந்து ஒருங்குசேர்ந்தார்கள். சேர்ந்த சமணர்கள், "இதைப்பல்லவ அரசன் கேள்வியுறுவானாயின், அவனுஞ் சைவனாவன்; நமது விருத்தியும் கெடும்" என்று மனங்கலங்கிச் சூழ்ச்சியிலிறங்கினார்கள். அவர்கள் அனைவரும் "தரும சேனரின் தமக்கை சைவ நெறியில் நிற்றலால், தரும சேனரும் அந்நெறி நிற்க எண்ணிச் சூலை நோய் தீரவில்லை என்று நடித்துப் போய் விட்டார் என்று அரசனிடங் கூறுதல் வேண்டும்" என்று தீர்மானித்தனர். "இதை அரசன் கேள்வியுறுதற்கு முன்னரே நாம் போய் முறையிடுவோம்" என்று அவர்கள் எழுந்து, அரமனை வாயிலை அடைந்து, தங்கள் வரவை அரசனுக்குத் தெரிவிக்கும்படி வாயில் காப்பவர்களிடம் சொன்னார்கள். வாயில் காப்பவர்கள் அடிகண்மார் வரவை அரசனுக்குத் தெரிவித்தார்கள். அரசன் ஆணைமேல் அடிகண்மார்கள் அரமனைக்குள் நுழைந்தார்கள். அவர்கள் மன்னவனைக் கண்டு தாங்கள் சித்திரித்த பொய்ம்மையைக் கூறினார்கள்.

பல்லவன் வெகுண்டு, "இதற்கு என் செய்வது?" என்றான். சமணர்கள் "நஞ் சமயங் கெடுத்த பாவியைத் துன்புறுத்தல் வேண்டும்" என்றார்கள். உடனே மன்னவன், அமைச்சர்களைநோக்கி, "இவர்கள் குறிப்பிட்ட தீயோனைப் பிடித்து வாருங்கள்" என்று கட்டளை யிட்டான். அமைச்சர்கள் திருவதிகை அடைந்து, திருநாவுக்கரசு சுவாமிகளைக் கண்டு, அரசன் ஆணையைத் தெரிவித்தார்கள். சுவாமிகள், "நாமார்க்குங் குடியல்லோம்" என்னுந் திருத்தாண்டகத்தைத் திருவாய்மலர்ந்தருளி, அரசன் ஆணைக்கு இணங்க மறுத்தார். அமைச்சர்கள் திருநாவுக்கரசர் திருவடிகளில் பன்முறை விழுந்து விழுந்து வணங்கி வேண்டினார்கள். திருநாவுக்கரசர், "எல்லாவற்றுக்கும் எம்பெருமானுளன்" என்று நினைந்து, அமைச்சர்களுடன் மன்னன்சபை சேர்ந்தார்.

மன்னன், அழுக்காறுடைய அடிகண்மார்களை நோக்கி, "இவனை என் செய்வது?" என்று கேட்டான். கொடியர்கள், "நீற்றறையிலிடுக" என்றார்கள். அவ்வாறு செய்யுமாறு அரசன் ஏவலாளர்கட்குக் கட்டளை யிட்டான். ஏவலாளர்கள் திருநாவுக்கரசரை நீற்றறையில் இட்டுக் கதவைத் தாளிட்டார்கள். திருநாவுக்கரசர் தாண்டவமூர்த்தியின் தாள் நிழலைத் தலைக்கொண்டு, "ஈசனடியார்க்கு ஈண்டு வருந் துயருளவோ?" என்றிருந்தார். நீற்றறை, இளவேனிலாய்த், தென்றலாய்க், கழுநீர்த்தடமாய், வெண்ணிலவாய், யாழொலியாய், இறைவன் திருவடி நீழலெனக் குளிர்ந்தது. திருநாவுக்கரசர், "மாசில் வீணையும்" என்னுந் திருக்குறுந் தொகையை ஓதி, அங்குஇனிது வீற்றிருந்தார்.

நாட்கள் ஏழாயின. அரசன் சமணர்களை அழைத்து, நீற்றறையைத் திறந்து பார்க்குமாறு கூறினான். சமணர்கள் அப்படியே நீற்றறையைத்திறந்து பார்த்தார்கள். அங்கே அருளாளராகிய நாவரசர், ஒரு துன்பமுமின்றி இனிது விளங்கிக் கொண்டிருந்தார். அவர்கள், "இஃதென்ன அதிசயம்!" என்று

உள்ளே வியந்தார்கள்; வியந்து, அரசனிடஞ் சென்று, "தருமசேனன் நமது சமய மந்திரங்களை நன்கு உணர்ந்தவன். அம்மந்திர வலியால் பிழைத்தான்" என்று சொல்லி, நஞ்சூட்டுமாறு அரசனுக்குப் போதித்தார்கள். அவ்வாறே அப்பாவி மன்னன், திருநாவுக்கரசருக்கு நஞ்சு கலந்த பாலமுதை ஊட்டுவித்தான். "நாதனடியார்க்கு நஞ்சும் அமுதாம்" என்று, அருளாளர் அந்நஞ்சமுதை அருந்தினர். அதனால் அவருக்குத் தீங்கு நேரவில்லை. சமணர்கள் நடுக்குற்றார்கள். "இவனுக்கு விடமும் அமுதமாயிற்று; இவன் பிழைத்திருப்பானாயின் நமக்குத் தீங்கே விளையும்" என்று அவர்கள்கருதி, அரசனிடஞ் சென்று, "நமது சமய மந்திரப் பயிற்சியால் தருமசேனன் நஞ்சாலும் செத்தானில்லை. அவன் இனி உயிரோடிருத்தல் ஆகாது. இருப்பின், எமது உயிரும் உமது அரசாட்சியும் அழிவது திண்ணம்" என்றார்கள். "இனி அவனை எப்படி மாய்ப்பது?" என்று அரசன் கேட்டான். கருணை என்பது சிறிதுமில்லாக் கரியவர்கள், "உமது யானையை அவன்மீது ஏவுக" என்றார்கள். அரசன் அங்ஙனே செய்தான்.

கொலையானை கோபங் கொண்டு திருநாவுக்கரசர் எதிரே வந்தது. திருநாவுக்கரசர் சிறிதும் அஞ்சினாரில்லை. அவர் சிவன் கழலைச் சிந்தித்துச் "சுண்ணவெண் சந்தனச் சாந்தும்" என்னுந் திருப்பதிகத்தை எடுத்து, யானையைப் பார்த்து, "யான் வீரட்டநாதன் அடியவன், அஞ்சுவது யாதொன்றுமில்லை; அஞ்ச வருவதுமில்லை" என்று ஓதியருளினார். எதிர்த்துச் சீறிப் பாய வந்த யானை, திருநாவுக்கரசரை வலம் வந்து வணங்கி, அப்புறம் போயிற்று. அதன்மேலிருந்த பாகர்கள், மீண்டும் அதனைச் சுவாமிகள் மீது திருப்பினார்கள். அஃது அவர்களைக் கீழே தள்ளிக் கொன்றது. மேலும் அவ்யானை ஓடிச் சமணர்களிற் சிலரை மிதித்தது; சிலரைப் பிளந்தது; சிலரைத் தேடித் தேடிப் பற்றிப் பாழ்படுத்தியது. இவ்வாறு யானை நகரத்தைக் கலக்கிற்று. அரசன் துயரக் கடலில் வீழ்ந்தான்.

யானைக்குத் தப்பிப் பிழைத்த சமணர்கள், மானமழிந்து மயங்கி வருந்திய சிந்தையராய் மன்னனிடம் தஞ்சம் புகுந்து, அவன் தாளில் தனித் தனியே வீழ்ந்து வீழ்ந்து புலம்பிப் புலம்பி, "நமது மந்திரவலி" என்னும் பழம் பாட்டையே படித்தார்கள். அரசன் சீறி, "இனிச் செய்வதென்ன?" என்றான். தீமைக்கஞ்சாத் தீயர்கள், "தருமசேனனைக் கல்லுடன் பிணித்துக் கடலில் எறிக" என்றார்கள். என்றதும், அரசன், அருகிருந்த ஏவலாளர்களை நோக்கினான். அவர்கள் அப்படியே செய்தார்கள்.

திருநாவுக்கரசர், "எப்பரிசாயினும் ஆக; யான் எந்தையை ஏத்துவன்" என்று "சொற்றுணை வேதியன்" என்னும் நமச்சிவாயப் பதிகத்தைப் பாடியருளினார். கடல்மீது கல்லானது மிதந்தது; பிணித்த பாசமும் அறுந்தது; கருங்கல்லே சிவிகையாக, அதை வருணன் தாங்கித் திருநாவுக்கரசரைத் திருப்பாதிரிப்புலியூர் அருகே விடுத்தான். சுவாமிகள் திருக்கோயிலுக்குச் சென்று, "ஈன்றாளுமாய்" என்னும் தமிழ் மாலையைச் சாத்தினார். அது போன்ற பல தமிழ் மாலைகளைச் சுவாமிகள் அங்கே சாத்திக்கொண்டிருந்தார்.

அருகக் கடல் கடந்தேறிய அன்பர் பெருமானுக்குத் திருவதிகையின்மீது காதல் முறுகி எழுந்தது. எழவே, அவர், திருப்பாதிரிப்புலியூரை விடுத்து, திருமாணிக் குழியையும், திருத்தினை நகரையுங் கண்டு தொழுது, திருவதிகை அடைந்தார். அப்பதியிலுள்ள அடியவர்கள், நகரை அலங்கரித்துப் பெரியவரை எதிர்கொண்டு பணிந்தார்கள். பெரியவர் அவர்களுடன் திருக்கோயிலுட் புகுந்து, பெருமானை வணங்கி, "வெறிவிரவு கூவிளம்" என்னும் ஏழைத்

திருத்தாண்டகம் முதலிய திருப்பதிகங்களைப் பாடித் திருத்தொண்டு செய்து வந்தார்.

பல்லவன் நல்லறிவு பெற்று, உண்மை தெளிந்து, திருவதிகை யடைந்து, திருநாவுக்கரசு சுவாமிகளை வணங்கிச் சிவனடியவனுனன். அவன் பாடலிபுத்திரத்திலிருந்த சமணப்பள்ளிகளையும் பாழிகளையும் இடித்து, அவைகளின் கற்களையும் பிறவற்றையுங் கொண்டு, திருவதிகையிலே **குணபர வீச்சரம்** என்னும் சிவாலயம் கட்டினன்.

சிவமயமாக விளங்கும் திருநாவுக்கரசு சுவாமிகள், திருவெண்ணெய்நல்லூர், திருவாமாத்தூர், திருக்கோவலூர் முதலிய திருப்பதிகளை வணங்கிப் பதிகம் பாடிக்கொண்டே திருப்பெண்ணுகடம் அடைந்தார். அவர், அங்குள்ள திருத்தூங்கானை மாடம் என்னும் திருக்கோயிலுட் சென்று, ஆண்டவனைத் தொழுது, "நாயகனே! அடியேன் உடல் ஆருகத சமயத்தொடக்குண்டது. இவ்வுடலோடு யான் உயிர் வாழேன். உயிர் வாழ்தற்குச் சூலத்தையும் இடபத்தையும் என் மீது பொறித்தருளல் வேண்டும்" என்று வேண்டிப் "பொன்னார் திருவடிக் கொன்றுண்டு" என்னுந் திருவருட் பதிகம் பாடினர். பாடினதும், ஆண்டவன் அருளால் ஒரு சிவபூதம் ஒருவரும் அறியாதவாறு சுவாமிகள் திருத்தோளில் இருகுறியையும் பொறித்தது. சுவாமிகள் ஆண்டவன் அருளை வியந்து கசிந்து கசிந்துருகினர்.

திருநாவுக்கரசர் திருப்பெண்ணு கடத்திலிருந்து கொண்டே, திருவறத்துறை, திருமுதுகுன்றம் முதலிய திருப்பதிகளுக்குச் சென்று, ஆண்டவனைத் தொழுது, தமிழ்பாடி வந்தார்; பின்னே, நிவாநதிக்கரை வழியே நடந்து, சிதம்பரம் சேர்ந்தார்; அங்கே, "என்று வந்தாய்" என்னுங் குறிப்புடன் ஆனந்தக் கூத்தாடும் ஸ்ரீ நடராஜப் பெருமானைப் பணிந்து, திருவிருத்தம் பாடிப் "பத்தனய்ப் பாடமாட்டேன்" என்னுந் திருநேரிசையையும், "அன்னம் பாலிக்கும்" என்னுந் திருக்குறுந் தொகையையும் பாடிப் பரவினர். சுவாமிகள் தில்லையினின்றும் திருவேட்களம் போந்து, பெருமானைப் பணிந்து, பதிகம் பாடி, திருக்கழிப்பாலை நண்ணி, "வனபவள வாய்திறந்து" என்னும் திருப்பதிகம் ஓதி, அங்கே தங்கினர். அங்குத் தில்லை நினைவு தோன்றச் சுவாமிகள், திருக்கழிப்பாலை விடுத்துப் "பனைக்கை மும்மத வேழம் உரித்தவன்" என்னுந் திருக்குறுந் தொகையை எடுத்து, "அம்பலக்கூத்தனைத் - தினைத்தனைப் பொழுதும் மறந்துய்வனே" என்று ஓதிக்கொண்டே திருச்சிற்றம்பலத்தை அடைந்தார். அங்கே அடியவர் பெருமான் "அரியானை" என்னும் பெரிய திருத்தாண்டகத்தைப் பாடியருளினர்; மேலுந் தொடர்ந்து, "செஞ்சடைக்கற்றை" என்னுந் திருநேரிசை பாடித் திருப்பணி செய்து வந்தார்.

அந்நாளில், சீர்காழியிலே அம்மையார் திருமுலைப்பாலையுண்டு, "இவன் எம்மான்" என்று ஆண்டவனைச் சுட்டிக் காட்டிய திருஞானசம்பந்த சுவாமிகளின் தெய்விகச் செயல்களை அடியவர்கள் பேசிக்கொண் டிருந்தார்கள். அதைக் கேட்ட திருநாவுக்கரசு சுவாமிகட்குத் திருஞானசம்பந்த சுவாமிகளின் சேவடியை வணங்குதல் வேண்டுமென்னும் வேட்கை எழுந்தது. எழுந்ததும், அவர் ஸ்ரீ நடராஜப் பெருமானைத் தொழுது, விடைபெற்றுத் திருவீதியிலே புரண்டு புரண்டு, தில்லை எல்லையைக் கடந்தார்; வழியில் திருநாரையூரைப் பணிந்து பாடிச் சென்று சீர்காழியை அணுகினர்.

திருநாவுக்கரசரது வருகையைக்கேள்வியுற்ற திருஞானசம்பந்தர் அடியவர் குழாத்துடன் அவரை எதிர்கொண்டார். திருநாவுக்கரசு சுவாமிகள் திருஞான

சம்பந்தசுவாமிகள் திருவடிகளில் விழுந்து வணங்கினார். கௌணியர் பெருமான், திருநாவுக்கரசுசுவாமிகளின் திருக்கரங்களைப்பற்றி, இறைஞ்சி, "அப்பரே!" என்றார்; அரசரும் "அடியேன்" என்றார். இரண்டு பெரியவர்களின் அடியார் கூட்டங்களும் இருபெருங் கடலைப்போல ஒன்றோடொன்று கலந்து ஆரவாரித்தன. பெரியவர் இருவரும் வரம்பிலா இன்பம் எய்தினார். பின்னர் இருவரும் திருக்கோயிலுக்குச் சென்று ஆண்டவனை வணங்கினார். திருஞான சம்பந்தப்பெருமான், அப்பர் சுவாமிகளை நோக்கி, "உம் தம்பிரானரைப் பாடும்" என்றார். அப்பர் சுவாமிகள், "பார்கொண்டு மூடி" என்னுந் திருப்பதிகத்தைப் பாடியருளினார். அப்பர் சுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகள் திருமடத்திற்கு எழுந்தருளி, அவருடன் அமுதுண்டு, அங்கே பல நாள் தங்கியிருந்தார்.

இருக்கும் நாளில் "சோழநாட்டுத் திருப்பதிகளைத் தரிசிக்க வேண்டும்" என்று திருநாவுக்கரசர் திருஞான சம்பந்தருக்குத் தெரிவித்தார். திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசருடன் திருக்கோலக்கா வரை சென்று, ஆண்டவனைத் தொழுது, விடைபெற்றுச் சீர்காழிக்குத் திரும்பினார். திருநாவுக்கரசர், திருக்கருப்பறியலூர், திருப்புன்கூர், திருநீடூர், திருக்குறுக்கை, திருநின்றியூர், திருநனிபள்ளி, திருச்செம்பொன் பள்ளி, திருமயிலாடுதுறை, திருத்துருத்தி, திருவேள்விக்குடி, திருஎதிர்கொள்பாடி, திருக்கோடிக்கா, திருவாவடுதுறை, திருவிடைமருதூர், திருநாகேச்சுரம், திருப்பழையாறை முதலிய திருப்பதிகளைக் கண்டு தொழுது, பதிகம் பாடித் திருச்சத்தி முற்றத்தை அடைந்தார்; அங்கே "கோவாய் முடுகி" என்னுந் திருப்பதிகத்தை எடுத்துப் "பூவார் திருவடி என் தலைமேல் பொறித்து வைப்பாய்" என்று முறையிட்டார். அப்பொழுது சிவபெருமான் "நல்லூருக்கு வா" என்று அருளிச் செய்தார். திருநாவுக்கரசர் நல்லூரை அணைந்து, இறைவனை வணங்கி எழுந்தார். எழும்போது, சிவபிரான் "உன்னுடைய நினைப்பை முடிக்கின்றோம்" என்று பாதமலரை அப்பர் திருமுடிமீது சூட்டியருளினார். அப்பரெம்பெருமான், "நனைந்தனைய திருவடி என்தலைமேல் வைத்தார் நல்லூரெம் பெருமானார் நல்லவாறே" என்று பாடிப் போற்றினார். அவர் இன்னும் பல பதிகங்களைப் பாடினார்.

அப்பர் சுவாமிகள் திருநல்லூரில் வதிந்துகொண்டே திருக்கருகாவூர், திருவாவூர், திருப்பாலைத்துறை முதலிய க்ஷேத்திரங்கட்குச் சென்று ஆண்டவனை வணங்கி வருவார். பின்னர்ச் சுவாமிகள் திருநல்லூரை விடுத்துத் திருப்பழனஞ் சேர்ந்தார். அங்கும் சுவாமிகள் தங்கிப் பல திருப்பதிகளைத் தரிசிப்பாரானார்.

ஒரு நாள் திருநாவுக்கரசு சுவாமிகள் திங்களூருக்குச் சென்றார். அங்கே அப்பூதியடிகள் என்பவர் ஒருவர் உளர். அவர் திருநாவுக்கரசரிடம் பேரன்பு வாய்ந்தவர். அவ்வன்புக்கு அறிகுறியாக அவர் தம் புதல்வர்களுக்கும், அன்னசாலை, கிணறு, குளம், தண்ணீர்ப்பந்தர் முதலியவற்றிற்கும் "திருநாவுக்கரசு" என்னும் திருப்பெயரையே சூட்டி அறம் வளர்த்து வந்தார். அவர்தம் அன்புச் செயலைத் திருநாவுக்கரசர் கண்டுங் கேட்டும் அவரது திருமாளிகை நோக்கினார். அப்பூதியடிகள் மனைவி மக்களுடன் தங் குருநாதனை எதிர் கொண்டு பணிந்தார்; "திருவமுது செய்தருளல் வேண்டும்" என்றுங் கேட்டுக் கொண்டார். திருநாவுக்கரசரும் உடன்பட்டார். திருவமுது விதம் விதமாக ஆக்கப்பட்டது. அப்பூதி நாயனார், 'திருநாவுக்கரசு' என்னும் பெயருடைய தம் புதல்வரை அழைத்து வாழைக் குருத்து அறுத்து வருமாறு கூறினார். புதல்வர் விரைந்தோடித் தோட்டம் புகுந்து குருத்தை அரிந்தார். அப்போது ஒரு நாகப் பாம்பு அவரைத் தீண்டிற்று. அவர் அதைப் பொருட்படுத்தாது மனோவேகமாகப் பறந்து வந்து குருத்தை அன்னையாரிடங் கொடுத்தார். நஞ்சு

தலைக்கேற மயங்கிவிழுந்து அவர் உயிர் துறந்தார். "பெரியவர் திருவமுது செய்தற்கு இடையூறு நேர்ந்ததே" என்று அப்பூதியாரும் அவர்தம் மனைவியாரும் வருந்திச் சவத்தை மறைத்தனர். அவ்விருவரும் திருநாவுக்கரசரிடம் போந்து அமுதுசெய்ய அவரைவேண்டினர். அவ்வேளையில் திருநாவுக்கரசருக்கு ஒருவித தடுமாற்ற முற்றது. இறைவன் அருளால் அவர் நிகழ்ந்ததை உணர்ந்து கொண்டார். திருநாவுக்கரசர் சவத்தைச் சிவாலயத்தின் முன்னர்க் கொணர்வித்து "ஒன்று கொலாமவர்" என்னுந் திருப்பதிகத்தை ஓதியருளினார். அப்பூதியடிகளின் அருமைப் புதல்வர் உயிர் பெற்றெழுந்தார். அதற்கு மேல் அப்பூதியடிகள் வேண்டுகோட் கிணங்கித் திருநாவுக்கரசர் திருவமுது செய்து சில நாள் அப்பூதியடிகளுடன் தங்கியிருந்தார். பின்னே அவர், திருப்பழனஞ் சென்று "சொன்மாலை" என்னுந் திருப்பதிகத்தை எடுத்து "அப்பூதிகுஞ்சிப் பூவாய்நின்ற சேவடியாய்" என்று அப்பூதியடிகளைச் சிறப்பித்தார். அப்பர் சுவாமிகள் திருச்சோற்றுத்துறை முதலிய திருப்பதிகட்குச் சென்று ஆண்டவனை வணங்கித் திருப்பழனத்தில் வதிந்து வந்தார்.

அப்பர் சுவாமிகள் திருப்பழனம் விடுத்துத் திருநல்லூரை அடைந்து திருப்பணி செய்து கொண்டிருந்தார். அவ்வேளையில் அவருக்குத் திருவாரூர் நினைவு தோன்றிற்று. தோன்றவே, அவர் திருநல்லூரினின்றும் நீங்கித் திருப்பழையாறை, திருவலஞ்சுழி, கும்பகோணம், திருநாலூர், திருச்சேறை, திருக்குடவாயில், திருநறையூர், திருவாஞ்சியம், பெரு வேளூர், திருவிளமர் முதலிய திருப்பதிகளைத் தரிசித்துத் திருவாரூரை அடைந்தார். அடியார்கள் அவரை எதிர் கொண்டார்கள். அப்பர் சுவாமிகள், "தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே" என்று பாடிக்கொண்டு, திருவீதியுள் புகுந்து, தேவாசிரிய மண்டபம் சேர்ந்து, திருக்கோயிலுள் நுழைந்து போற்றித்திருத் தாண்டகம் அருளிச் செய்தார் ; "காண்டலே கருத்தாய்" என்னுந் திருப்பதிகம் ஓதி உருகினார் ; "கொய்யுலா மலர்ச் சோலைக் குயில் கூவ மயிலாலும் ஆரூரைக் - கையினால் தொழாதே முன் கனியிருப்பக் காய் கவர்ந்த கள்வனேனே" என்று கசிந்தார் ; "பாடிளம்" என்னும் பதிகத்தை அருளினார் ; ஒரு திருப்பதிகத்தில் நமிநந்தியடிகளைச் சிறப்பித்தார் ; அங்குள்ள அரநெறி என்னுந் திருக்கோயிலையுங் கண்டு தொழுதார். திருநாவுக்கரசர் திருவாரூரில் அமர்ந்து கொண்டே திருவலிவலம், கீழ்வேளூர், கன்றாப்பூர் முதலிய திருப்பதிகளுக்குச் சென்றுவருவார். அவ்வேளையில் திருவாரூரில் திருவாதிரைத் திருவிழா நடைபெற்றது. அத்திருவிழாவை அப்பர்சுவாமிகள் கண்டு மகிழ்ந்தார். பின்னே அவர், திருப்புகலூரை நினைந்து, திருவாரூரை ஒருவாறு நீத்து, வழியில் பல திருப்பதிகளைக் கண்டு வணங்கித் திருப்புகலூரை நோக்கினார்.

அச்சமயத்தில் திருப்புகலூரில் திருஞானசம்பந்த சுவாமிகள் முருக நாயனார் திருமடத்தில் எழுந்தருளி யிருந்தார். அவர் திருநாவுக்கரசு சுவாமிகள்வருகையைக் கேள்வியுற்று அவரை எதிர்கொண்டார். ஒருவரை ஒருவர் வணங்கினார். திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசரை நோக்கி, " அப்பரே ! நீர் வரும் நாளில் திருவாரூரில் நிகழ்ந்த பெருமையை வகுத்துரையும்" என்று கேட்டார். அப்பெருமையைத் திருநாவுக்கரசு சுவாமிகள், " முத்து விதானம் " என்னுந் திருப்பதிகத்தால் விளக்கினார். உடனே திருஞான சம்பந்தர், "திருவாரூர் போய் வருகிறேன்" என்று திருவாரூரை நோக்கினார். திருநாவுக்கரசு சுவாமிகள் திருப்புகலூரை அடைந்து, ஆண்டவனைத் தொழுது, பதிகங்கள் பாடித் திருத்தொண்டு செய்துகொண்டிருந்தார்.

அப்பர் சுவாமிகள் திருப்புகலூரை விடுத்துத் திருச்செங்காட்டங்குடி, திருநள்ளாறு, சாத்தமங்கை, அயவந்தி, திருமருகல் முதலிய தலங்களுக்குச்

சென்று மீண்டுந் திருப்புகலூரை அடைந்தார். திருஞான சம்பந்தர் திரு வாரூர்ப் பெருமானை வணங்கித் திருப்புகலூர் சேர்ந்தார். திருநாவுக்கரசர், திரு ஞான சம்பந்தரை எதிர்கொண்டு அளவளாவி இருந்தார். அப்பொழுது சிறுத் தொண்டநாயனாரும் திருநீலநக்கநாயனாரும் அங்கே எழுந்தருளினார்கள். எல்லா ரும் முருகநாயனார் திருமடத்தில் வீற்றிருந்து இன்பத்தில் தோய்ந்திருந்தனர்.

இரண்டு பெரியார்களும் பிறதிருப்பதிகளை வணங்கத் திருவுளங் கொண் டமையால், திருநீலநக்க நாயனார், சிறுத்தொண்டநாயனார், முருகநாயனார் முத லியவர்கள் விடைகொண் டேகினார்கள். இருவரும் திருப்புகலூரை நீத்துத்திரு வம்பரைத் தொழுது, திருக்கடவூரை அடைந்து, அங்கே குங்குலியக் கலயநாய னார் விருந்தினராயிருந்து, திருவாக்கூர்த் தான்தோன்றி மாடக்கோயிலைக் கண்டு பணிந்து, திருவீழிமிழலை சேர்ந்தனர். அங்குள்ள அடியார்கள் எதிர்கொள்ள இருவரும் திருக்கோயில் அணைந்தனர். அப்பர் சுவாமிகள் "திருவீழிமிழலையா னைச் சேராதார் தீநெறிக்கே சேர்கின்றாரே" என்று திருத்தாண்டகம் பாடி னார். இருவரும் அங்கே தங்கினார்.

அந்நாளில் மழைவளஞ் சுருங்கினமையால், காவிரி வறண்டது. அதனால் பஞ்சம் உண்டாயிற்று; உயிர்கள் வருந்தின. சிவபெருமான் இரண்டு சுவாமி களின் கனவில்தோன்றிக் "காலநிலை உங்களை ஒன்றுஞ்செய்யாது. ஆனால் அஃது உங்கள் தொண்டர்களைத் தாக்கும். ஆதலால் அவர்கள் பொருட்டுப் படிக்காசு வழங்குவோம்" என்றருளினார். அருளியவாறே கிழக்கு மேற்குப் பீடங்களில் படிக்காசுகள் வைக்கப்பட்டன. அவைகளைக் கொண்டு அடியார்கள், அமுதாக் கிப், பறைசாற்றி, உயிர்களை யெல்லாம் உண்பித்தார்கள். திருஞானசம்பந்தர் சிவ குமார ராதலான், வட்டக் காசு பெற்று வந்தார். திருநாவுக்கரசர் கைத் தொண்டு செய்தலான் வட்டமில்லாக் காசு பெற்று வந்தார். பின்னே மழை பெய்தமையால் பஞ்சம் நீங்கிற்று.

இரண்டு அன்பர்களும் திருவீழிமிழலையை விடுத்துத் திருவாஞ்சியம் முத லிய திருப்பதிகட்குச் சென்று திருமறைக் காட்டுக் கேகினார்கள்; அங்கே அடி யார்களுடன் திருக்கோயிலுக்குப் போனார்கள். திருமறைக் காட்டின் திருக் கதவு வேதங்களால் பூசிக்கப் பெற்று அடைக்கப்பட்டது. அதைத் திறக்க வல்ல அன்பர் அணையாமையால், அதன் பக்கத்தில் ஒரு வாயில்செய்து, அதன் வழியே அடியவர்கள் சென்று, ஆண்டவனைத் தொழுவது வழக்கமாயிருந்தது. அதை இருவரும் நேரே கண்டனர்; கேட்டனர். ஞானசம்பந்த வள்ளல் நாவர சுப் பெருமானைப் பார்த்து, "நாம் இருவேமும் நேரே சென்று பெருமானைத் தொழுதல்வேண்டும். ஆகவே இக்கதவு திறக்க நீர் பாடும்" என்றார். அப்பரெம் பெருமான் "பண்ணினேர்" என்றெடுத்துக் "கண்ணினால் உமைக்காணக் கத வினைத் திண்ணமாகத் திறந்தருள் செய்ம்மினே" என்று பாடினார். சிவபிரான் திருக்காப்பு நீக்கத் தாழ்க்கவே, "இரக்கமொன்றிலீர்" என்று திருக்கடைக் காப் பில் அருளி இறைஞ்சினார். உடனே காப்பு நீங்கியது; கதவு திறந்து கொண்டது. இரு முனிவர்களும் அடியவர்களுடன் தொழுது விழுந்தார்கள். அடியவர்கள் ஆரவாரித்தார்கள். இருவரும் உள்நுழைந்து தமிழ் மாலைகள் சாத்தி வெளியே வந்தனர். தாண்டகவேந்தர் முத்தமிழ் விரகரைப் பார்த்து, "இத்திருக்கதவு திறக்கவும் அடைக்கவும் வழக்கத்தில் வரும் பொருட்டு நீர் அடைக்கப்பாடும்" என்றார். முத்தமிழ் விரகர் திருப்பதிகம் பாடத் தொடங்கியதும் திருக்கதவு திருவருளால் அடைந்துகொண்டது. பிள்ளையார் திருப்பதிகத்தைப் பாடி முடித்தார். அன்று முதல் அத்திருக்கதவு திறக்கப்பட்டும் அடைக்கப்பட்டும் வருகிறது. ஞானசம்பந்தரும் நாவரசரும் மற்ற அடியவர்களும் திருவருளை வியந்து திருமடத்தைச் சேர்ந்தார்கள்.

திருநாவுக்கரசருக்கு ஒருவித ஏக்கம் உண்டாயிற்று. "என்ன! என் பாட்டிற்குக் கதவு அரிதில் திறக்கப்பட்டது; அவர் பாட்டிற்கு அஃது எளிதில் மூடிக்கொண்டது!" என்று அவர் கவன்று மடத்தின் ஒரு பக்கத்தில் ஆண்டவனை நினைந்து உறங்கினார். அப்பொழுது சிவபெருமான் தோன்றி" "வாய்மூரிலிருப்போம்; தொடரவா" என்றருளினார். அப்பரெம் பெருமான் விழித்துத் "திருவாய்மூர் செல்வனார் - அங்கே வாவென்று போனார் அதென்கொலோ" என்று பாடிக்கொண்டு எழுந்தார். சிவபெருமான் அப்பருக்கு வழங்கிய திருக்கோலத்தோடு முன் செல்கிறார்; அப்பர் அவரைத் தொடர்ந்து செல்கிறார். அப்பர் ஆண்டவனை அணைய முயன்று முயன்று பார்க்கிறார்; அவர் அணையப் பெற்றாரில்லை. ஆண்டவன் அப்பர் சுவாமிகளுக்கு அணித்தே காட்சி கொடுப்பார் போலத் திருக்கோயில் ஒன்றை எதிரே காட்டி, அதனுள்ளே புகுந்தார். அப்பர் சுவாமிகள் விரைந்து தொடர்ந்தார். திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் திருவாய்மூர் நோக்கியதைக் கேள்வியுற்று, அவரும் அங்கே போந்தார். அப்பர் சுவாமிகளுக்கு ஆண்டவன் திருவுருவம் புலனாகவில்லை. அவர் அயர்ந்து, "திருக்குறிப்பை அறியாது கதவைத் திறப்பித்த அடியேனுக்குத் திருவுருவை மறைக்கலாம்; உறைக்கப்பாடிக் கதவை அடைப்பித்த அன்பர் இங்கே போந்துள்ளார். அவருக்கும் மறைக்கலாமோ" என்று விண்ணப்பித்தார். சிவபெருமான் திருஞான சம்பந்த சுவாமிகளுக்குக் காட்சி வழங்கினார். அவர் தொழுது திருநாவுக்கரசு சுவாமிகளுக்கு அக்காட்சியைக் காட்டினார். திருநாவுக்கரசர் சிவபெருமானைக் கண்டு "பாட அடியார்" என்னுந் திருத்தாண்டகத்தைப் பாடினார். சிவபெருமான் அத் தமிழ்மாலையணிந்து எழுந்தருளினார். இருவரும் திருவாய்மூர் போந்து, இறைவனை வணங்கி, அங்கே தங்கி யிருந்தனர். இருவரும் அங்கிருந்து மீண்டு திருமறைக் காட்டுக் கெழுந்தருளினர்.

திருஞான சம்பந்தப் பெருமானைக் கண்டு வருமாறு, பாண்டிமா தேவியாராகிய மங்கையர்க்கரசியார் முன்னிலையில் அமைச்சராகிய குலச்சிறை நாயனார் ஒற்றர்களை அனுப்பினார். அவர்கள் திருமறைக்காடு போந்து, திருஞான சம்பந்த சுவாமிகளைக் கண்டார்கள்; கண்டு பாண்டி நாட்டில் சைவ நன்னெறியை மாய்க்கச் சமணர்கள் புரிந்து வருங் கொடுமைகளைத் தெரிவித்தார்கள். உடனே ஞான சம்பந்தர் அக்கொடுமைகளை வீழ்த்திச் சைவம் வளர்க்கத் தெய்வ நீற்றை நினைந்து புறப்பட்டார். அப்பொழுது திருநாவுக்கரசர், "சமணர்கள் மிகப் பொல்லாதவர்கள்; என்னைச் சொல்லொணுத் துன்பத்துக் குட்படுத்தினார்கள்; நீர் போதலாகாது" என்று தடுத்தார். ஞான சம்பந்தப் பெருமான், "திருநீற்று நெறி போற்றி வரும் மங்கையர்க்கரசியார், குலச் சிறை நாயனார் ஆய இருவரையுங் காண்டல் வேண்டும் என்னும் வேட்கை எனக்கு எழுந்து விட்டது. சமணர்கள் கொடுமைகளை ஒழித்துச் சைவ நெறி ஓம்பாது, இனி யான் ஒன்றுஞ் செய்யேன்; உமது ஆணை" என்றார். திருநாவுக்கரசர், "நீர் அங்கே போகுமாறு துணிந்து விட்டீர். நீர் போதல் கூடாதென்பது எனது கருத்து. யான் போய்க் கொடுமைகளைச் சிதைத்து வருகிறேன்" என்று முறையிட்டுப் பிள்ளையார் செலவைத் தடுக்க முயன்றார். அம்முயற்சி பயன்படாமை கண்டு திருநாவுக்கரசர் நின்றார். திருஞான சம்பந்தர் திருநாவுக்கரசரிடம் விடை பெற்றுத் திருமறைக் காட்டுப் பெருமானைத் தொழுது, பாண்டிநாடு நோக்கினார்.

திருநாவுக்கரசர் திருவீழிமிழலையைக் கண்டு தொழுதற்குத் திருமறைக் காட்டினின்றும் புறப்பட்டுத் திருநாகைக்காரோணம் முதலிய தலங்களை

வணங்கித் திருவீழிமிழலை யடைந்தார். அவர், அங்கிருந்து திருவாவடுதுறை போந்து, ஆளுடைய பிள்ளையார்க்கு ஐயன் ஆயிரம் பொன் கொடுத்ததைக் "கழுமல வூரர்க் கம்பொன் ஆயிரங் கொடுப்பர் போலும் ஆவடு துறைய னாரே" என்று சிறப்பித்துத் திருப்பழையாறைக்குச் சென்றார்.

திருப்பழையாறிலே வடதளி என்றொரு சிவாலய முண்டு. ஆங்குள்ள சிவலிங்கப்பெருமான் சமணர்களால் மூடப்பட்டிருந்தார். அப்ப ரெம்பெருமான் ஆண்டவனைத் தொழுதபோது, "அது சமணர்கள் விமானம்" என்று கேட்டு மனம் நொந்து, ஓரிடத்தில் ஒதுங்கிச் சிவபெருமான் திருவடியைச் சிந்தித்து, "ஐயனே ! சமணர்கள் வஞ்சம் ஒழிதல்வேண்டும். அவர்கள் திறம் அழிதல் வேண்டும். திருவுருவைக் கண்டு தொழாது யான் போகேன்" என்று உறுதி கொண்டு அமுதுசெய்யாமலிருந்தார். அடியவருக்கெளிய அம்பல வாணர், மன்னன் கனவில் தோன்றி, நிலைமையை உணர்த்திச் சமணர்களைத் தொலைக்கு மாறு கூறித் தாம் எழுந்தருளியுள்ள இடத்தின் அடையாளத்தையுங் குறிப்பிட்டார். மன்னன் எழுந்து அமைச்சர்களையும் உடன் அழைத்துச் சென்று, திருநாவுக்கரசர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கிச் சமணர்கள் தூர் அறுத்தான். யானையினால் ஆயிரம் சமணர்கள் மிதியுண்டார்கள். மன்னன் சிவலிங்கப்பெருமான் மறைப்பை நீக்கி, விமானம் அமைத்துத் திருப்பணிகள் செய்தான். திருநாவுக்கரசர் கண்ணாரவும் மனமாரவும் சிவலிங்கப் பெருமானைக் கண்டு தொழுது, உருகி, ஆங்கே நிகழ்ந்த செயல்களைப் பொறித்துத் "தலையெலாம்" என்னுந் திருப்பதிகம் பாடினார்.

திருநாவுக்கரசு சுவாமிகள் திருப்பழையாறையில் சிலநாள் தங்கித் திருத்தொண்டு செய்து வந்தார்; பின்பு அத்திருப்பதியை விடுத்துத் திருவானைக்கா, திருவெறும்பியூர், திருச்சிராப்பள்ளி, திருக்கற்குடி முதலிய திருப்பதிகளைத் தொழுது, தமிழ் பாடினார் ; திருப்பராய்த்துறை தொழ விரும்பிச் சென்று, அத்திருப்பதியையுங் கண்டு தொழுதார் ; அங்கிருந்து, திருப்பைஞ்ஞீலியை நோக்கினார்.

வழியில் நீர் வேட்கையும் பசியும் அவரைப்பற்றின. அப்பர்சுவாமிகள் சித்தம் அலையாது சிவசிந்தனையுடன் நடந்தார். அருட்கடலாகிய சிவபெருமான் ஒரு திருநீற்று அந்தணராய் வழியில் ஓரிடத்தில் சோலையையுங் குளத்தையும் சமைத்துக் காட்டி, வழி நடப்பார் போலப் பொதிசோறு வைத்துக்கொண்டிருந்தார். திருநாவுக்கரசர் அவ்விடஞ் சேர்ந்தபோது, அந்தணர் அவரைப் பார்த்து, "இளைப்பாயிருக்கிறீர். என்னிடம் பொதிசோறு இருக்கிறது. அதை யுண்டு இக்குளத்தில் நீர் அருந்தி இளைப்பாறும்" என்றார். அப்பர்சுவாமிகள் அதற்கு உடன்பட்டுச் சோறுண்டு நீர் அருந்தி இளைப்பாறினார். அதற்கு மேல் அந்தணர் அப்பரைப் பார்த்து, "நீர் எவ்விடம் போகிறீர்?" என்றுகேட்டார். அப்பர் "பைஞ்ஞீலிக்குப் போகிறேன்" என்றார். அந்தணர், "யானும் அவ்விடமே போகிறேன்" என்றார். இருவரும் பைஞ்ஞீலி நோக்கி நடந்து அத்திருப்பதியை அணுகினார். உடன்போந்த அந்தணர் மறைந்தருளினார். திருநாவுக்கரசர் ஆண்டவன் அருட்பெருந் தன்மையை வியந்து பதிகம் பாடினார். பின்னை அவர் திருக்கோயிலுட் புகுந்து தமிழ்மாலை சாத்தித் தொண்டு செய்து கொண்டிருந்தார்.

அப்பர் சுவாமிகள் அங்கிருந்து புறப்பட்டுத் திருவண்ணாமலை, திருவோத்தூர், திருவேகம்பம், திருக்கச்சி மயானம், திருமேற்றளி, திருமாற்பேறு, திருக்கழுக்குன்றம், திருவான்மியூர், திருமயிலாப்பூர், திருவொற்றியூர், திருப்பாசூர்,

திருவாலங்காடு, திருக்காரிகரை முதலிய திருப்பதிகளைச் சேர்ந்து, ஆங்காங்கே திருப்பதிகம் பாடித் திருக்காளத்தியடைந்து, ஆண்டவனை வணங்கித் தமிழ் மாலை சூடிக் கண்ணப்பரையுந் தொழுதிருந்தார்.

தென்கயிலையாகிய திருக்காளத்தி, அப்பருக்கு வடகயிலை நினைவூட்டிற்று. வடகயிலையைக் காண அப்பர் உறுதிகொண்டார்; கொண்டு அவர் வடதிசை நோக்கினார்; ஸ்ரீ சைலத்தை அணைந்தார்; பதிகம் பாடினார்; தெலுங்கு, கன்னடம், மாளவம் முதலிய தேசங்களைக் கடந்தார்; காசியை யடைந்தார்; ஆண்டவனை வணங்கினார்; தம்முடன் வந்தவர்களை அவ்விடத்தில் நிறுத்தி விட்டார்; சாலமூல பலங்களை உண்பதையும் நீக்கினார்; அனல் உமிழும் கற்சுரங்களிலே நடக்கலானார்; பாதங்கள் தேய்ந்தன; கைகளால் தாவிச் சென்றார்; கைகள் தேய்ந்தன; மார்பினால் ஊர்ந்தார்; மார்பும் நைந்து தேய்ந்தது; எலும்புகளும் முறிந்தன; புரண்டு புரண்டு பார்த்தார்; உடலம் தேயலாயிற்று; மெல்ல மெல்ல நகர முயன்றார். அதற்குமேல் அப்பர் செயலற்றவரானார்.

அப்பர் சுவாமிகள் வாயிலாக இன்னுந் தமிழ்மறை வெளிவருதல் வேண்டும் என்று சிவபெருமான் திருவுளங் கொண்டார். அதனால் சிவபெருமான் அப்பருக்கு வடகயிலையில் காட்சி யருளத் திருவுளம் பற்றினாரில்லை. சிவபெருமான் ஒரு முனிவராய் ஒரு பொய்கையை உண்டாக்கி, அப்பர் எதிரிலே தோன்றி, "உறுப்புக்களெல்லாந் தேய்ந்து சிந்த, இவ்வருங் கானகத்தில் நீர் வந்ததன் நோக்கம் என்னை?" என்று கேட்டார். அம்முனிவர் திருக்கோலத்தைக் கண்டதும் அப்பர் சுவாமிகளுக்குப் பேசும் ஆற்றல் சிறிது பிறந்தது. அப்பர் சுவாமிகள் முனிவரிடந் தங் கருத்தைத் தெரிவித்தார். முனிவர், "கயிலைக் காட்சியா? அது தேவர்கட்கும் கிட்டுதல் அரிது! அது மனிதருக்கு எங்ஙனம் கிட்டும்? நீர் திரும்புவதே நலம்" என்றார். அதற்கு அப்பர், "இவ்வுடல் மாளுந் தகையது; கயிலைக் காட்சி கண்டலல்லால் யான் திரும்பேன்" என்றார். உடனே சிவபிரான் திருவுருக்கரந்து, "நாவுக்கரசனே! எழுந்திரு" என்றருளினார். திருநாவுக்கரசர் தீங்கெலாம் நீங்கி ஒளிதிகழ் மேனியுடன் எழுந்தார். எழுந்து, "அண்ணலே! எனை ஆண்டு கொண்டருளிய அமுதே! கயிலைக் காட்சி வழங்கியருள்க" என்று வேண்டினார். அடியார்கள் வேண்டுவதை வேண்டியாங் கருளும் சிவபெருமான், "நாவுக்கரசனே! இப்பொய்கையில் மூழ்கு. நமது கயிலைக் கோலத்தைத் திருவையாற்றில் காண்பாய்" என்றருளினார். திருநாவுக்கரசர் அஞ்செழுத்தோதிப் பொய்கையில் மூழ்கினார். அவர் திருவையாற்றிலே ஒரு தடாகத்திலே தோன்றிக் கரை சேர்ந்தார். அத்திருப்பதியிலுள்ள சராசரங்களெல்லாம் சத்தி சிவமாகப் பொலிந்தன. அப்பொலிவுகண்டு, உளங் குளிர்ந்து, அப்பர் திருக்கோயிலுக்குச் சென்றார். திருக்கோயில் கயிலையங்கிரியாக விளங்குகிறது. அப்பர் சுவாமிகள் ஆனந்தவாரிதியில் மூழ்கித் திருத்தாண்டகங்கள் பாடுகிறார். சிவபிரான் கயிலைக் காட்சியை மறைத்தருளினார். அப்பர் சுவாமிகள் வருந்திப் பின்னே "எல்லாம் ஆண்டவனருள்" என்று தெளிந்து, தாங்கண்ட காட்சியை "மாதர் பிறைக் கண்ணி யானை" என்னும் திருப்பதிகமாக அருளினார். அத்திருப் பதியிலேயே அன்பர் பெருமான் சில நாள் தங்கித் தமிழ்த் தொண்டுங் கைத்தொண்டுஞ் செய்து வந்தார்.

திருநாவுக்கரசு சுவாமிகள் அங்கிருந்து புறப்பட்டுத் திருநெய்த்தானம், திருமழபாடி முதலிய தலங்களை யடைந்து, பதிகம் பாடித் திருப்பூந்துருத்தி சேர்ந்தார். அங்கே தங்கி அவர் ஒரு திருமடங் கட்டினார்; திருவங்க மாலை உள்ளிட்ட பலதிருப்பதிகங்களைப் பாடினார். அவ்வேளையில் திருஞான சம்பந்தர் பாண்டி நாட்டை விடுத்துச் சோழ நாட்டை யடைந்து, அப்பர் சுவாமிகள் திருப்பூந்துருத்தி யிருத்தலைக் கேள்வி யுற்று, அத்திருப்பதி நோக்கி வந்

தார். அவர் வருகையைக் கேள்வியுற்ற அப்பர், அவரை எதிர் கொள்ள எழுந்தார். அப்பர், தம்மை ஒருவரும் அறியாதபடி திருக்கூட்டத்திடை நுழைந்து, திருஞான சம்பந்தர் முத்துச் சிவிகையைத் தாங்குபவருடன் தாமும் ஒருவரானார். திருஞான சம்பந்தர் திருப்பூந்துருத்திக்கு அருகே வந்தார்; "அப்பர் எங்குற்றார்" என்று கேட்டார். அப்பர், "திருவடி தாங்கும் பேறு பெற்று இங்குற்றேன்" என்றார். என்றதும், ஞானசம்பந்தர் பதைப்பெய்திச் சிவிகை விட்டிழிந்து அப்பரை வணங்கினார். அவருக்கு முன் இவர் அவரை வணங்கினார். அடியவர்கள் ஆரவாரித்தார்கள்.

இருவரும் திருப்பூந்துருத்தி அணைந்து, சிவபெருமானை வணங்கினர். திருஞானசம்பந்தர் பாண்டிநாட்டில் நிகழ்ந்தவைகளைக் கூறினார். திருநாவுக்கரசு சுவாமிகள் பாண்டிநாடு நோக்க விரும்பித் தொண்டைநாட்டுத் தலங்களைத் தரிசித்துத் தமிழ் பாடுமாறு திருஞானசம்பந்தருக்குச் சொல்லிப் புறப்பட்டார்.

திருநாவுக்கரசர் பாண்டிநாடு புகுந்து, திருப்புத்தூரைத் தொழுது, மதுரை சேர்ந்தார்; அங்கே ஆலவாய்க் கடவுளை வணங்கி "முளைத்தானை" என்னுந் திருத்தாண்டகம்பாடினார். மங்கையர்க்கரசியாரும், கூன்நிமிரப்பெற்ற பாண்டியனும், குலச்சிறையாரும் அப்பர்சுவாமிகளிடம் போந்து வணக்கஞ் செய்தனர். அவர்களுடன் அப்பர்சுவாமிகள் சிலநாள் தங்கி, விடைபெற்றுத் திருப்பூவணம், திருவிராமேச்சுரம், திருநெல்வேலி, திருக்கானப்பேர் முதலிய திருப்பதிகளைக் கண்டு, பதிகங்கள் பாடிப் பாண்டிநாட்டை நீத்துச் சோழநாட்டை அடைந்து, திருப்புகலூரைச் சேர்ந்தார்.

திருநாவுக்கரசுசுவாமிகள், பூம்புகலூரீசனை நாடோறும் தொழுது உழவாரத் தொண்டுசெய்துகொண்டிருந்தார். அங்கே அவர், நின்ற திருத்தாண்டகம், தனித் திருத்தாண்டகம், க்ஷேத்திரக்கோவைத் திருத்தாண்டகம், குறைந்த திருநேரிசை, தனித்திருநேரிசை, ஆருயிர்த் திருவிருத்தம், தசபுராணத்தடைவு, பாவநாசப் பதிகம், சரக்கறைத் திருவிருத்தம் முதலிய திருப்பதிகங்களைப்பாடி வழிபாடு செய்துவந்தார். வருநாளில் சிவபெருமான் அப்பர் சுவாமிகளுடைய நன்னிலைமையை உலகத்திற்குக் காட்டத் திருவுளம் பற்றினார்; பற்றிச் சுவாமிகள் புல் செதுக்கும்போது, உழவாரப்படை நுழைந்த இடங்களிலெல்லாம் பொன்னும், நவமணிகளும் பொலிந்து இலங்கும்படி திருவருள் செய்தார். அப்பெரும்பெருமான் அவைகளைப் பருக்கைக் கற்களோடு உழவாரத்தில் ஏந்தித் தடாகத்தில் எறிவார். அவர் புல்லோடும், கல்லோடும், பொன்னோடும், மணியோடும், சொல்லோடும் வேறுபாடில்லாத நிலைமையில் நின்றார். அதற்குமேல் ஆண்டவன் அருளால் தேவதாசிகள் மின்னுக் கொடிகள்போல ஆகாயத்தினின்றும் இறங்கிவந்து பாட்டாலுங் கூத்தாலும் பிறவாற்றாலும் சுவாமிகள் நிலையைக் குலைக்க முயன்றார்கள். சுவாமிகள் சித்தநிலை ஒரு சிறிதுந் திரியவில்லை. சுவாமிகள் திருத்தொண்டில் உறுதிகொண்டு, 'பொய்ம்மாயப் பெருங்கடலுள்' என்னுந் திருத்தாண்டகத்தை அருளிச்செய்தார். தேவதாசிகளும் சுவாமிகளுக்குச் சிவமாகவே காணப்பட்டார்கள். அவர்கள் சுவாமிகளை வணங்கிப் போய்விட்டார்கள். ஏழுலகமும் சுவாமிகளை வாழ்த்தின.

அன்புவடிவா யிலங்கும் திருநாவுக்கரசர், "புகலூர்ப் பெருமானே! என்னை இனிச் சேவடிக் கீழ்ச் சேர்த்திடுக" என்று திருவிருத்தங்கள் பல பாடினார். ஒரு சித்திரையில், சதயம் கூடிய திருநாளில், "எண்ணுகேன்" என்னுந் திருத்தாண்டகத்தை எடுத்துப் "புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன்" என்று ஓதித் திருநாவுக்கரசர் சிவானந்த ஞான வடிவைப் பெற்றுச் சிவபெருமான் சேவடியில் அமர்ந்தார்.



# குலச்சிறை நாயனார் புராணம்

பன்னு தொல்புகழ்ப் பாண்டிநன் னாட்டிடைச்
செந்நெ லார்வயல் தீங்கரும் பின்னயல்
துன்னு *பூகப் புறம்பணை சூழ்ந்தது
மன்னு வண்மையி னார்மண மேற்குடி. க

அப்ப திக்கு முதல்வர்வன் தொண்டர்தாம்
ஒப்ப ரும்“பெரு நம்பி”என் றோதிய
செப்ப ருஞ்சீர்க் குலச்சிறை யார்திண்மை
வைப்பி னால்திருத் தொண்டில் வழாதவர். உ

கார ணங்கண் ணுதற்கன்பர் என்னவே
வார மாகி மகிழ்ந்தவர் தாள்மிசை
யாரும் அன்பொடு வீழ்ந்தஞ் சலிமுகிழ்த்
தீர நன்மொழி எய்த இசைத்துளார். ௩

குறியில் நான்கு குலத்தின ராயினும்
நெறியின் அக்குலம் நீங்கின ராயினும்
அறிவு சங்கரற் கன்பர் எனப்பெறில்
செறிவு றப்பணிந் தேத்திய செய்கையார். ச

---

க. பன்னு தொல்புகழ் - பலரால் சொல்லப்படும் பழமை வாய்ந்த புகழினை யுடைய; (பன்னல் - வெகுசன வசனம்). ஆர் - நிறைந்த. துன்னு...பணை - நெருங்கிய பாக்கு மரங்களையுடைய மருத நிலம். மன்னு வண்மையினார் - நிலையான கொடையாளரையுடைய.

உ. “பெருநம்பி குலச்சிறைதன் அடியார்க்கும் அடியேன்”—**திருத்தொண்டத் தொகை :** ச. “ரகுமரபில் - பொன்னும் பெருநம்பி குலச்சிறையும்”—**தக்கயாகப்பரணி :** உகக. நம்பி - ஆடவரிற் சிறந்தவர். திண்மை வைப்பு - திடபக்தி ; உறுதிப்பாடு.

௩. காரணம் - (வீடு பேற்றிற்குக்) காரணமாகிய. வாரமாகி - அன்பாகி. அஞ்சலி முகிழ்த்து - கைகூப்பி. எய்த - பொருந்த. “வெற்றவே அடியார் அடிமிசை வீழும் விருப்பினன் வெள்ளைநீ றணியும் - கொற்றவன் தனக்கு மந்திரியாய குலச்சிறை.”—**திருஞான சம்பந்தர் :** திருவாலவாய் (‘மங்கையர்க்கரசி’ என்னும் பதிகம்).

ச. செறிவுற - பொருந்த. “குலமிலராகக் குலமதுண்டாகத் தவம் பணி குலச் சிறை”—ஷை தேவாரம். ௫.

பா - ம்—*பூகம்.

உலகர் கொள்ளும் *நலத்தின ராயினும்
அலகில் தீமைய ராயினும் அம்புலி
இலகு †செஞ்சடை யார்க்கடி யாரெனில்
தலமு றப்பணிந் தேத்துந் தகைமையார். ரு

‡பண்பு மிக்கார் பலராய் அணையினும்
உண்ப வேண்டி ஒருவர் அணையினும்
எண்பெ ருக்கிய அன்பால் எதிர்கொண்டு
நண்பு கூர்ந்தமு தூட்டும் நலத்தினார். சு

பூதி கோவணஞ் சாதனத் தாற்பொலிந்
தாதி தேவர்தம் அஞ்செழுத் தாமவை
ஓது §நாவணக் கத்தால் உரைப்பவர்
பாதம் நாளும் பரவிய பண்பினார். எ

இன்ன ¶நல்லொழுக் கத்தினால் ||ஈறிலாத்
தென்ன வன்நெடு மாறற்குச் சீர்திகழ்
மன்னு மந்திரி கட்குமே லாகியார்
ஒன்ன லார்ச்செற் றுறுதிக்கண் நின்றுளார். அ

ஆய செய்கைய ராயவர் ஆறணி
நாய னார்திருப் பாதம் நவின்றுளார்
பாய சீர்புனை பாண்டிமா தேவியார்
மேய தொண்டுக்கு மெய்த்தொண்ட ராயினார். கூ

புன்ன யத்தரு கந்தர்பொய் ᵒநீக்கவும்
தென்னர் நாடு திருநீறு போற்றவும்

---

ரு. அம்புலி இலகும் - சந்திரன் விளங்கும். "நலமில ராக நலம துண்டாக......"—திரு சு.

சு. எண் பெருக்கிய - அளவிறந்த. "கணங்களாய் வரினும் தமியராய் வரினும் அடியவர் தங்களைக் கண்டால் - குணங்கொடு பணியுங் குலச்சிறை" திரு : ச.

எ. "நாவணங்கியல்பாம் அஞ்செழுத்தோதி நல்லராய் நல்லியல்பாகும் - கோவணம் பூதி சாதனங் கண்டால் தொழுதெழு குலச்சிறை"—திரு : அ.

அ. பாண்டியன் நின்ற சீர் நெடுமாறனுக்கு. ஒன்னலார்ச் செற்று - பகைவர்களை அழித்து.

கூ. ஆறணி நாயனார் - சிவபெருமான். நவின்றுளார் - பலகால் போற்றுவோர். பாய - பரந்த. பாண்டிமா தேவியார் - மங்கையர்க்கரசியார்.

பா - ம்—*நலத்தள. †செஞ்சடை யாரடி. ‡பண்பின். §நாவணக்கத்தில். ¶நல்லொழுக்கத்தினில் ; நல்லொழுக்கத்தினார். ||ஈறில் சீர்த். ᵒநீங்கவும்; நீப்பவும்.

மன்னு காழியர் வள்ளலார் பொன்னடி
சென்னி சேர்த்தி மகிழ்ந்த சிறப்பினார். ௧o

வாதில் தோற்ற அமணரை வன்கழுத்
தீது நீங்கிட ஏற்றுவித் தார்திறம்
யாது போற்றினேன் மேலினி ஏத்துகேன்
வேத நீதி மிழலைக் குறும்பர்தாள். ௧௧

ஆ. திருவிருத்தம் - ௧,எ௧o

---

**பா**ண்டி நாட்டிலே மணமேற்குடி என்றொரு பதியுண்டு. அப்பதியில் தோன்றியவர் **குலச்சிறையார்** என்பவர்.

குலச்சிறையார், சுந்தரமூர்த்தி சுவாமிகளால் "பெருநம்பி" என்று சிறப்பிக்கப்பட்டவர். அவர் சிவனடியார்களிடத்திற் பேரன்பு வாய்ந்தவர்; சிவனடியார்களின் குலநலன் முதலியன கருதாது அவர்கட்குத் தொண்டு செய்பவர். சிவனடியார்கள் பலராய் அணையினும், ஒருவராய் அணையினும் அவர்கட்கு அவர் அமுதூட்டுவார்.

குலச்சிறையார், நின்ற சீர் நெடுமாறன் என்ற பாண்டியனுக்கு முதல் அமைச்சரா யிருந்தவர். அவர், அப்பாண்டியன் மனைவியாராகிய மங்கையர்க்கரசியாரின் திருத்தொண்டுக்குத் தொண்டராக நின்றவர்; சமணம் ஒழியவும், சைவம் ஓங்கவும் திருஞானசம்பந்த சுவாமிகளது பொன்னடியைப் போற்றியவர்; வாதிலே தோற்ற சமணர்களைக் கழுவில் ஏற்றுவித்தவர்.

---

# பெருமிழலைக் குறும்ப நாயனார் புராணம்

சூதம் நெருங்கு குலைத்தெங்கு பலவு பூகஞ் சூழ்புடைத்தாய்
வீதி தோறும் நீற்றினொளி விரிய மேவி விளங்குபதி
நீதி வழுவா நெறியினராய் நிலவுங் குடியால் நெடுநிலத்து
மீது விளங்குந் தொன்மையது மிழலை நாட்டுப் பெருமிழலை. ௧

அன்ன தொன்மைத் திருப்பதிக்கண் அதிபர் மிழலைக் குறும்பனார்
சென்னி மதியம் வைத்தவர்தம் அடியார்க் கான செய்பணிகள்
இன்ன வண்ணம் என்றவர்தாம் உரையா *முன்னம் எதிரேற்று
முன்னம் †உணர்ந்து செய்வாராய் முதிரும் அறிவின் பயன்கொள்வார்.

---

௧o. புல் நயத்து - அற்பக் கொள்கையுடைய. அருகந்தர் - சமணர்களின். தென்னர் நாடு - பாண்டி நாடு. காழியர் வள்ளலார் - திருஞான சம்பந்தர்.

௧. சூதம் - மாமரங்கள். பலவு - பலா மரங்கள். பூகம் - கமுக மரங்கள்.

௨. எதிர் ஏற்று - எதிர் கொண்டு வரவேற்று. முன்னம் உணர்ந்து - குறிப்பறிந்து.

பா - ம்—*வண்ணம். †உவந்து.

தொண்டர் பலரும் வந்தீண்டி உண்ணத் தொலையா அமுதூட்டிக்
கொண்டு செல்ல *வருநிதியம் முகந்து கொடுத்துக் குறைந்தடைவார்
வண்டு மருவுங் குழலுமையாள் கேள்வன் செய்ய தாளென்னும்
புண்ட ரீகம் அகமலரில் வைத்துப் போற்றும் பொற்பினார். ௩

இத்தன் மையராய் நிகழுநாள் எல்லை இல்லாத் திருத்தொண்டின்
மெய்த்தன் மையினை உலகறிய விதியால் வணங்கி மெய்யடியார்
சித்த நிலவுந் திருத்தொண்டத் தொகைபா டியநம் பியைப்பணிந்து
நித்தன் அருள்பெற் றவர்பாதம் நினைக்கும் நியமத் தலைநின்றார். ௪

மையார் தடங்கட் பரவையார் மணவா ளன்தன் மலர்க்கழல்கள்
கையால் தொழுது வாய்வாழ்த்தி மனத்தால் நினைக்கும் கடப்பாட்டில்
செய்யாள் கோனும் நான்முகனும் அறியாச் செம்பொற் றாளிணைக்கீழ்
உய்வான் சேர உற்றநெறி இதுவே என்றன் பினில்உய்த்தார். ௫

நாளும் நம்பி ஆரூரர் நாமம் நவின்ற நலத்தாலே
ஆளும் படியால் அணிமாதி சித்தி யான அணைந்ததற்பின்
மூளுங் காத லுடன்பெருக முதல்வர் நாமத் தஞ்செழுத்தும்
கேளும் பொருளும் உணர்வுமாம் பரிசு வாய்ப்பக் கெழுமினார். ௬

இன்ன வாறே இவரொழுக ஏறு கொடிமேல் உயர்த்தவர்தம்
பொன்னங் கழல்கள் மண்ணின்மேல் பொருந்த வந்து வழக்குரைத்து
மன்னும் ஓலை அவைமுன்பு காட்டி ஆண்ட வன்தொண்டர்
சென்னி மதிதோய் மாடமலி கொடுங்கோ ளூரைச் சேர்வுற்றார். ௭

---

௩. ஈண்டி - திரண்டு. முகந்து - அள்ளி. குறைந்தடைவார் - (அடியார்களிடத்தில்) தாழ்மையாக நடந்து கொள்வார். சிவபெருமான் திருவடியென்னும் தாமரையைத் தமது நெஞ்சத் தாமரையில் (இதய கமலத்தில்).

௪. விதிப்படி வணங்கி. மெய்யடியாரது. நம்பியை - சுந்தரமூர்த்தி சுவாமிகளை.

௫. செய்யாள் கோனும் - இலக்குமி நாயகனும். உய்த்தார் - சிந்தை செலுத்தினார்.

௬. அணிமா முதலிய சித்துக்கள் எட்டும் கூடிய பின்னர். (அணிமா, மகிமா, இலகிமா, கரிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம்; விளக்கம், திருமந்திரம் திருவிளையாடற் புராணம் முதலிய நூல்களிற் காண்க). அச்சித்துக்களால் எல்லாஞ் செய்யக்கூடுமாதலான் "ஆளும்படியால்" என்றார். கேளும் - உறவும். கெழுமினார் - செபித்தார்.

பா - ம்—* இரு.

அஞ்சைக் களத்து நஞ்சுண்ட அமுதைப் பரவி அணைவுறுவார்
செஞ்சொல் தமிழ்மா லைகள்மொழியத் தேவர் பெருமான் அருளாலே
மஞ்சில் திகழும் வடகயிலைப் பொருப்பில் எய்த வரும்வாழ்வு
நெஞ்சில் தெளிய இங்குணர்ந்தார் நீடு மிழலைக் குறும்பனுர். அ

"மண்ணில் திகழுந் திருநாவ லூரில் வந்த வன்றொண்டர்
நண்ணற் கரிய திருக்கயிலை நாளை எய்த நான்பிரிந்து
கண்ணிற் கரிய மணிகழிய வாழ்வார் போல வாழேன்" என்
றெண்ணிச் "சிவன்தாள் இன்றேசென் றடைவன் யோகத் தால்" என்பார்.

நாலு கரணங் களும்ஒன்ருய் நல்ல அறிவு மேற்கொண்டு
காலும் பிரம நாடிவழிக் கருத்துச் செலுத்தக் கபாலநடு
ஏல வேமுன் பயின்றநெறி எடுத்த மறைமூ லந்திறப்ப
மூல முதல்வர் திருப்பாதம் அணைவார் கயிலை முன்னடைந்தார். க0

பயிலைச் செறிந்த யோகத்தால் பரவை கேள்வன் பாதமுறக்
கயிலைப் பொருப்பர் அடியடைந்த மிழலைக் குறும்பர் கழல்வணங்கி
மயிலைப் புறங்கோள் மென்சாயல் மகளிர் கிளவி யாழிஞெடுங்
குயிலைப் பொருவுங் காரைக்கால் அம்மை பெருமை கூறுவாம். கக

ஆ திருவிருத்தம் - க,எஉக.

---

மிழலை நாட்டிலுள்ள மிழலை என்னுந் திருப்பதியிலே தோன்றியவர் குறும்பர் என்பவர். அவர் மிழலையில் தோன்றிய காரணத்தால் பெருமிழலைக் குறும்ப நாயனுர் என்னப்பட்டார். அவர் சிவனடியார்களின் குறிப்பறிந்து தொண்டு செய்வதில் பேர் பெற்றவர். அடியார்களுக்கு அன்னமளிப்பதும், பொருள் உதவுவதும் அவர்தந் தொண்டாகும்.

---

அ. திருவஞ்சைக் களத்தில் நஞ்சுண்ட சிவபெருமானை. நஞ்சுண்டுஞ் சாகாமையால் "நஞ்சுண்ட அமுதை" என்ருர். பொருப்பு - மலை. சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு எய்தவரும் பெருவாழ்வை. யோகத்தால் உணர்ந்தாரென்க.

க. நாயனுர்க்கும் சுந்தரமூர்த்திக்கு முள்ள உறவு கண்ணிற் கரியமணி போன்றதென்க.

க0. கரணம் நான்கு ; அவை : மனம் புத்தி சித்தம் அகங்காரம். நான்கு கரணங்களும் ஒன்றுமிடத்தில் நல்லறிவு என்னும் மெய்யறிவு விளங்குமென்க. காலும் - ஒளி வீசும். பிரமநாடி - சுழுமுனை. ஏலவே - பொருந்தும்படி. முன் பயின்ற அமலயோக நெறி. மறைமூலம் - பிரணவம்.

கக. பரவை கேள்வன் - சுந்தரமூர்த்தி. மகளிராகிய. கிளவி - மொழியானது. பொருவும் - ஒத்திருக்கும்.

பெருமிழலைக் குறும்பருக்குச் சுந்தரமூர்த்தி சுவாமிகளிடம் அளவிறந்த அன்பு உண்டு. நாயனார், சுவாமிகளைத் திரிகரணங்களாலும் வழிபட்டு வந்தார். அதனால் அவருக்கு அஷ்டசித்திகளுங் கூடலாயின. நாயனார் அஞ்செழுத்தை இடையறாது ஓதி ஓதி, யோகப் பயிற்சியில் முதிர்ச்சி யடைந்தார்.

ஒருநாள், சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவஞ்சைக் களத்தைப் பணிந்து, தமிழ் பாடிய சமயத்தில், அவருக்கு வடகயிலை வாழ்வை அளிக்கச் சிவபிரான் திருவுளம் பற்றினார். அதனை யோகக் காட்சியால் பெருமிழலைக் குறும்பர் உணர்ந்தார்; உணர்ந்து, "சுந்தரமூர்த்தி சுவாமிகள் நாளை வடகயிலைக்கு ஏகப் போகிறார்; மணி இழந்த கண்ணால் விளையும் பயன் என்ன? அவரைப் பிரிந்து இங்கு யான் வாழேன்" என்று யோகத்தால், சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு முன்னர் வடகயிலை யடைந்தார்.

# காரைக்காலம்மையார் புராணம்

மானமிகு தருமத்தின் வழிநின்று வாய்மையினில்
ஊனமில்சீர்ப் பெருவணிகர் குடிதுவன்றி ஓங்குபதி
கூனல்வளை திரைசுமந்து கொண்டேறி மண்டுகழிக்
கானல்மிசை உலவுவளம் பெருகுதிருக் காரைக்கால். க

வங்கமலி கடற்காரைக் காலின்கண் வாழ்வணிகர்
தங்கள்குலத் தலைவனார் தனதத்த னார்தவத்தால்
அங்கவர்பால் திருமடந்தை அவதரித்தா ளெனவந்து
பொங்கியபே ரழகுமிகப் புனிதவதி யார்பிறந்தார். உ

வணிகர்பெருங் குலம்விளங்க வந்துபிறந் தருளியபின்
அணிகிளர்மெல் அடிதளர்வுற் றசையுநடைப் பருவத்தே
பணிஅணிவார் கழற்கடிமை பழகிவரும் பாங்குபெறத்
தணிவில்பெரு மனக்காதல் ததும்பவரும் மொழிபயின்றார். ங

க. மானம் - பெருமை; அளவு. துவன்றி - நெருங்கி. கூனல்...உலவு - வளைந்த சங்குகளை அலைகள் சுமந்து ஏறிய அவைகள் பெருகிய கரையில் உலவும்.

["பீடுகெழு பெருந்தெருவும் புத்தரொடு பீலிஅமண், வேடமுடை யவர் பொருள்போல் ஆகாய வெளிமறைக்கும், மாடுகொடி அணிநெடுமா ளிகை நிரைகள் அலைகழுகின், காடனைய கடற்படப்பை என விளங்கு கவின் காட்டும்" இப்பாட்டுச் சில பிரதிகளில் இரண்டாவதாகக் காணப்படுகிறது].

உ. வங்கம்மலி - கப்பல்கள் நிறைந்த. திருமடந்தை - இலக்குமி.

ங. அணிகிளர் - அழகு விளங்கும். பணி அணிவார் - பாம்பணிந்த சிவபிரானது. "பிறந்து மொழி பயின்ற பின்னெல்லாங் காதல்-சிறந்து நின் சேவடியே சேர்ந்தேன்"—**காரைக்காலம்மையார்**: அற்புதத் திருவந்தாதி க.

பல்பெருநற் கிளைஉவப்பப் பயில்பருவச் சிறப்பெல்லாம்
செல்வமிகு தந்தையார் திருப்பெருகுஞ் செயல்புரிய
மல்குபெரும் பாராட்டின் வளர்கின்றார் விடையவர்பால்
அல்கியஅன் புடன்அழகின் கொழுந்தெழுவ தெனவளர்வார். ௪

வண்டல்பயில் வனவெல்லாம் வளர்மதியம் புனைந்தசடை
அண்டர்பிரான் திருவார்த்தை அணையவரு வனபயின்று
தொண்டர்வரில் தொழுதுதா தியர்போற்றத் துணைமுலைகள்
கொண்டுநுசுப் பொதுங்குபதங் கொள்கையினிற் குறுகினார். ௫

நல்லவென உறுப்புநூ லவர்உரைக்கும் நலம்நிரம்பி
மல்குபெரு வனப்புமீக் கூரவரு மாட்சியினால்
இல்லிகவாப் பருவத்தில் இவர்கள்மர பினுக்கேற்கும்
தொல்குலத்து வணிகர்மகட் பேசுதற்குத் தொடங்குவார். ௬

நீடியசீர் கடல்நாகை நிதிபதிஎன் றுலகின்கண்
பாடுபெறு புகழ்வணிகன் பயந்தகுல மைந்தனுக்குத்
தேடவருந் திருமரபில் சேயிழையை மகட்பேச
மாடமலி காரைக்கால் வளநகரில் வரவிட்டார். ௭

வந்தமூ தறிவோர்கள் *மணங்குறித்த மனைபுகுந்து
தந்தையாந் தனதத்தன் தனை†நேர்ந்து "நீபயந்த
பைந்தொடியை நிதிபதிமைந் தன்பரம தத்தனுக்கு
முந்தைமர பினுக்கேற்கும் முறைமைமணம் புரி"கென்றார். ௮

மற்றவனும் முறைமையினால் மணம்இசைந்து செலவிடச்சென்
றற்றவர்கள் உரைகேட்ட நிதிபதியும் உயர்சிறப்புப்
பெற்றனன்போல் உவந்துதனிப் பெருமகட்குத் திருமலியும்
சுற்றமுடன் களிகூர்ந்து வதுவைவினைத் தொழில்பூண்டான். ௯

௪. கிளை உவப்ப - சுற்றம் மகிழ. பயில் - கூடிவரும். மல்கு - மிகுந்த. விடையவர்பால் - சிவபிரானிடம். அல்கிய - இயல்பாகத் தங்கிய.

௫. வண்டல் - மகளிர் விளையாட்டு. விளையாட்டில் பழகுவன எல்லாம். துணை - இரண்டு. நுசுப்பு......குறுகினார் - இடை யொதுங்கும் பருவக் கொழுமை யுடையவரானார்.

௬. உறுப்பு நூலவர் - சாமுத்திரிக இலக்கண நூல் வல்லார். கண்ணுக் கடங்கா அழகு என்பார் "மல்கு...மாட்சியினால்" என்றார். இல் இகவா - வீட் டினின்றும் வெளியே வாராத.

௭. பாடு - பெருமை.

௯. திரு மலியும் - செல்வம் மிகுந்த. வதுவைவினைத் தொழில் - திரு மணவினைக்குரிய செயல்களை.

பா - ம்—*மணங்குறித்து. †நோக்கி.

மணமிசைந்த நாளோலை செலவிட்டு மங்கலநாள்
அணையவது வைத்தொழில்க ளானவெலாம் அமைவித்தே
இணரலங்கல் மைந்தனையும் மணஅணியின் எழில்விளக்கிப்
பணைமுரசம் எழுந்தார்ப்பக் காரைக்கால் பதிபுகுந்தார். ௰

அளிமிடைதார்த் தனதத்தன் அணிமாடத் துள்புகுந்து
தெளிதருநூல் *விதிவழியே செயல்முறைமை செய்தமைத்துத்
தளிரடிமென் நகைமயிலைத் தாதவிழ்தார்க் காளைக்குக்
களிமகிழ்சுற் றம்போற்றக் கல்யாணஞ் செய்தார்கள். ௧௧

மங்கலமா மணவினைகள் முடித்தியல்பின் வைகுநாள்
தங்கள்குடிக் கரும்புதல்வி ஆதலினால் தனதத்தன்
பொங்கொலிநீர் நாகையினிற் போகாமே கணவனுடன்
அங்கண்அமர்ந் தினிதிருக்க அணிமாடம் மருங்கமைத்தான். ௧௨

மகட்கொடையின் மகிழ்சிறக்கும் வரம்பில்தனங் கொடுத்ததற்பின்
நிகர்ப்பரிய பெருஞ்சிறப்பில் நிதிபதிதன் குலமகனும்
தகைப்பில்பெருங் காதலினால் தங்குமனை வளம்பெருக்கி
மிகப்புரியும் கொள்கையினில் மேம்படுதல் மேவினான். ௧௩

ஆங்கவன்தன் இல்வாழ்க்கை அருந்துணையாய் அமர்கின்ற
†பூங்குழலார் அவர்தாமும் பொருவிடையார் திருவடிக்கீழ்
ஓங்கியஅன் புறுகாதல் ஒழிவின்றி மிகப்பெருகப்
பாங்கில்வரும் மனைஅறத்தின் ‡பண்புவழா மையில்பயில்வார். ௧௪

---

௰. இணர்......விளக்கி - பூங்கொத்துக்களாகிய மாலையணிந்த மைந்தனையும் கல்யாண ஆபரணங்களால் அழகு செய்து. பணை - பருத்த. ஆர்ப்ப - ஒலிக்க.

௧௧. அளி மிடைதார் - வண்டுகள் நிறைந்த மாலையையுடைய. தளிர் போன்ற அடியும், மென்னகையும், மயிலனைய சாயலுமுடைய புனிதவதியாரை. தாது அவிழ் - மகரந்தஞ் சிந்தும். களி மகிழ் - மிக மகிழும்.

௧௨. பொங்கு ஒலி நீர் நாகையினில் - கடல் சூழ்ந்த நாகைக்கு; "கனையுமா கடல் சூழ் நாகை"—அப்பர். மருங்கு - தன் வீட்டுக்கருகே.

௧௩. நிதிபதிதன் குலமகனும் - பரம தத்தனும். தகைப்பில் - தடையில்லாத.

௧௪. பொரு விடையார் - போர் எருதையுடைய சிவபிரான். பாங்கில் - ஒழுங்கொடு. "அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை - பண்பும் பயனும் அது"—திருக்குறள் : ௪௫.

பா - ம்—*வழிமுறையே. †பூங்கொடியார். ‡பண்பு வழாமைப் பயில்வார்.

நம்பர்அடி யார்அணைந்தால் நல்லதிரு அமுதளித்தும்
செம்பொன்னும் நவமணியும் செழுந்துகிலும் முதலான
தம்பரிவி னால்அவர்க்குத் தகுதியின்வேண் டுவகொடுத்தும்
உம்பர்பிரான் திருவடிக்கீழ் உணர்வுமிக ஒழுகுநாள். ௧௫

பாங்குடைய நெறியின்கட் பயில்பரம தத்தனுக்கு
மாங்கனிகள் ஓரிரண்டு வந்தணைந்தார் சிலர்கொடுப்ப
ஆங்கவைதான் முன்வாங்கி அவர்வேண்டுங் குறையளித்தே
"ஈங்கிவற்றை இல்லத்துக் கொடுக்க"என இயம்பினான். ௧௬

கணவன்தான் வரவிடுத்த கனிஇரண்டுங் கைக்கொண்டு
மணமலியும் மலர்க்கூந்தல் மாதரார் வைத்ததற்பின்
பணஅரவம் புனைந்தருளும் பரமனார் திருத்தொண்டர்
உணவின்மிகு வேட்கையினால் ஒருவர்மனை யுட்புகுந்தார். ௧௭

வேதங்கள் மொழிந்தபிரான் மெய்த்தொண்டர் நிலைகண்டு
"நாதன்தன் அடியாரைப் பசிதீர்ப்பேன்" எனநண்ணிப்
பாதங்கள் விளக்கநீர் முன்னளித்துப் பரிகலம்வைத்
தேதந்தீர் நல்விருந்தா இன்அடிசில் ஊட்டுவார். ௧௮

கறியமுதம் குதவாதே திருஅமுது கைகூட
வெறிமலர்மேல் திருவனையார் விடையவன்தன் அடியாரே
பெறலரிய விருந்தானால் பேறிதன்மேல் இல்லையெனும்
அறிவினராய் அவர்அமுது செய்வதனுக் காதரிப்பார். ௧௯

இல்லாளன் "வைக்க"எனத் தம்பக்கல் முன்னிருந்த
நல்லநறு மாங்கனிகள் இரண்டினில்ஒன் றைக்கொண்டு
வல்விரைந்து வந்தணைந்து படைத்துமன மகிழ்ச்சியினால்
அல்லல்தீர்ப் பவர்அடியார் தமைஅமுது செய்வித்தார். ௨0

---

௧௭. பண அரவம் - படத்தையுடைய பாம்பை.

௧௮. பரிகலம் - உண்கலம். ஏதம் - குற்றம். விருந்தாகக் கருதி. இன் அடிசில் - இனிய அமுது.

௧௯. பதார்த்தம் சமைக்கப்படாமல் சோறு மட்டுஞ் சமைக்கப்பட்டிருக்க. மணங் கமழும் தாமரைப் பூவிலுள்ள இலக்குமியைப் போன்ற புனிதவதியார். ஆதரிப்பார் - விருப்பங் கொண்டாராய்.

௨0. வல் விரைந்து - அதிக விரைவாக.

மூப்புறும்அத் தளர்வாலும் முதிர்ந்துமுடு கியவேட்கைத்
தீப்பசியின் நிலையாலும் அயர்ந்தணைந்த திருத்தொண்டர்
வாய்ப்புறுமென் சுவைஅடிசில் மாங்கனியோ டினிதருந்திப்
பூப்பயில்மென் குழல்மடவார் செயல்உவந்து போயினார். உக

மற்றவர்தாம் போயினபின் மனைப்பதியா கியவணிகன்
உற்றபெரும் பகலின்கண் ஓங்கியபே ரில்லெய்திப்
பொற்புறமுன் நீராடிப் புகுந்தடிசில் புரிந்தயிலக்
கற்புடைய *மடவாரும் கடப்பாட்டில் ஊட்டுவார். உஉ

இன்னடிசில் கறிகளுடன் எய்துமுறை இட்டதற்பின்
மன்னியசீர்க் கணவன்தான் மனையிடைமுன் வைப்பித்த
நன்மதுர மாங்கனியில் இருந்ததனை நறுங்கூந்தல்
அன்னமனை யார்தாமுங் கொடுவந்து கலத்தளித்தார். உங

மனைவியார் தாம்படைத்த மதுரமிக வாய்த்தகனி
தனைநுகர்ந்த இனியசுவை ஆராமைத் தார்வணிகன்
"இனையதொரு பழம்இன்னும் உளததனை இடுக"என
அனையதுதாங் கொண்டுவர அணைவார்போல் அங்ககன்றார். உச

அம்மருங்கு நின்றயர்வார் அருங்கனிக்கங் கென்செய்வார்!
மெய்ம்மறந்து நினைந்துற்ற விடத்துதவும் விடையவர்தாள்
தம்மனங்கொண் டுணர்தலுமே அவர்அருளால் தாழ்குழலார்
கைம்மருங்கு வந்திருந்த ததிமதுரக் கனியொன்று. உரு

மற்றதனைக் கொடுவந்து மகிழ்ந்திடலும் அயின்ற†தனில்
உற்றசுவை அமுதினுமேற் படவுளதா யிட"இதுதான்

---

உக. அயர்ந்து - வருந்தி. வாய்ப்புறு - இனிமை பொருந்திய. பூப்பயில் - மலர் நிறைந்த.

உஉ. பொற்புற - பொலிவு பெற. அடிசில் புரிந்து அயில - அன்னத்தை விரும்பி யுண்ண. கடப்பாட்டில் - முறைமையால்.

உச. கனி அதிக இனிமையாயிருத்தல் கண்டு பரமதத்தன் மற்று மொரு கனி கேட்டது தவறு. அக்கனி நாயகிக்கு உரியதென அவன் எண்ணியிருத்தல் வேண்டும். இனிமையைத் தான் மட்டும் நுகர அவன் விரும்பியது தன்னலம். தான் நுகரும் இனிமையை நாயகியும் நுகர விரும்புவது நாயகன் கடமை. நாயகனும் நாயகியும் ஓராவிற்கு இருகோடு பூத்தாற் போன்றவர்.

உரு. மெய்ம்மறந்து நினைத்தலாவது தத்துவத் தொடக்கின்றி நினைப்பதென்க. ஆபத்து நேர்ந்தவிடத்தில் உதவும் சிவபிரான் திருவடியை. உணர்தல், ஈண்டு மெய்யுணர்தலை.

பா - ம்—*மனையாரும். †கனி.

முற்றருமாங் கனியன்று மூவுலகில் பெறற்கரிதால்
பெற்றதுவே றெங்''கென்று பெய்வளையார் தமைக்கேட்டான். உசு

அவ்வுரைகேட் டலும்மடவார் "அருளுடையார் அளித்தருளுஞ்
செவ்வியபேர் அருள்விளம்புந் திறமன்''றென் றுரைசெய்யார்
"கைவருகற் புடைநெறியால் கணவன்உரை காவாமை
மெய்வழியன்'' றெனவிளம்பல் விடமாட்டார் விதிர்ப்புறுவார். உஎ

செய்தபடி சொல்லுவதே கடன்என்னுஞ் சீலத்தார்
மைதழையுங் கண்டர்சே வடிகள்மனத் துறவணங்கி
"எய்தவருங் கனியளித்தார் யார்''என்னுங் கணவனுக்கு
மொய்தருபூங் குழல்மடவார் புகுந்தபடி தனைமொழிந்தார். உஅ

"ஈசனருள்'' எனக்கேட்ட இல்விறைவன் அதுதெளியான்
வாசமலர்த் திருவனையார் தமைநோக்கி "*மற்றிதுதான்
தேசுடைய சடைப்பெருமான் திருவருளேல் இன்னமும்ஓர்
ஆசில்கனி அவனருளால் அழைத்தளிப்பாய்'' எனமொழிந்தான்.

பாங்ககன்று மனைவியார் பணியணிவார் தமைப்பரவி
"ஈங்கிதளித் தருளீரேல் என்னுரைபொய் யாம்'' என்ன
மாங்கனியொன் றருளால்வந் தெய்துதலும் மற்றதனை
ஆங்கவன்கைக் கொடுத்தலுமே அதிசயித்து வாங்கினான். ௩0

வேறு

வணிகனுந் தன்கைப் புக்க மாங்கனி பின்னைக் காணான்
தணிவரும் பயமேற் கொள்ள உள்ளமுந் தடுமா றெய்தி
அணிகுழ லவரை வேறோர் அணங்கெனக் கருதி நீங்கும்
துணிவுகொண் டெவர்க்குஞ் சொல்லான் தொடர்வின்றி ஒழுகு நாளில்.

---

உசு. அயின்று - உண்டு. முன் தரு - முன் தந்த. இப்பொழுது உண்ட கனி ஆண்டவன் அருள் வடிவானது. பரமதத்தன் தத்துவத்தொடக்கில் கிடப்பவனாதலால், அவன் அதனை யுணராது தடுமாறி, "மூவுலகில் பெறற்கரிதால்'' என்றான். பெய்வளையார் தமை - புனித வதியாரை.

உஎ. கைவரும் - ஒழுக்கம் பொருந்திய. விளம்பல் விடமாட்டார் - உண்மை சொல்லுதலையும் விடாதவராய். விதிர்ப்பு - நடுக்கம். இரண்டுக்கும் இடையில் விதிர்ப்புறுவாராய் என்றபடி.

உகூ. தேசு - ஒளி. ஆசில் - குற்றமற்ற.

௩க. முன்னையதைத் தான் அனுப்பிய பழமென்று அவன் கருதினமையால், அவனுக்கு அஃது உணவாயிற்று. இப்பொழுது அவனுக்கு அவ்வுணர்வின்

பா - ம்—*மற்றது.

விடுவதே எண்ண மாக மேவிய முயற்சி செய்வான்
"படுதிரைப் பரவை மீது படர்கலங் கொண்டு போகி
நெடுநிதி கொணர்வேன்" என்ன நிரந்தபல் கிளைஞ ராகும்
வடுவில்சீர் வணிக மாக்கள் மரக்கலஞ் சமைப்பித் தார்கள். ௩௨

கலஞ்சமைத் ததற்கு வேண்டுங் கம்மிய ருடனே செல்லும்
புலங்களில் விரும்பு பண்டம் பொருந்துவ நிரம்ப வேற்றிச்
சலந்தரு கடவுட் போற்றித் தலைமையாம் நாய்கன் றானும்
நலந்தரு நாளில் ஏறி நளிதிரைக் கடல்மேற் போனான். ௩௩

கடல்மிசை வங்கம் ஓட்டிக் கருதிய தேயந் தன்னில்
அடைவுறச் சென்று சேர்ந்தங் களவில்பல் வளங்கள் முற்றி
இடைசில நாட்கள் நீங்க மீண்டும்அக் கலத்தில் ஏறிப்
படர்புனற் கன்னி நாட்டோர் பட்டினம் மருங்கு சேர்ந்தான். ௩௪

அப்பதி தன்னில் *ஏறி அலகில்பல் பொருள்கள் ஆக்கும்
ஒப்பில்மா நிதியம் எல்லாம் ஒருவழிப் பெருக உய்த்து
மெய்ப்புகழ் விளங்கும் அவ்வூர் விரும்பவோர் வணிகன் பெற்ற
செப்பருங் கன்னி தன்னைத் திருமலி வதுவை செய்தான். ௩௫

பேறலருந் திருவி னாளைப் பெருமணம் புணர்ந்து முன்னை
†அறலியல் நறுமென் கூந்தல் ‡அணங்கனாள் திறத்தில் அற்றம்

மையாலும், தெய்விக மென்று அவன் அதிசயித்தமையாலும், இக்கனிமறையலாயிற்று. ஆண்டவன் திருவருளுக்கு அவன் அருகனாக விளங்கவில்லை என்பது கருத்து. அணங்கென - தெய்வம் என்று. தொடர்வின்றி - சம்பந்தமின்றி; நெஞ்சில் மனைவி யென்னும் பாவனையின்றித் தெய்வமென்று போற்றி என்றபடி; பாட்டு : ௭௭. பார்க்க.

௩௨. செய்வானாகிய பரமதத்தன். படுதிரை பரவை - ஒலிக்கும் அலைகளையுடைய கடல். படர்கலம் - செல்லும் மரக்கலத்தை. நிரந்த - பரவியுள்ள.

௩௩. கம்மியர் - கப்பல் தொழில் செய்வோர்; "முழங்கு நீர் முன் றுறைக் கலம்புணர் கம்மியர்", "கலஞ்செய் கம்மியர்"—மணிமேகலை : ௭. துயி. ௭௦; ௨௫. ஆபுத். ௧௨௪. புலங்களில் - இடங்களில்; பதிகளில். சலந்தரு கடவுள் - வருணன். நாய்கன் - வணிகன்; பரமதத்தன். நளி - குளிர்ந்த.

௩௪. கன்னிநாட்டு - பாண்டிநாட்டிலுள்ள. பட்டினம் - துறைமுகப் பட்டினம்.

௩௫. அலகில் - அளவில்லாத. ஒரு வழியிற் பெருகவைத்து.

௩௬. முன்னை...பொதிந்த - முன்னே மணஞ் செய்த கருமணல்போன்ற நறியமெல்லிய கூந்தலையுடைய தெய்வம் அனைய புனிதவதியாரிடத்தில் தான்

பா - ம்—*எய்தி. †அறவியல். ‡அணங்கினாள்.

புறமொரு வெளியு றாமற் போதிந்தசிந் தனையி னோடு
முறைமையின் வழாமை வைகி முகமலர்ந் தொழுகு நாளில். ருக

முருகலர் சோலை மூதூ ரதன்முதல் வணிக ரோடும்
இருநிதிக் கிழவன் என்ன எய்திய திருவின் மிக்குப்
பொருகடற் கலங்கள் போக்கும் புகழினான் மனைவி தன்பால்
பெருகொளி விளக்குப் போலோர் பெண்கொடி அரிதிற் பெற்றான்.

மடமகள் தன்னைப் பெற்று மங்கலம் பேணித் தான்முன்
புடனுறை வஞ்சி நீத்த ஒருபெரு மனைவி யாரைத்
தொடர்வற நினைந்து *தெய்வத் தொழுகுலம் என்றே கொண்டு
கடனமைத் தவர்தம் நாமம் காதல்செய் மகவை இட்டான். ருஅ

இந்நிலை †இவன்இங் கெய்தி இருந்தனன் இப்பால் நீடுங்
கன்னிமா மதில்சூழ் மாடக் காரைக்கால் வணிக னான
தன்னிகர் கடந்த செல்வத் தனதத்தன் மகளார் தாமும்
மன்னிய கற்பி னோடு மனையறம் ‡புரிந்து வைக. ருகூ

"விளைவளம் பெருக்க வங்க மீதுபோம் பரம தத்தன்
வளர்புகழ்ப் பாண்டி நாட்டோர் மாநகர் தன்னில் மன்னி
அளவில்மா நிதியம் ஆக்கி அமர்ந்தினி திருந்தான்" என்று
கிளரொளி மணிக்கொம் பன்னார் கிளைஞர்தாங் கேட்டா ரன்றே. சO

அம்மொழி கேட்ட போதே அணங்கனார் சுற்றத் தாரும்
தம்முறு கிளைஞர்ப் போக்கி அவன்நிலை தாமும் கேட்டு
மம்மர்கொள் மனத்த ராகி "மற்றவன் இருந்த பாங்கர்க்
கொம்மைவெம் முலையி னாளைக் கொண்டுபோய் விடுவ" தென்றார். சக

---

புரிந்துள்ள வஞ்சனையைப் புறத்தில் ஒருவருக்கும் சொல்லாமல் மறைத்த. இல்லற முறைமையில்.

ருஎ. முருகு அலர் - வாசனை மலர்களையுடைய. முதல் - முதலையுடைய. இருநிதிக்கிழவன் - குபேரன். பொருகடல் - அலைமோதுங் கடலிலே.

ருஅ. மடம் - மடப்பத்தையுடைய. மங்கல காரியங்களைச்செய்து. உடன் உறைவு - உடன் வாழ்தற்கு. மனைவி யென்னுந் தொடர்பு நீங்க. தொழுங்குல தெய்வமென்றே. கடன் அமைத்து - நாமகரணச் சடங்குசெய்து. மகவுக்கு இட்டான். ருகூ. கன்னி - அழியாத. சO. கிளர் - எழும்.

சக. அணங்கனார் - தெய்வம்போன்ற அல்லது திருமகள்போன்ற புனிதவதியாரின். தம்முறு கிளைஞர்ப் போக்கி - தம் நெருங்கிய உறவினர்களை அனுப்பி. மம்மர் - மயக்கம். பாங்கர்க்கு - இடத்துக்கு.

பா - ம்—*தெய்வத் தொருகுலம். †இவனிங் கெய்த. ‡புரந்து

மாமணிச் சிவிகை தன்னில் மடநடை மயில்அன் னாரைத்
தாமரைத் தவிசில் வைகுந் தனித்திரு என்ன ஏற்றிக்
காமரு கழனி வீழ்த்துக் காதல்செய் சுற்றத் தாருந்
தேமொழி யவருஞ் சூழச் சேணிடைக் கழிந்து சென்றார். ௪உ

சிலபகல் கடந்து சென்று செந்தமிழ்த் திருநா டெய்தி
மலர்புகழ்ப் பரம தத்தன் மாநகர் மருங்கு வந்து
குலமுதல் மனைவி யாரைக் கொண்டுவந் தணைந்த தன்மை
தொலைவில்சீர்க் †கணவ னார்க்குச் சொல்லிமுன் செல்ல விட்டார். ௪௩

வந்தவர் அணைந்த மாற்றங் கேட்டலும் வணிகன் தானும்
சிந்தையில் அச்சம் எய்திச் "செழுமணம் பின்பு செய்த
பைந்தொடி தனையுங் கொண்டு பயந்தபெண் மகவி னோடு
முந்துறச் செல்வேன்" என்று மொய்குழ லவர்பால் வந்தான். ௪௪

தானும்அம் மனைவி யோடுந் தளர்நடை மகவி னோடும்
மானிளம் பிணைபோல் நின்ற மனைவியார் அடியில் தாழ்ந்தே
"யான்உம தருளால் வாழ்வேன் இவ்விளங் குழவி தானும்
பான்மையால் உமது நாமம்" என்றுமுன் பணிந்து வீழ்ந்தான். ௪௫

கணவர்தாம் வணங்கக் கண்ட காமர்பூங் கொடிய னாரும்
அணைவுறுஞ் சுற்றத் தார்பால் ‡அச்சமோ டொதுங்கி நிற்ப
உணர்வுறு கிளைஞர் வெள்கி "உன்திரு மனைவி தன்னை
§மணமலி தாரி னாய்!நீ வணங்குவ தென்கொல்" என்றார். ௪௬

மற்றவர் தம்மை நோக்கி " மானுடம் இவர்தாம் அல்லர்
நற்பெருந் தெய்வ மாதல் ¶நானறிந் தகன்ற பின்பு
பெற்றஇம் மகவு தன்னைப் பேரிட்டேன் ஆத லாலே
பொற்பதம் ||பணிந்தேன் நீரும் போற்றுதல் செய்மின்" என்றான்.

---

௪உ. மடநடை - மென்னடை. தாமரைப் பீடத்தில். காமரு கழனி வீழ்த்து - அழகிய திரைச்சீலை விடுத்து. தேன் மொழியவர் - பெண்மணிகள். சேணிடை - நெடுந்தூரம். ௪௩. செந்தமிழ்த் திருநாடு - பாண்டி நாடு.

௪௪. மாற்றம் - வார்த்தையை. மொய்குழ லவர்பால் - புனிதவதியாரிடம்.

௪௫. பிணை - பெண்மான். மனைவியார் - புனிதவதியார். முறைமையால் உமது திருப்பெயர் இடப்பெற்றது.

௪௬. காமர் - அழகிய. வெள்கி - வெட்கி.

௪எ. புனிதவதி என்னும் பேரிட்டேன்.

பா - ம்—*சவிகை. †கணவனுக்குச். ‡அச்சத்தோ. §மணமரு. ¶நானறிந் தகன்று. ||பணிந்து.

*என்றலுஞ் சுற்றத் தாரும் "இதுஎன்கொல்!" என்று நின்றார்
மன்றலங் குழலி னாரும் வணிகன்வாய் மாற்றங் கேளாக்
†கொன்றைவார் சடையி னார்தங் குரைகழல் போற்றிச் சிந்தை
ஒன்றிய நோக்கில் மிக்க உணர்வுகொண் டுரைசெய் கின்றார். சஅ

"ஈங்கிவன் குறித்த கொள்கை இதுஇனி இவனுக் காகத்
தாங்கிய வனப்பு நின்ற தசைப்பொதி கழித்திங் குன்பால்
ஆங்கு‡நின் தாள்கள் போற்றும் பேய்வடி வடியே னுக்குப்
பாங்குற வேண்டும்" என்று §பரமர்தாள் பரவி நின்றார். சகூ

ஆனஅப் பொழுது மன்றுள் ஆடுவார் அருளி னாலே
மேல்நெறி உணர்வு கூர வேண்டிற்றே பெறுவார் மெய்யில்
ℙ ஊனடை வனப்பை எல்லாம் உதறிஎற் புடம்பே யாக
வானமும் மண்ணும் எல்லாம் வணங்குபேய் வடிவம் ஆனார். ருo

மலர்மழை பொழிந்த தெங்கும் வானதுந் துபியின் நாதம்
உலகெலாம் நிறைந்து விம்ம உம்பரும் முனிவர் தாமும்
‖குலவினர் கணங்கள் எல்லாங் குணலையிட் டனமுன் நின்ற
¶தொலைவில்பல் சுற்றத் தாருந் தொழுதஞ்சி அகன்று போனார். ருக

---

சஅ. மன்றல் - வாசனை கமழும். குரைகழல் - ஒலிக்கும் வீரக்கழலை யணிந்த திருவடியை. சிந்தை ஒருமைப்பட்ட நோக்காவது அகநோக்கு. அக நோக்கால் விளைவது மெய்யுணர்வாகலான் "மிக்க உணர்வு" என்றார்.

சகூ. வனப்பு நின்ற தசைப்பொதி - அழகு தங்கிய மாமிசப் பொதியை, இங்கு அழித்து. நின்றார்கள் என்னும் பாடத்துக்கு உன்னிடம் சூழ்ந்து நின் றார்கள் எனக்கொள்க. பாங்குற - ஒழுங்குபெறப் பொருந்த.

ருo. கூர - மிக (உள்ளது சிறக்க). மெய்யில்...ஆக - உடலில் மாமிசத் தால் அடைந்திருந்த அழகை எல்லாம் உதறி எலும்பு உடம்பாக. பேய் வடிவ மாவது, தத்துவ காரிய மாயா உடலொழிந்த ஞானவடிவ மென்க. "பேயாய நற்கணத்தி லொன்றாய நாம்"—காரைக்கா லம்மையார் : அற்புதத் திருவந் தாதி. அகூ ; "காரைக்காற் பேய் செப்பிய செந்தமிழ் பத்தும்" க. மூத்ததிருப் பதிகம் கக; "காரைக்காற் பேய்தன் பாடல் பத்தும்": உ. மூத்ததிருப் பதிகம் கக.

ருக. குலவினர் - அளவளாவினார்கள். குணலைக்கூத் தாடினர் (குணலை - மகிழ்ச்சி மிகுந்தவிடத்து ஆடும் ஒருவகைக் கூத்து).

பா - ம்—*என்றபின். †கொன்றையார். ‡நின்றார்கள். §பரமனைப். ℙ ஊனுடை. ‖குலவிய. ¶தொலைபல.

உற்பவித் தெழுந்த ஞானத் தொருமையின் உமைகோன் தன்னை
அற்புதத் திருவந் தாதி அப்பொழு தருளிச் செய்வார்
"பொற்புடைச் செய்ய பாத புண்டரீ கங்கள் போற்றும்
நற்கணத் தினில்ஒன் றானேன் நான்" என்று நயந்து பாடி. ருஉ

"பெறினும் பிறிதியாதும் வேண்டேம் நமக்கீ
தறினும் உருதொழியு மேனும்—சிறிதுணர்த்தி
மற்றொருகண் நெற்றிமேல் வைத்தான்றன் பேயாய
நற்கணத்தி லொன்றாய நாம்"—அற்புதத் திருவந்தாதி : அசு.

ஆய்ந்தசீர் இரட்டை மாலை அந்தாதி எடுத்துப் பாடி
ஏய்ந்தபே ருணர்வு பொங்க எயிலொரு மூன்று முன்னாள்
காய்ந்தவர் இருந்த வெள்ளிக் கைலைமால் வரையை நண்ண
வாய்ந்தபே ரருள்முன் கூர வழிபடும் வழியால் வந்தார். ருங

கண்டவர் வியப்புற் றஞ்சிக் கையகன் றோடு வார்கள்
கொண்டதோர் வேடத் தன்மை உள்ளவா கூறக் கேட்டே
"அண்டநா யகனார் என்னை அறிவரேல் அறியா வாய்மை
எண்டிசை மாக்க ளுக்கியான் எவ்வுரு வாயென்" என்பார். ருச

வடதிசைத் தேசம் எல்லாம் மனத்தினுங் கடிது சென்று
தொடையவிழ் இதழி மாலைச் சூலபா ணியனார் மேவும்
படரொளிக் கைலை வெற்பின் பாங்கணை தாங்குக் †காலின்
நடையினைத் தவிர்ந்து பார்மேல் தலையினால் நடந்து சென்றார். ருரு

ருஉ. உமைகோன் தன்னை - சிவபெருமானை. பொற்பு - அழகு. செய்ய - சிவந்த. புண்டரீகங்கள் - தாமரைகள்.

ருங. இரட்டை மணிமாலையை அந்தாதியாக. ஏய்ந்த - பொருந்திய. மூன்று மதிலையும் முன்னாளில் எரித்த சிவபிரான். மால்வரை - பெரிய மலையை. வாய்ந்த - கிடைத்த.

ருச. கை அகன்று - இடத்தைவிட் டகன்று; உடனே அகன்று. தமது வேடத் தன்மையை உள்ளவாறு கூற அம்மையார் கேட்டு. வாய்மை அறியா எண்டிசை..........எவ்வுருவா யிருந்தா லென்ன? மாக்கள் - ஐயறிவினர். "மாவு மாக்களும் ஐயறிவினவே" தொல்காப்பியம்: மரபியல் உஉ. ஆறறிவுடைய மக்களுக்குப் பேய்வடிவின் நுட்பம் விளங்கும் என்றபடி. "மக்கள் தாமே ஆறறி உயிரே" ஷை இயல்.

ருரு. மெய்ஞ்ஞான நுண்ணுடம்பாகிய எற்புடம்பு மனதினுங் கடிது செல்வது இயல்பு. தொடை......பாணியனார் - கட்டவிழ்ந்த கொன்றை மாலையை யணிந்து சூலமேந்திய கையினராகிய சிவபிரான். தொடை - கொத்துமாம். வெற்பின் - மலையின்.

பா - ப— கடிதில். †காலால்.

தலையினால் நடந்து சென்று சங்கரன் இருந்த வெள்ளி
மலையின்மேல் ஏறும் போது மகிழ்ச்சியால் அன்பு பொங்கக்
கலையிளந் திங்கட் கண்ணிக் கண்ணுதல் ஒருபா கத்துச்
சிலைநுதல் இமய வல்லி திருக்கண்நோக் குற்ற தன்றே. ருசு

அம்பிகை திருவுள் ளத்தின் அதிசயித் தருளித் தாழ்ந்து
தம்பெரு மானை நோக்கித் "தலையினால் நடந்திங் கேறும்
எம்பெரு மானே ரேற்பின் யாக்கைஅன் பென்னே!" என்ன
நம்பெரு மாட்டிக் கங்கு நாயகன் அருளிச் செய்வான். ருஎ

"வரும்இவள் நம்மைப் பேணும் அம்மைகாண் உமையே மற்றிப்
பெருமைசேர் வடிவும் வேண்டிப் பெற்றனள்" என்று பின்றை
அருகுவந் தணைய நோக்கி "அம்மையே!" என்னுஞ் செம்மை
ஒருமொழி உலகம் எல்லாம் உய்யவே அருளிச் செய்தார். ருஅ

அங்கணன் "அம்மை யே"என் றருள்செய "அப்பா" என்று
பங்கயச் செம்பொற் பாதம் பணிந்துவீழ்ந் தெழுந்தார் தம்மைச்
சங்கவெண் குழையி னாருந் தாமெதிர் நோக்கி "நம்பால்
இங்குவேண் டுவதென்" என்ன இறைஞ்சிநின் றியம்பு கின்றார். ருகூ

இறவாத இன்ப அன்பு வேண்டிப்பின் வேண்டு கின்றார்
"பிறவாமை வேண்டும் மீண்டும் பிறப்புண்டேல் உன்னை என்றும்
மறவாமை வேண்டும் இன்னும் வேண்டும்நான் மகிழ்ந்து பாடி
அறவா!நீ ஆடும் போதுன் அடியின்கீழ் இருக்க" என்றார். சுo

---

ருசு. கலையிளந் திங்கட் கண்ணி - பிறைக்கண்ணி (கொண்டைமாலை). சிலை நுதல் - வில்லைப்போன்ற நெற்றியையுடைய. இமய வல்லி - பார்வதி ; பார்வதி சக்தி ; சக்தி - அருள் ; "அருளது சத்தியாகும்"—**சிவஞான சித்தியார்.** அருளாந் தாய் வாயிலாகத் தந்தையாஞ் சிவத்தைக் காண்டல் மரபு.

ருஎ. ஓர் எலும்புடலின் (உருவின்). எம்பெருமானே! எலும்புடல் தலையினால் நடந்திங்கேறும் அன்பு என்னே !

ருகூ. அங்கணன் - சிவபெருமான் ; **திருநகரச்சிறப்பு :** பாட்டு. சகூ. குறிப்புப் பார்க்க. பங்கயம் - தாமரை போன்ற. குழையினாரும் - சிவபெருமானும்.

சுo. அறவா - தர்ம சொரூபனே! "துறக்கப் படாத வுடலைத் துறந்துவெந் தூதுவரோ - டிறப்பன் இறந்தால் இருவிசும் பேறுவன் ஏறிவந்து - பிறப்பன் பிறந்தாற் பிறையணி வார்சடைப் பிஞ்ஞகன்பேர் - மறப்பன் கொலோவென் றென்னுள்ளங் கிடந்து மறுகிடுமே."—**அப்பர் :** தனித்திருவிருத்தம். அ.

கூடுமா றருள்கொ டுத்துக் "குலவுதென் திசையில் என்றும்
நீடுவாழ் பழன மூதூர் நிலவிய ஆலங் காட்டில்
ஆடுமா நடமும் நீகண் டானந்தஞ் சேர்ந்தெப் போதும்
பாடுவாய் நம்மை" என்றான் பரவுவார் பற்றாய் நின்றான். கூக

அப்பரி சருளப் பெற்ற அம்மையுஞ் செம்மை வேத
மெய்ப்பொரு ளானார் தம்மை விடைகொண்டு வணங்கிப் போந்து
செப்பரும் பெருமை அன்பால் திகழ்திரு வாலங் காடாம்
நற்பதி தலையி னாலே நடந்துபுக் கடைந்தார் அன்றே. கூஉ

ஆலங்கா டதனில் அண்ட முறநிமிர்ந் தாடு கின்ற
கோலங்காண் பொழுது "கொங்கை திரங்கி"*என் றெடுத்துத் தங்கு
†மூலங்காண் பரியார் தம்மை மூத்தநற் பதிகம் பாடி
ஞாலங்கா தலித்துப் போற்று நடம்போற்றி நண்ணு நாளில். கூங

"கொங்கை திரங்கி நரம்பெழுந்து குண்டுகண் வெண்பற் குழிவயிற்றுப்
பங்கி சிவந்திரு பற்கள்நீண்டு பரடுயர் நீள்கணைக் காலோர் பெண்பேய்
தங்கி அலறி உலறுகாட்டில் தாழ்சடை எட்டுத் திசைகள்வீசி
அங்கங் குளிர்ந்தனல் ஆடும்எங்கள் அப்பன் இடந்திரு ஆலங் காடே"
—மூத்த திருப்பதிகம்.

வேறு

மட்டவிழ்கொன் றையினார்தந் திருக்கூத்து முன்வணங்கும்
இட்டமிகு பெருங்காதல் ‡எழுந்தோங்க வியப்பெய்தி
"எட்டிஇல வம்மீகை" எனஎடுத்துத் திருப்பதிகங்
"கொட்டமுழ வங்குழகன்" ஆடும்எனப் பாடினார். கூச

"எட்டி இலவம் மீகைசூரை காரைபடர்ந் தெங்குஞ்
சுட்ட சுடலை சூழ்ந்தகள்ளி சோர்ந்த குடர்கவ்வப்
பட்ட பிணங்கள் பரந்தகாட்டிற் பறைபோல் விழிகட்பேய்
கொட்ட முழவங் கூளிபாடக் குழக னாடுமே"—மூத்த திருப்பதிகம்.

---

கூக. கூடுமாறு - கிடைக்கும்படி.

கூங. "அண்டமுற நிமிர்ந்தாடும் எங்கள் அப்பன் இடந் திரு ஆலங் காடே"—காரைக்காலம்மையார்: க. மூத்த திருப்பதிகம் ௨. தங்கு மூலங் காண்பரியார் - ஆதியில்லாதவர்; பிறப்பில்லாதவர்; அநாதி.

கூச. மட்டு - வாசனை; தேன். இஷ்டமிகு. எட்டி - எட்டிமரம். இல வம் - காட்டுப் பஞ்சுமரம். ஈகை - இண்டங் கொடி.

பா - ம்—*என்றெடுத்தே அங்கு. †மூலங்காணுதார். ‡எழுந்தோங்கி வியப் பெய்த.

மடுத்தபுனல் வேணியினார் "அம்மை" என மதுரமொழி
கொடுத்தருளப் பெற்றாரைக் குலவியதாண் டவத்தில்அவர்
எடுத்தருளுஞ் சேவடிக்கீழ் என்றும்இருக் கின்றாரை
அடுத்தபெருஞ் சீர்பரவல் ஆரளவா யினதம்மா. சுரு

வேறு

ஆதியோ டந்த மில்லான் அருள்நடம் ஆடும் போது
கீதமுன் பாடும் அம்மை கிளரொளி மலர்த்தாள் போற்றிச்
சீதநீர் வயல்சூழ் திங்கள் ஊரில்அப் பூதி யாராம்
போதமா முனிவர் செய்த திருத்தொண்டு புகல லுற்றேன். சுசு

ஆ_ திருவிருத்தம் - க,எஅஎ.

---

காரைக்காவிலே வணிகர் குலத் தலைவன் ஒருவன் இருந்தான். அவன் பெயர் தனதத்தன் என்பது. அவனது தவப் பயனால், அவனிடம் திருமகள் தோன்றினாலென்ன ஒரு பெண் மகவு பிறந்தது. அம்மகவுக்குப் **புனிதவதியார்** என்னும் பெயர் சூட்டப்பட்டது.

புனிதவதியார் குழந்தைப் பருவத்திலேயே இயல்பாகச் சிவநேசமுடைய வரானார். விளையாட்டுக் காலங்களிலும் அவர் சிவநாமத்தை முழக்குவார்; தொண்டர்கள் வரின் அவர்களைத் தொழுவார். இவ்வாறு அவர் ஒழுகி, அழகு ஒளி விடுவதுபோல வளர்ந்து, திருமணப் பருவமடைந்தார்.

நாகப்பட்டினத்திலே நிதிபதி என்றொரு வணிகத் தலைவன் இருந்தான். அவன், தன்மகன் பரமதத்தனுக்குப் புனிதவதியாரை மணஞ்செய்விக்க விரும்பி னான்; விரும்பியவாறு சில முதியோர்களைத் தனதத்தனிடம் அனுப்பினான். முதியோர்கள் காரைக்கால் போந்து, தனதத்தனிடம் நிதிபதியின் கருத்தை வெளியிட்டார்கள். தனதத்தன் நிதிபதியின் விருப்பத்துக்கு உடன்பட்டான். இதை முதியோர்கள் நாகைக்கேகி நிதிபதியினிடம் தெரிவித்தார்கள். இரு சார்பிலும் மணவினைக்குரிய செயல்கள் நிகழ்ந்து வந்தன. திருமணம் காரைக் காவில் நடைபெற்றது.

தனதத்தனுக்குப் புனிதவதியார் ஒருபெருந்தவப் புதல்வியாராதலின், அவன், தன் மகளையும் மருகனையும் நாகைக்கு அனுப்ப விரும்பினானில்லை. அவன், தன் வீட்டருகே ஒரு தனி வீடுகட்டி, அதில் இருவரையும் வதியுமாறு செய்து பெரும் பொருளும் உதவினான். பரமதத்தன் வாணிபத் துறையைப் பெருக்கி வாழலானான். புனிதவதியார், பரமதத்தனுக்கு வாழ்க்கைத் துணையாகி, இல்லறத்தை இனிது நடாத்தி வந்தார்.

புனிதவதியார்பால் சிவநேயம் நாளுக்குநாள் முறுகிப் பெருகி ஓங்கி வளர லாயிற்று. மனைக்கு வருஞ் சிவனடியார்களுக்கு அம்மையார் அமுதூட்டிப் பொன்னும் பொருளுங் கொடுத்துவந்தார்.

ஒருநாள் பரமதத்தனைக் காணவந்தவர்களிற் சிலர், அவனுக்கு இரண்டு மாங்கனிகள் கொடுத்தார்கள். அவன் அவைகளை வாங்கி, அவர்கள் குறை முடித்து, அவைகளை இல்லிற்கு அனுப்பினான். அம்மையார் அப்பழங்களை வாங்கிவைத்தனர். அவ்வேளையில் அங்கே ஒரு சிவனடியார் பசியால் வாடி இளைப்புற்றவராய் வந்தார். புனிதவதியார் அவர்தம் நிலைமைகண்டு, "அடியவர்

பா - ம்—*பரவும்.

பசி தீர்ப்பேன்" என்று கால் கழுவ நீர் கொடுத்தனர்; கலத்திலே திருவமுது படைத்தனர். அப்பொழுது கறியமுது சமைக்கப்படாமலிருந்தது. "சிவனடியாரே விருந்தினராய் வந்துள்ளார். இப்பேற்றினுஞ் சிறந்த தொன்றில்லை" என அம்மையார் கருதிக் கணவன் அனுப்பிய இரண்டு பழங்களில் ஒன்றைக் கொண்டு வந்து படைத்தார். சிவனடியார் மாங்கனியுடன் அமுதுண்டு அம்மையார் செயலைப் பாராட்டிப் போனார்.

பரமதத்தன் பகலிலே இல்லிற்கு வந்தான். அவன் வழக்கம்போல நீராடினன்; பின்னே அமுதுண்ண அமர்ந்தான். அம்மையார் திருவமுது கறியமுது முதலியவற்றைப் படைத்தார். அவர், தம்பாலுள்ள மாங்கனியையுங் கொண்டு வந்து வைத்தார். பரமதத்தன் கனியை உண்டான். அஃது அதிக சுவையாயிருத்தல்கண்டு, அவன் மற்றுமொரு கனியையுங் கேட்டான். அம்மையார் கனியைக்கொண்டு வருவார்போல அகன்றார்; அகன்று, மெய்ம்மறந்து, உணர்வினால் "உற்றவிடத்து உதவும் பெருமானே!" என்று ஆண்டவனை நினைந்தார். ஆண்டவனருளால் ஒரு மாங்கனி அம்மையார் கையில் வந்து நின்றது. அம்மையார், அப்பழத்தைக் கொண்டுவந்து கணவனுக்கு இட்டார். அவன் அதை உண்டான்; உண்டு, "என்னே இதன் சுவை! இது நான் அனுப்பிய மாங்கனியாயிருக்குமோ? இராது. இதைப்போன்றதொரு கனியை மூன்று உலகங்களிலும் பெறுதல் அரிது. இத்தகைய ஒன்றை நீ எங்கே பெற்றாய்?" என்று அம்மையாரைக் கேட்டான். புனிதவதியார், 'திருவருள் உதவிய திறத்தை வெளியிடலாமோ' என்று கருதுகிறார்; 'கணவனுக்கு உண்மையை மறைத்தலுந் தவறன்றோ' என்றும் எண்ணுகிறார். இருவழியிலும் அம்மையார் நெஞ்சஞ் சுழன்றது. பின்னே அம்மையார் தெளிவுற்று நிகழ்ந்ததைக் கூறினார்.

பரமதத்தன் திருவருள் நெறியில் நில்லாதவன். அவனுக்கு உண்மை விளங்கவில்லை. அவன் அம்மையாரைப் பார்த்துச் "சிவனருளா! சிவனருளாயின், அவனருளால் இன்னுமொரு கனிகொண்டுவா பார்ப்போம்" என்றான். கற்பரசியார் அவ்விடத்தைவிட்டு நீங்கி, அடியார்க் கெளியனாகிய ஆண்டவனைச் சிந்தித்து, "இன்னும் ஒரு பழம் அருளல்வேண்டும். இல்லையேல் என்னுரை பொய்யாகும்" என்று வேண்டினார். எங்குமுள்ள சங்கரன் அருளால் மாங்கனியொன்று அம்மையார் கையில் வந்து சேர்ந்தது. அம்மையார் அதைக்கொண்டு வந்து நாயகனிடந் தந்தார். அவன் அதிசயித்து அதை வாங்கினான்; உடனே அது மறைந்தது. பரமதத்தன் நெஞ்சம் சுழல்கிறது; அவன் அம்மையாரைப் பார்க்கிறான்; பார்த்துப் பார்த்து, "இவள் தெய்வம்; இவளை விட்டு நீங்குதல் வேண்டும்" என்று கருதலானான். அவன், தன்கருத்தை வெளியிடாது, அம்மையாரோடு தொடர்பின்றி வாழ்ந்து வந்தான்.

சின்னாள் கழிந்த பின்னர்ப் பரமதத்தன், "கடல்மீது சென்று வாணிபஞ் செய்து பொருள் திரட்டிவருவேன்" என்று சொல்லிக்கொண்டிருந்தான். சுற்றத்தவர்கள் சேர்ந்து மரக்கலஞ் சமைத்துத் தந்தார்கள். அம்மரக்கலத்தில் பல பண்டங்களை ஏற்றிப் பரமதத்தன் சிலருடன் புறப்பட்டான். அவன் வாணிபஞ் செய்துகொண்டே, பாண்டி நாட்டிலுள்ள ஒரு துறைமுகப்பட்டினத்தைச் சேர்ந்தான். அங்கே அவன் ஒரு வாணிபன் பெண்ணை மணஞ்செய்து கொண்டான். அவளுக்கு ஒரு பெண் குழவி பிறந்தது. அக்குழவிக்குப் பரமதத்தன், தான் தெய்வமாகக்கொண்டு வழிபட்டுவரும் முதன் மனைவியின் பெயரை இட்டுச் சிறப்பாக வாழ்ந்து கொண்டிருந்தான்.

பரமதத்தன் பாண்டி நாட்டி லிருப்பதைக் காரைக்காலிலுள்ள புனிதவதியார் சுற்றத்தவர்கள் கேள்வியுற்றார்கள். அவர்கள் சிலரை அனுப்பிப் பரமதத்தன் நிலைமையை உணர்ந்துகொண்டார்கள். அவர்கள் "புனிதவதியாரைப் பரம

தத்தனிடஞ் சேர்க்க வேண்டும்" என்று தீர்மானித்து, ஒரு சிவிகையிலே அம்மையாரை ஏற்றிப் பரமதத்தன் வாழும் பட்டினத்தை அணைந்தார்கள்; அணைந்து தங்கள் வரவைப் பரமதத்தனுக்குத் தெரிவித்தார்கள். பரமதத்தன் அதைக் கேட்டதும் மனைவி மக்களுடன் விரைந்து வந்து புனிதவதியாரைத் தொழுதான்; தொழுது, "உம்முடைய திருவருளால் இனிது வாழ்கிறேன்; இக்குழந்தைக்கும் உமது திருநாமத்தையே சூட்டியுள்ளேன்" என்கிறான்; அம்மையார் காலில் விழுகிறான்; எழுகிறான். இக்காட்சி கண்ட புனிதவதியார்க்கு அச்சமுண்டாயிற்று. அவர் சுற்றத்தவர்பால் ஒதுங்கி நின்றார். சுற்றத்தவர்கள் நாணிப் பரமதத்தனைப் பார்த்து, "பரமதத்தா! என்ன இது! உன் மனைவியை வணங்குகிறாயே?" என்று கேட்டார்கள். அதற்கு அவன், "என்ன சொல்கிறீர்கள்! இவர் மானிடம் அல்லர்; இவர் தெய்வம்; இவ்வாறு கருதியே இவரைவிட்டுப் பிரிந்தேன்; பின்பு பெற்ற இக்குழவிக்கு இவர் பெயரையே அணிந்தேன்; இப்பொழுது இவர் திருவடிகளிலும் பணிந்தேன்; நீங்களும் பணியுங்கள்" என்றான். அவர்கள், "இஃதென்ன மாயம்!" என்று திகைத்தார்கள்.

புனிதவதியார் சிவபெருமான் திருவடியைப் போற்றி, ஒன்றிய சிந்தையராய், "ஈசனே! இவன் குறித்த கொள்கை இது. இவனுக்காகத் தாங்கிய அழகு நிரம்பிய தசைப்பொதியைக் கழித்து, உன்னைச் சூழ்ந்து, உன் தாள்கள் போற்றும் பேய் வடிவை அடியேனுக்கு அளித்தருளல் வேண்டும்" என்று இறைஞ்சினார். ஆண்டவன் திருவருள் அவ்வாறே கூடிற்று. அம்மையார் திருவருளை முன்னிட்டு, ஊன் நிறைந்த அழகை உதறினார்; எற்புடம்பானார்; மண்ணும் விண்ணும் வணங்கும் பேய் வடிவம் பெற்றார். மலர்மாரி பொழிந்தது; வானதுந்துபிகள் முழங்கின; தேவர்களும் முனிவர்களும் ஆரவாரித்தார்கள்; சிவ கணங்கள் கூத்தாடின. சுற்றத்தவர்கள் அச்சமுற்று அம்மையாரைத் தொழுது போய்விட்டார்கள்.

பேய் வடிவாகிய அம்மையார், திருவருளால் அற்புதத் திருவந்தாதியையும், திருவிரட்டை மணிமாலையையுந் திருவாய் மலர்ந்தார். அம்மையார் உருவைக் காண்பவர்கள் ஓடுவார்கள்; அதன் தன்மையைப் பேசுவார்கள். அதைக் கேட்ட அம்மையார், "அண்டர் நாயகர் என்னை அறிவாராயின், வாய்மை அறியா மாக்களுக்கு யான் எவ்வுருவாக விளங்கினாலென்ன" என்று சொல்வார்.

'திருக்கயிலாயத்தைக் காணுதல் வேண்டும்' என்னும் விருப்பம் அம்மையாருக்கு எழுந்தது. அம்மையார், மனோ வேகத்தினும் அதிவேகமாக நடந்து சென்றார்; திருக்கயிலையை அணுகினார்; காலால் நடத்தலைத் தவிர்த்தார்; தலையால் நடந்தார்; மலை மீதேறினார். அப்பொழுது, உமாதேவியார் அதிசயித்துச் சிவபெருமானைப் பார்த்து, "இங்கே தலையினால் நடந்து வரும் என்புடலின் அன்பு என்னே!" என்றார். சிவபிரான், "உமையே! இவள் நம்மைத் துதிக்கும் அம்மை. இப்பெருமை வாய்ந்த வடிவத்தையும் நம்மை வேண்டிப் பெற்றாள்" என்று அருளினார். பின்னர்ப் பேயார் சிவபெருமான் திருமுன்னே நெருங்கி வந்தார். சிவபெருமான் அவரைத் திருநோக்கஞ் செய்து, "அம்மையே" என்று அழைத்தார். அம்மையாரும் "அப்பா" என்று சொல்லி, ஆண்டவன் அடியில் விழுந்து வணங்கினார்.

கயிலாயபதி, பேயாரைப் பார்த்து, "நம்பால் இங்கு வேண்டுவது என்ன?" என்று கேட்டார். அம்மையார், "ஆண்டவனே! அடியேனுக்கு இறவாத இன்ப அன்பு வேண்டும்; பிறவாமை வேண்டும்; மீண்டும் பிறப்புண்டேல், என்றும் உம்மை மறவாமை வேண்டும்; ஐயன் நடம் புரியும்போது அடியேன் மகிழ்ந்து பாடி, ஐயன் திருவடியின்கீழ் இருக்க வேண்டும்" என்று முறையிட்டார். சிவபெருமான் திருவருள் சுரந்து, "அம்மையே! தென்திசையில் திருவாலங்கா

டென்றொரு பதி இருக்கிறது. அங்கே நாம் நடம்புரிகிறோம். அதைக் கண்டு இன்புற்று நம்மைப் பாடிக்கொண் டிருப்பாயாக" என்றருளினார்.

பேயார், பெருமானைப் பணிந்து, விடைபெற்றுத் திருக்கயிலையை விடுத்துத் தலையினால் நடந்து, திருவாலங்காட்டை அடைந்தார்; அங்கே ஆண்டவன் புரியுந் திருக்கூத்தைக் கண்டு தொழுதார்; "கொங்கை திரங்கி", "எட்டி இலவம்" என்னும் இரண்டு மூத்த திருப்பதிகங்களைப் பாடினார். பின்னர்க் காரைக்காலம்மையார் ஆண்டவன் திருவடிக்கீழ் என்றும் சிவானந்தத்தை நுகரும் பெரும்பேற்றை அடைந்தார்.

# அப்பூதியடிகள் நாயனார் புராணம்

தாண்டவம் புரிய வல்ல தம்பிரா னாருக் கன்பர்
ஈண்டிய புகழின் பாலார் எல்லையில் *தவத்தின் மிக்கார்
ஆண்டசீர் அரசின் பாதம் அடைந்தவர் அறியா முன்னே
காண்டகு காதல் கூரக் கலந்தஅன் பினராய் உள்ளார். ௧

களவுபொய் காமம் கோபம் முதலிய குற்றங் காய்ந்தார்
வளமிகு மனையின் வாழ்க்கை நிலையினார் மனைப்பால் உள்ள
அளவைகள் நிறைகோல் மக்கள் ஆவொடு மேதி மற்றும்
உளவெலாம் அரசின் நாமஞ் †சாற்றும்அவ் வொழுக்க லாற்றார். ௨

வடிவுதாங் காணா ராயும் மன்னுசீர் வாக்கின் வேந்தர்
அடிமையுந் தம்பி ரானார் அருளுங்கேட் டவர்நா மத்தால்
‡படிநிகழ் மடங்கள் தண்ணீர்ப் பந்தர்கள் முதலா யுள்ள
முடிவிலா அறங்கள் செய்து முறைமையால் வாழும் நாளில். ௩

வேறு

பொருப்பரையன் மடப்பிடியி னுடன்புணருஞ் சிவக்களிற்றின்
திருப்பழனம் பணிந்துபணி செய்திருநா வுக்கரசர்

---

௧. நடராஜப் பெருமானுக்கு அன்பர். ஈண்டிய - மிகுந்த. திருநாவுக்கரசு சுவாமிகளின் திருவடிகளை.

௨. அளவைகள் - அளக்குங் கருவிகள். நிறைகோல் - தராசுகள். ஆவொடு மேதி-பசுக்களுடன் எருமைகள். அவ்வொழுக்கமுடையவர்.

௩. வாக்கின் வேந்தர் - திருநாவுக்கரசரின். வாக்கின் வேந்தர் ஆண்டவனிடங் கொண்டுள்ள அடிமைத் திறத்தையும், ஆண்டவன் அவருக்குச் செய்த அருட்டிறத்தையும் அப்பூதியடிகள் கேள்வியுற்று. அவர் - திருநாவுக்கரசரின். படி - உலகம்; முறைமையுமாம்.

௪. பொருப்பரையன் மடப்பிடியினுடன் - பார்வதியுடன். பிடி - பெண் யானை. களிறு - ஆண்யானை. ஒருப்படு காதலில் - ஒருமைப்பட்ட அன்பால். உடையவர்தம் - சிவபெருமானது.

பா - ம்—*குணத்தின். †சாத்தும்இவ் வொழுக லாற்றார். ‡படிதிகழ்.

ஒருப்படுகா தலிற்பிறவும் உடையவர்தம் பதிவணங்கும்
விருப்பினொடுந் திங்களூர் மருங்குவழி மேவுவார். ௪

அளவில்சனஞ் செலவொழியா வழிக்கரையில் அருளுடையார்
உளமனைய தண்ணளித்தாய் உறுவேனிற் பரிவகற்றிக்
குளநிறைந்த நீர்த்தடம்போல் குளிர்தூங்கும் பரப்பினதாய்
வளமருவும் நிழல்தருதண் ணீர்ப்பந்தர் வந்தணைந்தார். ௫

வந்தணைந்த வாகீசர் மந்தமா ருதசீதப்
பந்தருடன் அமுதமாந் தண்ணீரும் பார்த்தருளிச்
சிந்தைவியப் புறவருவார் திருநாவுக் கரசெனும்பேர்
சந்தமுற வரைந்ததனை எம்மருங்குந் தாங்கண்டார். ௬

"இப்பந்தர் இப்பெயரிட் டிங்கமைத்தார் யார்"என்றார்க்
கப்பந்தர் அறிந்தார்கள் †"ஆண்டஅர செனும்பெயரால்
செப்பருஞ்சீர் அப்பூதி அடிகளார் செய்தமைத்தார்
தப்பின்றி எங்குமுள சாலைகுளம் கா"என்றார். ௭

என்றுரைக்க அரசுகேட் "டிதற்கென்னோ கருத்"தென்று
நின்றவரை நோக்கி"அவர் எவ்விடத்தார்" என‡வினவத்
"துன்றியநூல் மார்பரும்இத் தொல்பதியார் மனையின்கண்
சென்றனர்இப் பொழுததுவுஞ் சேய்த்தன்று நணித்"தென்றார். ௮

அங்ககன்று முனிவரும்போய் அப்பூதி அடிகளார்
தங்குமனைக் கடைத்தலைமுன் சார்வாக, உள்ளிருந்த
திங்களூர் மறைத்தலைவர் "செழுங்கடையில் வந்தடைந்தார்
நங்கள்பிரான் தமர்ஒருவர்" எனக்கேட்டு நண்ணினார். ௯

---

௫. தண்ணளித்தாய் - தண்மையுடையதாய். உறுவேனில் பரிவு அகற்றி - மிக்க வேனிற்காலத்து வெம்மைத் துன்பத்தை நீக்கி. குளம் : இடம ; நீர் : அவ்விடத்தி விருப்பது. தடம் - தடாகம்.

௬. மந்த மாருத சீதம் - இளந்தென்றலின் குளிர்ச்சியுடைய. அமுதம் போன்ற தண்ணீரையும். சந்தமுற - அழகாக.

௭. என்று கேட்ட திருநாவுக்கரசருக்கு. அப்பந்தரை நன்கு அறிந்தவர் கள். கா - சோலை.

௮. துன்றிய......பதியார் - அவ்வப்பூதியடிகளும் இப்பழம் பதியில் வாழ் பவர். சேய்த்தன்று - தூரமன்று. நணித்து - அருகேயுள்ளது.

௯. சார்வாக - சேர. நஞ்சிவபிரான் அடியவர் ஒருவர்.

பா - ம்—*அறிவார்கள். †ஆண்ட அரசின். ‡நிறைந்து.

கடிதணைந்து வாகீசர் கழல்பணிய மற்றவர்தம்
அடிபணியா முன்பணியும் அரசினெதிர் அந்தணனார்
"முடிவில்தவஞ் செய்தேன்கொல் முன்பொழியுங் கருணைபுரி
வடிவுடையீர் ! என்மனையில் வந்தருளிற் றென்" என்றார். ௧௦

"ஒருகுன்ற வில்லாரைத் திருப்பழனத் துள்ளிறைஞ்சி
வருகின்றோம் வழிக்கரையில் நீர்வைத்த வாய்ந்தவளந்
தருகின்ற நிழல்தண்ணீர்ப் பந்தருங்கண் டத்தகைமை
புரிகின்ற அறம்பிறவுங் கேட்டணைந்தோம்" எனப்புகல்வார். ௧௧

"ஆறணியுஞ் சடைமுடியார் அடியார்க்கு நீர்வைத்த
ஈறில்பெருந் தண்ணீர்ப்பந் தரில்நும்பேர் எழுதாதே
வேறொருபேர் முன்னெழுத வேண்டியகா ரணம்என்கொல்
கூறும்"என எதிர்மொழிந்தார் கோதில்மொழிக் கொற்றவனார். ௧௨

நின்றமறை யோர்கேளா *நிலையழிந்த சிந்தையராய்
"நன்றருளிச் செய்திலீர் நாணில்அமண் பதகருடன்
ஒன்றியமன் னவன்சூட்சி திருத்தொண்டின் உறைப்பாலே
வென்றவர்தந் †திருப்பேரோ வேறொருபேர்!" என‡வெகுள்வார். ௧௩

"நம்மையுடை யவர்கழற்கீழ் நயந்ததிருத் தொண்டாலே
இம்மையிலும் பிழைப்பதென என்போல்வா ருந்தெளியச்
செம்மைபுரி திருநாவுக் கரசர்திருப் பெயர்எழுத
வெம்மைமொழி யான்கேட்க விளம்பினீர்" எனவிளம்பி. ௧௪

"போங்குகடற் கல்மிதப்பில் போந்தேறும் அவர்பெருமை
அங்கணர்தம் புவனத்தில் அறியாதார் யாருளரே
மங்கலமாந் திருவேடத் துடனின்றிவ் வகைமொழிந்தீர்
எங்குறைவீர்? நீர்தாம்யார்? இயம்பும்"என இயம்பினார். ௧௫

---

௧௦. எதிர் - எதிரிலே ; முன்னே.

௧௧. ஒரு குன்ற வில்லாரை - சிவபிரானை. வாய்ந்த - பொருந்திய; சிறந்த.

௧௨. ஈறில் பெரும் - முடிவு இல்லாத பெருமை வாய்ந்த. கோதில் மொழிக் கொற்றவனார் - குற்றமில்லாத திருநாவுக்கரசர்.

௧௩. நின்ற அப்பூதியடிகள் கேட்டு. பதகருடன் ஒன்றிய - சண்டாளர்களுடன் கலந்த. சூழ்ச்சியை. வெகுள்வார் - கோபிப்பவராய்.

௧௪. நம்மையுடைவராகிய சிவபிரான் திருவடிக்கீழ். இருவருஞ் சிவனடியாராதலினால் "நம்மை" என்றார். நயந்த - விரும்பிய. இம்மையிலும் - இப்பிறவியிலும். திருப்பெயரை யான் எழுத.

௧௫. கல்மிதப்பில் - கல்லாகிய தெப்பத்தில். அங்கணர்தம் புவனத்தில் சைவவுலகில். எங்கு உறைவீர் - எங்கே இருப்பவர்.

பா - ம்—*நிலை. †திருப்பெயரோ. ‡வெகுளார்.

திருமறையோர் அதுமொழியத் திருநாவுக் கரசர்அவர்
பெருமையறிந் துரைசெய்வார் *"பிறதுறையி னின்றேற
†அருளுபெருஞ் சூலையினால் ஆட்கொள்ள அடைந்துய்ந்த
தெருளும்உணர் வில்லாத சிறுமையேன் யான்" என்றார். கசு

அரசறிய உரைசெய்ய அப்பூதி அடிகள்தாங்
கரகமலம் மிசைகுவியக் கண்ணருவி பொழிந்திழிய
உரைகுழறி உடம்பெல்லாம் உரோமபுள கம்பொலியத்
தரையின்மிசை வீழ்ந்தவர்தஞ் சரணகம லம்பூண்டார். கஎ

மற்றவரை எதிர்வணங்கி வாகீசர் எடுத்தருள
அற்றவர்கள் அருநிதியம் பெற்றார்போல் அருமறையோர்
முற்றவுளங் களிகூர முன்னின்று கூத்தாடி
உற்றவிருப் புடன்சூழ ஓடினார் பாடினார். கஅ

ஈண்டபெரு மகிழ்ச்சியினால் முன்செய்வ தறியாதே
ஈண்டமனை அகத்தெய்தி இல்லவர்க்கும் மக்களுக்கும்
ஆண்டஅர செழுந்தருளும் ஓகையுரைத் தார்வமுறப்
பூண்டபெருஞ் சுற்றமெலாங் கொடுமீளப் புறப்பட்டார். கக

மனைவியா ருடன்மக்கள் மற்றுமுள்ள சுற்றத்தோர்
அனைவரையுங் கொண்டிறைஞ்சி ஆராத காதலுடன்
முனைவரைஉள் எழுந்தருளு வித்தவர்தாள் முன்விளக்கும்
புனை‡மலர்நீர் தங்கள்மேல் தெளித்துள்ளும் பூரித்தார். உ0

ஆசனத்தில் பூசனைகள் அமர்வித்து விருப்பினுடன்
வாசம்நிறை திருநீற்றுக் காப்பேந்தி மனந்தழைப்பத்
தேசம்உய்ய வந்தவரைத் திருவமுது செய்விக்கும்
நேசம்உற விண்ணப்பஞ் செயஅவரும் அதுநேர்ந்தார். உக

---

கசு. அவர் - அப்பூதியடிகளின். பிறதுறையினின்று - சமணத்திலிருந்து; மருட்டுறையினின்று. தெருளும் - தெளிந்த.

கஎ. திருநாவுக்கரசர் தம்மை அப்பூதியடிகள் அறிய. கர கமலம் - கைத் தாமரை. தலைமிசை. கண்ணினின்றும் ஆனந்த நீர் அருவிபோல் இடையீடின்றிச் சொரிய. உரோம புளகம் - மயிர்ச் சிலிர்ப்பு. அவர்...பூண்டார் - திருநாவுக்கரசரது திருவடித் தாமரைகளைத் தலையில் அணிந்தார்.

கஅ. அற்றவர்கள் - பொருள் அற்றவர்கள்.

கக. ஈண்ட - அன்பு திரண்ட. இல்லவர்க்கும் - மனைவியார்க்கும். ஓகை - உவகை. உ0. முனைவரை - தவமுடையவரை; வாகீச முனிவரை.

உக. திருநீற்றுக் காப்பு - திருநீற்று மடக்கை. நேர்ந்தார் - உடன்பட்டார்.

பா - ம்—*பிறதுறையினின்றேற்ற †அருள்பெருகு. ‡மலி.

வேறு

செய்தவர் இசைந்த போது திருமனை யாரை நோக்கி
"எய்திய பேறு நம்பால் இருந்தவா றென்னே!" என்று
"மைதிகழ் மிடற்றி னான்றன் அருளினால் வந்த தென்றே
உய்தும்"என் றுவந்து கொண்டு திருவமு தாக்கல் உற்றார். உஉ

தூயநற் கறிக ளான அறுவகைச் சுவையால் ஆக்கி
ஆயஇன் அமுதும் ஆக்கி அமுதுசெய் தருளத் தங்கள்
சேயவர் தம்மில் மூத்த திருநாவுக் கரசை "வாழை
மேயபொற் குருத்துக் கொண்டு வா"என விரைந்து விட்டார். உங

"நல்லதாய் தந்தை ஏவ நான்இது செயப்பெற் றேன்"என்
றொல்லையில் *விரைந்து தோட்டத் துள்புக்குப் பெரிய வாழை
மல்லலங் குருத்தை ஈரும் பொழுதினில் வாள ராவொன்
றல்லல்உற் றழுங்கிச் †சோர அங்கையில் தீண்டிற் றன்றே. உச

கையினிற் கவர்ந்து சுற்றிக் கண்ணெரி காந்து கின்ற
§பையரா வுதறி வீழ்த்துப் பதைப்புடன் "பாந்தள் பற்றும்
வெய்யவே கத்தால் வீழா முன்னம்வே கத்தால் எய்திக்
கொய்தஇக் குருத்தைச் சென்று கொடுப்பன்"என் றோடி வந்தான்.

பொருந்திய விட¶வே கத்திற் போதுவான் வேகம் முந்த
வருந்தியே அணையும் போழ்து "மாசுணங் கவர்ந்த தியார்க்கும்
அருந்தவர் அமுது செய்யத் தாழ்க்கயான் அறையேன்" என்று
திருந்திய கருத்தி னோடுஞ் செழுமனை சென்று புக்கான். உகூ

உஉ. செய்தவர் - திருநாவுக்கரசர். எய்திய - இப்பெரியார் எழுந்தருளிய; அடைந்த. உய்தும் - உய்வோம்.

உங. அறுவகைச் சுவை: கைப்பு, கார்ப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, தித்திப்பு. ஆய - அவைகளுக்குப் பொருந்திய. சேயவர் தம்மில் - பிள்ளைகளில்.

உச. மல்லல் அம் - வளப்பமும் அழகுமுடைய. வாளரா - ஒளியுடைய பாம்பு. மூத்த திருநாவுக்கரசு அல்லலுற்று வருந்திச் சோர.

உரு. கை......அரா - தன் கையைக் கடித்துச் சுற்றி கண்ணில் நெருப்பை உமிழாநின்ற படத்தையுடைய பாம்பினை. பாந்தள் பற்றும் - பாம்பு கடித்த.

உகூ. விடவேகத்தினும் விரைந்து போதுவான். வேகம் முந்த - வேகம் அதிகரிக்க. மாசுணங் கவர்ந்தது ஆர்க்கும் - பாம்பு கடித்ததை யார்க்கும். அருந்தவர் - திருநாவுக்கரசர்.

பா - ம்—*அணைந்து. †வீழ. §பையரவுதறி. ¶வேகத்தால்.

எரிவிடம் முறையே ஏறித் தலைக்கொண்ட ஏழாம் வேகம்
தெரிவுற எயிறும் கண்ணும் மேனியும் கருகித் தீந்து
விரியுரை குழறி ஆவி விடக்கொண்டு மயங்கி வீழ்வான்
பரிகலக் குருத்தைத் தாயார் பால்வைத்துப் படிமேல் வீழ்ந்தான்.

தளர்ந்துவீழ் மகனைக் கண்டு தாயருந் தந்தை யாரும்
உளம்பதைத் துற்று நோக்கி உதிரஞ்சோர் வடிவும் மேனி
விளங்கிய குறியும் கண்டு "விடத்தினால் வீந்தான்" என்று
துளங்குதல் இன்றித் தொண்டர் அமுதுசெய் வதற்குச் சூழ்வார்.

பெறலரும் புதல்வன் தன்னைப் பாயினுட் பெய்து மூடிப்
புறமனை முன்றிற் பாங்கோர் புடையினில் மறைத்து வைத்தே
"அறஇது தெரியா வண்ணம் அமுதுசெய் விப்போம்" என்று
விறலுடைத் தொண்ட னார்பால் விருப்பொடு விரைந்து வந்தார். ௨௯

கடிதுவந் "தமுது செய்யக் காலந்தாழ்க் கின்ற" தென்றே
அடிசிலும் கறியும் எல்லாம் அழகுற அணைய வைத்துப்
படியில்சீர்த் தொண்ட னார்முன் பணிந்தெழுந் "தமுது செய்தெங்
குடிமுழு துய்யக் கொள்வீர்" என்றவர் கூறக் கேட்டு. ௩௦

அருந்தவர் எழுந்து *செய்ய அடியிணை விளக்கி வேறோர்
திருந்துமா சனத்தில் †ஏறிப் பரிகலந் திருத்து முன்னர்
இருந்துவெண் ணீறு சாத்தி ‡இயல்புடை இருவ ருக்கும்
பொருந்திய நீறு நல்கிப் புதல்வர்க்கும் அளிக்கும் போழ்தில். ௩௧

ஆதிநான் மறைநூல் வாய்மை அப்பூதி யாரை நோக்கிக்
§"காதலர் இவர்க்கு மூத்த சேயையுங் காட்டும் முன்னே

---

௨௭. பாம்பின் விடம் ஒவ்வொரு தாதுவிலும் முறைமுறையே ஏறுதலால் "முறையே ஏறி" என்றார். ஏழு தாதுக்களிலும் விடம் ஏறிய பின்னர்ப் பல் கண் முதலியன கருகுதல் இயல்பு. அஃது இங்கே குறிக்கப்பட் டிருக்கிறது. ஏழாம் வேகம் என்றது இறுதியாக விடம் ஏறுவதைக் குறிப்பது. எயிறும் - பல்லும். பரிகலக் குருத்தை - உண்கலமாகிய வாழைக் குருத்தை. படி - நிலத்தின்.

௨௮. வீந்தான் - மாண்டான். துளங்குதலின்றி - நடுக்க மில்லாமல்; வருத்தமில்லாமல் என்றபடி.

௨௯. பெய்து - வைத்து. புறமனை முன்றில் - மனைப்புற முற்றத்தில். அற - முற்றும். விறல் - அன்பு உரம். ௩௦. அடிசிலும் - சோறும்.

௩௧. பரிகலமாகிய வாழைக் குருத்தை. ௩௨. பூதி - விபூதி.

பா - ம்—*செல்ல. †ஏற்றி. ‡இல்லுடை. §காதலீர்; காதலால்.

மேதகு பூதி சாத்த" என்றலும் விளைந்த தன்மை
யாதுமொன் றுரையார் "இப்போ திங்கவன் உதவான்" என்றார். ௩௨

அவ்வுரை கேட்ட போதே அங்கணர் அருளால் அன்பர்
செவ்விய திருவுள் ளத்தோர் தடுமாற்றஞ் சேர நோக்கி
"இவ்வுரை பொறாதென் உள்ளம் என்செய்தான் இதற்கொன் றுண்டால்
மெய்விரித் துரையும்" என்ன விளம்புவார் விதிர்ப்புற் றஞ்சி. ௩௩

"பெரியவர் அமுது செய்யும் பேறிது பிழைக்க என்றோ
வருவ"தென் றுரையா ரேனும் மாதவர் வினவ வாய்மை
தெரிவுற உரைக்க வேண்டுஞ் சீலத்தால் சிந்தை நொந்து
பரிவொடு வணங்கி மைந்தர்க் குற்றது பகர்ந்தார் அன்றே. ௩௪

நாவினுக் கரசர் கேளா "நன்றுநீர் *புரிந்த வண்ணம்
யாவர்இத் தன்மை †செய்வார்" என்றுமுன் எழுந்து சென்றே
ஆவிதீர் சவத்தை நோக்கி அண்ணலார் அருளும் வண்ணம்
பாவிசைப் பதிகம் பாடிப் பணிவிடம் பாற்று வித்தார். ௩௫

தீவிடம் நீங்க உய்ந்த திருமறை யவர்தஞ் சேயும்
மேவிய உறக்கம் நீங்கி விரைந்தெழு வானைப் போன்று
சேவுகைத் தவர்ஆட் கொண்ட திருநாவுக் கரசர் செய்ய
பூவடி வணங்கக் கண்டு புனிதநீ றளித்தார் அன்றே. ௩௬

பிரிவுறும் ஆவி பெற்ற பிள்ளையைக் காண்பார் தொண்டின்
நெறியினைப் போற்றி வாழ்ந்தார் ‡நின்றஅப் பயந்தார் §தாங்கள்
"அறிவரும் பெருமை அன்பர் அமுதுசெய் தருளு தற்குச்
சிறிதிடை யூறு செய்தான் இவன்"என்று சிந்தை நொந்தார். ௩௭

---

௩௩. அங்கணர் - சிவபெருமான். "உம்பர்பிரான் திருத்தொண்டர் உளத்தில் தடுமாற்றம் - நம்பர்திரு வருளாலே அறிந்தருளி நவைதீர்ப்பார்"— திருநாவுக்கரசு நாயனார் புராணம்: ௨0௭. என்செய்தான் - புதல்வன் என் செய்தான்; அவனிடம் என்நிகழ்ந்தது என்றபடி. ஒன்று - கழுவாய்; தீர்வு.

௩௪. பிழைக்க - தவற. காரைக்காலம்மையார் புராணம்: ௧௧ பார்க்க.

௩௫. "ஒன்றுகொலாம்" என்னுந் திருப்பதிகம் பாடி. பணிவிடம் பாற்று வித்தார் - பாம்பின் விஷத்தைப் போக்கினார்.

௩௬. சேவுகைத்தவர் - எருதை ஊர்தியாக்கொண்ட சிவபெருமான். சிவந்த மலரடியை.

௩௭. அங்கே நின்ற மக்கள்......காண்பார்......அப்பூதியின் தொண்டின் நெறி......வாழ்ந்தார். அங்கே நின்ற அப்பெற்றோர்.

பா - ம்—*மொழிந்த. †செய்தார். ‡நின்றவர். §தங்கள்.

ஆங்கவர் வாட்டந் தன்னை அறிந்துசொல் அரசர் கூட
ஓங்கிய மனையில் எய்தி அமுதுசெய் தருள வுற்ற
பாங்கினில் இருப்ப முந்நூல் பயில்மணி மார்பர் தாமும்
தாங்கிய மகிழ்ச்சி யோடுந் தருவன *சமைத்துச் சார்வார். ௩அ

புகழ்ந்தகோ மயத்து நீரால் பூமியைப் பொலிய நீவித்
திகழ்ந்தவான் சுதையும் போக்கிச் சிறப்புடைத் தீபம் ஏற்றி
நிகழ்ந்தஅக் கதலி நீண்ட குருத்தினை விரித்து நீரால்
மகிழ்ந்துடன் விளக்கி ஈர்வாய் வலம்†பெற மரபின் வைத்தார். ௩௯

திருந்திய வாச நன்னீர் அளித்திடத் திருக்கை நீவும்
பெருந்தவர், மறையோர் தம்மைப் பிள்ளைக ளுடனே நோக்கி
"அரும்புதல் வர்களும் நீரும் அமுதுசெய் வீர்இங்" கென்ன
விரும்பிய உள்ளத் தோடு மேலவர் ஏவல் செய்வார். ௪0

மைந்தரும் மறையோர் தாமும் மருங்கிருந் தமுது செய்யச்
சிந்தைமிக் கில்ல மாதர் திருவமு தெடுத்து நல்கக்
கொந்தவிழ் கொன்றை வேணிக் கூத்தனார் அடியா ரோடும்
அந்தமிழ் ஆளி யார்அங் கமுதுசெய் தருளி னாரே. ௪௧

மாதவ மறையோர் செல்வ மனையிடை அமுது செய்து
காதல்நண் பளித்துப் பன்னாள் கலந்துடன் இருந்த பின்றை
மேதகு நாவின் மன்னர் விளங்கிய பழன மூதூர்
நாதர்தம் பாதஞ் சேர்ந்து நற்றமிழ்ப் பதிகஞ் ‡செய்வார். ௪௨

அப்பூதி அடிக ளார்தம் அடிமையைச் சிறப்பித் தான்ற
மெய்ப்பூதி அணிந்தார் தம்மை விரும்புசொன் மாலை வேய்ந்த

---

௩அ. உற்ற பாங்கினில் - பொருந்திய இடத்தில். முந்நூல்......தாமும் - அப்பூதி யடிகளும்.

௩௯. கோமயத்து நீரால் - சாணக் குழம்பால். (கோசலம் - மூத்திரம்; கோமயம் - சாணம்.) நீவி - மெழுகி. திகழ்ந்த வான்சுதையும் போக்கி - விளங்கிய வெண்சுண்ணச் சாந்திட்டு (கோலமிட்டு). கதலி - வாழை. ஈர்வாய் - அரிந்தபக்கம். வலம்பெற - வலதுபக்க மிருக்க. மரபின் - சம்பிரதாயப்படி ; முறைப்படி.

௪0. நீவும் - கழுவும். பெருந்தவர் - திருநாவுக்கரசர். மேலவர் ஏவல் செய்வார் - பெரியோராகிய திருநாவுக்கரசரது கட்டளைப்படி நடப்பவராய்.

௪௧. நல்க - படைக்க. கொந்து - கொத்து. அடியாரோடும் - அப்பூதியடிகள் உள்ளிட்டவர்களோடும். அந்தமிழாளி - திருநாவுக்கரசர்.

பா - ம்— *புமைத்துச். †பட மன்னுவித்தார். ‡செய்தார்.

இப்பூதி பெற்ற நல்லோர் எல்லையில் அன்பால் என்றுஞ்
செப்பூதி யங்கைக் கொண்டார் திருநாவுக் கரசர் பாதம். ௪௩

இவ்வகை அரசின் நாமம் ஏத்திஎப் பொருளும் நாளும்
அவ்வருந் தவர்பொற் றாளே எனவுணர்ந் தடைவார் செல்லுஞ்
செவ்விய நெறிய தாகத் திருத்தில்லை மன்றுள் ஆடும்
நவ்வியங் கண்ணாள் பங்கர் நற்கழல் நண்ணி னாரே. ௪௪

மான்மறிக் கையர் பொற்றாள் வாகீசர் அடைவால் பெற்ற
மேன்மைஅப் பூதி யாராம் வேதியர் பாதம் போற்றிக்
கான்மலர்க் கமல வாவிக் கழனிசூழ் சாத்த மங்கை
நான்மறை நீல நக்கர் திருத்தொழில் நவில லுற்றேன். ௪௫

ஆ திருவிருத்தம் - க,அ௩௨.

---

**அப்பூதி அடிகள்** திங்களூரிலே மறையவர் குலத்திலே தோன்றியவர்; காமம் கோபம் முதலிய குற்றங்களைக் காய்ந்தவர்; இல்லறத்தில் நின்றவர்; சிவ பத்தி சிவனடியார் பத்திகளிற் சிறந்தவர்; திருநாவுக்கரசு சுவாமிகளிடம் பேரன்பு வாய்ந்தவர். அவ்வன்புக்கு அறிகுறியாக அவர் தம் வீட்டிலுள்ள அளவை, நிறைகோல், பிள்ளைகள், பசு, எருமை முதலியவற்றுக்கும், தாம் அமைத்த திருமடம், தண்ணீர்ப் பந்தல் முதலியவற்றுக்கும் '**திருநாவுக்கரசு**' என்னும் பெயரையே சூட்டி, அப்பெயராலேயே திருத்தொண்டு செய்து வந்தார்.

திருநாவுக்கரசு சுவாமிகள் திருப்பழனத்தைப் பணிந்து பணி செய்து, மற்றும் பல திருப்பதிகளைத் தொழ வேண்டித் திங்களூர் வழியே சென்றார்; அங்கே ஒரு தண்ணீர்ப் பந்தரைக் கண்டார்; அதிலே தம் பெயர் எங்கும் வரையப்பட்டிருத்தலைப் பார்த்தார். அவர் அங்கிருந்தவர்களை நோக்கி, "இப் பந்தரை இப்பெயரிட்டு அமைத்தவர் யாவர்?" என்று வினவினார். அவர்கள், "அப்பூதி அடிகள்" என்று சொல்லி, "அவரால் அமைக்கப் பெற்றுள்ள வேறு பல அறச்சாலைகட்கும் 'திருநாவுக்கரசு' என்னும் பெயரையே அவர் சூட்டியுள்ளார். அப்படிச் செய்வது அவரது வழக்கம்" என்றார்கள். திருநாவுக்கரசர், "இதற்குக் கருத்தென்னை?" என்று, அவர்களை நோக்கி "அவர் எவ்விடத்த

---

௪௩. "அஞ்சிப்போய்க் கலிமெலிய அழலோம்பும் அப்பூதி - குஞ்சிப்பூ வாய்நின்ற சேவடியாய் கோடியையே"—**அப்பர்**: திருப்பழனம் ௧0. ஆன்ற மெய்ப்பூதி அணிந்தார்தம்மை - பெருமை பொருந்திய திருமேனியில் திருநீற் றைப் பூசியுள்ள சிவபெருமானை. சொன்......நல்லோர் - பதிகத்தில் பாடப் பெற்ற இச்செல்வத்தைப் பெற்ற அப்பூதியடிகள். திருநாவுக்கரசர் திருவடி களைத் துதிக்கும் பயனைக் கைக்கொண்டவரானார். இப்பூதி - இச்செல்வத்தை. செப்பு ஊதியம். (இலாபம்).

௪௪. நவ்வியங் கண்ணாள் பங்கர் - மான் கண்ணையுடைய சிவகாமி சமேத ராகிய நடராசப் பெருமான்.

௪௫. அடைவால் சார்பால். கான் - வாசனை.

வர்?" என்று கேட்டார். அவர்களும், "அப்பூதி அடிகள் இப்பதியிலுள்ளவரே; இப்பொழுதுதான் வீட்டுக்குப் போனார்; அவர் வீடும் தூரத்திலில்லை; அது மிகச் சமீபத்திலேயே இருக்கிறது" என்று சொன்னார்கள்.

திருநாவுக்கரசு சுவாமிகள், அவ்விடத்தினின்றும் நீங்கி, அப்பூதியடிகள் வீடு நோக்கி விரைந்து நடந்து தலைக்கடை வாயிலைச்சேர்ந்தார். அதை அறிந்த அப்பூதி அடிகள் விரைந்தோடிச் சுவாமிகளை வணங்கினார். சுவாமிகளும் நாயனாரை வணங்கினார். நாயனார் திருநாவுக்கரசரை நோக்கிக் "கருணை வடிவுடையீர்! தாங்கள் என் வீட்டுக்கு எழுந்தருளினீர்கள். யான் செய்த தவம்" என்றார். திருநாவுக்கரசர், "நாம் திருப்பழனத்தைத் தொழுது வழியே வந்து கொண்டிருந்தோம்; உமது தண்ணீர்ப் பந்தரைக் கண்டோம்; உமது பிற அறங்களையுங் கேட்டோம்; உம்மைக் காண வந்தோம்" என்று சொன்னார். அதற்குமேல் திருநாவுக்கரசர் அப்பூதி அடிகளை நோக்கி, "அடியவர் பொருட்டு நீர் தண்ணீர்ப்பந்தர் வைத்திருக்கிறீர். அதன்கண் உம்முடைய பெயரை எழுதுவதே முறை. வேறு ஒரு பெயரை எழுதியதென்னை" என்று கேட்டார்.

அவ்வுரை கேட்ட அப்பூதி அடிகள் நிலையழிந்த சிந்தையரானார்; ஆகி, "நீர் நல்லது அருளிச் செய்தீர் இல்லை. பல்லவன் சமணர்களோடு சேர்ந்து செய்த கொடுங் கொடுஞ் சூழ்ச்சிகளை எல்லாம் திருத்தொண்டின் உறைப்பால் வென்ற ஒருவர் பெயரோ வேறொரு பெயர்?" என்று வெகுண்டார்; வெகுண்டு, "'திருத்தொண்டாலே இம்மையிலும் பிழைக்கலாம்' என்று எம் போன்றவர்களுந் தெளியத் திருவருள் புரிந்தவர் திருநாவுக்கரசர். அவர் தம் திருப்பெயரை யான் எழுதினேன். நீர் வெம்மை மொழி கூறக் கேட்டேன். திருநாவுக்கரசர் கருங்கல்லைத் தெப்பமாகக் கொண்டு கடலைக் கடந்தவர். அப்பெருமான் பெருமையை அறியாதவர் இவ்வுலகத்தில் யாவருளர்? சிவ வேடந் தாங்கி இவ்வெம்மொழி பகர்ந்தீர்; நீர் எங்கே இருப்பவர்? நீர் யாவர்" என்று கேட்டார்.

திருநாவுக்கரசர், அப்பூதி அடிகளின் பெருமையை உணர்ந்து, "சமணப் படுகுழிவிட்டு ஏறச் சிவபெருமான் சூலை நோய் தந்து ஆளப்பெற்ற தெளிவுணர்வில்லாத சிறுமையேன் யான்" என்றார். என்றதும், அப்பூதி அடிகளின் கைகள் தலைமீது குவிந்தன; கண்கள் அருவிநீர் பொழிகின்றன; உரை குழறுகிறது; உடம்பெல்லாம் மயிர்க் கூச்செறிகிறது. அடிகள் கீழே விழுந்து, சுவாமிகளின் திருவடித் தாமரையைச் சூடிக்கொண்டார். திருநாவுக்கரசர் எதிர்பணிந்து அடிகளை எடுத்தருளினார். அப்பூதி அடிகள் அருநிதியம் பெற்றவர்போல் ஆனார். ஆனந்த மேலீட்டால் அவர் ஆடுகிறார்; பாடுகிறார்; ஓடுகிறார்; இன்னது செய்வதென்றறியாது களிக்கிறார்; வீட்டுள் நுழைந்தார்; "திருநாவுக்கரசர் வந்திருக்கிறார்" என்று மனைவி மக்களுக்குச் சொல்லுகிறார்; அவர்களுடன் வந்து சுவாமிகளை வணங்குகிறார். அப்பூதி அடிகள் உற்ற ஆர்வத்துக்கோர் அளவில்லை.

அப்பூதி அடிகள், திருநாவுக்கரசரை வீட்டினுள் அழைத்துச் சென்றார்; அவர் தம் திருவடிகளை மனைவி மக்களுடன் நீரால் விளக்கினார்; அந்நீரை அவர்கள் எல்லாரும் தலைமேல் தெளித்து மகிழ்வெய்தினார்கள். பின்பு அவர்கள் உலகுய்யத் தோன்றிய சுவாமிகளைப் பீடத்திலிருத்தி வணங்கித் "திருவமுது செய்தருளல்வேண்டும்" என்று வேண்டினார்கள். சுவாமிகளும் உடன்பட்டார். அப்பூதி அடிகள், மனைவியாரைப் பார்த்து, "ஆண்டவன் அருளால் பெறுதற்கரிய பேறு பெற்றிருக்கிறோம்" என்று சொல்லித் திருவமுது சமைக்கப் புகுந்தார்; அறுசுவை கறிகளாக்கி அமுதும் ஆக்கினார்; தம் புதல்வருள் மூத்த திரு

நாவுக்கரசரை அழைத்து, வாழைக் குருத்து அறுத்துவரும்படி தோட்டத்திற்கு அனுப்பினார்.

மூத்த திருநாவுக்கரசர் பெற்றோர் சொற்படி தோட்டத்துக்குச் சென்று வாழைக் குருத்தை அரிந்தார். அப்பொழுது ஒருபாம்பு, அவர்தம் கையைத்தீண்டிச் சுற்றிக்கொண்டது. மூத்த திருநாவுக்கரசர் பாம்பை உதறிக் கீழேவீழ்த்திப் பதைபதைத்து, "விஷ வேகந் தலைக்கேறி என்னைச் சாய்த்துவிடும் ; அதற்கு முன் யான் வேகமாக ஓடி இக்குருத்தைக் கொடுப்பேன் ; நேர்ந்ததை எவரிடமுஞ் சொல்லேன் ; பெரியவர் திருவமுது செய்தருளல் வேண்டும் " என்று நினைந்து, அதிவேகமாக ஓடிவந்து, குருத்தைத் தாயாரிடம் நீட்டினார். அவரது உடல் கறுத்தது ; உரை தடுமாறிற்று; அவர் கீழே விழுந்தார். விழுந்த மகனைக் கண்டு தாயரும் தந்தையாரும் உளம் பதைத்து, உற்று நோக்கி, "விஷத்தால் மாண்டான் " என்றுணர்ந்தனர். அவர்கள் நடுங்காது, பெரியவர்க்கு அமுது செய்விப்பதிலேயே கருத்திருத்தினார்கள் ; சவத்தைப் பாயிலே வைத்துச் சுற்றி வீட்டின் ஒரு புறத்தில் மறைத்து வைத்தார்கள். "பெரியவர்க்கு இது தெரியா வண்ணம் அமுது செய்விப்போம்" என்று எண்ணி, அவர்கள் சுவாமிகளிடம் அணைந்தார்கள் ; அணைந்து பணிந்து, "எங்கள் குடிமுழுதும் உய்யுமாறு திருவமுது செய்ய எழுந்தருளல் வேண்டும்" என்று வேண்டினார்கள்.

திருநாவுக்கரசு சுவாமிகள் எழுந்து, கைகால் கழுவி, வேறொரு பீடத்தில் அமர்ந்து, திருநீறணிந்து கொண்டார் ; அப்பூதி யடிகளுக்கும், அவர்தம் மனைவியார்க்குந் திருநீறு கொடுத்தார் ; புதல்வர்க்குத் திருநீறளிக்கும்போது, அப்பூதியாரைப் பார்த்து, "மூத்த குமாரரையும் அழையும்" என்றார். அதற்கு நாயனார் நிகழ்ந்ததை விளக்கமாகக் கூறாதவராய், "அவன் இங்கே இப்போது உதவான்" என்றார். அதைக் கேட்டதும், சுவாமிகளுக்குத் திருவருளால் ஒருவித தடுமாற்றம் உண்டாயிற்று. "இவ்வுரையை என் உள்ளந் தாங்காது. அவன் என் செய்தான் ? உண்மை உரையும்" என்று வினவினார். அப்பூதி அடிகள், "பெரியவர் அமுது செய்தற்கு இடையூறு நேர்ந்து விட்டது ; நிகழ்ந்ததை மறைத்தலுங் கூடாது" என்று விதிர்ப்புற்று, நிகழ்ந்ததைக் கூறினார். திருநாவுக்கரசு சுவாமிகள், "நீர் செய்தது நன்றாயிருக்கிறது! எவரே இப்படிச் செய்தார்!" என்று சொல்லி எழுந்தார்; எழுந்து போய்ச் சவத்தைப் பார்த்தார்; திருவருளை நினைந்தார்; "ஒன்று கொலாம்" என்னுந் திருப்பதிகத்தைப் பாடினார். விஷம் நீங்கிற்று. மூத்த திருநாவுக்கரசர் உயிர் பெற்றெழுந்தார் ; எழுந்து தங்கள் குல குருவாகிய திருநாவுக்கரசு சுவாமிகளை வணங்கினார். திருநாவுக்கரசு சுவாமிகள் அவருக்குத் திருநீறு கொடுத்தார். நாயனாரும் நாயகியாரும் "சுவாமிகள் அமுது செய்வதற்கு இவன் சிறிது இடையூறு செய்தான்" என்று வருந்தினார்கள். அதை உணர்ந்த திருநாவுக்கரசு சுவாமிகள், அப்பூதி அடிகளின் வீட்டுக்குள் நுழைந்தார். அப்பூதி அடிகளும் அவர் தம் மனைவியாரும் திருவமுது படைத்தனர். சுவாமிகள், "அப்பூதி அடிகளே! நீரும் புதல்வர்களும் உடனிருந்து உண்ணலாமே!" என்றார். அவ்வாறே அப்பூதி அடிகளும் அவர்தம் பிள்ளைகளும் திருநாவுக்கரசருடன் அமுது செய்தார்கள்.

திருநாவுக்கரசு சுவாமிகள் திங்களூரிலேயே சில நாள் தங்கி இருந்து, திருப்பழனம் போந்து பதிகம் பாடிச் சென்றார். அப்பதிகத்தில் சுவாமிகள் அப்பூதி அடிகளைச் சிறப்பித்தார். அப்பூதி அடிகள், திருநாவுக்கரசரின் திருவடிகளை நினைந்து, தமக்குள்ள யாவும் அவர் தம் திருவடிகளுக்கு உரியனவே என்று கொண்டு, சில நாள் வாழ்ந்து, தில்லைக் கூத்தன் திருவடி அடைந்தார்.

# திருநீலநக்க நாயனார் புராணம்

பூத்த பங்கயப் பொருட்டின்மேற் பொருகயல் *உகளுங்
காய்த்த செந்நெலின் காடுசூழ் காவிரி நாட்டுச்
சாத்த மங்கையென் றுலகெலாம் †புகழ்வுறுந் தகைத்தால்
வாய்த்த மங்கல மறையவர் ‡முதற்பதி வனப்பு. க

நன்மை சாலும்அப் பதியிடை நறுநுதல் மடவார்
மென்ம லர்த்தடம் படியமற் றவருடன் விரவி
அன்னம் முன்துறை ஆடுவ பாடுவ சாமம்
பன்ம றைக்கிடை யுடன்பயிற் றுவபல பூவை. உ

ஆய்ந்த மெய்ப்பொருள் நீறெனை வளர்க்கும்அக் காப்பில்
ஏய்ந்த மூன்றுதீ வளர்த்துளார் இருபிறப் பாளர்
நீந்து நல்லறம் நீர்மையின் வளர்க்கும்அத் தீயை
வாய்ந்த கற்புடன் நான்கென வளர்ப்பர்கள் மடவார். ௩

சீலம் உய்த்தஅத் திருமறை யோர்செழு மூதூர்
ஞாலம் மிக்கநான் மறைப்பொருள் விளக்கிய நலத்தார்

---

க. பூத்த பங்கயப் பொருட்டின்மேல் - மலர்ந்த தாமரைப் பொருட்டின் மீது; (பொருட்டு - தாமரைக் குமிழி அல்லது கொட்டை) பொருகயல் - மோதுங்கயல் மீன்கள். உகளும் - புரளும்; பாயும். வனப்பு - அழகு.

உ. சாலும் - அமைந்த. நறுநுதல் மடவார் - மணங்கமழ் நெற்றியை யுடைய பெண் மக்கள். "மணநாறு நறுநுதல்......" கலித்தொகை: கச. ச.; "தேங்கமழ் திருநுதல்"—திருமுருகாற்றுப்படை: உ௪. நறுநுதல் - நல்ல நெற்றியுமாம். தடம்படிய - குளத்தில் நீராட. விரவி - கலந்து. கிடை - வேதம் ஓதும் இடம்; இங்கே ஓதுவோரைக் குறிப்பது. பூவை - நாகணவாய்ப் பறவைகள். கிடையில் ஓதல் பயிலல் இரண்டும் நிகழும்; இங்குப் பூவைகளும் தாங்களே சாம வேதத்தைப் பாடுகின்றன; அதைத் தங்கள் கூட்டத்துக்கும் பயிற்றுவிக்கின்றன.

௩. அக்காப்பில் ஏய்ந்த - அத்திருநீற்றில் பொருந்திய; அக்காப்பில் என் பதற்கு அவ்வூரில் என்பர் ஆறுமுகத்தம்பிரானார். மூன்றுதீ - தக்ஷிணாக்கினி, காருகபத்தியம், ஆகவனீயம். இரு பிறப்பாளர் - அந்தணர். பிறவிக் கடலினின் றும் நீந்துதற்குரிய. நீர்மையின் - தன்மையில். வாய்ந்த - சிறந்த. வேள் வித்தீமூன்று, கற்புத்தீ ஒன்று ஆக நான்கு.

௪. ஆலம் - விஷம்.

பா - ம்—*உறங்கும். †நிகழ்வுறுந் தவத்தால். ‡வாழ்பதி.

ஆலம் வைத்தகண் டத்தவர் தொண்டராம் அன்பர்
நீல நக்கனார் என்பவர் நிகழ்ந்துளார் ஆனார். ச

வேத உள்ளுறை யாவன விரிபுனல் வேணி
நாதர் தம்மையும் அவரடி யாரையும் நயந்து
பாதம் அர்ச்சனை புரிவதும் பணிவதும் என்றே
காத லால்அவை இரண்டுமே செய்கருத் துடையார். ரு

மெய்த்த ஆகம விதிவழி வேதகா ரணரை
நித்தல் பூசனை புரிந்தெழு நியமமுஞ் செய்தே
அத்தர் அன்பருக் கமுதுசெய் விப்பது முதலா
எத்தி றத்தன பணிகளும் ஏற்றெதிர் செய்வார். சு

ஆய செய்கையில் அமருநாள் ஆதிரை நாளில்
மேய பூசனை நியதியை விதியினால் முடித்துத்
தூய தொண்டனார் தொல்லைநீ டயவந்தி அமர்ந்த
நாய னாரையும் அருச்சனை புரிந்திட நயந்தார். எ

உறையு ளாகிய மனைநின் றும் ஒருமைஅன் புறற
முறைமை யால்வரு பூசைக்கும் முற்றவேண் டுவன
குறைவ றக்கொண்டு மனைவியார் தம்மொடுங் கூட
இறைவர் கோயில்வந் தெய்தினர் எல்லையில் தவத்தோர். அ

அணைய வந்துபுக் கயவந்தி மேவிய அமுதின்
துணைம லர்க்கழல் தொழுதுபூ சனைசெயத் தொடங்கி
இணைய நின்றங்கு வேண்டுவ மனைவியார் ஏந்த
உணர்வின் மிக்கவர் உயர்ந்தஅர்ச் சனைமுறை உய்த்தார். கூ

நீடு பூசனை நிரம்பியும் அன்பினால் நிரம்பார்
மாடு சூழ்புடை வலங்கொண்டு வணங்கிமுன் வழுத்தித்
தேடு மாமறைப் பொருளினைத் தெளிவுற நோக்கி
நாடும் அஞ்செழுத் துணர்வுற இருந்துமுன் நவின்றார். கo

---

ரு. உள்ளுறை - உட்பொருள். விரிபுனல் வேணி நாதர் - சிவபெருமான். நயந்து - விரும்பி.

சு. வேத காரணரை - சிவபெருமானை. அத்தர் - சிவபெருமானுடைய.

எ. பழமையும் விழுப்பமுமுடைய அயவந்தி. நாயனாரையும் - சிவபிரானையும். அ. உறையுள் - இருப்பிடம்.

கூ. அமுதின் - சிவத்தின். துணை - இரண்டு. இணைய - நெருங்க. வேண்டுவ - வேண்டப்படும் பொருள்களை. உணர்வின் மிக்கவர் - திருநீல நக்கர். உய்த்தார் - செய்தார். கo. பக்கத்தே சூழ்ந்த பிரகாரத்தை.

தோலையில் செய்தவத் தொண்டனார் சுருதியே முதலாங்
கலையின் உண்மையாம் எழுத்தஞ்சுங் கணிக்கின்ற காலை
நிலையின் நின்றுமுன் வழுவிட நீண்டபொன் மேருச்
சிலையி னார்திரு மேனிமேல் விழுந்ததோர் சிலம்பி. கக

விழுந்த போதில்அங் கயல்நின்ற மனைவியார் விரைவுற்
றெழுந்த அச்சமோ டிளங்குழ வியில்விழுஞ் சிலம்பி
ஒழிந்து நீங்கிட ஊதிமுன் துமிப்பவர் போலப்
பொழிந்த அன்பினால் ஊதிமேல் துமிந்தனர் போக. கஉ

பதைத்த செய்கையால் மனைவியார் முற்செயப் பந்தஞ்
சிதைக்கு மாதவத் திருமறை யவர்கண்டு தங்கண்
புதைத்து "மற்றிது செய்ததென் பொறியிலாய்" என்னச்
"சுதைச்சி லம்பிமேல் விழவூதித் துமிந்தனன்" என்றார். கங

மனைவி யார்செய்த அன்பினை மனத்தினிற் கொள்ளார்
புனையும் நூல்மணி மார்பர்தம் பூசனைத் திறத்தில்
"இனைய செய்கைஇங் கருசித மாம்"என எண்ணும்
நினைவி னால்அவர் தம்மைவிட் டகன்றிட நீப்பார். கச

"மின்நெ டுஞ்சடை விமலர்மேல் விழுந்தநூற் சிலம்பி
தன்னை வேறொரு பரிசினால் தவிர்ப்பது தவிர
முன்அ ணைந்துவந் தூதிவாய் நீர்ப்பட முயன்றாய்
உன்னை யான்இனித் துறந்தனன் ஈங்"கென உரைத்தார். கரு

மற்ற வேலையிற் கதிரவன் மலையிசை மறைந்தான்
உற்ற ஏவலின் மனைவியார் ஒருவழி நீங்க

கக. தொலைவில் - அழிவில்லாத. சுருதியே முதலாம் - வேதமே முதலாகச் சொல்லப்பட்ட. பஞ்சாட்சரத்தைச் செபிக்கும்போது. தான் இருந்த இடத்தினின்றும் வழுக்க ஒரு சிலம்பி (சிலந்தி). நீண்ட பொன் மேருச் சிலையினார் - சிவபெருமானது.

கஉ. இளங் குழந்தைமீது விழுஞ் சிலம்பி யொழிந்து நீங்க ஊதி உமிழ்வாரைப்போல. மேல் - சிவபெருமான் திருமேனிமீது. துமிந்தனர் - உமிழ்ந்தனர்.

கங. உள்ளம் பதைத்த செய்கையால். முன் - தம்முன். பொறியிலாய் - அறிவில்லாதவளே. சுதைச் சிலம்பி - வெண் சிலம்பி. சிவபிரான் திருமேனிமேல் விழ.

கச. பூசனைத் திறத்தில் - பூசையினிடத்து. அவர் - மனைவியார்.

கரு. பரிசினால் - வகையால்.

முற்ற வேண்டுவ பழுதுதீர் பூசனை முடித்துக்
கற்றை வேணியார் தொண்டரும் கடிமனை புகுந்தார். ௧௬

அஞ்சும் உள்ளமோ டவர்மருங் கணைவுற மாட்டார்
நஞ்சம் உண்டவர் கோயிலில் நங்கையார் இருந்தார்
செஞ்சொல் நான்மறைத் திருநீல நக்கர்தாம் இரவு
பஞ்சின் மெல்லணைப் பள்ளியிற் பள்ளிகொள் கின்றார். ௧௭

பள்ளி கொள்பொழு தயவந்திப் பரமர்தாங் கனவில்
வெள்ள *நீர்ச்சடை யொடுநின்று மேனியைக் காட்டி
"உள்ளம் வைத்தெமை ஊதிமுன் துமிந்தபால் ஒழியக்
கொள்ளும் இப்புறஞ் சிலம்பியின் கொப்புள்" என் றருள. ௧௮

கண்ட அப்பெருங் கனவினை நனவெனக் கருதிக்
கொண்ட அச்சமோ டஞ்சலி குவித்துடன் விழித்துத்
தொண்ட னார்தொழு தாடினார் பாடினார் துதித்தார்
அண்ட நாயகர் †கருணையைப் போற்றிநின் றழுதார். ௧௯

போது போயிருள் புலர்ந்திடக் கோயிலுட் ‡புகுந்தே
ஆதி நாயகர் அயவந்தி அமர்ந்தஅங் கணர்தம்
பாத மூலங்கள் பணிந்துவீழ்ந் தெழுந்துமுன் பரவி
மாத ராரையுங் கொண்டுதம் மனையில்மீண் டணைந்தார். ௨௦

பின்பு முன்னையிற் பெருகிய மகிழ்ச்சிவந் தெய்த
இன்பு றுந்திறத் தெல்லையில் பூசனை இயற்றி
அன்பு மேம்படும் அடியவர் மிகஅணை வார்க்கு
முன்பு போலவர் வேண்டுவ விருப்புடன் முடிப்பார். ௨௧

அன்ன தன்மையில் அமர்ந்தினி தொழுகும்அந் நாளில்
மன்னு பூந்தராய் வருமறைப் பிள்ளையார் பெருமை

---

௧௬. அவ்வேளையில் சூரியன் அத்தகிரியில் மறைந்தான். உற்ற ஏவலின்- நாயகன் வாயிலாகப் பிறந்த கட்டளைப்படி. முற்ற வேண்டுவ - முழுதும் வேண்டப்படுவனவாகிய. பழுதுதீர் பூசனை - நாயகியால் உற்ற அநுசிதத்தை ஒழிக்கும் பூசை முதலியவற்றை; பிராயச்சித்தஞ் செய்து என்றபடி. கடி- காப்புடைய.

௧௮. உன் மனைவி உள்ளம் வைத்து. பால் ஒழிய - பக்கந்தவிர.

௨௨ பூந்தராய் - சீர்காழியில். மறைப் பிள்ளையார் - திருஞான சம்பந்தர். பன்னி - சொல்லி.

பா - ம்—*நீர்ச்சடை யோடுதம் மேனியை. †கருணையே. ‡புகுந்தார்.

பன்னி வையகம் போற்றிட மற்றவர் பாதஞ்
சென்னி வைத்துடன் சேர்வுறும் விருப்பினிற் சிறந்தார். உஉ

பண்பு மேம்படு நிலைமையார் பயிலும்அப் பருவ
மண்பெ ருந்தவப் பயன்பெற மருவுநற் பதிகள்
விண்பி றங்குநீர் வேணியார் தமைத்தொழ அணைவார்
சண்பை மன்னருஞ் சாத்தமங் கையில்வந்து சார்ந்தார். உந

நீடு சீர்த்திரு நீலகண் டப்பெரும் பாணர்
தோடு லாங்குழல் விறலியார் உடன்வரத் தொண்டர்
கூடும் அப்பெருங் குழாத்தொடும் புகலியர் பெருமான்
மாடு வந்தமை கேட்டுளம் மகிழ்நீல நக்கர். உச

கேட்ட அப்பொழு தேபெரு மகிழ்ச்சியிற் கிளர்ந்து
தோட்ட லங்கலுங் கொடிகளும் புனைந்துதோ ரணங்கள்
நாட்டி நீணடைக் காவண மிட்டுநற் சுற்றத்
தீட்ட முங்கொடு தாமும்முன் எதிர்கொள எழுந்தார். உரு

சென்று பிள்ளையார் எழுந்தரு ளுந்திருக் கூட்டம்
ஒன்றி அங்கெதிர் கொண்டுதங் களிப்பினால் ஒருவா
றன்றி ஆடியும் பாடியுந் *தொழுதெழுந் தணைவார்
பொன்த யங்குநீள் மனையிடை யுடன்கொடு புகுந்தார். உசு

பிள்ளை யாரெழுந் தருளிய பெருமைக்குத் தக்க
வெள்ள மாகிய அடியவர் கூட்டமும் விரும்ப
உள்ளம் ஆதர வோங்கிட ஓங்குசீர்க் காழி
வள்ள லாரைத்தம் மனையிடை அமுதுசெய் வித்தார். உஎ

---

உந. அன்புத் தன்மையில் மேம்பட்டவராகிய நாயனார் அவ்வன்பின்வழி நின்று ஒழுகிவரும் காலத்தில். பதிகளில் எழுந்தருளியுள்ள கங்கையைச் சடையிற்கொண்ட சிவபெருமானை. சண்பை மன்னரும் - திருஞான சம்பந்தரும்.

உச. திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார். இவர் திருஞான சம்பந்தப் பெருமானுக்கு யாழ்த்தொண்டு செய்பவர். தோடு உலாங் குழல் - மலர்களை யணிந்த கூந்தலையுடைய. விறலியார் - பாணியாருடன் ; மதங்க சூளாமணியாருடன். புகலியர் பெருமான் - திருஞான சம்பந்தர். மாடு - அருகே.

உரு. கிளர்ந்து - எழுச்சிகொண்டு. தோட்டலங்கலும் - இதழ்களையுடைய மலர் மாலைகளையும். நடைக் காவணம் - நடைப் பந்தர். ஈட்டமும் - கூட்டமும்.

உசு. ஒன்றி - கலந்து. ஒருவாறன்றி - ஒருவழியில் அல்லாமல் ; பலவழியிலும் என்றபடி.

உஎ. உள்ளம் ஆதரவு - மனக்காதல்.

பா - ம்—*தொழுதெழுந் தயர்வார் ; தொழுதெழு பவராகி.

அமுது செய்தபின் பகலவன் மேல்கடல் அணையக்
குமுத வாவியிற் குளிர்மதிக் கதிரணை போதில்
இமய மங்கைதன் திருமுலை அமுதுண்டார் இரவும்
தமது சீர்மனைத் தங்கிட வேண்டுவ சமைத்தார். ௨௮

சீல மெய்த்திருத் தொண்டரோ டமுதுசெய் தருளி
ஞாலம் †மிக்கிட நாயகி யுடன்நம்பர் நண்ணும்
காலம் முற்பெற அமுதவர் அழைத்திடக் கடிது
நீல நக்கனார் வந்தடி பணிந்துமுன் நின்றார். ௨௯

நின்ற அன்பரை "நீலகண் டப்பெரும் ‡பாணர்க்
கின்று தங்கவோர் இடங்கொடுத் தருளுவீர்" என்ன
நன்றும் இன்புற்று நடுமனை வேதியின் பாங்கர்ச்
சென்று மற்றவர்க் கிடங்கொடுத் தனர்திரு மறையோர். ௩௦

ஆங்கு வேதியில் அறாதசெந் தீவலஞ் சுழிவுற்
றோங்கி முன்னையில் ஒருபடித் தன்றியே ஒளிரத்
தாங்கு நூலவர் மகிழ்வுறச் சகோடயாழ்த் தலைவர்
பாங்கு பாணியா ருடன்அரு ளாற்பள்ளி கொண்டார். ௩௧

---

௨௮. பகலவன் - சூரியன். குமுத வாவியில் - ஆம்பல் நிறைந்த தடாகத்தில். மதிக்கதிர் - திங்கள் நிலவு; சந்திரிகை. மதியைக் கண்டதும் ஆம்பல் மலர்தல் ஈண்டுக் குறிக்கப்பட்டது. (திருஞான சம்பந்தர் - மதி; திருநீலநக்கரில்லம் - குமுத வாவி).

௨௯. ஞாலமிக்கிட - உலகம் உயர்ந்து ஓங்க. அமுதவர் - திருஞான சம்பந்தர். "பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத - சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்"—**திருஞான சம்பந்த சுவாமிகள் புராணம்**: ௧.

௩௦. திருநீலநக்கர் மறையவராதலின், ஒருவேளை அவர் திருநீலகண்ட யாழ்ப்பாணரிடம் தீண்டாமை பாராட்டுவரோ என்று நினைந்து, "பாணர் தங்க ஓரிடம் கொடுத்தருளுவீர்" என்றார் போலும். நன்றும் - பெரிதும். நடுவீட்டிலுள்ள வேதிகையின் (பூசை மேடையின்) அருகே.

௩௧. வேதியில் அறாத - ஓமகுண்டத்தில் நீங்காத. ஒளிர - பிரகாசிக்க. தாங்கு நூலவர் - திருநீலநக்க நாயனார். சகோடயாழ்த் தலைவர் - திருநீலகண்ட யாழ்ப்பாணர். யாழ் நால்வகை: பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டியாழ். இவைகளுள் திருநீலகண்ட யாழ்ப்பாணர்கொண்டது சகோடயாழ். இது பதினான்கு நரம்புகளாலாகியது; **திருநீலகண்ட யாழ்ப்பாணநாயனார் புராணம்** பார்க்க. பாங்கு - பக்கத்தே; அழகிய எனினுமாம். திருநீலகண்ட யாழ்ப்பாணர் மனைவியாருடன் வேதிகையின் பாங்கர்ச் சென்று

பா - ம்—*கருங். †உய்ந்திட. ‡பாணர்.

கங்கு லிற்பள்ளி கொண்டபின் *கவுணியர்க் கிறைவர்
அங்கு நின்றெழுந் தருளுவார் அயவந்தி அமர்ந்த
திங்கள் சூடியை நீலநக் கரைச்சிறப் பித்தே
பொங்கு செந்தமிழ்த் திருப்பதி கத்தொடை புனைந்தார். ௩உ

பதிக நாண்மலர் கொண்டுதம் பிரான்கழல் பரவி
அதிக நண்பினை நீலநக் கருக்களித் தருளி
எதிர்†கொ ளும்பதி களில்எழுந் தருளினர் என்றும்
புதிய செந்தமிழ்ப் பழமறை மொழிந்தபூ சுரனார். ௩௩

பிள்ளை யார்எழுந் தருளஅத் தொண்டர்தாம் பின்பு
தள்ளும் அன்புடன் கேண்மையும் ‡தவிர்ப்பில எனினும்
வள்ள லார்திரு வருளினை வலியமாட் டாமை
உள்ளம் அங்குடன் போக்கிமீண் டொருவகை இருந்தார். ௩௪

மேவு நாளில்அவ் வேதியர் முன்புபோல் விரும்பும்
தாவில் பூசனை முதற்செய்கை தலைத்தலை சிறப்பச்
சேவின் மேலவர் மைந்தராந் திருமறைச் சிறுவர்
பூவ டித்தலம் பொருந்திய §உணர்வொடும் பயின்றார். ௩௫

---

பள்ளிகொள்ள, ஓமத் தீயானது முன்னையினும் எழுந்து ஓங்கி நாவிட்டுச் சுழன்றதை ஈண்டுச் சிறப்பாக ஆசிரியர் குறிப்பிட்டதன் கருத்தைச் சிவநேயர்கள் ஊன்றி உன்னுவார்களாக. நாயன்மார் காலத்தில் சாதி வேற்றுமையும் தீண்டாமையும் உண்டு. அக்கொடுமைகளை ஒழிக்கவே நாயன்மார்கள் தோன்றினர்கள் என்பதற்கு ஈண்டுள்ள குறிப்புச் சிறந்த சான்றாகும்.

௩உ. கங்குலில் - இரவில். கவுணியர்க்கு இறைவர் - திருஞான சம்பந்தர். திங்கள் சூடியை - சந்திரனை யணிந்த சிவபெருமானுக்கு. திருப்பதிக மாலை. "நிறையினார் நீல நக்கன் நெடுமா நகரென்று தொண்டர் - அறையும் ஊர் சாத்த மங்கை அயவந்தி"—**திருஞான சம்பந்தர்.**

௩௩. பதிகமாகிய நாண்மலர் (அன்றலர்ந்த மலர்). புதிய செந்தமிழிலே பழைய மறையை மொழிந்த அந்தணராகிய திருஞான சம்பந்தர்.

௩௪. அத்தொண்டர் - திருநீல நக்க நாயனார். திருஞான சம்பந்தர் பின்னே தொடர்ந்து செல்லத் தள்ளும் அன்பும் கேண்மையும் (நட்பும்). வள்ளலாராகிய திருஞான சம்பந்தரது கட்டளையை மீறமாட்டாமையால்.

௩௫. தாவில் - கெடுதலில்லாத. சேவின் மேலவர் - இடபாரூடராகிய சிவபெருமான். சிறுவர் - திருஞான சம்பந்தர். 'சேவின் மேலவர் மைந்தர்' என்பதின் நுட்பம் **திருஞான சம்பந்த சுவாமிகள்புராணத்தில் விளக்கப்படும்.**

**பா - ம்**—*கவுணியர் தலைவர். †தொழும். ‡தப்பில. §அறிவொடும்.

சண்பை யாளியார் தாமெழுந் தருளுமெப் பதியும்
நண்பு மேம்பட நாளிடைச் செலவிட்டு நண்ணி
வண்பெ ரும்புக ழவருடன் பயின்றுவந் துறைந்தார்
திண்பெ ருந்தொண்ட ராகிய திருநீல நக்கர். ௩௬

பெருகு காதலிற் பின்னெடு நாள்முறை பிறங்க
வருபெ ருந்தவ மறையவர் வாழிசீர் காழி
ஒருவர் தந்திருக் கல்லியா ணத்தினி லுடனே
திரும ணத்திறஞ் சேவித்து நம்பர்தாள் சேர்ந்தார். ௩௭

தருதொ ழில்திரு மறையவர் சாத்தமங் கையினில்
வருமு தற்பெருந் திருநீல நக்கர்தாள் வணங்கி
இருபி றப்புடை அந்தணர் ஏறுயர்த் தவர்பால்
ஒருமை உய்த்துணர் நமிநந்தி யார்தொழில் உரைப்பாம். ௩௮

ஆக திருவிருத்தம் - ௧,௮௭௦.

---

சோழநாட்டிலே சாத்தமங்கை என்றொரு பதியுண்டு. அப்பதியிலே மறையவர் குலத்திலே தோன்றியவர் திருநீலநக்க நாயனார் என்பவர். அவர், 'சிவபெருமானுக்கும் சிவனடியார்களுக்குந் தொண்டு செய்வது, வேதம் அறிவுறுத்தும் உண்மை' என்ற கொள்கையுடையவர். அக்கொள்கைப்படியே அவர் நடந்துவந்தார்.

அப்பதியில் அயவந்தி என்னுங் கோயிலில் வீற்றிருந்தருளும் சிவபெருமானை அர்ச்சிக்க விரும்பித் திருநீலநக்க நாயனார் ஒரு திருவாதிரைநாளில் மனைவியாரோடுஞ் சென்றார். அவர் விதிப்படி ஆண்டவனைத் தொழுது, அர்ச்சித்து, அஞ்செழுத்தை ஓதிக்கொண்டிருந்தார். அவ்வேளையில் ஒரு சிலம்பி மேலே நின்றும் வழுவிச் சிவலிங்கத்தின் மீது விழுந்தது. அதை நாயனார் மனைவியார் கண்டார். குழந்தைமேல் சிலம்பி விழுந்தால், அதை எப்படி ஊதித் துமிப்பாரோ, அப்படியே சிவலிங்கத்தின்மீது விழுந்த சிலம்பியை அவர் ஊதித் துமிந்தார்.

மனைவியார் செயலைத் திருநீலநக்கநாயனார் பார்த்துப் பதைபதைத்துக் கண்களைப் புதைத்துக்கொண்டார்; புதைத்து மனைவியாரை நோக்கி, " உணர்வில்லாதவளே! இப்படி ஏன்செய்தாய்?" என்று கேட்டார். "சிலம்பி சிவலிங்கத்

---

௩௬. திருஞான சம்பந்தர் எழுந்தருளும் எத்திருப்பதியிலும். இடையில் சிலநாள் கழித்து. அவருடன் பயின்று - திருஞான சம்பந்தருடன் பழகி. திண் பெரும் - உறுதியுடைய பெருமை வாய்ந்த.

௩௭. முறை பிறங்க - இம்முறை பெருக. மறையவர் - திருநீல நக்கர். ஒருவர் தம் - திருஞான சம்பந்தரது.

௩௮. தருந் தொழிலையுடைய. ஏறு...உய்த்து - இடபக் கொடியுடைய சிவபிரானிடம் ஒருமை அன்பு செலுத்தி.

தின்மீது விழுந்தது. அதை ஊதித் துமிந்தேன்" என்று அம்மையார் கூறினார். நாயனார் நாயகியாரது அன்பைக் கருதாது, அவர் செயலை அனுசிதமாகக் கருதினார். அவர் அம்மையாரை நோக்கிச் "சிலம்பியை வேறொரு வகையால் நீக்கி யிருக்கலாம். அதை எச்சில்பட ஊதித் துமிந்தாய். அடாதது செய்த உன்னைத் துறந்தேன். என்னைவிட்டு நீங்குவாயாக" என்றார். அப்பொழுது மாலைக்காலம் வந்தது. அம்மையார் நாயனார் கட்டளைப்படி ஒருவழி நீங்கினார். நாயனார் நேர்ந்த பழுது தீரப் பூசைசெய்து முடித்து வீடுசேர்ந்தார். அம்மையார் வீடுநோக்க அஞ்சித் திருக்கோயிலிலேயே தங்கினார்.

அன்றிரவு அடியவர்க் கெளியவராகிய அயவந்திநாதர், நாயனார் கனவிலே தோன்றி, "உன் மனைவி மெய்யன்போடு ஊதித் துமிந்த இடம் இது. இங்கே கொப்புளமில்லை. அவள் ஊதாத இடமாகிய இப்புறத்தைப் பார். கொப்புளம் எழும்பியிருக்கிறது" என்று காட்டினார். நாயனார் விழித்து எழுந்து, கனவை நினைவாக்கொண்டு திருவருளைப் போற்றுகிறார்; ஆடுகிறார்; பாடுகிறார்; அழுகிறார்.

பொழுது விடிந்தது. திருநீலநக்கநாயனார் திருக்கோயிலுக்குச் சென்று, ஆண்டவனைத் தொழுது, மனைவியாரை அழைத்துக்கொண்டு வீடு சேர்ந்தார். நாயனார் வழக்கம் போலத் திருத்தொண்டு செய்து வந்தார்.

திருநீலநக்க நாயனார் திருஞான சம்பந்த சுவாமிகளின் மாண்புகளைக் கேள்வியுற்றார். அச்சுவாமிகளைக் கண்டு தொழவேண்டும் என்னும் பேரவா அவருக்கு எழுந்தது. அச்சமயத்தில் ஒருநாள் திருஞான சம்பந்தப் பெருமான் அயவந்தி அப்பரைத் தொழுது, சாத்த மங்கைக் கெழுந்தருளினார். அவருடன் திருநீலகண்ட யாழ்ப்பாணரும், அவ்யாழ்ப்பாணரின் மனைவியாரும், மற்றும் பல அடியார்களும் போந்தார்கள். திருநீலநக்க நாயனார் தமது ஊரை அலங்கரித்துத் திருஞான சம்பந்தரையும் மற்றவர்களையும் எதிர் கொண்டார்; அவர்களை எதிர்கொண்டு அழைத்துத் திருவமுது செய்வித்தார். அன்றிரவும் திருஞான சம்பந்தர் அவ்விடம் தங்கினார். எல்லாரும் அமுதுண்ட பின்னர்த் திருஞான சம்பந்தர் திருநீலநக்கநாயனாரை அழைப்பித்துத் "திருநீலகண்டப் பெரும்பாணர் இன்று தங்க ஓரிடம் அளியும்" என்றார். திருநீலநக்க நாயனார் மகிழ் வெய்தி நடுமனையில் வேதிகையின் பக்கத்தில் யாழ்ப்பாணருக்கு இடம் அளித்தார். அங்கே வேதிகையிலுள்ள நித்தியாக்கினி எழுந்து ஓங்கி நாவிட்டு முன்னிலும் பிரகாசமாக எரியலாயிற்று. திருநீலநக்க நாயனார் இன்புற்றார் பெரும்பாணர் விறலியாரோடு பள்ளிகொண்டார்.

பொழுது விடிந்தபின், திருஞான சம்பந்த சுவாமிகள் அயவந்திக்குப் போனார்; போய்த் திருநீல நக்கரைச் சிறப்பித்துப் பதிகம் பாடினார். சுவாமிகள் சில நாள் அங்கிருந்து, நாயனாருக்கு விடை கொடுத்து, வேறு பதிகளுக்குச் சென்றார். திருஞான சம்பந்தரைப் பிரிந்து வாழ நாயனார்க்கு மனம் எழவே இல்லை. ஆனாலும் சுவாமிகள் கட்டளைப்படி நாயனார் சாத்தமங்கையிலேயே இருந்தார். அவர் மனம் திருஞான சம்பந்த சுவாமிக ளிடத்திலேயே படிந்து கிடந்தது. இடை நாட்களில் நாயனார் திருஞான சம்பந்தர் போகுந் திருப்பதிகளுக்குத் தாமும் போய் அவரைக் கண்டு தொழுது வருவார்.

இவ்வாறொழுகி வந்த திருநீலநக்க நாயனார், திருஞான சம்பந்த சுவாமிகளுடைய திருமணத்தைச் சேவித்துச் சிவபிரான் திருவடி சேர்ந்தார்.



# நமிநந்தியடிகள் புராணம்



வையம் புரக்குந் தனிச்செங்கோல் வளவர் பொன்னித் திருநாட்டுச்
செய்ய கமலத் தடம்பணையும் செழுநீர்த் தடமும் புடையுடைத்தாய்ப்
பொய்தீர் வாய்மை அருமறைநூல் புரிந்த சீலப் புகழதனால்
எய்தும் பெருமை எண்டிசையும் ஏறார் ஏமப் பேறூரால்.

மாலை பயிலும் தோரணங்கள் மருங்கு பயிலும் மணிமறுகு
வேலை பயிலும் புனல்பருகு மேகம் பயிலும் மாடங்கள்
சோலை பயிலும் குளிர்ந்தஇருள் சுரும்பு பயிலும் அரும்பூகம்
காலை பயிலும் வேதஒலி கழுநீர் பயிலும் செழுநீர்ச்செய்.

பணையில் விளைந்த வெண்ணெல்லின் பரப்பின் மீது படச்செய்ய
துணர்மென் கமலம் இடைஇடையே சுடர்விட் டெழுந்து தோன்றுவன
புணர்*வெண் புரிநூ லவர்வேள்விக் களத்தில் புனைந்த வேதிகைமேல்
மணல்வெண் பரப்பின் இடைஇடையே வளர்த்த செந்தீ மானுமால்.

பெருமை விளங்கும் அப்பதியில் பேணும் நீற்றுச் சைவநெறி
ஒருமை நெறிவாழ் அந்தணர்தம் ஓங்கு குலத்தி னுள்வந்தார்
இருமை உலகும் ஈசர்கழல் இறைஞ்சி ஏத்தப் பெற்றதவத்
தருமை புரிவார் நமிநந்தி அடிகள் என்பா ராயினார்.

---

க. வையம்புரக்கும் - உலகத்தைக் காக்கும். வளவர் பொன்னித் திரு நாட்டு - சோழர்களின் காவிரி நாட்டில். தடம்பணையும் - அகன்ற வயல்களை யும். தடமும் - தடாகங்களையும். புடை - தன்னகத்தே.

உ. மாலை பயிலும் - வரிசையாக உள்ள ; மாலைகள் கட்டப்பட்ட எனினு மாம். மணி மறுகு மருங்கு பயிலும் - அழகிய வீதிகளில் நெருங்கி யிருக்கும். வேலை...மாடங்கள் பயிலும் - கடலிலுள்ள நீரைக் குடிக்கும் மேகங்கள் மாடங் களில் தவழும். சோலை குளிர்ந்த இருள் பயிலும் (செறியும்). அரும்பூகம் சுரும்பு பயிலும் - அரிய கமுகுகளில் வண்டுகள் நிரம்பிக் கிடக்கும். செழு நீர்ச்செய் - செழிய நீர்வளங் கொண்ட வயல்களில். கழுநீர் பயிலும் - செங் கழுநீர்ப் பூக்கள் இருக்கும்.

ங. பணையில் விளைந்த. செய்யதுணர் மென்கமலம் - சிவந்த கொத்துக் களைக் கொண்ட மெல்லிய தாமரைகள். வேள்விக் களத்தில் - யாக சாலையில். புனைந்த - அழகு செய்த. வேதிகை மேல் - திண்ணைமீது. மானும் - ஒக்கும்.

ச. பேணும் - பாதுகாக்கும். இம்மை மறுமையுலகும்.

பா - ம்—*மென்.

வாய்மை மறைநூல் சீலத்தால் வளர்க்குஞ் செந்தீ எனத்தகுவார்
தூய்மை பத் திருநீற் றடைவேமெய்ப் பொருளென் றறியுந் துணிவினூர்
சாம கண்டர் செய்யகழல் *வழிப்பட் டொழுகுந் தலைமைநிலை
யாம இரவும் பகலும்உணர் வொழியா இன்பம் எய்தினூர். ரு

அவ்வூர் நின்றுந் திருவாரூ ரதனை அடைவார் "அடியார்மேல்
வெவ்வூ றகற்றும் பெருமான்றன் விரைசூழ் மலர்த்தாள் பணிவுறுதல்
எவ்வூ தியமும் எனக்கொள்ளும் எண்ணம் உடையார் பலநாளும்
தெவ்வூர் எரித்த †வரைச்சிலையார் திருப்பா தங்கள் வணங்கினூர். சு

செம்பொற் புற்றின் மாணிக்கச் செழுஞ்சோ தியைநேர் தொழுஞ்சீலம்
தம்பற் றாக நினைந்தணைந்து தாழ்ந்து பணிந்து வாழ்ந்துபோந்
தம்பொற் புரிசைத் திருமுன்றில் அணைவார் பாங்கோர் அரனெறியின்
நம்பர்க் கிடமாங் கோயிலினுட் புக்கு வணங்க நண்ணினூர். எ

நண்ணி இறைஞ்சி அன்பினுல் நயப்புற் றெழுந்த காதலுடன்
அண்ண லாரைப் பணிந்தெழுவார் அடுத்த நிலைமைக் குறிப்பினுல்
பண்ணுந் தொண்டின் பாங்குபல பயின்று பரவி விரவுவார்
எண்ணில் தீபம் ஏற்றுவதற் கெடுத்த கருத்தின் இசைந்தெழுந்தார்.

எழுந்த பொழுது பகற்பொழுதங் கிறங்கு மாலை எய்துதலும்
செழுந்தண் பதியி னிடையப்பால் செல்லிற் செல்லும் பொழுதென்ன
ஒழிந்தங் கணைந்தோர் மனையில்விளக் குறுநெய் வேண்டி உள்புகலும்
அழிந்த நிலைமை அமணர்மனை ஆயிற் றங்கண் அவருரைப்பார். கூ

---

ரு. சீலத் தூய்மையில் நெருப்பனையார் என்றபடி. அடைவே - சேர்க்கையே. சாம கண்டர் - சாமம் பாடும் திருமிடற்றராகிய சிவபெருமான். ஜாம இரவும்.

சு. வெம்மை ஊறு - கொடுந் துன்பங்களை. விரை - வாசனை. திருவடியைப் பணிவது எல்லாவித இலாபமும். தெவ்வூர் - பகைவர்களின் முப்புரங்களை. வரைச்சிலையார் - மேருவை வில்லாகவுடைய சிவபிரான்தன்.

எ. திருவாரூரில் பெருமான் புற்றிடங்கொண்டிருத்தலான், "செம்பொற் புற்றின்" என்றூர். அம்...திருமுன்றில் - அழகிய பொன்மதில் சூழ்ந்த திருமுற்றத்தில். பாங்கோர் அரனெறியில் - பக்கத்துள்ள ஒப்பற்ற அரனெறி என்னுங் கோயிலில்.

அ. நயப்புற்று - விருப்புற்று. பாங்கு...விரவுவார் - பகுதிகள் பலவற்றைச் செய்து வாழ்த்தி வாழும் நமிநந்தியடிகள். "விளக்கிட்டார் பேறு சொல்லின் மெய்ந்நெறி ஞானமாகும்." "விரும்பிநல் விளக்குத் தூபம் விதியினுல் இடவல் லார்க்குக் - கரும்பினில் கட்டி போல்வார் கடவூர் வீரட் டனூரே"—அப்பர்.

கூ. ஒழிந்து - செல்லாது. விளக்குக்கு. அவர் - சமணர்.

பா - ம்—*தலைப்பட் டொழுகுந் தன்மைநிலை. †வரிச்.

"கையில் விளங்கு கனலுடையார் தமக்கு விளக்கு மிகைகாணும்
நெய்யிங் கில்லை விளக்கெரிப்பீ ராகில் நீரை முகந்தெரித்தல்
செய்யும்" என்று திருத்தொண்டர்க் குரைத்தார் தெளியா தொரு*பொருளே
பொய்யும் மெய்யும் ஆம்என்னும் பொருள்மேற் கொள்ளும் புரைநெறியார்.

அருகர் மதியா துரைத்தவுரை ஆற்றா ராகி அப்பொழுதே
பெருக மனத்தில் வருத்தமுடன் பெயர்ந்து போந்து பிறையணிந்த
முருகு விரியும் மலர்க்கொன்றை முடியார் கோயில் முன்னெய்தி
உருகும் அன்பர் பணிந்துவிழ ஒருவாக் கெழுந்த துயர்விசும்பில். ௧௧

"வந்த கவலை மாற்றும்இனி மாறா விளக்குப் பணிமாற
இந்த மருங்கில் குளத்துநீர் முகந்து கொடுவந் தேற்றும்" என
அந்தி மதியம் அணிந்தபிரான் அருளால் எழுந்த மொழிகேளாச்
சிந்தை மகிழ்ந்து நமிநந்தி அடிகள் செய்வ தறிந்திலரால். ௧௨

சென்னி மிசைநீர் தரித்தபிரான் அருளே சிந்தை செய்தெழுவார்
நன்னீர்ப் பொய்கை நடுப்புக்கு நாதர் நாமம் நவின்றேத்தி
அந்நீர் முகந்து கொண்டேறி அப்பர் கோயில் அடைந்தகலுள்
முந்நீர் உலகம் அதிசயிப்ப முறுக்குந் திரிமேல் நீர்வார்த்தார். ௧௩

சோதி விளக்கொன் றேற்றுதலுஞ் சுடர்விட் டெழுந்த தனைநோக்கி
ஆதி முதல்வர் அரனெறியார் கோயில் அடைய விளக்கேற்றி
ஏதம் நினைந்த அருகந்தர் எதிரே முதிருங் களிப்பினுடன்
நாதர் அருளால் திருவிளக்கு நீரால் எரித்தார் நாடறிய. ௧௪

நிறையும் பரிசு திருவிளக்கு விடியு மளவும் நின்றெரியக்
குறையுந் தகளி களுக்கெல்லாங் கொள்ள வேண்டும் நீர்வார்த்து
மறையின் பொருளை †அருச்சிக்கும் மனையின் நியதி வழுவாமல்
உறையும் பதியின் அவ்விரவே அணைவார் பணிவுற் றொருப்பட்டார்.

---

௧௦. ஒரு...என்னும் - ஒரு கடவுளையே இல்லை உண்டு என்னும்; அஸ்தி நாஸ்திகவாதம். புரை நெறியார் - குற்றம் பொருந்திய நெறியில் நிற்பவராகிய சமணர்கள். ௧௧. அருகர் - சமணர்கள். முருகு - மணம்.

௧௩. முந்நீர் - கடல் சூழ்ந்த; "நிலத்தைப் படைத்தலும் காத்தலும் அழித்தலுமாகிய மூன்று தொழிலுமுடைமையின், முந்நீர் - ஆகுபெயர்"— நச்சினார்க்கினியம் : சிந்தாமணி : ௫.

௧௪. அடைய - முழுவதும். ஏதம் - தீங்கு.

௧௫. பரிசு - இயல்பிலே. தகளிகளுக்கு - அகல்களுக்கு. உறையும் பதியில் - வாழும் பதிக்கு; ஏமப் பேறூர்க்கு. ஒருமைப்பட்டவராகிய அடிகள்.

பா - ம்—*பொருளைப். †அருச்சித்து.

இரவு சென்று தம்பதியில் எய்தி மனைப்புக் கென்றும்போல்
விரவி நியமத் தொழில்முறையே விமலர் தம்மை அருச்சித்துப்
பரவி அமுது செய்தருளிப் பள்ளி கொண்டு புலர்காலை
அரவம் அணிவார் பூசைஅமைத் தாரூர் நகரின் மீண்டணைந்தார். ௧௬

வந்து வணங்கி அரனெறியார் மகிழுங் கோயில் வலங்கொண்டு
சிந்தை மகிழப் பணிந்தெழுந்து புறம்பும் உள்ளுந் திருப்பணிகள்
முந்த முயன்று பகலெல்லாம் முறையே செய்து மறையவனார்
அந்தி *அமையத் தரியவிளக் கெங்கும் ஏற்றி அடிபணிவார். ௧௭

பண்டு போலப் பலநாளும் பயிலும் பணிசெய் தவரொழுகத்
தண்டி அடிக ளால்அமணர் கலக்கம் †விளைந்து சார்வில்அமண்
குண்டர் அழிய ஏழுலகும் குலவும் பெருமை நிலவியதால்
அண்டர் பெருமான் தொண்டர்கழல் அமரர் பணியு மணியாரூர். ௧௮

நாத மறைதேர் நமிநந்தி அடிக ளார்நற் றொண்டாகப்
பூத நாதர் புற்றிடங்கொள் புனிதர்க் கமுது படிமுதலாம்
நீதி வளவன் தான்வேண்டும் நிபந்தம் பலவும் அரியணையின்
மீது திகழ இருந்தமைத்தான் வேதா கமநூல் விதிவிளங்க. ௧௯

வென்றி விடையார் மதிச்சடையார் வீதி விடங்கப் பெருமாள்தாம்
என்றுந் திருவா ரூர்ஆளும் இயல்பின் முறைமைத் திருவிளையாட்
டொன்றுஞ் செயலும் பங்குனியுத் தரமாந் திருநாள் உயர்சிறப்பு
நின்று விண்ணப் பஞ்செய்த படிசெய் தருளும் ‡நிலைபெற்றார். ௨௦

இன்ன பரிசு திருப்பணிகள் பலவுஞ் செய்தே ஏழுலகும்
மன்னும் பெருமைத் திருவாரூர் மன்னர் அடியார் வழிநிற்பார்

---

௧௭. அந்திவேளையில்.

௧௮. தண்டியடிகள் புராணம் பார்க்க. திருவாரூரில்.

௧௯. ஒலிவடிவான வேதப் பயிற்சியில் தெளிவுடைய. ஆக - நிகழ. பூதநாதர் - உயிர்கள் நாதராகிய சிவபெருமானுக்கு. வளவன்-சோழன். நிபந்தம் - படித்தரங்கள். அரியணையின் - சிம்மாசனத்தின்.

௨௦. விடங்கப் பெருமாள் - **திருநகரச் சிறப்பு** : ௪௫-ம். பாட்டுக் குறிப்புப் பார்க்க. ஒன்றும் செயலும் - பொருந்தும் உற்சவத்தையும். நின்று விழாக் கொள்ள வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்துகொண்டபடி திருவிழாக் கொண்டருளும் நேர்மையைப் பெற்றார்.

௨௧. திருவாரூர் மன்னர் - தியாகேசப் பெருமான்.

பா - ம்—*அமைத்த. †விளைக்கச். ‡நேர்.

அன்ன வண்ணந் திருவிளையாட் டாடி அருள எந்நாளும்
நன்மை பெருக நமிநந்தி அடிகள் தொழுதார் நாம்உய்ய. உக

தேவர் பெருமான் எழுச்சிதிரு மணலிக் கொருநாள் எழுந்தருள
யாவ ரென்னா துடன்சேவித் தெல்லாக் குலத்தி லுள்ளோரும்
மேவ அன்பர் தாமுமுடன் சேவித் தணைந்து விண்ணவர்தங்
காவ லாளர் ஓலக்கம் அங்கே கண்டு களிப்புற்றார். உஉ

பொழுது வைகச் சேவித்துப் புனிதர் மீண்டுங் கோயில்புகத்
தொழுது தம்மூர் மருங்கணைந்து தூய மனையுட் புகுதாதே
இழுதும் இருள்சேர் இரவுபுறங் கடையில் துயில இல்லத்து
முழுதுந் தருமம் புரிமனையார் வந்துட் புகுத மொழிகின்றார். உங

"திங்கள் முடியார் பூசனைகள் முடித்துச் செய்யுங் கடன்முறையால்
அங்கி தனைவேட் டமுதுசெய்து பள்ளி கொள்வீர்" எனஅவர்க்குத்
" தங்கள் பெருமான் திருமணலிக் கெழுச்சி சேவித் துடன்நண்ண
எங்கும் எல்லா ரும்போத இழிவு தொடக்கிற் றெனை"என்று. உச

"ஆத லாலே குளித்தடுத்த தூய்மை செய்தே அகம்புகுந்து
வேத நாதர் பூசனையைத் தொடங்க வேண்டும் அதற்குநீ
சீத நன்னீர் முதலான கொண்டிங் கணைவாய்" எனச்செப்பக்
காதல் மனையார் தாமும்அவை கொணரு மதற்குக் கடிதணைந்தார்.

ஆய பொழுது தம்பெருமான் அருளா லேயோ மேனியினில்
ஏயும் அசைவின் அயர்வாலோ அறியோம் இறையுந் தாழாதே
மேய உறக்கம் வந்தணைய விண்ணோர் பெருமான் கழல்நினைந்து
தூய அன்பர் துயில்கொண்டார் துயிலும் பொழுது கனவின்கண். உசு

மேன்மை விளங்குந் திருவாரூர் வீதி விடங்கப் பெருமாள்தாம்
மான அன்பர் பூசனைக்கு வருவார் போல வந்தருளி

---

உஉ. எழுச்சி - திருவிழா; உற்சவம். யாவர் - இக்குலத்தார். விண்ணவர் தங் காவலாளர் ஓலக்கம் - தியாகேசப் பெருமான் திருக்கொலுவை.

உங. புனிதர் - தியாகேசர். இழுதும் - மைக்குழம்பென்ன. புகும்படி.

உச. திங்கள் முடியார் - சந்திரனை யணிந்த முடியையுடைய சிவபிரானுக்கு ஆற்றும். அங்கிதனை வேட்டு - அக்கினி காரியஞ் செய்து. இழிவு தொடக்கிற்று - தீட்டுப் பற்றிக்கொண்டது.

உரு. அடுத்த - பற்றிய தீட்டை.

உசு. உடலில் பொருந்திய பிரயாணத்தின் அயர்வினாலோ. இறையும் - நொடிப் பொழுதும்.

பா - ம்—*மணலூர்.

"ஞான மறையோய்! ஆரூரில் பிறந்தார் எல்லாம் நங்கணங்கள்
ஆன பரிசு காண்பாய்"என் றருளிச் செய்தங் கெதிரகன்றார். ௨௭

ஆதி தேவர் எழுந்தருள உணர்ந்தார் "இரவர்ச் சனைசெய்யா
தேதம் நினைந்தேன்" எனஅஞ்சி எழுந்த படியே வழிபட்டு
மாத ரார்க்கும் புகுந்தபடி மொழிந்து †விடியல் விரைவோடு
நாத னூர்தந் திருவாரூர் புகுத எதிர்அந் நகர்காண்பார். ௨௮

தெய்வப் பெருமாள் திருவாரூர்ப் பிறந்து வாழ்வார் எல்லாரும்
மைவைத் தனைய ‡மணிகண்டர் வடிவே யாகிப் §பெருகொளியால்
மொய்வைத் தமர்ந்த மேனியராம் பரிசு கண்டு முடிகுவித்த
கைவைத் தஞ்சி அவனிமிசை விழுந்து பணிந்து களிசிறந்தார். ௨௯

படிவம் மாற்றிப் பழம்படியே நிகழ்வுங் கண்டு பரமர்பால்
"அடியேன் பிழையைப் பொறுத்தருள வேண்டும்"என்று பணிந்தருளால்
குடியும் திருவா ரூரகத்துப் புகுந்து வாழ்வார் குவலயத்து
நெடிது பெருகுந் திருத்தொண்டு நிகழச் செய்து நிலவுவார். ௩0

நீறு ||புனைவார் அடியார்க்கு நெடுநாள் நியதி யாகவே
வேறு வேறு வேண்டுவன எல்லாஞ் செய்து மேவுதலால்
ஏறு சிறப்பின் மணிப்புற்றில் இருந்தார் தொண்டர்க் காணியெனும்
பேறு ¶திருநா வுக்கரசர் விளம்பப் பெற்ற பெருமையினார். ௩௧

இன்ன வகையால் திருப்பணிகள் எல்லா உலகுந் தொழச்செய்து
நன்மை பெருகும் நமிநந்தி அடிகள் ⁑நயமார் திருவீதிச்

௨௭. மான - பெருமையுடைய. பரிசு - தன்மையை.

௨௮. விடியற்காலத்தில். எதிரே தோன்றும் அந்நகர்.

௨௯. சிவவடிவேயாகிப் பெருகு ஒளியால் திரண்ட திருமேனியர்களாக விளங்குந் தன்மையைக் கண்டு.

௩0. உயிர்களெல்லாம் சிவகணங்களான கோலத்தை மாற்றி. திருவாரூரிலேயே குடிபுகுந்து.

௩௧. "ஆராய்ந் தடித்தொண்டர் ஆணிப்பொன் ஆரூர் அகத்தடக்கிப் - பாரூர் பரிப்பத்தம் பங்குனி உத்திரம் பாற்படுத்தான் - ஆரூர் நறுமலர் நாதன் அடித்தொண்டன் நம்பிநந்தி-நீராற் றிருவிளக் கிட்டமை நீணா டறியுமன்றே"— திருநாவுக்கரசர்.

௩௨. திருவீதியிலே திருமுடியில் சந்திரனும் கங்கையும்.

பா - ம்—*மறையோர். †மனத்துள். ‡கண்டரவர். §பெருகொளியார். ||புனைந்த. ¶திருநாவினுக்கரசால். ⁑நலமார்.

சென்னி மதியும் திருநதியும் அலைய வருவார் திருவாரூர்
மன்னர் பாதம் நீழல்மிகும் வளர்பொற் சோதி மன்னினார். ௩௨

நாட்டார் அறிய முன்னாளி னன்னாள் உலந்த ஐம்படையின்
பூட்டார் மார்பிற் சிறியமறைப் புதல்வன் தன்னைப் புக்கொளியூர்த்
தாட்டா மரையின் மடுவின்கண் தனிமா முதலை வாய்நின்று
மீட்டார் கழல்கள் நினைவாரை மீளா வழியின் மீட்பனவே. ௩௩

ஆ_ திருவிருத்தம் க,கூ0௩

---

சோழநாட்டிலே ஏமப்பேறூரிலே தோன்றியவர் **நமிநந்தியடிகள்.** அவர் அந்தணர்; வாய்மையிற் சிறந்தவர்; திருநீற்றன்பர்; இரவும் பகலும் ஆண்டவன் அடியை நினைப்பதையே பேரின்பமாகக் கொண்டவர். அவர் திருவாரூருக்குச் சென்று சுவாமிதரிசனஞ் செய்வது வழக்கம்.

ஒருநாள் அவர் புற்றிடங்கொண்ட புனிதரைப் பணிந்து, அருகேயுள்ள அரனெறி என்னுங் கோயிலை யடைந்து திருத்தொண்டுகள் செய்தார். அங்கே தீபத்தொண்டு செய்தல் வேண்டும் என்னும் விருப்பம் அவருக்கு எழுந்தது. அவ்வேளை, மாலைக் காலமாயிருந்தமையால் அவர், வேறிடஞ் செல்ல மனங் கொண்டாரில்லை; அருகேயிருந்த ஒரு வீட்டுக்குள் நுழைந்தார்; திருவிளக்கேற்ற நெய் கேட்டார். அவ்வீட்டிலுள்ளவர்கள் சமணர்கள்.

சமணர்கள் அடிகளை நோக்கி, "கையிலே கனலுடைய கடவுளுக்கு விளக்கு எற்றுக்கு? இங்கு நெய்யில்லை. நீரை முகந்து விளக்கெரியும்" என்றார்கள். அவ்வுரையைக் கேட்ட நாயனார் மனஞ் சகியாராயினார். அவர் மன வருத்தத்தோடு, சிவசந்நிதி அடைந்து, பெருமானை வணங்கி விழுந்தார். அச்சமயத்தில், "கவலையொழி; அருகேயுள்ள குளத்து நீரை முகந்து விளக்கேற்று." என்று ஒரு வானொலி எழுந்தது. நாயனார்க்கு வரம்பிலா இன்பமுண்டாயிற்று.

நமிநந்தியடிகள் குளத்தில் இறங்கி, நீரை முகந்து கொண்டுவந்து, திரியிட்ட அகலிலே வார்த்து, ஒரு விளக்கேற்றினார். அது சுடர்விட்டெரிந்தது. அடியவர் மகிழ்ந்து, கோயில் முழுவதும் தண்ணீரால் விளக்கெரித்தார். சமணர்கள் நாணுற்றார்கள்.

நமிநந்தியடிகள் நாடோறும் திருவிளக்குத் திருத்தொண்டு செய்து வருவார். அவர், திருவிளக்குகள் விடியுமளவும் நின்றெரியும் பொருட்டு நீர் குறையுந் தகழிகளுக்கெல்லாம் நீரை வார்ப்பார்; தம் ஊருக்குச் செல்வார்; மனையில் நியதி தவறாது சிவபிரானை அர்ச்சிப்பார்; திருவாரூரை அடைவார்; தொண்டு செய்வார்.

தண்டியடிகளால் சமணர்கள் அழிந்தார்கள். திருவாரூர் சிவமயமாக விளங்கிற்று. நமிநந்தியடிகளின் திருத்தொண்டு குறைவற நிகழ்ந்துவரச்

---

௩௩. உலந்த - இறந்த. ஐம்படைப் பூண் அணிந்த; **தடுத்தாட்கொண்ட புராணம்:** பாட்டு ௪. குறிப்புப் பார்க்க. திரு அவிநாசிப் புக்கொளியூர். தாள் தாமரை. மீட்டார் - சுந்தரமூர்த்தி சுவாமிகளின். அக்கழல்கள் மீளாப் பிறவி வழியினின்று மீட்பனவாகும்.

சோழமன்னன் அமுதுபடி முதலான நிபந்தங்கள் அமைத்தான். நாயனார் வீதிவிடங்கப் பெருமானுக்குத் திருவிழாசெய்ய, அப்பெருமான் திருவடியை நோக்கி முறையிட்டார். ஆண்டவனருளால் பங்குனி உத்திரத் திருவிழா நன்கு நடைபெற்றது.

அவ்விழாவிலே ஒரு நாள் சிவபெருமான் திருமணலிக்கு எழுந்தருளினார். எல்லாக் குலத்தவர்களும் ஆண்டவனைத் தொழுது உடன் சென்றார்கள். அவர்களோடு நமிநந்தி யடிகளுஞ் சென்று ஆண்டவன் திருவோலக்கத்தைக் கண்டு ஆனந்தமுற்றார். பொழுதுபோயிற்று. சிவபெருமான் திருமணலியினின்றும் திருவாரூருக்கு எழுந்தருளினார். நாயனார் சிவபெருமானை வணங்கித் தம்மூரை யடைந்தார். அடைந்தவர் மனைக்குள் நுழைந்தாரில்லை ; புறக்கடையிலே துயின்றார்.

மனைவியார் போந்து நாயனாரைப் பார்த்து, "வீட்டுக்குள் வந்து சிவபூசை முதலியன முடித்துத் துயிலும்'' என்றார். அதற்கு நாயனார், "இறைவனார் இன்று திருமணலிக்கு எழுந்தருளினார். எல்லாச் சாதியாருடன் நானும் போனேன். பிராயச்சித்தஞ் செய்து மனைக்குள் நுழைந்து பூசைசெய்தல்வேண்டும். தண்ணீர் கொண்டுவா'' என்றார். அம்மையார் வீட்டிற்குட் சென்றார். அதற்குள் சிவபிரான் திருவருளாலோ அல்லது அயர்வாலோ நாயனாருக்கு உறக்கம் வந்தது. சிவபெருமான் அவர் கனவிலே தோன்றித் "திருவாரூரில் பிறந்தவர்கள் எல்லாரும் நம் கணங்கள்; அத்தன்மையை நீ காண்பாய்'' என்று அருளிமறைந்தார். உடனே நாயனார்பெருமான் துயில் நீங்கி, "இரவு சிவபூசை செய்தேனில்லை. நான் நினைத்தது குற்றம்'' என்று எழுந்தபடியே சிவவழிபாடு செய்தார்; நிகழ்ந்ததை மனைவியாருக்குச் சொன்னார். விடிந்ததும் அவர் திருவாரூரை அடைந்தார் ; அங்கே எல்லாரும் சிவகணங்களாக விளங்குதலைக் கண்டார்; விழுந்து விழுந்து அவர்களை வணங்கினார். அவர்களெல்லாரும் பழையபடியே ஆயினர். அதையும் நாயனார் கண்டார். "என் பிழை பொறுத்தருளல் வேண்டும்'' என்று அவர் ஆண்டவனைத் தொழுதார்.

நமிநந்தியடிகள் தம் ஊரை விடுத்துத் திருவாரூரிலே குடி புகுந்து, அடியவர்களுக்கு வேண்டுவன எல்லாஞ் செய்து வந்தார். அவர், "தொண்டர்க்கு ஆணி'' என்று அப்பர் சுவாமிகளால் சிறப்பிக்கப் பெற்றார்.

நமிநந்தியடிகள் முறைப்படி திருத்தொண்டுகளைச் செய்து தியாகேசப் பெருமான் திருவடி நீழலை யடைந்தார்.

பெரிய புராண முதற் காண்டமும்

அதற்குத் திருவாளர்-திரு. வி. கலியாணசுந்தர முதலியார் இயற்றிய

**அரும்பத விசேட ஆராய்ச்சிக் குறிப்புரையும் வசனமும்**

முற்றுப் பெற்றன.



## இரண்டாங் காண்டம்

### ரு. வம்பறுவரிவண்டுச் சருக்கம்

# திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் புராணம்

---

வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம். க

---

*க. வேதம் வித் என்னுந் தாதுவினடியாகப் பிறந்தது. வித் - அறிவு. வேதம் - சிவத்தை உணர்தற்குரிய அறிவுக்கருவி. வேதநெறி - வைதிகம் அதாவது அறிவு நெறி. நெறி - வழி. வேதம் வழி போன்றது. வழிக்குத் துறை இருத்தல் இயல்பு. துறை சைவம். துறையின் சிறப்பு நோக்கி, "மிகு சைவத்துறை" என்றார். வேத நெறியுஞ் சைவத் துறையுஞ் சேர்ந்த ஒன்று வைதிக சைவம் என்பது. "சைவமுதல் வைதிகமும்" (உஉ) என்பது ஆசிரியர் திருவாக்கு. "இராஜாங்கத்தில் அமர்ந்தது*வை**தீகசைவம்**" *என்றார்* **தாயுமானூரும்.**

*வேதம் - மந்திரம் என்றும், சைவம் தந்திரம் (ஆகமம்) என்றும் சொல்வது மரபு. மந்திரம் - நினைவு; தந்திரம் - நினைவின் பரிணாமமாகிய செயல் (கிரியை). மந்திரமாகிய வேதம் மூலம்; தந்திரமாகிய ஆகமம் உரை. வேதம் விதைபோன்றது; ஆகமம் மரம்போன்றது. நினைவின்றிச் செயலில்லை. நினைவே செயலாகப் பரிணமிக்கிறது. எதையும் நினைந்தே செய்வது வழக்கம். ஈண்டு நினைவுபோன்ற வேதம் வழியாகவும், செயல் போன்ற சைவம் துறையாகவுஞ் சொல்லப்பட்டன. "மந்திரமும் தந்திரமும் ஆனூர் போலும்."* —**அப்பர்:** *திருவிடைமருதூர்த் திருத்தாண்டகம். க. "ஆகமத்தொடு மந்திரங்கள்"*—**சம்பந்தர்:** *"மானினேர்விழி" உ. "வேதமோ டாகமம் மெய்யாம் இறைவனூல், ஓதும் பொதுவும் சிறப்புமென் றுன்னுக, நாதன் உரையவை நாடில் இரண்டந்தம், பேதம தென்னில் பெரி யோர்க்கபேதமே"*—**திருமூலர்.** *"ஓது சமயங்கள் பொருளுணரு நூல்க ளொன் றோடொன் றொவ்வாம லுளபலவும் இவற்றுள் - யாதுசம யம்பொருணூ லியாதிங் கென்னில் இதுவாகும் அதுவல்ல எனும் பிணக்க தின்றி - நீதியினால் இவையெல்லாம் ஓரிடத்தே காண நிற்பதியா தொருசமயம் அதுசமயம் பொருணூல் - ஆதலினால்* **இவையெல்லாம் அருமறை ஆகமத்தே அடங்கியிடும்** *அவைஇரண்டும் அரனடிக்கீழ் அடங்கும்."* **"வேதநூல் சைவநூல் என்**

சென்னிவளர் மதியணிந்த சிலம்பணிசே வடியார்தம்
மன்னியசை வத்துறையின் வழிவந்த குடிவளவர்
பொன்னிவளந் தருநாடு பொலிவெய்த நிலவியதால்
கன்னிமதில் மருங்குழுகில் நெருங்குகழு மலமூதூர். உ

உ. வளவர் - சோழர். பொன்னி - காவிரி. சோழநாடு. கன்னி - அழியாத ; புதிய எனினுமாம். கன்னிகையைப்போல என்பர் பழைய குறிப்புரைக்காரர். கழுமலம் - சீர்காழி ; சாரும் உயிர்களின் மலத்தைக் கழுவும் ஊர்.

ரிரண்டே நூல்கள் வேறுரைக்கு நூலிவற்றின் விரிந்த நூல்கள் - ஆதிநூல் அநாதிஅம லன்தருநூல் இரண்டும் ஆரணநூல் பொதுசைவம் அருஞ்சிறப்பு நூலாம் - நீதியினல் உலகர்க்குஞ் சத்திநிபா தர்க்கும் நிகழ்த்தியது நீண்மறையி னெழிபொருள்வே தாந்தத் - தீதில்பொருள் கொண்டுரைக்கு நூல்சைவம் பிற நூல் திகழ்பூர்வஞ் சிவாகமங்கள் சித்தாந்த மாகும்."—அருணந்தி.

சிவத்தை அடைதற்கு வேதநெறியுஞ் சைவத்துறையும் ஒன்றிய வைதிக சைவம் வேண்டற்பாலது. வைதிக சைவத்துக்கு உலகில் வழங்கும் பெயர்கள் பலப்பல. அப்பலபட்ட பெயர்களின் பொருள் ஒன்றே. வைதிகசைவம் என்னும் பெயர் பிற்காலத்தில் ஒரு கூட்டத்தாரிடைக் கட்டுப்பட்டு நிலவலாயிற்று. அதன் பொருள் எங்கும் வியாபித்திருப்பது. வைதிக சைவம் ஒரு கூட்டத்தார்க்குமட்டும் உரியதன்று. அஃது அகிலத்துக்கே உரியது. இந்நுட்பம் "பூதபரம் பரைபொலிய" என்பதில் நன்கு விளங்குதல் காண்க. "செப்பரிய சமயநெறி எல்லாந் தந்தந் தெய்வமே தெய்வமெனுஞ் செயற்கை யான - அப்பரிசா ளருமஃதே பிடித்தால் இப்பால் அடுத்ததந்நூல் களும்விரித்தே அனுமா ஞதி - ஒப்பவிரித் துரைப்பரிங்ஙன் பொய்மெய் என்ன ஒன்றிலே ஒன் றெனப்பார்ப்ப தொவ்வா தார்க்கும் - இப்பரிசாஞ் சமயமுமாய் அல்ல வாகி யாதுசம யமும்வணங்கும் இயல்ப தாகி" "இயல்பென்றுந் திரியாமல் இயம மாதி எண்குணமும் காட்டிஅன்பால் இன்ப மாகிப் - பயனருளப் பொருள்கள் பரி வார மாகிப் பண்புறவுஞ் சௌபான பக்ஷங் காட்டி - மயலறுமந் திரஞ் சிக்ஷை சோதி டாதி மற்றங்க நூல்வணங்க மௌன மோலி - அயர்வறச்சென் னியில்வைத்து ராசாங் கத்தில் அமர்ந்ததுவை திகசைவ மழகி தந்தோ."; "அந் தோஈ ததிசயமிச் சமயம் போலின் றறிஞரெல்லாம் நடுவறிய அணிமா வாதி - வந்தாடித் திரிபவர்க்கும் பேசா மோனம் வைத்திருந்த மாதவர்க்கும் மற்று மற்றும் - இந்த்ராதி போகநலம் பெற்ற பேர்க்கும் இதுவன்றித் தாயகம்வே றில்லை இல்லை - சந்தான கற்பகம்போல் அருளைக் காட்டத் தக்கநெறி இந் நெறியே தான்சன் மார்க்கம்."—தாயுமானர்.

பூதபரம்பரை - உயிர்களின் வழிவழி ; ஆன்ம கோடிகள். பூதத்தைச் சுத்தமெனக்கொண்டு, பரம்பரை என்பதற்குக் குருபரம்பரை என்று கூறுவோருமுளர். சில உயிர்கள் பொலிய என்று கூறாது, "பூதபரம்பரை பொலிய" என்றமையால், வேத நெறியும் மிகுசைவத் துறையும் ஒன்றிய

அப்பதிதான் அந்தணர்தம் கிடைகள்அரும் மறைமுறையே
செப்பும்ஒலி வளர்பூகச் செழுஞ்சோலை புறஞ்சூழ
ஒப்பில்நகர் ஓங்குதலால் உகக்கடைநாள் அன்றியே
எப்பொழுதுங் கடல்மேலே மிதப்பதெனை இசைந்துளதால். ௩

---

௩. கிடைகள்-ஓதுமிடங்களில். பூகம் - கமுகம். உகக்கடைநாள் - உகமுடிவில்; ஊழிக்காலத்தில் சீர்காழி கடலின்மீது மிதந்து அழியாமலிருப்பது; அதனால் அதற்குத் தோணிபுர மென்றொரு பெயருமுண்டு. கமுகஞ்சோலை கடல் நிறத்தையும், வேதஒலி கடல் முழக்கத்தையும் குறித்தல் காண்க.

---

வைதிக சைவம் எல்லா உயிர்கட்கும் உரியதாதலைத் தெளிக. பூதபரம்பரை பொலிதற்கு வேதநெறி ஓங்கிச் சைவத்துறை விளங்குதல் வேண்டுமென்க.

புகலி - சீர்காழி; சீர்காழியில் தோன்றிய. சீர்காழிக்குப் பன்னிரண்டு பெயர்கள் உண்டு. அவைகளுள் புகலி என்னும் பெயரை ஈண்டுக் குறிப்பிட்டதென்னை? அதற்கொரு சிறப்பிருத்தல்வேண்டும். புகலி - புகலிடம்; தஞ்சம் புகுமிடம். திருஞானசம்பந்தர் வைதிக சைவத்தின் வழிப் பூத பரம்பரை பொலியத் தோன்றிய குருமூர்த்தியாதலின், அவர்தந் திருவடி எல்லா உயிர் கட்கும் புகலிடம் என்பதைப் " புகலி " என்பது குறிப்பதென்க. "சராசரங்களெல்லாம் - சிவம்பெருக்கும் பிள்ளையார்" (௨௬) என்றதனில் திருஞான சம்பந்தர் எல்லா உயிர்க்கும் உரியகுரு என்பது புலனாகும்.

திருஞானசம்பந்தர் என்னும் பெயர் தாய்தந்தையர் அளித்த இயற் பெயரன்று. அது காரணப்பெயர். இதுபற்றியே "சிவஞானசம்பந்தர் ஆயினார்" (௬௩) என்றார் ஆசிரியர். இந்நுட்பம் அங்கே விளக்கப்படும். ஞானம் பொது; திருஞானம் சிறப்பு. ஞானம் பலரிடத்தில் விளங்குவது; திருஞானம் பலரிடத்தில் விளங்காதது. திருஞானமாவது ஆண்டவன் திருவடி ஞானம். இதற்கு அத்துவித ஞானம், திருவருள் ஞானம், சிவஞானம் முதலிய பல பெயர்கள் வழங்கப்படுகின்றன. திருஞானசம்பந்தர் என்னும் பெயர், திருஞானத்தை உயிர்களுக்குச் சம்பந்தப்படுத்துகிறவர் என்னும் பொருளை யுடையது. இதுபற்றிப் பின்னும் வந்துழி வந்துழி விளக்கஞ் செய்யப்படும்.

திருஞானசம்பந்தர், என்றும் குருமூர்த்தியாக வீற்றிருப்பவராதலின், " அக்காலத் துயிர்கள் பொலிய " என்னாது " பூத பரம்பரைபொலிய " என்றார். திருஞானசம்பந்தர் சீர்காழியில் தோன்றியபோது மட்டும் குருவாக விளங்கினவரல்லர். அவர் அதற்கு முன்னும் குருவாக விளங்கினவர்; பின்னுங் குருவாக விளங்கி வருவோர்.

திருஞானசம்பந்தர் தம்பொருட்டு அழுவில்லை யாதலின், " வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப் - பூத பரம்பரை பொலியப் புனிதவாய் மலர்ந்தழுத" என்றார். பிறர் பொருட்டு அழுதமையைப் " புனிதவாய் " என்பது புலப்படுத்துகிறது. புனிதம் - தூய்மை. தன்பொருட்டு எழும் எண்ணம் தூயதாகாது. பிறர்பொருட்டு எழும் எண்ணமே தூயது.

அரிஅயனே முதல்அமரர் அடங்கஎழும் வெள்ளங்கள்
விரிசுடர்மா *மணிப்பதணம் மீதெறிந்த திரைவரைகள்
புரிசைமுதல் புறஞ்சூழ்வ பொங்கோதங் கடைநாளில்
வரிஅரவ மந்தரஞ்சூழ் வடம்போல வயங்குமால். ௬

௪. வெள்ளங்கள் - கற்பாந்த வெள்ளங்கள். மணிப்பதணம் - மணிகள் அழுத்திய மதிலில். புரிசைமுதல் புறஞ்சூழ்வ - மதிலின் முற்பக்கத்தில் சூழ்தல். ஓதம் - பாற்கடலை. கடைந்த நாளில். மந்தரம் - மந்தரகிரியை. வரிஅரவ வடம்போல - வாசுகி என்னும் நாண்போல. வயங்கும் - விளங்கும். மதில் மந்தரகிரியையும், திரை வரைகள் பாம்பையும் ஒக்கு மென்றபடி.

உலகம் நன்கு பொலிந்து வாழ்தல் வேண்டும் என்று அழுதமையான் "மலர்ந்து அழுத" என்றார். மலர்தல் வளர்ச்சியையுணர்த்தும் மங்கலக் குறிப்பு.

"வாய்மலர்ந்து அழுத" என்பதை உற்று நோக்கநோக்க, அதன்கண் இரக்கமிருத்தல் நன்கு புலனாகும். உயிர்களின் பாவத்தைக் கழுவப் போந்தவர் திருஞான சம்பந்தராதலின், அவைகளின் பாவத்தைக் கழுவ அவர் அழுதார் என்க. திருஞான சம்பந்தரின் கண்ணீர் உயிர்களின் பாவத்தைக் கழுவுவதென்க. **கிறிஸ்துபெருமான்** சிலுவையில் அறையப்பட்டது இங்கே நினைவுக்குவருகிறது.

புகலியைச் "சீதவளவயற்புகலி" என்று சிறப்பித்தது கருதற்பாலது. திருஞானசம்பந்தர் திருவடி எல்லா உயிர்கட்கும் புகலிடமாயிருத்தலை உணர்த்தப் புகலி என்று மேலே சொல்லப்பட்டது. வயல் அகன்று பரந்திருப்பதோடு உயிர்களின் வாழ்வு நலனுக்குரிய பொருள்களையும் உதவுகிறது. திருஞானசம்பந்தரது சந்நிதிவிலாசம் உயிர்கட்கு வயல்போலப் பயன்படுவதாதலின், அது வயல் எனப்பட்டது. வளமில்லாத வயலால் பயன் விளையாதன்றோ? அதுபற்றியே "வளவயல்" என்றார். திருஞானசம்பந்தரின் சந்நிதி, உயிர்கட்கு ஞான அமுதை வரையாது வழங்கும் வளமுடையதென்க. வயல் வளத்துக்கு நீரின் சீதம் (தண்மை) வேண்டற்பாலது. இது "சீதவளவயல்" என்பதால் விளங்கும். கொடைக்கு அடிப்படை அந்தண்மை (இரக்கம்). அந்தண்மை இங்கே சீதம். திருஞானசம்பந்தரின் திருவடியாகிய புகலி (புகலிடம்) அகன்று பரந்த பொருளுடைய வயல்போன்றதாய், ஞானமிர்த வளமுடையதாய், தண்மையுடையதாயிருத்தல் "சீதவள வயற்புகலி" என்பதால் உணர்த்தப்பட்டது.

அத்தகைய ஒருவர் தொண்டினை (வரலாற்றை) அவர்தந் திருவருட்டுணை கொண்டு சொல்லப்புகுந்தால் இனிது முடியுமாதலின், "பாதமலர்தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்" என்றார். இஃது ஆசிரியரின் முனைப்பற்ற தன்மையைப் புலப்படுத்துவது. "வானிழல் கூறிய - பொருளினுகுமெனப் புகல்வாமன்றே" என்றார் முன்னரும் (பாயிரம். கூ). மெய்ஞ்ஞானமுள்ள இடத்தில் முனைப்பற்றதும் தற்பயன் கருதாததுமாகிய அன்புத் தொண்டு நிகழ்தல் இயல்பு.

பா - ம்—*மணிப்பாந்தள்.

வளம்பயிலும் புறம்பணைப்பால் வாசப்பா சடைமிடைந்த
தளம்பொலியும் புனற்செந்தா மரைச்செவ்வித் தட மலரால்
களம்பயில்நீர்க் கடல்மலர்வ தொருபரிதி எனக்கருதி
இளம்பரிதி பலமலர்ந்தாற் போல்பவுள இலஞ்சிபல. ௫

உளங்கொள்மறை வேதியர்தம் ஓமதூ மத்திரவும்
கிளர்ந்ததிரு நீற்றொளியிற் கெழுமியநண் பகலும்மலர்ந்

௫. வளம்........பால் - வளம் பொருந்திய மருதநிலத்தினிடத்து. வாசப் பாசடை மிடைந்த - வாசனையுடைய பசிய இலைகள் நெருங்கிய. தளம்........ மலரால் - இதழ்கள் பொலியும் நீரிலுள்ள செந்தாமரையில் மலரும் நிலையி லுள்ள பெரிய பூக்களால். செவ்வி - அழகிய எனினுமாம். களம்பயில் நீர் - கருமை வாய்ந்த நீரையுடைய. பரிதி - சூரியன். இலஞ்சி - குளங்கள். கடலில் ஒரு சூரியன் மலர்கிறது; குளத்தில் பல சூரியர்கள் (செந்தாமரை மலர்கள்) மலர்ந்திருக்கின்றன என்றபடி.

௬. ஓமப் புகையின் இரவும். திருநீற்றொளியின் பகலும். கிளர்ந்த - விளங் கிய. கெழுமிய - பொருந்திய. நண்பகலும் - நடுப்பகலும். பல்லூழி காலத்

பாதமலர் - திருவடி ஞானம். மூளை - தலையிலுள்ளது. மூளை - அறிவின் நிலைக்களம். தமது அறிவில் திருவடிஞானம் படிய என்றபடி. பாதம், என்றும் 'மலர்தலை' யுடையதென்க. திருவடிஞானம் திருத்தொண்டு பரவுதற்குத் துணை நிற்பதாகும். தொண்டு ஈண்டு வரலாற்றின் மேற்று. அத்தொண்டு சிறப்புடைய தென்பார் "திருத்தொண்டு" என்றார். தொண்டு - மூளைப்பற்றதை உணர்த்து வது. திருஞானசம்பந்தர் வரலாறு மூளைப்பற்றதென்பது குறிப்பு. அத்தொண் டைப் பரவுநரும் மூளைப்பற்றவராதல் ஒருதலை. பரவுவாம் - வாழ்த்துவாம்; சொல்வாம் (உளப்பாட்டுத் தன்மைப் பன்மை); பரவுதல் - பாட்டாற் சொல் வது. "வெம்பந்தம் தீர்த்துஉலகாள் வேந்தன் திருஞான - சம்பந் தனைஅரு ளால் சாருநாள் எந்நாளோ"—தாயுமானுர்.

இரண்டாங் காண்டத் தொடக்க மாதலாலும், அது, தங்குருமூர்த்தியாகிய திருஞான சம்பந்தர் வரலாற்றால் தொடங்கப் பெறுதலாலும் முதலில் ஆசிரியர், வணக்கங் கூறினரென்க. ஆசிரியர்க்கும் திருஞான சம்பந்தர்க்கு முள்ள தொடர்பு, "வெறியார் பொழிற்சண் பையர்வேந்தர் மெய்ப்பா சுரத்தைக் - குறியே றியஎல்லை அறிந்தும் பிட்டேன் அல்லேன் - சிறியேன் அறிவுக் கவர்தந்திருப் பாதந் தந்த - நெறியே சிறிதியான் அறிநீர்மைகும் பிட்டேன் அன்பால்" (அ௬௬) என்னும் இப்புராணப் பாட்டால் விளங்குதல் காண்க. இப்பாட்டுடன் பாயிரம் கூ-ம் பாட்டும் ஒப்பு நோக்கி உய்த்துணரற்பாலது.

பெரிய புராணத்துப் போந்துள்ள நாயன்மார் வரலாறுகளில், திருஞான சம்பந்தர் வரலாறே பெரிது. பாட்டுத் தொகையை நோக்குக. முதனூலாக வுள்ள திருத்தொண்டத் தொகையிலும் திருஞான சம்பந்தர் நீண்டிருத்தலை யோர்க. "பிள்ளை பாதி புராணம் பாதி"—பழமொழி.

பா - ம்—*மலரக்.

தளர்ந்தறியாப் பல்லூழி ஆற்றுதலால் அகலிடத்து
விளங்கியஅம் மூதூர்க்கு வேறிரவும் பகலும்மிகை. ௬

பரந்தவிளை வயற்செய்ய பங்கயமாம் பொங்கெரியில்
வரம்பில்வளர் தேமாவின் கனிகிழிந்த மதுநறுநெய்
நிரந்தரநீள் இலைக்கடையால் ஒழுகுதலால் நெடிதவ்வூர்
மரங்களும்ஆ குதிவேட்கும் தகையவென †மணந்துளதால். ௭

வேலைஅழற் கதிர்படிந்த வியன்கங்குல் வெண்மதியம்
சோலைதொறும் நுழைந்துபுறப் படும்பொழுது துதைந்தமலர்ப்
பாலணைந்து மதுத்தோய்ந்து தாதளைந்து பயின்றந்தி
மாலைஎழுஞ் ‡செவ்வொளிய மதியம்போல் வதியுமால். ௮

காமர்திருப் பதியதன்கண் வேதியர்போற் கடிகமழுந்
தாமரையும், புல்லிதழுந் தயங்கியநூ லுந்தாங்கித்
தூமருநுண் துகள்அணிந்து துளிவருகண் ணீர்ததும்பித்
தேமருமென் சுரும்பிசையாற் செழுஞ்சாமம் பாடுமால். ௯

புனைவார்பொற் குழைஅசையப் பூந்தானை பின்போக்கி
வினைவாய்ந்த தழல்வேதி மெழுக்குறவெண் சுதைஒழுக்கும்

---

தையுஞ் செய்தலால். அகலிடத்து - உலகில். வேறு இரவும் பகலும் என்றது சூரியனது மறைவுத் தோற்றத்தால் உண்டாகும் இரவையும் பகலையும் என்க. மிகை - அதிகம்; அதாவது வேண்டுவதில்லை என்றபடி.

௭. செய்ய...எரியில் - செந்தாமரையாகிய நெருப்பில். வரம்பில் - ஓரத்தில். தேமாவின்-இனிய மாவின். மது-தேனாகிய. நிரந்தரம் - எப்பொழுதும். இலைக்கடையால் - இலை நுனியால். மரங்களும் வேள்வி செய்யுந் தகைமையுடையன என அவ்வூர் மணந்துளது (பொருந்தியது). பிராமணர்களே அல்லாமல் மரங்களும் ஆகுதி செய்கின்றன என்றவாறு.

௮. வேலை...கங்குல் - வெங்கதிர்களையுடைய சூரியன் கடலிற் படிந்த மேன்மை வாய்ந்த இரவில். வெண்மதியம் - வெள்ளிய சந்திரன். துதைந்த ............பயின்று-நெருங்கிய மலர்களினிடம் அடைந்து, தேனில் தோய்ந்து, மகரந்தங்களைத் தீண்டிக் கலந்து.

௯. காமர் - அழகிய. கடி - வாசனை. புல்லிதழும் - புறவிதழும். தயங்கிய - விளங்கிய. நூல் - நாளநூல். தூமரு நுண்துகள் - தூய்மையான நுண்ணிய மகரந்தப் பொடிகளை. கள்நீர் - தேன். தேமரு - தேனில் பொருந்திய. சுரும்பு - வண்டு. சாமம் - கானம். வேதியர்க்கு ஆம்போது :—புல்லிதழ் - முஞ்சிப்புல், தருப்பைப் பவித்திரம்; நூல் - பூணூல்; துகள் - திருநீறு; கண்ணீர் - ஆனந்தக் கண்ணீர்; சாமம் - சாமவேதம்.

பா - ம்—*தகைமையென, †வயங்கியதால்; மலர்ந்துளதால், ‡சேயொளிய.

கனைவான முகில்கூந்தற் கதிர்செய்வட மீன்கற்பின்
மனைவாழ்க்கைக் குலமகளிர் வளம்பொலிவ மாடங்கள். கo

வேள்விபுரி சடங்கதனை விளையாட்டுப் பண்ணைதொறும்
பூழியுற வகுத்தமைத்துப் பொன்புனைகிண் கிணிஒலிப்ப
ஆழிமணிச் சிறுதேருர்ந் தவ்விரதப் பொடியாடும்
வாழிவளர் மறைச்சிறுர் நெருங்கியுள மணிமறுகு. கக

விடுசுடர்நீள் மணிமறுகின் வெண்சுதைமா ளிகைமேகம்
தொடுகுடுமி நாசிதொறுந் தொடுத்தகொடி சூழ்கங்குல்
உடுஎனுநாண் மலர்அலர உறுபகலிற் பலநிறத்தால்
நெடுவிசும்பு தளிர்ப்பதென நெருங்கியுள மருங்கெல்லாம். கஉ

மடைஎங்கும் மணிக்குப்பை வயலெங்கும் கயல்வெள்ளம்
புடைஎங்கும் மலர்ப்பிறங்கல் புறமெங்கும் மகப்பொலிவு
கிடைஎங்குப் கலைச்சூழல் கிளர்வெங்கும் †முரல்அளிகள்
இடைஎங்கும முனிவர்குழாம் எயிலெங்கும் பயில்எழிலி. கரு

பிரமபுரம் வேணுபுரம் புகலிபெரு வெங்குருநீர்ப்
பொருவில்திருத் தோணிபுரம் பூந்தராய் சிரபுரமுன்

---

கo. புனைவார் பொற்குழை - அணிந்த நீண்ட பொற்குண்டலங்கள். பூந்தானை - பொலிவுடைய பட்டாடையின் முன்தானையை. வினை வாய்ந்த - தொழில் பொருந்திய. தழல் வேதி - ஓம வேதிகையின். மெழுக்கு உற - மெழுக்கிற் படிய. வெண்சுதை ஒழுக்கும் - வெண் சுண்ணத்தால் கோலமிடும். கனை...கற்பின் - ஒலிக்கும் வான்முகில் போன்ற கூந்தலையும், ஒளியையும், அருந்ததி போன்ற கற்பினையு முடைய.

கக. பெரியோர்கள் வேள்விபுரி சடங்கதனை. விளையாட் டிடங்கள் தோறும். பூழி - புழுதி. ஆழி - உருளை பொருந்திய. அவ் இரதப் பொடி - அந்தச் சிறுதேர்களின் ஓட்டத்தி லெழுந்த புழுதியில். மணிமறுகு - அழகிய வீதிகள்.

கஉ. வெண்சுதை - வெண்சாந்து பூசிய. குடுமி - சிகரத்தின். கங்குல்- இரவு. உடு எனும் - நட்சத்திரமென்னும். நாண் மலர் - அன்றலர்ந்த மலர். விசும்பு - ஆகாயம். மருங்கெல்லாம் - பக்கமெல்லாம்.

கரு. மடை - நீர்மடை. மணிக் குப்பை - இரத்தினக் குப்பை. கயல்மீன் கூட்டம். புடை - பக்கம். மலர்ப்பிறங்கல் - மலர்மலை. புறம் - நகர்ப்புறம். மகம் - யாகம். கிடை - ஓதுமிடம்; பள்ளி. கிளர்வு - உயர்ந்த சோலைகளில். முரல் அளிகள் - ஒலிக்கும் வண்டுகள். இடை - நடுவிடங்கள். எயில் - மதில். பயில் எழிலி - தவழும் மேகம்.

பா - ம்—*கலையொலிகள். †மலர்.

வருபுறவஞ் சண்பைநகர் வளர்காழி கொச்சைவயம்
பரவுதிருக் கழுமலமாம் பன்னிரண்டு திருப்பெயர்த்தால். கச

அப்பதியின் அந்தணர்தங் குடிமுதல்வர் ஆசில்மறை
கைப்படுத்த சீலத்துக் கவுணியர்கோத் திரம்விளங்கச்
செப்புநெறி வழிவந்தார் *சிவபாத விருதயரென்
றிப்புவிவா ழத்தவஞ்செய் இயல்பினார் உளரானார். கரு

மற்றவர்தந் திருமனையார் வாய்ந்தமறை மரபின்வரு
பெற்றியினார் எவ்வுலகும் பெறற்கரிய பெருமையினார்
பொற்புடைய பகவதியார் எனப்போற்றும் பெயருடையார்
கற்புமேம் படுசிறப்பால் கணவனார் கருத்தமைந்தார். கசு

மரபிரண்டுஞ் சைவநெறி வழிவந்த †கேண்மையினார்
அரவணிந்த சடைமுடியார் அடியலால் அறியாது
பரவுதிரு நீற்றன்பு பாலிக்குந் தன்மையராய்
விரவுமறை மனைவாழ்க்கை வியப்பெய்த மேவுநாள். கஎ

மேதினிமேற் சமண்கையர் சாக்கியர்தம் பொய்ம்மிகுத்தே
ஆதிஅரு மறைவழக்கம் அருகிஅரன் அடியார்பால்
பூதிசா தனவிளக்கம் போற்றல்பெறு தொழியக்கண்
டேதமில்சீர்ச் சிவபாத விருதயர்தாம் இடருழந்தார். கஅ

---

கச. நீர்ப் பொருவில் - ஒளியுடையதும் ஒப்பற்றதுமாகிய; நீர் தன்மை யுடையதுமாம். (க) பிரமபுரம் (உ) வேணுபுரம் (ங) புகலி (ச) வெங்குரு (ரு) தோணிபுரம் (சு) பூந்தராய் (எ) சிரபுரம் (அ) புறவம் (கூ) சண்பை (க0) சீர் காழி (கக) கொச்சைவயம் (கஉ) திருக்கழுமலம்; "பிரமனூர் வேணுபுரம் புகலி வெங்குருப் பெருநீர்த் தோணி, புரமன்னு பூந்தராய் பொன்னஞ் சிரபுரம் புறவஞ் சண்பை, அரன்மன்னு தண்காழி கொச்சைவயம் உள்ளிட்டங் காதி யாய, பரமனூர் பன்னிரண்டாய் நின்றதிருக் கழுமலம்நாம் பரவு மூரே"—திரு ஞானசம்பந்தர்.

கரு. ஆசில்மறை கைப்படுத்த - குற்றமற்ற வேதத்தின் வழிநின்ற. சிவ பாத இருதயர் - சிவனுடைய பாதத்தை இதயத்தி லுடையவர்.

கசு. பெற்றியினார் - தன்மையினார். பொற்பு - அழகு.

கஎ. மரபு இரண்டு - தாய்மரபு; தந்தைமரபு. இருவர் மரபுஞ் சைவநெறி என்றபடி. கேண்மையினார் - உரிமையினார். பாலிக்கும் - வளர்க்கும். விரவு - கலந்த; ஒருமைப்பட்ட. மறைமனை, வாழ்க்கை - வேதநெறிப்பட்ட இல் வாழ்க்கை.

கஅ. கையர் - கீழ்மக்கள். சாக்கியர் - பௌத்தர். பூதி - விபூதி. ஏதமில் - குற்றமில்லாத. இடருழந்தார் - துன்பப்பட்டார்.

பா - ம்—*சிவபாத விரதியர். †கேண்மையராய்.

மனையறத்தில் இன்பமுறு மகப்பெறுவான் விரும்புவார்
அனையநிலை தலைநின்றே ஆடியசே வடிக்கமல
நினைவுறமுன் பரசமயம் நிராகரித்து நீறாக்கும்
புனைமணிப்பூண் காதலனைப் *பெறப்போற்றுந் தவம்புரிந்தார். ௧௯

பெருத்தெழும்அன் பாற்பெரிய நாச்சியா ருடன்புகலித்
திருத்தோணி வீற்றிருந்தார் சேவடிக்கீழ் வழிபட்டுக்
கருத்துமுடிந் திடப்பரவும் காதலியார் †மணிவயிற்றில்
உருத்தெரிய வரும்பெரும்பே றுலகுய்ய உளதாக. ௨௦

ஆளுடையா ளுடன்தோணி அமர்ந்தபிரான் அருள்போற்றி
மூளுமகிழ்ச் சியில்தங்கள் முதல்மறைநூல் முறைச்சடங்கு
நாளுடைய ஈரைந்து திங்களினும் நலஞ்சிறப்பக்
கேளிருடன் செயல்புரிந்து ‡பேரின்பங் கிளர்வுறுநாள். ௨௧

அருக்கன்முதற் கோள்அனைத்தும் அழகியஉச் சங்களிலே
பெருக்கவலி யுடன்நிற்கப் பேணியநல் லோரைஎழத்
திருக்கிளரும் ஆதிரைநாள் திசைவிளங்கப் பரசமயத்
தருக்கொழியச் சைவமுதல் வைதிகமும் தழைத்தோங்க. ௨௨

தொண்டர்மனம் களிசிறப்பத் தூயதிரு நீற்றுநெறி
எண்டிசையும் தனிநடப்ப ஏழுலகும் §குளிர்தூங்க

---

௧௯. ஆடிய சேவடிக் கமலம் - நடராசப்பெருமான் திருவடித் தாமரையை நீறாக்கும் - பொடிபடுத்தும்; அழிக்கும். சீலத்திற் சிறந்த சான்றோர் தாங் கொண்ட கருத்தை முடிக்கத் தவஞ்செய்வது இயல்பு. தவத்தின் பயனாகப் பிள்ளை பெறுவது சிறப்பு. அப்பிள்ளையினிடம் விலங்கியல்பின்றித் தெய்விக இயல்புகள் மலியு மென்க.

௨௦. பெரிய நாச்சியார் - சீர்காழியிலுள்ள உமையம்மையாரின் பெயர். புகலித் திருத்தோணி வீற்றிருந்தார் - சீர்காழியிலுள்ள தோணியில் எழுந்தருளி யுள்ள சிவபெருமானது. இத்தோணி சீர்காழிக் கோயிலுள் ளிருப்பது.

௨௧. ஆளுடையாளுடன் - பெரிய நாச்சியாருடன். ஈரைந்து திங்களினும் - பத்து மாதமும். கேளிருடன் - உறவினருடன். கிளர்வுறும் - முறுகி எழும்.

௨௨. அருக்கன்முதல் கோள் அனைத்தும் - சூரியன்முதலிய கிரகங்களெல் லாம். நல்லோரை - நல்ல முகூர்த்தத்தில். (ஹோரை-ஓரா-கிரேக்கமொழி). திருகிள ரும் - மங்கலமுண்டாகி விளங்கும். திருவாதிரை நாள் சிவனுக்குரிய சிறப்பு நாள். தருக்கு - செருக்கு. சைவமுதல் வைதிகம் - முதற்பாட்டுக் குறிப்புப் பார்க்க.

பா - ம்—*பெற்றெடுக்கும். †திரு. ‡பெரிதின்பம். §களி.

அண்டர்குலம் அதிசயிப்ப அந்தணர்ஆ குதிபெருக
வண்தமிழ்செய் தவம்நிரம்ப மாதவத்தோர் செயல்வாய்ப்ப. உ௩

திசையனைத்தின் பெருமையெலாந் தென்திசையே வென்றேற
மிசையுலகும் பிறவுலகும் மேதினியே தனிவெல்ல
அசைவில்செழுந் தமிழ்வழக்கே அயல்*வழக்கின் துறைவெல்ல
இசைமுழுதும் மெய்யறிவும் இடங்கொள்ளும் நிலைபெருக. உச

தாளுடைய படைப்பென்னுந் தொழிற்றன்மை தலைமைபெற
நாளுடைய நிகழ்காலம் எதிர்கால நவைநீங்க
வாளுடைய மணிவீதி வளர்காழிப் பதிவாழ
ஆளுடைய திருத்தோணி அமர்ந்தபிரான் அருள்பெருக. உரு

அவம்பெருக்கும் புல்லறிவின் அமண்முதலாம் பரசமயப்
பவம்பெருக்கும் புரைநெறிகள் பாழ்படநல் லூழிதொறும்
தவம்பெருக்குஞ் சண்பையிலே தாவில்சரா சரங்களெலாம்
சிவம்பெருக்கும் பிள்ளையார் திருஅவதா ரஞ்செய்தார். உசு

வேறு

அப்பொழுது பொற்புறு திருக்கழு மலத்தோர்
எப்பெயரி னோரும்அயல் எய்தும்இடை யின்றி

உ௩. தனிநடப்ப - ஒப்பின்றி இயங்க. குளிர்தூங்க - அன்பு நிலேக்க. ஆகுதி - வேள்வி. வாய்ப்ப - சிறக்க.

உச. மிசை உலகும்-விண்ணுலகமும். இடங்கொள்ளும்-எங்கும் நிறையும்.

உரு. தாள் - முயற்சி. உலகம் நல்வழியில் நடந்தால் படைப்புத் தொழில் நலமுறு மாதலால், "......தொழிற்றன்மை தலைமைபெற" என்றார். நவை - குற்றம், குறை. வாள் - ஒளி. "காழி வாழவந் தருளிய........" கூஎ௩.

உசு. அவம் - வீண்; பயனின்மை. பவம் - பாவம். புரை நெறிகள் - குற்றமுள்ளவழிகள். ஊழிக்காலந்தோறும் (தானழியாமல்) தவம்பெருக்கும்.சண்பையிலே-சீர்காழியிலே.(சீர்காழி ஊழிக்காலத்தும் அழியாமல் மிதத்தலால் அதற்குத் தோணிபுரம் என்றொரு பெயருண்டு). தாவில் - கெடுதலில்லாத. சரம் - இயங்குவது; அசரம் - இயங்காதது. திருஞான சம்பந்தர் ஒரு கூட்டத்தார்க்கோ ஒரு நாட்டார்க்கோ குருவாயிராது உலகுக்கே குருவா யிருத்தலான், "சராசரங்களெல்லாஞ் சிவம்பெருக்கும் பிள்ளையார்" என்றார்; முதற்பாட்டுக் குறிப்புப் பார்க்க. பிள்ளையார் - சிவனருளால் பிள்ளைமைப்பே றெய்தியவர்.

உஎ. திருக்கழுமலத்தோர் - சீர்காழி வாசிகள். எப்பெயரினோரும் - எல்லோரும்; சாதி மதம் முதலிய வேற்றுமையின்றி எல்லோரும் என்றபடி. அயல்

பா - ம்—*வழக்குர்.

மெய்ப்படு மயிர்ப்புளக மேவிஅறி யாமே
ஒப்பில்களி கூர்வதொர் உவப்புற உரைப்பார். உஎ

"சிவனருள் எனப்பெருகு சித்தமகிழ் தன்மை
இவணிது நமக்குவர எய்தியதென்" என்பார்
"கவுணியர் குலத்திலொரு காதலன் உதித்தான்
அவன்வரு நிமித்தம்இது" என்றதி சயித்தார். உஅ

பூமுகை அவிழ்ந்துமணம் மேவுபொழில் எங்கும்
தேமருவு தாதொடு துதைந்ததிசை யெல்லாம்
தூமருவு சோதிவிரி யத்துகள் அடக்கி
மாமலய மாருதமும் வந்தசையும் அன்றே. உகூ

மேலைஇமை யோர்களும் விருப்பொடு கரப்பில்
சோலைமலர் போலமலர் மாமழை சொரிந்தே
ஞாலமிசை வந்துவளர் காழிநகர் மேவும்
சீலமறை யோர்களுடன் ஓமவினை செய்தார். ௩0

பூதகண நாதர்புவி வாழஅருள் செய்த
நாதன்அரு ளின்பெருமை *கண்டுநலம் உய்ப்பார்
ஓதுமறை யோர்பிறி துரைத்திடினும் ஓவா
வேதமொழி யால்ஒலி விளங்கிஎழும் எங்கும். ௩க

பயன்தருவ பலறருவும் வல்லிகளும் மல்கித்
தயங்குபுன லுங்†தெளிவ தண்மையுடன் நண்ணும்

---

எய்தும் இடையின்றி - அயலிலே செல்லுதற்கு இடமில்லாமல். எல்லாரும் பிள்ளையாரையே குருவாகக் கொண்டனர் என்பது குறிப்பு. மெய்ப்படும் - உடலில் உண்டாகும்.

உஅ. சிவன் அருளைப்போல. இவண் - இங்கு. "கவுணியன் ஞானசம்பந்தன்" என்றும், "கழுமலவூரிற் கவுணியன்" என்றும் ஞான சம்பந்தர் தம்மைக் கவுணிய கோத்திரத்தார் என்பதை விளக்கியருளிய மொழிகள் பல.

உகூ. முகை - அரும்பு. பொழில் - சோலை. தேன்மருவு தாதொடு - தேன் பொருந்திய மகரந்தத்தொடு. துதைந்த - நெருங்கின. தூமருவு - சுத்தம் விளங்கும். பூந்துகளை. மாமலய மாருதமும் - இளந் தென்றலும்.

௩0. கரப்பில் - மறைப்பில்லாமல்; ஒழிவில்லாமல். விண்ணவர்களும் மறையோர்களுடன் யாகஞ் செய்தார்.

௩க. பூதகண நாதர்கள் நலஞ் செய்வார்கள். ஓவா - (அவ்வுரை) நீங்காத.

பா - ம்—*கொண்டுநல முற்றார். †தெளிவு.

வயங்கொளி விசும்புமலி னங்கழியும் மாறு
நயம்புரிவ புள்ளொலிகள் நல்லதிசை எல்லாம். ௩௨

அங்கண்விழ விற்பெருகு சண்பைஅகல் மூதூர்ச்
சங்கபட கங்கருவி தாரைமுத லான
எங்கணும் இயற்றுபவ ரின்றியும் இயம்பு
மங்கல முழக்கொலி மலிந்தமறு கெல்லாம். ௩௩

இரும்புவனம் இத்தகைமை எய்தஅவர் தம்மைத்
தருங்குல மறைத்தலைவர் தம்பவன முன்றில்
பெருங்களி வியப்பொடு பிரான்அருளி னாலே
அருந்திரு மகப்பெற அணைந்தஅணி செய்வார். ௩௪

காதல்புரி சிந்தைமகி ழக்களி சிறப்பார்
மீதணியு நெய்யணி விழாவொடு திளைப்பார்
சூதநிகழ் மங்கல வினைத்துழனி பொங்கச்
சாதக முறைப்பல சடங்குவினை செய்வார். ௩௫

மாமறை விழுக்குல மடந்தையர்கள் தம்மில்
தாமுறு மகிழ்ச்சியொடு சாயல்மயில் என்னத்
தூமணி விளக்கொடு சுடர்க்குழைகள் மின்னக்
காமர்திரு மாளிகை கவின்பொலிவு செய்வார். ௩௬

---

௩௨. பல்தருவும் - பல மரங்களும். வல்லிகளும் - கொடிகளும். மல்கி - நிறைந்து. மல்கிப் பயன்தருவ. தண்மையுடன் தயங்கு புனலும் (ஒளிரும் நீரும்) தெளிவ. வயங்கு - விளங்கும். விசும்பு (ஆகாயம்) களங்கமற்று விளங்கும் என்றபடி. புள் - பறவைகளின். மாறுநயம் (நலம்) புரிவ.

௩௩. அங்கண் விழவில் - அழகிய இடங்களில் விழாவால். சங்கம் - மங்கலச் சங்கு. படகம் - தம்பட்டம். கருவி - யாழ். இயற்றுபவர் - ஊதுவோர் கொட்டுவோர் வாசிப்போர். இயம்பும் - தாமே முழங்கும். மறுகு - தெரு.

௩௪. இரும் - பெரிய. அவர் தம்மை - பிள்ளையாரை. மறைத் தலைவர் - சிவபாத விருதயர். தம்பவனமுன்றில் - தமது வீட்டு முற்றத்தில். அணைந்த - இயைந்த ; பொருந்திய. அணி - அலங்காரம்.

௩௫. மீதணியும்......திளைப்பார் - மேலே பூசும் நெய்யணியைத் திருவிழாவுடன் செய்து மகிழ்ச்சியில் தோய்வார். சூதம் - பிறப்பு (நழுவுதல்) ; பிள்ளையார் பிறந்ததை யொட்டி. துழனி - ஒலி.

௩௬. விழுக்குலம் - சீரிய குலம். சாயல் - ஐம்பொறியால் நுகரும் மென்மை. குழை - குண்டலங்கள். காமர் - கண்டார்க்கு விருப்பமூட்டும். கவின் - அழகு. இயற்கையழகொடு செயற்கை அழகு பொலியச் செய்வார்.

பா - ம்—*முழங்கொலி.

சுண்ணமொடு தண்மலர் துதைந்ததுகள் வீசி
உள்நிறை விருப்பினுடன் ஓகையுரை செய்வார்
வெண்முளைய பாலிகைகள் வேதிதொறும் வைப்பார்
புண்ணிய நறும்புனல்கொள் பொற்குடம் நிரைப்பார். ௩௭

செம்பொன்முத லானபல தானவினை செய்வார்
நம்பர்அடி யார்அமுது செய்யநலம் உய்ப்பார்
வம்பலர் நறுந்தொடையல் வண்டொடு தொடுப்பார்
நிம்பமுத லானகடி நீடுவினை செய்வார். ௩௮

ஐயவி யுடன்பல அமைத்தபுகை யாலும்
நெய்யகில் நறுங்குறை நிறைத்தபுகை யாலும்
வெய்யதழல் ஆகுதி விழுப்புகையி னாலும்
தெய்வமணம் நாறவரு செய்தொழில் விளைப்பார். ௩௯

ஆயபல செய்தொழில்கள் அன்றுமுதல் விண்ணோர்
நாயகன் அருட்பெருமை கூறுநலம் எய்தத்
தூயதிரு மாமறை தொடர்ந்தநடை நூலின்
மேயவிதி ஐயிரு தினத்தினும் விளைத்தார். ௪0

---

௩௭. சுண்ணமொடு - வாசனைப் பொடியுடன். துதைந்த - கலந்த. ஓகை - உவகை. வேதி - திண்ணை. புண்ணியத் தீர்த்தங்களைக் கொண்ட. நிரைப்பார் - வரிசையாக வைப்பார்.

௩௮. வம்பலர்.....தொடுப்பார் - (களிப்பால்) மணங்கமழும் நல்ல மாலைகளை வண்டுகளோடு கட்டுவார். நிம்ப...வினை - வேப்பிலை செருகல் முதலிய காப்புச் செயல்களை.

௩௯. ஐயவியுடன் - வெண் சிறு கடுகுடன். தீமையை விலக்கிக் காக்கும் தன்மை ஐயவிக்குண்டு. இதனால் இது கடிப்பகை என்றும் வழங்கப்படுகிறது. வேப்பிலை ஐயவி இவைகள் காப்புக்குரிய பொருள்கள். "குறுநடைப் புதல்வர்க்குக் - காவற் பெண்டிர் கடிப்பகை எறிந்து - தூபங் காட்டித் தூங்கு துயில்வதியவும்" ; "அரவாய்க் கடிப்பகை ஐயவிக் கடிப்பகை"—மணிமேகலை : ௭. துயில். ௫௭-௫௯ ; ௭௩. (கடி - பேய். அரவாய் - வேப்பிலை). "ஐயவி புகைப்பவும்"; "வேம்பு மனைச் செரீஇ......ஐயவி சிதறி"—புறநானூறு : ௬௮ ; உ௮௧. தீமைகள் தாக்காதவாறு குழந்தைகளைக் காப்பதற்கு நெய்யணிந்து ஐயவி அப்புதலும் உண்டு. "ஐயவி அப்பிய நெய்யணி முச்சி"—மணிமேகலை : ௩. மலர் வனம். ௯௩௪. அகில் நறுங் குறை - அகில் துண்டுகளால்.

௪0. விண்ணோர் நாயகன் - சிவபெருமானின். நடை நூலின் - ஆகமத்தின்.

நாமகர ணத்தழகு நாள்பெற நிறுத்திச்
சேமவுத யப்பரிதி யில்திகழ் பிரானைத்
தாமரை மிசைத்தனி முதற்குழவி என்னத்
தூமணி நிரைத்தணிசெய் தொட்டில்அமர் வித்தார். சக

பெருமலை பயந்தகொடி பேணுமுலை யின்பால்
அருமறை குழைத்தமுது செய்தருளு வாரைத்
தருமறைவி யார்பரமர் தாள்பரவும் அன்பே
திருமுலை சுரந்தமுது செய்தருளு வித்தார். சஉ

ஆறுலவு செய்யசடை ஐயர்அரு ளாலே
பேறுலகி னுக்கென வரும்பெரிய வர்க்கு
வேறுபல காப்புமிகை என்றவை விரும்பார்
நீறுதிரு நெற்றியில் நிறுத்திநிறை வித்தார். சங

வேறு

தாயர்திரு மடித்தலத்துந் †தயங்குமணித் தவிசினிலும்
தூயசுடர்த் தொட்டிலினுந் தூங்குமலர்ச் சயனத்துஞ்

---

சக. சேம......பிரானை - நலஞ்செய்யும் இளஞ் சூரியனைப்போல விளங்கும் பெருமானை (பிள்ளையாரை); இளஞ் சூரியனது நிறம் செம்மை; அதன் கண் உயிர்ப்பு அதிகம். முதற்குழவி - பிரமன் என்பர் **ஆறுமுகத்தம்பிரானர்**; குமரக் கடவுள் என்பர் **பழைய குறிப்புரைக்காரர்**. குழந்தைக்குத் தாய் தந்தையரிட்ட பெயர் இன்னதெனத் தெரியவில்லை.

சஉ. பெருமலை பயந்த கொடி - உமையம்மையார். அருமறை குழைத்து - அரிய மறைப்பொருளாய சிவஞானத்தைக் குழைத்து ஊட்ட. தருமறைவியார்- ஈன்ற பார்ப்பனியார்; பகவதியார். உமையம்மையாரின் ஞானப் பாலுண்ணப் பிறந்தவர், பகவதியாரின் மாயைப்பாலுண்ணல் கூடாதாதலின், அப்பாலை "பரமர் தாள்பரவும் அன்பே திருமுலை சுரந்து" என்றார். பகவதியார் சிவபெருமானை இடையறாது தியானிப்பவராதலானும், அத்தியானத்தின் பயனாகப் பிறந்த குழந்தை இஃதாதலானும் அம்மையார் திருமுலைப்பால் "பரமர் தாள் பரவும் அன்பு" எனப் பட்டது. திருஞான சம்பந்தர் உண்டது பகவதியார் பாலையன்று; அஃது ஆண்டவன் அன்புப்பால் என்க.

சங. மிகை - குற்றம். அடியார்களை நாள்கோள் முதலியன ஒன்றுஞ் செய்யா என்று திருஞான சம்பந்தர் அருளியுள்ளது ஈண்டுக் கருதற்பாலது. **கோளறு பதிகம்** பார்க்க. "மீன்சனி புக்கு ஊன் சலிக்குங் காலந்தானும் - கலங்கலிலா மனப்பெருவண் கையுடைய மெய்யர்வாழ் கழுமலமே"—**திருஞான சம்பந்தர். திருநீற்றுப் பதிகம்** பார்க்க.

**பா - ம்**—*தருமிறைவி யார். †தக்க.

சேயபொருள் திருமறையுந் தீந்தமிழுஞ் சிறக்கவரு
நாயகனைத் தாலாட்டு நலம்பலபா ராட்டினார். சச

வருமுறைமைப் பருவத்தில் வளர்புகலிப் பிள்ளையார்
அருமறைகள் தலைஎடுப்ப ஆண்டதிரு முடிஎடுத்துப்
பெருமழுவர் தொண்டல்லால் பிறிதிசையோம் என்பார்போல்
திருமுகமண் டலமசையச் செங்கீரை ஆடினார். சரு

"நாம்அறியோம் பரசமயம் *உலகிர்!எதிர் நாடாது
போம்அகல" என்றங்கை †தட்டுவதும் புனிதன்பால்
காமருதா ளம்பெறுதற் கொத்துவதுங் காட்டுவபோல்
தாமரைச்செங் கைகளினால் சப்பாணி கொட்டினார். சசு

விதிதவறு படும்வேற்றுச் சமயங்க ளிடைவிழுந்து
கதிதவழ, இருவிசும்பு நிறைந்தகடி வார்கங்கை
நதிதவழுஞ் சடைமுடியார் ஞானம்அளித் திடவுரியார்
மதிதவழ்மா ளிகைமுன்றின் மருங்குதவழ்ந் தருளினார். சஎ

---

சச. தயங்கு - ஒளிவிடும். தவிசினிலும் - பீடத்திலும். சேய பொருள்- செப்பமான பொருளையுடைய.

சரு. முறை முறையே வரும் பருவத்தில். உயிர்களை ஆண்ட. மழுவர் - மழுவையுடைய சிவபெருமான். செங்கீரை- இஃதொருபருவம்; செவ்விய மழலைச் சொற்களைப் பேசும் பருவம்; இருகையும் முழந்தாள்களும் ஊன்றத் தலைநிமிர்ந் தாடல்.

சசு. "உலகீர்! பர சமயங்களை நாம் அறியோம்; நீங்கள் எதிர் நாடாது அகலப் போங்கள்" என்று. ஆண்டவன் ஒருவன்; அவனை அடையும் நெறியும் ஒன்று. பல தெய்வமும் பல நெறியும் மக்கள் அறியாமையால் கற்பித்துக் கொண்டவை. திருவருள் ஞானம் பெற்றவர்கட்கு ஒரு தெய்வமும் ஒரு நெறியுமே புலனாகும். பல தெய்வமும் பல நெறியும் அவர்கட்கு விகாரமாகத் தோன்றும்; அவைகளை அவர்கள் வெறுத்துங் கூறுவார்கள். பிள்ளையார் பலப்பட்ட பரசமயங்களை வெறுத்துக் கூறப்போவது ஈண்டு உணர்த்தப்படுகிறது. அங்கை - அழகிய கை. புனிதன்பால் - சிவபெருமானிடம். காமரு - அழகிய. ஒத்துவது - ஒத்தறுத்தல்; தாளம் போடுதல்; அந்தரக்கொட்டு.

சஎ. விதி - இயற்கை விதி. கதிதவழ - அடையுங் கதி குலையும்படி. இரு விசும்பு - பெரிய ஆகாயத்தில். கடி - வாசனை; புதியவுமாம். வார் - நெடிய. உரியார் - பிள்ளையார். சந்திரன் தவழும் மாளிகை முற்றத்தின் பக்கத்தே.

பா - ம்—*உலகில். †கொட்டுவதும்.

சூழவரும் பெருஞ்சுற்றத் தோகையரும் தாதியரும்
"காழியர்தஞ் சீராட்டே கவுணியர்கற் பகமே"†என்
றேழிசையும் பலகலையும் ‡எவ்வுலகுந் தனித்தனியே
வாழவரும் அவர்தம்மை "வருகவரு" கெனஅழைப்ப. ௪௮

திருநகையால் அழைத்தவர்தஞ் செழுமுகங்கள் மலர்வித்தும்
வருமகிழ்வு தலைசிறப்ப மற்றவர்மேற் செலவுகைத்தும்
உருகிமனங் கரைந்தலைய உடன்அணைந்து தழுவியும்முன்
பெருகியஇன் புறஅளித்தார் பெரும்புகலிப் பிள்ளையார். ௪௯

வளர்பருவ முறையாண்டு வருவதன்முன் மலர்வரிவண்
டுளர்கருமென் சுருட்குஞ்சி யுடன்அலையச் செந்நின்று
கிளர்§ஒலிகிங் கிணிஎடுப்பக் கீழ்மைநெறிச் சமயங்கள்
தளர்நடையிட் டறத்தாமுந் தளர்நடையிட் டருளினார். ௫௦

தாதியர்தங் கைப்பற்றித் தளர்நடையின் அசைவொழிந்து
சோதியணி மணிச்சதங்கை தொடுத்தவடம் புடைசூழ்ந்த
பாதமலர் நிலம்பொருந்தப் பருவமுறை ஆண்டொன்றின்
மீதணைய நடந்தருளி விளையாடத் தொடங்கினார். ௫௧

சிறுமணித்தேர் தொடர்ந்துருட்டிச் ¶செழுமணற்சிற் றில்கள்இழை
நறுநுதற்பே தையர்மருங்கு நடந்தோடி ||அடர்ந்தழித்தும்
குறுவியர்ப்புத் துளியரும்பக் கொழும்பொடியா டியகோல
மறுகிடைப்பே ரொளிபரப்ப @வந்துவளர்ந் தருளினார். ௫௨

---

௪௮. தோகையரும் - பெண்மணிகளும்.

௪௯. பிள்ளையார், தம்மை அழைத்தவர்களுடைய செழுமுகங்களைத் தமது திருநகையால் மலர்வித்தும். தலை சிறப்ப - அதிகரிக்க. அவர்மீது படுமாறு உதைத்தும்.

௫௦. ஓராண்டாவதற்குமுன். மலரிலே வரிவண்டுகள் குடையும். குஞ்சி - தலை மயிர்; குடுமி. செவ்வையாக நின்று. கிளர் - விளங்கும். கிங்கிணி - கிண்கிணி; சதங்கை. தளர்நடை யிட்டு அற - தள்ளாடி ஒழிய.

௫௧. புடை - பக்கத்தே.

௫௨. செழு......மருங்கு - செழிய மணலால் சிறுவீடு கட்டும் நறு நெற்றியையுடைய பெண் மக்கள் பக்கம். செழுமணி பாடமாயின், செம்மணியால் அல்லது அழகிய மணியால் என்று கொள்க. அடர்ந்து அழித்தும் - நெருங்கி அச்சிறு வீடுகளை அழித்தும்; அடர்ந்து - மாறுபட்டுமாம். வியர்ப்பு -

பா - ம்—*சுற்றத்தில். †என்றேழுலகும். ‡எவ்வுயிரும். §ஒளி. ¶செழுமணிச்சிற் றில்க ளிழைக்கு ||அடர்ந்தழித்து. @வந்துவளர்ந்தருளுநாள்.

மங்கையோ டுடனாகி வளர்தோணி வீற்றிருந்த
திங்கள்சேர் சடையார்தந் திருவருட்குச் செய்தவத்தின்
அங்குரம்போல் வளர்ந்தருளி அருமறையோ டுலகுய்ய
எங்கள்பிரான் ஈராண்டின் மேலோராண் டெய்துதலும். ருஙு

நாவாண்ட பலகலையும் நாமகளும் நலஞ்சிறப்பப்
பூவாண்ட திருமகளும் புண்ணியமும் பொலிவெய்தச்
சேவாண்ட கொடியவர்தஞ் சிரபுரத்துச் சிறுவருக்கு
மூவாண்டில் உலகுய்ய நிகழ்ந்ததனை மொழிகின்றேன். ருச

பண்டுதிரு வடிமறவாப் பான்மையோர் தமைப்பரமர்
மண்டுதவ மறைக்குலத்தோர் வழிபாட்டின் அளித்தருளத்
தொண்டின்நிலை தரவருவார் தொடர்ந்தபிரி வுணர்வொரு*கால்
கொண்டெழலும் வெருக்கொண்டாற் போல்அழுவார் குறிப்பயலாய்.

---

வியர்வை. பொடி - திருநீறு; புழுதி என்றலு மொன்று. மறுகிடை - தெரு விலே. ருங. அங்குரம்போல - முளையைப்போல.

ருச. நாமகளும் - சரஸ்வதியும். பூ - தாமரைப்பூ; சே......தம் - இடபக் கொடியாராகிய சிவபிரானுடைய. சிரபுரத்துச் சிறுவர்க்கு - சீர்காழிப் பிள்ளை யார்க்கு.

ருரு. பண்டு......தமை - முன்னே (சிவபெருமான்) திருவடியை மறவாத தன்மையுடைய பிள்ளையாரை. பரமர் - சிவபெருமான். மண்டு......அளித் தருள - நிரம்பிய தவத்தையுடைய சிவபாத விருதயரது வழி பாட்டால் (அவ ருக்குப் புதல்வராகக்) கொடுத்தருள. "திருந்தடி - மறக்குமா றிலாத என்னை மையல்செய்திம் மண்ணின்மேல் - பிறக்குமாறு காட்டினாய்"—**திருஞான சம்பந்தர்:** திருத்துருத்தி. ரு. தொண்டின்........உணர்வு - தொண்டின் நிலைமையை விளக்கப் போந்தவராகிய அப்பிள்ளையார் (பண்டைத்) தொடர் புடைய பிரிவாலாகிய உணர்வு. ஒருகால் - ஒவ்வொருகால். வெருக்கொண்டாற் போல - அச்சங்கொண்டா லென்ன. குறிப்புக்கு அயலாய். சிவபெருமான் பிள்ளையாரைச் சிவபாத விருதயர் தவத்துக் கிரங்கி அளித்தாலும், அவ்வளிப்பு உலகில் திருத்தொண்டின் நிலை விளக்கத்துக்குப் பயன்படுவதாயிற் றென்க. பிள்ளையார் பிறவியால் சிவபெருமானைப் பிரிந்தாலும், அப்பிரிவால் தொடர்பு அறவில்லை என்பார் "தொடர்ந்த பிரிவு" என்றார். பிரியாத் தொடர்பு அவ ருக்குப் பண்டையுணர்வை எழுப்பிற்றென்க. அவ்வுணர் வெழுதலும் "இஃ தென்ன! நாம் எவ்விடத்தினேம்; எவ்விடத்து வந்துளேம்" என்று வெருக் கொண்டாற்போலக் குறிப்பு வேறாக அழுதனர் என்றபடி. "வெருவுதல் என் பது அச்சம்போல நீடு நில்லாது கதுமெனத் தோன்றி மாய்வதொரு குறிப்பு; அதனைத் துணுக்கென்றலுமாம்"—**இளம்பூரணம்.**

**பா - ம்**—*பால்.

மேதகைய இந்நாளில் வேறொருநாள் வேதவிதி
நீதிமுறைச் சடங்குநெறி முடிப்பதற்கு நீராடத்
தாதையார் போம்பொழுது தம்பெருமான் அருள்கூடச்
சோதிமணி மனைமுன்றில் தொடர்ந்தழுது பின்சென்றார். ருசு

பின்சென்ற பிள்ளையார் தமைநோக்கிப் பெருந்தவத்தோர்
முன்செல்கை தனையொழிந்து முனிவார்போல் விலக்குதலும்
மின்செய்பொலங் கிங்கிணிக்கால் கொட்டிஅவர் மீளாமை
"உன்செய்கை இதுவாகில் போ"தென் றங் குடன்சென்றார். ருஎ

கடையுகத்தில் தனிவெள்ளம் பலவிரிக்குங் கருப்பம்போன்
றிடையறாப் பெருந்தீர்த்தம் எவற்றினுக்கும் பிறப்பிடமாய்
விடையுயர்த்தார் திருத்தோணிப் பற்றுவிடா மேன்மையதாம்
தடமதனில் துறையணைந்தார் தருமத்தின் தலைநின்றார். ருஅ

பிள்ளையார் தமைக்கரையில் வைத்துத்தாம் பிரிவஞ்சித்
தெள்ளுநீர்ப் புகமாட்டார் தேவியொடுந் திருத்தோணி
வள்ளலார் இருந்தாரை எதிர்வணங்கி மணிவாவி
உள்ளிழிந்து புனல்புக்கார் உலகுய்ய மகப்பெற்றார். ருகூ

நீராடித் தருப்பித்து நியமங்கள் பலசெய்வார்
*சீராடுந் திருமகனார் காண்பதன்முன் செய்ததற்பின்

---

ருசு. மேதகைய - (மேலே கூறிய) உணர்வு மேம்பட்ட. தம்பெருமான் - சிவபெருமான்.

ருஎ. முனிவார்போல் - கோபிப்பார்போல. பொலம் - பொன்னாற் செய்த. "பொன்னென் கிளவி ஈறுகெட முறையின் - முன்னர்த் தோன்றும் லகார மகாரம் - செய்யுள் மருங்கில் தொடரியலான"—தோல்காப்பியம் : புள்ளி மயங்கியல் - கக. கிண்கிணி அணிந்த காலே. அவர் - பிள்ளையார்.

ருஅ. உக முடிவில். எல்லா வெள்ளங்களையும் ஈனும் கருவைப் போல. தீர்த்த மெல்லாவற்றிற்கும். விடை உயர்த்தார் - இடபக் கொடியராகிய சிவ பெருமானது. தடாகத்தின் கரையை அடைந்தார். தருமத்தின் தலை நின்றார்- சிவபாத விருதயர்.

ருகூ. தெளிந்த நீர். தேவியோடும்......வணங்கி - பெரிய நாயகியாரோ டும் திருத்தோணியில் எழுந்தருளியுள்ள சிவபெருமானை (குழந்தையைப் பார்த்துக்கொள்ளும் என்று) எதிர் நோக்கி வணங்கி. மணி......புக்கார் - அழ கிய குளத்தில் இறங்கி நீரில் மூழ்கினார். தோணியப்பரைக் காவல்வைத்து என் பது குறிப்பு. இது பின்னிகழ்ச்சியால் இனிது விளங்கும்.

கூ௦. தருப்பித்து - தருப்பணஞ் செய்து. பல செய்வாராய். ஆராத - அடங் காத. அகமருஷண ஸ்நானஞ்செய்ய. அகமருஷணம் - பாவத்தைக் கெடுத்தல்.

பா - ம்—*சீராருந்.

ஆராத விருப்பினால் அகமருடம் படிய*நீர்
போராது மூழ்கினார் பெருந்†காதல் பெற்றாராய். ௬௦

மறைமுனிவர் மூழ்குதலும் ‡மற்றவரை முற்காணு
திறைதரியா ரெனுநிலைமை தலைக்கீடா ஈசர்கழல்
முறைபுரிந்த முன்உணர்வு முளஅழத் தொடங்கினார்
நிறைபுனல்வா விக்கரையில் நின்றருளும் பிள்ளையார். ௬௧

கண்மலர்கள் நீர்ததும்பக் கைம்மலர்க ளாற்பிசைந்து
வண்ணமலர்ச் செங்கனிவாய் மணிஅதரம் புடைதுடிப்ப
எண்ணில்மறை ஒலிபெருக எவ்வுயிருங் குதுகலிப்பப்
புண்ணியக்கன் றனையவர்தாம் பொருமிஅழு தருளினார். ௬௨

மெய்ம்மேற்கண் துளிபனிப்ப வேறெங்கும் பார்த்தழுவார்
தம்மேலைச் சார்புணர்ந்தோ சாரும்பிள் ளைமைதானோ
செம்மேனி வெண்ணீற்றார் திருத்தோணிச் சிகரம்பார்த்
"தம்மேஅப் பா"என்றென் றழைத்தருளி அழுதருள. ௬௩

அந்நிலையில் திருத்தோணி வீற்றிருந்தார் அருள்நோக்கால்
முன்நிலைமைத் திருத்தொண்டு முன்னியவர்க் கருள்புரிவான்
பொன்மலைவல் லியுந்தாமும் பொருவிடைமேல் எழுந்தருளிச்
சென்னிஇளம் பிறைதிகழச் செழும்பொய்கை மருங்கணைந்தார். ௬௪

திருமறைநூல் வேதியர்க்கும் தேவியர்க்கும் தாங்கொடுத்த
பெருகுவரம் நினைந்தோதான் தம்பெருமைக் கழல்பேணும்

---

௬௧. இறை - கணமும். "தந்தையைக் காணாத பிள்ளை இறையுந் தரியாது என்னும் நிலைமை" காரணமாக.

௬௨. அழகு மலர்தலையுடைய கொவ்வைக் கனிபோன்ற வாயின். மணி அதரம் - பவளம்போன்ற உதடு. புடைபெயர்ந்து துடிப்ப.

௬௩. திருமேனியில் கண்ணீர்த்துளி சிந்த. மேலைச் சார்பு - பழைய தொடர்பு. குழந்தைகள் "அம்மே அப்பா" என்றழைத்து அழும் உலகியலும் இங்கே குறிக்கப்பட்டது.

௬௪. முன்னி - கருதி. உமையம்மையாருந் தாமும் (சிவபெருமானும்). பொரு விடை - போர் ஏற்றின். "திருத்தோணி வீற்றிருந்தார்......(பிள்ளையாரின்) முன்னிலைமைத் திருத்தொண்டை முன்னி, அவர்க்கு (பிள்ளையாருக்கு) அருள் புரிவான் என்று கொள்ளுதல் ஒன்று. தமது "முன்னிலைமைத் திருத்தொண்டை முன்னியவர்க்கு (முன்னிய பிள்ளையார்க்கு)" என்று கோடல் மற்றொன்று.

பா - ம்—*அடி. †காவல். ‡மற்றவர்தம் மைக்காணு.

*ஒருநெறியில் வருஞானங் கொடுப்பதனுக் குடனிருந்த
அருமறையா ளுடையவளை †அளித்தருள அருள்செய்வார். சுரு

அழுகின்ற பிள்ளையார் தமைநோக்கி அருட்கருணை
எழுகின்ற திருவுள்ளத் திறையவர்தாம் எவ்வுலகும்
தொழுகின்ற மலைக்கோடியைப் பார்த்தருளித் "துணைமுலைகள்
பொழிகின்ற பால்அடிசில் பொன்வள்ளத் தூட்"டென்ன. சுசு

ஆரணமும் உலகேழும் ஈன்றருளி அனைத்தினுக்கும்
‡காரணமாய் வளம்பெருகு கருணைதிரு வடிவான
சீரிணங்கு சிவபெருமான் அருளுதலும் சென்றணைந்து
வாரிணங்கு §திருமுலைப்பால் வள்ளத்துக் கறந்தருளி. சுஎ

எண்ணரிய சிவஞானத் தின்னமுதங் குழைத்தருளி
"உண்ணடிசில்" எனஊட்ட உமையம்மை எதிர்நோக்கும்
கண்மலர்நீர் துடைத்தருளிக் கையிற்பொற் கிண்ணம்அளித
தண்ணலைஅங் கழுகைதீர்த் தங்கணனார் அருள்புரிந்தார். சுஅ

யாவருக்குந் தந்தைதாய் எனும்இவர்இப் படிஅளித்தார்
ஆவதனால் ஆளுடைய பிள்ளையா ராய்அகில

---

சுரு. வேதியர்க்கும் தேவியர்க்கும் - சிவபாத விருதயர்க்கும் பகவதியார்க்கும்; பாட்டு சஅ, சகூ, உ௦ பார்க்க. அருமறையாளுடையவளை - உமையம்மையாரை. ஞானத்தை ஊட்டியருள. "ஒரு நெறிய மனம் வைத்துணர் ஞான சம்பந்தன்":—பிரமபுரம் : கக.

சுசு. மலைக்கொடியை - உமையம்மையாரை. துணை - இரண்டு: ஒன்று பரஞானத்தைக் குறிப்பது; மற்றொன்று அபரஞானத்தைக் குறிப்பது. பாலடிசில் - பாலமுதம். பொன்வள்ளத்து - பொன் கிண்ணத்தில்.

சுஎ. ஆரணமும் - வேதங்களையும். "கற்பனை கடந்த சோதி கருணையே உருவமாகி"—தில்லைவாழ் அந்தணர் புராணம்: உ. இணங்கு - பொருந்திய. உமையம்மையார் சென்றணைந்து. வார் - கச்சு.

சுஅ. சிவஞானமாகிய இன்னமுதம். அண்ணலை - பிள்ளையாரை. அங்கணனார் - சிவபெருமான். திருநகரச் சிறப்பு: பாட்டு சசு குறிப்புப் பார்க்க. உமையம்மையார்...குழைத்தருளி, எதிர்நோக்கும்......கிண்ணமளித்து, "உண்ணடிசில்" என ஊட்டச் சிவபெருமான் அண்ணலை அங்கு அழுகை தீர்த்து அருள் புரிந்தார்.

சுகூ. தமக்குத் தந்தைதாயில்லாதவர், "தாயுமிலி தந்தையிலி"—திருவாசகம்: திருச்சாழல். தாவில் - கெடுதலில்லாத. எல்லார்க்குந் தாய்தந்தையாராக

பா - ம்—*ஒருமைநெறி. †அழைத்தருளி. ‡காரணமாம். §திருமுலைப்பொன்; முலைச்செம்பொன்.

தேவருக்கும் முனிவருக்கும் தெரிவரிய பொருளாகும்
தாவில்தனிச் சிவஞான சம்பந்த ராயினார். ௬௯

சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை அறமாற்றும் பாங்கினில்ஓங் கியஞானம்
உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர் தாம்உணர்ந்தார் அந்நிலையில். ௭௦

"எப்பொருளும் ஆக்குவான் ஈசனே" எனும்உணர்வும்
*"அப்பொருள்தான் †ஆளுடையார் அடியார்கள்" எனும்அறிவும்
இப்படியால் இதுவன்றித் தம்இசைவு கொண்டியலும்
துப்புரவில் லார்துணிவு துகளாகச் சூழ்ந்தெழுந்தார். ௭௧

உள்ளவரால் ஆளப்பட்டமையான் "ஆளுடையபிள்ளையார்" ஆனரென்க; ஆளப் படுதலுடைய பிள்ளையார். ஆளப்படுதலாவது பேதத்தை நீக்குவது. பழைய படி பிள்ளையானார் என்பது கருத்து. இது, "சிவஞானசம்பந்தராயினார்" என் பதனால் வலியுறுத்தப்படுதல் காண்க. முதற்பாட்டுக் குறிப்பைப் பார்க்க. இவர் தவத்தால் பிள்ளைமைப்பே றெய்தித் திருஞான சம்பந்தரானவர்; "தவ முதல்வர் சம்பந்தர்"—௭௦. இவர் சீர்காழிக்குச் சிவபிரானால் அனுப்பப்பட்டார். இதற்குக் காரணம் உலகில் திருவருள் நெறிக்குற்ற கேடு நீங்கவேண்டுமென்ப தும், அது கருதித் தவங்கிடந்த சிவபாத விருதயர் கருத்து நிறைவேறவேண்டு மென்பதுமாகும். உலகுக்கனுப்பப்பட்ட பிள்ளையாரை (உலக வாசனை தொடர் தற்கு முன்னரே)க் குழந்தைப் பருவத்திலேயே சிவபெருமான் ஆட்கொண்ட மையான், அவர் பழையபடி பிள்ளையாராய்த் திருஞானசம்பந்தரானார் என் றுணர்க.

௭௦. திரு - திருவருட்செல்வம். பவமதனை அறமாற்றும் - முற்பிறப்பை முற்றும் ஒழிக்கும். அற-அறும்படியுமாம். பாங்கினில்-இயல்பில்; உரிமையுடன். உவமையிலா - ஒப்பில்லாத. அந்நிலையில் - ஞானப்பாலுண்ட அவ்வேளையில். ...சிவஞானமாகிய...ஓங்கிய ஞானம் என்றும்,......கலைஞானமாகிய...மெய்ஞ் ஞானம் என்றுங் கொள்க. கலைஞானமாகிய மெய்ஞ்ஞானம் - அபரஞானம்; சிவஞானமாகிய ஓங்கிய ஞானம் - பரஞானம்; அபரஞானம் - கேட்டல், சிந்தித் தல்; பரஞானம் - தெளிதல், நிட்டை; "கேட்டலுடன் சிந்தித்தல் தெளிதல் நிட்டை கிளத்தலென ஈரிரண்டாங் கிளக்கின் ஞானம்"—சிவஞானசித்தியார்: சுபக்கம். ௬. அ. உச. உவமை......கலைஞானம் - கேட்டல் என்றும், சிவனடியே ......சிவஞானம்-சிந்தித்தல் என்றும், பவமதனை......ஓங்கிய ஞானம்-தெளிதல் என்றும், உணர்வரிய...மெய்ஞ்ஞானம் - நிட்டை என்றுங் கூறுவோருமுளர்.

௭௧. அப்பொருளை ஆள்வோர். இப்படியாகின்ற இதுவன்றி. தம் இசைவே கொண்டு நடக்கின்ற. துப்புரவில்லார் - அநுபவமில்லாதவராது. துணிவு - முடிவுகள். சூழ்ந்து - நினைந்து. எல்லாம் ஆண்டவனால் ஆக்கப்படுவன

பா - ம்—*அப்பொருளும். †ஆளுடையான்.

சீர்மறையோர் சிவபாத இருதயருஞ் சிறுபொழுதில்
நீர்மருவித் தாஞ்செய்யும் நியமங்கள் முடித்தேறிப்
பேருணர்விற் பொலிகின்ற பிள்ளையார் தமைநோக்கி
"யாரளித்த பாலடிசில் உண்டதுநீ" எனவெகுளா. எஉ

"எச்சில்மயங் கிடஉனக்கீ திட்டாரைக் காட்"டென்று
கைச்சிறிய தொருமாறு கொண்டோச்சக் காலெடுத்தே
அச்சிறிய பெருந்தகையார் ஆனந்தக் கண்துளிபெய்
துச்சியினில் எடுத்தருளும் ஒருதிருக்கை விரற்சுட்டி. எங

விண்ணிறைந்த பெருகொளியால் விளங்குமழ விடைமேலே
பண்ணிறைந்த அருமறைகள் பணிந்தேத்தப் பாவையுடன்
எண்ணிறைந்த கருணையினால் நின்றாரை எதிர்காட்டி
உள்நிறைந்து பொழிந்தெழுந்த உயர்ஞானத் திருமொழியால். எச

எல்லையிலா மறைமுதல்மெய் யுடன்எடுத்த எழுதுமறை
மல்லல்நேர் தமிழால்இம் மாநிலத்தோர்க் குரைசிறப்பப்
பல்லுயிருங் களிகூரத் தம்பாடல் பரமர்பால்
செல்லுமுறை பெறுவதற்குத் திருச்செவியைச் சிறப்பித்து. எரு

செம்மைபெற எடுத்ததிருத் தோடுடைய செவியன்எனும்
மெய்ம்மைமொழித் திருப்பதிகம் பிரமபுரம் மேவினார்

---

என்பதை உணர்ந்து நடப்பவர் அடியவர். இவர் ஆணவமில்லாதவர். ஆண்டவன் படைப்பெல்லாம் இவர்களுடைமை. என்னை? இவர்கட்குத் தங்கட்கென ஒன்றின்மையாலென்க. எல்லாம் தம்மால் நடக்கின்றன என்று திரிவோர் திருவருள்நெறி அநுபவமில்லாதவர். அவர்கள் கொள்கைகளால் உலகிற்குப் பலதிறத் துன்பங்கள் நேருமாதலால், அவைகளைத் துகளாக்கப் பிள்ளையார் எண்ணினார். உணர்வையும் அறிவையுஞ் சூழ்ந்து எழுந்தார்.

எஉ. பிள்ளையார் கரையிலிருத்தலால் காலம் போக்காது நீராடினார் என்பார் "சிறு பொழுதில் நீர் மருவி" என்றார்.

எங. மயங்கிட - கலக்க. மாறு - கோல். எச. மழவிடை - இள ஏற்றின்.

எரு. மறை முதல் - பிரணவத்தை. மெய்யுடன் - தகர மெய்யுடன் (தகர வித்தையுடன்). பிரணவம் - ஓ; மெய் - த்; த்+ஓ=தோ. எழுது மறை தமிழ் வேதம்; எழுதா மறை வேதம். மல்லல் - வளப்பமுடைய. செவி, ஓங்கார வடிவம்; நாதம்.

எகூ. பிரம புரம் - சீர்காழி. "தோடுடைய செவியன்" என்னும் பாட்டிற்குச் சைவத்திறவு என்னும் நூலில் விளக்கஞ் செய்துள்ளேன். விரிவு அந் நூலிற் காண்க. "போதையார் பொற்கிண்ணத் தடிசில்பொல் லாதெனத் -

தம்மைஅடை யாளங்க ளுடன்சாற்றித் தாதையார்க்
"செம்மையிது செய்தபிரான் இவனன்றே" எனஇசைத்தார். ௭௬

"தோடுடைய செவியன் விடையேறியோர் தூவெண்மதிசூடிக்
காடுடைய சுடலைப்பொடிப் பூசிஎன் னுள்ளங் கவர்கள்வன்
ஏடுடையமல ரான்முனை நாட்பணிந் தேத்தஅருள் செய்த
பீடுடைய பிரமாபுர மேவிய பெம்மான்இவனன்றே"

'அருநெறிய மறைவல்ல முனியகன் பொய்கை யலர்மேய
பெருநெறிய பிரமாபுர மேவிய பெம்மான் இவன்தன்னை
ஒருநெறிய மனம்வைத் துணர்ஞான சம்பந்தன் உரைசெய்த
திருநெறிய தமிழ்வல்லவர் தொல்வினை தீர்தல் எளிதாமே"—தேவாரம்.

மண்ணுலகில் வாழ்வார்கள் பிழைத்தாலும் வந்தடையின்
கண்ணுதலான் பெருங்கருணை கைக்கொள்ளும் எனக்காட்ட
எண்ணமிலா வல்லரக்கன் எடுத்துமுறிந் திசைபாட
அண்ணலவற் கருள்புரிந்த ஆக்கப்பா டருள்செய்தார். ௭௭

தொழுவார்க்கே அருளுவது சிவபெருமான் எனத்தொழார்
வழுவான மனத்தாலே மாலாய மாலயனும்
இழிவாகுங் கருவிலங்கும் பறவையுமாய் எய்தாமை
விழுவார்கள் அஞ்செழுத்துந் துதித்துய்ந்த படிவிரித்தார். ௭௮

---

தாதையார் முனிவுறத் தானெனை ஆண்டவன் - காதையார் குழையினன் கழு மல வளநகர்ப் - பேதையா ளவளொடும் பெருந்தகை இருந்ததே"—திருஞான சம்பந்தர்: இஃது அகச்சான்று. திருஞானசம்பந்தர் குழந்தைப் பருவத்தினர் என்பதற்குச் சில அகச்சான்றுகள் உண்டு. அவைகளுள் இரண்டொன்று வருமாறு:—ஒன்று திருஞானசம்பந்தர் குழந்தையா யிருந்தமையான், அவரை அவர் தந்தையார் தமது தோள்மீது தூக்கிச் சென்றது; "கடல்.........பதியான முனிவன்......அத்தர் பியன்மேலிருந்து இசையால் உரைத்த பனுவல்"—சம் பந்தர்: திருநனிபள்ளி. ௧௧; மற்றொன்று, திருஞானசம்பந்தர் சமணரொடு வாதுபுரியத் திருவாலவாய்க் கேகியபோது, சமணர் திறங் கண்டஞ்சிய மங்கை யர்க்கரசியாரைப் பார்த்து அவர் அருளியது; "பானல்வாயொரு பாலன் ஈங்கிவன் என்று நீ பரி வெய்திடேல்"—சம்பந்தர்: திருவாலவாய். ௧.

௭௭. பிழைத்தாலும் - தவறு செய்தாலும். வந்தடையின் - தமது தவறு தலே மனமார முறையிட்டு வந்தடைந்தால். வல்லரக்கன் - இராவணன். அண் ணல் - சிவபெருமான். அவற்கு - இராவணனுக்கு. ஆக்கப்பாட்டை - திருவருட் பெருக்கை. (இதை) எட்டாம் பாட்டில் அருளிச்செய்தார் என்க.

௭௮. தொழாராய். மாலாய - மயக்கமடைந்த. கருவிலங்கும் பறவையு மாய் - பன்றியும் அன்னமுமாகி. எய்தாமை - அடி முடியைக் காணமுடியாது. (இதை) ஒன்பதாம் பாட்டில் விரித்தாரென்க.

வேதகா ரணராய வெண்பிறைசேர் செய்யசடை
நாதன்நெறி அறிந்துய்யார் தம்மிலே நலங்கொள்ளும்
போதம்இலாச் சமண்கையர் புத்தர்வழி பழியாக்கும்
ஏதமே எனமொழிந்தார் எங்கள்பிரான் சம்பந்தர். எகூ

திருப்பதிகம் நிறைவித்துத் திருக்கடைக்காப் புச்சாத்தி
இருக்குமொழிப் பிள்ளையார் எதிர்தொழுது நின்றருள
அருட்கருணைத் திருவாள னார்அருள்கண் டமரரெலாம்
பெருக்கவிசும் பினில்ஆர்த்துப் பிரசமலர் மழைபொழிந்தார். அ௦

வங்தெழுமங் கலமான வானகதுங் துபிமுழக்கும்
கந்தருவர் கின்னரர்கள் கானஒலிக் கடல்முழக்கும்
இந்திரனே முதல்தேவர் எடுத்தேத்தும் இசைமுழக்கும்
அந்தமில்*பல் கணநாதர் அரஎனும்ஓ சையின்அடங்க. அக

வேறு

மறைகள் கிளர்ந்தொலி வளர முழங்கிட வானோர்தந்
நிறைமுடி உந்திய நிரைமணி சிந்திட நீள்வானத்
துறையென வந்துல கடைய நிறைந்திட ஓவாமெய்ப்
பொறைபெரு குந்தவ முனிவ ரெனுங்கடல் புடைசூழ. அஉ

அணைவுற வந்தெழும் அறிவு தொடங்கின அடியார்பால்
இணையில் பவங்கிளர் கடல்கள் இகந்திட இருதாளின்

---

எகூ. சுயநலங் கொள்ளும். போதம் - ஞானம். சமண்கையர் - சமணக் கீழ்கள். வழி - மார்க்கங்கள்; சமயங்கள். பழி ஆக்கும் ஏதமே என - பழியை யாக்கும் குற்றமுடையன என்று. (இதைப்) பத்தாம்பாட்டில் மொழிந்தாரென்க.

அ௦. திருக்கடைக் காப்பு-இறுதிப்பாட்டு. இருக்குமொழி-மறைமொழியை யுடைய. அருள்...கண்டு-திருவருட் செல்வராகிய சிவபெருமான் திருஅருட் பெருமையைக் கண்டு. ஆர்த்து - ஆரவாரித்து. பிரசம் - தேன்.

அஉ. கிளர்ந்து - எழுந்து. உந்திய - தெறித்த. நிரை - ஒழுங்கான. உறை-மழைத் துளி. உலகு அடைய - உலக முழுவதும். ஓவா - நீங்காத. பொறை - பொறுமை; போற்றாரைப் பொறுத்தல் மெய்ப்பொறை; "பொறை எனப் படுவது போற்றாரைப் பொறுத்தல்"—கலித்தொகை :கங. கச. "அகழ் வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை - இகழ்வார்ப் பொறுத்தல் தலை"—குறள் :

அங. அறிவு - மெய்யறிவு. பவம்...துணையொடு - பிறவிப் பெருங் கடல்களைக் கடக்க இருதாள்களாகிய தெப்பத்தை அருளும் சிவபெருமான் போர் விடைமீது வீற்றிருந்த உமாதேவியாருடன்.

பா - ம்—*சீர்.

புணையருள் அங்கணர் பொருவிடை தங்கிய புணர்பாகத்
துணையொ டணைந்தனர் சுருதி தொடர்ந்த பெருந்தோணி. அங

அண்ணல் அணைந்தமை கண்டு தொடர்ந்தெழும் அன்பாலே
மண்மிசை நின்ற மறைச்சிறு போதகம் அன்றுரும்
கண்வழி சென்ற கருத்து விடாது கலந்தேகப்
புண்ணியர் நண்ணிய பூமலி கோயிலின் உட்புக்கார். அச

ஈறில்பெ ருந்தவம் முன்செய்து தாதைஎ னப்பெற்றார்
மாறுவி ழுந்த மலர்க்கை குவித்து மகிழ்ந்தாடி
வேறுவி ளைந்தவெ ருட்சிவி யப்புவி ருப்போடும்
கூறும்அ ருந்தமி ழின்பொரு ளான குறிப்போர்வார். அரு

தாணுவி னைத்தனி கண்டு தொடர்ந்தவர் தம்மைப்போல்
காணுதல் பெற்றில ரேனு நிகழ்ந்தன கண்டுள்ளார்
தோணிபு ரத்திறை தன்னரு ளாதல் துணிந்தார்வம்
பேணும னத்தொடு முன்புகு காதலர் பின்சென்றார். அசு

அப்பொழு தங்கண் அணைந்தது கண்டவர் அல்லாதார்
முப்புரி நூன்மறை யோர்கள் உரோம முகிழ்ப்பெய்தி
"இப்படி ஒப்பதொர் அற்புதம் எங்குள" தென்றென்றே
துப்புறழ் வேணியர் கோயிலின் வாயில்பு றஞ்சூழ. அஎ

---

அச. அண்ணல்-சிவபெருமான். போதகம் அன்றுரும்-யானைக்கன்றனைய திருஞானசம்பந்தரும். பூ - பொலிவு.

அரு. மாறுவிழுந்த-(அடிக்க எடுத்த) கோல் தானே நழுவி விழுந்த. வேறு முறைமுறை விளைந்த. வெருட்சி - அச்சம். கூறும் - பிள்ளையார் அருளிய. ஓர்வார் . சிந்திப்பவராய். உண்மை உணராது கோலோச்சினமையால் வெருட்சியும், காணுதலைக் கண்டதால் வியப்பும், பரசமயங்களைத் தகர்க்கத் தாங் கொண்ட எண்ணம் நிறைவேறியதைக் குறித்து விருப்பும் சிவபாத விருதயர்க்கு நிகழ்ந்தனபோலும்.

அசு. தாணுவினை - சிவத்தை. ஆளுடைய பிள்ளையாரைப்போல் சிவ பெருமானைச் சிவபாத விருதயர் காணுதல் பெற்றிலரேனும். காதலர் - பிள்ளை யார்.

அஎ. அங்கண் அணைந்தது - அவ்விடத்தில் நடந்ததை. கண்டவர் - கண்டவர்களும். அல்லாதார் - காணாது கேட்டவர்களும். உரோமம் சிலிர்ப் பெய்தி. துப்புறழ் வேணியர் - பவளம் போன்ற சிவந்த சடையையுடைய சிவ பெருமான்.

பா - ம்—*வாய்தல்.

பொங்கொளி மால்விடை மீது *புகுந்தணி பொற்றோணித்
தங்கிஇ ருந்தபெ ருந்திரு வாழ்வு தலைப்பட்டே
"இங்கெனை யாளுடை யான்உமை யோடும் இருந்தான்" என்
றங்கெதிர் நின்று †புகன்றனர் ஞானத் தமுதுண்டார். அஅ

இன்னிசை ஏழும் இசைந்த செழுந்தமிழ் ‡ஈசற்கே
சொன்முறை பாடு தொழும்பருள் பெற்ற தொடக்கோடும்
பன்மறை வேதியர் காண விருப்பொடு பால்நாறும்
பொன்மணி வாயினர் கோயிலி னின்று புறப்பட்டார். அகூ

பேணிய அற்புத நீடருள் பெற்றபி ரான்முன்னே
நீணிலை யில்திகழ் கோபுர வாயிலின் நேரெய்தி
வாணில வில்திகழ் வேணியர் தொண்டர்கள் வாழ்வெய்தும்
தோணி புரத்தவர் தாமெதிர் கொண்டு துதிக்கின்றார். கூ0

வேறு

"காழியர் தவமே கவுணியர் தனமே கலைஞானத்
தாழிய கடலே அதனிடை அமுதே அடியார்முன்
வாழிய வந்திம் மண்மிசை வானோர் தனிநாதன்
ஏழிசை மொழியாள் தன்திரு வருள்பெற் றனை" என்பார். கூக

"மறைவளர் §திருவே வைதிக நிலையே வளர்ஞானப்
பொறையணி முகிலே புகலியர் புகலே பொருபொன்னித்
துறைபெறு மணியே சுருதியின் ஒளியே வெளியேவந்
திறையவன் உமையா ளுடனருள் தரஎய் தினை" என்பார். கூஉ

"புண்ணிய முதலே புனைமணி அரைஞா ணொடுபோதும்
கண்ணிறை கதிரே கலைவளர் மதியே கவின்மேவும்

---

அஅ. திருவாழ்வு தலைப்பட்டே - சிவத்தை யடைந்து.

அகூ. தொழும்பு - தொண்டாகிய. தொடக்கு - பற்று; தொடர்பு. பொன் மணி வாயினர் - அழகிய பவளம் போன்ற வாயினை யுடையவராகிய திருஞானசம்பந்தர்.

கூ0. பிரான் - திருஞான சம்பந்தர். வாள் நிலவில் திகழ் வேணியர் - ஒளியையுடைய சந்திரனுடன் பொலியும் சடையையுடைய சிவபிரான்றன்.

கூக. தனி நாதனதும், மொழியாளதும்.

கூஉ. ஞானமாகிய சூல் தாங்கிய மேகமே. புகலே - புகலிடமே. பொரு பொன்னி - மோதும் காவிரி.

கூ௩. கதிரே - சூரியனே. மதியே - இளம் பிறையே. கவின் மேவும் பண்ணியல் - இனிமை பொருந்தும் பண்நடக்கும்.

பா - ம்—*புகுந்தோளிர். †புகுந்தனர். ‡ஈசர்க்கே; ஈரச்செஞ். §தருவே; தவமே.

பண்ணியல் கதியே பருவம தோறும்ழ வருடத்தே
எண்ணிய பொருளாய் நின்றவர் அருள்பெற் றனை" என்பார். ௬௩

வேறு

என்றினைய பலகூறி இருக்குமொழி அந்தணரும் ஏனை யோரும்
நின்றுதுதி செய்தவர்தாள் நீள்முடிக்கண் மேலேந்தி நிரந்த போது
சென்றணைந்த தாதையார் சிவபாத விருதயர்தாந் தெய்வ ஞானக்
கன்றினைமுன் புக்கெடுத்துப் பியலின்மேற் கொண்டுகளி கூர்ந்து செல்ல.

மாமறையோர் குழாத்தினுடன் மல்குதிருத் தொண்டர்குழாம் மருங்கு சூழ்ந்து
தாம்அறுவை உத்தரியந் தனிவிசும்பில் எறிந்தார்க்குந் தன்மை யாலே
பூமறுகு சிவானந்தப் பெருக்காறு போதஅதன் மீது பொங்கும்
காமர்நுரைக் குமிழிஎழுந் திழிவனபோல் விளங்குபெரும் *காட்சித் தாக.

நீடுதிருக் கழுமலத்து நிலத்தேவர் மாளிகைமேல் நெருங்கி அங்கண்
மாடுநிறை மடவார்கள் மங்கலமா மொழிகளால் வாழ்த்தி வாசத்
தோடுமலி நறுமலருஞ் சுண்ணமும்வெண் பொரியினொடுந் தூவி நிற்பார்
கோடுபயில் குலவரைமேல் மின்குலங்கள் புடைபெயருங் கொள்கைத் தாக.

மங்கலதூ ரியந்துவைப்பார் மறைச்சாமம் பாடுவார் மருங்கு வேதிப்
பொங்குமணி விளக்கெடுத்துப் பூரணகும் பமும்†நிரைப்பார் போற்றிசெய்வார்
அங்கவர்கள் மனத்தெழுந்த அதிசயமும் பெருவிருப்பும் அன்பும் பொங்கத்
தங்குதிரு மலிவீதிச் சண்பைநகர் வலஞ்செய்து சாருங் காலை. ௬௭

---

௬௪. நிரந்த - சூழ்ந்த. பிள்ளையார் பின் சென்று அணைந்த. பியலின் மேல் - தோளின்மேல். பிள்ளையார் முத்துச் சிவிகை பெறும்வரை சிவபாத விருதயர் அவரைத் தோளின்மீது கொண்டு சென்றாரென்க; "அத்தர் பியன் மேலிருந்து இசையால் உரைத்த பனுவல்"—திருஞான சம்பந்தர்: திருநனி பள்ளி. ௧௧.

௬௫. மா......சூழ்ந்து - மறையோர் கூட்டத்துடன் நிறைந்த தொண்டர் கூட்டம் அருகே சூழ்ந்து. தாம்......ஆர்க்கும் - தாம் உடைகளையும் ஆடைகளையும் ஆகாயத்தில் எறிந்து ஆரவாரிக்கும். பூ மறுகு - பொலிந்த வீதி. காமர் - அழகிய. இழிவனபோல் - இறங்குவனபோல்.

௬௬. நிலத்தேவர் - மறையோரது. மாடு - பக்கத்தே. தோடு - இதழ்கள். சுண்ணமும் - வாசனைப் பொடியையும். கோடு......குலங்கள் - குடுமிகளை யுடைய மலைக் கூட்டங்கள்மீது மின்னற் கூட்டங்கள்.

௬௭. தூரியம் துவைப்பார் - வாத்தியங்கள் முழக்குவார்கள். வேதி - திண்ணைகளில். நிரைப்பார் - வரிசையாக வைப்பார்.

பா - ம்—*காட்சித்தாகும். †நிறைப்பார்.

தந்திருமா ளிகையின்கண் எழுந்தருளிப் புகும்பொழுது சங்க நாதம்
அந்தர*துந் துபிமுதலா அளவில்பெரு கொலிதழைப்ப அணைந்து புக்கார்
சுந்தரப்பொற் ஸ்ரேணிமிசை இருந்தபிரா னுடன்†அமர்ந்த துணைவி யாரும்
பைந்தொடியாள் திருமுலையின் பாலரு மதுரமொழிப் பவள வாயார்.

தூமணிமா ளிகையின்கண் அமர்ந்தருளி அன்றிரவு தொல்லை நாத
மாமறைகள் திரண்டபெருந் திருத்தோணி மன்னிவீற் றிருந்தார் செய்ய
காமருசே வடிக்கமலங் கருத்திலுற இடையறுக் காதல் கொண்டு
நாமநெடுங் கதிருதிப்ப நண்ணினர் திருத்தோணி நம்பர் கோயில்.

காதலுடன் அணைந்துதிருக் கழுமலத்துக் கலந்துவீற் றிருந்த தங்கள்
தாதையா ரையும்வெளியே தாங்கரிய மெய்ஞ்ஞானந் தம்பால் வந்து
போதமுலை சுரந்தளித்த புண்ணியத்தா யாரையும்முன் வணங்கிப் போற்றி
மேதகைய அருள்பெற்றுத் திருக்கோலக் காஇறைஞ்ச விருப்பிற் சென்றார்.

பெருக்கோலிட் டலைபிறங்கும் காவிரிநீர் பிரசமலர் தரளஞ் சிந்த, வரிக்கோல வண்டாட மாதரார் குடைந்தாடு மணிநீர் வாவித், திருக்கோலக் காஎய்தித் தேவர்பிரான் கோயில்வலஞ் செய்து முன்னின், திருக்கோலிட் டறிவரிய திருப்பாதம் ஏத்துவதற் கெடுத்துக் கொள்வார். கூ0க

மெய்ந்நிறைந்த செம்பொருளாம் வேதத்தின் விழுப்பொருளை வேணி மீது, பைந்நிறைந்த அரவுடனே பசுங்குழவித் திங்கள்பரித் தருளு வானை, மைந்நிறைந்த மிடற்றானை "மடையில்வா ளைகள்பாய" என்னும் வாக்கால், கைந்நிறைந்த ஒத்தறுத்துக் கலைப்பதிகங் கவுணியர்கோன் பாடுங் காலை. கூ0உ

" மடையில் வாளை பாய மாதரார்
குடையும் பொய்கைக் கோலக் காவுளான்

கூஅ. அந்தர துந்துபி - தேவ துந்துபி.

கூகூ. தொல்லை நாத - பழைய ஒலிவடிவாய. வீற்றிருந்தார் - சிவபிரானது. நாம நெடுங்கதிர் உதிப்ப - புகழையுடைய நீண்ட கதிர்களைக் கொண்ட சூரியன் உதயமாக.

கூ00. தாதையாரையும் - பரமசிவனையும். போத - மிகும்படி. தாயாரையும் - பார்வதியையும். மேதகைய - மேன்மையான.

கூ0க. பெருக்கு - வெள்ளம். ஓலிட்டு - ஒலித்து. பிறங்கும் - மிக்குவரும். பிரச மலர் தரளம் - தேன் பொருந்திய மலர்களையும் முத்துக்களையும். இருக்கு வேதம் ஓலமிட்டு.

கூ0உ. வேணி......வானை - சடைமீது படத்தையுடைய பாம்புடன் பசிய பிறைச் சந்திரனை அணிந்தருளியவனை. மிடற்றானை - கண்டத்தானை. ஒத்தறுத்து - தாளந் தட்டி. கலைகள் நிரம்பிய பதிகம்.

பா - ம்—*துந் துமிநாதம். †அணைந்த.

சடையும் பிறையுஞ் சாம்பற் பூச்சுங்கீள்
உடையுங் கொண்ட உருவம் என்கொலோ "—தேவாரம்.

கையதனால் ஒத்தறுத்துப் பாடுதலுங் கண்டருளிக் கருணை கூர்ந்த, செய்யசடை வானவர்தம் அஞ்செழுத்தும் எழுதியசெம் பொற்று ளங்கள், †ஐயரவர் திருவருளால் எடுத்தபா டலுக்கிசைந்த அளவால் ஒத்த, வையமெலாம் உய்யவரு மறைச்சிறுவர் கைத்தலத்து ‡வந்த வன்றே. கoங

காழிவரும் பெருந்தகையார் கையில்வருந் திருத்தாளக் கருவி கண்டு, வாழியதந் திருமுடிமேற் கொண்டருளி மனங்களிப்ப மதுர வாயில், ஏழிசையுந் தழைத்தோங்க ‡இன்னிசைவண் தமிழ்ப்பதிகம் எய்தப் பாடித், தாழுமணிக் குழையார்முன் தக்கதிருக் கடைக்காப் புச் சாத்தி நின்றார். கoச

உம்பருல கதிசயிப்ப ஓங்கியநா தத்தளவின் உண்மை நோக்கித், தும்புருநா ரதர்முதலாஞ் சுருதிஇசைத் துறையுள்ளோர் துதித்து மண்மேல், வம்பலர்மா மழைபொழிந்தார் மறைவாழ வந்தருளும் மதலை யாருந், தம்பெருமான் அருள்போற்றி மீண்டருளிச் சண்பை நகர் சாரச் செல்வார். கoரு

செங்கமல மலர்க்கரத்துத் திருத்தாளத் துடன்நடந்து செல்லும் போது, தங்கள்குலத் தாதையார் தரியாது தோளின்மேல் தரித்துக் கொள்ள, அங்கவர்தந் தோளின்மிசை எழுந்தருளி அணைந்தார்சூழ்ந் தமரர் ஏத்தும், திங்கள்அணி மணிமாடத் திருத்தோணி புரத் தோணிச் சிகரக் கோயில். கoசு

திருப்பெருகு §பெருங்கோயில் சூழவலங் கொண்டருளித் திரு முன் நின்றே, அருட்பெருகு திருப்பதிகம் எட்டொருகட் டளையாக்கி

---

கoங. செய்ய சடை வானவர்தம் - சிவபெருமானது. ஐயரவர் - சிவ பெருமான். "நாளும் இன்னிசை யால்தமிழ் பரப்பு ஞான சம்பந்த னுக்குல கவர்முன் - தாளம் ஈந்தவன் பாடலுக் கிரங்கும் தன்மையாளனை "—சுந்தரர் : திருக்கோலக்கா. அ.

கoச. குழையார் - குண்டல மணிந்த சிவபெருமான். திருக்கடைக்காப்பு - இறுதிப் பாட்டு.

கoரு. உம்பர் - தேவர். தும்புரு - வீணையில் வல்ல. வம்பலர் - வாசனை மலர். மதலையாரும் - பிள்ளையாரும். கoசு. தோணி என்னுஞ் சிகரக் கோயில்.

பா - ம்—*எழுதியநற் செம்பொற் றளம். †ஐயர்திரு வருளாலே. ‡வந்ததன்றே. §பங்.

அவற்றுள் ஒன்று, விருப்புறுபொற் றிருத்தோணி வீற்றிருந்தார் தமைப்பாட மேவு காதல், பொருத்தமுற அருள்பெற்றுப் போற்றி எடுத் தருளினார் "பூவார் கொன்றை". க0எ

"பூவார் கொன்றைப் புரிபுன் சடையீச
காவா யெனநின் றேத்துங் காழியார்
மேவார் புரமூன் றட்டார் அவர்போலாம்
பாவார் இன்சொற் பயிலும் பரமரே"—தேவாரம்.

எடுத்ததிருப் பதிகத்தின் இசைதிருத்தா ளத்தினால் இசைய ஒத்தி, அடுத்தநடை பெறப்பாடி ஆர்வமுற வணங்கிப்போந் தலைநீர்ப் பொன்னி, மடுத்தவயற் பூந்தரா யவர்வாழ மழவிளங்கோ லத்துக் காட்சி, கொடுத்தருளி வைகினார் குறைவிலா நிறைஞானக் கொண்ட லார்தாம். க0அ

அந்நிலையில் ஆளுடைய பிள்ளையார் தமைமுன்னம் அளித்த தாயார், முன்னுதிக்க முயன்றதவத் திருநன்னி பள்ளிமுதன் மறை யோர் எல்லாம், மன்னுபெரு மகிழ்ச்சியுடன் மங்கலதூ ரியந்துவைப்ப மறைகள் ஓதிக், கன்னிமதிற் சண்பைநகர் வந்தணைந்து கவுணியர் கோன் கழலில் தாழ்ந்தார். க0கூ

மங்கலமா மெய்ஞ்ஞானம் மண்களிப்பப் பெற்ற*பெரு வார்த்தை யாலே, எங்கணும்நீள் பதிமருங்கில் இருபிறப்பா ளரும்எல்லா ஏனை யோரும், பொங்குதிருத் தொண்டர்களும் அதிசயித்துக் குழாங் கொண்டு புகலி யார்தஞ், சிங்கஇள வேற்றின்பால் வந்தணைந்து கழல் பணியுஞ் சிறப்பின் மிக்கார். கக0

வந்ததிருத் †தொண்டர்க்கும் மல்குசெழு மறையவர்க்கும் மற்று ளோர்க்குஞ், சிந்தைமகிழ் வுறமலர்ந்து திருவமுது முதலான

க0எ. கட்டளை - விருத்த பேதமென்பர் சிலர்; தாள பேதமென்பர் சிலர். இசைத்தமிழ் இலக்கணம் ஆட்சியிலில்லா இக்காளில் அதுபற்றி விளக்கங் கூறல் அருமை.

க0அ. ஒத்தி - (தாள) வரையறுத்து. பொன்னி மடுத்த - காவிரி தன்னுள்பாயப் பெற்ற (உட்கொண்ட). பூந்தராயவர் - சீகாழியர். மழ இளங் கோலம் - அதிக இளமைக்கோலம்.

க0கூ. அளித்த தாயார் - ஈன்ற தாயாராகிய பகவதியார். மங்கல தூரியம் துவைப்ப - மங்கல வாத்தியங்கள் முழங்க. கன்னி மதில்: பாட்டு. உ. குறிப்புப் பார்க்க.

கக0. மெய்ஞ்ஞானத்தை மண் களிப்பப் பிள்ளையார் பெற்ற. இரு பிறப் பாளர் - பார்ப்பனர். குழாங் கொண்டு - கூட்டங் கூட்டமாக.

பா - ம்—*திரு. †தொண்டர்கட்கும்; தொண்டருக்கும்.

சிறப்பின் செய்கை, தந்தம்அள வினில்விரும்புந் தகைமையினால் கட-
றாற்றுஞ் சண்பை மூதூர், எந்தைபிரான் சிவலோகம் எனவிளங்கி
எவ்வுலகும் ஏத்து நாளில். ககக

செழுந்தரளப் பொன்னிசூழ் திருநன்னி பள்ளியுள்ளோர்
தொழுது "திங்கட், கொழுந்தணியுஞ் சடையாரை எங்கள்பதி யினிற்
கும்பிட் டருள அங்கே, எழுந்தருள வேண்டும்"என இசைந்தருளித்
தோணிவீற் றிருந்தார் பாதந், தொழுந்தகைமை யாலிறைஞ்சி
அருள்பெற்றுப் பிறபதியும் தொழமுன் *செல்வார். ககஉ

தாதவிழ்செந் தாமரையின் அகவிதழ்போல் சீறடிகள் தரையின்
மீது, போதுவதும் பிறர்ஒருவர் பொறுப்பதுவும் பொறாஅன்பு புரிந்த
சிந்தை, மாதவஞ்செய் தாதையார் வந்தெடுத்துத் தோளின்மேல் வைத்
துக் கொள்ள, நாதர்கழல் தம்முடிமேல் கொண்டகருத் துடன்போந்
தார் ஞானம் உண்டார். ககா

தேனலரும் கொன்றையினார் திருநன்னி பள்ளியினைச் சாரச்
செல்வார், "வானணையும் மலர்ச்சோலை தோன்றுவதெப் பதி?"என்ன
மகிழ்ச்சி எய்திப், "பானல்வயல் திருநன்னி பள்ளி"எனத் தாதையார்
பணிப்பக் கேட்டு,ஞானபோ னகர்தொழுது நற்றமிழ்ச்சொல் தொடை
மாலை நவில லுற்றார். ககச

வேறு

" காரைகள் கூகை முல்லை " எனநிகழ் கலைசேர் வாய்மைச்
சீரியற் பதிகம் பாடித் திருக்கடைக் காப்புத் தன்னில்
"நாரியோர் பாகர் வைகும் நனிபள்ளி உள்கு வார்தம்
பேரிடர் கெடுதற் காணை நம"தெனும் பெருமை வைத்தார். ககரு

"காரைகள் கூகை முல்லை களவாகை ஈகை படர்தொடரி கள்ளி கவினிச்
சூரைகள் பம்மி விம்மு சுடுகா டமர்ந்த சிவன்மேய சோலை நகர்தான்

ககஉ. செழுந்தரளப் பொன்னி - செழிய முத்துக்களைக் கொழிக்கும் காவிரி.

ககா. சீறடிகள் - சிறிய திருவடிகள். போதுவதும்......அன்பு - பொருந்துவதையும் (நடப்பதையும்) பிறர் அத்திருவடிகளைத் தாங்குவதையும் சகியாத அன்பு.

ககச. பானல் - நீலோற்பலம் மிகுந்த. பணிப்ப - சொல்ல. ஞானபோனகர் - ஞான அமுதுண்ட பிள்ளையார்.

ககரு. நிகழ்கலை — வினைத்தொகை. நாரி - உமை. உள்குவார்தம் - நினைப்பவரது.

பா - ம்—*சென்றார்.

தேரைக ளாரை சாய மிதிகொள்ள வாளை குதிகொள்ள வள்ளை துவள
நாரைக ளாரல் வாரி வயன்மேதி வைகு நனிபள்ளி போலும் நமர்காள்''

"கடல்வரை ஓதம் மல்கு கழிகானல் பானல் கமழ்காழி என்று கருதப்
படுபொரு ளாறு நாலு முளதாக வைத்த பதியான ஞான முனிவன்
இடுபறை ஒன்ற அத்தர் பியன்மேலிருந்து இசையால் உரைத்தபனுவல்
நடுவிரு ளாடும்எந்தை நனிபள்ளி உள்க வினைகெடுத லாணை நமதே"

—தேவாரம்.

ஆதியார் கோயில் வாயில் அணைந்துபுக் கன்பு *கூர
நீதியால் பணிந்து போற்றி நீடிய அருள்முன் பெற்றுப்
போதுவார் தம்மைச் சூழ்ந்து பூசுரர் குழாங்கள் போற்றும்
காதல்கண் டங்க மர்ந்தார் கவுணியர் தலைவ னார்தாம். ககக

அம்பிகை அளித்த ஞானம் அகிலமும் உய்ய உண்ட
நம்பெருந் தகையார் தம்மை எதிர்கொண்டு நண்ண வேண்டி
உம்பரும் வணங்கும் மெய்ம்மை உயர்தவத் தொண்ட ரோடு
தம்பெரு விருப்பால் வந்தார் தலைசைஅந் தணர்க ளெல்லாம். ககள

காவணம் எங்கும் இட்டுக் கமுகொடு கதலி நாட்டிப்
†பூவணை தாமந் தூக்கிப் பூரண கும்பம் ஏந்தி
ஆவண வீதி எல்லாம் அலங்கரித் தண்ண லாரை
‡மாவணை மலர்மென் சோலை வளம்பதி கொண்டு புக்கார். ககஅ

திருமறை யோர்கள் சூழ்ந்து சிந்தையின் மகிழ்ச்சி பொங்கப்
பெருமறை ஓசை மல்கப் பெருந்திருக் கோயில் எய்தி
அருமறைப் பொருளா னாரைப் §பணிந்தணி நற்சங் கத்தின்
தருமுறை நெறியக் கோயில் சார்ந்தமை அருளிச் செய்தார். ககக

கறையணி கண்டர் கோயில் காதலால் பணிந்து பாடி
மறையவர் போற்ற வந்து திருவலம் புரத்து மன்னும்

---

ககக. கூர - உள்ளது சிறக்க ; "கூர்ப்புங் கழிவும் உள்ளது சிறக்கும்"— தொல்காப்பியம் : சொல். உரி. கஅ. பூசுரர் - பிராமணர்கள்.

ககள. தலைசை - திருத்தலைச்சங்காட்டு.

ககஅ. காவணம் - பந்தர். பூ அணை தாமம் - மலர்மாலை. ஆவண வீதி - அங்காடி வீதி ; கடைத் தெரு. மா - வண்டு.

ககக. சங்கத்தின்......அக்கோயில் - சங்கின் வடிவத்தைப் புலப்படுத்தும் ஒழுங்குடைய அக்கோயிலை.

கஉ0. "கொடியுடை" என்பதை முதலாகக்கொண்ட பதிகத்தைப் பாடி.

பா - ம்—*கூரும். †பூவணத். ‡மாவண. §அடிபணிந் தஞ்சொல் மாலை.

இறைவரைத் தொழுது பாடுங் "கொடியுடை" ஏத்திப் போந்து
நிறைபுனல் திருச்சாய்க் காடு தொழுதற்கு நினைந்து செல்வார். கஉ௦

"கொடியுடை மும்மதி லூடுரு வக்குனி வெஞ்சிலை வாங்கி
இடிபட வெய்த அமரர் பிரானடி யாரிசைந் தேத்தத்
துடியிடை யாளையோர் பாகமா கத்துதைந் தாரிடம் போலும்
வடிவுடை மேதி வயல்படியும் வலம்புர நன்னகரே"—தேவாரம்.

பன்னகப் பூணி னாரைப் பல்லவ னீச்ச ரத்துச்
சென்னியால் வணங்கி ஏத்தித் திருந்திசைப் பதிகம் பாடிப்
பொன்னிசூழ் புகாரில் நீடு புனிதர்தந் திருச்சாய்க் காட்டு
மன்னுசீர்த் தொண்டர் எல்லாம் மகிழ்ந்தெதிர் கொள்ளப் புக்கார்.

வானளா வுயர்ந்த வாயில் உள்வலங் கொண்டு புக்குத்
தேனலர் கொன்றை யார்தந் திருமுன்பு சென்று தாழ்ந்து
மானிடந் தரித்தார் தம்மைப் போற்றுவார் "மண்பு கார்"என்
றூனெலாம் உருக ஏத்தி உச்சிமேற் குவித்தார் செங்கை. கஉஉ

"மண்புகார் வான்புகுவர் மனமிளையார் பசியாலும்
கண்புகார் பிணியறியார் கற்றாருங் கேட்டாரும்
விண்புகார் எனவேண்டா வெண்மாட நெடுவீதித்
தண்புகார்ச் சாய்க்காட்டெந் தலைவன்தாள் சார்ந்தாரே"—தேவாரம்.

சீரினில் திகழ்ந்த பாட்டில் திருக்கடைக் காப்புப் போற்றிப்
பாரினில் பொலிந்த தொண்டர் போற்றிடப் பயில்வார் பின்னும்
ஏரிசைப் பதிகம் பாடி ஏத்திப்போந் திறைவர் வெண்கா
டாருமெய்க் காத லோடும் பணிவதற் கணைந்தா ரன்றே. கஉ௩

பொன்னிதழ்க் கொன்றை வன்னி புனல்இள மதியம் நீடு
சென்னியர் திருவெண் காட்டுத் திருத்தொண்டர் எதிரே சென்றங்

---

கஉக. பன்னகப் பூணினாரை - பாம்பாபரணராகிய சிவபெருமானை. புகாரில் - காவிரிப்பூம் பட்டினத்தில். சில பிரதிகளில் இந்த நூற்றிருபத் தோராம் பாட்டு, "பொன்னிசூழ் புகாரில் நீடு புனிதர்தந் திருச்சாய்க் காட்டு - மன்னுசீர்த் தொண்டர் எல்லாம் மகிழ்ந்தெதிர் கொள்ளப் புக்குப் - பன்னகம் பூணக் கொண்ட பரமர்தங் கோயில் வாயில்-சென்னியால் வணங்கிச் சேர்ந்தார் சிரபுரச் செம்ம லாரே"—இவ்வாறு காணப்படுகிறது.

கஉ௩. பயில்வார் - ஆங்கு எழுந்தருளியுள்ள ஞான சம்பந்தர். ஏர் - அழகிய. ஆரும் - நிறைந்த ; அமைந்த.

கஉ௪. புனல் - கங்கையும்.

பா - ம்—*பாடி இனிதமர்ந் தேத்திப்.

இன்னதன் மையர்க ளானார் எனவொணு மகிழ்ச்சி பொங்க
மன்னுசீர்ச் சண்பை யாளும் மன்னரைக் கொண்டு புக்கார். ௧௨௪

முத்தமிழ் விரகர் தாமும் முதல்வர்கோ புரத்து முன்னர்ச்
சித்தநீ டுவகை யோடுஞ் சென்றுதாழ்ந் தெழுந்து புக்குப்
பத்தராம் அடியார் சூழப் பரமர்கோ யிலைச்சூழ் வந்து
நித்தனார் தம்முன் பெய்தி நிலமுறத் தொழுது வீழ்ந்தார். ௧௨௫

மெய்ப்பொரு ளாயி னாரை வெண்காடு மேவி னாரைச்
செப்பரும் பதிக மாலை "கண்காட்டு நுதல்"முன் சேர்த்தி
முப்புரஞ் செற்றார் பாதஞ் சேருமுக் குளமும் பாடி
ஒப்பரு ஞானம் உண்டார் உளமகிழ்ந் தேத்தி வாழ்ந்தார். ௧௨௬

"கண்காட்டும் நுதலானும் கனல்காட்டுங் கையானும்
பெண்காட்டும் உருவானும் பிறைகாட்டுஞ் சடையானும்
பண்காட்டும் இசையானும் பயிர்காட்டும் புயலானும்
வெண்காட்டில் உறைவானும் விடைகாட்டுங் கொடியானே"

"பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினே டுள்ளநினை
வாயினவே வரம்பெறுவர் ஐயுறவேண் டாவொன்றும்
வேயனதோ ளுமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையார் அவர்தம்மைத் தோயாவாந் தீவினையே"—தேவாரம்.

அருமையாற் புறம்பு போந்து வணங்கிஅங் கமரு நாளில்
திருமுல்லை வாயில் எய்திச் செந்தமிழ் மாலை *சாத்தி
மருவிய பதிகள் மற்றும் வணங்குவார் மறையோர் ஏத்தத்
†தருமலி புகலி வந்து ஞானசம் பந்தர் சார்ந்தார். ௧௨௭

தோணிவீற் றிருந்தார் தம்மைத் தொழுதுமுன் நின்று தூய
ஆணியாம் பதிகம் பாடி அருட்பெரு வாழ்வு கூரச்
சேணுயர் மாடம் ஓங்குந் திருப்பதி யதனிற் செய்ய
வேணியார் தம்மை நாளும் போற்றிய விருப்பின் மிக்கார். ௧௨௮

௧௨௫. முத்தமிழ் விரகர் - திருஞான சம்பந்தர்; முத்தமிழ்-இயல் இசை நாடகம்.

௧௨௬. முக்குளம் - சோமன் சூரியன் அக்கினி என்னும் மூன்றன் வடிவாயுள்ள மூன்று குளம். பரம சிவனுடைய திரிநேத்திரம் - சோம சூரியாக்கினி. இத்திரிநேத்திரத்தினின்றும் தோன்றித் துளி வடிவாகிய முக்குளம் என்னலு மொன்று.

௧௨௭. திருமுல்லை வாயிலென்றது தென் திருமுல்லை வாயிலை; இது சோழ நாட்டிலுள்ளது. தருமலி புகலி - மரங்கள் நிறைந்த சீர்காழிக்கு.

௧௨௮. சேண் உயர் - வானளாவிய.

பா - ம்—*சேர்த்தி. †திரு.

வைகும்அந் நாளிற் கீழ்பால் மயேந்திரப் பள்ளி வாசம்
செய்பொழிற் குருகா வூருந் திருமுல்லை வாயில் உள்ளிட்
டெய்திய பதிகள் எல்லாம் இன்புற இறைஞ்சி ஏத்தித்
தையலாள் பாகர் தம்மைப் பாடினார் தமிழ்ச்சொல் மாலை. கஉகூ

அவ்வகை மருங்கு சூழ்ந்த பதிகளில் அரனார் பொற்றாள்
மெய்வகை ஞானம் உண்ட வேதியர் விரவிப் போற்றி
உய்வகை மண்ணு ளோருக் குதவிய பதிகம் பாடி
எவ்வகை யோரும் ஏத்த இறைவரை ஏத்து நாளில். கங0

வேறு

திருநீல கண்டத்துப் பெரும்பாணர் தெள்ளமுதின்
வருநீர்மை இசைப்பாட்டு மதங்கசூ ளாமணியார்
†ஒருநீர்மை யுடன்உடைய பிள்ளையார் கழல்வணங்கத்
தருநீர்மை யாழ்கொண்டு சண்பையிலே வந்தணைந்தார். கஙக

பெரும்பாணர் வரவறிந்து பிள்ளையார் எதிர்கொள்ளச்
சுரும்பார்செங் கமலமலர்த் துணைப்பாதந் தொழுதெழுந்து
விரும்பார்வத் தொடும்ஏத்தி மெய்ம்மொழிக ளால்துதித்து
வரும்பான்மை தருவாழ்வு வந்தெய்த மகிழ்சிறந்தார். கஙஉ

அளவிலா மகிழ்ச்சியினார் தமைநோக்கி "ஐயர்நீர்
உளமகிழ இங்கணைந்த உறுதியுடை யோம்"என்றே
இளநிலா நகைமுகிழ்ப்ப இசைத்தவரை யுடன்கொண்டு
களநிலவு நஞ்சணிந்தார் பாலணையுங் கவுணியனார். கஙங

கோயிலினிற் புறமுன்றிற் கொடுபுக்குக் கும்பிடுவித்
"தேயும்இசை யாழ்உங்கள் இறைவருக்கிங் கியற்றும்"என

---

கங0. விரவி - அடைந்து.

கஙக. தெள்ளமுதென வரும் தன்மையுடைய இசைப்பாட்டு. திருநீல கண்டப் பெரும்பாணர் தம்மனைவியாராகிய மதங்க சூளாமணியாருடன். ஒரு நெறியில் மனங் கொண்டுள்ள ஆளுடைய பிள்ளையார். இசைதரும் இயல்புடைய யாழ். கஙஉ. சுரும்பு ஆர் - வண்டுகள் ஒலிக்கும்.

கஙங. ஐயர் - ஐயரே ; யாழ்ப்பாணரைப் பிள்ளையார் இவ்வாறு விளித்தல் பின்னுங் காண்க. முகிழ்ப்ப - மலர ; காட்ட. கண்டத்தில் நஞ்சணிந்த சிவ பெருமான்.

பா - ம்—*எய்தும். †பெருநீர்மை (பேரொளி) உடனுடைய.

ஆயபுகழ்ப் பிள்ளையார் அருள்பெற்ற அதற்கிறைஞ்சி
மேயதொடைத் தந்திரியாழ் வீக்கிஇசை விரிக்கின்றார். கஙச

தானநிலைக் கோல்வடித்துப் படிமுறைமைத் தகுதியினால்
ஆனஇசை ஆராய்வுற் றங்கணர்தம் பாணியினை
மானமுறைப் பாடினியா ருடன்பாடி வாசிக்க
ஞானபோ னகர்மகிழ்ந்தார் நான்மறையோர் அதிசயித்தார். கஙரு

யாழில்எழும் ஓசையுடன் இருவர்மிடற் றிசைஒன்றி
வாழிதிருத் தோணியுளார் மருங்கணையும் மாட்சியினைத்
தாழும்இரு சிறைப்பறவை படிந்ததனி விசும்பிடைநின்
றேழிசைநூற் கந்தருவர் விஞ்சையரும் எடுத்திசைத்தார். கஙசு

எண்ணருஞ்சீர்த் திருத்தோணி எம்பெருமான் கழல்பரவிப்
பண்ணமையாழ் இசைகூடப் பெரும்பாணர் பாடியபின்
கண்ணுதலார் அருளினாற் காழியர்கோன் கொடுபோந்து
நண்ணியுறை விடஞ்சமைத்து நல்விருந்து சிறந்தளிப்ப. கஙஎ

பிள்ளையார் அருள்பெற்ற பெரும்பாணர் பிறையணிந்த
வெள்ளநீர்ச் சடையாரை அவர்மொழிந்த *மெய்ப்பதிகம்

---

கஙச. ஏயும் - பொருந்தும்; ஒக்கும். மேய தொடைத் தந்திரியாழ் வீக்கி - பொருந்திய நரம்புத் தந்திகளையுடைய யாழ் உறுப்புக்களை முறுக்கி.

கஙரு. தானநிலை - வலிவு, மெலிவு, சமன் என்பன. கோல் - யாழ் வாசிக்குங் கருவியை. வடித்து - வசப்படுத்தி. படி - பொருந்தும். அங்கணர்தம் பாணியினை - சிவபிரான் திருப்பாட்டை. மானமுறை - அளவு முறையில் வல்ல.

கஙசு. மிடறு - கண்டம். "சீறியாழ் - நரம்பு மீதிற வாதுடன் புணர்ந் தொன்றிக் - கடவதறிந்த இன்குரல் விறலியர்"—மலைபடுகடாம் : ருசு-நகூ. "இருங்கடற் பவளச் செவ்வாய் திறந்தவள் பாடினாளோ - நரம்பொடு வீணை நாவில் நவின்றதோ என்று நைந்தார்" "வீணைச் சுகிர்புரி நரம்பு நம்பி - ஊழ் மணி மிடறும் ஒன்றாய்ப் பணிசெய்த வாறு"—சிந்தாமணி சருஅ; எஉஅ. அவ் விருவர் யாழிசையும் மிடற்றிசையும் ஒன்றித் தோணியப்பரிடம் அணையும் மாட்சியைப் பார்த்து......பறவைகள் இசையில் மூழ்கின; கந்தருவரும் வித்தியாதரர்களும் போற்றிக் கூறினார்கள். இரு சிறைப் பறவை - கின்னரமிதுனங்கள்; இவை ஆணும் பெண்ணுமாக உள்ளன; பாடும் வாய்ப்புடையன; "பாடுகின்றன கின்னர மிதுனங்கள் பாராய்"—கம்ப இராமாயணம் : சித்திரகூடப் படலம் கஉ. கஙஅ. அவர் - பிள்ளையார்.

பா - ம்—*திருப்.

உள்ளபடி கேட்டலுமே உருகுபெரு மகிழ்ச்சியராய்த்
தெள்ளமிர்தம் அருந்தினர்போல் சிந்தை*களிப் புறத்தொழுதார்.

காழியார் தவப்பயனாங் கவுணியர்தந் தோன்றலார்
ஆழிவிடம் உண்டவர்தம் அடிபோற்றும் பதிகஇசை
யாழின்முறை மையின்இட்டே எவ்வுயிரும் மகிழ்வித்தார்
ஏழிசையும் பணிகொண்ட நீலகண்ட யாழ்ப்பாணர். கருகூ

சிறியமறைக் களிறளித்த திருப்பதிக இசையாழின்
நெறியிலிடும் பெரும்பாணர் பின்னும்''நீர் அருள்செய்யும்
அறிவரிய திருப்பதிக இசையாழில் இட்டடியேன்
பிறிவின்றிச் சேவிக்கப் பெறவேண்டும்'' எனத்தொழுதார். கசo

மற்றதற்குப் பிள்ளையார் மனமகிழ்வுற் றிசைந்தருளப்
பெற்றவர்தாம் ''தம்பிரான் அருளிதுவே'' எனப்பேணிச்
சொற்றமிழ்மா லையின்இசைகள் சுருதியாழ் முறைதொடுத்தே
அற்றைநாட் போல்என்றும் அகலாநண் புடன்அமர்ந்தார். கசக

சிரபுரத்தில் அமர்ந்தருளுந் திருஞான சம்பந்தர்
பரவுதிருத் தில்லைநடம் பயில்வாரைப் பணிந்தேத்த
விரவிஎழும் பெருங்காதல் வெள்ளத்தை உள்ளத்தில்
தரஇசையுங் குறிப்பறியத் தவமுனிவர்க் கருள்செய்தார். கசஉ

பிள்ளையார் †அருள்செய்யப் பெருந்தவத்தால் பெற்றெடுத்த
வள்ளலார் தாமும்உடன் செல்வதற்கு மனங்களிப்ப
வெள்ளிமால் வரைஎன்னத் திருத்தோணி வீற்றிருந்த
புள்ளிமான் உரியாரைத் தொழுதருளாற் புறப்பட்டார். கசங

தாவில்யாழ்ப் பாணரொடுந் தாதையார் தம்மோடும்
மேவியசீர் அடியார்கள் புடைவரவெங் குருவேந்தர்

---

கருகூ. ஆழி - கடல். ஆனாய நாயனார் புராணம் பார்க்க.
கசo. சிறிய மறைக்களிறு - திருஞான சம்பந்தர்.
கசக. பெற்றவர்தாம் - யாழ்ப்பாணர். தம்பிரான் - சிவபிரான்.
கசஉ. விரவி - கலந்து. உள்ளத்தில் தர - மனதில் திருவருள் உண்டாக்க. இசையும் - சம்மதிக்கும். தவமுனிவர்க்கு - சிவபாத விருதயர்க்கு.
கசங. வெள்ளிமால் வரை என்ன - கயிலையைப்போல.

பா - ம்—*களியுறத். †உரை.

பூவின்மேல் அயன்போற்றும் புகலியினைக் கடந்துபோய்த்
தேவர்கள்தம் பெருந்தேவர் திருத்தில்லை வழிச்செல்வார். ௧௪௪

வேறு

நள்ளி ருட்கண்நின் றாடுவார் உறைபதி நடுவுகண் டனபோற்றி
முள்ளு டைப்புற வெள்ளிதழ் கேதகை முகிழ்விரி மணஞ்சூழப்
புள்ளு டைத்தடம் பழனமும் படுகரும் புடைகழிந் திடப்போந்து
கொள்ளி டத்திரு நதிக்கரை அணைந்தனர் கவுணியர் குலதீபர். ௧௪௫

வண்டி ரைத்தெழு செழுமலர்ப் பிறங்கலும் மணியும்ஆ ரமும்உந்தித்
தண்ட லைப்பல வளத்தொடும் வருபுனல் தாழ்ந்துசே வடிதாழத்
தெண்டி ரைக்கடற் பவளமும் பணிலமும் செழுமணித் திரள்முத்தும்
கொண்டி ரட்டி*வந் தோதமங் கெதிர்கொளக் கொள்ளிடங் கடந்தேறி.

பல்கு தொண்டர்தங் குழாத்தொடும் உடன்வரும் பயின்மறை யவர்சூழச்
செல்க திப்பயன் காண்பவர் போற்களி சிறந்தைகூர் தரக்கண்டு
மல்கு தேவரே முதலனைத் துயிர்களும் வணங்கவேண் டினவெல்லாம்
நல்கு தில்லைசூழ் திருஎல்லை பணிந்தனர் ஞானஆ ரமுதுண்டார்.

செங்கண் ஏற்றவர் தில்லையே நோக்கித் திருந்துல கினிற்கெல்லாம்
மங்க லந்தரு மழவிளம் போதகம் வரும்இரு மருங்கெங்கும்

---

௧௪௪. தாவில் - கெடுதலில்லாத. "ஏடுடைய மலரான் முனைநாட் பணி தேத்த அருள்செய்த பீடுடைய பிரமாபுரம்......"—திருஞான சம்பந்தர்: திருப் பிரமபுரம். ௧.

௧௪௫. நள்ளிருட்கண் நின்று ஆடுவார் - நடராசர்; விளக்கம் - திருநாவுக்கரசு சுவாமிகள் புராணம்: ௧௧௧ குறிப்புப் பார்க்க. உறைபதி நடுவு கண்டன போற்றி-வீற்றிருந்தருளும் பதிகளாகிய இடையிலுள்ளனவற்றைப் போற்றி. கேதகைமுகிழ் - தாழம்பூ. புள்......போந்து - பறவைகளை யுடைய தடாகங்களும், வயல்களும், வழிகளும் இருபக்கமும் கழியச் சென்று.

௧௪௬. மலர்ப் பிறங்கலும் - மலர் மலையையும். மணியும் - முத்தையும். ஆரமும் - சந்தனத்தையும். உந்தி - கொழித்து. தண்டலை - சோலைகளின் தெண்திரை - தெள்ளிய அலைகளையுடைய. பணிலமும் - சங்குகளையும். செழு மணித்திரள் - இரத்தினத் தொகுதிகளையும். இரட்டி வந்து ஓதம் - ஒலித்து வந்து கடல் வாய் வெள்ளம்.

௧௪௭. பல்கு - பெருகிய. மல்கு - நிறைந்த. நல்கு - கொடுக்கும். ஆர் பெறுதற்கரிய.

பா - ம்—*உந்தோதம்.

தங்கு புள்ளொலி வாழ்த்துரை எடுத்துமுன் தாமரை மதுவாசப்
பொங்கு செம்முகை கரங்குவித் தலர்முகங் காட்டின புனற்பொய்கை.

கலவ மென்மயி லினங்களித் தழைத்திடக் கடிமணக் குளிர்கால்வந்
துலவி முன்பணிந் தெதிர்கொளக் கிளர்ந்தெழுந் துடன்வருஞ் சுரும்பார்ப்ப
இலகு செந்தளிர் *ஒளிநிறந் திகழ்தர இருகுழை புடையாட
மலர்மு கம்பொலிந் தசையமென் கொம்பர்நின் றாடுவ மலர்ச்சோலை.

இழைத்த டங்கொங்கை இமயமா மலைக்கொடி இன்னமு தெனஞானம்
குழைத்த ளித்திட அமுதுசெய் தருளிய குருளையார் வரக்கண்டு
மழைத்த மந்தமா ருதத்தினால் நறுமலர் வண்ணநுண் துகள்தூவித்
தழைத்த பொங்கெழில் முகஞ்செய்து வணங்கின தடம்பணை வயற்சாலி.

ஞாலம் உய்ந்திட ஞானமுண் டவர்எழுந் தருளும்அந் நலங்கண்டு
சேல லம்புதண் புனற்றடம் படிந்தணை சீதமா ருதம்வீசச்
சால வும்பல கண்பெறும் பயன்பெறுந் தன்மையிற் களிகூர்வ
போல சைந்திரு புடைமிடைந் தாடின புறம்பணை †நறும்பூகம். ௧௫௧

பவந்த விர்ப்பவர் தில்லைசூழ் ‡எல்லையில் மறையவர் பயில்வேள்விச்
சிவந்த ரும்பய னுடையஆ குதிகளின் செழும்புகைப் பரப்பாலே

---

௧௪௮. செங்கண் ஏற்றவர் - சிவபெருமானது. மழ இளம் போதகம் - மிக இளங்களிறாகிய திருஞான சம்பந்தர். நீர்ப் பொய்கைகள் பறவை யொலியால் வாழ்த்தி, தாமரை முகையாகிய கையைக் குவித்து, மலர் முகங் காட்டின.

௧௪௯. மலர்ச் சோலைகள்......நின்றாடுவன. கலவம் - தோகையையுடைய. கடிமணக் குளிர்கால் - புது மணமுடைய தென்றல் காற்று. கிளர்ந்து எழுந்து- நெருங்கி எழுந்து. சுரும்பு ஆர்ப்ப - வண்டுகள் ஆரவாரிக்க. இலகு - விளங்கும். இரு குழை - பெரிய தழைகள். புடை - பக்கத்தே. பெண்களுக்காம் போது:—கலவம் - ஓர் அணி. சுரும்பு - வளையல். செந்தளிர் ஒளிநிறம் - செந்தளிர்மேனி. இரு குழை - இரண்டு குண்டலங்கள். மலர் முகம் - தாமரை முகம். கொம்பர் - பெண்.

௧௫௦. இழை - ஆபரணமணிந்த. தடம் - பெரிய. குருளையர் - சிங்கக் குட்டி போன்ற திருஞான சம்பந்தர். தடம் பணை வயற்சாலி - அகன்ற மருத நிலத்து வயல்களிலுள்ள நெற் பயிர்கள். மழைத்த மந்தமாருதத்தினால் - குளிர்ந்த தென்றலால். வண்ணம் - அழகிய. எழில் முகம் - அழகிய முகம்.

௧௫௧. சேல் அலம்பு - சேல் மீன்கள் கலக்கும். பூகம் - கமுகுகள். மிடைந்து - நெருங்கி. பூகக் கண்ணுவது வரை.

௧௫௨. பவம் - பிறவி. சிவம் - நன்மையை. நிவந்த - உயர்ந்த. நீல நுண்துகில் - நீல நிறமுடைய நுண்ணிய புடவையால். விதானித்தது - மேற்

பா - ம்—*வளரொளி சிறந்திட; மொய்யொளி சிறந்திட; மெய்யொளி. †நெடும். ‡எல்லையிற் பயின்மறை யவர் வேள்விச், எல்லை யில்மறை மலர்வேள்விச்.

தவந்த ழைப்பவந் தருளிய பிள்ளையார் தாமணை வுறமுன்னே
நிவந்த நீலநுண் துகில்விதா னித்தது போன்றது நெடுவானம். ௧௫௨

கரும்பு செந்நெல்பைங் கமுகொடு கலந்துயர் கழனியம் பணைநீங்கி
அரும்பு மென்மலர் தளிர்பல மூலமென் றனைத்தின்ஆ கரமான
மருங்கில் நந்தன வனம்பணிந் தணைந்தனர் மாடமா ளிகையோங்கி
நெருங்கு தில்லைசூழ் நெடுமதில் தென்திரு வாயில்நே ரணித்தாக.

"போங்கு கொங்கையிற் கறந்தமெய்ஞ் ஞானமாம் போனகம் பொற்குன்ற
மங்கை செங்கையால் ஊட்டஉண் டருளிய மதலையார் வந்தார்" என்
றங்கண் வாழ்பெருந் *திருத்தில்லை அந்தணர் அன்பர்க ளுடன்ஈண்டி
எங்கு மங்கல அணிமிக அலங்கரித் தெதிர்கொள அணைவார்கள்.

வேத நாதமும் மங்கல முழக்கமும் விசும்பிடை நிறைந்தோங்கச்
சீத வாசநீர் நிறைகுடந் தீபங்கள் திசைஎலா நிறைந்தாரச்
சோதி மாமணி வாயிலின் புறஞ்சென்று சோபன ஆக்கமுஞ் சொல்லிக்
கோதி லாதவர் ஞானசம் பந்தரை எதிர்கொண்டு கொடுபுக்கார். ௧௫௫

செல்வம் மல்கிய தில்லைமூ தூரினில் தென்திசைத் திருவாயில்
எல்லை நீங்கியுள் புகுந்திரு மருங்குநின் றெடுக்கும்வத் தொலிசூழ
மல்லல் ஆவண மறுகிடைக் கழிந்துபோய் மறையவர் நிறைவாழ்க்கைத்
தொல்லை மாளிகை நிரைத்திரு வீதியைத் தொழுதணைந் தனர்தூயோர்.

மலர்ந்த பேரொளி குளிர்தரச் சிவமணங் கமழ்ந்துவான் துகள்மாறிச்
சிலம்ப லம்பு†சே வடியவர் பயில்வுறுஞ் செம்மையால் திருத்தொண்டு
கலந்த அன்பர்தஞ் சிந்தையில் திகழ்திரு வீதிகண் களிசெய்யப்
‡பலன்கொள் மைந்தனார் எழுநிலைக் கோபுரம் பணிந்தெழுந் தனர்போற்றி.

---

கட்டிவிட்டது. "அந்தரத்தை நீலத்தால் விதானமாக்கி"—வில்லி **பாரதம் :** அர்ச்சுனன் தீர்த்தயாத்திரை. ௫௧.

௧௫௩. கழனியம்பணை - கழனிகளையுடைய மருத நிலத்தை. பலம் மூலம் - பழங்களும், கிழங்குகளும். என்று அனைத்தின் ஆகரமான - என்று சொல்லப்பட்ட எல்லாவற்றிற்கும் பிறப்பிடமான.

௧௫௪. போனகம் - அமுதை. பொற்குன்ற மங்கை - இமயமலை ஈன்ற உமையம்மையார்.

௧௫௫. சோபன ஆக்கம் - சோபன ஆசிகள்; நன்மொழிகள்.

௧௫௬. மல்லல் ஆவண மறுகு - வளப்பமுடைய கடைத்தெரு. தொல்லை - பழைய. நிரை - வரிசைகளையுடைய.

௧௫௭. வான் - மிகுந்த. அலம்பு - ஒலிக்கும். சேவடியவர் - நடராசப் பெருமான். பயில்வுறும் - திருக்கூத்தாடும். சிந்தையில் - சிந்தைபோல.

பா - ம்—*தில்லைவாழ். †மென் சேவடி. ‡புலன்கொள்.

நீடு நீள்நிலைக் கோபுரத் துள்புக்கு நிலவிய திருமுன்றின்
மாடு செம்பொனின் மாளிகை வலங்கொண்டு வானுற வளர்திங்கள்
சூடு கின்றபே ரம்பலந் தொழுதுபோந் தருமறை தொடர்ந்தேத்த
ஆடு கின்றவர் முன்புற அணைந்தனர் அணிகிளர் மணிவாயில். கருஅ

நந்தி எம்பிரான் முதற்கண நாதர்கள் நலங்கொள்பன் முறைகூட
அந்த மில்லவர் அணுகிமுன் தொழுதிரு அணுக்கனுந் திருவாயில்
சிந்தை ஆர்வமும் பெருகிடச் சென்னியிற் *சிறியசெங் கையேற
உய்ந்து வாழ்திரு நயனங்கள் களிகொள உருகும்அன் பொடுபுக்கார்.

அண்ண லார்தமக் களித்தமெய்ஞ் ஞானமே யானஅம் பலமுந்தம்
உண்ணி றைந்தஞா னத்தெழும் ஆனந்த ஒருபெருந் தனிக்கூத்தும்
கண்ணின் முன்புறக் கண்டுகும் பிட்டெழுங் களிப்பொடுங் கடற்காழிப்
புண்ணி யக்கொழுந் தனையவர் போற்றுவார் †புனிதரா டியபொற்பு.

‡"உணர்வின் நேர்பெற வருஞ்சிவ போகத்தை ஒழிவின்றி உருவின்கண்
அணையும் ஐம்பொறி அளவினும் எளிவர அருளினை" எனப்போற்றி
இணையில் வண்பெருங் கருணையே ஏத்திமுன் எடுத்தசொற் பதிகத்தில்
புணரும் இன்னிசை பாடினர் ஆடினர் பொழிந்தனர் விழிமாரி. கககக

வேறு

ஊழி முதல்வர்க் குரிமைத் தொழில்சிறப்பால்
வாழி திருத் தில்லைவாழ் அந்தணரை முன்வைத்தே
ஏழிசையும் ஓங்க எடுத்தார் எமையாளும்
காழியர்தங் காவலனார் "கற்றாங் கெரியோம்பி" ககஉ

" கற்றாங் கெரியோம்பிக் கலியை வாராமே
செற்றார் வாழ்தில்லைச் சிற்றம் பலம்மேய

தமது (சம்பந்தரது) கண்களை மகிழச் செய்ய. பலன் - பயன். மைந்தனார் - ஆளுடைய பிள்ளையார்.

கருஅ. நிலவிய திருமுன்றின் மாடு-விளங்கிய திருமுற்றத்தின் அருகே. **தடுத்தாட் கொண்ட புராணம்:** பாட்டு கO௪; **திருநாவுக்கரசு சுவாமிகள் புராணம்:** பாட்டு ககரு பார்க்க.

கருகூ. அந்தமில்லவர் - அமரர்கள்; தேவர்கள்.

ககO. சிவஞானமும், அதனால் விளையும் சிவானந்தமும் ஈண்டுப் புறத்தே முறையே அம்பலமும், அதில் புரியுங் கூத்தும் என்று கூறப்பட்டிருத்தல் காண்க. புனிதராகிய நடராசர் ஆடிய அழகை.

கககக. உரு......எளிவர - உடலிலுள்ள ஐம்பொறி அளவிலும் எளிதாகப் பெற. மெய்யுணர்வில் நுகருஞ் சிவபோகத்தை ஐம்பொறி வாயிலாகவும் நுகர அருளினை என்றபடி. **தடுத்தாட் கொண்ட புராணம்:** பாட்டு. கOகூ. பார்க்க.

ககஉ. ஊழி முதல்வர்க்கு - நடராசப் பெருமானுக்கு.

பா - ம் *சிறுச்செய்ய கையேற. †புனிதனாடிய. ‡உணர்வு.

முற்று வெண்திங்கள் முதல்வன் பாதமே
பற்று நின்றாரைப் பற்றா பாவமே"

"செல்வ நெடுமாடஞ் சென்று சேணோங்கிச்
செல்வ மதிதோயச் செல்வம் உயர்கின்ற
செல்வர் வாழ்தில்லைச் சிற்றம் பலம்மேய
செல்வன் கழலேத்துஞ் செல்வஞ் செல்வமே"—தேவாரம்.

பண்ணார் பதிகத் திருக்கடைக்காப் புப்பரவி
உண்ணாடும் என்பும் உயிருங் கரைந்துருக்கும்
விண்ணா யகன்கூத்து *வெட்டவெளி யேதிளைத்துக்
கண்ணா ரமுதுண்டார் காலம் பெறஅழுதார். கசுங

முன்மால் அயன்அறியா மூர்த்தியார் முன்னின்று
சொன்மாலை யாற்காலம் எல்லாந் துதித்திறைஞ்சிப்
பன்மா மறைவெள்ளஞ் சூழ்ந்து பரவுகின்ற
பொன்மா ளிகையைவலங் கொண்டு புறம்போந்தார். கசுச

செல்வத் திருமுன்றில் தாழ்ந்தெழுந்து தேவர்குழாம்
மல்குந் திருவாயில் வந்திறைஞ்சி மாதவங்கள்
நல்குந் திருவீதி நான்குந் தொழுதங்கண்
அல்குந் திறம்அஞ்சு வார்சண்பை ஆண்டகையார். கசுரு

செய்ய சடையார் திருவேட் களஞ்சென்று
கைதொழுது சொற்பதிகம் பாடிக் கழுமலக்கோன்
வைகி அருளுமிடம் அங்காக மன்றாடும்
ஐயன் திருக்கூத்துக் கும்பிட் டணைவுறுநாள். கசுசு

கைம்மான் மறியார் கழிப்பாலை யுள்ளணைந்து
மெய்ம்மாலைச் சொற்பதிகம் பாடி விரைக்கொன்றைச்

---

கசுங. கூத்தை மிக வெளியே கண்டு; கூத்தாகிய ஆனந்தத்தைத் திருச்சிற்றம்பலத்தின் (இதய கமலத்தின்) வாயிலாக நுகர்ந்து இடையீடின்றி மூழ்கி. காலம் பெற - உரிய காலத்தில் ஞானம் பெற.

கசுரு. மாதவங்கள் நல்கும் - அடைந்தவர்க்கு மாதவங்களைக் கொடுக்கும். அங்கண் - அவ்விடத்தில். அல்கும் திறம் - தங்குவதற்கு. தில்லை தொழுதற்குரிய தன்றித் தங்குதற்குரியதன்று என்று பிள்ளையார் கருதினார்போலும்.

கசுசு. திருவேட்களத்தைத் தங்குமிடமாகக் கொண்டு சிதம்பர தரிசனஞ் செய்து போவார்.

பா - ம்—*வென்ன.

செம்மாலை வேணித் திருவுச்சி மேவியுறை
அம்மானைக் கும்பிட் டருந்தமிழும் பாடினார். ௧௬௭

பாடும் பதிகஇசை யாழ்ப்பாண ரும்பயிற்றி
நாடுஞ் சிறப்பெய்த நாளுநடம் போற்றுவார்
நீடுந் திருத்தில்லை அந்தணர்கள் நீள்மன்றுள்
ஆடுங் கழற்கணுக்க ராம்பே றதிசயிப்பார். ௧௬௮

ஆங்கவர்தஞ் சீலத் தளவின் மையுநினைந்தே
ஓங்கி எழுங்காதல் ஒழியாத உள்ளத்தார்
தேங்கமழுஞ் சோலைத் திருவேட் களங்கடந்து
பூங்கிடங்கு சூழ்புலியூர்ப் புக்கணையும் போழ்தின்கண். ௧௬௯

அண்டத் திறைவர் அருளால் அணிதில்லை
முண்டத் திருநீற்று மூவா யிரவர்களும்
தொண்டத் தகைமைக் கணநாத ராய்த்தோன்றக்
கண்டப் பரிசுபெரும் பாணர்க்குங் காட்டினார். ௧௭௦

செல்வம் பிறிவறியாத் தில்லைவாழ் அந்தணரும்
எல்லையில்சீர்ச் சண்பை இளவே றெழுந்தருளி
ஒல்லை இறைஞ்சாமுன் தாமும் உடன்இறைஞ்சி
மல்லல் அணிவீதி மருங்கணைய வந்தார்கள். ௧௭௧

போங்கி எழுங்காதல் புலனுகப் பூசுரர்தம்
சிங்கம் அனையார் திருமுடியின் மேற்†குவித்த
பங்கயத்தின் செவ்வி பழித்து வனப்போங்கும்
செங்கை யொடுஞ்சென்று திருவாயி லுட்புக்கார். ௧௭௨

---

௧௬௭. விரை......அம்மானை - வாசனை பொருந்திய கொன்றையாகிய அழகிய மாலையானது சடையுடைய திருமுடியில் பொருந்தி விளங்கும் சிவபெருமானை. ௧௬௮. பயிற்றி - யாழில்விட்டு வாசித்து. எவரும் நாடும்.

௧௬௯. தேன் - பூமணம். பூங்கிடங்கு - பூக்கள் நிறைந்த அகழி. புலியூர் - சிதம்பரம்.

௧௭0. முண்டம் - நெற்றியில். தொண்டின் தன்மை பூண்ட. அப்பரிசு - அத்தன்மையை.

௧௭௧. திருவருட் செல்வத்தினின்றும் பிரிதலை அறியாத. ஒல்லை - விரைந்து ; உடனே. மல்லல் - வளப்பமுடைய.

௧௭௨. பூசுரர்தம் சிங்கம் அனையார் - பிராமணர்களில் சிங்கம் போன்றவராகிய ஆளுடைய பிள்ளையார். பங்கயத்தின் செவ்வி பழித்து - தாமரையின் அழகை இகழ்ந்து. வனப்பு - அழகு.

பா - ம்—*ஓவாத. †குவித்து.

ஒன்றிய சிந்தை உருக உயர்மேருக்
குன்றனைய பேரம் பலமருங்கு கும்பிட்டு
மன்றுள் நிறைந்தாடும் மாணிக்கக் கூத்தர்எதிர்
சென்றணைந்து தாழ்ந்தார் திருக்களிற் றுப்படிக்கீழ் ௧௭௩

வேறு

"ஆடி னாய்நறு நெய்யொடு பால்தயிர்" என்றெடுத் தார்வத்தால்
பாடி னார்பின்னும் அப்பதி கத்தினிற் பரவிய பாட்டொன்றில்
நீடு வாழ்தில்லை நான்மறை யோர்தமைக் கண்டஅந் நிலைஎல்லாம்
கூடு மாறுகோத் "தவர்தொழு தேத்துசிற் றம்பலம்" எனக்கூறி. ௧௭௪

"ஆடி னாய்நறு நெய்யொடு பால்தயிர் அந்தணர்பிரி யாதசிற் றம்பலம்
நாடி னாயிட மாநறுங் கொன்றை நயந்தவனே
பாடி னாய்மறை யோடுபல் கீதமும் பல்சடைப்பனி சால்கதிர் வெண்திங்கள்
சூடி னாய்அரு ளாய்சுருங்க எம்தொல்வினையே"

"நீலத் தார்கரி யமிடற் றார்நல்ல நெற்றிமே லுற்ற கண்ணினார் பற்று
சூலத் தார்சுட லைப்பொடி நீறணி வார்சடையார்
சீலத் தார்தொழு தேத்துசிற் றம்பலஞ்சேர்த லாற்கழற் சேவடி கைதொழக்
கோலத் தாயரு ளாயுள காரணங் கூறுதுமே"—தேவாரம்.

இன்ன தன்மையில் இன்னிசைப் பதிகமுந் திருக்கடைக் காப்பேத்தி
மன்னும் ஆனந்த வெள்ளத்தில் திளைத்தெதிர் வந்துமுன் நின்றாடும்
*பின்னு வார்சடைக் கூத்தர்பே ரருள்பெறப் பிரியாத விடைபெற்றுப்
பொன்னின் அம்பலஞ் சூழ்ந்துதாழ்ந் தெழுந்துபோந் தணைந்தனர் புறமுன்றில்.

அப்பு றத்திடை வணங்கிஅங் கருளுடன் அணிமணித் திருவாயில்
பொற்பு றத்தொழு தெழுந்துடன் போதரப் போற்றிய புகழ்ப்பாணர்
நற்ப தந்தொழு "தடியனேன் பதிமுதல் நதிநிவாக் கரைமேய
ஒப்பில் தானங்கள் பணிந்திட வேண்டும்"என் றுரைசெயஅதுநேர்வார்.

போங்கு தெண்திரைப் புனிதநீர் நிவாக்கரைக் குடதிசை மிசைப்போந்து
தங்கு தந்தையா ருடன்பரி சனங்களுந் தவமுனி வருஞ்செல்லச்

---

௧௭௩. திருக்களிற்றுப்படி - தடுத்தாட்கொண்ட புராணம் : பாட்டு. ௧௦௫. குறிப்புப் பார்க்க.

௧௭௬. அடியனேன்......தானங்கள் - அடியேனது பதி (திரு எருக்கத் தம்புலியூர்) முதல் நிவா நதிக்கரையிலுள்ள ஒப்பற்ற திருப்பதிகளை. அது நேர்வார் - அதற்கு உடன்பட்டார்.

பா - ம்—*மின்னு.

செங்கை யாழ்த்திரு நீலகண் டப்பெரும் பாணனு ருடன்சேர
மங்கை யார்புகழ் மதங்களு ளாமணி யாருடன் வரவந்தார். கஎஎ

இருந்த டங்களும் பழனமும் கடந்துபோய் எருக்கத்தம் புலியூரின்
மருங்கு சென்றுற நீலகண் டப்பெரும் பாணனார் வணங்கிக்"கார்
நெருங்கு சோலைசூழ் இப்பதி அடியனேன் பதி"என நெடிதின்புற்
றருங்க லைச்சிறு மழஇளங் களிறனார் அங்கணை ந் தருள்செய்வார்.

"ஐயர் நீர்அவ தரித்திட இப்பதி அளவில்மா தவம்முன்பு
செய்த வா"றெனச் சிறப்புரைத் தருளிஅச் செழும்பதி இடங்கொண்ட
மைகொள் கண்டர்தங் கோயிலி னுட்புக்கு வலங்கொண்டு வணங்கிப்பார்
உய்ய வந்தவர் செழுந்தமிழ்ப் பதிகம்அங் கிசையுடன் உரைசெய்தார்.

அங்கு நின்றெழுந் தருளிமற் றவருடன் அம்பொன்மா மலை வல்லி, பங்கர் தாம்இனி துறையுநற் பதிபல பரிவொடும் பணிந்தேத் தித், துங்க வண்தமிழ்த் தொடைமலர் பாடிப்போய்த் தொல்லைவெங் குருவேந்தர், செங்க ணேற்றவர் திருமுது *குன்றினைத் தொழுது சென் றணைகின்றார். கஅ௦

"மொய்கொள் மாமணி கொழித்துமுத் தாறுசூழ் முதுகுன்றை அடைவோம்"என், றெய்து சொன்மலர் மாலைவண் பதிகத்தை இசை யொடும் புனைந்தேத்திச், †செய்த வத்திரு முனிவரும் தேவரும் திசை யெலாம் நெருங்கப்புக், கையர் சேவடி பணியும்அப் பொருப்பினில் ஆதர வுடன்சென்றார். கஅக

"மத்தாவரை நிறுவிக்கடல் கடைந்தவ்விடம் உண்ட
தொத்தார்தரு மணிநீள்முடிச் சுடர்வண்ணன திடமாம்
கொத்தார்மலர் குளிர்சந்தகில் ஒளிர்குங்குமங் கொண்டு
முத்தாறுவந் தடிவீழ்தரு முதுகுன்றடை வோமே"—தேவாரம்.

வான நாயகர் திருமுது குன்றினை வழிபட வலங்கொள்வார்
தூந றுந்தமிழ்ச் சொல்விருக் குக்குறட் டிணைமலர் மொழிந்தேத்தி

---

கஎஎ. குடதிசை - மேற்குத்திசை. பரிசனங்களும் - அடியவர்களும்.

கஎஅ. பெரிய தடாகங்களையும் வயல்களையுங் கடந்து.

கஅ௦. அம்பொன் மாமலை வல்லி - உமையம்மையார். துங்க - உயர்ந்த. தொல்லை வெங்குரு - பழைய சீர்காழியின். திருமுது குன்றினை - விருத்தாசலத்தை.

கஅக. முத்தாறு - மணிமுத்தா நதி. அப்பொருப்பினில் - அத் திருமுது குன்றில். ஆதரவுடன் - விருப்புடன்.

கஅஉ. திருவிருக்குக் குறள் என்னும் அளவொத்த மாலையை.

பா - ம்—*குன்றினைச் சென்றெதிர். †செய்த வப்பெரு.

ஞான போனகர் நம்பர்தங் கோயிலை நண்ணிஅங் குள்புக்குத்
தேன லம்புதண் கொன்றையார் சேவடி திளைத்த*அன் பொடுதாழ்ந்தார்.

(திருவிருக்குக்குறள்)

"நின்று மலர்தூவி, இன்று முதுகுன்றை
நன்றும் ஏத்துவீர்க், கென்றும் இன்பமே"—தேவாரம்.

தாழ்ந்தெ ழுந்துமுன் "முரசதிர்ந் தெழும்" எனுந் தண்டமிழ்த் தொடைசாத்தி, வாழ்ந்து போந்தங்கண் வளம்பதி அதனிடை வைகுவார் மணிவெற்புச், சூழ்ந்த தண்புனல் சுலவு "முத் தாறொடு" தொடுத்தசொல் தொடைமாலை, வீழ்ந்த காதலாற் பலமுறை விளம்பியே மேவினார் சிலநாள்கள். கஅரு

"முரசதிர்ந் தெழுதிரு முதுகுன்ற மேவிய, பரசமர் படையுடை யீரே
பரசமர் படையுடையீர் உமைப் பரவுவார், அரசர்கள் உலகிலா வாரே"
—தேவாரம்.

ஆங்கு நாதரைப் பணிந்துபெண் ணாகடம் அணைந்தரு மறையோசை
ஓங்கு தூங்கானை மாடத்துள் அமர்கின்ற ஒருதனிப் பரஞ்சோதிப்
பாங்க ணைந்துமுன் வலங்கொண்டு பணிவுற்றுப் பரவுசொல் தமிழ்மாலை
"தீங்கு நீங்குவீர் தொழுமின்கள்" எனும்†இசைப் பதிகமும் தெரிவித்தார்.

"ஒடுங்கும் பிணிபிறவி கேடென்றிவை யுடைத்தாய வாழ்க்கை யொழியத்தவம், அடங்கும் இடங்கருதி நின்றீரெல்லாம் அடிக ளடிநிழற்கீ ழாளாம்வண்ணம், கிடங்கும் மதிலுஞ் சுலாவியெங்குங் கெழுமனைகள் தோறும் மறையின்ஒலி, தொடங்குங் கடந்தைத் தடங்கோயில்சேர் தூங் கானை மாடம் தொழுமின்களே"—தேவாரம்.

வேறு

கருவ டைப்பிற் புகாதவர் கைதொழும்
ஒருவ ரைத்தொழு துள்ளம் உவந்துபோய்ப்
பெருவ ரத்தினிற் பெற்றவர் தம்முடன்
திருவ ரத்துறை ‡சேர்துமென் றேகுவார். கஅ௬

---

கஅரு. அங்கண்-அழகிய இடம் அகன்ற. மணி வெற்பு - அழகிய திருமுதுகுன்றை. சுலவு - சுழலும். "முத்தாறொடு" முதலாகப் பாடிய பதிகங்களை.

கஅ௬. கரு......ஒருவரை - மீண்டுங் கருவிலே புகாத பெருமை வாய்ந்த அன்பர்கள் கைதொழும் ஒருவராகிய சிவபெருமானை. சிவபெருமானை அடைந்தவர்க்கு மீண்டும் பிறப்பில்லை. என்னை ? சிவபெருமான் பிறப்பிறப்பில்லாதவராதலின் என்க. பெருவரத்தினில் பெற்றவர் - (சிவபெருமானை நோக்கித் தவங் கிடந்து பெற்ற) பெருவரத்தினால் தம்மை ஈன்றவராகிய சிவபாத விருதயர்.

பா - ம்—*இன்பொடு. †இசைச் செய்யவாய் மலர்வித்தார். ‡சேரும்.

முந்தை நாள்கள் ஒரோவொரு கால்முது
தந்தை யார்பியன் மேலிருப் பார்தவிர்ந்
தந்த ணாளர் அவரரு கேசெலச்
சிந்தை செய்திருப் போடுமுன் சென்றனர். கஅசு.

ஆதி யார்தம் அரத்துறை நோக்கியே
காத லால்அணை வார்கடி தேகிடத்
தாதை யாரும் பரிவுறச் சம்பந்தர்
பாத தாமரை நொந்தது பைப்பய. கஅஎ.

மறைய வனத்தும் ஒருவடி வாமென
நிறைம திப்பிள்ளை நீள்நிலஞ் சேர்ந்தெனத்
துறைஅ லைக்கங்கை சூடும் அரத்துறை
இறைவ னைத்தொழு வான்விரைந் தேகினார். கஅஅ.

பாச மற்றில ராயினும் பார்மிசை
ஆசை சங்கரற் காயின தன்மையால்
தேசு மிக்க திருவுரு வானவர்
ஈச னைத்தொழு தேதொழு தேகினார். கஅகூ.

இந்த மாநிலத் தின்இருள் நீங்கிட
வந்த வைதிக மாமணி யானவர்
சிந்தை ஆரமு தாகிய செஞ்சடைத்
தந்தை யார்கழல் †தாழ்ந்தெழுந் தேகினார். ககூO.

மாறன் பாடி எனும்பதி வந்துற
ஆறு செல்வருத் தத்தின் அசைவினால்
வேறு செல்பவர் வெய்துறப் பிள்ளையார்
ஏறும் அஞ்செழுத் தோதிஅங் கெய்திட. ககூக.

---

கஅசு. ஒரோ ஒருகால் - ஒவ்வொருபோது. முது......இருப்பார் - சிவபாத விருதயரின் தோளின்மீது எழுந்தருளிச் செல்பவராகிய ஞானசம்பந்தப் பெருமான். தவிர்ந்து - அவ்வாறு செல்வதை ஒழித்து. அவர் - ஞானசம்பந்தர்.

கஅஎ. பரிவுற - வருந்த. பைப்பய - பையப்பைய ; மெல்ல மெல்ல.

கஅஅ. மதிப்பிள்ளை - பிள்ளைச் சந்திரன் ; ஞானப்பிள்ளை.

கஅகூ. பாசம் மற்றிலராயினும் - பற்றுப் பிறிதொன்றில் இல்லாதவராயினும். தேசு - ஒளி.

ககூக. ஆறு......அசைவினால் - வழிச் செல்லும் வருத்தத்தின் சோர்வினால். வேறு செல்பவர் - தம்மைச் சூழ வருவோர். வெய்துற - வெம்மையால் இளைப்படைய ; விரைந்து செல்ல எனினுமாம். ஏறும் - ஏற்றமுடைய.

பா - ம்—*அவர்க்கருகே. †தாழ்ந்தொழு.

உய்ய வந்தசம் பந்த ருடன்வந்தார்க்
கெய்து வெம்மை இளைப்பஞ்சி னான்போலக்
கைகள் ஆயிரம் வாங்கிக் கரந்துபோய்
வெய்ய வன்சென்று மேல்கடல் வீழ்ந்தனன். ௧௧௨

அற்றை நாள்இர வப்பதி யின்னிடைச்
சுற்று நீடிய தொண்டர்கள் போற்றிடப்
பெற்றம் ஊர்ந்த பிரான்கழல் பேணுவார்
வெற்றி மாதவத் தோருடன் மேவினார். ௧௧௩

இந்நி லைக்கண் எழில்வளர் பூந்தராய்
மன்ன னார்தம் வழிவருத் தத்தினை
அன்ன மாடுந் துறைநீர் அரத்துறைச்
சென்னி யாற்றர் திருவுளஞ் செய்தனர். ௧௧௪

ஏறு தற்குச் சிவிகை இடக்குடை
கூறி ஊதக் குலவுபொற் சின்னங்கள்
மாறில் முத்தின் படியினால் மன்னிய
நீறு வந்த நிமலர் அருளுவார். ௧௧௫

நீடு வாழ்பதி யாகும்நெல் வாயிலின்
மாட மாமனை தோறும் மறையோர்க்குக்
கூடு கங்குல் கனவில் குலமறை
தேடு சேவடி தோன்றமுன் சென்றுபின். ௧௧௬

" ஞான சம்பந்தன் நம்பால் அணைகின்றான்
மான முத்தின் சிவிகை மணிக்குடை

---

௧௧௨. கரந்து - மறைந்து. வெய்யவன் - சூரியன்.

௧௧௩. பெற்றம் ஊர்ந்தபிரான் - இடபவாகனராகிய சிவபெருமான்.

௧௧௪. எழில் - அழகு. பூந்தராய் மன்னனார் - திருஞான சம்பந்தர். சென்னி ஆற்றர் - தலையில் கங்கை யணிந்த சிவபிரான்.

௧௧௫. சிவிகை - பல்லக்கு. இட - நிழற்ற ; பிடிக்க. கூறி - புகழ்களைக் கூறி. குலவு பொன் - விளங்கும் அழகிய ; குலவு - வளைந்த எனினுமாம். மாறில்......மன்னிய - உவமையற்ற முத்தின் வகைகளால் ஆக்கப் பெற்றன வற்றை (சிவிகை முதலியவற்றை). நீறு உவந்த நிமலர் (திருஞான சம்பந்தர்) ஏறுதற்குச் சிவிகை......சிவபெருமான் அருள்வாராய். நீறு உவந்த நிமலர் என்பதற்குச் சிவபெருமான் எனினும் பொருந்தும்.

௧௧௬. கங்குல் - இரவில். குலமறை - கூட்டமான வேதங்கள். சிவபிரான் சேவடி.

யான சின்னம்நம் பாற்கொண் டருங்கலக்
கோன வன்பால் அணைந்து கொடும்'' என. கக௬எ

அந்த *ணாளர் உரைத்தஅப் போழ்தினில்
வந்து கூடி மகிழ்ந்தறற் புதமுறுஞ்
சிந்தை யோடுஞ் செழுநீர் அரத்துறை
இந்து சேகரர் கோயில்வந் தெய்தினர். கக௬அ

ஆங்கு மற்ற அருள்அடி யாருடன்
ஓங்கு கோயிலுள் ளார்க்குமுண் டாயிட
"ஈங்கி தென்ன அதிசயம்" என்பவர்
தாங்கள் அம்†மறை யோர்கள்முன் சாற்றினார். கக௬௯

சால மிக்க வியப்புறு தன்மையின்
‡பால ராதலும் பள்ளி எழுச்சியின்
காலம் எய்திடக் காதல் §வழிப்படும்
சீல மிக்கார் திருக்காப்பு நீக்கினர். உ00

திங்கள் நீர்மைச் செழுந்திரள் முத்தினல்
துங்க வெண்குடை தூய சிவிகையும்
பொங்க ஊதும் பொருவருஞ் சின்னமும்
அங்கண் நாதர் அருளினற் கண்டனர். உ0க

கண்ட பின்அவர் கைதலை மேற்குவித்
"தெண்டி சைக்கும் விளக்கிவை யாம்"எனத்
தொண்ட ரோடும் மறையவர் சூழ்ந்தெழுந்
தண்டர் நாடும் அறிவுற ஆர்த்தனர். உ0உ

---

கக௬எ. மான - பெருமையுடைய; வலிமையுடைய எனினுமாம். நம்பால் கொண்டு - நம்மிட மிருந்து (கோயிலி லிருந்து) எடுத்துக்கொண்டு.

கக௬அ. அந்தணாளர் தமக்கு ஆண்டவன் உரைத்த. இந்துசேகரர் - சந்திர சேகரர்; சிவபெருமான்.

கக௬௯. (முன் அந்தணர்க்குக் கனவிடைத் தோன்றிய) திருவருளானது, அடியவர்களுடன் கோயிலில் இருப்பவர்கட்கும் தோன்ற.

உ00. சாலமிக்க - மிகமிக அதிக. திருக்கோயிற் றிருவாயிலின் திருக்காப்பு.

உ0க. திங்கள் நீர்மை - சந்திரன் போன்ற தன்மை வாய்ந்த; தண்ணிலவு காலும் வெள்ளிய முத்து என்றபடி. துங்க - உயர்ந்த. பொருவரும் - ஒப்பற்ற. அங்கண் - அவ்விடத்தில்.

உ0உ. அண்டர் நாடும் - தெய்வ லோகமும். ஆர்த்தனர் - ஆரவாரித்தனர்.

**பா - ம்**—*அந்தணாளர்க் குரைத்த. †மறையோர்க்குமுன். ‡பாலராயினும். §வெளிப்படும்.

சங்கு துந்துபி தாரைபே ரிம்முதல்
பொங்கு பல்லிய நாதம் பொலிந்தெழ
அங்க ணன்அரு ளால்அவை கொண்டுடன்
பொங்கு காதல் எதிர்கொளப் போதுவார். ௨௦௩

மாசில் வாய்மைநெல் வாயின் மறையவர்
ஆசில் சீர்ச்சண்டை ஆண்டகை யார்க்கெதிர்
தேசு டைச்சிவி கைமுத லாயின
ஈசர் இன்னரு ளால்தாங்கி ஏகினர். ௨௦௪

இத்த லைஇவர் இன்னணம் ஏகினர்
அத்த லைச்சண்டை நாதர்க்கும் அவ்விரா
முத்த நற்சிவி கைமுத லாயின
உய்த்த ளிக்கும் படிமுன் உணர்த்துவார். ௨௦௫

அள்ளல் நீர்வயல் சூழும் அரத்துறை
வள்ள லார்"நாம் மகிழ்ந்தளிக் கும்அவை
கொள்ள லாகுங்கொண் டெய்த்தல்செய் வாய்"என
உள்ள வாறருள் செய்ய உணர்ந்தபின். ௨௦௬

சண்டை யாளியார் தாங்கண்ட மெய்யருட்
பண்பு தந்தையார் தம்முடன் பாங்கமர்
தொண்ட ருக்கருள் செய்து தொழாமுனம்
விண்பு லப்பட வீங்கிருள் நீங்கலும். ௨௦௭

மாலை யாமம் புலர்வுறும் வைகறை
வேலை செய்வினை முற்றிவெண் ணீறணி

---

௨௦௩. பல்லியம் - பல வாத்தியங்களின். அங்கணன் - சிவபிரான்.

௨௦௪. ஆசில் - குற்றமற்ற.

௨௦௫. இத்தலை - இவ்விடத்தில். அத்தலை - அவ்விடத்தில் (மாறன் பாடியில்). அவ்விரவில். முதலியவைகளைக் கொண்டு செலுத்தி (நடை வெயில் முதலிய) துன்பங்களினின்றும் நீங்கும்படி.

௨௦௬. அள்ளல் - குழைந்த சேறு. வள்ளலார் - சிவபெருமான்.

௨௦௭. மெய்யருட் பண்பினை - மெய்யருட் டன்மையை. மெய்யருளைப் பண்புடைய (குணமுடைய) தந்தையார்......எனக் கொள்ளினுமாம். திருவருளைத் தொழா முன்னம்.

௨௦௮. வைகறை வேலை - விடியற்காலத்தில். செய்வினை முற்றி - நித்தியக் கடன்களைச் செய்து முடித்து. ஏல - பொருந்த.

பா - ம்—*பேரருள் ; மெய்ப்பொருள்.

கோல மேனிய ராய்க்கைம் மலர்குவித்
தேல அஞ்செழுத் தோதி எழுந்தனர். ௨0அ

போத ஞானப் புகலிப் புனிதரைச்
சீத முத்தின் சிவிகைமேல் ஏற்றிடக்
காதல் செய்பவன் போலக் கருங்கடல்
மீது தேரின்வந் தெய்தினன் வெய்யவன். ௨0௯

ஆய போழ்தின் அரவெனும் ஆர்ப்புடன்
தூய முத்தின் சிவிகை சுடர்க்குடை
மேய சின்னங்கள் கொண்டுமெய் யன்பரோ
டேய அந்தணர் தாமெதிர் தோன்றினர். ௨௧0

வந்து தோன்றிய அந்தணர் மாதவர்
கந்த வார்பொழில் காழிநன் னாடர்முன்
" அந்த மில்சீர் அரத்துறை ஆதியார்
தந்த பேரருள் தாங்குவீர் " என்றனர். ௨௧௧

என்று தங்களுக் கீசர் அருள்செய்த
தொன்றும் அங்கொழி யாமை உரைத்துமுன்
நின்று போற்றித் தொழுதிட " நேர்ந்தது
மன்று ளார்அருள் " என்று வணங்கினர். ௨௧௨

" எந்தை ஈசன் " எனஎடுத் " திவ்வருள்
வந்த வாறுமற் றெவ்வண மோ " என்று
சிந்தை செய்யுந் திருப்பதி கத்திசை
புந்தி யாரப் புகன்றெதிர் போற்றுவார். ௨௧௩

" எந்தை ஈசன் எம்பெருமான் ஏறமர் கடவுளென் றேத்திச்
சிந்தை செய்பவர்க் கல்லால் சென்று கைகூடு வதன்றால்
கந்த மாமல ருந்திக் கடும்புனல் நிவாமல்கு கரைமேல்
அந்தண் சோலை நெல்வாயில் அரத்துறை அடிகள் தம்மருளே "
—தேவாரம்.

---

௨0௯. போத ஞானம் - மெய்ஞ் ஞானமுடைய.

௨௧0. ஆர்ப்புடன் - ஒலியுடன். மேய - பொருந்திய. ஏய - ஒத்த.

௨௧௧. கந்தவார் பொழில் - மணங்கமழும் நீண்ட சோலைகள் சூழ்ந்த. திருவாத்துறையில் எழுந்தருளியுள்ள முதல்வராகிய சிவபெருமான்.

௨௧௨. இவ்வாறு நேர்ந்தது மன்றுளார் (நடராஜப் பெருமான்) அருள்.

"பொடிஅ ணிந்த புராணன் அரத்துறை
அடிகள் தம்மரு ளேஇது வாம்" எனப்
படியி லாதசொன் மாலைகள் பாடியே
நெடிது போற்றிப் பதிகம் நிரப்பினர். ௨௧௪

மெய்ம்மை போற்றி விடாத விருப்பினால்
தம்மை உன்னும் பரிசுதந் தாள்பவர்
செம்மை நித்தில யானச் சிறப்பருள்
எம்மை யாளுவப் பானின் றளித்ததே. ௨௧௫

சோதி முத்தின் சிவிகைசூழ் வந்துபார்
மீது தாழ்ந்துவெண் ணீற்றொளி போற்றிநின்
றோதி யார்அரு ளாதலில் அஞ்செழுத்
தோதி ஏறினர் உய்ய உலகெலாம். ௨௧௬

வேறு

தொண்டர் ஆர்த்தனர் சுருதிகள் ஆர்த்தன தொல்லை
அண்டர் ஆர்த்தனர் அகிலமும் ஆர்ப்புடன் எய்தக்
கொண்டல் ஆர்த்தன முழவமும் ஆர்த்தன குழுமி
வண்ட றுப்பொலி மலர்மழை ஆர்த்தது வானம். ௨௧௭

வளையும் ஆர்த்தன வயிர்களும் ஆர்த்தன மறையின்
கிளையும் ஆர்த்தன கிளைஞரும் ஆர்த்தனர் கெழுவும்
களைகண் *ஆர்த்ததோர் †கருணையின் ஆர்த்தன முத்து
விளையு மாக்கதிர் வெண்குடை ஆர்த்தது மிசையே. ௨௧௮

---

௨௧௪. படி இலாத - ஒப்பில்லாத.

௨௧௫. போற்றி - பேணி; காத்து. பரிசு - தன்மை. செம்மை நித்தில யானச் சிறப்பு அருள் - செப்பமான முத்துச் சிவிகையாகிய சிறப்பருளை. ஆள் உவப்பான் - ஆளாக மகிழ்ந்து கொண்ட பிரான். இப்பாடல் சில பிரதிகளில் ௨௧௩-லும், சில பிரதிகளில் ௨௧௪-லும் காணப்படுகிறது.

௨௧௬. சூழ் வந்து - வலஞ் செய்து. பார்மீது தாழ்ந்து - பூமிமீது விழுந்து வணங்கி.

௨௧௭. ஆர்த்தனர் - ஆரவாரித்தனர். சுருதிகள் - வேதங்கள். தொல்லை அண்டர் - பழைய விண்ணவர்கள். கொண்டல் - மேகங்கள். முழவமும் - தெய்வ முரசும். குழுமி - கூடி.

௨௧௮. வளையும் - சங்குகளும். வயிர்களும் - கொம்புகளும் (கொம்பு என்பது ஒருவகை வாச்சியம்). மறையின் கிளையும்-வேத சாகைகளும். கிளைஞரும் - சுற்றத்தவர்களும். கெழுவும் - பொருந்திய. களைகண் - (உயிர்கட்கு) ஆதாரமாக. ஆர்த்த - நிறைந்த. ஓர் கருணையின் - ஒப்பற்ற (இறைவன்) அருளால். ஆர்த்தன - பிணிக்கப் பெற்றனவாகிய. விளையும் - அளிக்கும்; காலும்.

பா - ம்—*ஆர்ந்த. †கருணையி னூர்கவின் முத்தும்.

பல்கு வெண்கதிர்ப் பத்திசேர் நித்திலச் சிவிகைப்
புல்கு நீற்றொளி யுடன்பொலி புகலிகா வலனார்
அல்கு வெள்வளை அலைத்தெழு மணிநிரைத் தரங்கம்
மல்கு பாற்கடல் வளர்மதி உதித்தென வந்தார். உகசு

நீடு தொண்டர்கள் மறையவர் ஏனையோர் நெருங்கி
மாடு கொண்டெழு மகிழ்ச்சியின் மலர்க்கைமேல் குவித்தே
ஆடு கின்றனர் அயர்ந்தனர் அளவில்ஆ னந்தம்
கூடு கின்றகண் பொழிபுனல் வெள்ளத்தில் குளித்தார். உஉ௦

செய்ய பொன்புனை வெண்தா ளத்தணி சிறக்கச்
சைவ மாமறைத் தலைவர்பால் பெறுந்தனிக் காளம்
வையம் ஏழுடன் மறைகளும் நிறைதவத் தோரும்
"உய்ய ஞானசம் பந்தன்வந் தான்"என ஊத. உஉக

சுற்று மாமறைச் சுருதியின் பெருகொலி நடுவே
தெற்றி னார்புரம் எரித்தவர் தருதிருச் சின்னம்
"முற்றும் ஆனவள் ஞானமே முலைசுரந் தூட்டப்
பெற்ற பாலறு வாயன்வந் தான்"எனப் பிடிக்க. உஉஉ

புணர்ந்த மெய்த்தவக் குழாத்தொடும் போதுவார் முன்னே
இணைந்த நித்திலத் திலங்கொளி நலங்கிளர் தாரை
"அணைந்த மாமறை முதற்கலை அகிலமும் ஓதா
துணர்ந்த முத்தமிழ் விரகன்வந் தான்"என ஊத. உஉங

தெருளு மெய்க்கலை விளங்கவும் பாருளோர் சிந்தை
இருளும் நீங்கவும் எழுதுசொன் மறைஅளிப் பவர்தாம்

---

உகசு. பல்கு - பெருகும். பத்தி - ஒழுங்கு. புல்கு - சேர்ந்த. அல்கு - தடக்கும். அணிநிரைத் தரங்கம் - அழகுடன் வரிசையாக எழுதலையுடைய அலைகள். மல்கு - நிறைந்த.

உஉ௦. மாடுகொண்டு - தம்மிடங் கொண்டு. அயர்ந்தனர் - பரவசராய்.

உஉக. செய்ய பொன்புனை - செம்பொன்னால் அலங்கரிக்கப்பெற்ற. வெண்தாள - வெண்முத்தின். சைவமா மறைத்தலைவர்பால் - சிவபெருமானிடத்தில்.

உஉஉ. தெற்றினார் - பகைவர்களின். முற்றும் ஆனவள் - எங்கும் நீக்கமற நிறைந்து எல்லாம் ஆனவர்; உமையம்மையார்.

உஉங. நித்தில...தாரை - முத்துக்களால் விளங்கும் ஒளிநலம் எழும் தாரை. அகிலமும் - எல்லாம்.

உஉச. தெருளும் - தெளிந்த. எழுது சொன்மறை - தமிழ் வேதத்தை. அங்கணர் - சிவபெருமானது.

பொருளும் ஞானமும் போகமும் போற்றி*என் பாருக்
கருளும் அங்கணர் திருஅரத் துறையைவந் தணைந்தார். ௨௨௪

வந்து கோபுர மணிநெடு வாயில்சேய்த் தாகச்
சந்த நித்திலச் சிவிகைநின் றிழிந்துதாழ்ந் தெழுந்து
சிந்தை ஆர்வமும் மகிழ்ச்சியும் பொங்கிமுன் செல்ல
அந்தி நாண்மதி அணிந்தவர் கோயிலுள் அடைந்தார். ௨௨௫

மன்னு கோயிலை வலங்கொண்டு திருமுன்பு வந்து
சென்னி யிற்கரங் குவித்துவீழ்ந் தன்பொடு திளைப்பார்
"என்னை யும்பொரு ளாகஇன் னருள்புரிந் தருளும்
பொன்ன டித்தலத் தாமரை போற்றி"என் றெழுந்தார். ௨௨௬

வேறு

சூடி னார்கர கமலங்கள் சொரிந்திழி கண்ணீர்
ஆடி னார்திரு மேனியில் அரத்துறை விரும்பி
நீடி னார்திரு அருட்பெருங் கருணையே நிகழப்
பாடி னார்திருப் பதிகம்வ ழிசையொடும் பயில. ௨௨௭

இசைவி ளங்கிட இயல்பினிற் பாடிநின் றேத்தி
மிசைவி ளங்குநீர் வேணியார் அருளினால் மீண்டு
திசைவி ளங்கிடத் திருவருள் பெற்றவர் சிலநாள்
அசைவில் சீர்த்தொண்டர் தம்முடன் அப்பதி அமர்ந்தார்.

தேவர் தம்பிரான் திருஅரத் துறையினில் இறைஞ்சி
மேவு நாட்களில் விமலனார் நெல்வெண்ணெய் முதலாத்
தாவில் அன்பர்கள் தம்முடன் தொழுதுபின் சண்பைக்
காவ லார்அருள் பெற்றுடன் கலந்துமீண் டணைந்தார். ௨௨௯

---

௨௨௫. சேய்த்தாக - சிறிது தூரத்தே. சந்தம் - அழகிய. அந்திவேளையில் தோன்றும்.

௨௨௭. திருமேனியில் சொரிந்து இழி கண்ணீரில் ஆடினார். அரத்துறை விரும்பி நீடினார் - திருவரத் துறையில் விருப்பொடு எழுந்தருளியுள்ள சிவ பிரானது. பயில - செறிய; அமைய.

௨௨௮. அசைவில் சீர்த்தொண்டர்-திருக்கூட்டச்சிறப்பு: பாட்டு.எ. பார்க்க.

௨௨௯. விமலனார் - சிவபெருமான் எழுந்தருளியுள்ள. தாவில் - வருத்த மில்லாத. திருவரத்துறையை மீண்டும் அணைந்தார்.

பா - ம்—*செய் அன்பருக்.

விளங்கு வேணுபு ரத்திருத் தோணிவீற் றிருந்த
களங்கொள் கண்டர்தங் காதலி யாருடன் கூட
உளங்கொ ளப்புகுந் துணர்வினில் வெளிப்பட உருகி
வளங்கொள் பூம்புனற் புகலிமேற் செலமனம் வைத்தார். உ௫௦

அண்ண லார்திரு அரத்துறை அடிகளை வணங்கி
நண்ணு பேரரு ளால்விடை கொண்டுபோய் நடங்கொண்
டுண்ணி றைந்தபூங் கழலினை உச்சிமேற் கொண்டே
வெண்ணி லாமலர் நித்திலச் சிவிகைமேற் கொண்டார். உ௫க

சிவிகை முத்தினிற் பெருகொளி திசைஎலாம் விளக்கக்
கவிகை வெண்மதிக் குளிரொளி கதிர்செய்வான் கலப்பக்
குவிகை மேற்கொண்டு மறையவர் குணலையிட் டாடப்
புவிகைம் மாறின்றிப் போற்றவந் தருளினர் போந்தார். உ௫உ

மறைமு ழங்கின தழங்கின வண்தமிழ் வயிரின்
குறைந ரன்றன முரன்றன வளைக்குலங் காளம்
முறைஇ யம்பின இயம்பல ஒலித்தன முரசப்
†பொறை கறங்கின பிறங்கின ‡போற்றிசை அரவம். உ௫௩

---

உ௫௦. வேணுபுரத்திருத்தோணி-சீகாழியிலுள்ள தோணியென்னுங் கோயிலில். தோணியப்பரும் அம்மையாரும் உளம்புகுந்து உணர்வில் விளங்க என்றபடி.

உ௫க. தமது உள்நிறைந்த. அகத்துள்ள நடராசனைப் புறத்தே உச்சிமேற்கொண்டு; "கன்மன வீர்கழி யுங்கருத் தேசொல்லிக் காண்பதென்னே - நன்மன வர்நவில் தில்லையுட் சிற்றம் பலத்துநட்டம் - பொன்மலை யில்வெள்ளிக் குன்றது போலப் பொலிந்திலங்கி - என்மன மேயொன்றிப் புக்கனன் போந்த சுவடில்லையே"—அப்பர்: கோயில் திருவிருத்தம். ௩.

உ௫உ. கவிகை - குடையாகிய. கதிர் செய்வான் - சூரிய கிரணம் படரும் வானில். குணலையிட்டாட - மகிழ்ச்சி மிகுதியால் ஆரவாரித்துக் கூத்தாட. புவி...அருளினர் - உலகை எவ்வித கைம்மாறு மில்லாமல் காக்க வந்தருளிய திருஞானசம்பந்தர்.

உ௫௩. வண்தமிழ் - வண்மை வாய்ந்த தமிழ் மறையும். தழங்கின - ஒலித்தன. வயிரின்குறை நரன்றன - கொம்புகள் ஒலித்தன. வளைக்குலம் முரன்றன - சங்கினங்கள் முழங்கின. காளம் முறைமுறையே ஊதின. இயம்பல - வாத்தியங்கள் பல. கறங்கின - ஒலித்தன. பொறை - சிறு குவடு (மலை); முரசு சிறு குவடுபோன்றிருத்தலின் "முரசப் பொறை" என்றார். போற்றிசை அரவம் பிறங்கின-அடியார்கள் அரகர என்று போற்றி செய்யும் ஒலிகள் பெருகின.

பா - ம்—*விரிக்கக்; விரிப்பக். †பறை. ‡போற்றிசெய்.

உடைய பிள்ளையார் வரும்எல்லை உள்ள அப் பதியோர்
புடைஇ ரண்டினும் கொடியொடு பூந்துகில் விதானம்
நடைசெய் காவணந் தோரணம் பூகநற் கதலி
மிடையு மாலைகள் நிறைகுடம் விளக்கொடு நிரைத்தார். உ௲௪

அனைய செய்கையால் எதிர்கொளும் பதிகளா னவற்றின்
வினைத ரும்பவந் தீர்ப்பவர் கோயில்கள் மேவிப்
புனையும் வண்டமிழ் மொழிந்தடி பணிந்துபோந் தணைந்தார்
பனைநெ டுங்கைமா உரித்தவர் மகிழ்பெரும் பழுவூர். உ௲௫

**வேறு**

அங்கணைந் திளம்பிறை அணிந்த சென்னியார்
பொங்கெழிற் கோபுரந் தொழுது புக்கபின்
துங்கநீள் விமானத்தைச் சூழ்ந்து வந்துமுன்
பங்கயச் சேவடி பணிந்து பாடுவார். உ௲௬

மண்ணினிற் பொலிகுல மலையர் தாந்தொழு
தெண்ணில்சீர்ப் பணிகள்செய் தேத்துந் தன்மையில்
நண்ணிய வகைசிறப் பித்து நாதரைப்
பண்ணினில் திகழ்திருப் பதிகம் பாடினார். உ௲௭

*பாவின திசைவழி பாடி அங்ககன்
றியாவருந் தொழுதுடன் ஏத்த எய்தினார்
மூவுல குய்யநஞ் சுண்ட மூர்த்தியார்
மேவிய பெருந்திரு விசய மங்கையில். உ௲௮

அந்தணர் விசயமங் கையினில் அங்கணர்
தந்தனி ஆலயஞ் சூழ்ந்து தாழ்ந்துமுன்
வந்தனை செய்துகோ தனத்தை மன்னிய
செந்தமிழ் மாலையிற் சிறப்பித் தேத்தினார். உ௲௯

விசயமங் கையினிடம் அகன்று மெய்யர்தாள்
அசைவில்வை காவினில் அணைந்து பாடிப்போந்

---

உ௲௪. புடை - பக்கம். பூந்துகில் விதானம் - பூம்பட்டாலாகிய மேற்கட்டி. நடைசெய்காவணம் - நடைப்பந்தர். பூகம் - கமுகம். மிடையும் - நெருங்கிய.

உ௲௫. கைமா - துதிக்கையுடைய யானையை. உரித்தவர் - சிவபிரான்.

உ௲௭. மலையர் - மலையாளர். "மலையாளர் தொழுதேத்தி"—**திருஞான சம்பந்தர் :** திருப்பழுவூர். க.

உ௲௯. கோதனத்தை - பசுவை ; பசு வழிபட்டதை.

**பா - ம்**—*பாவினம் இசைவழி.

திசைவளர் ஞானசம் பந்தர் எய்தினார்
திசையுடை ஆடையர் திருப்பு றம்பயம். உசO

புறம்பயத் திறைவரை வணங்கிப் போற்றிசெய்
திறம்புரி நீர்மையிற் பதிகச் செந்தமிழ்
நிறம்பயில் இசையுடன் பாடி நீடிய
அறந்தரு கொள்கையார் அமர்ந்து மேவினார். உசக

அத்திருப் பதிபணிந் தகன்று போய்அனல்
கைத்தலத் தவர்பதி பிறவுங் கைதொழு
முத்தமிழ் விரகராம் முதல்வர் நண்ணினார்
செய்த்தலைப் பணிலமுத் தீனுஞ் சேய்ஞலூர். உசஉ

திருமலி புகலிமன் சேரச் சேய்ஞலூர்
அருமறை யவர்பதி அலங்க ரித்துமுன்
பெருமறை யொடுமுழ வொலிபி றங்கவே
வருமுறை எதிர்கொள வந்து முந்தினார். உசங

ஞானசம் பந்தரும் "நாய னார்சடைத்
தூநறுந் தொடையல்முன் சூட்டும் பிள்ளையார்
பான்மையில் வரும்பதி" என்று நித்தில
யானமுன் இழிந்தெதிர் இறைஞ்சி எய்தினார். உசச

மாமறை யாளர்வண் புகலிப் பிள்ளையார்
தாமெழுந் தருளிடத் தங்கள் பிள்ளையார்
காமரும் பதியில்வந் தருளக் கண்டனர்
ஆமகிழ் வுடன்பணிந் தாடி ஆர்த்தனர். உசரு

---

உசக. திறம் - திறப்பண் (பண்வகை நான்கு: அவை, பண், பண்ணியல், திறம், திறத்திறம் என்பன). நீர்மை - பண் பாகுபாடுகளுள் ஒன்று. திறம்புரி நீர்மையில் - திறப்பண் அமையும் நீர்மையில். நிறம் - வண்ணம். பயில் - செறியும்.

உசஉ. அனல் கைத்தலத்தவர் - மழுவேந்திய கையராகிய சிவபிரான் வீற்றிருந்தருளும். செய்த்தலை - வயல்களினிடத்து. பணிலம் - சங்குகளையும். சேய்ஞலூர் - **சண்டேசுர நாயனார் புராணம்**: பாட்டு. க. குறிப்புப்பார்க்க.

உசங. பிறங்கவே - பெருகவே.

உசச. நாயனார்......பிள்ளையார் - சிவபெருமான் சடையிலுள்ள தூய மணங்கமழும் மாலையை முன் சூட்டிய சண்டேசுர நாயனார். இந்நாயனார் புராணம் பார்க்க. நித்தில யானம் முன் இழிந்து - முத்துச் சிவிகையை விட்டிறங்கி.

உசரு. தங்கள் பிள்ளையார் - சண்டேசுர நாயனாரின். காமரும் - அழகிய. கண்டனர் ஆம் - கண்டவரைப்போல.

களித்தனர் புண்ணியக் கரக வாசநீர்
தெளித்தனர் பொரிகளும் மலருஞ் சிந்தினர்
துளித்தனர் கண்மழை சுருதி ஆயிரம்
அளித்தவர் கோயிலுள் அவர்முன் பெய்தினர். ௨சசு

வெங்குரு வேந்தரும் விளங்கு கோயிலைப்
பொங்கிய விருப்பினாற் புடைவ லங்கொடு
செங்கைகள் சென்னிமேற் குவித்துச் சென்றுபுக்
கங்கணர் முன்புற அணைந்து தாழ்ந்தனர். ௨சஎ

வேதியர் சேய்ஞலூர் விமலர் தங்கழல்
காதலிற் பணிந்தவர் கருணை போற்றுவார்
தாதைதாள் தடிந்தசண் டீசப் பிள்ளையார்
*பாதகப் பயன்பெறும் பரிசு பாடினார். ௨சஅ

"பீரடைந்த பால தாட்டப் பேணா தவன்தாதை
வேரடைந்து பாய்ந்த தாளை வேர்தடிந் தான்தனக்குத்
தாரடைந்த மாலை சூட்டித் தலைமை வகுத்தலென்னே
சீரடைந்த கோயில் மல்கு சேய்ஞலூர் மேயவனே"—தேவாரம்.

இன்னிசை வண்தமிழ் பாடி ஏத்தியே
நன்னெடும் பதியுளோர் நயக்க வைகிய
பின்னர்வெண் பிறையணி வேணிப் பிஞ்ஞகர்
மன்னிய திருப்பனந் தாள்வ ணங்கினார். ௨சகூ

ஆங்கணி சொன்மலர் மாலை சாத்திஅப்
பாங்குபந் தணைநலூர் பணிந்து பாடிப்போய்த்
தீங்குதீர் மாமறைச் செம்மை அந்தணர்
ஓங்கும்ஓ மாம்புலி யூர்வந் துற்றனர். ௨ருo

மற்றநற் பதிவட தளியின் மேவிய
அற்புதர் அடிபணிந் தலர்ந்த செந்தமிழ்ச்

---

௨சசு. கரகம் - கமண்டலத்துள்ள. சுருதி ஆயிரம் அளித்தவர் - சிவபிரான் (சுருதி - வேதம். ஆயிரம் - அளவில்லாத).

௨சஅ. வேதியர்களுடைய சேய்ஞலூர். விமலர்தம் - சிவபிரானது. பாதகமே உறுபயனாகப் பெற்ற தன்மையைப் பாடினார். **சண்டேசுர நாயனார் புராணம்** : பாட்டு. ருஉ. குறிப்புப்பார்க்க.

௨சகூ. நயக்க - விரும்ப; இரந்து வேண்ட.

௨ருக. **திருநாவுக்கரசு சுவாமிகள் புராணம்** : வடதளி அற்புதம் பார்க்க.

**பா** - **ம்**—*பாதபங் கயம்பெறும்.

சொற்றொடை பாடிஅங் ககன்று சூழ்மதில்
பொற்பதி வாழ்கொளி புத்தூர் புக்கனர். ௨௫௧

சீர்வளர் கோயிலை அணைந்து தேமலர்க்
கார்வளர் கண்டர்தாள் பணிந்து காண்பவர்
பார்புகழ் பதிகங்கள் பாடி நீடுவார்
வார்பொழிற் கடம்பையும் வணங்கி வாழ்ந்தனர். ௨௫௨

நம்பரை நலந்திகழ் நாரை யூரினில்
கும்பிடும் விருப்பொடு குறுகிக் கூடிய
வம்பலர் செந்தமிழ் மாலை பாடிநின்
றெம்பிரான் கவுணியர் தலைவர் ஏத்தினார். ௨௫௩

அப்பதி பணிந்தருந் தமிழ்பு னைந்துதம்
மெய்ப்படு விருப்பொடு மேவு †நாள்அரன்
பொற்பதி பலவும்முன் பணிந்து போந்தனர்
பைப்பணி யவர்கருப் பறிய லூரினில். ௨௫௪

‡பரமர்தந் திருக்கருப் பறிய லூரினைச்
சிரபுரச் சிறுவர்கை தொழுது செந்தமிழ்
உரைஇசை பாடிஅம் மருங்கின் உள்ளவாம்
சுரர்தொழும் பதிகளும் தொழுது பாடினார். ௨௫௫

## வேறு

மண்ணுலகு செய்ததவப் பயனா யுள்ள வள்ளலார் அப்பதிகள் வணங்கி ஏகி, எண்ணில்முர சிரங்கிஎழுப் பணிலம் ஆர்ப்ப இலங்கியகா ளஞ்சின்னம் எங்கும் ஊதக், கண்வளர்மென் கரும்புமிடை கதிர்

௨௫௨. தே...தாள் - மணங்கமழுங் கருங்குவளை போன்ற கண்டத்தை யுடைய சிவபிரான் திருவடிகளை. நீடுவார் - தங்குபவராகிய திருஞானசம்பந்தர்; கடந்து செல்பவராகிய திருஞானசம்பந்தர் எனினுமாம். வார் - நீண்ட.

௨௫௩. வம்பு அலர் - தெய்வ மணங் கமழும்.

௨௫௪. பைப்பணியவர் - படமுடைய பாம்பை அணியாக்கொண்ட சிவ பெருமான் வீற்றிருந்தருளும். சில பிரதிகளில் இப்பாடல் "அப்பதி அணைந்து போய் அமரர் நாயகர் - பொற்பதி பலவுமுன் பணிந்து போதுவார் - மெய்ப்படு விருப்பொடு மேவி னார்பணி - பைப்பணி யவர்கருப் பறிய லூரினை"—இவ் வாறு காணப்படுகிறது.

௨௫௬. இரங்கி - ஒலித்து. கண் - கணு.

பா - ம்—*மீண்டனர். †நாளமர்; நாள்மலர். ‡பரமர்தங் கழல்கருப் பறிய லூரினில்.

செஞ் சாலி கதலிகமு குடனோங்கும் கழனி நாட்டுத், தெண்ணிலவு சூடியதம் பெருமான் வைகும் திருப்பிரம புரஞ்சாரச் செல்லும் போது. ௨௫௬

பிள்ளையார் எழுந்தருளக் கேட்ட செல்வப் பிரமபுரத் தருமறை யோர் பெருகு காதல், உள்ளமகிழ் சிறந்தோங்கத் தோணி மேவும் உமைபாகர் கழல்வணங்கி உவகை கூர, வெள்ளமறை ஒலிபெருகு மறுகு தோறும் மிடைமகர தோரணங்கள் கதலி பூகம், தெள்ளுபுனல் நிறைகுடங்கள் தீப தூபம் *செழுங்கொடிகள் நிரைத்தெதிர்கொள் சிறப்பிற் செல்வார். ௨௫௭

ஆரணங்கள் மதுரவொலி எழுந்து பொங்க அரசிலையுந் தருப் பையும்பெய் தணிந்த வாசப், பூரணகும் பங்கள்நிறை கரகம் ஏந்திப் புதுமலரும் நறுந்துகளும் பொரியுந் தூவி, †வாரணங்கு முலைஉமை யாள் குழைத்த செம்பொன் வள்ளத்தில் அமுதுண்ட வள்ள லாரைச், சீரணங்கு மணிமுத்தின் சிவிகை மீது செழுந்தாளக் குடை நிழற்கீழ்ச் சென்று கண்டார். ௨௫௮

கண்டபொழு தேதைகள் தலைமேற் கொண்டு ‡கண்களிப்ப மனங் களிப்பக் காதல் பொங்கித், தொண்டர்களும் மறையவருஞ் சென்று சூழ்ந்து சொல்லிறந்த மகிழ்ச்சியினால் துதித்த ஓசை, எண்திசையும் நிறைவித்தார் ஆடை வீசி இருவிசும்பின் வெளிதூர்த்தார் ஏறு சீர்த்தி, வண்டமிழ்நா யகரும்இழிந் தெதிரே சென்று வணங்கிஅவ ருடன்§கூடி மகிழ்ந்து புக்கார். ௨௫௯

திங்கள்அணி மணிமாடம் மிடைந்த வீதி சென்றணைந்து தெய்வ மறைக் கற்பின் மாதர், மங்கலவாழ்த் திசைஇரண்டு மருங்கு மல்க வானவர்நா யகர்கோயில் மருங்கு சார்ந்து, துங்கநிலைக் கோபுரத்தை இறைஞ்சிப் புக்குச் சூழ்ந்துதிருத் தோணிமிசை மேவி னார்கள், தங்கள்திரு முன்புதாழ்ந் தெழுந்து நின்று தமிழ்வேதம் பாடினார் தாளம் பெற்றார். ௨௬௦

௨௫௮. ஆரணங்கள் - வேதங்களின். வார் - கச்சு. அணங்கு - வருத்தம். கச்சினுக்கு வருத்த மூட்டும் என்றபடி. சீர் அணங்கு - அழகிய தெய்வத் தன்மை வாய்ந்த ; சிறந்த அழகு வாய்ந்த ; அழகை அணிந்துள்ள.

௨௬௦. தாளம் பெற்றவராகிய திருஞான சம்பந்தர்.

பா - ம்—*செடி. †வாரிணங்கு முலைமலையாள். ‡கண்பனிப்ப. §கூட.

பரவுதிருப் பதிகஇசை பாடி நீடும் *பரன்கருணைத் திருவருளின் பரிசு போற்றி, விரவுமலர்க் கண்பனிப்பக் கைகள் கூப்பி வீழ்ந் தெழுந்து புறம்போந்து வேத வாய்மைச், சிரபுரத்துப் பிள்ளையார் செல்லும் போது திருநீல கண்டயாழ்ப் பாணர் பின்னே, வரஅவரை வளம்பெருகு மனையிற் போக அருள்செய்து தந்திருமா ளிகையின் வந்தார். உசுக

மறையவர்கள் அடிபோற்றத் தந்தை யாரும் மருங்கணைய மாளி கையில் அணையும் போதில், நிறைகுடமும் மணிவிளக்கும் முதலா யுள்ள †நீதிமறைக் குலமகளிர் நெருங்கி ஏந்த, இறைவர்திரு நீற்றுக் காப் பேந்தி முன்சென் றீன்றதா யார்சாத்தி இறைஞ்சி ஏத்த, முறைமையவர்க் கருள்செய்து மடத்திற் புக்கார் முதல்வர்பால் மணி முத்தின் சிவிகை பெற்றார். உசுஉ

செல்வநெடு மாளிகையில் அமர்ந்து நாளும் திருத்தோணி மிசை யாரைச் சென்று தாழ்ந்து, மல்குதிருப் பதிகங்கள் பலவும் பாடி மனமகிழ்ந்து போற்றிசைத்து வைகு நாளில், தொல்லைமுறை உபநயனப் பருவம் எய்த உலகிறந்த சிவஞானம் உணரப் பெற்றார், தொல்லை ‡மறை விதிச்சடங்கு மறையோர் செய்யத் தோலொடுநூல் தாங்கினார் சுரர்கள் போற்ற. உசுந

ஒருபிறப்பும் எய்தாமை உடையார் தம்மை உலகியல்பின் உப நயன முறைமை யாகும், இருபிறப்பின் நிலைமையினைச் சடங்கு காட்டி

---

உசுக. கருணையாகிய திருவருளின். அன்பு கூடிய மலர்க்கண்கள் இன்ப நீர் பொழிய

உசுஉ. முதலாயுள்ளனவற்றை. இறைவர் - சிவபெருமானது.

உசுந. தொல்லை முறை - பழைய முறைப்படி. உலகு......பெற்றார் - பிர கிருதி அசுத்தம் சுத்தம் என்னும் மூன்று மாயைகளையுங் கடந்த சிவஞானத்தை உணரப் பெற்றவராகிய திருஞான சம்பந்தர். "பாச ஞானத்தாலும் பசு ஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பரனைப் பதிஞானத்தாலே - நேசமொடும் உள்ளத்தே நாடி"—**சிவஞான சித்தியார்** : சூத். கூ. க. தோலொடு - மான் தோலொடு. நூல் - பூணூல். சுரர்கள் - தேவர்கள்.

உசுச. தவத்தால் முதன்மையும் மகன்மையும் பெற்றுப் பிறவா நெறி எய்தியவர் திருஞான சம்பந்தர். அவர் உலகோபகாரமாகச் சீர்காழியில் தோன்றினாரேயன்றி வினைக்கீடாகத் தோன்றினாரில்லை. "பாச மற்றவ ராயினும் பார்மிசை - ஆசை சங்கரற் காயின தன்மையால் - தேசு மிக்க திருவரு

பா - ம்—*பரங். †நீடு. ‡முறை.

எய்துவிக்கும் மறைமுனிவர் எதிரே நின்று, "வருதிறத்தின் மறை நான்குந் தந்தோம்" என்று மந்திரங்கள் மொழிந்தவர்க்கு மதுர வாக்கால், பொருவிறப்ப ஓதினார் புகலி வந்த புண்ணியனார் எண்ணிறந்த புனித வேதம். ௨௬௪

சுருதிஆ யிரம்ஓதி அங்க மான தொல்கலைகள் எடுத்தியம்புந் தோன்ற லாரைப், பரிதிஆ யிரகோடி விரிந்தால் என்னப் பரஞ்சோதி அருள்பெற்ற பான்மை மேன்மை, கருதிஆ தரவோடும் வியப்புற் றேத்துங் கலைமறையோர் கவுணியனார் தம்மைக் கண்முன், வருதியா னப்பொருளென் றிறைஞ்சித் தாமுன் வல்லமறை கேட்டையந் தீர்ந்து வாழ்ந்தார். ௨௬௫

---

வானவர்" "ஈறிலாத் திருஞான சம்பந்தர்" "தவமுதல்வர் சம்பந்தர்" - என்று இப்புராணம் (௧௮௬; ௭௦; ௯௧௬) கூறுதலை நோக்குக. "அருத்தியாய் திருந்தடி-மறக்குமாறு இலாத என்னை மையல் செய்து இம்மண்ணின் மேல் - பிறக்குமாறு காட்டினாய்" என்னுந் திருத்துருத்தித் தேவாரத்தில் சம்பந்தப் பெருமானே தமது நிலையைக் குறிப்பிட்டவாறு காண்க. "திருந்தடி மறக்குமாறு இலாத என்னை" என்பது "ஒரு பிறப்பும் எய்தாமை உடையார் தம்மை" என்பதன் நுட்பத்தை விளக்குவது காண்க. இரு பிறப்பின் நிலைமை - தாய் வயிற்றில் பிறப்பது ஒன்று; ஞானத்தில் பிறப்பது மற்றொன்று. திருஞான சம்பந்தர் வினைக்கீடாகப் பிறவி தாங்கியவரல்லராதலானும், அவர் ஆண்டவன் அருள் பெற்று எல்லாவற்றையும் ஓதாது உணர்ந்து தமிழ் வேதம் அருளுபவராதலானும், அவருக்கு உபநயனம், வேத போதனை முதலியன அநாவசியம் என்று பிராமணர்கள் கருதாது, உலகியல் முறைப்படி அவைகளை நிகழ்த்தினார்கள். ஞான வள்ளல் எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டிருந்து, தமக்கு வேத மந்திரங்களை ஓதவந்தவர்களுக்கு அவர்கள் வியக்குமாறு எண்ணிறந்த புனித வேதங்களை அறிவுறுத்தினார். இதனால் ஞானிகட்குப் புறக்கோலப் பூணூல், வேதமோதல், சடங்கு, சம்பிரதாயங்கள் முதலியன வேண்டுவதில்லை என்பது புலனாகிறது. மொழிந்தவர்க்கு - உரைத்த பிராமணர்கட்கு. புகலி வந்த புண்ணியனார் தமது மதுரவாக்கால். பொரு விறப்ப - ஒப்பில்லாத முறையில். குறிப்பிட்ட நான்கு வேத மந்திரங்களை ஓதவந்த பிராமணர்கட்குச் சம்பந்தப் பெருமான் எண்ணிறந்த புனித வேதங்களை அருளியது ஈண்டு உன்னத்தக்கது.

௨௬௫. எண்ணிறந்த சுருதிகளை (வேதங்களை) ஓதி, அவைகளின் அங்கங்களான பழைய கலைகளை எடுத்துச் சொல்லும் திருஞான சம்பந்தரை. ஆயிரகோடி பரிதி (சூரியர்கள்). பரஞ்சோதி - சிவபெருமானது. சூரியன் முதலியவற்றிற்குச் சோதி வழங்கலின் சிவம் பரஞ்சோதியாதல் காண்க; பாயிரம் முதற்பாட்டின் விரிவுரை பார்க்க. ஆதரவோடும்-விருப்போடும். கலைமறையோர் - கலைஞானப் பிராமணர்கள்; திருவருள் ஞானங் கைவரப் பெறாதவர்கள். தாங்கள்

மந்திரங்க ளானஎலாம் அருளிச் செய்து மற்றவற்றின் வைதிக நூற் சடங்கின் வந்த, சிந்தைமயக் குறும்ஐயந் தெளிய எல்லாம் செழுமறையோர்க் கருளிஅவர் *தெருளும் ஆற்றால், முந்தைமுதன் மந்திரங்கள் எல்லாந் தோன்றும் முதலாகும் முதல்வனார் எழுத்தஞ் சென்பார், "அந்தியினுள் மந்திரம்அஞ் செழுத்து மே"என் றஞ் செழுத்தின் திருப்பதிகம் அருளிச் செய்தார். உசுசு

"மந்திரம் நான்மறை யாகி வானவர்
சிந்தையுள் நின்றவர் தம்மை யாள்வன
செந்தழல் ஓம்பிய செம்மை வேதியர்க்
கந்தியுள் மந்திரம் அஞ்செ ழுத்துமே"—தேவாரம்.

அத்தகைமை பிள்ளையார் அருளிச் செய்ய அந்தணர்கள் அருள் தலைமேற் கொண்டு தாழ்ந்து, சித்தமகிழ் வொடுசிறப்பத் தாமுந் தெய்வத் திருத்தோணி அமர்ந்தாரைச் சென்று தாழ்ந்து, மெய்த்த இசைப் பதிகங்கள் கொண்டு போற்றி விரைமலர்த்தாள் மனங் கொண்டு மீண்டு போந்து, பத்தருடன் இனிதமரும் பண்பு கூடப் பரமர்தாள் பணிந்தேத்திப் பயிலும் நாளில். உசுஎ

வேறு

பந்தணை மெல்விர லாளும் பாமரும் பாய்விடை மீது
வந்துபொன் வள்ளத் தளித்த வரம்பில்ஞா னத்தமு துண்ட
செந்தமிழ் ஞானசம் பந்தர் திறங்கேட்டி றைஞ்சுதற் காக
அந்தணர் பூந்தராய் தன்னில் அணைந்தனர் நாவுக் கரையர். உசுஅ

"வாக்கின் பெருவிறல் மன்னர் வந்தணைந் தார்"எனக் கேட்டுப்
பூக்கமழ் வாசத் தடஞ்சூழ் புகலிப் பெருந்தகை யாரும்
"ஆக்கிய நல்வினைப் பே"றென் றன்பர் குழாத்தொடும் எய்தி
ஏற்கும் பெருவிருப் போடும் எதிர்கொள எய்தும் பொழுதில்.

---

கற்றுத் தேர்ந்த வேதத்தைத் திருஞான சம்பந்தர் வாயிலாகக் கேட்டு ஐயந் தீர்ந்து. அதற்கு முன்னே அவர்கள் வாழ்ந்தது வாழ்வன்றாதலின் "வாழ்ந் தார்" என்றார்.

உசுசு. வைதிக நூல் - வேத சம்பந்தமான நூல்களிற் சொல்லப்பட்ட. தெருளும் - தெளியும்.

உசுஅ. அந்தணர்கள் வாழும் சீர்காழியில். "அந்தணரென்போர் அற வோர் மற்றெவ்வுயிர்க்குஞ்-செந்தண்மை பூண்டொழுகலான்"—குறள் : உ0.

உசுகூ. வாக்கின் பெரு விறல் மன்னர் - திருநாவுக்கரசர். பூ......சூழ் - தாமரைப் பூக்களின் மணங்கமழும் பொய்கைகள் சூழ்ந்த. நல்வினை ஆக்கிய பேறு.

பா - ம்—*தெளியு.

சிந்தை இடையறு அன்பும் திருமேனி தன்னில் அசைவும்
*கந்தம் மிகையாங் கருத்தும் கைஉழ வாரப் படையும்
வந்திழி கண்ணீர் மழையும் வடிவிற் பொலிதிரு நீறும்
அந்தமி லாத்திரு வேடத் தரசும் எதிர்வந் தணைய. ௨௭௦

கண்ட கவுணியக் கன்றும் கருத்திற் பரவுமெய்க் காதல்
"தொண்டர் திருவேடம் நேரே தோன்றிய" தென்று தொழுதே
அண்டரும் போற்ற †அணைந்தங் கரசும் எதிர்வந் திறைஞ்ச
மண்டிய ஆர்வம் பெருக மதுர மொழிஅருள் செய்தார். ௨௭௧

பேரிசை நாவுக் கரசைப் பிள்ளையார் கொண்டுடன் போந்து
போர்விடை யார்திருத் தோணிப் பொற்கோயி லுட்புகும் போதில்
ஆர்வம் பெருக அணையும் அவருடன் கும்பிட் டருளால்
சீர்வளர் தொண்ட ரைக்கொண்டு ‡திருமா ளிகையினிற் சேர்ந்தார்.

அணையுந் திருத்தொண்டர் தம்மோ டாண்ட அரசுக்கும் அன்பால்
இணையில் திருவமு தாக்கி இயல்பால் அமுதுசெய் வித்துப்
புணரும் பெருகன்பு நண்பும் பொங்கிய காதலிற் கும்பிட்
டுணருஞ்சொன் மாலைகள் சாத்தி உடன்மகிழ் வெய்தி §உறைந்தார்.

அந்நாள் சிலநாள்கள் செல்ல அருள்திரு நாவுக் கரசர்
மின்னார் சடைஅண்ணல் எங்கும் மேவிடங் கும்பிட வேண்டிப்
பொன்மார்பின் முந்நூல் புனைந்த புகலிப் பிரான்இசை வோடும்
பின்னாக எய்த இறைஞ்சிப் பிரியாத நண்பொடும் போந்தார். ௨௭௪

வாக்கின் தனிமன்னர் ஏக மாறாத் திருவுளத் தோடும்
||பூக்கமழ் பண்ணைகள் சூழ்ந்த புகலியின் மீண்டும் புகுந்து

௨௭௦. திருநாவுக்கரசு சுவாமிகள் புராணம் : ௪௭௦ ; ௨௨௪ பார்க்க. கந்த மிகையாம் கருத்தும் - "இந்திரியங்களால் உணரப்படும் விஷயத் தொகுதிகள் குற்றமென்னுங் கருத்தும் (கந்தம் - இந்திரியம்; மிகை - குற்றம்)" என்பர் ஆறுமுகத்தம்பிரானுர். "திருமேனி தன்னிலசையுங் கந்தை..." என்று பாடங் கொண்டு "திருமேனியிலசைகின்ற கந்தையும் மிகை என்கின்ற கருத்தும்" என்பர் பழைய குறிப்புரை யாசிரியர். அந்தமிலா - அளவில்லாத.

௨௭௧. மண்டிய ஆர்வம் - மிக்கெழுந்த அன்பு.

௨௭௨. பேரிசை - பெரும்புகழ். தொண்டரை - திருநாவுக்கரசரை.

௨௭௩. உறைந்தார் - அன்பில் ஒருவரோடொருவர் உறைந்து நின்றனர்

௨௭௪. இசைவோடும் பின்னாக எய்த - உடன்பாட்டோடும் பின்னேவர.

பா - ம்—*கந்தை. †அணைந்த அரசும். ‡திருமாளிகை மடஞ். §இருந்தார். ||பூக்கம ழும்பணை.

தேக்கிய மாமறை வெள்ளத் திருத்தோணி வீற்றிருந் தாரைத்
தூக்கின் தமிழ்மாலை பாடித் தொழுதங் குறைகின்ற நாளில். ௨௭௫

செந்தமிழ் மாலை விகற்பச் செய்யுட்க ளான்மொழி மாற்றும்
வந்தசொற் சீர்மாலை மாற்றும் வழிமொழி எல்லா மடக்கும்
சந்த வியமகம் ஏகபா தந் தமிழ்இ ருக்குக்குறள் சாத்தி
எந்தைக் கெழுகூற் றிருக்கை ஈரடி †ஈரடி ‡வைப்பு. ௨௭௬

நாலடி மேல்வைப்பு §மேன்மை நடையின் முடுகுமி ராகம்
சால்பினில் சக்கரம் ஆதி விகற்பங்கள் சாற்றும் பதிக
மூலம் இலக்கிய மாக எல்லாப் பொருள்களும் முற்ற
ஞாலத் துயர்காழி யாரைப் பாடினார் ஞானசம் பந்தர். ௨௭௭

இன்னிசை பாடின எல்லாம் யாழ்ப்பெரும் பாணனா தாமும்
மன்னும் இசைவடி வான மதங்கசூ ளாமணி யாரும்
பன்னிய ஏழிசை பற்றிப் பாடப் பதிகங்கள் பாடிப்
பொன்னின் திருத்தா ளம்பெற்றார் புகலியிற் போற்றி இருந்தார்.

அங்கண் அமர்கின்ற நாளில் "அருந்தமிழ் நாடெத்தி னுள்ளும்
திங்கள் சடைஅண்ண லார்தம் திருப்பதி யாவையுங் கும்பிட்
டெங்குந் தமிழ்மா லைபாடி ஏத்திஇங் கெய்துவன்" என்று
தங்குலத் தாதையா ரோடுந் தவமுனி வர்க்கருள் செய்தார். ௨௭௯

பெருகு விருப்புடன் நோக்கிப் பெற்ற குலத்தாதை யாரும்
"அருமையால் உம்மைப் பயந்த அதனாற் பிரிந்துறை வாற்றேன்
இருமைக்கும் இன்பம் அளிக்கும் யாகமும் யான்செய வேண்டும்
ஒருமையால் இன்னஞ் சிலநாள் உடன்எய் துவேன்"என் றுரைத்தார்.

ஆண்டகை யாரும் இசைந்தங் கம்பொற் றிருத்தோணி மேவும்
நீண்ட சடையார் அடிக்கீழ்ப் பணிவுற்று நீடருள் பெற்றே

---

௨௭௫. தேக்கிய......தோணி - நிறைந்த வேதமாகிய வெள்ளத்திலே திருத்தோணியில். தூக்கின் - ஏழு தூக்குகளினால்; இவை இசைத்தமிழ் நூலுட் கூறப்படுவன; தாளங்களின் வழியே வருவன; "ஒருசீர் செந்தூக் கிருசீர் மதலை - முச்சீர் துணிவு நாற்சீர் கோயில் - ஐஞ்சீர் நிவப்பே அறுசீர் கழலே - எழுசீர் நெடுந்தூக் கென்மனார் புலவர்."

௨௭௯. எத்தினுள்ளும் - எல்லாவற்றுள்ளும்.

௨௮௦. பயந்த......ஆற்றேன் - பெற்றமையால் பிரிந்து வாழேன். இருமைக்கும் - இம்மை மறுமைக்கும். ஒருமைப்பாட்டுடன்.

பா - ம்—*மடக்குச். †மேல்வைப் பியைய. ‡வைப்பும். §மோனை. ¶முடுகும் அம்மார்க்கம்.

ஈண்டு புகழ்த்தா தையார்பின் எய்திட யாழ்ப்பாண ரோடும்
காண்டகு காழி தொழுது காதலி னுற்புறம் போந்தார். ௨அக

அத்திரு மூதூரின் உள்ளார் அமர்ந்துடன் போதுவார் போத
மெய்த்தவர் அந்தணர் நீங்கா விடைகொண்டு மீள்வார்கள் மீள
முத்தின் சிவிகைமேற் கொண்டு மொய்யொளித் தாமம் நிரைத்த
நித்தில வெண்குடை மீது நிறைமதி போல நிழற்ற. ௨அ௨

சின்னந் தனிக்காளந் தாரை "சிரபுரத் தாண்டகை வந்தார்"
என்னுந் தகைமை விளங்க ஏற்ற திருப்பெயர் சாற்ற
முன்னெம் மருங்கு நிரந்த முரசுடைப் பல்லியம் ஆர்ப்ப
மன்னுந் திருத்தொண்ட ராஞர் வந்தெதிர் கொண்டு வணங்க. ௨அ௩

சங்கநா தங்கள் ஒலிப்பத் தழங்குபொற் கோடு முழங்க
மங்கல வாழ்த்துரை எங்கும் மல்க மறைமுன் இயம்பத்
திங்களும் பாம்பும் அணிந்தார் திருப்பதி எங்கும் முன்சென்று
பொங்கிய காதலிற் போற்றப் புகலிக் கவுணியர் போந்தார். ௨அ௪

திருமறைச் சண்பைய ராளி சிவனார் திருக்கண் ணார்கோயில்
பெருவிருப் பால்அணைந் தேத்திப் பிஞ்ஞகர் கோயில் பிறவும்
உருகிய அன்பால் இறைஞ்சி உயர்தமிழ் மாலைகொண் டேத்தி
வருபுனற் பொன்னி வடபால் குடதிசை நோக்கி வருவார். ௨அ௫

போற்றிய காதல் பெருகப் புள்ளிருக் குந்திரு வேளூர்
நாற்றடந் தோளுடை மூன்று நயனப் பிரான்கோயில் நண்ணி
ஏற்றஅன் பெய்தவ ணங்கி இருவர்புள் வேந்தர் இறைஞ்சி
ஆற்றிய பூசனை சாற்றி அஞ்சொற் பதிகம் அணிந்தார். ௨அ௬

"கள்ளார்ந்த பூங்கொன்றை மதமத்தம் கதிர்மதியம்
உள்ளார்ந்த சடைமுடிஎம் பெருமானார் உறையுமிடம்

---

௨அக. இசைந்து அங்கு அம்பொன். ஈண்டு - நிறைந்த.

௨அ௨. மொய்......குடைமீது - மொய்த்த நிலவு ஒழுங்குபடக் கான்ற முத்துக்குடை தம்மீது. நிறைமதி - பூரண சந்திரன்.

௨அ௩. பெயர் - பாலறாவாயர், முத்தமிழ் விரகர், பரசமய கோளரி, திருஞானசம்பந்தர் முதலிய பெயர்களை. நிரந்த - பரந்த; சூழ்ந்த. முரசுடைப் பல்லியம் ஆர்ப்ப - முரசை முதலாக உடைய பல வாத்தியங்கள் ஒலிக்க.

௨அ௪. சங்க......முழங்க - சங்கொலிகள் முழங்கவும், ஒலிக்கும் பொன் கொம்பு வாத்தியங்கள் முழங்கவும்.

௨அ௫. பொன்னி வடபால் குடதிசை - காவிரியின் வடக்குப் பக்கத்து மேற்குத் திசை.

௨அ௬. தடம்-பெரிய. நயனம் - கண். இருவர் புள்வேந்தர் - சம்பாதிசடாயு என்னும் இரு பறவை வேந்தர்; இருவருஞ் சகோதரர்; "சம்பாதி இருந்த சம்

தள்ளாய சம்பாதி சடாயென்பார் தாமிருவர்
புள்ளானூர்க் கரையனிடம் புள்ளிருக்கு வேளூரே"—தேவாரம்.

நீடு திருநின்றி யூரின் நிமலனார் நீள்கழல் ஏத்திக்
கூடிய காதலிற் போற்றிக் கும்பிட்டு வண்தமிழ் கூறி
நாடுசீர் நீடூர் வணங்கி நம்பர் திருப்புன்கூர் நண்ணி
ஆடிய பாதம் இறைஞ்சி அருந்தமிழ் பாடிஅ மர்ந்தார். உஅஎ

அங்குநின் றேகிஅப் பாங்கில் அரனார் மகிழ்கோ யிலான
எங்கணுஞ் சென்று பணிந்தே ஏத்தி இமவான் மடந்தை
பங்கர் உறைபழ மண்ணிப் படிக்கரைக் கோயில் வணங்கித்
தங்கு தமிழ்மாலை சாத்தித் திருக்குறுக் கைப்பதி சார்ந்தார். உஅஅ

திருக்குறுக் கைப்பதி மன்னித் திருவீரட் டானத் தமர்ந்த
பொருப்புவில் லாளரை ஏத்திப் போந்தன்னி யூர்சென்று போற்றிப்
பருக்கை வரைஉரித் தார்தம் பந்தண நல்லூர் பணிந்து
விருப்புடன் பாடல் இசைத்தார் வேதந் தமிழால் விரித்தார். உஅகூ

அப்பதி போற்றி அகல்வார் அரனார் திருமணஞ் சேரி
செப்பருஞ் சீர்த்தொண்ட ரோடுஞ் சென்று தொழுதிசை பாடி
எப்பொரு ளுந்தரும் ஈசர் எதிர்கொள்பா டிப்பதி எய்தி
ஒப்பில் பதிகங்கள் பாடி ஓங்குவேள் விக்குடி உற்றார். உகூ0

செழுந்திரு வேள்விக் குடியில் திகழ்மண வாளநற் கோலம்
பொழிந்த புனல்பொன்னி மேவும் புனிதத் துருத்தி இரவில்
தழும்பிய தன்மையுங் கூடத் தண்தமிழ் மாலையிற் பாடிக்
கொழுந்துவெண் திங்கள் அணிந்தார் கோடி காவிற்சென் றடைந்தார்.

"ஓங்கிமேல் உழிதரும் ஒலிபுனற் கங்கையை ஒருசடைமேல்
தாங்கினார் இடுபலி தலைகல னாக்கொண்ட தம்மடிகள்
பாங்கினால் உமையொடும் பகலிடம் புகலிடம் பைம்பொழில்சூழ்
வீங்குநீர்த் துருத்தியார் இரவிடத் துறைவர்வேள் விக்குடியே"
—தேவாரம்.

---

பாதி வனமும்"—மணிமேகலை: மலர் வனம். நிச. புள்ளிருக்கு வேளூருக்குச் சம்பாதிபுர மென்றொரு பெயரும் உண்டு. வேளூரில் சம்பாதி பூசித்தமையால் அவ்வூர் இப்பெயர்பெற்றதுபோலும். சடாயுவைப்பற்றி இராமாயணத்திற் காண்க. உஅஅ. அப்பாங்கில் - அப்பக்கத்தில்.

உஅகூ. பொருப்பு வில்லாளரை - மலைவில்லாளராகிய சிவபெருமானை. பருக்கை வரையுரித்தார் - யானையை உரித்தவராகிய சிவபெருமானை,

உகூக. தழும்பிய - எழுந்தருளிய.

திருக்கோடி காவில் அமர்ந்த தேவர் சிகாமணி தன்னை
எருக்கோ டிதழியும் பாம்பும் இசைந்தணிந் தானைவெள் ளேனப்
பருக்கோடு பூண்ட பிரானைப் பணிந்துசொன் மாலைகள் பாடிக்
கருக்கோடி நீப்பார்கள் சேருங் கஞ்சனூர் கைதொழச் சென்றார்.

கஞ்சனூர் ஆண்டதங் கோவைக் கண்ணுற் றிறைஞ்சிமுன் போந்து
மஞ்சணி மாமதில் சூழும் மாந்துறை வந்துவ ணங்கி
அஞ்சொல் தமிழ்மாலை சாத்தி அங்ககன் றன்பர்முன் னாகச்
செஞ்சடை வேதியர் மன்னுந் திருமங்க லக்குடி சேர்ந்தார். ௨௯௩

வெங்கண் †விடைமேல் வருவார் வியலூர் அடிகளைப் போற்றித்
தங்கிய இன்னிசை கூடும் தமிழ்ப்பதி கத்தொடை சாத்தி
அங்கண் அமர்வார்தம் முன்னே அருள்வே டங்காட்டத் தொழுது
செங்கண்மா லுக்கரி யார்தந் திருந்துதே வன்குடி சேர்ந்தார். ௨௯௪

திருந்துதே வன்குடி மன்னுஞ் சிவபெரு மான்கோயில் எய்திப்
பொருந்திய காதலிற் புக்குப் போற்றிவ ணங்கிப் புரிவார்
"மருந்தொடு மந்திர மாகி மற்றும்இ வர்வேட மாம்" என்
றருந்தமிழ் மாலைபு னைந்தார் அளவில்ஞா னத்தமு துண்டார். ௨௯௫

"மருந்துவேண் டில்இவை மந்திரங் கள்இவை
புரிந்துகேட் கப்படும் புண்ணியங் கள்இவை
திருந்துதே வன்குடித் தேவர்தே வெய்திய
அருந்தவத் தோர்தொழும் அடிகள்வே டங்களே"—தேவாரம்.

மொய்திகழ் சோலைஅம் மூதூர் முன்னகன் றந்நெறி செல்வார்
செய்தரு சாலிக ரும்பு தெங்குபைம் பூகத்தி டைபோய்
மைதிகழ் கண்டர்தங் கோயில் மருங்குள்ள எல்லாம் வணங்கி
எய்தினர் ஞான சம்பந்தர் இன்னம்பர் ஈசர்தங் கோயில். ௨௯௬

---

௨௯௨. இதழியும் - கொன்றையையும். வெள் ஏனப் பருக்கோடு - வெண் பன்றியின் பருத்த கொம்பை. கருக்கோடி நீப்பார்கள் - கோடிக் கணக்கிலுள்ள கருக்களை (பிறவிகளை) நீத்த அடியார்கள்.

௨௯௩. கோவை - சிவபிரானை. மஞ்சு - மேகம்.

௨௯௪. அங்கண் அமர்வார்-அத்திருப்பதியில் வீற்றிருந்தருளும் சிவபிரான்.

௨௯௫. புரிவார் - விரும்புவாராய்.

௨௯௬. மொய்திகழ் - மொய்த்து விளங்கும். செய் - வயல். பைம்பூகம் - பசிய கமுகு.

பா - ம்—*மஞ்சணை. †விடைமீது மேவும்.

இன்னம்பர் மன்னும்பி ரானை இறைஞ்சி இடைமடக் கான
பன்னுந் தமிழ்த்தொடை மாலைப் பாடல்பு னைந்து பரவிப்
பொன்னங் கழலிணை போற்றிப் புறம்போந் தணைந்து புகுந்தார்
மன்னுந் தடங்கரைப் பொன்னி வடகுரங் காடு துறையில். ௨௯௭

"எண்டிசைக் கும்புகழ் இன்னம்பர் மேவிய
வண்டிசைக் குஞ்சடை யீரே
வண்டிசைக் குஞ்சடை யீருமை வாழ்த்துவார்
தொண்டிசைக் குந்தொழி லோரே"—தேவாரம்.

வடகுரங் காடு துறையில் வாலியார் தாம்வழி பட்ட
அடைவுந் திருப்பதி கத்தில் அறியச் சிறப்பித் தருளிப்
புடைகொண் டிறைஞ்சினர் போந்து புறத்துள்ள தானங்கள் போற்றிப்
படைகொண்ட மூவிலை வேலார் பழனத் திருப்பதி சார்ந்தார். ௨௯௮

"நீலமா மணிநிறத் தரக்கனை இருபது கரத்தொடொல்க
வாலினாற் கட்டிய வாலியார் வழிபட மன்னுகோயில்
ஏலமோ டிலைஇல வங்கமே இஞ்சியே மஞ்சளுந்தி
ஆலியா வருபுனல் வடகரை யடைகுரங் காடுதுறையே"—தேவாரம்.

பழனத்து மேவிய முக்கண் பரமேட்டி யார்பயில் கோயில்
உழையுக் கிறைஞ்சிநின் றேத்தி உருகிய சிந்தைய ராகி
விழைசொற் பதிகம் விளம்பி விருப்புடன் மேவி அகல்வார்
அழனக்க பங்கய வாவி ஐயாறு சென்றடை கின்றார். ௨௯௯

வேறு

மாடநிரை மணிவீதித் திருவையாற் றினில்வாழு மல்கு தொண்டர்
"நாடுய்யப் புகலிவரு ஞானபோ னகர்வந்து நண்ணி னார்" என்
றாடலொடு பாடல்அறா அணிமூதூர் அடையஅலங் காரஞ் செய்து
நீடுமனக் களிப்பினொடும் எதிர்கொள்ள நித்திலயா னத்து நீங்கி. ௩௦௦

வந்தணைந்த திருத்தொண்டர் மருங்குவர மான்ஏந்து கையர் தம்பால்
நந்திதிரு வருள்பெற்ற நன்னகரை முன்இறைஞ்சி நண்ணும் போதில்

௨௯௮. அடைவும் - அநுபவத்தையும்; முறைமையுமாம். புடை கொண்டு - அருகே சூழ்ந்து. மூவிலை வேலார் - சூலபாணியாகிய சிவபெருமானது.

௨௯௯. பயில் - எழுந்தருளியுள்ள. கோயில் உழை - கோயிலில். விழை - (எவரும்) விரும்பும். அழல் நக்க பங்கய வாவி - நெருப்பையும் பழிக்கும் தாமரைத் தடாகங்களையுடைய.

௩௦௦. மாடநிரை - மாடங்கள் வரிசையாகவுள்ள. மல்கு - நிறைந்து நிற்கும். அடைய - முழுவதும். நித்திலயானத்து - முத்துச்சிவிகையினின்றும்.

"ஐந்துபுலன் நிலைகலங்கும் இடத்தஞ்சேல் என்பார்தம் ஐயா" றென்று
புந்திநிறை செந்தமிழின் சந்தஇசை போற்றிசைத்தார் புகலி வேந்தர்.

" புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி அறிவழிந்திட் டைம்மே லுந்தி
அலமந்த போதாக அஞ்சேலென் றருள்செய்வான் அமருங் கோயில்
வலம்வந்து மடவார்கள் நடமாட முழவதிர மழையென் றஞ்சிச்
சிலமந்தி அலமந்து மரமேறி முகில்பார்க்குந் திருவை யாறே"—தேவாரம்.

மணிவீதி இடங்கடந்து மாலயனுக் கரியபிரான் மன்னுங் கோயில்
அணிநீடு கோபுரத்தை அணைந்திறைஞ்சி உள்ளெய்தி அளவில் காதல்
தணியாத கருத்தினொடுந் தம்பெருமான் கோயில்வலங் கொண்டு தாழ்ந்து
பணிசூடு மவர்முன்பு பணிந்துவீழ்ந் தெழுந்தன்பாற் பரவு கின்றார்.

"கோடல்கோங் கங்குளிர்கூ விளம்" என்னுந் திருப்பதிகக் குலவு மாலை
நீடுபெருந் திருக்கூத்து நிறைந்ததிரு உள்ளத்து நிலைமை தோன்ற
"ஆடுமா றதுவல்லான் ஐயாற்றெம் ஐயனே" என்று நின்று
பாடினார் ஆடினார் பண்பினொடுங் கண்பொழிநீர் பரந்து பாய. ௩௦௩

" கோடல்கோங் கங்குளிர் கூவிள மாலை குலாயசீர்
ஓடுகங் கையொளி வெண்பிறை சூடும் ஒருவனார்
பாடல்வீ ணைமுழ வங்குழல் மொந்தைபண் ணாகவே
ஆடுமா று வல்லானும் ஐயா றுடை ஐயனே "—தேவாரம்.

பலமுறையும் பணிந்தெழுந்து புறம்போந்து பரவுதிருத் தொண்ட ரோடு
நிலவுதிருப் பதியதன்கண் நிகழுநாள் நிகரிலா நெடுநீர்க் கங்கை
அலையுமதி முடியார்தம் பெரும்புலியூர் முதலான அணைந்து போற்றிக்
குலவுதமிழ்த் தொடைபுனைந்து †மீண்டணைந்து பெருகார்வங் கூரு நாளில்.

குடதிசைமேற் போவதற்குக் கும்பிட்டங் கருள்பெற்றுக் குறிப்பி னோடும்
படருநெறி மேலணைவார் பரமர்திரு நெய்த்தானப் பதியில் நண்ணி
அடையுமனம் உறவணங்கி அருந்தமிழ்மா லைகள்பாடி அங்கு நின்றும்
புடைவளர்மென் கரும்பினொடு பூகமிடை மழபாடி போற்றச் சென்றார்.

---

௩௦௧. நந்திஎம் பெருமான், ஆண்டவனை வழிபட்டுப் பேறு பெற்ற திரு வையாற்றை. புந்தி - உணர்வில்.

௩௦௨. பணி சூடுமவர் - பாம்பணிந்த சிவபெருமான்.

௩௦௩. கோடல் - காந்தள். கூவிளம் - வில்வம். குலவு - பொருந்தும்.

௩௦௪. குடதிசை - மேற்குத் திசை. புடை - பக்கங்களில். பூகமிடை - கமுகு நெருங்கிய.

பா -ம்—*பண்ணேடுங். †கொண்டுகளி.

செங்கைமான் மறியார்தந் திருமழபா டிப்புறத்துச் சேரச் செல்வார்
"அங்கையார் அழல்" என்னும் திருப்பதிகம் எடுத்தருளி அணைந்த போழ்தில்
"மங்கைவாழ் பாகத்தார் மழபாடி தலையினால் வணங்கு வார்கள்
பொங்குமா தவமுடையார்" எனத்தொழுது போற்றிசைத்தே கோயில்புக்கார்.

" அங்கை யார்அழ லன்னழ கார்சடைக்
கங்கை யான்கட வுள்ளிட மேவிய
மங்கை யான்உறை யும்மழ பாடியைத்
தங்கை யால்தொழு வார்தக வாளரே "—தேவாரம்.

மழபாடி வயிரமணித் தூண்அமர்ந்து மகிழ்கோயில் வலங்கொண்
டெய்திச், செழுவாச மலர்க்கமலச் சேவடிக்கீழ்ச் சென்றுதாழ்ந்
தெழுந்து நின்று, தொழுதாடிப் பாடிநறுஞ் சொன்மாலைத் தொடை
யணிந்து துதித்துப் போந்தே, ஒழியாத நேசமுடன் உடையவரைக்
கும்பிட்டங் குறைந்தார் சின்னாள். ௩௦௭

அதன்மருங்கு கடந்தருளால் திருக்கானூர் பணிந்தேத்தி
ஆன்ற சைவ, முதன்மறையோர் அன்பிலா லந்துறையின் முன்னவ
னைத் தொழுது போற்றிப், பதநிறைசெந் தமிழ்பாடிச் சடைமுடியார்
*பயில்பதியும் பணிந்து பாடி, மதகரட †வரையுரித்தார் வடகரைமாந்
துறைஅணைந்தார் மணிநூல் மார்பர். ௩௦௮

சென்றுதிரு மாந்துறையில் திகழ்ந்துறையுந் ‡துறைநதிவாழ்
சென்னி யார்தம், முன்றில்§பணிந் தணிநெடுமா ளிகைவலஞ்செய் துள்
புக்கு முன்பு தாழ்ந்து, துன்றுகதிர்ப் பரிதிமதி மருத்துக்கள்
தொழுதுவழி பாடு செய்ய, நின்றநிலை சிறப்பித்து நிறைதமிழின்
சொன்மாலை நிகழப் பாடி. ௩௦௯

அங்கணகன் றம்மருங்கில் அங்கணர்தம் பதிபிறவும் அணைந்து
போற்றிச், ||செங்கமலப் பொதிஅவிழச் சேல்பாயும் வயல்மதுவால்
சேறு மாறாப், பொங்கொலிநீர் மழநாட்டுப் பொன்னிவட கரைமிசைப்

௩௦௭. மழபாடியிலுள்ள பெருமான் பெயர் வச்சிரத்தம்ப நாயகராதலின் "மழபாடி வயிரமணித் தூண்" என்றார். உடையவரை - சிவபெருமானை.

௩௦௮. ஆன்ற - புலன் அடங்கிய. பதம் - மந்திரம். மதகரடவரை - யானையை.

௩௦௯. துன்று......மருத்துக்கள் - நெருங்கிய கிரணங்களையுடைய சூரியனும் சந்திரனும் தெய்வ வைத்தியர்களும் (மருத்துக்கள் இருவர்).

௩௧௦. பொதி - முறுக்கு.

பா - ம்—*பதிபலவும். †கரி. ‡திரு. §பணிந்தெழுநிலை. ||செங்கமலம்.

போய்ப் புகலி வேந்தர், நங்கள்பிரான் திருப்பாச்சி லாச்சிரா மம் பணிய நண்ணும் போதில். ௩௧0

அந்நகரில் கொல்லிமழ வன்பயந்த அரும்பெறல்ஆர் அமுத மென்சொற், கன்னிஇள மடப்பிணையாங் காமருகோ மளக்கொழுந்தின் கதிர்செய் மேனி, மன்னுபெரும் பிணியாகும் முயலகன்வந் தணைவுற மெய் வருத்தம் எய்தித், தன்னுடைய பெருஞ்சுற்றம் புலம்பெய்தத் தானும்மனந் தளர்வு கொள்வான். ௩௧௧

மற்றுவே றொருபரிசால் தவிராமை மறிவளருங் கையார் பாதம், பற்றியே வருங்குலத்துப் பான்மையினுன் ஆதலினால் பரிவு தீரப், பொற்றொடியைக் கொடுவந்து போர்க்கோலச் சேவகராய்ப் புரங்கள் மூன்றும், செற்றவர்தங் கோயிலினுட் கொடுபுகுந்து திருமுன்பே இட்டு வைத்தான். ௩௧௨

அவ்வளவில் ஆளுடைய பிள்ளையார் எழுந்தருளி அணுக எய்தச், "செவ்வியமெய்ஞ் ஞானமுணர் திருஞான சம்பந்தன் வந்தான்" என்றே, எவ்வுலகுந் துயர்நீங்கப் பணிமாறுந் தனிக்காளத் தெழுந்த ஓசை, வெவ்வுயிர்க்கும் அவன்கேளா மெல்லியலை விட்டெதிரே விரைந்து செல்வான். ௩௧௩

"மாநகரம் அலங்கரிமின் மகரதோ ரணநாட்டும் மணிநீர் வாசத், தூநறும்பூ ரணகும்பம் சோதிமணி விளக்கினொடு தூபம் ஏந்தும், ஏனைஅணி பிறவுமெலாம் எழில்பெருக இயற்றும்"என ஏவித் தானும், வானவர்நா யகர்மகனார் வருமுன்பு தொழுதணைந்தான் மழவர் கோமான். ௩௧௪

"பிள்ளையார் எழுந்தருளப் பெற்றேன்"என் றுனந்தம் பெருகு காதல், வெள்ளநீர் கண்பொழியத் திருமுத்தின் சிவிகையின்முன் வீழ்ந்த போது, வள்ளலார் "எழுக"என மலர்வித்த திருவாக்கால் மலர்க்கை சென்னி, கொள்ளமகிழ்ந் துடன்சென்று குலப்பதியின் மணிவீதி கொண்டு புக்கான். ௩௧௫

---

௩௧௧. பிணை - பெண்மான். காமரு கோமளக் கொழுந்தின் - அழகிய இளங்கொழுந்தின். முயலகன் - ஒருவித தொழுநோய்.

௩௧௨. மறி - மான் கன்று. பரிவு - துன்பம்.

௩௧௩. பணிமாறும் - ஊதும்; ஒலிக்கும். வெவ்வுயிர்க்கும் - துக்கத்தால் பெரு மூச்சு விட்டுக்கொண்டிருக்கும். அவன் - கொல்லி மழவன்.

௩௧௪. அலங்கரிமின் - அலங்கரியுங்கள். நாட்டும் - நாட்டுங்கள். ஏந்தும் - ஏந்துங்கள். இயற்றும் - செய்யுங்கள். வானவர் நாயகர் மகனார் - சிவகுமாராகிய திருஞான சம்பந்தர்.

மங்கலதூ ரியம்முழங்கு மணிவீதி கடந்துமதிச் சடையார் கோயில், பொங்குசுடர்க் கோபுரத்துக் கணித்தாகப் புனைமுத்தின் சிவிகை நின்றும், அங்கண்இழிந் தருளுமுறை இழிந்தருளி அணிவாயில் பணிந்து புக்குத், தங்கள்பிரான் கோயில்வலங் கொண்டுதிரு முன்வணங்கச் சாருங் காலை. ௩௧௬

கன்னிஇளங் கொடியுணர்வு கழிந்துநிலன் சேர்ந்ததனைக் கண்டு நோக்கி, "என்இது?" என் றருள்செய்ய மழவன்தான் எதிர்இறைஞ்சி "அடியேன் பெற்ற, பொன்இவளை முயலகனும் பொருவில்அரும் பிணி பொருந்தப் புனிதர் கோயில், முன்அணையக் கொணர்வித்தேன் இது புகுந்த படி" என்று மொழிந்து நின்றான். ௩௧௭

வேறு

அணிகிளர் தாரவன் சொன்ன மாற்றம் அருளொடுங் கேட்டந் நிலையில் நின்றே, பணிவளர் செஞ்சடைப் பாச்சின் மேய பரம்பொரு ளாயினா ரைப் பணிந்து, "மணிவளர் கண்டரோ மங்கையை வாட மயல் செய்வ தோஇவர் மாண்ப" தென்று, தணிவில் பிணிதவிர்க் கும்பதிகத் தண்டமிழ் பாடினார் சண்பை நாதர். ௩௧௮

"துணிவளர் திங்கள் துளங்கிவிளங்கச் சுடர்ச்சடை சுற்றிமுடித்துப்
பணிவளர் கொள்கையர் பாரிடஞ்சூழ வாரிடமும் பலிதேர்வர்
அணிவளர் கோல மெலாஞ்செய்துபாச்சி லாச்சிரா மத்துறைகின்ற
மணிவளர் கண்டரோ மங்கையைவாட மயல்செய்வதோ இவர்மாண்பே"

—தேவாரம்.

பண்ணு தமிழ்மறை யாம்பதிகம் பாடித் திருக்கடைக் காப்புச் சாத்தி, மன்னுங் கவுணியர் போற்றிநிற்க மழவன் பயந்த மழலை

௩௧௬. தூரியம் - வாத்தியங்கள். அணித்தாக - சமீபமாக. புனை - அழகு செய்த. அங்கண்......அருளி - அவ்விடத்தில் இறங்கும் முறைப்படி இறங்கியருளி.

௩௧௭. கண்டு - கண்ணால் கண்டு. நோக்கி - மனதாற் பார்த்து. பொன் என்பது புதல்விமீது மழவன் கொண்டுள்ள அளவிறந்த பேரன்பைக் காட்டுவது. பொருவில் - ஒப்பில்லாத. புகுந்தபடி - நிகழ்ந்தவாறு.

௩௧௮. அணிகிளர் தாரவன் - அழகு வீசும் மாலையை அணிந்த மழவன். மாற்றம் - உரையை. பாச்சின்மேய - திருப்பாச்சி லாச்சிரமத்தில் எழுந்தருளியுள்ள. மணிவளர் கண்டரோ - திருநீல கண்டரோ. விடத்தை ஏற்கும் இயல்பு வாய்ந்த பெருமான் இவள் விடத்தை (முயலகன் நோயை) ஏலாமல் (நீக்காமல்) இருக்கிறாரா என்பது குறிப்பு. தணிவில் பிணி - மணிமந்திர ஔஷதங்களால் தீராதபிணி.

மென்சொல், கன்னி யுறுபிணி விட்டு நீங்கக் கதுமெனப் பார்மிசை நின்றெழுந்து, பொன்னின் கொடிஎன ஒல்கி வந்து பொருவலித் தாதை புடைஅணைந்தாள். ௩௧௯

வன்பிணி நீங்கு மகளைக் கண்ட மழவன் பெருகு மகிழ்ச்சி பொங்கத், தன்தனிப் பாவையுந் தானுங் கூடச் சண்பையர் காவலர் தாளில் வீழ, நின்ற அருமறைப் பிள்ளை யாரும் நீரணி வேணி நிமலர் பாதம், ஒன்றிய சிந்தை யுடன்ப ணிந்தார் உம்பர் பிரான்திருத் தொண்டர் ஆர்த்தார். ௩௨௦

நீடு *திருவாச்சி ராமம் மன்னும் நேரிழை பாகத்தர் தாள்வ ணங்கிக், கூடும் அருளுடன் அங்கமர்ந்து கும்பிடுங் கொள்கைமேற் கொண்டு போந்தே, ஆடல் †பயின்றார் பதிபிறவும் அணைந்து பணிந் தடி போற்றி ஏகிச், சேடர்கள் வாழுந் திருப்பைஞ் ஞீலிச் சிவபெரு மானை இறைஞ்சச் சென்றார். ௩௨௧

பண்பயில் ‡வண்டினம் பாடுஞ் சோலைப் பைஞ்ஞீலி வாணர் கழல்ப ணிந்து, மண்பர வுந்தமிழ் மாலை பாடி வைகி வணங்கி மகிழ்ந்து போந்து, திண்பெருந் தெய்வக் கயிலை யில்வாழ் சிவனார் பதிபல சென் றிறைஞ்சிச், சண்பை வளந்தரு நாடர் வந்து தடந்திரு ஈங்கோய் மலையைச் சார்ந்தார். ௩௨௨

செங்கட் குறவரைத் தேவர் போற்றும் திகழ்திரு ஈங்கோய் மலையில் மேவும், கங்கைச் சடையார் கழல்ப ணிந்து கலந்த இசைப்பதி கம்பு னைந்து, பொங்கர்ப் பொழில்சூழ் மலையும் மற்றும் புறத்துள்ள தானங்க ளெல்லாம் போற்றிக், கொங்கிற் குடபுலஞ் சென்ற ணைந்தார் கோதில்மெய்ஞ் ஞானக் கொழுந்தனையார். ௩௨௩

வேறு

அண்டர்பிரான் ஆலயங்கள் அம்மருங்குள் ளனபணிந்து
தெண்டிரைநீர்த் தடம்பொன்னித் தென்கரையாங் கொங்கினிடை

௩௧௯. கதுமென - விரைவாக. ஒல்கி - ஒதுங்கி நடந்து. பொரு - போர்.
௩௨௦. நிமலர் பாதத்தை......பணிந்தார். ஒன்றிய-ஒருமைப்பட்ட ; கலந்த.
௩௨௧. நேரிழை பாகத்தர் - பார்வதி பாகராகிய சிவபெருமான். சேடர்கள் - அறிவிற் பெரியோர்கள்.
௩௨௩. பொங்கர் - மிக்செழுதலையுடைய ; கொம்புகளையுடைய எனினுமாம். கொங்கிற் குடபுலம் - கொங்கு நாட்டின் மேற்குத்திசை.

பா - ம்—*திருப்பாச்சி. †மகிழ்ந்தார். ‡வண்டிசை.

வண்டலையும் புனற்சடையார் மகிழ்விடங்கள் தொழுதணைந்தார்
கொண்டல்பயில் நெடும்புரிசைக் கொடிமாடச் செங்குன்றூர். ௩௨௪

அந்நகரில் வாழ்வாரும் அடியவரும் மனம்மகிழ்ந்து
பன்னெடுந்தோ ரணம்முதலாப் பயில்அணிகள் பலஅமைத்து
முன்னுறவந் தெதிர்கொண்டு பணிந்தேத்தி மொய்கரங்கள்
சென்னியுறக் கொண்டணைந்தார் சினவிடையார் செழுங்கோயில் ௩௨௫

தம்பெருமான் கோயிலினுள் எழுந்தருளித் தமிழ்விரகர்
நம்பரவர் திருமுன்பு தாழ்ந்தெழுந்து நலஞ்சிறக்க
இம்பரும்உம் பரும்ஏத்த இன்னிசைவண் தமிழ்பாடிக்
கும்பிடும்ஆ தரவுடன்அக் கோநகரில் இனிதமர்ந்தார். ௩௨௬

அப்பாலைக் குடபுலத்தில் ஆறணிந்தார் அமர்கோயில்
*எப்பாலுஞ் சென்றேத்தித் திருநணு வினைஇறைஞ்சிப்
பைப்பாந்தள் புனைந்தவரைப் பரவிப்பண் டமர்கின்ற
வைப்பான செங்குன்றூர் வந்தணைந்து வைகினார். ௩௨௭

†ஆங்குடைய பிள்ளையார் அமர்ந்துறையும் நாளின்கண்
தூங்குதுளி முகிற்குலங்கள் ‡சுரந்துபெயல் ஒழிகாலை
வீங்கொலிநீர் வைப்பெல்லாம் வெயில்§பெறா விருப்புவரப்
பாங்கர்வரை யுங்குளிரும் பனிப்பருவம் எய்தியதால். ௩௨௮

அளிக்குலங்கள் சுளித்தகல அரவிந்தம் முகம்புலரப்
பளிக்குமணி மரகதவல் லியிற்கோத்த பான்மையெனத்
துளித்தலை ¶மேல் அறுகுபனி தொடுத்தசையச் சூழ்பனியால்
குளிர்க்குடைந்து வெண்படாம் போர்த்தனைய குன்றுகளும். ௩௨௯

---

௩௨௪. கொண்டல் பயில் நெடும் புரிசை - மேகந் தவழும் நீண்ட மதில்களையுடைய.

௩௨௬. இம்பரும் உம்பரும் - மண்ணுலகிலுள்ளவரும் விண்ணுலகி லுள்ளவரும்.

௩௨௭. அதற்கு அப்பாலும் மேற்குத் திசையில். திருநணு - பவானி. பைப்பாந்தள் - படத்தையுடைய பாம்பினை. பண்டு அமர்கின்ற - முன்னிருந்த. செங்குன்றூர் - திருச்செங்கோடு.

௩௨௮. துளி தூங்கும். தூங்கும் - அசையும்; செறியுமாம். மேகக் கூட்டங்கள் மழை பொழிதலை நிறுத்திய காலத்தில். வீங்கு.........வர - பெருகும் ஒலியையுடைய கடல் சூழ்ந்த உலகமெல்லாம் வெயிலைப் பெறாமையால் அவ் வெயிலின்மீது விருப்பங்கொள்ள. பாங்கர் வரையும்-பக்கங்களிலுள்ள மலைகளும்.

௩௨௯. அளி......புலர - வண்டுக் கூட்டங்கள் வெறுத்து அகலத் தாமரை முகம் உலர. வல்லியில் - கொடியில். மரகதக் கொடியில் பளிங்கு மணி கோத்

பா - ம்—*எப்பாலுஞ் சென்றிறைஞ்சி இசைமொழிமா லைகள்சாத்தி. †ஆங்குறையும். ‡சுரந்த. §வெறு. ¶மேல்.

*மொய்ப்பனிகூர் குளிர்வாடை முழுதுலவும் பொழுதேயாய்க்
கொய்தளிர்மென் சோலைகளுங் குலைந்தசையக் குளிர்கொதுங்கி
வெய்யவனுங் கரநிமிர்க்க மாட்டான்போல் விசும்பினிடை
ஐதுவெயில் விரிப்பதுவும் அடங்குவதும் ஆகுமால். ௩௩0

நீடியஅப் பதிகளெலாம் †நிரைமாடத் திறைகள்தொறும்
பேடையுடன் பவளக்கால் புறவொடுங்கப் பித்திகையின்
தோடலர்மென் குழல்மடவார் துணைக்கலச ‡வெம்முலையுள்
ஆடவர்தம் பணைத்தோளும் மணிமார்பும் அடங்குவன. ௩௩௧

அரிசனமும் குங்குமமும் அரைத்தமைப்பார் அயலெல்லாம்
பரியஅகிற் குறைபிளந்து புகைப்பார்கள் பாங்கெல்லாம்
எரிஉமிழ்பேழ் வாய்த்தோணி இரும்பீர்ப்பார் இடையெல்லாம்
விரிமலர்§மென் புறவணிந்த மீப்புலத்து வைப்பெல்லாம். ௩௩௨

அந்நாளிற் கொடிமாடச் செங்குன்றூர் ¶அமர்ந்திருந்த
மெய்ஞ்ஞானப் பிள்ளையா ருடன்மேவும் பரிசனங்கள்

---

திருப்பதுபோலப் பசிய அறுகம் புற்களில் பனித்துளிகள் கோத்து (மொய்த்து)க் கொண்டிருந்தன என்றபடி. வெண்படாம் - வஸ்திரத்தை.

௩௩0. ஐது - மெல்லிய.

௩௩௧. நிரை மாடத்து இறைகள்தொறும் - வரிசையாகவுள்ள மாடங்களின் இறப்புக்கள்தோறும்; (இறை - வீட்டின் இறப்பு). பேடையுடன். பெண் புறாவினுடன். புறவு - ஆண் புறா. பித்திகையின்.........மடவார் - கருமுகையின் இதழ் மலர்கின்ற மெல்லிய கூந்தலையுடைய பெண்மணிகளின். பித்திகை - கருமுகை; பனிக்காலத்தில் வெப்பத்தின் பொருட்டு அணியும் ஒருவித மலர்; சிறு சண்பகமுமாம். வெம் - விரும்பத்தக்க. பணை - பருத்த.

௩௩௨. விரி......எல்லாம் - விரிந்த மெல்லிய மலர்களையுடைய குறிஞ்சியைச் சூழ்ந்து உயர்ந்துள்ள இடங்களிலெல்லாம். புறவு - முல்லை என்னலுமொன்று. மீப்புலத்து வைப்பெல்லாம் - மேல்திசை இடங்களிலெல்லாம் (கொங்கு நாடெல்லாம்) என்னலுமாம். அரிசனமும் - மஞ்சளும். பரிய அகில் குறை - பருத்த அகில் துண்டங்களை. பேழ் - பெரிய. தோணி இரும்பு - இரும்பினால் தோணி வடிவாகச் செய்யப்படுவது; குளிரின் போது இதில் தீயிட்டு இதை அருகே ஈர்த்துக்கொள்வது வழக்கம். ஈர்ப்பார் - இழுத்துக் கொள்வார்.

௩௩௩. பரிசனங்கள் - திருக்கூட்டத்தார். பயின்றதனால் - தங்கியதால். பனித்த - நடுக்கவல்ல. குளிர் முன்னான பிணி - குளிர் முன்னே தோன்றிப் பின்னே சுரங்காணும் நோய்; நளிர் சுரம்.

பாட - ம்—*மொய்யொளிகூர். †நீள் மாடத்துறையுள். ‡மென். §வண். ¶இடத்திருந்த.

பன்னாளும் அந்நாட்டிற் பயின்றதனால் பணித்தருளிர்
முன்னான பிணிவந்து மூள்வதுபோல் முடுகுதலும். ௩௩௩

*அந்நிலைமை ஆளுடைய பிள்ளையார்க் கவர்களெலாம்
முன்னறிவித் திறைஞ்சுதலும் முதல்வனார் அருள்தொழுதே
"இந்நிலத்தின் இயல்பெனினும் நமக்கெய்தப் பெறா" என்று
சென்னிமதி அணிந்தாரைத் திருப்பதிகம் பாடுவார். ௩௩௪

வேறு

"அவ்வினைக் கிவ்வினை" என்றெடுத் "தையர் அமுதுசெய்த
வெவ்விடம் முன்தடுத் தெம்மிடர் நீக்கிய வெற்றியினால்
எவ்விடத் தும்அடி யார்இடர் காப்பது கண்டம்" என்றே
"செய்வ்வினை தீண்டா திருநீல கண்டம்" எனச்செப்பினார். ௩௩௫

" அவ்வினைக் கிவ்வினை யாமென்று சொல்லு மஃதறிவீர்
உய்வினை நாடா திருப்பதும் உந்தமக் கூனமன்றே
கைவினை செய்தெம் பிரான்கழல் போற்றுது நாமடியேம்
செய்வினை வந்தெமைத் தீண்டப் பெறாதிரு நீலகண்டம்"—தேவாரம்.

ஆய குறிப்பினில் ஆணை நிகழ அருளிச்செய்து
தூய பதிகத் திருக்கடைக் காப்புத் தொடுத்தணிய
மேயஅப் பொற்பதி வாழ்பவர்க் கேஅன்றி மேவும்அந்நாள்
தீய பனிப்பிணி அந்நா டடங்கவுந் தீர்ந்ததன்றே. ௩௩௬

அப்பதி யின்கண் அமர்ந்து சிலநாளில் அங்ககன்று
துப்புறழ் வேணியர் தானம் †பலவுந் தொழுதருளி
முப்புரி நூலுடன் தோலணி மார்பர் முனிவரொடும்
செப்பருஞ் சீர்த்திருப் பாண்டிக் கொடுமுடி சென்றணைந்தார். ௩௩௭

பருவ மறாப்பொன்னிப் பாண்டிக் கொடுமுடி யார்தம்பாதம்
மருவி வணங்கி வளத்தமிழ் மாலை மகிழ்ந்துசாத்தி

௩௩௫. காப்பது - தீர்ப்பது. கண்டம் - திருநீலகண்டம்; கண்டோம் என்னலுமாம். திருநீல கண்டம் அடியார் இடர் தீர்ப்பதற்கு அறிகுறி என்றபடி.

௩௩௬. பனிப்பிணி - குளிர் சுரம்.

௩௩௭. துப்புறழ் வேணியர் - பவளம் போன்ற சடையையுடைய சிவபெருமான் எழுந்தருளியுள்ள.

௩௩௮. பருவமறாப் பொன்னி - காலந்தவறாது வெள்ளம் வரும் காவிரி நதி. குணதிசை - கிழக்குத் திசை.

பா - ம்—*அந்நிலையில். †பிறவுந் தொழுதிறைஞ்சி.

விரிசுடர் மாளிகை வெஞ்சமாக் கூடல் விடையவர்தம்
பொருவில்தா னம்பல போற்றிக் குணதிசைப் போதுகின்றார். ஙஙஅ

செல்வக் கருவூர்த் திருவா னிலைக்கோயில் சென்றிறைஞ்சி
நல்லிசை வண்டமிழ்ச் சொற்றொடை பாடிஅந் நாடகன்று
மல்கிய மாணிக்க வெற்பு முதலா வணங்கிவந்து
பல்கு திரைப்பொன்னித் தென்கரைத் தானம் பலபணிவார். ஙஙகூ

பன்னெடுங் குன்றும் படர்*பெருங் கானும் பலபதியும்
அந்நிலைத் தானங்கள் ஆயின எல்லாம் அமர்ந்திறைஞ்சி
மன்னு புகலியில் வைதிக வாய்மை மறையவனார்
பொன்னியல் வேணிப் புனிதர் பராய்த்துறை யுட்புகுந்தார். ஙச0

நீடும் பராய்த்துறை நெற்றித் தனிக்கண்ணர் கோயில்நண்ணிக்
கூடுங் கருத்தொடு கும்பிட்டுக் கோதில் தமிழ்ச்சொன் மாலை
பாடுங் கவுணியர் கண்பனி மாரி பரந்திழியச்
சூடுங் கரதலத் தஞ்சலி கோலித் தொழுதுநின்றார். ஙசக

தொழுது புறம்பணைந் தங்குநின் றேகிச் சுரர்பணிவுற்
றெழுதிரு வாலந் துறைதிருச் செந்துறை யேமுதலா
வழுவில்பல் கோயில்கள் சென்று வணங்கி மகிழ்ந்தணைவார்
செழுமலர்ச் சோலைத் திருக்கற் குடிமலை சேரவந்தார். ஙசஉ

வேறு

கற்குடி மாமலை மேலெழுந்த கனகக் கொழுந்தினைக் கால்வளையப்
பொற்றிரள் மேருச் சிலைவளைத்த போர்விடை யாளியைப் போற்றிசைத்து
நற்றமிழ் மாலை புனைந்தருளி ஞானசம் பந்தர் புலன்கள்ஐந்தும்
செற்றவர் மூக்கீச் சரம்பணிந்து திருச்சிராப் பள்ளிச் சிலம்பணைந்தார்.

செம்மணி வாரி அருவிதூங்கும் சிராப்பள்ளி மேய செழுஞ்சுடரைக்
கைம்மலை ஈருரி போர்வைசாத்துங் கண்ணுத லாரைக் கழல்பணிந்து

ஙஙகூ. மாணிக்க வெற்பு - இரத்தினகிரி.

ஙசங. கனகம் - பொன். "பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க - நெறிநின்றார் நீடு வாழ்வார்"—குறள் : 6. திருச்சிராப்பள்ளி மலையை.

ஙசச. செம்......தூங்கும் - மாணிக்கங்களை வாரி அருவி இடையறாது இழிதரும். கைம்மலை ஈருரி போர்வை - யானைத் தோற் போர்வை.

பா - ம்—*நெடுங்.

மெய்ம்மகிழ் வெய்தி உளங்குளிர விளங்கிய சொற்றமிழ் மாலைவேய்ந்து மைம்மலர் கண்டர்தம் ஆனைக்காவை வணங்கும் விருப்பொடு வந்தணைந்தார்.

"நன்றுடை யானைத் தீயதில் லானை நரைவெள்ளே
றொன்றுடை யானை உமையொரு பாகம் உடையானைச்
சென்றடை யாத திருவுடை யானைச் சிராப்பள்ளிக்
குன்றுடை யானைக் கூறஎன் னுள்ளங் குளிரும்மே"—தேவாரம்.

விண்ணவர் போற்றிசெய் யானைக்காவில் வெண்ணாவல் மேவிய மெய்ப்பொருளை, நண்ணி இறைஞ்சிமுன் வீழ்ந்தெழுந்து நாற்கோட்டு நாகம் பணிந்ததுவும், அண்ணல் கோச்செங்கண் அரசன்செய்த அடிமையும் அஞ்சொற் றொடையில் வைத்துப், பண்ணுறு செந்தமிழ் மாலைபாடிப் பரவினின் றேத்தினர் பான்மையினால். ௩௪௫

"சுறவக் கொடிகொண் டவன்நீ றதுவாய்
உறநெற் றிவிழித் தஎம்உத் தமனே
விறல்மிக் ககரிக் கருள்செய் தவனே
அறமிக் கதுவென் னுமென் ஆயிழையே"

"செங்கட் பெயர்கொண் டவன்செம் பியர்கோன்
அங்கட் கருணை பெரிதா யவனே
வெங்கண் விடையா யெம்வெண்நா வலுளாய்
அங்கத் தயர்வா யினள் ஆயிழையே"—தேவாரம்.

நாரணன் நான்முகன் காணாஉண்மை வெண்ணாவல் *உண்மை மயேந்திரமும், சீரணி நீடுந் திருக்கயிலை செல்வத் திருவாரூர் மேய பண்பும், ஆரணத் துட்பொரு ளாயினாரை ஆனைக்கா வின்கட் புகழ்ந்து பாடி, ஏரணி யும்பொழில் சூழ்ந்தசண்பை ஏந்தலார் எல்லையில் இன்ப முற்றார். ௩௪௬

"மண்ணது உண்டரி மலரோன்காணா
வெண்ணாவல் விரும்பும யேந்திரரும்
கண்ணது வோங்கிய கயிலையாரும்
அண்ணல்ஆ ரூராதி யானைக்காவே"—தேவாரம்.

---

௩௪௫. நாற் கோட்டு நாகம் - நான்கு கொம்புகளையுடைய யானை.

௩௪௬. ......உண்மையையும்......உண்மையையும்......பண்பையும். ஆரணத்துட் பொருள் - வேதப் பொருள். ஏர் - அழகு. சண்பை ஏந்தலார் - சீர்காழித் தலைவராகிய திருஞான சம்பந்தர்.

பா - ம்—*நன்மை.

கைதொழு தேத்திப் புறத்தணைந்து காமர் பதியதன் கட்சில நாள், வைகி வணங்கி மகிழ்ந்தணைவார் மன்னுந் தவத்துறை வானவர் தாள், எய்தி இறைஞ்சி எழுந்துநின்றே இன்தமிழ் மாலைகொண் டேத்திப் போந்து, வைதிக மாமணி அம்மருங்கு மற்றுள்ள தானம் வழுத்திச் செல்வார். ௩௪௭

ஏறுயர்த் தார்திருப் பாற்றுறையும் எறும்பியூர் மாமலை யேமுதலா வேறு பதிகள் பலவும் போற்றி விரவுந் திருத்தொண்டர் வந்துசூழ ஈறில் புகழ்ச்சண்பை யாளியார்* தாம் எண்திசை யோருந் தொழுதிறைஞ்ச நீறணி செம்பவ ளப்பொருப்பின் நெடுங்கள மாநகர் சென்றுசேர்ந்தார்.

நேடுங்களத் தாதியை அன்பால் "நின்பால் †நெஞ்சஞ் செலாவகை நேர்விலக்கும், இடும்பைகள் தீர்த்தருள் செய்வாய்" என்னும் இன் னிசை மாலைகொண் டேத்தி ஏகி, அடும்பணிச் செஞ்சடை யார்பதிகள் ‡அணைந்து பணிந்து நியமம் போற்றிக், கடுங்கை வரைஉரித் தார் மகிழ்ந்த காட்டுப்பள் ளிப்பதி கைதொழுவார். ௩௪௯

"கனைத்தெழுந்த வெண்டிரைசூழ் கடலிடை நஞ்சுதன்னைத்
தினைத்தனையா மிடற்றில்வைத்த திருந்திய தேவநின்னை
மனத்தகத்தோர் பாடல்ஆடல் பேணியிராப் பகலும்
நினைத்தெழுவார் இடர்களையாய் நெடுங்களம் மேயவனே"—தேவாரம்.

சென்று திகழ்திருக் காட்டுப்பள்ளிச் செஞ்சடை நம்பர்தங் கோயில்எய்தி, முன்றில் வலங்கொண் டிறைஞ்சி வீழ்ந்து மொய்கழற் சேவடி கைதொழுவார், கன்றணை ஆவின் கருத்துவாய்ப்பக் கண்ணுத லாரைமுன் போற்றிசெய்து, மன்றுள்நின் றுடல் மனத்துள் வைப் பார் "வாருமன் னும்முலை" பாடிவாழ்ந்தார். ௩௫0

"வாருமன் னும்முலை மங்கையோர் பங்கினன்
ஊருமன் னும்பலி உண்பதும் வெண்தலை
காருமன் னும்பொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி
நீருமன் னுஞ்சடை நிமலர்தம் நீர்மையே"—தேவாரம்.

---

௩௪அ. நீறணி செம்பவளப் பொருப்பின் - நீறணிந்த செம்பவள மலையாகிய சிவபெருமானது.

௩௪௯. நேர் விலக்கும் - தவிர்க்கும். அடும்பணி - கொல்லும் பாம்பணிந்த.

௩௫0. கன்று......வாய்ப்ப - கன்றை யடைந்த பசுவின் கருத்துண்டாக (நெஞ்சங் குழைய).

பா - ம்—*தாள். †நேசஞ் செலாவகை ; நேசஞ் செயாவகை. ‡அணைத்தும்.

அங்கப் பதியின் றெழுந்தருளி அணிதிரு வாலம் பொழில்வணங்கிப், பொங்கு புனற்பொன்னிப் பூந்துருத்திப் பொய்யிலி யாரைப் பணிந்து போற்றி, எங்கும் நிகழ்திருத் தொண்டர்குழாம் எதிர் கொள்ள எப்பதி யுந்தொழுது, செங்கயல் பாய்வயல் ஓடைசூழ்ந்த திருக்கண்டி யூர்தொழச் சென்றணைந்தார். ௩௱௩௧

கண்டியூர் வீரட்டர் கோயில்எய்திக் கலந்தடி யாருடன் காதல் பொங்கக், கொண்ட விருப்புடன் தாழ்ந்திறைஞ்சிக் குலவு மகிழ்ச்சியின் கொள்கையினால், தொண்டர் குழாத்தினை நோக்கி நின்று தொடுத்த இசைத்தமிழ் மாலைதன்னில், அண்டர் பிரான்தன் அருளின்வண்ணம் அடியார் பெருமையிற் கேட்டருளி. ௩௱௩௨

வினவி எடுத்த திருப்பதிகம் மேவு திருக்கடைக் காப்புத் தன்னில், அனைய நினைவரி யோன்செயலை அடியாரைக் கேட்டு மகிழ்ந்த தன்மை, புனைவுறு பாடலிற் போற்றிசெய்து போந்து புகலிக் கவுணியனார், துனைபுனற் பொன்னித் திரைவலங்கொள் சோற்றுத் துறை தொழச் சென்றடைவார். ௩௱௩௩

"வினவினேன்அறி யாமையிலுரை செய்ம்மினீரருள் வேண்டுவீர்
கனைவிலார்புனற் காவிரிக்கரை மேயகண்டியூர் வீரட்டன்
தனமுனேதனக் கின்மையோதம ராயினாரண்ட மாளத்தான்
வனனில்வாழ்க்கைகொண் டாடிப்பாடியிவ் வையமாப்பலி தேர்ந்ததே"

"கருத்தனைப்பொழில் சூழுங்கண்டியூர் வீரட்டத்துறை கள்வனை
அருத்தனைத்திறம் அடியர்பால்மிகக் கேட்டுகந்த வினவுரை
திருத்தமாந்திகழ் காழிஞானசம் பந்தன்செப்பிய செந்தமிழ்
ஒருத்தராயினும் பலர்களாயினும் உரைசெய்வார்உயர்ந் தார்களே"

—தேவாரம்.

வேறு

"அப்பர் சோற்றுத் துறைசென் றடைவோம்"என்
றொருப்பில் வண்தமிழ் மாலை ஒருமையால்

---

௩௱௩௨. சிவபிரான் அருளின் தன்மையை அடியவரிடம் பெருமையொடு வினவி யருளி. கண்டியூர்த் திருப்பதிகத்தில் ஆண்டவன், அருட்டன்மை விளங்கத்தாங்கிய கோலங்களின் நுட்பம் வினா முறையில் விளங்குதல் காண்க. கண்டியூர் - அட்டவீரத்துள் ஒன்று; பிரமன்சிரங் கொய்த தலம்.

௩௱௩௩. துனை......கொள் - விரைந்து செல்லும் நீரையுடைய காவிரியின் அலைகள் வலமாக வரும்.

௩௱௩௪. சேர்விலார் - பகைவர்களின்.

செப்பி யேசென்று சேர்ந்தனர் சேர்விலார்
முப்புரஞ் செற்ற முன்னவர் கோயில்முன். ௩௫௪

"செப்ப நெஞ்சே நெறிகொள் சிற்றின்பம்
துப்ப னென்னு தருளே துணையாக
ஒப்ப ரொப்பர் பெருமான் ஒளிவெண்ணீற்
றப்பர் சோற்றுத் துறைசென் றடைவோமே"—தேவாரம்.

தொல்லை நீள்திருச் சோற்றுத் துறையுறை
செல்வர் கோயில் வலங்கொண்டு தேவர்கள்
அல்லல் தீர்க்க*நஞ் சுண்ட பிரான்அடி
எல்லை யில்அன்பு கூர இறைஞ்சினர். ௩௫௫

இறைஞ்சி ஏத்தி எழுந்துநின் றின்னிசை
நிறைந்த செந்தமிழ் பாடி நிலாவிஅங்
குறைந்து வந்தடி யாருடன் எய்தினர்
சிறந்த சீர்த்திரு வேதி குடியினில். ௩௫௬

வேத வேதியர் வேதி குடியினில்
நாதர் கோயில் அணைந்து நலந்திகழ்
பாத பங்கயம் போற்றிப் பணிந்தெழுந்
தோதி னார்தமிழ் வேதத்தின் ஓங்கிசை. ௩௫௭

எழுது மாமறை யாம்பதி கத்திசை
முழுதும் பாடி முதல்வரைப் போற்றிமுன்
தொழுது போந்துவந் தெய்தினர் சோலைசூழ்
பழுதில் சீர்த்திரு வெண்ணிப் பதியினில். ௩௫௮

வெண்ணி மேய விடையவர் கோயிலை
நண்ணி நாடிய காதலி னுண்மதிக்
கண்ணி யார்தங் கழலிணை போற்றியே
பண்ணில் நீடும் †பதிகமும் பாடினர். ௩௫௯

பாடி நின்று பரவிப் பணிந்துபோய்
ஆடும் அங்கணர் கோயில்அங் குள்ளன

---

௩௫௫. தொல்லை - பழமை.

௩௫௯. மதி கண்ணியார் தம் - சந்திரனைக் கொண்டை மாலையாக அணிந்த சிவபிரானது.

பா - ம்—*நஞ்சுண்டா ரடியிணை. †பதிகமுன்.

மாடு சென்று வணங்கி மகிழ்ந்தனர்
நீடு சண்பை நிறைபுகழ் வேதியர். ௩சு௦

வேறு

மொய்தருஞ் சோலைசூழ் முளரிமுள் ளடவிபோய்
மெய்தரும் பரிவிலான் வேள்வியைப் பாழ்படச்
செய்தசங் கரர்திருச் சக்கரப் பள்ளிமுன்
பெய்தவந் தருளினார் இயல்இசைத் தலைவனார். ௩சு௧

சக்கரப் பள்ளியார் தந்* திருக் கோயிலுள்
புக்கருத் தியினுடன் புனைமலர்த் தாள்பணிந்
தக்கரைப் பரமர்பால் அன்புறும் பரிவுகூர்
மிக்கசொற் றமிழினால் வேதமும் பாடினார். ௩சு௨

தலைவர்தஞ் சக்கரப் பள்ளிதன் னிடையகன்
றலைபுனற் பணைகளின் அருகுபோய் அருமறைப்
புலனுறுஞ் சிந்தையார் புள்ளமங் கைப்பதி
குலவும்ஆ லந்துறைக் கோயிலைக் குறுகினார். ௩சு௩

மன்னும்அக் கோயில்சேர் மான்மறிக் கையர்தம்
பொன்னடித் தலம்உறப் புரிவொடுந் தொழுதெழுந்
தின்னிசைத் தமிழ்புனைந் திறைவர்சே லூருடன்
பன்னுபா லைத்துறைப் பதிபணிந் தேகினார். ௩சு௪

காவின்மேல் முகிலெழுங் கமழ்நறும் புறவுபோய்
வாவிநீ டலவன்வாழ் பெடையுடன் மலர்நறும்

௩சு௧. மொய்தரும் - கூட்டமான. முள் முளரி அடவிபோய் - முட்களையுடைய தாமரைக் காட்டின் வழியே சென்று. மெய்தரும் பரிவிலான் - உண்மையுள்ள அன்பில்லாதவனாகிய தக்கனது.

௩சு௨. அருத்தியுடன் புனைமலர்த்தாள் - ஆசையுடன் அடியார்கள் சூட்டிய மலர்களையுடைய திருவடிகளை. அக்கு அரை - என்பு மணி யணிந்த அரையையுடைய. (அக்கு - சங்குமணி).

௩சு௩. பணைகளின். அருமறைப் புலனுறும் - அரிய வேத உணர்வு மிகுந்துள்ள.

௩சு௫. காவின்......போய் - சோலைமீது மேகந் தவழும் மணங்கமழும் நல்ல முல்லை நிலத்தின் வழியே போய். அலவன் - ஆண் நண்டு. பெடையுடன் - பெண் நண்டுடன். சேவின்மேல் - எருதின்மேல் எழுந்தருளியுள்ள.

பா - ம்—*தனிக்.

பூவின்மேல் விழைவுறும் புகலியார் தலைவனார்
சேவின்மேல் அண்ணலார் திருநலூர் நண்ணினார். ௩௬௫

மன்றலங் கழனிசூழ் திருநலூர் மறையவோர்
துன்றுமங் கலவினைத் துழனியால் எதிர்கொளப்
பொன்றயங் கொளிமணிச் சிவிகையிற் பொலிவுறச்
சென்றணைந் தருளினார் சிரபுரச் செம்மலார். ௩௬௬

நித்திலச் சிவிகைமேல் நின்றிழிந் தருளியே
மொய்த்தஅந் தணர்குழாம் முன்செலப் பின்செலும்
பத்தரும் பரிசனங் களுமுடன் பரவவே
அத்தர்தங் கோபுரந் தொழுதணைந் தருளினார். ௩௬௭

வெள்ளிமால் வரையைநேர் விரிசுடர்க் கோயிலைப்
பிள்ளையார் வலம்வரும் பொழுதினிற் †பெருகுநீர்
வெள்ளஆ றணிந்தமெய் பொழியமேல் ஏறிநீர்
துள்ளுவார் சடையரைத் தொழுதுமுன் பரவுவார். ௩௬௮

பரவுசொற் பதிகமுன் பாடினார் பரிவுதான்
வரவயர்த் தருகுநேர் மனனுடன் புறம்அணைந்
தரவுடைச் சடையர்பேர் அருள்பெறும் பெருமையால்
விரவும்அப் பதிஅமர்ந் தருளியே மேவினார். ௩௬௯

வேறு

அன்ன தன்மையில் அப்பதி யினில்அமர்ந் தருளி
‡மின்னெ டுஞ்சடை விமலர்தாள் விருப்பொடு வணங்கிப்
பன்னும் இன்னிசைப் பதிகமும் பலமுறை பாடி
நன்னெ டுங்குல நான்மறை யவர்தொழ நயந்தார். ௩௭௰

நீடும் அப்பதி நீங்குவார் நிகழ்திரு நல்லூர்
ஆடு வார்திரு அருள்பெற அகன்றுபோந் தங்கண்
மாடும் உள்ளன வணங்கியே பரவிவந் தணைந்தார்
தேடு மாலயற் கரியவர் திருக்கரு காவூர். ௩௭௧

---

௩௬௬. மன்றல்அம் - மணமும் அழகுமுடைய. துன்று - நெருங்கிய. துழனியால் - ஒலியால்.

௩௬௯. பரிவானது வர அதனால் அயர்ந்து. விரவும் - நிரம்பியுள்ள.

௩௭௰. பன்னும் - பலர் போற்றும். நயந்தார் - இரக்கங்கொண்டிருந்தார்.

பா - ம்—*வரைநிகர். †பெருகுசீர். ‡மின்னு செஞ்சடை.

வந்து பந்தர்மா தவிமணங் கமழ்கரு காவூர்ச்
சந்த மாமறை தந்தவர் கழலிணை தாழ்ந்தே
"அந்தம் இல்லவர் வண்ணம் ஆரழல்வண்ணம்" என்று
சிந்தை இன்புறப் பாடினார் செழுந்தமிழ்ப் பதிகம். ௩௭௨

" முத்தி லங்குமுறு வல்லுமை அஞ்சவே
மத்த யானைமறு கவ்வுரி வாங்கியக்
கத்தை போர்த்தகட வுள்கரு காவூரெம்
அத்தர் வண்ணம்அழ லும்அழல் வண்ணமே "—**தேவாரம்.**

பதிக இன்னிசை பாடிப்போய்ப் பிறபதி பலவும்
நதிஅ ணிந்தவர் கோயில்கள் நண்ணியே வணங்கி
மதுர முத்தமிழ் வாசகர் அணைந்தனர் மன்றுள்
அதிர்சி லம்படி யார்மகிழ் அவளிவ ணல்லூர். ௩௭௩

மன்னும் அப்பதி வானவர் போற்றவும் மகிழ்ந்த
தன்மை யார்பயில் கோயிலுள் தம்பரி சுடையார்
என்னும் நாமமும் நிகழ்ந்திட ஏத்திமுன் இறைஞ்சிப்
பன்னு சீர்ப்பதி பலவும்அப் பாற்சென்று பணிவார். ௩௭௪

பழுதில் சீர்த்திருப் பரிதிநன் னியமமும் பணிந்தங்
கெழுது †மாமறை யாம்பதி கத்திசை போற்றி
முழுதும் ஆனவர் கோயில்கள் வணங்கியே முறைமை
‡வழுவி லார்திருப் பூவனூர் வணங்கிவந் தணைந்து. ௩௭௫

போங்கு காதலிற் போற்றிஅங் கருளுடன் போந்து
பங்க யத்தடம் பணைப்பதி பலவும்முன் பணிந்தே
எங்கும் அன்பர்கள் ஏத்தொலி எடுக்கவந் தணைந்தார்
அங்க ணர்க்கிடம் ஆகிய பழம்பதி ஆவூர். ௩௭௬

---

௩௭௨. மாதவிப் பந்தர் - குருக்கத்திக் கொடிப்பந்தர்; " பயிலு மாதவிப் பந்தரொன் றெய்தினன் " சிந்தாமணி: 1322. ஆர் - நிறைந்த.

௩௭௪. ......தன்மையார் பயில் - சிவபிரான் எழுந்தருளியுள்ள. தம்பரிசு உடையார் - இயல்பாகப் பாசங்களினின்றும் நீங்கல், முற்றறிவுடைமை முதலிய அருளியல்புடையார்.

௩௭௬. பங்கயத் தடம்பணை - தாமரைத் தடாகங்களையும் பண்ணைகளையுமுடைய.

பா - ம்—*வண்ணமா மழல். †கான். ‡வழுவில்சீர்த்.

பணியும் அப்பதிப் *பசுபதீச் சரத்தினி திருந்த
மணியை உள்புக்கு வழிபடும் விருப்பினால் வணங்கித்
தணிவில் காதலில் தண்டமிழ் மாலைகள் சாத்தி
அணிவி ளங்கிய திருநலூர் மீண்டும்வந் தணைந்தார். ௩௭௭

மறைவி ளங்கும்அப் பதியினில் மணிகண்டர் பொற்றாள்
நிறையும் அன்பொடு வணங்கியே நிகழ்பவர் நிலவும்
பிறைஅ ணிந்தவர் அருள்பெறப் பிரசமென் மலர்வண்
டறைந றும்பொழில் திருவலஞ் சுழியில்வந் தணைந்தார். ௩௭௮

மதிப்பு ளோர்ந்தவர் வலஞ்சுழி மருவுமா தவத்து
முதிரும் அன்பர்கள் முத்தமிழ் விரகர்தம் முன்வந்
தெதிர்கொள் போழ்தினில் இழிந்தவர் எதிர்செல மதியைக்
கதிர்செய் வெண்முகிற் குழாம்புடை சூழ்ந்தெனக் கலந்தார்.

கலந்த அன்பர்கள் தொழுதெழக் கவுணியர் தலைவர்
அலர்ந்த செங்கம லக்கரங் குவித்துடன் அணைவார்
வலஞ்சு ழிப்பெரு மான்மகிழ் கோயில்வந் தெய்திப்
பொலங்கொள் நீள்சுடர்க் கோபுரம் இறைஞ்சிஉட் புகுந்தார்.

மருவ லார்புரம் முனிந்தவர் திருமுன்றில் வலங்கொண்
டுருகும் அன்புடன் உச்சிமேல் அஞ்சலி யினராய்த்
திருவ லஞ்சுழி உடையவர் சேவடித் தலத்தில்
பெருகும் ஆதர வுடன்பணிந் தெழுந்தனர் பெரியோர். ௩௮௧

ஞான போனகர் நம்பர்முன் தொழுதெழு விருப்பால்
ஆன காதலில் அங்கண ரவர்தமை வினவும்
ஊன மில்இசை யுடன்விளங் கியதிருப் பதிகம்
பான லார்மணி கண்டரைப் பாடினார் பரவி. ௩௮௨

---

௩௭௮. பிரசம் - தேன்.

௩௭௯. இழிந்து - முத்துச் சிவிகையினின்றும் இறங்கி. அவர் - சம்பந்தர். மதியை...சூழ்ந்தென - சந்திரனை, மின்னொளிவிடும் வெள்ளிய மேகக் கூட்டம் பக்கத்திற் சூழ்ந்தாற்போல.

௩௮௦. பொலங்கொள் - பொன்னிறங்கொண்ட.

௩௮௧. மருவலார் புரம் முனிந்தவர் - பகைவர்களின் முப்புரங்களைச் செற்றவராகிய சிவபெருமானது. திருமுன்றில் - திருமுற்றத்தை. ஆதரவுடன் - வேட்கையுடன்.

௩௮௨. பானல்ஆர் - கருங் குவளையை யொத்த.

பா - ம்—*பசுபதீச் சரத்திருந் தருளும்; பசுபதீச் சரத்தினி தமர்ந்த.

புலன்கொள் இன்தமிழ் போற்றினர் புறத்தினில் அணைந்தே
இலங்கு நீர்ப்பொன்னி சூழ்திருப் பதியினில் இருந்து
நலங்கொள் காதலின் நாதர்தாள் நாள்தொறும் பரவி
வலஞ்சு ழிப்பெரு மான்தொண்டர் தம்முடன் மகிழ்ந்தார்.

மகிழ்ந்த தன்தலை வாழும்அந் நாளிடை வானில்
திகழ்ந்த ஞாயிறு துணைப்புணர் ஓரையுட் சேர்ந்து
நிகழ்ந்த தன்மையில் நிலவும்ஏழ் கடனீர்மை குன்ற
வெகுண்டு வெங்கதிர் பரப்பலின் முதிர்ந்தது வேனில். ௩அ௪

தண்பு னற்குளிர் கால்நறுஞ் சந்தனத் தேய்வை
பண்பு நீடிய வாசமென் மலர்பொதி பனிநீர்
நண்பு டைத்துணை *நகைமணி முத்தணி நாளும்
உண்ப மாதுரி யச்சுவை உலகுளோர் விரும்ப. ௩அ௫

**வேறு**

அறல்மலியுங் கான்யாற்றின் நீர்நசையால் அணையுமான்
பெறல்அரிய புனல்என்று பேய்த்தேரின் †பின்தொடரும்
உறையுணவு கொள்ளும்புள் தேம்பவயல் இரைதேரும்
பறவைசிறை விரித்தொடுங்கப் பனிப்புறத்து வதியுமால். ௩அ௬

---

௩அ௩. புலன்கொள் - மெய்யுணர்வு கொண்ட.

௩அ௪. அதன்தலை - அதனிடத்தில்; திருவலஞ் சுழியில். துணைப்புணர் ஓரையுள் - மிதுனராசியில்; ஆனியில்; மிதுனம் இரட்டையாதலின் "துணை புணர்" என்னப்பட்டது. பாட்டு ௩௩0 பார்க்க. ஆனியும் ஆடியும் முதுவேனிற் பருவம்.

௩அ௫. தண்புனல் குளிர்கால் - குளிர்ந்த நீரில் படிந்துவரும் தென்றற் காற்றையும். நறுஞ் சந்தனத் தேய்வை - மணங் கமழும் சந்தனக் குழம்பையும். பண்பு நீடிய - குணத்திற் சிறந்த. பொதி - மிகுந்த. மலரையும் பனி நீரையும். மலர் பொதிந்த பனிநீரையும் என்னலுமாம். நண்பையுடைய துணையாகிய நகை மணியையும் (சந்திரனையும்). உண்பனவாகிய மதுரச் சுவையையும்.

௩அ௬. அறல்...தொடரும் - கருமணல் மலிந்த காட்டாற்றில் நீர் வேட்கையால் அணையும் மான்கள், பெறுதற்கு அரிய நீர் என்று கானற் சலத்தின் பின் தொடரும். பேய்த்தேர் - கானற் சலம்; "அருஞ்சுரத்தின்கண் முதுவேனிலின் நண்பகற் கடுமை பற்றித் தோன்றி ஞாயிற்றின் கிரணம் முகிற்படலத்தின் மறைந்தவழித் தானும் மறைந்துபோவதாகிய பேய்த்தேர்..."—**சிவஞான பாடியம்:** (சூ - சு.) 'அழன் மேய்ந்துண்ட நிழன்மா யியவின், வறன்மரத் தன்ன

பா - ம்—*நகைமக. †பின்படரும்.

நீணிலைமா ளிகைமேலும் நிலாமுன்றின் மருங்கினிலும்
வாணிழனற் சோலையிலும் மலர்வாவிக் கரைமாடும்
பூணிலவு முத்தணிந்த பூங்குழலார் முலைத்தடத்தும்
காணுமகிழ்ச் சியின்மலர்ந்து மாந்தர்கலந் துறைவரால். ௩௮௭

மயிலொடுங்க வண்டாட மலர்க்கமல முகைவிரியக்
குயிலொடுங்காச் சோலையின்மென் தளிர்கோதிக் கூவிஎழத்
துயிலொடுங்கா உயிர்அனைத்தும் துயில்பயிலச் சுடர்வானில்
வெயிலொடுங்கா வெம்மைதரும் †வேனில்விரி தருநாளில். ௩௮௮

சண்பைவரும் பிள்ளையார் சடாமகுடர் வலஞ்சுழியை
எண்பெருகத் தொழுதேத்திப் பழையாறை எய்துதற்கு
நண்புடைய அடியார்க ளுடன்போத நடந்தருளி
விண்பொருநீள் மதிளாறை மேற்றளிசென் றெய்தினார். ௩௮௯

திருவாறை மேற்றளியில் ‡திகழ்ந்திருந்த செந்தீயின்
உருவாளன் அடிவணங்கி உருகியஅன் பொடுபோற்றி
மருவாருங் குழல்மலையாள் வழிபாடு செய்யஅருள்
தருவார்தந் திருச்சத்தி முற்றத்தின் புறஞ்சார்ந்தார். ௩௯௦

---

கவைமருப் பெழிற்கலை, அறல்விர்ந் தன்ன தேர்நசைஇ ஓடி"—அகநானூறு; ௩௮௬. உறை...தேம்ப - மழைத் துளியை உணவாக் கொள்ளும் வானம்பாடிகள் தேம்ப; "துளிநசை வேட்கையான் மிசைபாடும் புள்ளிற்றன்..."—கலித் தொகை: ௪௬. ௨௦; "வானம்பாடி வறங்களைந்தானு, தழிதுளி தலைஇய புறவில்"—ஐங்குறு நூறு: ௪௧௮; "தற்பாடிய தளி யுணவில், புட்டேம்பப் புயன்மாறி"...பட்டினப்பாலை: ௩. ௪. ("தேம்பி அயல் இரைதேரும்" என்னும் பாடத்துக்குத் தேம்பி வேறு இரைதேடும் என்று கொள்க). வயல்... வதியும் - வயலில் இரை ஆராயும் பறவைகள் (வெயிலின் கொடுமையால்) சிறகுகளை விரித்துப் பின் அச்சிறகுகள் ஒடுங்கக் குளிர்ந்த இடங்களைச் சேர்ந்து தங்கும்.

௩௮௭. வாழ் நிழல் நல்; வாள் நிழல் எனக் கொள்ளலுமாம்.

௩௮௮. குயிலானது ஒடுங்காத சோலையின். துயில்...பயில - பகலில் உறங்காத உயிர்கள் பகலிலும் உறக்கங் கொள்ளவும். இதுவேனிலின் கொடுமை குறிப்பது.

௩௮௯. எண் - திருவருள் நினைவு.

௩௯௦. செந்தீயின் உருவாளன் - சிவபெருமான். மருவாரும் - மணம் பொருந்திய. மலையாள் - உமாதேவியார். அருள் தருவார் தம் - சிவபெருமானது.

பா - ம்—*ஊர்அனைத்தும். †வேனில்தரும் அங். ‡வீற்றிருந்த.

திருச்சத்தி முற்றத்திற் சென்றெய்தித் திருமலையாள்
அருச்சித்த சேவடிகள் ஆர்வமுறப் பணிந்தேத்திக்
கருச்சுற்றில் அடையாமற் கைதருவார் கழல்பாடி
விருப்புற்றுத் திருப்பட்டீச் சரம்பணிய மேவுங்கால். ௩௧௧

வெம்மைதரு வேனிலிடை வெயில்வெப்பந் தணிப்பதற்கு
மும்மைநிலைத் தமிழ்விரகர் முடிமீதே சிவபூதம்
தம்மைஅறி யாதபடி தண்தரளப் பந்தர்எடுத்
"தெம்மைவிடுத் தருள்புரிந்தார் பட்டீசர்" என்றியம்ப. ௩௧௨

அவ்வுரையும் மணிமுத்தின் பந்தரும்ஆ காயம்எழச்
செவ்வியமெய்ஞ் ஞானமுணர் சிரபுரத்துப் பிள்ளையார்
"இவ்வினைதான் ஈசர்திரு வருளாகில் இசைவ"தென
மெய்விரவு புளகமுடன் மேதினியின் மிசைத்தாழ்ந்தார். ௩௧௩

அதுபொழுதே அணிமுத்தின் பந்தரினை அருள்சிறக்கக்
கதிரொளிய மணிக்காம்பு பரிசனங்கள் கைக்கொண்டார்
மதுரமொழி மறைத்தலைவர் மருங்கிமையோர் பொழிவாசப்
புதுமலரால் அப்பந்தர் பூம்பந்த ரும்போலும். ௩௧௪

தொண்டர்குழாம் ஆர்ப்பெடுப்பச் சுருதிகளின் பெருந்துழனி
எண்டிசையும் †நிறைந்தோங்க எழுந்தருளும் பிள்ளையார்
வெண்டரளப் பந்தர்நிழல் மீதணையத் திருமன்றில்
அண்டர்பிரான் எடுத்ததிரு வடிநீழல் எனஅமர்ந்தார். ௩௧௫

பாரின்மிசை அன்பருடன் வருகின்றார் பன்னகத்தின்
ஆரம்அணிந் தவர்தந்த அருட்கருணைத் திறம்போற்றி
ஈரமனங் களிதழைப்ப எதிர்கொள்ள முகமலர்ந்து
சேரவருந் தொண்டருடன் திருப்பட்டீச் சரம்அணைந்தார். ௩௧௬

சென்றணைந்து திருவாயிற் புறத்திறைஞ்சி உள்புக்கு
வென்றிவிடை யவர்கோயில் வலங்கொண்டு வெண்கோட்டுப்

---

௩௧௧. கருச்சுற்றில் - கருச்சுழலில். ௩௧௨. முத்தமிழ் விரகர்.
௩௧௩. இவ்வினைதான் - இச்செயல்தான்.
௩௧௪. மணிக்காம்பு - இரத்தினக்காம்பு.
௩௧௫. சுருதிகளின் பெருந்துழனி - வேதங்களின் பேரொலி.
௩௧௬. பன்னகத்தின் - பாம்பின்.

பா - ம்—*கதிரொளிசெய். †எழுந்.

பன்றி கிளைத் தறியாத பாததா மரைகண்டு
முன்தொழுது விழுந்தெழுந்து மொழிமாலை போற்றிசைத்தார். ௩௯௭

அருள்வெள்ளத் திறம்பரவி அளப்பரிய ஆனந்தப்
பெருவெள்ளத் திடைமூழ்கிப் பேராத பெருங்காதல்
திருவுள்ளப் பரிவுடனே செம்பொன்மலை வல்லியார்
தருவள்ளத் தமுதுண்ட சம்பந்தர் புறத்தணைந்தார். ௩௯௮

அப்பதியில் அமர்கின்ற ஆளுடைய பிள்ளையார்
செப்பருஞ்சீர்த் திருவாறை வடதளியில் சென்றிறைஞ்சி
ஒப்பரிய தமிழ்பாடி உடன்அமருந் தொண்டரொடு
எப்பொருளு மாய்நின்றார் இரும்பூளை எய்தினார். ௩௯௯

தேவர்பிரான் அமர்ந்ததிரு இரும்பூளை சென்றெய்தக்
காவணநீள் தோரணங்கள் நாட்டியுடன் களிசிறப்பப்
†பூவணமா லைகள்நாற்றிப் பூரணபொற் குடநிரைத்தங்
கியாவர்களும் போற்றிசைப்பத் திருத்தொண்டர் எதிர்கொண்டார்.

வண்தமிழின் மொழிவிரகர் மணிமுத்தின் சிவிகையினைத்
தொண்டர்குழாத் தெதிர்இழிந்தங் கவர்தொழத்தா மூந்தொழுதே
அண்டர்பிரான் கோயிலினை அணைந்திறைஞ்சி முன்நின்று
பண்தரும்இன் னிசைப்பதிகம் பரம்பொருளைப் பாடுவார். ௪0௧

நிகரிலா மேருவரை அணுவாக நீண்டானை
நுகர்கின்ற தொண்டர்தமக் கமுதாகி நொய்யானைத்
தகவொன்ற அடியார்கள் தமைவினவித் தமிழ்விரகர்
பகர்கின்ற அருமறையின் பொருள்விரியப் பாடினார். ௪0௨

"சீரார் கழலே தொழுவீ ரிதுசெப்பீர்
வாரார் முலைமங் கையொடும் முடனாகி
ஏரா ரிரும்பூ ளையிடங் கொண்டஈசன்
காரார் கடல்நஞ் சமுதுண் டகருத்தே."—தேவாரம்.

---

௩௯௭. வெண்கோட்டுப்பன்றி கிளைத்து - வெள்ளிய கொம்பையுடைய வராகம் (திருமால்) பூமியைத் தோண்டி.

௩௯௯. எப்பொருளுமாய் நின்றார் - சிவபிரானது.

௪00. காவணம் - பந்தர். நாற்றி - தொங்கவிட்டு.

௪0௨. சிவம் மகத்துக்கு மகத்தாகவும் அணுவுக்கு அணுவாகவுமுள்ள நுட்பம் இங்கே கூறப்பட்டது. தகவு ஒன்ற - பெருமை பொருந்த.

பா - ம்—*இழித். †பூவணை.

பாடும்அர தைப்பெரும் பாழியே முதலாகச்
சேடர்பயில் திருச்சேறை திருநாலூர் குடவாயில்
நாடியசீர் நறையூர்தென் திருப்புத்தூர் நயந்திறைஞ்சி
நீடுதமிழ்த் தொடைபுனைந்தந் நெடுநகரில் இனிதமர்ந்தார். சOஙூ

அங்கண்இனி தமருநாள் அடல்வெள்ளே னத்துருவாய்ச்
செங்கண்நெடு மால்பணியுஞ் சிவபுரத்துச் சென்றடைந்து
கங்கைசடைக் கரந்தவர்தங் கழல்வணங்கிக் காதலினால்
பொங்கும்இசைத் திருப்பதிகம் முன்நின்று போற்றிசைத்தார்.

போற்றிசைத்துப் புனிதர்அருள் பெற்றுப்*போந் தெவ்வுருவும்
தோற்றுவித்த அயன்போற்றுந் தோணிபுரத் தந்தணனார்
ஏற்றுமிசை ஏற்றுகந்த இறைவர்தமை ஏத்துதற்கு
நாற்றிசையோர் பரவுதிருக் குடமூக்கு நண்ணினார். சOரு

தேமருவு மலர்ச்சோலைத் திருக்குடமூக் கினிற்செல்வ
மாமறையோர் பூந்தராய் வள்ளலார் வந்தருளத்
தூமறையின் ஒலிபெருகத் தூரியமங் கலம்முழங்கக்
கோமுறைமை எதிர்கொண்டு தம்பதியுட் கொடுபுக்கார். சOசு

திருஞான சம்பந்தர் திருக்குடமூக் கினைச்சேர
வருவார்தம் பெருமானை வண்தமிழின் திருப்பதிகம்
உருகாநின் றுளம்மகிழக் "குடமூக்கை உவந்திருந்த
பெருமான்எம் இறை"என்று பெருகிசையால் பரவினார். சOஎ

"அரவிரி கோடனீட லணி காவிரி யாற்றயலே
மரவிரி போதுமௌவல் மண மல்லிகை கள்ளவிழும்

சOஙூ. திரு அரதைப் பெரும்பாழி என்னுந் திருப்பதி. சேடர்பயில் - பெரியோர்கள் வாழும்.

சOச. வெண் பன்றி உருவாய் ; "பிறை எயிற்று வெள்ளைப் பன்றி பிரியாது பல நாளும் வழிபட்டேத்தும்"—அப்பர் : சிவபுரத்திருத்தாண்டகம். சு. கங்கையைச் சடையில் மறைத்த சிவபிரானுடைய.

சOரு. பிரமன் வழிபட்ட தோணிபுரத்தில் தோன்றிய திருஞான சம்பந்தர். ஏற்றுமிசை ஏற்று (எறுதலை) உகந்த. குடமூக்கு - கும்பகோணம்.

சOசு. மங்கல தூரியம் (வாத்தியம்) முழங்க. கோமுறைமை - தலைமை முறைமையில் ; உபசாரங்களில் தலைமை உபசாரப்படி. அரசர்க்குரிய முறைமையில் எனினுமாம். கோ - தந்தையுமாம்.

சOஎ. சேரவருவாராய்.

பா - ம்—*போந்தெவ்வுயிருந்.

பன்றி*கிளைத் தறியாத பாததா மரைகண்டு
முன்தொழுது விழுந்தெழுந்து மொழிமாலை போற்றிசைத்தார். ௩௯௭

அருள்வெள்ளத் திறம்பரவி அளப்பரிய ஆனந்தப்
பெருவெள்ளத் திடைமூழ்கிப் போராத பெருங்காதல்
திருவுள்ளப் பரிவுடனே செம்பொன்மலை வல்லியார்
தருவள்ளத் தமுதுண்ட சம்பந்தர் புறத்தணைந்தார். ௩௯௮

அப்பதியில் அமர்கின்ற ஆளுடைய பிள்ளையார்
செப்பருஞ்சீர்த் திருவாறை வடதளியில் சென்றிறைஞ்சி
ஒப்பரிய தமிழ்பாடி உடன்அமருந் தொண்டரொடு
எப்பொருளு மாய்நின்றார் இரும்பூளை எய்தினார். ௩௯௯

தேவர்பிரான் அமர்ந்ததிரு இரும்பூளை சென்றெய்தக்
காவணநீள் தோரணங்கள் நாட்டியுடன் களிசிறப்பப்
†பூவணமா லைகள்நாற்றிப் பூரணபொற் குடநிரைத்தங்
கியாவர்களும் போற்றிசைப்பத் திருத்தொண்டர் எதிர்கொண்டார்.

வண்தமிழின் மொழிவிரகர் மணிமுத்தின் சிவிகையினைத்
தொண்டர்குழாத் தெதிர்இழிந்தங் கவர்தொழத்தா முந்தொழுதே
அண்டப்பிரான் கோயிலினை அணைந்திறைஞ்சி முன்நின்று
பண்தரும்இன் னிசைப்பதிகம் பரம்பொருளைப் பாடுவார். ௪௦௧

நிகரிலா மேருவரை அணுவாக நீண்டானை
நுகர்கின்ற தொண்டர்தமக் கமுதாகி நொய்யானைத்
தகவொன்ற அடியார்கள் தமைவினவித் தமிழ்விரகர்
பகர்கின்ற அருமறையின் பொருள்விரியப் பாடினார். ௪௦௨

"சீரார் கழலே தொழுவீ ரிதுசெப்பீர்
வாரார் முலைமங் கையொடும் முடனாகி
ஏரா ரிரும்பூ ளையிடங் கொண்டஈசன்
காரார் கடல்நஞ் சமுதுண் டகருத்தே."—தேவாரம்.

---

௩௯௭. வெண்கோட்டுப்பன்றி கிளைத்து - வெள்ளிய கொம்பையுடைய வராகம் (திருமால்) பூமியைத் தோண்டி.

௩௯௯. எப்பொருளுமாய் நின்றார் - சிவபிரானது.

௪௦௦. காவணம் - பந்தர். நாற்றி - தொங்கவிட்டு.

௪௦௨. சிவம் மகத்துக்கு மகத்தாகவும் அணுவுக்கு அணுவாகவுமுள்ள நுட்பம் இங்கே கூறப்பட்டது. தகவு ஒன்ற - பெருமை பொருந்த.

பா - ம்—*கிழித். †பூவணை.

பாடும்அர தைப்பெரும் பாழியே முதலாகச்
சேடர்பயில் திருச்சேறை திருநாலூர் குடவாயில்
நாடியசீர் நறையூர்தென் திருப்புத்தூர் நயந்திறைஞ்சி
நீடுதமிழ்த் தொடைபுனைந்தந் நெடுநகரில் இனிதமர்ந்தார். ௪0௩

அங்கண்இனி தமருநாள் அடல்வெள்ளே னத்துருவாய்ச்
செங்கண்நெடு மால்பணியுஞ் சிவபுரத்துச் சென்றடைந்து
கங்கைசடைக் கரந்தவர்தங் கழல்வணங்கிக் காதலினால்
பொங்கும்இசைத் திருப்பதிகம் முன்நின்று போற்றிசைத்தார்.

போற்றிசைத்துப் புனிதர்அருள் பெற்றுப்*போந் தெவ்வுருவும்
தோற்றுவித்த அயன்போற்றுந் தோணிபுரத் தந்தணனார்
ஏற்றுமிசை ஏற்றுகந்த இறைவர்தமை ஏத்துதற்கு
நாற்றிசையோர் பரவுதிருக் குடமூக்கு நண்ணினார். ௪0௫

தேமருவு மலர்ச்சோலைத் திருக்குடமூக் கினிற்செல்வ
மாமறையோர் பூந்தராய் வள்ளலார் வந்தருளத்
தூமறையின் ஒலிபெருகத் தூரியமங் கலம்முழங்கக்
கோமுறைமை எதிர்கொண்டு தம்பதியுட் கொடுபுக்கார். ௪0௬

திருஞான சம்பந்தர் திருக்குடமூக் கினைச்சேர
வருவார்தம் பெருமானை வண்தமிழின் திருப்பதிகம்
உருகாநின் றுளம்மகிழக் "குடமூக்கை உவந்திருந்த
பெருமான்எம் இறை"என்று பெருகிசையால் பரவினார். ௪0௭

" அரவிரி கோடனீட லணி காவிரி யாற்றயலே
மரவிரி போதுமௌவல் மண மல்லிகை கள்ளவிழும்

௪0௩. திரு அரதைப் பெரும்பாழி என்னுந் திருப்பதி. சேடர்பயில் - பெரியோர்கள் வாழும்.

௪0௪. வெண் பன்றி உருவாய்; "பிறை எயிற்று வெள்ளைப் பன்றி பிரியாது பல நாளும் வழிபட்டேத்தும்"—அப்பர் : சிவபுரத்திருத்தாண்டகம். ௩. கங்கையைச் சடையில் மறைத்த சிவபிரானுடைய.

௪0௫. பிரமன் வழிபட்ட தோணிபுரத்தில் தோன்றிய திருஞான சம்பந்தர். ஏற்றுமிசை ஏற்று (ஏறுதலை) உகந்த. குடமூக்கு - கும்பகோணம்.

௪0௬. மங்கல தூரியம் (வாத்தியம்) முழங்க. கோமுறைமை - தலைமை முறைமையில்; உபசாரங்களில் தலைமை உபசாரப்படி. அரசர்க்குரிய முறைமையில் எனினுமாம். கோ - தந்தையுமாம்.

௪0௭. சேரவருவாராய்.

பா - ம்—*போந்தெவ்வுயிருந்.

குரவிரி சோலைசூழ்ந்த குழகன்குட மூக்கிடமா
இரவிரி திங்கள்சூடி யிருந் தானவன் எம்மிறையே."—தேவாரம்.

வந்தணைந்து திருக்கீழ்க்கோட் டத்திருந்த வான்பொருளைச்
சிந்தைமகிழ் வுறவணங்கித் திருத்தொண்ட ருடன்செல்வார்
அந்தணர்கள் புடைசூழ்ந்து போற்றிசைப்ப அவரோடும்
கந்தமலர்ப் பொழில்சூழ்ந்த காரோணஞ் சென்றடைந்தார்.

பூமருவும் கங்கைமுதற் புனிதமாம் பெருந்தீர்த்தம்
மாமகந்தா னாடுதற்கு வந்துவழி படுங்கோயில்
தூமருவு மலர்க்கையால் தொழுதுவலங் கொண்டணைந்து
காமர்கெட நுதல்விழித்தார் கழல்பணிந்து கண்களித்தார்.

கண்ணாரும் அருமணியைக் காரோணத் தாரமுதை
†நண்ணாதார் புரமெரித்த நான்மறையின் பொருளானைப்
பண்ணார்ந்த திருப்பதிகம் பணிந்தேத்திப் பிறபதியும்
எண்ணார்ந்த சீரடியா ருடன்பணிவுற் றெழுந்தருளி.

திருநாகேச் சரத்தமர்ந்த செங்கனகத் தனிக்குன்றைக்
கருநாகத் துரிபுனைந்த கண்ணுதலைச் சென்றிறைஞ்சி
அருஞானச் செந்தமிழின் திருப்பதிகம் அருள்செய்து
பெருஞான சம்பந்தர் பெருகார்வத் தின்புற்றார்.

‡மாநாகம் அருச்சித்த மலர்க்கமலத் தாள்வணங்கி
நாளும் பரவுவார் பிணிதீர்க்கும் நலம்போற்றிப்
பானாறும் மணிவாயர் பரமர்திரு விடைமருதில்
பூநாறும் புனற்பொன்னித் தடங்கரைபோய்ப் புகுகின்றார். ௪௧௨

---

௪௦௯. வான் பொருளை - மேலான சிவத்தை. காரோணம் - குடந்தைக் காரோணம்.

௪௧௦. மகாமகத்தில் கங்கை முதலியன போந்து வழிபடுவது ஈண்டுக் குறிக்கப்பட்டது. "ஏவியிடர்க் கடலிடைப்பட் டுளைக்கின் றேனை இப்பிறவி அறுத்தேற வாங்கி ஆங்கே, கூவியமருலகனைத்து முருவிப் போகக் குறியில் அறு குணத்தாண்டு கொண்டார் போலும், தாவி முதற் காவிரிநல் யமுனை கங்கை சரஸ்வதிபொற் றாமரைபுட் கரணி தெண்ணீர்க், கோவியொடு குமரிவரு தீர்த்தஞ் சூழ்ந்த குடந்தைக்கீழ்க் கோட்டத்தெம் கூத்த னாரே"—அப்பர். சிவனுறையும் உள்ள முடையாராது புறவுறுப்பக்களும் சிவ மணத்தால் தூய்மை யுறுதல் இயல்பாதலின் "தூமருவு மலர்க்கையால்" என்றார். காமர் - மன்மதன்.

௪௧௧. கருநாகத்துரி - கரிய யானை யுரி.

௪௧௨. மாநாகம் - பெரியபாம்பு; அட்டமா நாகங்கள். நாள்-நாளும்.

பா - ம்—*அருங்கனியை. †நண்ணார்தம். ‡மாணாகம்

ஓங்குதிருப் பதிகம்ஓ டேகலன்என் றெடுத்தருளித்
தாங்கரிய பெருமகிழ்ச்சி தலைசிறக்குந் தன்மையினால்
"ஈங்கெனையா ளுடையபிரான் இடைமருதீ தோ"என்று
பாங்குடைய இன்னிசையாற் பாடிஎழுந் தருளினார். சகங

" ஓடேகலன் உண்பதும் ஊரிடுபிச்சை
காடேஇட மாவது கல்லால் நிழற்கீழ்
வாடாமுலை மங்கையுந் தானும்மகிழ்ந்
தீடாஉறை கின்ற இடைமருதீதோ "—தேவாரம்.

அடியவர்கள் எதிர்கொள்ள எழுந்தருளி அங்கணைந்து
முடிவில்பரம் பொருளானார் முதற்கோயில் முன்இறைஞ்சிப்
படியில்வலங் கொண்டுதிரு முன்பெய்திப் பார்மீது
நெடிதுபணிந் தெழுந்தன்பு நிறைகண்ணீர் நிரந்திழிய. சகச

பரவுறுசெந் தமிழ்ப்பதிகம் பாடிஅமர்ந் தப்பதியில்
விரவுவார் திருப்பதிகம் பலபாடி வெண்மதியோ
டரவுசடைக் கணிந்தவர்தந் தாள்போற்றி ஆர்வத்தால்
உரவுதிருத் தொண்டருடன் பணிந்தேத்தி உறையுநாள். சகரு

மருங்குளநற் பதிகள்பல பணிந்துமா நதிக்கரைபோய்க்
குரங்காடு துறையணைந்து குழகனார் குரைகழல்கள்
பெருங்காத லிற்பணிந்து பேணியஇன் னிசைபெருக
அருங்கலைநூல் திருப்பதிகம் அருள்செய்து பரவினார். சகசு

அம்ம லர்த்தடம் பதிபணிந் தகன்றுபோந் தருகு
மைம்ம லர்க்களத் திறைவர்தங் கோயில்கள் வணங்கி
நம்ம லத்துயர் *தீர்க்கவந் தருளிய ஞானச்
செம்ம லார்திரு ஆவடு துறையினைச் சேர்ந்தார். சகஎ

---

சகச. படியில் - தன்மையில்; முறைமைப்படி. நிரந்து - பரந்து.

சகரு. விரவுவார் - தங்குவார். ஆர்வத்தால் உரவு - அன்பால் வலிமை பெற்ற; (ஆர்வம் - கருதிய பொருள் மேல் தோன்றின பற்றுள்ளம்.)

சகசு. மாநதி - இங்கே காவிரி. குரைகழல்கள் - ஒலிக்கும் வீரக்கழலை யணிந்த திருவடிகளை. அருங்கலை நூலாகிய.

சகஎ. மைம்மலர்க்களத்து - கருங்குவளை போலுங் கண்டத்தையுடைய. நம்மலம் - நமது (உயிர்களின்) ஆணவ மலத்தால் விளையும்.

பா - ம்—*நீக்க.

### வேறு

மூவ ருக்கறி வரும்பொரு ளாகிய மூலத்
தேவர் தந்திரு ஆவடு துறைத்திருத் தொண்டர்
பூவ லம்புதண் பொருபுனல் தடம்பணைப் புகலிக்
காவ லர்க்கெதிர் கொள்ளும் ஆதரவுடன் கலந்தார். சகஅ

வந்த ணைந்தவர் தொழாமுனம் மலர்புகழ்ச் சண்பை
அந்த ணர்க்கெலாம் அருமறைப் பொருளென வந்தார்
சந்த நித்திலச் சிவிகைநின் றிழிந்தெதிர் தாழ்ந்தே
சிந்தை இன்புற இறைவர்தங் கோயில்முன் சென்றார். சகசு

---

சகஅ. மூவ...தேவர்-பிரமன் விஷ்ணு உருத்திரன் ஆகிய மும்மூர்த்திகளா லும் அறிதற்கு அரியபொருளாகிய சிவபெருமான். அயன் அரி அரன் என்னும் மூவரும் முறையே படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழி லையுஞ் செய்வோராவர். ஒருவர் தொழிலை மற்றொருவர் செய்வதில்லை. ஆகவே இவர் தத்தம் தொழில் புரிதற்கு ஒரு தலைவர் வேண்டற்பாலர். அவர் இயக்கும் வழி இம்மூவரும் தத்தம் தொழில் புரிவர். எனவே முத்தொழில் முறைமுறை புரியும் மூவர்க்கும் மேலாக உள்ளவர் தற்பர சிவனென்க. அச்சிவனார் அருளால் அயன் அரி அரன் ஆகிய மூவருந் தொழில் புரிதலால், அவரை அயன் என்றும், அரி என்றும், அரன் என்றும், இவர்கட்கு மேற் பட்ட முதல்வர் என்றும் அருள் நூல்கள் கூறுகின்றன. தற்பர சிவனை மும்மூர்த்திகளுள் ஒரு மூர்த்தியாகக் கருதல்தவறு. "வரியாய மலரானும் வையந் தன்னை - உரிதா யளந்தானும் உள்ளு தற்கு - கரியானும் அறியாத கள்ளின் மேயான் - பெரியானென் றறிவார்கள் பேசு வாரே" "விரைமலரோன் செங்கண்மால் ஈசன் என்னும் மூவராய முதலொருவன்" "படைத் தளித் தழிப்ப மும்மூர்த்திகளாயினை"—**திருஞானசம்பந்தர்:** திருக்கள்ளில்; திருமுது குன்றம்; திருவெழுகூற்றிருக்கை. "மூவருருத்தனதாம் மூலமுதற்கருவை"—**சுந்தரர்:** திருக்கானப்பேர். "பூவேறு கோனும் புரந்தரனும் பொற்பமைந்த - நாவேறு செல்வியும் நாரணனும் நான்மறையும் - மாவேறு சோதியும் வான வரும் தாமறியாச் - சேவேறு சேவடிக்கே சென்றூதாய் கோத்தும்பி" "மூவர் அறியாச் சிந்துரச் சேவடியானை", "தேவர் கோ அறியாத தேவதேவன் செழும் பொழில்கள் பயந்து காத்து அழிக்கும் மற்றை மூவர் கோனாய் நின்ற முதல் வன்"—**திருவாசகம்:** திருக்கோத்தும்பி; திருச்சதகம். "அரியாகிக் காப்பான் அயனாய்ப் படைப்பான் - அரனாய் அழிப்பவனுந்தானே"—**திருக்கைலாய ஞானவுலா:** க. "மூவர்க்கு முதல்வன் தன்னை", "மூவர் முதல்வன் மூவுல காளி"—**நம்மாழ்வார்:** இது குறித்துச் **சைவத்தின் சமரசம்** என்னும் நூலில் விளக்கஞ் செய்துள்ளேன். பொருபுனல் - மோதும் நீர் நிறைந்த.

பா - ம்—*வளர்.

நீடு கோபுரம் இறைஞ்சிஉள் புகுந்துநீள் நிலையான்
மாடு சூழ்திரு மாளிகை வலங்கொண்டு வணங்கி
ஆடும் ஆதியை ஆவடு துறையுள்ஆர் அமுதை
நாடு காதலிற் பணிந்தெழுந் தருந்தமிழ் நவின்றார். ௪௨0

அன்பு நீடிய அருவிகண் பொழியும்ஆர் வத்தால்
முன்பு போற்றி யே புறம்பணை முத்தமிழ் விரகர்
துன்பு போம்மனத் திருத்தொண்டர் தம்முடன் தொழுதே
இன்பம் மேவிஅப் பதியினில் இனிதமர்ந் திருந்தார். ௪௨௧

மேவி அங்குறை நாளினில் வேள்விசெய் வதனுக்
காவ தாகிய காலம்வந் தணைவுற அணைந்து
தாவில் சண்பையர் தலைவர்க்குத் தாதையார் தாமும்
போவ தற்கரும் பொருள்பெற எதிர்நின்று புகன்றார். ௪௨௨

தந்தை யார்மொழி கேட்டலும் புகலியார் தலைவர்
முந்தை நாளிலே மொழிந்தமை நினைந்தருள் முன்னி
"அந்த மில்பொரு ளாவன ஆவடு துறையுள்
எந்தை யார்அடித் தலங்களன் றே"என எழுந்தார். ௪௨௩

சென்று தேவர்தம் பிரான்மகிழ் கோயில்முன் பெய்தி
நின்று போற்றுவார் "நீள்நிதி வேண்டினார்க் கீவ
தொன்றும் மற்றிலேன் உன்னடி அல்லதொன் றறியேன்"
என்று பேரருள் வினவிய செந்தமிழ் எடுத்தார். ௪௨௪

"இடரினுந் தளரினும் எனதுறுநோய்
தொடரினும் உனகழல் தொழுதெழுவேன்
கடல்தனில் அமுதொடு கலந்தநஞ்சை
மிடறினில் அடக்கிய வேதியனே
இதுவோ எமைஆளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோஉன தின்னருள் ஆவடு துறையானே"—தேவாரம்.

எடுத்த வண்தமிழ்ப் பதிகநா லடியின்மேல் இருசீர்
தொடுத்த வைப்பொடு தொடர்ந்தஇன் னிசையினால் துதிப்பார்

௪௨0. நீள் நிலையால் மாடுசூழ் - நீண்ட அடுக்குகளால் பக்கஞ் சூழும்.
௪௨௩. பாட்டு ௨அ0 - பார்க்க.

பா - ம்—*அப்.

மடுத்த காதலில் வள்ளலார் அடியிணை வழுத்தி
அடுத்த சிந்தையால் ஆதரித் தஞ்சலி அளித்தார். ௪௨௫

ச்சி இன்தமிழ் பாடிய ஞானசம் பந்தர்
இச்சை யேபுரிந் தருளிய இறைவரின் அருளால்
அச்சி றப்பருள் பூதமுன் விரைந்தகல் பீடத்
துச்சி வைத்தது பசும்பொன்ஆ யிரக்கிழி ஒன்று. ௪௨௬

வைத்த பூதம்அங் கணைந்துமுன் நின்றுநல் வாக்கால்
"உய்த்த இக்கிழி பொன்னுல வாக்கிழி உமக்கு
நித்த னார்அருள் செய்த"தென் றுரைக்கநேர் தொழுதே
அத்த னார்திரு வருள்நினைந் தவனிமேற் பணிந்தார். ௪௨௭

பணிந்தெ ழுந்துகை தொழுதுமுன் பனிமலர்ப் பீடத்
தணைந்த ஆடகக் கிழிதலைக் கொண்டரு மறைகள்
துணிந்த வான்பொருள் தரும்பொருள் தூயவாய் மையினால்
தணிந்த சிந்தைஅத் தந்தையார்க் களித்துரை செய்வார். ௪௨௮

"ஆதி மாமறை விதியினால் ஆறுசூழ் வேணி
நாத னாரைமுன் னாகவே புரிபுநல் வேள்வி
தீது நீங்கநீர் செய்யவுந் திருக்கழு மலத்து
வேத வேதியர் அனைவருஞ் செய்யவும் மிகுமால்." ௪௨௯

என்று கூறிஅங் கவர்தமை விடுத்தபின் அவரும்
நன்றும் இன்புறு மனத்தொடும் புகலிமேல் நண்ண

---

௪௨௫. நாலடிமேல் வைப்பொடு. மடுத்த - நிறைந்த. வள்ளலார் - சிவபெருமானது. சிவபிரானிடத்து அடுத்த. ஆதரித்து - விரும்பி. அஞ்சலி அளித்தார் - கைகூப்பித் தொழுதார்.

௪௨௬. அச்சிறப்பு அருள் - ஞானசம்பந்தர் கருதிய சிறப்பை (பொருளை) அருளும்படி ; "முத்துப் பந்தரை முன்னருளிய பூதம்"—பழைய குறிப்புரை : கிழி - கிழித்த துணியால் கட்டப்பெற்ற பொன் முடிப்பு. "கழுமல ஊரர்க்கம் பொன் ஆயிரங் கொடுப்பர் போலும் ஆவடு துறையனாரே"—அப்பர் ; திருநாவுக்கரசு சுவாமிகள் புராணம் : பாட்டு - ௨௬௩. பார்க்க.

௪௨௭. உய்த்த - கொண்டுவந்து வைத்த. இக்கிழி - இம் முடிப்பு. பொன் உலவாக்கிழி - பொன்னை எடுக்க எடுக்கக் குறையாத முடிப்பு.

௪௨௮. ஆடகக்கிழி - பொன் முடிப்பை. அருமறைகள் துணிந்த வான்பொருள் - சிவபெருமான். தரும்பொருள் - அருள்செய்த பொற்கிழியை.

௪௨௯. யாகத்துக்குக் கர்த்தா சிவபெருமான் என்பது குறிக்கப்பட்டது. மிகும் - பொன் குறையாது மிகும்.

வென்றி ஞானசம் பந்தரும் விருப்பொடு வணங்கி
மன்றல் ஆவடு துறையினில் மகிழ்ந்தினி திருந்தார். சுகூ0

அண்ண லார்திரு ஆவடு துறைஅமர்ந் தாரை
உண்ணி லாவிய காதலி னுற்பணிந் துறைந்து
மண்ணெ லாம்உய வந்தவர் போந்துவார் சடைமேல்
தெண்ணி லாஅணி வார்திருக் கோழம்பஞ் சேர்ந்தார். சுகூக

கொன்றை வார்சடை முடியரைக் கோழம்பத் திறைஞ்சி
என்றும் நீடிய இன்னிசைப் பதிகம்முன் இயம்பி
மன்று ளார்மகிழ் வைகல்மா டக்கோயில் மருங்கு
சென்று சார்ந்தனர் திருவளர் சிரபுரச் செல்வர். சுகூஉ

வைகல் நீடுமா டக்கோயில் மன்னிய மருந்தைக்
கைகள் அஞ்சலி கொண்டுதாழ்ந் தெழுந்துகண் அருவி
செய்ய இன்னிசைச் செந்தமிழ் மாலைகள் மொழிந்து
நையும் உள்ளத்த ராய்த்திரு நல்லத்தில் நண்ணி. சுகூங

நிலவு மாளிகைத் திருநல்லம் நீடுமா மணியை
இலகு சேவடி இறைஞ்சிஇன் தமிழ்கொடு துதித்துப்
பலவும் ஈசர்தந் திருப்பதி பணிந்துசெல் பவர்தாம்
அலைபு னல்திரு வழுந்தூர்மா டக்கோயில் அடைந்தார். சுகூச

மன்னு மாமடம் மகிழ்ந்தவான் பொருளினை வணங்கிப்
பன்னு பாடலிற் பதிகஇன் னிசைகொடு பரவிப்
பொன்னி மாநதிக் கரையினில் மீண்டுபோந் தணைந்து
சொன்ன வாறறி வார்தமைத் துருத்தியில் தொழுதார். சுகூரு

திரைத்த டம்புனல் பொன்னிசூழ் திருத்துருத் தியினில்
"வரைத்த லைப்பசும் பொன்" எனும் வண்தமிழ்ப் பதிகம்
உரைத்து மெய்யுறப் பணிந்துபோந் தலவும்அந் நதியின்
கரைக்கண் மூவலூர்க் கண்ணுத லார்கழல் பணிந்தார். சுகூசு

"வரைத்தலைப் பசும்பொனோ டருங்கலன்கள் உந்திவந்
திரைத்தலைச் சுமந்துகொண் டெறிந்திலங்கு காவிரிக்

---

சுகூ0. நன்றும் - பெரிதும்.

சுகூரு. மாமடம் - மாடக்கோயிலில். சொன்னவாறறிவார் தம்மை - "சொல்லப்பட்ட ஆறறிவை யுடையோரை" (ஆறு+அறிவார்); "அடியார் விண்ணப்பஞ் செய்தபடி அறிந்து செய்பவரை என்றுமாம்"—பழைய குறிப்புரை. "சொன்னவா றறிவார்..."—சுந்தரர்: திருத்துருத்தி. க.

கரைத்தலைத் துருத்திபுக் கிருப்பதே கருத்தினாய்
உரைத்தலைப் பொலிந்துனக் குணர்த்துமாறு வல்லமே"—தேவாரம்.

மூவ லூர்உறை முதல்வரைப் பரவிய மொழியால்
மேவு காதலில் ஏத்தியே விருப்பொடும் போந்து
பூவ லம்புதண் புனற்பணைப் புகலியர் தலைவர்
வாவி சூழ்திரு மயிலாடு துறையினில் வந்தார். சஙஎ

மல்கு தண்டலை மயிலாடு துறையினில் மருவும்
செல்வ வேதியர் தொண்டரோ டெதிர்கொளச் சென்று
கொல்லை மான்மறிக் கையரைக் கோயில்புக் கிறைஞ்சி
எல்லை இல்லதோர் இன்பம்முன் பெருகிட எழுந்தார். சஙஅ

உள்ளம் இன்புற உணர்வுறும் பரிவுகொண் டுருகி
வெள்ளந் தாங்கிய சடையரை விளங்குசொற் பதிகத்
தெள்ளும் இன்னிசைத் திளைப்பொடும் புறத்தணைந் தருளி
*வள்ள லார்மற்ற வளம்பதி மருவுதல் மகிழ்ந்தார். சஙகூ

அத்தி ருப்பதி அகன்றுபோய் அணிகிளர் சூலக்
கைத்த லப்படை வீரர்செம் பொன்பள்ளி கருதி
மெய்த்த காதலில் விளநகர் விடையவர் பாதம்
பத்தர் தம்முடன் பணிந்திசைப் பதிகம்முன் பகர்ந்தார். சச0

பாடும் அப்பதி பணிந்துபோய்ப் பறியலூர் மேவும்
தோடு லாமலர் இதழியும் தும்பையும் †அடம்பும்
காடு கொண்டசெஞ் சடைமுடிக் கடவுளர் கருது
நீடு வீரட்டம் பணிந்தனர் நிறைமறை வேந்தர். சசக

பரமர் தந்திருப் பறியலூர் வீரட்டம் பரவி
விரவு காதலின் வேலையின் கரையினை மேவி

---

சஙஅ. மல்கு தண்டலை - மிகுந்த சோலைகள் சூழ்ந்த. மான்மறி - மான் கன்றை ஏந்திய.

சஙகூ. தெள்ளிய இன்னிசை அருளி பாடுதலுடன். மருவுதல் மகிழ்ந்தார்- செல்வதை விரும்பினார்.

சச0. வீரர் - சிவபெருமான்.

சசக. தோடு உலா மலர் இதழியும் - இதழ் பொருந்தி மலரும் கொன்றையையும். அடம்பும் - அடப்பம் பூவையும்; இஃதொருவித கொடிப்பூ; நெய்தல் நிலத்துக்கு உரியது.

சசஉ. பறியலூர் - அட்ட வீரட்டத்துள் ஒன்று; தக்கன் தலையைத் தடிந்த தலம்.

பா - ம்—*வள்ளலாருமற்றுளபதி. †அறுகும்.

அரவ ணிந்தவர் பதிபல அணைந்துமுன் வணங்கிச்
சிரபு ரத்தவர் திருத்தொண்டர் எதிர்கொளச் செல்வார். ௪௪௨

வேறு

அடியவர்கள் களிசிறப்பத் திருவேட்டக் குடிபணிந்தங் கலை வாய்ப் போகிக், கடிகமழு மலர்ப்பழனக் கழனிநாட் டகன்பதிகள் கலந்து நீங்கிக், கொடிமதில்சூழ் தருமபுரங் குறுகினார் "குண்டர்சாக் கியர்தங் கொள்கை, படிஅறியப் பழு"தென்றே மொழிந்துய்யும் நெறி காட்டும் பவள வாயர். ௪௪௩

தருமபுரம் பெரும்பாணர் திருத்தாயர் பிறப்பிடமாம் அதனாற் சார, வருமவர்தஞ் சுற்றத்தார் வந்தெதிர்கொண் டடிவணங்கி வாழ்த் தக் கண்டு, பெருமையுடைப் பெரும்பாணர் அவர்க்குரைப்பார் பிள்ளை யார் அருளிச் செய்த, அருமையுடைப் பதிகந்தாம் யாழினாற் பயிற் றும்பே றருளிச் செய்தார். ௪௪௪

கிளைஞரும்மற் றதுகேட்டுக் "கெழுவுதிருப் பதிகத்திற் கிளர்ந்த ஓசை, அளவுபெறக் கருவியில்நீர் அமைத்தியற்றும் அதனாலே அகி லம் எல்லாம், வளரஇசை நிகழ்வ"தென விளம்புதலும் வளம்புகலி மன்னர் பாதம், உளநடுங்கிப் பணிந்துதிரு நீலகண்டப் பெரும்பாணர் உணர்த்து கின்றார். ௪௪௫

"அலகில்திருப் பதிகஇசை அளவுபடா வகைஇவர்கள் அன்றி ஏயும், உலகில்உளோ ருந்தெரிந்தங் குண்மையினை அறிந்துய்ய உணர்த்தும் பண்பால், பலர்புகழுந் திருப்பதிகம் பாடிஅரு ளப்பெற்

---

௪௪௨. வேலையின் - கடலின்.

௪௪௩. கடி...நீங்கி - மணங் கமழும் மலர்களையுடைய வயல்கள் நிறைந்த சோழநாட்டிலுள்ள அகன்ற திருப்பதிகளை அடைந்து, அவைகளை விடுத்து நீங்கி. குண்டர் - சமணர். சாக்கியர் - பௌத்தர்.

௪௪௪. அவர்க்கு - அச்சுற்றத்தவர்க்கு. உரைப்பாராகிய பெருமையுடைப் பெரும்பாணர்...அருளிச் செய்தார்.

௪௪௫. கிளைஞரும் - சுற்றத்தாரும். கெழுவு - பொருந்தும். கிளர்ந்த - எழுந்த. கருவியில் - யாழில். தஞ்சுற்றத்தார் தம்மைப் புகழ்ந்து கூறும் அறியாமை கருதி உளம் நடுங்கி யாழ்ப்பாணர் பிள்ளையாரைப் பணிந்தா ரென்க. இச்செயல் யாழ்ப்பாணரின் முனைப்பின்மையைக் குறிப்பது.

௪௪௬. அலகில்...வகை - அளவிறந்த (தாங்கள் அருளும்) திருப்பதிக இசையானது (யாழில்) அளவுபடாத வகையை. ஏயும் - இவர்களையொத்த;

ருல் பண்பு நீடி, "இலகும்இசை யாழின்கண் அடங்காமை யான்காட்டப் பெறுவன்" என்றார். சசகூ

வேதநெறி வளர்ப்பவரும் விடையவர்முன் தொழுதுதிருப் பதிகத் துண்மை, பூதலத்தோர் கண்டத்தும் கலத்தினிலும் நிலத்துநூல் புகன்ற *பேத, நாதஇசை முயற்சிகளால் அடங்காத வகைகாட்ட நாட்டுகின்றார், "மாதர்மடப் பிடி"பாடி வணங்கினார் வானவரும் வணங்கி ஏத்த. சசஎ

"மாதர் மடப்பிடியும் மட அன்னமும் அன்னதோர் நடை யுடைம் மலைமகள் துணைஎன மகிழ்வர், பூத இனப்படைநின் றிசை பாடவும் ஆடுவர் அவர் படர் சடை நெடு முடியதோர் புனலர், வேதமொ டேழிசைபாடுவர் ஆழ்கடல் வெண்டிரை யிரைந் நுரை கரை பொருது விம்மிநின் றயலே, தாதவிழ் புன்னைதயங்கும லர்ச்சிறை வண்டறை எழில் பொழில் குயில் பயில் தரும புரம்பதியே"—தேவாரம்.

வண்புகலி வேதியனார் "மாதர்மடப் பிடி"எடுத்து வனப்பிற் பாடிப், பண்பயிலுந் திருக்கடைக்காப் புச்சாத்த அணைந்துபெரும் பாண னார்தாம், நண்புடையாழ்க் கருவியினில் முன்புபோல் கைக்கொண்டு நடத்தப் புக்கார்க்,கெண்பெருகும் அப்பதிகத் திசைநரம்பில் இடஅடங்கிற் றில்லை அன்றே. சசஅ

அப்பொழுது திருநீல கண்டஇசைப் பெரும்பாணர் அதனை விட்டு, மெய்ப்பயமும் பரிவும்உறப் பிள்ளையார் கழலிணைவீழ்ந் தெழுந்துநோக்கி "இப்பெரியோர் அருள்†செய்த திருப்பதிகத் திசை யாழில் ஏற்பன் என்னச், செப்பிய‡திக் கருவியைநான் தொடுதலினன் றோ"என்று தெளிந்து செய்வார். சசகூ

"வீக்குநரம் புடையாழி னால்விளைந்த திது"என்றங் கதனைப் போக்க, ஒக்குதலுந் தடுத்தருளி "ஐயரே உற்றஇசை §அளவினால்

---

பொருந்தும் எனினுமாம். பண்பால் - தகுதியால். பண்பு நீடி இலகும் - குணம் மிக்கு விளங்கும்.

சசஎ. கலத்தினிலும் - யாழினிலும். நிலத்துநூல் - உலகிலுள்ள இசை நூல்கள். முயற்சிகளாலும்.

சசஅ. வனப்பில் - வனப்பு வண்ணத்தால்; அழகொடு எனினுமாம். எண் - அறிவு.

சசகூ. மெய்ப்பயமும் பரிவும் உற - உடலில் நடுக்கமும் உள்ளத்தில் வருத்தமும் உண்டாக. தொடுதலின் அன்றோ - தொடுதலால் அல்லவா.

பா - ம்—*வேத. †செய்யத். ‡இக். §உணர்விலால்.

நீர், ஆக்கியஇக் கருவியினைத் தாரும்''என வாங்கிக்கொண் டவனி செய்த, பாக்கியத்தின் மெய்வடிவாம் பாலறு வாயர்*பணித் தருளு கின்றார். சுருo

"ஐயர்!நீர் யாழ்இதனை முரிக்குமதென் ஆளுடையா ளுடனே கூடச், செய்யசடை யார்அளித்த திருவருளின் பெருமையெலாந் †தெரிய நம்பால், எய்தியஇக் கருவியினில் அளவுபடு மோநந்தம் இயல்புக் கேற்ப, வையகத்தோர் அறிவுறஇக் கருவிஅள வையின் இயற்றல் வழக்கே'' என்றார். சுருக

"சிந்தையால் அளவுபடா இசைப்பெருமை செயலளவில் எய்து மோநீர், இந்தயா ழினைக்கொண்டே இறைவர்திருப் பதிகஇசை இத னில் எய்த, வந்தவா றேபாடி வாசிப்பீர்'' எனக்கொடுப்பப் புகலி மன்னர், தந்தயா ழினைத்தொழுது கைக்கொண்டு பெரும்பாணர் தலைமேற் கொண்டார். சுருஉ

அணைவுறும்அக் கிளைஞருடன் பெரும்பாணர் ஆளுடைய பிள்ளை யார்தம், துணைமலர்ச்சே வடிபணிந்து துதித்தருளத் தோணிபுரத் தோன்ற லாரும், இணையில்பெருஞ் சிறப்பருளித் தொண்டருடன் அப்பதியில் இனிது மேவிப், பணைநெடுங்கை மதயானை உரித்தவர்தம் பதிபிறவும் பணியச் செல்வார். சுருங

பங்கயப்பா சடைத்தடஞ்சூழ் பழனநாட் டகன்பதிகள் பலவும் நண்ணி, மங்கையொரு பாகத்தார் மகிழ்கோயில் எனைப்பலவும் வணங் கிப் போற்றித், தங்கிசையாழ்ப் பெரும்பாண ருடன்மறையோர் தலை வனுர் சென்று சார்ந்தார், செங்கைமான் மழுவேந்தும் சினவிடையார் அமர்ந்தருளுந் திருநள் ளாறு. சுருச

---

சுருo. வீக்கு - இறுகமுறுக்கிய ; பிணித்த. போக்க ஒக்குதலும் - உடைக்க ஓங்குதலும்.

சுருக. ஐயரே. முரிக்குமதென் - உடைக்கப்புகுந்ததென்ன. ஆளுடை யாள் - உமாதேவியார். ......பெருமை யெலாம் தெரிந்து கொள்ளுதற்கு நம் பால்......அளவுபடுமோ (அமையுமோ)? ஆதலால் நமது இயல்புக்கேற்ப...... இயற்றல் (வாசித்தல்) வழக்கே (ஒழுங்கே) யாகும்.

சுருஉ. பிள்ளையார் யாழைத் தொட்டுத் தந்தமையான் அதற்கு ஒருவித தனிச் சிறப்புண்டாயிற்றென்க. சுருங. பணை - பருத்த.

சுருச. பாசடை பங்கயத் தடஞ்சூழ் பழன நாட்டு - பசிய இலைகளையுடைய தாமரை யடர்ந்த தடாகங்கள் சூழ்ந்த வயல்கள் நிறைந்த சோழநாட்டில் உள்ள எனைய பலவும்.

பா - ம்—*பரிந். †தெளிய, திகழ.

நள்ளாற்றில் எழுந்தருள நம்பர்திருத் தொண்டர்குழாம் நயந்து சென்று, கொள்ளாற்றில் எதிர்கொண்டு குலவியுடன் சூழ்ந்தணையக் குறுகிக் கங்கைத், தெள்ளாற்று வேணியர்தந் திருவளர்கோ புரம் இறைஞ்சிச் செல்வக் கோயில், உள்ளாற்ற வலங்கொண்டு திருமுன்பு தாழ்ந்தெழுந்தார் உணர்வின் மிக்கார். சடுடு

உருகியஅன் புறுகாதல் உள்ளுருகி நனைசுரம் பெற்றாற் போல, மருவுதிரு மேனிஎலாம் முகிழ்த்தெழுந்த மயிர்ப்புளகம் வளர்க்கு நீராய், அருவி*சொரி திருநயனத் தானந்த வெள்ளம்இழிந் தலைய நின்று, பொருவில்பதி கம்"போக மார்த்தபூண் முலையாள்" என்றெடுத்துப் போற்றி. சடுசு

"போகமார்த்த பூண்முலையாள் தன்னொடும் பொன்னகலம்
பாகமார்த்த பைங்கண்வெள்ளேற் றண்ணல்பா மேட்டி
யாகமார்த்த தோலுடையன் கோவணவா டையின்மேல்
நாகமார்த்த நம்பெருமான் மேயதுநள் ளாறே"—**தேவாரம்.**

யாழ்நரம்பில் ஆரஇயல் இசைகூடப் பாடியே †எண்ணில் கற்பச் சேணளவு படஓங்குந் திருக்கடைக்காப் புச்சாத்திச் செங்கண் நாகப் பூணகலத் தவர்பாதம் போற்றிசைத்துப் புறத்தணைந்து புவனம் ஏத்தும் பாணனார் யாழிலிடப் பாலறு வாயர்அருள் பணித்த போது. சடுஎ

பிள்ளையார் திருத்தாளங் கொடுபாடப் பின்புபெரும் பாணனார்தாம், தெள்ளமுத இன்னிசையின் தேம்பொழிதந் திரியாழைச் சிறக்க வீக்கிக், கொள்ளஇடும் பொழுதின்கட் குவலயத்தோர் களிகூரக் குலவு சண்பை, வள்ளலார் திருவுள்ளம் மகிழ்ந்துதிருத் தொண்டருடன் மருவுங் காலை. சடுஅ

---

சடுடு. நயந்து சென்று கொள்ளாற்றில் - விரும்பிச் சென்று எதிர்கொள்ளும் முறைமைப்படி. செல்வக் கோயிலுள்ளே ஆற்ற (மிகுதியாக).

சடுசு. முகிழ்த்து (அரும்பி) எழுந்த மயிர்ப்புளகத்தை. இத்திருப்பதிகம் மதுரையில் நெருப்பிலிடப்பட்டது ; விரிவு பின்னே காண்க.

சடுஎ. யாழ்நரம்பில் ஆர (பொருந்த). இயல் இசை - இயன்ற இசை; இயற்றமிழும் இசைத் தமிழும் என்னினுமாம். எண்ணிறந்த கற்பங்களுக்கு அப்பாலும் நிலைபெற : அளவு கடக்க என்னலுமொன்று. அகலத்தவர் - மார்பையுடைய சிவபிரான்.

சடுஅ. தந்திரி - நரம்பையுடைய. வீக்கி - முறுக்கி.

பா - ம்—*சொரிந்திருநயனத். †எண்ணில்லாத.

மன்னுதிரு நள்ளாற்று மருந்தைவணங் கிப்போந்து வாச நன்னீர்ப்
பொன்னி*வளந் தருநாட்டுப் புறம்பணைசூழ் திருப்பதிகள் †பலவும் போற்றிச்
செந்நெல்வயற் செங்கமல முகம்மலருந் திருச்சாத்த மங்கை மூதூர்
தன்னில்எழுந் தருளினார் சைவசிகா மணியார்மெய்த் தவத்தோர் சூழ.

நிறைசெல்வத் திருச்சாத்த மங்கையினில் நீலநக்கர் தாமுஞ் சைவ
மறையவனார் எழுந்தருளும் படிகேட்டு வாழ்ந்துவழி விளக்கி எங்கும்
துறைமலிதோ ரணங்கதலி கமுகுநிறை குடந்தூப தீபம் ஆக்கி
முறைமையில்வந் தெதிர்கொள்ள உடனணைந்து முதல்வனார் கோயில் சார்ந்தார்.

அயவந்தி அமர்ந்தருளும் அங்கணர்தங் கோயில்மருங் கணைந்து வானோர்
உயவந்தித் தெழுமுன்றில் புடைவலங்கொண் டுள்‡புக்கா ரொழுகுஞ் செக்கர்
மயவந்தி மதிச்சடையார் முன்தாழ்ந்து மாதவம்இவ் வைய மெல்லாஞ்
செயவந்த அந்தணனார் செங்கைமேற் குவித்தெழுந்து திருமுன் நின்றார்.

போற்றிசைக்கும் பாடலினாற் பொங்கிஎழும் ஆதரவு பொழிந்து §விம்ம, ஏற்றின்மிசை இருப்பவர்தம் எதிர்நின்று துதித்துப்போந் தெல்லை இல்லா, நீற்றுநெறி மறையவனார் நீலநக்கர் மனையில்எழுந் தருளி அன்பால், ஆற்றும்விருந் தவர்அமைப்ப அன்பருடன் இன் புற்றங் கமுது செய்தார். ௪௬௨

நீடுதிரு நீலநக்கர் நெடுமனையில் விருந்தமுது செய்து நீர்மைப்
பாடும்யாழ்ப் பெரும்பாண ருந்தங்க அங்கிரவு பள்ளி மேவி
ஆடுமவர் அயவந்தி பணிவதனுக் கன்பருடன் அணைந்து சென்று
நாடியநண் புடைநீல நக்கடிக ளுடன்நாதர் கழலில் தாழ்ந்து. ௪௬௩

கோதிலா ஆரமுதைக் கோமளக்கொம் புடன்கூடக் கும்பிட் டேத்தி
||ஆதியாம் மறைப்பொருளால் அருந்தமிழின் திருப்பதிகம் அருளிச் செய்வார்.

---

௪௬௦. படி - செய்தி ; ஆகுபெயர். வாழ்ந்து - மகிழ்ந்து. துறை எங்கும் - இடங்களிலெல்லாம்.

௪௬௧. வானோர் உய்ய வணங்கி எழும் திருமுற்றத்தில் பக்கமாக வலம் வந்து. அந்தி வான்மதி யணிந்த சடையார்.

௪௬௨. ஆதரவு - அன்பு.

௪௬௩. பண்ணீர்மை. ஆடுமவர் - நடராசரது. **திருநீலநக்கர் புராணம்** பார்க்க.

௪௬௪. கோமளக் கொம்புடன் - இளம் பூங் கொம்பு போன்ற உமையம் மையாருடன்.

பா - ம்—*வளத்திரு. †பிறவும் போற்ற. ‡புக்கார் ஓங்குஞ். §விம்மி. ¶நினைத்து. ||ஆதிமா.

நீதியால் நிகழ்கின்ற நீலநக்கர் தம்பெருஞ்சீர் நிகழ வைத்துப்
பூதிசா தனர்பரவும் புனிதஇய லிசைப்பதிகம் போற்றி செய்தார்.

" மறையினார் மல்குகாழித் தமிழ்ஞானசம் பந்தன்மன்னும்
நிறையினார் நீலநக்கன் நெடுமாநக ரென்று தொண்டர்
அறையுமூர் சாத்தமங்கை அயவந்திமே லாய்ந்தபத்தும்
முறைமையா லேத்தவல்லார் இமையோரிலும் முந்துவரே "—தேவாரம்.

பரவியகா தலிற்பணிந்து பாலறு வாயர்புறத் தணைந்து பண்பு
விரவியநண் புடையடிகள் விருப்புறுகா தலில்தங்கி மேவும் நாளில்
அரவணிந்தார் பதிபிறவும் பணியஎழும் ஆதரவால் அணைந்து செல்வார்
உரவுமனக் கருத்தொன்றும் உள்ளமுடை யவர்க்குவிடை உவந்து நல்கி.

வேறு

மற்றவர்தம் பெருங்கேண்மை மகிழ்ந்து கொண்டு மாலயனுக்
கரியபிரான் மருவு தானம், பற்பலவுஞ் சென்றுபணிந் தேத்திப்
பாடிப் பரமர்திருத் தொண்டர்குழாம் பாங்கின் எய்தக், கற்றவர்
வாழ் கடல்நாகைக் காரோ ணத்துக் கண்ணுதலைக் கைதொழுது
கலந்த ஓசைச், சொற்றமிழ்மா லைகள்பாடிச் சிலநாள் வைகித்
தொழுதகன்றார் தோணிபுரத் தோன்ற லார்தாம். ௪௬௬

வேறு

கழிக்கானல் மருங்கணையுங் கடல்நாகை யதுநீங்கிக் கங்கை
யாற்றுச், சுழிக்கானல் வேணியர்தம் பதிபலவும் பரவிப்போய்த்
தோகை மார்தம், விழிக்காவி மலர்பழனக் கீழ்வேளூர் விமலர்கழல்
வணங்கி ஏத்தி, மொழிக்காதல் தமிழ்மாலை புனைந்தருளி அங்ககன்றார்
மூதூர் நின்றும். ௪௬௭

அருகணையுந் திருப்பதிகள் ஆனவெலாம் அங்கணரைப் பணிந்து
போற்றிப், பெருகியஞா னம்பெற்ற பிள்ளையார் எழுந்தருளும்
பெருமை கேட்டுத், திருமருவு செங்காட்டங் குடிநின்றுஞ் சிறுத்

௪௬௫. அடிகள் - திருநீலநக்கர். உரவு - அறிவால். மனக் கருத்து - மனத்தெழுங் கருத்து. உள்ளம் உடையவர்க்கு - திருநீலநக்க நாயனார்க்கு.

௪௬௬. கேண்மை - நட்பு.

௪௬௭. கழிக்கானல் - உப்பங் கழியையுடைய (கடற்) கரையின். சுழிக் கானல் - சுழியையுடைய ஒளி பொருந்திய. விழிபோன்ற நீலோற்பலங்கள் மலர்கின்ற வயல்கள் சூழ்ந்த.

௪௬௮. அருகேயுள்ள.

பா - ம்—*பரவு.

தொண்ட ரோடிச் சென்றங், குருகுமனங் களிசிறப்ப எதிர்கொண்டு
தம்பதியுட் கொண்டு புக்கார். சசுஅ

சிறுத்தொண்ட ருடன்கூடச் செங்காட்டங் குடியில்எழுந் தரு
ளிச் சீர்த்தி, நிறுத்தெண்டிக் கிலுநிலவுந் தொண்டரவர் நண்பமர்ந்து
நீல கண்டம், பொறுத்தண்டர் உயக்கொண்டார் கணபதீச் சரத்தின்
கட் போகம் எல்லாம், வெறுத்துண்டிப் பிச்சைநுகர் மெய்த்தொண்ட
ருடன்அணைந்தார் வேத *கீதர். சசுகூ

அங்கணைந்து கோயில்வலங் கொண்டருளி †அரவணிந்தார் அடிக்
கீழ் வீழ்ந்து, செங்கண்அரு விகள்பொழியத் திருமுன்பு பணிந்
தெழுந்து செங்கை கூப்பித், தங்கள்பெருந் தகையாரைச் சிறுத்தொண்
டர் தொழஇருந்த தன்மை போற்றிப், பொங்கிஎழும் இசைபாடிப்
போற்றிசைத்தங் கொருபரிசு புறம்பு போந்தார். சஎ0

"பைங்கோட்டு மலர்புன்னைப் பறவைகாள் பயப்பூரச்
சங்காட்டந் தவிர்த்தென்னைத் தவிராநோய் தந்தானே
செங்காட்டங் குடிமேய **சிறுத்தொண்டன் பணிசெய்ய**
வெங்காட்டு அனலேந்தி விளையாடும் பெருமானே."—**தேவாரம்.**

போந்துமா மாத்திரர்தம் போரேற்றின் திருமனையிற் புகுந்து சிந்தை
வாய்ந்தமா தவரவர்தாம் மகிழ்ந்தருள அமர்ந்தருளி மதில்கள் மூன்றும்
காய்ந்தமால் விடையார்தங் கணபதீச் சரம்பரவு காதல் கூர
ஏந்துநூல் அணிமார்பர் இன்புற்றங் கன்பருடன் இருந்த நாளில். சஎக

திருமருகல் நகரின்கண் எழுந்தருளித் திங்களுடன் செங்கட் பாம்பு
மருவுநெடுஞ் சடைமவுலி மாணிக்க வண்ணர்கழல் வணங்கிப் போற்றி
உருகியஅன் புறுகாதல் உள்ளலைப்பத் தெள்ளும்இசை யுடனே கூடப்
பெருகுதமிழ்த் தொடைசாத்தி அங்கிருந்தார் பெரும்புகலிப் பிள்ளை யார்தாம்.

---

சசுகூ. சீர்த்தி எண் திக்கிலும் நிறுத்தும் நிலவுந் தொண்டரவர் (சிறுத்தொண்டரது) நண்பை விரும்பி. பொறுத்து - தாங்கி.

சஎ0. தங்கள் பெருந்தகையாரை - தம் பெருமானை. சிறுத்தொண்டர் தொழ எழுந்தருளியிருந்த. ஒரு பரிசு - ஒருவாறு; பிரிய மனமில்லா முறையில் என்றபடி.

சஎக. மாமாத்திரர் தம் போரேற்றின் - சிறுத்தொண்டரின். மதில்கள் மூன்றுங் காய்ந்த - முப்புரமெரித்த.

சஎஉ. மவுலி - முடி.

பா - ம்—*வாயர். †ஆறணிந்தார்.

வேறு

அந்நாளில் ஒருவணிகன் பதிக ளுகி அணைவாரோர் கன்னியையும் உடனே கொண்டு, பொன்னூர்மே ருச்சிலையார் கோயில் மாடு புறத்தி லொரு மடத்திரவு துயிலும் போது, மின்னார்வெள் எயிற்றரவு *கவ்வுதலும் கிளர்ந்த விடவேகங் கடிதுதலை †மீக்கொண் டேறத், தன்னுவி நீங்குமவன் தன்மை கண்டு சாயலிளங் கன்னிநிலை தளர்ந்து சோர்வாள். சஎங

வாளரவு தீண்டவுந்தான் தீண்ட கில்லாள் மறுமாற்றம் மற்றொருவர்கொடுப்பா ரின்றி, ஆளரியே றனையானை ‡அணுக வீழ்ந்தே அசைந்த மலர்க் கொடிபோல்வாள் அரற்றும் போது, கோளுருமும் புள்ளரசும் அனையார் எல்லாக் கொள்கையினு லுந்தீர்க்கக் குறையா தாக, நீளிரவு புலர்காலை மாலை வாச நெறிகுழலாள் நெடிதயர்ந்து புலம்பு கின்றாள்.

"அன்னையையும் அத்தனையும் பிரிந்து நின்னை அடைவாக உடன் போந்தேன் அரவால் §வீடி, ¶என்னைஉயிர் விட்டகன்றாய் யானென் செய்கேன் இவ்விடுக்கண் தீர்க்கின்றார் யாரு மில்லை, மன்னியசீர் வணிகர்குல மணியே! யானும் வாழேன்" என் றென்றயர்வாள் மதியி னாலே,

சஎங. பதிகனுகி - வழிச் செல்வோனாய். மின்னார் வெள்ளெயிற்றரவு - ஒளி நிறைந்த வெண் பற்களையுடைய ஒரு பாம்பு. கிளர்ந்த - எழுந்த. சாயல் - மென்மையுடைய (சாயல் - ஐம்பொறியால் நுகரும் மென்மை).

சஎச. திருமணம் ஆகாதவளாதலின் "தீண்டகில்லாள்" என்றார். மறுமாற்றம் - மறுவார்த்தை; தேர்தல்மொழி. ஆள்அரி ஏறு அனையானை - ஆண் சிங்கம் போன்றவனை. அரற்றும்போது - கதறி அழும்போது (பல சொல்லிக் குறை கூறி அழும்போது). கோளுருமும் புள்ளரசும் அனையார் எல்லாக் கொள்கையினாலும்-கொல்லும் இடியையும் கருடனையும் ஒத்த மந்திரவாதிகளின் முயற்சிகளுக்கெல்லாம். இடியும் கருடனும் பாம்புக்குப் பகை என்பது மரபு. இடியையும் கருடனையும் தாமாகப் பாவித்துப் பயின்று அவ்விடியினியலையும் கருடனியலையும் பெறுவோர் பாம்பு விடத்தை அப்பாவனையால் இறக்குவதுண்டு. எல்லாக் கொள்கை என்பது பாவனையன்றி மற்ற மணிமந்திர ஔடதாதிகளையுங் குறிப்பதாகும். மாலையின் மணம் பொருந்திய நெறித்த கூந்தலை யுடையாள்.

சஎரு. அடைவாக - சார்பாக. வீடி - மாண்டு. அயர்வாள் மதியினால் - வருந்துகின்றவளாகிய அப்பெண்மணி தன் அறிவால். "திக்கற்றவர்கட்குத் தெய்வமே துணை". பெருந் துன்பத்தில் ஆண்டவன் நினைவு தோன்றலும்,

பா - ம்—*தீண்டுதலும். †மேற். ‡அணுகி. §வாடி. ¶என்னையும்விட் டிங்ககன்றாய்.

சென்னிஇளம் பிறைஅணிவார் கோயில் வாயில் திசைநோக்கித்
*தொழுதழுதாள் செயலொன் றில்லாள். சஎரு

"அடியாராம் இமையவர்தங் கூட்டம் உய்ய அலை†கடல்வாய் நஞ்
சுண்ட அமுதே! செங்கண், நெடியானும் நான்முகனும் காணாக் கோல

---

அவனை நோக்கி முறையிடலும் இளமைப் பயிற்சியின் பயன் என்க. மதி என்பது அப்பெண்மணியின் தெளிந்த நுண்ணறிவைப் புலப்படுத்துவது.

சஎசு. அடியவராகிய தேவர் கூட்டம். இரதி - காமன் மனைவி. புரிந்து - விரும்பி. பொங்கர்வாசக்கடி ஆரும் மலர் - கொம்புகளில் மணம் மிகுந்து கமழும் மலர்களையுடைய. கவின் - அழகு வாய்ந்த. ஆண்டவன் திருவடியில் இடையீடின்றி நெஞ்சைப் படியவைத்திருப்பவர் அடியார் எனப்படுவர். ஆண்டவன் திருவடி திருவருளுக்கு அறிகுறி. ஈண்டு இவ்வம்மையார் வேறு களைகண் பெறாது, ஆண்டவன் திருவடியில் நெஞ்சைப் படியவைத்தவ ராயினர் என்பது குறிப்பு. இமையவர் - இமையாநாட்ட முடையவர். இங்கே அம்மையார் கண்ணிமையாது வருந்தினர் என்று கொள்க. அன்று "கூட்டம்"; இன்று "ஒருயிர்" என்பது. "உய்ய" என்பது பழைய சான்றை உணர்த்துவது. "அலைகடல்வாய்", அலைக்குந் துக்கசாகரத்திடை அம்மையார் மூழ்கிக் கிடப்பதை உணர்த்துவது. நஞ்சால் இடர்நேர்ந்துள்ளமையான், இறைவன் நஞ்சுண்ட வரலாறு இங்கே குறிக்கப்படுகிறது. "அமுதே" என்பது இறவாமையை விளக்குவது. ஈண்டுச் செய்யப்படும் வேண்டுதலும் இறப்பைத் தவிர்த் தலைப்பற்றியது. அம்மையார் மனதுக்கு, நஞ்சுண்டும் இறவாத ஒருவனே அமுதாகத் தோன்றுவது உணர்த்தப்படுகிறது. "சட்டோ நினைக்க மனத்தமுதாஞ் சங்கரனை" (திருவாசகம்: திருக்கோத்தும்பி. எ). அடியார் துயரைக்களையும் ஆண்டவன்றன் பெற்றிமை நோக்கி "அடியாராம்" எனப்பட்டது. "அன்று இமையவர் பொருட்டு நஞ்சை ஏற்றாய்; இன்று மனிதர் பொருட்டு நஞ்சை ஏலாய்" என்று வேண்டியவாறும். "அன்று கூட்டத்துக்கு அருள்செய்த பெருமான் இன்று ஒருயிர்க்கு அருள்செய்தல் அருமைகொல்" என்றபடி. "உய்ய" என்பது, பழைய சான்றைக் குறித்தலான், உறுதியை உணர்த்துவது. "பெருங்கடலில் தோன்றிய நஞ்சை உண்டு அடியார்களைக் காத்த உனக்கு, இச் சிறுநஞ்சு எவ்வளவினது" என்றவாறும். ஆண்டவன் நஞ்சணி கண்டனாயிருத்தல் இரக்கக் குறிப்பையும், பிறர் துன்பங் களைதலையும், இன்னபிறவற்றையும் விளக்குவது. "சிற்றுயிர்க்கு இரங்கிக் - காய்சின ஆலம் உண்டாய் அமுதுண்ணக் கடையவனே" (திருவாசகம்: நீத்தல் விண்ணப்பம். ௫௦). நஞ்சு மரணத்தை விளைப்பது. நஞ்சுண்டுஞ் சாவாமலிருத்தல் அருமை. அந்நஞ்சுண்டும் இறவாதுள்ள ஒருவனே நஞ்சால் விளைந்த கேட்டினை ஒழிக்கவல்லான் என்பது. அந்நுட்பம் "அமுதே" என்பதனால் விளங்குகிறது. நஞ்சையொழிக்கவல்ல "அமுதம்" ஈண்டுவேண்டற்பால தென்பது குறிப்பு. "அடியவர்கள் துயர் போக்குந்

பா - ம்—*கைதொழுவாள் †வாயின்.

நீலவிட அரவணிந்த நிமலா! வெந்து, பொடியான காமன்உயிர் இரதி வேண்டப் புரிந்தளித்த புண்ணியனே! பொங்கர் வாசக், கடியாரும்

குறியாக அழுகிய நீலத்தைக் கண்டத்தில் தாங்கி அமுதாக விளங்கும் பெருமானே! நஞ்சால் உற்ற துன்பத்தைப் போக்காயோ" என்று வேண்டியவாறும்.

செங்கண் நெடியானும் நான்முகனும் இறைவன் அடிமுடி தேடிய காலத்தில் உற்ற மன அலைவு போன்ற அலைவினை இங்கே அம்மையார் பெற்றனர் போலும். செங்கண் துக்கத்தையும், நெடுமை துக்கத்தின் மிகுதியையும், நான்முகம் துக்கம் பெருகும் பன்முகத்தையுங் குறிப்பன. "அவ்விருவரும் முனைப்பால் திருவருட் கோலத்தைக் காணாராயினர். அவர் நிலையில் யான் இல்லை. என்னைக் கோலஞ் செய்யாதே ஆண்டவனே" என்றபடி. "அக்கோலம் எனக்கு வேண்டாம்" என்றவாறு. "பிரமன் அரிஎன்று இருவருந்தம் பேதைமையால் - பரம்யாம் பரம்என் றவர்கள் பதைப்பொடுங்க - அரனார் அழலுருவாய் அங்கே அளவிறந்து-பரமாகி நின்றவா தோணோக்கம் ஆடாமோ" (**திருவாசகம்**)

அரியும் அயனும் ஆண்டவன் அடிமுடி தேடிய கதை புராணங்களில் வருவது. அக்கதைக்குப் பலவித தத்துவார்த்தங்களுண்டு. தத்துவார்த்தத்தை விடுத்துக் கதையையே பொருளென நம்பி இடர்ப்படுவோர் பௌராணிக சமயத்தவரென்க. ஈண்டு ஒருவித நுட்பம் சுருங்கிய முறையில் வருமாறு:—பெயரில்லா ஆண்டவனுக்குப் பல பெயர்கள் வழங்கப்படுகின்றன. அப்பெயர்களை ஆராய்ந்தால், அவைகள் ஆண்டவன் இயல்பை உணர்த்துவனவாகும். அப்பெயர்களுள் ஒன்று **சச்சிதானந்தம்** என்பது. சத்+சித்+ஆனந்தம் - சச்சிதானந்தம். சத் - உண்மை; சித் - அறிவு; ஆனந்தம்-இன்பம். சத் சித் ஆனந்தம் என்னும் இம்மூன்றும் தனித்தனியே பிரிந்து நிற்பன அல்ல. இம்மூன்றும் ஒரு பொருளில் அகலமும் நீளமும் உயரமும் பிரிவின்றிக் கிடத்தல்போலப் பிரிவின்றிக்கிடப்பன. இம்மூன்றும் பிரமன் விஷ்ணு சிவன் என்று நூல் வழக்குப்பெற்றிருக்கின்றன. பிரமன் படைப்பவன் என்றும், விஷ்ணு காப்பவன் என்றும், சிவன் அழிப்பவன் என்றும் நூல்கள் சொல்கின்றன. பிரமன் படைப்பால் உலகம் தோன்றுகிற தென்பதும் நூற்கூற்று.

இவ்வுலகம் கண்ணுக்குப் புலனாகிறது. கண்ணுக்குப் புலனாகும் உலகைக் கொண்டே ஆண்டவனுண்மை உணர்ந்து தெளிவுறுதல் வேண்டும். ஒருவன் கண்கூடாகத் தோன்றும் உலகை ஆராயப் புகுகிறான். ஆராய்ந்து ஆராய்ந்து உலகம் காரியம் என்றும், அதற்குக் காரணம் ஒன்று உண்டு என்றும் அவன்முடிவுக்கு வருகிறான். அக்காரணம் உண்மை அல்லது சத் என்று அவன் உணர்கிறான். காரணமாகிய சத் உலகமாகக் காரியப்படுவது படைப்பு என்று சொல்லப்படுகிறது.

காரிய உலகம் சடமாயிருத்தலான், அதன் காரணமும் சடமாயிருத்தல் வேண்டும். சடம் தானே காரியப்படாது. அதைக் காரியப்படுத்த சட

பா · ம்—*பொங்கு

மலர்ச்சோலை மருங்கு சூழுங் கவின்மருகற் பெருமானே! காவாய்" என்றும். ௬௭௯

---

மல்லாத மற்றொரு பொருள் வேண்டற்பாலதாகிறது. அப்பொருளே அறிவு அல்லது இறை என்று சொல்லப்படுகிறது. இறை, சடத்தைக் காரியப் படுத்துதற்குப் படைப்பு என்றும், அவ்வியல்புக்குப் பிரமன் என்றும் நூல்கள் சொல்லும். அப்பிரமன் சச்சிதானந்தத்தின் ஒரு கூறாகிய சத் என்க. உலக மும் சத்; பிரமனும் சத். இவ்விரண்டனுள் முன்னையது காரியப்படுஞ் சத்; பின்னையது அக்காரியத்தைச்செய்யுங் காரியப்படாத சத். உலகம் மாறுதலடை யுஞ் சத் என்றும், பிரமன் மாறுதலடையாத சத் என்றுஞ் சுருங்கக் கூறலாம். இச்சத் அச் சத்தைக் காரியப்படுத்துவதால், இரண்டுக்கும் பொதுவாகச் சத் தென்னும் பொதுப்பெயர் வழங்கப்படுகிறது. ஆகவே எடுத்த பொருளை விளக் குதற் பொருட்டு உலகை - சத் - பிரமன் என்று குறித்துக் கொள்ளலாம். இது நிற்க.

உலகை ஆராயும் ஒருவன், அதனை ஆராய்ந்து, அதன் உண்மை கண்ட பின், மேலும் ஆராய்ந்து செல்கையில் அவனுக்கு உலகெனுஞ் சத்தினூடே நீக்கமின்றிக் கலந்துள்ள சித்தின் (அறிவின்) உண்மை விளங்குகிறது.

சித்தும் சச்சிதானந்தத்தின் ஒருகூறு. அச்சித் எங்கும் நீக்கமற நிறைந் திருத்தலால் அதற்கு விஷ்ணு என்ற பெயர் சூட்டப்பட்டது. விஷ்ணு என்பது எங்கும் நீக்கமற நிறைந்துள்ளது என்னும் பொருள் கொண்டது. சத்தினூடே கலந்துள்ள சித்தின் உண்மை உணர்ந்ததும் ஆராய்ச்சியாளனுக்கு ஒருவித ஐயம் பிறக்கிறது. அவ்வையமாவது 'சத்திலிருந்து (பிரமாவிலிருந்து) சித் (விஷ்ணு) பிறந்திருக்குமா அல்லது சித்திலிருந்து சத் பிறந்திருக்குமா' என்பது. இவ்வை யத்தால் தாக்குண்டு உண்மை காணக் கீழும் மேலும் நோக்கி நோக்கிச் சிந் தித்து அலையும் ஒரு நிலையைப் புராணங்கள், பிரம விஷ்ணுக்கள் சிவனது அடி முடி தேடியதாகக் கதைகள் கட்டியிருக்கின்றன. பின்னே சிந்தனையால் தெளிவு உண்டாகிறது. தெளிவில் ஆனந்தம் பிறத்தல் இயல்பு. ஆனந்தம் சச்சி தானந்தத்தின் மற்றொரு கூறு. ஆனந்தமாகிய சிவம் விளங்கியதும், அச்சிவத் துக்கு வேறாகச் சத்தும் (பிரமாவும்), சித்தும் (விஷ்ணுவும்) விளங்காமை புலப் படும். விரிக்கிற் பெருகும். கதைகளின் நுட்பத்தை ஆய்ந்து உண்மை தெளிந்து அறிவு விளங்கி இன்புறுவது சிறப்பு.

தத்துவ ஆராய்ச்சிக்காரன் சத்திலிருந்து சித்துப் பிறந்ததா அல்லது இதி லிருந்து அது பிறந்ததா என்று அலைவதுபோல அம்மையார் மனம் அலைந்த தென்க. புராணக் கதைப்படி இருவரும் அடிமுடி காணாது வருந்தி முனைப் பழிந்த பின்னை ஆண்டவன் அருட்கோலம் அவர்க்குப் புலப்பட்டது. அவ் வருட்கோலத்தை அம்மையார் நினைந்து வேண்டுகிறாரென்க.

நீலவிட அரவால் துன்பம் நேர்ந்துள்ளமையால், நீலவிட அரவம் அணிந்த கோலம் இங்கே குறிக்கப்படுகிறது. "அரவணிந்தும் அரவு தீண்டப் பெறாத

"வந்தடைந்த சிறுமறையோன் உயிர்மேற் சீறி வருங்காலன் பெருங்கால வலயம் போலும், செந்தறுகண் வெள்ளெயிற்றுக் கரிய கோலஞ் சிதைந்துருள உதைத்தருளுஞ் செய்ய தாளா!, இந்தவிடக் கொடுவேகம் நீங்கு மாறும் யான் இடுக்கண் ‡சூழ்கின் றும் ஏறு மாறும், அந்திமதிக் குழவிவளர் செய்ய வேணி அணிமருகற் பெருமானே! அருளாய்" என்றும். சளஎ

---

பெருமானே! அரவு தீண்டிய துன்பத்தைப் போக்குவாயாக" என்று முறை யிட்டவாறும்.

உலகம் காரியம். மாயை காரணம். ஆண்டவன் காரிய காரணங்களின் உள்ளும் புறமும் நீக்கமற நிற்பவன். காரணம் காரியப்படும்போது, அது பாம்பு மண்டிலித்தாற் போன்று சுழன்று சுழன்று இயங்கலான், அப்பாம்பு ஆண்டவ னுக்கு அணி என்று பௌராணிகம் கூறும். பாம்பணி, தோற்றத்துக்கு அறிகுறி யாதலின், அது, வணிகன் உயிர்த் தோற்றத்தைக் குறித்த வேண்டுதலுக்கு ஆளப்பட்டது காண்க. மாயை போர்வையாக இருந்தும், இறைவனுக்கு அதன்கண் தோய்தல் இன்மையான் "நிமலா" என்றார். மலத்திலுள்ளார்க் குத் துணைசெய்ய வல்லான் "நிமலனே யாவன்" என்பது அறியற்பாலது. இது நஞ்சைப்பற்றிய வேண்டுதல் ஆதலால், நஞ்சுண்டமையும் பாம்பணிந்த மையும் குறிக்கப்பட்டன என்க.

"இரதியாகிய பெண்ணின் வேண்டுதலுக்கு இரங்கிக் காமன் உயிரளித்த பெருமானே! யானும் ஒரு பெண். என் வேண்டுதலுக்கும் இரங்கியருளாய்" என்றபடி. (இரதியின் வேண்டுதலைக் **கந்தபுராணம் :** உற்பத்தி காண்டம் - காமதகனப் படலத்திற் காண்க). "ஆண்டவனே! பொடியான காமன் மீண்டும் உயிர்பெற்றெழப் புரிந்து திருவருள் செய்த உனக்கு, இன்னும் பொடியாகாத இவ்வணிகன் உயிர்பெற்றெழப் புரிந்து செய்தல் அருமையோ" என்றவாறு. மலர்ச்சோலை, ஆண்டவன் தண்ணருளைக் குறிப்பது. விடஅனல் ஒழியத் தண்மை அருள்வேண்டும் என்றபடி. துன்பும் துயருமில்லாத இடத்தே பொலி வது அழகு. சோலை சூழ அழகுடன் வீற்றிருக்கும் ஆண்டவனைச் சூழ்ந்து துன் பும் துயருமிருத்தல் கூடாதாகலான், அத்துன்பையுந் துயரையும் ஒழித்தருள்க என்று வேண்டியவாறு காண்க.

சளஎ. சிறுமறையோன் - மார்க்கண்டேயர். பெருங்கால வலயம் போலும் - "பரந்த நஞ்சின் சூழ்வு போலும்" என்பது **பழைய குறிப்புரை ;** "பெரிய காலச் சக்கரம் போலும்" என்பது **ஆறுமுகத் தம்பிரானூர்** உரை. செந்தறு... கோலம் - சிவந்த கடுங்கண்ணும் வெள்ளிய பற்களையுமுடைய காலனது கரிய கோலம்; (தறுகண்மை - கடிகக் கொல்லுதல்). அன்று சிறு மறையோன்; இன்று பெண் என்பது குறிப்பு. அங்கே காலனது தறுகண்மை; இங்கே கரும்பாம்பின் தறுகண்மை. "காலனை உதைத்த செய்ய தாளைப் போற்றும்

**பா - ம்**—*சுழி.

இத்தன்மை சிவனருளே சிந்தித் தேங்கும் இளங்கொடிபோல் நுடங்கும்இடை ஏழை ஏத்தும், அத்தன்மை ஓசைஎழுந் தெங்கள் சண்பை ஆண்டகையார் கும்பிடவந் தணைகின் றார்தம், மெய்த்தன்மை விளங்குதிருச் செவியிற் சார மேவுதலுந் திருவுள்ளக் கருணை மேன் மேல், வைத்தன்னம் எனஅயர்வாள் மாடு நீடு மாதவத்தோர் சூழ எழுந் தருளி வந்தார். சஎஅ

சிரபுரத்து மறையவனார் சென்று நின்று சிவபெருமான் அருள் போற்றிச் சிந்தை நைந்து, பரிவுறுவாள் தனைநோக்கிப் "பயப்ப டேல்நீ பருவரலும் நும்பரிசும் பகர்வாய்" என்னக், கரமலர்கள் உச்சியின்மேற் குவித்துக்கொண்டு கண்ணருவி சொரிந்திழியக் காழி வேதப், புரவலனார் சேவடிக்கீழ் வீழ்ந்து தாங்கள் போந்ததுவும் புகுந் ததுவும் புகல லுற்றாள். சஎகூ

"வளம்பொழில்சூழ் வைப்பூர்க்கோன் தாமன் எந்தை மருமகன் மற் றிவன்அவற்கு மகளிர் நல்ல, இளம்பிடியார் ஓரெழுவர் †இவரில் மூத்தாள் இவனுக்கென் றுரைசெய்தே ஏதி லானுக், குளம்பெருகத் தனம்பெற்றுக் கொடுத்த பின்னும் ஒரொருவ ராகஎனை ஒழிய ஈந்தான், தளர்ந்தழியும் இவனுக்காத் தகவு ‡செய்தங் கவரைமறைத் திவன் தனையே சார்ந்து போந்தேன்." சஅ௦

---

எனக்கு அத்தாள் துணைசெய்யாதோ" என்றபடி. "மார்க்கண்டர்க்காக மறலி பட்ட பாட்டை யுன்னிப் - பார்க்கில்நின் அன்பர்க்கு என்ன பயங்காண் பரா பரமே"—தாயுமானுர்: பராபரக்கண்ணி. வெயிலொடுங்கும் அந்தியும் வளர் மதியும் செய்ய வேணியும் துன்பம் ஒடுங்கத் தண்மை அருளைத் தாரை தாரை யாகப் பொழிதலைக் குறிப்பன. இப்பாட்டிலும் மேற்பாட்டிலும் போந்துள்ள கதைக் குறிப்புகள், அடியவர் துயர் களையும் ஆண்டவன் அருளியல்புகளை உணர்த்துவன என்க.

சஎஅ. நுடங்கும் இடை ஏழை - துவளும் இடையுடைய அப்பெண் மணி. மேன்மேல் அவளிடம் வைத்து. அயர்வாள் மாடு - வருந்திச் சோரும் அவளிடம்.

சஎகூ. பரிவுறுவாள் தனை - துன்புறுபவளை. பருவரலும் நும்பரிசும் - உனக்கு நேர்ந்த வருத்தம் இன்னதென்பதையும், உமது வரலாற்றையும். போந்ததுவும் புகுந்ததுவும் - தாங்கள் வந்த விதத்தையும், வந்த இடத்தில் நிகழ்ந்ததையும்.

சஅ௦. என் தந்தை வைப்பூர்க் கோன். அவன் பெயர் தாமன். இவன் அவனுக்கு (தந்தைக்கு) மருமகன். அவற்கு - தந்தைக்கு. பிடியார் - பெண்

பா - ம்—*பரவுறுவாள். †அவரில். ‡செய்தங் கவனைமறைத் திவனையே.

"மற்றிவனும் வாளரவு தீண்ட மாண்டான் மறிகடலிற் கலங் கவிழ்த்தார் போல நின்றேன், சுற்றத்தார் எனவந்து தோன்றி என் பால் துயரமெலாம் நீங்கஅருள் செய்தீர்" என்னக், கற்றவர்கள் தொழுதேத்துங் காழி வேந்தர் கருணையினாற் காரிகையாள் தனக்கு நல்கப், பற்றியவாள் அரவுவிடந் தீரு மாறு பணைமருகற் பெருமானைப் பாட லுற்றார். சஅக

சடையானை எவ்வுயிர்க்குந் தாயா னானைச் சங்கரனைச் சசிகண்ட மவுலி யானை, விடையானை வேதியனை வெண்ணீற் றானை விரவாதார் புரம்மூன்றும் எரியச் செற்ற, படையானைப் பங்கயத்து மேவி னானும் பாம்பணையில் துயின்றானும் பரவுங் கோலம், உடையானை "உடை யானே தகுமோ இந்த ஒள்ளிழையாள் உள்மெலிவு"வென் றெடுத்துப் பாட.

"சடையா யெனுமால் சரணீ எனுமால்
விடையா யெனுமால் வெருவா விழுமால்
மடையார் குவளை மலரும் மருகல்
உடையாய் தகுமோ இவளுண் மெலிவே."—தேவாரம்.

போங்குவிடந் தீர்ந்தெழுந்து நின்றான் சூழ்ந்த பொருவில்திருத் தொண்டர்குழாம் பொலிய ஆர்ப்ப, அங்கையினை உச்சியின்மேற்

---

யானை போன்றவர்கள். ஏதிலானுக்கு உளம் பெருகத் தனம் பெற்று - (பின்னே ஏமாற்றி) அயலானுக்குத் தன் மனம் மகிழ (அவனிடம்) பொருளை வாங்கிக் கொண்டு. இவனுக்காக. தகவு செய்து - அன்பு பூண்டு. அவரை மறைத்து - என்னைப் பெற்றவர்களுக்குத் தெரியாதவாறு மறைத்து. ஒரு பெரிய வரலாற் றை ஆசிரியர் மிகச் சுருங்கிய மொழியில் விளக்குவது கருதற்பாலது.

சஅக. வாள் - ஒளியுடைய. மறிகடலில் - மீளவரும் அலைகளையுடைய கட லில். கலம் - கப்பல். காரிகையாள் தனக்கு வணிகனைக் கொடுக்க. சம்பந்தப் பெருமான் தந்தையாக நின்று கருணை செய்கிறாரென்க. வாள் - கொல்லுந் தொழிலையுடைய. பணை - பண்ணை (வயல்) சூழ்ந்த.

சஅஉ. கண்ட சசி மவுலியானை - துண்டப்பிறை முடியானை. படை யானை - அம்பு முதலிய படைகளையுடையவனை. ஒள் இழையாள் - ஒளி பொருந்திய ஆபரணங்களை யணிந்த பெண்மணியின்.

சஅங. பொருவில் - ஒப்பில்லாத. நங்கை - மகளிரில் சிறந்தவள்; நம்பி - ஆடவரில் சிறந்தவன். நயந்த - விரும்பிய. புறம்பயம் என்னும் திருப்பதியில் ஒரு வணிகன் விடந்தீண்டப்பெற்றுத் திருஞானசம்பந்தப் பெருமான் திருவரு ளால் உயிர்பெற்றெழுந்த வரலாறு திருவிளையாடல் புராணங்களில் சொல்லப் பட்டிருக்கிறது. அவ்வரலாற்றையும், பெரியபுராணத்திற் கூறப்பெறும் இவ்வர

பா - ம்—*கவிழ்ந்தாற் போல.

குவித்துக் கொண்டங் கருட்காழிப் பிள்ளையார் அடியில் வீழ்ந்த, நங்கைஅவள் தனைநயந்த நம்பி யோடு நானிலத்தில் இன்புற்று வாழும் வண்ணம், மங்குல்தவழ் சோலைமலி புகலி வேந்தர் மணம்புணரும் பெருவாழ்வு வருத்து விட்டார். சஅந

மற்றவர்க்கு விடைகொடுத்தங் கமரு நாளில் மருகல்நக ரினில் வந்து வலிய பாசம், செற்றபுகழ்ச் சிறுத்தொண்டர் வேண்ட மீண் டுஞ் செங்காட்டங் குடியில்எழுந் தருள வேண்டிப், பற்றியெழுங் காதல்மிக மேன்மேற் சென்று பரமனார் திறத்துன்னிப் பாங்கர் எங் குஞ், சுற்றும்அருந் தவரோடுங் கோயில் எய்திச் சுடர்மழுவாண் டவர்பாதந் தொழுவான் புக்கார். சஅச

---

லாற்றையும் தொடர்புப்படுத்திச் சிலர் இடர்ப்படுகிறார். அதற்கும் இதற்கும் எவ் விதத்தொடர்புமில்லை. அக்கதை வேறு; இக்கதை வேறு. **பெரும்பற்றப்புலியூர் நம்பி திருவிளையாடற்புராணம்:**கூஉ. சான்றழைத்த திருவிளையாடலையும், **பரஞ் சோதி முனிவர் திருவிளையாடற் புராணம் :** கூச. வன்னியும் கிணறும் இலிங்க மும் அழைத்த படலத்தையும் பார்க்க. இவ்விரண்டு ஆசிரியன்மாரும் பெரிய புராணத்தை நன்கு ஓதி உணர்ந்தவராதலின், வெவ்வேறிடங்களில் பெரியபுரா ணச் சொற்றொடர்களை ஆண்டிருப்பதுபோல, இவ்விருபடலங்களிலும் பெரிய புராணத்தில் திருமருகல் விடந்தீர்த்த அற்புத நிகழ்ச்சியிலுள்ள சில சொற்றொ டர்களை ஆண்டிருக்கிறார். அங்கும் வணிகன் - இங்கும் வணிகன்; அங்கும் அரவு தீண்டல் - இங்கும் அரவு தீண்டல் ; அங்கும் பெண்ணின் அலமரல் - இங்கும் பெண்ணின் அலமரல் ; அங்கும் சம்பந்தர் - இங்கும் சம்பந்தர் ; அங்கும் விடந் தீரல் - இங்கும் விடந்தீரல் முதலிய ஒருமைப்பாடுக ளிருத்தலால் பெரியபுரா ணச் சொற்றொடர்களையும், வேறு சில அமைப்புக்களையும் ஆசிரியன்மார் எடுத் தாண்டனர் போலும். பெரும்பற்றப் புலியூர் நம்பி இவ்வையத்தைக் களைய வேண்டிப்போலும் "சான்றழைத்த திருவிளையாடல்" இறுதிப்பாட்டில், "மருத் தயில் பாப்புக் காப்பு வள்ளலை மனத்து வைத்துத் - தருக்கமார் காழி வேந்தர் சடையெனும் யாப்பெடுத்து - விரைத்திரு மருகல் தன்னில் வெவ்விடந் தீர்த்த தன்றித் - திருப்புறம் பயத்த லத்தில் தீர்த்தனர் திருக்கண் சாத்தி" என்று அருளிப் போந்தார். திருஞானசம்பந்தப் பெருமான் மருகலில் திருப்பதிகத் தாலும், புறம்பயத்தில் திருநோக்காலும் விடந்தீர்த்தனர் என்பது கருதற் பாலது.

சஅச. வலிய பாசம் செற்ற - வலிமையான பந்தத்தை அழித்த. பரமனார் திறத்து உன்னி - ஆண்டவன் திருவருள் திறத்தை நினைத்து. கோயில் - திரு மருகற் பெருமான் கோயில்.

பா - ம்—*மருகல்நகர் தனில்நின்று பாசம் எல்லாம்.

புக்கிறைஞ்சி எதிர்நின்று போற்று கின்றார் பொங்குதிரை நதிப் புனலும் பிறையுஞ் சேர்ந்த, செக்கர்முடிச் சடைமவுலி வெண்ணீற் றார்தந் திருமேனி ஒருபாகம் பசுமை யாக, மைக்குலவு கண்டத்தார் மருகற் கோயில் மன்னுநிலை மனங்கொண்டு வணங்கு வார்முன், கைக் கனலார் கணபதீச் சரத்தின் மேவுங் காட்சிகொடுத் தருளுவான் காட்டக் கண்டார். ௪௮௫

வேறு

மருகல் அமர்ந்து நிறைந்த கோலம் மல்குசெங் காட்டங் குடியின் மன்னிப், பெருகு கணபதி யீச்சரத்தார் பீடுடைக் கோலமே யாகித் தோன்ற, உருகிய காதலும் மீது பொங்க உலகர்முன் கொள்ளும் உணர்வு நீட, அருவிகண் வார்வுறப் பாட லுற்றார் "அங்கமும் வேத மும்" என்றெடுத்து. ௪௮௬

"அங்கமும் வேதமும் ஓதுநாவர் அந்தணர் நாளும் அடிபரவ
மங்குல் மதிதவழ் மாடவீதி மருகல்நிலாவி யமைந்த சொல்லாய்
செங்கய லார்புனற் செல்வமல்கு சீர்கொள்செங் காட்டங் குடியதனுள்
கங்குல் விளங்கெரி எல்லியாடுங் கணப தீச்சரங் காமுறவே"—தேவாரம்.

*கண்டெதிர் போற்றி வினவிப் பாடிக் கணபதி யீச்சரங் காத லித்த, அண்டர் பிரானை வணங்கி வைகும் அப்பதி யிற்சில நாள்கள் போற்றித், தொண்ட ருடன்அருள் பெற்று மற்றத் தொல்லைத் திருப் பதி எல்லை நீங்கிப், புண்டரி கத்தடஞ் சூழ்பழனப் பூம்புக லூர்தொழப் போது கின்றார். ௪௮௭

சீரின் மலிந்த சிறப்பின் மேவுஞ் சிறுத்தொண்டர் நண்புடன் செல்ல நல்ல, வேரி நறுந்தொங்கல் மற்றவரும் விடையரு ளப் பெற்று மீண்ட பின்பு, சீரின் மலிந்த சடையர் மேவி நிகழும் பதிகள் பலப ணிந்து, பாரின் மலிந்து நிறைந்த செல்வம் பயில்புக லூர்நகர்ப் பாங்க ணைந்தார். ௪௮௮

---

௪௮௫. செக்கர்முடி, வெண்ணீற்று மேனி, ஒருபாகம் பசுமை (உமை), மைக்குலவு (நீல) கண்டம்—அழகிய கோலம்; இக்கோலம் உள்ளங் கவர்வது; தியானத்துக் குரியது; இந்நிறங்களில் நலனும் திறனுமுண்டு.

௪௮௬. மல்கு - திருவருட் செல்வம் நிறைந்த. பீடு - பெருமை. உலகர் முன் கொள்ளும் - "உலகத்தார் முன்னரே அங்கீகரிக்கும்"—பழைய குறிப் புரை; "உலகின்கண் ணுள்ளாரிடத்துக் கொண்ட காருண்ய......"—ஆறுமுகத் தம்பிரானர்.

௪௮௮. வேரி நறுந் தொங்கல் - தேன் பொருந்தி மணங் கமழும் மலர் மாலையை யணிந்த. அவரும் - அச்சிறுத்தொண்ட நாயனாரும்.

பா - ம்—*கண்டடி.

திருப்புக லூர்த்திருத் தொண்ட ரோடுஞ் செம்மை முருகனார் மெய்ம்ம கிழ்ந்த, விருப்பொடு சென்றெதிர் கொள்ள வந்து வேத முதல்வர்தங் கோயி லெய்திப், பொருப்புறழ் கோபுரத் துட்பு குந்து பூமலி முன்றில் புடைவ லங்கொண் டொருப்படு சிந்தையொ டுள்ளணைந்தார் ஓதாது ஞானமெ லாமுஉ ணர்ந்தார். ௪அ௯

புக்கெதிர் தாழ்ந்து விழுந்தெ ழுந்து பூம்புக லூர்மன்னு புண்ணி யரை, நெக்குரு குஞ்சிந்தை அன்பு பொங்க நிறைமலர்க் கண்ணீர் அருவி செய்ய, மிக்க தமிழ்த்தொடை மாலை சாத்தி மேவிய ஏழிசை பாடிப் போந்து, திக்கு நிறைசீர் முருகர் முன்பு செல்ல அவர்மடஞ் சென்று புக்கார். ௪௯0

ஆங்கவர் போற்றுஞ் சிறப்பின் மேவி அப்பதி தன்னில் அமரு நாளில், வாங்கு மலைச்சிலை யார்ம கிழ்ந்த வர்த்தமா னீச்சரந் தான் வணங்கி, ஓங்கிய அன்பின் முருக னார்தம் உயர்திருத் தொண்டு சிறப்பித் தோங்கும், பாங்குடை வண்டமிழ் பாடி நாளும் பரமர்தம் பாதம் பணிந்தி ருந்தார். ௪௯௧

“ ஈசன் ஏறமர் கடவுள் இன்னமு தெந்தையெம் பெருமான்
பூசு மாசில்வெண் ணீற்றர் பொலிவுடைப் பூம்புக லூரில்
மூசு வண்டறை கொன்றை முருகன்முப் போதுஞ்செய் முடிமேல்
வாச மாமல ருடையார் வர்த்தமா னீச்சரத் தாரே ”—தேவாரம்.

மற்றத் திருப்பதி வைகு நாளில் வாக்கின் பெருவிறல் மன்ன னார்தாம், புற்றிடங் கொண்டாரை வந்தி றைஞ்சிப் பொன்மதில் ஆரூர் புகழ்ந்து போற்றிச், சிற்றிடைப் பொற்றொடிப் பங்கர் தங்குந் திருப்புக லூர்தொழச் சிந்தை செய்து, கொற்றவ னார்அருள் பெற்ற தொண்டர் குழாத்துடன் அவ்வூர் குறுக வந்தார். ௪௯௨

நாவுக் கரசர் எழுந்த ருளும் நல்ல திருவார்த்தை கேட்ட போதே சேவில் திகழ்ந்தவர் மைந்த ரான திருஞான சம்பந்தர் சிந்தை அன்பு மேவுற்ற காதல் மிகப்பெருக விரைந்தெதிர் கொள்ளமெய் யன்ப ரோடும் பூவிற் பொலிபொய்கை சூழ்புகலூர்ப் புறம்பணை எல்லை கடந்துபோந்தார்.

---

௪அ௯. முருகனார் - முருகநாயனார். பொருப்பு உறழ் - மலைபோன்ற.

௪௯௨. வாக்கின் பெருவிறல் மன்னனார் - திருநாவுக்கரசர். புற்றிடங் கொண்டாரை - திருவாரூர் வன்மீக நாதரை. கொற்றவனார் - சிவபெருமான்.

௪௯௩. சேவில் திகழ்ந்தவர் - எருதுமீது எழுந்தருளியுள்ளசிவபெருமான்.

பா - ம்—*வர்த்தமா னீச்சரர் தாள்.

அங்கணர் ஆரூர் வணங்கிப் போந்த அரசும் எதிர்வந் தணைய வாசப்
பொங்கு புனற்றண் புகலி வந்த பூசுரர் சிங்கமும் பொற்பின் எய்தித்
தங்களின் அன்பின் முறைமை யாலே தாழ்ந்து வணங்கித் தனித்தனியே
மங்கல மாகிய நல்வரவின் வாய்மை வினவி மகிழும் போது. ௪௧௪

மெய்த்திரு ஞானசம் பந்தர் வாக்கின் வேந்தரை நோக்கி விருப்பி
னாலே, "அப்பரை இங்கணை யப்பெ றும்பே றருளுடை யோம்யாம்
அந்தண் ஆரூர், எப்பரி சால்தொழு துய்ந்த" தென்று வினவிட
ஈறில் பெருந்த வத்தோர், செப்பிய வண்டமிழ் மாலை யாலே திருவா
திரைநிகழ் செல்வஞ் சொன்னார். ௪௧௫

அரசரு ளிச்செய்த வாய்மை கேட்ட அப்பொழு தேஅருள்
ஞானம் உண்ட,சிரபுர வேந்தருஞ் சிந்தை யின்கண் தென்திரு வாரூர்
வணங்கு தற்கு, விரவிய காதலிற் "சென்று போற்றி மீண்டும்வந்
தும்முடன் மேவுவன்" என், றூரவு கடற்கல் மிதப்பின் வந்தார்க்
குரைத்துடன் பாடுகொண் டொல்லை போந்தார். ௪௧௬

சொற்பெரு வேந்தருந் தோணி மூதூர்த் தோன்றல்பின் காதல்
தொடரத் தாமும், பொற்புக லூர்தொழச் சென்றணைந்தார் புகலிப்
பிரானும் புரிந்த சிந்தை, விற்குடி வீரட்டஞ் சென்று மேவி விடைய
வர் பாதம் பணிந்து போற்றிப், பற்பல ஆயிரந் தொண்ட ரோடும்
"பாடல னான்மறை" பாடிப் போந்தார். ௪௧௭

"பாடல னான்மறையன் படிபட்ட கோலத்தன் திங்கள்
சூடலன் மூவிலைய சூலம் வலனேந்திக்
கூடலர் மூவெயிலும் எரியுண்ணக் கூரெரி கொண்டெல்லி
ஆடலன் ஆதிரையன் ஆரூர் அமர்ந்தானே."—தேவாரம்.

---

௪௧௫. அப்பரை - முன்னிலைப் படர்க்கை. "அழகிய தண்மை வாய்ந்த திருவாரூரை எத்தன்மையால் தொழுது உய்ந்தது" என்று சம்பந்தர் அப்பரைக் கேட்க. பெருந் தவத்தோர் - அப்பர். "வண்டமிழ் மாலை" என்றது "முத்து விதானம்" என்னும் பதிகத்தை.

௪௧௬. விரவிய - கலந்த. ஊரவு கடல் - பரந்த கடலின். ஒல்லை - உடனே.

௪௧௭. திருவிற்குடி - அட்ட வீரட்டத்துள் ஒன்று; சலந்தரன்றன் தலை கொய்த தலம்.

பா - ம்—*விளம்பி.

துணரிணர்ச் சோலையுஞ் சாலி வேலித் துறைநீர்ப் பழனமுஞ் சூழ்க ருப்பின், மணமலி கானமும் ஞானம் உண்டார் மருங்குற நோக்கி மகிழ்ந்தருளி, அணைபவர் "அள்ளற் கழனி ஆரூர் அடைவோம்" என மொழிந் தன்பு பொங்கப், புணரிசைச் செந்தமிழ் கொண்டு போற்றிப் பொன்மதில் ஆரூர்ப் புறத்த ணைந்தார். சகூஅ

"உள்ளமோ ரிச்சையினால் உகந்தேத்தித் தொழுமின்தொண்டீர்மெய்யே
கள்ளம் ஒழிந்திடுமின் கரவா திருபொழுதும்
வெள்ளமோர் வார்சடைமேற் கரந்திட்டவெள் ளேற்றான்மேய
அள்ளல் அகன்கழனி ஆரூர் அடைவோமே"—தேவாரம்.

வானுயர் செங்கதிர் மண்டி லத்து மருங்கணை யுங்கொடி மன்னும் ஆரூர், தாமொரு பொன்னுல கென்னத் தோன்றுந் தயங்கொளி முன்கண்டு சண்பை வந்த, பானிற நீற்றர் "பருக்கை யானைப்" பதிகத் தமிழிசை *பாடி யாடித், தேனொடு வண்டு முரலுஞ் சோலைத் திருப்பதி மற்றதன் எல்லை சேர்ந்தார். சகூகூ

"பருக்கை யானை மத்தகத் தரிக்குலத் துகிர்ப்புக
நெருக்கி வாய நித்திலம் நிரக்குநீள் பொருப்பனூர்
கருக்கொள் சோலை சூழநீடு மாடமாளி கைக்கொடி
அருக்கன் மண்ட லத்தணவும் அந்தணாரு ரென்பதே"—தேவாரம்.

பொங்கிய சிந்தை விருப்பின் வெள்ளம் பொழிந்து புவிமேற் பொலிவதென்ன, எங்கும் †குளிரொளி வீசு முத்தின் இலங்கு சிவிகை இழிந்தருளிச், செங்கை நிறைமலர் கொண்டு தூவித் திருவிருக் குக் குறள் பாடி ஏத்தித், தங்கள் பிரான்அர சாளும் ஆரூர் தனைப்பணி வுற்றார் தமிழ்விரகர். ருOO

"சித்தந் தெளிவீர்காள், அத்தன் ஆரூரைப்
பத்தி மலர் தூவ, முத்தி யாகுமே"—தேவாரம்.

---

சகூஅ. துணர் இணர் - கொத்துக்களை யுடைய பூக்கள் நிறைந்த. சாலி... பழனமும் - செந்நெல் வேலி சூழ்ந்த நீர்த்துறைகளையுடைய வயல்களும். அள்ளல் - சேறு.

சகூகூ. பால்நிற நீற்றர் - திருஞானசம்பந்தர். தேனொடு வண்டு முரலும் - பெண்வண்டுகளுடன் ஆண் வண்டுகள் பாடும். "தேனும் வண்டும்-இசைபுலம்ப"; "வண்டொடு தேனினம் யாழ்செய்யும்"; "தேனினம் இரங்கு வண்டொடு சென்றன"—சிந்தாமணி: 349, 1196, 3034.

பா - ம்—*பாடிப்பாடி. †கதிரொளி.

வேறு

படியில் ஞானமுண் டருளிய பிள்ளையைப் பணிதற்
கடியர் சென்றெதிர் கொளஎழுந் தருளும்அந் ஞான்று
வடிகொள் சூலத்தர் மன்னிய பொன்மதில் ஆரூர்க்
கடிகொள் பேரணிப் பொலிவையார் முடிவுறக் காண்பார். ௫0௧

நான மான்மத நளிர்பெருஞ் சேற்றிடை நறும்பொன்
தூந றுந்துகள் சொரிதலிற் சுடரொளிப் படலை
யான வீதிகள் அடிவலித் தவைகரைந் தலைய
வான மாரியிற் பொழிந்தது †மலர்மது மாரி. ௫0௨

ஆடல் நீடுவ துகிற்கொடி அணிகுழற் கொடிகள்
தோடு சூழ்வன சுரும்பொடு தமனியத் தசும்பு
காடு கொண்டன கதலிதோ ரணநிரைக் கமுகு
மாட மாளிகை மண்டபங் களின்மருங் கெல்லாம். ௫0௩

மாலை சூழ்புறங் கடைகளின் மணிநிரை விளக்கின்
கோல நீள்சுடர் ஒளியுடன் கோத்திடை தூக்கும்
நீல மாமணி நிழல்பொர நிறம்புகர் படுக்கும்
பால வாயின பவளவே திகைமலர்ப் பந்தர். ௫0௪

---

௫0௧. படியில் - ஒப்பில்லாத; பூமியிலே எனினுமாம். கடி - ஒளி. அணி - அலங்காரம்.

௫0௨. நான மான்மத நளிர்-கஸ்தூரி புழுகுகளாலாகிய குளிர்ச்சி பொருந்திய. நறும்பொன் தூநறும் துகள் - நல்ல பொன்மயமான சுத்த வாசனையுடைய சுண்ணப் பொடிகளை. படலை - பச்சிலை மாலைகளால்; வரிசை, பரப்புமாம்.

௫0௩. துகில் (துணிக்) கொடிகளும், அணிகுழல் கொடிகளும் (அழகிய கூந்தலையுடைய பெண்கொடிகளும்) ஆடல் நீடுவ. பெண்கொடிகள் ஆடுதலாவது நாட்டியஞ் செய்வது. சுரும்பொடு தமனியத் தசும்பு தோடு சூழ்வன - வண்டுகளுடன் பொற்குடங்கள் மலரிதழ்களைச் சூழ்வன. கதலி தோரண நிரை கமுகு காடு கொண்டன - வாழைகளும் மகரதோரண வரிசைகளும் பாக்கு மரங்களும் காடுபோலக் காட்சியளித்தன.

௫0௪. பவள வேதிகைகளிலுள்ள (மேடைகளிலுள்ள) பூம்பந்தர்கள். புறங்கடைகளில் - புறவிடங்களிலுள்ள; புறவாயில்களிலுள்ள. மணி நிரை விளக்கின் - மாணிக்கங்களால் ஒழுங்குபடச் செய்த விளக்கின்; அழகிய வரிசையான விளக்கின் என்னலுமாம். இடைதூக்கும்-இடையிடையே தொங்கவிட்டுள்ள. நிழல்-ஒளி. பொர-அலைபோக; பத்திபாய. புகர்நிறம் உண்டாகும் பான்மையனவாயின.

பா - ம்—*பிள்ளையார்ப்; பிள்ளையாரைப். †மதுமலர்.

தழைம லர்த்தடஞ் சாலைகள் தெற்றிகள் சதுக்கம்
குழைமு கத்தவர் ஆடரங் கிமையவர் குழாமும்
விழைசி றப்பின வியலிடம் யாவையும் மிடைந்து
மழைமு ழக்கென இயம்பின மங்கல இயங்கள். ௫0௫

விரவு பேரணி வேறுவே றின்னன விளங்கும்
பிரச மென்மலர்ச் சோலைசூழ் பெருந்திரு வாரூர்
அரச ளிப்பவர் அருளினால் அடியவர் குழுவும்
புரிச னங்களும் புறத்தணைந் தெதிர்*கொளும் பொழுது. ௫0௬

வந்தி றைஞ்சுமெய்த் தொண்டர்தங் குழாத்தெதிர் வணங்கிச்
சந்த முத்தமிழ் விரகராஞ் சண்பையர் தலைவர்
"அந்த மாயுல காதியாம்" பதிகம்அங் கெடுத்தே
"எந்தை தான்எனை என்றுகொ ளுங்கொல்?"என் றிசைத்தார். ௫0௭

" அந்த மாயுல காதிய மாயினான்
வெந்த வெண்பொடி பூசிய வேதியன்
சிந்தை யேபுகுந் தான்திரு வாரூர்என்
எந்தை தான்எனை என்றுகொ ளுங்கொலோ "—தேவாரம்.

ஆன அத்திருப் பதிகமுன் பாடிவந் தணையும்
ஞான †வித்தகர் மெய்த்தவர் சூழஅந் நகரார்
தூந றுஞ்சுண்ண மலர்பொரி தூஉய்த்தொழு தேத்த
வான நாயகர் கோயில்வா யிலின்மருங் கணைந்தார். ௫0௮

---

புறங்கடைகளினும்,......விளக்கினும், கோல......நிழல் பொர எனக் கொள்வோரும் உளர்.

௫0௫. தடம் - தடாகங்கள். தடஞ்சாலைகள் எனக்கொண்டு அகன்ற சாலைகள் என்று கூறலுமொன்று. தெற்றிகள் - திண்ணைகள். சதுக்கம் - நாற்சந்திகள். குழை முகத்தவர் ஆடு அரங்கு - குண்டலம் அணிந்த பெண்மணிகள் நடிக்கும் சாலைகள்; (காதில் அணிந்துள்ள குழை, முகத்தை அழகு செய்தலின் "குழை முகத்தவர்" என்றார்). இமையவர் குழாமும் விழைசிறப்பின - தேவர் கூட்டமும் விரும்புஞ் சிறப்பினையுடையன. வியலிடம் யாவையும் மிடைந்து - விசாலித்த இடங்களிலெல்லாம் நெருங்கி. மங்கல இயங்கள் - மங்கல வாத்தியங்கள். இமையவர் குழாம் விழையுஞ் சிறப்பினவாகிய தழைமலர்...........அரங்கு (முதலிய) வியலிடம்.........எனக் கொள்ளலுமாம்.

௫0௬. விரவு பேரணி - இவ்வாறு கலந்த பெரிய அலங்காரங்கள். திருவாரூர் அரசளிப்பவர் - சிவபெருமான். புரி - நகரிலுள்ள.

௫0௭. "எந்தை இருப்பதும் ஆரூர் அவர் எம்மையும் ஆள்வரோ கேளீர்"—சுந்தரர்.

பா - ம்—*தொழும். †வர்த்தகர்.

மன்னு தோரண வாயில்முன் வணங்கியுள் புகுவார்
தன்னுள் எவ்வகைப் பெருமையுந் தாங்கிய தகைத்தாம்
பன்னெ டுஞ்சுடர்ப் படலையின் பரப்பினைப் பார்த்துச்
சென்னி தாழ்ந்துதே வாசிரி யன்தொழு தெழுந்தார். ௫0௯

மாடு சூழ்திரு மாளிகை வலங்கொண்டு வணங்கிக்
கூடு காதலிற் கோபுரம் பணிந்துகை குவித்துத்
தேடு மாலயற் கரியராய்ச் செழுமணிப் புற்றில்
நீடு வார்முன்பு நிலமுறப் பலமுறை பணிந்தார். ௫௧0

பணிந்து வீழ்ந்தனர் பதைத்தனர் பரவிய புளகம்
அணிந்த மேனியோ டாடினர் பாடினர் அறிவில்
துணிந்த மெய்ப்பொரு ளானவர் தமைக்கண்டு துதிப்பார்
தணிந்த சிந்தையின் விரைந்தெழு வேட்கையில் தாழ்ந்தார். ௫௧௧

செஞ்சொல் வண்டமிழ்த் திருப்பதி கத்திசை எடுத்து
நஞ்சு போனகம் ஆக்கிய நம்பர்முன் பாடி
மஞ்சு சூழ்திரு மாளிகை வாயிலின் புறம்போந்
தஞ்செ ழுத்தின்மெய் யுணர்ந்தவர் திருமடத் தணைந்தார். ௫௧௨

அங்க ணைந்தமர்ந் தருளுவார் அரனெறி அமர்ந்த
செங்க ணேற்றவர் சேவடி வணங்கிமுன் திளைத்துப்
பொங்கு பேரொளிப் புற்றிடங் கொண்டவர் புனிதப்
பங்க யப்பதந் தொழுதுகா லந்தொறும் பணிந்தார். ௫௧௩

புற்றி டங்கொளும் புனிதரைப் போற்றிசை பெருகப்
பற்றும் அன்பொடு பணிந்திசைப் பதிகங்கள் பாடி
நற்ற வத்திருத் தொண்டர்க ளொடுகலஞ் சிறப்ப
மற்ற வண்பதி தன்னிடை வைகும்அந் நாளில். ௫௧௪

மல்லல் நீடிய வலிவலங் கோளிலி முதலாத்
தொல்லை நான்மறை முதல்வர்தம் பதிபல தொழுதே

---

௫0௯. படலையின் - வரிசையின். தேவாசிரிய மண்டபத்தை.

௫௧0. மாடு - பக்கத்தில். நீடுவார் - எழுந்தருளியுள்ளவராகிய தியாகேசப் பெருமான்.

௫௧௧. புளகம் அணிந்த - மயிர் சிலிர்த்த.

௫௧௨. போனகம் - உணவு. உணர்ந்தவராகிய பிள்ளையார்.

௫௧௩. அரனெறி என்னுங் கோயில்.

பா - ம்—*பரப்பிய.

எல்லை யில்திருப் பதிகங்க ளாற்பணிந் தேத்தி
அல்லல் தீர்ப்பவர் மீண்டும்ஆ ரூர்தொழ அணைந்தார். ருகரு

ஊறு காதலில் ஒளிவளர் புற்றிடங் கொண்ட
ஆறு லாவிய சடைமுடி ஐயரைப் பணிந்து
நீறு வாழ்வென நிகழ்திருத் தொண்டர்க ளோடும்
ஈறி லாத்திரு ஞானசம் பந்தர்அங் கிருந்தார். ருகசு

அங்கு நன்மையில் வைகும்அந் நாள்சில அகல
நங்கள் தந்திரு நாவினுக் கரசரை நயந்து
பொங்கு சீர்ப்புக லூர்தொழ அருளினுற் போவார்
தங்கும் அப்பதிப் புறம்பணை சார்ந்தருள் செய்வார். ருகஎ

வேறு

புவனவா ரூரினிற் புறம்புபோந் ததனையே நோக்கி நின்றே
"அவமிலா நெஞ்சமே அஞ்சல்நீ உய்யுமா றறிதி" அன்றே
"சிவனதா ரூ. தொழாய் நீமற வா"தென்று செங்கை கூப்பிப்
"பவனமாய்ச் சோடையாய்" எனுந்திருப் †பதிகமுன் பாடி னூரே.

"பவனமாய்ச் சோடையாய் நாவெழாப் பஞ்சுதோய்ச் சட்டவுண்டு
சிவனதாள் சிந்தியாப் பேதைமார் போலநீ வெள்கினூயே
கவனமாய்ப் பாய்வதோர் ஏறுகந் தேறிய காளகண்டன்
அவனதா ரூர்தொழு துய்யலாம் மையல்கொண் டஞ்சல்நெஞ்சே"
—தேவாரம்.

காழியார் வாழவந் தருள்செயுங் கவுணியப் பிள்ளை யார்தாம்
ஆழியான் அறியொணு அண்ணல்ஆ ரூர்பணிந் தரிது செல்வார்
பாழிமால் யானையின் உரிபுனைந் தார்பனை யூர்ப ணிந்து
வாழிமா மறைஇசைப் பதிகமும் பாடிஅப் பதியில் வைகி. ருகக

அங்குநின் றரிதெழுந் தருளுவார் அகில‡கா ரணமும் ஆனார்
தங்குநற் பதிகளும் பிறபணிந் தருளிவண் தமிழ்பு னைந்தே

---

ருகரு. மல்லல் நீடிய - வளம் பெருகிய. ருகசு. ஊறு - சுரந்து பெருகும்.
ருகஎ. புறம்பணை - நகர்ப்புறத்துள்ள மருதநிலத்தை.
ருகஅ. புவனம் ஆரூரினில் - பூமியிற் சிறந்த திருவாரூரில்; நீர் வளஞ் சூழ்ந்த திருவாரூரில் எனினுமாம். அவமிலா - பயனுள்ள; சிவனடியையே சிந்தை செய்தலின் "அவமிலா நெஞ்சமே" என்றார்.
ருகக. ஆழியான் - திருமால். பாழிமால் - வலிமையும் மயக்கமுமுடைய.

பா - ம்—*தொழல். †பதிகமே பாடினின்றார். ‡காரணரும்.

எங்குமெய்த் தவர்குழாம் எதிர்கொளத் தொழுதெழுந் தருளி வந்தார்
பொங்குதண் பாசடைப் பங்கயப் புனல்வயற் புகலூர் சார. ருஉ0

நாவினுக் கரசரும் நம்பிசீர் முருகரும் மற்று நாமச்
சேவுகைத் தவர்திருத் தொண்டரா னவர்கள்முன் சென்று சீதப்
பூவினிற் பொலிபுனற் புகலியார் போதகத் ததிர்ப ணிந்தே
மேவமற் றவருடன் கூடவே விமலர்கோ யிலைஅு டைந்தார். ருஉக

**வேறு**

தேவர்தந் தலைவனார் கோயில்புக் கனைவருஞ் சீர்நிலத் துறவ ணங்கிப்
பாவருந் தமிழிசைப் பதிகமும் பாடிமுன் பரவுவார் புறம்ப ணைந்தே
தாவில்சீர் முருகனார் திருமனைக் கெய்திஅத் தனிமுதல் தொண்டர் தாமே
யாவையுங் குறைவறுத் திடஅமர்ந் தருளுவார் இனிதின்அங் குறையு நாளில்.

நீலநக் கடிகளும் நிகழ்சிறுத் தொண்டரும் உடன்அணைந் தெய்து நீர்மைச், சீலமெய்த் தவர்களுங் கூடவே கும்பிடுஞ் செய்கைநேர் நின்று வாய்மை, சாலமிக் குயர்திருத் தொண்டின்உண் மைத்திறந் தன்னையே தெளிய நாடிக், கால†முய்த் தவர்களோ டளவளா விக்கலந் தருளினார் காழி நாடர். ருஉங

கும்பிடுங் கொள்கையிற் "குறிகலந் திசை"எனும் பதிகமுன் னா பாடல், தம்பெருந் தலைமையால் நிலைமைசால் பதியதன் பெருமைசால் புறவி ளம்பி, உம்பரும் பரவுதற் குரியசொற் பிள்ளையார் உள்ள மெய்க் காதல் கூர, நம்பர்தம் பதிகளா யினஎனைப் பலவுமுன் நண்ணியே தொழுத யந்தார். ருஉச

"குறிகலந்தஇசை பாடலினான்நசை யாலிவ்வுல கெல்லாம்
நெறிகலந்ததொரு நீர்மைய னாய்எரு தேறிப்பலி பேணி
முறிகலந்ததொரு தோலரை மேலுடை யானிடம் மொய்ம்மலரின்
பொறிகலந்தபொழில் சூழ்ந்தயலேபுய லாரும்புக லூரே"—**தேவாரம்.**

---

ருஉ0. பாசடைப் பங்கயப் புனல் - பசிய இலைகளையுடைய தாமரைப் பொய்கைகள் சூழ்ந்த.

ருஉக. நாமச் சேவுகைத்தவர் - அச்சமூட்டும் இடபத்தை வாகனமாக உடைய சிவபெருமானின். பூவால் பொலி. போதகத்து - யானைக் கன்றாம் பிள்ளையாரை.

ருஉஉ. தாவில் - கெடுதலில்லாத. குறைவு அறுத்து இட.

ருஉங. காலம் உய்த்து - பொழுதுபோக்கி.

ருஉச. நிலைமை சால் - நன்னிலைமை யமைந்த. சால்புற - சிறப்புற.

பா - ம்—*சால்பின். †மெய்த்.

## வேறு

புள்ள லம்புதண் புனற்புக லூர்உறை புனிதனார் அருள்பெற்றுப்
பிள்ளை யாருடன் நாவினுக் கரசரும் பிறபதி தொழச்செல்வார்
வள்ள லார்சிறுத் தொண்டரும் நீலநக் கரும்வளம் பதிக்கேக
உள்ளம் அன்புறும் முருகர்அங் கொழியவும் உடன்பட இசைவித்தார்.

கண்ண கன்புக லூரினைத் தொழுதுபோம் பொழுதினிற் கடற்காழி
அண்ண லார்திரு நாவினுக் கரசர்தம் †அருகுவிட் டகலாதே
வண்ண நித்திலச் சிவிகையும் பின்வர வழிக்கொள உறுங்காலை
எண்ணில் சீர்த்திரு நாவினுக் கரசரும் மற்றவர்க் கிசைக்கின்றார்.

"நாய னார்உமக் களித்தருள் செய்தஇந் நலங்கிளர் ஒளிமுத்தின்
தூய யானத்தின் மிசைஎழுந் தருளுவீர்" என்றலுஞ் "சுடர்த்திங்கள்
மேய வேணியார் அருளும்இவ் வாறெனில் விரும்புதொண் டர்களோடும்
போய தெங்குநீர் அங்குயான் பின்வரப் போவ"தென் றருள்செய்தார்.

என்று பிள்ளையார் மொழிந்தருள் செய்திட இருந்தவத் திறையோரும்
"நன்று நீர்அருள் செய்ததே செய்வன்" என் றருள்செய்து நயப்புற்ற
அன்றை நாள்முதல் உடன்செலு நாளெலாம் அவ்வியல் பினிற்செல்வார்
சென்று முன்னுறத் திருவம்பர் அணைந்தனர் செய்தவக் குழாத்தோடும்.

சண்பை மன்னருந் தம்பிரான் அருள்வழி நிற்பது தலைச்செல்வார்
பண்பு மேம்படு பனிக்கதிர் நித்திலச் சிவிகையிற் பணிந்தேறி
வண்பெ ரும்புக லூரினைக் கடந்துபோய் வரும்பரி சனத்தோடும்
திண்பெ ருந்தவர் அணைந்ததெங் கென்றுபோய்த் திருவம்பர் நகர்புக்கார்.

அம்பர் மாநகர் அணைந்துமா காளத்தில் அண்ணலார் அமர்கின்ற
செம்பொன் மாமதிற் கோயிலை வலங்கொண்டு திருமுன்பு பணிந்தேத்தி
வம்பு லாமலர் தூவிமுன் பரவியே வண்தமி ழிசைமாலை
உம்பர் வாழநஞ் சுண்டவர் தமைப்பணிந் துருகும்அன் பொடுதாழ்ந்தார்.

---

ருஉசு. கண் அகல் - இடம் அகன்ற.

ருஉஎ. நாயனார் - சிவபெருமான். நலங்கிளர் - அழகு பொலியும்; இன்பம் எழும் என்னலுமாம்.

ருஉஅ. இருந்தவத்து இறையோரும் - திருநாவுக்கரசரும்.

ருஉகூ. தலைச்செல்வார் - மேற்கொள்வாராய். திண் பெருந்தவர் - திருநாவுக்கரசர்.

ருஙO. மாகாளம் - கோயில் பெயர். வண்தமிழ் இசை மாலையால்.

பா - ம்—*இசைந்தார்கள். †மருங்கு.

தாழ்ந்து நாவினுக் கரசுடன் தம்பிரான் கோயில்முன் புறமெய்திச்
சூழ்ந்த தொண்டரோ டப்பதி யமர்பவர் சுரநதி முடிமீது
வீழ்ந்த வேணியர் தமைப்பெருங் காலங்கள் விருப்பினுற் கும்பிட்டு
வாழ்ந்தி ருந்தனர் காழியார் வாழவந் தருளிய மறைவேந்தர். ௫௩௧

பொருவி லாதசொற் "புல்குபொன் னிற"முதற் பதிகங்க ளாற்போற்றித்
திருவி னார்ந்தகோச் செங்கணன் அந்நகர்ச் செய்தகோ யிலைச்சேர்ந்து
மருவு வாய்மைவண் தமிழ்மலர் மாலைஅவ் வளவனைச் சிறப்பித்துப்
பெருகு காதலிற் பணிந்துமுன் பரவினர் பேணிய உணர்வோடும்.

"புல்கு பொன்னிறம் புரிசடை நெடுமுடிப் போழிள மதிசூழப்
பில்கு தேனுடை நறுமலர்க் கொன்றையும் பிணையல்செய் தவர்மேய
மல்கு தண்டுறை அரிசிலின் வருபுனல் வடகரை மாகாளம்
அல்லு நண்பக லுந்தொழும் அடியவர்க் கருவினை அடையாவே"

"எரிதர அனல்கையில் ஏந்தி எல்லியில்
நரிதிரி கானிடை நட்டம் ஆடுவர்
அரிசிலம் பொருபுனல் அம்பர் மாநகர்க்
குரிசில்செங் கண்ணவன் கோயில் சேர்வரே"—**தேவாரம்.**

இன்ன வாறுசொன் மாலைக ளாற்றுதித் திறைஞ்சிஅங் கமர்நாளில்
கன்னி மாமதில் திருக்கட வூர்தொழக் காதல்செய் தருளிப்போய்
மன்னு கோயில்கள் பிறபதி வணங்கியே வாக்கின்மன் னவரோடும்
அந்நெ டும்பதி அணைவுறக் கலயரோ டடியவர் எதிர்கொண்டார். ௫௩௩

மற்ற வண்பதி அணைந்துவீ ரட்டத்து மழவிடை யார்கோயில்
சுற்று மாளிகை வலங்கொண்டு காலனை யுதைத்தருட் டியசெய்ய
பொற்சி லம்பணி தாமரை வணங்கிமுன் போற்றிஉய்ந் தெதிர்நின்று
பற்ற றுப்பவர் "சடையுடை யான்"எனும் பதிகஇன் னிசைபாடி.

"சடையுடை யானுநெய் யாடலா னுஞ்சரி கோவண
உடையுடை யானுமை யார்ந்தவொண் கண்ணுமை கேள்வனும்
கடையுடை நன்னெடு மாடமோங் குங்கட வூர்தனில்
விடையுடை யண்ணலும் வீரட்டா னத்தர னல்லனே"—**தேவாரம்.**

---

௫௩௧. சுரநதி - கங்கை.

௫௩௨. பொருவிலாத சொல் - ஒப்பில்லாத அருட்சொற்கள் நிரம்பிய. அவ்வளவனை - அக் கோச்செங்கட் சோழனை.

௫௩௩. கலயரோடு - குங்கிலியக்கலய நாயனருடன். கடவூர் - அட்ட வீரட்டத்துள் ஒன்று; யமனை உதைத்த தலம்.

பரவி ஏத்திஅங் கரிதினிற் போந்துபார் பரவுசீர் அரசோடு
விரவு நண்புடைக் குங்குலி யப்பெருங் கலயர்தம் மனைமேவிக்
கரையில் காதல்மற் றவர்அமைத் தருளிய விருந்தினி தமர்ந்தங்குச்
சிரபு ரத்தவர் திருமயா னமும்பணிந் திருந்தனர் சிறப்பெய்தி. ருகரு

சிறப்பு டைத்திருப் பதிஅத னிடைச்சில நாளமர்ந் தருளோடும்
விறற்பெ ருங்கரி உரித்தவர் கோயில்கள் விருப்பொடுந் தொழச்செல்வார்
மறைப்பெ ருந்திருக் கலயரும் உடன்பட வணங்கிய மகிழ்வோடும்
அறப்பெ ரும்பயன் அனையஅத் தொண்டரோ டணைந்தனர் திருவாக்கூர்.

தக்க அந்தணர் மேவும்அப் பதியினில் தான்தோன்றி மாடத்துச்
செக்கர் வார்சடை அண்ணலைப் பணிந்திசைச் செந்தமிழ்த் தொடைபாடி
மிக்க கோயில்கள் பிறவுடன் தொழுதுபோய் மீயச்சூர் பணிந்தேத்திப்
பக்கம் பாரிடம் பரவநின் றுடுவார் பாம்புர நகர்சேர்ந்தார். ருகஎ

பாம்பு ரத்துறை பரமரைப் பணிந்துநற் பதிகஇன் னிசைபாடி
வாம்பு னற்சடை முடியினர் மகிழ்விடம் மற்றுமுள் ளனபோற்றிக்
காம்பி னில்திகழ் கரும்பொடு செங்நெலின் கழனியம் பணைநீங்கித்
தேம்பொ ழில்திரு வீழிநன் மிழலையின் மருங்குறச் செல்கின்றார்.

வேறு

அப்பொழுதின் ஆண்ட அரசை எதிர்கொண்ட
மெய்ப்பெருமை அந்தணர்கள் வெங்குருவாழ் வேந்தனார்
பிற்படவந் தெய்தும் பெரும்பேறு கேட்டுவப்பார்
எப்பரிசி னால்வந் தணைந்தங் கெதிர்கொண்டார். ருகசு

நிறைகுடந் தூபந்தீபம் நீட நிரைத்தேந்தி
நறைமலர்ப் பொற்சுண்ணம் நறும்பொரியுந் தூவி
மறையொலிபோய் வானளப்ப மாமுரசம் ஆர்ப்ப
இறைவர்திரு மைந்தர்தமை எதிர்கொள்வர வேற்றார். ருசO

---

ருகரு. அரிதினில் போந்து - அரிதிற் பிரிந்துசென்று. அரசோடு - திருநாவுக்கரசோடு.

ருகசு. விறல் பெருங்கரி - வலிமையுடைய பெரிய யானையை. மறைப்பெருந் திருக்கலயரும் - வேதத்தில் வல்ல பெருமை பொருந்திய குங்கிலியக் கலய நாயனாரும். ருகஎ. பாரிடம் - பூதங்கள்.

ருகஅ. காம்பினில் - மூங்கில்போல். பணை - மருத நிலத்தை.

ருகசு. வெங்குருவாழ் வேந்தனார் - திருஞானசம்பந்தர். எப்படி......எதிர்கொண்டாரெனில்.

ருசO. திருநாவுக்கரசுசுவாமிகள் புராணம் : உருO, உருக - குறிப்புப்பார்க்க.

பா - ம்—*வீழிமா.

வந்து திருவீழி மிழலை மறைவல்ல
அந்தணர்கள் போற்றிசைப்பத் தாமும் மணிமுத்தின்
சந்த மணிச்சிவிகை நின்றிழிந்து தாழ்ந்தருளி
உய்ந்த மறையோ ருடனணைந்தங் குள்புகுவார். ௫௪௧

அப்போ தரையார் விரிகோ வணஆடை
ஒப்போ தரும்பதிகத் தோங்கும் இசைபாடி
மெய்ப்போதப் போதமர்ந்தார் தங்கோயில் மேவினார்
கைப்போது சென்னியின்மேற் கொண்டு கவுணியனார். ௫௪௨

நாவின் தனிமன்னர் தாமும் உடன்நண்ண
மேவிய விண்ணிழிந்த கோயில் வலங்கொள்வார்
பூவியலும் உந்தியான் போற்றப் புவிக்கிழிந்த
தேவியலு மெய்கண்டு சிந்தைவியப் பெய்தினார். ௫௪௩

வலங்கொண்டு புக்கெதிரே *வந்து வரநதியின்
சலங்கொண்ட வேணித் தனிமுதலைத் தாழ்ந்து
நிலங்கொண்ட மேனியராய் நீடுபெருங் காதல்
புலங்கொண்ட சிந்தையினாற் பொங்கி†இசை மீப்பொழிந்தார்.

போற்றிச் "சடையார் புனலுடையான்" என்றெடுத்துச்
சாற்றிப் பதிகத் தமிழ்மாலை சந்தஇசை
ஆற்ற மிகப்பாடி ஆனந்த வெள்ளத்தில்
நீற்றழகர் சேவடிக்கீழ் நின்றலைந்து நீடினார். ௫௪௫

" சடையார்புன லுடையானொரு சரிகோவண முடையான்
படையார்மழு உடையான்பல பூதப்படை உடையான்
மடமான்விழி உமைமாதிடம் உடையான்எனை உடையான்
விடையார்கொடி உடையானிடம் வீழிம்மிழ லையே."—தேவாரம்.

௫௪௧. பிள்ளையாரைக் காணப்பெற்றமையால் உய்ந்த.

௫௪௨. கைப்போது - கையாகிய தாமரைமலரை. கவுணியனார் அப்போது. மெய்ப்போதப் போது அமர்ந்தார்தம் - அடியார்களின் உண்மை ஞானமென்னும் திருவருள் பொலியுந் தாமரையில் விரும்பி வீற்றிருந்தருளுஞ் சிவபெருமானது. "மலர்மிசை ஏகினான்"—குறள் : ௩.

௫௪௩. திருநாவுக்கரசு சுவாமிகள் புராணம் : ௨௫௧. குறிப்புப் பார்க்க. பூ இயலும் உந்தியான் - திருமால். புவிக்கு இழிந்த - பூமியில் இறங்கிய. தே இயலும் மெய் - தெய்வத்தன்மை வாய்ந்த திருமேனியை.

௫௪௪. புலங்கொண்ட - மெய்யுணர்வு கொண்ட.

பா - ம்—*நின்று வரநதியின் ; வானநதியின். †இசைபொழிந்தார்.

நீடியபே ரன்புருகி உள்ளலைப்ப நேர்நின்று
பாடினதி ராடிப் பரவிப் பணிந்தெழுந்தே
ஆடிய சேவடிகள் ஆர்வமுற உட்கொண்டு
மாடுயர் கோயிற் புறத்தரிது வந்தணைந்தார். ருசசு

வந்தணைந்து வாழ்ந்து மதிற்புறத்தோர் மாமடத்துச்
செந்தமிழ்ச்சொல் வேந்தருஞ் செய்தவருஞ் சேர்ந்தருளச்
சந்தமணிக் கோபுரத்துச் சார்ந்தவட பாற்சண்பை
அந்தணர்சூ ளாமணியார் அங்கோர் மடத்தமர்ந்தார். ருசஎ

அங்கண் அமர்வார் அரனார் அடியிணைக்கீழ்த்
தங்கிய காதலினாற் காலங்கள் தப்பாமே
பொங்குபுகழ் வாகீச ருங்கூடப் போற்றிசைத்தே
எங்கும் இடர்தீர்ப்பார் *இன்புற் றுறைகின்றார். ருசஅ

ஓங்குபுனற் பேணு பெருந்துறையும் உள்ளிட்ட
பாங்கார் திலதைப் பதிமுற்ற மும்பணிந்து
வீங்குநீர் வீழி மிழலையினில் மீண்டும்அணைந்
தாங்கினிது கும்பிட் டமர்ந்தொழுகும் அந்நாளில். ருசசு

வேறு

சேணுயர் மாடப் புகலி யுள்ளார் திருஞான சம்பந்தப் பிள்ளை யாரைக், காணும் விருப்பிற் பெருகும் ஆசை கைம்மிகு காதல் கரையி கப்பப், பூணு மனத்தொடு தோணி மேவும் பொருவிடை யார்மலர்ப் பாதம் போற்றி, வேணு புரத்தை அகன்று போந்து வீழி மிழலையில் வந்த ணைந்தார். ருரு0

"ஊழி முடிவில் உயர்ந்த வெள்ளத் தோங்கிய காழி உயர்பதி யில், வாழி மறையவர் தாங்கள் எல்லாம் வந்து மருங்கணைந் தார்கள்" என்ன, வீழி மிழலையின் வேதி யர்கள் கேட்டுமெய்ஞ் ஞானமுண் டாரை முன்னா, ஏழிசை †சூழ்மறை எய்த ஓதி எதிர்கொள் முறை மையிற் கொண்டு புக்கார். ருருக

ருசஎ. வாழ்ந்து - மகிழ்ந்து.

ருசசு. ஓங்குபுனற் பேணும் - மிகு நீர்வளங் காரணமாகப் பலரும் பேணும். வீங்கு - மிக்க.

ருரு0. கைமிகு - அதிகப்பட (மெய்ப்பாடு). கரை இகப்ப - கரை கடந்து செல்ல.

ருருக. மெய்ஞ்ஞானம் உண்டாரை முன்னா - திருஞானசம்பந்தரை முத லாகக்கொண்டு.

பா - ம்—*இன்புற் றமர்கின்றார். †சூழ்மறையோரை எய்தி.

சண்பைத் திருமறை யோர்க ளெல்லாம் தம்பிரா னாரைப் பணிந்து போந்து, நண்பிற் பெருகிய காதல் கூர்ந்து ஞானசம் பந்தர் மடத்தில் எய்திப், பண்பிற் பெருகுங் கழும லத்தார் பிள்ளையார் பாதம் பணிந்து பூண்டே, "எண்பெற்ற தோணி புரத்தில் எம்மோ டெழுந்தரு ளப்பெற வேண்டும்" என்றார். ௫௫௨

என்றவர் விண்ணப்பஞ் செய்த போதில் ஈறில் சிவஞானப் பிள்ளை யாரும், "நன்றிது சாலவுந் தோணி மேவும் நாதர் கழலிணை நாமி றைஞ்ச, இன்று கழித்து மிழலை மேவும் இறைவர் அருள்பெற் றுப் *போவ" தென்றே, அன்று புகலி அருமறையோர்க் கருள்செய் தவர்க்கு முகமஅ ளித்தார். ௫௫௩

மேற்பட்ட அந்தணர் சண்பை மேவும் வேதியர்க் காய விருந்த ளிப்பப், பாற்பட்ட சிந்தைய ராய்ம கிழ்ந்து பரம்பொரு ளானார் தமைப்பரவும், சீர்ப்பட்ட எல்லை இனிது செல்லத் திருத்தோணி மேவிய செல்வர் தாமே, கார்ப்பட்ட வண்கைக் கவுணி யர்க்குக் கன விடை †முன்னின் றருள்செய் கின்றார். ௫௫௪

"தோணியில் நாமங் கிருந்த வண்ணந் தூமறை வீழி மிழலை தன் னுள், சேணுயர் விண்ணின் றிழிந்த இந்தச் சீர்கொள் விமானத்துக் காட்டு கின்றோம், பேணும் படியால் அறிதி" என்று பெயர்ந்தருள் செய்யப் பெருந்த வங்கள், வேணு புரத்தவர் செய்ய வந்தார் விரவும் புளகத் தொடும் உணர்ந்தார். ௫௫௫

அறிவுற்ற சிந்தைய ராய்எ ழுந்தே அதிசயித் துச்சிமேல் அங்கை கூப்பி, வெறியுற்ற கொன்றையி னார்ம கிழ்ந்த விண்ணிழி கோயிலிற் சென்று புக்கு, மறியுற்ற கையரைத் தோணி மேல்முன் வணங்கும் படிஅங்குக் கண்டு வாழ்ந்து, குறியிற் பெருகுந் திருப்பதிகங் குலவிய கொள்கையிற் பாடு கின்றார். ௫௫௬

---

௫௫௨. கழுமலத்தார் - சீகாழி வாசிகள்.

௫௫௩. முகம் அளித்தார் - முகமன் கூறினார்.

௫௫௪. மேற்பட்ட அந்தணர் - திருவீழிமிழலையிலுள்ள மறையவர்கள். பாற்பட்ட - பிள்ளையார் அருள் வழிநின்ற. கார் பட்ட வண்கை - மேகம் போன்ற கொடையுடைய திருக்கையைப் பெற்ற.

௫௫௫. வேணு புரத்தவர் (சீர்காழி வாசிகள்) பெருந் தவங்கள் செய்யத் தோன்றியவராகிய திருஞான சம்பந்தர். விரவும் புளகத்தொடு - உடல் முழு வதும் பரந்த மயிர் சிலிர்ப்பொடு.

பா - ம்—*போவனென்றே. †முன்னருள் காட்டுகின்றார்; நின்றருள் காட்டு கின்றார்.

"மைம்மரு பூங்குழல்" என்றெடுத்து மாறில் பெருந்திருத் தோணி தன்மேற், "கொம்மை முலையினுள் கூட நீடு கோலங் குலாவு மிழலை தன்னில், செம்மை தருவிண் ணிழிந்த கோயில் திகழ்ந்த படி இது என்கொல்!" என்று, மெய்ம்மை விளங்குந் திருப்பதிகம் பாடி மகிழ்ந்தனர் வேத வாயர். ௫௫௭

" மைம்மரு பூங்குழற் கற்றை துற்ற வாணுதல் மான்விழி மங்கையோடும்
பொய்ம்மொழி யாமறை யோர்க ளேத்தப் புகலி நிலாவிய புண்ணியனே
எம்மிறை யேஇமை யாத முக்கண் ஈசஎன்நேசஇ தென்கொல் சொல்லாய்
மெய்ம்மொழி நான்மறை யோர்மிழலை விண்ணிழி கோயில் விரும்பியதே "

—தேவாரம்.

செஞ்சொல் மலர்ந்த திருப்பதிகம் பாடித் திருக்கடைக் காப்புச் சாத்தி, அஞ்சலி கூப்பி விழுந்தெழுவார் ஆனந்த வெள்ளம் *அலைப் பப் போந்து, மஞ்சிவர் சோலைப் புகலி மேவும் மாமறை யோர்தமை நோக்கி வாய்மை, நெஞ்சில் நிறைந்த குறிப்பில் வந்த நீர்மைத் திறத்தை அருள்செய் கின்றார். ௫௫௮

"பிரம புரத்தில் அமர்ந்த முக்கட் பெரிய பிரான்பெரு மாட்டி யோடும், விரவிய தானங்கள் எங்குஞ் சென்று விரும்பிய கோலம் பணிந்து போற்றி, வருவது மேற்கொண்ட காதல் கண்டங் கமர்ந்த வகைஇங் களித்த" தென்று, தெரிய உரைத்தருள் செய்து "நீங்கள் சிரபுர மாநகர் செல்லும்" என்றார். ௫௫௯

என்று கவுணியப் பிள்ளை யார்தாம் இயம்பப் பணிந்தருள் ஏற் றுக் கொண்டே, ஒன்றிய காதலின் உள்ளம் அங்கண் ஒழிய ஒருவா றகன்று போந்து, மன்றுள் நடம்புரிந் தார்ம கிழ்ந்த தானம் பலவும் வணங்கிச் சென்று, நின்ற புகழ்த்தோணி நீடு வாரைப் பணியும் நிய தியராயு றைந்தார். ௫௬0

சிரபுரத் தந்தணர் சென்ற பின்னைத் திருவீழி மேவிய செல்வர் பாதம், பரவுதல் செய்து பணிந்து நாளும் பண்பின் வழாத்திருத் தொண்டர் சூழ, உரவுத் தமிழ்த்தொடை மாலை சாத்தி ஓங்கிய நாவுக் கரச ரோடும், விரவிப் பெருகிய நண்பு கூர மேவி இனிதங் குறையு நாளில். ௫௬௧

௫௬௧. உரவு - உணர்வூட்டும்.

பா - ம்—*அலையப் போந்து.

## வேறு

மண்ணின்மிசை வான்பொய்த்து *திகள் தப்பி மன்னுயிர்கள்
கண்சாம்பி உணவு மாறி, விண்ணவர்க்குஞ் சிறப்பில்வரும் பூசை
யாற்று மிக்கபெரும் பசிஉலகில் விரவக் கண்டு, பண்ணமரு மொழியு
மையாள் முலையின் ஞானப் பாலறா வாயருடன் அரசும் பார்மேல்,
" கண்ணுதலான் திருநீற்றுச் சார்வி னோர்க்குங் கவலைவருமோ "
என்று கருத்திற் கொண்டார். ௫௬௨

வானாகி நிலனாகி அனலு மாகி மாருதமாய் இருசுடராய் நீரு
மாகி, ஊனாகி உயிராகி உணர்வு மாகி உலகங்கள் அனைத்துமாய் உலகுக்
கப்பால், ஆனாத வடிவாகி நின்றார் செய்ய அடிபரவி அன்றிரவு துயி
லும் போது, கானாடு கங்காளர் மிழலை மூதூர் காதலித்தார் கனவில்
அணைந் தருளிச் செய்வார். ௫௬௩

"உலகியல்பு †நிகழ்ச்சியால் அணைந்த தீய உறுபசிநோய் உமை
அடையா தெனினும் உம்பால், நிலவுசிவ நெறிசார்ந்தோர் தம்மை வாட்
டம் நீக்குதற்கு ‡நித்தமொரோர் காசு நீடும், இலகுமணிப் பீடத்துக்
குணக்கு மேற்கும் யாமளித்தோம் உமக்கிந்தக் காலந் தீர்ந்தால், அல
கில்புக ழீர்! தவிர்வ தாகும்" என்றே அருள்புரிந்தார் திருவீழி மிழலை
ஐயர். ௫௬௪

---

௫௬௨. சாம்பி - பஞ்சடைந்து ; குவிந்து ; வாடி. விரவ - பரவ.

௫௬௩. மாருதமாய் - காற்றாகி. இரு சுடராய் - சூரிய சந்திரர்களாகி. உலகங்கள் - தத்துவ புவனங்கள். உலகுக்கு அப்பால் ஆனாத வடிவாகி - தத்துவ புவனங்களெல்லாங் கடந்து, தத்துவங்களால் அமையாத அருள் வடிவாகி. கான் ஆடு கங்காளர் - சுடுகாட்டில் ஆடும் சிவபெருமான் ; (கங்காளர் - என்பணிந்தவர்). இப்பாட்டில் ஆண்டவன் அட்ட மூர்த்தமும், மேலுங் கடந்த நிலையும் சொல்லப்பட்டிருக்கின்றன. நிலன், நீர், அனல், மாருதம், வான், இருசுடர், உயிர் - அட்ட மூர்த்தம். ஊன், நிலன்நீர் முதலிய பூதவகையினும், உணர்வு, உயிரின்பாலும் அடங்கும். "இருநிலனாய்த் தீயாகி நீரு மாகி இயமான னாய் எறியுங் காற்று மாகி, அருநிலைய திங்களாய் ஞாயி றாகி ஆகாசமாய் அட்ட மூர்த்தி யாகி "—அப்பர்; "நிலநீர் நெருப்புயிர் நீள் விசும்பு நிலாப்பகலோன் - புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்து நின்றான், உலகே ழெனத் திசை பத்தெனத்தான் ஒருவனுமே - பலவாகி நின்றவா தோணோக்க மாடாமோ"—**மாணிக்கவாசகர்.**

௫௬௪. குணக்கு மேற்கும் - கிழக்கிலும் மேற்கிலும். இந்தக் காலம் - இவ்வறுமைக்காலம். தவிர்வதாகும் - காசு அருளல் நிறுத்தப்படும்.

**பா - ம்**—*திங்கள். †நிகழ்ச்சியினில். ‡நித்தமோர்.

தம்பிரான் அருள்புரிந்து கனவின் நீங்கச் சண்பையார் இளவேறு தாமு ணர்ந்து, "நம்பிரான் அருளிருந்த வண்ணம்" என்றே நாவினிசை அரசரொடுங் கூட நண்ணி, வம்புலா மலரிதழி வீழி நாதர் மணிக்கோயில் வலஞ்செய்யப் புகுந்த வேலை, அம்பிகா பதிஅருளால் பிள்ளை யார்தாம் அபிமுகத்துப் பீடிகைமேற் காசு கண்டார். ருகூரு

காதலொடுந் தொழுதெடுத்துக் கொண்டு நின்று கைகுவித்துப் பெருமகிழ்ச்சி கலந்து பொங்க, "நாதர்விரும் படியார்கள் நாளும் நாளும் நல்விருந்தா யுண்பதற்கு வருக" என்று, நீதில்பறை நிகழ்வித்துச் சென்ற தொண்டர் திருவமுது கறிநெய்பால் தயிரோன் றின்ன, ஏதமுறு தினிதுண்ண ஊட்டி அங்கண் இருதிறத்துப் பெருந் தவரும் இருந்த நாளில். ருகூகூ

நாவினுக்கு வேந்தர்திரு மடத்தில் தொண்டர் நாட்கூறு திருவமுது செய்யக் கண்டு, சேவுகைத்தார் அருள்பெற்ற பிள்ளை யார்தந் திருமடத்தில் அமுதாக்கு வாரை நோக்கித், "தீவினைக்கு நீரென்றும் அடைவி லாதீர் திருவமுது காலத்தால் ஆக்கி இங்கு, மேவுமிக்க அடியவருக் களியா வண்ணம் விளைந்தவா றென்கொலோ விளம்பும்" என்றார். ருகூஎ

திருமறையோர் தலைவர்தாம் அருளிச் செய்யத் திருமடத்தில் அமுதமைப்போர் செப்பு வார்கள், "ஒருபரிசும் அறிந்திலோம் இதனை உம்மை உடையவர்பாற் பெறும்படிக்கா சொன்றுங் கொண்டு, கருதிய எல் லாங்கொள்ள வேண்டிச் சென்றால் காசுதனை வாசிபட வேண்டும் என்பார், பெருமுனிவர் வாகீசர் பெற்ற காசு பேணியே கொள்வர்இது பிற்பா" டென்றார். ருகூஅ

---

ருகூரு. வம்பு உலா மலர் இதழி - மணங்கமழும் கொன்றை மலரணிந்த. அபிமுகத்துப் பீடிகைமேல் - நேர்முக (கிழக்கு)ப் பீடத்தில். திருநாவுக்கரசர் காசு பெற்றதை அவர்தம் புராணத்திற் காண்க. அப்புராணம்: உருஅ. குறிப்பைப்பார்க்க. ருகூகூ. ஏதம் உறு து - குறைவுபடாது.

ருகூஎ. நாட்கூறு - பகலில். சேவுகைத்தார் - இடபவாகனராகிய சிவபெருமான். தீவினைக்கு நீர் என்றும் அடைவிலாதீர் - தீய காரியச் சேர்க்கைக்கு எப்பொழுதும் இடந்தாராத நீங்கள்...; இடந்தாராதவர்களே என்னலுமாம்.

ருகூஅ. திருமறையோர் தலைவர் - திருஞானசம்பந்தர். உம்மை உடையவர் பால்-சிவபிரானிடம். படிக்காசு - படியில் வைக்கப்படுங்காசு ; படியாகப் பெறுங் காசு. வாசிபட - வட்டந்தர. பிற்பாட்டுக்குக் காரணம் இதுவே என்றார்.

திருஞான சம்பந்தர் அதனைக் கேட்டுச் சிந்திப்பார் "சிவபெருமான் நமக்குத் தந்த, ஒருகாசு வாசிபட மற்றக் காசு நன்றாகி வாசிபடா தொழிவான் அந்தப், பெருவாய்மைத் திருநாவுக் கரசர் தொண்டாற் பெறுங்காசாம் ஆதலினாற் பெரியோன் தன்னை, வருநாள்கள் தருங்காசு வாசி தீரப் பாடுவன்" என் றெண்ணியது மனத்துட் கொண்டார். ௫௬௯

மற்றைநாள் தம்பிரான் கோயில் புக்கு "வாசிதீர்த் தருளும்" எனப் பதிகம் பாடிப், பெற்றபடி நற்காசு கொண்டு மாந்தர் பெயர்ந்து போய் ஆவணவீ தியினிற் காட்ட, நற்றவத்தீர்! "இக்காசு சால நன்று வேண்டுவன நாந்தருவோம்" என்று நல்க, அற்றைநாள் தொடங்கி நாட் கூறு தன்னில் அடியவரை அமுதுசெய்வித் தார்வம் மிக்கார். ௫௭௦

"வாசிதீரவே, காசுநல்குவீர், மாசின்மிழலையீர், ஏசலில்லையே.—தேவாரம்.

அருவிலையிற் பெறுங்காசும் அவையே யாகி அமுதுசெய்யத் தொண்டரள விறந்து பொங்கி, வருமவர்கள் எல்லார்க்கும் வந்தாருக்கும் மகிழ்ந்துண்ண இன்னடிசில் மாளா தாகத், திருமுடிமேல் திங்களொடு கங்கை சூடுஞ் சிவபெருமான் அருள்செய்யச் சிறப்பின் மிக்க, பெருமைதரு சண்பைநகர் வேந்தர் நாவுக் கரசர்இவர் பெருஞ் சோற்றுப் பிறங்கல் ஈந்தார். ௫௭௧

அவனிமிசை மழைபொழிய உணவு மல்கி அனைத்துயிருந் துயர் நீங்கி அருளி னாலே, புவனமெலாம் பொலிவெய்துங் காலம் எய்தப் புரிசடையார் கழல்பலநாள் போற்றி வைகித், தவமுனிவர் சொல் வேந்த ரோடுங் கூடத் தம்பிரான் அருள்பெற்றுத் தலத்தின் மீது, சிவன்மகிழுந் தானங்கள் வணங்கப் போவார் தென்திருவாஞ் சிய மூதூர் சென்று சேர்ந்தார். ௫௭௨

நீடுதிரு வாஞ்சியத்தில் அமர்ந்த முக்கண் நீலமிடற் றரு மணியை வணங்கிப் போற்றிப், பாடொலிநீர்த் தலையாலங் காடு மாடு பரமர்பெரு வேளூரும் பணிந்து பாடி, நாடுபுகழ்த் தனிச்சாத்தங் குடியில் நண்ணி நம்பர்திருக் கரவீரம் நயந்து பாடித், தேடுமறைக் கரியார்தம் விளமர் போற்றித் திருவாரூர் தொழ நினைந்து சென்று புக்கார். ௫௭௩

---

௫௭௦. ஆவண வீதியினில் - கடைத்தெருவில்.

௫௭௧. சோற்றுப் பிறங்கல் - அன்னமலை.

நம்பர்மகிழ் திருவாரூர் வணங்கிப் போந்து நலங்கொள்திருக் காறு
யில் நண்ணி ஏத்திப், பைம்புனல்மென் பணைத்தேவூர் அணைந்து
போற்றிப் பரமர்திரு நெல்லிக்காப் பணிந்து பாடி, உம்பர்பிரான் கைச்
சினமும் பரவித் தெங்கூர் ஓங்குபுகழ்த் திருக்கொள்ளிக் காடும் போற்
றிச், செம்பொன்மதில் கோட்டூரும் வணங்கி ஏத்தித் திருமலிவெண்
துறைதொழுவான் சென்று சேர்ந்தார். ௫௭௪

மற்றவ்வூர் தொழுதேத்தி மகிழ்ந்து பாடி மாலயனுக் கரியபிரான்
மருவுந் தானம், பற்பலவுஞ் சென்றுபணிந் தேத்திப் பாடிப் பரவு
திருத் தொண்டர்குழாம் பாங்கின் எய்தக், கற்றவர்வாழ் தண்டலைநீள்
நெறியுள் ளிட்ட கனகமதில் திருக்களருங் கருதார் வேள்வி, செற்ற
வர்சேர் பதிபிறவுஞ் சென்று போற்றித் திருமறைக்காட் டதன்
மருங்கு சேர்ந்தார் அன்றே. ௫௭௫

காரமண்வெஞ் சுரம்அருளால் கடந்தார் தாமும் கடற்காழிக் கவு
ணியர்தந் தலைவர் தாமும், சேரஎழுந் தருளியஅப் பேறு கேட்டுத்
திருமறைக்காட் டகன்பதியோர் சிறப்பிற் பொங்கி, ஊரடைய அலங்
கரித்து விழவு கொள்ள உயர்கமுகு கதலிநிறை குடந்தீ பங்கள், வார்
முரச மங்கலநா தங்கள் மல்க எதிர்கொள்ள அடியருடன் மகிழ்ந்து
வந்தார். ௫௭௬

முன்னணைந்த திருநாவுக் கரசர் தம்மை முறைமையால் எதிர்
கொண்டு களிப்பின் மூழ்கிப், பின்னணைய எழுந்தருளும் பிள்ளை
யார்தம் பெருகியபொற் காளத்தின் ஓசை கேட்டுச், சென்னிமிசைக்
கரங்குவித்து முன்பு சென்று சேணிலத்து வணங்குதலுந் திருந்து
சண்பை, மன்னவரும் மணிமுத்தின் சிவிகை நின்று வந்திழிந்து
வணங்கியுடன் மகிழ்ந்து போந்தார். ௫௭௭

சொல்லரச ருடன்கூடப் பிள்ளை யாரும் தூமணிநீர் மறைக்
காட்டுத் தொல்லை மூதூர், மல்குதிரு மறுகின்கட் புகுந்த போது

---

௫௭௪. திருக்கைச்சினம் - ஒரு திருப்பதி.

௫௭௫. திருத்தண்டலைப்பதி. கருதார் வேள்வி செற்றவர்-தக்கன் வேள்வி
தகர்த்த சிவபிரான்.

௫௭௬. கார்......தாமும் - திருநாவுக்கரசரும். வெஞ்சுரம் - பாலை நிலம்....
வெஞ்சுரத்தைக் கடந்த ஒருவரும்,அதைக் கடக்கப்போகும் மற்றொருவரும் என்
பது குறிப்பு. சமணர் கொடுமை அகற்ற அழைப்பு வந்த இடம் திருமறைக்
காடாதலால், சமணர் கொடுமை இங்கே குறிக்கப்பட்டதுபோலும்.

௫௭௮. திருமறுகின்கண் - திருவீதியில். அரகா என்று முழக்கிய ஓசை
ஒல்லெனும் ஓசைபட.

மாதவர்கள் மறையவர்கள் மற்றும் உள்ளோர், எல்லையில்லா வகை "அர"என் றெடுத்த ஓசை இருவிசும்பும் திசைஎட்டும் நிறைந்து பொங்கி, ஒல்லொலிநீர் வேலையொலி அடக்கி விண்மேல் உம்பர்நாட் டப்புறத்தும் உற்ற தன்றே. ருஎஅ

அடியவரும் பதியவரும் மருங்கு போற்ற அணிமறுகி னூடெய்தி அருகு சூழ்ந்த, கொடிநுடங்கு செழுந்திருமா ளிகையின் முன்னர்க் கோபுரத்தைத் தாழ்ந்திறைஞ்சிக் குறுகிப் புக்கு, முடிவில்இமை யவர்முனிவர் நெருங்குந் தெய்வ முன்றில்வலங் கொண்டுநேர் சென்று முன்னுள், படியின்மறை அருச்சித்துக் காப்புச் செய்த பைம்பொன் மணித் திருவாயிற் பாங்கு வந்தார். ருஎகூ

அருமறைகள் திருக்காப்புச் செய்து வைத்த அக்கதவந் திறந் திடஅம் மறைகள் ஓதும்,பெருகியஅன் புடைஅடியார் அணைந்து நீக்கப் பெறுமையினால் அன்றுமுத லாகப் பின்னை, ஒருபுடைஓர் வாயில் அமைத் தொழுகுந் தன்மை உள்ளபடி கேட்டருளி உயர்ந்த சண் பைத், திருமறையோர் தலைவர்வியப் பெய்தி நின்று திருநாவுக் கரச ருக்குச் செப்பு கின்றார். ருஅ0

"அப்பரே! வேதவனத் தையர் தம்மை அபிமுகத்துத் திருவாயில் திறந்து புக்கே, எப்பரிசும் நாம்இறைஞ்ச வேண்டும் நீரே இவ்வாயில் திருக்காப்பு நீங்கு மாறு, மெய்ப்பொருள்வண் தமிழ்பாடி அருளும்" என்ன விளங்குமொழி வேந்தர்அது மேற்கொண் "டென்னை, இப்பரிசு நீர்அருளிச் †செய்தீ ராகில் இதுசெய்வேன்" எனப்பதிகம் எடுத்துப் பாட. ருஅக

பாடியஅப் பதிகப்பாட் டான பத்தும் பாடல்நிரம் பியபின்னும் பைம்பொன் வாயிற், சேடுயர்பொற் கதவுதிருக் காப்பு நீங்காச் செய் கையினால் வாகீசர் சிந்தை நொந்து, நீடுதிருக் கடைக்காப்பில் அரிது வேண்டி நின்றெடுக்கத் ‡திருக்காப்பு நீக்கங் காட்ட, ஆடியசே வடியார் தம் அடியார் விண்ணோர் ஆர்ப்பெழுந்த தகிலாண்டம் அனைத்தும் சூழ்க. ருஅஉ

ருஎகூ. நுடங்கும் - ஆடும். திருமாளிகையின் - திருக்கோயிலின். படியில் மறை - ஒப்பில்லாத வேதம். காப்புச் செய்த - பூட்டிய.

ருஅக. வேதவனத்து ஐயர் தம்மை - திருமறைக்காட்டுப் பெருமானை. அபிமுகத்து - நேர் முகமாக உள்ள. **திருநாவுக்கரசு சுவாமிகள் புராணம் : உகஎ, உகஅ. பார்க்க.**

**பா - ம்**—*தாழ்ந்து. †செய்தீராக. ‡திருக்கதவு நீங்கிக்.

வேறு

மற்றது கண்ட போதே வாக்கின்மன் னவரை நோக்கிப்
பொற்புறு புகலி மன்னர் போற்றிட அவரும் போற்றி
அற்புத நிலையி னூர்கள் அணிதிரு மறைக்கா டாளும்
கொற்றவர் கோயில் வாயில் நேர்வழி குறுகிப் புக்கார். ருஅங

கோயிலுட் புகுவார் உச்சி குவித்தசெங் கைக ளோடும்
தாயினும் இனிய தங்கள் தம்பிரா னாரைக் கண்டார்
பாயுநீர் அருவி கண்கள் தூங்கிடப் படியின் மீது
மேயின மெய்ய ராகி விதிர்ப்புற்று விரைவின் வீழ்ந்தார். ருஅச

அன்பினுக் களவு காணார் ஆனந்த வெள்ளம் மூழ்கி
என்புநெக் குருக நோக்கி இறைஞ்சிநேர் விழுந்து நம்பர்
முன்புநிற் பதுவும் ஆற்றார் மொழிதடு மாற ஏத்தி
மின்புரை சடையார் தம்மைப் பதிகங்கள் விளம்பிப் போந்தார். ருஅரு

புறம்புவந் தணைந்த போது புகலிகா வலரை நோக்கி
"நிறங்கிளர் மணிக்க பாடம் நீக்கமும் அடைப்பும் நிற்கத்
திறந்தவா றடைக்கப் பாடி அருளும்நீர்" என்றார் தீய
மறம்புரி அமணர் செய்த வஞ்சனை கடக்க வல்லார். ருஅசு

அன்றர சருளிச் செய்ய அருமறைப் பிள்ளை யாரும்
வென்றிவெள் விடையார் தம்மை விருப்பினால் "சதுரம்" என்னும்
இன்தமிழ்ப் பதிகப் பாடல் இசைத்திட இரண்டு பாலும்
நின்றஅக் கதவு காப்பு நிரம்பிட அடைத்த தன்றே. ருஅஎ

"சதுரம் மறைதான் துதிசெய்து வணங்கும்
மதுரம்பொழில் சூழ்மறைக் காட்டுறை மைந்தா
இதுநன்கிறை வைத்தருள் செய்க எனக்குன்
கதவந்திருக் காப்புக்கொள் ளுங்கருத் தாலே"—தேவாரம்.

அடைத்திடக் கண்டு சண்பை ஆண்டகை யாரும் அஞ்சொல்
தொடைத்தமி ழாளி யாரும் தொழுதெழத் தொண்டர் ஆர்த்தார்

---

ருஅச. "தாயினும் நல்ல சங்கரன்"—அப்பர்: தூங்கிட - ததும்பிப் பொழிய. ருஅரு. மின்புரை - மின்னலைப்போன்ற.

ருஅசு. நிறம்......நீர் - ஒளி வீசும் மணிக்கதவம் திறக்கவும் அடைக்கவும் (வழக்கம் பெற்று) நிலவ, (அக்கதவை அடியேன்) திறந்தபடி (தாங்கள்) அடைக்கப் பாடியருளுங்கள்.

பா - ம்—*நீக்கவும்.

*புடைப்பொழிந் திழிந்த தெங்கும் பூமழை புகலி வேந்தர்
நடைத்தமிழ்ப் பதிக மாலை நிரம்பிட நவின்று போற்றி.  ருஅஅ

அத்திரு வாயில் தன்னில் அற்றைநாள் தொடங்கி நேரே
மெய்த்திரு மறைகள் போல மேதினி புக்குப் போற்ற
வைத்தெதிர் வழக்கஞ் செய்த வரம்பிலாப் பெருமை யோரைக்
கைத்தலங் குவித்துத் தாழ்ந்து வாழ்ந்தது கடல்சூழ் வையம்.  ருஅகூ

அருமறை யான வெல்லாம் அகலிரு விசும்பில் ஆர்த்துப்
பெருமையின் முழங்கப் பஞ்ச நாதமும் பிறங்கி ஓங்க
இருபெருந் தகையோர் தாமும் எதிரெதிர் இறைஞ்சிப் போந்து
திருமடங் களின்முன் புக்கார் செழும்பதி விழவு கொள்ள.  ருகூ0

வேதங்கள் எண்ணில் கோடி மிடைந்துசெய் பணியை மிக்க
ஏதங்கள் நம்பால் நீப்பார் இருவருஞ் செய்து வைத்தார்
நாதங்கொள் வடிவாய் நின்ற நதிபொதி சடையார் செய்ய
பாதங்கள் போற்று மேலோர் பெருமையார் †பகரு நீரார்.  ருகூக

திருமறை நம்பர் தாம்முன் பருள்செய்த அதனைச் செப்பும்
ஒருமையில் நின்ற தொண்டர் தம்பிரா ஞர்பால் ஒக்க
வரும்அருட் செய்கை தாமே வகுத்திட வல்லோர் என்றால்
பெருமறை யுடன்மெய்த் தொண்டர்க் கிடையீடு பெரிதா மன்றே.

---

ருஅஅ. புடை - பக்கங்களில்.

ருஅகூ. வேதங்கள் நேர்முகத்தில் நின்று ஆண்டவனைப் பூசித்துத் திருக் கதவை அடைத்தன. இப்பொழுது அவ்வடைப்பு நீங்கினமையால், அவ்வேதங் களைப்போல உலகோரும் நேர்நின்று ஆண்டவனைப் போற்றவைத்த பெருமை யுடையார் என்க.

ருகூ0. தேவதுந்துபி ஐந்தும் மிக்கு முழங்க.

ருகூக. வேதங்கள் எண்ணில்கோடி நெருங்கி அரிதில் செய்யவல்ல பணியை இவ்விருவரும் எளிதில் செய்தார் என்றபடி. நம்பால் ஏதங்கள் நீப் பார் - நம்மிடத்துள்ள (உயிர்களிடத்துள்ள) குறைபாடுகளை நீக்க வல்லவர்கள் (பிள்ளையாரும் அரசும்). "ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே"—அப்பர்.

ருகூஉ. ஆண்டவன் அருளிய வேதத்துக்கும் இத்தொண்டர் அருளிய வேதத்துக்கும் வேற்றுமையின்மை குறிக்கப்பட்டது. இவ்வொற்றுமையால் ஆண்டவன்றன் அருட்செயல்களை இத்தொண்டரும் ஆற்றவல்லார் என்பது அறிவிக்கப்பட்டது. "எனதுரை தனதுரையாக நீறணிந் தேறுகந் தேறிய நிமலன்"—சம்பந்தர்: இலம்பையங்கோட்டூர். க. "ஆண்டவன் அருளிய

பா - ம்—*புடைத்திடப் பொழிந்த. †பகரற் பாலார்.

இவ்வகை திரும றைக்காட் டிறையவர் அருளை யுன்னி
மெய்வகை தெரிந்த வாக்கின் வேந்தர்தாந் துயிலும் போதில்
மைவளர் கண்டர் சைவ வேடத்தால் வந்து "வாய்மூர்
அவ்விடை யிருத்தும் அங்கே வா"என் றங் கருளிப் போக. ருகூங

கண்டஅப் போதே கைகள் குவித்துடன் கடிது செல்வார்
மண்டிய காத லோடு மருவுவார் போன் றுங் காணர்
எண்டிசை நோக்கு வாருக் கெய்துவார் போல எய்தா
அண்டர்தம் பிரானர் தம்பின் போயினர் ஆர்வத் தோடும். ருகூச

அங்கவர் ஏகச் சண்பை ஆண்டகை யாரும் "அப்பர்
*எங்குற்ற" தென் று கேட்ப "எய்தினர் திருவாய் மூரில்
பொங்கிய காத லால்"என் றுரைத்திடப் "போன தன்மை
சங்கையுற் றென்கொல்" என்று தாமும்அங் கணையப் போந்தார்.

அங்கிலே அணைந்த போதில் அம்பிகை யுடனே கூட
மன்னிய ஆடல் காட்டத் "தளரிள வளரும்" பாடிச்
சென்னியால் வணங்கி வாய்மூர் அரசொடுஞ் சென் று புக்கங்
கின்னியல் புறமுன் கூடி இருவரும் போற்றி செய்தார். ருகூரு

"தளரிள வளரொன வுமைபாடத் தாளம் மிடவோர் தழல்வீசிக்
கிளரிள மணியர வரையார்த் தாடும்வேடக் கிறிமையார்
விளரிள முலையவர்க் கருள்நல்கி வெண்ணீ றணிந்தோர் சென்னிமேல்
வளரிள மதியமோ டிவராணீர் வாய்மூ ரடிகள் வருவாரே"—தேவாரம்.

நீடுசீர்த் திருவாய் மூரில் நிலவிய சிவனர் தம்மைப்
பாடுசொற் பதிகந் தன்னற் பரவிஅப் பதியில் வைகிக்

---

வேதத்தையே அருளும் மெய்த்தொண்டராகிய பிள்ளையார்க்கும் எனக்கும் இடையீடு வேற்றுமை பெரிதாம்" என்று அப்பர் கருதினரென்க. காரணம் திருநாவுக்கரசு சுவாமிகள் புராணம் : உஎடு. பார்க்க.

ருகூச. மண்டிய - நிறைந்து உந்திய. மருவுவார் - சமீபத்திலே விளங்குவார். எட்டுத் திக்கையும் சுழன்று சுழன்று நோக்கும் அப்பரெம்பெருமானர்க்கு. கிட்டே தோன்றுவார்போலத் தோன்றிக் கிட்டாதவராகிய தெய்வநாயகராகிய சிவபிரான் பின் அப்பர் தொடர்ந்து.

ருகூசு. திருஞான சம்பந்தர் சிவபிரானைக் காட்டத் திருநாவுக்கரசர் கண்டது முதலியவற்றைத் திருநாவுக்கரசு சுவாமிகள் புராணத்திற் காண்க.

ருகூஎ. தேடுமாமறைகள் கண்டார் திருமறைக்காடு - சிவபிரான் எழுந்தருளியுள்ள திருமறைக்காடு.

பா - ம்—*எங்குற்றரென்று.

கூடுமெய் அன்பு பொங்க இருவருங் கூடி மீண்டு
தேடுமா மறைகள் கண்டார் திருமறைக் காடு சேர்ந்தார். ௫௯௭

சண்பைநா டுடைய பிள்ளை தமிழ்மொழித் தலைவ ரோடு
மண்பயில் சீர்த்திச் செல்வ மாமறைக் காட்டு வைகிக்
கண்பயில் நெற்றி யார்தங் கழலிணை பணிந்து போற்றிப்
பண்பயில் பதிகம் பாடிப் பரவிஅங் கிருந்தார் அன்றே. ௫௯௮

இவ்வகை இவர்கள் அங்கண் இருந்தன ராக இப்பால்
செய்வகை இடையே தப்பும் தென்னவன் பாண்டி நாட்டு
மெய்வகை நெறியில் நில்லா வினைஅமண் சமயம் மிக்குக்
கைவகை முறைமைத் தன்மை கழியமுன் கலங்குங் காலை. ௫௯௯

தென்னவன் தானும் முன்செய் தீவினைப் பயத்தி னாலே
அந்நெறிச் சார்வு தன்னை அறமென நினைந்து நிற்ப
மன்னிய சைவ வாய்மை வைதிக வழக்க மாகும்
நன்னெறி திரிந்து மாறி நவைநெறி நடந்த தன்றே. ௬௦௦

பூழியர் தமிழ்நாட் டுள்ள பொருவில்சீர்ப் பதிகள் எல்லாம்
பாழியும் அருகர் மேவும் பள்ளிகள் பலவு மாகிச்
சூழிருட் †குழுக்கள் போலத் தொடைமயிற் பீலி யோடு
மூழிநீர் கையிற் பற்றி அமணரே யாகி மொய்ப்ப. ௬௦௧

பறிமயிர்த் தலையும் பாயும் பீலியும் தடுக்கும் மேனிச்
செறியுமுக் குடையு மாகித் திரிபவர் எங்கு மாகி
அறியும்அச் சமய நூலின் அளவினில் அடங்கிச் சைவ
நெறியினிற் சித்தஞ் செல்லா நிலைமையில் நிகழுங் காலை. ௬௦௨

௫௯௯. தென்னவன் (பாண்டியன்) பரம்பரையாகச் சைவ ஒழுக்கத்தில் நின்றவன். அவன் இடையே சமண ஒழுக்கத்தில் தலைப்படலானான். இதனால் "செய்வகை இடையே தப்புந் தென்னவன்" என்றார். தீவினை மிக்க அமண் சமயம் பரவி. கை......கழிய - ஒழுக்க முறைமையின் நல்லியல்பு எங்கும் ஒழிய. பாண்டி நாடு கலங்குங் காலை.

௬௦௦. நவை நெறி - குற்றம்பொருந்திய மார்க்கம்.

௬௦௧. பூழியர் - பாண்டியர்தம். பாண்டிநாட்டைத் தமிழ்நாடென்று இவ் வாசிரியர் பலவிடங்களில் கூறியுள்ளார். அருகர் - சமணர். பாழி - சமணர்கள் குகை. பள்ளி - சமணர்கள் கோயில். தொடை - கட்டிய. மூழி - கமண்டலம். அமணர் - சமணர்.

௬௦௨. மயிர் பறித்த தலையும். மேனி செறியும் - உடம்பில் கூடிய. இக் கோலங்கள் சமணமுனிவருடையன. இவைகளைத் திருஞான சம்பந்தர் பல விடங்களில் பத்தாம் பாடலில் அமைத்துப் பாடுவது வழக்கம்.

பா - ம்—*இவ்வா றிருந்தன ராக. †குழூஉக்கள்.

வரிசிலைத் தென்ன வன்தான் உய்தற்கு வளவர் கோமான்
திருவுயிர்த் தருளுஞ் செல்வப் பாண்டிமா தேவி யாரும்
குரைகழல் அமைச்ச ராங் குலச்சிறை யாரும் என்னும்
இருவர்தம் பாங்கு மன்றிச் சைவம்அங் கெய்தா தாக. சுOங

ஆங்கவர் தாங்கள் அங்கண் அரும்பெறல் தமிழ்நா டுற்ற
தீங்கினுக் களவு தேற்றாச் சிந்தையிற் பரிவு கொண்டே
ஓங்கிய சைவ வாய்மை ஒழுக்கத்தில் நின்ற தன்மை
பூங்கழற் செழியன் முன்பு புலப்படா வகைகொண் டுய்த்தார். சுOச

இந்நெறி யொழுகு கின்றார் ஏழுல குய்ய வந்த
மன்னிய புகலி வேந்தர் வைதிக வாய்மைச் சைவச்
செந்நெறி விளக்கு கின்றார் திருமறைக் காடு சேர்ந்த
நன்னிலை கன்னி நாட்டு நல்வினைப் பயத்தாற் கேட்டார். சுOரு

கேட்டஅப் பொழுதே சிந்தை கிளர்ந்தெழு மகிழ்ச்சி பொங்க
நாட்பொழு தலர்ந்த செந்தா மரைநகை முகத்த ராகி
வாட்படை அமைச்ச ரும் மங்கையர்க் கரசி யாரும்
சேட்படு புலத்தா ரேனுஞ் சென்றடி பணிந்தார் ஒத்தார். சுOசு

காதலால் மிக்கோர் தாங்கள் கைதொழுங் கருத்தி னாலே
"போதவிழ் சோலை வேலிப் புகலிகா வலனார் செய்ய
பாதங்கள் பணிமின்" என்று பரிசன மாக்கள் தம்மை
மாதவஞ் சுருதி செய்த மாமறைக் காட்டில் விட்டார். சுOஎ

---

சுOங. வரிசிலை - வளைந்த வில்லையுடைய. தென்னவன் (பாண்டியன்) உய்தற்காகச் சோழமன்னன் திருவென ஈன்ற செல்வப் பாண்டிமா தேவியா ராகிய மங்கையர்க்கரசியாரும்.

சுOச. தேற்றா சிந்தையில் பரிவு - தெளியாத மனதில் துன்பம். பூங் கழல் செழியன் - பொலிவு பொருந்திய கழலையணிந்த பாண்டியன்.

சுOரு. கன்னி நாட்டு - பாண்டி நாட்டின்.

சுOசு. சேட்படுபுலத்தாரேனும் - தூரத்தேயுள்ளவராயினும். மானதக் காட்சியால் சமீபத்திலுற்றவராய் ஞானசம்பந்தரின் சேவடியைப் பணிந்தார் என்றபடி.

சுOஎ. காதலால் மிக்கோர் - பிள்ளையார் பால் அன்பால் மேம்பட்ட மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும். போது அவிழ் - பூக்கள்மலர்ந்த. பரிசனமாக்கள் தம்மை - ஏவலாளர்களை. சுருதி (வேதங்கள்) மாதவஞ் செய்த.

ஆங்கவர் விடமுன் போந்த அறிவுடை மாந்தர் அங்கண்
நீங்கிவண் தமிழ்நாட் டெல்லை *பிற்பட நெறியின் ஏகி
ஞாங்கர்நீர் நாடும் காடும் நதிகளும் கடந்து வந்து
தேங்கமழ் கைதை நெய்தல் திருமறைக் காடு சேர்ந்தார். ௯௦௮

திருமறைக் காடு நண்ணிச் சிரபுர நகரில் வந்த
†அருமறைப் பிள்ளை யார்தாம் அமர்ந்தினி தருளுஞ் செல்வப்
பெருமடத் தணைய வந்து பெருகிய விருப்பில் தாங்கள்
வருமுறைத் தன்மை எல்லாம் வாயில்கா வலர்க்குச் சொன்னார்.

மற்றவர் சென்று புக்கு " ' வளவர்கோன் மகளார் தென்னர்
கொற்றவன் தேவி யாரும் குலச்சிறை யாரும் ஏவப்
பொற்கழல் பணிய வந்தோம் ' எனச்சிலர் புறத்து வந்து
சொற்றனர்" என்று போற்றித் தொழுதுவிண் ணப்பஞ் செய்தார்.

புகலிகா வலர்தாம் கேட்டுப் பொருவிலா அருள்முன் கூர
அகமலர்ந் "தவர்கள் தம்மை அழையும்"என் றருளிச் செய்ய
நகைமுகச் செவ்வி நோக்கி நற்றவ மாந்தர் கூவத்
தகவுடை மாந்தர் புக்குத் தலையினால் வணங்கி நின்றார். ௯௧௧

நின்றவர் தம்மை நோக்கி நிகரில்சீர்ச் சண்பை மன்னர்
மன்றலங் குழலி யாராம் மானியார் தமக்கும் மானக்
குன்றென நின்ற மெய்ம்மைக் குலச்சிறை யார்த மக்கும்
நன்றுதான் வினவக் கூறி நற்பதம் போற்று வார்கள். ௯௧௨

"கன்னிநா டமணர் தம்மால் கட்டழிந் திழிந்து தங்கள்
மன்னனும் அவர்கள் மாயத் தழுந்தமா தேவி யாரும்
கொன்னவில் அயில்வேல் வென்றிக் குலச்சிறை யாரும் கூடி
இந்நிலை புகலி வேந்தர்க் கியம்பும்"என் றிறைஞ்சி விட்டார். ௯௧௩

---

௯௦௮. ஞாங்கர் - அவ்விடத்தினின்றும். தேங்கமழ் கைதை நெய்தல் - மணம்வீசும் தாழை சூழ்ந்த நெய்தல் நிலத்திலுள்ள.

௯௧௦. அவர் - வாயில் காப்போர்.

௯௧௧. பொருவிலா - ஒப்பில்லாத. செவ்வி - அழகை; முகமலர்ந்த நிலையைப் பார்த்து என்றபடி. கூவ - கூப்பிட.

௯௧௨. மன்றல் - வாசனை பொருந்திய. மானியார் - மங்கையர்க்கரசியார். மானக்குன்றென - சிவநேய உறுதியில் மலையென. சண்பை மன்னர், இருவர்தம் நலத்தை வினவ ஆண்டுப் போந்தவர் அவர்தம் நலத்தைக் கூறி.

௯௧௩. கொன்னவில் அயில்வேல் - அச்சமூட்டும் கூரிய வேலேந்திய. இறைஞ்சி - (திசை நோக்கி) வணங்கி.

பா - ம்—*பிற்படும். †அருமறைத் தலைவனார் கமர்ந்திருந்.

வேறு

என்றவர்கள் விண்ணப்பஞ் செய்த பின்னர் ஏறூர்த்த சிவபெருமான் தொண்டர் எல்லாம் "நன்றுநமை ஆளுடைய நாதன் பாதம் நண்ணுத எண்ணில்அமண் குண்டர் தம்மை, வென்றருளி வேதநூல் நெறியே யாக்கி வெண்ணீறு வேந்தனையும் இடுவித் தங்கு, நின்ற செயல் சிவனடியார் செயலே யாக நினைந்தருள் வேண்டும்" என நின்று போற்ற. ருகச

மற்றவர்கட் கருள்புரிந்து பிள்ளை யாரும் வாகீச முனிவருடன் கூடச் சென்று, பெற்றம்உயர்த் தவர்பாதம் பணிந்து போந்து பெரிய திருக் கோபுரத்துள் இருந்து தென்னு, டுற்றசெயல் பாண்டிமா தேவி யாரும் உரிமைஅமைச் சரும்உரைத்து விட்ட வார்த்தை, சொற்றனிமன் னவருக்குப் புகலி மன்னர் சொல்லிஎழுந் தருளுதற் குத் துணிந்த போது. ருகரு

அரசருளிச் செய்கின்றார் "பிள்ளாய்! அந்த அமண்கையர் வஞ்சனைக்கோர் அவதி யில்லை, உரைசெய்வ துளதுறுகோள் தானுந் தீய எழுந்தருள உடன்படுவ தொண்ணு" தென்னப், "பரசுவது நம்பெருமான் கழல்கள் என்றால் பழுதணையா" தெனப்பகர்ந்து பரமர் செய்ய, விரைசெய்மலர்த் தாள்போற்றிப் புகலி வேந்தர் "வேயுறுதோளி"யை எடுத்து விளம்பி னாரே. ருகசு

"வேயுறு தோளி பங்கன் விடமுண்ட கண்டன் மிகநல்ல வீணை தடவி
மாசறு திங்கள் கங்கை முடிமே லணிந்தென் உளமே புகுந்த அதனால்
ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன்வியாழம் வெள்ளி சனிபாம் பிரண்டு முடனே
ஆசறு நல்ல நல்ல அவைநல்ல நல்ல அடியா ரவர்க்கு மிகவே"—**தேவாரம்.**

சிரபுரத்துப் பிள்ளையார் அருளிச் செய்த திருப்பதிகங் கேட்டதற்பின் திருந்து நாவுக், கரசும்அதற் குடன்பாடு செய்து தாமும் அவர்

---

ருகச. தொண்டரெலாம் பிள்ளையாரைப்போற்ற.

ருகரு. பெற்றம் உயர்த்தவர் - இடபக்கொடியுடைய சிவபெருமான். சொல் தனி மன்னவருக்கு - திருநாவுக்கரசருக்கு.

ருகசு. அவதி - எல்லை. உரைசெய்வதுளது - சொல்வது உண்டு; யாம் சொல்லவேண்டுவதுண்டு. உறுகோள்தானுந் தீய - பொருந்திய கிரகநிலைகளும் தீயனவாயுள்ளன. பரசுவது - போற்றுவது.

ருகள. புரமெரித்தார் திருமகனார் - பிள்ளையார். அப்பர் - அப்பரே. புனல் நாட்டில் - சோழநாட்டில். அரிதாங் கருத்தில் நேர்ந்தார் - கஷ்ட உள்ளத்

முன்னே எழுந்தருள அமைந்த போது, புரமெரித்தார் திருமகனார் "அப்பர்! இந்தப் புனல்நாட்டில் எழுந்தருளி இருப்பீர்" என்று, கரகம லங் குவித்திறைஞ்சித் தவிர்ப்ப வாக்கின் காவலருந் தொழுதரிதாங் கருத்தில் நேர்ந்தார். கூகஎ

வேறு

வேதம்வளர்க் கவுஞ்சைவம் விளக்கு தற்கும் வேதவனத் தரு மணியை மீண்டும் புக்குப், பாதமுறப் பணிந்தெழுந்து பாடிப் போற் றிப் பரசியருள் பெற்றுவிடை கொண்டு போந்து, மாதவத்து வாகீசர் மருத வண்ணம் வணங்கிஅருள் செய்துவிடை கொடுத்து மன்னும், காதலினால் அருமையுறக் கலந்து நீங்கிக் கதிர்ச்சிவிகை மருங்கணைந் தார் காழி †நாதர். கூகஅ

திருநாவுக் கரசரும்அங் கிருந்தார் இப்பால் திருஞான சம்பந்தர் செழுநீர் முத்தின், பெருநாமச் சிவிகையின்மீ தேறிப் பெற்றம் உயர்த்தவர்தாள் சென்னியின்மேற் பேணும் உள்ளத், தொருநாமத் தஞ்செழுத்தும் ஓதி வெண்ணீற் றொளிவிளங்குந் திருமேனி தொழு தார் நெஞ்சில், வருநாமத் தன்புருகுங் கடலாம் என்ன மாதவர்ஆர்ப் பொலிவையம் நிறைந்த தன்றே. கூகக

வேறு

பொங்கிஎழுந் திருத்தொண்டர் ‡போற்றெடுப்பார் நாற்றிசையும்
மங்கலதூ ரியந்தழங்க மறைமுழங்க மழைமுழங்கும்
சங்கபட கம்பேரி தாரைகா ளந்தாளம்
எங்கும்எழுந் தெதிரியம்ப இருவிசும்பு கொடிதூர்ப்ப. கூ௨௦

மலர்மாரி பொழிந்திழிய மங்கலவாழ்த் தினிதிசைப்ப
அலர்வாசப் புனற்குடங்கள் அணிவிளக்குத் தூபமுடன்

துடன் இசைந்தார். திருநாவுக்கரசு சுவாமிகள் புராணம்: உஅகூ,உஅஎ,உஅஅ. பார்க்க.

கூகக. பெருநாமம் - பெரும்புகழையுடைய. பெற்றம்......உள்ளத்து - இடபக்கொடியுடைய சிவபிரான் திருவடிகளைச் சிரசின்மீது விரும்பிக் கொள்ளும் உள்ளத்தில். உள்ளத்தால் பேணும் என்றபடி. ஒரு - ஒப்பற்ற. நெஞ்சில் வரு நாமத்து - நெஞ்சில் தோன்றும் சிவநாமத்தினிடத்து.

கூ௨௦. மங்கல தூரியம் தழங்க - மங்கல வாத்தியங்கள் கோஷிக்க. மழை முழங்கும் சங்கம் - மேகம்போல் முழங்கும் சங்கும். படகம் - ஒருவகைத் தோற் கருவி.

பா - ம்—*கருத்து. †நாடர். ‡போற்றிசைப்ப ; போற்றெடுப்ப.

நிலைநீடு தோரணங்கள் நிரைத்தடியார் எதிர்கொள்ளக்
கலைமாலை மதிச்சடையார் இடம்பலவுங் கைதொழுவார். ௬௨௧

தெண்டிரைசூழ் கடற்கானல் திருவகத்தி யான்பள்ளி
அண்டர்பிரான் கழல்வணங்கி அருந்தமிழ்மா மறைபாடிக்
கொண்டல்பயில் மணற்கோடு சூழ்கோடிக் குழகர்தமைத்
தொண்டருடன் தொழுதணைந்தார் தோணிபுரத் தோன்றலார். ௬௨௨

கண்ணார்ந்த திருநுதலார் மகிழ்ந்தகடிக் குளமிறைஞ்சி
எண்ணார்ந்த திருவிடும்பா வனமேத்தி எழுந்தருளி
மண்ணார்ந்த பதிபிறவும் மகிழ்ந்தரும்அன் பால்வணங்கிப்
பண்ணார்ந்த தமிழ்பாடிப் பரவியே செல்கின்றார். ௬௨௩

திருவுசாத் தானத்துத் தேவர்பிரான் கழல்பணிந்து
மருவியசெந் தமிழ்ப்பதிக *மலர்போற்றும் படிபாடி
இருவினையும் பற்றறுப்பார் எண்ணிறந்த தொண்டருடன்
பெருகுவிருப் பினராகிப் பிறபதியும் †பணிந்தருள்வார். ௬௨௪

கருங்கழிவே லைப்பாலைக் கழிநெய்தல் கடந்தருளித்
திருந்தியசீர்ப் புனல்நாட்டுத் தென்மேற்பால் திசைநோக்கி
மருங்குமிடை தடஞ்சாலி மாடுசெறி குலைத்தெங்கு
நெருங்கிவளர் கமுகுடுத்த நிறைமருத வழிச்சென்றார். ௬௨௫

சங்கங்கள் வயல்எங்கும் சாலிகழைக் கரும்பெங்கும்
கொங்கெங்கும் நிறைகமலக் குளிர்வாசத் தடம்எங்கும்
அங்கங்கே உழவர்குழாம் ஆர்க்கின்ற ஒலிஎங்கும்
எங்கெங்கும் மலர்ப்படுகர் இவைகழிய எழுந்தருளி. ௬௨௬

---

௬௨௧. கலை மாலை மதி - கலைகளையுடையதாய் மாலைக்காலத்தில் உதிக்கும் சந்திரனை யணிந்த.

௬௨௨. கடற்கானல் - கடற்கரையிலுள்ள. கொண்டல் பயில் மணற்கோடு - மேகம் தவழும் மணற்குன்று. திருக்கோடிக் குழகரை.

௬௨௩. திருக்கடிக்குளம் என்னும் திருப்பதியை. எண் ஆர்ந்த - அன்பர்கள் எண்ணம் நிறைந்த.

௬௨௫. கரும்......நெய்தல் - கரிய கழியையுடைய கடல் சார்ந்த நெய்தல் நிலத்தை. மருங்கு......கமுகு - பக்கங்களில் நெருங்கிய பெரிய செந்நெற் பயிர்களையும், அவைகளின் பக்கங்களில் நிறைந்த குலைகளையுடைய தென்னைகளையும், அவைகளைத் தொடர்ந்து நெருங்கி வளரும் பாக்கு மரங்களையும்.

௬௨௬. கொங்கு - தேன்; மகரந்தம். மலர்ப்படுகர் - மலர்கள் நிறைந்த பள்ளங்கள்; நீர் நிலைகளுமாம்.

பா - ம்—*மால். †பணிந்தணைந்தார்; பணிந்தணைவார்.

தடமெங்கும் புனல்குடையுந் தையலார் தொய்யில்நிறம்
இடமெங்கும் அந்தணர்கள் ஓதுகிடை யாகநிலை
மடமெங்குந் தொண்டர்குழாம் மனைஎங்கும் புனைவதுவை
நடமெங்கும் ஒலியோவா நற்பதிக ளவைகடந்து. ௬௨௭

நீர்நாடு கடந்தருளி நெடும்புறவிற் குறும்புதல்கள்
கார்நாடு முகைமுல்லைக் கடிநாறு நிலங்கடந்து
போர்நாடுஞ் சிலைமறவர் புன்*புலவைப் பிடைபோகிச்
சீர்நாடுந் தென்பாண்டி நன்னாடு சென்றணைவார். ௬௨௮

மன்றல்மலர்ப் பிறங்கல்மருங் கெறிந்துவரு நதிகள்பல
சென்றணைந்து கடந்தேறித் திரிமருப்பின் கலைபுணர்மான்
கன்றுதெறித் தனவுகைக்குங் கானஅதர் கடந்தணைந்தார்
கொன்றைநறுஞ் சடைமுடியார் மகிழ்ந்ததிருக் கொடுங்குன்றம். ௬௨௯

கோடுங்குன்றத் தினிதமர்ந்த கொழும்பவளச் செழுங்குன்றை
அடுங்குன்றம் உரித்தானை வணங்கிஅருந் தமிழ்பாடி

---

௬௨௭. தடம்......நிறம் - தடாகங்கள் எங்கும் நீராடும்பெண்களின் தொய்யிற்குழம்பு நிறம். தொய்யில் என்பது ஒருவித நீர்க்கொடி ; இக்கொடிபோன்ற கோலத்துக்குத் தொய்யில் என்பது வழங்கப்பட்டது ; பின்னே தொய்யில் என்பது கோலப்பொதுவுக்கு வழங்கப்படலாயிற்று. "நெய்தல் உறழக் காமர் - துணிநீர் மெல்லவற் றொய்யிலொடு மலர" ; "தொய்யில் பொறித்த சுணங்கெதிர் இளமுலை"—**மதுரைக் காஞ்சி**: 282 - 83 ; 415. "கரும்பையும் வல்லியையும் தோளிலே எழுதி, எனவே தொய்யிலொன்றையும் முலைமேல் எழுதி என்பதாயிற்று" "தொய்யில் முதலிய பத்திக்கீற்று" (சிலப்பதிகாரம் : உ. மனையறம். உ௯; ரு. இந்திர .௧௨௯. **அடியார்க்குநல்லார் உரை**). தொய்யில், சந்தனம் அகில் தேவதாரம் குங்குமம் முதலியவற்றின் குழம்பால் எழுதப்படுவது. ஓதுகிடை - வேதம் ஓதும் இடங்கள். யாகநிலை - யாகஞ் செய்யும் இடங்கள். வதுவை - கல்யாணம். ஓவா - நீங்காத.

௬௨௮. நீர்நாடு - சோழநாட்டை. நெடும் புறவில் - நெடிய முல்லை நிலத்து. குறும்...கடந்து - சிறிய தூறுகளில் கார்காலத்தை நாடும் முல்லை அரும்புகளின் மணங்கமழும் (அம்முல்லை) நிலங் கடந்து. குறும்புதல்களையும் கார்நாடும் முகை முல்லைகளையுமுடைய மணங்கமழும் நிலங்கடந்து என்னலுமாம். போர்...போகி - குறிஞ்சி நிலத்திடைச் சென்று.

௬௨௯. மன்றல்...எறிந்து - மணங்கமழும் மலர் மலைகளை இருபக்கமும் எறிந்து. திரி...அதர் - முறுக்கு வாய்ந்த கொம்பையுடைய ஆண்மான்களுடன் சேரும் பெண்மான்கள் ஈன்ற கன்றுகள் துள்ளிப் பாயுங் காட்டு வழியை.

பா - ம்—*புலை.

நெடுங்குன்றும் படர்கானும் நிறைநாடுங் கடந்துமதி
தொடுங்குன்ற மதில்மதுரைத் தொன்னகர்வந் தணைகின்றார். ௬௩0

வேறு

இங்கிவை இவர்வந் தெய்த எண்பெருங் குன்றம் மேவும்
அங்கிவை அமணர் தங்கட் கழிவுமுன் சாற்ற லுற்றுப்
பன்முறை வெருக்கொண் டுள்ளம் பதைப்பத்திக் கணுக்க ளோடும்
துன்னிமித் தங்கள் அங்கு நிகழ்ந்தன சொல்ல லுற்றும். ௬௩௧

பள்ளிகள் மேலும் மாடு பயில்அமண் பாழி மேலும்
ஒள்ளிதழ் அசோகின் மேலும் உணவுசெய் கவளங் கையில்
கொள்ளுமண் டபங்கள் மேலும் கூகையோ டாந்தை தீய
*புள்ளின மான தம்மிற் பூசலிட் டழிவு சாற்றும். ௬௩௨

பீலியும் தடுக்கும் பாயும் பிடித்தகை வழுவி வீழக்
கால்களுந் தடுமா றுடிக் கண்களும் இடமே ஆடி
மேல்வரும் அழிவுக் காக வேறுகா ரணமுங் காணா
மாலுழந் தறிவு கெட்டு மயங்கினர் அமணர் எல்லாம். ௬௩௩

௬௩0. அடுங்குன்றம் - யானையை. மதுரை - திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்: ௩௪. மதுரையான திருவிளையாடல் பார்க்க.

௬௩௧. எண்பெருங்குன்றம்: "அஞ்சனம் கொளஞ்சம் கோவத் தனம்திரிகூடம் காஞ்சி - குஞ்சர சையம் ஏம கூடமே விந்தம் என்னும் - மஞ்சிவர் வரைகள் எட்டும் வைகுறும் அமணர்"—பரஞ்சோதியார் திருவிளையாடற் புராணம்: ௨௨. யானை...எ. "பரங்குன் றொருவகம்பப் பாரம் பள்ளி - அருங்குன்றம் பேராந்தை யானை - இருங்குன்றம், என்றெட்டு வெற்பும் எடுத்தியம்ப வல்லார்க்குச் - சென்றெட்டு மோபிறவித் தீங்கு"; "எண்பெருங் குன்றாவன, யானைமலையும் நாகமலையும் நீலமலையும் சுணங்கமலையும் செப்புமலையும்......... வெள்ளிமலையுமென மதுரையைச் சூழ்ந்திருப்பன"—தக்கயாகப்பரணி: 218 உரை. "ஆனைமாமலை ஆதியாய இடங்களில்......"—திருஞான சம்பந்தர்: (மானினேர்). இப்புராணம் பாட்டு: அ௫௫. பார்க்க. வெருக்கொண்டு - தடுத்தாட்கொண்ட புராணம் பாட்டு: ககச. குறிப்புப் பார்க்க.

௬௩௨. பள்ளிகள் - கோயில்கள். மாடு பயில் அமண்பாழி - பக்கத்திலுள்ள சமணர்களின் குகைகள். அசோகு - அருகர்க்குரிய மரம். கூகை - கோட்டான். தீய புள்ளினம் - தீய பறவைக் கூட்டங்கள். பூசலிட்டு - கூச்சலிட்டு.

௬௩௩. "வானவன்......கண்ணிடன் ஆடலும்"—சிந்தாமணி 1156. கண் இடப்பக்கந் துடித்தல் தீமைக்கு அறிகுறி; மகளிர்க்காயின் நலமாம். மால் உழந்து - மயக்கத்தில் அழுந்தி.

பா - ம்—*புள்ளிவையான.

கந்தியர் தம்மில் தாமே கனன்றெழு கலாங்கள் கொள்ள
வந்தவா றமணர் தம்மில் மாறுகொண் டூறு செய்ய
முந்தைய உரையிற் கொண்ட பொறைமுதல் வைப்பும் விட்டுச்
சிந்தையிற் செற்றம் முன்னாந் தீக்குணத் தலைநின் றார்கள். ௬௩௪

இப்படி அமணர் வைகும் எப்பெயர்ப் பதியும் எய்தும்
ஒப்பில்உற் பாதம் எல்லாம் ஒருவரின் ஒருவர் கூறி
மெய்ப்படு தீக்க னவும் வேறுவே றாகக் கண்டு
செப்புவான் புறத்து ளோருந் தென்னவன் மதுரை சேர்ந்தார்.

அந்நகர் தன்னில் வாழ்வார் புறம்புநின் றணைவார் கூடி
மன்னவன் தனக்குங் கூறி மருண்டஉள் ளத்த ராகித்
துன்னிய அழுக்கு மெய்யில் தூசிலார் பலரும் ஈண்டி
"இன்னன கனவு கண்டேம்" எனஎடுத் தியம்ப லுற்றார். ௬௩௬

"சீர்மலி அசோகு தன்கீழ் இருந்தநந் தேவர் மேலே
வேரொடு சாய்ந்து வீழக் கண்டனம் அதன்பின் னாக
ஏர்கொள்முக் குடையுந் தாமும் எழுந்துகை நாற்றிப் போக
ஊருளோர் ஓடிக் காணக் கண்டனம்" என்று ரைப்பார். ௬௩௭

---

௬௩௪. கந்தியர் - ஆரியாங்கனைகள் ; தவமகளிர்கள் ; கணவனுள்ளபோதே துறப்போர். கனன்று எழு கலாங்கள்-கொதித்து எழும் கலகங்கள். வந்தவாறு - நேர்ந்தபடியே. அந்தவாறு எனக்கொண்டு அப்படியே எனக் கொள்வோரு முளர். முந்தைய உரையில் - தங்கள் பழையநூல்களில். பொறை முதலியர் உறுதிப் பொருள்களைக் கைவிட்டு. பொறை முதலியன சமண சமயநூல் களில் மிகச் சிறப்பாக அறிவுறுத்தப்படுவன. செற்றம் முன்னும் - கோபம் முதலிய. பொறைமுதலிய நற்குணங்களை விடுத்துச் செற்றம் முதலிய தீக் குணங்களைக் கொள்வது, ஆதிநாதர் கண்ட சமணசமயத்துக்கு மாறுபட்டு ஒழுகுவதாகும்.

௬௩௫. உற்பாதம் - தீக்குறிகள். செப்புவான் - சொல்லும் பொருட்டு.

௬௩௬. அம்மதுராபுரியில் வாழ்வோரும் அதற்குப் புறத்தினின்றும் வந் தோரும் கூடி. அழுக்கடைந்த உடலில் ஆடையில்லாதவர் ; இவர் திகம்பரர் எனப்படுவர். இவரல்லாத சமணர் சுவேதாம்பரர் எனப்படுவர். திகம்பரம் சுவே தாம்பரம் என்பன ஜைனத்தில் இடைக்காலத்தில் தோன்றிய பிரிவுகள். தென் னாட்டிற் பரவியது திகம்பர ஜைனமென்க. இதுபற்றி வந்துழி வந்துழிக் கூறு வன். ஈண்டி - ஒன்றுசேர்ந்து.

௬௩௭. நந்தேவர் - அருகர்; ஆதிநாதர். ஏர்கொள் - அழகிய. கைநாற்றி - கைகளைத் தொங்கவிட்டு ; வீசி. அருகர் முக்குடையுடன் தாமும் எழுந்துபோக.

பா - ம்—*பொறைமுத லவையும்.

"குண்டிகை தகர்த்துப் பாயும் பீறியோர் குரத்தி ஓடப்
பண்டிதர் பாழி நின்றும் கழுதைமேற் படர்வார் தம்பின்
ஒண்டொடி இயக்கி யாரும் †உளையிட்டுப் புலம்பி ஓடக்
கண்டனம்" என்று சொன்னார் கையறு கவலை யுற்றார். ௬௩௮

"கானிடை நட்டம்ஆடுங் கண்ணுதல் தொண்டர் எல்லாம்
மீனவன் மதுரை தன்னில் விரவிடக் கண்டோம்" என்பார்
கோனவன் தானும் வெய்ய ‡கொழுந்தழல் §முழுகக் கண்டோம்
ஆனபின் எழவுங் கண்டோம் அதிசயம் இதுவாம்" என்பார். ௬௩௯

"மழவிடை இளங்கன் றொன்று வந்துநங் கழகந் தன்னை
உழறிடச் சிதறி ||ஓடி ஒருவருந் தடுக்க அஞ்சி
விழவொரு புகலு மின்றி மேதினி தன்னை விட்டு
நிழலிலா மரங்க ளேறி நின்றிடக் கண்டோம்" ||என்பார். ௬௪௦

"ஆவதென் பாவி காள்!இக் கனத்திறம் அடிகள் மார்க்கு
மேவிய தீங்கு தன்னை விளைப்பது திடமே" என்று
நோவுறு மனத்த ராகி நுகர்பெரும் பதமுங் கொள்ளார்
"யாவது செயல்"என் றெண்ணி இடருழன் றழுங்கி னார்கள். ௬௪௧

அவ்வகை $அவர்கள் எல்லாம் அங்கிலை மையர்க ளாகச்
சைவநன் மரபில் வந்த தடமயில் மடமென் சாயல்
பைவளர் அரவே ரல்குல் பாண்டிமா தேவி யார்க்கும்
மெய்வகை அமைச்ச னார்க்கும் விளங்குநன் னிமித்தம் மேன்மேல்.

---

௬௩௮. குண்டிகை...ஓட - கமண்டலத்தை உடைத்துப் பாயையுங் கிழித்து ஒரு பெண்குரு (குருபத்தினி) ஓட. இயக்கியாரும்-தவப்பெண்களும் ; யக்ஷிதேவதைகளுமாம். உளை - ஊளை. கையறுகவலை - மீளாக்கவலை ; செயலற்றுக்கவலை.

௬௩௯. கானிடை - சுடுகாட்டில். மீனவன் - பாண்டியன். விரவிட - வந்து சேர.

௬௪௦. மிகவும் இளமை வாய்ந்த இடபக்கன்று ஒன்று. கழகந்தன்னை - கல்விச்சாலையை. உழறிட - சுழன்று சுழன்று மிதிப்ப. விழ ஒரு புகலும் இன்றி - அடைதற்கு ஒரு புகலிடமுமின்றி.

௬௪௧. பாவிகாள் ஆவதென்? அடிகள்மார்க்கு - சமணமுனிவர்கட்கு. பதமும் - உணவும். சமணர்கள் அழுங்கினார்கள்.

௬௪௨. பை - பாம்பின்படம். பாண்டிமா தேவியாரைச் சிறப்பிக்குஞ் சொற்கள் மகிழ்ச்சியையுங் கிளர்ச்சியையுங் குறிப்பன.

பா - ம்—*தம்மில். †உழைவிட்டு. ‡கொடுந்தழல். §மூழ்கக் ; மூளக். ||ஓட. ¶என்ன. $அம்மனர் எல்லாம்.

அளவிலா மகிழ்ச்சி காட்டும் அரும்பெரு நிமித்தம் எய்த
உளமகிழ் வுணருங் காலை உலகெலாம் உய்ய வந்த
வளரொளி ஞானம் உண்டார் வந்தணைந் தருளும் வார்த்தை
கிளர்வுறும் ஓகை கூறி வந்தவர் மொழியக் கேட்டார். ௬௪௩

அம்மொழி விளம்பி னோர்க்கு வேண்டுவ அடைய நல்கி
மெய்ம்மையில் விளங்கு காதல் விருப்புறு வெள்ளம் ஓங்கத்
தம்மையும் அறியா வண்ணங் கைமிக்குத் தழைத்துப் பொங்கி
விம்மிய மகிழ்ச்சி கூர மேவிய சிறப்பின் மிக்கார். ௬௪௪

மங்கையர்க் கரசி யார்பால் வந்தடி வணங்கி நின்ற
கொங்கலர் தெரிய லாராங் குலச்சிறை யாரை நோக்கி
"நங்கள்தம் பிரானு ராய ஞானபோ னகர்முன் பெய்தி
'இங்கெழுந் தருள உய்ந்தோம்' எனஎதிர் கொள்ளும்" என்றார். ௬௪௫

மன்றலங் குழலி னாரை வணங்கிப்போந் தமைச்ச னாரும்
வென்றிவேல் அரச னுக்கும் "உறுதியே" என†வி ரைந்து
பொன்திகழ் மாட வீதி மதுரையின் புறத்துப் போகி
இன்தமிழ் மறை‡தந் தாரை எதிர்கொள எய்துங் காலை. ௬௪௬

"அம்புய மலராள் போல்வார் ஆலவாய் அமர்ந்தார் தம்மைக்
கும்பிட வேண்டும்" என்று கொற்றவன் §தனக்குங் கூறித்
தம்பரி சனங்கள் சூழத் தனித்தடை யோடுஞ் சென்று
நம்பரை வணங்கித் தாழும் நல்வர வேற்று நின்றார். ௬௪௭

வேறு

திருநிலவு மணிமுத்தின் சிவிகையின்மேற் சேவித்து
வருநிலவு தருமதிபோல் வளரொளிவெண் குடைநிழற்றப்

---

௬௪௩. கிளர்வுறும் ஓகை கூறி - எழுச்சிதரும் உவகைச் செய்தியைக் கூறிக்கொண்டு.

௬௪௪. அடைய நல்கி - நிரம்பக் கொடுத்து. கைமிக்கு - வரம்பு கடந்து.

௬௪௫. கொங்கு அலர் தெரியலாராம் - மணங்கமழும் மாலையணிந்தவராகிய.

௬௪௬. மன்றலங்குழலினாரென்பது அரசனுக்கு உறுதிப் பயனைத் தருவதை உணர்த்துவது.

௬௪௭. அம்புய மலராள் போல்வார் - தாமரைமலரிலுள்ள திருமகளைப் போன்றவராகிய மங்கையர்க்கரசியார். தனித்தடையோடும் - தனியான காவலுடன். நம்பரை - ஞானசம்பந்தரை.

பா - ம்—*கூர. †நினைந்து. ‡சொற் றுரை. §தனக்குக்.

பெருகொளிய திருநீற்றுத் தொண்டர்குழாம் பெருகிவர
அருள்பெருக வருஞானத் தமுதுண்டார் அணைகின்றார். ௬௪௮

துந்துபிகள் முதலாய தூரியங்கள் கிளராமே
அந்தணராம் மாதவர்கள் ஆயிரமா மறையெடுப்ப
வந்தெழுமங் கலநாத மாதிரமுட் படமுழங்கச்
செந்தமிழ்மா ருதம்எதிர்கோண் டெம்மருங்குஞ் சேவிப்ப. ௬௪௯

பண்ணியவஞ் சனைத்தவத்தாற் பஞ்சவனாட் டிடைப்பரந்த
எண்ணில்அமண் எனும்பாவ இருஞ்சேனை இரிந்தோட
மண்ணுலக மேயன்றி வானுலகுஞ் செய்தபெரும்
புண்ணியத்தின் படைஎழுச்சி போலெய்தும் பொலிவெய்த. ௬௫௦

துன்னுமுழு உடற்றுகளால் சூழும்உணர் வினிற்றுகளால்
அன்னெறியிற் செறிந்தடைந்த அமண்மாசு கழுவுதற்கு
மன்னியொளிர் வெண்மையினால் தூய்மையினால் வழுதியர்தம்
கன்னிநாட் டிடைக்கங்கை அணைந்ததெனுங் கவின்காட்ட. ௬௫௧

பானல்வயல் †தமிழ்நாடும் பழிநாடும் படிபரந்த
மானமிலா அமணென்னும் வல்லிருள்போய் மாய்வதனுக்
கானபெரு கொளிப்பரப்பால் அண்டமெலாங் கொண்டதொரு
ஞானமணி விளக்கெழுந்து வருவதெனை நலம்படைப்ப. ௬௫௨

புரசைவயக் கடகளிற்றுப் பூழியர்வண் தமிழ்நாட்டுத்
தரைசெய்தவப் பயன்விளங்கச் சைவநெறி தழைத்தோங்க
உரைசெய்திருப் பேர்பலவும் ஊதுமணிச் சின்னமெலாம்
"பரசமயக் கோளரிவந் தான்" என்று பணிமாற. ௬௫௩

௬௪௮. திருநிலவு - அருட்செல்வம் பொலியும்; அழகு விளங்கும் எனினுமாம். நிலவு தரு மதிபோல் - நிலவு பொழியும் சந்திரனைப்போல. நிழற்ற - நிழலைச் செய்ய.

௬௪௯. துந்துபி முதலிய வாத்திய ஒலிகள் எழாவண்ணம். மாதிரம் - திக்குகள். செந்தமிழ் மாருதம் - செவ்விய இனிய தென்றல்; செந்தமிழ் அனைய தென்றல், செந்தமிழாகிய தென்றல் என்னலுமாம்; செந்தமிழ் நாட்டின் காற்றும் செந்தமிழ்மயம் போலும்.

௬௫௦. பஞ்சவன் நாட்டிடை - பாண்டியநாட்டில். இரிந்து - கெட்டு.

௬௫௧. உடலிலும் அழுக்கு உணர்விலும் அழுக்கு என்றபடி. வழுதியர்தம் - பாண்டியருடைய.

௬௫௨. பானல் - கருங்குவளை மலர்களையுடைய.

௬௫௩. புரசை......பூழியர் - கழுத்திற் கயிற்றையும் வெற்றியையும் மதத்தையுங்கொண்ட யானைகளையுடைய பாண்டியரின். பணிமாற - ஊத.

பா - ம்—*வளர். †தமிழ்நாடு.

வேறு

இப்பரி சணையுஞ் சண்பையர் பெருமான் எழுந்தரு ளும்பொழு திசைக்கும், ஒப்பில்நித் திலப்பொற் றனிப்பெருங் காளம் உலகுய்ய ஒலித்தெழும் ஓசை, செப்பரும் பெருமைக் குலச்சிறை யார்தஞ் செவி நிறை அமுதெனத் தேக்க, அப்பொழு தறிந்து தலத்தின்மேற் பணிந்தே அளப்பருங் களிப்பின ரானார். ௬௫௪

அஞ்சலி குவித்த கரங்களுந் தலைமேல் அணைந்திடக் கடிதுசென் றணைவார், நஞ்சணி கண்டர் தந்திரு மகனா ருடன்வரு நற்றவக் கடலை, நெஞ்சினில் நிறைந்த ஆர்வம்முன் செல்லக் கண்டுநீள் நிலத்திடைத் தாழ்ந்து, பஞ்சவர் பெருமான் மந்திரித் தலைவர் பாங்குற அணைந்து முன் பணிந்தார். ௬௫௫

நிலமிசைப் பணிந்த குலச்சிறை யாரை நீடிய பெருந்தவத் தொண்டர், பலரும்முன் அணைந்து வணங்கிமற் றவர்தாம் படியின் நின் றெழாவகை கண்டு, "மலர்மிசைப் புத்தேள் வழிபடும் புகலி வைதிகச் சேகரர் பாதம், குலவி*அங் கணைந்தார் தென்னவன் அமைச் சர் குலச்சிறை யார்" எனக் கூற. ௬௫௬

சிரபுரச் செல்வர் †அவருரை கேட்டுத் திருமுகத் தாமரை மலர்ந்து, விரவொளி முத்தின் சிவிகைநின் றிழிந்து விரைந்துசென் றவர்தமை அணைந்து, கரகம லங்கள் பற்றியே எடுப்பக் கைதொழு தவரும்முன் நிற்ப, வரமிகு ‡தவத்தார் அவரையே நோக்கி வள்ளலார் மதுரவாக் களிப்பார். ௬௫௭

"செம்பியர் பெருமான் குலமக ளார்க்குந் திருந்திய சிந்தையீர்! உமக்கும், நம்பெரு மான்தன் திருவருள் பெருகும் நன்மைதான் வாலிதே" என்ன, வம்பலர் அலங்கல் மந்திரி யாரும் மண்மிசைத் தாழ்ந்தடி வணங்கித், தம்பெருந் தவத்தின் பயன்அனை யார்க்குத் தன்மையாம் நிலையுரைக் கின்றார். ௬௫௮

---

௬௫௫. நற்றவக்கடலை - அடியார் கூட்டத்தை.

௬௫௬. படியினின்று - பூமியினின்றும். மலர்......சேகரர் - பிரமன் வழி பட்ட சீகாழியில் தோன்றிய பிள்ளையாரின். குலவி - சூழ்ந்து.

௬௫௮. சிவ பத்தியிற் சிறந்த இருவருள் பெண்ணுக்கு முதன்மை தந்து விசாரிப்பதை யோர்க. வாலிதே - நன்றுளதோ. வம்பு அலர் அலங்கல் - மணங்கமழும் மலர்மாலை யணிந்த. தங்கள் தவப்பயன் திருஞான சம்பந்தர் என்றபடி.

பா - ம்—*இங்கணைந்தார். †அவ்வுரை, இவருரை. ‡தவத்தால்.

"சென்றகா லத்தின் பழுதிலாத் திறமும் இனிஎதிர் காலத்தின் சிறப்பும், இன்றெழுந் தருளப் பெற்றபே றிதனால் எற்றைக்குந் திருவரு ளுடையேம், நன்றியில் நெறியில் அழுந்திய நாடும் நற்றமிழ் வேந்தனும் உய்ந்து, வென்றிகொள் திருநீற் றொளியினில் விளங்கும் மேன்மையும் படைத்தனம்" என்பார். ௬௫௯

இங்கெழுந் தருளும் பெருமைகேட் டருளி எய்துதற் கரியபே றெய்தி, மங்கையர்க் கரசி யாரு"நம் முடைய வாழ்வெழுந் தருளிய" தென்றே, "அங்குநீர் எதிர்சென் றடிபணி வீர்என் றருள்செய்தார்" எனத்தொழு தார்வம், பொங்கிய களிப்பால் மீளவும் பணிந்து போற்றினார் புரவலன் அமைச்சர். ௬௬0

ஆங்கனம் போற்றி அடிபணிந் தவர்மேல் அளவிலா அருள்புரி கருணை, தாங்கிய மொழியால் தகுவன விளம்பித் தலையளித் தரு ளும்அப் பொழுதில், ஓங்கெயில் புடைசூழ் மதுரைதோன் றுதலும் உயர்தவத் தொண்டரை நோக்கி, "ஈங்குநம் பெருமான் திருவால வாய்மற் றெம்மருங் கினி?"தென வினவ. ௬௬௧

அன்பராய் அவர்முன் பணிந்தசீர் அடியார் அண்ணலார் அடியிணை வணங்கி, முன்புநின் றெடுத்த கைகளாற் காட்டி "முருகலர் சோலைகள் சூழ்ந்து, மின்பொலி விசும்பை அளக்குநீள் கொடிசூழ் வியன்நெடுங் கோபுரந் தோன்றும், என்பணி அணிவார் இனிதமர்ந் தருளுந் திருவால வாய்இது" என்றார். ௬௬௨

---

௬௫௯. சென்ற கால நிலையையும் வருங்கால நிலையையும் சிறப்புறக் குறித்து நிகழ் காலநிலையைக் குறியாமையான், நிகழ்கால நிலை சீர்குலைந்துள்ள மையை ஊகித்துணர்தல்வேண்டும். பெரியோர்கள் தீமையைக் குறியாது விடுப்பது வழக்கம். பெருமான் எழுந்தருளிய படியால் நிகழ்கால நிலையும் சீர்பட்டது என்பது "எற்றைக்கும்" என்பதால் விளங்குகிறது. நன்றியில் நெறி - சமண மார்க்கம்.

௬௬0. மங்கையர்க்கரசியார் பணித்ததைச் சிறப்பாகக் குறிப்பிட்டு மீண்டுங் குலச்சிறையார் பிள்ளையாரைப் பணிந்தாரென்க. புரவலன் - பாண்டிமன்னர்.

௬௬௧. ஆங்கனம் - அத்தன்மையாக. அடிபணிந்தவர்மேல் - தமது அடி பணிந்த குலச்சிறையார் மீது. தலை அளித்து - முதற்கை கொடுத்து ; தலையளி செய்து என்னலுமாம். எயில் - மதில். திருவாலவாய் - மதுரையில் சோம சுந்தரக் கடவுள் எழுந்தருளியுள்ள திருக்கோயிலின் பெயர். ஆலவாய் என்றும், வாலவாய் என்றும் வழங்குதலுண்டு ; வாயை முன்னிட்டது ஆலவாய்; வாலை முன்னிட்டது வாலவாய். திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் : ௭௭. திருவாலவாயான திருவிளையாடல் பார்க்க.

பா - ம்—*நீற்றின் ஒளியினில்.

தொண்டர்தாம் போற்றிக் காட்டிடக் கண்டு துணைமலர்க் கரங் குவித் தருளி, மண்டுபே ரன்பால் மண்மிசைப் பணிந்து "மங்கையர்க் கரசி"என் றெடுத்தே, "எண்டிசை பரவும் ஆலவா யாவ திதுவே" என் றிருவர்தம் பணியும், கொண்டமை சிறப்பித் தருளிநற் பதிகம் பாடினார் குவலயம் போற்ற. ௬௬௩

"மங்கையர்க் கரசி வளவர்கோன் பாவை வரிவளைக் கைம்மட மானி
பங்கயச் செல்வி பாண்டிமா தேவி பணிசெய்து நாள்தொறும் பரவப்
பொங்கழ லுருவன் பூதநா யகனால் வேதமும் பொருள்களும் அருளி
அங்கயற் கண்ணி தன்னொடும் அமர்ந்த ஆலவா யாவதும் இதுவே"

"வெற்றவே அடியார் அடிமிசை வீழும் விருப்பினன் வெள்ளைநீ றணியும்
கொற்றவன் தனக்கு மந்திரி யாய குலச்சிறை குலாவிநின் றேத்தும்
ஒற்றைவெள் விடையன் உம்பரார் தலைவன் உலகினில் இயற்கையை யொழிந்திட்
டற்றவர்க் கற்ற சிவனுறை கின்ற ஆலவா யாவதும் இதுவே"—தேவாரம்.

பாடிய பதிகம் பரவியே வந்து பண்புடை அடியவ ரோடும்
தேடுமால் அயனுக் கரியவர் மகிழ்ந்த திருவால வாய்மருங் கணைந்து
நீடுயர் செல்வக் கோபுரம் இறைஞ்சி நிறைபெரு விருப்புடன் புக்கு
மாடுசூழ் வலங்கொண் டுடையவர் கோயில் மந்திரி யாருடன் புகுந்தார். ௬௬௪

வேறு

ஆலும் அங்கணர் ஆலவாய் அமர்ந்தினி திருந்த
கால கண்டரைக் கண்களின் பயன்பெறக் கண்டு
நீள வங்கெழும் அன்பினால் பணிந்தெழ நிறையார்
மீள வும்பல முறைநில முறவிழுந் தெழுவார். ௬௬௫

அங்கம் எட்டினும் ஐந்தினும் அளவின்றி வணங்கிப்
பொங்கு காதலின் மெய்ம்மயிர்ப் புளகமும் பொழியும்
செங்கண் நீர்தரும் அருவியும் திகழ்திரு மேனி
எங்கு மாகிநின் றேத்தினார் புகலியர் இறைவர். ௬௬௬

"நீல மாமிடற் றாலவா யான்"என நிலவு
மூல மாகிய திருவிருக் குக்குறள் மொழிந்து

௬௬௪. மாடுசூழ் வலம் கொண்டு - பக்கமாக வலம் வந்து. உடையவர் - சோம சுந்தரக் கடவுள்

௬௬௬. அட்டாங்க பஞ்சாங்க நமஸ்காரஞ் செய்து. பக்கம் : ௧௨௧. பார்க்க. "உள்ளந்தான் நின்று உச்சி அளவும் நெஞ்சாய் உருகாதால் உடம்பெல்லாங் கண்ணாய் அண்ணா, வெள்ளந்தான் பாயாதால்"—திருவாசகம் : திருச்சதகம் - சுட்டறுத்தல்: ௧.

சில மாதவத் திருத்தொண்டர் தம்மொடுந் திளைத்தார்
சாலு மேன்மையில் தலைச்சங்கப் புலவனார் தம்முன். ௬௬௭

“நீல மாமிடற் றால வாயிலான், பால தாயினார் ஞாலம் ஆள்வரே”—தேவாரம்.

சேர்த்தும் இன்னிசைப் பதிகமுந் திருக்கடைக் காப்புச்
சாத்தி நல்லிசைத் தண்டமிழ்ச் சொன்மலர் மாலை
பேர்த்தும் இன்புறப் பாடிவெண் பிறையணி சென்னி
மூர்த்தி யார்கழல் பரவியே திருமுன்றில் அணைய. ௬௬௮

பிள்ளை யார்எழுந் தருளிமுன் புகுதும்அப் பொழுது
வெள்ள நீர்பொதி வேணியார் தமைத்தொழும் விருப்பால்
உள்ள ணைந்திட எதிர்செலா தொருமருங் கொதுங்கும்
தெள்ளு நீர்விழித் தெரிவையார் சென்றுமுன் பெய்த. ௬௬௯

மருங்கின் மந்திரி யார்பிள்ளை யார்கழல் வணங்கிக்
கருங்கு ழற்கற்றை மேற்குவி *கைத்தளி ருடையார்
“பருங்கை யானைவாழ் வளவர்கோன் பாவையார்” என்னப்
பெருங்க ளிப்புடன் விரைந்தெதிர் பிள்ளையார் அணைந்தார். ௬௭0

தென்ன வன்பெருந் தேவியார் சிவக்கன்றின் செய்ய
பொன்ன டிக்கம லங்களிற் பொருந்தமுன் விழுந்தார்
மன்னு சண்பையர் வள்ளலார் மகிழ்சிறந் தளிக்கும்
இன்ன ருட்பெருஞ் சிறப்பொடுந் திருக்கையால் எடுத்தார். ௬௭௧

ஞான போனகர் எதிர்தொழு தெழுந்தநற் றவத்து
மானி யார்மனக் கருத்துமுற் றியதென மதித்தே
பானலங் கண்கள்நீர் மல்கப் பவளவாய் குழறி
“யானும் என்பதி யுஞ்செய்த தவமென்கொல்!” என்றார். ௬௭௨

யாழின் †மென்மொழி யார்மொழிந் தெதிர்கழல் வணங்கக்
காழி வாழவந் தருளிய கவுணியர் பிரானும்

---

௬௬௭. திளைத்தார் - அன்பில் ஈடுபட்டு மூழ்கினார். தலைச்சங்கப் புலவனார் - திரிபுரமெரித்த விரிசடைக் கடவுளாகிய சொக்கநாதர்.

௬௬௮. பேர்த்தும் - பெயர்த்தும் ; மீண்டும்.

௬௬௯. தெரிவையார் - மங்கையர்க்கரசியார்.

௬௭0. பாண்டியன் மனைவியார் எனக் கூறாது, சோழன்மகள் என்று கூறியது கருதற்பாலது.

௬௭௧. சிவக்கன்று என்பது, ஞானசம்பந்தப் பெருமானை மங்கையர்க்கரசியார் கண்டதும், அம்மையார் மாட்டுத் தாய்மை மீக்கூர்ந்து விளங்கியதைக் குறிப்பாக உணர்த்துவது. “இலைபடர்ந்த பொய்கை இடத்தழுதல் கண்டு - முலைசுரந்த அன்னையோ முன்னின்—நிலைவிளம்பக் - கொங்கை சுரந்த அருட் கோமகளோ சம்பந்தா - இங்குயர்ந்தா ளார்சொல் எனக்கு”—சிவப்பிரகாசர்.

பா - ம்—*கைம்மலருடையார். †மோ.

"சூழு மாகிய பரசம யத்திடைத் தோண்டு
வாழு நீர்மையீர்! உமைக்காண வந்தனம்" என்றார். ௬எ௩

இன்ன வாறருள் செய்திடத் தொழுதடி வீழ்ந்தார்
மன்னு மந்திரி யார்வரு திறமெலாம் மொழிய
அன்ன மென்நடை யார்தமக் கருள்செய்து போக்கித்
துன்னு மெய்த்தொண்டர் சூழவந் தருளும்அப் பொழுது. ௬எ௪

செல்வம் மல்கிய திருவால வாயினிற் பணிசெய்
தல்கு தொண்டர்கள் பிள்ளையார் மருங்கணைந் திறைஞ்சி
"மல்கு கார்அமண் இருள்கெட ஈங்குவந் தருள
எல்லை யில்தவஞ் செய்தனம்" எனஎடுத் திசைத்தார். ௬எ௫

அத்தி ருத்தொண்டர் தங்களுக் கருள்முகம் அளித்து
மெய்த்த காதலின் அவரொடும் புறத்தினில் மேவிச்
சித்தம் இன்புறும் அமைச்சனார் திருமடங் காட்டப்
பத்தர் போற்றிடப் பரிசனத் தொடும்இனி தமர்ந்தார். ௬எ௬

பரவு காதலிற் பாண்டிமா தேவியார் அருளால்
விரவு நண்பொடு குலச்சிறை யார்விருந் தளிப்பச்
சிரபு ரத்துவந் தருளிய செல்வர்அங் கிருந்தார்
இரவி மேற்கடல் அணைந்தனன் எல்லிவந் தணைய. ௬எஎ

வழுதி மாநகர் அதனிடை மாமறைத் தலைவர்
பழுதில் சீரடி யாருடன் பகல்வரக் கண்ட
கழுது போல்வருங் காரமண் குண்டர்கள் கலங்கி
இழுகு மெய்யிருட் கிருளென ஈண்டினர் ஒருபால். ௬எஅ

அங்கண் மேவிய சமணர்கள் பிள்ளையார் அமர்ந்த
துங்க மாமடந் தன்னிடைத் தொண்டர்தங் குழாங்கள்
எங்கும் ஓதிய திருப்பதி கத்திசை எடுத்த
பொங்கு பேரொலி செவிப்புலம் புக்கிடப் பொறாராய். ௬எ௯

---

௬எ௪. வருதிறமெல்லாம் - சமணர்களால் நேர்ந்த வகைகளையெல்லாம்.

௬எ௫. அல்கு - வசிக்கும்.

௬எ௬. மடத்தின் பெயர் **வாகீச சுவாமி மடம்** என்று பெரும்பற்றப் புலியூர் நம்பியாரும், பரஞ்சோதியாரும் தாம் தாம் பாடிய திருவிளையாடற் புராணங்களிற் குறிப்பிட்டுள்ளார்.

௬எஎ. இரவி - சூரியன். எல்லி - இரவு.

௬எஅ. கழுது - பேய். 'மெய் இருட்கு இருள் இழுகும் என ஒருபால் ஈண்டினர் - உடல் இருளுக்குப் பூத இருளும் பின் வாங்குமாறு ஓரிடத்திற் சேர்ந்தனர் ; இழுது மையிருட்கு என்னும் பாடத்துக்குக் குழம்பாகிய மையிருட்கு எனக் கொள்க.

மற்றிவ் *வான்பழி மன்னவன் மாறனை எய்திச்
சொற்றும் என்றுதஞ் சூழ்ச்சியும் ஒருபடி துணிவார்
கொற்ற வன்கடைக் காவலர் முன்சென்று குறுகி
"வெற்றி வேலவர்க் கெங்களை விளம்புவீர்" என்றார். சுஅ0

வாயில் காவலர் மன்னவன் தனைஎதிர் வணங்கி
"ஆய மாகிவந் தடிகள்மார் அணைந்தனர்" என்ன
†ஏயி னுன்அணை வாரென அவருஞ்சென் றிசைத்தார்
பாயி னுல்உடல் மூடுவார் பதைப்புடன் புக்கார். சுஅக

புக்க போதவர் அழிவுறு மனத்திடைப் புலர்ச்சி
மிக்க தன்மையை வேந்தனுங் கண்டெதிர் வினவி
"ஒக்க நீர்திரண் டணைவதற் குற்றதென்?" என்னத்
"தக்க தல்லதீங் கடுத்தது சாற்றுதற்" கென்றார். சுஅஉ

"ஆவ தேல்நமக் கடுத்தது கூறுவீர்" என்று
காவ லன்பரிந் துரைத்தலுங் கார்அமண் கையர்
"மாவ லாய்!உன்தன் மதுரையிற் சைவவே தியர்தாம்
மேவ லால்இன்று கண்டுமுட் டியாம்"என்று விளம்ப. சுஅந

என்று கூறலும் "கேட்டுமுட் டியானும்"என் றியம்பி
"நன்று நல்லறம் புரிந்தவா நான்"என்று நகுவான்

---

சுஅ0. வான்பழி - பெரும்பழியை. மாறனை - பாண்டியனை. சொற்றும் - சொல்லுதும்.

சுஅக. ஆயமாகி - கூட்டமாகி. அடிகள்மார் - சமணமுனிவரர்கள். ஏயினுன் அணைவார் என - (கொள்கையில் அவர்களுடன்) ஒத்தவனுகிய மன்னன் (அவர்கள்) அணைவார்களாக என்று சொல்ல; ('அடிகள்மார்களா!' என்று) விரைந்தவனுகிய மன்னன்...; (அவர்கள்) விரைவால்......; அவரும் (அடிகள் மார்களிடம்) சென்று (மன்னவன் சொற்றதை) இசைத்தார்.

சுஅஉ. புலர்ச்சி - வாட்டம். தகுதியல்லாததாகிய தீங்கு நேர்ந்தது.

சுஅந. மாவலாய் - யானையேறி நடாத்துவதில் வல்ல பாண்டியனே; மா குதிரையுமாம். கண்டுமுட்டு - ஜைனபரிபாஷை; கண்டதால் விளையும் முட்டு; காலையில் வைதிக சைவர்களைக் காண நேரின், சமணர்கள் அக் காட்சியை ஒருவிதத் தீட்டாகக் கருதுவது வழக்கம். இதன் பொருட்டு அவர்கள் நோன்பிருந்து கழுவாய் தேடுதலுமுண்டு.

சுஅச. கேட்டு முட்டு - இதுவும் ஜைனபரிபாஷை; கேட்டதால் விளையும் முட்டு. 'கண்டுமுட்டு', 'கேட்டு முட்டு' முதலியன இடைக்கால ஜைனர்

பா - ம்—*வான்பதி. †ஏயினர்.

கன்றும் உள்ளத்த னாகி"அக் கண்ணுதல் அடியார்
இன்றிம் மாநகர் அணைந்ததென் அவர்கள்யார்?" என்றான். ௬அச

"மாலை வெண்குடை வளவர்சோ ணாட்டுவண் புகலிச்
சூல பாணிபால் ஞானம்பெற் றான்என்று சுருதிப்
பாலன் அன்பர்தங் குழாத்தொடும் பணிமுத்தின் சிவிகை
மேல ணைந்தனன் எங்களை வாதினில் வெல்ல." ௬அரு

என்று கூறுவார் இத்திறம் முன்புதாம் அறிந்த
தொன்றும் அங்கொழி யாவகை உரைத்தலுந் தென்னன்
†மன்ற லம்பொழிற் சண்பையார் வள்ளலார் நாமம்
சென்று தன்செவி நிறைத்தலுஞ் செயிர்த்துமுன் சொல்வான். ௬அகு

"மற்ற மாமறை மைந்தன்இம் மருங்கணைந் தானேல்
உற்ற செய்தொழில் யாதுசெய் கோம்?"என உரைப்பச்
செற்றம் மீக்கொண்ட சிந்தையும் செய்கையும் உடையோர்
கொற்ற மன்னவன் மொழிக்கெதிர் குறித்துரை செய்வார். ௬அஎ

"வந்த அந்தணன் தன்னைநாம் வலிசெய்து போக்கும்
சிந்தை யன்றிஅச் சிறுமறை யோன்உறை மடத்தில்
வெந்த ழற்பட விஞ்சைமந் திரத்தொழில் விளைத்தால்
இந்த ‡நன்னக ரிடத்திரான் ஏகும்"என் றிசைத்தார். ௬அஅ

வேறு

"ஆவதொன் றிதுவே யாகில் அதனையே விரைந்து செய்யப்
போவ"தென் றவரைப் போக்கிப் §பொய்ம்மையைப் பொருளாக் கொண்டான்
யாவதும் உரையா டாதே எண்ணத்திற் கவலை யோடும்
பூவணை அமளி புக்கா பொங்கெழில் தேவி சேர்ந்தாள். ௬அகூ

---

கள் கொண்டவை. இவை எவ்வுயிரையுந் தன்னுயிர்போல்கருதும் பேரறத்தைக் கொண்ட ஆதிஜைனத்தின் கொள்கையல்ல. கன்றும் - கறுவும்; கோபிக்கும்; பகைக்கும். ௬அரு. சுருதிப்பாலன் - வேதியச் சிறுவன் ஒருவன்.

௬அகு. செயிர்த்து - வெகுண்டு.

௬அஅ. வீடுசேர்ந்தோரை வலிந்து துரத்தத் தமிழ் மன்னன் ஒருப்படானாதலின், " வலி செய்து போக்குஞ் சிந்தையன்றி" என்றார். தீயிடற்கும் மன்னன் ஒருப்படானாதலின், " வெந்தழற்பட விஞ்சை மந்திரத் தொழில் விளைத்தால்......" என்றார்.

௬அகூ. மந்திரத் தீ சுடாதென மன்னன் கருதினன் போலும்.

பா - ம்—*அங்கொளியா. †மன்றலார். ‡மாநகர். §பொய்பொரு ளாகக்கொண் டான். ¶புகுந்தனர் தேவியாரும்.

மன்னவன் உரைப்ப தின்றி இருக்கமா தேவி யார்தாம்
"என்னுயிர்க் குயிராய் உள்ள இறைவ! நீ உற்ற தென்னோ?
முன்னுள மகிழ்ச்சி இன்றி முகம்புலர்ந் திருந்தாய் இன்று
பன்னிய உள்ளத் தேய்தும் பருவரல் அருள்செய்" என்றார். சுசுO

தேவியார் தம்மை நோக்கித் தென்னவன் கூறு கின்றான்
"காவிநீள் கண்ணி னாய்! கேள் காவிரி நாட்டில் மன்னும்
தாவில்சீர்க் கழும லத்தான் சங்கரன் அருள்பெற் றிங்கு
மேவினான் அடிகள் மாரை வாதினில் வெல்ல" என்று. சுசுக

"வெண்பொடி பூசுந் தொண்டர் விரவினார் அவரை எல்லாம்
கண்டுமுட் டடிகள் மார்கள் கேட்டுமுட் டியானுங் காதல்
வண்டுணைத் துதைந்த கோதை மானியே! இங்கு வந்த
பண்புமற் றிதுவே யாகும் பரிசுவே றில்லை" என்றான். சுசுஉ

மன்னவன் உரைப்பக் கேட்டு மங்கையர்க் கரசி யார்தாம்
"நின்னிலை இதுவே யாகில் நீடிய தெய்வத் தன்மை
அன்னவர் வாது செய்தால் வென்றவர் பக்கஞ் சேர்ந்து
துன்னுவ துறுதி யாகுஞ் சுழிவுறேல் மன்ன!" என்றார். சுசுரு

சிந்தையிற் களிப்பு மிக்குத் திருக்கழு மலத்தார் வேந்தன்
வந்தவா றெம்மை யாள எனவரு மகிழ்ச்சி யோடும்
கொந்தலர் குழலார் போதக் குலச்சிறை யார்அங் கெய்த
இந்தநன் மாற்றம் எல்லாம் அவர்க்குரைத் திருந்த பின்னர். சுசுச

கோற்றவன் அமைச்ச னாருங் கைதலை குவித்து நின்று
"பெற்றனம் பிள்ளை யார்இங் கணைந்திடப் பெறும்பே" றென்பார்
"இற்றைநாள் ஈசன் அன்பர் தம்மைநாம் இறைஞ்சப் பெற்றோம்
மற்றினிச் சமணர் செய்யும் வஞ்சனை அறியோம்" என்றார். சுசுரு

மானியார் தாமும் அஞ்சி †"வஞ்சகப் புலையர் தாங்கள்
ஈனமே புரிய வல்லார் செய்வதென் நாம்"என் றெண்ணி

---

சுசுO. பன்னிய - பல பொருளை ஆராய்ந்த. பருவரல் - வருத்தம்.

சுசுஉ. துதைந்த கோதை மானியே - நெருங்கிய பூமாலை யணிந்த மங்கையர்க்கரசியே.

சுசுச. கொந்து மலரணிந்த கூந்தலையுடைய மங்கையர்க்கரசியார் செல்ல. மாற்றம் - வார்த்தைகள்.

பா - ம்—*வேண்டி. †வஞ்சரிப்.

"ஞானசம் பந்தர் தம்பால் நன்மையல் லாது செய்யும்
ஊனம்வந் தடையில் யாமும் உயிர்துறந் தொழிவ" தென்றார். சுகசு

இவர்நிலை இதுவே யாக இலங்குவேல் தென்ன னான
அவன்நிலை அதுவாம் அந்நாள் அருகர்தந் நிலையா தென்னில்
தவமறைந் தல்ல செய்வார் தங்கள்மந் திரத்தால் செந்தீ
சிவநெறி வளர்க்க வந்தார் திருமடஞ் சேரச் செய்தார். சுகஎ

வேறு

ஆதி மந்திரம் அஞ்செழுத் தோதுவார் நோக்கும்
மாதி ரத்தினும் மற்றைமந் திரவிதி வருமே
பூதி சாதனர் மடத்தில்தாம் புனைந்தசா தனைகள்
சாதி யாவகை கண்டமண் குண்டர்கள் தளர்ந்தார். சுகஅ

தளர்ந்து மற்றவர் தாஞ்செய்த தீத்தொழில் சரியக்
கிளர்ந்த அச்சமுன் கெழுமிய கீழ்மையோர் கூடி
"விளங்கு நீள்முடி வேந்தனீ தறியின்நம் மேன்மை
உளங்கொ ளான்நமர் விருத்தியும் ஒழிக்கும்"என் றுணர்வார்.

"மந்தி ரச்செயல் வாய்த்தில மற்றினிச் செய்யும்
புந்தி யாவதிங் கிது"எனப் பொதிதழல் கொடுபுக்
கந்தண் மாதவர் திருமடப் புறத்தயல் இருள்போல்
வந்து தந்தொழில் புரிந்தனர் வஞ்சனை மனத்தோர். எ00

---

சுகசு. அக்காலத்துச் சமணர் தமது அறத்தை விடுத்துப் பொறாமை மேலீட்டான் இழிதுறைகளிலும் இறங்கி இடர் செய்வோராயிருந்தமையான் "புலையர்" என்றும், "ஈனமேபுரிய வல்லார்" என்றுங் கூறினார்.

சுகஎ. தென்னவன் நிலையாவது, கேட்டுமுட்டால் வாட்டமுற்றிருந்த தென்க. அல்ல - அறமல்லாதன ; பாவச்செயல்கள்.

சுகஅ. மாதிரத்தினும் - திக்கினும். மந்திரவிதி வருமோ. எல்லாவற்றிற்கும் ஆதியாகிய பஞ்சாக்கர மந்திரத்தை ஓதுவோர் நோக்கும் திக்கையும், மற்றை விதி மந்திரங்கள் எட்டிப் பாரா என்றபடி.

சுகக. சரிய - விழ ; பயன்படாதாக. கிளர்ந்த - எழுந்த. கெழுமிய - பொருந்திய. விருத்தியும் - **திருநாவுக்கரசு சுவாமிகள் புராணம்:** அ உ. குறிப்புப் பார்க்க.

எ00. புந்தியாவது - சூழ்ச்சியாவது ; கீழ்மைப்புத்தியால் செய்யத் துணிவது. அந்தண் - அழகிய தண்மை வாய்ந்த. திருமடத்தின் புறப்பக்கத்தில். சிவனடியாருள்ள மடத்தில் தீவைத்தனர் என்று சொல்லவும் ஆசிரியர்க்கு மனம்

பா - ம்—*நன்மையல் லாதசெய்ய.

திருமடப்புறச் சுற்றினில் தீயபா தகத்தோர்
மருவு வித்தஅத் தொழில்வெளிப் படுதலும் மறுகிப்
பரிச னத்தவர் பதைப்பொடுஞ் சிதைத்தது நீக்கி
அருகர் இத்திறம் புரிந்தமை தெளிந்துசென் றணைவார். எ0க

கழும லப்பதிக் கவுணியர் கற்பகக் கன்றைத்
தொழுது நின்றமண் குண்டர்செய் தீங்கினைச் சொன்ன
பொழுது "மாதவர் துயிலும்இத் திருமடப் புறம்பு
பழுது செய்வதோ! பாவிகாள்!" எனப்பரிந் தருளி. எ0உ

"என்பொ ருட்டவர் செய்ததீங் காயினும் இறையோன்
அன்ப ருக்கெய்து மோ"என்று பின்னையும் அச்சம்
முன்பு றப்பின்பு முனிவுற முத்தமிழ் விரகர்
"மன்பு ரக்கும்மெய் முறைவழு" எனமனங் கொண்டார். எ0ங

வெய்ய தீங்கிது வேந்தன்மேற் றெனும்விதி முறையால்
"செய்ய னேதிரு வாலவாய்" எனுந்திருப் பதிகம்
"சைவர் வாழ்மடத் தமணர்கள் இட்டதீத் தழல்போய்ப்
பைய வேசென்று பாண்டியற் கா"கெனப் பணித்தார். எ0ச

"செய்ய னேதிரு வாலவாய் மேவிய, ஐய னேஅஞ்சல் என்றருள் செய்எனைப்
பொய்ய ராம்அம ணர்கொளு வுஞ்சுடர், பைய வேசென்று பாண்டியற் காகவே"
—தேவாரம்.

வேறு

பாண்டிமா தேவியார் தமது பொற்பில் பயிலுநெடு மங்கலநாண் பாது காத்தும், ஆண்டகையார் குலச்சிறையார் அன்பி னாலும் அரசன் பால் அபராதம் உறுத லாலும், மீண்டுசிவ நெறியடையும் விதியி

எழாமையான் "வந்துதங் தொழில் புரிந்தனர்" என்றார். மெய்ப்பொருள் நாயனார் புராணம்: கரு; ஏனாதிநாயனார் புராணம்: சo; திருநாவுக்கரசு சுவாமிகள் புராணம்: கஉச. பார்க்க.

எ0க. மருவுவித்த அத்தொழிலாவது மடத்தைச் சுற்றித் தீவைத்தது. பரிசனத்தவர் மறுகி - அடியார்கள் அங்குமிங்கும் ஓடி; (மறுகுதல் - பலமுறை திரிதல்; சுழலுதல்).

எ0ங- முனிவுற - (சமணர்கள் செய்கையில்) வெறுப்புண்டாக. மன்...... என - மன்னவன் ஆட்சி முறைமையின் தவறுதலென்று.

எ0ச. பையவே - மெல்லவே.

எ0டு. "பையவே" என்றதற்குக் காரணம் இப்பாட்டில் சொல்லப்பட்டிருத்தல் காண்க. பொற்பில் பயிலும் - அழகுடன் பொலியும்.

றும் வெண்ணீறு வெப்பகலப் புகலி வேந்தர், தீண்டியிடப் பேறு டைய ரூத லாலும் தீப்பிணியைப் "பையவே செல்க" என்றார். எ0௫

வேறு

திருந்தி சைப்பதி கத்தொடை திருவால வாயின்
மருந்தி னைச்சண்பை மன்னவர் புனைந்திட அருளால்
விரிந்த வெந்தழல் வெம்மைபோய்த் தென்னனை மேவிப்
பெருந்த றற்பொதி வெதுப்பெனப் பெயர்பெற்ற தன்றே. எ0௬

செய்ய மேனியர் திருமக னார்உறை மடத்தில்
நையும் உள்ளத்த ராய்அமண் கையர்தாம் நணுகிக்
கையி னால்எரி இடவுடன் படும்எல்லி கரப்ப
வெய்ய வன்குணக் கடலிடை எழுந்தனன் மீது. எ0எ

இரவு பாதகர் செய்ததீங் கிரவிதன் மரபில்
குரவ ஓதியார் குலச்சிறை யாருடன் கேட்டுச்
"சிரபு ரப்பிள்ளை யாரைஇத் தீயவர் நாட்டு
வரவ ழைத்தநாம் மாய்வதே" என மனம் மயங்கி. எ0அ

பெருகும் அச்சமோ டாருயிர் பதைப்பவர் பின்பு
திரும டப்புற மருங்குதீ தின்மையிற் றெளிந்து
"கருமு ருட்டமண் கையர்செய் தீங்கிது கடைக்கால்
வருவ தெப்படி யாம்"என மனங்கொளும் பொழுது. எ0௯

"அரச னுக்குவெப் படுத்த"தென் றருகுகஞ் சுகிகள்
உரைசெ யப்பதைத் தொருதனித் தேவியார் புகுத
விரைவும் அச்சமும் மேற்கொளக் குலச்சிறை யாரும்
வரைசெய் பொற்புய மன்னவன் மருங்குவந் தணைந்தார். எக0

---

எ0௬. பதிகம்......புனைந்திட - பதிகமாகிய மாலையைச் சோமசுந்தரக் கடவுள்மீது அணிய. அருளால் - அக்கடவுளின் அருளால். வெதுப்பு - வெப்ப நோய்; சுரநோய்.

எ0எ. எரியிடுதற்கு உடன்பட்டிருந்த இரவு ஒழியச் சூரியன் கீழ்க்கடலில் எழுந்தான்.

எ0அ. இரவிதன் மரபில் குரவ ஓதியார் - சூரியன் மரபில் (சோழ மரபில்) தோன்றிய குரவம்பூவணிந்த கூந்தலையுடைய மங்கையர்க்கரசியார்.

எ0௯. திருமடப் புறத்தயல் என்றார் முன்னும். கையர் - கீழ்மக்கள். கடைக்கால் வருவது - இதன் முடிவில் விளைவது; (கடைக்கால் - முடியும் வேளையில்).

எக0. அருகு கஞ்சுகிகள் - வெம்மையால் அருகிய அல்லது அருகிலிருந்த சட்டையிட்ட காவற்காரர்கள்; தூதர்கள்.

பா - ம்—*மதி.

வேந்த னுக்குமெய் விதிர்ப்புற வெதுப்புறு வெம்மை
காந்து வெந்தழற் *கதுமென மெய்யெலாங் கவர்ந்து
போந்து மாளிகைப் புறத்துநின் றார்களும் புலர்ந்து
தீந்து போம்படி எழுந்தது விழுந்துடல் திரங்க. எகக

உணர்வும் ஆவியும் ஒழிவதற் கொருபுடை ஒதுங்க
அணைய லுற்றவர் அருகுதூ ரத்திடை அகலப்
புணர்இ ளங்கத லிக்குருத் தோடுதளிர் புடையே
கோணரி னுஞ்சுருக் கொண்டவை நுண்துக ளாக. எகஉ

மருத்து நூலவர் தங்கள்பல் கலைகளில் வகுத்த
திருத்த குந்தொழில் யாவையுஞ் செய்யவும் மேன்மேல்
உருத்தெ ழுந்தவெப் புயிரையும் உருக்குவ தாகக்
†கருத்தொ ழிந்துரை மறந்தனன் கௌரியர் தலைவன். எகங

ஆன வன்பிணி நிகழ்வுழி அமணர்கள் எல்லாம்
மீன வன்செயல் கேட்டலும் வெய்துயிர்த் தழிந்து
"போன கங்குலிற் புகுந்ததின் விளைவுகொல்" என்பார்
மான முன்தெரி யாவகை மன்னன்மாட் டணைந்தார். எகச

வேறு

‡மால்பெருக்குஞ் சமண்கையர் மருங்கு சூழ்ந்து வழுதிநிலை கண்டழிந்து வந்த நோயின், மூலநெறி அறியாதே தங்கள் தெய்வ மொழிநவில்மந் திரங்கொண்டு முன்னும் பின்னும், பீலிகொடு தைவ

---

எகக. மெய் விதிர்ப்புற - உடல் நடுங்க. வெதுப்புறு வெம்மை - வெதுப் புஷ்ணம் ; வெஞ்சுரம். காந்து - எரியும். கதுமென - கடுக. திரங்க - உலர.

எகஉ. ஒரு புடை - ஒரு பக்கம். அருகு அணையலுற்றவர். இளம் வாழைக் குருத்தும், நீர்க்குளிரி முதலிய பசுந்தளிரும் வெந்து சாம்பராகும்படி என்ற படி. "வரிசை நீடிய ராடக மாளிகைப் புறத்து-விரைகொள் சோலையும் வெஞ் சுருட் கொண்டது வெப்பால் - கருதி மெல்லணைப் படுத்ததண் கதலியங் குருத் தும் - சருகெ ழுந்தது புலர்ந்தன சந்தனம் பனிநீர்"—திருவாலவாயுடையார் **திருவிளையாடற் புராணம்** : ௩எ. வெப்புத் தீர்த்த திருவிளையாடல். சக.

எகங. கௌரியர் தலைவன் - பாண்டியன்.

எகச. மீனவன் - பாண்டியன். வெய்துயிர்த்து - பெருமூச்சு விட்டு. போன......என்பார் - சென்ற இரவு நாம் நிகழ்த்திய தீமையால் விளைந்தது இதுவோ என்று சொல்வோராய்.

எகரு. வழுதி - பாண்டியனது. வெருவல் - அச்சம்.

**பா - ம்**—*கனமென. †கருத்தழிந்து. ‡மால்பெருகுஞ்.

ருதற் கெடுத்த போது பிடித்தபீ லிகள்பிரம்பி னோடுந் தீந்து, மேலெ ரியும் பொரிசிதறி வீழக் கண்டு வெப்பின்அதி சயம்நோக்கி *வெருவல் மிக்கார். எகரு

கருகியமா சுடையாக்கைத் தீயோர் தங்கள் கைத்தூங்கு குண் டிகைநீர் தெளித்துக் "காவாய், அருகனே! அருகனே!" என்றென் றோதி அடல்வழுதி மேல்தெளிக்க அந்நீர் பொங்கிப், பெருகும்எரி தழல்சொரிந்த நெய்போ லாகிப் போர்த்தும்ஒரு தழல்அதன்மேற் பெய் தாற் போல, "ஒருவரும்இங் கிருமருங்கும் இராது போம்"என் றமணை ரைப்பார்த் துரைத்தரசன் உணர்வு சோர்ந்தான். எகசு

வேறு

பாண்டிமா தேவி யாரும் பயம்எய்தி அமைச்சர் பாரம்
பூண்டவர் தம்மை நோக்கிப் "புகலியில் வந்து நம்மை
ஆண்டுகொண் டவர்பால் கங்குல் †அமணர்தாஞ் செய்த தீங்கு
மூண்டவா றினைய தாகி முடிந்ததோ?" என்று கூற. எகஎ

கோற்றவன் அமைச்ச னாரங் குலச்சிறை யாருந் தாழ்ந்து
"மற்றிதன் கொடுமை இந்த வஞ்சகர் மதில்கள் மூன்றும்
செற்றவர் அன்பர் தம்பால் செய்ததீங் கரசன் பாங்கு
முற்றிய திவர்கள் தீர்க்கின் முதிர்வதே யாவ" தென்பார். எகஅ

இருதிறத் தவரும் மன்னன் ‡எதிர்பணிந் "திந்த வெப்பு
வருதிறம் புகலி வந்த வள்ளலார் மதுரை நண்ண
அருகர்கள் §செய்த தீய அனுசிதம் அதனால் வந்து
பெருகிய திதற்குத் தீர்வு பிள்ளையார் அருளே" என்று. எகக

"காயமும் மனமும் மாசு கழுவுதல் செய்யார் செய்யும்
மாயமும் இந்த நோயை வளர்ப்பதே வளர்வெண் திங்கள்
மேயவே ணியர்பால் ஞானம் பெற்றவர் ¶விரும்பி நோக்கில்
தீயஇப் பிணியே அன்றிப் பிறவியுந் தீரும்" என்றார். எஉ0

மீனவன் செவியி னூடு மெய்யுணர் வளிப்போர் கூற
ஞானசம் பந்தர் என்னும் நாமமந் திரமுஞ் செல்ல

எகசு. அடல் வழுதி - வெற்றியுடைய பாண்டியன்.

எகக. அனுசிதம் - தகுதியில்லாதது ; உசிதமல்லாதது.

பா - ம்—*வெருவில். †அமணர்கள். ‡எதிர்பணிந் தெய்த. §இரவு செய்த அனு சிதம். ¶விரைந்து நோக்கத்.

ஆனபோ தயர்வு தன்னை அகன்றிட அமண ராகும்
மானமில் லவரைப் பார்த்து மாற்றமொன் றுரைக்க லுற்றான். எஉக

மன்னவன் அவரை நோக்கி "மற்றிவர் செய்கை எல்லாம்
இன்னவா றெய்து நோய்க்கே ஏதுவா யின" என் றெண்ணி
"*மன்னிய சைவ நீதி மாமறைச் சிறுவர் வந்தால்
அன்னவர் அருளால் இந்நோய் அகலுமேல் அறிவேன்" †என்றான்.

என்றுமுன் கூறிப் பின்னும் "யானுற்ற பிணியைத் தீர்த்து
வென்றவர் பக்கஞ் சேர்வன் விரகுண்டேல் அழையும்" என்ன
அன்றவர் உவகை பொங்கி ஆர்வத்தால் அணையை நூக்கிச்
சென்றநீர் வெள்ளம் போலும் காதல்வெள் ளத்திற் செல்வார். எஉங

பாயுடைப் பாத கத்தோர் திருமடப் பாங்கு செய்த
தீவினைத் தொழிலை நோக்கி உள்ளழி திருவுள் ளத்தான்
மேயஅத் துயரம் நீங்க விருப்புறு விரைவி னோடு
நாயகப் பிள்ளை யார்தம் நற்பதம் பணிவா ராகி. எஉச

மன்னவன் இடும்பை தீர மற்றவன் பணிமேற் கொண்டே
அன்னமென் னடையி னாரும் அணிமணிச் சிவிகை ஏறி
மின்னிடை மடவார் சூழ வேற்படை அமைச்ச னாரும்
முன்அணைந் தேகச் ‡சைவ முதல்வனார் §மடத்தைச் சார்ந்தார். எஉரு

திருமடஞ் சாரச் சென்று "சேயரிக் கண்ணி னார்முன்
வருபரி இழிந்து நின்ற அமைச்சனார் வந்த பான்மை
சிரபுரப் பிள்ளை யார்க்கு விண்ணப்பஞ் செய்வீர்" என்னப்
பரிசனத் தவரும் புக்குப் பதம்அறிந் துணர்த்து கின்றார். எஉசு

"பாண்டிமா தேவி யாரும் பரிவுடை அமைச்ச னாரு
மீண்டுவந் தணைந்தார்" என்று விண்ணப்பஞ் செய்யச் சண்பை
ஆண்டகை யாரும் ¶"ஈண்ட அழையும்"என் றருளிச் செய்ய
மீண்டுபோந் தழைக்கப் புக்கார் விரைவுறும் விருப்பின் மிக்கார். எஉஎ

---

எஉக. அயர்வு (சோர்வு, வருத்தம்) சிறிது தன்னை விடுத்து அகன்றிட.

எஉஉ. நோய் அகலுமாயின் (அவர்-பிள்ளையார்-பெருமையை) அறிவேன்.

எஉங. என்று சமணர்கள் முன் கூறிப் பின்னும் (மங்கையர்க்கரசியாரையும் குலச்சிறையாரையும் நோக்கி). விரகு உண்டேல்-(பிள்ளையாரை அழைத்தற்கு) உபாயம் உண்டானால். நூக்கி - அலைத்து ; உடைத்து.

எஉசு. சேய் அரி - செவ்வரி படர்ந்த. பரி இழிந்து - குதிரையினின்றும் இறங்கி. பதம் - சமயம்.

பா - ம்—*மாமறைத் தலைவர். †என்பான். ‡சண்பை. §மடத்தில். ¶ஈண்டிங் கழையும்.

வேறு

ஞானத்தின் திருவுருவை நான்மறையின் தனித்துணையை
வானத்தின் மிசையன்றி மண்ணில்வளர் மதிக்கொழுந்தைத்
தேனக்க மலர்க்கொன்றைச் செஞ்சடையார் சீர்தொடுக்குங்
கானத்தின் எழுபிறப்பைக் கண்களிப்பக் கண்டார்கள். எ௨அ

கண்டபொழு தமண்கொடியோர் செய்தகடுந் தொழில்நினைந்தே
மண்டியகண் அருவிநீர் பாயமலர்க் கைகுவித்துப்
புண்டரிகச் சேவடிக்கீழ்ப் பொருந்தநில முறவிழுந்தார்
கொண்டகுறிப் போடுநெடி துயிர்த்தழிந்த கொள்கையராய். எ௨௯

உரைகுழறி மெய்ந்நடுங்கி ஒன்றும் அறிந் திலராகித்
தரையின்மிசைப் புரண்டயர்ந்து சரணகம லம்பற்றிக்
கரையில்கவ லைக்கடற்கோர் கரைபற்றி னார்போன்று
விரைவுறுமெய் அன்பினால் விடாதொழிவார் தமைக்கண்டு. எ௩0

அருமறைவாழ் பூம்புகலி அண்ணலார் அடிபூண்ட
இருவரையுந் திருக்கையால் எடுத்தருளித் தேற்றிடவும்
தெருமந்து தெளியாதார் தமைநோக்கிச் சிறப்பருளித்
"திருவுடையீர்! உங்கள்பால் தீங்குளதோ?" எனவினவ. எ௩க

எ௨அ. தேனக்க - தேன் விளங்குகின்ற. கானத்தின் எழுபிறப்பை - ஏழிசையின் பிறப்பிடத்தை. திருஞானசம்பந்தர் மீது கொண்ட ஆர்வமும், நேர்ந்த விரைவும், சமயமும், பிறவும் இருவர்தங் கண்களுக்கும் இவ்வாறு தோன்றின. அகத்தோற்றத்தின் பரிணமமே புறத்தோற்றமென்க. ஞானசம்பந்தப் பெருமான், கருமத்தின் காரணமாக மாயா உடல் தாங்காத தவ முதல்வ ராதலான் "ஞானத்தின் திருவுருவை" என்றார்; நான்மறைக்கு இழுக்கு நேரும்போதெல்லாம், அவ்விழுக்கைப் போக்கி, அதன் ஆக்கத்துக்குத் துணை புரியும் மெய்க்குரவராதலின், "நான்மறையின் தனித்துணையை" என்றார்; வானுள்ளோர்க்கும் மண்ணுள்ளோர்க்கும் மதி அமுதம் பொழிபவ ராதலின், "வான.........கொழுந்தை" என்றார்; மலர்க்கொன்றை, பிரணவத்தைக் குறிப்பது. அப்பிரணவத்தை முதலாக் கொண்டு மறையை இசைத்தமிழ் வழி வளர்ப்பவர் ஞானசம்பந்தப் பெருமான் என்க. ஞானசம்பந்தர் தேவாரம் "தோ" (ஒ+த்) என்று தொடங்கப்பெறுதலை யோர்க. இன்னோரன்ன காரணங்களான், "தேனக்க.........பிறப்பை" என்றார். கண்களிப்ப என்பது கருத்துக் களிப்பினின்றும் எழுந்தது.

எ௩க. தெருமந்து - மனஞ்சுழன்று.

பா - ம்—* அறிந் திலர்தம்மைத்.

“வெஞ்சமணர் முன்செய்த வஞ்சனைக்கு மிகஅழிந்தே
அஞ்சினோம் திருமேனிக் கடாதென்றே அதுதீர்ந்தோம்
வஞ்சகர்மற் றவர்செய்த தீத்தொழில்போய் மன்னவன்பால்
எஞ்சலிலாக் கொடுவெதுப்பாய் எழாநின்ற” தெனத்தொழுது. எ௬௨

“வெய்யதொழில் அமண்குண்டர் விளைக்கவரும் வெதுப்பவர்தாம்
செய்யுமதி மாயைகளால் தீராமைத் தீப்பிணியால்
மையலுறு மன்னவன்முன் மற்றவரை வென்றருளில்
உய்யும்எம துயிரும்அவன் உயிரும்”என உரைத்தார்கள். எ௬௩

வேறு

என்றவர் உரைத்த போதில் எழில்கொள்பூம் புகலி வேந்தர்
“ஒன்றுநீர் அஞ்ச வேண்டா உணர்விலா அமணர் தம்மை
இன்றுநீர் உவகை எய்த யாவருங் காண வாதில்
வென்றுமீ னவனை வெண்ணீ றணிவிப்பன் விதியால்” என்றார். எ௬௪

வேறு

மொழிந்தருள †அதுகேட்டு முன்இறைஞ்சி முகமலர்வார்
“அழுந்தும்இடர்க் கடலிடைநின் றடியோமை எடுத்தருளச்
செழுந்தாளச் சிவிகையின்மேல் தென்னாடு செய்தவத்தால்
எழுந்தருளப் பேறுடையோம் என்பெறோம்?” எனத்தொழலும்.

வேறு

“ஆவதும் ‡அழிவ தெல்லாம் அவர்செயல் அமண ராகும்
பாவகா ரிகளை நோக்கும் பழுதுடன் §நீங்க வெல்லச்
சேவுயர் கொடியி னார்தந் திருவுள்ளம் அறிவேன்” என்று
பூவலர் பொழில்சூழ் சண்பைப் புரவலர் போது கின்றார். எ௬௬

எ௬௨. அடாது - பொருந்தாது. தீத்தொழில் - தீய தொழில்; நெருப்பு வினை எனினுமாம். எஞ்சலிலா - ஒழியாத.

எ௬௩. அதிமாயைகளால் - மிகுந்த மாயச்செயல்களாலும். அவரை - சமணர்களை. அவன் - பாண்டியன்.

எ௬௬. அவர் - சிவபெருமான். பாவகாரிகளை - பாவகாரர்களை; பாவஞ் செய்தவர்களை “......பாவகாரிகள் பார்ப்பரி தென்பரால்...”—அப்பர் : ஆதி புராணத் திருக்குறுந்தொகை ௫; “முதல்வனைச் சிந்தியாதஅப் - பாவகாரிகள்”- பெரியாழ்வார் : ௪. ௪ : ௯. “நோய்செய்த பாவகாரியிற் பிறந்த பாவியேன்” கம்பன் : கிளைகண்டு. ௬௬. நீங்கவும் வெல்லவும். திருஞானசம்பந்தர் “சிவபெருமான் திருவுள்ளம் அறிவேன்” என்று திருக்கோயில் போந்தமை அவர் தம் முனைப்பின்மையைப் புலப்படுத்துவதென்க.

பா - ம்—*ஆண்மைகளால். †அவர். ‡அழிவு மெல்லாம். §நீங்கி.

வையகம் உய்ய வந்த வள்ளலார் மடத்தி னின்று
மெய்யணி நீற்றுத் தொண்டர் வெள்ளமும் தாமும் போந்து
கையிணை தலையின் மீது குவியக்கண் மலர்ச்சி காட்டச்
செய்யவார் சடையார் மன்னுந் திருவால வாயுட் புக்கார். எஙஎ

"நோக்கிட விதியி லாரை நோக்கிநான் வாது செய்யத்
தீக்கனல் மேனி யானே திருவுள மே"என் றெண்ணில்
பாக்கியப் பயனு யுள்ள பாலறு வாயர் மெய்ம்மை
நோக்கிவண் தமிழ்செய் மாலைப் பதிகந்தான் நுவல லுற்றார். எஙஅ

கானிடை ஆடு வாரைக் "காட்டுமா வுரி"முன் பாடித்
தேனலர் கொன்றை யார்தந் திருவுளம் நோக்கிப் பின்னும்
ஊனமில் "வேத வேள்வி" என்றெடுத் துரையின் மாலை
மானமில் அமணர் தம்மை வாதில்வென் றழிக்கப் பாடி. எஙகூ

" ஆலமே அமுத மாக உண்டுவா னவர்க்க ளித்துக்
காலனை *மார்க்கண் டர்க்காக் காய்ந்தனை அடியேற் கின்று
ஞாலம்நின் புகழே யாக வேண்டும்நான் மறைகள் ஏத்தும்
சீலமே ஆல வாயிற் சிவபெரு மானே" என்றார். எசO

"காட்டு மாவ துரித்துரி போர்த்துடல்
காட்ட மூன்றுடை யாயுரை செய்வனன்
வேட்டு வேள்விசெய் யாஅமண் கையரை
ஓட்டி வாதுசெ யத்திரு வுள்ளமே"

---

எஙஅ. திருவுள்ளமோ என்று வினவி. எண்ணில்லாத பாக்கியப்பயனும்.

எசO. அளித்து - அருள் செய்து. சமணர்களின் கொடுஞ் செயலாம் நஞ்சை உண்டு அடியார்க்கு அருளமுதம் ஊட்டவேண்டு மென்பதும், சமணர் களின் அடுஞ்செயலாங் காலனைச் சாய்த்து அடியவருக்கு அருள் செயல் வேண்டு மென்பதுங் குறிப்பு. மார்க்கண்டரும் இளைஞர்; திருஞானசம்பந்த ரும் இளைஞர். " ஞாலநின் புகழே மிகவேண்டும்" என்பது, சம்பந்தர் தம்புகழ் கருதிச் சமணரின் தீமையைக் களையப் போந்தாரில்லை என்பதை உணர்த்து வது. சிவம் எல்லார்க்குந் தெய்வம். அவ்வொன்றையே ஒவ்வொருவர் ஒவ் வொருவிதமாக வழிபடுகின்றார். சமணர் சீலத்தைப் பொருளாக்கொண்டு வழி பாடு செய்வோர். அத்தகைச் சமணர் சீலத்தினின்றும் வழுவி அடாத செயல் புரிந்து வருவாராயினார். அவர்தஞ் சீலமாகவும் விளங்கும் பொருள் சிவம் என் பது "சீலமே..." என்றதனால் விளங்குகிறது. "சீலம் மிகு சித்தத்தவர் சிந்தித் தெழும் எந்தை"; "இன்னவுரு இன்னநிறம் என்றறிவதேல் அரிது

பா - ம்—*மார்க்கண்டிக்காக.

"வேத வேள்வியை நிந்தனை செய்துழல்
ஆத மில்லி அமணொடு தேரரை
வாதில் வென்றழிக் கத்திரு வுள்ளமே
பாதி மாதுட னய பரமனே
ஞால நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயில் உறையுமெம் மாதியே"

"கூடல் ஆலவாய்க் கோனை விடைகொண்டு
வாடல் மேனி அமணரை வாட்டிட
மாடக் காழிச்சம் பந்தன் மதித்தஇப்
பாடல் வல்லவர் பாக்கிய வாளரே"—தேவாரம்.

நாதர்தம் அருள்முன் பெற்று நாடிய மகிழ்ச்சி பொங்கப்
போதுவார் பணிந்து போற்றி விடைகொண்டு புனித நீற்று
மேதகு கோலத் தோடும் விருப்புறு தொண்டர் சூழ
மூதெயிற் கபாடம் நீடு முதற்றிரு வாயில் சார்ந்தார். எசக

அம்மலர்க் குழலி னார்க்கும் அமைச்சர்க்கும் அருள வேண்டிச்
செம்மணிப் பலகை முத்தின் சிவிகைமேற் கொண்ட போதில்
எம்மருங் கினிலும் தொண்டர் எடுத்தஆர்ப் பெல்லை யின்றி
மும்மைநீ டுலக மெல்லாம் முழுதுடன் நிறைந்த தன்றே. எசஉ

பல்லிய நாதம் பொங்கப் படர்திரு நீற்றின் சோதி
நல்லொளி வட்ட மாகி நண்ணிமேல் வருவ தென்ன
வில்வளர் தாளக் கோவை வெண்குடை நிழற்ற வெவ்வே
றெல்லையில் முத்தின் காளந் தாரைசங் கெங்கும் †ஓத. எச௩

கண்ணினுக் கணியாய் உள்ளார் எழுச்சியிற் காட்சி பெற்றார்
"நண்ணிய சமயம் வேறு நம்பினர் எனினும் முன்பு

நீதி பலவும், தன்ன வுருவாமென மிகுத்ததவன் நீதியொடுந் தானமர் விடம்"—திருஞானசம்பந்தர்; திருஇடும்பாவனம். ௩; திருவைகாவூர். ௪, "சீலந் தான்பெரி தும்உடை யானை"—சுந்தரர்: திருவேகம்பம் க.

எசக. மூதெயில்...வாயில் - பழைய மதில் சூழ்ந்த கதவுகள் நீண்ட முதல் திருவாயிலில்.

எசஉ. மும்மை நீடுலகம் - சுவர்க்க மத்திய பாதலம்.

எச௩. பல்லிய நாதம் - பலவகை வாத்திய ஓசை. வில் வளர் தாளக் கோவை - ஒளிவளரும் முத்துக் கோவைகளாலாகிய.

எசச. கண்ணுக்கு அழகாயுள்ளவராகிய பிள்ளையாரது. பஞ்சவன் தஞ்ச மேவி - பாண்டியனுக்கு எளிமையாகி (எளியதாய்).

பா - ம்—*ஓங்கப் †ஒத்த ; ஊத.

பண்ணிய தவங்கள் என்கொல் பஞ்சவன் தஞ்ச மேவிப்
புண்ணிய மூர்த்தி வந்து மதுரையிற் புகுத'' என்றார்.  எசச

தென்னவன் தேவி யாருந் திருமணிச் சிவிகை மீது
பின்வர அமைச்சர் முன்பு பெருந்தொண்டர் குழாத்துச் செல்லப்
பொன்னணி மாட வீதி யூடெழுந் தருளிப் புக்கார்
கன்னிநா டுடையான் கோயில் காழிநா டுடைய பிள்ளை.  எசரு

கொற்றவன் தன்பால் முன்பு குலச்சிறை யார்வந் தெய்திப்
பொற்றட மதில்சூழ் சண்பைப் புரவலர் வரவு கூற
முற்றுயர் சிறிது நீங்கி முழுமணி அணிப்பொற் பீடம்
மற்றவன் முடியின் பக்கத் திடுகென வல்ல னானான்.  எசசு

மந்திரி யாரைப் பின்னும் எதிர்செல மன்னன் ஏவச்
சிந்தையுள் மகிழ்ந்து போந்தார் செயலையான் சமயத் துள்ளோர்
பைந்துணர் அலங்கல் மன்னன் பரிசுகண் ''டிதுவோ பண்பால்
நந்தனிச் சமயந் தன்னை நாட்டுமா'' றென்று பின்னும்.  எசஎ

''நின்அற நெறியை நீயே காத்தருள் செய்தி யாகில்
அன்னவர் தம்மை இங்கே அழைத்தனை அவரும் யாமும்
முன்னுற ஒக்கத் தீர்க்க மொழிந்துமற் றவரால் தீர்ந்த
தென்னினும் யாமுந் தீர்த்தோ மாகவும் இசைவாய்'' என்றார்.  எசஅ

பொய்தவ மாகக் கொண்ட புன்தலைச் சமணர் கூறச்
''செய்தவப் பயன்வந் தெய்துஞ் செவ்விமுன் னுறுத லாலே

---

எசசு. முன்துயர் சிறிது நீங்கி...இடுக என்று கூற வல்லவனாயினான்.

எசஎ. செயலையான் சமயத்துள்ளோர் - அசோகின் கீழுள்ள அருகன் சமயத்திலுள்ளவர் என்று சொல்லப்படும் சமணர்கள். பைந்......பரிசு - பசிய பூங்கொத்தாலாகிய மாலையை யணிந்த பாண்டியன் இயல்பை.

எசஅ. 'பாண்டியனே! உனது அறநெறியை நீயே காத்தருளல்வேண்டும். ஆனால் அவரை இங்கே அழைத்தாய். அவரும் யாமும் உனது முன்னே நின்று நோயை ஒருங்கு தீர்க்கும்படி மொழிந்து, நோய் அவரால் தீர்ந்தாலும், எம்மாலும் அது தீர்ந்ததென்று இசைவாய்' என்றனர். (அன்னவர் தம்மை இங்கே அழைத்தனை ; நின் அறநெறியைக் காத்தருள் செய்யவேண்டுமானால்...). இக்கூற்றால் அக்காலச் சமணர், உண்மைச் சமணத்தின் செந்நெறியினின்றும் வழுக்கி வீழ்ந்தவர் என்பது வெள்ளிடை மலையென விளங்குதல் காண்க.

எசகூ. செவ்வி - காலம். கைதவம் - வஞ்சனை; (நடுநிலை பிறழ்ந்த வஞ்சனையில் தலைப்படேன் என்றபடி). கைதவனும் - ஒழுக்கத்திற் குறியுள்ள பாண்டியனும்.

பா - ம்—*குழாத்துட்.

எய்திய தெய்வச் சார்வால் இருதிறத் தீரும் தீரும்
கைதவம் பேச மாட்டேன்'' என்றுகை தவனுஞ் சொன்னான். எ௪௯

என்றவன் உரைப்பக் குண்டர் எண்ணங்கெட் டிருந்த எல்லைத்
தென்தமிழ் நாடு செய்த செய்தவக் கொழுந்து போல்வார்
†வன்தனிப் பவன முன்னர் வாயிலுள் அணைந்து மாடு
பொன்திகழ் தரளப் பத்திச் சிவிகைநின் றிழிந்து புக்கார். எ௫0

குலச்சிறை யார்முன் பெய்தக் கொற்றவன் தேவி யாரும்
தலத்திடை இழிந்து சென்றார் தண்தமிழ் நாட்டு மன்னன்
நிலத்திடை வானின் றிறு நீளிருள் நீங்க வந்த
கலைச்செழுந் திங்கள் போலும் கவுணியர் தம்மைக் கண்டான். எ௫க

கண்டஅப் பொழுதே வேந்தன் கையெடுத் தெய்த நோக்கித்
தண்டுணர் முடியின் பாங்கர்த் தமனியப் பீடங் காட்ட
வண்டமிழ் விரகர் மேவி அதன்மிசை இருந்தார் மாயை
கொண்டவல் அமணர் எல்லாங் குறிப்பினுள் அச்சங் கொண்டார்.

செழியனும் பிள்ளை யார்தந் திருமேனி காணப் பெற்று
விழியுற நோக்க லாலே வெம்மைநோய் சிறிது நீங்கி
‡அழிவுறு மனனேர் நிற்க அந்தணர் வாழ்வை நோக்கிக்
"கெழுவுறு பதியா'' தென்று விருப்புடன் கேட்ட போது. எ௫௩

வேறு

"பொன்னிவளந் தருநாட்டுப் புனற்பழனப் புறம்பணைசூழ்
கன்னிமதிற் கழுமலம்நாம் கருதுமூர்'' எனச்சிறந்த
பன்னிரண்டு பெயர்பற்றும் பரவியசொல் திருப்பதிகம்
தென்னவன்முன் பருள்செய்தார் திருஞான சம்பந்தர். எ௫௪

"பிரமனூர் வேணுபுரம் புகலி வெங்குருப் பெருநீர்த் தோணி
புரம்மன்னு பூந்தராய் பொன்னஞ் சிரபுரம் புறவம் சண்பை

---

எ௫0. பவனம் - அரண்மனை. பக்கங்களில் பொன்விளங்கும் முத்துப்பத்திகளையுடைய.

எ௫௨. எய்த நோக்கி - பொருந்தப் பார்த்து. தண்...காட்ட-குளிர்ந்த பூங்கொத்துக்கள் பொலியும் முடியின் பக்கத்தில் பொன்பீடத்தைக் காட்ட.

எ௫௩. அழி உறும் மனமானது நேர்நிற்க. கெழுவுறுபதி - பொருந்தி வாழும் பதி.

எ௫௪. பொன்னி - காவிரி. புனற்பழனப் புறம்பணைசூழ் - நீர் நிறைந்த வயல்களையுடைய மருதநிலஞ் சூழ்ந்த. கன்னி - அழியாத ; புதிய.

பா - ம்—*வேலைத். †மன். ‡அறிவுறும் அன்றோர் நிற்க ; அழிவுறும் அமணர் நிற்க.

அரன்மன்னு தண்காழி கொச்சைவயம் உள்ளிட்டங் காதி யாய
பரமனூர் பன்னிரண்டாய் நின்றதிருக் கழுமலம்நாம் பரவும்ஊரே"—தேவாரம்.

பிள்ளையார் செம்பொன்மணிப் பீடத்தில் இருந்தபொழு
துள்ளநிறை பொறுமையினால் உழையிருந்த காரமணர்
கொள்ளுமனத் திடையச்சம் மறைத்துமுகங் கோபத்தீத்
துள்ளிஎழும் எனக்கண்கள் சிவந்துபல சொல்லுவார். எருரு

காலைஎழுங் கதிரவனைப் புடைசூழுங் கருமுகில்போல்
பீலிசேர் சமண்கையர் பிள்ளையார் தமைச்சூழ்வார்
ஏலவே வாதினால் வெல்வதனுக் கெண்ணித்தாங்
கோலுநூல் எடுத்தோதித் தலைதிமிர்ப்பக் குரைத்தார்கள். எருசு

பிள்ளையார் அதுகேளாப் "†பேசுகநும் பொருள்எல்லை
உள்ளவா றென்" றருள ஊத்தைவாய்ப் பறிதலையர்
துள்ளிஎழுந் தனேகராய்ச் சூழ்ந்துபத றிக்கதற
ஒள்ளிழையார் அதுகண்டு பொறாராகி உள்நடுங்கி. எருஎ

வேறு

தென்னவன் தன்னை நோக்கித் "திருமேனி எளியர் போலும்
இன்னருட் பிள்ளை யார்மற் றிவர்உவர் எண்ணி லார்கள்
மன்ன!நின் மயக்கம் எங்கள் வள்ளலார் தீர நல்கும்
பின்னைஇவ் வமணர் மூள்வார் வல்லரேல் பேச" என்றார். எருஅ

மாறனும் அவரை நோக்கி "வருந்தல்நீ" என்று "மற்று
வேறுவா தென்கொல் என்மேல் வெப்பொழித் தருகர் நீரும்
ஆறணி சடையி னாருக் கன்பராம் இவரும் நீங்கள்
தேறிய தெய்வத் தன்மை என்னிடைத் தெரிப்பீர்" என்றான். எருகூ

எருரு. உழையிருந்த - பக்கத்திருந்த.

எருசு. ஏலவே - பொருந்தவே. கோலும் - ஆக்கிய ; ஓதிய. திமிர்ப்ப - விரைப்ப ; சொல்லின் வேகத்தால் நடுக்குற்று வருந்த.

எருஎ. ஒள்ளிழையார் - மங்கையர்க்கரசியார்.

எருஅ. இவர் இன்னருட் பிள்ளையார் (பாலகர்) திருமேனி எளியர்போலும். உவர் - இச்சமணர்கள். சமணர்கள் எண்ணில்லாதவர்களாய்த் திண்ணர்களா யுள்ளார்கள் என்றபடி. உனது வெப்பு நோய் மயக்கத்தை எங்கள் காழிவள்ள லார் தீர்த்தருள்வார்.

எருகூ. பாண்டியனும் தேவியாரைப் பார்த்து நீ வருந்தாதே என்று. அருகர்களாகிய நீரும்...இவருமாக நீங்கள்.

பா - ம்—*அனற். †பேசுதிர்நும்.

ஞானஆ ரமுதம் உண்டார் நற்றவத் திருவை நோக்கி
"மானினேர் விழியி னாய்!கேள் மற்றெனைப் பாலன் என்று
நீநனி அஞ்ச வேண்டாம் நிலையிலா அமணர்க் கென்றும்
யானெளி யேன லேன்"என் றெழுந்திருப் பதிகம் பாடி. ஏசு0

"மானினேர்விழி மாதராய்வழு திக்குமாபெருந் தேவிகேள்
பானல்வாயொரு பாலன்ஈங்கிவன் என்றுநீபரி வெய்திடேல்
ஆனைமாமலை ஆதியாய இடங்களிற்பல அல்லல்சேர்
ஈனர்கட்கெளி யேன்அலேன்திரு ஆலவாய்அரன் நிற்கவே"—தேவாரம்.

பெற்றியால் அருளிச் செய்த பிள்ளையார் தமக்கும் முன்னம்
சுற்றுநின் றழைத்தல் ஓவா அருகர்க்கும் தென்னர் கோமான்
"இற்றைநாள் என்னை யுற்ற பிணியைநீர் இகலித் தீரும்
தெற்றெனத் தீர்த்தார் வாதில் வென்றவர்" என்று செப்ப. ஏசுக

மன்னவன் மாற்றங் கேட்டு வடிவுபோல் மனத்து மாசு
துன்னிய அமணர் தென்னர் தோன்றலை நோக்கி "நாங்கள்
உன்னுடம் பதனில் வெப்பை ஒருபுடை வாம பாகம்
முன்னம்மந் திரித்துத் தெய்வ முயற்சியால் தீர்த்தும்"என்றார். ஏசுஉ

†யாதுமொன் றறிவி லாதார் இருளென அணையச் சென்று
வாதினில் மன்ன வன்தன் வாமபா கத்தைத் தீர்ப்பார்
மீதுதம் பீலி கொண்டு தடவிட மேன்மேல் வெப்புத்
தீதுறப் பொறுது தென்னன் சிரபுரத் தவரைப் பார்த்தான். ஏசுரு

தென்னவன் நோக்கங் கண்டு திருக்கழு மலத்தார் செல்வர்
"அன்னவன் வலப்பால் வெப்பை ஆலவாய் அண்ணல் நீறே
மன்னுமந் திரமு மாகி மருந்துமாய்த் தீர்ப்ப" தென்று
பன்னிய மறைகள் ஏத்திப் பகர்திருப் பதிகம் பாடி. ஏசுச

"மந்திர மாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தர மாவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திர மாவது நீறு சமயத்தி லுள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் திருஆல வாயான்திரு நீறே"—தேவாரம்.

---

ஏசு0. நனி - மிகவும்.

* ஏசுக. பெற்றியால் - ஆண்டவன் அருட்டிறத்தால். அழைத்தல் ஓவா - குரைத்தல் (கூக்குரலிடுதல்) நீங்காத. இகலி - மாறுபட்டு ; வேறுபட்டு. தெற்றென - விரைவாக ; முற்றுந்தீர எனினுமாம் (தெளிய).

ஏசுஉ. ஒருபக்கமாகிய இடப்பாகத்தை.

பா - ம்—*ஓத்த. †யாதுமொன் றறிகி லார்கள்.

திருவளர் நீறு கொண்டு திருக்கையால் தடவத் தென்னன்
பொருவரு வெப்பு நீங்கிப் போய்கையிற் குளிர்ந்த தப்பால்
மருவிய இடப்பால் மிக்க †அழுலெழ மண்டு தீப்போல்
இருபுடை வெப்புங் கூடி இடங்கொளா தென்னப் பொங்க. எசுரு

உறியுடைக் கையர் பாயின் உடுக்கையர் நடுக்கம் எய்திச்
செறிமயிற் பீலி தீயத் தென்னன்வெப் புறுதீத் தம்மை
எறியமா சுடலுங் கன்றி அருகுவிட் டேற நிற்பார்
அறிவுடை யாரை யொத்தார் அறிவிலா நெறியில் நின்றார். எசுசு

பலர்தொழும் புகலி மன்னர் ஒருபுடை வெப்பைப் †பாற்ற
மலர்தலை யுலகின் மிக்கார் வந்ததி சயித்துச் சூழ
இலகுவேல் தென்னன் மேனி வலம்இடம் எய்தி நீடும்
உலகினில் தண்மை வெம்மை ஒதுங்கினுல் ஒத்த தன்றே. எசுஎ

மன்னவன் மொழிவான் "என்னே! மதித்தஇக் காலம் ஒன்றில்
வெந்நர கொருபா லாகும் வீட்டின்பம் ஒருபா லாகும்
துன்னுநஞ் சொருபா லாகும் சுவையமு தொருபா லாகும்
என்வடி வொன்றி லுற்றேன் இருதிறத் தியல்பும்" என்பான். எசுஅ

"வெந்தொழில் அருகர் தோற்றீர் என்னைவிட் டகல நீங்கும்
வந்தெனை உய்யக் கொண்ட மறைக்குல வள்ள லாரே!
இந்தவெப் படைய நீங்க எனக்கருள் புரிவீர்" என்று
சிந்தையால் தொழுது சொன்னன் செல்கதிக் கணிய ஞனன். எசுகூ

திருமுகங் கருணை காட்டத் திருக்கையால் நீறு காட்டிப்
பெருமறை துதிக்கும் ஆற்றுல் பிள்ளையார் போற்றிப் பின்னும்
ஒருமுறை தடவ அங்கண் ஒழிந்துவெப் பகன்று ‡பாகம்
மருவுதீப் பிணியும் நீங்கி வழுதியும் முழுதும் உய்ந்தான். எஎ0

---

எசுரு. பொருவரும் - ஒப்பற்ற ; தீர்க்க முடியாத. பொய்கைபோல் குளிர்ந்தது.

எசுசு. தீயானது தம்மீதும் வீச ; சுட. அருகுவிட்டுத் தூரத்தே ஒதுங்கி நிற்பவராய். அறிவுடையாரைப் போன்றவர்.

எசுஎ. பாற்ற - அழிக்க. வலப்பக்கம் தண்மையும் இடப்பக்கம் வெம்மையும் பொருந்தின வென்க.

எசுகூ. செல்கதிக்கு அணியஞனன் - வீடு பேற்றிற்குச் சமீபித்தவனுகிய பாண்டியன்.

பா - ம்—*அழலெனை. †மாற்ற. ‡நீங்க.

கோற்றவன் தேவி யாரும் குலச்சிறை யாரும் தீங்கு
செற்றவர் செய்ய பாத தாமரை சென்னி சேர்த்துப்
"பெற்றனம் பெருமை இன்று பிறந்தனம் பிறவா மேன்மை
உற்றனன் மன்னன்" என்றே உளங்களித் துவகை மிக்கார். எஎக

மீனவன் தன்மே லுள்ள வெப்பெலாம் உடனே மாற
ஆனபேர் இன்பம் எய்தி உச்சிமேல் அங்கை கூப்பி
மானமொன் றில்லார் முன்பு வன்பிணி நீக்க வந்த
"ஞானசம் பந்தர் பாதம் நண்ணிநான் உய்ந்தேன்" என்றான். எஎஉ

வேறு

கந்துசீறு மாலியானை மீனவன் கருத்துநேர்
*வந்துவாய்மை கூறமற்று மாசுமேனி நீசர்தாம்
முந்தைமந் திரத்துவிஞ்சை முற்றும்எஞ்ச அஞ்சியே
சிந்தைசெய்து கைவருந் திறந்தெரிந்து தேடுவார். எஎ௩

"சைவமைந்தர் சொல்லின்வென்றி சந்தஇன்சொல் மாலையால்
கைதவன்றன் †வெப்பொழிந்த தன்மைகண் டறிந்தனம்
மெய்தெரிந்த தர்க்கவாதம் வெல்லலாவ தன்றுவே
றெய்துதீயின் நீரில்வெல்வ" தென்று தம்மில் எண்ணினார். எஎச

பிள்ளையாரும் "உங்கள்வாய்மை பேசுமின்கள்" என்றலும்
தள்ளுநீர்மை யார்கள்"வேறு தர்க்கவாதின் உத்தரம்

---

எஎக. தீங்கு செற்றவர் - பாண்டியனுக்குற்ற தீங்கினை (பாண்டிநாடுற்ற தீங்கினை; செந்நெறிக்குற்ற தீங்கினை)ப் போக்கிய பிள்ளையாரது. பிறந்தன மாகிய நாங்கள் பிறப்பாலாகிய பெருமையை இன்று பெற்றனம்; மன்னன் இனிப் பிறவா மேன்மையை உற்றனன்.

எஎ௩. கந்து சீறு மால் யானை - கம்பத்தைக் கோபித்து மோதும் மதம் பொருந்திய யானைகளையுடைய. "கந்துமுனிந்துயிர்க்கும் யானையொடு"— புறநானூறு: கஎஅ. "கந்து நீத்து உழிதரும் கடாஅ யானையும்"—மதுரைக் காஞ்சி: 383. முந்தை...எஞ்ச - பழைய மந்திர வித்தைகளின் ஆற்றல் முழுவதுங் குறைவுபட. சமணர்கள் நெறியல்லா நெறியிற் சென்றமையால் மந்திர வித்தைகள் பயன்படா தொழிந்தன என்க. கைவருந்திறம் - கைகூடவல்ல வேறு வகைகளை.

எஎச. இனித் தர்க்கவாதத்தால் வெல்லமுடியாது என்றபடி.

எஎரு. சமணர்கள் எண்ணத்தை உணர்ந்த பிள்ளையாரும். தள்ளு நீர்மை யார்கள் - தள்ளப்படுங் குணங்களையுடையவர்கள்; தள்ளப்படுங் குணங்களாவன கொலை பொய் வஞ்சனை முதலியன. வேறு கடா விடைகளான் பெறும்

பா - ம்—*வந்த. †வெப்பொழிந்த தன்மைகண் டறிந்தபின்.

கொள்ளும்வென்றி அன்றியே குறித்தகொள்கை உண்மைதான்
உள்ளவாறு கட்புலத்தில் உய்ப்ப"தென்ன ஓட்டினார். எஎரு

என்றுவாது கூறலும் இருந்ததென்னர் மன்னனும்
"கன்றிஎன் உடம்பொடுங்க வெப்புநோய் கவர்ந்தபோ
தொன்றுமங் கொழித்திலீர்கள் என்னவா துமக்"கெனச்
சென்றுபின்னும் முன்னும்நின்று சில்லிவாயர் சொல்லுவார். எஎசு

"என்னவாது செய்வதென் றுரைத்ததே வினைவெனச்
சொன்னவாச கந்தொடங்கி ஏடுகொண்டு சூழ்ச்சியால்
மன்னுதம் பொருட்கருத்தின் வாய்மைநீட்டி மாட்டினால்
வெந்நெருப்பின் வேவுறாமை வெற்றியாவ" தென்றனர். எஎஎ

என்றபோது மன்னனென் றியம்புமுன்பு பிள்ளையார்
"நன்றுநீர் உரைத்தவாறு நாடுதீயில் ஏடுதான்
வென்றிடிற் பொருட்கருத்து மெய்ம்மையாவ தென்றிரேல்
வன்தனிக்கை யானைமன்னன் முன்புவம்மின்" என்றனர். எஎஅ

வேறு

அப்ப டிக்கெதிர் அமணரும் அணைந்துறும் அளவில்
ஒப்பில் வண்புகழ்ச் சண்பையர் காவலர் உரையால்
செப்ப ருந்திறல் மன்னனும் "திருந்தவை முன்னர்
வெப்பு றுந்தழல் அமைக்கென" வினைஞரை விடுத்தான். எஎகூ

ஏய மாந்தரும் இந்தனங் குறைத்துடன் அடுக்கித்
தீஅ மைத்தலுஞ் சிகைவிடு புகையொழிந் தெழுந்து
காயும் வெவ்வழற் கடவுளும் படரொளி காட்ட
ஆயு முத்தமிழ் விரகரும் அணையவந் தருளி. எஅ௦

செங்கண் ஏற்றவ ரேபொருள் என்றுதாந் *தெரித்த
பொங்கி சைத்திருப் பதிகநன் முறையினைப் போற்றி

---

வெற்றி யல்லாமல், குறித்த கொள்கைக்குரிய உண்மையை உள்ளவாறு பிரத்தியட்சமாக நிறுவிக்காட்டல் வேண்டுமென்று உறுதி கொண்டு இசைந்தன ரென்க.

எஅ௦. இந்தனங் குறைத்து - விறகை வெட்டி.

எஅக. திருப்பதிகங்களைக் கொண்ட திருமுறையினை. ஞானசம்பந்தர் பாடி வந்த திருப்பதிகங்களை ஓர் அன்பர் எழுதி வந்தார்; இப்புராணம் : பாட்டு கூ௦அ பார்க்க. நாண் - கயிற்றை.

பா - ம்—*தெரிந்த.

"எங்கள் நாதனே பரம்பொருள்" எனத்தொழு தெடுத்தே
அங்கை யால்முடி மிசைக்கொண்டு காப்புநாண் அவிழ்த்தார்.

சாற்று மெய்ப்பொருள் தருந்திரு முறையினைத் தாமே
நீற்று வண்கையால் மறித்தலும் வந்துநேர்ந் துளதால்
நாற்ற டம்புயத் தண்ணலார் மருவுநள் ளாறு
போற்றும் அப்பதி கம்"போக மார்த்தபூண் முலையாள்." எஅஉ.

"போகமார்த்த பூண்முலையாள் தன்னோ டும்பொன் னகலம்
பாகமார்த்த பைங்கண் வெள்ளேற் றண்ணல்பர மேட்டி
யாகமார்த்த தோலுடையன் கோவணவா டையின்மேல்
நாகமார்த்த நம்பெருமான் மேயதுநள் ளாறே."—தேவாரம்.

அத்தி ருப்பதி கத்தினை அமர்ந்துகொண் டருளி
மைத்த வெங்கடு மிடற்றுநள் ளாறரை வணங்கி
மெய்த்த நற்றிரு வேட்டினைக் கழற்றிமெய்ம் மகிழ்ந்து
கைத்த லத்திடைக் கொண்டனர் கவுணியர் தலைவர். எஅங.

நன்மை உய்க்கும்மெய்ப் பதிகத்தின் நாதனென் றெடுத்தும்
என்னை ஆளுடை ஈசன்தன் நாமமே என்றும்
மன்னு மெய்ப்பொரு ளாமெனக் காட்டிட வன்னி
தன்னி லாகெனத் "தளிரிள வளரொளி" பாடி. எஅச.

"தளிரிள வளரொளி தனதெழில் தருதிகழ் மலைமகள்
குளிரிள வளரொளி வனமுலை யிணையவை குலவலில்
நளிரிள வளரொளி மருவுநள் ளாறர்தம் நாமமே
மிளிரிள வளரெரி இடில்இவை பழுதிலை மெய்ம்மையே."
—தேவாரம்.

செய்ய தாமரை அகவித ழினும்மிகச் சிவந்த
கையில் ஏட்டினைக் கைதவன் பேரவை காண
வெய்ய தீயினில் வெற்றரை யவர்சிந்தை வேவ
வையம் உய்ந்திட வந்தவர் மகிழ்ந்துமுன் னிட்டார். எஅரு

எஅஉ. மறித்தலும் - திருப்புதலும். நால் தடம்புயத்து அண்ணலார் - சிவபெருமான்.

எஅங. அமர்ந்து - விரும்பி. திருநீலகண்டத்தையுடைய திருநள்ளாற்றுப் பெருமானை.

எஅச. உலகுக்கு நன்மை உய்க்கும். வன்னி தன்னில் ஆக - நெருப்பிடை உண்மை நிலைபெறுக.

இட்ட எட்டினில் *எழுதிய செந்தமிழ்ப் பதிகம்
மட்டு லாங்குழல் வனமுலை மலைமகள் பாகத்

*௭௬௬. மட்டு...அட்டமூர்த்தியை - மணங்கமழும் கூந்தலையுடைய அழகிய (பரஞானம் அபரஞானம் என்னும் இரு) முலைகளையுடைய உமையம்மையாரை இடப்பாகங்கொண்ட அட்டமூர்த்தியை. நிலன் நீர் தீ காற்று வான் ஞாயிறு திங்கள் உயிர் ஆகிய எட்டையும் ஆண்டவன் வடிவாகக்கொண்ட நிலைக்கு அட்டமூர்த்தமென்று பெயர். விளக்கம் இப்புராணம் ௫௬௬-ம் பாட்டுக் குறிப்பைப் பார்க்க. பட்ட - வளர்க்கப்பட்ட.*

*திருஞானசம்பந்தர் தவத்தால் பிள்ளைமைப் பேறெய்திவர். அவர் என்றுந் திருஞானசம்பந்தராகவே இருப்பவர். உயிர்களைத் திருஞானத்துடன் சம்பந்தப் படுத்துவோர் என்பது அப்பெயரின் பொருள்.* இப்புராணம்: *௬௬-ம் பாட்டையும், அப்பாட்டுக் குறிப்பையும் பார்க்க.*

*உயிர்களைத் திருஞானத்துடன் சம்பந்தப்படுத்தும் ஒருவர் குரு எனப்படுவர். திருஞானசம்பந்தர் உலகுக்கு ஒரு பெருங் குருவாக வீற்றிருப்பவர். அவருக்குப் பல மொழியில் பல பெயர்களுண்டு. மொழி அளவில் நிற்போர் அவரை வெவ்வேறு புருஷராக உணர்கிறார். உண்மை ஞானங் கைவரப் பெற்றோர்க்கு அவர் ஒருவரே என்பது நனி விளங்கும்.*

*திருஞானசம்பந்தரைச் சூழ்ந்து, அவர்தம் ஏவல்வழி நிற்கும் குருமார் பலர் வீற்றிருக்கிறார். உலகில் எங்கெங்கே திருவருள் நெறிமீது மாசு படிகிறதோ அங்கங்கே அம்மாசினைப் போக்கித் திருவருள் நெறியை விளங்கச் செய்யத் திருஞானசம்பந்தர் போதருவர்; இல்லையேல் தம்மைச் சூழ்ந்துள்ள குருமாருள் ஒருவரை அனுப்புவர்.*

*திருஞானசம்பந்தர் சமண சமயத்தை அழித்துச் சைவசமயத்துக்கு ஆக்கந் தேடத் தமிழ்நாட்டிற்றோன்றினார் என்று சிலர் கூறுப. அது குறித்து ஈண்டுச் சில சுருங்கக்கூற விரும்புகிறேன்.*

*ஆண்டவன் ஒருவன்; அவன் அருள்நெறியும் ஒன்றே. அவ்வொன்று ஒவ்வொருபோது ஒவ்வொருவிதப் பெயர் பெறுவதாகிறது. அப்பெயர்கள், பல சமயங்களாக, ஆராய்ச்சி இல்லாதவர்களால் கொள்ளப்படுகின்றன. பலபட்ட பெயர்களை நீக்கிப் பொருளைப் பார்த்தால், ஒருமை புலப்படுமே யன்றிப் பன்மை புலப்படாது.* திருநாவுக்கரசு சுவாமிகள் புராணம்: *௭௬. குறிப்புப் பார்க்க.*

*திருஞான சம்பந்தர் வருகைக்குக் காரணமாயிருந்தது, அந்நாளில் சமணமென்று பெயர் பெற்றிருந்த திருவருள் நெறியில் நேர்ந்த மாறுபாடேயாகும்.* ஆதிநாதராகிய விருஷபதேவர் *கண்ட அருள்நெறி தோன்றியவாறே இயங்கி இருப்பின், திருஞான சம்பந்தரின் வருகைக்கு இடம் நேர்ந்திராது. "முந்தைய உரையிற் கொண்ட பொறைமுதல் வைப்பும் விட்டு........."*—இப்புராணம்: *௬௩௭.*

பா - ம்—*எய்திய.

தட்ட மூர்த்தியைப் பொருளென உடைமையால் அமர்ந்து
பட்ட தீயிடைப் பச்சையாய் விளங்கிய தன்றே. எஅசு

---

விருஷபதேவர் கண்ட அருள்நெறியிடை அதாவது ஆதிஜைனத்திடைச் சில பிரிவுகள் தோன்றலாயின. அவைகளுள் சிறப்பாக இரண்டைக் குறிக்கலாம். ஒன்று திகம்பரஜைனம்; மற்றொன்று சுவேதாம்பரஜைனம். திகம்பரம் இயற்கையை வெறுப்பது; பெண்ணை இழிவாகக் கருதுவது; பெண் பிறவிக்கு வீடுபேறு இல்லை என்பது; பெண்ணானவள், ஆண் பிறவி தாங்கிய பின்னரே வீடுபேறு எய்தல் வேண்டுமென்னுங் கொள்கையுடையது. இன்னோரன்ன கொள்கைகள் ஆதிஜைனத்துடன் மாறுபட்டவை. இம்மாறு பாட்டுக்கு உடன்படாதவர்கள் தங்களைச் சுவேதாம்பரர்கள் என்று சொல்லிக் கொண்டார்கள். சுவேதாம்பரம் இயற்கையை வெறுப்பதில்லை; பெண்ணை இழிவாகக் கருதுவதில்லை; பெண் பிறவிக்கும் வீடுபேறு உண்டு என்னுங் கொள்கை உடையது.

திகம்பரம் தென்னாட்டிலும், சுவேதாம்பரம் வடநாட்டிலும் பரவலாயின. தென்னாட்டில் திகம்பரம் பரவினமையால், மக்கள் இயற்கை நெறியினின்றும் வழுவி நின்றார்கள்; பெண்ணை இழிவாகக் கருதினார்கள்; பெண்ணை வெறுத்தல் பெருந் துறவு என்று கொண்டார்கள். திகம்பரத்தால் இயற்கை நெறிக்கும், பெண்ணுலகுக்கும் பெருந் துன்பம் நேர்ந்தது என்று பொதுப்படக் கூறலாம். அந்நாளைய திகம்பர ஜைனத்தின் நிலைகளைப் பெரிதும் திருஞான சம்பந்தர் தேவாரப் பதிகங்களிலுள்ள பத்தாம் பாட்டிற் பார்க்கலாம். அப்பாக்களைத் திரட்டிப் பார்த்தால், அந்நாளைய ஜைனர்கள் எந்நெறி பற்றி ஒழுகினார்கள் என்பது நன்கு புலனாகும்.

இயற்கை நெறிக்கும் பெண்ணுலகுக்கும் கேடு நேர்வது இறை நெறிக்குக் கேடு நேர்வதாகும். இயற்கை, இறையின் போர்வை அதாவது உடல். அவ்வியற்கையை வெறுத்துத் துறப்பது இறையை வெறுத்துத் துறப்பதாகும். "உலகினில் இயற்கையை யொழிந்திட்டு, டற்றவர்க்கற்ற சிவன் உறைகின்ற ஆலவா யாவதும் இதுவே"—திருஞான சம்பந்தர்.

இயற்கையை உற்று நோக்கினால் அது பெண் ஆண் மயமாயிருத்தல் நனி விளங்கும். இயற்கைக் காரியங்கள் யாவும் பெண் ஆண் மயமாயிருப்பின், அவ்வியற்கைக்குக் காரணமாயுள்ள இறையும் பெண் ஆண் கூறுடையதாயிருத்தல் வேண்டும். இது பற்றிப் "பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத்துணை" என்னும் நூலில் விரித்துக் கூறியுள்ளேன்; விளக்கம் ஆண்டுக்காண்க; திருநாவுக்கரசு சுவாமிகள் புராணம்; பாட்டு - கஎச. குறிப்பையும் பார்க்க.

இயற்கை நெறிக்கும் பெண்ணுலகுக்கும் இழுக்கு நேரும் இடங்களில் அருள்நெறி செவ்விய முறையில் இயங்காது. தென்னாட்டில் திகம்பரம் பரவிய காரணத்தால், இயற்கை நெறிக்கும் பெண்ணுலகுக்கும் இழிவு நேர்ந்தது. அவ்விழிவைப் போக்கினாலன்றி அருள் நெறி நன்முறையில் இயங்காது. அவ்விழிவைப் போக்கவே திருஞான சம்பந்தர் தோன்றினாரென்க. அவர், அருள் நெறி

மையல் நெஞ்சுடை அமணருந் தம்பொருள் வரைந்த
கையில் ஏட்டினைக் கதுவுசெந் தீயினில் இடுவார்
உய்யு மோஇது எனஉறுங் கவலையாம் உணர்வால்
நையு நெஞ்சின ராகியே நடுங்கிநின் றிட்டார். ௭௮௭

அஞ்சும் உள்ளத்த ராகியும் அறிவிலா அமணர்
வெஞ்சு டர்ப்பெருந் தீயினில் விழுத்திய ஏடு
பஞ்சு *தீயிடைப் பட்டது படக்கண்டு பயத்தால்
நெஞ்சு சோரவும் பீலிகை சோர்ந்திலர் நின்றார். ௭௮௮

௭௮௭. கதுவும் - அதிகமாகப்பற்றி எரியும்.
௭௮௮. தீயினில் பஞ்சு பட்டதுபோல.

யாகிய ஆதி ஜைனத்தை அழிக்கப் போந்தாரென்பது ஆராய்ச்சி இல்லாதார் கூற்று.

திருஞான சம்பந்தர் திரு இரும்பூளைத் திருப்பதிகத்தில் பத்தாம் பாட்டின் இறுதியில் "சமண் சாக்கிய மாக்கியவாறே" என்று அருளியுள்ளது ஈண்டு உன்னற்பாலது. இத்திருமொழியால் சமண் சாக்கியம் ஆக்கியவன் சிவனே என்பது விளங்குகிறது. சமண் சாக்கியம் என்பன அருள்நெறிக்கு வழங்கப் படும் பல பெயர்களுள் சேர்ந்தவை. ஆகவே சிவனால் ஆக்கப்பட்ட சமண் சாக்கியம் ஒழிந்துபடத் திருஞான சம்பந்தர் முயல்வரோ என்பது சிந்திக்கத் தக்கது.

சிவநாமம் சமணத்துக்கும் சைவத்துக்கும் பொதுவானது. சமணமும் சிவ நெறி; சைவமும் சிவநெறி. சிவநெறி என்னும் அருள்நெறி ஒவ்வொருபோது ஒவ்வொரு பெயர் பெறுவது வழக்கம். "ஸ்ரீ ஊண ஞணஸலிலம் ணிம்மல ஹநி ஸடாக ஸெஸ உம்முக்கா உந்தி சிவாலய வாஷி திருவண சூடாமணி ஸித்தா * * * * சிவா ஹொந்தி * * * * ஞாநீ சிவ பரமேஷ்டி * * * * சச்வத் சிவ ஆசாதர ஹா * * * * - குந்தகுந்தோச்சாரியார் (அஷ்டபாகுடம்); "சிவ சுகம ஜரஸ்ரீ * * * *"—பூபால ஸ்தோத்திரம்; "இன்பமற் றென்னும் போரா னெழுந்தபுற் கற்றை தீற்றித் - துன்பத்தைச் சுரக்கு நான்கு கதியெனுந் தொழுவிற் சேர்ந்து - நின்றபற் றூர்வ சீக்கி நிருமலன் பாதஞ் சேரின் - அன்பு விற் றுண்டு போகிச் சிவகதி அடைய லாமே"—சிந்தாமணி : 3105 ; "சின வரன் தேவன் சிவகதி நாயகன்"—சிலப்பதிகாரம்: ௧௦. நாடுகாண். ௧௮௦; "மணி மலிந்த ஒளியெனவும் மலர்நிறைந்த விரையெனவும் மல்கு சந்தின் - துணியு மிழ்ந்த தண்மையினுந் தோன்றியஅப் பேரின்பத் துள்ளே தோன்றி - இணை பிறிதும் இலராகி இமையவரும் மாதவரும் இறைஞ்சி ஏத்தப் - பணிவரிய சிவ கதியின் அமர்ந்திருந்தார் அறஅமிர்தம் உண்டா ரன்றே"—மேருமந்திர புரா ணம் : 1400. "**** மாக்கயிலை மிசைநாப்பண் **** மூவிலையொரு நெடு

பா - ம்—*தீயினிற்.

மான மன்னவன் அவையின்முன் வளர்த்தசெந் தீயின்
ஞானம் உண்டவர் இட்டஏ டிசைத்தநா ழிகையில்
ஈனம் இன்மைகண் டியாவரும் வியப்புற எடுத்தார்
பான்மை முன்னையிற் பசுமையும் புதுமையும் பயப்ப. எஅகூ

எடுத்த ஏட்டினை அவையின்முன் காட்டிஅம் முறையில்
அடுத்த வண்ணமே கோத்தலும் அதிசயித் தரசன்
தொடுத்த பீலிமுன் தூக்கிய கையரை நோக்கிக்
"கடுத்து நீரிட்ட ஏட்டினைக் காட்டுமின்" என்றான். எகூ0

---

எஅகூ. குறிப்பிட்ட நாழிகையில்.
எகூ0. கடுத்து - கோபித்து ; ஐயுற்றுமாம்.

---

வேலின் - மேவாத வினையவுணர், குன்றுபட நூழிலாட்டி - வென்றட்ட விறல் வெகுளியை, மூவெயிலின் முரண்முருக்கி-மூவர் சரணடைய நின்றனை, கருப்பு நாண்வில்லிபட-நெருப்புமிழ் நெடு நோக்கினை, கோள்வலிய கொடுங் கூற்றைத்-தாள் வலியின் விழவுதைத்தனை, பரிவில்கே வலக்கிழத்தி - பிரிவில்லா ஒரு பாகனை, ஆன்றமெய் அறம் வளர்க்கும் - மூன்றுகண் முனித்தலைவனை, ஆல நெடு நிழல் அமர்ந்தனை - கால மூன்றுமுடன் அளந்தனை, தாழ்சடை முடிச் சென்னிக் - காசறு பொன்னெயிற் கடவுளை, மன்னியபே ருலகனைத்தும் - நின் னுள்ளே நீயொடுக்கினை, நின்னின்று நீ விரித்தனை - நின்னருளின் நீகாத்தனை, எனவாங், காதிபகவனை அருகனை, மாதுயர் நீங்க வழுத்துவம் பலவே"—திருக் கலம்பகம் : ௧0கூ.

இடைநாளில் இயற்கை நெறிக்கும், பெண்ணுலகுக்கும் நேர்ந்த இழிவைப் போக்கித் திருவருள் நெறியை விளக்கத் திருஞான சம்பந்தர் போந்தனர். இவ்வுண்மை திருஞான சம்பந்தர் திருமொழியாலேயே இனிது விளங்கும். இயற்கையானது ஆண்டவன் உடல் என்பதும், ஆண்டவன் பெண்ணோடு கூடியுள்ள பெருந்தகை என்பதும் பொதுளவே திருஞான சம்பந்தர் திருப்பதிகங்கள் பாடியருளினர். அவர்தம் பாக்களில் எங்கணும் இயற்கை அன்னையின் திருக்கோலமும், உமைபங்கன் அருளொளியும் காட்சியளித்தல் வெள்ளிடைமலை. இவ்விருகூறும் சிறப்பாகத் திருஞானசம்பந்தர் தேவாரத்தில் பெரிதுஞ் செறிந்து கிடத்தற்குரிய காரணத்தை ஆராய்வோர்க்கு அவர்தம் வருகை நுட்பம் நன்கு புலனாகும்.

திருஞானசம்பந்தப் பெருமான் வாது குறித்து ஆண்டவனிடம் விடைபெற வேண்டியபோது ஓதிய திருப்பதிகத்திலும், எரியிலிடக் கொண்ட திருநள்ளாற்றுத் திருப்பதிகத்திலும், அதைத் தொடர்ந்து பாடிய திருப்பதிகத்திலும் ஆண்டவன் பெண்மைக் கூறு சிறந்து விளங்குதலை யோர்க. உலகில் பெண் ஆண் கூட்டுறவு என்னும் பேரறம், இயற்கை - இறையின் வழியது என்பது திருஞான சம்பந்தர் உள்ளக்கிடக்கை. "கேவல மடந்தை யென்னுங் கேழ்

வேறு

அருகர்தாம் இட்ட ஏடு வாங்கச்சென் றணையும் போதில்
பெருகுதீக் கதுவ வெந்து பேர்ந்தமை கண்ட மன்னன்
தருபுனல் கொண்டு செந்தீத் தணிப்பித்தான் சமணர் அங்குக்
கருகிய சாம்ப ரோடுங் கரியலால் மற்றென் காண்பார். ஏ௩௬௧

செய்வதொன் றறிகி லாதார் திகைப்பினால் திரண்ட சாம்பல்
கையினாற் பிசைந்து தூற்றிப் பார்ப்பது *கண்ட மன்னன்
எய்திய நகையி னோடும் "ஏடின்னம் அரித்துக் காணும்
பொய்யினால் மெய்யை யாக்கப் புகுந்தீர் போமின்" என்றான். ஏ௩௬௨

"வெப்பெனுந் தீயில் யான்முன் வீடுபெற் றுய்ய நீங்கள்
அப்பொழு தழிந்து தோற்றீர் ஆதலால் †அதுவா றாக
இப்பொழு தெரியில் இட்ட ஏடுய்ந்த தில்லை என்றால்
துப்புர வுடையீர்! நீங்கள் தோற்றிலீர் போலும்" என்றான். ஏ௩௬௩

ஏ௩௬௧. கதுவ - பற்றிச் சுட.

ஏ௩௬௨. இன்னும் அரித்துப் பாருங்கள்.

ஏ௩௬௩. வீடு பெற்று - விடுதலை யடைந்து. அது ஆறாக - அவ்வழியாக. துப்புரவு உடையீர் - ஐம்புல நுகர்ச்சி உடையவர்களே! அறிவில்லாதவர்களே என்றபடி.

கிளர் நெடிய வாட்கட் - பூவலர் முல்லைக் கண்ணிப் பொன்னொரு பாகமாகக் - காவலன் றானோர் கூறாக் கண்ணிமை யாது புல்லி - மூவுல குச்சி யின்பக் கடலி னுள்மூழ்கி னானே."—சீவக சிந்தாமணி:3117. "அறிவன் காதற் பெருங்கிழத்தி அகிலம் ஈன்ற தாயென்றும் அழியாக் கன்னி அறம்வளர்த்த அன்னை ஆறு சமயத் தின் - பிறிவு தன்பால் தோன்றியவள் பிறங்கு புவனத் தனிவிளக்குப் பிறழா முத்தி நாயகிநம் பிறவிப் பகைத்தி உயிர்க்கெல்லாஞ் - செறியுங் கருணை சுரந் தளிக்குந் தெய்வச் செவிலி கற்புடைய செஞ்சொற் பாவை ஆனந்த வல்லி ஞானச் செழுங்கொழுந்து - பொறிஐம் புலத்தின் வேட்கைநோய் தீர்க்கும் மருந்தென் றருந்தவர்கள் போற்றும் பதத்தான் செய்யபதம் போற்றார் உணர்வு பொங்காதே"—திருக்கலம்பகம் : ௬௦௧.

திருஞான சம்பந்தர் உள்ளக் கிடக்கையை இந்நூலாசிரியர் நன்கு உணர்ந் தவராதலின், "இட்ட ஏட்டினில் எழுதிய செந்தமிழ்ப் பதிகம் - மட்டு லாங் குழல் வனமுலை மலைமகள்பாகத் - தட்ட மூர்த்தியைப் பொருளென உடை மையால்" என்று விளங்கச் செய்தார். இன்னும் விரிக்கிற் பெருகும்.

எரி அட்டமூர்த்தத்துள் ஒன்று. அவ்வெரி ஆண்டவன் உருவம். இவ் உண்மையை அநுபூதியில் உணர்ந்து திருவருள்ஞானம் பெற்ற பெரியாரின் திரு வாக்கைக் கொண்ட திருப்பதிகம் எரியில் எங்ஙனம் அழிந்து படும்? "எரி பெருக்குவர் அவ்வெரி யீசன - துருவ ருக்கம தாவ துணர்கிலார் - அரி யயற்கரி யானை யயர்த்துப்போய் - நரிவி ருத்தம தாகுவர் நாடரே.—அப்பர்.

பா - ம்—*கண்டு. †அதுவே றாக.

தென்னவன் நகையுட் கொண்டு செப்பிய மாற்றந் தேரார்
சொன்னது பயனுக் கொண்டு சொல்லுவார் "தொடர்ந்த வாது
முன்னுற இருகால் செய்தோம் முக்காலில் ஒருகால் வெற்றி
என்னினும் உடையோம் மெய்ம்மை இனியொன்று காண்ப" தென்றார்.

தோற்கவும் ஆசை நீங்காத் துணிவிலார் சொல்லக் கேட்"டிம்
மாற்றமென் னுவ" தென்று மன்னவன் மறுத்த பின்னும்
நீற்றணி விளங்கு மேனி நிறைபுகழ்ச் சண்பை மன்னர்
"வேற்றுவா தினிஎன் செய்வ" தென்றலும் மேற்கோள் ஏற்பார்.

"நீடுமெய்ப் பொருளின் உண்மை நிலைபெறுந் தன்மை எல்லாம்
ஏடுற எழுதி மற்றவ் வேட்டினை யாமும் நீரும்
ஓடுநீர் ஆற்றில் இட்டால் ஒழுகுதல் செய்யா தங்கு
நாடிமுன் தங்கும் ஏடு நற்பொருள் பரிப்ப" தென்றார். எகூசு

என்றமண் கையர் கூற ஏறுசீர்ப் புகலி வேந்தர்
"நன்றது செய்வோம்" என்றங் கருள்செய நணுக வந்து
வென்றிவேல் அமைச்ச னார்தாம் "வேறினிச் செய்யும் இவ்வா
தொன்றினுந் தோற்றார் செய்வ தொட்டியே செய்வ" தென்றார். எகூஎ

அங்கது கேட்டு நின்ற அமணரும் அவர்மேற் சென்று
பொங்கிய வெகுளி கூரப் பொறாமைகா ரணமே யாகத்
தங்கள்வாய் சோர்ந்து தாமே "தனிவாதில் அழிந்தோ மாகில்
வெங்கழு வேற்று வான்இவ் வேந்தனே" என்று சொன்னார். எகூஅ

மற்றவர் சொன்ன வார்த்தை கேட்டலும் மலய மன்னன்
"செற்றத்தால் உரைத்தீர் உங்கள் செய்கையும் மறந்தீர்" என்று
"பற்றிய பொருளின் ஏடு படர்புனல் வைகை யாற்றில்
பொற்புற விடுவ தற்குப் †போதுவ" தென்று கூற. எகூகூ

---

"........போற்றிப் புகலி நிலாவும் பூசுரன் ஞானசம் பந்தன் - தேற்றித் தென்னன்உட லுற்ற தீப்பிணி யாயின தீரச் - சாற்றிய பாடல்கள் பத்தும்....." —திருஞான சம்பந்தர் : திருநீற்றுப் பதிகம். கக. "......கோற்றவன் எதிரிடை எரியினில் இடஇவை......"—திருஞான சம்பந்தர் : திருநள்ளாறு. கக.

எகூச. மாற்றந்தேரார் - சொல்லின் நுட்பம் தெளியாதவராய். ஒருகால் - ஒருதரமாயினும்.

எகூரு. வேறு வாது. மேற்கோள் ஏற்பார் - வாதத்தில் தலைப்படுவோரானார்.

எகூசு. ஒழுகுதல் செய்யாது - ஆற்று நீருடன் செல்லாது. பரிப்பது - தாங்குவது.

எகூகூ. மலய மன்னன் - பொதிகை மலையையுடைய பாண்டியன்.

பா - ம்—*சென்ற. †போதுக என்று.

பிள்ளையார் முன்னம் பைம்பொற் பீடத்தின் இழிந்து போந்து
தெள்ளுநீர்த் தரளப் பத்திச் சிவிகைமேல் ஏறிச் சென்றார்
வள்ளலார் அவர்தம் பின்பு மன்னன்மா ஏறிச் சென்றான்
உள்ளவா றறிகி லாதார் உணர்வுமால் ஏறிச் சென்றார். அ00

தென்னவன் வெப்புத் தீர்ந்து செழுமணிக் கோயில் நீங்கிப்
பின்னுற அணைந்த போது பிள்ளையார் பெருகுஞ் செல்வம்
மன்னிய மதுரை மூதூர் மறுகில்*வந் தருளக் கண்டு
துன்னிய மாதர் மைந்தர் தொழுதுவே றினைய சொன்னார். அ0க

"மீனவன் கொண்ட வெப்பை நீக்கிநம் விழுமந் தீர்த்த
ஞானசம் பந்தர் †இந்த நாயனார் காணும்" என்பார்
"பானறுங் குதலைச் செய்ய பவளவாய்ப் பிள்ளை யார்தாம்
மானசீர்த் தென்னன் நாடு வாழவந் தணைந்தார்" என்பார். அ0உ

"எரியிடை வாதில் தோற்ற திவர்க்குநம் அருகர்" என்பார்
"புரிசடை அண்ணல் நீறே பொருளெனக் கண்டோம்" என்பார்
"பெருகொளி முத்தின் பைம்பொற் சிவிகைமேற் பிள்ளை யார்தாம்
வருமழ கென்னே" என்பார் "வாழ்ந்தன கண்கள்" என்பார். அ0௩

"ஏதமே விளைந்த திந்த அடிகள்மார் இயல்பால்" என்பார்
"நாதனும் ஆல வாயில் நம்பனே காணும்" என்பார்
"போதமா வதுவும் முக்கட் புராணனை அறிவ" தென்பார்
"வேதமும் நீறு மாகி ‡விரவிடும் எங்கும்" என்பார். அ0௪

"அடிகள்மார் முகங்கள் எல்லாம் அழிந்தன பாரீர்" என்பார்
"கொடியவஞ் சனைகள் எல்லாங் குலைந்தன போலும்" என்பார்
"வடிகொள்வேல் மாறன் காதல் மாறின வண்ணம்" என்பார்
"விடிவதாய் முடிந்த திந்த வெஞ்சமண் இருளும்" என்பார். அ0௫

---

அ00. நீர்த்தரளப் பத்தி - நீர்முத்து வரிசைகளையுடைய. மா - குதிரை. மால் - மயக்கம்.

அ0க. மறுகில் - தெருவில்.

அ0உ. விழுமம் - வருத்தம். பால் மணங் கமழும் நறுங்குதலை மொழி பேசும்.

அ0௪. போதமாவது - மெய்ஞ்ஞானமாவது. வேதமும் நீறுமே எங்கும் பரவி விடும் என்பார்.

அ0௫. மாறன் (பாண்டியன் அடிகள்மார் மீது கொண்ட) காதல் மாறின வண்ணம் என்ன என்பார்.

பா - ம்—*வந்தணைய. †ஆன. ‡விடும்விடும்.

"நெருப்பினில் தோற்றார் தாங்கள் நீரில்*வெல் வாரோ" என்பார்
"இருப்புநெஞ் சுடைய ரேனும் பிள்ளையார்க் கெதிரோ" என்பார்
"பருப்பொருள் உணர்ந்தார் தாங்கள் படுவன பாரீர்" என்பார்
"மருப்புடைக் கழுக்கோல் செய்தார் மந்திரி யார்தாம்" என்பார். அ0௬

"ஏடுகள் வைகை தன்னில் இடுவதற் கிணைந்தார்" என்பார்
"ஓடுநீ ருடன்செ லாது நிற்குமோ ஓலை" என்பார்
"நீடிய ஞானம் பெற்றார் நிறுத்தவும் வல்லர்" என்பார்
"நாடெலாங் காண இங்கு நண்ணுமா காணீர்" என்பார். அ0எ

"தோற்றவர் கழுவில் ஏறத் துணிவதே அருகர்" என்பார்
"ஆற்றிய அருளின் மேன்மைப் பிள்ளையார்க் கழகி" தென்பார்
"நீற்றினால் தென்னன் தீங்கு நீங்கிய வண்ணங் கண்டார்
போற்றுவார் எல்லாஞ் சைவ நெறியினைப் போற்றும்" என்பார். அ0அ

இன்னன இரண்டு பாலும் ஈண்டினர் எடுத்துச் சொல்ல
மின்னொளி மணிப்பொற் காம்பின் வெண்குடை மீது போதப்
பன்மணிச் சிவிகை தன்மேற் பஞ்சவன் நாட்டு ளோர்க்கு
நன்னெறி காட்ட வந்தார் நான்மறை வாழ வந்தார். அ0௯

"தென்தமிழ் விளங்க வந்த திருக்கழு மலத்தான் வந்தான்
மன்றுளார் அளித்த ஞான வட்டில்வண் கையன் வந்தான்
வென்றுல குய்ய மீள வைகையில் வெல்வான் வந்தான்"
என்றுபன் மணிச்சின் னங்கள் எண்டிசை நெருங்கி ஏங்க. அக0

பன்மணி முரசஞ் சூழ்ந்த பல்லியம் இயம்பப் பின்னே
தென்னனும் தேவி யாரும் உடன்செலத் திரண்டு செல்லும்
புன்னெறி அமணர் வேறோர் புடைவரப் புகலி வேந்தர்
மன்னிய வைகை யாற்றின் கரைமிசை மருவ வந்தார். அகக

கார்கெழு பருவம் வாய்ப்பக் காமுறு மகளிர் உள்ளம்
சீர்கெழு கணவன் தன்பால் †விரைவுறச் செல்லு மாபோல்

---

அ0௬. பருப்பொருளுணர்ந்தார் என்பது நுண்பொருள் உணராமையைக் குறிப்பது. நுண்பொருளாவது இயற்கையினூடு இரண்டறக் கலந்துள்ள இறையின் உண்மையை என்க.

அக0. வட்டிலை ஏந்திய. நெருங்கி முழங்க.

அகக. பல அழகிய முரசங்களுடன் சூழ்ந்த பலவகை வாத்தியங்கள் முழங்க.

பா - ம்—*வெல்வார்கொல். †விரவுறச்.

நீர்கெழு பௌவம் நோக்கி நிரைதிரை இரைத்துச் செல்லும்
பார்கெழு புகழின் மிக்க பண்புடை வைகை யாறு. அகஉ

ஆற்றில்நீர் கடுக ஓடும் மருங்குற அரசன் நோக்கி
"நீற்றணி *திகழ்ந்த மேனி நிறைமதிப் பிள்ளை யாரும்
வேற்றுரு அருகர் நீரும் விதித்தவே டிடுக" என்றான்
தோற்றவர் தோலார் என்று முன்னுறத் துணிந்திட் டார்கள். அகங

படுபொரு ளின்றி நெல்லிற் பதடிபோல் உள்ளி லார்மெய்
அடுபவர் பொருளை "அத்தி நாத்தி"என் றெழுதி ஆற்றில்
கடுகிய புனலைக் கண்டும் அவாவினாற் கையி லேடு
விடுதலும் விரைந்து கொண்டு வேலைமேற் படர்ந்த தன்றே. அகச

ஆறுகொண் டோடும் ஏட்டைத் தொடர்ந்தெதிர் அணைப்பார் போலத்
தேறுமெய் யுணர்வி லாதார் கரைமிசை ஓடிச் சென்றார்
பாறும்அப் பொருள்மேற் கொண்ட பட்டிகை எட்டா தங்கு
நூறுவிற் கிடைக்கு முன்னே போனது †நோக்கிக் காணார். அகரு

காணவும் எய்தா வண்ணம் கடலின்மேற் செல்லும் ஏடு
நாணிலா அமணர் தம்மை நட்டாற்றில் விட்டுப் போகச்
சேணிடைச் சென்று நின்றார் சிதறினார் திகைத்தார் மன்னன்
‡ஆணையில் வழுவ மாட்டா தஞ்சுவார் அணைய மீண்டார். அகசு

வேறொரு செயலி லாதார் வெருவுற்று நடுங்கித் தம்பால்
ஈறுவந் தெய்திற் றென்றே மன்னவன் எதிர்வந் தெய்தி
ஊறுடை நெஞ்சில் அச்சம் வெளிப்பட ஒளிப்பார் போன்று
§"மாறுகொண் டீரும் இட்டால் வந்தது காண்டும்" என்றார். அகஎ

மாசுசேர் அமணர் எல்லாம் மதியினில் மயங்கிக் கூற
ஆசிலா நெறியிற் சேர்ந்த அரசனும் அவரை விட்டுத்

---

அகஉ. கார்காலம். பௌவம் - கடலை. கெழு - பொருந்திய.

அகங. குருபிகளாகிய அருகரே என்பது பழைய குறிப்புரை.

அகச. படுபொருள் - உண்மை விளங்கும் பொருள். நெல்லினுள் பதர் போல மெய்ம்மையில் உள்ளீடில்லாதவர். அத்தி நாத்தி - உண்டு இல்லை என் னும் வாதம் ; " அத்தகு பொருள் உண்டும் இல்லையும் என்று நின்றவர்க்கு..." —திருஞானசம்பந்தர் : திருவாலவாய் ங. கடுகிய புனலை - விரைந்து ஓடிய நீரை. வேலை - கடல்.

அகரு. பாறும்......பட்டிகை - அழியும் பொய்ப்பொருளைக் கொண்ட ஏடு. (பட்டிகை - தோணி ; இங்கே ஏட்டைக் குறிப்பது).

பா - ம்—*திகழு. †நோக்கிச் சென்றார். ‡ஆணையும் வழுவ மாட்டார் அஞ்சுவார் அடைய. §மாறுகொண் டவரும். ¶காணும்.

தேசுடைப் பிள்ளை யார்தந் திருக்குறிப் பதனை நோக்கப்
பாசுரம் பாட லுற்றார் பாசம யங்கள் பாற. அ௧அ

தென்னவன் மாறன் தானுஞ் சிரபுரத் தலைவர் தீண்டிப்
பொன்னவில் கொன்றை யார்தந் திருநீறு பூசப் பெற்று
முன்னைவல் வினையும் நீங்கி முதல்வனை அறியுந் தன்மை
துன்னினன் வினைகள் ஒத்துத் துலையென நிற்ற லாலே. அ௧௯

வேறு

உலகியல் வேதநூல் ஒழுக்கம் என்பதும்
நிலவுமெய்ந் நெறி*சிவ நெறிய தென்பதும்
கலதிவாய் அமணர்காண் கிலார்க ளாயினும்
பலர்புகழ் தென்னவன் அறியும் பான்மையால். அ௨0

"வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாம்அரன் நாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

அரிய காட்சிய ராய்த்தம தங்கைசேர்
எரியர் ஏறுகந் தேறுவர் கண்டமும்
கரியர் காடுறை வாழ்க்கைய ராயினும்
பெரியர் ஆரறி வாரவர் பெற்றியே.

வெந்த சாம்பல் விரைஎனப் பூசியே
தந்தை யாரொடு தாயிலர் தம்மையே
சிந்தி யாஎழு வார்வினை தீர்ப்பரால்
எந்தை யாரவர் எவ்வகை யார்கொலோ.

ஆட்பா லவர்க்கருளும் வண்ணமும் ஆதி மாண்பும்
கேட்பான் புகில்அள வில்லை கிளக்க வேண்டா
கோட்பா லனவும் வினையுங் குறுகாமை எந்தை
தாட்பால் வணங்கித் தலைநின் றிவை கேட்க தக்கார்.

ஏதுக்க ளாலும் எடுத்த மொழியாலும் மிக்குச்
சோதிக்க வேண்டா சுடர்விட்டுளன் எங்கள் சோதி
மாதுக்கம் நீங்க லுறுவீர் மனம்பற்றி வாழ்மின்
சாதுக்கள் மிக்கீர் இறையே வந்து சார்மின்களே.

---

அ௧அ. ஆசிலா - குற்றமில்லாத.
அ௨0. கலதி - மூதேவி பொருந்திய.

பா - ம்—*சிவ நெறியே என்பதும்.

ஆடும் எனவும் அருங்கூற்றம் உதைத்து வேதம்
பாடும் எனவும் புகழல்லது பாவம் நீங்கக்
கேடும் பிறப்பும் அறுக்கும்எனக் கேட்டீ ராகில்
நாடுந் திறத்தார்க் கருளல்லது நாட்ட லாமே.

கடிசேர்ந்த போது மலரான கைக்கொண்டு நல்ல
படிசேர்ந்த பால்கொண்டங் காட்டிடத் தாதை பண்டு
முடிசேர்ந்த காலைஅற வெட்டிட முக்கண் மூர்த்தி
அடிசேர்ந்த வண்ணம் அறிவார்சொலக் கேட்டுமன்றே.

வேத முதல்வன் முதலாக விளங்கி வையம்
ஏதப் படாமை உலகத்தவர் ஏத்தல் செய்யப்
பூத முதல்வன் முதலே முதலாப் பொலிந்த
சூதன் ஒலிமாலை என்றே கலிக்கோவை சொல்லே.

பாராழி வட்டம் பகையால் நலிந்தாட்ட ஆடிப்
போராழி யானதிடர் கண்டருள் செய்தல்பேணி
நீராழி விட்டேறி நெஞ்சிடங் கொண்டவர்க்குப்
போராழி ஈந்த புகழும் புகழுற்ற தன்றே.

மாலா யவனும் மறைவல்ல நான்முகனும்
பாலாய தேவர் பகரில்லமு தூட்டல் பேணிக்
காலாய முந்நீர்க் கடைந்தார்க் கரிதா யெழுந்த
ஆலாலம் உண்டங்கம ரர்க்கருள் செய்த தாமே.

அற்றன்றி அந்தண் மதுரைத்தொகை யாக்கினானும்
தெற்றென்று தெய்வந் தெளியார் கரைக்கோலை தெண்ணீர்ப்
பற்றின்றிப் பாங்கெதிர்வி னூரவும் பண்பு நோக்கில்
பெற்றொன் றுயர்த்த பெருமான் பெருமானு மன்றே.

நல்லார்கள் சேர்புகலி ஞானசம் பந்தன் நல்ல
எல்லார்க ளும்பரவும் ஈசனை ஏத்து பாடல்
பல்லார்க ளும்மதிக்கப் பாசுரஞ் சொன்ன பத்தும்
வல்லார்கள் வானோ ருலகாளவும் வல்ல ரன்றே."—தேவாரம்.

"அந்தணர் தேவர்ஆன் இனங்கள் வாழ்க"என்
றிந்தமெய்ம் மொழிப்பயன் உலகம் இன்புறச்
சந்தவேள் விகள்முதல் சங்க ரர்க்குமுன்
வந்தஅர்ச் சனைவழி பாடு மன்னவாம். அஉக

---

அஉக. "அந்தண ரென்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்-செந்தண்மை பூண்டொழுக லான்"—குறள் : 30. தேவர் - உலகுக்கு நலன் நாடுவோர் ; ஆன் இனங்கள் - பசுக் கூட்டங்கள் ; இவை சாந்தத்துக்கு அறிகுறியாக விளங்குவன.

வேறு

வேள்வி நற்பயன் "வீழ்புன லாவது"
நாளும் அர்ச்சனை நல்லுறுப் பாதலால்
"ஆளு மன்னனை வாழ்த்திய" தர்ச்சனை
மூளு மற்றிவை காக்கும் முறைமையால். அஉஉ

"ஆழ்க தீய"தென் றோதிற் றயல்நெறி
வீழ்க என்றது வேறெல்லாம் "அரன்பெயர்
சூழ்க" என்றது தொல்லுயிர் யாவையும்
வாழி அஞ்செழுத் தோதி வளர்கவே. அஉ௩

சொன்ன "வையக முந்துயர் தீர்கவே"
என்னும் தீர்மை இகபரத் தில்துயர்
மன்னி வாழுல கத்தவர் மாற்றிட
முன்னர் ஞானசம் பந்தர் மொழிந்தனர். அஉச

"அரிய காட்சியர்" என்பதவ் வாதியைத்
தெரிய லாகிலை யால்தெரி யாரென
உரிய அன்பினிற் காண்பவர்க் குண்மையாம்
பெரிய நல்லடை யாளங்கள் பேசினார். அஉரு

---

"வாழ்க அந்தணர் வானவர் ஆன்இனம்" என்று அருளிய இந்தமொழிப் பயனாவது: உலகம் இன்புறச் சங்கரர்க்கு அழகிய யாகங்கள் முதலாக அர்ச்சனையும் வழிபாடும் நிலைபெறவாம். ஈண்டு வேள்வி என்றது ஊன் வேள்வியை அன்று; ஊனமில் வேள்வியை என்க. இவ்வேள்வி சமணர்க்கு முடையதாம்.

அஉஉ. வீழ்புனல் - மழை. வேள்வியால் மழை வருதலால் அதை "வேள்வி நற்பயன்" என்றார். "வீழ்க தண்புனல்" என்று அருளியது, அது நாடோறும் அர்ச்சனைக்கு நல்ல உறுப்பாதலால் என்க. மன்னனை வாழ்த்தியது, "வேந்தனும் ஓங்குக" என்றது. வேள்வி அர்ச்சனை முதலியவற்றைக் காக்கும் முறைமையுடைமையால் மன்னனும் வாழ்த்தப்பட்டான் என்க.

அஉ௩. "ஆழ்க தீயது" என்று ஓதியது, அயல்நெறி வீழ்க என்றதாம். உயிர்கள் எல்லாம் அஞ்செழுத்தை ஓதி வளர்தற்காம்.

அஉச. இம்மை மறுமைத் துயரை உலகத்தவர் மாற்றும் பொருட்டு.

அஉரு. "அரிய காட்சியர்" என்றது, அன்பு நெறி நில்லாது தம்மைத் தேடுவோர்க்கு ஆதியாகிய சிவபெருமான் அரியர் என்பதை அறிவுறுத்துவது; தம்மை அன்பினில் காண்போர்க்கு அங்கை எரி, ஏறு, கரியகண்டம், காடுறை வாழ்வு முதலிய அடையாளங்களைக் கொண்டவராய் அவர் காட்சியளிப்பர் என்றபடி.

"ஆயி னும்பெரி யாரவர்" என்பது
மேய இவ்வியல் பேயன்றி விண்முதற்
பாய பூதங்கள் பல்லுயிர் அண்டங்கள்
ஏயும் யாவும் இவர்வடி வென்றதாம். ௮௨௬

பின்பும் "ஆரறி வாரவர் பெற்றியே"
என்ப தியாருணர் வானுஞ்சென் றெட்டொணு
மன்பெ ருந்தன்மை யாரென வாழ்த்தினுர்
அன்பு சூழ்சண்டை ஆண்டகை யாரவர். ௮௨௭

"வெந்த சாம்பல் விரை"யென் பதுதம
தந்த மில்லொளி அல்லா ஒளியெலாம்
வந்து வெந்தற மற்றப் பொடியணி
சந்த மாக்கொண்ட வண்ணமுஞ் சாற்றினுர். ௮௨௮

"தமக்குத் தந்தையர் தாயிலர்" என்பதும்
அமைத்திங் கியாவையும் ஆங்கவை வீந்தபோ
திமைத்த சோதி அடக்கிப்பின் ஈதலால்
எமக்கு நாதர் பிறப்பிலர் என்றதாம். ௮௨௯

---

௮௨௬. சிவபெருமான் எரி, ஏறு, கரியகண்டம், காடுறை வாழ்வு முதலிய அடையாளங்களை உடையவராயினும், அவர் பெரியவராவர். எப்படி? "விண் முதல்...யாவும்" அவர் வடிவாகவின் என்க. "அரிய காட்சியர்" என்னும் பாட்டின் விளக்கம் இப்புராணத்தின் முதற் பாட்டாகிய "உலகெலாம் உணர்ந் தோதற்கரியவன்" என்பதில் ஒளிர்தல் காண்க. எரி, ஏறு, கரியகண்டம், காடுறை வாழ்வு முதலியன, விண்முதல் பூதங்கள், பல்லுயிர்கள், அண்டங்கள் முதலியவற்றைக்கொண்ட பெருவடிவின் சுருக்கமென்க. அச்சுருங்கிய வடிவம் தியானத்துக்கென ஏற்பட்டதாகும். இது குறித்துச் "சைவத்திறவு" என் னும் நூலில் விரிவுரை கூறியுள்ளேன்.

௮௨௮. விரை - கலவைச் சாந்து. சிவவொளி யொன்றே அழிவில்லாதது. மற்றவை யெல்லாம் அழிவுடையன. அழிந்து நீறுகும் அவைகள் எங்கே அடங்கும்? அழிவிலா ஒன்றனிடத்தில் அடங்கும். அடங்கிய இடத்தினின்றும் அவை பிறத்தலும் இயல்பு. அண்டாண்டங்களெல்லாம் நாம ரூபமுடைய காரிய வடிவமாகத் திகழும்போதும், அந்நாமரூப காரியத் தோற்றங்கள் அழிந்து பொடியாகிக் காரணத்தில் ஒடுங்கும்போதும் அவைகளினூடே சிவம் நீக்கமற நிறைந்து நிற்கும். காரணத்தில் ஒடுங்குவது ஈண்டுப் பொடியெனப்பட்டது. சந்தமா - அழகாக ; சந்தனமாக என்னலுமாம்.

௮௨௯. காரிய உலகங்களெல்லாம் ஒடுங்குதற்குத் தான் நிலைக்களனுக நிற்ற லாலும், தான் பிறிதொன்றில் ஒடுங்காத தன்மையாலும் சிவத்துக்குப் பிறப் பிறப்பில்லையென்க. பிறப்பிறப்பில்லா ஒன்றற்குத் தாயேது? தந்தையேது? "தாயுமிலி தந்தையிலி"—திருவாசகம் : திருச்சாழல்.

"தம்மை யேசிந்தி யா"வெனுந் தன்மைதான்
மெய்ம்மை யாகி விளங்கொளி தாமென
இம்மை யேநினை வார்தம் இருவினைப்
பொய்ம்மை வல்லிருள் போக்குவர் என்றதாம். அருo

"எந்தை யாரவர் எவ்வகை யார்கொல்"என்
றிந்த வாய்மைமற் றெப்பொருட் கூற்றினும்
முந்தை யோரைஎக் கூற்றின் மொழிவதென்
றந்தண் பூந்தராய் வேந்தர் அருளினார். அருக

"ஆதி ஆட்பா லவர்க்கரு ளுந்திறம்
நாதன் மாட்சிமை கேட்க நவிலுங்கால்
ஓதும் எல்லை உலப்பில ஆதலின்
யாதும் ஆராய்ச்சி இல்லையாம்" என்றதாம். அருஉ

அன்ன ஆதலில் "ஆதியார் தாளடைந்
தின்ன கேட்கவே ஏற்றகோட் பாலவும்
முன்னை வல்வினை யும்முடி வெய்தும்அத்
தன்மை யார்க்"கென் றனர்சண்பை காவலர். அருரு

---

அருo. இருவினை - புண்ணிய பாவம். வல்லிருள் - ஆணவத்தை. இருவினைக்குக் காரணம் வல்லிருளென்க. இருவினைக்கட்டால் நேரும் பிறப்பிறப்பை ஒழிப்பதெப்படி? பிறப்பிறப்பில்லாச் சிவத்தைச் சிந்தித்தல்வேண்டும். இவ்வுண்மை இங்கே விளக்கப்பட்டுளது.

அருக. "எந்தை யாரவர் எவ்வகை யார்கொலோ" என்னும் வாய்மை (மெய்ம்மொழி). மிக நுண்ணியதைக் கூறிடினும் மிகப்பெரியதைக் கூறிடினும், அதாவது காரிய காரணங்களை எவ்வளவு நுணுகி நுணுகிக் கூறிடினும் அவ்வக்கூற்றில் அவ்வக்கூறாகச் சிவம் விளங்கலின், அச்சிவமே எல்லாவற்றிற்கும் முதன்மை என்றபடி. அவ்வாறிருத்தல் வியப்பாதலின் "எவ்வகையார் கொலோ" என்றார்.

அருஉ. ஆதி - சிவபெருமான். உலப்பில ஆதலின் - அளவில்லை ஆதலான். மன உணர்வு கொண்டு செய்யப்படும் ஆராய்ச்சி எல்லைக்கு உட்பட்டது. சிவம் எல்லைக்கு உட்படாதது. அதை எங்ஙனம் எல்லைக்கு உட்படுத்தி ஆராய்ச்சி செய்வது என்றபடி. ஆராய்ச்சியில் நுழையாது என்செய்தல் வேண்டும் என்பது கீழ் உணர்த்தப்படுகிறது.

அருரு. "இன்ன" என்பது கோளாலும் வினையாலும் நேரும் தீமைகளைக் குறிப்பது. கோட்பாலவும் - கிரகங்களின் பாற்பட்டு விளையும் தோஷங்களும். ஆண்டவன்தாள் அடைந்து, கோளாலும் வினையாலும் விளையும் கெடுதல்கள் குறுகி இடர்ப்படுத்தாதவாறு முறையிடவேண்டுவது உயிர்களின் கடமை என்ற

மன்னும் "ஏதுக்க ளாலெனும்" வாய்மைதான்
தன்ன தொப்புவே றின்மையிற் சங்கரன்
இன்ன தன்மையை ஏது எடுத்துக்காட்
டன்ன வற்றால் அளப்பிலன் என்றதாம். ௮௩௪

தோன்று காட்சி "சுடர்விட் டுளன்"என்ப
தான்ற அங்கிப் புறத்தொளி யாய்அன்பில்
ஊன்ற உள்ளெழுஞ் சோதியாய் நின்றனன்
என்று காண்பார்க் கிதுபொருள் என்றதாம். ௮௩௫

வேறு

"மாதுக்க நீங்க லுறுவீர் மனம்பற்றும்" என்ப
தாதிச் சுடர்ச்சோ தியைஅன்பின் அகத்துள் ளாக்கிப்
போதித்த நோக்குற் றெழியாமற் பொருந்தி வாழ்ந்து
பேதித்த பந்தப் பிறப்பின்னெறி பேர்மின் என்றாம். ௮௩௬

வேறு

ஈண்டு "சாதுக்கள்" என்றெடுத் தோதிற்று
வேண்டும் வேட்கைய எல்லாம் விமலர்தாள்
பூண்ட அன்பினிற் போற்றுவீர் "சார்மின்"என்
றூண்ட சண்பை அரசர் அருளினார். ௮௩௭

---

படி. கர்மங்களை அழிக்க வல்லது ஆண்டவன் திருவடிகளை நோக்கிச் செய்யும் உண்மை முறைப்பாடேயாகும்.

௮௩௪. வாததர்க்க திருஷ்டாந்தங்களாலும், பிரமாண முதலியவற்றாலும் ஆண்டவனைச் சோதிக்கவேண்டாம் என்றபடி. காரணம் சிவம் எல்லையற்ற ஒன்று என்பது மேலே காட்டப்பட்டது.

௮௩௫. ஆன்ற அங்கி - அமைந்த அக்கினி. புறத்தே அக்கினி வடிவாகவும், அகத்தே அருட்சோதியாகவும் சிவம் விளங்குவது என்க. வீண்வாததர்க்கங்களில் நுழையாது, சிவத்தை அன்பினில் ஊன்றி உன்னுவார்க்கு அச்சிவம் அகச்சோதியாய் விளங்கி வினையை அழிக்கும் என்றபடி.

௮௩௬. போதித்த - குருநாதன் போதித்தபடி. மாதுக்க நீங்கலாவது பிறவியை யறுப்பது. பிறப்பின் நெறி பெயர்மின் என்றதாம்.

௮௩௭. சாதுக்கள் - வேண்டுதல் யாவும் ஆண்டவன் திருவடிநேயம் என்று வாழ்வோர்; போகம் முதலிய யாவற்றையும் இறைவழி நின்று நுகர்வோர் சாதுக்களாவர்; வேடத்தால் சாதுக்களில்லை என்றபடி.

வேறு

"ஆடும்" எனவாந் திருப்பாட்டின் அமைத்த மூன்று
நீடும் புகழோ பிறர்துன்பம் நீத்தற்கோ என்று
தேடும் உணர்வீர் உலகுக்கிவை செய்த தீசர்
கூடுங் கருணைத் திறம்என்றனர் கொள்கை மேலோர். அகஅ

கருதுங் "கடிசேர்ந்த" எனுந்திருப் பாட்டில் ஈசர்
மருவும் பெரும்பூசை மறுத்தவர்க் கோறல் முத்தி
தருதன் மையதாதல் சண்டீசர் தஞ்செய்கை தக்கோர்
பெரிதுஞ் சொலக்கேட் டனம்என்றனர் பிள்ளை யார்தாம்.

"வேத முதல்வன்" எனும்மெய்த் திருப்பாட் டினினேர்
ஆதி உலகோர் இடர்நீங்கிட ஏத்த ஆடும்
பாத முதலாம் பதினெண் புராணங்கள் என்றே
ஓதென் றுரைசெய் தனர்யாவும் ஓதா துணர்ந்தார். அசo

பாவுற்ற "பாராழி வட்டத்" திருப் பாட்டின் உண்மை
காவற்றொழி லானெனுங் கண்ணனுங் காவல் பெற்ற
தியாவர்க்கு மேலாய ஈசன்அருள் ஆழி பெற்று
மேவுற்ற சீருற் றதுஎன்றனர் வேத வாயர். அசக

"மாலா யவன்"என்ன வருந்திருப் பாட்டில் மாலும்
தோலா மறைநான் முகனும் தொடர்வாம் அமரர்

---

அஈஅ. ஆடுவது, கூற்றை உதைத்தது, வேதம் பாடுவது ஆக மூன்று. இம்மூன்றும் எந்நோக்குடன் நிகழ்த்தப்படுகின்றன? புகழுக்கா பிறர் துன்பம் நீக்குதற்கா? பிறர் துன்பம் நீக்குதற்கு அருளால் இம்மூன்றையும் ஆண்டவன் நிகழ்த்துகின்றானென்க. ஆடுவது திதியையும், கூற்றை உதைத்தது சம்மாரத்தையும், வேதம் பாடுவது சிருஷ்டியையும் உணர்த்துவன.

அஈக. கருதத்தக்க "கடிசேர்ந்த" என்னும் பாட்டு. கடி - அச்சம்; வடு. மறுத்தவரைக் கொல்லுதல் முத்தி............

அசo. முதல்வனுவான் உலகுய்ய ஆடும் பாதமுடையவன் என்றபடி. இவனே வேதத்தின் பொருளாயுள்ளவன். ஈண்டு வேதம் என்றது வேதாந்தத்தை. வேதாந்தம் சிவத்தின் இயல்பை நுண்மை வழியில் அறிவுறுத்தும். அதைப் பருமை நெறியில் அறிவுறுத்துவன சூத முனிவர் வழிப்பிறந்த பதினெண் புராணங்களாகும். பதினெண் புராணங்கள் கூறுங் கதைகளை உள்ளவாறே கொள்ளாது வேதாந்த முறைப்படி கொள்ளல்வேண்டும் என்றபடி.

அசக. பாராழிவட்டம் - கடல் சூழ்ந்த உலகம். உலகம் பாட்டுமயமாயிருத்தலான் "பாவுற்ற" என்றார். ஈசன் அருள் ஆழி - ஈசன் அருளிய சக்கரம்.

ஏலா வகைசுட்ட நஞ்சுண் டிறவாமை காத்த
மேலாங் கருணைத் திறம்வெங்குரு வேந்தர் வைத்தார். அசஉ

வேறு

ஆன"அற் றன்றி" என்ற அத்திருப் பாட்டிற் கூடல்
மாநக ரத்துச் சங்கம் வைத்தவன் தேற்றத் தேரு
ஈனர்கள் எல்லைக் கிட்ட ஏடுநீர் எதிர்ந்து செல்லில்
ஞானம் ஈசன்பால் அன்பே என்றனர் ஞானம் உண்டார். அசங

வேறு

*வெறியார் பொழிற்சண் பையர்வேந்தர் மெய்ப்பா சுரத்தைக்
குறிஎ றியஎல்லை அறிந்துரும் பிட்டேன் அல்லேன்
சிறியேன் அறிவுக் கவர்தந்திருப் பாதந் தந்த
நெறியே சிறித்யான் அறிநீர்மைதும் பிட்டேன் அன்பால். அசச

†அலரும் விரைசூழ் பொழிற்காழியுள் ஆதி ஞானம்
மலருந் திருவாக் குடைவள்ளலார் உள்ள வண்ணம்
பலரும் உணர்ந்துய்யப் பகர்ந்து வரைந்தி யாற்றில்
நிலவுந் திருவேடு திருக்கையால் நீட்டி இட்டார். அசரு

வேறு

திருவுடைப் பிள்ளை யார்தந் திருக்கையால் இட்ட ஏடு
மருவுறும் பிறவி யாற்றில் மாதவர் மனஞ்சென் றாற்போல்
பொருபுனல் வைகை யாற்றில் ‡எதிர்ந்துநீர் கிழித்துப் போகும்
இருநிலத் தோர்கட் கெல்லாம் "இதுபொருள்" என்று காட்டி. அசசு

"எம்பிரான் சிவனே எல்லாப் பொருளும்"என் றெழுதும் ஏட்டில்
தம்பிரான் அருளால் வேந்தன் தன்னைமுன் ஓங்கப் பாட
அம்புய மலராள் மார்பன் "அனபாயன்" என்னுஞ் சீர்த்திச்
செம்பியன் செங்கோ லென்னத் தென்னன்கூன் நிமிர்ந்த தன்றே.

---

அசஉ. தோலா - அளவில்லாத; ஈடழியாத. தொடர்வாம் அமரர் - முதலாய தேவர்கள். ஏலாவகை - ஏற்றுக்கொள்ள முடியாதபடி.

அசங. கூடல்......வைத்தவன் - மதுரையில் சங்கம் வைத்த பாண்டியன். தேற்றத்தேரு ஈனர்கள்-தெளியத் தெளியாத சமணர்கள். எல்லைக்கு-முடிவுக்கு.

அசச. குறிஎறிய எல்லை - பொருள்குறிச் செறிவின் அளவை.

அசஎ. "வேந்தனும் ஓங்குக" என்று பாட. அம்புய மலராள் - இலக்குமி. இலக்குமி வாழும் மார்பினரென்று மன்னர்களைக் கூறுதல் மரபு. மன்னர்கள்

பா - ம்—*வெறியேர். ‡எதிர்த்து.

†சில பிரதிகளில் இப்பாட்டு எண்ணூற் றிருபத்தோராவதாகக் காணப்படுகிறது.

ஏடுநீர் எதிர்ந்து செல்லும் பொழுதிமை யோர்கள் எல்லாம்
நீடிய வாழ்த்திற் போற்றி *நிமிர்ந்தபூ மாரி தூர்த்தார்
ஆடியல் யானை மன்னன் அற்புதம் எய்தி நின்றான்
பாடுசேர் அமணர் அஞ்சிப் பதைப்புடன் பணிந்து நின்றார். அசஅ

ஆற்றின்மேற் செல்லும் ஏடு தொடர்ந்தெடுப் பதற்கு வேண்டிக்
†காற்றென விசையிற் செல்லுங் கடும்பரி ஏறிக் கொண்டு
கோற்றொழில் திருத்த வல்ல குலச்சிறை யார்பின் சென்றார்
ஏற்றுயர் கொடியி னாரைப் பாடினார் ஏடு தங்க. அசகூ

ஏடகம் பிள்ளை யார்தாம் "வன்னி" என் றெடுத்துப் பாடக்
கூடிய நீரில் ஏடு குலச்சிறை யாருங் கூடிக்
காடிட மாக ஆடுங் கண்ணுதல் கோயில் மாடு
நீடுநீர் நடுவுட் புக்கு நின்றவ தெடுத்துக் கொண்டார். அஞ0

"வன்னியும் மத்தமும் மதிபொதி சடையினன்
பொன்னியல் திருவடி புதுமல ரவைகொடு
மன்னிய மறையவர் வழிபட அடியவர்
இன்னிசை பாடலர் ஏடகத் தொருவனே"

"கோடுசந் தனமகில் கொண்டிழி வைகைநீர்
ஏடுசென் றணைதரும் ஏடகத் தொருவனை
நாடுதென் புகலியுள் ஞானசம் பந்தன
பாடல்பத் திவைவல்லார்க் கில்லையாம் பாவமே"—**தேவாரம்.**

தலைமிசை வைத்துக் கொண்டு தாங்கரு மகிழ்ச்சி பொங்க
அலைபுனற் கரையில் ஏறி அங்கினி தமர்ந்த மேருச்
சிலையுடை யவர்தாள் போற்றி மீண்டுசென் றணைவார் தெய்வ
மலைமகள் குழைத்த ஞானம் உண்டவர் தம்பால் வந்தார். அஞக

மற்றவர் பிள்ளை யார்தம் மலரடி வணங்கிப் போற்றிக்
கொற்றவன் முதலா யுள்ளோர் காணமுன் கொணர்ந்த ஏடு

---

திருமால் கூற்றினர் என்பதும் மரபு. "திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண்டேனே என்னும்"—**ஆழ்வார். கூன்பாண்டியன்** என்ற பெயர் பின்னே **நின்றசீர் நெடுமாறன்** என்று மாறலாயிற்று.

அசஅ. பாடுசேர் - தோல்வி அடைந்த. பணிந்து - தலைகுனிந்து.

அசகூ. குலச்சிறையார் அமைச்சராதலின் "கோல் தொழில் திருத்த வல்ல" என்னப்பட்டார். திருஞானசம்பந்தர் சிவபெருமானைப் பாடினார்.

அஞ0. ஏடகம் - திருவேடகத் திருப்பதி. "பருமதில் மதுரைமன் அவையெதிரே பதிகம தெழுதிலை அவையெதிரே - **வருநதி யிடைமிசை வருகரனே**" **—திருஞானசம்பந்தர்:** திருக்கழுமலம். கக.

**பா - ம்**—*நிறைந்த. †காற்றினுங் கடுகச்.

பற்றிய கையில் ஏந்திப் பண்பினால் யார்க்குங் காட்ட
அற்றருள் பெற்ற தொண்டர் அரவொலி எழுந்த தன்றே. அருஉ

மன்னவன் மாறன் கண்டு மந்திரி யாரை நோக்கித்
"துன்னிய வாதில் ஒட்டித் தோற்றஇச் சமணர் தாங்கள்
முன்னமே பிள்ளை யார்பால் அநுசிதம் முற்றச் செய்தார்
கொன்னுனைக் கழுவில் *ஏற முறைசெய்க" என்று கூற. அருங

†புகலியில் வந்த ஞானப் புங்கவர் அதனைக் கேட்டும்
இகலிலர் எனினுஞ் சைவர் இருந்துவாழ் மடத்தில் தீங்கு
தகவிலாச் சமணர் செய்த தன்மையால் சாலும் என்றே
மிகையிலா வேந்தன் செய்கை விலக்கிடா திருந்த வேலை. அருச

---

அருஉ. அற்று - ஐயம் திரிபு மயக்கம் முதலியவற்றை அற்று.

அருச. இகல் - பகை ; வன்மம். மிகையிலா-குற்றமில்லாத ; வரம்புகடந்த செய்கையில் தலைப்படாத ; நியாயவரம்புக்கு உட்பட்ட என்றபடி. மடத்தில் தீவைத்தது நியாய வரம்புக்கு மீறியது. அச் செயலுக்கு அரசநீதிப்படி தண்டனை விதிக்கவேண்டுவது நியாயம் என்றபடி.

திருஞானசம்பந்தர் தேவாரத்தில் சமணர்கள் கழுவேறிய குறிப்பு அகச் சான்றாக ஒன்றுமில்லை. சமணர்கள் நூல்களிலும் அதுபற்றிய சான்றில்லை. சீனயாத்திரைக்காரர்கள் எழுதியுள்ள தமிழ்நாட்டுக் குறிப்புகளிலும் சமணர்கள் கழுவேறியதைக் காணோம். சமணர்கள் கழுவேறிய செய்தியை முதல் முதல் குறிப்பிட்டவர் நம்பியாண்டார் நம்பியாவர். விரிவு அவர்தம் நூற்களிற் காண்க. அவர் உரையைக் கடைப்பிடித்துச் சேக்கிழார் கழுச்செய்தியை அருளினார்போலும். சேக்கிழார்கூற்று, அரசநீதியை ஒட்டிப்பிறந்திருத்தல் வெள்ளிடைமலை. பின்னே தோன்றிய திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம், பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற்புராணம் முதலிய புராணங்கள் சமணர்கள் கழுவேறியதைப் பலவாறு கூறலாயின. கதைப்போக்குகளில் முரண்பாடுகள் நிரம்பிக் கிடக்கின்றன. சமணர்கள் தாங்களே கழுவேறினார்கள் என்றும், அவர்கள் கழுவேற்றப்பட்டார்கள் என்றும் புராணங்களில் மாறுபடச் சொல்லப்பட்டிருத்தல் கவனிக்கத்தக்கது. சமணர்களைக் கழுவேறாதவாறு திருஞானசம்பந்தர் தடுத்தாரென்று திருவாலவாயுடையார் திருவிளையாடல் கூறுகிறது. சமணர்கள் கழுவேறிய பதி திருப்பூவணமென்றும், அவ்விடம் பின்னே 'கழுவர் படைவீடு' என்று வழங்கப்பட்டதென்றும் அப்புராணம் சொல்கிறது. தல புராணக் கூற்றுக்களின் முரண்பாடுகளை ஈண்டு விரிக்கிற் பெருகும். திருஞான சம்பந்தர் திருநாள், திருவருட் செயல்கள் முதலியன தமிழ் நாடெங்கும் கொண்டாடப்படுகின்றன. சமணர்கள் கழுவேறிய விழா, பாண்டி நாட்டில்மட்

பா - ம்—*ஏற்றி ; ஏற்ற.
†இப்பாடல் சில பிரதிகளிலில்லை.

பண்புடை அமைச்ச ரூரும் பாருளோர் அறியும் ஆற்றால்
கண்புடை பட்டு நீண்ட கழுத்தறி நிரையில் ஏற்ற
நண்புடை ஞானம் உண்டார் மடத்துத்தீ நாடி இட்ட
எண்பெருங் குன்றத் தெண்ணா யிரவரும் ஏறி னார்கள். அருரு

தோற்றவர் கழுவில் ஏறித் தோற்றிடத் தோற்றுந் தம்பம்
ஆற்றிடை அமண ரோலை அழிவினால் ஆர்ந்த தம்பம்
வேற்றொரு தெய்வ மின்மை விளக்கிய பதாகைத் தம்பம்
போற்றுசீர்ப் பிள்ளை யார்தம் புகழ்ச்சயத் தம்ப மாகும். அருசு

தென்னவன் தனக்கு நீறு சிரபுரச் செல்வர் ஈந்தார்
முன்னவன் பணிந்து †கொண்டு முழுவதும் அணிந்து நின்றான்
"மன்னன்நீ றணிந்தான்" என்று ‡மற்றவன் மதுரை வாழ்வார்
துன்னிநின் றார்கள் எல்லாந் தூயநீ றணிந்து கொண்டார். அருஎ

பூதிமெய்க் கணிந்து வேந்தன் புனிதனாய் §உய்ந்த போது
நீதியும் வேத நீதி யாகியே நிகழ்ந்த தெங்கும்
மேதினி புனித மாக வெண்ணீற்றின் விரிந்த சோதி
மாதிரந் தூய்மை செய்ய அமணிருள் மாய்ந்த தன்றே. அருஅ

மீனவற் குயிரை நல்கி மெய்ந்நெறி காட்டி மிக்க
ஊனமாஞ் சமணை நீக்கி உலகெலாம் உய்யக் ‖கொண்ட
ஞானசம் பந்தர் வாய்மை ஞாலத்திற் பெருகி யோங்கத்
¶தேனலர் கொன்றை யார்தந் திருநெறி நடந்த தன்றே. அருகூ

மறையவர் வேள்வி செய்ய வானவர் மாரி நல்க
இறைவன்நன் னெறியின் ஓங்க இகத்தினில் அவனி இன்பம்

---

டும் நடைபெற்று வருகிறது. திருப்பாசுரம் என்று வழங்கப்படும் "வாழ்க அந்த ணர்" என்னும் பதிகத்திறுதியில் "எல்லார்களும் ஏத்தும் ஈசனை" என்று ஞானசம்பந்தப் பெருமான் குறிப்பிட்டது ஈண்டுச் சிறப்பாகக் கருதற்பாலது. "உரைசேரும் எண்பத்துநான்கு நூறாயிரமாம் யோனி பேதம் - நிரைசேரப் படைத்தவற்றின் உயிர்க்குயிராய் அங்கங்கே நின்றான் கோயில்.........மிழலை யாமே" என்பதும் திருஞானசம்பந்தர் திருவாக்கே. இப்புராணம்: பாட்டு. எஅசு குறிப்புப் பார்க்க.

அருரு. கண்புடைபட்டு - கணுக்கள் பக்கத்தே தறிக்கப்பட்டு. கழுத்தறி களை வரிசையாக நாட்ட.

அருசு. ஆர்ந்த - நின்ற; பொருந்திய. பதாகை - வெற்றிப் பெருங்கொடி. அருஅ. மாதிரம் - திக்குகளெல்லாம்.

பா - ம்—*புகழ்செய்த. †வாங்கி. ‡மற்றஅம். §உயர்ந்த. ‖வந்த. ¶தேனவில்; தேனவிழ்.

குறைவில தெனினுங் கூற்றை உதைத்தவர் நாமங் கூறி
நிறைகடற் பிறவித் துன்பம் நீங்கிடப் பெற்ற தன்றே. அகூo

"அங்கயற் கண்ணி தன்னோ டாலவாய் அமர்ந்த அண்ணல்
பங்கயச் செய்ய பாதம் பணிவன்" என் றெழுந்து சென்று
பொங்கொளிச் சிவிகை ஏறிப் புகலியர் வேந்தர் போந்தார்
மங்கையர்க் கரசி யாரும் மன்னனும் போற்றி வந்தார். அகூக

எண்ணரும் பெருமைத் தொண்டர் யாவரும் மகிழ்ச்சி எய்திப்
புண்ணியப் பிள்ளை யாரைப் †புகழ்ந்தடி போற்றிப் போத
மண்ணெலாம் உய்ய வந்த வள்ளலார் தம்மைக் கண்டு
கண்ணினுற் பயன்கொண் டார்கள் கன்னிநாட் டவர்கள் எல்லாம்.

ஆலவாய் அண்ணல் கோயில் அங்கண்முன் தோன்றக் கண்டு
பாலறு வாயர் மிக்க பண்பினுல் தொழுது சென்று
மாலுநான் முகனும் போற்ற மன்னினார் கோயில் வாயில்
சீலமா தவத்தோர் முன்பு சிவிகைநின் றிழிந்து புக்கார். அகூங

தென்னவன் தானும் எங்கள் செம்பியன் மகளார் தாமும்
நன்னெறி அமைச்ச ரும் ஞானசம் பந்தர் செய்ய
பொன்னடிக் கமலம் போற்றி உடன்புகப் புனிதர் கோயில்
தன்னைமுன் வலங்கொண் டுள்ளால் சண்பையர் தலைவர் புக்கார்.

கைகளுந் தலைமீ தேறக் கண்ணில்ஆ னந்த வெள்ளம்
மெய்யெலாம் பொழிய வேத முதல்வரைப் பணிந்து போற்றி
"ஐயனே அடிய னேனை அஞ்சலென் றருள வல்ல
மெய்யனே" என்று "வீட லாலவாய்" விளம்ப லுற்றார். அகூரு

"வீடலால வாயிலாய் விழுமியார்கள் நின்கழல்
பாடலால வாயிலாய் பரவநின்ற பண்பனே
காடலால வாயிலாய் கபாலிநீள் கடிம்மதில்
கூடலால வாயிலாய் குலாயதென்ன கொள்கையே"

"குற்றம்நீ குணங்கள்நீ கூடல்ஆல வாயிலாய்
சுற்றம்நீ பிரானும்நீ தொடர்ந்திலங்கு சோதிநீ

---

அகூo. இகத்தினில் - இம்மையில்.

அகூக. பிள்ளையார் ஆண்டவன் ஆணை பெற்றே வாதத்திலிறங்கினர்; வாதம் முடிந்ததும் ஆண்டவன் கோயில் புகத் திருவுளங்கொண்டனர். இஃது அவர் திருவருள் வழி நிற்பவர் என்பதை வலியுறுத்துவது.

பா - ம்—*வள்ளல். †புகழ்ந்துமுன் ; புகழ்ந்துடன்.

கற்றநூற் கருத்தும்நீ யருத்தமின்ப மென்றிவை
முற்றும்நீ புகழ்ந்துமுன் உரைப்பதென்மு கம்மனே"—தேவாரம்.

"ஒன்றுமே றுணர்வும் இல்லேன் ஒழிவற நிறைந்த கோலம்
மன்றில்நான் மறைகள் ஏத்த மானுடர் உய்ய வேண்டி
நின்றுநீ ஆடல் செய்கை நினைப்பதே நியமம் ஆகும்"
என்றுபூம் புகலி மன்னர் இன்தமிழ்ப் பதிகம் பாட. அ௬௬

தென்னவன் பணிந்து நின்று "திருவால வாயில் மேவும்
மன்னனே! அமணர் தங்கள் †மாய்கையால் மயங்கி யானும்
உன்னையான் அறிந்தி லேனை உறுபிணி தீர்த்தாட் கொள்ள
இன்னருட் பிள்ளை யாரைத் தந்தனை இறைவ!" என்றான். அ௬௭

சீருடைப் பிள்ளை யாரும் சிறப்புடை அடியா ரோடும்
காரினிற் பொலிந்த கண்டத் திறைவர்தாள் வணங்கிக் காதல்
ஆரருள் பெற்றுப் போற்றி அங்குநின் றரிது நீங்கி
ஏரியல் மடத்தில் உள்ளால் இனிதெழுந் தருளிப் புக்கார். அ௬அ

நீடுசீர்த் தென்னர் கோனும் நேரியன் பாவை யாரும்
மாடுசென் றிறைஞ்சி நோக்கி மாளிகை தன்னிற் போகக்
கூடிய மகிழ்ச்சி பொங்கக் கும்பிடும் விருப்பி னாலே
நாடிஅங் கிருந்து தங்கள் நாதரைப் பாட லுற்றார். அ௬௯

திருவிய மகத்தின் உள்ளுந் திருநீல கண்டப் பாணர்க்
கருளிய திறமும் போற்றி அவரொடும் அளவ ளாவித்
தெருளுடைத் தொண்டர் சூழத் திருத்தொண்டின் உண்மை நோக்கி
இருள்கெட மண்ணில் வந்தார் இனிதமர்ந் திருந்தா ரன்றே. அ௭0

"நக்கமேகுவர் நாடுமோர் ஊருமே நாதன்மேனியின் மாசுணம் ஊருமே
தக்கபூமனைச் சுற்றக் கருளொடே தாரமுய்த்தது பாணர்க் கருளொடே
மிக்கதென்னவன் தேவிக் கணியையே மெல்லநல்கிய தொண்டர்க் கணியையே
அக்கினொடு துண்கல னேடுமே ஆலவாயர னுருமை யோடுமே"—தேவாரம்.

பூழியன் மதுரை யுள்ளார் புறத்துளார் அமணர் சேரும்
பாழியும் அருகர் மேவும் பள்ளியும் ஆன எல்லாம்
கீழுறப் பறித்துப் போக்கிக் களரொளித் தூய்மை செய்தே
வாழிஅப் பதிகள் எல்லாம் மங்கலம் பொலியச் செய்தார். அ௭௧

அ௬அ. ஏரியல் - கிளரும் அன்பு வாய்ந்த. அ௬௯. நேரியன் - சோழன்.
அ௭0. திரு இயமகத்திலுள்ளும். அ௭௧. மங்கலம் - சிவம்; சைவம்.

பா - ம்—*நினைப்பதென். †மாயையால்.

மீனவன் தேவி யாரும் குலச்சிறை யாரும் மிக்க
ஞானசம் பந்தர் பாதம் நாடொறும் பணிந்து போற்ற
ஆனசண் பையர்கோ னாரும் ஆலவாய் அமர்ந்தார் பாதம்
*ஊனமர்ந் துருக ஏத்தி உளங்களித் துறையும் நாளில். அ௭௨

வேறு

செய்தவத்தால் சிவபாத விருதயர்தாம் பெற்றெடுத்த
வைதிகசூ ளாமணியை மாதவத்தோர் பெருவாழ்வை
மைதிகழுந் திருமிடற்றார் அருள்பெற்ற வான்பொருளை
எய்தியபூம் புகலியிலே இருந்தநாள் மிகநினைந்தார். அ௭௩

"ஆனபுகழ்த் திருநாவுக் கரசர்பால் அவஞ்செய்த
மானமிலா அமணருடன் வாதுசெய்து வெல்வதற்கும்
மீனவன்தன் நாடுய்ய வெண்ணீறு †பெருக்குதற்கும்
போனவர்பால் புகுந்தபடி அறிவன்"எனப் புறப்படுவார். அ௭௪

துடியிடையாள் தன்னோடுந் தோணியில்வீற் றிருந்தபிரான்
அடிவணங்கி அலர்சண்பை அதனின்றும் வழிக்கொண்டு
படியின்மிசை மிக்குளவாம் பரன்கோயில் ‡பணிந்தேத்தி
வடிநெடுவேல் மீனவன்தன் வளநாடு வந்தணைந்தார். அ௭௫

மாமறையோர் வளம்பதிக ளிடைத்தங்கி வழிச்செல்வார்
தேமருவு நறும்பைந்தார்த் தென்னவன்தன் திருமதுரை
தாமணைந்து திருவால வாய்அமர்ந்த தனிநாதன்
பூமருவுஞ் சேவடிக்கீழ்ப் புக்கார்வத் தொடும்பணிந்தார். அ௭௬

அங்கணரைப் பணிந்துபோந் தருகணைந்தார் தமைவினவ
"இங்கெம்மைக் கண்விடுத்த காழியார் இளவேறு
தங்குமிடந் திருநீற்றுத் தொண்டர்குழாஞ் சாருமிடம்
செங்கமலத் திருமடம்மற் றிது"என்றே தெரிந்துரைத்தார். அ௭௭

செப்புதலும் அதுகேட்டுத் திருமடத்தைச் சென்றெய்த
அப்பர்எழுந் தருளினார் எனக்¶கண்டோர் அடிவணங்கி

அ௭௬. தே...தார் - தேன்நிறைந்து நறுமணங் கமழும் பசிய மாலையை அணிந்த.

அ௭௭. கண்விடுத்த - கண்ணருளிய. முன்னே அறியாமையால் குருடரா யிருந்தனர் என்பது. திருமகள் வாழும் மடம்.

அ௭௮. உவகைச் செய்தி சொல்ல.

பா - ம்—*உளங்கனிந் துறையும். †பெருகுதற்கும். ‡வலங்கொண்டு. ¶கேட்டோர்.

ஒப்பில்புகழ்ப் பிள்ளையார் தமக்கோகை உரைசெய்ய
"எப்பொழுது வந்தருளிற்" றென்றெதிரே எழுந்தருள. அஎஅ

சிவபாத விருதயர்தாம் முன்தொழுது சென்றணையத்
தவமான நெறியணையுந் தாதையார் எதிர்தொழுவார்
அவர்சார்வு கண்டருளித் திருத்தோணி அமர்ந்தருளிப்
பவபாசம் அறுத்தவர்தம் பாதங்கள் நினைவுற்றார். அஎகூ

இருந்தவத்தோர் அவர்முன்னே இணைமலர்க்கை குவித்தருளி
"அருந்தவத்தீர் எனைஅறியாப் பருவத்தே எடுத்தாண்ட
பெருந்தகைஎம் பெருமாட்டி யுடனிருந்த தே" என்று
பொருந்துபுகழ்ப் புகலியின்மேல் திருப்பதிகம் போற்றிசைத்தார்.

"மண்ணினல்ல" என்றெடுத்து மனத்தெழுந்த பெருமகிழ்ச்சி
உண்ணிறைந்த காதலினால் கண்ணருவி பாய்ந்தொழுக
அண்ணலார் தமைவினவித் திருப்பதிகம் அருள்செய்தார்
தண்ணறும்பூஞ் செங்கமலத் தாரணிந்த தமிழ்விரகர். அஅக

"மண்ணில்நல் லவண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணில்நல் லகதிக்கு யாதுமோர் குறைவிலை
கண்ணில்நல் லஃதுறுங் கழுமல வளநகர்ப்
பெண்ணில்நல் லாளொடும் பெருந்தகை இருந்ததே"—தேவாரம்.

திருப்பதிகந் திருக்கடைக்காப் புச்சாத்திச் சிறப்பின்மிகு
விருப்பினால் அவர்தமக்கு விருந்தளித்து மேவுநாள்
அருப்புறுமெய்க் காதல்புரி அடியவர்கள் தம்மோடும்
பொருப்புறுகைச் சிலையார்சேர் †பதிபிறவும் தொழப்போவார். அஅஉ

ஆலின்கீழ் ‡நால்வர்க்கன் றறமுரைத்த அங்கணனை
நூலின்கட் பொருள்பாடி நூலறிவார்க் கீந்தானைக்

---

அஎகூ. சார்வு - வரவை. பவ பாசம் - பிறவித்தொடக்கை. ஞானசம்பந்தரின் இயற்கைத் தந்தையார் சிவபெருமான் என்றபடி.

அஅ௦. பிள்ளையார் இணை மலர்க்கை......

அஅஉ. அருப்புறும் - கிளைத்துப் பெருகும்; புளகாங்கிதங் கொள்ளும். பொருப்புறு கைச் சிலையார் - சிவபெருமான்.

அஅ௩. கல்லாலின்கீழ்ச் சனகாதி நால்வருக்கும்; (சனகாதி நால்வர் : சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர்). அகப்பொருளை அருளிப் புலவர்க்

*இப்பாடல் சில பிரதிகளிலில்லை.

பா - ம்—†பிறபதியும். ‡நால்வர்க்கங் கறமுரைத்த.

காலம்பெற் றினிதிறைஞ்சிக் கைதொழுது புறம்போந்தார்
சீலங்கொள் தென்னவனும் தேவியரும் உடன்போத. அஅங

**வேறு**

தேனிலவு பொழில்மதுரைப் புறத்துப் போந்த தென்னவனார் தேவியார் அமைச்சர் சிந்தை, ஊனெகிழும் படிஅழிந்தங் கொழுகு கண்ணீர் பாய்ந்திழிய உணர்வின்றி வீழக் கண்டே, "யானுமுமைப் பிரியாத வண்ணம் இந்நாட் டிறைவர்பதி எனைப்பலவும் பணிவீர்" என்று, ஞானமுணர் வார்அருள அவரும் போத நம்பர்திருப் பரங்குன்றை நண்ணி னாரே. அஅச

ஆறணிந்தார் தமைவணங்கி அங்குப் போற்றி அணிஆப்ப னூரணைந்து பணிந்து பாடி, நீறணிந்த செல்வர்பதி பிறவுஞ் சேர்ந்து நிலவு திருப் பதிகங்கள் நிகழப் பாடிச், சேறணிந்த வயற்பழனக் கழனி சூழ்ந்த சிரபுரத்து வந்தருளுஞ் செல்வர் செங்கண், ஏறணிந்த வெல் கொடியார் திருப்புத் தூரை *எய்திஇறைஞ் சிச்சிலநாள் இருந்தா ரன்றே. அஅரு

பற்றார்தம் புரங்கள்மலைச் சிலையால் செற்ற பரமனார் திருப்புத் தூர் பணிந்து போந்து, புற்றாரும் பணிபூண்ட புனித னார்தம் பூவணத்தைப் புக்கிறைஞ்சிப் புகழ்ந்து பாடிக், கற்றார்கள் தொழுதேத்துங் கானப் பேரும் கைதொழுது தமிழ்பாடிச் சுழியல் போற்றிக், குற்றாலங் குறும்பலாக் கும்பிட் டேத்திக் கூற்றுதைத்தார் நெல் வேலி குறுகி னாரே. அஅசு

புண்ணியனார் நெல்வேலி பணிந்து போற்றிப் புரிசடையார் திருப்பதிகள் †பிறவும் சென்று, நண்ணிஇனி தமர்ந்தங்கு நயந்து பாடி நற்றொண்ட ருடன்நாளும் போற்றிச் செல்வார், விண்ணவரைச் செற்றுகந்தான் இலங்கை செற்ற மிக்கபெரும் பாதகத்தை நீக்க வேண்டித், திண்ணியபொற் சிலைத்தடக்கை இராமன் செய்த திரு விரா மேச்சரத்தைச் சென்று சேர்ந்தார். அஅஎ

---

களித்தவனை ; வேதத்தில் அறம் முதலிய பொருளையருளி நூலாராய்ச்சி யுடையார்க் களித்தவனை என்னலுமாம்.

அஅசு. புற்றாரும் பணி - புற்றிலுள்ள பாம்பை ஆபரணமாக.

அஅஎ. தேவர்களை நெடுங்காலம் பகைத்த இராவணனையும் அவனது இலங்கையையும் அழித்த......

பா - ம்—*இனிதிறைஞ்சிச் சிலநாளங் கிருந்தா ரன்றே. †பலவும்.

செங்கண்மால் வழிபட்ட கோயில் நண்ணித் திருமுன்பு தாழ்ந் தெழுந்து தென்னனோடும், மங்கையர்க்கு நாயகியார் தாமும் மெய்ம்மை மந்திரியா ருஞ்சூழ மணிநீள் வாயில், பொங்கிஎழும் விருப்பினால் உட னே புக்குப் புடைவலங்கொண் டுள்ளணைவார் போற்றி செய்து, பங்க யச்செங் கைகுவித்துப் பணிந்து நின்று பாடினார் மன்னவனும் பரவி ஏத்த. அஅஅ

சேதுவின்கட் செங்கண்மால் பூசை செய்த சிவபெருமான் தனைப் பாடிப் பணிந்து போந்து, காதலுடன் அந்நகரில் இனிது மேவிக் கண் ணுதலான் திருத்தொண்ட ரானார்க் கெல்லாம், கோதில்புகழ்ப் பாண் டிமா தேவி யார்மெய்க் குலச்சிறையார் குறைவறுத்துப் போற்றிச் செல்ல, நாதர்தமை நாடோறும் வணங்கி ஏத்தி நளிர்வேலைக் கரை யில்நயந் திருந்தா ரன்றே. அஅகூ

அந்நகரில் அமர்ந்தங்கண் இனிது மேவி ஆழிபுடை சூழ்ந்தொ லிக்கும் ஈழந் தன்னில், மன்னுதிருக் கோணமலை மகிழ்ந்த செங்கண் மழவிடையார் தமைப்போற்றி வணங்கிப் பாடிச், சென்னிமதி புனை மாட மாதோட் டத்தில் திருக்கேதீச் சரத்தண்ணல் செய்ய பாதம், உன்னிமிகப் பணிந்தேத்தி அன்ப ரோடும் உலவாத கிழிபெற்றார் உவகை யுற்றார். அகூ0

அப்பதியைத் தொழுதுவட திசைமேற் செல்வார் அங்கைஅனல் தரித்தபிரான் அமருங் கோயில், புக்கிறைஞ்சிப் பலபதியுந் தொழுது போற்றிப் புணரிபொரு தலைகரைவாய் †ஒழியப் போந்தே, செப்பரிய புகழ்த்திருவா டானை சேர்ந்து செந்தமிழ்மா லைகள்சாத்திச் சிவனார் மன்னும், ஒப்பரிய புனவாயில் போற்றி செய்து வணங்கினார் உல குய்ய ஞானம் உண்டார். அகூக

பதிநிலவு பாண்டிநா டதனில் முக்கட் பரமனார் மகிழ்விடங்கள் பலவும்போற்றி, விதிநிலவு வேதநூல் நெறியே ஆக்கி வெண்ணீற்றின்

---

அஅகூ. நளிர்...நயந்து - குளிர்ந்த கடற்கரையில் விரும்பி.

அகூ0. ஆழி - கடல். ஈழம் தன்னில் - ஈழநாட்டில்; இலங்கையில். உல வாத கிழிபெற்றார் - திருவாவடுதுறையில் வற்றாத பொன்முடிப்புப் பெற்றவ ராகிய திருஞானசம்பந்தர்.

அகூக. புணரிபொருது அலைகரைவாய்-கடலிலெழுந்து மோதும் அலைகளை யுடைய கரையிடத்தை.

பா - ம்—*பணிந்து போற்ற, †போந்து மன்னும்.

சார்வினால் மிக்கு யர்ந்த, கதியருளிக் காழிநகர் வாழ வந்தார் கண்ணு தலான் திருத்தொண்டர் பலருஞ் சூழ, மதிநிலவு குலவேந்தன் போற்றிச் செல்ல மந்திரியார் பதிமணமேற் குடியில் வந்தார். அகூஉ

அந்நகரில் இனிதமர்வார் அருகு சூழ்ந்த பதிகளில்நீ டங்கணர் தங் கோயில் தாழ்ந்து, மன்னுதிருத் தொண்டருடன் மீண்டு சேர்ந்து மன்னவனும் மங்கையருக் கரசி யாரும், கொன்னவில்வேற் குலச் சிறையார் தாமும் கூடிக் குரைகழல்கள் பணிந்துகுறை கொண்டு போற்றச், சென்னிவளர் மதியணிந்தார் பாதம் போற்றிச் சிரபுரத் துச் செல்வர்இனி திருந்த நாளில். அகூஙு

பொங்குபுனற் காவிரிநா டதனின் மீண்டு போதுதற்குத் திரு உள்ள மாகப் போற்றும், மங்கையருக் கரசியார் தாமும் தென்னர் மன்னவனும் மந்திரியார் தாமும் கூட, அங்கவர்தந் திருப்பாதம் †பிரிய லாற்று துடன்போக ஒருப்படும்‡அவ் வளவு நோக்கி, "இங்குநான் மொழிந்ததனுக் கிசைந்தி ராகில் ஈசர்சிவ நெறிபோற்றி இருப்பீர்" என்று. அகூச

சாலமிகத் தளர்வாரைத் தளரா வண்ணம் தகுவனமற் றவர்க் கருளிச் செய்த பின்பு, மேலவர்தம் பணிமறுக்க அவரும் அஞ்சி மீள்வதனுக் கிசைந்துதிரு வடியில் வீழ்ந்து, ஞாலமுய்ய வந்தருளும் பிள்ளை யாரைப் பிரியாத §நண்பினொடுந் தொழுது நின்றார், ஆலவிடம் உண்டவரை அடிகள் ||போற்ற அந்நாட்டை அகன்றுமீண் டணையச் செல்வார். அகூரு

பொன்னிவளந் தருநாடு புகுந்து மிக்க பொருவில்சீர்த் திருத் தொண்டர் குழாத்தி னோடும், பன்னகப்பூண் அணிந்தவர்தங் கோயில் தோறும் பத்தருடன் பதியுள்ளோர் போற்றச் சென்று, கன்னிமதில் திருக்களரும் போற்றிக் கண்டங் கறையணிந்தார் பாதாளீச் சரமும் பாடி, ¶முன்னணைந்த பதிபிறவும் பணிந்து போற்றி முள்ளிவாய்க் கரையணைந்தார் முந்நூல் மார்பர். அகூசு

---

அகூஙு. அமர்வார் - பிள்ளையார். நீடு - எழுந்தருளியுள்ள. குரைகழல்கள் - ஒலிக்கின்ற வீரக் கழல்களையணிந்த திருவடியை. குறைகொண்டு - குறைகளை முறையிட்டு.

அகூச. உடன்படும் நிலையை நோக்கி. இருப்பீராக.

அகூசு. காவிரி வளந்தருஞ் சோழநாட்டில். பாம்பாபரணத்தைப் பூண்ட சிவபெருமான். கன்னி - அழியாத. கண்டத்தில் நீலமணிந்த பெருமான்.

பா - ம்—*பெற்று. †பிரித. ‡அவ் வன்பு. §அன்பினொடுந். ||போற்றி. ¶முன்னணைந்து.

மலைவளர்சந் தனமகிலும் தேக்கும் உந்தி மலர்ப்பிறங்கல் வண்டி--ரப்பச் சுமந்து பொங்கி, அலைபெருகி ஆளியங்கா வண்ணம் ஆறு பெருகுதலால் அத்துறையில் அணையும் ஓடம், நிலைபுரியும் ஓடக்கோல் †நிலையி லாமை நீர்வாழ்நர் கரையின்கண் நிறுத்திப் போகக், கலைபயி லும் கவுணியர்கோன் அதனைக் கண்டக் கரையின்கண் எழுந்தருளி நின்ற காலை. அ௬எ

தேவர்பிரான் அமர்ந்ததிருக் கொள்ளம் பூதூர் எதிர்தோன்றத் திருவுள்ளம் பணியச் சென்று, மேவுதலால் ஓடங்கள் விடுவார் இன்றி ஒழிந்திடவும் மிக்கதோர் விரைவால் சண்பைக், காவலனார் ஓடத்தின் கட்ட விழ்த்துக் கண்ணுதலான் திருத்தொண்டர் தம்மை ஏற்றி, நாவலமே கோலாக அதன்மேல் நின்று நம்பர்தமைக் "கொட்டம்" என நவின்று பாட. அ௬அ

உம்பருய்ய நஞ்சுண்டார் அருளால் ஓடம் செலச்செல்ல உந்துதலால் ஊடு சென்று, செம்பொன்நேர் சடையார்தங் கொள்ளம் பூதூர் தனைச்சேர அக்கரையில் சேர்ந்த பின்பு, நம்பரவர் தமை‡வணங்க ஞானம் உண்ட பிள்ளையார் நற்றொண்ட ருடனி ழிந்து, வம்பலரு நறுங்கொன்றை நயந்தார் கோயில் வாயிலின்முன் மகிழ்ச்சியொடு வந்து சார்ந்தார். அ௬௯

"கொட்ட மேகம ழுங்கொள்ளம் பூதூர்
நட்ட மாடிய நம்பனை உள்கச்
செல்ல உந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறருள் நம்பனே"

"ஓடம் வந்தணை யுங்கொள்ளம் பூதூர்
ஆடல் பேணிய அடிகளை உள்கச்
செல்ல உந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறருள் நம்பனே"—தேவாரம்.

நீணிலைக்கோ புரமதனை இறைஞ்சிப் புக்கு நிகரிலாத் தொண்டருடன் நெருங்கச் சென்று, வாணிலவு கோயிலினை வலங்கொண்

அ௬எ. மலையில் வளரும் சந்தனத்தையும்......தள்ளிக்கொண்டு மலர்களாகிய மலைகளில்...ஆட்கள் போக்குவரவு செய்யாவண்ணம்...நில்லாமையால் ஓடக்காரர்கள் ஓடங்களைக் கரைக்கண்......கலைசெறிந்த......

அ௬அ. விரைவால் - வேட்கையால். நாவலமே - நாவெற்றியே ; "நாவலங் கொண்டு நண்ணுரோட்டி "—சிலப்பதிகாரம் : உ௩. கட்டுரை காதை. எக.

பா - ம்—*எத்துறையும். †நிலையி லாமல். ‡வணங்கி.

டெய்தி மதிச்சடையார் திருமுன்பு வணங்கி நின்று, "தாணுவே! ஆற்றின்கண் ஓடம் உய்க்கும் தன்மையால் அருள்தந்த தலைவா! நாகப் பூணினாய்! களிற்றுரிவை போர்த்த முக்கட் புனிதனே!" எனப் பணிந்து போற்றி செய்தார். கூ௦௦

போற்றிசைத்துப் புறம்போந்தங் குறையும் நாளில் பூழியன்முன் புன்சமயத் தமணர் தம்மோ, டேற்றபெரு வாதின்கண் எரியின் வேவாப் பதிகமுடை இறையவரை இறைஞ்ச வேண்டி, ஆற்றவும்அங் கருள்பெற்றுப் போந்து முன்னம் அணைந்தபதி களும்இறைஞ்சி அன்பர் சூழ, நாற்றிசையும் பரவுதிரு நள்ளா றெய்தி நாடுடைநா யகர்கோயில் நண்ணி னாரே. கூ௦க

நீடுதிருத் தொண்டர்புடை சூழ அங்கண் நித்திலயா னத்திடை நின் றிழிந்து சென்று, பீடுடைய திருவாயில் பணிந்து புக்குப் பிறையணிந்த சென்னியார் மன்னுங் கோயில், மாடுவலங் கொண்டுள்ளால் மகிழ்ந்து புக்கு மலர்க்கரங்கள் குவித்திறைஞ்சி வள்ள லாரைப், "பாடகமெல் லடி"எடுத்துப் பாடி நின்று பரவினார் கண்ணருவி பரந்து பாய. கூ௦உ

"பாடக மெல்லடிப் பாவை யோடும் படுபிணைக் காட்டிடம் பற்றி நின்று
நாடக மாடுநள் ளாறுடைய நம்பெரு மான்இது வென்கொல் சொல்லாய்
சூடக முன்கை மடந்தை மார்கள் துணைவரொ டுந்தொழு தேத்தி வாழ்த்த
ஆடக மாட நெருங்கு கூடல் ஆலவா யின்கண் அமர்ந்த வாறே"—தேவாரம்.

"தென்னவர்கோன் முன்னமணர் செய்த வாதில் தீயின்கண் இடும்ஏடு பச்சை யாக்கி, என்னுள்ளத் துணையாகி ஆல வாயில் அமர்ந் திருந்த வாறென்கொல் எந்தாய்" என்று, பன்னுதமிழ்த் தொடை சாத்திப் பரவிப் போந்து பண்பினிய தொண்டருடன் அங்கு வைகி, மன்னுபுகழ்ப் பதிபிறவும் வணங்கச் சண்பை வள்ளலார் நள்ளாறு வணங்கிச் செல்வார். கூ௦௩

சீர்நிலவு திருத்தெளிச்சே ரியினைச் சேர்ந்து சிவபெருமான் தனைப்பரவிச் செல்லும் போது, சார்வறியாச் சாக்கியர்தம் போதி

கூ௦௦. வாண்நிலவு - ஒளிவீசும். தாணுவே - புகலிடமான சிவமே.

கூ௦க. " நாடுடைய நம்பெருமான் மேயதுநள் ளாறே "—தேவாரம்.

கூ௦உ. சிவிகையினின்றும் இறங்கிச் சென்று. பீடு - பெருமை. "பாடக மெல்லடி"—எஅ௬ குறிப்புப் பார்க்க.

பா - ம்—*பரவிப் போந்தல்.

மங்கை சார்தலும்மற் றதுஅறிந்த சைவர் எல்லாம், ஆர்கலியின் கிளர்ச் சினைச் சங்கு தாரை அளவிறந்த பல்லியங்கள் முழக்கி ஆர்த்துப், பார்குலவு தனிக்காளஞ் சின்னம் எல்லாம் "பரசமய கோளரிவந் தான்" என் றூத. கூ0௪

புல்லறிவிற் சாக்கியர்கள் அறிந்தார் கூடிப் புகலியர்தம் புரவல ஞர் புகுந்து தங்கள், எல்லையினில் எழுந்தருளும் பொழுது தொண்டர் எடுத்தஆர்ப் பொலியாலும் எதிர்முன் சென்று, மல்கியெழுந் திருச் சின்ன ஒலிக ளாலும் மனங்கொண்ட பொறாமையினல் மருண்டு தங் கள், கல்வியினில் மேம்பட்ட புத்த நந்தி முதலான தேரர்க்குங் கனன்று சொன்ஞர். கூ0௫

மற்றவர்கள் வெவ்வுரையும் பிள்ளை யார்முன் வருசின்னப் பெரு கொலியும் மன்னுந் தொண்டர், பொற்புடைய ஆர்ப்பொலியுஞ் செவியி ஞூடு புடைத்தநா ராசம்எனப் புக்க போது, செற்றமிகும் உள்ளத் துப் புத்த நந்தி செயிர்த்தெழுந்து தேரர்குழாஞ் சூழச் சென்று, "வெற்றிபுனை சின்னங்கள் வாதில் எம்மை வென்றன்றே பிடிப்ப" தென வெகுண்டு சொன்ஞன். கூ0௬

புத்தரினம் புடைசூழப் புத்த நந்தி பொருவில்ஞா னப்புனிதர் திருமுன் பூதும், மெய்த்தவிறற் சின்னங்கள் விலக்குங் காலை வெகுண் டெழுந்த திருத்தொண்டர் *வெறுத்து நோக்கி, "இத்தகைய செயற்கி வரைத் †தடிதல் செய்யா திதுபொறுக்கில் தங்கள்நிலை ஏற்பர்" என்று, முத்துநிரைச் சிவிகையின்மேல் மணியை வந்து முறைபணிந்து புகுந்த படி மொழிந்து நின்றார். கூ0எ

"வருமிடத்தில் அழுகிதாம் நமக்கு வாதில் மற்றிவர்தம் பொருள் நிலைமை மருத வண்ணம், பொருமிடத்தில் அறிகின்றேம் புத்த நந்தி

கூ0௪. சாக்கியர் தம் - பௌத்தர்களுடைய.

கூ0௫. தேரர்க்கும் - பௌத்தர்கட்கும்.

கூ0௬. புடைத்த நாராசம் என - காய்ச்சி அடித்த இருப்புச் சலாகை போல.

கூ0எ. மெய்த்த விறல் - உண்மையான வெற்றியையுடைய; போலிச் சின் னங்களல்ல என்றபடி. தடிதல் செய்யாது - இருகூறுபடுத்தாது. தங்கள் நிலை ஏற்பர் - தங்கள் நிலை மேற்கொள்வர்.

கூ0அ. மருதவண்ணம் - மாருதபடி. பொரும் இடத்தில் - வாதிக்குமிடத் தில். அருமுறை எனச் சிலரும் வருமுறை எனச் சிலருங் கொள்வர். அரிய

பா - ம்—*வேறு. †தடுத்தல் செய்யீர்.

பொய்ம்மேற்கோள்" எனப்புகலி வேந்தர் கூற, அருமுறைசொற் றிருப்பதிகம் எழுதும் அன்பர் ஆளுடைய பிள்ளையார் திருவாக் காலே, "உரும்இடித்து விழப்புத்தன் உத்த மாங்கம் உருண்டுவீழ் கெ"னப்பொரு உரைமுன் விட்டார். கூ0அ

ஏறுயர்த்தார் சைவநெறி ஆணை உய்க்க எதிர்விலக்கும் இடை யூற்றை எறிந்து நீக்கும், †மாறில்வலி மந்திரமாம் அசனி போல வாய்மை‡உரைத் திருத்தொண்டர் வாக்கி னாலே, வேறுமொழிப் போரேற்பான் வந்த புத்தன் மேனியையும் தலையினையும் வெவ்வே றாகக், கூறுபட நூறியிடப் புத்தர் கூட்டங் குலைந்தோடி விழுந்து வெருக் கொண்ட தன்றே. கூ0கூ

மற்றவர்கள் நிலைமையையும் புத்த நந்தி வாக்கின்போ ரேற்ற வன்தன் தலையும் மெய்யும், அற்றுவிழ அத்திரவாக் கதனால் அன்பர் அறுத்ததுவும் கண்டஅரன் அடியார் எல்லாம், வெற்றிதரும் பிள்ளை யார் தமக்குச் சென்று விண்ணப்பஞ் செய"எதிர்ந்த விலக்கு நீங்க, உற்றவிதி §அதுவேயாம் அரனென் றெல்லாம் ஓது"கென அவ்வொலி வான் உற்ற தன்றே. கூகO

"புத்தர் சமண்கழுக் கையர் பொய்கொளாச்
சித்தத் தவர்கள் தெளிந்து தேறின
வித்தக நீறணி வார்வினைப் பகைக்கு
**அத்திர மாவன** அஞ்செ ழுத்துமே"—**தேவாரம்.**

---

முறையில் பிள்ளையார் சொல்லும் என்றும், திருவருள் வழிவரும் முறையில் பிள்ளையார் சொல்லும் என்றும் முறையே பொருள் விரிக்க. பிள்ளையார் அருளிய திருப்பதிகங்களை எழுதிவந்த அன்பர் சம்பந்தசரணாலயர் என்றும், இவர் பிள்ளையாரின் நல்லம்மான் என்றும் சொல்லப்படுகிறார். உரும் இடித்து - இடி இடித்து. உத்தமாங்கம் - தலை.

கூ0கூ. சிவபெருமானது சைவநெறி ஆணையைச் செலுத்துதற்குத் தடை செய்யக் குறுக்கிட்ட இடையூற்றை அறவே களைந்து ஒழிக்கும் மாறில்லாத வலிமை பொருந்திய. அசனிபோல - இடிபோல. வாய்மைஉரை - "அத்திர வாக்கு"; அடுத்த பாட்டிற் பார்க்க. திருத்தொண்டர் - சம்பந்த சரணாலயர். வேறுமொழி - மாறுபட்ட மொழியால். நூறியிட - சிதைக்க. வெருக்கொண் டது - திடுக்கிட்டு நடுக்குற்றது.

கூகO. அத்திரவாக்கதனால் - "அத்திரமாவன அஞ்செழுத்துமே" என்னுந் திருவாக்கால். எதிர்ந்த விலக்கு - எதிர்த்து வந்த தடை. புத்தநந்தியைத் தலையறுத்த செயல் பிள்ளையார்க்குத் தெரியாமலே நிகழ்ந்தது. அஃது எதிர்

பா - ம்— அருமறைச். †மாறுவலி. ‡உணர். §இது.

அஞ்சியகன் றோடியஅப் புத்த ரெல்லாம் அதிசயித்து மீண்டும் உடன் அணைந்து கூடி, "வஞ்சனையோ இதுதான்மற் றவர்தஞ் சைவ வாய்மையோ" எனமருண்டு மனத்திற் கொள்வார், "எஞ்சலின்மந் திரவாதம் அன்றி எம்மோ டெதிர்ந்து பொருள் பேசுவதற் கிசைவ" தென்று, தஞ்செயலின் மிக்குள்ள சாரி புத்தன் தன்னையே முன் கொண்டு பின்னுஞ் சார்ந்தார். ௬௧௧

அத்தன்மை கேட்டருளிச் சண்பை வந்த அடலேறு திருவுள்ளத் "தழகி" தென்று, மெத்தமகிழ்ச் சியினோடும் விரைந்து சென்று வெண் தரளச் சிவிகையின்நின் றிழிந்து வேறோர், சத்திரமண் டபத்தின் மிசை ஏறி நீடு சைவருடன் எழுந்தருளி இருந்து "சாரும், புத்தர் களை அழைக்க"எனத் திருமுன் நின்றார் புகலிகா வலர்ஏவல் போற் றிச் சென்றார். ௬௧௨

சென்றவர்கள் தேரர்குழாம் அணைந்து "நீங்கள் செப்பிவரும் பொருள்நிலைமை தெரிக்க எங்கள், வென்றிமழ இளங்களிறு சண்பை யாளி *வேதபாரகன் மும்மைத் தமிழின் வேந்தன், நன்றுமகிழ்ந் தழைக்கின்றான் ஈண்ட †நீரும் நண்ணும்"எனக் கூறுதலும் நன்மை சாராத், தன்றகைமைப் புத்தருடன் சாரி புத்தன் சத்திரமண் டப முன்பு சார வந்தான். ௬௧௩

அங்கணைந்து மண்டபத்துப் புத்த ரோடும் பிள்ளையார் அரு கணைய நின்ற போதில், எங்குநிகழ் திருச்சின்னந் தடுத்த புத்தன் இருஞ்சிரத்தைப் பொடியாக்கும் எதிரில் அன்பர், பொங்குபுகழ்ப் புகலிகா வலர்தம் பாதம் போற்றிஅரு ளாற்சாரி புத்தன் தன்னை, "உங்கள்தலை வனும்பொருளும் உரைக்க" என்ன உற்றவா தினைமேற் கொண் டுரைசெய் கின்றான். ௬௧௪

---

பாராதவாறு நிகழ்ந்தமையான், "உற்றவிதி அதுவேயாம் 'அர' என்று எல்லாம் ஓதுக" என்றார்; திருவருட் செயல் என்று "அரகர" என்று ஓதுமாறு கூறினு ரென்க.

௬௧௧. எஞ்சலில் - குறைவில்லாத. பொருளுண்மை பேசிவாதம் புரிதற்கு.

௬௧௨. அடல் ஏறு - திருவருட்டுணையால் எதிர்த்தவர்களைச் சாய்க்குஞ் சிங்க மாகிய திருஞான சம்பந்தர். சத்திரத்திலுள்ள மண்டபத்திலே.

௬௧௩. தேரர்குழாம் அணைந்து - புத்தர் கூட்டத்தை அடைந்து.

௬௧௪. எதிரில்லாத அன்பராகிய சம்பந்த சரணாலயர். பிள்ளையார் அருளால்.

பா - ம்—*வேதபாலகன். †நீங்கள்.

"கற்பங்கள் அனைத்தினிலும் பிறந்து வீந்து கதிமாறுங் கணபங்க இயல்பு தன்னில், பொற்புடைய தானமே தவமே தன்மை புரிந்தநிலை யோகமே பொருந்தச் செய்ய, உற்பவிக்கும் ஒழிவின்றி உரைத்த ஞானத் தொழியாத பேரின்ப முத்தி பெற்றான், பற்பலரும் பிழைத் துய்ய அறமுன் சொன்ன பான்மையான் யாங்கள் தொழும் பரமன்" என்றான். ௬௬௫

என்றுரைத்த சாரிபுத்தன் எதிர்வந் தேற்ற இருந்தவத்துப் பெருந்தன்மை அன்பர் தாமும், "நன்றுமது தலைவன்தான் பெற்றான் என்று நாட்டுகின்ற முத்திதான் யாவ" தென்றார், "நின்றவுரு வேதனையே குறிப்புச் செய்கை நேர்நின்ற ஞானமெனை நிகழ்ந்த ஐந்தும், ஒன்றியகந் தத்தவிவே முத்தி" என்ன உரைசெய்தான் பிடகத்தின் உணர்வு மிக்கான். ௬௬௬

---

௬௬௫. கற்பகாலங்களிலெல்லாம். கற்பம் - காலத்தின் பேரெல்லை; ௪௩௨ கோடி வருஷம். வீந்து - இறந்து. கதி - பதவி; பிறப்பு வகையுமாம். கணபங்கம் - க்ஷணத்துக்கு க்ஷணம் கெடல். கணம் - "நூறு தாமரை இதழை அடுக்கி ஊசியினால் குத்தினால் எட்டு இதழ் அறும் எல்லை; உயிர்கள் உய்தற் பொருட்டுக் கற்பகாலங்களிலெல்லாம் பிறந்து இறந்து கதிமாறும் கணபங்க நியாயங் கூறும் பௌத்தத்தில் என்றபடி. யோகம் எல்லாத் தொடர்புகளினின்றும் நீங்கித் தனித்து ஒன்றுவதாகலின் "தன்மை புரிந்த யோகமே" என்றார். தானமே தவமே யோகமே முதலாகச் சொல்லப்பட்ட பத்து நற்குணங்களில் ஈடுபட. அதனால் உற்பவிக்கும் (தோன்றும்).

௬௬௬. ஏற்ற - எதிர்த்த. உமது தலைவன் பெற்றதாகச் சொல்லப்படும் முத்தி எது என்று கேட்டனர்....ஐந்துஞ் சேர்ந்த கந்தத்தின் அழிவே முத்தி என்று கூறினான். உரு, வேதனை (நுகர்ச்சி), குறிப்பு,செய்கை (பாவனை),ஞானம் ஆகிய இவை ஐந்தும் பஞ்சஸ்கந்த மெனப்படும். " உருவு நுகர்ச்சி குறிப்பே பாவனை உள்ள அறிவிவை ஐங்கந்தமாவன"—**மணிமேகலை** : ௩௦. பவத்திற மறுகெனப் பாவை நோற்றகாதை க௮௯ - க௯௦.

" ஒங்கிய உருவ மோடும் வேதனைக் குறிப்பி னோடும்-தாங்குபா வனைவிஞ் ஞானந் தாமிவை ஐந்துங் கூடி..." என வரூஉம் **சிவஞானசித்தியார்** பரபக்கம் சௌந்திராந்திகன் மதம் - ௩௦-ம் பாட்டையும், அதன் உரையையும் பார்க்க. அவ்வுரைக் குறிப்புக்கணுள்ள பஞ்சஸ்கந்த விளக்கம் வருமாறு:—" இனி, உருவமாவதெட்டு. அவை பூதவுருநாலு; உபாதானவுருநாலு. அவை வருமாறு—பிருதிவி, அப்பு, தேயு, வாயுவெனும் நாலும் பூதவுரு; வலி, கந்தம், இரதம், வன்னமெனும் நாலும் உபாதானவுரு; ஆக-அ. வேதனையாவது மூன்று. அவை வருமாறு—குசலாவேதனை (சுக அறிவு), அகுசலாவேதனை(துக்க அறிவு), குசலா

பா - ம்—*நன்மை.

ஆங்கவன்தான் உரைத்தமொழி கேட்ட அன்பர் அதனைஅனுவாதஞ்செய் தவனை நோக்கித், "தாங்கியஞா னத்துடனுங் கந்தம் ஐந்தும் தாம்வீந்து கெட்டனவேல் தலைவன் தானும், ஈங்குளன்" என்றவனுக்கு விடய மாக யாவையும்முன் இயற்றுதற்கு விகார மேசெய், தோங்குவடி வமைத்துவிழ வெடுக்கும் பூசை கொள்வார்ஆர்? உரைக்க" என உரைக்க லுற்றான். கூகஎ

---

குசலாவேதனை (சுக துக்க அறிவு) ஆக-ங. குறிப்பாவது ஆறு—சோத்திரம், துவக்கு, சக்ஷு, சிங்குவை, ஆக்கிராணம் (மெய், வாய், கண், மூக்கு, செவி), மனம்; ஆக கூ. பாவனை இருபது— தீக்குணம்-க0; நற்குணம் க0. தீக்குணங்களாவன—பொய் சொல்லல், கோட்சொல்லல், கோபித்துச் சொல்லல், பயனில சொல்லல் எனவாக்கின்குணம் ச; களவிற்குப்போகுதல், வறிதே தொழில்செய்தல், கொலைசெய்தல் எனக் காயத்தின்குணம் ங; கொலைநினைக்கை, காமப்பற்று, ஆசை என மனத்தின் குணம் ங ; ஆக - க0. நற்குணங்களாவன—மெய்யுரை, நல்வார்த்தை, இனியனகூறல், பயன்படுசொல் என வாக்கின்குணம் ச; பள்ளி வலம்வரல், தவம்புரிதல், தானஞ் செய்தல் எனக் காயத்தின் குணம் ங; அருள் நினைவு, ஆசையறுத்தல், தவப்பற்று என மனத்தின்குணம் ங; ஆக - க0. ஆகப் பாவனை - உ0. இவை, மானச வாசிக காயங்களான் வருவனவாம். விஞ்ஞானம் ஆறு. அவையாவன—சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம், சித்தம். ஆக - கூ. ஆகப் பஞ்சகந்தபேதம் - சங. இதற்கு அவன் வசனம்—'எட்டிவை யுருவ மூன்று வேதனை யாறு ஞானம் - ஒட்டிய குறிப்போ ராறு செய்கையும் இருபதாகக் - கட்டிய பஞ்ச கந்தங் கணத்தினிற் பங்க மாகுங் - தொட்டநாற் பத்து மூன்றுஞ் சுகதநூற் றுணிவு தானே' என்பதாம்."

பிடகம் - பௌத்தாகமம்; இது "புத்த தர்ம சங்கம்" என்னும் மூத்திறமணியை (புத்தம் சரணங்கச்சாமி, தருமம் சரணங்கச்சாமி, சங்கம் சரணங்கச்சாமி—மும்மணி)க் கூடைபோன்று தாங்குவதால் பிடகம் எனப்பட்டது; (பிடகம் - கூடை); பிடகம் மூவகைப்படும்; அவை வினயபிடகம், சூத்திரபிடகம், அபிதர்மபிடகம் என்பன. இவை திரிபிடகம் என்றும் பிடகத்திரயம் என்றும் வழங்கப்படும்.

கூகஎ. அனுவாதம் - முன் குறித்தபொருளை வேறொன்று கூறுதற்காகத் திருப்பிச் சொல்வது; எதிரியைப் பார்த்து 'இவ்விவ்வாறு கூறினை' என்று அவன் கூற்றைத் திருப்பிச் சொல்லி மேலே வாதிப்பது. பஞ்சஸ்கந்தத்தின் கூட்டத்தினின்றும் விளையும் ஒன்றே உள்ளமென்றும் உணர்வென்றும் உயிரென்றும் பௌத்தம் கூறுகிறது. பஞ்சஸ்கந்த அழிவே முத்தி என்றும் அச்சமயம் சொல்கிறது. அங்ஙனமாயின் முத்தி இன்பத்தை அனுபவிப்பது எது என்னுங் கேள்வி எழுவதாகிறது. இதையொட்டியே சம்பந்த சரணாலயர் சாரிபுத்தனை நோக்கி, "பஞ்சஸ்கந்தத்தின் அழிவே முத்தியாயின், உங்கள் தலைவனுக்கு இருப்பு எங்கே? பஞ்சஸ்கந்தக் கூட்டம் குலைந்ததும், உங்கள்

"கந்தமாம் வினையுடம்பு நீங்கி எங்கோன் கலந்துளன்முத் தியில் என்றான்" என்னக் "காணும், இந்திரியங் கண்முதலாங் கரணந் தானும் இல்லையேல் அவன்உணர்ச்சி இல்லை" என்றார், "முந்தையறி விலனாகி உறங்கி னானை நிந்தித்து மொழிந்துடல்மீ தாடி னார்க்கு, வந்தவினைப் பயன்போல வழிபட் டார்க்கும் வருமன்றோ நன்மை"என மறுத்துச் சொன்னான். கூகஅ

சொன்னஉரை கேட்டருளி அன்பர் தாமும் "தொடர்ந்தவழி பாடு பல கொள்கின் றானுக், கன்னவற்றின் உடன்பாடும் எதிர்வும் இல்லை யானபோ தவன்பெறுதல் இல்லை" என்றார், "முன்னவற்றில் உடன் பாடும் எதிர்வும் இன்றி முறுகுதுயில் உற்றானை முனிந்து கொன்றால், இன்னுயிர்போய்க் கொலையாகி முடிந்த தன்றோ இப்படியால் எம்மிறை வற் கெய்தும்" என்றான். கூகக

"இப்படியால் எய்தும்"என இசைத்து "நீஇங் கெடுத்துக்காட் டியதுயிலும் இயல்பி னன்போல், மெய்ப்படிய கரணங்கள் உயிர்தாம் இங்கு வேண்டுதியால் நம்இறைவற் கான போது, செப்பிய அக் கந்

---

தலைவனுக்குப் பொருள்கள் எங்ஙனம் விஷயமாகும்? முன்போல அவனுக்கு உடல் முதலிய அமைத்து விழா பூசை முதலியன செய்வதென்னை? இச் செயல் விகாரமன்றோ" என்று கேட்டாரென்க.

கூகஅ. என்றான் - சாரிபுத்தன் கூறினான். என்ன - அவன் அவ்வாறு சொல்ல. காணும் இந்திரியங்களாகிய கண் முதலான கரணங்கள் இல்லை என் றால், உணர்ச்சியேது என்றபடி. முந்தையறிவு - பழைய உணர்வு. உறங்கு வோனுக்கு முன்னை உணர்வு இல்லாதிருத்தல் இயல்பு. முந்தையறிவின்றி உறங்குவோனை நிந்தித்து...போல...எந்தலைவனை வழிபட்டார்க்கும் நன்மை வருமன்றோ....

கூகக. உடன்பாடும் எதிர்வும் - விருப்பும் வெறுப்பும். பூசிப்போன் அல் லது பூசிக்கப்படுவோன் ஒன்றையும் பெறுதல் இல்லை என்றார். முறுகுதுயில் - மிக்க துயில். முன்னுணர்வின்றி விருப்பு வெறுப்பின்றி உறங்குவோனை (ஒரு வன்) கோபித்துக் கொன்றால், அது கொலையாகு மன்றோ? அதேபோல எம் மிறைவர்க்குச் செய்யப்படும் வழிபாட்டின் பயனுமாகும் என்றான். கொன்றவ னுக்குக் கொலைப்பாவம் சூழ்வதுபோல வழிபடுவோன் செயலைப் பொறுத்தே பயன்விளையும் என்றபடி.

கூஉ௦. பஞ்சஸ்கந்த கூட்டத்தால் உணர்வு உண்டாகிறதென்பதும், அவை களின் அழிவு முத்தி என்பதும் பௌத்தர் கொள்கை. இதை அடிப்படை யாகக் கொண்டு நிகழ்ந்த வாதத்தில், பஞ்சஸ்கந்த அழிவே முத்தியெனில், விழா பூசை கொள்வோன் யாவன் என்னுங் கேள்வி எழுப்பப்பட்டது. அதற்கு உறங்குவோன் இயல்பு எடுத்துக் காட்டப்பட்டது. இதற்குச் சம்பந்த சரணால

தத்தின் விளைவின் ருகித் திரிவில்லா முத்தியிற்சென் றிலனும் ஆனுன், அப்படிஅக் கந்தத்துள் அறிவுங் கெட்டால் அம்முத்தி யுடன் இன்பம் அணையா'' தென்றார். கூஉ0

அவ்வுரைகேட் டெதிர்மாற்றம் அறைவ தின்றி "அணைந்துளன் அம்முத்தியெனும் அதுவும் பாழாம்'', கவ்வையில்நின் றவனைஎதிர் நோக்கி ஞானக் கடலமுதம் அனையவர்தங் காதல் அன்பர், "பொய் வகையே முத்தியினிற் போனுன் முன்பே பொருளெல்லாம் உணர்ந் துரைத்துப் போனுன் என்றாய், எவ்வகையால் அவன்எல்லாம் உணர்ந்த தீதும் இல்லதுரைப் பாய்எனினும் ஏற்போம்'' என்றார்.

"உணர்வுபொதுச் சிறப்பென்ன இரண்டின் முன்ன துளவான மரப்பொதுமை †உணர்த்தல் ஏனைப், புணர்சிறப்பு மரங்களில்வைத் தின்ன தென்றல் இப்படியால் வரம்பில்லாப் பொருள்கள் எல்லாம், கொணரும்விற கினைக்குவைசெய் திடினும் வேறு குறைத்தவற்றைத் தனித்தனியே இடினும் வெந்தீத், துணர்கதுவிச் சுடவல்ல வாறு போலத் தொகுத்தும்விரித் துந்தெரிக்குந் தொல்லோன்'' என்றான்.

எடுத்துரைத்த புத்தன்எதிர் இயம்பும் அன்பர் "எரியுணர்வுக் கெடுத்துக்காட் டாகச் ‡சொன்னாய், அடுத்தவுணர் வுருவுடைய தன்று

---

யர் "உறங்கும் இயல்பினன்போல் எனில், உடம்பிலுள்ள கரணங்களையும் உயிரையும் இங்கே விரும்புகின்றாய். உம் இறைவனுக்கு அக்கரணமும் உயிரும் ஆகியபோது, சொல்லப்பட்ட பஞ்சஸ்கந்தத்தின் விளைவு ஏது? அஃது இல் லாததாய் முடிகிறது; முத்தியும் உம்இறைவன் அடைந்திலனுகிறான். உமது கூற்றுப்படி பஞ்சஸ்கந்தத்தின் குலைவால் உணர்வும் அழிந்தால் உம் இறைவன் முத்தி இன்பத்தை அடையாதவனுகிறான்'' என்றார்.

கூஉக. அணைந்துளன் அம்...... பாழாம் - நம் இறைவன் முத்தி யடைந் துள்ளான் என்பதும் பாழாயிற்று என்று. கவ்வையில் நின்றவனை - வருத்தத் தோடு நின்ற சாரிபுத்தனை. ஞான...அன்பர் - ஞானசம்பந்தரின் அடியவராகிய சம்பந்த சரணாலயர். முன்பே - முத்திக்கு முன்னரே. ஈதும் இல்லது - இதுவும் ஒப்பக் கூடாதது. உரைப்பாய் எனினும் - அதைத் தக்க ஏதுக்களால் நிறுவிக் கூறுவாயானாலும்.

கூஉஉ. உணர்வு பொது என்றும் சிறப்பென்றும் இரண்டுவகை. வனத் தைப் பொதுவாக உணர்வது பொது உணர்வின்பாற்பட்டது. அவ்வனத்துள்ள மரங்களை இன்ன இன்ன என்று உணர்வது சிறப்புணர்வின் பாற்பட்டது. விற கைக் குவியலாக வைப்பினும் தனியாக வைப்பினும் வெந்தீக் கொழுந்து பற் றிச் சுடவல்ல வாறுபோல.

பா - ம்—*உண்டவர். †உணர்தல். ‡சொன்னால்.

சொன்ன அனல்வடிவிற் றும்அதுவும் அறிதி நுங்கோன், தொடுத்த நிகழ் காலமே அன்றி எனைத் தொடர்ந்தஇரு காலமுந்தொக் கறியு மாகில், கடுத்தளரி நிகழ்காலத் திட்ட தல்லால் காணாத காலத்துக் கதுவா" தென்றார். கூஉரு

ஆதலினால் உன்னிறைவன் பொருள்கள் எல்லாம் அறிந்ததுநும் முத்திபோல் ஆயிற் றன்றே, ஏதமாம் இவ்வறிவால் உரைத்த நூலும் என்றவனுக் கேற்குமா றருளிச் செய்ய, வாதமா றொன்றின்றித் தோற்றான் புத்தன் மற்றவனை வென்றருளிப் புகலி மன்னர், பாததா மரைபணிந்தார் அன்பர் தங்கள் பான்மையழி புத்தர்களும் பணிந்து வீழ்ந்தார். கூஉச

புந்தியினால் அவருரைத்த பொருளின் தன்மை பொருளன்றாம் படிஅன்பர் பொருந்தக் கூற, மந்தவுணர் வுடையவரை நோக்கிச் "சைவம் அல்லாது மற்றொன்றும் இல்லை" என்றே, அந்தமில்சீர் மறைகள்ஆ கமங்கள் ஏனை அகிலகலைப் பொருளுணர்ந்தார் அருளிச் செய்யச், சிந்தையினில் அதுதெளிந்து புத்தர் சண்பைத் திருமறை யோர் சேவடிக்கீழ்ச் சென்று தாழ்ந்தார். கூஉரு

அன்றவர்க்குக் கவுணியர்கோன் கருணை நோக்கம் அணைதலினால் அறிவின்மை அகன்று நீங்கி, முன்தொழுது விழுந்தெழுந்து சைவ ரானார் முகைமலர்மா ரியின்வெள்ளம் பொழிந்த தெங்கும், நின்றன வும் சரிப்பனவும் சைவ மேயாம் நிலைமையவர்க் கருள்செய்து சண்பை வேந்தர், சென்றுசிவ னூர்பதிகள் பணிய வேண்டித் திருக்கடவூ ரதன் மருங்கு சேர வந்தார். கூஉகூ

வேறு

அந்நகரில் அடியார்கள் எதிர்கொள்ளப் புக்கருளிக்
கொன்னவிலுங் கூற்றுதைத்தார் குரைகழல்கள் பணிந்தேத்தி

கூஉரு. எரியை உணர்வுக்குத் திருஷ்டாந்தமாகச் சொன்னாய். உணர்வு உருவுடையதன்று; அனல் உருவுடையது. தொக்கு - கலந்து. கடுத்த - உவமையாகக் காட்டப்பட்ட; வெம்மையுடைய எனினுமாம். காணாத காலம் - இறந்த காலம், எதிர்காலம். கதுவாது - பற்றிச் சுடாது.

கூஉச. முத்திபோல் பாழாயிற்று என்றபடி. இவ்வறிவால் உரைத்த நூலும் (பிடகமும்) ஏதமாம் (குற்றமாம்).

கூஉரு. புத்தியினால் புத்தர்கள் உரைத்த.

கூஉகூ. நின்றனவும் - அசரமும்; சரிப்பனவும் - சரமும்; "தாவில் சராசரங்களெலாஞ் சிவம் பெருக்கும் பிள்ளையார்..."—இப்புராணம்: உகூ.

மன்னிஅமர்ந் துறையுநாள் "வாகீச மாமுனிவர்
எந்நகரில் எழுந்தருளிற்" றென்றடியார் தமைவினவ. கூஉஎ

அங்கவரும் அடிபோற்றி ஆண்டஅர செழுந்தருள்இப்
பொங்குபுனற் பூந்துருத்தி நகரின்கண் போற்றிசைத்துத்
தங்குதிருத் தொண்டுசெயும் மகிழ்ச்சியினால் சார்ந்தருளி
எங்குநிகழ்ந் திடஇருந்த படிஎல்லாம் இயம்பினார். கூஉஅ

அப்பரிசங் கவர்மொழிய ஆண்டஅர சினைக்காணும்
ஒப்பரிய பெருவிருப்பு மிக்கோங்க ஒளிபெருகு
மைப்பொருவு கறைக்கண்டர் கழல்வணங்கி அருள்பெற்றுச்
செப்பரிய புகழ்ப்புகலிப் பிள்ளையார் செல்கின்றார். கூஉகூ

பூவிரியுந் தடஞ்சோலை புடைபரப்பப் புனல்பரக்கும்
காவிரியின் தென்கரைபோய்க் கண்ணுதலார் மகிழ்ந்தஇடம்
மேவிஇனி தமர்ந்திறைஞ்சி விருப்புறுமெய்த் தொண்டரொடு
நாவரச ருழைச்சண்பை நகரரசர் நண்ணுவார். கூநo

அந்தணர்சூ ளாமணியார் பூந்துருத்திக் கணித்தாக
வந்தருளும் பெருவார்த்தை வாகீசர் கேட்டருளி
"நந்தமையா ளுடையவரை நாமெதிர்சென் றிறைஞ்சுவது
முந்தைவினைப் பயன்"என்று முகமலர அகமலர்வார். கூநக

"எதிர்சென்று பணிவன்"என எழுகின்ற பெருவிருப்பால்
நதிதங்கு சடைமுடியார் நற்பதங்கள் தொழுதகந்தப்
பதிநின்றும் புறப்பட்டுப் பரசமயஞ் சிதைத்தவர்பால்
முதிர்கின்ற பெருந்தவத்தோர் முன்னெய்த வந்தணைந்தார். கூநஉ

திருச்சின்னம் பணிமாறக் கேட்டநாற் றிசையுள்ளோர்
பெருக்கின்ற ஆர்வத்தால் பிள்ளையார் தமைச்சூழ்ந்த
நெருக்கினிடை யவர்காணா வகைநிலத்துப் பணிந்துள்ளம்
உருக்கிஎழும் மனம்பொங்கத் தொண்டர்குழாத் துடன்அணைந்தார்.

வந்தணைந்த வாகீசர் வண்புகலி வாழ்வேந்தர்
சந்தமணிச் சிவிகையினைத் தாங்குவார் உடன்தாங்கிச்

கூஉஅ. எங்கும் தொண்டின் பெருமை நிகழ்ந்திட.

கூஉகூ. மையொத்த நீலகண்டராகிய சிவபெருமான்.

கூநo. நாவரசர் உழை - திருநாவுக்கரசரிடத்து.

**பா - ம்**—*சந்தமணித் திருமுத்தின் சிவிகையினைத் தாங்கியே - சிந்தைகளிப் புற வருவார்.

சிந்தைகளிப் புறவந்தார் திருஞான சம்பந்தர்
புந்தியினில் வேறொன்று நிகழ்ந்திடமுன் புகல்கின்றார். ௬௩௪

"அப்பர்தாம் எங்குற்றார் இப்பொழு?"தென் றருள்செய்யச்
செப்பரிய புகழ்த்திருநா வுக்கரசர் செப்புவார்
"ஒப்பரிய தவஞ்செய்தேன் ஆதலினால் உம்மடிகள்
இப்பொழுது தாங்கிவரப் பெற்றுய்ந்தேன் யான்"என்றார். ௬௩௫

அவ்வார்த்தை கேட்டஞ்சி அவனியின்மேல் இழிந்தருளி
"இவ்வாறு செய்தருளிற் றென்னும்"என் றிறைஞ்சுதலும்
செவ்வாறு மொழிநாவர் "திருஞான சம்பந்தர்க்
கெவ்வாறு செயத்தகுவ" தென்றெதிரே †இறைஞ்சினார். ௬௩௬

சூழ்ந்துமிடைந் தருகணையும் தொண்டரெல்லாம் அதுகண்டு
தாழ்ந்துநிலம் உறவணங்கி எழுந்துதலை கைகுவித்து
வாழ்ந்துமனக் களிப்பினராய் "மற்றிவரை வணங்கப்பெற்
றாழ்ந்தபிறப் புய்ந்தோம்"என் றண்டமெலாம் உறஆர்த்தார். ௬௩௭

திருஞான சம்பந்தர் திருநாவுக் கரசர்தமைப்
பெருகார்வத் தொடும்அணைந்து தழீஇக்கொள்ளப் பிள்ளையார்
மருவாரும் மலரடிகள் வணங்கியுடன் வந்தணைந்தார்
பொருவாரும் புனற்சடையார் மகிழ்ந்ததிருப் பூந்துருத்தி. ௬௩௮

அன்பர்சூழத் தொடுஞ்செல்வார் ஆனேற்றார் மகிழ்கோயில்
முன்பணித்தா கச்சென்று கோபுரத்தை முன்னிறைஞ்சித்
துன்பமிலாத் திருத்தொண்ட ருடன்தொழுது புக்கருளி
என்புருக வலங்கொண்டு பணிந்தேத்தி இறைஞ்சினார். ௬௩௯

பொய்யிலியா ரைப்பணிந்து போற்றியே புறத்தணைவார்
செய்யசடை யார்கோயில் திருவாயில் முன்னாக

---

௬௩௬. செவ்வாறு மொழிநாவர் - செம்மை நெறியை உலகுக்கு அறிவுறுத்தும் நாவுக்கரசர். திருஞானசம்பந்தர் மாட்டுள்ள அன்பை எவ்வழியில் காட்டுவது என்றபடி; சிவிகை தாங்கும் வழி அப்பர் தமது அன்பைப் புலப்படுத்தினா ரென்க.

௬௩௮. மருஆரும் - மணம் நிறைந்த. பொருஆரும் புனல் - அலைமோதுதலை யுடைய கங்கை யணிந்த.

௬௩௯. ஆனேற்றார் - இடபாரூடராகிய சிவபெருமான்.

௬௪௦. பொய்யிலியாரை - சிவபெருமானை. மை - மலத்தை; அழுக்கை.

பா - ம்*—ஆதலின்தம் இணையடிகள். †இறைஞ்சுதலும்.

மையறுசீர்த் தொண்டர்குழாம் வந்துபுடை சூழஉல
குய்யவரு வார்தங்க ளுடன்மகிழ்ந்தங் கினிதிருந்தார். ௬௪0

வேறு

வாக்கின் தனிமன்னர் வண்புகலி வேந்தர்தமைப்
போக்கும் வரவும் வினவப் புகுந்ததெல்லாந்
தூக்கின் தமிழ்விரகர் சொல்லிறந்த ஞானமறை
தேக்குந் திருவாயால் செப்பி அருள்செய்தார். ௬௪௧

காழியினில் வந்த கவுணியர்தம் போரேற்றை
ஆழிமிசைக் கல்மிதப்பில் வந்தார் அடிவணங்கி
"வாழிதிருத் தொண்டென்னும் வான்பயிர்தான் ஓங்குதற்குச்
சூழும் பெருவேலி யானீர்" எனத்தொழுதார். ௬௪௨

பிள்ளையார் தாமுமவர் முன்தொழுது பேரன்பின்
வெள்ள மனையபுகழ் மானியார் மேன்மையையும்
கொள்ளும் பெருமைக் குலச்சிறையார் தொண்டினையும்
உள்ள பரிசெல்லாம் மொழிந்தங் குவந்திருந்தார். ௬௪௩

தென்னற் குயிரோடு நீறளித்துச் செங்கமலத்
தன்னம் அனையார்க்கும் அமைச்சர்க்கும் அன்பருளித்
துன்னுநெறி வைதிகத்தின் தூநெறியே ஆக்குதலால்
மன்னுபுகழ் வாகீசர் கேட்டு மனம்மகிழ்ந்தார். ௬௪௪

சொல்லின் பெருவேந்தர் தொண்டைவள நாடெய்தி
மல்கு புகழ்க்காஞ்சி ஏகாம் பரம்மன்னும்
செல்வர் கழல்பணிந்து சென்றதெல்லாஞ் செப்புதலும்
புல்குநூல் மார்பரும்போய்ப் *போற்ற மனம்புரிந்தார். ௬௪௫

அங்கணரைப் போற்றிஎழுந் தாண்ட அரசமர்ந்த
பொங்கு திருமடத்தில் புக்கங் கினிதமர்ந்து
திங்கட் †பகவணியும் சென்னியார் சேவடிக்கீழ்த்
தங்கு மனத்தோடு தாம்பரவிச் செல்லுநாள். ௬௪௬

வாகீச மாமுனிவர் மன்னுதிரு வாலவாய்
நாகம் அரைக்கசைத்த நம்பர் கழல்வணங்கப்

௬௪௧. தூக்கின் - இசையினையுடைய (செந்தூக்கு முதலியன).
௬௪௬. திங்கட்பகவு - பிறை.

பா - ம்—*போற்றுந் திறம். †கொழுந்தணியும்.

போதும் பெருவிருப்புப் பொங்கப் புகலியின்மேல்
ஏதும் பெருங்காதல் பிள்ளையார் ஏற்றெழுவார். கூசஎ

பூந்துருத்தி மேவும் புனிதர்தமைப் புக்கிறைஞ்சிப்
போந்து திருவாயில் புறத்தணைந்து நாவினுக்கு
வேந்தர் திருவுள்ளம் மேவவிடை கொண்டருளி
ஏந்தலார் எண்ணிறந்த தொண்டருடன் ஏகினார். கூசஅ

மாடுபுனற் பொன்னி இழிந்து வடகரையில்
நீடுதிரு நெய்த்தானம் ஐயாறு நேர்ந்திறைஞ்சிப்
பாடுதமிழ் மாலைகளுஞ் சாத்திப் பரவிப்போய்
ஆடல் புரிந்தார் திருப்பழனஞ் சென்றணைந்தார். கூசகூ

செங்கண் விடையார் திருப்பழனஞ் சேர்ந்திறைஞ்சிப்
பொங்கிய காதலின்முன் போற்றும் பதிபிறவும்
தங்கிப்போய்ச் சண்பைநகர் சார்ந்தார் தனிப்பொருப்பின்
மங்கை திருமுலைப்பால் உண்டருளும் வள்ளலார். கூ௫0

*தென்னாட் டமண்மா சறுத்துத் திருநீறே
அந்நாடு போற்றுவித்தார் வந்தணையும் வார்த்தைகேட்
"டென்னாள் பணிவ"தென ஏற்றெழுந்த மாமறையோர்
முன்னாக வேதம் †முழங்க எதிர்கொண்டார். கூ௫க

வேறு

போத நீடுமா மறையவர் எதிர்கொளப் புகலிகா வலருந்தம்
சீத முத்தணிச் சிவிகைநின் றிழிந்தெதிர் செல்பவர் திருத்தோணி
நாதர் கோயில்முன் தோன்றிட நகைமலர்க் கரங்குவித் திறைஞ்சிப்போய்
ஓத நீரின்மேல் ஓங்குகோயி லின்மணிக் கோபுரஞ் சென்றுற்றார்

அங்கம் மாநிலத் தெட்டுற வணங்கிப்புக் கஞ்சலி முடியேறப்,
பொங்கு காதலிற் புடைவலங் கொண்டுமுன் பணிந்துபோற் றெடுத்

கூசஎ. பிள்ளையார் சீர்காழியினிடம் உதிக்கும் பெருங் காதல் மேற்கொண்டு எழுவாரானார்.

கூசஅ. ஏந்தலார் - பிள்ளையார்.

கூ௫0. பொருப்பின் மங்கை - உமையம்மையாரின்.

கூ௫உ. போதம் நீடும் - ஞானம்மிக்க. நகை - ஒளிபொருந்திய. ஓதநீரின் மேல் ஓங்கு கோயிலின் -(பிரளயத்திலும்) கடல்நீர்மீது மிதக்கும் தோணியாகிய கோயிலின்.

பா - ம்—*தென்னாட் டமண்ஆ சறுத்துத். †மொழிந்தங் கெதிர்.

தோதித், துங்க நீள்பெருந் தோணியாங் கோயிலை அருளினால் தொழு தேறி, மங்கை யோடுடன் வீற்றிருந் தருளினார் மலர்க்கழல் பணி வுற்றார். ௬௫௩

முற்று மெய்யெலாம் புளகங்கள் முகிழ்த்தெழ முகந்துகண் களிகூரப், பற்றும் உள்ளம்உள் ளலைத்தெழும் ஆனந்தம் பொழிதரப் பணிந்தேத்தி, "உற்று மைசேர்வ" தெனுந்திரு வியமகம் உவகை பால் எடுத்தோதி, வெற்றி யாகமீ னவன்அவை எதிர்நதி மிசைவரு கரனென்பார். ௬௫௪

" உற்றுமை சேர்வது மெய்யினையே உணர்வது நின்னருள் மெய்யினையே
கற்றவர் காய்வது காமனையே கனல்விழி காய்வது காமனையே
அற்ற மறைப்பதும் உன்பணியே அமரர்கள் செய்வதும் உன்பணியே
பெற்றும் உகந்தது கந்தனையே பிரம புரத்தை உகந்தனையே"

" பருமதில் மதுரைமன் அவையெதிரே பதிகம தெழுதிலை அவையெதிரே
வருநதி யிடைமிசை வருகரனே வசையொடு மலர்கெட வருகரனே
கருதலில் இசைமுரல் தருமருளே கழுமலம் அமரிறை தருமருளே
மருவிய தமிழ்விர கனமொழியே வல்லவர் தம்மிடர் திடமொழியே"

—தேவாரம்.

சீரின் மல்கிய திருப்பதி கத்தினில் திருக்கடைக் காப்பேற்றி
வாரின் மல்கிய வனமுலை யாருடன் மன்னினார் தமைப்போற்றி
ஆரும் இன்னருள் பெற்றுமீண் டணைபவர் அங்கையால் தொழுதேத்தி
ஏரின் மல்கிய கோயில்முன் பணிந்துபோந் திறைஞ்சினர் மணிவாயில்.

தாதை யாரும்*அங் குடன்பணிந் தணைந்திடச் சண்பையார் தனிஏறு
மூதெ யில்திரு வாயிலைத் தொழுதுபோய் முகைமலர்க் குழலார்கள்
ஆத ரித்துவாழ்த் துரைஇரு மருங்கெழ அணிமறு கிடைச்சென்று
காத லித்தவர்க் கருள்செய்து தந்திரு மாளிகைக் கடைசார்ந்தார்.

நறவ மார்பொழிற் புகலியில் நண்ணிய திருஞான சம்பந்தர்
விறலி யாருடன் நீலகண் டப்பெரும் பாணர்க்கு மிகநல்கி

௬௫௩. அஷ்டாங்க நமஸ்காரஞ் செய்து.

௬௫௪. உடலெல்லாம் மயிர்ச் செறிய ; கண்கள் திருவருட்கோலத்தை முகந்து களிகூர. கரன் - அபயாத்தத்தையுடையவனே.

௬௫௬. பெண்மணிகள் விரும்பி வாழ்த்தும் சொல்லொலி இருபக்கமும் எழ அழகிய வீதியினிடத்துச் சென்று...

பா - ம்—*அங் கணைந்துடன் பணிந்திடச்.

உறையு ளாம்அவர் மாளிகை செலவிடுத் துள்ளணை தரும்போதில்
அறவின் நேர்குழ லார்மணி விளக்கெடுத் தெதிர்கொள அணைவுற்றார்.

அங்க ணைந்தரு மறைக்குலத் தாயர்வந் தடிவணங் கிடத் தாமும்
துங்க நீள்பெருந் தோணியில் தாயர்தாள் மனங்கொளத் தொழுவாராய்த்
தங்கு காதலின் அங்கமர்ந் தருளுநாள் தம்பிரான் கழல்போற்றிப்
பொங்கும் இன்னிசைத் †திருப்பதி கம்பல பாடினார் புகழ்ந்தேத்தி.

நீல மாவிடந் திருமிடற் றடக்கிய நிமலரை நேரெய்தும்
கால மானவை அனைத்தினும் பணிந்துடன் கலந்தஅன் பர்களோடும்
சால நாள்கள்அங் குறைபவர் தையலாள் தழுவிடக் குழைகம்பர்
கோல மார்தரக் கும்பிடும் ஆசைகொண் டெழுங்குறிப் பினரானார்.

"தண்ட கத்திரு நாட்டினைச் சார்ந்து‡வந் தெம்பிரான் மகிழ் கோயில், கண்டு போற்றிநாம் பணிவதென்" றன்பருக் கருள்செய்வார் காலம்பெற், றண்ட ருக்கறி வரும்பெருந் தோணியில் இருந்தவர் அருள்பெற்றுத், தொண்டர் சூழ்ந்துடன் புறப்படத் தொடர்ந் தெழுந் §தாதையார்க் குரைசெய்வார். ௬௬௦

"அப்பர்! நீர்இனி இங்கொழிந் தருமறை அங்கிவேட் டன் போடும், துப்பு நேர்சடை யார்தமைப் பரவியே தொழுதிரும்" எனச் சொல்லி, மெய்ப்பெ ருந்தொண்டர் மீள்பவர் தமக்கெலாம் விடை கொடுத் தருளிப்போய், ஒப்பி லாதவர் தமைவழி யிடைப்பணிந் துருகும்அன் பொடுசெல்வார். ௬௬௧

---

௬௫௭. மிகவும் அருள்புரிந்து அவர்தம் இருக்கையாகிய மாளிகைக்குச் செல்ல விடையளித்து. அறவின்நேர் குழலார் - கருமணலை யொத்த கூந்தலை யுடையார்.

௬௫௯. கோலம் ஆர்தர - திருக்கோலத்தை(க் கண்ணும் கருத்தும்) நுகர.

௬௬௦. தண்டகத் திருநாடு - தொண்டை நாடு; "அண்டரும் புகழ்துண் டீரன் ஆண்டுதுண் டீர நாடாய்த் - **தண்டகன் பின்னர் ஆண்டு தண்டக நாடாய்ப்** பின்னர்த் - தொண்டைமா னாண்டு தொண்டை நாடெனத் துலங்கிற் றென்ப - பண்டையன் படைப்புத் தொட்டுப் பயிலும்இத் தொண்டை நாடு"— **விநாயக புராணம்.** "தொண்டை நாட்டுத் திருக்கோயில்களை நாம் வணங்கப் போவோம்" என்று பிள்ளையார் தம்மைச் சூழ்ந்துள்ள அன்பர்க் கருள் செய்து......

௬௬௧. அப்பர் - தந்தையாரே. அங்கி வேட்டு - அக்கினிகாரியஞ் செய்து; வேள்வி செய்து. துப்பு நேர் - பவளம்போன்ற. தொண்டர்களில் தம்முடன்

பா - ம்—*தாழ்ந்து. †தமிழ்ப். ‡நந்தம்பிரான் §தாதையார்க் கருள்செய்வார்.

செல்வம் மல்கிய தில்லைமூ தூரினில் திருநடம் பணிந்தேத்திப்
பல்பெ ருந்தொண்டர் எதிர்கொளப் பரமர்தந் திருத்தினை நகர்பாடி
அல்கு தொண்டர்கள் தம்முடன் திருமாணி குழியினை அணைந்தேத்தி
மல்கு வார்சடை யார்திருப் பாதிரிப் புலியூரை வந்துற்றார். ௬௬௨

கன்னி மாவனங் காப்பென இருந்தவர் கழலிணை பணிந்தங்கு
முன்ன மாமுடக் கான்முயற் கருள்செய்த வண்ணமும் மொழிந்தேத்தி
மன்னு வார்பொழில் திருவடு கூரினை வந்தெய்தி வணங்கிப்போய்ப்
பின்னு வார்சடை யார்திரு வக்கரை பிள்ளையார் அணைவுற்றார். ௬௬௩

"முன்ன நின்றம் முடக்கால் முயற்கருள் செய்துநீள்
புன்னை நின்று கமழ்பா திரிப்புலி யூருளான்
தன்னை நின்று வணங்குந் தனைத்தவ மில்லிகள்
பின்னை நின்ற பிணியாக் கையைப்பெறு வார்களே"—தேவாரம்.

வக்க ரைப்பெரு மான்தனை வணங்கிஅங் கமருநாள் அருளாலே,
செக்கர் வேணியார் இரும்பைமா காளமுஞ் சென்றுதாழ்ந் துடன்
மீண்டு, மிக்க சீர்வளர் அதிகைவீ ரட்டமும் மேவுவார் தம்முன்பு,
தொக்க மெய்த்திருத் தொண்டர்வந் தெதிர்கொளத் தொழுதெழுந்
தணைவுற்றார். ௬௬௪

ஆதி தேவர்அங் கமர்ந்தவீ ரட்டானஞ் சென்றணை பவர்முன்னே
பூதம் பாடநின் றுடுவார் திருநடம் புலப்படும் படிகாட்ட
வேத *பாலகர் பணிந்து†மெய் யுணர்வுடன் உருகிய விருப்போடும்
கோதி லாஇசை "குலவுகுண் டைக்குறட் ‡பூதம்"என் றெடுத்தேத்தி.

"குண்டைக் குறட்பூதங் குழும அனலேந்திக்
கெண்டைப் பிறழ்தெண்ணீர்க் கெடில வடபக்கம்
வண்டு மருள்பாட வளர்பொன் விரிகொன்றை
விண்ட தொடையலான் ஆடும்வீரட் டானத்தே"—தேவாரம்.

பரவி ஏத்திய திருப்பதி கத்திசை பாடினார் பணிந்தங்கு
விரவும் அன்பொடு மகிழ்ந்தினி துறைபவர் விமலரை வணங்கிப்போய்

---

தொடாராது மீள்பவர்க்கெல்லாம். ஒப்பில்லாதவர் - சிவபெருமான். "தனக்குவமை யில்லாதான்"—திருக்குறள்: ௪.

௬௬௨. அல்கு - தம்மொடு தங்கும்.

௬௬௩. கன்னிமாவனமே (திருப்பாதிரிப்புலியூர்) தமக்குரிய இடமாக இருந்த சிவபிரான்.

௬௬௫. வேதபாலகர் - ஞானசம்பந்தர்.

பா - ம்—*பாரகர். †மெய் யுருகிய அன்புற. ‡பூதம்என் றெடுத்தோதி.

அரவ நீர்ச்சடை அங்கணர் தாம்மகிழ்ந் துறைதிரு வாமாத்தூர்
சிரபு ரத்தவர் தருளிய திருமறைச் சிறுவர்சென் றணைவுற்றார். கூகூகூ

சென்ற ணைந்துசிந் தையின்மகிழ் விருப்பொடு திகழ்திரு வாமாத்தூர்ப்
பொன்த யங்குபூங் கொன்றையும் வன்னியும் புனைந்தவர் அடிபோற்றிக்
"குன்ற வார்சிலை" எனுந்திருப் பதிகமெய் குலவிய இசைபாடி
நன்றும் இன்புறப் பணிந்துசெல் வார்திருக் கோவலூர் நகர்சேர்ந்தார்.

"குன்ற வார்சிலை நாணராவரி வாளிகூரெரி காற்றில் மும்மதில்
வென்றவா றெங்ஙனே விடையேறும் வேதியனே
தென்ற லார்மணி மாடமாளிகை சூளிகைக்கெதிர் நீண்ட பெண்ணைமேல்
அன்றில் வந்தணையும் ஆமாத்தூர் அம்மானே"—தேவாரம்.

கோவல் நீடிய வீரட்டம் அமர்ந்தவர் குரைகழல் பணிந்தேத்தி
ஆவின் ஐந்துகந் தாடுவார் அறையணி நல்லூரை அணைந்தேத்திப்
பாவ லர்ந்தசெந் தமிழ்கொடு பரவுவார் பரவுசீர் அடியார்கள்
மேவும் அன்புறு மேன்மையாந் தன்மையை விளங்கிட அருள்செய்தார்.

சீரின் மன்னிய பதிகமுன் பாடிஅத் திருஅறை யணிநல்லூர்
வாரின் மல்கிய கொங்கையாள் பங்கர்தம் மலைமிசை வலங்கொள்வார்
பாரின் மல்கிய தொண்டர்கள் இமையவர் நாடோறும் பணிந்தேத்தும்
காரின் மல்கிய சோலைஅண் ணாமலை அன்பர்காட் டிடக்கண்டார்.

வேறு

அண்ணா மலை†அங் கமரர்பிரான் வடிவு போன்று தோன்றுதலும்
கண்ணால் பருகிக் கைதொழுது கலந்து போற்றுங் காதலினால்
"உண்ணா முலையாள்" எனும்பதிகம் பாடித் தொண்ட ருடன்போந்து
தெண்ணீர் முடியார் திருவண்ணா மலையைச் சென்று சேர்வுற்றார். கூஎ0

"உண்ணாமுலை உமையாளொடும் உடனாகிய ஒருவன்
பெண்ணாகிய பெருமான்மலை திருமாமணி திகழ
மண்ணார்ந்தன அருவித்திரள் மழலைம்முழ வதிரும்
அண்ணாமலை தொழுவார்வினை வழுவாவணம் அறுமே"—தேவாரம்.

அங்கண் அணைவார் பணிந்தெழுந்து போற்றி செய்தம் மலைமீது
தங்கு விருப்பில் வீற்றிருந்தார் தாள்தா மரைகள் தம்முடிமேல்

---

கூகூஅ. ஆவின் ஐந்து - பஞ்சகவ்வியத்தை.

கூகூகூ. காரின் மல்கிய - மேகம்போல் நிறைந்த.

கூஎ0. சிவலிங்க வடிவுபோல.

பா - ம்—*ஆவில். †அங் கமர்ந்த.

பொங்கும் ஆர்வத் தொடும்புணைந்து புளக மலர்ந்த திருமேனி
எங்கு மாகிக் கண்பொழியும் இன்ப அருவி பெருக்கினார். ௬௭௧

ஆதி மூர்த்தி கழல்வணங்கி அங்கண் இனிதின் அமருநாள்
பூத நாத ரவர்தம்மைப் "பூவார் மல"ரால் போற்றிசைத்துக்
காத லால்அத் திருமலையிற் சிலநாள் வைகிக் கமழ்கொன்றை
வேத கீதர் திருப்பதிகள் பிறவும் பணியும் விருப்புறுவார். ௬௭௨

" பூவார் மலர்கொண் டடியார் தொழுவார் புகழ்வார் வானோர்கள்
மூவார் புரங்கள் எரித்த அன்று மூவர்க்கருள் செய்தார்
தூமா மழைநின் றதிர வெருவித் தொறுவின் நிரையோடும்
ஆமாம் பிணைவந் தணையுஞ் சாரல் அண்ணா மலையாரே "—தேவாரம்.

மங்கை பாகர் திருவருளால் வணங்கிப் போந்து வடதிசையில்
செங்கண் விடையார் பதிபலவும் பணிந்து புகலிச் செம்மலார்
துங்க வரைகள் கான்பலவுங் கடந்து தொண்டைத் திருநாட்டில்
திங்கள் முடியார் இனிதமருந் திருவோத் தூரைச் சேர்வுற்றார். ௬௭௩

தேவர் †முனிவர்க் கோத்தளித்தார் திருவோத் தூரில் திருத்தொண்டர்
தாவில் சண்பைத் தமிழ்விரகர் தாம்அங் கணையக் களிசிறந்து
மேவுங் கதலி தோரணங்கள் விளக்கு நிரைத்து நிறைகுடமும்
பூவும் பொரியும் சுண்ணமும்முன் கொண்டு போற்றி எதிர்கொண்டார்.

சண்பை வேந்தர் தண்தரளச் சிவிகை நின்றும் இழிந்தருளி
நண்பின் மிக்க சீரடியார் சூழ நட்பார் கோபுரஞ்சூழ்
விண்பின் னாக முன்னோங்கும் வியன்பொற் புரிசை வலங்கொண்டு
பண்பு நீடிப் பணிந்தெழுந்து பரமர் கோயி லுள்ளடைந்தார். ௬௭௫

வார ணத்தின் உரிபோர்த்த மைந்தர் உமையாள் மணவாளர்
ஆர ணத்தின் உட்பொருளாய் நின்றார் தம்முன் அணைந்திறைஞ்சி
நார ணற்கும் பிரமற்கும் நண்ணற் கரிய கழல்போற்றும்
கார ணத்தின் வரும்இன்பக் கண்ணீர் பொழியக் கைதொழுதார். ௬௭௬

---

௬௭௩. உயர்ந்த மலைகளையுங் காடுகளையுங் கடந்து.

௬௭௪. ஓத்து - வேதம். தாவில் - வருத்தமில்லாத.

௬௭௫. வியன் பொன் புரிசை - அகற்சியுடைய அழகிய மதிலை.

௬௭௬. வாரணத்தின்......மைந்தர் - யானையுரி போர்த்த சிவபெருமான். ஆரணத்தின் - வேதத்தின். காரணத்தால் வரும் இன்ப............

பா - ம்—*பணிய விரும்புவார். †முனிவர்க் கோத்தளித்த.

தொழுது விழுந்து பணிந்தெழுந்து சொன்மா லைகளால் துதிசெய்து
முழுதும் ஆனார் அருள்பெற்றுப் *போந்து வைகி முதல்வர்தமைப்
பொழுது தோறும் புக்கிறைஞ்சிப் போற்றி செய்தங் கமர்வார்முன்
அழுது வணங்கி ஒருதொண்டர் அமணர் திறத்தொன் றறிவிப்பார்.

"அங்கை அனலேற் றவர்க்கடியேன் ஆக்கும் பனைக ளானவெலாம்
மங்கு லுறநீண் டாண்பனையாய்க் †காயா தாகக் கண்டமணர்
'இங்கு நீரிட் டாக்குவன காய்த்தற் கடைவுண் டோ'என்று
பொங்கு நகைசெய் திழித்துரைத்தார் அருள வேண்டும்" எனப்புகல.

பரம னார்தந் திருத்தொண்டர் பண்பு நோக்கிப் பரிவெய்தி
விரவு காத லொடும்விரைந்து விமலர் கோயில் புக்கருளி
அரவும் மதியும் பகைதீர அணிந்தார் தம்மை அடிவணங்கி
இரவு போற்றித் திருப்பதிகம் இசையிற் பெருக எடுத்தருளி. கூஎகூ

விரும்பு ‡மேன்மைத் திருக்கடைக்காப் பதனில் விமலர் அருளாலே
"குரும்பை ஆண்ப னைஈனும்" என்னும் வாய்மை குலவுதலால்
நெருங்கும் ஏற்றுப் பனையெல்லாம் நிறைந்த குலைக ளாய்க்குரும்பை
அரும்பு பெண்ணை யாகியிடக் கண்டோ ரெல்லாம் அதிசயித்தார்.

"குரும்பை யாண்பனை ஈன்குலை ஓத்தூர்
அரும்பு கொன்றை அடிகளைப்
பெரும் புகலியுள் ஞானசம் பந்தன்சொல்
விரும்பு வார்வினை வீடே"—தேவாரம்.

சீரின் மன்னுந் திருக்கடைக்காப் பேற்றிச் சிவனார் அருள்பெற்றுப்
பாரில் நீடும் §ஆண்பனைமுன் காய்த்துப் பழுக்கும் பண்பினால்
நேரும் அன்பர் தங்கருத்து நேரே முடித்துக் கொடுத்தருளி
ஆரும் உவகைத் திருத்தொண்டர் போற்ற அங்கண் இனிதமர்ந்தார்.

‖தென்னாட் டமண்மா சறுத்தார்தஞ் செய்கை கண்டு திகைத்தமணர்
அந்நாட் டதனை விட்டகல்வார் சிலர்தங் கையிற் குண்டிகைகள்

---

கூஎஅ. சிவபெருமானுக்கு அடியேன். அடைவு - தகுதி. அவ்விழிவைப் போக்கியருளல் வேண்டும்......

கூஎகூ. பண்பு - நற்குணத்தை ; தன்மையை. இரவு முழுதும் போற்றி.

கூஅ0. குலவுதலால் - விளங்குதலால். ஏற்றுப் பனையெல்லாம் - ஆண் பனைக ளெல்லாம்.

கூஅக. நேரும் அன்பர்தம் - தம்மையடைந்த அன்பருடைய.

பா - ம்—*வைகி வணங்கி. †காயா வாகக். ‡மெய்ம்மைத். §பனைமுன்னம், அப் பனைமுன். ‖தென்னாட் டமணு.

"என்னு வனமற் றிவை?" என்று தகர்ப்பார் "இறைவன் ஏறுயர்த்த
பொன்னார் மேனிப் புரிசடையான் அன்றே" என்று போற்றினார்.

பிள்ளை யார்தந் திருவாக்கிற் பிறந்த லால்அத் தாலமும்முன்
புள்ள பாசம் விட்டகல ஒழியாப் பிறவி தனையொழித்துக்
கொள்ளு நீர்மைக் காலங்கள் கழித்துச் சிவமே கூடினவால்
வள்ள லார்மற் றவரருளின் வாய்மை கூறின் வரம்பென்னாம். கூஅரு

அங்கண் அமரர் பெருமானைப் பணிந்து போந்தா டரவினுடன்
பொங்கு கங்கை முடிக்கணிந்தார் மகிழும் பதிகள் பலபோற்றி
மங்கை பாகர் அமர்ந்தருளும் வயல்மா கறலை வழுத்திப்போய்க்
கொங்கு மலர்நீர்க் குரங்கணின்முட் டத்தைச் சென்று குறுகினார்.

ஆதி முதல்வர் குரங்கணின் முட்டத்தை அணைந்து பணிந்தேத்தி
நீதி †வாழுந் திருத்தொண்டர் போற்ற நிகரில் சண்பையினில்
வேத மோடு சைவநெறி விளங்க வந்த கவுணியனார்
மாதொர் பாகர் தாம்மன்னும் மதில்சூழ் காஞ்சி மருங்கணைந்தார். கூஅரு

வேறு

நீடுகாஞ்சி வாணரும் நிலவுமெய்ம்மை அன்பரும்
மாடுசண்பை வள்ளலார் வந்தணைந்த ஓகையால்
கூடுகின்ற இன்பநேர் குலாவுவீதி கோலினார்
காடுகொண்ட பூகம்வாழை காமர்தோ ரணங்களால். கூஅகு

கோடிநிரைத்த வீதியில் கோலவே திகைப்புறம்
கடிகொள்மாலை மொய்த்தபந்தர் கந்தநீர்த் தசும்புடன்
மடிவில்பொன் விளக்கெடுத்து மாதர்மைந்தர் மல்குவார்
படிவிளக்கும் அன்பரும் பரந்தபண்பில் ஈண்டுவார். கூஅஎ

---

கூஅ௨. பாண்டிநாட்டில் சமண்மாசு களைந்த சம்பந்தரது. தொண்டை நாட்டை அல்லது அத்திருவோத்தூரை விட்டு அகல்வாரானார். தமது கையிலுள்ள குண்டிகைகள் (கமண்டலங்கள்) என்ன பயனைத் தரப்போகின்றன என்று.......

கூஅரு. அத்தாலமும் - அப்பனைகளும். கொள்ளும்......கழித்து - தாம் உலகில் பயன்படும்வரை நின்று காலங்கழித்து.

கூஅகு. பூகம் - கமுகம். காமர் - விரும்பத்தக்க. கோலினார் - அலங்கரித்தார்.

கூஅஎ. கோல வேதிகைப் புறம் - அழகிய திண்ணையின் பக்கத்தே. கடி - மணம். கந்தநீர் தசும்புடன் - வாசனை நீர் கொண்ட குடங்களுடன். மடிவில் - கெடுதலில்லாத. படி - பூமியில்.

பா - ம் —*பிறத்த லாலே தாலமுமுன். †வழுவாத்.

கோதைமாதர் ஆடலும் குலாவுதொண்டர் பாடலும்
வேதகீத நாதமும் மிக்கெழுந்து விம்மவே
காதல்நீடு காஞ்சிவாணர் கம்பலைத் தெழுந்துபோய்
மூதெயிற் புறம்புசென் றணைந்துமுன் வணங்கினர். ௬அஅ

சண்பையாளும் மன்னர்முன்பு தொண்டர்வந்து சார்தலும்
பண்பு *நீடி யானமுன் பிழிந்திறைஞ்சு பான்மைகண்
டெண்பெருக்கு மிக்கதொண்டர் †அஞ்சலித் தெடுத்தசொல்
மண்பரக்க வீழ்ந்தெழுந்து வானமுட்ட ஆர்த்தனர். ௬அ௬

சேணுயர்ந்த ‡வாயில்நீடு சீர்கொள்சண்பை மன்னனார்
வாணிலாவு நீற்றணி §விளங்கிட மனத்தினில்
பூணும்அன்பர் தம்முடன் புகுந்திடப் புறத்துளோர்
காணும்ஆசை யிற்குவித்த கைந்நிரை எடுத்தனர். ௬௬௦

வியனெடுந் தெருவினூடு மிக்கதொண்டர் ஆர்ப்பெழக்
கயனெடுங்கண் மாதரும் காதல்நீடு மாந்தரும்
புயல்பொழிந்த தாமெனப் பூவினோடு பொற்சுணம்
இயலுமாறு வாழ்த்தெடுத் திருமருங்கும் வீசினர். ௬௬௧

இன்னவண்ணம் யாவரும் இன்பமெய்த எய்துவார்
பின்னுவார் சடைமுடிப் பிரான்மகிழ்ந்த கோயில்கள்
முன்னுறப் பணிந்துபோய் மொய்வரைத் திருமகள்
மன்னுபூ சனைமகிழ்ந்த மன்னர்கோயில் முன்னினார். ௬௬௨

கம்பவாணர் கோயில்வாயில் கண்டுகை குவித்தெடுத்
தும்பரோங்கு கோபுரத்தின் முன்னிறைஞ்சி உள்ளணைந்
தம்பொன்மா ளிகைப்புறத்தில் அன்பரோடு சூழவந்
திம்பர்ஞாலம் உய்யவந்த பிள்ளையார் இறைஞ்சுவார். ௬௬௩

---

௬அஅ. கம்பலைத்து - ஒலித்து. மூதெயில் - பழைய மதில்.

௬௬௦. வாள் நிலாவு - ஒளி விளங்கும். கைந்நிரை எடுத்தனர் - கைகளை வரிசையாகத் தலைமேல் ஏற்றினார்கள்.

௬௬௨. மொய்வரை......கோயில் - மலையரையன் திருமகளாகிய உமாதேவியார் பூசனையை மகிழ்ந்தேற்ற திருவேகம்பர் திருக்கோயிலை.

௬௬௩. கம்பவாணர் - திருவேகம்பர். உம்ப ரோங்கு - வானளாவிய. இம்பர் ஞாலம் - இவ்வுலகம்.

பா - ம்—*நீட ஐயன்முன். †அஞ்சலித் தெழுந்தசொல். ‡வான §விளக்கிட.

வேறு

செம்பொன்மலைக் கொடிதழுவக் குழைந்தருளுந் திருமேனிக்
கம்பரைவந் ததிர்வணங்குங் கவுணியர்தங் காவலனார்
பம்புதுளிக் கண்ணருவி பாய்ந்துமயிர்ப் புளகம் வரத்
தம்பெருகு மனக்காதல் தள்ளநில மிசைத்தாழ்ந்தார். ௬௬௪

பலமுறையும் பணிந்தெழுந்து பங்கயச்செங் கைமுகிழ்ப்ப
†மலருமுகம் அளித்ததிரு மணிவாயால் "மறையான்"என்
றுலகுய்ய எடுத்தருளி உருகியஅன் பென்புருக்க
நிலவுமிசை முதற்றாளம் நிரம்பியசீர் மையில்நிகழ. ௬௬௫

" மறையானை மாசிலாப் புன்சடை மல்குவெண்
பிறையானைப் பெண்ணொடா ணாகிய பெம்மானை
இறையானை ஏர்கொள்கச் சித்திரு ஏகம்பத்
துறைவானை அல்லதுள் காதென துள்ளமே "—தேவாரம்.

பாடினார் பணிவுற்றார் பரிவுறும்ஆ னந்தக்கூத்
தாடினார் அகங்குழைந்தார் அஞ்சலிதஞ் சென்னியின்மேல்
சூடினார் மெய்ம்முகிழ்த்தார் சூகரமும் அன்னமுமாய்த்
தேடினார் இருவருக்குந் தெரிவரியார் திருமகனார். ௬௬௬

மருவியஏ ழிசைபொழிய மனம்பொழியும் பேரன்பால்
பெருகியகண் மழைபொழியப் பெரும்புகலிப் பெருந்தகையார்
உருகியஅன் புள்ளலைப்ப உமைதழுவக் குழைந்தவரைப்
பருகியமெய் யுணர்வினொடும் பரவியே புறத்தணைந்தார். ௬௬௭

புறத்தணைந்த தொண்டருடன் போந்தமைந்த திருமடத்தில்
பெறற்கரும்பே றுலகுய்யப் பெற்றருளும் பிள்ளையார்
மறப்பரிய காதலுடன் வந்தெய்தி மகிழ்ந்துறைவார்
அறப்பெருஞ்செல் வக்காமக் கோட்டம்அணைந் திறைஞ்சினார். ௬௬௮

‡திருவேகம் பத்தமர்ந்த செழுஞ்சுடரைச் சேவடியில்
§ஒருபோதும் தப்பாதே உள்ளுருகிப் பணிகின்றார்
மருவுதிரு வியமகமும் வளர்இருக்குக் குறள்மற்றும்
பெருகும்இசைத் திருப்பதிகத் தொடைபுனைந்தார் பிள்ளையார். ௬௬௯

௬௬௪. பம்பு - ததும்பும். ௬௬௫. சிவந்த கரங்கள் விரிய.

௬௬௬. மெய்ம்முகிழ்த்தார் - புளகங் கொண்டார். சூகரமும் - பன்றியும்.

பா - ம்—*எழத். †மலருமறை. ‡திருவேகாம்; திருவேகம்பத். §ஒருபொழுதும்.

நீடுதிருப் பொழிற்காஞ்சி நெறிக்காரைக் காடிறைஞ்சிச்
சூடுமதிக் கண்ணியார் துணைமலர்ச்சே வடிபாடி
ஆடுமவர் இனிதமரும் அனேகதங்கா வதம்பரவி
மாடுதிருத் தானங்கள் பணிந்தேத்தி வைகுநாள். க000

எண்டிசையும் போற்றிசைக்குந் திருப்பதிமற் றதன்புறத்துத்
தொண்டருடன் *இனிதேகித் தொல்லைவிடம் உண்டிருண்ட
கண்டர்மகிழ் மேற்றளியும் முதலான கலந்தேத்தி
மண்டுபெருங் காதலினால் வணங்கிமீண் டினிதிருந்தார். க00க

அப்பதியில் விருப்பினொடும் அங்கணரைப் பணிந்தமர்வார்
செப்பரிய புகழ்ப்பாலித் திருநதியின் தென்கரைபோய்
மைப்பொலியுங் கண்டர்திரு மாற்பேறு மகிழ்ந்திறைஞ்சி
முப்புரஞ்செற் றவர்தம்மை மொழிமாலை சாத்தினார். க00உ

திருமாற்பே றுடையவர்தந் திருவருள்பெற் றெழுந்தருளிக்
கருமாலுங் கருமாவாய்க் காண்பரிய கழல்தாங்கி
†மருஆற்றல் மழவிடையார் திருவல்லம் வணங்கித்தம்
பெருமாற்குத் திருப்பதிகப் பெரும்பிணையல் அணிவித்தார். க00ங

அங்குள்ள ‡பிறபதியில் அரிக்கரியார் கழல்வணங்கிப்
பொங்குபுனற் பால்யாற்றின் புடையில்வட பாலிறைவர்
எங்கும்உறை பதிபணிவார் இலம்பயங்கோட் டூர்இறைஞ்சிச்
செங்கண்விடை §உகைத்தவரைத் திருப்பதிகம் பாடினார். க00௪

திருத்தொண்டர் பலர்சூழத் திருவிற்கோ லமும்பணிந்து
பொருட்பதிகத் தொடைமாலை புரம்எரித்த படிபாடி
அருட்புகலி ஆண்டகையார் தக்கோலம் அணைந்தருளி
விருப்பினொடுந் திருவூறல் மேவினார் தமைப்பணிந்தார். க00ரு

தொழுதுபல முறைபோற்றிச் சுரர்குருவுக் கிளையமுனி
வழுவில்தவம் புரிந்தேத்த மன்னினார் தமைமலர்ந்த

க000. மதிக் கண்ணியார் - சந்திரனைக் கொண்டை மாலையாக அணிந்த சிவபெருமான். மாடு திருத்தானங்கள் - பக்கத்துள்ள திருப்பதிகளையும்.

க00ங. கரு மாவாய் - பன்றியாய். திருப்பதிகமாகிய பூமாலையை.

க00ரு. திருவிற்கோலம் கூவம் என்று வழங்கப்படுகிறது. தக்கோலத்துள்ள திருவூறல்.

பா - ம்—*இனிதேத்தித். †வரும் ஆற்றல். ‡பிறபதிகள். §உயர்த்தவரைத்.

பழுதில்செழுந் தமிழ்மாலைப் பதிகஇசை புனைந்தருளி
முழுதும்அளித் தவர்அருளால் போந்தனர்முத் தமிழ்விரகர். கoOசு

குன்றநெடுஞ் சிலையாளர் குலவியபல் பதிபிறவும்
சென்றவிருப் புடன்இறைஞ்சி நீடுதிருத் தொண்டருடன்
பொன்தயங்கு மணிமாடப் பூந்தராய்ப் புரவலனார்
சென்றணைந்தார் பழையனூர்த் திருவாலங் காட்டருகு. கoOஎ

வேறு

"இம்மையிலே புவியுள்ளோர் யாருங் காண ஏழுலகும் போற் றிசைப்ப எம்மை ஆளும், அம்மைதிருத் தலையாலே நடந்து போற் றும் அம்மையப்பர் திருவாலங் காடாம்" என்று, தம்மையுடை யவர் மூதூர் மிதிக்க அஞ்சிச் சண்பைவரும் சிகாமணியார் சாரச் சென்று, செம்மைநெறி வழுவாத பதியின் மாடோர் செழும்பதியில் அன் றிரவு பள்ளி சேர்ந்தார். கoOஅ

மாலையிடை யாமத்துப் பள்ளி கொள்ளும் மறையவனார் தம் முன்பு கனவி லேவந், தாலவனத் தமர்ந்தருளும் அப்பர் "நம்மை அயர்த்தனையோ பாடுதற்"கென் றருளிச் செய்ய, ஞாலம்இருள் நீங்க வரும் புகலி வேந்தர் நடுஇடையா மத்தின்இடைத் தொழுது ணர்ந்து, வேலைவிடம் உண்டவர்தங் கருணை போற்றி மெய்யுருகித் திருப் பதிகம் விளம்ப லுற்றார். கoOகூ

"துஞ்சவரு வார்"என்றே எடுத்த ஓசைச் சுருதிமுறை வழுவா மல் தொடுத்த பாடல், எஞ்சலிலா வகைமுறையே பழைய னூரார் இயம்புமொழி காத்தகதை சிறப்பித் தேத்தி, "அஞ்சனமா கரியுரித் தார் அருளாம்" என்றே †அருளும்வகை திருக்கடைக்காப் பமையச்

கoOசு. சுரர் குருவுக்கு இளைய முனி - தேவகுருவாகிய வியாழனுக்குத் தம்பியாகிய சம்வர்த்த முனி. மன்னினார் தமை - சிவபெருமானை. முழுதும் அளித்தவர் - எல்லாவற்றையும் படைத்த சிவபெருமான்.

கoOஅ. அம்மை - காரைக்காலம்மையார். தம்மை யுடையவர் - சிவ பெருமானது.

கoOகூ. இரவிலே நடுயாமத்திலே. அயர்த்தனையோ - மறந்தனையோ.

கoகo. எஞ்சலிலா வகை - குறைவில்லாத வகையில். பழையனூரார் சிறப்பு மொழி காத்த கதையைத் திருக்குறிப்புத் தொண்டர் புராணம்: பாட்டு ௩. குறிப்பில் காண்க. அஞ்சன மாகரி - கருமை நிறமுடைய பெரிய யானையை.

பா - ம்—*நடுஇருள்யா. †அறியும்.

சாத்திப், பஞ்சுரமாம் பழையதிறங் கிழமை கொள்ளப் பாடினார் பாரெல்லாம் உய்ய வந்தார். க0க0

"துஞ்ச வருவாருந் தொழுவிப் பாரும் வழுவிப்போய்
நெஞ்சம் புகுந்தென்னை நினைவிப் பாரும் முனைநட்பாய்
வஞ்சப் படுத்தொருத்தி வாணாள்கொள் ளும்வகைகேட்
டஞ்சும் பழையனூர் ஆலங்காட் டெம் மடிகளே"—தேவாரம்.

நீடும்இசைத் திருப்பதிகம் பாடிப் போற்றி நெடுங்கங்குல் இருள் நீங்கி நிகழ்ந்த காலை, மாடுதிருத் தொண்டர்குழாம் அணைந்த போது மாலையினில் திருவால வனத்து மன்னி, ஆடுமவர் அருள்செய்த படியை எல்லாம் அருளிச்செய் தகமலரப் பாடி ஏத்திச், சேடர் பயில் திருப்பதியைத் தொழுது *போந்து திருப்பாசூர் அதன்மருங்கு செல்ல லுற்றார். க0கக

திருப்பாசூர் அணைந்தருளி அங்கு மற்றச் செழும்பதியோர் எதிர்கொள்ளச் சென்று புக்குப், பொருப்பரையன் மடப்பாவை இடப்பாகத்துப் புராதனர்வேய் இடங்கொண்ட புனிதர் கோயில், விருப்பினுடன் வலங்கொண்டு புக்குத் தாழ்ந்து வீழ்ந்தெழுந்து மேனியெலாம் முகிழ்ப்ப நின்றே, அருட்கருணைத் திருவாளன் நாமஞ் "சிந்தை இடையார்"என் றிசைப்பதிகம் அருளிச் செய்தார். க0கஉ

"சிந்தை யிடையார் தலையின் மிசையார் செஞ்சொலார்
வந்து மாலை வைகும் போழ்தென் மனத்துளார்
மைந்தர் மணாளர் என்ன மகிழ்வா ரூர்போலும்
பைந்தண் மாதவிச் சோலை சூழ்ந்த பாசூரே"—தேவாரம்.

---

பஞ்சுரமாம்......கொள்ள - பஞ்சுரமென்னும் பழைய பண்திறத்தின் உரிமை கொள்ள; பஞ்சுரம் - ஒருவகைப்பண். திறம் - **ஆனாயநாயனார் புராணம்**: உக. குறிப்புப் பார்க்க.

க0கக. நிகழ்ந்த காலை - விளங்கிய காலை நேரத்தில். மாலையினில்......... ஆடுமவர் - **திருநாவுக்கரசு சுவாமிகள் புராணம்**: பாட்டு ககக. குறிப்புப் பார்க்க. நடராசப்பெருமான் மாலையில் திருவாலங்காட்டிலும் (திருச்சிற்றம்பலத்திலும்) பகலில் திருப்பாசூரிலும் ஆடுகிறார் என்னுமொரு சம்பிரதாய முண்டு. "பாகப்பொழுதெல்லாம் பாசூர்த்தங்கி"—**அப்பர்**: கோயில்புக்கதிருத்தாண்டகம் உ. சேடர் பயில் - பெரியோர்கள் வாழும்.

க0கஉ. புராதனரும் மூங்கிலின் கீழ் எழுந்தருளியுள்ள புனிதருமாகிய சிவபெருமான் கோயிலை.

பா - ம்—*போற்றி.

மன்னுதிருப் பதிகஇசை பாடிப் போற்றி வணங்கிப்போந் தப் பதியில் வைகி மாடு, பிஞ்ஞகர்தம் வெண்பாக்கம் முதலா யுள்ள பிற பதிகள் பணிந்தணைவார் பெருகும் அன்பால், முன்னிறைந்த திரு வாய்மஞ் சனநீ ராட்டும் முதல்வேடர் கண்ணப்ப நாய னாரை, உன்னி யொளிர் காளத்தி மலைவ ணங்க உற்றபெரு வேட்கையுடன் உவந்து சென்றார். ௧0௧௩

மிக்கபெருங் காதலுடன் தொண்டர் சூழ மென்புனல்நாட் டின் கன்று வெற்பும் கானும், தொக்கபெரு வன்புலக்கான் அடைந்து போகிச் சூலகபா லக்கரத்துச் சுடரு மேனி, முக்கண்முதற் றலைவ னிட மாகி யுள்ள முகில்நெருங்கு காரிகரை முன்னர்ச் சென்று, புக்கிறைஞ்சிப் போற்றிசைத்தப் பதியில் வைகிப் பூதியரோ டுடன் மகிழ்ந்தார் புகலி வேந்தர். ௧0௧௪

இறைவர்திருக் காரிகரை இறைஞ்சி அப்பால் எண்ணில்பெரு வரைகளிரு மருங்கும் எங்கும், நிறையருவி நிரைபலவாய் மணியும் பொன்னும் நிறைதுவலை புடைசிதறி நிகழ்ப வாகி, அறைகழல்வா னவர்க்கிறைவன் குலிச வேற்றால் அற்றசிறை பெற்றவன்மேல் எழுவ தற்குச், சிறகடித்துப் பறக்கமுயன் றுயர்ந்த போலும் சிலைநிலத்தில் எழுந்தருளிச் செல்லா நின்றார். ௧0௧௫

மாதவர்கள் நெருங்குகுழாம் பரந்து செல்ல மணிமுத்தின் பரிச் சின்னம் வரம்பின் றாகப், பூதிநிறை கடலணைவ தென்னச் சண்பைப் புரவலனார் எழுந்தருளும் பொழுது சின்னத், தீதிலொலி பலமுறை யும் பொங்கி எங்கும் "திருஞான சம்பந்தன் வந்தான்" என்னும், நாத

---

௧0௧௪. மென்புனல் நாட்டின் கன்று - மெல்லிய காவிரிநாட்டு இரக்க முடைய கன்றாகிய பிள்ளையார்; காவிரிநாட்டின் கன்றாகிய பிள்ளையார் என னலுமாம்; மெல்லிய புனல்நாட்டின் இனிய கன்று மலையுங் காடுங் கடந்து செல் கிறது என்று இரங்கிக் கூறியபடி. வெற்பும்......அடைந்து - மலையையுங் காட்டையுங் கொண்ட வன்புலமாகிய குறிஞ்சிக்காட்டை அடைந்து. விபூதி யணிந்த திருவருட் செல்வரோடு. கன்றாகிய புகலிவேந்தர் எனக் கூட்டுக.

௧0௧௫. பெரிய மலை வழிகளின் இருபக்கங்களிலும், மற்றெவ்விடங் களிலும். நிறைந்த அருவிகளின் வரிசைகள் பலவாய்......துவலைப் பக்கங் களில் சிதறி. இந்திரன் வச்சிராயுதத்தால் வெட்டப்பெற்ற சிறகுகளை மீண்டும் பெற்று, அவ்விந்திரன் மீது பாய்வதற்குச் சிறகடித்துப் பறக்க முயன்று உயர்ந்தாற்போல உள்ள குறிஞ்சி நிலத்தில்.

பா - ம்—*மென்புனல் நாட்டினை யகன்று.

நிறை செவியினவாய் மாக்க ளெல்லாம் நலம்மருவு நினைவொன்றாய் மருங்கு நண்ண. க0கக

கானவர்தங் குலம்உலகு போற்ற வந்த கண்ணப்பர் திருப்பாதச் செருப்புத் தோய, மானவரிச் சிலைவேட்டை ஆடும் கானும் வான மறை நிலைபெரிய மரமும் தூறும், ஏனைஇமை யோர்தாமும் இறைஞ்சி ஏத்தி எய்தவரும் பெருமையவாம் எண்ணி லாத, தானமும் மற் றவைகடந்து திருக்கா ளத்தி சாரஎழுந் தருளினார் சண்பை வேந்தர். க0கஎ

"அம்பொன்மலைக் கொடிமுலைப்பால் குழைத்த ஞானத் தமு துண்ட பிள்ளையார் அணைந்தார்" என்று, செம்பொன்மலை வில்லியார் திருக்கா ளத்தி சேர்ந்ததிருத் தொண்டர்குழாம் அடைய ஈண்டிப், பம்புசடைத் திருமுனிவர் கபாலக் கையர் பலவேடச் சைவர்குல வேடர் மற்றும், உம்பர்தவம் புரிவார்அப் பதியில் உள்ளோ ருடன் விரும்பி எதிர்கொள்ள உழைச்சென் றுற்றார். க0கஅ

திசைஅனைத்தும் நீற்றினொளி தழைப்ப மண்மேல் சிவலோகம் அணைந்ததெனச் சென்ற போது, மிசைவிளங்கும் மணிமுத்தின் சிவிகை நின்றும் †வேதபா லகர்இழிந்து வணங்கி மிக்க, அசைவில் பெருந் தொண்டர்குழாம் தொழுது போற்றி "அர"எனும்ஓ சையின் அண்டம் நிறைப்ப அன்பால், இசைவிளங்குந் தமிழ்விரகர் "திருக்கா ளத்தித் திருமலைஇம் மலைகளில்யா?" தென்று கேட்டார். க0கக

வந்தணைந்த மாதவத்தோர் வணங்கித் தாழ்ந்து "மறைவாழ்வே! சைவசிகா மணியே! தோன்றும், இந்தமலை காளஞோ டத்தி தம்மில் இகலிவழி பாடுசெய இறைவர் மேவும், அந்தமில்சீர்க் காளத்தி மலை யாம்" என்ன அவனிமேற் பணிந்தெழுந்தஞ் சலிமேற் கொண்டு,

---

க0கக. மாக்கள் - விலங்குகள். தீதில் ஒலியாதலின் மாக்கள் நெருங்கின என்க. எவ்வுயிரிலுமுள்ள ஈசனைக் கண்ட பெரியாரிடம் விலங்குகள் நெருங்குதல் இயல்பு.

க0கஎ. மானவரிச்சிலை - வலிமையோடு வரிந்து கட்டிய வில். தூறும் - செடிகளும்; புதர்களும்.

க0கஅ. பம்பு - நெருங்கிய. உழை - அருகே.

க0உ0. பாம்பும் யானையும் தம்முள் மாறு கொண்டு பூசித்தமையான், காளத்தி என்னும் பெயரை அம்மலை பெற்றதென்க. அந்தமில் - அழிவில்லாத.

பா - ம்—*வான்மறைய. †வேதபாரகர்.

சிந்தைகளி மகிழ்ச்சிவரத் திருவி ராகம் "வானவர்கள் தானவர்" என் றெடுத்துச் செல்வார். கOஉO

"வானவர்கள் தானவர்கள் வாதைபட வந்ததொரு மாகடல்விடந்
தானமுது செய்தருள் புரிந்தசிவன் மேவுமலை தன்னைவினவில்
ஏனமின மானினொடு கிள்ளைதினை கொள்ளஎழி லார்கவணினால்
கானவர்தம் மாமகளிர் கனகமணி இலகுகா ளத்திமலையே"

"வேயனைய தோளுமையொர் பாகமது வாகவிடை யேறிசடைமேல்
தூயமதி சூடிசுடு காடில்நட மாடிமலை தன்னைவினவில்
வாய்கலச மாகவழி பாடுசெயும் வேடன்மல ராகுநயனம்
காய்கணையி னாலிடந் தீசனடி கூடுகா ளத்திமலையே"—தேவாரம்.

திருந்தியஇன் னிசைவகுப்புத் திருக்கண் ணப்பர் திருத் தொண்டு சிறப்பித்துத் திகழப் பாடிப், பொருந்துபெருந் தவர்கூட் டம் போற்ற வந்து பொன்முகலிக் கரைஅணைந்து தொழுது போகி, அருந்தவர்கள் எம்மருங்கும் மிடைந்து செல்ல ஆளுடைய பிள்ளையார் அயன்மால் தேடும், மருந்துவெளி யேஇருந்த திருக்கா ளத்தி மலை யடிவா ரஞ்சார வந்து தாழ்ந்தார். கOஉக

தாழ்ந்தெழுந்து திருமலையைத் தொழுது கொண்டே தடஞ் சிலா தலசோபா னத்தால் ஏறி, வாழ்ந்திமையோர் குழாம்நெருங்கு மணிநீள் வாயில் மருங்கிறைஞ்சி உள்புகுந்து வளர்பொற் கோயில், சூழ்ந்துவலங் கொண்டிறைவர் திருமுன் பெய்தித் தொழுதுதலை மேற் கொண்ட† செங்கை போற்றி, வீழ்ந்தெழுவார் கும்பிட்ட பயன்காண் பார்போல் மெய்வேடர் பெருமானைக் கண்டு வீழ்ந்தார். கOஉஉ

உள்ளத்தில் தெளிகின்ற அன்பின் மெய்ம்மை உருவினையும் அவ்வன்பின் உள்ளே மன்னும், வெள்ளச்செஞ் சடைக்கற்றை நெற் றிச் செங்கண் விமலரையும் உடன்கண்ட விருப்பும் பொங்கிப், பள் ளத்தில் இழிபுனல்போல் பரந்து செல்லப் பைம்பொன்மலை வல்லி பரிந் தளித்த செம்பொன், வள்ளத்தில் ஞானஆ ரமுதம் உண்டார் மகிழ்ந்தெழுந்து பலமுறையும் ‡வணங்கு கின்றார். கOஉங

பங்கயக்கண் அருவிநீர் பாய நின்று பரவும்இசைத் திருப்பதி கம் பாடி ஆடித், தங்குபெருங் களிகாதல் தகைந்து தடப்பத் தம்பெரு மான் கழல்போற்றுந் தன்மை நீட, அங்கரிதிற் புறம்போந்தங் கயன் மால் போற்ற அரியார்தந் திருமலைக்கீழ் அணைந்தி றைஞ்சிப், பொங் குதிருத் தொண்டர்மடங் காட்ட அங்குப் புக்கருளி இனிதமர்ந்தார் புகலி வேந்தர். கOஉச

---

கOஉக. இசை வகுப்பால் (இசைப்பாட்டால்.)

கOஉஉ. தடம்...ஏறி - பெரிய கற்பாறைகளாகிய படிகளிலேறி.

கOஉச. களிப்பும் காதலும் வலிந்து தடுக்க.

பா-ம்—*தடஞ்சிலைச்சோ பானநிலை தன்னால் ஏறி. †கொண்டு. ‡வணங்கி நின்றார்.

யாவர்களும் அறிவரிய இறைவன் தன்னை ஏழுலகும் உடையானை எண்ணிலாத, தேவர்கள்தம் பெருமானைத் திருக்காளத்தி மலையின்மிசை வீற்றிருந்த செய்ய தேனைப், பூவலரும் பொழில்புடைசூழ் சண்பை யாளும் புரவலனார் காலங்கள் தோறும் புக்குப், பாமலர்கொண் டடிபோற்றிப் பருகி யார்ந்து பண்பினிய திருப்பதியில் பயிலும் நாளில். கOஉரு

அங்கண்வட திசைமேலும் குடக்கின் மேலும் அருந்தமிழின் வழக்கங்கு நிகழா தாகத், திங்கள்புனை முடியார்தந் தானந் தோறும் சென்றுதமிழ் இசைபாடுஞ் செய்கை போல, மங்கையுடன் வானவர்கள் போற்றி சைப்ப வீற்றிருந்தார் வடகயிலை வணங்கிப் பாடிச், செங்கமல மலர்வாவித் திருக்கே தாரம் தொழுதுதிருப் பதிகஇசை திருந்தப் பாடி. கOஉசு

கூற்றுதைத்தார் மகிழ்ந்தகோ கரணம் பாடிக் குலவுதிருப் பருப்பதத்தின் கொள்கை பாடி, ஏற்றின்மிசை வருவார்இந் திரன்றன் நீல பருப்பதமும் பாடி†மற் றிறைவர் தானம், போற்றியசொன் மலர்மாலை பிறவும் பாடிப் புகலியர்தம் பெருந்தகையார் புனித மாகும், நீற்றின்அணி கோலத்துத் தொண்டர் சூழ நெடிதுமகிழ்ந் தப்பதியில் நிலவு கின்றார். கOஉஎ

தென்திசையிற் கயிலையெனுந் திருக்கா ளத்தி போற்றிஇனி தமர்கின்றார் திரைசூழ் வேலை, ஒன்றுதிரு வொற்றியூர் உறைவார் தம்மை இறைஞ்சுவது திருவுள்ளத் தூன்னி அங்கண், இன்தமிழின் விரகர்அருள் பெற்று மீள்வார் "எந்தையார் இணையடிஎன் மனத்த" என்று, பொன்தாளங் கொழித்திழிபொன் முகலி கூடப் புனைந்த திருப் பதிகஇசை போற்றிப் போந்தார். கOஉஅ

" சந்தமார் அகிலொடு சாதிதேக் கம்மரம்
உந்துமா முகலியின் கரையினில் உமையொடும்
மந்தமார் பொழில்வளர் மல்குவண் காளத்தி
எந்தையார் இணையடி என்மனத் துள்ளவே "—**தேவாரம்.**

---

கOஉரு. திருவடித்தேனை............ பருகி நிறைத்து.

கOஉசு. குடக்கின் - மேற்கின்.

கOஉஎ. பருப்பதத்தின் கொள்கை - ஸ்ரீ சைலத்தின் இயல்பையும்; **திருநாவுக்கரசு சுவாமிகள் புராணம் :** ௩௪௪. பார்க்க.

கOஉஅ. கடற் கரையிலுள்ள திருவொற்றியூர்.

பா - ம்—*பாடலுறுஞ். †மகிழ்ந்திறைவர்.

மன்னுபுகழ்த் திருத்தொண்டர் குழாத்தி னோடும் மறைவாழ வந்தவர்தாம் மலையும் கானும், முன்னணைந்த பதிபிறவும் கடந்து போந்து முதல்வனார் உறைபதிகள் பலவும் போற்றிப், பன்மணிகள் பொன்வரன்றி அகிலும் சந்தும் பொருதலைக்கும் பாலிவட கரையில் நீடு, சென்னிமதி அணிந்தவர்தந் திருவேற் காடு சென்றணைந்தார் திருஞான முண்ட செல்வர். கOஉகூ

திருவேற்கா டமர்ந்தசெழுஞ் சுடர்பொற் கோயில் சென்றணைந்து பணிந்துதிருப் பதிகம் பாடி, வருவேற்று மனத்தவுணர் புரங்கள் செற்றார் வலிதாயம் வந்தெய்தி வணங்கிப் போற்றி, உருவேற்றார் அமர்ந்துறையும் ஓத வேலை ஒற்றியூர் கைதொழச்சென் றுற்ற போது, பெருவேட்கை தருவாழ்வு பெற்ற தொண்டர் பெரும்பதியோர் எதிர்கொள்ளப் பேணி வந்தார். கOஙO

மிக்கதிருத் தொண்டர்தொழ தணையத் தாமுந் தொழுதிழிந்து "விடையவன்"என் றெடுத்துப் பாடி, மைக்குலவு கண்டத்தார் மகிழுங் கோயில் மன்னுதிருக் கோபுரத்து வந்து தாழ்ந்து, தக்கதிருக் கடைக்காப்புச் சாற்றித் தேவர் தம்பெருமான் திருவாயி னூடு சென்று, புக்கருளி வலங்கொண்டு புனிதர் முன்பு போற்றெடுத்துப் படியின்மேல் பொருந்த வீழ்ந்தார். கOஙக

" விடையவன் விண்ணுமண்ணுந் தொழநின்றவன் வெண்மழுவாட்
படையவன் பாய்புலித்தோல் உடைகோவணம் பல்கரந்தைச்
சடையவன் சாமவேதன் சசிதங்கிய சங்கவெண்தோ
டுடையவன் ஊனமில்லி யுறையும்மிடம் ஒற்றியூரே"—தேவாரம்.

போற்றிசைகள் போல்புரிந்த சடையார் தம்பால் பொங்கியெழுங் காதல்மிகப் பொழிந்து விம்மிப், பற்றியெழும் மயிர்ப்புளகம் எங்குமாகிப் பரந்திழியுங் கண்ணருவி பாய நின்று, சொற்றிகழுந் திருப்பதிகம் பாடி ஏத்தித் தொழுதுபுறத் தணைந்தருளித் தொண்டரோடும், ஒற்றிநகர் காதலித்தங் கினிதுறைந்தார் உலகுய்ய உலவாத ஞானம் உண்டார். கOஙஉ

கOஉகூ. வரன்றி - கொழித்து ; அரித்துமாம். பொருது - மோதி. ஈண்டுப் பாலி என்றது பழம்பாலாற்றை. பின்னே பாலி வேறு வழியாக ஓடலாயிற்று. பழம்பாலாற்றுச் சிதைவுகளை இன்னும் பார்க்கலாம்.

கOஙO. வேறுபட்ட மனத்தவுணர். வலிதாயம் இப்பொழுது பாடி என்று வழங்கப்படுகிறது. அடியார்கள் பொருட்டு உருவேற்ற பெருமான். ஓத வேலை - வாய் வெள்ளமுடைய கடல் சூழ்ந்த ; (ஓதம் - வாய் வெள்ளம்).

கOஙஉ. உலவாத - குறையாத.

வேறு

இன்ன தன்மையிற் பிள்ளையார் இருந்தனர் இப்பால்
பன்னு தொல்புகழ்த் திருமயி லாபுரிப் பதியில்
மன்னு சீர்ப்*பெரு வணிகர்தந் தோன்றலார் திறத்து
முன்னம் எய்திய தொன்றினை நிகழ்ந்தவா மொழிவாம். ௧௦௩௩

அருநி தித்திறம் பெருக்குதற் கருங்கலம் பலவும்
பொருக டற்செலப் போக்கிஅப் பொருட்குவை நிரம்ப
வரும ரக்கலம் †மனைப்படப் பணைக்கரை நிரைக்கும்
இருநி திப்பெருஞ் செல்வத்தின் எல்லையில் வளத்தார். ௧௦௩௪

தம்மை உள்ளவா றறிந்தபின் சங்கரற் கடிமை
மெய்ம்மை யேசெயும் ‡விருப்புடன் மிக்கதோர் அன்பால்
பொய்ம்மை §நீக்கிய பொருளிது எனக்கொளும் உள்ளச்
செம்மை யேபுரி மனத்தினார் சிவநேசர் என்பார். ௧௦௩௫

கற்றை வார்சடை முடியினார் அடியவர் கலப்பில்
உற்ற செய்கையில் ஒழிவின்றி உருகிய மனமும்
பற்றி லாநெறிப் பரசம யங்களைப் பாற்றும்
செற்றம் மேவிய சீலமும் உடையராய்த் திகழ்வார். ௧௦௩௬

ஆன நாள்செல அருமறைக் கவுணியர் பெருமான்
ஞான போனகம் நுகர்ந்ததும் நானிலம் உய்ய
ஏனை வெஞ்சமண் சாக்கியம் இழித்தழித் ததுவும்
ஊன மில்புகழ் அடியர்பால் ¶கேட்டுவந் துளராய். ௧௦௩௭

செல்வம் மல்கிய சிரபுரத் தலைவர்சே வடிக்கீழ்
எல்லை இல்லதோர் காதலின் இடையறு உணர்வால்

---

௧௦௩௩. தோன்ற லாரிடத்து.

௧௦௩௪. அருநிதி வகைகளை. கலம் - கப்பல். அலைமோதுங் கடலில். மனைப்பட - வீட்டிற் சேர. பணைக்கரை நிரைக்கும் - பெரிய கடற்கரையில் வரிசையாக வைக்கப்படும்.

௧௦௩௬. ஆண்டவனிடத்தில் பற்றில்லாத நெறிகளாகிய பரசமயங்களைச் சிதற ஓட்டும் கோபம் பொருந்திய சீலமும். இக்கோபம் நல்லதாதலின், அதைச் "சீலம்" என்றார்.

௧௦௩௭. ஞான அமுதை உண்டதும். கேட்டு உவந்து உளராய்.

பா - ம்—*புகழ். †மனைப்படப் படிக்கவர் நிரப்பும். ‡விருப்பினின். §நீக்கி மெய்ப் பொருளிது. ¶கேட்டுவந் துள்ளார்.

அல்லு நண்பக லும்புரிந் தவரருட் டிறமே
சொல்ல வும்செயல் கேட்கவும் தொழிலின ரானார். க0ருஅ

நிகழும் ஆங்கவர் நிதிப்பெருங் கிழவனின் மேலாய்த்
திகழு நீடிய திருவினிற் சிறந்துள ராகிப்
புகழு மேன்மையில் உலகினிற் பொலிந்துளா ரெனினும்
மகவி லாமையின் மகிழ்மனை வாழ்க்கையின் மருண்டு. கoருகூ

அரிய நீர்மையில் அருந்தவம் புரிந்தரன் அடியார்க்
குரிய அர்ச்சனை உலப்பில செய்தஅந் நலத்தால்
†கரிய வாங்குழல் மனைவியார் வயிறெனுங் கமலத்
துரிய பூமகள் எனஒரு பெண்கொடி உதித்தாள். கoசo

நல்ல நாள்பெற ‡ஓரையின் நலம்மிக உதிப்பப்
பல்பெ ருங்கிளை யுடன்பெரு வணிகர்பார் முழுதும்
எல்லை யில்தனம் முகந்துகொண் டியாவரும் உவப்ப
மல்லல் ஆவண மறுகிடைப் பொழிந்துளம் மகிழ்ந்தார். கoசக

ஆறு சூடிய முடியினர் அடியவர்க் கன்பால்
ஈறி லாதபூ சனைகள்யா வையும்மிகச் செய்து
மாறி லாமறை யவர்க்குவேண் டினஎலாம் அளித்துப்
பேறு §மற்றிது எனும்படி பெருங்களி சிறந்தார். கoசஉ

சூத நல்வினை மங்கலத் தொழில்முறை தொடங்கி
வேத ||நீதியின் விதியுளி வழாவகை விரித்த
சாத கத் ¶தொடு சடங்குகள் தசதினஞ் செல்லக்
காதல் மேவிய சிறப்பினில் கடிவிழா அயர்ந்தார். கoசந

யாவ ரும்பெரு மகிழ்ச்சியால் இன்புறப் பயந்த
பாவை நல்லுறுப் பணிகிளர் பண்பெலாம் நோக்கிப்

---

கoருஅ. புரிந்து (விரும்பி) அவர் அருள் திறமே.

கoருகூ. நிதிப்பெருங் கிழவனில் - குபேரனைப் பார்க்கிலும்.

கoசo. உலப்பில - அளவில்லாதன.

கoசக. ஓரையின் - முகூர்த்தத்தின். தனம் முகந்து - பொருளை வாரி. மல்லல் ஆவண மறுகிடை - வளப்பம் பொருந்திய கடை வீதியில்.

கoசந. சூதம் நல்வினை - பிரசவ காலத்தில் செய்யப்படும் நற்கருமங்கள். விதியுளி - முறைமை. கடிவிழா அயர்ந்தார் - மங்கல விழா நிகழ்த்தினர்.

பா - ம்—*திகழ. †வரிய. ‡ஓரையும். §மற்றிது வேயெனும் பெருமகிழ். ||நீதியில். ¶தொழில்.

'பூவி னாளென வருதலிற் பூம்பாவை என்றே
மேவு நாமமும் விளம்பினர் புவியின்மேல் விளங்க. கoசச

திங்கள் தோறும்முன் செய்யும்அத் திருவளர் சிறப்பின்
மங்க லம்புரி நல்வினை மாட்சியிற் பெருக
அங்கண் மாநகர் அமைத்திட ஆண்டெதிர் அணைந்து
தங்கு பேரொளிச் சீறடி தளர்நடை பயில. கoசரு

தளரும் மின்னின்அங் குரமெனத் தமனியக் கோடியின்
வளரி ளந்தளிர்க் கிளையென மணிகிளர் ஒளியின்
அளவி லஞ்சுடர்க் கொழுந்தென அணைவுறும் பருவத்
திளவ னப்பிணை அனையவர்க் கேழியாண் டெய்த. கoசசு

அழகின் முன்னிளம் பதமென அணிவிளக் கென்ன
விழவு கொண்டெழும் பேதைய ருடன்விளை யாட்டில்
கழலொ டம்மனை கந்துகம் என்றுமற் றினைய
மழலை மென்கிளிக் குலமென மனையிடை ஆடி. கoசஎ

பொற்றொ டிச்சிறு மகளிர்ஆ யத்தொடும் புணர்ந்து
சிற்றில் முற்றவும் இழைத்துடன் அடுந்தொழிற் சிறுசோ
றுற்ற உண்டிகள் பயின்றொளி மணியூசல் ஆடி
மற்றும் †இன்புறு வண்டலாட் டயர்வுடன் வளர. கoசஅ

தந்தை யாரும்அத் ‡தளிரிளங் கொம்பனாள் தகைமை
இந்த வையகத் தின்மையால் இன்புறு களிப்பு
வந்த சிந்தையின் மகிழ்ந்து"மற் றிவள்மணம் பெறுவான்
அந்த மில்லென தருநிதிக் குரியன்"என் றறைந்தார். கoசகூ

---

கoசச. பாவை நல்லுறுப்பு அணிகிளர் பண்பெலாம் - பெண்ணின் நல்ல அவயவங்களில் அழகு எழும் இயல்புகளெல்லாம். பூவினாள்-பூமகள்; இலக்குமி.

கoசரு. அங்கண்...அணைந்து - அழகிய இடமகன்ற மயிலாப்பூரிலே சிவநேசர் செய்திட ஓராண்டு அணைதலால். சீறடி - சிறிய அடி.

கoசசு. அங்குரம் என - முளை போலவும். தமனியக் கொடியின் - பொற்கொடியின். மணி கிளர் - மாணிக்கத்தினின் றெழும். வனப்பிணை அனையவர்க்கு - வனத்திலுள்ள பெண்மானைப்போன்ற பூம்பாவையார்க்கு.

கoசஎ. அழகின் முதல் இளம் பதமென. விழாக்கொண்டெழும் சிறுமியருடன். கழலொடு - கழற்சிக் காயுடன். கந்துகம் - பந்து.

கoசஅ. சிறுமியர் கூட்டத்தொடுஞ் சேர்ந்து. அடுந்தொழில் - சமைக்குந் தொழிலாகிய. வண்டலாட்டு - மகளிர் விளையாட்டுள் ஒன்று.

பா - ம்—*பூவினாளெனத் தருதலிற். †இன்புற. ‡தளரிளங்.

ஆய நாள்களில் அமண்பயில் பாண்டிநா டதனைத்
தூய ஞானமுண் டருளிய தோன்றலார் அணைந்து
மாய வல்லமண் கையரை வாதில்வென் றதுவும்
மேய வெப்பிடர் மீனவன் மேலொழித் ததுவும். க0௫0

நெருப்பில் அஞ்சினார் தங்களை நீரிலோட் டியபின்
மருப்பு நீள்கழுக் கோலில்*மற் றவர்களே றியதும்
விருப்பி னால்திரு நீறுமீ னவற்களித் தருளிப்
பொருப்பு வில்லியார் சாதனம் போற்றுவித் ததுவும். க0௫க

இன்ன வாறெலாம் அறிந்துளார் எய்திஅங் கிசைப்பச்
சொன்ன வர்க்கெலாம் இருநிதி தூசுடன் அளித்து
மன்னு பூந்தராய் வள்ளலார் தமைத்திசை நோக்கிச்
சென்னி மேற்கரங் குவித்துவீழ்ந் தெழுந்துசெந் நின்று.க0௫உ

சுற்றம் நீடிய கிளையெலாஞ் சூழ்ந்துடன் கேட்பக்
"கற்ற மாந்தர்வாழ் காழிநா டுடையவர்க் கடியேன்
பெற்றெ டுத்தபூம் பாவையும் பிறங்கிய நிதியும்
முற்றும் என்னையும் கொடுத்தனன் யான்" என்று மொழிந்தார்.

எல்லை யில்பெருங் களிப்பினால் இப்பரி சியம்பி
முல்லை வெண்ணகை முகிழ்முலை யாருடன் முடியா
மல்கு செல்வத்தின் †வளமையும் மறைவளர் புகலிச்
செல்வ ரேஉடை யாரெனுஞ் சிந்தையால் மகிழ்ந்தார். க0௫௪

ஆற்று நாள்களில் அணங்கனார் கன்னிமா டத்தின்
பாற்ற டம்பொழில் மருங்கினிற் பனிமலர் கொய்வான்

---

க0௫க. அனல் வாதத்தில் தோற்றவர்கள் தங்களைப் புனல் வாதத்துக்கும் உட்படுத்திக் கொண்ட பின்னர். மருப்பு - கொம்பால். பொருப்பு வில்லியார் சாதனம் - சிவசாதனங்களாகிய விபூதி ருத்திராட்சங்களை.

க0௫உ. தூசுடன் - பட்டாடையுடன். செந்நின்று - செவ்விய நெறியில் நின்று ; நேர் நின்று.

க0௫௪. முல்லை வெண்ணகை - முல்லைபோன்ற வெள்ளிய பற்களையும். முகிழ் - அரும்பும். முடியா.........வளமையும் - முடிவில்லாது நிறைந்து கிடக்கும் செல்வத்தின் வளப்பத்தையும்.

க0௫௫. இவ்வா றொழுகிவரு நாளில் பூம்பாவையார் கன்னிமாடத்தின்பாலுள்ள. கோற்றொடி - கோற்றொழிலையுடைய வளை யணிந்த ; நேரிய வளை யணிந்த.

பா - ம்—*மற் றவரையேற் றியதும். †வண்மையும்.

போற்று வார்குழற் சேடிய ருடன்புறம் போந்து
கோற்றொ டித்தளிர்க் கையினுல் முகைமலர் கொய்ய. கOருரு

அன்பர் இன்புறும் ஆர்வத்தின் அளித்தபாங் கல்லால்
பொன்பி றங்குநீர்ப் புகலிகா வலர்க்கிது புணரா
தென்ப துட்கொண்ட பான்மைஓர் எயிற்றிளம் பணியாய்
முன்ப ணைந்தது போலஓர் முள்ளெயிற் றரவம். கOருசு

மௌவல் மாதவிப் பந்தரில் மறைந்துவந் தெய்திச்
செவ்வி நாண்முகை கவர்பொழு தினில்மலர்ச் செங்கை
நவ்வி வாள்விழி நறுநுதற் செறிநெறி கூந்தல்
கொவ்வை வாயவள் முகிழ்விரல் கவர்ந்தது குறித்து. கOருஎ

நாலு தந்தமும் என்புறக் கவர்ந்துநஞ் சுகுத்து
மேலெ ழும்பணம் விரித்துநின் றுடிவே றடங்க
நீல வல்விடந் தொடர்ந்தெழ நேரிழை மென்பூ
மாலை தீயிடைப் பட்டது போன்றுளம் மயங்கி. கOருஅ

தரையில் வீழ்தரச் சேடியர் வெருக்கொடு தாங்கி
வரைசெய் மாடத்தி னுட்கொடு புகுந்திட வணிகர்
உரையும் உள்ளமும் நிலையழிந் துறுதுயர் பெருகக்
கரையில் சுற்றமும் தாமும்முன் கலங்கினுர் கலுழ்ந்தார். கOருகூ

---

கOருசு. அன்பர் - சிவநேசச் செட்டியார். பாங்கு-உரிமை. பொன்...புணராது - காவிரி சூழ்ந்த சீர்காழித் தலைவராகிய பிள்ளையார்க்கு இது பொருந்தாது. பான்மை.........பணியாய் - பான்மையானது பற்களையுடைய ஓர் இளம் பாம்பாகி.

கOருஎ. மௌவல் மாதவி - மல்லிகை முல்லை. செவ்வி......கவர் பொழுதினில் - அழகிய அன்றலர்ந்த மலரைக் கொய்யும்போது. மலர்ச்......கவர்ந்தது - மலர்போன்ற சிவந்த கையையும், மான்போன்ற ஒள்ளிய கண்களையும், நறிய நெற்றியையும், செறிந்து நெறிந்த கூந்தலையும், கொவ்வைக் கனியொத்த வாயினையு முடைய பூம்பாவையாரின் அரும்புபோன்ற விரலைக் குறித்துக் கடித்தது.

கOருஅ. நாலு தந்தமும் - நான்கு பற்களும். என்பு உற - பூம்பாவையாரின் என்பில் பாய. கவர்ந்து - கடித்து. நஞ்சு உகுத்து - விஷத்தைக் கக்கி. பணம் - படத்தை. வேறு அடங்க - வேறிடத்தில் மறைந்தொடுங்க. நேரிழை - பூம்பாவையார்.

கOருகூ. வெருக்கொடு - திடுக்கிட்டு அஞ்சி. வரை செய் - மலைபோன்று செய்யப்பட்ட. வணிகர் - சிவநேசச் செட்டியார். கலுழ்ந்தார் - அழுதார்.

பா - ம்—*குறித்தே.

விடந்தொ லைத்திடும் விஞ்சையிற் பெரியராம் மேலோர்
அடர்ந்த தீவிடம் அகற்றுதற் கணைந்துளார் அனேகர்
திடங்கொள் மந்திரந் தியானபா வகநிலை முட்டித்
தொடர்ந்த செய்வினைத் தனித்தனித் தொழிலராய்ச் சூழ்வார்.

மருந்தும் எண்ணில மாறில செய்யவும் வலிந்து
பொருந்து வல்விடம் ஏழுவே கமும்முறை பொங்கிப்
பெருந்த டங்கண்மென் கொடியனாள் தலைமிசைப் பிறங்கித்
திருந்து செய்வினை யாவையுங் கடந்துதீர்ந் திலதால். கOசுக

ஆவி தங்குபல் குறிகளும் அடைவில வாக
மேவு காருட விஞ்சைவித் தகர்"இது விதி"என்
றேவும் வேலையில் உறுபெருஞ் சுற்றமும் அலறிப்
பாவை மேல்*விழுந் தழுதனர் படரொலிக் கடல்போல். கOசுஉ

சிந்தை வெந்துய ருறுசிவ நேசரும் தெளிந்து
வந்த செய்வினை இன்மையில் "வையகத் துள்ளோர்
இந்த வெவ்விடம் †ஒழிப்பவர்க் கீகுவன் கண்ட
அந்த மில்நிதிக் குவை"எனப் பறைஅறை வித்தார். கOசுங

‡முரசி யம்பிய மூன்றுநாள் அகவையின் முற்ற
அரசர் பாங்குளோர் உட்பட அவனிமே லுள்ள
கரையில் கல்வியோர் யாவரும் அணைந்துதங் காட்சிப்
புரையில் செய்கையில் தீர்ந்திடா தொழிந்திடப் போனார். கOசுச

சீரின் மன்னிய சிவநேசர் கண்டுளம் மயங்கிக்
காரின் மல்கிய சோலைசூழ் கழுமலத் தலைவர்

---

கOசுO. கருடதியான பாவகம் முதலியன.

கOசுக. (மந்திரங்களன்றி) மருந்துகளும் எண்ணிலவாய் உவமையில்லன வாய்... அப்பூதியடிகள் புராணம் : உஎ. பார்க்க. பிறங்கி - பெருகி.

கOசுஉ. உயிர் தங்குதற்குரிய பல குறிகள் பொருந்தாதொழிய ; உயிர் போங் குறிகள் தோன்ற என்றபடி. கருடபாவனை முதலிய வித்தைகளில் வல்லவர்கள் "இது விதி" என்று நீங்கும் வேளையில்.

கOசுங. செயத்தக்க செயல் வேறின்மையால். கண்ட - யான் ஈட்டிய.

கOசுச. பறை சாற்றிய மூன்றுநாள் எல்லையில் ஒரு சேர அரசர் பக்கத்தி லுள்ள மருத்துவர் (இராஜ வைத்தியர்) உள்பட....தங்காட்சி என்னும் (கருட பாவனை முதலிய) குற்றமற்ற செயல்களாலும்.

பா - ம்—*விழுந் தழுதது. †ஒழிப்பவர்க் கீவனென் னுடைய. ‡முரசி யம்பலும்.

சாரும் அவ்வள வும்உடல் தழலிடை அடக்கிச்
சேர என்பொடு சாம்பல்சே மிப்பது தெளிவார். க0௬௫

"உடைய பிள்ளையார்க் கெனஇவள் தனைஉரைத் ததனால்
அடைவு துன்புறு வதற்கிலை யாம்நமக்" கென்றே
இடரொ ழிந்தபின் அடக்கிய என்பொடு சாம்பல்
புடைபெ ருத்தகும் பத்தினிற் புகப்பெய்து *வைப்பார். க0௬௬

கன்னி மாடத்தில் முன்புபோற் காப்புற அமைத்துப்
பொன்னும் முத்தும்மேல் அணிகலன் பூந்துகில் சூழ்ந்து
பன்னு தூவியின் பஞ்சணை விரைப்பள்ளி அதன்மேல்
மன்னு பொன்னரி மாலைகள் அணிந்துவைத் தனரால். க0௬எ

மாலை சாந்தொடும் மஞ்சன நாடொறும் வழாமைப்
பாலி னேர்தரும் போனகம் †பகல்விளக் கினைய
சாலு நன்மையில் தருவன நாடொறுஞ் சமைத்தே
ஏலு மாசெய யாவரும் வியப்பெய்து நாளில். க0௬அ

சண்பை மன்னவர் திருவொற்றி யூர்நகர் சார்ந்து
பண்பு பெற்றநற் றொண்டர்க ளுடன்பணிந் திருந்த
நண்பு மிக்கநல் வார்த்தைஅந் நற்பதி யுள்ளோர்
வண்பு கழ்ப்பெரு வணிகர்க்கு வந்துரை செய்தார். க0௬௯

சொன்ன வர்க்கெலாந் தூசொடு காசுபொன் னளித்தே
இன்ன தன்மையர் எனவொணு ‡மகிழ்சிறந் தெய்தச்

---

க0௬௫. காரின் மல்கிய - மேகங்களால் நிறைந்த; மேகம்போல் நிறைந்த எனினுமாம். கழுமலத் தலைவர் - திருஞான சம்பந்தர். தழலிடை அடக்கி - நெருப்பிலிட்டு; தகனஞ் செய்து.

க0௬௬. துன்புறுவதற்கு அடைவு (முறை) இல்லை. புடை பெருத்த-பக்கம் பெருத்த.

க0௬எ. தூவியின் - அன்னத் தூவிபோன்ற (தூவி - மயிர்); "அன்னத் தின் தூவி மெல்லணை அசைஇ......"—கலித்தொகை: எஉ. உ. விரைப் பள்ளி - வாசனைப் பொருள்கள் அமைந்த படுக்கை. பொன்னரி மாலைகள் - வாடா மாலைகள்; கற்பக மாலைகள்.

க0௬அ. மாலை சந்தனத்தொடு திருமஞ்சனம் முதலியவற்றை. பாலி னேர்தரு போனகம் - பால் சோறு.

க0எ0. தூசொடு - வஸ்திரத்துடன். நெருங்கிய நீண்ட நடைப்பந்த ரிட்டு; துணியால் மேற்கட்டி அமைத்து.

பா - ம்—*வைத்தார். †பலவிளக். ‡மகிழ்ச்சிவந் தெய்தச்.

சென்னி வாழ்மதி யார்திரு வொற்றியூர் அளவும்
துன்னு நீள்நடைக் காவணந் துகில்விதா னித்து. ௧௦௭௦

மகர தோரணம் வண்குலைக் கமுகொடு கதலி
நிகரில் பல்கொடித் தாமங்கள் அணிபெற நிரைத்து
நகர நீள்மறு கியாவையும் நலம்புனை அணியால்
புகரில் பொன்னுல கிழிந்ததாம் எனப்பொலி வித்தார். ௧௦௭௧

இன்ன வாறணி செய்துபல் குறைவறுப் பேவி
"முன்னம் ஒற்றியூர் நகரிடை முத்தமிழ் விரகர்
பொன்னடித்தலந் தலைமிசை புனைவன்" என் றெழுவார்
அந்த கர்ப்பெருந் தொண்டரும் உடன்செல அணைந்தார். ௧௦௭௨

ஆய வேலையில் அருமறைப் புகலியர் பிரானும்
மேய வொற்றியூர் பணிபவர் வியனகர் அகன்று
காயல் சூழ்கரைக் கடல்மயி லாபுரி நோக்கித்
*தூய தொண்டர்தங் குழாத்தொடும் எதிர்வந்து தோன்ற.

மாறில் வண்பெரு வணிகரும் தொண்டரும் மலர்ந்த
நீறு சேர்தவக் குழாத்தினை நீளிடைக் கண்டே
"ஆறு சூடினார் திருமக னார்அணைந் தார்" என்
றீறி லாததோர் மகிழ்ச்சியி னால்விழுந் திறைஞ்ச. ௧௦௭௪

காழி நாடரும் கதிர்மணிச் சிவிகைநின் றிழிந்து
சூழி ரும்பெருந் தொண்டர்முன் தொழுதெழுந் தருளி
வாழி மாதவர் வணிகர்†செய் திறஞ்சொலக் கேட்டே
ஆழி சூழ்மயி லாபுரித் திருநகர் அணைந்தார். ௧௦௭௫

அத்தி றத்துமுன் நிகழ்ந்தது ‡திருவுள்ளத் தமைத்துச்
சித்தம் இன்புறு சிவநேசர் §தஞ்செயல் வாய்ப்பப்
பொய்த்த ¶வச்சமண் சாக்கியர் புறத்துறை அழிய
வைத்த அப்பெருங் கருணைநோக் கால்மகிழ்ந் தருளி. ௧௦௭௬

---

௧௦௭௧. தாமங்கள் - மாலைகள். மறுகு - தெருக்கள். புகரில்-குற்றமில்லாத.

௧௦௭௨. குறைவு அறுப்பு ஏவி - குறைகளை நீக்குதற்பொருட்டு (குறைகளைப் பூர்த்தி செய்யும்படி) ஆட்களை ஏவி.

௧௦௭௩. திருவொற்றியூரைப் பணிபவராய் அவ்வகன்ற நகரை அகன்று. காயல் - கழி ; உப்பளமுமாம்.

௧௦௭௬. செயல் கூடவும்.

பா - ம்—*ஏய. †தக். ‡திருவுளத்தடைத்து. §தம்பணி. ¶வெஞ்சமண்.

கங்கை வார்சடை யார்கபா லீச்சரத் தணைந்து
துங்க நீள்சுடர்க் கோபுரந் தொழுதுபுக் கருளி
மங்கை *பங்கர்தம் கோயிலை வலங்கொண்டு வணங்கிச்
செங்கை சென்னிமேற் குவிந்திடத் திருமுன்பு சேர்ந்தார்.

தேவர் தேவனைத் திருக்கபா லீச்சரத் தமுதைப்
பாவை பாகனைப் பரிவுறு பண்பினுற் பரவி
மேவு காதலின் விரும்பிய விரைவினுல் விழுந்து
நாவின் வாய்மையிற் போற்றினுர் ஞானசம் பந்தர். கoஎஅ

போற்றி மெய்யருட் டிறம்பெறு †புரிவுடன் வணங்கி
நீற்றின் மேனியில் நிறைமயிர்ப் புளகங்கள் நெருங்கக்
கூற்ற டர்த்தவர் கோயிலின் புறம்புபோந் தருளி
ஆற்றும் இன்னருள் வணிகர்மேற் செலஅருள் செய்வார். கoஎகூ

"ஒருமை உய்த்தநல் லுணர்வினீர் ! உலகவர் அறிய
அருமை யாற்பெறு மகள்என்பு நிறைத்தஅக் குடத்தைப்
பெருமயா னத்து நடம்புரி வார்பெருங் கோயில்
திருமதிற்புற வாய்தலிற் கொணர்"கென்று செப்ப. கoஅo

அந்த மில்பெரு மகிழ்ச்சியால் அவனிமேற் பணிந்து
வந்து தந்திரு மனையினில் மேவிஅம் மருங்கு
கந்த வார்பொழிற் கன்னிமா டத்தினிற் புக்கு
வெந்த சாம்பலோ டென்புசேர் குடத்தைவே றெடுத்து. கoஅக

---

கoஎஅ. அமுதம் இறவாமையைக் குறிப்பது; பூம்பாவையாரின் இறப்பை நீக்கக் கொண்ட கருத்தை நிறைவேற்ற வல்ல தெய்வம் அமுதம் போன்றது என்பது நுட்பம்.

கoஎகூ. கூற்றடர்த்தவர் - யமனைக் காய்ந்தவராகிய சிவபெருமான்; இங்கே பூம்பாவையாரின் மரணத்தைத் தவிர்க்க வல்லவர் என்பது குறிப்பு. இனி நிகழ்த்தப் போவதற்கு ஏதுவாயுள்ள இனிய அருளை வணிகர் மீது செல்ல....

கoஅo. மயானம் எல்லா உயிர்களும் ஒடுங்குமிடம். அவ்விடத்தில் நடம்புரிவோன் அவ்வுயிர்களைப்போல ஒடுங்குதல் இல்லாதவன். அவனே இறைவன். மீண்டும் அவ்வொடுங்கிய உயிர்களைத் தோற்றுவிப்போனும் அவ்விறைவனே யாவன். இன்னோரன்ன காரணங்களால் ஆண்டவன் கோயில் சுடுகாடேயாதல் காண்க. இது முன்னருஞ் சிலவிடங்களில் விளக்கப்பட்டது. ஈண்டுமயானத்தில் நடம்புரிவது என்பது ஒடுங்கிய உயிரை எழுப்புவதை உணர்த்துவது. மயானம் ஒடுக்கத்தையும் நடம் தோற்றத்தையுங் குறிப்பன.

பா - ம்—*பாகர்தம். †பரிவுடன்.

மூடு பன்மணிச் சிவிகையுட் பெய்துமுன் போத
மாடு சேடியர் இனம்புடை சூழ்ந்துவந் தணைய
ஆடல் மேவினார் திருக்கபா லீச்சரம் அணைந்து
நீடு கோபுரத் தெதிர்மணிச் சிவிகையை நீக்கி. க0அ௨

அங்க ணாளர்தம் அபிமுகத் தினில்அடி உறைப்பால்
மங்கை என்புசேர் குடத்தினை வைத்துமுன் வணங்கப்
பொங்கு நீள்புனற் புகலிகா வலர்புவ னத்துத்
தங்கி வாழ்பவர்க் குறுதியாம் நிலைமைசா திப்பார். க0அ௩

மாடம் ஓங்கிய மயிலைமா நகருளார் மற்றும்
நாடு வாழ்பவர் நன்றியில் சமயத்தி னுள்ளோர்
மாடு சூழ்ந்துகாண் பதற்குவந் தெய்தியே மலிய
நீடு தேவர்கள் ஏனையோர் விசும்பிடை நெருங்க. க0அ௪

தொண்டர் தம்பெருங் குழாம்புடை சூழ்தரத் தொல்லை
அண்டர் நாயகர் கோபுர வாயில்நேர் அணைந்து
வண்டு வார்குழ லாள்என்பு நிறைந்தமட் குடத்தைக்
கண்டு தம்பிரான் கருணையின் பெருமையே கருதி. க0அ௫

"இந்த மாநிலத் திறந்துளோர் என்பினைப் பின்னும்
நந்து நன்னெறிப் படுத்திட நன்மையாந் தன்மை

---

க0அ௩. அங்கணாளர்.........உறைப்பால் - கபாலீச்சுரப் பெருமானது சந்நிதி எதிரில் பாதகாணிக்கைபோல; அடி உறைப்பால்-அடிப்பாகம் நன்றாகப் பதியுமாறு என்னலுமாம்.

க0அ௪. இருட்டில் கிடந்த உயிர்களுக்குத் தனுகரண புவன போகங்களைத் தந்து சிறிது அறிவு விளக்கஞ் செய்பவன் ஆண்டவன். அவன் செய்த நன்றியைப் பாராட்டி அவன் வழி நிற்பது கடவுள் நெறி எனும் சமய வழி நிற்பதாகும். அந்நன்றி மறந்து வாழ்வது சமய வழி நிற்பதாகாது. சமய வழியை மறந்து வாழ்வோர் ஈண்டு "நன்றியில் சமயத்தினுள்ளோர்" என்னப்பட்டார்; அவர் கடவுள் நெறியல்லாத வேறு நெறி நிற்பவர் என்பது கருத்து.

க0அ௬. நந்தும் - தழைக்கும். அந் நன்மையாந் தன்மை அந்த எனும் பொடு தொடர்ச்சியாம் என்று. சிந்திய அங்கம் அங்கு உடைய; பருவுடலிழந்த நிலையுடைய என்றபடி. இறப்பாவது பருவுடல் அழிவு. பருவுடல் அழிந்ததும் எஞ்சி நிற்கும் நுண்ணுடல் ஊனக் கண்ணினர்க்குப் புலனாவதில்லை. நுண்ணுடல் ஞானக்கண்ணினர்க்குப் புலனாவது. இங்கே ஞானசம்பந்தப் பெருமானுக்குப் பூம்பாவையின் நுண்ணுடல் புலனாகிறது. அந்நுண்ணுடலுக்கு இப்

அந்த என்பொடு தொடர்ச்சியாம்" எனஅருள் நோக்கால்
சிந்தும் அங்கம்அங் குடையபூம் பாவைபேர் செப்பி. க0அசு

" மண்ணி னிற்பிறந் தார்பெறும் பயன்மதி சூடும்
அண்ண லார்அடி யார்தமை அமுதுசெய் வித்தல்
கண்ணி னால்அவர் நல்விழாப் பொலிவுகண் டார்தல்
உண்மை யாமெனில் உலகர்முன் வரு"கென உரைப்பார். க0அஎ

மன்னு வார்சடை யாரைமுன் தொழுது "மட்டிட்ட"
என்னும் நற்பதி கத்தினிற் "போதியோ" என்னும்
அன்ன மெய்த்திரு வாக்கெனும் அமுதம்அவ் வங்கம்
துன்ன வந்தவர் துருவமாய்த் தொக்கதக் குடத்துள். க0அஅ

ஆன தன்மையின் அத்திருப் பாட்டினில் அடைவே
போன *வாயுவும் வடிவமும் பொலிவொடு நிரம்பி
ஏனை அக்குடத் தடங்கிமுன் னிருந்தெழு வதன்முன்
ஞான போனகர் பின்சமண் பாட்டினை நவில்வார். க0அகூ

---

பொழுது அவர் பருவுடல் வழங்கப்போகிறார். பருவுடலாவது என்போடு கூடியது. என்போடு கூடாது நிலவுவது நுண்ணுடல்.

பருவுடல் மறையப் பெற்றோர் மீண்டும் அவ்வுடல் தாங்குவது, முன்னை யூழை யொழிக்கத் திருவருள் வழி என்னும் நன்னெறியில் நின்று ஒழுகுதற் பொருட்டேயாகும். அந்நன்மை நெறியில் நிற்க என்போடு தொடர்பு கொள்ளுதலாகிய பருவுடல் தாங்குதல் வேண்டும். இந்நுட்பம் "இந்தமா......... தொடர்ச்சியாம்" என்று குறிக்கப்பட்டிருத்தல் காண்க. பருவுடல் இழந்த பூம்பாவையை மீண்டும் உயிர்ப்பிக்க அதாவது மீண்டும் என்புடல் கொண்டெழுப்ப ஞானசம்பந்தர் அருணோக்கங் கொண்டார் என்க. அருணோக்கமாவது நுண்ணுடலைக் காண வல்ல நோக்கம்; அவ்வுயிர் மீண்டும் சிவத்தொண்டு செய்து அதாவது நன்னெறி நின்று பேறுபெற நோக்கும் நோக்கம்.

இன்னொருவர் வயிற்றில் பிறந்து என்புடல் தாங்கப் போகும் பூம்பாவையாரை, அவ்வாறு பிறக்கச் செய்யாது, திருவருளால் அவர்க்கு ஒருவித உடல் நல்கப்போகிறார் ஞானசம்பந்தப் பெருமான். சில உயிர்களின் நுண்ணுடல் என்பைப் பற்றியும் சில நாள் நிலவுவதுண்டு. நுண்ணுடலின் உண்மையைப் பற்றி ஸர் ஓலிவர் லாட்ஜ் முதலிய விஞ்ஞானிகள் ஆராய்ந்து வெளியிடும் நுட்பங்களைக் கொண்ட நூல்கள் பல இந்நாளில் உலகெங்கும் உலவுகின்றன.

க0அஎ. ஆர்தல் - இன்ப நுகர்தல்.

க0அஅ. வாக்கெனுஞ் சாவாமருந்து பொருந்தி நிறைய அவ்வங்கமானது. தொக்கது - திரண்டது; உருக்கொண்டது.

க0அகூ. வாயுவும் - பிராணனும். அத்திருப்பாட்டினின் அடைவே - அத்திருப்பாட்டைப்போல மற்றத் திருப்பாட்டுக்களிலும் முறையே. ஏனை-ஒழிந்த. சமண்பாட்டு - பத்தாம்பாட்டு.

பா - ம்—*ஆயுளும்.

தேற மலசமண் சாக்கியத் திண்ணரிச் செய்கை
ஏற்ற தன்றென எடுத்துரைப் பார்"என்ற போது
கோற்றொ டிச்செங்கை தோற்றிடக் குடம்உடைந் தெழுவாள்
போற்று தாமரைப் போதவிழ்ந் தெழுந்தனள் போன்றாள். க௦கூ௦

எடுத்த பாட்டினில் வடிவுபெற் றிருநான்கு திருப்பாட்
டடுத்த அம்முறைப் பன்னிரண் டாண்டஎ வணைந்து
தொடுத்த வெஞ்சமண் பாட்டினில் தோன்றிடக் கண்டு
விடுத்த வேட்கையர் திருக்கடைக் காப்புமே *விரித்தார். க௦கூக

"மட்டிட்ட புன்னையங் கானன் மடமயிலைக்
கட்டிட்டங் கொண்டான் கபாலீச் சரம்அமர்ந்தான்
ஒட்டிட்ட பண்பின் உருத்திர பல்கணத்தார்க்
கட்டிட்டல் காணாதே போதியோ பூம்பாவாய்"

"உரிஞ்சாய வாழ்க்கை அமணுடையைப் போர்க்கும்
இருஞ்சாக் கியர்க ளெடுத்துரைப்ப நாட்டில்
கருஞ்சோலை சூழ்ந்த கபாலீச் சரம்அமர்ந்தான்
பெருஞ்சாந்தி காணாதே போதியோ பூம்பாவாய்"—தேவாரம்.

வேறு

ஆங்கனம் எழுந்து நின்ற அணங்கினை நோக்கு வார்கள்
"ஈங்கிது காணீர்" †என்று அற்புதம் எய்தும் வேலைப்
பாங்குசூழ் தொண்ட ரானோர் "அரகர" என்னப் பார்மேல்
ஓங்கிய ஓசை உம்பர் நாட்டினை உற்ற தன்றே. க௦கூ௨

தேவரும் முனிவர் தாமும் திருவருட் சிறப்பு நோக்கிப்
பூவரு விரைகொள் மாரி பொழிந்தனர் ஒழிந்த மண்ணோர்
யாவரும் இருந்த வண்ணம் எம்பிரான் கருணை என்றே
மேவிய கைகள் உச்சி மேற்குவித் திறைஞ்சி வீழ்ந்தார். க௦கூ௩

அங்கவள் உருவங் காண்பார் அதிசயம் மிகவும் எய்திப்
பங்கமுற் றாரே போன்றார் பரசம யத்தி னுள்ளோர்

---

க௦கூ௦. தெளிவில்லாத சமணரும் சாக்கிய குண்டர்களும். இலக்குமியைப் போன்றாள்.

க௦கூக. "மட்டிட்ட" என்றெடுத்த முதற்பாட்டில் வடிவு பெற்று, மற்ற எட்டுப் பாட்டுக்களில் முறை முறையே பன்னிரண்டு வயதேறப்பெற்றுச் சமண் பாட்டாகிய பத்தாம் பாட்டில் வெளித் தோன்ற.........

க௦கூ௨. உலகில் பிறந்து ஓங்கிய ஓசை தேவர் நாட்டினை உற்றது.

க௦கூ௩. விரை - வாசனை.

பா - ம்—*விதித்தார். †என்ன.

"எங்குள செய்கை தான்மற் றென்செய்த வா"றி தென்று
சங்கையாம் உணர்வு கொள்ளும் சமணர்தள் ளாடி வீழ்ந்தார். ௧௦௬௪

கன்னிதன் வனப்புத் தன்னைக் கண்களால் முடியக் காணார்
முன்னுறக் கண்டார்க் கெல்லாம் மொய்கருங் குழலின் பாரம்
மன்னிய வதன செந்தா மரையினிற் கரிய வண்டு
துன்னிய ஒழுங்கு துற்ற சூழல்போல் இருண்டு தோன்ற. ௧௦௬௫

பாங்கணி சுரும்பு மொய்த்த பனிமலர் அளகப் பந்தி
தேங்கமழ் ஆரஞ் சேருந் திருநுதல் விளக்கம் நோக்கில்
பூங்கொடிக் கழகின் மாரி பொழிந்திடப் புயற்கீ ழிட்ட
வாங்கிய வான வில்லின் வளரொளி வனப்பு வாய்ப்ப. ௧௦௬௬

புருவமென் கொடிகள் பண்டு புரமெரித் தவர்தம் நெற்றி
ஒருவிழி எரியின் நீறாய் அருள்பெற உளனாங் காமன்
செருவெழுந் தனுவ தொன்றும் சேமவில் லொன்றும் ஆக
இருபெருஞ் சிலைகள் முன்கொண் டெழுந்தன போல †வேற்ப. ௧௦௬௭

மண்ணிய மணியின் செய்ய வளரொளி மேனி யாள்தன்
கண்ணிணை வனப்புக் காணில் காமரு வதனத் திங்கள்

---

௧௦௬௪. இஃது எங்குள்ள செய்கை ? எப்படிச் செய்யப்பட்டது ? என்று ஐய உணர்வு கொண்ட சமணர்கள் ; சங்கை - அச்சமுமாம்.

௧௦௬௫. கன்னியின் அழகை. கூந்தற் பாரமானது, நிலையான முகமென்னுஞ் செந்தாமரையில் கரிய வண்டு படிந்த ஒழுங்கு நெருங்கின சூழல்போல்...

௧௦௬௬. பாங்கு.................விளக்கம் - பக்கத்தே அழகிய வண்டுகள் மொய்த்த குளிர்ந்த மலர் முடித்த முன்னுச்சி மயிரின் ஒழுங்கையும், மணங் கமழும் மாலை சேரும் அழகிய நெற்றியின் விளக்கத்தையும். பூங்கொடிக்கு - பூங்கொடிபோன்ற பூம்பாவைக்கு. வாங்கிய - வளைந்த. அளக பந்தியையும் திருநுதல் விளக்கத்தையும் நோக்கினால்,..............மாரி பொழியுமாறு, முகில் கீழிட்ட வானவில்லினது......; அளகப்பந்தி—மாரி பொழிந்திடும் புயல் ; திருநுதல் விளக்கம்—வானவில்லின் வளரொளி.

௧௦௬௭. சிவபெருமான் நெற்றிவிழி நெருப்பால் நீறாகி மீண்டும் அப்பெருமான் அருள்பெற வாழ்வுபெற் றெழுந்த மன்மதனது. செருவெழுந்தனு-போர் வில். சேம வில் - பாதுகாப்பிலுள்ள வில்.

௧௦௬௮. மண்ணிய - கடைந்த. காமரு - அழகிய. வதனத் திங்கள் - முகமாகிய சந்திரனது. தகைவில் - தடுத்தலில்லாத. கரிய செய்ய - கருமையும் செம்மையுமுடைய. இரண்டு கண்களின் அழகைக் காணில், அவை முகமாகிய சந்திரனது ஒளி வெள்ளத்தில் இரண்டு கயல் மீன்களை ஒத்து உலாவ.

பா - ம்—*உளதாங். †ஒப்ப ; ஏய்ப்ப.

தண்ணளி விரிந்த சோதி வெள்ளத்தில் தகைவின் நீள
ஒண்ணிறக் கரிய செய்ய கயலிரண் டொத்து லாவ. க௦௯௮

பணிவளர் அல்குல் பாவை நாசியும் பவள வாயும்
நணியபே ரொளியில் தோன்றும் நலத்தினை நாடு வார்க்கு
மணிநிறக் கோபங் கண்டு மற்றது வவ்வத் தாழும்
அணிநிறக் காம ரூபி அணைவதாம் அழகு காட்ட. க௦௯௯

இளமயில் அனைய சாயல் ஏந்திழை குழைகொள் காது
வளமிகு வனப்பி னாலும் வடிந்ததா ளுடைமை யாலும்
கிளரொளி மகர வேறு கெழுமிய தன்மை யாலும்
அளவில்சீர் அனங்கன் வென்றிக் கொடியிரண் டனைய வாக. கக௦௦

விற்பொலி தரளக் கோவை விளங்கிய கழுத்து மீது
பொற்பமை வதன மாகும் பதுமநன் நிதியம் †பூத்த
நற்பெரும் பணிலம் என்னும் நன்னிதி போன்று தோன்றி
அற்பொலி கண்டர் தந்த அருட்கடை யாளங் காட்ட. கக௦க

எரிஅவிழ் காந்தள் மென்பூத் தலைதொடுத் திசைய வைத்துத்
திரள்பெறச் சுருக்குஞ் செச்சை மாலையோ, தெரியின் வேறு
கருநெடுங் கயற்கண் மங்கை கைகளால் காந்தி வெள்ளம்
அருகிழிந் தனவோ என்னும் அதிசயம் வடிவிற் றோன்ற. கக௦௨

---

க௦௯௯. பணி - பாம்பின் படம்போல. நணிய - நண்ணிய ; பொருந்திய. நலத்தினை - அழகினை. மணிநிறக் கோபம் - மாணிக்க நிறமுடைய இந்திரகோபம் (தம்பலப் பூச்சி). அணி நிறம் - அழகிய நிறம் வாய்ந்த. காமரூபி - பச்சோந்தி ; (விரும்பிய உருவங் கொள்வது).

கக௦௦. ......பூம்பாவையாரின் குண்டலமணிந்த காதுகள். கிளர்......... கெழுமிய - விளங்கும் ஒளியையுடைய மகரவேறு பொருந்திய. அனங்கன் - அங்கமில்லாதவன் ; மன்மதன். பூம்பாவையாரின் காதுகள், அனங்கன் வெற்றிக்கொடி இரண்டை ஒத்தனவாக. வனப்பு (அழகு) காதுக்கும் கொடிக்கும் பொது. வடிந்த தாள் - (காதுக்காம்போது) வடிந்த காதுத் தண்டு (குண்டல மணிதற்குப் பண்படுத்திய காதினடி); (கொடிக்காம்போது) வடிந்த அடி. மகர ஏறு - (காதுக்காம்போது) மகரகுண்டலம் ; (கொடிக்காம்போது) சுறாவேறு.

கக௦க. வில்.........ஆகும் - ஒளி பொலியும் முத்துக்கோவை விளங்கிய கழுத்துமீது அழகமைந்த முகமாகிய. பணிலம் என்னும் நன்னிதி - சங்கநிதி. அல்பொலி கண்டர் - திருநீலகண்டராகிய சிவபெருமான். கழுத்து—சங்கநிதி ; முகம்—பதுமநிதி. கழுத்துக் காட்ட..........

கக௦௨. எரி அவிழ் - எரிபோன்று விரியும். செச்சை - வெட்சி. வேறு தெரியின் - வேறு வழியில் ஆராய்ந்தால் ; வேறு உவமை கொள்ளின். .........

பா - ம்—*அணையதாம். †பூப்ப.

ஏர்கெழு மார்பிற் பொங்கும் ஏந்திளங் கொங்கை நாகக்
கார்கெழு விடத்தை நீக்குங் கவுணியர் தலைவர் நோக்கால்
ஆர்திரு வருளிற் பூரித் தடங்கிய அமுத கும்பச்
சீர்கெழு முகிழைக் காட்டுஞ் செவ்வியிற் றிகழ்ந்து தோன்ற. ௧௧௦௩

காமவேள் என்னும் வேடன் உந்தியிற் கரந்து கொங்கை
நேமியம் புட்கள் தம்மை அகப்பட நேரி தாய
தாமநீள் கண்ணி சேர்த்த சலாகைதூக் கியதே போலும்
வாமமே கலைசூழ் வல்லி மருங்கின்மேல் உரோம வல்லி. ௧௧௦௪

பிணியவிழ் மலர்மென் கூந்தல் பெண்ணமு தனையாள் செம்பொன்
அணிவளர் அல்குல் தங்கள் அரவுசெய் பிழையால் அஞ்சி
மணிகிளர் காஞ்சி சூழ்ந்து வனப்புடை அல்கு லாகிப்
பணியுல காளுஞ் சேடன் பணம்விரித் தடைதல் காட்ட. ௧௧௦௫

வரிமயில் அனைய சாயல் மங்கைபொற் குறங்கின் மாமை
கரிஇளம் பிடிக்கை வென்று கதலிமென் தண்டு காட்டத்
தெரிவுறு மவர்க்கு மென்மைச் செழுமுழந் தாளின் செவ்வி
புரிவுறு பொற்பந் தென்னப் பொலிந்தொளி விளங்கிப் பொங்க.

---

மங்கை - பூம்பாவையின். வடிவிற் றோன்ற - வடிவை யுடையனவாய்த் (கைகள்) தோன்ற; வடிவிலே தோன்ற என்னலுமொன்று. கையின் ஒளி வெள்ளம் இழிதருவது எரியவிழ்......மாலைபோன்றிருத்தலை யுணர்த்தியவாறு.

௧௧௦௩. ஏர்கெழு-அழகு பொருந்திய. நாகக்கார் கெழுவிடத்தை-பாம்பின் கருமை பொருந்திய நஞ்சை. நிறைந்த திருவருளால் பூரித்து உள்ளடங்கிய. முகிழை - முகையை ; அரும்பை. செவ்வியிற் றிகழ்ந்து - அழகொடு விளங்கி.

௧௧௦௪. வாம......வல்லி - அழகிய மேகலையணிந்த கொடிபோன்ற பூம் பாவையாரின் இடைமீதுள்ள ரோம ரேகையானது. உந்தியில்.........தம்மை - உந்தியில் மறைந்து கொங்கைகளாகிய சக்கரவாகப் பறவைகளை. தாமம் - கயிற்றாலாகிய ; வரிசையான எனினும் அமையும். கண்ணி - புட்கள் படுவது. சலாகை - அம்பு.

௧௧௦௫. முறுக்கு அவிழ்ந்த......செம்பொன்னுபரணம் வளரும் அல்கு லானது. அரவுசெய் பிழையாவது பூம்பாவையாரைத் தீண்டியது. மணிகிளர் காஞ்சி-தடுத்தாட்கொண்ட புராணம் : ௩௩அ. குறிப்புப் பார்க்க. பணி...பணம்-நாகலோகத்தை ஆளும் ஆதிசேடன் படத்தை. சேடன் தங்கள் இனமாகிய அரவுசெய்...அல்குலாகி...பணம் விரித்து......

௧௧௦௬. பொன் குறங்கின்......காட்ட - பொன்போன்ற தொடைகளின் அழகானது, இளம் பெண் யானையின் துதிக்கையை வென்று வாழையின் மெல் லிய தண்டைக் காட்ட. தெரிவுறும் அவர்க்கு - பார்ப்பவர்க்கு. செவ்வி - அழகா னது. புரிவுறு - செய்யப்பட்ட ; விருப்புறும்.

பா - ம்—*வருமயில்.

பூவலர் நறுமென் கூந்தல் பொற்கொடி கணைக்கால் காமன்
ஆவநா ழிகையே போலும் அழகினில் மேன்மை எய்த
மேவிய செம்பொற் றட்டின் வனப்பினை மீதிட் டென்றும்
ஓவியர்க் கெழுத ஒண்ணுப் பரட்டொளி *ஒளிர்வுற் றோங்க. கக0எ

கற்பகம் ஈன்ற செவ்விக் காமரு பவளச் சோதிப்
பொற்றிரள் வயிரப் பத்திப் பூந்துணர் மலர்ந்த போலும்
நற்பதம் பொலிவு காட்ட ஞாலமும் விசும்பும் எல்லாம்
அற்புதம் எய்தத் தோன்றி அழகினுக் கணியாய் நின்றாள். கக0அ

எண்ணிலாண் டெய்தும் வேதாப் படைத்தவள் எழிலின் வெள்ளம்
நண்ணுநான் முகத்தால் கண்டான் அவளினும் நல்லாள் தன்பால்
புண்ணியப் பதினு றாண்டு பேர்பெறும் புகலி வேந்தர்
கண்ணுதல் கருணை வெள்ளம் ஆயிர முகத்தாற் கண்டார். கக0கூ

---

கக0எ. கணைக்கால்......போலும் - கணைக்காலானது, மன்மதனது அம்பறாத்தூணியே போலும். செம்பொன் தராசுத் தட்டினது அழகை வென்று. ஓவியர்க்கு - சித்திரக்காரர்க்கு.

கக0அ. கற்பகம்......நற்பதம் - கற்பகத்தரு ஈன்ற அழகிய விரும்பத்தக்க பவளச் சோதி பொருந்திய பொன் திரளுடன் வயிர ஒழுங்குகளையுடைய பூங்கொத்துக்கள் மலர்ந்தனபோலும் நல்ல பாதங்கள். பவளச்சோதி...பூந்துணர் : இவைகளைக் கால் விரல் நகம் ஆகியவற்றிற்குக் கொள்க.

கக0கூ. வேதா.........வெள்ளம் - பிரமன் தான் படைத்த திலோத்தமையின் அழகு வெள்ளத்தை. அவளினும் நல்லாள் தன்பால் - அத்திலோத்தமையினும் நல்லாளாகிய பூம்பாவையினிடத்து. பிரமன் பன்னெடுங்காலங் கொண்ட கிழவனுதலின் "எண்ணிலாண்டெய்தும் வேதா" என்றனர். கிழவனுகிய பிரமன் தான் படைத்த திலோத்தமையின் அழகுவெள்ளத்தில் மூழ்கிக் காமுற்று நான்கு முகங்கொண்டு அவளை நோக்கினன். இங்கே திருஞானசம்பந்தர் பதினறு வயதுள்ளவர். அவரால் உயிர்ப்பிக்கப்பெற்ற பூம்பாவையார் திலோத்தமையினும் அழகுடையார். அவரைச் சம்பந்தர் எக்கருத்துடன் நோக்கினர்? பிரமனைப்போலவா நோக்கினர்? சீ! சீ! புகலிவேந்தர் சிவம் பழுத்த பெருமான் ஆதலால், அவர் கண்ணுக்குப் பூம்பாவையார் கண்ணுதல் கருணைவெள்ளம்போலத் தோன்றினரென்க. அங்கே நான்கு முகம்; இங்கே ஆயிரமுகம். அகநோக்குடையார், எல்லாம் உணர்வோராதலின், அவர் முகத்துக்கு (நோக்குக்கு) அளவில்லை என்க. பதினுறாண்டு திருவருள் வழி மலர்ந்தமையான் "புண்ணிய" என்றார்.

பா - ம்—*ஒளிர்விட்டோங்க ; ஒளியுற்றோங்க.

வேறு

இன்னணம் விளங்கிய ஏர்கொள் சாயலாள்
தன்னைமுன் கண்ணுறக் கண்ட தாதையார்
பொன்னணி மாளிகைப் புகலி வேந்தர்தாள்
சென்னியிற் பொருந்தமுன் சென்று வீழ்ந்தனர். ககக0

அணங்கினும் மேம்படும் அன்னம் அன்னவள்
பணம்புரி அரவரைப் பரமர் முன்பணிந்
திணங்கிய முகில்மதில் சண்பை ஏந்தலை
வணங்கியே நின்றனள் மண்ணு ளோர்தொழ. கககக

*சீர்கெழு சிவநேசர் தம்மை முன்னமே
கார்கெழு சோலைசூழ் காழி மன்னவர்
"ஏர்கெழு சிறப்பில்நும் மகளைக் கொண்டினிப்
பார்கெழு மனையினிற் படர்மின்" என்றலும். கககஉ

பெருகிய அருள்பெறும் வணிகர் பிள்ளையார்
மருவுதா மரையடி வணங்கிப் போற்றிநின்
"றருமையால் அடியனேன் பெற்ற பாவையைத்
திருமணம் புணர்ந்தருள் செய்யும்" என்றலும். கககங

மற்றவர் தமக்குவண் புகலி வாணர்"நீர்
பெற்றபெண் விடத்தினால் வீந்த பின்னையான்
கற்றைவார் சடையவர் கருணை காண்வர
†உற்பவிப் பித்தலால் உரைத கா"தென. கககச

வணிகருஞ் சுற்றமும் மயங்கிப் பிள்ளையார்
அணிமலர் அடியில்வீழ்ந் தரற்ற ஆங்கவர்
தணிவில்நீள் பெருந்துயர் தணிய வேதநூல்
துணிவினை அருள்செய்தார் தூய வாய்மையார். கககரு

---

கககக. அணங்கினும் - இலக்குமியினும். பணம்...பரமர் - படம் பொருந்திய பாம்பை அரையில் அணிந்த சிவபெருமான்.

கககஉ. கெழு - பொருந்திய.

கககச. வீந்த - இறந்த.

கககரு. அரற்ற - பலவுஞ் சொல்லிக் குறை கூறி அழ.

பா - ம்—*சில பிரதிகளில் இப்பாடல் இல்லை.

† உற்பவித்தலால்; உற்பவித்திதலால்; உற்பவித்திடுதலால்.

தெள்ளுநீ தியின்முறை கேட்ட சீர்க்கிளை
வெள்ளமும் வணிகரும் வேட்கை நீத்திடப்
பள்ளநீர்ச் செலவெனப் பரமர் கோயிலின்
உள்ளெழுந் தருளினர் உடைய பிள்ளையார். ௧௧௧௬

பான்மையால் வணிகரும் "பாவை தன்மணம்
ஏனையோர்க் கிசைகிலேன்" என்று கொண்டுபோய்
வானுயர் கன்னிமா டத்து வைத்தனர்
தேனமர் கோதையும் சிவத்தை மேவினள். ௧௧௧௭

வேறு

தேவர்பிரான் அமர்ந்தருளுந் திருக்கபா லீச்சரத்து
மேவியஞா னத்தலைவர் விரிஞ்சன்முதல் எவ்வுயிர்க்கும்
காவலனார் பெருங்கருணை கைதந்த *படிபோற்றிப்
பாவலர்செந் தமிழ்பாடிப் பன்முறையும் பணிந்தெழுவார். ௧௧௧௮

தொழுதுபுறம் போந்தருளித் தொண்டர்குழாம் புடைசூழப்
பழுதில்புகழ்த் திருமயிலைப் பதியில்அமர்ந் தருளுநாள்
முழுதுலகுந் தரும்இறைவர் முதற்றானம் பலஇறைஞ்ச
அழுதுலகை வாழ்வித்தார் அப்பதியின் மருங்ககல்வார். ௧௧௧௯

திருத்தொண்டர் அங்குள்ளார் விடைகொள்ளச் சிவநேசர்
வருத்தம்அகன் றிடமதுர மொழிஅருளி விடைகொடுத்து
நிருத்தர்உறை பிறபதிகள் வணங்கிப்போய் நிறைகாதல்
அருத்தியொடுந் திருவான்மி யூர்பணிய அணைவுற்றார். ௧௧௨௦

திருவான்மி யூர்மன்னுந் திருத்தொண்டர் சிறப்பெதிர
வருவார்மங் கலஅணிகள் மறுகுநிரைத் தெதிர்கொள்ள
அருகாக இழிந்தருளி அவர்வணங்கத் தொழுதன்பு
தருவார்தங் கோயில்மணித் தடநெடுங்கோ புரஞ்சார்ந்தார். ௧௧௨௧

---

௧௧௧௬. சீர்க்கிளை வெள்ளமும் - சிறந்த சுற்றமாகிய பெருங் கூட்டமும். வேட்கை - பூம்பாவையாரைப் பிள்ளையார்க்குத் திருமணஞ் செய்விக்க வேண்டுமென்று கொண்ட விருப்பை. பள்ளத்தில் நீர் செல்வதுபோல.

௧௧௧௮. விரிஞ்சன் - பிரமன்.

௧௧௧௯. முதல் தானம் - முதன்மையுடைய திருப்பதிகளை. அழுதுலகை வாழ்வித்தார் - திருஞானசம்பந்தர்.

௧௧௨௦. அருத்தியொடும் - அன்புடன்.

௧௧௨௧. சிறப்பொடு எதிர்கொள்ள வருவாராய், மங்கலம் பொருந்திய அலங்கார வகைகளைத் தெருக்களில் ஒழுங்குபடுத்தி.

பா - ம்—*படியென்று.

மிக்குயர்ந்த கோபுரத்தை வணங்கிவியன் திருமுன்றில்
புக்கருளிக் கோயிலினைப் புடைவலங்கொண் டுள்ளணைந்து
கொக்கிறகும் மதிக்கொழுந்தும் குளிர்புனலும் ஒளிர்கின்ற
செக்கர்நிகர் சடைமுடியார் சேவடியின் கீழ்த்தாழ்ந்தார். ககஉஉ

தாழ்ந்துபல முறைபணிந்து தம்பிரான் முன்னின்று
வாழ்ந்துகளி வரப்பிறவி மருந்தான பெருந்தகையைச்
சூழ்ந்தஇசைத் திருப்பதிகச் சொன்மாலை வினவுரையால்
வீழ்ந்தபெருங் காதலுடன் சாத்திமிக இன்புற்றார். ககஉ௩

பரவிவரும் ஆனந்த நிறைந்ததுளி கண்பனிப்ப
விரவுமயிர்ப் புளகங்கள் மிசைவிளங்கப் புறத்தணைவுற்
றரவநெடுந் திரைவேலை அணிவான்மி யூர்அதனுள்
சிரபுரத்துப் புரவலனார் சிலநாள்அங் கினிதமர்ந்தார். ககஉ௪

அங்கணமர் வார்உலகா ளுடையாரை அருந்தமிழின்
பொங்கும்இசைப் பதிகங்கள் பலபோற்றிப் போந்தருளிக்
கங்கையணி மணிமுடியார் பதிபலவுங் கலந்திறைஞ்சிச்
செங்கண்விடைக் கொடியார்தம் இடைச்சுரத்தைச் சேர்வுற்றார்.

சென்னிஇள மதியணிந்தார் மருவுதிரு இடைச்சுரத்து
மன்னுதிருத் தொண்டர்குழாம் எதிர்கொள்ள வந்தருளி
நன்னெடுங்கோ புரம்இறைஞ்சி உள்புகுந்து நற்கோயில்
தன்னைவலங் கொண்டணைந்தார் தம்பிரான் திருமுன்பு. ககஉ௬

கண்டபொழு தேகலந்த காதலால் கைதலைமேல்
கொண்டுதலம் உறவிழுந்து குலவுபெரு மகிழ்ச்சியுடன்
மண்டியபேர் அன்புருகி மயிர்முகிழ்ப்ப வணங்கிஎழுந்
தண்டர்பிரான் திருமேனி வண்ணங்கண் டதிசயித்தார். ககஉ௭

"இருந்தஇடைச் சுரம்மேவும் இவர்வண்ணம் என்னே!"என்
றருந்தமிழின் திருப்பதிகத் தலர்மாலை தொடுபரவித்
திருந்துமனங் கரைந்துருகத் திருக்கடைக்காப் புச்சாத்திப்
பெருந்தனிவாழ் வினைப்பெற்றார் பேருலகின் பேறுனார். ககஉ௮

"வரிவள ரவிரொளி யரவரை தாழ வார்சடை முடிமிசை வளர்மதி சூடிக், கரிவளர் தருகழல் கால்வல னேந்திக் கனலெரி யாடுவர் காடரங்

ககஉ௩. திருவான்மியூர்ப் பெருமான் திருநாமம் மருந்தீசர் என்பது.

பா - ம்—*கரைந்துருகித்

காக, விரிவளர் தருபொழில் இளமயில் ஆல வெண்ணிறத் தருவிகள் திண்ணென வீழும், எரிவள ரினமணி புனமணி சாரல் இடைச்சுரம் மேவிய இவர்வண மென்னே ''—தேவாரம்.

நிறைந்தாரா வேட்கையினுல் நின்றிறைஞ்சிப் புறம்போந்தங்
குறைந்தருளிப் பணிகின்ருர் உமைபாகர் அருள்பெற்றுச்
சிறந்ததிருத் தொண்டருடன் எழுந்தருளிச் செந்துருத்தி
அறைந்தளிகள் பயில்சாரல் திருக்கழுக்குன் றினையணைந்தார். கக௨கூ

சென்றணையும் பொழுதின்கண் திருத்தொண்டர் எதிர்கொள்ளப்
பொன்திகழும் மணிச்சிவிகை இழிந்தருளி உடன்போந்து
மன்றல்விரி நறுஞ்சோலைத் திருமலையை வலங்கொண்டு
மின்தயங்குஞ் சடையாரை விருப்பினுடன் பணிகின்ருர். கக௩௦

திருக்கழுக்குன் றத்தமர்ந்த செங்கனகத் தனிக்குன்றைப்
பெருக்கவளர் காதலினுல் பணிந்தெழுந்து பேராத
கருத்தினுடன் "காதல்செயுங் கோயில்கழுக் குன்"றென்று
திருப்பதிகம் புனைந்தருளிச் சிந்தைநிறை மகிழ்வுற்ருர். கக௩க

"தோடுடை யானெரு காதில்தூய குழைதாழ
ஏடுடை யான்தலை கலனுக இரந்துண்ணும்
நாடுடையான் நள்ளிரு ளேம நடமாடும்
காடுடையான் காதல்செய் கோயில் கழுக்குன்றே"—தேவாரம்.

இன்புற்றங் கமர்ந்தருளி ஈறில்பெருந் தொண்டருடன்
மின்பெற்ற வேணியினுர் அருள்பெற்றுப் போந்தருளி
என்புற்ற மணிமார்பர் எல்லையிலா ஆட்சிபுரிந்
தன்புற்று மகிழ்ந்ததிரு அச்சிறுபாக் கத்தணைந்தார். கக௩௨

ஆதிமுதல் வரைவணங்கி "ஆட்சிகொண்டார்" எனமொழியும்
கோதில்திருப் பதிகஇசை குலாவியபா டலிற்போற்றி
மாதவத்து முனிவருடன் வணங்கிமகிழ்ந் தின்புற்றுத்
தீதகற்றுஞ் செய்கையினுர் சின்னுளங் கமர்ந்தருளி. கக௩௩

"பொன்திரண் டன்ன புரிசடை புரளப் பொருகடற் பவளமோ டழல்நிறம் புரையக், குன்றிரண் டன்ன தோளுடை யகலங் குலாயவெண் ணூலொடு கொழும்பொடி யணிவர், மின்திரண் டன்ன நுண்ணிடை அரிவை மெல்லிய லாளையோர் பாகமாப் பேணி, அன்றிரண் டுருவம் ஆய எம் மடிகள் அச்சிறு பாக்கம தாட்சிகொண் டாரே"—தேவாரம்.

---

கக௨கூ. செந்துருத்திப் பண்ணைப் பாடி வண்டுகள் வாழும் சாரலையுடைய.

ஏறணிந்த வெல்கொடியார் இனிதமர்ந்த பதிபிறவும்
நீறணிந்த திருத்தொண்டர் எதிர்கொள்ள நேர்ந்திறைஞ்சி
வேறுபல நதிகானங் கடந்தருளி விரிசடையில்
ஆறணிந்தார் மகிழ்ந்ததிரு அரசிலியை வந்தடைந்தார். ௧௧௩௪

அரசிலியை அமர்ந்தருளும் அங்கணரைப் பணிந்து
பரசிஎழு திருப்புறவார் பனங்காட்டூர் முதலாய
விரைசெய்மலர்க் கொன்றையினார் மேவுபதி பலவணங்கித்
திரைசெய்நெடுங் கடலுடுத்த திருத்தில்லை நகரணைந்தார். ௧௧௩௫

எல்லையில்ஞா னத்தலைவர் எழுந்தருள எதிர்கொள்வார்
தில்லையில்வாழ் அந்தணர்மெய்த் திருத்தொண்டர் சிறப்பினொடு
மல்கஎதிர் பணிந்திறைஞ்ச மணிமுத்தின் சிவிகைஇழிந்
தல்குபெருங் காதலுடன் அஞ்சலிகொண் டணைகின்றார். ௧௧௩௬

திருவெல்லை யினைப்பணிந்து சென்றணைவார் சேண்விசும்பை
மருவிவிளங் கொளிதழைக்கும் வடதிசைவா யிலைவணங்கி
உருகுபெருங் காதலுடன் உட்புகுந்து மறையினொலி
பெருகிவளர் †மணிமாடப் பெருந்திருவீ தியைஅணைந்தார். ௧௧௩௭

நலமலியுந் திருவீதி பணிந்தெழுந்து நற்றவர்தங்
குலநிறைந்த திருவாயில் குவித்தமலர்ச் செங்கையொடு
தலமுறமுன் தாழ்ந்தெய்தித் தமனியமா ளிகைமருங்கு
வலமுறவந் தோங்கியபே ரம்பலத்தை வணங்கினார். ௧௧௩௮

வணங்கிமிக மனமகிழ்ந்து மாலயனுந் தொழும்பூத
கணங்கள்மிடை திருவாயில் பணிந்தெழுந்து கண்களிப்ப
அணங்குதனிக் கண்டருள அம்பலத்தே ஆடுகின்ற
குணங்கடந்த தனிக்கூத்தர் பெருங்கூத்துக் கும்பிடுவார்.ு ௧௧௩௯

தொண்டர்மனம் பிரியாத ‡திருப்படியைத் தொழுதிறைஞ்சி
மண்டுபெருங் காதலினால் நோக்கிமுகம் மலர்ந்தெழுவார்

---

௧௧௩௫. பரசிஎழு - அடியார்கள் வாழ்த்தி எழும்.

௧௧௩௬. அல்கு - தங்கும்.

௧௧௩௮. தமனிய மாளிகை மருங்கு - பொற்கோயில் பக்கத்தே.

௧௧௩௯. மிடை - நெருங்கிய. அணங்கு - சிவகாமியார். தத்துவக் குணங்களைக் கடந்த.

௧௧௪௦. இறைவன் ஆனந்த வடிவினன். அவன் எங்குமிருத்தலால், ஆனந்தமும் எங்குமிருப்பதாகிறது. தத்துவங் கடந்த உணர்வினர் அவ்வானந்தத்தில் தோய்வர்.

பா- ம்—*அரசிலியில். †நெடு ‡திருப்பதியைப் பணிந்திறைஞ்சி.

முண்டமெலாம் நிறைந்தெழுந்த ஆனந்தத் துள்ளலைந்து
ண்டபே ரின்பத்தின் கரையில்லா நிலைஅணைந்தார். ககசo

அந்நிலைமை அடைந்துதிளைத் தாங்கெய்தாக் காலத்தில்
மன்னுதிரு அம்பலத்தை வலங்கொண்டு போந்தருளிப்
பொன்னணிமா ளிகைவீதிப் புறத்தணைந்து போதுதொறும்
இன்னிசைவண் தமிழ்பாடிக் கும்பிட்டங் கினிதிருந்தார். ககசக

திருந்தியசீர்த் தாதையார் சிவபாத விருதயரும்
பொருந்துதிரு வளர்புகலிப் பூசுரரும் மாதவரும்
"பெருந்திருமா லயன்போற்றும் பெரும்பற்றப் புலியூரில்
இருந்தமிழா கரர்அணைந்தார்" எனக்கேட்டு வந்தணைந்தார். ககசஉ

ஆங்கவரைக் கண்டுசிறப் பளித்தருளி அவரோடும்
தாங்கரிய காதலினால் தம்பெருமான் கழல்வணங்க
ஓங்குதிருத் தில்லைவாழ் அந்தணரும் உடனாகத்
தேங்கமழ்கொன் றைச்சடையார் திருச்சிற்றம் பலம்பணிந்தார். ககசங

தென்புகலி அந்தணரும் தில்லைவாழ் †அந்தணர்முன்
அன்புநெறி ‡பெருக்குவித்த ஆண்டகையார் அடிபோற்றிப்
பொன்புரிசெஞ் சடைக்கூத்தர் அருள்பெற்றுப் போந்தருளி
இன்புறுதோ ணியில்அமர்ந்தார் தமைவணங்க எழுந்தருள. ககசச

ற்றவர்தங் குழாத்தோடும் நம்பர்திரு நடஞ்செய்யும்
பொற்பதியின் திருவெல்லை பணிந்தருளிப் புறம்போந்து
பெற்றம்உயர்த் தவர்அமர்ந்த பிறபதியும் புக்கிறைஞ்சிக்
கற்றவர்கள் பரவுதிருக் கழுமலமே சென்றடைவார். ககசரு

பல்பதிகள் கடந்தருளிப் பன்னிரண்டு பேர்படைத்த
தொல்லைவளப் பூந்தராய் தூரத்தே தோன்றுதலும்
மல்குதிரு மணிமுத்தின் சிவிகைஇழிந் தெதிர்வணங்கிச்
செல்வமிகு பதியதன்மேல் திருப்பதிகம் அருள்செய்வார். ககசசு

மன்னும்இசை மொழி"வண்டார் குழல்அரிவை" என்றெடுத்து
மின்னுசுடர் மாளிகை"விண் தாங்குவபோல் வேணுபுரம்"

---

ககசக. திளைத்து-ஆனந்தத்தில் இடையீடின்றி மூழ்கி. ஆங்கு காலத்தில் எய்தாத - அவ்விடத்தில் கால எல்லையில் அடங்காத.

ககசரு. பெற்றம் உயர்த்தவர் - இடபக்கொடியுடைய சிவபெருமான்.

ககசஎ. புறவப் புறம்பணை - சிறுகாடு சூழ்ந்த மருத நிலப்பக்கம்.

பா - ம்—*புறத்தமர்ந்து. †அந்தணரும். ‡பெருகுவித்த.

என்னும்இசைச் சொன்மாலை எடுத்தியம்பி எழுந்தருளிப்
புன்னைமணங் கமழ்புறவப் புறம்பணையில் வந்தணைந்தார். ககசஎ.

"வண்டார்குழ லரிவையொடும் பிரியாவகை பாகம்
பெண்தான்மிக ஆனான்பிறைச் சென்னிப்பெரு மானூர்
தண்தாமரை மலராளுறை தவளம்நெடு மாடம்
விண்தாங்குவ போலும்மிகு வேணுபுரம் அதுவே"—தேவாரம்.

வாழிவளர் புறம்பணையின் மருங்கணைந்து வரிவண்டு
சூழுமலர் நறுந்தீப தூபங்க ளுடன்தொழுது
"காழிநகர் சேர்மின்" எனக் கடைமுடிந்த திருப்பதிகம்
ஏழிசையி னுடன்பாடி எயின்மூதூ ருட்புகுந்தார். ககசஅ

"நம்பொருள் நம்மக்க ளென்று நச்சி இச்சை செய்துநீர்
அம்பரம் அடைந்து சால அல்ல லுய்ப்ப தன்முனம்
உம்பர்நாதன் உத்தமன் ஒளிம்மிகுத்த செஞ்சடை
நம்பன் மேவு நன்னகர் நலங்கொள் காழி சேர்மினே"—தேவாரம்.

சேணுயர்ந்த திருத்தோணி வீற்றிருந்த சிவபெருமான்
தாணிணைந்த ஆதரவின் தலைப்பாடு தனையுன்னி
நீணிலைக்கோ புரம்அணைந்து நேரிறைஞ்சிப் புக்கருளி
வாணிலவு பெருங்கோயில் வலங்கொண்டு முன்பணிந்தார். ககசகூ

முன்னிறைஞ்சித் திருவருளின் முழுநோக்கம் பெற்றேறிப்
பொன்னிமயப் பாவையுடன் புணர்ந்திருந்த புராதனரைச்
சென்னிமிசைக் குவித்தகரங் கொடுவிழுந்து திளைத்தெழுந்து
மன்னுபெரு வாழ்வெய்தி மனங்களிப்ப வணங்குவார். ககரு0

பரவுதிருப் பதிகங்கள் பலவும்இசை யினிற்பாடி
விரவியகண் ணருவிநீர் வெள்ளத்திற் குளித்தருளி
அரவணிந்தார் அருள்பெருகப் புறம்பெய்தி அன்பருடன்
சிரபுரத்துப் பெருந்தகையார் தந்திருமா ளிகைசேர்ந்தார். ககருக

மாளிகையின் உள்ளணைந்து மறையவர்கட் கருள்புரிந்து
தாள்பணியும் பெருங்கிளைக்குத் தகுதியினால் தலையளிசெய்
தாளுடைய தம்பெருமான் அடியவர்க ளுடன்அமர்ந்து
நீளவரும் பேரின்பம் மிகப்பெருக நிகழுநாள். ககருஉ

---

ககசகூ. ஆதரவின் தலைப்பாடுதனை உன்னி - விருப்பின் நேர்படுதலை நினைந்து. வாள் நிலவு - ஒளி விளங்குகின்ற.

காழிநா டுடையபிரான் கழல்வணங்கி மகிழ்வெய்த
ஆழியினும் மிகப்பெருகும் ஆசையுடன் திருமுருகர்
வாழிதிரு நீலநக்கர் முதற்றொண்டர் மற்றனையோர்
சூழுநெடுஞ் சுற்றமுடன் தோணிபுரந் தொழுதணைந்தார். ககருந

வந்தவரை எதிர்கொண்டு மனமகிழ்ந்து சண்பையர்கோன்
அந்தமில்சீர் அடியார்கள் அவரோடும் இனிதமர்ந்து
சுந்தரவா ரணங்கினுடன் தோணியில்வீற் றிருந்தாரைச்
செந்தமிழின் பந்தத்தால் திருப்பதிகம் பலபாடி. ககருச

பெருமகிழ்ச்சி யுடன்செல்லப் பெருந்தவத்தால் பெற்றவரும்
மருவுபெருங் கிளையான மறையவரும் உடன்கூடித்
"*திருவளர்ஞா னத்தலைவர் திருமணஞ்செய் தருளுதற்குப்
பருவமிது" என்றெண்ணி †அறிவிக்கப் பாங்கணைந்தார். ககருரு

நாட்டுமறை முறையொழுக்க ஞானபோ னகருக்குங்
கூட்டுவது ‡மனங்கொள்வார் "கோதில்மறை நெறிச்சடங்கு
காட்டவரும் வேள்விபல புரிவதற்கோர் கன்னிதனை
வேட்டருள வேண்டும்"என விண்ணப்பஞ் செய்தார்கள். ககருசு

மற்றவர்தம் மொழிகேட்டு மாதவத்தின் கொழுந்தனையார்
சுற்றமுறு பெரும்பாசத் தொடர்ச்சிவிடு நிலைமையராய்ப்
பெற்றம்உயர்த் தவர்அருள்முன் பெற்றதினால் இசையாது
"முற்றியதா யினுங்கூடா" தென்றவர்முன் மொழிந்தருள. ககருஎ

அருமறையோர் அவர்பின்னுங் கைதொழுதங் கறிவிப்பார்
"இருநிலத்து மறைவழக்கம் எடுத்தீர்நீர் ஆதலினால்
வருமுறையால் அறுதொழிலின் வைதிகமா நெறியொழுகும்
திருமணஞ்செய் தருளுதற்குத் திருவுள்ளஞ் செய்யும்"என. ககருஅ

---

ககருந. கடலினும் மிகப் பெருகும் ஆசையுடன்.

ககருச. செந்தமிழ்த் தொடையால்.

ககருசு. நாட்டும் - நாட்டப்படும். வேட்டருள - மணஞ் செய்ய. யாகங்கள் செய்வதற்கு மனைவி வேண்டற்பாலள் என்பது அறிவிக்கப்பட்டது.

ககருஎ. திருவருள் ஆணைப்படி திருஞானசம்பந்தர் உலகுய்யப் போந்தவர். அவர் எதன் பொருட்டுப் போந்தாரோ, அது முற்றுப் பெற்றது. இனி அவர் முன்னை நிலைக்கு ஏகுதல் வேண்டும். அதுபற்றியே "சுற்றமுறு......நிலைமையராய்......இசையாது......கூடாது" என்றார் போலும்.

ககருஅ. அறுதொழில் - ஓதல் ஓதுவித்தல் வேட்டல் வேட்பித்தல் ஈதல் ஏற்றல். வைதிகம் - வேத சம்பந்தம்.

பா - ம்—*திருவருள். †அறிவிக்கும். ‡மணங்கொள்வார்.

மறைவாழ அந்தணர்தம் வாய்மையொழுக் கம்பெருகும்
துறைவாழச் சுற்றத்தார் தமக்கருளி உடன்படலும்
பிறைவாழுந் திருமுடியிற் பெரும்புனலோ டரவணிந்த
கறைவாழுங் கண்டத்தார் தமைத்தொழுது மனங்களித்தார். ககருகூ

திருஞான சம்பந்தர் திருவுள்ளஞ் செய்ததற்குத்
தருவாய்மை மறையவரும் தாதையரும் தாங்கரிய
பெருவாழ்வு பெற்றாராய்ப் "பிஞ்ஞகனார் அருள்" என்றே
உருகாநின் றின்பமுறும் உளமகிழ்ச்சி எய்துவார். ககசு0

ஏதமில்சீர் மறையவரில் ஏற்றகுலத் தோடிசைவால்
நாதர்திருப் பெருமணத்து நம்பாண்டார் நம்பிபெறும்
காதலியைக் காழிநா டுடையபிரான் கைப்பிடிக்கப்
போதுமவர் பெருந்தன்மை எனப்பொருந்த எண்ணினார். ககசுக

திருஞான சம்பந்தர் சீர்பெருக மணம்புணரும்
பெருவாழ்வு திருத்தொண்டர் மறையவர்கள் மிகப்*பேண
வருவாரும் பெருஞ்சுற்ற †மகிழ்சிறப்ப மகட்பேசத்
தருவார்தண் பணைநல்லூர் சார்கின்றார் தாதையார். ககசுஉ

மிக்கதிருத் தொண்டர்களும் வேதியரும் உடனேகத்
திக்குநிகழ் திருநல்லூர்ப் பெருமணத்தைச் சென்றெய்தத்
தக்கபுகழ் நம்பாண்டார் நம்பிதாம் அதுகேட்டுச்
செக்கர்முடிச் சடையார்தந் திருப்பாதந் தொழுதெழுவார். ககசுங

ஒப்பரிய பேருவகை ஓங்கிஎழும் உள்ளத்தால்
அப்புநிறை குடம்‡விளக்கு மறுகெல்லாம் அணிபெருக்கிச்
செப்பரிய ஆர்வமிகு பெருஞ்சுற்றத் தொடுஞ்சென்றே
"எப்பொருளும் எய்தினேன்" எனத்தொழுதங் கெதிர்கொண்டார்.

---

ககருகூ. மறையொழுக்கம்பற்றி அந்தணர்கள் செய்த வேண்டுதலை முன்னிட்டும், இயற்கை வாழ்வு வளம்பெறத் தாம் போந்தமையை உன்னியும், அவ்வியற்கை வாழ்வினைச் செயலிற் காட்டுதல் வேண்டியும் பிள்ளையார் மணவினைக்கு உடன்பட்டாரென்க.

ககசுக. நாதர் திருப்பெருமணத்து - சிவபெருமான் எழுந்தருளியுள்ள திருநல்லூர்த் திருப்பெருமணத்திலே. போதும் - இயையும்.

ககசுஉ. தரு ஆர் தண்பணை - மரங்கள் நிறைந்த குளிர்ந்த வயல் சூழ்ந்த; தருஆர் தண்பணை என்பது பெண்மையின் தண்மையைக் குறிப்பது.

ககசுச. நீர் நிறைந்த குடங்களாலும் விளக்குகளாலும் வீதிகளையெல்லாம் அலங்காரஞ் செய்து.

பா - ம்—*பேணி. †மகிழ்வெய்த. ‡விளக்கால்.

எதிர்கொண்டு மணிமாடத் தினில்எய்தி இன்பமுறு
மதுரமொழி பலமொழிந்து வரன்முறையால் சிறப்பளிப்பச்
சதுர்முகனின் மேலாய சண்பைவரு மறையவரும்
முதிருணர்வின் மாதவரும் அணைந்ததிறம் மொழிகின்றார். கககரு

"ஞானபோ னகருக்கு நற்றவத்தின் ஒழுக்கத்தால்
ஊனமில்சீ லத்தும்பால் மகட் பேச வந்த"தென
"ஆனபே றந்தணர்பால் அருளுடைமை யாம்"என்று
வானளவு நிறைந்தபெரு மனமகிழ்ச்சி யொடுமொழிவார். கககசு

"உம்முடைய பெருந்தவத்தால் உலகனைத்தும் ஈன்றளித்த
அம்மைதிரு முலைப்பாலிற் குழைத்தஆ ரமுதுண்டார்க்
கெம்முடைய குலக்கொழுந்தை யாம்உய்யத் தருகின்றோம்
வம்மின்"என உரைசெய்து மனமகிழ்ந்து செலவிடுத்தார். கககஎ

பேருவகை யால்இசைவு பெற்றவர்தாம் மீண்டணைந்து
காருலவு மலர்ச்சோலைக் கழுமலத்தை வந்தெய்திச்
சீருடைய பிள்ளையார்க் கவர்நேர்ந்த படிசெப்பிப்
பார்குலவுந் திருமணத்தின் பான்மையினைத் தொடங்குவார். கககஅ

திருமணஞ்செய் கலியாணத் திருநாளும் திகழ்சிறப்பின்
மருவியஓ ரையுங்கணித மங்கலநூ லவர்வகுப்பப்
பெருகுமண நாளோலை பெருஞ்சிறப்பி னுடன்போக்கி
அருள்புரிந்த நன்னாளில் அணிமுளைப்பா லிகைவிதைத்தார். கககக

செல்வமலி திருப்புகலிச் செழுந்திருவீ திகளெல்லாம்
மல்குநிறை குடம்விளக்கு மகரதோ ரண †நிரைத்தே
எல்லையிலா ஒளிமுத்து மாலைகள்எங் கணுநாற்றி
அல்குபெருந் திருஓங்க அணிசிறக்க அலங்கரித்தார். ககஎ0

அருந்தவத்தோர் அந்தணர்கள் அயலுள்ளோர் தாம்உய்யப்
பொருந்துதிரு நாளோலை பொருவிறந்தார் கொண்டணையத்
திருந்துபுகழ் நம்பாண்டார் நம்பிசிறப் பெதிர்கொண்டு
வருந்தவத்தான் மகட்கொடுப்பார் வதுவைவினை தொடங்குவார்.

---

கககசு. இவ்வாறாகிய பேறு இவ்வந்தணர்பால்......

கககக. ஓரை - முகூர்த்தம்; இலக்கினம். ககஎ0. அல்கு - தங்கும்.

ககஎக. பொருவிறந்தார் - ஒப்பில்லாதவர்; குற்றமில்லாதவருமாம்.

பா - ம்—*பேசி. †நிறைத்தே.

மன்னுபெருஞ் சுற்றத்தார் எல்லாரும் வந்தீண்டி
நன்னிலைமைத் திருநாளுக் கெழுநாளாம் நன்னாளிற்
பன்மணிமங் கலமுரசம் பல்லியங்கள் நிறைந்தார்ப்பப்
பொன்மணிப்பா லிகைமீது புனிதமுளை பூரித்தார். ௧௧௭௨

சேணுயரு மாடங்கள் திருப்பெருகு மண்டபங்கள்
நீணிலைய மாளிகைகள் நிகரில்அணி பெறவிளக்கிக்
†காணவருங் கைவண்ணம் கவினோங்கும் படிஎழுதி
வாணிலவு மணிக்கடைக்கண் மங்கலக்கோ லம்புனைந்து. ௧௧௭௩

நீடுநிலைத் தோரணங்கள் நீள்மறுகு தொறுநிரைத்து
மாடுயருங் கொடிமாலை மணிமாலை இடைப்போக்கிச்
சேடுயரும் வேதிகைகள் செழுஞ்சாந்து கொடுநீவிப்
பீடுகெழு மணிமுத்தின் பெரும்பந்தர் பலபுனைந்தார். ௧௧௭௪

மன்றல்வினைத் திருமுளைநாள் தொடங்கிவரு நாளெல்லாம்
முன்றில்தொறும் வீதிதொறும் முகநெடுவா யில்கள்தொறும்
நின்றொளிரும் மணிவிளக்கு நிறைவாசப் பொற்குடங்கள்
துன்றுசுடர்த் தாமங்கள் தூபங்கள் துதைவித்தார். ௧௧௭௫

எங்கணுமெய்த் திருத்தொண்டர் மறையவர்கள் ஏனையோர்
மங்கலநீள் மணவினைநாள் கேட்டுமிக மகிழ்வெய்திப்
பொங்குதிருப் புகலிதனில் நாடோறும் ‡புகுந்தீண்ட
§அங்கண்அணைந் தவர்க்கெல்லாம் பெருஞ்சிறப்பு மிகஅளித்தார்.

மங்கலதூ ரியநாத மறுகுதொறும் நின்றியம்பப்
பொங்கியநான் மறையோசை கடலோசை ||மிசைப்பொலியத்
தங்குநறுங் குறைஅகிலின் தழைத்தசெழும் புகையினுடன்
செங்கனல்ஆ குதிப்புகையும் தெய்வவிரை மணம்பெருக. ௧௧௭௭

௧௧௭௩. காண...எழுதி - கண்டு மகிழத்தக்க கைத்தொழிலாகிய உருவங்களை அழகுபெற வரைந்து. வாள்...கடைக்கண் - ஒளி விளங்கும் மணிகளையுடைய வாயிற்படியில்.

௧௧௭௪. மாடு - பக்கங்களில். சேடு...நீவி - திரண்டு உயர்ந்த திண்ணைகளில் செழுஞ் சாந்து பூசி. பீடுகெழு - பெருமை பொருந்திய.

௧௧௭௫. மன்றல் வினை - திருமண வினைக்கு. முன்றில்தொறும் - முற்றங்கள்தோறும். துன்று சுடர்த் தாமங்கள் - நெருங்கி ஒளிகாலும் கற்பக மாலைகள். துதைவித்தார் - நெருங்கவைத்தார்கள்.

௧௧௭௭. மங்கல...இயம்ப - மங்கல வாத்தியங்கள் தெருவுதோறும் நிலையாக முழங்க.

பா - ம்—*நிகரிலொளி. †காண்வருகை வினைவண்ணம்; காணவரு வினைவண்ணம்; காணவரு கைவினைஞர். ‡புகுந்தீண்டி. §அங்கணைந்த வர்க்கெல்லாம். ||மிசைப்.

எண்டிசையி னுள்ளோரும் ஈண்டுவளத் தொடுநெருங்கப்
பண்டநிறை சாலைகளும் பலவேறு விதம்பயில
மண்டுபெரு நிதிக்குவைகள் மலைப்பிறங்கல் எனமலிய
உண்டிவினைப் பெருந்துழனி ஓவாத ஒலிஓங்க. ககள அ

மாமறைநூல் விதிச்சடங்கில் வகுத்தமுறை நெறிமரபின்
தூமணநல் லுபகரணம் சமைப்பவர்தந் தொழில்துவன்றத்
தாமரையோன் அனையபெருந் தவமறையோர் தாமெடுத்த
பூமருவு பொற்கலசப் புண்ணியநீர் பொலிவெய்த. ககள கூ

குங்குமத்தின் செழுஞ்சேற்றின் கூட்டமைப்போர் இனங்குழுமப்
பொங்குவிரைப் புதுக்கலவைப் புகையெடுப்போர் தொகைவிரவத்
துங்கநறுங் கர்ப்பூரச் சுண்ணம்இடிப் போர்நெருங்க
எங்குமலர்ப் பிணைபுனைவோர் ஈட்டங்கள் மிகப்பெருக. கக அ0

இனையபல வேறுதொழில் எம்மருங்கும் நிரைத்தியற்றும்
மனைவளரும் மறுகெல்லாம் மணஅணிசெய் மறையூர்
நினைவரிய பெருவளங்கள் நெருங்குதலால் நிதிக்கோமான்
தனைஇறைவர் தாம்ஏவச் சமைத்ததுபோல் *அமைந்துளதால். கக அக

வேறு

மாறி லாநிறை வளந்தரு புகலியின் மணமீக்
கூறு நாளின்முன் ஞளினில் வேதியர் குழாமும்
நீறு சேர்திருத் தொண்டரும் நிகரிலா தவருக்
காறு சூடினார் அருட்டிருக் காப்புநாண் அணிவார். கக அஉ

ககள அ. ஈண்டு - திரண்ட. பயில - நெருங்க. மண்டு - மிகுந்த. மலைப்பிறங்கல்என - மலைப் பெருக்குப்போல. துழனி - ஓசை. ஓவாத - நீங்காத.

ககள கூ. தூய மணத்துக்குரிய நல்ல உபகரணங்கள். துவன்ற - நிறைய. தாமரையோன் அனைய - பிரமனைப் போன்ற.

கக அ0. கலவைப் பொருள் பலவற்றாலாகிய புகை. மலரால் பிணையல் மாலை கட்டுவாரது கூட்டங்கள்.

கக அக. மனைகள் ஓங்கும் தெருக்களிலெல்லாம். குபேரனை இறைவர் அனுப்ப அவன் சமைத்ததுபோல்.

கக அஉ. நிகரிலாதவருக்கு - திருஞான சம்பந்தருக்கு. அருளுக்கு அறிகுறியான திருக்காப்பு; திருக்காப்பு, சக்திக்கு அறிகுறியாதலின் "அருட்டிருக்காப்பு" என்றார்.

பா - ம்—*நிறைந்துளதால்.

வேத வாய்மையின் விதியுளி வினையினுல் விளங்க
ஓத நீருல கியன்முறை ஒழுக்கமும் பெருகக்
காதல் நீள்திருத் தொண்டர்கள் மறையவர் கவிஞர்
மாதர் மைந்தர்பொற் காப்புநாண் நகர்வலஞ் செய்தார். கக அங

நகர்வ லஞ்செய்து புகுந்தபின் நவமணி அணிந்த
புகரில் சித்திர விதானமண் டபத்தினிற் பொலியப்
பகரும் வைதிக விதிச்சமா வர்த்தனப் பான்மை
திகழ முற்றிய செம்மலார் திருமுன்பு சேர்ந்தார். ககஅச

செம்பொ னின்பரி கலத்தினிற் செந்நெல்வெண் பரப்பின்
வம்ப ணிந்தநீள் மாலைசூழ் மருங்குற அமைத்த
அம்பொன் வாசநீர்ப் பொற்குடம் அரசிலை தருப்பை
பம்பு நீள்சுடர் மணிவிளக் கொளிர்தரும் பரப்பில். ககஅரு

நாத மங்கல முழக்கொடு நற்றவ முனிவர்
வேத கீதமும் விம்மிட விரைகமழ் வாசப்
போது சாந்தணி பூந்துகில் புனைந்தபுண் ணியம்போல்
மீது பூஞ்சய னத்திருந் தவர்முன்பு மேவி. ககஅசு

ஆர்வம் மிக்கெழும் அன்பினுல் மலரயன் அனைய
சீர்ம றைத்தொழிற் சடங்குசெய் திருந்துநூல் முனிவர்
பார்வ ழிப்பட வரும்இரு வினைகளின் பந்தச்
சார்பொ ழிப்பவர் திருக்கையிற் காப்புநாண் சாத்த. ககஅஎ

கண்ட மாந்தர்கள் கடிமணங் காணவந் தணைவார்
கொண்ட வல்வினை பாப்பவிழ் கொள்கைய வான

ககஅங. விதியுளி வினையினுல் விளங்க - விதிகள் (முறைமைகள்) செய லால் விளங்க. கவிஞர் மாதர் - அழகு நிறைந்த மாதர்கள்.

ககஅச. புகரில் சித்திர விதானம் - குற்றமற்ற சித்திரம் அமைந்த மேற் கட்டியுடைய. சமாவர்த்தனம் - சம்சாரத்திற் குட்படுதற்குரிய நிலையை; பிரம சரியத்தை ஒழுங்குபெற முடித்த நிலையை. செம்மலார் (பிள்ளையாரது) திரு முன்பு (மறையோர்கள்) சேர்ந்தார்கள்.

ககஅரு. செம்பொற் பாத்திரத்தில்......வாசனையுடைய நீண்ட மாலைகள். பம்பு - பரவிய.

ககஅசு. வாசமலர், சந்தனம், ஆபரணம், பூந்துகில் ஆகியவற்றை அணிந்த.

ககஅஅ. கொண்ட வல்வினை யாப்பு - பற்றிய வலிய வினைக் கட்டு. வதனமும் - முகமும். சுருதி மண்டும் - வேதம் நிறைந்த.

பா - ம்—*பரப்பு.

தொண்டர் சிந்தையும் வதனமும் மலர்ந்தன சுருதி
மண்டு மாமறைக் குலமெழுந் தார்த்தன மகிழ்ந்தே. ககஅஅ

நிரந்த கங்குலின் நிதிமழை விதிமுறை எவர்க்கும்
புரந்த ஞானசம் பந்தர்தாம் புன்னெறிச் சமய
அரந்தை வல்லிருள் அகலவந் தவதரித் தாற்போல்
பரந்த பேரிருள் துரந்துவந் தெழுந்தனன் பகலோன். ககஅகூ

அஞ்சி றைச்சுரும் பறைபொழிற் சண்பையாண் டகையார்
தஞ்சி வத்திரு மணஞ்செயத் தவஞ்செய்நாள் என்று
மஞ்ச னத்தொழில் புரிந்தென மாசிருள் கழுவிச்
செஞ்சு டர்க்கதிர்ப் பேரணி அணிந்தன திசைகள். ககக௦

பரம்பு தம்வயின் எங்கணும் உள்ளபல் வளங்கள்
நிரம்ப முன்கொணர்ந் தெண்டிசை யவர்நெருங் குதலால்
தரங்க டந்தவர் தந்திருக் கல்லியா ணத்தின்
வரம்பில் தன்பயன் காட்டுவ தொத்தது வையம். கககக

நீங்கள் வாழ்வென வருந்திரு ஞானசம் பந்தர்
மங்க லத்திரு மணஎழுச் சியின்முழக் கென்னத்
துங்க வெண்டிரைச் சுரிவளை ஆர்ப்பொடு சூழ்ந்து
பொங்கு பேரொலி முழக்குடன் எழுந்தது புணரி. ககக௨

அளக்கர் ஏழுமொன் றாமெனும் பெருமைஎவ் வுலகும்
விளக்கு *மாமண விழாவுடன் விரைந்துசெல் வனபோல்
துளக்கில் வேதியர் ஆகுதி தொடங்கிடா முன்னம்
வளர்க்கும் வேதியில் வலஞ்சுழித் தெழுந்தது வன்னி. கககங

சந்த மென்மலர்த் தாதணி நீறுமெய் தரித்துக்
கந்த மேவுவண் டொழுங்கெனுங் கண்டிகை பூண்டு

---

ககஅகூ. நிரந்த......புரந்த - பரந்த இருளினைய கடலினின்றும் எழுந்து பெய்யும் மழைபோல விதிமுறையை எவர்க்கும் ஈந்த. அரந்தை - துன்பமாகிய. துரந்து - நீக்கி. பகலோன் - சூரியன்.

ககக௦. சுரும்பு - வண்டுகள். திருமஞ்சனத் தொழில்.

கககக. பரம்புதம்வயின் - பெருகிய தம்மிடத்து.

ககக௨. புணரி - சமுத்திரம். சுரிவளை ஆர்ப்பொடு - சுரிசங்கொலியுடன்.

கககங. அளக்கர் - கடல். துளக்கில் - கலக்கமில்லாத. வேதியில் - யாக குண்டத்தில். வன்னி - நெருப்பு.

பா - ம்—*மாமணி.

சிந்தை தூயஅன் பர்களுடன் திருமணம் போத
மந்த சாரியின் மணங்கொணர்ந் தெழுந்தது மருத்து. ககக௯௪

எண்டி சைத்*திறத் தியாவரும் புகலிவந் தெய்தி
மண்டும் †அத்திரு மணஎழுச் சியின்அணி வாய்ப்பக்
கொண்ட வெண்ணிறக் குரூஉச்சுடர்க் கொண்டல்கள் என்ன
வெண்து கிற்கொடி நிரைத்தது போன்றது விசும்பு. ககக௯௫

ஏல ‡இந்நலம் யாவையும் எழுச்சிமுன் காட்டும்
காலை செய்வினை முற்றிய கவுணியர் பெருமான்
மூல மாகிய தோணிமேல் முதல்வரை வணங்கிச்
சீல மார்திரு வருளினால் மணத்தின்மேற் செல்வார். ககக௯௬

காழி மாநகர் வேதியர் குழாத்தொடுங் கலந்து
சூழும் அன்பர்கள் ஏனையோர் துதைந்துமுன் செல்ல
வாழி மாமறை முழங்கிட வளம்பதி வணங்கி
நீழல் வெண்சுடர் நித்திலச் சிவிகைமேற் கொண்டார். ககக௯௭

§ஆன வாகனம் ஏறுவார் யாருமேற் கொள்ளக்
கான மாகிய தொங்கல்பிச் சங்குடை கவரி
மேல்நெ ருங்கிட விசும்பினும் நிலத்தினும் எழுந்த
வான துந்துபி முழக்குடன் மங்கல இயங்கள். ககக௯அ

வேறு

சங்கொடு தாரை சின்னந் தனிப்பெருங் காளந் தாளம்
வங்கியம் ஏனை மற்று மலர்துளைக் கருவி எல்லாம்

---

ககக௯௪. மருத்து - காற்று. மந்தசாரியின் - மந்தகதியில். சந்த...தரித்து - அழகிய மெல்லிய மலர்த்துகளாகிய நீற்றை உடலிற் பூசி. கந்த......எனும் - திரளாக மேவுகின்ற வண்டுகளின் வரிசை என்னும். **திருக்கூட்டச் சிறப்பு : ௯.** பார்க்க.

ககக௯௫. குரூஉ - கனம்; நிறம்; குரா நிறம். "பசுமட்குரூஉத் திரள்போல"- **புறநானூறு : ௩௨.** "குரூஉக்கட்கொலை ஏறு"—**கலித்தொகை : ௧0௪. ௨௩; ௭௨.** கொண்டல்கள் - மேகங்கள்.

ககக௯௬. ஏல - பொருந்த.

ககக௯அ. ஆன-அவரவர்க்கான. யான என்னும் பாடத்துக்குச்சிவிகை என்று பொருள் கொள்க. கானம்......கவரி - கருமையாகிய பீலிக் குஞ்சக்குடையும் சாமரமும். இயங்கள் - வாத்தியங்கள்.

ககக௯௯. வங்கியம் - குழல்.

பா - ம்—*தலத். †மெய்த். ‡இன்னணம். §யான.

பொங்கிய ஒலியின் ஓங்கிப் பூசுரர் வேத *கீதம்
எங்கணும் எழுந்து மல்கத் திருமணம் எழுந்த தன்றே. ௧௧௯௯

கோதையர் குழல்சூழ் வண்டின் குழாத்தொலி ஒருபால், கோல
வேதியர் வேத வாய்மை மிகுமொலி ஒருபால், மிக்க
ஏதமில் விபஞ்சி வீணை யாழொலி ஒருபால், ஏத்தும்
காதமங் கலங்கள் கீத நயப்பொலி ஒருபா லாக. ௧௨௦௦

விண்ணினை †விழுங்க மிக்க வெண்துகிற் பதாகை வெள்ளம்
கண்வெறி படைப்ப மிக்க கதிர்விரி கவரிக் கானம்
மண்ணிய மணிப்பூண் நீடும் அரிசனம் மலிந்த பொற்பின்
எண்ணிலா வண்ணத் தூசின் பொதிப்பரப் பெங்கும் நண்ண. ௧௨௦௧

சிகையொடு மான்தோல் தாங்கும் கிடையுமா சாணுஞ் செல்வார்
புகைவிடும் வேள்விச் செந்தீ இல்லுடன் கொண்டு போவார்
தகைவிலா விருப்பின் மிக்க பதிகங்கள் விளம்பிச் சார்வார்
வகையறு பகையுஞ் செற்ற மாதவர் இயல்பின் மல்க. ௧௨௦௨

அறுவகை விளங்குஞ் சைவத் தளவிலா விரதஞ் சாரும்
நெறிவழி நின்ற வேடம் நீடிய தவத்தி னுள்ளோர்
மறுவறு மனத்தில் அன்பின் வழியினால் வந்த யோகக்
குறிநிலை பெற்ற தொண்டர் குழாங்குழா மாகி ஏக. ௧௨௦௩

---

௧௨௦௦. ஏதமில் விபஞ்சி வீணை - குற்றமில்லாத விபஞ்சியாகிய வீணை. வீணை வேறு; யாழ்வேறு. —திருநாளைப்போவார் புராணம்: ௧௪. குறிப்புப் பார்க்க.

௧௨௦௧. பதாகை வெள்ளம் - கொடிப் பெருக்கு. வெண்துகிற் பதாகை வெள்ளம் விண்ணினை விழுங்க. கவரிக்கானம் - சாமரக்கூட்டம். கண்வெறி கொள்ளும்படி. மண்ணிய - அலங்கரித்த. அரிசனம்.........தூசின் - மஞ்சள் நிறைந்த அழகுடைய எண்ணில்லாத நிறங்கள் வாய்ந்த பட்டாடைகளின்.

௧௨௦௨. கிடையும் - வேதம் ஓதும் மாணாக்கர்களும். இல்லுடன் - மனையாளுடன். தகைவு இலா - தடுக்க முடியாத. அறுவகைப் பகையையும் ஒழித்த மாதவர்கள்; (பகை ஆறு:—காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாச்சரியம்.)

௧௨௦௩. அறுவகையாக விளங்குஞ் சைவத்தில்; (அகச்சமயம் ஆறு:—சைவம், பாசுபதம், மாவிரதம், காளாமுகம், வாமம், வைரவம்).

பா - ம்—*நாதம். †விழுங்கு.

விஞ்சையர் இயக்கர் சித்தர் கின்னரர் மிடைந்த தேவர்
அஞ்சன நாட்ட ஈட்டத் தரம்பையர் உடனு யுள்ளோர்
தஞ்சுடர் விமான மேறித் தழைத்தஆ தரவி னோடு
மஞ்சுறை விசும்பின் மீது மணஅணி காணச் சென்றார். கஉ0ச

மற்றிவர் மிடைந்து செல்லும் மங்கல வனப்பின் காட்சி
முற்றஇத் தலத்தி னுள்ளோர் மொய்த்துடன் படரும் போதில்
அற்புத நிகழ்ச்சி எய்த அணைதலால் மணமேற் செல்லும்
பொற்பமை மணத்தின் சாயை போன்றுமுன் பொலியச் செல்ல.

தவவர சாள உய்க்குந் தனிக்குடை நிழற்றச் சாரும்
பவம்அறுத் தாள வல்லார் பாதம்உள் ளத்துக் கொண்டு
புவனங்கள் வாழ வந்த பூந்தராய் வேந்தர் போந்து
சிவனமர்ந் துறையும் நல்லூர்த் திருப்பெரு மணத்தைச் சேர்ந்தார்.

பெருமணக் கோயி லுள்ளார் மங்கலம் பெருகு மாற்றால்
வருமணத் திறத்தின் முன்னர் வழிஎதிர் கொள்ளச் சென்று
திருமணம் புணர எய்தும் சிரபுரச் செம்ம லார்தாம்
இருள்†மணந் திலங்கு கண்டத் திறைவர்தங் கோயில் புக்கார். கஉ0எ

நாதரைப் பணிந்து போற்றி நற்பொருட் பதிகம் பாடிக்
காதல்மெய் யருள்முன் பெற்றுக் கவுணியர் தலைவர் போந்து
வேதியர் "வதுவைக் கோலம் புனைந்திட வேண்டும்" என்னப்
பூதநா யகர்தங் கோயில் புறத்தொரு மடத்திற் புக்கார். கஉ0அ

பொற்குடம் நிறைந்த வாசப் புனிதமஞ் சனநீ ராட்டி
விற்பொலி வெண்பட் டாடை மேதக விளங்கச் சாத்தி
நற்றிரு உத்த ரீய நறுந்துகில் சாத்தி நானப்
பற்பல கலவைச் சாந்தம் பான்மையின் அணிந்த பின்னர். கஉ0கூ

---

கஉ0ச. அஞ்சன.........அரம்பையர் - கருமைக் கண்களையுடைய கூட்டமான தேவப் பெண்கள்.

கஉ0டு. மற்றிவர் - விஞ்சையர் முதலிய தேவர்கள். மிடைந்து - நெருங்கி. வனப்பின் - அழகின்.

கஉ0சு. சாரும்......பாதம் - சிவனடி; (பவம் - பிறப்பு.)

கஉ0கூ. வில் பொலி - ஒளி விளங்கும். நானம் - வாசனை.

பா - ம்—*மற்றவர். †மறைத்.

திருவடி மலர்மேற் பூத்த *செழுநகைச் சோதி என்ன
மருவிய தாளக் கோவை †மணிச்சரி அணையச் சாத்தி
விரிசுடர்ப் பாட்டின் மீது விளங்குபொற் சாட்டிற் கோத்த
பெருகொளி முத்தின் தாமம் பிறங்கிய தொங்கல் சாத்தி. க௨க0

தண்சுடர்ப் பரிய முத்துத் தமனிய நாணிற் கோத்த
கண்கவர் கோவைப் பத்திக் கதிர்க்கடி சூத்தி ரத்தை
வெண்சுடர்த் தாள மாலை விரிசுடர்க் கொடுக்கின் மீது
வண்திரு அரையின் நீடு வனப்பொளி வளரச் சாத்தி. க௨.கக

‡ஒளிகதிர்த் தாளக் கோவை உதரபந் தனத்தின் மீது
தளிரொளி துளும்பு முத்தின் சன்னவீ ரத்தைச் சாத்திக்
குளிர்நில வெறிக்கு முத்தின் பூணநூல் கோவை சாத்தி
நளிர்கதிர் முத்து மாலை நகுசுடர் ஆரஞ் சாத்தி. க௨க௨

வாள்விடு வயிரக் கட்டு மணிவிரல் ஆழி சாத்தித்
தாளுறு தடக்கை முத்தின் தண்டையும் சரியும் §சாத்தி
நீளொளி முழங்கைப் பொட்டு நிரைசுடர் வடமுஞ் சாத்தித்
தோள்வளைத் தாளப் பைம்பூண் சுந்தரத் தோள்மேல் சாத்தி. க௨க௩

---

க௨க0. நகை - விளக்கமுடைய. மருவிய......சரி - பொருந்திய முத்துக் கோவைகளையுடைய இரத்தின வளையை. முத்தின்...சாத்தி - முத்தின் வடத்தில் விளங்கிய குஞ்சம் சாத்தி.

க௨கக. பரிய முத்து - பரு முத்துக்களை. தமனிய நாணில் - பொன் நாணில். கடி சூத்திரத்தை - அரை ஞாணை. கொடுக்கின் - பின் கச்சத்தின். வஸ்திரக் கரையில் முத்துக் குறிகள் வரிசையாகப் பொறிக்கப்படுவதுண்டு. அக் கரை, கச்சமாக அமையுமாறு வஸ்திரங் கட்டுவது வழக்கம். அம் முத்துக் குறிகள்மீது கடிசூத்திரத்தைச் சாத்தினரென்க.

க௨க௨. உதர பந்தனத்தின் - அரைப்பட்டிகையின். சன்னவீரத்தை - சன்னவீரமென்னும் அணியை; சன்னவீரம் - கழுத்திலிருந்து உந்திவரை தொங்கும் ஒருவித அணி; இது பதக்கம், வாகுவலயம், வீர சங்கிலி என்றும் வழங்கப்படும். " சன்ன வீரத்த கோவை "—கம்பன்; கண்ணப்ப நாயனார் புராணம்: ௫௧. பார்க்க.

க௨க௩. வாள் - ஒளி. ஆழி - ஒருவகை மோதிரம். முழந்தாள்வரை நீண்ட தடக்கையில். சரியும் - வளையும். முழங்கைப் பொட்டு - முழங்கையில் அணியும் ஒருவித ஆபரணம். முழங்கைப் பொட்டுடன் வரிசையான மணிவடங் களையும். தோள்......பூண் - தோள் வளையாகிய முத்தாபரணத்தை.

பா - ம்—*செழுந்தலைச். †மணிச்சிலம் பணையச். ‡ஒளிர். §நாணும்.

திருக்கழுத் தாரந் தெய்வக் கண்டிகை மாலை சேரப்
பருத்தமுத் தொழுங்கு கோத்த படரொளி வடமுஞ் சாத்திப்
பெருக்கிய வனப்பின் செவ்வி பிறங்கிய திருவார் காதில்
வருக்கவெண் தாளக் கொத்தின் வடிக்குழை விளங்கச் சாத்தி. ௧௨௧௪

நீற்றொளி தழைத்துப் பொங்கி நிறைதிரு நெற்றி மீது
மேற்பட விரிந்த சோதி வெண்சுடர் எழுந்த தென்னப்
பாற்படு முத்தின் பாரப் பனிச்சுடர்த் திரளை சாத்தி
ஏற்பவைத் தணிந்த முத்தின் எழில்வளர் மகுடஞ் சேர்த்தார்.

இவ்வகை நம்மை யாளும் ஏர்வளர் தெய்வக் கோலம்
கைவ்வினை மறையோர் செய்யக் கடிகொள்செங் கமலத் தாதின்
செவ்விநீள் தாம மார்பர் திருவடை யாள மாலை
எவ்வுல கோரும் ஏத்தத் தொழுதுதாம் எடுத்துப் பூண்டார். ௧௨௧௬

அழகினுக் கணியாம் வெண்ணீ றஞ்செழுத் தோதிச் சாத்திப்
பழகிய அன்பர் சூழப் படரொளி மறுகில் எய்தி
மழவிடை மேலோர் தம்மை மனங்கொள வணங்கி வந்து
முழுவொலி எடுப்ப முத்தின் சிவிகைமேற் கொண்ட போது. ௧௨௧௭

எழுந்தன சங்க நாதம் இயம்பின இயங்கள் எங்கும்
பொழிந்தன விசும்பில் விண்ணோர் கற்பகப் புதுப்பூ மாரி
தொழுந்தகை முனிவர் தொண்டர் சுருதியின் வாழ்த்துப் பொங்கி
வழிந்தன திசைகள் மீது மலர்ந்தன உலகம் எல்லாம். ௧௨௧௮

---

௧௨௧௪. திருக்கழுத்தில் ஆரமும்......கண்டிகை மாலையுஞ் சேர......... முத்து வடத்தையுஞ் சாத்தி. வனப்பின்...........காதில் - அழகின் அழகு பெருத்த பேரழகு நிறைந்த காதில். வருக்க......குழை - ஒருவகை வெண் முத்துக் கொத்துக்களையுடைய வடித்த குண்டலத்தை.

௧௨௧௫. நெற்றிமீது...நல்ல முத்தின்...திரளைச் சாத்தி.

௧௨௧௬. கடி......மார்பர் - வாசனைகொண்ட செந்தாமரைத் தாதுக்களின் அழகு பெருகும் மாலையை அணிந்த மார்பராகிய பிள்ளையார். திரு அடையாள மாலை - உருத்திராக்க மாலை. இம்மாலையை மட்டும் பிள்ளையார் தாமே எடுத் தணிந்துகொண்டது கவனிக்கத்தக்கது.

௧௨௧௭. மறுகில் - தெருவில்.

௧௨௧௮. இயங்கள் - (மங்கல) வாத்தியங்கள். சுருதியின் - மறை மொழி யின்.

பா - ம்—*சென்னி.

படர்பெருந் தொங்கல் பிச்சம் பைங்கதிர்ப் பீலிப் பந்தர்
அடர்புனை செம்பொற் பாண்டில் அணிதுகிற் சதுக்கம் மல்கக்
கடலின்மீ தெழுந்து நிற்குங் கதிர்நிறை மதியம் போல
வடநிரை அணிந்த முத்தின் மணிக்குடை நிழற்ற வந்தார். ௧௨௧௯

சீரணி தெருவி னூடு திருமணஞ் செல்ல முத்தின்
ஏரணி காளஞ் சின்னம் இலங்கொளித் தாரை எல்லாம்
பேரொலி பெருக முன்னே பிடித்தன "மறைக ளோடு
தாரணி உய்ய ஞான சம்பந்தன் வந்தான்" என்று. ௧௨௨0

மண்ணினுக் கிடுக்கண் தீர வந்தவர் திருநா மங்கள்
எண்ணில பலவும் ஏத்திச் சின்னங்கள் எழுந்த போதவ்
அண்ணலார் வதுவை செய்ய அலங்கரித் தணையப் பெற்ற
புண்ணிய மறையோர் மாட மங்கலம் பொழிந்து பொங்க. ௧௨௨௧

முற்றுமெய்ஞ் ஞானம் பெற்ற மூர்த்தியார் செங்கை பற்ற
நற்பெருந் தவத்தின் நீர்மை நலம்படைத் தெழுந்த தெய்வக்
கற்பகப் பூங்கொம் பன்னார் தம்மையுங் காப்புச் சேர்த்துப்
பொற்புறு சடங்கு முன்னர்ப் புரிவுடன் செய்த வேலை. ௧௨௨௨

செம்பொன்செய் வாசிச் சூட்டுத் திருமணிப் புனைபூண் செல்வப்
பைம்பொனின் மாலை வேய்ந்த பவளமென் கொடியொப் பாரை
நம்பன்தன் அருளே வாழ்த்தி நல்லெழில் விளங்கச் சூட்டி
அம்பொன்செய் தீபம் என்ன அழுகலங் கரித்து வைத்தார். ௧௨௨௩

மாமறை மைந்த ரெல்லாம் மணத்தெதிர் சென்று மன்னும்
தூமலர்ச் செம்பொற் சுண்ணந் தொகுநவ மணியும் வீசத்
தாமரை மலரோன் போல்வார் அரசிலை தருப்பை தோய்ந்த
காமர்பொற் கலச நன்னீர் இருக்குடன் கலந்து வீச. ௧௨௨௪

---

௧௨௧௯. தொங்கல் - குஞ்சம் ; குடையுமாம். பிச்சம் - மடற்பனைக் குழாம் போன்றது ; பீலியாற் கட்டப்படுவது. பந்தர் - நீழல். பாண்டில்.........மல்க - வட்டமாக அணியப்பெற்ற வஸ்திர விதானங்கள் நெருங்க.

௧௨௨௧. திருநாமங்கள் - பாலறுவாயன், பரசமய கோளரி, முத்தமிழ் விரகன் முதலியன. புண்ணிய மறையோர் மாடம் - நம்பாண்டார் நம்பியின் மாளிகை.

௧௨௨௨. புரிவுடன் - விருப்பத்துடன்.

௧௨௨௩. செம்......சூட்டு - செம்பொன்னாலாகிய நுதலணி மாலையையும். வேய்ந்த - சூடிய.

௧௨௨௪. தாமரை மலரோன் போல்வார் - பிரமனையொத்த வேதியர்கள். இருக்குடன் - வேதமந்திர முழக்குடன்.

பா - ம்—*பொலிவுடன் ; பரிவுடன் ; போதுடன்.

மேய சுடர்மா ளிகைஎங்கும் விளங்க வீசி உளங்களிப்ப
ஏய சிறப்பில் அர்ச்சனைகள் எல்லாம் இயல்பின் முறைபுரிவார். ௩௪

பூந்தண் பனிநீர் கொடுசமைத்த பொருவில் விரைச்*சந் தனக்கலவை
வாய்ந்த அகிலின் நறுஞ்சாந்து வாசம் நிறைமான் மதச்சேறு
தோய்ந்த புகைநா வியின்நறுநெய் தூய பசுந்†கர்ப் பூரமுடன்
ஏய்ந்த அடைக்காய் அமுதினைய எண்ணில் மணிப்பா சனத்தேந்தி.

வேறு வேறு திருப்பள்ளித் தாமப் பணிகள் மிகஎடுத்து
மாறி லாத மணித்திருவா பரண வருக்கம் பலதாங்கி
ஈறில் விதத்துப் பரிவட்டம் ஊழின் நிரைத்தே எதிரிறைஞ்சி
ஆறு புனைந்தார் அடித்தொண்டர் அளவில் பூசை கொள‡அளித்தார்.

செங்கோல் அரசன் அருளுரிமைச் சேனை பதியாங் கோட்புலியார்
நங்கோ மானை நாவலூர் நகரார் வேந்தை நண்பினால்
தங்கோ மனையில் திருஅமுது செய்வித் திறைஞ்சித் தலைசிறந்த
பொங்கோ தம்போல் பெருங்காதல் புரிந்தார் பின்னும் போற்றுவார்.

ஆனா விருப்பின் மற்றவர்தாம் அருமை யால்முன் பெற்றெடுத்த
தேனார் கோதைச் சிங்கடியார் தமையும் அவர்பின் திருவுயிர்த்த
மானார் நோக்கின் வனப்பகையார் தமையும் கொணர்ந்து வன்தொண்டர்
தூநாண் மலர்த்தாள் பணிவித்துத் தாமும் தொழுது சொல்லுவார்.

"அடியேன் பெற்ற மக்களிவர் அடிமை யாகக் கொண்டருளிக்
கடிசேர் மலர்த்தாள் தொழுதுய்யக் கருணை அளிக்க வேண்டும்" எனத்
"தொடிசேர் தளிர்க்கை இவர்எனக்குத் தூய மக்கள்" எனக்கொண்டப்
படியே மகண்மை யாக்கொண்டார் பரவை யார்தங் கொழுநனார். ௩௯

---

௩௫. பொருவில் விரை - ஒப்பற்ற வாசனை கமழும். மான்மதச் சேறு - கஸ்தூரிக்குழம்பு. நாவியின் நறுநெய் - நாவிக்குழம்பு; புழுகு. அடைக்காய் அமுது - தாம்பூலம். பாசனத்து - தட்டுகளில்.

௩௬. பள்ளித் தாமத்துக்குரிய பணிகள். பள்ளித்தாமம் - எறிபத்தநாயனார் புராணம் ௯-ம் பாட்டுக் குறிப்புப்பார்க்க. ஊழின் நிரைத்தே - முறைப்படி வரிசையாக வைத்து.

௩௭. பொங்கு கடல்வாய் வெள்ளம்போல்.

௩௮. குறையாத விருப்பின். அவர் பின் பெற்றெடுத்த. கோதை - மாலை யணிந்த.

௩௯. மணங்கமழும் மலர்த்தாள். நம்பியாரூரர் சிங்கடியையும் வனப் பகையையும் புதல்வியாராகக் கொண்டார் என்பதற்கு அகச் சான்றுகள் வருமாறு:—"சேடார் பூங்குழல் சிங்கடியப்பன் திருவாரூரன்" "நாணியூரன்

பா - ம்—*சந்தனமெனவே. †கர்ப்பூரமுதல். ‡அணிந்தார்.

கோதை சூழ்ந்த குழலாரைக் குறங்கின் வைத்துக் கொண்டிருந்து
காதல் நிறைந்த புதல்வியராங் கருத்துட் கசிவால் அணைத்துச்சி
மீது கண்ணீர் விழமோந்து வேண்டு வனவுங் கொடுத்தருளி
நாதர் கோயில் சென்றடைந்தார் நம்பி தம்பி ரான்தோழர். ௪௦

வென்றி வெள்ளே றுயர்த்தருளும் விமலர் திருக்கோ புரம்இறைஞ்சி
ஒன்றும் உள்ளத் தொடும்அன்பால் உச்சி குவித்த கரத்தோடும்
சென்று புக்குப் பணிந்துதிருப் பதிகம் "பூணண்" என்றெடுத்துக்
கொன்றை முடியார் அருளுரிமை சிறப்பித் தார்கோட் புலியாரை. ௪௧

"பூண ணவதோ ரரவங்கண் டஞ்சேன் புறங்காட் டாடல்கண் டிகழேன்
பேணீ ராகிலும் பெருமையை யுணர்வேன் பிறவே னாகிலு மறவேன்
காணீ ராகிலுங் காண்பனென் மனத்தாற் கருதீ ராகிலுங் கருதி
நானே லும்மடி பாடுத லொழியேன் நாட்டியத் தான்குடி நம்பீ"—தேவாரம்.

சிறப்பித் தருளுந் திருக்கடைக்காப் பதனி னிடைச்சிங் கடியாரைப்
பிறப்பித் தெடுத்த பிதாவாகத் தம்மை நினைந்த பெற்றியினால்
"மறப்பில் வகைச்சிங் கடியப்பன்" என்றே தம்மை வைத்தருளி
சிறப்பொற் புடைய இசைபாடி நிறைந்த அருள்பெற் றிறைஞ்சுவார்.

"கூடா மன்னரைக் கூட்டத்து வென்ற கொடிறன் கோட்புலி சென்னி
நாடார் தொல்புகழ் நாட்டியத் தான்குடி நம்பியை நாளும் மறவாச்
சேடார் பூங்குழற் சிங்கடி யப்பன் திருவா ரூர னுரைத்த
பாடீ ராகிலும் பாடுமின் தொண்டீர் பாடநும் பாவம் பற்றறுமே."
—தேவாரம்.

அங்கு நின்றும் எழுந்தருளி அளவில் அன்பின் உள்மகிழச்
செங்கண் நுதலார் *மேவுதிரு வலிவ லத்தைச் சேர்ந்திறைஞ்சி
மங்கை பாகர் தமைப்பதிகம் " வலிவ லத்துக் கண்டேன் "என்
றெங்கும் நிகழ்ந்த தமிழ்மாலை எடுத்துத் தொடுத்த இசைபுனைவார்.

" நன்று மகிழுஞ் சம்பந்தர் நாவுக் கரசர் பாட்டுகந்தீர் "
என்று சிறப்பித் திறைஞ்சிமகிழ்ந் தேத்தி அருள்பெற் றெழுந்தருளி
மன்றி னிடையே நடம்புரிவார் மருவு பெருமைத் திருவாரூர்
சென்று குறுகிப் பூங்கோயிற் பெருமான் செம்பொற் கழல்பணிந்து.

" நல்லிசை ஞானசம் பந்தனும் நாவி னுக்கர சரும்பாடிய நற்றமிழ்
மாலை, சொல்லிய வேசொல்லி ஏத்துகப் பானைத் தொண்ட னேன்அறி

---

வனப்பகையப்பன் வன்தொண்டன்" "ஆரூரன் வனப்பகை யவளப்பன்"
"சிங்கடியப்பன் மெய்ப்பத்தனூரன்" "செறிந்த...நள்ளாற்றெஞ் சிவனை
நாவலூர்ச் சிங்கடி தந்தை......வனப்பகையப்பனூரன் வன்தொண்டன்"
—சுந்தரர் : திருக்கடைக் காப்புகள்.

௪௦. குறங்கில் - தொடையில்.

பா - ம்—*மருவு.

யாமை அறிந்து, கல்லியன் மனத்தைக் கசிவித்துக் கழலடி காட்டிஎன் களைகளை யறுக்கும், வல்லியல் வானவர் வணங்கநின்றானை வலிவலந் தனில் வந்துகண் டேனே."—தேவாரம்.

இறைஞ்சிப் போந்து பரவையார் திருமா ளிகையில் எழுந்தருளி
நிறைந்த விருப்பின் மேவுநாள் நீடு செல்வத் திருவாரூர்ப்
புறம்பு நணிய கோயில்களும் பணிந்து போற்றிப் புற்றிடமாய்
உறைந்த பெருமான் கழல்பிரியா தோவா இன்பம் உற்றிருந்தார். சரு

சேறிபுன் சடையார் திருவாரூர்த் திருப்பங் குனியுத் தரத்திருநாள்
குறுக வரலும் பரவையார் கொடைக்கு விழாவில் குறைவறுக்க
நிறையும் பொன்கொண் டணைவதற்கு நினைந்து நம்பி திருப்புகலூர்
இறைவர் பாதம் பணியஎழுந் தருளிச் சென்றங் கெய்தினார். சசு

சென்று விரும்பித் திருப்புகலூர்த் தேவர் பெருமான் கோயில்மணி
முன்றில் பணிந்து வலங்கொண்டு முதல்வர் முன்பு வீழ்ந்திறைஞ்சித்
தொன்று மரபின் அடித்தொண்டு தோய்ந்த அன்பில் துதித்தெழுந்து
நின்று பதிக இசைபாடி நினைந்த கருத்து நிகழ்விப்பார். சஎ

சிறிது பொழுது கும்பிட்டுச் சிந்தை முன்னம் அங்கொழிய
வறிது புறம்போந் தருளிஅயல் மடத்தில் அணையார் வன்தொண்டர்
அறிவு கூர்ந்த அன்பருடன் அணிமுன் றிலின்ஓர் அருகிருப்ப
மறிவண் கையார் *அருளேயோ மலர்க்கண் துயில்வந் தெய்தியதால்.

துயில்வந் தெய்தத் தம்பிரான் தோழர் அங்குத் திருப்பணிக்குப்
பயிலுஞ் சுடுமட் பலகைபல கொணர்வித் துயரம் பண்ணித்தேன்
அயிலுஞ் சுரும்பார் மலர்ச்சிகழி முடிமேல் அணியா உத்தரிய
வெயிலுந் தியவெண் பட்டதன்மேல் விரித்துப் பள்ளி மேவினார். சகூ

சுற்றும் †இருந்த தொண்டர்களும் துயிலும் அளவில் துணைமலர்க்கண்
பற்றுந் துயில்நீங் கிடப்பள்ளி உணர்ந்தார் பரவை கேள்வனார்

---

சரு. நணிய - அருகேயுள்ள ; சூழ்ந்துள்ள. ஓவா - மாறாத.

சஎ. தொன்று தொட்டுவரும் மரபின் ; வாழையடி வாழையென வரும் மரபின்.

சஅ. மறி - மான் கன்று. சிவபெருமான் அருளாலோ என்றபடி.

சகூ. தேனையுண்ணும் வண்டுகள் நிறைந்தமலர் முடித்த குடுமி........; வெயில் உந்திய - ஒளிவீசும்.

ருo. பள்ளி உணர்ந்தார் - துயில் எழுந்தார். "பொன்னும் மெய்ப்பொருளுந் தருவானை"—சுந்தரர் - திருவாரூர் க.

பா -ம்—*அருளாலே. †மிகுந்த.

வெற்றி விடையார் அருளாலே வேமண் கல்லே விரிசுடர்ச்செம்
பொற்றிக *கல்லா யினகண்டு புகலூர் இறைவர் அருள்போற்றி. ருo

தொண்டா உணர மகிழ்ந்தெழுந்து துணைக்கைக் கமல முகைதலைமேல்
கொண்டு கோயி லுட்புக்குக் குறிப்பில் அடங்காப் பேரன்ட
மண்டு காத லுறவணங்கி †வாய்த்த மதுர மொழிமாலை
பண்டங் கிசையில் " தம்மையே புகழ்ந்"தென் றெடுத்துப் பாடினார்.

"தம்மை யேபுகழ்ந் திச்சை பேசினுஞ் சார்வினுந் தொண்டர் தருகிலாப்
பொய்ம்மை யாளரைப் பாடாதே எந்தை புகலூர் பாடுமின் புலவீர்காள்
இம்மை யேதருஞ் சோறுங் கூறையும் ஏத்த லாம்இடர் கெடலுமாம்
அம்மை யேசிவ லோக மாள்வதற் கியாதும் ஐயுற வில்லையே."

—தேவாரம்.

பதிகம் பாடித் திருக்கடைக்காப் பணிந்து பரவிப் புறம்போந்தே
எதிரில் இன்பம் இம்மையே தருவார் அருள்பெற் றெழுந்தருளி
நிதியின் குவையும் உடன்கொண்டு நிறையும் நதியும் குறைமதியும்
பொதியுஞ் சடையார் திருப்பனையூர் புகுவார் புரிநூல் மணிமார்பர்.

செய்ய சடையார் திருப்பனையூர்ப் புறத்துத் திருக்கூத் தொடுங்காட்சி
எய்த அருள எதிர்சென் றங் கெழுந்த விருப்பால் விழுந்திறைஞ்சி
‡ஐயர் தம்மை "அரங்காட வல்லார் அவரே அழகியர்"என்
றுய்ய உலகு பெறும்பதிகம் பாடி அருள்பெற் றுடன்போந்தார். ருக

" மாட மாளிகை கோபுரத்தொடு மண்டபம் வளரும் வளர்பொழிற்
பாடல் வண்டறையும் பழனத் திருப்பனையூர்த்
தோடு பெய்தொரு காதினிற்குழை தூங்கத் தொண்டர்கள் துள்ளிப்பாடநின்
றாடு மாறுவல் லார்அவரே அழகியரே "—தேவாரம்.

வளமல் கியசீர்த் திருப்பனையூர் வாழ்வார் ஏத்த எழுந்தருளி
அளவில் செம்பொன் இட்டிகைகள் ஆள்மேல் நெருங்கி அணிஆரூர்த்
தளவ முறுவல் பரவையார் தம்மா ளிகையில் புகத்தாமும்
உளமன் னியதம் பெருமானார் தம்மை வணங்கி §உவந்தணைந்தார். ருச

வந்து பரவைப் பிராட்டியார் மகிழ வைகி மருவுநாள்
அந்தண் ஆரூர் மருங்கணிய கோயில் பலவும் அணைந்திறைஞ்சிச்
சிந்தை மகிழ விருப்பினொடுந் தெய்வப் பெருமாள் திருவாரூர்
முந்தி வணங்கி இனிதிருந்தார் முனைப்பா டியர்தங் காவலனார். ருரு

ருச. செம்பொன் இட்டிகைகள் - செம்பொன் கற்கள். தளவமுறுவல் - முல்லையரும்பொத்த பற்களையுடைய.

பா - ம்—*கல்லாயிடக், கனக மாக். †வாழ்த்து. ‡ஐயர் அரங்கி லாடுமா. §உவக் தணைவார்.

பலநாள் அமர்வார் பரமர்திரு வருளால் அங்கு நின்றும்போய்ச்
சிலைமா மேரு வீரனார் திருநன் னிலத்துச் சென்றெய்தி
வலமா வந்து கோயிலினுள் வணங்கி மகிழ்ந்து பாடினார்
தலமார் கின்ற "தண்ணியல்வெம் மையினான்" என்னுந் தமிழ்மாலை.

"தண்ணியல் வெம்மையினான் தலை யிற்கடை தோறும்பலி
பண்ணியன் மென்மொழி யார்இடக் கொண்டுழல் பண்டரங்கன்
புண்ணியன் நான்மறையோர் முறையாலடி போற்றிசைப்ப
நண்ணிய நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே"—தேவாரம்.

பாடி அங்கு வைகியபின் பரமர் வீழி மிழலையினில்
நீடு மறையால் மேம்பட்ட அந்த ணாளர் நிறைந்தீண்டி
நாடு மகிழ அவ்வளவு நடைக்கா வணம்பா வாடையுடன்
மாடு கதலி பூகநிரை மல்க மணித்தோ ரணம்நிரைத்து. ருஎ

வந்து நம்பி தம்மைஎதிர் கொண்டு புக்கார் மற்றவருஞ்
சிந்தை மலர்ந்து திருவீழி மிழலை இறைஞ்சிச் சேண்விசும்பின்
முந்தை இழிந்த மொய்யொளிசேர் கோயில் தன்னை முன்வணங்கிப்
பந்தம் அறுக்குந் தம்பெருமான் பாதம் பரவிப் பணிகின்றார். ருஅ

படங்கொள் அரவில் துயில்வோனும் பதுமத் தோனும் பரவரிய
விடங்கன் விண்ணோர் பெருமானை விரவும் புளக முடன்பரவி
"அடங்கல் வீழி கொண்டிருந்தீர் அடியே னுக்கும் அருளும்" எனத்
தடங்கொள் செஞ்சொற் றமிழ்மாலை சாத்தி அங்குச் சாருநாள். ருகூ

"விடங்கொள் மாமிடற்றீர் வெள்ளைச்சுருளொன் றிட்டுவிட்ட காதினீரென்று
திடங்கொள் சிந்தையினார் கலிகாக்குந் திருமிழலை
மடங்கல் பூண்ட விமானமும் மண்மிசை வந்திழிச்சிய வானநாட்டையும்
அடங்கல் வீழி கொண்டீர் அடியேற்கும் அருளுதிரே"—தேவாரம்.

வாசி யறிந்து காசளிக்க வல்ல மிழலை வாணர்பால்
தேசு மிக்க திருவருள்முன் பெற்றுத் திருவாஞ் சியத்தடிகள்

ருஎ. திருநாவுக்கரசு சுவாமிகள் புராணம்: உருச. குறிப்புப் பார்க்க. நடைக்காவணம் - நடைப்பந்தர். பூகம் - கமுகு. நிரைத்து - வரிசையாக எடுத்து.

ருஅ. திருநாவுக்கரசு சுவாமிகள் புராணம்: பாட்டு உருக. குறிப்புப் பார்க்க.

ருகூ. விடங்கன் - உளிபடாத கடவுள் (டங்கம் - உளி; வி - இன்மை).

சு௦. திருவீழிமிழலைப் பெருமான் திருநாவுக்கரசருக்கு வாசியின்றியும், திருஞான சம்பந்தருக்கு வாசியுடனும் காசு அளித்தது இங்கே குறிக்கப்பட்டுள்ளது. விரிவு அவரவர் புராணத்திற் பார்க்க.

பாச மறுத்தாட் கொள்ளுந்தாள் பணிந்து "பொருவனார்" என்னும்
நாசில் பதிகம் பாடிஅமர்ந் தரிசிற் கரைப்புத் தூரணைந்தார். ௬௦

"பொருவ னார்புரி நூலர் புணர்முலை உமையவ ளோடு
மருவ னார்மரு வார்பால் வருவதும் இல்லைநம் மடிகள்
திருவ னார்பணிந் தேத்துந் திகழ்திரு வாஞ்சியத் துறையும்
ஒருவ னார்அடி யாரை ஊழ்வினை நலியவொட் டாரே" —தேவாரம்.

செழுநீர் நறையூர் நிலவுதிருச் சித்தீச் சரமும் பணிந்தேத்தி
விழுநீர் மையினில் பெருந்தொண்டர் விருப்பி னோடும் எதிர்கொள்ள
மழுவே டிளமான் கரதலத்தில் உடையார் திருப்புத் தூர்வணங்கித்
தொழுநீர் மையினில் துதித்தேத்தித் தொண்டர் சூழ உறையுநாள்.

புனித னார்முன் புழ்த்துணையார்க் கருளுந் திறமும் போற்றிசைத்து
முனிவர் போற்ற எழுந்தருளி மூரி வெள்ளக் கங்கையினில்
பனிவெண் திங்கள் அணிசடையார் பதிகள் பலவும் பணிந்துபோந்
தினிய நினைவில் எய்தினார் இறைவர் திருவா வடுதுறையில். ௬௨

"அகத்தடி மைசெய்யும் அந்தணன்தான் அரிசிற் புனல்கொண் டுவந்
தாட்டு கின்றான், மிகத்தளர் வெய்திக் குடத்தையு நம்முடி மேல்விழுத்
திட்டு நடுங்குதலும், வருத்தவ னுக்குநித் தற்படியும் வருமென் றொரு
காசி னைநின்ற நன்றிப், புகழ்த்துணை கைபுகச் செய்துகந்தீர் பொழிலார்
திருப்புத் தூர்ப்புனி தனீரே"—தேவாரம்.

விளங்குந் திருவா வடுதுறையில் மேயார் கோயில் புடைவலங்கொண்
டுளங்கொண் டுருகும் அன்பினுடன் உள்புக் கிறைஞ்சி ஏத்துவார் [ன்
வளங்கொள் பதிகம் "மறையவன்" என் றெடுத்து வளவன் செங்கணா
களங்கொள் பிறப்புஞ் சிறப்பித்துத் தமிழ்ச்சொன் மாலை சாத்தினார்.

"மறைய வனொரு மாணிவந் தடைய வார மாய்அவன் ஆருயிர் நிறுத்தக்,
கறைகொள் வேலுடைக் காலனைக் காலாற் கடந்த காரணங் கண்டுகண்
டடியேன், இறைவ னெம்பெரு மானென்றெப் போதும் ஏத்தி ஏத்திநின்
றஞ்சலி செய்து, நறைகொள் சேவடிக் கன்பொடும் அடைந்தேன் ஆவடு
துறை ஆதிஎம் மானே"

---

௬௧. விழுநீர்மையினில் - வணங்கிய ஒப்புரவு வாய்ந்த. தொழு நீர்மையி
னில் - தொழும் இயல்பில்.

௬௨. மிக்க வெள்ளமுடைய கங்கையுடன்.

௬௩. வளவன் செங்கணான் தளங்கொள் - கோச்செங்கட்சோழ நாயனா
னுடைய மேன்மை பொருந்திய.

பா - ம்—*மழுநீ டிளமான் மறிகரத்தில்.

"தெருண்ட வாயிடை நூல்கொண்டு சிலந்தி சித்திரப் பந்தர் சிக்கென இயற்றச், சுருண்ட செஞ்சடை யாய்அது தன்னைச் சோழ னாக்கிய தொடர்ச்சிகண் டடியேன், புரண்டு வீழ்ந்துநின் பொன்மலர்ப் பாதம் போற்றி போற்றிஎன் றன்பொடு புலம்பி, அருண்டென் மேல்வினைக் கஞ்சிவந் தடைந்தேன் ஆவடுதுறை ஆதிஎம் மானே"—தேவாரம்.

சாத்தி அங்கு வைகுநாள் தயங்கும் அன்ப ருடன்கூடப்
போத்தும் இறைஞ்சி அருள்பெற்றுப் பெண்ணோர் பாகத் தண்ணலார்
தீர்த்தப் பொன்னித் தென்கரைமேல் திகழும் பதிகள் பலபணிந்து
மூர்த்தி யார்தம் இடைமருதை அடைந்தார் முனைப்பா டித்தலைவர்

மன்னு மருதின் அமர்ந்தவரை வணங்கி மதுரச் சொன்மலர்கள்
பன்னிப் புனைந்து பணிந்தேத்திப் பரவிப் போந்து தொண்டருடன்
அந்நற் பதியில் இருந்தகல்வார் அரனார் திருநா கேச்சரத்தை
முன்னிப் புக்கு வலங்கொண்டு முதல்வர் திருத்தாள் வணங்கினார்.

பெருகும் பதிகம் "பிறையணிவாள் நுதலாள்" பாடிப் பெயர்ந்துநிறை
திருவின் மலியுஞ் சிவபுரத்துத் தேவர் பெருமான் கழல்வணங்கி
உருகுஞ் சிந்தை யுடன்போந்தே உமையோர் பாகர் தாமகிழ்ந்து
மருவும் பதிகள் பிறபணிந்து கலைய நல்லூர் மருங்கணைந்தார். ௬௬

"பிறையணி வாணுதலாள் உமை யாளவள் பேழ்கணிக்க
நிறையணி நெஞ்சனுங்க நீல மால்விடம் உண்டதென்னே
குறையணி கொல்லை முல்லை யளைந் துகுளிர் மாதவிமேல்
சிறையணி வண்டுகள்சேர் திருநாகேச் சரத்தானே"—தேவாரம்.

செம்மை மறையோர் திருக்கலைய நல்லூர் இறைவர் சேவடிக்கீழ்
மும்மை வணக்கம் பெறஇறைஞ்சி முன்பு பரவித் தொழுதெழுவார்
கொம்மை மருவு "குரும்பைமுலை உமையாள்" என்னுந் திருப்பதிகம்
மெய்ம்மைப் புராணம் பலவுமிகச் சிறப்பித் திசையின் விளம்பினார்.

"குரும்பைமுலை மலர்க்குழலி கொண்டதவங் கண்டு குறிப்பினொடுஞ் சென்றவள்தன் குணத்தினைநன் கறிந்து, விரும்பும்வரங் கொடுத்தவளை வேட்டருளிச் செய்த விண்ணவர்கோன் கண்ணுதலோன் மேவியவூர் வினவில், அரும்பருகே சுரும்பருவ அறுபதம்பண் பாட அணிமயில்கள் நடமாடும் அணிபொழில்சூழ் அயலின், கரும்பருகே கருங்குவளை கண்வளருங் கழனிக் கமலங்கண் முகமலருங் கலையநல்லூர் காணே"—தேவாரம்.

---

௬௭. மும்மை - மனம் வாக்கு காயம். திருக்கலையநல்லூர்த் திருப்பதிகத்தில் புராணக் கதைகள் பல செறிந்து கிடத்தல் காண்க.

அங்கு நின்று திருக்குடமூக் கணைந்து பணிந்து பாடிப்போய்
மங்கை பாகர் வலஞ்சுழியை மருவிப் பெருகும் அன்புருகத்
தங்கு காத லுடன்வணங்கித் தமிழாற் பரசி அரசினுக்குத்
திங்கள் முடியார் அடியளித்த திருநல் லூரைச் சென்றணைந்தார். ௬௮

நல்லூர் இறைவர் கழல்போற்றி நவின்று நடுவு நம்பர்பதி
எல்லாம் இறைஞ்சி *ஏத்திப்போந் திசையாற் பரவுந் தம்முடைய
சொல்லூ தியமா அணிந்தவர்தஞ் சோற்றுத் துறையின் மருங்கெய்தி
அல்லூர் கண்டர் கோயிலினுள் அடைந்து வலங்கொண் டடிபணிவார். ௬௯

"அழல்நீர் ஒழுகி அனைய" எனும் அஞ்சொற் பதிகம் எடுத்தருளிக்
கழல்நீ டியஅன் பினிற்போற்றுங் காதல் கூரப் பரவியபின்
கெழுநீர் மையினில் அருள்பெற்றுப் போந்து பரவை யார்கேள்வர்
முழுநீ றணிவார் அமர்ந்தபதி பலவும் பணிந்து முன்னுவார். ௭௦

"அழல்நீர் ஒழுகி அனைய சடையும்
உழைநீர் உரியும் உடையா னிடமாங்
கழைநீர் முத்துங் கனகக் குவையுஞ்
சுழல்நீர்ப் பொன்னிச் சோற்றுத் துறையே"—தேவாரம்.

தேவர் பெருமான் †கண்டியூர் பணிந்து திருவை யாறதனை
மேவி வணங்கிப் பூந்துருத்தி விமலர் பாதந் தொழுதிறைஞ்சிச்
சேவில் வருவார் திருவாலம் பொழிலிற் சேர்ந்து தாழ்ந்திரவு
பாவு சயனத் தமர்ந்தருளிப் பள்ளி கொள்ளக் கனவின்கண். ௭௧

"மழபா டியினில் வருவதற்கு நினைக்க மறந்தா யோ" என்று
குழகா கியதங் கோலம்எதிர் காட்டி அருளக் குறித்துணர்ந்து
நிழலார் சோலைக் கரைப்பொன்னி வடபால் ஏறி நெடுமாடம்
அழகார் வீதி மழபாடி அணைந்தார் நம்பி ஆரூரர். ௭௨

அணைந்து திருக்கோ புரம்இறைஞ்சி அன்பர் சூழ உடன்புகுந்து
பணங்கொள் அரவம் அணிந்தார்முன் பணிந்து வீழ்ந்து பரங்கருணைக்

---

௬௮. குடமூக்கு - கும்பகோணம். "நினைந்தனைய திருவடிஎன் தலைமேல் வைத்தார் நல்லூரெம் பெருமானார்"—திருநாவுக்கரசர்.

௬௯. நவின்று - வாழ்த்தி. நடுவு - மத்தியிலுள்ள. ஊதியமா - இலாபமாக. அல்லூர்கண்டர் - நீலகண்டராகிய சிவபிரான் எழுந்தருளியுள்ள.

௭௦. கெழுநீர்மையினில் - பொருந்திய தன்மையால்.

௭௧. சேவில் - இடபத்தில். பாவு - விரிந்த. ௭௨. குழகு - இளமை.

*பா - ம்—*ஏத்திப்போய் இசையால். †திருப்பழனத் திருவை யாறு செய்த்தானம்.

குணங்கொள் அருளின் திறம்போற்றிக் கொண்ட புளகத் துடனுருகிப்
புணர்ந்த இசையால் திருப்பதிகம் "பொன்னார் மேனி" என்றெடுத்து.
"அன்னே உன்னை அல்லால்யான் ஆரை நினைக்கேன்" எனஏத்தித்
தன்னே ரில்லாப் பதிகமலர் சாத்தித் தொழுது புறம்பணைந்து
மன்னும் பதியில் சிலநாள்கள் வைகித் தொண்ட ருடன்மகிழ்ந்து
பொன்னிக் கரையின் இருமருங்கும் பணிந்து மேல்பாற் போதுவார்.

"பொன்னார் மேனியனே புலித் தோலை அரைக்கசைத்து
மின்னார் செஞ்சடைமேல் மிளிர் கொன்றை அணிந்தவனே
மன்னே மாமணியே மழ பாடியுள் மாணிக்கமே
அன்னே உன்னை யல்லால் இனியாரை நினைக்கேனே"—தேவாரம்.

செய்ய சடையார் திருவானைக் காவில் அணைந்து திருத்தொண்டர்
எய்த முன்வந் தெதிர்கொள்ள இறைஞ்சிக் கோயி லுட்புகுந்தே
ஐயர் கமலச் சேவடிக்கீழ் ஆர்வம் பெருக விழுந்தெழுந்து
மெய்யு முகிழ்ப்பக் கண்பொழிநீர் வெள்ளம் பரப்ப விம்முவார். எகு

"மறைக ளாய நான்கும்" என மலர்ந்த செஞ்சொற் றமிழ்ப்பதிகம்
நிறையுங் காத லுடன்எடுத்து நிலவும் அன்பர் தமைநோக்கி
"இறையும் பணிவார் எம்மையும்ஆ ளுடையார்" என்றென் றேத்துவார்
உறையூர்ச் சோழன் மணியாரம் சாத்துந் திறத்தை உணர்ந்தருளி.

"மறைக ளாயின நான்கும் மற்றுள பொருள்களும் எல்லாந்
துறையுந் தோத்திரத் திறையுந் தொன்மையும் நன்மையு மாய
அறையும் பூம்புன லானைக் காவுடை ஆதியை நாளும்
இறைவ னென்றடி சேர்வார் எம்மையும் ஆளுடை யாரே"—தேவாரம்.

வளவர் பெருமான் மணியாரம் சாத்திக் கொண்டு வரும்பொன்னிக்
கிளருந் திரைநீர் மூழ்குதலும் வழுவிப் போகக் கேதமுற
அளவில் திருமஞ் சனக்குடத்துள் அதுபுக் காட்ட அணிந்தருளித்
தளரும் அவனுக் கருள்புரிந்த தன்மை சிறக்கச் சாற்றினார். எஎ

"தார மாகிய பொன்னித் தண்டுறை யாடி விழுத்தும்
நீரி னின்றடி போற்றி நின்மலா கொள்ளென ஆங்கே

எகு. பணம் - படம். எசு. இறையும் - க்ஷணநேரமாவது.

எஎ. பொன்னிக் கிளருந் திரைநீர் - காவிரியினின்றெழும் அலைநீரில். கேதம் - வருத்தம். ஆரம் திருமஞ்சனக் குடத்தில் புகுந்துகொண்டது. இறைவனுக்கு நீராட்டியபோது ஆரத்தை இறைவன் அணிதல் நேர்ந்ததென்க.

பா - ம்—*திருவாரம்.

ஆரங் கொண்டஎம் மானைக் காவுடை யாதியை நாளும்
ஈர முள்ளவர் நாளும் எம்மையு மாளுடை யாரே"—தேவாரம்.

சாற்றி அங்குத் தங்குநாள் தயங்கும் பவளத் திருமேனி
நீற்றர் கோயில் எம்மருங்குஞ் சென்று தாழ்ந்து நிறைவிருப்பால்
போற்றி அங்கு நின்றும்போய்ப் பொருவில் அன்பர் மருவியதொண்
டாற்றும் பெருமைத் திருப்பாச்சி லாச்சி ராமஞ் சென்றடைந்தார்.

சென்று திருக்கோ புரம்இறைஞ்சித் தேவர் மலிந்த திருந்துமணி
முன்றில் வலங்கொண் டுள்ளணைந்து முதல்வர் முன்னம் வீழ்ந்திறைஞ்சி
நன்று பெருகும் பொருட்காதல் நயப்புப் பெருக நாதரெதிர்
நின்று பரவி நினைந்தபொருள் அருளா தொழிய நேர்நின்று. எகூ

அன்பு நீங்கா அச்சமுடன் அடுத்த திருத்தோ ழமைப்பணியால்
பொன்பெ றாத திருவுள்ளம் புழுங்க அழுங்கிப் புறம்பொருபால்
முன்பு நின்ற திருத்தொண்டர் முகப்பே முறைப்பா டுடையார்போல்
என்பு கரைந்து "பிரானார்மற் றிலையோ" என்ன எடுக்கின்றார். அ0

வேறு

நித்தமும் நீங்கா நிலைமையின் நீங்கி நிலத்திடைப் புலங்கெழும் பிறப்பால், உய்த்தகா ரணத்தை உணர்ந்துகொாந் தடிமை ஒருமையாம் எழுமையும் உணர்த்தி, "எத்தனை அருளா தொழியினும் பிரானார் இவரலா தில்லையோ" என்பார், "வைத்தனன் தனக்கே தலையும்என் நாவும்" எனவழுத் தினர்வழித் தொண்டர். அக

"வைத்தனன் தனக்கே தலையும்என் நாவும் நெஞ்சமும் வஞ்சமொன் றின்றி
உய்த்தனன் தனக்கே திருவடிக் கடிமை உரைத்தக்கால் உவமனே யொக்கும்
பைத்தபாம் பார்த்தோர் கோவணத் தோடு பாச்சிலாச் சிராமத்தெம் பரமர்
பித்தரே யொத்தோர் நச்சில ராகில் இவரலா தில்லையோ பிரானார்"—தேவாரம்.

இவ்வகை பரவித் திருக்கடைக் காப்பும் "ஏசின வல்ல" என்றிசைப்ப, மெய்வகை விரும்பு தம்பெரு மானார் விழுநிதிக் குவை அளித் தருள, மைவளர் கண்டர் கருணையே பரவி வணங்கிஅப் பதி

எகூ. நன்று...பெருக - பெரிதும் வளரும் பொருள் வேட்கை அதிகம்எழ.

அ0. தோழமை - தடுத்தாட்கொண்ட புராணம் பாட்டு - கஉஎ. குறிப்புப் பார்க்க. முகப்பே - முன்னே.

அக. வன்தொண்டர் தமது பழைய நிலையை உணர்ந்து வருந்துகிறார். "நித்தமும் நீங்கா நிலைமையினின்றும் நீங்கி...புலன்கள் பொருந்திய மானுடப் பிறப்பில் விடுத்த...எழு பிறவியிலும் உணர்த்திச் சிறிதும் அருளா தொழியினும்..."

யிடை வைகி, எவ்வகை மருங்கும் இறைவர்தம் பதிகள் இறைஞ்சி
அங் கிருந்தனர் சிலநாள். அஉ

"ஏசின வல்ல இகழ்ந்தன வல்ல எம்பெரு மானென்றெப் போதும்
பாயின புகழான் பாச்சிலாச் சிராமத் தடிகளை அடிதொழப் பன்னாள்
வாயினாற் கூறி மனத்தினால் நினைவான் வளவய லாவலா ரூரன்
பேசின பேச்சைப் பொறுத்தி லராகில் இவரலா தில்லையோ பிரானார்"
—தேவாரம்

அப்பதி நீங்கி அருளினாற் போகி ஆவின்அஞ் சாடுவார் நீடும்
எப்பெயர்ப் பதியும் இருமருங் கிறைஞ்சி இறைவர்பைஞ் ஞீலியை
எய்திப், பைப்பணி அணிவார் கோபுரம் இறைஞ்சிப் பாங்கமர் புடை
வலங் கொண்டு, துப்புறழ் வேணி யார்கழல் தொழுவார் தோன்றுகங்
காளரைக் கண்டார். அங

கண்டவர் கண்கள் காதல்நீர் வெள்ளம் பொழிதரக் கைகுவித்
திறைஞ்சி, வண்டறை குழலார் மனங்கவர் பலிக்கு வருந்திரு வடிவு
கண் டவர்கள், கொண்டதோர் மயலால் வினவுகூற் றாகக் குலவு
சொற் "காருலா விய" என், றண்டர்நா யகரைப் பரவி "ஆ ரணிய
விடங்கராம்" அருந்தமிழ் புனைந்தார். அச

"காரு லாவிய நஞ்சை உண்டிருள் கண்டர் வெண்டலை யோடுகொண்
டேரெ லாந்திரிந் தென்செய் வீர்பலி யோரி டத்திலே கொள்ளுநீர்
பாரெ லாம்பணிந் தும்மை யேபர விப்பணி யும்பைஞ் ஞீலியீர்
ஆர மாவது நாக மோசொலும் ஆர ணீய விடங்கரே"—தேவாரம்.

பரவிஅப் பதிகத் திருக்கடைக் காப்புச் சாத்திமுன் பணிந்தருள்
பெற்றுக், கரவில்அன் பர்கள்தங் கூட்டமுந் தொழுது கலந்தினி
திருந்துபோந் தருளி, விரவிய ஈங்கோய் மலைமுத லாக விமலர்தம்
பதிபல வணங்கிக், குரவலர் சோலை அணிதிருப் பாண்டிக் கொடுமுடி
அணைந்தனர் கொங்கில். அரு

அஉ. சீரிய நிதிக் குவை.

அங. பைப்பணி - படமுடைய பாம்பினை. துப்பு உறழ் வேணியார் - பவளம் போலும் சடையையுடைய சிவபெருமானது. கங்காளரை - என்பணிந்த மூர்த்தியை.

அச. கண்டவர் - சுந்தரமூர்த்திகளின். குழலார் - தாருகா வனத்துப் பெண்கள். பலிக்கு - பிச்சைக்கு. வினவுரையாக.

அரு. குரவு அலர் - குரா மலர். கொங்கில் - கொங்கு நாட்டிலுள்ள.

கொங்கினிற் பொன்னித் தென்கரைக் கறையூர்க் கொடுமுடிக் கோயில்முன் குறுகிச், சங்கவெண் குழையர் உழைவலஞ் செய்து சார்ந்தடி அன்பினில் தாழ்ந்து, பொங்கிய வேட்கை பெருகிடத் தொழுது புனிதர்பொன் மேனியை நோக்கி, "இங்கிவர் தம்மை மறக்கவொண் ணா"தென் றெழுந்தமெய்க் குறிப்பினில் எடுப்ப. அசு

"அண்ணலார் அடிகள் மறக்கினும் நாம அஞ்செழுத் தறியஎப் பொழுதும், எண்ணிய நாவே இன்சுவை பெருக இடையறா தியம்பும்" என் றிதனைத், திண்ணிய உணர்விற் கொள்பவர் "மற்றுப் பற்றி லேன்" எனச்செழுந் தமிழால், நண்ணிய அன்பில் பிணிப்புற நவின்றார் நமச்சிவா யத்திருப் பதிகம். அஎ

" மற்றுப் பற்றெனக் கின்றி நின்திருப் பாத மேமனம் பாவித்தேன்
பெற்ற லும்பிறந் தேன்இ னிப்பிற வாத தன்மைவந் தெய்தினேன்
கற்ற வர்தொழு தேத்துஞ் சீர்க்கறை யூரிற் பாண்டிக் கொடுமுடி
நற்ற வாஉனை நான்ம றக்கினுஞ் சொல்லுநா நமச்சி வாயவே "

—தேவாரம்.

உலகெலாம் உய்ய உறுதியாம் பதிகம் உரைத்துமெய் உணர்வறா ஒருமை, நிலவிய சிந்தை யுடன்திரு வருளால் நீங்குவார் பாங்குநற் பதிகள், பலவுமுன் பணிந்து பரமர்தாள் போற்றிப் போந்துதண் பனிமலர்ப் படப்பைக், குலவும்*அக் கொங்கிற் காஞ்சிவாய்ப் பேரூர் குறுகினார் முறுகும்ஆ தரவால். அஅ

அத்திருப் பதியை அணைந்துமுன் தம்மை ஆண்டவர் கோயிலுட் புகுந்து, மெய்த்தவர் சூழ †வலங்கொண்டு முன்பு மேவுவார் தம்மெதிர் விளங்க, நித்தனார் தில்லை மன்றுள்நின் றாடல் நீடிய கோலம்நேர் காட்டக், கைத்தலங் குவித்துக் கண்கள்ஆ னந்தக் கலுழிநீர் பொழிதரக் கண்டார். அகூ

காண்டலுந் தொழுது வீழ்ந்துடன் எழுந்து கரையில்அன் பென்பினை உருக்கப், பூண்டஐம் புலனில் புலப்படா இன்பம் புணர்ந்து

அசு. சங்க வெண் குழையர் உழை - சிவபிரான் இடத்தை (திருக்கோயிலை).

அஅ. படப்பை குலவும் - சோலைகள் சூழ்ந்த. காஞ்சிவாய் - காஞ்சி நதிக்கரையிலுள்ள. பேரூர் - மேலைச் சிதம்பரம். முறுகும் ஆதரவால் - முறுகி எழும் வேட்கையால்.

அகூ. கலுழி - வெள்ளம் ; பெருக்கு.

பா - ம்—*இக். †வலங்கொடு திருமுன்.

மெய் யுணர்வினில் பொங்கத், தாண்டவம் புரியுந் தம்பிரா னுரை,
தலைப்படக் கிடைத்தபின் சைவ, ஆண்டகை யாருக் கடுத்தஅ
நிலைமை விளைவையார் அளவறிந் துரைப்பார். கூ0

அந்நிலை நிகழ்ந்த ஆரருள் பெற்ற அன்பனூர் இன்பவெள் ளத்து,
மன்னிய பாடல் மகிழ்ந்துடன் பரவி வளம்பதி அதனிடை மருவிப்,
"பொன்மணி மன்றுள் எடுத்தசே வடியார் புரிநடங் கும்பிடப் பெற்
றால், என்இனிப் புறம்போய் எய்துவ" தென்று மீண்டெழுந் தருளு
தற் கெழுவார். கூக

ஆயிடை நீங்கி அருளினாற் செல்வார் அருவரைச் சுரங்களும்
பிறவும், பாயுநீர் நதியும் பலபல கடந்து பரமர்தம் பதிபல பணிந்து,
மேயவண் தமிழால் விருப்பொடும் பரவி வெஞ்சமாக் கூடலும்
பணிந்து, சேயிடை கழியப் போந்தவந் தடைந்தார் தென்திசைக்
கற்குடி மலையில். கூஉ

வேறு

வீடு தரும்*இக் கற்குடியில் விழுமி யாரைப் பணிந்திறைஞ்சி
நீடு விருப்பில் திருப்பதிகம் நிறைந்த சிந்தை யுடன்பாடிப்
பாடும் விருப்பில் தொண்டருடன் பதிகள் பலவும் அணைந்திறைஞ்சித்
தேடும் இருவர் காண்பரியார் திருவா றைமேற் றளிசென்றார். கூங

செம்பொன் மேருச் சிலைவளைத்த சிவனார் ஆறை மேற்றளியில்
நம்பர் பாதம் பணிந்திறைஞ்சி நாளும் மகிழ்வார்க் கருள்கூட
உம்பர் போற்றுந் தானங்கள் பலவும் பணிந்து போந்தணைவார்
இம்பர் †வாழ இன்னம்பர் நகரைச் சேர எய்தினார். கூச

ஏரின் மருவும் இன்னம்பர் மகிழ்ந்த ஈசர் கழல்வணங்கி
ஆரும் அன்பிற் பணிந்தேத்தி ஆரா அருளால் அங்கமர்வார்
போரின் மலியுங் கரியுரித்தார் மருவும் புறம்ப யம்போற்றச்
சேரும் உள்ளம் மிக்கெழமெய்ப் பதிகம் பாடிச் செல்கின்றார். கூரு

---

கூ0. புலன் கடந்த இன்பம் மெய்யின்ப மென்பது. தலைப்பட - கூட;
சேர. தடுத்தாட்கொண்ட புராணம் : க0கூ, க0எ. பார்க்க.

கூஉ. ஆயிடை - அத்திருப் பதியினின்றும். வரைச் சுரங்களும் - மலை
வழிகளையும். சேயிடை கழிய - நெடுந்தூரங் கடந்து.

கூங. விழுமியாரை - சிவபெருமானை. கூச. இம்பர் - இவ்வுலகோர்.

கூரு. ஏரின் மருவும் - அழகாற் பொலியும். ஆரும் - நிறைந்த. ஆரா -
தெவிட்டாத.

பா - ம்—*அக். †வாழும்.

வேறு

'அங்கம் ஓதியோர் ஆறை மேற்றளி" என்றெ டுத்தமர் காதலில்
பொங்கு செந்தமி ழால்வி ரும்பு "புறம்ப யந்தொழப் போதும்" என்
றெங்கும் மன்னிய இன்னி சைப்பதி கம்பு னைந்துடன் எய்தினார்
திங்கள் சூடிய செல்வர் மேவு திருப்பு றம்பயஞ் சேரவே. கசு

" அங்க மோதியோர் ஆறை மேற்றளி நின்றும் போந்துவந் தின்னம்பர்த்
தங்கி னேமையும் இன்ன தென்றிலர் ஈச னார்எழு நெஞ்சமே
கங்கு லேமங்கள் கொண்டு தேவர்கள் ஏத்தி வானவர் தாந்தொழும்
பொங்கு மால்விடை ஏறிச் செல்வப் புறம்ப யந்தொழப் போதுமே"

—தேவாரம்.

அப்ப திக்கண் அமர்ந்த தொண்டரும் "அன்று வெண்ணெய்நல் லூரினில்
ஒப்ப ருந்தனி வேதி யன்பழ ஓலை காட்டிநின் றாண்டவர்
இப்ப திக்கண்வந் தெய்த என்ன *தவங்கள்" என்றெதிர் கொள்ளவே
முப்பு ரங்கள் எரித்த சேவகர் கோயில் வாயிலின் முன்னினார். கஎ

நீடு கோபுர முன்பி றைஞ்சி நிலாவு †தொண்டரொ டுள்ளணைந்
தாடல் மேவிய அண்ண லாரடி போற்றி அஞ்சலி கோலிநின்
றேடு லாமலர் தூவி எட்டினொ டைந்து மாகும் உறுப்பினால்
பீடு நீடு நிலத்தின் மேற்பெரு கப்ப ணிந்து வணங்கினார். கஅ

அங்கு நீடருள் பெற்றுள் ஆர்வம் மிகப்பொ ழிந்தெழும் அன்பினால்
பொங்கு நாண்மலர்ப் பாத முன்பணிந் தேத்தி மீண்டு புறத்தணைந்
தெங்கு மாகி நிறைந்து நின்றவர் தாம்ம கிழ்ந்தஇ டங்களில்
தங்கு கோலம் இறைஞ்சு வார்அருள் தாவில் அன்பரோ டெய்தினார். கக

வேறு

வம்புநீ டலங்கல் மார்பின் வன்றொண்டர் வன்னி கொன்றை
தும்பைவெள் ளடம்பு திங்கள் தூயநீ ரணிந்த சென்னித்
தம்பிரான் அமர்ந்த தானம் பலபல சார்ந்து தாழ்ந்து
கொம்பனார் ஆடல் நீடு கூடலை யாற்றூர் சார. ௪00

கஎ. ...ஆண்டவர் - சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

கஅ. அஷ்டாங்க பஞ்சாங்க நமஸ்காரஞ் செய்து.

கக. தாவில் - அழியாத.

௪00. மணங் கமழும் மாலையணிந்த மார்பினையுடைய.

பா - ம்—*தவஞ்செய் தோம்என எதிர்கொள. †தொண்ட ருடன்பணிந்.

செப்பரும் பதியில் சேரார் திருமுது குன்றை நோக்கி
ஒப்பரும் புகழார் செல்லும் ஒருவழி உமையா ளோடு
மெய்ப்பரம் பொருளாய் உள்ளார் வேதிய ராகி நின்றார்
முப்புரி நூலுந் தாங்கி நம்பியா ரூரர் முன்பு. க௦க

நின்றவர் தம்மை நோக்கி நெகிழ்ந்தசிந் தையராய்த் தாழ்வார்
"இன்றியாம் முதுகுன் றெய்த வழிஎமக் கியம்பும்" என்னக்
குன்றவில் லாளி யாரும் "கூடலை யாற்றூர் ஏறச்
சென்றதிவ் வழிதான்" என்று செல்வழித் துணையாய்ச் செல்ல. க௦உ

கண்டவர் கைகள் கூப்பித் தொழுதுபின் தொடர்வார்க் காணார்
வண்டலர் கொன்றை யாரை "வடிவுடை மழு"என் றேத்தி
"அண்டர்தம் பெருமான் போந்த அதிசயம் அறியேன்" என்று
கொண்டெழும் விருப்பி னோடுங் கூடலை யாற்றூர் புக்கார். க௦௩

"வடிவுடை மழுவேந்தி மதகரி யுரிபோர்த்துப்
பொடியணி திருமேனிப் புரிகுழ லுமையோடும்
கொடியணி நெடுமாடக் கூடலை யாற்றூரில்
அடிகள்இவ் வழிபோந்த அதிசயம் அறியேனே"—தேவாரம்.

கூடலை யாற்றூர் மேவுங் கொன்றைவார் சடையி னார்தம்
பீடுயர் கோயில் புக்குப் பெருகிய ஆர்வம் பொங்க
ஆடகப் பொதுவில் ஆடும் அறைகழல் வணங்கிப் போற்றி
நீடருள் பெற்றுப் போந்து திருமுது குன்றில் நேர்ந்தார். க௦௪

*தடநிலைக் கோபு ரத்தைத் தாழ்ந்துமுன் இறைஞ்சிக் கோயில்
புடைவலங் கொண்டு புக்குப் போற்றினர் தொழுது வீழ்ந்து
நடநவில் வாரை "நஞ்சி யிடை"எனுஞ் செஞ்சொன் மாலைத்
தொடைநிகழ் பதிகம் பாடித் தொழுதுகை சுமந்து நின்று. க௦௫

"நஞ்சியிடை இன்று நாளை என்றும்மை நச்சுவார்
துஞ்சியிட்டால் பின்னைச் செய்வ தென்னடி கேள்சொலீர்
பஞ்சியிடப் புட்டில் கீறு மோபணி யீர்அருள்
முஞ்சியிடைச் சங்க மார்க்குஞ் சீர்முது குன்றரே"—தேவாரம்.

நாதர்பால் பொருள்தாம் வேண்டி நண்ணிய வண்ணம் எல்லாம்
கோதறு மனத்துட் கொண்ட குறிப்பொடும் பரவும் போது

---

க௦௩. கண்டவர் - வன்தொண்டர். தொடர்வாரைக் காணாதவராய்.
க௦௪. ஆடகப் பொதுவில் - பொன்னம்பலத்தில்.
க௦௫. தடம் நிலை - பெரிய நிலைகளையுடைய.

பா - ம்—*தடவரைக்.

தாரவிழ் கொன்றை வேய்ந்தார் தாஅருள் பெறுவார் சைவ
வேதியர் தலைவர் மீண்டும் "மெய்யில்வெண் பொடி"யும் பாட. ௧௦௬

"மெய்யை முற்றப்பொடி பூசியோர் நம்பி வேதநான் கும்விரித் தோதி யோர் நம்பி, கையிலோர் வெண்மழு வேந்தியோர் நம்பி கண்ணு மூன் றும்உடை யாயொரு நம்பி, செய்ய நம்பிசிறு செஞ்சடை நம்பி திரிபுரந் தீஎழச் செற்றதோர் வில்லால், எய்த நம்பிஎன்னை யாளுடை நம்பி எழுபிறப் பும்எங்கள் நம்பிகண் டாயே"—தேவாரம்.

பனிமதிச் சடையார் தாமும் பன்னிரண் டாயி ரம்பொன்
நனியருள் கொடுக்கும் ஆற்றால் நல்கிட உடைய நம்பி
தனிவரு மகிழ்ச்சி பொங்கத் தாழ்ந்தெழுந் தருகு சென்று
கனிவிட மிடற்றி னார்முன் பின்னொன்று கழற லுற்றார். ௧௦௭

"அருளும்இக் கனக மெல்லாம் அடியனேற் காரூர் உள்ளோர்
மருளுற வியப்ப அங்கே வரப்பெற வேண்டும்" என்னத்
தெருளுற எழுந்த வாக்கால் "செழுமணி முத்தாற் றிட்டிப்
பொருளினை முழுதும் ஆரூர்க் குளத்திற்போய்க் கொள்க" என்றார்.

என்றுதம் பிரானார் நல்கும் இன்னருள் பெற்ற பின்னர்
வன்தொண்டர் மச்சம் வெட்டிக் கைக்கொண்டு மணிமுத் தாற்றில்
பொன்திரள் எடுத்து நீருள் புகவிட்டுப் போது கின்றார்
"அன்றெனை வலிந்தாட் கொண்ட அருள்இதில் அறிவேன்" என்று.

மேவிய காதல் தொண்டு விரவுமெய் விருத்தி பெற்றார்
"ஆவியின் விருத்தி யான அந்தணர் புலியூர் மன்றில்
காவியங் கண்டர் கூத்துக் கண்டு*கும் பிடுவ" தென்று
வாவிசூழ் தில்லை மூதூர் வழிக்கொள்வான் வணங்கிப் போந்தார்.

---

௧௦௭. நனி...நல்கிட - மிகவும் அருள் செய்யும் வழியால் கொடுக்க. தனி வரும் - ஒப்பற்று எழும். கனி விட மிடற்றினார் - கொடுமை முதிர்ந்த விடந் தங்கிய கண்டத்தை யுடைய சிவபெருமான்; கனி விடம் - களங் கனிபோன்ற கரிய விடம் என்னலுமாம்.

௧௦௮. அடிகள் அருளிய இப் பொன்னெல்லாம்......மயங்கி வியக்க...... (சிவபெருமான்) தெளிவுற எழுந்த தமது திருவாக்கால்......மணி முத்தா நதியில் இட்டு......என்றார்.

௧௦௯. மச்சம் - மாற்று நிலை அறிய வெட்டி எடுத்து வைத்திருக்கும் மச்சப்பொன்.

௧௧௦. பொருந்திய காதல் தொண்டு கலந்த மெய் விருத்தி பெற்றவராகிய நம்பியாரூரர்;மெய்விருத்தியை மெய்ம்மையான சித்தவிருத்தி என்பர் ஆறுமுகத்

பா - ம்—*கும்பிடுவனென்று.

மாடுள பதிகள் சென்று வணங்கிப்போய் மங்கை பாகர்
நீடிய கடம்பூர் போற்றி நிறைந்தஆ னந்தக் கூத்தர்
ஆடிய தில்லை மூதூர் அணைந்தணி வாயில் புக்குச்
சேடியர் மாடம் மன்னுஞ் செழுந்திரு வீதி சார்ந்தார். ககக

பொற்றிரு வீதி தாழ்ந்து புண்ணிய விளைவாய் ஓங்கும்
நற்றிரு வாயில் நண்ணி *நறைமலி அலங்கல் மார்பர்
மற்றதன் முன்பு மண்மேல் வணங்கிஉட் புகுந்து பைம்பொற்
சுற்றுமா ளிகைசூழ் வந்து தொழுதுகை தலைமேற் கொள்வார். ககஉ

ஆடிய திருமுன் பான †அம்பொனின் கோபு ரத்தின்
ஊடுபுக் கிறைஞ்சி ஓங்கும் ஒளிவளர் கனக மன்றில்
நாடகச் செய்ய தாளை நண்ணுற உள்நி றைந்து
நீடும்ஆ னந்த வெள்ளக் கண்கள்நீர் நிரந்து பாய. ககங

பரவுவாய் குளறிக் காதல் படிதிருப் படியைத் தாழ்ந்து
விரவுமெய் அங்கம் ஐந்தும் எட்டினும் வணங்கி வேட்கை
‡உரனுறு திருக்கூத் துள்ளம் ஆர்தரப் பெருகி நெஞ்சில்
கரவிலா தவரைக் கண்ட நிறைவுதங் கருத்திற் கொள்ள. ககச

வேறு

"மடித்தாடும் §அடிமைக்கண்" என்றெடுத்து மன்னுயிர்கட் கருளும் ஆற்றால், அடுத்தாற்று நன்னெறிக்கண் ¶நின்றார்கள் வழுவி நர கணையா வண்ணம், தடுப்பானைப் பேருரிற் கண்டநிலை சிறப்பித் துத் தனிக்கூத் தென்றும், நடிப்பானை நாம்மனமே பெற்றவா றெனுங் களிப்பால் நயந்து பாடி. ககரு

"மடித்தாடும் அடிமைக்கண் அன்றியே மனனேநீ வாழு நாளும்
தடுத்தாட்டித் தருமனார் தமர்செக்கி லிடும்போது தடுத்தாட் கொள்வான்

தம்பிரானார் ; உடம்பு விருத்தி என்பர் பழைய குறிப்புரையாசிரியர். (உடம்பு விருத்திக்காகப் பொன்னையும்பெற்ற வன்தொண்டரானவர் ஆன்மவிருத்தி யான தில்லைவாழ் அந்தணர்களிருக்கின்ற சிதம்பரத்துள்ள கனக சபையில்—பழைய குறிப்புரை). காவியங் கண்டர்-நீல மலர்போன்ற கண்டத்தையுடைய சிவபெருமானது.

ககஉ. மணம் நிறைந்த மாலையணிந்த மார்பர். ககங. நிரந்து - பரவி.

ககச. காதல் படிந்த. ஞானமயமான திருக்கூத்தானது உள்ளம் நிறைய.

ககரு. .........நின்றார்கள் ஒரு வேளை வழுவினாலும் அவர்கள் நரகு அணையா வண்ணம்.

பா - ம்—*நலமலி. †அம்பொனின். ‡அரனுற. §அடிமைக்கள். ¶நின்றுனும் விழுவினர்கள் அணையா.

கடுத்தாடுங் காதலத்தில் தமருகமும் எரியகலுங் கரிய பாம்பும்
பிடித்தாடி புலியூர்ச்சிற் றம்பலத்தெம் பெருமானைப் பெற்றா மன்றே"
—தேவாரம்.

மீளாத அருள்பெற்றுப் புறம்போந்து திருவீதி மேவித் தாழ்ந்தே
ஆளான வன்றொண்டர் அந்தணர்கள் தாம்போற்ற அமர்ந்து வைகி
மாளாத பேரன்பாற் பொற்பதியை வணங்கிப்போய் மறலி வீழத்
தாளாண்மை கொண்டவர்தங் கருப்பறிய லூர்வணங்கிச் சென்று சார்ந்தார்.

வேறு

கூற்றுதைத்தார் திருக்கொகுடிக் கோயில் நண்ணிக் கோபுரத்
தைத் தொழுதுபுகுந் தன்பர் சூழ, ஏற்றபெருங் காதலினால் இறைஞ்சி
ஏத்தி எல்லையிலாப் பெருமகிழ்ச்சி மனத்தில் எய்தப், போற்றிசைத்
துப் புறத்தணைந்தப் பதியில் வைகிப் புனிதரவர் தமைநினையும் இன்
பங் கூறிச், சாற்றியமெய்த் திருப்பதிகம் "சிம்மாந்" தென்னும்
தமிழ்மாலை புனைந்தங்குச் சாரு நாளில். கக௭

"சிம்மாந்து சிம்புளித்துச் சிந்தையினில் வைத்துகந்து திறம்பா வண்ணம்
கைம்மாவின் உரிவைபோர்த் துமைவெருவக் கண்டானைக் கருப்ப றியலூர்க்
கொய்ம்மாவின் மலர்ச்சோலைக் குயில்பாட மயிலாடுங் கொகுடிக் கோயில்
எம்மானை மனத்தினால் நினைந்தபோ தவர்நமக் கினிய வாறே"—தேவாரம்.

கண்ணுதலார் விரும்புகருப் பறிய லூரைக் கைதொழுது நீங்கிப்
போய்க் கயல்கள் பாயும், மண்ணிவளம் படிக்கரையை நண்ணி அங்கு
மாதொருபா கத்தவர்தாள் வணங்கிப் போற்றி, எண்ணில்புகழ்ப் பதி
கமும்"முன் னவன்"என் றேத்தி ஏகுவார் வாழ்கொளிபுத் தூர்எய்
தாது, புண்ணியனார் போம்பொழுது நினைந்து மீண்டு புகுகின்றார்
"தலைக்கலன்"என் றெடுத்துப் போற்றி. கக௮

"முன்னவன் எங்கள்பிரான் முதல்காண்பரி தாயபிரான்
சென்னியில் எங்கள்பிரான் திருநீலமிடற் றெம்பிரான்
மன்னிய எங்கள்பிரான் மறைநான்குங்கல் லால்நிழற்கீழ்ப்
பன்னிய எங்கள்பிரான் பழமண்ணிப் படிக்கரையே"—தேவாரம்.

"தலைக்க லன்தலை மேல்தரித் தானைத் தன்னைஎன் னைநினைக் கத்
தரு வானைக், கொலைக்கை யானையுரி போர்த்துகந் தானைக் கூற்று தைத்த
குரை சேர்கழ லானை, அலைத்தசெங் கண்விடை ஏறவல் லானை ஆணை

யால்அடி யேன்அடி நாயேன், மலைத்தசெங் நெல்வயல் வாழ்கொளி புத் தூர் மாணிக்கத் தைமறந் தென்னினைக் கேனே"—தேவாரம்.

திருப்பதிகம் பாடியே சென்றங் கெய்தித் தேவர்பெரு மானார் தங் கோயில் வாயில், உருப்பொலியும் மயிர்ப்புளகம் விரவத் தாழ்ந்தே உள்ளணைந்து பணிந்தேத்தி உருகும் அன்பால், பொருப்பரையன் மடப்பாவை இடப்பா லானைப் போற்றிசைத்துப் புறம்போந்து தங்கிப் பூமென், கருப்புவயல் வாழ்கொளிபுத் தூரை நீங்கிக் கானாட்டு முள் ளூரிற் கலந்த போது. கககூ

கானாட்டு முள்ளூரைச் சாரும் போது கண்ணுதலார் எதிர் காட்சி கொடுப்பக் கண்டு, "தூநாண்மென் மலர்க்கொன்றைச் சடை யார் செய்ய துணைப்பாத மலர்கண்டு தொழுதேன்" என்று, வானா ளுந் திருப்பதிகம் "வள்வாய்" என்னும் வண்தமிழின் தொடைமாலை மலரச் சாத்தித், தேனாரும் மலர்ச்சோலை மருங்கு சூழ்ந்த திருஎதிர் கொள் பாடியினை எய்தச் செல்வார். கஉ0

"வள்வாய மதிமிளிரும் வளர்சடையி னானை மறையவனை வாய் மொழியை வானவர்தங் கோனைப், புள்வாயைக் கீண்டுலகம் விழுங்கி உமிழ்ந் தானைப் பொன்னிறத்தின் முப்புரிநூல் நான்முகத்தி னானை, முள்வாய மடல்தழுவி முடத்தாழை யீன்று மொட்டலர்ந்து விரைநாறும் முருகுவிரி பொழில்சூழ், கள்வாய கருங்குவளை கண்வளருங் கழனிக் கானாட்டு முள்ளூரில் கண்டுதொழு தேனே"—தேவாரம்.

எத்திசையுந் தொழுதேத்த "மத்த யானை" எடுத்"தெதிர்கொள் பாடியினை அடைவோம்" என்னும், சித்தநிலைத் திருப்பதிகம் பாடி *வந்து செல்வ†மிகு செழுங்கோயில் இறைஞ்சி நண்ணி, அத்தர்தமை அடிவணங்கி அங்கு வைகி அருள்பெற்றுத் திருவேள்விக் குடியில் எய்தி, முத்திதரும் பெருமானைத் துருத்தி கூட "மூப்பதிலை" எனும் பதிகம் மொழிந்து வாழ்ந்தார். கஉக

"மத்தயானை ஏறிமன்னர் சூழவரு வீர்காள்
செத்தபோதேல் யாருமில்லைச் சிந்தையுள்வைம் மின்கள்
வைத்தவுள்ளம் மாற்றவேண்டா வம்மின்மனத் தீரே
அத்தர்கோயில் எதிர்கொள்பாடி என்பதடை வோமே"—தேவாரம்.

"மூப்பது மில்லைப் பிறப்பது மில்லை இறப்ப தில்லைச்
சேர்ப்பது காட்டகத் தூரினு மாகச் சிந்திக்கில் அல்லால்

---

கஉ0. தூய அன்றலர்ந்த மென்மலர்க் கொன்றை......

பா - ம்—*சேர்ந்து. †மலி.

காப்பது வேள்விக் குடிதண் துருத்திஎங் கோனரைமேல்
ஆர்ப்பது நாகம் அறிந்தோமேல் நாம்இவர்க் காட்ப டோமே"—தேவாரம்

வேறு

காட்டுநல் வேள்விக் கோலங் கருத்துற வணங்கிக் காதல்
நாட்டிய உள்ளத் தோடு நம்பிஆ ரூரர் போற்றி
ஈட்டிய தவத்தோர் சூழ அங்குநின் றேகி அன்பு
பூட்டிஆட் கொண்டார் மன்னுந் தானங்கள் இறைஞ்சிப் *போந்து.

வேறு

எஞ்சாத பேரன்பில் திருத்தொண்ட ருடனெய்தி
நஞ்சாருங் கறைமிடற்ருர் இடம்பலவும் நயந்தேத்தி
மஞ்சாரும் பொழிலுடுத்த மலர்த்தடங்கள் புடைசூழும்
செஞ்சாலி வயல்மருதத் திருவாரூர் சென்றடைந்தார். கஉ௩

செல்வமலி திருவாரூர்த் தேவரொடு முனிவர்களும்
மல்குதிருக் கோபுரத்து வந்திறைஞ்சி உள்புக்கங்
கெல்லையிலாக் காதல்மிக எடுத்தமலர்க் கைகுவித்துப்
பல்குதிருத் தொண்டருடன் பரமர்திரு முன்அணைந்தார். கஉச

மூவாத முதலாகி நடுவாகி முடியாத
சேவாருங் கொடியாரைத் திருமூலட் டானத்துள்
ஓவாத பெருங்காத லுடன்இறைஞ்சிப் புறம்போந்து
தாவாத புகழ்ப்பரவை யார்திருமா ளிகைசார்ந்தார். கஉ௫

பொங்குபெரு விருப்பினொடு புரிகுழலார் பலர்போற்றப்
†பங்கயக்கண் செங்கனிவாய்ப் பரவையார் அடிவணங்கி
"எங்களையும் நினைந்தருளிற்" றெனஇயம்ப இனிதளித்து
மங்கைநல்லார் அவரோடு மகிழ்ந்துறைந்து வைகுநாள். கஉ௬

---

கஉ௩. எஞ்சாத - குறையாத. மஞ்சு...சூழும் - மேகந் தவழும் சோலைகளையுடைய பூந்தடாகங்கள் பக்கத்தே சூழ்ந்த.

கஉ௫. மூவாத - அழியாத. சேஆரும் - இடபம் பொருந்திய. திருமூலட்டானத்து - திருமூலஸ்தானத்திலே. ஓவாத - நீங்காத. தாவாதபுகழ் - கெடாத புகழையுடைய.

கஉ௬. தாமரை மலர் போன்ற கண்ணும் கொவ்வைக் கனிபோன்ற வாயும் உடைய பரவையார் ஆரூரரது அடிவணங்கி. இனிது அருள்செய்து; நலம் வினவி.

பா - ம்—*போந்தார். †அங்கயற்கண்.

"நாயனார் முதுகுன்றர் நமக்களித்த நன்னிதியம்
தூயமணி முத்தாற்றிற் புகவிட்டேம் துணைவரவர்
கோயிலின்மா ளிகைமேல்பாற் குளத்தில்அவர் அருளாலே
போயெடுத்துக் கொடுபோதப் போதுவாய்" எனப்புகல. கஉள

"என்னஅதி சயம்இதுதான் என்*சொன்ன வா"றென்று
மின்னிடையார் சிறுமுறுவ லுடன்விளம்ப மெய்யுணர்ந்தார்
"நன்னுதலாய்! என்னுடைய நாதன்அரு ளாற்குளத்தில்
பொன்னடைய எடுத்துனக்குத் தருவதுபொய் யா"தென்று. கஉஅ

ஆங்கவரும் உடன்போத அளவிறந்த விருப்பினுடன்
பூங்கோயில் உள்மகிழ்ந்த †புராதனரைப் புக்கிறைஞ்சி
ஓங்குதிரு மாளிகையை வலம்வந்தங் குடன்மேலைப்
பாங்குதிருக் குளத்தணைந்தார் பரவையார் தனித்துணைவர். கஉகூ

மற்றதனில் வடகீழ்பாற் கரைமீது வந்தருளி
முற்றிழையார் தமைநிறுத்தி முனைப்பாடித் திருநாடர்
கற்றைவார் சடையாரைக் கைதொழுது குளத்தில்இழிந்
தற்றைநாள் இட்டெடுப்பார் போல்அங்குத் தடவுதலும். கநூ0

நீற்றழகர் பாட்டுவந்து திருவிளையாட் டினில்நின்று
மாற்றுறுசெம் பொன்குளத்து வருவியா தொழிந்தருள
"ஆற்றினில்இட் டேக்குளத்தில் தேடுவீர்! அருள்இதுவோ
சாற்றும்"எனக் கோற்றொடியார் மொழிந்தருளத் தனித்தொண்டர்.

"முன்செய்த அருள்வழியே முருகலர்பூங் குழற்பரவை
தன்செய்ய வாயில்நகை ‡தாராமே தாரும்"என

கஉஎ. நாயனார் - தலைவராகிய. துணைவரவர் என்றது திருவாரூர்ப்பெருமானைக் குறிப்பது. முதுகுன்றப் பெருமானும் திருவாரூர்ப் பெருமானும் ஒருவரே யாதலின் "துணைவரவர்" என்றார். போதுவாய் - வருவாய்.

கநூ0. முற்றிழையார்தமை - பரவையாரை. அன்று இட்டு இன்று எடுப்பார் போல்.

கநூக. நீற்றழகராகிய சிவபெருமான் நம்பியாரூரர் பாட்டை விரும்பி. "ஆற்றிலிட்டுக் குளத்தில் தேடுவோரே! சிவபிரான் திருவருள் இதுவோ சாற்றும்" என்று பரவையார் மொழிந்தருள.

கநூஉ. முன் செய்த அருளாவது 'மணிமுத்தா நதியிலிட்டுத் திருவாரூர்த் திருக்குளத்தில் பொன்னை எடுத்துக் கொள்க' என்றது. மணங் கமழும் மலரையணிந்த கூந்தலுடைய பரவையார் தமது அழகிய வாயால் நகை செய்யாதவாறு பொன்னைத் தாரும். வேதியர் தாம் - வன்தொண்டர். முதுகுன்றில் என்றது, திருமுதுகுன்றில் வீற்றிருந்தருளும் பெருமானை.

பா - ம்—*செய்த. †புனிதர்கழல். ‡சாராமே.

மின்செய்த நூல்மார்பின் வேதியர்தாம் முதுகுன்றில்
"பொன்செய்த மேனியினீர்" எனப்பதிகம் போற்றிசைத்து. கஙஉ

"பொன்செய்த மேனியினீர் புலித்தோலை அரைக்கசைத்தீர்
முன்செய்த மூவெயிலும் எரித்தீர்முது குன்றமர்ந்தீர்
மின்செய்த நுண்ணிடையாள் பரவைஇவள் தன்முகப்பே
என்செய்த வாறடிகேள் அடியேன்இட் டளங்கெடவே"

"உம்பரும் வானவரும் முடனேநிற்க வேஎனக்குச்
செம்பொனைத் தந்தருளித் திகழும்முது குன்றமர்ந்தீர்
வம்பம ருங்குழலாள் பரவைஇவள் வாடுகின்றாள்
எம்பெரு மானருளீர் அடியேன்இட் டளங்கெடவே"—தேவாரம்.

"முட்டஇமை யோர்அறிய முதுகுன்றில் தந்தபொருள்
சட்டநான் பெறுதொழிந்த தளர்வினால் கையறவாம்
இட்டளத்தை இவளெதிரே கெடுத்தருளும்" எனுந்திருப்பாட்
டெட்டளவும் பொன்காட்டா தொழிந்தருள ஏத்துவார். கஙங

"ஏத்தாதே இருந்தறியேன்" எனுந்திருப்பாட் டெவ்வுலகும்
காத்தாடும் அம்பலத்துக் கண்ணுளனுங் கண்ணுதலைக்
"கூத்தா! தந் தருளாய்இக் கோமளத்தின் முன்" என்று
நீத்தாருந் தொடர்வரிய நெறிநின்றார் பரவுதலும். கஙச

"ஏத்தா திருந்தறியேன் இமையோர்தனி நாயகனே
மூத்தா யுலகுக் கெல்லாம் முதுகுன்றம் அமர்ந்தவனே
பூத்தா ருங்குழலாள் பரவைஇவள் தன்முகப்பே
கூத்தா தந்தருளாய் கொடியேன்இட் டளங்கெடவே"—தேவாரம்.

கோங்கவிழ்பூங் கொன்றைமுடிக் கூத்தனார் திருவருளால்
வங்கெழுபொன் திரளெடுத்து *வான்முறையாற் கரையேற்ற
அந்தரத்து மலர்மாரி பொழிந்திழிந்த தவனியுளோர்
"இந்தஅதி சயம்†என்னே! யார்பெறுவார்?" எனத்தொழுதார். கஙரு

ஞாலம்வியப் பெய்தவரு நற்கனக மிடைஎடுத்து
மூலமெனக் கொடுபோந்த ஆணியின்முன் உரைப்பிக்க

கஙங. இமையோர் முட்ட அறிய-தேவர்களெல்லாரும் அறிய; (முட்ட-முழுவதும்). சட்ட-கடுக; திசைச்சொல். தளர்வினால் கையறவாம் இட்டளத்தை-தளர்வினால் நேர்ந்த செயலற்ற தன்மையதாகிய துன்பத்தை.

கஙரு. கொங்கு - கொத்து.

பா - ம்—*வருமுறையால். †என்னே எங்கிலையார் பெறத்தொழுவார்.

நீலமிடற் றவர்அருளால் உரைதாழப் பின்னும்நெடு
மாலயனுக் கரியகழல் வழுத்தினார் வன்றொண்டர். கந௬

மீட்டும்அவர் பரவுதலும் மெய்யன்பர் அன்பில்வரும்
பாட்டுவந்து கூத்துவந்தார் படுவாசி முடிவெய்தும்
ஓட்டறுசெம் பொன்னொக்க ஒருமாவுங் குறையாமல்
காட்டுதலும் மகிழ்ந்தெடுத்துக் கொண்டுகரை ஏறினார். கந௭

கரையேறிப் பரவையா ருடன்கனக மானமெலாம்
*நிரையேயா ளிற்சுமத்தி நெடுநிலமா ளிகைபோக்கித்
திரையேறும் புனற்சடிலத் திருமூலட் டானத்தார்
விரையேறு மலர்ப்பாதந் தொழுதணைந்தார் வீதியினில். கந௮

வந்துதிரு மாளிகையின் உட்புகுந்து மங்கலவாழ்த்
தந்தமிலா வகைஎத்தும் அளவிறந்தார் ஒலிசிறப்பச்
சிந்தைநிறை மகிழ்ச்சியுடன் சேயிழையா ருடன்அமர்ந்தார்
கந்தமலி மலர்ச்சோலை நாவலர்தங் காவலனார். கந௯

அணியாரூர் மணிப்புற்றின் அமர்ந்தருளும் பரம்பொருளைப்
பணிவார்அங் கொருநாளிற் பாராட்டுந் திருப்பதிகம்
தணியாத ஆனந்தந் தலைசிறப்பத் தொண்டருடன்
†துணிவாய பொருள்வினவித் தொழுதாடிப் பாடுவார். கச0

பண்ணிறையும் வகை"பாறு தாங்கி"என எடுத்தருளி
உண்ணிறையும் மனக்களிப்பால் உறுபுளகம் மயிர்முகிழ்ப்பக்
கண்ணிறையும் புனல்பொழியக் கரைஇகந்த ஆனந்தம்
எண்ணிறைந்த படிதோன்ற ஏத்திமகிழ்ந் தின்புற்றார். கசக

"பாறுதாங்கிய காடரோபடு தலையரோமலைப் பாவையோர்
கூறுதாங்கிய குழகரோகுழைக் காதரோகுறுங் கோட்டிள
ஏறுதாங்கிய கொடியரோசுடு பொடியரோஇலங் கும்பிறை
ஆறுதாங்கிய சடையரோநமக் கடிகளாகிய அடிகளே"—தேவாரம்.

---

கந௬. கனகமிடை - பொற்குவையை. முன்னே தாம் வெட்டி யெடுத்து வைத்துள்ள மச்சத்துடன் மாற்றுரைத்துப் பார்க்க என்றபடி.

கந௭. பாட்டு உவந்து கூத்து உவந்தார் - பாட்டை விரும்பிச் சிவபெருமான். படுவாசி - நேர்ந்த வேறுபாடு. ஒருமாவும் - ஓரளவும்.

கந௮. நிரையே - வரிசையாக. திரை ஏறும் புனல் சடிலம்-அலை கொழிக்கும் கங்கை தங்கும் சடையையுடைய.

பா - ம்—*நிரையாளிற் சுமையேற்றி. †துணிவாய்ப்பே ரருள்வினவி.

இன்புற்றங் கமர்நாளில் ஈறில்அரு மறைபரவும்
வன்புற்றின் அரவணிந்த மன்னவனார் அருள்பெற்றே
அன்புற்ற காதலுடன் அளவிறந்த பிறபதியும்
பொன்புற்கென் றிடஒளிருஞ் சடையாரைத் தொழப்போவார். ௧௪௨

பரிசனமும் உடன்போதப் பாங்கமைந்த பதிகள்தொறும்
கரியுரிவை புனைந்தார்தங் கழல்தொழுது மகிழ்ந்தேத்தித்
துரிசறுநற் பெருந்தொண்டர் நள்ளாறு தொழுவதற்குப்
புரிவுறுமெய்த் திருத்தொண்டர் எதிர்கொள்ளப் புக்கணைந்தார். ௧௪௩

விண்தடவு கோபுரத்தைப் பணிந்துகரம் மேற்குவித்துக்
கொண்டுபுகுந் தண்ணலார் கோயிலினை வலஞ்செய்து
மண்டியபே ரன்பினொடு மன்னுதிரு நள்ளாறர்
புண்டரிகச் சேவடிக்கீழ்ப் பொருந்தநில மிசைப்பணிந்தார். ௧௪௪

அங்கணரைப் பணிந்தேத்தி அருளினால் தொழுதுபோய்
மங்குலணி மணிமாடத் திருக்கடவூர் வந்தெய்தித்
திங்கள்வளர் முடியார்தந் திருமயா னமும்பணிந்து
பொங்கும்இசைப் பதிகம்"மரு வார்கொன்றை" எனப்போற்றி. ௧௪௫

"மருவார் கொன்றை மதிசூடி மாணிக் கத்தின் மலைபோல
வருவார் விடைமேல் மாதோடு மகிழ்ந்து பூதப் படைசூழத்
திருமால் பிரமன் இந்திரற்குந் தேவர் நாகர் தானவர்க்கும்
பெருமான் கடவூர் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே"—**தேவாரம்.**

திருவீரட் டானத்துத் தேவர்பிரான் சினக்கூற்றின்
பொருவீரந் தொலைத்தகழல் பணிந்து"பொடி யார்மேனி"
மருவீரத் தமிழ்மாலை புனைந்தேத்தி மலைவளைத்த
பெருவீரர் வலம்புரத்துப் பெருகார்வத் தொடுஞ்சென்றார். ௧௪௬

"பொடியார் மேனியனே புரிநூலொரு பாற்பொருந்த
வடியார் மூவிலைவேல் வளர்அங்கையின் மங்கையொடும்
கடியார் கொன்றையனே கடவூர்தனுள் வீரட்டத்தெம்
அடிகேள் என்னமுதே எனக்கார்துணை நீயலதே"—**தேவாரம்.**

---

௧௪௨. பொன் புற்கு என்ன - பொன்னும் குறையையுடையதே என்று சொல்லும்படி; பொன்னும் புகையுடையதென்று சொல்லுமாறு; பொன்னினும் ஒளியுடைய சடை என்றபடி.

௧௪௩. துரிசு - குற்றம். புரிவுறும் - விருப்பமுறும்.

௧௪௬. திருக்கடவூர் - வீரட்டங்களுள் ஒன்று; யமனை உதைத்த இடம். சினக்கூற்றின் - கோபமுடைய யமனது. ஈரம்மரு - குளிர்ச்சி பொருந்திய.

வரையோடு நிகர்புரிசை வலம்புரத்தார் கழல்வணங்கி
உரையோசைப் பதிகம்"எனக் கினி" ஓதிப் போய்ச்சங்க
நிரையோடு துமித்தூப மணித்தீப நித்திலப்பூந்
திரையோதங் கொண்டிறைஞ்சுந் திருச்சாய்க்கா டெய்தினர். ௧௪௭

"எனக்கினித் தினைத்தனைப் புகலிட மறிந்தேன்
பனைக்கனி பழம்படும் பரவையின் கரைமேல்
எனக்கினி யவன்றமர்க் கினியவ னெழுமையும்
மனக்கினி யவன்றன திடம்வலம் புரமே"—தேவாரம்.

தேவர்பெரு மான்தன்னைத் திருச்சாய்க்காட் டினிற்பணிந்து
பாவலர்செந் தமிழ்மாலைத் திருப்பதிகம் பாடிப்போய்
மேவலர்தம் புரம்எரித்தார் வெண்காடு பணிந்தேத்தி
நாவலர்கா வலர்அடைந்தார் நனிபள்ளித் திருநகரில். ௧௪௮

நனிபள்ளி அமர்ந்தபிரான் கழல்வணங்கி நற்றமிழின்
புனிதநறுந் தொடைபுனைந்து திருச்செம்பொன் பள்ளிமுதல்
பனிமதிசேர் சடையார்தம் பதிபலவும் பணிந்துபோய்த்
தனிவிடைமேல் வருவார்தந் திருநின்றி யூர்சார்ந்தார். ௧௪௯

நின்றியூர் மேயாரை நேயத்தாற் புக்கிறைஞ்சி
ஒன்றியஅன் புள்ளுருகப் பாடுவார் உடையஅர
சென்றும்உல கிடர்நீங்கப் பாடியஏ ழெழுநூறும்
அன்றுசிறப் பித்தஞ்சொல் திருப்பதிகம் அருள்செய்தார். ௧௫௦

"அணிகொ ளாடையம் பூணணி மாலை அமுது செய்தமு தம்பெறு சண்டி, இணைகொள் ஏழெழு நூறிரு பனுவல் ஈன்ற வன்திரு நாவினுக் கரையன், கணைகொள் கண்ணப்ப னென்றிவர் பெற்ற காத லின்னரு ளாதரித் தடைந்தேன், திணைகொள் செந்தமிழ் பைங்கிளி தெரியுஞ் செல்வத் தென்திரு நின்றியூ ரானே"—தேவாரம்.

---

௧௪௭. வரையோடு நிகர் புரிசை - மலைபோலும் மதில் சூழ்ந்த. சங்க...... இறைஞ்சும் - சங்கு வரிசைகளுடன் பவளத்தூபத்தையும் (பவளக் கொடியையும்) மணித்தீபத்தையும் (மணிக்குவையையும்) முத்தையும் பொலிவுடைய கடல்வாய் அலைகள் கொண்டு வந்து வணங்கும்.

௧௪௯. நற்றமிழின் தூய நறிய பாமாலையைச் சாத்தி.

௧௫௦. திருநாவுக்கரசுசுவாமிகள் அருளிய பதிகத்தொகை ஏழ் எழுநூறு—நாலாயிரத்துத் தொள்ளாயிரம். இப்பதிகத் தொகைக்குரிய பாட்டுத் தொகை நாற்பத்தொன்பதி னுயிரம். "பதிகம் ஏழ் எழுநூறு பகருமா கவியோகி"—திருநாவுக்கரசர் திருஏகாதசமாலை : எ. "கொடுங்கூற்று யினஎன்ன எடுத்துக் கோதில் - ஒருமானைத் தரிக்குமொரு வரையுங் காறும் ஒருநாற்பத் தோன்பதினுயிரமதாக..."—திருமுறைகண்டபுராணம் : ௧௫.

அப்பதியில் அன்பருடன் அமர்ந்தகல்வார் அகலிடத்தில்
செப்பரிய புகழ்நீடூர் பணியாது செல்பொழுதில்
ஒப்பரிய உணர்வினால் நினைந்தருளித் தொழுதுறுவார்
மெய்ப்பொருள்வண் தமிழ்மாலை விளம்பியே மீண்டணைந்தார். கருக

" மடலாரும் புனல்நீடூர் மருவினர்தாள் வணங்காது
விடலாமே" எனுங்காதல் விருப்புறும்அத் திருப்பதிகம்
அடலார்சூ லப்படையார் தமைப்பாடி அடிவணங்கி
உடலாரும் மயிர்ப்புளகம் மிகப்பணிந்தங் குறைகின்றார். கருஉ

"ஊர்வ தோர்விடை ஒன்றுடை யானை ஒண்ணு தற்றனிக் கண்ணுத லானைக், கார தார்கறை மாமிடற் றானைக் கருத லார்புரம் மூன் றெரித் தானை, நீரில் வாளை வரால்குதி கொள்ளும் நிறைபு னற்கழ னிச் செல்வ நீடூர்ப், பாரு ளார்பா வித்தொழ நின்ற பரம னைப்பணி யாவிட லாமே"—தேவாரம்.

அங்கண்இனி தமர்ந்தருளால் திருப்புன்கூர் அணைந்திறைஞ்சிக்
கொங்கலரும் மலர்ச்சோலைத் திருக்கோலக் காஅணையக்
கங்கைசடைக் கரந்தவர்தாம் எதிர்காட்சி கொடுத்தருளப்
பொங்குவிருப் பால்தொழுது திருப்பதிகம் போற்றிசைப்பார். கருங

திருஞான சம்பந்தர் திருக்கைக ளால்ஒற்றிப்
பெருகார்வத் துடன்பாடப் பின்னுகனார் கண்டிரங்கி
அருளாலே திருத்தாளம் அளித்தபடி சிறப்பித்துப்
பொருள்மாலைத் திருப்பதிகம் பாடியே போற்றிசைத்தார். கருச

"நாளும் இன்னிசை யாற்றமிழ் பரப்பு ஞான சம்பந்த னுக்குல கவர் முன், தாள மீந்தவன் பாடலுக் கிரங்குந் தன்மை யாளனை என்மனக் கருத்தை, ஆளும் பூதங்கள் பாடநின் றாடும் அங்க ணன்தனை எண்கணம் இறைஞ்சும், கோளி லிப்பெருங் கோயி லுள்ளானைக் கோலக் காவினிற் கண்டுகொண் டேனே"—தேவாரம்.

மூவாத முழுமுதலார் முதற்கோலக் காஅகன்று
தாவாத புகழ்ச்சண்பை வலங்கொண்டு தாழ்ந்திறைஞ்சி

---

கருக. அகலிடத்தில் - பூமியில்.

கருஉ. மடல் ஆரும் புனல் - பூக்கள் நிறைந்த நீர்வளம் பொருந்திய. அடல்- வலிமை. கருங. கொங்கு அலரும் - மணம் கமழும்.

கருடு. சண்பை - சீர்காழியை. முத்தமிழ்விரகர் - திருஞானசம்பந்தர். மேவார்தம் புரஞ் செற்றார் - பகைவர்களின் முப்புரமெரித்த சிவபிரான் எழுந் தருளியுள்ள.

நாவார்முத் தமிழ்விரகர் *நற்பதங்கள் பரவிப்போய்
மேவார்தம் புரஞ்செற்றார் குருகாவூர் மேவுவார். கருரு

உண்ணீரின் வேட்கையுடன் உறுபசியால் மிகவருந்திப்
பண்ணீர்மை மொழிப்பரவை யார்கொழுநர் வரும்பாங்கர்க்
கண்ணீடு திருநுதலார் †காதல்வரக் கருத்தறிந்து
தண்ணீரும் பொதிசோறும் கொண்டுவழிச் சார்கின்றார். கருசு

வேனிலுறு வெயில்வெம்மை தணிப்பதற்கு விரைக்குளிர்மென்
பானல்மலர்த் தடம்போலும் பந்தர்ஒரு பால்அமைத்தே
ஆனமறை வேதியராய் அருள்வேடங் கொண்டிருந்தார்
மானமருந் திருக்கரத்தார் வன்தொண்டர் தமைப்பார்த்து. கருஎ

குருகாவூர் அமர்ந்தருளுங் குழகர்வழி பார்த்திருப்பத்
திருவாரூர்த் தம்பிரான் தோழர்திருத் தொண்டருடன்
வருவார்அப் பந்தரிடைப் புகுந்துதிரு மறையவர்பால்
பெருகார்வஞ் செலஇருந்தார் "சிவாயநம" எனப்பேசி. கருஅ

ஆலநிழற் கீழிருந்தார் அவர்தம்மை எதிர்நோக்கிச்
"சாலமிகப் பசித்தீர்இப் பொதிசோறு தருகின்றேன்
காலம்இனித் தாழாமே கைக்கொண்டிங் கினிதருந்தி
ஏலநறுங் குளிர்தண்ணீர் குடித்திளைப்புத் தீரும்" என. கருகூ

வன்தொண்டர் அதுகேட்டு "மறைமுனிவர் தரும்பொதிசோ
றின்றுநமக் கெதிர்விலக்கல் ஆகா"தென் றிசைந்தருளிப்
பொன்தயங்கு நூல்மார்பர் தரும்பொதிசோ றதுவாங்கிச்
‡சென்றுதிருத் தொண்டருடன் திருஅமுது செய்தருளி. கசூ0

எண்ணிறந்த பரிசனங்கள் எல்லாரும் இனிதருந்தப்
பண்ணியபின் அம்மருங்குப் பசித்தணைந்தார் களும்அருந்த
உண்ணிறைந்த ஆரமுதாய் ஒருகாலும் உலவாதே
புண்ணியனார் தாமளித்த பொதிசோறு பொலிந்ததால். கசூக

சங்கரனார் திருவருள்போல் தண்ணீரின் சுவை ஆர்ந்து
பொங்கிவரும் ஆதரவால் அவர்நாமம் புகழ்ந்தேத்தி

---

கருசு. உண்ணும் நீரின்.

கருஎ. வாசனை வீசும் குளிர்ந்த மெல்லிய செங்கழுநீர் மலர்கள் நிறைந்த தடாகம்போலும்.

கருஅ. 'சிவாயநம' என்று கூறி. கசூக. உலவாதே - குறையாமல்.

பா - ம்—*நற்பதிகம். †காதலவர். ‡சென்ற.

அங்கயர்வால் பள்ளிஅமர்ந் தருகணைந்தார் களுந்துயிலக்
கங்கைசடைக் கரந்தார்அப் பந்தரொடுந் தாங்கரந்தார். கசுஉ

சித்தநிலை திரியாத திருநாவ லூர்மன்னர்
அத்தகுதி யினிற்பள்ளி யுணர்ந்தவரைக் காணாமை
"இத்தனையா மாற்றம் அறிந்திலேன்" எனஎடுத்து
மெய்த்தகைய திருப்பதிகம் விளம்பியே சென்றடைந்தார். கசுங

"இத்தனை யாமாற்றம் அறிந்திலேன் எம்பெருமான்
பித்தரே என்றும்மைப் பேசுவார் பிறரெல்லாம்
முத்தினை மணிதன்னை மாணிக்கம் முளைத்தெழுந்த
வித்தனே குருகாவூர் வெள்ளடை நீயன்றே"

"ஆவியைப் போகாமே தவிர்த்தென்னை ஆட்கொண்டாய்
வாவியிற் கயல்பாயக் குளத்திடை மடைதோறும்
காவியுங் குவளையுங் கமலஞ்செங் கழுநீரும்
மேவிய குருகாவூர் வெள்ளடை நீயன்றே"

"பாடுவார் பசிதீர்ப்பாய் பரவுவார் பிணிகளைவாய்
ஓடுநன் கலனாக உண்பலிக் குழல்வானே
காடுநல் லிடமாகக் கடுவிருள் நடமாடும்
வேடனே குருகாவூர் வெள்ளடை நீயன்றே"—தேவாரம்.

குருகாவூர் *அமர்ந்தருளுங் குழகனார் கோயிலினுக்
கருகார்பொற் கோபுரத்தை அணைந்திறைஞ்சி உள்புக்கு
வருகாதல் கூரவலங் கொண்டுதிரு முன்வணங்கிப்
பருகாஇன் னமுதத்தைக் கண்களாற் பருகினார். கசுச

கண்ணார்ந்த இன்னமுதைக் கையாரத் தொழுதிறைஞ்சிப்
பண்ணார்ந்த திருப்பதிகம் பாடியே பணிந்தேத்தி
உண்ணாடும் பெருங்காதல் உடையவர்தாம் புறத்தெய்தி
நண்ணார்வத் தொண்டருடன் அங்கினிது நயந்திருந்தார். கசுரு

அந்நாளில் தம்பெருமான் †அருள்கூடப் பணிந்தகன்று
மின்னார்செஞ் சடைமுடியார் விரும்புமிடம் பலவணங்கிக்
கன்னாடும் எயில்புடைசூழ் கழிப்பாலை தொழுதேத்தித்
தென்னாவ லூர்மன்னர் திருத்தில்லை ‡வந்தடைந்தார். கசுசு

---

கசுஉ. ஆர்ந்து - பருகி. ஆதரவால் - விருப்பால்.

கசுச. வாயாற் பருக இயலாத இன்னமுதத்தை.

கசுசு. கல்லால் கட்டப்பட்ட மதில் பக்கத்தே சூழ்ந்த கழிப்பாலை.

பா - ம்—*மணிவயிரக் கொழுந்தனார். †அருள்கூரப். ‡மருங்கணைந்தார்.

சீர்வளருந் திருத்தில்லைத் திருவீதி பணிந்துபுகுந்
தேர்வளர்பொற் றிருமன்றுள் எடுத்தசே வடிஇறைஞ்சிப்
பார்வளர மறைவளர்க்கும் பதிஅதனிற் பணிந்துறைவார்
போர்வளர்மே ருச்சிலையார் திருத்தினைமா நகர்புகுந்தார். ௧௬௭

திருத்தினைமா நகர்மேவுஞ் சிவக்கொழுந்தைப் பணிந்துபோய
நிருத்தனார் அமர்ந்தருளும் நிறைபதிகள் பலவணங்கிப்
பொருத்தமிகுந் திருத்தொண்டர் போற்றுதிரு நாவலூர்
கருத்தில்வரும் ஆதரவால் கைதொழச்சென் றெய்தினார். ௧௬௮

"திருநாவ லூர்மன்னர் சேர்கின்றார்" எனக்கேட்டுப்
பெருநாமப் பதியோருந் தொண்டர்களும் "பெருவாழ்வு
வருநாள்" என் றலங்கரித்து வந்தெதிர்கொண் டுள்ளணையச்
செருநாகத் துரிபுனைந்தார் செழுங்கோயில் உள்ளணைந்தார். ௧௬௯

மேவியஅத் தொண்டர்குழாம் மிடைந்"தர"என் றெழும்ஓசை
மூவுலகும் போய்ஒலிப்ப முதல்வனார் முன்பெய்தி
ஆவியினும் அடைவுடையார் அடிக்கமலத் தருள்போற்றிக்
"கோவலனன் முகன்"எடுத்துப் பாடியே கும்பிட்டார். ௧௭0

"கோவல னான்முகன் வானவர் கோனுங்குற் றேவல்செய்ய
மேவலர் முப்புரந் தீயெழு வித்தவன் ஓரம்பினால்
ஏவல னார்வெண்ணெய் நல்லூரில் வைத்தென்னை யாளுங்கொண்ட
நாவல னார்க்கிட மாவது நந்திரு நாவலூரே"—தேவாரம்.

நலம்பெருகும் அப்பதியில் நாடியஅன் பொடுநயந்து
குலம்பெருகுந் திருத்தொண்டர் குழாத்தோடும் இனிதமர்ந்து
சலம்பெருகுஞ் சடைமுடியார் தாள்வணங்கி அருள்பெற்றுப்
பொலம்புரிநூல் மணிமார்பர் பிறபதியுந் தொழப்போவார். ௧௭௧

தண்டகமாந் திருநாட்டுத் தனிவிடையார் மகிழ்விடங்கள்
தொண்டர்எதிர் கொண்டணையத் தொழுதுபோய்த் தூயநதி

௧௬௯. செருநாகத்துரி - போர் யானையின் தோல்.

௧௭0. ஆவியினும் அடைவுடையார் - உயிரினும் சிறப்புடையார். ஒருவனுக்கரியது அவனது உயிர்; அவ்வுயிரினுஞ் சிறந்தது சிவம்; "என்னில் யாரும் எனக்கினி யாரில்லை - என்னி லும்இனி யான்ஒரு வன்உளன் - என்னுளே உயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக் - கென்னுளே நிற்கும் இன்னம்பர் ஈசனே" —அப்பர்.

௧௭௧. பொலம் - பொன்.

வண்டறைபூம் புறவுமலை வளமருதம் பலகடந்தே
எண்டிசையோர் பரவுதிருக் கழுக்குன்றை எய்தினார். களஉ

தேனார்ந்த மலர்ச்சோலைத் திருக்கழுக்குன் றத்தடியார்
ஆனாத விருப்பினொடும் எதிர்கொள்ள அடைந்தருளித்
தூநாள்வெண் மதியணிந்த சுடர்க்கொழுந்தைத் தொழுதிறைஞ்சிப்
பாநாடும் இன்னிசையின் திருப்பதிகம் பாடினார். களஙு

பாடியஅப் பதியின்கண் இனிதமர்ந்து பணிந்துபோய்
நாடியநல் லுணர்வினொடும் திருக்கச்சூர் தனைநண்ணி
ஆடகமா மதில்புடைசூழ் ஆலக்கோயி லின்அமுதைக்
கூடியமெய் அன்புருகக் கும்பிட்டுப் புறத்தணைந்தார். களச

அணைந்தருளும் அவ்வேலை அமுதுசெயும் பொழுதாகக்
கொணர்ந்தமுது சமைத்தளிக்கும் பரிசனமுங் குறுகாமைத்
தணந்தபசி வருத்தத்தால் தம்பிரான் திருவாயில்
புணர்ந்தமதிற் புறத்திருந்தார் முனைப்பாடிப் புரவலனார். களரு

வன்தொண்டர் பசிதீர்க்க மலையின்மேல் மருந்தானார்
மின்தங்கு வெண்டலையோ டொழிந்தொருவெற் றோடேந்தி
அன்றங்கு வாழ்வாரோர் அந்தணராய்ப் புறப்பட்டுச்
சென்றன்பர் முகநோக்கி அருள்கூரச் செப்புவார். களகூ

"மெய்ப்பசியால் மிகவருந்தி இளைத்திருந்தீர் வேட்கைவிட
இப்பொழுதே சோறிரந்திங் கியான்உமக்குக் கொணர்கின்றேன்
அப்புறநீர் அகலாதே சிறிதுபொழு தமரும்"எனச்
செப்பிஅவர் திருக்கச்சூர் மனைதோறுஞ் சென்றிரப்பார். களஎ

வெண்திருநீற் றணிதிகழ விளங்குநூல் ஒளிதுளங்கக்
கண்டவர்கள் மனம்உருகக் கடும்பகற்போ திடும்பலிக்குப்

---

களஉ. தண்டகமாந் திருநாட்டு - திருஞானசம்பந்தர் புராணம் : பாட்டு கூகூ0 குறிப்புப் பார்க்க. விடையார் - இடபாரூடராகிய சிவபெருமான். புறவும் - முல்லை நிலங்களையும். மலை - குறிஞ்சி நிலங்களையும்.

களச. ஆடகம் - பொன். ஆலக்கோயில் - திருக்கச்சூர்க் கோயில் பெயர்.

களரு. திருவமுது கொண்டுவந்து கொடுக்கும் அடியவர்கள் வாராமையால் மிகுந்த பசி......

களகூ. "மாலை மதியே மலைமேல் மருந்தே மறவே னடியேன் வயல் சூழ்ந்த - ஆலைக் கழனிப் பழனக் கச்சூர் ஆலக் கோயில் அம்மானே" —சுந்தரர் : ஙு.

களஅ. பலிக்கு - பிச்சைக்கு.

புண்டரிகக் கழல்புவிமேல் பொருந்தமனை தொறும்புக்குக்
கொண்டுதாம் விரும்பிஆட் கொண்டவர்முன் கொடுவந்தார். களஅ

இரந்துதாங் கொடுவந்த இன்னடிசி லுங்கறியும்
"அரந்தைதரும் பசிதீர அருந்துவீர்" எனஅளிப்பப்
பெருந்தகையார் மறையவர்தம் பேரருளின் திறம்பேணி
நிரந்தபெரும் காதலினால் நேர்தொழுது வாங்கினார். களகூ

வாங்கியஅத் திருஅமுது வன்தொண்டர் மருங்கணைந்த
ஓங்குதவத் தொண்டருடன் உண்டருளி உவந்திருப்ப
ஆங்கருகு நின்றார்போல் அவர்தம்மை அறியாமே
நீங்கினார் எப்பொருளும் நீங்காத நிலைமையினார். கஅ0

திருநாவ லூராளி சிவயோகி யார்நீங்க
வருநாம மறையவனார் இறையவனார் எனமதித்தே
"பெருநாதச் சிலம்பணிசே வடிவருந்தப் பெரும்பகற்கண்
உருநாடி எழுந்தருளிற் றென்பொருட்டாம்" எனஉருகி. கஅக

வேறு

"முதுவா யோரி" என்றெடுத்து முதல்வ னார்தம் பெருங்கருணை
அதுவாம் இதுஎன் றதிசயம்வந் தெய்தக் கண்ணீர் மழைஅருவிப்
புதுவார் புனலின் மயிர்ப்புளகம் புதையப் பதிகம் போற்றிசைத்து
மதுவார் இதழி முடியாரைப் பாடி மகிழ்ந்து வணங்கினார். கஅஉ

"முதுவா யோரி கதறமுதுகாட் டெரிகொண் டாடல் முயல்வானே
மதுவார் கொன்றைப் புதுவீசூடும் மலையான் மகள்தன் மணவாளா
கதுவாய்த் தலையில் பலிநீகொள்ளக் கண்டால் அடியார் கவலாரோ
அதுவே யாமா றிதுவோகச்சூர் ஆலக் கோயில் அம்மானே"

"கச்சேர்அரவொன் றரையிலசைத்துக் கழலுஞ்சிலம்புங் கலிக்கப்பலிக்கென்
றுச்சம்போதா ஊரூர்திரியக் கண்டால் அடியார் உருகாரோ
இச்சையறியோம் எங்கள்பெருமான் ஏழேழ்பிறப்பும் எனையாள்வாய்
அச்சமில்லாக் கச்சூர்வடபால் ஆலக்கோயில் அம்மானே"—தேவாரம்.

வந்தித் திறைவர் அருளாற்போய் மங்கை பாகர் மகிழ்ந்தஇடம்
முந்தித் தொண்டர் எதிர்கொள்ளப் புக்கு முக்கட் பெருமானைச்

---

களகூ. இன்அடிசிலும் - இனிய சோறும். அரந்தை - துன்பம்.

கஅஉ. மதுஆர் இதழி - தேன் நிறைந்த கொன்றை.

கஅங. அந்திவேளைச் சிவப்பனைய நிறம் பெருகு ஒளியாகிய சிவபெருமான்.

சிந்தித்திடவந்தருள்செய்கழல்பணிந்துசெஞ்சொல்தொடைபுனைந்தே
அந்திச் செக்கர்ப் பெருகொளியார் அமருங் காஞ்சி மருங்கணைந்தார்.

"அன்று வெண்ணெய் நல்லூரில் அரியும் அயனும் தொடர்வரிய
வென்றி மழவெள் விடைஉயர்த்தார் வேத முதல்வ ராய்வந்து
நின்றுசபைமுன்வழக்குரைத்து நேரேதொடர்ந்தாட்கொண்டவர்தாம்
இன்றிங் கெய்தப் பெற்றோம்"என் றெயில்சூழ் காஞ்சி நகர்வாழ்வார்.

மல்கு மகிழ்ச்சி மிகப்பெருக மறுகு மணித்தோ ரணம்நாட்டி
அல்கு தீப நிறைகுடங்கள் அகிலின் தூபங் கொடிஎடுத்துச்
செல்வ மனைகள் அலங்கரித்துத் தெற்றி ஆடல் முழவதிரப்
பல்கு தொண்ட ருடன்கூடிப் பதியின் புறம்போய் எதிர்கொண்டார்.

ஆண்ட நம்பி எதிர்கொண்ட அடியார் வணங்க எதிர்வணங்கி
நீண்ட மதிட்கோ புரங்கடந்து நிரைமா ளிகைவீ தியிற்போந்து
பூண்ட காதல் வாழ்த்தினுடன் புனைமங் கலதூ ரியம்ஒலிப்ப
ஈண்டு தொண்டர் பெருகுதிரு ஏகாம் பரஞ்சென் றெய்தினர். க[illegible]

ஆழி நெடுமால் அயன்முதலாம் அமரர் நெருங்கு கோபுரம்முன்
பூழி யுறமண் மிசைமேனி பொருந்த வணங்கிப் புகுந்தருளிச்
சூழு மணிமா ளிகைபலவுந் தொழுது வணங்கி வலங்கொண்டு
வாழி மணிப்பொற் கோயிலினுள் வந்தார் அணுக்க வன்தொண்டர்.

கைகள் கூப்பி முன்அணைவார் கம்பை ஆறு பெருகிவர
ஐயர் தமக்கு மிகஅஞ்சி ஆரத் தழுவிக் கொண்டிருந்த
மையு லாவுங் கருநெடுங்கண் மலையாள் என்றும் வழிபடுபூஞ்
செய்ய கமலச் சேவடிக்கீழ்த் திருந்து காத லுடன்வீழ்ந்தார். கஅஅ

வீழ்ந்து போற்றிப் பரவசமாய் விம்மி எழுந்து மெய்யன்பால்
வாழ்ந்த சிந்தை யுடன்பாடி மாறா விருப்பிற் புறம்போந்து
சூழ்ந்த தொண்ட ருடன்மருவும் நாளில் தொல்லைக் கச்சிநகர்த்
தாழ்ந்த சடையார் ஆலயங்கள் பலவுஞ் சார்ந்து வணங்குவார். கஅகூ

சீரார் காஞ்சி மன்னுதிருக் காமக் கோட்டஞ் சென்றிறைஞ்சி
நீரார் சடையார் அமர்ந்தருளும் நீடு திருமேற் றளிமேவி

---

கஅடு. மறுகு - வீதியில். அல்கு - நிலையாக உள்ள. தெற்றி ஆடல் முழவு அதிர - சித்திர கூடங்களில் நடன முழவு ஒலிக்க. பல்கு - பரவிய.

கஅசு. தூரியம் - வாத்தியம். ஈண்டு - நெருங்கிய.

கஅள. பூழி - புழுதி. சூழும் - ஆலயத்துள் சூழ்ந்துள்ள.

கஅஅ. மலையாள் - உமையம்மையார்

ஆரா அன்பிற் பணிந்தேத்தும் அளவில் "நுந்தா ஒண்சுடராம்"
பாரார் பெருமைத் திருப்பதிகம் பாடி மகிழ்ந்து பரவினர். கககூ0

" நுந்தா ஒண்சுடரே நுனையே நினைந்திருந்தேன்
வந்தாய் போயறியாய் மனமே புகுந்துநின்ற
சிந்தாய் எந்தைபிரான் திருமேற் றளியுறையும்
எந்தாய் உன்னைஅல்லால் இனிஏத்த மாட்டேனே "—தேவாரம்.

ஓண காந்தன் றளிமேவும் ஒருவர் தம்மை உரிமையுடன்
பேணி அமைந்த தோழமையாற் பெருகும் அடிமைத் திறம்†பேசிக்
காண மோடு பொன்வேண்டி "நெய்யும் பாலும்" கலைவிளங்கும்
யாணர்ப் பதிகம் எடுத்தேத்தி எண்ணில் நிதிபெற் றினிதிருந்தார்.

" நெய்யும் பாலுந் தயிருங்கொண்டு நித்தம் பூசனை செய்யலுற்றார்
கையி லொன்றுங் காணமில்லைக் கழல டிதொழு துய்யின்அல்லால்
ஐவர் கொண்டிங் காட்ட வாடி யாழ்குழிப்பட் டழுந்துவேனுக்
குய்யு மாறென் றருளிச்செய்யீர் ஓண காந்தன் றளியுளீரே "—தேவாரம்.

அங்கண் அமர்வார் அனேகதங்கா பதத்தை எய்தி உள்ளணைந்து,
செங்கண் விடையார் தமைப்பணிந்து "'தேனெய் புரிந்"தென்
றெடுத்ததமிழ், "தங்கும் இடமாம்" எனப்பாடித் தாழ்ந்து பிறவுந்
தானங்கள், பொங்கு காத லுடன்போற்றிப் புரிந்தப் பதியிற் பொரு
ந்துநாள். கககூஉ

" தேனெய் புரிந்துழல் செஞ்சடை எம்பெரு மானதிடந்திக ழைங்கணைஅக்
கோனை எரித்தெரி யாடிஇடங்குல வானதி டங்குறை யாமறையா
மானை யிடத்ததோர் கையனிடம் மதமாறு படப்பொழி யும்மலைபோல்
ஆனை யுரித்தபி ரானதிடங் கலிக்கச்சி அனேகதங் காபதமே"—தேவாரம்.

‡பாட லிசையும் பணியினுற் பாவை தழுவக் குழைகம்பர்
ஆடல் மருவுஞ் சேவடிகள் பரவிப் பிரியா தமர்கின்றார்
நீட மூதூர்ப் புறத்திறைவர் நிலவும் பதிகள் தொழவிருப்பால்
மாடம் நெருங்கு வன்பார்த்தான் பனங்காட் டூரில் வந்தடைந்தார்.

§செல்வம் மல்கு திருப்பனங்காட் டூரிற் §செம்பொற் செழுஞ்சுடரை
அல்லல் அறுக்கும் அருமருந்தை வணங்கி அன்பு பொழிகண்ணீர்

கககக. காணம் - காசு; "நலங்கிளர் காணமும் மணியும் நன்பொனும்......"
—சிந்தாமணி 2410. "நெய்யும் பாலும்" என்னும் அருட்கலை விளங்கும்
நல்ல பதிகத்தை.

பா - ம்—*பணிந்தேத்தி. †பெருகக். ‡பாட லிசையும். §செல்வச்.

மல்க நின்று "விடையின்மேல் வருவான்" எனும்வண் தமிழ்ப்பதிகம்
நல்ல இசையி னுடன்பாடிப் போந்து *புறம்பு நண்ணுவார். கக௬௪

"விடையின் மேல்வரு வானை வேதத் தின்பொரு ளானை
அடையில் அன்புடை யானை யாவர்க் கும்அறி யொண்ணா
மடையில் வாளைகள் பாயும் வன்பார்த் தான்பனங் காட்டூர்ச்
சடையிற் கங்கை தரித்தானைச் சாரா தார்சார் வென்னே"—தேவாரம்.

மன்னு திருமாற் பேறணைந்து வணங்கிப் பரவித் திருவல்லம்
தன்னுள் எய்தி இறைஞ்சிப்போய்ச் சாரும் மேல்பாற் சடைக்கற்றைப்
பின்னல் முடியார் இடம்பலவும் பேணி வணங்கிப் பெருந்தொண்டர்
சென்னி முகில்தோய் தடங்குவட்டுத் திருக்கா ளத்தி மலைசேர்ந்தார்.

தடுக்க லாகாப் பெருங்காதல் தலைநின் றருளுங் கண்ணப்பர்
இடுக்கண் களைந்தாட் கொண்டருளும் இறைவர் மகிழ்ந்த காளத்தி
அடுக்கல் சேர அணைந்துபணிந் தருளால் ஏறி அன்பாறு
மடுப்பத் திருமுன் சென்றெய்தி மலைமேல் மருந்தை வணங்கினார்.

வணங்கி உள்ளங் களிகூர மகிழ்ந்து போற்றி மதுரஇசை
அணங்கு "செண்டா" டெனும்பதிகம் பாடி †அன்பாற் கண்ணப்பர்
மணங்கொள் மலர்ச்சே வடிபணிந்து வாழ்ந்து போந்து மன்னுபதி
இணங்கு தொண்ட ருடன்‡கெழுமி இன்புற் றிருக்கும் அந்நாளில்.

"செண்டா டும்விடையாய் சிவனேஎன் செழுஞ்சுடரே
வண்டா ருங்குழலாள் உமைபாகம் மகிழ்ந்தவனே
கண்டார் காதலிக்குங் கணநாதன்எங் காளத்தியாய்
அண்டா உன்னைஅல்லால் அறிந்தேத்த மாட்டேனே"—தேவாரம்.

வடமா திரத்துப் பருப்பதமும் திருக்கே தார §மலையும்முதல்
இடமா அரனார் தாம்||உவந்த எல்லாம் இங்கே இருந்திறைஞ்சி
நடமா டியசே வடியாரை நண்ணி னார்போல் உள்நிறைந்து
திடமாங் கருத்தில் திருப்பதிகம் பாடிக் காதல் சிறந்திருந்தார். கக௬அ

அங்குச் சிலநாள் வைகியபின் அருளாற் போந்து பொருவிடையார்
தங்கும் இடங்கள் எனைப்பலவும் சார்ந்து தாழ்ந்து தமிழ்பாடிப்

கக௫. குவட்டு - முடியையுடைய.
கக௬. காளத்தி அடுக்கல் - காளத்தி மலை. அன்பாகிய ஆறு புரள.
ககஎ. அணங்கு-விரும்பும்; கலந்த எனினுமாம். தொண்டருடன் கலந்து.
ககஅ. வடமாதிரத்து-வடதிசையிலுள்ள. கக௯. புணரிக்கரை-கடற்கரை.
பா - ம்—*பிறவும். †அன்பர். ‡விரும்பி. §மலைமுதலாம். ||மகிழ்ந்த.

பொங்கு புணரிக் கரைமருங்கு புவியுட் சிவலோ கம்போலத்
திங்கள் முடியார் அமர்ந்ததிரு ஒற்றி யூரைச் சென்றடைந்தார்.

அண்ணல் தொடர்ந்தா வணங்காட்டி ஆண்ட நம்பி எழுந்தருள
எண்ணில் பெருமை ஆதிபுரி இறைவர் அடியார் எதிர்கொள்வார்
வண்ண வீதி வாயில்தொறும் வாழை கமுகு தோரணங்கள்
சுண்ண நிறைபொற் குடந்தூப தீபம் எடுத்துத் தொழஎழுங்கால்.

வரமங் கலநல் லியம்முழங்க வாச மாலை அணிஅரங்கில்
புரமங் கையர்கள் நடமாடப் பொழியும் வெள்ளப் பூமாரி
அரமங் கையரும் அமரர்களும் வீச அன்ப ருடன்புகுந்தார்
பிரமன் தலையிற் பலியுவந்த பிரானார் விரும்பு பெருந்தொண்டர். ௨௦௧

ஒற்றி யூரின் உமையோடுங் கூட நின்றார் உயர்தவத்தின்
பற்று மிக்க திருத்தொண்டர் பரந்த கடல்போல் வந்தீண்டிச்
சுற்றும் அணைந்து துதிசெய்யத் தொழுது தம்பி ரான்அன்பர்
கொற்ற மழவே றுடையவர்தங் கோயில் வாயில் எய்தினார். ௨௦௨

வானை அளக்குங் கோபுரத்தை மகிழ்ந்து பணிந்து புகுந்துவளர்
கூனல் இளவெண் பிறைச்சடையார் கோயில் வலங்கொண் டெதிர்குறுகி
ஊனும் உயிரும் கரைந்துருக உச்சி குவித்த கையினுடன்
ஆன காத லுடன்வீழ்ந்தார் ஆரா அன்பின் ஆரூரர். ௨௦௩

எட்டு வரியில் "ஒற்றியூர் நீங்கல்" *என்ன எழுத்தறியும்
நாட்ட மலருந் திருநுதலார் நறும்பொற் கமலச் சேவடியில்
கூட்டும் †உணர்வு கொண்டெழுந்து கோதில் அமுத இசைகூடப்
"பாட்டும் பாடிப் பரவி" எனும் பதிகம் எடுத்துப் பாடினார். ௨௦௪

> "பாட்டும் பாடிப் பரவித் திரிவார்
> ஈட்டும் வினைகள் தீர்ப்பார் கோயில்
> காட்டுங் கலமுந் திமிலுங் கரைக்கே
> ஓட்டந் திரைவாய் ஒற்றி யூரே"—**தேவாரம்.**

---

௨௦௦. ஆதிபுரி - திருவொற்றியூர்.

௨௦௧. மேன்மையான நல்ல மங்கலவாத்தியங்கள் முழங்க. புரம் - அவ்வூ ருள்ள. அரமங்கையர் - தேவமகளிர்கள்.

௨௦௪. வரிக்கணக்கில் 'திருவொற்றியூர் நீங்கலாக' என்று எழுத அறியு திருவொற்றியூர்ப் பெருமானுக்கு 'எழுத்தறியும் பெருமான்' என்றொரு பெ ருண்டு.

**பா - ம்**—*என்னும். †உணர்வும்.

ாடி அறிவு பரவசமாம் பரிவு பற்றப் புறம்போந்து
சீடு விருப்ப பெருங்காதல் நிறைந்த அன்பர் பலர்போற்றத்
தேடும் அயனும் திருமாலும் அறிதற் கரிய திருப்பாதம்
கூடுங் காலங் களில்அணைந்து பரவிக் கும்பிட் டினிதிருந்தார். ௨0௫

இந்த நிலைமை யாரிவரிங் கிருந்தார் முன்பே இவர்க்காக
அந்தண் கயிலை மலைநீங்கி அருளாற் போந்த அநிந்திதையார்
வந்து புவிமேல் அவதரித்து வளர்ந்து பின்பு வன்றொண்டர்
சந்த விரைசூழ் புயஞ்சேர்ந்த பரிசு தெரியச் சாற்றுவாம். ௨0௬

ாலாங் குலத்திற் பெருகுநலம் உடையார் வாழும் ஞாயிற்றின்
மேலாங் கொள்கை வேளாண்மை மிக்க திருஞா யிறுகிழவர்
பாலா தரவு தருமகளா ராகிப் பார்மேல் அவதரித்தார்
ஆலா லஞ்சேர் கறைமிடற்றார் அருளால் முன்னை அநிந்திதையார்.

மலையான் மடந்தை மலர்ப்பாதம் மறவா அன்பால் வந்தநெறி
தலையாம் உணர்வு வந்தணையத் தாமே அறிந்த சங்கிலியார்
அலையார் வேற்கட் சிறுமகளிர் ஆயத் தோடும் †விளையாட்டு
நிலையா யினஅப் பருவங்கள் தோறும் நிகழ நிரம்புவார். ௨0௮

சீர்கொள் மரபில் வருஞ்செயலே அன்றித் தெய்வ நிகழ்தன்மை
பாரில் எவரும் அதிசயிக்கும் பண்பில் வளரும் பைந்தொடியார்
வாரு மணிய அணியவாம் வளர்மென் முலைகள் இடைவருத்தச்
சாரும் பதத்தில் தந்தையார் தங்கண் மனைவி யார்க்குரைப்பார். ௨0௯

"வடிவும் குணமும் நம்முடைய மகட்கு மண்ணு ளோர்க்கிசையும்
படிவ மன்றி மேற்பட்ட பரிசாம் பான்மை அறிகிலோம்

---

௨0௬. திருவருள் ஆணைப்படி போந்த. சந்தனமணங் கமழும் புயம்.

௨0௭. ஞாயிறு...ஆகி - ஞாயிறு கிழவரிடத்தே விருப்பந் தரும் மகளாராகி. **திருமலைச் சிறப்பு :** பாட்டு ௨௧ முதல் ௨௯ வரை பார்க்க. **தடுத்தாட்கொண்ட புராணம் :** பாட்டு. கரு௧ பார்க்க.

௨0௮. அநிந்திதையார் சங்கிலியாராகப் பிறந்தாரென்க. இவ்வம்மையார் திருக்கயிலையில் உமையம்மையாரை வழிபட்டு வந்தவர். அப்பண்டை யுணர்வு இப்பொழுது இயல்பாகவே சங்கிலியார் மாட்டு அரும்பலாயிற்று. அலையார் - கொலைத்தொழில் பொருந்திய. ஆயத்தோடும் - கூட்டத்தோடும்.

௨0௯. வாருமணிய அணியவாய்—"கச்சும் அழகிய ஆபரணங்களும் அவாவும்" —**பழைய குறிப்புரை ;** " கச்சுமணியும்படி சமீபித்த பருவமுடையவராய் " —**இராமலிங்கத் தம்பிரானர்.**

**பா - ம்—***பரவசமாய். †விளையாடும்.

கடிசேர் மணமும் இனிநிகழுங் காலம்'' என்னக் கற்புவளர்
கொடியே அனைய மனைவியார் ''ஏற்கும் ஆற்றாற் கொடும்'' என்றார்.

தாய ரோடு தந்தையார் பேசக் கேட்ட சங்கிலியார்
''ஏயு மாற்றம் அன்றிதுஎம் பெருமான் ஈசன் திருவருளே
மேய ஒருவர்க் குரியதியான் வேறென் விளையும்'' என வெருவுற்
றுய உணர்வு மயங்கிமிக அயர்ந்தே அவனி மேல்விழுந்தார். ௨௧௧

பாங்கு நின்ற தந்தையார் தாயார் பதைத்துப் பரிந்தெடுத்தே
ஏங்கும் உள்ளத் தினராகி ''இவளுக் கென்னோ வுற்ற''தெனத்
தாங்கிச் சீத விரைப்பனிநீர் தெளித்துத் தைவந் ததுநீங்க
வாங்கு சிலைநன் னுதலாரை ''வந்த துனக்கிங் கென்?'' என்றார். ௨௧௨

என்று தம்மை ஈன்றெடுத்தார் வினவ மறைவிட் டியம்புவார்
''இன்றென் திறத்து நீர்மொழிந்த இதுஎன் பரிசுக் கிசையாது
வென்றி விடையார் அருள்செய்தார் ஒருவர்க் குரியேன் யான்இனிமேல்
சென்று †திருஒற் றியூர்அணைந்து சிவனார் அருளிற் செல்வன்'' என.

அந்த மாற்றங் கேட்டவர்தாம் அயர்வும் பயமும் அதிசயமும்
வந்த வுள்ளத் தினராகி மற்ற மாற்றம் மறைத்தொழுகப்
பந்தம் நீடும் இவர்குலத்து நிகராம் ஒருவன் பரிசறியான்
சிந்தை ‡விரும்பி மகட்பேச §விடுத்தான் சிலருஞ் சென்றிசைத்தார்.

தாதை யாரும் அதுகேட்டுத் தன்மை விளம்பத் தகாமையினால்
ஏதம் எய்தா வகைமொழிந்து போக்க அவராங் கெய்தாமுன்

௨௧௦. படிவம் - முறைமை ; தன்மை.

௨௧௧. ''இஃது ஒப்பத்தகும் உரை அன்று. இறைவன் திருவருள் பொருந்திய ஒருவர்க்கு யான் உரியவள். தாய்தந்தையர் முயற்சியால் வேறு என்ன விளையுமோ'' என்று அஞ்சி. அயர்ந்து - தம்மை மறந்து ; மூர்ச்சித்து.

௨௧௨. மயங்கி மூர்ச்சித்து விழுவோரைத் தெளிவு செய்வதற்குக் குளிர்ந்த நீர் தெளிப்பது வழக்கம். தைவந்து - தடவி. வளைந்த வில்லைப் போன்ற நெற்றியையுடைய சங்கிலியாரை நோக்கி.

௨௧௩. மறைவிட்டு இயம்புவார் - தங்கருத்தை மறையாது சொல்வார். என் திறத்து - என்னைப்பற்றி. பரிசுக்கு - தன்மைக்கு. சிவனார் அருள்வழி.

௨௧௪. பந்தம் நீடு - (பல வழியிலும்) தொடர்பு மிகுந்த. பரிசறியான் - நிலைமையை அறியாதவனாய். மகட்பேசச் சிலரை விடுத்தான் ; அவனால் விடுக்கப்பட்ட அச்சிலரும். விடுத்தார் என்னும் பாடத்துக்கு விடுக்கப்பட்டவராகிய சிலரும் என்று கொள்க.

பா - ம்—*தாய ரோடும். †ஒற்றியூர் அணைந்து. ‡மகிழ்ந்து. §விடுத்தார்.

தீதங் கிழைத்தே இறந்தான்போல் செல்ல விடுத்தா உடன்சென்றான்
மாத ராரைப் பெற்றார்மற் றதனைக் கேட்டு மனம்மருண்டார். உ௧௫

"தைய லார்சங் கிலியார்தந் திறத்துப் பேசத் தகாவார்த்தை
உய்ய வேண்டும் நினைவுடையார் உரையார்" என்றங் குலகறியச்
செய்த †விதிபோல் இதுநிகழச் சிறந்தார்க் குள்ள படிசெப்பி
னையும் ‡உள்ளத் துடன்அஞ்சி நங்கை செயலே உடன்படுவார். உ௧௬

"அணங்கே யாகும் இவள்செய்கை அறிந்தோர் பேச அஞ்சுவரால்
§வணங்கும் ஈசர் திறமன்றி வார்த்தை அறியாள் மற்றொன்றும்
குணங்கள் இவையாம் இனிஇவள்தான் குறித்த படியே ஒற்றிநகர்ப்
பணங்கொள் அரவச் சடையார்தம் பாற்கொண் டணைவோம்" எனப்பகர்வார்.

பண்ணார் மொழிச்சங் கிலியாரை நோக்கிப் பயந்தா ரொடுங்கிளைஞர்
"தெண்ணீர் முடியார் திருஒற்றி யூரிற் சேர்ந்து செல்கதியும்
கண்ணார் நுதலார் ||திருவருளா லாகக் கன்னி மாடத்துத்
தண்ணார் தடஞ்சூழ் அந்நகரில் தங்கிப் புரிவீர் தவம்" என்று. உ௧அ

பெற்ற தாதை சுற்றத்தார் பிறைசேர் முடியார் விதியாலே
மற்றுச் செயலொன் றறியாது மங்கை யார்சங் கிலியார்தாம்
சொற்ற வண்ணஞ் செயத்துணிந்து துதைந்த செல்வத் தொடும்புரங்கள்
செற்ற சிலையார் திருஒற்றி யூரிற் கொண்டு சென்றணைந்தார். உ௧௯

---

உ௧௫. ஏதம் - குறைவு. எய்தாமுன் - சேர்வதற்கு முன்னே; தீது......
.........சென்றான் - ஏதோ தீமை செய்து இறந்தவனைப்போல (மகட்பேச)
விடுக்கப்பட்டவருடன் இறந்தான். விடுக்கப்பட்டவரும் இறந்தார் என்றபடி.
"தீது......சென்றார்" என்னும் பாடத்துக்கு, ஏதோ தீமை செய்து இறந்த
வனைப்போல (சிலரை விட்ட அவன்) இறக்க, (மகட்பேச) விடுக்கப்பட்டவரும்
உடனே இறந்தார் என்று கொள்க.

உ௧௬. உய்யவேண்டும் - (உலகில் உயிர் பெற்றுப்) பிழைத்திருக்க வேண்
டும். தாய்தந்தையர் உலகத்துக்கு அஞ்சிச் சங்கிலியார் கருத்தை வெளியிடாது
மறைத்து வைத்திருந்தனர். அதனை உலகறியச் செய்யவே, இந்நிகழ்ச்சி நிகழ்ந்து
விட்டது. இவ்வாறு விதி நேர்ந்தது போலும்! பின்னே பெற்றோர், தங்குலத்
தில் சிறந்தவர்கட்குச் சங்கிலியார் நிலையைத் தெரிவித்தனரென்க.

உ௧௭. அணங்கே - தெய்வமே. வார்த்தை மற்றொன்றும் அறியாள்.
இவள் குணங்கள் இவையாம். பணம்...பால் - படங்கொண்ட பாம்பை யணிந்த
சடையையுடைய சிவபெருமானிடம்.

உ௧அ. பயந்தாரொடுங் கிளைஞர் - பெற்றவருடன் சுற்றத்தவரும்.

உ௧௯. திரண்ட செல்வத்தோடும்.

பா - ம்—*உடன்சென்றார். †இதுபோல் அது. ‡உள்ளத்தினராகி. §வணங்கி
வணங்க. ||திருவருளாலாகிக்.

சென்னி வளர்வெண் பிறையணிந்த சிவனார் கோயி லுட்புகுந்து
துன்னுஞ் சுற்றந் தொடும்பணிந்து தொல்லைப் பதியோர் இசைவினால்
கன்னி மாடம் மருங்கமைத்துக் கடிசேர் முறைமைக் காப்பியற்றி
மன்னுஞ் செல்வம் தகவகுத்துத் தந்தை யார்வந் தடிவணங்கி. உ௨0

"யாங்கள் உமக்குப் பணிசெய்ய ஈசற் கேற்ற பணிவிரும்பி
ஓங்கு கன்னி மாடத்தில் உறைகின் றீர்" என் றுரைக்கின்றார்
தாங்கற் கரிய கண்கள்நீர்த் தாரை ஒழுகத் தரியாதே
ஏங்கு சுற்றத் தொடும்இறைஞ்சிப் போனார் எயில்சூழ் தம்பதியில்.

காதல் புரிந்து தவம்புரியுங் கன்னி யார்அங் கமர்கின்றார்
பூத நாதர் கோயிலினிற் காலந் தோறும் புக்கிறைஞ்சி
நீதி முறைமை வழுவாது தமக்கு நேர்ந்த பணிசெய்யச்
சீத மலர்ப்பூ மண்டபத்துத் திரைசூழ் ஒருபாற் *சென்றிருந்து. உ௨௨

பண்டு கயிலைத் திருமலையிற் செய்யும் பணியின் பான்மைமனங்
கொண்ட உணர்வு †தலைநிற்பக் குலவு மலர்மென் கொடியனையார்
வண்டு மருவுந் திருமலர்மென் மாலை காலங் களுக்கேற்ப
அண்டர் பெருமான் முடிச்சாத்த அமைத்து வணங்கி அமருநாள்.

அந்தி வண்ணத் தொருவர்திரு அருளால் வந்த ஆரூரர்
கந்த மாலைச் சங்கிலியார் தம்மைக் காதல் மணம்புணர
வந்த பருவம் ஆதலால் வகுத்த தன்மை வழுவாத
முந்தை விதியால் வந்தொருநாள் முதல்வர் கோயி லுட்புகுந்தார்.

அண்டர் பெருமான் அந்தணராய் ஆண்ட நம்பி அங்கணரைப்
பண்டை முறைமை யாற்பணிந்து பாடிப் பரவிப் புறம்போந்து
தொண்டு செய்வார் ‡திருத்தொழில்கள் கண்டு தொழுது செல்கின்றார்
புண்டரீகத் தடம்நிகர்பூந் திருமண் டபத்தின் உட்புகுந்தார். உ௨௫

அன்பு நாரா அஞ்செழுத்து நெஞ்சு தொடுக்க அலர்தொடுத்தே
§என்புள் ளுருக்கும் அடியாரைத் தொழுது நீங்கி வேறிடத்து

உ௨0. கடி...இயற்றி - காவலுக்குரிய முறைமைப்படி மதில்காப்பு முதலி யன அமைத்து. சங்கிலியாரைச் சிவனடியாரெனத் தந்தையார் வணங்கினா ரென்க.

உ௨௧. 'உறைவீராக' என்று உரைக்கின்றவராய்.

உ௨௫. பூவின் பெருக்கால் மண்டபம் தாமரைத் தடாகத்தைப் போன் றிருந்ததென்க.

பா - ம்—*சேர்ந்திருந்து. †தலைசிறப்பக். ‡திருப்பணிகள். §என்புள்ளுருகும்.

முன்பு போலத் திரைநீக்கி முதல்வர் சாத்தும் பணிகொடுத்து
மின்போல் மறையுஞ் சங்கிலியார் தம்மை விதியாற் கண்ணுற்றார்.

கோவா முத்தும் சுரும்பேறாக் கொழுமென் முகையும் அனையாரைச்
சேவார் கொடியார் திருத்தொண்டர் கண்ட போது சிந்தைநிறை
காவா தவர்பால் போய்வீழத் தம்பாற் காம னார்துரந்த
பூவா ளிகள்வந் துறவீழத் தரியார் புறமே போந்துரைப்பார். ௨௨௭

“இன்ன பரிசென் றறிவரிதால் ஈங்கோர் மருங்கு திரைக்குள்ளால்
பொன்னும் மணியும் மலர்ந்தஒளி அமுதில் அளாவிப் புதியமதி
தன்னுள் நீர்மை யாற்குழைத்துச் சமைத்த மின்னுக் கொடிபோல்வாள்
என்னை உள்ளந் திரிவித்தாள் யார்கொல்?” என்றங் கியம்புதலும்.

அருகு நின்றார் விளம்புவார் “அவர்தாம் நங்கை சங்கிலியார்
பெருகுந் தவத்தால் ஈசர்பணி பேணுங் கன்னி யார்” என்ன,
“இருவ ரால்இப் பிறவியைஎம் பெருமான் அருளால் எய்துவித்தார்
மருவும் பரவை ஒருத்தி,இவள் மற்றை யவளாம்” எனமருண்டார்.

“மின்னார் சடையார் தமக்காளாம் விதியால் வாழும் எனைவருத்தித்
தன்னார் அருளால் வரும்பேறு தவத்தால் அணையா வகைதடுத்தே
என்னா ருயிரும் எழில்மலருங் கூடப் பிணைக்கும் இவள்தன்னைப்
பொன்னார் இதழி முடியார்பால் பெறுவேன்” என்று போய்ப்புக்கார்.

---

௨௨௬. அன்னை நாராகக் கொண்டு. முதல்வர் சாத்தும் மலர் மாலையைக் கொடுத்து.

௨௨௭. கோவா.........போது - துளையாத முத்தையும், வண்டுவிழாத செழிய மெல்லிய அரும்பையும் ஒத்த சங்கிலியாரைச் சிவனடியாராகிய வன்தொண்டர் கண்டபோது. (அம்மையாரின் தூய்மை குறித்தவாறும்.) அவர்பால் - அச்சங்கிலியாரிடத்து.

௨௨௮. அளாவி - கலந்து. நீர்மையால் - ஒளியால். பொன்னும் மணியும் காலும் ஒளியை அமுதத் தண்ணொளியிற் கலந்து, அக்கலந்த ஒளியைச் சந்திரன் தண்ணொளியில் குழைத்து ஆக்கிய மின்கொடி போன்ற சங்கிலியார். சங்கிலியார் திருமேனியின் ஒளி கூறியவாறும்.

௨௩௦. தன்னார் அருளால் - சிவபிரான் அருளால். பொன்.........பால் - பொன்னிறம் பொருந்திய கொன்றை முடியாராகிய சிவபெருமானிடம். வன்தொண்டர் உடல் பொருள் ஆவி மூன்றையும் சிவனடிக்கு அர்ப்பணஞ் செய்தவர். அவர், எதை வேண்டினும் அதைத் தமது முனைப்பு முயற்சியாற் பெறாது சிவன் அருள்வழி நின்று பெற்று வருவோர். முன்னே பரவையாரையும், பொன் பொருள் முதலியவற்றையும் வன்தொண்டப் பெருமான் சிவன் அருள்வழி நின்று பெற்றமை ஈண்டு உன்னற்பாலது.

மலர்மேல் அயனும் நெடுமாலும் வானும் நிலனும் கிளைத்தறியா
நிலவு மலருந் திருமுடியும் நீடுங் கழலும் உடையாரை
உலக மெல்லாந் தாம்உடையா ராயும் ஒற்றி யூர்அமர்ந்த
இலகு சோதிப் பரம்பொருளை இறைஞ்சி முன்னின் றேத்துவார்.

"மங்கை யொருபால் மகிழ்ந்ததுவும் அன்றி மணிநீள் முடியின்கண்
கங்கை தன்னைக் கரந்தருளுங் காதல் உடையீர்! அடியேனுக்
கிங்கு நமக்குத் திருமாலை தொடுத்தென் உள்ளத் தொடைஅவிழ்த்த
திங்கள் வதனச் சங்கிலியைத் தந்தென் வருத்தந் தீரும்"என. ௨௩௨

அண்ண லார்முன் பலவும்அவர் அறிய உணர்த்திப் *புறத்தணைந்தே
"எண்ண மெல்லாம் †உமக்கடிமை யாமா றெண்ணும் என்நெஞ்சில்
திண்ண மெல்லாம் உடைவித்தாள் செய்வ தொன்றும் அறியேன்யான்
தண்ணி லாமின் னொளிர்பவளச் சடையீர்! அருளும்" எனத்தளர்வார்.

மதிவாண் முடியார் மகிழ்கோயில் புறத்தோர் மருங்கு வந்திருப்பக்
கதிரோன் மேலைக் கடல்காண மாலைக் கடலைக் கண்டயர்வார்
முதிரா முலையார் தம்மைமணம் புணர்க்க வேண்டி முளரிவளை
நிதியான் நண்பர் தமக்கருளும் நண்பால் நினைந்து நினைந்தழிய.

உம்பர் உய்ய உலகுய்ய ஓல வேலை விடம்உண்ட
தம்பி ரானார் வன்தொண்டர் தம்பால் எய்திச் "சங்கிலியை
இம்பர் உலகில் யாவருக்கும் எய்த ஒண்ணா இருந்தவத்துக்
கொம்பை உனக்குத் தருகின்றோம் கொண்ட கவலை ஒழி" கென்ன.

"அன்று வெண்ணெய் நல்லூரில் வலிய ஆண்டு கொண்டருளி
ஒன்றும் அறியா நாயேனுக் குறுதி யளித்தீர் உயிர்காக்க
இன்றும் இவளை மணம்புணர்க்க ஏன்று நின்றீர்" எனப்போற்றி
மன்றல் மலர்ச்சே வடியிணைக்கீழ் வணங்கி மகிழ்ந்தார் வன்தொண்டர்.

ஆண்டு கொண்ட அந்தணனார் அவருக் கருளிக் கருணையினால்
நீண்ட கங்குல் யாமத்து நீங்கி வானில் நிறைமதியம்

---

௨௩௧. கிளைத்து - அகழ்ந்து; தோண்டி. "ஊர்தா னுவ துலகேழும் உடையார்க் கொற்றியூர்..."—சுந்தரர் : திருக்கடவூர் மயானம். ௭.

௨௩௨. தொடை - கட்டை. ௨௩௩. திண்ணம் - உறுதிப்பாட்டை.

௨௩௪. மதிவாழ் முடியார். முளரி வளை நிதியான் நண்பர் - பதுமம் சங்கம் என்னும் இருநிதியையுடைய குபேரன் நண்பராகிய சிவபெருமான்.

௨௩௫. ஓலவேலை - ஒலி கடலினின்றும் எழுந்த.

௨௩௬. ஏன்று நின்றீர் - (உரிய அரிய அன்புக் கடனாக) ஏற்று நின்றீர்; இசைந்து நின்றீர். மன்றல் - மணங்கமழும்.

௨௩௭. நடுயாமத்தில்.

பா - ம்—*புறம்பணைவார். †உமக்கடிமை யாமென் றெண்ணும்.

தீண்டு கன்னி மாடத்துச் சென்று திகழ்சங் கிலியாராம்
தூண்டு சோதி விளக்கனையார் தம்பாற் கனவில் தோன்றினார். உ௩எ

தோற்றும் பொழுதிற் சங்கிலியார் தொழுது விழுந்து பரவசமாய்
ஆற்ற அன்பு பொங்கிஎழுந் "தடியேன் உய்ய எழுந்தருளும்
பேற்றுக் கென்யான் செய்வ"தெனப் பெரிய கருணை *பொழிந்தனைய
நீற்றுக் கோல வேதியரும் நேர்நின் றருளிச் செய்கின்றார். உ௩அ

"சாருந் தவத்துச் சங்கிலிகேள்! சால என்பால் அன்புடையான்
மேரு வரையின் மேம்பட்ட தவத்தான் வெண்ணெய் நல்லூரில்
யாரும் †அறிய யான்ஆள உரியான் உன்னை எனைஇரந்தான் [றார்
வார்கொள் முலையாய்! நீஅவனை மணத்தால் அணைவாய் மகிழ்ந்" தென

ஆதி தேவர் முன்னின்றங் கருளிச் செய்த பொழுதின்கண்
மாத ரார்சங் கிலியாரும் மாலும் அயனும் அறிவரிய
சீத மலர்த்தா மரையடிக்கீழ்ச் சேர்ந்து வீழ்ந்து செந்நின்று
வேத முதல்வர் முன்நடுக்கம் எய்தித் தொழுது விளம்புவார். உ௪௦

"எம்பி ரானே! நீர்அருளிச் செய்தார்க் குரியேன் யான்இமையோர்
தம்பி ரானே! அருள்தலைமேற் கொண்டேன் தக்க விதிமணத்தால்
நம்பி யாரூ ரருக்கென்னை நல்கி அருளும் பொழுதிமயக்
கொம்பின் ஆகங் கொண்டீர்க்குக் கூறுந் திறமொன் றுள"தென்பார்.

பின்னும் பின்னல் முடியார்முன் பெருக நாணித் தொழுதுரைப்பார்
"மன்னுந் திருவா ரூரின்கண் அவர்தாம் மிகவும் மகிழ்ந்துறைவ
தென்னுந் தன்மை அறிந்தருளும், எம்பி ராட்டி திருமுலைதோய்
மின்னும் புரிநூல் அணிமார்பீர்!" என்றார் குன்றா விளக்கனையார்.

வேறு

மற்றவர்தம் உரைகொண்டு வன்தொண்டர் நிலைமையினை
ஒற்றிநகர் அமர்ந்தபிரான் உணர்ந்தருளி உரைசெய்வார்

உ௩அ. ஆற்ற - மிகவும். கருணை பொழிந்து, அப்பொழிவு போன்ற நீற்றுக்கோல......

உ௪௦. செந்நின்று - செம்மையில் நின்று; நேர் நின்று.

உ௪க. பார்வதியைத் திருமேனியினிடத்தே கொண்ட உமக்கு.

உ௪உ. பின்னல் முடியார் முன் - சடைமுடியையுடைய சிவபிரான் திருமுன். மகிழ்ந்து உறைவது - பரவையுடன் வாழ்வது; இது, நயம்படக் குறிக்கப்படுதல் காண்க.

பா - ம்—*பொழிகின்ற. †காண.

"பொற்றொடியாய்! உனைஇகந்து போகாமைக் கொருசபதம்
அற்றமுறு நிலைமையினால் அவன்செய்வான்" எனஅருளி. உசங

வேயனைய தோளியார் பால்நின்று மீண்டருளித்
தூயமனம் மகிழ்ந்திருந்த தோழனார் பால்அணைந்து
"நீஅவளை மணம்புணரும் நிலையுரைத்தோம் அதற்கவள்பால்
ஆயதொரு குறைஉன்னால் அமைப்பதுள" தென்றருளி. உ.சச

வன்தொண்டர் மனங்களித்து வணங்கி"அடி யேன்செய்ய
நின்றகுறை யா"தென்ன "நீஅவளை மணம்புணர்தற்
கொன்றியுட னே*நிகழ்வ தொருசபதம் அவள்முன்பு
சென்றுகிடைத் திவ்விரவே செய்க" என அருள்செய்தார். உசரு

"என்செய்தால் இதுமுடியும் அதுசெய்வன் யான்அதற்கு
மின்செய்த புரிசடையீர்! அருள்பெறுதல் வேண்டும்"என
முன்செய்த முறுவலுடன் †முதல்வர்தாம் முகநோக்கி
"உன்செய்கை தனக்கினிஎன் வேண்டுவ" தென் றுரைத்தருள. உசசு

வம்பணிமென் முலையவர்க்கு மனங்கொடுத்த வன்தொண்டர்
"நம்பரிவர் பிறபதியும் நயந்தகோ லஞ்சென்று
கும்பிடவே கடவேனுக் கிதுவிலக்காம்" எனுங்குறிப்பால்
தம்பெருமான் திருமுன்பு தாம்வேண்டுங் குறை‡இரப்பார். உசஎ

சங்கரர்தாள் பணிந்திருந்து தமிழ்வேந்தர் மொழிகின்றார்
"மங்கைஅவள் தனைப்பிரியா வகைசபதஞ் செய்வதனுக்
கங்கவளோ டியான்வந்தால் அப்பொழுது கோயில்விடத்
தங்கும்இடந் திருமகிழ்க்கீழ்க் கொளவேண்டும்" எனத்தாழ்ந்தார்.

---

உசங. இகந்து - கைவிட்டு. அற்றமுறு நிலைமையினால் - (உன்பொருட்டு அவன்) துன்பமுறும் நிலைமையினால்; "இரந்தோர் அற்றந் தீர்க்கென" —புறநானூறு : கடுஅ.

உசச. மூங்கில் போன்ற தோளையுடைய சங்கிலியாரிடமிருந்து.

உசரு. ஒன்றியுடனே நிகழ்வது - ஒன்றி அவளுடன் வாழ்வதாகிய; (ஒன்றியுடன் நிகழ - ஒன்றி அவளுடன் வாழ); அவளைப் பிரியாதிருக்க என்றபடி. கிடைத்து - அணுகி.

உசசு. "என்ன செய்தால் மணமுடியுமோ அதைச் செய்வேன்........"; "சபதஞ் செய்தலாகிய உனது செயலுக்கு இனி வேண்டுவது என்ன........"

உசஎ. வம்பு - கச்சு. சபதத்தால், பிறதிருப்பதிகளைக் கண்டு தொழத்தடை நேருமென்று நினைந்தன ரென்க.

உசஅ. கோயில்விட - கோயில் விட்டு.

பா - ம்—*நிகழ. †முதல்வரவர். ‡உரைப்பார்.

தம்பிரான் தோழரவர் தாம்வேண்டிக் கொண்டருள
உம்பர்நா யகரும்அதற் குடன்பாடு செய்வாராய்
"நம்பி!நீ சொன்னபடி நாஞ்செய்தும்" என்றருள
"எம்பிரா னே!அரிய தினியெனக்கென்?" எனவுந்தி. உ௪௯

அஞ்சலிசென் னியில்மன்ன அருள்பெற்றுப் புறம்போதச்
செஞ்சடையார் அவர்மாட்டுத் திருவிளையாட் டினைமகிழ்ந்தே தா
வஞ்சிஇடைச் சங்கிலியார் வழியடிமைப் பெருமையோ
துஞ்சிருள்மீ ளவும்அணைந்தார் அவர்க்குறுதி சொல்லுவார். உ௫0

சங்கிலியார் தம்மருங்கு முன்போலச் சார்ந்தருளி
"நங்கையுனக் காரூரன் நயந்துசூ ளுறக்கடவன்
அங்குநமக் கெதிர்செய்யும் அதற்குநீ இசையாதே
கொங்கலர்பூ மகிழின்கீழ்க் *கொள்க"எனக் குறித்தருள. உ௫க

மற்றவரும் கைகுவித்து "மாலயனுக் கறிவரியீர்!
அற்றம்எனக் கருள்புரிந்த அதனில்அடி யேனைப்
பெற்றதுயான்" எனக்கண்கள் பெருந்தாரை பொழிந்திழிய
வெற்றிமழ விடையார்தஞ் சேவடிக்கீழ் வீழ்ந்தெழுந்தார். உ௫உ

தையலார் தமக்கருளிச் சடாமகுடர் எழுந்தருள
எய்தியபோ ததிசயத்தால் உணர்ந்தெழுந்தவ் விரவின்கண்
செய்யசடை யார்அருளின் திறம்நினைந்தே கண்துயிலார்
ஐயமுடன் அருகுதுயில் சேடியரை அணைந்தெழுப்பி. உ௫௩

நீங்குதுயில் பாங்கியர்க்கு நீங்கல்எழுத் தறியும்அவர்
தாங்கனவில் எழுந்தருளித் தமக்கருளிச் செய்ததெலாம்
பாங்கறிய மொழியஅவர் பயத்தினுடன் அதிசயமும்
தாங்குமகிழ்ச் சியும்எய்தச் சங்கிலியார் தமைப்பணிந்தார். உ௫௪

---

உ௫0. வஞ்சிக்கொடி போன்ற இடையையுடைய......பெருமையை நினைந்தோ நள்ளிருளில்..........

உ௫க. நயந்து சூள் உறக்கடவன் - விரும்பிச் சபதஞ்செய்து கொடுக்கக் கடமைப்படுவன். அதற்கு - அச்சபதத்துக்கு. கொங்கு அலர்பூமகிழின் - மணங் கமழும் பூக்களையுடைய மகிழமரத்தின்.

உ௫உ. அற்றம் - உண்மையை; இரகசியத்தை எனினுமாம். "அருள்புரிந்த அதனால், யான் வழி வழி அடியேனைப் பெற்றேன்" என்றாரென்க.

உ௫௪. "திருவொற்றியூர் நீங்கலாக" என்ற எழுத்தை அறியும் பெருமான்... பாங்கு அறிய - முறைமையால் அறியுமாறு.

பா - ம்—*கொள்வதெனக்.

சேயிழையார் திருப்பள்ளி எழுச்சிக்கு மலர்தொடுக்கும்
தூயபணிப் பொழுதாகத் தொழில்புரிவார் உடன்போதக்
கோயிலின்முன் காலமது வாகவே குறித்தணைந்தார்
ஆயசப தஞ்செய்ய வரவுபார்த் தாரூரர். ௨௫௫

நின்றவர்அங் கெதிர்வந்த நேரிழையார் தம்மருங்கு
சென்றணைந்து தம்பெருமான் திருவருளின் திறங்கூற
மின்தயங்கு நுண்ணிடையார் விதியுடன்பட் டெதிர்விளம்பார்
ஒன்றியநா ணொடும்மடவா ருடன்ஒதுங்கி உட்புகுந்தார். ௨௫௬

அங்கவர்தம் பின்சென்ற ஆரூரர் "ஆயிழையீர்!
இங்குநான் பிரியாமை உமக்கிசையும் படிஇயம்பத்
திங்கள்முடி யார்திருமுன் போதுவீர்" எனச்செப்பச்
சங்கிலியார் கனவுரைப்பக் கேட்டதா தியர்மொழிவார். ௨௫௭

"எம்பெருமான்! இதற்காக எழுந்தருளி, இமையவர்கள்
தம்பெருமான் திருமுன்பு சாற்றுவது தகா"தென்ன
நம்பெருமான் வன்தொண்டர் நாதர்செயல் அறியாதே
"கொம்பனையீர்! யான்செய்வ தெங்?"கென்று கூறுதலும். ௨௫௮

மாதரவர் "மகிழ்க்கீழ்ழ அமையும்"என மனமருள்வார்
"ஈதலர்ஆ கிலும்ஆகும் இவர்சொன்ன படிமறுக்கில்
ஆதலினால் உடன்படவே அமையும்"எனத் துணிந்"தாகில்
போதுவீர்" எனமகிழ்க்கீழ் அவர்போதப் போய்அணைந்தார். ௨௫௯

தாவாத பெருந்தவத்துச் சங்கிலியா ருங்காண
மூவாத திருமகிழை முக்காலும் வலம்வந்து
"மேவாதிங் கியான்அகலேன்" எனநின்று விளம்பினார்
பூவார்தண் புனற்பொய்கை முனைப்பாடிப் புரவலனார். ௨௬௦

மேவியசீர் ஆரூரர் மெய்ச்சபத வினைமுடிப்பக்
காவியினேர் கண்ணாருங் கண்டுமிக மனங்கலங்கிப்
"பாவியேன் இதுகண்டேன் தம்பிரான் பணியால்"என்
றாவிசோர்ந் தழிவார்அங் கொருமருங்கு மறைந்தயர்ந்தார். ௨௬௧

௨௫௬. மின்னும் மயங்கும்.

௨௫௮. எம்பெருமானே (வன்தொண்டரே).

௨௫௯. இவர் சொன்னபடி மறுக்கில் ஈது அலர் ஆகிலும் ஆகும். அலர் - பழிமொழி ; (அலர் தூற்றல்). ஆகில் - இஃது உமக்குச் சம்மதமாகில்.

௨௬௦. தாவாத - கெடாத. மூவாத - முதிராத ; அழியாத என்னலுமாம். மேவாது...அகலேன் - இங்கு இராது நான் நீங்கமாட்டேன். "பொன்னவிலுங் கொன்றையினாய் போய்மகிழ்க்கீ ழிருவென்று - சொன்னஎனைக் காணாமே சூளுறவு மகிழ்க்கீழ்ழ-என்னவல்ல பெருமானே"-சுந்தரர்:திருவெண்பாக்கம். ௬.

௨௬௧. காவியினேர் - குவளை மலர்போன்ற.

திருநாவ லூராளி தம்முடைய செயல்முற்றிப்
பொருநாகத் தணிபுனைந்தார் கோயிலினுட் புகுந்திறைஞ்சி
"அருள்நாளுந் தரஇருந்தீர் செய்தவா றழகி!"தெனப்
பெருநாமம் எடுத்தேத்திப் பெருமகிழ்ச்சி யுடன்போந்தார். ௨௬௨

வார்புனையும் வனமுலையார் வன்றொண்டர் போனதற்பின்
தார்புனையும் மண்டபத்துத் தம்முடைய பணிசெய்து
கார்புனையும் மணிகண்டர் செயல்கருத்திற் கொண்டிறைஞ்சி
ஏர்புனையுங் கன்னிமா டம்புகுந்தார் இருள்புலர. ௨௬௩

அன்றிரவே ஆதிபுரி ஒற்றிகொண்டார் ஆட்கொண்ட
பொன்திகழ்பூண் வன்றொண்டர் புரிந்தவினை முடித்தருள
நின்றபுகழ்த் திருஒற்றி யூர்நிலவு தொண்டர்க்கு
மன்றல்வினை செய்வதற்கு மனங்கொள்ள உணர்த்துவார். ௨௬௪

"நம்பியா ரூரனுக்கு நங்கைசங் கிலிதன்னை
இம்பர்ஞா லத்திடைநம் ஏவலினால் மணவினைசெய்
தும்பர்வா ழுலகறிய அளிப்பீர்"என் றுணர்த்துதலும்
தம்பிரான் திருத்தொண்டர் அருள்தலைமேற் கொண்டெழுவார். ௨௬௫

மண்ணிறைந்த பெருஞ்செல்வத் திருஒற்றி யூர்மன்னும்
எண்ணிறைந்த திருத்தொண்டர் எழிற்பதியோ ருடன்ஈண்டி
உள்நிறைந்த மகிழ்ச்சியுடன் உம்பர்பூ மழைபொழியக்
கண்ணிறைந்த பெருஞ்சிறப்பிற் கலியாணஞ் *செய்தளித்தார். ௨௬௬

பண்நிகழ் பான்மையினாற் பசுபதிதன் அருளாலே
வண்டமர்பூங் குழலாரை மணம்புணர்ந்த வன்றொண்டர்
புண்டரிகத் தவள்வனப்பைப் புறங்கண்ட தூநலத்தைக்
கண்டுகேட் டுண்டுயிர்த்துற் றமர்ந்திருந்தார் காதலினால். ௨௬௭

---

௨௬௨. போர்யானை யுரிபுனைந்தார்.

௨௬௩. வார்...முலையார் - கச்சணிந்த அழகிய முலையையுடைய சங்கிலியார். தார் - மாலை. ஏர் - அழகு.

௨௬௪. ஆதி புரியாகிய ஒற்றியூரை. புரிந்த வினை - விரும்பிய மணவினை. மன்றல்வினை - மணவினை.

௨௬௬. திருத்தொண்டர், அழகிய அப்பதியோருடன் கலந்து. நம்பி - ஆண்பால்; நங்கை பெண்பால். "திருவொற்றி யூர்புக்குச் - சார்ந்தனன் சார்ந்தனன் சங்கிலி மென்தோள்", "சங்கிலியோடு எனைப்புணர்த்த தத்துவனை", "மான்திகழுஞ் சங்கிலியைத் தந்து", "பண்மயத்த மொழிப்பாவை சங்கிலிக்கும் எனக்கும் பற்றாய பெருமானே"—சுந்தரர்: திருவாமாத்தூர். ௬. திருவாரூர். ௧௧. திருவெண்பாக்கம். ௧௦. திருநாகைக்காரோணம். ௧௧.

௨௬௭. புண்டரிக...நலத்தை - திருமகளின் அழகைப் பின்னிடச் செய்த தூய அழகை. சங்கிலியார் அழகை ஐம்புலன்களால் நம்பியாரூரர் இனிது

பா - ம்—*செய்தமைத்தார்.

யாழின்மொழி எழில்முறுவல் இருகுழைமேற் கடைபிறழும்
மாழைவிழி வனமுலையார் மணியல்குல் துறைபடிந்து
வீழுமவர்க் கிடைதோன்றி மிகும்புலவி புணர்ச்சிக்கண்
ஊழியாம் ஒருகணந்தான் அவ்வூழி ஒருகணமாம். உகூஅ

இந்நிலையிற் பேரின்பம் இனிதமர்வார் இறையுறையும்
மன்னுபுகழ் ஒற்றியூ ரதனில்மகிழ் சிறப்பினால்
சென்னிமதி புனைவார்தந் திருப்பாதந் தொழுதிருந்தார்
முன்னியகா லங்கள்பல முறைமையினால் வந்தகல. உகூகூ

பொங்குதமிழ்ப் பொதியமலைப் பிறந்துபூஞ் சந்தனத்தின்
கொங்கணைந்து குளிர்சார லிடைவளர்ந்த கொழுந்தென்றல்
அங்கணையத் திருவாரூர் அணிவீதி அழகரவர்
மங்கலநாள் வசந்தமெதிர் கொண்டருளும் வகைநினைந்தார். உஎ0

வெண்மதியின் கொழுந்தணிந்த வீதிவிடங் கப்பெருமான்
ஒண்ணுதலார் புடைபரந்த ஓலக்கம் அதனிடையே
பண்ணமரும் மொழிப்பரவை யார்பாடல் ஆடல்தனைக்
கண்ணுறமுன் கண்டுகேட் டார்போலக் கருதினார். உஎக

பூங்கோயில் அமர்ந்தாரைப் புற்றிடங்கொண் டிருந்தாரை
நீங்காத காதலினால் நினைந்தாரை நினைவாரைப்
பாங்காகத் தாம்முன்பு பணியவரும் பயன்உணர்வார்
"ஈங்குநான் மறந்தேன்"என் றேசறவால் மிகஅழிவார். உஎஉ

மின்னொளிச்செஞ் சடையானை வேதமுதல் ஆனானை
மன்னுபுகழ்த் திருவாரூர் மகிழ்ந்தானை மிகநினைந்து

---

நுகர்ந்தாரென்க. "கண்டுகேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஐம்புலனும் - ஒண்தொடி கண்ணே உள "—திருக்குறள் : 1101.

உகூஅ. எழில் முறுவல் - அழகிய எயிறு (பற்கள்). இரு......பிறழும் - இரு காதின்மேல் கடைப்பார்வை பிறழும். மாழை - மாவடுபோன்ற ; அழகிய; திரண்ட என்னலுமாம். புலவியிலும் புணர்ச்சியிலும் முறையே ஊழி........; புலவியில் ஒருகணம் ஊழியாம் ; புணர்ச்சியில் அவ்வூழி ஒரு கணமாம்.

உகூகூ. அமர்வார் - விரும்புவார் ; நுகர்வார்.

உஎ0. .........பொலிவாகிய சந்தன மணத்தில் கலந்து......;மங்கலநாள் வசந்தம் - திருவிழாவில் வசந்த உற்சவத்தை.

உஎக. ஒண்......இடையே - அழகிய நெற்றியையுடைய பெண்மணிகள் பக்கத்தே சூழக் கொலுமண்டபத்தில். (வீதிவிடங்கப் பெருமானது கொலு மண்டபத்தில்)

உஎஉ. பூங்கோயில் - கமலாலயத்தில். ஏசறவால் - வருத்தத்தால்.

பன்னியசொற் "பத்திமையும் அடிமையையும் கைவிடுவான் "
என்னும்இசைத் திருப்பதிகம் எடுத்தியம்பி இரங்கினர். உஎங

" பத்திமையும் அடிமையையும் கைவிடுவான் பாவியேன்
பொத்தினநோய் அதுஇதனைப் பொருளறிந்தேன் போய்த்தொழுவேன்
முத்தினைமா மணிதன்னை வயிரத்தை மூர்க்கனேன்
எத்தனைநாள் பிரிந்திருக்கேன் என்னாரூர் இறைவனையே "—தேவாரம்.

பின்னொருநாள் திருவாரூர் தனைப்பெருக நினைந்தருளி
உன்னஇனி யார்கோயில் புகுந்திறைஞ்சி ஒற்றிநகர்
தன்னைஅக லப்புக்கார் தாஞ்செய்த சபதத்தால்
முன்னடிகள் தோன்ருது கண்மறைய மூர்ச்சித்தார். உஎச

செய்வதனை அறியாது திகைத்தருளி நெடிதுயிர்ப்பார்
"மைவிரவு கண்ணார்பால் சூளுறவு மறுத்ததனல்
இவ்வினைவந் தெய்தியதாம்" எனநினைந்"தெம் பெருமானை
*எய்தியஇத் துயர்நீங்கப் பாடுவேன்" எனநினைந்து. உஎரு

---

உஎங. பன்னிய சொல் - பலவகைச் சொல்லமைந்த.

உஎச. முன்னே கால் செல்லும் வழியானது தோன்ருது.

உஎரு. சூளுறவு - சபதத்தை ; சத்தியத்தை. நெடிதுயிர்ப்பார் - பெருமூச்சு விடுபவராகிய வன்தொண்டர். வன்தொண்டப் பெருமான் தம்பிரான் தோழர் என்னும் பெருமையுடையார். அவர், பொன் பெண் முதலியவற்றையும் ஆண்டவன் வழிப்பெறும் பெருந்தகைமை வாய்ந்தவர். ஆண்டவனை அவர்தம் அன்புக்கு எளிவரும் வேலையாள் என்றுங் கூறலாம். இத்துணைச் சிறப்பு வாய்ந்த ஒருவர், ஒரு சபதத்தை வழுவிய காரணத்தால், கண்ணிழக்கலானர். இதனல், ஆண்டவன், அன்பர்தம் அன்புக்கு எளிவருவோ னயினும், தவறுதல் கண்டவிடத்து எவராயினும்,அவரை ஒறுக்கும் நீதிச்செல்வன் என்பது நனிவிளங்குதல் காண்க. வன்தொண்டர் சத்திநிபாதச் செல்வராதலின், உடனே "மைவிரவு......இவ்வினைவந் தெய்தியது" என்று உண்மையை உணர்ந்துகொண்டார். உணர்ந்து, அவர் ஆண்டவனைக் கடியாது, தமது குற்றத்தையே கருதியது ஈண்டு நோக்கற்பாலது. ஆண்டவன், அருளாளனதலால், மக்கள் தாங்கள் செய்த குற்றத்தை புணர்ந்து, கழிவிரக்கங் கொண்டு, உண்மையாகக் கசிந்து கசிந்து, உருகி உருகி, அவனை நோக்கி முறையிடுவரேல், அவன் இரங்கி அவர்தங் துயர் தீர்த்தல் ஒருதலை. வன்தொண்டர் பாட்டால் உருகி உருகி அழுதலை இனி அவர் பாடிவரும் தேவாரங்களால் அறியலாம்.

பா - ம்—*வெவ்விய.

### வேறு

"அழுக்கு மெய்கொ"டென் றெடுத்தசொற் பதிகம் ஆதி நீள்புரி அண்ணலை ஓதி, வழுத்து நெஞ்சொடு தாழ்ந்துநின் றுரைப் பார் மாதொர் பாகனார் மலர்ப்ப ம் உன்னி, "இழுக்கு நீக்கிட வேண் டும்"என் றிரந்தே எய்து வெந்துயர்க் கையற வினுக்கும், பழிக்கும் வெள்கிநல் லிசைகொடு பரவிப் பணிந்து சாலவும் பலபல நினைவார்.

"அழுக்கு மெய்கொடுன் திருவடி அடைந்தேன் அதுவும் நான்படப் பாலதொன் றுனற், பிழுக்கை வாரியும் பால்கொள்வர் அடிகேள் பிழைப்ப னாகிலுந் திருவடிப் பிழையேன், வழுக்கி வீழினுந் திருப்பெயர் அல்லால் மற்று நான்அறி யேன்மறு மாற்றம், ஒழுக்க என்கணுக் கோருமருந் துரை யாய் ஒற்றியூ ரெனும் ஊருறை வானே"

"கட்ட னேன்பிறந் தேன்உனக் காளாய்க் காதற் சங்கிலி காரண மாக, எட்டி னாற்றிக ழுந்திரு மூர்த்தி என்செய் வான்அடி யேன்எடுத் துரைக் கேன், பெட்ட னாகிலுந் திருவடிப் பிழையேன் பிழைப்ப னாகிலுந் திரு வடிக் கடிமை, ஒட்டி னேன்எனை நீசெய்வ தெல்லாம் ஒற்றி யூரெனும் ஊருறை வானே"

"ஈன்று கொண்டதோர் சுற்றமொன் றன்றால் யாவ ராகில்என் அன் புடை யார்கள், தோன்ற நின்றருள் செய்தளித் திட்டாற் சொல்லு வாரையல் லாதன சொல்லாய், மூன்று கண்ணுடை யாயடி யேன்கண் கோள்வ தேகணக் குவழக் காகில், ஊன்று கோல்எனக் காவதொன் றருளாய் ஒற்றி யூரெனும் ஊருறை வானே"

"வழித்த லைப்படு வான்முயல் கின்றேன் உன்னைப்போல் என்னைப் பாவிக்க மாட்டேன், சுழித்த லைப்பட்ட நீரது போலச் சுழல்கின் றேன் சுழல் கின்றதென் னுள்ளம், கழித்த லைப்பட்ட நாயது போல ஒருவன் கோல்பற்றிக் கறகற இழுக்கை, ஒழித்து நீயரு ளாயின செய்யாய் ஒற்றி யூரெனும் ஊருறை வானே"

"மற்றுத் தேவரை நினைந்துனை மறவேன் நெஞ்சி னாரொடு வாழவு மாட்டேன், பெற்றி ருந்துபெ றுதொழி கின்ற பேதை யேன்பிழைத் திட்டதை அறியேன், முற்று நீஎனை முனிந்திட அடியேன் கடவ தென்னுனை நான்மற வேனேல், உற்ற நோயுறு பிணிதவிர்த் தருளாய் ஒற்றி யூரெனும் ஊருறை வானே"

"மகத்திற் புக்கதோர் சனிஎனக் கானாய் மைந்த னேமணி யேமண வாளா,அகத்திற் பெண்டுகள் நான்ஒன்று சொன்னால் அழையேற் போதரு டாஎனத் தரியேன், முகத்திற் கண்ணிழந் தெங்ஙனம் வாழ்கேன் முக்க

௩௪௬. கையறவினுக்கும் - செயலற்ற தன்மைக்கும்.

*ஞமுறை யோமறை ஓதி, உகைக்குந் தண்கடல் ஓதம்வந் துலவும் ஒற்றி யூரெனும் ஊருறை வானே"*—தேவாரம்.

அங்கு நாதர்செய் யருளது வாக அங்கை கூப்பிஆ ரூர்தொழ நினைந்தே, பொங்கு காதல்மீ ளாநிலை மையினாற் போது வார்வழி காட்டமுன் போந்து, திங்கள் வேணியார் திருமுல்லை வாயில் சென்றி றைஞ்சிநீ டியதிருப் பதிகம், "சங்கி லிக்காக என்கணை மறைத்தீர்" என்று சாற்றிய தன்மையிற் பாடி. ௨௭௭

"விண்பணிந் தேத்தும் வேதியர் மாதர் வெருவிட வேழமொன் றுரித்தாய்
செண்பகச் சோலை சூழ்திரு முல்லை வாயிலாய் தேவர்தம் அரசே
தண்பொழில் ஒற்றி மாநக ருடையாய் சங்கிலிக் காக என்கண் கொண்ட
பண்பநின் அடியேன் படுதுயர் களையாய் பாசு பதாபரஞ் சுடரே"-தேவாரம்.

தொண்டை மானுக்கன் றருள்கொடுத் தருளுந் தொல்லை வண்புகழ் முல்லைநா யகரைக், "கொண்ட வெந்துயர் களை" கெனப் பரவிக் குறித்த காதலின் நெறிக்கொள வருவார், வண்டு லாமலர்ச் சோலைகள் சூழ்ந்து மாடமாளிகை நீடுவெண் பாக்கம், கண்ட தொண்டர்கள் எதிர்கொள வணங்கிக் காயும் நாகத்தர் கோயிலை அடைந்தார். ௨௭௮

அணைந்த தொண்டர்கள் உடன்வல மாக *அங்கண் நாயகர் கோயில்முன் எய்திக், குணங்கள் ஏத்தியே பரவிஅஞ் சலியாற் குவித்த கைதலை மேற்கொண்டு நின்று, வணங்கி "நீர்மகிழ் கோயி லுளீரே" என்ற வன்தொண்டர்க் கூன்றுகோல் அருளி, இணங்கி லாமொழி யால்"உளோம் போகீர்"என்றி யம்பினர் ஏதிலார் போல. ௨௭௯

வேறு

"பிழையுளன பொறுத்திடுவர்" என்றெடுத்துப் பெண்பாகம்
விழைவடிவிற் பெருமானை வெண்பாக்கம் மகிழ்ந்தானை
இழைஎனமா சுணம்அணிந்த இறையானைப் பாடினார்
மழைதவழும் நெடும்புரிசை நாவலூர் மன்னவனார். ௨௮௦

"பிழையுளன பொறுத்திடுவர் என்றடியேன் பிழைத்தக்கால்
பழியதனைப் பாராதே படலம்என்கண் மறைப்பித்தாய்

---

௨௭௭. அருள் தண்டனையேயாக.

௨௭௮. காயும் நாகத்தர் - கோபிக்கும் பாம்பணிந்த பரமனாது.

௨௭௯. இணக்கமில்லாத மொழியால். ஏதிலார் - அந்நியர்.

௨௮௦. இழைஎன மாசுணம் - ஆபரணமாகப் பாம்பினை. புரிசை - மதில் சூழ்ந்த.

பா - ம்—*அங்க ணாளர்தம்.

குழைவிரவு வடிகாதா கோயில்உளா யோஎன்ன
உழையுடையான் உள்ளிருந்து உளோம்போகீர் என்றானே"

"மான்திகழுஞ் சங்கிலியைத் தந்துவரு பயன்களெல்லாம்
தோன்றஅருள் செய்தளித்தாய் என்றுரைக்க உலகமெல்லாம்
ஈன்றவனே வெண்கோயில் இங்கிருந்தா யோவென்ன
ஊன்றுவதோர் கோல்அருளி உளோம்போகீர் என்றானே"—தேவாரம்.

முன்னின்று முறைப்பாடு போல்மொழிந்த மொழிமாலைப்
பன்னும்இசைத் திருப்பதிகம் பாடியபின் "பற்றாய
என்னுடைய பிரான்அருளிங் கித்தனைகொ லாம்"என்று
மன்னுபெருந் தொண்டருடன் வணங்கியே வழிக்கொள்வார். உஅக

அங்கணர்தம் பதிஅதனை அகன்றுபோய் அன்பருடன்
பங்கயப்பூந் தடம்பணைசூழ் பழையனூர் உழைஎய்தித்
தங்குவார் அம்மைதிருத் தலையாலே வலங்கொள்ளும்
திங்கள்முடி யார்ஆடுந் திருவாலங் காட்டின்அயல். உஅஉ

முன்னின்று தொழுதேத்தி "முத்தா"என் றெடுத்தருளிப்
பன்னும்இசைத் திருப்பதிகம் பாடிமகிழ்ந் தேத்துவார்
அங்கின்று வணங்கிப்போய்த் திருவூறல் அமர்ந்திறைஞ்சிக்
கன்னிமதில் மணிமாடக் காஞ்சிமா நகர்அணைந்தார். உஅங

"முத்தா முத்தி தரவல்ல முகிழ்மென் முலையாள் உமைபங்கா
சித்தா சித்தித் திறங்காட்டுஞ் சிவனே தேவர் சிங்கமே
பத்தா பத்தர் பலர்போற்றும் பரமா பழைய னூர்மேய
அத்தா ஆலங் காடாஉன் னடியார்க் கடியே னாவேனே"—தேவாரம்.

தேனிலவு பொழிற்கச்சித் திருக்காமக் கோட்டத்தில்
ஊனில்வளர் உயிர்க்கெல்லாம் ஒழியாத கருணையினால்
ஆனதிரு அறம்புரக்கும் அம்மைதிருக் கோயிலின்முன்
வானில்வளர் திருவாயில் வணங்கினார் வன்தொண்டர். உஅ

தொழுதுவிழுந் தெழுந்தருளால் துதித்துப்போய்த் தொல்லுலகம்
முழுதும்அளித் தழித்தாக்கும் முதல்வர்திரு ஏகம்பம்
பழுதில்அடி யார்முன்பு புகப்புக்குப் பணிகின்றார்
"இழுதையேன் திருமுன்பே என்மொழிவேன்" என்றிறைஞ்சி.

---

உஅஉ. தாமரை நிறைந்த பெரிய வயல்கள் சூழ்ந்த பழையனூரிலே.
உஅ௫. இழுதையேன் - பேயேன்.

பா - ம்—* அங்கிலையே.

"விண்ணுள்வார் அமுதுண்ண மிக்கபெரு விடமுண்ட
கண்ணுளா! கச்சிஏ கம்பனே! கடையானேன்
எண்ணுத *பிழைபொறுத்திங் கியான்காண எழிற்பவள
வண்ணு!கண் ணளித்தருளாய்" எனவீழ்ந்து வணங்கினர். உஅசு

பங்கயச்செங் கைத்தளிரால் பணிமலர்கொண் டருச்சித்துச்
செங்கயற்கண் மலைவல்லி பணிந்தசே வடிநினைந்து
பொங்கியஅன் பொடுபரவிப் போற்றியஆ ரூராருக்கு
மங்கைதழு வக்குழைந்தார் மறைந்தஇடக் கண்கோடுத்தார். உஅஎ

ஞாலந்தான் இடந்தவனும் நளிர்விசும்பு கடந்தவனும்
மூலந்தான் அறிவரியார் கண்ணளித்து முலைச்சுவட்டுக்
கோலந்தான் காட்டுதலுங் குறுகிவிழுந் தெழுந்துகளித்
"தாலந்தான் உகந்தவன்"என் றெடுத்தாடிப் பாடினர். உஅஅ

"ஆலந் தான்உகந் தமுதுசெய் தானை ஆதி யைஅம ரர்தொழு தேத்தும்
சீலந் தான்பெரி தும்உடை யானைச் சிந்திப் பார்அவர் சிந்தையு ளானை
ஏல வார்குழ லாள்உமை நங்கை என்றும் ஏத்தி வழிபடப் பெற்ற
கால காலனைக் கம்பன்எம் மானைக் காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே"
—தேவாரம்.

பாடிமிகப் பரவசமாய்ப் பணிவார்க்குப் பாவையுடன்
நீடியகோ லங்காட்ட நிறைந்தவிருப் புடன்இறைஞ்சிச்
சூடியஅஞ் சலியினராய்த் தொழுதுபுறம் போந்தன்பு
கூடியமெய்த் தொண்டருடன் கும்பிட்டங் கினிதமர்வார். உஅகூ

மாமலையாள் முலைச்சுவடும் வளைத்தழும்பும் அணிந்தமதிப்
பூமலிவார் சடையாரைப் போற்றிஅரு ளதுவாகத்
தேமலர்வார் பொழிற்காஞ்சித் திருநகரங் கடந்தகல்வார்
பாமலர்மா லைப்பதிகந் திருவாரூர் மேற்பரவி. உகூ0

"அந்தியும்நண் பகலும்"என எடுத்தார்வத் துடன்நசைவால்
"எந்தைபிரான் திருவாரூர் என்றுகொல்எய் துவ"தென்று

---

உஅஅ. ஞால......அரியார் - திருமாலும் பிரமனும் தேடியறியாத சிவபெருமான்.

உகூ0. பார்வதியார் தழுவியபோது உற்ற அவர் தம் முலைச்சுவட்டையும் வளைத் தழும்பையும்.........

உகூக. ஆதரவு வந்தணைய - ஆர்வம் பொங்க.

பா - ம்—*பிழைபொறுத்தின் றியான்.

சந்தைஇசை பாடிப்போய்த் தாங்கரிய ஆதரவு
வந்தணைய அன்பருடன் மகிழ்ந்துவழிக் கொள்கின்றார். ௨௩௧

“அந்தியும் நண்பகலும் அஞ்சுப தஞ்சொல்லி
முந்தின ழும்பழைய வல்வினை மூடாமுன்
சிந்தைப ராமரியாத் தென்திரு வாரூர்புக்
கெந்தைபி ரானுரை என்றுகொல் எய்துவதே”—தேவாரம்.

மன்னுதிருப் பதிகள்தொறும் வன்னியொடு கூவிளமும்
சென்னியிசை வைத்துவந்தார் கோயிலின்முன் சென்றிறைஞ்சிப்
பன்னுதமிழ்த் தொடைசாத்திப் பரவியே போந்தணைந்தார்
அன்னமலி வயல்தடங்கள் சூழ்ந்ததிரு ஆமாத்தூர். ௨௩௨

அங்கணரை ஆமாத்தூர் அழகர்தமை அடிவணங்கித்
தங்கும்இசைத் திருப்பதிகம் பாடிப்போய்த் தாரணிக்கு
மங்கலமாம் பெருந்தொண்டை வளநாடு கடந்தணைந்தார்
செங்கண்வளவன்பிறந்த சீர்நாடு நீர்நாடு. ௨௩௩

“ஓர்ந்தனன் ஓர்ந்தனன் உள்ளத்துள் ளேநின்ற ஒண்பொருள்
சேர்ந்தனன் சேர்ந்தனன் சென்று திருஒற்றி யூர்புக்குச்
சார்ந்தனன் சார்ந்தனன் சங்கிலி மென்தோள் தடமுலை
ஆர்ந்தனன் ஆர்ந்தனன் ஆமாத்தூர் ஐயன் அருளதே”—தேவாரம்.

அந்நாட்டின் மருங்குதிரு அரத்துறையைச் சென்றெய்தி
மின்னாரும் படைமழுவார் விரைமலர்த்தாள் பணிந்தெழுந்து
சொன்மாலை மலர்க்“கல்வாய் அகில்”என்னுந் தொடைசாத்தி
மன்னார்வத் திருத்தொண்ட ருடன்மகிழ்ந்து வைகினார். ௨௩௪

“கல்வாய்அகி லுங்கதிர் மாமணியுங் கலந்துந்தி வருந்நிவ வின்கரை மேல், நெல்வாயில் அரத்துறை நீடுறையும் நிலவெண்மதி சூடிய நின்மலனே, நல்வாயில்செய் தார்நடந் தார் உடுத்தார் நரைத்தார் இறந்தார் என்றுநா னிலத்திற், சொல்லாய்க் கழிகின்ற தறிந்தடியேன் தொடர்ந் தேன்உய்யப் போவதோர் சூழல்சொல்லே”

“புற்றாட ரவம்அரை யார்த்துகந்தாய் புனிதாபொரு வெள்விடை யூர்தியினாய், எற்றேயொரு கண்ணிலன் நின்னையல்லால் நெல்வாயில் அரத்துறை நின்மலனே, மற்றேல்ஒரு பற்றிலன் எம்பெருமான் வண்டார் குழ லாள்மங்கை பங்கினனே, அற்றார்பிற விக்கடல் நீந்தியேறி அடி யேன்உய்யப் போவதோர் சூழல்சொல்லே”—தேவாரம்.

---

௨௩௨. கூவிளமும் - வில்வத்தையும்.
௨௩௩. கோச்செங்கட் சோழநாயனார் பிறந்த.........

பரமர்திரு அரத்துறையைப் பணிந்துபோய்ப் பலபதிகள்
விரவிமழ விடைஉயர்த்தார் விரைமலர்த்தாள் தொழுதேத்தி
உரவுநீர்த் தடம்பொன்னி அடைந்தன்ப ருடன்ஆடி
அரவணிந்தார் அமர்ந்ததிரு வாவடுதண் டுறைஅணைந்தார். ௨௬௫

அங்கணைவார் தமைஅடியார் எதிர்கொள்ளப் புக்கருளிப்
பொங்குதிருக் கோயிலினைப் புடைவலங்கொண் டுள்ளணைந்து
"கங்கைவாழ் சடையாய்!ஓர் கண்ணிலேன்" எனக்கவல்வார்
"இங்கெனக்கார் உற"வென்னுந் திருப்பதிகம் எடுத்திசைத்தார்.

"கங்கை வாழ்சடை யாய்கண நாதா கால காலனே காமனுக் கனலே
பொங்கு மாகடல் விடமிடற் றானே பூத நாதனே புண்ணியா புனிதா
செங்கண் மால்விடை யாய்தெளி தேனே தீர்த்த னேதிரு வாவடு துறையுள்
அங்க ணாஎனை அஞ்சலென் றருளாய் ஆரெ னக்குற வமரர்க ளேறே"

"மண்ணின் மேல்மயங் கிக்கிடப் பேனை வலிய வந்தெனை ஆண்டு கொண் டானே, கண்ணி லேன்உடம் பில்அடு நோயாற் கருத்த ழிந்துனக் கேபொறை யானேன், தெண்ணி லாவெறிக் குஞ்சடை யானே தேவ னேதிரு வாவடு துறையுள், அண்ண லேஎனை அஞ்சலென் றருளாய் ஆரெ னக்குற வமரர்க ளேறே"—**தேவாரம்.**

திருப்பதிகங் கொடுபரவிப் பணிந்துதிரு வருளாற்போய்
விருப்பினொடுந் திருத்துருத்தி தனைமேவி விமலர்கழல்
அருத்தியினாற் புக்கிறைஞ்சி "அடியேன்மேல் உற்றபிணி
வருத்தம்எனை ஒழித்தருள வேண்டும்"என வணங்குவார். ௨௬௭

பரவியே பணிந்தவர்க்குப் பரமர்திரு வருள்புரிவார்
"விரவியஇப் பிணிஅடையத் தவிர்ப்பதற்கு வேறாக
வரமலர்வண் டறைதீர்த்த வடகுளத்துக் குளி"என்னக்
கரவில்திருத் தொண்டர்தாங் கைதொழுது புறப்பட்டார். ௨௬௮

மிக்கபுனல் தீர்த்தத்தின் முன்அணைந்து வேதமெலாம்
தொக்கவடி வாயிருந்த துருத்தியார் தமைத்தொழுது

---

௨௬௫. உரவு நீர் தடம் பொன்னி - பரந்த நீரையுடைய பெரிய காவிரியை. ௨௬௭. அருத்தியினால் - ஆர்வத்தால்.

௨௬௮. பிணிமுழுவதும் வேறுபடத் தவிர்ப்பதற்கு. வரமலர் - தாமரை மலரில்.

**௨௬௯.** இடையில் சேர்ந்த பிணியாதலின் "புதிய பிணி" என்றார்.

புக்கதனில் முழுகுதலும் புதியபிணி அது*நீங்கி
அக்கணமே மணியொளிசேர் திருமேனி ஆயினார். ௨கூகூ

கண்டவர்கள் அதிசயிப்பக் கரையேறி உடைபுனைந்து
மண்டுபெருங் காதலினாற் கோயிலினை வந்தடைந்து
தொண்டரெதிர் "மின்னுமா மேகம்" எனுஞ் சொற்பதிகம்
எண்டிசையும் அறிந்துய்ய ஏழிசையால் எடுத்திசைத்தார். ௩00

"மின்னுமா மேகங்கள் பொழிந்திழிந் தருவி வெடிபடக் கரையொடுந் திரைகொணர்ந் தெற்றும், அன்னமாங் காவிரி அகன்கரை உறைவார் அடியிணை தொழுதெழும் அன்பராம் அடியார், சொன்னவா றறிவார் துருத்தியார் வேள்விக் குடியுளார் அடிகளைச் செடியனேன் நாயேன், என்னை நான் மறக்குமா றெம்பெரு மானை என்னுடம் படும்பிணி இடர்கெடுத் தானை"—தேவாரம்.

பண்ணிறைந்த தமிழ்பாடிப் பரமர்திரு வருள்மறவா
தெண்ணிறைந்த தொண்டருடன் பணிந்தங்கண் †உறைந்தேகி
உள்நிறைந்த பதிபிறவும் உடையவர்தாள் வணங்கிப்போய்க்
கண்ணிறைந்த திருவாரூர் முன்தோன்றக் காண்கின்றார். ௩0க

அன்றுதிரு நோக்கொன்றால் ‡ஆரக்கண் டின்புறார்
நின்றுநில மிசைவீழ்ந்து நெடிதுயிர்த்து நேர்இறைஞ்சி
வன்தொண்டர் திருவாரூர் மயங்குமா லையிற்புகுந்து
துன்றுசடைத் தூவாயர் தமைமுன்னத் தொழஅணைந்தார். ௩0௨

பொங்குதிருத் தொண்டருடன் உள்ளணைந்து புக்கிறைஞ்சித்
துங்கஇசைத் திருப்பதிகம் "தூவாயா" என்றெடுத்தே
"இங்கெமது துயர்களைந்து கண்காணக் காட்டாய்" என்
றங்கணர்தம் முன்நின்று பாடிஅருந் தமிழ்புனைந்தார். ௩0௩

" தூவாயா தொண்டுசெய் வார்படு துக்கங்கள்
காவாயே கண்டுகொண் டாரைவர் காக்கிலும்
நாவாயால் உன்னையே நல்லன சொல்லுவேற்
காவாஎன் பரவையுள் மண்டளி யம்மானே "—தேவாரம்.

ஆறணியுஞ் சடையாரைத் தொழுதுபுறம் போந்தங்கண்
வேறிருந்து திருத்தொண்டர் §விரவுவார் உடன்கூடி

௩0௨. இரவு பகல் மயங்கிய அந்தி வேளையில். தூவாயர்தமை - சிவபெருமானை.

பா - ம்—*நீக்க. †உறைந்தேத்தி. ‡ஆரக்கண் டின்புற்றார். §விரவஅவ ருடன்கூடி.

ஏறுயர்த்தார் திருமூலட் டானத்துள் இடைதெரிந்து
மாறில்திரு அத்தயா மத்திறைஞ்ச வந்தணைந்தார். ௩௦௪

ஆதிதிரு அன்பர்எதிர் அணையஅவர் முகநோக்கிக்
கோதில்இசை யாழ்''குருகு பாய''எனக் கோத்தெடுத்தே
ஏதிலார் போல்வினவி ஏசறவால் திருப்பதிகம்
காதல்புரி கைக்கிளையாழ் பாடியே கலந்தணைவார். ௩௦௫

"குருகு பாயக்கொழுங் கரும்புகள் நெரிந்தசா
றருகு பாயும்வயல் அந்தண்ஆ ரூரரைப்
பருகு மாறும்பணிந் தேத்துமா றுந்நினைந்
தருகு மாறும்இவை யுணர்த்தவல் லீர்களே"—தேவாரம்.

சீர்பெருகுந் திருத்*தேவா சிரியன்முன் சென்றிறைஞ்சிக்
கார்விரவு கோபுரத்தைக் கைதொழுதே உட்புகுந்து
தார்பெருகு பூங்கோயில் தனைவணங்கிச் சார்ந்தணைவார்
ஆர்வமிகு பெருங்காத லால்அவனி மேல்வீழ்ந்தார். ௩௦௬

வீழ்ந்தெழுந்து கைதொழுது முன்நின்று விம்மியே
வாழ்ந்தமலர்க் கண்ணொன்றால் ஆராமல் மனமழிவார்
"ஆழ்ந்ததுயர்க் கடலிடைநின் றடியேனை எடுத்தருளித்
தாழ்ந்தகருத் தினைநிரப்பிக் கண்தாரும்" எனத்தாழ்ந்தார். ௩௦௭

திருநாவ லூர்மன்னர் திருவாரூர் †வீற்றிருந்த
பெருமானைத் திருமூலட் டானஞ்சேர் பிஞ்ஞகனைப்
பருகாஇன் னமுதத்தைக் கண்களாற் பருகுதற்கு
மருவார்வத் துடன்"மற்றைக் கண்தாரீர்" எனவணங்கி. ௩௦௮

வேறு

"மீளா அடிமை" எனஎடுத்து மிக்க தேவர் குலமெல்லாம்
மாளா மேநஞ் சுண்டருளி மன்னி இருந்த பெருமானைத்

---

௩௦௪. இடை - சமயம். அர்த்த சாமத்தில்.

௩௦௫. ஆதி.........அணைய - சிவனடியார்கள் எதிரே வர. ஏதிலார் - அந்நியர். ஏசறவால் - வருத்தத்தால். கைக்கிளையால் - ஒருதலைக் காமத்தால்.

௩௦௭. ஒரு கண் இன்மையால் "தாழ்ந்த கருத்தினை நிரப்பி" என்றார்.

௩௦௮. பிஞ்ஞகனை - தலைக்கோலமுடைய சிவபெருமானை.

௩௦௯. தாள் ஆதரிக்கும் - திருவடிகளை விரும்பிப் போற்றும். அடிமையும் திருத்தோழமையும் ஆகும் திறத்தால்.

பா - ம்—*தேவா சிரியனை. †வீற்றிருக்கும்.

"தாளா தரிக்கும் மெய்யடியார் தமக்காம் இடர்நீர் தரியீர்"என்
றுளாந் திருத்தோ ழமைத்திறத்தால் அஞ்சொற் பதிகம் பாடினார்.

"மீளா அடிமை உமக்கே ஆளாய்ப் பிறரை வேண்டாதே
மூளாத் தீப்போல் உள்ளே கனன்று முகத்தான் மிகவாடி
ஆளா யிருக்கும் அடியார் தங்கள் அல்லல் சொன்னக்கால்
வாளாங் கிருப்பீர் திருவா ரூரீர் வாழ்ந்து போதீரே"

"விற்றுக் கொள்வீர் ஒற்றி யல்லேன் விரும்பி ஆட்பட்டேன்
குற்ற மொன்றுஞ் செய்த தில்லை கொத்தை யாக்கினீர்
எற்றுக் கடிகேள் என்கண் கொண்டீர் நீரே பழிபட்டீர்
மற்றைக் கண்தான் தாரா தொழிந்தால் வாழ்ந்து போதீரே"

—தேவாரம்.

பூத முதல்வர் புற்றிடங்கொண் டிருந்த புனிதர் வன்தொண்டர்
காதல் புரிவே தனைக்கிரங்கிக் கருணைத் திருநோக் களித்தருளிச்
சீத மலர்க்கண் கொடுத்தருளச் செவ்வே விழித்து முகமலர்ந்து
பாத மலர்கள் மேற்பணிந்து வீழ்ந்தார் உள்ளம் பரவசமாய். ௩கo

விழுந்தும் எழுந்தும் பலமுறையால் மேவிப் பணிந்து மிகப்பரவி
*எழுந்த களிப்பி னல்ஆடிப் பாடி இன்ப வெள்ளத்தில்
அழுந்தி இரண்டு கண்ணாலும் அம்பொற் புற்றின் இடைஎழுந்த
செழுந்தண் பவளச் சிவக்கொழுந்தின் அருளைப் பருகித் திளைக்கின்றார்.

காலம் நிரம்பத் தொழுதேத்திக் கனக மணிமா ளிகைக்கோயில்
ஞாலம் உய்ய வருநம்பி நலங்கொள் விருப்பால் வலங்கொண்டு
மாலும் அயனும் முறைஇருக்கும் வாயில் கழியப் புறம்போந்து
சீல முடைய அன்பருடன் தேவா சிரியன் மருங்கணைந்தார். ௩கஉ

நங்கை பரவை யார்தம்மை நம்பி பிரிந்து போனதற்பின்
தங்கு மணிமா ளிகையின்கண் தனிமை கூரத் தளர்வார்க்குக்
கங்குல் பகலாய்ப் பகல்கங்குல் ஆகிக் கழியா நாளெல்லாம்
பொங்கு காதல் மீதூரப் புலர்வார் சிலநாள் போனதற்பின். ௩க௩

---

௩கo. பூத முதல்வர் - உயிர்கட்குத் தலைவர்; பசுபதி. வலக்கண்ணைக் கொடுத்தருள.

௩கக. திளைக்கின்றார் - இடையீடின்றி இன்பநுகர்கிறார்.

௩கஉ. முறையிருக்கும் - தங்கள் குறைகளை முறையிட முறை முறையே காத்திருக்கும்.

௩க௩. இரவுக்குரியன பகலிலும், பகலுக்குரியன இரவிலும் நிகழலால் "கங்குல்......கழியா" என்றார். நாளெல்லாம்......கழியா.

பா - ம்—*எழுந்த.

*செம்மை நெறிசேர் திருநாவ லூரர் ஒற்றி யூர்சேர்ந்து
கொம்மை முலையார் சங்கிலியார் தம்மைக் குலவு மணம்புணர்ந்த
மெய்ம்மை வார்த்தை தாம்அவர்பால் விட்டார் வந்து கட்டுரைப்பத்
தம்மை அறியா வெகுளியினல் தரியா நெஞ்சி னெடுந்தளர்வார். ௫௧௪*

*மென்பூஞ் சயனத் திடைத்துயிலும் மேவார் விழித்தும் இனிதமரார்
பொன்பூந் தவிசின் *மிசையினிரார் நில்லார் செல்லார் புறம்பொழியார்
†மன்பூ வாளி மழைகழியார் மறவார் நினையார் ‡வாய்விள்ளார்
என்பூ டுருக்கும் புலவியோ பிரிவோ இரண்டின் இடைப்பட்டார்.*

*ஆன கவலைக் கையறவால் அழியும் நாளில் ஆரூரர்
கூனல் இளவெண் பிறைக்கண்ணி முடியார் கோயில் முன்குறுகப்
பானல் விழியார் மாளிகையிற் பண்டு செல்லும் பரிசினல்
போன பெருமைப் பரிசனங்கள் புகுதப் பெருது புறநின்ருர். ௫௧௬*

*நின்ற நிலைமை யவர்கள்சிலர் நிலவு திருவா ரூரர்எதிர்
சென்று மொழிவார் "திருஒற்றி யூரில் நிகழ்ந்த செய்கைஎலாம்
ஒன்றும் ஒழியா வகையறிந்தங் குள்ளார் தள்ள மாளிகையில்
இன்று புறமுஞ் சென்றெய்தப் பெற்றி லோம்"என் றிறைஞ்சினர்.*

*மற்ற மாற்றங் கேட்டழிந்த மனத்த ராகி வன்தொண்டர்
"உற்ற இதனுக் கினிஎன்னே செயல்"என் றுணர்வார் உலகியல்பு
கற்ற மாந்தர் சிலர்தம்மைக் காதற் பரவை யார்கொண்ட
செற்ற நிலைமை அறிந்தவர்க்குத் தீர்வு சொல்லச் செலவிட்டார்.*

*நம்பி அருளாற் சென்றவரும் நங்கை பரவை யார்தமது
பைம்பொன் மணிமா ளிகைஅணைந்து பண்பு புரியும் பாங்கினல்
வெம்பு புலவிக் கடல்அழுந்தும் மின்னே ரிடையார் முன்எய்தி
"எம்பி ராட்டிக் கிதுதகுமோ" என்று பலவும் §எடுத்துரைப்பார்.*

---

௫௧௫. தவிசின்மீது இரார் - ஆசனத்தின்மீது இரார். மன்......கழியார் - மன்மதனது புஷ்ப பாணமாகிய மழையைக் கழியார்.

௫௧௬. கையறவால் - செயலற்ற தன்மையால்; வருத்தத்தால். பிறைக் கண்ணி - பிறையாகிய கொண்டைமாலையை யணிந்த. பானல் விழியார் - குவளைபோலுங் கண்களையுடைய பரவையார். பண்டு செல்லும் பரிசினல் போன - பழையபடி போவதுபோலப் போன.

௫௧௭. அங்குள்ளார் - தோழிகள். ௫௧௮. செற்றம் - கோபம்.

௫௧௯. பண்பு புரியும் பாங்கினல் - ஒழுக்கத்தை நாடி அதைக் கடைப் பிடித்த தன்மையால்.

பா - ம்—*மிசையிரார். †வன். ‡என்செய்வார். §எடுத்துரைத்தார்.

பேத நிலைமை நீதியினாற் பின்னும் பலவும் சொன்னவர்முன்
மாத ரவரும் மறுத்துமனங் கொண்ட செற்றம் மாற்றாராய்
"ஏதம் மருவும் அவர்திறத்தில் இந்த மாற்றம் இயம்பில்உயிர்
போதல் ஒழியா" தெனஉரைத்தார் அவரும் அஞ்சிப் புறம்போந்தார்.

போந்து புகுந்த படியெல்லாம் பூந்தண் பழன முனைப்பாடி
வேந்தர் தமக்கு விளம்புதலும் வெருவுற் றயர்வார் துயர்வேலை
நீந்தும் புணையாந் துணைகாணார் நிகழ்ந்த சிந்தா குலம்நெஞ்சில்
காந்த அழிந்து தோய்ந்தெழார் கங்குல் இடையா மக்கடலுள். கூஉக

அருகு சூழ்ந்தார் துயின்றுதிரு அத்த யாமம் பணிமடங்கிப்
பெருகு புவனம் சலிப்பின்றிப் பேயும் உறங்கும் பிறங்கிருள்வாய்
முருகு விரியும் மலர்க்கொன்றை முடிமேல் அரவும் இளமதியும்
செருகும் ஒருவர் தோழர்தனி வருந்தி இருந்து சிந்திப்பார். கூஉஉ

"முன்னை வினையால் இவ்வினைக்கு மூலம் ஆனாள் பால்அணைய
என்னை உடையாய்! நினைந்தருளாய் இந்த யாமத் தெழுந்தருளி
அன்னம் அனையாள் புலவியினை அகற்றில் உய்ய லாம்,அன்றிப்
பின்னை இல்லைச் செயல்"என்று பெருமான் அடிகள் தமைநினைந்தார்.

அடியார் இடுக்கண் தரியாதார் ஆண்டு கொண்ட தோழர்குறை
முடியா திருக்க வல்லரே முற்றும் அளித்தாள் பொற்றளிர்க்கைத்
தொடியார் தழும்பும் முலைச்சுவடும் உடையார் தொண்டர் தாங்காணும்
படியால் அணைந்தார் நெடியோனும் காணா அடிகள் படிதோய. கூஉச

கூஉ0. பேத நிலைமை நீதியினால் - "ஊடலுக்குரிய ஒழுக்க நீதியால்"—பழைய குறிப்புரை; "வெவ்வேறு வகைப்படும் நியாயங்களினால்"—இராம லிங்க சுவாமிகள். ஏதம்......ஒழியாது - குற்றம் பொருந்திய நம்பியாரூரர் சார்பாக இம்மொழியை வலியுறுத்திப் பேசுவீராயின், என்னுயிர் நீங்குதல் தவறாது.

கூஉக. பழனம் - வயல்கள் சூழ்ந்த. வெருவுற்று அயர்வார் - நடுக்குற்றுச் சோர்வார். துயர் வேலை - துன்பக் கடலை. காந்த - முதிர்ந்து வேக. கங்குல்... கடலுள் - இரவில், அர்த்த சாமமென்னுங் கடலுள்.

கூஉஉ. திரு அர்த்தசாமப் பூசையும் முடிந்து. பிறங்கு இருள்வாய் - செறிந்த இருளிலே ; அர்த்தராத்திரியிலே. முருகு - வாசனை.

கூஉச. வல்லரே - வல்லரோ? முற்றும் அளித்தாள் - உமையம்மையார். தொடியார் தழும்பும் - வளைத்தழும்பும்.

பா - ம்—*என்னை யுடையான் நினைந்தருளில்.

நம்பி ராஞர் எழுந்தருளத் தாங்கற் கரிய மகிழ்ச்சியினல்
கம்பி யாநின் றவயவங்கள் கலந்த புளகம் மயிர்முகிழ்ப்ப
நம்பி யாரு ரரும்எதிரே நளின மலர்க்கை தலைக்குவிய
அம்பி காவல் லவர்செய்ய அடித்தா மரையின் கீழ்வீழ்ந்தார். ௩உரு

விழுந்து பரவி மிக்கபெரு விருப்பி ளேடும் எதிர்போற்றி
எழுந்த நண்பர் தமைநோக்கி "என்நீ யுற்ற?" தென்றருளத்
தொழுந்தங் குறையை விளம்புவார் "யானே *தொடங்குந் துரிசிடைப்பட்
டுழுந்தும் என்னை இன்னம்எடுத் தாள வேண்டும் உமக்"கென்று.

"அடியேன் †அங்குத் திருஒற்றி யூரில் நீரே அருள்செய்ய
வடிவேல் ஒண்கண் சங்கிலியை மணஞ்செய் தணைந்த திறமெல்லாம்
‡கொடியே ரிடையாள் பரவைதான் அறிந்து தன்பால் யான்குறுகில்
'முடிவேன்' என்று துணிந்திருந்தாள் §என்நான் செய்வ?" தெனமொழிந்து.

"நாயன் நீரே நான்உமக்கிங் கடியே ளுகில் நீர்எனக்குத்
தாயின் நல்ல தோழருமாம் தம்பி ராஞ ரேயாகில்
ஆய அறிவும் இழந்தழிவேன் அயர்வு நோக்கி அவ்வளவும்
போய்இவ் விரவே பரவையுறு புலவி ||தீர்த்துத் தாரும்"என. ௩உஅ

அன்பு வேண்டுந் தம்பெருமான் அடியார் வேண்டிற் றேவேண்டி
முன்பு நின்று விண்ணப்பஞ் செய்த நம்பி முகநோக்கித்
"துன்பம் ஒழிநீ யாம்உனக்கோர் தூத ளுகி இப்பொழுதே
பொன்செய் மணிப்பூண் பரவைபால் போகின் றேம்"என் றருள்செய்தார்

எல்லை இல்லாக் ¶களிப்பினராய் இறைவர் தாளில் வீழ்ந்தெழுந்து
வல்ல பரிசெல் லாந்துதித்து வாழ்ந்து $நின்ற வன்தொண்டர்

௩உரு. அவயவங்கள் கம்பியா (நடுங்கி) நின்று. நளினமலர் - தாமரைமலர் போலும். அம்பிகாவல்லவர் - அம்பிகை நாயகர்; சிவபெருமான்; வல்லவர் என்பதை,வலவர் என்பதன்விரித்தல் விகாரமாக்கொண்டு அம்பிகையை இடப்பாகங் கொண்டவர் என்று கூறுதலுமொன்று.

௩உகூ. தொடங்கும் துரிசிடைப்பட்டு - மேற்கொண்ட குற்றத்துள் அகப்பட்டு; ...உமக்குக் கடமை என்று.

௩உஎ. கொடிபோன்ற (ஏர் - உவம உருபு).

௩உஅ. நாயகராகிய நீரே. பொருந்திய அறிவும்......

௩௩೦. வல்ல பரிசெல்லாம் துதித்து - தாம் உணரவல்ல இயல்புகளையெல்லாம் துதித்து; கூடிய வகைகளிலெல்லாம் துதித்து. வாழ்ந்து-மகிழ்ந்து. ஈண்டு-விரைய.

பா - ம்—*தொடக்குத். †வணங்கும். ‡கொடிசே ரிடையாள். §என்னேசெய்வ. ||தீர்த்தாண் டருளும். ¶களிப்பினல். $நின்று.

"'முல்லை முகைவெண் நகைப்பரவை முகில்சேர் மாடத் திடைச்செல்ல
நில்லா தீண்ட எழுந்தருளி நீக்கும் புலவி" எனத்தொழுதார். ௩௩௦

அண்டர் வாழக் கருணையினால் ஆல காலம் அமுதாக
உண்ட நீலக் கோலமிடற் றேருருவர் இருவர்க் கறிவரியார்
வண்டு வாழும் மலர்க்கூந்தல் பரவை யார்மா ளிகைநோக்கித்
தொண்ட னார்தம் துயர்நீக்கத் தூத னாராய் எழுந்தருள. ௩௩௧

*தேவா சிரியன் முறையிருக்குந் தேவ ரெல்லாஞ் சேவித்துப்
போவார் தம்மில் வேண்டுவார் போத ஒழிந்தார் †புறத்தொழிய
ஓவா அணுக்கச் சேவகத்தில் உள்ளோர் பூத கணநாதர்
மூவா முனிவர் யோகிகளின் முதலா னார்கள் முன்போத. ௩௩௨

*அருகு பெரிய தேவருடன் அணைந்து வரும்அவ் விருடிகளும்
மருவு நண்பு நிதிக்கோனும் முதலா யுள்ளோர் மகிழ்ந்தேத்தத்
தெருவும் விசும்பும் நிறைந்துவிரைச் செழும்பூ மாரி பொழிந்தலையப்
பொருவில் அன்பர் விடுந்தூதர் புனித வீதி யினிற்போத. ௩௩௩

*"மாலும் அயனும் காணாதார் மலர்த்தாள் பூண்டு வந்திறைஞ்சும்
காலம் இது"என் றங்கவரை அழைத்தால் என்னக் கடல்விளைத்த
ஆலம் இருண்ட கண்டத்தான் அடித்தா மரைமேற் சிலம்பொலிப்ப
நீல மலர்க்கண் பரவையார் திருமா ளிகையை நேர்நோக்கி. ௩௩௪

இறைவர் விரைவின் எழுந்தருள எய்தும் அவர்கள் பின்தொடர
அறைகொள் திரைநீர் தொடர்சடையில் அரவு தொடர அரியஇளம்
பிறைகொள் அருகு நறைஇதழிப் பிணையல் சுரும்பு தொடரஉடன்
மறைகள் தொடர வன்தொண்டர் மனமும் தொடர வரும்பொழுது.

பெருவீ ரையினும் மிகமுழங்கிப் பிறங்கு மதகுஞ் சரம்உரித்து
மருவீர் உரிவை புனைந்தவர்தம் மருங்கு சூழ்வார் நெருங்குதலால்

---

௩௩௨. தேவாசிரிய மண்டபத்தில் முறையே இருக்கும்......உடன் போக மற்றவர் புறத்தொழிய நீங்காத அணுக்கச்சேவகர்களாகிய நந்தி முதலியோர்...

௩௩௩. பொருவில் அன்பர் - ஒப்பற்ற அன்பராகிய வன்தொண்டர்.

௩௩௪. அவரை - அவ்விருவரையும்.

௩௩௫. உடன் சென்றவர்கள் பின்தொடர. அறை...தொடர் - ஒலித் தலைக்கொண்ட அலைகளையுடைய கங்கை நீர் தொடரும். நறை...சுரும்பு - தேன் சிந்தும் கொன்றை மாலையில் வண்டுகள்.

*௩௩௨, ௩௩௩, ௩௩௪—இம்மூன்றும் சில பிரதிகளில் இல்லை.

பா - ம்—†புறத்தணைய.

திருவீ தியினில் அழகர்அவர் மகிழுஞ் செல்வத் திருவாரூர்
ஒருவீ தியிலே சிவலோகம் முழுதுங் காண உளதாமால். ௩௩௬

ஞாலம் உய்ய எழுந்தருளும் நம்பி தூதர் பரவையார்
கோல மணிமா ளிகைவாயில் குறுகு வார்முன் கூடத்தம்
பாலங் கணைந்தார் புறநிற்பப் பண்டே தம்மை அர்ச்சிக்கும்
சீலம் உடைய மறைமுனிவ ராகித் தனியே சென்றணைந்தார். ௩௩௭

சென்று மணிவா யிற்கதவஞ் செறிய அடைத்த அதன் முன்பு
நின்று *"பாவாய்! திறவாய்"என் றழைப்ப நெறிமென் குழலாரும்
ஒன்றுந் துயிலா துணர்ந்தயர்வார் "உடைய பெருமான் பூசனைசெய்
துன்றும் புரிநூல் மணிமார்பர் போலும் அழைத்தார்" எனத்துணிந்து.

"பாதி மதிவாழ் முடியாரைப் பயில்பூ சனையின் பணிபுரிவார்
பாதி இரவில் இங்கணைந்த தென்னோ!" என்று பயமெய்திப்
பாதி உமையாள் திருவடிவிற் பரம ராவ தறியாதே
பாதி மதிவாள் நுதலாரும் பதைத்து வந்து கடைதிறந்தார். ௩௩௯

மன்னும் உரிமை வன்தொண்டர் †வாயில் தூதா வாயிலிடை
முன்னின் றாரைக் கண்டிறைஞ்சி "முழுதும் உறங்கும் பொழுதின்கண்
என்னை ஆளும் பெருமான்இங் கெய்தி அருளி னீரென்ன
பின்னு மணிநூல் அணி‡மார்பீர் எய்த வேண்டிற் றென்?"என்றார்.

வேறு

கங்கைநீர் கரந்த வேணி கரந்தவர் அருளிச் செய்வார்
"நங்கைநீ மறாது செய்யின் §நான்வந்த துரைப்ப" தென்ன

௩௩௬. பெரு...மருங்கு - பெரிய கடலைப் பார்க்கினும் மிக முழங்கி விளங்கும் மதயானையை உரித்துக் குளிர்ச்சி பொருந்திய தோலைப் போர்த்தவராகிய சிவபிரான் பக்கத்தே.

௩௩௭. தூதர்......குறுகுவாராய்.

௩௩௮. செறிய அடைத்த - நன்றாக (நெருங்க) அடைத்த. நெறித்த மெல்லிய கூந்தலையுடைய பரவையாரும். ஒன்றும்......அயர்வார்-சிறிதும் துயிலாது கண் விழித்து (பலவாறு எண்ணி எண்ணி) வருந்துபவராய். உடைய பெருமான் - எல்லாரையும் ஆளாக உடைய சிவபெருமானை. ஒன்றும்...அயர்வாராகிய வன்தொண்டரை ஆளாகவுடைய பெருமான் என்று கொள்ளலுமாம்.

௩௪௦. வன்தொண்டர் காரணமாகத் தூதாகி. அருளினர் போல.

பா - ம்—*பாவாய்! என்றழைப்ப நெறித்துச் சுழல்மென் குழலாரும். †விடுத்த தூதர். ‡மார்பர். §நான்வந்ததுரைப்பேன்" என்ன.

அங்கயல் விழியி னாரும் "அதனைநீர் அருளிச் செய்தால்
இங்கெனக் கிசையு மாகில் இசையலாம்" என்று சொல்லி. ௩௪௧

"என்னினைந் ததனைந் தென்பால் இன்னதென் றருளிச் செய்தால்
பின்னைய தியலு மாகில் ஆம்"எனப் பிரானார் தாமும்
"மின்னிடை மடவாய்! நம்பி வரஇங்கு வேண்டும்" என்ன
நன்னுத லாருஞ் "சால நன்று!நம் பெருமை" என்பார். ௩௪௨

"பங்குனித் திருநா ளுக்குப் பண்டுபோல் வருவா ராகி
இங்கெனைப் பிரிந்து போகி ஒற்றியூர் எய்தி அங்கே
சங்கிலித் தொடக்குண் டாருக் கிங்கொரு சார்வுண் டோ?நீர்
கங்குலின் வந்து சொன்ன காரியம் அழகி!" தென்றார். ௩௪௩

நாதரும் அதனைக் கேட்டு "நங்கைநீ நம்பி செய்த
ஏதங்கள் மனத்துக் கொள்ளா தெய்திய வெகுளி நீங்கி
நோதக ஒழித்தற் கன்றோ நுன்னையான் வேண்டிக் கொண்ட
தாதலின் மறுத்தல் செய்ய அடா"தென அருளிச் செய்தார். ௩௪௪

அருமறை முனிவ ரான ஐயரைத் தைய லார்தாம்
"†கருமம்ஈ தாக நீர்இக் கடைத்தலை ‡வருகை மற்றும்
பெருமைக்குத் தகுவ தன்றால் ஒற்றியூர் உறுதி பெற்றார்
வருவதற் கிசையேன் நீரும் போம்"என மறுத்துச் சொன்னார். ௩௪௫

நம்பர்தாம் அதனைக் கேட்டு நகையும்உட் கொண்டு மெய்ம்மைத்
தம்பரி சறியக் காட்டார் தனிப்பெருந் தோழ னார்தம்
வெம்புறு வேட்கை காணுந் திருவிளை யாட்டின் மேவி
வம்பலர் குழலி னார்தாம் மறுத்ததே கொண்டு மீண்டார். ௩௪௬

தூதரைப் போக விட்டு வரவுபார்த் திருந்த தொண்டர்
"நாதரை அறிவி லாதே நன்னுதல் புலவி §நீக்கிப்

---

௩௪௧. கங்கைநீர் மறைந்த சடையை மறைத்து வந்தவராகிய இறைவன்

௩௪௩. பங்குனித் திருநாளுக்குப் பொன் முதலியன கொண்டு முன் போல வருவாராகி.

௩௪௪. நோதக ஒழித்தற் கன்றோ - துன்பமுறுதலை நீக்குதற்கன்றோ "காதலர் பிரிந்த மாதர் நோதக "—சிலப்பதிகாரம் : ௪. அந்திமாலை. ௫ (நோவுதக - அடியார்க்கு நல்லார்).

௩௪௬. திருவிளையாட்டில் விருப்புற்று.

பா - ம்—*வரப்பெற. †கரும்ம் ஈதாகில். ‡வருதல் ஈந்தம். §நீக்கப்.

போதரத் தொழுதேன்" என்று புலம்புவார் பரவை யாரைக்
காதலில் இசைவு கொண்டு வருவதே கருத்துட் கொள்வார். ௩௪௭

"போய்அவள் மனையில் நண்ணும் புண்ணியர் என்செய் தாரோ
நாயனார் தம்மைக் கண்டால் நன்னுதல் மறுக்கு மோதான்
ஆயஎன் அயர்வு தன்னை அறிந்தெழுந் தருளி னார்தாம்
சேயிழை துனிதீர்த் தன்றி *மீள்வது செய்யார்" என்று. ௩௪௮

வழிஎதிர் கொள்ளச் செல்வர் வரவுகா ணாது மீள்வர்
அழிவுற மயங்கி நிற்பர் அசைவுடன் இருப்பர் "நெற்றி
விழியவர் தாழ்த்தார்" என்று மீளவும் எழுவர் மாரன்
பொழிமலர் மாரி வீழ ஒதுங்குவர் புன்க ணுற்றார். ௩௪௯

பரவையார் தம்பால் நம்பி †தூதராம் பாங்கிற் போன
அரவணி சடையார் மீண்டே ‡அறியுமா றணையும் போதில்
இரவுதான் பகலாய்த் தோன்ற எதிரெழுந் தணையை விட்ட
உரவுநீர் வெள்ளம் போல ஓங்கிய களிப்பிற் சென்றார். ௩௫௦

சென்றுதம் பிரானைத் தாழ்ந்து திருமுகம் முறுவல் செய்ய
ஒன்றிய விளையாட் டோரார் "உறுதிசெய் தணைந்தார்" என்றே
"அன்றுநீர் ஆண்டு கொண்ட அதனுக்குத் தகவே செய்தீர்
இன்றிவள் வெகுளி எல்லாந் தீர்த்தெழுந் தருளி" என்றார். ௩௫௧

அம்மொழி விளம்பும் நம்பிக் கையர்தாம் அருளிச் செய்வார்
"நம்மைநீ சொல்ல நாம்போய்ப் பரவைதன் இல்லம் நண்ணிக்
கொம்மைவெம் முலையி னாட்குன் திறமெலாங் கூறக் கொள்ளாள்
வெம்மைதான் சொல்லி நாமே வேண்டவும் மறுத்தாள்" என்றார்.

அண்ணலார் அருளிச் செய்யக் கேட்டஆ ரூரர் தாமும்
துண்ணென நடுக்கம் உற்றே தொழுது"நீர் அருளிச் செய்த

---

௩௪௭. நன்னுதல் - நல்ல நெற்றியையுடைய பரவையார்.

௩௪௮. சேயிழை - செவ்விய ஆபரணங்களை யணிந்த பரவையாரது. துனி - கையிகந்த ஊடலை; புலவி நீட்டத்தை; வெறுப்பை.

௩௪௯. புன்கண் - துன்பம்.

௩௫௦. பாங்கில் - தன்மையில்; முறைமையில். மீண்டே அறியுமாறு - திரும்பித் தம்மை அறியுமாறு. உரவு - பரந்த. அணைகடந்த வெள்ளம் போல.

௩௫௧. ஒன்றிய - பொருந்திய. ஓரார் - உணராதவராய்.

பா - ம்—*மீள்வதும். †தூதராய்ப் பாங்கு. ‡அணையுமா றறியும்.

வண்ணமும் அடியா ளான பரவையோ மறுப்பாள் நாங்கள்
எண்ணஆர் அடிமைக் கென்ப தின்றறி வித்தீர்!" என்று. ௩௫௩

"வானவர் உய்ய வேண்டி மறிகடல் நஞ்சை உண்டீர்
தானவர் புரங்கள் வேவ மூவரைத் †தவிர்த்தாட் கொண்டீர்
நான்மறைச் சிறுவர்க் காகக் காலனைக் காய்ந்து நட்டீர்
யான்மிகை உமக்கின் றானால் என்செய்வீர் போதா!" தென்றார். ௩௫௪

"ஆவதே செய்தீர் ‡இன்றென் அடிமைநீர் வேண்டா விட்டால்
பாவியேன் தன்னை அன்று வலியஆட் கொண்ட பற்றென்?
நோவுமென் அழிவுங் கண்டீர் நுடங்கிடை அவள்பால் §இன்று
மேவுதல் செய்யீ ராகில் விடும்உயிர்" என்று வீழ்ந்தார். ௩௫௫

தம்பிரான் அதனைக் கண்டு தரியாது தளர்ந்து வீழ்ந்த
நம்பியை அருளால் நோக்கி "நாம்இன்னம் அவள்பாற் போய்அக்
கொம்பினை இப்போ தேநீ ||குறுகுமா கூறு கின்றோம்
வெம்புறு துயர்நீங்" கென்றார் வினைஎலாம் விளைக்க வல்லார். ௩௫௬

மயங்கிய நண்பர் உய்ய வாக்கெனும் மதுர வாய்மை
நயங்கிளர் அமுதம் நல்க நாவலூர் மன்னர் தாமும்

௩௫௩. நீர் கட்டளையிட்ட தன்மையையும் பரவையா மறுப்பாள்? நாங்கள் அடிமைக்கு எண்ண ஆர் என்பதை இன்று அறிவித்தீர் (நாங்கள் அடிமைக்கு உரியவர்களாக எண்ணுதற்கு என்ன இயல்பு எங்களிட மிருக்கிறது என்றபடி); எண்ணலார் என்னும் பாடத்துக்கு "நாங்கள் அடிமைக்கு எண்ணப் படாதவர்கள்........." என்று கொள்க.

௩௫௪. ஈண்டுப் போந்துள்ள கதைகளின் தத்துவங்கள் முன்னர்ப் பல விடங்களில் விளக்கப்பட்டுள்ளன. அசுரர்கள் முப்புரங்கள். மூவர் - பரமவிரதன், பரமயோகன், பரமகுணன்; "மூவெயில் செற்ற ஞான்று உய்ந்த மூவரில்...... திருப்புன்கூருளானே"—சுந்தரர். நட்டீர் - அன்புக்குரிமையாக்கினீர்; நிலை பெறுத்தினீர். இங்கே குறிப்பிட்ட நஞ்சை உண்டது முதலிய யாவும் இறைவனை அடைக்கலம் புகுந்தவரைக் காத்தமையைக் குறிப்பன. இவ்வளவு செய்த பெருமானை வன்தொண்டர் பார்த்து "யான்...உமக்கு மிகை இன்றைக் கானல்......"என்றார். போதாது - திரும்பி வாராது.

௩௫௫. எனக்கு ஆவதே செய்தீர்! (வருத்தத்தால் உடன்பாடு போன்று எதிர்மறையாக வரும் இகழ்ச்சிக் குறிப்பு. இது தொடர்ந்து வரும் வன்தொண்டர் மொழிகளால் இனிது விளங்கும்). பற்று எற்றுக்கு என்றபடி.

௩௫௭. வாய்மை - தப்பாத மொழி; உண்மை; முன்னே கூறியது திருவிளையாட்டின் பொருட்டாதலான், இங்கே இம்முறை "வாய்மை" என்றார்.

பா - ம்—*எண்ணலார். †தடுத். ‡என்தன். §இன்னம். ||கூடுமா.

"முயங்கிய கலக்கம் நீக்கி உம்மடித் தொழும்ப னேனைப்
பயங்கெடுத் திவ்வா றன்றோ பணிகொள்வ!" தென்று போற்ற. ௩௫௭

அன்பர்மேற் கருணை கூர ஆண்டவர் மீண்டுஞ் செல்லப்
பின்புசென் றிறைஞ்சி நம்பி பேதுற வோடு மீண்டார்
முன்புடன் போதா தாரும் முறைமையிற் சேவித் தேகப்
பொன்புரி சடையார் மாதர் புனிதமா ளிகையிற் சென்றார். ௩௫௮

மதிநுதற் பரவை யார்தாம் மறையவர் போன பின்பு
*முதுமறை முனியாய் வந்தார் †அருளுடை முதல்வ ராகும்
அதிசயம் பலவுந் தோன்ற "அறிவுற்றே அஞ்சிக் கெட்டேன்
எதிர்மொழி எம்பி ரான்முன் என்செய மறுத்தேன்" என்பார். ௩௫௯

கண்துயில் எய்தார் வெய்ய கையற வெய்தி ‡"ஈங்கின்
றண்டர்தம் பிரானார் தோழர்க் காகஅர்ச் சிப்பார் கோலம்
கொண்டணைந் தவரை யான்உட் கொண்டிலேன் பாவி யேன்"என்
றொண்சுடர் வாயி லேபார்த் துழையரோ டழியும் போதில். ௩௬௦

வெறியுறு கொன்றை வேணி விமலருந் தாமாந் தன்மை
அறிவுறு கோலத் தோடும் அளவில்பல் பூத நாதர்
செறிவுறு தேவர் யோகர் முனிவர்கள் சூழ்ந்து செல்ல
மறுவில்சீர்ப் பரவை யார்தம் மாளிகை புகுந்தார் வந்து. ௩௬௧

பாரிடத் தலைவர் முன்னும் பல்கண நாதர் தேவர்
நேர்வுறு முனிவர் சித்தர் இயக்கர்கள் நிறைத லாலே
பேரரு ளாளர் எய்தப் பெற்றமா ளிகைதான் §தென்பால்
சீர்வளர் கயிலை வெள்ளித் திருமலை போன்ற தன்றே. ௩௬௨

ஐயர்அங் கணைந்த போதில் அகிலலோ கத்துள் ளாரும்
எய்தியே செறிந்து சூழ எதிர்கொண்ட பரவை யார்தாம்
மெய்யுறு நடுக்கத் தோடு மிக்கெழு மகிழ்ச்சி பொங்கச்
செய்யதா ளிணைமுன் சேர விரைவினுற் சென்று வீழ்ந்தார். ௩௬௩

---

நயம்கிளர் - விருப்பம் எழும். அமுதம் உயிரைக் கொடுக்க வல்லது. இங்கே இறைவனது வாய்மை, நண்பராகிய வன்தொண்டருக்கு அமுதாயிற்றென்க. முயங்கிய - மனதிற் கொண்ட. தொழும்பனேனை - தொண்டனேனை.

௩௫௮. பேதுறவோடும் - மயக்கத்தோடும்.

௩௬௦. கையறவு - செயலற்ற வருத்தம். உழையரோடு - பாங்கிமாரோடு.

௩௬௨. பாரிடத்தலைவர் - பூதத்தலைவர்.

பா - ம்—*முதிர். †ஆளுடை. ‡இன்றிங் கண்டர். §அன்பால்.

அரிஅயற் கரியார் தாமும் ஆயிழை யாரை நோக்கி
"உரிமையால் ஊரன் ஏவ மீளவும் உன்பால் வந்தோம்
முருகலர் குழலாய்! இன்னம் முன்புபோல் மறுதே நின்பால்
பிரிவுற வருந்து கின்றான் வரப்பெற வேண்டும்" என்றார். ௩௬௪

பெருந்தடங் கண்ணி ஞரும் பிரான்முன்பு மிகவும் அஞ்சி
வருந்திய உள்ளத் தோடு மலர்க்கரங் குழல்மேற் கொண்டே
"அருந்திரு மறையோ ராகி அணைந்தீர்முன் அடியேன் செய்த
இருந்தவப் பயனும் என்ன எய்திய நீரோ?" என்பார். ௩௬௫

துளிவளர் கண்ணீர் வாரத் தொழுதுவிண் ணப்பஞ் செய்வார்
"ஒளிவளர் செய்ய பாதம் வருந்தஓர் இரவு மாறு
தளிவரும் அன்பர்க் காக அங்கொடிங் குழல்வீ ராகி
எளிவரு வீரு மானல் என்செய்கேன் இசையா!" தென்றார். ௩௬௬

"நங்கைநின் தன்மைக் கேற்கும் நன்மையே மொழிந்தாய்" என்று
மங்கையோர் பாகம் வைத்த வள்ளலார் விரைந்து போகத்
திங்கள்வா ணுதலி ஞருஞ் சென்றுபின் இறைஞ்சி மீண்டார்
எங்களை ஆளும் நம்பி தூதர்மீண் டேகு கின்றார். ௩௬௭

வேறு

ஆதியும் மேலும் மாலயன் நாடற் கருளாதார்
தூதினில் ஏகித் தொண்டரை ஆளுந் தொழில்கண்டே
வீதியில் ஆடிப் பாடி மகிழ்ந்தே மிடைகின்றார்
பூதியில் நீடும் பல்கண †நாதப் புகழ்வீரர். ௩௬௮

அன்னவர் முன்னும் பின்னும் மருங்கும் அணைவெய்த
மின்னிடை யார்பால் அன்பரை உய்க்கும் விரைவோடும்

---

௩௬௬. அளிவரும் - அருளொழுகும். இரங்கி எளிதில் வருவீரானல்.

௩௬௭. நம்பிதூதர் - சிவபெருமான். "அடியேற்கு எளிவந்த - தூதனைத் தன்னைத் தோழமை அருளித் தொண்டனேன் செய்த துரிசுகள் பொறுக்கும் - நாதனை நள்ளாறனை" "தூதனை என்தனை ஆள்தோழனை......கானப் பேருறை காளையையே"—சுந்தரர்.

௩௬௮. ஆதியும் மேலும் - அடியையும் முடியையும். மிடைகின்றார் - நெருங்கித் திரள்கிறார். விபூதியில்.

௩௬௯. மருங்கும் - இருபக்கமும். அன்பரை உய்க்கும் - வன்தொண்டரைச் செலுத்தப் போகும். திருவாரூர் மன்னவனார் - தியாகேசப் பெருமான். அம்மறையவனார்பால் - வன்தொண்டரிடத்து.

பா - ம்—*எய்தினர். †நாதர்.

சென்னியில் நீடுங் கங்கை ததும்பத் திருவாரூர்
மன்னவ னார்அம் மறையவ னார்பால் வந்துற்றார். ௩௬௯

அன்பரும் "என்பால் ஆவி அளிக்கும் படிபோனார்
என்செய்து மீள்வார் இன்னமும்?" என்றே இடர்கூரப்
பொன்புரி முந்நூல் மார்பினர் செல்லப் பொலிவீதி
முன்புற நேருங் கண்ணிணை தானும் †முகிழாரால். ௩௭௦

அந்நிலை மைக்கண் மன்மதன் வாளிக் கழிவார்தம்
மன்னுயிர் நல்குந் தம்பெரு மானார் வந்தெய்த
முன்னெதிர் சென்றே மூவுல குஞ்சென் றடையுந்தாள்
சென்னியில் வைத்"தென் சொல்லுவர்" என்றே தெளியாதார்.

"எம்பெரு மான்நீர் என்னுயிர் காவா திடர்செய்யும்
கொம்பனை யாள்பால் என்கொடு வந்தீர் குறை"என்னத்
தம்பெரு மானும் "தாழ்குழல் செற்றந் தணிவித்தோம்
நம்பி இனிப்போய் மற்றவள் தன்பால் நணு"கென்ன. ௩௭௨

நந்தி பிரானார் வந்தருள் செய்ய நலமெய்தும்
சிந்தையுள் ஆர்வங் கூர்களி எய்தித் திகழ்கின்றார்
"பந்தமும் வீடும் நீர்அருள் செய்யும் படிசெய்தீர்
எந்தைபி ரானே என்இனி என்பால் இடர்?"என்றார். ௩௭௩

என்றடி வீழும் நண்பர்தம் அன்புக் கெளிவந்தார்
"சென்றணை நீஅச் சேயிழை பால்"என் றருள்செய்து
வென்றுயர் சேமேல் வீதி விடங்கப் பெருமாள்தம்
பொன்திகழ் வாயிற் கோயில் புகுந்தார் புவிவாழ. ௩௭௪

---

௩௭௦. ............மார்பினர் - தியாகேசப் பெருமான். கண் இணையை மூடாதவரானார்.

௩௭௨. 'என்கொடு வந்தீர் என்குறை என்னவாயிற்று' என்று கேட்க. தாழ்குழல் செற்றம் - பரவையார் கோபத்தை.

௩௭௩. நந்திபிரானார் - சிவபெருமான். பந்தம் மோட்சம் என்னும் இரண்டையும் மறக்கருணையானும் அறக்கருணையானும் உயிர்களுக்குக் கொடுப்பவன் இறைவன். அவ்விரண்டையும் தமக்கு இறைவன் அளித்தான் என்று நம்பியாரூரர் சொல்கிறார். கண்போனதும், பரவையார் ஊடியதும், இவைகளால் நேர்ந்த துன்பமும் பந்தத்தின் பாற்பட்டன. பரவையின் ஊடல் தீர்த்தது வீட்டின் பாற்பட்டது.

௩௭௪. வென்றுயர் சேமேல் - வெற்றியால் மேம்படும் இடபத்தின் மீது.

பா - ம்—*மன்னவ னார்தாம் அன்பினர் தம். †முகிழாதால்.

## வேறு

தம்பிரா னாரின் சென்று தாழ்ந்தெழுந் தருளான் மீள்வார்
"எம்பிரான் வல்ல வா"றென் றெய்திய மகிழ்ச்சி யோடும்
வம்பலர் குழலார் செம்பொன் மாளிகை வாயில் நோக்கி
நம்பியா ரூரர் காதல் நயந்தெழுந் தருளும் போது. ௩௭௫

முன்துயில் உணர்ந்து சூழ்ந்த பரிசனம் மருங்கு மொய்ப்ப
மின்திகழ் பொலம்பூ மாரி விண்ணவர் பொழிந்து வாழ்த்த
மன்றல்செய் மதுர சீத சீகரங் கொண்டு மந்தத்
தென்றலும் எதிர்கொண் டெய்துஞ் சேவகம் முன்பு காட்ட. ௩௭௬

மாலைதண் கலவைச் சேறு மான்மதச் சாந்து பொங்கும்
கோலநற் பசுங்கர்ப் பூரங் குங்குமம் முதலா யுள்ள
சாலும்மெய்க் கலன்கள் கூடச் சாத்தும் *பூண் ஆடை வர்க்கம்
†பாலன பிறவும் ஏந்தும் பரிசனம் முன்பு செல்ல. ௩௭௭

இவ்வகை இவர்வந் தெய்த எய்திய விருப்பி னோடும்
மைவளர் நெடுங்கண் ணாரும் மாளிகை அடைய மன்னும்
செய்வினை அலங்கா ரத்துச் சிறப்பணி பலவுஞ் செய்து
நெய்வளர் விளக்குத் தூப நிறைகுடம் நிரைத்துப் பின்னும். ௩௭௮

பூமலி நறும்பொற் றாமம் புனைமணிக் கோவை நாற்றிக்
காமர்பொற் சுண்ணம் வீசிக் கமழ்நறுஞ் சாந்து நீவித்
தூமலர் வீதி சூழ்ந்த தோகையர் வாழ்த்தத் தாமும்
மாமணி வாயில் முன்பு வந்தெதிர் ஏற்று நின்றார். ௩௭௯

---

௩௭௫. மீள்வாராகிய நம்பியாரூரர். "எம்பிரான் அருளால் முடிவதாயிற்று" என்று...

௩௭௬. துயிலுணர்ந்து - விழித்தெழுந்து. பொலம்பூ - பொன்மலர்; கற்பக மலர். மன்றல் - வாசனை. சீகரம் - நீர்த்துவலை. மந்தத்தென்றலும் - மந்த மாருதமும்.

௩௭௭. கலவைச்சேறு - எல்லா வாசனைகளுங் கலந்த குழம்பு. மான்மதச் சாந்து - கஸ்தூரி கலந்த சந்தனம். மெய்க்கலன்கள் - உடல் அணிகள். பாலன- இவைகளின்பாற்பட்டனவாகிய.

௩௭௮. அடைய - முழுவதும்.

௩௭௯. பூமலி......நாற்றி - பூக்கள் நிறைந்த மணம் வீசும் அழகிய மாலை களையும், புனைந்த மணிமாலைகளையும் தூக்கி. காமர் - விரும்பத்தக்க. சாந்துநீவி- சந்தனத்தால் மெழுகி.

பா - ம்—*பூணாரவர்க்கம். †பாலினம்.

வண்டலாங் குழலார் முன்பு வன்றொண்டர் வந்து கூடக்
கண்டபோ துள்ளக் காதல் வெள்ளத்தின் கரைகா ணாது
கொண்டநாண் அச்சங் கூர வணங்கஅக் குரிசி லாரும்
தண்தளிர்ச் செங்கை பற்றிக் கொண்டுமா ளிகையுட் சார்ந்தார். ௩௮0

இருவருந் தம்பி ரானார் தாம்இடை யாடிச் செய்த
திருவருட் கருணை வெள்ளத் திறத்தினைப் போற்றிச் சிந்தை
மருவிய இன்ப வெள்ளத் தழுந்திய புணர்ச்சி வாய்ப்ப
ஒருவருள் ஒருவர் மேவும் நிலைமையில் உயிர்ஒன் றானார். ௩௮௧

ஆரணக் கமலக் கோயில் மேவிப்புற் றிடங்கொண் டாண்ட
நீரணி வேணி யாரை நிரந்தரம் பணிந்து போற்றிப்
பாரணி விளக்குஞ் செஞ்சொற் பதிகமா லைகளுஞ் சாத்தித்
தாரணி மணிப்பூண் மார்பர் தாம்மகிழ்ந் திருந்த நாளில். ௩௮௨

“நம்பியா ரூரர் நெஞ்சில் நடுக்கம்ஒன் றின்றி நின்று
தம்பிரா னாரைத் தூது தையல்பால் விட்டார்” என்னும்
இம்பரின் மிக்க வார்த்தை ஏயர்கோ னார்தாங் கேட்டு
வெம்பினார் அதிச யித்தார் வெருவினார் விளம்ப லுற்றார். ௩௮௩

“நாயனை அடியான் ஏவுங் காரியம் நன்று! சால
ஏயும்என் றிதனைச் செய்வான் தொண்டனாம்! என்னே! பாவம்!
பேயனேன் பொறுக்க ஒண்ணாப் பிழையினைச் செவியாற் கேட்ப
தாயின பின்னும் மாயா திருந்ததென் ஆவி” என்பார். ௩௮௪

“காரிகை தன்பாற் செல்லுங் காதலால் ஒருவன் ஏவப்
பாரிடை நடந்து செய்ய பாததா மரைகள் நோவத்
தேரணி வீதி யூடு செல்வது வருவ தாகி
ஓரிர வெல்லாந் தூதுக் குழல்வராம் ஒருவர்” என்று. ௩௮௫

*நம்பர்தாம் அடிமை †ஆற்று ராகியே நண்ணி னாரேல்
உம்பரார் கோனும் மாலும் அயனும்நேர் உணர ஒண்ணா

௩௮௨. ஆரணக் கமலக்கோயில் - வேதம் புகழும் கமலாலயத்தில். நிரந்தரம் - எப்பொழுதும்.

௩௮௩. இவ்வுலகில் பரவிய வார்த்தையை. வெருவினார் - நடுக்குற்றார்.

௩௮௪. நாயனை - தலைவனை. சாலநன்று!

௩௮௬. சிவபெருமான் அன்பு காரணமாக அடியவர் வழி நிற்பாராகி.....; உம்பர்கோனும் - இந்திரனும். ஏவப் பெறுவதோ? கம்பியாதவனை - நடுக்குறாதவனை; வன்றொண்டனை.

பா - ம்—*நம்பர்தம். †அற்று ராகியே.

எம்பிரான் இசைந்தால் ஏவப் பெறுவதே இதனுக் குள்ளம்
கம்பியா தவனை யான்முன் காணுநாள் எந்நாள்?" என்று. ௩௮௬

"அரிவைகா ரணத்தி னாலே ஆளுடைப் பரமர் தம்மை
இரவினில் தூது போக ஏவினு மிருந்தான் தன்னை
வரவெதிர் காண்பே னாகில் வருவதென் னாங்கொல்?" என்று
விரவிய செற்றம் பற்றி விள்ளும்உள் ளத்த ராகி. ௩௮௭

ஈறிலாப் புகழின் ஓங்கும் ஏயர்கோ னார்தாம் எண்ணப்
பேறிது பெற்றார் கேட்டுப் பிழைஉடன் படுவா ராகி
வேறினி இதற்குத் தீர்வு வேண்டுவார் விரிபூங் கொன்றை
யாறிடு சடைய னாருக் கதனைவிண் ணப்பஞ் செய்து. ௩௮௮

நாடொறும் பணிந்து போற்ற நாதரும் *அதனை நோக்கி
நீடிய தொண்டர் தம்முள் இருவரும் மேவு நீர்மை
கூடுதல் புரிவார் ஏயர் குரிசிலார் தம்பால் மேனி
வாடுறு சூலை தன்னை அருளினார் வருந்து மாற்றால். ௩௮௯

ஏதமில் பெருமைச் செய்கை ஏயர்தம் பெருமான் பக்கல்
ஆதியார் †ஏவும் சூலை அனல்செய்வேல் குடைவ தென்ன
வேதனை மேன்மேற் செய்ய மிகஅதற் குடைந்து வீழ்ந்து
பூதநா யகர்தம் பொற்றாள் பற்றியே போற்று கின்றார். ௩௯௦

சிந்தையால் வாக்கால் அன்பர் திருந்தடி போற்றி செய்ய
எந்தமை யாளும் ஏயர் காவலர் தம்பால் ஈசர்
வந்"துனை வருத்துஞ் சூலை வன்தொண்டன் தீர்க்கில் அன்றி
முந்துற ஒழியா" தென்று மொழிந்தருள் செய்யக் கேட்டு. ௩௯௧

"எம்பிரான் எந்தை தந்தை தந்தைஎங் கூட்ட மெல்லாம்
தம்பிரான் நீரே என்று வழிவழிச் சார்ந்து வாழும்

---

௩௮௭. வருவது என்னாங்கொல் - என்ன விளைந்துவிடுமோ? விரவிய... ஆகி - நெருங்கித் தாக்கிய வன்மம்கொண்டு விம்மும் உள்ளத்தவராகி.

௩௮௮. எண்ணமென்னும் பேறாகிய இதனைப் பெற்றவராகிய வன் தொண்டர்.

௩௯௦. ஏதமில் - குற்றமில்லாத.

௩௯௨. எம்பிரானே !. இம்பரின்.........என்னை - இவ்வுலகில் வாழ்க்கை யுடைய என்னை. ஈரும் - வருத்தும். வம்பென - புதிதாக. ஒருவனோ வந்து தீர்ப்பான்.

பா - ம்—*அதனைக்கேட்டு. †அருளும்.

இம்பரின் மிக்க வாழ்க்கை என்னைநின் றீருஞ் சூலை
வம்பென ஆண்டு கொண்டான் ஒருவனே தீர்ப்பான் வந்து." ௩௯௨

"மற்றவன் தீர்க்கில் தீரா தொழிந்தெனை வருத்தல் நன்றால்
பெற்றம்மேல் உயர்த்தீர் செய்யும் பெருமையை †அறிந்தார் யாரே
உற்றவன் தொண்டர்க் கேனும் உறுதியே செய்தீர்" என்னக்
கற்றைவார் சடையார் தாமும் அவர்முன்பு கரந்தார் அன்றே. ௩௯௩

வன்தொண்டர் தம்பால் சென்று வள்ளலார் அருளிச் செய்வார்
"இன்றுநம் ஏவ லாலே ஏயர்கோன் உற்ற சூலை
சென்றுநீ தீர்ப்பா யா"ரென் றருள்செயச் சிந்தை யோடு
நன்றுமெய்ம் மகிழ்ந்து போற்றி வணங்கினார் நாவ லூரர். ௩௯௪

அண்ணலார் அருளிச் செய்து நீங்கஆ ரூரர் தாமும்
விண்ணவர் தம்பி ரானார் ஏவலால் விரைந்து செல்வார்
கண்ணிய மனத்தின் மேவுங் காதலால் கலிக்கா மர்க்குத்
திண்ணிய சூலை தீர்க்க வருதிறஞ் செப்பி விட்டார். ௩௯௫

நாதர்தம் அருளால் நண்ணுஞ் சூலையும் அவர்பாற் கேட்ட
கேதமும் வருத்த மீண்டும் வன்தொண்டர் வரவும் கேட்டுத்
"தூதனாய் எம்பி ரானை ஏவினான் சூலை தீர்க்கும்
ஏதம்இங் கெய்த எய்தில் ‡யான்செய்வ தென்னாம்?" என்பார். ௩௯௬

"மற்றவன் இங்கு வந்து தீர்ப்பதன் முன்நான் மாயப்,
பற்றினின் றென்னை நீங்காப் பாதகச் சூலை தன்னை
உற்றஇவ் வயிற்றி னோடுங் கிழிப்பன்"என் றுடைவாள் தன்னால்
செற்றிட உயிரி னோடும் சூலையுந் தீர்ந்த தன்றே. ௩௯௭

---

௩௯௩. தீர்க்கில் - தீர்ப்பதினும். தீரா தொழிந்து - தீராது நின்று. பெற்றம்மேல் உயர்த்தீர் - இடபக்கொடியுடைய பெருமானே! செய்யும் - ஒருவர் பொருட்டு நீர் செய்யும். உற்ற - புதிதாக அடைந்த. ஆம் உறுதி - உரிய உயர்வை. ௩௯௪. தீர்ப்பாயாக என்று.

௩௯௫. கண்ணிய - (ஏயர்கோனைக்) கருதிய.

௩௯௬. அவர்பால் கேட்ட கேதமும் - அந்நாதர்பால் கேட்ட துன்ப மொழியும்; (வன்தொண்டனாலன்றி இந்நோய் நீங்காது என்ற மொழியும்). ஏதம் இங்கு எய்த எய்தில் - குற்றமும் இங்கு வந்து சேர்ந்தால்.

௩௯௭. மாயப்பற்றினின்றும் நீங்குதலாவது - உயிர்விடுதல். செற்றிட - கிழிக்க.

பா - ம்—*தீர்க்கத். †அறிவார். ‡யான்செய்வ தென்னோ என்று.

கருதரும் பெருமை நீர்மைக் கலிக்காமர் தேவி யாரும்
பொருவருங் கணவ ரோடு போவது புரியுங் காலை
"மருவிஇங் கணைந்தார் நம்பி" என்றுமுன் வந்தார் கூற
"ஒருவரும் அழுதல் செய்யா தொழிக"என் றுரைத்துப் பின்னும்.

கணவர்தஞ் செய்கை தன்னைக் கரந்துகா வலரை நம்பி
அணைவுறும் பொழுது சால அலங்கரித் தெதிர்போம் என்னப்
புணர்நிலை வாயிற் றீபம் பூரண கும்பம் வைத்துத்
துணர்மலர் மாலை தூக்கித் தொழுதெதிர் கொள்ளச் சென்றார். ௩௯௯

செம்மைசேர் சிந்தை மாந்தர் சென்றெதிர் கொண்டு போற்ற
நம்மையா ளுடைய நம்பி நகைமுகம் அவர்க்கு நல்கி
மெய்ம்மையாம் விருப்பி னோடும் மேவிஉட் புகுந்து மிக்க
மொய்ம்மலர்த் தவிசின் மீது முகமலர்ந் திருந்த போது. ௪00

பான்மைஅர்ச் சனைகள் எல்லாம் பண்பினில் வழாமை ஏய்ந்த
நான்மறை தொடர்ந்த வாய்மை நம்பியா ரூரர் கொண்"டிங்
கியான்மிக வருந்து கின்றேன்; ஏயர்கோ னார்தாம் உற்ற
ஊனவெஞ் சூலை நீக்கி உடன்இருப் பதனுக்" கென்றார். ௪0௧

மாதர்தம் ஏவ லாலே மனைத்தொழில் மாக்கள் "மற்றிங்
கேதமொன் றில்லை உள்ளே பள்ளிகொள் கின்றார்" என்னத்
"தீதணை வில்லை யேனும் என்மனந் தெருளா தின்னம்
ஆதலால் அவரைக் காண வேண்டும்"என் றருளிச் செய்தார். ௪0௨

வன்தொண்டர் பின்னுங் கூற மற்றவர் தம்மைக் காட்டத்
துன்றிய குருதி சோரத் தொடர்குடர் சொரிந்துள் ளாவி
பொன்றியே கிடந்தார் தம்மைக் கண்டபின் "புகுந்த வாறு
நன்!"றென மொழிந்து "நானும் நண்ணுவேன் இவர்முன்" பென்பார்.

கோளுறு மனத்த ராகிக் குற்றுடை வாளைப் பற்ற
ஆளுடைத் தம்பி ரானார் அருளினால் அவரும் உய்ந்து

---

௩௯அ. பொருவரும்......காலை - ஒப்பற்ற கணவருடன் உயிர் துறத்தலை விரும்பும்பொழுது.

௩௯௯. கரந்து - மறைத்து. காவலரை - ஏவலாளரை. துணர் - கொத்து.

௪0௨. மாதர் தம் - கலிக்காமர் மனைவியாரின். இன்னம் தெருளாது - இன்னும் தெளியவில்லை.

௪0௩. ஆவி நீங்கியே கிடந்தார்...நிகழ்ந்தவாறு நன்று! இவர் முன் யானும் உயிர் நீத்துச் செல்வேன்......

"கேளிரே யாகிக் கெட்டேன்" எனவிரைந் தெழுந்து கையில்
வாளினைப் பிடித்துக் கொள்ள வன்றொண்டர் வணங்கி வீழ்ந்தார்.

மற்றவர் வணங்கி வீழ வாளினை மாற்றி ஏயர்
கொற்றவ னாரும் நம்பி குரைகழல் பணிந்து வீழ்ந்தார்
அற்றைநாள் நிகழ்ந்த இந்த அதிசயங் கண்டு வானோர்
பொற்றட மலரின் மாரி பொழிந்தனர் புவனம் போற்ற. ௪0௫

இருவரும் எழுந்து புல்லி இடைவிடா நண்பி னாலே
பொருவரும் மகிழ்ச்சி பொங்கத் திருப்புன்கூர்ப் புனிதர் பாதம்
மருவினர் போற்றி நின்று வன்றொண்டர் தம்பி ரானார்
அருளினை நினைந்தே "அந்த ணாளன்"என் றெடுத்துப் பாடி. ௪0௬

"அந்தணாளன்உன் னடைக்கலம் புகுத அவனைக்காப்பது காரண மாக, வந்தகாலன்தன் ஆருயிர் அதனை வவ்வினாய்க்குன் றன் வன்மைகண் டடியேன், எந்தைநீஎனை நமன்தமர் நலியில் இவன்மற்றென் னடியான்என விலக்குஞ், சிந்தையால்வந்துன் திருவடி யடைந்தேன் செழும்பொழில் திருப் புன்கூரு ளானே"—தேவாரம்.

சிலபகல் கழிந்த பின்பு திருமுனைப் பாடி நாடர்
மலர்புகழ்த் திருவா ரூரில் மகிழ்ந்துடன் வந்த ஏயர்
குலமுதற் றலைவ னாருங் கூடவே குளிர்பூங் கோயில்
நிலவினார் தம்மைக் கும்பிட் டுறைந்தனர் நிறைந்த அன்பால். ௪0௭

ஊங்கினி தமர்ந்து நம்பி அருளினால் மீண்டும் போந்து
பொங்கிய திருவின் மிக்க தம்பதி புகுந்து பொற்பில்
தங்குநாள் ஏயர் கோனார் தமக்கேற்ற தொண்டு செய்தே
செங்கண்மால் விடையார் பாதஞ் சேர்ந்தனர் சிறப்பி னோடும். ௪0௮

வெள்ளிருள் நாய னாரைத் தூதுவிட் டவர்க்கே நண்பாம்
வள்ளலார் ஏயர் கோனார் மலரடி வணங்கிப் புக்கேன்
உள்ளுணர் வான ஞானம் முதலிய ஒருநான் குண்மை
தெள்ளுதீந் தமிழாற் கூறுந் திருமூலர் பெருமை செப்ப. ௪0௯

ஆ திருவிருத்தம் - ௩,௫௬௮.

---

௪0௪. கோளுறும் - கொலையுற்ற. கேளிரே - நட்புடையவரே.
௪0௯. ஞானம் முதலிய ஒரு நான்கு - ஞானம் யோகம் கிரியை சரியை.
பா - ம்—*நண்பால்.

சோழநாட்டில் திருப்பெருமங்கலம் என்றொரு பதியுண்டு. அப்பதியில், வேளாண் மரபில் ஏயர்குடியில் தோன்றியவர் கலிக்காமர்.

கலிக்காமர் சோழமன்னனிடத்தில் சேனைத் தலைவராய் அமர்ந்திருந்தார். அஃது அவர்தம் பரம்பரைத் தொழிலாகும். திருப்புன்கூர் என்னும் பதிக்கும், கலிக்காமருக்கும் நெருங்கிய தொடர்பிருந்தது. அத்திருப்பதியில் அவரால் பல திருப்பணிகள் செய்யப்பட்டன.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் தியாகேசப் பெருமானைப் பரவைபால் தூது விட்ட செய்தி, கலிக்காமருக்கு எட்டிற்று. எட்டவே, அவர் வெம்பி வெம்பி வீழ்ந்தார்; துன்பத்தில் ஆழ்ந்தார்; "ஆண்டவனை அடியான் தூது விடுவதோ? நன்று! நன்று!" என்பார்; "இச்செயலுக்குத் துணிந்தவனும் ஒரு தொண்டனோ? இக்கொடுமைகேட்டும் என் ஆவி சோரவில்லையே!" என்பார்; "ஒரு பெண்ணின் பொருட்டா ஆண்டவனைத் தூது விடுவது? ஆண்டவன் இசைந்தாலும் அவனைத் தூதுக்கு ஏவலாமோ? ஓர் இரவு முழுவதும் ஐயன் தூதனாக உழன்றானாம்! என்ன கொடுமை!" என்பார்; "இக்கொடுமைக்கு மனங் கம்பியாத ஒருவனைக் காணும் நாள் எந்நாளோ? அவனைக் காண நேர்ந்தால் என்ன விளையுமோ?" என்பார். இவ்வாறு கலிக்காமர் மனம் நொந்து கிடந்தார்.

கலிக்காமர் நிலை,வன்தொண்டருக்குத் தெரியவந்தது. இதனை வன்தொண்டர், ஆண்டவன் முன்னிலையில் முறையிட்டுக்கொண் டிருந்தார். சிவபெருமான் இருவரையும் ஒருமைப் படுத்தத் திருவுளங் கொண்டார்; கொண்டு, கலிக்காமர்பால் சூலைநோயை ஏவினார். அந்நோய் நாயனாரைப்பற்றி முடுக்கிக் குடைந்தது. நாயனார், சிவபெருமானை நினைந்து நினைந்து உருகினார்; போற்றினார். சிவபெருமான் கலிக்காமர் முன்னே தோன்றி, "அன்பனே! இந்நோய் எவராலுந் தீராது. இதைத் தீர்க்கவல்லான் ஒருவனே. அவன் வன்தொண்டன்" என்றார்; என்றதும், நாயனார், சிவபெருமானைப் பார்த்து, "எம்பிரானே! அடிகளுக்கு வழிவழித் தொண்டு செய்யும் மரபில், தோன்றியவன் யான்; வன்தொண்டனோ புதிதாக அடிமைப்பட்டவன். அவனா என்நோயைத் தீர்க்கவல்லான்! நோயால் வருந்துவதே எனக்குமகிழ்ச்சி" என்றார்.

உடனே சிவபெருமான், வன்தொண்டர்பால் ஏகி, "தோழனே! கலிக்காமன் சூலை நோயால் பீடிக்கப்பட்டு வருந்துகிறான். அது நமது ஏவலால் நேர்ந்தது. நீ அவனிடஞ் சென்று அந்நோயைத் தீர்ப்பாயாக" என்றருளினார். வன்தொண்டர்க்கு மகிழ்ச்சி பொங்கித் ததும்பி வழிந்தது. அவர், தாம் சூலை நோயைத் தீர்க்க வருவதைக் கலிக்காமருக்குத் தெரிவித்துப் புறப்பட்டார்.

கலிக்காமர், "பெண்பொருட்டு ஆண்டவனைத் தூதுவிட்ட ஒருவனா இங்கு வருகிறான்? அவன் வந்து நோயைத் தீர்த்தற்கு முன்னர், என் வயிற்றைக் கிழித்துக்கொள்கிறேன்" என்று உடைவாளை எடுத்தார்; எண்ணியவாறே செய்துகொண்டார்.

இக்காட்சி கண்ட நாயனார் மனைவியார், தாமும் உயிர் துறக்கத் துணிந்தார். அவ்வேளையில், சிலர் போந்து, "வன்தொண்டர் வருகிறார்" என்று சொன்னார். அம்மையார் திடுக்கிட்டார்; அங்கே அழுதுகொண்டிருந்தவர்களைப் பார்த்து, "அழாதேயுங்கள்" என்று கட்டளையிட்டார்; சுவாமிகளை எதிர்கொள்ளுமாறு அங்கிருந்தவர்களை ஏவினார். அவர்கள் அவ்வாறே சென்று சுவாமிகளை எதிர்கொண்டார்கள். சுவாமிகள் கலிக்காமர் இல்லம் போந்தார்; அங்கே இடப்

பட்டிருந்த பீடத்தில் அமர்ந்தார். அவருக்கு அர்ச்சனை முதலியனசெய்யப்பட்டன. அவைகளைத் தம்பிரான் தோழர் ஏற்று, " கலிக்காமர் எங்கே ? அவர்க்கு உற்ற நோயைத் தீர்த்து அவரோடு யான் இருத்தல் வேண்டும்" என்று கேட்டார்.

அம்மையார் ஏவலாளர்களை அழைத்து, " நாயனார்க்குக் கெடுதி ஒன்றும் இல்லை ; அவர் உள்ளே உறங்குகிறார் என்று வன்தொண்டருக்குச் சொல்லுங்கள்" என்றார். ஏவலாளர்கள், அவ்வாறே வன்தொண்டருக்கு அறிவித்தார்கள். அதற்கு வன்தொண்டப் பெருமான், "நாயனார்க்குத் தீங்கு இல்லையாயினும், என் மனதிற்குத் தெளிவு ஏற்படல் வேண்டும்." என்றார் ; மேலும் மேலும் பெருமான் தங்கருத்தை வலியுறுத்தினார். ஏவலாளர்களுக்கு ஒன்றுந் தோன்றவில்லை. அவர்கள் வன்தொண்டருக்குக் கலிக்காமரைக் காட்டினார்கள்.

வன்தொண்டப் பெருமான் நாயனாரைப் பார்த்தார் ; அவர்தம் நிலையை உணர்ந்தார். உணர்ந்ததும், "யானும் உயிர்துறப்பேன்" என்று உடைவாளை எடுத்தார் ; அன்னே ஆண்டவனருளால் கலிக்காம நாயனார் உயிர் பெற்றெழுந்தார் ; எழுந்ததும் "அந்தோ ! கெட்டேன்" என்று விரைந்துபோய்ச் சுவாமிகள் கையிலிருந்த வாளைப்பற்றினார். வன்தொண்டப் பெருமான், நாயனார் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார். நாயனாரும் சுவாமிகளை வணங்கினார். அன்று தொட்டு இருவரும் கெழுதகை நண்பராயினர்.

இருவரும் திருப்புன்கூருக்குப் போய்த் திருவாரூரை அடைந்து, ஆண்டவனை வழிபட்டுக்கொண்டிருந்தனர். சிலநாள் கடந்த பின்னை, கலிக்காம நாயனார் வன்தொண்டர்பால் விடைபெற்றுத் தம்பதி சேர்ந்தார். நாயனார் ஆங்கே திருத்தொண்டுகள் பல செய்து ஆண்டவன் திருவடி நீழலையடைந்தார்.

# திருமூல நாயனார் புராணம்

அந்திஇளம் பிறைக்கண்ணி அண்ணலார் கயிலையினில்
முந்தைதிகழ் கோயிலுக்கு முதற்பெருநா யகமாகி
இந்திரன்மால் அயன்முதலாம் இமையவர்க்கு நெறியருளும்
நந்திதிரு வருள்பெற்ற நான்மறையோ கிகள்ஒருவர். க

மற்றவர்தாம் அணிமாதி வருஞ்சித்தி பெற்றுடையார்
கொற்றவனார் திருக்கயிலை மலைநின்றுங் குறுமுனிபால்
உற்றதொரு கேண்மையினால் உடன்சிலநாள் உறைவதற்கு
நற்றமிழின் பொதியமலை நண்ணுதற்கு வழிக்கொண்டார். உ

உ. அணிமா ஆதி சித்திகள் :—அணிமா, மகிமா, லகிமா, கரிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்பன. அணிமா—அணுவினுஞ் சிறிய உருவங் கொள்வது. மகிமா—எங்கும் நீக்கம்அற நிறைந்து நிற்பது. லகிமா—மேருவைப்போலிருந்தும் எடுக்குங்கால் லகுவாயிருப்பது. கரிமா—பரமாணு

மன்னுதிருக் கேதாரம் வழிபட்டு மாமுனிவர்
பன்னுபுகழ்ப் பசுபதிநே பாளத்தைப் பணிந்தேத்தித்
துன்னுசடைச் சங்கரனார் ஏற்றநறு நீர்க்கங்கை
அன்னமலி அகன்றுறைநீர் அருங்கரையின் மருங்கணைந்தார். ௩

கங்கைநீர்த் துறையாடிக் கருத்துறைநீள் கடலேற்றும்
அங்கணர்தாம் மகிழ்ந்தருளும் அவிமுத்தம் பணிந்தேத்தி
மங்குல்வளர் வரைவிந்த மன்னுபருப் பதம்இறைஞ்சித்
திங்களணி *சடையர்திருக் காளத்தி மலைசேர்ந்தார்.

நீடுதிருக் காளத்தி நிலவுதா ணுவைவணங்கி
ஆடுதிரு அரங்கான ஆலவனந் தொழுதேத்தித்
தேடும்இரு வர்க்கரியார் திருஏகாம் பரம்பணிந்து
மாடுயர்மா †மதிற்காஞ்சி வளநகரின் வைகினார். ரு

-வைப் போலிருந்தும் எடுக்குங்கால் மேருவைப்போல் கனப்பது. பிராத்தி—எங்கும் போகும் ஆற்றலோடு எல்லா வளங்களையும் பெறுவது. பிராகாமியம்—ஓரிடத்திலிருந்தே எல்லாப் போகங்களையும் பெற்று நுகர்வது. ஈசத்துவம்—கடவுளைப்போல் முத்தொழில் செய்து, எவரும் பணிகேட்ப நிற்பது. வசித்துவம்—எவ்வுயிருந் தன்வயப்படுவது. கொற்றவனார்-சீகண்ட சிவனார் எழுந்தருளியுள்ள. திருக்கயிலைமலை - குருமார்கள் வாழுமிடம்; திருக்கயிலை பலவிதம்; இங்கே குறிப்பிடப்பட்டது இமயத்திலுள்ளது. "......வளப்பிற் கயிலை வழியில்வந் தேனே"—திருமந்திரம்: பாயிரம். கக. குறுமுனிபால் - அகத்தியரிடத்து. கேண்மையினால் - நட்பினால்.

௩. பசுபதி எழுந்தருளியுள்ள.

௪. கருத்துறை.........ஏத்தி - பிறவிக்கடலினின்றும் கரையேற்றும் சிவபிரான் வீற்றிருந்தருளும் காசியை வணங்கிப் போற்றி; "அவிமுத்தம் என்பதில் முத்தம் - விடுகை; விமுத்தம் - மிகவும் விடுகை; அவிமுத்தம் - மிகவும் விடவேண்டியகாலத்தும் விடாமையெனக் கொள்க. இதில் அகரம் எதிர்மறை. முன்னொரு காலத்திலே, திவோதாஸன் அருந்தவமியற்றிப் பிரமதேவரால் காசியை ஆளும் அரசுரிமை பெற்றவழி, அத்தலத்திலே தேவர் வாசமில்லாதிருக்கும்படி வரமேற்று ஆண்டுகொண்டிருக்க, சிவபிரான் அவ்வரம் பொய்க்கா வண்ணம் தாம் மந்தரமலையை அடைய உத்தேசித்தகாலத்தும் அருவுருவாக வீற்றிருந்தருளினராகலின், அவிமுத்தமெனப் பெயர்பெற்றதென்பது அத்தல மான்மியம்"—இராமலிங்க சுவாமிகள்.

ரு. தாணுவை - சிவத்தை. ஐந்து சபைகளுள் திருவாலங்காடும் ஒன்றாதலின் "ஆடுதிரு அரங்கான ஆலவனம்" என்றார். ஐந்து சபைகள்:— இரத்தின சபை (திருவாலங்காடு), பொற்சபை (சிதம்பரம்), வெள்ளி சபை (மதுரை),

பா - ம்—*சடைமுடியார் காளத்தி. †மணிக்காஞ்சி வளநகருள்.

நற்பதிஅங் கமர்யோக முனிவர்களை நயந்துபோய்க்
கற்புரிசைத் திருவதிகை கலந்திறைஞ்சிக் கறைக்கண்டர்
அற்புதக்கூத் தாடுகின்ற அம்பலஞ்சூழ் திருவீதிப்
பொற்பதியாம் பெரும்பற்றப் புலியூரில் வந்தணைந்தார். ௬

எவ்வுலகும் உய்ய*எடுத் தருளியசே வடியாரைச்
செவ்வியஅன் புறவணங்கிச் †சிந்தைகளி வரத்திளைத்து
வவ்வியமெய் யுணர்வின்கண் வரும்ஆனந் தக்கூத்தை
அவ்வியல்பிற் கும்பிட்டங் காராமை ‡அமர்ந்திருந்தார். ௭

தடநிலைமா ளிகைப்புலியூர் தன்னிலுறைந் திறைஞ்சிப்போய்
"அடல்விடையின் மேல்வருவார் அமுதுசெய அஞ்சாதே
விடம்அளித்த" தெனக்§கருதி மேதினிக்கு வளம்நிறைத்தே
||கடல்வயிறு நிறையாத காவிரியின் கரைஅணைந்தார். ௮

¶காவிரிநீர்ப் பெருந்தீர்த்தம் கலந்தாடிக் கடந்தேறி
ஆவின்அருங் கன்றுறையும் ஆவடுதண் டுறைஅணைந்து
சேவில்வரும் பசுபதியார் செழுங்கோயில் வலம்வந்து
மேவுபெருங் காதலினால் பணிந்தங்கு விருப்புறுவார். ௯

அந்நிலைமைத் தானத்தை அகலாத தொருகருத்து
முன்னிஎழுங் குறிப்பினால் மூளும்ஆ தரவெய்தப்

---

தாமிரசபை (திருநெல்வேலி), சித்திரசபை (திருக்குற்றாலம்). திருவேகாம்பரம் - காஞ்சியிலுள்ள திருக்கோயில்.

௬. புரிசை - மதில். பெரும்பற்றப் புலியூரில் - சிதம்பரத்தில்.

௭. திளைத்து - இடையீடின்றி ஒன்றி; பரவசப்பட்டு. வவ்விய - (திளைத்த லால்) ஏற்ற. அவ்வியல்பில் - அவ்வானந்த இயல்பிலிருந்து.

௮. தடம் - பெரிய. அடல் - போர்; வலிமையுமாம். கடல் சிவபிரானுக்கு நஞ்சையளித்தமையான், காவிரி அதில் புகாது உயிர்கட்கு நலஞ் செய்ய வளந் தந்து பயன் தருவது ஈண்டுக் குறிப்பிடப்பட்டது.

௯. சேவில் - இடபத்தில். பசுபதியார் - திருவாவடுதுறைப் பெருமான் பெயர். "...சீருடை யான்சிவன் ஆவடு தண்டுறை - சீருடை யான்பதஞ் சேர்ந்திருந் தேனே" "சேர்ந்திருந் தேன்சிவன் ஆவடு தண்டுறை"—திருமந் திரம் : பாயிரம். கசு. கஎ.

**பா - ம்**—*எடுத் தாடிய. †சிந்தைதெளி வரத்தெளிந்து. ‡அமைந்திருந்தார். §மலைத்து. ||கடல்வயிற்று நிறையாத. ¶காவிரியின் நீர்த்தீர்த்தம்; காவிரிநீர்த் தீர்த் தங்கள்.

பின்னும்அகன் றேகுவார் பேணவரும் கோக்குலங்கள்
பொன்னிநதிக் கரைப்புறவிற் புலம்புவன எதிர்கண்டார். ௧௦

அந்தணர்தஞ் சாத்தனூர் ஆமேய்ப்பார் குடித்தோன்றி
முந்தைமுறை நிரைமேய்ப்பான் மூலன்எனும் பெயருடையான்
வந்துதனி மேய்க்கின்றான் வினைமாள வாழ்நாளை
வெந்தொழில்வன் கூற்றுண்ண வீடிநிலத் திடைவீழ்ந்தான். ௧௧

மற்றவன்தன் உடம்பினைஅக் கோக்குலங்கள் வந்தணைந்து
சுற்றிமிகக் கதறுவன சுழல்வன*மோப் பனவாக
நற்றவயோ கியர்காணா "நம்பர்அரு ளாலேஆ
உற்றதுயர் †இவைநீங்க ஒழிப்பன்"என உணர்கின்றார். ௧௨

"இவனுயிர்பெற் றெழிலன்றி ஆக்களிடர் நீங்கா"என்
றவனுடலிற் றம்முயிரை அடைவிக்க அருள்புரியும்
தவமுனிவர் தம்முடம்புக் காண்செய்து தாம்முயன்ற
பவனவழி அவனுடலில் தம்முயிரைப் பாய்த்தினார். ௧௩

பாய்த்தியபின் திருமூல ராய்எழலும் பசுக்களெலாம்
நாத்தழும்ப நக்கிமோந் தணைந்துகளைப் பொடுநயந்து
வாய்த்தெழுந்த களிப்பினால் வாலெடுத்துத் துள்ளிப்பின்
நீத்ததுய ரினவாகி நிரைந்துபோய் மேய்ந்தனவால். ௧௪

ஆவினிரை மகிழ்வுறக்கண் டளிகூர்ந்த அருளினராய்
மேவியவை மேய்விடத்துப் பின்சென்று ‡மேய்ந்தவைதாம்
காவிரிமுன் துறைத்தண்ணீர் கலந்துண்டு கரையேறப்
பூவிரிதண் புறவினிழல் இனிதாகப் புறங்காத்தார். ௧௫

௧௦. முன்னி - நினைந்து. ஆதரவு - விருப்பம். பேண......புலம்புவன - மேய்த்துப் பாதுகாக்கக் கொண்டுவரப்பட்ட பசுக்கூட்டங்கள் காவிரிநதிக் கரைக் காட்டிலே புலம்புவதை.

௧௧. சாத்தனூர் அந்தணர்களின் ஆக்களை மேய்ப்பவர்களது குடியில்...; நிரை - பசுநிரை. கூற்று - யமன். வீடி - இறந்து.

௧௩. அரண் - காப்பு. பவனம் - பிராணவாயு. "காயாதி பூதம் கலைகாய மாயையில் - ஆயா தகல அறிவொன் றறிதியே - ஓயாப் பதியதன் உண்மையைக் கூடினால் - வீயாப் பரகாயம் மேவலு மாமே"—**திருமந்திரம்:** அட்டமாசித்தி ௩.

௧௫. அளி - அன்பு; (கூர்தல் - உள்ளது சிறத்தல்). புறவின் - முல்லை நிலத்தின்; காட்டின்.

**பா - ம்**—*மொய்ப். †அது. ‡மேய்த்தவர்தாம்.

வெய்யசுடர்க் கதிரவனும் மேல்பாலை மலைஅணையச்
சைவநெறி மெய்யுணர்ந்தோர் ஆனினங்கள் தாமேமுன்
பையநடப் பனகன்றை நினைந்துபடர் வனவாகி
வையநிகழ் சாத்தனூர் வந்தெய்தப் பின்போனூர். கசு

போனவர்தாம் பசுக்களெலாம் மனைதோறும் புகநின்றூர்
மானமுடை மனையாளும் "வைகியபின் தாழ்த்தார்" என்
றூனபயத் துடன்சென்றே அவர்நின்ற வழிகண்டாள்
"ஈனம்இவர்க் கடுத்த"தென மெய்தீண்ட அதற்கிசையார். கஎ

அங்கவளும் மக்களுடன் அருஞ்சுற்றம் இல்லாதாள்
தங்கிவெரு வுறமயங்கி "என்செய்தீர் !" எனத்தளர
"இங்குனக்கென் னுடன்அணைவொன் றில்லை"என எதிர்மறுத்துப்
பொங்குதவத் தோர்ஆங்கோர் பொதுமடத்தி னுட்புகுந்தார். கஅ

இல்லாளன் இயல்புவே றுனமைகண் டிரவெல்லாம்
சொல்லாடா திருந்தவர்பால் அணையாது துயிலாதாள்
பல்லார்முன் பிற்றைநாள் *இவர்க்கடுத்த பரிசுரைப்ப
நல்லார்கள் அவர்திறத்து நாடியே நயந்துரைப்பார். கக

"பித்துற்ற மயலன்று பிறிதொருசார் புளதன்று
சித்தவிகற் பங்களைந்து தெளிந்தசிவ யோகத்தில்
வைத்தகருத் தினராகி வரம்பில்பெரு மையிலிருந்தார்
இத்தகைமை அளப்பரிதால் யாராலும்" எனஉரைப்பார். உ0

"பற்றறுத்த உபதேசப் †பரமர்பதம் பெற்றூர்போல்
முற்றும்உணர்ந் தனராகும் முன்னைநிலை மையில்உங்கள்
சுற்றஇயல் பினுக்கெய்தார்" என்றுரைப்பத் துயர்எய்தி
மற்றவளும் மையலுற மருங்குள்ளார் கொண்டகன்றூர். உக

இந்தநிலை மையிலிருந்தார் எழுந்திருந்தாங் கானிரைகள்
வந்தநெறி யேசென்று வைத்தகாப் பினில்உய்த்த

---

கஎ. வைகியபின் தாழ்த்தார் என்று - பொழுதுபோன பின்னும் கணவர் வரவில்லையே என்று. இவர்க்கு ஏதோ ஈனம் அடுத்தது.......

கஅ. வெருவுற - நடுக்குற. அணைவு - தொடர்பு.

உ0. சித்தவிகாரத்தை நீக்கி ; "...சித்தவிகாரக் கலக்கந் தெளிவித்த........கோத்தும்பீ"—திருவாசகம்.

உக. உபதேசத்தால். முன்னிருந்த நிலைமைபோல.

உஉ. காப்பில் வைத்த பழைய உடல் சுமையை.

பா - ம்—*அவர்க்குற்ற. †பரம்பரமே.

முந்தையுடற் பொறைகாணார் முழுதுணர்ந்த மெய்ஞ்ஞானச்
சிந்தையினில் வந்தசெயல் ஆராய்ந்து தெளிகின்றார். ௨௨

தண்ணிலவார் சடையார்தாம் தந்தஆ கமப்பொருளை
மண்ணின்மிசைத் திருமூலர் வாக்கினால் தமிழ்வகுப்பக்
கண்ணியஅத் திருவருளால் அவ்வுடலைக் கரப்பிக்க
எண்ணிறைந்த உணர்வுடையார் "ஈசர்அருள்" எனஉணர்ந்தார். ௨௩

சுற்றியஅக் குலத்துள்ளார் தொடர்ந்தார்க்குத் தொடர்வின்மை
முற்றவே மொழிந்தருள அவர்மீண்டு போனதற்பின்
பெற்றமீ துயர்த்தவர்தாள் சிந்தித்துப் பெருகார்வச்
செற்றமுதல் கடிந்தவர்தாம் ஆவடுதண் டுறைசேர்ந்தார். ௨௪

ஆவடுதண் டுறைஅணைந்தங் கரும்பொருளை *உறவணங்கி
மேவுவார் புறக்குடபால் மிக்குயர்ந்த அரசின்கீழ்த்
தேவிருக்கை அமர்ந்தருளிச் சிவயோகந் தலைநின்று
பூவலரும் இதயத்துப் பொருளோடும் †உணர்ந்திருந்தார். ௨௫

ஊனுடம்பிற் பிறவிவிடந் தீர்ந்துலகத் தோர்உய்ய
ஞானமுதல் நான்குமலர் நற்றிருமந் திரமாலை

---

௨௩. ......சடையார் - சிவபெருமான். கண்ணிய - கருதிய. கரப்பிக்க - மறைப்பிக்க. எண்ணிறைந்த உணர்வுடையார் - திருமூலர்; யோகக்காட்சியினர் எண்ணிறைந்த உணர்வுடையாராதல் இயல்பு. "என்னை நன்றாக இறைவன் படைத்தனன் - தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே"—திருமந்திரம்: பாயிரம் - திருமூலர் வரலாறு. 81.

௨௪. இடபக்கொடியுடைய சிவபெருமான் தாளைச் சிந்தித்து. செற்ற முதல் கடிந்தவர்தாம் - காம வெகுளி மயக்கம் முதலியவற்றை அழித்த திருமூலர்.

௨௫. அரும்பொருளை - சிவத்தை. புறக்குடபால்-புறத்தே மேற்குத் திசையில். "சேர்ந்திருந்தேன் சிவமங்கைதன் பங்கனைச் - சேர்ந்திருந்தேன் சிவன் ஆவடு தண்டுறை - சேர்ந்திருந்தேன் சிவபோதியின் நீழலில்-சேர்ந்திருந்தேன் சிவன் நாமங்கள் ஓதியே" "நானும் இருந்தேன் நற்போதியின் கீழே"—திருமந்திரம்: பாயிரம். 79, 82. பூவலரும் இதயத்து - இருதய கமலத்து.

௨௬. ஊனுடம்பி லிருந்துகொண்டே பிறவித்துன்பத்தை யொழித்தல் கூடும் என்பதற்குச் சான்றுகள் திருமந்திரத்தில் பல கிடக்கின்றன. "அஞ்சனம் போன்றுட லையறு மந்தியில்-வஞ்சக வாத மறுமத்தி யானத்திற்-செஞ்சிறு காலையிற் செய்திடிற் பித்தறும்-நஞ்சறச் சொன்னோம் நரைதிரை நாசமே"-727.

பா - ம்—*உள். †புணர்ந்திருந்தார்.

பான்மைமுறை ஓராண்டுக் கொன்றாகப் பரம்பொருளாம்
ஏனஎயி றணிந்தாரை "ஒன்றவன்தான்" எனஎடுத்து. உசு

"ஒன்றவன் தானே இரண்டவ னின்னருள்
நின்றனன் மூன்றினுள் நான்குணர்ந் தான்ஐந்து
வென்றனன் ஆறு விரித்தனன் ஏழும்பார்
சென்றனன் தானிருந் தான்உணர்ந் தெட்டே"—திருமந்திரம்.

முன்னியஅப் பொருள்மாலைத் தமிழ்மூவா யிரஞ்சாத்தி
மன்னியமூ வாயிரத்தாண் டிப்புவிமேல் மகிழ்ந்திருந்து
சென்னிமதி அணிந்தார்தந் திருவருளால் திருக்கயிலை
தன்னில்அணைந் தொருகாலும் பிரியாமைத் தாளடைந்தார். உஎ

நலஞ்சிறந்த ஞானயோ கக்கிரியா சரியையெலாம்
மலர்ந்தமொழித் திருமூல தேவர்மலர்க் கழல்வணங்கி
அலர்ந்தபுகழ்த் திருவாரூர் அமணர்கலக் கங்கண்ட
தலங்குலவு விறற்றண்டி அடிகள்திறஞ் சாற்றுவாம். உஅ

ஆ திருவிருத்தம் - ௩,௫கசு.

---

திருக்கயிலாயத்திலே நந்தி யெம்பெருமான் திருவருள் பெற்ற சிவயோகிகள் பலர் இருக்கின்றார். அவருள் ஒருவர் அணிமா முதலிய சித்திகளில் வல்லவர். அவருக்கு, 'அகத்தியருடன் சிலநாள் தங்குதல் வேண்டும்' என்னும் வேட்கை எழுந்தது. அவர், அவ்வேட்கையைத் தணித்துக் கொள்ளத் திருக்கயிலையினின்றும் பொதிகை நோக்கிப் புறப்பட்டார்; வழியில் திருக்கேதாரம், பசுபதி நேபாளம், காசி, ஸ்ரீசைலம், திருக்காளத்தி, திருவாலங்காடு, காஞ்சீபுரம், திருவதிகை, சிதம்பரம் முதலிய திருப்பதிகளைக் கண்டு தொழுது, திருவாவடுதுறையை அடைந்தார். அத்திருப்பதியை விடுத்து அகலாத ஒரு கருத்து அவர்தம் உள்ளத்தில் உதித்துக்கொண்டிருந்தது. ஆயினும் அவர், ஒருநாள், திருவாவடு

---

மந்திரமாலை - "மறப்பிலர் நெஞ்சினுள் மந்திரமாலை" திருமந்திரம் : 86. ஏன எயிறு அணிந்தாரை - பன்றிக் கொம்பை யணிந்த பரமசிவனை.

உஎ. திருமந்திரத்தின் தொகை மூவாயிரம் ; மூவாயிரத்துக்கு மேற்பட்ட பாடல்கள் இடைச்செருகல் என்க. "மூலன் மடவரை தந்திரம் ஒன்பது சார்வு மூவாயிரம்", "மூலன் உரை செய்த மூவாயிரந்தமிழ்", "முத்தி முடிவிது மூவாயிரத்திலே", "மூலன் உரைசெய்த மூவாயிரந்தமிழ்"—திருமந்திரம்: 101, 99, 100, 3046. திருமூலர் ஒவ்வோராண்டுக்கு ஒவ்வொரு மந்திரமாக மூவாயிரம் ஆண்டிருந்து மூவாயிரம் மந்திரஞ் சொன்னார் என்பதற்கு அகச்சான்றில்லை. திருமூலர் நீண்டகாலம் இருந்தனர் என்பதுமட்டும் "ஒப்பில்கோடி யுகமிருந்தேனே" (74), "இருந்தேன் இக்காயத்தில் எண்ணிலி கோடி" (80) என வரும் அவர் திருவாக்குகளான் இனிது விளங்குகிறது. ஆண்டு என்பதற்கு அந்நாளில் வேறு பொருள் வழங்கிவந்ததோ என்னவோ தெரியவில்லை.

துறையை விடுத்துப் புறப்பட்டார். அப்போது, காவிரிக் கரையில் உள்ள ஒரு பசுங்காட்டிலே பசுக் கூட்டங்கள் புலம்பிக் கொண்டிருந்தன. அக்காட்சியைச் சிவயோகியார் கண்டார்.

அப்பசுக்களை மேய்ப்பவன் சாத்தனூரில் உள்ள ஓர் இடையன். அவன், மூலன் என்னும் பெயரை உடையவன். அவன் அன்று இறந்து பட்டான். பசுக்கள் அவனைச் சுற்றி நின்று மோந்து மோந்து அழுதுகொண் டிருந்தன. பசுக்களின் அழுகை சிவயோகியார் நெஞ்சைக் கவர்ந்தது. "பசுக்களின் துயரை நீக்குதல் வேண்டும்" என்னும் கருணை அவர்தம் உள்ளத்தில் பிறந்தது. "இவ் விடையன் உயிர் பெற்றெழுந்தாலன்றி இப்பசுக்களின் துயர் நீங்காது" என்று அவர் நினைக்கலானார்.

சிவயோகியார், கூடுவிட்டுக் கூடுபாயும் சித்தில் வல்லவராதலால், அவர், தமது உடலை ஓரிடத்தில் சேமித்து வைத்தார்; இடையன் உடலிலே நுழைந் தார்; திருமூலராய் எழுந்தார். பசுக்கள் எல்லாம் ஆனந்த முற்றன; அவரை நாத்தழும்பத்தழும்ப நக்கின; மோந்தன; கனைத்தன; துள்ளியோடி மேய்ந்தன. பொழுது போயிற்று. பசுக்கள் வழக்கம்போலச் சாத்தனூரை நோக்கி நடந்தன. திருமூலரும் அவைகளுடன் சென்றார். பசுக்கள் இல்லந்தோறும் நுழையலா யின. திருமூலர் வீதியிலே ஓரிடத்தில் நின்றார்.

மூலனுக்கு ஒரு மனைவி உண்டு. அவள், "என்ன! நாயகர் இன்னும் வர வில்லையே" என்று வெளியே வந்து பார்த்தாள்; சிவயோகியார் நின்ற இடத் துக்கு வந்தாள்; "இவர் ஏன் இங்கே நிற்கிறார்? இவருக்கு என்ன? தீட்டா?" என்று சிவயோகியாரைத் தீண்டப்போனாள். சிவயோகியார் அவளைப் பார்த்து, "என்னைத் தீண்டாதே" என்றார். அவள் மருண்டு, "இஃதென்ன!" என்று தளர்வுற்றாள். சிவயோகியார், அவளை நோக்கி, "எனக்கும் உனக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை" என்று சொல்லி ஒரு பொது மடத்திலே நுழைந்தார்.

இடையன் மனைவி இரவு முழுவதும் துயிலாது வருந்திக்கொண்டிருந் தாள். பொழுது விடிந்தது. விடிந்ததும், அவள் அவ்வூரிலுள்ள அறிஞர்களிடஞ் சென்று, தன் கணவன் செயலைத் தெரிவித்தாள். அவர்கள் சென்று திரு மூலரைப் பார்த்தார்கள்; பார்த்து, "இதுபித்தன்று; மயக்கன்று; இவர் சித்தம் சிவயோகத்தில் ஈடுபட்டிருக்கிறது. இனி இவர் சுற்றத்துடன் சேர்ந்து வாழார்" என்று சொல்லி விட்டார்கள். அதுகேட்ட மனைவி துயரக் கடலில் ஆழ்ந்தாள். அவர்கள் அவளைத் தேற்றி உடனழைத்துச் சென்றார்கள்.

பின்னே திருமூலர் எழுந்து பசுக்கள் வந்த வழியே சென்றார்; தாம் சேமித்துவைத்த தமது உடலைத் தேடினார்; அதைக் கண்டாரில்லை. "சிவாகமத் தின் உண்மைப் பொருளைத் தம்வாயிலாகத் தமிழில் வெளியிடவேண்டி உடலை மறைத்தது சிவபிரான் திருவருள்" என்பதை ஞான உணர்வினால் திருமூலர் தெளியலானார். அந்நிலையில், சுற்றத்தார், திருமூலரைத் தொடர்ந்து சூழ்ந்தனர். திருமூலர் அவர்களைப் பார்த்து, "உங்களுக்கும் எனக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை; நீங்கள் போங்கள்" என்றார். அவர்கள் திரும்பிப் போய்விட்டார்கள்.

திருமூலர், திருவாவடுதுறை சேர்ந்தார்; திருக்கோயிலுள் நுழைந்தார்; மேற்புறத்திலுள்ள அரசமரத்தடியில் அமர்ந்தார்; மூவாயிரம் ஆண்டு சிவயோகத் தில் இருந்தார். ஆண்டுக்கு ஒரு மந்திரமாகத் திருமந்திரம் மூவாயிரம் அவ ரால் அருளிச் செய்யப்பட்டன. அத்திருத் தொண்டு முற்றுப் பெற்றதும் அவர் திருக்கயிலை அடைந்தார்.



# தண்டியடிகள் புராணம்

தண்டி யடிகள் திருவாரூர்ப் பிறக்கும் பெருமைத் தவமுடையார்
அண்ட வாணர் மறைபாட ஆடுஞ் செம்பொற் கழல்மனத்துக்
கொண்ட கருத்தின் *அகநோக்குங் குறிப்பே அன்றிப் புறநோக்கும்
கண்ட உணர்வு துறந்தார்போல் பிறந்த பொழுதே கண்காணார். க

காணுங் கண்ணாற் காண்பதுமெய்த் தொண்டே யான கருத்துடையார்
பேணுஞ் செல்வத் திருவாரூர்ப் பெருமா னடிகள் திருவடிக்கே
பூணும் அன்பி னற்பரவிப் போற்று நிலைமை †புரிந்தமரார்
சேணும் ‡அறிய அரியதிருத் தொண்டிற் செறியச் சிறந்துள்ளார். உ

பூவார் சடிலத் திருமுடியார் மகிழ்ந்த செல்வப் பூங்கோயில்
தேவா சிரியன் முன்னிறைஞ்சி வலஞ்செய் வாராய்ச் செம்மைபுரி
நாவால் இன்ப முறுங்காதல் நமச்சி வாய நற்பதமே
ஓவா அன்பில் எடுத்தோதி ஒருநாள் போல வருநாளில். ந

செங்கண் விடையார் திருக்கோயிற் குடபால் தீர்த்தக் குளத்தின்பாங்
கெங்கும் அமணர் பாழிகளாய் இடத்தாற் குறைபா டெய்துதலால்
அங்கந் நிலைமை தனைத்தண்டி யடிகள் அறிந்தே ஆதரவால்
"இங்கு நான்இக் குளம்பெருகக் கல்ல வேண்டும்" என்றெழுந்தார். ச

குழிவா யதனிற் §குறிநட்டுக் ||கட்டுங் கயிறு ¶குளக்குலையின்
இழிவாய்ப் புறத்து நடுத்தறியோ டிசையக் கட்டி இடைதடவி

---

க. தண்டியடிகள் அகக்கண் விளங்கப் பெற்றவர்; புறக்கண்ணில்லாதவர். இதனால் "நாட்டமிகு தண்டிக்கும்" என்றார் **திருத்தொண்டத்தொகையுடையார்.** கருத்தின்கண் என்னும் பாடத்துக்கு அகக்கண் என்று கொள்க. உணர்வு இருவகைத்து. ஒன்று கண்ட உணர்வு; மற்றொன்று அகண்ட உணர்வு. முன்னையது புறக்கண்ணுக்குரியது; பின்னையது அகக்கண்ணுக் குரியது.

ந. சடிலம் - சடை. தேவாசிரிய மண்டபத்தின் முன். நற்பதமே - நல்ல மந்திரமே. ஓவா - நீங்காத.

ச. குடபால் - மேற்கிலுள்ள. பாங்கு - பக்கம். பாழிகளாய் - மடங்களாய்; குகைகளாய். ஆதரவால் - விருப்பத்தால். கல்ல - தோண்ட; வெட்ட.

ரு. குலையின் - கரையின். இழிவாய்ப்புறத்து - இறங்கும் இடப்புறத்தில். தறியோடு - முளையுடன். மறித்தும் - மீண்டும். உய்த்தார் - சேர்த்தார்; கொட்டினார். உய்ப்பார் - உச்சரிப்பவராய்.

**பா - ம்**—*கண். †புரிந்தமர்வார் ‡மருவ. §குறிகாட்டி; தறிநட்டு. ||கூட்டுக். ¶குளக்கரையின்.

வழியால் வந்து மண்கல்லி எடுத்து மறித்துந் தடவிப்போய்
ஒழியா முயற்சி யாலுய்த்தார் ஓதும் எழுத்தஞ் சுடனுய்ப்பார். ௫

நண்ணி நாளும் நற்றொண்டர் நயந்த விருப்பால் மிகப்பெருகி
அண்ணல் தீர்த்தக் குளங்கல்லக் *கண்ட அமணர் பொறாராகி
எண்ணித் தண்டி யடிகள்பால் எய்தி முன்நின் றியம்புவார்
"மண்ணைக் கல்லிற் பிராணிபடும் வருத்த வேண்டாம்" என்றுரைத்தார். ௬

மாசு †சேர்ந்த முடையுடலார் மாற்றங் கேட்டு மறுமாற்றம்
தேசு பெருகுந் திருத்தொண்டர் செப்பு கின்றார் "திருவிலிகாள்
பூசு நீறு சாந்தமெனப் புனைந்த பிரானுக் கானபணி
ஆசி லாநல் லறமாவ தறிய வருமோ உமக்?"கென்றார். ௭

அந்த மில்லா அறிவுடையார் உரைப்பக் கேட்ட அறிவில்லார்
"சிந்தித் திந்த அறங்கேளாய் செவியும் இழந்தா யோ!"என்ன
"மந்த உணர்வும் விழிக்குருடும் கேளாச் செவியும் மற்றுமக்கே
இந்த உலகத் துள்ளன"என் றன்பர் பின்னும் இயம்புவார். ௮

"வில்லால் எயில்மூன் றெரித்தபிரான் விரையார் கமலச் சேவடிகள்
அல்லால் வேறு காணேன்யான் அதுநீர் அறிதற் கார்?"என்பார்
"நில்லா ‡நிலையீர் உணர்வின்றி நுங்கண் குருடாய் என்கண்உல
கெல்லாங் காண்பான் யான்கண்டால் என்செய் வீர்?"என் றெடுத்துரைத்தார். ௯

அருகர் அதுகேட் "டுன்தெய்வத் தருளால் கண்நீ பெற்றாயேல்
பெருகும் இவ்வூ ரினில்நாங்கள் பின்னை இருக்கி லோம்"என்று
கருகு முருட்டுக் கைகளால் கொட்டை வாங்கிக் கருத்தின்வழித்
தருகைக் கயிறுந் தறியுமுடன் பறித்தார் தங்கள் தலைபறித்தார். ௧௦

வெய்ய தொழிலார் செய்கையின்மேல் வெகுண்ட தண்டி யடிகள்தாம்
மைகொள் கண்டர் பூங்கோயில் "மணிவா யிலின்முன் வந்திறைஞ்சி

---

௬. பிராணிபடும் - உயிர்கள் சாகும். வருந்தவேண்டாம் என்பது பாடமாயின், நீரும் வீணே வருந்தவேண்டாம் என்று கொள்க.

௭. அந்தம் - எல்லை. முடை - நாற்றம் வீசும். தேசு - ஒளி. திருவிலிகாள்-மூதேவிகளே என்றபடி. ஆசிலா - குற்றமில்லாத.

௯. வில்லால் - மேருவில்லால். எயில் மூன்றும் - மூன்று மதில்களையும்; முப்புரங்களையும்.

௧௦. கொட்டை - மண்வெட்டியை. கருத்தின் வழிதரு - கருத்துப்போல் வழி தெரிவிக்கும். தலைபறித்தார் - தலைமயிர் பறிப்பவர்களாகிய சமணர்கள்.

பா - ம்—*அமணர் கண்டு. †படர்ந்த. ‡நிலையீர்க் குணர்வின்றி.

"ஐய னே! இன் றமணர்கள் தாம் என்னை அவமா னஞ்செய்ய
வைவ தானேன் இதுதீர நல்கும் அடியேற்" கெனவீழ்ந்தார். கக

பழுது தீர்ப்பார் திருத்தொண்டர் பரவி விண்ணப் பஞ்செய்து
தொழுது போந்து மடம்புகுந்து தூய பணிசெய் யப்பெறு
தழுது கங்குல் அவர்துயிலக் கனவில் அகில லோகங்கள்
முழுதும் அளித்த முதல்வனார் முன்நின் றருளிச் செய்கின்றார். கஉ

"நெஞ்சில் மருவுங் கவலையினை ஒழிநீ நின்கண் விழித்தந்த
வஞ்ச அமணர் தங்கண்கள் மறையு மாறு காண்கின்றாய்
அஞ்ச வேண்டாம்" என் றருளி அவர்பால் நீங்கி அவ்விரவே
துஞ்சும் இருளில் அரசன்பால் தோன்றிக் கனவில் அருள்புரிவார்.

"தண்டி நமக்குக் குளங்கல்லக் கண்ட அமணர் தரியாராய்
மிண்டு செய்து பணிவிலக்க வெகுண்டான் அவன்பால் நீமேவிக்
கொண்ட குறிப்பால் அவன்கருத்தை முடிப்பாய்" என்று கொளஅருளித்
தொண்டர் இடுக்கண் நீங்களழுந் தருளி னார்அத் தொழிலுவப்பார். கச

வேந்தன் அதுகண் டப்பொழுதே விழித்து மெய்யின் மயிர்முகிழ்ப்பப்
பூந்தண் கொன்றை வேய்ந்தவரைப் போற்றிப் புலரத் தொண்டர்பால்
சார்ந்து புகுந்த படிவிளம்பத் தம்பி ரானார் அருள்நினைந்தே
ஏய்ந்த மன்னன் கேட்பஇது புகுந்த வண்ணம் இயம்புவார். கரு

"மன்ன! கேள்யான் மழுவிடையார் மகிழுந் தீர்த்தக் குளங்கல்லத்
துன்னும் அமணர் அங்கணைந்தீ "தறம்அன்" றென்று பலசொல்லிப்
பின்னுங் கயிறு தடவுதற்கியான் பிணித்த தறிகள் அவைவாங்கி
என்னை வலிசெய் தியான்கல்லுங் கொட்டைப் பறித்தார்" என்றியம்பி.

"'அந்த ணனை உனக்கறிவும் இல்லை' என்றார் யான்அதனுக்
'கெந்தை பெருமான் அருளால்யான் விழிக்கில் என்செய் வீர்?' என்ன
'இந்த ஊரில் இருக்கிலோம்' என்றே ஒட்டி னார்இதுமேல்
வந்த வாறு கண்டிந்த வழக்கை முடிப்ப" தெனமொழிந்தார். கஎ

---

கஉ. பழுது தீர்ப்பார் - சிவபெருமான்.

கச. மிண்டுசெய்து - இடக்கர்செய்து; தருக்கால் பிழைசெய்து;......உவப்பார் - சிவபெருமான்.

கரு. வேய்ந்தவரை-அணிந்தவரை. புலர - இருள்விடிய. ஏய்ந்த-அடைந்த. புகுந்த வண்ணம் இது - நிகழ்ந்ததை.

கஎ. அந்தணனை - குருடனை. ஒட்டினார் - சபதங் கூறினார். இதுமேல் வந்தவாறு - இது முன்னே நடந்தவிதம்.

பா - ம்—*தங்கள்கண்.

அருகர் தம்மை அரசனும்அங் கழைத்துக் கேட்க அதற்கிசைந்தார்
மருவுந் தொண்டர் முன்போக மன்னன் பின்போய் மலர்வாவி
அருகு நின்று விறல்தண்டி யடிகள் தம்மை முகநோக்கிப்
"பெருகுந் தவத்தீர்! கண்அருளாற் பெருமா காட்டும்"எனப்பெரியோர்.

"ஏய்ந்த அடிமை சிவனுக்கியான் என்னில் இன்றென் கண்பெற்று
வேந்தன் எதிரே திருவாரூர் விரவுஞ் சமணர் கண்ணிழப்பார்
ஆய்ந்த பொருளுஞ் சிவபதமே ஆவ"தென்றே அஞ்செழுத்தை
வாய்ந்த தொண்டர் எடுத்தோதி மணிநீர் வாவி மூழ்கினார். கக

தொழுது புனல்மேல் எழுந்தொண்டர் தூய மலர்க்கண் பெற்றெழுந்தார்
பொழுது தெரியா வகைஅமரர் பொழிந்தார் செழுந்தண் பூமாரி
இழுதை அமணர் விழித்தேகண் ணிழந்து தடுமா றக்கண்டு
"பழுது செய்த அமண்கெட்ட" தென்று மன்னன் பகர்கின்றான். உ௦

"தண்டி யடிகள் தம்முடனே ஒட்டிக் கெட்ட சமண்குண்டர்
அண்டர் போற்றுந் திருவாரூர் நின்றும் அகன்று போய்க்கழியக்
கண்ட அமணர் தமைஎங்குங் காணு வண்ணந் துரக்க"என
மண்டி வயவர் சாடுதலும் கண்கள் காணார் மனங்கலங்கி. உக

குழியில் விழுவார் நிலைதளர்வார் "கோலும் இல்லை" எனஉரைப்பார்
"வழியீ" தென்று தூறடைவார் "மாண்டோம்" என்பார் †"மதிகெட்டீர்
அழியும் பொருளை வட்டித்திங் கழிந்தோம்" என்பார் "அரசனுக்குப்
பழியீ தாமோ" என்றுரைப்பார் பாய்கள் இழப்பார் பறிதலையர். உஉ

பீலி தடவிக் காணாது பெயர்வார் நின்று பேதுறுவார்
காலி னோடு கைமுறியக் கல்மேல் இடறி வீழ்வார்கள்
சால நெருங்கி எதிரெதிரே தம்மிற் றாமே முட்டிடுவார்
மாலும் மனமும் அழிந்தோடி வழிகள் அறியார் மயங்குவார். உங

கஅ. மலர்நிறைந்த தீர்த்தத்தின் அருகே நின்று.

உ௦. பொழுது தெரியாவகை - சூரியன் மறையும்படி; பொழுது நீட்டித்தல் தெரியாதபடி எனினுமாம். இழுதை-அறிவில்லாதவர்களாகிய. விழித்த நிலையில் கண்ணிழத்தலாவது கண்ணொளி இழத்தலாம்.

உக. துரக்க - ஓட்டுக. வயவர்மண்டி - வீரர்கள் மிக்குச் சென்று.

உஉ. தூறு - புதர்களை. வட்டித்து - பிரதிக்கினை பண்ணி. போர்த்த பாய்கள்.

உங. பெயர்வார் - பெயர்ந்து செல்வார். பேதுறுவார்-மயங்குவார். மாலும்-மயங்கும்; இருண்ட.

பா - ம்—*இன்னே. †மதிகெட்டோம்.

அன்ன வண்ணம் ஆரூரில் அமணர் கலக்கங் கண்டவர்தாம்
சொன்ன வண்ண மேஅவரை *ஓடத் தொடர்ந்து துரந்ததற்பின்
பன்னும் பாழிப் பள்ளிகளும் பறித்துக் குளஞ்சூழ் கரைபடுத்து
மன்ன னவனும் மனமகிழ்ந்து வந்து தொண்டர் அடிபணிந்தான். உச

மன்னன் வணங்கிப் போயினபின் மாலும் அயனும் அறியாத
பொன்னங் கழல்கள் போற்றிசைத்துப் புரிந்த பணியுங் குறைமுடித்தே
உன்னும் மனத்தால் அஞ்செழுத்தும் ஓதி வழுவா தொழுகியே
மின்னுஞ் சடையார் அடிநீழல் மிக்க சிறப்பின் மேவினார். உரு

கண்ணின் மணிக ளவையின்றிக் கயிறு †தடவிக் குளந்தொட்ட
எண்ணில் பெருமைத் திருத்தொண்டர் பாதம் இறைஞ்சி இடர்நீங்கி
விண்ணில் வாழ்வார் தாம்வேண்டப் புரங்கள் வெகுண்டார் வேற்காட்டூர்
உண்ணி லாவும் புகழ்த்தொண்டர் மூர்க்கர் செய்கை உரைக்கின்றாம்.

ஆ திருவிருத்தம் - ௩,௬௨௨

---

**தண்டியடிகள்** சோழநாட்டிலே திருவாரூரிலே பிறந்தவர்; பிறவிக் குருடர்; அகக்கண்ணினாலே ஆண்டவனை வழிபடுவோர். அவர் திருவாரூர்த் திருக்கோயிலை வலம் வருவார்; அஞ்செழுத்தை ஓதுவார்.

திருக்கோயிலுக்கு மேற்பால் ஒரு திருக்குளம் உண்டு. அதன் பக்கமெங்கும் சமண மடங்கள் நிரம்பி இருந்தன. அதனால், திருக்குளம் இடத்தால் சுருக்கமுற் றிருந்தது.

தண்டியடிகள், திருக்குளத்தைப் பெருக்க முயன்றார். அவர், திருக்குளத்தினுள்ளே ஒரு தறி நட்டார்; கரையிலே மற்றொரு தறி நட்டார்; இரண்டுக்கும் இடையே கயிறு கட்டினார்; கயிற்றைத் தடவிக்கொண்டே போவார்; மண்ணை வெட்டுவார்; அதைக் கூடையிலே சுமந்து வருவார்; கொட்டுவார்.

இச்செயலைச் சமணர்கள் கண்டார்கள்; பொறாமை கொண்டார்கள். அவர்கள் நாயனாரை அணைந்து, "மண்ணைக்கல்லாதேயும்; பிராணிகள் இறக்கும்; அவைகளை வருத்தவேண்டாம்" என்று சொன்னார்கள். அதற்கு அடிகள், "அறிவு கெட்டவர்களே! இது சிவத்தொண்டு; அறத்தொண்டு; இதன் பெருமை உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டார். சமணர்கள் வெகுண்டு, "நாங்கள் சொன்னது அறவுரை. அதைக் கேட்கின்றாய் இல்லை. செவியும் இல்லைபோலும்!" என்றார்கள். நாயனார், "மந்த உணர்வும், குருட்டு விழியும், கேளாச் செவியும் உங்களுக்கே உண்டு. சிவனடியை அன்றிப்

---

உச. பன்னும் பாழி பள்ளிகளும் - நெருங்கியுள்ள மடங்களையும் கோயில்களையும்.

உரு. புரிந்த பணியும் - விரும்பிய தொண்டையும்.

பா - ம்—*ஓடஓடத் துரந்ததற்பின். †பிடித்துக்.

பிறிதொன்றை என்கண் பாராது. அந்நுட்பம் உங்களுக்கு விளங்காது. புற உலகம் எல்லாவற்றையும் யான்காணக் கண் பெற்றால், நீங்கள் என் செய்வீர்கள்?" என்று கேட்டார். சமணர்கள் "நீ உன் தெய்வ வல்லமையால் கண் பெறுக, பார்ப்போம்! பெறுவையேல் நாங்கள் இவ்வூரில் இருப்பதில்லை" என்று கூறினார்கள். அவ்வளவில் சமணர்கள் நில்லாது, நாயனாருடைய மண் வெட்டியையும், குறித்தறிகளையும், கயிற்றையும் பறித்துப் பிடுங்கி எறிந்தார்கள். தண்டியடிகள் என் செய்வார்! அவருக்கு வெகுளி மேலிட்டது. அவர், திருக்கோயில் திருவாயிலிலே சென்றார்; ஆண்டவனை இறைஞ்சினார்; "ஐயனே! இன்று சமணர்கள் என்னை அவமானஞ் செய்தார்கள்; அதனால் யான் மிக வருந்துகிறேன்; அதை ஒழித்தருள்க" என்று வேண்டினார். வேண்டி, அவர் தமது திருமடத்தை அடைந்தார்; துன்பத்தில் மூழ்கித் துயின்றார்.

சிவபெருமான் அன்றிரவு, நாயனார் கனவிலே தோன்றி, "அன்பனே! கவலை யுறாதே; உன்கண் காணவும், சமணர் கண்கள் குருடாகவும் அருள் செய்வோம்" என்று திருவாய் மலர்ந்தார். அப்பொழுதே சிவபெருமான் சோழமன்னன் கனவிலுந் தோன்றி, "தண்டி என்பவன் நமக்குக் குளங்கல்லினான். அதற்குச் சமணர்கள் இடையூறு செய்தார்கள். நீ அவனிடம் போந்து அவன் கருத்தை முடிப்பாயாக" என்று கட்டளை யிட்டார். மன்னன் விழித்து, ஆண்டவனருளைப் போற்றினான்.

பொழுது விடிந்தது. மன்னன், நாயனார்பா லணைந்தான். அவன், தான் கண்ட கனவை நாயனாருக்குத் தெரிவித்தான். நாயனாரும், சமணர்கள் நிகழ்த்தியதையும், அதன் பொருட்டுத் தாம் ஏற்ற சூளையும் மன்னனுக்கு விளங்க உணர்த்தினார். மன்னன், சமணர்களை அழைப்பித்து விசாரணை புரிந்தான். சமணர்கள், தண்டி கண் பெற்றால், தாங்கள் இவ்வூரை விட்டுப் போவதாக உறுதி கூறினார்கள்.

தண்டியடிகள் குளக்கரைக்குச் சென்றார். மன்னனும் உடன்போந்தான். மன்னன், கரையிலே நின்று, தண்டியடிகளை நோக்கி, "சிவநேயரே! சிவனருளால் கண்ணைப் பெறுதலைக் காட்டுக" என்றான். நாயனார், "சிவபெருமானுக்கு யான் தொண்டு செய்வது உண்மையாயின், மன்னன் எதிரே, யான் கண்பெறுதல் வேண்டும்; சமணர்கள் கண்ணிழத்தல் வேண்டும்" என்று உரைத்து அஞ்செழுத்தை ஓதிக்கொண்டே திருக்குளத்தில் மூழ்கினார்; கண் பெற்றே எழுந்தார். சமணர்கள் கண்ணிழந்து தடுமாறினார்கள்.

அக்காட்சி கண்ட மன்னன், சமணர்களை ஊரை விட்டுத் துரத்தினான்; சமணர்களுடைய பள்ளிகளையும் பாழிகளையும் இடித்தான்; திருக்குளத்தை நாயனார் கருத்துப்படி ஒழுங்கு செய்தான்; நாயனாரைப் பணிந்து விடைபெற்றுச் சென்றான். தண்டியடிகள் வழக்கம்போலத் தொண்டு செய்து சிவபெருமான் திருவடி நீழலை யடைந்தார்.

# மூர்க்க நாயனார் புராணம்

மன்னிப் பெருகும் பெருந்தொண்டை வளநா டதனில் வயல்பரப்பு
நன்னித் திலவெண் திரைப்பாலி நதியின் வடபால் நலங்கொள்பதி
அன்னப் பெடைகள் குடைவாவி அலர்புக் காட அரங்கினிடை
மின்னுக் கொடிகள் துகிற்கொடிகள் விழவிற் காடு வேற்காடு. க

செம்பொற் புரிசைத் திருவேற்கா டமர்ந்த செய்ய சடைக்கற்றை
நம்பர்க் கும்பர்க் கமுதளித்து நஞ்சை அமுது செய்தவருக்
கிம்பர்த் தலத்தில் வழிஅடிமை என்றுங் குன்று இயல்பில்வரும்
தம்பற் றுடைய நிலைவேளாண் குலத்திற் றலைமை சார்ந்துள்ளார். உ

கோதில் மரபிற் பிறந்துவளர்ந் தறிவு கொண்ட நாள்தொடங்கி
"ஆதி *முதல்வர் திருநீற்றின் அடைவே பொருள்" என் றறிந்தரனார்
காதல் அடியார்க் கமுதாக்கி அமுது செய்யக் கண்டுண்ணும்
நீதி முறைமை வழுவாத நியதி பூண்ட நிலைமையார். ௩

தூய அடிசில் நெய்கன்னல் சுவையின் கறிக ளவைஅமைத்து
மேய அடியார் தமைப்போற்றி விருப்பால் அமுது செய்வித்தே
ஆய பொருளும் அவர்வேண்டும் படியால் உதவி அன்புமிக
ஏயு மாறு நாள்தோறும் இனைய பணிசெய் தின்புற்றார். ச

இன்ன செயலின் ஒழுகுநாள் அடியார் மிகவும் எழுந்தருள
முன்னம் உடைமை யானபொருள் முழுதும் மாள அடிமையுடன்
மன்னும் காணி யானநிலம் மற்றும் உள்ள †திறம்விற்றே
அன்னம் அளித்தே மேன்மேலும் ஆரா மனத்தா ராயினார். ரு

---

க. நல்லமுத்துகளைத் தாங்கி வந்து வயல்களில் பரப்பும் வெள்ளிய அலைகளையுடைய பாலாற்றின். குடைவாவி அலர் புக்காட - நீராடுதற்குரிய தடாகங்களிலுள்ள மலர்களில் புகுந்து ஆட. அரங்கினிடை - நடன சாலைகளில். மின்னுக் கொடிகள் துகிற் கொடிகள் - பெண்களும் துணிக் கொடிகளும். விழவிற்கு - திருநாள்களில்; மங்கலத்துக்காக.

உ. புரிசை - மதில். உம்பர்க்கு - தேவர்களுக்கு. இம்பர் தலத்தில் - இவ்வுலகில். பற்று - அன்பு.

௩. அடைவே - சார்பே.

ச. அடிசில் - சோறு. கன்னல் - சர்க்கரை. ரு. திறம் - வகைகள்.

பா - ம்—*முதலாம். †தனம்.

அங்கண் அவ்வூர் தமக்கொருபற் றடியார் தங்கட் கமுதாக்க
எங்குங் காணு வகைதோன்ற இலம்பா டெய்தி இருந்தயர்வார்
தங்கும் வகையால் தான்முன்பு கற்ற தன்மை நற்சூதால்
பொங்கும் பொருளாக் கவும்அங்குப் பொருவார் இன்மை யினிற்போவார்.

பெற்றம் ஏறிப் பலிக்குவரும் பெருமான் அமருந் தானங்கள்
உற்ற அன்பாற் சென்றெய்தி உருகும் உள்ளத் தொடும்பணிந்து
கற்ற சூதால் நியதியாங் *கருமம் முடித்தே கருதாரூர்
செற்ற சிலையார் திருக்குடந்தை அடைந்தார் வந்து சிலநாளில். எ

வேறு

இருளாரும் மணிகண்டர் அடியார்க்கின் னமுதளிக்கப்
பொருளாயம் எய்துதற்குப் புகழ்க்குடந்தை அம்பலத்தே
உருளாயச் சூதாடி உறும்பொருள்வென் றனநம்பர்
அருளாக வேகொண்டங் கமுதுசெய்வித் தின்புறுவார். அ

முற்சூது தாந்தோற்று முதற்பணைய மவர்கொள்ளப்
பிற்சூது பலமுறையும் வென்றுபெரும் பொருளாக்கிச்
சொற்சூதால் மறுத்தாரைச் சுரிகைஉருவிக்குத்தி
†நற்சூதர் மூர்க்கரெனும் பெயர்பெற்றார் நானிலத்தில். கூ

சூதினில்வென் றெய்துபொருள் துரிசற்ற நல்லுணர்வில்
தீதகல அமுதாக்கு வார்கொள்ளத் தாந்தீண்டார்
காதலுடன் அடியார்கள் அமுதுசெயக் கடைப்பந்தி
ஏதமிலா வகைதாமும் அமுதுசெய்தங் கிருக்குநாள். கO

நாதன்தன் அடியார்க்கு நல்லடிசில் நாள்தோறும்
ஆதரவி னால்அமுது செய்வித்தங் கருளாலே

---

சு. பற்று - பற்றுக்கோடு. இலம்பாடு - இல்லாமை யுண்டாதல்; வறுமை. பொருவார் - ஆடுவார்.

எ. பெற்றம் - இடபம். நியதியாங் கருமம் - அடியார்களுக்கு அன்னமிடுவது. கருதார்......குடந்தை - பகைவரது முப்புரமெரித்த சிவபெருமான் எழுந்தருளியுள்ள கும்பகோணத்தை.

அ. பொருள் ஆயம் - பொருள் வரவு. அம்பலத்தே - பலர் கூடும் பொதுவிடம். உருள்ஆயச் சூதாடி - உருளும் கருவியால் சூதாடி; (ஆயம் - சூதாடு கருவி).

கூ. பணயம் - பணம். சூதான சொற்களால் மறுத்தவரை. சுரிகை - உடைவாளை.

கO. துரிசு அற்ற - குற்றமற்ற.

பா - ம்—*கடனும். †நற்சூதால்.

ஏதங்கள் போயகல இவ்வுலகை விட்டதற்பின்
பூதங்கள் இசைபாட ஆடுவார் புரம்புக்கார். கக

வல்லார்கள் தமைவென்று சூதினால் வந்தபொருள்
அல்லாருங் கறைக்கண்டர் அடியவர்கள் தமக்காக்கும்
நல்லார்நற் சூதராம் மூர்க்கர்கழல் நாம்வணங்கிச்
சொல்லார்சீர்ச் சோமாசி மாறர்திறஞ் சொல்லுவாம். கஉ

ஆ திருவிருத்தம் - ரு,கூரு௪.

---

தொண்டை நாட்டில் திருவேற்காடு என்றொரு பதியுண்டு. அத்திருப் பதியில் வேளாளர் மரபில் தோன்றியவர் **மூர்க்கநாயனார்**; அடியவர்களை அமுது செய்வித்த பின்னர் உண்பது அவரது நியதி; அடியவர்கள் விரும்பும் பொருளைக் கொடுப்பதும் அவர்தம் வழக்கம்.

நாளுக்குநாள் அடியவர் கூட்டம் பெருகலாயிற்று. நாயனாரிடம் இருந்த பொருளெலாஞ் செலவாயின. நிலம் முதலியவற்றை விற்றும் அவர் தமது தொண்டை வழாது நடாத்தி வந்தார். எவ்வகைப் பொருளும் இல்லாத நிலைமை நேர்ந்தது. அடியவர் பெருமான் நொந்து நொந்து நைந்தார்.

நாயனார் சூதாட்டத்தில் வல்லவர்; அதன் வாயிலாகவாவது பொருளீட்டித் தமது தொண்டாற்றக் கருதினார்; திருவேற்காட்டில் தம்முடன் சூதாடுவோரைக் கண்டாரில்லை. ஆகவே, அவர், பல திருப்பதிகளுக்குச் செல்வாரானார். ஆங்காங்கே அவர் சூதாடுவார்; கிடைக்கும் பொருளைக் கொண்டு அடியார்களுக்கு அமுதூட்டுவார்.

நாயனார் கும்பகோணத்தை அடைந்தார்; அங்கும் சூதாட்டத்தால் பொருள் பெற்றுத் தமது தொண்டாற்றினார். நாயனார், முதல் ஆட்டத்தில் தோற்பார்; பின் ஆட்டங்களிலெல்லாம் வெற்றி பெறுவார்; ஆட்டத்தில் மாறுபடுவோரை உடைவாளால் குத்துவார்; அதனால் **மூர்க்கர்** என்னும் அருமைத் திருநாமமும் உடையவரானார்.

சூதில் கிடைக்கும் பொருள்களை மூர்க்கர் தங்கருமத்துக்கெனச் சிறிதும் பயன்படுத்தமாட்டார்; அவைகளைச் சமையல் செய்வோரிடம் கொடுப்பார். அவர்கள் அமுதாக்குவார்கள். அடியவர் எல்லாரும் உண்ட பின்னர், நாயனார் கடைப்பந்தியில் அமர்ந்து உண்பார். இவ்வாறு சிலநாள் திருத்தொண்டு செய்து மூர்க்க நாயனார் சிவபெருமான் திருவடியைச் சேர்ந்தார்.

---

கக. ஏதங்கள் - குற்றங்கள்.

கஉ. அல்லாரும் கறைக்கண்டர் - நீலகண்டராகிய சிவபெருமான்.

பா - ம்—*சூதாடும்.

# சோமாசிமாற நாயனார் புராணம்

சூதம்பயி லும்பொழில் அம்பரில் தூய வாய்மை
வேதம்பயி லும்மறை யாளர் குலத்தின் மேலோர்
ஏதம்புரி யும்எயி* செற்றவர்க் கன்பர் வந்தால்
பாதம்பணிந் தார்அமு தூட்டுநற் பண்பின் மிக்கார். க

"யாழின்மொழி யாள்தனிப் பாகரைப் போற்றும் யாகம்
ஊழின்முறை மைவழு வாதுல கங்க ளான
ஏழும்உவப் பப்புரிந் தின்புறச் செய்த பேற்றால்
வாழுந்திறம் ஈசர் மலர்க்கழல் வாழ்த்தல்" என்பார். உ

எத்தன்மைய ராயினும் "ஈசனுக் கன்பர்" என்றால்
†"அத்தன்மையர் தாம்நமை யாள்பவர்" என்று கொள்வார்
"சித்தந்‡தெளி யச்சிவன் அஞ்செழுத் தோதும் வாய்மை
நித்தந் நியமம்" எனப்போற்றும் நெறியில் நின்றார். ந

சீருந்திரு வும்§பொழி யுந்திரு வாரூர் எய்தி
ஆரந்திகழ் மார்பின் அணுக்கவன் தொண்டர்க் கன்பால்
சாரும்பெரு நண்பு சிறப்ப அடைந்து தங்கிப்
பாரும்விசும் பும்பணி யும்பதம் பற்றி யுள்ளார். ச

துன்றும்புலன் ஐந்துடன் ஆறு தொகுத்த குற்றம்
வென்"றிங்கிது நன்னெறி சேரும் விளக்கம்" என்றே
வன்தொண்டர் பாதந்||தொழு தான சிறப்பு வாய்ப்ப
என்றுந்நில வுஞ்சிவ லோகத்தில் இன்பம் உற்றார். ரு

---

க. சூதம்...அம்பரில் - மாமரங்கள் நிறைந்த சோலைகளையுடைய திருவம்பரில். ஏதம்...அன்பர் - கேடுசெய்த முப்புரங்களை அழித்த சிவபெருமான் அன்பர்கள்.

உ. ஊழின் - நியமத்தின்.

ரு. ஆறுகுற்றம் - காமம் குரோதம் லோபம் மோகம் மதம் மாச்சரியம்.

பா - ம்—*எய்தவர்க். †அத்தன்மைய ராம். ‡தெளி யத்திரு. §பொலியுந். ||தொழுதொன்று.

வேறு

பணையுந் தடமும் புடைசூழும் ஒற்றி யூரில் பாகத்தோர்
துணையுந் தாமும் பிரியாதார் தோழத் தம்பி ராஜனை
இணையுங் கொங்கைச் சங்கிலியார் எழில்மென் பணைத்தோள் எய்துவிக்க
அணையும் ஒருவர் சரணமே அரண மாக அடைந்தோமே.

ஆ திருவிருத்தம் - ௩,௬௪௦.

---

சோமாசிமாற நாயனார் சோழநாட்டில் உள்ள திருவம்பரில் பிறந்தவர். அவர் வேதியர்; சிவனடியார். அவர் அடியார்களுக்கு அமுதூட்டுவார்; யாகஞ் செய்வார்; ஐந்தெழுத் தோதுவார்; அடியவர் எவராயினும் அவரைச் சிவமெனக் கொண்டு வழிபாடு செய்வார். அந்நாயனார் திருவாரூரை அடைந்து, வன்தொண்டப் பெருமானுக்கு இடையறாப் பேரன்பு செலுத்திப் புலன்களை வென்று சிவலோகத்தை அடைந்தார்.



---

சு. பணையும் தடமும் - வயல்களும் தடாகங்களும். பணைத்தோள் - மூங்கில்போலும் தோள்களை. அரணமாக - காப்பாக.

## எ. வார்கொண்ட வனமுலையாள் சருக்கம்

# சாக்கிய நாயனார் புராணம்

அறுசமயத் தலைவராய் நின்றவருக் கன்பராய்
மறுசமயச் சாக்கியர்தம் வடிவினால் வருந்தொண்டர்
உறுதிவரச் சிவலிங்கங் கண்டுவந்து கல்லெறிந்து
மறுவில்சரண் பெற்றதிறம் அறிந்தபடி வழுத்துவாம். க

தாளாளர் திருச்சங்க மங்கையினில் தகவுடைய
வேளாளர் குலத்துதித்தார் மிக்கபொருள் தெரிந்துணர்ந்து
கேளாகிப் பல்லுயிர்க்கும் அருளுடைய ராய்க்கெழுமி
"நீளாது பிறந்திறக்கும் நிலைஒழிவேன்" எனநிற்பார். உ

அந்நாளில் எயிற்காஞ்சி அணிநகரஞ் சென்றடைந்து
நன்ஞானம் அடைவதற்குப் பலவழியும் நாடுவார்
முன்னாகச் சாக்கியர்தாம் மொழிஅறத்தின் வழிச்சார்ந்து
மன்னாத பிறப்பறுக்குந் தத்துவத்தின் வழிஉணர்வார். ௩

அந்நிலைமைச் சாக்கியர்தம் அருங்கலைநூல் ஓதிஅது
தன்னிலையும் புறச்சமயச் சார்வுகளும் பொருளல்ல
என்னும்அது தெளிந்தீசர் அருள்கூட "ஈறில்சிவ
நன்னெறியே பொருளாவ" தெனஉணர்வு நாட்டுவார். ௪

"செய்வினையுஞ் செய்வானும் அதன்பயனுங் கொடுப்பானும்
மெய்வகையான் நான்காகும் விதித்தபொருள்" எனக்கொண்டே
"இவ்வியல்பு சைவநெறி *அல்லவற்றுக் கில்லை"என
உய்வகையாற் "பொருள்சிவன்"என் றருளாலே உணர்ந்தறிந்தார். ௫

---

க. அறுசமயத் தலைவராய் நின்றவருக்கு - சிவபெருமானுக்கு.

உ. தாளாளர் - முயற்சியுடையவர். கேளாகி - உறவாகி. உண்மைப்பொருளைத் தெரிந்துணர்தற்கு அறிகுறி, உயிர்களிடத்து உறவுகொண்டு அருளுடையராய் வாழ்ந்து பிறவிப் பிணியினின்றும் விடுதலை யடைவதென்பது இங்கு ஓதப்பட்டது. "எவ்வுயிரும் நீங்காதுறையும் இறை சிவன் என்று - எவ்வுயிர்க்கும் அன்பாயிரு"—**சைவ சமயநெறி.**

௩. மன்னாத - நிலையுதலில்லாத.

௫. செய்வினை, செய்வான், பயன், கொடுப்பான் ஆக நான்கு. செய்வினை- நல்வினை தீவினை. செய்வான் - (அவைகளைக் கொடுக்கும்) சீவன். பயன் - இன்ப துன்பங்கள். கொடுப்பான் - சிவன்.

பா - ம்—*அல்லவருக்.

"எந்நிலையில் நின்றாலும் எக்கோலங் கொண்டாலும்
மன்னியசீர்ச் சங்கரன்தாள் மறவாமை பொருள்"என்றே
துன்னியவே டந்தன்னைத் துறவாதே தூயசிவம்
தன்னைமிகும் அன்பினால் மறவாமை தலைநிற்பார். கூ

வேறு

'எல்லாம் உடைய ஈசனே இறைவன்' என்ன அறியாதார்
பொல்லா வேடச் சாக்கியரே யாகிப் புல்ல ராகுவார்
அல்லார் கண்டர் தமக்கிந்த அகில மெல்லாம் ஆளென்ன
வல்லார் இவர்அவ் வேடத்தை மாற்றா தன்பின் வழிநிற்பார். எ

வேறு

காணாத அருவினுக்கும் உருவினுக்குங் காரணமாய்
நீணாகம் அணிந்தார்க்கு நிகழ்குறியாஞ் சிவலிங்கம்
நாணாது நேடியமால் நான்முகனுங் காணநடுச்
சேணாருந் தழற்பிழம்பாய்த் தோன்றியது தெளிந்தாராய். அ

நாடோறுஞ் சிவலிங்கங் கண்டுண்ணு மதுநயந்து
மாடோர்வெள் ளிடைமன்னுஞ் சிவலிங்கங் கண்டுமனம்
நீடோடு களியுவகை நிலைமைவரச் செயலறியார்
பாடோர்கல் கண்டதனைப் பதைப்போடும் எடுத்தெறிந்தார். கூ

---

சு. தாம் தாங்கிய சாக்கிய வேடத்தைத் துறவாது...; சிவத்துக் குரியது அன்பு ; புறவேடமன்று ; எந்நிலையில் நின்றும் எவ்வேடம் பூண்டும் சிவத்தை வழிபடலாம்.

எ. அல்லார் கண்டர் தமக்கு - சிவபெருமானுக்கு. **திருநாவுக்கரசு சுவாமிகள் புராணம் :** எக. குறிப்புப் பார்க்க.

அ. காணும் உருவினுக்கும். அருவம் உருவம் இரண்டிற்கும் மூலம் சிவலிங்கமென்க. மாலயன் தேடிய நுட்பத்தைத் **திருஞானசம்பந்த சுவாமிகள் புராணம்:** சஎக. குறிப்பிற் பார்க்க. பாம்பணி என்பது தோற்றத்தைக் குறிப்பது ; இது, மேற்படி புராணம் மேற்படி பாட்டுக் குறிப்பில் விளக்கப்பட்டிருக்கிறது. தோற்றக் குறிப்பு, ஒடுக்கத்தையும் உணர்த்துவதாகும். உலகங்களும் உயிர்களும் ஒடுங்குதற்கும் தோன்றுதற்கும் நிலைக்களனாக இருப்பது சிவலிங்கம். சிவலிங்க வழிபாடு சோதி தரிசனத்தைக் கூட்டுவது.

கூ. மாடோர் வெள்ளிடை மன்னும் - பக்கத்திலே ஒருவெளியில் உள்ள. பாடு-பக்கத்தில். செயல் அறியா நிலையிலுள்ளோர்க்கு அவர்தங் கருத்தில் தோன்றும் ஒன்றே பொருளாகப் புலனாதல் இயல்பு. சிவலிங்கத்தைக் கண்டதும் அன்பு மேலீட்டான் சாக்கியர் செயலற்றவரானார். அவர் கருத்தில் சிவார்ச்

அகநிறைந்த பெருவகை அடங்காத ஆதரவால்
மகவுமகிழ்ந் துவப்பார்கள் வன்மைபுரி செயலினால்
இகழ்வனவே செய்தாலும் இளம்புதல்வர்க் கின்பமே
நிகழுமது போலதற்கு நீள்சடையார் தாம்மகிழ்வார். ௧௦

அன்றுபோய்ப் பிற்றைநாள் அந்நியதிக் கணையுங்கால்
கொன்றைமுடி யார்மேல்தாங் கல்லெறிந்த குறிப்பதனை
நின்றுணர்வார் "எனக்கப்போ திதுநிகழ்ந்த தவர்அருளே"
என்றதுவே தொண்டாக என்றும்அது செயநினைந்தார். ௧௧

தொடங்கியநாள் அருளியஅத் தொழிலொழியா வழிதொடரும்
கடன்புரிவார் அதுகண்டு கல்லெறிவார் துவராடைப்
படம்புனைவே டந்தவிரார் பசுபதியார் தஞ்செயலே
அடங்கலும்என் பதுதெளிந்தார் ஆதலினால் மாதவர்தாம். ௧௨

இந்நியதி பரிவோடும் வழுவாமல் இவர்செய்ய
முன்னுதிருத் *தொண்டர்நிலை முடிந்தபடி தான்மொழியில்
துன்னியமெய் யன்புடனே எழுந்தவினை தூயவர்க்கு
மன்னுமிகு †பூசனையாம் அன்புநெறி வழக்கினால். ௧௩

கல்லாலே எறிந்ததுவும் அன்பான படி‡காணில்
வில்வேடர் செருப்படியுந் திருமுடியின் மேவிற்றால்
நல்லார்மற் றவர்செய்கை அன்பாலே நயந்ததனை
அல்லாதார் கல்லென்பார் அரனார்க்கஃ தலராமால். ௧௪

அங்கொருநாள் அருளாலே §அயர்ந்துண்ணப் புகுகின்றார்
"எங்கள்பிரான் தனைஎறியா §தயர்ந்தேன்யான்" எனஎழுந்து

---

சனைமட்டும் நிலவியிருந்தது. அக்கருத்துப், பக்கத்திருந்த ஒன்றை (கல்லை) எடுத்து அர்ச்சிக்கச் செய்தது. கல் அவர்க்கு அர்ச்சனைக் குரிய ஒன்றாகவே தோன்றிற்றென்க.

௧௦. ஆதரவால் - அன்பால். உவப்பார்கள் - தாய் தந்தையர்கள்.

௧௧. அந்நியதிக்கு - அக்கடமைக்கு (அர்ச்சனைக்கு).

௧௨. அது - சிவலிங்கத்தை. துவராடைப்படம் - செம்மை நிற உடையை. எல்லாச் சமயக் கோலமும் பசுபதியார்க்கு உரியனவாம்.

௧௩. முடிந்த தன்மையைக் கூறின். எழுந்த வினை- நேர்ந்த செயல். தூயவர்க்கு - இறைவனுக்கு,

௧௪. அல்லாதார் - அன்புநெறி யில்லாதார்; உண்மை யுணராதார்.

பா - ம்—*தொண்டாகி. †பூசனையே யாம்அன்பு. ‡காணில். §அயர்த்.

பொங்கியதோர் காதலுடன் மிகவிரைந்து புறப்பட்டு
வெங்கரியின் உரிபுனைந்தார் திருமுன்பு மேவினார். கரு

கொண்டதொரு கல்லெடுத்துக் குறிகூடும் வகைஎறிய
உண்டிவினை ஒழித்தஞ்சி ஓடிவரும் வேட்கையொடும்
கண்டருளுங் கண்ணுதலார் கருணைபொழி திருநோக்கால்
தொண்டரெதிர் நெடுவிசும்பில் துணைவியொடுந் தோன்றினார். கசு

மழவிடைமேல் எழுந்தருளி வந்ததொரு செயலாலே
கழலடைந்த திருத்தொண்டர் கண்டுகரங் குவித்திறைஞ்சி
விழஅருள்நோக் களித்தருளி மிக்கசிவ லோகத்தில்
பழஅடிமைப் பாங்கருளிப் பரமரெழுந் தருளினார். கஎ

வேறு

ஆதியார் தம்மை நாளுங் கல்லெறிந் தணுகப் பெற்ற
கோதில்சீர்த் தொண்டர் கொண்ட குறிப்பினை அவர்க்கு நல்கும்
சோதியார் அறித லன்றித் துணிவதென் னவர்தாள் சூடித்
தீதினை நீக்க லுற்றேன் சிறப்புலி யாரைச் செப்பி. கஅ

ஆ திருவிருத்தம் - ௩,கூ௫அ.

---

**சாக்கிய நாயனார்** திருச்சங்கமங்கையிலே, வேளாளர் மரபிலே தோன்றியவர். அவர் உயிர்களிடத்தில் இரக்கமுடையவர். "பிறப்பிறப்புத் துன்பத்தினின்றும் விடுதலை யடையும் வழி யாது?" என்ற விசாரத்தில் அவர் பெரிதுந் தலைப்பட்டார்.

அதன்பொருட்டு அவர் திருக்காஞ்சியை அடைந்தார்; பல மார்க்கங்களை ஆராய்ந்தார்; பௌத்த சமயத்தில் பிரவேசித்தார். அந்நெறி நின்று ஒழுகிவரும் நாளிலும் அவர் சமய உண்மைகளை ஆராய்ந்த வண்ணமா யிருந்தார். அவ்வாராய்ச்சிகளால், அவர்க்கு உற்ற தெளிவும், திருவருளும் அவர்க்குச் **சிவநெறியே செந்நெறி** என்பதை விளங்கச் செய்தன. அதனால் அவர், சிவநெறியில் நிற்பாரானார்.

நாயனார் பௌத்தகோலத்தை நீக்கினாரில்லை. "எந்நிலையில் நின்றால் என்ன! எக்கோலங் கொண்டால் என்ன! சங்கரன் திருவடியை மறவாதிருத்தலே பொருள்" என்ற பரந்த உணர்வு அவர்பால் தோன்றிற்று. அதனால் பௌத்த வேடந் தாங்கியே அவர் சிவனடியைச் சிந்தை செய்துவந்தார்.

---

கரு. அருளாலே அயர்ந்து - சிவனருட் சோதனையால் மறந்து. வெங்கரியின் உரிபுனைந்தார் - கொடிய யானை யுரிவைப் போர்த்த சிவபெருமான்.

கஎ. நாயனார் பழைய அடியவர் திருக்கூட்டத்தினின்றும் உலகோபகாரமாய்த் தோன்றியவராதலின் "பழ அடிமைப்பாங்கருளி..." என்றார்.

கஅ. சோதியார் - சிவபெருமான்.

நாயனார், "சிவலிங்கத்தைக் கண்டு வழிபட்ட பின்னரே உண்ணுதல் வேண்டும்" என்று ஓர் உறுதிகொண்டார்; கொண்டபடியே நடந்து வந்தார்; ஒருநாள், ஒரு வெளியிலே உள்ள சிவலிங்கத்தைக் கண்டார்; கண்டதும் ஆனந்த வாரிதியில் தோய்ந்தார்; செயலற்றவரானார். இந்நிலையில் அவருக்கு வழிபாட்டு எண்ணம் தோன்றியது. தோன்றவே, அவர் அருகே கிடந்த ஒரு செங்கல்லை எடுத்தார்; சிவலிங்கத்தின்மீது அதை எறிந்தார். இளங் குழவிகள் எது செய்யினும், அது, பெற்றோர்க்கு இன்பூட்டுவது இயல்பன்றோ? அதேபோல, நாயனார் செயலும் சிவபெருமானுக்கு இன்பூட்டிற்று.

அடுத்தநாள் நாயனார் தமது நியதியைச் செய்யச் சென்றார். நேற்றைய செயல் அவர்தம் மனதில் உற்றது. அவர் கல்லெறிந்த குறிப்பை ஓர்ந்தார்; "எனக்கு அவ்வெண்ணம் சிவபெருமான் திருவருளாலேயே பிறந்தது. ஆகவே, கல்லெறிதலையே தொண்டாகக் கொள்வது திருவருள்வழி நிற்பதாகும்" என்று எண்ணினார்; எண்ணியவாறே, நாடோறும் கல்லெறிந்து ஆண்டவனை வழிபட்டுவந்தார்.

ஒருநாள், சிவபெருமான் திருவருளால் தமது நியதித்தொண்டைச் செய்ய மறந்து நாயனார் உண்ணப்புகுந்தார். அவ்வேளையில் தொண்டு நினைவு அவருக்குத் தோன்றிற்று. தோன்றவே, நாயனார் "அந்தோ! இன்று தொண்டை மறந்தேனே!" என்று எழுந்தார்; விரைந்து நடந்தார்; சிவலிங்கப் பெருமானை அடைந்தார்; திருமுன்னே நின்றார்; ஒரு கல்லை எடுத்துச் சிவலிங்கப் பெருமான்மீது எறிந்தார். சிவபெருமான், நாயனார் அன்புக்கு எளியராய், உமாதேவியாருடன் மழவிடையின்மேல் இவர்ந்து, அன்பரைச் சிவலோகத்துக்கு அழைத்துச் சென்றார்.

# சிறப்புலி நாயனார் புராணம்

பொன்னிநீர் நாட்டின் நீடும் பொற்பதி "புவனத் துள்ளோர்
இன்மையால் இரந்து சென்றோர்க் கில்லைஎன் னாதே ஈயும்
தன்மையார்" என்று நன்மை சார்ந்தவே தியரைச் சண்பை
மன்னனார் அருளிச் செய்த மறைத்திரு வாக்கூர் *அவ்வூர். க

தூமலர்ச் சோலை தோறும் சுடர்தொடு மாடந் தோறும்
மாமறை முழக்கந் தாழ மறையொலி முழக்கம் ஓங்கும்
பூமலி மறுகில் இட்ட புகைஅகில் தூபந் தாழ
ஓமநல் வேள்விச் சாலை ஆகுதித் தூபம் ஓங்கும். உ

க. பொன்னிநீர் நாட்டில் - சோழநாட்டில். சண்பை மன்னனார் - திருஞானசம்பந்தர். "......இன்மையால் சென்றிரந்தார்க்கு இல்லை என்னாது ஈந்து உவக்கும்-தன்மையார் ஆக்கூரில் தான் தோன்றி மாடமே"—**சம்பந்தர்.**

உ. மறுகில் - தெருவில்.

பா - ம்—*ஆகும்; ஆக்கூர்.

ஆலைசூழ் பூக வேலி அத்திரு வாக்கூர் தன்னில்
ஞாலமார் புகழின் மிக்கார் நான்மறைக் குலத்தி னுள்ளார்
நீலமார் கண்டத் தெண்டோள் நிருத்தர்தந் திருத்தொண் டேற்ற
சீலராய்ச் சாலும் ஈகைத் திறத்தினில் சிறந்த நீரார். ௩

ஆளும்அங் கணருக் கன்பர் அணைந்தபோ தடியிற் றாழ்ந்து
மூளும்ஆ தரவு பொங்க முன்புநின் றினிய கூறி
நாளும்நல் லமுத மூட்டி நயந்தன எல்லாம் நல்கி
நீளும்இன் பத்துள் *தங்கி நிதிமழை மாரி போன்றார். ௪

அஞ்செழுத் தோதி அங்கி வேட்டுநல் வேள்வி எல்லாம்
நஞ்சணி கண்டர் பாதம் நண்ணிடச் செய்து ஞாலத்
தெஞ்சலில் அடியார்க் கென்றும் இடையறா அன்பால் வள்ளல்
தஞ்செயல் வாய்ப்ப ஈசர் தாள்நிழல் தங்கி னாரே. ௫

அறத்தினில் மிக்க மேன்மை அந்தணர் ஆக்கூர் தன்னில்
மறைப்பெரு வள்ள லார்வண் சிறப்புலி யார்தாள் வாழ்த்திச்
சிறப்புடைத் திருச்செங் காட்டங் குடியினிற் செம்மை வாய்த்த
விறற்சிறுத் தொண்டர் செய்த திருத்தொழில் விளம்ப லுற்றேன். ௬

ஆ திருவிருத்தம் - ௩,௬௬௪

---

**சிறப்புலி** நாயனார், சோழமண்டலத்திலே, திருவாக்கூரிலே, வேதியர் குலத்திலே தோன்றியவர். அடியவர்களுக்கு அமுதூட்டுவதும், பொருள் உதவுவதும் அவர்தம் திருத்தொண்டு. ஐந்தெழுத்து ஓதுவதும், யாகம் செய்வதும் அவர்தம் வழக்கம். இவ்வாறு சிவபணிசெய்து சிறப்புலிநாயனார் ஆண்டவன் திருவடி சேர்ந்தார்.

---

௩. கரும்பாலை சூழ்ந்த கமுக வேலியுடைய.

௪. அங்கணருக்கு அன்பர் - சிவனடியார்கள். ஆதரவு - அன்பு. நிதிமழை பொழியும் மேகம் போன்றார்.

௫. அங்கிவேட்டு - அக்கினி காரியஞ் செய்து. எஞ்சலில் - குறைவில்லாத.

பா - ம்—*தங்கு.

# சிறுத்தொண்ட நாயனார் புராணம்

உருநாட்டுஞ் செயல்காமன் ஒழியவிழி பொழிசெந்தீ
வருநாட்டத் திருநுதலார் மகிழ்ந்தருளும் பதிவயலிற்
கருநாட்டக் கடைசியர்தங் களி*காட்டுங் காவேரித்
திருநாட்டு வளங்காட்டுஞ் செங்காட்டங் குடியாகும். க

நிலவியஅத் திருப்பதியில் நெடுஞ்சடையார் நீற்றடைவால்
உலகில்வளர் உயிர்க்கெல்லாம் உயர்காவற் றொழில்†பூண்டு
மலர்புகழ்மா மாத்திரர்தங் குலம்பெருக வந்துள்ளார்
பலர்புகழுந் திருநாமம் பரஞ்சோதி யாரென்பார். உ

ஆயுள்வே தக்கலையும் அலகில்வட நூற்கலையும்
தூயபடைக் கலத்தொழிலும் துறைநிரம்பப் ‡பயின்றவற்றால்
பாயுமதக் குஞ்சரமும் பரியும்உகைக் கும்§பண்பு
மேயதொழில் ||விஞ்சையினும் மேதினியில் மேலானார். ௩

உள்ளநிறை ¶கலைத்துறைகள் ஒழிவின்றிப் பயின்றவற்றால்
தெள்ளிவடித் தறிந்தபொருள் சிவன்கழலிற் செறிவென்றே
கொள்ளும்உணர் வினில்முன்னே கூற்றுதைத்த கழற்கன்பு
பள்ளமடை யாய்என்றும் பயின்றுவரும் பண்புடையார். ௪

ஈசனடி யார்க்கென்றும் இயல்பான பணிசெய்தே
ஆசில்புகழ் மன்னவன்பால் அணுக்கராய் அவற்காகப்

---

க. நாட்டத் திருநுதலார் - நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான். மன்மதன் முதல்முதல் உருவமுடையவனா யிருந்தான். அவன் உருவைச் சிவபிரான் தமது நெற்றிக்கண்ணால் நீறாக்கினார். பின்னே அவன் மனைவி இரதி வேண்டச் சிவபிரான் அவனை அருவமாக உலவச் செய்தார். விரிவு கந்தபுராணத்திற் காண்க. கரு......காட்டும் - கருவிழிகளையுடைய மருதநிலப் பெண்கள் தங்கள் மகிழ்ச்சியைக் (குரவையாடல் முதலியவாற்றான்) காட்டும்.

உ. நீற்றடைவால் - திருநீற்றுச் சார்பால்.

௩. குஞ்சரமும்...விஞ்சையினும்-யானைகளையும் குதிரைகளையும் செலுத்தும் இயல்பமைந்த தொழிலாகிய வித்தையிலும். படைக்கலங்கள் அறவழியில் பயன்படுவதை, "தூய" என்பது விளக்குதல் காண்க.

௪. செறிவு - உறவு. பள்ளமடையாய்-பள்ளத்திற் பாயும் நீர் மடைபோல.

பா - ம்—*காட்டுங். †பூண்ட. ‡பயின்றுள்ளார். §பண்பின். ||விஞ்சையினில். ¶கலைத்தொழில்கள்.

பூசல்முனைக் களிறுகைத்துப் *போர்வென்று பொரும்அரசர்
தேசங்கள் பலகொண்டு தேர்வேந்தன் பாற்சிறந்தார். ரு

மன்னவர்க்குத் தண்டுபோய் வடபுலத்து வாதாவித்
தொன்னகரந் துகளாகத் துளைநெடுங்கை வரையுகைத்துப்
பன்மணியும் நிதிக்குவையும் பகட்டினமும் †பரித்தொகையும்
இன்னனஎண் ணிலகவர்ந்தே ‡இகலரசன் முன்கொணர்ந்தார். சு

கதிர்முடிமன் னனும்இவர்தங் களிற்றுரிமை ஆண்மையினை
அதிசயித்துப் புகழ்ந்துரைப்ப அறிந்தஅமைச் சர்களுரைப்பார்
"மதியணிந்தார் திருத்தொண்டு வாய்த்தவலி யுடைமையினால்
எதிரிவருக் கிவ்வுலகி லில்லை"என எடுத்துரைத்தார். எ

"நம்பெருமான் திருத்தொண்டர்" எனக்கேட்ட தார்வேந்தன்
"உம்பர்பிரான் அடியாரை உணராதே கெட்டொழிந்தேன்
வெம்புகொடும் போர்முனையில் விட்டிருந்தேன்" எனவெருவுற்
"றெம்பெருமான் இதுபொறுக்க வேண்டும்"என இறைஞ்சினான். அ

இறைஞ்சுதலும் §முன்னிறைஞ்சி "என்னுரிமைத் தொழிற்கடுத்த
திறம்புரிவேன் அதற்கென்னோ தீங்கென்ன!" ஆங்கவர்க்கு
நிறைந்தநிதிக் குவைகளுடன் நீடுவிருத் திகள்அளித்தே
அறம்புரிசெங் கோலரசன் அஞ்சலிசெய் துரைக்கின்றான். கூ

"உம்முடைய நிலைமையினை ||அறியாமை கொண்டுய்த்தீர்
எம்முடைய மனக்கருத்துக் கினிதாக ¶இசைந்துமது

ரு. ஆசில் - குற்றமில்லாத. அணுக்கராய் - நெருங்கி யிருப்பவராய்; நண்பராய். பூசல்முனைக் களிறு உகைத்து - போர்முனையில் யானைகளைச் செலுத்தி. பொரும் - போர்புரிந்த.

சு. தண்டுகளுடன் (சேனைகளுடன்) போய் வடக்கேயுள்ள வாதாவி என்னும் பழைய நகரம்...; துளைநெடுங்கை வரை உகைத்து-யானைகளைச் செலுத்தி. பகட்டினமும் பரித்தொகையும் - யானைக்கூட்டங்களையும் குதிரைக் கூட்டங்களையும். இகல் - போரிற் சிறந்த.

அ. தார் - மாலையணிந்த. உம்பர்பிரான் அடியாரை - சிவனடியாரை. வெருவுற்று - நடுக்குற்று. எம்பெருமானே......

கூ. விருத்திகள் - சர்வமானியங்கள்; கவலையின்றிச் சீவிக்கும்படி விடப்படுவன.

பா - ம் - *போய். †பரிநிரையும். ‡இயலரசன். §எதிர். ||அறியாமற் கொண்டுய்த்தோம். ¶இசையுமிது.

மெய்ம்மைபுரி செயல்விளங்க வேண்டியவா றேசரித்துச்
செம்மைநெறித் திருத்தொண்டு செய்யும்" என விடைகொடுத்தான்.

மன்னவனை விடைகொண்டு தம்பதியில் வந்தடைந்து
பன்னுபுகழ்ப் பரஞ்சோதி யார்தாமும் பனிமதிவாழ்
சென்னியரைக் கணபதீச் சரத்திறைஞ்சித் திருத்தொண்டு
முன்னைநிலை மையில்வழுவா முறைஅன்பிற் செய்கின்றார். கக

வேதகா ரணர்அடியார் வேண்டியமெய்ப் பணிசெய்யத்
தீதில்குடிப் பிறந்ததிரு வெண்காட்டு நங்கைஎனும்
காதல்மனைக் கிழத்தியார் கருத்தொன்ற வரும்பெருமை
நீதிமனை அறம்புரியும் *நீர்மையினை நிலைநிற்பார். கஉ

நறைஇதழித் திருமுடியார் அடியாரை நாடோறும்
முறைமையினில் திருஅமுது முன்னூட்டிப் பின்னுண்ணும்
நிறையுடைய †பெருவிருப்பால் நியதியா கக்கொள்ளும்
துறைவழுவா வகையொழுகுந் தூயதொழிற் றலைநின்றார். கங

தூயதிரு அமுதுகனி கன்னல்அறு சுவைக்கறிநெய்
பாயதயிர் பால்இனிய பண்ணியம்உண் நீர்அமுதம்
‡மேயபடி யால்அமுது செய்விக்க §மிசைந்தடியார்
மாயிருஞா லம்போற்ற வரும்இவர்பால் மனமகிழ்ந்தார். கச

சீதமதி அரவினுடன் செஞ்சடைமேற் செறிவித்த
நாதனடி யார்தம்மை நயப்பாட்டு வழிபாட்டால்

---

க0. ......நிலைமையினை யான் அறியாதவாறு கொண்டு செலுத்தினீர். சரித்து - நடந்து.

கக. பன்னு - பலரால் போற்றப்படும். கணபதீச்சரம் - திருச்செங்காட்டங்குடியிலுள்ள சிவாலயம்; கணபதியால் பூசிக்கப்பட்டது.

கஉ. மனைக்கிழத்தியார் - மனைவியார்; மனைக்குரியார். ஒன்ற - ஒருமைப்பட. நீர்மையினை - தன்மையிலே.

கங. நறை இதழி - தேன் சொரியும் கொன்றைமாலை யணிந்த.

கச. கன்னல் - சர்க்கரை. அறு சுவை - உவர்ப்பு, கார்ப்பு, கைப்பு, தித்திப்பு, துவர்ப்பு, புளிப்பு. பாய் - உறைந்த; பரந்த. பண்ணியம் - பலகாரங்கள். மேய - விரும்பிய. மிசைந்து - உண்டு.

கரு. செறிவித்த - உறவாக்கிய (சந்திரனுக்கும் பாம்புக்கும் உள்ள பகைமையைத் தீர்த்து உறவு படுத்திய). நயப் பாட்டு - நயம்படுத்தலுடைய; அன்பு கொண்ட. மேதகையாரவர் - சிறப்புடையவர்களாகிய திருத்தொண்டர்களின்.

பா - ம்—*நீர்மையினில். †பெருவிருப்பு. ‡எய. §இசைந்தடியார்.

மேதகையா ரவர்முன்பு மிகச்சிறிய ராய்அடைந்தார்
ஆதலினாற் சிறுத்தொண்டர் எனநிகழ்ந்தார் அவனியின்மேல். ௧௫

கண்ணுதலார் கணபதீச் சரத்தின்கட் கருத்தமர
உண்ணிறைஅன் பினிற்பணிசெய் தொழுகுவார் வழுவின்றி
எண்ணில்பெருஞ் சீரடியார் இடைவிடா தமுதுசெய
நண்ணியபே ருவகையுடன் நயந்துறையு நாளின்கண். ௧௬

நீராருஞ் சடைமுடியார் அருளினால் நிறைதவத்துப்
பேராள ரவர்தமக்குப் பெருகுதிரு மனையறத்தின்
வேராகி விளங்குதிரு வெண்காட்டு நங்கைபால்
சீராள தேவரெனுந் திருமைந்தர் அவதரித்தார். ௧௭

அருமையினிற் றனிப்புதல்வர் பிறந்த*பொழு தலங்கரித்த
பெருமையினிற் கிளைகளிப்பப் பெறற்கரிய †மணிபெற்று
வருமகிழ்ச்சி தாதையார் மனத்தடங்கா வகைவளரத்
திருமலிநெய் யாடல்விழாச் செங்காட்டங் குடிஎடுப்ப. ௧௮

மங்கலநல் லியம்முழக்கம் மறைமுழக்கம் வானளப்ப
அங்கணார்தஞ் சீரடியார்க் களவிறந்த நிதியளித்துத்
தங்கள்மர பினிலுரிமைச் சடங்குதச தினத்தினிலும்
பொங்குபெரு மகிழ்ச்சியுடன் புரிந்துகாப் பணிபுனைந்தார். ௧௯

ஆர்வநிறை பெருஞ்சுற்றம் அகமலர அளித்தவர்தாம்
பார்பெருகு மகிழ்ச்சியுடன் பருவமுறைப் பாராட்டுச்
சீர்பெருகச் செய்யவளர் திருமகனார் சிறடியில்
தார்வளர்கிண் கிணிஅசையத் தளர்நடையின் பதஞ்சார்ந்தார். ௨0

சுருளுமயிர் நுதற்சுட்டி துணைக்காதின் மணிக்குதம்பை
மருவுதிருக் கண்டநாண் மார்பினில்ஐம் படைகையிற்
பொருவில்வயி ரச்சரிகள் பொன்னரைஞாண் புனைசதங்கை
தெருவிலொளி விளங்கவளர் திருவிளையாட் டினிலமர்ந்தார். ௨௧

---

௧௮. அலங்கரித்த - அணிசெய்த ; "மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன் - நன்கலம் நன்மக்கட் பேறு"—திருக்குறள் : 60. எடுப்ப - கொண்டாட ; செய்ய. ௧௯. நல்ல மங்கல வாத்தியங்களின்.

௨0. பார் - உலகிலே. பருவமுறை பாராட்டு - பருவந்தோறும் பாராட்டுகளை. சிறடியில் - சிறிய அடிகளில். தார் வளர் - பூவரும்பு போன்ற. பதம் - பருவம்.

௨௧. நுதற் சுட்டி - நெற்றிச் சுட்டி. துணைக் காதில் - இரண்டு காதுகளிலும். மணிக் குதம்பை - இரத்தினக் காதணி. கண்ட நாண் - கண்டசரம்.

பா - ம்—*பொழு தலங்கரித்து. †மகப்பெற்று.

வந்து*வளர் மூவாண்டில் மயிர்வினைமங் கலஞ்செய்து
தந்தையா ரும்பயந்த தாயாருந் தனிச்சிறுவர்
சிந்தைமலர் சொற்றெளிவிற் செழுங்கலைகள் பயிலத்தம்
†பந்தமற வந்தவரைப் பள்ளியினில் ‡இருத்தினார். உஉ

அந்நாளிற் சண்பைநகர் ஆண்டகையார் எழுந்தருள
முன்னாக எதிர்கொண்டு கொடுபுகுந்து முந்நூல்சேர்
பொன்மார்பிற் சிறுத்தொண்டர் புகலிகா வலனார்தம்
நன்னாமச் சேவடிகள் போற்றிசைத்து நலஞ்சிறந்தார். உ௩

சண்பையர்தம் பெருமானுந் தாங்கரிய பெருங்காதல்
பண்புடைய சிறுத்தொண்ட ருடன்பயின்று மற்றவரை
மண்பரவுந் திருப்பதிகத் தினில்வைத்துச் சிறப்பித்து
நண்பருளி எழுந்தருளத் தாமினிது நயப்புற்றார். உ௪

இத்தன்மை நிகழுநாள் இவர்திருத்தொண் டிருங்கயிலை
அத்தர்திரு வடியிணைக்கீழ்ச் சென்றணைய அவருடைய
மெய்த்தன்மை அன்புநுகர்ந் தருளுதற்கு விடையவர்தாம்
சித்தமகிழ் வயிரவராய்த் திருமலையின் றணைகின்றார். உ௫

மடல்கொண்ட மலரிதழி நெடுஞ்சடையை வனப்பெய்தக்
கடல்மண்டி முகந்தெழுந்த காளமே கச்சுருள்போல்
தொடர்பங்கி சுருண்டிருண்டு தூறிநெறித் தசைந்துசெறி
§படர்துஞ்சின் கருங்குஞ்சி கொந்தளமா கப்பரப்பி. உ௬

---

ஐம்படை - தடுத்தாட்கொண்ட புராணம் : ௪. குறிப்புப் பார்க்க. வயிரச் சரிகள் - வயிர வளைகள்.

உஉ. சிந்தையை மலர்விக்கும் சொல் தெளிவால்......

உ௩. சண்பை நகர் ஆண்டகையார் - திருஞானசம்பந்தர். புகலிகாவலனார் தம் - திருஞானசம்பந்தரது. நாமம் - புகழுடைய.

உ௪. பயின்று - வசித்து. "பைங்கோட்டு...செங்காட்டங் குடிமேய சிறுத் தொண்டன் பணிசெய்ய...பெருமானே"—திருஞானசம்பந்தர்.

உ௫. தடுத்தாட்கொண்ட புராணம் : உக குறிப்புப் பார்க்க.

உ௬. மடல்கொண்ட மலர் இதழி - இதழ்களைக் கொண்ட கொன்றை மலர்களை அணிந்த. வனப்பு எய்த - அழகு அடைய. கடல்...மேகம் - கடலில் மிக்குச் சென்று நீரைப் பருகும் கருமேகத்தின். தொடர்...கொந்தளமாக - தொடர்ச்சி கொண்ட தலைமயிர் அடுக்கடுக்காகச் சுருண்டு சிலிர்த்து (காடடர்ந்து) நெறித்தலைக் கொண்டு அசைந்து நெருங்கியடர்ந்த நிலைகளையுடைய கருமயிர் கொத்தாக ; (துஞ்சின் - அடுக்குகளின் நிலையைக் குறிப்பது).

பா - ம்—*வினை. †பந்தமறப் பிறந்தவரை. ‡அமர்த்தினார். §அடர்.

அஞ்சனமஞ் சனஞ்செய்த தனைய அணி கிளர்பம்பை
மஞ்சினிடை இடைஎழுந்த வானமீன் பரப்பென்னப்
புஞ்சநிரை வண்டுதேன் சுரும்புபுடை படர்ந்தார்ப்பத்
துஞ்சினுனித் தனிப்பரப்புந் தும்பைநறு மலர்தோன்ற. ௨௭

அருகுதிரு முடிச்செருகும் அந்திஇளம் பிறைதன்னைப்
பெருகுசிறு மதியாக்கிப் பெயர்த்துச்சாத் தியதென்ன
விரிசுடர்ச்சேம் பவளஒளி வெயில்விரிக்கும் விளங்குசுடர்த்
திருநுதன்மேல் திருநீற்றுத் தனிப்பொட்டுத் திகழ்ந்திலங்க. ௨௮

வெவ்வருக்கன் மண்டலமும் விளங்குமதி மண்டலமும்
அவ்வனற்செம் மண்டலமும் உடன்அணைந்த தெனஅழகை
வவ்வுதிருக் காதின்மணிக் குழைச்சங்கு வளைத்ததனுள்
செவ்வரத்த மலர்செறித்த திருத்தோடு புடைசிறக்க. ௨௯

களங்கொள்விட மறைத்தருளக் கடலமுதக் குமிழிநிரைத்
துளங்கொளிவெண் திரட்கோவைத் தூயவடம் அணிந்ததென
உளங்கொள்பவர் கரைந்துடலும் உயிரும்உரு கப்பெருக
விளங்குதிருக் கழுத்தினிடை வெண்பளிங்கின் வடந்திகழ. ௩௦

---

௨௭. அஞ்சனம் மஞ்சனஞ் செய்தது அனைய - மைக்குழம்பை வார்த்தது போன்ற; அஞ்சனம் அஞ்சனம் எனக்கொண்டு இருளுக்கு இருள் ஊட்டியதைப் போன்ற எனக் கொள்ளலுமாம். அணி...மஞ்சின் - அடுக்கடுக்காகவுள்ள சுருண்ட மயிராகிய மேகத்தின். வான மீன் - நட்சத்திரங்களின். புஞ்ச...ஆர்ப்ப - திரட்சியாக வரிசைப்பட்ட கருவண்டும் தேன்வண்டும் பொறிவண்டும் பக்கங்களிற் படர்ந்து ஒலிக்க. துஞ்சின் நுனி தனிப்பரப்பும் - ஒவ்வொரு நிலையின் (மயிரடுக்கு நிலையின்) நுனியில் தனித் தனிப் பரப்பப்பெற்றுள்ள; ...வானமீன் பரப்பென்ன...தும்பை நறுமலர் தோன்ற.

௨௮. பிறைமதியை நிறைமதியாக்கினுரென்க. அது, பொட்டுக்கு உவமையாக நிற்றலின், சிறு மதி எனப்பட்டது. ஒளிபோன்று வெயில் பிரகாசிக்கும். திருநீற்றாலாகிய தனிப்பொட்டு.

௨௯. சூரியமண்டலம், சந்திரமண்டலம், அக்கினிமண்டலம் ஆகிய மூன்றும், மணிக்குழை, சங்கு, செவ்வரத்த மலர் செறித்த திருத்தோடு ஆகியவற்றிற்கு முறையே உவமை. திருக்காதைச் சூரிய மண்டலத்துக்கு ஒப்பிடுவோருமுளர் ; அவர் மணிக்கு அழகுப் பொருள் கூறுவர்.

௩௦. கழுத்திற் கொண்ட விடத்தை...திருப்பாற்கடலில் எழுந்த அமிர்தக் குமிழ்களென்னும் வரிசை விளங்கும்.........கோவையாகிய தூயவடம். உளங்கொள்பவர் - மனதில் எண்ணுபவர்.

செம்பரிதி *கடலளித்த செக்கரொளி யினைஅந்திப்
பம்புமிருள் செறிபொழுது படர்ந்தணைந்து சூழ்வதெனத்
தம்பழைய கரியுரிவை கொண்டுசமைத் ததுசாத்தும்
அம்பவளத் திருமேனிக் கஞ்சுகத்தின் அணிவிளங்க. ௩க

மிக்கெழும்அன் பர்கள்அன்பு திருமேனி விளைந்ததென
அக்குமணி யாற்சன்ன வீரமும்ஆ ரமும்வடமும்
கைக்கணிகொள் வளைச்சரியும் அரைக்கடிசூத் திரச்சரியும்
தக்கதிருக் காற்சரியும் சாத்தியஒண் சுடர்தயங்க. ௩உ

பொருவில்திருத் தொண்டர்க்குப் புவிமேல்வந் தருள்புரியும்
பெருகருளின் திறங்கண்டு "பிரானருளே பேணுவீர் !
வரும்அன்பின் வழிநிற்பீர்" எனமறைபூண் டறைவனபோல்
திருவடிமேல் திருச்சிலம்பு திசைமுழுதுஞ் செலஒலிப்ப. ௩௩

அயன்கபா லந்தரித்த இடத்திருக்கை யால்அணைத்த
வயங்கொளிமூ விலைச்சூலம் மணித்திருத்தோள் மிசைப்பொலியத்
தயங்குசுடர் வலத்திருக்கைத் தமருகத்தின் ஒலிதழைப்பப்
பயன்தவத்தால் பெறும்புவியும் பாததா மரைசூட. ௩௪

அருள்பொழியுந் திருமுகத்தில் அணிமுறுவல் நிலவெறிப்ப
மருள்பொழியும் மலஞ்சிதைக்கும் வடிச்சூலம் வெயிலெறிப்பப்
பொருள்பொழியும் பெருகன்பு தழைத்தோங்கிப் புவிஏத்தத்
தெருள்பொழிவண் தமிழ்நாட்டுச் செங்காட்டங் குடிச்சேர்ந்தார். ௩௫

---

௩க. செம்பரிதி...ஒளியினை - சிவந்த சூரியன் கடலிற் சேர்ந்தபோது (அஸ்தமித்தபோது) அளித்த செவ்வொளியினை. அந்தி...பொழுது - அந்தி வேளையில் பரவும் இருள் அடரும் இரவுப்பொழுது. கரியுரிவை - யானைப் போர்வை. கஞ்சுகத்தின் அணி - சட்டையின் அழகு.

௩உ. பெருமான் திருமேனியிலே உருக்கொண்டு விளைந்தாலென. அன்பு வெண்மைக்கு அறிகுறி. அக்குமணியாலாய அணிகள் யாவும் வெண்ணிறத்தன. அக்குமணி - சங்குமணி; என்பு மணி. சன்ன வீரமும் - வெற்றிமாலையும்; வீர சங்கிலியும். வளைச்சரியும் - கடகமும். அரைக்கடி சூத்திரச் சரியும் - அரை ஞாணும். கையணி கடியணி காலணி முதலியன இயங்குவனவாதலால், அவை முறையே சரி சரி சரி என்னப்பட்டன.

௩௩. பேணுவீர் - பேணுபவர்களே. பூண்டு - நியதியாக் கொண்டு.

௩௫. நிலவு - தண்கதிர். மூவிலைச்சூலம் மும்மைமலத்தை அறுப்பதற்கு அறிகுறி. வெயில் - வெங்கதிர். தெருள் - தெளிவு.

பா - ம்—*கடற்குளித்த.

தண்டாத தொருவேட்கைப் பசியுடையார் தமைப்போலக்
கண்டாரைச் சிறுத்தொண்டர் மனைவினவிக் கடிதணைந்து
"தொண்டனார்க் கென்நாளுஞ் *சோறளிக்குந் திருத்தொண்டர்
வண்டார்பூந் தாரார்இம் மனைக்குள்ளா ரோ?" என்ன. ௩௬

"வந்தணைந்து வினவுவார் †மாதவரே யாம்" என்று
சந்தனமாந் தையலார் முன்வந்து தாள்வணங்கி
"அந்தமில்சீர் அடியாரைத் தேடிஅவர் புறத்தணைந்தார்
எந்தமைஆ ளுடையவரே அகத்துள்ளெழுந் தருளும்" என. ௩௭

மடவரலை முகநோக்கி "மாதரார் தாமிருந்த
இடவகையிற் றனிப்புகுதோம்" என்றருள அதுகேட்டு
விடஅகல்வார் போலிருந்தார் எனவெருவி விரைந்துமனைக்
கடனுடைய திருவெண்காட் டம்மைகடைத் தலையெய்தி. ௩௮

"அம்பலவர் அடியாரை அமுதுசெய்விப் பார்இற்றைக்
கெம்பெருமான் யாவரையுங் கண்டிலர்தே டிப்போனார்
வம்பெனநீர் எழுந்தருளி வருந்திருவே டங்கண்டால்
தம்பெரிய பேறென்றே மிகமகிழ்வர் இனித்தாழார். ௩௯

"இப்பொழுதே வந்தணைவர் எழுந்தருளி இரும்" என்ன
"ஒப்பில்மனை யறம்புரப்பீர்! உத்தரா பதியுள்ளோம்
செப்பருஞ்சீர்ச் சிறுத்தொண்டர் தமைக்காணச் சேர்ந்தனம்யாம்
எப்பரிசும் அவரொழிய இங்கிரோம்" என்றருளி. ௪௦

கண்ணுதலிற் காட்டாதார் "கணபதீச் சரத்தின்கண்
வண்ணமலர் ஆத்தியின்கீழ் இருக்கின்றோம் மற்றவர்தாம்
நண்ணினால் நாமிருந்த பரிசுரைப்பீர்" என்றருளி
அண்ணலார் திருவாத்தி அணைந்தருளி அமர்ந்திருந்தார். ௪௧

---

௩௬. தண்டாத - தணியாத; தண்டாத வேட்கைப் பசி - பெரும் பசி. "தண்டா வேட்கையிற் றான்சிறி தருந்தி"—சிலப்பதிகாரம்: ௧௫. அடைக்கல - ௧௭௦. பூந்தாரார் - பூமாலை யணிந்த சிறுத்தொண்டர். இம்மனையிலுள்ளாரோ?

௩௮. மடவரலை - மடப்பத்தை யுடையவளை; இளம்பெண்ணை; சந்தன நங்கையாரை. விட...உடைய-விட்டால் நீங்குவார்போ லிருந்தாரென்று நடுங்கி விரைந்து இல்லறக் கடனுடைய. கடைத்தலை - கடைவாயில்..

௩௯. எம்பெருமான் - எம்பெருமானே; சிறுத்தொண்டர் எனினுமாம். அம்பலவர் - அம்பலத்தாடும் ஆண்டவன்றன். வம்பென - புதிதாக.

௪௦. புரப்பீர் - வளர்ப்பவரே. உத்தராபதி - வடதேசத்தில். அவர் ஒழிய எப்பரிசும் - அவர் இல்லாதிருக்க எவ்வகையிலும்.

பா - ம்—*சோறளிக்குஞ் சிறுத்தொண்டர். †மாதவரே யோஎன்று.

வேறு

நீரார் சடையான் அடியாரை நேடி எங்குங் காணாது
சீரார் தவத்துச் சிறுத்தொண்டர் மீண்டுஞ் செல்வ மனையெய்தி
ஆரா *இன்ப மனைவியார்க் கியம்பி அழிவெய் திடஅவரும்
பாரா தரிக்குந் திருவேடத் தொருவர் வந்த படிபகர்ந்தார். ௪௨

"அடியேன் உய்ந்தேன் எங்குற்றார் உரையாய்?" என்ன அவர்மொழிவார்
"வடிசேர் சூல கபாலத்தார் 'வடதே சத்தோம்' என்றார்வண்
துடிசேர் கரத்துப் பயிரவர்யாஞ் சொல்ல இங்கும் இராதேபோய்க்
கடிசேர் திருவாத் தியின்கீழ்ற்கீழ் இருந்தார் கணப தீச்சரத்து." ௪௩

என்று மனைவி யார்இயம்ப எழுந்த விருப்பால் விரைந்தெய்திச்
சென்று கண்டு திருப்பாதம் பணிந்து நின்றார் சிறுத்தொண்டர்
நின்ற தொண்டர் தமைநோக்கி "நீரோ பெரிய சிறுத்தொண்டர்"
என்று திருவாய் மலர்ந்தருள இறைவர் தம்மைத் தொழுதுரைப்பார்.

"பூதி அணிசா தனத்தவர்முன் போற்றப் போதேன் ஆயிடினும்
நாதன் அடியார் கருணையினால் அருளிச் செய்வர் நான்என்று
கோதில் அன்பர் தமைஅமுது செய்விப் பதற்குக் குலப்பதியில்
காத லாலே தேடியும்முன் காணேன் தவத்தால் உமைக்கண்டேன்."

"அடியேன் மனையில் எழுந்தருளி அமுது செய்ய வேண்டும்"என
நெடியோன் அறியா அடியார்தாம் "நிகழுந் தவத்தீர்! உமைக்காணும்
படியால் வந்தோம் உத்தரா பதியோம் எம்மைப் பரிந்தூட்ட
முடியா துமக்குச் செய்கைஅரி தொண்ணா" தென்று மொழிந்தருள.

"எண்ணா தடியேன் மொழியேன்நீர் அமுது செய்யும் இயல்பதனைக்
கண்ணார் வேட நிறைதவத்தீர்! அருளிச் செய்யுங் கடிதமைக்கத்

---

௪௨. பார் ஆதரிக்கும் - உலகம் விரும்பும் (உலகை ஆதரிக்கும் என்பது தொனி).

௪௩. துடி - உடுக்கை. கடி - வாசனை.

௪௫. விபூதி யணிந்த சாதனத்தவர் முன்னே போற்றவும் அருகனல் லேன்...; நான் என்று அருளிச் செய்வார். குலப்பதியில் - சிறந்த இப்பதியில் எங்கும்.

௪௬. நெடியோன் (திருமால்) அறியாத்திருவடியை உடையவராகிய பெருமான். உத்தராபதி என்று குறித்துப் பேசுவது பின்னே கேட்கப்போகும் புலாலுணவை உன்னியே யாகும். தென்னாட்டுச் சிவனடியார் புலால் உண்ணாதவர்; வடநாட்டவர் அவ்வுணவு கொள்வோர்.

பா - ம்—*அன்பின்.

தண்ணார் இதழி முடியார்தம் அடியார் தலைப்பட் டால்தேட
ஒண்ணா தனவும் உளவாகும் அருமை இல்லை'' எனஉரைத்தார். ௪௭

"அரிய தில்லை'' எனக்கேட்ட பொழுதில் அழகு பொழிகின்ற
பெரிய பயிர வக்கோலப் பெருமான் அருளிச் செய்வார்''யாம்
பரியுந் தொண்டர்! மூவிருது கழித்தாற் பசுவீழ்த் திடஉண்ப
துரிய நாளும் அதற்கின்றால் ஊட்ட அரிதாம் உமக்''கென்றார். ௪௮

''சால நன்று! முந்நிரையும் உடையேன் தாழ்வின் கெனக்கில்லை
ஆலம் உண்டார் அன்பர்உமக் கமுதாம் பசுத்தான் இன்னதென
ஏல அருளிச் செயப்பெற்றால் யான்போய் அமுது கடிதமைத்துக்
காலந் தப்பா மேவருவேன்'' என்று மொழிந்து கைதொழுதார். ௪௯

பண்பு மிக்க சிறுத்தொண்டர் பரிவு கண்டு பயிரவரும்
''நண்பு மிக்கீர்! நாம்உண்ணப் படுக்கும் பசுவும் நரப்பசுவாம்

---

௪௭. கண்கள் கவரும் வேடம் நிறைந்த தவத்தை உடையீர்! தண்... பட்டால் - சிவனடியார் (எழுந்தருளின்) கிடைக்கப்பெற்றால். தேட...ஆகும்- தேடிப் பெற முடியாதனவும் கிடைப்பனவாகும்.

௪௮. பரியும்...உண்பது - அன்பு கூரும் தொண்டரே! ஆறுமாதம் கழிந் தால் பசுவைக் கொன்று அதன் ஊனினை உண்பது வழக்கம். சிறுத்தொண் டர் தென்னாட்டவராதலின் ''ஊட்ட அரிதாம் உமக்கு'' என்றார்.

௪௯. சால - மிக. முந்நிரையும் - பசுத்திரள், எருமைத்திரள், ஆட்டுத்திரள் ஆக மூன்றையும். நாயன்மார் கொண்ட நியதியினின்றும் வழுவாதிருப்பதை உலகுக்கு உணர்த்துதற் பொருட்டு, இறைவன், அவர் தம் நியதி வழி நின்றே அருமைப்பாடு நேரச்செய்வது வழக்கம். இப்பொழுது இங்கே சிவனடியாராகப் போந்தவர் கோமாமிசம் கேட்பது கவனிக்கத்தக்கது. அவ்வுணவு கேட்பதற்கோ அவர் வடநாட்டு வயிரவர் கோலந் தாங்கி வந்தார் போலும்! சிறுத்தொண்டர் சிவனடியாருக்கு அன்னதானஞ் செய்வதை நியதி யாக் கொண்டவர். அவர்பால் இதுகாறும் போந்த அடியார் எவரும் ஊன் உணவு கேட்டார் என்று கூறுதற்குச் சான்றில்லை. இப்பொழுது போந்த அடியார் ஊன் - அதுவும் பசு ஊன் - கேட்கிறார். மறுப்பின், சிறுத்தொண்டரது அன்னதான நியதிக்கு இழுக்கு நேர்ந்துவிடும். சிறுத்தொண்டர் அன்பு, மறுக் குந் தகையதன்று. அவர், சிவனடியாரிடம் தலை யன்பு வாய்ந்தவர்; தம் உடல் பொருள் ஆவி எல்லாம் சிவனடியார் உடைமை என்று கொண்ட பேரன்பால் விழுங்கப்பட்டவர். அவர் நெஞ்சம் சிவனடியார் விரும்புவதைச் செய்வதில் ஈடுபடுவதே யன்றி மறுப்பிலோ ஆராய்ச்சியிலோ ஈடுபடாதது. ஆகவே, சிவ னடியார் விரும்பியதைச் செய்யவே அவர்தம் அன்பு முனைந்து வீறிட்டு நிற் கிறது. அவர் ''பசு மட்டுமன்று; முந்நிரையும் உண்டு'' என்கிறார்.

உண்ப தஞ்சு பிராயத்துள் உறுப்பில் மறுவின் றேல்இன்னம்
புண்செய் நோவில் வேலெறிந்தாற் போலும் புகல்வ தொன்'' றென்றார்.

"யாதும் அரிய தில்லைஇனி ஈண்ட அருளிச் செய்யும்'' என
நாதன் தானும் "ஒருகுடிக்கு நல்ல சிறுவன் ஒருமகனைத்
தாதை அரியத் தாய்பிடிக்கும் பொழுதில் தம்மில் மனமுவந்தே
ஏதம் இன்றி அமைத்தகறி யாம்இட் டுண்ப'' தெனமொழிந்தார். ருக

அதுவும் முனிவர் மொழிந்தருளக் கேட்ட தொண்டர் "அடியேனுக்
கிதுவும் அரிதன் றெம்பெருமான் அமுது செய்யப் பெறில்''என்று
கதுமென் விரைவில் அவர்இசையப் பெற்றுக் களிப்பாற் காதலொடு
மதுமென் கமல மலர்ப்பாதம் பணிந்து மனையில் வந்தணைந்தார். ருஉ

†அன்பு மிக்க பெருங்கற்பின் அணங்கு திருவெண் காட்டம்மை
முன்பு வந்து சிறுத்தொண்டர் வரவு நோக்கி முன்னின்றே
இன்பம் பெருக மலர்ந்தமுகங் கண்டு பாத மிசைஇறைஞ்சிப்
பின்பு கணவர் முகநோக்கிப் பெருகுந் தவத்தோர் செயல்வினவ. ருங

வள்ள லாரும் மனையாரை நோக்கி "வந்த மாதவர்தாம்
உள்ளம் மகிழ அமுதுசெய்ய இசைந்தார் குடிக்கோர் சிறுவனுமாய்க்
கொள்ளும் பிராயம் ஐந்துளனாய் உறுப்பிற் குறைபா டின்றித்தாய்
பிள்ளை பிடிக்க உவந்துபிதா அரிந்து சமைக்கப் பெறின்'' என்றார். ருச

அரிய கற்பின் மனைவியார் அவரை நோக்கி உரைசெய்வார்
"பெரிய பயிர வத்தொண்டர் அமுது செய்யப் பெறுவதற்கிங்
குரிய வகையால் அமுதமைப்போம் ஒருவ னாகி ஒருகுடிக்கு
வருமச் சிறுவன் தனைப்பெறுமா றெவ்வாறு?'' றென்று வணங்குதலும்.

மனைவி யார்தம் முகநோக்கி "மற்றித் திறத்து மைந்தர்தமை
நினைவு நிரம்ப நிதிகொடுத்தால் தருவா ருளரே நேர்நின்று

---

ருo. முன்னே அமுது என்றார்; பின்னே பசுஊன் என்றார்; இப்பொழுது நரப்பசு என்கிறார். அஞ்சு......இன்றேல் உண்பது.

ருக. ஈண்ட - விரைய. ஏதம் - வருத்தம்.

ருஉ. "எம்பெருமான் அமுதுசெய்யப்பெறில் இதுவும் அரிதன்று'' என்பது, சிறுத்தொண்டரின் நியதி வழுவாத தலைமை யன்பைப் புலப்படுத்துதலையோர்க. கதுமென் விரைவில் - அதிக விரைவில்.

ருங. அணங்கு - பெண்தெய்வமாகிய.

பா - ம்—*பிராயத்தில். †அன்பின்.

தனையன் தன்னைத் தந்தைதாய் அரிவார் இல்லைத் தாழாமே
எனை இங் குய்ய நீபயந்தான் தன்னை *அழைப்போம் யாம்'' என்றார்.

என்று கணவர் கூறுதலும் அதனுக் கிசைந்''தெம் பிரான்தொண்டர்
இன்று தாழா தமுதுசெய்யப் பெற்றிங் கவர்தம் மலர்ந்தமுகம்
நன்று †காண்ப'' தெனநயந்து "நம்மைக் காக்க வருமணியைச்
சென்று பள்ளி யினிற்கொண்டு வாரும்'' என்றார் திருவனையார். ௫௭

காதல் மனையார் தாங்கூறக் கணவ னாருங் காதலனை
ஏதம் அகலப் பெற்றபே றெல்லாம் எய்தி னார்போல
நாதர் தமக்கங் கமுதாக்க நறுமென் குதலை மொழிப்புதல்வன்
ஓத அணைந்த பள்ளியினில் உடன்கொண் டெய்தக் கடிதகன்றார். ௫௮

பள்ளி யினிற்சென் றெய்துதலும் பாதச் சதங்கை மணியொலிப்பப்
பிள்ளை ஓடி வந்தெதிரே தழுவ எடுத்துப் பியலின்மேல்
கொள்ள அணைத்துக் கொண்டுமீண் டில்லம் புகுதக் குலமாதர்
வள்ள லார்தம் முன்சென்று மைந்தன் தன்னை எதிர்வாங்கி. ௫௯

குஞ்சி திருத்தி முகந்துடைத்துக் கொட்டை அரைநாண் துகள்நீக்கி
மஞ்சள் அழிந்த அதற்கிரங்கி மையுங் கண்ணின் மருங்கொதுக்கிப்
பஞ்சி அஞ்சும் மெல்லடியார் பரிந்து திருமஞ் சனமாட்டி
எஞ்சல் இல்லாக் கோலஞ்செய் தெடுத்துக் கணவர் கைக்கொடுத்தார்.

அச்சம் எய்திக் கறியமுதாம் என்னும் அதனால் அரும்புதல்வன்
உச்சி மோவார் மார்பின்கண் அணைத்தே முத்தந் தாமுண்ணார்

---

௫௬. ......இத்தகை மைந்தனை நிதி கொடுத்தால் தருவார் உளர். ஆனால் நேர் நின்று மைந்தனை அரிந்து கொடுக்குந் தாய் தந்தைய ரில்லை......என்னை இங்கு உய்விக்க.

௫௭. திருவெண்காட்டு நங்கையாரின் அடியவர் பக்தி போற்றற்குரியது. அவ்வம்மையார் இசைந்து வருதல் கருதற்பாலது. "நம்மைக்காக்க வருமணியை" என்பது பிள்ளையின்மாட்டுள்ள அன்பைப் புலப்படுத்துகிறது. நமது நியதியைக் காக்க வருமணியை எனக் கொள்க.

௫௯. பியலின்மேல் - தோளின்மேல். குலமாதர் - திருவெண்காட்டு நங்கையார். வள்ளலார் தம்முன் - சிறுத்தொண்டர் முன்பு.

௬௦. குஞ்சி - குடுமியை. கொட்டை....நீக்கி - காதணியிலும் அரைஞாணிலும் உள்ள அழுக்கை நீக்கி. மையையும் கண்ணின்பக்கத்திலே ஒதுக்கி, எஞ்சல் இல்லா - குறைவில்லாத.

பா - ம்—*அறுப்போம். †காண்பமெனா.

பொச்சம் இல்லாத் திருத்தொண்டர் புனிதர் தமக்குக் கறிஅமைக்க
மெச்சு மனத்தால் அடுக்களையின் மேவார் வேறு கொண்டணைவார்.

ஒன்று மனத்தார் இருவர்களும் 'உலகர் அறியார்' எனமறைவில்
சென்று புக்குப் பிள்ளைதனைப் பெற்ற தாயார் செழுங்கலங்கள்
நன்று கழுவிக் கொடுசெல்ல நல்ல மகனை எடுத்துலகை
வென்ற தாதை யார்தலையைப் பிடிக்க விரைந்து மெய்த்தாயர். கூஉ

இனிய மழலைக் கிங்கிணிக்கால் இரண்டும் மடியின் புடைஇடுக்கிக்
கனிவாய் மைந்தன் கைஇரண்டும் கையாற் பிடிக்கக் காதலனும்
'நனிநீ டுவகை யுறுகின்றார்' என்று மகிழ்ந்து நகைசெய்யத்
தனிமா மகனைத் தாதையார் கருவி கொண்டு தலையரிவார். கூரு

"பொருவில் பெருமைப் புத்திரன்மெய்த் தன்மை அளித்தான்' எனப்பொலிந்து
மருவு மகிழ்ச்சி எய்தஅவர் மனைவி யாருங் "கணவனார்
அருமை உயிரை எனக்களித்தான்" என்று மிகவும் அகமலர
இருவர் மனமும் பேருவகை எய்தி அரிய வினைசெய்தார். கூச

"அறுத்த தலையின் இறைச்சிதிரு அமுதுக் காகா" தெனக்கழித்து
மறைத்து நீக்கச் சந்தனத்தார் கையிற் கொடுத்து மற்றைஉறுப்
பிறைச்சி எல்லாங் கொத்திஅறுத் தெலும்பு மூளை திறந்திட்டுக்
கறிக்கு வேண்டும் பலகாயம் அரைத்துக் கூட்டிக் கடிதமைப்பார். கூரு

மட்டு விரிபூங் குழல்மடவார் அடுப்பில் ஏற்றி மனமகிழ்ந்தே
அட்ட கறியின் பதம்அறிந்தங் கிழிச்சி வேறோர் அருங்கலத்துப்

---

கூக. அடியவர்க்குரிய கறியமுதம் என்று அச்சங்கொண்டு, பிள்ளை என்னும் உரிமைப்பாட்டால், உச்சிமோர்தல் முதலியன செய்யாராயினரென்க. பொச்சம் இல்லா - குற்றமில்லாத. வழக்கம்போலச் சமைக்கும் இடத்துக்குச் செல்லாதவராய் வேறு இடம் அணைந்தார்.

கூஉ. கலங்கள் - பாத்திரங்கள்.

கூரு. குடியர்கள் வெறியால் தங்களை மறந்து செய்யுஞ் செயல்களை ஈண்டுக் கருதிக்கொள்க. இங்கே சிறுத்தொண்டரும், அவர் தம் மனைவியாரும் கொண்ட வெறி கட் குடியால் எழுந்ததன்று. அவர்தம் வெறி அன்புக்குடியினால் எழுந்தது. அடியவர்மீது கொண்ட அன்புவெறி, மேலிட்டு நின்று, அவ்விருவரையும் செயற்கருஞ் செய்கையைச் செய்ய உந்துகிறது. அவ்வெறி அவர்கட்கு மேலும் மேலும் களிப்பு ஊட்டிக்கொண்டே போகிறது.

கூச. பொருவில் - ஒப்பில்லாத.

கூரு. சந்தனத்தார் - சந்தனநங்கையார்.

பட்ட நறையால் தாளித்துப் பலவும் மற்றுங் கறிசமைத்துச்
சட்ட விரைந்து போனகமும் சமைத்துக் கணவர் தமக்குரைத்தார்.

"உடைய நாதர் அமுதுசெய உரைத்த படியே அமைத்தவதற்
கடையும் இன்பம் முன்னையிலும் ஆர்வம் பெருகிக் களிகூர
விடையில் வருவார் தொண்டர்தாம் விரைந்து சென்று மென்மலரின்
புடைவண் டறையும் ஆத்தியின்கீழ் இருந்த புனிதர் முன்சென்றார்.

அண்ணல் திருமுன் பணிந்திறைஞ்சி அன்பர் மொழிவார் "அடியேன்பால்
நண்ணி நீரிங் கமுதுசெய வேண்டும் என்று நான்பரிவு
பண்ணி னேனாய்ப் பசித்தருளத் தாழ்த்த தெனினும் பணிசமைத்தேன்
எண்ணம் வாய்ப்ப எழுந்தருள வேண்டும்" என்றங் கெடுத்துரைப்பார்.

" இறையுந் தாழா தெழுந்தருளி அமுது செய்யும்" என்றிறைஞ்சக்
கறையும் கண்டத் தினில்மறைத்துக் கண்ணும் நுதலிற் காட்டாதார்
" நிறையும் பெருமைச் சிறுத்தொண்டர்! போதும்" என்ன நிதிஇரண்டும்
குறைவன் ஒருவன் பெற்றுவந்தாற் போலக் கொண்டு மனைபுகுந்தார்.

வந்து புகுந்து திருமனையில் மனைவி யார்தாம் மாதவரை
முந்த எதிர்சென் றடிவணங்கி முழுதும் அழகு செய்தமனைச்
சந்த மலர்மா லைகள்முத்தின் தாமம் நாற்றித் தவிசடுத்த
கந்த மலர்ஆ சனங்காட்டிக் கமழ்நீர்க் கரகம் எடுத்தேந்த. எ0

தூய நீரால் சிறுத்தொண்டர் சோதி யார்தங் கழல்விளக்கி
ஆய புனிதப் புனல்தங்கள் தலைமேல் ஆரத் தெளித்தின்பம்
மேய இல்லம் எம்மருங்கும் வீசி விரைமென் மலர்சாந்தம்
ஏயுந் தூப தீபங்கள் முதற்பூ சனைசெய் திறைஞ்சுவார். எக

பணிவெண் திங்கள் சடைவிரித்த பயில்பூங் குஞ்சிப் பயிரவராம்
புனிதர் தம்மைப் போனகமும் கறியும் படைக்கும் படிபோற்பின்

---

சுசு. மட்டு விரி பூங்குழல்-தேன் சிந்தும் மலர்க் கூந்தலையுடைய. அட்ட - சமைத்த. இழிச்சி - இறக்கி. நறையால் - நறுமணப் புகையுடன். சட்ட - கடுக. போனகமும் - சோறும்.

சுஅ. பரிவு பண்ணினேனாய் - அன்பு செய்தேனாய். பணி - கட்டளை. எண்ணம் வாய்ப்ப - அடியேன் கருத்துக் கைகூட.

சுகூ. இறையும் - நொடியும்; க்ஷணமும். போதும் - வருவோம். நிதி... போல - வறியவன் ஒருவன் பதுமநிதி சங்கநிதி என்னும் இருநிதியையும் பெற்று மகிழ்வெய்தினாற்போல......

எ0. சந்தம் - அழகு. தாமம் - மாலைகள். நாற்றி - தூக்கி; தொங்கவிட்டு. கந்தமலர் தவிசடுத்த (அணைபோன்ற) ஆசனங் காட்டி, மணங்கமழ் நீர்......

வனிதை யாருங் கணவரும்முன் வணங்கிக் கேட்ப மற்றவர்தாம்
"இனிய அன்ன முடன்கறிகள் எல்லாம் ஒக்கப் படைக்க"என. எஉ

பரிசு விளங்கப் பரிகலமும் திருத்திப் பாவா டையில்ஏற்றித்
தெரியும் வண்ணஞ் செஞ்சாலிச் செழும்போ னகமும் கறிஅமுதும்
வரிசை யினில்முன் படைத்தெடுத்து மன்னும் பரிக லக்கான்மேல்
விரிவெண் துகிலின் மிசைவைக்க விமலர் பார்த்தங் கருள்செய்வார். எஙு

"சொன்ன முறையிற் படுத்தபசுத் தொடர்ந்த உறுப்பெல் லாங்கொண்டு
மன்னு சுவையிற் கறியாக்கி மாண அமைத்தீ ரே"என்ன
அன்னம் அனையார் "தலைஇறைச்சி அமுதுக் காகா தெனக்கழித்தோம்"
என்ன "அதுவுங் கூடநாம் உண்ப" தென்றார் இடர்தீர்ப்பார். எச

சிந்தை கலங்கிச் சிறுத்தொண்டர் மனையா ரோடுந் திகைத்தயரச்
சந்த னத்தார் எனுந்தாதி யார்தாம் "†அந்தத் தலைஇறைச்சி
வந்த தொண்டர் அமுதுசெயும் பொழுது நினைக்க வரும்என்றே
முந்த அமைத்தேன் கறிஅமு"தென் றெடுத்துக் கொடுக்க முகமலர்ந்தார். எரு

வாங்கி மகிழ்ந்து படைத்ததற்பின் வணங்குஞ் சிறுத்தொண் டரைநோக்கி
"ஈங்கு நமக்குத் தனியுண்ண ஒண்ணா தீசன் அடியார்இப்
பாங்கு நின்றார் தமைக்கொணர்வீர்" என்று பரமர் பணித்தருள
ஏங்கிக் "கெட்டேன் அமுதுசெய இடையூ றிதுவோ" எனநினைவார். எசு

‡அகத்தின் புறத்துப் போய்அருளால் எங்கும் காணார் அழிந்தணைந்து
முகத்தில் வாட்டம் மிகப்பெருகப் பணிந்து முதல்வர்க் குரைசெய்வார்
"இகத்தும் பரத்தும் இனியாரைக் காணேன் யானுந் திருநீறு
சகத்தில் இடுவார் தமைக்கண்டே இடுவேன்" என்று தாழ்ந்திறைஞ்ச. எஎ

---

எஉ. சடையையே தலை மயிராகத் தாங்கி வந்தமையால் "சடை...குஞ்சி" என்றார். படி - வகையை.

எஙு. பரிசு - இயல்பு. பரிகலமும் - உண்கலத்தையும். பாவாடையில் - நிலத்தில் விரிக்குஞ் சீலையில். சாலியால் (சம்பா அரிசியால்) ஆக்கப்பெற்ற சோற்றையும்...நிலையான முக்காலியின்மேல் விரித்த வெள்ளை வஸ்திரத்தின் மீது......

எச. படுத்த பசுத்தொடர்ந்த - கொன்ற பசுவிலேயுள்ள. மாண - சிறக்க.

எஎ. திருநீறிட்டவர்க்கே அன்னமிடும் வழக்கத்தைக் குறிப்பிட்டவாறும்; நீறிட்டார் ஒருவரையும் சிறுத்தொண்டர் காணாமை விளங்குதல் காண்க.

பா - ம்—*வண்ண முடன். †நான்அத். ‡அகத்தும் புறத்தும்.

"உம்மைப் போல நீறிட்டார் உளரோ! உண்பீர் நீர்"என்று
செம்மைக் கற்பில் திருவெண்காட் டம்மை தம்மைக் "கலந்திருத்தி
வெம்மை இறைச்சி சோறிதனில் மீட்டுப் படையும்" எனப்படைத்தார்
தம்மை ஊட்ட வேண்டிஅவர் உண்ணப் புகலுந் தடுத்தருளி. எஅ

"ஆறு திங்கள் ஒழிந்துண்போம் உண்ணும் அளவுந் தரியாது
சோறு நாளும் உண்பீர்முன் உண்ப தென்?நம் முடன்துய்ப்ப
மாறின் மகவு பெற்றீரேல் மைந்தன் தன்னை அழையும்"என
ஈறும் முதலும் இல்லாதார்க் "கிப்போ துதவான் அவன்"என்றார்.

"நாமிங் குண்ப தவன்வந்தால் நாடி அழையும்" எனநம்பர்
தாமங் கருளிச் செயத்தரியார் "தலைவர் அமுது செய்தருள
யாமிங் கென்செய் தாலாகும்?" என்பார் விரைவுற் றெழுந்தருளால்
பூமென் குழலார் தம்மோடும் புறம்போய் அழைக்கப் புகும்பொழுது.

வைய நிகழுஞ் சிறுத்தொண்டர் "மைந்தா வருவாய்" எனஅழைத்தார்
தைய லாருந் தலைவர்பணி தலைநிற் பாராய்த் தாம்அழைப்பார்
"செய்ய மணியே! சீராளா! வாராய் சிவனார் அடியார்யாம்
உய்யும் வகையால் உடனுண்ண அழைக்கின் றார்"என் றோலமிட.

பரமர் அருளால் பள்ளியினின் றோடி வருவான் போல்வந்த
தரமில் வனப்பின் தனிப்புதல்வன் தன்னை எடுத்துத் தழுவித்தங்
கரமுன் அணைத்துக் கணவனார் கையிற் கொடுப்பக் களிகூர்ந்தார்[வால்
"புரமூன் றெரித்தார் திருத்தொண்டர் உண்ணப் பெற்றேம்" எனும்பொலி

வந்த மகனைக் கடிதிற்கொண் டமுது செய்விப் பான்வந்தார்
முந்த வேஅப் பயிரவராம் முதல்வர் அங்கண் மறைந்தருளச்
சிந்தை கலங்கிக் காணாது திகைத்தார் வீழ்ந்தார் தெருமந்தார்
வெந்த இறைச்சிக் கறிஅமுதும் கலத்திற் காணார் வெருவுற்றார். அங

எஅ. தம்மை - வயிரவரை. அவர் - சிறுத்தொண்டர்.

அ௦. அவன் வந்தால் (வந்தாலே - வந்த பின்னரே) நாம் இங்கு உண்பது. சிறுத்தொண்டரும், அவர்தம் மனைவியாரும் வயிரவரிடங் கொண்ட அன்பு வெறியால் களித்திருத்தல் கூங-ம் பாட்டுக் குறிப்பில் சுருங்கச் சொல்லப்பட்டது. அஃது இங்கே உறுதிப்படுதல் காண்க. தம் கையால் அரிந்த புதல்வரை மீட்டும் அழைக்க எவரே புறப்படுவர்! இங்கே இருவரும் வயிரவர் சொற்படி மைந்தனை அழைக்கப் புறப்படுதலை யோர்க. இதனால் விளங்குவதென்னை? இருவர் மனமும் அவர்தம் வசமின்றி வயிரவர்மாட்டுக்கொண்ட அன்பு வெறியில் ஈடுபட்டிருத்தல் வெள்ளிடைமலை. அவர் சொல்வழியே இருவரும் உழன்றது உறுகரியாமென்க.

அக. வைய நிகழும் - பூமியில் ஒளி செய்யும்.

அஉ. தரம்இல் வனப்பின் - ஒப்பில்லாத அழகினையுடைய.

அங. முந்தவே - முன்னமே. தெருமந்தார் - மனஞ் சுழலப் பெற்றார். வெருவுற்றார் - அஞ்சித் திடுக்கிட்டார்.

"செய்ய மேனிக் கருங்குஞ்சிச் செழுங்கஞ் சுகத்துப் டயிரவர்யாம்
உய்ய அமுது செய்யாதே ஒளித்த தெங்கே?" எனத்தேடி.
மையல் கொண்டு புறத்தணைய மறைந்த அவர்தாம் மலைபயந்த
தையலோடுஞ் சரவணத்துத் தனய ரோடுந் தாம்அணைவார். அச

தனிவெள் விடைமேல் நெடுவிசும்பில் தலைவர் பூத கணநாதர்
முனிவர் அமரர் விஞ்சையர்கள் முதலா யுள்ளோர் போற்றிசைப்ப
இனிய கறியும் திருஅமுதும் அமைத்தார் காண எழுந்தருளிப்
பனிவெண் திங்கள் முடிதுளங்கப் பரந்த கருணை நோக்களித்தார்.

அன்பின் வென்ற தொண்டரவர்க் கமைந்த மனைவி யார்மைந்தர்
முன்பு தோன்றும் பெருவாழ்வை முழுதுங் கண்டு பரவசமாய்
என்பும் மனமும் கரைந்துருக விழுந்தார் எழுந்தார் ஏத்தினார்
பின்பு பரமர் தகுதியினாற் பெரியோ ரவருக் கருள்புரிவார். அசு

கொன்றை வேணி யார்தாமும் பாகங் கொண்ட குலக்கொடியும்
வென்றி நெடுவேல் மைந்தருந்தம் விரைப்பூங் கமலச் சேவடிக்கீழ்
நின்ற தொண்டர் மனைவியார் நீடு மகனார் தாதியார்
என்றும் பிரியா தேஇறைஞ்சி இருக்க உடன்கொண் டேகினார். அஎ

ஆறு முடிமேல் அணிந்தவருக் கடியார் என்று கறிஅமுதா
ஊறி லாத தனிப்புதல்வன் தன்னை அரிந்தங் கமுதூட்டப்
பேறு பெற்றார் சேவடிகள் தலைமேற் கொண்டு பிறஉயிர்கள்
வேறு கழறிற் றறிவார்தம் பெருமை தொழுது விளம்புவாம். அஅ

ஆ திருவிருத்தம் ௩,எருஉ.

---

திருச்செங்காட்டங்குடி சோழநாட்டில் உள்ளது. அப்பதியில் மாமாத்திரர் குலம் என்றொரு குலம் உண்டு. அதன்கண் தோன்றியவர் **பரஞ்சோதியார்.** அவர், ஆயுள்வேதக் கலைகளிலும் வடமொழிக் கலைகளிலும் புலமை வாய்ந்தவர்; படைத்தொழில், யானையேற்றம், குதிரையேற்றம் முதலியவற்றிலும் பயிற்சி பெற்றவர் ; சிவபத்தி சிவனடியார் பத்தியிற் சிறந்தவர்.

பரஞ்சோதியார், சோழ மன்னனிடத்தில் அமைச்சராய் அமர்ந்து கடனாற்றி வந்தார். அவர், வேற்றரசர்களை வெல்வதிலும், அவர்கள் நாடுகளைப் பற்றுவதிலும் பேர் பெற்று விளங்கினார். ஒருமுறை வடபுலத்திலே உள்ள வாதாவி என்னும் நகரத்தில் போர் மூண்டது. அப்போரில் பரஞ்சோதியார் தலைப்பட்டு வெற்றி பெற்றார். அவ்வெற்றியின் பயனாக மணி, நிதி முதலியவற்றைக் குவையல் குவையலாகவும், யானை, குதிரை முதலியவற்றைக் கூட்டங் கூட்டமாகவும் பரஞ்சோதியார் திரட்டி வந்தார். அவைகளைக் கண்ட

---

அச. கஞ்சுகத்து - சட்டை யணிந்த. சரவணத்துத் தனயரோடும் - சரவணத்திற்றோன்றிய பிள்ளையோடும்; முருகனுடனும். அரு. துளங்க-அசைய.

மன்னன், பரஞ்சோதியார் திறத்தை வியந்து வியந்து பேசினான். அப்பொழுது அங்கு இருந்த மற்ற அமைச்சர்கள், மன்னனைப் பார்த்து, "இவர் சிவனடியார்; இவருக்கு எதிராவார் ஒருவரும் இல்லை" என்று சொன்னார்கள். அது கேட்ட மன்னன், நடுக்குற்றான்; "அந்தோ! கெட்டேன்; இதுவரை இவரைச் சிவனடியார் என்று உணர்ந்தேனில்லை; போர்முகத்துக்கு அனுப்பினேன்; பாவியானேன்" என்று வருந்தினான்; பரஞ்சோதியார் காலில் விழுந்தான்; விழுந்து, "அடியவரே! என் பிழை பொறுத்தருளல் வேண்டும்" என்று வேண்டினான். பரஞ்சோதியார், "என் கடமையை யான் செய்தேன்; அதனால் என்ன தீங்கு?" என்று சொன்னார். மன்னன் அவருக்கு நிதிக்குவையல்களையும், விருத்திகளையும் கொடுத்து, "உமது மெய்ந்நிலைமையை யான் அறியாதவாறு நடந்து வந்தீர்; இனி என் கருத்துக்கு இசைந்து நடக்குமாறு வேண்டுகிறேன்; இனி, இப்பணி செய்தல் வேண்டாம்; திருத்தொண்டு செய்துகொண்டிரும்" என்று வணங்கி விடைகொடுத்தான். பரஞ்சோதியார் விடைபெற்றுத் தம் திருப்பதி சேர்ந்தார்.

பரஞ்சோதியார், திருச்செங்காட்டங்குடியில் உள்ள கணபதீச்சுரப் பெருமானை வழிபடுவார்; தமக்கு இல்லக் கிழத்தியாராக வாய்த்த **திருவெண்காட்டு நங்கையார்** என்னும் பெருமாட்டியாருடன் கலந்து நல்லறம் ஓம்புவார்; சிவனடியார்களுக்கு அமுதூட்டிய பின்னர்த் தாம் உண்பார். அவர், அடியவர்களிடத்தில் மிகச் சிறியராய் நடப்பார். அதனால் அவருக்குச் **சிறுத்தொண்டர்** என்னுந் திருநாமம் வழங்கலாயிற்று.

இவ்வாறு ஒழுகிவரு நாளில், சிறுத்தொண்டர் மனைவியார் கருவுற்றனர். அவருக்கு ஒரு புதல்வர் பிறந்தார். அப்புதல்வருக்குச் **சீராளதேவர்** என்னும் பெயர் சூட்டப்பட்டது. சீராளதேவர் பிறை என வளர்ந்து வந்தார். அவர் தக்க பருவத்தில் பள்ளிக்கனுப்பப்பட்டார்.

திருச்செங்காட்டங்குடிக்குத் திருஞானசம்பந்தப் பெருமான் எழுந்தருளினார். அவர்தம் வருகையைக் கேள்வியுற்ற சிறுத்தொண்டர், அவரை எதிர்கொண்டு அழைத்து வந்தார்; அன்பில் மூழ்கிப் பலவித உபசாரஞ் செய்தார். திருஞானசம்பந்தப் பெருமான், சிறுத்தொண்டரைத் தமது திருப்பதிகத்தில் வைத்துச் சிறப்பித்து எழுந்தருளினார்.

சிறுத்தொண்டரின் திருத்தொண்டு, திருக்கயிலையையும் ஈர்த்தது. அவ்வடியவர் பெருமான் அன்பை நுகரச் சிவபெருமான் திருவுளங் கொண்டார்; கொண்டு, ஒரு வயிரவத் திருக்கோலந் தாங்கித் திருக்கயிலையினின்றும் புறப்பட்டார்; திருச்செங்காட்டங்குடி சேர்ந்தார்; பசியால் பீடிக்கப் பட்டார் போல் நடந்தார்; "சிறுத்தொண்டர் வீடு எங்கே எங்கே" என்று விசாரித்து வந்தார்; சிறுத்தொண்டரது வீட்டை அணுகி, வாயிலிலே நின்றார்; "சிறுத்தொண்டர் வீட்டில் உளரா?" என்று கேட்டார். தாதியாராகிய **சந்தன நங்கையார்**, "மாதவர் வந்துள்ளார்" என்று விரைந்து வந்து, வயிரவர் திருவடியிலே வீழ்ந்து வணங்கினார்; வணங்கி, "நாயனார் அடியவர்களைத் தேடிச் சென்றிருக்கிறார். அடிகள் உள்ளே எழுந்தருளலாம்" என்று சொன்னார். அதற்கு வயிரவர், "பெண்கள் உள்ள இடத்தில் நாம் தனித்துப் புகுவதில்லை" என்று திருவாய் மலர்ந்தருளினார். அவ்வுரை, திருவெண்காட்டு நங்கையார்க்குக் கேட்டது. "அடியவர் போய் விடுவரோ" என்று எண்ணி ஓடி வந்தார்; வந்து, "அடிகளே! நாயனார், அடியவர்களுக்கு நாடோறும் அமுது செய்விப்பது வழக்கம். இன்று ஓர் அடியவரும் வரவில்லை. அதனால் அவர், அடியவர்களைத் தேடிப் போயுள்ளார்; இப்பொழுது வருவார். புதிதாக அடிகள் எழுந்

தருளி இருக்கிறீர். அடிகள் திருவேடத்தைப் பார்த்தால், நாயனார் மகிழ்வெய்து வார். அடிகள் உள்ளே எழுந்தருள்க" என்று வேண்டினார். வயிரவர் அவ்வேண்டு தலுக்கு இசையாது, "நாம் இருப்பது வடதேசம்; சிறுத்தொண்டரைக் காணவே வந்தோம்; அவர் இல்லாத வேளையில் இங்கே தங்கமாட்டோம்; கணபதீச்சுரத்தில் திருஆத்தியின்கீழ் இருப்போம். சிறுத்தொண்டர் வந்ததும் இதைத் தெரிவியுங்கள்" என்று கூறிக் கணபதீச்சுரத்தை அணைந்தார்; திரு ஆத்தியின்கீழ் வீற்றிருந்தார்.

சிறுத்தொண்டர் அடியவர்களைத் தேடித் தேடி அலைந்தார்; ஒருவரையுங் காணாது வீடு சேர்ந்தார்; நிலைமையை மனைவியார்க்குக் கூறி வருந்தினார். அம்மையார், நாயனாரைப் பார்த்து, "இப்பொழுது இங்கே ஒரு வயிரவர் வந்தார்" என்று சொன்னார். அச்சொற் கேட்டதும், நாயனார் "உய்ந்தேன்; உய்ந்தேன்" என்று கூத்தாடினார்; "அவர் எங்கே?" என்று கேட்டார். அம்மையார், "அவர் வடதேசத்தவராம். அவரை இங்கே இருக்கவேண்டினேன். அவர் இசையாது சென்றார். அவர் கணபதீச்சுரத்துள்ள திரு ஆத்தியின்கீழ் அமர்ந்திருக்கிறார்" என்று கூறினார்.

உடனே சிறுத்தொண்டர் மனை வேகமாக ஓடினார்; வயிரவரைக் கண்டார்; வணங்கி நின்றார். வயிரவர், நாயனாரைப் பார்த்து, "பெரிய சிறுத்தொண்டர் நீரோ?" என்றுகேட்டார். அன்பர், "சிவனடியார்கள் எளியேனை அப்படிச் சொல்வது வழக்கம்" என்றார். நாயனார் வயிரவரை மீண்டும் வணங்கி, "அடிகளே! ஏழைக்குடிலுக்கு எழுந்தருளல் வேண்டும்; அமுதுசெய்தல் வேண்டும்" என்று முறையிட்டார். வயிரவர், தொண்டரைப் பார்த்து, "உம்மைக் காண வந்தோம்; நாம் வடதேசத்தினோம்; எமக்கு அமுதளித்தல் உம்மால் இயலாது" என்றார். அதற்குச் சிறுத்தொண்டர், "அடிகள் ஏன் அப்படிச் சொல்கிறீர்கள்? அடிகளின் உணவு முறையைத் தெரிவியுங்கள்; அவ்வாறே செய்விப்பேன்; அருமை ஒன்றும் இல்லை" என்றார். அது கேட்ட வயிரவர், "நாம் ஆறுமாதத்துக்கு ஒருமுறை உணவு கொள்ளும் இயல்பினோம். அந்நாள் இந்நாளாகும். இன்று, பசுவைக் கொன்று சமைத்து உண்பது நமது வழக்கம். இஃது உமக்கு அருமையன்றோ?" என்றார். அதற்குச் சிறுத்தொண்டர் "சால நன்று! எனக்கு மூன்நிரையும் உண்டு. ஒன்றுங் குறைவில்லை. அடிகளுக்குத் திருவமுதாகும் பசு இன்னதென்று தெரிதல்வேண்டும். தெரிந்தால், யான் போய் அமுதாக்குவித்து விரைவில் திரும்புவேன்" என்று சொல்லி வணங்கினார்.

வயிரவர், "தொண்டரே! நாம் உண்ணும் பசு நரப் பசுவாகும். அஃது ஐந்து வயதுடையதாய், உறுப்பில் பழுதில்லாததாய் இருத்தல்வேண்டும். இன்னும் அதன் இயல்பைக் கூறுவோம். கூறினால், அஃது உமக்குப் புண்ணில் வேல் எறிந்தாற்போல் தோன்றுமே! என்செய்வது?" என்றார். சிறுத்தொண்டர், "நன்றாகக் கூறலாம்" என்றார். வயிரவர், "அச்சிறுவன், ஒருகுடிக்கு ஒருவனாய் இருத்தல் வேண்டும்; அவனைத் தாய் உவந்து பிடிக்கத் தாதையும் உவந்தே அரிதல்வேண்டும். இவ்வாறு அரிந்து சமையல் செய்தால் நாம் உண்போம்" என்றார். சிறுத்தொண்டர், "இஃதும் எனக்கு அரியதன்று; அடிகள் திருவமுது செய்ய இசைவது போதும்" என்று கூறி வேண்டினார். வயிரவர் இசையலானார்.

சிறுத்தொண்டர் பேரானந்தத்துடன் வீடு நோக்கி விரைந்து நடந்தார். அவர்தம் வருகையை வெண்காட்டுநங்கையார் ஆவலுடன் எதிர்நோக்கிக்கொண்டிருந்தார். நாயனார் முகமலர்ச்சியோடு வருதலை நங்கையார் கண்டார்; கண்டு,

அகமகிழ்ந்தார். அம்மையார் நாயனுரை வணங்கி, வயிரவர் செய்கையைக் கேட்டார். நாயனுர், வயிரவர் விருப்பத்தைத் தெரிவித்தார். அதுகேட்ட அம்மையார், "ஒரு குடிக்கு ஒருவனுக உள்ள சிறுவனை எப்படிப் பெறுவது?" என்று வணங்கி நின்றார். நாயனுர் அம்மையாரைப் பார்த்து, "நிரம்பப் பொருள் கொடுத்தால் சிறுவனைப் பெறுதல் கூடும். பொருளுக்குப் பிள்ளையைத் தருவோர் இருப்பர்; ஆனால், அச்சிறுவனை உவப்புடன் அரியத் துணியும் பெற்ரோர் கிடைப்பரோ! கிடைத்தல் அரிது. இனிக் காலந் தாழ்த்தல் ஆகாது. நமது அருமைப் புதல்வனை அழைப்போம்" என்று துணிந்து கூறினர். அம்மையார், "நங்குலமணியைப் பள்ளியினின்றும் அழைத்து வாரும்" என்ருர்.

உடனே சிறுத்தொண்டர் பள்ளிக்குப் போனுர். சீராளதேவர் ஓடிவந்து தந்தையைத் தழுவிக்கொண்டார். சிறுத்தொண்டர் பிள்ளையைத் தூக்கித் தோள்மேல் வைத்து வீட்டுக்கு வந்தார். அம்மையார் எதிர்சென்று பிள்ளையை வாங்கினுர்; வாங்கிப் பிள்ளையின் தலைமயிரைத் திருத்தினுர்; முகந் துடைத்தார்; திருமஞ்சன மாட்டினுர்; அலங்கரித்தார்; தமது ஆருயிரைக் கணவனுர் கையிற் கொடுத்தார்.

சிறுத்தொண்டர் புத்திரனை அன்போடு வாங்கினுர்; அடுக்களைக்குச் செல்லாமல் வேருர் இடத்திற்குச் சென்ருர். அம்மையார் பாத்திரங்களைக் கழுவி எடுத்துக்கொண்டு உடன் போனுர். சிவபத்தியிலேயே ஈடுபட்டு நின்ற சிறுத்தொண்டர், பிள்ளையின் தலையைப் பிடித்தார். அம்மையார் பிள்ளையின் காலை மடியிலே இடுக்கினுர்; இரண்டு கைகளையும் தமது இரண்டு கைகளால் பற்றினுர். சீராளதேவர் "பெற்ரோர் மகிழ்கிருர்" என்று கருதி நகைசெய்தார். சிறுத்தொண்டரும் அம்மையாரும் "நம் புதல்வன் நமக்குப் பெறும்பேறு அளித்தான்" என்று மகிழ்வெய்தினுர். அம்மகிழ்வுடன் சிறுத்தொண்டர் செயற்கருஞ் செய்கை செய்தார்.

தலை இறைச்சி அமுதுக்கு உதவாதென்று அதை விலக்குமாறு அம்மையார் தோழியாரிடங் கூறினுர். மற்ற உறுப்புக்கள் எல்லாம் சமைக்கப்பட்டன. வேறு கறி வகைகளும் செய்யப்பட்டன. சோறும் ஆக்கப்பட்டது. சமையல் வேலை முடிந்ததை அம்மையார் நாயனுர்க்குத் தெரிவித்தார்.

சிறுத்தொண்டர் களிகூர்ந்து, திருஆத்தியை அடைந்தார்; வயிரவரைத் தொழுதார்; தொழுது, "அடிகள் விரும்பியவாறு சமையல் செய்யப்பட்டது. கருணை கூர்ந்து எழுந்தருள்க" என்று வேண்டி நின்ருர். வயிரவர் புறப்பட்டார். நாயனுரும் உடன் போந்தார். இருவரும் வீடு சேர்ந்தனர்.

நாயனுரும் அம்மையாரும் வயிரவர்க்கு முறைப்படி வழிபாடு செய்தனர்; செய்து, "அமுது படைக்கும்வகை எப்படி?" என்று வயிரவரைக் கேட்டனர். வயிரவர், "சோற்றுடன் கறிகளையும் ஒக்கப் படைக்க" என்ருர். வெண்காட்டு நங்கையார், பரிகலந் திருத்திச் சோறு கறிகளை முறைப்படி படைத்தார். வயிரவர் அதனைத் திருநோக்கஞ்செய்து, பசுவின் உறுப்புக்கள் எல்லாவற்றையுஞ் சமைத்தீரா?" என்று கேட்டார். அம்மையார், "தலை இறைச்சி திருவமுதுக்கு ஆகாதென்று அதைக் கழித்தோம். பிற சமைக்கப்பட்டுள்ளன" என்ருர். வயிரவர் "தலையும் வேண்டும்" என்ருர். நாயனுரும் நாயகியாருந் திகைத்து நின்றனர். அப்பொழுது தாதியாராகிய சந்தனநங்கையார், "வயிரவர் திருவமுது செய்யும்போது, தலை இறைச்சியின்மீது அவர்தம் எண்ணம் செல்லினும் செல்லும் என்று நினைந்து, அதையுஞ் சமையல்செய்து வைத்திருக்

கிறேன்" என்று சொல்லி, அதைக் கொண்டுவந்தார். திருவெண்காட்டுநங்கை யார் அகம் மலர்ந்தது. நங்கையார் அத்தலை இறைச்சியையும் வாங்கி அன்புடன் படைத்தார்.

பிறகு வயிரவர் சிறுத்தொண்டரைப் பார்த்தார்; பார்த்து, "நாம் தனியே உண்பதில்லை ; சிவனடியார்களுடன் உண்பது வழக்கம். அவர்களை அழைத்து வாரும்" என்றார். நாயனார்க்குச் சொல்லொணு வருத்தந் தோன்றிற்று. "அந்தோ! இவர் திருவமுதுசெய்ய இடையூறு நேர்ந்ததே" என்று ஏங்கினார் ; வெளியே போனார் ; சிவனடியார்களைத் தேடினார் ; ஒருவரையுங் கண்டாரில்லை. சோர்வுடன் வீட்டிற்குத் திரும்பினார். நிலைமையை வயிரவர்க்குத் தெரிவித்துத் " திருநீறு அணிந்தவர்க்கே யான் சோறிடுவது வழக்கம்" என்று சொல்லி வணங்கினார்.

வயிரவர் நாயனாரை நோக்கி, "உம்மைப்போலத் திருநீறு இட்டவரும் உளரோ ? ஆகவே, நீர் எம்முடன் அமர்ந்து அமுது செய்க" என்று அருளினார். அதற்குமேல் வயிரவர், நங்கையாரை நோக்கி, "நமக்குப் படைத்தசோறு கறிகளில் இருந்து எடுத்து இவருக்கும் படைக்க" என்று பணித்தார். உடனே நங்கையார் அப்படியே செய்தார். சிறுத்தொண்டர் "நாம் உண்டால் வயிரவரும் உண்பார்" என்று எண்ணி, முதலில் உண்ணப்புகுந்தார். வயிரவர், சிறுத்தொண்டரைத் தடுத்தார்; தடுத்து, "நாம் அன்னம்உண்டு ஆறுமாதகாலமாயிற்று. நீர் நாள்தோறும் உண்பவர். நாம் உண்ணும்வரை நீர் பொறுத்தலாகாதா ? நம்முடன் உணவு கொள்வதற்குப் புத்திரன் இல்லையோ ? இருப்பின் அவனையும் அழையும்" என்றார். நாயனார், "எனக்குப் புதல்வன் உண்டு; ஆனால் அவன் இப்போது இங்கு உதவான்" என்று சொன்னார். வயிரவர், "அவன் வந்தாலன்றி நாம் உண்ணோம் ; அவனைத் தேடி அழைத்துவாரும்" என்றார்.

நாயனாரும் நாயகியாரும் என்செய்வர்! திருவருளை நினைந்து வெளியே போந்தனர்; " மைந்தா ! மணியே ! சீராளா ! வாராய் ! வாராய் ! வயிரவர் உடனுண்ண அழைக்கிறார் ; வாராய் ! வாராய் !" என்று ஓலமிட்டு அழைத்தனர். ஆண்டவனருளால் சீராளர் பள்ளியினின்றும் ஓடிவருபவரைப்போல வந்தார். அம்மையார் அருமைப் புதல்வரை அணைத்து எடுத்தார் ; எடுத்து நாயனாரிடங் கொடுத்தார். நாயனார், " அடியவர் அமுது செய்யப் பெற்றோம் ; பெற்றோம்" என்று ஆனந்தங் கொண்டார் ; பிள்ளையுடன் வீட்டிற்குள் விரைந்து நுழைந்தார். அதற்கு முன்னரே வயிரவர் மறைந்தருளினார். சிறுத்தொண்டர் திகைக்கிறார் ; விழுகிறார் ; எழுகிறார் ; மயங்குகிறார் ; " வயிரவர் எங்கே எங்கே" என்கிறார். இறைச்சியும் அமுதும் கலத்தில் காணோம். நாயனார் நடுக்குற்று வெளியே வந்தார்.

அப்பொழுது, சிவபெருமான் உமாதேவியாருடனும், முருகப்பெருமானுடனும் மழவிடைமேல் காட்சியளித்தார். சிறுத்தொண்டரும், நங்கையாரும், புதல்வரும், தாதியரும் ஆண்டவனைக் கண்டு தொழுது ஆனந்தமயமானார். சங்கரனும், சங்கரியும், சண்முகனும் அந்நால்வருக்கும் அருள் சுரந்து, தங்களைப் பிரியாத பெருவாழ்வு நல்கி, உடன் அழைத்துச் சென்றனர்.

# கழறிற்றறிவார் நாயனார் புராணம்

மாவீற் றிருந்த பெருஞ்சிறப்பின் மன்னுந் தொன்மை மலைநாட்டுப்
பாவீற் றிருந்த *பல்புகழார் பயிலும் இயல்பிற் பழம்பதிதான்
சேவீற் றிருந்தார் திருவஞ்சைக் களமும் நிலவிச் சேரர்குலக்
கோவீற் றிருந்து முறைபுரியும் குலக்கோ மூதூர் கொடுங்கோளூர். க

காலை எழும்பல் கலையினொலி களிற்றுக் கன்று வடிக்குமொலி
சோலை எழுமென் சுரும்பினொலி துரகச் செருக்காற் சுலவுமொலி
பாலை விபஞ்சி பயிலுமொலி பாட லாடல் முழவினொலி
வேலை யொலியை விழுங்கிஎழ †விளங்கி யோங்கும் வியப்பினதால். உ

மிக்க செல்வ மனைகள்தொறும் ‡விளையும் இன்பம் விளங்குவன
பக்க நெருங்கு சாலைதொறும் §பயில்சட் டறங்கள் பல்குவன
தக்க ||அன்பர் மடங்கள்தொறும் சைவ ¶மெய்ம்மை சாற்றுவன
தொக்க வளங்கொள் இடங்கள்தொறும் அடங்க நிதியந் துவன்றுவன.

வேத நெறியின் முறைபிறழா மிக்க ஒழுக்கந் தலைநின்ற
சாதி நான்கு நிலைதழைக்குந் தன்மைத் தாகித் தடமதில்சூழ்
சூத வகுள சரளநிரை துதையுஞ் சோலை வளநகர்தான்
கோதை அரசர் மகோதைஎனக் குலவு பெயரும் உடைத்துலகில். ச

முருகு விரியும் மலர்ச்சோலை மூதூ ரதன்கண் முறைமரபின்
அருகி அழியுங் கலிநீக்கி அறங்கொள் சைவத் திறந்தழைப்பத்

---

க. மா - இலக்குமி. மலைநாடு, உள்ள நாடுகளில் மிகப் பழமையதாதலின், "தொன்மை மலைநாடு" என்றார். பா - பாக்களில். பயிலும் - வதியும். சே - இடபத்தின்மீது. கோ - தலைமை வாய்ந்த.

உ. களிற்றுக் கன்று வடிக்கும் - யானைக் கன்றுகளை வசப்படுத்தும். சுரும்பின் - வண்டின். துரகச்செருக்கால் சுலவும் - குதிரைகள் களிப்பால் கனைத்துச் சுழலும். பாலை விபஞ்சி - பாலையாழ். வேலை - கடலின்.

ங. பயில் சட்டறங்கள் பல்குவன - சொல்லப்படும் செப்பமான அறங்கள் பெருகுவன ; (சத்தான அறங்கள்).

ச. சூதம்...சோலை - மாமரமும் மகிழமரமும் நறுவிளிமரமும் வரிசையாக நெருங்கியுள்ள. கோதை அரசர் - சேர அரசரது. கோதை அரசரால் ஆளப்படுவது மகோதை.

பா - ம்—*பல்புகழின் ; சொல்புலவர். †விளங்கிப் பொங்கும். ‡விழையும். §பயில்நெட் டறங்கள் பயிலுவன. ||அணிகொள். ¶மேன்மை.

திருகு சினவெங் களியானைச் சேரர் குலமும் உலகுஞ்செய்
பெருகு தவத்தால் அரனருளால் பிறந்தார் பெருமாக் கோதையார். ரு

திருமா நகரந் திருஅவதா ரஞ்செய் விழவின் சிறப்பினுல்
வருமா களிகூர் நெய்யாடல் *எடுப்ப வான மலர்மாரி
தருமா விசும்பின் மிகநெருங்கத் தழங்கும் ஒலிமங் கலந்தழைப்பப்
பெருமா நிலத்தில் எவ்வுயிரும் பெருகு மகிழ்ச்சி பிறங்கினவால். சு

மண்மேற் சைவ நெறிவாழ வளர்ந்து முன்னை வழிஅன்பாற்
கண்மேல் விளங்கு நெற்றியினுர் கழலே பேணுங் கருத்தினராய்
உண்மே வியஅன் பினராகி உரிமை அரசர் தொழில்புரியார்
தெண்ணீர் முடியார் திருவஞ்சைக் களத்தில் திருத்தொண் டேபுரிவார்.

'உலகின் இயல்பும் அரசியல்பும் உறுதி யல்ல' எனஉணர்வார்
புலரி எழுந்து புனல்மூழ்கிப் புனித வெண்ணீற் றினும்மூழ்கி
நிலவு திருநந் தனவனத்து நீடும் பணிகள் பலசெய்து
மலரு முகையும் கொணர்ந்துதிரு மாலை சாத்த மகிழ்ந்தமைத்து. அ

திருமஞ் சனமும் கொணர்ந்துதிரு அலகும் இட்டுத் திருமெழுக்கு
வரும்அன் புடன்இன் புறச்சாத்தி மற்றும் உள்ள திருப்பணிகள்
பெருமை பிறங்கச் செய்தமைத்துப் பேணும் விருப்பில் திருப்பாட்டும்
ஒருமை நெறியின் உணர்வுவர ஓதிப் பணிந்தே ஒழுகுநாள். கூ

நீரின் மலிந்த கடலகழி நெடுமால் வரையின் கொடிமதில்சூழ்
சீரின் மலிந்த திருநகர மதனிற் செங்கோற் பொறையனெனும்
காரின் மலிந்த கொடைநிழல்மேற் கவிக்குங் கொற்றக் குடைநிழற்கீழ்த்
தாரின் மலிந்த புயத்தரசன் தரணி நீத்துத் தவஞ்சார்ந்தான். கo

வந்த மரபின் அரசளிப்பான் வனஞ்சார் தவத்தின் மருவியபின்
சிந்தை மதிநூல் தேரமைச்சர் சிலநாள் ஆய்ந்து தெளிந்தநெறி

ரு. முருகு - மணம். அருகி அழிதற்குரிய கலி. திருகு - மாறுபட்ட.

சு. தழங்கும் மங்கல ஒலி - ஒலிக்கும் மங்கல முழக்கங்கள்.

அ. புலரி - விடியற்காலையில்.

கo. கடலனைய அகழியும், சக்கரவாள கிரிபோன்ற மதிலும் சூழ்ந்த. காரின் - மேகம்போல ; மேகத்தினும் எனினுமாம். தாரின் - மாலையால். செங்கோற் பொறையன் என்னும் அரசன்.

கக. ...மூயல்வார் முதற்றுக - மாக்கோதையார் மரபுக்கு முதன்மை யுடையவராகத் தோன்றினமையால். இந்து முடியார் - பிறையணிந்த முடியை யுடைய சிவபெருமான் எழுந்தருளியுள்ள.

பா - ம்—*எடுப்பர்.

முந்தை மரபில் முதல்வர்திருத் தொண்டு முயல்வார் முதற்றாக
இந்து முடியார் திருவஞ்சைக் களத்தில் அவர்பால் எய்தினர். கக

எய்தி அவர்தம் எதிரிறைஞ்சி "இருந்தண் சாரல் மலைநாட்டுச்
செய்தி முறைமை யால்உரிமைச் செங்கோல் அரசு புரிவதற்கு
மைதீர் நெறியின் முடிசூடி அருளும் மரபால் வந்த"தெனப்
பொய்தீர் வாய்மை மந்திரிகள் போற்றிப் புகன்ற பொழுதின்கண். கஉ

"இன்பம் பெருகுந் திருத்தொண்டுக் கிடையூ றாக இவர்மொழிந்தார்
அன்பு நிலைமை வழுவாமை அரசு *புரக்க அருளுண்டேல்
என்பும் அரவும் புனைந்தாரை †இடைபெற் றறிவேன்" எனப்புக்கு
முன்பு தொழுது விண்ணப்பஞ் ‡செய்தார், முதல்வர் அருளினால். கங

மேவும் உரிமை அரசளித்தே விரும்பு காதல் வழிபாடும்
யாவும் யாரும் கழறினவும் அறியும் உணர்வும் ஈறில்லாத்
தாவில் விறலும் தண்டாத கொடையும் படைவா கனமுதலாம்
காவல் மன்னர்க் குரியனவும் எல்லாங் கைவந் துறப்பெற்றார். கச

ஆன அருள்கொண் டஞ்சலிசெய் திறைஞ்சிப் §புறம்போந் தரசளித்தல்
ஊனம் ஆகுந் திருத்தொண்டுக் கெனினும் உடையான் அருளாலே
மேன்மை மகுடந் தாங்குதற்கு வேண்டும் அமைச்சர்க் குடன்படலும்
மான அமைச்சர் ||தாள்பணிந்தவ் வினைமேற் கொண்டு மகிழ்ந்தெழுந்தார்.

உரிமை நாளில் ஓரைநலன் எய்த மிக்க உபகரணம்
பெருமை சிறக்க வேண்டுவன எல்லாம் பிறங்க மங்கலஞ்செய்

---

கங. சிவன் அருளுண்டேல் ...புனைந்தாரை...அறிவேன் - சிவபெருமானிடம் சமயம் பெற்று அவர் திருவுளத்தை அறிவேன்.

கச. அரசளித்தே - அரசாட்சி செய்துகொண்டே. யாவும் யாரும் கழறினவும் அறியும்-அஃறிணை உயிர்களும் உயர்திணை உயிர்களும் சொல்லுவனவற்றை எல்லாம் அறியும். தாவில் விறலும்-கெடாத வெற்றியும். தண்டாத- நீங்காத. கழறிற்று அறிவார் - எல்லாவித உயிர்களும் சொல்வதை அறிபவர்; "இலத்து உயிர் கழறுஞ் சொற்கள் - அனைத்தையும் அறிந்து இரங்கும் அன்புடைச் சேரமான் காண்"—திருவாலவாயுடையார் திருமுகங்கொடுத்த திருவிளையாடல் : எ. எவ்வுயிரும் எங்கிருந்தும் முறையிடுங் குறைபாடுகளை உணர்ந்து, குறை கடிந்து, நலஞ்செய்தற்கு ஆண்டவன், சேரர் பெருமானுக்கு இவ்வரம் அளித்தான் போலும். சிவயோகிகளுக்கு உயிர்களின் ஒலி கேட்டல் இயல்பு. விரிவு பதஞ்சலி யோக சூத்திரம் பார்க்க.

கரு. மாண்புடைய அமைச்சர்.

பா - ம்—*புரக்கும். †இடைபுக் கறிவேன். ‡செய்ய. §புறம்போந் தரசளித்தால். ||தாம்.

திருமை உலகுக் கொருமைமுடி கவித்தார் எல்லா உயிரும்மகிழ்
தரும நிலைமை அறிந்துபுவி தாங்குங் கழறிற் றறிவார்தாம். ௧௬

தம்பி ரானார் கோயில்வலங் கொண்டு திருமுன் தாழ்ந்தெழுந்து
கும்ப யானை மேல்கொண்டு கொற்றக் குடையுஞ் சாமரையும்
நம்பும் உரிமை யவர்தாங்க நலங்கொள் நகர்சூழ் வலங்கொள்வார்
மொய்ம்பில் உவரின் பொதிசுமந்தோர் வண்ணான் முன்னே வரக்கண்டார். ௧௭

மழையிற் கரைந்தங் குவர்ஊறி மேனி வெளுத்த வடிவினால்
"உழையிற் பொலிந்த திருக்கரத்தார் அடியார் வேடம்" என்றுணர்ந்தே
இழையிற் சிறந்த ஓடைநுதல் யானைக் கழுத்தின் நின்றிழிந்து
விழைவிற் பெருகுங் காதலினால் விரைந்து சென்று கைதொழுதார்.

சேரர் பெருமான் தொழக்கண்டு சிந்தை கலங்கி முன்வணங்கி
"யாரென் றடியே னைக்கொண்ட தடியேன் அடிவண் ணான்" என்னச்
சேரர் பிரானும் "அடிச்சேரன் அடியேன்" என்று "திருநீற்றின்
வார வேடம் நினைப்பித்தீர் வருந்தா தேகும்" எனமொழிந்தார். ௧௯

மன்னர் பெருமான் திருத்தொண்டு கண்டு மதிநீ டமைச்சரெலாம்
சென்னி மிசைஅஞ் சலிசெய்து போற்றச் சினமால் களிறேறி
மின்னு மணிப்பூண் கொடிமாட வீதி மூதூர் வலங்கொண்டு
பொன்னின் மணிமா ளிகைவாயில் புக்கார் புனைமங் கலம்பொலிய. ௨௦

யானை மிசைநின் றிழிந்தருளி இலங்கு மணிமண் டபத்தின்கண்
மேன்மை அரியா சனத்தேறி விளங்குங் கொற்றக் குடைநிழற்றப்
பானல் விழியார் சாமரைமுன் பணிமா றப்பன் மலர்தூவி
மான அரசர் போற்றிடவீற் றிருந்தார் மன்னர் பெருமானார். ௨௧

---

௧௬. ஓரை - இலக்கினம்; முகூர்த்தம். இருமை உலகுக்கு - அஃறிணை உயர்திணை என்னும் இரண்டாகிய உலகுக்கு. யாவும் யாரும் கழறுவதை அறிந்து முறைசெய்யும் ஆட்சியாதலின் "இருமை உலகுக்கு" என்றார்.

௧௭. கும்பயானை - மத்தகத்தையுடைய யானை. நம்பும் - நச்சும். மொய்ம்பில் உவரின் பொதி - தோள் கட்டில் உவர்மண் மூட்டையை.

௧௮. உழையில் - மானால். இழையில்...யானை - அணிகளிற் சிறந்த பட்டம் அணிந்த நெற்றியையுடைய யானையின். விழைவிற் பெருகுங்காதலினால்-விருப்பத்தினின்றும் எழும் பேரன்பால்.

௧௯. வாரம் - அன்பு.

௨௧. அரியாசனத்து - சிங்காசனத்தில். பானல் - குவளைபோன்ற.

உலகு புரக்குங் கொடைவளவர் உரிமைச் செழியர் உடன்கூட
நிலவு பெருமுக் கோக்களாய் நீதி மனுநூல் நெறிநடத்தி
அலகில் அரசர் திறைகொணர அகத்தும் புறத்தும் பகையறுத்து
மலருந் திருநீற் றொளிவளர மறைகள் *வளர மண்ணளிப்பார். உஉ

"நீடும் உரிமைப் †பேரரசால் நிகழும் பயனும் நிறைதவமும்
தேடும் பொருளும் பெருந்துணையும் தில்லைத் திருச்சிற் றம்பலத்துள்
ஆடுங் கழலே" எனத்தெளிந்த அறிவால் எடுத்த திருப்பாதம்
கூடும் அன்பில் அர்ச்சனைமேற் கொண்டார் சேரர் குலப்பெருமாள்.

வாசத் திருமஞ் சனம்பள்ளித் தாமஞ் சாந்தம் மணித்தூபம்
தேசிற் பெருகுஞ் செழுந்தீபம் முதலா யினவுந் திருஅமுதும்
ஈசர்க் கேற்ற பரிசினால் அருச்சித் தருள எந்நாளும்
பூசைக் கமர்ந்த பெருங்கூத்தர் பொற்பார் சிலம்பின் ஒலிஅளித்தார்.உச

நம்பர் தாளின் வழிபாட்டால் நாளும் இன்புற் றமர்கின்றார்
இம்பர் உலகில் இரவலர்க்கும் வறியோர் எவர்க்கும் ஈகையினால்
செம்பொன் மழையாம் எனப்பொழிந்து திருந்து வென்றி யுடன்பொருந்தி
உம்பர் போற்றத் தம்பெருமாற் குரிய வேள்வி பலசெய்தார். உரு

இன்ன வண்ணம் இவரொழுக எழில்கொள் பாண்டி நன்னாட்டு
மன்னும் மதுரைத் திருவால வாயில் இறைவர் வரும்அன்பால்
பன்னும் இசைப்பா டலிற்பரவும் பாண னார்பத் திரனார்க்கு
நன்மை நீடு பெருஞ்செல்வம் நல்க வேண்டி அருள்புரிவார். உசு

இரவு கனவில் எழுந்தருளி "என்பால் அன்பால் எப்பொழுதும்
பரவு சேரன் தனக்குனக்குப் பைம்பொன் காணம் பட்டாடை

---

உஉ. வளவர் - சோழர். செழியர் - பாண்டியர். சோழரும் பாண்டியருந் தம்முடன் சேர, விளங்கும் பெரிய மூவேந்தராய்.

உங. எடுத்த திருப்பாதம் - குஞ்சிதபாதம். "தேடும் பொருளும் சிவன் கழலே எனத் தெளிந்து"—மாணிக்கவாசகர்.

உச. தேசில் - ஒளியால். அமர்ந்த - விரும்பிய. நடராசப்பெருமான் தமது சிலம்பொலி கேட்குமாறு சேரமானுக்கு அருள் செய்தார். ஆண்டவன் அருள் நாத ஒலி இல்லாத இடமில்லை; கருவிகரணங் கடந்து, ஒன்றிய அன்பு செய்யும் பெரியோர்கட்கு, அவ்வொலி கேட்டல் இயல்பு. பாயிரம் முதற்பாட்டின் விரிவுரை பார்க்க.

உரு. இம்பருலகில் இரவலர்க்கும் - இவ்வுலகில் இரப்போர்க்கும். உம்பர் - தேவர்.

உசு. பாணபத்திரருக்கு ; விரிவு திருவிளையாடற் புராணங்களிற் பார்க்க.

பா - ம்—*பெருக. †பொறைசால.

விரவு கதிர்செய் நவமணிப்பூண் வேண்டிற் றெல்லாங் குறைவின்றித்
தரநம் ஓலை தருகின்றோம் தாழா தேகி வரு"கென்று. ௨௭

**வேறு**

அதிர்கழல் உதியர் வேந்தற் கருள்செய்த பெருமை யாலே
"எதிரில்செல் வத்துக் கேற்ற இருநிதி கொடுக்க"என்று
"**மதிமலி புரிசை**" என்னும் வாசகம் வரைந்த வாய்மைக்
கதிரொளி விரிந்த தோட்டுத் திருமுகம் கொடுத்தார் காண. ௨௮

" **மதிமலி புரிசை** மாடக் கூடல்
பதிமிசை நிலவு பானிற வரிச்சிற
கன்னம் பயில்பொழில் ஆல வாயில்
மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம்
பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்
குரிமையின் உரிமையின் உதவி ஒளிதிகழ்
குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா உகைக்குஞ் சேரலன் காண்க
பண்பால் யாழ்பயில் பாண பத்திரன்
தன்போல் என்பால் அன்பன் தன்பால்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே."

**வேறு**

சங்கப் புலவர் *திருமுகத்தைத் தலைமேற் கொண்டு பத்திரனார்
அங்கப் பொழுதே புறப்பட்டு †மலைநா டணைய வந்தெய்தித்
துங்கப் புரிசைக் கொடுங்கோளூர் தன்னிற் புகுந்து துன்னுகொடி
மங்குல் தொடக்கும் மாளிகைமுன் வந்து மன்னர்க் கறிவித்தார்.

கேட்ட பொழுதே கைதலைமேற் கொண்டு கிளர்ந்த பேரன்பால்
நாட்டம் பொழிநீர் வழிந்திழிய எழுந்து நடுக்கம் மிகஎய்தி
ஓட்டத் தம்பொன் மாளிகையின் புறத்தில் உருகுஞ் சிந்தையுடன்
பாட்டின் ‡தலைமைப் பாணனார் பாதம் பலகால் பணிகின்றார். ௩௦

---

௨௭. காணம் - காசு. தாழாமற் போய்வருக.

௨௮. உதியர் வேந்தற்கு - சேரமான் பெருமானுக்கு. தோட்டு - இதழுடைய.

௨௯. சங்கப் புலவர் - தலைச்சங்கப் புலவராகிய விரிசடைக் கடவுள். துங்கப் புரிசை - உயர்ந்த மதில்களையுடைய. துன்னு......தொடக்கும் - நெருங்கிய கொடிகள் மேகத்தை முட்டும்.

௩௦. கிளர்ந்த-எழுந்த. நாட்டம்-விழிகள். ஓட்டத்தம்பொன்-ஓடவிட்ட மாற்றுயர்ந்த பொன்; (உருக்கி ஓடவிட்டு எடுத்த பொன் உயர்ந்ததென்க.)

**பா-ம்**—*திருமுகந்தர். †மலைநா டதனை. ‡தலைமைப் பத்திரனார் தம்மைப் பலகால்.

"அடியேன் பொருளாத் திருமுகங்கொண் டணைந்த" தென்ன அவர்தாமும்
கொடிசேர் விடையார் திருமுகங்கைக் கொடுத்து வணங்கக் கொற்றவனார்
முடிமேற் கொண்டு கூத்தாடி மொழியுங் குழறிப் பொழிகண்ணீர்
பொடியார் மார்பிற் பரந்துவிழப் புவிமேற் பலகால் *வீழ்ந்தெழுந்தார்.

பரிவிற் போற்றித் திருமுகத்தைப் பலகால் தொழுது படிஎடுக்க
உரிய வகையால் எடுத்தோதி உம்பர் பெருமான் அருள்போற்றி
விரிபொற் சுடர்மா ளிகைபுக்கு மேவும் உரிமைச் சுற்றமெலாம்
பெரிது விரைவிற் கொடுபோந்து பேணும் அமைச்சர்க் கருள்செய்வார்.

"நங்கள் குலமா ளிகையிதனுள் நலத்தின் மிக்க நிதிக்குவையாய்ப்
பொங்கி நிறைந்த பலவேறு வகையிற் பொலிந்த பண்டாரம்
அங்கண் ஒன்றும் ஒழியாமை அடையக் கொண்டு புறப்பட்டுத்
தங்கும் பொதிசெய் தாளின்மேற் சமைய ஏற்றிக் கொணரும்" என.

சேரர் பெருமான் அருள்செய்யத் திருந்து மதிநூல் மந்திரிகள்
சாரு மணிமா ளிகையுள்ளாற் றனங்க ளெல்லாம் நிறைந்தபெருஞ்
சீர்கொள் நிதியம் எண்ணிறந்த எல்லாம் பொதிசெய் தாளின்மேல்
பாரில் நெருங்க மிசைஏற்றிக் கொண்டு வந்து பணிந்தார்கள். ௩௪

பரந்த நிதியின் பரப்பெல்லாம் பாண னார்பத் திரனார்க்கு
நிரந்த தனங்கள் வெவ்வேறு நிரைத்துக் காட்டி "மற்றிவையும்
உரந்தங் கியவெங் கரிபரிகள் முதலாம் உயிருள் ளனதனமும்
புரந்த அரசும் கொள்ளும்" என மொழிந்தார் பொறையர் புரவலனார்.

பாண னார்பத் திரனாரும் பைம்பொன் மௌலிச் சேரலனார்
காணக் கொடுத்த †நிதிஎல்லாங் கண்டு மகிழ்வுற் றதிசயித்துப்

௩௧. அடியேனை ஒரு பொருளாக எண்ணி. அவர் தாமும் - பாணபத்திரரும். பொடியார் - திருநீறு நிறைந்த.

௩௨. படி - பிரதி ; மூலத்தினின்றும் எடுப்பது. படிஓலை, மூலஓலை என்று **தடுத்தாட்கொண்ட புராணத்தில்** வருதல்காண்க.

௩௩. பண்டாரம் - பொக்கிஷங்களை. அடைய-முழுவதும். சமைய-தகுதியாக.

௩௫. நிரந்த - நெருங்கிய. நிரைத்து - வரிசை வரிசையாக வைத்து. உரம்......தனமும் - வலிமை பொருந்திய கடிய யானை குதிரை முதலாக உள்ள உயிர்ப்பொருள்களையும். புரந்த - ஆண்டுவந்த. பொறையர் புரவலனார் - சேரமான் பெருமாள் நாயனார்.

**பா - ம்**—*வீழ்ந்தயர்வார். †இவைஎல்லாம்.

"பேண எனக்கு வேண்டுவன அடியேன் கொள்ளப் பின்னருளும்
ஆணை, அரசும் அரசுறுப்பும் கைக்கொண் டருளும்" எனஇறைஞ்ச.

இறைவர் ஆணை மறுப்பதனுக் கஞ்சி *இசைந்தார் இகல்வேந்தர்
நிறையும் நிதியின் பரப்பெல்லாம் நிலத்தை நெளிய உடன்கொண்டே
உறைமும் மதத்துக் களிறுபரி உள்ளிட் டனவேண் டுவகொண்டோர்
பிறைவெண் கோட்டுக் களிற்றுமேல் கொண்டு போந்தார் பெரும்பாணர்.

பண்பு பெருகும் பெருமாளும் பாண னார்பத் திரனார்பின்
கண்கள் பொழிந்த காதல்நீர் வழியக் கையால் தொழுதணைய
நண்பு சிறக்கும் அவர்தம்மை நகரின் புறத்து விடைகொண்டு
திண்பொற் புரிசைத் திருமதுரை புக்கார் திருந்தும் இசைப்பாணர்.

வான வரம்பர் குலம்பெருக்கும் மன்ன னாரும் மறித்தேகிக்
கூனல் இளவெண் பிறைக்கண்ணி முடியார் அடிமை கொண்டருளும்
பான்மை அருளின் பெருமையினை நினைந்து பலகால் பணிந்தேத்தி
மேன்மை விளங்கு மாளிகைமண் டபத்துள் அரசு வீற்றிருந்தார்.

அளவில் பெருமை †அகிலயோ னிகளும் கழறிற் றறிந்தவற்றின்
உளமன் னியமெய் யுறுதுயரம் ஒன்றும் ஒழியா வகைஅகற்றிக்
களவு கொலைகள் முதலான கடிந்து கழறிற் றறிவார்தாம்
வளவர் பெருமா னுடன்செழியர் மகிழுங் கலப்பில் வைகுநாள். சo

வானக் கங்கை நதிபொதிந்த மல்கு சடையார் வழிபாட்டுத்
தூநற் சிறப்பின் அர்ச்சனையாந் தொண்டு புரிவார் தமக்கொருநாள்
தேனக் கலர்ந்த கொன்றையினார் ஆடற் சிலம்பின் ஒலிமுன்போல்
மானப் பூசை முடிவின்கண் கேளா தொழிய மதிமயங்கி. சக

பூசை கடிது முடித்''தடியேன் என்னோ பிழைத்த'' தெனப்பொருமி
''ஆசை உடம்பால் ‡மற்றினிவே றடையும் இன்பம்யா'' தென்று
தேசின் விளங்கும் உடைவாளை உருவித் திருமார் பினில்நாட்ட
ஈசர் விரைந்து திருச்சிலம்பின் ஓசை மிகவும் இசைப்பித்தார். சஉ

---

ஙசு. சிவபிரான் ஆணை (மறுதேயும்); அரசையும் அரசாங்கத்தையும்......

ஙஎ. இகல் - வலிமையுடைய. உறை - துளிக்கும்.

ஙகூ. வானவரம்பர் - சேரர்.

சக. தேன் - வண்டு. மான - பெருமை வாய்ந்த.

சஉ. பொருமி - துக்கித்து ; அழுது. தேசில் - ஒளியொடு.

பா - ம்—*இருந்தார். †யோனிகளும் கழறிற் றறிந்தே அவ்வவற்றின். ‡காம் இனி.

ஆடற் சிலம்பின் ஒலிகேளா உடைவாள் அகற்றி அங்கைமலர்
கூடத் தலைமேற் குவித்தருளிக் கொண்டு விழுந்து தொழுதெழுந்து
நீடப் பரவி மொழிகின்றார் "நெடுமால் பிரமன் அருமறைமுன்
தேடற் கரியாய்! திருவருள்முன் செய்யா தொழிந்த தென்?"னென்றார்.

என்ற பொழுதில் இறைவர்தாம் எதிர்நின் றருளா தெழும்ஒலியால்
"மன்றி னிடைநங் கூத்தாடல் வந்து வணங்கி வன்தொண்டன்
ஒன்றும் உணர்வால் நமைப்போற்றி உரைசேர் பதிகம் பாடுதலால்
நின்று கேட்டு வரத்தாழ்ந்தோம்" என்றார், அவரை நினைப்பிப்பார்.

"என்னே! அடியார்க் கிவர்அருளும் கருணை இருந்த வா"றென்று
"பொன்னேர் சடையார் திருநடஞ்செய் புலியூர்ப் பொன்னம் பலமிறைஞ்சித்
தன்னே ரில்லா வன்தொண்டர் தமையுங் காண்பன்" எனவிரும்பி
நன்னீர் நாட்டுச் செலநயந்தார் நாமச் சேரர் கோமானார். ௪௫

பொன்னார் மௌலிச் சேரலனார் போற்றும் அமைச்சர்க் கிதியம்பி
"நன்னாட் கொண்டு பெரும்பயணம் எழுக" என்று நலஞ்சாற்ற
மின்னார் அயில்வேற் குலமறவர் வென்றி நிலவுஞ் சிலைவீரர்
அந்நாட் டுள்ளார் அடையநிரந் தணைந்தார் வஞ்சி அகநகர்வாய். ௪௬

இட்ட நன்னாள் ஓரையினில் இறைவர் திருவஞ் சைக்களத்து
மட்டு விரிபூங் கொன்றையினார் தம்மை வலங்கொண் டிறைஞ்சிப்போய்ப்
பட்ட நுதல்வெங் களியானைப் பிடர்மேற் கொண்டு பனிமதியம்
தொட்ட கொடிமா ளிகைமூதூர் கடந்தார் உதியர் தோன்றலார். ௪௭

யானை அணிகள் பரந்துவழி எங்கும் நிரந்து செல்லுவன
மான மலைநாட் டினில்மலிந்த மலைக ளுடன்போ துவபோன்ற
சேனை வீரர் புடைபரந்து செல்வ தங்கண் மலைசூழ்ந்த
கானம் அடைய உடன்படர்வ போலுங் காட்சி மேவினதால். ௪௮

புரவித் திரள்கள் ஆயோகப் பொலிவின் அசைவிற் போதுவன
அரவச் சேனைக் கடற்றரங்கம் மடுத்து மேன்மேல் அடர்வனபோல்

---

௪௪. அவரை வன்தொண்டரை.

௪௫. புலியூர் - சிதம்பரத்திலுள்ள. நீர்...நயந்தார் - சோழநாட்டுக்குச் செல்ல விரும்பினார். நாமம் - புகழுடைய.

௪௬. பயணம் - பிரயாணம்; "பயணம் புறப்படுவித்து"—வெள்ளானைச் சருக்கம்: ௧௮. மறவர் - வீரர். வேல்வீரரும்...வில் வீரரும்...முழுவதும் பரவி வந்து அணைந்தார். வஞ்சி - வஞ்சிக்களம்; திருவஞ்சைக்களம்.

௪௭. சோதிடர் இட்ட.

௪௮. புடைபரந்து - பக்கத்தே பரந்து. கானம் அடைய - காடு முற்றும்.

விரவிப் *பரந்து சென்றனவால் மிசையும் அவலும் ஒன்றாக
நிரவிப் †பரந்த நெடுஞ்சேனை நேமி நெளியச் சென்றனவால். ௪௯

அந்நாட் டெல்லை கடந்தணைய அமைச்சர்க் கெல்லாம் விடையருளி
மின்னார் மணிப்பூண் மன்னவனார் வேண்டு வாரை உடன்கொண்டு
கொன்னார் அயில்வேல் மறவர்பயில் கொங்கர் நாடு கடந்தருளிப்
பொன்னாட் டவரும் அணைந்தாடும் பொன்னி நீர்நாட் டிடைப்போவார். ௫௦

சென்ற திசையிற் சிவனடியார் சிறப்பி னோடும் எதிர்கொள்ளக்
குன்றுங் கானும் உடைக்குறும்பர் இடங்கள் தோறும் குறைவறுப்பத்
துன்று முரம்பும் கான்யாறும் துறுகற் சுரமும் பலகடந்து
வென்றி விடையார் இடம்பலவும் மேவிப் பணிந்து செல்கின்றார். ௫௧

பொருவில் பொன்னித் திருநதியின் கரைவந் தெய்திப் புனிதநீர்
மருவுந் தீர்த்தம் மகிழ்ந்தாடி மருங்கு வடபாற் கரையேறித்
திருவிற் பொலியுந் திருப்புலியூர்ச் செம்பொன் மன்றுள் நடம்போற்ற
உருகு மனத்தி னுடன்சென்றார் ஒழியா அன்பின் வழிவந்தார். ௫௨

வந்து தில்லை மூதூரின் எல்லை வணங்கி மகிழ்ச்சியினால்
அந்த ணாளர் தொண்டர்குழாம் அணைந்த போதில் எதிர்வணங்கிச்
சந்த விரைப்பூந் திருவீதி இறைஞ்சித் தலைமேற் கரம்முகிழ்ப்பச்
சிந்தை மகிழ எழுநிலைக்கோ புரத்தை அணைந்தார் சேரலனார். ௫௩

நிலவும் பெருமை எழுநிலைக்கோ புரத்தின் முன்னர் நிலத்திறைஞ்சி
மலரும் கண்ணீர்த் துளிததும்பப் புகுந்து மணிமா ளிகைவலங்கொண்
டுலகு விளக்குந் திருப்பேரம் பலத்தை வணங்கி உள்ளணைந்தார்
அலகில் அண்டம் அளித்தவர்நின் றாடுந் திருச்சிற் றம்பலமுன். ௫௪

---

௪௯. ஆயோகப் பொலிவின் - கரைபோன்ற தோற்றத்துடன். அரவ...... போல் - ஒலியுடைய சேனை, கடலின் அலைகள் சென்று ஒன்றன்மேல் ஒன்று தாக்குவனபோல். மிசையும் அவலும் - மேடும் பள்ளமும். நேமி - பூமி. புரவித்திரள்—கரை ; அத்திரளின் அசைவு—அலைகள் ; சேனை—கடல்.

௫௦. கொன்னார் அயில்வேல் - அச்சமூட்டும் கூரியவேல் ஏந்திய. பயில் - வாழும். பொன்னாட்டவரும் - தேவரும். பொன்னி - காவிரி.

௫௧. குறும்பர் - வேடர்கள் ; குறுநில மன்னருமாம். துன்றுமுரம்பும் - பரல்செறிந்த பாலை நிலங்களும் ; மேட்டுநிலங்களுமாம். சுரமும் - வழியும்.

௫௨. ஒப்பிலாத காவிரித் திருநதியின். புனிதநீர் மருவு-பரிசுத்தத்தன்மை வாய்ந்த.

௫௩. மணமுடைய சந்தனமும் மலர்களும் சொரியப்பெற்ற திருவீதி.

௫௪. தடுத்தாட்கொண்ட புராணம். ௧௦௪ - குறிப்புப் பார்க்க.

பா - ம்—*படர்ந்து. †படர்ந்த.

அளவில் இன்பப் பெருங்கூத்தர் ஆட எடுத்த கழல்காட்ட
உளமும் புலமும் ஒருவழிச்சென் றுருகப் போற்றி உய்கின்றார்
களனில் *விடம்வைத் தளித்தஅமு தன்றி மன்றில் கழல்வைத்து
வளருந் திருக்கூத் தமுதுலகுக் களித்த கருணை வழுத்தினார். ௫௫

ஆரா ஆசை ஆனந்தக் கடலுள் திளைத்தே அமர்ந்தருளால்
சீரார் வண்ணப் பொன்வண்ணத் திருவந் தாதி திருப்படிக்கீழ்ப்
பாரா தரிக்க எடுத்தேத்திப் பணிந்தார் பருவ மழைபொழியும்
காரால் நிகர்க்க அரியகொடைக் கையார் கழறிற் றறிவார்தாம். ௫௬

"பொன்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் மேனி பொலிந்திலங்கும்
மின்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் வீழ்சடை வெள்ளிக்குன்றம்
தன்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் மால்விடை தன்னைக்கண்ட
என்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ண மாகிய ஈசனுக்கே"
—பொன்வண்ணத்தந்தாதி.

தம்பி ரானார்க் கெதிர்நின்று தமிழ்ச்சொன் மாலை கேட்பிக்க
உம்பர் வாழ நடமாடும் ஒருவர் அதற்குப் பரிசிலெனச்
செம்பொன் மணிமன் றினிலெடுத்த செய்ய பாதத் திருச்சிலம்பின்
இம்பர் நீட எழுந்தஒலி தாமும் எதிரே கேட்பித்தார். ௫௭

ஆடற் சிலம்பின் ஒலிகேட்பார் அளவில் இன்ப ஆனந்தம்
கூடப் பெற்ற பெரும்பேற்றின் கொள்கை வாய்ப்பக் கும்பிடுவார்
நீடப் பணியுங் காலமெலாம் நின்று தொழுது புறம்போந்து
மாடத் திருமா ளிகைவீதி வணங்கிப் புறத்து வைகினார். ௫௮

பரவுந் தில்லை வட்டத்துப் பயில்வார் பைம்பொன் அம்பலத்துள்
அரவும் புனலும் சடையாட ஆடு வார்கூத் தாராமை

---

௫௫. கண்டத்தில் விடம்வைத்து (தேவருக்குக் கருணைசெய்த) அமுத மன்றித் திருச்சிற்றம்பலத்தில் திருவடிவைத்து...; முன்னைய அமுது தேவர்களுக்குமட்டும் அளித்ததாதலின், வெறுமையாக "அளித்த" என்றும், பின்னைய அமுது உலகுய்ய அளித்தருள்வதாகலின் "உலகுக்களித்த" என்றுங் கூறினார்.

௫௬. காரையும் (மேகத்தையும்) ஒப்பிடக் கூடாத கொடைசெய்யும் திருக்கையையுடையார் என்றபடி.

௫௭. பாட்டுக்குப் பரிசிலாகத் திருச்சிலம்பொலி கேட்பித்தாரென்க.

௫௮. கொள்கை வாய்ப்ப - சிலம்பொலி கேட்கும் தமது நியதியும கைகூட.

பா - ம்—*விடம்வைத் துலகளித்த அமுதன்.

விரவுங் காதல் மிக்கோங்க வேதம் படியுந் திருப்படிக்கீழ்
இரவும் பகலும் பணிந்தேத்தி *இன்பஞ் சிறக்கும் அந்நாளில். ௫௯

ஆடும் பெருமான் பாடல்கேட் டருளித் தாழ்த்த படிதமக்குக்
கூடும் பரிசால் முன்பருளிச் செய்த நாவ லூர்க்கோவை
நீடும் பெருங்கா தலிற்காண நிறைந்த நினைவு நிரம்பமால்
தேடும் பாதர் அருளினால் திருவா ரூர்மேற் செலஎழுந்தார். ௬௦

அறிவின் எல்லை யாயதிருத் தில்லை எல்லை அமர்ந்திறைஞ்சிப்
பிறிவி லாத திருவடியைப் பெருகும் உள்ளத் தினிற்பெற்றுச்
செறியும் ஞான போனகர்வந் தருளும் புகலி சென்றிறைஞ்சி
மறிசேர் கரத்தார் கோயில்பல வணங்கி மகிழ்ந்து வழிக்கொள்வார்.

வழியிற் குழியிற் செழுவயலின் மதகின் மலர்வா விகளின்மடுச்
சுழியிற் றரளந் திரைசொரியுந் துறைநீர்ப் பொன்னி கடந்தேறி
விழியிற் றிகழுந் திருநுதலார் விரும்பும் இடங்கள் இறைஞ்சியுகக்
கழிவிற் பெருவெள் ளமுங்கொள்ளாக் கழனி ஆரூர் கண்ணுற்றார். ௬௨

நம்பி தாமும் †அந்நாட்போய் நாகைக் காரோ ணம்பாடி
அம்பொன் மணிப்பூண் நவமணிகள் ஆடை சாந்தம் அடற்பரிமா
பைம்பொற் சுரிகை முதலான பெற்று மற்றும் பலபதியில்
தம்பி ரானைப் பணிந்தேத்தித் திருவா ரூரிற் சார்ந்திருந்தார். ௬௩

---

௫௯. தில்லை எல்லையில் வதிபவராகிய சேரர்பெருமான். வேதமும் படிந்துள்ள பஞ்சாக்கரப்படிக் கீழ்.

௬௦. தாழ்த்த...பரிசால் - (சிலம்பொலி கேளாதவாறு) தாழ்த்த தன்மையைத் தமக்கு நேரும்படி.

௬௧. அறிவின் எல்லை - வேதாந்தம். சிதம்பரம் வேதாந்தத்துக்கு அறிகுறி. புறத்தே தில்லையைக் காண்பதாவது, அகத்தே வேதாந்த நிலை எய்துவதாகும். ஈண்டு வேதாந்தமென்பது நூலைக் குறிப்பதன்று; அநுபவத்தைக் குறிப்பது. "அறிவே ஆலங் காடா" என்றார் சுந்தரரும். ஞானபோனகர் - திருஞான சம்பந்தர். புகலி - சீர்காழியை.

௬௨. வழிகளிலும்...மடுச் சுழிகளிலும் முத்துக்களை அலைகள் சொரியும் துறைகளையுடைய. கற்பாந்த வெள்ளத்திலும் அழியாத ஆரூர் என்றபடி. திருவாரூர்க் கோயில் காலங்கடந்தது என்பதற்குத் திருநாவுக்கரசர் ஒரு திருத்தாண்டகமே அருளியுள்ளது ஈண்டுக் கருதற்பாலது.

௬௩. நம்பிதாமும் - சுந்தரமூர்த்தி சுவாமிகளும். அடல்பரிமா - வெற்றிக் குதிரை. சுரிகை - கவசம்.

பா - ம் — *இன்புற் றிருக்கும். †முன்னாட்போய்.

வந்து சேரர் பெருமானார் மன்னுந் திருவா ரூரெய்த
அந்த ணாளர் பெருமானும் அரசர் பெருமான் வரப்பெற்றுச்
சிந்தை மகிழ எதிர்கொண்டு சென்று கிடைத்தார் சேரலனார்
சந்த விரைத்தார் வன்றொண்டர் முன்பு விருப்பி னுடன்தாழ்ந்தார்.

முன்பு பணிந்த பெருமானைத் தாமும் பணிந்து முகந்தெடுத்தே
அன்பு பெருகத் தழுவவிரைந் தவரும் ஆர்வத் தொடுதழுவ
இன்ப வெள்ளத் திடைநீந்தி ஏற மாட்டா தலைவார்போல்
என்பும் உருக உயிரொன்றி உடம்பும் ஒன்றும் எனஇசைந்தார். ௬௫

ஆன நிலைமை கண்டதிருத் தொண்டர் அளவில் மகிழ்வெய்த
மானச் சேரர் பெருமானார் தாமும் வன்தொண் டருங்கலந்த
பான்மை நண்பால் 'சேரமான் தோழர்' என்று பார்பரவும்
மேன்மை நாமம் முனைப்பாடி வேந்தர்க் காகி விளங்கியதால். ௬௬

ஒருவர் ஒருவ ரிற்கலந்த உணர்வால் இன்ப மொழியுரைத்து
"மருவ இனியார் பால்செய்வ தென்னும்" என்னும் மகிழ்ச்சியினால்
பருவ மழைச்செங் கைப்பற்றிக் கொண்டு பரமர் தாள்பணியத்
தெருவு நீங்கிக் கோயிலினுட் புகுந்தார் சேர மான்தோழர். ௬௭

சென்று தேவா சிரியனைமுன் இறைஞ்சித் திருமா ளிகைவலங்கொண்
டொன்றும் உள்ளத் தொடும்புகுவார் உடைய நம்பி முன்னாக
நின்று தொழுது கண்ணருவி வீழ நிலத்தின் மிசைவீழ்ந்தே
என்றும் இனிய தம்பெருமான் பாதம் இறைஞ்சி ஏத்தினார். ௬௮

தேவர் முனிவர் வந்திறைஞ்சுந் தெய்வப் பெருமாள் கழல்வணங்கி
மூவர் தமக்கு முதலாகு மவரைத் திருமும் மணிக்கோவை
நாவ லூரர் தம்முன்பு நன்மை விளங்கக் கேட்பித்தார்
தாவில் பெருமைச் சேரலனார் தம்பி ரானார் தாங்கொண்டார். ௬௯

---

௬௪. அந்தணாளர் பெருமானும் - சுந்தரமூர்த்தி சுவாமிகளும். கிடைத்தார் - கிட்டினார். சந்தவிரைத்தார் - அழகிய மணமுடைய மாலை யணிந்த.

௬௬. முனைப்பாடி வேந்தர்க்கு - சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு.

௬௭. சேரமான் தோழராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகள், இனியராகிய சேரமான்பால் செய்யத் தக்கது எது என்று, அவர்தம் கைப்பற்றி......; சேரர் பெருமான் கை மழைபோலக் கொடுக்குந் தன்மையதாகலின் "பருவ மழைச் செங்கை" என்றார்.

௬௮. ஒன்றும் உள்ளத்தொடும் புகுவார் - சேரமான் பெருமாள்.

௬௯. தாவில் - கெடாத.

பாட- ம்— உருகி.

அங்கண் அருள்பெற் றெழுவாரைக் கொண்டு புறம்போந் தாரூரர்
நங்கை பரவை யார்திருமா ளிகையில் நண்ண நன்னுதலார்
பொங்கு விளக்கும் நிறைகுடமும் பூமா லைகளும் புகைஅகிலும்
எங்கும் மடவார் எடுத்தேந்த அணைந்து தாமும் எதிர்கொண்டார். எ0

சோதி மணிமா ளிகையின்கண் சுடரும் பசும்பொற் காலமளி
மீது பெருமாள் தமைஇருத்தி நம்பி மேவி யுடனிருப்பக்
கோதில் குணத்துப் பரவையார் கொழுந ஞர்க்குந் தோழர்க்கும்
நீதி வழுவா ஒழுக்கத்து நிறைபூ சனைகள் முறையளித்தார். எக

தூண்டும் புரவிச் சேரர்குலப் பெருமாள் தமக்குத் திருஅமுது
தூண்டு சோதி விளக்கனையார் அமைக்கத் துணைவர் சொல்லுதலும்
வேண்டும் பரிசு வெவ்வேறு விதத்துக் கறியும் போனகமும்
*ஈண்டச் சமைப்பித் துடன்வந்தார்க் கெல்லாம் இயல்பின் விருந்தமைத்தார்.

அரசர்க் கமைத்த சிறப்பினும்மேல் அடியார்க் கேற்கும் படியாக
விரவிப் பெருகும் அன்பினுடன் விரும்பும் அமுது சமைத்ததற்பின்
புரசைக் களிற்றுச் சேரலனார் புடைசூழ்ந் தவரோ டமுதுசெயப்
பரவைப் பிறந்த திருவனைய பரவை யார்வந் தறிவித்தார். எங

"சேரர் பெருமான் எழுந்தருளி அமுது செய்யச் †செய்தவத்தால்
தாரின் மலிபூங் குழல்மடவாய்! தாழா தமுது செய்வி" எனப்
பாரின் மலிசீர் வன்தொண்டர் அருளிச் செய்யப் பரிகலங்கள்
ஏரின் விளங்கத் ‡திருத்திக்கால் இரண்டிற் படியா ஏற்றுதலும். எச

"ஆண்ட நம்பி, பெருமாளை உடனே அமுது செய்தருள
வேண்டும்" என்ன ஆங்கவரும் விரைந்து வணங்கி வெருவுறலும்

எக. பசும்...அமளி - பசும்பொற் கால்களையுடைய பீடத்தில். கொழுந ஞர்க்கும் - கணவராகிய நம்பியாரூரர்க்கும்.

எஉ. துணைவர் - நாயகராகிய நம்பியாரூரர். போனகமும் - சோறும். ஈண்ட - விரைய.

எங. சேரர் அரசரும் அடியாருமாவர். அரசர் என்னுஞ் சிறப்பினும், அடியவர் என்னுஞ் சிறப்பு மிக என்றபடி. புரசைக்களிற்று - கழுத்திற் கயிறணிந்த யானையுடைய. பரவை...பரவையார் - பாற்கடலிற் பிறந்த இலக்குமி போன்ற பரவையார்.

எச. செய்தவத்தால் சேரர்.........அமுது செய்ய...........பூமாலையால் மலிந்த கூந்தலையுடைய பரவையே. உண் கலங்களை அழகு விளங்கத் திருத்தி. கால் இரண்டில் - இரண்டு முக்காலிகளில்.

பா - ம்—*ஈண்டுச். †செய்யதவத் ; செய்தலர்ந்த ; சேயதவத். ‡திருக்காத்தில் இரண்டு.

நீண்ட தடக்கை பிடித்தருளி மீண்டும் நேரே குறைகொள்ள
ஈண்ட அமுது செய்வதனுக் கிசைந்தார் பொறையர்க் கிறையவனார்.

ஒக்க அமுது செய்தருள உயர்ந்த தவத்துப் பரவையார்
மிக்க விருப்பால் அமுது*செய்வித் தருளி மேவும் பரிசனங்கள்
தக்க வகையால் அறுசுவையுந் தாம்வேண் டியவா றினிதருந்தத்
தொக்க மகிழ்ச்சி களிசிறப்பத் தூய விருந்தின் கடன்முடித்தார். ௭௬

பனிநீர் விரவு சந்தனத்தின் பசுங்கர்ப் பூர விரைக்கலவை
வனிதை யவர்கள் சமைத்தெடுப்பக் கொடுத்து மகிழ்மான் மதச்சாந்தும்
புனித நறும்பூ மாலைகளும் போற்றிக் கொடுத்துப் பொற்கொடியார்
இனிய பஞ்ச வாசமுடன் அடைக்காய் அமுதும் ஏந்தினார். ௭௭

ஆய சிறப்பிற் பூசனைகள் அளித்த எல்லாம் அமர்ந்தருளித்
தூய நீறு தங்கள்திரு முடியில் வாங்கித் தொழுதணிந்து
மேய விருப்பி னுடனிருப்பக் கழறிற் றறிவார் மெய்த்தொண்டின்
சேய நீர்மை †அடைந்தாராய் நம்பி செம்பொற் கழல்பணிந்தார். ௭௮

மலைநாட் டரசர் பெருமானார் வணங்க வணங்கி எதிர்தழுவிக்
கலைநாட் பெருகு மதிமுகத்துப் பரவை யார்தங் கணவனார்
சிலைநாட் டியவெல் கொடியாரைச் சேரத் தந்தார் எனக்கங்கை
அலைநாட் கொன்றை முடிச்சடையார் அருளே போற்றி யுடனமர்ந்தார்.

செல்வத் திருவா ரூர்மேவுஞ் செம்பொற் புற்றில் இனிதமர்ந்த
வில்வெற் புடையார் கழல்வணங்கி வீதி விடங்கப் பெருமானை
மல்லற் பவனி சேவித்து வாழ்ந்து நாளும் மனமகிழ்ந்து
சோல்வித் தகர்தாம் இருவர்களுந் தொடர்ந்த காத லுடன்சிறந்தார்.

இவ்வா றொழுகு நாளின்கண் இலங்கு மணிப்பூண் வன்றொண்டர்
மைவாழ் களத்து மறையவனார் மருவும் இடங்கள் பலவணங்கிச்

---

௭௫. வெருவுறலும் - அஞ்சித் திடுக்கிடவும். "நம்பியுட னிருந்து அமுது செய்ய யான் அருக னவனோ" என்று வெருக்கொண்டார் என்க.

௭௭. பனிநீர் கலந்த...வாசனைக் கலப்பை. மான் மதச் சாந்து - கஸ்தூரியும். பஞ்ச வாசம் : "தக்கோலம் தீம்பூத் தகைசால் இலவங்கம் - கப்பூரஞ் சாதியோ டைந்து". அடைக்காய் அமுது - தாம்பூலம்.

௭௮. அமர்ந்தருளி - விரும்பி ஏற்றருளி. சேய நீர்மை - செம்மைத் தன்மையை; பெருந் தன்மையை எனினுமாம்.

௭௯. வில் கொடி சேரருடையது. அன்றலர்ந்த கொன்றை.

௮0. வெற்பு (மேரு) வில்லுடையார். மல்லல் - வளப்பம் வாய்ந்த.

பா - ம்—*செய்வித் தருளின். †அறிந்தாராய்.

செய்வார் கன்னித் தமிழ்நாட்டுத் திருமா மதுரை முதலான
மொய்வார் சடையார் மூதூர்கள் இறைஞ்ச முறைமை யால்நினைந்தார்.

சேரர் பிரானும் ஆரூரர் தம்மைப் பிரியாச் சிறப்பாலும்
வாரம் பெருகத் தமக்கன்று மதுரை ஆல வாயமர்ந்த
வீரர் அளித்த திருமுகத்தால் விரும்பும் அன்பின் வணங்குதற்குச்
சார எழுந்த குறிப்பாலும் தாமும் உடனே செலத்துணிந்தார். அ௨

இருவர் திருவுள் ளமும்இசைந்த பொழுதில் எழுந்து திருவாரூர்
ஒருவர் மலர்த்தாள் புக்கிறைஞ்சி உடன்பாட் டருளால் போந்தருளி
மருவும் உரிமைப் பெருஞ்சுற்றம் வரம்பில் பணிகள் வாகனங்கள்
பொருவில் பண்டா ரங்கொண்டு போது வார்கள் உடன்போத. அ௩

சேவித் தணையும் பரிசனங்கள் சூழத் திருவா ரூரிறைஞ்சிக்
காவிற் பயிலும் புறம்பணையைக் கடந்து போந்து கீழ்வேளூர்
மேவிப் பரமர் கழல்வணங்கிப் போந்து வேலைக் கழிக்கானல்
பூவிற் றிகழும் பொழில்நாகை புகுந்து காரோ ணம்பணிந்தார். அ௪

†திருக்கா ரோணச் சிவக்கொழுந்தைச் சென்று பணிந்து சிந்தையினை
உருக்கார் வச்செந் தமிழ்மாலை சாத்திச் சிலநாள் உறைந்துபோய்ப்
பெருக்கா றலவு சடைமுடியார் இடங்கள் பலவும் பணிந்தேத்தி
அருட்கா ரணர்தந் திருமறைக்கா டணைந்தார் சேரர் ஆரூரர். அ௫

முந்நீர் வலங்கொள் மறைக்காட்டு முதல்வர் கோயில் சென்றிறைஞ்சிச்
செந்நீர் வாய்மைத் திருநாவுக் கரசும் புகலிச் சிவக்கன்றும்
அந்நேர் "திறக்க அடைக்க"எனப் பாடுந் திருவா யிலைஅணைந்து
நன்னீர் பொழியும் விழியினராய் நாயன்மாரை நினைந்திறைஞ்சி. அ௬

நிறைந்த மறைகள் அர்ச்சித்த நீடு மறைக்காட் டருமணியை
இறைஞ்சி வீழ்ந்து பணிந்தெழுந்து போற்றி "யாழைப் பழித்"தென்னும்

---

அ௧. செய் வார் - வயல்கள் நிறைந்த.

அ௨. வாரம் - அன்பு.

அ௩. திருவாரூர் ஒருவர் சிவபெருமான். அ௪. காவில்...கடந்து-சோலைகளால் சூழப்பெற்ற வயற்பக்கங்களைக் கடந்து. வேலைக் கழிக்கானல் - கடற் கரையிலுள்ள நெய்தல் நிலத்தில்.

அ௬. முந்நீர் - கடல். திறக்க அடைக்க எனப் பாடிய அந்நேரிய திரு வாயிலை......; நாயன்மாரை - அப்பரையும் சம்பந்தரையும்.

அ௭. நினைத்து - அன்பில் இடையீடின்றித் தோய்ந்து.

பா - ம்—*ஆர்வம். †"திருக்கா ரோணத் திருப்பீரே" என்னும் அன்பர்.

அறைந்த பதிகத் தமிழ்மாலை நம்பி சாத்த அருட்சேரர்
சிறந்த அந்தா தியிற்சிறப்பித் தனவே யோதித் திளைத்தெழுந்தார்.

"யாழைப்பழித் தன்னமொழி மங்கையொரு பங்கன்
பேழைச்சடை முடிமேல்பிறை வைத்தானிடம் பேணில்
தாழைப்பொழி லூடேசென்று பூழைத்தலை நுழைந்து
வாழைக்கனி கூழைக்குரங் குண்ணும்மறைக் காடே"—தேவாரம்.

எழுந்து பணிந்து புறத்தெய்தி இருவர் பெருந்தொண் டருஞ்சிலநாள்
செழுந்தண் பழனப் பதியதனுள் அமர்ந்து தென்பால் திரைக்கடல்நஞ்
சழுந்து மிடற்றார் அகத்தியான் பள்ளி இறைஞ்சி அவிர்மதியக்
கொழுந்து வளர்செஞ் சடைக்குழகர் கோடிக் கோயில் குறுகினார்.

கோடிக் குழகர் கோயில்அயல் குடிகள் ஒன்றும் புறத்தெங்கும்
நாடிக் காணு துள்புக்கு நம்பர் பாதந் தொழுதுள்ளம்
வாடிக் "கடிதாய்க் கடற்காற்"றென் றெடுத்து மலர்க்கண் ணீர்வாரப்
பாடிக் காடு காள்புணர்ந்த பரிசும் பதிகத் திடைவைத்தார். ௮௯

"கடிதாய்க் கடற்காற்று வந்தெற்றக் கரைமேல்
குடிதான் அயலேஇருந் தால்குற்ற மாமோ
கொடியேன் கண்கள்கண் டனகோடிக் குழகீர்
அடிகேள் உமக்கார்துணை யாகஇருந் தீரே"

"மையார் தடங்கண்ணி பங்காகங் கையாளும்
மெய்யா கத்திருந்தனள் வேறிட மில்லை
கையார் வளைக்காடுகா ளோடு முடனாய்க்
கொய்யார் பொழிற்கோடி யேகோயில் கொண்டாயே"—தேவாரம்.

அங்கு வைகிப் பணிந்தருளாற் போவார் அகன்சோ ணாட்டானார்
தங்கும் இடங்கள் வணங்கிப்போய்ப் பாண்டி நாடு தனைச்சார்ந்து
திங்கள் முடியார் திருப்புத்தூர் இறைஞ்சிப் போந்து சேண்விளங்கும்
மங்குல் தவழும் மணிமாட மதுரை மூதூர் வந்தணைந்தார். ௯௦

௮௮. பழனப் பதியதனுள் - வயல்கள் சூழ்ந்த திருமறைக்காட்டில். அவிர் - விளங்கும்.

௮௯. காடுகாள் - காடுகிழாள்; மோடி; துர்க்கை. காடேகிறைந் திருந் தமையான் "காடுகாள் புணர்ந்த" என்றார். "போகங் கண்டார் கடற்கோடி யின் மோடியைப் பூண்பதாக - நாகங் கொண்டார்க் கிடமாவது நாவலூரே'—சுந்தரர்.

**வேறு**

சேரமான் தோழரும்அச் *சேரர்பிரா னும்பணிப்பூண்
ஆரமார் பரைமதுரை ஆலவா யினில்வணங்க
வாரமா வந்தணைய வழுதியார் மனக்காதல்
கூரமா நகர்கோடித் தெதிர்கொண்டு கொடுபுக்கார். கூக

தென்னவர்கோன் மகளாரைத் திருவேட்டு முன்னரே
தொன்மதுரை நகரின்கண் இனிதிருந்த சோழனார்
அன்னவர்கள் உடன்கூட அணையஅவ ருங்கூடி
மன்னுதிரு ஆலவாய் மணிக்கோயில் வந்தணைந்தார். கூஉ

திருஆல வாயமர்ந்த செஞ்சடையார் கோயில்வலம்
வருவார்முன் வீழ்ந்திறைஞ்சி வன்தொண்டர் வழித்தொண்டு
தருவாரைப் போற்றிசைத்துத் தாழ்ந்தெழுந்து வாழ்ந்ததமிழ்ப்
பெருவாய்மை மலர்புனைந்து பெருமகிழ்ச்சி பிறங்கினார். கூந

படியேறு புகழ்ச்சேரர் பெருமானும் பார்மிசைவீழ்ந்
"தடியேனைப் பொருளாக அளித்ததிரு முகக்கருணை
முடிவேதென் றறிந்திலேன்" எனமொழிகள் தடுமாறக்
கடியேறு கொன்றையார் முன்பரவிக் களிகூர்ந்தார். கூச

செம்பியனா ருடன்செழியர் தாம்பணிந்து சேரருடன்
நம்பியும்முன் புறத்தணைய நண்ணியபே ருவகையால்
உம்பர்பிரான் கோயிலினின் றுடன்கொடுபோய் இருவர்க்கும்
பைம்பொன்மணி மாளிகையில் குறைவறுத்தார் பஞ்சவனார். கூரு

உளமகிழக் கும்பிட்டங் குறையுநாள் உதியருடன்
இளவொளிப்பூண் வன்தொண்டர் தாமிருந்த இடங்கெழுமி

---

கூக. பணிப்பூண் ஆர மார்பரை - பாம்பணியை மார்பில் பூண்ட சிவபெருமானை. வழுதியார் - பாண்டியர். கோடித்து - அலங்கரித்து.

கூஉ. திருவேட்டு - மணஞ்செய்து.

கூந. வாய்மை மலர் - வாய் மலர்; பாடல்; உண்மைப் பாவாகிய மலர்.

கூச. படி ஏறு புகழ் - உலகில் பரவிய புகழையுடைய. ஆண்டவன்கருணைக்கு எல்லையில்லை என்பது குறிப்பு. கடி ஏறு - மணங் கமழும்.

கூரு. செம்பியனாருடன் - சோழருடன். செழியர் தாம் - பாண்டியரும். இருவர்க்கும் - நம்பிக்கும் சேரர்க்கும். பஞ்சவனார் - பாண்டியனார். குறைவறுத்தார் - குறைவின்றி உபசரித்தார்.

பா - ம்— *சேரனா ரும்பணிப்பூண்.

வளவனார் மீனவனார் வளம்பெருக மற்றவரோ
டளவளா வியவிருப்பால் அமர்ந்துகலந் தினிதிருந்தார். ௬௬

அந்நாளில் மதுரைநகர் மருங்கரனார் அமர்பதிகள்
பொன்னாரம் அணிமார்பில் புரவலர்மூ வரும்போதச்
செந்நாவின் முனைப்பாடித் திருநாடர் சென்றிறைஞ்சிச்
சொன்மாலை களுஞ்சாத்தித் தொழுத்திருப்பூ வணத்தணைந்தார். ௬௭

நீடுதிருப் பூவணத்துக் கணித்தாக நேர்செல்ல
மாடுவருந் திருத்தொண்டர் மன்னியஅப் பதிகாட்டத்
தேடுமறைக் கரியாரைத் "திருவுடையார்" என்றெடுத்துப்
பாடிசையிற் "பூவணமீ தோ?"என்று *பணிந்தணைவார். ௬அ

" திருவுடையார் திருமால் அயனாலும்
உருவுடையார் உமையாளை யோர்பாகம்
பரிவுடையார் அடைவார் வினைதீர்க்கும்
புரிவுடையார் உறைபூவணம் ஈதோ "—தேவாரம்.

சென்றுதிருப் பூவணத்துத் தேவர்பிரான் மகிழ்கோயில்
முன்றில்வலங் கொண்டிறைவர் முன்வீழ்ந்து பணிந்தெழுந்து
நின்றுபர விப்பாடி நேர்நீங்கி யுடன்பணிந்த
வென்றிமுடி வேந்தருடன் போந்தங்கண் மேவினார். ௬௯

அப்பதியி லமர்ந்திறைஞ்சிச் சிலநாளி லாரூரர்
முப்பெருவேந் தர்களோடு முதன்மதுரை நகரெய்தி
மெய்ப்பரிவில் திருவால வாயுடையார் விரைமலர்த்தாள்
எப்பொழுதும் பணிந்தேத்தி இன்புற்றங் கமர்கின்றார். ௬00

செஞ்சடையார் திருவாப்ப னூர்திருவே டகம்முதலாம்
நஞ்சணியுங் கண்டரவர் நயந்தபதி நண்ணியே

---

௬௬. உதியருடன் - சேரருடன். கிளர் - எழும். வளவனார் மீனவனார் - சோழரும் பாண்டியரும். இடங்கெழுமி - இடத்தைச் சேர்ந்து. உதியருடன் வன்தொண்டர் தாமிருந்த இடத்தை வளவனார் மீனவனார் கெழுமி.........

௬௭. புரவலர் மூவரும் - தமிழ்நாட்டு வேந்தர் மூவரும்.

௬அ. மாடு வரும் - பக்கத்தே சூழ்ந்து வரும்.

௬௯. நேர் நீங்கி - சோர்வின்றி ; (நேர் - அழிவு, தேய்தல், சோர்வு) " அங்கிகள் மூவரு நேர் அட்ட வசுக்களு நேர்......"—தக்கயாகப்பரணி 690. " நேர் என்றது தேய்ந்துபோனா ரென்றவாறு "—உரை.

பா - ம்—*பகர்ந்தணைந்தார்.

ஞ்சலிலாக் காதலினால் இனிதிறைஞ்சி மீண்டணைந்து
மஞ்சணையும் மதில்மதுரை மாநகரில் மகிழ்ந்திருந்தார். கOக

பரமர்திருப் பரங்குன்றில் சென்றுபார்த் திபரோடும்
புரமெரித்தார் கோயில்வலங் கொண்டுபுகுந் துள்ளிறைஞ்சிச்
சிரமலிமா லைச்சடையார் திருவடிக்கீழ் ஆட்செய்யும்
அருமைநினைந் "தஞ்சுதும்"என் றாரூரர் பாடுவார். கOஉ

"கோத்திட்டை" என்றெடுத்துக் கோயில்திருப் பதிகஇசை
மூர்த்தியார் தமைவணங்கி மூக்கோக்க ளுடன்முன்பே
ஏத்தியவண் தமிழ்மாலை இன்னிசைபா டிப்பரவிச்
சாத்தினார் சங்கரனார் தங்குதிருப் பரங்குன்றில். கOங

"கோத்திட் டையுங்கோ வலுங்கோ யில்கொண்ட ருமைக்கொண் டுழல்கின் றதோர்கொல் லைச்சில்லைச், சேத்திட் டுக்குத்தித்தெருவே திரியுஞ் சிலபூ தமுநீ ருந்திசை திசையன, சோத்திட் டுவிண்ணோர் பல ருந் தொழநும் மரைக்கோ வணத்தோ டொருதோல் புடைசூழ்ந், தார்த் திட் டதும்பாம் புகைக்கொண் டதும்பாம் படிகேள் உமக்காட் செயஅஞ் சுதுமே"—தேவாரம்.

இறைவர்திருத் தொண்டுபுரி அருமையினை இருநிலத்து
முறைபுரியும் முதல்வேந்தர் மூவர்களுங் †கேட்டஞ்சி
மறைமுந்நூல் மணிமார்பின் வன்தொண்டர் தமைப்பணிந்தார்
நிறைதவத்தோர் அப்பாலும் நிருத்தர்பதி தொழநினைந்தார். கOச

அந்நாட்டுத் திருப்பதிகள் ‡பலவும்அணைந் திறைஞ்சமலை
நன்னாட்டு வேந்தருடன் நம்பிதாம் எழுந்தருள
மின்னாட்டும் பன்மணிப்பூண் வேந்தர்இரு வரும்மீள்வார்
தென்னாட்டு வேண்டுவன செய்தமைப்பார் தமைவிடுத்தார். கOரு

இருபெருவேந் தரும்இயல்பின் மீண்டதற்பின் எழுந்தருளும்
பொருவருஞ்சீர் வன்தொண்டர் புகழ்ச்சேர ருடன்புனிதர்

---

கOஉ. பார்த்திபரோடும் - மூவேந்தருடனும்.

கOசு. புனிதர் மருவிய - சிவபெருமான் எழுந்தருளியுள்ள. குரு...எறிக்கும் - நிறத்தையுடைய மாணிக்கங்கள் கதிர் உமிழும்.

பா - ம்—*தம்முன்பே ; தம்முடனே. †கேட்டிறைஞ்சி ; கேட்டருளி. ‡பிறவும்.

மருவியதா னம்பலவும் பணிந்துபோய் மலைச்சாரல்
குருமணிகள் வெயிலெறிக்குங் குற்றாலஞ் சென்றடைந்தார். ௧௦௬

குற்றாலத் தினிதமர்ந்த கூத்தர்குரை கழல்வணங்கிச்
சொற்றாம மலர்புனைந்து குறும்பலாத் தொழுதிப்பால்
முற்றாவெண் மதிமுடியார் பதிபணிந்து மூவெயில்கள்
செற்றார்மன் னியசெல்வத் திருநெல்வே லியைஅணைந்தார். ௧௦௭

நெல்வேலி நீற்றழகர் தமைப்பணிந்து பாடிநிகழ்
பல்வேறு பதிபிறவு* பணிந்தன்பால் வந்தணைந்தார்
வில்வேட ராய்வென்றி விசயனெதிர் பன்றிப்பின்
செல்வேத முதல்வரமர் திருவிரா மேச்சரத்து. ௧௦௮

மன்னுமிரா மேச்சரத்து மாமணியை முன்வணங்கிப்
பன்னுதமிழ்த் தொடைசாத்திப் பயில்கின்றார் பாம்பணிந்த
சென்னியர்மா தோட்டத்துத் திருக்கேதீச் சரஞ்†சார்ந்த
சொன்மலர்மா லைகள்சாத்தித் தூரத்தே தொழுதமர்ந்தார். ௧௦௯

திருவிரா மேச்சரத்துச் செழும்பவளச் சுடர்க்கொழுந்தைப்
பரிவினால் தொழுதகன்று பரமர்பதி பிறபணிந்து
பெருவிமா னத்திமையோர் வணங்குபெருந் திருச்சுழியல்
மருவினார் வன்தொண்டர் மலைவேந்த ருடன்கூட. ௧௧௦

திருச்சுழிய லிடங்கொண்ட செம்பொன்மலைச் சிலையாரைக்
கருச்சுழியில் வீழாமைக் காப்பாரைக் கடல்விடத்தின்

---

௧௦௭. சொல்லாகிய மலர்மாலை.

௧௦௯. பயில்கின்றார் - வதிபவராகிய வன்தொண்டர். மாதோட்டத் திருக்கேதீச்சரம் ஈழநாட்டிலுள்ளது.

௧௧௦. விமானங்களில் செல்லும் தேவர்கள்.

௧௧௧. இருள் சுழியும் - இருள் (நஞ்சு) தங்கும். இதழிமலர் பருச்சுழியத் துடன் - கொன்றை மலரணிந்த பருத்த சுருண்ட மயிருடன். இஃது இளமைக் கோலக் குறிப்பு. பின்வருஞ் செய்யுளைப் பார்க்க. "ஊனாய் உயிர் புகலாய்" என்னுந் திருப்பதிகத்தில் "தெய்வத் தவர்தொழு தேத்திய குழகன்" (௭) என்றும், "செண்டாடுதல் புரிந்தான்திருச் சுழியற் பெருமானை" (௯) என்றும் வன்தொண்டர் அருளியிருத்தல் காண்க.

பா - ம்—*பணிந்தன்பர். †சார்ந்து.

இருட்சுழியு மிடற்றுரை இறைஞ்சிஎதிர் இதழிமலர்ப்
பருச்சுழியத் தாடன்"ஊனாய் உயிர்"எனும்பா மலர்புனைந்தார். கககூ

" ஊனாய்உயிர் புகலாய்அக லிடமாய்முகில் பொழியும்
வானாய்வரு மதியாய்விதி வருவானிடம் பொழிலின்
தேனாதரித் திசைவண்டினம் மிழற்றுந்திருச் சுழியல்
நானாவித னினைவார்தமை நலியார்நமன் தமரே"—தேவாரம்.

அங்கணரைப் பணிந்துறையும் ஆரூரர்க் கவ்வூரில்
கங்குலிடைக் கனவின்கட் காளையாந் திருவடிவால்
செங்கையினிற் பொற்செண்டுந் திருமுடியிற் சுழியமுடன்
எங்குமிலாத் திருவேடம் என்புருக முன்காட்டி. ககஉ

"கானப்பேர் யாம்இருப்ப" தெனக்கழறிக் கங்கையெனும்
வானப்பே ராறுலவும் மாமுடியார் தாமகல
ஞானப்பே ராளருணர்ந் ததிசயித்து "நாகமுடன்
ஏனப்பே ரெயிறணிந்தார் அருளிருந்த பரி"சென்பார். ககஙு

கண்டருளும் படிகழறிற் றறிவார்க்கு மொழிந்தருளிப்
புண்டரிகப் புனற்சுழியற் புனிதர்கழல் வணங்கிப்போய்
அண்டர்பிரான் திருக்கானப் பேரணைவார் ஆரூரர்
"தொண்டரடித் தொழலும்"எனுஞ் சொற்பதிகத் *தொடைபுனைவார்.

"காளையார் தமைக்கண்டு தொழப்பெறுவ தென்"றென்று
தாளைநா ளும்பரவத் தருவார்பால் சார்கின்றார்
ஆளைநீ ளிடைக்காண அஞ்சியநீர் நாய்அயலே
வாளைபாய் நுழைப்பழன முனைப்பாடி வளநாடர். ககரு

" தொண்ட ரடித்தொழலுஞ் சோதி இளம்பிறையுஞ் சூதன மென்முலை யாள் பாகமு மாகிவரும், புண்ட ரிகப்பரிசாம் மேனியும் வானவர்கள் பூச லிடக்கடல்நஞ் சுண்ட கருத்தமருங், கொண்ட லெனத்திகழுங் கண்டமும் எண்தோளுங் கோல நறுஞ்சடைமேல் வண்ணமுங் கண்குளிரக், கண்டு தொழப்பெறுவ தென்றுகொ லோஅடியேன் கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே"—தேவாரம்.

---

ககஙு. ஏனப்பேர் எயிறு - பன்றியின் பெருங் கொம்பை.

ககச. புண்டரிகப்புனல் - தாமரை நிறைந்த நீர்நிலைகள் சூழ்ந்த. பதிகத் தொடை - பதிகமாலை.

ககரு. ஆளை...முனைப்பாடி - மனிதர்களைத் தூரத்தே காண அஞ்சிய நீர் நாயின் பக்கத்தே வாளை பாய்ந்து நுழையும் சேற்றையுடைய வயல் சூழ்ந்த முனைப்பாடி.

பா - ம்—*தொடைஎடுத்தார்.

மன்னுதிருக் கானப்பேர் வளம்பதியில் வந்தெய்திச்
சென்னிவளர் மதியணிந்தார் செழுங்கோயில் வலங்கொண்டு
முன்னிறைஞ்சி உள்ளணைந்து முதல்வர்சே வடிதாழ்ந்து
பன்னுசெழுந் தமிழ்மாலை பாடினார் பரவினார். ௧௧௬

ஆராத காதலுடன் அப்பதியிற் பணிந்தேத்திச்
சீராருந் திருத்தொண்டர் சிலநாளங் கமர்ந்தருளிக்
காராரு மலர்ச்சோலைக் கானப்பேர் கடந்தணைந்தார்
போரானேற் றார்கயிலைப் பொருப்பர்திருப் புனவாயில். ௧௧௭

புனவாயிற் பதிஅமர்ந்த புனிதரா லயம்புக்கு
மன*ஆர்வ முறச்"சித்த நீநினைஎன் னொடு"என்றே
வினவான தமிழ்பாடி வீழ்ந்திறைஞ்சி அப்பதியில்
சினயானை உரித்தணிந்தார் திருப்பாதந் தொழுதிருந்தார். ௧௧௮

"சித்த நீநினை என்னொடு சூளறும் வைகலும்
மத்த யானையின் ஈருரி போர்த்த மணாளனூர்
பத்தர் தாம்பலர் பாடிநின் றாடும் பழம்பதி
பொத்தி லாந்தைகள் பாட்ட றாப்புன வாயிலே"—தேவாரம்.

திருப்புனவா யிற்பதியில் அமர்ந்தசிவ னார்மகிழும்
விருப்புடைய †கோயில்பணிந் தருள்பெற்று மேவினார்
பொருப்பினொடு கானகன்று புனற்பொன்னி நாடணைந்து
பருப்பதவார் சிலையார்தம் பாம்பணிமா நகர்தன்னில். ௧௧௯

பாதாளீச் சரமிறைஞ்சி அதன்மருங்கு பலபதியும்
வேதாதி நாதர்கழல் வணங்கிமிகு விரைவினுடன்
சூதாருந் துணைமுலையார் மணிவாய்க்குத் தோற்றிரவு
சேதாம்பல் வாய்திறக்குந் திருவாரூர் வந்தணைந்தார். ௧௨0

திருநாவ லூர்வேந்தர் சேரர்குல வேந்தருடன்
வருவாரைத் திருவாரூர் வாழ்வார்கள் எதிர்கொள்ளத்
தருகாத லுடன்வணங்கித் தம்பெருமான் கோயிலினுள்
பெருகார்வத் தொடுவிரும்பும் பெரும்பேறு பெறப்புகுந்தார். ௧௨௧

---

௧௧௯. பொருப்பினொடு - மலைகளுடன். பருப்பதவார் சிலையார்தம் - மேருவை நீண்ட வில்லாகவுடைய சிவபிரானது.

௧௨0. பாதளீச்சரம் ஆதிசேஷனால் பூசிக்கப்பெற்றது (பாம்பணி மாநகர்). சூது ஆரும் - சூதாடு கருவிபோன்ற. சேதாம்பல் - செவ்வல்லி.

பா - ம்—* ஆர்வம் வரச். †கோயில்பல பணிந்தருளால் மேவினார்.

வாசமலர்க் கொன்றையார் மகிழ்கோயில் வலங்கொண்டு
நேசமுற முன்னிறைஞ்சி நெடும்பொழுதே லாம்பரவி
ஏசறவால் திருப்பதிகம் எடுத்தேத்தி எழுந்தருளால்
பாசவினைத் தொடக்கறுப்பார் பயில்கோயில் பணிந்தணைவார். ௧௨௨

பரவையார் மாளிகையில் பரிசனங்கள் முன்னெய்த
விரவுபே ரலங்கார விழுச்செல்வம் மிகப்பெருக
வரவெதிர்கொண் டடிவணங்க வன்றொண்டர் மலைநாட்டுப்
புரவலனா ரையுங்கொண்டு பொன்னணிமா ளிகைபுகுந்தார். ௧௨௩

பரவியே பரவையார் பரிவுடனே பணிந்தேத்தி
விரவியபோ னகங்கறிகள் விதம்பலவா கச்சமைத்துப்
பரிகலமும் பாவாடை பகல்விளக்கும் உடனமைத்துத்
திருஅமுது செய்வித்தார் திருந்தியதேன் மொழியினார். ௧௨௪

மங்கலமாம் பூசனைகள் பரவையார் செயமகிழ்ந்து
தங்கிஇனி தமர்கின்றார் தம்பிரான் கோயிலினுட்
பொங்குபெருங் காலமெலாம் புக்கிறைஞ்சிப் புறத்தணைந்து
நங்கள்பிரான் *அருள்மறவா நல்விளையாட் டினைநயந்தார். ௧௨௫

நிலைச்செண்டும் பரிச்செண்டும் வீசிமிக மகிழ்வெய்தி
விலக்கரும்போர்த் தகர்ப்பாச்சல் கண்டருளி வென்றிபெற
மலைக்குநெடு முட்கணைக்கால் வாரணப்போர் மகிழ்ந்தருளி
அலைக்குமறப் பலபுள்ளின் அமர்விரும்பி அமர்கின்றார். ௧௨௬

வேறு

விரவு காதல் மீக்கூர மேவு நாள்கள் பலசெல்லக்
கரவில் ஈகைக் கேரளனார் தங்கள் கடல்சூழ் மலைநாட்டுப்
பரவை யார்தங் கொழுநனார் தம்மைப் பணிந்து கொண்டணைவான்
இரவும் பகலும் தொழுதிரக்க இசைந்தார் அவரும் எழுந்தருள. ௧௨௭

---

௧௨௩. விரவு - செறிந்த. அலங்காரமாகிய விழுச்செல்வம். விழு - சீரிய.

௧௨௪. விரவிய - கலந்த. போனகம் - சோறு. பகல் விளக்கு மங்கலத்துக்கு அறிகுறி.

௧௨௬. நிலைச் செண்டு - நின்று விளையாடும் பந்து. பரிச்செண்டு - குதிரை மீதிருந்து ஆடும் பந்து. தகர் - ஆட்டுக்கடா. மலைக்கும் - மாறுபட்டு எதிர்க்கும். வாரணப் போர் - கோழிச்சண்டையையும் பார்த்து. அலைக்கும்...... அமர் - வருத்தும் கொடிய பறவைகளின் சண்டைகளையும்.

௧௨௭. விரவு காதல் மீக்கூர - கலந்த அன்பு அதிகப்பட. கேரளனார் - சேரர் பெருமான்.

பா - ம்---*தமர் அவர்கள் ; தமர் ஆவார்.

நங்கை பரவை யாருள்ளத் திசைவால் நம்பி எழுந்தருளத்
திங்கள் முடியார் திருவருளைப் பரவிச் சேர மான்பெருமாள்
எங்கு முள்ள அடியாருக் கேற்ற பூசை செய்தருளிப்
பொங்கு முயற்சி இருவரும்போய்ப் புக்கார் புனிதர் பூங்கோயில்.

தம்பி ரானைத் தொழுதருளாற் போந்து தொண்டர் சார்ந்தணைய
நம்பி யாரூ ரருஞ்சேரர் நன்னாட் டரச னாராய
பைம்பொன் மணிநீள் முடிக்கழறிற் றறிவார் தாமும் பயணமுடன்
செம்பொன் நீடு மதிலாரூர் தொழுது மேல்பாற் செல்கின்றார். கஉகூ

வேறு

*பொன்பரப்பி மணிவரன்றிப் புனல்பரக்குங் காவேரித்
தென்கரைபோய்ச் சிவன்மகிழ்ந்த கோயில்பல சென்றிறைஞ்சி
மின்பரப்புஞ் சடைஅண்ணல் விரும்புதிருக் கண்டியூர்
அன்புருக்குஞ் சிந்தையுடன் பணிந்துபுறத் தணைந்தார்கள். கஙo

வடகரையில் திருவையா றெதிர்தோன்ற மலர்க்கரங்கள்
உடலுருக உள்ளுருக உச்சியின்மேற் குவித்தருளிக்
கடல்பரந்த தெனப்பெருகுங் காவிரியைக் கடந்தேறித்
தொடர்வுடைய திருவடியைத் தொழுவதற்கு நினைவுற்றார். கஙக

வேறு

ஐயா றதனைக் கண்டுதொழு தருளா ரூரர் தமைநோக்கிச்
செய்யாள் பிரியாச் சேரமான் பெருமாள் அருளிச் செய்கின்றார்
"மையார் கண்டர் மருவுதிரு வையா றிறைஞ்ச மனமுருகி
நையா நின்ற திவ்வாறு கடந்து பணிவோம் நாம்"என்ன. கஙஉ

ஆறு பெருகி இருகரையும் பொருது விசும்பில் எழுவதுபோல்
வேறு நாவாய் ஓடங்கள் மீது செல்லா வகைமிகைப்ப
நீறு விளங்குந் திருமேனி நிருத்தர் பாதம் பணிந்தன்பின்
ஆறு நெறியாச் செலவுரியார் தரியா தழைத்துப் பாடுவார். கஙங

"பரவும் பரிசேன்" றெடுத்தருளிப் பாடுந் திருப்பாட் டின்முடிவில்
அரவம் புனைவார் தமை"ஐயா றுடைய அடிக ளோ"என்று

கஙo. வரன்றி - கொழித்து. கஙஉ. செய்யாள் - இலக்குமி.

கஙங. இரு......போல் - இரு கரையும் மோதி ஆகாயத்தில் எழுவது போல். நாவாய் ஓடங்கள் - மரக்கப்பல்களும், அம்பிகளும் (தெப்பங்களும்). மிகைப்ப - அதிகரிக்க. அன்பின் ஆறு நெறியா - அன்பின் வழியே வழியாக. அழைத்து - 'ஐயா றுடைய அடிகளோ' என்று அழைத்து.

பா - ம்—*பொங்கும் உயர்ச்சி.

விரவும் வேட்கை யுடனழைத்து விளங்கும் பெருமைத் திருப்பதிகம்
நிரவும் இசையில் வன்றொண்டர் நின்று தொழுது பாடுதலும். கஙச

"பரவும் பரிசொன் றறியேன்நான் பண்டே யும்மைப் பயிலாதேன்
இரவும் பகலும் நினைந்தாலும் எய்த நினைய மாட்டேன்நான்
கரவில் அருவி கமுகுண்ணத் தெங்கங் குலைக்கீழ்க் கருப்பாலை
அரவந் திரைக்கா விரிக்கோட்டத் தையா றுடைய அடிகளோ"

"கதிர்க்கொள் பசியை யொத்தேநான் கண்டேன் உம்மைக் காணாதேன்
எதிர்த்து நீந்த மாட்டேன்நான் எம்மான் தம்மான் தம்மானே
விதிர்த்து மேகம் மழைபொழிய வெள்ளம் பரந்து நுரைசிதறி
அதிர்க்குந் திரைக்கா விரிக்கோட்டத் தையா றுடைய அடிகளோ"
—தேவாரம்.

மன்றில் நிறைந்து நடமாட வல்லார் தொல்லை ஐயாற்றில்
கன்று தடையுண் டெதிரழைக்கக் கதறிக் கனைக்கும் புனிற்றுப்போல்
ஒன்றும் உணர்வால் சராசரங்கள் எல்லாங் கேட்க "ஓலம்"என
நின்று மொழிந்தார் பொன்னிமா நதியும் நீங்கி நெறிகாட்ட. கஙரு

விண்ணின் முட்டும் பெருக்காறு மேல்பாற் பளிக்கு வெற்பென்ன
நண்ணி நிற்கக் கீழ்பால்நீர் *வடிந்த நடுவு நல்லவழிப்
பண்ணிக் குளிர்ந்த †மணல்பரப்பக் கண்ட தொண்டர் பயில்மாரி
கண்ணிற் பொழிந்து மயிர்ப்புளகம் கலக்கக் கைஅஞ் சலிகுவித்தார்.

நம்பி பாதஞ் சேரமான் பெருமாள் பணிய நாவலூர்ச்
செம்பொன் முந்நூல் மணிமார்பர் சேரர் பெருமான் எதிர்வணங்கி
"உம்பர் நாதர் உமக்களித்த தன்றோ?" என்ன உடன்மகிழ்ந்து
தம்பி ரானைப் போற்றிசைத்துத் தடங்கா வேரி நடுவணைந்தார். கஙஎ

செஞ்சொற் றமிழ்நா வலர்கோனும் சேரர் பிரானும் தம்பெருமான்
எஞ்ச லில்லா நிறையாற்றின் இடையே அளித்த மணல்வழியில்
தஞ்ச முடைய பரிசனமும் தாமும் ஏறித் தலைச்சென்று
பஞ்ச நதிவா ணரைப்பணிந்து விழுந்தார் எழுந்தார் பரவினார். கஙஅ

---

கஙச. நிரவும் - நிறைந்த.

கஙரு. புனிற்று - ஈன்றணிமைப் பசு; இளங்கன்றையுடைய பசு. ஐயாற்றில் நின்று "ஓலம்" என மொழிந்தார்.......

கஙசு. மேற்பக்கம் நீர் பளிங்கு மலைபோல நிலைத்து நிற்க. பயில்-நிறைந்த. வடிந்த - வடிந்ததாக.

கஙஅ. எஞ்சலில்லா - குறைதல் இல்லாத. தலைச்சென்று - அவ்விடஞ் சென்று. பஞ்சநதி வாணரை - ஐயாறடிகளை.

பா - ம்—*வடிந்து. †மணற்பரப்பு.

அங்கண் அரனார் கருணையினை ஆற்றா தாற்றித் திளைத்திறைஞ்சித்
தங்கள் பெருமான் திருவருளால் தாழ்ந்து மீண்டுந் தடம்பொன்னிப்
பொங்கு நதியின் முன்வந்த படியே நடுவு போந்தேறத்
துங்க வரைபோல் நின்றநீர் துரந்து தொடரப் பெருகியதால். கநகூ

ஆய செயலின் அதிசயத்தைக் கண்டக் கரையில் ஐயாறு
மேய பெருமான் அருள்போற்றி வீழ்ந்து தாழ்ந்து மேல்பாற்போய்த்
தூய மதிவாழ் சடையார்தம் பதிகள் பிறவுந் தொழுதேத்திச்
சேய *கொங்க நாடணைந்தார் திருவா ரூரர் சேரருடன். கசo

கொங்கு நாடு கடந்துபோய்க் குலவு மலைநாட் டெல்லையுற
நங்கள் பெருமான் தோழனார் நம்பி தம்பி ரான்தோழர்
அங்கண் உடனே அணையஎழுந் தருளா நின்றார் எனும்விருப்பால்
எங்கும் அந்நாட் டுள்ளவர்கள் எல்லாம் எதிர்கொண் டின்புறுவார்.

பதிக ளெங்கும் தோரணங்கள் பாங்க ரெங்கும் †பூவனங்கள்
வதிக ளெங்கும் குளிர்பந்தர் மனைக ளெங்கும் அகிற்புகைக்கார்
நதிக ளெங்கும் மலர்ப்பிறங்கல் ஞாங்க ரெங்கும் ஓங்குவன
நிதிக ளெங்கும் முழவினொலி நிலங்க ளெங்கும் பொலஞ்சுடர்ப்பூ.

திசைகள் தோறும் வரும்பெருமை அமைச்சர் சேனைப் பெருவெள்ளம்
குசைகொள் வாசி நிரைவெள்ளம் கும்ப யானை அணிவெள்ளம்
மிசைகொள் பண்ணும் பிடிவெள்ளம் மேவுஞ் சோற்று வெள்ளங்கண்
டசைவில் இன்பப் பெருவெள்ளத் தமர்ந்து கொடுங்கோ ளூரணைந்தார்.

கொடுங்கோ ளூரின் ‡மதில்வாயில் அணிகோ டித்து மறுகில்உடுத்
தொடுங்கோ புரங்கள் மாளிகைகள் சூளி §குளிர்சா லைகள்தெற்றி

---

கநகூ. உயர்ந்த மலைபோல் நின்ற நீர் விரைந்து................

கசக. ......தோழனாராகிய நம்பி என்னும் தம்பிரான் தோழர்.

கசஉ. பாங்கர் - பக்கங்கள். வதிகள் - வழிகள். காரகில் புகை. மலர்ப் பிறங்கல் - மலர் மலைகள். ஞாங்கர் - அந்நதியிடங்களில். பொலம் - பொன்.

கசங. குசைகொள் வாசி நிரை வெள்ளம் - கடிவாளங்கொண்ட குதிரை அணியாகிய வெள்ளம். மிசை.........பிடி - மேற்கொண்ட அலங்காரத்தை யுடைய பெண் யானைகளின்.

கசச. அணி கோடித்து - அணிகளால் அழகு செய்து. மறுகில் உடு - தெருக்களில் நட்சத்திரங்களை. சூளி - நிலா முற்றங்கள். தெற்றி - திண்ணைகள். கோ நகர்கள்-தலை நகரங்கள். ஆடு அரங்கு-நடன சபைகள். நிரந்த மணித்

பா - ம்—*கொங்கர்; கொங்கு. †பலவளங்கள்; பவளங்கள். ‡மணிவாயில் கோடித் தணிகள். §கரிசாலை.

நெடுங்கோ நகர்கள் ஆடரங்கு நிரந்த மணித்தா மங்கமுகு
விடுங்கோ தைப்பூந் தாமங்கள் நிரைத்து வெவ்வே றலங்கரித்து. கசச

நகர மாந்தர் எதிர்கொள்ள நண்ணி எண்ணில் அரங்குதொறும்
மகரக் குழைமா தர்கள்பாடி ஆட மணிவீ தியில்அணைவார்
சிகர நெடுமா ளிகைஅணையார் சென்று திருவஞ் சைக்களத்து
நிகரில் தொண்டர் தமைக்கொண்டு புகுந்தார் உதியர் நெடுந்தகையார்.

இறைவர் கோயில் மணிமுன்றில் வலங்கொண் டிறைஞ்சி எதிர்புக்கு
நிறையுங் காத லுடன்வீழ்ந்து பணிந்து நேர்நின் றாரூரர்
முறையில் விளம்புந் திருப்பதிகம் 'முடிப்பது கங்கை' என்றெடுத்துப்
பிறைகொள் முடியார் தமைப்பாடிப் பரவிப் பெருமா ளுடன்தொழுதார்.

"முடிப்பது கங்கையுந் திங்களுஞ் செற்றது மூவெயில்
நொடிப்பது மாத்திரை நீறெ ழக்கணை நூறினார்
கடிப்பது மேறுமென் றஞ்சு வன்திருக் கைகளால்
பிடிப்பது பாம்பன்றி இல்லை யோஎம் பிரானுக்கே"—தேவாரம்.

தொழுது திளைத்துப் புறம்போந்து தோன்றப் பண்ணும் பிடிமேற்பார்
முழுதும் ஏத்த நம்பியைமுன் பேற்றிப் பின்பு தாமேறிப்
பழுதில் மணிச்சா மரைவீசிப் பைம்பொன் மணிமா ளிகையில்வரும்
பொழுது மறுகில் இருபுடையும் மிடைந்தார் வாழ்த்திப் புகல்கின்றார்.

"நல்ல தோழர் நம்பெருமாள் தமக்கு நம்பி இவ"ரென்பார்
"எல்லை இல்லாத் தவம்முன்பென் செய்தோம் இவரைத் தொழ"என்பார்
"செல்வம் இனியென் பெறுவதுநஞ் சிலம்பு நாட்டுக்" கெனஉரைப்பார்
"சொல்லுந் தரமோ பெருமாள்செய் தொழிலைப் பாரீர்" எனத்தொழுவார்.

பூவும் பொரியும் பொன்துகளும் பொழிந்து பணிவார் "பொருவில்இவர்
மேவும் பொன்னித் திருநாடே புவிக்குத் திலதம்" எனவியப்பார்
பாவுந் துதிகள் எம்மருங்கும் பயில வந்து மாளிகையின்
மாவுங் களிறும் நெருங்குமணி வாயில் புகுந்து மருங்கிழிந்தார். கசகூ

---

தாமம் - பரவிய இரத்தின மாலைகள். விடும் கோதைப்பூந் தாமங்கள் - தொங்க விடும் கோதையாகிய பூமாலைகள்.

கசரு. மகரக் குழை - மகரகுண்டலம்; சுறா வடிவாகச் செய்த காதணி. மாளிகையில் அணையாதவராய்.

கசஅ. சிலம்பு நாட்டுக்கு - மலை நாட்டுக்கு.

கசகூ. குதிரைகளும் யானைகளும் நெருங்கும் மணி வாயில்.

கழறிற் றறியுந் திருவடியுங் கலைநா வலர்தம் பெருமானும்
முழவிற் பொலியுந் திருநெடுந்தோள் முனைவர் தம்மை உடன்கொண்டு
விழவிற் பொலியும் மாளிகையில் விளங்கு சிங்கா சனத்தின்மிசை
நிழல்திக் கொளிரும் பூணாரை இருத்தித் தாமும் நேர்நின்று. ௪௫௦

செம்பொற் கரக வாசநீர் தேவி மார்கள் எடுத்தேந்த
அம்பொற் பாதந் தாம்விளக்கி அருளப் புகலும், ஆரூரர்
தம்பொற் றாளை வாங்கி'இது தகா'தென் றருளத் தரணியில்வீழ்ந்
"தெம்பெற் றிமையால் செய்தனஇங் கெல்லாம் இசைய வேண்டும்"என

பெருமாள் வேண்ட எதிர்மறுக்க மாட்டார் அன்பிற் பெருந்தகையார்
திருமா நெடுந்தோள் உதியர்பிரான் செய்த எல்லாங் கண்டிருந்தார்
அருமா னங்கொள் பூசனைகள் அடைவே எல்லாம் அளித்ததற்பின்
ஒருமா மதிவெண் குடைவேந்த ருடனே அமுது செய்துவந்தார்.

சேர ருடனே திருஅமுது செய்த பின்பு கைகோட்டி
ஆரம் நறுமென் கலவைமான் மதச்சாந் தாடை அணிமணிப்பூண்
ஈர விரைமென் மலர்ப்பணிகள் இனைய முதலா யினவருக்கம்
சார எடுத்து வன்தொண்டர்ச் சாத்தி மிக்க தமக்காக்கி. ௪௫௩

பாடல் ஆடல் இன்னியங்கள் பயிறல் முதலாம் பண்ணையினில்
நீடும் இனிய விநோதங்கள் நெருங்கு காலந் தொறுநிகழ
மாடு விரைப்பூந் தருமணஞ்செய் ஆரா மங்கள் வைகுவித்துக்.
கூட முனைப்பா டியர்கோவைக் கொண்டு மகிழ்ந்தார் கோதையார்.௪௫௪

வேறு

சேண்டாடுந் தொழில்மகிழ்வுஞ் சிறுசோற்றுப் பெருஞ்சிறப்பும்
வண்டாடு மலர்வாவி மருவியநீர் விளையாட்டும்

---

௪௫௦. திருவடியும்-அடிகளும். முழவில் - மத்தளம்போல. முனைவர்தம்மை-முதல்வரை; நாவலர் தம் பெருமானாகிய முனைவர்தம்மை. நிழல் திக்கு ஒளிரும் பூணாரை - திக்குகளெல்லாம் ஒளி விளங்கும் ஆபரணமணிந்த சுந்தரரை.

௪௫௧. எம் பெற்றிமையால் - எமது அன்புத் தன்மையால்.

௪௫௨. அரு மானங்கொள் - அரிய மாண்பு கொண்ட.

௪௫௩. சேரர் சுந்தரருடன் திருவமுது செய்தபின்பு தமது கையை வளைத்து......சந்தனக்கலவை கஸ்தூரி......வன்தொண்டர்க்குச் சாத்தி மிகுந்தனவற்றைத் தமக்காக்கி.

௪௫௪. இன் இயங்கள் - இனிய வாத்தியங்கள். பண்ணையினில் - விளையாடல்களில். தரு - மரங்கள். ஆராமங்கள் - சோலைகளில்.

தண்டாழும் மதகும்பத் தடமலைப்போர் சலமற்போர்
கண்டாரா விருப்பெய்தக் காவலனார் *காதல்செய்நாள். ௧௫௫

நாவலர்தம் பெருமானும் திருவாரூர் நகராளும்
தேவர்பிரான் கழலொருநாள் மிகநினைந்த சிந்தையராய்
"ஆவியையா ரூரானை மறக்கலுமா மே"என்னும்
மேவியசொற் றிருப்பதிகம் பாடியே வெருவுற்றார். ௧௫௬

"பொன்னும் மெய்ப்பொரு ளுந்தரு வானைப் போக முந்திரு வும்பு ணர்ப் பானைப், பின்னை என்பிழை யைப்பொறுப் பானைப் பிழைஎ லாந் தவி ரப்பணிப் பானை, இன்ன தன்மையன் என்றறி யொண்ணா எம்மா னைஎளி வந்தபி ரானை, அன்னம் வைகும் வயற்பழ னத்தணி ஆரூ ரானை மறக்கலு மாமே"—தேவாரம்.

திருவாரூர் தனைநினைந்து "சென்றுதொழு வேன்"என்று
மருஆர்வத் தொண்டருடன் வழிக்கொண்டு செல்பொழுதில்
ஒருவாநண் புள்ளுருக உடனெழுந்து கைதொழுது
பெருவான வரம்பனார் பிரிவாற்றார் பின்செல்வார். ௧௫௭

வன்தொண்டர் முன்னெய்தி மனமழிந்த உணர்வினராய்
"இன்றுமது பிரிவாற்றேன் என்செய்கேன் யான்"என்ன
"ஒன்றுநீர் வருந்தாதே உமதுபதி யின்கணிருந்
தன்றினார் முனைமுருக்கி அரசாளும்" எனமொழிந்தார். ௧௫௮

ஆரூரர் மொழிந்தருள அதுகேட்ட அருட்சேரர்
"பாரோடு விசும்பாட்சி எனக்குமது பாதமலர்
தேரூரும் நெடுவீதித் திருவாரூர்க் கெழுந்தருள
நேரூரும் மனக்காதல் நீக்கவும்அஞ் சுவன்"என்றார். ௧௫௯

மன்னவனார் அதுமொழிய வன்தொண்டர் எதிர்மொழிவார்
"என்னுயிருக் கின்னுயிராம் எழிலாரூர்ப் பெருமானை

௧௫௫. சிறு சோறு - பிள்ளைகள் சமைக்குஞ் சோறு; "சிறுமுத் தனைப் பேணிச் சிறுசோறு மடுத்துநீ......"—கலித்தொகை: ௫௯. ௨௦. சிறுசோற்றைச் சித்திரான்னம் என்போருமுளர். தண்டா......போர் - குறையாத மும்மதத்தையுடைய மத்தகம் பொருந்திய யானையின் போர். சலமற் போர் - தணியாக் கோபத்துடன் புரியும் மல்யுத்தம். காவலனார் (சேரமான்) நம்பியாரூரரைக் காதல்செய் நாள்.

௧௫௭. ஒருவா - நீங்காத.

௧௫௮. அன்றினார் முனை முருக்கி - பகைத்தவரைப் போரில் அழித்து.

பா - ம்—*காவல்.

வன்னெஞ்சக் கள்வனேன் மறந்திரேன் மதியணிந்தார்
இன்னருளால் அரசளிப்பீர் நீர்இருப்பீர்" எனஇறைஞ்ச. ௧௯o

மற்றவரும் பணிந்திசைந்தே மந்திரிகள் தமைஅழைத்துப்
"பொற்புநிறை தொன்னகரில் இற்றைக்கு முன்புகுந்த
நற்பெரும்பண் டாரநா லுவருக்க மானவெலாம்
பற்பலவாம் ஆளின்மிசை ஏற்றிவரப் பண்ணும்"என. ௧௯௧

ஆங்கவரும் அன்றுவரை ஆயமா கியதனங்கள்
ஓங்கியபொன் நவமணிகள் ஒளிர்மணிப்பூண் துகில்வருக்கம்
ஞாங்கர்நிறை விரையுறுப்பு வருக்கமுதல் நலஞ்சிறப்பத்
தாங்குபொதி வினைஞர்மேல் தலமலியக் கொண்டணைந்தார். ௧௯௨

மற்றவற்றின் பரப்பெல்லாம் வன்தொண்டர் பரிசனத்தின்
முற்படவே செலவிட்டு முனைப்பாடித் திருநாடர்
பொற்பதங்கள் பணிந்தவரைத் தொழுதெடுத்துப் புனைஅலங்கல்
வெற்புயர்தோ ளுறத்தழுவி விடைஅளித்தார் வன்தொண்டர். ௧௯௩

ஆரூரர் அவர்தமக்கு விடைஅருளி அங்ககன்று
காரூரு மலைநாடு கடந்தருளிக் கற்சுரமும்
நீரூருங் கான்யாறும் நெடுங்கானும் பலகழியச்
சீரூருந் திருமுருகன் பூண்டிவழிச் *செல்கின்றார். ௧௯௪

திருமுருகன் பூண்டிஅயற் †செல்கின்ற போழ்தின்கண்
பொருவிடையார் நம்பிக்குத் தாமேபொன் கொடுப்பதலால்
ஒருவர்கொடுப் பக்கொள்ள ஒண்ணுமைக் கதுவாங்கிப்
பெருகருளால் தாங்கொடுக்கப் பெறுவதற்கோ அதுஅறியோம். ௧௯௫

௧௯௧. புகுந்த - சேர்ந்த. பண்டாரம் - பொக்கிஷத்தில்.

௧௯௨. ஆயமாகிய - குவிந்துள்ள. ஞாங்கர் - அவ்விடத்தில். விரையுறுப்பு வருக்கமுதல் - வாசனைத் திரவியங்கள் முதலியவற்றை.

௧௯௩. ...வன்தொண்டரின் பரிசனங்கள் முன்னே...முனைப்பாடித் திருநாடராகிய வன்தொண்டரது பொற்பாதங்களைப் பணிந்தவராகிய சேரமான் பெருமானை, வன்தொண்டர் தொழுது எடுத்து, மாலையணிந்த மலைபோலும் உயர்ந்த தோளுறத் தழுவி......

௧௯௪. ஆரூரர் சேரர்தமக்கு. கல்சுரமும் - பாலகள் நிறைந்த வழியும்; பாலை வழியும்.

௧௯௫. பொரு விடையார் - சிவபெருமான்.

பா - ம்—*செலவணைந்தார்; சென்றணைந்தார். †சேர்கின்ற.

வென்றிமிகு பூதங்கள் வேடர்வடி வாய்ச்சென்று
வன்தொண்டர் பண்டாரங் கவரஅருள் வைத்தருள
அன்றினார் புரமெரித்தார் அருளால்வேட் டுவப்படையாய்ச்
சென்றவர்தாம் வரும்வழியில் இருபாலுஞ் செயிர்த்தெழுந்து. ௧௬௬

வில்வாங்கி அலகம்பு விசைநாணிற் சந்தித்துக்
"கொல்வோம்இங் கிட்டுப்போம்" எனக்கோபத் தாற்குத்தி
எல்லையில்பண் டாரமெலாங் கவர்ந்துகொள இரிந்தோடி
அல்லலுடன் பறியுண்டார் ஆரூரர் மருங்கணைந்தார். ௧௬௭

ஆரூரர் தம்பால்அவ் வேடுவர்சென் றணையாதே
நீரூருஞ் செஞ்சடையார் அருளினால் நீங்கஅவர்
சேரூரத் திருமுருகன் பூண்டியினிற் சென்றெய்திப்
போரூரு மழவிடையார் கோயிலினா டிப்புக்கார். ௧௬அ

அங்கணர்தங் கோயிலினை அஞ்சலிகூப் பித்தொழுது
மங்குலுற நீண்டதிரு வாயிலினை வந்திறைஞ்சிப்
பொங்குவிருப் புடன்புக்கு வலங்கொண்டு புனிதநதி
திங்கள்முடிக் கணிந்தவர்தந் திருமுன்பு சென்றணைந்தார். ௧௬௯

உருகியஅன் பொடுகைகள் குவித்துவிழுந் துமைபாகம்
மருவியதம் பெருமான்முன் வன்தொண்டர் பாடினார்
"வெருவுறவே டுவர்பறிக்கும் வெஞ்சுரத்தில் எத்துக்கிங்
கருகிருந்தீர்?" எனக்"கொடுகு வெஞ்சிலை"அஞ் சொற்பதிகம். ௧௭0

"கொடுகுவெஞ்சிலை வடுகவேடுவர் விரவலாமை சொல்லித்
திடுகுமொட்டெனக் குத்திக்கூறைகொண் டாறலைக்கு மிடம்
முடுகுநாறிய வடுகர்வாழ்முரு கன்பூண்டிமா நகர்வாய்
இடுகுநுண்ணிடை மங்கைதன்னொடும் எத்துக்கிங்கிருந் தீர்எம்பிரான் நீரே"
—தேவாரம்.

---

௧௬௬. செயிர்த்து - கோபித்து.

௧௬௭. அலகம்பு - ஒருவித அம்பு ; இதனை வாளியம்பு என்பர். குத்தி - பூமியில் குத்தி ; தாக்கியுமாம். அல்லலுடன் பறியுண்டார் (திரவியங்களைச் சுமந்துகொண்டு ஆரூரருக்கு முன்னே சென்ற ஆட்கள்) இரிந்தோடி ஆரூரர் மருங்கணைந்தார். இரிந்தோடி - கலைந்தோடி,

௧௬அ. அவர் - ஆரூரர்.

௧௭0. வெருவுற - அச்சமுற்றுத் திடுக்கிட. எத்துக்கு - எற்றுக்கு ; என்னத்துக்கு.

பாடியவர் பரவுதலும் பரம்பொருளாம் அவரருளால்
வேடுவர்தாம் பறித்தபொரு ளவையெல்லாம் விண்ணொருங்க
நீடுதிரு வாயிலின்முன் குவித்திடலும் நேரிறைஞ்சி
ஆடுமவர் திருவருளால் அப்படியே கைக்கொண்டார். ௧௭௧

கைக்கொண்டு கொடுபோம்அக் கைவினைஞர் தமைஏவி
மைக்கொண்ட மிடற்றாரை வணங்கிப்போய்க் கொங்ககன்று
மெய்க்கொண்ட காதலினால் விரைந்தேகி மென்கரும்புஞ்
செய்க்கொண்ட சாலியுஞ்சூழ் திருவாரூர் சென்றணைந்தார். ௧௭௨

நாவலர்மன் னவர்அருளால் விடைகொண்ட நரபதியார்
ஆவியின்ஒன் றாநண்பின் ஆரூரர் தமைநினைந்து
மாவலரு மலர்ச்சோலை மகோதையினில் மன்னிமலைப்
பூவலயம் பொதுநீக்கி அரசுரிமை *புரிந்திருந்தார். ௧௭௩

இந்நிலைமை உதியர்பிரான் எம்பிரான் வன்றொண்டர்
பொன்னிவள நாடகன்று மகோதையினில் மேற்புகுந்து
மன்னுதிருக் கயிலையினில் மதவரைமேல் எழுந்தருள
முன்னர்வயப் பரியுகைக்குந் திருத்தொழில்பின் †மொழிகின்றாம்.

மலைமலிந்த திருநாட்டு மன்னவனார் மாகடல்போல்
சிலைமலிந்த கொடித்தானைச் சேரலனார் கழல்போற்றி
நிலைமலிந்த மணிமாட நீள்மறுகு ‡நான்மறைசூழ்
கலைமலிந்த புகழ்க்காழிக் கணநாதர் திறமுரைப்பாம். ௧௭௫

ஆக திருவிருத்தம் - ௩,௯௨௭.

---

௧௭௨. கொடு...ஏவி - (திரவியங்களைச் சுமந்து) கொண்டுபோகும் ஆட்களை (ஆரூரர்) ஏவி. செய் - வயல்களில்.

௧௭௩. நரபதியார் - சேரவேந்தர். உயிரியல்புகளுள் ஒன்றாகிய நண்பு என்றபடி. மா - வண்டுகள். மலைப் பூவலயம் - மலைநாட்டில்.

௧௭௪. மதவரை - யானை. வயப்பரி உகைக்கும் - வெற்றிக் குதிரையைச் செலுத்தும்.

௧௭௫. தானை - சேனைகளையுடைய.

பா - ம்—*புரந்திருந்தார். †மூயல்கின்றாம். ‡மாமறைசூழ் ; மாளிகைசூழ்.

மலைநாட்டிலே, கொடுங்கோளூரிலே, சேரர்மரபிலே பிறந்தவர் பெருமாக் கோதையார். "உலக இயல்பும் அரச இயல்பும் உறுதியுள்ளன அல்ல" என்னும் எண்ணம் அவருக்கு உண்டாயிற்று. அதனால், அவர், சிவபக்தராய்த் திருவஞ்சைக்களத்தப்பனை நாள்தோறும் வழிபட்டு வந்தார்.

அதுபோது சேரநாட்டைப் புரந்து வந்த செங்கோற் பொறையன் என்னும் மன்னன், தவமேற்கொண்டு வனம் புகுந்தான். அமைச்சர்கள் ஒருங்கு சேர்ந்து ஆலோசித்தார்கள். அவர்கள் நினைவில் பெருமாக்கோதையார் தோன்றினர். பெருமாக்கோதையார் சேரர்குல முதல்வர் என்பதும், அரசிற்கு உரியவர் என்பதும் அவர்களுக்கு விளங்கின.

அமைச்சர்கள், பெருமாக்கோதையார்பால் அணைந்தார்கள்; பணிந்தார்கள்; "இம்மலைநாட்டின் செங்கோலை அடிகள் தாங்கி அருளல்வேண்டும்" என்று முறையிட்டார்கள். பெருமாக்கோதையார், "இவர்கள் விருப்பத்துக்கு இணங்கினால், திருத்தொண்டுக்குப் பழுது நேருமன்றோ ? திருத்தொண்டுக்குப் பழுது நேராதவாறு அரசு புரிதல் கூடுமோ ? இதற்குத் திருவருள் துணைவேண்டும். எதற்கும் திருவருள் நோக்கை அறிதல் நலம்" என்று சிவசந்நிதி அடைந்தார் ; விண்ணப்பஞ் செய்தார். திருத்தொண்டை வழாது அரசியற்றும் ஆற்றலும், யாரும் யாவும் கழறுவதை விளங்கிக்கொள்ளும் உணர்வும், அழியா விறலும், பெருங்கொடையும், படை வாகனம் முதலியனவும் திருவருளால் பெருமாக் கோதையார்க்குக் கிடைத்தன. மாக்கோதையார், ஆண்டவனை வாழ்த்தி வணங்கி வெளியே வந்தார் ; அமைச்சர்கள் வேண்டுகோளுக்கு இணங்கினார். யாரும் யாவும் கழறுவதை யுணரும் இயல்பைப் பெற்றமையால், பெருமாக்கோதையார்க்குக் கழறிற்றறிவார் என்னும் பெயர் வழங்கலாயிற்று.

கழறிற்றறிவார் நன்னாளிலே திருமுடி சூட்டப்பெற்றார் ; பெற்றதும், திருக்கோயிலுக்குச் சென்று ஆண்டவனைத் தொழுதார் ; பின்னர் யானைமீது இவர்ந்து ஊர்வலம் வந்தார். அவ்வேளையில், வண்ணான் ஒருவன் எதிர்ப்பட்டான். அவன், தோளிலே உவர்ப் பொதி இருந்தது. வழியில் பெய்த மழையினால் உவர் கரைந்தது. அதனால் அவன் உடலில் வெண்மை பூத்திருந்தது. கழறிற்றறிவார், அவ்வண்ணானைச் 'சிவனடியார்' என மனத்துட் கொண்டார் ; யானையை விட்டு இறங்கினார் ; விரைந்தோடினார் ; அவனைக் கும்பிட்டார். வண்ணான் அகங் கலங்கி, "சிறியேன் அடி வண்ணான்" என்று சொன்னான். அதற்குச் சேரர்பிரான், "அடியேன் அடிச் சேரன் ; திருநீற்றின் திருவேடத்தை நினைப்பித்தீர் ; வருந்தற்க" என்று விடைகொடுத்தனுப்பினார். அக்காட்சி, அமைச்சர்க்கும் மற்றவர்க்கும் வியப்பூட்டிற்று. அவர்கள், மன்னரின் அடியவர் பத்தியைப் பாராட்டிப் போற்றினார்கள். கழறிற்றறிவார் மீண்டும் யானைமீதேறி நகர்வலம் வந்தார் ; அரண்மனை அடைந்தார் ; அரியாசனத்தில் அமர்ந்தார்.

சேரர்பெருமான் சிவநேயமும், திருநீற்றுச் செல்வமும் விளங்க, நீதி அரசியற்றி வந்தார். "தேடும் பொருளும் செல்வமும் பிறவும் தில்லைக் கூத்தன் திருவடிகளே" என்று கொண்டு, அக்கூத்தனைப் பூசித்து வரலானார். ஒவ்வொரு நாளும் பூசை முடிவிலே, தில்லைக் கூத்தன் தனது திருச்சிலம்பொலியை, நாயனார்க்குக் கேட்பிக்கச் செய்வது வழக்கம். சேரர்பெருமான், சிவபூசையில் ஈடுபட்டும், சிவனடியார்களுக்கும் வறியவர்களுக்கும் வரையாது கொடுத்தும், சிவவேள்விகள் பல செய்தும் வாழ்ந்து வந்தார்.

மதுரையம்பதியிலே "பாணபத்திரர்" என்ற சிவனடியார் ஒருவர் இருந்தார். ஆண்டவனை இசையால்வழிபடுவது அவர்தம் திருத்தொண்டு. அவருக்குப்

பொருள் உதவச் சிவபெருமான் திருஉளங் கொண்டார்; கொண்டு, பாணபத்திரர் கனவிலே தோன்றி, "சேரன் நம்மாட்டு அன்புடையவன்; அவன், உனக்குப் பொருள் உதவுவான்; அதன்பொருட்டு நாம் திருமுகங் கொடுக்கிறோம்; போய்வா" என்று திருவாய் மலர்ந்து, "மதிமலிபுரிசை" என்னும் திருப்பாசுரத்தை வரைந்து கொடுத்தருளினார்.

பாணபத்திரர் ஆண்டவன் ஆணைதாங்கி, மலைநாட்டுக்குச் சென்றார்; கொடுங்கோளூரிலுள்ள அரண்மனை அடைந்தார்; தமது வருகையைச் சேரமான் பெருமானுக்குத் தெரிவித்தார். சேரர் ஓடிவந்து, பாணபத்திரரை வணங்கினார். பத்திரர், சேரரைத்தொழுது திருமுகத்தைக் கொடுத்தார். மன்னர் பெருமான் திருமுகத்தை வாங்கிப் பார்த்தார்; தலைமீது வைத்துக் கொண்டார்; தம்மைமறந்தார்; ஆனந்தக்கூத்தாடினார்; பாணரது பாதங்களிலே வீழ்ந்து வீழ்ந்து வணங்கினார்; திருமுகத்தைப் பலமுறை பார்த்துப் பார்த்து மகிழ்வெய்தினார்; மந்திரிமார்களை அழைத்தார்; நமது பலவகைப்பட்ட பொருள்களையும் பொதி செய்யுங்கள்; அவைகளை ஆட்களின்மீது சுமத்தி வாருங்கள்" என்று கட்டளை இட்டார். அவர்கள் அப்படியே செய்தார்கள்.

சேரமான் பெருமாள், பாணபத்திரருக்கு அவைகளைக் காட்டி, "இவைகளைக் கொள்க; இன்னும் சேனை அரசு முதலியவற்றையுங் கொள்க" என்று வேண்டினார். பாணபத்திரர், சேரர் பெருமானை நோக்கி, "யான் விரும்புவதை மட்டும் பெற்றுக்கொள்ளல் வேண்டும். இதுவே சிவபெருமான் ஆணை. ஆகவே, அரசு முதலியவற்றை அடிகளே கொள்ளுங்கள்" என்று சொன்னார். மன்னர் பெருமான், ஆண்டவன் ஆணையை மறுத்தற்கு அஞ்சினார்; பாணபத்திரர் சொல் வழி நின்றார். பாணபத்திரர், பொருள், யானை முதலியவற்றை ஏற்றுக்கொண்டார். பின்னர் அவர், யானைமீதேறிப் புறப்பட்டார். சேரர் பெருமான் அவரைத் தொடர்ந்து சென்றார். நகர்ப்புறம் எய்தியதும், மன்னரிடம் பாணனார் விடைபெற்று மதுரை நோக்கினார்.

ஒருநாள் வழக்கம்போலச் சேரமான் பெருமாள் பூசைசெய்தார். அன்று அவருக்குத் திருச்சிலம்பொலி கேட்கவில்லை. அதனால் சேரர் பெருமானுக்கு வருத்தம் உண்டாயிற்று. "யான் ஏதோ பிழை செய்துவிட்டேன். இவ்வுடல் ஏற்றுக்கு?" என்று உடைவாளை உருவினார்; மார்பிலே நாட்டினார். நாட்டினதும், திருச்சிலம்பொலி கேட்டது. உடனே அன்பர் பெருமான் உடைவாளை நீக்கினார்; தில்லைக் கூத்தனை வழுத்தினார். வழுத்தி, "ஐயனே! இத்திருவருளை முன்னம் புரியாதது என்னை?" என்று கேட்டார். இச்சமயத்தில் வன்தொண்டப் பெருமானை நினைப்பிக்கத் தில்லைப் பெருமான் திருஉளங் கொண்டார்; கொண்டு, "சேரனே! இன்று வன்தொண்டன் நம்மைச் சிற்றம்பலத்திலே கண்டு வழிபட்டான்; தமிழ் பாடினான். அத்தமிழ் நம்மைத் தன் வயப்படுத்திற்று. அதனால் சிலம்பொலி தகையப்பட்டது" என்று அசரீரியாக அருளிச் செய்தார்.

அது கேட்ட சேரர் பெருமான், அடியவர்களுக்கு ஆண்டவன் அருள் செய்யுந் திறத்தை வியந்தார்; 'சிற்றம்பலத்தையும் வன்தொண்டரையும் காணல்வேண்டும்' என்று உறுதிகொண்டார்; உடனே புறப்பட்டார்; தில்லையை அடைந்தார்; சிற்றம்பலத்தில் ஆனந்தக் கூத்தாடும் அப்பனைக் கண்டார்; அகங்குழைந்து குழைந்து உருகினார்; அன்பில் மூழ்கிப் **பொன்வண்ணத்தந்தாதி** பாடினார். சிற்சபேசன் திருச்சிலம்பொலி கேட்டது. சேரர் பெருமான் இன்பக் கடலில் அழுந்தினார். அவர் சிலநாள் அங்கே தங்கி இருந்தார்.

கழறிற் றறிவார் வன்தொண்டரைக் காண விரும்பினார்; தில்லையை விடுத்தார்; சீர்காழி முதலிய பல தலங்களை வணங்கிக்கொண்டே திருவாரூரை

அடைந்தார். மன்னர் வருகையைக் கேள்வியுற்ற நம்பியாரூரர் அவரை, எதிர் கொண்டார். இவர் அவரை வணங்கினர்; அவர் இவரை வணங்கினர்; இருவரும் அன்பில் மூழ்கி ஒருவராயினர். இவ்வொருமையால் வன்தொண்டருக்குச் "சேரமான் தோழர்" என்னும் ஒரு நாமமும் வழங்கலாயிற்று.

பின்னர் இருவருஞ் சேர்ந்து திருக்கோயிலுக்குச் சென்றனர்; ஆண்டவனை வழிபட்டனர். சேரமான் பெருமாள் மும்மணிக்கோவையை அருளிச்செய்தார். அங்கிருந்து இருவரும் பரவையார் திருமாளிகை நோக்கினர். பரவையார் அன்புடன் அடியவரை வரவேற்றார். சேரமான் பெருமாள், வன்தொண்டருடன் சிலநாள் தங்கி இருந்தார்.

'மதுரை முதலிய திருப்பதிகளைக் கண்டு தொழுதல் வேண்டும்' என்னும் விருப்பம் வன்தொண்டருக்கு எழுந்தது. அவருடன் போந்து அத் திருப்பதிகளை வணங்குதற்குச் சேரமான் பெருமாளும் விரும்பினர். இருவரும் புறப்பட்டனர்; திருநாகைக் காரோணந் தொழுது, திருமறைக்காடு சேர்ந்தனர். திருமறைக்காட்டில் சேரமான் பெருமாள் திருவந்தாதி பாடினர். இருவரும் அங்கிருந்து மதுரை சேர்ந்தனர். அங்கே சோழ மன்னனும் போந்திருந்தான். சேர சோழ பாண்டியர் மூவரும், நம்பியாரூரரும் ஒருவரோடொருவர் அளவளாவி, ஆலவாய்ப் பெருமானை வழிபட்டுக்கொண் டிருந்தனர்.

சிலநாள் கழிந்தபின்னை, சேரமான் பெருமாளும் நம்பியாரூரரும் மதுரையை விடுத்துத் திருவாரூரை அடைந்தனர். சேரமான் பெருமாள், வன்தொண்டரைத் தம் ஊருக்கு எழுந்தருளுமாறு பன்முறை வேண்டினர். அவர்தம் வேண்டுதலுக்கு இணங்கி, வன்தொண்டப் பெருமான் அவருடன் புறப்பட்டார். இருவரும் கொடுங்கோளூர் சேர்ந்து, அஞ்சைக் களத்தப்பனை வழிப்பட்டு வந்தனர்.

வன்தொண்டப் பெருமானுக்குத் திருவாரூர்ப் பெருமான் நினைவு தோன்றிற்று. தோன்றவே, அவர் திருவாரூருக்குப் பயணமானர். அதுகண்ட சேரர் பெருமான், வன் தொண்டரை வணங்கி, "பெருமானே! உம்மை யான் எங்ஙனம் பிரிந்து வாழ்வேன்?" என்றார். அதற்கு, வன்தொண்டப் பெருமான், "நீர் சிறிதும் வருந்தற்க; பகை அரசை வென்று இவ்வூரை ஆண்டு வருக" என்று கூறியருளினர். சேரமான் பெருமாள், "அடிகளின் திருவடிகளே அடியேன் அரசாட்சி" என்று வணங்கினர். வன் தொண்டப் பெருமான் "யான் திருவாரூர்ப் பெருமானை மறந்திரேன்; நீர் இங்கு இருக்க" என்று சொல்லி வணங்கினர். அதற்கு மேல் மறுப்புரை கூறக் கழறிற்றறிவார் அஞ்சினர். அரசர் பெருமான் அமைச்சர்களை அழைத்து, "நமது அரண்மனையில் உள்ள பண்டாரம் முழுவதையும் ஒருங்கே திரட்டுங்கள்; அவைகளைப் பொதி பொதியாகக் கட்டுங்கள்; வன் தொண்டருக்கு முன்னர் அவைகளைச் சுமந்து செல்லுமாறு ஆட்களை ஏவுங்கள்" என்று பணித்தார். அப்பணியை அமைச்சர்கள் உடனே செய்து முடித்தார்கள். வன்தொண்டர், தோழரை அன்போடு தழுவி, விடை கொடுத்துத் திருவாரூரை நோக்கினர். சேரமான் பெருமாள், வன்தொண்டரை மறவாத சிந்தையினராய், ஆட்சி புரிந்து வந்தார்.

சிலகாலங் கழித்து, வன்தொண்டப்பெருமான் மீண்டும் கொடுங்கோளூரை அடைந்தார். அவர், அஞ்சைக்களத்து அப்பனை வழிபட்டுக் கொண்டிருந்த வேளையில், ஆண்டவன் அருளால் ஒரு வெள்ளையானை வந்தது. அவர் அதன் மீது ஏறித் திருக்கயிலைக்கு எழுந்தருளினர். சேரமான் பெருமாள், அதை உணர்ந்து, குதிரையின்மேலேறித் தொடர்ந்தார்.(மற்றவிவரம் சுந்தரர் வரலாற்றில் கூறப்படும்.)



# கணநாத நாயனார் புராணம்

ஆழி மாநிலத் தகிலமீன் றளித்தவள் திருமுலை அமுதுண்ட
வாழி ஞானசம் பந்தர்வந் தருளிய வனப்பின தளப்பில்லா
ஊழி மாகடல் வெள்ளத்து மிதந்துல கினுக்கொரு முதலாய
காழி மாநகர்த் திருமறை யவர்குலக் காவலர் கணநாதர்.

ஆய அன்பர்தாம் அணிமதிற் சண்பையில் அமர்பெருந் திருத்தோணி, நாய னார்க்குநற் றிருப்பணி யாயின நாளும்அன் பொடு செய்து, மேய அத்திருத் தொண்டினில் விளங்குவார் விரும்பிவந் தணைவார்க்குத், தூய கைத்திருத் தொண்டினில் அவர்தமைத் துறை தொறும் பயில்விப்பார். உ

நல்ல நந்தன வனப்பணி செய்பவர் நறுந்துணர் மலர்கொய்வோர்
*பல்ப ணித்தொடை புனைபவர் கொணர்திரு மஞ்சனப் பணிக்குள்ளோர்
அல்லு நன்பக லுந்திரு அலகிட்டுத் திருமெழுக் கமைப்போர்கள்
எல்லை யில்விளக் கெரிப்பவர் திருமுறை எழுதுவோர் வாசிப்போர்.

இனைய பல்திருப் பணிகளில் அணைந்தவர்க் கேற்றஅத் திருத்தொண்டின், வினைவி ளங்கிட வேண்டிய குறைஎலாம் முடித்துமே விடச்செய்தே, அனைய அத்திறம் புரிதலின் தொண்டரை ஆக்கிஅன் புறுவாய்மை, மனைய றம்புரிந் தடியவர்க் கின்புற வழிபடுந் தொழில் மிக்கார். ச

இப்பெ ருஞ்சிறப் பெய்திய தொண்டர்தாம் ஏறுசீர் வளர்காழி
மெய்ப்பெ ருந்திரு ஞானபோ னகர்கழல் மேவிய விருப்பாலே
முப்பெ ரும்பொழு தருச்சனை வழிபாடு மூளும்அன் பொடுநாளும்
ஒப்பில் காதல்கூர் உளங்களி சிறந்திட ஒழுகினார் வழுவாமல். ரு

---

உ. துறைதொறும் - கைத்திருத்தொண்டின் ஒவ்வொரு துறையிலும். அவை இன்ன இன்ன என்பது பின் கூறப்படுதல் காண்க.

௩. துணர் - கொத்து. தொடை - மாலை. நன்பகலும் - "நன்றாகிய உச்சிக் காலத்திலும்;" "நன்பகல் அந்தி நடைஇடை விலங்கலின்"—**பொருநராற்றுப்படை ; சசு.**

ச. பல்திரு - பல் திரு.

ரு. திருஞான போனகர் - திருஞான சம்பந்தர்.

**பா - ம்.** பன்மலர்த்.

ஆன தொண்டினில் அமர்ந்தபே ரன்பரும் அகலிடத் தினிலென்றும்
ஞான முண்டவர் புண்டரீ கக்கழல் அருச்சனை நலம்பெற்றுத்
தூந றுங்கொன்றை முடியவர் சுடர்நெடுங் கயிலைமால் வரையெய்தி
மான நற்பெருங் கணங்கட்கு நாதராம் வழித்தொண்டின் நிலைபெற்றார்.

உலக முய்யநஞ் சுண்டவர் தொண்டினில் உறுதிமெய் யுணர்வெய்தி
அலகில் தொண்டருக் கறிவளித் தவர்திறம் அவனியின் மிசையாக்கும்
மலர்பெ ரும்புகழ்ப் புகலியில் வருங்கண நாதனார் கழல்வாழ்த்திக்
குலவு நீற்றுவண் கூற்றுவ னார்திறங் கொள்கையின் மொழிகின்றாம்.

ஆ திருவிருத்தம் - ந,கூநச.

---

**கணநாத நாயனார்**; சோழநாட்டிலே, சீர்காழியிலே தோன்றிய வேதியர். அவர், இல்லறத்தில் நின்று, திருத்தோணிப் பெருமானார்க்குத் திருத்தொண்டு செய்தவர். அவர், திருநந்தனவனப் பணி செய்வோர், மலர் கொய்வோர், திருமாலை கட்டுவோர், திருமஞ்சன மெடுப்போர், திருவலகிடுவோர், திருமெழுக்கிடுவோர், திருவிளக்கேற்றுவோர், திருமறை எழுதுவோர் - ஓதுவோர் முதலிய திருத்தொண்டர்களுக்குக் குறைகள் நேருமாயின், அவைகளை நீக்குவார்; இத் திருத்தொண்டுகளில் மக்களை ஈடுபடுத்தி அவர்களைத் திருத்தொண்டர்களாக்குவார். இத்துணைத் திருத்தொண்டுகளுடன், நாயனார், திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளைப் பேரன்போடு முப்போதும் வழிபட்டு வந்தார். அதனால், அவர் திருக்கயிலையடைந்து சிவகணங்களுக்குத் தலைவரானார்.

## கூற்றுவ நாயனார் புராணம்

துன்னார் முனைகள் தோள்வலியால் வென்று சூலப் படையார்தம்
நன்னா மந்தந் திருநாவில் நாளும் நவிலும் நலமிக்கார்
பன்னாள் ஈசர் அடியார்தம் பாதம் பரவிப் பணிந்தேத்தி
முன்னா கியநற் றிருத்தொண்டின் முயன்றார் களந்தை முதல்வனார்.

அருளின் வலியால் அரசொதுங்க அவனி எல்லாம் அடிப்படுப்பார்
பொருளின் முடிவுங் காண்பரிய வகையால் பொலிவித் திகல்சிறக்க
மருளுங் களிறு பாய்புரவி மணித்தேர் படைஞர் முதல்மாற்றார்
வெருளுங் கருவி நான்குநிறை வீரச் செருக்கின் மேலானார். உ

---

க. துன்னார் முனைகள் - பகைவர்களைப் போர்க்களத்தில்.

உ. மற்ற அரசுகள் ஒதுங்க. பொருளின் எல்லையையும்......பெருக்கி.

வென்றி வினையின் மீக்கூர வேந்தர் முனைகள் பலமுருக்கிச்
சென்று தும்பைத் துறைமுடித்துஞ் செருவில் வாகைத் திறங்*கெழுமி
மன்றல் மாலை மிலைந்தவர்தம் வளநா டெல்லாங் கவர்ந்துமுடி
ஒன்றும் ஒழிய அரசர்திரு எல்லாம் உடைய ராயினார். ௩

மல்லல் ஞாலம் புரக்கின்றார் மணிமா மவுலி புனைவதற்குத்
தில்லை வாழந் தணர்தம்மை வேண்ட அவரும் "செம்பியர்தம்
தொல்லை நீடுங் குலமுதலோர்க் கன்றிச் சூட்டோம் முடி" என்று
நல்கா ராகிச் சேரலன்றன் மலைநா டணைய நண்ணுவார். ௪

ஒருமை உரிமைத் தில்லைஅந் தணர்கள் தம்மில் ஒருகுடியைப்
பெருமை முடியை அருமைபுரி காவல் பேணும் படிஇருத்தி
இருமை மரபுந் தூயவர்தாஞ் சேரர் நாட்டில் எய்தியபின்
வரும்ஐ யுறவால் மனந்தளர்ந்து மன்றுள் ஆடும் கழல்†பணிவார். ௫

அற்றை நாளில் இரவின்கண் "அடியேன் தனக்கு முடியாகப்
‡பெற்ற பேறு மலர்ப்பாதம் பெறவே வேண்டும்" எனப்பரவும்
பற்று விடாது துயில்வோர்க்குக் கனவில் பாத மலரளிக்க
உற்ற §அருளால் அவைதாங்கி உலகம் எல்லாந் தனிப்புரந்தார். ௬

அம்பொன் நீடும் அம்பலத்துள் ஆரா அமுதத் திருநடஞ்செய்
தம்பி ரானார் புவியில்மகிழ் கோயில் எல்லாந் தனித்தனியே
இம்பர் ஞாலம் களிகூர எய்தும் பெரும்பூ சனைஇயற்றி
உம்பர் மகிழ அரசளித்தே உமையாள் கணவன் அடிசேர்ந்தார். ௭

காதற் ||பெருமைத் தொண்டின்நிலைக் கடல்சூழ் வையங் காத்தளித்துக்
கோதங் ககல முயல்களந்தைக் கூற்ற னார்தங் கழல்வணங்கி

௩. முருக்கி - கெடுத்து. "வெட்சி நிரைகவர்தல் மீட்டல் கரந்தையாம், வட்கார்மேற் செல்வது வஞ்சியாம் - உட்கா, தெதிரூன்றல் காஞ்சி எயில்காத் தல் நொச்சி, அதுவளைத்த லாகும் உழிஞை - அதிரப், பொருவது தும்பையாம் போர்க்களத்து மிக்கோர் செருவென் றதுவாகை யாம்". துறை, திறம் என் பன கூறுபாடுகளை உணர்த்துவன; விரிவு தொல்காப்பியம் புறத்திணை இய லிற் பார்க்க.

௪. மல்லல் ஞாலம் புரக்கின்றார் - வளமையுடைய உலகைக் காக்கின்ற கூற்றுவ நாயனார். மவுலி - முடி. செம்பியர்தம் - சோழர்களின்.

௫. இருமை மரபும் - வைதிகமும் சைவமும்; தாய் மரபும் தந்தை மரபும் என்றும், இருபிறப்பு என்றும் கூறுதலுமாம். வரும் ஐயுறவால் - நேர்ந்த சந்தேகத்தால்.

௬. பெற்ற பேறு - பெற்ற பயனையுள்ளதாகிய.

பா - ம்—*கமழு. †பணிந்தார். ‡பெற்ற மேறு. §உணர்வால். ||பெருகுர்.

நாத மறைதந் தளித்தாரை நடைநூற் பாவில் நவின்றேத்தும்
போத மருவிப் பொய்யடிமை இல்லாப் புலவர் செயல்புகல்வாம். அ

தேனுங் குழலும் பிழைத்ததிரு மொழியாள் புலவி தீர்க்கமதி
தானும் பணியும் பகைதீர்க்குஞ் சடையார் தூது தருந்திருநாள்
கூனுங் குருடுந் தீர்த்தேவல் கொள்வார் குலவு மலர்ப்பாதம்
யானும் பரவித் தீர்க்கின்றேன் ஏழு பிறப்பின் முடங்குகூன். கூ

ஆக திருவிருத்தம் - ரு,கூசரு.

---

**கூற்றுவ நாயனார்** களந்தைப் பதியின் தலைவர்; குறுநில மன்னர். அவர், அடியவர் பத்தியிற் சிறந்தவர். ஐந்தெழுத்தோதுவது அவர்தம் வழக்கம்.

நாயனார் வேற்றரசர் பலருடன் போர்புரிந்து பல நாடுகளைப் பற்றினார். அவர், சதுரங்க சேனை முதலிய அரசர்க்குரிய செல்வமெல்லாம் பெற்றிருந்தார்; திருமுடி ஒன்றுமட்டும் பெறாதிருந்தார்; அக்குறையை நீக்குதற் பொருட்டுத் தில்லைவாழ் அந்தணர்களிடம் முறையிட்டார். அவர்கள், "சோழமன்னர்க் கன்றி மற்றவர்க்கு நாங்கள் முடி சூட்டுவதில்லை" என்று மறுத்தார்கள். மறுத்த அவர்கள், திருமுடியைக் காக்கும்பொருட்டு, ஒரு குடியை மட்டும் அங்கே விடுத்துச் சேரநாட்டுக்குச் சென்றார்கள்.

கூற்றுவ நாயனார் வருந்தி வருந்தித் "தில்லைக் கூத்தன் திருவடியே எனக்கு முடியாதல் வேண்டும்" என்று துயின்றார். தில்லைப் பெருமான் நாயனார் கனவிலே தோன்றித் திருவடியை முடியாக நாயனார்க்குச் சூட்டியருளினார். நாயனார் அத்திருவடியை முடியாகத் தாங்கி, உலகத்தைப் புரந்து வந்தார். அவர், பல திருப்பதிகளுக்குச் சென்று, வழிபாடுசெய்து, சிவபிரான் திருவடி நீழலை யடைந்தார்.

---

கூ. குழலும் - புல்லாங்குழலும். பிழைத்த - தோற்ற. பணியும் - பாம்பும். "பாம்பொடு திங்கள் பகைதீர்த் தாண்டாய்"—அப்பர். பரவையார் வீட்டில் கூனன் ஒருவனும், குருடன் ஒருவனும் இருந்தனர். அவ்விருவரும் முறையே திருமாலையையும் அடைக்காயையும் வன்றொண்டப் பெருமானுக்குக் கொடுப்பதுவழக்கம். ஆண்டவன் தூதுசென்று, பரவையாரின் புலவிதீர்த்தநாளில், அவ்விருவரும் முறையே கூனும் குருடும் நீங்கப்பெற்றார்; "கூற்றுக் கெவனோ புகல் திரு வாரூரன் பொன்முடிமேல் - ஏற்றுத் தொடையலும் இன்னடைக் காயும் இடுதருமக் - கோற்றொருத்து கூன்னுங் கூன்போய்க் குருடனுங் கண்பெற்றமை - சாற்றித் திரியும் பழமொழி யாம்இத் தரணியிலே"—நம்பியாண்டார் திருவந்தாதி : சஅ.

பா - ம்—*குழைத்ததிரு.

# பொய்யடிமையில்லாத புலவர் புராணம்

"செய்யுள்நிகழ் சொற்றெளிவும் செவ்வியநூல் *பலநோக்கும்
மெய்யுணர்வின் பயன்இதுவே" எனத்துணிந்து விளங்கியொளிர்
மையணியுங் கண்டத்தார் மலரடிக்கே ஆளானார்
பொய்யடிமை யில்லாத புலவரெனப் †புகழ்மிக்கார். க

பொற்பமைந்த அரவாரும் புரிசடையார் தமையல்லால்
சொற்பதங்கள் வாய்திறவாத் தொண்டுநெறித் தலைநின்ற
பெற்றியினில் மெய்யடிமை யுடையாராம் பெரும்புலவர்
மற்றவர்தம் பெருமையார் அறிந்துரைக்க வல்லார்கள். உ

ஆங்கவர்தம் அடியிணைகள் தலைமேற்கொண் டவனிஎலாம்
தாங்கியவெண் குடைவளவர் குலஞ்செய்த தவமனையார்
ஓங்கிவளர் திருத்தொண்டின் உண்மையுணர் செயல்புரிந்த
பூங்கழலார் புகழ்ச்சோழர் திருத்தொண்டு புகல்கின்றாம். ௩

ஆ திருவிருத்தம் - ௩,௯௪௬.

---

பொய்யடிமை யில்லாத புலவர், "செய்யுளின் சொற்றெளிவும், பல நூலாராய்ச்சியும், அவைகளால் பெறும் மெய்யுணர்ச்சியின் பயனும் சிவனடிக்கு அன்பு செய்தலே யாகும்" என்னும் உண்மையை உணர்ந்தவர்; அவ்வழி நின்றொழுகி ஆண்டவன் திருவடி சேர்ந்தவர்.

---

க. "பொய்யடிமையில்லாத புலவர்" என்று நம்பியாரூரர் கூறியவாறே சேக்கிழாரும் கூறிப்போந்தார். வழிநூலாசிரியராகிய **நம்பியாண்டார் நம்பி,** "தரணியிற் பொய்ம்மை யிலாத்தமிழ்ச் சங்க மதிற்கபிலர்-பரணர் நக்கீரர் முதல் நாற்பத் தொன்பது பல்புலவோர் - அருணமக் கீயுந் திருவால வாயரன் சேவ டிக்கே-பொருளமைத் தின்பக் கவிபல பாடும் புலவர்களே" (௬௧) என்று புலவர் பெயர்களைச் சிறப்பாகக் குறித்துள்ளார். சேக்கிழார் முதல்நூல் வழிநின்றொழு கியதைக்கொண்டு, ஆராய்ச்சிக்காரருட் சிலர்,வழிநூலார் கொள்கையை மறுத்து, "பொய்யடிமை யில்லாத புலவர் **மாணிக்கவாசகர்**" என்று கூறுப.

உ. "கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வு குடிகெடினும் - நள்ளேன் நினதடி யாரொடல் லால்நர கம்புகினும் - எள்ளேன் திருவரு ளாலே இருக்கப் பெறின்இறைவா - உள்ளேன் பிறதெய்வம் உன்னையல் லாதெங்கள் உத்த மனே"—**மாணிக்கவாசகர்**

பா - ம்—*பயில். †புலம்.

# புகழ்ச்சோழ நாயனார் புராணம்

குலகிரியின் கொடுமுடிமேல் கொடிவேங்கைக் குறியெழுதி
நிலவுதரு மதிக்குடைக்கீழ் நெடுநிலங்காத் தினிதளிக்கும்
மலர்புகழ்வண் தமிழ்ச்சோழர் வளநாட்டு மாமூதூர்
உலகில்வளர் அணிக்கெல்லாம் உள்ளுறையு ளாம்உறையூர். க

அளவில்பெரும் புகழ்நகரம் அதனில்அணி மணிவிளக்கும்
இளவெயிலின் சுடர்ப்படலை இரவொழிய எறிப்பனவாய்க்
கிளரொளிசேர் நெடுவானப் பேர்யாற்றுக் கொடிகெழுவும்
வளரொளிமா ளிகைநிரைகள் மருங்குடைய மறுகெல்லாம். உ

நாகதலத் தும்பிலத்தும் நானிலத்தும் நலஞ்சிறந்த
போகம்அனைத் தினுக்குறுப்பாம் பொருவிறந்த வளத்தினவாய்

---

க. குல கிரியின் - மேரு வரையின்; இமய மலையின் எனினுமாம். மேரு, மந்தரம், இமயம் இவைகளை ஒன்றுபடுத்திக் கூறுதல் மரபு. "...இமய நட் டரவு சுற்றி - அத்தலை யலற முந்நீர் கடைந்தவ ரவ மொப்ப" என வருஉஞ் சிந்தாமணிப் பாட்டின் (963) உரையில் நச்சினார்க்கினியர் "மந்திரத் தின் தொழிலை இமயத்துக் கேற்றினர். அது மலையரையனாதலின், "இமய வில்வாங்கிய (கலித்தொகை - ௩அ : க) என்றார் பிறரும்" என்று விசேடங் கூறியிருத்தல் காண்க. "பல்கொடி - தாழ மேருவில் உயர்த்த செம்பியர் தனிப்புலிக் கொடி தழைக்கவே"—கலிங்கத்துப்பரணி : கஅ. "மேருவரை யிற் புலிபொறித்து மீண்டநாள்"—இராச இராச சோழன் உலா : எசு. "இமையவர் உறையும் சிமையப் பிடர்த்தலைக் - கொடுவரி ஒற்றி", "பொன் னிமயக் கோட்டுப் புலிபொறித்து மண்ணாண்டான் - மன்னவன் வளவன்", "வடவரைமேல் வாள்வேங்கை ஒற்றினன்யார் அம்மானை"—சிலப்பதி காரம் : ௫. இந்திரன் : கஎ-கசுஅ; கஎ. ஆய்ச்சியர் - உள்வரி உ; உக. வாழ் த்து - அம்மானை. ௩. திருக்குறிப்புத்தொண்ட நாயனார் புராணம் : அ௫-குறிப் புப் பார்க்க. உள்ளுறை - இருப்பிடம். உறையூர் - சோழ இராஜதானிகளுள் ஒன்று. அழகுகளெல்லாம் உறையும் ஊர் என்றபடி. "பீடார் உறந்தை" (சிலப்பதிகாரம் : அ - வேனில் - ௩), "ஓடாப் பூட்கை உறந்தை" (சிறுபாணாற் றுப்படை : அ௩).

உ. படலை - பரப்பு; செறிவு. கிளர் ஒளி - எழும் ஒளி. வானப்பேர் யாறு - "கங்கையம் பேரியாறு". கெழுவும் - பொருந்தும். நிரைகள் - வரிசை கள். மறுகு - தெரு. ஒளி சேர்ந்த ஆற்றிலே துகிற் கொடிகள் படியும் மாளிகை நிரைகள்......

பா - ம்—*உலகுவளர் பணிக்கெல்லாம்.

மாகநிறைந் திடமலிந்த வரம்பில்பல பொருள்பிறங்கும்
ஆகரமொத் துளஅளவில் ஆவணவீ திகளெல்லாம். ௩

பார்கனைய மதம்பொழிந்து பணிவிசும்பு கொளமுழங்கும்
போர்முகவெங் கறையடியும் புடையினமென் றடையவரும்
சோர்மழையின் விடுமதத்துச் சுடருநெடு மின்னுடைக்
கார்முகிலும் பலதெரியா களிற்றுநிரைக் *களமெல்லாம். ௪

படுமணியும் பரிச்செருக்கும் ஒலிகிளரப் பயில்புரவி
நெடுநிரைமுன் புல்லுண்வாய் நீர்த்தரங்க நுரைநிவப்ப
விடுசுடர்மெய் யுறையடுக்கல் முகில்படிய விளங்குதலால்
தொடுகடல்கள் அனையபல துரங்கசா லைகளெல்லாம். ௫

துளைக்கைஐரா வதக்களிறுந் துரங்கஉச்ச சுந்திருவும்
விளைத்தஅமு துந்தருவும் விழுமணியுங் கொடுபோத
உளைத்தகடல் இவற்றொன்று பெறவேண்டி உம்பருூர்
வளைத்ததுபோன் றுளதங்கண் மதில்சூழ்ந்த மலர்க்கிடங்கு. ௬

---

௩. நாக தலத்தும் - சுவர்க்கத்தினும். பிலத்தும் - பாதாள லோகத்தினும். "நாகநீள் நகரொடு நாகநா டதனொடு"—சிலப்பதிகாரம்: க. மங்கல. உக. (நாக நீணகர் - சுவர்க்கம்: உரை). "மாலை நாகமார்பர் மேகமாகி நின்றிடிப்ப வான் - மேலைநாகர் கீழைநாகர் போன்மயங்கி வீழவே"—தக்கயாகப்பரணி: 510. (மேலை நாகர் - சுவர்க்க லோகத்தார்; கீழை நாகர் - பிலத்தவர்.) நானிலத்தும் - குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் என்று நான்காகப்பிரிந்துள்ள இப்பூமியினும். பொரு விறந்த - ஒப்பில்லாத. மாகம் - ஆகாயம். பிறங்கும் - பெருகும். ஆகரம் - உறைவிடம்; சுரங்கம். ஆவண வீதிகள் - கடை வீதிகள்.

௪. கறையடியும் - யானையும். புடை - பக்கத்தே. ஓடை - பட்டம்; மதத்தையும் பட்டத்தையும் உடைய. நிறம் செயல் முதலியவாற்றான், யானையும் மேகமும் ஒத்திருத்தலால், இரண்டுக்கும் வேற்றுமை தெரியா முறையில், யானைக் கூடங்கள் இருந்தன என்றபடி.

௫. படு......கிளர - ஒலிக்கின்ற மணியும் குதிரைக் கனைப்பும் கடல் ஒலி போல முழங்க. பயில்......நிவப்ப - நிறைந்த குதிரை வரிசைகளும், புல்லை யுண்ணும் அவைகளின் வாய் நீரும் முறையே அலைகளையும், அவைகளின் நுரைகளையும்போன்று ஓங்க. விடு......படிய - ஒளிவிடும் உடலமும், போர் வையும் (கவசமும்) முறையே மலைகளையும் அவைகளில் படியும் மேகங்களையும் நிகர்ப்ப. துரங்கம் - குதிரை.

௬. துளை......கொடு போத - துளை பொருந்திய கையையுடைய ஐராவத மென்னும் யானையையும், உச்சைச்சிரவமென்னும் அரச குதிரையையும்,

பா - ம்—*கணமெல்லாம்.

காரேறுங் கோபுரங்கள் கதிரேறும் மலர்ச்சோலை
தேரேறும் மணிவீதி திசையேறும் வசையிலணி
வாரேறும் முலைமடவார் மருங்கேறும் மலர்க்கணையொண்
பாரேறும் புகழ்உறந்தைப் பதியின்வளம் பகர்வரிதால். எ

அந்நகரில் பாரளிக்கும் அடலரச ராகின்ருர்
மன்னுதிருத் தில்லைநகர் மணிவீதி அணிவிளக்கும்
சென்னிநீ டனபாயன் திருக்குலத்து வழிமுதலோர்
பொன்னிநதிப் புரவலஞர் புகழ்ச்சோழர் எனப்பொலிவார். அ

ஒருகுடைக்கீழ் மண்மகளை உரிமையினில் மணம்புணர்ந்து
பருவரைத்தோள் வென்றியினல் பார்மன்னர் பணிகேட்பத்
திருமலர்த்தும் பேருலகுஞ் செங்கோலின் முறைநிற்ப
அருமறைச்சை வந்தழைப்ப அரசளிக்கும் அந்நாளில். கூ

பிறைவளருஞ் செஞ்சடையார் பேணுசிவா லயமெல்லாம்
நிறைபெரும்பூ சனைவிளங்க நீடுதிருத் தொண்டர்தமைக்
குறையிரந்து வேண்டுவன குறிப்பின்வழி கொடுத்தருளி
முறைபுரிந்து திருநீற்று முதல்நெறியே பாலிப்பார். கO

அங்கண்இனி துறையுநாள் அரசிறைஞ்ச வீற்றிருந்து
கொங்கரொடு குடபுலத்துக் கோமன்னர் திறை*கொணரத்
தங்கள்குல மரபின்முதற் றனிநகராங் கருவூரில்
மங்கலநாள் அரசுரிமைச் சுற்றமுடன் வந்தணைந்தார். கக

---

இலக்குமியையும், கடைந்த அமுதத்தையும், கற்பகத் தருவையும், சிந்தாமணியையும் தேவர்கள் எடுத்துச் சென்றமையால். உளைத்த கடல் - வருந்திய திருப்பாற்கடல். உம்பர் ஊர் - தேவருலகத்தை. கிடங்கு - அகழி.

எ. கோபுரங்களில் கார் (மேகம்) ஏறும். கதிர் - சூரிய சந்திரர். வசையில் அணி திசை ஏறும்-இழிவில்லா அழகு திசைகளில் பரவும். அளி என்பது பாடமாயின், அருள் எனக்கொள்க. வார் - கச்சை. மடவார் மருங்கு - மடவாரிடம்; மடவாரிடை எனினுமாம். தேர் ஏறும் (செல்லும்) மணிவீதி திசை ஏறும் (திக்குகளிற்போய் முடியும்) என்றும், வசையில் அணிவார் முலை ஏறு மடவார் ......என்றும் கோடலுமாம்.

அ. பார் அளிக்கும் - உலகைக் காக்கும். அடல் - வெற்றி. சென்னி - சோழரில். பொன்னிநதிப் புரவலஞர் - காவிரி நாட்டுக் காவலராகிய.

கO. குறையிரந்து - தாமே வேண்டி.

கக. பல அரசுகள் இறைஞ்ச. கருவூர் சோழ இராசதானிகளுள் ஒன்று.

பா - ம்—*காணத்.

வந்துமணி மதிற்கருவூர் மருங்கணைவார் வானவர்சூழ்
இந்திரன்வந் தமரர்புரி எய்துவான் எனஎய்திச்
சிந்தைகளி கூர்ந்தானூர் மகிழ்திருவா னிலைக்கோயில்
முந்துறவந் தணைந்திறைஞ்சி மொய்யொளிமா ளிகைபுகுந்தார். கஉ

மாளிகைமுன் அத்தாணி மண்டபத்தின் மணிபுனைபொற்
கோளரிஆ சனத்திருந்து குடபுலமன் னவர்கொணர்ந்த
ஒளிநெடுங் *களிற்றின்அணி உலப்பில்பரி †துலைக்கனகம்
நீளிடைவில் விலகுமணி முதல்நிறையுந் திறைகண்டார். கங

திறைகொணர்ந்த அரசர்க்குச் செயலுரிமைத் தொழிலருளி
"முறைபுரியுந் தனித்திகிரி ‡முறைநில்லா முரண்அரசர்
உறைஅரணம் உளவாகில் தெரிந்துரைப்பீர்" எனஉணர்வு
நிறைமதிநீ டமைச்சர்க்கு மொழிந்தருளி நிகழுநாள். கச

§சென்றுசிவ காமியார் கொணர்திருப்பள் ளித்தாமம்
அன்றுசித றுங்களிற்றை அறஎறிந்து பாகரையும்
கொன்றஎறி பத்தரெதிர் "என்னையுங்கொன் றருளும்"என
வென்றிவடி வாள்கொடுத்துத் திருத்தொண்டில் மிகச்சிறந்தார். கரு

விளங்குதிரு மதிக்குடைக்கீழ் வீற்றிருந்து பாரளிக்கும்
துளங்கொளிநீள் முடியார்க்குத் தொன்முறைமை நெறிஅமைச்சர்
"அளந்ததிறை முறைகொணரா அரசன்உளன் ஒருவன்"என
உளங்கொள்ளும் வகைஉரைப்ப உறுவியப்பால் முறுவலிப்பார். கசு

"ஆங்கவன்யார்?" என்றருள "அதிகனவன் அணித்தாக
ஓங்கெயில்சூழ் மலைஅரணத் துள்ளுறைவான்" எனஉரைப்ப

---

கஉ. இந்திரன் அமராவதியை அடைந்ததுபோல. திருவானிலை, கருவூர் ஆலயத்தின் பெயர்.

கங. அத்தாணிமண்டபத்தின்-அரசிருக்கை மண்டபத்தின். ஒளி......மணி முதல்-நெடிய யானைக் கூட்டத்துடன் அளவில்லாத குதிரைஅணி, பொன் நிறை, தொலைவிலேயே ஒளி விளக்கும் மணிகள் முதலிய.

கச. திகிரி......அரணம் - சக்கரநெறி நில்லாது மாறுபட்ட அரசர்கள் வாழும் அரணாகிய இடங்கள். (அரணம் - காவலிடங்கள் ; கோட்டைகள்).

கசு. துளங்கு ஒளி - மிக்க ஒளி. முறுவலிப்பார் - புன்னகை புரிவாராய்.

கஎ. அணித்தாக - சமீபமாக. எயில் - மதில். அப்பாங்கு - அப்பக்கத் துள்ள.

பா - ம்—*களிற்றணியும் விளக்குமணி. †துணைக்கனகம். ‡வழி. §இப்பாடல் சில பிரதிகளிலில்லை.

"எங்குநுமக் கெதிர்நிற்கும் அரணுளதோ! படைஎழுந்தப்
பாங்கரணந் துகளாகப் *பற்றறுப்பீர்" எனப்பகர்ந்தார். கஎ

அடல்வளவர் ஆணையினால் அமைச்சர்களும் புறம்போந்து
கடலனைய நெடும்படையைக் கைவகுத்து மேற்செல்வார்
படர்வனமும் நெடுங்கிரியும் பயில்அரணும் பொடியாக
மிடலுடைநாற் கருவியுற †வெஞ்சமரம் மிகவிளைத்தார். கஅ

வளவனார் பெருஞ்சேனை வஞ்சிமலர் ‡மிலைந்தேற
அளவில்அர ணக்குறும்பின் அதிகர்கோன் அடற்படையும்
உளநிறைவெஞ் சினந்திருகி உயர்காஞ்சி ‡மிலைந்தேறக்
கிளர்கடல்கள் இரண்டென்ன இருபடையும் கிடைத்தனவால். கக

**வேறு**

கயமொடு கயமெதிர் குத்தின
அயமுடன் அயமுனை முட்டின
வயவரும் வயவரு முற்றனர்
வியனமர் வியலிட மிக்கதே. உ0

மலையொடு மலைகள் மலைந்தென
அலைமத அருவி கொழிப்பொடு
சிலையினர் விசையின் மிசைத்தெறு
கொலைமத கரிகொலை யுற்றவே. உக

கஅ. அடல் வளவர் - வெற்றி வாய்ந்த சோழர். கைவகுத்து - அணி வகுத்து. மிடலுடை நாற்கருவி உற - வலிமையுடைய நால்வகைச் சேனைகளைக் கொண்டு. வெஞ்சமரம் - வெம்போரை.

கக. வஞ்சி மலர் மிலைந்து - வஞ்சிமாலை யணிந்து ; வஞ்சி பகைமேற் செல்வோர் அணிவது. அரணக் குறும்பின்-மிக்க அரண்களையுடைய; (குறும்பு சாதியைக் குறிப்பதுமாம்.) திருகி-முறுகி. உயர் காஞ்சி - உயர்ந்த காஞ்சிப் பூமாலை; இது, படைமுன் எதிரூன்றி நிற்போர் சூடுவது; கூற்றுவ நாயனார் புராணம் : ரு. குறிப்புப் பார்க்க. கிடைத்தன - கிட்டின.

உ0. கயமொடு - யானையுடன். அயமுடன் - குதிரையுடன். முனை - போரிடை. வயவரும் - வீரரும். வியன் அமர் - பெரும்போர். வியலிடம் - அகன்ற இடத்தில்.

உக. மலைந்தென - போர் புரிந்தாற்போல. சிலையினர்...உற்ற - மேலுள்ள வில் வீரரது விசையினைப்பார்க்கிலும் மிகுந்து கொல்லும் கொலை யானைகள் ஒன்றோடொன்று போரிட்டு மாண்டன.

பா - ம்—*பற்றுவீர். †வெஞ்சமத்தை. ‡மலைந்தேற்ப, மிலைந்தேற்ப.

வேறு

சூறை மாருதம் ஒத்தெதிர்
ஏறு பாய்பரி வித்தகர்
வேறு வேறு தலைப்பெய்து
சீறி ஆவி செகுத்தனர். உஉ

மண்டு போரின் மலைப்பவர்
துண்ட மாயிட உற்றெதிர்
கண்டர் ஆவி கழித்தனர்
உண்ட சோறு கழிக்கவே. உந

வீடி னார்உட விற்பொழி
நீடு வார்குரு திப்புனல்
ஓடும் ஆறென ஒத்தது
கோடு போல்வ பிணக்குவை. உச

வானி லாவு கருங்கொடி
மேனி லாவு பருந்தினம்
ஏனை நீள்கழு கின்குலம்
ஆன ஊனொ டெழுந்தவே. உரு

வேறு

வரிவிற் கதைசக் கரமுற் கரம்வாள்
சுரிகைப் படைசத் திகழுக் கடைவேல்
எரிமுத் தலைகப் பணமெற் பயில்கோல்
முரிவுற் றனதுற் றனமொய்க் களமே. உசு

---

உஉ. சூறை மாருதம் - சண்டமாருதம். பரி வித்தகர் - குதிரை வீரர்கள். வேறு......செகுத்தனர் - வேறுவேறாக எதிர்த்துச் சீறிப் போரிட்டு உயிரை மாய்த்தனர்.

உந. கண்டர் - வீரர்கள் ; எதிர்த்தவர்களைக் கண்டப்படுத்த வல்லார்.

உச. வீடினார் - இறந்தவர். குருதிப் புனல் - இரத்த நீர். பிணக்குவை கோடு (கரை) போல்வ. உரு. கொடி - காக்கைகளும்.

உசு. மொய்க்களம் - போர்க்களத்தில். வரி வில் - வரிந்து கட்டிய வில். முற்கரம் - சம்மட்டி போன்ற ஓர் ஆயுதம். சுரிகைப் படை - உடை வாள். சத்தி - சிறு சூலம். கழுக்கடை - ஈட்டி. முத்தலை - சூலம். கப்பணம் - யானை நெருஞ்சி முள்போல இரும்பினால் செய்யப்பட்ட ஒருவித போர்க்கருவி. எல் பயில் கோல் - ஒளி செறிந்த அம்பு. முரிவுற்றனவாய் நெருங்கி நிறைந்தன.

வடிவே லதிகன் படைமா ளவரைக்
கடிசூழ் அரணக் கணவாய் நிரவிக்
கொடிமா மதில்சூ ழுகுறும் பொறையூர்
முடிவே ரியனார் படைமுற் றியதே. உஎ

முற்றும் பொருசே னைமுனைத் தலையில்
கற்றிண் புரிசைப் பதிகட் டழியப்
பற்றுந் துறைநொச் சிபரிந் துடையச்
சுற்றும் படைவீ ரர்துணித் தனரே. உஅ

மாறுற் றவிறற் படைவா ளதிகன்
நூறுற் றபெரும் படைநூ ழில்படப்
பாறுற் றஎயிற் பதிபற் றறவிட்
டேறுற் றனன்ஓ டிஇருஞ் சுரமே. உக

அதிகன் படைபோர் பொருதற் றதலைப்
பொதியின் குவைஎண் ணிலபோ யினபின்
நிதியின் குவைமங் கையர்நீள் பரிமா
எதிருங் கரிபற் றினர்எண் ணிலரே. ௩௦

அரண்முற் றிஎறிந் தஅமைச் சர்கள்தாம்
இரணத் தொழில்விட் டெயில்சூழ் கருவூர்
முரணுற் றசிறப் பொடுமுன் னினர்நீள்
தரணித் தலைவன் கழல்சார் வுறவே. ௩க

மன்னுங் கருவூர் நகர்வா யிலின்வாய்
முன்வந் தகருந் தலைமொய் குவைதான்

உஎ. வரை...நிரவி - மலைக் காப்புச் சூழ்ந்த கோட்டைகளுடன் கணவாயையும் சமமாக்கி. முடி...முற்றியது - முடியணிந்த புகழ்ச்சோழனார் சேனை வளைந்து கொண்டது.

உஅ. கல் திண் புரிசை - கற்களாலாகிய வலிய அரணுடைய. நொச்சி - நொச்சிமாலை ; மதிலைக் காத்தற்கு உரிய வீரர் அணிந்து கொள்வது.

உக. நூறுற்ற - அழிவுற்ற. நூழில்பட - குவியல் குவியலாக. பாறுற்ற எயில் - சிதறுண்ட மதில்களையுடைய.

௩௦. அற்றதலை......பின் - அறுபட்ட தலைப் பொதிக் குவையல்கள் எண்ணில அனுப்பப்பட்ட பின்னர்.

௩க. முற்றி - வளைத்து. முரண்உற்ற-வலிமை மிகுந்த. முன்னினர் - கருதிச் சேர்ந்தனர். தரணித் தலைவன் - புகழ்ச்சோழ நாயனாரது.

௩௨. தானையுளோர் - சேனையிலிருப்பவர். வளவன்தன்-புகழ்ச்சோழரது.

பா - ம்—*எதிர்ந்த.

மின்னுஞ் சுடர்மா முடிவேல் வளவன்
தன்முன் புகொணர்ந் தனர்தா னையுளோர். ௩௨

மண்ணுக் குயிரா மெனும்மன் னவனார்
எண்ணிற் பெருகுந் தலையா வையினும்
நண்ணிக் கொணருந் தலையோன் றினடுக்
கண்ணுற்ற தோர்புன் சடைகண் டனரே. ௩௩

வேறு

கண்டபொழு தேநடுங்கி மனங்கலங்கிக் கைதொழுது
கொண்டபெரும் பயத்தினுடன் குறித்தெதிர்சென் றதுகொணர்ந்த
திண்டிறலோன் கைத்தலையில் சடைதெரியப் பார்த்தருளிப்
புண்டரிகத் திருக்கண்ணீர் பொழிந்திழியப் புரவலனார். ௩௪

"முரசுடைத்திண் படைகொடுபோய் முதலமைச்சர் முனைமுருக்கி
உரைசிறக்கும் புகழ்வென்றி ஒன்றொழிய *ஒன்றாமல்
திரைசரித்த கடலுலகில் திருநீற்றின் நெறிபுரந்தியான்
அரசளித்த படிசால அழகி!"தென அழிந்தயர்வார். ௩௫

"தார்தாங்கிக் கடன்முடித்த சடைதாங்குந் திருமுடியார்
நீர்தாங்குஞ் சடைப்பெருமான் நெறிதாங்†கண் டவரானார்
சீர்தாங்கும் இவர்வேணிச் சிரந்தாங்கி வரக்கண்டும்
பார்தாங்க இருந்தேனோ பழிதாங்கு வேன்"என்றார். ௩௬

என்றருளிச் செய்தருளி இதற்கிசையும் படிதுணிவார்
நின்றநெறி அமைச்சர்க்கு "நீள்நிலங்காத் தரசளித்து
மன்றில்நடம் புரிவார்தம் வழித்தொண்டின் வழிநிற்ப
வென்றிமுடி என்குமரன் தனைப்புனைவீர்" எனவிதித்தார். ௩௭

அம்மாற்றங் கேட்டழியும் அமைச்சரையும் இடாகற்றிக்
கைம்மாற்றுஞ் செயல்தாமே கடனாற்றுங் கருத்துடையார்

---

௩௩. "நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே - மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்"—புறநானூறு : கஅசு. நடுக்கண் - நடுவிலே.

௩௪. திண் திறலோன் கையிலுள்ள அத்தலையில். செந்தாமரை மலர் போன்ற கண்ணினின்றும் நீர்.

௩௫. முனை முருக்கி - பகை அழித்தமையால் (வினைகாந்த). ஒன்றாமல் - வேறொன்றும் பொருந்தாமல்.

௩௬. தார்...முடித்த - போருக்குரிய மாலை யணிந்து சோற்றுக்கடன் முடித்த. வேணிச்சிரம் - சடைத்தலையை.

பா - ம்—*ஒன்றாமால். †கண் டறிவானார்.

செம்மார்க்கந் தலைநின்று செந்நிமுன் வளர்ப்பித்துப்
பொய்ம்மாற்றுந் திருநீற்றுப் புனைகோலத் தினிற்பொலிந்தார். ௩௮

கண்டசடைச் சிரத்தினையோர் கனகமணிக் கலத்தேந்திக்
கொண்டுதிரு முடித்தாங்கிக் குலவுமெரி வலங்கொள்வார்
அண்டர்பிரான் திருநாமத் தஞ்செழுத்தும் எடுத்தோதி
மண்டுதழற் பிழம்பினிடை மகிழ்ந்தருளி உள்புக்கார். ௩௯

புக்கபொழு தலர்மாரி புவிநிறையப் பொழிந்திழிய
மிக்கபெரு மங்கலதூ ரியம்விசும்பின் முழக்கெடுப்பச்
செக்கர்நெடுஞ் சடைமுடியார் சிலம்பலம்பு சேவடியின்
அக்கருணைத் திருநிழற்கீழ் ஆராமை அமர்ந்திருந்தார்.

மூரசங்கொள் கடற்றானை மூவேந்தர் தங்களின்முன்
பிரசங்கொள் நறுந்தொடையல் புகழ்ச்சோழர் பெருமையினைப்
பரசுங்குற் றேவலினால் அவர்பாதம் பணிந்தேத்தி
நரசிங்க முனையர்திறம் நாமறிந்த படிஉரைப்பாம். ௪௧

ஆ திருவிருத்தம் ௩,௯௮௭.

---

**புகழ்ச்சோழ நாயனார்** சோழநாட்டை ஆண்ட மன்னருள் ஒருவர்; உறையூரிலே தங்கி ஆட்சி புரிந்தவர்; சைவந் தழைக்க முயன்றவர். அவர், திருக்கோயில்களில் பூசனை வழாது நடத்துவிப்பார்; திருத்தொண்டர்கள் குறிப்பறிந்து, அவரவர் விரும்புமாறு உதவுவார். இவ்வாறு இவரால் திருநீற்று நெறி ஓம்பப்பட்டு வந்தது.

கொங்குநாட்டரசர்களிட மிருந்தும் குடகநாட்டரசர்களிட மிருந்தும் திறைவாங்குதற் பொருட்டுப் புகழ்ச்சோழ நாயனார் கருவூருக் கேகினார்; அத் திருப்பதியில் எழுந்தருளியுள்ள ஆனிலைப் பெருமானை வழிபட்டுத், திரு மாளிகை சேர்ந்து, அரியாசனத்தில் வீற்றிருந்தார். கொங்கரும், குடகரும் திறை செலுத்தினர். புகழ்ச் சோழர் அவர்கட்கு ஆசிகூறி அரசுரிமைத் தொழில் அருளினார்.

மேலும் சோழர்பெருமான், அமைச்சர்களை நோக்கி, “நமது ஆணைக்குக் கீழ்ப்படாத அரசர் எவரேனும் உளரோ? அறிந்து சொல்லுங்கள்” என்று கட்டளை இட்டார்.

அந்நாளில் **சிவகாமியாண்டார்** என்னும் ஓர் அடியவர் ஆனிலைப் பெருமானுக்கு வழக்கம்போலத் திருப்பள்ளித்தாமம் கொண்டு போனார். அதனைப்பட்

---

௩௮. கை மாற்றுஞ் செயல் - நேர்ந்த சிறுமையை ஒழிக்குஞ் செயலை.

௩௯. கனகமணிக்கலத்து - அழகிய மாணிக்கத் தட்டில்.

௪0. தூரியம் - வாத்தியம். ஆராமை அமர்ந்து - இரண்டறக் கலந்து.

௪௧. மூவேந்தரில் முதன்மை பெற்ற என்றபடி. பிரசம் - தேன். தொடையல் - மாலையணிந்த. பரசுங்குற் றேவலினால் - புகழுந் தொண்டினால்.

பா - ம்—*திருநாமம்.

டத்து யானை,பற்றி ஈர்த்துச் சிதறச் செய்தது. எறிபத்த நாயனார் அவ்யானையை வெட்டிக் கொன்றார். அதையுணர்ந்த புகழ்ச்சோழ நாயனார், எறிபத்த நாயனார் எதிரே சென்று, தமது வாளை அவரிடங் கொடுத்து, “என்னையுங் கொன்றருள்க” என்று வணங்கினார். இவ்வாறு புகழ்ச்சோழ நாயனார் கருவூரிலிருந்த போது திருத்தொண்டிலே மேம்பட்டவரானார்.

அமைச்சர்கள், மன்னரிடம் போந்து, “உங்கள் ஆட்சிக்குக் கீழ்ப்படியாத அரசன் ஒருவனே உளன்; அவன் அதிகன் என்பவன்; அவன் அருகேயுள்ள மலையாணத்துள்ளே இருப்பவன்.” என்றார்கள். உடனே புகழ்ச்சோழ நாயனார் அமைச்சர்களைப் பார்த்து, “அவ்வரணை அதஞ்செய்து வாருங்கள்” என்றார். அமைச்சர்கள், அப்படியே செய்தார்கள். அதிகன் அருஞ்சுரத்தில் ஓடி ஒளித்துக்கொண்டான். புகழ்ச்சோழரின் சேனை வீரர்கள் அதிகனுடைய சேனை வீரர்களின் தலைகளையும், செல்வங்களையும், பிறவற்றையும் எடுத்துக் கொண்டு வந்தார்கள்.

ஒரு வீரரின் சடைத்தலை புகழ்ச்சோழ நாயனார்க்குப் புலனாயிற்று. ஆகவே, நாயனார் அலறுகிறார்; கதறுகிறார்; “சைவந் தழைக்க அரசியற்றுவோன் யானோ? நன்று! நன்று!!” என்பார்; “சோற்றுக் கடன் முடிக்கப் போர்புரிந்த அடியவரையோ என் சேனை கொன்றது!” என்பார்; “இப்பழிக்கு என் செய்வேன்? என் உயிர் நீங்கவில்லையே” என்பார்.

இவ்வாறு நாயனார் புலம்பி, அமைச்சர்களை நோக்கி, “இவ்வுலகத்தை ஆளுமாறும், சிவத்தொண்டைத் தவறாது நடத்துமாறும் என் புதல்வனுக்கு முடி சூட்டுங்கள்” என்று கட்டளையிட்டார். அமைச்சர்கள் மனங் கலங்கி நின்றார்கள். நாயனார், அவர்களைத் தேற்றினார்; நெருப்பை வளர்ப்பித்தார்; நீற்றுக்கோலப் பொலிவுடன், திருச்சடைத் தலையை ஒரு மாணிக்கத் தட்டிலே ஏந்தினார்; அதைத் தமது திருமுடியிலே தாங்கினார்; நெருப்பை வலம் வந்தார்; ஐந்தெழுத்தை ஓதிக்கொண்டே நெருப்பில் இறங்கினார்; ஆண்டவன் திருவடி நீழலை யடைந்தார்.

---

# நரசிங்கமுனையரைய நாயனார் புராணம்

கோடாத நெறி*விளக்குங் குலமரபில் அரசளித்து
மாடாக மணிகண்டர் திருநீறே மனங்கொள்வார்
தேடாத பெருவளத்தில் சிறந்ததிரு முனைப்பாடி
நாடாளுங் காவலனார் நரசிங்க முனையரையர்.

இம்முனையர் பெருந்தகையார் இருந்தரசு †புரந்துபோய்த்
தெம்முனைகள் பலகடந்து தீங்குநெறிப் பாங்ககல

---

க. கோடாத - மாறுபடாத. மாடாக - செல்வமாக. மணிகண்டர் - நீலகண்டராகிய சிவபெருமான். தேடாத - உலகில் தேடி அறிதற்கரிய.

உ. தெம்...கடந்து - பகைவர்களின் போர்கள் பலவற்றையும் வென்று. .........அம்முனைவர் - அச்சிவனடியார்களின்.

பா - ம்—*விளங்கும். †புரிந்த.

மும்முனைநீள் இலைச்சூல முதற்படையார் தொண்டுபுரி
அம்முனைவர் அடிஅடைவே அரும்பெரும்பே றெனஅடைவார். ௨

சினவிடையார் கோயில்தொறுந் திருச்செல்வம் பெருக்குநெறி
யனஇடைஆர் உயிர்துறக்க வருமெனினும் அவைகாத்து
மனவிடைஆ மைத்தொடையல் அணிமார்பர் வழித்தொண்டு
கனவிடையா கிலும்வழுவாக் கடனாற்றிச் செல்கின்றார். ௩

ஆறணிந்த சடைமுடியார்க் காதிரைநாள் தொறுமென்றும்
வேறுநிறை வழிபாடு விளங்கியபூ சனைமேவி
நீறணியும் தொண்டர்அணைந் தார்க்கெல்லாம் நிகழ்பசும்பொன்
நூறுகுறை யாமல்அளித் தின்னமுது நுகர்விப்பார். ௪

ஆனசெயல் முறைபுரிவார் ஒருதிருவா திரைநாளில்
மேன்மைநெறித் தொண்டர்க்கு விளங்கியபொன் னிடும்பொழுதில்
மானநிலை அழிதன்மை வருங்காமக் குறிமலர்ந்த
ஊனநிகழ் மேனியராய் ஒருவர்நீ றணிந்தணைந்தார். ௫

மற்றவர்தம் வடிவிருந்த படிகண்டு மருங்குள்ளார்
உற்றஇகழ்ச் சியராகி ஒதுங்குவார் தமைக்கண்டு
கொற்றவனார் எதிர்சென்று கைகுவித்துக் கொடுபோந்தப்
பெற்றியினார் தமைமிகவுங் கொண்டாடிப் பேணுவார். ௬

சீலம்இல ரேஎனினுந் திருநீறு சேர்ந்தாரை
ஞாலம்இகழ்ந் தருநரகம் நண்ணாமல் எண்ணுவார்
பாலணைந்தார் தமக்களித்த படிஇரட்டிப் பொன்கொடுத்து
மேலவரைத் தொழுதினிய மொழிவிளம்பி விடைகொடுத்தார். ௭

இவ்வகையே திருத்தொண்டின் அருமைநெறி எந்நாளும்
செவ்வியஅன் பினிலாற்றித் திருந்தியசிந் தையராகிப்
பைவளர்வாள் அரவணிந்தார் பாதமலர் நிழல்சேர்ந்து
மெய்வகைய வழிஅன்பின் மீளாத நிலைபெற்றார். ௮

---

௩. பெருக்கு நெறியனஇடை ஆர் உயிர் - பெருக்கு நெறியாயவற்றில் அரிய உயிர். அவை - அந்நெறிகளை. மனவு இடை...மார்பர் - அக்கு மணிகளின் இடையிலே ஆமையோடு கோக்கப்பட்ட மாலை யணிந்த மார்பையுடைய சிவபெருமானது ; மனவு - எலும்புமாம்.

௬. கொற்றவனார் - நரசிங்க முனையர். அப்பெற்றியினார்தமை - காமக்குறி மலர்ந்த தொண்டரை.

௮. பை வளர் வாள் - படம் வளர்ந்த ஒளியையுடைய.

விடநாகம் அணிந்தபிரான் மெய்த்தொண்டு விளைந்தநிலை
உடனாகும் நரசிங்க முனையர்பிரான் கழலேத்தித்
தடநாக மதஞ்சொரியத் தனஞ்சொரியுங் கலஞ்சேரும்
கடனாகை அதிபத்தர் கடனாகைக் கவினுரைப்பாம். ௯

ஆ திருவிருத்தம் ௩,௯௯௬.

---

நரசிங்க முனையரைய நாயனார் என்பவர், திருமுனைப்பாடி நாட்டை ஆண்ட மன்னருள் ஒருவர். அவர், பகையரசர்களை வென்று, நன்னெறி வளர்த்து வந்தார். திருநீறே அவர்க்கு உரிய செல்வம்; சிவனடியே அவர்தம் சார்பு. திருக்கோயிற் பூசைகள் அவரால் குறைவற நடாத்தப்பட்டு வந்தன.

திருவாதிரைதோறும் அடியவர்களுக்கு அமுது செய்வித்து, ஒவ்வொரு வர்க்கும் நூறு பொன் கொடுப்பது நாயனாரது நியதிகளுள் ஒன்று. ஒரு திருவாதிரையிலே வழக்கம்போல அடியவர்கள் வந்தார்கள். அவர்களுடன் ஒரு தூர்த்தரும் போந்தார். அவர் திருநீறணிந்திருந்தார். அவரைக் கண்ட மற்ற அடியவர்கள் ஒதுங்கினார்கள்.

நரசிங்கமுனையர் அத்தூர்த்தரிடஞ் சென்று அவரை வணங்கினார்; "திருநீறணிந்தவர் தூர்த்தராயினும் ஆக; அவரை இகழலாகாது" என்பதை உலகம் உணர்ந்து உய்யும்பொருட்டு, அவருக்கு இரட்டிப்பாக இருநூறு பொன் கொடுத்தார்; அவரைத் தொழுது முகமன்கூறி விடை கொடுத்தனுப்பினார். இவ்வாறு திருத்தொண்டு செய்து நரசிங்கமுனையர் சிவனடி சேர்ந்தார்.

# அதிபத்த நாயனார் புராணம்

மன்னி நீடிய செங்கதி ரவன்வழி மரபின்
தொன்மை யாம்முதற் சோழர்தந் திருக்குலத் துரிமைப்
பொன்னி நாடெனுங் கற்பகப் பூங்கொடி மலர்போல்
நன்மை சான்றது நாகப்பட் டினத்திரு நகரம். ௧

தாம நித்திலக் கோவைகள் சரிந்திடச் சரிந்த
தேமலர்க்குழல் மாதர்பந் தாடுதெற் றிகள்சூழ்

---

௯. தடநாகம் - பெரிய யானைகள். கலம் - கப்பல்கள். கடல்நாகை - கடல் சூழ்ந்த நாகப்பட்டினத்து. கடன் ஆகை கவின் - நியமமாகிய தொண்டின் அழகை.

௧. காவிரி நாடெனும் கற்பகப் பூங்கொடியிலுள்ள மலர்போல். பட்டினம் - துறைமுகம்; கடலோரத்திருப்பது; (பட்டணம் வேறு).

௨. தாம நித்திலக் கோவைகள் - ஒளிபொருந்திய முத்து மாலைகள். தே மலர்க் குழல் - மணங்கமழும் மலர்க்கூந்தலையுடைய. தெற்றிகள் - மேடைகள். காமர் - விரும்பத்தக்க. மாளிகைகளில். மா - கரிய.

காமர் பொற்சுடர் மாளிகைக் கருங்கடல் முகந்த
மாமு கிற்குலம் மலையென ஏறுவ மருங்கு. உ

பெருமை யிற்செறி பேரொலி பிறங்கலின் *நிறைந்து
திருமு கட்குவாழ் சேர்விட மாதலின் யாவும்
தருத லின்கடல் தன்னினும் பெரிதெனத் திரைபோல்
கரிப ரித்தொகை மணிதுகில் சொரிவதாங் கலத்தால். ங

நீடு தொல்புகழ் நிலம்பதி னெட்டினும் நிறைந்த
பீடு தங்கிய பலபொருள் மாந்தர்கள் பெருகிக்
கோடி நீள்தனக் குடியுடன் குவலயங் காணும்
ஆடி மண்டலம் போல்வதவ் வணிகிளர் மூதூர். ச

அந்நெ டுந்திரு நகர்மருங் கலைகடல் விளிம்பில்
பன்னெ டுந்திரை நுரைதவழ் பாங்கரின் ஞாங்கர்
மன்னு தொன்மையின் வலைவளத் துணவினில் மலிந்த
தன்மை வாழ்குடி மிடைந்தது தடநுளைப் பாடி. ரு

புயல எப்பன எனவலை புறம்பணை குரம்பை
அயல எப்பன மீன்விலைப் பசும்பொனின் அடுக்கல்
வியல எக்கரில் விடுந்திமில் வாழ்நர்கள் கொணர்ந்த
கயல எப்பன பரத்தியர் கருநெடுங் கண்கள். சு

---

ங. பெரு...பிறங்கலின் - பெரிய மேகங்களிலுண்டாகும் பேரொலி பெருகுதலாலும். கடல் - பாற்கடல். திரைபோல்-அக்கடல் போலவே. கரி...துகில் - யானை குதிரைக் கூட்டங்களையும், நவமணிகளையும், வஸ்திர வகைகளையும். கலத்தால் - கப்பலால். ஒலி பெருகுதலாலும், திருமகள் வாழ்விடமாதலாலும், கரி பரி முதலியவற்றைச் சொரிதலாலும், பிற எல்லாவற்றையும் தருதலாலும், நாகை, பாற்கடலினும் பெரிதென்க.

ச. நிலம் பதினெட்டு - அங்கம், அருணம், கலிங்கம், கௌசிகம், காம்போசம், கொங்கணம், கோசலம், சாவகம், சிங்களம், சிந்து, சீனம், சோனகம், திராவிடம், துளுவம், பப்பரம், மகதம், மராடம், வங்கம். பீடு - பெருமை. குவலயம் காணும் ஆடி மண்டலம் - உலகையே காண்கின்ற கண்ணாடி வட்டத்தை. நாகை, உலகையே காட்டுங் கண்ணாடிபோன்ற தென்றபடி ; உலகிலுள்ள எல்லாம், நாகையிலுண்டு என்பது கருத்து. கிளர் - விளங்கும்.

ரு. விளிம்பில் - ஓரத்தில் ; கரையில். திரை...ஞாங்கர்-துறைப் பக்க இடத்தில். மிடைந்தது - நெருங்கியது.

சு. புயல்......அயல் - மேகங்கள் கவிந்தாலென விளங்கும் வலைகள் பக்கத்தே செறிந்த குடில்களின் அருகே. வலை எனக் கொள்ளாது அலை எனக் கொள்ளலும் ஒன்று. மேகங்களை அளந்தாலென எழும் அலைகள் செறிந்த...... என்று கொள்க. அடுக்கல் - மலை. மீன் விற்றலால் ஆகிய பசும்பொன் மலைகள்

பா - ம்—*சிறந்து.

உணங்கல் மீன்கவர் உறுநசைக் குருகுடன் அணைந்த
*கணங்கொள் ஓதிமம் கருஞ்சினைப் புன்னையங் கானல்
அணங்கு நுண்ணிடை நுளைச்சியர் †அசைநடைக் கழிந்து
மணங்கொள் கொம்பரின் மருங்குநின் றிழியல மருளும். ௭

வலைநெ டுந்தொடர் வடம்புடை வலிப்பவ ரொலியும்
விலைப கர்ந்துமீன் குவைகொடுப் பவர்விளி யொலியும்
தலைசி றந்தவெள் வளைசொரி பவர்தழங் கொலியும்
அலைநெ டுங்கடல் அதிரொலிக் கெதிரொலி அனைய. ௮

அனைய தாகிய அந்நுளைப் பாடியில் அமர்ந்து
மனைவ ளம்பொலி நுளையர்தங் குலத்தினில் வந்தார்
புனைஇ ளம்பிறை முடியவர் அடித்தொண்டு புரியும்
வினைவி ளங்கிய அதிபத்தர் எனநிகழ் மேலோர். ௯

ஆங்க வன்பர்தாம் நுளையர்தந் தலைவராய் அவர்கள்
ஏங்கு தெண்திரைக் கடலிடைப் பலபட வியக்கிப்
பாங்கு சூழ்வலை வளைத்துமீன் படுத்துமுன் குவிக்கும்
ஓங்கு பல்குவை உலப்பில உடையராய் உயர்வார். ௧௦

முட்டில் மீன்கொலைத் தொழில்வளத் தவர்வலை முகந்து
பட்ட மீன்களில் ஒருதலை மீன்படு தோறும்
"நட்ட மாடிய நம்பருக்" கெனநளிர் முந்நீர்
விட்டு வந்தனர் விடாதஅன் புடனென்றும் விருப்பால். ௧௧

---

அளக்கப்படுவன. வியல்...கண்கள் - பரந்த கடலில் விடப்படும் படகுகளால் வாழ்வு நடாத்தும் பரதவர்கள் கொண்டுவந்த கயல் மீன்கள், பரத்தியர்களின் கரிய நெடுங் கண்களால் அளக்கப்படுவன. அளத்தலாவது கயலோ பிறவோ என்று ஐயமிட்டு மதித்தல் என்க.

௭. உணங்கல் மீன் - உலர்ந்த மீன். குருகுடன் - நீர்ப் பறவைகளுடன். கணங்கொள் ஓதிமம்-அன்னக் கூட்டங்கள். சினை புன்னையங்கானல்-கிளைகளையுடைய புன்னைச் சோலையில். அணங்கு - (தன பாரத்தால்) வருத்தும். இழியல - இறங்காதனவாகி.

௮. புடை - பக்கத்தே. விளி - அழைக்கும். வெள்...ஒலியும் - வெண் சங்குகளைச் சொரிபவர்களின் மிக்க ஒலியும்.

௧௦. அவ்வன்பர் தாம் ஆங்கு. ஏங்கு - ஒலிக்கும். படவு இயக்கி - படகுகளைச் செலுத்தி. உலப்பில - ஒழியாதன.

௧௧. தலை மீன் - சிறந்த மீன். நளிர் முந்நீர் - குளிர்ந்த கடலில்.

பா - ம்—*கணங்கள். †அணி.

வாகு சேர்வலை நாளொன்றில் மீனொன்று வரினும்
ஏக நாயகர் தங்கழற் கெனவிடும் இயல்பால்
ஆகு நாள்களில் அநேகநாள் *அடுத்தொரு மீனே
மேக நீர்படி வேலையிற் படவிட்டு வந்தார். ௧௨

மீன்வி லைப்பெரு குணவினில் மிகுபெருஞ் செல்வம்
தான்ம றுத்தலின் உணவின்றி அருங்கிளை சாம்பும்
பான்மை பற்றியும் வருந்திலர் பட்டமீன் ஒன்று
மான்ம றிக்கரத் தவர்கழற் கெனவிட்டு மகிழ்ந்தார். ௧௩

சால நாள்கள்இப் படிவரத் தாம்உண வயர்த்துக்
கோல மேனியுந் தளரவுந் தந்தொழில் குறையாச்
சீல மேதலை நின்றவர் தந்திறந் தெரிந்தே
ஆலம் உண்டவர் தொண்டர்அன் பெனும்அமு துண்பார். ௧௪

ஆன நாளொன்றில் அவ்வொரு மீனும்அங் கொழித்துத்
தூநி றப்பசுங் கனகநற் சுடர்நவ மணியால்
மீனு றுப்புற அமைத்துல கடங்கலும் விலையாம்
பான்மை அற்புதப் படியதொன் றிடுவலைப் படுத்தார். ௧௫

வாங்கு நீள்வலை அலைகடற் †கரையில்வந் தேற
ஓங்கு செஞ்சுடர் உதித்தென உலகெலாம் வியப்பத்
தாங்கு பேரொளி தழைத்திடக் காண்டலும் எடுத்துப்
பாங்கு நின்றவர் "மீனொன்று படுத்தனம்" என்றார். ௧௬

என்று மற்றுளோர் இயம்பவும் ஏறுசீர்த் தொண்டர்
"பொன்தி ரள்சுடர் நவமணி பொலிந்தமீன் உறுப்பால்
ஒன்றும் மற்றிது என்னையா ளுடையவர்க் காகும்
சென்று பொற்கழல் சேர்"கெனத் திரையொடுந் திரித்தார். ௧௭

---

௧௨. வாகு - ஒழுங்கு. அடுத்து அநேக நாள் ஒரு மீனே மேக நீர் படி கடலில் அகப்பட.

௧௩. மீன்...மறுத்தலின் - மீன் விற்றலால் பெருகிய உணவுப் பொருளுடன், மிகுந்து கிடைக்குஞ் செல்வப் பொருளும் தடைபட்டமையால். கிளை சாம்பும் - சுற்றம் வருந்தும். ௧௪. அயர்த்து - மறந்து ; இழந்து.

௧௫. பசுங் கனகம் - பசும் பொன். விற்றால் உலகு அடங்கலும் விலையாகும்.......அற்புதத் தகுதி வாய்ந்த மீன் ஒன்று.......

௧௭. ஒன்றும் - பொருந்திய. திரையொடுந் திரித்தார் - அலையில் விடுத்தார்.

பா - ம்—*அடுத்தடுத் தொருமீன். †திரையில்.

அகில லோகமும் பொருள்முதற் ருமெனும் அளவில்
புகலும் அப்பெரும் பற்றினைப் புரையற எறிந்த
இகலில் மெய்த்திருத் தொண்டர்முன் இறைவர்தாம் விடைமேல்
முகில்வி சும்பிடை அணைந்தனர் பொழிந்தனர் முகைப்பூ. கஅ

பஞ்ச நாதமும் எழுந்தன அதிபத்தர் பணிந்தே
அஞ்ச லிக்கரஞ் சிரமிசை அணைத்துநின் றவரை
நஞ்சு வாண்மணி மிடற்றவர் சிவலோகம் நண்ணி
அஞ்சி றப்புடை அடியர்பாங் குறத்தலை அளித்தார். ககூ

தம்ம றம்புரி மரபினில் தகும்பெருந் தொண்டு
மெய்ம்மை யேபுரி அதிபத்தர் விளங்குதாள் வணங்கி
மும்மை யாகிய புவனங்கள் முறைமையிற் போற்றும்
செம்மை நீதியார் கலிக்கம்பர் திருத்தொண்டு பகர்வாம். உO

திருவிருத்தம் - ௩,0கசு.

---

சோழ நாட்டிலே, நாகப்பட்டினத்திலே, நுளைப்பாடியிலே, வலைஞர் குலத்திலே பிறந்தவர் **அதிபத்த** நாயனார் என்பவர். அவர், பரதவர்களுக்குத் தலைவர்; சிவபத்தியில் சிறந்தவர். வலைப்படும் மீன்களில் ஒரு தலை மீனைச் சிவ பெருமானுக்கென்று கடலிலே விடுவது அவரது வழக்கம். வலையில் ஒரே மீன்படினும், அதனைச் சிவபெருமானுக் கென்றே அவர் கடலில் விடுவார்.

சிவபெருமான் திருவருளால் நாடோறும் ஒவ்வொரு மீனே கிடைப்ப தாயிற்று. வழக்கம்போல அதிபத்தர் அதனைக் கடலிலே விட்டு வந்தார். நாயனார் செல்வஞ் சுருங்கிற்று. சுற்றங்கள் உணவின்றி வருந்தின. உண வின்மையால் நாயனார் திருமேனியும் மெலிந்தது. அது குறித்து அவர் வருந் துவதில்லை. சிவபத்தியில் மட்டும் நாயனார்க்குத் தளர்ச்சி தோன்றவேயில்லை.

ஒருநாள் வலையில் பொன் மீன் ஒன்றே அகப்பட்டது. அதை வலைஞர்கள், நாயனார் முன்னிலையில் கொண்டுவந்தார்கள். நாயனார், அதைக் கண்டு, "இஃ தென்ன பொன் மீன்! உறுப்புக்களிலும் நவமணிகள் அமைந்திருக்கின்றன. இது சிவபெருமானுக்கு ஆக" என்று அதனையும் கடலிலே விடுத்தார்.

அப்பொழுது சிவபெருமான் நாயனாருக்குக் காட்சியளித்தார். நாயனார் அகங்குழைந்து சிவபெருமானைத் தொழுதார். சிவபெருமான் அவருக்குச் சிவலோக வாழ்வு தந்தருளினார்.

---

கஅ. புரையற - களங்கமற. இகலில் - மாறுபாடில்லாத. எல்லா உலகமும் பொருளையே முதலாக உடையனவாம் என்று பிரமாணத்துடன் சொல்லப் படும் அப்பொருளின் பெரும்பற்றினை ஒழித்த பெரியாராயினார் அதிபத்த ரென்க.

ககூ. பஞ்சநாதமும் - ஐவகைத் துந்துபியும். அம் - அழகிய. நின்றவரை - நின்றவர்க்கு. தலை அளித்தார் - தலையளி செய்தார். வாழ்மணி.

உO. மறம் புரி - கொலைத் தொழில் புரியும்.

பா - ம்—*தகு.

# கலிக்கம்ப நாயனார் புராணம்

உரிமை ஒழுக்கந் தலைநின்ற உயர்தொன் மரபில் நீடுமனைத்
தரும நெறியால் வாழ்குடிகள் தழைத்து வளருந் தன்மையதாய்
வருமஞ் சுறையும் மலர்ச்சோலை மருங்கு சூழ்ந்த வளம்புறவில்
பெருமை யுலகு பெறவிளங்கும் மேல்பாற் பெண்ணா கடமூதூர். க

மற்றப் பதியி னிடைவாழும் வணிகர் குலத்து வந்துதித்தார்
கற்றைச் சடையார் கழற்காத லுடனே வளர்ந்த கருத்துடையார்
அற்றைக் கன்று தூங்கானை மாடத் தமர்ந்தார் அடித்தொண்டு
பற்றிப் பணிசெய் கலிக்கம்பர் என்பார் மற்றோர் பற்றில்லார். உ

ஆன அன்பர் தாமென்றும் அரனார் அன்பர்க் கமுதுசெய
மேன்மை விளங்கு போனகமும் விரும்பு கறிநெய் தயிர்தீம்பால்
தேனின் இனிய கனிகட்டி திருந்த அமுது செய்வித்தே
ஏனை நிதியம் வேண்டுவன எல்லாம் இன்ப முறஅளிப்பார். ௩

அன்ன வகையால் திருத்தொண்டு புரியு நாளில் அங்கொருநாள்
மன்னு மனையில் அமுதுசெய வந்த தொண்டர் தமைஎல்லாம்
தொன்மை †முறையே அமுதுசெயத் தொடங்கு விப்பார் அவர்தம்மை
முன்னர் அழைத்துத் திருவடிகள் எல்லாம் விளக்க முயல்கின்றார். ௪

திருந்து மனையார் மனையெல்லாந் திகழ விளக்கிப் போனகமும்
பொருந்து சுவையிற் கறியமுதும் புனிதத் தண்ணீ ருடன்மற்றும்
அருந்தும் இயல்பில் உள்ளனவும் அமைத்துக் கரக நீரளிக்க
விரும்பு கணவர் பெருந்தவர்தாள் எல்லாம் விளக்கும் பொழுதின்கண்.

முன்பு தமக்குப் பணிசெய்யுந் தமராய் ஏவல் முனிந்துபோய்
என்பும் அரவும் அணிந்தபிரான் அடியா ராகி அங்கெய்தும்
அன்ப ருடனே திருவேடந் தாங்கி அணைந்தார் ஒருவர்தாம்
பின்பு வந்து தோன்றஅவர் பாதம் விளக்கும் பெருந்தகையார். ௬

---

க. மஞ்சு உறையும் - மேகம் படியும். புறவில் - முல்லைநிலத்தில். பெண்ணும் ஆவும் கடமும் (யானையும்) பூசித்தது பெண்ணாகடம்.

உ. அன்றைக் கன்று. 'அற்றைக்கு - மறுமைக்கு' என்பர் பழைய குறிப்புரையாசிரியர். ௩. போனகமும் - சோறும். கட்டி - கற்கண்டு.

௬. தமராய் - உறவினராய். ஏவல் முனிந்துபோய் - பணிவிடையை வெறுத்துச் சென்று. நாணத்தால் பின்பு வந்தார் போலும்!

பா - ம்—*அற்றைக்கென்று. †முறைமை.

கையால் அவர்தம் அடிபிடிக்கக் காதல் மனையார் "முன்பேவல்
செய்யா தகன்ற தமர்போலும்" என்று தேரும் பொழுதுமலர்
மொய்யார் வாசக் கரகநீர் வார்க்க முட்ட முதற்றொண்டர்
மையார் கூந்தல் மனையாரைப் பார்த்து மனத்துட் கருதுவார். எ

"வெறித்த கொன்றை முடியார்தம் அடியார் இவர்முன் மேவுநிலை
குறித்து வெள்கி நீர்வாரா தொழிந்தாள்" என்று மனங்கொண்டு
மறித்து நோக்கார் வடிவாளை வாங்கிக் கரகம் *வாங்கிக்கை
†தறித்துக் கரக நீரெடுத்துத் தாமே அவர்தாள் விளக்கினார். அ

விளக்கி அமுது செய்வதற்கு வேண்டு வனதா மேசெய்து
துளக்கில் சிந்தை யுடன்தொண்டர் தம்மை அமுது செய்வித்தார்
அளப்பில் பெருமை யவர்பின்னும் அடுத்த தொண்டின் வழிநின்று
களத்தில் நஞ்சம் அணிந்தவர்தாள் நிழற்கீழ் அடியா ருடன்கலந்தார்.

ஓத மலிநீர் விடமுண்டார் அடியார் வேடம் என்றுணரா
மாத ரார்கை தடிந்தகலிக் கம்பர் மலர்ச்சே வடிவணங்கிப்
பூத நாதர் திருத்தொண்டு புரிந்து புவனங் களிற்பொலிந்த
காத லன்பர் கலிநீதி யார்தம் பெருமை கட்டுரைப்பாம். கo

ஆ திருவிருத்தம்-ச,oஉகூ.

---

**கலிக்கம்ப நாயனார்** திருப்பெண்ணாகடத்திலே, வணிகர் குலத்திலே பிறந்தவர். அவர், திருத்தூங்கானை மாடத்துள் வீற்றிருந்தருளுஞ் சிவக் கொழுந்தை வழிபடுவார்; சிவனடியார்களுக்கு அமுது செய்விப்பார்.

ஒருநாள், நாயனார் வழக்கப்படி அடியவர்களை அமுது செய்விக்க அழைத்து வந்தார். நாயகியார் கரகநீர்வார்க்க, நாயனார் அடியவர்களுடைய திருவடிகளை விளக்கி வந்தார். அவ்வடியவருள் ஒருவர், நாயனாரிடம் பணிசெய்தவர். அவர், முனிவால் பணிவிடுத்துச் சென்றவர். கலிக்கம்பர், அவ்வடியவர் திருவடிகளை விளக்கப் புகுந்தார். அப்பொழுது அம்மையார், "இவர் நம்மிடத்தில் முன்னே பணிசெய்து போனவர் போலும்!" என்று எண்ணினார். அதனால், கரகநீர் வார்க்கச் சிறிது நேரந்தாழ்த்தது. இதை யுணர்ந்த நாயனார், "இவருடைய முன் நிலையைக் குறித்து இவள் வெள்குகிறாள்" என்று கருதி, வாளாயுதத்தை எடுத்தார்; கரகத்தை வாங்கிக் கீழே வைத்தார்; அம்மையார் திருக்கரத்தைத் துணித்தார்; பின்னர்த் தாமே கரகநீர் விடுத்து அடியவர் திருவடியை விளக்கினார்; அவரையும், மற்றவர்களையும் அமுது செய்வித்தார். இம் முறையில் கலிக்கம்ப நாயனார் திருத்தொண்டு செய்து வாழ்ந்து சிவனடி சேர்ந்தார்.

---

எ. தேரும் - ஆராயும். முட்ட - தாமதமாக.

அ. வெறித்த - வாசனையுடைய. மறித்து - மீண்டும். கரகம் - கரகநீர்.

க. துளக்கில் - அசைவில்லாத. கo. ஓதம் மலிநீர் - கடல்.

பா - ம்—*பிடித்தகை. †தறித்தக் கரக நீரேந்தி

# கலிய நாயனார் புராணம்

பேருலகில் ஓங்குபுகழ்ப் பெருந்தொண்டை நன்னாட்டு
நீருலவுஞ் சடைக்கற்றை நிருத்தர்திருப் பதியாகும்
காருலவு மலர்ச்சோலைக் கன்னிமதில் புடைசூழ்ந்து
தேருலவு நெடுவீதி சிறந்ததிரு ஒற்றியூர். க

*பீடுகெழும் பெருந்தெருவும் புத்தருடன் பிலிஅமண்
வேடமுடை யவர்பொருள்போல் ஆகாச வெளிமறைக்கும்
ஆடுகொடி மணிநெடுமா ளிகைநிரைகள் அலைகமுகின்
காடனைய கடல்படப்பை எனவிளங்குங் கவின்காட்டும். உ

பன்னுதிருப் பதிகஇசைப் பாட்டோவா மண்டபங்கள்
அன்னநடை மடவார்கள் ஆட்டோவா அணிஅரங்கு
பன்முறைதூ ரிய†முழங்கு விழவோவா பயில்வீதி
செந்நெல்அடி சிற்பிறங்கல் உணவோவா திருமடங்கள். ௩

கெழுமலர்மா தவிபுன்னை கிளைஞாழல் தளைஅவிழும்
கொழுமுகைய சண்பகங்கள் குளிர்செருந்தி வளர்கைதை
முழுமணமே முந்நீரும் கமழமலர் முருகுயிர்க்கும்
செழுநிலவின் துகளனைய மணற்பரப்புந் திருப்பரப்பு. ௪

எயிலணையும் முகில்முழக்கும் எறிதிரைவே லையின்முழக்கும்
பயில்தருபல் லியமுழக்கும் முறைதெரியாப் பதியதனுள்
வெயிலணிபன் மணிமுதலாம் விழுப்பொருளா வனவிளக்கும்
தயிலவினைத் தொழில்மரபில் சக்கரப்பா டித்தெருவு. ௫

---

க. கன்னி - அழியாத.

உ. பௌத்தரும் சமணரும் ஆகாயத்தை இன்மைப் பொருளாகக் கொள்ளுதலின் "...அவர் பொருள்போல் ஆகாயம்" என்றார். படப்பை - தோட்டம்.

௩. ஓவா - நீங்கா. அரங்கு - நடன சபையில். தூரியம் - வாத்தியம். அடிசிற்பிறங்கல் - சோற்று மலை.

௪. கெழு - பொருந்திய. மாதவி - குருக்கத்தி. ஞாழல் - குங்கும மரம்; புலிநகக் கொன்றையுமாம். தளை - கட்டு; முறுக்கு. கைதை - தாழை. முந்நீரும் - கடலும். முருகு உயிர்க்கும் - வாசனை வீசும். திருப்பரப்பு - அழகிய இடங்களிலெல்லாம்.

௫. எயில் - மதில்களில். பயில்தரு பல்லியம் - நிரம்பிய பல வாத்தியங்களின். வெயில் அணி - ஒளியுடைய.

பா - ம்—*இப்பாடல் பல பிரதிகளிலில்லை. இதனை வெள்ளிப்பாடல் என்பர் சிலர். காரைக்காலம்மையார் புராணம் : பாட்டு க. குறிப்புப் பார்க்க. †முழக்கும்.

அக்குலத்தின் செய்தவத்தால் அவனிமிசை அவதரித்தார்*
மிக்கபெருஞ் செல்வத்து மீக்கூர விளங்கினார்
தக்கபுகழ்க் கலியனார் எனுநாமந் தலைநின்றார்
முக்கண்இறை வர்க்குரிமைத் திருத்தொண்டின் நெறிமுயல்வார். ௬

†எல்லையில்பல் கோடிதனத் திறைவராய் இப்படித்தாம்
செல்வநெறிப் பயனறிந்து திருவொற்றி யூரமர்ந்த
கொல்லைமழ விடையார்தங் கோயிலின்உள் ளும்புறம்பும்
அல்லுநெடும் பகலும்இடுந் திருவிளக்கின் அணிவிளைத்தார். ௭

எண்ணில்திரு விளக்குநெடு நாளெல்லாம் எரித்துவரப்
புண்ணியமெய்த் தொண்டர்செயல் புலப்படுப்பார் அருளாலே
உண்ணிறையும் பெருஞ்செல்வம் உயர்த்தும்வினைச் செயல்ஒவி
மண்ணில்அவர் இருவினைபோல் மாண்டதுமாட் சிமைத்தாக. ௮

திருமலிசெல் வத்துழனி தேய்ந்தழிந்த பின்னையுந்தம்
பெருமைநிலைத் திருப்பணியில் பேராத பேராளர்
வருமரபில் உள்ளோர்பால் எண்ணெய்மா றிக்கொணர்ந்து
தருமியல்பிற் கூலியினால் தமதுதிருப் பணிசெய்வார். ௯

வளமுடையார் பால்எண்ணெய் கொடுபோய்மா றிக்கூலி
கொளமுயலுஞ் செய்கையும்மற் றவர்கொடா மையின்மாறத்
தளருமன முடையவர்தாஞ் சக்கரஎந் திரம்புரியும்
களனில்வரும் பணிசெய்து பெறுங்கூலி காதலித்தார். ௧௦

செக்குநிறை எள்ளாட்டிப் பதமறிந்து திலதயிலம்
பக்கமெழ மிகவுழந்தும் பாண்டில்வரும் எருதுய்த்தும்
தக்கதொழில் பெறுங்கூலி தாங்கொண்டு தாழாமை
மிக்கதிரு விளக்கிட்டார் விழுத்தொண்டு விளக்கிட்டார். ௧௧

அப்பணியால் வரும்பேறும் அவ்வினைஞர் பலருளராய்
எப்பரிசுங் கிடையாத வகைமுட்ட இடருழந்தே

---

௮. உள் நிறையும் - வீட்டிலே நிறைந்துள்ள. ஒவி - நீங்கி.

௯. துழனி - முழக்கம்.

௧௦. சக்கர எந்திரம் புரியும் களனில் - செக்காடும் இடத்தில்.

௧௧. திலதயிலம் - எள்நெய். உழந்தும் - துகைத்தும். பாண்டில் வரும் எருது உய்த்தும் - வட்டமாகச் சுற்றி வரும் எருதுகளைச் செலுத்தியும். "விளக் கிட்டார் பேறு சொல்லின் மெய்ந்நெறி ஞானமாகும்"—அப்பர்.

பா - ம்—*அவதரித்து. †எல்லைபல ; எல்லையில்லாக்.

ஒப்பில்மனை விற்றெரிக்கும் உறுபொருளும் மாண்டதற்பின்
செப்பருஞ்சீர் மனையாரை விற்பதற்குத் தேடுவார். ௧௨

மனமகிழ்ந்து மனைவியார் தமைக்கொண்டு வளநகரில்
தனமளிப்பார் தமைஎங்குங் கிடையாமற் றளர்வெய்திச்
சினவிடையார் திருக்கோயில் திருவிளக்குப் பணிமுட்டக்
கனவினுமுன் பறியாதார் கையறவால் எய்தினார். ௧௩

பணிகொள்ளும் படம்பக்க நாயகர்தங் கோயிலினுள்
அணிகொள்ளுந் திருவிளக்குப் பணிமாறும் அமையத்தில்
"மணிவண்ணச் சுடர்விளக்கு மாளில்யான் மாள்வன்" எனத்
துணிவுள்ளங் கொளநினைந்தவ் வினைமுடிக்கத் தொடங்குவார். ௧௪

திருவிளக்குத் திரிஇட்டங் ககல்பரப்பிச் செயல்நிரம்ப
ஒருவிய*எண் ணெய்க்கீடா உடல்உதிரங் கொடுநிறைக்கக்
கருவியினால் மிடறரிய, அக்கையைக் கண்ணுதலார்
பெருகுதிருக் கருணையுடன் நேர்வந்து பிடித்தருளி. ௧௫

மற்றவர்தம் முன்னாக மழவிடைமேல் எழுந்தருள
உற்றவூ றதுநீங்கி †ஒளிவிளங்க உச்சியின்மேல்
பற்றியஅஞ் சலியினராய் நின்றவரைப் பரமர்தாம்
பொற்புடைய சிவபுரியில் பொலிந்திருக்க அருள்புரிந்தார். ௧௬

தேவர்பிரான் திருவிளக்குச் செயல்முட்ட மிடறரிந்து
மேவரிய வினைமுடித்தார் கழல்வணங்கி வியனுலகில்
யாவரொரு தானடியார் தமைஇகழ்ந்து பேசினரை
நாவரியுஞ் சத்தியார் திருத்தொண்டின் நலமுரைப்பாம். ௧௭

ஆக திருவிருத்தம் - ௪0௪௩

---

தொண்டை நாட்டிலே உள்ள சிறந்த திருப்பதிகளுள் திருவொற்றியூரும் ஒன்று. அவ்வூரில் பல தெருக்கள் உண்டு. அவைகளில் ஒன்று சக்கரப் பாடித் தெரு. அத்தெருவிலே, செக்கார் குலத்திலே பிறந்தவர் **கலியநாயனார்** என்பவர். திருக்கோயிலின் உள்ளும் புறமும் அல்லும் பகலும் திருவிளக் கேற்றுவது அவர்தம் திருத்தொண்டு.

---

௧௨. இடர் உழந்து - இடரால் வருந்தி.

௧௩. கையறவால் - செயலற்ற தன்மையால்.

௧௪. படம்பக்க நாயகர் - திருவொற்றியூர் ஆண்டவன் பெயர். திருவிளக்கு எரிக்குஞ் சமயத்தில். ௧௫. ஒருவிய - கிடையாதொழிந்த.

பா - ம்—*எண் ணெய்க்குடமா, †ஒளிவிளங்கும்.

கலியநாயனாருடைய அன்பின் திறத்தை உலகத்திற்கு வெளிப்படுத்தச் சிவ பெருமான் திருவுளங் கொண்டார். அதனால் நாயனாரது செல்வநிலை சுருங்க லாயிற்று. சுருங்கியும், நாயனார் தொண்டில் உறைந்தே நின்றார். அவர், தம் மரபினர்பால் கூலிக்கு எண்ணெய் வாங்கி விற்றுத் திருவிளக்கிட்டு வந்தார். மரபினர் எண்ணெய் கொடுத்தலை நிறுத்தி விட்டனர். நாயனார் தளர்ச்சி யடைந்தாரில்லை.

நாயனார், செக்காட்டும் இடத்திற்குப் போவார்; அங்கே எள்ளிடு வார்; எண்ணெ யெடுப்பார்; எருது ஓட்டுவார்; இத்தொழில்களைச் செய்து கூலி பெற்றுத் திருவிளக்கேற்றுவார். தொழிலாளர் கூட்டம் நாளுக்கு நாள் பெருகலாயிற்று. அதனால் நாயனார்க்குத் தொழில் கிடைத்தலே அருமையாகி விட்டது.

நாயனார், தமக்கு உரிய பொருள்களை எல்லாம் விற்றுவிற்றுத் தொண்டாற்றி வந்தார். பொருளெல்லாம் பொன்றின. நாயனார்க்கு ஒன்றுந் தோன்றவில்லை. நாயனார், தம் மனைவியாரை விற்கத் துணிவுகொண்டார்; நகரெங்கும் விலைகூறி னார்; வாங்குவாரில்லை; மனந்தளர்ந்து திருக்கோயிலை அடைந்தார்; திருவிளக்குத் தொண்டில் தலைப்பட்டார்; "தொண்டுக்கு இடையூறு நேரின், யான் இறப் பேன்" என்று உறுதி கொண்டார்; அவ்வுறுதியுடன் அகல்களுக்குத் திரி யிட்டார்; அவைகளைப் பரப்பினார்; எண்ணெய்க்கு என் செய்வார்! தமது உதிரத்தை அகல்களில் நிரப்பக் கருவிகொண்டு கழுத்தை அரியலானார். அவ் வேளையில் கலியநாயனாரது அன்பாக விளங்குஞ் சிவபெருமான், அவ ருடைய கையைப் பிடித்தார்; மழவிடைமேல் காட்சி வழங்கினார். நாயனாரின் ஊறு நீங்கிற்று. நாயனார், சிவபெருமானைக் கும்பிட்டு நின்றார். சிவபெரு மான், நாயனாருக்குச் சிவபதம் அளித்தார்.

# சத்தி நாயனார் புராணம்

களமர் கட்ட கமலம் பொழிந்ததேன்
குளநி றைப்பது கோலொன் றிலெண் டிசை
அளவும் *ஆணைச் சயத்தம்பம் நாட்டிய
வளவர் காவிரி நாட்டு வரிஞ்சையூர். ௧

வரிஞ்சை யூரினில் வாய்மைவே ளாண்குலம்
பெருஞ்சி றப்புப் பெறப்பிறப் பெய்தினார்
விரிஞ்சன் மால்முதல் விண்ணவர் எண்ணவும்
அருஞ்சி லம்பணி சேவடிக் காட்செய்வார். ௨

அத்த ராகிய அங்கணர் அன்பரை
இத்த லத்தில் இகழ்ந்தியம் பும்உரை

௧. களமர் கட்ட - உழவர்களால் களையப்பட்ட. கோல் - செங்கோல்.

பா - ம்—*ஆண்டுச் செயத்தறி.

வைத்த நாவை வலித்தரி சத்தியால்
சத்தி யார்எனும் *நாமமும் தாங்கினர். ங

தீங்கு சொற்ற திருவிலர் நாவினை
வாங்க வாங்குதண் டாயத்தி னல்வலித்
தாங்க யிற்கத்தி யால்அரிந் தன்புடன்
ஓங்கு சீர்த்திருத் தொண்டி னுயர்ந்தனர். ச

அன்ன தாகிய ஆண்மைத் திருப்பணி
மன்னு பேருல கத்தில் வலியுடன்
பன்னெ டும்பெரு நாள்பரி வாற்செய்து
சென்னி ஆற்றினர் செங்நெறி ஆற்றினர். ரு

ஐய மின்றி அரிய திருப்பணி
மெய்யி னற்செய்த வீரத் திருத்தொண்டர்
வைய முய்ய மணிமன்று ளாடுவார்
செய்ய பாதத் திருநிழல் சேர்ந்தனர். சு

நாய னர்தொண் டைநலங் கூறலார்
சாய நாவரி சத்தியார் தாள்பணிந்
தாய மாதவத் தையடி கள்எனுந்
தூய காடவர் தந்திறஞ் சொல்லுவாம். எ

ஆ திருவிருத்தம் - சOஙி0

---

சோழ நாட்டிலே, வரிஞ்சையூரிலே, வேளாளர் குலத்திலே தோன்றிய வர் சத்தி நாயனர். அவர், சிவனடியார்களை இகழ்வோருடைய நாவினைத் தண்டாயத்தினல் வலிப்பார்; கத்தியினல் அறுப்பார். இச்சக்தி வாய்ந்தமையால் அவர்,சத்தி நாயனர் என்னப்பட்டார். அவர் இச்செயலையே பெருந்தொண்டாக்கொண்டு வாழ்ந்து சிவபெருமான் திருவடிநீழலையடைந்தார்.



---

ச. தண்டாயம் - குறடு போன்ற தொருகருவி. அயில் - கூரிய.
ரு. சென்னி ஆற்றினர் - சிவபெருமானது.
எ. நாயனர் - சிவபிரானுடைய.
பா - ம்—*நாமந் தரித்துளார்.

# ஐயடிகள்காடவர்கோன் நாயனார் புராணம்

வையகநிகழ் பல்லவர்தங் குலமரபின் வழித்தோன்றி
வெய்யகலி யும்பகையும் மிகையொழியும் வகைஅடக்கிச்
செய்யசடை யவர்சைவத் திருநெறியால் அரசளிப்பார்
ஐயடிகள் நீதியால் அடிப்படுத்துஞ் செங்கோலார். க

திருமலியும் புகழ்விளங்கச் சேணிலத்தில் எவ்வுயிரும்
பெருமையுடன் இனிதமரப் பிறபுலங்கள் அடிப்படுத்துத்
தருமநெறி தழைத்தோங்கத் தாரணிமேற் சைவமுடன்
அருமறையின் துறைவிளங்க அரசளிக்கும் அந்நாளில். உ

மன்னவரும் பணிசெய்ய வடநூல்தென் தமிழ்முதலாம்
பன்னுகலைப் பணிசெய்யப் பாரளிப்பார் "அரசாட்சி
இன்னல்" என இகழ்ந்ததனை எழிற்குமரன் மேலிழிச்சி
நன்மைநெறித் திருத்தொண்டு நயந்தளிப்பா ராயினார். ங

தொண்டுரிமை புரக்கின்றார் சூழ்வேலை உலகின்கண்
அண்டர்பிரான் அமர்ந்தருளும் ஆலயங்க ளானஎலாம்
கண்டிறைஞ்சித் திருத்தொண்டின் கடனேற்ற பணிசெய்தே
வண்தமிழின் மொழிவெண்பா ஓரொன்று வழுத்துவார். ச

பெருத்தெழுகா தலில்வணங்கிப் பெரும்பற்றத் தண்புலியூர்த்
திருச்சிற்றம் பலத்தாடல் புரிந்தருளுஞ் செய்யசடை
நிருத்தனார் திருக்கூத்து நேர்ந்திறைஞ்சி நெடுந்தகையார்
விருப்பினுடன் செந்தமிழின் வெண்பாமென் மலர்புனைந்தார். ரு

"ஓடுகின்ற நீர்மை ஒழிதலுமே உற்றாரும்
கோடுகின்றார் மூப்புங் குறுகிற்று - நாடுகின்ற
நல்லச்சிற் றம்பலமே நண்ணாமுன் நன்னெஞ்சே
தில்லைச்சிற் றம்பலமே சேர்"—ஐயடிகள்.

அவ்வகையால் அருள்பெற்றங் கமர்ந்துசில நாள்வைகி
இவ்வுலகில் தம்பெருமான் கோயில்களெல் லாமெய்திச்
செவ்வியஅன் பொடுபணிந்து திருப்பணியற் றனசெய்தே
எவ்வுலகும் புகழ்ந்தேத்தும் இன்தமிழ்வெண் பாமொழிந்தார். சு

க. நீதியால் உலகை அடிப்படுத்தும்.
உ. சேண் நிலத்தில் - தூரதேசத்திலும். ங. இழிச்சி - இறக்கி.

இந்நெறியால் அரனடியார் இன்பமுற இசைந்தபணி
பன்னெடுநாள் ஆற்றியபின் பரமர்திரு வடிநிழற்கீழ்
மன்னுசிவ லோகத்து வழிஅன்பர் மருங்கணைந்தார்
கன்னிமதில் சூழ்காஞ்சிக் காடவரை அடிகளார். எ

பையரவ மணியாரம் அணிந்தார்க்குப் பாவணிந்த
ஐயடிகள் காடவனூர் அடியிணைத்தா மரைவணங்கிக்
கையணிமான் மழுவுடையார் கழல்பணிசிந் தனையுடைய
செய்தவத்துக் கணம்புல்லர் திருத்தொண்டு விரித்துரைப்பாம். அ

உளத்திலொரு துளக்கமிலோம் உலகுய்ய இருண்டதிருக்
களத்துமுது குன்றர்தரு கனகம்ஆற் றினிலிட்டு
வளத்தின்மலிந் தேழுலகும் வணங்குபெருந் திருவாரூர்க்
குளத்திலெடுத் தார்வினையின் குழிவாய்நின் றெனைஎடுத்தார். க

ஆ திருவிருத்தம் - ௪0௫௧.

---

**ஐயடிகள் காடவர்கோன் நாயனார்**, காஞ்சிபுரத்திலே, பல்லவர்குலத்திலே தோன்றியவர்; 'எல்லா உயிர்களும் இன்பம் நுகர்தல் வேண்டும்' என்னும் பெருங் கொள்கையுடையவர். அக்கொள்கையின் பொருட்டு அவர் பல நாடுகளைத் தம்வயப்படுத்தினர்.

ஐயடிகளின் ஆட்சியில் சைவந் தழைத்தது; கலைகள் பெருகின. நாளடைவில் அடிகளுக்கு அரசாட்சியில் வெறுப்புண்டாயிற்று. அதனால் அவர், தம் புதல்வனுக்கு முடிசூட்டிச் சிதம்பரம் முதலிய திருப்பதிகளுக்குச் சென்று ஆண்டவனை வழிபட விரும்பினர்; விரும்பியவாறே செய்து, பல திருப்பதிகளுக்குச்சென்றார். அடிகள், ஒவ்வொரு திருப்பதிக்கு ஒவ்வொரு வெண்பா பாடினர்; இவ்வாறு சிவபணி செய்து சிவலோகஞ் சேர்ந்தார்.

---

க. துளக்கம் இலோம் - நடுக்கம் இல்லோம்.

## ௯. கறைக்கண்டன் சருக்கம்

# கணம்புல்ல நாயனார் புராணம்

திருக்கிளர்சீர் மாடங்கள் திருந்துபெருங் குடிநெருங்கிப்
பெருக்குவட வெள்ளாற்றுத் தென்கரைப்பால் பிறங்குபொழில்
வருக்கைநெடுஞ் சுளைபொழிதேன் மடுநிறைத்து வயல்விளைக்கும்
இருக்குவே ளூரென்ப திவ்வுலகில் விளங்குபதி. ௧

அப்பதியில் குடிமுதல்வர்க் கதிபராய் அளவிறந்த
எப்பொருளும் முடிவறியா எய்துபெருஞ் செல்வத்தார்
ஒப்பில்பெருங் குணத்தினால் உலகின்மேம் படநிகழ்ந்தார்
"மெய்ப்பொருளா வனஈசர் கழல்" என்னும் விருப்புடையார். ௨

"தாவாத பெருஞ்செல்வந் தலைநின்ற பயன்இது" என்
றோவாத ஒளிவிளக்குச் சிவன்கோயி லுள்ளெரித்து
நாவாரப் பரவுவார் நல்குரவு வந்தெய்தத்
தேவாதி தேவர்பிரான் திருத்தில்லை சென்றடைந்தார். ௩

தில்லைநகர் மணிமன்றுள் ஆடுகின்ற சேவடிகள்
அல்கியஅன் புடனிறைஞ்சி அமர்கின்றார் புரமெரித்த
வில்லியார் திருப்புலீச் சரத்தின்கண் விளக்கெரிக்க
இல்லிடைஉள் ளனமாறி எரித்துவரும் அந்நாளில். ௪

ஆயசெயல் மாண்டதற்பின் அயலவர்பால் இரப்பஞ்சிக்
காயமுயற் சியில்அரிந்த கணம்புல்லுக் கொடுவந்து
மேயவிலைக் குக்கொடுத்து விலைப்பொருளால் நெய்மாறித்
தூயதிரு விளக்கெரித்தார் துளக்கறுமெய்த் தொண்டனார். ௫

இவ்வகையால் திருந்துவிளக் கெரித்துவர அங்கொருநாள்
மெய்வருந்தி அரிந்தெடுத்துக் கொடுவந்து விற்கும்புல்
எவ்விடத்தும் விலைபோகா தொழியவும்இப் பணியொழியார்
அவ்வரிபுல் லினைமாட்டி அணிவிளக்கா யிடஎரிப்பார். ௬

---

௧. வருக்கை - பலாவின்.

௩. தாவாத - கெடாத. ஓவாத - நீங்காத. நல்குரவு - வறுமை.

௪. அல்கிய - நிலைபேறான.

௫. காயமுயற்சியில் - சரீர உழைப்பால். கணம்புல் - ஒருவகைப் புல்.

முன்புதிரு விளக்கெரிக்கும் முறையாமங் குறையாமல்
மென்புல்லும் விளக்கெரிக்கப் போதாமை மெய்யான
அன்புபுரி வார்அடுத்த விளக்குத்தந் திருமுடியை
என்புருக மடுத்தெரித்தார் இருவினையின் தொடக்கெரித்தார். ௭

தங்கள்பிரான் திருவுள்ளஞ் செய்துதலைத் திருவிளக்குப்
பொங்கியஅன் புடன்எரித்த பொருவில்திருத் தொண்டருக்கு
மங்கலமாம் பெருங்கருணை வைத்தருளச் சிவலோகத்
தெங்கள்பிரான் கணம்புல்லர் இனிதிறைஞ்சி அமர்ந்திருந்தார். ௮

பூரியார் கலியுலகின் முடியிட்ட திருவிளக்குப்
பேரியா றணிந்தாருக் கெரித்தார்தங் கழல்பேணி
வேரியார் மலர்ச்சோலை விளங்குதிருக் கடவூரில்
காரியார் தாஞ்செய்த திருத்தொண்டு கட்டுரைப்பாம். ௯

ஆக திருவிருத்தம் - ௪0௬௮

---

வட வெள்ளாற்றுக்குத் தென்கரையிலே இருக்குவேளூர் என்றொரு பதியுண்டு. அப்பதியிலே ஒரு பெரியவர் இருந்தார். அவர் செல்வர். 'செல்வத்தினலாகிய பயன், திருக்கோயிலில் திருவிளக் கெரித்தல்' என்னும் உறுதி அவருக்குத் தோன்றிற்று. அவ்வுறுதிப்படி, அவர், அத்திருத் தொண்டைச் செய்து வந்தார். அவருக்குத் திருவருளால் வறுமை நேர்ந்தது. அதனால் அவர், தில்லையம்பதியை அடைந்தார்; தில்லைக்கூத்தனை வழிபட்டுத், தமது வீட்டுப்பொருள்களை விற்று விற்றுத் தமது திருத்தொண்டை வழாது நிகழ்த்தலானார். பொருளெல்லாம் ஒழிந்தன.

நாயனார் இரத்தலை விரும்பவில்லை. அவர் கணம்புற்களை அறுப்பார்; விற்பார்; கிடைக்கும் பொருளைக் கொண்டு திருத்தொண்டு செய்வார். அதனால் அவர்க்குக் **கணம்புல்லர்** என்னும் பெயருண்டாயிற்று. ஒருநாள், ஆண்டவன் அருளால் புற்கள் விலைப்படவில்லை. கணம்புல்லர் சோர்வடையாது, அப்புற்களைத் திரித்து விளக்கெரித்தார். புற்கள் போதவில்லை. நாயனார் என் செய்தார்? அவர், தமது திருமுடியை அன்போடு மடுத்து எரித்தார். அக்காட்சி கண்ட சிவபெருமான், அவருக்குத் திருவருள் செய்தார். கணம்புல்ல நாயனார் சிவலோகஞ் சேர்ந்தார்.

---

௯. பூரி ஆர்கலி - பெரிய கடல் சூழ்ந்த.

# காரி நாயனார் புராணம்

மறையாளர் திருக்கடவூர் வந்துதித்து வண்தமிழின்
துறையான பயன்தெரிந்து சொல்விளங்கிப் பொருள்மறையக்
குறையாத தமிழ்க்கோவை தம்பெயராற் குலவும்வகை
முறையாலே தொகுத்தமைத்து மூவேந்தர் பால்பயில்வார். க

அங்கவர்தாம் மகிழும்வகை அடுத்தவுரை நயமாக்கிக்
கொங்கலர்தார் மன்னவர்பால் பெற்றநிதிக் குவைகொண்டு
வெங்கண்அரா வொடுகிடந்து விளங்கும்இளம் பிறைச்சென்னிச்
சங்கரனார் இனிதமருந் தானங்கள் பலசமைத்தார். உ

யாவர்க்கும் மனமுவக்கும் இன்பமொழிப் பயனியம்பித்
தேவர்க்கு முதற்றேவர் சீரடியார் எல்லார்க்கும்
மேவுற்ற இருநிதியம் மிகஅளித்து விடையவர்தம்
காவுற்ற திருக்கயிலை மறவாத கருத்தினராய். ௩

ஏய்ந்தகடல் சூழுலகில் எங்குந்தம் இசைநிறுத்தி
ஆய்ந்தவுணர் விடையருள அன்பினராய் அணிகங்கை
தோய்ந்தநெடுஞ் சடையார்தம் அருள்பெற்ற தொடர்பினால்
வாய்ந்தமனம் போலுடம்பும் வடகயிலை மலைசேர்ந்தார். ௪

வேரியார் மலர்க்கொன்றை வேணியார் அடிபேணும்
காரியார் கழல்வணங்கி அவரளித்த கருணையினால்
வாரியார் மதயானை வழுதியர்தம் மதிமரபில்
சீரியார் நெடுமாறர் திருத்தொண்டு செப்புவாம். ௫

ஆ திருவிருத்தம் - ௪,0௭௩

---

**காரி நாயனார்** திருக்கடவூரிலே பிறந்தவர்; தமிழ் மொழியிலே பெரும் புலமை வாய்ந்தவர்; திருக்கயிலையை மறவாதவர். கோவை பாடுவது அவர்தம் வழக்கம். அதன்கண் சொல் விளங்கும்; பொருள் நிறைந்திருக்கும்.

காரியார், சேரசோழ பாண்டியர்களிடம்செல்வார்; தம்பாக்கட்குப் பொருள் விரிப்பார். அவர்கள் மகிழ்வெய்திப் பொருள் கொடுப்பார்கள். அப்பொருளைக் கொண்டு காரியார்திருக்கோயில்கள்கட்டுவிப்பார்; சிவனடியார்களுக்கு உதவுவார். இவ்வாறு, காரிநாயனார் தொண்டுசெய்து, உலகமெல்லாந் தம் புகழை நிறுத்தித் திருக்கயிலை சேர்ந்தார்.

---

க. காரிக்கோவை. மூவேந்தரிடஞ் செல்வாராய்.

உ. உரையை நயம்பட விளக்கி. தானங்கள் - கோயில்கள்.

௩. விடையவர்தம் - சிவபிரானது. காவுற்ற - சோலை சூழ்ந்த.

௫. மதவாரிஆர் - மதப்பெருக்கு நிறைந்த. வழுதியர்தம் மதிமரபில் - பாண்டியர்களின் சந்திரவமிசத்தில் தோன்றிய.

# நின்றசீர் நெடுமாற நாயனார் புராணம்

தடுமாறு நெறியதனைத் தவமென்று தம்முடலை
அடுமாறு செய்தொழுகும் அமண்வலையில் அகப்பட்டு
விடுமாறு தமிழ்விரகர் வினைமாறுங் கழலடைந்த
நெடுமாற னார்பெருமை உலகேழும் நிகழ்ந்ததால்.

அந்நாளில் ஆளுடைய பிள்ளையார் அருளாலே
தென்னாடு சிவம்பெருகச் செங்கோல்உய்த் தறம்†அளித்துச்
சொன்னாம நெறிபோற்றிச் சுரர்நகர்க்கோன் தனைக்கொண்ட
பொன்னாரம் அணிமார்பிற் புரவலனார் பொலிகின்றார்.

ஆயஅர சளிப்பார்பால் அமர்வேண்டி வந்தேற்ற
சேயபுலத் தெவ்வரெதிர் நெல்வேலிச் செருக்களத்துப்
பாயபடைக் கடல்முடுகும் பரிமாவின் பெருவெள்ளம்
காயுமதக் களிற்றின்நிரை பரப்பிஅமர் கடக்கின்றார். ௩

---

க. திகம்பர சமணர்கள் இயற்கைவாழ்வு செலுத்தாதவர்களாதலின், அவர்கள், தங்கள் உடலையும் ஒறுத்துக்கொண்டார்கள். அஃது இங்கே "தம்முடலை அடுமாறு செய்தொழுகும் அமண்" என்று குறிக்கப்பட்டது. உடல், அறிவு விளக்கத்துக்கென ஆண்டவனால் கொடுக்கப்பட்ட உடைமை. அதனை ஒறுத்தல் அருள்நெறி நிற்பதாகாது; "உடம்பார் அழியில் உயிரார் அழிவர், திடம்பட மெய்ஞ்ஞானஞ் சேரவு மாட்டார், உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே, உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே"—**திருமூலர்.** தமிழ்விரகர் - ஞானசம்பந்தராது. வினைமாறும் - இருவினையைப் போக்கும்.

உ. சொல்நாமநெறி - போற்றப்படும் புகழ் வாய்ந்த நெறி; புகழ் வாய்ந்த ஐந்தெழுத்து நெறி என்னலுமாம். சுரர்நகர்க்கோன்தனைக் கொண்ட - இந்திரனால் அளிக்கப்பெற்ற. உக்கிரகுமார பாண்டியர் இந்திர லோகம் சென்று, இந்திரனால் மணியாரம் பெற்ற வரலாற்றைத் **திருவிளையாடற் புராணத்திற்** காண்க; "செங்கணா யிரத்தோன் திறல்விளங் காரம் - பொங்கொளி மார்பிற் பூண்டோன் வாழி"; "தேவர்கோன் பூணாரம் தென்னவர்கோன் மார்பினவே"; "வானவர்கோன் ஆரம் வயங்கியதோட் பஞ்சவன்றன்"—**சிலப்பதிகாரம்** : கக. காடு காண். உச - உரு; கஎ. ஆய்ச்சியர்குரவை. உள்வரி. க; உக. வாழ்த்துக் காதை. வள்ளைப்பாட்டு. அ.

௩. ஏற்ற - எதிர்த்த. சேய...களத்து - தூரதேச (வடபுல)த்துப் பகைவர் முன்னே திருநெல்வேலியிலுள்ள போர்க்களத்தில். பாய - பரந்த. முடுகும் பரிமாவின் - வேகமுடைய குதிரைகளின். காயும் - கோபிக்கும்.

பா - ம்—*செய்தொழுகும் அவர். †வளர்த்துச்.

எடுத்துடன்ற முனைஞாட்பின் இருபடையிற் பொருபடைஞர்
படுத்தநெடுங் கரித்துணியும் பாய்மாவின் அறுகுறையும்
அடுத்தமர்செய் வயவர்கருந் தலைமலையும் *அலைசெந்நீர்
மடுத்தகடல் மீளவுந்தாம் வடிவேல்வாங் கிடப்பெருக. ௪

வயப்பரியின் கனிப்பொலியும் மறவர்படைக் கலவொலியும்
கயப்பொருப்பின் முழக்கொலியும் கலந்தெழுபல் லியவொலியும்
வியக்குழுகக் கடைநாளின் மேகமுழக் கெனமீளச்
சயத்தொடர்வல் லியும்இன்று தாம்விடுக்கும் படிதயங்க. ௫

தீயுமிழும் படைவழங்குஞ் செருக்களத்து முருக்குமுடல்
தோயுநெடுங் குருதிமடுக் குளித்துநிணந் துய்த்தாடிப்
போயபரு வம்பணிகொள் பூதங்க ளேயன்றிப்
பேயும்அரும் பணிசெய்ய உணவளித்த தெனப்பிறங்க. ௬

இனையகடுஞ் சமர்விளைய இகலுழந்த பறந்தலையில்
பனைநெடுங்கை மதயானைப் பஞ்சவனார் படைக்குடைந்து
முனையழிந்த வடபுலத்து முதல்மன்னர் படைசரியப்
புனையுநறுந் தொடைவாகை பூழியர்வேம் புடன்புனைந்து. ௭

---

௪. எடுத்துடன்ற முனைஞாட்பின் - படையெடுத்து மாறுபட்ட போர்க்களத்தில். பொரு......மலையும் - போர்புரியுஞ் சேனைகள் வீழ்த்திய நீண்ட யானைத் துண்டங்களும், குதிரைத் துண்டங்களும், எதிர்த்துப் போர் புரியும் வீரர்களின் கரிய தலை மலைகளும். செந்நீர் மடுத்த - இரத்த வெள்ளம் நிறைந்த. கடல்......பெருக - கடலானது முன்னே உக்கிர குமார பாண்டியனரால் வேல் வாங்கியதுபோல மீண்டும் வேல் வாங்குமாறு பெருக. இவ்வரலாற்றைத் திருவிளையாடற் புராணத்திற் பார்க்க.

௫. வயம் - வெற்றியுடைய. மறவர் - வீரர்களின். கயப்பொருப்பின் - யானைகளின். பல்லியம் - பலவகை வாத்தியங்களின். சயத்தொடர் வல்லியும் - வீரச்சங்கிலி கொண்ட விலங்கையும். தயங்க - ஒலிக்க. மேக முழக்கமோ என்று எண்ணி உக்கிரகுமாரர்போல அம்மேகத்தை அடக்க மீளச் சயத் தொடர்.........

௬. குருதிமடு - இரத்த மடுவில். போய பருவம் - முன் பருவத்தே; கிடைத்த அக்காலத்தே. முருக்கும் உடல் - அழிந்த உடல்கள். பிறங்க - விளங்க.

௭. இகலுழந்த பறந்தலையில் - மாறுபட்டுப் போர் புரிந்த யுத்த களத்தில். பஞ்சவனார் - பாண்டியனார். பூழியர் - பாண்டியனார். வாகைத் தொடை - வெற்றிமாலையை. வேம்பு மாலை பாண்டியருக்குரியது.

பா - ம்—*அவர். †மீளச்.

வளவர்பிரான் திருமகளார் மங்கையருக் கரசியார்
களபமணி முலைதிளைக்குந் தடமார்பிற் கவுரியனார்
இளவளவெண் பிறைஅணிந்தார்க் கேற்றதிருத் தொண்டெல்லாம்
அளவில்புகழ் பெறவிளக்கி அருள்பெருக அரசளித்தார்.

திரைசெய்கடல் உலகின்கண் திருநீற்றின் நெறிவிளங்க
உரைசெய்பெரும் புகழ்விளக்கி ஓங்குநெடு மாறனார்
அரசுரிமை நெடுங்காலம் அளித்திறைவர் அருளாலே
பரசுபெருஞ் சிவலோகத் தின்புற்றுப் பணிந்திருந்தார். ௯

பொன்மதில்சூழ் புகலிகா வலர்அடிக்கீழ்ப் புனிதராந்
தென்மதுரை மாறனார் செங்கமலக் கழல்வணங்கிப்
பன்மணிகள் திரையோதம் பரப்புநெடுங் கடற்படப்பைத்
தொன்மயிலை வாயிலார் திருத்தொண்டின் நிலைதொழுவாம். ௧0

ஆ திருவிருத்தம் - ௩,0அ௩

---

நின்றசீர் நெடுமாறர் பாண்டி மன்னருள் ஒருவர். அவர் மங்கையர்க்கரசியாரை மனைவியாகப் பெற்றவர்; சமண சமயஞ் சார்ந்தவர்; பின்னர்த் திருஞானசம்பந்த சுவாமிகள் திருவருளால் திருநீற்று நெறியில் நின்றவர்; வடபுல மன்னரைத் திருநெல்வேலியிலே தோல்வியுறச் செய்தவர். அவர் சைவந்தழைக்க நீதி அரசியற்றிச் சிவனடி சேர்ந்தார்.

# வாயிலார் நாயனார் புராணம்

சொல்வி ளங்குசீர்த் தொண்டைநன் னாட்டிடை
மல்லல் நீடிய வாய்மை வளம்பதி
பல்பெ ருங்குடி நீடு பரம்பரைச்
செல்வம் மல்கு திருமயி லாபுரி. ௧

நீடு வேலைதன் பால்நிதி வைத்திடத்
தேடும் அப்பெருஞ் சேமவைப் பாமெனா

---

அ. வளவர் - சோழர். களபம் அணி - கலவைச் சாந்தணிந்த. கவுரியனார் - பாண்டியனார். ௯. பரசு - போற்றல் பெற்ற.

௧0. ஓதம் - கடல்வாய் வெள்ளம். "தொன்மயிலை வாயிலான்"—திருத்தொண்டத்தொகை.

பா - ம்—* இளவர.

ஆடு பூங்கொடி மாளிகை அப்பதி
மாடு தள்ளு மரக்கலச் செப்பினால். ௨

கலஞ்சொ ரிந்த கரிக்கருங் கன்றுமுந்
தலம்பு முந்நீர் படிந்தணை மேகமும்
நலங்கொள் மேதிநன் னாகுந் தெரிக்கொணா
சிலம்பு தெண்திரைக் கானலின் சேணெலாம். ௩

தவள மாளிகைச் சாலை மருங்கிறைத்
துவள்ப தாகை நுழைந்தணை தூமதி
பவள வாய்மட வார்முகம் பார்த்தஞ்சி
உவள கஞ்சேர்ந் தொதுங்குவ தொக்குமால். ௪

வீதி எங்கும் விழாஅணிக் காளையர்
தூதி யங்குஞ் சுரும்பணி தோகையர்
ஓதி எங்கும் ஒழியா அணிநிதி
பூதி எங்கும் புனைமணி மாடங்கள். ௫

மன்னு சீர்மயி லைத்திரு மாநகர்த்
தொன்மை நீடிய சூத்திரத் தொல்குல
நன்மை சான்ற நலம்பெறத் தோன்றினார்
தன்மை வாயிலார் என்னுந் தபோதனர். ௬

---

௨. வேலை தன்பால்நிதி - கடல், தன்னிடமுள்ள பொருளை. சேமவைப்பா மென - பண்டாரமென்று. அப்பதிமாடு - அப்பதியினிடத்தில்.

௩. சிலம்பு......எலாம் - ஒலிக்கும் தெள்ளிய அலைகளையுடைய கடற்கரைகளின் பரப்புக்களிலெல்லாம். கலம் - கப்பல். முந்நீர் - கடல். மேதி - எருமை. யானைக்கன்றுக்கும் மேகத்துக்கும் நாகுக்கும் வேற்றுமை தெரியவில்லை என்றபடி.

௪. தவளம் - வெண்மையான. இறை - இறப்புக்களில். பதாகை - கொடிகளில். உவளகம் - மறைவிடத்தில்.

௫. வீதி எங்கும் விழா அணி காளையர் பொருட்டுத் தூது செல்லும் வண்டுகள் மொய்த்த கூந்தலையுடைய தோகையர்கள்; (தலைவன் தலைவி ஊடல் தீர்க்கத் தோழிமார் தூது போவது வழக்கம்). பூதி (சுண்ணத்தால்) எங்கும் புனை மணிமாடங்கள் எங்கும் ஓதி ஒழியா அணிநிதி—இஃதொரு வகை. வீதி...விழா அணி; தோகையர் ஓதி (கூந்தலில்) காளையர் பொருட்டுத் தூது செல்லும் சுரும்பு அணி (வண்டு வரிசைகள்); பூதி புனை மாடங்கள் எங்கும் ஒழியா அணி நிதி—இது மற்றொரு வகை.

௬. சான்ற - அமைந்த.

வாயி லாரென நீடிய மாக்குடித்
தூய மாமர பின்முதல் தோன்றியே
நாய னார்திருத் தொண்டின் நயப்புறு
மேய காதல் விருப்பின் விளங்குவார். ௭

**வேறு**

மறவாமை யால்அமைத்த மனக்கோயில் உள்ளிருத்தி
றவாதி தனையுணரும் ஒளிவிளக்குச் சுடரேற்றி
றவாத ஆனந்தம் எனுந்திருமஞ் சனமாட்டி
அறவாணர்க் கன்பென்னும் அமுதமைத்தர்ச் சனைசெய்வார்.

அகமலர்ந்த அர்ச்சனையில் அண்ணலார் தமைநாளும்
நிகழவரும் அன்பினால் நிறைவழிபா டொழியாமே
திகழநெடு நாட்செய்து சிவபெருமான் அடிநிழற்கீழ்ப்
புகலமைத்துத் தொழுதிருந்தார் புண்ணியமெய்த் தொண்டனார். ௯

நீாருஞ் சடையாரை நீடுமன ஆலயத்துள்
ஆராத அன்பினால் அர்ச்சனைசெய் தடியவர்பால்
பேராத நெறிபெற்ற பெருந்தகையார் தமைப்போற்றிச்
சீராருந் திருநீடூர் முனைஅடுவார் திறமுரைப்பாம். ௰

ஆ திருவிருத்தம் - ௪,0௬௩.

---

**வாயிலார் நாயனார்** தொண்டை நாட்டில் உள்ள திருமயிலையில், வேளாள மரபில் தோன்றியவர். அவர், தமது உள்ளத்தைச் சிவத்துக்குரிய கோயிலாக்கினார். அக்கோயிலில் அறிவு விளக்கேற்றி, ஆனந்தமாகிய நீராட்டி, அன்பாகிய அமுதை நிவேதிப்பது அவர்தந் திருத்தொண்டு. இவ்வாறு ஞானபூசை செய்து வாயிலார் சிவமானார்.



---

௭. நாயனார் - சிவபெருமானது. காதலாகிய விருப்பு.

௮. மறவாமையால் - இடையறாத தியானத்தால். ஆதி (சிவம்) தனை உற இருத்தி ; அவ்வாதிதனை உற உணரும். அறவாணர்க்கு - சிவபெருமானுக்கு.

௯. புகல் - புகுமிடம்.

பா - ம்—*மறவாத வாய்மையால்.

# முனையடுவார் நாயனார் புராணம்

மாறு கடிந்து மண்காத்த வளவர் பொன்னித் திருநாட்டு
நாறு விரைப்பூஞ் சோலைகளின் கனிவாய் திறந்து பொழிசெழுந்தேன்
ஆறு பெருகி வெள்ளமிடும் அள்ளல் வயலின் மள்ளர்உழும்
சேறு நறுவா சங்கமழுஞ் செல்வ நீடூர் திருநீடூர். க

விளங்கும் வண்மை மிக்குள்ள வேளாண் தலைமைக் குடிமுதல்வர்
களங்கொள் மிடற்றுக் கண்ணுதலார் கழலிற் செறிந்த காதல்மிகும்
உளங்கொள் திருத்தொண் டுரிமையினில் உள்ளார் நள்ளார் முனைஎறிந்த
வளங்கொ டிறைவர் அடியார்க்கு மாறா தளிக்கும் வாய்மையார். உ

மாற்றார்க் கமரில் அழிந்துள்ளோர் வந்து தம்பால் மாநிதியம்
ஆற்றும் பரிசு பேசினல் அதனை நடுவு நிலைவைத்துக்
கூற்றும் ஒதுங்கும் ஆள்வினையால் கூலி ஏற்றுச் சென்றெறிந்து
போற்றும் வென்றி கொண்டிசைந்த பொன்னுங் கொண்டு மன்னுவார்.

இன்ன வகையால் பெற்றநிதி எல்லாம் ஈசன் அடியார்கள்
சொன்ன சொன்ன படிநிரம்பக் கொடுத்துத் தூய போனகமும்
கன்னல் நறுநெய் கறிதயிர்பால் கனியுள் ளுறுத்த கலந்தளித்து
மன்னும் அன்பின் நெறிபிறழா வழித்தொண் டாற்றி வைகினர். ச

மற்றிந் நிலைமை பன்னெடுநாள் வையம் நிகழச் செய்துவழி
உற்ற அன்பின் செந்நெறியால் உமையாள் கணவன் திருவருளால்
பெற்ற சிவலோ கத்தமர்ந்து பிரியா உரிமை மருவினர்
முற்ற உழந்த முனையடுவார் என்னும் நாமம் முன்னுடையார். ரு

---

க. மாறுகடிந்து - பகைவரை வென்று. அள்ளல் - குழைசேறுள்ள.

உ. நள்ளார் முனை எறிந்த வளங்கொடு - பகைவரைப் போரில் வென்றதால், கிடைத்த வளங்களைக் கொண்டு.

ங. அமரில் மாற்றார்க்கு - போரில் பகைவர்களுக்கு. ஆற்றும் பரிசு - மனமியையுமாறு. கூற்றும் - யமனும். ஆள்வினையால் - முயற்சியால். இசைந்த பொன் என்றது நடுவு நிலையாக வைத்த பொருளை.

ச. போனகமும் - சோறும். கன்னல் - சர்க்கரையும். உள்ளுறுத்த - உள்ளிட்டன; முதலியன.

ரு. முற்ற உழந்த - வெற்றியுறப் போர் புரிதலால். முனை அடுவார் - போரில் பகைவரை வீழ்த்துவோர்.

யாவ ரெனினும் இகலெதிர்ந்தே ஈசன் அடியார் தமக்கின்பம்
மேவ அளிக்கும் முனையடுவார் விரைப்பூங் கமலக் கழல்வணங்கித்
தேவர் பெருமான் சைவநெறி விளங்கச் செங்கோல் முறைபுரியும்
காவல் பூண்ட கழற்சிங்கர் தொண்டின் நிலைமை கட்டுரைப்பாம். சு

செறிவுண் டென்று திருத்தொண்டிற் சிந்தை செல்லும் பயனுக்கும்
குறியுண் டொன்று கிலுங்குறையொன் றில்லோம் நிறையுங் கருணையினால்
வெறியுண் சோலைத் திருமுருகன் பூண்டி வேடர் வழிபறிக்கப்
பறியுண் டவர்எம் பழவினைவேர் பறிப்பார் என்னும் பற்றாலே. எ

ஆ திருவிருத்தம் - ச,கoo.

---

சோழநாட்டிலே, திருநீடூரிலே, வேளாளர் குலத்திலே தோன்றிய சிவனடியார் ஒருவர் இருந்தார். அவர், போர்முனையில் நின்று மாற்றாரைச் சாய்ப்பதில் வல்லவர். அதனால் அவருக்கு முனையடுவார் என்ற பெயர் வழங்கலாயிற்று.

பகைவரால் தோல்வி யுறுவோர் முனையடுவாரிடம் வருவர்; வந்து அவர் தம் துணையை நாடுவர். நாயனார், அவர் பொருட்டுப் போர் புரிந்து வெற்றி பெறுவார்; அவ்வெற்றியால் கிடைக்கும் பொருளைக் கொண்டு சிவனடியார்களுக்கு அமுதூட்டுவார்; அவர்கள் விரும்புமாறு உதவுவார். முனையடுவார் பன்னெடுநாள் இத்தகைத் தொண்டு செய்து சிவனடி சேர்ந்தார்.

---

சு. இகல் எதிர்ந்து - பகை கடந்து.

எ. நிறையுங் கருணையினால் எம்பழவினைவேர்......; பறியுண்டவர் - சுந்தரமூர்த்தி சுவாமிகள். செறிவு - உறவு.

## ௬௦. கடல்சூழ்ந்த சருக்கம்

# கழற்சிங்க நாயனார் புராணம்

படிமிசை நிகழ்ந்த தொல்லைப் பல்லவர் குலத்து வந்தார்
கடிமதில் மூன்றுஞ் செற்ற கங்கைவார் சடையார் செய்ய
அடிமலர் அன்றி வேறொன் றறிவினிற் குறியா நீர்மைக்
கொடிநெடுந் தானை மன்னர் கோக்கழற் சிங்கர் என்பார். ௧

காடவர் குரிசி லாராங் கழற்பெருஞ் சிங்க னார்தாம்
ஆடக மேரு வில்லார் அருளினால் அமரிற் சென்று
கூடலர் முனைகள் சாய வடபுலங் கவர்ந்து கொண்டு
நாடற நெறியில் வைக நன்னெறி வளர்க்கு நாளில். ௨

குவலயத் தரனார் மேவுங் கோயில்கள் பலவுஞ் சென்று
தவலரும் அன்பிற் றாழ்ந்து தக்கமெய்த் தொண்டு செய்வார்
சிவபுரி என்ன மன்னுந் தென்திரு வாரூர் எய்திப்
பவமறுத் தாட்கொள் வார்தங் கோயிலுட் பணியப் புக்கார். ௩

அரசியல் ஆயத் தோடும் அங்கணர் கோயி லுள்ளால்
முரசுடைத் தானை மன்னர் முதல்வரை வணங்கும் போதில்
விரைசெறி மலர்மென் கூந்தல் உரிமைமெல் லியலார் தம்முள்
உரைசிறந் துயர்ந்த பட்டத் தொருதனித் தேவி மேவி. ௪

கோயிலை வலங்கொண் டங்கண் குலவிய பெருமை எல்லாம்
சாயல்மா மயிலே போல்வாள் தனித்தனி கண்டு வந்து
தூயமென் பள்ளித் தாமந் தொடுக்குமண் டபத்தின் பாங்கர்
மேயதோர் புதுப்பூ அங்கு விழுந்ததொன் றெடுத்து மோந்தாள். ௫

புதுமலர் மோந்த போதிற் செருத்துணைப் புனிதத் தொண்டர்
"இதுமலர் திருமுற் றத்துள் எடுத்துமோந் தனளாம்" என்று
கதுமென ஓடிச் சென்று கருவிகைக் கொண்டு பற்றி
மதுமலர்த் திருவொப் பாள்தன் மூக்கினைப் பிடித்து வார்ந்தார். ௬

---

௧. படிமிசை நிகழ்ந்த தொல்லை - பூமியில் வழி வழி வந்த பழமையுடைய. தானை - சேனைகளையுடைய.

௨. காடவர் குரிசில் - பல்லவர் குலத்தலைவராகிய. ஆடகம் - பொன்.

௩. தவலரும் - கெடுதலில்லாத. ௪. ஆயத்தோடும் - கூட்டத்தோடும்.

௬. மலர் திருமுற்றத்துள் - பூ மண்டபத்துள்.

வார்ந்திழி குருதி சோர மலர்க்கருங் குழலுஞ் சோரச்
சோர்ந்துவீழ்ந் தரற்றுந் தோகை மயிலெனத் துளங்கி மண்ணில்
சேர்ந்தயர்க் துரிமைத் தேவி புலம்பிடச் செம்பொற் புற்றுள்
ஆர்ந்தபே ரொளியைக் கும்பிட் டரசரும் அணைய வந்தார். ௭

வந்தணை வுற்ற மன்னர் மலர்ந்தகற் பகத்தின் வாசப்
பைந்தளிர்ப் பூங்கோம் போன்று பார்மிசை வீழ்ந்த தென்ன
நொந்தழிந் தரற்று வாளை நோக்கி"இவ் வண்டத் துள்ளோர்
இந்தவெவ் வினைஅஞ் சாதே யார்செய்தார்?" என்னும் எல்லை. ௮

அந்நிலை அணைய வந்து செருத்துணை யாராம் அன்பர்
முன்னுறு நிலைமை அங்குப் புகுந்தது மொழிந்த போது
மன்னரும் அவரை நோக்கி "மற்றிதற் குற்ற தண்டம்
தன்னைஅவ் அடைவே யன்றோ தடிந்திடத் தகுவ" தென்று. ௯

கட்டிய உடைவாள் தன்னை உருவி"அக் கமழ்வா சப்பூத்
தொட்டுமுன் னெடுத்த *கையாம் முற்படத் துணிப்ப" தென்று
பட்டமும் அணிந்து காதல் பயில்பெருந் தேவி யான
மட்டவிழ் குழலாள் செங்கை வளையொடுந் துணித்தா ரன்றே. ௧௦

ஒருதனித் தேவி செங்கை உடைவாளால் துணித்த போது
பெருகிய தொண்டர் ஆர்ப்பின் பிறங்கொலி புவிமேற் பொங்க
இருவிசும் படைய ஓங்கும் இமையவர் ஆர்ப்பும் விம்மி
மருவிய தெய்வ வாச மலர்மழை பொழிந்த தன்றே. ௧௧

அரியஅத் திருத்தொண் டாற்றும் அரசனார் அளவில் காலம்
மருவிய உரிமை தாங்கி மாலயற் கரியார் மன்னும்
திருவருட் சிறப்பி னாலே செய்யசே வடியின் நீழற்
பெருகிய உரிமை யாகும் பேரருள் எய்தி னாரே. ௧௨

வையக நிகழக் காதல் மாதேவி தனது செய்ய
கையினைத் தடிந்த சிங்கர் கழலிணை தொழுது போற்றி
எய்திய பெருமை அன்பர் இடங்கழி யாரென் றேத்தும்
மெய்யருளுடைய தொண்டர் †செய்வினை விளம்ப லுற்றாம். ௧௩

ஆ திருவிருத்தம் ௪,௧௩.

---

௭. வார்ந்து இழி - வடிந்தொழுகும். துளங்கி - அசைந்து.
௧௦. மட்டவிழ் - மணங்கமழும்.

பா - ம்—*கையே. †செயவினை.

கழற்சிங்க நாயனார் பல்லவர் குலத்திலே தோன்றியவர்; சிவபக்தர். அவர், வடபுல மன்னர்களை வென்று எங்குஞ் சைவந்தழைக்கச் செங்கோலோச்சினார். பல திருப்பதிகளுக்குப் போய் ஆண்டவனை வழிபடுவது அவர்தம் வழக்கம்.

ஒருநாள் கழற்சிங்கர், தமது மனைவியாருடன் திருவாரூரை அடைந்து தியாகேசப் பெருமானைத் தொழுதார். அவ்வேளையில், அம்மையார் திருக் கோயிலை வலம் வந்தார்; அங்கே உள்ள பெருமைகளைத் தனித்தனிக் கண்டு மகிழ்வெய்தினார்; பூ மண்டபத்தின் பக்கத்திலே புதுப் பூ ஒன்று விழுந்து கிடந்தது. அம்மையார் அப்பூவை எடுத்து மோந்தார்.

அங்கே தொண்டு செய்துகொண்டிருந்த செருத்துணை நாயனார் அதைப் பார்த்தார். அவர், 'அம்மையார் மண்டபத்துள்ள பூவை எடுத்து மோந்தார்' எனக் கருதி, விரைந்து ஓடிக் கருவிகொண்டு அம்மையார் மூக்கை அறுத்தார். அம்மையார்மூக்கினின்றும் உதிரம் ஒழுகிற்று; கூந்தல் சோர்ந்தது. அம்மையார் பூமியிலே விழுந்து புலம்பினார்.

கழற்சிங்க நாயனார் அங்கே வந்தார்; "இச்செயலை அஞ்சாது செய்தவர் யாவர்?" என்று கேட்டார். செருத்துணை நாயனார் போந்து, நிகழ்ந்ததைக் கூறினார். கழற்சிங்க நாயனார், "அப்படியா! பூவை எடுத்தது கையன்றோ! அதையே முதலில் துணித்தல் வேண்டும்" என்று சொல்லித் தம்முடைய உடைவாளை உருவினார்; தேவியார் கையைத் துணித்தார். அச்செயற்கருஞ் செய்கையைக் கண்ட அமரர்கள் பூ மழை பொழிந்தார்கள். கழற்சிங்க நாயனார் பன்னெடுநாள் சிவத்தொண்டு செய்து சிவபிரான் திருவடி சேர்ந்தார்.

# இடங்கழி நாயனார் புராணம்

எழுந்திரைமா கடலாடை இருநிலமா மகள்மார்பில்
அழுந்துபட எழுதும்இலைத் தொழில்தொய்யில் அணியினவாம்
செழுந்தளிரின் புடைமறைந்த *பெடைகளிப்பத் தேமாவின்
கொழுந்துணர்கோ திக்கொண்டு குயில்நாடு கோனாடு. க

முருகுறு†செங் கமலமது மலர்துதைந்த மொய்யளிகள்
‡பருகுறுதெண் திரைவாவிப் பயில்பெடையோ டிரையருந்தி
வருகுறுதண் டுளிவாடை மறையமா தவிச்சூழல்
குருகுறங்குங் கோனாட்டுக் கொடிநகரங் கொடும்பாளூர். உ

---

க. இலை போன்ற தொழில் அழுந்துபட எழுதும். துணர் - பூங்கொத்தை. கோனாடு பூமிதேவியின் மார்பில்...தொய்யிலை ஒத்த அணியென விளங்குவது. தொய்யில் முன்னர் விளக்கப்பட்டது.

உ. முருகு - மணம். துதைந்த மொய் அளிகள் - நிறைந்து மொய்த்த வண்டுகள். அளிகள்...மதுபருகுறும்...வாவியில் உடன் வாழும்......வாடைக் காற்று தாக்காதவாறு குருக்கத்திச்சூழலில் குருகுகள்.........

பா - ம்—*பெடைக்களிக்கத். †செங் கமலமலர் மகரந்த. ‡பெருகுறு.

அந்நகரத் தினிலிருக்கும் வேளிர்குலத் தரசளித்து
மன்னியபொன் னம்பலத்து மணிமுகட்டில் பாக்கொங்கின்
பன்னு*துலைப் பசும்பொன்னாற் பயில்பிழம்பாம் மிசையணிந்த
பொன்னெடுந்தோள் ஆதித்தன் புகழ்மரபிற் குடிமுதலோர். ௩

இடங்கழியார் எனவுலகில் ஏறுபெரு நாமத்தார்
அடங்கலர்முப் புரமெரித்தார் அடித்தொண்டின் நெறியன்றி
முடங்குநெறி கனவினிலும் முன்னாதார் எந்நாளும்
தொடர்ந்தபெரும் காதலினால் தொண்டர்வேண் டியசெய்வார். ௪

சைவநெறி வைதிகத்தின் தருமநெறி யொடுந்தழைப்ப
மைவளருந் திருமிடற்றார் மன்னியகோ யில்களெங்கும்
மெய்வழிபாட் டர்ச்சனைகள் விதிவழிமேன் மேல்விளங்க
மொய்வளர்வண் புகழ்பெருக முறைபுரியும் அந்நாளில். ௫

சங்கரன்றன் அடியாருக் கமுதளிக்குந் தவமுடையார்
அங்கொருவர் அடியவருக் கமுதொருநாள் ஆக்கவுடன்
எங்குமொரு செயல்காணா தெய்தியசெய் தொழில்முட்டப்
பொங்கியெழும் பெருவிருப்பால் புரியும்வினை தெரியாது. ௬

அரசரவர் பண்டாரத் தந்நாட்டின் நெற்கூட்டின்
நிரைசெறிந்த புரிபலவா நிலைக்கொட்ட காரத்தில்
புரைசெறிநள் ளிருளின்கண் புக்குமுகந் தெடுப்பவரை
முரசெறிகா வலர்கண்டு பிடித்தரசன் முன்கொணர்ந்தார். ௭

மெய்த்தவரைக் கண்டிருக்கும் வேல்மன்னர் வினவுதலும்
"அத்தனடி யாரையான் அமுதுசெய்விப் பதுமுட்ட
இத்தகைமை செய்தேன்"என் றியம்புதலும் மிகஇரங்கிப்
பத்தரைவிட் "டிவரன்றோ பண்டாரம் எனக்"கென்பார். ௮

---

௩. பாக்கொங்கின் - ஒளியும் மாற்றும் உயர்வுமுடைய; (கொங்கிற்பொன் என்பது ஒருவகைப் பொன்; இது பண்டை வழக்கு). ஆதித்தன் - சூரியன்.

௭. பண்டாரம் - பண்டசாலை; பொக்கிஷம். புரி பலவாநிலை கொட்ட காரத்தில் - மதில் பலவுடைய நிலைக்களமாகிய நெற்கூடுகள் உள்ள இடத்தில். புரைசெறி - எங்கும் மிகுந்து.

௮. இருக்கும் - கொலு வீற்றிருக்கும். கண்டிருக்கும் - முன்னமே பார்த் திருக்கும் என்னலுமாம். பண்டாரம் - பொக்கிஷம்; சிவனடியாருமாம்.

பா - ம்—*துணைப்; சுடர்ப்.

நிறையழிந்த உள்ளத்தால் "நெற்பண்டா ரமும்அன்றிக்
குறைவில்நிதிப் பண்டார மானஎலாங் கொள்ளைமுகந்
திறைவனடி யார்கவர்ந்து கொள்க" என எம்மருங்கும்
பறையறையப் பண்ணுவித்தார் படைத்தநிதிப் பயன்கொள்வார். ௬

எண்ணில்பெரும் பண்டாரம் ஈசனடி யார்கொள்ள
உண்ணிறைந்த அன்பினால் உறுகொள்ளை மிகஊட்டித்
தண்ணளியால் நெடுங்காலந் திருநீற்றின் நெறிதழைப்ப
மண்ணிலருள் புரிந்திறைவர் மலரடியின் நிழல்சேர்ந்தார். ௰

மைதழையும் மணிமிடற்றார் வழித்தொண்டின் வழிபாட்டில்
எய்துபெருஞ் சிறப்புடைய இடங்கழியார் கழல்வணங்கி
மெய்தருவார் நெறியன்றி வேறொன்றும் மேலறியாச்
செய்தவராஞ் செருத்துணையார் திருத்தொண்டின் செயல்மொழிவாம்.

ஆகு திருவிருத்தம் - ௪,௧௨௪.

---

கோனாட்டிலே, கொடும்பாளூரிலே, வேளிர் குலத்திலே, ஆதித்தன் குடியிலே தோன்றிய ஒரு பெரியவர் இருந்தார். அவர் மன்னர். அவரே இடங்கழி நாயனார் என்பவர். அவர்தம் ஆட்சியில் சைவம் ஓங்கி வளர்ந்தது; திருக்கோயில்களில் பூசை முதலியன ஒழுங்காக நடைபெற்று வந்தன.

அந்நாளில் ஒரு சிவனடியார் இருந்தார். அவர் அடியவர்கட்கு மாகேசுர பூசை செய்விப்பதை நியதியாகக் கொண்டவர். ஒருநாள் பொருள் முடையால் அவர்தம் நியதிக்கு முட்டு உண்டாகும் நிலை நேர்ந்தது. அவர் என் செய்தார்? அன்றிரவு, அவர், இடங்கழியார் அரண்மனையில் புகுந்தார்; கூட்டிலுள்ள நெல்லை எடுத்தார். அப்பொழுது காவலாளர்கள், அவரைப் பிடித்தார்கள்; பிடித்து, மன்னரிடங் கொண்டு வந்தார்கள்.

மன்னர் அவரை நோக்கி, "என் நெல்லைத் திருடினீர்?" என்று கேட்டார். அதற்கு அடியவர், "சிவனடியார்களுக்கு மாகேசுர பூசை செய்விப்பது எனது வழக்கம். பொருளின்மையால் அது முட்டுப்பட்டது. அதனால் இவ்வாறு செய்யலானேன்" என்று சொன்னார். அச்சொல்லைக் கேட்டதும், இடங்கழி நாயனார்க்கு இரக்கம் பெருகிவிட்டது. நாயனார், "இவ்வடியவரன்றோ பண்டாரம்!" என்று அடியவரை விடுதலை செய்தார்; நெற்கூடுகளையும் மற்றப் பொருட்சாலைகளையும் திறந்துவிட்டார்; சிவனடியார்கள் அவைகளைக் கொள்ளையிடுமாறு பறையறைவித்தார்; அக்கொள்ளைக் காட்சி கண்டு மகிழ்வெய்தினார். இடங்கழி நாயனார் பன்னெடுநாள் நீதி அரசியற்றிச் சிவனடி சேர்ந்தார்.

---

௬. நிறை யழிந்த - (எனது ஆட்சியில் அடியவர்கள் வருந்துவதும் உண்டோ என்று) நிலையழிந்த.

# செருத்துணை நாயனார் புராணம்

உள்ளும் புறம்புங் குலமரபின் ஒழுக்கம் வழுவா ஒருமைநெறி
கொள்ளும் இயல்பிற் குடிமுதலோர் மலிந்த செல்வக் குலப்பதியாம்
தெள்ளுந் திரைகள் மதகுதொறுஞ் *சேலுங் கயலுஞ் செழுமணியும்
தள்ளும் பொன்னி நீர்நாட்டு மருக னாட்டுத் தஞ்சாவூர். க

சீரின் விளங்கும் அப்பதியில் திருந்து வேளாண் குடிமுதல்வர்
நீரின் மலிந்த செய்யசடை நீற்றர் கூற்றின் நெஞ்சிடித்த
†வேரி மலர்ந்த பூங்கழல்சூழ் மெய்யன் புடைய சைவரெனப்
பாரில் நிகழ்ந்த செருத்துணையார் பரவுந் தொண்டின் நெறிநின்றார். உ

ஆன அன்பர் திருவாரூர் ஆழித் தேர்வித் தகர்கோயில்
ஞான முனிவர் இமையவர்கள் நெருங்கு நலஞ்சேர் முன்றிலினுள்
மான நிலவு திருப்பணிகள் செய்து காலங் களின்வணங்கிக்
கூனல் இளவெண் பிறைமுடியார் தொண்டு பொலியக் குலவுநாள். ங

உலகு நிகழ்ந்த பல்லவர்கோச் சிங்கர் உரிமைப் பெருந்தேவி
நிலவு திருப்பூ மண்டபத்து மருங்கு நீங்கிக் கிடந்ததொரு
மலரை எடுத்து மோந்ததற்கு ‡வந்து பொறாமை வழித்தொண்டர்
இலகு சுடர்வாய்க் கருவி§எடுத் தெழுந்த வேகத் தாலெய்தி.

கடிது முற்றி மற்றவள்தன் கருமென் கூந்தல் பிடித்தீர்த்துப்
படியில் வீழ்த்தி மணிமூக்கைப் பற்றிப் "பரமர் செய்யசடை
முடியில் ஏறுந் திருப்பூமண் டபத்து மலர்மோந் திடும்மூக்கைத்
தடிவன்" என்று கருவியினால் அரிந்தார் தலைமைத் தனித்தொண்டர்.

அடுத்த திருத்தொண் டுலகறியச் செய்த அடலே றனையவர்தாம்
தொடுத்த தாம மலரிதழி முடியார் அடிமைத் தொண்டுகடல்
உடுத்த உலகில் நிகழச்செய் துய்யச் செய்ய பொன்மன்றுள்
எடுத்த பாத நிழலடைந்தே இறவா இன்பம் எய்தினார். சு

---

உ. கூற்றின் நெஞ்சில் உதைத்த.

ரு. கடிதுமுற்றி - விரைந்து சேர்ந்து.

சு. இதழிமலர் தொடுத்ததாமம் - கொன்றை மலரால் கட்டிய மாலை யணிந்த.

பா - ம்—*செம்பொன் தரளஞ். †வேரி மலிந்த. ‡வந்த. §எடுத்தெழுந்து.

செங்கண் விடையார் திருமுன்றில் விழுந்த திருப்பள் ளித்தாமம்
அங்கண் எடுத்து மோந்தஅதற் கரசர் உரிமைப் பெருந்தேவி
துங்க மணிமூக் கரிந்தசெருத் துணையார் தூய கழலிறைஞ்சி
எங்கு நிகழ்ந்த புகழ்த்துணையார் உரிமை அடிமை எடுத்துரைப்பாம்.

ஆ திருவிருத்தம் - ௪,௧௩௧.

---

செருத்துணை நாயனார் சோழ நாட்டிலே, தஞ்சாவூரிலே, வேளாளர் மரபிலே பிறந்தவர்; சிவபத்தி சிவனடியார் பத்தியில் சிறந்தவர். அவர் திருவாரூரை அடைந்து திருத்தொண்டு செய்து வந்தார். அங்கே வழிபாட்டுக்கு வந்த கழற்சிங்க நாயனாருடைய மனைவியார், பூமண்டபத்தின் பக்கத்திலே கிடந்த ஒரு பூவை எடுத்து மோந்தார். அதைச் செருத்துணையார் பார்த்தார்; விரைந்து ஓடினார்; கத்தி எடுத்தார்; அம்மையார் கூந்தலைப் பிடித்தார்; ஈர்த்தார்; கீழே தள்ளினார்; தள்ளி, அம்மையாரின் மூக்கை அறுத்தார். செருத்துணை நாயனார் பலநாள் தொண்டு செய்து, சிவபெருமான் திருவடிநீழலையடைந்தார்.

# புகழ்த்துணை நாயனார் புராணம்

செருவிலிபுத் தூர்மன்னுஞ் சிவமறையோர் திருக்குலத்தார்
அருவரைவில் லாளிதனக் ககத்தடிமை யாமதனுக்
கொருவர்தமை நிகரில்லார் உலகத்துப் பரந்தோங்கிப்
பொருவரிய புகழ்நீடு புகழ்த்துணையார் எனும்பெயரார். ௧

தங்கோனைத் தவத்தாலே தத்துவத்தின் வழிபடுநாள்
பொங்கோத ஞாலத்து வற்கடமாய்ப் பசிபுரிந்தும்
"எங்கோமான் தனைவிடுவேன் அல்லேன்" என் றிராப்பகலும்
கொங்கார்பன் மலர்கொண்டு குளிர்புனல்கொண் டருச்சிப்பார். ௨

மாலயனுக் கரியானை மஞ்சனம்ஆட் டும்பொழுது
சாலவுறு பசிப்பிணியால் வருந்திநிலை தளர்வெய்திக்
கோலநிறை புனல்தாங்கு குடந்தாங்க மாட்டாமை
ஆலமணி கண்டத்தார் முடிமீது வீழ்த்தயர்வார். ௩

---

௧. அரிய மேருவரையை வில்லாகவுடைய சிவபெருமானுக்கு. பொருவரிய - ஒப்பற்ற.

௨. தங்கோனை - சிவபெருமானை. தத்துவத்தின் - உண்மையில். வற்கடமாய் - பஞ்சமாய். கொங்கு ஆர் - மணம் நிறைந்த. ௩. விழவிட்டு அயர்வார்.

பா - ம்—* அருவிவரை வில்லாளிக்.

சங்கரன்தன் அருளாலோர் துயில்வந்து தமையடைய
அங்கணனும் கனவின்கண் அருள்புரிவான் "அருந்துணவு
மங்கியநாள் கழியளவும் வைப்பதுநித் தமும்ஒருகா
சிங்குனக்கு நாம்" என்ன இடர்நீங்கி எழுந்திருந்தார். ச

பெற்றம்உகந் தேறுவார் பீடத்தின் கீழ்ஒருகா
சற்றம்அடங் கிடஅளிப்ப அன்பரும்மற் றதுகைக்கொண்
டுற்றபெரும் பசியதனால் உணங்கும்உடம் புடன்உவந்து
முற்றுணர்வு தலைநிரம்ப முகமலர்ந்து களிகூர்ந்தார். ரு

அந்நாள்போல் எந்நாளும் அளித்தகா சதுகொண்டே
இன்னாத பசிப்பிணிவந் திறுத்தநாள் நீங்கியபின்
மின்னார்செஞ் சடையார்க்கு மெய்யடிமைத் தொழில்செய்து
பொன்னாட்டின் அமரர்தொழப் புனிதரடி நிழல்சேர்ந்தார். சு

பந்தணையு மெல்விரலாள் பாகத்தார் திருப்பாதம்
வந்தணையு மனத்துணையார் புகழ்த்துணையார் கழல்வாழ்த்திச்
சந்தணியு மணிப்புயத்துத் தனிவீர ராந்தலைவர்
கொந்தணையும் மலரலங்கல் கோட்புலியார் செயலுரைப்பாம். எ

ஆ திருவிருத்தம் - ச,கூஅ.

---

புகழ்த்துணை நாயனார் செருவிலிபுத்தூரிலே, ஆதி சைவ மரபிலே பிறந்தவர். அவர், சிவபெருமானை முறைப்படி அர்ச்சித்து வந்தார். வருநாளில், பஞ்சம் நேர்ந்தது. நாயனார் பஞ்சத்தைக் கருதாது தமது தொண்டைக் குறைவற நிகழ்த்திக்கொண்டிருந்தார். நாளுக்குநாள் அவர் பசியால் மெலிவுறலானார்.

மெலிவுடன் புகழ்த்துணையார் ஒருநாள் திருமஞ்சன மாட்டும்போது, திருக்குடம் தேவதேவன் திருமுடிமீது விழுந்தது. அதுகண்ட நாயனார் சிவசந்நிதியில் விழுந்தார்; அயர்ந்தார். திருவருளால் அவருக்கு உறக்கம் வந்தது. சிவபெருமான் அவர்தங் கனவிலே தோன்றி, "பஞ்சம் ஒழியும் வரை, நாள்தோறும் ஒரு காசு இங்கே வைப்போம். அதைப் பெற்றுக் கொள்" என்று அருளிச் செய்தார். நாயனார் விழித்து எழுந்தார். ஒரு காசு, பீடத்தின் கீழே இருப்பதைக் கண்டார்; மகிழ்வெய்தினார்; அக்காசு பெற்று வாழ்ந்து வந்தார். பஞ்சம் ஒழிந்தது. நாயனார் தமது திருத்தொண்டை வழாது செய்து சிவபதம் சேர்ந்தார்.

---

ரு. பெற்றம் - இடபம். பீடத்தின் - லிங்க பீடத்தின். அற்றம் - சோர்வு. உணங்கும் - வாடும்.

சு. இன்னாத - கொடிய. எ. கொந்து அணையும் - மலர்மாலை யணிந்த.

# கோட்புலி நாயனார் புராணம்

நலம்பெருகுஞ் சோணாட்டு நாட்டியத்தான் குடிவேளாண்
குலம்பெருக வந்துதித்தார் கோட்புலியார் எனும்பெயரார்
தலம்பெருகும் புகழ்வளவர் தந்திரியா ராய்வேற்றுப்
புலம்பெருகத் துயர்*விளைப்பப் போர்விளைத்துப் புகழ்விளைப்பார். க

மன்னவன்பால் பெறுஞ்சிறப்பின் வளமெல்லாம் மதியணியும்
பின்னுகர்தங் கோயில்தொறுந் திருஅமுதின் படிபெருகச்
செந்நெல்மலைக் குவடாகச் செய்துவருந் திருப்பணியே
பன்னெடுநாள் செய்தொழுகும் †பாங்குபுரிந் தோங்குநாள். உ

வேந்தனே வலிற்பகைஞர் வெம்முனைமேல் செல்கின்றார்
பாந்தள்பூ ணணிஅணிந்தார் தமக்கமுது படியாக
ஏந்தலார் தாமெய்து மளவும்வேண் டுஞ்செந்நெல்
வாய்ந்தகூ டைவகட்டி வழிக்கொள்வார் மொழிகின்றார். ங

தந்தமர்க ளாயினார் தமக்கெல்லாந் தனித்தனியே
"எந்தையார்க் கமுதுபடிக் கேற்றியநெல் விவைஅழிக்கச்
சிந்தைஆற் றுநினைவார் திருவிரையாக் கலி"என்று
வந்தனையால் உரைத்தகன்றார் மன்னவன்மாற் றார்முனைமேல். ச

மற்றவர்தாம் போயினபின் சிலநாளில் வற்காலம்
‡உற்றலும்அச் சுற்றத்தார் உணர்வின்றி "இறப்பதனில்
பெற்றம்உயர்த் தவர்அமுது படிகொண்டா கிலும்பிழைத்துக்
குற்றமறப் பின்கொடுப்போம்" எனக்கூடு குலைத்தழித்தார். ரு

---

க. தந்திரியாராய் - சேனாதிபதியாய். புலம் - இடம் ; தேசம்.

உ. குவடாக - மலையாக.

ங. முனை - போர். பாந்தள்...தமக்கு-சிவபெருமானுக்கு. பாந்தள்-பாம்பு. ஏந்தலார் தாம் எய்துமளவும் - கோட்புலி நாயனார் தாம் திரும்பி வரும் வரை. வழிக்கொள்வார் - புறப்படுகின்றவராகிய நாயனார்.

ச. தமர்கள் - சுற்றத்தவர்கள். ஆற்றா - சகியாமல். திருவிரையாக்கலி - திருவாணை. மாற்றார் - பகைவர்.

ரு. வற்காலம் - பஞ்சகாலம். இறப்பதனில் - சாவதைப் பார்க்கிலும். பெற்றம் உயர்த்தவர் - இடபக்கொடியுடைய சிவபெருமானுக்கென்று நாயனாரால் சேமித்து வைக்கப் பெற்ற.

பா - ம்—*விளையப். †பாங்குபுரிந் தொழுகுநாள். ‡உற்றிட.

மன்னவன்றன் தெம்முனையில் வினைவாய்த்து மற்றவன்பால்
நன்னிதியின் குவைபெற்ற நாட்டியத்தான் குடித்தலைவர்
அந்நகரில் தமர்செய்த பிழையறிந்த தறியாமே
துன்னினார் "சுற்றமெலாந் துணிப்பன்"எனுந் துணிவினராய். ௬

எதிர்கொண்ட தமர்க்கெல்லாம் இனியமொழி பலமொழிந்து
மதிதங்கு சுடர்மணிமா ளிகையின்கண் வந்தணைந்து
"பதிகொண்ட சுற்றத்தார்க் கெல்லாம்பைந் துகில்நிதியம்
அதிகந்தந் தளிப்பதனுக் கழைமின்கள்" என்றுரைத்து. ௭

எல்லாரும் புகுந்ததற்பின் இருநிதியம் அளிப்பார்போல்
"நல்லார்தம் பேரோன்முன் கடைகாக்க நாதன்றன்
வல்லாணை மறுத்தமுது படிஅழித்த மறக்கிளையைக்
கொல்லாதே விடுவேனோ" எனக்கனன்று கொலைபுரிவார். ௮

தந்தையார் தாயார்மற் றுடன்பிறந்தார் தாரங்கள்
பந்தமார் சுற்றத்தார் பதியடியார் மதியணியும்
எந்தையார் திருப்படிமற் றுண்ணஇசைந் தார்களையும்
சிந்தவாள் கொடுதுணித்தார் *தீயவினைப் பவந்துணிப்பார். ௯

பின்னங்குப் பிழைத்ததொரு பிள்ளையைத்தம் பெயரோன்"அவ்
அன்னந்துய்த் திலது,குடிக் கொருபுதல்வன் அருளும்"என
"இந்நெல்லுண் டாள்முலைப்பால் உண்ட" தென எடுத்தெறிந்து
மின்னல்ல வடிவாளால் இருதுணியாய் விழவேற்றார். ௧௦

அந்நிலையே சிவபெருமான் அன்பரெதிர் வெளியேநின்
"றுன்னுடைய கைவாளால் உறுபாசம் அறுத்தகிளை
பொன்னுலகின் மேலுலகம் புக்கணையப் புகழோய்நீ
இந்நிலைநம் முடன்அணை"கென் றேவிஎழுந் தருளினார். ௧௧

அத்தனாய் அன்னையாய் ஆருயிராய் அமிர்தாகி
முத்தனும் முதல்வன்தாள் அடைந்துகிளை முதல்தடிந்த

௬. அரசனுடைய பகைவரைப் போக்கி வென்று. அறிந்தும் அறியாதார் போல என்றபடி.

௮. நல்லார் - கோட்புலியார். தம்பேரோன் - தம்பெயராகிய கோட்புலி என்னும் பெயரையுடைய காவலாளன். மறக்கிளையை - அறநெறியில்லாத இச் சுற்றத்தவரை.

௯. பதி அடியார் - அப்பதியிலுள்ள ஏவலாளர்கள். பவம் - பிறவியை.

பா - ம்—*தீவினையின் பயன்துணிப்பார்.

கொத்தலர்தார்க் கோட்புலியார் அடிவணங்கிக் கூட்டத்தில்
பத்தராய்ப் பணிவார்தம் பரிசினையாம் பகருவாம். ௧௨

மேவரிய பெருந்தவம்யான் முன்புவிளைத் தனஎன்னோ
யாவதும்ஓர் பொருளல்லா என்மனத்தும் அன்றியே
நாவலர்கா வலர்பெருகு நதிகிழிய வழிநடந்த
சேவடிப்போ தெப்போதுஞ் சென்னியினும் மலர்ந்தனவால். ௧௩

ஆ திருவிருத்தம் - ௪,௧௫௧௬.

---

சோழ நாட்டிலே, நாட்டியத்தான் குடியிலே, வேளாண்மரபிலே தோன்றியவர் ஒருவர் இருந்தார். அவர் சிவனடியார். அவர்தம் பெயர் **கோட்புலி நாயனார்** என்பது.

கோட்புலியார், சோழமன்னனிடத்தில் சேனாதிபதியாய் இருந்தவர்; மாற்றரசரை வெல்வதில் பேர் பெற்றவர்; தந்தொழிலால் பெறும் பொருளைக் கொண்டு திருக்கோயில் திருவமுதுக்கென நெற்களை வாங்குவார்; அவைகளைக் கூடுகளில் சேமித்து வைப்பார். அவர் இச்செயலைத் தமக்குரிய தொண்டாகக் கொண்டு வாழ்ந்தார்.

அரசன் ஆணைப்படி, கோட்புலியார் போருக்குப் போதல் நேர்ந்தது. அப்பொழுது, நாயனார், தாம் மீண்டும் திரும்பும்வரை, திருக்கோயில் திருவமுதுக்கு வேண்டப்படும் நெற்களைச் சேமித்து, அவைகளைக் கூடுகளில் நிரப்பினார்; சுற்றத்தவர்களைத் தனித்தனியே அழைத்தார்; "இந்நெற்கள் திருக்கோயில் திருவமுதுக்கெனச் சேமிக்கப்பட்டவை; இவைகளை எக்காரணம் பற்றியும் உங்களுக்கென்று எடுத்துச் செலவழித்தல் கூடாது; இறை ஆணை" என்று கூறிப் போர்மேற் சென்றார்.

கோட்புலியார் சென்ற சில நாளுக்குள் பஞ்சம் நேர்ந்தது. சுற்றத்தவர்கள் பஞ்சத்தால் பீடிக்கப்பட்டு வருந்தினார்கள். அவர்கள் உயிர் துறக்கும் நிலை நெருங்கிவிட்டது. அதனால், அவர்கள், 'கோட்புலியார் சேமித்துள்ள நெற்களை எடுத்துப் பயன்படுத்திக்கொள்வோம்' என்று துணிவு கொண்டார்கள்; கொண்டபடியே நெல்லை எடுத்துப் பயன் படுத்தினார்கள்.

கோட்புலியார் பகைவர்களை முறியடித்து, மன்னனிடம் நிதி பெற்றுத் திரும்பினார்; வழியில் சுற்றத்தவர் செயலைக் கேள்வியுற்றார்; உண்மை உணர்ந்

---

௧௨. கொத்து மலரால் ஆக்கப்பெற்ற மாலையணிந்த கோட்புலியார்.

௧௩. நாவலர் காவலர் - சுந்தரமூர்த்தி சுவாமிகள்; ......மனத்திலல்லாமல் சென்னியினும் மலர்ந்தமையால் யான் முன்பு பெருந்தவம் விளைத்ததென்னோ என்றபடி.

தார் ; "அடாத செயல் புரிந்தவர்களை வெட்டி வீழ்த்துவேன்" என்று உள்ளே கன்று வந்தார்.

சுற்றத்தவர்கள் நாயனாரை எதிர் கொண்டார்கள். நாயனார் அவர்களுக்கு இனியமொழி கூறி வீடு சேர்ந்தார்; "சுற்றத்தவர்களுக்குப் பரிசில் வழங்கல் வேண்டும்" என்று சொல்லி அவர்களை அழைப்பித்தார் ; கோட்புலி என்னும் தம் பெயருடைய சேவகன் ஒருவனை வாயில் காக்குமாறு செய்தார் ; "அடாத செயல் புரிந்த இவர்களைக் கொல்லாது விடுவதோ" என்று உருத்து எழுந்தார்; எழுந்து, தந்தை, தாய், உடன் பிறந்தார், தாரம், துரோகத்துக்கு உட்பட்ட மற்றவர் ஆகிய எல்லாரையும் வெட்டி வீழ்த்தினார். ஓர் ஆண் குழந்தை மட்டும் எஞ்சி நின்றது. நாயனார் அதன் மீது பாய்ந்த பொழுது, வாயில் காப்போன், அவரைப் பார்த்துப், "பெருமானே! இக்குழந்தை என்ன செய்தது? இது சிவ சோற்றை உண்ணவில்லையே! ஒரு குடிக்கு ஒரே பிள்ளை ; அருள் செய்யும்" என்று வேண்டினான். அதற்குக் கோட்புலியார் "இக்குழவி சிவசோற்றை உண்ணவில்லை ; ஆனால் அதை உண்டவளுடைய முலைப்பாலை உண்டது" என்று கூறி, அக்குழந்தையையும் வாளுக்கு இரையாக்கினார்.

அந்நிலையில், சிவபெருமான் தோன்றினார் ; தோன்றி, "கோட்புலி! உன் கைவாளால் வெட்டுண்ட உன் சுற்றத்தவர்கள் எல்லாரும் பாசம் நீங்கப் பெற்றார்கள் ; மேற்பதவி எய்தினார்கள். நீ இப்படியே நம்முடன் வருவாயாக" என்று அருள்செய்து எழுந்தருளினார்.

## கக. பத்தராய்ப்பணிவார் சருக்கம்

# பத்தராய்ப் பணிவார் புராணம்

ஈசனுக்கே அன்பானார் யாவரையுந் தாங்கண்டால்
கூசிமிகக் குதுகுதுத்துக் கொண்டாடி மனமகிழ்வுற்
றாசையினால் ஆவின்பின் கன்றணைந்தாற் போலணைந்து
பேசுவன பணிந்தமொழி இனியனவே பேசுவார். க

தாவரிய அன்பினாற் சம்புவினை எவ்விடத்தும்
யாவர்களும் அர்ச்சிக்கும் படிகண்டால் இனிதுவந்து
பாவனையால் நோக்கினால் பலர்காணப் பயன்பெறுவார்
மேவரிய அன்பினால் மேலவர்க்கும் மேலானார். உ

அங்கணனை அடியாரை ஆராத காதலினால்
பொங்கிவரும் உவகையுடன் தாம்விரும்பிப் பூசிப்பார்
பங்கயமா மலர்மேலான் பாம்பணையான் என்றிவர்கள்
தங்களுக்குஞ் சார்வரிய சரண்சாருந் தவமுடையார். ந

யாதானும் இவ்வுடம்பாற் செய்வினைகள் ஏறுயர்த்தார்
பாதார விந்தத்தின் பாலாக எனும்பரிவால்
காதார்வெண் குழையவர்க்காம் பணிசெய்வார் கருக்குழியில்
போதார்கள் அவர்புகழ்க்குப் புவனமெலாம் போதாவால். ச

சங்கரனைச் சார்ந்தகதை தான்கேட்குந் தன்மையராய்
அங்கணனை மிகவிரும்பி அயலறியா அன்பினால்
கங்கைநதி மதிஇதழி காதலிக்குந் திருமுடியார்
செங்கமல மலர்ப்பாதஞ் சேர்வதனுக் குரியார்கள். ரு

ஈசனையே பணிந்துருகி இன்பமிகக் களிப்பெய்திப்
பேசினவாய் தழுதழுப்பக் கண்ணீரின் பெருந்தாரை
மாசிலா *நீறழித்தங் கருவிதர மயிர்சிலிர்ப்பக்
கூசியே உடல்கம்பித் திடுவார்மெய்க் குணமிக்கார். சு

நின்றாலும் இருந்தாலும் கிடந்தாலும் நடந்தாலும்
மென்றாலும் துயின்றாலும் விழித்தாலும் இமைத்தாலும்

---

உ. தாவரிய - கெடுதலில்லாத. சம்புவினை - சிவபெருமானை.
ந. அங்கணனை - சிவபெருமானையும். சரண் - சிவனடி.
ரு. இதழி - கொன்றை. சு. கம்பித்திடுவார் - விதிர் விதிர்ப்பார்.
பா - ம்—*நீற்றின்மிசை வழிந்திழிய.

மன்றாடு மலர்ப்பாதம் ஒருகாலும் மறவாமை
குன்றாத உணர்வுடையார் தொண்டராங் குணமிக்கார். எ

சங்கரனுக் காளான தவங்காட்டித் தாமதனால்
பங்கமறப் பயன்துய்யார் படிவிளக்கும் பெருமையினார்
அங்கணனைத் திருவாரூர் ஆள்வானை அடிவணங்கிப்
பொங்கியெழுஞ் சித்தமுடன் பத்தராய்ப் போற்றுவார். அ

---

**பத்தராய்ப் பணிவார்,** அடியார்களைக் கண்டால் ஆனந்த பரவசராவார்; பசுவைத் தொடர்ந்து செல்லுங் கன்றைப்போல அவரைத் தொடர்ந்து செல்வார்; பணிவார்; அவர்களிடம் இனிய மொழி பேசுவார்; சிவபூசை செய்பவர்களைப் பார்த்ததும் இன்புறுவார்; சிவபெருமானையும் அடியவர்களையும் காதலுடன் வழிபடுவார்; தாம் செய்யும் அறங்களைச் சிவார்ப்பணஞ் செய்வார்; சிவசரிதங்களையே கேட்பார்; ஈசனை நினைந்து நினைந்து உருகுவார்; வாய் குழறுவார்; கண்ணீர் உகுப்பார். அவர்தம் உடல் விதிர்க்கும்; மயிர்சிலிர்க்கும். நின்றாலும், இருந்தாலும், கிடந்தாலும், நடந்தாலும் எப்பொழுதும் எக்காரணம்பற்றியும் அவர் ஆண்டவனை மறவார். அவர் குன்றாத உணர்வுடையார்; வயிற்றின் பொருட்டுச் சிவவேடம் தரியார்.

# பரமனையே பாடுவார் புராணம்

புரமூன்றுஞ் செற்றானைப் பூணாகம் அணிந்தானை
உரனில்வரும் ஒருபொருளை உலகனைத்தும் ஆனானைக்
கரணங்கள் காணாமல் கண்ணார்ந்து நிறைந்தானைப்
பரமனையே பாடுவார் தம்பெருமை பாடுவாம். க

தென்தமிழும் வடகலையும் தேசிகமும் பேசுவன
மன்றினிடை நடம்புரியும் வள்ளலையே பொருளாக
ஒன்றியமெய் யுணர்வோடும் உள்ளுருகிப் பாடுவார்
பன்றியுடன் புட்காணாப் பரமனையே பாடுவார். உ

---

**பரமனையே பாடுவார்,** தென்மொழி வடமொழி முதலிய மொழிகளைப் பயின்று "அப்பயிற்சியாலாகிய பயன் சிவபெருமானைப் பாடுதல்" என்று கொண்டு மெய்யுணர்வுடன் உள்ளுருகிப் பாடுவோராவர்.

---

அ. படி - உலகை.

க. உரனில்வரும்-ஞானத்துக்கு எளிவரும். அஞ்ஞானக் கரணங்கள் காணாமல் ஞானக்கண்ணில் பொருந்தி நிறைந்தானை; "கரணங்களெல்லாங் கடந்து நின்ற கறைமிடற்றன்"—மாணிக்கவாசகர்.

உ. தேசிகமும் - மற்ற தேச மொழிகளும். புள் - அன்னப்பறவை (பிரமன்).

# சித்தத்தைச்சிவன்பாலேவைத்தார் புராணம்

காரணபங் கயம்ஐந்தின் கடவுளர்தம் பதங்கடந்து
பூரணமெய்ப் பரஞ்சோதி பொலிந்திலங்கு நாதாந்தத்
தாரணையாற் சிவத்தடைந்த சித்தத்தார் தனிமன்றுள்
ஆரணகா ரணக்கூத்தர் அடித்தொண்டின் வழியடைந்தார். க

---

பதங்களை எல்லாங் கடந்து விளங்கும் நாதாந்தத் தாரணையால், சிவத்தை அடைந்த திருஉள்ளத்தவர், **சித்தத்தைச் சிவன்பால் வைத்தவராவர்.**

# திருவாரூர்ப் பிறந்தார் புராணம்

அருவாகி உருவாகி அனைத்துமாய் நின்றபிரான்
மருவாருங் குழலுமையாள் மணவாளன் மகிழ்ந்தருளும்
திருவாரூர்ப் பிறந்தார்கள் திருத்தொண்டு *தெரிந்துணர
ஒருவரால் சிறியேனால் உரைக்கலாந் தகைமையதோ. க

திருக்கயிலை வீற்றிருந்த சிவபெருமான் திருக்கணத்தார்
பெருக்கியசீர்த் திருவாரூர்ப் பிறந்தார்கள் ஆதலினால்
தருக்கியஐம் பொறிஅடக்கி மற்றவர்தந் †தாள்வணங்கி
ஒருக்கியநெஞ் சுடையவர்க்கே அணித்தாகும் உயர்நெறியே. உ

---

**திருவாரூரில் பிறந்தவர்கள்** சிவகணங்கள். ஆதலால், அவர்கள் பெருமையை என்னென்று சொல்வது!

---

க. புறக்கருவிகட்கும் அகக்கருவிகட்கும் காரணமாய், கருவிகட்கு எட்டாதனவாய் உள்ள நிலைகள் ஐந்து. அவைகளின் பீடங்கள் தாமரை போன்றிருக்கும். அவ்வவ்விடத்தில் முறையே, பிரமன், விஷ்ணு, உருத்திரன், மஹேஸ்வரன், சதாசிவன் ஆகிய கடவுளர் வீற்றிருப்பர். இவ்வைந்து நிலைகளையுங் கடந்து ஒளிர்வது சிவசோதி. அச்சோதி நிலையையுங் கடந்து நிற்பது சுத்த சிவம். இச்சிவத்திடைச் சித்தத்தை வைத்தவர் பெருமை ஈண்டுச் சொல்லப்பட்டுளது. தாரணை பலவிதம். நாத தத்துவங் கடந்த தாரணையில் சுத்த சிவம் விளங்குதலால், "நாதாந்தத் தாரணையால் சிவத்தடைந்த" என்றார். சுத்த சிவத்தினிடஞ் சித்தம் வைப்பவர் சித்தரென்க. ஆண்டவன் திருக்கூத்தால், சுத்தமாயை இயங்கி வேதமாகக் காரியப்படுவதால், "ஆரண காரணக்கூத்து" என்றார். இத்திருப்பாட்டின் விளக்கம் திருமந்திரம் முதலிய நூல்களிற் பார்க்க.

பா - ம்—*தேர்ந்துணர ; தெரிந்துரைக்க. †தாள்வணங்க.

# முப்போதும் திருமேனி தீண்டுவார் புராணம்

எப்போதும் இனியபிரான் இன்னருளால் அதிகரித்து
மெய்ப்போத நெறிவந்த விதிமுறைமை வழுவாமே
அப்போதைக் கப்போதும் ஆர்வமிகும் அன்பினராய்
முப்போதும் அர்ச்சிப்பார் முதற்சைவ ராம்முனிவர். க

தெரிந்துணரின் முப்போதுஞ் செல்காலம் நிகழ்காலம்
வருங்கால மானவற்றின் வழிவழியே திருத்தொண்டின்
விரும்பியஅர்ச் சனைகள்சிவ வேதியர்க்கே உரியனஅப்
பெருந்தகையார் குலப்பெருமை யாம்புகழும் பெற்றியதோ. உ

வேறு

*நாரணற்கும் நான்முகற்கும் அறிய ஒண்ணா நாதனைஎம் பெருமானை ஞான மான, ஆரணத்தின் உட்பொருள்கள் அனைத்து மாகும் அண்ணலைஎண் ணியகாலம் மூன்றும் அன்பின், காரணத்தால் அர்ச்சிக்கும் மறையோர் தங்கள் கமலமலர்க் கழல்வணங்கிக் கசிந்து சிந்தைப், பூரணத்தால் முழுநீறு பூசி வாழும் புனிதர்செயல் அறிந்தவா புகல லுற்றேன். ௩

முப்போதும் திருமேனி தீண்டுவோர் என்பவர் சிவவேதியர்.

# முழுநீறு பூசிய முனிவர் புராணம்

†ஆதார மாயனைத்தும் ஆகி நின்ற அங்கணன்எம் பெருமான்நீர் அணிந்த வேணிக், காதார்வெண் திருக்குழையான் அருளிச்செய்த கற்பம்அநு கற்பம்உப கற்பந் தானும், ஆகாதென் றங்குரைத்த அகற்பம் நீக்கி ஆமென்று முன்மொழிந்த மூன்று பேத, மோகாதி குற்றங்கள் அறுக்கும் நீற்றை மொழிவதுநம் இருவினைகள் கழிவ தாக. க

---

க. முதற்சைவராம் - ஆதிசைவராம்.

க. மோகாதி குற்றங்கள் - காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம்.

பா - ம்—*பல ஏட்டுப் பிரதிகளில் இப்பாடல் இல்லை.

†அம்பலத்தே உலகுய்ய ஆடும் அண்ணல் உவந்தாடும் அஞ்சினை யும் அளித்த ஆக்கள், இம்பர்மிசை அநாமயமாய் இருந்த போதில் ஈன்றணிய கோமயமந் திரத்தி னால்ஏற், றும்பர்தொழ எழுஞ்சிவமந் திரஓ மத்தால் உற்பவித்த சிவாங்கிதனில் உணர்வுக் கெட்டா, எம் பெருமான் கழல்நினைந்தங் கிட்ட தூநீ றிதுகற்பம் என்றெடுத்திங் கேத்த லாகும். ௨

†ஆரணியத் துலர்ந்தகோ மயத்தைக் கைக்கொண் டழகுறநுண் பொடியாக்கி ஆவின் சுத்த, நீரணிவித் தத்திரமந் திரத்தி னாலே நிசயமுறப் பிடித்தோம நெருப்பில் இட்டுச், சீரணியும் படிவெந்து கொண்ட செல்வத் திருநீறும் அநுகற்பம் தில்லை மன்றுள், வாரணியு முலைஉமையாள் காண ஆடும் மாணிக்கக் கூத்தர்மொழி வாய்மை யாலே. ௩

†அடவிபடும் அங்கியினால் வெந்த நீறும் ஆனிலைகள் அனல்தொ டக்க வெந்த நீறும், இடவகைகள் எரிகொளுவ வெந்த நீறும் இட்டி கைகள் சுட்டஎரி பட்ட நீறும், உடனன்றி வெவ்வேறே ஆவின் நீரால் உரைதிகழு மந்திரங்கொண் டுண்டை யாக்கி, மடமதனில் பொலிந்திருந்த சிவாங்கி தன்னால் வெந்ததுமற் றுபகற்பம் மரபின் ஆகும். ௪

†இந்தவகை யால்அமைத்த நீறு கொண்டே இருதிறமுஞ் சுத்தி வரத் தெறித்த பின்னர், அந்தமிலா அரன்அங்கி ஆறு மெய்ம்மை அறிவித்த குருநன்மை அல்லாப் பூமி, முந்தஎதிர் அணியாதே அணி யும்போது முழுவதும்மெய்ப் புண்டரஞ்சந் திரனிற் பாதி, நந்திஎரி தீபநிகழ் வட்ட மாக நாதரடி யார்அணிவர் நன்மை யாலே. ௫

---

௨. அஞ்சினையும் - பஞ்சகவ்வியத்தையும். இம்பர்மிசை - உலகத்திலே. அநாமயமாய் - நோயில்லாமல். ஈன்றணிய கோமயம் - கன்றை ஈன்றுள்ள பசுவின் சாணத்தை. சிவாக்கினிதன்னில்.

௩. மாணிக்கக்கூத்தர் மொழி வாய்மையால்-சிவாகமப்படி. கோமயத்தை - பசுஞ் சாணத்தை. ஆவின் சுத்த நீர் அணிவித்து - கோசலத்தைச் சேர்த்துப் பிசைந்து. நிசயமுற - திரட்சியாக.

௪. அடவிபடும் அங்கியினால் - காட்டில் உண்டாகும் நெருப்பால். ஆன் நிலைகள் அனல் தொடக்க - பசு நிலைகளில் நெருப்புப்பற்ற. இடவகைகள் - பல வகை இடங்கள். இட்டிகைகள் - செங்கற்கள். மடமதனில் - முனிவர்கள் மடங்களில்.

௫. இருதிறமும் - அகமும்புறமும். அரன்முன்னும், குருமுன்னும், அக் கினி, வழி, நலமில்லாப் பூமி இவைகளின் முன்னும் அணியாது......; முழு வதும் மெய்-உடல் முழுவதும் உத்தூளனம். புண்டரம் - திரிபுண்டரம். சந்திர னிற்பாதி - பிறை வடிவம். நந்தி எரிதீபம் - விளங்கி எரியுந் தீபவடிவம்.

பா - ம்—†இவ்வைந்தும் பழைய பிரதிகளில் இல்லை. இவை இடைச்செருகல்.

சாதியினில் தலையான தரும சீலர் தத்துவத்தின் நெறியுணர்ந் தோர் தங்கள் கொள்கை, நீதியினிற் பிழையாது நெறியில் நிற்போர் நித்தநிய மத்துநிகழ் அங்கி தன்னில், பூதியினைப் புதியபா சனத்துக் கொண்டு புலியதளின் உடையானைப் போற்றி நீற்றை, ஆதிவரு மும்மலமும் அறுத்த வாய்மை அருமுனிவர் முழுவதும்மெய் அணிவ ரன்றே. ௬

ஆ திருவிருத்தம் - ௪,௧௭௩.

முழுநீறு பூசிய முனிவர், திருநீற்றைச் சிவமாகக்கொண்டு அதனைப் பூசு வோர் ; பூசுநீறுபோல் உள்ளும் புனிதர் ; வாய்மையாளர் ; மும்மலத்தை நீறு படுத்தியவர்.

# அப்பாலும் அடிசசார்ந்தார் புராணம்

மூவேந்தர் தமிழ்வழங்கு நாட்டுக் கப்பால் முதல்வனார் அடிச் சார்ந்த முறைமை யோரும், நாவேய்ந்த திருத்தொண்டத் தொகை யிற் கூறும் நற்றொண்டர் காலத்து முன்னும் பின்னும், பூவேய்ந்த நெடுஞ்சடைமேல் அடம்பு தும்பை புதியமதி நதிஇதழி பொருந்த வைத்த, சேவேந்து வெல்கொடியான் அடிச்சார்ந் தாரும் செப்பியஅப் பாலும்அடிச் சார்ந்தார் தாமே. ௧

செற்றார்தம் புரமெரித்த சிலையார் செல்வத் திருமுருகன் பூண்டி யினிற் செல்லும் போதில், சுற்றருஞ் சிலைவேடர் கவர்ந்து கொண்ட தொருநிதியின் பரப்பெல்லாஞ் சுமந்து கொண்டு, முற்றாத முலைஉமை யாள் பாகன் பூத முதற்கணமே உடன்செல்ல முடியாப் பேறு, பெற் றார்தங் கழல்பரவ அடியேன் முன்னைப் பிறவியினிற் செய்ததவம் பெரிய வாமே. ௨

ஆ திருவிருத்தம் - ௪,௧௭௫

அப்பாலும் அடிச்சார்ந்தார், சேர சோழ பாண்டிய நாடுகளுக்கு அப்பா லுள்ள நாடுகளில் தோன்றி அடியவரானவரும், திருத்தொண்டத் தொகை யில் போந்துள்ள அடியவர்கள் காலத்துக்கு முன்னும் பின்னும் இருந்த அடிய வரும் ஆவர்.

---

௬. பாசனத்து-பாத்திரத்தில். புலிஅதளின் உடையானை - புலித்தோலை அணிந்த சிவபெருமானை. ஆதிவரும்-தோன்றிய நாள் முதல் தொடர்ந்து வரும்.

௧. இதழி - கொன்றை. சே-இடபம். இப்பாட்டால், சைவத்தின் சமரசம் நன்கு விளங்குதல் காண்க. சைவத்தைத் தமிழ்நாட்டளவில் கட்டி ஆளக் கருதும் கண்மூடிகள், இப்பாடலைப் பன்முறை உற்று உற்றுநோக்கி உண்மை யுணர்வார்களாக.

பா - ம்—*தமிழ் விளக்கு.

## கஉ. மன்னியசீர்ச் சருக்கம்

# பூசலார் நாயனார் புராணம்

அன்றினார் புரமெ ரித்தார்க் காலயம் எடுக்க *எண்ணி
ஒன்றும்அங் குதவா தாக உணர்வினால் எடுக்குந் தன்மை
நன்றெனு மனத்தி னாலே நல்லஆ லயந்தான் செய்த
நின்றவூர்ப் பூச லார்தம் நினைவினை உரைக்க லுற்றாம். க

உலகினில் ஒழுக்கம் †என்றும் உயர்பெருந் தொண்டை நாட்டு
நலமிகு சிறப்பின் மிக்க நான்மறை ‡விளங்கு மூதூர்
குலமுதற் சீலம் என்றுங் குறைவிலா மறையோர் கொள்கை
நிலவிய செல்வம் மல்கி நிகழ்திரு நின்ற வூராம். உ

அருமறை மரபு வாழ அப்பதி வந்து சிந்தை
தருமுணர் வான எல்லாந் தம்பிரான் கழல்மேற் சார
வருநெறி மாறா அன்பு வளர்ந்தெழ வளர்ந்து வாய்மைப்
பொருள்பெறு வேத நீதிக் கலையுணர் பொலிவின் மிக்கார். ௩

"அடுப்பது சிவன்பால் அன்பர்க் காம்பணி செய்தல்" என்றே
கொடுப்பதெவ் வகையுந் தேடி அவர்கொளக் கொடுத்துக் கங்கை
மடுப்பொதி வேணி ஐயர் மகிழ்ந்துறை வதற்கோர் கோயில்
எடுப்பது மனத்துக் கொண்டார் இருநிதி இன்மை எண்ணார். ௪

மனத்தினாற் கருதி எங்கும் மாநிதி வருந்தித் தேடி
"எனைத்துமோர் பொருட்பே றின்றி என்செய்கேன்" என்று நைவார்
நினைப்பினால் எடுக்க நேர்ந்து நிகழ்வுறு நிதிய மெல்லாம்
தினைத்துணை முதலாத் தேடிச் சிந்தையால் திரட்டிக் கொண்டார். ௫

சாதனத் தோடு தச்சர் தம்மையும் மனத்தால் தேடி
நாதனுக் கால யஞ்செய் நலம்பெறு நன்னாட் கொண்டே

---

க. அன்றினார் - பகைவராது.

உ. திருநின்றவூர் இந்நாளில் தின்னனூர் என்று வழங்கப்படுகிறது.

௪. அடுப்பது - நிகழ்த்துவது. அவர் - அன்பர்கள்.

௫. எனைத்தும் ஓர் பொருள் பேறின்றி - சிறிதும் ஒரு பொருளாவது பெறுதலின்றி.

பா - ம்—*வேண்டி. †மன்னும். ‡விளக்கு.

ஆதரித் தாக மத்தால் அடிநிலை பாரித் தன்பால்
காதலிற் கங்குற் போதுங் கண்படா தெடுக்க லுற்றார். ௬

அடிமுதல் உபானம் ஆதி யாகிய படைக ளெல்லாம்
வடிவுறுந் தொழில்கள் முற்ற மனத்தினால் வகுத்து மான
முடிவுறு சிகரந் தானும் முன்னிய முழத்திற் கொண்டு
நெடிதுநாள் கூடக் கோயில் நிரம்பிட நினைவாற் செய்தார். ௭

தூபியும் நட்டு மிக்க சுதையுநல் வினையுஞ் செய்து
கூவலும் அமைத்து மாடு கோயில்சூழ் மதிலும் போக்கி
வாவியுந் தொட்டு மற்றும் வேண்டுவ வகுத்து மன்னுந்
*தாபரஞ் சிவனுக் கேற்க விதித்தநாள் சாரு நாளில். ௮

காடவர் கோமான் கச்சிக் கற்றளி எடுத்து முற்ற
மாடெலாஞ் சிவனுக் காகப் பெருஞ்செல்வம் வகுத்தல் செய்வான்
நாடமா லறியா தாரைத் தாபிக்கும் அந்நாள் முன்னாள்
ஏடலர் கொன்றை வேய்ந்தார் இரவிடைக் கனவி லெய்தி. ௯

"நின்றவூர்ப் பூசல் †அன்பன் நெடிதுநாள் நினைந்து செய்த
நன்றுநீ டால யத்து நாளைநாம் புகுவோம் நீஇங்
கொன்றிய செயலை நாளை ஒழிந்துபின் கொள்வாய்" என்று
கொன்றைவார் சடையார் ‡தொண்டர் கோயில்கொண் டருளப்போந்தார். ௧o

---

௬. சாதனத்தோடு - துணைக் கருவிகளுடன். ஆதரித்து...பாரித்து - விரும்பி ஆகம முறைப்படி கால்கொண்டு.

௭. உபானம் - உபானவரி; கோபுரத்தின்கீழ் அமைக்குஞ் சித்திரவரி. படைகள் - அடுக்குகள். மான - பெருமை வாய்ந்த. முன்னிய - மனதாற் கருதியபடி. முழத்தில் - முழவளவில்.

௮. சுதையும் - சுண்ணச் சாந்தும். கூவலும் - கிணறும். மாடு - பக்கத்தே. வாவியும் தொட்டு-குளமும் எடுத்து. சிவனுக்கேற்க மன்னுந் தாபரம் விதித்த நாள் - சிவனுக்கேற்ப நிலைபெற்ற தாபரலிங்கம் பிரதிஷ்டை செய்ய ஏற்படுத்திய நாள்.

௯. காடவர் - பல்லவர். கச்சிக் கல்தளி எடுத்து - காஞ்சிபுரத்திலே கல்லால் திருக்கோயில் கட்டி. மாடெலாம் - பக்கங்களிலுள்ள நிலபுலங்களை எல்லாம்; பொருளை எல்லாம் என்னலுமாம். செய்வான் - செய்யும்படி. மால் அறியாதாரை - சிவலிங்கப் பெருமானை. கொன்றை வேய்ந்தார் - சிவபெருமான்.

௧o. ஒன்றிய - எண்ணிய. தொண்டர் - பூசலாரது. கோயில் - மானதக் கோயில்.

பா - ம்—*தாவரம்; தாபனம். †அன்பால்; என்பால். ‡அன்பர்.

தொண்டரை விளக்கத் தூயோன் அருள்செயத் துயிலை நீங்கித்
திண்திறல் மன்னன் "அந்தத் திருப்பணி செய்தார் தம்மைக்
கண்டுநான் வணங்க வேண்டும்" என்றெழுங் காத லோடும்
தண்டலைச் சூழல் சூழ்ந்த நின்றவூர் வந்து சார்ந்தான். கக

அப்பதி அணைந்து "பூசல் அன்பர்இங் கமைத்த கோயில்
எப்புடை யது?" என் றங்கண் எய்தினார் தம்மைக் கேட்கச்
"செப்பிய பூசல் கோயில் செய்ததொன் றில்லை" என்றார்
"மெய்ப்பெரு மறையோ ரெல்லாம் வருக" என் றுரைத்தான் வேந்தன்.

பூசுரர் எல்லாம் வந்து புரவலன் தன்னைக் காண
"மாசிலாப் பூச லார்தாம் யார்?" என மறையோ ரெல்லாம்
"ஆசில்வே தியன்இவ் வூரான்" என்றவர் அழைக்க *ஒட்டான்
ஈசனார் அன்பர் தம்பால் எய்தினன் வெய்ய வேலான். கங

தொண்டரைச் சென்று கண்ட மன்னவன் தொழுது "நீர்இங்
கெண்திசை யோரும் ஏத்த எடுத்தஆ லயந்தான் யாதிங்
கண்டர்நா யகரைத் தாபித் தருளுநாள் இன்றென் றும்மைக்
கண்டடி பணிய வந்தேன் கண்ணுதல் அருள்பெற்" றென்றான். கச

மன்னவன் உரைப்பக் கேட்ட அன்பர்தாம் மருண்டு நோக்கி
"என்னையோர் பொருளாக் கொண்டே எம்பிரான் அருள்செய் தாரேல்
முன்வரு நிதியி லாமை மனத்தினால் முயன்ற கோயில்
இன்னதாம்" என்று சிந்தித் தெடுத்தவா றெடுத்துச் சொன்னார். கரு

அரசனும் அதனைக் கேட்டங் கதிசயம் எய்தி "என்னே!
புரையறு சிந்தை அன்பர் பெருமை!" என் றவரைப் போற்றி
விரைசெறி மாலை தாழ நிலமிசை வீழ்ந்து தாழ்ந்து
முரசெறி தானை யோடு மீண்டுதன் மூதூர்ப் புக்கான். கசு

அன்பரும் அமைத்த சிந்தை ஆலயத் தரனார் தம்மை
நன்பெரும் பொழுது சாரத் தாபித்து நலத்தி னோடும்
பின்பூ சனைக ளெல்லாம் பெருமையிற் பலநாள் பேணிப்
பொன்புனை மன்று ளாடும் பொற்கழல் நீழல் புக்கார். கஎ

---

கக. தொண்டரை விளக்க - பூசலாரது பெருமையை விளக்க. தூயோன் - சிவபெருமான். தண்டலைச் சூழல் - சோலைச் செறிவுகள்.

கஉ. எப்புடையது - எப்பக்கத்திலிருக்கிறது.

கங. பூசுரர் - வேதியர். புரவலன் - பல்லவ மன்னன்.

கசு. புரையறு - குற்றமற்ற. விரைசெறி - மணங் கமழும். முரசு எறி தானையோடும் - முரசு முழங்கும் சேனைகளுடன்.

கஎ. பொன்புனை மன்றுள் - பொன்னம்பலத்தில்.

பா - ம்—*ஒட்டா - திசனர்.

நீண்டசெஞ் சடையி னார்க்கு நினைப்பினால் கோயி லாக்கிப்
பூண்டஅன் பிடைய றாத பூசலார் பொற்றாள் போற்றி
ஆண்டகை வளவர் கோமான் உலகுய்ய அளித்த செல்வப்
பாண்டிமா தேவி யார்தம் பாதங்கள் பரவ லுற்றேன். கஅ

ஆ திருவிருத்தம் - ச,கககூ

---

**பூசலார் நாயனார்** தொண்டை நாட்டிலே, திருநின்ற ஊரிலே, மறையவர் குலத்திலே பிறந்தவர்; வேதம் முதலிய கலைகளில் வல்லவர்; சிவபத்தி சிவனடியார் பத்தியிற் சிறந்தவர்; சிவனடியார் விரும்புவதை எப்படியாவது முயன்று செய்பவர்.

இப் பெரியார், திருக்கோயில் ஒன்று கட்ட விரும்பினார்; அதற்குப் பொருள்தேட முயன்றார். பொருள் சிறிதும் கிடைக்கவில்லை. அவர், தளர் வெய்தி, நினைவினால் கோயில் கட்ட உறுதிகொண்டார்; மனதினாலே அடி கோலினார்; கோயில் உறுப்புக்களையெல்லாம் அமைத்தார்; மதில் முதலியன வகுத்தார்; கிணறு குளம் முதலியன எடுத்தார்; இவ்வாறு மானதக் கோயில் கட்டிப் பிரதிட்டைநாளை நிச்சயஞ் செய்தார்.

அச்சமயத்தில் காடவ மன்னர், காஞ்சியிலே ஒரு திருக்கோயில் கட்டி முடித்தார். பிரதிட்டைக்கென ஒரு நன்னாள் குறிக்கப்பட்டது. அந்நாளுக்கு முன்னாள் சிவபிரான், மன்னர் கனவிலே தோன்றித், "திருநின்ற ஊரிலே **பூசல்** என்பவன் ஒருவன் இருக்கிறான். அவன் நீண்ட நாள் நினைந்து நினைந்து ஒரு கோயில் கட்டியுள்ளான். நாளை நாம் அதில் எழுந்தருள்வோம். ஆதலால், உனது ஆலயப் பிரதிட்டையைப் பின்னொரு நாளில் வைத்துக்கொள்" என்று திருவாய் மலர்ந்தருளினார். உடனே மன்னர் விழித்தெழுந்தார்; பூசலாரைக் காணவிரும்பினார்; புறப்பட்டார்; திருநின்ற ஊரை அடைந்தார்; அங்கிருந்தவர்களைப் பார்த்துப், "பூசலார் கட்டிய திருக்கோயில் எங்கே இருக்கிறது?" என்று விசாரித்தார்; "பூசலார் இங்கு ஒரு கோயிலையுங் கட்டவில்லை" என்ற பதிலே பெற்றார். அதற்குமேல், மன்னர் அவ்வூர் அந்தணர்களை அழைப்பித்தார்; "பூசலார் யாவர்?" என்று அவர்களைக் கேட்டார். அவ்வந்தணர்கள், "பூசலார் இவ்வூரவர்" என்று சொல்லி, அவரை அழைக்கப் புறப்பட்டார்கள். மன்னர் அவர்களைத் தடுத்து, அவர்கள் துணை கொண்டு, தாமே பூசலாரிடஞ் சென்றார்; பூசலாரைக் கண்டு தொழுதார்; தொழுது, "அடிகள் கட்டிய திருக்கோயில் எங்கே இருக்கிறது? அத்திருக் கோயிலின் பிரதிட்டைநாள் இன்று என்பதைச் சிவபிரானால் அறியப் பெற்றேன். அடிகளை வணங்க வந்தேன்" என்று சொன்னார்.

மன்னவர் உரை கேட்டதும், பூசலார் மருண்டார்; "சிறியேனை ஒரு பொருளாகக் கருதியா சிவபெருமான் அருள் செய்தார்! யான் திருக்கோயில் கட்ட முயன்றேன். பொருளே கிடைக்கவில்லை. அதனால், யான் மானதக் கோயில் கட்டினேன்" என்று சொல்லிக் கட்டிய முறையையும் விளக்கினார். மன்னர், நாயனாரைத் தொழுது விடை பெற்றுச் சென்றார்.

பூசலார், தமது மானதக்கோயிலில் சிவபெருமானைப் பிரதிட்டைசெய்தார்; சிலகாலம் வழிபாடுசெய்து, சிவபிரான் திருவடி நீழலைச் சேர்ந்தார்.

# மங்கையர்க்கரசியார் புராணம்

மங்கையர்க்குத் *தனியரசி எங்கள் தெய்வம் வளவர்திருக் குலக்கொழுந்து வளைக்கை மானி, செங்கமலத் திருமடந்தை கன்னி நாடாள் தென்னர்குலப் பழிதீர்த்த தெய்வப் பாவை, எங்கள்பிரான் சண்பையர்கோன் அருளி னாலே இருந்தமிழ்நா டுற்றஇடர் நீக்கித் தங்கள், பொங்கொளிவெண் திருநீறு †பரப்பி னாரைப் போற்றுவார் ‡கழல் எம்மால் போற்ற லாமே. க

பூசுரர்சூ ளாமணியாம் புகலி வேந்தர் போனகஞா னம்பொழிந்த புனித வாக்கால், தேசுடைய பாடல்பெறுந் தவத்தி னாரைச் செப்புவதியா மென்னறிந்து தென்னர் கோமான், மாசில்புகழ் நெடுமாறன் தனக்குச் சைவ வழித்துணையாய் நெடுங்காலம் மன்னிப் பின்னை, ஆசில்நெறி யவரோடுங் கூட ஈசர் அடிநிழற்கீழ் அமர்ந்திருக்க அருளும் பெற்றார். உ

வருநாளென் றும்பிழையாத் தெய்வப் பொன்னி வளம்§பெருக்க வளவர்குலம் பெருக்குந் தங்கள், திருநாடு போற்செழியர் ||தென்னர் நாடு சீர்விளக்குஞ் செய்யசீ றடிகள் போற்றி, ஒருநாளுந் தஞ்செயலில் வழுவா தன்பர்க் குடைகீளுங் கோவணமும் நெய்து நல்கும், பெருநாமச் சாலியர்தங் குலத்தில் வந்த பெருந்தகையார் நேசர்திறம் பேச லுற்றாம். ங

ஆ திருவிருத்தம் - ச,கசுகூ.

---

க. வளவர் - சோழர். கன்னிநாடு - பாண்டிநாட்டை. சண்பையர்கோன் - திருஞானசம்பந்தர். "மங்கையர்க்கரசி வளவர்கோன்பாவை வரிவளைக்கைம் மடமானி - பங்கயச் செல்வி பாண்டிமா தேவி...ஆலவாயாவது மிதுவே"—திருஞானசம்பந்தர்.

உ. "கொன்றையான் அடியலாற்பேணா - எம்பிரான் சம்பந்தர்" ஆதலின், அவர்தம் வாக்கைப் "புனித வாக்கு" என்றார்.

ங. "வான் பொய்ப்பினும் தான்பொய்யா - மலைத்தலைய கடற்காவிரி" —பட்டினப்பாலை: 5-6. செழியர் - பாண்டியர். சீறடிகள் - சிற்றடிகளை. பெருநாமம் - பெரும்புகழ் வாய்ந்த.

பா - ம்—*தனித்திலதம். †பரவி னாரைப். ‡புகழ். §பெருக. ||தென்னாடு விளக்குஞ் சீர்விளக்கின் செய்யசீ றடிகள் போற்றி.

**மங்கையர்க்கரசியார்** சோழ மன்னரின் புதல்வியார்; நின்றசீர் நெடுமாற நாயனாரின் மனைவியார். அவர், திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகளைக் கொண்டு பாண்டி நாட்டுக்கு உற்ற துன்பத்தைப் போக்கியவர்; அச்சுவாமிகளால் அவர்தம் திருப்பதிகத்தில் சிறப்பிக்கப் பெற்றவர்; திருநீற்று நெறி வளர்த்தவர். அப்பெருமாட்டியார், தம் நாயகருக்குச் சைவ வழித்துணையாய் நின்று, அவருடன் சிவலோகம் எய்தினார்.

# நேசநாயனார் புராணம்

சீர்வளர் சிறப்பின் மிக்க செயன்முறை ஒழுக்கங் குன்றா
நார்வளர் சிந்தை வாய்மை நன்மையார் மன்னி வாழும்
பார்வளர் புகழின் மிக்க பழம்பதி மதிதோய் நெற்றிக்
கார்வளர் சிகர மாடக் காம்பீலி என்ப தாகும். ௧

அந்நக ரதனில் வாழ்வார் அறுவையர் குலத்து வந்தார்
மன்னிய தொழிலில் தங்கள் மரபில்மேம் பாடு பெற்றார்
பன்னகா பரணற் கன்பர் பணிதலைக் கொண்டு பாதம்
சென்னியிற் கொண்டு போற்றுந் தேசினார் நேசர் என்பார். ௨

ஆங்கவர் மனத்தின் செய்கை அரனடிப் போதுக் காக்கி
ஓங்கிய வாக்கின் செய்கை உயர்ந்தஅஞ் செழுத்துக் காக்கித்
தாங்குகைத் தொழிலின் செய்கை தம்பிரான் அடியார்க் காகப்
பாங்குடை உடையுங் கீளும் பழுதில்கோ வணமும் நெய்வார். ௩

உடையொடு நல்ல கீளும் ஒப்பில்கோ வணமும் நெய்து
விடையவர் அடியார் வந்து வேண்டுமா றீயு மாற்றால்
இடையறா தளித்து நாளும் அவர்கழல் இறைஞ்சி ஏத்தி
அடைவுறு நலத்த ராகி அரனடி நீழல் சேர்ந்தார். ௪

வேறு

கற்றை வேணி முடியார்தங் கழல்சேர் வதற்குக் கலந்தவினை
செற்ற நேசர் கழல்வணங்கிச் சிறப்பால் முன்னைப் பிறப்புணர்ந்து

௧. நார் - அன்பு.

௨. அறுவையர் - சாலியர்; உடைநெய்வோர். பன்னகாபரணர்க்கு அன்பர் - சிவனடியார்களின். தேசினார் - சிவவொளி வீசப்பெற்றவர்.

௩. போதுக்கு - மலருக்கு. கீள் - அரைஞாணுக்குப் பதிலாக அணியப்படுவது.

பெற்றம் உயர்த்தார்க் காலயங்கள் பெருக அமைத்து மண்ணாண்ட
கொற்ற வேந்தர் கோச்செங்கட் சோழர் பெருமை கூறுவாம். ரு

ஆ திருவிருத்தம்-௪,உ௦௧.

நேசநாயனார் காம்பீலி நகரத்திலே, சாலியர் குலத்திலே பிறந்தவர். அவர், தம் மனதால் சிவனடியைச் சிந்திப்பார்; வாக்கால் அஞ்செழுத் தோதுவார்; கையால் கீள், கோவணம், ஆடை முதலியன செய்து சிவனடியார்களுக்கு உதவுவார். இத்துணைத் திருத்தொண்டுகளை நேசநாயனார் சிறப்புறச் செய்து சிவனடி சேர்ந்தார்.

# கோச்செங்கட்சோழ நாயனார் புராணம்

துலையிற் புறவின் நிறையளித்த சோழர் உரிமைச் சோணாட்டில்
அலையிற் றாளம் அகிலொடுசந் தணிநீர்ப் பொன்னி மணிகொழிக்கும்
குலையிற் பெருகுஞ் *சந்திரதீர்த் தத்தின் மருங்கு குளிர்சோலை
நிலையிற் பெருகுந் தருமிடைந்த நெடுந்தண் கானம் ஒன்றுளதால். ௧

அப்பூங் †கானில் வெண்ணாவல் அதன்கீழ் முந்நாள் அரிதேடும்
மெய்ப்பூங் கழலார் வெளிப்படலும் மிக்க தவத்தோர் வெள்ளானை
கைப்பூம் புனலும் முகந்தாட்டிக் கமழ்பூங் கொத்தும் அணிந்திறைஞ்சி
மைப்பூங் குவளைக் களத்தாரை நாளும் வழிபட் டொழுகுமால். உ

ஆன செயலால் திருவானைக் காஎன் றதற்குப் பெயராக
ஞான முடைய ஒரு‡சிலந்தி நம்பர் செம்பொன் திருமுடிமேல்
§கானல் விரவுஞ் சருகுதிரா வண்ணங் கலந்த வாய்நூலால்
மேனற் றிருமேற் கட்டிஎன விரிந்து செறியப் புரிந்துளதால். ௩

நன்றும் இழைத்த சிலம்பிவலைப் பாப்பை நாதன் அடிவணங்கச்
சென்ற யானை "அநுசிதம்" என் றதனைச் சிதைக்கச் சிலம்பிதான்

ரு. செற்ற - போக்கிய. பெற்றம் உயர்த்தார்க்கு - இடபக் கொடியுடைய சிவபெருமானுக்கு. கொற்ற - வெற்றியுடைய.

௧. துலையில்...சோழர் - சிபிச்சக்கரவர்த்தியின். பொன்னி...குலையில் - காவிரிக்கரையில். தருமிடைந்த - மரங்கள் நெருங்கிய.

உ. மை...களத்தாரை - நீலகண்டராகிய சிவபெருமானை.

௩. கானல் விரவும் - அக் கானில் நிறைந்துள்ள; கானகை நிரம்பிய எனினுமாம். மேற்கட்டி என - விதானம்போல. செறிய - நெருங்க.

பா - ம்—*சந்திரகாந் தத்தின். †காவில். ‡சிலம்பி. §சானில்.

"இன்று களிற்றின் கரஞ்சுலவிற்" றென்று மீள இழைத்ததனை
அன்று கழித்த பிற்றைநாள் அடல்வெள் ளானை அழித்ததால். ௪

"எம்பி ரான்தன் மேனியின்மேல் சருகு விழாமை யால்வருந்தி
உம்பர் இழைத்த நூல்வலயம் அழிப்ப தே"என் றுருத்தெழுந்து
வெம்பிச் சிலம்பி துதிக்கையினிற் புக்குக் கடிப்ப வேகத்தால்
கும்ப யானை கைநிலத்தில் மோதிக் குலைந்து வீழ்ந்ததால். ௫

துறையிற் புடைப்பக் கைப்புக்க சிலம்பி தானும் உயிர்நீங்க
மறையிற் பொருளுந் தருமாற்றான் மதயா னைக்கும் வரங்கொடுத்து
முறையிற் சிலம்பி தனைச்சோழர் குலத்து வந்து முன்னுதித்து
நிறையிற் புவனங் காத்தளிக்க அருள்செய் தருள நிலத்தின்கண். ௬

வேறு

தொன்மைதரு சோழர்குலத் தரசனுஞ் சுபதேவன்
தன்னுடைய பெருந்தேவி கமலவதி யுடன்சார்ந்து
மன்னுபுகழ்த் திருத்தில்லை மன்றாடும் மலர்ப்பாதம்
சென்னியுறப் பணிந்தேத்தித் திருப்படிக்கீழ் வழிபடுநாள். ௭

மக்கட்பே றின்மையினால் *மாதேவி வரம்வேண்டச்
செக்கர்நெடுஞ் சடைக்கூத்தர் திருவுள்ளஞ் செய்தலினால்
மிக்கதிருப் பணிசெய்த சிலம்பிகுல வேந்துமகிழ்
அக்கமல வதிவயிற்றில் அணிமகவாய் வந்தடைய. ௮

வேறு

கழையார் தோளி கமலவதி தன்பாற் கருப்ப நாள்நிரம்பி
விழைவார் மகவு பெறஅடுத்த வேலை யதனிற் காலம்உணர்
பழையார் "ஒருநா ழிகைகழித்துப் பிறக்கு மேல்இப் பசுங்குழவி
உழையார் புவனம் ஒருமூன்றும் அளிக்கும்" என்ன ஒள்ளிழையார். ௯

---

௪. அநுசிதம் - உசிதமல்லாதது. சுலவிற்று - சுழற்றி அழித்தது. அடல் - வலிய.

௫. உம்பர்...அழிப்பதே - மேலே பின்னிய நூற்பரப்பை அழிக்கலாமோ. கும்ப யானை - மத்தகத்தையுடைய யானை.

௬. மறையிற் பொருளும் - சிவமும். தரும் ஆற்றான் - அருளும் முறைப்படி. முறையில் - முறைப்படி.

௯. கழையார் - மூங்கில்போலும். உழை...மூன்றும் - பார்த்த மூன்று உலகையும்.

பா - ம்—*மாதேவி யார்தமக்குச்.

"பிறவா தொருநா ழிகைகழித்தென் பிள்ளை பிறக்கும் பரிசென்கால்
உறஆர்த் தெடுத்துத் தூக்கும்" என உற்ற செயல்மற் றதுமுற்றி
அறவா ணர்கள்சொல் லியகாலம் அணையப் பிணிவிட் டருமணியை
இறவா தொழிவாள் பெற்றெடுத்"தேன் கோச்சேங் கண்ணனோ!" என்றாள்.

தேவி புதல்வர்ப் பெற்றிறக்கச் செங்கோற் சோழன் சுபதேவன்
ஆவி அனைய அரும்புதல்வன் தன்னை வளர்த்தங் கணிமகுடம்
மேவும் உரிமை முடிகவித்துத் தானும் விரும்பு பெருந்தவத்தின்
தாவில் நெறியைச் சென்றடைந்து தலைவர் சிவலோ கஞ்சார்ந்தான். ௧௧

கோதை வேலார் கோச்செங்கட் சோழர் தாம்இக் குவலயத்தில்
ஆதி மூர்த்தி அருளால்முன் னறிந்து பிறந்து மண்ணாள்வார்
பூத நாதன் தான்மகிழ்ந்து பொருந்தும் பெருந்தண் சிவாலயங்கள்
காத லோடும் பலஎடுக்குந் தொண்டு புரியுங் கடன்பூண்டார். ௧௨

ஆனைக் காவில் தாம்முன்னம் அருள்பெற் றதனை அறிந்தங்கு
மானைத் தரித்த திருக்கரத்தார் மகிழுங் கோயில் செய்கின்றார்
ஞானச் சார்வாம் வெண்ணாவ லுடனே கூட நலஞ்சிறக்கப்
பானற் களத்துத் தம்பெருமான் அமருங் கோயில் பணிசமைத்தார்.

வேறு

மந்திரிகள் தமையேவி வள்ளல்கொடை அநபாயன்
முந்தைவருங் குலமுதலோ ராயமுதற் செங்கணார்
அந்தமில்சீர்ச் சோணாட்டில் அகனாடு தொறுமணியார்
சந்திரசே கரனமருந் தானங்கள் பலசமைத்தார். ௧௪

அக்கோயில் தொறுஞ்சிவனுக் கமுதுபடி முதலான
மிக்கபெருஞ் செல்வங்கள் விருப்பினால் மிகஅமைத்துத்

---

௧௦. பிள்ளை பிறக்குமாறு என் கால்களை நன்றாகக் கட்டி...உற்ற செய லாகிய அதனைச் செய்து முடிக்க...காலம் அணைய அக்கட்டை அறுக்க. தலை கீழாகக் கட்டியும் அம்மையார் இறவாமையான், "இறவா தொழிவாள்" என்றார். சிறிது காலந்தாழ்த்தமையான் குழந்தையின் கண்கள் சிவந்தன போலும்.

௧௧. புதல்வரைப் பெற்று இறக்க. தாவில் - கெடாத.

௧௨. கோதை-மாலையணிந்த. முன்னறிந்து பிறந்து-முற்பிறவி யுணர்ந்து, (அவ்வுணர்வுடன்) பிறந்து.

௧௩. ஞானச் சார்புடைய. பானற்களத்து - திருநீலகண்டத்தையுடைய.

௧௪. அநபாயனுக்கு முன்னரே சோழ குலத்தில் தோன்றிய முதல்வ ராகிய.

திக்கனைத்துந் தனிச்செங்கோல் முறைநிறுத்தித் தேர்வேந்தர்
முக்கண்முதல் நடமாடும் முதற்றில்லை முன்னினார். ௧௫

திருவார்ந்த செம்பொன்னின் அம்பலத்தே நடஞ்செய்யும்
பெருமானை அடிவணங்கிப் பேரன்பு தலைசிறப்ப
உருகாநின் றுளங்களிப்பத் தொழுதேத்தி உறையுநாள்
வருவாய்மை மறையவர்க்கு மாளிகைகள் பலசமைத்தார். ௧௬

தேவர்பிரான் திருத்தொண்டிற் கோச்செங்கட் செம்பியர்கோன்
பூவலயம் பொதுநீக்கி ஆண்டருளிப் புவனியின்மேல்
ஏவியநற் றொண்டுபுரிந் திமையவர்கள் அடிபோற்ற
மேவினார் திருத்தில்லை வேந்தர்திரு வடிநிழற்கீழ். ௧௭

வேறு

கருநீல மிடற்றார் செய்ய கழலடி நீழல் சேர
வருநீர்மை யுடைய செங்கட் சோழர்தம் மலர்த்தாள் வாழ்த்தித்
தருநீர்மை *இசைகொள் யாழின் தலைவராய் உலக மேத்துந்
திருநீல கண்டப் பாணர் திறமினிச் செப்ப லுற்றேன். ௧௮

ஆ. திருவிருத்தம் - ௪,௨௧௧

---

சோழநாட்டிலே, காவிரிக்கரையிலே ஒருதீர்த்தம் உண்டு. அதன் பெயர் சந்திர தீர்த்தம் என்பது. அதன் மருங்கே ஓரழகிய வனமிருந்தது. அவ்வனத்தில் ஒரு வெண்ணாவல் மரத்தடியில் ஒரு சிவலிங்கம் வெளிப்பட்டது. அஃதொரு வெள்ளானைக்குப் புலப்பட்டது.

அவ்யானை துதிக்கையால் நீரை முகக்கும்; சிவலிங்கத்தை அபிடேகம் செய்யும்; மலர் சாத்தும். இவ்வாறு நாடோறும் அவ்யானை சிவலிங்கப் பெருமானை வழிபட்டு வந்தது. அதனால் அத்திருப்பதிக்குத் திருவானைக்கா என்னுந் திருநாமம் உண்டாயிற்று.

அங்கே ஞான உணர்வுடைய ஒருசிலந்தியும் இருந்தது. சிவலிங்கத்தின் மீது சருகு உதிர்வதை அச்சிலந்தி கண்டது. அதைத் தடுக்கும் பொருட்டு அச்சிலந்தி தனது வாய்நூலால் மேற்கட்டி அமைத்தது. பூசைக்கு வரும் வெள்ளானை, அம்மேற்கட்டியைக் கண்டது; 'அநுசிதம்' என்று அதனை அழித்தது. சிலந்தி அதைப் பார்த்துத் "துதிக்கை சுழன்றமையால் விதானம் அழிந்தது போலும்" என்று கருதிற்று; மீண்டும் விதானம் அமைத்தது. அடுத்தநாளும் யானை விதானத்தை அழித்தது. சிலந்திக்குச் சினம் மூண்டது. அஃது உருத்து எழுந்தது; யானையின் துதிக்கையுள் புகுந்தது; கடித்தது. யானை விழுந்தது; தும்பிக்கையை நிலத்திலே மோதி மோதி இறந்தது. சிலந்தியும் மாண்டது. சிவபெருமான், யானைக்குச் சிவகதி வழங்கினார்; சோழகுலத்தில் பிறக்குமாறு சிலந்திக்கு அருள் செய்தார்.

பா - ம்—*இசையாழின்

சுபதேவர் என்னும் ஒரு சோழமன்னர் இருந்தார். அவர்தம் மனைவியார் கமலவதியார். இருவரும் தில்லை சேர்ந்து ஆண்டவனை வழிபட்டுக் கொண்டிருந் தார். கமலவதியார்க்குப் புத்திரப் பேறு இல்லாமலிருந்தது. அப்பேறு குறித்து அம்மையார் தில்லைக் கூத்தனைப் போற்றுவது வழக்கம். தில்லைக் கூத்தன் திருவருளால் அம்மையார் கருவுற்றனர். அக்கருவில் திருவானைக்காச் சிலந்தியின் ஆருயிர் சேர்ந்தது.

கமலவதியார் கருஉயிர்க்கும் நேரம் வந்தது. "பிள்ளை இப்பொழுது பிறத்தல் கூடாது; இன்னும் ஒரு நாழிகை கழித்துப் பிறக்குமாயின், அது மூன்று லோகத்தையும் ஆள்வதாகும்" என்று காலக் கணிதர்கள் சொன்னார் கள். அவ்வுரை கேட்ட கமலவதியார், "அப்படியானால் என்னைத் தலை கீழா கக் கட்டுங்கள்" என்று கூறினார். அவ்வாறே செய்யப் பட்டது. ஒரு நாழிகை கழிந்தது; பிள்ளை பிறந்தது. காலந்தாழ்த்துப் பிறந்தமையால், குழந்தை சிவந்த கண்களை உடைத்தா யிருந்தது. அதைக் கண்ட அன்னை யார், "என்கோ செங்கண்ணனோ" என்று சொல்லிக் கொண்டே இறந்தார்.

சுபதேவர் பிள்ளையை வளர்த்தார்; தக்க வயதில் பிள்ளைக்கு முடி சூட் டினார். பின்னே, அவர் தவநெறி நின்று சிவனடி சேர்ந்தார்.

கோச்செங்கட் சோழருக்கு முன்னை உணர்வு முகிழ்த்திருந்தது. அவர் திருக்கோயில்கள் கட்டுவதில் கண்ணுங் கருத்தும் உடையவரா யிருந்தார்; தாம் முன்னே திருவருள் பெற்ற திருவானைக்காவினை நாடிச்சென்று, அங்கே திருக்கோயில் அமைத்தார்; அமைச்சர்களைக் கொண்டு சோழநாட்டிலே பல திருக்கோயில்கள் கட்டுவித்தார். அவைகளுக்குக் கட்டளைகளும் முறைப்படி அமைக்கப் பட்டன.

கோச்செங்கட் சோழ நாயனார் தில்லை சேர்ந்தார்; தில்லைக் கூத்தனை வழிபட்டார்; தில்லைவாழ் அந்தணர்க்கு மாளிகைகள் கட்டிக் கொடுத்தார். இவ் வழியில் திருத்தொண்டுகள் பல செய்து நாயனார் சிவபெருமான் திருவடி சேர்ந்தார்.

# திருநீலகண்டயாழ்ப்பாண நாயனார் புராணம்

எருக்கத்தம் புலியூர் மன்னி வாழ்பவர் இறைவன் தன்சீர்
திருத்தகும் யாழி லிட்டுப் பரவுவார் செழுஞ்சோ ணாட்டில்
விருப்புறு தான மெல்லாம் பணிந்துபோய் விளங்கு கூடற்
பருப்பதச் சிலையார் மன்னும் ஆலவாய் பணியச் சென்றார்.

ஆலவாய் அமர்ந்தார் கோயில் வாயிலை அடைந்து நின்று
பாலையீ ரேழு கோத்த *பண்ணினிற் கருவி வீக்கிக்

க. கூடல் - மதுரை; நான்மாடக்கூடல்; நான்கு மேகங்கள் மாடங்களா கக் கூடப் பெற்றது. பருப்பதச் சிலையார் - மேரு வில்லையுடைய சிவபெருமான்.

பா - ம்—*பண்ணியல்.

காலமா தரித்த பண்ணிற் கைபல முறையும் ஆராய்ந்
தேலவார் குழலாள் பாகர் பாணிகள் யாழி விட்டார். ௨

மற்றவர் கருவிப் பாடல் மதுரைநீ டால வாயில்
கொற்றவன் திருவுள் ளத்துக் கொண்டுதன் தொண்டர்க் கெல்லாம்
அற்றைநாட் கனவில் ஏவ அருட்பெரும் பாண னாரைத்
தெற்றினார் புரங்கள் செற்றார் திருமுன்பு கொண்டு புக்கார். ௩

அன்பர்கள் கொண்டு புக்க பொழுதினில் அரிவை பாகன்
தன்பெரும் பணியாம் என்று தமக்குமெய் யுணர்த லாலே
மன்பெரும் பாண னாரும் மாமறை பாட வல்லார்
முன்பிருந் தியாழிற் கூடல் முதல்வரைப் *பாடு கின்றார். ௪

திரிபுர மெரித்த வாறும் தேர்மிசை நின்ற வாறும்
கரியினை யுரித்த வாறும் காமனைக் காய்ந்த வாறும்

---

௨. "ஈரேழ் தொடுத்த செம்முறைக் கேள்வியின் - ஓரேழ்பாலை நிறுத்தல்வேண்டி..." என வரூஉஞ் சிலப்பதிகார அரங்கேற்று காதை (௭௦...) யையும், அதன் குறிப்புரை விசேட உரைகளையும் பார்க்க. கருவி வீக்கி - யாழ் நரம்புகளை இறுக்கி. காலம் ஆதரித்த - காலம் விரும்பிய; காலத்துக்குப் பொருந்திய. கை...ஆராய்ந்து - கைகளால் பல முறை தடவுதல் முதலியவற்றைப் பலமுறை ஆராய்ந்து. ஏலவார் குழலாள் பாகர் - சாந்தணிந்த நீண்ட கூந்தலையுடைய பார்வதி பாகராகிய பரமசிவனுக்குரிய. பாணிகள் - இசைப் பாட்டுகளை.

௩. கருவிப்பாடல் - யாழ்ப்பாட்டு. கொற்றவன் - சிவபெருமான். தெற்றினார்...திருமுன்பு - சிவசந்நிதி முன்பு. நாயன்மார் காலத்தில் சாதிமுறை இருந்ததென்பதையும், அம்முறை போக்கும் அன்பு நெறியில் நாயன்மார்கள் நின்று ஒழுகி வந்தார்கள் என்பதையும் இந்நூற்கண் பல விடங்களிற் குறித்து வந்துள்ளேன். ஈண்டும் அதற்கொரு சான்று காணப்படுகிறது. யாழிசைத் தொண்டர், சாதியில் பாணர். 'பாணர், திருக்கோயிலுக்குள் செல்லலாகாது' என்னும் விதி அந்நாளிலும் இருந்தது. அப்பொல்லா விதியை உடைக்க ஆண்டவனே திருவுள்ளம் பற்றியிருத்தல் ஈண்டுக் கருதற்பாலது. திருக்கோயிலில் தீண்டாமை பாராட்டுவோர், ஆண்டவன் திருவுள்ளக் குறிப்புக்கு மாறுபட்டு நடப்பவரே யாவர்.

௪. அரிவைபாகன் - உமைபாகன்; சிவபிரான். பணியாம் - கட்டளையாம். மாமறை பாடவல்லாராகிய கூடல் முதல்வரை.

௫. " அயன்றலை யறுத்தல் பாடி யருக்கனை யடர்த்தல் பாடிக் - கயந்தனை யுரித்தல் பாடிக் காலனை யுதைத்தல் பாடி - வியன்புர மெரித்தல் பாடி வேள் கெட விழித்தல் பாடிச் - சயந்தரு புகழ்கள் மற்றும் பாடினன் சால வாழ்த்தி" —திருவாலவாய் - திருவிளையாடல்: ௬௫ பலகையிட்ட திருவிளையாடல்: ௩.

பா - ம்—*பாடலுற்றார்.

அரிஅயற் கரிய வாறும் அடியவர்க் கெளிய வாறும்
பரிவினாற் பாடக் *கேட்டுப் பரமனார் அருளி னாலே. ௫

அந்தரத் தெழுந்த ஓசை "அன்பினிற் பாணர் பாடும்
சந்தயாழ் தரையிற் சீதந் தாக்கில்வீக் கழியும்" †என்று
"சுந்தரப் பலகை முன்நீர் இடும்"எனத் தொண்ட ரிட்டார்
செந்தமிழ்ப் பாண னாருந் திருவருள் பெற்றுச் சேர்ந்தார். ௬

தமனியப் பலகை ஏறித் தந்திரிக் கருவி வாசித்
துமையொரு பாகர் ‡வண்மை உலகெலாம் அறிய ஏத்தி
இமையவர் போற்ற ஏகி எண்ணில்தா னங்கள் கும்பிட்
டமரர்நா டாளா தாரூர் ஆண்டவர் ஆரூர் சேர்ந்தார். ௭

வேறு

கோயில் வாயில் முன்னடைந்து கூற்றஞ் செற்ற பெருந்திறலும்
தாயின் நல்ல பெருங்கருணை அடியார்க் களிக்குந் தண்ணளியும்
ஏயுங் கருவி யிற்றொடுத்தங் கிட்டுப் பாடக் கேட்டங்கண்
வாயில் வேறு வடதிசையில் §வகுப்பப் புகுந்து வணங்கினார். ௮

மூலத் தானத் தெழுந்தருளி இருந்த முதல்வன் தனைவணங்கிச்
சாலக் காலம் அங்கிருந்து தம்பி ரான்தன் திருவருளால்
சீலத் தார்கள் பிரியாத திருவா ரூரின் நின்றும்போய்
ஆலத் தார்ந்த கண்டத்தார் அமருந் தானம் பலவணங்கி. ௯

ஆழி சூழுந் திருத்தோணி அமர்ந்த அம்மான் அருளாலே
யாழின் மொழியாள் உமைஞானம் ஊட்ட உண்ட எம்பெருமான்
காழி நாடன் கவுணியர்கோன் கமல பாதம் வணங்குதற்கு
வாழி மறையோர் புகலியினில் வந்தார் சந்த இசைப்பாணர். ௧௦

ஞானம் உண்டார் கேட்டருளி நல்ல இசையாழ்ப் பெரும்பாணர்க்
கான படியாற் சிறப்பருளி அமரு நாளில் அவர்பாடும்

---

௬. வீக்கு - நரம்பின் இறுக்கம்.

௭. தமனியம் - பொன். தந்திரி - நரம்புகளையுடைய. தியாகேசப் பெருமான், தேவர் உலகினின்றும் முசுகுந்தனால் திருவாரூருக்குக் கொண்டுவரப் பட்டவராதலான், "அமரர்நா டாளாது ஆரூர் ஆண்டவர்..." என்றார்; விரிவு கந்த புராணத்திற் காண்க.

பா - ம்—*கேட்ட. †இன்று. ‡வாய்மை. §வந்து.

மேன்மைப் பதிகத் திசையாழில் இடப்பெற் றுடனே மேவியபின்
பானற் களத்தார் பெருமணத்தி லுடனே பரமர் தாளடைந்தார். ௧௧

வரும்பான் மையினிற் பெரும்பாணர் மலர்த்தாள் வணங்கி வயற்சாலிக்
கரும்பார் கழனித் திருநாவ லூரிற் சைவக் கலைமறையோர்
அரும்பா நின்ற அணிநிலவும் பணியும் அணிந்தார் அருள்பெற்ற
சுரும்பார் தொங்கற் சடையனார் பெருமை சொல்ல லுறுகின்றாம். ௧௨

ஆ திருவிருத்தம் - ௪,௨௩௧.

---

திருஎருக்கத்தம் புலியூரிலே, **திருநீலகண்ட யாழ்ப்பாணர்** என்பவர் ஒருவர் இருந்தார். சிவபெருமான் திருப்புகழை யாழில் இட்டு வாசிப்பது அவர் தந் திருத்தொண்டு.

யாழ்ப்பாணர் சோழநாட்டுத் திருப்பதிகளைத் தொழுது பாண்டி நாடு போந்தார். அவர், ஆலவாய் அப்பன் திருவாயிலிலே நின்று யாழ் வாசித்தார். ஆலவாய்ப் பெருமான் அன்றிரவு அடியவர்கள் கனவிலே தோன்றித், "திருநீலகண்ட யாழ்ப்பாணரைக் கோயிலுக்குள் அழைத்துச் செல்லுங்கள்" என்று கட்டளையிட்டார். பொழுது புலர்ந்தது. அடியவர்கள், ஆண்டவன் ஆணைப்படி செய்தார்கள்.

திருநீலகண்டர், "இஃது இறைவன் ஆணை" என்று வியந்தார்; திருமுன்பு நின்றார்; தமது தொண்டைச் செய்தார். அவ்வேளையில், "தரையில் சீதம்தாக்கினால், யாழின்வீக்கு அழியும் ; தரையில் பலகை இடுங்கள்" என்னும் ஒலி வானில் எழுந்தது. உடனே அன்பர்கள் பொற்பலகை இட்டார்கள். பாணர் பெருமான் அப்பலகைமீது நின்று யாழ் முழக்கினார்.

திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார் திருவாலவாயை விடுத்தார்;பல திருப்பதிகளை வணங்கிக் கொண்டே திருவாரூரை அடைந்தார் ; திருக்கோயில் வாயிலிலே நின்று யாழ் வாசித்தார். ஆண்டவனருளால் வடதிசையில் ஒரு திருவாயில் வகுக்கப்பட்டது. யாழ்ப் பெரும்பாணர் அத்திருவாயிலின் வழியாக நுழைந்து ஆண்டவனைக் கண்டு தொழுதார். நாயனார், நெடுநாள் திருவாரூரிலேயே தங்கினார்.

பின்னே யாழ்ப்பாணர், திருவாரூரை விடுத்துப் பலதிருப்பதிகளைத் தொழுது சீர்காழி சேர்ந்தார். அங்கே திருஞான சம்பந்த மூர்த்திசுவாமிகள் யாழ்ப்பாணருக்குப் பலவித சிறப்புகள் செய்தார். யாழ்ப்பாணரும் ஞானசம்பந்தரிடம் உயிர் ஒன்றிய உறவு கொண்டார் ; திருஞான சம்பந்தர் அருளிய பாடல்களை யாழில் அமைத்து வாசித்து வந்தார். இத்திருத் தொண்டைத் திருநீலகண்டப் பெருமான் நெடுநாள் செய்து, திருநல்லூர்ப் பெருமணத்திலே ஞானசம்பந்தருடன் சிற்சோதியிற் கலந்தார்.

---

௧௧. திருநீலகண்டராகிய சிவபெருமான் எழுந்தருளியுள்ள திருநல்லூர்ப் பெருமணம் என்னும் திருப்பதியில்.

௧௨. பணியும் - பாம்பும். சுரும்புஆர் தொங்கல் - வண்டுகள் ஒலிக்கும் மாலையணிந்த.

# சடையநாயனார் புராணம்

தம்பி ரானைத்[1] தோழமைகொண் டருளித் தமது தடம்புயஞ்சேர்
கொம்ப னார்பால் ஒருதூது செல்ல ஏவிக் கொண்டருளும்
எம்பி ரானைச் சேரமான் பெருமாள் இணையில் துணைவராம்
நம்பி யாரூ ரரைப்பயந்தார் ஞால மெல்லாங் குடிவாழ.

ஆ திருவிருத்தம் - ௪,௨௬௨

**சடையநாயனார்,** சுந்தரமூர்த்தி சுவாமிகளைப் புத்திரராகப் பெற்ற பெருமை வாய்ந்தவர்.

# இசைஞானியார் புராணம்

ஒழியாப் பெருமைச் சடையனார் உரிமைச் செல்வத் திருமனையார்
அழியாப் புரங்கள்[1] எய்தழித்தார் ஆண்ட நம்பி தனைப்பயந்தார்
இழியாக் குலத்தின் இசைஞானிப் பிராட்டி யாரை என்சிறுபுன்
மொழியாற்[1] புகழ முடியுமோ முடியா தெவர்க்கும் முடியாதால்.

ஆ திருவிருத்தம் ௪,௨௬௩

**இசைஞானியார்,** சடையநாயனாருடைய மனைவியார். அவர் சுந்தரமூர்த்தி சுவாமிகளை ஈன்றருளியவர். அவர்தம் பெருமையை எம்மொழியால் கூறுதல் கூடும்!

---

௧. பயந்தார் - பெற்ற சடையனார்.

